# போகரின் சப்த காண்டம் – 7000

1.
ஆனந்தமாய் நிறைந்த ஆதிபாதம் அண்டபரி பூரணமாம் ஐயர் பாதம்
வானந்தமாகி நின்ற கணேசன் பாதம் மருவியதோர் மூலத்தின் நந்தி பாதம்
தானந்தமாகியதோர் காளாங்கி பாதம் கனவருடவியாக்கிரமர் பதஞ்சலியின் பாதம்
போனந்தமாகியதோர் ரிஷிகள் பாதம் போற்றி ஏழாயிரம் நூல் பகலுவேனே
2.
தானான தாமிரபரணி ஏழு காதம் தாக்காண காவேரி எழுபது காதம்
வேனான கங்காவும் எழுநூறு காதம் வேகமுடன் சென்றுமல்லோ குளிகைகொண்டேன்
கானான கடலேழும் சுற்றிவந்து காணாத காட்சியெல்லாம் கண்ணிற் கண்டு
பாணான பராபரியை மனதிலெண்ணி பாடினேன் சப்தகாண்டம் பண்பாய்த்தானே
3.
பண்பான வைத்தியமும் வாதமார்க்கம் பரிதான ஜெகஜால குளிகைமார்க்கம்
நண்பான சித்தர்களின் மறைவுமார்க்கம் நலமான ராஜாக்கள் இருந்தமார்க்கம்
திண்பான தேவர்தாம் கடந்தமார்க்கம் திறமான மனோவேகம் செல்லும்மார்க்கம்
தண்பான சாஸ்திரங்கள் தொகுப்புமார்க்கம் தயவான மூலிகையுட ரகசியங்காணே
4.
காணவே பாண்டவாளிருந்த மார்க்கம் கதிர்மதியின் கிரிகைகளிலிருக்கும் மார்க்கம்
பூணவே பிரமாலய தேவாலயங்கள் புகழான பாசமான மலைகள் மார்க்கம்
தோணவே சரக்குகளின் வைப்பு மார்க்கம் துறையான ஆதிமலைகளிருக்கு மார்க்கம்
ஈணவே மிருகங்கள் மகத்துவமார்க்கம் எழிலான பட்ஷியுட மார்க்கம்பாரே
5.
பார்க்கவே மனிதரிடம் பேதாபேதம் பாங்கான உரைகோடி சொந்தங்கோடி
ஏர்க்ககே அதிசயங்கள் எடுத்துக்கூற ஆதிசேஷனிலும் ஆகா
சேர்க்கவே உலகத்தின் மகிமைகோடி சிறப்பான அதிசயங்கள் உள்ளதெல்லாம்
ஆர்க்கவே சித்தர்களை வணங்கியானும் அன்பாக போகரிஷி அறைந்திட்டேனே
6.
அறைந்திட்டேன் ஏழுலட்சம் கிரந்தந்தன்னைஅன்பாக அதிசயங்களெல்லாம் பார்த்து
குறைந்திட்டேன் போகரேழாயிரமாக கூறினேன் லோகத்து மாந்தர்க்காக
வறைந்திட்டேன் நாலுயுக அதிசாயங்கள் யாவும் வாகாக பாடிவைத்தேன் சத்தகாண்டம்
வுறைந்திட்டேன் சீனதேசம் யானும்சென்று பாடினேன் போகரிஷி புகலுவேனே
7.
புகலுவேன் வாதியென்ற பேர்களுக்கு போற்றியே மெய்ஞானம் வரவேண்டும்
நிகலுகின்ற ஆதாரம் அறியவேண்டும் நீக்கறிய காலத்தை நிறுத்தவேண்டும்
புகலுகின்ற பராபரியை பூசிக்கவேண்டும் பானமென்றால் தூசிக்காய் பருவம்வேண்டும்
மகலுகின்ற குருமுறையும் கைமுறையும் வேண்டும் மறுகாட்டாவிதெல்லாம் வாதம்போச்சே
8.
போகாமல் வாதத்தை நிறுத்தவென்றால் போக்கோடே சவர்க்காரக் குருவைப்பண்ணு
வாகாக முப்பைநன்றாய் கட்டியிறு மருவியதன் பூரத்தையுப்பு பண்ணு
தாகாறும் தாளகத்தை நீறுபண்ணு சமர்த்துடனே வங்கத்தை சுண்ணம்பண்ணு
வேகாத துரிசியைத்தான் குருவாய்ப்பண்ணு விளங்கியதோர் வாதமெல்லாம்
கைக்குள்ளாச்சே

9.
கரிமுகன் பதம் போற்றி கடவுள் பதம் போற்றி கடாட்சித்து எனையீன்ற ஆயிபதம் போற்றி
அரிஅயன் பதம் போற்றி வாணி பதம் போற்றி அருள்தந்த லட்சுமிதான் ஆயிபதம்போற்றி
வரியமாம் பாட்டனென்ற மூவர்பதம் போற்றி துணையான காளாங்கி அய்யர்பதம்போற்றி
நிரிவிகற்ப சமாதியுற்ற ரிஷிகள்பதம் போற்றி நிறைந்துநின்ற சரளமே காப்புதானே
10.
தானான ஏழுலட்சம் சிவன்தான் சொன்ன சாஸ்திரத்தின் கருவெல்லாம் திரிக்கப்பண்ணி
கோனான குருநூலாம் ஏழுகாண்டம் கொட்டினேன் வாதமென்ற முறைதடன்னை
பானான பாட்டுரைதான் கருக்கள் கேட்டு பயின்றெடுத்த ஆயிசொன்ன பண்புகேட்டு
தேனான காளாங்கி ஐயரையுங் கேட்டு செப்பினேன் சத்தகாண்டம் திறமாய்த்தானே
11.
காணவே மூலமது அண்டம்போல காரணமாய் திரிகோணமாகி நிற்கும்
பூணவே மூன்றின்மேல் வளையமாகும் பிரம்பாக இதழதுதான் தானுமாகும்
நாணவோ நாற்கமலத்து அட்சரத்தைக்கேளு நலமான வயநமசி ரீரீயாகும்
மூணவே முக்கோணத்துள் ஒளிஓங்காரம் முயற்சியால் அதற்குள்ளே யகாரமாச்சே
12.
அகாரத்தின் மேலாக கணேசன் நிற்பார் ஆதியொருகோணத்தில் உகாரம்நிற்கும்
உகாரத்தின் வல்லமையால் சக்தி நிற்பாள் ஒடுங்கியதோர் மூலையொன்றில் கதலிப்பூவாய்
புகாரமாய் முகங்கீழ் குண்டலியாஞ்சக்தி பெண்பாம்புபோல் சுருட்டி சீறிக்கொண்டு
சுதாரமாய் சுழிமுனையோடு உருவிநிற்பாள் துரியாதீதமென்ற அவத்தைதானே
13.
அவத்தைக்கு இருப்பிடம் மூலமாகும் அழகான கதலிப்பூ எட்டிதழாய் நிற்கும்
நவத்திற்கு நந்தியநூல் வாயில்நிற்பாள்நற்சிவமாம் சிகாரத்தில் கோடியாகும்
வவத்தைக்கும் வாய்திறவான் மலனால்மூடும் மைந்தனே எட்டிதழில் எட்டுசக்தி
பவத்தைக்கு சக்திஎட்டின் பேரேதென்றால் பாங்கான அனிமாவும் லகிமாத்தானே
14.
தானான லகிமாவும் கிரிமாவோடு தங்குமே சுரக்கத்தான் சத்தில்சத்து
பூனான பிரதாசத்தி பிரகாமிசத்தி பேரேட்டுத்தேவரையும் தளத்தில் நின்று
ஏனான இதழாலே மூடிக்கொள்வார் ஏத்தமாம் நந்தியைத்தான் காணாமையால்
வானான வஸ்துவைநீ பாணம்பண்ணி வங்கென்று வாங்கியே கும்பித்ததே
15.
ஊதினால் என்வாசத்தில் அகரியாலே உலவுவார் இதழெல்லாம் திறந்துவிட்டு
போதினால் ஆயிசொன்ன ஏவல் கேளப்பா பூந்துபார் நந்திகண்டால் யோகமாகும்
வாதினால் பத்தான வருவித்திக்கும் வாசலையே திறவாமல் மூடிக்கொள்வர்
ஏதினால் இதுக்குல்லே வாசிமாட்டு இடத்தோடி வங்கென்றே உள்ளேவாங்கே
16.
வாங்கியே நந்திதனில் சிங்கென்றுகும்பி வலத்தோடில் சிங்கென்று உள்ளேவாங்கி
தாங்கியே வங்கென்று இருத்திக்கும்பி தளமான தெளிவாகும் வெளியால்காணும்
ஓங்கியே மாணிக்க ஒளிபோல்தோன்றும் உத்தமனே மூலத்தின் உண்மைகாணும்
தேங்கிய வல்லமையாஞ்சத்தி தானும் சிறந்திருந்தால் பச்சைநிறமாகுந்தானே

17.
பச்சைநிற வல்லமையை பணிந்துபோற்று பாங்கான யாருக்கும் பருவம்சொன்னால்
மொச்சையாய் மூலமது சத்தியானால் மூவுலகும் சஞ்சரித்து திரியலாகும்
கச்சைநிற காயமுமே கனிந்துமின்னும் கசடகன்று ஆறுதளம் தன்னில்தோன்றும்
துச்சைநிற வாதமது சொன்னபடிகேட்கும் துரியத்தின் சூட்சமெல்லாம் தோன்றும்பாரே
18.
பாரென்று புரிஅஷ்ட நாவில்சேர்க்கும் பளிச்சென்று மூலத்தில் ஜோதிகாணும்
காரென்ற தீபவொளி கண்ணோகூசும் கணபதிதான்கண்முன்னே நிர்த்தம்செய்வார்
ஊரென்ற யோகத்துக்கு உறுதிசொல்வார் உற்பணமாம் வாதத்தின் உண்மைசொல்வார்
நேரென்ற சதாசிவத்தின் நிலையும் சொல்வார் நீச்சென்று விட்டாக்கால் யோகம்போச்சே
19.
போச்சென்று விடுக்காதே மூலந்தன்னை போகையிலும் இருக்கையிரு மனத்தில்பூனு
சேச்சென்ற வீரசத்தம் கேளாய்பக்கம் புரந்திருந்து லட்சியத்தை பூட்டி வாங்கு
மாச்சென்று வாசியைநீ தவறொட்டாதே மனந்தன்னை மூலத்தில் மருவிச்சேர்க்கும்
மேச்சென்று கடினம்போல் முன்னேகாணும் விடுகாதே மாச்சலாய் விரைந்துண்ணே
20.
உன்னியே பழகுமட்டும் கடுக்காய்காணும் உட்புகுந்து பார்த்துவந்தால் உறுதிகூடும்
வன்னியே துலங்குமட்டும் மனதலைக்கும் மாசற்றொளிவு கண்டால் மகிழ்ச்சியாகும்
பின்னியே பிங்கலையில் இசையும்கூடும் பேரானசுழினைதன்னில் கெட்டிசேரும்
நன்னியே நமன்வெகுன்டு அப்பால்போவான் ஆளெல்லாம் கடிகையுமாய் நாட்டலாமே
21. **வாசியோகம்**
நாட்டமாய் லகுவாக மூலம்பாரு நலமான வாசிகொண்டு ஊதியூதி
ஊட்டமாய் சாக்கிரத்தில் நின்றுநின்று உத்தமனே நந்திகண்டால் வாதங்காணும்
தூட்டமாய் வெறும்பேச்சால் வார்த்தைசொன்னால் சுடுகாட்டுப்பிணமாக சொல்லுக்கொக்கும்
பூட்டுவாய் மூலத்தின் ஒளிகாண்மட்டும் பொற்கொடிபோல் சுழிமுனையும் திறந்துபோகும்
22.
சுழிமுனையே திறந்தாக்கால் மனமொடுங்கும் சுழியிலே அகப்பட்ட துரும்புபோலாம்
வழிமுனையே ஆதாரம் ஏறலாகும் மகத்தான சித்தியது எட்டுவாகும்
சுழிமுனையாஞ் சுழித்துள்ளே அழித்திடாது கணக்கோடே வாசியென்ற குதிரையேறு
சுழிமுனையில் இருந்தாக்கால் அங்கொன்றுமில்லை
23.
ஏறவே ஐம்புலனும் உலக்கையாக விடும்பான ஆங்காரம் உரலுமாக
ஆறவே ஆசையது உருவமாக வழுப்பான மனதை உள்ளெகாட்டிக்கொண்டு
மூறவே ஆசையதை அடித்துத்தள்ளி முழுமோசமாகியல்லோ பிரலப்பண்ணும்
தேறவே யோகம்முதல் ஞானம்ரெண்டும் தெரியாதே இறந்தவர்கள் கோடிதானே
24.
கோடியென்ற நரஜென்மம் மண்ணாசையாலும் குணமான ஆசையுட தீனியாலும்
ஓடியென்ற மோகத்தில் பெண்ணாசையாலும் மோகத்தால் பூட்டுகின்ற பொன்னாசையாலும்
தூடியென்ற சுகபோக சுகியினாலும் துலையாத பாகத்தின் மயக்கத்தாலும்
வாடியிந்த உலகமெலாம் மயக்கமாச்சு மக்களே வாய்ஞானம் பேச்சுமாச்சே

25.
ஆச்சென்ற பேச்சாலே ஒன்றுமில்லை அரிதான சாத்திரத்தை ஆராய்ந்து பார்த்து
மூச்சென்ற மூச்சாலே சகலஜனமிறந்தார் மூச்சடங்கி சாகாமல் முயற்சிகேளு
நாச்சென்ற நடுமூலம் கண்டத்தூன்றி நலியாமல் வுடவீட்டில் கட்டி
தோச்சென்ற தேசியெங்கும் ஓடாதப்பா சோடகத்தில் சீவகளை இருப்புமாமே
26.
இருப்பான மூலத்தில் கணேசன்பாதம் இருத்தியே வாசியைநீ அதற்குள்மாட்டு
தடுப்பான பிராணயந்தான் தவறிற்றானால் தம்பித்து வரவழைத்து தளத்தில்சேரு
குறிப்பான மாத்திரைதான் ஏற ஏறக் குறிகளெல்லாம் குறிப்பாக வடிவம்தோன்றும்
மதிப்பான வாசியது வழுவிற்றானால் மனிதரெல்லாம் மாடென்ற வார்த்தைதாமே
27.
வார்த்தையால் தாக்கத்தால் ஒன்றுமில்லை வல்லமையால் ஐம்புலனை அடுத்துக்கட்டி
ஆர்த்தையால் அக்கரத்தை விழிரெண்டில்வைத்து அறிவான மனந்தன்னை
அதற்குள்மாட்டி
தேர்த்தையால் தேசியென்ற குதிரைதன்னை சிக்கெனவாய் சிங்கென்று கடிவாளம்பூட்டி
மூர்த்தையால் மூலத்தில் மறிந்துகட்டி முனையான சுழினைவிட்டு மூட்டில்பாரே
28.
மூட்டியே அதுவுண்ணும் கற்பமுண்ணும் மூதண்டை காயத்தைசுத்தி பண்ணும்
காட்டியே கனமான மூலிகையுமுண்ணும் கசடகற்றும் கழுகனத்தில்
கண்ணொளிதான்மீறும்
ஆட்டியே அண்ணாக்கில் கபத்தைதள்ளி அடுத்தாறு தளத்திலுள்ள ஆமம்நீக்கும்
வாட்டியே ஐம்புலனை வாளால்வீசு மறவாதே இரவுபகல் வாசிவாட்டே
29.
மாட்டவே மார்க்கமாய் மூலத்தில் நில்லு மறவாதேயொன்றில் நின்றுதேறினாக்கால்
ஆட்டவே அடிமரத்தைதொத்தியேற ஆச்சர்யம் நுனிமட்டும் ஏறலாகும்
மூட்டவே மூலமதுபழகினாக்கால் முகிந்தவிடமாறுகடந்தப்பால் தாண்டி
தூண்டவே துவாதசாந்தத்தில் சொக்கிச் சுருதிமுடிந்திடமறிந்து சேரலாமே
30.
சேரவே சகஸ்திரமா முண்டகத்தின் பூவைச்சேர்ந்தேறிச் சந்திரமண்டலத்தில் புக்கு
ஆரவே அறிவென்ற மனதால்கொய்து ஆனைமுகன் வல்லபைக்குங்
குண்டலியாந்தாய்க்கும்
பாரவே பதத்தில்வைத்து அர்சித்துத்தூபம் பலதூபம்பணிமாரி விவேகத்தாலே
தூரவே சோமப்பாலுகந்தளித்து தூயநால்மூலத்தில் குதிரைமுனைகட்டே
31.
கட்டியே அஞ்சலிபண்ணி குண்டலியாந்தாயைமனதில்வைத்து கணபதிவல்லபைத்தானும்
மூட்டியே முகிழ்ந்திரந்து வழிதாவென்று முனையானசத்தியென்பாய் மயக்கந்தீர
தெட்டியே வஸ்துவைத்தான் பாணம்பண்ணி செயலறிந்து கபாடமதுதிறப்பாரப்பா
எட்டியே நந்திபதமிறைஞ்சி போற்று ஏற்றமாந்தொழிலெல்லாம் எளிதிலாமே
32.
எளிதிலே நந்திவந்து இரக்கமாகி எட்டாமறுபத்துநாலுமீவார்
நெறியிலே வாதங்கைகட்டிநிற்கும் நீச்சான குருவகைகள் நிஜமாய்தோன்றும்
களியிலே காயமதுசித்தியாகும் கருத்தூனித்தான் வாய்க்கக்கலந்துபோவாய்
அளிகிலே ஆலமுண்டான் ஆட்டுக்காணும் மாச்சரியம் சிலம்பொலியும் மயக்குமாமே

33.
அயிக்கமாய் விழுகாதே காமத்தீயில் அனுதினமும் வேதாந்தமுடிவைப்பாரு
ஒயிக்கமாய் ஒருவருடன் வாயாடாதே உண்மையாயிருந்து உன்னில் உண்ணிப்பாரு
தியக்கமாய் பொய்கொலைகள் செய்திடாதே சேர்த்தேறு வாசியென்ற தேசிதன்னில்
மயக்கமாய் வஸ்துவைநீ பாணம்பண்ணி மத்தாலேயழியாதே மாய்கைநீக்கே
34.
நீக்கியே ஐம்புலனை அருத்துசாடு நித்திரையைத் தள்ளிவிட்டு காலைப்பண்ணு
தூத்தமரே சகபூதந்தானும் சுயம்பான கும்பகமும் கணக்காய்சூட்டு
தாக்கியே அமுர்தவெல்லந்தன்னையுண்ணு சங்கற்பவிகற்பமென்ற சட்டைநீக்கு
வாக்கியே பிராணயம் வரிசைதன்னை மறவாமல் மாட்டுதற்கு மார்க்கஞ்செய்யே
35.
செய்துமே யுற்றுப்பார் கருத்தையூனித் திகையாதே புலன்களோடு கணேசன் காண்பார்
கொய்த்துமே பூசைபண்ணி குட்டிக்கொண்டு கூர்ந்துமே வாசிதன்னை இருத்திவைத்து
ஒய்த்துமே ஓம்சிறியும் கிறியுங்கிளியும் உயரயெங்கணபதி யென்றுச்சரிக்க
நய்ந்துமே நந்தியர்கொடிக்கதிர் கொப்பு நற்சுழியில் ஒளிகண்டால் நமநாடானே
36.
நாடாமற் போவதென்ன என்றுகேட்க நற்சத்த பரிசமொடுரூபம் ரசகெந்தி
தாடாமல் சத்தோடு பொறிகளாஞ்சாந் தனக்கேற்ற வழிப்போக்கில் மனந்தானோடும்
தேடாமல் காதையைநீ போற்றினாக்கால் சொல்லொன்று கேளாது சூட்டிப்பாரே
37.
சூட்டிப்பார் இன்னமும்நீ பரிட்சைகேளு துடித்தன்னை போற்றிடிலோ ரூபங்காணார்
ஊட்டிப்பார் அமுதந்தன்னை அசைத்துக்கொண்டால் வளமானவாசமொன்றும் தோன்றிடாது
ஊட்டிப்பார் வாய்தன்னில் உப்பையிட்டால் உருக்கறிச்சு உப்பென்ற ருசியேகாணும்
ஒட்டிப்பார் என்பது மூடலிலூர்ந்தாலேற்றமாம் அறிவாலே பரிசமாச்சே
38.
ஆச்சிசிந்தனை வேரால் நின்றாயானால் அரிருமாகா மந்திரியின் வேகமாச்சு
ஒச்சிந்து மனத்துணித்தம் பிராணயாமம் உகந்தேறி வாசியைநீ பிடித்தேபூரி
முச்சிந்த மூலத்தில் முதிர்ந்துகும்மி முனையான வயமுமாச்சு விவரிடாமல்
காச்சிந்த மூலத்தில் நின்றுநின்று கதறக்கண்டு தெரியும் மேலேயேறே
39.
ஏறியே பாரென்று ஐயர்சொன்னார் எனையீன்ற ஆயர்காளாங்கிநாதர்
பாருஇது வழியென்று பக்குவத்திச்சொன்னார் பதஞ்சலியும் வியாக்கிரமர் சிவயோகமும்
மீறியோ அதற்குவிளக்கஞ்சொன்னார் மிக்கபராபரித்தாயும் இதுவேசொன்னாள்
ஆரியோ தான்பார்த்து ஆறுவத்தை அநுபவித்து ஏழாயிரத்தில் அமைத்திட்டேனே
40.
அமைத்திட்ட சிகாரமென்ற அட்சரத்தா மழும்பாகான்வெளியில்லாகனமே செய்வார்
வெளிதன்னில் கூகூகூகூ நமைத்திட்டொரு சொல்லால் ஏழுகோடி
காகமெனும்விரவியென்ற கடலில் வீழ்வார்
சிமைத்திட்ட சித்தமெல்லாம் மூலத்துள்ளே சிக்கென்று உன்னியே தியானிப்பாரே

41.
தியானித்து உள்ளடக்கி பூசைசெய்வார் செயகண்டி சங்கோசை காதில்கேட்கும்
தியானிப்பார் சிலம்பொலியின் ஓசைகேட்கும் சிதம்பரமாம் நடனத்தின்செய்துங்காணும்
தியானிப்பார் சச்சிதானந்தவெள்ளம் திகட்டாமதுண்டிப்பார் தேவிமீவாள்
தியானிப்பார் அனுதினமும் சிவன்தேவி பத்ததில் திடமாகமனவிலங்கு மாட்டுவாரே
42.
மாட்டியே மனவிலங்கை பூட்டிக்கொண்டு மகிழ்ச்சியாய் ஆனந்தமயமுமாகி
பூட்டியே வாசியைத்தான் கும்பித்துக்கொண்டு பிறளாமல் தம்பித்து நிற்பாரையா
நாட்டியே மனமொன்றாய் திடாகரித்து நாதாந்தபெருவழியே நாடுவார்கள்
தூட்டியே துவாதசாந்தத்தில் புக்கிசுருதியந்தத்துள் இருந்து துதிசெய்வாரே
43.
துதிசெய்து மூலதனந்தாண்டியப்பால் துடியான நாலங்குலமே தாண்ட
பதிசெய்த பிரமனுட வீடுமாகும் பகர்ந்த சுவாதிஷ்டான மென்றுபேரு
அதிசெய நால்வட்டக வளபஞ்சுத்தம் ஆறிதன் தானட்சரத்தை யறியக்கேளு
பதிசெய்த சுயபிரமர் யாரவர்தான் நடுபீசம்லங்னம் ஆமே
44.
சகாரமென் றெழுத்ததுவும் பிரமர்க்காகும் வாவென்ற எழுத்ததுவும் பிரிதிவிபீசம்
யகாரமென்ற துரியாதிக்கிருப்பிடம்தான் புகளுகின்ற இருக்கான வேதமாகும்
அகாரமென்ற அன்னமாம் வாகனந்தா னதினுடையநிறம் பொன்னிறமுமாகும்
மகாருகின்ற இவருடைய தொழிலின்கூறு மயிரெலும்பு இறைச்சிதோல் சரம்போடஞ்சே
45.
அஞ்சான பொன்னிற பிரமன்பக்க கடந்தால் வாணிநிற்பாள் அறிந்துகொள்ளு
தஞ்சான சதுரமுகமுப்பை அவர்தம்தண்டுகமண்டலமும் அட்சதமாலையோடு
பஞ்சான பதமதனம் பிரம்மணிமாலை பகர்ந்தநவரத்தினமாங் கிரிடத்தோடு
திஞ்சான தியானித்து வேசியைத்தான் கிரந்தசபா மந்திரத்தை செபித்து உண்ணே
46.
உண்ணியே சரஸ்பதியை தியானித்தூதி உறுதியாய் பெறுதற்கு உண்மைகேளு
கண்ணியே சகலவித்தை தருந்தாய்நீயே தயாநிதியே சிங்குவையில் தரிக்குந்தாயே
முன்னியே நீபிரிந்தால் மோடனாவான் முனிந்துநீ முன்னின்றால் மூத்தனாவான்
கன்னியே போகசித்தி வாதசித்தி காயசித்தி ஞானசித்தி கடாட்சியெண்ணே
47.
என்றுமே தியானித்து வாசிவைத்து யிழுத்துமேகம்மென்று இருத்திக்கும்பி
என்றுமே சகாரத்தால் வியந்தோர்கோடி நல்வினைக்கும் தீவினைக்கும் எருத்தகடா
என்றுமே தியானித்து இருக்கநன்று ஏத்தமலர்கொண்டு அர்ச்சித்தேற்ற
அகன்றுமே நான்முகன் தன்பதியைவிட்டு அடியதிந்த மாலினுட பதியிரைக்கே
48.
மாலினுட வீடதுதான் அருவிரலின்மேலே மாசற்றபிறைபோல கோட்டையாகும்
மாலினுட விலையம்போல் பத்திதழ்தான் பத்தில் மகத்தான லட்சத்தின் பயனைக்கேளு
தாலினுட ஜனகமகா முனியின்தாயார் தயங்காதநரபர்ப்பர் தன்மையாகும்
ஆயினுடமங்கண்டு வில்பூதமப்பு அதன்பீசம் வங்கென்றறியலாமே

# மணிபூரகம்

49.
அறிந்தமணி பூரத்தின்வீடுமாகும் அப்பனே துரியமதுயிருப்பிடந்தான்
பிரிந்தேசா வேதமுமாம் படிகவர்ணம் பிரியாமல் லட்சுமிதான் வாம்பாகம்
கறிந்தஅறு சுவையுமங்கே காணலாகும் கதிர்த்தநீர் மச்சையொடு உதிரமூளை
வெறித்ததோர் விந்துவொடு அஞ்சமாகும் மிக்கசங்குசக்கரமும் கருடவாகனமே
50.
வாகனமாய் லட்சுமியின் சமேதர்பக்கம் வாசியொடு மங்கென்று இருத்திக்கும்பி
ஆகனமாயரிநமோ நாராயணாவென்று அனுசரித்து செபம்செய்து அஞ்சல்பண்ணு
தேகனமாய் ஜெகமெல்லாம் ரட்சிக்கும்தாய்தான் திரோதமையுமயக்கத்தில் சுழற்றுமேதான்
மோகனமாய் மோகமெல்லா மானவீடு மூச்சிரைச்சி குடியிருந்த முதிர்ந்தவீடே
51.
வீடாகதிரோதகையு மிருந்தவீடு வெகுபோகங்காமியத்தைவிடுத்தவீடே
வாசாமனங்கலங்கி நின்றவீடு மாயமெல்லாங்குடிகொண்ட மகத்தாம்வீடு
பேடாக்கருத்தழிந்து பெண்ணைத்தேடி பேய்க்கூத்தாய் நின்றலைந்த பெரியவீடு
சாகாவரம் பழித்த சாதிவீடு தன்வசமாய் வாசிகொண்டு தாக்கிடாயே
52.
தாக்கியே சந்திரமண்டலத்தில் பூவை சகஸ்திரமாமிதழாலே தரிக்கப்பண்ணி
பாக்கியே பலபலதூபந்தானும் பண்பாக மனத்தாலே பாவகமேபண்ணி
ஆக்கியே மேலேற அருள்தாவென்று அஷ்டசித்து தந்துமே அனுப்பநன்று
போக்கியே ஐம்புலனைப் பொறியின்பக்கம் போகாமல் நிறுத்தவென்று போற்றிசெய்யே
53.
செய்யவே மாலொடுலட்சுமிதானும் சித்தமகிழ்ந்தப்போது சித்தியீவார்
பையவே ஏறுதற்கு பலனுஞ்சொல்வார் பலபலவாந்தொழிலுனுட பக்குவமேசொல்வார்
உய்யவே இரக்காமல் சடந்தானிருந்த உறுதியாம் யோகத்துக்குண்மை சொல்வார்
ஐயவே அஷ்டாங்கமனைத்தும் பார்க்க அதற்கதற்கு வங்கமெலாம் அறிவிப்பாரே

# அநாகதம்

54.
அறிவுக்கு மேலேறி யெட்டங்குலத்துக்கப்பால் அனாகதத்தின் வீட்டைக்கேளு
முறிவுக்கு முக்கோணமாருதற்கு முதிர்வளையம் பனிரெண்டிதழுமாகும்
பிரிவுக்கு சாகாவாகா சாகாபேரான சகசகானூடாட டாவாரூபமே
இறிவுக்குயிதமில் நிற்கும் அட்சரந்தான் ஏற்றமாஞ்சழித்திய துக்கிருப்புமாமே
55.
ஆமென்ற சிகாரத்தின் எடுத்தூடுவாகும் ஆண்மையாய் பூதமதுதேயுதானாகும்
தேனென்ன செம்மைநிறச் சிவப்புமாகும் தேய்வுடபீசமது றவ்வுமாகும்
ஒமென்ற வொளிகோடி பானுவாரும் ருத்திரனும் ருத்திரியும் நடுவேநிற்பார்
கோமென்ற அவருடைய குணமேதென்னில் கொடும்பொசிப்புஞ் சோம்பலொடு பயமுந்தூங்கே

56.
தூங்கவே எழுப்பிமெல்ல பெண்ணைசேர்க்கும் சுகமஞ்சுஞ்சிவன்கைக்குள்
தொழில்தானப்பா
ஓங்கவே ரத்தினசிம்மாசனமுமாகும் உமாசத்தியாகுமடா அஸ்திமாலை
மாங்கவே மான்மழுவும் வரிப்புலித்தோல் மகரகொடி சூரியப்பிரகாசமாகும்
தாங்கவே தேவதேவா சர்ப்பாசனம்தரித்த தாயார்தாமே
57.
தாமென்றே தியானித்து வாசியைநீவைத்து தம்பித்து ஓம்அம்அம்உம் சிவாயநமாவென்று
ஓமென்று உன்னியே உத்தமிதாய்பதத்தை உறுதியாய் மனந்தன்னை ஓங்கப்பண்ணி
ஆமென்று ஐம்புலனை பறிவாய்தள்ளி ஆதிஅந்தமில்லா தாயே என்று
காமென்று கடாட்சித்து அருள்தாவென்று கருத்தாகமனந்தன்னை ஒளியில்வையே
58.
ஒளியான நந்திவாகனமுமாகும் ஒருசாமவேதத்தி னுருப்புமாகும்
கனியான காமப்பால் மாச்சல்செய்து கடுநரையுந் திரையோடு கண்புகைச்சலாகி
வெளியான சடமழிந்து விந்தையூற்றி வெறுங்கூத்தாய் ஞானமெல்லாம் விழலாய்ப்பண்ணும்
கொளியான இவருடைய கூத்தையெல்லாம் கண்டுகும்பித்து குறியோடேகூர்ந்திடாயே
59.
கூர்ந்திட்டாடு வளையில் காந்திதானும் கூகைக்குமாக்காலம் குறிகண்டாப்போல
ஆர்த்திட்டு அவர்பதத்தில் மனவிலங்குமாட்டி அறிவோடே அசையாமல் அடற்குள்நின்று
ஏர்ந்திட்ட ஏறுதற்கு வழியைக்கேட்டு எட்டெட்டு சித்திக்கும் இயல்புவாங்கி
வார்த்திட்டு வாதத்தின் இனங்களெல்லாம் கேட்டு வகையான காயசித்தி மார்க்கங்கேளே
60.
கேளுமே சந்திரமண்டலத்தில் புக்கி கெடியான மலர்வாங்கி பதத்தில்வைத்து
தேளுமே சிவனோடு சத்திக்குந்தான்சிதையாமல் மனந்தன்னைதிருவடிசேவித்து
வாழுமே மந்திரத்தையுன்னியுன்னி வாசியைநீ மறவாமல் மருவிப்பூட்டி
மாளுமே நீயகற்றித் தூயதீபமாறச் சித்துவிடைதானே சுருக்காயேறே

## <u>விசுத்தி</u>

61.
ஏறியே பனிரெண்டங்குலமே தாண்டி ஏத்தமாம் விசுத்தியென்ற தலமுமாகும்
மாறவே அருகோணவளையமொன்று மகத்துவமாம் பதினாறு இதழுமாகும்
ஆறவே இதழுக்கு அட்சரந்தான் அஆஇஈஉஊ வாமதுரவெயிரோ இல்லோ
துனையான எ ஐ ஒ ஔ அம் அம் ஆமே
62.
ஆம்முதலாய் பதினாறுஎழுத்துமிட்டு அறுகோண நடுவேதான் வகாரம்நிற்கும்
வாமுதலாய் மஹேஸ்வரனும் மஹேஸ்வரியும் நிற்பார் மகத்தானசொப்பணத்தின்
இருப்புமாகும்
பூமுதலாய் பூதமதுவாயுமாகும் புகழானபீசமது அங்குமாகும்
நாமுதலாய் தாணவேதாந்தானாகும் சபலமனோவேகமாய் நாடலாமே

63.
நாட்டமாய் இவருடைய தொழிலுநன்றாய் நடத்தலொடு ஓட்டல்மயங்கிக்கிடத்தல்
நீட்டமாய் நிறுத்தலொடு கலங்காமலிருத்தல் நிலையஞ்சின் விபரத்தை நிலைக்கக்கேளு
பூட்டமாய் பொசித்தலொடு ராகங்கேட்கல் பொங்கியே கோபஞ்சண்டை சினமடைத்தாங்கல்
ஓட்டமாய் ஓங்காரம் உன்னைக்கண்டால் உயர்வாயை திறந்திடுதல் உருதிகாணே
64.
உறுதியாம் ருசியாறு வாயினுள்ளே உரிசைதான் வாயினுக்கு பாலுமில்லை
பறுதியாம் பரமென்ற பீடமப்பா பரத்தி என்றுமோர் பண்புமாகும்
கிறிதியாமைப் பொறியின் கணையைவாங்கி பிசகாமல் நாலதனிலொக்கசேர்த்து
அறுதியாம் ஆதாரமெல்லாம் பார்த்து அப்பனே நாலுக்குள் அனைத்திடாயே
65.
அனைத்திட்ட நாலுக்குள் சிங்கென்றூணு ஆதியாம் ஓம்நமசிவாயாவென்றே
துளைத்திட்டு வாசியைநீ வாயிலூட்டில் சுருக்கிட்டு கட்டிடவே ஓடாதப்பா
பழைத்திட்டு பதினாறு தலத்தில்தானும் பாங்கான சீவகளை இருப்புமாகும்
தினைத்திட்ட சீவகளை இருந்தத்தானே சிறப்பாக பாடிவிக்கும் திறமையாமே
66.
திறமையோ புரிசையொடு உண்ணப்பண்ணும் சீவகளை இருந்துகொண்டு எட்டுநாளாய்
புறமையா இருந்துகொண்டு நாவும்பாழாய் புத்தியுள்ள சீவகளை மதிபோல்தேய்ந்து
நலுமையாய் நறைதிறையாய்ச்சேரமாண்டு நலமான ஜீவகளை போகுவதைக்காணார்
குறமையாம் நாதமது கண்டத்திற்காணும் குறிப்பான திரோதகையின் கூற்றுதானே
67.
தானான வாய்வுட வீட்டில்நின்று தம்பித்து ஆத்தாளைத்தான் விலங்குபூட்டி
போனான சந்திரன் மண்டலத்தில்பூவால் போற்றியே அடிவணங்கி வாசிபூட்டி
தேனான மேலேற வழிதாவென்று சுத்தசைதன்னிபத்தைத் தோத்தரித்து
வானான வாதசித்தி யோகசித்தி மகாசித்தி யோகசித்தி மார்க்கங்கேளே
68.
மார்க்கமாய் மந்திரத்தை யுன்னியுன்னி வாசியைநீ மறவாமல் மருவியூட்டி
ஆர்க்கமாய் வங்கென்று கும்பித்துநிற்கில் ஆத்தாளும் அய்யருமே யுளமகிழ்ந்து
மார்க்கமாய் வாதத்தின் வழிதான்சொல்லி வரிசையோடேறுதற்கு வழியுஞ்சொல்வார்
ஊக்கமாம் மஹேஸ்பரத்தின் பதியைவிங்கு உயர்ந்தேறி பதினோரங்குலமேலேயேறே
69.
மேலேறி இரண்டு புருவமத்தியில் மிகையான அண்டம்போல் நிற்குமப்பா
மேலேறி வட்டமாம் வீடுபோலே வளையமொன்று ரெண்டிதழ்தான் எரஷரிவாகும்
ஆலேறி ஆங்கென்ற அட்சரந்தான் நடுவே ஆகாசபூதமாம் பூதபீசம்
மானேறி மனோன்மணியும் சதாசிவனும் நிற்பார் மவத்தைதான் சாக்கிரத்தின்வீடுமாமே
70.
வீடுமாம் வர்ணமது மேகவர்ணம் விலங்குகின்ற தொழிலதுதான் காமம்குரோதம்
வாடுவாம் லோபமொடு மோகமாகும் மதமாச்சரியத்தோடு அஞ்சாகும்
நாடுநான் முகன்மாலுஞ் சிவன்மஹேஸன் நலமாக காப்பார்கள் திகைத்துதானும்
தானுசதாசிவன் தானும் தளவாயாருந் தளவாயை கண்டாக்கால் சகலமாமே

71.
தளவாயை கண்டாக்கால் சம்சயந்தான்தீரும் சங்கற்பவகற்ப மென்ற சட்டைநீக்கும்
தளவாயை கண்டாக்கால் தாயோடே சேர்ப்பார் சச்சிதானந்தத்தின் தன்மைகாண்பார்
தளவாயை கண்டாக்கால் சகலசித்துமாகும் தனைவானோடொத்த கள்ளனைந்து நிறமாகும்
தளவாயை ஐம்பத்தொன்றில் காணாதப்பா சாங்கமாயரைத்து நீ வாசிமாட்டே
72.
உரைத்துமே ஆக்கினையாஞ் சாக்கிரத்தில் உகந்துமே மனோன்மணியை உச்சரித்து
மரைத்துமே மந்திரத்தை சொல்லக்கேளும் மருவு கா ஏ இன் கூ ஆகல இரியுமாகும்
அரைத்தும் அசைகன் இரியுமாரு அதின்பின்பு அதிகழாயிரமமாகும்
உரைத்தும் மூக்கண்ட பஞ்சதேசாவிது உச்சரியே முனிந்துமேயுச்சரித்து மூட்டுநீயே
73.
மூட்டியே தாயாருட பதத்தைக்கண்டால் முஷ்காரமாய் கையெல்லாம் ஒருந்துட்போகும்
நாட்டியே யெடோட நாலுங்கூட்டி நாதாந்த சித்தயெல்லாம் சணத்திலாகும்
மாட்டியே தமருக்குள் புகுதலாகும் மயிர்ப்பான நெருப்பாறு கடக்கலாகும்
நீட்டியே நிராதாரம் அறியலாகும் நிச்சயமாய்க் குடுகளெல்லா நினைக்கலாமே
74.
நினைக்கவே ஐம்புலனும் ஒடுங்கிப்போகும் நோய்மூப்பு சாடுநரை திரையும்போகும்
கனைக்கவே காயசித்தி வாதசித்துங் காணும் கண்ணிமைக்குள் போற்றுயிர் கடிகிமீளும்
அனைக்கவே சாக்கிரத்தில் இருந்துகொண்டு ஆயியொடு அப்பனுந்தான் கூத்தும்பார்த்து
தனைக்கவே சரியொடு கிரிகையோகம் சார்ந்ததோர் ஞானமெல்லாம் தானானாரே
75.
தானான மனோன்மணியைத் தாண்டியப்பால் தணிந்ததோ ரெட்டுவிரல் மேலேகேளு
கோனான குருபதந்தான் கூட்டிப்பாரு குறிப்பான புகழ்காணார் ஆயிரத்தெட்டு
ஆனான நடுமையம் ஐங்கோணமாகும் அகராமாமகாரமொடு மகாரமாகும்
நானான நாதமொடு விந்து அஞ்சும் வந்தமந்தாம் ஐங்கோணத்தில் நிற்கும்பாரே
76.
பார்க்கவே உகாரமா நடுமையத்தில் பரிசுத்த ஒளியாகி உதிக்கும்பாரு
பார்க்கவே நிகராத நிர்மலன் தன்வடிவாம் பார்த்ததொரு வாசியைத்தான் அதற்குள்வைத்து
நேர்க்கவே ஓடாமல் நிறுத்திப்பாரு நிலையாத பிரவியரும் பூரணமுட்கொள்ளும்
ஆர்க்கவே யடிவாழ வேதாந்தத்தின் ஆதிபொருள் ஒருவர்க்கு அறியொண்ணாதே
77.
அறியொணா பிரமாந்திரம் என்றுபேரு அதிலுடைய நிறந்தானும் படிகவர்ணம்
நெறியொண்ணா காயத்ரியாகலின்னா நித்யநித்ய நிருபமாகும் நித்யசுத்த
பறியெண்ணாம் பரிபூரண சச்சிதானந்த பகாரிய நிரஞ்சன வித்துவங்கே
நெறியொண்ணா நிற்பாகா யதிமசியாம் மெறிவதனுசூட தம்பிரசோதயாதே

## <u>ஆராதார தெரிசனம் காயத்திரி</u>

78.
தேயென்ற யிருபத்தி நாலாய்நின்ற தெளிவான காயத்திரி தனைச்செயித்து
வாவென்று வாசியைநீ இருத்திவைத்து மனந்தன்னைப் போறவழி போகொட்டாமல்
தேயென்று இருத்தியே கும்பித்துக்கொண்டு சிற்சொருப காயத்திரி தணிற்செயிக்க
பூவென்ற பிறவியற்ற பூரணத்தில் லயிப்பாய் போக்குமில்லை வரவுமில்லை பொருளுமாச்சே

79.
பொருளாக மேலேறி துவாதசந்தான் போக்கோடே பதினொன்றாய் பிரித்துப்பாரு
அருளான உன்மனையில் எட்டுசத்தி மருளான பரையொன்று பறந்தானொன்று
தெருளான பதினொன்றுஞ் செப்பினேன்நான் செப்பரிது காரணந்தான் அடியேன்காணேன்
நருளான நந்தியேழாயிரத்தில் நாட்டினார் நல்லநீவை நான்காணேனே
80.
காணாத மார்க்கமெல்லாம் காணும்நேராய் கடுசாகமுனைமுகத்தில் கடிந்தால்சாறும்
வாணாதே யூணினால் பிடரிக்குள்ளே வுறுதியொடு நற்சிவமும் ருத்திரனும்காணும்
கோனாக குண்டலிகோத்தை நோக்கிக்கூர்ந்து பார்ப்பதினொன்று மொன்றுகாணும்
நானாதோடு மையம்நோக்கினாக்கால் நலமானகாலாந்தான் கோடிப்பானே
81.
பானான நூல்சொன்னபடி கேட்கும் பரந்தோடும் வாசியொடு பழகினாக்கால்
வானான வார்த்தையால் பார்த்திட்டாக்கால் வளமாக காயத்திரி யோகித்தாய் தானும்
கானான காய்க்குமே தேங்காய்தானும் கனமான யோகசித்தி பார்க்குங்காலம்
கோனான பறத்தினுட முலவைப்பாரு குடியிருந்த வாசியுடமுறையைக்கேளே
82.
கேளுநீ மூலத்தில் குமட்டுவாகரத்தை கீழமர்த்தி சிகாரத்தை போகாமல்ரேசி
நீளுநீ ரேசித்துப் பூரித்துப்பாரு  நிர்மலமாம் குண்டலியில் நந்திதானும்
வாளுநீ நந்திவந்து வசனிப்பார்பார் மகத்தான சித்தியெட்டு ஞானந்தானும்
நாளுநீ வாசிவைத்து  மந்திரமகாரத்தை நலமாக கண்டிட்டே நாட்டிடாயே
83.
நாட்டிட்ட மூலத்தைத் தாண்டிப்பின்னர் நலமான கஞ்சனுபதியிற்கூட்டி
ஒட்டியே வகாரத்தை உருத்திநோக்கி ஒளியான சிகாரத்தால் உள்ரேசிக்க
பாட்டியே பண்டான பிறவியறலாகும் பண்பாக நான்முகனைக் கண்டதாலே
மாட்டியே கஞ்சனுட பதியைத்தாண்டி மாவிருக்கும் மதியூடி மருவிநில்லே
84.
மருவியே வகாரத்தை யுட்பூரித்து வாதமாஞ்சிகாரத்தை உள்ளே ரேசி
பருவியே பஞ்சநரை யெல்லாம்போக்கிப் பாலனுமாய் பதினாறுவயசுமாவார்
உருவியே யாங்கடந்து ருத்திரன்தன்பதியில் உணர்வான வாசியைநீ உருத்தித்தாக்கு
தருவியே சிகாரத்தை உள்ரேசிக்கச் சடந்தானும் சிவப்போடி சித்தியாமே
85.
சித்தியாம் ருத்திரன்தன் பதியைத்தாண்டி தெளிவான மஹேஸனுட பதியில்புக்கி
அத்தியாம் வகாரத்தை அசையாமல்பூரி யதுக்குள்ளே சிகாரத்தை உள்ரேசிக்கப்
பத்தியாம் சிறுபிள்ளை தானாவார்கள் பாருடலுங்கை  நெல்லிக்கனிபோலாகும்
துத்தியாம் சிவயோகம் வைத்துப்பாரு துடியாகும் குளிகையெல்லாம் சுருக்கிலாமே
86.
சுருக்கான மஹேஸ்பரத்தின் பதியைத்தாண்டி சூ என்றசதாசிவமிடத்தே காலையூன்றி
மகத்தான சிகாரத்தை வைத்துப்பாரு மகத்தான சித்தோடும் கெனனமாகும்
செருக்கான மனோன்மணி மாதாவின்பாதம் திரமானவாசிவைத்துப் படியேபார்க்க
பெருக்கான மெய்ஞான நிராதாரந்தான் செய்வான வாசினைதான் தானும்நீயாமே

87.
நீயான குருபதத்தில் நின்றாயானால் நிலையான சிவயோகவாசிஒட்டு
தாயான பூரணமும் சகலதெரிசனமாஞ் சதமான வகரசிகாரத்தின் மார்க்கம்
வயலான வலுவைத்தான் வைத்துமங்கே மதியோடேபார் மகத்தானசித்தி
தீயான நீக்கவிட மற்றுநின்ற சிறந்திடுமே பூரணந்தான் சித்துமாதே
88.
சித்தாகப் பாய்ந்தேன்நான் அண்டந்தன்னில் தெளிவான அண்டத்தின் சித்தஞ்சொன்னார்
நந்தி
அத்தாக அண்டியஞ்சலித்து அடுக்காக அதுதாண்டி யிருந்ததுதான் நடுவுமாகி
பத்தாக துனையென்றார் பட்டார்தாமும் பாலித்தார் ரூபத்தை வாறவைத்து
கத்தாக மலினியை காத்தில்கட்டி கனல்ஜோதி யண்டம்போல் நுழைந்திட்டேனே
89.
நுழைந்திட்டே நிருவிகற்ப நிறையானயோகி நேரஞ்சு தனித்தனியே கோடிசித்தர்
குழைத்திட்டு தெவிட்டாதே பார்த்துநின்றேன் சித்தாணியுனக் கெந்நாளாச்ச தென்றார்
குழைந்திட்டு கொடியறுத்து மாச்சுதென்றேன் நூறியதளஞ்சித்திப் பாரென்றார்கள்
மழைத்திட்டு நுழைந்தேன் பின்னோரண்டத்தில் மகத்தான சித்தர்க்கு கைகூப்பினேனே
90.
கைகூப்பி கட்டியதோர் பதுமைபோலக் கையினால் தடவினேன் கைதட்டாது
கைகூப்பி நீள்சாரடைந்தயோர் களரியோரைக் கண்டுநானஞ்சி வலம்வந்தேன்
கைகூப்பி பரிவான அடுக்கொன்று தன்னில் பாய்ந்தேநான் முடியேறிபரிந்துபோந்தேன்
செய்கூப்பி அண்டமெல்லாம் சோதித்தேநான் சுருக்காக மறுவண்டம் பாய்ந்திட்டேனே
91.
பாய்ந்திட்டேன் அண்டத்தில் நுழைந்துபார்த்தேன் பலகோடிசித்தர்கள் வாசித்தார்கள்
ஆய்ந்திட்டு அனைந்திடும் நூலார்தான் சொன்னார் ஐயனே எனக்கேட்டே னடிவணங்கி
காய்ந்திட்ட சிவன்தானும் தாய்கண்டுசொன்னார் தனி ஏழுலட்சத்தை
கரைகண்டுபார்த்தோம்
தோய்ந்திட்ட இந்தநூல் பெருக்கமெத்த சுருக்காதே போனவென்ன வெனக்கேட்டேனே
92.
கேட்டதற்கு தரந்தான் சொன்னார் சித்தர்தானும் கிரந்தத்தை சுருக்குவதற்கு
சிவனாலுமாகா
மாட்டாதற்கு ஒன்றான சாஸ்திரத்தின் மகத்துவமாஞ் சுருக்குண்டோ வென்றுகேட்டார்
சூட்டிதுக்குச் சித்தர்தான் சொன்னமார்க்கம் சருமிச்சதொகுப்பெல்லாம் தெரிந்துபார்த்து
ஏட்டத்துக்குள் ஏழுலட்சம் இயல்புதன்னை ஏற்றகல்லு வெட்டுபோல் இசைந்திட்டாரே
93.
இசைந்திட்டார் ஏழுலட்சம் இயல்பையெல்லாம் எளிதாய் ஏழாயிரம் இசைத்துவைத்தார்
பசைந்திட்ட நூலெங்கே இருக்குதெனப் பகர்ந்தார் பாக்கானதெட்சண பாகத்தில்தானும்
அசைந்திட்ட நூற்றறுபதா மண்டபத்தில் அமைத்துவைத்தார் சித்தர்கள் தான்பாரே
வசைந்திட்ட ஏடுதனில் கருவென்ன சொல்லும் கருத்தை கடாட்சித்துச் சொல்லெண்பாரே

94.
என்றதோர் படிக்கின்ற நூலில்தானும் ஏற்றமாய்ப் பயனெல்லாம் சொல்லுவோமோ
வென்ற கண்டதோர் நூல்தன்னில் சாரனேயுங்குருந்தான் சுருக்குமேபதினாறு
அங்கந்தானும்
தின்றுமே எட்டெட்டு சித்தோடு தியய்காமல் ஆதற்கேற்க ஏற்றுகிட்டார்
என்றுமே தேங்காமல் தெங்குசிவயோகம் கனமான பூரணமும் மயிக்கம்பாரே
95.
அயிக்கமே பூரணத்தில் தூங்காமல்தூங்கும் அன்பான சொருபத்தைக் காட்டும்பாரு
அயிக்கமே தூவாரார் கையிலுண்டு அவருடைய பேர்தன்னை சொல்லுமென்றார்
கயிக்குமே வாசிக்கும் குருவுமான காரணமாம் நந்தியர் காட்டும்நூலை
தியக்குமே சித்தருக்குங் கொடுத்தார் நூலை திருமூலர் அரைந்ததை திடமென்பாரே
96.
திடமான நூல்தன்னில் செப்பினது சொல்லாய் தியங்காத சாரனைதான் கட்டுமார்க்கம்
குடமான கோடரியொடு சிராவனந்தான் கொடிதான பரிக்குருவும் செந்தூரங்கள்
தடமான லவனமொடு சத்தும்செம்பு தனியகந்த குளிகையொடு செந்நீராகும்
கடமான திருகலமும் இனக்கூட்டந்தான் கடிதானமூலிமகா அவுஷதந்தானே
97.
அவுஷதமொடு வவுஷதவகை பதினேழும் அடங்களுஞ் சொல்லு ரெண்ணாயிரத்துள்ளே
வவுஷதமொடு ஏழுலட்சகிரந்தப் போக்கை இடித்தும் எண்ணாயிரமாம்
என்பாட்டர்சொன்னார்
கவுஷதமெண்ணாயிரத்தைத் திரட்டித்தானும் கதித்த ஐயாயிரமாய் பின்புசொன்னார்
மவயஷத மூவாயிரமும் ஆயிரம்பின்பு சொன்னார்முந்நூறு முப்பத்து மூன்றென்றாரே
98.
என்றாரே சாற்றினதோர் நூலேழில்தான் ஏழுலட்சம் கிரந்தத்தின் போக்கெல்லாந்தான்
கன்றாரே கரும்பான பாகுபோல் திரட்டி கருவெல்லாங் கண்டுணர்ந்த படியேசொன்னார்
தன்றாரே தந்தை காலாங்கிநாதர் தாமுமோசகல நூல்பார்த்துத் தேர்ந்து
அண்டாரே யகண்டம்போலஞ்சு காண்டஞ்சொன்னார் ஆயிரத்தெட்டு அண்டமெல்லாம்
அலாவினேனே
99.
அலாவினேன் நூற்றறுபதா மண்டலத்தில் ஐயர்நந்தி சாஸ்திரமும் ஆராய்ந்துபார்த்தேன்
துளாவினேன் பாட்டருடனென்நூலை ஐயர்துதி செய்தேன்சுருதியாம்வாக்கியத்தை
கலாவினேன் காலாங்கி நூலைதானும் கருத்திருத்திச் சனகாதி நால்வர்நூலும்
விளாவினேன் ரிஷிசித்தர் நூலையெல்லாம் வெட்டவெளியாய் திறந்துவீசினேனே
100.
வீசினேன் ஏழுகாண்ட முடுக்காய் சொன்னேன் வெட்டவெளி யாகுதற்கு நிகண்டு
சொன்னேன்
தூசினேன் சூத்திரந்தான் எழுநூற்று சொச்சஞ் சொல்லரிய நிகண்டதுவும் பதினேழுநூறு
பூசினேன் யோகத்துக்கு உறுதிசொன்னேன் பூட்டுகின்ற லட்சியத்தின்
போக்குஞ்சொன்னேன்
ஓதினேன் மந்திரத்தின் உறுதிசொன்னேன் உறுதியாம் வாசியென்ற யோகந்தானே

# <u>போகரின் சப்த காண்டம் – 7000</u>

101.
தானான காயத்தை யுறுதிபண்ணு தனித்தோடு வாசிவைத்து வைத்ததங்கே
பானேயெந்நேரமுந்தான் பழக்கமாகிப் பார்த்துத் தேர்ந்தாக்கால் தேகம்தூக்கும்
தேனாகத் தெளியாத காலத்தில்தான் தித்தோடுமெய்யாது சித்திக்காது
வானான வாசிவைத்து உரைக்காதார்க்கு மருவாது பூரணந்தான் வெளியாகாதே

## <u>வாசியோகம்</u>

102.
வெளியான வாசியைத்தான் வரவழைத்து வீட்டுக்குள் அங்கங்கே வைத்திட்டுத்தான்
தனியாகவைத்திட்டுச் சாதித்தாக்கால் சாதித்தவாசியுமீசனும் ஒன்றாகும்
வளியாக வாசியைப்போல் சித்தொன்றுமில்லை மாசித்த சிவனவரும் வாசியொன்றில்
ஒளியாக வாசியது உயிரைமீட்டும் உறுதியாம் சிவயோகத் துண்மைதானே
103.
உண்மையாய் இதைப்போல ஏதுலகில் சித்தி உத்தமனே மற்றொன்றும் இல்லையேதான்
பண்மையாய் பல்லயிராய் காலமெல்லாம் பார்த்தாலும் கிட்டாது பாரிலில்லை
துண்மையாய்ச் சொல்லுயர்ந்த வாசிதானும் சுருதிமுடிந்திட சூட்சமமாகும்பாரு
வண்மையாய் வாசிசித்த ரிஷிகள் யோகி வாசியைப்போல சித்தியில்லை பரிந்துநோக்கே
104.
நோக்கவே சோங்கினால் நுட்பங்காணும் நுணுக்கத்தில் வாதம்வந்து செய்திடாது
பார்க்கவே சோம்பிநீ நின்றாயானால் பாவம்தான் கிடையாது பாழாம்ஜென்மம்
பூர்க்கவே வாசியைத்தான் விட்டாயானால் பிறவியாஞ் சாக்கிரத்தில் அழுந்திப்போவாய்
நீக்கவே வாசியைத்தான் நிறுத்திநோக்கு நிட்கனமாய் ஜோதியொளி யாகுங்காணே
105.
காணவே பரத்தினடி கண்ணேயாகும் காண்பதரிதுமே கண்ணெட்டதென்றீர்
பாணவே பரத்தினடி யார்க்குமார்க்கம் பண்பட்ட கண்ணிரண்டு வைக்கமுனைமூக்கில்
காணவே காலசையாமல் நோக்கில் கதிக்கின்ற நாவிலொன்று சேரில் வெறும்பாழாம்
பாணவே மனோன்மணித்தாய் பட்டப்பகலாவாள் பகாரியாரவிகோடி ஒப்புமாமே
106.
ஒப்பல்ல ஒப்பல்லதிந்து பூரணந்தான் உண்மையாங் கனாயில்லை பாய்ந்திட்டாக்கால்
கப்பல்ல களங்கற்ற பூரணந்தான் கரையற்ற நின்ற ஒளி மனபோதந்தான்
நிப்பல்லென்ற பெண்பிள்ளை நாட்டநிறையற்ற நிர்க்குணந்தான் மௌனமாகும்
முப்பல்ல மோனமாஞ் சமாதியுற்று முனைநாசியூடி குலமுத்தியாமே
107.
முத்தியாங் கானகத்தி லிருந்தாலென்ன முகையாநாடுவீரின் வாழ்ந்தாலென்ன
தந்திராந் தானமென்ன மானமென்ன சாவென்ன பிழைப்பென்ன சாந்தியானால்
வத்தியாம் வானமென்ன அண்டமென்ன வாரிதியம் பொய்யாச்சு மனஞ்சொல்வானால்
புத்தியாம் பொய்யாமோ கண்டதெல்லாம்பிறிதியுற்றசாங்கற்றால் பொய்யெண்பாரே
108.
என்பதே கண்ணாரக் கண்டதெல்லாம் எய்யாமற் காணாதே போனதென்ன
அன்பதே ஐயர்பதம் வாசிவைத்து அடைந்தார்க்குங் காணுமது அசையாவிட்டால்
கண்பதே காணாது நடனந்தானும் நலமாகப் பூணவே திகைநாதங்காணும்
துன்பதே சருதிமுடிந் திடமும் சுத்தசைதன்னியம்தான் போதமாமே

109.
போதமே நோக்கவுந்தானெளிதோ சொல்லுபுக்கியே வாசிவைத்து நிலைத்துப்பாரு
நீதமே மௌனமாய் நிலைத்த உண்ணு நிமையானதட்ணுற்ற அடுத்தடுத்த
சாதகமேமுறையோடே
தப்பாதே நில்லு தப்பாமல் பார்க்கவுந்தான்செயலோநந்தி
ஒக்கமே உன் செயலால் ஊடி வெளியாகும் உருதிமுப்பாழ் வெளிதாண்டி முடிவுமட்டே
110.
முடிவுமப்பா உனக்குமே வாதியொன்றில்லை மிக்கான பராபரமுமில்லை கண்டாய்
எடிவுமென்றுளிதுங்கொக்க பின்னொன்றுமில்லை ஏகமென்பார் காணார்கள்
எல்லையில்லை
துடிவு சொன்னவழி கேளு சூட்சந்தன்னால் தூய்தானகண்டத்தின் மனவடிவைத்தார்
படிவு பண்ணி எட்டுண்ணாய் பகுந்தமுடிபரந்தான் பயனறிந்து சாதிக்கவல்லோர்தானே
111.
வல்லோர்கள் பார்ப்பார்கள் வாட்டியன்தானாய் வாய்க்குமோ யெல்லோர்க்கும்
எளிதாச்சோஞானம்
பல்லோர்கள் மாயமாய்கை வாட்டியத்தான்பார் பாங்கான மயிர்ப்பாலம் செதுப்பாதுந்தாண்டித்
தல்லோர்கள் வாசினையைத் தவிடுபொடியாக்கி தரிக்கின்ற வாசியைத்தான்
சாதனம்பண்ணி
மல்லோர்கள் மார்க்கமாய் ஆறுதளம் தாண்டி மந்திரியாமர்க்கடக மழிந்துபோமே
112.
மர்க்கடக ஐம்புலந்தான் மாண்டுபோகில் மாசற்றசிற்பனர்தான் சடர்கோடிபானு
கர்க்கடங் கண்டிதிரி கடந்தவெளிபாரு கடுவெளிக்கு மருவில்லை முடிவுமில்லை
கர்க்கடந்த ஒளிக்கு முடிவில்லைகாணும் காணவே அடியில்லை யுன்மனந்தானுண்ணு
புர்க்கடக மனந்தானே மகத்துவமித்தனையும் பெரிதானவழிதாண்டி கூடிற்றுதானே

## நரகசொர்க்காதி

113.
கூடிற்று மனந்தானே மாயத்தில்மருவி குழாம்பிப்போ யலைந்துகொண்டு குறிகூடாது
வாடித்து மனந்தானே போதத்தில்சொக்கி மாறாதகருணைக்குள் வாழ்ந்தோர்சித்தர்
காடிற்று மனமாளுங்கருணையாலே கண்டிக்கவாய்க்கும் எளிதாமோசொல்லு
மாடிற்று மாறாதகருணையாலும் வாச்சதே மெய்ஞான சித்திதானே
114.
சித்தியா மாறாதகருணைக்குள்நின்று ஜெகஜால வித்தையென்று தெள்ந்திட்டார்கள்
சித்தியா மவுனயோகத்தில்நின்று தெளிந்திட்டார் வெளிந்திட்டார் வாதன்பத்தில்
சித்தியாம் பெரியோர்க்கு மற்றொன்றுமில்லை சிகாரவாசியது சொன்னபடிகேட்கும்
சித்தியாமனவாக்கும் பெரியோர்களுக்கு சொல்லரிதாம் பிர்மநிஷ்டை விசாரமாமே
115.
பிரமவிசாரத்தைதான் பேசிடும் வேதாந்தம் பேசமறைநூலதுதான் பிரமவிசாரத்தை
பிரமவிசாரத்தையே பேசும்பதினெட்டு பேரான அறுபத்துநாலு கலைதானும்
பிரமவிசாரத்தைப் பேசதொண்ணூற்றாறும் பிரமவிசாரத்தையே பேணுமற்றஞானம்
பரமவிசாரதினுடப் பேறறியாமாண்பர் பேயானமாய்கைதனி லழுந்துவாரே

116.
அழுந்துவார்தானென்ற ஆங்காரத்தி னல்லேவாப்பிடுங்காதார் அறியமாட்டார்
வருந்துவார் வாசியென்ற மவுனியோர்கள் மாசற்ற பிரமவிசாரத்தைக் காண்பார்கள்
மழுந்துவார் பிறப்பில்லை மரணமில்லை வாசியமே சித்தித்த மகத்தோர்க்குந்தான்
எழுந்துவார் காயசித்தி யோகசித்தி யெழிலானவாதசித்தி யேத்தந்தானே
117.
ஏத்தமாய் சித்தாவர் வாதிதன்னை இடும்பாகக்காணாமல் தூஷித்தாக்கால்
கூத்தமாம் ரவிகோடி சாவில்வீழ்வார் கொடும்பசியால் வறுமையால் திகைத்தேங்குவார்கள்
காத்தமாய் நரகமொடு சொர்க்கந்தானும் நரகமாயாயிது ரெண்டும் சொல்லக்கேளு
மாத்தமாம் மலத்திலே கிருமிச்சகிருமி மகத்தாக செனித்ததுபோல் நரகந்தானே
118.
தானென்ற கோபத்தால் வந்தமுறையாலே தாக்கான ஜெனனமும் பலவுமாகும்
தேனென்ற ஜெனனமாய் ஜெனிப்பதெல்லாம் திகைப்பான கோபமது கொடும்பாவந்தான்
மானென்ற சொர்க்கத்தின் வழிதானேது மகத்தான மானிடனாக ஜெனித்து
பானென்ற முன்செய்த பலாபலத்தின் குறையால் பராபரத்தே தோன்றினால்
மண்சொர்க்கந்தானே
119.
தானான பூரணமருத்துவம்நீபாரு தளிரானதீபம்போல் தான்முனைந்த தேகம்
கானான கண்டிப்பு தண்டிக்கப்படாது சத்தியதூறுவோடு வகைதட்டாது
கோனான மனந்தானும் வாசியோடொன்றில் கூறாதபூரணமும் குறிப்பாய்தோன்றும்
கானான மாய்கையையுங் கண்டங்கழுந்திப்போகும் நலமான நிர்மலங்கா பூரத்தியே
120.
கற்பூரத் தீபம்போல்தீபமாகும் கடிதான பூரணம் வாவென்றேகூவும்
பர்ப்பூரம் போலொத்த வாசிதான்போகும்  பலபலவாந்துன்பமொடு பாவமற்றுப்போகும்
அர்ப்பூரக் காயமது அழியாதாகும் அதிமாயையில்லை யந்த கண்டத்தில்தான்
உர்ப்பூரத் தோயவே சித்தருக்கு உறவாடல் மெத்தவுண்டு உண்மையாமே
121.
உண்மையாய்ப் பவியாது யோகந்தானும் உறதியாம்பலவான நீசருக்கு
பண்மையாம் பாவமென கோபிக்குந்தான் பலியாது கொலைசெய்த பாவிக்கேற்கே
வண்மையாம் மத்திபமாம் புத்தியானோன் மருவான காமோகி மகத்தன்மூடன்
எண்மையாய் தாட்சிகளும் ஏற்றம்பொய்யோன் இடும்பனாம் அனியனொடு சோம்பர் தானே
122.
தானான பெண்ணைப்பார்த்தேங்கிப் பின்செல்வோன் தாக்கான கர்ம்மவரை தப்புமாபாவி
தானான சோகவிகாரந்தான் சோம்பன் துனையான மூத்தோரை தந்தைதாயை
ஆனான சங்மில்லாதேதான் வைவோனதிகமாம் வீணார்ப்பரானதூரன்
வேயூன வெறுங்கைவெகுதுஷ்டன் மூர்க்கன் வெகுபுல்லன் குருதோகிக்கும் பொய்யாமே
123.
ஆமேயா காமியத்தா னடங்காக்காமன் அளம்பனான் எரிமுகத்தான் அதியபாண்டி
தூமைதுடைக்கின்ற சுகியில்லாச் சண்டாலன் சிவவேடந்தரிசிக்கில் தூஷிப்போன்தான்
வாமேவு கோன்பொய்யன் கோவியீனன் மகத்தானயீனாக்கன் வாதிதர்க்கன்
மாமேவு மாமிசத்தை வருந்தித்தின்போன் மதுவாகியிவர்களுக்கு யோகம்பொய்யோ

124.
ரோகத்தால் யிவர்களுக்கு நீந்தால்பாவம் உடனேதான் நரகெய்தி உழுதுவான்பார்
யாகதூவிவர்களர்ச்சிக்கலாகா அதிசயமாய் பிர்மத்தி யனுகும்பாரு
காகநூல்கர்ப்பத்தைச் சூட்டலாகா கண்காணா தூரத்தே சயமாய்நில்லு
நாகநூல் ஞானத்தை விழித்தலாகா நாட்டினால் நரகெய்து நலங்குவாரே
125.
நலங்கவே யாருக்குக் கொடுப்பதென்றால் நாதாந்தவேதாந்த பிரமசாரி
மலங்கவே பலதூதிகர்மிகூர்மி மகத்தான சிவயோகிபதி மார்க்கத்தார்
துலங்கவே சுத்தசைதன்னியத்தோர் சொல்மொழிமதிவாத தூய்மையானார்
கலங்கவே தர்மமனுஷ்டித்தோர் சார்ந்தோர் கர்ப்புடைய மங்கையரைக் கருதார்தானே
126.
தாமென்ற தந்தைதாயை பூசிப்போர்கள் தமையடைந்த பேர்களையே தற்காப்போர்கள்
ஏமென்ற எல்லாவுயிருந் தம்முயிர்போலெண்ணி யிறங்குவோர் வரம்புதப்பி யிகழ்ந்திடாதார்
வாமென்ற வாசியுடன் வாதித்தாடு மகத்தோர்கள் வாமத்தின் வழியில்நிற்பார்
ஆமென்ற அப்புனிடம் வுப்புபோல வடைந்தோர்க்கு மடங்கலும் போதிக்கலாமே
127.
போதித்து போகத்தின்பொருளைகாட்டி பேரானஞானத்தின் பொருளைசொல்லு
ஆசித்துவமர்ந்தாக்கா லதில்பிழைப்பான் அல்லாவிட்டால் பேய்வனதிஷ்டயீனன்
சோதித்து நால்வகைக்கும் கர்ப்பஞ்சூட்டி துடியான வாதத்தின் சூட்சஞ்சொல்லு
காதித்து கைகாட்டு அருளொடுபொருளும் கைம்முறையாய் குளிகையொன்று சூட்டிநீட்டே
128.
நீட்டுகின்ற லச்சையது நிரந்தரமுங்காட்டு நீங்காதபூரணத்தை படுத்துப்பாரு
நாட்டுகின்ற யெட்டுகா லதனில்சேர்ந்து கடித்துமே கண்டத்தை நின்றுகூடி
ஆட்டுகின்ற ஆடிச்சநிறைந்தரத்திலிருக்க ஆனவழியாங்கதிரேது முனைமூக்கில்நின்று
ஊட்டுகின்ற யோகிக்குத் தன்னிடத்தேயோடு முதிக்கின்ற ஞானத்துக்கதுபதமே
129.
பதமான லோகத்தாரீந்தமுறைகேளு மதியான அம்புவியில் முழங்குஞ்சீவன்
நிதமான நித்திரையில் கெடுவீதியோடல் நிறைந்தசையோகங் கொட்டாவியேக்கத்தால்
இதமான முப்பத்துயறுபத்துமாயாடும் இயலானபுரியஷ்ட மொவ்வொன்றாக
நலமாக நாளுக்குநாள் சீரணிக்கநாடியே சமன்பதிக்கு யெய்துவாரே
130.
காடுமிரந்தோடியே நமதுக்கெய்வார் நலமானவாசிநிறைந் துள்ளேவாங்கில்
ஆடுதிருகடனமும் அம்பலமும் காணும் ஆட்டத்தின் குறிப்புதான் மேலோகீழோ
நாடுமூலதாரஞ் சபைநந்தோமென்றே நாட்டியே தலமாறு முருகிச்சுழியோடேபூட்டு
கபாலம்புகுந்து குருபதத்தில்மேவிபுகுந்த மண்டலத்திதழ்தான் ஆயிரத்தினெட்டே
131.
எட்டாதக் கருமண்டல மூட்டிக்கவிழ்ந்து இதமாகக் கைகண்டயோகங்காணும்
கட்டாகக் கபாலத்தைக்கடந்து மெய்யென்று கதிர்போலே பகையோடி துவாதசாந்தத்தை
உட்டாக உண்டிருந்து அச்சபைதான்மறித்து உயரமாமுகடேத்த கபாலங்கல்லாம்
இட்டாத கருங்கனலே மிகவுமுண்டு எல்லாந்தான் தெரிசனமே யேறுங்காணே

132.
ஏறுமேலென்றீர்கண் மூக்கலேதாச்சு ஏறியேவாசிகொண்டு மனந்தோடுணு
ஊறுமங்கென்றுன்னினாலுகும்பாழில் ஒளியோடு பூரணந்தான் கோடிபானு
தேறிதீபச்சுடரில் திக்கெல்லாங்காணும் தெவிட்டாதமாலையாகி சிறக்கும்நாலுவீறு
யுரைத்திடு யோகத்தாலேமூட்டி உருக்கடந்த பொருள்தானும் மூலமாமே
133.
மூலந்தானாலான பதவெளியுமாச்சுபாரு நலமானவானந்தான் போகமாச்சே
பானந்தான்பாரு மதிநல்லூராகும் பாவுமுப்பாழ்கடந்துமே பாருந் தீயைத்தானந்தா
பார்த்திடவே பரமவெளியாச்சு சாதித்து ஏரிடவே வெறும்பொய்யாச்சு
தேனந்தான் தோத்தரித்து சுருதிமனோன்மணியோ சுக்குற்றபூரணத்தை கண்டிட்டேனே

## புரியஷ்டம்

134.
கண்டிட்ட சழிமுனையில் மன்னமோட்டி கண்மூடிவிழிரெண்டும் நினைவில்நோக்க
பண்டிட்ட நினைகாரம் பளிச்சென்று தோனும் பராபரமாமணித்தாயும் பரியொன்றீய்ந்தாள்
அண்டிடு ஏறுனால் அகண்டவெளிகாட்டும் ஆண்மையாம் போதத்தி லடுத்திவிக்கும்
குண்டிட்டு பரத்தினடி தன்னிற்காட்டுஞ் சுருதி மனோன்மணித்தாயும் வாவென்பாளே
135.
வாவென்ற சடமெல்லாம் பிரமன்கூறு மறைந்துநின்ற சத்தான மாலின்கூறு
போவெனற திதற்குள்ளே புரியஷ்டந்தான் பேரானசூட்சமென்ற தேகங்கேளு
சேவென்ற நரசிரமாம் சிவன்தானொன்று சேர்ந்ததின் மேலாதாரம் மஹேஸ்பரந்தானொன்று
தாவென்ற யகாரமாம் சதாசிவன்தானென்று சாந்துநின்ற விந்துவதின் மேலுமாமே
136.
மேலானவிந்துவின்மேல் நாதமொன்று மிக்கவதின்மேல்சத்தி யொன்றுகேளு
மாலானவிதின்மேலே சிவன்தானொன்று உற்றசிவனாரென்னில் வாராட்டியந்தான்
பாலான வதின்மேலே பரைதானொன்று பாருமந்தயெட்டல்லோ புரியஷ்டந்தான்
மாலானவிதினெட்டால் பிறப்பிறப்புமாச்சு வாரான புரியஷ்டமார்க்கந்தானே
137.
மார்க்கந்தான் புரியஷ்டங் கூத்தேகூத்து கோடிஜென்மமெடுத்து ஆடும்
ஏர்க்கவே புரியஷ்டத்தெழுவகைதோற்றம் எங்குமதுவிரிந்தாடப் பிரபஞ்சமாச்சு
பார்க்கத்தான் புரியஷ்ட பகவான்கூத்து பண்பாகவிதையறிந்து கூர்ந்துபாரு
தீர்க்கந்தான் பார்த்தறிந்த பெரியோர்தாமும் திறந்தோமே தன்னியதில் மேல்நிற்பாரே
138.
நிற்பார்கள் பரைமேலே முப்பாழ்கேளு நீங்கியே கடுவெளிப்பாழாம துக்குள்ளே
ஒப்பார்க யொளிபாழாம் நிற்கும்பாரு உமாந்துமேலதைத்தாண்டி யுரைக்கக்கேளு
விப்பான வெளியொளிப்பாழ் விரைந்துபாரு மிதுமூன்றுவரை தாண்டவன் மனத்தாய்நிற்பாள்
கர்ப்பான மொழியுடையாள் தமரின்வாசல் தனிப்பரந்தான் போதமது வொன்றாம்பாரே
139.
போதமது தானென்று மதற்கேபாரு பேரானவகண்டமென்ற விளக்கேபேரு
மேதமென்ற தவன் கடுக்கவ்வனவேப் பாதம்சேர்ந்ததுகில் தமக்குள்ளே சேரலாகும்
ஆகமதுகண்டவர் கண்டவீதி ஆதியில்லை அந்தமில்லை யறியப்பாகும்
சேதமது போதமது மௌனமாகும் சேசரித மனக்கரலா சேரொட்டாதே

## மறுபிறவியில்லாமல்

140.
சேராதுயென்று சொல்லி சிவயோகிதானும் நிலைத்து உன்னிப்பரையளவு யோடினாலுங்
கானானபிரவிவந்து யெய்தும்யெய்தும் கருவில் பிறந்தாலும் சிவயோகியாவான்
பாரான பிரையளவும் புரியஷ்டமாச்சு பண்பானவரைகடந்து வெளிப்பாழுற்றால்
ஆறான வெளிப்பாழை அண்டமென்று அர்ச்சித்துப் பார்த்தாக்கால் பிறவியொட்டாதே
141.
ஏதென்று பிறக்காமல் அதற்குள்ளேநின்று இன்னமொருவரை யேறியிதுவே என்பான்
வாதென்று அதற்குள்ளே மயங்கியேங்கி மற்றுமொருவரையேறி யிதுதானென்பான்
தீதென்று மூன்றுவரை திறந்துயேறி சிறந்துநின்று உம்மனையிதுதானென்பான்
யாதென்று ரவிகோடி வன்னிகோடி பரிவானமதிகோடி பரிந்துபாரே
142.
பரிந்துபார் முதற்பாழில் பூதபூதம் புரியாதவன்தான் வாதியாவான்
எரிந்துபாரண்டன்பாழ்தேதிட்டாக்கா லெட்டெட்டு மறுபத்துநாலாஞ் சித்தன்
முரிந்துபார் மூணாம்பாழ் புக்கினாக்கால் மூச்சான வாதுபது பிரந்ததானம்
கரிந்துபார் நால்பரிஞ்ச போகுவிடங்கண்டால் எமனடுங்கிப்போவான் இடம்காட்டிடாமே
143.
நாட்டியே நிராதாரம் தன்னில்சொக்கி நலமாகக் குழைந்துள்ளே புகுந்தாயானால்
நாடியே தானேற காமம்போச்சு சாஸ்திரத்தாலாய்ந்த பொருளும்போச்சு
சூட்டியேசுழுத்தியைப்போல் உறக்கமாச்சு தூங்குமாம் ஆகுமோ ஒன்றுங்காணார்
தாட்டியே சடம்போன சழுத்தியினில் புகுந்தால் தனித்தசிவன் போலாவாய்நீயுங்காணே
144.
காணவே பாடினதோர் கூத்தைப்பார்த்து கருத்துரைத்து பின்புதான்வாதம்பாரு
பானவே பாதரவா நோக்கிப்பாரு பாதந்தல்லாடியதோர் கூத்துங்காணும்
கானவே வாசியுட நட்பைக்கண்டால் நடனமாய் கூத்ததுவும் கண்முன் காணும்
தானவே நடனத்தின் கூத்துகண்டால் தடித்ததோர்சாவும் பொய்யாகிப்போமே
145.
போமென்று சொன்ன ஆறாதாரத்தில் போக்கான களத்தில் நிற்கும் அட்சரந்தான்
ஆமென்று சேர ஐம்பது அட்சரமேயாச்சு அப்பனே ஒன்றெங்கே காணோங்காணோம்
மாமென்று ஆசானை யடுத்துக்கேளு அதுவறிந்து சொன்னாக்கால் குருவேயாகும்
146.
நாமென்றே போகிறது வருகிறது ரண்டாம் நலமான ஓரெழுத்து எங்கே என்றால்
கோமென்ற குருபதத்தில் ஐக்கியமாகி கூடியேமருவிநின்று அரியென்றாகி
வாமென்ற வாசியினால் சிகாரமாகி வாசியோடொன்றியே சிங்கென்றாச்சு
தேமென்ற ஓரெழுத்தால் வாசியாச்சு சகனாச்சு சடமாச்சு அண்டமாச்சே
147.
ஆச்சென்ற ஓரெழுத்தால் கோபமாச்சு அரகறா உற்பனமும் ஒடுங்கின மூலமாச்சு
ஓச்சென்ற எழுத்தாலே ஒளியுமாச்சு உள்ளடங்கிச் சோதியைப்போல் நந்திநந்தி
தேச்சென்ற வெழுத்தடங்கில் ஜோதிகாணும் தேகமுமே விளக்கொளியாஞ் சிந்தையில்லை
நாச்சென்ற சந்திரனுஞ் சூரியனும் ஒன்றாய் தயங்காதே சுழிமுனையில் பேணிகூடே

148.
கூடுவது முப்பாழும் மூன்றுவீதி குறிப்பாக முனையுமணிகூடிச்சேர்க்கும்
நாடவே நாலுக்குளடங்கும்பாரு நலமாக ஏணிபழுவாகக்காணும்
ஏடவே தளத்தோடு எழுத்துபாரு ஏறினால் முப்பாழும் கடந்துபோகும்
பாடவே பராபரத்தில் மனோன்மணித்தாயும் பரிவான அமிர்தமொடு பாலிப்பாளே
149.
பாலிப்பாலது கடந்தால் நிராதாரந்தான் பார்த்துமே தெளிந்த பின்பு
பரத்தேயேகில் போலிப்பாள் தெளிவான போதம்போதம் போக்கோடே என்குருவும்
அதற்குள்ளசென்றார்
ஏறிப்பாழிது கடந்தேபோனேன் இளைப்பாறி யிதுகடந்து அந்தரத்திலேறில்
ஜொலிப்பான சிலம்பொலியில் புக்கினேன்யான் சுகமெல்லாம் காலாங்கியைப் பார்த்தாச்சே
150.
ஐயரென்ற காலாங்கிநாதர் தானறியாத சிறியோர்க்கு அறிவுதந்தார்
உயிரென்ற உடல்பொருளாவியுந்தான் மூன்றாம் உலகத்தார் கொண்டவர்க்குப்
பலந்தானென்றேன்
செய்யமென்ற சிலம்பொலிக்குள் அவரும்வந்தார் சிரசுவைத்து அவர்பதத்தில்
சரணஞ்செய்தேன்
ஐயரென்று எனையாண்டு ஞானங்காட்டி யெளிமையாஞ் சஞ்சலத்தை யோட்டினாரே
151.
சஞ்சலத்தினைப் போக்கித் தயவாகப்பூரணந்தான் காட்டி
நெஞ்சலத்தில் சித்தரெல்லாம் பணியக்காட்டி தேசிமராமென்குருவும் மண்டலத்தெய்தில்
கஞ்சலித்து கண்களித்தே உன்கருணைக்கூர்ந்தேன் கருணைதந்தாரென்றுரைத்து
கடாட்சித்தாரே
152.
ஆரேயம்புலனறுத்தால் மனமொன்றாச்சு அரிகமனவாய்வுவேனப் பூசித்தோங்கும்
போமென்ற வாயுமேல் மனதுயேறிபொரிகடந்து நெறிகடந்து போக்குந்தாண்டி
கூரென்ற வாரொடு குளப்பதமுந்தாண்டி கொடிதான முப்பாழின் போக்குந்தாண்டி
மாமென்ற மணித்தாயை சரணம்பணணி வைத்துப்பார் நாலுக்குள் மருவிப்பாரே

## மனப்பெருமை மௌனயோகம்

153.
மருவியே முந்திமுந்தி மூலம்நீதான் வாசிகொண்டு பாய்ச்சியதில் மாட்டிப்பாரு
உருவியே குறியின்மேல் கொண்டாயானால் உற்பான நாலைவிட்டால் எங்குமில்லை
அருவியே முன்பின்னும் கீழுமேலும் அழவென்னதழலென்ன மதிதானென்ன
கருவியே கனங்கொள்ளாக் காட்சியாகும் கனங்கொள்ளாப் போதத்தைக் கண்டிடாயே
154.
கண்டிட்ட மனத்தாலே தவமுமாச்சு கவர்ந்ததுவுமுயிரதுவும் மனமேயாச்சு
மண்டிட்ட வாயுமேல் மனமுமாச்சு மகத்தான சஞ்சலத்தால் மனம்பேயாச்சு
அண்டிட்ட தீபம்போல் மனமேசென்று அண்டத்தில் சேர்ந்ததென்றால் அதுவேபோதம்
மண்டிட்ட மனம்விட்டால் ஞானம்போச்சு வாசியைத்தான் நழுவவிட்டால் யோகம்போச்சே

155.
யோகத்தை விடுகாதே மவுனமார்க்கம் உற்பனமாய்ப்புத்தியள்ளானென்றுச் சொல்லிக்
காகத்தை காலாங்கி ஐயனார்தாமும் கடாட்சித்துமுன்னேதான் பிராணயாமம்
மோகத்தை முதிர்ந்தபின்பு மொழிந்தசொற்கேளு முந்தினதோர் மூலத்திலகாரமீசன்
காகத்தை உகாரமது சத்தியாக்க தனித்திரண்டுங்கூடுவது மவுனமாமே
156.
மவுனமாம் மூலத்தில் முந்திமுந்தி மருவினால் பளிச்சென்று லிகிதங்காணும்
நிவுனமாலிங்கமது நந்தியாக நேராகயெட்டிதழும் விரிந்துகாணும்
உவுனமா மகத்தைவிட்டுச் சுழிமுனையினூடே ஓகோகோ அநாகதத்தில் மவுனமெட்டு
சவுனமா மசைந்துநித்த மவுனத்தாலே சிரசுசடை யசைந்தாட நடனந்தானே
157.
காணப்பா மேலேறி யக்கினியினுள்ளே கருத்தாகி மவுனத்தை தாக்கினாக்கால்
நீணப்பா சதாசிவன்தான் நிர்த்தஞ்செய்வார் நிலையாக சிவகாமி யிருந்துபார்ப்பாள்
ஆணப்பா யவனிடத்தில் கவர்ந்து நித்தம் அனுகினாலம்பலத்தி னடையலாகும்
மூணப்பா வதைவிட்டு அறிவின்மூலம் முதிர்ந்தேற வாசியுடமுறையைக்கேளே
158.
முறைமையாய் நடுவில் மவுனமூன்றி முதிர்ந்துமனமேறவிட்டுத் திறமாய்நில்லு
திறமையாய் அறியவென்றால் எழில்சேரமைந்து ஏறுவதும் தவறுவதும் மனதுக்குள்பாரு
அருமையாய் அறிவினுடமூலங் கண்டால் அசடில்லா கற்பூரதேகமாச்சு
செருமையாய் ஆலயத்துள் சிவன்தான்வந்து திரட்டியன்னங்கொடுக்கையிலே
யுண்ணலாமே
159.
உண்ணலாமென்று நித்த மூலத்துள்ளே உறுதியாய் ஒவ்வொன்றாய் உரைத்துக்காணும்
எண்ணலா மினத்தோடோ வரிசையோடேயே மாறலில்லாமல் எத்தியாடு
கண்ணலாம் அட்சரத்தில் கருத்தைவைத்துப்பாருச் சுருதிநின்ற மந்திரத்தைச்
சேர்த்துவுண்ணு
பொன்னலாம் புலன்தன்னை யவரவர்களிருக்கும் பேரானவீட்டில்வைத்துப் பூட்டிப்போடே
160.
பூட்டிட்டு நாலாக வெளியினுள்ளே புகழ்நின்ற ஜோதியைப்பார் பொருளே தோன்றும்
கூட்டிட்டு ஒவ்வொன்றாய்க் கடிந்துகூடும் கொள்கியதோர் மூன்றாந்தா னறைதானுள்ளே
மாட்டிட்ட மேற்கண்ணின் மணித்தாயப்பா மருவிநின்ற கொலுக்காண
கண்ணுண்டோசொல்
மீட்டிடும் மேலான புத்திதானுஞ்சென்றால் வேதாந்த முடிவான வெளியுமாச்சே
161.
ஆச்சென்ற வெளியெனறால் இருடடு வெளியல்ல ஆதியாம் உன்மனைத்தாய் விளக்காய்
நின்றாள்
ஓச்சென்ற ஒளியென்றால் ஒளியுமல்ல ஓகோகோ இருவர்தாம் ஒன்றில் நின்றார்
காச்சென்ற நிராதாரங்காணுங்காணும் கண்டுடனே மண்சூரி கலந்துபோகும்
வாச்சென்ற விளக்கொளியில் விட்டில்வீழ்ந்து மாண்டிடல் போல் மனஞ்சென்றுமருவர்தானே

162.
மருவினால் முத்திமுத்தி மைந்தாகேளு மற்றதெல்லாம் முத்தியல்லா மருவுமார்க்கம்
மருவினால் மனஞ்செயித்தால் போக்குயில்லை பூணாட்டால் பேய்க்கூத்தாம்
பொல்லாமாய்கை
உருவினால் யோகத்துக்கிதுவே மார்க்கம் உண்மையாம் பார்த்தபடி உறுதிசொன்னேன்
இருவினால் இந்தமுறை யேத்துவாசி யேறாவிட்டால் யோகமெல்லாம் இழக்குந்தானே
163.
தானான நாதவொளி நின்றுவொங்கா சமர்த்தான பூரணத்தே தளர்த்துநோக்கி
கானான மனமிந்த நிராதாரத்தை வாய்திறந்து சொல்லுதற்கு நாமமேது
பானான நிர்குணமே காணேன்காணேன் பாங்கான கரையில்லை பதியேகாணேன்
வானான மூலத்தைநின்று ஏறி எட்டியே நூற்பனத்தை கண்டிட்டேனே
164.
உற்பனமாம் பூரணத்தில் கரையேகாணேன் உயர்ந்துநின்ற சனகாதி நால்வர்காணா
நிற்பனமாம் மூலகுருதானுங்காணார் நிலைமையாஞ்சுரர் முதலாய் சித்தர்காணார்
நிற்பனமாம் நிட்களத்தின் கரையேசொல்ல நிலையான வேதாந்தம் விளம்பக்காணேன்
அற்பனமாம் மனமோடி யண்டிற்றாணால் ஆலித்தேலயித்துநின்று வழுத்தலாமே
165.
லயித்து நின்றுவழுத்துவது எவ்வாறென்னில் அன்னமிஞ்சவஸ்துவுண்ட ஆண்மைபோல
சுகித்து நின்றுசொக்குவது எவ்வாறென்னில் ஜோதியாம் அமிர்தமுண்ட தூய்மைபோல
குவித்து நின்றுவழுத்துவது எவ்வாறென்னில் கோரக்கர்கற்பமிஞ்சுங் கூர்மைபோல
இனித்துநின்ற இம்மூன்றும் ஒப்புமல்ல ஏத்தமாமா ஆனந்த போதைதானே
166.
தானெங்கே பார்ப்பதென்றால் மூலமாகும் தருகுரும்ப மிலேச்சருக்குங் காணுஞ்ஜோதி
ஆனங்கே ஆதாரத் தளமுங்காணும் ஆட்டான முப்பாழுங்கடந்து போகும்
கோனெங்கே யமர்வாசற் குள்ளேபுக்கில் கோடிமதிகோடிரவி யெண்ணொண்ணாது
பூணங்கே பூரணத்தின் கரையேகாணோம் பூந்துடனே காந்தயம்போல் பொருந்தும்பாரே
167.
பொருந்துவது எவ்வாறுயென்று பேசில் பெருந்தீபமுடை திரிபோல் நெய்யுமாகும்
வருந்துவது வருணஜலம் ரவியுண்டாப்போல் மகாவஞ்சுவர்னண்ட படிகம்போல
தருந்துவது ஜலத்தடங்கும் குமுளிபோல சேத்தமவன் கூப்பிட்டுக் கேளாப்போல
ஒருந்துவதும் ஒடுங்குவதும் இதுவோமார்க்கம் உத்தமனே மகத்தோடு உன்னுவுன்னே
168.
உன்னுதன்மை ஞானத்துக்கு ஆதாரமாச்சு உண்மையாஞ்சாந்தமல்லோ யோகச்சார்வு
மண்ணுவன்மை விவேகமென்ற வாழ்வுமாச்சு வாய்திறக்கா மவுனமொன்றே மனதுக்கின்பம்
நண்ணுவுண்மை ஞானத்துக்கோடும்வீதி நலிவில்லாத்திடமன்றோ மகத்துவவீரம்
புண்ணுவுண்மை பூரணமாம் பொறியைத்தள்ளு போக்கோடே மவுனத்தில் பூட்டிநில்லே
169.
நில்லாமல் மடவார்பால் மாயத்தூடில் இருத்தலையாங்கொள்ளி மையத்து எரும்புபோலாவாய்
நல்லாமல் காமுகனாய்த் திரிந்திடாதே கடிதானபாழை தொடந்துதானால்
வல்லாமல் விழிகண்டு வலையிற்சிக்கி மற்றதுமே சமாதிவிட்டு கழண்டாயானால்
அல்லாமலொன்றுமில்லை நீயுங்கேட்டால் அதிஷ்டம் உனக்கில்லையென்று
அறிந்துகொள்ளே

170.
கொள்ளென்ற யோகமார்தாம் பார்த்தாரென்றால் குணமான சூடாலையென்ற பிணந்தான்
வள்ளென்ற மூடாபிள்ளை ஜுவாலமூர்த்தி வண்டையாயிவருக்கு உபதேசித்தார்
புள்ளென்ற வாசியெல்லாம் போகொட்டாமற் போக்கோடே குண்டிலியிற் கருத்தைப்பூட்டி
வெள்ளென்ற வயசெல்லாம் விருத்தியாக்கி விளங்கிய அரசருக்கு அருள்செய்வானே
171.
செய்தவனை பெண்ணென்று அறியான்மன்னன் ஜெகத்துவசனம் அவளாலே பேர்ந்தார் ஞானம்
பைதவளப் பதினாறுயுக கற்பந்தான்பரத்தோடெயொன்றாகப் பரிந்துபோனால்
தொய்பவளத் துவாபரமாம் பதத்தில்தானுஞ் சேர்ந்துமே இருவருந்தான் கலந்துபோனார்
கைதளப்போச்சி யவளுதவும் பெண்தாய் கற்புடைய பெண்ணானால் அனையகன்றே
172.
அனையவே பெண்ணவர்க்கு வந்ததேது அதிகமாய் நால்யுகத்தில் செய்தவப் பயன்தான்
பினையவே பெண்ணான ரூபமாச்சு போதித்த குருவாச்சு பெண்டீராச்சு
மனையவே பதக்க மூத்தாராம்பெண் தன்னோடே பரவியே மூலமாம் உறிதியோகம்
கனையவோ பெண்ணை விட்டாலாகாதென்னில் கனவாலேகாயப்பெண் கலவானப்போ
173.
கலந்துமே விண்ணான துறவியென்றார் காமமாம் பெண்ணைவிட்டு நீக்குநீக்கு
அலந்துமே காலாங்கி ஐயர்தாமும் அடித்துமே பெண்ணாசை தள்ளிவிட்டார்
புலைந்துமே பிள்ளைகளை வேறேவேறாய் போயெங்குதிரியுமென்று விடையுமீந்தார்
கலந்துமே கருவூரார் தெற்கே சென்று கடியரிஷிகையில் சாபம் கொண்டிட்டாரே
174.
கொண்டிட்ட பின்புதான் போதுமப்பாவென்று கொடிதான காந்திமதிக்குள்ளே சென்றால்
என்றுமெனையாண்ட காலாங்கிநாதர் யேகவெளியம்பலத்தே யேகிநின்றார்
பண்டுபராபரனால் கடாட்சத்தால் யான்பாய்ந்துமே விண்ணேறி யோங்கிவந்தேன்
மண்டுமணித் தாயோடு பழக்கமாகி மனமூனித்திரும்பிவந்தேன் மக்கள்பாரே

## <u>பசுண்தீர்யோகம்</u>

175.
வந்தேறி நெஞ்சினுள்ளே நினைவையோடி வளர்நத பனிபுகைபோலே யிழைத்துவோடும்
பந்தேறி நினைவையுன்னிப் பற்றிப்பாரு பரிந்துமேற்கொண்டால் உன்னிப்பாரு
மந்தேறி மகோசரத்தை நின்றுபாரு மருவவே இதற்குள்ளே காலைக்கூட்டு
புந்தேறி செய்தவர் யாரென்றால்கேளு புசுண்டர் செய்தார் சதாநித்தம் பூட்டியாட்டே
176.
ஆடவேயவர் செய்தவகை யேதென்னில் அய்யமாங் கும்பகந்தான் அறுபத்துநாலு
பூடவே பூரகந்தான் முப்பத்திரண்டு புகையான ரேசகந்தான் பதினாறாகும்
ஆடவேயவரிருந்து பெற்றார்பேறு அழகான கற்பகமரத்தின் மேலே
காடவே காகமென உருவைக்கொண்டு கண்டிருந்தார் கோடியுகங் கரைகாணேனே
177.
கரைகாணாகோடி பிர்மாகண்டாரையா கரையற்ற விஷ்ணுமயம் கோடிகண்டார்
தரைகாணா சங்காரங்கோடி கண்டார் தாக்கோடே மஹேஸ்பரத்தைத் தாண்டிநின்று
துரைகாணாச் சதாசிவன் தானொடுங்கிச்சத்தி துலையாத வாதமுடன் விந்துவற்று
திரைகாணா சிவன்சென்று சிற்பரையிற் சேர்ந்து தெளிகடந்த பூரணத்தில் சொக்கினாரே

178.
சொக்கியே புசுண்டருமே யவளைத்தொட்டு சுழுத்தியென்ற சினேந்திரன் தானுநின்றார்
பக்கியிந்திர ஜாலவித்தை போட்டானாகில் பரிந்துமே ஷணப்பொழுதில் பணியும்வந்து
நிக்கிநிஜமென விரித்தாள் யீடாரத்தை நிமிஷத்தில் அண்டமெல்லாம் மாய்ந்துபோச்சு
சுக்கியதை வேணுமென்றால் உடைக்கவல்லாள் சுருதிக்கு வித்தான முத்தித்தாயே
179.
முத்தியிலே நின்றுமந்த கண்டமூர்த்தி முன்போலே கற்பகமே ஆவாவென்றார்
பத்தியிலே யதுமேலே கூடாரமென்றார் பார்க்கையிலே கூட்டோடே விருட்சமாச்சு
நித்தியிலே நின்றுரைத்த சித்தைப்போலே நிலவரமாகக் கூட்டுக்குள் அமர்ந்துநின்றார்
கத்தியிலே நிற்கிறதோர் பூவைப்போல கண்டத்தே நின்றுரைத்துக் கருதினாரே
180.
உரைத்துமே புசுண்டருட பிறப்பைக்கேளு உகந்துமது நடனங்கள் களிக்கும்போது
பரிந்துமே பரிதிமுதற் சோமனையுந் தரித்துப் பராபரமும் பார்வதியும் பார்த்தாரத்தை
நிரைத்துமே சிவகளையை காமம்போல சேர்ந்தனைய யன்னமங்கே நிறைக்கெர்ப்பமாச்சு
இரைத்துமே இருபத்து ஒன்றுபிள்ளை ஈசனுடகளையாலே புசுண்டராச்சே
181.
ஆச்சென்ற இருபதுபேர் காமத்தாலே யனேகநாளிருந்துமே லிருந்துபோனார்
போச்சென்று அவர்பிடித்தார் பிராணயோகம் பேரானசிவகளை மூர்க்கத்தாலே
பேச்சென்ற வாணவம் பிறந்தால் பார்மேற் பேறுபெற அவர்போலே யாருக்காகும்
மூச்சென்று முந்திமுந்தி மூலயோகம் ஒளிவுகண்ட மட்டுமே நெஞ்சிற்பாரே
182.
பாரென்ற நெஞ்சில்நிற்கும் நடுமூலந்தான் பரிநேராய் பார்த்துமே பழக்கமாக்கி
பூரென்று வந்ததென்றார் புசுண்டமூர்த்தி யொருநெருப்பு பஞ்சுபட்டார் போலேயாகும்
போரென்ற பரத்தேறு போகரையய்யமாம் பின்குஞ்சு சிறகொடிந்து நாலும்போனால்
ஏரென்ற வினத்தோடே கூடாதாய் போவிளமையிலே மூலத்தைக் கூட்டிடாயே
183.
கூடாட்டால் அரிதரிது பிராணனென்றார் கூறியதோர் சொன்னமொழி கேட்டுப்பொங்கி
ஆடாட்டால் அடியற்ற மரம்போல் யானுமவர்பதத்தில் வீழ்ந்தெழுந்தேன் ஆண்மையாக
நாடாட்டால் ஐயரன்று யோகமூர்த்தி நம்போலே வாழ்ந்திரென்று யெடுத்தாரைய்யர்
மூடாட்டால் சொன்னதொரு மூலமாதி முதிர்ந்துநின்ற பிராணனைத்தான் அறிந்திடாயே
184.
அறிந்திட்ட ஐயரெங்கே இருப்பதென்றால் அதிகமாமேருவுக்கு தெற்கேயாகும்
முறிந்திட்ட வாதமுண்டு ஞானமுண்டு மூர்க்கமாம் யோகமுண்டு சித்தரெல்லாமுண்டு
பிறந்திட்ட பிராணனைத்தான் அறியப்பண்ணி பூரணந்தான் லயிக்கின்ற யோகங்காட்டி
உருந்திட்ட மாவாசல் உணர்வுகாட்டி உபதேசத்தண்மைதான் உரைத்திட்டாரே
185.
உரைத்திட்டு அழித்தலும் படைத்தலும் செய்தார் உரையான சிவலோக ஆண்மையாலே
வரைத்திட்டு அனுப்பியே விடைகொடுத்து மாசற்றமூர்த்தியே போய்வாவென்றார்
தரைத்திட்ட ஐயருமே சாகைக்குப்போனார் சாங்கமாய் பிள்ளைகட்குத் தன்மைசொல்லி
புரைத்திட்டு பிராணனைத்தான் அறியுங்களென்று போதித்தேன் பிள்ளைகட்கு புத்திதானே

186.
தானான ரெண்டெழுத்தை பூட்டியேறச் சதிரான சிவயொகம் கையிற்சிக்கும்
ஆனான விசுத்தியிலே நின்றுகொண்டு அப்பனே நினைவாலே மூலம்பாரு
கூனான சுழிமுனையில் குழலாய்க்காணும் குறிப்பாக வாசிவைத்து காலையாட்டு
பானான பதிசென்று நந்திகண்டு பண்பான மதுவையுண்டு பரிந்துபாரே
187.
பரிந்துநின்று கண்டத்தைப் புருவமையம்பாரு பண்பானசுடர்போல பகுந்துகாணும்
குரிந்துநின்று குருபதத்தைத் துவாதசத்தைப்பாரு கூர்மையாய்ப் பதினொன்றில்
கடந்துதோன்றும்
கரிந்துநின்று கண்டத்தில் நாகத்தைப்பாரு கலங்காமல் பிராணனுமே நிலைத்துக்காணும்
அரிந்துநின்ற அனாகதத்தை மாலோடுபிரமன் அடுத்துப்பார் வெட்டவெளி அல்லலாமே
188.
அல்லலாம் தேகத்தை அறியவென்றால் அடுத்தேறி உன்மனையில் நின்றுபாரு
கல்லலாம் கீழ்நோக்கக் கண்டிப்பற்று கையினால் பிடித்த இடமொன்றுமில்லை
வல்லலாம் லட்சியங்கள் வழியாச்சு ஆனால்வாராது நித்திரையும் பசியுங்கேளு
புல்லலாம் பிறசத்தம் கேளாப்பக்கம் பிறந்திருந்து லட்சியத்தைப் பூட்டிமாட்டே
189.
பூட்டையிலே பிறசத்தம் கேட்டுதானால் புலங்களது முஷ்கரமாய் முறித்துப்போடும்
மாட்டையிலே மனதுசற்று நழுவிற்றானால் மடையனாய் கடித்த வெள்ளெலும்பாய்ப் போவாய்
தூட்டையிலே மனமலைக்கும் சூடொட்டாது சோதனையால் குறிகளெல்லாம்
சுழற்றிப்போடும்
காட்டையிலே கைநெல்லிக்கனி போலாகும் கனமான வாசிவைத்துக் கருத்தைவூனே
190.
ஊனிப்போம் கப்பலுக்கு நங்கூரம் போட்டால் உறிகின்ற வாசியைநீ உரைத்துக்கட்டி
ஆனிப்போல் அசையாமல் மனத்தைமாட்டி படியோடே யழுக்காறு தளத்திலோட்டி
காணிப்போம் புலன்தன்னை நாட்டிநாட்டி கரிபரிக்குக் கடிவாளம் பூட்டிக்கட்டி
மூணிப்போ முனைபிடித்து குருபதத்தில் பிடிக்க முனிந்தநிராதாரத்தில் மூட்டியோடே
191.
ஓட்டியே மூலத்தால் முத்திபெற்றார் உத்தமனே பாட்டனென்ற மூலநாயர்
நாட்டியே நந்தியல்லோ உபதேசித்தார் நலமான மூலத்தில் நந்திநந்தி
ஏட்டிலே மூலத்தால் முத்திபெற்றார் ஏத்தமாம் பாட்டரென்ற எட்டுபேரும்
மூட்டியே இதுகடந்த மூலமூலம் மூலமென்று மூச்சுவிட்டுப் பேசொண்ணாதே
192.
பேசொண்ணா மூலத்தே எல்லாம்தோன்றும் பொருளாகவிரிந்துநின்றுப் பிரபஞ்சமாகிப்
பேசொண்ணா போகமெல்லாம் அனுபோகித்து பெரிதான மூலத்தே வந்துசேரும்
பேசொண்ணா வகசரத்தோ உரப்பனமும் பயமும் போக்கொன்று வரத்தொன்று
ரெண்டுஞ்சொல்வேன்
பேசொண்ணா வகாரமது உற்பனத்தைப்பண்ணும் பிரிந்துகொள்ளும் உதரத்தாயையுமாமே
193.
லயமான நிஷ்களமாம் மகாரமொன்றில் நந்தியென்பார் அதன்பேரு அதுவேபோகம்
நயமான ஓங்காரம் அதிலேநின்று ஓராறும் அறிவுயர்ந்து தாழ்ந்துதானும்
நியமான பனிரெண்டாய் நின்று அடிநிலைத்துநின்ற எட்டினுட கனையைவாங்கி
மயமான காமப்பாலிரைத்து இரைத்து மாண்டுபோம் கள்ளருடன் மருவிடாதே

194.
மருவுவதுதான் எதையென்றால் மூலத்தீயை மாட்டினால் வாசியுங் கைவிட்டேகும்
கருவதுவும் பேச்சாக கருதிடாதே காமப்பேய் பிடித்தது போக்கேபூணு
வருவதுதான் மொத்து உள்ளே பார்த்தானுற்ற கள்ளரைவருந்தான் ஓடிப்போவார்
முருவதுதான் முன்பிள்ளை என்றாயானால் மூலத்தில் காணலாம் காலனில்லைதானே
195.
தானான காலனுண்டென்று உலகோர்சொல்வார் தனிக்காலன் வேறில்லை மூலன்காலன்
ஆனான ஆலமுண்டார் அஞ்சே செய்தார் அதைக்கண்டு பதஞ்சலியம் அன்புகூர்ந்தார்
கோனான பிரபஞ்சத்தில் தில்லைக்குள்ளே கூப்பிட்டு ஆட்டுவித்துக் கூத்துகண்டார்
ஆனான கன்னியன்று ஆலங்காட்டில் ஆட்டுவித்தாள் திருநடனஞ் சிவனைத்தானே
196.
சிவசத்தி வந்திதிலே தானாய் நின்று சேர்ந்துநின்ற இடபாகத்துரிய வீடு
அசைத்த பானமது நின்றுகொண்டு அதிகமலஞ்சலம் கருத்து அருந்தல் கேட்கும்
தவசித்தமானன் அதில்கூடிக்கொண்டு சாப்பிட்ட பதார்த்தமெல்லாம் சமனாய்ச் செய்யும்
துவதத்த நெஞ்சான சுழுத்தியுள்ளே துலங்கியதோரென வாசத்தி ஈசன்தானே
197.
ஈசனென்ற இடத்துள்ளே இதனைக்கேளு ஈராறு அதனுள்ளே காவலாச்சு
தாச்சென்ற பதினொருவர் கருவிகூட்டர் தனித்துநின்ற பிராணனங்கே நிற்கும்பாரு
கோச்சென்றும் கொலுவிருந்தார் பத்தியீசன் கொள்கின்ற சொர்ப்பனத்தின் வீட்டைக்கேளு
பாச்சென்ற பரத்தினிடம் வடிவுமாச்சு பாங்கான வுதரனங்கே பாரித்தானே
198.
பாரித்துப் பதினாறு கருவிக்கூட்டம் பண்பாகக் கொலுவிருந்தார் பரமன்சத்தி
வீரித்து அவ்விடத்தே நின்றவரானார் விராடன் பதிலுறைந்தான் முன்பின் இரண்டுங்காணும்
ஏரித்து எட்டினுட கனையைவாங்கி படிசூரை விட்டுவிடம் ஏந்திப்பாரு
பூரித்து கடந்த வெள்ளம் புருவமையத்தே பேரானசாக்கிரமாம் தவமிதாச்சே
199.
ஆச்சென்று பதினாறு கருவிக்கூட்டம் மதிநின்றார் சதாசிவனும் மணித்தாயாகும்
வேச்சென்ற விபானனங்கே விரைந்துநின்றான் மேலானகொலுவாச்சு பிரபஞ்சமாச்சு
தேச்சென்ற கவியெங்கே தொண்ணூற்றாறு சுயம்பாக அதனுடைய தொழிலைச்செய்யு
மாச்சென்ற மறந்ததெல்லாம் தோற்றமாகும் மனங்குவிந்து பூரணத்தின் கொலுவிதாமே
200.
தாமென்ற கொலுக்கண்டு கருவிக்கூட்டம் தனித்தங்கே இந்திரியக் கூத்துகண்டு
மானென்ற மாயைபெண்ணாசை மகத்தான படுகுழியில் மாய்ந்து காண்பார்
ஆமென்ற வடிவெடுத்து அகங்காரங்கூட்டி அழும்பான மயக்கத்தால் அகமேலாக்கி
பாமென்ற பாவத்தை தலைமேற்கொண்டு பாங்கான வாசனையில் குறுகுவாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

201.
புருகுவார் நரகத்தில் மூலங்கண்டு புகுந்துமே தீயொளியில் கூடக்கூட்டி
கருகுவார் களையிருந்த பானுவீட்டில் கலங்காமல் கலந்துமந்த ஒளியுங்கண்டு
தகுறவே சந்திரனாற் விருந்தவீட்டில் தாமதமாய் இத்தணலை மேவப்பண்ணி
அகுறவே ஆபரணச் சோலைபோல அழுந்தவே உடல்குளிர்ந்து புளகமாமே
202.
ஆமென்ற சாம்பவிமுன் திரையைக்காட்டி ஐங்கோணக் குருபதத்தின் புகழைக்கண்டு
நாமென்ற நாதவிந்து ஈசன்சத்தி நற்கமலம் ஆயிரத்தெட்டு இதழின்மையம்
தாமென்ற ரவிகோடி மதிதான்கோடி சார்ந்துநின்ற மூலத்தில் சதமாங்கோடி
வேமென்ற அவ்வொளிக்கு நின்றுமேலே இருக்கிறதே தேவியென்ற பிரமன்தானே
203.
பிரமமாம் பிரமமென்பார் போதமென்பார் பிரகாச சுத்தவெளி சாரவென்பார்
நிர்மலமாம் வேறொன்றிலாத நிற்குணந்தான் நிர்மலமாங்கடந்துநின்ற வேதாந்தமென்பார்
விபரமாம் பிரபஞ்சமெல்லாம் விளைந்ததென்பார் வெளியாக நிற்மயமாய் நிறைந்ததென்பார்
வர்மமாம் கடந்தவழி வெளிதானென்பார் வாய்ப்பேச்சே அல்லாமல் வரைகாணாரே
204.
கரைகாணா பூரணத்தின் ஒளியைச்சொல்ல மதியேது துதியேது தீய்தானேது
நிரைகாணா நிரஞ்சனமாம் எழிலைக்காண நிசமாகக் கேசரியால் நீட்டிப்பாரு
பரைகாணாப் புல்லருக்கு ஒன்றுமில்லை புத்தியள்ள சித்தருக்கு பொருள்தான்மேலே
உரைகாணார் மூலத்தே பார்த்து என்ன உறுதியில்லாது உண்ணியே உளறிப்போச்சே

## ஆசனத்தில் அப்பியாசிக்கமுறை

205.
உண்ணவே யகாரமுதல் எண்பத்தொன்றும் உறுதியாம் பதினாறில் பிரிந்ததுப்பா
பண்ணவே யகாரமது ஈசனாச்சு பதிகடுக்கவார்த்தி கஞ்சத்தியாச்சு
எண்ணவே இப்படி பதினாயிரமும் ஏத்தமாஞ் சிற்ற சத்தியாகநின்று
முண்ணவே இதனாலே முப்பத்தைந்தாச்சு மூவுலகோர் எழுத்தாக முதிர்ந்தவாறே
206.
முதிர்ந்தவன் பத்தோரெழுத்தால் வேதமாச்சு முக்கியமாம் புராணமொடு சாஸ்திரங்களெல்லாம்
விதிர்ந்தபின் புயிதற்குள்ளே விரிந்ததுப்பா மிக்க சச்சிதானந்த வீரினாலே
நதிர்ந்தாறும் நதிகளெல்லாம் சமுத்திரத்தில் புக்கி நகர்ந்தார்போல் பூரணத்தில் லயிச்சிப்போகும்
ஒதிர்ந்துதே ஒன்றுமில்லை போக்கியதோர் நாளுமில்லை ஒளிதான்காணே
207.
ஒளியான வாசியைத்தான் உண்ணிக்கொண்டு உருண்டாலும் புரண்டாலும் உண்ணுமூலம்
அளியான ஆணியடித்தார்போலக்கூடும் அப்பவொரு விக்கினங்கள் அனுகிடாது
குளியான முழங்கால்மேல் குதிகால்போட்டுக் கொடுஞ்சுழுக்கால் கோமுதாசனத்தில் கூட்டு
வெளியாக அணிந்தாக்கால் வலக்கால்மேலே விபரமாம் ஆசனத்தில் கூட்டிடாயே

208.
ஆசனத்தில் கூடையிலே வாசினைசுண்டி அத்துடைமேல் ரணடான் பதத்தைவைத்து
பாசனத்தில் பற்பாசனமாய்க்கட்டிப் பதிவாக நுனிமூக்கைப் பரிந்துபாரு
வாசனத்தில் சுழிமுனையில் வாசிகூடும் மருகின்ற வாசினைத்தான் ஓடிப்பேரீகும்
ஏசனத்தில் இதுமார்க்கம் தாயைக்கண்டு இருக்கலாம் பூரணத்தில் எய்தலாலே
209.
எய்தினால் சிவயோகி ஞானியாவான் அருகியே வாசியெல்லாம் முடங்கிச்சேரும்
அய்தினால் மூலத்தில் ஒளியேவிசும் ஆறுதலம் கிரந்தியெல்லாம் அற்றுப்போகும்
கொய்தினால் கும்பகத்தே மிதக்கலாகும் கொடிதான தணலே அசைக்கப்போவார்
மைதினால் வாய்வுவென்ன மசகமாச்சு மறந்தந்த சித்தரும் கண்டவாறே
210.
வாரான மூலத்தை யவ்வென்றூனு மருவியபின் முனைகொண்டால் வங்கென்றூனு
பாரான பளிச்சென்றால் சிங்கென்றூனு பற்றியே முன்னூறு வகைகாணும்காணு
மீரான மின்னினுட ஒளிபோல் காணும் மிரலாதே மனமுன்னே சாரமுண்ணு
ஆரான ஆலமுண்ட சிவன்முக்கண் போல் ஆங்கார தீபொளியை அமுந்திப்பாரே
211.
தீபொளிதான் பளிச்சென்றால் பிரண்டையிலேவூது சிந்தித்தால் யோகமதுசித்தியாச்சு
சரவொளியாம் குமபகம் மூளைக்கேறாது கொடிதான வாயுவங்கே மவுனமாகும்
சரவொளிதான் சமைப்பதற்குத் தீயும் வேண்டாம் சமர்த்தான சிகாரத்தை யூதப்பற்றும்
சூழொளியாஞ் சுழித்தியங்கே நெடும்பாதையோடு சுளுக்காக இம்முறையை ஆடிப்பாரே
212.
ஆடியங்கே பார்ப்பதற்கு முறையைக்கேளு ஆடவெல்லாம் சொல்லுகிறேன்
அறிந்துகொள்ளு
ஈடியங்கே இடகலையால் பூரித்துநின்று எழிலாக மூலத்தே நினைவாய்க்குமாயின்
நீடியங்கெ பின்கலையினுள்ளேரேசி நேர்ப்பாக நேர்ப்பாக யேத்திவாநீ
தூடியங்கே விரைத்தாக்கால் சுத்திநாடி திறமான வாதபித்தம் சிலேத்தமமும் போமே
213.
திறமான மூன்றுவகை நோயும்வெந்து சித்தியாய்க் காயந்தான் இருக்கும்நன்றாய்
நலமான நல்வினையும் தீவினையும் தீரும் நலியான ஐம்புலனும் விரைந்துபோகும்
உறவான ஓங்கார நாதத்தாலே ஒருகோடி இடிபோலே ஓங்குமோங்கும்
அறமானது இப்படியே அனைஞ்சுகண்டேன் அறிந்துமே நாங்கள் இப்படிதான்பாரே
214.
பாருநீ யவ்வென்றாலும் புக்கூடும் பரவிதோர் மகாரமதில் சேர்ந்து நின்றால்
ஊருநீ உகாரமாய் மேலேயேறும் இதுகாணும் பிரகாசம் என்றமார்க்கம்
நாருநீ பளிச்சென்றால் நந்தியாக நயமாக இதினோடே வாசிசேரு
ஆருநீ அட்சரமும் மகாரத்தோடு அனைந்ததோர் வாசிரெண்டு நாதவிந்தே
215.
நாதமென்றும் விந்துவென்றும் வாசிக்கபேரு ரவிமதியும் சிவசத்தி என்றுபேரு
வாதமென்றும் வசியமென்றும் அதுக்கேபேரு மனமென்றும் போதமென்றும் இதுக்கேபேரு
நீதமென்றம் பூமியென்றும் இதற்கேபேரு நிலையான வேகமென்றும் கந்தமென்றும் நேரு
காதமென்றும் தாரமென்றும் இதற்கேபேரு கண்ணொளியாய் நின்றது இரண்டும்தானே

216.
இரண்டையும்தான் உற்றுப்பார்க்கப் பார்க்க நிறையற்று உறையற்று உணர்வுமற்று
அண்டையுந்தான் நல்லற்றுப் போனதெல்லாம் மடங்கிற்று உட்புகுந்த அந்தநாவில்
தண்டையுந்தான் சித்தொத்துத் தெளிவுமொத்து செயலற்ற நிஷ்களமாய்க் காணுங்காணும்
பண்டையுந்தான் பற்றற்றசிற்பரந்தான் பணிந்திடும் என்றுசொல்லி பகர்ந்திட்டானே
217.
பகர்ந்திட்ட வாசியது என்றபேச்சு பண்பாக வாய்க்கும்மெத்த எளிதோசொல்லு
திகர்ந்திட்டதேசிதான்ஞானதேசி சேர்நதிதைத்தான் மனமொத்து ஏறுவோர்க்கு
புகர்ந்திட்ட புருவத்தில் நின்று ஆடும் மனோன்மணியாம் பெண்ணைப்பாரு
இகர்ந்திட்ட காசிகங்கையமுனையூன்று மேகமாய்க் கண்டுந்தான் புருவமென்னே
218.
என்னவே சிகாரமது நெருப்பாரம்மா இசைந்துநின்ற வகாரமது மயிர்ப்பாலமாம்
உண்ணவே இரண்டும் விட்டால் ஒன்றாயொன்றில் சிகாரத்தையொளிக்காண்டு
மன்னவே யோகாரமும் தில்லசவுமுந்தும் வருந்தியே இதுநன்று கள்ளகன்று
தன்னவே இரணடொளித்தான் சாந்தியாவான் தனித்திரண்டுமாறுக்குந் தள்ளநன்றே
219.
நன்றான சிகாரத்தில் கோபமெய்து நானென்ற ஆணவத்தால் ஆங்காரம் தாக்கும்
ஒன்றான ஈதிரண்டும் பெரியோரையா பிறப்பதற்கும் இறப்பதற்கும் பெரியவித்து
உண்டாட உகாரமது உடனேயாச்சு ஓங்கியதோர் சிகாரமது வரைந்தேபுக்கி
என்றான பிறப்பிறப்பும் இரண்டமாச்சு எழுத்திரண்டும் ஏத்தமாய் இருத்திப்பாரே
220.
இருத்தியே பாரென்று சொன்ன ஏத்தமாங் காலாங்கி ஐயர் தாமும்
பருந்தியே பக்குவம் பார்த்தெனக்குச் சொன்னார் பாரென்றார் வாசியைத்தான் பூரணத்தில்லயிக்க
மருந்தியே கண்ணிமைக்குள் வாயில்வந்து கலங்கும் மருவிரண்டும் பிறந்திறந்து வித்திதென்றார்
மறித்துமே மவுனத்தை விடாதேயென்றார் மகத்தான விதுரண்டால் பிறப்புமாச்சே
221.
பிறவாமல் ஞானத்தில் கூடுகூடு பிறத்தியாந் தூரமல்ல புகுந்தாராகில்
மறவாமல் எந்நாளும் வாழ்வாய் நீதான் மாசற்ற நாளைப்பார் சக்கோடாது
கறவாமல் கண்டததை வைத்துக் கனிந்துமே யோடுறதை ரகடுகிப்ப
நறவாமல் கைக்கனிபோல் நாலும்தோன்றும் நாதாந்த மணித்தாயும் அழைப்பாள்பாரே
222.
பாரென்ற நாலையே பார்க்கவென்றால் பண்பாக வகையெல்லாஞ் சொல்லக்கேளு
கானென்ற காலையேமாலைக்கண்டால் கடியதோர் கூட்டங்கள் கலக்கவேண்டாம்
நானென்ற நிசியான நடுசாமத்தில் கலங்காமல் அசைவற்று இருந்துபாரு
கோனென்ற கோலத்தைக் கூட்டிப்பார்த்துக் குறுமுனியாந்தலத்தில் நின்று குறித்துநோக்கே
223.
நோக்கியே நிலைத்துநின்று அகண்டத்துள்ளே நுட்பமாம் அட்சரந்தான் பதினார்தன்னில்
ஒக்கியே ஒன்றிதின்றால் உயிரேயாகும் உள்ளாறில் வகாரம்நிற்கும் சாவுபொய்யாம்
நாக்கியே கைக்கெட்டா நாலுங்காணும் நாலதனிலே நின்று வாசியோட்டி
மூக்கியே தாய்காண்பான் மூன்றும்வீதி முப்பாழெல்லாம் வெளியாம் முன்பின்னாமே

224.
பின்னாகப் புக்கியிரு யென்பாள் தாயும் யோர்தமொழி யிருவென்ற சொல்லைக்கேட்டு
முன்னாகக் குதிரைநான்பாகத்தோரணன் மூலமாம் ஆதாரமெல்லாம் காணேன்
கொன்னாகக் குருவென்ற மொழியுங்காணேன் குறித்திட்ட பொறியோடு நெறியுங்காணேன்
மன்னாக மறுவென்ற தாயுங்காணேன் மட்டற்ற போதத்தில் உன்னினேனே
225.
உன்னியே சமாதி ஐந்தின் உறுதிகேளு உகப்பான தத்துவம் யசாதியென்று
முன்னியே தத்துவங்கள் முப்பத்தாறும் முனிந்து அகலாப் பூதங்கள் ஐந்தாகும்
துன்னியே சூட்சுமத்தில் தானடக்கி சூட்சுமத்தை நம்பெரிய வாசன்போலாக்கி
கன்னியே காரணமாஞ் சரீரத்திடைக்கிக்கருதி இதைப்பிரகிருதியிலே கலறப்பண்ணே
226.
கலறவே புருடனையந் திட்டமான மாகக்கலந்துநின்ற அறைதன்னியமாகக்கண்டு
ஒலறவே கருத்தழிந்து ஒன்றேயாகி உன்னனாயின் காற்றசையா விளக்குபோல
அலறவே அலைச்சலற்றுத் தானேதான் ஆயகண்ட மெய்ப்பூரணமாய் நின்றுபின்னை
துலறவே தேகமற்று இருப்பதாலே சுத்தமாம் தத்துவல்ப சமாதியாச்சே
227.
சமாதியாம் சல்விகற்ப சமாதிகேளு தனித்தனித்தான் இரண்டுவகை அதிலேயுண்டு
சமாதியாம் சத்தானு வித்தையுண்டு தரிப்பான திரிசானு வித்தையொன்று
மெமாதியாம் சத்தானு வித்தைமார்க்கம் பெரியதொரு தத்துவ சமாதிக்குத்தான்
மமாதியாம் சத்தங்கள் பட்சியோசை படுகிறது உன்மனத்தை பாருமங்கே
228.
பருவமாம் சத்தானு வித்தையொன்று படிப்பான சல்விகற்பம் என்றுபேரு
திருவமாம் திரிசானு வித்தைமார்க்கம் சூட்சியாய் அந்தநிலைக்குள்ளே நின்று
தருவமாம் தன்னை அனுசந்தானம்பண்ணி சஞ்சரிச்சு திரிசானு வித்தையாகும்
அருவமாம் சல்விகற்ப சமாதிமார்க்கம் மருவியதோர் சஞ்சாரத்திருக்கில் பாரே
229.
பாரென்ற நிருவிகற்ப சமாதிகேளு பாங்கான தத்துவநிலை சமாதிமுத்தி
காரென்ற சத்தானு வித்தைமுத்தி தன்னைத்தான் மறந்து தூக்கமுறு மயக்கம்போல
வாரென்ற பிறசத்தம் காதில்கேளா மருவியந்த பூரணத்தே லயித்துநிற்கும்
நேரென்ற அசைதன்னியமாகப்போனால் நிருவிகற்ப சமாதியென்ற நேர்மையாச்சே
230.
நேர்மையாய் சமாதிவிட்டு சஞ்சரிக்கையில் நினைவாகச் சமாதியிலே இருக்கும்போது
தீர்மையாய் பக்கானமென்ற திரையத்துள்ளும் சிதைந்த பிரபஞ்சமெல்லாம் பொய்யென்றெண்ணு
வேர்மையாய் விவகாரத்தாலே தோன்றி விரிந்த பிரபஞ்சத்தின் பாசந்தள்ளி
நேர்மையாய் நிருவிகற்ப மாகநின்றால் நெளிவான நிருவிகற்பம் இதுவேயாச்சே
231.
ஆச்சென்றத் துவல்ப சமாதிமுத்தி அறிவான நிருவிகற்பம் ஆகும்போது
நீச்சென்ற நிருவிகற்ப சமாதிக்குள்ளே நேரான விக்கினங்கள் நானதுண்டு
தூச்சென்றது எதுவென்றால் சொல்லக்கேளு சுருதிலயம் விட்சேமம் சட்சேமமாகும்
காச்சென்ற கரமாம் சுவாசமொன்று கருத்தூணிச் சொல்லுவது நாலுதானே

232.
நாலென்றது இதற்குள்ளே இடத்தைக்கேளு நனிந்துநின்ற நித்திரைதான் விட்சேபந்தான்
காலென்ற ராகமுறும் கலகத்தாலே கலந்துவரும் வாசியும் காரணத்தாலே
மாலென்ற மனோக ராஜ்ஜியத்தினாலே வருகுந்தான் சஞ்சேபம் நித்திரையுமல்ல
ஆலென்ற மனோக ராஜ்ஜியமுமல்ல அரவான சொருபங்கள் மறக்குமதுவே
233.
அதுமறந்து இடமாக அகண்டுநிற்கும் அத்தியதில் ஆச்சரியம் சுவாசமாகும்
கதுநமக்கு மனமொழிந்த கணுவில்நின்ன கருதுகின்ற சுரூபத்தே சந்தோஷித்துச்
சதுமறந்து தனித்துயர்ந்த சமாதியுள்ளே தனித்துநின்ற ஆனந்தம் அனுபோகத்தைந்து
பறந்துபோம் நாலுவிக்கினமுமற்று நலமுற்ற சொரூபத்தில் லயிக்கநன்றே
234.
அயிக்கவே நன்றான அகண்டவிருத்திய நாதகாற்றில்லா விளக்குபோல
ஐயிக்கவே அலைச்சலற்றுத் தண்ணீருமுப்பம் அடக்கி நின்றவாறதுபோல அழுத்திநிற்கும்
தயிக்கவே பிரமன்மாலு ருத்திரனும் கேட்டுத் தனித்துமே வேற்றுருவாய்ப் பிரமன்தானும்
அயிக்கவே இப்படிதான் கடிகையொன்று யறுநேரம் கடிகையுற்றால் பதத்தைக்கேளே
235.
கேளுமே அசுவாதி யாகங்கோடி கிருபைபண்ணி செய்ததோர் பலனுக்கொக்கும்
மூளுமே இப்படித்தான் சமாதி மூட்டில் முனையாகச்சுழுத்தியென்று எண்ணவேண்டாம்
கேளுமே சுழுத்திக்குச் சித்தந்தானும் திலங்கி நின்ற வஸ்துமே நசித்துப்போகும்
ஆளமே சமாதிக்கு நாம்பிரமம் என்று ஆண்மையாய் அதுவிருத்த இருக்கும்பாரே
236.
பாரென்று சொல்லுகையால் இரண்டுக்கும் பேதம் பண்பான நிருவிகற்ப சமாதிமார்க்கம்
தாரென்ற சஞ்சாரச் சமாதிகேளு சார்ந்துநின்ற நிருவிகற்பம் பட்டேயப்பா
பேரென்று எழுந்திருந்து பிரபஞ்சத்தைப் பார்த்து விரிவாக விவரிக்குங்காலமெல்லாம்
ஆகான்ற பிரபஞ்சமெல்லாம் சமுத்திரத்தில் நிற்கும் துறைபோல மாயம்தானே
237.
தானான மாயம்மூன்று கிலந்தியிட மலைபோல் தயங்குகின்ற கூர்மத்தின் அங்கம்போல்
ஆனான தோயமூற்ற ஆகாசம்போல் அழுத்துகின்ற சொர்ப்பனத்தின் நிலைபோலே
தானான நம்மிடத்தே உண்டாச்சையா தம்மிடத்தே இருந்துகொண்டு மாரபுக்கி
கானான அறிவழிந்து போறதானால் கலந்து நம்மைவிட ஒன்று காண்கிலேனே
238.
காண்கிலேன் சகலமும் யானென்று நின்று கலந்து நாமொன்றல்லோ வேறொன்றில்லை
பூன்கிலேன் என்னிடத்தே பிறந்ததெல்லாம் பேயாகவழிந்தெல்லாம் எண்ணிலெய்தும்
என்கிலேன் என்னைவிட்ட தொன்றுமில்லை இயல்பாக உரைந்துநில்லு எந்நேரந்தான்
மாண்கிலேன் மனத்தோடு சந்தானத்து மருகியே உள்ளிட்டு உரைதல் நன்றே
239.
உரைத்திட்டார் சாதாரப் பயந்தான்வந்து உறப்பெரிய பிராமணன் உருப்பயந்தான் வந்து
மறைத்திட்டு மானபங்கம் அகத்தாய்வந்து மயக்கமாய்க் கண்முன்னே தேவதைகள்வந்தும்
குறைத்திட்ட குருவினுட கோபம்வந்தும் கோளுகையும் விகற்பமென்ற அறியாரியுமாகி
பரைத்திட்டு பரிபாசம் அதில்பழிபோட்டு பதவிகற்க மனதிங்கே இல்லையென்னே

240.
என்னவே என்னிடத்தே ஒன்றும்காணேன் இயல்பாக நானொருவன் என்னில் எல்லாம்
பொன்னவே நான்கண்டதெல்லாம் பொய் பொய் பேரான சத்தியுட இந்திர ஜாலம்
மன்னவே மனமுரைந்து சஞ்சரித்தால் மகத்தான சஞ்சார சமாதியாச்சு
அன்னவே யாரூட சமாதிதன்னை பாய்ந்துமே சொன்னபடி அறிந்துகொள்ளே
241.
கொள்ளென்ற தேவதைகள் வந்தாலுந்தான் குவித்து சட்டை பண்ணாதே அகண்டமாய்நில்லு
அள்ளென்ற பத்துவித நெறியிற்கூடி அறிந்துமே சஞ்சார சமாதிக்குள்ளும்
தெள்ளன்ற திடம்பட்ட பின்புகேளு தெளிந்துமே சகலத்தில் சஞ்சலம் போக்கித்
துள்ளென்ற சுட்டசட்டி விட்டாப்போலே தோற்றமாம் தேவதையை சத்தாய்க்காணே
242.
காணவே தேவதையை மனதிலெண்ணிக் கலங்காமல் மலைபோலே அசைவுமற்று
நீனவே தேவதைகள் காற்று போலென்று நிச்சயித்து ஒன்றாக நில்லுனில்லு
ஆனவே பத்துவித நிலைதானென்று அறிவொடே திடப்பட்டு திறத்தில்நில்லு
பூணவே சாதகத்தின் நிலையைக் கூட்டி உத்தமமாம் ஆரூட சமாதியாச்சே
243.
சமாதியெல்லாம் பார்க்கும் முன்னே சாதகத்தைக்கேளு தம்பித்து வாசியைநீ பூட்டிமூட்டு
உமாதியாம் மூலங்கண்டு உரைத்தபின்பு யோகமெல்லாம் நவ்வொன்றா ஊட்டிப்பாரு
வமாதியாம் பயமெல்லாம் தள்ளிப்போட்டு வகையாகச் சமாதி ஐந்தும் வாய்க்கும்பாரு
நமாதியாய் நாலுமங்கே முன்னேத் தோன்றும் நாடினால் சமாதிக்கு முறை இதாமே
244.
முறையான மவுனமான சமாதிகேளு மொழிந்துநான் சொல்வதேது குருசொல்லக் கேளு
மறையான மாய்கையறு மனஞ்செம்மையாகு மாசற்றால் ராஜமென்ற யோகந்தானும்
அறையான மனஞ்சென்று அறிவில்கூடும் அதீதமதாங்கண்ட வெளிகாந்திகாணும்
பாறையா அதுக்கெல்லாம் படுதீபற்றும் பண்பான மவுனத்தை பரைகிறேனே
245.
பறையுறேன் அகாரமது மூலத்தில் நிற்கும் பண்பான உகாரமது கண்டத்தில் நிற்கும்
வரையிறேன் மகாரமது மனோன்மணியில் நிற்கும் வாகாக இழுத்தொன்றாய்க் கூட்டினாக்கால்
நிரையிறேன் மவுனமதறிவில் கூடுநின்றுரைக்கில் கண்டந்தான் உள்ளே கொள்ளும்
இறையிறேன் நடக்கையிலும் இருக்கையிலும் மைந்தா இருந்துரைக்க பிரபஞ்சமெல்லாம் எளிதாய்ப்போச்சே
246.
போச்சுதே பாழாச்சு முன்பின்னில்லை பெரும்பரியாந் திசைநாதங் காதில்கேட்கும்
ஆச்சுதே மதிகோடி வன்னிகோடி அடங்காத ரவிகோடி காந்தியாகும்
பாச்சுதே தினந்தோறும் பார்க்கக்கிட்டில் பண்பாக முழுகிப்போ மவுனப்பாம்புபோலே
தேச்சுதே சடத்துக்கு சிதைவுகாணும் சடந்தானும் சித்தியாய்த் திடமாய்ப்பண்ணே
247.
திடமாகப் பண்ணினால் சடம்போகாது சிதையாது மவுனத்தை திடமாய்நில்லு
மடமாக வுளத்தால் ஆவியைப்பாரு மனமொன்றில் கண்டத்தில் ஒளியேகாணும்
பிடிக்கப் பொய்யாம் பெரிதான கற்பூர தீபம் போல் நிற்கும்
சடமாகக் கண்ணினால் சாய்கையினாலாச்சு சச்சிதானமென்ற தேகமாமே

248.
தேகமே மாறுதலை ஆறுகாலாய்ச் சித்திமுத்தி கண்டுநின்ற பானுவுக்குள்
மாகமே இப்படியே மதியைப்பார்த்தால் மகத்தான அமுர்தமென்ற தேகமாகும்
பூசுமே பொன்போலே வர்ணமாகும் பொருள்கடந்தும் அண்டத்தில் புக்கலாகும்
சோகமே சோம்பதுண்டு சட்டைத்தோலுரியும் மவுனத்தின் சூட்சந்தானே
249.
தானென்ற சமாதியத்தான் முன்னேபார்த்து சாதித்து வம்பியாசம் பண்ணக்கேளு
ஊனென்ற ஓகாரமாம் உதாசனந்தான் தள்ளு உத்தமனே சிகாரமென்ற கோபம்போக்கு
வானென்ற வாயில் வந்தால் மனதுட்கொள்ளு மகத்தான துவைதமென்ற வாசினைதான் முந்தும்
தேனென்ற விதிரண்டுஞ் ஜெயிக்கமாட்டார் திறமாகத் தள்ளிவிட்டுச் சமாதிசேரே
250.
சேராக முந்தின தத்துவத்தைப்பாரு சேர்ந்தபின்பு ஏமமென்ற சயதயைத்தான்பாரு
பூராக கிரிகைசென்ற நேமத்தைப்பாரு பகழான ஓமென்ற பிராணயாமம்
பேராக உண்ணியபின் பிரத்தியாகாரம் பெரிதான தாரனையும் யோகமாச்சு
தாராக சமாதி ஐந்தும் ஞானமாச்சு சாதகமாய் இதனாலும் சார்ந்துபாரே
251.
சார்ந்துமே நாலுமுறை பார்ப்பதற்கு முன்னே தனிபஞ்ச கிர்த்திபமெல்லாம் சாதித்தேறி
மார்ந்துமே மவுனமாம் சமாதிக்குள்ளே மாசற்ற சிவமான தெரிசனையைக்கண்டு
சார்ந்துமே தத்வல்ப சமாதிபார்த்து தனிப்பின்பு சஞ்சார சமாதிசென்று
சேர்ந்துமே நிருவிகற்ப சமாதியானால் சிறந்தபின் யாரூடச்சமாதியாமே
252.
ஆமென்ற வேதாந்தம் சித்தாந்தத்தோடே ஆண்மையாம் சமதாந்த மப்பியாசமார்க்கம்
ஊமென்ற நாதாந்த யோகமார்க்கம் உற்றுநின்ற போதாந்த ஞானமார்க்கம்
வாமென்ற காலாங்கி வைக்குமார்க்கம் வகைமுறையாய் இதுவாறும் காணுங்காணும்
ஊமென்ற உடம்பெடுத்து விட்டகுறை வந்தால் உயர்ந்துநின்ற அகண்டமுன்னே யுண்ணுந்தானே
253.
தானென்ற உண்ணுவது தவளைசற்பம் போலும் தனித்துநின்ற கெருடன்கைக் கோழிபோலும்
வேனென்ற வேங்கைகையாடுபோலும் விரவியதோர் மயிலின்வாய் சற்பம்போலும்
மானென்ற இடிவிழுந்த மலையைப்போலும் மகத்தான துஷ்டர்கையில் செந்துபோலும்
மானென்ற போதமுன்னைப் பாய்ந்திறைஞ்சி பருவமே தீயானால் பண்ணுந்தானே
254.
பண்ணவே தத்துவத்தை பரிந்துபாரு பாங்கான யோகத்தில் மாய்ந்துபாரு
குண்ணவே மவுனத்தில் கூடிப்பாரு கேசரிதானேனென்றால் கூர்ந்துகேளு
நண்ணவே ரவிமதியாம் வன்னிமூன்றும் நாடிநின்ற அதுவல்லோ கேசரிதான் மைந்தா
வண்ணவே ஆனந்த வேதாந்தம் பார்ப்பாய் அதிலொன்றும் கேசரியைப் பார்த்திலேனே
255.
ஆர்ந்துவது எவ்வாறு வேதாந்தமார்க்கம் அறிவான மூன்றெழுத்தினுட ரேசமுன்னே
நார்ந்த நாலெழுத்து இரண்டாம் தீட்சைப்பாரு நலம்பெறவே ஐந்தெழுத்து மூன்றாம்தீட்சை
போர்ந்துவது ஆறெழுத்து நாலாம் தீட்சை பேரான எட்டெழுத்து ஐந்தாம் தீட்சை
பார்ந்துமது பத்தெழுத்து ஆறாம் தீட்சை பதினைந்து அட்சரந்தான் ஏழுமாச்சே

256.
ஏழோடு பதினாறு எட்டாம் தீட்சை ஏற்றமாம் சத்தியுட பிரசாதவித்தை
ஊழோடு ஒன்பதுதான் பின்புகேளு உத்தமனே பரமான பிரசாதவித்தை
மாழோடு பத்தாச்சு தீட்சைமார்க்கம் மருவியதோர் பதினொன்று மவுனதீட்சை
மூழோடு ஆடாது எட்டிச்சேரு மூதண்ட மவுனத்தை மெல்ல அறிவில்சேரே
257.
சேருநீ குருசொன்ன எழுத்தையொட்டி திறமான அறிவிலே அகண்டத்தைப் பாரு
ஆருநீ அண்டமது உன்னைத்தூக்கும் அறிவிலே மனம் செல்ல நாதம்மாங்கு
மாருநீ மவுனத்தைச் சொல்லாராசான் மகத்தான அகண்டத்தில் சொக்கிபுக்க
வாருநீ மந்திரம்பொய் வாயைமூடு மாற்ற பதினோராம் தீட்சைதானே
258.
தானென்ற குருபரந்தான் தாமரைப்பூப்போல் சகஸ்திரத்தில் எட்டிதழாய்த் தயங்கிநிற்கும்
நானென்ற நடுவேதான் மட்டமாக நலமான ஐங்கோணம் நிற்கும்பாரு
தேனென்ற நடுவேதான் சிவசத்தி யொன்றாய்ச் செயலற்று உருவமற்று ஒளியாய்நிற்கும்
கானென்ற ரவிகோடி காந்தியாகும் கண்கூசும் இந்தவொளி கண்கண்டாமே
259.
கண்டிட்டால் தத்துவங்கள் சூழ்ந்துநிற்கும் கருத்தாக தத்துவத்தின் தெரிசனையைக்கண்டு
அண்டிட்டால் ஞானத்துக்கு ஆதியிடம் அண்டமெல்லாம் போகுதடா உருவித்தாண்டி
வண்டிட்டால் ஞானமென்பார் வாய்பேச்சாலே வந்துதென்று வித்தைசொல்லி வாதுங்காட்டி
கொண்டிட்டால் குறிகளை காட்டமாட்டார் கொடிதான திருப்பாட்டு கூறுவாரே
260.
கூறுவார் குருபரத்தின் தத்துவத்தைத் தாண்டி குறிப்பாக சிவனுட தெரிசனையைக்கேளு
தேறுவார் சீவகளை கோடிரவிபோலச் சிறப்பாக நின்றுதடா திடமாய்ப்பாரு
ஆறுவார் சிவனென்ன சிவமேயாச்சு அறையிறேன் அதில்நின்றான் உறையொட்டாது
ஊறுவார் உன்னியதில் நின்றாயானால் உயரவல்லோ தூக்கியே விழுங்குந்தானே
261.
இழுக்கான மூலமுதலாறுந் தள்ளியேறிநின்று மேலற்றும் அடுத்துநோக்கி
உழுக்கான உன்மனையைத் தாண்டியேறி உதிப்பான ஞானசத்திக்குள்ளே சென்று
மழுக்கான கேசரியாம் மனத்தாடி அந்தத்தின் பராபரமாம் ஞானமூர்த்தி
யிழுக்கான காலமொடு பிறப்பிறப்பும் போகும் பிடித்துவிட்ட சூடாலை போக்கராமாமே
262.
ஓங்கார மத்துநின்று மண்ணையுண்ணு முருவியந்த மனஞ்சென்று தண்ணிருண்ணும்
தேங்காரம் தண்ணீர்தான் தீமையுண்ணும் தீங்கான தீர்சென்று காலையுண்ணும்
காங்காரங் கால்சென்று விண்ணையுண்ணும் கருத்தழிந்துமே சடலமென்றேயுண்ணும்
ஓங்காரம் வேதாந்தம் சித்தாந்தம் போச்சு மேலேறி மதுவுண்டு விரைந்துபாரே
263.
உண்டு ஓங்கார மூதலமுஞ் செழுத்தோடாறும் உற்றுநின்ற மஞ்சகர்தான் இருக்குந்தானம்
அண்டு ஆங்காரமொடு ஆணவமுற்று அதிஷ்டானம் நானென்றது அற்றுப்போனால்
பண்டுதான் அகாரமொடு உகாரங்காணும் பாங்கான மகாரமொடு விந்துநாதம்
விண்டுவதின் மேல்நிற்கும் பராபரத்தின் வெளியான மவுனத்தைப் பற்றியேறே

264.
யேறவே யகாரமது உகாரத்தைக் கொள்ளும் ஏத்தமாம் உகாரமது மகாரத்தைக்கொள்ளும்
மாறவே மகாரமது விந்துவையுட்கொள்ளும் மகத்தான விந்துவது நாதத்தைக்கொள்ளும்
தாறவே நாதமது சத்தியைத்தான் கொள்ளும் தன்த்துநின்ற சத்தியல்லோ சிவத்தைக் கொள்ளும்
சீறவே பரந்தன்னை பரந்தான்கொள்ளும் சிவபதத்தைக் கொண்டவிடஞ் சேர்ந்துண்ணே
265.
சேர்ந்துநின்ற மூலமுதல் ஆறும்பார்த்து சுழிமுனைதான் உருவிநின்ற தோற்றம்பார்த்து
சார்ந்துநின்ற மதிபோலே சாம்பவியைக்கண்டு தாக்கிநின்று வளமுறைத்து தேர்ந்தபின்பு
பார்த்துநின்றது இவ்வளவும் யோகமார்க்கம் பகலிறவு அற்றவிடம் ஞானமார்க்கம்
கார்ந்து கன்னிநின்ற இடம் கண்டால் ஞானம்காட்டுவாள் கேசரியைக் கண்டுபாரே
266.
கண்டுபார் வாசியுன்னி மேலேயேத்த கைவிட்ட மயக்கத்தை கீழேதள்வாள்
விண்டுபார் ஷணத்துக்குள் வெளியுங்காணும் விடுபடுவாள் அண்டண்ட மாலைபூண்டால்
அணடுபார் ஆதிவலையத்து அநாதிவலையத்து அதீதமாம் இரண்டுமொன்று அறிந்துகூடு
உண்டுபார் நிற்குணத்தில் அமிர்தமுண்ணில் உயர்ந்துநின்ற ஞானசித்தி உண்மைதானே
267.
உண்மையாம் வாசியென்று மவுனமொன்றும் உத்தமமாம் இரண்டுவித்தை உரைக்கக்கேளு
தண்மையாம் சாம்பவியும் கேசரியும் இரண்டும் தனித்தேசி ஏறுதற்கு காதிவித்தை
வண்மையாம் மனமென்றால் ஞானவித்தை மாசியென்ற மனமானால் இரண்டும் பொய்யாம்
ஆண்மையாம் அறிவந்தாண்டுபோகும் அதிதனின்ற வெளியல்லோ அகண்டம்பாரே
268.
பாரென்ற தீயிற்குள் பராபரந்தான் இருந்தார் பண்பாக கண்டவரார் சித்தயோகி
ஏரென்ற உன்மனத்தாய் கேசரிக்குள் நிற்பாள் ஏறிப்பார் மவுனம்வைத்து ஊதுவூது
நீயென்ற நிர்குணந்தான் அதிலேகொள்ளு நிலையாரெ மவுனமொன்று வதியண்டு
கானென்ற நீராகாரம் ஒன்றுமில்லை கட்டுதரார் அறிவுகொண்டு கருதிக்காணே
269.
காணவே குண்டலியின் மூலமொன்று கண்டத்தில் பராபரமாம் மூலமொன்று
பூணவே புரயவமைய மூலமொன்று புகழான விந்துவிலே மூலமொன்று
தாணவே சத்தியிலே மூலமொன்று தனித்துநின்ற பராபரத்தின் மூலமொன்று
ஆணவே இதையாறும் கண்டோன் ஞானி அறிந்தணர்ந்தால் மும்மூலயோகியாமே
270.
யோகியாம் நகாரவரை யகாரவரை மட்டும் உறுதியாம் யோகத்தின் மூலமாச்சு
வாசியாம் அகாரம் முதல் உகாரந்தொட்டு அதிதமாம் மகாரம்வரை ஞானமூலம்
தேசியாம் திசைநாதம் மவுனத்தில் காணும் சேர்ந்தேற சேர்ந்தேற கண்டவீதி
ஊதியாம் காமப்பாலுண்டால் கேளிபோகம் சித்திக்கு அடுக்கா நற்பாலையுண்ணே
271.
கடுங்கான நற்பாலுண்ண ஞானசித்தி கடிதான யோகத்தில் அஞ்சாத
மடுங்கான பவுறுத்தில் அஞ்சுநாதம் அறைதானும் கடந்திடத்தே சுத்தநாதம்
நெடுங்கானல் ஈசத்தில் வாசிமுத்தி நேர்ப்பான மூலத்திடில் ஆவியேசத்தி
திடுங்கானல் சொலித்து நிற்கும் எந்நாளுந்தான் தூரமல்ல காதமல்ல கண்ணிமைக்குளாமே

272.
கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்துகாணும் கடிதான விண்ணேது வெளியெங்கேது
ஒண்ணிமைக்குள் ஒளியேது உரைத்தபடி இம்மூன்றும் உன்னதமாங்கே
சரிதானுயர்த்தியாச்சு
நுண்ணிமைக்குள் கண்ணேது மூக்கங்கேது நுண்மையாம் கண்டிப்பு அழிந்துபோச்சு
உண்ணிமைக்குள் ஒன்றிரண்டு சமரசந்தானேது உற்றுப்பார் வெட்டவெளி
ஒண்ணில்தானே
273.
ஒண்ணிலே நின்றுரைத்துப் பழக்கமாகி உத்தமியாம் மனோன்மணியை புருவமையத்தோடே
உண்ணியே ஒளியோடே மவுனத்தையோட்டி ஊதியே சாம்பவியைக் கண்டுகொள்வாய்
நிண்ணியே இவ்வளவு யோகமார்க்கம் நின்றவனே சிவயோகி நினைவாய் கேளு
குண்ணியே விந்துவென்ற குருபதத்தைக் கூட்டப்பா மவுனத்தைத் தாரையாமே
274.
தாரையாம் விந்திலே திரமதியோகோடி தளுக்கான கண்கூசி மயக்கமாகும்
ஓரையாம் நாதத்தில் செவிடுபட்டு ஊமையென்ற வெருத்தினுட உருவந்தோன்றும்
வாரையாம் அயசத்தியிலே வன்னியேடு மாசற்ற கோடிரவிமதியும் ஒவ்வா
சூரையாம் சோமப்பாலுண்டவருக்குக் காணும் சூதான ஞானிகட்கு மாயந்தானே
275.
மாயமாம் சிவத்துக்குள் மவுனம்சென்றால் மாசற்ற நவகோடி வன்னிரவு சோமன்
மாயமாம் பரத்தின்கீழ் முப்பாழுண்டு பார்க்கவே யகாரமொன்று உகாரமொன்று
மோயமாம் மகாரமொன்று முப்பாழாக முனைந்திந்து அதனொளியைச் சொல்லப்போகா
தூயமாம் ஒளியுடைய உன்மனத்தை தேவியுடபதமொன்றே கேசரிதான்காணே
276.
கேசரிதான் தாயானபதத்தின் காந்தி கீர்த்தி கண்கொள்ளாது விண்கொள்ளாது
ஆசரியென்பார் ரம்பாரம் தூளென்பார் அவளுக்குள் மவுனமுண்டு அறிவுன்னிப்பாரு
கேசரியின் மவுனத்தே நிஷ்களமாய் போவாய் கெடியான வம்பரத்தில் ஏதொவேதோ
தூசரியின்படி மைந்தா லட்சியத்தில் நேர்மை சொல்லரிது அப்பறத்தே சோதித்தானே
277.
தானென்ற மகாரவரை காதவோசை தாயான கன்னிக்குப் பீடமாகும்
மானென்ற பூரணம்பார் மவுனஞானம் மகத்தான நாதத்தோடு ஒன்றி ஒருமுனையாகும்
ஊனென்ற ஒருவழியாய் ஒன்றாயோடு உட்புகுந்தால் தோற்றுது அங்கொன்றுமில்லை
தூனென்ற சுத்தவெளி ரவிகோடி வன்னிகுழம்பாக மதிகோடி கண்டுகொள்ளாதே
278.
கொள்ளாத மதிதமென்ற மகாரங்காணும் குறிப்பாக நகாரமல்லோ குருவைக்காட்டும்
வள்ளாத மகாரமன்றோ மடங்கி அந்தந்தாண்டி வழிகாட்டும் இடமல்லோ
கேசரிதான்மைந்தா
மள்ளாத மகாரமென்ற மேலெழுத்தேயென்பார் மாட்டுவது மூன்றெழுத்துங் காணமாட்டார்
அள்ளாத மகாரமென்ன மவுனவித்தை வாய்திறவா மவுனமாமே

279.
வாமென்ற மவுனவித்தை மூன்றெழுத்துயென்பார் மாட்டுகிற இனங்காணார்
மார்க்கங்காணார்
வாமென்ற மவுனவித்தை வாய்மூடயென்பார் மாடோடு குதிரையது வாய்ப்போக்கேது
கோமென்ற மவனவித்தை கேட்டிருப்பார் கூட்டுறவு காணார் கள்நாதங்கேளார்
ஆமென்ற மவுனவித்தை தாண்டி நாட்டி ஆதியாந் திசைநாதம் கேட்கும்காணே
280.
காணேதான் மதியினுட அமுர்தஞ்சிந்தும் கலங்காமல் துவாதசங் கடந்துதோன்றும்
தானேதான் ஓசையறும் தன்னினைவும் போகும் தாரைபோல் அண்ணாக்கில் அமிர்தமொடு
மானேதான் மும்மலங்கள் அற்றுப்போகும் சகத்தான ஐம்பொறிகள் அடங்கிநிற்கும்
தேனேதான் மேலாமுதம் லகிறிமீறிச் சணமாகும் மூன்றுக்குமேல் ஜெயமுமாமே
281.
ஜெயமான உலகத்தில் லகிரி உண்டு தீர்க்கமாய் முதிர்ந்தபின்பு உன்னுளக்கிரி
மயமான மகாரத்தால் வந்துதாக்கும் மகாரத்தைக் கூட்டையிலே அறிந்து கூடு
குயமான கும்மென்ற ஞானத்தில் கூடு குறியோடே அறிவென்ற மவுனத்தை நாட்டு
நயமான நாதத்தின் ஆட்டங்கேளு நலங்காமல் ஒருவழியே நாட்டிடாயே
282.
நாடினால் சன்னமது முத்தியாகும் நலமாக யேறுதற்கு வழியைக்கேளு
வாடினால் மூலத்தில் வாசிவைத்து வழியோடே பிராணயாமம் பண்ணத்தீரும்
கூடினால் குண்டலிக்கும் நடனங்கண்டு கொடிதான வாதித்த னொளியைக்காணும்
ஆடினால் கண்டத்தில் வங்கென்றூனு ஆடாத வழிதிறக்கா வழிசெல்வாமே
283.
செவ்வையாய் நின்றுரைத்த பழக்கமானால் சிறப்பான மனோன்மணிதான் புருவமையத்தே
மவ்வையாம் ஒளியோடே மவுனத்தைப்பூணு மகத்தான சாம்பவியைக் கண்டுகொள்வாய்
நெவ்வையாம் இவ்வளவும் யோகமார்க்கம் நின்றல்லோ சிவயோகி நிலைத்துக்காணும்
தவ்வையாம் விந்துவென்ற குருபதத்தில் தாக்கவே மவுனத்தைத் தாரையாமே
284.
தாரையாம் அஷ்டாங்கம் சாற்றக்கேளு தனித்தனியே ஒவ்வொன்றாய் விரித்துச்சொல்வேன்
நேரையாம் சாட்டியமாம் நித்திரையும் போக்கு நியமமாய் சதாநித்தம் தாரகத்தில் நில்லு
தூரையாம் மனம்குவிந்து கேசரியைப்பாரு சோமப்பால் கசிந்தோடும் கேசரியைக்கண்டால்
காரையாம் ரவிமதியும் வன்னிகூடி கலந்துநின்ற இடமல்லோ கேசரிதான்காணே
285.
காணவே ஏமமொடு நேமமாகும் கருதியதோர் ஆசனமும் பிராணயாமம்
பூணவே பிரத்தியாகாரம் தாரனையினொடு பெருமையாம் தியானமொடு சமாதியாகும்
ஏனவே இதுவெல்லாம் எட்டெயங்கு மிகையான சித்தாந்தம் வேதாந்தமிரண்டும்
ஆனவே அடமெல்லாம் சொல்லக்கேளு அறிந்துகொள்ளும் நிரைநிரையாய் அறிவில்தானே
286.
நானென்ற ஏமமது பத்துமாகும் தனித்ததோர் ஐங்கிரியையும் சத்தியத்தினோடு
ஆனென்ற ஆர்த்திக பிரமங்கேளு ஆச்சரியம் தயவினொடு ஆட்சேபமாகும்
கானென்ற கூர்மையினொடு திருதிகூட கடிதான மிதாசார மஞ்சனத்தோடு
பானென்ற பத்துமே ஏமமாச்சு பண்பான நேமத்தைப் பகர்ந்துபாரே

287.
பாரென்ற சோலையத்தில் கோமுத்தினோடு பரமமொடு வீரமாஞ்சிங்கமாகும்
மூரென்ற மந்திரமொடு முத்தமாகும் முனையான பூரணமொடு ஜகந்தானாகும்
ஒவென்ற ஒன்பதும் ஆசனந்தானாச்சு உற்றுக்கேள் பராணாய பிரிதிதன்னை
காரென்ற ரேசகமும் பூரகமும் கலந்துநின்ற அற்பிசமும் நிற்பிசமஞ்சே
288.
அஞ்சவே ஆறுவகை பிரத்தியாகாரம் அனுகூல சரீரமென்ற பிரத்தியாகாரம்
இஞ்சவே இந்திரியம் பிரத்தியாகாரம் இயல்பான பிராணனென்ற பிரத்தியாகாரம்
கஞ்சவே கரணமென்ற பிரத்தியாகாரம் கைகலந்த காமியமாம் பிரத்தியாகாரம்
துஞ்சவே பிரத்தியாகாரந்தன்னை சொல்லிவிட்டேன் தனியாறுஞ் சூட்டிப்பாரே
289.
சூட்டியே தாரனையில் ஆறுவிதம் சொல்வேன் சுயபஞ்சபூதத்தின் தாரனைதான் ஒன்று
பூட்டியே பிராணனென்ற தாரனையினோடு புகழான பிர்மமென்ற தாரணையுமாகும்
தாட்டியே தாகமென்ற தாரனையினோடு தத்துவமென்ற தோரனையுஞ் சார்ந்துகேளு
மாட்டியே தாரனையினோடு மைந்தா மகத்தான ஆறுவிதம் உண்டுபாரே
290.
பார்க்கவே பத்துவித தியானம் சொல்வேன் பரிவான சடாதாரத் தியானமொன்று
மார்க்கவே தேகமொன்று தியானமொன்று மருவிநின்ற மண்டலத்தில் தியானமொன்று
வேர்க்கவே பிரமத்தின் தியானமொன்று வெளியான விட்டுணுவின் தியானமொன்று
ஊர்க்கவே ருத்திரனாம் தியானமொன்று உகப்பான தேவதா தியானமொன்றே
291.
ஒன்றான சஞ்சாரச் சமாதியொன்று உதிக்கின்ற ஆரூடச் சமாதியொன்று
அன்றான சமாதிக்கு அஞ்சுவிதம் சொன்னேன் அப்பனே அஷ்டாங்கம் எட்டுமாச்சு
பன்றான ஏமமது பத்தும்கேளு பயனெல்லாம் சொல்லுகிறேன் பட்சிமிருகம்
துன்றான போதுவுந்தன் சுகதுக்கம்போல துப்புறவாய் மனதொன்று தெளிந்திடாயே
292.
தெளிந்திட்டால் அங்கிஷைதான் என்றுசொல்வார் சித்தாந்த விபரந்தான் சொல்லும்வாறு
விளிந்திட்ட வேதாந்தம் சொல்லுவாரு விரிவான பொறிவழியே அறிந்துநின்று
அளிந்திட்ட அகண்டமென்று பூரணத்தையப்பா அறிந்திட்டுப் பரிசனனாகக்கண்டு
தளிந்திட்ட ஜாதிவர்ணாச் சிரமத்தாலே சங்கற்பவிகற்பம் எல்லாம்தள்ளிப்போடே
293.
போட்டுமே ஏறுகூறாகப் பண்ணி பூதாமலங்கிழையாய்ச் சார்ந்துநிற்கில்
நீட்டுமே நின்றநிலை ஆயிங்கிஷை என்பார்கள் நேரான பரிபாசம் விளையாட்டாலும்
ஆட்டுமே போய்விட்டு எங்குமான மாயந்தமாய் நிரைந்திருந்த சொரூபமூர்த்தி
சாட்டுமே இதுவல்லோ சத்தியந்தான் மைந்தா தனித்தனியே கண்டிசகப் படாதென்பாரே
294.
என்பார்கள் அங்கிஷையில் கூடிநின்று இறந்துமே பரிபூரணமாய் இருப்பதாக்கி
மன்பார்கள் வன்மையும் தவிரவேறே மார்க்கந்தான் இல்லையென்று சந்தானித்து
தன்பார்கள் சத்தியமாய் வாக்குங்காயம் சாதமென்றும் பாலென்றும் கிரகியாமல்
அன்பார்கள் அபகரிப்பை விட்டு மனமுரைத்தால் அனித்தியமாம் சரீராதிசுபாவமாச்சே

295.
சரீரமென்றே அறிந்துபார் சகலமெல்லாம் தாரான சரீரத்தில் வருத்தத்தை நீக்கு
துரியமென்றே சகலஜனம் நன்மைபோலச் சுகம்வருத்தம் அல்லோர்க்கும்
தந்தைதாய்மைந்தர்
பிரியமென்றே ஜனந்தான் வந்தாலுந்தான் பேராசைத்து உருவுக்கு இதமே செய்யில்
நெரியமென்றே ஆட்சேபம் இதையென்பார்கள் நேராக இதுவுமல்லோ சொல்லக்கேளே
296.
கேளப்பா வேதாந்த சாஸ்திரமே செம்மை கேள்வியுற்ற சமயமெல்லாம் பொய்யென்றுதள்ளி
தேனப்பா திடப்பட்டால் ஆட்சேபமாகும் ஜெயமான சத்துருவும் வியாதிபீடை என்பார்
மீளப்பா நிரஞ்சனமும் சீதளமுமாகும் இஷ்டான துக்கவபிமானம் வந்து
ஏளப்பா சொற்பனம் போலென்றெண்ணி ஏங்காமல் சேருவது சமயமென்பாரே
297.
என்பார்கள் வேதாந்தத்துள்ளே முத்தியொடு குறியாம் சாஸ்திரத்தில் முத்தியில்லை
என்பார்கள் அதினாலே சொன்னபொருளென்ன வேறில்லை நாமதுதான் என்பதல்லோ
உன்பார்கள் காரியத்தில் மனத்திற்கோனை புருகாமலிருப்பதே திருப்தியென்பார்
இன்பார்கள் வேதாந்தத்தாலே முத்தி இதைவிட்டால் மற்றொன்றுமில்லைதானே
298.
இல்லையே பூரணந்தான் நாமென்றெண்ணி ஏகநித்தம் மறவாமல் இருந்தானாகில்
கொல்லையே நம்மிடத்தில் வந்ததொன்றுமில்லை கூடிநின்றால் இதுவே ஆகாரம்
என்றுமாகும்
வெல்லையே நிற்குணம் வேறொன்றில்லை இருதாவாய் ஆகாரந்தன்னைச் சுக்கி
கல்லையே துருத்திகையும் ஜலத்தினாலே தனித்துநின்ற ஆசனந்தான் சவுசமாச்சே
299.
சவுசமாம் வேதாந்த சாரத்தாலே சுகமென்ற துரியமதில் தானே நின்று
நிவுசமாஞ் சொற்பனத்தில் அவத்தைகளைக் கண்டுநெருங்கிநின்று போனதில்லை
வந்ததில்லையென்று
வெவுசமாம் வேதாந்த குருமுகத்தில் விரைந்துகொண்டு காலம்வந்து சேர்ந்துதானால்
துவுசமாய் இருப்பதுவே சவுசமாகும் துரிதமாம் ஏமமென்ற பத்துமாச்சே
300.
பத்தான ஏமத்தைப் பகரக்கேளு பாங்கான சத்தியமென்ன மித்தையென்ன
நத்தான நானேது நானென்றதாரு நமக்குத்தான் மகத்துவந்த பேதமேது
சத்தான சோத்தியங்காண் அதுவாலாச்சு சுருதியாம் வேதாந்தத்தாலே பார்த்து
நித்தான நிரந்தயமும் ஆலோசித்து நீங்காட்டால் பொல்லாங்கைத் தவசுமாச்சே

# போகரின் சப்த காண்டம் – 7000

301.
ஆச்சுதே பிரமாதி லோகத்துள்ளே அழுத்திநின்ற காமிபத்தை நாகம்போலெண்ணி
துச்சுதே வெறுப்புவந்து சொற்பனம்போலாச்சு துக்கமிது என்றுசொல்லி மனதுதேறி
தாச்சதே பொருளான சச்சிதானந்தத் தடையற்று தெளிந்துநின்று தானேதான் ஆனால்
போச்சுதே ஆனந்த வடிவுமாகி போதமாயிருக்கில் சந்தோஷந்தானே
302.
தானான ஆகமபுராணந்தன்னை தணிவாக எல்லோர்க்கும் வெளியிலிட்டு
வேனான வேதாந்த பிரமசாரம் விளங்குகிற கருச்சொல்லும் பூரணமென்றெண்ணி
ஆனானது அறிந்துகொண்டார் ஆத்திமம் ஆச்சு பரியதாய்க் குருவுரைத்த உபதேசத்தைக
கானானாறிந்து பொருள்மூத்தனாகக் கருதியதோர் ரத்தமெல்லாம் குருவுக்கீயே
303.
ஈய்ந்துபார் பரம்நோக்கத் தானமாகும் இருக்கிறதோர் தன்தேக சுகபோகமெல்லாம்
ஆய்ந்துபார் செய்துந்தனக்கு வந்தாப்போலே அனேகசெந்து பொதித்ததெல்லாம் நாமென்று திருத்தி
நயந்துபார் ஒருமித்தால் ஈசருக்கும் பூசைநலமாக ஆச்சுதென்று அறிந்துகொள்ளு
தோய்ந்துபார் இப்படிதாந் திருத்தியானால் தீர்க்கமாம் சிவபூஜை யென்றுகாணே
304.
காணவே சாஸ்திரங்கள் எல்லாம்விட்டு கலந்தாடு விர்த்தியெல்லாம் அடித்துத்தள்ளி
தாணவே தன்னிழல்போல் குருவினுட்பின்னே சச்சிதானந்த வெள்ளந்தானென்றெண்ணி
தோணவே தெளிவிக்கும் வஸ்துக்குள்ளே தோற்றியே சோதித்து மனந்தானென்றால்
ஆனவே தெளிவித்து முபஷத்துவென்று அறிவிக்கும் பூரணமே சிரவணமுமாமே
305.
அறிவிக்குமாம் காரவியாபாரத்தால் ஆதாயம் மிகுதியாய் அகப்பட்டாலும்
பொரிவித்தும் அதின்மேலே யபேட்சைவிட்டு பொறிதானும் புலன்வழியே போக்குண்டாக்கி
அறிவிக்கும் கேட்டிருந்த ஞானமெல்லாம் கெடியாக நிலைகுலைந்து உலகத்தேசிக்கி
வறிவிக்கும் வாசனையாம் பெண்டிர்பிள்ளை வாருகின்ற பாசமெல்லாம் லட்சமெண்ணே
306.
எண்ணவே எண்ணியந்த மதியாறில் வந்தால் இயல்பாக அழிசகத்தில் இருந்துகொண்டு
திண்ணதே மனதொன்றில் வேதாந்தம்பார்த்து சீராக நிற்கிறதே லட்சையாகும்
வெண்ணவே வேதாந்த பிரமந்தன்னில் விரைந்துநின்று பூரணத்தை தினம்தான்நோக்க
வண்ணவே கோழைவிட்டு தெளிவுவந்து வளப்பமுற்றால் மதியென்று சொல்லலாமே
307.
சொல்லவே நான்பிரமமென்று ஆசான் சுருதிகுரு உபதேசப்படியேநின்று
வெல்லவே மேதாந்தப் பொருளென்றெண்ணி மிகுதியாசைதன்னை தள்ளிவிட்டால்
மல்லவே மனமொத்தால் சிவமிதாச்சு மற்றதெல்லாம் சிவமல்ல மாயங்காணும்
வல்லவே மவுசத்தை ஐம்பொறியின் வழியில் மருவாமல் நிறுத்தினால் மாயம்போமே
308.
மாயாமல் நான்பிரமமென்றே எண்ணி மனதொத்து நிரந்தரமும் வேதாந்தம்பார்த்து
பேயாமல் எந்தெந்த காரியங்கள் வந்தும் புகழாக துக்கமுடன் சுகந்தான்வந்தும்
காயாமல் குருசொன்ன காரியத்தின் வழியைக் கைமுறையாய் நிற்பதுவே விரதமாச்சு
நேயாமல் ஏமமென்ற பத்துஞ்சொன்னேன் நேராக இருபதையும் அனுஷ்டித்தேறே

309.
ஏறியிந்த இருபதையும் அனுஷ்டித்தாக்கால் ஏற்றமாம் மனத்திடம் இல்லாவிட்டால்
தேறியிந்தச் சுவரில்லாச் சித்திரம் போலாகும் சிறந்த சீவரடிப்படைதான் வைக்குமுன்னே
சூரியிந்த குளிகை யவயத்து மொக்கு துப்புரவாய்க் காயசித்தி பண்ணுமுன்னே
ஊறியிந்த சதுரகத்தைக் கண்டதொக்கு முண்மையிருபதும் அனுஷ்டித்தால் அறிவுண்டாமே
310.
அறிவுண்டாம் சதுர்யுகத்தோடே மூர்த்தியைக்காணா அப்பனே அஷ்டாங்கம்
அறிந்துயுண்ணு
தறிவுண்டாச்சு கசாதனமாயிருந்துகொண்டே தனித்ததோர் மூலத்தில் வங்கென்றுபூரிக்
குறியுண்டாய் கும்பித்து மாத்தீயையேற்றி கூராகசிகாரத்தால் முடியுண்டாக்கி
நெறியுண்டாய் மூன்றுமுறை மாறினாக்கால் நேராகக் கும்பகமே ரேசிப்பாயே
311.
ரேசித்து இப்படிதான் அங்கென்று கும்பி நில்லாமல் இதுரண்டும் தீர்ந்தபின்பு
ஆசித்து அகாரமுதல் உகாரங்கூட்டி அப்பனே மவுனத்தால் கும்பித்தேக்கு
மாசற்ற மவுனந்தான் குவிந்தபின்பு மருவியதோர் மூலத்தை விட்டுநீயும்
காகித்து கண்டத்தே நின்று ஊது காலடங்கி வந்தபின்பு மூலம்பாரே
312.
பார்த்துமே அறிவோடே மவுனம்பூரி பரிவாகப் பூரணத்தை அதுக்குள் கும்பி
நீர்த்துமே முனையோடே ரேசகத்தைப்பண்ணு நிற்பிசமாம் பிரமமென்ற பிராணயாமம்
பூர்த்துமே பிரபஞ்சமென்ற ஆசைவிட்டு பின்னொன்று மனதுள்ளே சங்கியாமல்
ஆர்த்துமே அந்தமென்ற காரணமுமாகி அந்தமென்ற மார்க்கத்தில் ஆடிக்காணே
313.
ஆடியே ஆசனத்தை விரித்துச் சொல்வேன் அதிகமாஞ்சோஸ்திதத்தை அறியக்கேளு
மூடியே முழங்காலால் குளச்சில்ரண்டில் முனிந்தாக்கால் ரண்டும்வைக்கச்
சொல்லதிகமாச்சு
சூடியே சிங்காசனத்தைக்கேளு சறந்தையோ வேட்டிதனைப் போட்டுக்கொண்டு
நூடிகய முழங்கால்கள் நீட்டி நுனிமூக்கைப் பார்த்திருப்பார் நிசமாங்காணே
314.
நிசமான பத்திராசனத்தைக் கேளு நேராக உட்கார்ந்து காலைரண்டும்
துசமான பிறகாலே கையால்கட்டி சுகமுற்று இருக்கையில் ஆசனமுமாச்சு
நிசமான மூத்தயாசனத்தைக்கேளு முனிந்துமே காட்டோடு காடுபோட்டு
குசமான குத்துக்குள் குதிரைவைத்து கூசாமல் இருப்பதிந்தக் கொள்கைதானே
315.
கொள்கையாம் பூரயாசனத்தைக் கேளு குறிபெறவே ரெண்டுகையும் தலையிலூனி
கிள்கையாம் முழங்கையைத் தொப்புளிலே வைத்து கலந்துதடிபோலக் கவருவார்கள்
தூள்கையாம் சுகமுற்ற யாசனத்தைக்கேளு சுகமாக வேண்டியதோர் படியிருப்பு
உள்கையாம் எண்பதுக்கும் பருவம்சொன்னேன் உரைந்துமினி பிராணயாமம்
உரைக்கக்கேளே
316.
கேளென்ற சரீசத்தில் பஞ்சபூதம் கெடியாக இருக்கின்ற தானத்துள்ளே
மானென்ற மண்டலத்தில் வர்னமுத்து மனதுள்ளே தரித்துடனே பிராணாதாரம்
பானென்ற பதினாறு மூலத்தொட்டு பருவமுடன் பிராணனைத்தான் தரிக்கப்பண்ணி
தானென்ற கிரமத்தோடே சஞ்சரிக்கில் தாரணைதான் நாலுவிதம் சாதிப்போராக்கே

317.
சாதித்த தியானத்தை சாற்றக்கேளு சட்டமாம் பிரமருட வீட்டுக்குள்ளே
ரேதித்த மண்டலமும் குண்டலங்கிரீடங் கலந்துமே சரஜொதி லோகப்ரதானம்
சோதித்த பரிவாரஞ் சூழ்ந்துநிற்க சொல்லுகிறேன் வானத்தில் சூட்டினோர்க்கு
மாதித்த வரனுடைய தியானங்கேளு மாசற்ற பச்சைவர்ணம் வருத்திட்டாயே
318.
வருத்திட்ட சங்கொடு சக்கரமும் தடியும் தரைந்துநின்ற பதுமைபோல் நாற்கால்கள்
குருந்திட்ட குண்டலமும் கிரீடம்வைத்துக் கொத்தான முத்தோடு துளசிமாலை
கருந்திட்ட கவுஸ்திவமாம் ரத்தினம் பூண்டுகையெடுக்க லட்சுமியும் கலந்துவைத்து
அருந்திட்ட பிரமாதி லோகபாலர் அருகிருத்தி தியானிப்பார் அறிந்துகாணே
319.
அறிந்துமே ருத்திரனைத் தியானம்பண்ணு ஆண்மையாம் அஞ்செழுத்தும் ஆயுதங்களோடு
பிரிந்துமே குண்டலமும் கிரீடம்பூண்டு புகழான ருத்திரியை வாமம்வைத்து
எரிந்துமே இருக்கிறதாய் தியானித்துள்ளே எளிதாக உபசரிப்பார் பெரியோர்தாமும்
அறிந்துமே மயேஸ்பரனைக் கருத்தாய் நோக்கி மாசற்று அர்ச்சிப்பார் வண்மையோரே
320.
வண்மையாம் சதாசிவனும் மனோன்மணியை நோக்கி மனதுண்ணி தியானிப்பார் அதிகமெத்த
ஆண்மையாய் இப்படியே அறுவரை தியானமானபின்பு மண்டலத்தில் மூன்றுவகைதியானம்
உண்மையாய் இப்படியே உபாசிப்பார்க்க உத்தமமாம் தேவதா தியானமாச்சு
விண்மையாய் விசுவமென்ற தியானங்கேளு விளங்கிநின்ற பிரபஞ்சமெல்லாம் சரீரமொன்றே
321.
சரீரமொன்றே நானென்று அபிமானித்து தனித்திருந்து ஈஸ்வரனைச் சிந்திப்பார்கள்
சரீரமென்றே சிவனுக்கு நீரவான கலந்துநின்ற லிங்கத்தைக் கண்டாப்போலே
உரீரமென்றே ரூபமாய் நின்றதெல்லாம் உண்மையாய் ஈஸ்வரனைப்போலே பார்ப்பார்
புரீரமொன்றே பிராணாயத் தியானங்கேளு பகழ்பெறவே வொன்றுவஞ்சக முப்பத்தாறே
322.
ஆறோடு பிரகிருதியென்ற புருஷனப்பா அதிகமாம் பரமார்த்தம் மூன்றாய்க்கண்டு
மாறோடு காஷமஷ்டி மருவிநின்ற வியாஷ்டியாய்ப் பிரித்துக்கொண்டு
தேறோடு மந்திரத்தால் பூசைபண்ணி செபித்துநின்று உபாசிப்பார் நாற்பத்திரண்டு
ஊறோடு ஒவ்வொன்றே எட்டாய்வாங்கி உயர்ந்து நின்றது இத்தனையும் வித்தையாமே
323.
வித்தையாம் பிரமமென்ற தியானங்கேளு விரிவான மாயையொடு மாயப்பூமி
சுத்தையான சுத்தமென்ற சைதன்னியந்தான் சருதியாய் இதுமூன்றும் விண்ணைப்போலே
வித்தையாய் பறந்திருக்க காடுகண்டு மதித்தவரைத் தீர்த்தமூர்த்தி சேத்திரமாய்ப்பார்த்து
உத்தையாய் எந்நேரஞ் சிந்தைசெய்து உகந்துநான் பிரமமென்று எண்ணியெண்ணே

324.
எண்ணியே பத்துநான் இயல்பாய்ச் சொன்னேன் எளிதாக சமாதியஞ்சும்
முன்னேசொன்னேன்
அண்ணியாதோர் அஷ்டாங்கம் அடக்கிச்சொன்னேன் அடவெல்லாம் தானறிந்தால்
ஞானியாவன்
எண்ணியதோர் சமாதிக்கு ஆதிக்கஞ்சொன்னேன்உரைப்பான மாயியுட உறுதிசொன்னேன்
உண்ணியதோர் உனைஞ்சுமுன்னே பார்த்துத்தேறி உண்ணியே வாசியென்ற
திறத்தைப்பாரே

325.
திறமாக இப்படிதான் பிராணயாமம் செய்வதற்கு ரோமமெல்லாம் வேர்வையோடு
அறமாக ஆடனொன்று வாசிதன்னை அனுதினமும் அப்பியாசம் பண்ணினாக்கால்
தறமான தாதுவெல்லாஞ் சித்தியாகும் தசையிலுள்ள தோஷமெல்லாம் சாடிப்போகும்
நிறமான நோயெல்லாம் கக்கும்பாரு நெடிதாகச் சட்டையொன்று திரண்டுபோமே
326.
போகுமே சடத்திலுள்ள நோய்களெல்லாம் பொருமியே நீராக வெந்துபோகும்
தேருமே தேகமது சிவப்புமாகும் செவ்வலரிப் பூபோலாம் கண்களிரண்டும்
வாகுமே சடமிந்த பிறுகுந்தேகம் மகத்தான சக்கரங்கள் ஆறுங்காணும்
ஒகுமே பஞ்சகர்த்தாளை வருந்தான்வந்து உற்றுவவர் கேட்டதெல்லாம் உதவுமாறே
327.
உரைக்கவே ரேசகந்தான் விடுவதாகும் ஓங்கியதோர் பூரகந்தான் உள்ளேவாங்கல்
தரைக்கவே கும்பகந்தான் தம்பிச்சிருத்தல் தாங்கியதோர் பீசமந்திரத்தினூடல்
விரைத்துமே நீபீசமந்திரத்தைவிட்டு தெளியிலே பூரித்தால் மெதுவிலேதான்
அரைக்கவே அஞ்சுவித பிராணயாமம் அசையாமல் தயாசனத்தில் இருத்திப்பாரே
328.
பார்க்கவே மாத்திரைதான் முப்பத்திரண்டு பண்பாக பூரிப்பாய் மூலத்துக்குள்ளே
ஆர்க்கவே மாத்திரைதான் அறுபத்தினாலு அடவாக கும்பித்துப்பாரு
மூர்க்கவே மாத்திரைதான் பதினாறப்பா முறையாக ரேசிப்பாய் தவறிடாமல்
நார்க்கவே அறிந்துகொண்டு நந்தியைத்தான் பார்த்து நலந்தபின் பிறநலம் நாடிஊதே
329.
நாடியே விஷ்ணுவை நயந்துவூது நலமாக உரைத்தபின்பு ருத்திரனில் சேரு
ஊடியே மஹேஸ்பரத்தில் நின்று ஊது உரைத்தபின்பு சதாசிவத்தில் உகந்துகூடு
ஓடியே ஆறுதலம் முத்தியேறி உகந்துமே யொன்றாச்சு பிராணயாமம்
பீடியே விரமத்தின் காயமத்தின் பேராக ஒருமுறைக்குள் நீங்கிப்போமே
330.
நீங்கிப்போம் பிராணாயஞ் செய்யும்போது நிலைத்துமே மாத்திரைதான் ஏறயேற
காங்கிப்போம் கப்பமிகும் நேர்மைகொள்ளும் கதித்துமே கபாலத்தை அசைத்துத்தூக்கும்
வூங்கிப்போம் மும்மலமும் களிம்புபோல மூர்ந்துநின்ற நாடியெல்லாம் சுத்தியாகும்
ஓங்கிப்போம் பிராணாயாம் உரைத்துதானால் ஓங்குமே திசைநாதம் உண்மைதானே

331.
உண்மையெட்டு பருவமுண்டு பிராணாயத்தில் ஒளியாமல் சொல்லுகிறேன் வந்துகேளு
வெண்மை பத்தினின்று முத்திவேர்வையாகும் மிக்கநின்ற தம்பிக்கு ரண்டாம்பட்சம்
திண்மை அற்புததீபமாம் முன்றாம்பட்சம் செடந்தானும் லெகுவாகும் நாலாம்பட்சம்
பெண்மையொத்து பிரகாசிக்கும் அஞ்சாம்பட்சம் பேரானகுண்டலிமேலாறிலாமே
332.
ஆறவே ஆகாய கெவுனமார்க்கம் அதிகமாம் தூரதிஷ்டி அறியப்பண்ணும்
ஏறவே எட்டினுட பெருமைகேளு ஏற்றமாம் கேசத்தில் திசைநாதங்கள்
நாறவே நல்வினையும் தீவினையும் நீங்கும் நயந்தபின்பு நாடியுத்தி தானுமாகும்
ஊறவே காமப்பாலுடம்போடே கலக்கும் உவந்துமே பிராணயாமம் உரைத்துப்பாரே
333.
உரைத்துமே சொல்லுகிறேன் பிரிதியாகாரம் உண்மையாய் வாசினையின் வழியிற்சென்று
மிரைத்துமே கடந்துவிக்கும் துரியந்தானும் மிகையாத மவுனத்தை மெல்ல முயற்சியாக்கி
விரைத்துமே திரிபுரத்தை திரியவொட்டாமல் வெட்டியத்தை மறிக்கிறதே பிரத்தியாகாரம்
கிரைத்துமே இதற்குள்ளே ஆறுவிதமுண்டு எடுத்துமே சொல்லுகிறேன் இயல்பாய்க்கேளே
334.
இயல்பான சரீரமென்ற பிரத்தியாகாரம் எய்துவது ரண்டுவிதம் நன்றாய்க்கேளு
நயல்பான பிரபஞ்சத்தில் மனம்போகாமல் நலமாகச் சமாதியிலே இருத்தவொன்று
கயலாக காடியத்தில் கலந்தபின்பு கலந்துபோம் இளமையெல்லாம் அழைப்பதொன்று
ஒயிலான ஒரயபொருளைநாடி நின்றால் உத்தமனே பிரத்தியாகாரமாச்சே
335.
ஆச்சென்ற இந்திரிய பிரத்தியாகாரம் ஆண்மையுற்ற தாதுவெனும் தனத்தரோகம்
போச்சென்று போகாமல் சமாதியில் வைத்து புத்தியொத்து பூட்டுகிறது ஒன்றுகாணும்
நீச்சென்ற பிராணனால் பிரத்தியாகாரம் நேர்மையொத்து நாடிசுத்தியானபின்பு
ஊச்சென்ற விச்சிமி கலாடத்தோடு உறுதியுற்ற வாக்கினையும் சோத்திரந்தானாமே
336.
தானான நேத்திரமும் நாசிவாய்தான் தனித்தபடி நாக்குதான் கண்டம்நெஞ்சு
ஊனான உதிரமொடு இடுப்புநாபி உற்றதுடை முழங்காலும் பாதங்கேளு
ஆனான யங்குஷ்டம் வயவங்களோடு மன்பான பிராணனைத்தான் தானம்விட்டு
வேனான காலத்தில் விரைந்தனைத்து விடுகிறது துராணமென்ற பிரத்தியாமே
337.
ஆமென்ற பிரத்தியாந்தரமாங்கானந் தன்னையலைத்து பிரபஞ்சத்தை அணுகொட்டாமல்
வாமென்ற வஸ்துவொடு மார்க்கத்தாடி மகத்தான காமீயத்தை காகம்போலெண்ணி
தாமென்ற சங்கற்ப விகற்பமெல்லாம் தனியான மனதினுள்ளே சங்கியாமல்
வேமென்ற வேதாந்த விசாரத்தாலே விளங்கியதோர் ஞானத்தில் இருத்தல்நன்றே
338.
இருத்தினால் கரணமென்ற பிரத்தியாகாரம் எளிதான தனதாண்ய பொன்னுமண்ணும்
தருத்தினால் ஆபரணம் சகலவஸ்தும் தந்ததினால் மனதிலே அபேட்சிக்காமல்
வருத்தினால் வைராக்கிய மனதிலெண்ணி மனம்வெருத்துவிடுதல் மெத்தவுயர்ததிகேளு
பருத்தினால் கருவசங்க பிரத்தியாகார பரிவாக வேதாந்தம் பார்த்துத்தேறே

339.
தேறவே சாட்சி எங்கும் நாமாய்நின்றோம் திகைத்துநின்ற மாயயெல்லாம் நமக்கும்கீழே
ஊறவே நிரந்தரமும் உரைத்துநின்று உவிந்துநின்ற மார்க்கமெல்லாம் நமக்குள்நின்று
மாறவே மாயமென்ற தெல்லாம்தள்ளி மகத்தான லோகத்தோர் வணங்கிநின்று
சாரவே சர்வசித்தி யாகும்பாரு சருகாதிபட்சனையும் உதவுவாரே
340.
உதவுவார் நிர்வாணி ஏவல்கேட்பார் உண்மையாம் யோகசித்தி வாதசித்தி
விதவுவார் வினைகளெல்லாம் கழன்றுபோகும் விரைந்ததோர் சுழிமுனையும் வெளியாய்காணும்
பதவுவார் சடமதுவும்கண்டு போலாம் பொற்பதுமை போலதுதான் இருக்கலாகும்
சிதவுவார் சடந்தானும் சொன்னபடிகேட்கும் சித்தியாய் கூடுவிட்டுப் பாயலாமே
341.
பாயவே உமிநீரும் பானமாகும் பார்க்கவொட்டால் திரிபது கண்ணில்மீரும்
தோயவே தேவரெல்லாம் வணங்கிநிற்பார் செடம்போச்சு கைலாசதேகமாச்சு
ஆயவே அஷ்டமா சித்தியாகும் அதுகடந்த நிற்குணமும் அடுக்கக்காட்டும்
வாயவே கோபத்தால் வார்த்தை சொன்னால் மண்ணோடு கல்முதலாய் நீராய்ப்போமே
342.
நீரான அக்கினி மண்டலந்தான் சேர்ந்த சுவாதிஷ்டானத்தின் கீழாகவாறான மூலமுக்கோணத்தின்
மருவியதோர் நாலிதழ்மே அமர்ந்து நிற்கும் தேறானவானமது சிவப்புமாகும்
தெரிந்துகொண்டு வாசியினால் உன்னிபாடும் காறான களிம்பற்று சடமுந்தானும்
கனமில்லா வண்டதுபோல் தேகமாகும் மூறானமும்மலமும் களிம்புநீங்கும் மீளாத்திய அக்கினி மண்டலமுமாமே
343.
ஆமென்ற மாலிடை விஷ்ணுமேலே அதிதமாம் ருத்திரனின் பதிக்குக்கீழே
பாமென்ற பன்னிருவர் காவலாக பரிவான பிராணனைதான் காத்துநிற்கும்
பாமென்ற பளிங்கு நிறம்போலிருக்கும் பரிவாக வாசிவைத்து ஊதிப்பாரு
தேமென்ற சீவகளை தேசுபோல சிறந்த வாதித்தன் மண்டலமுந்தானே
344.
மண்டலமாய் விசுத்தியின் மேலேகாணும் மனோன்மணித்தாய் கொலுவுக்கு கீழேபாரு
குண்டலமாய்ச் சந்திர மண்டலமுந்தானும் குறிப்பாக அமர்ந்திருக்கும் கூடிப்பாரு
மண்டலமாய் அமுர்தகலை பருவிபாரு அதில்சொக்கில் அமுர்தத்தை உண்ணலாகும்
பண்டலாய்ப் பதினாறுகலையும் தானாய் பரிசுத்தி தழைசுத்தி பரவுந்தானே
345.
பரவியே காலாங்கிநாதர் சொன்னார் பக்குவத்தில் அடியேனும் பார்த்துத்தேறி
புரவியே பொதிகைக்கும் வாய்வுமூலை பெருத்ததோர் அசோகமாமரத்தின்கீழே
அருவியே அறுபத்திமூன்று போக்கும் அஷ்டாங்க யோகத்தை போதித்தேதான்
பரவியே அறுபத்திமூன்று பேர்க்கும் பலித்துதே அஷ்டாங்க சித்திதானே
346.
சித்தியாய் அறுபத்திமூன்று பேரும் தேசமெங்கும் திரிந்திட்டு விண்ணிலேறி
அத்தியே அடுக்காறும் அதனில்புக்கி அதிசயங்களெல்லாம் தானறிந்து பார்த்து
நத்தியாய் நடனத்தின் புதுமைகண்டு நாதாந்தத் திசைநாதம் நாட்டம்பார்த்து
புத்தியாய் இப்பூமிக்குள் மேருவலம்வந்து புகழ்ந்தாரே பிள்ளைகள்தான் புகழ்ந்தேன்காணே

347.
காணவே பிள்ளைகள்தான் வணக்கம்செய்தார் கையமர்த்தி சமாதிக்குள் செல்லுமென்றேன்
ஊணவே காலாங்கிநாயகர் மூலக்குருவுமே நெஞ்சில்வைத்து மூலநாயர்
தோணவே பாதமெந்தன் சிரசில்வைத்து சிவயோக மார்க்கத்தில் தெளியவென்று
வேணவே அசோகமாமரத்தின்கீழே வேட்டிதனை விரித்துமே விரைந்தேன்பாரே
348.
விரைந்துமே நூறாண்டு சிவயோகத்தில் வெளியொளிபாழ்தன்னில் மனம்விரவிப்போச்சு
திறைந்துமே ஆண்பெண்ணாஞ் சிங்கம்ரண்டும் சிலையென்று நம்மையெண்ணிச் சிறக்குநாலில்
புரைந்துமே வெகுநாள்தான் பிள்ளைகளைப் பெற்றுப் பெருக்கங்களாகியே சிங்கக்கூட்டம்
நரைந்துமே நம்மைசுத்தி இருந்துகொண்டு நாட்டமாய் இரைகொண்டு கொடுக்கும்பாரே
349.
பார்க்கவே வெகுநாள்தான் இருக்கும்போது பதிவாக அதிலொருநாள் நமக்குத்தானும்
ஆர்க்கவே ஆனந்தங்கழிந்துதானும் மருவிபோல் தில்லை சிங்கமடியின்மேலே
தீர்க்கவே சிங்கமது படுத்திருக்கத் தில்லைதான் சிங்கத்தின் வாயில்வீழ
ஆர்க்கவே எழுந்திருந்து விழித்துப்பார்த்து ஆனந்தவாரியினால் ஞானமாச்சே
350.
ஞானமாய் பந்துகனந் தனையழைத்து நாதாந்த சிவயோகி தன்னைத்தாமும்
கானமாய்க் கல்லென்று பருகிருந்தோம் கடுஞ்சாபம் நமக்குவரப்போகுதென்று
தூனமாய் இடமெல்லாம் சுத்திபண்ணி சுற்றிலுந்தான் பிள்ளைகளைக் காவல்வைத்து
நமனமாய்த் தங்களுக்கு இடந்தான்வேறே அவதரித்துச் சதாநித்தம் போற்றுவாரே
351.
போற்றியே அர்ச்சித்து அஞ்சலிபண்ணி பேரான சிவசொத்தை பொசித்திடாமல்
தேற்றியே புல்சருகு தனைப்பொசித்து சிவசிந்தை மறவாமல் காத்திருக்கும்
ஆற்றியே இப்படிதான் அநேககாலம் அர்ச்சித்துக் காத்திருக்கும் நாளில்தானும்
லேற்றியே வெளியொளிபாழ் தன்னைவிட்டு வெளியிலே மனந்தன்னை விரைந்திட்டேனே
352.
விரைந்திட்டு கண்விழித்து பார்க்கும்போது மிருகமென்ற சிங்கமெல்லாம் நடுநடுங்கி
அரைந்திட்டு அடிவணங்கி நிற்கும்போது ஆர்நீங்களென்றுசொல்லி நான்தான்கேட்க
திரந்திட்ட மிருகமென்ற சிங்கம்நாங்கள் செயலறியாப் புத்திதனில் செயலெண்ணி
முறைத்திட்ட மூர்த்தியிட பதத்தில் நின்றோம் உனிந்தகண்ணீர் தில்லையினால் அறிவுண்டாச்சே
353.
அறிவுண்டாய்ப் பயந்துமே நடுங்கி அடியேன்கள் கடந்தேறும் பொருட்டுக்காகத்
தெறுவுண்டாய்த் தேவர்மறம் காத்திருந்தும் ஜெயமேது தேவரீர் கடாஷத்தாலே
நெறியண்டாய் மிருகமென்ற சட்டைநீக்கி நித்யமா முத்தியெனக்கருளுகன்னே
நெறிவுண்டாய் நான்தானும் உபதேசிக்க நாடாளும் ராஜாவாய்ப் பிறந்திட்டாரே
354.
பிறந்திட்டு ராஜ்ஜியங்கள் மிகவும் ஆண்டு பேரானசுகாதிகளை அனுபவித்து
மறந்திட்ட மாய்கை பெண்ணாசை மயக்கறுத்து மனதுதன்னை வழிப்பாடாக்கி
திறந்திட்டுத் திரேகசதமல்லவென்று திரும்பிவந்து ராஜாவாய்க் குருவேயென்று
கறந்திட்ட பால்போல யோகஞானம் கருத்தெனக்கு அருளுயென்றார் கடாஷித்தேனே

355.
என்றான கடாஷத்தால் யோகம்பார்த்து எத்தான ஆசானயோகத்தில்நின்று
கன்றான கைநெல்லிக் கனிபோலேதான் கருதியே யோகத்தின் கருத்தறிந்து
தின்றான கற்பங்கள் வெகுநாள் தின்று சடமிருக்கக் கற்பாந்தகாலந்தானும்
குன்றான வாதமெல்லாம் கூர்ந்துபார்த்து குளிகைகட்டி கெவுனவழி கொண்டிட்டாரே
356.
கொண்டிடவே ஐவரையும் சோதித்தேறி கூர்ந்துமே திரும்பிவந்து அடியேன்பக்கம்
அண்டிட்ட அஷ்டாங்கம் அறிந்துபார்த்து அஷ்டான சைதன்யத்துள் அடர்ந்திருந்தார்
விண்டிட்ட அறுபத்து நாலுபேர் சீஷர்மேதினியில் எங்குமே சஞ்சரித்து
அண்டிட்டு சமாதிக்குள் அமைந்திருந்தார் அறியாட்டல் யோகத்தை யவத்தமாமே
357.
அவத்தமா அவயோகங்கள் செய்தானாகில் அரியாமல் பூரித்தல் ஒதுங்கிற்றானால்
விவத்தசாம் வியாப்பிரத்தை சொருக்கிக்கொள்ளும் விழிப்பான கனபோகமும்
கோணிப்போகும்
உவத்தமா உடம்மெரி உமிகளாகும் உடலெல்லாம் வேர்வையால் வலியேகாணும்
கவத்தமாம் அட்டயோகம் கர்மயோகம் கடிதான அவயோகம் கருமங்கேளே
358.
கருமமாய் பூதமெல்லாம் லயமேசெய்து காரணமாம் தத்துவத்தை லயமேசெய்து
நருமமாய் குருபதத்தில் நாட்டிநின்று நயந்துமே ஏறுவார் கடினமெத்த
பருவமாய்ப் பிரியங்கி யோகத்தாலே பரிந்துமே மலிவார்கள் கர்மகர்மம்
நிருபமாய் மிக்கான ராஜயோகம் நிலைத்தல்லோ சாதித்து நினைவாய்ப் பாரே
359.
நினைவாக அதன்மேலே மந்திரயோகம் நேரான தசதீட்சை முறையோடொக்க
அனைவாக அண்டவெளிச் சக்கரத்தை ஆடிநின்று பிராணாயந் தீர்ந்துதேறி
மனைவாக நிற்குணத்தின் மவுனத்தூடி மருவிவிட்டாய் மருவிவிட்டாய் பூரணத்தினோடு
வினைவாகத் தசதீட்சைப்பார் சொல்லப்போறார் விரைந்துணர்ந்த பெரியோரை
அடுத்திடாயே
360.
பெரியோரை அடுத்திட்டு தொண்டுபண்ணி போற்றிசெய்து அனுசரித்துக் கேட்டால்
சொல்வார்
மரியோரைக் கேட்டேனே சொல்லவில்லையென்று வனக்குறங்கால் கெட்டவர்கள்
கோடாகோடி
துரியாதே அலையாதே மோட்சம்வேண்டி துரிசிவிட்டுக் காத்திருந்து குருபதத்தில்கேளு
குரியார்க்குக் கொடுத்திட்டால் தீட்சையாவார் கூட்டடா பூரணத்தில் கடுகநீயே
361.
கடுகவே ஏறயிலே தீட்டைவிதிக் கருவைக் கருத்துண்ணி அங்கங்கே கலந்துகாணும்
அடுகவே பிராணயாமம் அங்கேவைத்து வாகாக விழுங்கையிலே ஒளியேயீறும்
திடுகவே ஒளியோடே சேரு சேர சிறப்பான திசைநாதம் செவியில் கேட்கும்
அடுகவே பராபரத்தாய் அமிர்தம் ஈவாள் அகண்டபரி பூரணந்தான் பேசும்பாரே

362.
பார்க்கவே பூரணந்தான் எளிதோமைந்தா பரிவான தசதீட்சைக் குருவைக்காரு
ஆர்க்கவே அவர்மனது வந்துதானால் ரண்டிலே சித்தியாம் அடைந்துகூடும்
நோக்கவே இதைவிட்டு மத்தில்சென்று நினைவுகெடப் பானமுண்டு நிலைத்துவுண்ணார்
தாக்கவே கூசாதே சற்குருவைத்தேடித்தான் அசையாமல் உடல்பொருளுமாவிநீயே
363.
ஆவியவர் கைக்கொண்டால் கண்டங்கொள்ளும் அடுக்கான வானுவந்தான் பிறவிபோச்சு
பாவியென்ற பேரெல்லாம் படுதீயாச்சு பராபரத்தில் உன்னறிவு பாய்ந்துபோச்சு
காவியென்ற சீலையென்ற வேஷமென்னக் கருவுண்ணி சமுசாரத்தின் உள்ளேநிற்பார்
கோவியென்ற கோபம்வந்து செபித்தாரானால் கோட்டிவிழுந்தாப்போல கொள்குந்தானே
364.
தானான பிராணயாமம் பண்ணும்போது தயங்கியே அபினாபரத்தில் பானந்தாக்கில்
ஊனான உகாரத்தில் உந்தியிலே சேர்வாய் முகப்பான மருந்துகொண்டால் சருமநோய்தான்
ஆனான லட்சியத்தை அதிலேவைத்து அடியற்றா மூர்ச்சையுள்ளே வாங்கிநின்றால்
பானான வபானமது பிரிந்துபோகும் பண்பான பானத்தை பாங்காயுண்ணே
365.
உண்ணவே இவ்வளவும் யோகமார்க்கம் உறுதியாய் பார்த்தபடி உண்மைசொன்னேன்
கண்ணவே காலாங்கி ஐயர்சொல்லக் கடாட்சித்த பாட்டரென்ற மூலநாயர்
திண்ணவே அவர்பதத்தைச் சிரசில்வைத்துச் சிறந்தமனோன்மணித்தாயார்
சொல்லக்கேட்டு
விண்ணவே பதஞ்சலியர் வியாக்கிரமர்தாமும் விதியுள்ளாரென்று போதித்தாரே
366.
போதித்த பெரியோர்கள் ரிஷிகள்சித்தர் புத்தியள்ளாரென்று மாகக்கண்டு
ஓவறவே கருத்தழிந்து ஒன்றேயாகி உள்ளரையில் காற்றசையா விளக்குப்போல
அலறவே அலைச்சலற்றுத் தானேதானாய் அகண்டமொடு பூரணமாய் நின்றுபின்னை
துலறவே தேகமற்று இருப்பதாலே சுத்தமாம் அகத்துவல்ல சமாதியாச்சே
367.
ஆச்சப்பா சவர்க்காரக் குருவைப்பண்ண அறைகிறேன் நான் அறிந்தமட்டும்
போச்சப்பா சவர்க்காரம் என்னவென்பார் பொல்லாதர் எண்ணெயைக் கழற்றமாட்டார்
மாச்சப்பா பூநீரால் எல்லாமாச்சு மருவியதிற் பழச்சாற்றைவிட்டு ஆட்டி
பாச்சப்பா புடம்போட்டு எடுத்துப்பார்த்து பாரமில்லை லேசாச்சு என்பார்பாரே
368.
பாரப்பா சவர்க்கார மார்க்கம்பாரு பங்குனிதனிலெடுத்த பூநீர்தானும்
நேரப்பா படிநாலு பாண்டத்தில் போட்டு தாரப்பாவாட்டி நன்றாய் வகையதிலேயுண்டு
சமாதியாம் சத்தானவித்தையுண்டு தரிப்பான திரிசானு வித்தையொன்று
பெமாதியாம் சத்தான வித்தைமார்க்கம் கலக்கிவைத்து சமர்த்துடனே நாலாநாள்
தெளிவைவாங்கே
369.
வாங்கியே அடுப்பில் வைத்து எரிநேர்ப்பாக வற்றியே குழம்புபோல் வருதல்கண்டு
தேங்கியே படி அரைதான் நல்லெண்ணெயும் சிறப்பாக கூடவிட்டுத் திரளாய்க்காச்சி
பிரங்கியே பக்குவத்தில் ஆனபின்பு பருவமுடன் விபூதிமேல் சீலைப்போட்டு
நீங்கியே அகப்பையினால் எடுத்துவிட்டு நெகிழாமல் விளாங்காய்ப்போல் உண்டைசெய்யே

370.
செய்தவுண்டை ரவிதனிலே உலறவைத்து சிறப்பாக எடுத்து நவபாண்டத்தில்
மைதபின்பு லோகத்தோர் சவர்க்காரந்தான் வாதத்துக்காகாது வண்ணார்க்காகும்
பைதபின்பு இதற்கடுத்த சுத்திகேளு பாங்காக பாக்குபோல் சீவிக்கொண்டு
கொய்தமல்லி சாறதனால் பாகமேசெய்து கூரறிய ரவிதனிலே காயப்போடே
371.
காயவே ஏழுநாள் கலைத்துப்போடு காய்ந்தபின்பு செய்கிற வரிசைகேளு
மாயவே நெல்லதனைப் பாண்டத்திட்டு வகையாகத் தண்ணீரும் கூடவிட்டு
நேயவே மல்லிகையினிலையை நினைவாக அதின்மேலே சவர்க்காரம்வைத்து
தோயவே மேலுமந்த இலைபரப்பித் தோலைகட்டி மேல்மூடி அடுப்பிலேற்றே
372.
அடுப்பேற்றி கடிகைரண்டு தீயைமூட்டி ஆவிமேல் வருதல்கண்டு எடுநேர்பாகத்
துடுப்பேற்ற ரவிதனிலே உலரப்போட்டுத் துலங்கமுன்போல் இலைபரப்பி நெல்லிவைத்து
அடுப்பேற்ற ரவிதனிலே உலரப்போட்டு மறுநாளும் முன்போலே இலைபரப்பிக்
கடுப்பேற்றி எரித்து முன்போல் பதத்தைப் பார்த்து கனமான வெயிலுக்குள் காயப்போடே
373.
போட்டுடனே தந்தம்போல் சுத்தியாகும் புகழாகக் கிளிபோலத் தாழக்கட்டி
ஆட்டுடனே கற்சுண்ணம் கிளிஞ்சல்சுண்ணம் அப்பனே அகண்டோறி நத்தைசுண்ணம்
நீட்டோடே சங்குசுண்ணம் புதிதாய்ச்சுட்டு நீற்றாமேல் ஒன்றாகக் கலந்துகொண்டு
மாட்டுடனே கிளியெடுத்து நடுவேவைத்து வளமான சட்டியிலே வைத்திடாயே
374.
வைத்தபின்பு அயத்தகடு கெண்ணிபார்த்து வளமாகப் பதியையுறவாகப்போட்டு
உயத்தபின்பும் உவரிதன்னில் மல்லிகையினிலையை உறவாகப்போட்டு
நனாறாய்காச்சிக்கொண்டு
நைத்தபின்பு இந்நீரைவிட்டு நீயும்நலமாக மேற்சட்டிமூடிபோடு
ஐத்தபின்பு கிளிவாங்கி உலரப்போடு ஐந்துதரம் இப்படிதான் இற்றிடாயே
375.
நீற்றபின்பு கிளிவாங்கி உலரப்போடு நிதமாக அண்டோடல் இதனைவைத்து
மாட்டியபின் அண்டோடு மேலேமூடி மறவாமல் சுண்ணாம்பு சீலைசெய்து
தோற்றியதோர் பத்தெருவில் புடத்தைப்போடு சுகமாகக் குளிர்ந்தபின்பு எடுத்துப்பாரு
ஆற்றியதோர் தவளகமாம் படிகம்போல அம்மம்மா சவர்க்காரக் குருவுமாமே
376.
குருவுக்கு கடுங்கார ஜெயநீர்கேளு கூரறிய பூநீறும் கல்லுசுண்ணம்
தருவுக்குள் அமுரிவிட்டுக் கலக்கிவைத்துச் சாதகமாய் மூன்றுதினங்கடந்தபின்பு
திருவுக்குள் தெளிவிருந்துச் சேருரண்டு திறமான பீங்கானில் வைத்துக்கொண்டு
கருவுக்குள் போடுகிற மருந்தைக்கேளு கனமான ஐந்துசுன்னங் காசுபோடே
377.
போடப்பா காசெடைதான் வாங்கச்சுன்னம் பொலிவான வெடியுப்பு சுன்னம்போடு
நீடப்பா சீனமொருகாசுபோடு நிகறான சூடனுமோர் காசுபோடு
மூடப்பா பூரமொரு காசுபோடு முனையான சவரசத்து காசுபோடு
ஆடப்பா நாபியொரு காசுபோடு ஆதியென்ற சாரமொரு காசுதானே

378.
காசெடைதான் குருவண்டு உரமுஞ்சூதம் கனமான பழுகோடு புறாவினெச்சில்
நேசிதோர் குக்குடத்தின் வெண்மலமுங்கூட நெகிழாமல் அமுரிவிட்டு அரைநாற்சாமம்
வாசியதாம் உன்னீரில் கரைத்துக்கொண்டு மறவாமல் அண்டமது மூப்பத்தொன்று
தேசியாத வெண்கருவஜக் கூடவிட்டுச் சிறப்பான எருக்கம்பால் சோரைவாரே
379.
வார்த்துநன்றாய் மத்திப்பாய்க் குச்சியாலே மறவாமல் மூன்றுநாள் மத்திச்சப்பால்
போற்றியதோர் தெளிவிறுத்துப் பீங்கானுக்குள் பொற்கொடிமுன்வைத்ததனைப் பூசைபண்ணி
மாற்றியதோர் வஸ்துசித்தி பானஞ்செய்து மறவாமல் அஞ்செழுத்து எட்டெழுத்துமாதி
தூற்றியதோர் சவர்க்காரம் தோய்த்துப்போடு சுகமாக ஏழுநாள் ரவியிற்போடே
380.
போட்டபின்பு சண்ணாம்பு முப்புசேரே பொடித்துஅரை சுண்ணாம்பு தண்ணீர்விட்டு
நாட்டபின்பு புடம்போட்டு எடுத்துரைத்து நலமாக குளிகைபோல பண்ணிக்கொண்டு
நீட்டமுடன் சரக்கெல்லாம் ஒன்றாய் சேர்த்து நெடிதான பருவமுடன் அனுகியேதான்
ஆட்டியபின் மேல்மூடிச் சீலைசெய்து அதட்டியொரு புடம்போடச் சுன்னமாமே
381.
சுன்னமென்ற துரைக்கலாம் கடுங்காரமெத்த தொடுகுறிபோல் கடுங்காரமேறுமேறும்
கன்னமென்ற திறவுகோல் வழலைச்சுன்னம் கடுங்காரமேற்றினால் சரக்குக்கக்கும்
பன்னமென்ற கல்லுப்பு இதுக்குட்சாகும் படுமுன்னே நவாச்சாரம் கட்டிப்போகும்
வண்ணமென்ற வீரமது மணியுமாகும் மகத்தான பூரமது சுன்னமாமே
382.
ஆமப்பா தாதுவகை அறுபத்திநாலும் அப்பனே மெழுகாகும் குருவுமாகும்
வாமப்பா உபசரங்கள் ஈயமாகும் மார்க்கத்தில் குளிகையுமாம் செந்தூரமாகும்
போமப்பா வெகுதூரம் எட்டியோடும் போகத்தில் மெத்தவுண்டு புகட்டியாடும்
ஊமப்பா காலாங்கி பாதம்போற்றி உலகத்தோர் பிழைக்கவென்று வழிசொன்னேனே
383.
உரைசெய்தேன் ஈசருடவடமொழியைப் பார்த்து உத்தமனே ஏழாயிரமாமுன்னே
நிரைசெய்தேன் ஏழைத்தான் எழுநூறாக நிகண்டாக மறையாமல் திறந்துபோட்டேன்
புரைசெய்த எந்நூலில் ஒன்றுபொய்யா புத்தியில்லா புல்லருக்கும் மலைவுதோன்றும்
கரைசெய்தேன் வாதமடைதிறந்துபோக கைதவறில் நூலெல்லாம் அசடாய்ப்போமே
384.
போகாது ஆயிபதம் பூசைபண்ணு போங்கோடே ஆதாரம் ஏறிப்பாரு
ஏகாமல் வாசியைத்தான் நங்கென்றூணு எழும்பாமல் வாசியைத்தான் அறுத்துத்தள்ளு
நோகாமல் சடமெல்லாம் கற்பமுண்ணு நோக்கிநின்ற அறிவுக்குள் மனத்தைப்பூணு
சாகாமல் தேகத்தை சுத்திபண்ணு சதாநித்தம் குவினுட பதத்தினுள்ளே
385.
உன்னவே உப்புடைய கட்டைக்கேளு ஓடுகிறதூரமது உயர்த்திமெத்த
பன்னவே பலநூலில் இல்லைஇல்லை பாடினதால் சித்தரென் பகையுமாச்சு
கன்னவே சவர்க்காரச் சுன்னமொன்று கலருகமன் சாரத்தைக் கல்லத்திட்டு
பன்னவே நாற்சாமமும் உமிநீர்விட்டு பக்குவமாய் அரைத்துருட்டி குகையில்வையே

386.
வைத்துமே சில்லிட்டு சீலைசெய்து வளமாக பத்தெருவிற் புடத்தைப்போடு
வைத்துமே வாவிட்டு எடுத்துவாங்கி கடுங்கார செயநீர் குத்தித்
தைத்துமே மூன்றுநாள் ரவியிற்போடு சாதகமாய் தினந்தினமும் செயநீர்குத்திப்
பைத்துவெண்ணெய்ப் பக்குவமாய்ப் பீங்கானிலப்பி பருவமாய் ராக்காலம் பனியில்வையே
387.
வைத்துடனே மொலுமொலெனத் தண்ணீராகும் வாகாக இந்நீரில் வீரம்போட்டு
கைத்துடனே இந்துப்பை கல்லத்திட்டுக் காணிதே நீரிலரைநாலுசாமம்
மொய்த்துட பன்பெடுத்துருட்டி சுன்னமுனைமேல் மூடியே சீலைசெய்து புடத்தைப்போட்டு
கைத்துடனே இந்துப்புச் சுன்னமாகும் நனைத்துமே கடுங்காரம் ரவியிற்போடே
388.
போடப்பா தினம் மூன்றுகாயம் பொசிவான பின்பெடுத்து பனியில்லைப்பாய்
நீடப்பா செயநீராம் இதனைவாங்கி நிலைத்துநிற்கும் வீரத்தைப் பொடித்துத்தூவி
ஆடப்பாசெயநீரும் ஒருபலந்தான் வாங்கி அதற்குள்ளே பூரமொருபலத்தைப்போடு
நாடப்பா காற்றில்லாக் குளிந்தவிடந்தன்னில் அணுகாமல் மூன்றுநாள் மூடிவையே
389.
வையப்பா ரவிதனிலே ஐந்துநாள்தான் மகத்தான பூரமது முப்புமாகும்
செய்யப்பா சுண்ணாம்புக் குகையிலிட்டு சிறப்பாக மேல்மூடிச் சீலைசெய்து
மெய்யப்பா பத்தெருவில் புடத்தைபபோடே வெரித்த புலிபோல் உழன்றுவெண்ணெயாகும்
கையப்பா பட்டுடனேவெந்து நீறுங் கடுங்காரம் செயநீரால் அரைத்து அப்பே
390.
அப்பியே பீங்கானில் ரவியில்போடு ஐந்துநாள் தினந்தினமும் செயநீர் குத்தி
செப்பியே ஒருவருடன் பேசவேண்டாம் ஜெகஜாலம் இதற்குள்ளெ அடங்கிப்போச்சு
கப்பியாஞ் சுன்னமெல்லாம் இதற்குள்ளாச்சு கதையில்லை இதற்குள்ளே சொல்லவென்றால்
வெப்பியே வெம்மியே அலையவேண்டாம் வெகுளாதே பீங்கானில் பதனம்பண்ணே
391.
பண்ணப்பா வீரமொரு பலந்தான் தூக்கி பரியான சவர்க்காரச் செயநீர்விட்டு
தண்ணப்பா கல்லத்தில் அரைநாற்சாமம் தனில்பிறகு வழிந்தெடுத்து வில்லையாக்கி
கண்ணப்பா ரவிதனிலே உலர்ந்தபின்பு காசிடைதான் சவர்க்காரச் சுன்னம்போட்டு
விண்ணப்பா பூரணமாஞ் சுன்னமொன்று வெண்காரஞ்சாரம் இருகாசுதூக்கே
392.
தூக்கியபின் கல்வத்தில் சாரநீரால் துடியாக அரைத்து மேல்கவசங்கட்டி
தாக்கியபின் ரவிதனிலே உலரவைத்து சாதகமாய்ச் சுண்ணாம்புக் குகையிலிட்டு
நோக்கியே வஜ்ஜிரமாம் சீலைசெய்து நொடியான காந்தவாம் சீலைசெய்து
நீக்கியபின் சீலைசெய்து புடத்தைப்போடு நிர்மலம்போல் வெண்ணீராய் நிரைந்துபோமே
393.
போகாமல் வெடியுப்பு செயநீர்கேளு போக்கேடே வெடியுப்பு நாலாங்காய்ச்சல்
வாகாமல் பலம்பத்து நிறுத்துக்கொண்டு மைந்தனே பூநீறு பலமும்போடு
தாகாமல் சீனமொரு பலமும்போடு தயங்காதக் கல்லுப்புப் பலமும்போடு
வேகாமல் சூடனது காசுபோடு விரவியதோர் காரமொரு காசுபோடு

394.
போட்டெல்லாம் கல்வத்தில் பழச்சார்விட்டுப் பொலிவாக மூன்றுநாள் ஆட்டுஆட்டு
நீட்டெல்லாம் வழித்துய்யச் சட்டிக்கிட்டு நேர்ப்பாகத் தீயெரிப்பாய் நாலுசாமம்
வாட்டெல்லாம் வடித்துமொரு பீங்கானுக்குள் மைந்தனே கடுங்காரச் செயநீர்குத்தித்
தீட்டோடே ஐந்துநாள் ரவியிற்போட்டுச் சிறப்பாகச் சுன்னமென்ற குகையிலூதே
395.
ஊதையிலே சுண்ணாம்பு பாய்வெந்து நீறும் உத்தமனே பீங்கானில் எடுத்துக்கொண்டு
மாதையிலே கடுங்காரம் செயநீர்குத்தி மைந்தனே நீற்றியதைப் பனியில்வைப்பாய்
பாதையிலே சலமாகும் இந்நீரில் பருவமுடன் வழலையென்ற சுன்னங்காசு
கோதையிலே பூரமென்ற சுன்னம்காசு கொடியதொரு வீரமென்ற சுன்னங்காசே
396.
காசெடைதான் செயநீரில் கலக்கிக்கொண்டு கடியதொரு சரக்குகளிற் சுக்குபோடே
ஆசெடைதான் அறுபத்திநாலுங் கட்டும் ஆச்சரிய உபசரியங்கள் சத்தேயாகும்
காசெடைதான் கெவிரிவெள்ளை லிங்கம் வீரம் தயங்காத தாளகமும் சிலையும்கெந்தி
தேசெடைதான் நாகத்தைப் பகையாமல் கொல்லுஞ்சனத்தினிலே கவரும் கஞ்சாய்க்
காச்சாமே
397.
சாமப்பா உப்பிதுக்குள் சாற்றக்கேளு தனித்ததொரு வெடியுப்பு சீனக்காரம்
ஓமப்பா கடல்நுரையும் சூடனிந்து உத்தமனே வெண்காரம் துருசுச்சாரம்
நாமப்பா வெடியுப்பு நீரைவார்த்து நலக்கவரை ஏழுநாள்ரவியிற்போடு
வேமப்பாசரக்கெல்லாம் வெந்துநீறும் வெகுளாதே பீங்கானில் எடுத்துவையே
398.
வையப்பாவுப்பேது என்றாயானால் மகத்தான வாரிதியில் சத்திநாதம்
தையப்பா மலைபோலே நிற்கும்பாரு தனையெடுத்துப் பாக்குப்போல் உண்டைசெய்து
செய்யப்பா பூச்சாறு தினமூன்றுவிட்டுத் திறமான உப்பங்கே சுத்தியாகும்
மெய்யப்பா நினைவாக உலரப்போடு விரவியங்கே உட்பூச மருந்துகேளே
399.
கேளப்பா சவர்க்காரச் சுன்னமொன்று கொடியான வீரமொன்று பூரமொன்று
வாளப்பா சவர்க்காரச் செயநீர்விட்டு மைந்தான குழம்புபோல கல்வத்தாட்டி
கேளப்பா கல்லுப்பில் துவைத்து வாட்டு கொள்கியந்த தணலுக்குள் அடர்ந்துவாட்டி
நாளப்பா குழம்பையெல்லாம் பூசிவாட்டி கலந்தபின்பு முன்னெட்டு மருந்துபூசே
400.
பூசியதை வாட்டுதற்கு விபரங்கேளு பொலிவான வெடியுப்பு நீரைவார்த்து
தாசியதைக் கல்வத்தில் குளப்பிக்கொண்டு தழையெல்லாம் பிரட்டிநன்றாய் வாட்டிப்போடு
வாசியதைக் கல்லுப்பு பலத்தைக்கேளு  வகையாக மும்மலத்தில் பூசிப்போடு
தேசியதை அடுக்கடுக்க முதிரவாட்டி சிறப்பாக தணலுக்குள் அடந்ததுவாட்டே

# போகரின் சப்த காண்டம் – 7000

401.
வாட்டிடவே கல்லுப்புத் தேறிப்போகும் மருவியதோர் ஊசரமும் உப்பும்கேளே
நாட்டிடவே நாயுருவிப் பிரண்டைச் சாம்பல் நலமான கிளிங்சிநீர் சரியாய்கூட்டி
ஆட்டிடவே அமுரிவிட்டு மெழுகாய்ப்பண்ணி அடைபோலே ரண்டாக்கி சட்டியிலேபோடு
நீட்டிடவே அடைமேலே உப்பைவைத்து நேர்பாக அதின்மேலே அடையால்மூடே
402.
மூடியே மேல்மூடிச் சீலைசெய்து முசியாதே அடுப்பேற்றி எரிநால்சாமம்
ஆட்டியே தீபம்போல் எரித்துவாங்கி ஆறவிட்டு எடுத்தந்த படியேவைத்து
நாட்டியே கசபுடத்திற் போட்டாயானால் நலமான வயிரம்போல் உருகிக்கட்டும்
தேற்றியே ஆறவிடுத்துப்பாரு சிவசிவா முத்துபோல் மணியுமாமே
403.
ஆமப்பா மணியெடுத்து உருக்கிப்பாரு அரகரா பொன்போல நின்றுஆடும்
தேமப்பா கரிதனிலே இறங்கிற்றானால் சிறப்பாக முன்போல மருந்துபூசி
வாமப்பா புடம்போடு உருகிநிற்கும் மணிபோலே நின்றாடும் கரியுனுள்ளே
தாமப்பா உப்புமணித் தாழ்வடமாய்க் கோர்த்துத் தாயோடு தந்தையும் பூசைபண்ணே
404.
பண்ணப்பா பானமொடு சுத்திவைத்துப்பரிவாக பூசைபண்ணி மதுவையுண்ணு
விண்ணப்பா தாழ்வடத்தைக் காதில்வைத்து வேதாந்த அனுபவத்தில் மனதையுன்னி
கண்ணப்பா அங்செழுத்தம் எட்டெழுத்தும் ஒத கயிலையுறை சிவன்வந்து நிர்த்தஞ்செய்வார்
நண்ணப்பா சிறுபிள்ளை ஆயிவந்து நாட்டிலுள்ள அதிசயங்கள் சொல்லுவேனே
405.
சொல்லுவாள் அஷ்டகர்மம் எட்டுந்தானும் தோற்றான கர்மத்தில் வழியுஞ்சொல்வாள்
கொல்லுவாள் வாமத்தைப் பணிந்தபேரை கூப்பிடுவாள் வாமத்தில் கொள்டினோரை
சொல்லுவாள் சிவகாம் சொல்லயானும் விடுத்துப்பார்த்து மக்கட்காக சொன்னேன்
மல்லுவாள் சமாதியிலே உரைத்துப்பாரு மாயப்பிரபஞ்சமெல்லாம் ஒழிந்துபோமே
406.
போகாமல் உப்பினுட குருவைச்சொல்ல புகழாக சவர்க்காரச் சுன்னமொன்று
நோகாமல் கற்பூரச் சுன்னமொன்று நேர்பாபார வீரத்தின் சுன்னமொன்று
வேகாமற் புழுகொன்று சீனமொன்று விரவியரைச் சவர்க்கார நீரினாலே
வாகாமல் உப்பினுட மணிக்கு பூநீர் மாசற்ற ரவிதனிலே உலரப்போடே
407.
உலர்ந்த பின்பு சண்ணாம்புக் குகையில்வைத்து உத்தமனே மேல்மூடிசீலைசெய்து
அலர்ந்த பின்பு பத்தெருவில் புடத்தைப்போடு ஆதியென்ற கல்லுப்பு சுண்ணாம்பாகும்
குலந்தனக்குக் கோடாலிகாம்புபோலே கொள்ளியதோர் சரக்குக்குக் காலன்காலன்
நலந்தனக் கடுங்காரம் செயநீர்குத்திக் நாளெழு ரவியிற்குள் உலரப்போடே
408.
போடவே அதின்மேனிப் பூப்போலாகும் பொலிவான சுன்னமிடை சாரங்கூட்டி
நாடவே தினமொன்று அரைத்தாயானால் நலமான வருணசலம் போலேநிற்கும்
நீடவே ரவிதனிலே உலர்ந்தபின்பு நேரான சுண்ணாம்புக் குகையில்வைத்து
ஆடவே மேல்மூடிச் சீலைசெய்து அகட்டியொரு புடம்போடச் சுன்னமாமே

409.
சுன்னத்தைப் பனியில் வைக்கச் செயநீராகும் தோற்றறிய வெந்நீரில் வீரச்சுன்னம்
வன்னத்தை மாற்றிவிக்கும் சவர்க்காரச் சுன்னம் மாசற்றவெளியாகும் பூரச்சுன்னம்
சுன்னத்தை வெளியாக்கும் நீரில்போட்டு கலக்கியொன்றாய் மத்தித்து சரக்கிற்பூச
அன்னத்தை அடுத்த பால்சலம் வேறாம்போல் அணுகிலே கட்டியங்கே மணிபோலாமே
410.
ஆமப்பா அறுபத்துநாலுதானும் அப்பனே உபசரங்கள் நூற்றிரண்டுபத்தும்
போமப்பால் அவணமுதல் இருபத்தஞ்சும் பொன்காய்க்கும் மரமாக பண்ணுவிக்கும்
நாமப்பா காலாங்கி பதத்தைப் போற்றி நாட்டிலுள்ள பேர்களுக்கு பிழைக்கச்சொன்னேன்
வாமப்பா என்னாவில் ஒன்றுதப்பில் மதிகெட்ட போகமுனியென்று சொல்லே
411.
சொல்லவே உபினுட மணியைக்கேளு துடியாகக்கருவில் வைத்து உருக்கும்போது
மல்லவே தங்கமோர் இடையை நீட்டு வாய்திறந்து ஆவென்று சுழித்துவாங்கும்
வெள்ளவே நாகமோர் இடையைப் போடு பேதித்து வாங்கையிலே சூதம்போடு
தெள்ளவே வீரமோர் இடையைப்போடுத் திரண்டுருகி வாங்கையிலே கெந்திபோடே
412.
போட்டுடனே களங்காகும் முப்பூவுங்கால் பொலிவான நவலோகம் அன்பதுக்கொன்று
காட்டுடனே பத்தரையே மாற்றுங்காணும் கனகத்தைக் கண்டுடனே கொ்ச்சிக்காதே
ஆட்டுடனே அன்னமரைத் தண்ணீர் கொள்ளு ஆசையென்ற புளியுப்பை அகற்றித்தள்ளு
நாட்டுடனே சிவசொத்தை வருமைபோலெண்ணு நலம்போலே சமாதியிலே இருந்திடாயே
413.
இருந்திட்ட உப்பினுட செந்தூரத்தை இதமாகக்கேளுங்கள் மாணாக்காளே
தருந்திட்ட சூதம் ஒன்று நாகம் மூன்று மருவியிதை உருக்கியல்லோ பொடியாய்ப்பண்ணி
திருந்திட்ட வீரமென்ற சுன்னமொன்று சிறப்பாக மத்தித்து பனியில் வைக்க
அருந்திட்ட செயநீராம் இதனைவாங்கி ஆதியென்ற உப்புபண்ணி தன்னிற்றோயே
414.
தோச்சுமே பரித்த கட்டைமேலே தூற்றில் சுகமான இலுப்பை நெய்யால் விளக்கைவைத்தும்
பாச்சுமே நூலிழையில் திரியைப்போட்டுப் பக்குவமாய் வாங்குமட்டும் வாட்டித்தீரு
ஏய்ச்சுமே உப்பருந்து பரிதானப்பா இதமான வருணனைப்போல் ஆகும்பாரு
காச்சுமே நவலோகம் ஐம்பதுக்கொன்றிய கையோடே பத்தரையாம் கண்டுகொள்ளே
415.
கொள்ளப்பா செந்தூரம் குன்றிமட்டும் கோடானகோடிவரை இருத்தும் தேகம்
விள்ளப்பா சுக்கிலத்தைக் கட்டிநீற்ற மேலேறும் அல்லாது கீழோடாது
துள்ளப்பா நரைதிரைகளெல்லாம் மாறும் சுகமாகும் காயமது சிவந்துபோகும்
விள்ளப்பா சட்டையொன்று கக்கிப்போகும் வேதாந்தசாரமெல்லாம் வெளியாய்ப்போமே
416.
போமப்பா பச்சையுப்பு தின்றாயானால் புகழான வேருவையில் சுக்கிப்போடும்
வேமப்பா அமுரியிலே இரங்கிப்போகும் வெறிப்பானச் சடமெல்லாம் தளர்ந்துபோகும்
போமப்பா சடமலைந்து நரைமெத்தாகி புகழான தந்தமெல்லாம் கழன்றுபோகும்
நாமப்பா கட்டியதோர் உப்பைத்தின்று நலமான சமாதியிலே இருந்திட்டேனே

417.
இருந்திட்டேன் சமாதியிலே கற்பமுண்டு ஏழுயுகங்கடந்து எழுந்தேனப்பா
அருந்திட்ட பாட்டர் பக்கல்சென்றுயானும் அருகிருந்தெழுந்திறைஞ்சி தீட்சைக்கேட்டேன்
திருந்திட்ட காலாங்கி ஐயர்பாகல் சென்று செப்பமுடனே யுகம்வாதம்பார்த்தேன்
மருந்திட்டம் ஆகியல்லோ குளிகைகட்டிப் பக்குவமாய் அண்டமெல்லாம் பார்த்திட்டேனே
418.
பார்த்திட்டேன் அண்டரண்ட பத்துமட்டும் பரிவான மலைதோறும் நாதாக்கள் கோடி
ஆர்த்திட்ட மலைதோறும் சித்தர்கோடி அந்தந்த மலைகளிலே மூலிகையோமெத்த
ஏர்த்திட்ட சாஸ்திரங்கள் அநேகமுண்டு எந்தநூல் பார்த்துமே எளிதில்காணார்
மார்த்திட்சிமாகவல்லோ உப்புசொன்னேன் மறைத்தார்கள் சாஸ்திரத்தில் சித்தர்தானே
419.
மறைத்ததென்னவென்றாக்கால் சொல்லக்கேளு மலைகளெல்லாம் சித்தர்மயமாச்சுதென்று
நிறைந்ததென்ன ஆதியுப்பை இழுக்காய்ச்சொல்லி நேராகவழலைத்தான் மூடிப்போட்டார்
உரைத்ததென்ன வாலையினால் வாதம்போச்சு ஓகோகோகாயசித்தி கெவுனசித்திபோச்சு
குரைத்ததென்ன சித்தரென்று சொல்லியானும் கூறினேன் வெளியாகக்கூறினேனே
420.
கூறியதோர் சவர்க்கார உண்டைசெய்து குறிப்பாக சுத்திபண்ணி சுன்னம்பண்ணு
மாறியதோர் கடுங்காரச் செயநீர்பண்ணு மைந்தனே கற்பூரவுப்பு பண்ணு
தேறியதோர் வீரத்தை சுண்ணம்பண்ணு சிறப்பாக வெடியுப்பிற் செயநீர்பண்ணு
ஆறியதோர் கல்லுப்பைக் கட்டியாடு அரகரா வாதமிதில் அடங்கிப்போச்சே
421.
போச்சென்ற உப்பினுட மெழுகைக்கேளு பேரானுவப்பதுவும் பலமுமொன்று
ஆச்சென்ற குகையில்நின்று உருகும்போது அப்பனே சாரமது பலமும்கால்தான்
நீச்சென்ற வெண்காரம் பலமும் கால்தான் நேரான கந்தகமும் பலம் அரைதான் சேர்த்து
காச்சென்ற சவர்க்கார நீரைவார்த்துக் குன்றியளவு உண்டைசெய்யே
422.
செய்த உண்டையுப்பு நின்று உருகும்போது சிதராமல் ஒவ்வொன்றாய்க் கொடுத்துவாநீ
மைதவுண்டை புகையாமல் உள்ளேவாங்கி மகிழாமல் உப்பதுவும் இப்பால்வாங்கிப்
பெய்தநவலோகத்தில் நூற்றுக்கொன்று போட்டிடவே தசமாற்றாய் நிற்கும்பாரு
ஐதவுப்புக் காவிக்கும் ஓடாதப்பா ஆச்சரியம் காயசித்தி சுருக்கம்பாரே
423.
பாரிந்த மெழுகதனை குன்றியண்ணு பத்தியமாய்ப் புளியுப்புப் பெண்ணும்தள்ளு
காரிந்த நாற்பது நாள் உள்ளவரையில் வாழும் கனமான யோகத்தே நின்றுதேரு
சாரிந்த சட்டையொன்று தள்ளிப்போடும் சந்திரனோ சூரியனோ என்பார்பாரு
ஆரிந்தபடி செய்வார் நாதாக்கள் செய்வார் ஆச்சரியம் உலகத்தோர் பாஷாண்டிதானே
424.
தானென்ற உலகத்தோர்க்கு வாதமெய்தில் அத்தருவம் அயனாய்த்திரிந்து பெண்ணைச்சேர்ந்து
பானென்ற அமுதமுண்டு மற்றேயாகிப் பலநிலைவாய்க்கப் பழுத்துப்பாசமெய்தி
கோனென்ற குருவேது காயசித்தியேது குறிப்பான ஆதாரவழிதானேது
வானொன்றி யாடுகிற குளிகையென்ன வென்று வாய்ப்பேச்சாய்த் திரிந்துழன்று மருளுவானே

425.
மருளாமற் போகவல்லோ வாதஞ்சொன்னேன் மாண்டிறந்து போகாமல் காயசித்திச்சொன்னேன்
இருளான வெளிகான யோகஞ்சொன்னேன் ஏழுவகைக் காணவல்லோ குளிகைச்சொன்னேன்
அருளான மனமடங்க போதஞ்சொன்னேன் வாநந்தமாவதற்கு வஸ்துசொன்னேன்
பொருளான குருபதத்தில் தொண்டுபண்ணி போக்கோடே உப்பைமுந்திக் கட்டியாடே
426.
ஆடவே உப்பென்ற சுன்னமொன்று அணைத்திடுநீ சாரத்தை ரண்டையுந்தான்
நீடவே கல்வத்தில் அரைநாற்சாமம் நேர்ந்த பின்பு சுன்னமென்ற குகையில்வைத்தூது
நாடவே கடுங்காரச்செயநீர்குத்தி நாள்மூன்று மத்தித்து ரவியில்வைப்பாய்
மூடவே ரவியில்வைக்கச் செயநீருமாகும் உத்தமனே இந்நீரின் ஓட்டங்கேளே
427.
கேளப்பா இந்நீரில் வீரச்சுன்னம் கெடியாக மத்தித்துப் பலந்தான்பூரம்
நாளப்பா பீங்கானில் பூரம்போட்டு நலமாகச் செயநீரை அதிலேவாரும்
நீளப்பா மூன்றுநாள் நிழலில்வைத்து நேர்பாக ரவிதனிலே ஐந்துநாள்போடு
வாளப்பா அரைத்துநன்றாய் பில்லைதட்டி வளமான சவர்க்காரச்சுன்னம்பூசே
428.
பூசியல்லோ சுன்னமென்ற குகையில்வைத்து பொருந்தவே மேல்மூடிசீலைசெய்து
ஆசியல்லோ பீசானம் பூசைபண்ணி ஐந்தெருவில் புடம்போடப் பூரம்நீறும்
வாசியல்லோ கடுங்காரம் செயநீர்குத்தி மகத்தான ரவிதனிலே உலரப்போடு
தேசஇயல்லோ சிவகாமி சொன்ன மார்க்கம் செப்புகிறேன் அதின்வேகம் செப்புறேனே
429.
செப்பியதோர் பூரமது பலந்தான் ஒன்று தெள்வான சாரமது பலமுமொன்று
ஒப்பியதோர் இதுரெண்டும் கல்வத்தாட்டு ஓங்கியதோர் நெட்டெழும்ப மாட்டுமாட்டு
தப்பியதோர் சுண்ணாம்புக் குகையில் வைத்து சார்பாக மேல்மூடி சீலைசெய்து
அப்பியதோர் புடத்தைப்போட வெந்துநீராம் ஆச்சரியம் பனியில்வைக்கச் செயநீராமே
430.
ஆமப்பா இந்நீரில் வீரச்சுன்னம் அதட்டியே கலக்கிமெள்ளவைத்துக்கொண்டு
ஓமப்பா சரக்கான அறுபத்திநாலு முற்றும்மெள்ள மாட்டிடவே மணியுமாகும்
சாமப்பா சாரமது லவணமெல்லாம் ஷணத்திலே சுண்ணாம்பாய் விரிந்துபோகும்
வேமப்பா கண்டருமோ வெள்ளையாகும் வேதித்ததாளகத்தின் மஞ்சள்போமே
431.
மஞ்சளென்ற கெந்தகமே வெள்ளையாகும் மாசற்ற வீரமது சுன்னமாகும்
மஞ்சளென்ற லிங்கமது மெழுகேயாகும் ஆதியென்ற கல்லுப்பும் மணியுப்பாகும்
துஞ்சளென்ற உபசாரங்கள் ஈயமாகும் தொடுமுன்னே தேகமது விரைத்துப்போகும்
சுஞ்சலென்ற லோகங்கள் வெண்ணையாகும் காட்டிடவே நூற்றொன்றில் ஏமமாமே
432.
ஏமமே ஆச்சுதென்று புளகிக்க வேண்டாம் மெளிதாக மூலத்தையிருத்திப் பாரு
வாமயம கெதியாக அனுதினமும் போற்று வழியாறு தளமெல்லாம் கண்டுபாரு
தேவமே சமரசவாசலுக்குள்ளே புக்கிச் செப்பரிய மதியளவும் தொட்டுயேறு
காமமே கதியென்று விழுகவேண்டாம் கருத்தென்ற வாளினால் பொறியைவீசே

433.
வீசிடவே பூரமென்ற நீரினாலே விளங்கியதோர் தாளகத்தில் சுருக்குப்போடு
தூசிடவே சவர்க்காரச் சுன்னம்தானும் துடியான பூரமென்ற சுன்னம் மூன்று
ஆசிடவே வெடியுப்பு நீரால் ஆட்டி அப்பிய தாளகத்தில் விரவிப்போடு
வாசிடவே சுண்ணாம்புக் குகையில்வைத்து மண்செய்து ஊதிடவே சுன்னமாமே
434.
சுன்னமென்ற தாளகத்தில் வீரம்கூட்டித் துடியாக மத்தித்து வங்கத்தப்பி
கன்னமென்ற அண்டோடு கீழ்மேலிட்டு கடுகவே சுன்னமென்ற குகையில் ஊது
வன்னமென்ற வங்கமது சுன்னமாகும் வாதமென்ற கடைதிறக்கும் திறவுகோலாம்
சின்னமென்ற வேங்கையில் ஆடுபோன திடுக்கிட்டுச் சூடமது உண்டையாமே
435.
ஆமப்பா துரிசியொரு பலமேதூக்கு அதிகமென்ற பூதநீர் தன்னில் தோய்த்து
சேமப்பா ரவிதனிலே உலரப்போடு சிறப்பாக ஏழுநாள் ஆனபின்பு
தாமப்பா சவர்க்காரச் சுன்னமொன்று தயங்காத வீரமொன்று சுன்னமொன்று
வாமப்பா வங்கமொன்று பூரமொன்று வகையாக சூதமொரு காசுந்தானே
436.
தானென்ற புழுகோடு உரமுங்கூட்டிச் சமரசமாய்க் கடுங்காரச் செயநீர்குத்தி
மானென்ற துரிசியின்மேல் கவசங்கட்டி வகையான சுண்ணாம்புக் குகையில் வைத்து
கானென்ற மேல்மூடிச் சீலைசெய்து கசபுடத்தில் போட்டெடுத்து ஆறவிட்டு
ஆனென்ற கவசத்தை உடைத்துப் பார்த்தால் அம்மம்மா கடுஞ்சுருக்குச் சுன்னமாச்சே
437.
ஆச்சப்பா துரிசியது குருவுமானால் அண்டரண்ட கடாகமெல்லாம் கிழிந்துபோகும்
மூச்சப்பா ஆடுமுன்னே நாகங்கட்டு மூதண்ட சவ்வீர மெழுகேயாகும்
பாச்சப்பா அண்டமெல்லாம் மெழுகாய்ப்போகும் பாஷானகுலமெல்லாம் வெண்மையாகும்
ஏசப்பா பனிநீரும் வெள்ளைநீரும் எடுத்துவந்தால் ஒன்றிரவில் கோடியாமே
438.
கோடியென்று சொல்லுவதும் கொஞ்சம்கொஞ்சம் குறுக்காமல் எடுக்கலாம் அனேகவித்தை
மாடியென்றும் இளையாமல் சித்தியாகும் மாசித்தர் ஆட்டமெல்லாம் இதுதானல்லோ
நாடியென்றும் துரிசினால் சிங்கிபண்ணி நலமுற்ற குளிகைகட்டிச் சாரணைசெய்து
ஆடியென்றும் குளிகைதனை வாயில்வைத்து அண்டரண்ட பதமெல்லாம் பார்த்திட்டேனே
439.
பார்த்திட்டேன் அண்டத்தில் சித்தர்கோடி பரிவாக அவரைநீகண்டு பேசில்
மார்திட்ட குருவேது என்றாராகில் மகத்தான மூலரிட பேரனென்று சொல்லு
சேர்திட்டால் அஸ்திரமும் சூஸ்திரமும் கேட்பார் சிறப்பாகக் கக்கத்தில் இருக்குதென்று
கார்த்திட்ட குளிகையுட வேகங்கேட்கில் கண்ணிமைக்குள் கற்பமென்று
புக்குமென்றுன்னே
440.
என்னவே சாரத்தை பண்டம்போல்சீவி இதமான அபினோடு மிளகு பூரம்
கன்னவே மேனிச்சார் அரைத்துப்பூசிக் கடுகவே ரவிதன்னில் உலரப்போடு
பன்னவே அதின்மேலேச் சரக்குத்தானும் பக்குவமாய் இறக்கியதில் கவசங்கட்டி
மன்னவே சாணாக்கில் சீலைசெய்து வகையாக வங்கத்தில் தோய்க்கக்கேளே

441.
கேளப்பா வங்கத்தைக் குகையிலிட்டு கெடியாக வருகையில் தோய்த்துவாநீ
வாளப்பா ஏழுதரம் தோய்த்துவாநீ வகையான காரமது சுத்தியாகும்
தாளப்பா சவர்க்காரச் சுன்னவீரம் தயங்காத பூரமொடு மூன்றுங்கேளு
வேளப்பா வெடியுப்பு நீரைவார்த்து விரவியதை சாரத்தின் மேலேபூசே
442.
பூசியதைச் சுண்ணாம்புக் குகையில்வைத்துப் புடம்போட்டு எடுத்துப்பார் தவளநீராம்
ஆசியதைக் கடுங்காரச் செயநீர்குத்தி அப்பனே பனியில்வைக்கச் செயநீராகும்
தேசியதில் சரக்குகளில் சுருக்குப்போட செயமான மெழுகாகும் வேதையாகும்
ஆசியதை எண்ணாதே கற்பமுண்ணு அருணனைப்பொல் சிவப்பாகும் காயந்தானே
443.
தானென்ற செயநீரில் வீரச்சுன்னம் சமரசமாய் பூரமொன்று சுன்னமொன்று
கானென்ற சவர்க்காரச் சுன்னம்தானும் கலந்தசெயநீரால் படிகைமேலே
வானென்ற தினந்தோறும் தோய்த்துத் தோய்த்து மகத்தான ரவிதனில் ஏழுநாள்போட்டு
பானென்ற வெடியுப்புச் சுன்னம்பூசப் பருவமாய் சுன்னமொரு குகையில்வையே
444.
வைத்துமே சீலைசெய்து புடத்தைப்போடு வாகாக எடுத்துப்பார் சீனச்சுன்னம்
கைத்துமே கடுங்காரச் செயநீர்குத்தி கணிதமாய்ச் சமனான சாரம்சேர்த்து
தைத்துமே கல்வத்திட்டு ஆட்டிச்சமமாகப் புடம்போடு எடுத்துக்கொட்டி
மைத்துமே பனியில்வைக்கச் செயநீராகும் மாசற்ற நீராலே எல்லாம்சாமே
445.
சாமென்ற நீரிலே வீரச்சுன்னம் தயங்காத பூரமென்ற சுன்னம்போட்டு
காமென்ற நீரிலே கலக்கிவைத்துக் கடுஞ்சூடன் பலமொன்றில் நீரைவார்த்து
ஆமென்ற நிழலிலே மூன்றுநாள் வைத்து  அதன்பிறகு ஏழுநாள் ரவியில்போட்டு
வாமென்ற பில்லைபண்ணி உலரப்போட்டு மாசாரக்கல்லுப்பு சுன்னம்பூசே
446.
பூசியே சுண்ணாம்புக் குகையில்வைத்துப் பொலிவாகப் புடம்போடப் பூப்போலாகும்
காசியென்ற நடுங்காரச் செயநீர்குத்தி கனமாக அண்டத்தின் மேலேபூசி
தேசியென்ற சேர்த்துருக்க முன்னேவைத்து சிறப்பாக மூன்றுநாள் ரவியிற்போடு
தூசியென்ற மேலோடு ரண்டுசுருக்கூடும் சுழன்று வெந்து சுண்ணாம்பாய் நீறிப்போமே
447.
நீறியதில் வீரமென்ற சுன்னம்போட்டு நேர்ப்அகச் சாரநீர்விட்டு ஆட்டி
மாறியதில் நிமிளைதனை கவசங்கட்டி மகத்தான சுண்ணாம்புக் குகையில்வைத்து
தேறியதில் மேல்மூடிசீலைசெய்து சிறப்பாக கெசபுடத்தில் போடுநீயும்
ஆறியபின் எடுத்துப்பார் கடிதாம் சுன்னம் ஆகாரம் அதின் ஆண்மை அறிந்திலேனே
448.
அறிந்திலேன் இச்சுன்னம் வீரச்சுன்னம் அப்பனே ரண்டையும்தான் சாரநீரால்
பிறிந்திலேன் மத்தித்துத் தங்கத்துக்கப்பி பேரானயண்டத்தோல் கீழ்மேலிட்டு
செறிந்திலேன் கெசபுடமாய் வெளியில்போடு சிறப்பான பரிதானும் சுன்னமாகும்
கறிந்திலேன் வாதமடம் திறந்துப்போச்சு கரைக்குள்ளாய் வாதமடம் சிக்கிப்போச்சே

449.
போச்சப்பா பரிதானும் சுன்னமானால் போட்டிட்டால் சூதமது கட்டிப்போகும்
நீச்சப்பா வாதமெல்லாம் கைக்குள்ளாகும் நிரைநிரைத் தாதுவெல்லாம் மணிபோலாடும்
காச்சப்பா தேகமது பொன்போலாகும் கண்டுகொள்ளு காயயித்தி சுருக்குமெத்த
வாச்சப்பா இத்தனையும் முப்பாலாச்சு மயங்காதே உப்பைமந்திக் கட்டியாடே
450.
ஆடவே வாசினையை அடித்துத்தள்ளு அப்பனே அஷ்டாங்கம் அறிந்துபாரு
போடவே கற்பமுண்டு காயசித்தியுண்டு புகழும் மனோன்மணித்தாயை நீராய்ப்பூசி
கூடவே குருபதத்தை தொண்டுபண்ணு குறிப்பாக கைமுறையும் இனமும்பாரு
நீடவே சத்துரு மித்துருவும்பாரு நினைவெல்லாம் வேதாந்தக் குறிப்பில்வையே
451.
குறிப்பாக வெங்காரக் கட்டுகேளு கூறியது இதன்பெருமை சிவனுங்காணார்
நெரிப்பாகச் சத்தெலஃலாம் இதினாலல்லோ நேரான காமவிடாய் சத்துப்போச்சு
வெறிப்பான லோகங்கள் தம்மினத்துக்கெல்லாம் விரவியிதைவிட்டலல்லோ கண்விட்டாடும்
கறுப்பாகம் கபாலல்லோ கார ஆட்டு கைவிட்டால் சரக்கெல்லாம் உட்கொள்ளாதென்னே
452.
என்னவே சாரமது பலகைபோல எடுத்துமே ஆவெருதின் சாணியாலே
கன்னவே கழுவிநன்றாய் சுத்திபண்ணு கலங்காதே சவர்க்காரச் சுன்னம் வீரம்
என்னவே பூரமொடு மூன்று கேளு பதறாமல் கழஞ்சிவைதான் சாக்கிக்கொண்டு
தன்னவே மத்தித்து சாரநீரில் தயங்காதே ரவிதனிலே தோய்த்துப்போடே
453.
போடவே தினமெழில் வெளிரிக்கட்டும் பூனைக்கண்போல வரவும் காணும்
ஆடவே நாகத்தின் செயநீர்க்குள்ளே அபாஞ்சி ரேக்கதனை மேலேசுற்றி
நிடவே தீபத்தில் வாட்டு நேர்ந்த நேரான அபஞ்சியைத்தான் சுளித்து வாங்கும்
மாடவே அருணனைப்போல் சிவப்பேயாகும் மாதளம்பூப் போலிருக்கும் மக்காள்பாரே
454.
பார்க்கவே நவலோகம் நூற்றுக்கொன்று பாச்சிடவே பதினாறு மாற்றுமாகும்
ஆர்க்கவே தினம்பணந்தான் உண்டாயானால் அருணனைப்போல் தேகமுமாம்
கண்ணொளியேயீறும்
சேர்க்கவே காயமது கர்ப்பாந்தகாலம் திரையாமல் பண்ணிவைக்கும் நரையோயில்லை
சார்க்கவே சூதத்தை ஷணத்தில்கொல்லும் கண்ணிமைக்குள் பாஷாணம் சத்துமாமே
455.
சத்தான சாரநீர்க் குள்ளே மைந்தா தயங்காத சவர்க்காரச் சுன்னமிட்டும்
மகத்தான வீரமிட்டும் பூரமிட்டுப் பரிவாகப் பீங்கானில் வாங்கிக் கொண்டு
அத்தான அண்டமது அன்பத்தொன்று அதிகமென்ற மஞ்சளாய்க் கருவைவாங்கி
நித்தான சட்டியிட்டு அடுப்பிலேற்றி நினைவாக வருத்திடுவாய் கருகத்தானே
456.
கருகவே வருத்திடவே மயிலமாகும் கானந்த வேளையிலே படிதானொன்று
பகருவேன் இலுப்பையெண்ணெய் கூடவிட்டு பக்குவமே ஆனபின்பு இருத்துக்கொண்டு
தருகவே அப்புருகம் பலந்தான்ரண்டு தன்னோடு காந்தமது பலமும்ரண்டு
திருகவே கருவளகில் பலமும்ரண்டு சிறந்ததொரு வெங்காரம் பலமும்ரண்டே

457.
ரெண்டோடு இதுவெல்லாம் பொடியாய்ப்பண்ணி நேரான அண்டத்தின் தைலத்தில்குழப்பி
பண்டோடே மண்ணாலே குகைதான் பண்ணி பக்குவமாய்ச் சுட்டெடுத்து வைத்துக்
கொண்டு
சண்டோடே தயிலத்தை யுடகுகையிற்பூசி சார்பாக நாகம் பலந்தான் எட்டு
கண்டோடே வெறும்குகைக்குள் உரிக்கிமைந்தா கனமான சாரத்தின்பொடிமேல்தூவே
458.
தூவியே நாகமது கண்விட்டாடும் சுகமாக மருந்திட்ட குகையில் வார்த்துத்
தாவையிலே தயிலத்தைக் குத்துகுத்து தணிப்பிறகு சாரநீர் குத்திவாரி
பாவையிலே வில்லையாய் இருக்கும்பாரு பக்குவமாய் எடுத்துமுன்போல் தயிலம்பூசி
காவையிலே முன்போல உருக்குமைந்தா கனமான சாரத்தின்பொடிமேல்தூவே
459.
தூவியபின்முன்குகையில் மருந்துபூசிதுடியாக அதற்குள்ளே சாய்த்துப்பின்பு
பாவியபின் அதின்மேலே தயிலம்குத்தி பரிவாகாதின்மேலே சாரநீர்குத்தி
மேவியபின் அப்படியே ஐம்பத்தொன்றும் ஒலிவாக சாய்ந்துவா பாகமாக
காவியபின்புகையஞ்சும் கட்டிப்போகும் கனமானமுழுக்கட்டு நாகம்பாரே
460.
பாரப்பா நாகமது கட்டிற்றானால் பண்பேதி சண்பேதி கத்திபேதி
ஆரப்பா இதினாட்டைக் காணப்போறார் அம்மம்மாசிவரிஷி சித்தர்காண்பார்
தூரப்பா எடுத்தசலம் துலையாப்போல தொடர்ந்தேறி கொடிமட்டும் எட்டியோடும்
காரப்பா குருபதத்தில் தொண்டுபண்ணு கைமுறைகள் தவறாமல் சூட்டுவிட்டே
461.
சூட்டவே நாகமொரு பலந்தானப்பா துடியான தங்கமொரு பலத்திலீய
நீட்டவே ரண்டுமொன்றாய் உருகும்போது நினைவாக சூதமொரு பலத்தைப்போடு
ஆட்டவே கல்வத்தில் அதனைக்கொட்டி அனையப்பா பலம்நாலு கெந்திதானும்
கூட்டவே சூடனது பலமிரண்டு கொடிதான மல்லிகையின் சாற்றால் ஆட்டே
462.
ஆட்டியே தினமூன்று காயக்காய அதன்பின்பு பொடியாக்கி குப்பிக்கேற்றி
நீட்டியே வான்குகையிற் பனிரண்டு சாமம்நேர்ப்பாக முத்தீயும் மாட்டித்தீரு
கூட்டியே வஸ்துசுத்தி ஈசானத்தில் கொடிய நிருவாணிக்கும் பூசைசெய்து
மாட்டியே நவலோகம் ஆயிரத்துக்கொன்று மாற்றது இருபத்து அஞ்சுதானே
463.
அஞ்சான செந்தூரம் குன்றியுண்ணு அப்பனே மண்டலத்தில் சட்டைபோகும்
பஞ்சாங்க நேரங்களெல்லாம் தவிடுபொடியாகும் மடுமுன்னே காயமது இருக்கிக்கொள்ளும்
தஞ்சானசிலைபோலத் தேகமாகும் சாவில்லை யுகாந்தவரை நரைதிரை இல்லை
பிஞ்சான காயமுமாம் மத்தியாமுண்ணு பேசாதே ஒருவருடன் மூலம்பாரே
464.
பார்க்கவே நாகமொரு பலத்தைநீயும் பரிவாகத் தகடாக்கிப் பூசக்கேளு
சேர்க்கவே வீரமென்ற சுன்னமொன்று சிறப்பான பூரமென்ற சுன்னமொன்று
கார்க்கவே தாளகத்தின் சுன்னமொன்று கலங்காதே சாரநீர்விட்டு ஆட்டி
ஆர்க்கவே மத்தித்து தகட்டிற்பூசி ஆதியாம் சுண்ணாம்பு குகையில் ஊதே

465.
ஊதவே சுண்ணம்பாய் நீறிப்போகும் உத்தமனே வாசனைக்குப் பாஷாணம் சாகும்
பாதவே சூதமது இட்டிளி போலாகும் பண்பான வீரமது மணியுமாகும்
கோதவே லிங்கமது கட்டிப்போகும் கொடிதான சரக்குகளிற் பூசிவாட்ட
ஓதவே சரக்கெல்லாம் மணிபோலாகும் உத்தமனே நாகத்தின்ஓட்டம்தானே
466.
தானென்ற நாகம்போல் காரீயம் சாய்த்துச் சமர்த்துனே தகடாக்கி பூசக்கேளு
ஊனென்ற வெள்ளையென்ற பாஷாணத்தோடு உத்தமனே சவ்வீரம் பூரம்சீனம்
கானென்ற சவர்க்காரச் சுன்னம் சூடன்கலந்தரைத்து சாரதின்செயநீராகில்
பானென்ற தகடுதனிற் பூசிவைத்து பக்குவமாய் சுன்னமென்ற குகையிலூதே
467.
ஊதையிலே வெந்துருகி சுன்னமாகும் உத்தமனே சுன்னத்தின் சாரங்கூட்டிப்
பாதையிலே கல்வத்திலிட்டு ஆட்டிப் பக்குவமாய் சுன்னமென்ற குகையில்வைத்து
வேதையிலே மேல்மூடிசீலைசெய்து விளங்கவே மலரும் பூப்போல்
காதையிலே கடுங்காரச் செயநீர்குத்திக் கனமான பீங்கானிற் பனிப்படவே வையே
468.
வைத்துடனே பலபலெனத் தண்ணீராகும் வாகாகயின்னீரில் வீரம்பூரம்
கைத்துடனே உப்பான சுன்னமிட்டுக் கனமானதுரிசிநீர் கழஞ்சுபோட்டுத்
தைத்துடனே கல்வத்தில் சூதம்போட்டு தாக்கி அரைக்கால்சாமம் கல்வத்திட்டு
மொய்த்துடனே உண்டையாய் எடுத்துக்கொண்டு முயற்சியாய் ஆரையிலை கவசங்கட்டே
469.
கட்டியே அவிற்புடமாய் பத்துபோடு கனமானசூடன் தீதத்னில்வாட்டித்
தேட்டியே கரண்டியிலே எண்ணெய்குத்தி உருக்கிச் செயமானபின்பு எடுத்து
சிரசில்வைக்க
வெட்டியே பார்நீ மகற்றிபோடு விரவியே வாயில்வைக்க தம்பனையேயாகும்
வட்டியே உபசரத்தின் சத்தையீந்து மார்க்கமாய்ச் சாரனைதான் செய்திடாயே
470.
செய்திட்ட குளிகைதன்னை வாயில்வைக்கத் திறமான அண்டரண்டத் தலங்களெல்லாம்
கைத்திட்டமாக உந்தன் காட்டிவிக்கும் கண்ணிமைக்குள் சங்கவரை புக்குவிக்கும்
கொய்திட்ட ஆண்டத்தில் சித்தருண்டு குளிகையெங்கே பார்ப்போமென்பர்
அறியவேண்டாம்
மெய்த்திட்ட புத்தியினால் கொடுத்தாயானால் விரைந்தெடுத்து அண்டத்தில்
பாய்வார்பாரே
471.
பாரப்பா அடுக்குகளிற் புத்திகொள்வார் பாய்ந்துபோய்நீயங்கே தடவப்போறாய்ச்
சேரப்பா பாட்டருட மணியைவாங்கி திறமாகப் பார்ப்பமென்று வாயில்வைத்து
காரப்பா அண்டத்திற் புக்கிப்போனால் கடுகவொருமணி வாயில்வைத்துப் பாட்டர்
தூரப்பா கேதனத்தில் தேடிப்பார்த்தார் சுற்றியெங்கும் காணாமல் திகைத்திட்டாரே

472.
திகைத்திட்டுக் குகையில்வைத்து சீஷருக்குச் செப்பினார் கேசரத்தில் ஆடும்போது
பகைத்திட்ட சித்தர்கள்தான் அநேகங்கோடி பாசிக்கும் குளிகையைதான்
கேட்பார்மக்கள்
நகைத்திட்டு அவர்கையில் ஈயவேண்டாம் நம்போலே ஏளிதயாய்ப் போகவேண்டாம்
புகைத்திட்டார் பாட்டர்சொல்லக்கேட்டே இனியானும் போய்மக்காள் புத்திகொண்டு
பிழைத்திட்டாரே

473.
பிழைத்திட்டு குளிகைகட்டி யோகம்பார்த்து பேரானகாயத்தை சுத்திபண்ணி
குழைத்திட்டு ஆத்தாளை பூசைபண்ணிக் கூறிய வஸ்துசுத்தி பானம்பண்ணி
அழைத்திட்டு வாசியைத்தான் அங்கென்றூணி அடுக்காறு தளத்தில்நிற்கும்
அச்சமுங்கண்டு
வழைத்திட்ட சாந்திதனில் அமுர்தத்தையுண்டு வழியோடே மனதூன்றிப் பாருபாரே

474.
பார்த்திடவே தங்கமொன்று உருகும்போது பரிவான சூதமொன்று காரத்தோடீய்ந்து
கார்திடவே நாகமொன்று கொடுத்துவாங்கிக் காணிதுக்கு சமனாககெந்திகூட்டி
ஆர்த்திடவே தாளகமும் சிலையும் வீரம் அழகாக நாலிலொன்று கூடக்கூட்டி
மார்த்திடவே கல்வத்தில் இதனைவிட்டு மல்லிகையினிலைச் சாற்றில் அரைத்திடாயே

475.
அரைத்திடுவாய் தினமூன்று சாறுவிட்டு அழகாகப் பொடியாக்கிக் குப்பிக்கேற்றி
நிரைத்திடுவாய் வாலுகையின் அடுப்பிலேற்றி நேர்பாகத் தீயெரிப்பாய் பனிரெண்டுசாமம்
விரைந்திடுவாய் ஆயிபதம் பூசைபண்ணி வெகுளாதே எடுத்துப்பார் அருணன்போலாம்
கரைத்திடுவாய் ஆயிரத்துக் கொன்றேயீயக் கைகண்ட மாற்றென்ன இருபத்தஞ்சே

476.
அஞ்சுமே செந்தூரம் பணந்தானொன்று அனுபானம் தேனோடே மண்டலமேகொள்ளு
கெஞ்சுமே நோய்களெல்லாம் தவிடுபொடியாகும் கொடியான காயசித்தி
அருணன்போலாம்
துஞ்சுமே நரைதிரையெல்லாம் மாறும் சகமான சட்டையொன்று கக்கிப்போகும்
வஞ்சுமே கற்பாந்தகோடிகாலம் வாசியை ஐந்துதலத்தில் இருத்திப்பாரே

477.
இருந்திடமே சவ்வீரவைப்புகேளு எழிலான வெடியுப்பு நாலுபத்து பலந்தான்
பொருத்திடவே சீனமது அஞ்சுபத்து பலந்தான் புகழாமல் இதுரண்டும்கல்வத்திட்டு
வருத்திடவே மேனிசார்விட்டுஆட்டு வகையாக வில்லைதட்டி உலரப்போட்டு
கரித்திடவே கவசத்தில் இதனைப்போட்டு சக்கரமாம் பானையைத்தான் மேலேமூடே

478.
மூடியே சீலைசெய்து அடுப்பிலேற்றி முசியாதே பீங்கானில் கிண்ணிவைத்துச்
சாடியே தணலெறிப்பாய் மூச்சாமம்தான் தன்னுக்குள் வேர்வைபோலிறங்கும்பாரு
வாடியே வெளுப்பாக இறங்கும்நீரை வகையாக ஊற்றிவிடு மறுகாலைநீரைத்
தேடியே வீதருக்குள் அடைத்துவைத்துச் சிதறாமல் நீரையெல்லாம் வாங்குவாங்கே

479.
வாங்கியே சூதமொரு பலந்தானெட்டு வகையாக மறுபீங்கான் தன்னில்வைத்து
ஓங்கியே திராவகத்தை அதிலேவிட்டு உர்ப்பனமாய்த் தனலிட்டு உருகவைத்து
தேங்கியே மணல்போலே ஆகும்பாரு சிறக்கவே கல்லுப்பு பலந்தானொன்று
பாங்கியே துரிசியொரு பலந்தானாறு பக்குவமாம் பூநீருபலந்தான் ரண்டே
480.
ரெண்டோடு வெடியுப்பு ஒன்றைதானப்பா நேர்ப்பான சீனமது ஒன்றரையேயாகும்
ரண்டோடு அன்னமென்ற பேதிதானும் கருவவே ஒருபலந்தான் கூடப்போடு
தண்டோடு சாரமது அரையேபோடு சார்வான கல்லுப்பு துரிசுதன்னை
பண்டோடே பொடியாக வறுத்துப்போடு பக்குவமாய் வெவ்வேறே பொடித்துவையே
481.
வைத்தெல்லாம் சூதத்தில் நன்றாய்ப்போட்டு வாகாகப்பொடிசெய்து குப்பிக்கேற்றி
பைத்ததெல்லாம் அரைவாசிதானே போட்டுப் பக்குவமாய் வாலுகையில் மேலேயேற்றி
கைத்தல்லோ தீபோட்டுக் கமலம்போல நாலுநாள் மூச்சாமம் ஆறவிட்டுப்போடு
கைத்தல்லோ பனிரண்டுசாமமானால் கனமான தங்கம்போலிருக்கும் தானே
482.
தானென்ற சவ்வீரப்பொடிதான் சேரை சமர்த்தான கல்லுப்பு ஒன்றுக்கு முக்கால்
மானென்ற சவ்வீரம் பொடியாக்குப்பாதி மகத்தான மூரில்யென்ற பலந்தானப்பா
தானென்ற துரிசுக்குப்பாதிப் பூநீரு கனமான நீருக்குச் சீனம் முக்கால்
வேனென்ற வெடியுப்பும் அப்படியேயாகும் வெடியுப்பு மூன்றிலொன்று சாரஞ்செய்யே
483.
சேர்க்கவே அன்னமென்றபேதி தானும்சிறந்த பூநீருக்குப்பாதியப்பா
ஆர்க்கவே பொடிசெய்து குப்பிக்கேற்றி அரைவாசி வாலுகையில் மேலேவைத்து
ஏர்க்கவே தீயிடுவாய் கமலம்போல இதமான நாலுமுச்சாமமப்பா
பார்க்கவே ஆறவிட்டு எரித்தாயானால் பருவமாய் பனிரண்டு சாமம்தானே
484.
தானென்ற மும்முறைதான் இப்படியே செய்தால் சமர்த்தான கொச்சியென்ற பேருமாச்சு
தானென்ற பரங்கிவைத்தான் மாயிசொல்ல கனமான வீரத்தால் வாதமாச்சு
வேனென்ற வீரத்தைச் சுன்னம்செய்தால் வெகுளாமல் தங்கமது பூப்போலாகும்
தேனென்ற சரக்கெல்லாம் சுண்ணாம்பாகும் சிறுபிள்ளையாடுமிந்த வாதந்தானே
485.
வாதத்துக்கு ஆதியென்ற வீரப்போக்கை மரைத்தாரே நாதாக்கள் ரிஷிகள்சித்தர்
வேதத்தின் முடிவுபோல் ஒளிப்புமெத்த வெட்டவெளியாச்சுதென்றார் லோகமெல்லாம்
போதத்தின் பஞ்சகர்த்தாள் சிருட்டிபோகும் பொன்மயமாயுலகமெல்லாம் போகுமென்று
நீதத்தல் சொன்னவராருமில்லை நேர்ப்பாக எந்நூலில் சொன்னேன் காணே
486.
சொன்னதினால் சித்தரென்னப் பகையுமாச்சு தோற்றாத கருவெல்லாம் வெட்டவெளியாகப்
பன்னதினால் பலனென்று விரித்துச்சொன்னேன் பரத்துக்கேவுப்பென்று மனதிலெண்ணி
தன்னதினால் மன்னதினால் நூல்கொடுத்தோன் நரகமெய்தி மாண்டிறந்து கடைநரகில் வீழ்வான் காணே

487.
காணவே நிர்மூடவாவாதிகட்கு கைகொடுக்கில் இந்நூலில் கருவையுண்ணி
பூணவே பார்த்தலைந்து ஏமம்கண்டு புளாகித்து மெய்மறந்து பெண்ணைக்கண்டு
ஆணவே தனையீய்ந்து கற்பழிந்து அழும்பாக்கிக் குடிகெடுத்து ஆசைபூட்டி
ஊணவே காமநோய் கொண்டுயேங்கி உலகத்து நடத்தைத் தப்பியவன்தானே
488.
தானான ஞானிக்கு இந்நூல் எய்தில் சண்டாளப் பாசத்தை அறுத்துத்தள்ளி
ஊணான காயத்தைச்சுத்திப்பண்ணி ஊரூரு தலங்களெல்லாம் சோதித்துப்பார்த்து
பானான நிராதாரத்துக்குள்ளே சொக்கிப் பரத்துக்கு அடுக்கநின்று பானம்பண்ணி
ஆனான அன்னமரை தண்ணீர்கால் மருந்தியே ஒருபொழுது இருப்பார்தானே
489.
இருந்திட்ட கருவெல்லாம் எண்ணிப்பார்த்து எளிதாகத் தொழில்செய்து ஏமம்கண்டு
திருந்திட்ட சிவனுடைய சொத்திதுவென்று செலவுசெய்யார் கனமான கர்மத்துக்கும்
பொருந்திட்ட மாத்திரையே எடுத்துவித்து பூசைதிரவியத்துக்கும் கற்பத்துக்கும்
அருந்திட்டும் ஒன்றும் அறியாதார்போல வசையற்று இருப்பார்கள் ஞானிதானே
490.
ஞானிக்கு வறுமைவந்தால் சகலசித்தும் பொய்யாம் நாட்டிலுள்ள மனிதரெல்லாம் நகைப்பாரென்று
ஞானிக்குப் பசிவந்தால் மனமலையுமென்று நலமானகாயசித்தி போகுமென்று
ஞானிக்கு விகடம் வரலாகாதென்று நாதாக்கள் சொல்லாத கருவைச்சொன்னேன்
ஞானிக்கு சொன்னதால் குருவுக்காச்சு நலமான சவ்வீர வைப்புகேளே
491.
கேளப்பா வெடியுப்பு பலமேநூறு கெடியான சீனமது நூற்றுப்பத்து
வாளப்பா சவுட்டுப்பு இருபத்தைந்து மருவியதோர் துரிசியது முப்பதாகும்
நாளப்பா நவாச்சாரம் பலமும்பத்து நண்பான சத்தியென்ற சாரமாச்சு
காளப்பா கல்லுப்புப் பலமும் அஞ்சு கடிசாகக் கல்வத்தில் பொடியாய்ப்பண்ணே
492.
பொடிபண்ணி பிரண்டைசார் தன்னினாலே பூணியரைத்து ஏழுநாள் பில்லைசெய்து
கெடிபண்ணி ரவிதனிலே உலரப்போட்டு கெட்டியாம் பாண்டத்தில் அரைவாசியிட்டு
தடிபண்ணிச் சக்கரமாம் பானைதன்னை சாங்கமாய் மூடியெல்லாம் சீலைமண்செய்து
துடிபண்ணி அடுப்பேற்றி தீயைமூட்டித் துப்புரவாய்த் தீநீரை வாங்குவாங்கே
493.
நீரிலே வெள்ளைநீர் தனையகற்றி நேர்பான சிவந்தநீர் தன்னைவாங்கிச்
சீரிலே யரக்கான தய்யார்தன்னில் சிறப்பாக அடைத்துவைத்து சேதிகேளு
தூரிலே சூதமது பலந்தான்பத்து சூஷாதி கல்லுப்பு அஞ்சுமாகும்
ஊரிலே துரிசியது ரண்டரையே பலந்தான் முற்பனமாம் வெடியுப்பு ரண்டுபலமுமாமே
494.
ஆமப்பா சீனமது ரண்டுபலமாகும் அன்னமென்ற பேதியது பலமுமிரண்டு
ஓமம்பா சாரமது பலமும்ரண்டு உறுதியாம் பூநீரு பலமும்ரண்டு
காமப்பா லிங்கமது பலமுமெட்டுக் கம்பிரசகர்ப்பூர பலமுமெட்டு
காமப்பா வெள்ளையது பலமேயொன்று நற்கெவுரிமனோசிலையும் பலமுமொன்றுபோடே

495.
போடவே பலமொன்று கெந்திதானும்  புகழான  சூடனது பலமுமொன்று
வாடவே தொட்டியொடு அப்புரக நிமிளை வர்த்தமொடு வைகிருந்து தமர்காந்தலோகம்
தேடவே கற்காதி சாத்திரவேதி சிறப்பான சிங்கியொடு குதிரைப்பல்லு
நீடவே அஞ்சனக்கல் துத்தத்தோடு கெடிதான சலாசித்துக் கல்நார்தானே
496.
தானென்ற கடல்நுரையும் ஒவ்வொன்று பலந்தான் தாக்கியரை யெட்டுநாள் திராவகத்தைவிட்டு
பானென்ற ரவிதனிலே உலரப்போட்டு மருப்பீங்கான் தன்னிலிட்டு தனலில்வைத்து
ஊனென்ற பொடிப்போலே வறுத்துக்கொண்டு உற்பனமாய்க் காசியென்ற மேருக்கேற்றி
வானென்ற அரைவாசி மட்டும் போட்டு மயங்காதே மாலுகையில் வைத்திடாயே
497.
வைத்திட்டு தீயெரிப்பாய் பனிரெண்டுசாமம் வளமான தீபம்போல் ஆறவிட்டுக்
கைத்திட்டு தீயெரிப்பாய் கமலம்போல கலங்காத பனிரண்டுசாமம்தானும்
மொய்த்திட்டுப் பகல்முழுதும் தீயைப்போடு முயற்சியாய் ராக்காலம் ஆறப்போடு
நைத்திட்டு ஆறுநாள் ஆனபின்பு நலமாகும் பதம்பார்த்து இறக்கிடாயே
498.
இறக்கியே குப்பியைத்தான் முன்மருந்துகூட்டி இதமாக திராவகத்தில் அரைத்துலர்த்தி
நறுக்கியே முன்போல பொடியாய்ப்பண்ணி நலமான காசிபென்ற மேருக்கேற்றி
உறக்கியே வானுகையில் மேலேவைத்து உற்பனமாய்த் தீயிட்டு அறுநாலுசாமம்
இறக்கியே ஆறவிட்டு உடைத்துவாங்கி மறுகாலும் முன்போலே மருந்தைக்கூட்டே
499.
கூட்டியே மும்முறைதான் செய்தாயானால் கொடுவசிப்பாய்ச் சவ்வீரமிருக்கும்பாரு
நீட்டியே சிறுவிஷமும் பலமுமஞ்சு நெடிதான அலரிவேர்ப்பட்டை பலம்பத்து
மூட்டியே கெந்தகந்தான் பலமுரண்டு மூட்டையா மஞ்சளென்ற கருவாலாட்டி
வாட்டியே பில்லைபண்ணிப் புடத்தயிலம் வாங்கி வகையான வீரத்தில் சுருக்குபோடே
500.
போட்டுடனே மெழுகாக பதத்தில்வாங்கிப் பேரானரேக்குசுத்தி வைக்கத்தின்னும்
நீட்டுடனே வுள்ளுக்கு நாலுதங்கம் நிகழாமல் சுற்றிவைக்கத் தின்றுபோடும்
மூட்டுடனே ஆயிரத்துக்கொன்றீய முசியாதே பதினாலு மாற்றுமாகும்
மாட்டுடனே வுபசவங்கள் ஈயமாகும் மாசற்ற வீரத்தை ஒளித்தார்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

501.
ஒளித்தாரே நாதாக்கள் என்றுசொல்லி உத்தமித்தாய்ப் பாதத்துக்குண்மையாக
அளித்தாரே லோகத்தோர் பிழைக்கவென்று ஆச்சரியம் வீரம்விட்டால் வாதம்போச்சு
களித்தாரே முன்சொன்ன வீரமெல்லாம் காரமிடும் வைத்தியத்திற்கு உறுதியாகும்
சளித்தாரே யேமமென்றும் காணாதேங்கி சுணங்களாய்ச் சூடலைந்து மாள்வான்தானே
502.
மாளாமல் பறங்கியென்ற பாஷாணத்தை மகிழ்வாக வைக்கிறதோர் முறையைக்கேளு
தாளாமல் சூதமொரு பலந்தான்பத்து சாகாமல் கல்லுப்பு பலந்தானெட்டு
மீளாமல் வெள்ளையென்ற பாஷாணம் ஐந்து விரவியே கல்வத்தில் பொடித்துக்கொண்டு
கேளாமல் திராவகத்தில் எட்டுநாளாட்டி கெடியாகப்பொடிபண்ணி மேருக்கேற்றே
503.
மேருக்கேற்றி பின்வாலுகையில் வைத்து விதமாகத் தீயுங்கள் பனிரண்டுசாமம்
பேருக்கே பதங்கமது இறங்கியேறும் பெருந்தேங்காய் போலிருக்கும் பாஷாணந்தான்
பேருக்கேறினபோலமருந்து கூட்டிப்பேசாதே திராவகத்தைவிட்டு ஆட்டிப்
பாருக்கே பொடிபண்ணி மேருக்கேற்றி பக்குவமாய் வானுகையில் பதித்திட்டாயே
504.
பதித்திட்டு பனிரண்டுசாமம் தீயைப் பகல்முழுதும் எரியிட்டு ஆறப்போடு
விதித்திட்ட பக்குவத்தில் இறக்கிப்பாரு மேலோடுதள்ளியே பொடியாய்ப்பண்ணு
மதித்திட்டு முன்போல மருந்துகூட்டி மறவாதே மூன்றுதரம் திறந்தாயானால்
கதித்திட்டு பரங்கியென்ற பாஷாணமாகும் கண்ணிமைக்குள் ரகிதவித்தை ஆகும்பாரே
505.
பாரப்பா பரங்கியென்ற பாஷாணந்தான் பலமெடுத்து அயச்சட்டிக்குள்ளேவைத்து
நேரப்பா துண்டிப்பாய் நாலுசாமம் நீத்தாதே சுருக்கிடனே மெழுகாய்ப்போகும்
தூரப்பா இரும்பு செம்பில் நூற்றுக்கொன்றி துடியான ரசிதமது பதினாறாகும்
சீரப்பா சரக்கெல்லாம் கட்டிப்போகும் சிறுபிள்ளை ஆடும்இந்த வாதந்தானே
506.
வாதமென்றால் கொஞ்சத்தில் கிடைக்குமோதான் மகத்தான யோகிமுதல் ரிஷிகள்சித்தர்
நீதமென்ற பஞ்சகர்த்தாள் இவர்களெல்லாம் நேர்ப்பாக பார்க்கையிலும் தப்பிப்போகும்
வேதமென்ற அந்தரத்தின் முடிவுக்கு ஏற்கும் விரைந்த மனோன்மணித் தாயார்
சொல்லயானும்
பாதமெந்தன் சிரசில்வைத்து கேட்டுப்பரிவாக பிள்ளைகட்கா உரைசெய்தேனே
507.
உரைசெய்தார் சித்தர்கள்தான் அநேகம்கோடி உத்தமனே அகஸ்தியர்தான் எட்டுப்பாவாய்
நிரைசெய்தே நவகண்டம் சொன்னாரையா நேர்பாக வெண்பாவாய் கோரக்கர்தாமும்
திரைசெய்த எழு ஆயிரம்தான் சொன்னார் திரட்டியல்லோ மச்சமுனி ஏழுகாண்டம்
சொன்னார்
புரைசெய்த சிவவாக்கியர் அஞ்சு காண்டம் சொன்னார் போக்கோடே சித்தர்சொன்னார்
கரைகாணேணே

508.
காணாத காசிபர்தான் வண்ணம்சொன்னார் கறையற்ற ரோமமுனி வடுகிற்சொன்னார்
பூணாதராமதேவர் சந்தப்பா சொன்னார் புகழரிய நந்திகள்தான் சந்தஞ்சொன்னார்
கோணாத சங்குமாமுனி தானையா குறைத்துமே கலித்துரையாய்த் தெளிவாய்ச்சொன்னார்
கோணாதே திருமூலநாயர் தாமும் சொன்ன திருமந்திரமும்தான் காடுகாடே
509.
காடாகப்போகாமல் பதஞ்சலிமாமூர்த்தி கணக்கோடே ஏழுகாண்டம் சொன்னாரையா
தோடாகச் சட்டைமுனி நிகண்டோடொக்கத் தோராமல் இருபத்துயேழுநூறு
பாட்டாக காலாங்கிநாதர்தாமும் பக்குவமாய் நாலுகாண்டம் சொன்னாரையா
நாயாக இருந்தபேர்க்கு உதவியென்று நலமாக ஏழுகாண்டம் சொன்னேன்பாரே
510.
பார்க்கவே என்மைந்தா எழுநூறாகப் பரிவாகச் சொல்லிவிட்டேன் சூத்திரமாய்த்தானும்
நோக்கவே என்பிள்ளை கொங்கணர்தானப்பா நிறைமூன்று ஆயிரத்தன்னூறு சொன்னார்
சேர்க்கவே சட்டைமுனி நூலும்நன்று ஜெகமறிய கொங்கணர்தன் நூலும்நன்று
கார்க்கவே வேகம் ரோமமுனி நூலும்நன்று கருதியே மனமூன்றிப் பாருபாரே
511.
பாரப்பாநூல் மற்றநூல்களெல்லாம் பரிபாஷைக் கருவாகச் சொன்னாரையா
நேரப்பா கண்ணாடி மூக்கும்போல் நேர்பாக சமர்சொல்லி வைத்தார் தேவர்
சேரப்பா சாஸ்திரங்கள் பார்க்கப்பார்க்கத் திருட்டெல்லாம்வெளியாகும் மறைப்புமில்லை
ஆரப்பா என்னுடைய நூலுகண்டோர் ஆதியென்ற கொங்கணர்தான் கரைகண்டாரே
512.
கண்கண்ட கோரையென்ற வீரவுப்பைக் காட்டுகிறேன் கருவாகக் கேளுங்கள்மக்காள்
பாரைகண்ட சவ்வீரம் பலந்தானெட்டு பாய்ச்சிநன்றாய் கல்வத்திற் பொடியாய்ப் பண்ணி
திரைகண்ட கல்லுப்புச் சுன்னம்ரண்டு ஜெகமறிய சவர்க்காரச் சுன்னம்ரண்டு
மறைகண்ட துரிசியென்ற சுன்னம்ரண்டு மாசற்றவெடியுப்புச் சுன்னம்ரண்டே
513.
ரெண்டான சாரமென்ற சுன்னம்ரெண்டு நேர்பான சீனமென்ற சுன்னம்ரெண்டு
பண்டான அன்னமென்ற பேதிரண்டு பாங்கான பொடியோடே வொக்கக்கூட்டித்
தண்டான மேருவுக்கு அரைவாசிபோட்டுச் சாதகமாய் வாலுகையின்மேலேவைத்து
செண்டான அடுப்பேற்றி வைப்பாயப்பா ஜெகமறிய பனிரண்டு சாமம்தானே
514.
தானென்ற வீரத்தை எடுத்துப் பார்த்தால் சாதகமாய் அடியிலே தானேநிற்கும்
கானென்ற இரும்புமேல் அணுபோல்வைத்து கனமான நீரையள்ளி அதிலேகுத்தி
தேனென்ற குருவாகும் தண்ணியிலே குழைத்துச் சிறப்பாகக் காகத்தின் இறகிற்பூச
கோனென்ற கொக்கிறகுபோலேயாகும் கொள்ளையோ கொள்ளையிதில் வாதந்தானே
515.
வாதந்தான் எப்படிதான் வருகுமக்காள் மகத்தான துரிசியல்லோ நீறுபண்ணவேணும்
சூதந்தான் தன்னையல்லோ கட்டத்தேணும் துடியான சூதமல்லோ காயசித்தியாகும்
வேதமென்ற பொருளறிந்தான் ஞானியாவான் விரைந்தாறுதல்ம் கண்டோன் யோகியாவான்
காதந்தானென்று சொல்ல வார்த்தையாச்சு சலந்தொட்டி நடந்தாக்கால் துலையும்பாரே

516.
பார்ப்பதுபோல் துரிசியொரு பலத்தைவாங்கி பரிவான சேரையென்ற வீரந்தன்னை
சேர்ப்பதுதான் முக்காயெடையே தூக்கிச் ஜெயமான வாலநீரால் மத்தித்தப்பா
கார்ப்பதுதான் துரிசிமேல் பூசபூச கனமான ரவிதனிலே போடுபோடு
தோர்ப்பதுதான் பத்துநாள் போட்டாயானால் சகமான துரிசியது நீறுமாமே
517.
ஆமேதான் சாறுவாரத் தழைகளெல்லாம் அதட்டிமெல்லக் குருபோட்டுப் பிழியதண்ணீர்
போமேதான் பாலெல்லாமுறித்து நீராய்போம் ஈடில்லை சுத்தஜலம் போலேநிற்கும்
வேமேதான் சரக்குகளில் சுருக்குபோட விடுபட்ட மெழுகாகும் வேதையாகும்
ஓமேதான் நவலோகம் ஈர்ந்தாயானால் ஒருகோடிக்கு ஓடுமிது உயர்த்திதானே
518.
உயர்த்தியென்ற விராலி இலைக்குள்ளேகேளு உரலிலிட்டு இடித்தபின்பு துரிசுச்சுன்னம்
புயர்த்தியென்ற விராகனிடை அதிலேபோட்டு பிசைந்துவைத்து கிட்டிசுட்டிப் பிழியதண்ணீர்
குயர்த்தியென்ற சூதமது அயச்சட்டியிட்டுக் கொடுஞ்சுறுக்காய்ப்போட்டுவர ஒருசாமம்தான்
கயர்த்தியென்ற இட்டிலிபோலாகும்பாரு நாமறியோம் இதுபோல போகம்தானே
519.
போக்கான சூதத்தில் தங்கமிட்டுப் பேரானகெந்தமோ சரியாய்கூட்டித்
தாக்கான தாளகமும் சிலையும்வீரம் தயங்காத மல்லிகையின் சாற்றால் ஆட்டி
நோக்கான குப்பியிலே பொடிபண்ணிப்போட்டு உகந்துநின்ற வானுகையில் செந்தூரித்து
வாக்கான ஆயிரத்துக்கொன்றேயீய மாற்றென்ன பனிரண்டு காணுங்காணே
520.
காணாத உபசரங்கள் நூற்றிரண்டுபத்தும் கனமான பாஷாணம் அறுபத்துநாலும்
தோணந்த லவணமுதல் இருபத்தஞ்சும் சொல்முறையாம் நவலோகம் நவரத்தினங்கள்
ஆணந்த இதுவெல்லாம் சத்தாய்வாங்கி அம்மம்மா சூதத்தில் ஒவ்வொன்றாய் யீய்ந்து
பூணந்த குடோரிவிட்டுச் சுக்கப்பண்ணி புகழான சாரணையில் சாய்த்திடாயே
521.
சாய்த்திடவே யொருதந்தான பாசத்தையீய்ந்து சாதகமாம் சகடென்ற குளிகையாச்சு
வாய்திடவே ரண்டுதரம் தீர்ந்தாயானால் மாசற்ற போகியென்ற குளிகையாச்சு
மாய்த்திடவே மூன்றுநாள் தீர்ந்தாயானால் மகத்தான யோகியென்ற குளிகையாச்சு
ஆய்ந்திடவே ஐந்துதரம் தீர்ந்தாயானால் அதிசயமாம் குளிகையென்று அறிந்திடாயே
522.
அறிந்திடவே ஒருதரம் தீர்ந்தாயானால் அப்பனே மோகினியென்ற குளிகையாச்சு
செறிந்திடவே இருநாலும் தீர்ந்தாயானால் ஜெகமறிய அஷ்டமா சித்தியாச்சு
பிறிந்திடவே பதினொன்றே தரம் தீர்ந்தாயானால் பேரான காமதேவர் குளிகையாச்சு
கறிந்திடவே பதின்மூன்றுதரம் தீர்ந்தாயானால் கமலினியாம் குளிகையென்ற நாமமாச்சே
523.
ஆச்சப்பா பதினைந்து தரமுந்தீர்ந்தாயானால் அப்பனே சத்தான குளிகையாச்சு
போச்சப்பா பதினேழுதரமும் தீர்ந்தால் பேரான சுரூபமென்ற குளிகையாச்சு
வாச்சப்பா குளிகைதனை வாயில்வைத்து வடகடலும் தென்கடலும் மருவலாகும்
தோச்சப்பா அண்டத்தில் மரிற்புக்கிச் சுரூபமென சிலம்பொலியில் மேவலாமே

524.
மேவவே துரிசியென்ற குருவைத்தொட்டு விளம்புகிறேன் தாசான பூவைவாங்கிப்
பாவவே துரிசியிட்டுப் பிழிந்துகொண்டு பருவான அயச்சட்டிக்குள்ளேவார்த்து
தாவவே நெடுங்கம்பி லிங்கமொன்று தனைப்பொடித்து அயச்சட்டிக்கள்ளேவைத்து
காவவே வெடியுப்பைக் காசெடையைவைத்துக் கனமான அடுப்பேற்றி தீயைமூட்டே
525.
மூட்டவே வெந்துநன்றாய் மெழுகுமாகும் முனியவே வழித்தெடுத்து பீங்கானில்வைத்து
நாட்டவே நவலோகம் நூற்றுக்கொன்று நலமான மாற்றென்ன பத்தரையே காணும்
ஆட்டவே தினங்குன்றியுள்ளேகொள்ள அருணனைப்போல் தேகமுமாகும் கண்டுகொள்ளு
பூட்டவே நரையெல்லாம் மாறிப்போகும் பொற்சடையோன் தேகமுமாம் கண்டுபாரே
526.
கண்டுபார் விராகனிடை துரிசுசுன்னம் கனமான சதுரக்கள்ளி பாலில்போட்டு
விண்டுபார் சாமம்தான் மூடிவைக்க விடுபட்ட சுத்தஜலம் போலேயாகும்
கொண்டுபார் வெள்ளையென்ற பாஷானந்தான் கொடிதான அயச்சட்டிக்குள்ளே வைத்து
மண்டுபார் நாற்சாமம் சுருக்குபோட மகத்தான வெள்ளையது மெழுகுமாமே
527.
மெழுகெடுத்து வங்கத்தினிடைதானீய மெதுவான வங்கமது நொறுங்கும்பாரு
அழுகெடுத்து வங்கத்தை வெள்ளியிலே தாக்க அப்பனே ரசிதமது பொடியேயாகும்
தழுகெடுத்து சூதத்தை சமனாய்ச் சேர்த்து தாக்கியரைபாறென்ற தண்ணீர்விட்டு
அழுகெடுத்து நாற்சாமம் அரைத்தபின்பு நலமாக வழித்தெடுத்து அயவகலில்வையே
528.
வைத்துமே அயவகலால் சீலைமண்செய்து வாகாகப் பத்தெருவில் புடத்தைப்போடு
தைத்துமே வெந்ததும் குருவாய்நிற்கும் சம்சயங்களெண்ணாமல் வங்கநூற்றில்
நைந்துமே அரிசெடைதான் குருமுடித்தாயானால் நலமான மாற்றென்ன பதினைந்தாகும்
வெய்த்துமே செய்யு அயந்தன்னிலீய விடுபட்ட வெள்ளீயம் ஆகும்பாரே
529.
பாரப்பா ரசிதமென்ற பாஷாணம்வைக்க பண்பாகசொல்லுகிறேன் மாணாக்காளே
நேரப்பா சங்கினுட சுன்னந்தானும் நிறுத்தல்லோ பலம்பத்து கல்வத்திலிட்டு
சேரப்பா சீனமென்ற பொடிதான் பத்து சிறப்பான கல்லுப்பு பொடிதான்பத்து
வேரப்பா வெள்ளையென்ற பாஷானம்பத்து மேவியதோர் சாரமது பலமும்ரண்டே
530.
ரெண்டோடே சூதமது பலமும்பத்து நேர்ப்பான திராவகத்தில் எட்டுநாள் ஆட்டி
தண்டோடெ ரவிதனிலே உலரப்போட்டுச் சாங்கமாய் பொடிபண்ணி மேருக்கேற்றி
வெண்டோடே வானுகையின் பாலேவைத்து விரவியே கமலம்போல் தீயைப்போடு
பண்டோடே பனிரண்டு சாமமானால் பக்குவமாய் பலகைபோல் பதங்கமாமே
531.
ஆமிந்தப் பாஷாணம் பலம்தான்வாங்கி அயச்சட்டிக்குள்வைத்து அப்பால்கேளு
சாமிந்தச் சதுரக்கள்ளி பால்தான்சேரை சமர்த்துடனே யெலிபாலம் பலந்தான்சேரை
வேமிந்த ரண்டும் ஒன்றாய்க் கலக்கிவைத்து விரவியதோர் கருநாபிபலம் பொடித்துப்போட்டு
ஊமிந்த மூன்றுநாள் கலக்கிவைத்து உற்பனமாம் தண்ணீரால் சுருக்குபோடே

532.
சுருக்கிடவே ரசிதமென்ற பாஷாணந்தான் துடியான மெழுகாகும் சுரண்டிவாங்கி
சுருக்கிட்ட வெள்ளியைத் தீர்ந்தாயானால் நலமான நீர்வற்றி ரசிதமாகும்
முழுக்கிட்ட மெழுகாலே சூதங்கட்டும் முயற்சியாம் துரிசியது குருவுமாகும்
குருக்கிட்ட வாதமொன்று பார்ப்போமென்று குலாமான வாதியல்ல குருடனாமே
533.
குருடனென்றால் புத்தியண்டு பயபக்தியண்டு குரங்கான வாதியென்றால்
இலைதழையைத்தேடி
குருடனைப்போல் ஒன்றோடே ஒன்றைச்சேர்த்து முயற்சியாய் உரைத்தங்கே புடத்தைப்போடு
திருடனைப்போல் விழித்தங்கே யெடுத்துப்பார்த்து சீயென்று எறிந்துவிட்டு பின்னொன்றைப்
பார்ப்பான்
கெருடனைப்போல் ஞானமுற்ற வாதியென்றால் கேள்வியாய்ச் சுடுகாமல் குருதேடுவானே
534.
குருத்தேடியவர்கள் சொன்னமொழிகேட்டு குறையாதே சாஸ்திரத்தைத் தேடிச்சேர்த்து
கருத்தேறிக் கைம்முறைகள் கண்டுதேறிக் கலங்காதே யோகத்தை நின்றுதேறி
உருத்தேடி உட்கருவில் கருவையறிந்து உடலறிந்த உயிர்நிற்கும் தானந்தேடி
அருள்தேடி ஆத்தாளை அறிந்துதேடி அவள்சொல்லக் கேட்டறிந்து வாதம்பாரே
535.
பாரப்பா துரிசியென்ற சுன்னம்தானும் பதறாமல் விராகணிடை எடுத்துக்கொண்டு
சேரப்பா எருக்கனுட பால்ரண்டுசேரில் நினைவாக அதிலிட்டுச் சாமம்வைக்க
சேரப்பா கசடற்றி ஜலமாய்நிற்கும் சிறப்பான கெவுரியென்ற பாஷானந்தான்
வாரப்பா அயச்சட்டிக்குள்ளே வைத்து மறவாமல் நாற்சாமம் சுருக்குபோடே
536.
போட்டுடனே மெழுகாகும் எடுத்துமக்காள் பேரான காரீயம் பலந்தானொன்றில்
நீட்டுடனே சரியிடையாய் மெழுகிலீய நேர்ப்பாக வாங்கியது தூளாய்ப்போகும்
மாட்டுடனே ஈயத்தில் தங்கமீய்ந்தால் மலிந்துதங்கம் நொருங்கியே தூளாய்ப்போகும்
ஆட்டுடனே இதற்குநேர் சூதங்காட்டி யரைத்துமுந்நீர் தன்னாலே பில்லைகட்டே
537.
கட்டியே அயச்செம்புக்குள்ளேவைத்து கெமான பத்தெருவில் புடத்தைப்போடு
உட்டியே குருவாகும் நூற்றுக்கொன்றீய ஓடியே பத்தரைதான் உயர்த்திமெத்த
தூட்டியே அம்மெழுகு சூதம்கட்டும் துலையாத சரக்கெல்லாம் கொல்லும் கொல்லும்
எட்டியே வெகுதூரம் ஓடுமோடும் எடுக்கெடுக்கத் துலையாத ஊற்றுமாமே
538.
ஊற்றான தாளகந்தான் பலத்தைவாங்கி உறுதியாஞ்சுன்னத்தில் சுத்திபண்ணி
மாற்றான அயச்சட்டிக்குள்ளேவைத்து மருவவே இலைக்கள்ளிப் பாலுக்குள்ளே
நீற்றான துரிசியென்ற சுன்னம்போடு நீறாக முறிந்தபின்பு எடுத்துக்கொண்டு
காற்றான தாளகத்தில் சுருக்குப்போட கனமான மெழுகாகும் எடுத்துக்கொள்ளே
539.
கொள்ளவே சுத்தித்த செம்புஒன்று குவிந்து நின்று உருகையிலே மெழுகொன்றீய
மெள்ளவே வெங்கலம்போல் தகர்ந்துநிற்கும் ஏதித்து வருகையிலே தங்கமீயத்
தள்ளவே சுழன்று ஒன்றாய் ஆடும்போது தங்கத்தின் சரியிடைக்கு நாகமீய
அள்ளவே கூட்டியெல்லாம் பொடியாய்ப் பண்ணி அதிகமாய்சூரணத்தைச் சரியாய்கூட்டே

540.
கூட்டவே சூதந்தான் கெந்தகத்தில் கொட்டி குறிப்பாக முன்பாவின் தண்ணீராலாட்டி
நாட்டவே பில்லைபண்ணி அயச்சிமிளில்வைத்து நயமாக மேல்மூடிசீலைசெய்து
வாட்டவே பத்தெருவில் புடத்தைப்போடு மகத்தான செந்தூரம் ரவிதானப்பா
ஆட்டவே மதிதன்னில் நூற்றுக்கொன்றீய வருணனைப்போல் சிவப்பான தங்கமாமே
541.
தங்கமாம் குருபட்டால் சூதங்கட்டும் சாவென்ற பேர்போச்சு தேகத்துக்கு
பங்கமாம் சரக்குகளில் போட்டுப்போட பதைத்தங்கே கட்டிப்போம் தூரவோடும்
கெங்கையாம் சாறுவாரத் தழைகளெல்லாம் கெடியாகப் பிசைந்தழுத்தி பிழியத்தண்ணீர்
கங்கையாம் உட்கொள்ளக் காயசித்தியாகி சதகோடியுகம்வரைக்கும் அழியாதெண்ணே
542.
எண்ணவே சிவப்பான யெவாச்சாரத்தை இயமாகக் கேளுங்கள் மாணாக்காளே
பண்ணவே வெடியுப்பு ரண்டுபத்து பலந்தான் பருவமுடன் சீனமது இருபத்தைந்து
கண்ணவே ரண்டையுந்தான் கல்வத்திட்டு காரமாம் நாயுருவிச் சாற்றாலாட்டி
தெண்ணவே தெல்லுபோல் பில்லைதட்டி திறமான ரவிதனிலே காயப்போடே
543.
போடவே தினமூன்ற காயகாயப் பொருக்கான பின்பெடுத்து கலையத்திட்டு
ஆடவே சக்கரமாம் பானைமேலே அனைத்தாப்போல் வைத்திட்டு மாசிமண்பூசி
நீடவே அடுப்பில்வைத்து தீயைமூட்டு நினைவாக வெள்ளைநீர் வருகும்பாரு
வாடவே சிவந்தநீர் பன்வருகுமுக்கால் மகத்தான பீங்கானில் எடுத்துவையே
544.
வைக்கவே அரக்காலே குப்பிபண்ணி வருகிறதோர் திராவகத்தை அதிலேவாரு
கைக்கவே வெள்ளைதன்னை வீசிப்போடு நவாச்சாரம் ஒருசேரை கல்வத்திட்டு
ஐயிக்கமே திராவகத்தாலாட்டு ஆட்டுஅது சாகமாட்டியபின் வழித்தெடுத்து
பைக்கவே பரும்பீங்கான் தன்னில்வைத்தும் பருவமாய்த் திராவகத்தை வாங்கிக்குத்தே
545.
குத்தியே ரவியில்வைத்து மூன்றுநாள்தான் குறிப்பாகத் தணல்மேலே பீங்கான்வைத்துப்
பத்தியே பொடிபொடிபோல் வறுத்துக்கொண்டு பருவமாய் காசிபென்ற மேருக்கேற்றி
அத்தியே அரைமாசிமட்டும் போடு அனிகான வானுகையில் மேலேவைத்து
எத்தியே தீப்போடு கமலம்போல இதமாக பனிரண்டு சாமம்தானே
546.
தானென்ற நாற்சாமம் எரித்துப்போடு சாதகமாய் ராக்காலம் ஆறப்போடு
கானென்ற மூன்றுநாள் ஆனபின்பு கடுங்குப்பி எடுத்துடைத்தால் தேங்காய்போலத்
தேனென்ற சிறுதிடத்தில் சிவந்துகாணும் திரும்பவதைக் கல்வத்தில் பொடியாய்பண்ணி
வானென்ற திராவகத்தை விட்டுஆட்டு மறுப்பீங்கான் தனிலிட்டுத் திராவகத்தைக் குத்தே
547.
குத்தியே நாள்மூன்று ரவியில்போடு குவிந்தபின்பு தணலுக்குள் வறுத்துப்போடு
எத்தியே பொடியாக்கி மேருக்கேற்றி விதமான வானுகையில் தீயைமூட்டு
பத்தியே கமலம்போல் எரிப்பாயப்பா பனிரண்டு சாமமுந்தான் கடந்தபின்பு
தத்தியே குப்பியைத்தானுடைத்துப்போடு தணலில் நிற்கும் தங்கமதை எடுத்துக்கொள்ளே

548.
கொள்ளவே முன்போல திராவகத்தாலாட்டு குவிந்தபின்பு நீர்குத்தி தவியிற்போடு
அன்னவே தணலுக்குள் வறுத்துப்போடு அதிமாம் காசிபென்ற மேருக்கேற்றி
தன்னவே வானுகையில் தீயைமூட்டித் தனையெடுத்து முன்போலப் பாவனைசெய்து
துன்னவே ஏழுதரம் தீர்ந்தாயானால் சூரியன்போல் வந்திருக்கும் சாரம்தானே
549.
சாரந்தான் பலம்பத்து நிறுத்துக்கொண்டு சமர்த்தாகச் சூதமது பலமும்பத்து
வாரந்தான் தங்கமது ரண்டரையேபலந்தான் மருவிநன்றாய்லேசாய்க் கல்வத்திட்டு
தீரந்தான் எலுமிச்சம் பழச்சார்விட்டுதிரளவகை மூன்றுநாள் பொடியாய்பண்ணி
காரந்தான் காசிபென்ற மேருக்கேற்றி கனமான வானுகையில் வைத்திடாயே
550.
வைத்துமே பனிரண்டுசாமம் தீயை மறவாமல் போட்டுவர தீபம்போல
மைத்துமே மாதளம்பூ போலேயாகும் மைந்தனே வேறொன்று குப்பிக்கேற்றி
வைத்து மண்சீலையினால் காற்றொடாமல் நலமாகக் கட்டிவைத்து ஆயிரத்துக்கொன்று
தைத்துமே காசிடைதான் கொடுப்பாயானால் தங்கமது பதினாறு மாற்றுமாமே
551.
தங்கமே ஆச்சுதென்று கெர்விக்காதே தளராமல் காயத்தை சித்திபண்ணு
பங்கமே வாராமல் தினம்பணந்தானுண்டு பளபளக்கும் உடம்பெல்லாம் பாலையாவாம்
அங்கமே சரீரமது பவளம்போலாம் அரனுண்ட கற்பமிது யானும்உண்டேன்
சிங்கமே இவனென்பார் நரையோயில்லை ஜெகமெல்லாம் குன்றியிடை கொள்ளவாமே
552.
ஒவ்வாது ஏகாம்ப சாரத்துக்கு உத்தமியாம் மனோன்மணித்தாய் பிளப்பமெத்த
சவ்வாது உடன்கூடிச் சரக்கிற்பூசி தணலிலே வாட்டையிலே சவளையாகும்
கவ்வாது நவலோகம் படிகுமுன்னே கனகமயமாகிவிடும் கணக்கோமெத்த
பவ்வாது உலகத்தில் கெட்டபேர்கள் பரிபாசமென்பார்கள் பாஷாண்டிதானே
553.
பாஷாண்டி மெத்தவுண்டு லோகத்துள்ளே பரவாக அவனுடனே பேசவேண்டாம்
பாஷாண்டி வாதமுண்டோ என்றுகேட்டால் பண்பாகச் செய்தொழிலே வாதமென்றுசொல்லு
பாஷாண்டி வைதாலும் சகித்துக்கொண்டு பயபக்தி மார்க்கமாய் விசேஷம்சொல்லி
பாஷாண்டி முகத்துமுன்னே நிற்குமூதேவி பாங்கான தேசம்விட்டு மறுதேசம்புக்கே
554.
புக்கவே ஞானமுற்ற வாதியுடன்பேச பிறப்பான மனிதருடன் பேசவேண்டாம்
மக்கியே மனதடங்கி போதம்பாரு மகத்தான பெரியோர்க்கு தொண்டுபண்ணு
எக்கியே மூலத்தைக் குப்பிக்கேற்று இயலான தளங்களெல்லாம் சோதித்தேறி
நக்கியே அமுதத்தை மவுனமுன்னி நாதாக்கள் ரிஷியுடைய மரபில்நில்லே
555.
நில்லென்று அறுபத்துநாலு மரபுள்ளே நிலைத்துநிற்கும் வாதசித்தி குளிகைசித்தி
கல்லென்ற காயசித்தி கெவுனசித்தி கரையுடனே காயசித்தி ஞானசித்தி
வில்லென்ற எட்டெட்டுச் சித்தியுண்டு மேதினியும்கொள்ளாது கரைகொள்ளாது
சில்லென்ற காடுபோல் சாத்திரங்கள்மெத்த செப்பரிது உரைகாணில் வாதந்தானே

556.
வாதந்தான் முன்பின்னாய்ச் சொல்லிவைத்து மறைத்தாரே சரக்கென்ற வைப்புதன்னை
நீதந்தான் ஆதியுப்பை இழுக்காய்ச் சொல்லி நிலைத்துநிற்கும் வீரத்தை மறைத்துப்போட்டார்
வேதந்தான் முடிவுக்கு ஒப்பாய்நின்ற வீரத்தைவைத்தாலே வாதமாகும்
பாதந்தான் இல்லாமல் நடக்கப்போமோ பரிவாகச் சிவந்திருந்த சாரந்தானே
557.
சிவந்திருந்த சாரத்தின் மகிமைசொல்ல சித்தர்முதல் ரிஷிகளுக்கும் முடியாதப்பா
உவந்திருந்த காலாங்கி நாயனார்சொல்ல உண்மையாய்க் கேட்டிருந்து யானுங்கண்டேன்
நவத்திருந்த சூதத்தைத் தாக்கிக்கொல்ல நலமாக வெகுசுளுக்கு நல்கப்போகார்
தவழ்ந்திருந்து பின்னைசென்று கடந்தாப்போல சரக்கெல்லாம் கண்ணிமைக்குள் கொல்லுந்தானே
557.
கொல்லுகிற கருவேதுயென்றாயானால் குருந்தபடி சொல்லுகிறேன் குறிப்பாய்க்கேளு
வெல்லுகிற சூதமென்ற கெந்தியொன்று விடுபட்ட தாளகமும் சிலையும்லிங்கம்
அல்லுகிற சிவப்பான சாரமொன்று அப்பனே பழச்சாற்றால் சாமமாட்டி
தெல்லுகிற பில்லைதட்டி உலறப்போட்டு சிறப்பான ஐங்குகையில் வைத்திடாயே
558.
வைத்துமே சீலைசெய்து புடத்தைப்போடு வயிரவற்கு வஸ்துசுத்திப் பூசைபண்ணி
கைத்துமே கவசத்தைவாங்கிப்போடு களங்காகவே இருக்கும் நவலோகத்தில்
ஐந்துமே ஆயிரத்துக்கொன்றுபோடு அப்பனே மாற்றென்ன பனிரண்டாகும்
கைத்துமே காவிக்கு உப்புக்கேகா நலமான சீஷருக்குத் தொழிலில்லைசொல்லே
559.
சொல்லவே சூதத்தைக் கட்டுதற்கு சுளுவாக வழிசொல்வேன் கேளுமக்காள்
அல்லவே இருப்பகலில் பழச்சார்விட்டு அதீதமென்ற சாரத்தை பொடியாய்ப்பண்ணி
மல்லவே சூதமொரு பலத்தைவிட்டு மறவாமல் தணலில்வைத்து பொடியைத்தூவு
கல்லவே கட்டியது மண்போடும் கரியில்வைத்து உருகிடவே ரசிதமாமே
560.
ஆமப்பா இச்சாரம் பொடியாய்ப்பண்ணி அப்பனே மஞ்சளென்ற கருவைப்போட்டு
ஓமப்பா ரவியில்வைக்க தயிலமாகும் உற்பனமாம் பணவிடைதான் தயிலம்கொள்ள
போமப்பா சாவுபொய்யா கற்பகாலம் பகழான வயிரம்போல் இருக்கும்தேகம்
காமப்பா வித்தைக்கு மெத்தநன்று கைவிட்ட சூத்திரம்போல் ஆடும்பாரே
561.
பார்க்கவே துரிசியொரு வைப்புசொல்லப் பண்பாக செம்பாலே பானைபண்ணி
கார்க்கவே கல்லுப்புப் பொடியாய்ப் பண்ணி காணிதுக்குப் பதினாறில் வெடியுப்புச்சீனம்
நீர்க்கவே நிறுத்தந்த பானையிலேபோட்டு இதமான பழச்சாறு மோரும்வார்த்து
ஆர்க்கவே மேல்மூடி புதைத்துப்போடு ஆறுதிங்களானபின்பு எடுத்துப்பாரே
562.
எடுத்துப்பார் பச்சையாய் கட்டியாக இதமான வயிரம்போல் துரிசியாகும்
அடுத்தப்பார் உப்பதுவும் சத்தியாச்சு அப்பனே செம்பதுவும் சிவமுமாச்சு
கடுத்தப்பார் தயிரதுவும் விஷ்னுவாச்சு கலந்துநின்ற பழச்சாறு பிருமாவாச்சு
தொடுத்துப்பார் இதைகுருவுசெய்யில் வேதைதுலையாது வாதத்தில் ஆதியாமே

563.
வாதத்தில் ஆதியென்ற சூதக்கட்டு வகைசொல்வேன் பச்சையென்று மயங்கவேண்டாம்
நீதத்தில் துரிசியது பலமுமொன்று நேர்ப்பாகப்பொடிபண்ணி வைத்துக்கொண்டு
பூதத்தில் இரும்பான கரண்டிதன்னைப் புதுக்கியே தண்ணிர்விட்டுக் கழுவிப்போடு
சூதத்தை நிறுத்தல்லோ பலமும்போட்டு சுறுக்குடனே தண்ணீரை முக்கால்வாரே
564.
தண்ணீர்தான் கொதிக்கையிலே துரிசுத்தூளை சாதகமாய் தூவிவரதண்ணீர்மேலே
தண்ணிர்தான் சுண்டிடவே மறுதண்ணீர்விட்டு சாகாமல் தூவிவர தண்ணீர்சுண்டும்
இண்ணீர்தான் மூன்றுதரம்விட்டுக்காய்ச்ச மெழுகுபோல் உருண்டிருக்கும் சூதந்தானும்
தண்ணீரை விட்டுநன்றாய் தோய்த்துத் தோய்த்துச் சிறப்பாக் கழுவிவிட தீர்க்கமாமே
565.
தீர்க்கவே உருட்டியதை வைத்துக்கொண்டு செப்பரிய மத்தங்காய்க்குள்ளேவைத்து
மூர்க்கமாய்ப் புடந்தன்னைப் பேர்த்துப்போடு முயற்சியாய்ப் பின்பெடுத்துக் கழுவிப்போடு
ஆர்க்கமாய் வெள்ளியதன் விராகனிடைபத்து அழகாக சிமிழ்போல திருவள்வைத்துப்பண்ணி
தூர்க்கதே சூதவுண்டை நடுவேவைத்து துப்புரவாய் மேல்மூடிதிருவப்போடே
566.
திருவியே மறுசற்றால் நல்லயெண்ணை சிறப்பாகக் கல்வத்திலரைமட்டம் வார்த்து
மருவியே வெள்ளியென்ற கிண்ணிதன்னை வட்டமிட்டு ஊங்சல்போல் கல்வத்திட்டு
தருவியே மேலோடுகொண்டுமூடி சாங்கமாய்ப் பாஷாணம்மேலேபூசி
கருவியே கவசத்தின் கழுத்துதன்னில் கடுகியே மனம்போலத் தமருபோடே
567.
தமரிட்டுக் கலசத்தை ஆணிமேல்வைத்து தயங்காதே விரல்பருமன் கிரியைப்போட்டு
கமரிட்டு விளக்கேற்றி நாலுசாமம் கலங்காதே யெரியிட்டு ஆறவிட்டு
அமரிட்டு வெள்ளியென்ற கிண்ணிதன்னை அசையாமல் திருகிவிடு உண்டைவாங்கி
பமரிட்டுத் தண்ணியிலே கழுவிப்போட்டு பத்துவிசை அவிப்புடமாய் காயில்போடே
568.
காயிலே போட்டபின்பு தண்ணீரில்கழுவி கசகாமல் வெள்ளியிட சிமிளில்வைத்துப்
பாயிலே முன்போல யெண்ணையிலேபோட்டு பக்குவமாய் நாற்சாமம் எரித்தபின்பு
போயிலே இப்படிதான் ஆறுபுடம்போடு பேரான எண்ணையிலே பத்துவிசைபோடு
தோயிலே வெள்ளியைத்தான் அடித்துப்போடு சிறப்பான வெள்ளியைத்தான் ஈயம்விட்டதே
569.
ஊதியே முன்னிரையில் சிமிள்போலப்பண்ணு உத்தமனே புடம்பத்து எரிப்புபத்து
பாதியே இப்படிதான் செய்துகொண்டு பரிவாகக் கரியில்வைத்து உருக்கஆடும்
கோதியே தங்கமிட்டு உருக்கிக்கொண்டு குறிப்பான நாகமதுகூடவிட்டு
ஆதியே சகனாகப் பொடியாய்ப்பண்ணி அற்றகெந்தி சூதமிடைச்சரியாய் கூட்டே
570.
கூட்டியே கல்வத்தில் பொடியாய்ப்பண்ணி கொடியான மல்லிகையின் சாற்றாலாட்டி
நீட்டியே மூன்றுநாள் அரைத்தபின்பு நேராகப்பொடிபண்ணி குப்பிக்கேற்றி
மூட்டியே வானுகையின் மேலேவைத்து முயற்சியாய் தீயிட்டு கமலம்போல
ஆட்டியே பனிரண்டு சாமமானால் அருணநிறம் போலாகும் வேதைகேளே

571.
கேளப்பா நூற்றொன்று லோகத்தோடும் கெடியான மாற்றென்ன எட்டுமாகும்
வேளப்பா குளிகைக்குச் சாரணையே செய்தால் விரவியே கோடிலட்சம்காணலாகும்
தாளப்பா ஆச்சுண்டு தயங்கவேண்டாம் தயங்காத மூலிகையிலாச்சுமெத்த
பாளப்பா துரிசுவிட்டு சூதக்கட்டு படுசுருக்கு மூலிகையில் காட்டாதென்னே
572.
என்னவே உபசரங்கள் நூற்றிரண்டுபத்து இலைகளினால் சுருக்கிட்டால் சத்துவாரா
மண்ணவே பாஷாணம் அறுபத்துநாலும் படுமுன்னே நட்டாகச் சுன்னமாகா
மண்ணவே உப்புவகை இருபத்தஞ்சும் மல்லிகை பூப்போல்மலர்ந்து சுன்னமாகா
தன்னவே காரசாரங்களாலே சகலமுந்தான் கடினவாம் குருவுமாமே
573.
ஆமப்பா மூலிகையில் சிறிதுவுண்டு அந்தவித மூலிகைதான் மானுடருக்கெய்தா
வாமப்பா மலைகளிலே யுண்டுவுண்டு மகத்தான கல்லருகில் சூதமுண்டு
தாமப்பா மனிதரங்கே சஞ்சரிக்கப்போகார் சஞ்சரிப்பார் நாதாக்கள் ரிஷிகள்சித்தர்
போமப்பா மனிதருக்குக் காரசாரம் புகழ் ஆதிவாதத்தில் துரிசியாமே
574.
ஆதியாம் துரிசியொன்றில் களங்குசொல்ல அறைகிறேன் பண்பாக அறிவுள்ளோர்க்கு
யாதியாம் துரிசியிலே ஒருபலமேதூக்கு பண்பாகக் கெந்தியது பலமே முக்கால்
வாதியாம் சூடனது பலமரைதான்போடு மாசற்ற வீரமது பலமும்கால்தான்
மேதியாம் இதுமூன்றும் உமிநீர்விட்டுப் பிலக்கவரை நாற்சாமம் பின்புகேளே
575.
கேளுநீ மெழுகாகும் பதத்தில்வாங்கிக் கெடிபடவே துரிசியின் மேலப்பிப்போடு
வாளுநீ யுலர்ந்தபின்பு அதின்மேற்போட வகையாகச் சுண்ணாம்புக் கவசம்போடு
தாளுநீ யுலர்ந்தபின்பு சீலைசெய்து தணலிலே யூதிநன்றாய்க் கவம்வாங்கி
நீளுமே நீறியதைக் குகையில்வைத்து நேராக விட்டெரிக்க மணியுமாமே
576.
மணியெடுத்து அடித்தாக்கால் ரவியுமாகும் மாசற்ற வெள்ளிதனில் நாலுக்கொன்று
தனியாக வுருக்கிடவே மூன்றுமாற்று தப்பாது கைகண்டதொழிலுமாகும்
அணியாக இச்செம்பு களங்குசெய்ய அப்பனே செந்தூரரங் குருந்தான் செய்ய
கணியாக நாலாறுங் காணுங்காணும் கருத்திதுக் கருவென்றால் கெந்திதானே
577.
தானாகுந் துரிசியென்ற செந்தூரத்தை சாற்றுகிறேன் இதுவேகுரு முன்னேபாரு
தேனாகும் வெடியுப்புச் செயநீர்தன்னில் சிறந்துநின்ற துரிசியொரு பலந்தானெட்டு
கானாகும் செயநீரில் தோய்த்துத்தோய்த்துக் கடுரவியில் போட்டுவா தினந்தான் ஏழு
பானாகும் வெடியுப்பு மூன்றுபத்து பலந்தான் பண்பான சீனமதுமுப்பத்தஞ்சே
578.
அஞ்சவே கல்வத்தில் பொடியாய்ப் பண்ணி அப்பனே கழுதையிட ரத்தம்வார்த்துத்
துஞ்சவே அரைத்துநன்றாய் வில்லைபண்ணித் துடியான ரவிதனிலே யுலரப்போட்டு
மிஞ்சவே கல்வத்தில் போட்டுநீயும் மேலான சக்கரமாம் பானைவைத்து
கெஞ்சவே யுளுந்தரைத்துச் சீலைசெய்து கெடியான அடுப்பேற்றித் தீயைமூட்டே

579.
மூட்டவே லோடிப்புகையோடொக்க மூக்காலே சலம்விழுகும் வெள்ளைநீராய்
ஆட்டவே வெள்ளையைத்தான் அகலவைத்து அதன்பின்பு சிவந்தசலம் வருகுமக்காள்
பூட்டவே பீங்கானில் வாங்கிப் பேரான அரக்காலே குப்பிபண்ணி
நீட்டவே அதில்வாரு கரையாதப்பா நேரானலோகமென்றால் கரைந்துபோமே
580.
போமெனவே ரவியில்வைத்துத் தரிசியைநீவாங்கிப் பொடிபண்ணிக் கல்வத்தில்
திராவகத்தைவார்த்து
ஆவெனவே மறுசாமம் அரைத்தபின்பு அப்பனே மறுபீங்கான்தன்னில்வைத்து
காவெனவே நீர்குத்தி ரவியிற்போடு கலங்காதே மூன்றுநாள் ஆனபின்பு
தாமெனவே தணலுருகுவறுத்துப்போட்டுத் தயங்காதே பொடிபோலே மேருக்கேற்றே
581.
ஏற்றியே தீமூட்டு பனிரண்டுசாமம் இதமாகக்கடந்தபின்பு ஆறவிட்டு
மாற்றியே புடைத்தெடுத்து கல்வத்திலிட்டு வாகானதிராவகத்தில் அரைத்துமுன்போல்
தூற்றியே செரும்பீங்கான்தன்னில் வைத்துதுடிப்பான திராவகத்தைக் குத்துகுத்து
ஆற்றியே தணலுக்குள் வறுத்துப்போடு அதிதமாம் காசிபென்ற மேருக்குப்போடே
582.
போட்டுமே வானுகையின் மேலேவைத்துப் பொலிவாகத்தீபம்போல் தீயைப்போடு
ஆட்டுமே பனிரண்டுசாமமானால் அப்பனே ஆறவிட்டு எடுத்துப்பாரு
காட்டுமே ஐந்துதரம் இப்படியே பண்ணு கசடற்ற வருணனைப்போல் சிவந்துகாணும்
தீட்டுமே அம்மரத்தைக் கத்திகொண்டு செதுக்கியதோர் வாளொக்கும் துரிசியாட்டே
583.
ஆட்டான செந்தூரம் நவலோகத்தில் அணைத்திடவே பத்தரைதான் ஆயிரத்துக்கொன்று
மூட்டான சூதகத்தைக் கரண்டியிலேவிட்டு மூந்துநின்ற செந்தூரம் ஆரையிலைக்கட்டு
காட்டான சாரதனைப் பிழிந்தாயானால் கனகம்போல் திரண்டுருண்டு மணியுமாகும்
வாட்டான சூடன் அதிற்குள்ளே வாட்டி மருவநன்றாய் உருக்கிடவே ஜோதியாமே
584.
ஜோதியாம் குளிகைதனை வாயில்வைக்கச் சுக்கிலத்தம்பனையாகும் வசியமாகும்
வாதியாம் கைக்குளிது இருந்துதென்றால் வாதாடிசண்டையிட்டோர்
வணக்கமாவார்ஜாதியாம் குலங்களென்று தர்க்கம்யேகிச் சண்டையிட்டு மயிர்பிடித்து
சாகவேண்டாம்
பேதியாம் காயத்தை சித்திபண்ணி பேரான சித்தினிட மரபில்நில்லே
585.
சித்தரென்ற நாமமது எதினாலாச்சு சிவ வித்தைக் கட்டியதோர் தீர்மையாலே
மத்தனென்ற நாமமது எதினாலாச்சு பானமென்ற தூசிக்கா பருவத்தாலே
நித்தனென்ற நாமமது எதினாலாச்சு நிலைத்தாறு தலம்கண்ட நிலையினாலே
முத்தனென்ற நாமமது எதினாலாச்சு மூச்சற்ற ஞானவிடம்கண்ட ஞானியோர்க்கே
585.
ஞானிநானென்று சொல்லிவாய்பேசாமல் மாண்பர் நலமான அவ்வேடம் பூண்டுகொண்டு
யோனிதனக்காசை சாத்திரங்கள் சொல்லி உண்மையாபென்ற மந்திரங்கள் உபதேசித்து
பானியென்ற பணம்பரித்து பொய்கள்சொல்லி பார்த்துக்கொள்வேன் என்று நரகத்தில்புக்கி
சூணியென்ற நோய்வந்தால் அமைத்தபடியென்று சுழன்றலைவார் ஞானியல்ல
வேடத்தோரே

586.
வேடமாந் துரிசியென்ற செந்தூரம் பலந்தான் விளங்கியதோர் சுத்தித்த பூரமொன்று
காடமந்த தங்கமென்ற ரேக்குத்தானும் கடுகவே அரைப்பலந்தான் கூடவிட்டு
பாடமாம் வெற்றிலையின் சாற்றாலாட்டு பக்குவமாய்ப் பொடியாக்கி குப்பிக்கேற்றி
வாடமாம் வாலுகையின் மேலேவைத்து வளமாகபனிரண்டுசாமம் தீயெரியே
587.
தீயெரித்து ஆறவிட்டு எடுத்துப்பாரு சிவப்பென்றால் வெகுசிவப்பு அருணன்போலாம்
ஆயெரித்து நவலோகம் ஆயிரத்துக்கொன்று அணைத்திடவே பதினாறுமாற்றுமாகும்
பாயெரித்து பணவிடைதான் தேனிலுண்ணு பளபளக்கும் உடம்பெல்லாம் மண்டலத்தில்
மனம்வெறுத்து வறுமையுற்றால் என்னஞானம் வழங்கியதோர் சித்தியெல்லாம்
மண்ணாய்ப்போமே
588.
மண்ணாசை கொண்டல்லோ சிறிதுபேர்கள் மாயமாம் வாசனையில் இறந்துபோனார்
பெண்ணாசை கொண்டல்லோ சிறிதுபேர்கள் பொன்தோற்றுப் பேயராய் மாண்டுபோனார்
உண்ணாசை கொண்டல்லோ சிறிதுபேர்கள் உலுத்தராய்ப் பிச்சையெடுத்து உண்டிறந்தார்
கண்ணாசை பசுவுக்கு இருக்குமாம்போல் கலக்கமற்ற ஞானிக்கு வேடமென்னசொல்லே
589.
வேடமா இந்துப்பு வைப்புசொல்வேன் விளங்கியதோர் நாலடுப்பு வரிசையாய்க்கட்டி
பாடமாம் அடிகனத்த சட்டிவைத்து பருவமாய்க் கடல்நீரில் உப்புகாய்ச்சி
கோடமாமரத்தினந் தினமும்காய்ச்சிக் காய்ச்சிக் கொட்டியே வடிப்பாரமுள்ளபானை
காடமாய் நிறைத்திட்டு அடுப்பிலேற்றி காடாக்கினியாகவே தீயைமூட்டே
590.
மூட்டவே வெந்துருகிச் சலமாய்நிற்கும் முனையாக முப்பத்துக்கொன்று சீனம்
நீட்டவே வெடியுப்பு முப்பத்துக்கொன்று நேராகப்பொடிபண்ணி அதிலேபோடு
ஆட்டவே வெந்து ஒன்றாய் குழம்பாய்நிற்கும் ஆறவிட்டுப் பானையைதான் உடைத்துவாங்கி
காட்டவே வெளுப்பாக கட்டியாகும் கல்லுப்பில் செய்தாக்கால் சிவந்துபோமே
591.
சிவக்கின்ற இந்துப்பு வாதத்துக்காய்ச் செய்கின்ற பேர்களுக்கு கல்லுப்புச்சுளுகு
பவக்கின்ற லோகத்தோர் கல்லுப்பில் செய்வார் பரங்கியென்றால் கடல்நீரில் உப்புகாய்ச்சி
கவக்கின்ற வண்ணார் தன்னுப்புப்போலச் சதுரமாய்க் கட்டில்வைத்துச் செய்வாரையா
அவக்கின்ற கட்டியாய் வெளுப்புமெத்த ஆகையால் சுண்ணாம்புக்கு இதுதானென்றே
592.
நன்றெனவே கெந்தியுப்பு வைப்புகேளு நலமாகக்கடல்நீரில் உப்புகாய்ச்சி
கண்டனவே அடிகனத்த பானையிலேபோட்டு காய்ச்சினதோருப்புக்குப் பதினாறிலொன்று
தண்டனவே சரைகெந்தி பொடித்துப்போட்டு சாதகமாய் முப்பத்துக்கொன்றுநீலம்
பண்டெனவே வெடியுப்பும் அப்படியேயாகும் பாங்காகப் பொடித்ததெல்லாம் கூடப்போடே
593.
கூடவிட்டு அடுப்பேற்றி எரிநால்சாமம் கோடிகோடாக்கினியாம் தீயைப்போடு
ஆடவிட்டு உப்புருகி நிற்கும்போது அதிற்போடு மருந்தெல்லாம் பொடியாய்ப்பண்ணி
வாடவிட்டு நால்சாமம் எரித்தபின்பு மயங்காதே சீதளமாய் ஆறப்போடு
நாடவிக்கிப் பானையைத்தானுடைவாங்க நலமான வயிரம்போலுப்புமாமே

594.
உப்பான கெந்தியது திராவகசத்துக்காதி உத்தமனே சாரணைக்கு முதலியாகும்
தப்பான சொல்லில்லை கருமறைப்போயில்லை சத்தியமாய் நான்பார்த்தபடி
தான்சொன்னேன்
சப்பான அஞ்சுகொம்பில் மனந்தான்சென்று கலகத்தில் விழுகாதே கருத்தூன்றிப்பார்
அப்பான உப்புப்போல் நேர்மைபாரு அழும்பருடன் பேசாமல் இருக்கநன்றே
595.
நன்றெனவே குடோரியொன்று சொல்லக்கேளு நலமான வெடியுப்பு நாலாங்காய்ச்சல்
கன்றெனவே பலம்நாலு கல்வத்திலிட்டு கானிதுக்கு சமனாகப் பூநீருபோட்டு
வின்றெனவே வெள்ளையென்ற பாஷாணந்தான் வெங்காரம் பலம்நாலு பொறித்துப்போட்டு
தன்றெனவே தாளகமும் நாலுபலமே போட்டு சாதகமாய்ச் சூதமது பலமும்நாலே
596.
நாலோடு அரைபலந்தான் சாரம்போடு நலமாகக் கல்லுப்பு வறுத்துப்போடு
சாலோடு நாலுபலம் கூட்டிப்போடு தளையெல்லாம் எருக்கினுடபாலினாலே
காலோடு மறுசாமம் அரைத்து நன்றாய்க் கனமான ரவிதனிலே பொடியாய்ப்பண்ணி
மேலோடு காசிபென்ற மேருக்கேற்றி விரவியே அரைவாசிமட்டும்போடே
597.
போட்டுமே வானுகையில் மேலேவைத்து பொலிவாகத் தீமூட்டுகமலம்போல
வாட்டுமே பனிரண்டு சாமந்தானும் பதறாமல்போட்டுவா கமலத்தீயை
ஆட்டுமே ஆறவிட்டு எடுத்துப்பாரு அரகரா வயிரம்போல் பதங்கித்துநிற்கும்
காட்டுமே சத்துதனில் கரைநீராகக் கண்விட்டு ஈயம்போல் இருக்குந்தானே
598.
தானான சூடனது வைப்புகேளு தனித்துநின்ற வாழையுடகிழங்கு தண்ணீர்
தேனென்ற படிபத்து அளந்துகொண்டு சிறப்பான செம்பினுட பாண்டத்தில்விட்டு
வேனென்ற வெடியுப்பு நாலுபத்து பலந்தான் வெகுளாமல் பொடிபண்ணி கூடப்போட்டு
மானென்ற அடுப்பேற்றி யெறிநேர்பாக வற்றியெல்லாம் குழம்புபோல வருகும்பாரே
599.
வருதல்கண்டு கருவாயின் பட்டைதன்னை வகையாகத் தூள்பண்ணி தயிலம்வாங்கி
திருகல்கண்டு படிதானும் கூடவிட்டு சிறப்பான புட்டான பதத்திற்காய்ச்சி
கருதல்கண்டு இறக்கியே ஆறவிட்டுக் கசகாமல் உளிகொண்டு வெட்டிவாங்கி
அருகல்கண்டு பரணிதனில் அடைத்துப்போடு ஆச்சரியம் சூடனென்ற பேருமாச்சே
600.
ஆச்சிந்த சூடனைத்தான் பொடியாய்ப்பண்ணி அகண்டசெம்புபானைதனில்
கால்வாசிபோட்டு
பாச்சிந்த செம்பினுட சூடத்துநீரை பக்குவமாய் மேல்வைத்துச் சீலைசுற்றி
காச்சிந்த அடுப்பேற்றிக் கமலம்போல கையொருக்கத் தண்ணீரை பதத்தைப்பார்த்து
கீச்சிந்த ஆவிவிடுத்துப் பார்க்க கிண்ணியென்ற கற்பூரமாகும்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

601.
பாரப்பா கிண்ணியென்ற கற்பூரத்தில் பக்குவமாய்க் கட்டினதோர் சரக்கையெல்லாம்
வாரப்பா பரிசுற்றி வாட்டென்றதெல்லாம் மைந்தனே இதினுடைய தீயில்வாட்டு
நேரப்பா புகையடங்கி பரியுள்ளவாங்கி நேர்ப்பாகச் செந்தூரமாகும்பாரு
காரப்பா விளக்குதான் கற்பூரவிளக்கு கருகாமல் சிவக்குமிந்த தீபந்தானே
602.
தானென்ற அயமுருக்கு வித்தைகேளு சாதகமயெலியாலம்பால் ரண்டுசேரில்
கானென்ற கெந்தகத்தைப் பொடியாய்ப்பண்ணி கனமான நாலுபலம் கூடப்போட்டு
லவனென்ற வெண்காரம் பலமும்ரண்டு மெலிவான குடோரி கால்பலமும்போடு
ஊனென்ற செவ்வல்லிக் கிழங்குதானும் உரலிலிட்டு இடித்துச்சார் சேரவாரே
603.
வார்த்துடனே யெள்ளெண்ணை ரெண்டுசேரு வாகாக வுதுவெல்லாம் அயச்சட்டிலிட்டு
போர்த்துடனே அடுப்பேற்றி யெறித்துமெள்ளப் பொங்காமல் தயிலமென்ற பதத்தில்வாங்கு
சேர்த்துடனே யரப்பொடிதான் பலமும்நாலு திறமான காந்தத்தால் எடுத்துக்கொண்டு
ஏர்த்துடனே பீங்கானில் பொடியைப்போட்டு இதமாகத் தயிலத்தில் பிசறிவையே
604.
வைத்துமே மூன்றுநாள் ஆனபின்பு வஜ்ஜிரமாம் குகைதன்னில் அடைத்துமூடி
மொய்த்துமே சரவுலையில் வைத்துவூத பேரான அயந்தானும் உருகியாடும்
நைத்துமே பொடியாக்கித் தயிலத்தில் பிசறிநலமாக முன்போலவுருக்கித்தீரு
தைத்துமே தாமுருக்கித்தீர்ந்தால் கனமான அயந்தானும் நாகந்தானே
605.
நாகமாம் அயந்தானும் சிவந்திருக்கும் நண்பாக இடைக்கிடைதான் தங்கத்திலீய்ந்து
பாகமாயுருகையிலே நாகமீயப் பதையாமல் நாகமங்கே கட்டிப்போகும்
சாகமாம் கல்வத்தில் இதனையிட்டு தனைப்பொடித்து நாகயிடைச் சூதங்கட்டி
ஆகமாம் சூதத்தில் ரெட்டிகெந்தி அரைத்துமே மல்லிகையின் சாற்றாலாட்டே
606.
ஆட்டுவது நாகரசமானபின்பு அப்பனே ரவியில்வைத்து பொடியாய்ப்பண்ணி
பூட்டுவது காசிபென்ற மேருக்கேற்றி பேரானவானுகையில் மேலேவைத்துக்
காட்டுவாய் பனிரண்டுசாமம் தீயைக்கமலம்போல் எறியிட்டுக் கலரவாங்கி
ஊட்டுவது நவலோகம் நூற்றுக்கொன்று உட்புகுந்து பத்தரைதான் தப்பாவாறே
607.
வாறுகேள் செந்தூரம் குன்றியுண்ணு மண்டலத்தில் நரைதிரைகளெல்லாம் மாறும்
கூறுகேள் தேகமது கருங்கல்லாகும் குத்தினால் மலைகளெல்லாம் பொடியாய்ப்போகும்
தேறுகேள் தேகமது வுவர்ந்தகாலம் சென்றாலும் பதினாறுவயது போலாகும்
வேறுகேள் வாசியெல்லாம் உள்ளெநிற்கும் வெளியோடே மனங்கப்பண்ணும்பாரே
608.
பண்ணவே காந்தத்தின் சத்துகேளு பருக்கையாய்ப்பொடித்து அயச்சட்டியிட்டு
குண்ணவே கொள்ளிலையின் சாறுவாங்கிக் குன்றாதே நால்சாமம் சுறுக்குப்போடு
விண்ணவே வெள்ளாட்டு உதிரம்வார்த்து விளங்கவே அதின்தோலில் வைத்துகட்டி
கண்ணவே குழிவெட்டி குப்பைக்குள்வைத்து கலங்காதே இருபதுநாள் மூடிப்போடே

609.
போட்டபின்பு எடுத்துஅதைக் கல்வத்தாட்டி புகழான கொள்ளிலையின் சாற்றினாலே
நீட்டபின்பு கல்வத்தில் சாறுவிட்டு நினைவாக அதற்குள்ளே காந்தம்வைத்து
வாட்டபின்பு மேல்மூடிச்சீலைசெய்து வலியபுடம் போட்டெடுத்துவைத்துக்கொண்டு
நாட்டபின்பு நல்லெண்ணை படிதானொன்று நலமான குன்றிமணி படியரைதான்போடே
610.
போட்டதனைக்குள்சாற்றில் ஊறவைத்து புகழாக ஊறியபின் கல்வத்தாட்டி
நீட்டதனை மெழுகதுபோல் அரைத்துவாங்கி நினைவாக நல்லெண்ணெய்தனில்போட்டு
ஆட்டதனை யெலியாலம்பால் சேரைவிட்டு அழகான கொள்ளிலைசாறு சேரைவிட்டு
கேட்டபின்பு கெந்தகந்தான் நாலுபலம் போட்டு கெடியான வெண்காரம் ரண்டுபலம்போடே
611.
போட்டப்பா குடோரியொரு பலமுங்கால்தான் பொடித்தெல்லாம் கொள்ளிலையின் சாற்றாலாட்டி
நாட்டப்பா நல்லெண்ணெய்தன்னிற்போட்டு நலமாக அடுப்பேற்றி யெறிநேராக
கூட்டப்பா குழம்பாகி இறக்கிவைத்து கொடியதொரு காந்தத்தில் பிசறிகொண்டு
மூட்டப்பா மூன்றுநாள் ஆனபின்பு மூச்சைக்கே எடுத்திட்டு உருக்கிடாயே
612.
உருக்கவே வெந்துருகிக் கரடுமாகும் உத்தமனே உடைத்தெடுத்துப் பொடியாய்ப்பண்ணி
தருக்கவே முன்குழம்பிற் பிசறிவைத்துச் சாதகமாய் முன்போலே உருக்கித்தீரு
பருக்கவே இப்படிதான் ஏழுமூது பண்பான காந்தமது சத்தேயாகும்
இருக்கவே கற்பாந்த காலமென்றால் என்மகனே மெழுகுகட்டி கிண்ணிவாரே
613.
வார்த்திந்த கிண்ணியிலே பாணம்பண்ணி வகைவகையாய் கற்பமெல்லாம் அதிலேயுண்ணு
போர்த்திந்த கிண்ணியிலே சூதம்வார்த்து புகழான கருவூமத்தம் சாறுவிட்டு
பேர்த்திந்த வானுகையின் மேலேவைத்து மருபமாய்த் தீயெரிக்க வுண்டையாகும்
பார்த்திதனை வழித்தெடுத்து கழஞ்சிநிறையாக பக்குவமாய் உண்டைபண்ணித் தமரும்போடே
614.
தமரிட்டு உண்டைபண்ணி அதிலேபோட்டு சாதகமாய் மூன்றுதினம் கழிந்தபின்பு
அமரிட்ட செம்பட்டில் கோர்த்துக்கொண்டு ஆதியாம் பராபரியைபூசைபண்ணி
கமரிட்ட வஸ்துசுத்தி அர்ச்சனையேசெய்து காரணமாம் சாம்பவி விமோசனமேபண்ணி
குமரிட்டு ஆதாரம் நிராதாரம் பார்த்து கொள்கியதோர் சபைதன்னில் மனதையுண்ணே
615.
உன்னிய பிரசத்தம் கேளாப்பக்கம் உவந்திருந்து நிஷ்டையிலே ஜபமேசெய்து
கன்னிய அஞ்செழுத்து மூன்றெழுத்தும் ஓதி காரணமாம் குருசொல்ல வுறுதிகேட்டு
மன்னியே மதியில்நின்று அமுதத்தையுண்ண பரிதிகண்ட பனிபோல பாவம்நீங்கி
மன்னியே சிலம்பொலி நாதம்கேட்டு மகிழ்ச்சியாய் கற்பமதை உண்டுதேறே
616.
தேறியே காந்தசத்து பலத்தைவாங்கிச் சிவப்பாகத் தங்கத்தை இடைக்கிடையேகூட்டி
மாறவே ரெண்டுமொன்றாய் புகும்போது மைந்தனே நாகமொரு பலத்தைப்போடு
ஆறவே கல்வத்தில் இதனைக்கொட்டி அதட்டியே பொடிபண்ணி சூதம்சேர்த்து
காரவே ரெண்டுபலம் கெந்தியிட்டுக் காரியமாய் பொற்றலையின் சாற்றாலாட்டே

617.
ஆட்டியே அறுசாமம் ரவியில்வைத்து அப்பனே பொடிபண்ணி குப்பிக்கேற்றி
நீட்டியே வானுகையின் மேலேவைத்து நினைவாகத்தீ போட்டு பனிரண்டுசாமம்
பூட்டியே செந்தூரப்பதத்தைப் பாரு புகழாகச் சலாகைநுனி கருப்புகாணும்
வாட்டியே ஆறவிட்டு இறக்கிக்கொட்டி மைந்தனே தங்கமென்ற சிமினில்வையே
618.
வைக்கவே நவலோகம் நூற்றுக்கொன்று மாட்டிடவே பனிரண்டு மாற்றுமாகும்
மெய்க்கவே பணவிடைதான் தேனிலுண்ண மேனியெல்லாம் தங்கமாகும்பாரு
நைக்கவே நரைதிரை எல்லாம்மாறும் நமனென்ற சொல்லுமில்லை கற்பகோடி
சைக்கவே புளியுப்பு இரண்டும்விட்டு கன்னியின் மேலாசைவிட்டு உண்ணு உண்டே
619.
உண்ணவே கற்பத்துக்கு உறுதிகேளு உப்பாகா புளியாகா பெண்ணுமாகா
கண்ணவே துவர்ப்பாகா மோருமாகா கசிந்தயெள்ளு நல்லெண்ணெய் சுண்ணாம்பாகா
விண்ணவே நித்திரையின் சோம்பலாகா வேறான மாங்கிஷங்கள் மச்சமாகா
பண்ணவே கடுகுள்ளி காயமாகா பலபலவாம் சிந்தையெல்லாம் அறுத்துதள்ளே
620.
தள்ளியே உண்ணுகிற பத்தியத்தைக்கேளு சார்பான நெய்யாகும் பாலுமாகும்
அள்ளியே சிறுபயறு முருங்கையாகும் அப்பனே வெள்ளாட்டுக் கரியுமாகும்
துள்ளியே தூதுவளை யிலைகாயாகும் சுண்டெலியாம் கவுதாரி காடையாகும்
பள்ளியே பழமாகும் மழுவெல்லாம் தேனாகும் பானமாமே
621.
ஆமப்பா சிறுகீரை அரைக்கீரையாகும் அதிகமாம் புளியாரை நல்லாரையாகும்
போமப்பா பொன்னி நல்லாங்கன்னியாகும் புளிப்பான நெல்லிக்காய் வூற்காயாகும்
தேமப்பா வழுதலங்காய் பீர்க்கங்காயாகும் சிறப்பான மூசலாகும் ஊர்க்குருவியாகும்
வாமப்பா மரையாகும் மானுமாகும் வகையாக இப்படிதான் பத்தியமாயுண்ணே
622.
உண்ணுறது ஒருசேரை பரிசியப்பா உத்தமனே உத்தமனே ஒருபொழுது  வெந்நீர்கொள்ளு
பண்ணுறதோர் மருந்துகளில் காந்திகொண்டால் பசுவின்பால் ராக்காலமொருசேர்கொள்ளு
விண்ணுறது உள்ளமுடம் பெல்லாம்பாரு வேதாந்தவாலையைத்தான் நித்தம்பூசி
அண்ணுறது குருபதத்தை அடுத்துநித்தம் அடுக்கடுக்காய் உண்ணுகிற கற்பங்கேளே
623.
உண்ணவே வயதங்கே இருபதாகி உத்தமனே இருபதுநாள் கடுக்காய்க்கொள்ளு
கண்ணவே வயதங்கில் முப்பதாகில் கடிதாக முப்பதுநாள் கொள்ளுகொள்ளு
மண்ணவே வயதங்கில் நாற்பதாகில் பரிவாக கடுக்காயை நாற்பதுநாள் கொள்ளு
ரண்ணவே வயதங்கே அன்பதாகில் நலமாகப் பதினைந்து நாள்தான்கொள்ளே
624.
கொள்ளவே வயதங்கே அறுபதாகில் குறையாதே கடுக்காயைப் பத்துநாள்கொள்ளு
அள்ளவே யறுபதின்மேல் வயதானால் ஆச்சரியங் காயசித்தி அகாவாகா
விள்ளவே கடுக்காயைப் பொடியாய்ப்பண்ணி மெல்லிதாய்ச் சீலையிலே பறிந்துகொண்டு
துள்ளவே அமுரிதனைமுறித்துக்கொண்டு சுகமாகவெருகடித்தூள் குழம்பில்கொள்ளே

625.
கொள்ளுதற்கு அமுரிதனை முறிக்கக்கேளு கொடூரமாங் காந்தமென்ற பாத்திரத்தில்
விள்ளுதற்கு முன்னீராம் அமுரிதள்ளி விளங்கவே கொள்ளுமட்டும் பின்னீர்வாங்கித்
துள்ளுதற்கு தேத்தினுட வித்துதன்னை துடியாக இதிற்கலக்கி வைத்தும்பின்னும்
அள்ளுதற்கு தெளிவிருந்து தூளைப்போட்டு அங்கனவே வாசியோடிழுத்துவாங்கே
626.
வாங்கியே தினந்தோறும் விடியற்காலைமாலையிலே கியாழமொன்று வைக்கக்கேளு
பாங்கியே மிளகதுதான் இருபத்தஞ்சு பரிவான அருகம்வேர் பிடிதானொன்று
தேங்கியே பிடித்துநன்றாய் சட்டியிலேபோட்டு திறமாக படியொன்று தண்ணீர்விட்டு
ஆங்கியே ஆழாக்காய் காய்ச்சிக்கொண்டு ஆலெண்ணப் பாக்களவு போட்டருந்தே
627.
அருந்தியேகாலமே கடுக்காய்கொள்ளு அப்பனே மாலையிலே கியாழங்கொள்ளு
பொருந்தியே உடலுக்குத் தாகமில்லை புளியுப்பு எண்ணெயெல்லாம் தள்ளுதள்ளு
அருந்தியே மண்டலந்தான் கொள்ளும்போது அப்பனேயொருமுறைதான் சட்டைநீக்கும்
மொருந்தியே இக்கற்பம் கொண்டாயானால் புண்ணியனே திரேகமது இறுகும்பாரே
628.
இறுகுமே செங்கடுக்காய் மிக்கநன்று இதமாக கிடைக்காட்டி பொற்கடுக்காய்நன்று
அறுகுமே ஆணியாவணிக்குமப்பா அழகான வெல்லத்தினோடேகொள்ளு
தருகுமே சித்திரைவைகாசிக்கப்பா சாதகமாய் சுக்கினுட கியாழத்திற்கொள்ளு
மறுகுமே புரட்டாசியாடிக்கப்பா மாசற்ற குறிஞ்சித்தேன் தன்னிற்கொள்ளு
629.
கொள்ளவே ஐப்பசிக்கும் கார்த்திகைக்குமப்பா குமறியாஞ்சார்தனிலே வைத்துக்கொள்ளு
விள்ளவே காயசித்தி யோகசித்தி வேதாந்தமனோன்மணியாம் ஞானசித்தி
தள்ளவே அஷ்டமாம் யோகசித்தி தாரணியில் மானிடர்கள் கெவுனசித்தி
மெள்ளவே சதாகாலம் இந்தமார்க்கம் மேதினியில் கசடறவே வைத்துப்போற்றே
630.
வைத்துமே தைமார்கழி மாசிக்கப்பா வாகான கற்கண்டினோடேயுண்ணு
பைத்துமே பங்குனிக்கு நெய்யிற்கொள்ளு பனிரெண்டு மாதத்திற்பருவம் சொன்னேன்
நைத்துமே இப்படிதான் பருவமாக நானுண்டபடிசொன்னேன் நீயுமுண்ணு
பொய்த்துமே போகாமல் பூசைபண்ணு போக்கோடே வாசியைத்தான் இழுத்துவாங்கே
631.
வாங்கியே சதுரக்கள்ளி காயேபத்து மைந்தனே குமரிச்சோற்காசுரண்டு
தேங்கியே அமுரியுடன் கலந்துகொள்ள சிதைந்துநின்ற ஆமமெல்லாம் தள்ளிப்போடு
பாங்கியே கைம்முறையாய் செய்தாயானால் பலிக்குமே வயித்தியவாதயோகம்
ஏங்கியே சடத்திலுள்ள விழநீர்வற்றும் எலும்பில்நின்ற சுண்ணாம்பு வேகம்போமே
632.
வேகம்போம் இருபதுநாள் காலமேகொள்ளு மெலிவான மாலையிலே கியாழங்கொள்ளு
தாகம்போந் தாளிசப்பத்திரியுஞ் சுக்குந்தனிந்ததொரு சீரகமுமாஞ்சியேலம்
ஆகம்போய் வராகனிடை யொவ்வொன்றுக்கு அதட்டியே சட்டியிலே பொடித்துக்காய்ச்சி
காகம்போம் ஆழாக்கு மாலையிலேகொள்ளு நமக்குநமனாவாய் நன்றாய்ப்பாரே

633.
பாரப்பா இதுகடந்தபின்பு நீதான் பரிவாக அவ்வஞ்சாய் மிளகையேற்றி
சேரப்பா அமுரியிலே காலமேகொள்ளு சிறப்பான நாற்பதுநாள் கொள்ளுகொள்ளு
காரப்பா இருபதுநாளேற்றியுண்ணு கைம்முறையாய் நூறுமட்டுமானபின்பு
தூரப்பா அவ்வஞ்சாய்க் குறைத்து எண்ணு சொல்முறையாய் மாலையிலே பொடிநீயுண்ணே
634.
பொடியாவதேதென்றால் சொல்லக்கேளு பேரான பொற்கொன்றைப் பூவினோடு
கொடியான மல்லிகையின் பூவினோடு கொக்கிறகு மந்தாரை வெள்ளைப்பூவும்
அடியாக நிழலுலர்த்தாய் உலர்த்திக்கொண்டு அப்பனே பொடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
கொடியான தேனதனில் குழைத்துயுண்ணு நேர்பாகமாலையிலே மண்டலந்தானுண்ணே
635.
மண்டலந்தானுண்டபின்பு சொல்லக்கேளு வாகான தூதுவளை இலையினோடு
விண்டலந்தான் தக்கோலஞ்சாதிக்காயு மேலான வாலுழுவைவித்தினோடு
குண்டலந்தான் கொடிவேலி பொற்கொன்றைப்பூவு கூரான நிலப்பனையின் கிழங்குகூட்டி
முண்டலந்தான்பொடிசெய்து வைத்துக்கொண்டு மூக்கழஞ்சு முட்பன்றி நெய்யில்கொள்ளே
636.
கொள்ளவே வதத்தைக் கறிப்போடு கொடிதான பித்தமெல்லாம் முறிந்துபோகும்
கள்ளவே சிரசில்நிற்கும் கற்பத்தை சாடுஞ்சங்கிலைபோல் கோழையறுந்தமர்ந்திருக்கும்
விள்ளவே மதிதன்னில் அமுதஞ்சேர்க்கும் மெய்நிறைந்து ஆடியெல்லாம் இறுகிக்கொள்ளும்
துள்ளவே இந்திரியச் சேறுபொங்கும் துடியாதே காமநோய்க் கொல்லுந்தானே
637.
கொல்லுகிற காமத்தை மதியிலேற்று குறிபார்த்து தளங்களெல்லாம் கூர்ந்துபாரு
வொல்லுகிற மனக்குரங்கு அஞ்சகொப்பிற்றாண்ட விடுகாதே யோகமென்ற வாளால்வீசு
மல்லுகின்ற யோகத்தை சதாநித்தம் பகரு மதியினிற்கும் மூதத்தைச்சிந்தியுண்ணு
அல்லுகிற ஆத்தாளை நித்தம்பூசி பரிவில்நின்ற குருபதத்தை யடுத்துக்கேளே
638.
கேளப்பா கரிசாலை குப்பைமேனி கொடியான கரந்தையொடு வல்லாரைநீலி
வாளப்பா பொற்றலையின் சமூகமோடு வகையாக நிழலுலர்த்த உலர்த்திக்கொண்டு
தாளப்பா இடித்துநன்றாய் சூரணமேசெய்து சாதகமாய் வெகுகடிதான தேனிலுண்ணு
கேளப்பா கட்டியதோர் வேசம்போல கெணத்திலே காயசித்தி இருவேளையுண்ணே
639.
உண்ணப்பா மண்டலந்தான் நோய்மூன்றுபோம் உத்தமனே உதிரத்தில் கிருமிபோகும்
கண்ணப்பா பவளம்போல் சிவந்திருக்கும் காயமெல்லாம் சம்பனத்தின் வாசம்வீசும்
விண்ணப்பா அந்தரத்து மீன்களெல்லாம் வெகுளாமல் பகல்காணத் தோற்றுவிற்கும்
வண்ணப்பா பாதாள நிதிகள் தோற்றும் வாய்திறந்த தளமாறும் வெளியாய்ப்போமே
640.
போமப்பா இதுகடந்த பின்புநீதான் புகழ்பெறவே நூறாண்டு வேம்பைப்பார்த்து
ஆமப்பா பட்டையைத்தான் வெட்டிவந்து அப்பனே நிழலுலத்தாய் உலர்த்திபின்பு
காமப்பா இடித்து நன்றாய்ச்சூரணமே கரிசாலை மல்லிகையின் சாறுவார்த்தை
தேமப்பா ஏழுதரம் பாவனையேசெய்து சிறப்பான வொருகடித்தூள் கொண்டிடாயே

641.
கொண்டிடவே அனுபான வகையைக்கேளு குறிஞ்சித்தேன் தனிற்குழைத்து
நாற்பதுநாள்கொள்ளு
விண்டிடவே அந்திசந்தி நினைவாய்க்கொள்ளு மெய்யெல்லாம் கருங்காலின் வயிரமாகும்
கண்டிடவே நரைதிரைகளெல்லாம்போகும் சுக்கிலந்தான் மேலிறுகிக்கீழோடாது
கண்டிடவே ஆறுதளம் வெளியாய்க்காணும் காலனுமே அஞ்சிடுவான் காணுகாணே
642.
காணவே மலைதோறும் சர்க்கரைவேம்புண்டு காய்தின்றால் கற்கண்டுபோலேதோன்றும்
பூணவே இலைதின்றால் மண்டலத்தில்சித்தி புகழான காய்தின்றால் பட்சத்தில்சித்தி
தோணவே பூதின்றால் வாதத்தில்சித்தி தொகுத்ததொகை சித்தருக்கு இதுவேயாகும்
ஆணவே கீழ்வழிபார்க்குமப்பா ஆச்சரியம் இதுதேடி அறிந்துகொள்ளே
643.
கொள்ளவே சிவப்பான கற்றாழைதானும் கொண்டுவர மண்டலந்தான் அந்திசந்தி
விள்ளவே தேகமது கஸ்தூரிவீசும் வேர்வைதான் தேகத்தில் கசியாதப்பா
துள்ளவே நரைதிரைகளெல்லாம்மாறும் சோம்பலென்ற நித்திரையும் கொட்டாவியில்லை
கள்ளவே காமமிது உடம்பிலூறும் கண்களுமே செவ்வாளிப் பூப்போலாமே
644.
ஆமிந்தச் சோறெடுத்து சூதத்துக்கு அளவிலேவைத்து மெல்லசுருக்குப்போட
வாமிந்த சூதமது மணிபோலாமே வகைவகையாய் பாஷாணம்கட்டிப்போகும்
சேமிந்தத் தங்கத்தை உருக்கிசாய்க்க ஷெணத்திலே செம்பாகும் தூரவோடும்
நாமிந்தப்படி பார்த்தோம் காரீயம் செம்பாம் நாதாக்கள் இப்படியே பார்த்திட்டாரே
645.
பார்த்திட்ட மலைகளிலே மூலிகையைக்கேளு பரிவான கருநெல்லி கருத்தநொச்சி
பூர்த்திட்ட புறச்சோதி பெரியசோதி புகழ்பெரிய வெள்ளைப்பூ துத்தியோடு
ஏர்த்திட்ட கல்லுக்குள் கோசங்கம்பாளளிதானரேமவிருட்சம் எருமைவிருட்சம்
கார்த்திட்ட கருநீலி கணங்கல் விருட்சம் கறுத்திருக்கும் கொடுவேலி செந்திராமே
646.
செந்திரால் வெண்புரசு வெள்ளைக்கண்டா செங்கள்ளி சேம்பல்லிகுண்டலமாம்பாலை
கந்திராம் கசப்பான பசலையொடு கடியதொரு பொற்சீந்தி சாய்கைவேதி
அந்திராய்க் கருவீரு சிவதத்தில்லை அதிவெள்ளைத்தூதுவளை கறுத்தவாளை
கந்திராய் கருப்பான கரிசாலை கருத்தமத்தை வெண்கரந்தைக் கரையுமாமே
647.
ஆமப்பா மூவிலைக்குறுந்தினோடு ஆச்சரியங்கருந்தும்பை வெள்ளைக்காந்தி
ஓமப்பா வெண்டான ஆதண்டையோடு உத்தமனே முப்பத்திரண்டுமூலி
வாமப்பா மலைதோறும் உண்டுவுண்டு மகத்தான மூலிகைதான் பரீசவேதை
காமப்பா ஒப்பின்றி சூதங்கட்டும் கலந்துநின்ற பாஷாணம் சாகே
648.
சாகவே சரக்கான அறுபத்திநாலும் தனித்தனியே வேதையுமாம் சகஸ்திரத்துக்கோடும்
சாகவே உபசரங்கள் நூற்றிரணடுபத்தஞ்சும் அனைபோல்சத்தாக பிறக்கும்பாரு
சாகவே ஷணமுதல் இருபத்தஞ்சும் தனித்தனியே கட்டாகும் சரக்கைக்கொல்லும்
சாகவே பண்ணாமல் இருந்தினிக்கும் சங்கற்பவிருப்பமென்ற வீட்டைப்போக்கே

649.
போக்கான கிளிமூக்குமாவொன்றுண்டு புகழான கிளிபோலே காயும்காய்க்கும்
வாக்கான இலையதுவும் அரசிலைபோல்காணும் மைந்தனே இதனுடைய பழத்தையுண்ணு
நோக்கான கெவுனவழி சறுக்காபோடும் நொடியிலே காயசித்தி கிடைக்குமப்பா
போக்கான பூப்பூத்த பத்துநாள் பழமாம் புண்ணியராம் சித்தருக்கு எய்தும்வாறே
650.
வாறுகேள் இடத்தோல்வேர் பட்டைவாங்கி மருவநன்றாய் நிழலுலர்த்திச் சூரணமேசெய்ய
பேறுகேள் பலம்நாலு நிறுத்திக்கொண்டு பேச்சரிய சூதமதுபலந்தான் நாலு
தாறுகேள் கல்வத்தில் இதனைப்போட்டு சாதகமாய் மல்லிகையின் சாறுவிட்டு
தேறுகேள் எண்சாமம் அரைப்புமைபோல் தேன்வார்த்து வுண்டைசெய்து
வைத்துக்கொள்ளே
651.
வைத்ததொரு மருந்தெடுத்து அந்திசந்தி வகையாக மண்டலந்தான் உண்டாயானால்
கைத்ததொரு பித்தமது கபத்தைச்சாடும் கசடான ஆறுதளம் திறந்துபோகும்
வெய்த்ததொரு வாதமெண்பதுவும் போகும் மேலான சிலேத்துமமும் அகன்றுபோகும்
வித்ததொரு சரசோதி நிர்த்தஞ்செய்வாள் வினைபோல் ஒளியாகும் வாக்குத்தானே
652.
தானென்ற பொற்சீந்தியானால்நன்று சாதகமாய் சிகப்புநன்று கிடையாவிட்டால்
பானென்ற நற்சீந்தி மேல்தோலைப்போக்கி மருந்தண்டாய்க் கொண்டுவந்து
கிழித்துப்போட்டு
கோனென்ற நிழலுலர்த்தி சூரணமேசெய்து கூறானகற்கண்டு சமபாகஞ்சேர்த்து
வேனென்ற ஒருகடித்தூள் அந்திசந்தி வெகுளாதே மண்டலமும் உண்டுபாரே
653.
பாரப்பா மேகமென்ற தெல்லாம்போகும் பரிவாக வாதபித்தம் பக்குவமாகும்
சேரப்பா கபாலத்தின் வெட்டைபோகும் செகமறிய அட்டசர வேகம்போகும்
காரப்பா தாதுமூற்றும் தழைக்குந்திரேகம் சதிரான ஆறுதளம் வன்னிமீதும்
பேரப்பா சிந்திக்கு சாவேயில்லை பேரின்ப சாஸ்திரத்தைப் பேணிப்பாரே
654.
பேணிப்பார் நெல்லிக்காய் முக்கல்வாங்கி பேரானபால்விட்டவித்துக்கொண்டு
ஊணிப்பா நிழலுலர்த்திச் சூரணமேசெய்து உத்தமனே சுத்தித்த கெந்திசரிசேர்த்து
பேணிப்பார் தேனதனிற் குழைத்துவுண்ணு பேராக மண்டலந்தான் உண்டாயானால்
ஆணிப்பார் முன்னெடுத்த தேகம்போக்கி ஆச்சரியம் சிவசக்திதேகமாச்சே
655.
சத்தியது ஏதென்றால் கெந்தமுமாச்சு தனித்துநின்ற சிவந்தானும் சூதமாச்சு
புத்தியது ஏதென்றால் மூலமாச்சு புகழான ஆறுதளம் உன்னிப்பாரு
பத்திபறு வயதென்றால் அறிவுட்புக்கி பராபரத்தில் இச்சதுவேபத்திபத்தி
முத்தியது ஏதென்றால் மவுனந்தாண்ட மோசமில்லை சைதன்னிய முத்தியாமே
656.
ஆமப்பா இதுகடந்த சிவனார்வேம்பை அப்பனே பிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
தேமப்பா வானுமுவைச் சரியாய்க்கூட்டி சிறப்பாகக் கரைந்தைச்சார் வார்த்தரைத்து
தாமப்பா வில்லைப்பண்ணி நிழலுலர்த்திச் சாதகமாய்ப் பூம்புடத்தில் தயிலம்வாங்கி
வாமப்பா மூக்கழஞ்சு அந்திசந்தி மறவாதே மண்டலமும் கொண்டிடாயே

657.
கொண்டிடவே குட்டமெல்லாம் போகும்பாரு கூரானசரீரத்தில் வாதம்போகும்
கண்டிடவே விஷங்களெல்லாம் அகன்றுபோகும் மேனிவுயர் மாந்துளிர் நிறமுமாகும்
கண்டிடவே கன்னியர்கள் வசமதாவார் காரியமாய் ஐம்புலனை படுத்துச்சாடும்
தூன்றிடவே ஆசையற்றால் காயசித்தியோகும் தூசித்துக் கன்னியரைத் தொடலாகாதே
658.
ஆகவே அண்டத்தின் கற்பம்கேளு அப்பனே கருங்கோழி சாவலுடன்போடு
வாகவே வளர்த்ததின் முட்டையெல்லாம்வாங்கி வகையாக கல்லுப்புக்குள்ளேவைத்து
ஏகவே இருபதுநாள் கழித்தபின்பு எடுத்தல்லோ அயச்சட்டிக்குள்ளேவைத்து
போகவே கெருடனுட கிழங்குசார்விட்டு புகழாக அடுப்பேற்றி எரித்திடாயே
659.
எரித்திடவே சாரெல்லாம் சுண்டிப்பாரு மிதமாக ஆறவிட்டு வைத்துக்கொண்டு
பரித்திடவே மேலோடு அண்டமொன்று வாங்கி பதறாமல் ரண்டாக்கி பச்சந்திக்கொள்ளு
தரித்திடவே தினமொன்று மேலோடுவாங்கி சாதகமாய்த் தினந்தோறும் ஒவ்வொன்றாக
மரித்திடவே எரித்தசலம் கற்பாந்தகாலம் வைத்திருக்க வேணுமென்றால் மண்கலந்தான்கொள்ளே
660.
கொள்ளவே காயமிது சிவந்துமின்னும் குறிப்பான கண்கள்ரண்டு செய்தஞ்சம்போலாம்
விள்ளவே கைகால்ரண்டும் கற்றூணாகும் மெலிவான நரம்பெல்லாம் இருகிக்கொள்ளும்
துள்ளவே அனுபவித்தால் விந்துவீழாச் சுக்கிலந்தான் இறுகியங்கே மேலேயோடும்
தள்ளவே சட்டையொன்று கக்கிப்போகும் சமர்த்துடனே இவ்வளவும் சாதித்தேறே
661.
சாதித்து தலைமுழுக வரிசைகேளு சாதகமாய்ப் பட்சத்துக் கொருகாலப்பா
பேதித்து மிளகோடு மஞ்சள்நெல்லி பேரான வெப்பரிசி கடுக்காய்தானும்
வாதித்து சமபாகம் நிறுத்துக்கொண்டு வளமான ஆவின்பால் விட்டுஆட்டி
காதித்த தலைதனிலே தேய்த்துக்கொண்டு கனமான வெந்நீரில் முழுகிடாயே
662.
முழுகிடவே கபாலமது கெட்டியாகும் மூச்சான வாசியது மேற்கொள்ளாது
எழுகிடவே ரோமமது தும்பிபோலாகும் நனைந்தாலும் குளியாது வன்னிமீறும்
அழுதிடவே கண்ணீர் தண்ணீர்விழாது அந்தரத்தின் மீனெல்லாம் பகலில்தோன்றும்
விழித்திடவே உடலிலுள்ள விஷநீர்வற்றும் மேனியுமே பொன்நிறமாகும்பாரே
663.
பார்க்கவே வார்த்துமிக உருகிக்கால்தான் பரிவாக ஆவினெய் தேய்த்துக்கொண்டு
ஏர்க்கவே பசும்பாலும் அரைப்பாய்ப்பண்ணி எளிதாக வெந்நீரில் முழுகிவாநீ
கார்க்கவே ரோமமது கருவண்டுபோலாம் கண்ணுக்குள் ஒளிமீறும் தாகமில்லை
தேர்க்கவே சுழிமுனையும் கெட்டிட்டேறும் சுள்ளாமல் பிரபஞ்ச மாயைநீக்கே
664.
நீர்க்கவே தாம்பூலம் தின்பதற்கு நினைவாகச் சுண்ணாம்பு செய்யக்கேளு
கார்க்கவே கற்பூரச்சிலையின்மேலே கல்லுக்குள் சுன்னத்தைக் கவசம்போட்டு
பார்க்கவே கறியோட்டி ஊதுயூது பஞ்சுபோல் பொருமியங்கே சுன்னமாகும்
தோர்க்கவே கல்நாரில் இப்படியேயூது துடியான அண்டத்தோல் ஊதிடாயே

665.
ஊதிடவே கெருடபட்சி பவளமுத்து உத்தமனே இவ்வகையும் சுன்னமாகும்
கோதுவது கொட்டைப்பாக்கதனைச்சீவி குறிப்பாகப் பளுத்த வெற்றிலையில்பூசி
ஓதுவது முன்சாற்றை உமிழ்ந்துபோட்டு உத்தமனே தாம்பூலம் தின்றுத்துப்பு
வாதுவது வாதசத்தம் கேட்டு மத்தைப்போக்கு மகத்தான உபாசத்தின் சுன்னந்தானே
666.
தானென்ற காலையிலே வழலைவாங்கச் சாதகமாய்ச் சொல்லுகிறேன் மக்காள்கேளும்
வானென்ற கரிசாலஞ்சாற்றினோடு வளமான ஆவினெய் சமனாய்ச் சேர்த்து
ஊனென்ற அங்குட்ட விரலில் தோய்த்து உத்தமனே அண்ணாக்கில் பிரளதேய்த்து
தேனென்ற சங்கிலிபோல் கபந்தான் வீழும் சிறப்பாகப் பதினாறுதரமும் வாங்கே
667.
வாங்கியே மண்டலந்தான் இப்படிதானப்பா மாலையிலே செய்கிறவரிசைகேளு
பாங்கிலாப் பேரண்டத் தெண்ணெய்தன்னைப் பரிவாகத்தான் துணியில் தோய்த்துக் கொண்டு
தேங்கியே பாலைபோல் காலையூன்றி சிறப்பாகக் குஞ்சனத்தில் சுத்துநூலு
ஓங்கிவா யிடசாரி திருப்பூநூறு ஒளிந்திருந்த ஆமமெல்லாம் கழன்றுபோமே
668.
ஆமமே கழலாட்டால் காயசித்தியில்லை அண்ணாக்கில் வீழாட்டால் அமுதம்சிந்தாம்
வாமமே யில்லாட்டால் பூசைபோச்சு மாயிங்கே சொல்வது மறைந்துபோச்சு
ஏமமே பிறப்பதுவும் மண்ணாய்ப்போச்சு எடுத்ததொரு குளிகையுட வேகம்போச்சு
காமமே கதியென்று இருக்கவேண்டாம் கைமுறையாய் இருதளத்தின் சட்டைதள்ளே
669.
தள்ளியே மூலிகையைக் கறுப்புபண்ணச் சாதகமாய் அரைமட்டும் குழிதான்வெட்டி
தெள்ளியே சேங்கொட்டை ஒன்றிரண்டாய்வெட்டி சிறப்பாக மிளகுசாம்பல் பரப்பிமேலே
அள்ளியே கரம்பைமண்ணை மேலேபோட்டு அழகாக பாத்திகட்டி நீர்விட்டு
நள்ளியே அழுகவிட்டு மூன்றுதினங்கள் நலமாகக் கொத்தியே ஆறப்போடே
670.
ஆறவிட்டுப் பதிப்பதற்கு விபரங்கேளு அழகான குமரியொடு ஓமங்கஞ்சா
தேறவிட்டு வல்லாரைக் கரிசாலை சிறப்பான செரும்படையும் நீலிவீழி
ஏறவிட்டுப் பொற்றலை யினொச்சிநெல்லி இதமான கரந்தையொடு மத்தந்தும்பை
சீறவிட்டுக் கொல்லனி கோவைவாழை சிறப்பாகப் பதித்துவைத்து நீரைவாரே
671.
வார்த்தல்லோ பயிராக்கி தண்ணீர்வார்த்து வாகாகக் காய்ந்தபின்பு விரையைவாங்கிப்
பார்த்தல்லோ முன்போல சேங்கொட்டையிட்டு புகழான மறுபடிதான் விரையைப்போடு
கோர்த்தல்லோ ரண்டிடத்தில் கொட்டையிட்டுச் கொடுஞ்சுருக்காய் மாறியே பயிரைப்போடு
ஏர்த்தல்லோ இப்படிதான் ஆறுதரம்போடு என்மகனே முழுக்கறுப்பாய் மூலிதானே
672.
தானென்ற மூலிகைதான் மலைகள்தோறும் சாதகமாய் வைத்தாரே ரிஷிகள்சித்தர்
வாவென்ற கறுப்புக்கு பரிட்சைக்கேளு வாகாகக் கொக்கிறகு கொண்டுவந்து
பானென்ற இலைகசக்கி மேலேபூசப் பரிவாகக் காகத்தினிறகோயாகும்
கோனென்ற இலைதின்றால் காயசித்தி கொடுஞ்சுறுக்காய் கொடியவரை இறுத்துந்தானே

673.
இறுத்தியதோர் குமரியுட கற்பமுண்டு எழுபதுதான் கோடியுகமிருந்தார்பாட்டர்
அருந்தியதோர் ஓமமுண்டு காலாங்கிநாயனறுபதுதான் கோடியுகம் வாதம்பார்த்தார்
வருந்தியதோர் கஞ்சாதான் கோரக்கர்தானும் மனதொன்றிச் சமாதியிலே ஏழுயுகம்நின்றார்
திருந்தியதோர் கரிசாலைக் கற்பமுண்டு சிவயோகிமுனியுடைய திறமைகேளே
674.
கேளப்பா அஞ்சயுகம் நாதாக்களோடே கொடிதாகத்தான் சிறிது வேதாந்தம்பார்த்தார்
கேளப்பா நீலியுண்டு ராமதேவர் விழைந்தேழு லட்சமப்பா யோகம்பார்த்தார்
நாளப்பா வாமமுனி செரும்படையுண்டு நாலேழுலட்சமப்பா சமாதியுற்றார்
தேனப்பா ஓமமுண்டு ஆனந்தநாதர் செகத்திலுள்ள அதிசயங்கள் பார்த்திட்டாரே
675.
பார்த்திட்டு விழிகொண்டு கஞ்சமலைசித்தர் பத்துயுகம் ஆரூடச்சமாதியிலேநின்றார்
ஏர்த்திட்ட பொற்றலையார் கொங்கணர்தானப்பா ஏழுயுகம் குளிகைகட்டி வாதம்பார்த்தார்
வார்த்திடவே பதஞ்சலிதான் கரந்தையுண்டு கைகொட்டிச் சிதம்பரத்தில் நடனம்கண்டார்
போர்த்திட்ட கொல்லனுட கோவையுண்டு போகர்முனியென்று சொல்லிப்புலகித்தேனே
676.
புளகித்து கோடியுகம் வாதம்பார்த்து போக்கோடே யொவ்வொன்றாய் விரித்துயானும்
இளகித்து ஏழுகாண்டம் இதுவேசொன்னேன் ஏழையுந்தான் எழுநூறாய்
நிகண்டாய்க்கோர்த்தேன்
அழகித்துக் கண்டபடி சொன்னமாக்கள் ஆச்சரியம் வெட்டவெளி மறைப்போயில்லை
ஊகித்து உப்பைநன்றாய்க் கட்டியண்ணு ஒருசொல்லும் தப்பாது சித்தியாமே
677.
சித்தியாம் அன்னத்தில் உப்புகூட்டச் செப்புகிறேன் நாதாக்கள்சொல்லாதெல்லாம்
மத்தியாய்ப் புங்கம்வேர்ப் பாலைவாங்கு பாரையுப்புத் தோய்த்தெடுத்து ரவியிற்போட்டு
முத்தியா ஏழுநாள் ரவியிற்போட்டு முனையான வெடியுப்பு பலந்தானஞ்சு
வெத்தியாய் சீனமது பலந்தானைந்து வெண்காரம் பலமஞ்சு கல்லுப்பஞ்சே
678.
அஞ்சோடு காரமஞ்சு பூநீரஞ்சு ஆதியாங்கடநுரையுஞ் சூடனஞ்சு
பிஞ்சோடு சவ்வீரம் பலந்தான்ரண்டு பேயானபுங்கன்வேர் பால்லாட்டி
கஞ்சோடு ஏழுநாள் வார்த்தரைத்து நலமான ரவிதனிலே யுலரப்போட்டு
குஞ்சோடு அண்டநீர் பலந்தானைந்து குழப்பியே பாலாலே வைத்துக்கொள்ளே
679.
கொள்ளவே பாரவுப்பில் தோய்த்துதோய்த்து குறிப்பாகக் கரிவோட்டில் வாட்டுவாட்டு
மெள்ளவே தணலுக்குளடர்ந்து வாட்டுவெளுப்படங்கி யுப்பதுவும் செம்மையாகும்
தள்ளவே சுண்ணாம்பு முப்புகோரே சமனாகப்பொடுத்துமைபோல் முறியறவே
துள்ளவே ரண்டடையாய்த்தட்டி வைத்துத்துடியாக விசித்தவுப்பை வைத்துவையே
680.
வைத்து மேலடைமூடி சட்டியில்வைத்து வாகாக நாற்சாமம் தீயைமூட்டி
மொய்த்து மேல்மூடி யொருசீலைசெய்து முசியாமல் நூறெருபுடத்தேபோடு
தைத்துமே ஆறவிட்டு யெடுத்துப்பாரு தவளம்போல் அப்பளிங்கு நிறமாகிநிற்கும்
நைத்துமே கரிச்சோரில் இந்தவுப்பையிட்டு நலமாக நாள்தோறும் கொண்டிடாயே

681.
கொண்டிட்டால் இந்தவுப்பு சட்டையெல்லாம் தள்ளும் கூசாதே வாசியெல்லாம் கெட்டிட்டேறும்
விண்டிட்ட புருவமையத்தமர் திறக்கும் விழியோடே மனங்கலங்க பண்ணிவிக்கும்
தண்டிட்ட அமுரியிலே இறங்காதுப்பு சாதகமாய் பச்சையுப்புத் தின்றாயானால்
மண்டிட்ட சித்தியெல்லாம் பாழாய்ப்போகும் வாய்த்திருந்த கருவெல்லாம் மண்ணாப்போமே
682.
போமென்ற உப்புக்கு காரமேற்றி பொலிவாகச் சுன்னமென்ற குகையிலூத
ஆமென்ற பூப்போல சுன்னமாகும் அத்திடைக்குச் சாரம்விடச் செயநீராகும்
வேமென்ற சரக்கான வறகத்துநாலும் வெகுளாமல் மணிபோல கண்விட்டாடும்
சாமென்ற சாவுபொய்யாம் வோதையாகும் சகஸ்திறந்தான் மாற்றாகுந்தன்னிற்பாரே
683.
பாரப்பா உப்புநின்று உருகும்போது பரிவோடு இடைக்கிடையாய் நாகம்போடு
காரப்பா நாகயிடை சூதம்போடு கனமான கெந்தந்தான் ரெட்டிப்போடு
சேரப்பா எடுத்துடனே களங்குமாகும் சேர்ந்தநவலோகத்தில் அன்பதுக்கொன்றீய
ஓமப்பா மாற்றாறி காணுங்காணும் வெகுளாதே பணவிடைதான் தேனிலுண்ணே
684.
உண்ணவே மண்டலத்தில் வெளியேமீறும் உத்தமனே கால்கள்ரண்டு கற்றூணாகும்
விண்ணவே பச்சைரசமென்றுதின்னு வெகுளாதே பாஷாணமெல்லாம் தின்னு
விண்ணவே உபரசத்தின் சத்தைத்தின்னு கலங்காதே வாசிகொண்டு உள்ளேபூரு
பண்ணவே நடக்கையிலும் இருக்கையிலும் நீரன் பழக்கமுண்டு மூலத்தைப்பாருபாரே
685.
பார்க்கவே உப்பென்ற களங்கள்தன்னைப் பலபலவாம் லோகத்தில் அன்பதுக்கொன்றீய்ந்து
ஏர்க்கவே இதைவிற்றுச் செலவுசெய்து எளிதாக அன்னவரை தண்ணீர்கொள்ளு
கார்க்கவே யொருசேரைச் சமைத்துவுண்டு கனமான கற்பத்தை வுண்டுதேறு
தோர்க்கவே வுட்புகுந்து மூலம்பாரு தொடுகுறிபோல் ஆறுதளம் வெளியாய்போமே
686.
வெளியான வப்பிரேக சத்துகேளு விளங்குகின்ற வப்ரோக முதற்றரந்தான்
சுளியான ரத்தவர்னம் ரண்டாம்பட்சம் முயர்ந்த மூன்றாம்தரம்தான் கிருஷ்ணவர்னம்
அள்யாத வப்பிரேக நவநீதம்பண்ணி அப்பனே கிளிபோல கட்டிக்கொண்டு
களியான கொள்ளிலையின் சாறுதன்னால் களியாதே நாள்மூன்று ஓலையாக்கே
687.
ஆர்க்கவே ஓலையோர் சட்டியிலேவிட்டு அசையாதே கொள்ளிலைசார் தன்னாலே
பார்க்கவே அடுப்பேற்றி கரித்துபின்பு மருவாழைக்கிழங்குச்சார் மூன்றுநாள்தான்
காக்கவே அறுசாமம் ஊறப்போட்டு கலங்காமல் வடிகட்டி எடுத்துக்கொண்டு
நீக்கவே வானுகையில் அடுப்பிலேற்றி நிதானமதா யெரித்துமெள்ளக் குளிகைவாங்கே
688.
வாங்கியே பலம்பத்து கல்வத்தில்போட்டு வகையான வெங்காயம் பலம்தான் பத்து
தேங்கியே காரமைந்து கட்டப்புவொன்று சிறப்பான சர்க்கரைதேன் பழமும்போடு
ஒங்கியே ஆகளையின் பாலைவார்த்து உறுதியாம் குடோரியொரு பலமும்போட்டு
நீங்கியே மூன்றுநாள் நெகிழவாட்டி லேசானவடைதட்டி யுலரப்போடே

689.
உலர்ந்தபின்பு வங்கமென்ற தாதொத்தாலூனு உத்தமனே சரவுலையில் வைத்துவூது
அலர்ந்தபின்பு அப்பிரேகம் சத்தாய்வீழும் ஆராய்ந்து சத்தெல்லாம் பொருக்கிக்கொண்டு
கலர்ந்தபின்பு காடெடுத்துக் கல்வத்தாட்டி கலங்காதே முன்போலே மருந்தரைத்துக்கூட்டி
நலர்ந்தபின்பு வில்லைதட்டிச் சரவுலையிலூது நலமாக அப்பிரேகம் சத்துமாமே
690.
ஆமப்பா காடெடுத்து மூன்மருந்துகூட்டி அரைத்துநன்றாய் வில்லைதட்டி ஐந்துதரமூது
ஓமப்பா சத்தெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து உத்தமனே வெண்காரம் சரியாய்க்கூட்டித்
தாமப்பா குகையிலிட்டு உருக்கிநன்றாய் சாய்க்கவே நல்லெண்ணெய் தேங்காய்ப்பாலும்
காமப்பா இலுப்பைப்பூ நெய்யுந்தேனும் கலந்தொன்றாய் மத்தித்து சாய்த்திடாயே
691.
சாய்த்திடவே மூன்றுதரம் கன்மிசங்கள்போகும் தங்கமது ரண்டுக்கு அப்பிரேகம்காணும்
மாய்த்திடவே ரண்டுமொன்றாய் உருக்கிக்கொண்டு பரிவாக மெழுகுகட்டி கிண்ணிதாரு
மாய்ந்திடவே சீலையது திறமையாச்செய்து வானுகைமேல்வைத்து அதற்குசூதம்பாரு
சாய்த்திடவே கருமத்தஞ்சாருவிட்டு கிண்ணிக்கிதமாக வைத்திடவே வெண்ணெயாவே
692.
வெண்ணெயெல்லா வழித்துமொரு மொத்தையாக்கி மேலானகுளிந்ததண்ணீரில்போட்டு
திண்ணெய்தாய் உருகியது கல்லுப்போலாம் சேர்ந்தெடுத்து ஆரையிலைகவசங்கட்டி
தண்ணெயா யவிர்ப்புடமாய்ப் பத்துபோட்டு தயங்காதே மத்தங்காய்க்
குள்ளேவைத்துப்போடு
விண்ணெயாய் விராலியிலைக்குள்ளேபோடு விதமான விராலியிலைக்குள்ளேபோடே
693.
போட்டெடுத்துச் சூடனுட தீயில்வாட்டிப் புகழாக கரண்டியிலெண்ணெய்குத்தியுருக்கி
ஆட்டெடுத்து வொன்றுக்கு நாலுதங்கம் அழகாகச் சூதத்தில் பாதிநாகம்
நீட்டெடுத்து உருக்கியொன்றாய் மணியாய்வாங்கி நேர்ப்பாகக் கல்வத்தில்பொடித்துநன்றாய்
தொட்டெடுத்து சத்தித்த கெந்திதானும் துரிசாக சூதயிடை கெந்திகூட்டே
694.
கூட்டியெல்லாம் பொற்றலையின் சாற்றாலாட்டி குறிப்பாகப் பொடிபண்ணி குப்பரக்கேற்றி
ஆட்டியே வாலுகையின் மேலேவைத்து மறுசாமமானபின்பு கடுந்தீப்போடு
நீட்டியே பனிரண்டு சாமமானால் நிலைத்துநிற்கும் மாதளம்பூ நிறத்தைப்போல
வாட்டியே நவலோகம் நூற்றுக்கொன்றீய மாற்றெண்ண பனிரண்டாம்
பணவிடைதானுண்ணே
695.
உண்ணவே மண்டலந்தான் அந்திசந்தி உத்தமனே யுகாந்தவரை இறுத்துந்தேகம்
தண்ணவே இருட்டரையில் இருந்தாயானால் சந்திரனோ சூரியனோ யென்பார்பாரு
கண்ணவே மேனியது கஸ்தூரிவீசும் கமலம்போல் கால்கைரண்டு மிருதுவாகும்
எண்ணவே கற்பமெல்லாம் படிப்படியாய்யேறு இருந்துபார் சமாதிக்குள் கற்பமொன்றே
696.
ஒன்றான கெந்தகந்தான் பலமோபத்து உத்தமனே சுத்திபண்ணி அயச்சட்டியிட்டு
கன்றான குமரிச்சோர் கீழ்மேலுமிட்டு கலறவே கொதிப்பாக நாலுசாமம்
பன்றான பழச்சாறு சுருக்குப்போடு பருவமாய்ப் புங்கம்பால் நாலுசாமம்
கன்றான நிழலுலர்த்திக் கல்வத்திட்டுக் கடுகவே பொடிபண்ணி மாந்துளிரின்சாறே

697.
சாறதினால் எண்சாமமட்டு ஆட்டு தயங்குமணித்தக்காளிச் சாற்றாலாட்டு
யேறதினால் மந்தாரைப் வெள்ளைப்பூவைப் பிசைந்தரைச்சாற்றினால் எண்சாமமாட்டு
வாறதினால் புளிப்பான மாதளையின் பழந்தான் வகையான சாறதினால் எண்சாமமாட்டு
தேறதினால் தாமரைப்பூச் சாற்றாலாட்டி சிறப்பாகக் காந்தமைந்து பலந்தான்போடே
698.
போடவே வெண்காரம் பலந்தானைந்து புகழான குடோரியொரு பலமும்போடு
நீடவே குன்றிமணிக் கட்டுவுப்பு நிலைக்கவொரு பலம்போட்டு ஆகலையின்பாலால்
வாடவே எண்சாமமாட்டிப்பின்பு வகையாகவில்லைதட்டி யுலரப்போட்டு
நாடவே நல்லெண்ணெய் பலந்தானொன்று நயமான அயச்சட்டிக்குள்ளேவாரே
699.
வார்த்துமே அடுப்பேற்றி வில்லைதட்டி வாகான கமலம்போல் எரிநேர்ப்பாக
ஏர்த்துப்பொறுத்த பதந்தன்னில்வாங்கு யிருபுவிமுந்துருத்தியிட்டுச் சரவுலையிலூது
பேர்த்துமே மணிமணியாய்ச் சத்துவிழும் பேராகக் கட்டையெல்லாம் சோதித்துவாங்கி
கார்த்துமே முன்போலக் காரங்கூட்டி கலங்காதே ஐந்துதரம் ஊதிடாயே
700.
ஊதியே சத்தெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து உத்தமனே வெண்காரம்கூடக்கூட்டி
காதியே ஐங்குதுகையிலிட்டுருக ஆட்டிக்கனமான அப்பிரேகம் சாய்த்தாப்போல
சாதியே சாய்க்காக்கால வருணன்போலத் தயங்காதே சத்தாகும் கெந்திசந்து
வாதியே இதைக்காணப் போறார் மாண்பர் மாசற்றநாதாக்கள் ஆடும்ஆட்டே

# போகரின் சப்த காண்டம் – 7000

701.
ஆட்டான கெந்தகத்தின் சத்துவேகம் ஆரறிவார் சிவயோகி அல்லார்காணார்
நீட்டான அம்பலத்தில் சோழன்றாலும் நிலைத்த நடராசரைத்தான் வார்க்கச்சொன்னார்
பூட்டான சிற்பர்கள்தான் கருக்கட்டி வார்த்தார்பின்பு போகவுமே சிற்பரேங்கி
கூட்டான மனதுநொந்து திகைக்கும்போது கொடுமூலநாயனங்கே வந்திட்டாரே
702.
வந்திட்டு சிற்பரைதான் வரவழைத்து மனக்குறைதான் என்ன சொல்லு மைந்தாவென்ன
மெந்திட்டு விக்ரகம் வார்க்கவார்க்க வின்னமாய்ப் போடுதென கெய்வோமென்ன
கெந்திட்ட மனதுகண்டு திருமூலர்தாமும் நொடிக்குள்ளே வார்த்திடுநீ என்றுசொல்லிக்
கந்திட்டுக் காசெடைதான் செம்பையீந்தார் கடுகவே சிற்பருந்தான் வார்த்திட்டாரே
703.
வார்த்திடவே தங்கமெல்லாம் செம்பாய்ப்போச்சு மனம்புண்ணாய் நிற்குறப்போ சோழன்வந்தார்
ஏத்திடவே விக்கிரகம் வார்ப்பித்தாயோ எடுத்துவா என்றிடவே கொண்டுமுன்வைத்தார்
பார்த்திடவே தங்கமெல்லாம் எடுத்துக்கொண்டு பரிவாகச் செம்பாலே வார்த்தாயென்று
வேர்த்திடவே ஆக்கினைதான் பண்ணச்சொன்னார் வடுபட்டார் சோழன்முன்னே நாயன்தாமே
704.
ஆமப்பா சிற்பரைதான் சொல்லவேண்டாம் அதிகமாய்ப் பொன்னுனக்குத் தாரோமென்று
வேமப்பா வெள்ளியைத்தான் உருகச்சொல்லி விரைந்த மூவாயிரத்திற் காசெடைதான் போட்டார்
தாமப்பா மாற்றதுவும் இருபாதாச்சு சாதகமாய் குளிகையிட்டு மறைந்திட்டாரே
சேமப்பா தவசியெங்கே என்றுகேட்கத் தேடியெங்கும் பார்த்திட்டுத் திகைத்திட்டாரே
705.
திகைத்திட்டு வந்துசொன்னார் சோழன்முன்னே சிவசிவாவென்றுசொல்லி வாயைப்பொத்தி
நகைத்திட்டு சிற்பருக்கு வெகுமானஞ்செய்து நாதாக்கள்மகிமைசொல்ல எவரால்கூடும்
மிகைத்திட்டு விடுதிக்குப் போனார்சோழன் வேண்டியாதோர் கெந்தகத்தின் சத்துவேகம்
பகைத்திட்டு சித்தரூபங்களுக்கும் சொன்னேன் பாரிதுக்குள் செந்தூரஞ்செய்யக்கேளே
706.
கேளப்பா கட்டியதோர் சூதமொன்று கொடியாக உருகையிலே சத்துவொன்று
நீளப்பா தங்கமொன்று நாகமொன்று நேராகவுருக்கி ஒருமணியாய்வாங்கி
வேனப்பா கல்வத்தில் பொடியாய்ப்பண்ணி விளங்கிநின்ற தாளகமும் சிலையுமொன்று போட்டு
நாளப்பா பொற்றலையின் சாற்றாலாட்டி நலமாகத் தெல்லுப்பொல் வில்லைபண்ணே
707.
பண்ணியதோர் வில்லைதன்னை அகலிலிட்டு பாய்ச்சியே மூடியொருசீலைசெய்து
கண்ணியே பத்தெருவிற்புடத்தைப்போடு கண்கொள்ளா வருணன்போல் செந்தூரமாகும்
கண்ணியே செந்தூரம் ஆயிரத்துக்கொன்று நாட்டிடவே பதினாறு மாற்றுமாகும்
புண்ணியமே செய்தவர்க்கு செந்தூரமாகும் பொல்லாத துரோகிக்கு எய்தவாறே

708.
வாறுகேள் செந்தூரங் குன்றியுண்ணு மண்டல்ந்தான் அந்திசந்தி மறவாமல்நீயும்
தேறுகே தேகமது செப்புத்தூணாம் சிதறடித்தால் மலைகளெல்லாம் தவிடுபொடியாகும்
சாறுகேள் கத்தியிலே வீசினாக்கால் கனீரென்று வெங்கலத்தின் ஓசையாகும்
நாறுகேள் நரமெல்லாம் சிவந்து காணும் நாதாக்கள் சித்தியெல்லாம் இதற்குள்ளாச்சே
709.
ஆச்சப்பா மயூரத்தின் செம்பெடுக்க அறைகிறேன் நானறிந்தமட்டுந்தானும்
வாச்சப்பா மயிலிறகு கொண்டுவந்து வளமாக திரிதிரித்து நல்லெண்ணெய்தோய்த்து
நீச்சப்பா கட்டெடுத்து கரியாய்ப்பண்ணி நிலைக்கவொரு சேருமட்டும் நிறுத்துகொண்டு
தேச்சப்பா கல்வத்திலிதனைப்போட்டுத் தூரியாகக் காரமொரு பலந்தானஞ்சே
710.
அஞ்சான வெண்காரம் பலந்தானஞ்சு ஆதியாங்குடோரியொரு பலமுங்கொண்டு
நஞ்சான வீரமொரு பலமும்மூன்று நாயகமாம் கல்லுப்புப் பலமுமொன்று
பிஞ்சான குன்றிமணி யெள்ளுமொச்சை பேசாதே யொவ்வொன்று பலமும்போட்டு
கஞ்சான வாதளையின் பாலைவார்த்து கடுகியே திரைமூன்றுநாள் வில்லைகட்டே
711.
கட்டியே வில்லைதன்னை நாளத்தூதிக் கட்டோடே மணிமணியாய் ரவிதனினிற்கும்
ஒட்டியேதே செம்பெல்லா மெடுத்துக்கொண்டு ஓகோகோ காடெல்லா முன்போலூது
தெட்டியதோரைந்துதரம் மருந்திட்டு தெல்லிப்போல் வில்லைதட்டி வூதுவூது
யெட்டியதோர் செம்பெல்லாம் காரமிட்டு பாட்டியே காரமுன்போல் சாய்த்திடாயே
712.
சாய்த்திடவே செம்பாலே சூதங்கட்டும் சமுசயங்களெண்ணாதே பாஷாணஞ்சாகும்
மாய்த்திட்ட அரவமது தீண்டாதையா மகத்தான விஷங்களொன்றுங் கிட்டாதப்பா
பாய்த்திட்ட செம்போடே தங்கஞ்சேர்த்து பாங்கான கைவளைகள் பண்ணுபண்ணு
காய்திட்ட குண்டலங்கள் விக்கிரகம்பண்ணு காட்டினுள்ளே சித்தரெல்லாம் தரிப்பார்பாரே
713.
பாரப்பா மயூரத்தின் செம்புஒன்று பாங்கான தங்கமொன்று நாகமொன்று
சேரப்பா மூன்றுமொன்றாயுருக்கிக்கொண்டு செயலான சூதத்தைபொங்கக்கூட்டி
காரப்பா கல்வத்தில் பொடியாய்ப்பண்ணி கசடற்ற கந்தகத்தைப் பாதிகூட்டு
வாரப்பா செருப்படையின் சாற்றாலாட்டி வளமாக கல்லுபோல் வில்லைதட்டே
714.
கட்டியே அஞ்செருவிற் புடத்தைப்போட்டு கைம்முறையாய் ஆறவிட்டு எடுத்துப்பாரு
தட்டியே மாதளம்பூப்போலேயாகும் தனையெடுத்து ஆயிரத்துக்கொன்றேபோடு
மட்டியே மாற்றென்ன பதினாறுகாணும் மைந்தனே பணவிடைதான் பாலிலுண்ணு
நாட்டியே காயமது இரும்புத்தூணாம் என்னென்ன கடித்தாலும் செத்துப்போமே
715.
போமென்ற அயத்தினுட செம்புகேளு புகழான ரோமமது எள்ளெண்ணெய்த்தோய்த்து
வாமென்ற அயச்சட்டிக்குள்ளேயிட்டு அப்பனே மூன்றுபத்து பலத்தைப்போடு
காமென்ற யரப்பொடிதான் பலமோபத்து கைம்முறையாய் யறைப்பொடியை பிசறிவைக்க
தேமென்ற அடுப்பேற்றி ரோமத்தின்தயிலம் சிறப்பாகயுண்ண பிரட்டித்தீரே

716.
தீரென்று ரோமமெல்லாம் கரியாகுமட்டும் செய்முறையாய் யரப்பொடியைப்பரட்டிவாங்கி
காமென்ற கரியோடே வைத்துக்கொண்டு கார்த்திகையின் கிழங்கதுவும் பலமும்பத்து
சேரென்ற செவ்வல்லிக் கிழங்குபத்து செர்த்திடித்து சாறுவொருபடியும்வாங்கி
ஆரென்ற ஆதளையின் பாலைவார்த்து அழகான எள்ளெண்ணெய்படிதான் வாரே
717.
வார்த்தெல்லாம் குழம்புபோல் வருதல்கண்டு வகையான வெண்காரம் பலந்தானைந்து
சேர்த்தெல்லாம் துரிசியொரு பலந்தானைந்து தேசில்லாக் கந்தகந்தான் பலமும்மூன்று
சேர்த்தெல்லாம் பொடியாக்கி யெண்ணெயிலேபோட்டு கொதிப்பித்துக் குழம்பான பதத்தில்வாங்கி
கார்த்தெல்லாம் வழித்துவொரு கல்வத்திட்டு கைம்முறையாய் யரைப்பொடியைப் பிசிறிவையே
718.
வையப்பா ரோமமென்ற கரியினோடே மயங்காதே குகையிலிட்டு மாட்டியூது
தெயப்பா மணிமணியாய் இறங்கும்பாரு தனையெடுத்து முன்போல் தைலத்தில்பிசறி
கையப்பா அஞ்சுதரம் உருக்கித்தீரு கசடற்ற வெள்ளிபொன்போல் கண்விட்டாடும்
மையப்பா கசடற்ற செம்பேயாகும் வயதையிதில் முடிவுசொல்லி விண்கொள்ளாதே
719.
கொள்ளாத அயச்செம்பு பலந்தானாறு குறிப்பான தங்கமொன்று நாகமொன்று
விள்ளாத ஈயமொன்று உருக்கியாட்டி விரவிடுநீ கல்வத்தில்பொடியாய்ப்பண்ணி
அள்ளாத சூதமது பலந்தானொன்று அசடில்லா கெந்தகந்தான் பலமும்நாலு
தள்ளாத மாளிகையின் சாற்றாலாட்டி துடியாகவெண்சாமம் ரவியிற்போடே
720.
போட்டெடுத்து பொடியாக்கி மேருக்கேற்றி புகழான வானுகையின் மேலேவைத்து
ஆட்டெடுத்து பனிரண்டுசாமந்தீயை ஆறவிட்டு பார்த்தாக்கால் செந்தூரமாகும்
பூட்டெடுத்து ஆயிரத்துக்கொன்றுபோடு புகழாகப் பதினாறுமாற்றுகாணும்
நீட்டெடுத்து மண்டலந்தான் தினங்குன்றியுண்ணு நேரானசட்டைகக்கிப் பாலையாமே
721.
ஆமென்ற காந்தமது பலந்தான்பத்து அப்பனேகுன்றிபோல் உடைத்துக்கொண்டு
காமென்ற செம்பிலிப்பால் படிதான்நாலு கலரவிட்டு சுருக்கிடுநீ நாலுசாமம்
தாமென்ற கல்வத்தில் செம்பிலிப்பால் விட்டுத்தாக்கி அரைநால்சாமம் புடத்தைப்போடு
ஆமென்ற பாலாலே யரைத்தரைத்து அப்பனே ஐந்துபுடம் போட்டுத்தீரே
722.
தீர்ந்தபின்பு பொடியாக்கி சட்டியிட்டு செம்பிலியின் ரோமமது பலந்தான்பத்து
ஆய்ந்தபின்பு சுருக்கிட்டு ரோமந்தன்னை அப்பனே தயிலத்தில் பிரட்டிப்போடு
காய்ந்தபின்பு ரோமத்தின் தயிலமெல்லாம் கரியோடே வாரிவைத்து கருத்தைக்கேளு
தேய்த்தபின்பு கருங்குன்றிச் சாறதுவும்படிதான் சிறப்பான கொள்ளிலைசார் படிதானொன்றே
723.
ஒன்றானபொன்னினாவாரையின்சாறு உயர்ந்த ஆதளையின்பால் படிதானொன்று
கன்றான செவ்வல்லிக்கிழங்கு சார்படிதான் கார்த்திகையின் கிழங்குசார்படிதானொன்று
தின்றான புளிபரணைக்கிழங்குச்சாறு சிறப்பான நல்லெண்ணெய்ச் சமனாக்கூட்டி
நன்றான அடுப்பேற்றி கமலம்போல் எரித்து நலமாக்குழம்பான பதத்தில்பாரே

724.
பார்க்கவே கெந்தகந்தான் பலமும்மூன்று பரிவான வெண்காரம் பலமுமைந்து
ஏர்க்கவே இதைவிற்று செலவுசெய்து வெளிதான வீரமதுபலமுமொன்று
கார்க்கவே குடோரியது பலமுமொன்று கல்வத்திலிட்டெல்லாம் பொடியாய்ப்பண்ணி
சேர்க்கவே முன்மருந்திலொக்கப்போட்டு சிறப்பாகக் குழம்பான பதத்தில்வாங்கே
725.
வாங்கியே காந்தத்தில் பிசறிக்கொண்டு வளமான சரவுலையில் வூதுவூது
தாங்கியே காட்டோடு சத்தாய்வீழும் தப்பாமல் சத்தெல்லாம் பொருக்கிக்கொண்டு
தேங்கியே கரடெடுத்துத் தயிலத்தில்பிசறிச் செப்பரியநாளத்தால் ஊதித்தீரு
பங்கியே ஐந்துதரம் ஊதித்தீரு பரிதிபோல் செம்பாக நிறமுமாச்சே
726.
செம்பான காந்தமது பலந்தாநாலு திறமானதங்கமது பலந்தானொன்று
கம்பானநாகமது பலந்தானொன்று கருதியதோர் கட்டான சூதமொன்று
நம்பான இதுநாலும் உருக்கிக்கொண்டு நலமாகக் கல்வத்தில் பொடியாய்ப்பண்ணி
கொம்பான குலாமல்லிச் சாற்றாலாட்டி கூறவேமுன்னநாள் ரவியிற்போடே
727.
போட்டுவா முன்சொன்ன சூதத்திலாட்டி பெரிதான கெந்தகத்தைச் சுத்திப்போடு
கேட்டுவா பொடிபண்ணி மேறுக்கேற்றி கெடியான வானுகையில் மேலேவைத்து
நாட்டுவா பனிரன்டு சாமந்தீயை நலமாகஆறவிட்டு எடுத்துப்பாரு
காட்டுவாய் மாதளப்பழம் பூப்போலேயாகும் சாத்திரத்திற் கொண்டாடும் வேதைதானே
728.
தானென்ற செந்தூரங்குன்றியுண்ணு சாதகமாய் மண்டலத்திற் சட்டைகக்கும்
கோனானகாயமெல்லாம் சிவந்துமின்னும் கெடிதான நாகமெல்லாம் பவளம்போலாம்
பானான வஸ்துவுண்டால் லாகிரியில்லை பாஷானவர்க்கங்கள் கறிசோறாகும்
ஊனான சடந்தானும் கோடிகாணும் உத்தமனே சமாதியிலே இருக்கலாமே
729.
இருக்கவே லோகமென்ற திராவகத்தை யியம்பிடவே பானந்தா உற்றுக்கேளு
பருக்கவே வெடியுப்பு பலந்தானூறு பரவியதோர் சீனமது எண்பத்தைந்து
சுருக்கவே துரிசியது நாற்பதாகும் சுளுவான சாரமது இருபதாகும்
உருக்கவே கல்லுப்பு பலந்தான்பத்து உயர்த்தியாம் பூநீறு பலந்தானஞ்சே
730.
அஞ்சானசத்தியென்ற சாரம்நாலு அழகான கெந்தியுப்பு பலந்தான் மூன்று
வஞ்சான வுருவியுப்பு பலந்தானொன்று வகையெல்லாம் பொடித்துயொரு சட்டியிட்டு
கஞ்சான கழுதையுட ரத்தம் வார்த்து கடுகரைத்து ஏழுநாள்ரவியிற்போடு
அஞ்சான அடிகனத்த கவாசத்திட்டு துடியறவே அடிக்கவசமட்டும் போடே
731.
போட்டதன்மேல் சக்கரமாம் பாலைச்சுட்டி பொருந்தவே மேல்கவிழ்ந்து மாலும்தன்னால்
நாட்டதின்மேல் சீலைசெய்து ரவியில்வைத்து நலமாகவடுப்பேற்றி யெறிலயமாக
நீட்டதின்பின் பீங்கானால் கிண்ணிவைத்து நேர்ப்பாக சட்டியின்மேல் தண்ணீர்குத்தி
பூட்டதின்மேல் புகைபோடச் சலந்தான்வீழும் பொருந்திமுன்னீர்தனைதகற்றி
பின்னீர்வாங்கே

732.
வாங்கியே முன்வைத்த சரக்குதன்னை வகையாக ஐந்துபங்குபண்ணிவைத்து
தேங்கியே ஒருபங்கில் தனையூத்து சிறப்பாக முன்போலே கவசத்திட்டு
தாங்கியே அடுப்பேற்றி யெரித்துவாங்கி சாதகமாய்முன்போலே மறுசரக்கிலூற்றி
பாங்கியே யுலரவிட்டு கவசத்திட்டு பக்குவமாய் ஐந்துதரம் இப்படியேவாங்கே
733.
வாங்கியே அரக்காலே குப்பிபண்ணி வளமாக திராவகத்தை அதிலேவாரு
தேங்கியே சூதமொரு பலந்தானெட்டு சிறப்பாக கல்வத்தில் இட்டுக்கொண்டு
வாங்கியே தினமூன்று திராவகத்தாலாட்டி மறுபீங்கான்தன்னிலே வழித்தெடுத்து
தாங்கியே கரியோட்டில் வறுத்துக்கொண்டு சமரசமாய்ப் பொடிபோலே மேறுக்கேற்றே
734.
ஏற்றியே வானுகையின்மேலேவைத்து இதமாகத் தீயெரித்து பனிரண்டுசாமம்
போற்றியே யாறவிட்டு எடுத்துக்கொட்டி புகழாகத்திராவகத்தில் அரைத்துலர்த்தி
தூற்றிய கொடிபோலே குப்பிக்கிட்டுச் சகமான வானுகையின்மேலேவைத்து
பாற்றியே பனிரண்டு சாமந்தானும் பக்குவமாய் தீயெரித்து  ஆறவிட்டுவாங்கே
735.
வாங்கியெல்லாம் முன்போலே அரைத்தெடுத்து வரிசையாய் ஐந்துமுறைதீர்ந்துயேறு
தாங்கியே செந்தூரம் அருணன்போலே தலத்திலே இருக்குமப்பா இதனின்வேதை
ஓங்கியே கோடிக்கு ஒன்றுஓடும் உத்தமனே கதலியுட பழத்தைவாங்கி
தேங்கியே பணவிடைதான் உள்ளேகொள்ள சிவசிவாசூரியன்போல்தேகமாச்சே
736.
ஆச்சப்பா திராவகத்தில் அனந்தம் வித்தை ஆராய்ந்து ஒவ்வொன்றாய்ப் பார்த்துத்தேறு
ஏச்சப்பா கட்டினமோ உருக்கினமோ கோடியெடுத்தோடும் குளிகைமுதல் செந்தூரங்கோடி
வாச்சப்பா சுன்னமுதல் களங்குகோடி வழங்கியதோர் குருக்கோடி மெழுகுகோடி
பாச்சப்பா ஒவ்வொன்றில் வேதைகோடி பரிட்சிக்க தூமமுதலெட்டுமாமே
737.
**துரிசி திராவகம்**

ஆமென்ற துரிசியுட திராவகத்தைச் சொல்வேன் அப்பனே துரிசியொரு பலந்தான் நூறு
காமென்ற வெடியுப்பு பலந்தான் நூறு கலங்காத சீனமது பலந்தான் நூறு
வேமென்ற சவுட்டுவுப்பு பலமுமைந்து வெகுளாலே வளையலுப்பு பலமுமைந்து
தாமென்ற கெந்தியுப்பு பலமுமைந்து தயங்காதே இந்துப்பு பலமுமைந்தே
738.
அஞ்சோடு சத்தியென்ற காரம்பத்து அப்பனே கல்லுப்பு பலமும்பத்து
நஞ்சோடு வீரமது பலமும் மூன்று நவாச்சாரமும் பத்துபலம்போடு
பிஞ்சோடு கருவங்கம் பலமுமூன்று பேசாதே வாதனையுப்பு உருவியுப்பு
பஞ்சோடு மணியுப்பு மேனியுப்பு பதறாதே ஒவ்வொன்றும் பலமும்போடே
739.
போட்டெல்லாம் பாங்கியுடன் சாராயம் வார்த்து பொருந்தவே மூன்றுநாள் ஆட்டுஆட்டு
ஆட்டெல்லாம் ரவியிலிட்டு ஐந்துபங்கு பண்ணி அப்பனே ஒருபங்கு கலசத்திலிட்டு
பூட்டெல்லாம் மாலையென்று சட்டிமூடி பகழாக மாஷத்தால் சீலைசெய்து
மூட்டெல்லாம் அடுப்பேற்றி பீங்கான் வைத்து முயற்சியாய் திராவகத்தை வாங்கிடாயே

740.
வாங்கிட்ட திராவகத்தை மறுசரக்கிலூற்றி வளமாக ரவியிலிட்டு கலசத்திற்போட்டு
தேங்கிட்ட திராவகத்தை வாங்கித்தீரு சிறப்பாக ஐந்து தரம் இப்படியே வாங்கு
பாங்கிட்ட அரக்காலே குப்பிபண்ணி பதனமாய் மூடிவைத்து பாங்கைக்கேளு
தேங்கிட்ட பாறையுப்பு பலமீரேழு சிறப்பாக திராவகத்தில் தோய்த்திடாயே
741.
தோய்த்துமே தினமேழு ரவியிற்போடு தொன்மையாம் வெடியுப்பு சீனாக்காரம்
காய்த்துமே கடல்நுரையும் சூடனீந்து கலங்காத பூநீரில் காரம்வீரம்
தேய்த்துமே நவாச்சாரம் துரிசு வெள்ளை சிறப்பாகப்பதினொன்று திராவகத்திலாட்டி
ஏய்த்துமே வில்லைகட்டு ரவியிற்போடு இதமாக அகலிட்டு அவிர்ப்புடமாய்ப்போடே
742.
புடம்போடு அரைத்தரைத்து ஐந்துதரந்தானும் புகழாக எருவெடுத்து பத்துமட்டும்
திடம்போடு திராவகத்தில் பலந்தானேழு சிறப்பான புடம்போட மருந்தைதானும்
கடம்போடு குழம்பாக கரைத்துக்கொண்டு கல்லுப்பில் பிசறியல்லோ கரியோட்டில்வாட்டு
கடம்போடு குழம்பெல்லாம் தோய்த்து தோய்த்து வாட்டுவாட்டே
743.
வாட்டியே கவிசுக்கு மருந்துகேளு வகையாக பேறனென்ற கிளிஞ்சல்தன்னை
வாட்டியே சுண்ணாம்புஞ் சவுட்டுமண்ணில் கலங்காதே தண்ணீரில் கலந்துகொண்டு
மூட்டியே தீயெறித்து வற்றுமட்டும் உத்தமனே புடம்போட்டுத்தூளாய்ப்பண்ணி
நாட்டதியே திராவகத்தால் அரைத்தரைத்து நலமாக ஐந்துபுடம்போட்டுத்தீரே
744.
தீரவே புடம்போட்ட மருந்துதன்னை திராவகத்தாலளர தீதுருட்டி மெழுகுபோல
ஆறவே முன்னுப்பில் கவசங்கட்டி அசையாதே கலசத்தில் பூநீறுவைத்து
ஊரவே அதின்மேலே உப்பைவைத்து உத்தமனே மேலுமந்த பூநீறுபோட்டு
தேறவே சில்லிட்டு சீலைசெய்து தீர்க்கமாய்க் கெஜபுமாய்ப் போட்டுவாங்கே
745.
வாங்கியே உப்புபண்ணி பார்த்தால் வயிரம்போல் இருகியாது தங்கல்போலாம்
ஓங்கியே கரியில்வைத்து உருக்கிப்பாரு உத்தமனே தங்கம்போல் கண்விட்டாடும்
தேங்கியே கரியில்நின்று கம்மித்தானால் சிறப்பாக முன்போல புடத்தைப்போடு
ஏங்கியே ஒருவருடன் பேசவேண்டாம் ஏத்தியே கடுங்காரச் சுன்னத்திலூதே
746.
**பாலரசம்**
சுன்னமென்ற குளிகைதன்னில் ஊதிப்பின் மைந்தா துடிராகப்பலம்நாலு நிறுத்திக்கொண்டு
சுன்னமென்ற திராவகத்தில் இதனைப்போட்டு கயறவே மத்தித்து வைத்துக்கொண்டு
பன்னமென்ற சூதமது பலந்தானெட்டு பாய்ச்சியே கல்வத்தில் திராவகத்தைப்பாறு
சின்னமென்ற சாமமொன்று அரைத்துநன்றாய் சிறப்பாக ரவிதனிலே போட்டிடாயே
747.
போட்டுவா யரைத்தரைத்து ரவிதனிலேயப்பா புகழாக மாதமொன்று மறவாமல்நீயும்
காட்டுவாய் சூதமது சிவப்பேயாகும் கண்டுகொள்ளா வேதையுமாம் கண்டுகொள்ளு
நீட்டவே குகையில்வைத்து காயவைத்து நினைவாகக் கையிடேகுளிர்ந்துபோகும்
பூட்டுவா வெந்நீரைக் கொப்பரையில் காய்ச்சி புகழாக துளிசூதம் அதுக்குள்போடே

748.
போட்டுடனே சூதந்தண்ணீர் போலேயாகும் போக்கான பலரசம் பரிட்சை செம்மை
காட்டுடனே நாலுபலம் நிறுத்துக்கொண்டு நலமான தங்கமது பலந்தானொன்று
பூட்டுடனே கல்வத்தில் இதனைப் போட்டு புகழான கருந்துளசி சாறுவிட்டு
தொட்டுடனே நாள்மூன்று அரைத்துபின்பு துடியான கெந்தகத்தை சேருபோடே

## சந்திரோதயம்

749.
போட்டரைத்து தினமொன்று ரவியில்போட்டு ப் பொடியாரைக் காசிபென்ற மேருக்கேற்றி
நீட்டரைத்து வாலுயின் மேலேவைத்து நினைவாகத்தீயிடுவாய் பனிரெண்டுசாமம்
கூட்டரைத்து ஆறவிட்டு எடுத்துப்பாரு கொடியான மாதளம்பூ நிறம்போல்நிற்கும்
தொட்டரைத்து சந்திரோதயம் என்றநாமந் துலங்கி இதன்மகிமை சொல்லமுடியாதாமே
750.
முடியாத செந்தூரம் குன்றியுண்ண முனையான காயமது சிவந்துமின்னும்
பிடியாத மதயானை பிளிறுக் கொக்கும் பெண்களுடன் அதுபோல பண்ணினாக்கால்
துடியாத நூறுபேர்வேணும்வேணும் சுக்கிலந்தானூறுகின்ற கேணியாகும்
அடியாத நேரமெல்லாம் அறுத்துப்போடும் அம்மம்மா செண்பகத்தின் கண்போலாமே
751.
ஆமிந்தச் செந்தூரம் ஆயிரத்துக்கொன்று அனைந்திடவே இரபத்தைந்து மாற்று
போமிந்த சரக்குகளிற் போட்டுப்போட்டுப் புகழாகக்கட்டுண்டு மெழுகுமாகும்
காமிந்த துரிசியின்மேல் நீராலப்பி கடுரவியிற் போட்டிடவே குருவுமாகும்
வாமிந்த துரிசியினால் சூதங்கட்டும் மகத்தான லிங்கமது ஒருபலந்தான்
752.
ஒருபலந்தான் கட்டியாய் வாங்கிக்கொண்டு உத்தமனே அயச்சட்டிக்குள்ளேவைத்து
சுருபலந்தான் சுருக்கிடவே மெழுகாய்ப்போகும் சூட்சாதி வேதைகள் கோடியுண்டு
கருபலந்தான் ரவிமதியஞ்சேர்த்து கண்காணா மாற்றதுவும் அதிகங்காணும்
நிருபலமாய் நவலோகம் நூற்றிலீய நிச்சயமாய் மாற்றென்ன பனிரெண்டாமே

## மகாதிராவகம்

753.
ஆமப்பா திராவகத்தை சொல்வேனப்பா அப்பனே எருக்கோடு குப்பைமேனி
போமப்பா தாழையொடு அறுகுவாழை போரான மத்தையொடு துத்திகள்ளி
தாமப்பா தென்னிலையும் நாயுரு நாணல் தயங்காத பிரண்டையொடு முடக்கொத்தானும்
சாமப்பா புரசோடு முள்ளங்கத்திப்புல் தயங்காதே காயவைத்துச் சாம்பலாக்கே
754.
காயவைத்துச் சுட்டுமே சாம்பலாக்கி கலங்காதே வெவ்வேறாய்த் தண்ணீர்கரைத்து
தோயவைத்து மூன்றுநாள் தெளிவைவாங்கி சகமாக அடுப்பெறித்து உப்பாய்க்காய்ச்சி
மேயவைத்து ஒவ்வொன்றாய்க் காய்ச்சி வெவ்வேறு நெகிழாமல் ஒவ்வொன்று பலமுந்தூக்கி
சாயவைத்து மானினொடு ஆடுபானை ஒட்டையொடு வழுதைதானே

755.
தானென்ற குதிரையொடு மாடுயேழும் தனித்தனியே நீர்வாங்கி உரைப்பாய்க்காச்சி
வானென்ற ரெண்டுபலந்தூக்கிக்கொண்டு வளமான முயல்புழுக்கை யெலிப்புழுக்கை
தேனென்ற வவ்வாலின் புழுக்கையோடு சிறப்பாக இவைமூன்றும் சுட்டசாம்பல்
வானென்ற ரெண்டுபலம் கடல்நீர்தண்ணில் கரைத்திறுத்தெளிவிறுத்து உப்பாய்க்காச்சே
756.
காச்சியது பலம்பத்து நிறுத்திக்கொண்டு கடிதான வீரமது பலமுமூன்று
காய்ச்சியே தாளகமும் பலமுமூன்று தயங்காத சிலையதுவும் பலமுமூன்று
பாய்ச்சியே வெள்ளையது பலமுமூன்று பரிவான கெந்தகமும் பலமுமூன்று
வாச்சியே துத்தமது பலமுமூன்று மகத்தான பேதியது பலந்தானாறே
757.
ஆறாகச் சாரமது பலந்தானாறு அடைவான கல்லுப்பு பலந்தானாறு
ஏறாக இந்துப்பு பலந்தானாறு எளிதான வளசிலுப்பு பலந்தானாறு
பேராக வெண்காரம் பலந்தானாறு பெலத்துநின்ற சத்தியென்ற சாரமாறு
நீராகப் பூநீறு பலந்தானாறு நிலைத்த கெந்தியுப்பதுவும் பலந்தானெட்டே
758.
எட்டாத கடல்நுரைதான் பலமுமெட்டு இயல்பான துரிசியது பலந்தானெட்டு
காட்டாத வெடியுப்பு பலந்தானாறு கலங்காத சீனமது பலமுமாறு
தெட்டாத பரங்கியுட சாரால்வார்த்து சிறப்பாக ஏழுநாள் அரைத்துலர்த்து
பட்டாத ஐந்துபங்கு பண்ணிவைத்து பக்குவமாயொருபங்கு கலயத்தூட்டே
759.
ஊட்டியே மேல்சட்டி கவிழ்ந்துமூடி உத்தமனே மாமிசத்தால் சீலைசெய்து
நீட்டியே அடுப்பேற்றி எரிநேர்பாக நிலைத்தவுப்பு கையோடே சலந்தான்வீழும்
காட்டியே புகைநின்றால் திராவகமும் நிற்கும் கலங்காதே முன்வைத்த சரக்கில்வார்த்து
சூட்டியே ரவியில்வைத்து கல்வத்திட்டு துடியாகத் திந்நீரைவாங்குவாங்கே
760.
வாங்குமே ஐந்துதரமூட்டிமூட்டி மறவாதே அரக்கான குப்பியிலேவாரு
தேங்குமே மணற்கல்லு ரோமமத்தி சிறப்பான நவலோக மெல்லாம்சாம்பல்
எங்குமே மகத்திலந்த தூபம்பட்டால் எளிதிலே கண்களெல்லாம் கரைந்துபோகும்
பாங்குமே தூயமுகம் பார்த்துநின்று பதறாதே விறகைமெல்ல அடுப்பிற்போடே
761.
போட்டிடு தூரத்தேநின்று கொள்ளுபுகைமேலே பட்டுதென்றால் சடம்விரிந்துபோகும்
வாட்டிட்டு சரக்குதனில் ஏத்துப்போட மகத்தான மெழுகுமாகும்
நீட்டிட்டு ஏறவென்றே கிளிஞ்சல்தன்னை நீரோடேயுவமண்ணுந்தன்னிலேபோட்டு
காட்டிட்டு அடுப்பேற்றி எரித்துவாங்கி கனபுடமாய்ப் போட்டெடுத்து தூளாய்ப்பண்ணே
762.
பண்ணியே திராவகத்தில் இதனைப்போட்டு பதறாமே மூன்றுநாள் கழிநதபின்னே
நண்ணியே கல்வத்தில் அரைத்துருட்டி நலமாக அகலிலிட்டு புடத்தைப்போடு
கண்ணியே ஐந்துதரம் திராவகத்தி லரைத்துக் கடுகியே புடமைந்து கடுகித்தீரு
திண்ணியே பொடியாக்கிப் பீங்கானில் வைத்து சிற்பம்போல் சாரமொரு கட்டிவாங்கே

## சாரக்கட்டுச்சுன்னம்

763.
வாங்கியொரு கலசத்தில் பொடிக்கீழிட்டு வாகான சாரமென்ற கட்டிவைத்து
தேங்கியே மேலுமிந்தப்பொடியைப் போட்டுச் சிறப்பாக மேல்மூடிசீலைசெய்து
தாங்கியே ஐந்தெருவிற் புடத்தைப்போடு தயங்காதே ஆறவிட்டு எடுத்துக்கொண்டு
ஓங்கியே பொடியெல்லாம் பொடித்துக்கொண்டு உத்யமனே முன்போல கட்டிவையே
764.
கட்டிவைத்து முன்போலே புடத்தைப்போடு காணப்பா ஏழுபுடம்போட்டுத்தீரு
அட்டிவைத்த தந்தம்போல் இருக்கும்பாரு ஆச்சரிய சாரத்தின்முடிவு சொல்லப்போகா
முட்டிவைத்து சாரத்தில் செயநீர் கோடிமுதல் அண்டகுருக்கோடி செந்தூரங்கோடி
பொட்டிவைத்து திறந்ததுபோல் வாதமாச்சு போக்கதிலே மெத்தவுண்டு புகட்டியாட்டே
765.
ஆடவேசாரத்தைக்கட்டியாக அதின்மேலே சவ்வீரபூரம்போட்டு
நீடவேபகழோடு சூதமைந்தும் நேரானவாய்நீரால் அரைத்துப்பூசி
கூடவேசண்ணாம்புக் குகையிலிட்டு கூசாதே கரியோட்டிலூதிவாங்கு
சூடவே நீராகும் பீங்கானில்வைத்து துடியாகப் பனியில்வைக்கச் செயநீராமே
766.
ஆமின்னஞ்செயநீரால் சொல்லக்கேளு ஆச்சரியஞ் சூதவித்தைக் கல்வத்திட்டு
வேமுன்னஞ்செயநீரால் அரைத்தரைத்து வெகுளாதே ரவிதனிலே காயப்போடு
தாமின்னம் இருபதுநாள் அரைத்தரைத்து சார்பாக ரவிதனிலே காயப்போடு
சேமின்னம் ஏழுசட்டைநீக்கிப்போடு சேர்ந்திருக்கும் சத்தானும் செய்திகேளே
767.
சேதிகள்தேங்காயின் குடுக்கையிலே வார்த்து சிறப்பாக மெழுகடைத்து
வைத்துக்கொண்டு வாதிகேள் ரவிமதியில் தகடுவாங்கி வளமான ரசம்தடவி
புடத்தைப்போடு பாதிகள் பதினாறுமாற்றுமாகும் பாசத்தில் வேதையுமாம் பாருபாரு
சோதிகேளிந்தரசம் தின்றால் காயஞ்சுறுக்காகச் சட்டைகக்கி வாலையாமே

## கெந்தகத்தயிலம்

768.
ஆமின்னங்கெந்தகத்தின் தயிலம்சொல்வேன் அப்பனேகெந்தகந்தான் பலமும்பத்து
காமின்னங்கற்றாழைக்குள்ளேவைத்து கடுஆவின்நெய்ப்பாலிற் சுத்திப்பண்ணி
தேமின்னங்கல்வத்திலிதனைப்போட்டுச் சிறப்பான குருக்த்திவிரையைவாங்கி
ஓமின்னமயிற்கொன்றை விரையினூடே உற்பனமாய்ச் சமனாக்கி வெங்காய்ச்சாறே
769.
சாற்றினாலரைத்தரைத்து வில்லைகட்டி சார்வாகப் பூப்புடத்தில் தயிலம்வாங்கு
தேற்றினால் தயிலம்விட்டு கெந்தகத்தைச் சிறப்பாக இருபதுநாள் ஆட்டுஆட்டு
பேற்றினால் துரிசிவெள்ளைப்பலந்தானொன்று பேராகக்கட்டியதோர்சாரமொன்று
காற்றினால் கட்டியதோர் உப்புமொன்று கலங்காதே கூடவிட்டு மூன்றுநாளாட்டே

770.
ஆட்டியபின் காசிபென்ற மேருவிலேபோட்டு அப்பனே மூக்கின்வாய்க்கதம்பைவைத்து
மூட்டியபின் கும்பித்துச்சட்டியிலேபோட்டு மூக்கின்வாய்ப்பிரம்பைவிட்டு மண்ணைக்கொட்டி
தீட்டியபின் அடுப்பேற்றி அடுப்புக்குள்ளே சிறப்பாகப் பீங்கானாம் பரணிவைத்து
ஒட்டியபின் கட்டியிலே எருவைப்போட்டு உத்தமனே தயிலமெல்லாம் எடுத்துவையே
771.
தயிலமெல்லாம் வீழ்வதற்கு மூன்றுபுடம்போடத் தங்காமலிறங்கிப்போகும் பீங்கானுள்ளே
அகிலமெல்லாமீந்தாலும் தயிலவிலைக்கொவ்வாது ஆச்சரியம்பரிமேலே பூசிக்காய்ச்சு
மயிலமெல்லாந் தங்கமதுசெம்பேயாகும் மாசற்றசெம்பொன்னும் நவலோகங்கோடி
கயிலமெல்லாமுன்கையிலே செம்பையீயக் கண்கொள்ளா வேதையுமாம் கண்டுபாரே

## கேசரத்தின்தயிலம்

772.
பாரப்பா கேசரத்தின்தயிலம்சொல்வேன் பரிவான கேசரந்தான் பலந்தானூறு
சேரப்பா இளவயதுரோமந்தன்னை சீயக்காய்க் கொதியிட்டுக் கழுவிப்போட்டு
சாரப்பா எள்ளுபோல் நறுக்கிக்கொண்டு சாகாமலெண்ணெய்தனில்தோய்த்து
சீரப்பா சட்டியிலே வறுத்துக்கொண்டு சிறப்பான கல்வத்திலிதனைப்போடே
773.
போடவே கெந்தகந்தான் பலமும்பத்து புகழான தாளகமும்பலமுமைந்து
நாடவே சிலையதுவும் பலமுமூன்று நஞ்சானவீரமது பலமும்ரண்டு
கூடவே கட்டியதோர் சாரமொன்று குறிப்பாகக் கட்டியதோர் கல்லுப்பொன்று
தேடவே துரிசுகுரு பலந்தானொன்று சிறப்பாகக்கூடவிட்டுத் திறமாயாட்டே
774.
ஆட்டுவது எருக்கம்பால் நாலுசாமம் அப்பனே மெழுகாகும்பதத்தில்வாங்கிப்
பூட்டுவது தெல்லுபோல் வில்லைகட்டி பேரான பூப்புடத்தில் தயிலம்வாங்கி
நாட்டுவது பரணியிலே அடைத்துநலமாக அரப்பொடிதான் பலமுமெட்டு
மூட்டுவது தயிலத்திற் பிசறிக்கொண்டு முயற்சியாய் காரமிட்டு உருக்கிடாயே

## அயச்செம்பு

775.
உருக்கிடவே ஐந்துதரந்தயிலத்தில்பிசறி உத்தமனே ரவிபோலே செம்புமாகும்
சொருக்கிடவே மதிதனிலே ஐம்பதுக்குஒன்று துடியாக மாற்றேழுங்காணும்காணும்
அருக்கிடவே தங்கமிட்டு உருக்கிக்கொண்டு ஆயென்றசூதமிட்டு கெந்தியிட்டு
பருக்கிடவே வானுகையில் செந்தூரித்தால் பதினாறுமாற்றாக விளங்கும்பாரே
776.
பாரின்னந்தாளகத்தின் செம்புசொல்வேன் பருகல்லும்சுண்ணாம்புச் சுட்டுக்கொண்டு
காரின்னந்தாளகத்தை கிளிபோற்கட்டுக் கல்சுண்ணங் கீழ்மேலும்பூசிநன்றாய்
வாரின்னம் வெந்நீரைவிட்டுநீற்று மறவாதேவிருபத்துவென்றுநீயும்
சேரின்னங் கூழ்ப்பாண்டங்காடியிலேபோட்டுத் திறமாக கொதிக்கவிட்டு இறக்கிடாயே

## தாளகம்

777.
இறக்கியே கல்வத்திற்சேரைப்போட்டு இதமானகுலாமல்லிச் சாற்றாலாட்டி
அறக்கியே யுலரவிட்டு ஐந்துநாளாட்டி ஆடுதின்னாப்பாலை சாற்நாலுசாமம்
மறுக்கியே சிறுகுட்டித் தக்காளிச்சாறு மைந்தனே யமுரியிலைச் சாற்றாலாட்டு
நறக்கியே எருக்கினுட பழுப்புச்சாறு நலமானவகத்தியுட பழுப்புச்சாறே
778.
பழுப்பான கெருகனுட கிழங்குசாறு பரிவான எருக்கினுட கிழங்குசாறு
கொழுப்பான வெள்ளாட்டு ரத்தத்தோடு கூரானமுசல்ரத்தம் கோழிரத்தம்
கொழுப்பான வெள்ளைமந்தாரைப்பூச்சாறு திறமான இந்ரிதமாங்கோபப்பூச்சி
நழுப்பான பூநாகம் நூறுபோட்டு நன்கரைத்து ஒவ்வொருநாள் உலரப்போடே
779.
உலர்ந்தபின்பு துரிசிபலம் நாலுபோடு உத்தமனே வெண்காரம் பலந்தான்மூன்று
அலர்ந்தபின்பு வெடியுப்பு பலந்தான்ரண்டு அப்பனே வீரமதுபலந்தானொன்று
கலந்தபின்பு சீனமதுபலந்தான்போடு கற்பூரசிலாசத்து பலந்தான்ரண்டு
குலந்தனக்குக் கோடாலி குடோரியொன்று கூசாதே கூடவிட்டு அரைத்திடாயே
780.
அரைத்திடவே யெலியாலம்பாலாலாட்டி அப்பனேமூன்றுநாள் அரைத்துப்பின்பு
நிரைத்திடவே தெல்லுபோல் வில்லைகட்டி நேராக சரவுலையில் வூதுவூது
துரைத்திடவே உருகியது சத்தாய்வீழும் சிதறாமலெடுத்தெல்லாம் கட்டைதானும்
புரைத்திடவே பின்பொருகாலுருக்கிப்பாரு பொன்போலாஞ்சத்தெல்லாம் எடுத்துக்கொள்ளே
781.
கொள்ளவே குகையில்வைத்து காரமிட்டு கூசாதே உருகியெல்லா மணியாய்வாங்கே
விள்ளவே நவலோகம் நூற்றுக்கொன்று மேவியகாசெடைதான் சத்தையீய
துள்ளவே பதினாறுமாற்றுமாகும் துடியான சத்திலே கிண்ணிவார்த்து
அள்ளவே சீலைசெய்து வானுலையில்வைத்து ஆதியாகும் சூதமிட்டு கொதிக்கவையே
782.
கொதிக்கையிலே கரூமத்தஞ்சாறுவாறு கூசாதே வெண்ணெய்ப்போல் வாருமட்டும்
விதிக்கையிலே வெண்ணெயெல்லாம் வழித்துக்கொண்டு மேலான குளிர்ந்தநீரில்போட்டு
மதிக்கையிலே ஆரையிலை கவசங்கட்டி வகையாக யீரஞ்சு புடத்தைப்போடு
துதிக்கையிலே மணியாலே சிவத்தைப்பண்ணு செனனமென்ற மூவேழுமோஷந்தானே
783.
தானென்ற மணியாலே செந்தூரம்பண்ணு சமத்தான குரபண்ணு களங்குபண்ணு
வானென்ற வெளிகடக்க சித்திபண்ணு மாசற்ற யோகசித்தி கெவுனசித்திபண்ணு
தேனென்ற வமுர்தமங்கே சித்திபண்ணு ஜெகஜால வார்த்தையெல்லாம் ஜகம்போலெண்ணு
கோனென்ற குரதேடிகூப்பிட்டாலே யென்பாளாயிதானே

## சாதிலிங்கவைப்பு

784.
தானென்ற சாதிலிங்கவைப்புகேளு சாற்றறிய சூதமது பலந்தானூறு
தேனென்ற கெந்தகந்தான் இருபத்தைந்து நேர்ப்பாக கெந்தகத்தை ஓட்டிவிட்டு
வானென்ற கணவில்வைத்து உருக்கிக்கொண்டு வரிசையாய்ச் சூதத்தை அதிலேபோட்டு
தானென்ற அயத்துடுப்பால் கிண்டிக்கிண்டுக் கறுப்பாகத்தூள்போலே ஆகும்பாரே

785.
ஆகுமப்பா கெந்தகத்தில் நாலத்தொன்று அசையாதே வெடியுப்புப்பொடித்துப்போடு
வாகுமப்பா செம்பாலேகுடம்போலான வகையாகவதற்குள்ளே தூளைப்போடு
ஏகுமப்பா அரைவாசி மட்டும்போடு எழிலான வானுகையின்மேலேவைத்து
போகுமப்பா தீயெரிப்பா யெட்டுநாள்தான் புகழான பதங்கித்து லிங்கமாமே
786.
ஆமப்பா பதங்கித்துப் பவளம்போலே அசையாதுமேல்நின்றததுதான் லிங்கம்
போமப்பா பாண்டமதுசெம்புத்தொட்டி புகழான அடியில்நின்றால் தீமுறுகலாச்சு
காமப்பா நடுவில்நின்றால் கார்முகிலுமாச்சு கடுகியிதில்மெழுகுசெய்யில் வேதையாகும்
சேமப்பா ஷானமுப்பத்திரண்டு சிறப்பானவைப்புக்கு நாலுமாச்சே
787.
வைப்பான நாகமென்ற பாஷானத்தை வகையாகசொல்லுகிறேன் வேதையாக
மெய்ப்பான நாகமதுபலந்தான்பத்து விரவியே இலுப்பைநெய்யில் சுத்திசெய்து
வைப்பான தகடுகட்டிப் புளியிலைபோல்நறுக்கி நயமானகூத்தனென்ற யிலையரைத்து
கைப்பான தகட்டுக்குக் கவசங்கட்டி கடுகியைந்து வெருவிலே புடத்தைப்போடே
788.
போட்டபின்பு யீரைந்து புடந்தானப்பா புகழான அயச்சட்டித்தனிலுருக்கி
நீட்டபின்பு குமரிவேர் பொடியாய்நறுக்கி நிற்வாகக் கூடவிட்டுஅயத்தால் கிண்டு
மூட்டபின்பு பனிரண்டுசாமந்தானு முத்தமனே வேர்போட்டுக்கிடைக்கிண்ட
மாட்டபின்பு மஞ்சள்நிறபற்பமாகும் மைந்தனேயிதைநிறுத்துக் கல்வத்திற்போடே
789.
போடவே நாகமென்ற தூள்தான்பத்து பகழாக சூதமதுபலந்தான்பத்து
நீடவே துரிசியது பலந்தானைந்து நேர்பான சூடனது பலந்தானைந்து
வாடவே வெண்சாரம் பலந்தானைந்து வரிசையாய்க் கெந்தியது பலமுமைந்து
தேடவே வெள்ளையது பலமுமூன்று சிறப்பான வீரமது பலந்தான்மூனே

## தீமுருகல்பாஷானம் கார்முகில்பாஷானம்

790.
மூணோடு தாளகமும் பலமுமூன்று முயற்சியாய்சிலையதுவும் பலமுமூன்று
தூனோடு விதுவெல்லாம் கல்வத்திட்டு துடியாகப்பொடிபண்ணி சூட்சுமங்கேளு
நாணாக்குமட்டி மாதளம்பூசாற்றில் அரைத்து எட்டுநாள்ரவியில்வைத்து
பூணோடுபொடிபண்ணி குப்பிக்கேற்றி புகழாக வானுகையில் வைத்திடாயே
791.
வைத்திட்டு தீயெரிப்பாய் பனிரண்டுசாமம் வாகான கமலம்போல்தீதைமூட்டு
கைத்திட்டு ஆறவிட்டுமூன்றுநாள் போடு சாதகமாய் ஆறியபின்னுடைத்துப்பாரு
மெய்த்திட்டு மேலேறிப் பதங்கிப்போகும் மூர்க்கமாம் பாஷானம் இந்திரனாம்
கைத்திட்ட விலாபக்கஞ் சோரமென்றநாமம் காணப்பா அடியில் நின்றால்நாகமாமே
792.
ஆமென்றபாஷானம் மூன்றதானும் அன்றெறித்தார் மன்மதனை ஈசன்தானும்
ஓமென்ற நெற்றிக்கண் சுவாலைக்கொக்கும் உத்தமனே சரக்குக்குக் காலகாலன்
போமென்ற வெகுதீரன் யெட்டியோடும் போனபின்பு கற்பகமாம் விருஷமப்பா
வேமென்ற காலனுண்ட கற்பமப்பா விரைந்துண்ண காயசித்தி மண்டலத்தில்தானே

793.
சித்தியாகும் சூதமென்ற பாஷானம்வைப்பு செய்யரிது சித்தருடநூலிலில்லை
பத்தியாம் பாஷானம் பணந்தானெண்பார் பரியாகப் பேச்சாச்சு வாதப்பேச்சு
முத்தியாம் சூதமென்ற பாஷானத்தை முன்னூற்றுக்கொன்றிடவே பத்தும்பத்தும்
வெத்தியாம் பாஷானம்பச்சைதன்னில்வேதை வெகுநூலில் ஆராய்ந்துசொன்னேன்காணே

## இந்திரகோபம் பூதபாஷானம்

794.
காணப்பா யெந்நூலில் ஒன்றுதப்பில் கடைகெட்டபோகரென்று சொல்லிக்காட்டு
பூணப்பா கைதப்பில் போக்குதப்பும் புத்தியண்டாய்ச் செய்திடிலோ ஒன்றும்பொய்யா
வீணப்பா ஒருதரந்தான் தப்பிற்றானால் மீளுமதைமூன்றுதரம் அறைத்துப்பாரு
தூணப்பாதுரும்பான வாறுபோல சொல்முறையைமறவாதே சூட்டிப்பாரே
795.
சூட்டியதோர் எந்நூலில்பாஷானங்கள் சுளுக்காகும்வேதைக்குப் பச்சைதன்னில்
பூட்டியதோர் பூட்டென்ன பாஷானத்தில் பிரித்திதற்குள் வேதையென்று சொன்னேனில்லை
காட்டியதோடு அடித்துடையில் புண்தனக்கு கண்மறையச் சீலையினால் மூடினாபோல்
மூட்டென்ன விதுதான்மைந்தா மூட்டாளே இம்மட்டும் அறிந்து ஆடே
796.
ஆடவே சூதமது பலந்தான்பத்து அத்திடைக்கு வெள்ளையென்ற பாஷானந்தான்
நீடவே கெந்தியது பலமுமைந்து நிலையான வெடியுப்புப் பலமுமூன்று
மகத்தான தாளகமும் பலமுரண்டு மூடவேசிலையதுவும் பலமுமொன்று
முயற்சியாய்க் கல்வத்திற்பொடியாய்ப் பண்ணே
797.
பொடிபண்ணித் தவசியென்ற முருங்கைசாறில் போக்கோடே மூன்றுநாளரைத்துமைபோல்
மூடிபண்ணி ரவியிலிட்டு மேருக்கேற்றி முயற்சியாய் வாலுகையில் மேலேவைத்து
அடிபண்ணி தீயெரிப்பாய் பனிரண்டுசாமம் ஆறவிட்டுராமாறு மகலிற்போடு
கெடிப்பண்ணி பனிரண்டு சாமமானால் கெடியாகக் குப்பியைத்தான் உடைத்துப்பாரே
798.
உடைத்திடவே மேலோடி பசுங்கித்துநின்றால் உத்தமனே சூதமென்றபாஷானமாச்சு
அடைத்திடவே அடியில்நின்ற பாஷானந்தான் அப்பனே நீலமென்ற பேருமாச்சு
குடைத்திடவே அடியில்நின்றால் காகபாஷானங்கூறிதுக்குள் கரைகண்டு சொல்லப்போனா
நடைத்திடவே சிவகாமி சொல்லக்கேட்டு நாதாக்கள் பதமறிய சொன்னேன்பாரே
799.
சொன்னதொரு சாத்திரபலங்களெல்லாஞ் சொற்பரிய மணித்தாய்க்கு குருவுமாச்சு
பன்னதொரு மனதிலுள்ள கருவையெல்லாம் பாடினேன் வெட்டவெளியாகத்தானும்
மன்னரொரு நாதாக்கள் நூலைப்பார்த்து மவுனமாய்வைத்ததெல்லாம் வெளியிற்போட்டார்
இன்னதொரு சாஸ்திரத்தைக்குள்ளேவைத்து இமுக்காகும் நூல்களையே வெளிவைத்தாரே
800
வைத்ததொரு சாஸ்திரத்தின்வழிதன்னை வகையாகச்சொல்லாமல்கருமறைத்துப்போட்டார்
மெய்த்ததொரு வீரமென்ற போக்குதன்னை வெளியாகசொல்ல்மல்சூத்திரமாய்சொன்னார்
தைத்ததொரு சரக்கான வைப்புதன்னைநலமாக ஒளித்துவிட்டால் வாதமெங்கேசெய்வார்
பைத்ததொரு வாதத்திலென்ன பாங்கான வழலையொரு வீரந்தானே

801.
தானென்ற வழலையது சுன்னமானால் சரக்கெல்லாம் கழண்டுசுன்னமாகும்
வேனென்றமகாவீரம் வாச்சுதென்றால் வேதையென்ற சொல்லுக்கு உறுதியாகும்
கானென்ற கல்லுப்பு கரியில்நீற்று கசமான சரக்கெல்லாம் ஊறல்போகும்
வேனென்ற மகாவீரம் வாய்க்காவிட்டால் வேதையென்ற சொல்லெல்லாம் விழலாய்போமே

குங்குமபாஷாணம்

**802.**
போமென்ற குங்குமபாஷாணவைப்பு காட்டுகிறேன்புத்தியில்லா புல்லருக்குங்காண
வாமென்ற சூதமதுபாஷாணம்பத்து அழகான குதிரைப்பல் பாஷாணம்பத்து
வேனென்ற வெண்காரபொறி பலந்தான்பத்து வெளுப்பான சீனத்தின்பொறிதானைந்து
தாமென்ற அன்னத்தின் பேதிபலமைந்து கடிதான கெந்தகமும் பலமுமைந்தே
**803.**
பலமான தாளகந்தான் சிலையுமானால் பாங்காக நிறுத்தியல்லோ கல்வத்திட்டு
குலமாகும் எலுமிச்சை பழசாறுவிட்டு குமட்டியே அரைத்து ஏழுநாள் ரவியிற்போட்டு
தலமாகும் காசிபென்ற மேருக்கேற்றி தளறாமல் வாலுகையின் மேலேவைத்து
நிலமாகும் பனிரண்டுசாமம் தீமூட்டி நிசமாகும் பதம்பார்த்து ஆறப்போடே
**804.**
ஆறவிட்டு உடைத்துப்பார் கட்டியாகுமப்பனே குங்குமத்தின் நிறமதாகும்
நீறவிட்ட சரக்குக்காலனாகும் நெடுங்காலமிருக்கவென்றால் வீசமிதையுண்ணு
தேறவிட்டு மண்டலத்திற் சட்டைகக்கும் சித்தர்கள் தானுண்டல்லோ காயசித்தியானார்
மீறவிட்டு மெழுகைபண்ணிக்கொண்டு விரவிதோர் சூதத்தில் போட்டுப்போடே
**805.**
போடவே ஆணையைப்போல் வீறிட்டுச்சாகும் போக்கோடே தங்கமிட்டு காகமிட்டு
ஆடவே கெந்தியிட்டு செந்தூரித்து ஆயிரத்துக்கொன்றிடவே னம்மைந்தாகும்
வாடவே மயங்காமல் சரக்குவைப்பு ஒவ்வொன்றாய் பார்த்துத்தேறு
தேடவே காயத்தை சுத்திபண்ணு ஜெகச்சாலத்துன்மார்க்கச் சட்டைபோக்கே

வைணபாஷாணம்

**806.**
போக்கான வைணமென்ற பாஷாணத்தை பொல்லாதவாதிக்குக் காட்டவேண்டாம்
தேக்கான கெதினாலென்றுகேட்கில் ஜெகச்சாலமயக்கத்தில் சிக்கிக்கொண்டு
சோக்கான பெண்ணாசைதனிலுழன்று நோயெத்திக்குடிகெடுத்தால் நுணக்கமாகி
தாக்கான லோகத்தோர் குடிகெடுத்து சங்கியாதேயிருப்பான் சண்டிதானே
**807.**
தானென்ற மனதையுற்றுப் பார்த்தானால் சண்டான கோபத்தைநிறுத்தமாட்டார்
ஊனென்ற சுகத்தையல்லோ இச்சித்துக்கொண்டு ஊற்றகின்ற சயயோகத்தாலேகெட்டு
வானென்ற பொருள் தேடமாட்டார் மாண்பர்மகத்தான அறுதலத்தின் தரிசனையைப்பாரார்
மானென்ற ஞானவெள்ளமுண்டுகொண்டு பதறாமலிருக்கனிபார் மூடர்தாமே

808.
தானென்ற வெடியுப்பு பலந்தானூறு சாதகமாய்ப் பாண்டத்திற்போட்டுப்பின்பு
கானென்ற காடியொடு எலுமிச்சை பழத்தால்கலந்துகொண்டு சமனாக நாலு
பானென்ற சாறுவிட்டு கரையக்காய்ச்சி பக்குவமாய் வடிகட்டி பதத்தில்காய்ச்சி
வானென்ற ஐந்துதரம் காச்சிக்கொண்டு மார்க்கமாய் ரவியுலர்த்தி பரம்பாய்வையே
809.
பிரம்பான பூநீறுபலந்தானூறு புளிப்பான காடியொடு எலுமிச்சம்பழசாறு கூட்டி
திறமான தெளிவிருந்து உப்பாய்க்காய்ச்சி சேர்ந்துநின்ற உப்பதனை முன்போல்கரைத்து
அரப்பான ஒருநிரைக்கு நாலுநிரைதண்ணீர் அரட்டையாய்விடுகாதே ஐந்துதரங்காச்சி
உரப்பான உப்பெடுத்து ரவியில்வைத்து உத்தமனே கல்லுப்பு பலந்தானூறே
810.
நூறோடு பழச்சாறு புளித்தக்காடி நகர்ந்துநின்ற நாநூறு பலந்தான்வார்த்து
காறோடு கொதிக்கவைத்துக் காய்ந்தபின்பு கலங்காமல் வடிகட்டியுப்பாய்க்காச்சு
வீறோடு ஐந்துதரங்காச்சிகாச்சி விளங்கியதோர் ரவியிலிட்டு உப்புபலம் பத்துநிறுத்து
நாறோடு காச்சிதோர் வெடியுப்புப்பார்த்து தாழ்ச்சியில்லா பூநீறு உப்புபத்தே
811.
உப்போடு வெள்ளையென்ற பாஷாணம்பத்து உயர்ந்துநின்ற சூதமது பலந்தான்பத்து
அப்போடு கெந்தமது பலமும்பப்து ஆதியென்ற துரிசியது பலமும்பத்து
வைப்போடு தாளகமும் பலமுமைந்து மாசற்ற தாளகமுஞ்சிலையதுவுஞ்சியதுவுமூணே
812.
மூணோடு இதுவெல்லாம் கல்வத்திட்டு முப்புறத்தையெரித்த குப்பைமேனிசாறு
பூணோடு ஏழுநாளரைத்துமைபோல் பொடியாக்கி காசிபென்ற மேருக்கேற்றி
வாணோடு வானுகையில் மேலேவைத்து மறவாதே தீமூட்டிகமலம்போல
நுணோடு பனிரண்டு சாமமானால் துடியான வைனமென்ற பாஷாணமாச்சே
813.
ஆச்சென்ற கொடுஞ்சிங்கித்தயிலம்சொல்வேன் ஆதளையும் வாலுமுலை புரசுருட்டி
நீச்சென்ற கஞ்சாவூமத்தையுங்கு நெடுதான குருக்கத்தி அழிஞ்சில்புன்னை
வாச்சென்ற தாளையொடு வானம்வேம்பு வகையான நீர்வெட்டி சமூதைமுன்னி
காச்சென்ற பல்லைந்தும் விரையைவாங்கி கணக்காக படியொன்று அளந்துபோடே
814.
போட்டெல்லாங்கெருடனுடகிழங்குசாற்றில் புகழாகவூறவைத்து மூன்றுநாள்காண்
நூட்டிதெல்லாம் கல்வத்திலிட்டுயாட்டி அதிற்போடு மருந்தினைத்தான் அறையக்கேளு
நீட்டிதெல்லாம் அரிதாரஞ்சிலையுங்கெந்தி நேரானவெடியுப்பு சீனஞ்சூடன்
பூட்டிதெல்லாம் சாம்பிரானிச் சாரம்வீரம் புகழ்ந்த கருங்குங்கிலியப்பூநீர்தானே
815.
தானென்ற துரிசியொடு அன்னபேதி சாதகமாய் வகைக்குரண்டு பலந்தான்போடு
கானென்ற முன்மருந்தோடொக்கப்போட்டு கலந்தரைப்பாய் கெருடனுடகிழங்குசாற்றில்
தேனென்ற எட்டுநாள் மெழுகுபோலாட்டி தெல்லுபோல் வில்லைபண்ணியுலரப்போடு
பானென்ற பூப்புடத்தில் தயிலம்வாங்கி பாச்சியெல்லாம் பரணிதனில் வைத்திடாயே

816.
அடைத்திட்ட தயிலத்தில் துரிசிவெள்ளை அப்பனேபலமொன்றுநிறத்திக்கொண்டு
கிடைத்திட்ட தயிலத்தில் மத்தித்தப்பா கெடியான லிங்கத்திற்சுருக்குபோட்டு
மடைத்திட்ட லிங்கமது மெழுகுமாகும் பாங்கான நவலோகம் வேதையாகும்
முடைத்திட்ட மெழுகாகும் பரிசினத்தில் மூதண்டவேதையுமாங்கண்டுபாரே

## சூதக்கட்டு

817.
பாரென்ற சூதமொரு பலந்தானெட்டு பாய்ச்சியல்லோ கல்வத்திலிட்டுநீயும்
வாவென்ற தயிலமது ஏருதுளிதான்குத்தி அரைத்திடவே வெண்ணெயைப்போலாகும்பாரு
காரென்ற கிளிக்கட்டிச் சூடன்தீயில் கலங்காதே இருநாழிகாட்டிபின்பு
சீரென்ற கரண்டியிலே எண்ணெய்குத்தி திறமாகவுருக்கிடவே மணியுமாமே
818.
ஆமிந்த மணிதனக்கு சாரணையைச்செய்ய அண்டரண்ட பதமளவும் போகலாகும்
போமிந்த மணிதனையே வாயில்வைத்துப் புகழான உமிநீரை உள்ளேகொள்ள
சாமிந்த சடந்தானும் சட்டைகக்கி சந்திரர்கள் சூரியர்கள்போலாந்தேகம்
தாமிந்தபடியண்டாம் பாட்டருண்டார் நாதாக்களிப்படியே உண்டிட்டாரே
819.
உண்டிட்ட மணிதனுக்கு நாலுக்கொன்று உத்தமனே தங்கமிட்டு நாகமிட்டு
மண்டிட்ட காரமிட்டு உருக்கிக்கொண்டு பாய்ச்சிதற்குச் சரியாக கெந்திகூட்டி
கண்டிட்ட கல்வத்திற் பொடித்துக்கொண்டு கலங்காதே குலாமல்லிச்சாற்றாலாட்டி
மண்டிட்ட மூன்றுநாள் அரைத்துப்பின்பு மயங்காதே காசிபென்ற மேருக்கேற்றே
820.
ஏற்றியல்லோ முத்தீயும் மூன்றுநாள்தான் இதமாக ஆறவிட்டு எடுத்துப்பாரு
போற்றியல்லோ வருணனைப்போல் சிவந்துநிற்கும் பொலிவாகப் பணவிடைதான் தேனிலுண்ணு
சாற்றியல்லோ மண்டலந்தான் தப்பாதுண்ணு சட்டைகக்கி சந்திரர்போல்முகமுமாகும்
வாற்றியல்லோ கெவுனவழி சுறுக்குமெத்த ஆச்சரியம் சிங்கியென்ற தயிலந்தானே

## துவாதசத்தின்தயிலம்

821.
தானென்ற துவாதசத்தின் தயிலஞ்சொல்வேன் சாதகமாய்ச் சேக்கொட்டைநீர் வெட்டிமுந்து
தேனென்ற குருக்கத்தி வாலுமுலைவித்து சிறப்பான குமட்டிவித்தினொடு
வேனென்ற வாலுமுலையரிசியொடு விரும்பியே சமனிடையாய்த் தூக்கிக்கொண்டு
பானென்ற பெருங்காட்டாமணக்குவித்து பாகரிய குன்றிமணி யழுஞ்சில்வித்தே
822.
வித்தோடு பிராயமணி பனிரண்டுகேளு விளங்கியதோர் படியொன்று அளந்துபோட்டு
புத்தோடு செங்கனார் கிழங்குசாற்றில் பொலிவாகவூறவைத்து மூன்றுநாள்தான்
மத்தோடு கல்வத்திலரைத்துமைபோல பகாரியகந்தகமுந்தாளகமுஞ்சிலையும்
கொத்தோடு கைவீரங்கெவுரிவெள்ளை கொடியதொரு பூநீறுஞ்சவட்டு உப்பே

823.
உப்பான கல்லுப்பு வெடியுப்புச்சீனம் உத்தமனே துரிசியொடு சூடனிந்து
விப்பான முன்மருந்தோ டொக்கப்போட்டு விரவியரையெட்டுநாள் கிழங்குசாற்றில்
அப்பாநீதெல்லுபோல் வில்லைபண்ணி பாத்தியாம் பூப்புடத்தில் தயிலம்வாங்கி
செப்பான தீயிட்டு துரிசுநீரிட்டு சீரானசரக்குதனில் சருக்குபோடே
824.
சுருக்கிடுவ தெதிலென்றால் லிங்கம்வெள்ளை துடியான மாகல்தேவிசீலையும்வீரம்
முருக்கிட்ட கெவுரியொடு கெந்திசூதம் முனையான நாகமொடு காரீயம்வங்கம்
நருக்கிட்ட துரிசியொடு செம்புகாரம் நலமான சிங்கியொடு மெழுகுமாகும்
சுருக்கிடுவ தொவ்வொன்றில் வேதைகோடி கரையில்லை கணக்கில்லை கலந்துபாரே
825.
பாரப்பா சதமுகமாங் குருவிநாட்டு பண்பேதிசெண்பேதி பென்சத்தபேதி
தாரப்பா தூமமொடு சந்தானபேதி தயங்காத பரிசமொடு லேபனபேதி
சேரப்பா தீபமொடு எட்டுமாகும் சித்தருட நூல்களிலேயில்லையில்லை
பாரப்பா யிதன்பெருமை அறியப்போறார் அரனறிவார் யாத்தாளறிந்தவாறே
826.
வாறானநீறு பதக்குவாரி மாட்டிதற்குள் எட்டிலொன்று கல்லுச்சுன்னம்
பேறான கழுதைமூத்திரத்தில் பிசைந்துநன்றாய் கலக்கிவைத்து மூன்றுநாள்தான்
தாறானநாள்தெளிவைவாங்கி தயங்காத கல்லுப்புச்சூடன்ரண்டு
காறானவகைக்குரண்டு பலமேதூக்கி அப்பனே பொடிபண்ணி தெளிவில்போடே
827.
போட்டுமே யடுப்பேற்றி யெரித்து உப்பாய் புகழான பதத்தெடுத்து கல்வத்திட்டு
மீட்டுமே மூன்றுநாளரைத்தபின்பு மெழுகாகும்பதத்தெடுத்து வில்லைதட்டி
தீட்டுமே மூன்றுதரம் வில்லைதட்டி நிட்சயமாய்ச் சீனமொடு கல்லுப்போடு
தீட்டுமே ரவிதனிலே காயப்போடு செம்பில்வைத்து சீலைசெய்து புடத்தைப்போடே
828.
புடம்போட்டு ஐந்தெருவில் ஆறவிட்டுவாங்கி பேரானமுன்போலரைத்துக்கட்டி
கடம்போட்டு மூன்றுதரம் போட்டுத்தீரு கசகாமல் வழலையென்ற குருதானைந்து
திடம்போடு செம்புக்குள் கொடுத்துக்கொண்டு திறமான நாயுருவி சுட்டசாம்பல் புடம்போடு
பதக்கெடுத்து யானைநீர்விட்டு அதட்டிநன்றாய் கலக்கிவைத்துத் தெளிவாவாங்கே
829.
வாங்கியே அண்டோடு சுண்ணம்பண்ணி வலமாகப் பலம்ரண்டு கூடப்போட்டு
தேங்கியே இந்துவுப்பு பச்சைபூரம் சிறக்கவே ரண்டுபலம் கல்வத்திட்டு
தாங்கியே அரைத்துமைபோல் தெளிவிலிட்டு சார்பாக அடுப்பேற்றி யெரித்துவுப்பாய்ப்
பாங்கியே கல்வத்தில் விட்டுமாட்டிப் பதமாக மூன்றுநாள் ஆட்டிடாயே
830.
ஆட்டியே மூன்றுபுடந்தீர்ந்தபின்பு அசங்காமல் வெவ்வேறே எடுத்துவைத்து
தேட்டியே பூரமென்றது இதுதானாச்சு ஜெகமெல்லாம் மெச்சுமிந்த குருதானாட்டு
தட்டியே யெருக்குமிதைச் சமூலஞ்சுட்டு தயங்காமல் பதத்தெடுத்துக் குதிரைநீரில்
மட்டியே இருதூணி நீரிற்போட்டு மறவாமல் மூன்றுநாள் கலக்கிவையே

831.
கலந்தபின்பு தெளிவிறுத்து பாண்டத்திலிட்டு மறவாமல் சங்குநீர்யிரண்டுபலம்போட்டு
நைந்தபின்பு கடல்நுரையும் சாரம்ரண்டு நலமாக பலம்ரண்டும் கல்வத்திட்டு
கைத்தபின்பு பொடிபண்ணி குழம்பில்போட்டு கலங்காதே வுப்பானபதத்தில்வாங்கி
மொய்த்தபின்பு முன்னீரால் அரைத்துக்கட்டி மூன்றுபுடம்போட்டெடுத்து பதனம்பண்ணே
832.
பண்ணியபின் சாரமென்ற குருதானாச்சு பகர்சதுரக்கள்ளிதனைச் சுட்டசாம்பல்
கண்ணியதோர் பதக்கெடுத்துப் பாண்டத்திலிட்டு நலமான வெள்ளாட்டு முரிதானும்
கண்ணமதாலி தூணியமுரிவிட்டு கலக்கிவைத்து தெளிவிறுத்தி கிளிஞ்சிற்சுண்ணம்
எண்ணியதாம் ரண்டுபலம் கூடவிட்டு இதமாக அடுப்பேற்றி எரித்திடாயே
833.
எரித்திடவே குறுகியது குழம்புபோலாம் எளிதான வெண்காரம் துரிசிரண்டு
மரித்திடவே பொடியாக்கி குழப்பிவிட்டு வளமாகக் காய்ச்சியதை வுப்பாய்ப்பண்ணி
தரித்திடவே முன்போல புடத்தைப்போடு தயங்காதே எரித்துவைத்து மாட்டக்கேளு
குரித்திடவே துரிசியென்ற குருதானாச்சு கொடுவேலி சமூலமே சாம்பலாச்சு
834.
சாம்பலைத்தான் பதக்கெடுத்து பாண்டத்திட்டு சார்பான பசுவின் சகாசல்த்திலிட்டு
சாம்பலைத்தான்கரைத்துவைத்து மூன்றுநாள்தான்வகையாகதெளிவிறுத்தி
நத்தைச்சுன்னம்
சாம்பலைத்தான் ரண்டுபங்கு கூடப்போட்டு கலர்குழம்பும் பக்குவத்தில் வெடியுப்புப்போடு
வேம்பிலைதான் வீரமதுபலமும்ரண்டு விரவிநன்றாய்ப்பொடிபண்ணி லுழம்பில்போடே
835.
போட்டபின்பு அடுப்பேற்றி எரிக்கவுப்பாம் புகழாகமுன்னீரால் அரைத்துதட்டி
நாட்டபின்பு முன்போல மூன்றுபுடம்போட்டு நலமாக எடுத்துவைத்து செம்புக்குள்ளே
ஆட்டபின்பு வீரனென்ற குருதானாச்சு அப்பப்பா இதன்வேகம் அண்டரண்டமீறும்
நாட்டபின்பு கொடிக்கள்ளி சாம்பலாக நலமாக மனிதனுட வமுரியிலேபோடே
836.
போட்டுமே யகட்டிநன்றாய் கலக்கிவைத்துப் புகழாக தெளிவிறுத்தி அடுப்பிலேற்றி
வாட்டுமே நாகமாம் வண்டுசுட்டு மருவியதே சுண்ணாம்பாய் ரண்டுபலம்போடு
கேட்டுமே குழம்பான பதத்தில்வாங்கி சிறப்பான வெள்ளையொடு சீனம்ரண்டு
ஆட்டுமே பொடிபண்ணி குழம்பில்போட்டு அடுப்பேற்றி எரித்தந்த வுப்பைவாங்கே
837.
வாங்கியே ஊமையென்ற சிப்பிதன்னை வகையாகச்சுத்திபண்ணி சுண்ணாம்பாக்கி
தேங்கியே ரண்டுபலம் நிறுத்துப்போட்டு சிறப்பாக வடுப்பேற்றி குழம்பாய்க்காய்ச்சி
ஓங்கியே தாளகமும் வளகிலுப்பு ஒக்கவேபொடிபண்ணி ரண்டுபலம்போட்டு
ஏங்கியே வுப்பாகக்காய்ச்சிக்கொண்டு எடுத்தரைத்துமுன்போலே புடத்தைப்போடே
838.
போடென்ற வமுரிசுட்டுச் சாம்பலாக்கி புகழாகப்பதங்கலந்து பாண்டத்திற்போடு
நாடென்ற கஙலில்நிற்கும் சிவந்திருந்த சொரியை நலமாக எடுத்துவந்து பாண்டத்துள்ளே
ஊனென்ன வுப்பிடவும் தண்ணீராகும் உத்தமனே இருதூணி நீரைவிட்டு
ஆடென்ற மூன்றுநாள் கழிந்தபின்பு அப்படியே தெளிவிருத்திப் பாண்டத்தில்வாங்கே

839.
வாங்கும்போ தடுப்பேற்றி யெரிக்கும்போது வளமான நன்டோடு சுன்னம்பண்ணி
தாங்கும்பேரண்டு பலங்கூடப்போட்டு தயங்காதே யடுப்பேற்றி யெரிப்பாயானால்
ஓங்குமப்போ குழம்பான பதத்தைப்பார்த்து உற்றுநின்ற சரக்கையினி சொல்லக்கேளு
தூங்குமப்போ சூதமிரண்டு பலத்தைப்போடு துடியாக கெந்தியுப்பு ரெண்டுபலம்போடே
840.
போட்டெல்லாம் அடுப்பேற்றி உப்பாய்க்காச்சி பொலிவான பின்பெடுத்து கல்வத்திட்டு
மூட்டெல்லாம் முந்நீரால் அரைத்துக்கட்டி மூன்றுபுடம்போட்டெடுத்து வைத்துக்கொள்வாய்
ஆட்டெல்லாஞ் சூதத்திலாட்டு ஆட்டு அண்டபகிரண்டமுதல் வெந்துநீரும்
காட்டெல்லாம் வாழையுட சருகுசுட்டு காரியமாய்பதக்களந்து பாண்டத்திற்போடே
841.
போட்டுமே வாழையுடகிழங்குசாற்றில் புகழாகத்தெளிவிறுத்து அடுப்பில்வைத்து
ஊட்டுமேசுண்ணாம்பு சொல்லக்கேளு உயர்ந்தவாங்கூமச்சி சுண்ணம்பண்ணி
நாட்டுமே பலம்ரண்டு நிறுத்துப்போட்டு நயமான குழம்பாகும் பதத்திற்கேளும்
ஆட்டியே அன்னமென்றபேதியோடு அசையாதலிங்கமது ரண்டுந்தூக்கி
பூட்டியே பொடிபண்ணி குழம்பிற்போட்டு புரட்டியெல்லாம் வாங்கியல்லோ கல்வத்தாட்டே
842.
ஆட்டியே முன்போல மூன்றுபுடம்போட்டு அயச்சிமிழி லெடுத்துவைத்துப்பதனமாகப்
பூட்டியே தெர்ப்பைசுட்டு சாம்பலாக்கி புகழாக மூன்றுபடி பாண்டத்திற்போட்டு
மூட்டியே கள்ளென்ற காடிதானும் முசியாமல் இருதூணிவிட்டுப்பின்பு
வாட்டியே மூன்றுநாள் கலக்கிவைத்து மறவாதே தெளிவிறுத்தி அடுப்பிற்காய்ச்சே
843.
காய்ச்சியே குழம்பானபக்குவத்தில் கலந்திடயநீ கெருடபட்சி கன்னம்ரண்டு
பாய்ச்சியே குக்குடவெண்மலமும்ரண்டு பகரறிய கெந்தகமும் பலமும்ரண்டு
தாய்ச்சியே பொடிபண்ணி குழம்பிற்போட்டு சார்பாக அடுப்பெரித்து வுப்புவாங்கு
முயற்சியே முன்போலே வரைத்துக்கட்டி முன்றுபுடம்போட்டெடுத்து பதனம்பண்ணே
844.
பண்ணியபின் சதமுகமாம் குருவுமாச்சு பணவிடைதான் பத்துமெடுத்தொன்றாய்க்கூட்டி
ஒண்ணிப்பின் கல்வத்தில் முன்னீராலாட்டி உத்தமனே செப்புக்குளெடுத்து
நண்ணியபின் மேல்மூடிசீலைசெய்து நலமாக வஞ்செருவிற் புடத்தைப்போடு
எண்ணியபின் ஆறவிட்டு எடுத்துக்கொண்டு இதமான பொற்சிமிளிற் பதனம்பண்ணே
845.
பண்ணயதோர் குருவெடுத்து விராலிக்கிட்டுப் பரிவாகச் சாறெடுத்து அயச்சட்டிவார்த்து
ஒண்ணியதோர் நல்லகொழுக்கரியிலூதி உத்தமனே காந்தமதிற் காட்டித்தோய்ப்பாய்
விண்ணியதோர் கொழுக்காய்ச்சி தோய்க்கவிண்டுவிண்ணு அகரதரால்ப்பொருமிவிழும்
நண்ணியதோர் சாதெல்லாம் அளற்றத்தோய்ந்து நலமான அகரெல்லாம் வாரிக்கொள்ளே
846.
வாரியேயெருங்காட்டாமணக்கி னெண்ணெய் வார்த்தல்லோ வெண்காரஞ் சரியாய்க்கூட்டி
நாரியே குகையிலிட்டு மூன்றுதரமுருக்க நலமான ஈயம்போற் சவளையாகும்
ஏரியே உடைந்ததுபோல் வாதவெள்ளம் இரைக்கவேதுலையாது அயத்தூள்வித்தை
வாரியே பொங்கையிலே சதமுட்கொள்ளு மகத்தான அயமுருக்கில் கொல்லுந்தானே

847.
தானென்ற நாகத்தைப் பதையாமற்கொல்லும் சமுசயங்களெண்ணாதே சகலமுமுட்கொள்ளும்
வானென்ற சூதமது கட்டிப்போகும் மாசற்ற அயனாகமாட்டி ஆட்டு
தேனென்ற சிவகாமி சொன்னமார்க்கம் செப்பரிய நாதர்கள் சொல்லும்வித்தை
பானென்ற செந்தூரங்களங்கு செய்யில் பரிவாகவாயிரத்துக்கோடும்பாரே
848.
ஓடுமே அண்டத்தை பணம்போல்போற்று உத்தமனே காசெடைதான் குருவைப்போடு
வாடுமே செந்துருக்க மேலேவைத்து மாசற்ற ரவிதனிலே சாமம்வைக்கத்
தேடுமே மெழுகெல்லாம் மெழுகாய்போகும் சேர்ந்த மூவாயிரத்துக்கொன்றேபோடும்
பாடுமே வீணையைப்போல் மெழுகுகொள்ள பரிவான அண்டரதினாண்மைதானே
849.
அண்டவித்தை யாருக்காம் சிவயோகிக்காம் ஆத்தாளப்பூசித்தால் மிக்காகும்
பிண்டவித்தை மும்மூலயோகிக்காகும் பேரான அசையையுட மூலிக்கொக்கும்
வண்டவித்தை பொல்லாதது ரோகிக்கெய்து மகத்தான வேதாந்த ரிஷிகள்சித்தர்
கண்டவித்தை மனதடக்கி யூமையாவார் காரணமாம் சீஷருக்குப் போதிப்பாரே
850.
பாரென்ற குருவெடுத்து காசெடைதான்தூக்கிப் பரிவான சதுரகள்ளிப்பாலிற்போட்டு
காரென்ற சாமத்தில் சுத்தசலமாகும் கல்வத்தில்சூதம்விட்டு சுத்திபண்ணிப்
பாரென்ற அயச்சட்டிக்குள்ளே விட்டுப் பதறாமலொருசாமம் சுருக்குபோட
கோனென்ற யிட்டிளிபோல் கட்டியாகும் கூப்பிட்டால் ஏனென்னும் வாதந்தானே
851.
வாதந்தான் வேண்டுமென்றால் சூதத்தாட்டு மகத்தான அஷ்டகர்மமெட்டுமாகும்
காதந்தான் கோடியது நிமைக்குமுன்னே கலந்தோடிப்புக்கிவரு மணியினோசை
வேதந்தான் திடத்துமே முடிவுக்கொக்கு மேவியதோர் சிலம்பொலியில் நாதங்கேட்கும்
நீதந்தான் குகத்துக்கடுத்தவாறு நிமிஷத்திற்காயசித்தி கெவுனசித்தியாமே
852.
ஆமிந்தமணிநின்று வுருகும்போது அந்திடைக்குத் தங்கமிட்டு ஆட்டுஆட்டு
சேமிந்தகெந்தகத்தை ரெட்டுயிட்டு சிறப்பான பொற்றலையின் சாற்றாலாட்டி
போமிந்தசரக்கதனைக் குப்பியில்வைத்துப் புகழாக சீலைமண்வலுவாய்ச்செய்து
ஓமிந்தகாசிபென்ற மேருக்கேற்றி உற்பனமாம் வானுகையின் மேலேவையே
853.
வைக்கவே பனிரண்டுசாமந்தீயை மறவாதே முத்தீயு மாட்டுமாட்டு
வைக்கவே தாளம்பூ நிறத்தைபோலாம் சார்பாகச் சிலாகிட்டுக் கிண்டிப்பாரு
உய்க்கவே நவலோக மாயிரத்துக்கொன்று உத்தமனே பதினாறுமாற்றுமாகும்
மொய்க்கவே செந்தூரங்குன்றியுண்ணு மேனியுமே யருணன்போலாகுந்தானே
854.
தானென்ற வங்காளப் பச்சைவைப்பு சாதகமாய்ச் சொல்லுகிறேன் மாணாக்கானே
ஊவென்ற செம்பான அரப்பொடிதான்பத்து வுத்தமனே துரிசிபத்து வெடியுப்புரண்டு
வானென்ற எலுமிச்சம்பழச்சார்விட்டு மருவமேமத்தித்து கல்வத்திட்டு
தேனென்ற குப்பியிலே மூன்றுதினங்கள் புதைத்து திறமாகவெடுத்துப்பார் பச்சையாமே

855.
ஆமப்பாசெம்புதனை சுத்திபண்ண அறையுறேன் கருங்குன்றிக் கொள்ளிலையின்சாறு
வாமப்பாகல்லுருவி நொச்சியொடு வகைநாளுமிடித்துநன்றாய் பழச்சார்விட்டு
காமப்பாகுன்றிமணி யரைத்துப்போட்டு கலக்கியொன்றாய்மத்தித்து யதிற்குடசாய்ப்பாய்
சேமப்பாவேழுதரம் உருக்கிசாய்க்கச் செம்பினுடவூறலெல்லாம் கழன்றுபோமே
856.
போகவேயிச்செம்பில் கிண்ணிபண்ணு புகழானசெங்கொட்டை நீர்வெட்டிமுத்து
வேகவேவெளிக்காட்டா மணர்குவித்து விரைந்தவேர் வாழைவித்து சரியாய்கூட்டி
சாகவேதுரிசியொன்று சாரமொன்று சாதகமாய்க் கல்லுப்பு வெடியுப்பொன்று
ஏகவேயுரலிலிட்டு இடித்திதெல்லாம் இதமான கார்த்திகையின் கிழங்குசாறே
857.
சாற்றினால் மூன்றுநாளரைத்துமைபோல் சந்திச்சு பில்லைதட்டி யுலரப்போடு
பேற்றினால் பூப்புடத்தில் தயிலம்வாங்கி பீங்கானாம் பரணிலடைத்துவைத்து
வாற்றினால் பதங்கமொன்று சொல்வேன்யானும் வகையான கல்லுப்பு வெடியுப்புசீனம்
தேற்றினால் துரிசியொடு சாரந்தானும் சிறப்பாக ஒவ்வொருகாசெடைதான்தூக்கே
858.
தூக்குவது அரிதாரஞ் சிலையுங்கெந்தி துடியானவெள்ளையொடு கெவுரிலிங்கம்
ஆக்குமது கடல்நுரையும் வீரந்தொட்டி அழகான குதிரைப்பல் அன்னபேதி
தேக்குவது பூநீறுத்தியானமாகும் சிறப்பான வெண்காரங்காந்தஞ்சிங்கி
நீக்குவது அப்பிரேகம் ராசவந்தாம் நேரான நிமிளையொடு பொன்னம்பர்தானே
859.
தானான அரப்பொடியும் நாகம்வங்கம் சார்பான காரீயம்வெங்கலத்தின் பொடியும்
தேனான வகைக்கொரு காசெடைதான்தூக்கி சிறப்பாக முப்பத்திலொன்றுமாச்சு
வானான சூதமது முப்பத்தொன்று வகையெல்லாம் கல்வத்திற்பொடித்துப்போட்டு
தேனான தயிலத்தைக் குத்தியாட்டி குறிப்பாக ஏழுதரமரைத்துலர்த்தே
860.
உலர்த்தியே யிரும்பாலே யுள்ளங்கைபோல் உத்தமனே சாகச்சட்டிபண்ணி
மலர்த்தியே வரைவிட்டு செம்புகிண்ணி மருவவே வதைக்குள்ளே வழக்கம்பார்த்து
அலர்த்தியே சட்டியிலே வருந்துவைத்து அதன்மேலேகிண்ணிவைத்து பொருந்தப்பார்த்து
சிலர்த்தியே சத்துக்குச்சீலை செய்யுந்திறமையாய்த் தான்வரிசை செப்புவேனே
861.
செப்பவேசெம்பினுட அரப்பொடியுங்கடுக்காய் திறமான இரும்பினுட அரப்பொடியுங்கூட்டி
அப்பவேசெம்புநீறு மடலானகுருந்தக்கல்மீனினெட்டி
நப்பவே வெண்கருவு மத்திப்பாகும் நலமாக இதில்விட்டி இடித்துநைய
உப்பவே மெழுகுபோல் பதமாய்ப்பண்ணி உத்தமனே சந்துக்குளடைத்திடாயே
862.
அரைத்திட்ட செம்புபோல் கவசம்பண்ணி அசகாமல் பதனமாய்ச் சீலைசெய்து
உடைத்திட்டு முக்கவரில் சட்டிவைத்து உற்பனமாம் இலுப்பைநெய்யில் விளக்குவைத்து
படைத்திட்டு அங்குட்டப் பருமமாகப் பக்கத்தில் நின்றதிரி விளக்கையேற்றி
கடைத்திட்டு மூன்றுநாள் அவியாமலெடுத்து கைகண்டபதங்கமது ஏறும்பாரே

863.
ஏறியதோர் பதங்கமெல்லாம் வழித்தெடுத்து இதமானவப்பிரேக நவநீதம்பண்ணி
கூறியதோர் வெண்கருவாலரைத்துவாங்கி குகைசெய்து மேல்மூடிரண்டுசெய்து
மாறியதோர் பதங்கமதையுள்ளேவைத்து வகையாக மேல்மூடிச்சீலைசெய்து
தேரியதோர் செகபுடத்தில் போட்டெடுத்துச் சிறப்பாக மருந்தெல்லாம் வாங்கிக்கொள்ளே
864.
வாங்கியே குகையிலிட்டு காரம்வைத்து வளமாகயுருக்கியொரு மணியால்வாங்கி
தாங்கியே எடுத்துப்பார் முத்துப்போலத் தவளம்போல் சூதமதுயிருக்கும்பாரு
ஏங்கியே ஆச்சுதென்று மயங்கவேண்டாம் இயல்பாக கெந்தியிட்டுப் பதங்கம்செய்து
ஓங்கியே நாகமிட்டுக் கல்வத்திற்போட்டு உத்தமனே மயிற்கொன்றை சாற்றாலாட்டே
865.
ஆட்டியே காசிபென்ற மேருக்கேற்றி அப்பனே வானுகையில் மேலேவைத்து
மூட்டியே பனிரண்டுசாமந்தீயை முசியாமலாறவிட்டு யெடுத்துப்பாரு
நீட்டியே செந்தூரம் அருணன் போலாம் நேரான நவலோகம் நூற்றுக்கொன்று
காட்டியே தனமாற்றாய்க் கண்டுபாரு கனமான பதங்கமது மகிமைதானே
866.
தானான அரைவாசி வுப்பின்மேற்போட்டுத் தன்னுக்குள் சூதத்தைப்பரப்பிவைத்து
கானானவதின்மேலே செங்கல்தூள்போட்டுக் கையாலே அமிழ்த்திட்டு
மேல்தோண்டிகவிழ்த்து
வானானசந்துக்கு மண்ணைசெய்து மருவிதோர்வடுப்பேற்றி யெறிப்பாயப்பா
தேனான காடாக்கினி சாமம்நாலு சிறப்பாக யெரித்திடவே பதங்கமாமே
867.
மகிமையென்ற பதங்கத்தை பலந்தான்தூக்கி மகத்தான கல்வத்திற்போட்டுப்பின்பு
மகிமையென்ற அரப்பொடியும் நாலுபலம்போட்டு மகத்தானகாரமொரு
பலமும்பலமும்போட்டு
மகிமையென்ற பெருங்காட்டாமணக்கினெண்ணெய் வார்த்தரைத்து சாமமொன்று
குகையிலிட்டு
மகிமையாய் மூன்றுதர முருக்கிப்போட மாசற்ற அயந்தானும் நாகமாமே
868.
நாகமென்ற அயத்திடைக்குச் சூதங்கூட்டி நலமாகவுருக்கையிலே நாகமிட்டு
மோகமென்ற புகையெழுப்பி கட்டிப்போகும் உத்தமனே கெந்தியிட்டுச் சூதமிட்டு
பாகமென்ற பொற்றலையின் சாற்றாலாட்டி பக்குவமாய் ஐந்தெருவிற் புடத்தைப்போட்டு
வேகமென்ற நவலோகம் நூற்றுக்கொன்று வேதிக்க மாற்றெண்ண பனிரெண்டாச்சே
869.
ஆச்சப்பா வெள்ளையென்ற பதங்கம்கேளு ஆதிவெள்ளைப்பாஷாணக் குதிரைப்பல்லும்
ஓச்சப்பா தாளகமும் பூநீறும்வீரம் உத்தமனே சாரமொடு துருசுசீனம்
பாச்சப்பா கல்லுப்பு வெடியுப்புக் கெவுரி பரிவாக வெள்ளையென்ற அப்பிரகத்தோடு
காச்சப்பா நாகமொடு வெள்ளீயப்பொடியும் கடல்நுரையும் சவ்வுநீரண்டத்தோடே
870.
ஓடோடு அன்னமென்ற பேதிதானும் உத்தமனே சூடனொடு அரப்பொடியுஞ்சிங்கி
காடோடு வக்கிராந்த கஞ்சமென்ற நிமிளை காந்தமொடு சத்தியென்ற சாரந்தானும்
நாடோடு இரபத்து ஐந்துமாச்சு நலமான சூடனதுஇருபத்தைந்து
பாடோடு யெருகாலம்பால்விட்டாட்டி பதறாம லேழுநாளரைத்துலர்த்தே

871.
உலர்த்தியே விமலையாய் வைத்துக்கொண்டு உத்தமனே வெள்ளிபண்ணி
அலர்த்தியே அயச்சட்டியுள்ளங்கைபோல் அப்பனே வரையிட்டு பண்ணிவைத்து
மலர்த்தியே மருந்துதனை யுள்ளேவைத்து வகையாக மேற்கிண்ணிப் பொருந்தப்பார்த்து
பிலர்த்தியே முன்கவசம் போலேசெய்து பேராகமுக்கலரின் மேலேயேற்றே
872.
ஏங்கியேகல்வைத்துத் திரியைப்போட்டு இதமான முள்ளியெண்ணெய் விளக்குயேற்றி
போற்றியே மூன்றுநாளவியாமலேற்று புகழான பதங்கமது யேறும்பாரு
ஆற்றியே பதங்கமெல்லா மெடுத்துவாங்கி யாதிவெள்ளை யப்பிரேக நவநீதம்பண்ணி
சாற்றியே குகையொன்று சில்லுபண்ணி சார்பான அண்டவெள்ளைக் கருவால்வண்ணே
873.
பண்ணியதோர் குகைக்குள்ளே மருந்தைவைத்து பரிவாக மேல்மூடிசீலைசெய்து
கண்ணியதோர் கெஜபுடத்திற் போட்டெடுத்து கனமான குகைக்குள்ளே வைத்துருக்கி
கண்ணியதோர் சூதம்நின்று வருகும்போது நலமான கிண்ணியைநீ சமனாய்ப்போடு
திண்ணியதோர் சூதமிடை வெள்ளீயம் போட்டு திறமாக காரமிட்டு வுருக்கிச்சாயே
874.
சாய்த்திடவே மருந்தெடுத்து நிறுத்துக்கொண்டு சார்பான நாலுக்குச் சூதமொன்று
போய்த்திட்ட மருந்துக்கு நாலுக்கொன்று புகழான வெள்ளியது நிறுத்துப்போட்டு
காய்த்திட்ட முலைப்பாலை விட்டுயாட்டிக் கனமானவில்லைசெய்து அயச்செம்பில்வைத்து
யெய்த்திட்ட யைந்தெருவிற் புடத்தைப்போடு எளிதான செம்புவங்கம் நூற்றுக்கொண்ணே
875.
ஒண்ணான வெள்ளியது மாற்றுகேளு உற்பனமா யிருபத்தயைந்துமாற்று
கண்ணான சூதமது வெள்ளியாகும் காரீயம்வெள்ளீயம் நாகம் வெள்ளியாகும்
விண்ணான செம்பதுவும் வெள்ளியாகும் மகத்தான வயமதுவும் வெள்ளியாகும்
விண்ணான அம்பலத்தை தெரிசித்தப்பா மேவியதோர் சிலம்பொலி நாதங்கேளே
876.
நாதமென்ற பச்சைரச கற்பூரம்பண்ண நலமாக சொல்லுகிறேன் கேளுகேளு
போதமென்ற சூதமது பலந்தானெட்டு புகழான கெந்தகமே பலந்தானொன்று
நீதமென்ற கெந்தகத்தை ஓட்டிவிட்டுவுருக்கி நினைவாகச் சூதத்தை யதில்விட்டுக்கிண்டு
நாதமென்ற கரிபோல தூளாய்ப்போகும் நலமாக வெடுத்துவை பாகங்கேளே
877.
கேளப்பா மண்ணாலே தோண்டிபண்ணி கெடியாகச் சந்துவாய்ப் பொருந்தச்சுட்டு
நாளப்பா மேல்தோண்டிக் குள்ளேபூச நலமான மத்தைச்சார் மூன்றுதரம்பூசி
வேளப்பா வுலர்ந்தபின்பு அடித்தோண்டிக்குள்ளே விரவிதோர்கறி யுப்பு அரைத்தோண்டிமட்டும்
வாளப்பா பொடிபண்ணி தோண்டியிலேபோட்டு மருவிதோர் செங்கல் மண்ணாழிதானே
878.
ஆமப்பா பதங்கமது மேல்தோண்டிக்குள்ளே அப்பனேயேறியது மாப்போல்நிற்கும்
தாமப்பா பதங்கமெல்லா மயிற்குச்சுகட்டித் ததும்பாம லெடுத்தல்லோ குப்புக்கிட்டு
வாமப்பா வாலுகையின் மேலேவைத்து மறவாமல் தீப்போடு பனிரண்டுசாமம்
காமப்பா பதங்கமது யிறுகியேறிக் கம்பிபோல் வெளும்பாக விருக்கும்பாரே

879.
இருக்கிறதோர் கற்பூரம்விராகநாலு இதமான கெந்தியது விராகனொன்று
பருக்கிறதோர் கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி பணவிடைதான் அனுபானத்தோடேகொள்ள
செருக்கிறதோர் கடிவிஷங்கள் புண்கள்சூலை செருமியவெண் குஷ்டங்கள் பவுத்திரங்கள்கிரந்தி
அருக்கிறதோர் வியாதியெல்லாம் அகன்றுபோகும் ஆதித்தன் கண்டதொரு பனிபோலாமே
880.
பனியென்ற பச்சைரசம் செந்தூரிக்கப் பாங்கான சூதமது பலந்தானெட்டு
கனியென்ற கெந்தகந்தான்ரண்டு பலமாகுங் கனமான வோட்டிலிட்டுத் தணலில்வைத்து
தொனியென்ற கெந்தகத்தை யுருக்கிக்கொண்டு சூதத்தையதில்விட்டு அயத்தால்கிண்டி
நனியென்ற சூதமது கரிபோலாகும் நயத்தோடே வாங்கிமெல்ல குப்பியிற்போடே
881.
போட்டுமே அரைவாசிகுப்பிக்கப்பா புகழான வாலுகையின்மேலேவைத்து
நாட்டுமே ஓடாலேமேலேமூடி நயமாகவடுப்பெரித்து சாமம்ரண்டு
ஓட்டுமே ஓடதனை வாங்கிப்போட்டு வுக்கிரமாயெரித்தாக்கால் கெந்தகந்தான்பத்தும்
வாட்டுமே கெந்தகத்தின் நாலுக்கொன்று மருவியதோர் தாளகத்தை நிறுத்துவையே
882.
வைக்கவே கொஞ்சமாய்க் குப்பியிலேபோட்டு மறவாமல் அயக்கத்தியால் கிண்டுகிண்டு
நைக்கவே தாளகத்தைப் போட்டுப்போட்டு நலமாக கிண்டிவரச் சாகையாலே
உய்க்கவே சரக்கெல்லாம் பதங்கமாகும் உற்றவெறுங் குப்பியாயடியிற்காணும்
செயிக்கவே யடியிலே மருந்தில்லாட்டால் சீரானபதமென்று அடுப்பையாற்றே
883.
ஆற்றியே யிருநாழியானபின்பு அயக்குறட்டால் குப்பிதன்னை வெளியில்வாங்கி
போற்றியே நீர்தெளித்து ஆறப்போட்டு புகழாக குப்பியெல்லாம் தள்ளிப்போட்டு
தேற்றியே சிவப்பாகக் கம்பிபோலாய்ச் சிறுகதிராய்ப் பலகைபோலிருக்கும்பாரு
சாற்றியே பணவிடைதான் தேனிலுண்ணத் தப்பாதுநோயெல்லாம் சாடிப்போமே
884.
சாட்டியே கல்வத்திலிதனைப்போட்டுத் தயங்காமல் பொடிபண்ணிக் காட்டுச்செம்பு
நீட்டியே கிழங்கின்சாற்றுவைத்துக்கொண்டு நினைவாகயரைத்திடுவாய் மூன்றுநாள்தான்
வாட்டியே ரவியில்வைத்துப் பொடியாய்ப்பண்ணி வளமானகாசிபென்ற குப்பியிலேபோடு
ஒட்டியே வாலுகையின்மேலேவைத்து உற்பனமாயடுப்பெரித்து ஆறவிட்டுவாங்கே
885.
வாங்கியே முன்போலக் கல்வத்திட்டு வளமானகிழங்குசார் விட்டுஆட்டி
தேங்கியே யரைத்திட்டு மூன்றுநாள்தான் திறமாக பொடியாக்கிக் குப்பிக்கேற்றி
ஓங்கியே யரைக்கையிலே பலந்தான்கெந்தி உற்பனமாய்ப் போட்டரைத்து குப்பிக்கேற்றி
தாங்கியே மூன்றுநாள் தீயையாட்டு தப்பாமலிப்படிதான் ஐந்துதரமேற்றே
886.
ஐந்துமே வாலுகையின் தளத்தில்நிற்கும் அசங்காமல் அயச்சிமிழிலெடுத்துவைத்து
உஞ்சுமே நவலோகம் நூற்றுக்கொன்றீய உற்பனமாய்ப் பத்தரையேமாற்றுகாணும்
செஞ்சுமே நோயெல்லாம் தவிடுபொடியாகும் கெடியான காலனுமே யஞ்சிப்போவான்
மிஞ்சியதோர் புளியுப்புவிட்டுத் தின்றால் மேவியதோர் சட்டைகக்கிப் பாலையாமே

887.
பாலையாஞ் சிவப்பான கெந்திதன்னை பகரக்கேள்பராபரைக்கு மூதல்நாகந்தான்
ஓலையாலெழுதவென்றால் இதனினாட்டு உத்தமனே கடல்தண்ணீர்க் கொப்பேயாகும்
மாலையாங்கொன்றையைத்தான்தரித்தசிவன்மைந்தர் மயங்கினார் இதினுடைய ஆட்டைபார்த்து
ஆலையாய் சரக்கெல்லாம் கொல்லும்கொல்லும் அம்மம்மா ஆயியுட நாதந்தானே
888.
நாதமென்றுமிதுக்குப்பேர் சத்திகெந்தி நலமான கோழித்தலைச் சூடனென்றும்
போதமென்ற விதினுடைய வைப்புதன்னைப் போக்கோடே வெளியாகச் சொன்னேன் மக்காள்
நிதமென்ற நெல்லிக்காய் கெந்தகத்தை நினைவாகப் பலம்பத்து நிறுத்துக்கொண்டு
கீதமென்ற செவ்வகத்தி செவ்வலரிமுருக்கு கெடியான செவ்வல்லி செம்பருத்திதானே
889.
தானானமாந்துளிரும் குமரிவேரும் தயங்குமணித் தக்காளிசாணாக்கியோடு
பானான புளியாரைப் பத்துங்கேளு பாங்காக வெவ்வேறாய்ப் படிதான்சாறு
கோனாகவார்த்து வொவ்வொன்றாய்க் கலக்கிக்கொண்டு கொடியதொரு யிந்திரமாங் கோபப்பூச்சி
தேனானபூநாகம் ரண்டுங்கேளு தேசிக்காயளவரைத்து கீடப்போடே
890.
போடவே வெடியுப்பு சீனம்ரண்டு பொலிவாக வகைக்குமொரு பலமும்போட்டு
வாடவேபசுவின்பால் படிதானைந்து மாசற்ற எலுமிச்சப் பழச்சாறுசேரே
தேடவே கலக்கியொன்றாய் வைத்துக்கொண்டு திறமாகச் சட்டியிலே படிதான்வார்த்து
நீடவே சீலைகட்டி அதின்மேற்கெந்தி நினைவாகப் பரப்பியல்லோ மேற்கட்டிமூடே
891.
மூடியே சீலைசெய்து குருதான்கெல்வி முயற்சியாய்ச் சட்டிதனைப்புதைத்துப்போடு
நாடியே மேற்சட்டி தெரியவிட்டு நழுகாமல் புடம்போடு பத்தெருவிலப்பா
தேடியே ஆறவிட்டு எடுத்துப்பாரு சிறப்பாக உருகியெல்லாம் சாறுதனில்நிற்கும்
வாடியே மணியெல்லாம் பொருக்கிக்கொண்டு மறுபடியும் சாறொக்கப்படிதான்வாறே
892.
படிச்சாறு வார்த்துமே மறுசீலைகட்டிப் பாங்காக மணியெல்லாம் பொறுக்கிவைத்து
துடியாக பரப்பியே மேற்சட்டிமூடி துப்புரவாய்ச் சீலைசெய்து புடத்தைப்போடு
அடிச்சாறு வற்றவற்ற மறுவாறுவார்த்து அதட்டியே இருபத்தொன்றுபோடு
கடிதுதள்ளிவிட்டு மணியெல்லாம் பொறுக்கிக் கழுவியே தண்ணீரில் ரவியிற்போடே
893.
போட்டபின்பு எடுத்ததனை கல்வத்திலிட்டு பொடிபண்ணிக்கல்வத்தில் மயில்நெய்வார்த்து
பூட்டபின்பு வாலுகையின்மேலேவைத்து பொருந்தவே தீமூட்டிக்கமலம்போல
நாட்டபின்பு காடாக்கிநி நாலுசாமம் நலமாகத் தீயாக்கினி யாறுசாமம்
கேட்டபின்பு நாற்சாமம் ஆறவிட்டு எரிக்கச்சிவசிவா மாதளம்பூ நிறம்போலாமே
894.
நிறமான கெந்தகத்தில் வேகம்பட்டால் நினைக்குமுன்னே சூதமதுயேமமாகும்
மறவான லோகத்தில் பரிசிக்கவேதை யானுண்டகற்பமிது யானுங்கொண்டேன்
திறமான தங்கமது செம்புமாகுஞ் சேர்ந்தநவலோகத்தில் யிரத்துக்கோடும்
குறமாது மாமியுட நாதமப்பா கொண்டாக்கால் கடிகையிலே சித்தியாமே

895.
சித்தியாந் தேவருக்கும் ஐந்துபூதம் ஜெகத்திலுள்ள சித்தருக்கும் ஐந்துபூதம்
முத்தியாம் ஊர்வனமும் ஐந்துபூதம் உயர்ந்துநின்ற விருட்சமெல்லாம் ஐந்துபூதம்
புத்தியாம் பாம்பினமும் ஐந்துபூதம் போக்கான ஐந்தினாலெல்லாமாச்சு
பத்தியாம் வாதத்தில் பஞ்சபட்சி பாஷாணவைப்புதனைப் பாடினேனே
896.
பாடினேன் வடமொழியைப்பிரித்துப்பார்த்து பரிவாக ஆத்தாளைக் கேட்டுகேட்டு
ஓடினேன்குளிகையிட்டு நாதாக்கள் பதத்தில் உகந்தடுமை யாகியல்லோ வாதம்பார்த்தேன்
வாடினேன் மனமிளைத்து வாதம்பார்த்து பயக்கமெல்லாம் குருசொல்ல மனதிலெண்ணி
நாடினேன் உலகக்தோர் நம்மைபோல நவிந்துயான் வெளியாகத் திறந்திட்டேனே
897.
திறந்திடாதிருந்தாக்கால் சரக்குவைப்பை ஜெகத்திலே வாதம்பொய்யாகுமென்று
இறந்திடாதிருக்க வெளியாகச்சொன்னேன் ஏழைமதிபோகாதே பார்க்கவென்றால்
மறந்திடாக் கருவையெல்லாம் உன்னிப்பாரு மாயமாம் வாசினையால் மனம்புண்ணாகும்
பிறந்திடாதிருக்கவென்றால் காயசித்திபண்ணு பெரியோர்கள் பதம்போற்றிக்
கருவைக்கேளே
898.
கருவென்ன தாளகமும் பலமுமைந்து காந்தளப்பூப்போலான பூநீறைந்து
உருவென்ன லிங்கமது பலமுமைந்து உயர்த்தியாய் சிலையதுவும் பலமுமைந்து
குருவென்ன கெவுரியது பலமுமைந்து கூட்டியெல்லாம் கல்வத்திற்பொடியாய்ப்பண்ணி
திருவென்ன செங்கீரைச்சாறுவிட்டு சிறப்பாக வேழுநாள் அரைத்திடாயே
899.
அரைத்திட்டுப் பொடிபண்ணி மேருக்கேற்றி ஆறவிட்டுப் பனிரண்டுசாமந் தீயைப்போடு
வரைத்திட்டப் பதங்கமதுயிறுகியேறி வகையான பஞ்சபட்சி பாஷாணமாகும்
நரைத்திட்டுப் போகாதுமெழுகுபண்ணிக்கொண்டால் நவலோகமாயிரத்துக்கோடும்பாரு
புரைத்திட்டு வீசமுடை பாலிலுண்ணு பொலிவான சட்டைகக்கி வாலையாமே
900.
ஆமென்ற பவளப்புற்றுப் பாஷாணந்தான் அறையிறேன் யானறிந்தமட்டும்
போமென்ற காளகந்தான் பலமும்பத்து புகழானவெள்ளையென்ற பாஷாணந்தான்
காமென்ற பலம்பத்து கல்வத்திட்டு கனமாகவரைத்துநன்றாய் பொடியாய்ப்பண்ணி
தேமென்ற ரண்டுபலங்கெந்தியிட்டு சிறப்பாக காசிபென்ற மேருக்கேற்றே

901.
ஏற்றியே வானுகையின் மேலேவைத்து இதமாகக் கமலம்போல் தீயைமூட்டு
போற்றியே நால்சாமங் கமலம்போலாட்டு புகழாக ஆறவிட்டுத் தண்ணீர்குத்து
சாற்றியே குப்பியைத்தான் உடைத்துப்பார்த்தால் சாங்கமாய்ப் பாஷாணம் புற்றுப்போலாகு
மாற்றியே யிதைக்கட்டி வேதையோடில் அம்மம்மா வெகுதூரமோடுங்காணே
**902.**
காணப்பா கெவுரியுடவைப்புகேளு கடிதான வெள்ளையென்ற பாஷாணந்தான்
ஊணப்பா பலம்பத்துநிறுத்துக்கொண்டு உத்தமனே கெந்தகம் ரண்டரைபலந்தான்
பூணப்பாபொடிபண்ணி மேருக்கேற்றிப் புகழான வாலுகையின்தீயைமூட்டு
வீணப்பா கமலம்போல் நாலுசாமம் விடுபடவே யெரித்திட்டு உடைத்துவாங்கே
**903.**
வாங்கியே யுடைத்தாக்கால் அடுக்குபோல வகையான சிவப்புமஞ்சள் போலிருக்கும்
ஓங்கியேயிதைக்கட்ட ஆராலாகும் உத்தமனே வெடியுப்புச் செந்நீராகும்
தேங்கியே வெடியுப்புச் செயநீர்கேளு சிறப்பான பெருங்கம்பி நாலாங்காய்ச்சல்
பாங்கியே பலம்பத்து நிறுத்துக்கொண்டு பக்குவமாஞ்சாரமது காசெடைதானைந்தே
**904.**
ஐஞ்சோடு கல்லுப்பு காசெடைதானைந்து அழகான பூநீறு காசுமைந்து
நஞ்சோடு சீனமதுகாசுமைந்து நலமானவப்பிரேகங் காசுமைந்து
பஞ்சோடு சீனமது காசுமைந்து பாங்கான சூடனது காசுமைந்தே
**905.**
காசுதானைந்தாகும் வெண்காரம்பூரம் காணிதுக்குள் சமனாகக் கடல்நுரையைப்போடு
மாசுதானிந்துப்பு அன்னபேதி மகத்தான சத்தியென்ற சாரத்தோடு
தூசுதானிதுவெல்லாம் கல்வத்திட்டுத் துடியாகப் பொடிபண்ணிச் சொல்லக்கேளு
பூசுதான் பழம்புளிதான் பலமும்பத்து புகழான கொறுக்காயின் பலமும்பத்தே
**906.**
பத்தான ஏறலென்சதையினோடு பாங்கான பருங்கொன்றை பழத்தைக்கேளு
வித்தான பலம்பத்து நிறுத்துப்போட்டு மேவியதோர் எலுமிச்சை பழச்சார்விட்டு
முத்தாக இடித்துமைபோல் மெழுகாய்ப்பண்ணி முயற்சியாய் பில்லைசெய்து வுலரப்போட்டு
அத்தான பூப்புடத்தில் தயிலம்வாங்கி அழகான முன்மருந்தில் விட்டுஆட்டே
**907.**
ஆட்டியே ஏழுநாள் ரவியில்போடு அழகான அடிகனத்த கலசம்வாங்கி
பூட்டியே கற்சுன்னங் குழைத்துக்கொண்டு புகழான விரல்பருமங் கனமாய்ப்பூசி
தேடியே கல்வத்தினுள்ளும்பூசிச் சிறப்பான சில்லுக்கு நடுவே பூசி
வாடியே கலயத்துள் மருந்தைவைத்து வகையாக சில்லிட்டுச் சீலைசெய்யே
**908.**
செய்தபின்பு நூறெருவிற் புடத்தைப்போடு திறமாக ஆறவிட்டு யெடுத்துப்பாரு
கைதபின்பு பொடிபண்ணிப் பீங்கானில்வைத்துக் கனமான பனியில்வைக்க செயநீராகும்
மைதபின்பு இந்நீரில் வீரம்பூரம் மருவநன்றாய்ப் பொடிபண்ணிச் செயநீரிற்போடு
எய்தபின்பு சரக்கான வறுபத்துநாலு மிதமான செயநீரிற் தோய்த்துவாட்டே

909.
வாட்டியபின் சுருக்கிடவே மெழுகாய்ப்போகும் வகையான கட்டினமாம் நீற்றினமுமாகும்
பூட்டியபின் செந்தூரங்களங்குமாகும் போக்கான சத்துவகை குளிகையாகும்
நீட்டியபின் நவலோகம் வேதையாகும் நிலைநிற்கும் காவிக்கும் புடத்துக்கே
ஓட்டியபின் செயநீரில் சுருக்காம்வேதை உற்பனமாம் காயசித்துக் கெவனமாமே
910.
சீனமாமப்பிரேகங் காசுமைந்து சிறப்பான சூடனது காசுமைந்து
பானமாம்பூரமது காசுமைந்து பகருகின்ற வெண்காரங் காசுமைந்து
வூனமாம் வீரமது காசுமைந்து உற்பனமாஞ் சத்தியென்ற சாரமைந்து
கானமாம் அன்னமென்ற பேதியைந்து கனமான கல்வத்திற்பொடியாய்ப்பண்ணே
911.
பண்ணியே வெடியுப்பு நீரைவார்த்து பாங்காக வரைத்திடுவாய் ஏழுநாள்தான்
ஒண்ணியே கலசத்திற் சுண்ணாம்பூசி வுத்தமனே யதற்குள்வைத்து புடத்தைப்போடு
நண்ணியேயாறவிட்டுப் பனியில்வைக்க நலமான வாரிதீபோல் நலமுமாகும்
கண்ணியே இந்நீரில் வீரம்பூரம் காசெடைதான் பொடித்திட்டு வைத்துக்கொள்ளே
912.
கொள்ளென்ற செயநீரால் பாஷாணங்கள் குறிப்பாக சுருக்கிடவே கட்டிப்போகும்
அள்ளென்ற கல்லுப்பு மணிபோலாடு மாச்சரிய நாகத்தையமுக்கிக்கொல்லும்
துள்ளென்ற சூதத்தை மாலையாக்கும் துடியான பூரத்தை சுன்னம்பண்ணும்
புள்ளென்ற லிங்கத்தை மெழுகுபண்ணும் போகத்திலே வெகுகோடியாடலாமே
913.
ஆடலாம் துருசென்ற செயநீராலே அப்பனே துருசதுவும் பலந்தான்பத்து
சூடலாங் கெந்தகந்தான் பலந்தான்மூன்று சுடற்கொடியாஞ்சூடனது பலமுமூன்று
வூடலாம் வீரமது பலந்தானொன்று உற்பனமாம் வெள்ளையது பலமுமூன்று
நீடலாம் பூநீறுபலமுமொன்று நிச்சயமாம் காரமது பலமுமொன்றே
914.
ஒன்றான சத்தியது காசுமைந்து உற்பனமாந் தாளகமும் காசுமைந்து
மன்றான சிலையதுவுங் காசுமைந்து மாசற்றசீனமது காசுமைந்து
குன்றான அண்டநீர் காசுமைந்து கோழியுட வெண்மலமும் காசுமைந்து
வென்றான சூதமது காசுமைந்து மெய்யான பூரமது காசுமைந்தே
915.
காசெடைதானைந்தாகும் வெள்வீரம்பூரம் கனத்ததொரு குருவண்டு ஐம்பத்தொன்று
தூசெடைதான் கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி துவளவரை ஏழுநாள்சாரநீரால்
மாசெடைதான் நெல்லுப்போல் வில்லைபண்ணி வளமான கல்வத்திற் சுன்னம்பூசி
ஆசெடைதான் மருந்தையிட்டு சீலைசெய்து வைம்பதெருவணைத்துமெள்ள புடம்பலவாமே
916.
பலமதுதான் கெந்தகத்தை நிறுத்துப்போடு பாஷாணவெள்ளையது காசுமைந்து
நிலமதுதானீலமது காசுமைந்து நீச்சான வீரமதுகாசுமைந்து
குலமதுதான் கல்லுப்புக் காசுமைந்து கொடிதான காரமது காசுமைந்து
நலமதுதான் சீனமதுகாசுமைந்து நற்கெவுரி மனோசிலையுங் காசுமைந்தே

917.
அஞ்சோடு வெங்காரமன்னபேதி அழகான துத்தமொடு காசுமைந்து
கஞ்சோடுயிதுவெல்லாங் கல்வத்திட்டு கடிதான வெண்கருவும் எருக்கம்பாலும்
நஞ்சோடு வார்த்தரைத்து குழம்பிக்கொண்டு நலமான தாம்பரத்தின் தகட்டிலப்பி
மிஞ்சோடு கொடிவேலி வேரின்பட்டை மெலிவான அண்டோடுஞ் சமனாய்ச்சேரே
918.
சேர்த்தல்லோ பொடியாக்கி யெருக்கன்பாலுஞ் சினத்த அடைவெண்கருவு மத்தித்துக்கொண்டு
வார்த்தல்லோ யரைத்திடுவாய் நாலுசாமம் வளமான குகைபண்ணித் தாம்பரத்தைவைத்து
ஏர்த்தல்லோ மேல்மூடிசீலைசெய்து இயல்பாக குழிவெட்டி முழங்கால்மட்டும்
போர்த்தல்லோ புலிப்பாணி எருவடுக்கி புகழாக கெஜபுடமாய் போட்டுவாங்கே
919.
வாங்கியே மேல்கவசந் தள்ளிப்போட்டு வாசியர்முன்குழம்பில் பிசறிக்கொண்டு
தேங்கியே மூன்குகையில் வைத்துப்பூசிச் சிறப்பாக முன்போலப்புடத்தைப்போடு
தாங்கியே இப்படிதான் மூன்றுதரம்போடு தவளம்போல் குருவாகும் செம்புதானும்
ஓங்கியே இக்குருவுக்கென்னவொப்பு உத்தமித்தாயொப்பென்று வுரைசெய்தேனே
920.
உரைசெய்த குருவுக்கு எடைகெடைதான்சாரம் உத்தமனே பொடிசெய்து கல்வத்திட்டு
நிரைசெய்த முன்னீரால் அரைத்துக்கட்டி நேர்பாகப் புடம்போட்டு பனியில்வைக்க
கரைசெய்த ஜெயநீராம் பூரம்வீரம் கனமாகப் பொடிசெய்து நீரிற்போட்டு
பரைசெய்த ஜெயநீரை வார்த்துக்கொண்டு பாங்கான சூதத்தை அரைத்துருட்டே
921.
உருட்டியதைத்தான் வடமாய்க்கோர்த்துக்கொண்டு உத்தமனே ஐந்தெழுத்துமெட்டெழுத்துமோது
மருட்டியதையவர்கையில் காண்பிக்கவேண்டாம் மாஞானமன்மவித்தை யுற்றுப்பாரு
சிருட்டியிதை யொளித்துவிட்டு மூலம்பாரு சிவயோகபிரம்மநிஷ்டை தெளிந்துகண்டு
திருட்டியமாய் மூலமென்ற மௌனம்பாரு தீர்க்கமுடன் சின்மயத்தை அறிந்துபோற்றே
922.
போற்றவே பொற்றொட்டி வைப்புகேளு புகழாகத் தாளமது மேருபண்ணி
மாற்றவே மண்சீலை பிலக்கச்செய்து மகத்தான சூதமது பலந்தானெட்டு
ஏற்றவே ரெண்டுபலஞ்சுத்திகெந்தி இயல்பான ஓட்டிலே கெந்தகத்தையுருக்கி
தோற்றவே சூதத்தையதில்வைத்துக்கிண்டு துடிக்கின்ற சூதமது கரிபோலாமே
923.
சரியான சூதத்தில் வெடியுப்பு பலந்தான் கனமான தாளகமும் பலந்தான்போட்டு
உரியான பொடிபண்ணி மேருவிலேபோட்டு உத்தமனே குப்பிவாய்ச் சில்லிட்டுமூடி
மரியான வாலுகையின் மேலேவைத்து வாம்பாகத் தீமூட்டி பனிரண்டுசாமம்
தெரியான கெந்தகத்திலெரிச்சல் கண்டால் சில்லதனைத்தள்ளிவிட்டு சீலாகைவுட்டுக்கிண்டே
924.
கிண்டையிலே அடியில் மருந்தில்லாவிட்டால் கெட்டியான பதமென்று தீயையாற்றி
சண்டையிலே ஆறவிட்டு ஒருசாமந்தான் சாதகமாயிருப்பான குறட்டினாலே
மண்டையிலே குப்பியைதான் வெளியேவாங்கி மகத்தான கண்ணீரைத் தெளித்துஆற்றி
பண்டையிலே இரும்பான கத்திகொண்டு பக்குவமாய் மேலோடு பிரம்பாய்வாங்கே

925.
வாங்கியதோர் தொட்டின்மேற் பொற்றொட்டியாச்சு மருவியே மேலோடிப் பதங்கித்துநின்றால்
ஓங்கியதோர் ரத்தமென்ற பாஷாணநாமம் உற்றஅடி நின்றதுவும் அஞ்சனமுமாச்சு
ஏங்கியதோர் நடுவில்நின்றால் கற்பரியுமாச்சு ஏககுனிமுன் நிற்கில் சரக்கண்டமாச்சு
தாங்கியதோர் இத்தனையும் ஆயிசொல்லச் சாதகமாய்ச் சித்தரெல்லாம் சமைத்திட்டாரே
926.
சமைத்திட்ட சரக்குகளில் வேதைகோடி சாதகமா யொவ்வொன்றாய்ப் பார்த்துக்கொண்டு
அமைத்திட்ட நூல்களிலே மறைப்பில்லாமல் அறியாத பசகட்குந் தெரியவென்று
குமைத்திட்ட முத்துபோல் ஒருகயிற்றில் கோர்த்தேன் கொடிகொம்பு கயிற்கொடி மரமொன்றேபோல்
இமைத்திட்ட பிள்ளைகளுக்குகந்து சொன்னேன் ஏழாயிரம் பார்த்தவர்கள் என்போலாமே
927.
ஆமின்னம் நாகத்தைச்சொல்லக்கேளு ஆச்சரியம்நாகமது பலந்தான்பத்து
ஓமின்னம் நாகத்தைத்தான் கடுகவாங்கி உயர்ந்தமயிர்கொன்றையிலை யரைத்துக்கொண்டு
தாமின்னந்தகடுமேல் பொதிந்து மூடிச்சார்பாகப் புடம்போட்டு எடுத்துக்கொண்டு
காமின்ன மிப்படியே பத்துவிசைபோட்டுக் கார்த்திகையின் கிழங்காலே பத்துவிசைபோடே
928.
போடப்பா வெருகினுட கிழங்கில்பத்து புளியரனைக் கிழங்குதனில் பத்துவீசைபோடு
நாடப்பா பின்பெடுத்து எண்ணெய்குத்தியுருக்கி நலமாகக் கிண்ணியைபோல் வார்த்துக்கொண்டு
ஊடப்பா நேர்வாளந் தயிலம்வாங்கி யுத்தமனே சாரமது காசுஐந்து
நீடப்பா துரிசியது காசுஐந்து நிலையான கல்லுப்புக் காசுஅஞ்சே
929.
அஞ்சான பூநீறுகாசுஐந்து ஆதியென்ற கெவுரியது காசுஐந்து
பிஞ்சான கெந்தகமும் காசுஐந்து பேசாத சிலையதுவும் காசுஐந்து
மஞ்சான வீரமது காசுமைந்து மாசற்ற லிங்கமுந்தான் காசுமைந்து
துஞ்சான தாளகமுங் காசுமைந்து துடியான வெடியுப்பு காசுமைந்தே
930.
காசுதானைந்தாகும் சீனமப்பா கலந்திந்த இடையெல்லா மறுபதாச்சு
மாசுதான் சூதமதும் அறுபதாகும் வாகான கல்வத்திலிட்டுக்கொண்டு
ஆசிதானேர்வானத் தயிலத்தாலே ஐந்துநாளரைத்து நன்றாய்வில்லைகட்டி
தூசுதான் நிழலுலர்த்தி அயத்தகடுக்குளமுத்தி துப்புரவாய்க் கிண்ணியைத்தான் பதித்திடாயே
931.
பதித்திடவே யரைத்துநன்றாய் சீலைசெய்து பாங்கான முன்னிசைத்த மெழுகினாலே
நிதித்திட்டு இலுப்பைநெய்யால் விளக்குவைத்து நேராகவிளக்கெரிப்பாய் மூன்றுநாள்தான்
கொதித்திட்ட ரசமெல்லாம் பதங்கமேறுங் கொள்கியந்த பதங்கத்தைக் கத்திகொண்டுவாங்கி
விதித்தி ட்ட நவலோகம் நூற்றுக்கொன்றி விரைந்ததுவும் பனிரண்டு மாற்றுமாமே

932.
மாற்றான ரத்தசிங்கி வைப்புகேளு மருவியதில் காயசித்தி லோகசித்தியாகும்
கூற்றானயெமன்போலே சுருக்குமெத்த கொடியவிஷசூதத்தை நிமைக்குமுன்னே
கொல்லும்
காற்றான காரீயம்பொடிபலந்தான்பத்து கனகத்தின்பொடிதானும் ரண்டரையேபலந்தான்
னீற்றான நாகத்தின் பொடிபலந்தானைந்து நெல்லிக்காய்க் கெந்தகந்தான் பலம்பத்துபோடே
933.
பத்துடனே வெடியுப்புப் பலமுமைந்து பாங்கான தாளகமும் பலமும்நாலு
கொத்துடனே குதிரைப்பல் பாஷாணமூன்று கொடிதான சாராயம் விட்டுஆட்டி
சித்துடனே லோகமெல்லாம் கரையுமட்டுஆட்டி சிறப்பாக ரவியிலிட்டுப் பொடியாய்பண்ணி
மூத்துடனே காசிபென்ற மேருக்கேற்றி மூதண்டவாலுகையில் வைத்திடாயே
934.
வைத்திட்டுத் தீயெரிப்பாய் எட்டுநாள்தான் மாராமலிரவுபகலாறாமற்றா
னைத்திட்டு அடியதனில் தானேநிற்கும் நலமாகஆறவிட்டு உடைத்துவாங்கி
கைத்திட்டு கம்பியாயருணன்போலக் கட்டியாதிருக்குமப்பா ரத்தச்சிங்கி
பைத்திட்டு யிதினுடைய ஆட்டினாலே பத்துயுகமாடியல்லோ கரைகாணேணே
935.
கரைகாணா ரத்தசிங்கி பலந்தான்பத்து கலரிதற்குள் சூதமதுபலமும்பத்து
உரைகாணாக் கெந்தகமும் பலமும்பத்து உகந்துநின்ற வெடியுப்புப் பலமுமைந்து
பரைகாணா தாளகமும் பலமுமொன்று பரிவான சிலையதுவும் பலமுமொன்று
புரைகாணா வுரிசார்விட்டுயாட்டுப் பேரானநாள்மூன்று அரைத்திடாயே
936.
மூன்றுநாள ரைத்திட்டுப் பொடியாய்ப்பண்ணி முயற்சியாய்க் காசிபென்ற மேருக்கேற்றி
பூணுநாள் வாலஉகையின் மேலேயாற்றிப் பொருந்தவே தீமூட்டுமூன்றுநாள்தான்
தோணுநாளாறவிட்டு உடைத்துவாங்கி துடியான யேமமென்ற சிங்கியாச்சே
வீணுநாள்போகாமல் வீசமிடையுண்ணு மேனியுமே தங்கநிறமாகும்பாரே
937.
தங்கநிறமானாக்கால் மேனிதானும் சாவேதுநோவேது கற்பாந்தகாலம்
மங்களமாம் பெண்மாய்கை தனையகற்றி பாழானபுளிப்பைத்தள்ளிவிட்டு
சங்குநிறமாகவே பாலிலுண்ணு சாவென்றதது பொய்யா மூகாந்தவரைநிற்கும்
கொங்கநிறமாகவுந்தான் லோகந்தன்னில் கொடுத்திடவே பதினாறு மாற்றுமாமே
938.
புடம்போட்டு யெடுத்துடனே குருவுமாகும் புகழாக நாலிலொன்று காரங்கூட்டி
திடம்போட்டுக் கல்வத்திலிட்டுயாட்டிச் சீராக நாற்சாமமாட்டுமாட்டு
தடம்போட்டு அண்டோட்டிலிட்டுமூடிச் சார்பாக புடம்போட்டு பணியில்வைக்க
நடம்போட்ட யாறுபோல் ஜெயநீராகும் நலமாக இந்நீரில் வீரம்போடே
939.
வீரமிட்டால் சிவப்பாகுஞ் ஜெயநீரப்பா வீறுபட்ட சூதமது மதயானையொக்கும்
வாரமிட்ட புலிகையிலாடுபோல அடர்ந்துபோஞ் ஜெயநீரைகண்டவுடனப்பா
காரமிட்ட சூதத்தைக் கல்வத்திட்டுக் கடியதொருஜெயநீரால் மூன்றுநாளாட்ட
தூரமிட்ட வெண்ணெய்போலாகும்பாரு துடியான மத்தங்காய்க்குள் வைத்துவாட்டே

940.
வாட்டியே ஏழுபுடம்போட்டெடுத்து வரிசையாய்க் கரண்டிதனில் வெண்ணெய்குத்தியுருக்கி
பூட்டியே யெடுத்துப்பார் நாகத்துமீன்போல் புகழாகப் பளிச்சென்று மணியுமாகும்
ஊட்டியே உபசரங்கள் நூற்றிரண்டுபத்து உத்தமனே பாஷாணமறுபத்துநாலு
தீட்டியே லவணவகை இருபத்தைந்து திரமாகவாட்டினம் நவலோகத்தூடே
941.
ஊட்டுமே சத்தெடுத்து விடுவித்தாக்கா லுத்தமனே சாரனைதானொன்றேயாச்சு
பூட்டிமேயிப்படியே இருபத்தொன்று போக்கான சத்தெடுத்துக் கொடுத்துகக்கில்
யாட்டுமே நிஜரூபமென்ற குளிகையாச்சு அண்டமுதல் பதங்களெல்லாம் நிமைக்குள்புக்கி
சூட்டுமே நீமீண்டுவருங்குளிகைவேதம் சுரூபசித்துங் கவனசித்துஞ் சுருக்கம்பாரே
942.
சுறுக்காகத் தாம்பரத்தின் சுன்னம்கேளு சுளுகாமம் புளியிலைபோல் தகடுவாங்கி
முறுக்காகப் பலமெட்டு நிறுத்துக்கொண்டு முனையான பழச்சாற்றி லூறவைத்து
நறுக்காகக் கழுவியதை யெடுத்துக்கொண்டு நாறுகின்ற செம்பினிய வூறல்போக்கி
அறுக்காக வெள்ளீயஞ் சட்டியிலேயுருக்கி இதமாக நிமிளைதனைப் பொடியாய்பண்ணே
943.
பண்ணியதோர் பொடிதானும் வங்கத்திலுருக்கு பரவியதோர் சமபாகம் நிறுத்துக்கொண்டு
ஒண்ணியதோர் வெடியுப்பு நிமிக்குப்பாதி யுத்தமனே பொடியாக்கி வேறேவைத்து
நண்ணியதோர் வங்கம்நின்றுருகும்போது நலமாக வொவ்வொன்றாய் மாறிமாறி
கண்ணியதோர் வங்கத்தில் போட்டுக்கிண்டு கசகாமல் சுன்னமதுவாகும்பாரே
944.
சுன்னமின்னமாவதற்கு வகையைக்கேளு துடியான வெண்கருவுமெருக்கம்பாலும்
வன்னமின்ன ரெண்டுமொன்றாய்க் கலக்கிக்கொண்டு வங்கத்தில்விட்டரைத்து
வில்லைதட்டி
தின்னமின்ன வகலிலிட்டுப் புடத்தைப்போடு தீர்க்கமா யாறியபின்னெடுத்துவாங்கி
என்னமின்ன நாலுபலம் நிறுத்துக்கொண்டு இயலான சூதமது பலந்தானொன்றே
945.
மாற்றான மிருதாரு சிங்கிவைக்க மாணாக்கா சொல்லுகிறேன் மகிழ்வாய்க்கேளும்
காற்றான காரீயம்பலந்தான்பத்து கலரிதற்குள் நாலிலொன்று சரகெந்தியப்பா
மூற்றான கெந்திக்குப்பாதி வெடியுப்பு முயற்சியாய்ப் பொடிபண்ணி வைத்துக்கொண்டு
தேற்றான ஈயத்தைச்சட்டியிலேயுருக்கிச் சிறப்பாகப் பொடியிட்டு வருத்திடாயே
946.
வறுத்திடவே பொடிபோலே யீசஞ்சாறு மாசற்றபொடியெல்லாங் கலசத்திட்டு
நிறுத்திடவே கலசத்தில் அரைவாசியிட்டு நேராதமேல்மூடிச் சீலைசெய்து
கறுத்திடவே யடுப்பேற்றிப் பனிரண்டுசாமங்காலம் போவெரியிட்டு வுடைத்துவாங்கி
மறுத்திடவே பார்த்தாக்கால் கம்பிபோலாம் மாசற்றமிருதாசிங்கியாமே
947.
ஆமப்பா பாஷாணம் முப்பத்திரண்டு மப்பனேவைப்பதனைச் சொல்லிப்போட்டேன்
ஒமப்பா சித்தர்சொன்ன நூலைப்போல ஒளித்துவைத்து சொல்லவில்லை
காமப்பா கருவெல்லாம் ஆராய்ந்துபார்த்து நலமாகவொவ்வொன்றாய் பார்த்துகண்டு
சேமப்பா ஏழாயிரஞ்சிக்கில்லாமல் சிறப்பாக வெளியாகத் திறந்திட்டேனே

948.
திறந்திட்ட சிவயோகி சித்தர்ஞானி சீராகப்பிழைக்கவென்று திருவுளத்துக்கொப்பாய்
திறந்திட்டேன் சித்தருடன்வாதுகொண்டுச் சிவயோகிபரம்மநிஷ்டை முனிகளுக்காய்
திறந்திட்டேனாத்தா சொல்லக்கேட்டுக்கேட்டுத் தேகசித்தியாகவென்று லோகத்தோர்கள்
திறந்திட்டேன் தேவியுடபூசைக்காகச் சிவசொத்தை வறுமைபோலுண்டாயே
949.
வறுமைபோலுண்டுடுத்தி வாதம்பாரு மகாசெறிமாயத்தே யழுந்திடாதே
வறுமைபோல் திரிந்துகொண்டு காயசித்திபண்ணு மகத்தான ரிஷிகளைத்தொண்டுபண்ணு
வறுமைபோல் திரிந்துகொள்ளுநாட்டிலுள்ள நாட்டிலுள்ள போக்கு மன்னுயிருந்தன்னுயிராய் மனதிலுண்ணு
வறுமையாம் மலையிலுள்ள வதிசயத்தைப்பாரு மகாமூலிபாஷாண வகையைத்தேடே
950.
வகைகேளு பாஷாணப்பிறப்புதன்னை மைந்தனே முப்பத்துரண்டுதாவது
துகைகேளு மலைதோறுமுண்டுமுண்டு கணங்களாய்த் திரியாதே வுட்புகுந்துபாரு
நகைகேளு பாஷாணபேருதன்னை நகையான கர்க்கடகங்கோளகமுஞ்சூதம்
மிகைகேளு மரிதாரங் கெந்தந்தானும் மிக்கான வக்கிராந்த வீரந்தானே
951.
தானென்ற முர்தமொடு சீர்பந்தங்கொட்டி சங்கசீப்பாஷாணக் குதிரைப்பகெவுரி
பானென்ற பல்லாண்டுமுகந்ததப்பா பரிவான சரக்காண்டம் லிங்கபாஷாணம்
தேனென்ற காலபாஷாண மவுல்பாஷாணம்
ஊனென்ற கல்லானபாஷாணத்தோடுத்தமனே கச்சால பாஷாணமாமே
952.
ஆமென்ற வஞ்சனப்பாஷாணத்தோடு மப்பனேபாஷாணலே கசடுமாகும்
தாமென்ற கார்முகியும் சிலாமாதம் பாஷாணம் கடிதானவெள்ளையொடு அப்ரகபாஷாணம்
போமென்ற காந்தபாஷாணத்தோடு புகழான முப்பத்திரண்டுதாது
வானென்ற மலைதோறுமுண்டுவுண்டு மகத்தான பெரியோரைவணங்கிக்கேளே
953.
கேட்கையிலே ஆருடைய வர்க்கமெனில் கெடியான மூலவர்க்ககாலாங்கிநாதர்
தாட்டையிலே காலாங்கி மைந்தன்போகர் சார்பானசீஷனென்று சொல்லிக்காட்டு
வீட்கையிலே சந்தோஷித்தழைத்தேயுன்னை வேண்டிதோர் பாஷாணமூலிகையுமீய்வார்
வாடகையிலே கடுசற்றும்வேட்டை நாய்போல் மாயத்தே யுண்மையுள்ளவாதந்தானே
954.
வஅுதந்தானெளிதென்று யெண்ணவேண்டா மகத்தான சிவத்தினுட தெரிசனையேயொக்கும்
நாதமென்ற சிலம்பொலியில் மேவப்பண்ணும் நாதாக்களருகிருந்து வார்த்தைசொல்லலாகும்
கீதமொடு மூன்றுலோகஞ்சஞ்சரிக்கலாகும் கெடியாங்காயமது உகாந்தவரைநிற்கும்
நீதமென்ற சிங்கியைத்தான் செம்புபண்ணு நிலவரமாய்ப்பதினாறு மாற்றுமாமே
955.
சிங்கியென்ற செம்புக்குத் தண்ணீர்மிட்டான் திறமான பழச்சாறுபடிதான்வாங்கி
அங்கியென்ற சிங்கியைத்தான் பொடிபோற்பண்ணி அயச்சட்டிதனில்வைத்து சருக்குபோடு
மங்கியென்ற பொடிபோல வருத்துப்போடு மாசற்ற தண்ணீர்மிட்டான் கிழங்குவாங்கி
தெங்கியென்ற பொற்பொடியாய்ச் சீவிவைத்துக் கெடியாக நிழலுலர்த்தித் தயிலம்வாங்கே

956.
வாங்கியந்த தயிலத்தாலாட்டும்ஆட்டு மறவாமல்மூன்றுஉநாளாகுமட்டும்
ஏங்கியந்த வெங்காரங்கூடவிட்டு இயல்பான மூசையிட்டு லையிலூது
தாங்கியந்த மணிமணியாய்ச் செம்புமாகும் தக்கறடெல்லாந் தயிலத்தாட்டித்
தேங்கியந்த முன்போல மூன்றுதரமூது சிவசிவா சிங்கியென்ற செம்புமாச்சே
957.
சிங்கியென்ற செம்பாலே சுன்னங்கோடி திறமானசெந்தூரங்களங்குகோடி
தங்கியென்ற செம்பெடுத்துத் தங்கள்கூட்டிச் சார்பான தகடாக்கிச் சூதங்கெந்தி
நங்கியென்ற சாரரைத்துத்த கட்டிற்பூசிநலமாகமூன்றுபுடம் போட்டெடுத்துத்
தெங்கியென்ற நவலோகம் நூற்றிக்கொன்றீ திறமான மாற்றதுவும் வார்த்ததல்லோ
958.
வார்த்தல்லோ தினந்தினமும் ஊறவைத்து மண்டலந்தான்கடந்தபின்பு எடுத்துவாங்கிப்
போர்த்தல்லோ அயமெல்லாந் தாராய்ப்போகும் போக்கானமருந்தோடே சுரண்டிவாங்கி
ஏர்த்தல்லோ சுண்ணாம்பு உப்புநேரே யிடித்தல்லோ மருந்துக்குக்கவசங்கட்டி
ஆர்த்தல்லோ புடம்போட்டு எடுத்துக்கொண்டு அதட்டியே குகையிலிட்டு வுருக்கிடாயே
959.
உண்ணென்ற பூநாகச்சத்துகேளு உத்தமனே செம்மண்ணில் பூநாகந்தான்
கண்ணென்ற ரிஷபத்தின் சாணிதண்ணில் கலந்தெடுத்துப் பிசறிநன்றாய்த் தட்டிப்போட்டு
கண்ணென்ற காய்ந்தபின்பு பாண்டத்திற்போட்டு மறவாமல் மேல்மூடி யெரித்தெடுத்து
கண்ணென்ற சாம்பிலைத்தான் காடிவிட்டுக்கரைத்து நலமான தெளிவையெல்லா
மிறுத்திடாயே
960.
இறுத்துவிட்டு அடிவண்டலுற்றுப்பார்த்தா லிதமாகப் பளிச்சென்று மின்னல்காணும்
பறுத்துவிட்ட சூதத்தைவிட்டுத் தேய்க்கமாசற்ற செம்பெல்லாம் பிடித்துக்கொள்ளும்
கறுத்துவிட்ட காரத்தை யிட்டுருக்க கண்விட்டாடியல்லோ செம்பாய்நிற்கும்
அறுத்துவிட்ட குளிகைக்கு முந்திமுந்தி அப்பனேவுருக்கையிலே யிச்செம்புதாக்கே
961.
தாக்காட்டால் குளிகைக்கு தீபனமேயில்லை சார்பான சத்தெல்லா மூடகொள்ளாது
தாக்காட்டால் கெவுனத்தில் சுறுக்கோடாது தளித்த மின்னலிடியுடற்குள் களித்துப்போகும்
தாக்காட்டால் சந்திரனிற்குளிச்சியாலே சங்கரிக்கவொட்டாது குளிர்ச்சிகாணும்
தாக்காட்டா லக்கினியிற் காந்திகாணும் தாக்கியல்லோ சாரணையிலாடினாரே
962.
ஆடினதோர் செம்புக்கு நாலிலொன்று அப்பனே தங்கமிட்டுத் தகடுதட்டி
ஓடினதோர் சூதமொடு சிலையுங்கெந்தி வுயர்ந்துநின்ற தாளகமும் வீரஞ்சேர்த்து
நாடினதோர் முலைப்பால்தான் விட்டியாட்டி நலமான தகட்டின்மேற்பூசிப்பூசிப்
பாடினதோர் மூன்றுபுடம் போட்டெடுத்து பாய்ச்சினாலாயிரத்துக் கோடும்பாரே
963.
ஓடுமே படிகத்தின் சொல்வேனுத்தமனே வெகுபுளுக்கு ஓடும்வேதை
பாடுமே படிகக்கல் பொடியாய்ப்பண்ணி பண்பாகமாவாக்கிச் சேரைநாலு
ஆடுமேயாவாரம் வேர்தனின்பட்டை அப்பனே மறுதோன்றி வாகைமல்லி
தேடுமே பூவரசுமருதுவன்னி சிறப்பான கிளிஞ்சியொடு நுணாவேர்தானே

964.
தானென்ற கருவேலும் வார்தஃதங்கி பூவாம் சார்பானயின்பூரம் கருக்காயோபட்டை
வானென்ற யிவ்வரையின்பட்டை யெல்லாம்வளமாகச் சமபாகம்நிறுத்துக்கொண்டு
கோனென்ற வுரலிலிட்டுயிடித்து நையக்கொட்டியே பாண்டத்தில் தண்ணீர்விட்டுப்
பானென்ற யெட்டிலொன்றாய்க் காய்ச்சிக்கொண்டு பக்குவமாய் வடித்திறுத்து
அயப்பாண்டத்திலூற்றே
965.
ஊற்றியபின் படிகாரஞ்சேரவொன்று ஒளியானகெந்தகந்தான் பலமும்நாலு
சாற்றியபின் பூநீரு பலமும்ரெண்டு மாசற்றதுரிசியது பலமும்நாலு
சாற்றியபின்பு நீறுபலமும்ரண்டு சாரித்து யாதளையின் பாலினாலே
ஏற்றியபின் கியாழத்தில் கூடவிட்டு எளியாலம்பால் சேருகூடவாரே
966.
வார்க்கவே நல்லெண்ணெய் நாலுசேரை நலமாகக்காய்ச்சியெல்லாம் குழம்பாய்ப்பண்ணி
ஏர்க்கவே கலயத்தில் வார்த்துகட்டி இச்சையாம் படிகத்தின் மாவில்விட்டு
தோர்க்கவே யரைத்து நாற்சாமமட்டும் நெல்லுப்போல் வில்லைபண்ணிச்
சரவுலையில்வைத்து
பார்க்கவே துருத்தியிட்டு யிருபுறமூடு படிகமதுசெம்பாகும் பண்பாய்வாங்கே
967.
வாங்கியே செம்பெல்லாமெடுத்துக்கொண்டு வளமான கறடெடுத்துத் தயிலத்தாலாட்டிப்
பாங்கியே முன்போலவைந்துதரமூதிப்பருவமாய்ச் செம்பெல்லாமெடுத்துக்கொண்டு
ஓங்கியே குளிகைக்குச் செம்பையீய ஒடுகிறகெவுனத்தி லிருலெல்லாம்தீர்க்கும்
தாங்கியே இச்செம்பை மதியிலீயச் சார்பாகப் பனிரெண்டுமாற்றுமாமே
968.
மாற்றான படிகத்தைப்போலேயப்பா வளமான தங்கத்தைச் செம்புபண்ணு
கூற்றான குளிகைக்குக்கொடுத்தாயானால் கொடுவேகமோடையிலே நாதம்பண்ணு
நாற்றான ததுவிளைந்து நெல்லானாப்போல் நலமானசங்கத்தில் உயர்த்திவேதை
மூன்றான தேவிவிடுபட்டுப்போவாள் முங்கியதோர் சங்கத்தை செந்தூரித்துண்ணே
969.
உண்ணவே சங்கத்தின் செம்புகேளு ஒளியாகப் பலம்பத்துநிறுத்துக்கொண்டு
கண்ணவே ஐவேலிக் கொட்டைகோவை கலந்துநின்ற முசுமுசுக்கை மணித்தக்காளி
பண்ணவே அழுக்குறா ஆறுந்தானும் பலமும்வாங்கிச் சமமாகநிறுத்துக்கொண்டு
திண்ணவே நிழலுலர்த்திப் பூப்புடத்தில் சிறப்பாக வாங்கியல்லோ தயிலஞ்செய்யே
970.
செய்யப்பா தயிலத்தைவிட்டுஆட்டு சிறக்கவே எண்சாமம் வில்லைகட்டி
மெய்யப்பா ரவிதனிலே யுலரப்போடு மெதுவாகச் சீலைமண்ணேமுஞ்செய்து
வையப்பா வாலுகையில் தீயைமூட்டு மைந்தனே கைபாகம்நழுகிடாமல்
பொய்யப்பா போகாமல் சரவுலையிலூது போக்கெல்லாம் மணிமணியா யிறங்கும்பாரு
971.
இறங்குகின்ற சரக்கெல்லாமெடுத்துக்கொண்டு எளிதாகக் கொடுக்குமுன் மருந்துகூட்டி
அறங்குகின்ற தயிலத்தாலரைத்தெடுத்து அடவாகவில்லைதட்டிச் சரவுலையிலூது
தாங்குகிற சத்தெல்லாமெடுத்துக்கொண்டு சார்பாக முன்போலவுருக்குமப்பா
உறங்குகிற யானையைப்போல் சத்துவேக மொருநொடிக்குள் சூதமது விரைத்தப்போமே

972.
போமென்ற சூதத்தில் தங்கம்சேர்த்து பூவையாம் நாகமிட்டு கெந்தியிட்டு
ஆமென்ற வாலுகையில் செந்தூரித்தால் அருணன்போல் செந்தூரமாகும்பாரு
ஓமென்ற நவலோகம் நூற்றுக்கொன்று யுயர்ந்ததுவும்பதினாறு மாற்றமாகும்
தாமென்ற செந்தூரங்குன்றியுண்ணு சதகோடிவருடமெல்லாம் ஒருநாளாமே
979.
ஆமென்ற வக்கிராந்த சத்துகேளு அப்பனே பலம்பத்துநிறுத்துக்கொண்டு
ஓமென்ற வெண்காரம் பலந்தானைந்து உயர்ந்துநின்ற கெந்தியது பலமுமைந்து
வாமென்ற கௌரியது பலந்தான்ரண்டு வளமான சிங்கியது பலந்தானாலு
தேமென்ற மலைத்தேனாங்கதண்டுத் தேனுதீர்க்கமுடன் தானரைப்பாய்சாமம்நாலே
980.
நாலானசாமமது வரைத்ததின்பு நலமான சரக்கதுவும் மெழுகதாகும்
காலானமெழுகுதனை எடுத்துமைந்தா கலங்காமல் மூசைதனி லடைத்துக்கொண்டு
மாலானரவிதனிலே காயவைத்து மார்க்கமுடன் குகைதனிலேயேற்றியேதான்
பாலான துரித்தியது நன்மதாகும் பாலகனே தானுவந்து வூதிடாயே
981.
ஊதவேவங்கமது யென்னசொல்வேன் வுத்தமனே களங்கென்ற சத்துமாச்சு
நீதமுடன் சரக்கதுவும் சேர்ந்துமல்லோ நிட்களங்கமானதொரு வெள்ளையாச்சு
தோதமுடன் சவளைக்கு நாலுக்கொன்று துப்புரவாய்த் தங்கமதுவொன்றுங்கூட்டி
வாதமதுசெய்வதற்கு வழியுண்டாக்கி வளமுடையசத்துதனை யுருக்கிடாயே
982.
உருக்கிடவே யேமனென்ற சத்துமாச்சு வுத்தமனே கெந்தியது நாலுக்கொன்று
வருக்கமுடன் சூதமது இடைதான்கெந்தி வளமாகதான் சேர்த்துபொடித்துமைந்தா
பெருக்கமுடன் முப்புமென்ற பூநீரப்பா பேரான களஞ்சியது வொன்றேசேர்த்து
சுருக்கமுடன் பொற்கையான் சாற்றினாலே சுந்தரனே யரைத்திடுவாய் சாமம்நாலே
983.
சாமமதுநாற்சாம மரைத்தபின்பு சாங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
ஏமமென்ற பொடிதானும் காய்ந்தபின்பு யெழிலான மரக்கல்லால் கொண்டுமேதான்
நாமமென்ற வளையலது குப்பிதானும் நலமான சீலையதுயேழயஞ்செய்து
வாமமுடன் பொடியதனைக் குப்பிக்கேற்றி வளமான மரக்கல்லு கொண்டுமூடே
984.
மூடியேயேழுசீலை வலுவாய்ச்செய்து வுத்தமனே காய்ந்தாறி யெடுத்துமைந்தா
தேடியேதளவாயாம் மண்பாண்டத்தில் தேற்றமுடன் மணல்தனை விரல்நாற்போடு
கூடியேகுப்பிவாய்த் தெரியுமட்டும் கூசாமல் மணலதனைப்போடுபோடு
வாடியே மயங்காதே யருண்மைந்தாகேள் வளமாகமேல்மூடிச் சீலைசெய்யே
985.
செய்யவேசீலையதுவலுவாய்ச்செய்து ஜெயம்பெறவே வாலுகையாமேந்திரத்தில்
பையவே பாண்டமதை யடுப்பிலேற்றி பாங்கான கணபதிக்குப் பூசைசெய்து
துய்யவே மனோன்மணியால் பாதம்போற்றி துப்புரவாய்ச் சின்மயத்தை மனதிலுன்னி
வெய்யவே நாற்சாமமெரித்தபோது வேதாந்தசிந்தூரம்போலேயாச்சே

986.
ஆச்சப்பா செந்தூர மென்னசொல்வேன் அப்பனே நாதாக்கள்செய்யும்வேதை
மூச்சடக்கிக் காலாங்கிநாதர்தாமும் மூதுலகில் சமாதிமுகஞ்சென்றபோது
பாச்சனுடனெந்தனுக்கு வுபதேசித்த பாங்கான செந்தூர வேதையப்பா
ஆச்சரியமானதொரு சித்துவேதை ஆகாகா நாதாக்கள்வேதைதானே
987.
தானானசெந்தூர மாரிப்பின்பு தாக்கானசோடசமாம் பூசைமார்க்கம்
கோனான குருவருளை முன்னேயெண்ணி கொற்றவனே லட்சமுறு மோதுவோது
தேனான மனோன்மணியும் நிர்த்தஞ்செய்வாள் தெகமதிலுந்தனுக்கு வாதஞ்சித்தி
மானானமகதேவர் கடாட்சத்தாலே மதியமுர்தங் கொண்டுமல்லோ வாழ்குவீரே
988.
வாழ்கவென்றால் செந்தூரந்தனையெடுத்து வளமான வெள்ளியது நூற்றக்கொன்று
தாழ்கவே தானுருக்கி கொடுத்தாயானால் தப்பாது மாற்றுபனிரண்டதாகும்
மூழ்கவே புடந்தனுக்கு யேகாதப்பா மூதுலகில் நவகண்டர் செய்யும்வேதை
வேழ்விமுகந் தானிருந்து வம்பால்பூசை மேதினியில் செய்துமல்லோ வெடுத்திடாயே
989.
எடுத்திடவே யேமமதுயென்னசொல்வேன் யெழிலான வைப்பதுவும் பிறவித்தங்கம்
கொடுத்திடவே செம்பதனில் நூற்றுக்கொன்று கொற்றவனே தானுருக்கிக்கொடுத்தபோது
தடுத்திடாவர்ணத்து சோடகமுமாகும் தாக்கான செம்பதுவும் தங்கச்செம்பாம்
கொடுத்திடா சமுசாரிக்கானவேதை கேசரத்திலிந்தவருஞ் செய்யலாமே
990.
செய்யவே புலிப்பாணிமைந்தாகேளு செயலான மார்க்கமது யின்னஞ்சொல்வேன்
துய்யநல்ல வக்கிராந்த செந்தூரத்தை துப்புரவாயுண்டவர்க்கு பலனைகேளு
வையகங்கள் நாலுயுகமிருக்கலாகும் வாகானசெந்தூர மதித்தமார்க்கம்
வெய்யபுகழ் வாசியைத்தான் மேல்நோக்காது மேனியதுசிவப்பேரி மின்னும்பாரே
991.
மின்னுமே தேகமதுசெந்தாழைவீசும் மிக்கானவாசியது கீழ்நோக்காகும்
பன்னவேநெடுங்காலமிருக்கலாகும் பாங்கான தூலமதுவழியாதப்பா
சொன்னதொரு காலாங்கிநாதர்வாக்கு துப்புரவாய் வையகத்தில் பொய்யாதப்பா
நன்னயமாய் ஞானமென்ற பொருள்தான் காட்டும்நாதாந்த செந்தூரவேதைதானே
992.
காணவே புலிப்பாணிமைந்தாகேளு காசினியில் திக்கெட்டும் கண்டுவந்தேன்
தேணவே சீனபதித்தன்னிற்சென்று தோற்றமுடன் காலாங்கிநாதர்பக்கம்
வேணபடி சமாதிமுகந்தானிருந்து வெகுகால மகிமையெல்லாம் கண்டுவந்தேன்
ஆணவங்கள் தானொடுங்கி குளிகைபூண்டு வப்பனேநாற்றிசையும் சுத்தினேனே
993.
சுத்தினேன் மலைவளங்கள் நானுங்கண்டேன் சுந்தரனே சாத்திரங்கள் சமாதிகண்டேன்
எத்திசையும் பதினெண்பேர் நவகோடிதானும் யெழிலான நாற்பத்தெண் முனிவரோடும்
புத்தியுள்ள இதிகாச புராணம்யாவும் புகழானசித்துமுனியாயுர்வேதம்
பத்தியுடனாராய்ந்து வுளவுகண்டு பாங்கான சாஸ்திரத்தைப் பாடினேனே

994.
பாடினேன் போகரேழாயிரந்தான் பாங்கான காண்டமது சத்தகாண்டம்
தேடினேன் யோகமது வட்டவேதை தெளிவான ஜாலங்கள் கருவுமார்க்கம்
நீடியதோர் பிறப்புருபாவர்ணம் கெடிதான யிந்திரமாம் ஜாலப்போக்கு
கூடியதோர் மந்திரமாம் தந்திரப்போக்கும் குறிப்பான மாற்றமது வமைத்திட்டேனே
995.
அமைத்தேனே மதற்காண்டந் தன்னிலப்பா வப்பனேயோகிகளுக்கான மார்க்கம்
நிமைப்பொழுது தவப்பொழுது மழியாவண்ணம் நீடாழியுலகுமது முடிவுமட்டும்
தமையான அத்வீதஞானந்தன்னில் தபோதனர்கள் ரிஷிகள்முதல் கூறாவண்ணம்
சுமைபோன்ற ஞானமெனும் வடிவந்தன்னை சூட்சமுடன் கொட்டிவைத்தேன் கூர்மைபாரே
996.
பாரேதான் யெந்தனது காண்டமேழு பான்மையுடன் கண்டவர்க்கு யெல்லாஞ்சித்தி
நேரேதான் பன்னீராயிரத்துக் கொப்பாய் நேர்மையுள்ள தைத்தியனார் கூறும்நூலில்
வேரோடுஞ் சொல்லியதோர் ஞானமார்க்கம் வேதாந்த சின்மயத்தை வெளியதாக்கி
கூரோடு முதற்காண்டந்தன்னிலேதான் கூறினேனே சங்கையறக் கூறினேனே
997.
கூறினேன் போகரேழாயிரந்தான் குருவான நூலிதுதான் சத்தகாண்டம்
மீறியதோர் யிந்நூலுக்கெந்தநூலும் மேதினியில் செய்தவர்காருமில்லை
தேறியதோர் கும்பமுனி பன்னீராயிரந்தான் சிறப்பான நூலென்றே செய்யலாகும்
ஆறியதோர் போகரேழாயிரந்தான் வப்பனே முதற்காண்டம் முற்றதாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

1001.
ஆதிபாராபரத்தினிட கிருபைபோற்றி அன்பான வடிமுடியும் நந்திகாப்பு
ஜோதியா முச்சுடரின் அருளேகாப்பு சுட்சமாஞ் சதாசிவத்தின் பொருளேகாப்பு
பாதிமதிசடையணிந்த பரமன்காப்பு பத்தியடன் முத்திதரு முதல்வன்காப்பு
ஓதியதோர் வாணிசரஸ்வதியேகாப்பு ஓங்காரத்துள் வட்டத்தொளிகாப்பாமே
1002.
காப்பான யேழுலட்சம் கிரந்தந்தன்னில் கருவாக வொளித்துவைத்த சூட்சமார்க்கம்
காப்பான வைப்புடனே சீனவெப்பு காரமாங்குடோரிமுதல் கண்டாராய்ந்து
காப்பான களங்குகளும் சுன்னப்போக்கும் களிப்பான செந்தூரக்காடெல்லாந்தான்
காப்பான ஜெயநீர்கள் பூநீர்யாவும் கடையான திராவகமும் மெழுகுமாமே
1003.
ஆமேதான் மெழுகுடனே தயிலமார்க்கம் அழகான வஞ்சனமாமையின்போக்கும்
தாமேதான தர்வனத்தின் யெழுத்தின்போக்கும் தாக்கான மூலிகையின் சாபப்போக்கும்
வேமேதான் வெகுகோடி காலகற்பம் விருப்பமுடனுண்டுபின் காட்சியெல்லாம்
நாமேதான றிவதற்குயாவுஞ்சொன்னோம் நாதாக்களடிவணங்கி நவிறிட்டேனே
1004.
நவின்றிட்டே னேழுலட்சம் கிரந்தப்போக்கை நயமுடனே நாட்டிலோர்க் கறியவென்று
புகன்றிட்டேனே ழாயிரக்காண்டமாக பூட்டினேன் சத்தகாண்டம் பண்பதாக
நவின்றிட்டேனிக் காண்டமிரண்டாக்காண்டம் தகுமானபோக்குகளு மனந்தஞ்சொன்னேன்
நவின்றிட்ட போகரிஷி சொன்னநூலில் கருமான நூலிதுதான் மதநூல்தானே
1005.
தானான பெருநூலேழாயிரந்தான் தாக்கான சீனமுடன் வைப்புமார்க்கம்
போனான குருசொன்ன நீதிமார்க்கம் குறிப்பான கைபாகஞ்செய்பாகந்தான்
வேனானலிங்கமது வைப்புமார்க்கம் எளிதாகக் கூறுகிறேன் மைந்தாகேளு
பானான படிகாரம் கெந்திதானும் பளிங்கான ரசமுடனே மதியமாமே
1006.
மதியான பூநீறு காரந்தானு மார்க்கமாமூவருப்பு நாகத்தோடு
ததியான வறுவகை ஜெயநீராலே தண்பெறவெணசாமமரைத்துப்போடு
பசயான செம்பினுட பாத்திரத்தில் பதிவாகத்தான்கொட்டி சட்டிமூடி
விதிபோலே முப்பொழுது யெரித்தாயானால் விளையுமடா லிங்கமென்ற கம்பியாச்சே
1007.
கம்பியாமேற் பதங்கலிங்கமாச்சு காட்டுமே தீமுறுவல் நடுவிலாச்சு
தும்பிபோல் நிறமுடைய பாண்டந்தானும் தொட்டியென்பாஷாணந்தானுமாச்சு
தம்பாலென்ற லிங்கமது வெள்ளிசெம்பில் தாக்காக பத்துக்கொன்றுபோடு
அம்பொன்னாமாற்றதுவும் மொன்பதாகும் அப்பனே லிங்கமது குருவுமாச்சே
1008.
குருவான லிங்கமதை செம்புதன்னில் கொடுத்தமே சரியெடையாய் வூதிப்போடு
கருவான வெள்ளியிலே பத்துக்கொன்று கருத்தாகத்தானுருக்கி யெடுத்துப்பாரு
உறவான மாற்றதுவும் எட்டதாகும் உத்தமனே பத்திலொன்று தங்கஞ்சேர்த்து
பருவாகத் தகடடித்துப் புடத்தைப்போடு பாங்கான தங்கமது பிறக்கும்பாரே

1009.
பாரப்பா தங்கமென்ன சொல்லப்போமோ பழுப்பான பசுந்தங்கம் யென்னசொல்வேன்
கூறப்பா சிவயோகநிலையில் நின்றுகும்பித்து ரேசகத்தை மாறிக்கொண்டு
சேரப்பா நடுநிலையை மையம்பற்றி சிறக்கவே சுழிமுனையைநிறுத்திக்கொண்டு
பாரப்பா தவநிலையைக்கைவிடாமல் பக்குவமாய் வாசியோகம் பாருபாரே
1010.
பார்க்கையிலே தேகமதுகற்பமுண்ணு பச்சையென்ற வில்வமது இதழேயாகும்
சேர்க்கையுட னிதமொன்று மிளகுவொன்று சிறப்பாகக் காலையிலே வுண்ணவேண்டும்
தீர்க்கமுடன் நாளொன்றுக்கதிகமாக திறமுடனே மிளகதனையேத்தவேண்டாம்
ஆர்க்கமுடன் மண்டலந்தானுண்டுபாரு அப்பனே தேகமதுபொன்னாம்பாரே
1011.
பொன்னான தேகமது கற்றூணாகும் போகுமே நரைதிரையும் பூதலத்தில்
மன்னான கண்ணிரண்டு மொளியேவீச மயக்கமில்லை யென்நாளும் கொதிப்புமில்லை
கன்னான மாய்கையது யற்றுமேதான் காலனுக்கு நாளதுவுமிடங்கொடாமல்
எந்நாளு மூலமதில் வாழ்வீரென்று இயம்பினார் போகரிஷி எழிலாய்த்தானே
1012.
தானான நாகமென்ற சிறுகண்ணாகம் தனியான சாரமுட னிலுப்பைநெய்யில்
வேனான வேழுதரமுருக்கிச் சாய்க்க வெழிலான சட்டைதள்ளி சுத்தியாச்சு
கோனானதாளகமும் வீரனொன்று கொடிதான கெவுரியடன் துருசுவொன்று
பானாகவோர் நிறையாயெடுத்துக்கொண்டு பாங்கான நாகத்திற் சரியாய்க்கூட்டே
1013.
கூட்டியே தானுருக்கி கிராசமீவாய் குருவானநாதமது கட்டிப்போகும்
தாட்டிகமாய் வெள்ளிக்கு நேராநாகம் தாக்குவாய்த் தானுக்கி வூதிப்போட்டு
மாட்டுவாய் முன்சொன்ன லிங்கசெம்பு மார்க்கமுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
வாட்டமாய் தானுருக்கி யெடுத்துப்பாரு மகத்தான வர்ணமதுமேவும்பாரே
1014.
பாரான செம்புதனில் வர்ணமுண்டாய்ப் பாங்கான நாகத்தைவேதிக்கும்பா
கூராகவிரண்டிலொன்று தங்கஞ்சேர்த்து குறிப்பாகத் தகடடித்துப் புடத்தைப்போடு
வீரானமாற்றதுவும் விஷம்போலேறி மிக்கான வெட்டரையுமாகும்பாரு
காராககாவிக்கு முப்புக்கேகா கனமான செம்பிலிட வேகந்தானே
1015.
வேகமாம் லிங்கமொரு பலமுமொன்றாம் மிக்கான முலைப்பாலால் சுருக்குதாக்கு
பாகமா மெலுமிச்சம் பழச்சார்சாமம் பசுவானமேனிச்சார் சாமந்தாக்கு
யூகமாந்தேனுமோர் சாமந்தாக்கு உற்பனமா மெருமைப்பால் சாமந்தாக்கு
சாகாமல் மேதிப்பால் சாமந்தாக்கு சாரவே சாட்டரணை சாமமாமே
1016.
சாமந்தான்சுருக்கிடவே கட்டியாகும் சாங்கமாய் வயமதுவும் பொடிகாலாகும்
தாமந்தான் றாளமுங்கால் தானாகும்தனியான கெந்தியது கால்தானாகும்
வெமந்தான் சிங்கியது கால்தானாகும் வெடியான வுப்பதுவும் கால்தானாகும்
ஆமந்தான் சிற்றண்டக் கருவாலாட்டி அப்பனே லிங்கத்திற் கவசம்போடே

1017.
போடவே ரவிதனிலே காயப்போடு பொங்கமுடன் சீலையதுயேழுஞ்செய்து
நீடவே பூப்புடமாம் உமியிற்போடு நெடிதான லிங்கமது கட்டியாடும்
கூடவே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று குறிப்புடனே யுருக்கிப்பார் மாற்றாறாகும்
தேடவே னத்துக்குறுதிமெத்த சிறப்பாக யூதியபின் னெடுத்துக்கொள்ளே
1018.
கொள்ளவே மாற்றதுவுமுறுதிமெத்த கூறவேயிடைக்கிடைதான் தங்கஞ்சேர்த்து
விள்ளசீவனத்தை செய்துகொண்டு விரிவான சாஸ்திரத்தை யறிந்துகொள்வாய்
தள்ளவே பொய்சூது கள்ளுநீக்கு தாழ்மையா யெளியோரைப் போலவாழ்ந்து
மெல்லவே துன்பசாகரத்தைவிட்டு மெதுவாக துவாதசாந்தத்தில் நில்லே
1019.
நில்லவே கருவான மின்னமொன்று நெடிதான லிங்கமது பலந்தானாகும்
புல்லவே வங்கமது பலந்தானொன்று புகலவே தாளகமும் பலந்தானொன்று
முல்லவே முலைப்பாலால் நாலுசாமம் மூர்க்கமாய் தானரைத்து கவசித்தேதான்
வெல்லவே லிங்கமதுக்கங்கிபூட்டி விருப்பாக ரவிதனிலே காயப்போடே
1020.
காயவே ரவிதனிலே யுலர்ந்தபின்பு கருவான சாண்குழியில் புடமேபோடு
மாயவே யுமிப்புடமாம் லகுப்புடந்தான் மயங்கஅமல்தான்போட கட்டிப்போகும்
சாயவே கவசமதுநீக்கிப்பாரு சட்டமுடனுருகியது கட்டிநிற்கும்
பாயவே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று பாச்சடா மாற்றதுவும் ஆறதாமே
1021.
ஆறான மாற்றதுவுமென்னசொல்வேன் அரகரா சியோகம் காணலாச்சு
பாறான தங்கமது நேரேசேர்த்து பரிவாகத் தகடடித்துப் புடத்தைப்போடு
கூறான மட்டதங்கஞ் சேர்த்துருக்க குசலமாம் மாற்றதுவும் பத்ததாகும்
பேறான லிங்கமது குருவினாலே பலத்துதடா வாதவித்தை நிசமதாச்சே
1022.
நிசமான வாதவித்தைக் கைக்குள்ளானால் நிச்சயமாய் விட்டகுறை வாய்த்ததென்பார்
குசமான விதியாளி சாதியாவான் கும்பகத்தைச் சேர்ந்துகொண்டு கூர்மைசொல்வான்
தசமான மூலத்தை யிருத்திக்கொண்டு தாக்கியே சதாநித்தம் நிஷ்டைசெய்வார்
வசமான நிஷ்டையிலே இருந்துகொண்டு வாதிப்பான் சண்டாளக் கிடங்கொடானே
1023.
இடங்கொடான் கோடிபேரணுகினாலும் இயலானது வாதத்திலிருந்துகொண்டு
மடமுடனே சிவாலயங்கள் கட்டுவான்பார் மகத்தான சித்தர்கட்கு தொண்டுபண்ணி
திடமுடனே யவர்களிடங்கோடிகாலந்தான் தெரிசித்து விருப்பமுடன் யாவுங்கேட்டு
சடமதற்கு காயசித்தி யேத்தவென்று சதாகாலம் நிஷ்டையிலே நிற்பர்தானே
1024.
தானான லிங்கமது பலந்தானொன்று சார்வான சீனமுடனண்டமொன்று
வேனான வெடியுப்பு பலந்தானொன்று வெடியான வீரமதை சேர்த்துமேதான்
பானான முட்டையின் கருவினாலே பதமாகதாதானரைத்துக் கங்கிபூட்டி
மானான ரவிதனிலே காயப்போடு மகத்தான மண்மறைவில் புடத்தைப்போடே

1025.
போடவே பத்துமுறை முன்போல்தானே போக்கான சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி
தேடவே தானரைத்துக் கவசஞ்செய்து தெளிவாக மண்மறைவிற் புடத்தைப்போடு
நாடவே சாண்குழியில் வாட்டிநாலாம் நலமாகப் புடம்போடக் கட்டிப்போகும்
வாடவே கவசமதை நீக்கிநீக்கி வண்மைபெறப் போடுவதுவலுமைபாரே
1026.
வலுவான லிங்கமது குருவுமாச்சு வரிசைபெற வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
சுலுவாக கொடுத்துருக்கி யூதிப்போடு சூட்சமாமாற்றதுவும் ஆறதாகும்
மலுவாகத் தங்கமதுக் கிடையேசேர்த்து மதிப்புடனே தானுருக்கிப் புடத்தைப்போடு
மெலுவான மாற்றதுவும் அதிகங்காண மேன்மைபெற கும்பகத்தில் நின்றுகொள்ளே
1027.
கொள்ளவே யோகசாதனத்தைப்பாரு கறிப்புனே யெப்போதும் வாசிபாரு
மெள்ளவே முப்பூவையறிந்துபாரு மேன்மையாம் ஞானத்தைமேவிப்பாரு
உள்ளவே மனவாக்குகஃ காயம்பாரு உற்பனமா மவஸ்தைமுத லுளவுபாரு
தள்ளவே மோகத்தை யகற்றிப்போடு சதானந்தம் நிஷ்டையிலே தனித்துநில்லே
1028.
நின்றதுமே துஷ்டர்களை யகலத்தள்ளி நிட்சயமாய்க் கருவிகாண் ஆதியெல்லாம்
வென்றுமே யாராய்ந்துமேலுக்கேறி வேதாந்த விளக்கொளியை மேவிப்பாரு
குன்றுமேலிருந்தாலும் குறைவுமுண்டோ கூறவே கும்பகத்திலிருந்துகொண்டு
கன்றுதான் தாய்தனையே தேடினாற்போல் கடுகவே சின்மயத்தை யறிந்துகொள்ளே
1029.
அறியவே யிருளதனைப் போக்கடிக்க அப்பனேசூரியன் வந்துதித்தார்போல
முறியவே லிங்கமது பலந்தானாகும் முசியாத சூடனது பலந்தானாகும்
தெரியவே யிரண்டுருவமொன்றாய்ச்சேர்த்து தேய்த்திடவே மெழுகதுபோலாட்டிமைந்தா
கரியவே லிங்கத்திற் கங்கிபூட்டிக் கசகாமல் தீயதனில் வாட்டிடாயே
1030.
வாட்டவே யிந்தமுறை பத்துமார்க்கம் வரிசைபெற நெருப்பதனிற் றீயாலாட்டு
நீட்டமுடன் லிங்கமதை யெடுத்துப்பாரு நிறையான கட்டியது வுறுகிநிற்கும்
தேட்டமாஞ் ஜெயநீரில் சுருக்குதாக்கு தெளிவாகலிங்கமது வுருக்குபோலாம்
மூட்டனமாம் லிங்கமது சுருக்குருவுமாச்சு முசியாது வர்ணமது கண்கொள்ளாதே
1031.
கண்ணவே துருசுடனே காரமாகும் கடிதான வெடியுப்பு சீனந்தானும்
நண்ணவே யுப்புடனே சாரமாகும் நலமான சரக்கதுதானாராதாரம்
பண்ணவே ஜெயநீராய்செய்துகொண்டு பாங்கான லிங்கத்திற் சுருக்குத்தாக்கு
எண்ணவே ஜெயநீரின் போக்கையாவும் யென்னசொல்வோம் நாதாக்கள் போக்குதானே
1032.
போக்கான போக்கிதுவே யென்னசொல்வேன் பூட்டினார் மர்மங்களிக்குள்ளாச்சு
தூக்கான வண்டபிண்ட மிதனாலாச்சு துறைகோடி தொந்தங்கள் கோடாகோடி
தாக்கான விதியாளி யறிவானல்லால் தனியான வீணாளனறிவானோதான்
வாக்கான வீணருடன் வாய்பேசாதே வழிவிட்டு வழிபோவான் மடையன்தானே

1033.
மடையனாம் நூல்பார்த்தேனென்பான்பாரு மகத்தான ரகசியங்களனேகமுண்டு
இடையனைப்போல் தோள்கொண்டு வாட்டையேத்தி வாடெங்கேயென்று
சொன்னதைப்போல
தடையன்றி பலநூல்கையேந்தியேதான் சதாகாலம்வாசித்துப் பலந்தானென்ன
விடையின்றி நுட்பங்கள் அறியார்மாண்பர் வீணிலேவாதிகளாய்த்திரிவார்தாமே
1034.
திரிந்துமே கும்பல்கும்பலாகக்கூடி திறமுடனே சாஸ்திரத்தின் நுட்பங்காணார்
பரிந்துமே யோகியிடம் சொல்லமாட்டார் பக்குவமாய்த் தொழில்முறையைக் கேட்கமாட்டார்
எரிந்துமே தெரிந்தவர்போல் யாவும்பேசி யெழிலான சாஸ்திரத்தை தாறுமாராய்
வரிந்துமே தலையேடு காப்பேடுந்தான் வரிசைமுதல் குறிநோக்க மறியார்தாமே
1035.
நோக்கமாங்கண்போன குருடனுக்குநுணுக்கமாந்தடிகொடுத்த கதையைப்போல
சூசகமாலிங்கமொரு பலமேவாங்கி சுருதிபெற முலைப்பாலில் சுத்திசெய்து
தீக்கமாய்மயமதுவும் பலந்தானொன்று திறமான வெள்ளியது பலந்தானொன்று
பாக்கமாந் தாளகமும் பலந்தானொன்று பளுவான சிங்கியது பலந்தானொன்றே
1036.
ஒன்றான வங்கமது பலந்தானொன்று ஓகோகோ துருசுடனே காசுகட்டி
நன்றான அபினியது பலந்தானொன்று நயமான நாகமது பலந்தானொன்று
குன்றாமல் பொடியதுவாய் மைந்தாமைந்தா குமுறவே யெலுமிச்சன் பழச்சாற்றாலே
பன்றாக பாகுபோலரைத்துக்கொண்டு பாங்குபெற லிங்கத்திற் கங்கிபூட்டே
1037.
பூட்டியே சுண்ணாம்பு சீலைசெய்து புகழ்ச்சியாய்ச் சட்டிக்குள் மணல்தான்றப்பி
வாட்டமாய் மணல்நடுவில் வைத்துமூடி வாகாகத்தானெரிப்பாய்க் கமலம்போல
பூட்டமாய் நாற்சாமம் யெரித்துவாங்கி பொங்கமுடன் சுண்ணாம்புக் கவசம்நீக்கி
நாட்டமுடன் வஜ்ஜிரமாம் குகையில்வைத்து நலமாக வுறுக்கிடவே களங்கமாமே
1038.
களங்கான காரசாரலோகந்தன்னை கருவாக வோட்டில்வைத்து வூதிப்பாரு
வளமானவெள்ளியிடை நின்றுமேதான் வாகாக மாற்றதுவுமேழதாகும்
மனமுடனே நாலுக்குத் தங்கஞ்சேர்த்து மாசற்ற புடமடா வன்னிமீறும்
தனமான யோகத்தில் நின்றுகொண்டு சதாநித்தம் மகேஸ்பரியை பூசிப்பாயே
1039.
பூசிப்பாய் கட்குடத்திலீக்கண்மொய்க்கும் புகழான மும்மலத்தின் தன்மைபோலும்
ஆசிப்பாய் புழுவினால் சூழ்ந்ததேகம் வப்பனே கடைத்தேற் காயகற்பம்
நேசிப்பாய் லிங்கமது பலமேவாங்கி நெடிதான பொடுதலையின்மூலியாலே
மாசிப்பால் தேங்காயின் பிரமாணந்தான் மதிப்பாகக் கவசமது மாட்டிடாயே
1040.
மாட்டவே பச்சரிசிதன்னிலேதான் மார்க்கமுடன் பாண்டமதுக்குள்ளேபோட்டு
வாட்டமாய் லிங்கத்தைப் பொதிந்துமூடி வரிசைபெற தான்சமைத்து சாதந்தன்னை
தீட்டமாய் மண்டலமிப்படியேசெய்து திறமாகத் தானருந்தக் காயம்பொன்னாம்
தேட்டமாய் லிங்கமதைத் தேனிலுண்ணு தேகமது கற்றூணாகும்தானே

1041.
தானான பிள்ளையழச் சத்தத்கேட்டுத் தயவுடனே பால்கொடுக்குந்தாயைப்போல
வேனான போகரிஷி இரக்கம்வைத்து விருப்பமுடன் தானுரைக்கும் கசாயகற்பம்
பானான தேனதுவும் படிதானெட்டு பாங்காக அளந்துவொரு பாண்டமிட்டு
கோனான மேல்மூடி சீலைசெய்து குறிப்புடனே பூமிக்குள் புதைத்திடாயே
1042.
புதைத்துமே தீமூட்டி மண்டலந்தான் பொங்கமுடன் தானெரிப்பாய்ச் சதுரமட்டும்
சிதைத்துமே மண்டலமுங் கடந்தபின்பு தெளிவாகத் தேனதுவுங் கட்டிப்போகும்
பதத்துடனே தானெடுத்து காலைமாலை பதராமல் மண்டலந்தான் மூன்றேயாகும்
மிதத்துடனே பலமதுவாய் கொண்டுவந்தால் மிக்கான தேகமிது இறுகலாச்சே
1043.
ஆச்சப்பா தேகமது கல்தூணாகும் அப்பனே வாசியது மேலேறாது
மூச்சப்பா வாசியது கீழேநோக்க முறுகுடனே தாதுகளும் வலுத்துப்போகும்
பேச்சப்பா யில்லையப்பா பிராணாயாமம் பேரான கும்பகத்திலிருந்துகொண்டு
மாச்சப்பா மாய்கைதனை விட்டொழித்து மகதாதான கேசரத்தில் நின்றுவாடே
1044.
ஆடையிலே சித்தர்களும் முனிவர்தாமும் அங்ஙனவே யோடிவந்துவதிதங்கேட்பார்
மேடையிலே இருந்துமங்கே வங்கென்றூனு மிக்கதொரு கேள்விக்கு விடையுஞ்சொல்லி
கூடையிலே பிராயணாயந்தன்னிற்சென்று குப்புவாய்ப் படுத்திருந்து பிணம்போற்பேசி
பாடையிலே போறமட்டும் பராபரியையுன்னிப் பதாம்புயத்தை அடைவதுதான் பான்மையாமே
1045.
பன்மையாய் கடல்தனிலே வீழ்ந்தபேருக்கு பருந்தொப்பங் கைதனிலே கிட்டினாற்போல்
மேன்மையாய் போகரிஷி மனமுவந்து மதினியில் காயாதிகற்பஞ்சொல்வேன்
கான்மையாம் சதவீசி காந்தந்தன்னை களிப்புடனே பலமெடுத்துக் கல்வமிட்டு
வான்மையாய் தாளகமும் விராகனொன்று வாகபாஷாணம் விராகனொன்றே
1046.
ஒன்றான கெவுரியது விராகனொன்று ஒளிவான சிங்கியது விராகனொன்று
குன்றான வீரமது விராகனொன்று குறிப்பான பூரமது விராகனொன்று
தன்றான லிங்கமது விராகனொன்று தாங்கான சூடனது விராகனொன்று
பன்றான துரிசியது விராகனொன்று பாங்கான சூதமது விராகனொன்றே
1047.
சூதமுடன் நாகமது விராகனொன்று சூட்சுமாந் துத்தமது விராகனொன்று
நாதமாங் கெந்தியது விராகனொன்று நலமான காரமது விராகனொன்று
கீதமாங் குடோரியது விராகனொன்று கெடியான சீனமது விராகனொன்று
வேகமாங் கருடக்கால் விராகனொன்று விரைவான கருமாவும் விராகனொன்றே
1048.
ஒன்றாக விவையெல்லாங் கல்வமிட்டு உத்தமனே மலைத்தேனில் தன்னிலாட்டும்
குன்றாமல் நாற்சாமமாட்டியேதான் குமுறவே வச்சிமாங் குகையில்வைத்து
பன்றாகச் சீலையதுவலுவாய்ச்செய்து பாங்குடனே ரவிதனிலே காயவைத்து
நன்றாக யுலைமூட்டி மூசைவைத்து நலமாக மூசையது வூதிடாயே

1049.
ஊதியே வச்சிரமாங் குகையேதன்னை வுடைத்துப்பார் வுத்தமனேயென்னசொல்வேன்
நீதியாங் காந்தமது சத்தேயாகி நிலைத்துதுடா காயத்துக்குயிருமாச்சு
வாதியே கெந்தகமும் ரசமுமூட்டி வரிசைபெற பொற்றலையின் சாற்றினாலே
ஆதியாமுப்பூவில் குருவுஞ்சேர்த்து அப்பனே நாற்சாமமரைத்திடாயே
1050.
அரைத்துமே காசிபென்ற மேருக்கேத்தி அடவாகமூன்றுநாளெரித்துமேதான்
நிரைத்துமே யாறவிட்டு யெடுத்துப்பாரு நெடிதான செந்தூர குப்பிவைப்பு
பரைத்துமே செந்தூர மண்டலந்தான் பாங்காக கொண்டிடவே காயம்பொன்னாம்
திரைத்துமே நரைதிரையுமற்றுப்போகும் தெளியமே தேகமதுகற்றூணாமே
1051.
கற்றூணாய்க் காயத்தை நிறுத்திக்கொண்டு கடந்தவெளி முப்பாழாம் மதிகடந்து
பற்றூணாம் மாயசாகரத்தைவிட்டுப் பதிவாக மேலேறி கும்பகத்தில்நின்று
வெற்றிபெற சின்மயத்தை மிகவிரும்பி வெளியான ஜெகஜோதிதன்னைக்கண்டு
பற்றியே பராபரத்தினடியைக்காண பராபரிமணித்தாயைப் பணிந்துபோற்றே
1052.
போற்றவே தாலிப்பொன் னேளிதத்தைப் பொலிவான விசுவகரிமியறிவான்பாரு
ஏற்றவே உன்னெளிமை யறிவாராந்தான் யெழிலான சித்தர்முனி யறிவாரப்பா
மாற்றவே சீவனத்துக் கிடமதாக மகாகோடி ரிஷிதேவர் கைமறைப்பு
ஆற்றவே கூடாது யொருவராலும் அப்பனே நாமுனக்கு வரைவோம்பாரே
1053.
பாரேதான் நாகமது பலமஞ்சாகும் பதிவான இலுப்பைநெய்யில் சுத்திசெய்து
நேரேதான் கிண்ணமது குடம்போல்செய்து நேரான தாசிளமும் சரியாய்க்கொண்டு
சீரேதான் பழச்சாற்றால் மைபோலாட்டி கற்பகக் கிண்ணிக்கு வங்கிபூட்டி
வாரேதான் கிண்ணத்தில் சூதராசன் வளமாக வாய்மட்டும் நிறையவாரே
1054.
நிறையவே சட்டியிலே மணல்தான்கொட்டி கெடிதான கிண்ணமதை மணல்மேல்வைத்து
அறையவே யெலுமிச்சம்பழச்சாற்றன்னை அப்பனே சுருக்கிடவே மண்டலந்தான்
கரையவே தாளகத்தின் வங்கவாசால் கடிதான நாகமது கட்டிப்போகும்
முறைபோல சூதமது விடையேசேர்த்து முயற்சியாய் குகையிலிட்டு வுருக்கிடாயே
1055.
உருக்கியே கெந்தியது பாதிசேர்த்து வுற்பனமாமேருவென்ற குப்பிக்கேற்றி
நெருக்கியே நாற்சாமமெரித்தபோது நிலையான செந்தூரமென்ன சொல்வேன்
பருக்கியே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று பாங்காக கொடுத்திடவே மற்றுபத்தாம்
பெருக்கியே சிவயோகந்தன்னிற்சென்று பேரின்பலாபமென விதியைத்தேடே
1056.
தேடவே சித்தர்களும் முனிவர்தாமும் தெளிவுடனே மறைப்பெல்லாம் தெரிவிப்பார்
கூடவே யோகத்திற்குறுதிசொல்வார் குறியான வாசிபீடத்தைச்சொல்வார்
நாடவே நாலுயுக மகிமைசொல்வார் நாதாக்கள் மறைப்பினுட மார்க்கஞ்சொல்வார்
பாடவே போகரிஷி மர்மமெல்லாம் பாடிவைத்தேன் சத்தகாண்டந்தன்னில்தானே

1057.
தானேதான் வுப்பிட்ட பாண்டந்தானும் தப்பாது தானுளுக்குந்தன்மைபோல
வேனென்ற காயமது நில்லாதப்பா வெகுசுருக்கு மேதினியிலார்தா னின்றார்
நானென்ற காயாதிகற்பஞ் சலெ்வோம் நலமான கையானின் சார்தானாழி
போமென்ற பொன்முசுட்டை சார்தானாழி போற்றவே யாவாரைச் சார்தான்கூட்டே
1058.
கூட்டவே தலைச்சுருளி சாற்தானாழி கொடிதான சிறியாளின் சாற்தானாழி
நீட்டவே கொடிவேலின் சார்தானாழி நெடிதான புனல்முருங்கை சார்தானாழி
பூட்டவே நறுதாளிச் சார்தானாழி புகலவே வெள்ளறுகுச் சார்தானாழி
மாட்டவே புளியாரைச் சார்தானாழி மதிப்புடனே செங்கடுக்காய் சாற்தான்கூட்டே
1059.
சாறான தழுதாழை சாற்தானாழி தாக்கான குமரிச்சாற்தானாழி
மாறான வழுதலையின் சாற்தானாழி மதிப்பான காசானின் சாற்தானாழி
வேரான விஷப்பாகல் சாற்தானாழி வெடிப்பான கொமட்டியின் சாற்தானாழி
கூறான பொடுதலையின் சாற்தானாழி கறிப்பான மாமதளையின் சார்தான்சேரே
1060.
சேர்க்கவே பசும்பாலைச் சாற்தானாழி சிவப்பான செம்பசலைச் சாற்தானாழி
தீர்க்கவே தைவேளைசார்தானாழி திறமான வாதண்டை சாற்தானாழி
பார்க்கவே முசல்மூலிச் சாற்தானாழி பாங்கான பழுபாகல் சாற்தானாழி
பூர்க்கவே நொச்சியிலை சாற்தானாழி போக்கான தக்காளிச் சாற்தான்பூட்டே
1061.
பூட்டயிலே விதுவெல்லாம் பாண்டத்திட்டுப் பொங்கமுடனிதுநேரே யெண்ணைசேர்த்து
மாட்டுவாய் கடைசரக்குசொல்லக்கேளு மகத்தான கிராம்புடனே ஏலந்தானும்
நீட்டுவாய்ச் சுக்குடனே மிளகுசேரு கெடிதான வலம்புரியின் மாசிக்காயும்
தேட்டமே மதுரமுடன் கோஷ்டந்தானும் தெளிவான திப்பிளியும் ரோசனையுமாமே
1062.
ஆமேதான் பரங்கியுட பட்டைதானும் அடவான மாசிக்காய் தான்றிக்காயும்
வேமேதான் குரோசானி ரோமந்தானும் விரைவான முட்டியுடன் கடுகுரோனி
தாமேதான் வாய்விலங்கம் லவங்கப்பட்டை தயவான வால்மிளகு சித்ரமூலம்
நாமேதான் வசம்புடனே சித்தரைத்தை நலமான சாதிக்காய் தானுங்கூட்டே
1063.
கூட்டியே வகைவகைக்கும் பலந்தான்காலாம் குறிப்புடனே தானிடித்து சூரணித்து
பூட்டியே யெண்ணெயுட மூலிசேர்த்து புகழாக மூன்றுமொன்றாய் ஒக்கக்கூட்டி
மாட்டியே பசும்பாலுங்கூடச்சேர்த்து மதிப்பாக மெழுகுபதந் தன்னிற்காய்ச்சி
தாட்டியால் சீசாவில் தானடைத்து சாங்கமாய் னெல்லாவிக்குள்ளேவையே
1064.
வைக்கவே மண்டலந்தான் கொள்ளவேண்டும் வகையாகக் காசிடைதானருந்தவேண்டும்
மெய்க்கவே புளிபுகையுந்தள்ளவேண்டும் மேன்மைபெற பத்தியந்தானிருக்கவேண்டும்
சொக்கவே பெண்மாய்கை நீக்கவேண்டும் சூட்சாதி சூட்சத்தையறியவேண்டும்
புக்கவே வாசியைத்தானிறுத்தவேண்டும் புகழான தேகமது பொன்னாகும்பாரே

1065.
பொன்னாகும் நரைதிரையு மற்றுப்போகும் பாகாது சடலமது கல்தூணாகும்
மன்னாகேள் மூப்பதுவுமகலும்பாரு மைந்தனே வாலையது யாவாய்நீயும்
பன்னவே மூச்சதுவும் கீழேநோக்கும் பாங்கான முனைமூக்கு பிடரிதன்னில்
என்னவே மூச்சதுவு மேவும்பாரு எழிலான சுழிமுனையுமாகுந்தானே
1066.
மாறுமே சுழிமுனையும் விந்துதானே மாறாமல் மேல்மூலத்தொடுங்கும்பாரு
கோறுமே திரிகோணவட்டத்துள்ளே குறிப்பாகச் சவாத்துமாவைக் காணலாகும்
நீறுமேரவிமேநேர் மதிதாநிற்கும் நெடிதான வாகாசம் பிரமபீடம்
பாறுமே முத்திவழிகாணலாகும் பதிகடந்த ஞானியாம்யோகியாமே
1067.
யோகியாமுனைமூக்கு மத்தியத்தில் யொளிவீசுமோரி தழத்தாமரையின்மேலே
போகியாம்விலையத்திலூடுதாக்கி பகட்டவே வங்குலந்தா னின்றுசென்றால்
சாகியாம் ரவிமதியும் ஒன்றாய்கூடும் சாங்கமாய் கோட்டைவிட்டு வுடலுய்யாது
வேகியால் காதுபொரி மிகவேக்காடு விலங்கவே யோகத்துக்குறுதியாச்சு
1068.
ஆச்சப்பா மத்திவழிகாணலாச்சு அடவான நினைவுதடுமாறல் கண்டாய்
பேச்சப்பா மிகப்பேச்சு பேசினாக்கால் பிராணாய யோகநிலை காணலாமே
மூச்சப்பா பிரளாது வயானத்தின்கீழ் முடிவான வயானத்தில் மனமேகுற்றம்
நீச்சப்பா வுதரத்தில் நாடிதானும் நெடிதான மூலவலை நீக்கும்பாரே
1069.
பாரேதான் யையந்தும் போக்கிவிட்டால் பசியேது ஞானத்தின் கதையேகாட்டும்
சீரேதான் கலபமறிந்துண்ணவேண்டும் சிறப்பான வியாதிதன்னைத் தீர்க்கவேண்டும்
நேரேதான் ரேசகத்தை நிறுத்தவேண்டும் நெடிதான கும்பத்தை மாற்றவேண்டும்
கூரேதான் பூரகத்தைச் சாரவேண்டும் கூசாமல் காலூறி செபத்திடீரே
1070.
செபிக்கவே நெற்றியிலே விபூதிபூசி சிறப்பான வஷ்டாங்க யோகஞ்செய்து
லபிக்கவே பலநூறுங்கற்றுக்கொண்டு லோசித்து யோகத்தைப்போற்றிக்கொண்டு
குபிக்கவே பம்பரத்தி னாட்டினாற்போல் குட்டங்கொண்ட யெண்ணையது தண்ணீராமோ
தபிக்கவே நாய்போலக் கெட்டலைந்து சதாகாலங் காசினியி லுழல்வார்தாமே
1071.
தாமேதான் பசுவுக்கு ஞானமார்க்கம் தாக்குடனே போதித்தால் அறிவுமுண்டோ
வேமேதான் கரைகடந்த ஞானிதானும் வெளியான சற்குருவின் முன்னேவந்து
போமேதான் சொன்னாலும் தெரியாதொன்றும் புகட்டினாலென்னபலன்தானுண்டாமோ
நாமேதான் சொன்னபடி யேழாயிரத்தில் நலமான நுட்பமெல்லாம் காட்டினேனே
1072.
காட்டினேன் நுட்பமெல்லா முலகத்தோர்க்கு நலமாக கொட்டிவிட்டேன் பிசகுமல்ல
காட்டினேன் பிள்ளைகளும் பிழைக்கவென்று கருத்தறியாமல் போனால்நானென்ன
செய்வேன்
பூட்டினேன் பிழைக்கவென்று மைந்தாகேளு பிசகாமல் சொல்லிவிட்டேன் ஞானமார்க்கம்
மாட்டினேன் அரைக்கீரை அறுத்தாலும்தான் மறுகாகாலும் ததைப்பதுபோலாகும்பாரே

1073.
பாரேதான் அவரவர்கள் குணம்போலாகும் பாங்கான கற்பகத்தை சார்ந்தாலென்ன
சீரேதான் பலநூறுங்கற்றாலென்ன சிவயோகந்தன்னிலே சென்றாலென்ன
நேரேதான் தத்துவங்கள் அறிந்தாலென்ன நெடிதான வாசிடைதா னிறுத்திலென்ன
கூரேதான் அஷ்டசித்துக் கொண்டாலென்ன குணமில்லை பூவுலகிலொன்றங்காணே
1074.
காணவே தாளகத்தின் வேதைகேளு கடிதான தாளகமோர் பலமதாகும்
மாணவே சுண்ணாம்புக் கவசஞ்செய்து மதிப்புடனே பனங்கள்ளிற் சாமம்நாலு
நீணவே தாளித்துச் சுத்திசெய்து நெடிதான தாளகத்தை யெடுத்துப்பாரு
வேணவே துருசதுஊம் நேரேயொக்க விரைவாகப் படிசாற்றால் அரைத்துப்பூசே
1075.
பூசியே ரவிதனிலே காயப்போடு பொங்கமுடன் சுண்ணாம்புச் சீலைசெய்து
வீசியே குக்குடமாம் போடயீயம் விரைவான வங்கமது யென்னசொல்வேன்
ஊதியே காந்தமது யீயமாச்சு உப்பனமாந் தாளகத்தின் வேதையாச்சு
மாசில்லா வங்கமது நேரேசூதம் மாட்டாகெந்தகமு மாட்டித்தீரே
1076.
மாட்டவே யறுவகை ஜெயநீர்தன்னால் மதிப்புடனே நாற்சாமமரைத்துமேதான்
நீட்டவே மேருவென்ற குப்பிக்கேற்றி நெடிதாக வெண்சாமம் எரித்துப்போடு
கூட்டவெ யாறவிட்டு யெடுத்துப்பாரு கொடிதான செந்தூரம் முருக்கம்பூப்போல்
தீட்டவே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று திறமுடனே கொடுத்துருக்க மாற்றாறாமே
1077.
ஆமேதான் செம்பதனை ஊதிப்போடு அப்பனே மாற்றதுவு மின்னும்பாரு
தாமேதான் பத்திலொன்று தங்கஞ்சேர்த்து தாக்காகப் புடம்போட மாற்றெட்டாகும்
வேமேதான் சிவபதத்தி லிருந்துகொண்டு வெளியான ஜெகஜோதிதன்னைக்கண்டு
போமேதான் பராபரியை மனதிலெண்ணி போற்றடா குருபாதத்தைப் பணிந்துநில்லே
1078.
நில்லவே துவாதிஷ்டானந் தன்னிற்சென்று நிலையான கும்பகத்திலிருந்துகொண்டு
புல்லவே பிராணாயந் தன்னிற்சென்று போற்றவே நிர்வாணிரூபிதன்னை
மல்லவே சதாகாலம் போற்றிசெய்து மக்கமென்னுஞ்சாகரத்தை யகற்றிப்போடு
வெல்லவே வேதாந்தந் தன்னிற்சென்று விரைவுடனே சொரூபநிலை சார்ந்துதேறே
1079.
சார்ந்ருமே வுப்பிட்டப் பாண்டம்போல தட்டழிந்துபோகுமே தேகந்தானும்
கூர்ந்துமே தேகமது கல்தூணாகும் குறியான காயமது கற்பஞ்சொல்வேன்
தேர்ந்துபார் செங்கடுக்காய் நிதமுமுண்ணு தெளிவான மண்டலந்தா னுண்டபோது
ஆர்ந்துமே சுவாசமது கீழேநோக்கும் மகங்கார்க்குண்டதியி னுணுக்கம்பாரே
1080.
நுணுக்கமாம் சதாசிவத்தின் பெருமைபாரு நுனிநாக்கு மூக்குமுனைசிரசுதானும்
கணுக்கமாங் குண்டலியை வாசிபற்றிக் கதிரொளியைக் காணுதற்கு லக்கோயில்லை
பணுக்கமாம் நேசகபூரகத்தில் தானும்பார்க்கவே மதிலயத்தை யூணிநிற்கும்
துணுக்கமாம் காயமது யிறுகிப்போகும் துன்பசாகரத்தைவிட்டுத் துலைவாய்நில்லே

1081.
துலைவான செம்பொன்னைக் கோடாகோடி துறையாகத் தேடியென்ன பலந்தானென்ன
நிலையான தேகமது போகும்போது நேரான கடுகளவு செம்பொன்தானும்
கலையான பொன்னதுவும் தன்னோடொக்க கடைசியிலே யாதொன்றுங்கண்டதில்லை
மலையான சாஸ்திரத்தி னுபதேசம் மார்க்கமுட னறிவதற்கு வகைதான்கேளே
1082.
கேளேதான் சார்புநூலறியவேண்டும் கொடியான வஷ்டாங்கம் பார்க்கவேண்டும்
மீளேதான் தத்துவத்தின் மூலமார்க்கம் மிக்கான சடாதாரக் குருவின்மார்க்கம்
பானேதான் குண்டலியின் வாசிமார்க்கம் பாங்கான அறாதாரத்தின் மார்க்கம்
சூளேதான் ஓங்காரக் குளிகைமார்க்கம் சுடரொளியின் சின்மயத்தின் மார்க்கம்தானே
1083.
தானான லிங்கமது சுத்திசெய்து தாக்கான வைங்கோலத் தயிலத்தாலே
வேனாக சுருக்கிடவே கட்டிப்போகும் எழிலாக வங்கமதை யிதுபோற்செய்து
பானான விரண்டையுந்தா னுருக்கிப்பாரு பாங்கான மணிபோலக் கட்டியாடும்
தேனான மணியதனை யுடைத்துக்கொண்டு தெளிவாக வெள்ளிசெம்பில் தன்னிற்றாக்கே
1084.
தாக்கவே கரியோட்டிலூதிப்போடு தளுக்கறவே கசடுதா னகன்றுபோகும்
நோக்கவே மாற்றதுவும் மாறதாகும் நொடிதான யேமவித்தை சொல்லப்போமோ
தேக்கவே பத்திலோர் தங்கஞ்சேர்த்து தெளிவறவே தகடடித்து புடத்தைப்போடு
நோக்கவே பரியதுவுஞ் சேர்ந்துமல்லோ நொடிதான மாற்றதுவும் எட்டதாகும்
1085.
எட்டான மாற்றதுவுங் காணமாட்டார் யெழிலான விஞ்சிதின்னுங் குரங்கைப்போல
வட்டாக மயங்கியல்லோ யேங்கிநிற்பார் வரிசைபெற கருவான மின்னமொன்று
திட்டமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு தெளிவான தாளகமும் பலந்தானொன்று
திட்டமாய் சுண்ணாம்பும் பூநீர்தானும் கெடியான வமுரியினா லாட்டித்தீரே
1086.
தீர்க்கவே தாளகத்துக்கங்கிபூட்டி திறமான மணல்மறைவிற்புடத்தைப்போடு
மார்கமாய்ப் புடம்போடலீயமாகும் மகத்தான யீயமதுயென்னசொல்வேன்
பார்க்கவே சூதமது சரிநேரொக்கப் பாங்காகத் தானூட்டி ஜெயநீர்தன்னால்
மூர்க்கமாய் நாற்சாம மரைத்துமேதான் முனையான மகமேருக் குப்பிக்கேற்றே
1087.
ஏற்றவே சாமமது பனிரண்டாகும் யெழிலான செந்தூரமென்ன சொல்வேன்
மாற்றவே வெள்ளிசெம்பில் பத்துகொன்று வரிசைபெறத்தானுருக்கி குருவொன்றீய
நாற்றமுடன் செம்பதுவும் நீங்கியேதான் நலமான வெள்ளயது மாற்றுகாணும்
தோற்றவே பத்திலோர் தங்கஞ்சேர்த்து சுருதிபெற தகடடித்து புடத்தைப்போடே
1088.
போடவே மாற்றதுவு மிகுதியாகிப் பொங்கமுடன் னெட்டரையுங்காணும்பாரு
கூடவே சிவயோகந்தன்னிற்சென்று கும்பகத்தில்மீதிருந்து பாய்ச்சலாகி
நீடவே சதாநித்தம் வாசியோகம் நெடியான பூரணத்தி ரேசித்தேதான்
மாடவே யோகத்தை சாதித்தேறு மகத்தான ரேசகத்தில் மருவிப்பாரே

1089.
மருவியதோர் வாலையது பிரம்மபீடம் மகத்தான புவனையது கருவிதாரம்
மருவிதோர் திரிப்புரைதான் கபாலபீடம் மகத்தான வஷ்டாங்கந் தன்னிற்சென்று
கருவியதோர் ஞானத்தின் மார்க்கங்கண்டு கருவான வெட்டவெளிதன்னிற்சென்று
உருவிதோர் பரபிரமந்தன்னிற்புக்கி வுத்தமனே லகிரியிலே போற்றிநில்லே
1090.
போற்றவே மனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள் பொங்கமுடனின்னமொரு மார்கங்கேளு
ஆற்றவே பாஷாணம் பலமைந்தாகும் அப்பனே சுக்கான்றன் கல்லைத்தானும்
தூற்றவே திருகுகள்ளிப் பாலாலாட்டி தூய்மைபெற கவசித்துக் காயவைத்து
மாற்றவே சட்டியிலே மணல்தான்கொட்டி மறவாமல் மணலையுந்தான் மேல்மூடே
1091.
மூடியே சட்டிகொண்டு சீலைசெய்து முயற்சியாய்த் தானெரிப்பாய் கமலம்போல
ஓடியே நாற்சாமம் எரித்தபோது வுயர்வான பற்பமதுயென்னசொல்வேன்
நாடியே பற்பமதுதன்னைவாங்கி நலமாக வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
தேடியே வுருக்குமுகந் தன்னிலீய தெளிவான மாற்றதுவுங் காணும்பாரே
1092.
காணவே கரியோட்டிலூதிப்போடு கருவான வெள்ளியது கனகமாகும்
தோணவே நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து சிறப்பாகத் தகடடித்துப் புடத்தைப்போடு
மாணவே தங்கமதுயிறங்கும்பாரு மகத்தான வேதையிது களுக்குவேதை
நீணவே ஜீவனத்தைசெய்துகொண்டு நெடிதான சாஸ்திரத்தை யறிந்துபாரே
1093.
பாரேதான் கோடிபொருளிருந்துமென்ன பாருலகில் வெகுநாளாய் வாழ்ந்துமென்ன
சீரேதான்மனமகிழ்ச்சி கொண்டுமென்ன சிறப்பான மாளிகையுங் கட்டியென்ன
நேரேதான் வாசியோகஞ் செய்துமென்ன நெடிதான மலைகளிலே யிருந்துமென்ன
கூரேதான் ரிஷிசித்தராயுமென்ன குவலயத்தில் நாயமது யிருக்கப்பாரே
1094.
இரக்கவே யுகாந்தவரை யிருக்கவேண்டும் யெழிலான காயத்தை நிறுத்தவேண்டும்
பொருக்கவே மனமாசை வெறுக்கவேண்டும் பூதலத்தில் காயகற்ப மருந்தவேண்டும்
வருக்கவே வாலுமுலைத்தயிலத்தாலே வாகாக காயத்தை இருத்தலாகும்
தருக்கவே வெகுகோடி காலமட்டும் தரணியிலே தானிருந்து வாழலாமே
1095.
வாழலாம் பொய்யான வாழ்வைநம்பி வகைதெரியா பசகளெல்லாம் கூட்டம்கூடி
வாழலாமென்று சொல்லிவாதந்தேடி வையகத்தில் சுட்டிறந்தோர் கோடாகோடி
வாழலாமென்றுமல்லோ பொருளைத்தேடி வையகத்தில் மோசங்கள் மிகவும்பண்ணி
வாழலாம் புக்கோடி காலமட்டும் நீனிலத்திலெப்போதும் யோகம்பாரே
1096.
நிலையென்ற யிஞ்சிதின்ற குரங்கைப்போல விளித்தேங்கி நின்றதினால் பயனுண்டாமோ
நிலையான பத்தியமுமில்லாவிட்டால் நேரான மோட்சவழிக் கேகலாமோ
நிலையான காயத்தை நிறுத்தவேண்டும் நெடுங்காலம் யோகநிலையறியவேண்டும்
நிலையான பதவிமனையடையவென்று நீனிலத்திலெப்பொதும் யோகம்பாரே

1097.
பார்க்கவே லிங்கமொருபலமே தூக்கு பாங்கான முலைப்பாலில் சுத்திசெய்து
ஏர்க்கவே வீரமென்ற ஜெயநீர்தன்னால் யெழிலாக நாற்சாமம் சுறுக்குதாக்கு
தீர்க்கவே வெள்ளிபோல் கட்டியாகும் தெளிவான லிங்கமது வுருகியாடும்
வோர்க்கவே வங்கமதை வெட்டைசெய்து விரைவாக லிங்கமுடன் நாகஞ்சேரே
1098.
சேரவே நாகத்தையொன்றாய்கூட்டி செழிப்புடனே செந்தூரஞ்செய்யலாகும்
கூரவே வெள்ளியது வாரதாகும் குணமான செம்பதுவும் மூன்றதாகும்
நேரவே மூசையிட்டு வுருக்கிநன்றாய் நேரான கண்விட்டாடும்போது
தீரவே செந்தூரமொன்றுபோட திறமுடனே மாற்றதுவுங் காணும்தானே
1099.
தானான களங்குதன்னை யோட்டில்வைத்து தகமைபெற வூதிடவேதெளிவதாகி
வஆனான ரவிமதியமொன்றாய்ச் சேர்ந்து விரைவான மாற்றதுவும் மிகுதியாகும்
கோனான குருவருளால் வாதசித்திக் குணமானசின்மயமும் வெளியாய்த்தோன்றும்
பானான சிவயோகந் தன்னில்சென்று பாருலகில் வாழுவது பான்மையோர்க்கே
1100.
பான்மையாம் லாகிரியை நீக்கவேண்டும் பாங்கான மோகமதை தவிர்க்க வேண்டும்
மேன்மையாஞ் சின்மயத்தைப் பூசித்தேதான் மேலானகருவிகரணாதியெல்லாம்
வான்மையா மடிமுடியுங் கண்டுமேதான் வாகுடனே பராபரியை நிர்த்தஞ்செய்து
துன்மைபெற வஷ்டாங்கயோகஞ்சென்று துறைகோடி முடியுமட்டும் துலைவாய்நில்லே

1101.
நில்லவே சித்திராப்பர்வதந்தன்னில் நெடிதான பூரணையில் சாமநேரம்
கல்லான களர்மண்ணா மூவர்மண்பூமி கடிதான மலைச்சாரல் தன்னில்சென்று
புல்லான மணற்றூரு யாவுமாய்ந்துபோக்கான சவுட்டுமண் தன்னைப்போக்கி
வல்லான கிட்டலைகள் யாவும்செய்து வளமாக மூங்கல்தனை யாப்புமாச்சே
1102.
ஆச்சப்பா மூங்கலா லாப்பேயாச்சு அப்பனே நடுச்சாமம் கதிர்போலுப்பாம்
பேச்சப்பா வொன்றில்லை பூநீர்பூக்கும் பேரான கற்பமது பூநீராகும்
மூச்சப்பா முன்சொன்ன பூநீராலே முன்னிரைத்த செந்நீரு மளவாய்கொண்டு
காச்சப்பா கலசமது தீபம்போல கண்கொள்ளாயுப்பதுவும் பூநீராமே
1103.
ஆமேதான் பூநீரின் மார்க்கங்கேளு அப்பனே சீனமதுபலந்தானொன்று
தாமேதான் வெடியுப்பு பலமதொன்று தாக்கான இந்துப்பு பலமதொன்று
வேமேதான் வீரமது பலமதொன்று மிக்கான சூடனது பலமதொன்று
நாமேதான் சொன்னபடி யெல்லாங்கூட்டி நலமாகத் தானரைப்பா யமிநீர்தானே
1104.
தானான சரக்கதனை தசப்பங்காக்கிச் சார்பான லிங்கமதுக் கங்கிபூட்டி
வேனாக ரவிதனிலே காயவைத்து விருப்பமுட னோட்டில்வைத்து சீலைசெய்து
கோனான குக்குடத்தி லிறுக்கிக்கட்டும் குருவான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
மானாகக் கொடுத்திடவே வுருகிப்பாயும் மாசற்ற களங்கதுவு மாகும்பாரே
1105.
பாரேதா னோட்டில்வைத்து வூதிப்போடு பழிப்பான மாற்றதுவுமெட்டதாகும்
சீரேதா னாலுக்கோர் தங்கஞ்சேர்த்து சிறப்பாகப் புடம்போட மாற்றுகாணும்
கூரேதான வணிகரிடஞ் சென்றுமாறி குறிப்பான சிவயோகந் தன்னிற்சென்று
நீரேதான் நிர்த்தமுடன் மாயிபூசை நேர்ப்பாகச் செய்து சிவசொத்தையுண்ணே
1106.
உண்ணயிலே வஷ்டாங்கந் தன்னிற்சென்று உத்தமனே அரமணைத்தும்கைவிடாமல்
எண்ணயிலே எளியார்போல் மனதிலெண்ணி ஏற்றமாங் கர்வமதை யகற்றித்தள்ளி
நண்ணியிலே சிவவேடம் பூண்டுகொண்டு நாதாக்களடிவணங்கி நானிலத்தில்
திண்ணயிலே வொதுங்கிருந்து யோகம்பார்த்து தேவிமனோன்மணியை பார்த்திடாயே
1107.
போற்றவே மேருகிரிதன்னிற்சென்று புகழான சித்தர்வர்க்கம் யாவுங்கண்டு
ஆற்றவே யுந்தனது வுள்ளந்தன்னில் அடக்கியதோர் கருகரணாதியெல்லாம்
சீற்றமுடனவர்பாதம் பணிந்துபோற்றிச் செழிப்புடனே தாமுரைத்து வதீகங்கேட்பீர்
கூற்றனுமே தானகற்றி யுந்தன்மீது குவினது கடாட்சம் வைத்து ரட்சிப்பாரே
1108.
இரட்சிக்க வின்னமொரு கருமானங்கேள் இயலான நாகமதுபலந்தானொன்று
இரட்சிக்க கெந்தகமும் பலந்தானொன்று யெழிலான மஞ்சளிட கருவாலாட்டி
இரட்சிக்க கெந்தகத்தை தயிலமாக்கி யெழிலான தயிலமதை நாகத்தூண்டு
இரட்சிக்க நாகமது கட்டிப்போகும் இயலான நாகத்தின் வேதையாமே

1109.
வேதையாமதிதனிலே சரியாய்க்கூட்டி வேடிக்கை சிமிட்டுவித்தை வாதங்கேளு
பாதையாங் கரியோட்டிலூதிப்போடு பாங்கான வெள்ளியது மாற்றுகாணும்
நீதியாம் வெள்ளியது மெட்டதாறும் நிலையான செம்பதுவுமொன்றுகூட்டி
மாதையாந் தானுருக்கி யெடுத்துப்பாரு மகத்தான மாற்றதுவு மேழதாமே
1110.
ஏழான வெள்ளிக்கு இரண்டுதங்கம் ஏற்றமாந்தகடடித்துப் புடத்தைப்போடு
சாழான தங்கமது நேரேசேர்ந்து சரியான தன்னிறப்போலாகும்பாரு
மாழான பிரமவித்தை வாதவித்தை வாய்குமோ யெல்லோர்க்கும்
பாழான துக்கசாகரத்தைவிட்டுப் பதறாமல் பதாம்புயத்தை பணிந்து நில்லே
1111.
பணியவே கன்றுக்கு பால்கொடுத்த பழங்கதையாம் போல்யாகும் பரிநதுபார்த்து
துணியவே போகரிஷி சொன்னநூலில் துறைகோடி யுகங்கோடி தொந்தங்கோடி
அணியவே வொவ்வொன்று மாராய்ந்தேதான் அப்பனே செய்திடிலோ யெல்லாஞ்சித்தி
கணியவே காலாங்கி பாதம்போற்றி கருதினார் போகரிஷி கருதினாரே
1112.
கருத்தவுவே வுப்பதுதான் சேரொன்றாகும் கனமான புளியாரைச் சாரைவாங்கி
திருத்தமாய்த் தானரைத்துப் பில்லைதட்டி திறமாக ரவிதனிலே காயப்போடு
பருதமாம் குக்குடத்தில் புடத்தைப்போடு பாங்கான செந்தூரமாகும்பாரு
வெருதமாமிப்படியே பத்துமுறைபோடு வெளியான சூதத்தை கூடச்சேரே
1113.
சேர்த்துமே மேனிச்சார் தன்னாலாட்டி சிறப்பாக பத்துமுறை யிப்படியேபோடு
கார்த்துமே யாறவிட்டு யெடுத்துப்பாரு கனமான செந்தூரம் சொல்லப்போமோ
தீர்த்துமே செந்தூரந்தானெடுத்து திகழான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
பார்த்தமே தானுருக்கிக் கொடுத்துப்பாரு பாங்கான மாற்றதுவுங்காணும்பாரே
1114.
மாற்றான வெள்ளிக்கு நேரேதங்கம் மதிப்புடனே தான்சேர்த்து வுருக்கிப்பாரு
தூற்றான திரைநீங்கி சிவந்ததங்கம் துரைகோடி சென்றாலும் பழுதுறாது
காற்றான கானகந்தன்னிற்சென்று கருமூலிவிஷமூலி யாவும்பார்த்து
சோற்றான துருத்தியென்னுங் காயந்தன்னை சுகம்பெறவே சாதித்துக் கற்பங்கொள்ளே
1115.
கொள்ளவே காயாதிகற்பங் கொண்டால் கோடிவரையுகங்கோடி யிருத்தலாகும்
தள்ளவே மாய்கைதனை யறுக்கவேண்டும் சமுசார தொல்லைதனை வெறுக்கவேண்டும்
மெள்ளவே சிவயோகங் காணவேண்டும் மேலான பதாம்புயத்தை நண்ணவேண்டும்
உள்ளவே வாசியைத்தான் நிறுத்தவேண்டும் முத்தமனே போகரிஷி யுரைத்ததாமே
1116.
ஆமென்ற வுலகத்தோர் வாதந்தேடி ஆராய்ந்து சரக்குகளைப் பார்த்துப்பார்த்து
போமென்று யிதினாலே சீவனங்கள்பண்ணிப் புல்லர்கள்தா னெட்டுபேர்பத்துபேர்கூடி
காமென்ற யோசனைதான் மிகவும்பண்ணிக் கலந்துநின்ற சாஸ்திரத்தில் மறைத்துப்போட்டார்
நாமென்ன ஜெயநீரில் பார்ப்பதொன்று நலமாகச் சாறுவிட்டு அரைப்பார்பாரே

1117.
அரைத்துமே புடம்போட்டுப் பனியில்வைத்து ஆகாகாஜெயநீர்தா னாச்சுதென்பார்
நிரைத்துமே புடம்போட்டுச் சரக்கைகட்டி நேராகவாச்சுதென்று லோகத்தீய்ந்து
கரைத்துமே செம்பையிட்டுக் காரீயங்குத்தி கசடகற்றியூதியே யுரைத்துப்பார்த்து
மறைத்துமே நால்மாற்று ஆச்சுதென்று மயங்குவாருலகத்தச் சண்டிதானே
1118.
சண்டிகள்தான் மெத்தவுண்டு வுலுத்தமாண்பர் தருகுரும்பனதிலொருவன்
பொன்னைச்சேர்த்து
மண்டியே கடைதனிலே வுரைத்துக்காட்டி மனதுநொந்து புண்ணாகிப் போட்டபொன்போய்
தண்டியே ஒருகாசிரண்டுகாசி சார்பாக யின்னொன்று பார்ப்போமென்று
மண்டியே நான்போட்டே நீபோடென்று மயிர்பிடித்துச் சண்டையிட்டு வழக்கம்பாரே
1119.
வழக்கிட்டுச் சண்டைகொண்டு பின்னொருவன்வந்து வாதியொருபரதேசிவந்தானப்பா
வழக்கிட்டு தொழில்செய்து கடையில்விற்றான் நான்பார்த்தேன் வெகுசுளுவு நீயும்பாரு
அமுக்கிட்டு ஒன்றோடெஒன்றைச்சேர்த்து அமர்த்தியவர்புடம் போடப்புகைத்துப்போயி
பழுக்கிட்டு இப்படியே சாகுமட்டும் புலம்பியிறந்துண்டவர்கள் கோடியாமே
1120.
இறந்திட்டார் சித்தர் சர்வாதிஞானி இயல்பான சாஸ்திரத்தை யாராய்ந்துபார்த்து
மறந்திட்டார் கருவையெல்லாம் மனதிலெண்ணி மகத்தான பெரியோர்க்குத்
தொண்டுபண்ணி
திறந்திட்டார் குருசொன்ன மொழியைத்தானும் சிவயோகமார்க்கத்தின் வழியிற்சென்று
அறந்திட்டா ஆத்தாளைக் கேட்டுகேட்டு அவள்சொன்னபடி செய்வார் பெரியோர்தாமே
1121.
பெரியோர்களென்று சொன்னமொழி யேதுக்குப் பேரின்பசாத்திரத்தி லுரைத்ததாலே
பெரியோர்களாவதுவும் ஏதலாலென்றால் பொய்மறந்து மெய்யுரைத்த பிரதாபத்தாலே
பெரியோர்களானதென்ன யோகநிஷ்டை பேரானகற்பமுண்டு காயசித்திசெய்தார்
பெரியோர்கள் குருபதத்தை மறவாமலென்றும் பேசாமலூமையைப்போ லிருப்பார்பாரே
1122.
பாரப்பா நிர்மூடவாதிகட்குப் பலியாது யேமமென்ற வித்தைதானும்
நேரப்பா பொய்சொல்லும்புலையருக்கு நிச்சயமாய் காணுகிற யோகம்பொய்யாம்
சேரப்பா காமமென்ற காதுகட்குத்தானும் செயலான காயசித்தி சோபம்பொய்யாம்
தூரப்பா குருசொன்ன மொழிமாயை யிந்ததுஷ்டருக்குச் சகலநூல்களெல்லாம் பொய்யே
1123.
பொய்யென்ற வார்த்தையது சொன்னானாகில் போக்கோடேயேழுஜென்ம புலையனாவான்
பொய்யென்று காயசித்தியென்று சொன்னால் பிறந்திடுவான் கழுதையென்ற ஜென்மமாகப்
பொய்யென்று யோகத்தைச் சொன்னானாகில் புளுவான பாழ்நரகில் வீழ்வான்பாவி
பொய்யென்ற பூசையைத்தான் தூசித்தோர்க்கும் பேராகமூவேழுவங்கிஷம்பாழாமே
1124.
பாழாகும் வஸ்துசுத்தி பானந்தன்னைப் பதையாமற் சொன்னோர்க்கு அல்லலுண்டாம்
கூழாகும் கஞ்சிக்கி ஏங்கிஏங்கிக் கொடிதான பெருவயறுஏளையெய்தி
மீழாகுங்குணமுவலி பித்துக்கொண்டு மிகையெய்தி நகையெய்தி வீடுதோறும்
நாளாக யிரப்புண்டு கொடுப்பார்க்கைபார்த்து நமனுக்குப்பகையாகி நரகெய்வானே

1125.
எய்தவே சகஸ்திரமாஞ்சத்துகேளு இதமான ஆதளையின் பால்தானல்லோ
கொய்தவே யெருக்கம்பால் சேரையொன்று கோழிமுட்டை வெண்கருவுஞ் சமனாய்க்கூட்டி
பைதவே வெண்காரம் பலந்தானைந்து பகருகின்ற கெந்தகந்தான் பலமும்நாலு
நைதவே துரிசியது பலமுமூன்று நாட்டுவாய் தாளகமும் பலமும்ரண்டே
1126.
ரண்டெல்லாம் பொடிபண்ணிப் பாலிற்போடு நேர்ப்பான பன்றிநெய்சேரவிட்டு
பண்டெல்லாம் அயச்சட்டிக்குள்ளேவார்த்துப் பருவமாமடுப்பேற்றி யெரித்துவாங்கி
கொண்டெல்லாம் குழம்பான பதத்திற்கிண்டிக்கொண்டுமே கலயத்திற்கட்டிவைத்து
துண்டெல்லாஞ் சகஸ்திரமாம் வேதையிலேபோட்டுத் துவளபரையெண்சாமம்
வில்லைகட்டே
1127.
வில்லைகட்டி சரவுலையில் போட்டுவூது மேலானசத்தெல்லாங் கழன்றுவீழும்
கல்லைகட்டி சத்தெல்லாம் பொருக்கிக்கொண்டு கறடெடுத்து தயிலத்தி லரைத்துவூது
வில்லைகட்டி ஐந்துதரமூதுவூது சிறப்பாகச் சத்தெல்லாமொன்றாய்ச்சேர்த்து
முல்லைகட்டி காரமிட்டு வுருக்கினாக்கால் முத்துபோல் வெளுப்பாகும் சத்தாகும்பாரே
1128.
சத்தெடுத்துப் பலமொன்று நிறுத்திக்கொண்டு தங்கமது நாலுக்கு ஒன்றுயிட்டு
பத்தெடுத்து நாகமது அரைப்பலந்தான் போட்டு பரிவாகயுருக்கிநன்றாய்ச் சூதம்போட்டுக்
கொத்தெடுத்து கெந்தகத்தை ரண்டுபலம்போட்டு குறிப்பாகக் கல்வத்தில்
பொடியாய்பண்ணி
மத்தெடுத்து அந்திமல்லிச் சாற்றாலாட்டி வகையாகப்பொடிபண்ணி குப்பிக்கேற்றே
1129.
குப்பிக்கே யேற்றிடுவாய் வாலுகையில்வைத்துக் கூசாமற் பனிரண்டு சாமந்தீப்போடு
குப்பிக்கே சூரியன்போல் சிவந்துகாணும் துடியாகப் பணவிடைதான் தேனிலுண்ணு
சிப்பிக்கே வுடலைப்போல கனசட்டைதள்ளும் தேசியைப்போல் நடப்பதற்கு
லெகுவுண்டாகும்
அப்பனே ஆயிரத்துக்கொன்றேயீய மருமமென்ற மாற்றாகு மறிந்துகொள்ளே
1130.
கொள்ளென்ற அண்டோடசத்துபண்ணிக்குன்றி மணித்தோல்போக்கிப் படிதானொன்று
அள்ளென்ற ரோமமது பலந்தான்பத்து அப்பனே அண்டத்தின் மேலேசுத்தி
தள்ளன்ற கெஜபுடத்தினீற்றிக்கொண்டு தயவாகப் பற்பத்தைக் கவசஞ்செய்து
முள்ளென்ற முசலெலும்புத் தூள்தான்பத்து முயற்சியா யெருக்கம்பால் விட்டுஆட்டே
1131.
ஆட்டியே ஐந்தாநாள் வில்லைபண்ணி அழகான பூப்புடத்தில் தயிலம்வாங்கிப்
பூட்டியே கலயத்திற்கட்டிவைத்துப் பொறித்தெடுத்த முட்டைதோல் பலமும்பத்து
நீட்டியே கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி நினைவாக வெண்காரம் பலமுமைந்து
தீட்டியே வீரமது பலமும்ரண்டு சிறப்பாகக் கூடவிட்டுத் தயிலத்தாலாட்டே
1132.
ஆட்டியே மூன்றுநாள் வில்லைகட்டி அசங்காமல் சரவுலையிலைந்துதரமூது
பூட்டியே சத்தெல்லாம் பொருக்கிக்கொண்டு பொரிக்காரமிட்டுருக்கி யொன்றாய்ச்சேர்த்து
வாட்டியே ஒன்றுக்கு நாலுதங்க மருவிநின்று வுருகையிலேகூடவிட்டுத்
தீட்டியே நாகமிட்டுச் சூதமிட்டுச் சிறப்பாகக் கெந்தியிட்டுக் களங்கமாமே

1133.
ஆமிந்தக் களங்கெடுத்து நவலோகத்தில் நூற்றுக்கொன்றிடவே யைம்பத்தைந்து
வாமிந்தப் பொன்னதுவும் பச்சைபோல்காணும் வாய்ப்பாகக் குப்பியிலே செந்தூரித்துண்ணு
நேமிந்தச் சடந்தானும் பச்சைநிறமாகும் தேகமென்றால் பொற்சிலைபோ லமுந்திக்காணும்
காமிந்தக் கற்பாந்தகாடிகாலங் காலனுமேயணுகாமல் சித்தியாமே
1134.
சித்தியாம் வெகுசுளுக்கு நாகபற்பம் திறமாகக் கேளுங்கள் மாணாக்காளே
பத்தியாம் நாகமதுபலந்தான்பத்து பகருகின்ற இலுப்பைநெய்யில் சாரம்போட்டு
மத்தியாமுமாறுதரம்தான்சாய்த்து முகியாமல் தகடுதட்டிப் புளியிலைபோல்நறுக்கிக்
கத்தியாங் கடுகொருபலந்தானைந்து காரமாமிளகாயம் பலமுமஞ்சே
1135.
அஞ்சான அபினைந்துபலமுந்தூக்கி அழகான எலுமிச்சைபழசார்விட்டு
துஞ்சான மூன்றுநாள் நேயமுடனரைத்து துடியாக வழித்தெல்லாம் குழம்பாய்வைத்து
பிஞ்சான தகட்டுக்குப் பூசபூச பேராக வாகையுட பட்டைவாங்கி
தஞ்சான திடித்துநன்றாய் தகடுவைத்து சார்பாக மேல்மூடி புடத்தைப்போடே
1136.
மூடியே சீலைசெய்து அவிர்புடமாய்ப்போடு முயற்சியாய்ப் பத்துவிசைப் போட்டெடுத்து
ஆடியே விளக்கெண்ணெய் விட்டுருக்கி அப்பனே நாகத்தைக் கிண்ணி
பண்ணிக்கொண்டு
நாடியே கிண்ணிநிறை சூதமப்பா நலமான தாளகமுஞ் சரியாய்க் கூட்டி
தேடியே தேடிசார்விட்டரைத்து சிறப்பாகக் கிண்ணிதனி லுள்ளேபூசே
1137.
பூசியே வாலுகையில் சட்டிவைத்துப் பொருந்தவே மணல்விட்டு அடியிற்றானும்
நேசியே யதின்மேலே யுப்புவிட்டு நினைவாகக் கிண்ணிதனைப் பதித்துவைத்து
தேசியே எலுமிச்சம் பழச்சாறு தானுஞ் சிறப்பாக எரியிட்டுச் சுறுக்குபோடு
மாசியே பதினைந்து நாள்தான் தீயைமறவாமல் போட்டிடுவாய் இரவுபகல்தானே
1138.
தானாகு மெலுமிச்சம்பழச்சாறு தானுஞ்சாதகமாய் வற்றவற்றச் சுறுக்குபோடு
பானாகும் பதினைந்துநாள்தான் சென்றால் பக்குவமாய் எடுத்துவைப்பாய் பீங்கானுக்குள்
கானாகு மல்லிகைபூப்போலே நிற்குங்கசடற்ற செம்பிலே நூற்றுக்கொன்று
கோனாகு மெழுகிலோட்டி கொடுத்தாயானால் குறையாது பனிரண்டுமாற்றுமாமே
1139.
ஆமப்பா துரிசியது பலமுமொன்று அழகான தாளகமும் பலமுமொன்று
வேமப்பா கள்ளிப்பால் வார்த்தரைத்து விளங்கவே மூன்றுநாளாகுமட்டும்
தாமப்பா குன்றிபோலுண்டைபண்ணி தாக்கான வெள்ளீயம் பலந்தானாலு
போமப்பா குகையில்நின்று வறுகும்போது போக்கான வுண்டையெல்லாம் கிராசம்போடே
1140.
போட்டுடனே யுண்டையெல்லாமானபின்பு பொடிபண்ணிச் சாரத்தூள் மேலேபோட்டு
ஆட்டுடனே கற்றாழஞ்சாற்றில்சாய்த்து அடவாக யேழுதரமுருக்கிசாய்ப்பாய்
பூட்டுனே வங்கத்தில் சமனாய்வெள்ளி பொலிவாக வுருக்கியல்லோ கிண்ணிவார்த்து
மாட்டுடனே கிண்ணியிடை சூதம்வீர மருவியதோர் வெள்ளையென்ற பாஷாணங்காணே

1141.
காணிந்த மருந்தெல்லாங் கல்வத்திட்டு கடிதான பெருங்கம்பால் வார்த்துஆட்டிப்
பூணிந்த மருந்தை கிண்ணிக்குள்பூசி பேரான வாலுகையின் மேலேவைத்து
ஆணிந்த வடுப்பேற்றிப் பட்சமொன்று ஆறாமலெரியிட்டு அப்பால்வாங்கித்
தோனிந்தப் பீங்கானி லெடுத்துவைத்து சூட்சமமாங் குருவாகும் நூற்றுக்கொன்றீயே
1142.
ஈவதுதான் வங்கத்திற் செம்புதனி லெடுத்துப்பா ரிதுபத்துஐந்துமாற்று
ஆவதுதான் சூதமது வெள்ளியாகும்  அதிகமாம்பித்தளையும் வெள்ளியாகும்
போவது தானேமவித்தை யிதுதானப்பா பூட்டினேன் தொந்தங்களனேகங்கோடி
தேவதுதான் வெள்ளிவித்தை சுருக்குமெத்த சிவசிவாசித்தர்சொன்னார் கரைகாணேணே
1143.
கரைகாணா சாத்திரங்கள் மெத்தவுண்டு காரணமாங் காலாங்கிநாயனார்தாமும்
நிறைகாணா ரேழுலட்சம் விரித்துச்சொன்னார் நேர்ப்பாக விரிவையெல்லாம் பிரித்துபார்த்து
உரைகாணார் சூத்திரமாய்ச் சுருக்கு அப்பாயுற்பனமாந்தொழில்வகை
யெல்லாஞ்சொன்னேன்
பரைகாணா யெந்நூலை பொய்யென்றெண்ணில் பாழாகும் நரகத்திலெய்துவாரே
1144.
எய்துவார் ரவிகோடி நரகத்தில்தானும் ஏனமென்ற பிறப்பாக சபிப்பாளாத்தாள்
அய்துவார் வாதம்பொய் யென்றுசொன்னாலாகா வங்கிஷங்கள் குடும்பமெல்லாம்
நய்துவார் நரகெய்தி வறுமையாகும் நாதாக்கள் பெரியார்களிடசாபம்
கொய்துவா ரானாலுந் தீர்க்கக்கூடா கொடுஞ்சத்தி ரிஷியிட்ட சாபம்வேரே
1145.
வாறான வுப்பினுட ஜெயநீர்தன்னால் வாகாக துருசதனையாட்டிமைந்தா
சேறான கழம்புபதந்தன்னிலாட்டி சிறப்பாக வுண்டைக்குச் சாரந்தன்னை
கூறாகக் கவசமது செய்துமைந்தா குணமாக ரவிதனிலே காயவைத்து
தாறான குக்குடமாய் வைத்துநீறு தயவாகச் சூதமதைக் கொல்லும்பாரே
1146.
கொல்லுமே சூதமதுமாண்டுதானால் கோடானகோடிவித்தை யாடலாகும்
வெல்லுமே சூதத்திற் கெந்திரெட்டி விரைவாகத்தான் சேர்த்து ஜெயநீர்தன்னால்
புல்லுமே நாற்சாம மரைத்தபோது புகழான மதவானை யடங்கும்பாரு
தெல்லுபோல் பில்லையது செய்துமேதான் சிறப்பாக ரவியில்வைத்து காயப்போடே
1147.
போடவே பில்லையது காய்ந்தபின்பு பொலிவாக வோட்டில்வைத்து சீலைசெய்து
நீடவே தளவாயாஞ் சட்டிதன்னில் கெடிதாக வுப்பதனை நிரபக்கொட்டி
சூடவே வகலதனைவோட்டில்வைத்து சூட்சமுடன் தானெரிப்பாய் நாலுசாமம்
சாடவே ஆறவிட்டு மறுநாள் தீயை சட்டமுடன் தானெரிப்பாய் கமலந்தானே
1148.
கமலமாமேழு நாளெரிப்பாய் மைந்தா கருணைபெற தீயாறி யெடுத்துப்பாரு
அமலமாஞ் செந்தூரமென்ன சொல்வேன் அப்பனே கண்கொள்ளா வேதையாகும்
தமலமாய் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று தாக்கடா மாற்றதுவும் பத்தேயாகும்
புமலமாம் பசுந்தங்கமிதுக் கொப்பாமோ பூதலத்தி லாச்சரியமிகு வேதையாமே

1149.
வேதையாங் குடவனிவே மாற்றெட்டாகும் வெளியான தனிச்செம்பில் மாற்றோமெத்த
பாதையாமின்ன வெகுவேதை யொடும்பாங்கான செந்தூரஞ் சொல்லப்போமோ
நீதையாம் ரசீதமென்ற சூதவித்தை நிலைத்துதடா யேமமென்ற வித்தையாகும்
மேதையாஞ் சியோகம் நிலைக்கப்பாரு மேதினியில் ராசனாய் வாழலாமே
1150.
தானான குருவுடைய பதத்தைப்போற்றி சமுசயங்க ளிருந்தெல்லாங் கேட்டுக்கேட்டு
கோனான குருசொல்ல வாதம்பாரு கருவில்லாதிருந்தாக்கால் நூலைப்பாரு
ஆனான நூலல்லால் வாதம்பார்த்தால் அணுகாது வாதமொன்றுந் தலைகீழாகும்
தேனான சூதத்தின் சாமமட்டுந்தியேங்கியே நரகெய்திமாளுவானே
1151.
மாளாமற்கனமான கற்பமுண்ணு மாயியைத்தான் பூசைபண்ணு மயக்கம்போக
தாளாமல் வாசியைத்தான் பூட்டிவாங்கி சதாநித்தம் குருபதத்தில் சரணம்பண்ணு
ஆளாமல் பலத்திலஃ மனதையூணு ஆனந்தமாவதற்கு அமுதமுண்ணு
மீளாமல் கெவனத்திலேறவென்றால் விடுஞ்சூதம் பசிக்குண்ண மருந்ருகேளே
1152.
கேளுநீ யானையென்ற சூதராஜன் கெவனத்தில் பறக்கின்ற மார்க்கமெல்லாம்
கேளுநீ பரிசுத்த வேமமாக விங்கியதோர் பகலிரவுமொன்றாய்க்காட்ட
தாளுநீ நிமைக்குமுன்னே கோடிகாதஞ் சஞ்சரித்து அடுக்கெல்லாம் தாண்டியேற
மீளுநீ அட்டமா சித்தியாடமிருந்துவட வாக்கினிபோல் பசியண்டாக்கே
1153.
ஆக்குவது சூதமது குகையில்நின்று அமளியாயுருக்கையிலே பூநாகத்தை
நோக்குவது சமனாகக் கொடுத்துவாங்கி நேராகப்புடமிட்டு விடுவித்தாக்கால்
தேக்குவது சூதமென்ற ராஜாவுக்குச் சிவணுண்ட ஆலம்போல்பசியண்டாகும்
நீக்குவது அரசனைப்போல் நினைத்ததெல்லாம் வெல்லும் நேரிட்ட கெந்திசத்தை
யிட்டுத்தாண்டே
1154.
தாண்டியே பின்னுபாசங்களெல்ல்ம் முட்டுதனித்தபின்பு மூலிகைக்குச் சத்தைப்பூட்டு
தீண்டியபின் நவலோக மிட்டுத்தீரு திறமாக புடத்தையிட்டு நவாவிட்டிணமூட்டு
வேண்டியபின் தனித்ததங்கம் செம்பைபூட்டு மேலான மணிபார்த்த வருணனைபோலாகும்
தூண்டியே யிவ்வளவுங்கடந்துபோச் சுகமான செம்பையினிசொல்லக்கேளே
1155.
சொல்லவே குகைக்குள்ளே மருந்துபூசத் துடியான சிலைகெந்திநிமிளைக்காந்தம்
கொல்லவே பூநாகமிவை தானைந்து கொடிதாகச்சமமாக நிறுத்துகொண்டு
கல்லவே கஞ்சாவினஃ விரையினொக்க கலரவே ரோமத்தின் தயிலம்வார்த்து
பல்லவே மூன்றுநாள்ட்டியாட்டிப் பக்குவமாய் ரோமத்தின் தயிலம்வாரே
1156.
வார்த்துமே யரைத்துநன்றாய்குகையிற்பூசி வாகாகக்கட்டினதோர் சூதம்வைத்து
ஏர்த்துமே வுருகையிலே பூநாகசத்தை இதமான சூதத்தினிடையே தாக்குபோர்த்துமே
புடந்தானுஞ் சொல்லக்கேளு புகழான வானசத்தை சித்திரமூலங்
கோர்த்துமே தொடையோடு முள்ளங்கித்தாழை கொடிதான நாயுருவி வமுரிகூட்டே

1157.
கூட்டுநீ புரசோடுதேவதாளி கொடிக்கள்ளி புனமுருங்கை சதுரக்கள்ளி
மாட்டுநீயெள்ளோடு புறாவினெச்சம் மகத்தான பதினைந்தும் வெவ்வேறேவாங்கித்
தீட்டுநீ வெவ்வேறாய்ச் சுட்டுசாம்பல் திறமாக வகைவகையாய்ப் படியளந்துபோட்டு
மூட்டுநீ பாண்டத்திற் கொட்டிநீயு மூத்திரந்தான் பதினைந்துபடிவாரே
1158.
படியைந்து கோமியத்தைக் கூடவாரு பாங்கான கழுதையொடு குதிரையானை
நெடியைந்து ஆடோடுநாலுங்கேளு நிலவரமாயமுரிபடியைந்யுவாரு
கொடியைந்து படிதானும் நாற்பதாச்சு கூசாதே சாம்பலுக்குங் கரைத்துவைத்து
தேடியைந்து மூன்றுநாள் தெளிவைவாங்கிச் சிறப்பாக வடுப்பேற்றி யெரித்திடாயே
1159.
எரித்திடவே குழம்புபோல் வருதல்கண்டு இணக்கமொடு படிகாரங் கெந்தினுப்பு
அரித்திட்டுக் கல்லுப்புச் சத்திசாரம் ஆதியாம் நவாச்சாரம் ஏவட்சாரம்தான்
பொரித்திட்ட வெங்காரஞ் சவர்காரம்தான் புகழான கெந்தியுப்பு வளகிலுப்பு
சரித்திட்டு கடல்நுரையு மன்னபேதி சார்பான துரிசியொடு பூநீறுதானே
1160.
தானான வகைக்கொன்று பலமுமைந்து சார்பாகப் பொடிபண்ணிக் குழம்பிலிட்டுப்
பானான பாஷாணநிலையைக்கேளு பரிவான கெந்தியொடு சங்குசுன்னந்
தேனான வீரமொடு வகைக்குமொரு பலந்தான்சிறக்கவே எருக்கம்பால் படிதான்வாரு
கானான குழம்புதனிலொக்கவிட்டுக் கலரவேயடுப்பெரித்து மெழுகுபோல்வாங்கே
1161.
வாங்கியே பீங்கானில் பதனம்பண்ணி வளமான நெற்குழியில்புதைத்துவைத்து
பாங்கியே பட்சத்திற் பிறகுவாங்கிப்பார்க்கையிலே கடராஜனென்றுபேராம்
தேங்கியே கோபமாம் ருத்திரனாரும் சிங்கமாங்கொடுஞ்சூரனாகும்
கோங்கியே கொடுங்கால விஷமதாகும் குளிகைக்குப்புடந்தானும் சுருக்கம்பாரே
1162.
பாரென்ற புடந்தானுஞ் சாத்திரத்தினுள்ளே பலபலவாய்ச் சொன்னார்கள் நாதாக்கள்சித்தர்
நேரென்ற திருமூலர் ஆயிரத்தில்சொன்னார் நேர்ப்பான காலாங்கி சொல்லக்கேட்டுத்
தேனென்ற வேழாயிரத்தில்தான் திறந்துசொன்னேன் சிறப்பான சாறனைதான் செய்யமார்க்கம்
வானென்ற ஆகாசவீதியோடி லாவாக்கால் சிறுபிள்ள யோடுங்காணே
1163.
காணிந்தச் சூதம்நின்று வுருகும்போது கலங்காதே சம்பாதஞ் சத்தையூட்டு
பூணிந்த ரசம்பத்து சத்துபத்து பொலிவாக வுருகையிலே புடமொன்று நீட்டு
ஆணிந்தச் சத்துடராகமெல்லா மப்பனே பலபலவா வர்ணங்காணும்
தோணிந்தச் சூதத்தை நிறுத்துப்பார்க்கத் துடியாக மணியிடையே நிற்குமென்னே
1164.
என்னவே புடத்துக்கே ஒப்பு ஈசனுடபுடந்தானுந் தோற்றுப்போகும்
மன்னவே மணித்தாயார் சொல்லையானும் வகைவகையாய்ச் சோதித்து யானுங்கண்டேன்
கன்னவேயுபசங்கள் நூற்றிரண்டுபத்தும் காரசாரங்கள் மதலிருபத்தைந்து
பன்னவே பாஷாணமறுபத்துநாலும் பாங்கான நவலோகம் நவாஷ்ட்டின்மூட்டே

1165.
ஊட்டியே இப்படிதான் சாரணையே செய்யில் ஒன்றாச்சி கெவுனமது நூற்றொக்கோடி
மாட்டியே மறுதரந்தான் விடுவித்தாக்கால் மகத்தான ஆயிரமாங்காதமோடும்
நீட்டியே ரவிதனிலே யீய்ந்தாயானால் நிகரான சிகாரவரை காணலாகும்
ஆட்டியே நாலுதரம் விடுவித்தேற அப்பனே லட்சமாங்காதம்போமே
1166.
போமெனவே ஐந்துதரம் விடுவித்தேறப் பொருந்தவொரு கோடிக்கே யோடும்பாரு
தாமெனவே ஆறானால் பரிசைவேதை தாண்டியே யேழுதரங்கடந்துயேறு
ஆமெனவே லக்கினங்கள் சொல்லப்போகா அண்டொணாலோகத்தில் தெரிசவேதை
நாமெனவே காண்கிலேன் சித்தர்வேதை நண்ணிய பேரீதுலகில் வேதையாமே
1167.
வேதையாஞ் செப்பிடிலோ ரூபவேதை விளங்கியே பழுக்கவென்றால் பழுக்கும்வேதை
காதையாங் குளிகைதனைக் காதில்வைத்துக் கடுகியே யுரைப்பராகில் பொன்னுமானால்
மாதையாம் பொன்னென்றே உன்னநெஞ்சில் மலைகளெல்லாம் பொன்னாகு மக்காள்பாரு
பாதையா பகலிரவு மொன்றாய்ப்போகும் பராபரித்தாய் சிவன்வந்து பூசிப்பாரே
1168.
பாருங்கள் உபசரங்கள் நூற்றிரண்டு பத்தும் பாஷாண மூலிகையின் சத்துங்கூட
கோருமே நவலோகம் பாஷாணங்கள் குறிப்பாகக் குளிகைக்குக் கொடுத்துருக்கில்
வீருமே மாற்றதுவும் இருபதாகும் விண்ணுலகி லிவ்வேதை காட்டப்போமோ
ஆருநீ விடுவித்தால் சதமுமாச்சு அறிந்திப்படி செய்வார்தாமே
1169.
ஆமிந்தமார்க்கமாய்ச் சூதத்துக்கு அணைத்தணை சத்துகளை ஈயானாகில்
போமிந்தக் கெவுனமே சித்துப்பொய்யாய்ப் போனமட்டுங் கண்டலைந்து பழுத்துமாய்வான்
நாமிந்த வுபசரங்கள் பொன்னேயாச்சு கடுஞ்சூதராசன் நிகேபதளித்தாக்கால்
தாமிந்த நாகமுண்ட சூதங்கேளு தனிவேதை யாத்தாளும் அறியாள்கேளே
1170.
கேளுநீ பனிரண்டாம் குளிகைதன்னில் கெடியான சுரபியொடு போகந்தன்னை
வாளுநீ ரண்டுநவலோகம் போதுமற்ற மற்றகுளிகைதனை விடுவித்தேறு
வேளுநீ சத்துகளை யூட்டிவூட்டி விடுவித்துச் சாரணைகள் செய்யாவிட்டால்
தாளுநீ கெவுனமது எடுத்துவோடா தனித்துமே பரிசத்தில் வேதையில்லை
1171.
என்னவே சாரணையைத் தீர்க்கமாய்ச் செய்யில் எடுத்தோடும் அண்டமெல்லாம் பதமுந்தாண்டி
பன்னவே ரவிகோடிபிடியோகோடி பரிதியிலே கணங்களெல்லா மயங்கிப்போகும்
தன்னவே குளிகையினால் மேற்கொண்டோடுஞ் சந்திரனிலோடையிலே நடுக்கங்காணும்
மன்னவே குளிகைதன்னால் குளிரும்போகும் மாயமாஞ்சொரூபமெல்லாம் வெளியாய்ப்போமே
1172.
வெளியாக சூதத்தைகட்டாவிட்டால் விரைந்தேறும் ஞானமெல்லாம் பொய்யாய்ப்போகும்
ஒளிவான யோகமது பாழாய்ப்போகும் உற்பனமாங் காயசித்தி யொன்றுமாகும்
அளியான ஆதாரகுறியுமில்லை அணுகையிலே வேதிக்கு மேமமில்லை
நெளிதான மனதாலே யோகம்பார்ப்பார் நிர்மூட ஞானியென்று சொல்வார்பாரே

1173.
பாரப்பா மூலவன்னி துலங்கினாக்கால் பளிச்சென்று ஆறுதலம் வெளியாய்க் காணும்
நேரப்பா மேலாறும் வெளியாய்ப்போகும் நேரான சாஸ்திரந்தா னாறுங்காணும்
சேரப்பா பராபரியின் செயலுங்காணும் சேர்ந்தநிஷ்களமதுதான் வெளியாய்ப்போகும்
ஆரப்பா நிராதாரத் தடங்கினோர்க்கு மாதியந்த நாமற்ற அந்தந்தானோ
1174.
தானென்ற சிங்கியொன்று சொல்லக்கேளு சாதகமாயிது லெக்குமுன்னேபாரு
ஈனென்ற வேழாயிரத்திலொன்றே மிஞ்சியிதமான வுடும்பாமை அழக்கினோடு
தானென்ன தாயீசல் மாட்டினுட கொழுப்பு கலந்தைந்து ஐங்கழஞ்சி கொழுப்புதூக்கி
பானென்ற புழுகைந்து சவ்வாதைந்து பருவமுடனொன்றாகப் பண்ணிக்கொள்ளே
1175.
கொள்ளயிலே பரிசுன்னந் துரிசுசுன்னங் கொடிதான பூரமென்ற சுன்னமூன்றும்
விள்ளயிலே யொவ்வொன்று கழஞ்சிதூக்கி ரவியொன்றாய் மத்தித்துக் கல்வத்திலப்பி
நள்ளவே ரவியில்வைத்துக் காந்திநாட்டநலம்பெறவே தயிலமாய் வழித்துவாங்கு
துள்ளவே நில்லாமல் நன்றாய்வாங்கு துடியான பீங்கானில் வைத்துக்கொள்ளே
1176.
வைத்தபின்பு கூடயிடமருந்துகேளு வானவெண்காரம்கெந்தி
வைத்தபின்பு சவ்வீரம் அரிதாரம் பூரம்கருநாபி கஸ்தூரிதொட்டிகூட
வைத்தபின்பு வகையொன்று பணந்தானொன்று பண்பான வொன்பதையுங் கல்வத்திட்டு
வைத்ததிலே யரைத்துநன்றாய் தயிலத்தில்சேர்த்து சாங்கமாய் வைத்திடவே சிங்கியாச்சே
1177.
ஆச்சப்பா சூதமது கருத்துகொண்டு அழகாகுங் கல்வத்திற்நிறுத்திவிட்டு
பாச்சப்பா சிங்கியொருபொட்டுபோடப் பதறாமல் சேருரசம் வெண்ணெயாகும்
கேச்சப்பா கிளிபோல கட்டிக்கொண்டு சிறப்பான சூடனிட தீயில்வாட்டி
ஒச்சென்ற கரண்டியிலே எண்ணெய்குத்தி யுருக்கிடவே வெள்ளிபொன்போலாகும்பாரே
1178.
ஆடுகின்ற சூதமென்ற ஆணைப்பட்டுதானால் ஆகாகாவாதமென்ன மசகமாச்சு
நாடுவாரிச்சூதம் தாழ்வடமாய்க்கோர்த்து நலமாகச் சகாசனத்திலிருந்துகொண்டு
ஊடுவார் சிவசிவா வென்றுமூட்ட வுவந்துமுன்னே பஞ்சகர்த்தாள் நிற்பார்பாரு
தேடுவார் கேட்டதெல்லாம் ஈவாரீசன் ஜெகஜால வித்தையெல்லாம் தெளிந்துபோமே
1179.
போமென்ற சிங்கினால் கட்டுசூதம் புகழான வேரடைக்குத் தங்கம்நாலு
ஆமென்ற சுண்ணாம்புக்கு கையில்வைத்து அப்பனே புடம்போட தங்கம்நீறும்
நாமென்ற நவலோக மாயிரத்தஉக்கோடும் நாமறியோமிதனுடைய வர்ணந்தன்னை
ஓமென்ன பரிதிபோல் நிறமேயாகும் உத்தமே வெகுசுருக்கு ஓடிப்பாரே
1180.
ஒட்டுவது சவர்க்காரச் சுன்னந்தொட்டு உப்பினுட வுறதிதொட்டு வுயர்ந்துஓடும்
ஆட்டுவது வர்ணமென்ற சூதத்தாலே ஆச்சரியஞ் சிவப்பென்ன கெந்தியாலே
பூட்டுவது தங்கத்தால் காரத்தாலே பூப்போலாஞ் சுன்னமென்ன வீரந்தானே
நாட்டுவது விண்ணான பூரத்தாலே நலமான வாதமிதிலடங்கிப்போச்சே

1181.
போகாமல் சவர்க்காரச் சுன்னம்சொல்வேன் பொற்கொடிக்கு ஈசனன்று புகன்றவாறு
வேகாமல் பூநீறுபதக்குவாரி விரைந்துவொரு பாண்டத்திலளந்துபோட்டு
ஏகாமல் மனிதனுட அமுரிதானும் இதமாகப் பதினாறுபடிதான்வார்த்து
சாகாமல் மூன்றுநாள் கலக்கிவைத்துச் சார்ந்தபின்பு நாலாநாள் தெளிவுவாங்கே
1182.
வாங்கியந்த தெளிவிலே கல்லுச்சுன்னம் வளமாகத் தீநிறுத்தரைப்படிரண்டுபோட்டு
தேங்கியதைமூன்றுநாள் கலக்கிவைத்துச் சிறப்பாக நாலாநாள் தெளிவுவாங்கி
ஓங்கியொருபடிதானுங்கல்லுநயப்பொடித்து வொக்கவந்த தெளிவிலே கரைத்துப்போடு
தாங்கியே நாலாநாள் தெளிவைவாங்கி சமர்த்தாக வடிகனத்த சட்டியிலேவூற்றே
1183.
ஊற்றியே வெடியுப்புச் சீனந்தானு முயர்ந்துநின்ற துரிசியொடு சாரம்வீரம்
ஆற்றியே வெள்ளையென்ற பாஷாணந்தா னப்பனே வகைக்குமொரு பலந்தான்தூக்கி
சாற்றியே கல்வத்திற்பொடித்து மைபோல் சார்பாக முன்தெளிவிலொக்கப்போட்டுப்
போற்றியே ஈசானபூசைபண்ணிப் புகழாக வடுப்பேற்றி யெரித்திடாயே
1184.
எரித்திட்டுத் தீபம்போலடிபாறாவிதமாக வயத்துடுப்பால் கிண்டிக்கிண்டி
வரித்திட்டுக் குழம்புபோல் வருதல்கண்டு வாகான நல்லெண்ணெய் சேரவார்த்து
தரித்திட்டு மெழுகுபோல் பில்லைபண்ணிச் சமரசமாய் ரவியிலிட்டுக் காய்ந்தபின்பு
மரித்திட்டு மல்லிகையின் சாறுவாங்கி வரிசையாய்த் தோய்த்தெடுத்து ரவியிற்போடே
1185.
போட்டுவா தினமேழுபக்தோட்டுக்குள் பொலிவான யெண்ணெயெல்லா மோடேயுண்டு
காட்டுவாய் கருப்பாக யிருக்கும்பாரு கண்டுநீமயங்காதே பாக்குபோல்சீவி
நீட்டுவால் சீலைதனைக் கீழேபோட்டு நேராகமல்லிகையினிலைபரப்பி
மாட்டுவாய் சீவல்தன்மேல்வைத்து மல்லிகையினிலையினாலே மூடிப்போடே
1186.
மூட்டியே நெல்லதனைப் பாண்டத்திட்டு முயற்சியாய்த் தண்ணீரில்பசரிக்கொண்டு
நீட்டியே யடுப்பேற்றி யதின்மேல்சீலை நேர்ப்பாக வைத்தெரித்து நினைவாய்வாங்கி
வாட்டியே மேற்சட்டி கவிழ்த்துமூடி மயங்காதே யாவிகண்டபதத்தில்வாங்கு
தேட்டியே சீவனெல்லா மொன்றாய்ப்போகும் திறமாக ரவிதனிலே காயப்போடே
1187.
காய்ந்தபின்பு யிலைபரப்பி நெற்பாண்டத்திட்டு காரியமாய் முன்போலே அவித்தெடுத்து
மாய்ந்துபின்பு ரவியிலிட்டுக் காய்ந்தபின்பு மறுக்காலும் மருந்ததனைச் சீவலாக்கிக்
காய்ந்ததின்பு யிலைபரப்பி அவித்தெடுத்துக் கவனமாமூன்றுதரமானபின்பு
ஆய்ந்தபின்பு பல்லையைப்போல் பண்ணிக்கொண்டு வுற்பனமாய்க் கீழ்மேலும்
கற்சுன்னம்வையே
1188.
வையப்பா சீலைக்குள் கிளிபோல்கட்டு வளமாகசட்டியிலேவோடுநடுவிலேவைத்து
மெய்யப்பா மேலாகவாட்டவோடு மெல்லிதாய்த் தமருமொரு நூறுமிட்டுச்
செய்யப்பா சட்டியின்மேல் ஊறப்போட்டுச் சிறப்பாக மல்லிகையினிலையதுவைத்து
கொய்யப்பா தண்ணியிலே போட்டுக்காய்ச்சி குறிப்பாகத் துவாரத்தால் விட்டுநீற்றே

1189.
ஆமேதானாகமொரு பலமேவாங்கி அடவாக யிலுப்பைநெய்யில் வுருக்கிச்சாய்த்து
வேமேதான் கிண்ணியிலை கவசஞ்செய்து மிக்கான காடையென்ற புடத்தைப்போடு
நாமேதான் புகையதுவுங்கட்டியேதான் நலமாகக் கண்ணெல்லாங் கட்டிப்போகும்
தாமேதான் நாகமிடை சூதஞ்சேர்த்து தாக்கான களங்காக வுருக்கிடாயே
1190.
உருக்கையிலே கெந்தியைநீ களஞ்சியொடு வுத்தமனே நாகமதுகளங்குமாகும்
வருகையிலே கலங்குதனை யெடுத்துப்பாரு மகத்தான சொர்ணமதுவுள்ளேநிற்கும்
தருகையிலே வெள்ளிசெம்பஇில் பத்துக்கொன்று தாக்கடாகுருவதனை களங்குதன்னை
நிருகையிலே விருக்குமுகந் தன்னிலீய நெடிதான மாற்றதுவுமாகும்பாரே
1191.
பாரேதான் சரியோட்டி லூதிப்போடு பாங்கான செம்பதுவும் நீங்கியேதான்
சீரேதான் வெள்ளியது மாற்றுகாணும் சிறப்பாகத் தகடடித்துப் புடத்தைப்போடு
நேரேதா னிரண்டுக்கோர் தங்கம்சேர்த்து நேர்ப்பாகத் தானுருக்கி யெடுத்துப்பாரு
தீரேதான் சீவனத்தை செய்துகொண்டு தெளிவாக சாத்திரத்தை யறிந்துபாரே
1192.
அறிந்துமே யோகமுதலறியவேண்டும் அப்பனே காரணத்தின் குருவைக்கண்டு
முறிந்துமே குருசம்பிரதாயங்கண்டு முடிவணங்கி யடிதொழுது முழுதும்பார்த்து
குறிந்துமே கும்பகத்திலிருந்துகொண்டு கூற்றனுக்குச் சற்றேனுமிடங்கொடாமல்
சறிந்துமே பராபரத்தின் மார்க்கம்கண்டு சாதிப்பஅய் சதாநித்தம் சாதிப்பாயே
1193.
சாதிப்பா யின்னமொரு ககருமானங்கேள் சாற்றுகிறேன் லோகத்து மாந்தர்க்காக
வேதிப்பா மயமதுவு மொன்றேகாலாம் வெளுப்பான செம்பதுவும் விராகனொன்று
சொதிப்பாய் கடைசரக்கு சொல்லக்கேளுந்துவான தாளகமும் களஞ்சியொன்று
சாதிப்பாய் காடியென்ற காரந்தானும் கருவான பாஷாணம் களஞ்சியொன்றே
1194.
ஒன்றான பூரமது களஞ்சியொன்று வுத்தமனே வீரமது களஞ்சியொன்று
குன்றான துரிசியது களஞ்சியொன்று கூரான துத்தமது களஞ்சியொன்று
கன்றான கவுரியது களஞ்சியொன்று தாக்கான வெடியுப்பு களஞ்சியொன்று
அன்றான சீனமது களஞ்சியொன்று அழகான லிங்கமது களஞ்சியொன்றே
1195.
களஞ்சியாங் காரமது களஞ்சியொன்று கடிதான நாகமது களஞ்சியொன்று
தளஞ்சியாஞ் சூதமது களஞ்சியொன்று தாக்கான விவையெல்லா மொன்றாய்ச்சேர்த்து
அளஞ்சியா மெரிகாலன் பாலாலாட்டி யப்பனே வச்சிரமாங் குகையில்வைத்து
முளஞ்சியாஞ் சில்லிட்டுச் சீலைசெய்து முயற்சியாய் ரவிதனிலே காயப்போடே
1196.
போடேநீ தீமூட்டி யுலையில்வைத்து பொங்கமுடன் தானுருக்கி யெடுத்துப்பாரு
நாடவே களங்கமது யென்னசொல்வேன் நயமான களங்கமது சொல்லப்போமோ
நீடவே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று நினைவாகத் தானுருக்கி யெடுத்துப்பாரு
நூடவே கரியோட்டி லூதிப்போடு நுணுக்கமா மாற்றதுவு மாறதாமே

1197.
ஆறான மட்டமது சொல்லப்போமோ அப்பனே நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து
வாறான வாறடித்துப் புடத்தைப்போடு வரைகட்டித் தங்கமது இறங்கும்பாரு
கூறான தங்கமது பசுமைமெத்தக் குவலயத்தில் யத்தங்கம் சொல்லப்போமோ
நாறான சவளையது வதிதங்காணீர் நாதாக்கள் செய்திடுவார் நளினமாமே
1198.
நளினமா மின்னமொரு போக்குசொல்வோம் நாதாக்கள் வித்தையது கூறப்போமோ
மளினமாங் கெந்தியொரு பலமேவாங்கு மகத்தான விரும்பிலியின் தயிலத்தாட்டி
களினமா மாத்திரைபோ லுண்டைசெய்து கலசத்தில் தானடைத்து சீலைசெய்து
தளினமாய் குழித்தயிலம் இறக்கிப்பாரு தாக்கான பொன்வர்ணத் தயிலமாமே
1199.
ஆமேதான் தயிலத்தை ரசத்திற்றாக்கு அப்பனே சூதமது மடிந்துபோகும்
தாமேதான் சூதமதுமடிந்துதானால் தாரணியில் வெகுகோடி வேதையோடும்
வேமேதான் சூதமது நேரேயொக்க வெடியான வுப்பதுவுங் காலாய்க்கூட்டி
நாமேதான் அறுவகை ஜெயநீர்தன்னால் நலமாகத் தானரைப்பாய் சாமம்நாலே
1200.
நாலான பில்லையதுக் காயவைத்து நலமாக ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
காலான குக்குடமாம் புடத்தைப்போடு கருவான செந்தூரம் யென்ன சொல்வேன்
வேலான வெள்ளியது செம்பிற்றாக்கு மிக்கான மாற்றதுவு மென்னசொல்வேன்
சூலான வர்ணமது சொல்லப்போமோ கருதியாம் வாதவித்தை அதீதம்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

1201.
பாரேதான் லோகமதில் பஞ்சமானால் படுவுரலுங் கல்லுமது பஞ்சமாமோ
சீரேதான் குகைதனிலே வாழுஞ்சித்தர் சிறப்பான தெரிசினைக்குறவுமுண்டோ
காரேதான் சித்தர்செய்யும் வேதைமார்க்கம் கடிதான செம்பொன்று செப்பக்கேளும்
கூரேதான் செம்பதுவும் பலமேவாங்கிக் குறிப்பாகத் தானுருக்கிகிராசமீயே
1202.
ஈயவே வீரமதுகாலதாகும் இயலான சிற்றண்டங்காலதாகும்
கையவே மதியுப்புக் காலதாகும் நலமான சாரமது காலதாகும்
பையவே விதுவெல்லாமொன்றாய்ச்சேர்த்து பரிவாக செம்புக்கு கிராசமீவாய்
கொய்யவே செம்பதுவும் கசடுநீங்கி நுணுக்கமாய்ச் சவளைபோலாகுந்தானே
1203.
தானான செம்பதனைத் தகடடித்து தாழ்ச்சியாய் புடம்போட மருந்தைக்கேளும்
தேனான மனோன்மணியாள் சத்தரூபி தெளிவான செம்புதனிற் கவசம்பூசி
வேனான சீலையது வலுவாய்ச்செய்து விருப்பமுடன் குக்குடமாம் புடத்தைப்போடு
பானான புடமாறி யெடுத்துப்பாரு பாங்கான செம்பதுவுஞ் சுத்தியாச்சே
1204.
ஆச்சப்பா செம்பதுவு மொன்றேயாகும் அப்பனே வெள்ளியது மூன்றேயாகும்
காச்சப்பா தங்கமது வொன்றேயாகும் கருவாகத் தானுருக்கி யெடுத்துப்பாரு
பேச்சப்பா பேசுதற்கு யிடமேயில்லை பேரான பொன்னதுவு மாற்றானாகும்
மூச்சப்பா தானொடுங்கி யண்டுநீயும் முனையான பராபரியை தியானம்பண்ணே
1205.
பண்ணவே நிர்வாணி நிர்த்தஞ்செய்வாள் பாங்கான வாறுதலங் காணலாகும்
எண்ணவே யுகாந்தவரைக் காணலாகும் யெளிதான கும்பகத்தை நிறுத்தவேண்டும்
திண்ணவே பதாம்புயத்தை நண்ணவேண்டும் தெளிவான ரேசகத்தை யறியவேண்டும்
கண்ணவே கால்மாடு தலைமாடெல்லாம் கருத்தினிலே யெப்போதும் நாட்டுவீரே
1206.
நாட்டவே எச்சிலைதான் கொண்டபோது நாடுமே தாகவிடாய் தீருமோசொல்
மூட்டவே பச்சிலையில் காசாரமுடிப்பதுவும் பொன்னல்லோ பொய்யுமாமே
காட்டவே திணையளவு சூதம்விட்டால் காசினியில் வாதமென்ற யேமமில்லை
நீட்டவே போகரிஷி சொன்னநூலில் நெடிதான பொன்கணக்கு யிந்நூலாமே
1207.
இந்நூலா மேழாயிரக்காவியத்தில் யெழிலான குறுக்குடனே நெடுக்குப்பாதை
பந்நூலா மநேகவிதக்காவியத்தில் பலப்பலவாம் பாடிவைத்தார் சித்தரானோர்
அந்நூலில் மறைத்ததொரு கருவெல்லாந்தான் அப்பனேயாவுமிந்தக் காவியத்தில்
எந்நூலாமே ழாயிரச் சத்தகாண்ட மெழிலாகத் தாமுரைத்ததுண்மையாமே
1208.
உண்மையாஞ் சதகோடி சூரியன்போல் வுத்தமனே தாமுறைப்போ முறுதியாக
தன்மையாய் பாஷாணம்வீரந்தானும் பாங்கான ரசமுடனே காரந்தானும்
தண்மையாய்ப் பூநீறு சுண்ணாம்போடு தாக்கியே தானரைப்பாய் உமிநீராலே
வண்மையாய் செம்பகலில் வைத்துமூடி வாகாகப் புடம்போட வெளுக்கும்செம்பே

1209.
செம்பான களங்குடனே மதிசேரொக்க சேர்க்கவே வயமதுதா னெட்டதாகும்
செம்பான களங்கதுவும் வெள்ளிசேர்ந்து செழிப்பான துய்யான்போல் சிவந்துமின்னும்
செம்பான செம்பதுதான் சிவப்புமாறி சிறக்கவே வாளமது மாறிப்போகும்
செம்பான லோகமது நிறமேகுன்றில் தேகமதில் வெகுவித்தையாடலாமே
1210.
ஆடலா முழக்கினிலே கிழக்குமேற்கு அப்பனேநின்றநிலை விள்ளுவாறே
தேடவே பராபரத்தி னாதியந்தம் சேர்ந்துரைப்பார் இவ்வுலகில் கூறப்போமோ
பாடலாம் போகரிஷி சொன்னநூலில் பார்க்கவே யாதியந்தம் காணப்போமோ
நீடலாஞ் சித்தர்முதல் கூட்டங்கூடி நேர்ப்பாக பாடிவைத்தார் பலநூலாமே
1211.
தாமேதான் வழலையைத்தான் மறைத்துவிட்டார் சதகோடிரிஷிகள்முதல் முனிவர்தாமும்
நாமேதான் வழலையுட மார்க்கந்தன்னை நாதாக்கள் தானறிய வெளியாய் சொன்னேன்
போமேதான் வென்பேரிற் கோபங்கொண்டு புறங்கூறி தூஷனைகள் மிகவுஞ்சொன்னார்
வேமேதான் திஷிகளுட சாபத்தாலே வெளிப்பட்டேன் சீனபதி சென்றேன்தானே
1212.
தானான அயமதுதான் பொடிதான்பத்து தாக்கான செம்பதுவும் விராகனொன்று
வேனான தாளகம்விராகனொன்று வியர்வான பாஷாணம் விராகனொன்று
கோனான லிங்கமது விராகனொன்று கொடிதான பூரமது விராகனொன்று
கானான வீரமது விராகனொன்று கடிதான சீனமும்விராகனொன்றே
1213.
ஒன்றான வெடியுப்பு விராகனொன்று வுறுதியாந்துருசுடனே விராகனொன்று
நன்றான துத்தமது விராகனொன்று நலமான காரமது விராகனொன்று
பன்றான கெவுரியது விராகனொன்று பாங்கான ரசமதுதான் விராகனொன்று
தன்றான விவையெல்லாம் வொன்றாய்ச்சேர்த்து தாக்குனே யெரியாலன் பாலாலாட்டே
1214.
ஆட்டியே நாற்சாமமரைத்துத்தீரு வன்பாக குகைதனிலே சீலைசெய்து
மாட்டியே யுலையில்வைத்து வூதித்தீரு மகத்தான களங்கமது சொல்லப்போமோ
தாட்டிகமாய் களங்கொன்று செம்புவொன்று கருவான வெள்ளியது வொன்றதாகும்
பூட்டியே தானுருக்கி வூதிப்போடு போக்கான வெள்ளியது கட்டிப்போச்சே
1215.
போச்சென்று விடுகாதே மைந்தாகேளு பொங்கமுடன் நாலிலொன்று தங்கஞ்சேர்த்து
காய்ச்சியே தகடடித்துப் புடத்தைப்போடு கலங்காமல் மாற்றதுவுங் காணும்பாரு
காய்ச்சியே வுருக்குமுகந்தன்னிலேதான் சார்வான செந்தூர முப்புமாகும்
பாய்ச்சவே மாற்றதுவு மிருவதாகும் பாடினார் போகரிஷி பாடினாரே
1216.
பாடியே தாளகமோர் பலந்தானாகும் பாங்கான துருசுடனே காரந்தானும்
கூடியே சரியிடையா யெடுத்துக்கொண்டு குணமாக தாளகத்துக் கங்கிபூட்டி
நாடியே முலைப்பாலி லரைத்துமேதான் நலமாக மூன்றுபுடந் தானேபோடு
நீடியே மண்மறைவில் புடமேபோடு நேர்ப்பாகத் தாளகமும் கட்டிப்போமே

1217.
கட்டியதோர் தாளகமும் விராகனொன்று கருவான வெள்ளியது விராகனொன்று
திட்டமுடன் செம்பதுவும் விராகநாலு திறமாகத் தானுருக்கி குருதானீய
கிட்டமா மோடதனி லூதிப்போடு கொடிதான வெள்ளியது மாற்றாறாகும்
வட்டமுடன் தங்கமது நேரேசேர்த்து வளமாகத் தகடடித்தப் புடத்தைப்போடே
1218.
போடவே மாற்றதுமிறங்கியேதான் போகாது முப்புக்கு காவிக்குந்தான்
தீடவே சொர்ணமது மதிகவன்னம் திறமான வாதவித்தை யிதினாலாச்சு
கூடவே சிவயோகந்தன்னில்நின்று கும்பகத்தை மேல்நோக்கி மேவிப்பாரு
பாடவே போகரிஷி தேவர்தாமும் பாடிவைத்தார் லோகத்து மாண்பருக்கே
1219.
மாண்பான மின்னமொரு கருவைக்கேளு மகத்தான வேதையிது சுளுக்குவேதை
கான்பான வயமதுதான் ராவிமைந்தா கணக்குடனே பொடியதுவும் பலந்தானொன்று
நாண்பான துருசதுவும் பலந்தானாலு நலமான சீனமது பலந்தானாலு
வீண்பான சாரமது பலந்தானாலு வெடியான யுப்பதுவும் பலந்தானாலே
1220.
நாலான படிகாரந் தன்னைத்தானும் நலமாகப் பங்கிட்டு வதிலோர்பாகம்
மாலான வயப்படியில் போட்டரைத்து வளமாக வமுரியினால் கழுவிப்போடு
சேலான விந்தமுறை நாலுபாகஞ் சிறப்பாகக் கழுவிடவே வயமுந்தானும்
காலான கசடதுதான் நீங்கியல்லோ காரான பொடியாக விருக்குந்தானே
1221.
தானான பொடியதனில் சாரந்தன்னைத் தாக்குடனே நாலுவிதயாகஞ்செய்து
பானான வயப்பொடியி லோர்பாகந்தான் பதறாமல் தான்போட்டு வரைத்துமேதான்
வேனாக யிந்தமுறை நாலுபாகம் விடாமலே வமுரியினால் கழுவிப்போடு
கோனாக துருசிதனை நாலுபாகம் குறிப்புடனே முன்போல செய்துகொள்ளே
1222.
கொள்ளவே வமுரியினால் கழுவிப்போடு கொற்றவனே நாலுமுறை யிந்தபாகம்
விள்ளவே வமுரியினால் கழுவிப்போடு விகற்பமுடன் வந்திடைக்கு சூதஞ்சேர்த்து
மெள்ளவே குழியம்மி தன்னாலாட்டி விருப்பமுடன் சட்டியிட்டு சீலைசெய்து
உள்ளவே யடுப்பேற்றி நாலுசாம முத்தமனே தானெறிப்பாய்க் கமலந்தானே
1223.
கமலமாஞ் செந்தூரமாகும்பாரு கதிப்புடனே செந்தூரம் நாலிலொன்று
விமலமாய்க் காரமது நாலேசேர்த்து விருப்பமுடன் குகையிலிட்டு வுறுக்கிப்பாரு
தமலமாங் களங்குடனே செம்புமாகும் தளிரான களங்குமுட நேரேசேர்த்து
விமலமாம் வூதிடவே செம்புமாகும் விசையான களிப்பதுவுங் கட்டிப்போச்சே
1224.
கட்டியதோர் செம்பொன்று தங்கமொன்று கருவான வெள்ளியது விராகனொன்று
திட்டமுடன் தானுறுக்கி வூதிப்போடு தெளிவான மாற்றதுவு மெட்டதாகும்
நட்டமென்ன வணிகரிடம் சென்றுமேதான் நலமாக நீர்கொடுக்கி லாபங்காணும்
கட்டமுட னிருந்துகொண்டு கவனியாவாய் ஒருவருடன்கூடாதே கருவைப்பாரே

1225.
கருவான பிராணாயந் தன்னில்நின்று கதிப்புடனே சின்மயத்தைக் கடந்துமேதான்
உருவான குருபீடந் தன்னைப்போற்றி வுத்தமனே உதாசினத்தை தள்ளிப்போடு
மருவான கும்பகத்தில் நின்றுகொண்டு மகத்தான ஜெகஜோதி தன்னைப்பாரு
திருவான மகெஸ்பரியாள் நிர்வாணிதானும் தேவியரும் கடாட்சித்து அர்ச்சிப்பாளே
1226.
பாளேதான் பாஷாணம் பலமைந்தாகும் பாங்கான பூநீறு பலமைந்தாகும்
சூளேதான் பூநீறுதன்னைத்தானும் சோகமாங் கேசரியிந்நீராலாட்டி
கோளேதான் ஏறாமற் பாஷாணத்துக் குறுதிபெறக் கவசத்துக்கங்கிபூட்டி
சாளேதான் போலாந்திரமாகக்கட்டி தயவுடனே யடுப்பில்வைத் தெரித்திடாயே
1227.
எரித்தபின் பாஷாணங்கவசநீக்கி எழிலாக தானெடுத்து எருக்கன்பாலால்
பரித்துமே நாற்சாமம் சுருக்குதாக்க பளிங்கான பாஷாணங் கட்டிப்போகும்
தெரிந்துமே சூதமது நேரேதாக்கு தெளிவாக வறுவகையின் ஜெயநீராலே
முறித்துமே எண்சாம மரைக்கும்போது முனையான மெழுகதுபோலாகும்பாரே
1228.
பாரேதான் மெழுகெடுத்து வெள்ளீயத்தில் பாச்சப்பா பத்துக்கு ஒன்றுபோடு
நேரேதான் வெள்வங்க நீரைவாங்கி நிலைத்துதடா வாதவித்தை நிசமதாச்சு
கூரேதான் சிவயோகந் தன்னிற்சென்று குறிப்புடனே மனோலயத்தை மேவிப்பாரு
வீரேதான் போகாமல் காயந்தன்னை விருப்பமுடன் யோகநிலை சாதிப்பீரே
1229.
சாதிப்பீர் தவளைபூ மணத்தைதானும் சற்றுமேயதின்வாச மறியாற்போலும்
சொதிக்க சித்தர்சொல்லும் நூல்கள்யாவும் சுருதிபெற வேதாந்தநூல்கள்யாவும்
வாதிக்க யெவராலுமுடியாதப்பா வரியெந்நூலில் நுட்பம்வைத்து
நீதியாய் மனோன்மணித்தாய் பாதம்போற்றி நிஷ்களமாய்ப் பராபரியை பரவிநில்லே
1230.
நில்லடா நாகமது பலந்தானைந்து நெடிதான தாளகமும் பலந்தானைந்து
கொள்ளடா கெந்தகமும் பலந்தானைந்து கொடிதான சிங்கியது பலந்தானைந்து
மெல்லடா சூதமது பலந்தானைந்து மேலான துருசதுவும் பலந்தானைந்து
கல்லடா வாக்ரந்தம் பலமைந்தாகும் கருவாக வெள்ளியது பலமஞ்சாமே
1231.
அஞ்சான சரக்கெல்லா மொன்றாய்கூட்டி அப்பனே குழியம்மி தன்னாலாட்டி
திஞ்சான ஜெயநீர்தன்னால் மைந்தா தெளிவாக வறுசாம மரைத்துமேதான்
கஞ்சான வஜ்ஜிரமாம் குகையில்வைத்து கலங்காமலுலையில் வைத்தூதிப்பாரு
மிஞ்சாமல் மூசதனையடைத்துப்பாரு மிக்கான களங்குமது வாகுந்தானே
1232.
தானான களங்கமதை யென்னசொல்வேன் தாக்கான வெள்ளிசெம்பில் தன்னிற்றாக்கு
கோனான குருமுறையாய் வூதிப்போடு குணமான மாற்றதுவும் சொல்லப்போமோ
வேனான நாலிலோர் தங்கம்சேர்த்து விருப்பமுடன் தகடடித்துப் புடத்தைப்போடு
மானான மாற்றதுவும் மிகுதியாகி மாசற்ற தங்கமது வாகும்பாரே

1233.
பாரேதான் பராபரியைப் பூசித்தேதான் பாங்கான சின்மயத்தி லிருந்துகொண்டு
நேரேதான் மும்மலமும் விட்டகற்றி நெறியான வெட்டவெளி தன்னிற்சென்று
சீரேதாத் ஜோதிமயந்தன்னைக்கண்டு சுடரொளியையெப்போது மனதிலெண்ணி
கூரேதான் விட்டகுறை நேருமட்டும் குறிப்பாக சமாதியிலே யிருந்துபோற்றே
1234.
போற்றவே தாயறியாச் சூலுமிந்த பூதலத்திலில்லை என்றவாக்கியம்போல
ஏற்றவே நானறியா வாதந்தானும் யெழிலாகத் தானுமுண்டோ தரணிமீது
ஆற்றவே லிங்கமது பலமதாகும் அப்பனே பாவையர்பாலூறவைத்து
தூற்றவே சுறுக்குடனே நாலுசாமம் துடிப்பான லிங்கமது சுத்தியாச்சே
1235.
ஆச்சப்பா தேனதுவும் நாலுசாமம் அப்பனே சுருக்கதுவும் தாக்கவேண்டும்
மூச்சப்பா தைவேளை நாலுசாமம் முசுக்கையுடன் கருப்பன்சார் நாலுசாமம்
பேச்சப்பா பழச்சாறு நாலுசாமம் பேரான சங்கன்சார் நாலுசாமம்
பேச்சப்பா மேனிச்சார் நாலுசாமம் கலங்காமல் சுருக்கிவே கட்டிப்போமே
1236.
கட்டியதோர் லிங்கமது பலமேயாகும் கடிதான ரவிமதியும் பலமேயாகும்
திட்டமுடன் தான்ராவி மைந்தாகேளு திறமான குன்றிமணி யரைத்துமேதான்
பட்டயம்போல் தான்பிசறி லிங்கமிதில் பக்குவமாயங்கியது பதியமாட்டி
சட்டமதாய் சீலையது வலுவாய்ச் செய்து சார்புடனே மிப்புடத்தில் போட்டிடாயே
1237.
போடவே லிங்கமது வுருகியாடும் போக்கான சரக்கதுவுங் கட்டிப்போகும்
நீட்டமுடன் லிங்ககுரு தனையெடுத்து நேர்ப்பாக வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
வாட்டமுடன் கொடுத்துருக்க மாற்றாகும் மைந்தனே வுப்புக்கு காவிக்கேகா
தேட்டமுடன் கரியோட்டி லூதிப்போடு தெளிவான மாற்றதுவும் பாருபாரே
1238.
பாரேதான் செம்பதுவும் நீங்கியல்லோ பாங்கான வெள்ளயது மாற்றுகாணும்
சீரேதானவ்விடைக்குத் தங்கஞ்சேர்த்துச் சிறப்பாகத் தகடடித்துப் புடத்தைப்போடு
நேரேதான் தங்கமதுவதிகங்காணும் நிலையான வித்தையடா வாதவித்தை
கூரேதான் போகரிஷச சொன்னமார்க்கம் கவலயத்தில் பொய்யாது மெய்யாங்காணே
1239.
காணவே துடுப்பொன்று தானிருக்க கருவான கையதுதான் வேகுமோசொல்
நாணவே தவமொன்றுதானிருக்க நாம்செய்ய வினையதுதா னென்னசெய்யும்
பூணவே மருந்தினது போக்கிருக்க பொலிவான பாகமது வென்னசெய்யும்
நீணவே போகரிஷி புகலுமார்க்கம் நிச்சயமாய் தெரிந்துகொள்ளும் நெளிவைத்தானே
1240.
தானான ரசமதுவும் சேர்தானொன்று தாக்கான கெந்தியது சேர்தான்ரண்டு
வேனான வடிகனத்த சட்டிலேதான் வெகுளாமல் வுப்பதனை படிதான்கொண்டு
பானாக கீழ்மேலுப்பைகொட்டிப் பாங்காக கந்தகத்தை கீழ்மேலிட்டு
கோனாக ரசமதுவை நடுவேயூத்தி குப்புரவாய் தீயெரிப்பாய் சாமம்பத்தே

1241.
பத்தான சாமமது சென்றபின்பு பாங்காக எடத்தப்பார் செந்தூரம்தான்
புத்தான லிங்கமது போலிருக்கும் பொலிவாக செந்தூரம் சொல்லப்போமோ
சத்தான தங்கமது பத்துக்கொன்று தாக்கியரை ஜெயநீரால் மறுக்காலுந்தான்
வித்தான செந்தூரம் வேகமிஞ்சி வெகுதூரம் வேதையது வோடும்பாரே
1242.
பாரேதான்வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று பாங்காகத் தானுருக்கியெடுத்துப்பாரு
சீரேதான் கருப்புவன்னக் கனகமாகும் சிறப்புடனே யூதிப்பார் சிவந்துபொன்னாம்
நேரேதான் தகடடித்து புடத்தைப்போடு கெடிதான மாற்றதுவு மாறதாகும்
கூரேதான் நாலுக்கோர் தங்கஞ்சேர்த்துக் குறிப்புடனே சென்றெடுத்து யுருக்கிப்பாரே
1243.
சென்றேனே வஷ்டதிசை குளிகைகொன்டேன் திரளான நதிமலைகளனைத்தும்பார்த்தேன்
சென்றேனே பொன்விளையும் மணலுங்கண்டேன் செழிப்பான கெம்பினுட விளையுங் கண்டேன்
சென்றேனே பச்சைமலை யானுஞ்சென்றேன் சிவப்பான வயிசீரிய விளையும்பார்த்தேன்
சென்றேனே நாகார்ச்சுனன் மலையுங்கண்டேன் சேனவித வதிசயங்கள றிந்திட்டேனே
1244.
அறிந்திட்டேன் வெள்ளியென்ற மலையுங்கண்டேன் அப்பனே செம்பினுட மலையுங் கண்டேன்
பிரிந்திட்டேன் மேருகிரி தன்னிற்சென்றேன் ரோமரிஷிகள் முனிசித்தர்தம்மை
பரிந்திட்டு யவர்களிடம் சென்றுபேசி பலபலவாஞ் சாத்திரங்கள் மறைத்ததெல்லாம்
குறித்திட்டு வெளியாக்க வென்றேயெண்ணி குளிகையிட்டு சீனபதி யமர்ந்திட்டேனே
1245.
பதியான தீவுதீவாந்திரங்கள் பறக்கவே குளிகையொன்று செய்துகொண்டேன்
நதியான சத்தசாகரமும் கண்டேன் நாதாக்களிருப்பிடமும் துறையுங்கண்டேன்
விதியான சத்திரங்கள் மலைபோற்றங்கம் விஸ்தாரமாயிருக்குங் குகையுங்கண்டேன்
மதியான வெள்ளியென்ற கானாற்கண்டேன் மகத்தான சுரங்கமுதல் யான்கண்டேனே
1246.
கண்டேனே ரிஷிகளுட கூட்டந்தன்னைக் காலாங்கிநாயனார் சமாதிகண்டேன்
உண்டான சமாதியிடபக்கந்தன்னில் வுத்தமனே மேருகிரி சமாதியோகம்
அண்டாத தடாகமொன்று யங்கேயுண்டு அதிலுள்ள வதிசயங்கள் யாவுஞ்சொல்வேன்
திண்டான வாயிரங்கால் மண்டபந்தான் திறமாகக் கட்டியிருக்கும் வண்மைபாரே
1247.
பாரேதான் சித்தர்கள் கூட்டமாகப் பதிவாக தூணருகில் சமாதியிருப்பார்
நேரேதான் காலாங்கி மூவர்தாமும் நெடுந்தூரஞ் சமாதியது நெருங்கிருப்பார்
சாரேதான் சதகோடி திரிஷிகள் தாமும் சார்பாகத் தானருகில்வந்து
கூரேதான் தீதங்கள் மிகவுங்கேட்பார் கோடிமனுதானுரைப்பார் சித்தர்தாமே
1248.
தாமேதான் கருக்குருவும் விள்ளச்சொல்வார் தாக்கான செந்தூரக்காடு சொல்வார்
வேமேதான் சுன்னமென்ற காடுஞ்சொல்வார் மிக்கான கிடாரங்களிருப்புசொல்வார்
போமேதான் ராமரிடவைப்புஞ்சொல்வார் பொலிவான கெடிஸ்தலமும் புகழ்ந்துசொல்வார்
நாமேதான் ராவணிஸ்தலமும் சொல்வார் நலமான திரவியமு மிடஞ்சொல்வாரே

1249.
சொல்லுவார் பொன்னென்ற காட்டையெல்லாம் சூட்சமுடன் சூட்சமுடன்றானுரைப்பார் வதீதமெத்த
வெல்லுவார் அயோத்திநகராசனான வீரியனா மரிச்சந்திரன் வைத்தபொன்னை
கெல்லுவாரஃ பாதாளவஞ்சனத்தைக் கீர்த்தியுடன்றான் கொடுப்பார்மைந்தாகேளு
புல்லுவார் புரூரன்றன் பொன்னையெல்லாம் பொருப்பாகத் தானெடுக்கும் வகைசொல்வாரே
1250.
வகையுடனே ராஜாக்கள் வைத்தமார்க்கம் வகுப்புடனே தானெடுப்பார் சித்தர்வர்க்கம்
தொகையுடனே விக்கிரமாதித்தன் சொத்தைதுறைகோடி பரிசனமாமெல்லாஞ்சொல்வார்
நகையுடனே ராஜருட சோழவர்க்கம் நாட்டிலுள்ள பொருளையெல்லாம் விரித்துச்சொல்வார்
பகையுடனே பாண்டவாள் திருதராட்சன் பண்பாகத் தேடிவைத்த பொருள்சொல்வாரே
1251.
பொருள்சொல்வார் நளராஜன் திரவியங்கள் பூதலத்தில்மெத்தவுண்டு புகலப்போமோ
இருள்சேர்ந்த காட்டகத்தில் புதைத்துவைத்தார் எழிலான தேவரிஷிவனந்தானப்பா
மருள்சாய்ந்த மராமரமாம் விருட்சமுண்டு மலையோர லதினருகே சித்தர்கூட்டம்
அருள்சூழ்ந்த மூலவர்க்கர் மெத்தவுண்டு அவருடைய பலாபலத்தை யறையக்கேளே
1252.
கேளேநீ திரவியங்கள் மலைபோற்றங்கம் குவிந்திருக்குஞ் சாவடியாங் குளமொன்றுண்டு
சூளேநீ ராட்சதங்கள் கூட்டமப்பா சொல்லவொண்ணா ரிஷிகளுட சேர்வைமெத்த
அளேதான் மானிடர்க ளெவர்போனாலும் அண்டவொண்ணாதிரவியத்தை யெடுக்கப்போமோ
தாளேதான் மந்திரமாமதர்வணவேதம் தாக்குடனே தானறிந்தோர் போகலாமே
1253.
போகலாம் பொன்னெல்லாம் வாரிவந்து பூதலத்தி லரசனாய் வாழலாமே
வாழலாமென்றுசொல்லி தனத்தைத்தேடி தாரணியில் வைத்திறந்தோர் கோடாகோடி
வேகலாந்தீயதனி லென்றஜோதி மேதினியில் கேட்டிருந்து வீணாய்மாண்டார்
நோகலாஞ் சித்தர்மனமென்றெண்ணாமல் நொடிக்குள்ளே சாபத்தால் மாண்டிட்டாரே
1254.
மாண்டிட்டார் வரைகோடி ரிஷிசாபத்தால் மண்டிலத்தில் மடிந்தவர்கள் கோடாகோடி
தூண்டிட்ட கருமான மின்னமொன்று சூட்சமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு
வேண்டிட்ட திரவியங்கள் மெத்தவுண்டு விலாடனாம் நகரமதில் மலையோரந்தான்
தாண்டிட்ட கோபுரமாந் தேவஸ்தானம் தனிப்பிள்ளையார் கோவில்வுண்டுபாரே
1255.
பாரேதான் திருக்கோயில்குளமுண்டு படிமாம்வட்டக்கல்பாறையுண்டு
நேரேதான் சிவாலிங்கஞ் சமைந்திருக்கும் நெடிதான குத்துக்கல்பாறையுண்டு
சீரேதான் தருமரிட திரவியங்கள் தேடவொண்ணா மலைபோலதங்கமப்பா
சீரேதான் களஞ்சியங்கள் கோடாகோடி குறிக்கமுடிதென்று கூறினாரே
1256.
கூறினேன் போகரிஷிசொல்லுமார்க்கம் கொற்றவனாம் விபிஷணன்திரவியங்கள்
தேறினதோர் கோடிவரையுகாந்த தங்கம் கொட்டியே கிடக்குமது லங்கைதன்னில்
மீறினதோர் பச்சைவடம் தாவடங்கள் மின்னலைப்போ லொளிவீசு மிலங்கைதன்னில்
மாறியதோர் கோட்டைமுகம் பதிமுன்னாக மன்னவனார் நிதியனைத்தங் காணலாமே

1257.
காணலாம் பொற்கோபுர வாசல்முன்னே கருவான செந்தூரக்கிடாரமுண்டு
தூணெலாந் தங்கமதுசெம்புவண்ணம் துறைநடுவெ ஜெயரசக்கிடாரமுண்டு
பூணெலாம் வாபரணமெத்தவுண்டு பொங்கமுடன் தானிருக்கும் புரவிபூண்டு
நீணலாந் தெய்வலோகபுரவிமீதில் நெடிதான ரக்கையதுதோன்றுந்தானே
1258.
தானான பரவியதுதானிருக்குந் தனியான சப்ரகூட மண்டபந்தான்
வேனான செம்பினுட மாளிதானும் விண்ணுலகில் விசுவகர்ம நிரூபந்தன்னால்
பானான விபீஷணனாமாண்டு தன்னில்பாவித்த மண்டபத்தின் மகிமைசொல்வோம்
கானான யிந்திரசித்தன் சிசுபாலன்தான் காட்டியதோர் வாதவித்தை காணலாமே
1259.
ஆமேதான் ஜெயரசமாஞ் செந்தூரத்தை அடவுடனே தாம்பிரத்தின் மாளிதன்னில்
தாமேதான் காலடியில் மண்டபத்தில் தாக்கவே தூம்சரமாம் ஜெயசூதத்தை
காமேதான் தடவிதணலைக்காட்டக் கட்டடமாமாளிகையும் பழுத்துதங்கம்
நாமேதான் கண்டபடி சொர்ணமாளி நளினமுட னிந்திரசித்தனாட்டினானே
1260.
நாட்டினான் சித்தர்முதல் ரிஷிகள்தாமும் நடுக்கமுடன் திடுக்கிட்டு ஓடிவந்து
மீட்டினதோர் ஜெயசூததூம்பரத்தை மேதினியிலாரிடமும் கிட்டாமற்றான்
பூட்டினார் கிராடமென்ற ஜெயசூதத்தை பூதலத்தில் யாரேனும் நெருங்கவொட்டால்
தாட்டினாற் சமாதியிலே கிடாரமெல்லாந் தாணியில் பாதாளம் புதைத்திட்டாரே
1261.
புதைத்துமே ரிஷிகோடி முனிவர்தாமும் பஊதலத்தி லிந்திரனாம்சித்தனுக்கு
பதைத்துமே சாபமது கொடுத்திட்டார்கள் பாருலகில் பத்தனாய்த் திரியவென்றார்
சிதைத்துமே இந்திரனாஞ் சித்தராஜன் சிறையிட்டு முறையிட்டுத் திரிந்தான்பாரில்
வதைத்துமே தானிறுந்ர யிந்திரசித்தை வாகுடனே சாபமதை தீர்த்தார்பாரே
1262.
தீர்க்கவே ஜனகமுனி பெரியோர்தாமும் திறமுடனே கானகத்தில் கொண்டுசென்று
பார்க்கவே யெல்லோரும் புகழவென்று பாவித்தார் ஞானோபதேசவுண்மை
தேர்க்கவே சித்தருட மகத்துவத்தை தெளிவுறவே ஜனகமுனி யெடுத்துக்கூற
மார்க்கவே மனோலயத்தி லகித்துநின்று மதிப்புடனே யோகசமாதியில் நின்றாரே
1263.
நின்றாரே லங்கைபதியோரந்தன்னில் நெடுந்தூரம் சுனையொன்று தடாகமுண்டு
குன்றான மலைபோலப்பூஷணங்கள் கோடானகோடி செம்பொன் கிடாரந்தன்னை
வன்றான பூமியிலேவைத்தார் வாகான வேதாளங்காவலுண்டு
தன்றான பூஷணமாஞ் சாடிவைப்பை தரணியிலே போகரிஷிகண்டிட்டாரே
1264.
கண்டிட்டே னிலங்கைக்கு மேற்புரத்தில் கருவான சுரங்கமுண்டு கிடாரந்தன்னில்
குண்டிட்ட காவடியாங் கோட்டைவாசல் கொடிதான கிங்கிலியர் அனுமார்கூட்டம்
தாண்டிட்ட காவற்கார ணேகருண்டு சதகோடி ரிஷிகளெல்லாம் வருவார்போவார்
கொண்டிட்ட சீதையாபரணந்தன்னைக் கோடித்துத்தான்வருவார் முனிவர்தாமே

1265.
முனியான லங்கைக்கு வடபாகத்தில் முனையான மலையோரம் பாரையண்டு
தனியான மண்டபமாங் கோட்டையுண்டு தாக்கான கடலோரங் குத்துக்கல்லாம்
கனியான தேவதாமாவிருட்சம் கடலருகே ராட்சதாள் கூட்டங்காவல்
பணியான சூரியசந்திரனுங்காணார் பாருலகில் யெவராலும் பார்க்கப்போமோ
1266.
பார்க்கவே வெகுகோடி சித்தர்தாமும் பதிவாகக் காணவென்று வருவார்போவார்
ஆர்க்கமுடியாது தனத்தின்சேர்வை ஆஇறிவாரிவ் வுலகில் தீதமெத்த
தீர்க்கவே குளிகைகொண்டு யானுஞ்சென்று திரளான கோட்டைவழி தான்கடந்து
ஏற்கவே சுரங்கத்தின் வழியுங்கண்டேன் யெழிலான ராவணனார் நிதிகண்டேன்
1267.
நிதியான தளவாசலனைத்தும்கண்டேன் நெடிதான பாஞ்சாலன் கிடாரவைப்பு
பதியான கடலோரம் விருட்சமுண்டு பாங்கான கோட்டைக்கு யிடபாகத்தில்
வதிமணலென்ற வாறுமுண்டு மகத்தான வாற்றருகே சுணையுமுண்டு
துதியான கிங்கிலியர் காவலுண்டு துறைமுகத்தில் கறுப்பண்ணன் நிற்பான்பாரே
1268.
நிற்பானே பாஞ்சாலன் எக்கியசாலை நெடிதான பொன்விலையுந் தலமொன்றுண்டு
கற்பானகன்னிகை களங்கிருப்பார் கண்டாலே சாபத்தால் சமைப்பார் கண்டீர்
பொற்பான குடமெடுத்துச் சலமேதூக்கி போற்றியே யெக்கியத்திற் கச்சனையே செய்வார்
துற்பான யாகசாலயத்தைக்கண்டேன் துடியான குளிகையிட்டு நடந்தேன்பாரே
1269.
நடந்தேனே சீனபதி நாடிவந்தேன் நானங்கே சிகாலமிருந்துபார்த்தேன்
தொடர்ந்தேனே தட்சினமாம்பதிக்கு வந்தேன் தொடரான வஞ்சனமாங் கிரியில்வாழும்
அடர்ந்தேனே யவரிடமாங் குகையிற்சென்று அடங்காத சாத்திரத்தி னளவுபார்த்துக்
கடந்தேனே சிகரமலை மேலைசென்றேன் கடாட்சிக்க ரிஷபத்தை துறைபார்த்தேனே
1270.
துரைகண்டேன் காலாங்கி பாதங்கண்டேன் துய்யமலர்தானெடுத்து சரணஞ்செய்தேன்
கரைகடந்தேன் கடந்தமுனிரிஷிகள்தம்மை கார்க்கவென்று வவர்களிட பாதஞ்சென்றேன்
முறைகொண்டேன் சித்தர்களை யான்வணங்கி மொழிந்திட்டேன் லோகத்தின்மகிமை
தன்னை
தரைகண்டே னடிமுடியனைத்துங்கண்டேன் சதாநிஷ்டையத்தனையும் வெளியிட்டேனே
1271.
வெளியிட்ட யெந்தன்மேல் சந்தோஷித்து வெளியாக சாத்திரத்தின் மறைப்புதன்னை
பலியிட்ட சாபத்தை நிவர்த்திசெய்து பாருலகி லெள்ளோரும் பிழைக்கவென்று
குளியிட்ட கவனமுதல் கெவுனசித்தி குறிப்பான வடையாள மனைத்துங்காட்டி
வளியிட்டா ரெந்தனுக்கு வாக்குசொல்லி வரங்கொடுத்தா ரிஷிமுனிவர் சித்தர்தாமே
1272.
சித்தருடவரம்பெற்று திரும்பியானும் சென்றேனே சீனபதிதேசந்தன்னில்
நித்தமுடன் முனிரிஷிகள் சித்தர்தாமும் நேர்துரைத்தமுறைப்படியே யானுங்கொண்டு
சத்தமுடன் செத்ததொரு மனிதர்தம்மை தாரணியில் காணுதற்கு ஜாலஞ்சொல்வேன்
பத்தியடன் மாளிகையா மச்சிவீடு பாங்காகத் தான்சமைப்பீர் மைந்தாகேளே

1273.
கேளவே பத்தடியாய் நாலுபக்கம் கெடியான சந்தில்லா மச்சிவீடு
நீளவே யொருபக்கம் சந்தமைத்து நிலையான வாள்போக யிடமுண்டாக்கி
தாளவே கண்ணாடி கீழ்புதைத்து தாக்காகச் சுற்றிலும் படமடைத்து
ஆளவே ஒவ்வொரு படத்தில்தானும் அய்யனே அண்பெண்ணா ரூபஞ்செய்யே
1274.
செய்யவே கண்ணாடி யறுபத்துநான்கு திறமுடனே வைங்கோல மையினாலே
பையவே வெவ்வேறு சட்டந்தன்னில் பாங்காகப் பலவிதரூபமாக
தொய்யவே சகலவிதவர்ணத்தாலே தோற்றவே நேத்திரத்திற் கழகாக
மய்யவே மறைப்பினுட கருவினாலே மாட்டடா நெற்றுதனில் பொட்டுவையே
1275.
வைக்கவே மாளிகையில் மேற்புரத்தில் வகையுடனே வாகாஷங்காண்பதற்கு
கைக்கனத்தக் குழாவொன்று துத்தநாகம் கடுந்தூரம் பார்வையது தெரியவேதான்
மெய்க்கவே குழாவினுட சந்தினாலே மேல்நோக்கி வாகாஷந்தன்னைப்பாரு
பொய்க்கவே கண்ணிமைகள் சிமிட்டாமற்றான் பொங்கமுடன் தானின்று சிரசைப்பாரே
1276.
பார்க்கையிலே ரூபமது யெதிரேநிற்கும் பாங்குடனே மறுபடியு மாயாரூபம்
பார்க்கையிலே மறுபடியுங் கண்ணாடிபாரு படிகமென்ற கண்ணாடி ரூபங்காட்டும்
பார்க்கையிலே யாரைநீ நினைத்திட்டாலும் பட்சமுட னெதிர்நின்று தோற்றங்காணும்
பார்க்கையிலே நிஜரூப மிறந்தோர் காண்பீர்பாரினிலே ஜாலவித்தை பகரலாமே
1277.
பகரலாம் தோற்றமதை காணும்போது பகற்கால மேகமதுயிருக்கப்போகா
நகரெலாஞ் சூரியனி னொளியேவேண்டும் நாட்டமுடன் திரைக்குள்ளே நிற்கும்போது
சகரெலாமஃ காண்பதற்கு யிடமும் வேண்டு சட்டமுடன் கடிகைதனில் பத்துக்குள்ளே
பகரலாம் மாளிகையில் ஜாலவித்தை புகழ்ச்சியுட னெப்போதுங் காட்டுவீரே
1278.
காட்டவே மாளிகையினுட்புகுந்து கனமான ரூபத்தைக் காணும்போது
நாட்டமுடன் மனோலயமு மாறியேதான் நடுக்கமுட நேத்திரத்தில் ரூபங்காட்டும்
வாட்டமுடன் ஜெகஜால வித்தைதன்னை வாகுடனே மானிடர்களறியவென்று
தேட்டமுடன் போகரிஷியானுங்கண்டு தெளிவாகப் பாடிவைத்தேன் திறமிதாமே
1279.
திறமான வித்தைதனை சீனந்தன்னில் தெளிவாகச் செய்துமல்லோ கீர்த்திபெற்றேன்
திறமான போகரிஷியென்றுசொல்லி திக்கிலுள்ள ஜெனமெல்லாம் கண்டுவந்து
திறமான வித்தையிது வதீதவித்தை தேசத்தில்கிட்டாது சித்தாக்கில்லை
திறமானலோகமதை மயக்கும்வித்தை தெரிவித்தார் போகரிஷியென்றிட்டாரே
1280.
என்றிட்ட சித்தரெல்லா மொன்றாய்க்கூடி ஏகாந்தம்பேசியல்லோ எனைக்கோபித்தார்
கன்றிட்ட பாலதுபோல் யானும்பொங்கி கடிந்துரைத்த மொழிதனையே கருத்திலுன்னி
வென்றிட்ட ரிஷிமுனிவர் ஜாலம்சொன்னார் வேதாந்த தாயெனக்குச் சாபந்தீர்த்தாள்
அன்றிட்ட சாபத்தைக் கடந்துயானும் அப்பனேயநேகவித்தை செய்தேன்பாரே

1281.
பார்க்கவே வாகாஷம்பாவந்தன்னில் பரிவுடனே குதிப்பதற்கு கூண்டுசொல்வேன்
கார்க்கவே வட்டமாங்குடைதானொன்று பாங்கான குடைநிகள மகலங்கேளிர்
ஏர்க்கவே ஆறடியாவட்டவீடு யெழிலான பட்டுவடந் தன்னாற்செய்து
தீர்க்கவே பிரம்பதுவும் முப்பத்திரண்டு திறமான சக்கரமுமொன்றேமாட்டே
1282.
மாட்டவே சக்கரத்திலிரும்புக்கம்பி மார்க்கமாய்த் தான்முடுக்கி வாணிமாட்டி
நீட்டமுடன் கம்பிக்குத் துணிதான்போர்த்து நெடிதான சூத்திரமாங் கயற்தான்கோர்த்து
வாட்டமுடன் தான்விரித்து குடையையேந்தி வாகாகத் தான்குதிக்கில் வாயுபூந்து
தேட்டமுடன் காற்றதுவுங் கூண்டேதூக்கும் தீவிரமாய் மனிதனுந்தான் கீழ்நோக்கலாமே
1283.
நோக்கலாம் குடைதனையே கையிலேந்தி நொடிக்குள்ளே மலையைவிட்டு குதிக்கும்போது
தூக்குமே குடைதானுமனிதனைத்தான் துப்புரவாய் மனிதனங்கே துணிவுகொண்டு
தேக்குடனே பூமிதனிலிறங்கும்போது தேசமெல்லாங் கண்ணுக்கு எணுவுபோலும்
நோக்குடனே தெரியுமென்று போகர்தானும் நேராகப் பாடிவைத்தேன் நேர்மைபாரே
1284.
பாரேதானின்னமொரு சூட்சஞ்சொல்வேன் பாருலகி லிந்தவித்தைபழக்கஞ்செய்ய
சீரேதானாற்றருகே தன்னிற்சென்று சிறப்பான ஜலமதுவும் நிற்கும்போது
நீரேதான் பாளமதில் நின்றுகொண்டு நேர்த்தியாய் குடைதனையே கையிலேந்தி
தீரேதான் ஜலமதினில் குதித்தாயானால் திறமான தேகமது பழுதுறாதே
1285.
பழுதுமே வாராது தேகந்தானும் பலகாலுமிப்படியே பழக்கஞ்செய்தால்
கழுதுவள தானிருக்கும் பனையின்மேலே கருவாகத்தானேறி குடையையேந்தி
தொழுமே பராபரியை மனதிலெண்ணி தொய்யாமலே பூமியிலே குதிப்பீரானால்
முழுதுமே லாசுடனே பழக்கந்தன்னால் முனையான கோபுரத்திலேறலாமே
1286.
ஏறலாந் தேவதாகோபுரத்தில் யெழிலான குடைதனையே கையிலேந்தி
தேறலாஞ் சிகரபுரை மீதிருந்து தேற்றமுடன் குடைதனையே விரித்துயேந்தி
மாறலாமேலிருந்து கீழ்குதிக்கில் மதிப்புடனே தீரனாயிருந்துகொண்டு
கூறலாமிக பழக்க மதிகமாகி குன்றின் மேலேறுதற்கு குணமுண்டாமே
1287.
குணமுண்டா மடமனமுண்டாங் குவலயத்தில் கோடிபேருளைவந்து மனங்களிப்பார்
பணமென்ன கோடிதனம்படைத்தாலென்ன பாருலகிலிவ்வித்தைப் பகரப்போமோ
சின்மதிலே யானுமிந்தவித்தை தன்னைச்சீனபதிசென்று செய்துகீர்த்திபெற்றேன்
வளமுடனே மானிடர்கள் பிழைக்கவென்று வாகுடனே பாடிவைத்தேன் வளமைபாரே
1288.
பாடினதோர் வண்மையினால் சித்தரெல்லாம் பாருலகிலென்மீது கோபங்கொண்டார்
தேடினதோர் நாதாக்கள தீதவித்தை தெருவினிலே வீணாகப்போச்சுதென்று
கூடியே யெல்லோரு மொன்றாய்க்கூடி கூறினார் சாபமதுயென்னசொல்வேன்
நாடியே காலாங்கிநாதர் பாதம்தான்வணங்கி சாபமதை தவிர்த்திட்டேனே

1289.
தவிர்திட்டேன் மறுபடியஞ்சித்தர்கூடி தயவுடனே யெனையழைத்து தர்க்கம்பேசி
மவிர்த்திட்ட ஜாலமது மிஞ்சிப்போச்சு மகத்தான வித்தையது பாழாய்ப்போச்சு
உயிர்த்துவிட்ட வித்தையது சொல்லப்பாவுத்தமனே செத்தவரைப் பிழைக்கும்வித்தை
நிவர்த்தி கட்டுமற்றதெல்லாம் செய்யவென்று நீணிலத்தில் நாதாக்கள் தடுத்திட்டார்
1290.
தடுத்திட்ட மொழிபடியே யான்வணங்கி தட்டாமலவர்பாதம் பணிந்துமேதான்
அடுத்திட்ட நிர்வாணி பாதஞ்சென்று அப்பனே நெடுந்தவசு தானிருந்து
கொடுத்திட்ட வித்தையெல்லாங் குவலயத்தில் கொட்டினேன் மானிடர்கள் பிழைக்கவென்று
எடுத்திட்டு குளிகைதனைக் கொண்டுயானும் ஏகினேன் சீனபதியமர்ந்திட்டேனே
1291.
பதியான மேருகிரிதன்னிற்சென்றேன் படியான சிகரவரை யானுங்கண்டேன்
நதியான தனையொன்று வங்கேகண்டேன் நாதாக்களிருப்பிமுந் துறையுங்கண்டேன்
பொதியான புத்தொன்று வங்கேயுண்டு புகழான சித்தொருவ ரதிலேகண்டேன்
துதியான மனதாரஞ்செய்துகொண்டு தொழுதுமே யவர்பாதம் பணிந்திட்டேனே
1292.
பணிந்திட்டேன் சித்தரையான் வணங்கிமெத்தப் பரிவாகநின்றுகொண்டு பாண்மைகேட்டேன்
துணிந்திட்டு யவரிமும் பத்திவைத்து தொண்டனாய்க் கீழிருந்து துதித்துநின்றேன்
கனிந்திட்டு என்பேரில் கிருபைகூர்ந்து கடாட்டிக்க யெந்தனைநீ யெவர்தானென்றார்
வணிந்திட்டு யென்பேர் போகரென்றேன் வந்தவரலாறென்னசொல்லென்றாரே
1293.
சொல்லவே சீனபதிநடந்துயானும் துப்புரவாய் குளிகையது பூண்டுகொண்டு
மெல்லவே மேருகிரி பார்க்கவென்று மேன்மையாய்த் தங்களிடஞ் சேர்வைகண்டேன்
புல்லவே யவரெனக்கு வாக்களித்தார் பூதலத்தில் மனிதரப்பா வந்தாயென்றார்
அல்லவே நானுமுன்னை சபிப்பேனென்றார் அப்பனே மனமொருத்தேனென்றிட்டாரே
1294.
என்றைமே பாலனுமே ஏங்கிநிற்க என்பேரில் மறுபடியுங்கிருபைவைத்து
குன்றுமேல் வந்ததுனக்கதிககுற்றம் கொடிதான தண்டனைகள் செய்யவேண்டும்
ஒன்றுமே யாமுனக்கு செய்யாமற்றான் வுத்தமனே வுபதேசஞ்செய்வேனென்றார்
கன்றுடனே தாய்சேர்ந்தக் கதையைப்போலக் காத்திருந்தேன் வெகுநாளாயானுந்தானே
1295.
காத்திருந்த யெந்தனுக்குக் கடாட்சம்வைத்து கைலாச மேருகிரிவந்த பாலா
பார்த்திருந்து துவாபரமாய் யுகத்தில் யானும் பர்வதாமாமேருகிரி தன்னில்வந்தேன்
சேர்ந்திருந்த வதிசயங்கள் மெத்தவுண்டு செப்பினாரெந்தனுக்கு வெளிதாக
போர்த்திருந்த புலிதோலினாசனத்தை பொங்கமுட னெனக்களித்தார் புதுமைபாரே
1296.
புதுமையுடன் கனியொன்று யெனக்களித்தார் பொங்கமுடன் பசியாறி வீற்றிருந்தேன்
பதுமைதனை யவரிடத்தில் கண்டேன்யானும் பட்சமுட னதுவருகில் நின்றிருந்தேன்
பதுமையுட னென்னிடத்தில் மிகவும்பேசி கருவான மறைப்பையெல்லாம் பிரித்துக்காட்டி
பதுமையுட னுபதேசஞ்செய்துயென்னை மோட்சவழிக்கேகும்வழி சொல்லலாச்சு

1297.
ஆச்சப்பா பிரதமையின் மகிமைதானும் அதற்கப்பால் மேருவின் வடபாகத்தில்
பேச்சப்பா யில்லையது பதுமையப்பா பேரான பதுமையொன்று யங்கேகண்டேன்
மூச்சப்பா சுவாசனையால் வயிறென்றெண்ணி முன்னிருந்த பதுமைபோலிருக்குதென்று
விச்சப்பா வதனிடத்தில் நின்றேயானும் வேடிக்கை வினோதமெல்லாஞ் சொல்லலாச்சே
1298.
சொல்லுவது வப்பதுமை புதுமைமார்க்கம் சுந்தரனேயாரென்று யெனைதான்கேட்க
மெல்லவே யான்பயந்து நடுநடுங்கி மெத்தவுபசாரமுடன் வணங்கியானும்
வெல்லவே காலாங்கி நாதர்பாதம் விருப்பமுடன்தான்தொழுது யெடுத்துரைத்தேன்
புல்லவே யென்பேரு போகநாதன் புகழ்ச்சியுடன் குளிகையிட்டு வந்திட்டேனே
1299.
வந்திட்டேன் சீனபதியான்கடந்து வாகுடனே மேருகிரி காணவந்தேன்
குந்திட்ட சித்தருட புத்துகண்டேன் கோடித்து அவர்பாதம் பணிந்துநின்றேன்
திந்திட்ட பதுமையொன்று முன்னே கண்டேன் மொழிந்திட்ட வனேகவித வதிசயங்கள்
தந்திட்ட தெந்தனுக்கு மனேகவண்மை தயவுடனே கொடுத்ததென்று மொழிந்திட்டேனே
1300.
மொழிந்திட்ட வார்த்தைதனைக் கேட்டபோது முனையான பதுமையது யென்னைப்பார்த்து
சுழிந்திட்ட வனேகவித வித்தையெல்லாஞ் சூட்சமுடனெ ந்தனுக்குச் சொல்லலாச்சு
பருந்திட்ட நானுமல்லா வெகுவாப்பேசி பாங்கான வுயிர்கொடுக்கு மூலிகேட்டேன்
வழிந்திட்டு யெந்தனுக்கு சொன்னதென்றால் வையமெல்லாம் சித்தாகப் போகுந்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

1301.
போகுமென்று சொல்லியல்லோ வந்தவித்தை பூதலத்தில் செய்யமுடி போகாதென்று
சாகும்வித்தை எழுப்புவதும் சரியுமல்ல தற்கால முந்தனுக்கு மனேகவித்தை
பாகுடனே ஜெகஜால மிந்திரஜாலஜாலம் பாங்கான கோகர்ண மயேந்திரஜாலம்
ஆகுடனே கூடுவிட்டுப் பாயம்வித்தை அப்பனே எந்தனுக்கு கொடுக்கலாச்சே
**1302.**
கொடுக்கவே எந்தனுக்கு ரிஷியும்வந்து குறிப்புடனே எந்தனது ராசிபார்த்து
விடுக்கவே வேண்டுமென்று மனதிலெண்ணி வேதாந்த நுட்பமெல்லா மெனக்கோதித்து
தொடுக்கவே வடிவேலர் கோயில்முன்னே துப்புறவாய் போவதற்கு துறையுஞ்சொன்னார்
நடுக்கவே சிகரம்வரை மேலேயேறி நளினமுடன் வேலவரைக் கண்டிட்டேனே
**1303.**
கண்டிட்டேன் வேலவரையடிபணிந்தேன் காலாங்கிநாதரைத் தொழுதுபோற்றி
மண்டிட்டு கால்பணிந்து யடிவணங்கி மகாதேவா சரணமென்று தொழுதேன்யானும்
தெண்டிட்ட வடியேனை வேலர்பார்த்து தேவரிடம் வந்ததென்ன பாலாவென்றார்
விண்டிட்டு யானுமப்போ வரலாறுசொன்னேன் விரும்பியே எந்தனையு மாட்கொண்டாரே
**1304.**
கொண்டவுட னடியேனுந்தான் பணிந்து குறிப்புடனே காலாங்கிதனைநினைத்து
அண்டசராசரங்களெல்லாம் காணவென்று அப்பனே குளிகைதனை பூண்டுகொண்டு
கண்டறிய வேண்டுமென்று மேருதன்னில் கருத்துடனே சிகரவரை யேறிவந்தேன்
திண்டமுன் பதுமையொன்று யானுங்கண்டேன் திறமான சித்தொருவ ரிருந்திட்டாரே
**1305.**
இருந்திட்ட சித்தரென்னை கண்டுவந்து இனிதாக வாய்மொழிகள் தாமுரைத்தார்
வருந்திட்டு யானுமெனக்கெதியேதென்றேன் வாகான சித்தரவர் பேசவில்லை
கருந்திட்ட பதுமையது தன்னைபார்த்து சட்டமுடன் கண்சாடை காட்டினார்பார்
மருந்திட்ட பதுமையது யெனையாரென்ன மார்க்கமுடன் நான்பயந்து போகரென்றேன்
**1306.**
என்றேனே பதுமைக்கு விடையுஞ்சொன்னேன் என்மீது பதுமையது கிருபைவைத்து
குன்றான பொருளெல்லா மெனக்கோதித்து குவலயத்தில் போகவென்று வாக்களிக்க
பன்றான சிகரவரைக் காணவென்று பாங்குடனே மறுபடிய மேலேவந்தேன்
ஒன்றான பதுமையது பின்னுங்கண்டேன் ஓகோகோநீயாரென் றோதலாச்சே
**1307.**
ஓதவே யான்வணங்கி ஒடுங்கிநின்று ஒப்பமுடன் தான்பணிந்து தொழுதுநின்றேன்
நீதமுடனெந்தனுக்கு வுபதேசங்கள் நிட்களமாம் பூரணத்தை யோதிற்றங்கே
போகரிஷியங்கிருந்து வாழ்த்து சொன்னார் பூதலத்தில் போய்பிழைக்க வயனஞ்சொன்னார்
தோதமுடன் நானனைத்தும் கேட்டுமேதான் தோற்றமுடன் தங்களிடம் கண்டேன்தானே
**1308.**
கண்டுமே தானுரைத்தே னதீதமார்க்கம் கைலாசநாதரங்கே கிருபைகூர்ந்து
அண்டமுடன் மேருகிரி தன்னில்வாழும் அழகான மயில்மீதி லிருந்துகொண்டு
தொண்டனெனக் கதிகமுட னுபதேசங்கள் சுருக்கமுன்றானுரைத்தார் ஞானம்நூறு
விண்டுமே மேல்வரையிற் சிகாரம்போனேன் மிக்கான கணபதியைக் கண்டிட்டேனே

1309.
இட்டேனே கணபதியை யானுங்கண்டேன் இயலான மேருகிரி தன்னில்வாழும்
அட்சான பெருச்சாளி வாகனத்தி லன்புடனே வினாயகரும் வீற்றிருந்தார்
கிட்டான தேவருட னனேகம்பேர்கள் கிருபையுடனங்கிருந்தார் சேர்வைகண்டேன்
சட்டான தோத்திரமு மறுநூறுசொன்னார் சர்ங்கமுட னுபதேசம் பெற்றேன்பாரே
1310.
பாரேதான் மேருகிரி பக்கம்போனேன் பாங்கான சுனையுண்டு குகைதானுண்டு
சீரேதான் சித்தரவர் நூறுபேர்கள் சிறப்பாக வங்கிருப்பார் தவயோகத்தில்
நேரேதா னவர்கள்முகந்தன்னில் நின்றேன் நிஷ்கரமா யெந்தனையும் நிமிர்ந்துபார்த்தார்
சேரேதா னிவ்விடத்தில் வந்ததென்ன சிறியதோர் பாலகனே சொல்லென்றாரே
1311.
சொல்லென்றார் சித்தரெல்லா மொன்றாய்கூடி சூழ்ந்துகொண்டா ரெந்தனையங் கிட்டேவந்து
கல்லென்ற கல்லோடே யான்பயந்து கர்த்தாவாங் காலாங்கி நாயர்தம்மை
புல்லனான் சிறியனும் யாநினைத்து புத்தியுடன் தைரியங்கள் மிகவுண்டாகி
வெல்லவே சித்தர்களை யடிபணிந்து விருப்பமுனென்பேரு போகரென்றேன்
1312.
போகர்நான் குளிகையிட்டு சீனம்விட்டுப் பொங்கமுடன் மேருகிரிதன்னைக்காண
வேகமுட னாலுவரையேறிவந்தேன் வேதாந்த மாயதனையே காணவில்லை
வூகமுடன் வடிவேலர் தன்னைக்கண்டேன் யுற்றதொரு பதுமைமுகம் சேர்வைகண்டேன்
சாகமுன் சித்தருட தெத்துகண்டேன் சண்முகத்தின் சூலமுதல் மயில்கண்டேனே
1313.
மயில்கண்டேன் சுப்பிரமணியர் தன்னைகண்டேன் வாகான பதுமையொன்று வங்கேகண்டேன்
ஒயிலுடனே பதுமையுபதேசங்கேட்டேன் ஓங்காரச் சத்தமது காதிற்கேட்டேன்
வெயிலுடனே பனிமுந் திசைகள்மாறி வெட்டடெளி சின்மயத்தின் ஜோதிகண்டேன்
குயிலுடைய சத்தமது பதுமைகூற கொற்றவரே தமதிடத்தில் வந்திட்டேனே
1314.
வந்திட்டே னென்றதுமே வார்த்தைசொன்னேன் வாராக எந்தனுக்கு கிருபைகூர்ந்தார்
முந்திட்ட சாபமதை நிவர்த்திசெய்து மொழிந்திட்டார் மாநிலத்தில் போகவென்றார்
பிந்திட்டு அடியேனும் சித்தர்முன்னே பேசினேன் வெகுவாக வாதுசெய்தேன்
தந்திட்டா ரெந்தனுக்கு சாத்திரங்கள் சதகோடிவித்தைகளை யறிந்திட்டேனே
1315.
அறிந்தேனே மேருவுக்குத் தென்பாகத்தில் அஷ்டவிதசித்தர்கள் தானங்கிருந்தார்
பறிந்திட்டு யவர்களைநான் தெரிசித்தேதான் பாங்குடனே யவரிடமும் வணங்கிநின்றேன்
சறிந்திட்ட சாத்திரங்கள் மிகவுஞ்சொன்னார் சரிகைகிரியோகமுதல் யாவுஞ்சொன்னார்
குறிந்திட்ட வஷ்டாங்க யோகஞ்சொல்லி கொற்றவாநீ யாரென்றெனைக்கேட்டாரே
1316.
கேட்டவுடன் காலாங்கி நாயர்தம்மைக் கிருபையுடன் பணிந்துநினைத்துயானும்
தேட்டமுடன் சீனபதிதனிலிருந்து திறமான குளிகையது பூண்டுகொண்டு
வாட்டமுடன் மேருகிரி காணவந்தேன் வாகுடனே யாதரித்து கார்க்கவென்றேன்
கூட்டமுடன் சித்தர்களு மொன்றாய்க்கூடி கூறினார் ஞானோபதேசந்தானே

1317.
தேசமாம் சாத்திரத்தின் தொகுப்பைக்கேட்டேன் தெளிவாக தாமுரைத்தார்
வுளவையெல்லாம்
மோசமில்லை யென்றுசொல்லி யென்னைநம்பி மொழிந்திட்டார் சித்தர்களின்
மறைப்பையெல்லாம்
பாசமுன் கிட்டிருந்து யழைத்துப்போய் பாங்கான கிடாரமுதல் ஜெயசூதத்தை
நேசமுடன் தானிருக்குஞ் செந்தூரத்தை நிட்சயமாயெந்தனுக்கு காண்பித்தாரே
1318.
காண்பித்தார் சித்தர்தம்மை விட்டுநீங்கி கடந்துமேசிகரம்வரை யேறலானேன்
காண்பித்தார் மேருவுக்கு கீழ்பாகத்தில் கருவான மூலியுண்டு வேதையுண்டு
காண்பித்தார் குகைமுதலா மடங்கள்தம்மை கடியான சித்தர்முத லிருக்குமார்க்கம்
காண்பித்தார் சதகோடி ராமலிங்கம் கருத்துடனே தானிருக்குந் தலங்கண்டேனே
1319.
தலங்கண்டேன் சதகோடி சமாதிகண்டேன் தாக்கான சித்தரகளின் பெயருங்கண்டேன்
வலங்கண்டு யிடம்புரியாய் சுத்திவந்தேன் வாகுடனே வர்ச்சனைகள் மிகவுஞ்செய்தேன்
பலங்கொண்ட சித்தருட சமாதிநின்றேன் படிகமென்ற லிங்கமதை பணிந்துநின்றேன்
கலங்கொண்டு காலாங்கி நாயர்தம்மைக் கருத்திலேதானினைந்து கலங்கிட்டேனே
1320.
கலங்கிட்ட யெந்தனையுங் கார்க்கவென்று கடிதான சமாதிதனி லிருந்தசித்தர்
துலங்கிட்ட சமாதிதனி லிருந்துகொண்டு துப்பரவா யெந்தனையும்தட்டிக்கேட்க
விலங்கிட்டு யானுமது தூரநின்று விருப்பமுடன்றாள்பணிந்து போகரென்றேன்
மலங்கிட்டு சமாதிதனிலிருந்த சித்தர் மார்க்கமுட னுபதேசஞ்செய்திட்டாரே
1321.
செய்திட்ட பிற்பாடு சிறியேன்தானும் சிறப்புடனே மேருவுக்கு குணபாகத்தில்
செய்திட்ட ரிஷிகோடிசித்தரப்பா மெய்மறந்து தவநிலையில் நிற்கக்கண்டேன்
பொய்த்திட்ட மில்லாதசித்தர்தம்மை பூதலத்தில் காண்பதுவுமறிதேயாகும்
வைதிட்டால் குற்றமில்லை யென்றுசொல்லி வாகுடனே யவரருகில் நின்றேன்பாரே
1322.
பார்க்கையிலே சித்தர்முனி ரிஷிகள்தாமும் பாகுடனே யெந்தனையாரென்றுகேட்டார்
மேற்கையிலே யிருந்ததொரு சித்தர்தம்மை மேன்மையுடன் றாள்பணிந்து
வணக்கஞ்சொன்னேன்
கார்க்கவே வேண்டுமென்று காலாங்கிதம்மை கருத்திலே தானினைத்து குளிகைபூண்டு
தீர்க்கமுட னென்பேரு போகரென்றேன் திறமையுடன் சித்தர்களு மருள்செய்தாரே
1323.
அரஉள்செய்தா ரெந்தனையு மழைத்துச்சென்று அனேகவித தருமான வுளவுஞ்சொல்லி
பொருளிந்த குகைமுதலு மருமங்காட்டி போக்கான வழிதுறையு மிகவுரைத்து
இருள்சேர்ந்த பாறையது தன்னிற்சென்று யெழிலான பச்சைமலை தன்னைக்காட்டி
இருள்சேர்ந்த பொன்வளையுந் தலமுங்காட்டி மூதண்டமான ரசக்கிணற்சொன்னாரே
1324.
சொன்னாரே காஞ்சான மாமலையுங்காட்டி துரைகோடி ரவிவிளையுமிடமுங்காட்டி
மின்னேதான் கெம்பினுட விளைவுஞ்சொன்னார் மேலான சிகரவரைமுனையுங்காட்டி
அன்னேதா னருமையுடன் சுனையுங்காட்டி அப்பனே கருமீலிவிளைவுங்காட்டி
பொன்னேதான் விளைகின்ற வாறுங்காட்டிப் பூதலத்தில் போகவென்ன விடைதந்தாரே

1325.
விடைதந்தார் மேருகிரி மேலேசென்றேன் மிக்கான சித்திரக்கூடந் தன்னைக்கண்டேன்
தடைமுகமாந் தடாகமதில் புஷ்பங்கண்டேன் தாக்கான கருஞ்செந்தாமரையுங் கண்டேன்
படைமுகமாம் ராட்சதாள் கூட்டமுண்டு படியோரம் யாராலும்கிட்டவொண்ணா
சடைமரமாஞ் சவ்வாது மரமுங்கண்டேன் சந்தனமாம் விருட்சமுடன் மரங்கண்டேனே
1326.
மரங்கண்டேன் நிறங்குலைந்தேன் மேருதன்னில் மகத்துவங்கள் சொல்லிமுடியாதுகண்டீர்
வரங்கொண்ட சித்தரகளுமங்கேயுண்டு வடிவான செம்புரவி பொன்மானுண்டு
நிறங்கொண்ட கரும்பசுவு காமதேனு நெடிதான செம்புலிகளனேகங்கண்டேன்
தரங்கொண்ட தேவதா விருட்சமுண்டு தழைதின்றால் தேகமது கற்பமாமே
1327.
கற்பமுண்ட சித்தர்களனேகமுண்டு காலவரை கோடிவரை யுகாந்தகாலம்
கெற்பமுடன் சமாதியிலே நின்றுகொண்டு தேவதாபூசையுடன் சிரங்குனிந்து
விற்பனராய் சாத்திரங்கள் யாவுங்கொண்டு வேதாந்த தாய்தனையே மனதிலெண்ணி
பொற்புடனே தாள்பணிந்து சதாநிர்த்தந்தான் போற்றி யஞ்சலிசெய்து புகழுவாரே
1328.
புகழான வஞ்சலியைக் கண்டுயானும் பொங்கமுடன் திரும்பியே மலையிற்சென்றேன்
சகழான மண்டபமும் ஓடைகண்டேன் தாக்கான சூரியன் சந்திரனுங்கண்டேன்
துகழான முக்கடிகை கண்டேன்யானும் தோற்றவில்லை மறுபடியும் பரிதிபரிதிகாணேன்
மிகழான நட்சத்திர மிருபத்தேழு மிக்கவொரு கடிகைதன்னில் கண்டிட்டேனே
1329.
கண்டிட்ட மறுகாலும் படியிலேறிப் பார்ப்பதற்கு வென்மனங்கேளாமற்றான்
துண்டிட்ட சித்திரகிரி பக்கஞ்சென்றேன் துரைகோடி வழிகோடி தெரியவில்லை
கொண்டிட்ட மலைமீதிலேறிப்போனேன் குறிப்புடனே தனிவாசல் தானடைந்து
லிண்டிட்ட கதவருகில் யானுஞ்சென்று விருப்பமுடன் கைதட்டி நின்றேன்பாரே
1330.
தட்டிநீ யாரென்றுயென்னைக்கேட்டார் தயவுடனே காலாங்கி தனைநினைத்து
முட்டியுடன் றாள்பணிந்து வணங்கிநின்று முடவனாம் போகரிஷி யென்றுரைத்தேன்
சட்டமுடன் குளிகையது பூண்டுகொண்டு சாஞ்கமாய் மேருகிரி காணவந்தேன்
திட்டமுட னெந்தனுக் குபதேசங்கள் சிறப்புடனே போதிக்கத் தொழுதிட்டேனே
1331.
தொழுதிட்ட சித்தரமுனி கோடாகோடி தோற்றமுடன் னெனைப்பார்த்து வாவென்றேதான்
முதிட்ட பாலகனை மேருகாண முழுதிலும் வந்ததுனுக்கு குற்றமல்லோ
தழுதிட்டு வந்தவுனைச் சபிக்கவென்று சட்டமுடன் சொல்லுகிறோ மைந்தாவென்றார்
அழுதிட்டே னப்போது யென்னைப்பார்த்து அங்ஙனவே யாதரிக்க மனங்கொண்டாரே
1332.
மனங்கொண்டார் சித்தர்முனி சிலதுபேர்கள் மதித்துமே ஞானோபதேசஞ்சொல்ல
சினங்கொண்டார் சித்தர்முனி சிலதுபேர்கள் சீறியேயென்பேரிற் கோபங்கொண்டார்
கனங்கொண்ட சித்தர்களை வணங்கியானும் காலடியில் தொழுதிட்டேனே பலநாளுந்தான்
தினங்கொண்டு யெந்தனுக்கு விசேஷஞ்சொல்லி திறமான துறப்புமுதல் காட்டிட்டாரே

1333.
காட்டினார் சுரங்கமுதல் குகைகள்யாவும் கருவான மறைப்புமுதல் யாவுஞ்சொல்லி
மூட்டினார் சித்தகிரி பர்வதத்தை முனையான மூலிகைகள் முழுதும்பூசி
மாட்டினார் துருத்திகொண்டு வூதிக்காட்டி மகாமேரு சாரலைப்பழுக்கச் செய்தார்
நீட்டமுடன் போகரிஷியானும்பார்த்து நீனிலத்தில் மதிமயங்கி விழுந்திட்டேனே
1334.
விழுந்திட்ட வடியேனை ரிஷிகள்பார்த்து விருப்பமுடன் மூர்ச்சையது தெளியவென்று
அழுந்திட்ட வெந்தனுக்கு களைகள்தீர அருமூலி சன்றனையே நசியமீய்ந்தார்
எழுந்திட்டு யானுமங்கே சரணஞ்செய்தேன் யெழிலான மறைப்புமுத லுளவுஞ்சொன்னார்
முழுந்திட்ட தாவடவாம் வச்சிரகண்டி முடிமேலேதான்போட்டார் சித்தர்தாமே
1335.
சித்தர்முனி ரிஷிகள்தவ யோகிதானுஞ் சிறப்பாக வெந்தனுக்கு வுபதேசித்து
கத்தனென்னுங் கைலாசமேருதன்னைக் காணவென்று சிகரம்வரை செல்வதற்கு
சத்தமுட னடையாளடையாளங்கையிலீந்து சுகமுடனே மேருவரைக்கடந்துபோக
சத்தமுடன் றானிருக்குங் குகையிற்சென்று சாங்கமுடன் போவதற்கு விடைதந்தாரே
1336.
விடைதந்தா ரெந்தனுக்கு சித்தர்தாமும் வெளிப்பட்டேன் மேருகிரிவரையிற்சென்றேன்
மடையுடனே சுனையுண்டு குகைதானுண்டு மார்க்கமுடன் சித்தர்கள் கோடாகோடி
நடையுடனே யவர்களிட பாதஞ்சென்றேன் நாதாக்க ளிருப்பிடமுந் துறையுங்கண்டேன்
சடையுடனே ரிஷிதேவர் தவத்தில்நிற்க சாஷ்டாங்கம் பணிந்து தெண்டனிட்டேன்பாரே
1337.
பாரேதானவர்களிம் பற்றிப்போனேன் பதிவாக திருமுடியைச் சாய்த்துநின்றேன்
சீரேதானெந்தனுக்கு கருவுசொன்னார் சிறப்பான மூலியுட வுளவுசொன்னார்
நேரேதான் கிரேதாயியுகத்திலப்பா நெடிதான சமாதியிலிருந்தோமென்றார்
நீரேதான் பூலோகஞ் சென்றாயானால் நேர்ப்புடனே யெமைநினைத்து துதியென்றாரே
1338.
துதிக்கையிலே நீநினைத்த காரியந்தான் துப்புரவா வொவ்வொன்றுஞ்சித்தியாகும்
மதிப்புடனே யின்னமுண்டு மனேகசித்தர் மகாகோடிரிஷிமுனிவர் சொல்லப்போமோ
கெதிப்புடனே யவர்மனது நோகாமற்றான் கொண்டனைத்து கார்க்கவென்று
மனதிலெண்ணி
நிதிப்புடனே சதாகாலம் பூசைசெய்து நேர்மையாய் வாழவே வசனித்தாரே
1339.
வசனிக்க மேருவுக்கு கடைபாகத்தில் வாகான குளமுண்டு குகைதானுண்டு
துசனிக்க கருஞ்சாமரை மரமுமுண்டு துடியான கருநெல்லிமரமுமுண்டு
தசனிக்க வேலக்காய் மரமுமுண்டு தாக்கான கருவேங்கை விருட்சமுண்டு
குசனிக்க மடையொன்று வாறொன்று குறும்பராம் சித்தர்களைக் கண்டேன்தானே
1340.
தானான சித்தர்களின் குருக்கள்மார்க்கம் சதகோடிசூரியர்போல் பிரகாசிப்பார்
தானான வாற்றருகே வந்துநிற்பார் கருவான சாத்திரங்கள் தர்க்கஞ்சொல்வார்
பானான சிவயோகந்தன்னைச்செய்வார் பாங்குடனே மனோலயத்தைத் தாவிநிற்பார்
தேனான வமுர்தமது முண்டுசித்தர் தேத்தமுடன் வாசமதுசெய்வார்பாரே

1341.
பாரான மேருகிரிதன்னைவிட்டு பாங்குடனே குளிகைதனை பூண்டுகொண்டு
நேரான வாஸ்தான கிரியைக்காண நேர்மையுடன் விடைபெற்றுவந்தேயானும்
காரான மலைதனிலே யேறிப்போனேன் கண்டேனே சித்தருட சமாதிதன்னை
நேரான வெட்டவெளி தன்னைக்கண்டு நின்றிட்டே னொருவரையங் காணகிலேனே
1342.
காணவே வென்மனது கலங்கும்போது கண்டேனே சித்தரொருவர் முன்னேநிற்க
தோணவே காயாதி கற்பங்கொண்ட தோரான சித்தொருவர் மாயாசித்து
காணவே வென்னெதிரில் ரூபங்கொண்டு நளினமுடன் றான்சபிக்கவந்தயென்னை
பாணப்போல் கோபமதைத்தானடக்கி பட்சமுட னுபதேசஞ்செய்திட்டாரே
1343.
செய்யவே யெந்தனுக்கு தீட்சைமார்க்கம் செப்பினா ரடியேனும் பிழைக்கவென்று
பையவே சித்தொருவராதிரம்பேர் படைகூட்டந் தன்னுடனே சூழ்ந்துகொண்டார்
தொய்யவே யடியேனும் திகிலடைந்தேன் தோன்றவில்லையெந்தனுக்கு என்னசெய்வேன்
வையவேயடியேனும் காலாங்கிதம்மை வரங்கொடுக்க மனதிலே நினைத்திட்டேனே
1344.
நினைத்திட்டே னென்சாமி குருவேயென்றேன் நினைத்ததொரு வண்மைதனை யறிந்துகொண்டார்
முனைந்திட்டு சித்தரெல்லாம் என்னைப்பார்த்து முழிமிரட்டி காலாங்கி நினைத்தாயல்லோ
கனைத்திட்டு மனோலயத்தை யறிந்துகொண்டார் காலாங்கிநாயனுடசீஷனென்று
புனைந்திட்டு வென்மீதில் பட்சம்வைத்து புகழ்ச்சியுடன் கொண்டனைத்தா ரென்னைத்தானே
1345.
என்னையே கொண்டுசென்று குகைக்குள்வைத்து யெழிலான வித்தைகளைக் கற்பித்தேதான்
பொன்னையே யிருக்குமிடந் தானுங்கண்டு புகழான வதிசயங்களெல்லாங்காட்டி
தன்னையே குருவர்க்கமென்றே சூட்டி தயவாக வுயிர்கொடுக்கு மூலிசொல்லி
பின்னையே போகவெனக் குறுதிகூறி பிழையென்று வுத்தாரஞ் சொல்லிட்டாரே
1346.
சொல்லவே விடைபெற்று படியிறங்கி சூட்சமுடன் குளிகைதனைபூண்டுகொண்டு
மெல்லவே யடிநோக்கித் திரும்பும்போது மேலான ரிஷியொருவ ரங்கிருந்தார்
வெல்லவே யாரென்று யென்னைக்கேட்டார் வேகமுடன்றான்பயந்து போகரென்றேன்
புல்லவே யேன்வந்தாய் குகைதான்மீது பொல்லாத மனுஷர்கள் வரலாகாதே
1347.
ஆகாதுயிக்கிரியி லேன்தான்வந்தாய் ஆக்கினைகள் மிஞ்சிவிடு முந்தனுக்கு
சாகாதுவரமூலி சித்தர்தந்தார் சாபமது கொடுத்துவிட்டேன் போபோவென்றார்
போகாது மற்றதொருவித்தையெல்லாம் பொங்கமுட னுனக்களித்தோம் சாபமில்லை
நோகாதுசித்தர்பத்தர் மனம்வேகாமற்றான் மேதினியில் தந்திரமாய் நடந்துகொள்ளே

1348.
கொள்ளவே வெகுகோடி மனுக்கள்தாமும் குவலயத்தி லுன்னையொரு சித்தனென்பார்
மெள்ளவே செத்தவரை யெழுப்பும்வித்தை மேதினியில் தள்ளுவது மெத்தநன்று
துள்ளவே லோகமெல்லாஞ் சித்தாய்ப்போகும் சூட்சமத்தை யொருவருக்குஞ்
சொல்லப்போமோ
அள்ளவே வனேகவித வித்தையெல்லா மன்புடனே யுனக்கீய்ந்தோம் பிழைபோவென்றார்
1349.
போவெனவே விடைபெற்றுப் படியிறங்கி பூதலத்தில் யான்வரவே நோக்கங்கொள்ள
காவெனவே கெண்டபேரண்டபட்சி காணவே யெந்தனையுங் கையமர்த்தி
சாவெனவே யுன்னைநானிப்போதல்லோ சபிக்கவே வந்தேனென்றருகில்வந்து
கூவெனவே சத்தமிட்ட தொனியுங்கேட்டு கோடிவரைப் பட்சியங்கே சூழலாச்சே
1350.
சூழவே நான்பயந்து நடுநடுங்கி சொல்லவொண்ணா திகிலுடனே யேக்கங்கொண்டு
தாழவே மூர்ச்சையுடன் கீழ்விழுந்து தடுமாறி திசைமாறி நினைவுகெட்டு
ஆழவே யடியேனுமிருக்கும்போது அங்ஙனவே கெண்டபேரண்டபட்சி
மீளவே யெந்தனுக்கு சஞ்சிமூலி யின்பமுடன் றான்கொடுக்க பிழைத்தேன்பாரே
1351.
பிழைக்கையிலே யெந்தனையும் பட்சிபார்த்து பிரியமுடன் யாரப்பா வென்றுகேட்க
அழைக்கையிலே யானுமங்கே கிட்டிப்போய் அன்பான பட்சியிட மருகில்நின்று
தழைக்கவே வென்பேரு போகரென்றேன் தயவுடனே விக்கிரியைக் காணவந்தேன்
முழக்கையுடன் சித்தர்முனி ரிஷிகள்கூடி முக்கியமா யுபதேசஞ்செய்திட்டாரே
1352.
செய்யவே விடைபெற்று குளிகைபூண்டு செயலுடனே மானிடர்கள் பிழைக்கவென்று
மெய்யவே மேதினியில் போறேனென்றேன் மிக்கான பட்சியுமெனைத்தடுத்து
பையவே யெந்தனுக்குப் பிழைக்கும் மார்க்கம் பலவதமாந் தொழிலனைத்து முரைக்கலாச்சு
உய்யவே காயாதிகற்பங் கொண்டேன் வுற்பனமாம் வைப்புமுதல் தெரிந்திட்டேனே
1353.
தெரியவே பட்சியுட யுபதேசத்தால் தேசத்திலுள்ளதொரு மார்க்கமெல்லாம்
புரியவே யெந்தனுக்குக் காண்பித்தேதான் பூலோகம்போவதற்கு விடையுந்தந்து
சரியவே கிரியைவிட்டு கீழிறங்கி சாந்தமுடன் வந்துநிற்கும் வேளைதன்னில்
உரியவே பொன்பட்சி யொன்றுகண்டேன் வுத்தமனே யதன்பெருமை சொல்லக்கேளே
1354.
சொல்லவே பொன்பட்சி கண்டேன்யானும் சுத்தமுட னதனருகில் வந்துநின்றேன்
வெல்லவே யெந்தனையும் பார்த்துமேதான் மேதினியில் யாரென்று என்னைக்கேட்க
புல்லவே யென்பஏரு போகரென்றேன் புகழான மேருகிரிகாணவென்று
மெல்லவே குளிகையது பூண்டுகொண்டு மேதினியிலிட்டுமல்லோ வந்திட்டேனே
1355.
வந்திட்டேன் என்றதுமே என்னைப்பார்த்து வணக்கமுடன் என்பேரில் கிருபைவைத்து
பொந்திட்டு யென்னுடனே வாவென்றென்ன பொலிவாகப் பட்சியுடன் குளிகைபூண்டு
பந்திட்டு யான்பறந்தேன் பட்சிமார்க்கம் பாகுடனே கடலோரம் போயிருந்தேன்
தந்திட்ட தெந்தனுக்கு வாணிமுத்து தாக்கான மாலையது பூண்டேன்பாரே

1356.
பூண்டேனே கடலோரம் விட்டுநீங்கி பொங்கமுடன் மேருவரையேறிப்போனேன்
மீண்டேனே கானாறு குகைதான்தாண்டி மிக்கான சுனைமுதலுங் கண்டேன்யானும்
தாண்டியே மேலவரை யேறிப்போனேன் தடாகமுண்டு வதிசயங்கள் கண்டேன்யானும்
வேண்டியே தவசுடனே ரிஷிகள்கோடி விரைவான செந்நிறக்கொக்குமாமே
1357.
கொக்கான சிவந்ததொரு காக்கைக்கண்டேன் குயிலுடனே மயிலாடல் பாடக்கண்டேன்
மிக்கான செம்புலியும் பசுவுங்கூட மேன்மையுடன் தடாகமதிலிருக்கக் கண்டேன்
வெக்கான புகையுடனே பனிகள்தனில் வெள்ளானை மேய்ந்துவரும் வண்மைகண்டேன்
சுக்கான பாறைதன்னில் பொன்னுங்கண்டேன் சூட்சமுனாளியுட மிருகந்தானே
1358.
தானான கல்லானையானுங்கண்டேன் தாக்கான சிங்கமுதல் வேங்கைகண்டேன்
பானான படிகமென்ற நதியைகண்டேன் பாங்கான கெம்பாறு குகையுங்கண்டேன்
வேனான சஞ்சீவி மூலியுண்ட வெளியான செந்தூரக்காலுமுண்டு
மானான குளத்தருகே சமாதிகோடி மதிப்பான சித்தர்களைக் கண்டிட்டேனே
1359.
கண்டிட்டென் சித்தர்களை வணங்கியானும் கைலாசம் பார்க்கவென்று களிப்பாய்வந்தேன்
கண்டிட்டேன் பொன்கருடன் வெள்ளைகாக்கை கண்காணாபச்சைமலைச
சித்தர்கண்டேன்
கண்டிட்டேன் ரிஷிமுனிவர் ஞானிகண்டேன் காலாங்கிநாதரையான் மனதிலெண்ணி
கண்டிட்டேனவர்பாதம் பணிந்துநின்றேன் கடாட்சித்து வெந்தனுக்கு வருள்சொன்னாரே
1360.
அருள்சொன்னார் வேதாந்தமெனக்களித்தார் அப்பனேசூட்சமத்தின் நேர்மைசொன்னார்
பொருள்சொன்னார் சித்தரகளது மறைப்புமார்க்கம் பூட்டினார் கருநிறை மறைப்புயாவும்
இருள்சேர்ந்த காட்டகத்தி லென்னைக்கண்டு யேற்றமுடன் காயாதிகற்பந்தன்னை
தெருளுடனே கூடுவிட்டு கூடுபாயும் திறமான வித்தைதன்னை தெரிவித்தாரே
1361.
தெரிவித்தா ரஞ்சனங்கள் மாரணங்கள் தெளிவான மோகனங்கள் வசியம்யாவும்
புரிவித்தார் வாதமுதல் யோகமார்க்கம் புகழான ஸ்தம்பனமு மோகனந்தான்
பரிவித்தார் தேவதைகள் வருகுமார்க்கம் பாங்கான செப்பிடுகல் வித்தைமார்க்கம்
அறிவித்தார் கோகாணஜாலமார்க்கம் மகத்தான பிரம்மவித்தை மதீதந்தானே
1362.
அதீதமாம் சகலசித்து வஷ்டசித்து அன்பான லோகமதில் பொடிகள்வித்தை
கதீதமாஞ் சக்கரங்கள் காணமார்க்கம் கண்கட்டி வித்தைமுதல் ஜாலமார்க்கம்
பதீதமாம் பச்சிலையில் வித்தைகோடி பகற்கால நட்சத்திரக் காலவித்தை
துரிதமுடன் மேகத்தில் பறக்கும்வித்தை சூட்டினாரெந்தனுக்கு சூட்சம்பாரே
1363.
சூட்சமுடன் மோடியிலனந்தங்கோடி சொல்லவொண்ணா பரிசனங்கள் தூம்பரவேதை
மாட்சமுடனுழ்விடுவ தீதவித்தை மகத்தான காலிகாஷாயமார்க்கம்
ஆட்சான வித்தைகளில் துறைகள்கோடி அப்பனே கூறவொண்ணா குறளிவித்தை
தீர்க்கமுடன் தந்திரமா யனந்தம்போக்கு திறமுனே யெமக்களித்தார் தெளிவாய்த்தானே

1364.
தெளிவான கடல்முகமாஞ் சாகரத்தில் திறளான மாயவனுங் கடந்தநீராம்
கனிவான வெண்ணெயது மெழுகுபோல கடலோரம் பாறைகள்போல் மிதக்கும்வண்ணம்
மொலிவான நவகோடி ரிஷிகளப்பா மயற்சஇயுடன் கடலோரந் தவமிருப்பார்
வெளியான சமாதியிடம் சென்றுபோனேன் விருப்பமுட னெந்தனைநீ யாரென்றாரே
1365.
ஆரென்று கேட்டவுட னடியேன்தானும் அங்ஙனவே யடிவணங்கி தாழ்மைகொண்டு
ஊரொன்றுந்தெரியாமல் குளிகைபூண்டு வுத்தமனே தேசம்விட்டு தேசம்வந்தேன்
காரென்று யெனைகார்க்க யேழ்மைகொண்டு கர்த்தாவே கதியென்று சரணஞ்செய்து
மேரென்ற கிரியைவிட்டு மேற்புரத்தில் மேன்மையுடன் காணவந்தேன் போகர்தானே
1366.
நான்தானே போகரென்றேன் காலாங்கிதம்மை நலமுடனே தானித்து தொழுதிட்டேனே
பாங்கான வென்மீதில் கிருபைவைத்து பாகமுடன் யோகத்துக்குறுதிசொன்னார்
மான்தோலி லாசனத்திலிருந்து மார்க்கமுடன் சித்தரைப்போ லுருவங்கொண்டு
மேன்மையுட னுபதேசம் யாவும்பெற்று மேதினியில் பிழைக்கவென்று வந்திட்டேனே
1367.
வந்திட்டேன் சீனபதிதன்னிற்சென்றேன் வாகுடனே கற்றதொருவித்தையெல்லாம்
தந்திட்டேன் மாணாக்கள் பிழைக்கவென்று தாரணியி லெந்தனைமெச்சியேதான்
குந்திட்டேன் சீனபதிமார்க்கமெல்லாம் குறிப்புடனே சாலமிகச்செய்தேன்யானும்
முந்திட்ட தேசாதிதேசமெல்லாம் முயற்சியுடன்றான் திரிந்து வந்தேன்பாரே
1368.
பாரேதான் விளக்கொளிதான் கையிலேந்தி பாழ்கிணற்றில் செல்லுகின்ற பான்மைபோல
சீரேதான் சகலமுந்தானறிந்து சீர்தப்பி இருட்டுவழி செல்லல்போல
நேரேதான சகலமுந்தானறிந்து கெடிதான வித்தைகளைக் கற்றுமென்ன
கூரேதான் யோகத்தின் மார்க்கங்காணார் குவலயத்தில் கோடிபேர் காணலாமே
1369.
காணலாம் காயாதிகற்பங்கொண்டோர் காசினியில் விழலாகப்போனபேர்கள்
மாணவே சிவயோகந்தன்னிற்சென்று மாண்டிறந்தோர் கோடானகோடிபேர்கள்
தோணாத சரக்கெடுத்துச் சுழலைநடந்து கொல்லுலகில் மாண்டவர்கள் கோடாகோடி
காணவே சாத்திரங்கள் பார்த்துக்கெட்டு நலமழிந்து குறுக்குவழி போவார்தாமே
1370.
தாமேதான் நாகமது பலமேவாங்கி தாக்கான யிலுப்பைநெய்யில் வுருக்கிச்சாய்த்து
நாமேதான் கெந்தியொரு பலமேவாங்கு நலமான ரசமதுதான் பலமேதூக்கு
வேமேதான் பழச்சாறுதன்னாலாட்டி விருப்பமுடன் தானரைத்துக் கவசஞ்செய்து
போமேதான் ரவிதனிலே காயப்போடு பொங்கமுட னோட்டிலிட்டு சீலைசெய்யே
1371.
செய்துமே குக்குடமாம் புடத்தைப்போடு சிறப்பான படமாறி யெடுத்துப்பாரு
நைதுமே களங்கினுட மார்க்கத்தன்னை நாதாக்கள் தங்களால் சொல்லப்போமோ
வெய்துமே களங்குடனே சூதஞ்சேர்த்து விருப்பமுடன் பரிசரியாய்க் கூட்டியேதான்
கொய்துமே தாளகமும் கணக்காய்க்கூட்டி கொப்பெனவே ஜெயநீரிலரைத்திடாயே

1372.
அரைத்துமே மேருவென்ற குப்பிக்கேற்றி அப்பனே வாலுகையிலெரித்துமேதான்
திரைத்துமே குப்பியைத்தான் சிலாகையிட்டுத் திறமுடனே பார்க்கையிலே சிவப்புமெத்த
யரைத்துமே செந்தூரப் பதனம்பண்ணு பாங்கான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
முறைத்துமே தானுருக்கி குருவொன்றீய முதிர்வான மாற்றதுவும் எட்டதாமே
1373.
எட்டான மட்டமது நாலதாகும் யெழிலான தங்கமது வொன்றுசேர்த்து
தட்டான மூசைதனி லுருக்கித்தீரு தாக்கான வாரடித்துப் புடத்தைப்போடு
கட்டான தங்கமது விரண்டுக்கொன்று கருவானபுடத்தங்கம் நயப்புகாணும்
கிட்டான வேதையிது சித்தர்வேதை கெடியான ரிஷிமுனிவர் செய்வார்தாமே
1374.
தர்மமாமிருதாரு சிங்கிசேர்தான் தயவான செவ்வாலம் பழந்தான்கொண்டு
பூமான தேங்காய்போல் அரைத்துருட்டிப் பொலிவான சிங்கியைத்தான் பொதிந்துமூடு
கரமான சீலையது வலுவாய்ச்செய்து கனமான புடமதுதான் போட்டாயானால்
வேதான சிங்கியது கட்டிப்போடும் வெடியான யுப்பதுவும் கூடக்கூட்டே
1375.
கூட்டியே துருசுடைய சுன்னந்தானும் குணமான சிங்கியுடன் சமனாய்ச்சேர்த்து
மாட்டியே தானரைப்பாய் ஜெயநீராலே தாழ்வாகப் பில்லைதட்டிக் காயவைத்து
மாட்டிகமா யோட்டில்வைத்துச் சீலைசெய்து மகிழ்ச்சியுடன் காயவைத்து புடத்தைப்போடு
நோட்டகமா யாறியபின் னெடுத்துப்பாரு கொடிதான செந்தூரங் காணலாச்சே
1376.
காணவே செந்தூரம் களஞ்சிதூக்கு கருவான வெண்காரம் காற்கழஞ்சி
தோணவே இரண்டுமொன்றாய் தானரைத்து துப்புரவாய் ரவிதனிலே சரியாய்தூக்கி
மாணவே மூசைதனில் செம்புருக்கி மதிப்புடனே கிராசமது தானேயீவாய்
பாணம்போல் செம்பதுவு மூறல்நீக்கி பசுமைநிறம் செம்பொன்னு நிறமதாமே
1377.
நிறமான செம்பதனை யெடுத்துப்பார்க்க கெடிதான வூறலதுவற்றுப்போச்சு
திறமான தங்கம்நிகர் செம்புசேர்த்து திறலான மூசைதனிலுருக்கிப்பாரு
கறமான மாற்றதுவுமெட்டதாகும் கருவான வெள்ளியது கணக்காய்ச்சேர்த்து
உறவான வாறடித்துப் புடத்தைப்போடு உத்தமனே பசுமைநிறமாகுமாமே
1378.
ஆமப்பா சொல்லுகிறேன் நிமிளைவேதை அப்பனே மாணாக்கள் பிழைக்கவென்று
தாமப்பா படிகமென்ற நிமிளைதன்னை தாரணியில் தேர்ந்தெடுத்து தாம்பரத்தில்
வேமப்பா சூதமது கூடச்சேர்த்து விருப்பமுடன் தானரைத்து தாம்பூரத்தில்
போமப்பா பழச்சாற்றில் அரைத்துமைபோல் பொங்கமுடன் சாந்தமதாய்ப் பூசிப்போடே
1379.
போடவே ரவிதனிலே காயவைத்துப் பொங்கமுடன் வகல்தனிலே வைத்துமூடி
நீடவே சீலையது வலுவாய்ச்செய்து நேர்ப்பான புடமதுதான் கோழியாக
காடவே கனலாறியெடுத்துப்பாரு கனமான செம்பதுவு மூறலற்று
மூடவே தங்கநிறம் போலேயாகும் முயற்சியாய் வேதையிது சொல்லொண்ணாதே

1380.
சொல்லவே செம்புதனை யெடுத்துப்பாரு சொக்கமுடன் சொகுசாவி நிறம்போலாகும்
வெல்லவே செம்புவித்தை யெவர்தான்செய்வார் வேதாந்த தாயினதுவருளினாலே
புள்ளவே குளிகையது பூண்டுகொண்டு புக்கினேன் தேசாதி வாந்தரங்கள்
செல்லவே யான்சஎன்று கற்றவித்தை ஜெகத்திலே மானிடர்கள் பிழைக்கத்தானே
1381.
பிழைக்கவே யின்னமொரு தயிலஞ்சொல்வேன் புகழான வராகமொன்று பிடித்துவந்து
குழைக்கவே துருசுடனே காரந்தானும் குணமான கெந்தியுடன் தாளகந்தான்
மழைச்சுவே லிங்கமது வீரந்தானும் மகத்தான பூரமுடன் கெவுரிவெள்ளை
தழைக்கவே துத்தமது சூதந்தானும் சார்பான சாரமது தானுங்கூட்டே
1382.
கூட்டவே சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி குமுறவே குழியம்மி தன்னாலாட்டி
தாட்டிகமாய் தான்பொடித்து வராகந்தன்னில் தாக்காகத்தான் கீறித் தூவிதூவி
மாட்டிகமாய் வராகமதை சாடியிட்டு மதிப்புடனே மேல்மூடி சீலைசெய்து
நோட்டமுடன் மண்மறைவில் புதைத்துப்போடு நோக்கான மண்டலந்தான் சென்றுபாரே
1383.
சென்றுபார் புழுவதுவும் மிகவேயாகி சீரான பரும்புழுவும் சிறியதாகும்
வென்றுபார் புழுவெடுத்து சீசாவுக்குள் விருப்பமுடன் தானடைத்து சீலைசெய்து
பன்றாக வென்னீரிற் பிடித்தாயானால் பாங்கான நீலநிறத் தயிலமாகும்
குன்றான தயிலமதை யெடுத்துப்பாரு கொற்றவனே டவனிலே தடவிப்போடே
1384.
போடவே செம்பினிலே தடவிப்போடு பொங்கமுடன் மாற்றதுவு யேழதாகும்
நீடவே வெள்ளிதனி லாறதாகும் நெடிதான மட்டமது வன்னியீறும்
கூடவே பொன்னதுவு மாற்றுமெத்தக் குணமான தயிலமது சொல்லப்போமோ
பாடவே போகரிஷி சொன்னமார்க்கம் பாங்கான மானிடர்கள் பிழைக்கத்தானே
1385.
பிழைக்கவே யின்னமொரு கருமானங்கேள் பேரான வங்கமது சேரைவாங்கு
தழைக்கவே பாஷாணசுருமாவோடு தாக்கான இரசமுடனே காடிக்காரம்
எழைக்கவே வறுவகை ஜெயநீர்தன்னால் ஏற்றமுடன் தானரைத்து வங்கத்தின்மேல்
குழைக்கவே பூசியதை தடவிப்பின்பு குமுறவே கரியோட்டில் பொதித்துமூடே
1386.
மூடவே குக்குடமாம் புடத்தைப்போடு முனையான வங்கமது நீரைவாங்கி
நீடவே துய்யானுக் கொப்பதாகும் நெடிதான வித்தையிது சொல்லப்போமோ
கூடவே வெள்ளிதனை சிலவுசெய்து குறிப்பாக நிஷ்டையிலே யிருந்துகொண்டு
தேடவே சின்மயத்தை யாராய்ந்தோர்ந்து சிவானந்த கிரிதனிலே நின்றுதாக்கே
1387.
தாக்கவே கரிவங்கவெட்டைகேளும் தயவான தாளகமும் பலந்தான்வாங்கி
நோக்கவே மிருதாரு சிங்கிதானும் நொடிதாகத் தானரைத்து வங்கத்தின்மேல்
தேக்கான ரவிதனிலே காயவைத்து திறமாக வோட்டிலிட்டு சீலைசெய்து
போக்கான கோழஇயென்ற புடமேபோடு பொங்கமுடன் வெட்டையது யாகும்பாரே

1388.
பாரேதானிப்படியே புடமேபத்து பாங்காகப் போட்டுவர பலனைக்கேளு
சீரேதான் வங்கமது வெட்டையாகி சிறப்பாக சொருங்கியது மீறநிற்கும்
தூரேதான் வெட்டையது வொன்றேயாகும் துடியான செம்பொன்று வெள்ளியொன்று
நேரேதான் தானுருக்கி யெடுத்துப்பாரு நிலையான களங்கம்போலாகுந்தானே
1389.
தானான வெள்ளியென்ற களங்குதன்னை தாக்கான கரியோட்டி லூதிப்போடு
வேனான வெள்ளியது களங்குநீங்கி விருப்பமுடன் மாற்றதுவு மாறதாகும்
கோனான மட்டமது நாலுக்கொன்று குணமான தங்கமது வொன்றுகூட்டி
பானான மாற்றதுவு மிகுதியாகி பழுப்பான தங்கமது காணுந்தானே
1390.
காணவே வுப்புக்கும் காவிக்கேகா கனமான வங்கமது தங்கமாகும்
பூணவே ஜெகஜோதி தன்னைபார்த்துப் பொங்கமுடன் சின்மயத்திலிருந்துகொண்டு
வேணவே சுடரொளியின் லபியைப்பார்த்து மிக்கான வஷ்டாங்க யோகஞ்சென்று
ஊணவே குருபதத்தை வணங்கிப்போற்றி வுத்தமனே நடுமையம்பற்றிநில்லே
1391.
நிற்கவே லிங்கமது பலமேவாங்கி நேரான முலைப்பாலால் சுறுக்குதாக்கு
கற்பமுடன் மேனிச்சார் நாலுசாமம் கருவான தும்பைசார் நாலுசாமம்
வற்கமுடன் பழச்சாறு நாலுசாமம் வாகான வரமுள்ளி நாலுசாமம்
சற்கமுடன் பழச்சாறு நாலுசாமம் சார்வான குமரிச்சார் சாமம்நாலே
1392.
நாலான முசுக்கைசார் சாமம்நாலு நலமான தைவேளை சாமம்நாலு
காலான முள்ளங்கிசஃ சாமம்நாலு கறுத்ததோர் துளசியது சாமம்நாலு
பாலான மேதிப்பால் சாமம்நாலு பாங்கான தேங்காய்ப்பால் சாமம்நாலு
வேலான தேனதுதான் சாமம்நாலு விள்ளவே நெய்யதுதான் சாமம்நாலே
1393.
சாமமாஞ் சுருக்குடனே கட்டிப்போகும் சார்வான லிங்கமது மெழுகிலோடும்
தாமமாஞ் சரக்குவகை சொல்லக்கேளு தளுக்கான வரப்பொடியுஞ் சிங்கிதானும்
காமமாஞ் சுருமாவுஞ் சாரந்தானும் கடிதான படிகாரம் யுப்புமாகும்
பூமமாம் வகைக்கொரு பலமேவாங்கு பொங்கமுடன் குழிக்கல்லில் பொடித்திடாயே
1394.
பொடித்துமே வறுவகை ஜெயநீர்தன்னால் பொங்காமல் தானரைப்பாய் சாமம்நாலு
துடுப்புனே தானரைத்து லிங்கந்தன்னில் தொகுப்பாகக் கவசித்துக் காயவைத்து
கடிப்புடனே காவிக்கற்சீலைசெய்து கருவாகக் குழிவெட்டி முழந்தாநீளம்
மடிப்புடனே வுமிகொட்டி லிங்கம்வைத்து மதிப்புடனே புடம்போடக் கட்டிப்போமே
1395.
கட்டியதோர் லிங்கமதை தானெடுத்துக் கணக்காக வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
திட்டமுடன் தான்கொடுத்து வுருக்கிப்பாரு தெளிவான மாற்றதுவும் ஏழதாகும்
நட்டமென்ன பத்திலோர் தங்கஞ்சேர்த்து நயமாக வாரடித்துப் புடமேபோடு
சட்டமுடன் தானெடுத்து யெடுத்துப்பாரு சார்வான புடத்தங்க மாகும்பாரே

1396.
பாரேதான் தங்கமதை சிலவுசெய்து பாசமென்னுஞ் சாகரத்தை விட்டொழித்து
சிரேதான் கும்பத்திலிருந்துகொண்டு சிறப்புடனே வஷ்டாங்கஞ் சென்றுமேதான்
கூரேதான் பீடமதிலிருந்துகொண்டு கோடானகோடிவரை மேலேயேறி
தீரேதான் சொரூபமென்ற கலையில்நின்று தீவிரமாஞ் சுழிமுனையைப் பற்றியேறே
1397.
ஏறவே பூரமென்ற கட்டைசொல்வேன் யெழிலான கேசரியின் பால்தானாழி
கூடவே சாமமது சுருக்குதாக்கு குறிப்பான தொட்டியின் பாஷாணத்தால்
தேறறே வறுவகை ஜெயநீர்தன்னால் தேற்றமுடன் தானரைத்து கவசஞ்செய்து
மாறவே ரவிதனிலே காயவைத்து மார்க்கமுடன் புடம்போடக் கட்டிப்போமே
1398.
போமேதான் குக்குடத்தில் கட்டிப்போகும் போக்கான சரக்கதுவும் புகைத்துநிற்கும்
நாமேதான் சொன்னபடி பூரக்கட்டை நலமாக மட்டமென்ற பொன்தகட்டில்
வேமேதான் வுமிநிரால் தானிழைத்து விருப்பமுடன் தான்தகட்டில்பூசிப்பின்பு
காமேதான் காவிக்குள் கீழ்மேலிட்டு கருத்தாக புடம்போடமாற்றமாமே
1399.
மாற்றான செம்பதனில் தாக்கிப்பாரு மகத்தான செம்பதுவுங் களிம்புநீங்கி
கூற்றான கவளையதுபோலேகாணும் குணமாகு பழுப்புநிறங் குன்றிக்காட்டும்
வேற்றான வெள்ளிதனில் வாதோகொஞ்சம் விரைவான தேகமது காயகற்பம்
ஆற்றான வாயுவென்ற தெண்பதும்போம் அப்பனே போகரிஷிகண்டதாமே
1400.
கண்டபடி மாணாக்காள் பிழைக்கவென்று காசினியில் வெகுதூரம் சென்றுயானும்
கண்டபடி முறையெல்லாம் பார்த்துத்தேர்ந்து காசினியில் பிழைப்பதற்கு வெகுவாய்ச் சொன்னேன்
கண்டபடி யெந்நூலை மிகவும்பார்த்துக் கைகண்டமுன்னோரை நண்ணலாகி
கண்டபடி வுளவெல்லாம் பார்த்துத் தேர்ந்து பாரினிலே செய்கிறவன்வாதியாமே

1401.
வாதியாம் வீரமது பலமேவாங்கி வகுப்புடனே வில்வமது நாற்பதாகும்
பாதியாம் வில்வமது பழத்தைக்கீறி பாங்காகத்தான்பொதிந்து சீலைசெய்து
ஆதியாம் மண்மறைவிற் புடத்தைப்போடு அப்பனே புடமதுவுங் கோழியாகும்
வேமேதா னிப்படியே புடமேபோடு வெடியான நாற்பது பழமுமாமே
**1402.**
பழமான காயதுவும் நாற்பதாகும் பக்குவமாய்ப் புடம்போடக் கட்டிப்போகும்
கழமான வீரமதை வுமிநீதன்னாய் கருவான பொன்மட்டம்தன்னிற்பூசி
குழமான பூங்காவிதன்னிற்குள்ளே பொதித்துமே புடம்போடத் தங்கமாகும்
மழமான வீரத்தின் போக்குகோடி மகிலமதில் மெத்தவு மதிக்கப்போமோ
**1403.**
மதிக்கவே தாளகமோர் பலமேவாங்கி மகத்தான தும்பைசார் குமரிசாரொக்க
கதிக்கவே பழச்சாற்றால் குறுகையாட்டி கவசமாய்த் தாளகத்துக்கங்கிபூட்டி
துதிக்கவே பத்தெருவிற் புடத்தைப்போடு துலக்கமுடன் தாளகமும் கட்டிப்போகும்
விதிக்கவே யிப்படியே பத்துபுடம்போடு விரைவான தாளகமும் கட்டிப்போமே
**1404.**
கட்டியதோர் தாளகமும் பலமொன்றாகும் கதிப்பான சூதமுடன் கெந்திதானும்
திட்டமுடன் வறுவகையாஞ் ஜெயநீர்தன்னால் திறமுடனே தானரைப்பாய் சாமம்நாலு
சட்டமதாய்ப் பில்லையது காயவைத்து சார்வாக வில்லையது ஓட்டிலிட்டு
மாட்டமுடன் கோழியென்ற புடத்தைப்போடு மார்க்கமுடன் செந்தூரமாகும்பாரே
**1405.**
பாரேதான் செந்தூரம் பதனம்பண்ணு படிகமென்ற வெள்ளிசெம்பில் பத்தக்கொன்று
நேரேதான் தானுருக்கி செந்தூரத்தை நேர்பாகத் தான்கொடுக்க வாங்கிக்கொள்ளும்
சீரேதான் கரியோட்டி லூதிப்போடு சிறப்பாக மாற்றதுவு மெட்டதாகும்
கூரேதான் ஆறுக்கோர் தங்கஞ்சேர்த்து குறிப்பாகப் புடம்போடத் தங்கமாமே
**1406.**
தங்கமது பசும்பொன்னாம் வர்ணமொத்த தயங்காது காவிக்குமுப்புக்கேகா
அங்கமுடன் வாதத்துக் குறுதியாச்சு அப்பனே சித்தர்முனி செய்வாரப்பா
புங்கசித்தி ரெட்டுடனே பெறுவதாகும் போதமெட்டுங் கொள்ளுவதும் ஞானியாவான்
சிங்கமென்ற குருபீடம் பிரமபீடம் சிறப்பான சித்தருட மகிமைபாரே
**1407.**
மகிமையாம் துருசுடைய களங்குமார்க்கம் மகத்தான அவமுடனே வைதைபாரு
மகிமையா மயமதுவும் வொன்றேயாகும் மதிப்பான துருசதுவு மெட்டதாகும்
மகிமையா மிரண்டுமொன்றாய்ச் சேர்த்துக்கொண்டு மார்க்கமுட னமுரியினாலரைத்துக் கொண்டு
மகிமையாம் ஜலந்தனிலே கழுவிப்போடு மாசற்ற வயஞ்சேர்த்து சிவக்குந்தானே
**1408.**
சிவப்பான வயஞ்சேர்ந்த துருசுதன்னை செழிப்புடனே சட்டிதன்னில் பரப்பிப்போடு
தவப்பான வாழைநீரதிலேவிட்டு தயவாக மூன்றுநாள் ரவியில்வைத்து
கயப்பறவே சூதமது நாலுக்கொன்று கலதவே தானரைத்து மறுசட்டிட்டு
நயப்புடனே மேற்சட்டி மூடிப்போடு நலமாக சீலையது வலுவாய்செய்யே

1409.
செய்துமே யடுப்பேற்றி யெரிப்பாய்சாமம் செழிப்புடனே யாறவிட்டு எடுத்துப்பாரு
நைதுமே செந்தூரமாகும்பாரு நலமான ரசமதுதான் மேலேயேறும்
கொய்துமே செந்தூரம் நாலுக்கொன்றி கொப்புடனே வெண்காரங் காலாய்க்கூட்டி
பெய்துமே மூசையிட்டு சீலைசெய்து பிலமாகக் காயவைத்து வுருக்கிடாயே
1410.
உருக்கியே செம்பான களங்குதன்னை வுத்தமனே வங்கமிட்டு வூதித்தீரு
நருக்கியே காரமிட்டு வுருக்கிப்பாரு நயமான செம்பதுவுமாகும்பாரு
பெருக்கியே வெள்ளியது நாலுக்கொன்று பேரான செம்பதுவு வொன்றேசேர்த்து
பருக்கியே தானுருக்கி யெடுத்துப்பாரு பதமான மஞ்சளது மட்டந்தானே
1411.
மட்டமது வைந்துக்கோர் தங்கஞ்சேர்த்து மயங்காமல் வாறடித்துப் புடத்தைப்போடு
திட்டமுடன் மாற்றதுவு மிகவேயாகும் திறமான துருசுடைய களங்குவேதை
சட்டமதாய் கண்டருட வேதை மார்க்கம் சாற்றவுமெவராலு முடியாதையா
நட்டமில்லை யிவ்வேதை பரிசைவேதை நாதாக்கள் செப்புகின்ற மார்க்கம்பாரே
1412.
மார்க்கமாம் வேதையிது சுளுக்குவேதை மானிலத்தில் தவயோகிசெய்வாரப்பா
தீர்க்கமுடன் யோகநிலைதன்னிற்சென்று தெளிவாக சின்மயத்திலிருந்துகொண்டு
மார்க்கமுடன் பிராணநிலை சொரூபம்பற்றி பரகதிக்கு நன்மனதாய் வொடுக்கம்பார்த்து
சேர்க்கமுடன் திவ்யகலை தானிறுத்தி சிதம்பரத்தி னடனவொளி காணுவீரே
1413.
காணவே யின்னமொரு மார்க்கங்கேளு கருவான காந்தமது ஊசிக்காந்தம்
பூணவே தேன்விட்டு வரைத்துமேதான் பொங்கமுடன் மூசையிட்டு வுருக்கித்தீரு
வேணவே சத்தெடுத்து சூதஞ்சேர்த்து விருப்பமுடன் கெந்தியது காலாய்க்கூட்டி
மாணவே வறுவகை ஜெயநீர்தன்னால் மாட்டாநாற் சாமமரைத்துப்போடே
1414.
போடவே ரவிதனிலே காயவைத்து பூப்போல தானுதிர்த்து பொடித்துமேதான்
நாடவே காசிபென்ற குப்பிகொண்டு நன்மைபெற சீலையது யேழுஞ்செய்து
கூடவே குப்பிக்குள் மருந்தையிட்டு குறிப்பாக பலபத்தின் கல்லால்மூடி
சாடவே ஈட்டிதனில் மணலைக்கொட்டிச் சார்புடனே குப்பிநடு மையம்வையே
1415.
வைத்துமே மணல்கொண்டு மேலேசெம்மி வளமாக சட்டிகொண்டுமூடிச்சீலை
சத்துமே போகாமல் தீயைமூட்டி சாங்கமாய்த் தானெரிக்க செந்தூரம்தான்
முத்தமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று முயற்சியுடன் தான்கொடுக்க மாற்றுங்காணும்
சுத்தமுட னூதிப்பார் மாற்றேயேகு சூட்சமுடன் போகரிஷிவறைந்ததாமே
1416.
வரைந்தாரே மானிடர்கள் பிழைக்கும்வண்ணம் வனாந்திரங்கள் குகைமுதலும் காணாற்கண்டு
துறந்தாரே குளிகையது பூண்டுகொண்டு துறைகோடி மலைகளெல்லாம் கண்டாராய்ந்து
பறந்தாரே மேருகிரி மேலேசென்று பாராதாட்சியெல்லாம் பார்த்துமெய்ச்சி
மறந்தாரே சித்தரிடம் விடைகள்பெற்று மருத்துவத்தை வெளியாக்கி மதிப்பிட்டேனே

1417.
மதிப்பிட்டே னின்னமொரு கருமானங்கேள் மாசற்ற மனவிரும்பு பலமோவைந்து
கதிப்புடனே பொடிபொடியாய் சன்னமாக கண்டிடைக்கு கெந்தியொரு பலமேபத்து
வெதுப்புடனே கையாளின் சாற்றினாலே விளங்கவே நாற்சாம மரைத்தபின்பு
துதிப்புடனே பில்லைதட்டி காயவைத்து துப்புரவாய் சட்டிதனில் பில்லைவையே
1418.
வைத்துமே மேற்சட்டிக் குமரிச்சாற்றால் வப்பமுடன் தான்மூடிசீலைசெய்து
வைத்துமே தானெரிப்பாய் நாலுசாமம் மயங்காமல் எடுத்தப்பார் செந்தூரம்தான்
த்துமே செந்தூரந்தான் தனையெடுத்து தயங்காமல் மறுபடியும் கையான்சாற்றால்
பொய்த்துமே போகாமல் செந்தூரத்தை பொங்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
1419.
நாலான செந்தூரம் பில்லைதட்டி நலமாக ரவிதனிலே காயவைத்து
மேலான சட்டிதனில் தான்பரப்பி விருப்பமுடன் பில்லைதனைமேலேவைத்து
பாலான சட்டிதன்னைக் கவிழ்த்துமூடி பாலகனே முன்போலச் சீலைசெய்து
சீலான வடுப்பேற்றி நாலுசாமம் சிவக்கவே தானெரிப்பாய் கமலமாமே
1420.
கமலந்தானெரிப்பா யானபின்பு கருவாக யிப்படியே பத்துமுறைதானும்
விமலமாஞ் செந்தூரமிகவேசெய்து விருப்பமுடன் குப்பிதனில் பதனம்பண்ணு
புமலமாய் செம்புருக்கி நாலுக்கொன்று புகழுடனே செந்தூரங்கொடுத்தூது
தமலமாம் ரவிதானும் கட்டிப்போகும் தாக்கடா மதிதனிலே நாலுக்கொன்றே
1421.
ஒன்றான மதியுடனே ரவியுஞ்சேர்ந்து வுத்தமனே மாற்றதுவும் பழுக்கும்பாரு
நன்றான தங்கமது இரண்டுக்கொன்று நயமுடனே தான்கொடுத்து புடத்தைப்போடு
குன்றான பொன்னதுவு மேழதாகும் குணமான நயப்புடனே மின்னும்பாரு
அன்றான வயத்தினுட போக்கைச்சொல்ல அரனாலு மயனாலஉ முடியாதென்றே
1422.
முடியான செந்தூரம் வேதைப்போக்கு முனிகோடி ரிஷிமுதலெலொர் சொல்வார்கோடி
வெடியான செந்தூரங்கொண்டபோது விருப்பமுடன் வாயுவென்ற தெண்பதுபோம்
தடியான தேகமதுமுருக்கேயேறி தாதுகளுமிகவலுத்து யிரத்தமுண்டாம்
குரியான சேத்துமத்தை யடுத்துப்போடும் குணமாகுந் தேகமது இருகும்பாரே
1423.
பாரேதா னின்னமொரு பற்பங்கேளு பாங்கான சிங்கியொருபலமேவாங்கி
சீரேதான் கோமியத்திலூதிப்பின்பு செழிப்புடனே பசும்பாலிலரைத்துமேதான்
நேரேதான் புடமதுவுங் கோழியாக நேர்ப்புனே தான்போட பற்பமாகும்
கூரேதான் பற்பமதுக்கிடையே சூதம் குறிப்பாகத்தான் சேர்த்தரைத்திடாயே
1424.
அரைக்கவே வாராதா ரச்சரக்கால் அப்பனே ஜெயநீராய்செய்துகொண்டு
திரைக்கவே நாற்சாம மரைத்தபோது திறமான பற்பமதுக் கிணைவேறுண்டோ
நிரைக்கவே பில்லைதட்டிக் காயவைத்து நிறமாகப் புடம்போடப் பற்பமாகும்
முறைக்கவே ஜெயநீரின் போக்கைச்சொல்வோம் முழுமக்களானவரு மறியத்தானே

1425.
அரியவே அராதாரச்சரக்கை அன்புடனே யாமுரைப்போமதீதமாக
தெரியவே காரமுடன் சாரந்தானும் திறமான துருசுடனே சீனந்தானும்
புரியவே வெடியுப்பு கரியுப்புமாகும் புகழான வித்தனையுமாராதாரம்
சரியவே மாணாக்காள் பிழைக்கவென்று சாற்றினார் போகரிஷிதன்மைபாரே
1426.
தண்மையாம் பற்பமது பணமேதூக்கு சார்பான வெண்ணெயதுதன்னிற்கொள்ள
வண்மையாங் காயமது இருகிப்போகும் வாகான தேகமது மின்னல்தோன்றும்
குண்மையாந் தங்கமது வலுத்துப்போகும் குணமாக்கும் சிங்கியது கூறப்போமோ
நண்யாம் காயமது கற்றூனாகும் நாதாக்கள் செய்முறைதான் உண்மைபாரே
1427.
உண்மையாம் வீரமது பலமேவாங்கு ஓங்காரமுள்ளதொரு விலாங்கைத்தேடி
கண்மையாந் தயிலமதுயிறக்கிக்கொண்டு கசடகற்றி தயிலமதை சுருக்குத்தாக்கு
பண்மையாம் நாற்சாமம் வறுக்குத்தாக்கு பளபளத்த வீரமது மெழுகுமாகும்
தண்மையாம் பரியதுவும் பத்துக்கொன்று தாழ்ச்சியுடன் தான்கொடுக்க வாங்கும்பாரே
1428.
வாங்கியதோர் மெழுகெடுத்து பதனம்பண்ணு வரிசைபெற வெள்ளிசெம்பில்
பத்துக்கொன்று
ஓங்கியே கொடுத்தாக்கால் ஏழுகாணும் உத்தமனே தொண்டுபண்ணி வேலைவாங்கு
பாங்குபெற மட்டமது நாலுக்கொன்று பக்குவமாய்ப் பரியதுவும் மிகவேகூட்டி
தூக்கியே திரியாதே மைந்தாகேளு சுத்தமுடன் செய்துமல்லோ வழலைபாரே
1429.
வழலையென்றால் வழலையது சொல்லப்போமோ வளமாக நாதாக்கள் பாடிவைத்தார்
வழலையென்றால் சுந்தரனார் வழலையல்ல வரரிஷியும் சொன்னதொரு வழலையல்ல
வழலையென்றால் மச்சமுனி வழலையல்ல வன்பான சட்டமுனி வழலையல்ல
வழலையென்றால் கோரக்கர் வழலையல்ல வான்மீகிர் பாடினதும் விழலையாமே
1430.
ஆமேதான் கொங்கணரும் வழலையல்ல அப்பனே இடைக்காடர் வழலையல்ல
தாமேதான் டமரகனார் வழலையல்ல தாக்கான சிவசிவாக்கியர் வழலையல்ல
வேமேதான் சூதமுனி வழலையல்ல மிக்கான புஜண்டரும் வழலையல்ல
நாமேதான் சொன்னபடி வழலைமார்க்கம் மற்றுமுள்ள சித்தரெல்லாம் பாடினாரே
1431.
பாடினா ரிந்நூலில் சொன்னசித்தர் பழக்கமுடன் சொல்லவில்லை மறைத்துப்போட்டார்
பாடினார் பலபலவாந்துறைகள் சொன்னார் பக்குவங்கள் யாதொன்றுங்கூறவில்லை
பாடினார் அவரவர்கள் நூல்கள்தன்னில் பலபேர்கள் மறைப்புகளைக் காணவில்லை
பாடினார் துறைமுகமுஞ்சொல்லவில்லை பாடிக்கெட்டலைந்தார் கோடிபேரே
1432.
கோடானகோடிபேர் நூலைப்பார்த்து குவலயத்தில் கெட்டுவிட்டார் சொல்லப்போமோ
கோடானகோடிபேர் குறுக்குப்பாதை குணமுடனே செய்யாமல் மாண்டுபோனார்
கோடானகோடிபேர் காப்பேடுதள்ளி குடிகெட்டுப்போனார்கள் கணக்கேயில்லை
கோடானகோடிபேர் கடையேபார்த்துக் குலைநாசமடைந்தவர் கோடியாமே

1433.
கோடியாந் தீட்சைவிதி யறியமாட்டார் கோலமுட னுப்பெடுக்கும் வகையுங்காணார்
தேடியதோர் பொருளெல்லாஞ் சிலவழித்து தேசம்விட்டு தேசம்போய் தெரியாமற்றான்
பாடியே சாத்திரத்தை பாடிக்கொண்டு பத்துபேரெட்டுபே ரொன்றாய்கூடி
நீடியே காலத்தை தெரியாமற்றான் நிட்சயமாய்ப் பூவெடுக்க போவார்பாரே
1434.
போவாரே கானகமெல்லாந்திரிந்து புக்காத நிலமெல்லாம் பூர்க்குமென்று
ஆவலுடன் மலையோரம் பாறைபார்த்து வதுக்கப்பால் காதவழிசென்றுதாமும்
காவலுடன் நடுச்சாமவேலைதன்னில் கண்ணிருட்டுமுன்பாக மதிநேரத்தில்
காவலுடன்புலிகொண்டு யெழுத்தையோதி சமாதிகட்டித் தானிருந்தார் பலபேர்தாமே
1435.
பலபேராய்ச் சாத்திரத்தைக் கையிலேந்தி காப்பேடு கடையேடு தெரியாமற்றான்
சிலபேருங் கண்கெட்டு முழுதும்பார்த்து சூட்சாதி சூட்சமிடமறியாமற்றான்
மலமுடனே மூலபுளிமுப்பூவென்று மதிமயக்கந்தெரியாமல் தியங்கியேதான்
ஜலமுடனே கண்ணீருமாய் காலமதுதான் கழித்தார் கசடராமே
1436.
கசடகற்றி புத்தியள்ள இளைஞரானால் காசினியி லெந்நூலைக்கருதிப்பாரார்
நிசமுடைய சாத்திரமெல்லாம் அகற்றிநேரான சாத்திரங்கள் மெய்யென்றெண்ணி
விஷமுடைய முப்பூவின் மண்ணினாலே வேண்டியதோர் வளையல்களும் செய்வார்கோடி
குசமுடையவளையல் கார்க்காகார்காய்ச்சு மண்ணில் கூறவொண்ணா நஞ்சதுவு
மிதக்கும்பாரே
1437.
பாரேதான் எந்நூலைப்பாராவிட்டால் பாங்கான முப்பதுவுங் காணாவிட்டால்
சீரேதான் வளையற்காற் நஞ்சானாலும் தீவரமாய்தானெடுத்து பூமுடித்தால்
நேரேதான் சரக்கெல்லாங் கட்டலாகும் நிலையாத சரக்கெல்லாம் நிற்கப்பண்ணும்
நேரேதான் வேதையிதுக்கோடும்வித்தை விழலாகப்போகாது வேண்டிச்செய்யே
1438.
செய்யவே எந்நூலேழாயிரம்பார் ஜெகத்திலே மறைத்ததெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
பையவே சத்தகாண்டம் பார்த்தாயானால் பாருலகில் நீயுமொரு சித்தனாவாய்
தொய்யவே பலபேர்கள் முனிவரானோர் தொல்லுலகில் பாடிவைத்தார் நூல்கள்பேதம்
மெய்யவே பலதுறைகள் பார்க்கவேண்டும் மேதினியில் நூல்பார்த்தோர் சித்தராமே
1439.
சித்தராம் எந்நூல்போலாருஞ்சொல்லார் ஜெகத்தினிலே கோடானகோடிநூல்கள்
பத்தியுடன் நானுரைத்தேன் மண்டலத்தில் பாகமுடன் எந்நூலைபார்த்தபேர்கள்
முத்தியுடன் காண்பதற்கு வழியுங்காண்பர் மூவுலகும் கிட்டவல்லோ கதியுங்காண்பர்
சத்தியுடன் பராபரியை தொழுதுபோற்றி சட்டமுடன் சத்தகாண்டம்பாடினேனே
1440.
பாடினேன் சத்தகாண்ட மேழுகாண்டம் பாங்கான யெழுநூறவொன்றுசொன்னேன்
பாடினே னென்னூறுவைப்பு சொன்னேன் பாங்கான திரட்டு வெழுநூறுசொன்னேன்
பாடினேன் முந்நூறு வொன்றுசொன்னேன் பதிவான ஞானமொரு நூறுசொன்னேன்
பாடினேன் சோடசமு மெட்டுஞ்சொன்னேன் பகரவே நிகண்டுவொரு நூலதாமே

1441.
நூலான வாயிரத்திருநூறு சொன்னேன் நுணுக்கமாஞ் சொச்சங்கள னேகம்சொன்னேன்
பாலான வைநூறு கறுகிடையும் சொன்னேன்பாலகனே யெந்நூல்போ லாறுஞ்சொல்லார்
சேலான சுருக்கிடையுங் குருக்கிடையுஞ் சொன்னேன் சிறப்பான ஜோதிமுமந்நூறு
சொன்னேன்
மூலான காலாங்கிநாயர்தம்மை முடிவணங்கி யடியேனும் தொழுதிட்டேனே
1442.
மொழிந்திட்ட பாஷாணம் பலமொன்றாகும் முனையான ரசமதுவும் வொன்றேயாகும்
வழிந்திட்ட பூரமது பலமொன்றாகும் வாகான இம்மூன்று மொன்றாய்ச்சேர்த்து
எழுந்திட்டு கல்வமதில் பொடித்துக்கொண்டு கருவான வறுவகை ஜெயநீர்தன்னால்
பிழிந்திட்டு தானரைத்து பில்லைதட்டி பசகாமரவிதனிலே காயப்போடே
1443.
போட்டுமே சட்டியிலே பில்லைவைத்து பொங்கமுடன் மேற்சட்டி கவிழ்த்துமூடி
நீட்டமுடன் சீலையது வலுவாய்ச் செய்து நேரானவடுப்பில்வைத்து யெரித்துநேராய்
வாட்டமுடன் நாற்சாமம் யெரிக்கும்போது வளமான பற்பமது பதங்கமேறி
சட்டமுடன் மேற்பட்டி மேலேநிற்கும் யெழிலான பற்பமது சொல்லப்போமோ
1444.
சொல்லவேபற்பமது தனையெடுத்து சத்துள்ள செம்புதனில் பத்துக்கொன்று
மெல்லவே தானுறுக்கி யெடுத்துப்பாரு வேதாந்த தாயினது வருளினாலே
புல்லவே செம்பதுவும் வெள்ளியால் பூதலத்தில் மானிடர்கள் பிழைக்கவென்று
மெல்லவே போகரிஷிமனமுவந்து மேதினியில் பாடிவைத்தா ருண்மைபாரே
1445.
உண்மையா மின்னமொரு கருமானங்கேள் உரைக்கிறன் மாணாக்கள் பிழைக்கவென்று
யண்மையா மயமதுவும் பலமொன்றாகும் தனியான பச்சையது பலமொன்றாகும்
கண்மையாம் ரசமதுவும் பலமொன்றாகும் காரமாம் வெண்காரம் பலமொன்றாகும்
வெண்மையாம் வெடியுப்பு ஜெயநீர்தன்னால் விருப்பமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
1446.
நாலான ஜெயநீராலாட்டிமைந்தா நாள்மூன்று ரவிதனிலே காயப்போடு
காலான செந்தூரம் சொல்லப்போமோ காசினியில் சித்தரமுனி செய்வாரப்பா
நாலான செந்தூரம் விராகனொன்று மதிப்பான வெள்ளியது விராகனொன்று
சூலான வெள்ளிக்கஉ கீழ்மேலும் சூட்டியே மூசைதனில் பொதிந்திடாயே
1447.
பொதியவே மூசையிட்டு சீலைசெய்து புகழான வுலையிலிட்டு வூதித்தீரு
பதியவே வெள்ளிக்குச் சாயமேறி பழுப்பான பொன்போலே யிருக்கும்பாரு
முதியவே நாலுக்கோர் தங்கம்சேர்த்து முயற்சியாய்ப் புடம்போட மாற்றோமெத்த
கதியவே பசுமைநிறஞ் சொல்லப்போமோ கருத்துடனே பாடிவைத்தேன் கணக்காய்த்தானே
1448.
கணக்கான சிடிகையென்ற வேதைசொல்வேன் கணக்குடனே செப்புயென்ற தாட்டியென்று
வணக்கமுடன் மணலிரும்பு வொன்றேயாகும் வளமானவெணகார மொன்றேயாகும்
இணக்கமாய்க் கூட்டியொன்றாய்ப் பொடித்துக்கொண்டு யெழிலான தேன்விட்டு
வரைத்துமைபோல்
கணக்கமில்லா குகையிலிட்டு முடிசீலைசுகமுடனே தான்செய்து வுருக்கிடாயே

1449.
உருக்கியே யெடுத்தப்பார் யென்னசொல்வேன் வுத்தமனே வயஞ்சேர்ந்த தொட்டியாச்சு
நருக்கியே யின்னமொரு குகையிலிட்டு நலம்பெறவே மூசையிட்டுச் சீலைசெய்து
பெருக்கியே தீமூட்டி யுலையிலேத்தி பாரான துருத்திகொண்டு வூதித்தீரு
பருக்கியே மூசைதனையெடுத்துப்பாரு பாங்கான செம்பதுவும் வெளுத்துப்போமே
1450.
வெளுப்பான செம்பதனை யெடுத்துப்பாரு விருப்பமுடன் வெள்ளிதனில் நாலுக்கொன்று
தனுப்பான தங்கமுட னொன்றுசேர்த்து தாட்டிகமாய்த் தானுருக்கி வாரடித்துச்
சுளுப்பான வுப்புடனே காவிசேர்த்து சூட்சமுடன் புடம்போட வன்னிமீறும்
பளுப்பான பொன்னதுவும் மிகவேயாகும் பணிதிமுத லனைத்துக்கும் பாண்மையாமே
1451.
பாண்மையாம் யாகநிலை தவத்தில்நின்று பாங்குபெற சின்மயத்தை பணிந்துபோற்றி
கான்மையாம் காலாங்கி தனைநினைத்து கருத்துடனே எப்போதும் கடாட்சிக்கத்தான்
மேன்மையுடன் மனோன்மணியை மனதிலெண்ணி மிக்கான சுடரொளியைக் காணவென்று
வாண்மைபெற பராபரியை நிலையாராய்ந்து வாகுடனே சுருதிநிலை நின்றுபோற்றே
1452.
போற்றவே வஷ்டாங்கந் தன்னிற்சென்று புகழாக மேல்வரை மனதிலுண்ணி
ஆற்றவே வம்பரத்தை மேலேநோக்கி ஆராதாரச்சுடலை அருவித்தாண்டி
சீற்றவே லாகிரியிலணைத்துந்தள்ளி சித்தாந்த பாசமதையுள்ளடக்கி
நாற்றமென்னுந் துருத்திநிலை சமாதியாக்கி நடுவுநிலைபற்றியே தானமர்ந்துபோற்றே
1453.
அமர்ந்துமே லிங்கமென்ற தாரந்தானும் அப்பனே பூரமுடன் வீரந்தானும்
சுமர்ந்துமே கெந்தியது துருசுதானும் சுடரான பாஷாண மிருதார்சிங்கு
தமர்ந்துமே சூதமுடன் துத்தந்தானும் தாக்கான வெடியுப்பு சீனந்தானும்
புமர்ந்துவே கெவுரியுடன் சாரந்தானும் பூட்டினார் சமயெடையாய் பூட்டினாரே
1454.
பூட்டவே வறுவகை ஜெயநிர்தன்னால் பொங்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நீட்டமுடன் சிமில்தனிலே பதனம்பண்ணு நிலையான வெள்ளிதனி லிரண்டுக்கொன்று
தாட்டிகமாய்த் தகடடித்துப் பூசிப்பின்பு சாங்கமாய் காவிக்குள் புடத்தைப்போடு
வாட்டமுடன் புடமாறி யெடுத்துப்பாரு மாசற்ற வெள்ளியது பழுக்கும்பாரே
1455.
பாரப்பா வெள்ளியது பழுத்துமிக்க பாங்கான மாற்றதுவு மாறதாகும்
சீரப்பா வெள்ளியிடை யிரண்டுக்கொன்று சிறப்பாகத் தங்கமது வொன்றுசேரு
நாரப்பா நயப்புடனே வேதிக்கும்பார் நயமான பசுமையது சொல்லப்போமோ
கூரப்பா சிடிகையிது வேதைமார்க்கம் கூறினேன் போகரிஷி உண்மைதானே
1456.
உண்மையாமின்னமொரு போக்குகேளு ஓகோகோவுலகுதனில் யார்தான்செய்வார்
கண்மையாம் ரிஷிமுனிவர் சித்தர்செய்வார் காசினியில் நூல்பார்த்தோர் செய்வார்கள்தான்
திண்மையாம் லிங்கமொரு பலமேவாங்கு தெளிவான வரப்பொடியுந் தாளகந்தான்
வண்மையா மிருதாரு சிங்கிதானு மணக்கமுடன் துருசுடனே காரமாமே

1457.
காரமாஞ்சாரமுடன் வீரந்தானும் கருவான பூநீறுஞ் சாம்பிராணிபூரமாம்
பூரமாஞ் சூடனுடன் மதியும்போடு புகழான சீனமுடன்கரியுப்பாகும்
தீரமா மித்தனையும் சரிநேரொக்க திகழவே குழிக்கல்லில் பொடித்துக்கொண்டு
சோரவே வறுவகைஜெயநீர்தன்னால் சூட்டியரை யெண்சாமம் புகலக்கேளே
1458.
கேளேநீ மெழுகாலே குகைதான்செய்து கெட்டியாய் லிங்கமதையுள்ளே வைத்து
கோளேதான் வாராமல் சீலைசுற்றி கொப்பனவே ரவிதனிலே காயவைத்து
தாளேதான் வஜ்ஜிரமாஞ் சீலைசெய்து தாக்குடனே குழிவெட்டி வுமிதான்கொட்டி
மீளேதான் கரிநெருப்பைக் கொட்டியேதான் மிக்கான தீமூட்டி மாட்டிடாயே
1459.
மாட்டவே மூன்றுநாட் சென்றபின்பு மயங்கியே திரியாதே மைந்தாகேளு
வாட்டமுடன் தீயாறிதானிருக்கும் வளமான லிங்கமது யிருகிப்போகும்
தாட்டிகமாய் நீயெடுத்துப் பார்க்கும்போது சாங்கமாய் லிங்கமது வுருக்குபோலாம்
நாட்டமுடன் றானெடுத்து மெழுகுசெய்ய நலமான போக்குவழி சொல்லக்கேளே
1460.
சொல்லவே வராகத்தின் நெய்யோடொக்க சுறுக்கான வெருக்கன்பால் சமனதாக
வெல்லவே லிங்கமதையோட்டிலிட்டு வேகமுடன் சுருக்கிடவே மெழுகுமாகும்
புல்லவே மெழுகதனை வெள்ளிசெம்பில் புகழாகத்தான் கொடுக்க மெழுகுமாகும்
மெல்லவே வாறடித்து புடத்தைப்போடு மேலான பொன்னதுவு மாகுந்தானே
1461.
பொன்னான மட்டமுடன் நாலுக்கொன்று பொலிவான தங்கமது வொன்றுசேர்க்க
மன்னானமன்னர்மெச்சும் பொன்னேயாச்சு மகத்தான வேதையிது சித்தர்வேதை
வன்னான ரிஷிமுனிவர் செய்யும்வேதை வாகுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
தென்னானா னுங்களுக்குத் தெளிவாகத்தான் பாடிவைத்தேன் தெளிவைப்பாரே
1462.
தெளிவான வாதவித்தை வதீதமெத்த தேசத்தில்கிட்டாது சிவயோகிக்கு
ஒளிவான சித்தரெல்லாம் மறைத்துவைத்தார் ஓகோகோநாதாக்கள் சூதார்கண்டார்
நெளிவான சாத்திரத்தின் மறைப்புமார்க்கம் நேர்மையட நானுரைத்த பாவனைப்போல்
வழியாகச் சொன்னவர்க ளாருமில்லை வையகத்தில் போகரைப்போ லாவார்தானே
1463.
தானான பிரமவித்தை யறியவேண்டும் சதாகாலஞ் சமாதியிலே நிற்கவேண்டும்
கோனான குருவருளைக் காணவேண்டும் காணாட்டால் காயுமில்லை பூவுமில்லை
வேனான பரஞ்சுடரை நிர்த்தம் நிர்த்தம் விரும்பியே பேரின்பங் காணவேண்டும்
பானான காயசித்தி யோகசித்தி பாங்கான குளிகையுள சித்துதானே
1464.
காணவே வண்டபகிரண்டமெல்லாம் கடிதான வடிமூலங்காணவேண்டும்
பூணவே பூரணத்தையறியவேண்டும் போக்கான வஸ்துவெல்லாங் காணவேண்டும்
தோணவே கமுத்திலே நிற்கவேண்டும் சூட்சமு னாடெல்லா மறியவேண்டும்
வேணவே வம்பரத்தை நாடவேண்டும் வெட்டவெளி சின்மயத்தைக் கூடநன்றே

1465.
கூடவே மனந்தேறி நிற்கவேண்டும் குவலயத்தில் துரியம்விட்டு பிரியவேண்டும்
நாடவே நடுமையமேறல் வேண்டும் நாதாக்கள் கூத்தெல்லாங் காணவேண்டும்
தேடவே வாலைதனைக் காணவேண்டும் தெளியாத மூன்றெழுத்தைப் பற்றவேண்டும்
நீடவே சிதானந்த வறிவில்நின்று நிட்களமாய் மேலவரைப்போகநன்றே
1466.
நன்றான வர்ச்சனைகள் யாவுந்தேர்ந்து நாதாக்கள் பூசிக்கும் நிலையைப்பார்த்து
குன்றான பிராணாயந்தன்னிற்சென்று கொடிதான காமத்தை நிவர்த்திசெய்து
பன்றான பரபூசை சிவபூசையாவும் பாங்கான ஞானத்தின் சுடலைத்தாண்டி
வன்றான மாயசமு சாகரத்தை மறந்தவனே சித்தரிலினி லொருவனாமே
1467.
ஆமப்பா வின்னமொரு கருமானங்கேள் அப்பனே சங்குயென்ற பாஷாணந்தான்
தாமப்பா திருகள்ளி பாலைவாங்கி தப்பாமற்றான்சுருக்கு சாமம்நாலு
வேமப்பா கொடுத்தவுடன் கட்டிப்போகும் வேகமுடன் கடுஞ்சுருக்கு சொல்லப்போமோ
நாமப்பா மெழுகுவகை போக்குசொல்வோம் நாதாக்கள்மறைப்பையெல்லாம்
நவில்வேண்பாரே
1468.
நவிலவே யானையென்னு விலாங்குதன்னை நாட்டமுடன் காரமிட்டுத் தயிலமாக்கி
குவிலவே சிற்றண்ட மஞ்சள்தானும் கூடவேதான்கூட்டி கலந்துகொண்டு
கவிலவே சங்கென்ற பாஷாணத்தை கருவாக ஓட்டிலிட்டு சுருக்குதாக்கு
புல்லவே மெழுகாகும் பாஷாணந்தான் நாட்டினார் லோகத்து மாந்தர்க்காமே
1469.
ஆமேதான் மெழுகெடுத்து ரவியில்தாக்கு அப்பனே பத்துக்கு ஒன்றுபோடு
தாமேதான் ரவிதானும் வெளுத்துக்காணும் தரித்தலே யெடைக்கிடைதான் வெள்ளிசேர்த்து
நாமேதான் சொன்னபடி வங்கஞ்சார நயமாகவெள்ளியது வலுத்துப்போச்சு
போமேதான் திராவகத்துக்குயிருமாச்சு போக்கான செம்பதுவும் கட்டிப்போச்சே
1470.
போச்சென்று விடுகாதே மைந்தாகேளு பொங்கமுடன் மெழுகெடுத்து வெள்ளீயத்தில்
பாச்சவே பத்துக்கு ஒன்றுதாக்கு பதமுடனே நீரதுவும் நீங்கிப்போகும்
மூச்சொன்று விடுகாதே யின்னங்கேளு முக்கியமாய் மேற்சொன்ன வெள்ளீயத்தை
காச்சுடனே வறுவகைஜெயநீர்தன்னில் களிப்புடனே மூன்றுமுறை வுருக்கிச்சாயே
1471.
சாய்க்கவே வெள்வங்கம் வெள்ளயாகும் சாங்கமுடன் பத்துக்கு ரண்டுவெள்ளி
மாய்க்கவே தானுருக்கு மகத்தாம்வேதை மானிலத்தில் சொல்லுவறோ சித்தர்தாமும்
காய்க்கவே பொன்வேண்டுமென்றாயானால் கருவாக வெந்நூலைப்பாரு
ஏய்க்குமே பின்னொருநூலானாலும் என்போலும் யாருரைப்பார் சித்தர்தாமே
1472.
சித்தான சித்தர்முனி யார்தான்சொல்வார் சிறந்தசிவ யோகியருஞ்சொல்லமாட்டார்
முத்தான சாத்திரங்க ளனேகமுண்டு முன்பின்னாய் பாடிவிட்டார் சித்தர்தாமும்
பத்தான வழியுரையுங்காணார் மாண்பர் பாழாகிக் கட்டலைந்து கெட்டலைந்து
தெத்தான பித்தமது வதிகமாகித் தெருதெருவாய்த் திரிவார்கள் மடையர்தாமே

1473.
மடையறாமானவர்கள் நூலைப்பாரார் மாறாட்டமாகவே கெடுத்தாரென்று
நடையான நூல்வழிக ளறியாமற்றான் நாதாக்கள் கைமறைப்பு யார்தான்காண்பர்
மடைபோல பேசவல்லார் நூலைப்பாறார் மதிகுலைந்து நினைவழிந்து வறிவுகெட்டு
கடையான சாத்திரங்கள் மிகவும்பார்த்து கருத்தெரியா மானிடர்கள் மெத்தவாமே
1474.
மெத்தவுண்டு முழுமடையர் என்னசொல்வார் முனையான சாத்திரங்கள் மிகப்பாறாமல்
சுத்தமுடன் ரஇஷிமுனிவர் சொன்னநூலை சூட்சாதிசூட்சங் காணாமற்றான்
பத்தரென்ன சித்தர்களை மெத்தப்பேசி பலபலவாய் சாத்திரத்தை மறைப்புசெய்வார்
குத்தமென்று திட்டியல்லோ சாபந்தன்னை குவலயத்தில் தேடிக்கொள்ளு மாண்பராமே
1475.
வெளியான சாத்திரங்க ளனைத்துங்கண்டேன் வேதாந்தத் தாயினது வருளினாலே
ஒளியான காலாங்கி கடாட்சந்தன்னால் ஒளித்திருந்த சாத்திரங்கள் கைமறைப்பை
தெளிவாக மானிடர்கள் பிழைக்கவென்று தேசதேசங்கள்முதல் குளிகைபூண்டு
நெளிவான மலைகுகைகள் வனாந்திரங்கள் நேர்ப்புடனே குளிகையிட்டு பறந்தேன்தானே
1476.
தானான சித்தர்முனி இருப்பிடங்கள் தாக்கான சமாதிமுத லெல்லாம்பார்த்து
கோனான கவரவர்கள் செய்தநூலை குகைதனிலே மறைத்துவைத்த கருவையெல்லாம்
பானாக சித்தரிடம் வாதுபேசி பழிபோட்டு சாத்திரங்க ளனைத்தும்பெற்றேன்
மானாக மறைத்துவைத்த நுட்பமெல்லாம் மதிப்புடனே யாராய்ந்து நூல்செய்தேனே
1477.
செய்தேனே பெருநூலேழாயிரந்தான் செப்பினேன் போகரிஷிசத்தகாண்டம்
செய்தேனே நாதாக்களுளவைப்பார்த்து திறட்டினேன் குருநூலாய் காவியந்தான்
செய்தேனே நூலினிடை வண்மைபார்த்து சீறியே சித்தரெல்லாம் சினந்தாரென்னை
செய்தேனே லோகமெல்லாம் சித்தாச்சென்று சித்தரெல்லா மெனைசபிக்க வந்திட்டாரே
1478.
வந்திட்டார் கோடான கோடிபேர்கள் வரைகோடி துரைகோடி தொந்தங்கோடி
நொந்திட்டு சித்தரகளை செய்தேனென்று நொடிக்குள்ளே எனைக்கொல்ல வந்தாரையா
முந்திட்டு யான்பயந்து காலாங்கிதன்னை முறையமிட ரெனதையர் கிருபையாலே
தந்திட்ட சாபமதை நிவர்த்திசெய்து தாரணியில் பிழையென்று யெனைவிட்டாரே
1479.
விட்டவுடன் யானுமல்லோ சீனதேசம் போயிருந்து கமலர்தன்னைச்
சட்டமுடன் சமாதியிலே யிருந்தாரங்கே சார்புடனே யவர்பாதம் தொழுதிட்டேதான்
இட்டமுடன் யானுமல்லோ சீனதேசம் யின்பமுடன் காணவென்று குளிகைபூண்டு
சட்டமுடன் யான்வந்தேன் என்றுசொல்லிக் கமலமுனிதன்பாதந் தொழுதிட்டேனே
1480.
தொழுதிட்ட யெந்தனுக்கு முனிதான்சொன்னார் தொல்லுலகில் நீர்கற்றவித்தைதன்னை
பழுத்திட்ட மில்லாமல் சீனந்தன்னில் பட்சமுடன் மாணாக்கள்பிழைக்கவென்று
முழுதிட்டந் தன்னுடனே முனிதானசொல்ல முயற்சியுடன் கற்றவித்தை பழுதில்லாமல்
வழுதிட்டமுடன் றானுமறைப்பையெல்லா மானிடத்தில் கொட்டிவிட்டென் வண்மைபாரே

1481.
வண்மையா மின்மொரு மார்க்கங்கேளு வளமான வங்கமொரு பலமேதூக்கு
திண்மையாந் தாளகமும் பாஷாணந்தான் திறமான சவுக்காரச் சாரந்தானும்
உண்மையாம் பூநீறு கிளிஞ்சிற்சுண்ணாம்பு வுத்தமனே வகைக்கொரு பலமும்தூக்கு
நன்மையாங் கல்வத்திலாட்டியேதான் நலமாபெறவே கலசமென்ற குடுவைவாங்கே
1482.
வாங்கியே முன்னரைத்த சரக்கையெல்லாம் மார்க்கமுடன் கலசத்தினுள்ளேபோட்டு
தேங்கியே திரியாதே மைந்தாகேளு தெளிவான வங்கமதை சரக்கில்போட்டு
ஓங்கியே சில்லிட்டு சீலைசெய்து வுத்தமனே கோழியென்ற புடத்தைப்போடு
தூங்கியே திரியாதே மைந்தாபாரு துடியான களங்குபோ லிருக்கும்பாரே
1483.
களங்கான வங்கமது வொன்றேயாகும் கடிதான வெள்ளியது வொன்றேயாகும்
குளங்கான சூதமது ரண்டேயாகும் கொடிதான சாரமது காலேயாகும்
பளங்கான மதிஜெயநீர் தன்னாலாட்டி பாங்குபெற வில்லையது லேசாய்தட்டி
முளங்கான ரவிதனிலே காயப்போடு உத்தமனே ஓட்டிலிட்டு சீலைசெய்யே
1484.
செய்யவே காடையென்ற புடத்தைப்போடு சேரவே வோடதுதான் குளிர்ந்தபின்பு
வையவே தானெடுத்துப் பார்க்கும்போது பாங்கான பற்பமது சொல்லப்போமோ
வெய்யவே ரவிதனிலே பத்துக்கொன்று விதமுடறானுருக்கிக் கொடுக்கும்போது
துய்யவே தய்யானுக் கொப்பதாகும் துரைராசர் மெச்சுகின்ற மதியமாமே
1485.
மதியான வெள்ளிதனில் பத்துக்கொன்று மாற்கமுடன் தான்சேர்த்து வங்கத்தூது
நிதியான வெள்ளியது துய்யரூபாய் நிகரில்லை மாற்றில்லை கணக்குமில்லை
பதியான பதிதனிலே நின்றுகொண்டு பட்சமுடன் திரிபுரியை பணிந்துபோற்றி
துதியான வாலைதனை வணங்கிநித்தம் சூட்சமுட னிறங்குநிலை கண்டிடாயே
1486.
கண்டபின்பு சமாதிக்கி நிலையைப்பாரு காலாங்கி வையரதம்மை கருத்திலுண்ணி
அண்டரண்டம் தான்புகழு மெந்தனையருளிருந்தால் கதிபெறலாமன்பர்கேளு
தொண்டுசெய்து சித்தர்களை வணங்கிநித்தம் தொடர்ந்துமே யவரிடத்தில் பத்திவைத்தால்
விண்டுபகழ் மாலயனார் கிருபையாலே விட்டகுறை வயந்தனுக்கு வாய்க்குந்தானே
1487.
வாய்க்கவே வின்னமொரு கருமானங்கேள் வளமான துருசுவொரு கட்டிவாங்கி
காய்க்கவே பொன்வேண்டுமானால் அப்பாகணக்காக வெடியுப்பு சரிநேராக
மாய்க்கவே பூநீறுசரியோடொக்க மார்க்கமுடன் தான்கூட்டி யரைப்பாய் நீதான்
தோய்க்கவே வறுவகை ஜெயநீர்தன்னால் துப்புரவாய் தானரைப்பாய் சாமம்நாலே
1488.
நாலான சாமமது தானரைத்து நலமாகப் பில்லைதட்டிக் காயவைத்து
மாலான புடம்போடப் பற்பமாகும் மகத்தான துருசினிட பச்சைநீங்கி
சேலான வெளுப்புநிற மதிகங்காட்டும் செழிப்பான பற்பமது சிவந்துபோனால்
காவான மின்னமொரு புடந்தான்போட்டு களிப்புடனே தானரைப்பாய் ஜெயநீராலே

1489.
ஜெயநீரை விட்டுமல்லோ யரைப்பாய்சாமம் சிறப்புடனே பில்லைதட்டிக் காயவைத்து
நயமுடனே ஓட்டிலிட்டு சீலைசெய்து நன்றாக ரவிதனிலே காயவைத்து
பயமுடனே தீமூட்டி புடத்தைப்போடு பக்குவமா யாறினபின் னெடுத்துப்பாரு
மயமுடைய பற்பமது யென்னசொல்வேன் மாணாக்கள் பிழைக்கவென்று மதிப்பிட்டேனே
1490.
மதிக்கவே பற்பமது நேரேசூதம் மாட்டடாகுக்கல்லில் ஜெயநீராலே
கதிக்கவே தானரைப்பாய் நாலுசாமம் தண்மைபெற மூசையிட்டு புடத்தைப்போடு
விதிக்கவே புமாறியெடுத்துப்பாரு வீரியமாம் பற்பமது  காரமெத்த
துதிப்புடனே வெள்ளிதனில் பத்துக்கொன்று துறைபார்த்துக் கொடுத்துப்பார் மாற்றெட்டாமே
1491.
எட்டான மாற்றதுவுமென்ன சொல்வேன் பெருவான பசுமையது மிகவேகாட்டும்
நாட்டான சூதமது லெகுவிலோடும் கசடகற்றி மாற்றதுவுங் காணலாகும்
மாட்டான பொன்னதுவில் நாலுக்கொன்று மாட்டடா தங்கமது ஒன்றுகூட்டு
திட்டான வாரடித்துப் புடத்தைப்போடு திகழான பசுந்தங்கம் சொல்லப்போமோ
1492.
சொல்லவென்றால் நாவில்லை பாவமில்லை சூட்சாதிசூட்சமெல்லாம் சூதத்தாட்டு
மெல்லவே ஜீவனத்தைசெய்துகொண்டு மேதினியில் யோகத்துக்குருதிபாரு
வல்லவே ஞானத்தைமிகவே வுன்னிவழியான முனைமூலத்துள்ளேபுக்கி
கொல்லவே ஓங்காரமுள்ளடக்கி குறிப்புடனே சமாதிநிலை யறிந்துபோற்றே
1493.
போற்றவே சிகாரத்தின் மீதிருந்து பொலிவாக மகாரத்தை யுன்னிப்பாரு
ஆற்றவே வகாரமா மனாதிபீடம் அப்பனே நகாரமாம் பிரம்மபீடம்
தூற்றவே யகாரமாம் லட்சுமிபீடம் துலையாத கர்மேந்திரியம் ஐந்துக்குள்ளே
மாற்றவே மனோலயத்தை மருவிப்பாரு மகத்தான நாதாக்க ளாடுங்கூத்தே
1494.
கூத்தான பஞ்சகர்த்தா ளாடுங்கூத்து குடியான வீட்டுக்குள் ஐந்துபேராம்
காத்தான வாசலது வொண்பதாகும் கருவிகாணாதிமுதல் பொந்துக்குள்ளே
மாத்தானும் வந்தவுடன் சாமிபூணும் மகத்தாக திரேகமது பொய்யாம்பாரு
ஆத்தாளை வணங்கி மிகவனுசித்து அப்பனே சாயுச்சிப் பதத்தைத்தேடே
1495.
தேடையிலே மின்னமொரு மார்க்கங்கேளு வெளியான வெள்ளிவித்தை யார்தான்காண்பார்
வாடையுள்ள பாஷாணம் பலமொன்றாகும் வகுப்பான கோழஇயென்ற மூலிதானும்
மேடையிலேதான் விலையும் மூலியப்பா மேன்மையுடன் கொண்டுவந்து சாற்றைவாங்கி
ஆடையிலேதான் பிழிந்து மைந்தாகேளு அப்பனே நாற்சாமம் சுருக்குதாக்கே
1496.
தாக்கவே பாஷாணம் புகையடங்கி சார்புடனே கட்டியது பொருமிக்கொல்லும்
நோக்கவே பூநீறு வுப்பெடுத்து நுணுக்கமுடன் தான்சேர்த்து கவசஞ்செய்து
போக்கவே ரவிதனிலே காயவைத்து பொங்கமுடன் சுண்ணாம்புசீலைசெய்து
பார்க்கவே சட்டிதனில் மணல்தான்கொட்டிபாங்காக நடுமையம் வைத்திடாயே

1497.
வைத்துமே சட்டிகொண்டு மேலேமூடி வாகுடனே மண்சீலைவலுவாய்ச் செய்து
பொய்த்துமே போகாமல் வடுப்பிலேற்றி புகழாகத் தானெரிப்பாய் நாலுசாமம்
கைத்துமே யாறினபின் னெடுத்துப்பாரு கனமான பாஷாணம் முருக்கிக்கட்டும்
மெய்த்துமே கட்டினதோர் பாஷாணத்தில் மேன்மையுடன் வங்கமது காலாய்க்கூட்டே
1498.
கூட்டியே வங்கத்தோர் நிடைதானாகம் குமுறவே வறுவகைஜெயநீர்தன்னால்
தாட்டிகமாய் தானரைப்பாய் நாலுசாமம் சார்பாக பில்லைதட்டிக் காயவைத்து
நீட்டமுடன் வோட்டிலிட்டுச் சீலைசெய்து நேர்பாக காடையென்ற புடத்தைப்போடு
வாட்டமுடன் கோழியென்ற புடந்தானாகும் மைந்தனே தீயாறியெடுத்துப்பாரே
1499.
எடுக்கவே பற்பமது என்னசொல்வேன் என்மைந்தா நாதாக்கள் செய்யும்வேதை
கொடுக்கவே செம்புதனில் கொடுத்துப்பாரு சொக்கமுள்ள வெள்ளியது கூறப்போமோ
மடுக்கவே பத்துக்கொன்று வெள்ளி மார்க்கமுடன் தானுருக்கிக் கொடுத்துப்பாரு
விடுக்கவே வுப்புக்குக் காய்ப்புண்டாகும் விபரமுடன் செய்யம் வழியறிந்துபாரே
1500.
பார்க்கவே நாதாக்கள் கைமறைப்பு கருவாளி கண்டறிவான் மற்றோர்காணார்
ஏர்க்கவே யவர்களிடம் தொண்டுசெய்து என்மகனேயவர்கள் மனங்களியவேண்டும்
பூர்க்கவே மனதுவந்து வுந்தனுக்கு புகழ்ச்சியுடன் வேதைமுகம் யாவுஞ்சொல்வார்
தீர்க்கவே சாத்திரங்களுமுரைப்பார் தீர்க்கமுட னறிபவனே சித்தனாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

1501.
சித்தனாமின்னமொரு மார்க்கங்கேளு சிவப்பான சாரமது கட்டுசொல்வேன்
நித்தமுடன் காரமது வொன்றேயாகும் நிகரான சீனமது வொன்றேயாகும்
துத்தமுடன் பூநீறுவொன்றேயாகும் துடியான சிப்பியென்ற தண்ணந்தானும்
முத்தமுடன் சிப்பியுட ஜெயநீர்தன்னால் மூன்றுநாளரைத்து பாவகமேசெய்யே
1502.
செய்யவே மெழுக்காலே குகையுண்டாக்கி செழிப்புடனே சாரமதுக்கங்கிபூட்டி
நையவே சுண்ணாம்பு சீலைசெய்து நலம்பெறவே ரவிதனிலே காயவைத்து
முய்யவே முழப்புடந்தான் பூப்புடந்தான் முனையான மணல்தனிலே நடுவேவைத்து
பையவே மணலாலே மேலேமூடி பாங்குபெற தீமூட்டி போட்டிடாயே
1503.
போடவே தீயாறியெடுத்துப்பாரு பொங்கமுடன் சாரமது கட்டிப்போகும்
நீடவே முப்புமிப்படியேதீறு நிலையான சாரமது தந்தம்போலாம்
நீடவே சாரணைதான் சொல்லக்கேளாய் கொடிதான நாயுருவி சாம்பல்தன்னில்
மூடவே சாரமதை யுள்ளேவைத்து முழுகவே சாம்பலையும் மேலேபோடே
1504.
போடவே சட்டிதனில் பொதிந்துமூடி பொங்காமல் சீலையது வலுவாய்ச் செய்து
சூடவே தணல்மூட்டி மூன்றுநாளாய் சுகம்பெறவே தானெரிப்பாயஃ மைந்தாகேளு
தூடவே யாறினபின் னெடுத்துப்பாரு துடியான சாரமதுக் கிணைவேறுண்டோ
ஆடவே சாரமதை யென்னசொல்வேன் அப்பனே கருவாளி சொல்வான்பாரே
1505.
பாரேதான் சாரமது கட்டுமானால் படுமுன்னே சரக்கெல்லாம் கட்டிப்போடும்
நேரேதான் நாகமதை நொடியிற்கொல்லும் நேரான செம்பதுவு மூறல்போகும்
சீரேதான் சாரமது கட்டுமானால் சிறப்பான வீடுகளும் கட்டினாற்போல்
கூரேதான் சரக்குதான் காலனாகும் கொடிதான சாரத்தின் நேர்மைபாரே
1506.
நேர்மையாஞ் சாரமது கட்டிற்றானால் நெடுந்தூரம் வேதைமுகங்காணலாகும்
கூர்மையாம் சூதத்தைக் கொல்லும்காலன் கொடிதான சுன்னமதை செப்பவென்றால்
வார்மையாம் வுப்புக்குச் சத்துருவேயாகும் வாகான செந்தூரகோடிவேதை
மேர்மையாஞ் சித்தர்முனி செய்வாரப்பா மேதினியில் மற்றவரால் செய்யப்போமோ
1507.
போகுமே சாரமென்ற செந்தூரத்தை பொல்லாத வயிற்றுவலி குன்மத்தொக்கும்
ஏருமே வாயுவென்ற தெண்பதுக்கு மெழிலான சோகைகாமாலை யேற்கும்
பாகுமே சூதகத்தில் வாய்வுள்ளோர்க்கும் பாங்கான மகோதரமாம் பீலியோர்கும்
வாகுடனே தேன்திலே கொடுத்தாயானால் வளமான தேகமது கர்ப்பமாமே
1508.
கற்பமா மின்னமொரு கருமானங்கேள் காசினியோர் பிழைக்கவென்று லகுவாய் சொல்வோம்
அற்பமென்று நினையாதே வன்பாகேளு அருங்காந்த மூசியென்ற தேழதாகும்
துற்பாவாய் பலமதுதான் கொண்டுவந்து துடியான வறுவகை ஜெயநீர்தன்னால்
சிற்பரம் போல்மெழுகாக்கி மூசையிட்டு சில்லிட்டு சீலையது வலுவாய்ச்செய்யே

1509.
வலுவாகச் செய்துமல்லோ ரவியில்வைத்து வாகுடனே தீமூட்டி புடத்தைப்போடு
சுலுவாம புடமதுதான் போட்டாயானால் சுறுக்கென்ற காந்தமது ஈயமாகும்
பளுவான யீயமது சொல்லப்போமோ பதந்தெரிந்து யெடுத்தவனே வாதியாவான்
மெழுகான காந்தமதூ யீயமானால் மேதினியில் வெகுகோடி வேதையாமே
1510.
வேதையாங் காந்தமென்ற யீயந்தானும் வாரைவான கெந்தியிட சத்துதானும்
பாதையாம் நாகமென்ற சத்துதானும் பாங்கான வயத்தினுட சத்துதானும்
மேதையாம் பூநாகச்சத்துதானும் மிக்கான வப்பிரேகச் சத்துதானும்
தோகையுடன் தானெடுத்து வொன்றாய்க்கூட்டி தொந்தமுடன் தானெடையாய்த்
தங்கஞ்சேரே
1511.
தங்கமுட னிடையாக வொன்றாய்க்கூட்டி தாழ்மையுடன் தானரைப்பாய் கையான்சாற்றால்
துங்கமுன் நாற்சாமமரைத்துத் துப்புரவாய்ப் பில்லைதட்டி காயவைத்து
பங்கமுடன் வாராமல் ஓட்டிலிட்டு பாங்குபெற சீலையது வலுவாய்ச் செய்து
அங்கமுடன கோழியென்ற புடத்தைப்போடு அப்பனே செந்தூர மாகுந்தானே
1512.
தானாக யிப்படியே பத்துபுடம்போடு தாக்கான மூலிகையா லரைத்துப்போடு
வேனாக செந்தூரம் வீரமெத்த வேதைக்கு வெகுதூரம் எட்டியோடும்
பானாக செந்தூரம் பதனம்பன்னு பத்துக்கு வொன்றுகுடு வெள்ளிசெம்பில்
மாணாகேள் கொடுத்திடவே வேதிக்கும்பார் மகத்தான மருந்தினுட போக்குதானே
1513.
போக்கான செந்தூரங் குன்றியுண்ணு பொங்கமுடன் மண்டலந்தான் கொண்டாயானால்
தூக்கான தேகமது கற்றூணாகும் துலையாது வயதுமிக வதிதங்காணும்
நோக்கான நரைதிரையு மற்றுப்போகும் நோய்தானுஞ் சடந்தனிலே மேவலாகா
பாங்கான கண்ணுரண்டும் ஒளியேவீசும் பார்வைக்கு வருந்ததியுங் காணலாமே
1514.
காணலாம் சட்சத்திரம் பகற்காலத்தில் கருவிழியு மொருக்காலுந் திரைதானில்லை
பூணலாம் தேகத்தை வுறுதிபண்ணு போக்கான சட்டையது தள்ளிப்பாரு
வேணலாம் வெகுகால மிருக்கலாகும் வேண்டியே சமநிலைக்கு சமாதிதேட
நீணளாம் வாசியது மேல்நோக்காது நீணிலத்தில் நீயமொரு சித்தனாமே
1515.
சித்தனாம் கெடையாட்டஞ் சொல்வேன்கேளு செழிப்பான துலாக்கோலா மூங்கிலொன்று
மத்தலாய் நூறடியாம் பருவநீட்ட முனையான கொப்புக்கு கயிர்தான்நாலு
சுத்தமாம் வெட்டார வெளியில்நின்று சுகமுடனே கால்நாட்டி பதுங்குமாட்டி
துத்தமுடன் முனைகிடையில் காந்தம்வைத்து துறையான விரும்பினுட சட்டைபூணே
1516.
பூணவே கைதனிலே மாத்திரைக்கோலும் புகழான நெற்றிதனி லைங்கோலமையும்
நாணவே மானிடர்கள் நடுங்கவென்று நாதாக்கள் மெச்சிடவே கச்சைபூண்டு
காணவே தலைதனில் கலசப்பானை கடினமுடன் பத்தொன்று வொன்றோடொன்று
வூணவே பானைதனில் காந்தம்பூசி வுத்தமனே கிடைதனிலே யேறலாமே

1517.
ஏறலாமுச்சிவரை கிடைமேல்நின்று ஏற்றமுடன் துத்தாரிவாயிலேந்தி
கூறலா மோடியென்ற வித்தைதன்னை குவலயத்தில் மெச்சடவே போகர்தாமும்
தேறவே மேல்நின்று காணந்தன்னில் திறமுடனே வாசியைத்தான் கீழ்நோக்காமல்
மாரவே பிரணவத்தைமாறி மார்க்கமுடன் நின்றுவிளையாடினாரே
1518.
ஆடினார் சீனமென்ற தேசந்தன்னில் அன்புடனே மாணாக்கள் பிழைக்கவென்று
பாடினார் சித்தர்முனி சொன்னநூலைப் பரிவாகத் தானெடுத்து பாருவோர்க்கு
மூடினதோர் வுளமெல்லாம் மிகவேபார்த்து முயற்சியுடன் வெளியங்கமாகச்செய்தேன்
கூடினதோர் கருமான மெல்லாந் தேர்ந்து குறிகண்டு நிலைகண்டார் சீனத்தாரே
1519.
சீனபதி மானிடர்கள் செய்புமார்க்கம் சித்தர்முனி ரிஷிதேவர் முறைககளாகும்
மானபதிமாண்பர் கருவாளியல்லோ மண்டலத்திலாருமில்லை பேருமில்லை
தானமுடன் கொச்சியென்ற மார்க்கத்தாரும் சட்டமுடன் செய்வார்க ளிவர்போல
மோனமுடன் தேவதா ரிஷிக்கொப்பாவார் மண்டலத்தில் சீனபதிமாந்தர்தாமே
1520.
தாமேதான் சத்தியங்களுண்டு தரணிதனில் பொய்சொல்வார் மாண்பர்தாமும்
வேமேதான் நீதிமனுமுறைகளுண்டு வெகுகோடி வத்தைகளுஞ்செய்வாரப்பா
போமேதான் பொய்யொன்றஞ் சொல்லமாட்டார் பொன்னுலகுக் கொப்பான மாந்தரப்பா
நாமேதான் கண்டபடி சொன்னேனப்பா நாட்டினிலே சீனத்துக் கிணையாகாரே
1521.
ஆகாது காலாங்கிநாதர் தாமும் அவருடைய சீர்பாத கிருபையாலே
போகாத தேசமெல்லாங் குளிகைபூண்டு போனேனே சேரசோழபாண்டிநாடு
சாகாத சித்தர்முனி யென்றுசொல்லி சமாதிலே யிரப்பேனென்றுசொன்ன மாந்தர்தம்மை
வேகாதவெயில்தனிலே தவசிருந்த வேணசித்து பொய்ஞ்ஞானி கண்டிட்டேனே
1522.
கண்டிட்டே னவர்களிடம் வாதுபேசி கருவான மறைப்புமுதல் திறப்புங்கேட்டேன்
விண்டிட்ட சாத்திங்கள் கற்றோர்போல வீண்வார்த்தை பேசியல்லோ பொய்யேசொன்னார்
தண்டிட்டு வவர்களிடம் துஞ்சிப்பேசி தூரான மாராட்டப் பேச்சரிந்து
பண்டிட்ட சீனபதிவந்துசேர்ந்து பலபலவாம் வித்தைகளைக் கற்பித்தேனே
1523.
கற்பித்த வித்தைகளும் கணக்கேயில்லை கால்மாடுதலைமாடு பரட்டார்மாண்பர்
துற்புத்தி சற்றேனுமில்லா பாலர் துறைமுகமும் ஒருமுகங்கண்டதில்லை
விற்புத்தி யானதொருமாண்பரப்பா விண்ணுலகில் சீனபதிக்கிணையாமோதான்
சற்புத்தியுடையதொரு சித்தர்க்கொப்பாய சாற்றலாஞ் சீனபதி தேசத்தோரே
1524.
தேசமென்றால் தேசமதுசீனமாமோ ஜெகத்திலே கண்டவர்கள் யாருமில்லை
பாசமென்றால் பிரம்மத்தின் பாசமாகும் பாருலகில் சதாநித்தம் தொழுவார்மாந்தர்
நேசமென்றால் போகரிஷிதன்னைப்போற்றி நெடுங்காலஞ் சமாதியிலே யிருந்தார்கோடி
வாசமுடன் சீனபதி யாவுங்கண்டேன் வளமாக மாந்தருட வுண்மைபாரே

1525.
வண்மையா மின்னமொரு கருமானங்கேள் வுத்தமனே மாணாக்கள் பிழைக்கவென்று
தண்மையாம் நாகமது சேர்தானொன்று தாக்கான பாஷாணம் சேர்தானொன்று
கண்மையாஞ் சுண்ணாம்புஞ் சேர்தான்பாதி கருவான மதியுப்பு சேர்தான்காலாம்
நன்மையா மித்தனையு மொன்றாய்ச்சேர்த்து நலம்பெறவே சிப்பியென்ற சாரத்தாட்டே
1526.
சாரமென்ற ஜெயநீரி லரைத்துமைந்தா சாங்கமுடன் நாகத்துக் கங்கிபூட்டி
காரமென்ற சுண்ணாம்புச் சீலைசெய்து கருத்துடனே ரவிதனிலே காயவைத்து
ஈரமென்ற சீலையது காய்ந்தபின்பு யென்மகனே கோழியென்ற புடத்தைப்போடு
பாரமென்ற கண்ணதுவும் நீங்கியேதான் பளபளத்த வெள்ளியது வாகுந்தானே
1527.
தானான வெள்ளியது சிவத்துக்கொப்பாம் சங்கரனார்பூசைக்குகந்த வெள்ளி
கோனான வெள்ளிதனை கடையில்மாற்றி கொப்பனவே பூசையர்ச்சனைகள் செய்வாய்
பானான பரங்களுக்கு வன்னமீவாய் பட்சமுடன் கோயில்குளம் கட்டவேண்டும்
வேனான வந்தணராம் குருக்கள்மார்க்கு வேணவுசாரமது செய்யநன்றே
1528.
செய்யவே திரிவாமி பூசைவேண்டும் சிறப்பான மனோன்மணியை நணுகவேண்டும்
பையவே சத்தியட பூசைவேண்டும் பாருலகில் தேவதைகள் வணக்கம்வேண்டும்
முய்யவே சதாநித்தம் போற்றிசெய்து மோட்சத்திற்கேகும்வழி தேடவேண்டும்
மையவே காலாங்கரதனை நினைந்து மண்டலத்தில் வாழ்பவனே யோகவானே
1529.
யோகமென்றால் யோகமதுசொல்லப்போமோ யொளியான வயிரவன்தன் பூசைசொல்வேன்
போகனென்னு மடியேனும் தாள்வணங்கி பொங்கமுடன் காலாங்கிநாதர்பாதம்
வேகமுடன் தாள்பணிந்து வணங்கிநின்று வேதாந்த தாயினது அருளும்பெற்று
சாலமுடன் நவகோண வாசலிட்டு சாந்தமுடன் கலசமது வைத்திடாயே
1530.
வைத்திடவே கலசமது நூலேசுற்றி யாருடனே தேங்காயை மேலேவைத்து
கைத்திடவே மாவிலையை கவசம்பூண்டு கலசத்தின் கீழுநவதானியங்கள்
மெய்த்திடவே தான்பரப்பி கலசம்வைத்து மேன்னையுடன் கலசமது யெதிர்நேராக
பைத்திடவே மஞ்சளென்ற பிள்ளையாரை பக்குவமாய் எதிர்வாசல் வைக்கநன்றே
1531.
நன்றான ரீங்கார மோங்காரத்தை நலமுடனே வஷ்டதிசை வாசல்போடு
குன்றான வயிரவனை முன்னேவைத்து கூறுவாய் யங்சிங்வங் கென்றேயோது
பன்றான சதுர்வாசல் தூபதீபம் பாகுடனே பாணக்கம் பகுந்தவன்னம்
வன்றான வுருதானும் லட்சமோது வயிரவனார் பூசையது வகுத்தவாறே
1532.
வாரான வாதமது முடிந்தாரானால் வளமுடனே வயிரவன் பூசைவேண்டும்
சீரான தங்கமது பலிக்கும்பாரு ஜெகத்தினிலே சித்தர்களுஞ் செய்வாரப்பா
கூரான புத்தியுடன் குருபதத்தை கொப்பனவே தான்வணங்கி நிற்கவேண்டும்
காரான காலாங்கி நாதர்பாதம் கடாட்சித்துத் தொழுகவென்று பாடினேனே

1533.
பாடினேன் முத்துயென்ற வைப்புசொல்வேன் பாங்குபெற மாணாக்கள் பிழைக்கவென்று
தேடியே முத்தினுட சிப்பினோட்டை தெளிவான வெண்மைநிறம் போன்றதாக
கூடியே ஒருசேருதானெடுத்துக் குடிலமுடன் தானிடித்து பிழிந்துகொண்டு
ஆடியே நவநீதம் வெண்ணைப்போல அப்பனே தானெடுத்து வளமைசெய்யே
1534.
வளமையென்ன சொல்லவென்றால் பயணங்கேளு வாகான நீதமுடன் குடோரிகாரம்
பளமையாம் கட்டினதோர் காரந்தானும் படிகமாம் சீனமென்ற பதியினுப்பு
மளமையாமிதுவெல்லாஞ் சரியாய்க்கூட்டி மார்க்கமுடன் மூசையிட்டு சீலைசெய்து
தளமையா யுலையிலிட்டு வுருக்கிப்பாரு தளுக்கான முத்துபோல் வெளுக்கும்பாரே
1535.
வெளுப்பான மத்ததனை யுடைத்துப்பாரு வெகுளாமல் சிறுமணியாங் கருவுகட்டி
பளுக்கான மூசையிட்டு வுருக்கித்தீரு பாலகனே கருக்களிலே துவாரமிட்டு
சுளுக்கான கருக்களிலே வார்ப்பாயானால் சூட்சமுடன் முத்ததுவும் பாய்ந்துநிற்கும்
தளுக்கான முத்ததனை யெடுத்துக்கொண்டு தண்மைபெற ராஜரிடம் சென்றுபாரே
1536.
சென்றமே யவர்களிடஞ் சிறக்கவேதான் சீரான மத்ததனைக்கணிதமிட்டு
குன்றைபோல் திரவியங்கள் மிகவும்பெற்று கோடானகோடி மரியாதைபூண்டு
நின்றமே யவர்களிடம் விடைகள்பெற்று நீணிலத்தில் நீயமொரு வரசனாவாய்
நன்றுமே காலாங்கி நாதர்பாதம் நலமுடனே யான்வணங்கி பாடினேனே
1537.
பாடியே தளமென்ன கெம்புராசி பழுதுள்ள காய்ச்சக்கள் தன்னிலொப்பாய்
ஆடியே சேரொன்று வாங்கி மைந்தா அழகான குருந்தக்கல் நாலிலொன்று
தேடியே கட்டினதோர் காரமொன்று தெளிவான பூநீறு நாலிலொன்று
கூடியே வறுவகை ஜெயநீர்தன்னால் குணமுடனே தானரைப்பாய் சாமம்நாலே
1538.
நலமான சாமமது மரைத்துமைந்தா நலமுடனே மூசையிட்டு சீலைசெய்து
காலான ரவிதனிலே காயவைத்துக் களிப்புடனே வுலையிலிட்டு வூதித்தீரு
சேவான சரக்கதுவும் ஒன்றாய்ச்சேர்த்து செழிப்புடனே தானுருகி சிவப்புமெத்த
பாலான முகம்விட்டு கண்விட்டாடும் பாலகனே கருக்கட்டி வார்த்திடாயே
1539.
வார்க்கவென்றால் சிறுகருவாம் பொடியாய்ச்செய்து வளமாகத் தானெடுத்து வார்ப்பாயானால்
தீர்க்கமுடன் மணிபோல விறுகிக்கட்டும் திறமான செப்பினுட வலுவுகாணும்
பார்க்கவே வேண்டுமென்றால் அதீதமெத்த பாரினிலே சித்தர்செய்யும் வேதைமார்க்கம்
சேர்க்கவே படிகமென்ற சானைதன்னில் சிறப்புடனே தான்கொடுக்க வொளிகாணுமே
1540.
ஒளிவான கெம்பினுட மகிமைமெத்த ஓகோகோ வுலகுதன்னில் செய்வாருண்டோ
தெளிவான கெம்பெடுத்து ராஜர்மார்க்கம்சென்று வெகுமதிப்புடனே லாபங்காணீர்
நெளிவான வித்தையிது யாருஞ்சொல்லார் நீணிலத்தில் மாணாக்கள் பிழைக்கவென்று
கனிவுடனே காலாங்கிதன்னைப்போற்றி கருவாகப் பாடிவிட்டேன் போகர்தானே

1541.
தானான சூடனது பலமேவொன்று தாக்கான சீனமது பலமோகால்தான்
வேனான சாம்பிராணி பலமோகால்தான் மூக்கான மதியுப்பு பலமோகால்தான்
பானான பூநீறு பலமோகால்தான் பாங்கான தாழையுப்பு பலமோகால்தான்
கோனான கோரையுட கிழங்குதானும் குணமான வாடையென்ற  காறமாமே
1542.
காரமாங் கஸ்தூரி மஞ்சள்தானும் கருவான ஏலக்காய் தன்னோடொக்க
வீரமா மிலாக்காயின் சந்தனந்தான் விரைவான கிளியூறல்பட்டைதானும்
கோரமாம் பச்சலைக்கிச்சிலிதான் கூட்டி கோமகனே கவனமுடன் வராகன்சேரு
தீரமாம் ஆவினுட நெய்யில்தானும் தீர்க்கமுடன் தானெரிப்பாய் சாமமெட்டே
1543.
எட்டான சாமமது வரைத்தபோது யெழிலான மெழுகதுபோலாகும்பாரு
வட்டான பீங்கானுக்கைள்ளேபோட்டு வளமுடனே மேல்பீங்கான் புனுகுபூசி
திட்டான சட்டிதனில் மணல்தான்கொட்டி திறமுடனன பூங்கானும் நடுவேவைத்து
மட்டான மணலதனைமேலேகொட்டி மார்க்கமுடன் தானெரிப்பாய் சாமமொன்றே
1544.
ஒன்றான சாமமது யெரிந்தபோது வுத்தமே மேற்பதங்க நின்றுமேதான்
குன்றான பீங்கான்மேல் தேங்காய்ப்போல பிறைபோல வொளிவதுவாயேறிநிற்கும்
தன்றான தகடதுதான் வெளியிற்காட்டும் தயவான பூரமது பச்சைப்பூரம்
பன்றான ராசர்களுக்குகந்த பூரம் பாரினிலே சித்தர்செய்யும்பூரமாமே
1545.
பூரமா மின்னமொரு வைப்புகேளு போக்கான ரத்தமென்ற யாளந்தானும்
வீரமாம் வேங்கைமரப்பிசினுங்கூட்டி விகற்பமுடன் பழந்தின்னும் வௌவாளெச்சம்
காரமாங் கலைமானின் ரத்தத்தாட்டி கசகாமல் தாழைமலர் கவசஞ்செய்து
தீரமாஞ்சட்டிக்குள் பொதிந்துமூடி திட்டமுடன் பூமிதனில் புதைத்திடாயே
1546.
புதைத்துமே மண்டலஞ்சென்றெடுத்துப்பாரு புகழான கஸ்தூரியென்ன சொல்வேன்
சிதைத்துமே ஜலந்தனிலே போட்டுப்பார்த்தால் சிறப்பான ரத்தமது போலேயோடும்
கதைத்துடனே சன்னிக்குக் காலனாகும் கடிதான வைப்புமல்லோ சீனவைப்பு
விதைத்துடனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வோம் விரைவுடனே கேட்பவருக்கு யினஞ்சொல்வேனே
1547.
சொல்லுதற்கு நாவுமில்லை யாவுமில்லை துரைகோடி முறைகோடி தொந்தங்கோடி
வெள்ளுதற்கு காண்டாவின் மிருகமப்பா வெழிலான வுதிரமது படிதானெட்டு
கொல்லுதற்குக் கருங்காலி பட்டைதானும் குணமான காசியென்ற கட்டிதானும்
புல்லுதற்கு கிராம்புடனே யேலந்தானும் புகழான கெவுரியையும் சரியாய்கூட்டே
1548.
கூட்டவே நாற்சாமமரைத்துமேதான் குணமான சாடியென்ற  பாண்டத்துள்ளே
மாட்டவே முதற்றிரமாம் பன்னீர்தானும் மயங்காமல் நிறையவிட்டு தாளிக்கேற்றி
தீட்டவே சீலையது மேலேசெய்து திட்டமுடன் யெரித்திடுவாய் மூன்றுநாளும்
நீட்டமுடன் சரக்கெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து நேர்ப்பாக வுதிரமுடன் கட்டிப்போமே

1549.
போமேதான் பாண்டமது திறந்துபார்க்க பொங்கமுடன் சீனமது வைப்புமார்க்கம்
ஆமேதான் சரக்கினிட வேகமெத்த மப்பனே நாசிதனில்முகரும்போது
வேமேதான் வுதிரமது கலக்கங்காணும் வாரைவான சூடதுதான் கபாலத்தோடும்
போமேதான் கஸ்தூரி யென்னசொல்வேன் புகல்வரோ சித்தர்முனி சொல்லார்தாமே
1550.
தாமேதான் போகரிஷிசொன்னமார்க்கம் தப்பாது வொருக்காலும் முறைபொய்யாது
வேமேதான் வேணபடி சித்தர்தாமும் வெகுவெகுவாய்ப் பாடிவிட்டார் நூல்கள்தோறும்
நாமேதான் காலாங்கிநாதர்பாதம் நற்கமலந்தாள்வணங்கி வடியஆன்தானும்
போமேதான் பிசகொன்று நேரிடாமல் பூதலத்தில் பிழைக்கவென்று பூட்டினேனே
1551.
பூட்டினே னின்னமொரு கருமானங்கேள் புகழான ரத்தமென்ற பாளந்தானும்
மூட்டினேன் கார்போக வரிசிதானும் முக்கியமாம் வாலுழுவை யரிசிதானும்
தாட்டிகமாம் நீலமென்ற கூகைநீறும் தாக்கான பன்னீரா லரைத்துமைந்தா
நீட்டமுடன் பாண்டத்தில் லிடித்துப்போடு நேர்ப்பாக பூமிதனில் புதைத்திடாயே
1552.
புதைத்தவுடன் நீரெல்லாம் சுண்டவேதான் பொங்கமுடன் கருநிறமாயிருக்கும்பாரு
சிதைத்துமே நாசிதனில் முகந்திட்டாக்கால் திக்காடுஞ் சுவாசமது திணறிக்காட்டும்
பதைத்துமே மேனியது சிலிர்ப்புகாணும் படுஞ்சுலுக்கு கஸ்தூரி சொல்லப்போமோ
மிதத்துடனே மருந்துகளில் சேர்க்கவேண்டும் மிக்கான போகருட வைப்புதானே
1553.
வைப்பான மின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான கமலமுனி சொன்னமார்க்கம்
வைப்பான காசியென்ற கட்டிதானும் வாகான கருவாயின்பட்டைதானும்
வைப்பான வவிரியுட சார்தான்கூட்டி வளமான வொட்டகத்தின் வுதிரந்தானும்
வைப்பான சரக்குடனே வுதிரவேங்கை வளமுடனே தான்சேர்த்து வரைத்திடாயே
1554.
அரைக்கவே பன்னீராலரைக்கவேண்டும் அப்பனே சாடிதனில் பொதியவேண்டும்
திரைக்கவே பூமிதனில் புதைக்கவேண்டும் திகழான மண்டலந்தான் சென்றபின்பு
நிறைக்கவே குழிதோண்டியெடுத்துப்பாரு யென்மகனே கஸ்தூரி யென்னசொல்வேன்
பரைக்கவே ராசரிடம் சென்றுமேதான் பாங்குடனே வெற்றியது பெறலாம்பாரே
1555.
பாரேதான் வயமதுவும் பலம்பத்தாகும் பாங்கான தாளகமும் பலமைந்தாகும்
சீரேதான் யெரிகாலான்பாலாலாட்டி சிறப்புடனே வெண்காரம் பொரித்துப்போடு
கூரேதான் வச்சிரமாங் குகைதனில்வைத்து குமுறவே மேல்மூடிசீலைசெய்து
நேரேதான் சரவுலையில் வைத்துவூது நேர்ப்பான களங்கமது சொல்லொண்ணாதே
1556.
சொல்லவே சாரமென்ற ஜெயநீர்தன்னால் சுறுக்குடனே தானுருக்கி சாய்ப்பாயானால்
கொல்லவே வயமதுவுஞ்சவுடுநீங்கி குணமாகும் களிம்பூர லற்றுப்போகும்
வெல்லவே செந்தூரஞ்செய்தாயானால் மிக்கான காயத்துக்குறுதியாகும்
புல்லவே தேனதிலே யுண்டுபாரு புகழான தாதுக்களும் வலுத்துப்போச்சே

1557.
போச்சென்று விடுகாதே மைந்தாகேளு பொங்கமுடன் லிங்கமது பலந்தானொன்று
போச்சொன்று மில்லாமல் பீங்கானுக்குள் பேரானபாலதனை விட்டுமைந்தா
நீச்சென்ற பாலதனால் சுறுக்குத்தாக்கு நெடிதான லிங்கமது சுத்தியாச்சு
மாச்சென்ற பழரசமும் நாழியாகும் மகத்தான தேனதுவும் நாழியாமே
1558.
நாழியாம் மேனிச்சார் நாழியாகும் நலமான கையான்சாற் நாழியாகும்
தாழியாம் இலைச்சாறு நாழியாகும் தாக்கான வாதளையின்சாற் நாழியாகும்
கோழியா மிலைமூலிச்சாற் நாழி கொடிதான முசுக்கையுட சாறுநாழி
வாழியாம் படாமூலிச்சாறுநஅழி வளமான கழற்சிக்காய் நாழியாமே
1559.
ஆமேதான் பூலாவுஞ்சாறுநாழி அப்பனே வாதண்டைச்சாறு நாழி
வேமேதான் கொடிக்கள்ளிச் சாறுநாழி வாரைவான தும்பைமலர்ச்சாறுநாழி
காமேதான் பூப்பனையின் சாறுநாழி கருவான விளாவிலையுஞ்சாறு நாழி
போமேதான் பூப்பனையின் சாறுநாழி பொலிவான கஞ்சாவின் சாறுமாமே
1560.
நாறான குமரிச்சார் நாழியாகுஞ் சதாவேரி மூலியது சாறுநாழி
வேறான முசுட்டையுட சாறுநாழி மிக்கான கவுதும்பை சாறுநாழி
கூறான மத்தங்காய் சாறுநாழி குணமான சிவதைவேர் சாறுநாழி
பாறான தேட்கொக்கு சாறுநாழி பாங்கான முருக்கன்சாற் நாழிகூட்டே
1561.
கூட்டவே முடக்கொத்தான் சாறுநாழி குறிப்பான தக்காளிசாறுநாழி
மாட்டவே பழுபாகல் சாறுநாழி மதிப்பான குவளைச்சாறு நாழியாகும்
நீட்டவே திருக்கள்ளிச்சாறுநாழி நெடிதான பாலையுடச்சாறுநாழி
மூட்டவே பெருந்தாளிச்சாறுநாழி முனையான பொன்முசுட்டைச் சார்தான்சேரே
1562.
சேர்க்கவே விவையெல்லா மொன்றாய்ச் சேர்த்து சிறப்பாக லிங்கத்திற் சுறுக்குதாக்கு
ஏர்க்கவே லிங்கமது கட்டிப்போகும் எழிலான லிங்கமது வுறுக்குபோலாம்
பார்க்கவே வெட்டுருக்குபோலேகாணும் பாங்கான லிங்கமது சொல்லப்போமோ
தீர்க்கமுடன் கவசமது சொல்வேன்பாரு தெளிவான சரக்குகளுஞ் சாற்றக்கேளே
1563.
கேளேநீ வெடியுப்பு பலமொன்றாகும் கெடிதான வந்துப்பு பலமொன்றாகும்
சூளேதான் பூநீறு பலமொன்றாகும் சுடரான துருசதுவும் பலமொன்றாகும்
வீளேதான் படிகாரம் பலமொன்றாகும் மிக்கான காரமது பலமொன்றாகும்
பாளேதான் கெந்தியது பலமொன்றாகும் பருவமாம் வளையலுப்பு பலமொன்றாமே
1564.
ஒன்றான வுப்புடனே சாரமொன்றாம் ஒளிவான தாளகமும் பலமொன்றாகும்
குன்றான வீரமது பலமொன்றாகும் குறிப்பான பூரமது பலமொன்றாகும்
நன்றான குணங்கியது பலமொன்றாகும் நலமான தொட்டியது பலமொன்றாகும்
அன்றான வறுவகை ஜெயநீர்தன்னால் அப்பனே நாற்சாம மரைத்திடாயே

1565.
அரைக்கவே மைபோலே வெண்ணையாகும் அப்பனே மெழுகதனையெடுத்துக்கொண்டு
திறைக்கவே தசபங்காய் செய்துகொண்டு தெளிவான லிங்கத்திற் கங்கிபூட்டி
மரைக்கவே சுண்ணாம்பு சீலைசுற்றி மார்க்கமுடன் ரவிதனிலே காயவைத்து
விரைக்கவே மணல்மறைவிற் புடத்தைப்போடு வீரமுடன் லிங்கமது கட்டிப்போமே
1566.
போமேதா னிப்படியே புடமேபத்து பொங்கமுடன் மாறாமல் புடத்தைப்போடு
வேமேதான் லிங்கமது கவசம்நீக்கி மேன்மையுடன் தான்பார்க்க வுருக்குமாகும்
சாமேதான் லிங்கமது யெடுத்து மைந்தா சாங்கமுடன் தங்கமது பத்துக்கொன்று
நாமேதான் சொன்னபடி தங்கரேக்கை நயமாக லிங்கத்திற் கங்கிசுத்தே
1567.
சுத்தியே குன்றிமணி பசையினாலே சூட்சமுடன் விராலியிட தயிலங்கேளு
பத்தியுடன் பீங்கானுக்குள்ளே வைத்து பாலகனே எருக்கன்பால் சுருக்குதாக்கு
துத்தியுடன் தீநெருப்பை மூட்டிக்கொண்டு சுடரொளியின் மேல்வைத்து வாட்டுமார்க்கம்
புத்தியுடன் விராலியிட தயிலத்தாலே பொங்கமுடன் சுருக்கிடவே மெழுகுமாமே
1568.
மெழுகான பதம்பார்த்து மைந்தாகேளு மேன்மையுடன் யெருக்கன்பால் சுருக்குதாக்கு
நழுவான வராகத்தின் நெய்யால்மைந்தா நலமுடனே நாற்சாமம் சுறுக்குதாக்கு
வழுகாது மெழுகாகும் சிவத்துக்கொப்பாம் வாகான மெழுகெடுத்து பதனம்பண்ணு
தொழுகாத வயிரவரை பூசித்தேதான் தோற்றமுடன் கொடுக்கும் விதிசொல்லுவேணே
1569.
சொல்லவே வெள்ளிதனில் நூற்றுக்கொன்று சூட்சமுடன் தானுருக்கி மாற்றைப்பாரு
வெல்லவே மாற்றதுவு மெட்டதாகும் மேன்மைபெற செப்பிலே கொடுத்துப்பாரு
கொல்லவே செம்பினிட வூறல்நீங்கி குருமருந்தால் செம்பினிலே நூற்றுக்கொன்று
புல்லவே கொடுத்திடுவாய் மாற்றோ பத்து குறையாது வித்தையிது அதீதந்தானே
1570.
தானான சித்தர்முனி ரிஷிகள்தாமும் தயவுடனே செய்யமிந்த வேதையாகும்
கோனான குருவருளைப் பெறவேவேண்டும் பெறாவிட்டால் வாதமது வாய்க்குமோசொல்
தேனான மனெனொன்மணியை பணியவேண்டும் பணியாட்டால் வாதசித்தி கிடைக்குமோசொல்
பானான பராபரியைத் துதிக்கவேண்டும் துதியாட்டால் விட்டகுறை லபியாதாமே
1571.
ஆமேதான் சித்தர்முனி ரிஷிகள்சாபம் அப்பனே முன்னின்று வகற்றவேண்டும்
போமேதான் குருபதத்தை வணங்கவேண்டும் வணங்காட்டால் காயுமில்லை பூவுமில்லை
வேமேதான் சித்தருடன் வாதுபேசி வேதாந்த தாயினது வருளினாலே
நாமேதான் காலாங்கி வரமும்பெற்று நாட்டினிலே மாணாக்கள் பிழைக்கத்தானே
1572.
பிழைக்கவென்று சீனபதிசென்று மேதான்பிழைமோசம்நேராமல் கருவாய்கண்டு
தழைக்கவே தாரிணியில் பிழைக்கவென்று தடுமாற்றம் வாராமல் மைந்தாயானும்
பழக்கமுடன் கிட்டிருந்து தொண்டுசெய்து பலகாலுங் கைமறைப்பை பழுதாராய்ந்து
வழக்கமுடன் சீனம்விட்டு வந்தேனே தெட்சணத்தில் பாதைதாமே

1573.
பாதையால் வந்துனக்கு பாகஞ்சொன்னேன் படுங்காளி முழுமங்களானபேரை
வாதையுடன் தானகற்றி தூரத்தள்ளி வளர்ப்பமுடன் கைமசக்கு யாருங்காணார்
வேழைமுக முன்னிருந்து சித்தன்போல மேதினியில் துஷிடர்களை யகலத்தள்ளி
கோதையென்னுஞ் சமுசார மாய்கைநீக்கி குணமுடனே யிவ்வேதை செய்வாய்தானே
1574.
செய்குவாய்ப் பராணாயந்தன்னில்நின்று சிறப்புடனே சிதானந்தம் பாசம்நீக்கி
உய்குவாய் சடாட்சரத்தை உச்சரித்து வுத்தமனே சுடரொளியைக் கண்டுபோற்று
வைகுவார் தன்னைமனமெதிர் நோகாமல் வாசவனே முன்னிருந்து வம்பாள்பாதம்
மைகுடனே வம்பரத்தை மேலேகும்பி வரமுடனே வாழ்கவென்று வசனித்தேனே
1575.
வசனித்தே னின்னமொரு கருமானங்கேள் வாகுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
தூசனித்த பாஷாணம் பலமொன்றாகும் துடியான சிப்பியென்ற சுன்னந்தானும்
பசனித்த சுக்கான்தன் சுண்ணந்தன்னை பாகுடனே பாஷாணத்தங்கிபூட்டி
நிசினித்து சட்டியிலே மணல்தான்கொட்டி நிறையவே மணலாகில மூடிப்போடே
1576.
போடவே நாற்சாம மெரித்தபோது பொங்கமுடன் தீயாறி யெடுத்துப்பாரு
நாடவே பாஷாணஞ்சுத்தியாச்சு நலமான கட்டிதனை யெடுத்துக்கொண்டு
மூடவே வெள்ளியென்ற ரேக்குதன்னால் முறைப்படியே பாஷாணத்தங்கிபூட்டி
மாடவே சாரையென்ற சர்ப்பந்தன்னால் மார்க்கமுடன் தானெடுத்து கொழுப்பை வாங்கே
1577.
வாங்கியே கொழுப்புநிகர் வீரஞ்சேர்த்து வாகுடனே பாஷாணஞ் சுருக்குதாக்கு
தேங்கியே போகாமல் மெழுகுபண்ணு தெளிவான செம்புதனை வெள்ளிபண்ணு
ஓங்கியே யச்செம்பு நாலுக்கொன்று வுத்தமனே மெழுகெடுத்து குருவொன்றீய
ஏங்கியே திரியாதே மைந்தாகேளு யெழிலான வித்தையது வதீதங்காணே
1578.
காணவே வெள்ளியென்ற செம்புதன்னில் கருவான வெள்ளியது நாலுக்கொன்று
பூணவே தான்சேர்த்து வுருகிப்பாரு புண்ணியனே துய்யனுக்கிணைவேறுண்டோ
தோணவே பாஷாணமிகவேதிக்கும் துறைகோடி முறைகோடி தொந்தங்கோடி
நாணவே சித்தரகள்தான் செய்யுமார்க்கம் நலமுடனே மானிலத்தில் செய்யலாச்சே
1579.
செய்யவே யின்னமொரு மார்க்கங்கேளு தெளிவான தாளகமும் பலமொன்றாகும்
நையவே துருசுடனே சாரநீரால் நவிலவே தானரைத்து மெழுகுபண்ணு
துய்யவே தாளகத்துக்கங்கிபூட்டி துடியுடனே சுண்ணாம்புச்சீலைசெய்து
பையவே கொழியென்ற புடத்தைப்போடு பாங்கான தாளகமும் கட்டிப்போமே
1580.
போமென்று விடுகாதே பூபாகேளு புகலுவே னின்னமோரு மார்க்கம்பாராய்
காமென்ற கடுக்கார்சீனமொன்று கலறவிட்டு ஜெயநீரா லரைத்துமேதான்
வேமென்ற தாளகத்துக் கங்கிபூட்டி விரைவுடனே சுண்ணாம்பு சீலைசெய்து
பாமென்ற வெயில்தனிலே காயவைத்து பாலகனே கோழியென்ற புடத்தைப்போடே

1581.
போடவே தாளகமுஞ் சிவந்துமின்னும் போக்கான சரக்கதுவும் கட்டிப்போகும்
நீடவே வங்கமது போலேகாணும் நீணிலத்தில் வாதிமெச்சும் வங்கமாச்சு
கூடவே வங்கமதை தானெடுத்து குறிப்புடனே காரமது காலாய்ச்சேர்த்து
போடவே மூசைதனிலுக்கித்தீரு பொங்கமுடன் தாரத்தின் வங்கமாமே
1582.
வங்கமென்றால் வங்கமது சொல்லப்போமோ வளவான தாரத்தின் வங்கமாகும்
பங்கமொன்றுஞ் சொல்லாத வங்கமாகும் படுமுன்னே சூதத்தைக் கட்டிக்கொள்ளும்
தங்கமென்ற லோகமதை சரியாய்க்கூட்டித் தாக்கிடவே தங்கமது வங்கமாகும்
அங்கமுடன் தங்கமது வங்கமானால் அவனியிலே வாதவித்தை பார்க்கப்போமோ
1583.
போமென்று விடுகாதே மைந்தாகேளு பொங்கமுடன் கெந்தியது நாலுக்கொன்று
வேமென்ற சிலையதுவு மொன்றேயாகும் மிக்கான காரமதுவொன்றேயாகும்
பாமென்ற வீரமது வொன்றேயாகும் சடுக்கான வளையலுப்பு வொன்றேயாகும்
யாமென்ற படிகாரமொன்றேயாகும் பாங்குடனே விவையெல்லாம் ஒன்றாய்க்கூட்டே
1584.
கூட்டியே தானரைப்பாய் ஜெயநீர்கேளு குறையாத சாரமென்ற ஜெயநீர்தன்னால்
தாட்டிகமாய் தானரைப்பாய் நாலுசாமம் சட்டமுடன் ரவிதனிலே காயப்போடு
நீட்டமுடன் சரக்கதனை பொடிதாக்கி நிலவரமாய் குழிக்கல்லில் பொடித்துக்கொண்டு
வாட்டமுடன் காசியென்ற குப்பிகொண்டு வளமான சீலையது வேழுசெய்யே
1585.
செய்யவே காசிபென்ற மேருதன்னில் சிறப்புடனே மருந்தெல்லாங் குகையிலிட்டு
பையவே மரக்காலால் கொண்டுமூடி பாங்குடனே சீலையது வலுவாய்செய்து
மையவே சட்டிதனில் மணல்தான்கொட்டி மார்க்கமுடன் மேல்சட்டி கொண்டுமூடு
துய்யவே சீலையது வலுவாய்ச்செய்து தோராம வாலுகையிலேற்றிடாயே
1586.
ஏற்றவே சாமமது யிருபதாகும் யெழிலான தீமூட்டி யெரித்தாயானால்
மாற்றமுடன் செந்தூரமென்ன சொல்வேன் மயங்காதே வருண்மைந்தா புகலக்கேளு
சீற்றமென்ற செம்புதனில் பத்துக்கொன்று திறமுடனே தானுருக்கிக் கொடுத்துப்பாரு
கூற்றமென்ற வூரலதுயெங்கேபோச்சு குணமான செம்பதுவு மாற்றமாச்சே
1587.
மாத்தான பொன்னதுவும் பசுமைமெத்த மண்டலத்தி லார்செய்யப்போராரப்பா
நீத்தான சித்தர்முனி செய்வாரப்பா நேர்மையுடன் கருவாளி செய்வான்பாரு
கூத்தான கூத்துவிது சித்தர்கூத்து குவலயத்தில் முழுமக்கள் செய்யமாட்டார்
நாத்தான நாதாக்கள் செய்யமார்க்கம் நலமுடனே யங்களுக்காக வுரைத்திட்டேனே
1588.
உரைத்திட்டேன் காலாங்கிதனைநினைத்து உத்தமனே ஒருகோடி நூலைப்பார்த்து
நிரைத்திட்டேன் சாத்திரத்தி னுளவையெல்லாம் நேர்மையுடன் பிழைக்கவென்று யானுஞ்சொன்னேன்
குரைத்திட்டேன் சித்தர்சொன்ன நூலையானும் குவலயத்தில் பிழைப்பதற்கு காண்டஞ்சொன்னேன்
உரைத்திட்டே னேழுலட்சங் கிரந்தந்தன்னை யேழைகட்கா யிரக்கம் வைத்துபாடினேனே

1589.
பாடினே னேழாயிரச் சத்தகாண்டம் பாங்குபெற சிமிழ்போல பாடிவைத்தேன்
தேடியே பார்த்தாலும் கிடைக்குமோசொல் தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கு
நாடிநூல்தானும் கிட்டும்பாரு நரகில்விழும் பாவியற்குக் கிட்டுமோசொல்
கூடியே சீனபதி சென்றுயானும் குறிப்புடனே பாடிவிட்டேன் மர்மந்தானே
1590.
தானான வின்னமொரு போக்குகேளு தாக்கான பித்தளைதான் சேர்தானொன்று
கோனான வச்சமென்ற தகடதாக்கி கோர்வையுடன் கடைசரக்கு சொல்லக்கேளு
பானான பாஷாணம் பலங்காலாகும் பதிவான தாளகமும் பலங்காலாகும்
வேனான லிங்கமது பலங்காலாகும் மிக்கான வீரமது பலங்காலாமே
1591.
பலமான பூரமது பலல்காலாகும் பாங்கான கெவுரியது பலங்காலாகும்
நலமான சூடனது பலங்காலாகும் நாற்றமுள்ள கெந்தியது பலங்காலாகும்
சலமான ரசமதுதான் பலங்காலாகும் காந்தமுடன் மதியுப்பு பலங்காலாகும்
சலமான பூநீறு பலங்காலாகும் சார்பான இந்துப்பு பலந்தான்கூட்டெ
1592.
கூட்டியே வறுவகை ஜெயநீர் தன்னால் குமரவே சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி
தாட்டிகாமய் தானரைப்பாய் நாலுசாமம் தகமையுடன் தகடெல்லாம் பூசித்தீரு
வாட்டமுடன் ரவிதனிலே காயவைத்து வாகாகப் புடம்போட விபரங்கேளு
நீட்டமுடன் ஓடதனில் தான்பரப்பி நிலைமையுடன் கோழியென்ற புடத்தைப்போடே
1593.
போடவே தீயாறியெடுத்துப்பாரு பொங்கமுடன் தகடதுதான் வதரேபோகும்
நீடவே குடவனென்ற தகட்டைதானும் நேர்பாக புடம்போட வூரல்போகும்
கூடவே சரக்கதனை தசபங்காக்கி குழம்பாகத் தான்குழப்பி தகட்டிற்பூசி
சாடவே புடம்போட குடவன்செம்பாம் சாங்கமுடன் வெள்ளிக்குத் தாக்கிடாயே
1594.
தாக்குவாய் வெள்ளிக்கு நாலுக்கொன்று தகமைபெற செம்பதனைக் கொடுத்துப்பாரு
நோக்கமுடன் வெள்ளியது வாறுகாணும் நொடிக்குள்ளே வாதவித்தை கைக்குள்ளாச்சு
பார்க்கவே மட்டமது சொல்லப்போமோ பசுந்தங்கம் இரண்டுக்கு வொன்றேசேரு
தூக்கமுடன் தடடடித்து புடத்தைப்போடு துளிரான தங்கமது விரங்கும்பாரே
1595.
பாரேதா னின்னமொரு கருமானங்கேள் பசுந்தங்கம் இரண்டுதுலாம் பகர்ந்தெடுத்து
சேரேதான் மாசியென்ற பத்திரிதன்னால் செழுமையுடன் தானரைத்து புடத்தைப்போடு
நேராஏதான் பத்துமுறை போட்டாயானால் நெடிதான செந்தூரம் சொல்லப்போமோ
கூரேதான் செந்தூரங் குன்றியுண்ணு குணமாகும் மண்டலத்தில் வடிவுகாணே
1596.
காணவே தேகமது மின்னல்தோன்றும் கடிதான ரோகமெல்லாம் மகன்றுபோகும்
பூணவே தாதுகளும் வலுத்துகாணும் புரையோடுஞ் சிலவிஷயங்கள் அற்றப்போகும்
தோணவே நரைதிரையு மாறிப்போகும் தொடராது வாயுவென்ற வெண்பதும்போம்
மாணவே செந்தூரம் வெள்ளிசெம்பில் மாட்டடா பத்துக்கு வொன்று போடே

1597.
போட்டுமே தானுருக்கி யெடுத்துப்பாரு புகழுடனே வேதிக்கும் பொன்னோமெத்த
நீட்டமுடன் கரியோட்டி லூதிப்போடு நிலையானத் தங்கமது கூறப்போமோ
வாட்டமுடன் தகடடித்துப் புடத்தைப்போடு வளமான பசுந்தங்க மாகும்பாரு
நாட்டமுடன் சிவயோகிக் குகந்தபொன்னாம் நலமான சித்தர்செய்யும் வேதையாமே
1598.
வேதையிலே யின்னமொரு கருமானங்கேள் விதமான பெரியகண்ணாகமப்பா
போதையிலே வெண்வங்கந் தன்னோடொக்க புகழான சூடனுடன் கெந்திதானும்
தீதையிலே கெவுரியுடன் தாரந்தானும் திறமான பூரமுடன் சரியதாகும்
பாதையிலே யித்தனையுங்கூட்டிமைந்தா பாங்குடனே பாங்குடனே குழியம்மி லாட்டிடாயே
1599.
ஆட்டவே குமரியுட பாலினாலே அப்பனே யெண்சாமமரைத்த போது
வாட்டமுடன் சரக்குடனே வங்கஞ்சேர்த்து வளமான செந்தூரத் தாதியாகும்
நீட்டமுடன் காசியென்ற குப்பிகொண்டு நேர்மையுடன் சீலையது வேழுசெய்து
மூட்டமுடன் மருந்தெல்லாம் குப்பிக்கேற்றி முனையான மரக்காலால் கொண்டுமூடே
1600.
மூடவே குப்பியென்ற வாயிற்சீலை முயலவே தான்செய்து முசியாமற்றான்
நீடவே சட்டிதனில் மணலைக்கொட்டி நினைவாகக் குப்பிதனை நடுவேவைத்து
சாடவே மேற்சட்டி கவிழ்த்துமூடி சாங்கமுடன் சீலையது வலுவாய்ச் செய்து
போடவே தீயதுதான் சாமம்பத்து பகழ்ச்சியாய் நீயெரிப்பாய் மைந்தாபாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

1601.
பாரேதான் தீயாறியெடுத்துப்பார்க்க பதனமா செந்தூர மென்னசொல்வேன்
சீரேதான் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று திறமாகத் தானுருக்கிக் கொடுத்துத்தீரு
நேரேதான் கரியோட்டில் வூதிப்போடு நேர்ப்புடனே தங்கமது நாலுக்கொன்று
வாரேதான் சேர்த்துருக்கி புடத்தைப்போடு மகத்தான வேதையிது சொல்லொண்ணாதே
1602.
சொல்லவே சித்தர்செய்யும் வேதைமார்க்கம் ஜெகத்தினிலே மானிடர்கள் செய்வாரோதான்
பல்லவே கருவாளி செய்வான்பாரு பூதலத்தில் முழுமக்கள் செய்யப்போமோ
வெல்லவே காலாங்கி நாதர்பாதம் விருப்பமுடன் தாள்பணிந்து செய்யலுற்றேன்
நல்லதொரு ஞானவானாகவென்றால் நானுரைத்த நூலதனை யறிவான்காணே
1603.
தானான பிரகாசமான போகர் சதகோடி சூரியர்போல் பிரகாசிப்பார்
கோனான குருவருளால் தன்னைப்பார்த்து கூறுவேன் யின்னமொரு குருவைக்கேளாய்
வேனான அயமதுதான் ராவிமைந்தா விபரமுடன் பழச்சாற்றில் வூறவைத்து
வூனான அமுரினால் கழுவிப்போட்டு வுத்தமனே யதில்சேர்க்க மருந்துகேளே
1604.
கேளடா அயப்பொடிக்கு ரெட்டிமைந்தா கெணிதமுடன் துருசுடனே காரமாகும்
வாளடா கெந்தகமும் சூடன்வீரம் மார்க்கமாய் யப்பொடிக்கு நாலுக்கொன்று
கோளடா வாராமல் யெல்லாங்கூட்டி குமுறவே சம்பழத்தின் சாற்றாலாட்டி
காளடா வச்சிரமாங் குகையில்வைத்து கலங்காமல் வுலையில்வைத்து வூதிடாயே
1605.
ஊதிடவே அயமதுதான் சரக்குச்சேர்த்து வுண்மையுடன் செம்பதுவாய் வுருகிநிற்கும்
நீதியாம் அயமதுதான் செம்பேயானால் நிலைத்துதடா வாதவித்தை நிஜமதாச்சு
ஆதியாம் அயமதுனால் சகலசித்தும் அப்போதே சித்தியடா தப்பேயில்லை
ஜொதியாங் குருபரந்தன்னருளினாலே சுத்தமுள்ள அயத்தினுட செம்பைவாங்கே
1606.
வாங்கியே செம்புநிகர் தங்கஞ்சேர்த்து வரிசையுடன் தானுருக்கி வைத்துக்கொண்டு
ஏங்கியே திரியாதே மைந்தாநீதான் இன்பமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
ஓங்கியே தானெடுத்து வுருக்கிப்பாரு வுறுதியாம் மாற்று பனிரண்டதாகும்
பாங்குபெற ஜொதிமயந் தன்னைக்காணில் பாலகனே சிவயோகம் பலிக்குந்தானே
1607.
தானான பொதிகைமலை வைப்புசொல்வேன் தாக்கான தென்பொதிகைதன்னிலோரம்
வேனான மடாலயமண்டபந்தான் வெளியான சுனைகரைகளங்குமுண்டு
பானான வாய்க்கால் மண்டபத்தில் படியோரம் வோராளின் மட்டந்தன்னில்
கோனான குருகூட்டம் சித்தர்கூட்டம் கோடான கோடிபொருள் வைத்திட்டாரே
1608.
வைத்திட்ட திரவியங்கள் மெத்தவுண்டு மானிலத்தில் சித்தர்வைப்பு யார்தான் காண்பார்
கைத்திட்ட திரவியத்தை யெடுக்கவென்றால் கதவுடனே தாளனைத்து சீலுமாட்டி
மெய்த்திட்ட காப்பனென்ற காத்தராயன் மேல்வாசல் தனில்காவல் வீற்றிருப்பான்
மைத்திட்ட வடபுரத்தில் பூதங்காவல் மானிடர்கள் யாரேனுஞ் சொல்லார்பாரே

1609.
பாரேதான் திரவியத்து யெடுக்கவென்றால் பராசத்தியுட கிருபையதுபெறவேவேண்டும்
சீரேதான்னன்நடக்கை கொள்ளவேண்டும் சீர்தப்பி தீவிணையை யகற்றவேண்டும்
நேரேதான் மனோன்மணியாள் பூசைவேண்டும் நெறிமுறைமை தவறாத வருளேவேண்டும்
கூரேதான் சிற்பரத்தை நாடவேண்டும் கோடியுகந்தானிருக்க கற்பந்தேடே
1810.
தேடவே கையாளின் மூலிதானும் தெளிவான நற்கையாள் மூலிதானும்
கூடவே மேனியுட மூலிதானும் குணமான கஞ்சாவின் மூலிதானும்
நாடவே கருவேளிமூலிதானும் நலமான வெள்வேலி மூலிதானும்
சாடவே பேய்விரட்டி மூலிதானும் சாங்கமுடன் விரலியான் மூலியாமே
1611.
மூலியாம் தைவேளை தழையுமாகும் முயலான கவுதும்பை தழையுமாகும்
பாலியாம் பாவட்டையி னிலையுமாகும் பாங்கான வாதண்டைத்தழையுமாகும்
சாலியாம் தும்பையிட யிலையுமாகும் சார்பான வழுதலையி னிலைதானாகும்
வேலியாம் பருத்தியுட மூலிதானும் வேரானகொடிவேலி தழையுமாமே
1612.
தழையான சங்கனிட மூலியாகும் தாக்கான புங்கனிட மூலியாகும்
மழையான பேய்ச்சுரையாம் பணிநாக்கோடு மகத்தான பாற்சரண்டினிலைதானாகும்
குழையான கொள்ளுக்கா மூலிதானும் கோடான சுழிமூலி நிலைதானாகும்
இழையான யிண்டிலையுனிலையுமாகும் மெழிலான கோறையுட யெலையுமாமே
1613.
இலையான விஷமூலி யெலையுமாகும் எழிலான பம்பையுட பொன்முசுட்டை
தலையான பரட்டையுட மூலிதானும் தனியான குணமூலி வெளிச்சிமூலி
கலையான நக்கியென்ற மூலிதானும் கடிதான பற்பாட மூலிதானும்
வலையான சின்னியுட மூலிதானும் வகுப்பான குறுந்தொட்டி மூலியாமே
1614.
ஆமேதான் செந்தூரா மூலிதானும் அப்பனே கருவாளிமூலிதானும்
வேமேதான் விழிவிரட்டி மூலிதானும் வெடிப்பான காந்தியுட மூலிதானும்
போமேதான் மலைதாங்கி மூலிதானும் போக்கான சிறுதும்பை மூலிதானும்
தாமேதான் தீக்கோட்டான் மூலிதானும் தாக்கான சூரியென்ற மூலிபாரே
1615.
பாரேதான் தக்காளிகொன்றைமூலி பாங்கான வெண்ணொச்சியிலையுங்கூட்டு
சீரேதான் குட்டிவிலா மாவின்கொன்றை சிறப்பாக கூர்மல்லி பாளைதானும்
நேரேதான் வெவ்வல்லி பத்திரிதானும் நெடிதான வெள்ளல்லி மூலிதானும்
கூரேதான் பிரமராட்சதையுங்கூட்டி பேரான நற்றும்பை தானுங்கூட்டே
1616.
கூட்டியே ரவிதனிலே காயவைத்து குறிப்புனே யொவ்வொன்றும் பொடியாய்தெள்ளி
தாட்டிகமாய்ச் சர்க்கரைதான் சமனாய்ச்சேர்த்து சார்புடனே நெய்தேனிற் கொண்டாயானால்
வாட்டமுடன் சேத்துமங்கள் தொண்ணூற்றாறும் வாகான வாயுவென்ற தெண்பதும்போம்
தேட்டமுடன் பித்தமென்ற நாற்பதும்போம் தெளியாகும் திரேகமது யிறுகுங்காணே

1617.
காணவே தேகமது கற்றூணாகும் கருவான நரம்புகளும் முறுக்கிக்காட்டும்
தோணவே சதாகாலமிருக்கலாகும் துன்பமென்ற சாகரத்தை விட்டொழித்து
மாணவே சதாநிதம் பூசித்தேதான் மகத்தான கெவனமுதல் கொள்ளலாகும்
வேணவே சமாதியிலே யிருக்கலாகும் வெகுகோடி காலமட்டும் தேகம்போமோ
1618.
போகாது கற்பாந்திரகாலமட்டும் பொலிவான தேகமது இரும்புபோலாம்
வேகாது சடந்தானும் தீயில்தானும் விருப்பமுடன் கோடியுகங் காணலாகும்
சாகாது பூமிதனிலிருந்துகொண்டு சதாகாலம் வாமியைத்தான் பூசிப்பாய்நீ
ஆகாது லோகமென்ற மாய்கைநீக்கி வப்பனே யெனைப்போல யாகுவீரே
1619.
ஆகவென்றா லின்னமொரு கருமானங்கேள் அப்பனே வபினியென்ற வைப்புசொல்வேன்
வாகமுடன் கடுகுடனே கசகசாவும் பாங்கான கஞ்சாவும் கஞ்சாவும் சரியாய்தூக்கி
வேகமுடன் மராட்டியமா மொக்குதானும் விசையுடனே கியாழமது செய்துகொண்டு
தோகமுடன் சரக்கதனை வரைப்பாய்மைபோல் தொவுரதனை தான்போக்க
முறைதான்கேளே
1620.
கேளேநீ சினமென்ற வெல்லந்தன்னை கிருபையுடன் பாகுபதஞ் செய்துகொண்டு
கோளேதான் வாராமல் மைந்தாகேளு கொப்பெனவே சரக்கதனை கிளரிக்கொண்டு
பாளேதான் போகாமல் மெழுகெடுத்து பான்மைபெற பரணிதனில் பதனம்பண்ணு
தாளேதான் அபினியது சொல்லப்போமொ தாரணியில் மானிடர்கள் பிழைக்கத்தானே
1621.
தானான வபினியது மயக்கமெத்தத் தாரணியில் நாதாக்கட்குகந்தபோதை
வேனான யிடுமருந்து பாஷாணந்தான் மிக்கான புத்திதனை மயக்கப்பண்ணும்
கோனான குருவருளா லிந்தபாகம் குணமாகப்பாடிவைத்தேன் மாந்தர்க்காக
தேனான காலாங்கி தன்னைப்போற்றி தேற்றமுடன் சதாகாலம் தவத்தில்நில்லே
1622.
நில்லவே போகரிட வுப்புமணியைக்கெளு நிலையான மணியதுவும் சித்தர்வேதை
புல்லவே சாகரத்தில் சலவேயாகும் போக்கான படிரண்டுவளந்துவாரு
கொல்லவே சொ்த்துப்பு படியேவாகும் குணமான வளையலுப்பு படியேயாகும்
வெல்லவே விதுரண்டும் பொடியதாக்கி மேன்மையுடன் காச்சும்வகை செப்பக்கேளே
1623.
செப்பவென்றால் ஜலந்தனிலே வுப்புக்கொட்டி சீலமுடன் தான்கரைத்து தெளிவைவாங்கி
ஒப்பமுடன் சீலையது வேடுகட்டி வுத்தமனே வடுப்பேற்றி யெரிப்பாயப்பா
தெப்பமுடன் நீரெல்லாம் சுண்டியேதான் தெளிவுபெற வுப்பதுவும் வட்டுப்போலாம்
நெப்பமுடன் தானிருக்கும் வுப்பைத்தானும் நேர்ப்பாக சரண்டியதை யெடுத்திடாயே
1624.
எடுத்துமே மறுசட்டிதானெடுத்து எழிலான கடல்ஜலம்தான் படிரண்டப்பா
தொடுத்துமே மறுபடியும் வுப்பைக்கொட்டி தொடரவே தான்கரைத்து வடிதான்கொண்டு
விடுத்துமே மேற்கவசம் சீலைகட்டி விருப்பமுடன் தானெரிப்பாய் சுண்டமட்டும்
கொடுத்துமே தானிறக்கி யெடுத்துப்பாரு குடிலமுடன் வப்பதுதான் கரடுமாமே

1625.
கரடான வுப்பதனை யெடுத்துக்கொண்டு கருத்துடனே மறுசட்டி கடல்ஜலந்தான்
பிரட்டாதே பின்னுமந்த சட்டிக்குள்ளே பெரான கடல்ஜலந்தான் படிரண்டிட்டு
வரட்டுடனே வுப்பையெல்லாம் சீவிவாங்கி வளமாக கடல்ஜலத்தில் கரைத்துக்கொண்டு
திரட்டுடனே வடிகட்டி யெடுத்துக்கொண்டு தீர்க்கமுடன் வடுப்பேற்றி யெரிப்பாய்நேரே
1626.
நேரான வுப்பையெல்லாம் சுரண்டிவாங்கி நேர்ப்புடனே மறுசட்டிதன்னிற்போட்டு
கூரான தீநெருப்பில் யெரிக்கும்போது குணமுடனே வுப்பெல்லாம் வுருகிக்கட்டும்
பேரான வுப்பதுவும் வயிரம்போலாம் பெரிதான வயிரமதையெடுத்துக்கொண்டு
சேரான மண்ணான சட்டிதன்னில் தெளிவுடனே காச்சியல்லோ மூசைக்கேற்றே
1627.
ஏற்றவே வுப்பதனைமூசையிட்டு யெழிலான தன்பதத்தி லிறக்கித்தீரு
போற்றவே கருகட்டி சிலைதான் வார்ப்பாய் புகழான சிலையதுவும் பாய்ந்தபின்பு
சீற்றமுடன் சிலையதுவும் சாரணிப்பாய் சிறப்புடனே மேனியென்னும் குப்பைமேனி
தேற்றமுடன் சார்பிழிந்து காய்ச்சி தோய்ப்பாய் தேர்மையுடன் சிலையதுவு மிருகும்பாரே
1628.
பாரேதான் சிலையதுவு மிறுகிக்காட்டும் பாங்கான லிங்கமுடன் துருசுதானும்
சீரேதான் கெந்தியுடன் தாரந்தானும் சிறப்பான சூதமுட னிடையாய்ச் சேர்த்து
வேரேதான் மூலியது விராலிதானும் வேகமுடன் தான்பிழிந்துசரக்கைமைந்தா
கூரேதான் மைபோலரைத்துபின்பு குணமான மருந்தையெல்லாம் சிலையிற்கேற்றே
1629.
சிலையான வுப்பினுட கெதையைமைந்தா சீர்பெறவே கவசித்துப் பூசிப்பின்பு
மலையான வோரமதில் தானேபூர்க்கும் மகத்தான பூநீறு கவசஞ்செய்து
குலையான சித்தர்முனி ரிஷிகளில்லாக் கொலுக்கூடவனந்தனிலே புடத்தைப்போடு
விலையான வுப்பதுவும் சிவந்துமேதான் விண்ணுலகந்தான்மதிக்கு மதீதம்பாரே
1630.
அதிதமாங் கெதையதனை யெடுத்துமைந்தா அழகுபெற குகைவீட்டில் பதனம்பண்ணு
துவிதமு னுந்தனுக்கு வறுமைவந்தால் துடியான கெதையதனை சீவிமைந்தா
நதீதமுடன் செம்பதனில் நூற்றக்கொன்று நாட்டிவே மாற்று பனிரண்டாகும்
பதியான சித்தரமுனி செய்யும் வேதை பாருலகில் யார்செய்வார் நம்பிடாதே
1631.
நிம்பயெண்ணெய் படியாழாக்கரண்டியிட்டு நினைவாக வெள்ளுள்ளி தாரங்கொஞ்சம்
தெம்புடனே விட்டெரித்து சூடுதண்ட திறமான பருவமதில் சிரசிலுற்று
துன்பமது சன்னிதனிற் பிரட்டல்போகுந் துடிப்புள்ள சலவைகளும் சொல்லாதோடும்
நம்பியிட்ட பயிர்போலே நலமதாகும் நாதாந்தமாக போகர்நவின்றிட்டாரே
1632.
கருத்துடைய மானிடர்க்கு பேதிகண்டால் கைக்கடக்கப் பிடியெடுத்து முளகாய்தன்னை
இரத்தியரை வெண்ணைபோல மூளைதன்னிலிதமாகப் பதித்திட்டுப் பின்புரியும்
பொருத்தமுள்ள வன்னிபற்பமுடனேதாக்கு பேருலகில் சன்னியற்று பிழைப்பார்பாரு
வருத்தமில்லை கைகண்டதொழிலுமாகும் வண்மையாம் போகமுனிவழுத்தினாரே

1633.
பேதிகண்டவுடனே தான்பத்துஒத்து பேதமிலா வாக்கிறாணம் கலிக்கம்பற்பம்
நீதியாய் மாத்திரைக ளன்னப்போக்கு நிலையாக வொருநாளிற் செய்துகொள்ளு
ஜோதிபெற நாளிரண்டிற்செய்ய வேண்டாஞ் சுருக்கிலே குளுமைவந்து மூடிப்பொகும்
நாடிதா னில்லாமல் உயிரும்போகும் நலமான போகரிஷி நவின்றவாரே
1634.
நிம்பயிலையிடை யெட்டு வுரலிலிட்டு நேகயிடிபாணிரெட்டி சாலிலிட்டு
தம்பமற வெட்டிலொன்றாய்க் காச்சிக்கொண்டு தனையெடுத்து கிட்டிகட்டிப் பிழிந்துதன்னை
நிம்யிடு அரன்பீசப்பலமுமஞ்சு நிரம்பிட்டு ஒட்டியெரிக்குழம்பதாக
நம்பியெடு கல்வமிட்டு அரைசேர் காமம்நாடி யெடுமெழுகாகும் நாட்டுளோர்க்கே
1635.
ஈரவெங்காயமது கழச்சிக்கொட்டை யிலையிடித்து இரண்டெடையும் படியுமிட்டு
காரமுள்ள முத்தெண்ணெய் படியுமொன்று கருத்தறிந்த தந்திவிரை பலமுங்கால்தான்
கோலமுள்ள ரசமெழுகு பலமுங்கால்தான்கூட்டி யெரிவடிகட்டிப் பூசைசெய்து
பாரமுள்ள யெண்ணையது பணமும்வீதம் பாச்சிட நோய்தீரும் பரிசுகேளே
1636.
பாரிந்த யெண்ணெய்தனை மூன்றுபோது பாச்சிடவே பாரிசமாஞ் சூலையெல்லாம்
சாரியந்தப் படியோடு மேகமெல்லாந்தாக்கி நெய்யடி படுங்காண் மகோதரங்கள்
கூறிந்தப் படிபோகும் வாதமெல்லாங் கொள்ளையது கொண்டாப்போ லோடிப்போகும்
சொரிந்த மேகவெட்டைநீர் களெல்லாம் சுவரிடுங்காண் வாயுவெல்லாம் சூட்சமாமே
1637.
சுவறிடுங்காண் பவுத்திரங்கள் மூலரோகஞ் சொல்லியநீராம்பல் துடிகள்போகும்
கவறதுபோலாகிவிடும் எண்ணைப்போக்கு கைகண்டு போகரிஷி கருத்தில்வைத்து
தவறிடாதெனக்குரைத்தார் லோகத்தோர்தான் பிழைக்கச்சொன்ன திந்தமார்க்கந்தன்னை
எவரிடத்தில் சொல்லாதே புளிப்புதள்ளு இனமாக வுண்வர்க்கு பிணிகள்போமே
1638.
காரியெடை சேர்த்துமே கூடச்சேர்த்துக் காரண்டியிட்டு யிலுப்பைநெய்யி லுருக்கிமெள்ள
சாரியிட்டுப் பத்திரண்டு தரமுங்காச்சி சரியரவே கரண்டியிட்டு வுருக்கிமெல்ல
கூறியதோர் சூதமிட்டு வுருக்கத்தானே நாற்றமற முன்னெண்ணெய் நிறையவிட்டு
பாரியிது பத்துமது யெரியவிட்டுப் பாகமது யெடுத்து நிறையிடைபோகாதே
1639.
போகாதே அன்னமிட்டு வுடைத்துஅன்னம் புட்டியரைவில்லைகட்டு கிடத்திலிட்டு
பாகமாயெரித்திடவே யுயரவேறிப் பார்த்திடவும் எடுத்துவைத்து மடியில்நின்ற
தாகமாய் வில்லையரை சோறுவிட்டுத் தாக்கியே வில்லைகட்டி புடமூன்றிட்டால்
நாகமாம் வில்லையது சிவந்துபோகும் நாதாக்கள் சொன்னதிந்த நாட்டந்தானே
1640.
எறிகின்ற சூதமிடை புகைநீர்விட்டு எரியழலிற்ற பன்னிடம்வைத்துப்பாரு
கூறியதோர் காளாஞ்சி வந்தவில்லை கூட்டியரை புடமிட்டு எரிநேர்ப்பாக
மாறியெடு சிவந்துநிற்கும் ரவியில்நீறு மயமாகத் தாக்கிடவே யொன்றதாகப்
பாரியது ஏமமது பத்துமாகும் பாலித்தா ரிஷிபோகர் பண்பதாமே

1641.
தேனிலிடு சகலநோயெல்லாந்தீருஞ் செங்கதிறாமேனியது இரும்புபோலாம்
வானிலே யிப்பாகம் பொய்யோவென்றால் வண்மையுள்ள ஆண்டவனும் பொய்யதாகும்
ஞானிகளுக்கிவ்வேதை யெறக்கமிட்டு நாட்டிலுள்ள நல்லவர்கள் செய்துகொள்வார்
கூறுநீமறாதவர்கள் செய்யமாட்டார் கொட்டிரைப்போமெப் போகர்மனமிதாமே
1642.
வீரமுடன் பதங்கபற்பம் பலமூம்நாலு வீதமிடை மிளகுசுக்கு தந்திகூட்டி
பாரமுள்ள நெல்லிமுள்ளி கடுக்காய் நேராய் பார்த்துஅரை புகைநீறார்சாமம்ரண்டு
கோரமதா யுத்தியளவாக வுண்டைகொடுத்து விடுமகோதரங்கள் முப்பத்தொன்றும்
நேரமில்லை யோடிவடும் நிமிஷந்தன்னில் நிட்சயமாய் போகரிஷி நேர்சொன்னாரே
1643.
நல்லிரும்பு வோடையாம் செம்புநேரே நாட்டியரை பொடியாக குகையிலிட்டு
மெல்லவதை யுருக்கிவிட புட்டுபோலாம் விரும்பியெடு ரண்டுமுக்கால் நாத்தஞ்சூடன்
செல்லநிறுவிரண்டுமரை நிறுத்திக்கொள்ளு சிறுகவது வீரமது யிரண்டுகாலாம்
சொல்லவிந்த வைத்துடனே நிறத்துக்கல்வஞ் சுறுதியுடன் பாணிவிட்டு
அரைத்துக்கொள்ளே
1644.
அரைத்துவில்லை யங்கியிடு பத்துந்தூமம் அதின்பேரு சுயமக்கினி யதைநிறுத்து
வரைத்து பலமொன்று நிறுவேலிவேறுவகை கடுகுஓமமொடு சிறுதேக்காகும்
நிறுத்திஎடு ஆனைத்திப்பிலி யிந்துப்பு நேரான கோஷ்டமொரு வகைக்குவொன்று
அரைத்துநிறு காயங்கால் வசம்புகாலாம் குணமான கடுகுபொடி அரையும்போடே
1645.
சங்குநிறம் சீரியதோர் சீனச்சுன்னம் சாதகமா யெடுத்துநேரே துடிசாற்றக்கேளு
இங்கிதமாய் வன்னிரசம் உப்பிலிட்டு இதமாக வெரித்திடவே பதங்கமேறும்
துங்கவதை யெடுநிறுத்துமுன் சுன்னவைத்து சுகமாகச்சேர்த்து கல்வமீதிட்டு
சங்கைபடப் பழச்சாற்றாற் சாமமாட்டி சதுறாககிடைத்திலிட்டு மூடிகேளே
1646.
மூடியதைச் சீலைசெய்து எரிகால்சாமம் முத்தியதை யெடுத்துமண்டலமேயுண்ண
கோடியது நோயெல்லாம் குஷ்டம்போகுங் குணமாகும் வாதவெடி சூலைபோகும்
நாடியது மகோதரமுப்பதாகும் நாட்டிலுள்ள நீரிழிவு நடுங்கியோடும்
வாடிமுகங் கனவில்கண்ட விருள்போலாகும் வகையாக போகரிஷி சொன்னார்தாமே
1647.
வச்சிரத்தின் பாலாழாக்குப் பீங்கானிலிட்டு வசமாகமுற்றி வெள்ளைக்கரு நேரிட்டு
தச்செயலாய்த் திரிகால்வைமுரிந்து நீராந்தகைமைபெற எலிகொல்லி யோட்டிலிட்டு
வைச்சபடி முன்னீரால் சுருக்குயிட்டு வகையாக நாற்சாமம் போட்டுத்தீரு
உச்சிதமா யண்டமென்ற சுண்ணங்கூட்டி யூரறியப் புடம்போடக்கட்டுந்தானே
1648.
கட்டுகின்ற பாஷாணங் கரியிலாடும் காதலாயெடுத்ததை வைத்துக்கொண்டு
வெட்டுநீ வெள்ளீய நூற்றுக்கொன்று விரும்பியிடு ரசிதமாய் நீர்களற்று
தட்டுநீ நாதம்வரும் கடையில்விற்று தகமையுள்ள ஞானத்தை தரித்துக்கொள்ளு
பட்டுநூற் சாயம்போற் பாகம்பாரு பதிவான போகரிஷி பாலித்தாரே

1649.
சடைக்கஞ்சாய் நூறுசட்டிலிட்டு ஜலம்விட்டு திரிநாள்வை யலம்பிவாங்கி
திட்டமாகப் பின்னுமொரு சட்டியிட்டு சீறாவின்பால்படியும் பாணிநேரே
விடையாக விட்டெரி நீக்கோணியிட்டு இதமாகப்பிழிந்து ரசம்வாங்கிப்பின்பு
கிடமிட்டு ஆவின்நெய் சிறுகவிட்டு கிருபையாய் வைத்துநீ பகரக்கேளே
1650.
சக்கரையின் சுக்கேலமிளகுமாஞ்சி சாதிக்காய் பத்திரியுங் கிராம்புகோஷ்டம்
மிக்கஅதிமதுரமுடன் அமுக்கறாவும் விதமான வாள்மிளகு கசகசாவும்
தொக்கவகை பலமிரண்டு தட்டியிட்டுச் சுருதியெனும் பாலிலிட்டுப் பாகாய்க்காச்சி
பக்கமுள முன்ரசத்தை யதிலேயிட்டுப் பாகமாயிறுக பதம்பார்த்துக்கேளே
1651.
பார்த்தெடுநீ சாறாயந்தேனுமட்டும் பதமாகயூத்தி யளவாகச்செய்து
சாற்றிலிடு வாயொருகுளிகை கொடுத்துப்பாரு சதுரத்தில் வசனமுதற்பேதிநிற்கும்
காத்துநல்ல மூலத்திற் கிறாணிநல்ல கடிதான செறியாமை வாந்திநிற்கும்
போற்றியே தேகத்தை பார்த்துதாக்கு புகலரிய போகரிஷி புகன்றிட்டாரே
1652.
புகன்றிட்டா ரின்னமொரு கருமானங்கேள் புகழான போகரிஷி கீர்த்திமார்க்கம்
தகன்றிட்ட சீனபதிசென்றுயானும் தாழ்வாக குளிகைகொண்டு பூமிதன்னில்
மகின்றிட்டுயானும் அங்கேயிறங்கி பார்த்தேன்மனிதருட நிறந்தானு மேகவெள்ளை
பகின்றிட்ட நிறமதுதான் வெள்ளையாக கண்டேனே பெண்களுட ரூபந்தானே
1653.
தானான ரூபமது வெண்மைகண்டேன் தாக்கான தரணியெல்லாம் சுத்திவந்தேன்
கோனான பெணகளெல்லாம் வானபேதம் குணக்குறிக ளனேகமதாய்த் தோற்றங்காணும்
வேனான சீனபதிப்பெண்களெல்லாம் மேன்மையுடன்தானிருக்கக் கண்டேன்யானும்
பானான காரமதுபூமிதன்னால் பரங்கியர்க ளெல்லோரும் வெள்ளைதானே
1654.
வெண்மையாம் பெண்களுடன் போகம்செய்தேன் வேதாந்த தாயினது வருளினாலே
கண்மையாம் காலாங்கிதனைநினைத்து களிப்புடனே யிந்திரபோகஞ்செய்தேன்
தண்மையாம் பதினெட்டுத் தொப்பிக்காரர் தரணியிலவதரித்தார் புகழ்ச்சிமெத்த
உண்மையா மானிடர்கள் பிறந்தாரப்பா வுற்பனமாம் கோடிவித்தை பெற்றோர்தாமே
1655.
தாமேதான் சவுக்கார வழலைசெய்வார் தகைமையுள்ள கண்ணாடிகாய்ச்சுவார்பார்
போமேதான் பூநீரை சுண்ணாம்பாக்க புத்தியள்ள மாந்தரப்பா சீனதேசம்
காமேதான் மற்றதோர் தேசமெல்லாம் கருவளையல் பூநீரைக் காய்ச்சுவார்பார்
நாமேதான் போகரிஷி கண்டமார்க்கம் நாதாக்கள் கைமறைப்பு வெளியிட்டேனே
1656.
வெளியிட்டேன் கோடியுக வித்தையெல்லாம் வேணபடி யுபதேசஞ்செய்தேன்யானும்
பளியிட்ட யெந்தனுக்கு சாபமில்லை பாருலகில் சித்தர்முனி கைமறைப்பை
நெளியிட்ட வெள்ளையென்ற மனிதருக்கு நேர்புடனே காட்டிவிட்டேன் காரணத்தை
துளியிட்ட தேசமெங்கும் சுற்றிவந்தேன் சூட்சாதி சூட்சமெல்லாம் திறந்திட்டேனே

1657.
திறந்திட்டேன் வெள்ளையென்ற மனிதர்நீங்கி செப்பவில்லை கருநீலமாந்தருக்கு
குறைந்திட்ட வித்தையெல்லாம் கூறவில்லை கொட்டினால் மோசமதுவாகும்பாரு
முறைந்திட்ட சாஸ்திரங்கள் சாபமெய்தும் மோட்சமென்ற வீடில்லை நரகம்போவார்
வரைந்திட்ட வாக்கியங்கள் பிசகாய்ப்போகும் வாகுடனே போகரிஷி பாடிட்டேனே
1658.
பாடினே னின்னமொரு கருமானங்கேள் பாருலகில் சித்தர்முனி கூறுமார்க்கம்
நீடியதோர் காந்தமது பலமோவைந்து நேரான வெண்காரம் பலமோவைந்து
தேடியதோர் பூநீரு பலமோவைந்து தெளிவான கெந்தியது பலமோகால்தான்
கூடியதோர் சரக்கெல்லா மொன்றாய்ச் சேர்த்து குமுறவே குழிக்கல்லில் போட்டிடாயே
1659.
போடவே தேனதுவும் விட்டுமைந்தா பொங்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலி
நீடவே வச்சிரமாங் குகையில்வைத்து நேர்புடனே சில்லிட்டுச் சீலைசெய்து
கூடவே ரவிதனிலே காயவைத்து குணமாக வுலையில்வைத்து வூதிப்பாரு
வாடவே கஅந்தமது சத்தேயாகும் வளமான சத்தெல்லா மெடுத்துக்கொள்ளே
1660.
கொள்ளவே காந்தமென்ற சத்துதன்னை குமுறவே மறுபடியும் மூசைக்கேற்றி
விள்ளவே தானுருக்கி யெடுத்துப்பாரு வீரான மணியதுவாய் வுருகிநிற்கும்
மெள்ளவே சத்தெடுத்து கல்வமிட்டு மேன்மைபெற வறுவகை ஜெயநீர்தன்னால்
துள்ளவே தானரைப்பாய் நாலுசாமம் துறையாக தானெடுத்து ரவியிற்பூசே
1661.
பூசவே செம்பென்ற தகட்டில்மைந்தா பகழாக பத்துக்கு வொன்றேயாகும்
காசென்ற துட்டின்மேல் பூசிப்பூசிக் களமாக ரவியில்வைத்து புடத்தைப்போடு
மாசென்ற புடமதுவும் பத்தேயாகும் மகத்தான செம்பதுவு மூறலேயாகும்
பாசென்ற களிப்பதுவு மற்றுப்போய் பளிங்கான தம்பாக்கு நிறம்போலாமே
1662.
நிறமான செம்பதுவு மொன்றேயாகும் நிறையான வெள்ளியது வொன்றேயாகும்
திறமான தங்கமது வொன்றேயாகும் திடமுடனே மூசையிட்டு வருக்கித்தீரு
பரமான சரக்கதுவு மொன்றாய்ச்சேர்த்து பளபளத்த வர்ணமது காந்திமெத்த
உறமான மாற்றதுவு மெட்டதாகும் உத்தமனே போகரிஷி வுரைத்தவாறே
1663.
வாறான பொன்னதுவும் வாறடித்து வளமுடனே பூங்காவி தன்னிற்போட
மாறான மாசியது நீங்கியேதான் மகத்தான பசுமைநிற தங்கமாகும்
காறான கடைத்தங்க மிதுக்கொப்பாமோ கடந்தமுனி சித்தரிஷி செய்யுமார்க்கம்
பாறான காலாங்கி யடிவணங்கி பேருலகில் மாந்தர்காய்ச் செப்புவேனே
1664.
செப்பினேன் நாதாக்கள் அருமைவித்தை ஜெகத்திலே யாராலுங்கூறப்போமோ
ஒப்பவே மனோன்மணியாள் பாதம்போற்றி ஒழுங்குடனே சிதாபாசந்தன்னைநீக்கி
தப்பவே பூரணத்தை மனதிலுண்ணி சதாகாலம் நிருவானி முன்னதாக
மெப்புடனே பராபரியை முன்னிப்பாக மேதினியில் தவசிருந்து நாளைப்போக்கே

1665.
போக்கவே துஷ்டருடன் கூடவேண்டாம் பொலிவான யுளவையெல்லாங் காட்டவேண்டாம்
தூக்கமுடன் சோம்பருடன்கூடி துறைமுறைகள் யாதொன்றும் காட்டவேண்டாம்
வாக்கிலுள்ள சித்தர்முனி ரகசியத்தை வளப்பமுடன் விருதாவில் கொட்டவேண்டாம்
நோக்கமுடன் தானிருந்து பொருளாராய்ந்து நொடிக்குள்ளே காயசித்திக் கிடமுந்தேடே
1666.
தேடவே யின்னமொரு மார்க்கம்பாரு தெளிவான மையொன்று செப்பக்கேளு
நீடயிலே வழுகண்ணி தொழுகண்ணியாகும் நீடான நீர்மேல் நெருப்புமாகும்
கூடயிலே பசலையாங் கருபசளையாகும் குறிப்பான வாள்காட்டி னிலையுமாகும்
வாடையிலே அழுஞ்சியென்ற மூலியாகும் வகுப்பான கருமூலி இருள்மூலியாமே
1667.
மூலியாமஃ பேய்மிரட்டி முசுட்டையாகு முகிழான கருந்தும்பை விளாத்தியாகும்
வாலிவாம் கருடனிட மூலியாகும் பாங்கான சுருங்குவளை பொன்முசுட்டை
வேலியாங் கருமூலிச்சாற்றுக்கூட்டு வெடிப்பான வாதளையின் பாலுங்கூட்டி
கோலியாங் கழற்சியுட மூலிதானும் குணமான பசிமூலி புன்னையாமே
1668.
புன்னையா மேரண்ட மிரண்டதாகும் பகழான நரிமிரட்டி மூலிதானும்
மன்னையாம் பேய்மூலி திகைப்பூண்டாகு மயமான வாளையுடநூமத்தையாகும்
தொன்னையாங் கடம்பையுடன் முதியார் கூந்தல் தோரான வாள்மிரட்டி மூலிதானும்
பன்னையாங் கருங்காலி காறையாகும் பாங்கான திமிர்க்கேட்டான் மதிப்பூண்டாமே
1669.
பூண்டான கூத்தனிட குதம்பையாகும் புகழான நன்னாரி மூலிதானும்
தீண்டாத வாடுதின்னாப்பாளைதானும் திறமான கருங்கோவை சிவனார்வேம்பு
கூண்டான மாமல்லி செவ்வல்லிதானும் கொடிதான மையூரின் சிகைதானாகும்
தூண்டான மூலியிட சாறுவாங்கி துறைபோல மையெடுக்கும் வகையைகேளே
1670.
கேளேநீ சாரெல்லாம் ஒன்றாய்கூட்டி கீர்த்திபெற சிலைதனிலூட்டிமைந்தா
பாரேதான் போகாமல் காயவைத்து பாங்குபெற சீலைதனையுருட்டியேதான்
மீளேதான் அழுஞ்சியிட தயிலத்தாலே மிகமைபெற தானனைத்துக் கொளுத்திப்போடு
கீளேதான் பீங்கான்வை தயிலம்வீழும் கிருபையுடன் தானெடுத்து வகையைக்கேளே
1671.
வகையான வாந்தையுட பிச்சிதானும் வலுவான செம்போத்துப் பிச்சுதானும்
பகையான வல்லூறு பிச்சுதானும் பாங்கான காட்டோனான் பிச்சுதானும்
தகையான வாயசத்தின் பிச்சுதானும் தடிப்பான சாரையுட பிச்சுதானும்
மைகையான காடையுட பிச்சுதானும் மூர்க்கமாங் கருங்குருவி பிச்சுதானே
1672.
பிச்சான மீன்குத்தி பிச்சுதானும் பேரான தேவாங்கு பிச்சிதானும்
முச்சான கருங்குரங்கு பிச்சுதானும் முயலான நாரையுட பிச்சுதானும்
வச்சான மாடப்புறா பிச்சுதானும் கொடியான பூனையுட பிச்சுதானும்
நச்சான பாப்பரணி பிச்சுதானும் நலமான கருஞ்சாரை பிச்சுமாமே

1673.
ஆமேதா னித்தனையு மொன்றாய்க்கூட்டி அப்பனே புனுகுடனே பச்சைப்பூரம்
போமேதான் கோரோசனை குங்குமப்பூ பொலிவான சவ்வாது தானுங்கூட்டி
காமேதான் கஸ்தூரி வாடைதானும் கருவான முதற்றிட்டு சீலைபோடு
காமேதான் வழிஞ்சியிட தயிலத்தாட்டி விருப்பமுடன் பரணிதனில் பதனம்பண்ணே
1674.
பண்ணவே மையதனையெடுத்துக்கொண்டு பதிவான வுருவுதனை யேற்றியேதான்
திண்ணமுட னாஞ்சினேயர் வுருவைமாட்டி திறமுடனே லட்சமுரு போட்டுக்கொண்டு
வண்ணமுடன் வலாடமதில் மையைத்தீட்டி மயங்கிடவே லோகமெல்லாம் வசியமாவார்
நண்ணமுடன் ராஜாதிராஜர்தாமும் நாட்டிலே சித்தர்களும் வசியமாமே
1675.
வசியமா மஷ்டசித்து யிதனாலாகும் வளமான மோகனமு மிதனாலாகும்
வசியமான் ஸ்தம்பனமும் இதனாலாகும் வாகான கருவுகளு மிதனாலாகும்
வசியமாம் பேததனமு மிதனாலாகும் மகத்தான கிரியைமுத லிதனாலாகும்
வசியமா முச்சாடன மிதனாலாகும் மார்க்கமுடன் உருமாற்ற மிதனாலாகும்
1676.
ஆமேதான் சித்தர்முனி செய்யும்பாகம் அடவாகப் பலநூலுமாராய்ந்தேதான்
நாமேதான் காலாங்கிநாதர்பாதம் நாட்டமுடன்றாள் பணிந்து நவிலலுற்றேன்
வேலேதான் இக்கருவை வெளியிடாதே விட்டாலே வெகுமோச மாகும்பாரு
நாமேதான் சொல்லுகிறோம் யானைமார்க்கம் நாதாக்கள் பிடிவாதம் நவில்வோம்பாரே
1677.
பாரேதான் குருவானை சுவாமியானை பராபரியாயிதன்னானை சிவனாரானை
சீரேதான் உமையானை வும்பரானை சிவாலயங்கள் கன்னானை தேவியானை
கூரேதான் குருவானை கணேசனானை குறிப்பான கண்ணனிட வானைகண்டீர்
நேரேதான் சித்தரிட யானைகண்டீர் நெரியான முரிஷிக ளானையாமே
1678.
ஆமேதான் ஆணையது கடக்கவேண்டா மப்பனேசாமமது செய்தும்பாரு
நாமேதான் சொல்லுகிறோம் ரிஷிகள்போக்கு நன்மையுட னுபசாரஞ் செய்யவேண்டும்
வேமேதான் மனதுவர நடக்கவேண்டும் வேதாந்ததாயினது வருளேவேண்டும்
போமேதான் கற்பமது கொள்ளவேண்டும் பொலிவான நன்னடக்கை வேண்டுந்தானே
1679.
தானான ரிஷிகளிட பதாம்புயத்தை சதாகாலம் ரிஷிகள்மேற்றாக்கவேண்டும்
கோனான சாபத்திற் கிடங்கொடாமல் குருநிந்தை யணுகாமலிருக்கவேண்டும்
மானான சித்தர்முனி தங்களுக்கு பட்சமுடன்மனதுவந்து நடக்கவேண்டும்
மானான சாத்திரத்தை யாருக்குந்தான் மானிடரே கொடுத்தாக்கால் தீமையாமே
1680.
தீமையாந் தலையதுதான்வெடித்துப்போகும்திகழான சாபமதுமேவும்பாரு
சாமையாங்கோபமது வதிகமாகி சண்டாளதுரோகியென்றே சபிப்பார்சித்தர்
வூமையாமூடனென்றபெயர்தானாகும்மூர்க்கமுடன் தானுரைப்பார் வதீதமெத்த
ஆமைபோல் உறுப்பெல்லாந் தானடக்கி அவனியிலே வாழுவது மதீதங்காணே

1681.
காணவே நல்வழிபோகாவிட்டால் கடிந்துரைப்பார்சித்தரெல்லாம் நாள்கடோறும்
மாணவே சாபத்துக்கிடமுண்டாகும் மாற்கமுடன் யாதொன்றுங் காட்டவேண்டாம்
வேணவேசூத்திர சாத்திரங்களெல்லாம் விள்ளாதகைமறைப்பு வுளவுசொல்லி.
நாணவே முப்பூவுக்கு உறவுஞ்சொல்லி நாதாக்கள் தானெடுக்கும் வகையைத்தேடே
1682.
தேடையிலே பூம்பாறை யானைக்கல்லாம் தேசத்தில் சோழனிட நாடேயாகும்
ஓடையிலே விராலியிட மலைதானாகும் வுத்தமனே திருப்பாண்டி நாடேயாகும்
மேடையிலே நாகார்ச்சுன மலையுமாகும் மேலான நாமக்கல் பாறையாகும்
வாடையிலே சுவாமியிட மலைதானாகும் வளமான சுரசிந்து யோரமாமே
1683.
ஓரமாம் நர்மதாபூமியாகும் உத்தமனே திருமாலி நகரமாகும்
காரமா முகவைபதி கடலோரந்தான் கரியான பூமியிடம் படிக்கல்லாம்
தூரமாம் தாம்பிரபரணி ஸ்தலமுமாகும் தூக்கான வேகவதி தீர்த்தமாகும்
பாரமாம் சித்தூரா மாக்காடாகும் பசுவலையும் நீரெடுக்கப் பதியுமாமே
1684.
பதியான கங்கைநதிக் கடலோரந்தான் பாங்கான வளர்பூமி தேசம்யாவும்
கதியான வாள்மீகர் பாளந்தன்னில் நயமான யிடப்பாகம் புத்தாருண்டு
வதியான சித்தர்முனி யிருக்குந்தானம் வினோதவதி யாரொன்று கம்பவொன்று
சதியான மிருகங்க ளிருக்குந்தானம் சதகோடிசூரியர்போல் ரிஷிகள்பாரே
1685.
பாரேதான் கல்லானை வாசஞ்செய்யும் பனிமூடும் தேசமது பகரப்போமோ
நேரேதான் சுனையுண்டு மலையிலுண்டு நெடிதான பூமியெல்லா மளவேயாகும்
சீரேதான் பாலைநிலமென்பார் சித்தர் சீர்பாதம்பட்டாலே வெந்துபோகும்
ஊரேதான் பூண்டுமுதலில்லையப்பா வுத்தமனே காரமென்ற பூமியாச்சே
1686.
சுண்ணமென்ற பூமிதனில் பூநீரப்பா சுருதியுடன் தானெடுத்து மாண்டார்கோடி
அண்ணலென்ற வாவுடையார் கோயிலுண்டு அதன்பக்க மெண்ணாயிரங் காதமப்பா
கண்ணபிரான் தானிருக்கும் கோயிலுண்டு கடுந்தூர மானிடர்கள் செல்லமாட்டார்
தண்ணமுடன் மகாகோடி முனிவர்சித்தர் சதாகால வாசமது வாசமதுசெய்வார்தானே
1687.
தானான கோயில்குள மதிகங்காணும் தாக்கான மானிடர்கள் காணாதேசம்
பானான வூர்வனவுமில்லாதேசம் புகழான மலைகுகைகள் கண்டோரில்லை
தேனான தேன்விளையுங் கதண்டுக்காடு தெற்கான தேசமது சுள்ளர்நாடு
மானான வழகர்மலை புத்தூராகு மகத்தான வைகைநதி பூமியாமே
1688.
ஆமேதானத்திநகராசீர்மந்தான் அயோத்திநக ராற்றோரங்கரைதானாகும்
வேமேதான் விலாடபுரி குகையோரந்தான் வெளிக்காடு பூமியெல்லாம் அளவேயாகும்
நாமேதான் கண்டபடி பின்னஞ்சொல்வேன் நாதாக்கள் தானெடுக்கும் வளமுஞ்சொல்வோம்
போமேதான் பொன்னகர மேருபக்கம் பொலிவான ஸ்தலமுண்டு புகலக்கேளே

1689.
கேளேதான் ஸ்தலமதுவும் தேவஸ்தானம் கெடியான கோபுரமும் தங்கமாகும்
காளேதான் விக்கினங்கள் தங்கமாகும் கடலான மதிகளெல்லாந் தங்கமாகும்
ஆளேதான் கண்டறியா தேவஸ்தானம் ஆத்தான மண்டபமுந்தங்கமாகும்
மீளேதான் வாகனங்க ளெல்லாந்தங்கம் மேலான பூமியெல்லாந் தங்கமாமே
1690.
தங்கமாம் தேர்ரதந்தங்கவர்ணம் தனியான பிரதமைகள் தங்கமாகும்
அங்கமாலட்சுமியும் வாசஞ்செய்வாள் அந்நகரங்கண்டவர்களாருமில்லை
புங்கமாஞ் சித்தர்முனி ரிஷிகள்தாமும் பொலிவான கூட்டமெத்த கோயிலுள்ள
சிங்கமுடன் கோபுரமாம் வாசல்தன்னில் சிறப்புடனே காவலது கண்டேன்பாரே
1691.
கண்டேனே வன்னகரஞ் சிலதுகாலம் கவனமுடன் குளிகையது பூண்டுகொண்டு
அண்டரண்ட முடையதொரு கோபுரத்தில் அப்பனேயான்சென்று பார்த்தபோது
திண்டமுட னவ்விடத்தில் ரிஷிகளப்பா தேவாதிகோஷ்டமுடன் தியானஞ்செய்வார்
தெண்டமுட னானவரைக்கண்டபோது திடுக்கிட்டு மனங்கலங்கி தியங்கிட்டேனே
1692.
தியங்கிட்டு வடியேனும் காலாங்கிதன்னைத் தியக்கமுடன் தானினைத்துவிழித்து பார்த்தேன்
மயங்கிட்ட யெந்தனையும் ரிஷிகள்பார்த்து மனமிறங்கி தீரமுடன் வதீதஞ்சொன்னார்
தயங்கிட்ட யெந்தனையும் யாரென்றுகேட்க தாழ்மையுடன் சிரங்குவித்து வணக்கஞ் சொன்னேன்
நயங்கிட்டு வடியேனும் குளிகைபூண்டு நாட்டமுடன் பூவிளையும் தேசம்வந்தேன்
1693.
வந்தேனே பூமிவளங்காண வந்தேன் வளமையுடன் நாதாக்களெடுக்கும் ஸ்தானம்
சந்தேகமில்லா தவனந்தானாடு சார்புடனே மலைகுகைகள் யாவுங்கண்டேன்
தொந்தமுடன் நதிகரைகள் யமுனையாவும் தோறாமல் குளிகைகொண்டு சுத்திப்பார்த்தேன்
எந்தனிட தைரியங்கள் மிகவுமாகி யேகினேன் பொன்னகரங் காணத்தானே
1694.
காணயிலே தேவஸ்தான பெருமைகண்டேன் கைலங்கரி வாசல்களிதற்கீடல்ல
வேணவே வதிசயங்க ளெல்லாம்பார்த்தேன் விளைகின்ற பூநீரும் காரமெத்த
தோணவே மானிடர்க ளெடுக்கமாட்டார் தொலைதூர தேசமுந்தொடரமாட்டார்
மாணவே வந்தாலு மாண்டுபோவார் மகிதலத்திலஃ சித்தருட தேசந்தானே
1695.
தேசத்தை கண்டாலு மாண்டுபோவார் தெரிச்த்தால் சித்தர்களுஞ் சாபஞ்சொல்வார்
பாசத்தை விட்டொழித்து வந்திட்டாலும் பதையாமற் காரத்தால் சாவார்தாமும்
வேஷத்தை போட்டுமல்லோ வீணர்கூடி வெகுவெகுவாய் வளம்பார்ப்பார் கோடிகோடி
கேசத்தை விட்டொழியார் மாய்கையாலே நெடுந்தூரஞ் செல்லார்கள் சண்டிமாடே
1696.
மாடான சண்டிகளை விட்டுநீங்கி மார்க்கமுடன் குளிகைகொண்டு பார்க்கவந்தேன்
காடான வனாந்திரங்கள் குகைகள்கண்டேன் கனமான சித்தரிட மார்க்கம்பார்த்தேன்
கோடான கோடிமுறையாவும் பார்த்தேன் குறிப்புடனே பொன்னகரம் கண்டுவந்தேன்
சேடான பகவானால் சொல்லலாகா சிறப்பான பொன்னகரங் கண்டேன்தானே

1697.
கண்டேன் சதாசிவத்தின் கோயில்கண்டேன் கைலங்கிரிவாசரை யான்கண்டதில்லை
தொண்டுசெயும் ரிஷிமுனிவர் பாதங்கண்டேன் தோராத வர்ச்சனைகள் யாவும்பார்த்தேன்
அண்டரண்டசராசரங்க ளிதற்கீடல்ல ஆதிசேடன் தன்னாலுங் காணலாகா
தெண்டமுடன் மேற்புரம் வாசல்வந்தேன் தேவரிஷிமுனியென்றொருவர் கண்டேன்தானே
1698.
முனியான ரிஷிசித்தர் யானுங்கண்டேன் மூலஸ்தானப் பெருமை கோயில்கண்டேன்
கனியான வடவாசல் சேர்வைகண்டேன் தாக்கான பொன்கோபுர வாசல்கண்டேன்
தொனியான வாத்தியங்கள் வழங்கக்கண்டேன் தோரான கண்ணபிரா னூஞ்சல்கண்டேன்
இனியான தடாகங்கள் படிகளெல்லாம் இயலான தங்கமது வர்ணமாமே
1699.
ஆமேதான் வண்ணங்க ளெல்லாம்பார்த்தேன் அதற்கப்பால் பூமியிட நாதங்கண்டேன்
தாமேதா னின்னகரம் பூநீரப்பா தாக்கான சித்தர்களும் கண்டமார்க்கம்
போமேதான் முந்நூறு காதந்தானும் பொலிவான பூநீறுவிளையும்பூமி
தாமேதான் கண்டுவந்தேன் பூநீர்தன்னை நாட்டிலே கண்டவர்களில்லைதாமே
1700.
தானேதான் கண்டமட்டும் குளிகைகொண்டேன் தயவுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
நானேதான் சித்தர்முனி சொன்னநூலை நலமுடனே யாராய்ந்து வளமுங்கண்டு
மானேதான் தேர்ந்தெடுத்தேன் இந்ததேசம் மகத்தான தேசங்களிதற்கீடல்ல
பானேதான் முன்சொன்ன தேசமெல்லாம் பாங்கான பூநீறுக்காதியாச்சே

# போகரின் சப்த காண்டம் – 7000

1701.
ஆச்சப்பா பூநீறுயெடுக்குமார்க்கம் அப்பனே வதிசொல்வேன் மதியாய்கேளு
பேச்சப்பா சித்தருட சாத்திரத்தில் பிரட்டான கைமறைப்பு வதீதமெத்த
காச்சவே பூநீரை யெடுக்கும்சைகை கருவாகச் சொல்லவில்லை சாத்திரத்தில்
பாச்சலுடன் காலாங்கி வையர்பாதம் கருணையுடன் தாள்பணிந்து உறுகுவேனே
1702.
கூறுவேன் பங்குனியாம் பருவந்தன்னில் குறிப்புடனே நாதாக்கள் சொன்னமார்க்கம்
மாறுபடு பேதனங்கள் கண்டாராய்ந்து மதிதலத்தில் பூநீறு காய்க்குங்காலம்
வேறுடனே ராக்காலஞ் சாமத்திலிப்பமுடன் காட்டகத்தே சென்றுமேதான்
சாறுடனே காடெல்லாம் திரிந்துபார்த்தால் சதிரான பூநீறு பூர்க்குந்தானே
1703.
பூர்க்குமே பூநீறு கதிர்போலாகும் பொங்கமுடன் தானெழும்பி மலர்போல்வீழும்
நிர்க்குமே விடியநற்சாமந்தன்னில் நிலையாது பூநீறு காரம்போச்சு
தீர்க்கமுடன் காரமதுயில்லாவிட்டாலும் தெளிவான பூநீரைவாரிவந்து
மார்க்கமுடன் தான்கரைத்து தெளிவிறுத்தி மயங்காமல் தீட்சையது பத்துசெப்பே
1704.
செய்யவே யின்னமொரு வயணங்கேளு செழிப்பான சித்திரையாம் பருவகாலம்
பையவே பூரணையாம் பட்சந்தன்னில் பாங்கான நடுச்சாம வேளைபார்த்து
மெய்யவே பூநீறுவிளையுமார்க்கம் மேன்மையுடன் கண்டறிந்துயெடுக்கும்போது
தொய்யவே தேவதையின் பூசைவேண்டும் தோராமல் வட்சரத்தை மாறிக்கொள்ளே
1705.
கொள்ளவே தீட்சைவிதி மார்க்கந்தன்னை குறிப்பாகத் தான்செய்துமுடிப்பாயானால்
எள்ளளவுங் கோளாறுநேராதப்பா என்மகனே குருமுடிக்கும் வகையைத்தேடு
விள்ளவே பூமியுட வளமுஞ்சொன்னேன் விருப்பமுடன் நாதாக்கள் துறையுஞ்சொன்னேன்
மெள்ளவே யெந்நூலேழாயிரந்தான் மேன்மையுடன் கண்டறிந்து யோகந்தேடே
1706.
தேடையிலே போகரிஷி சொன்னமார்க்கம் தெளிவாக யாருந்தான் சொல்லாரப்பா
நீடையிலே வாசனத்துக்குறுதிசொல்வேன் நெடிதான மான்தோலாசனந்தானாகும்
ஆடையிலே காவிகஷாயமாகும் அப்பனே அடிவேட்டி முழந்தானாலு
முழங்கால்மட்டும் முக்கியமாய் தானணிதல் முறைமையாமே
1707.
முறைமையாய் தானிருந்து யோகவெட்டி முடிமீதுதானணிந்து யோகஞ்செய்வாய்
நிறைமையாய் கைகாலை முடக்கவேண்டும் நித்தியமும் வாசிதனை நடத்தவேண்டும்
திறைமையாய் வட்சரத்தை மாறவேண்டும் தீர்க்கமுடன் சின்மயத்திலேறவேண்டும்
வறைமையாய் சூட்சாதிவாராதாரம் வகுப்புடனே யறிந்தவனே யோகியாமே
1708.
யோகியா மின்னமொரு மார்க்கங்கேளு நொடிதான சித்ராபர்வமுன்னே
ஆகியே பூமிவயந்தன்னைபார்த்து அப்பனே யளர்பூமி யாராய்ந்தேதான்
பாகியே ஓராளிணாழமட்டும் பாங்குடனே யளர்களத்தை யாராய்ந்தேதான்
மாகியே கிட்டனைகள் மிகவுஞ்செய்து மார்க்கமுடன் பன்னாடை மேலேசாத்தே

1709.
சாத்தவே மூன்றுநாள் சென்றபின்பு சாங்கமுடன் தான்சென்று பார்க்கும்போது
ஏத்தமுள வளர்போல யிருக்கும்பாரு என்மகனே வாரியதை பீங்கானிட்டு
தூத்தமுடன் பனிநீரால் கரைத்துமேதான் தோராமல் சத்துமுறை தெளிவிறுத்தி
மாத்தமே மறுசட்டிக்குள்ளே வார்த்தஉ மயங்காமல் பத்துமுறை காச்சுகாச்சே
1710.
காய்ச்சவே வுப்பதுவும் மிகவேபூர்க்கும் கருவான வுப்பதுவுங் காரமெத்த
மாய்ச்சலுடன் சரக்குக் கடுங்காலனாகும் மகத்தான வேதையிது கோடிக்கொவ்வும்
தீய்ச்சலுடன் வுப்புக்குத் தீட்சைசெய்து திறமுடனே காயத்துக் குறுதிபண்ணு
பாய்ச்சலுடன் முப்பூவுந் தின்றாயானால் பாங்குடனே தேகமது இறுகுந்தானே
1711.
தானான காயத்தை நிறுத்தவேண்டும் சதாகாலம் சுக்கிலத்தை கட்டவேண்டும்
வேனான மும்மலத்தை யறுக்கவேண்டும் வெளியான சிதாபாசம் நீக்கவேண்டும்
பானான முச்சுடரை யறுக்கவேண்டும் பாழான தூலமதை வெறுக்கவேண்டும்
மானான பராபரியை நிர்த்தஞ்செய்து மானிலத்தில் வாழ்பவனே சித்தனாமே
1712.
சித்தனுங் காலாங்கிநாதர்பாதம் சிறப்புடனே போகரிஷியடிபணிந்து
சத்தமுடன் மேருவுக்கு இடபாகத்தில் சுடரொளிபோல் மடுவொன்று நதியொன்றுண்டு
முத்தமுன் மண்டபமுஞ்சுனையுங்கண்டேன் முலான மண்டபத்தினருகே சென்றேன்
கர்த்தனென்னும் கண்ணபிரான் மாளிகண்டேன் கதிரொளிபோ நவரத்தின கசிதந்தானே
1713.
கசிதமா மண்டபத்தி னடியோரந்தான் கதிரோனை கண்மறைக்கும் சித்தரப்பா
நிசிதமுடன் தவநிலையில் வணங்கிநிற்பார் நீடூழிகால வரைகண்டதில்லை
உசிதமுடன் கண்ணபிரானானவர்க்கு வுற்பனமாங் குளிகையது மிகவேயீவார்
றுசிதமுடன் குளிகையது பூண்டுகொண்டு துரைராஜர் சதாநித்தம் கலவிசெய்வார்
1714.
செய்வாரே பன்னிரண்டாயிரந்தான் சிறப்பான தேவதாபெண்கள்தானும்
உய்குவா ரெட்டெட்டு கலவியோடு வுற்பனமாம் நிசிதகளை யார்செய்வார்பார்
மொய்குழல் மார்தானிருக்கும் பளிங்குமாடம் மும்மணியாம் தேவரிட வாசீர்மந்தான்
நெய்தலுடன் கொட்டியவர் தாமரைபோல் நேரான தடாகமது கண்டேன்பாரே
1715.
பாரேதான் தடாகத்தில் கோடிசித்தர் பாங்கான யாதவத்தின் சித்தராகும்
நேரேதான் தடாகத்தில் கீழ்பாகத்தில் நெடிதான சித்தரகளோ குறும்பராகும்
சேரேதான் தடாகத்தின் மேற்பாகத்தில் சிறப்பான சித்தர்களோ மூலவர்க்கம்
ஊரேதான் தடாகத்தின் குணபாகத்தில் வுத்தமனே கன்னடியர் சித்தராமே
1716.
ஆமேதான் சித்தருட வளமுங்கண்டேன் அதற்கப்பாலவருடைய வுளவுங்கண்டேன்
தாமேதான் தவநிலையி னுறுதிகண்டேன் சாங்கமுடன் வயதல்லோலக் கோயிலில்லை
போமேதான் குளிகையது பூண்டுகொண்டு பொங்கமுடன் தவநிலையில் எதிரில்நின்றேன்
வேமேதான் சித்தர்களுமென்னைக்கண்டு வெகுவெகுவாய் மாறாட்டம் செய்தார்பாரே

1717.
செய்யவே வடியேனும் குலைநடுங்கி திடுக்கிட்டு மெய்மறந்து யேங்கிநின்றேன்
பையவே எந்தனையாரென்றுகேட்க பட்சமுடன் காலாங்கி தனைநினைத்து
மெய்யுடனே என்பேரு போகரென்றேன் மெய்ச்சியே எனக்குபதேசஞ்செய்தார்
வலமையுடனே லலாடமதில் பூண்டுகொண்டு மகத்தான கண்ணபிரான் தனைக்கண்டேனே
1718.
கண்டேனே கண்ணபிரா னருகில்வந்தேன் கனமுடனே யவர்பாதம் போற்றிசெய்தேன்
தொண்டனெனு மடியேனும் தாள்பணிந்து துரைராஜர் முன்பாக நிற்கும்போது
தெண்டமுடன் மண்டபத்தினருகேதான் தீவிரமாய்ப் போய்வரலாமோ சித்தாவென்றார்
பெண்டுகள் தாமிருக்குமிடம் தெரியாதோ பேரான போகரிஷி சாபந்தானே
1719.
சாபமது சொன்னவுட னடியேன்தானும் சாங்கமுடன் கண்ணபிரான் தன்னைநோக்கி
வேகமுடன் காலாங்கிதனைநினைத்து விகற்பமதுயெந்தனுக்கு நேர்ந்ததென்று
சாகமுட னடியேனும் சாபம்நீக்கி தாரிணியில் பிழைப்பதற்கு கெதிதானென்ன
பாகமுடன் கண்ணபிரான் மனமுவந்து பட்சம்வைத்து யெந்தனுக்கு மொழிசொன்னாரே
1720.
சொன்னாரே கண்ணபிரான் மனமுவந்து சுட்டெரிக்க போகரையுமனதிலெண்ணி
நன்னயமாய் குளிகைகொண்ட போகர்தன்னை நயமுடனே தாமுரைப்பார் தீதமெத்த
பன்னகசாலையிலிருக்கும் பாங்கியாரைப் பார்ததினா லுந்தனுக்கு கெடுதியாச்சு
வன்னயமா யெந்தனையு மெடுத்துக்கூற வாகுடனே மறுபடியும் வணங்கிட்டேனே
1721.
வணங்கிட்டே போதையிலே சித்தரெல்லாம் வாகாக வோடிவந்து யென்னைச்சூழ்ந்தார்
பிணங்கிட்ட யெந்தனையும் ரிஷிகள்பார்த்து பிரியமுடன் ஓடிவந்து யின்னுஞ்சொல்வார்
தணங்கிட்ட யெந்தனுக்கு சொன்னதென்றால் தயவுடனே போகரிஷி சொல்லக்கேளும்
சுணங்கிட்டு கண்ணபிரான் மண்டபத்தில் துறைகோடி ரிஷிமுனிவர் போனார்காணே
1722.
காணோமே யிதுநெடுநாள் சித்தர்தம்மை காத்திருந்தோம் நெடுநாளாய் நதியோரத்தில்
நாணவே தேவாதி ரிஷிகளெல்லாம் நலமுடனே யன்றாடம் வருவார்போவார்
வேணவே வுபசாரம் நடக்குமிங்கே விசையுடனே மண்டபத்தில் போனாரில்லை
ஆனவே யும்முடைய விறுமாப்பாலே ஆக்கினையைதான் கடந்து வந்திட்டீரே
1723.
வந்ததினா லுந்தனுக்கு சாபமப்பா வரைகோடி யுகவருஷம் தந்தோம்காணும்
தொந்தமுடன் தான்கொடுத்தார் சித்தரெல்லாம் தொல்லுலகில் போவதற்குயிடமுமில்லை
சந்தமுடன் கிருஷ்ணமண்டபத்தினோரம் சாங்கமுடன் தானிருந்தேன் சிலகாலந்தான்
கந்தமுடன் பெண்களெல்லாம் நதியோரத்தில் கலந்துமே ஜலக்ரீடை செய்யவந்தார்தாமே
1724.
தாமேதா னெந்தனையும் கண்டாரப்பா சதகோடி சூரியர்போல் கண்டேன்யானும்
காமேதான் பெண்களெல்லாம் கிட்டிவந்தார் கண்டாரே யெந்தனையும் பெண்களெல்லாம்
வேமேதா னெந்தனையும் யாரென்றார்கள் மிக்கவுமே தான்பணிந்து யடிவணங்கி
நாமேதா னிவ்வூரு தேசமல்ல நலமுடனே சீனபதி யென்றிட்டேனே

1725.
என்றவுடன் பெண்களெல்லாம் அதிசயித்து ஏற்றமுள்ள சிறுபாலா யேன்தான்வந்தீர்
கன்றுடனே பசுநீங்கும் கதையைப்போல பாங்கியர்க்கு பரிதாபமெடுத்துச் சொன்னேன்
நன்றுடனே காலாங்கி சீஷணம்மா நாட்டிலுள்ள வளமெல்லாங் காணவந்தேன்
தென்திசையில் நானிருந்து குளிகைபூண்டு சிறப்பான சீனபதிபோனேன்தானே
1726.
போனதினா லதிசயங்கள் மெத்தவுண்டு பூதலத்தில் ஆருந்தான்கண்டதில்லை
நானதினால் சிலகாலமங்கிருந்தே நயமுடனே பெண்களெல்லாம் வெண்மைகண்டேன்
தானவனாம் கமலமுனி யங்கிருந்தார் சாஷ்டாங்க தெண்டனிட்டு தாள்பணிந்தேன்
ஆனதினா லெந்தனுக்கு வுபதேசங்களனேகமதாய் தானுரைத்தார் வதிசயந்தானே
1727.
தானான வதிசயங்க ளனேகஞ்சொன்னேன் தகமையான சீனபதிசிறப்புஞ்சொன்னேன்
வேனான மேருகிரி போனேனம்மா வெழிலான விருவத்தோர் வரைதானுண்டு
கோனான வேழுவகை சொன்னேனம்மா கோடிமுனிசித்தர்களைக் கண்டேனென்றேன்
பானான வடிவேலர் தயிலமொன்றுண்டு பாங்கான பொன்மானுங் கண்டிட்டேனே
1728.
கண்டேனே சித்தர்வர்க்கங் கோடாகோடி காணாத வரைதேசமனந்தமுண்டு
அண்டான முனியறியாக் காடுங்கண்டேன் அங்குள்ள வதிசயங்களெல்லாஞ்சொன்னேன்
பண்டமுடன் கிடாரங்கள் வைப்புசொன்னேன் பாங்கியர்களெல்லோரு மதிசயித்தார்
தெண்டமுட னெந்தனுக்கு சாபந்தீர்த்து திகழுடனே யனுப்பவென்று விடைகேட்டேனே
1729.
கேட்டவுடன் பெண்களெல்லாங் கிருபைவைத்து கிருபையுடன் கண்ணபிரான் பக்கல்வந்து
கோட்டமுடன் பன்னீராயிரம்பேரும் நுணுக்கமுடன் தானுரைத்தா ரென்னைத்தானும்
தேட்டமுடன் சீனபதியிருந்த சித்தன் திறமுடனே லோகமெல்லாம் காணவென்று
வாட்டமுடன் குளிகையது பூண்டுகொண்டு வந்திட்டானும்பர்பதி யென்றிட்டாரே
1730.
என்னவே பெண்களெல்லாமொன்றாய்கூடி யெழிலாக யெந்தனுக்கு சாபம்நீக்க
நன்னயமாய்க் கண்ணபிரான் தன்றமக்கு நலமுடனே தாமுரைத்தா ரதீதமெத்த
சொன்னவுடன் கண்ணபிரான் கடாட்சம்வைத்து சுகமுடனே சித்தர்தம்மை வரவழைத்து
பன்னயமாய் சாபமதைநீக்கவென்று பட்சமுட னெந்தனுக்கு விடைதந்தாரே
1731.
விடைதந்தார் சித்தரகளுந் தானுங்கேட்டு விரைவுனே யோடிவந்து வுண்மைகூறி
படையுடனே கூட்டமதா யொன்றாய்கூடிப் பரிவாக வுபதேசம் பாலித்தேதான்
சடையுடனே ரிஷிமுனிவர் சித்தர்தாமும் சமைத்திட்டார் சாபமதையெந்தனுக்கு
தடைநீங்கி கண்ணபிரான் விடைகள்பெற்று சாங்கமுடன் சீனபதிவந்திட்டேனே
1732.
வந்தவுடன் கமலமுனி தன்னைக்கண்டேன் வாகுடனே கண்ணபிரான் வளமைசொன்னேன்
நொந்து மனமுருகியல்லோ சித்தரெல்லாம் நொடிக்குள்ளே யெந்தனுக்கு சாபஞ்சொன்னார்
வந்தபெண்களெல்லாரு மென்னைக்கண்டு கருணைபெற சாபமதை தீர்க்கவென்று
அந்தமுடன் கண்ணபிரான் பக்கல்சென்று அடிவணங்கி சாபமதை தீரென்றாரே

1733.
என்றயிலே கண்ணபிரான் முனிவர்தம்மை யெழிலாகத் தாமழைத்து வுறுதிசொன்னார்
அன்றையிலே ரிஷிமுனிவர் சித்தர்கூடி அகமுடனே முகமலர்ந்து சாபந்தீர்ந்து
இன்றையிலே சாபமது தீர்ந்ததென்று யெழிலுடனே சீனபதிபோகவென்று
சென்றுடனே போகவென்று விடையுந்தந்தார் சிறப்புடனே தம்பாதம் கண்டிட்டேனே
1734.
கண்டேனே காலாங்கி கடாட்சத்தாலே கருணைபெற யெந்தனுக்கு விடைதாவென்ன
தெண்டமுடன் விடைபெற்று நிடததேசம் திரும்பினேன் குளிகைகொண்டு வெகுகாலந்தான்
தண்டுலவு மாலயனைதரிசித்தேதான் சாங்கமுடன் நளபதியைக்காணவென்று
அண்டமுடன் குளிகையிட்டு ராஜதேகம் அப்பனே வந்திட்டேன் யானும்பாரே
1735.
யாரேதான் சக்கரவர்த்தி பரிவான மாளிகையுங் கோட்டைகண்டேன்
சீரேதான் சித்திரரதம் தங்கமாகும் சிறப்பான கோட்டைகளும் குருந்தக்கல்லாம்
நேரேதான் வைடூரிய மண்டபந்தான் நெடிதான வாகனங்கள் தங்கவண்ணம்
ஊரேதான் பொன்னகரங் கைலையென்பார் வுத்தமனே நளபதிக்கு ஈடாகாதே
1736.
ஈடான தேசமதுகண்டோருண்டோ யெழிலான மாபுரமும் தங்கவர்ணம்
கோடாகோடி பொருள்களங்குண்டு குகையுண்டு சுனையுண்டு தடாகமுண்டு
ஊடான மிருகங்களனேகமுண்டு வுத்தமனே புலிபசுவுமொன்றோடொன்று
காடான வனாந்திரத்தி லுறவுகொண்டு கருணையுட னெப்போதும் குடியுமாமே
1737.
ஆமேதான் கோட்டைக்குள் குளிகைபூண்டு அப்பனே சுரங்கத்தின் வழியாக
நாமேதான் சென்றல்லோ பார்க்கும்போது நாட்டமுட னரசாட்சி கொலுக்கூடந்தான்
போமேதான் கிட்டயல்லோ சென்றுநின்றேன் பொலிவான நவரத்தினங் கசிதத்தாலே
மாமேதான் பிரதமைகள் சூழ்ந்துநிற்க மயக்கமுடன் சிம்மாதனங் கண்டேன்தானே
1738.
தானான மேற்புறத்தில் பக்கஞ்சென்றேன் தாக்கான கொலுமாளி சலவைக்கூடம்
வேனான கற்றூணாம் வயிரக்கல்லாம் வெழிலான பக்கமெல்லாம் பச்சைக்கல்லாம்
மானான தேவதச்சன் மயனினாலே மார்க்கமுடன் புஷ்பரதமொன்று கண்டேன்
கானான கைலாசமென்பார்தானுங் காசினியிற் கண்டவரை விண்டிலேனே
1739.
விண்ணவே தலைவாசல் பக்கம்போனேன் விராஜனிடகாவல் கணமாயிரம்பேர்
திண்ணமுட னங்கிருந்தார் தவசியோர்கள் தீர்க்கமுட னெந்தனையுங் கண்டிட்டார்கள்
எண்ணமுடன் யானுமல்லோ கண்டபோது எனைக்கொல்ல திருஷ்டித்துப் பார்த்தாரென்னை
அண்ணலென்ற காலாங்கி தனைநினைந்தேன் அப்போதே யெந்தனையுஞ் சூழ்ந்திட்டாரே
1740.
சூழவே யடியேனுங் கிடுகிடுத்து துப்புறவாய் தாள்பணிந்து சரணஞ்சொன்னேன்
தாழவே காவற்காராயிரம்பேர் சார்புடனே யெந்தனையுமாரென்றார்கள்
மீளவே யானுமல்லோ தீரங்கொண்டு மேன்மையுட னவர்களுக்கு வதீதஞ்சொன்னேன்
ஆளவே யெந்தனையும் வரலாறுகேட்டார் அப்பனே அடிமுதலு முரைத்திட்டேனே

1741.
உரைத்தேனே வதிசயங்க ளெல்லாஞ்சொன்னேன் வுலகமெலாஞ் சென்றதொரு கீர்த்தி சொன்னேன்
இரைத்தேனே தேசத்திலுளவு மார்க்க மெழிலாகக் கேட்டவுடன் கிருபைகூர்ந்து
வுரைத்துடனே யெந்தனையு மழைத்துமேதான் வாகாகக் கோட்டைக்குள் கொண்டுசென்று
நிரைத்துடனே சித்தர்முனிக் காவர்காரர் நிறையுடனே காண்பித்தார் அதீதந்தானே
1742.
தானான நளபதியின் கிடாரங்கண்டேன் தாக்கான சுரங்கத்தி னுலவுகண்டேன்
வேனான பச்சையென்ற மாளிகண்டேன் வெழிலான கெம்பினுட மதிலுங்கண்டேன்
மானான தன்வாசல் நான்குபக்கம் மன்னனிட காவல்களாஞ் சிங்கமுண்டு
பானான மதிலோரம் கானாருண்டு பக்கமெல்லாம் தேக்கினிடக் காடுமாமே
1743.
காடான கோட்டைக்குள் மாளியேழு கருவான மண்டபங்க ளனேகமுண்டு
வீடான மாபுரத்தில் சித்தர்கோடி விடுதியாய் தாமிருப்பார் கூறப்போமோ
நீடான மலையுண்டு சுனையொன்றுண்டு நித்தியமும் சித்தர்முனி வாசஞ்செய்வார்
நாடான மனிதர்களுங் காணமாட்டார் நாட்டிலே கண்டவர்க ளில்லைதானே
1744.
இல்லையே இன்னமொரு மார்க்கங்கேளும் யியலான ராஜனுட தேவிகோட்டை
பல்லையாம் வெகுதூரங் காந்தமாகும் பாரினிலே ராஜர்கட்கு கிட்டுமோசொல்
மல்லவே தமயந்தி பூணாரந்தான் மார்க்கமுடன் கண்டுவந்து யேங்கிநின்றேன்
சொல்லவே பூணாரந் தன்னைத்தானும் சூட்சமுடன் கண்டுவந்தேன் போகர்தாமே
1745.
தாமேதான் சித்தர்முனி ரிஷிகள்தாமும் தயவுடனே யெந்தனுக்கு வதீதஞ்சொன்னார்
போமேதான் குகைமுத்தும் கிடாரந்தன்னை பொங்கமுடன் தான்கொண்டு காண்பித்தார்கள்
நாமேதான் கண்டுமனமுவந்துமெத்த நாதாக்கள் கிருபையது மிகவும்பெற்றேன்
ஆமேதான் விசுவாச மருளும்பெற்று அப்பனே சீனபதி யமர்ந்திட்டேனே
1746.
அமர்ந்திட்ட தின்னமொரு மார்க்கங்கேளு அப்பனே குளிகையது பூண்டுகொண்டு
தமர்ந்திட்ட வகஸ்தியனார் மலையைக்கண்டேன் தாக்கான மலையோரம் சென்றபோது
கமர்ந்திட்ட சித்தர்முனி கோடானகோடி கண்டிட்டா ரெந்தனையும் யார்நீயென்றார்
சுமர்ந்திட்ட காலாங்கி நாதர்பாதம் சுடரொளியின் பதாம்புயத்தை நினைத்தேன்பாரே
1747.
நினைத்துமே காலாங்கி சீஷனென்றேன் நேரான போகரிஷி யென்பேரென்ன
முனைத்துமே சித்தரெல்லா மொன்றாய்கூடி முனையான வகஸ்தியனார் பக்கல்சென்று
தினைப்புடனே வாய்பொத்தி கரங்குவித்து தேவனே சாஷ்டாங்கஞ் சரணமென்றார்
பனைப்புடனே வகஸ்தியருங் கண்டுமேதான் பட்சமுடன் தானுரைப்பார் சித்தர்தாமே
1748.
சித்தர்முனி ரிஷிமுதலோரொன்றாய்க்கூட்டி தெட்சணாமூர்த்தியிடம் வந்ததென்ன
சத்தமுடனெ ல்லவரு மொன்றாய்ச்சேர்ந்து சதாசிவமே சுடரொளியே தயாளவானே
பத்தியுடன் காலாங்கி சீஷனென்று பாரினிலே பேர்படைத்த சித்துவொன்று
முத்திபெற தங்களிடங் காணவென்று முறைமையுடன் குளிகைகொண்டு வந்திட்டாரே

1749.
வந்திட்டா ரென்றதுமே கும்பமுனி வாகுடனே வருகவென்று விடைதந்தாரே
பந்திட்ட யெந்தனையும் பட்சம்வைத்து பாருடனே குகைக்குள்ளே கொண்டுசென்று
முந்திட்ட சாத்திரங்க ளெல்லாங்கேட்டார் மோசமில்லை யென்றென்னைக்
கொண்டணைத்து
தந்திட்டா ரெந்தனுக்கு நூலுமீய்ந்தார் சதகோடி வித்தைகளுங் கற்பித்தாரே
1750.
கற்பித்தார் பிரமனென்ற வித்தைதானும் கருவான யேமத்தின் வித்தைதானும்
உற்பித்த சாத்திரத்தி னுளவையெல்லாம் ஒன்றாகத் தானெடுத்து உபதேசித்தார்
கற்பித்த கருவுகரணாதியெல்லாம் மார்க்கமுடன் தான்கொடுத்தார் உவமையாக
தற்பித்து செய்துமல்லோ புத்திகூறி  சகலகலைக்கியான மோதிட்டாரே
1751.
ஓதவே யடியேனுக் குறுதிசொன்னார் வுத்தமனே போகரிஷி சொல்லக்கேளும்
நீதமுடன் சாஸ்திரங்க ளெல்லாங்கற்றீர் நிலையான காயத்தை நிறுத்தக்கண்டீர்
தோதமுடன் சித்தருட குளிகைகொண்டீர் தோராதகீர்த்தியுடன் சீனம்சென்றீர்
பாதமுடன் காலாங்கி யருளும்பெற்றீர் பட்சமுடன் சித்தருட வரங்கொண்டீரே
1752.
கொண்டீரே போகரென்ற பெயருங்கொண்டீர் குவலயத்தில் சித்தருட மகிமைகண்டீர்
அண்டரண்ட சரசரங்க ளனைத்தும் கண்டீர் ஆகாயபூமிமுத லுளவாராய்ந்தீர்
திண்டமுடன் ராஜாதிராஜர் சேர்வை திறமுடனே யவர்கள் வைத்தகிடாரங் கண்டீர்
மண்டபங்கள் தடாகமுதல் குகையுங்கண்டீர் மன்னவர்கள் ராஜ்ஜியங்கள் கண்டீர்பாரே
1753.
கண்டதினால் கீர்த்தியுண்டு குற்றமில்லை கைலாசநாதரைப்போல் சித்தரப்பா
மண்டபங்கள் கடலோரம் ரிஷிகள்தானும் மகாகோடி மகானுக்கள் மிகவுண்டப்பா
தெண்டமுட னுந்தனுக்கு சாபமீவார் தெளிவாக வவர்களிடஞ் சொல்லவேண்டாம்
அண்டர்முனி போலவரும்  வதீதங்கேட்பார் அப்பனே தாள்பணிந்து வுரைசொல்வீரே
1754.
சொன்னதினால் சாபமது கிடமுறாது தொல்லுலகி லுன்னையொரு சித்தரென்பார்
நன்னயங்கள் தாமுரைத்து நலமும்பேசி நாட்டிலுள்ள வளப்பமெல்லாம் கண்டாராய்ந்து
வின்னமிலா வரமுடனே சாபம்நீக்கி வேதாந்த தாயினது வருளும்பெற்று
முன்னமாய்ப் பெரியோர்கள் வரமும்பெற்று முகைமையுடன் சீர்மவருள் தந்தாரே
1755.
அருள்பெற்று போகருமே சீனஞ்சென்று அங்ஙனவே போயிருந்து சிலதுகாலம்
தெருளுடனே வித்தையெல்லாம் செய்துபார்த்து தேவதைக்கொப்பான மாந்தருக்கு
பொருளுடைய கருவான வதீதவித்தைப் புகட்டினார் சீனமென்ற மாந்தருக்கு
இருளகல போதித்து போகர்தாமும் யெப்போதும் போலாகப்பறந்திட்டாரே
1756.
பறந்திட்டார் சீனபதிவிட்டுநீங்கி பாங்குடனே குளிகையது பூண்டுகொண்டு
மறந்திட்ட காலாங்கி தனைநினைத்து மார்க்கமுடன் இரத்தினகிரி மலைமேற்சென்று
துறந்திட்ட சித்தர்களைக் காணவென்று துரைராஜர் வீற்றிருக்கும் பக்கல்சென்று
நிரைந்திட்ட முனிவரிடம் நின்றுபேச நீனிலத்தில் போகரையா ரென்றிட்டாரே

1757.
என்னவே யடியேனும் தாள்பணிந்தேன் யெழிலான காலாங்கிதனை நினைந்தேன்
சொன்னதோர் சித்தர்கட்கு விடையுஞ் சொன்னேன் சுடரொளியாங் காலாங்கி சீஷனென்றேன்
நன்னயமா யெனையழைத்து குகையிற்சென்று நாதாக்களிருப்பிடமும் காண்பித்தேதான்
பன்னயமாஞ் சித்தர்களின் மரபுசொல்லி பட்சமுடனெந்தனுக்கு வழிசொன்னாரே
1758.
வழியுடனே இரத்தினகிரி மேலேசென்றேன் வாகுடனே ரத்தினமென்ற கிரியிற்கண்டேன்
அழியாத வாஸ்தான கோட்டைகண்டேன் அதற்கப்பால் திருமாலின் கோயில்கண்டேன்
குழிபோலக் குகையுடனே புனலொன்றுண்டு கூரானமச்சமுனி சித்தனுண்டு
வழிபோகக் காண்பதற்குத் துரையுமில்லை மகத்தான சித்தர்முனி காவல்தானே
1759.
தானான காவலிடம் சென்றுபோனேன் தயவாக யெந்தனையும் கண்டிட்டார்கள்
மானான மச்சமுனி யெங்கேயென்றேன் மகத்தான சித்தர்களும் கொண்டுசென்றார்
வேனான மச்சமுனி கண்டபோது வெகுவெகுவா யெந்தனிடமவர்சொன்னாரே
பானான திருமூலர் பாட்டரெங்கே பார்த்து நெடுநாளாச்சு யென்றிட்டேனே
1760.
என்றையிலே போகரிஷிசொன்னபோது யெடுத்துரைத்தார் திருமுகங்க ளனேகமுண்டு
நின்றையிலே சமாதியிடங் கொண்டுசென்றார் நிலையான ரத்னகிரி மலையோரந்தான்
நன்மைபெற திருமூலர் பாட்டர்தம்மை நாதாந்த சித்தொளியைக் காணவென்று
தன்மையுட னவர்பாதந் தொழுதுநின்றேன் ஷணத்திலே சமாதியது வெடிப்புண்டாச்சே
1761.
ஆச்சப்பா சமாதியது வெடிக்கக் கண்டேன் அப்பனே திருமூலர் பாட்டர்கண்டேன்
மூச்சப்பா தானடக்கி பூமிக்குள்ளே மூன்றுயுகந்தானிருந்த சித்துதன்னை
பேச்சப்பா வெகுபேச்சு பேசுதற்கு பீடமுதல் தலைவாசல் முன்னே நின்றேன்
நீச்சப்பா வாசனைகளொன்றுமில்லை நிலையான கற்பமுண்ட காயமாமே
1762.
காயமது வாசனைகள் கூறப்போமோ கடும்பச்சை பூரமென்ற வாடைவீசும்
நேயமுள்ள மல்லிகைப்பூ மணம்போலெங்கும் நெருங்கவே வொட்டாது குகையினுள்ளே
சாயமென்ற தேகமது குங்குமம்போல் தரிசிக்க மானிடர்க்கு கிட்டுமோசொல்
மாயமென்ற சித்தொருவர் மகிமைசொல்ல மாளாது வையகத்தில் மாளாதாமே
1763.
மாளாத சித்தென்னைக் கண்டபோது மகிதலத்தி லாரப்பா காணவந்தீர்
சூளாத ஜெனமில்லாச் சமாதியுள்ளே சூட்சமுடன்வந்தலுவலென்ன வென்றார்
கோளான வார்த்தைகளும் பேசவேண்டாம் குறிப்புடனே இரண்டொரு வார்த்தைகள் சொல்லி
தாளான சமாதிதனை மூடிப்போடு தரணியள்ள சித்தரெல்லாம் வருவார்தாமே
1764.
வந்தாரே யாமானால் கேள்விகேட்பார் வளமுடனே யவர்களுக்கு விடைசொல்லவேண்டும்
சிந்தனையை யான்மறந்துபேச வேண்டும் பேசாட்டா லவர்களுக்கு மனநோயுண்டாம்
பாங்கான மூலவர்க்கங் கோடியுண்டு பந்துபந்தாய் வருவார்கள் சமாதியண்டை
தொந்தரவு யெனக்கல்லோ மிகுதியாகும் துரைராஜ சுந்தரனே சமாதிமூடே

1765.
மூடனென்று சொல்லுகையி லடியேன்தானும் முடிவணங்கி தெண்டனிட்டு கெதியேதென்ன
நாடென்ற பதிதனிலே வாழுஞ்சித்தர் நாமிருக்கு மிடந்தனையே யறியமாட்டார்
மாடென்ற மனிதரப்பா முழுமக்கள்தாமு மடையர்களோ கோடான கோடிபேர்கள்
கூடென்ற கூடுவிட்டுப் பாய்ந்தேனென்று குவலயத்தில் கூக்குரலு மிகவுண்டாச்சே
1766.
ஆச்சதினா லெந்தனையு மனேகம்பேர்கள் அதிசயமாய்க் காணவே வருவார்மாண்பர்
மூச்சடங்கி மூன்றுயுக மிருந்தேனப்பா முனையான காலாங்கி சீஷன்தானும்
பாச்சலுடன் குளிகையது பூண்டுகொண்டு பட்சமுடன் வந்ததொரு ஜோதிதன்னால்
காச்சலுடன் மூடிருந்த சமாதிதானும் கடுகெனவே வெடித்துமல்லோ காணலாச்சே
1767.
கண்டதினா லுந்தனுக்கு கருணைகூர்ந்து கடாட்சித்தேன் திருமூலர் பாட்டர்தானும்
விண்டதில்லை யொருவருக்கும் ரகசியார்த்தம் வேதாந்ததாயினது கடாட்சத்தாலே
மண்டலத்தி லுந்தனுக்கு வுபதேசித்தேன் மானிலத்தில் குளிகையது பூண்டுகொண்டு
தெண்டமுடன் சித்தர்களை வணங்கிநீயும் தேசமெலாங் குளிகைகொண்டு திரிவாய்நீயே
1768.
திரியென்ற போதையிலே விடையும்பெற்று திரும்பினேன் சீனபதிகுளிகைபூண்டு
நெரியென்ற சத்தியத்தை கைவிடாத நேர்ப்பான வெள்ளையென்ற மாந்தர்முன்னே
பரியென்ற கருவிகரணாதியெல்லாம் பாங்குடனே வுபதேசம் செய்தேன்யானும்
சரியென்று யெந்தனையு மாசீர்மித்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்திட்டாரே
1769.
செய்தபின்பு வடியேனுஞ் சீனந்தன்னில் சிறப்புடனே சிலகால மிருந்தேனப்பா
மெய்யுடனே இன்னம்வெகுதேசங்காண மேதினியில் குளிகையது பூண்டுகொண்டு
கைதவமாய்ச் சீனபதிவிட்டு நீங்கி காலாங்கிநாதர்பாதம் மனதிலுண்ணி
பையவே யானுமல்லோ பறந்தேனப்பா பாரினிலே வயோத்திர்கள் கண்டிட்டேனே
1770.
கண்டேனே திரிச்சங்கு சமாதிகண்டேன் கடலோரம் போயிரங்கி நின்றேனப்பா
அண்டர்முனி ராட்சதர்கள் இருக்குங்கூட்டம் அணியணியாய் அவர்பாட்டன் சமாதிகண்டேன்
தண்டுடனே ராட்சதாள் கூட்டம்பக்கல் தாழ்மையுடன் போயிருந்து தண்டஞ்செய்தேன்
கொண்டென்னை தானனைத்து ராட்சதாக்கள் கொண்டுபோய் சமாதியிடம் விட்டிட்டாரே
1771.
விட்டவுட னடியானுந் தாள்பணிந்து விருப்பமுடன் காலாங்கிதனைநினைத்தேன்
கிட்டநின்ற பாலகனுமே சிரங்குவித்து கிருபையுடன் திருச்சங்கைக் காணவென்று
திட்டமுடன் முழங்காலு சமாதியிட்டுத் தீவிரமா யடிதொழுது போற்றிநின்றேன்
சட்டமுடன் சமாதியது தான்திறந்து சடுக்கெனவே சத்தமது கேட்டிட்டேனே
1772.
கேட்டவுனடியேனுங் கிடுகிடுத்து கிருபையுடன் சாஷ்டாங்கஞ் சமர்ப்பித்தேதான்
வாட்டமுட னெந்தனையாரென்று கேட்க வளமுடனே சிறுபால னுரைக்கலுற்றேன்
பாட்டரென்ற திருச்சங்கு ராஜன்தன்னை பாரினிலே காண்பதற்கு மனமுவந்து
கோட்டமுடன் சமாதியிடம் வந்தேனென்று நுட்பமதாய் போகரிஷிவுரைத்திட்டேனே

1773.
உரைத்தேனே யெந்தனிட தீரத்தாலே வுத்தமனே காலாங்கி கடாட்சந்தன்னால்
திறப்புடனே காலாங்கி சீஷனென்றேன் திகழுடனே சீர்பாதங்காணவென்று
மரைப்புடனே குளிகையது பூண்டுகொண்டு மார்க்கமுடன் சீனபதிவிட்டு நீங்கி
விரைப்புடனே சமாதியிடங்கண்டுவந்து விருப்பமுடன் வந்தேனே போகர்தானே
1774.
தானான போகரென்ற போதேயப்பா தயவுடனே யென்மீதில் பட்சம்வைத்து
கோனான திருச்சங்கு ராஜன்தானும் கொற்றவனாரெந்தனுக்கு வுபதேசித்தார்
பானான புத்திமதி மிகவுரைத்து பாங்குடனே குளிகைகொண்டு போமிடத்தே
வேனான சித்தர்முனி ரிஷிகள்தாமும் வேணுமென்றே சபித்திடுவார் தப்பிக்கொள்ளே
1775.
கொள்ளுவது வுந்தனுக்கு புத்திமார்க்கம் கோளாறுநேராமல் சித்தர்முன்னே
எள்ளளவும் பிசகின்றி நடந்துகொள்வாய் என்பேரா வுந்தனுக்கு சாபமில்லை
கள்ளமனமுடையதொரு சித்தரப்பா கண்டாலே வுன்னையுந்தான் சபிப்பார்சித்தர்
உள்ளபடி போலாகவுறவுபேசி ஒருகடிகைநேரமதில் சபிப்பார்பாரே
1776.
பாரென்ற போதையிலே யானடுங்கி பட்சமுடன் பாட்டரையான் பரிவுகேட்டேன்
நேரென்ற சேதியெனக்கு பாட்டரென்றேன் விருப்பம்வைத்து யெந்தனுக்கு ஞானோபித்தார்
சீருடனே யடியேனும் நடுநடுங்கி சிறப்புடனே வுபதேசம்பெற்றுக்கொண்டு
பேருடனே காலாங்கி தனைநினைந்து பேரின்பசாகரத்தை யடைந்திட்டேனே
1777.
அடைந்தபின்பு குளிகையது பூண்டுகொண்டு அரசனாம்திருசங்கு விடையும்பெற்று
கடந்துமே யயோத்திநகர் தன்னைவிட்டுக் காலாங்கிநாதருட கிருபையாலே
தொடர்ந்துமே சீனபதிக் கேகியானும் துப்புரவாய்க் கமலமுனி பக்கல்சென்றேன்
நடந்ததொரு சங்கிரகம் யானுரைத்தேன் நலமுடனே கமலமுனி மகிழ்ந்திட்டாரே
1778.
மகிழவே யடியேனும் விடைகள்பெற்று மார்க்கமுடன் வெள்ளையென்ற மனிதர்பக்கம்
நெகிழவே போயிருந்து யாவுஞ்சொன்னேன் நெடிதான கருவிகரணாதியெல்லாம்
மகிழவே முடித்திட்டேன் தலைகீழாகச் சதாகாலம் வெள்ளையென்ற மனிதருக்கு
புகழவே சீனபதியோர்கள் மெச்ச புகட்டினேன் வினோதமென்ற வித்தைதானே
1779.
தானான வினோதமென்ற வித்தையப்பா தாரிணியில் செய்தவரும் பார்த்தோரில்லை
கோனான குருவருளால் குளிகைபூண்டு குவலயங்கள் சுற்றியல்லோ முழுதும்பார்த்தேன்
பானான கற்றவித்தை வீண்போகாமல் மாறாமல்சதாகால மென்பேர்கூற
வேனான வித்தைகளை விரும்பியானும் விபரீதமாகவல்லோ விரித்திட்டேனே
1780.
விரித்துமே சீனபதி தன்னில்யானும் வெகுகாலம் நானிருந்தேன் மைந்தாகேளு
நெரித்துமே மறுபடியும் குளிகைபூண்டு நேரானசீனபதிவிட்டுநீங்கி
புரிந்துமே சத்தியரிச்சந்திரன்தன் பகழான சமாதியிடங்காணவென்று
தெரித்துமே வயோத்திநகர் வடபாகத்தில் திறமுடன் சமாதிகண்டு புறப்பட்டேனே

1781.
புறப்பட்டேன் குளிகைகொண்டு பறந்தேனப்பா பொங்கமுட னயோத்திநகர் வடபாகத்தில்
துறப்புடனே சமாதிபுறம் காணவென்று துப்புரவாய் நதியோரம் போனேன்யானும்
முறப்புடனே கிங்கிலியர் கோடாகோடி மூர்க்கமுடன் காவற்காரங்கிருந்தார்
சிறப்புடனே யடியேனுங் காலாங்கிதன்னை சீர்பாதந் தனைநினைந்து கண்டிட்டேனே
1782.
கண்டவுடன் கிங்கிலியர் யாரென்றார்கள் காலாங்கிவையருட சீஷனென்று
தெண்டமுடன் திருச்சங்கு பேரனென்று தீவிரமாய் முறைகொண்டு செய்யலுற்றேன்
மண்டலங்கள் யான்முழுதும் குளிகைபூண்டு மானிலத்தில் சுத்தியல்லோ வரிசைபெற்றேன்
குண்டலங்கள் சரப்பளிகள் பதக்கம்யாவும் குவலயத்திலெனக்களித்து போவென்றாரே
1783.
என்றார்கள் மனுகோடி சித்தர்கூட்டி யெழிலுடனே ரிஷிகள்முதலாசீர்மித்தார்
குன்றான மலைநதிகள் குகைகள்போனேன் கோடிவரை வெகுகாலமிருந்து பார்த்தேன்
பன்றான சீனபதி தலைமையென்று பாங்குடனே குளிகையது பறந்திட்டேன்யான்
நன்றான கமலமுனி சித்தர்தம்மை நலமுடனே சீனமதில் பார்த்திட்டேனே
1784.
பார்த்தேனே வெள்ளையென்ற மனிதரப்பா பரிவாக பூமியெல்லாங்காரமாகும்
நீர்த்தமுடன் பொய்கையொன்று சுனையொன்றுண்டு திகழான படியோரம் சித்தொன்றுண்டு
ஊர்த்தமுடன் சமாதியிலே யிருந்தாரப்பா வுவமையுட னவர்பாதம் கண்டுவந்தேன்
ஏர்த்தமுடன் வரரிஷியா மவர்பேராகு சமழிலான மார்க்கமெனக் கோதிட்டாரே
1785.
ஓதவே சிறுபாலன் விடைகள்பெற்று வுகமையுட னனேகவித நூல்கள்பார்த்தேன்
நீதமுடன் வரரிஷியார் நூலில்சொன்ன நுட்பமா மரிச்சந்திரன் சமாதிகாணா
வேதமுத லாராய்ந்துங் காணவில்லை வெளியான வரரிஷியின் நூலில்சொன்னார்
பாதமுடன் சத்தியரிச்சந்திரன் பாதம்புயத்தைக்காண வெனவந்திட்டேனே
1786.
என்னவே யடியேனும் போகர்நாயன் யெழிலாகத்தானுரைத்தேன் யிரக்கம்வைத்து
சொன்னபடி விதிமுறையில் நுணுக்காராய்ந்து சுடரொளியின் காலாங்கி சீஷனென்றும்
நன்னயமாய் ரிஷிமுனிவர் சித்தர்தம்மால் நலமுடனே பலபேரின் வரமும்பெற்றேன்
வன்னமுட னரிச்சந்திரன் சமாதிமார்க்கம் வகையுடனே காணவென்று வழிகேட்டேனே
1787.
வழிகேட்டேன் துறைகேட்டேன் சமாதிகேட்டேன் வண்மையுட னெந்தனுக்குப் பட்சம்வைத்து
மொழியுடனே காலாங்கி சீஷனென்று முறைகொண்டுவந்ததினால் போகருக்கு
பழியண்டாமென்றல்லோ பயந்தெல்லோரும் பாராளுமரிச்சந்திரன் சமாதிதன்னை
குழியுடனே தானிருக்கும் குகையினுள்ளே கொண்டுபோய் விட்டார்கள் கிங்கிலியர்தாமே
1788.
விட்டவுடன் போகரும்யான் முன்னேசென்று விரைவுடனே தாள்பணிந்து கரங்குவித்து
பட்டமன்னன் கொலுவினுட சமாதிபக்கம் பாங்குடனே நிற்கையிலே சித்தர்கூட்டம்
திட்டவந்து யென்னையாரென்று கேட்க கீர்த்திபெற்ற காலாங்கிசீஷனென்றேன்
சட்டமுட னென்னையவர்பட்சம்வைத்து சாங்கமுடன் ஆசீர்மஞ்சளய்தார்தாமே

1789.
தாமேதா னனேகவித தர்க்கஞ்சொன்னார் தாழ்வாக யானுமல்லோ யெடுத்துரைத்தேன்
போமேதான் சமாதியிடம் செல்கவென்றார் போனேனே ஓங்காரஞ்சத்தங்கேட்டேன்
வாமேதான் வாத்தியங்கள் கோஷ்டம்போல வளமையுடன் வினோதவகை வரிசைகேட்டேன்
நாமேதா னிருக்குமந்த காலந்தன்னில் நலமாக சமாதியது திறக்கலாச்சே
1790.
திறக்கையிலே சத்தியரிச்சந்திரன்தன் திறலான சமாதியது யென்னசொல்வேன்
சுரங்கமுடன் சுடரொளிபோல் காணலாச்சு சூக்குமமாந் தேகமது மின்னல்போலாம்
இரங்கவே மூன்றுபடி நடந்துபோனேன் இராஜனா மரிச்சந்திர னருகில்சென்றேன்
வரங்கொண்ட வரிச்சந்திர னென்னைப்பார்த்து யாரப்பா வந்தவனீ ரென்றார்பாரே
1791.
பார்க்கவே பாலனுமே கால்நடுங்கி பாராளும் ராஜனுக்குப் பதிவுகூற
ஏர்க்கவே முடியாமல் மைந்தாயானும் யெழிலாகக் காலாங்கிசீஷனென்றேன்
தீர்க்கமுட னவர்தானு மென்னைப்பார்த்து திறமுடனே யவரெனக்கு வுரைத்தவாறு
மார்க்கமுட னென்தகப்பன் திருச்சங்குதானும் மகத்தான சமாதியிலே போனார்தாமே
1792.
போகையிலே காலாங்கி சமாதிதன்னைப் பொங்கமுடன் அவர்போய்க் கண்டதுண்டு
சாகையிலே இடமவர்க்குதெரியும்பாலா சதகோடியுகமதுவும் சென்றுபோச்சு
ஆகையினா லுந்தனுக்கு யானுஞ்சொன்னோ மப்பனே போகரிஷிவன்பதாக
வேகையிலே புறங்காடு சுடுகாடப்பா வெகுகாலம் யானுமல்லோ காத்தேன்பாரே
1793.
காத்தேனே மேதினியில் மெய்யொன்றுக்காய் கனமழிந்து காடுறைந்து கடந்துநின்றேன்
நாத்தமுடன் சுடுகாடு காத்திருந்து நலமுடனே பிள்ளமுதல் மனைவிதோத்தேன்
பூத்தமலர் மூச்சுகுண தேவிதன்னை பொற்காசு விசுவாமிக் கடனுக்காக
தோத்தேனே நாடுமுதல் நகரமெல்லாம் தொலைத்தேனே சமுசாரத்தொல்லைதாமே
1794.
தொல்லைவிட்டு சமாதிக்குள் சென்றேனப்பா தொல்லுலகில் பற்றொன்று யில்லைகண்டீர்
அல்லலெனு மரசாட்சி விட்டுநீங்கி அப்பனே சமாதியிடங் கண்டேனென்றார்
மெல்லவே சதாகாலம் பூமிதன்னில் மேனியிலிருந்தோர்க்கு பலனொன்றில்லை
வெல்லவே பூலோகமாய்கைவிட்டு விருப்பமுடன் சமாதிதனி லிருக்கநன்றே
1795.
இருக்கவென்ற வார்தஃதையது கேட்டபோது யென்மகனே யென்புத்திலயித்துப்போச்சு
பொருத்துமுடி போகவில்லை பூமியாசை பொன்னுலகம் காண்பதுவே புண்ணியந்தான்
திருத்தமுட னிவ்வுலகி லிருந்துமென்ன திரள்கோடிவித்தைகளுங் கற்றுமென்ன
வருத்தமுடன் குளிகையிட்டுப் பறந்துமென்ன வாகுடனுலகமதி லொன்றுங்காணே
1796.
காணோமே யென்றுமல்லோ கலங்கிநின்றேன் காலாங்கிநாதருட கிருபையாலே
தூணதுபோ லங்கிருந்த விருட்சந்தன்னில் சுடரொளிபோல் ஜோதியது காணலாச்சு
வீணையுடன் வாத்தியங்கள் முழங்கலாச்சு வேதாந்த தாயினது மகிமையப்பா
நாணமுடன் பார்த்துமுனி சித்தரப்பா நடுக்கமுடன் தானடுங்கி பயந்திட்டாரே

1797.
பயந்திட்ட சித்தர்களை யான்வணங்கி பரிவாகச் சிரங்குவித்து வணக்கஞ்செய்து
நயமுடனே வதிசயங்கள் கேட்கும்போது நாதாந்தத் தாயினது பிரகாசந்தான்
மயமுடனே சத்தியரிச்சந்திரற்கு மகிமையுட னெப்போதும் காட்சியுண்டு
தயவுடனே நிர்வாணி ரூபவாணி சதாகாலங் காட்சியது தருவாள்பாரே
1798.
தருவாளே மனோன்மணியுந் திரிகாலந்தான் தரணிபதியாளுமரிசந்திரற்கு
குருவான சித்தர்முனி ரிஷிகளப்பா கூறினாரெந்தனுக்கு வண்மைமெத்த
திருவான வார்த்தையது மிகவுங்கேட்டு தீரனாம் ராஜனிட மொழியுங்கேட்டு
மருவான வுபதேசமெல்லாம்பெற்று மாற்கமுடன் சீனபதிக்கேகினேனே
1799.
ஏகினேன் சீனமென்ற பதிக்குமைந்தா யெழிலான குளிகைகொண்டு பறந்தேனப்பா
பாகமுட னுபதேசம் பெற்றமார்க்கம் பாங்குடனே வெள்ளையென்ற மனிதரப்பா
வாகுடனே நூல்படியே முறையோதித்து வளமைபெற சமாதிக்கு வழியுஞ்சொன்னேன்
வேகுடனே வெகுகால மிருந்தேன்யானும் வேடிக்கைசிமிட்டுவித்தை செய்தேன்தானே
1800.
தானான பிரம்மகோடி வித்தைசெய்தேன் தாக்கான காத்தாடி வித்தைவித்தை
மானான வித்தையிலு மதீதவித்தை மாணாக்காள் புகலுகின்றேன் மகிமைகேளு
வேனான பட்டமது கெஜமோபத்து வேகமுடன் நீளமது கெஜமோபத்து
பானான வட்டமது நடுவட்டந்தான் பாங்குடனே வுள்வட்ட முழந்தான்ரண்டே

# போகரின் சப்த காண்டம் – 7000

1801.
இரண்டான பக்கவட்ட மூன்றேயாகும்மெழிலான நெடுவட்டம் நாலேயாகும்
மிரண்டான வெளிவட்டம் சக்கரம்போல் மூலத்தின் வுள்வட்டம் கமலமாகும்
திரண்டான சுற்றோரம் கம்பியப்பா திரளான கம்பிகளில் காதுரண்டாம்
உருண்டான நடுக்கம்பில் சூட்சாதாரம் வுத்தமனே புறவட்டம் வளையமாமே
1802.
வளைவுடனே ஒவ்வொன்றில் கொலுசுமாகும் வரிகளிலே காந்தமது சத்தேயாகும்
களையுடனே நாரென்ற பட்டேயாகும் கம்பிகளில் தையல்களை வோட்டவேண்டும்
துலையான கொலுசுகளில் குண்டேயாகும் தோராத கயறுகளில் சூட்சமாட்டி
முளையுடனே பூமிதனில் கயிறைமாட்டி மூர்க்கமுடன் பறக்கையில் கயிறைத்தட்டே
1803.
தட்டையிலே காத்தாடிதான்பறந்து சந்திரனார் மண்டலத்தி னளவுமட்டும்
நெட்டையிலே தான்பறந்து நின்றுவாடும் நிலையான சூட்சாதி சூட்சத்தாலே
முட்டையிலே வுள்ளிருந்த கருவைப்போலு மொருகுடனே நின்றாடும் நெடுநேரந்தான்
சட்டையிலே நார்பட்டு காற்றைக்கொண்டு சடுதியிலே தானெடுக்கும் பான்மைபாரே
1804.
பான்மையாம் வாயுவது மேலாதாரம் பற்றுகையில் காத்தாடி மேலேநோக்கும்
வான்மையுடன் நடுக்கம்பி வட்டந்தன்னில் நயமுடனே சூட்சாதி சூட்சந்தன்னை
மேன்மையுடன் கயிறுமாட்டி சுருக்கும்போது மெல்லெனவே காத்தாடி இறங்கலாகும்
தான்மையுடன் சுக்கானின் சூட்சமப்பா தாரணியிலாரறிவார் விசுவர்தானே
1805.
விசுவனாம் தேவகம்மாளசித்தன் வேணபடிசெய்துமல்லோ சூட்சங்காண்பான்
பசுவுடனே கண்சேர்ந்த கதையைப்போல கருத்தறியார் முழுமூடர் காண்பரோதான்
முசருடைய யிரும்பதனில் காந்தஞ்சேர்த்து முடித்தார்கள் காத்தாடி வினோதவித்தை
நசுருண்டாய் சூட்சாதி சூட்சமார்க்கம் நாமுரைத்தபடி யாருங்கண்டிடாரே
1806.
கண்டபடி கருத்துடைய சித்தர்தாமும் காசினியில் செய்தவருங் கண்டோரில்லை
கண்டபடி காத்தாடி சூட்சாசூட்சம் கயிர்நிற்கும் வழியறியார் துறையுங்காணார்
கண்டபடி கருவூரார் செய்துபார்த்தார் கருத்திலே யவர்தனக்கு தோன்றவில்லை
கண்டபடி யெந்தனுட புத்தியாலே காத்தாடி யான்முடித்தேன் அவனியோர்க்கே
1807.
முடித்தேனே சீனமென்றபதியில்தானும் முனையான காத்தாடி யடிவாரத்தில்
படித்தளமாம் தோணியது மிகபோல்கட்டி பாங்கான மாளிகைபோல் தானமைத்து
குடித்தனமாஞ் ஜனங்கள் பதினாயிரம்பேர் குடையடியில் தானேத்திக் கொண்டுசென்று
நடிப்புடனே தேவாதிதேவர்தானும் நாணமுற்று பார்த்திடவே நடத்தினேனே
1808.
நடத்தினேன் சீனபதிஜனங்களெல்லாம் நலமுடனே காத்தாடி தன்னிற்கொண்டு
திடத்துடனே சீனபதிமூன்றுகாதம் திறமையுடன் சுத்திவந்தேன் சித்தர்மெச்ச
வடத்திடமாய் சூத்திரக் கயிர்திரட்டி வாகுடனே சீனபதியிறக்கிவிட்டேன்
தடத்துடனே சீனபதிஜனங்களெல்லாஞ் சந்தோஷித்தென்பேரி லன்புற்றாரே

1809.
அன்புற்றார் கமலமுனி சேதிகேட்டு அப்பனே போகரிஷிசொல்லக்கேளும்
வன்புற்ற யிதிகாசவித்தையெல்லாம் வளமுடனே காட்டிவிட்டால் பூலோகத்தில்
இன்புற்று யாரொருவர் மதிக்கப்போறார் யேகவெளியாகிவிடும் மன்னாகேளு
துன்புற்று யெந்தனையும் சபிப்பாரப்பா சூட்சாதி சூட்சமதை வெளிக்காட்டாதே
1810.
காட்டினால் லோகமெல்லாஞ் சித்தாய்ப்போகும் கசடருக்குக் காட்டாதே கருணைபோகும்
தாட்டிகமாய் நல்லோருக்கு கருவிகாட்டு தயையுடனே யுபதேசம் யாவுங்கூறும்
நோட்டமுடன் முழுமக்களொன்றாய்க்கூட்டி நொடிப்பார்கள் பகடிமெத்தக் கூறுவார்கள்
தாட்டியுடன் புலவோர்க்கு புத்திகூறு சதாகாலம் தானினைப்பார் புத்திபாரே
1811.
பாரேதா னின்னமொரு மாற்றங்கேளு பாங்கான சூதமது சேர்தானொன்று
சீரேதான் நாகமதுசேர்தான்பாதி சிறப்புடனே யூகமதா யொன்றாய்கூட்டி
நேரேதான் வட்டோட்டில் பில்லையூத்து நேர்ப்பாக பில்லைக்கு சுறுக்குதாக்கு
ஆரேதானாதாரச் சரக்காலப்பனே ஜெயநீர்தான் செய்துகொள்ளே
1812.
கொள்ளவே ஜெயநீரை சுருக்குதாக்கு முணமுடனே சூதமது யிருக்கிக்காட்டும்
விள்ளவே கிண்ணமது சாற்றக்கேளும் வேடிக்கை சிமிட்டுவித்தை வாதம்பாரு
மெள்ளவே சரக்குவகை யாமுரைப்போம் மேதினியிலார்செய்தா ரிந்தபாகம்
துள்ளவே மிருதாரு சிங்கிதானும் துறையான துருசுடனே காரமாமே
1813.
காரமாம் வீரமுடன் பூரமாகும் கருவான சீனமுடன் பாஷாணந்தான்
தாரமாங் கெந்தியுடன் லிங்கந்தானும் தாக்கான சூடனுடன் கெவுரிதானும்
காரமாம் காந்தமுடன் காடிக்காரம் கடிதான சாரமுடன் பூநீராகும்
தீரமாய்ப் பவளத்தின் புத்துமாகும் திறமான சலாசத்து பலந்தான்தூக்கே
1814.
தூக்கவே சரக்கெல்லாஞ் சமனதாக துறையோடும் முறையோடும் மொக்கச்சேர்த்து
நோக்கவே குழியம்மி தன்னிலாட்டி நுட்பமுடன் பழச்சாற்றில் நாலுசாமம்
தாக்கவே தானரைப்பாய் குமரிச்சாற்றால் தப்பஅது தானரைப்பாய் கையான்சாற்றால்
வூக்கமாய் வகைவகைக்கு நாலுசாமம் வுத்தமனே தானரைப்பாய் மூலியாமே
1815.
மூலியாம் கவுதும்பை சாறுதானும் முயலான முசல்க்காது சாறுதானும்
நீலியாம் அவிரிடச்சாறுதானும் நேரான வரமுள்ளிச்சாறுதானும்
பாலியாம் குடசப்பால் மூலிதானும் பாங்கான துளசியிடமூலிதானும்
வேலியா முத்தாமணிச் சாறுநாழி வெளியான கள்ளிச்சார் தானுங்கூட்டே
1816.
கூட்டியே வகைவகைக்கு நாலுசாமம் குறிப்புடனே தானரைப்பாய் மூலியாலே
நீட்டமுடன் வெண்ணெயது போலேயாட்டி நினைவுடனே வகல்போலே மூசைபண்ணி
வாட்டமுடன் மூசையிலே பில்லைவைத்து வாகாகமேல்மூசைதான்பொதிந்து
தேட்டமுடன் மாசீலை வலுவாய்ச் செய்து தெர்ந்துமே ரவிதனிலே காயப்போடே

1817.
போடவே சீலையது காய்ந்தபின்பு பொங்கமுடன் சுண்ணாம்புசீலையேழு
கூடவே சீலையது வலுவாய்ச்செய்து குமுறவே சட்டிதனில் மணலைக்கொட்டி
நீடவே சட்டிநடுகலசம்வைத்து நினைவுடனே மேலுமந்த மணலைக்கொட்டி
சூடவே மேற்சட்டி கவிழ்த்துமூடி துப்புரவாய்ச் சீலையது வலுவாய்ச்செய்யே
1818.
செய்யவே சீலையது காய்ந்தபின்பு செம்மையுடன் சட்டிதனை யடுப்பிலேற்றி
முய்யவே வாலுகையின் மேலேவைத்து முயற்சியுடன் தீபமது கமலமெட்டு
மையவே தீபமது காடோபத்து நயமுடனே தீபமதுயெரிப்பாயப்பா
பையவே யாறினபின் னெடுத்துப்பாரு பளிங்கான செந்தூரம் சொல்லொணாதே
1819.
சொல்லாலே நாவேதுபாவுமேது சுடரொளிபோல் செந்தூரஞ் சொல்லப்போமோ
வல்லவே வருணனிட னிறம்போலாகும் வலுவான சூதமது காரமெத்த
மெல்லவே வோடதனைத்திறந்துபாரு மேலான செந்தூரம்தீதப்போக்கு
புல்லவே முடியாது சித்தர்தாமும் புகலார்கள் லொகத்து மாந்தர்தாமே
1820.
ஆமேதான் செந்தூரம் பதனம்பண்ணு அப்பனே நாதாக்கள் காண்பாராகில்
போமேதான் விடுவாரேசெந்தூரத்தை போக்கோடே கொடுபோகும் வழியைப்பார்ப்பார்
நாமேதா னுந்தமக்குச் சொன்னோமப்பா நாட்டிலே யாரேனுஞ் சொல்வாருண்டோ
வேமேதான் செந்தூரங் குன்றியுண்ணு வெகுகோடி காலவரையிருக்கலாமே
1821.
இருக்கலாம் கற்பாந்திரகாலமட்டும் யிளப்பில்லை தவிர்ப்பில்லை ஈளையில்லை
முறுக்குடனே தேகமது இருக்கிக்காட்டும் கூதண்டங்கொண்டவரு முமக்கீடுண்டோ
பொருக்கவே முடியாது வன்னிமீறும் பூதலத்தில் நீயுமொரு சித்தனாவாய்
வெடுக்கவே சமுசார மாய்கைதன்னை விட்டொழித்து நிற்பதுவே சமாதியாமே
1822.
ஆமென்றா லின்னமொரு வயணங்கேளு அடவான செந்தூரங் களஞ்சிதானும்
போமென்று விடுகாதே மைந்தாகேளு போக்கான சூதமது செந்துரத்தை
நாமென்ற வாக்கியமும் பொய்க்காமற்றான் நலமுடனே வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
தாமென்ற வுறுக்குமுகந்தன்னிற்றானுந் தப்பாதுதான் கொடுக்கமாற்றெட்டாமே
1823.
எட்டான மாற்றதுவும் பசுமைமெத்த ஏற்றமுடன் ரவிதனிலே நூற்றுக்கொன்று
மட்டாகத் தானுருக்கிக் கொடுத்துப்பாரு மகத்தான வர்ணமது சிவப்புமெத்த
வட்டான மாற்றதுவு மெட்டரையுமாகும் மகத்தான வேதையிது கிட்டுமோசொல்
திட்டான வெள்ளிசெம்பில் கொடுத்துப்பாரு திறளான ஜெகஜோதி தெளிவைப்பாரே
1824.
தெளிவான மாற்றதுவு மொன்பதாகும் தேசத்தில் கிட்டாது யார்க்குக்கிட்டும்
ஒளிவான சித்தர்முனி ரிஷிகட்கப்பா வுத்தமனே கிட்டுமது சிவயோகிக்கும்
வழியான முறைப்படியே கண்டாராய்ந்து வகுப்புடனே சித்தருட நூலும்பார்த்து
நெளிவான நூல்களெல்லா முளவாராய்ந்து நேர்ப்புடனே சோதித்தேன் மாந்தற்காமே

1825.
மாந்தர்கள் பிழைக்கவென்று வடியேன்தானும் வளப்பமுடன் காலாங்கிநாதர்பாதம்
சாந்தமுடன் சீர்பாதம் தனைநினைத்து சாற்றினேன் லோகத்துமாண்பர்க்கு
வேந்தனெனும் ராஜாதிராஜர்கட்கும் வெகுதூரம் கடந்துசென்ற ஞானிகட்கும்
போந்தமுடன் போகரிஷி யடியேன்தானும் போதித்தேன் வெள்ளையென்ற மனிதற்காமே
1826.
ஆமென்ற வித்தங்கம் அருமையப்பா யாராலுங் கண்டறிவ தெளிமையாகும்
நாமென்ற சூதத்தினாட்டுதன்னை நயமுடனே காரசாரங்களாலே
காமென்ற சத்துருமித்துருகளாலே கருவிகரணாதியின்தன் போக்கறிந்து
வேமென்ற குறுக்குவழி போக்குப்பாதை வெகுதூர மறிந்துமல்லோ சாற்றினோமே
1827.
போற்றினோ மின்னமொரு கருமானங்கேள் பொங்கமுடன் வீரமென்ற செந்தூரந்தான்
மாற்றமுடன் வில்வத்தின் தயிலத்தாலே மயங்காமல் சுருக்கிடவே கட்டிப்போகும்
கூற்றமுடன் மேற்போக்கு புகல்வோர்கண்டீர் போக்கான சரக்குவகை நிற்கப்பாரும்
தேற்றமுடன் சாரமொன்று துத்தமொன்று தெளிவான சிங்கியொன்று கெவுரியொன்றே
1828.
ஒன்றான அயமதுவும் செம்புவொன்று வுத்தமனே பொடிபொடியாய் ராவிக்கொண்டு
பன்றான சரக்குகளும் சரியதாக பண்பாகக் குழிக்கல்லிலிட்டு மைந்தா
யொன்றாகத் தளவிட்டு மாவதாக்கிப் பொங்கமுடன் காலனென்ற ஜெயநீர்தானும்
தன்றான வறுவகையாஞ் ஜெயநீர்தன்னால் தன்மையுடன் தானரைப்பாய் சாமம்நாலே
1829.
நாலான ஜெயநீரில் மைந்தாகேளு நலம்பெறவே தானரைப்பாய் மைபோல்தானும்
மாலான செப்பகலும் வொன்றுசெய்து மார்க்கமுட னவ்வகலில் சரக்கைபூசி
வேலான ரவிதனிலே காயப்போடு வெளுமையுடன் காய்ந்தபின்பு விபரங்கேளு
சாலான வகல்தனிலே வீரம்வைத்து சார்புடனே சீலையது வலுவாய்ச்செய்யே
1830.
செய்துமே ரவிதனிலே காயவைத்து செம்மையுடன் தளவாயாஞ் சட்டிதன்னில்
பெய்துமே வுப்பையரவாசியிட்டு பேரான வீரத்தைநடுவேவைத்து
கைமுறையாய் மேலுமந்த வுப்பைக்கொட்டி கணக்குடனே மேற்சட்டி தன்னைமூடி
மெய்முறையாய் சட்டிக்குச் சீலையப்பா மேன்மையுடன் செய்துமல்லோ ரவியிற்போடே
1831.
போடவே சீலையது காய்ந்தபின்பு போற்றமுடன் மனோன்மணியால் கிருபையாலே
நீடவே காலாங்கிதனைநினைந்து நீடூழிகாலம்வரை யிருப்பதற்கு
கூடவே சித்தர்முனி ரிஷிகள்பாதங் கும்பிட்டு யடியேனை மிகத்தொழுது
மூடவே வாலுகையா மேந்திரத்தில் முடிமீதில் தானிருத்தி யெரித்திடாயே
1832.
எரிக்கையிலே கமலமென்ற சிறுதீயப்பா யென்மகனே யாறுநாள் யெரிநேரப்பா
கரிகியல்லோ வுப்பெல்லாங் கறுத்துக்காணும் கனகமென்ற செம்பதுவு மக்கியல்லோ
நொரிக்கியே சரக்குடனே செம்புசேர்ந்து கொடிதான வீரத்துக் காரமேறி
பரிக்கியே வுட்கொண்டு காரசாரம் பாங்குடனே யேறியல்லோ சிவக்குந்தானே

1833.
தானான செந்தூர மென்னசொல்வேன் தகைமைபெறத் தானெடுத்து சீஷாவிற்றான்
கோனான குருபதத்தை நணுகியேதான் கொற்றவனே தானெடுத்து வைத்துக்கொண்டு
வேனான வெள்ளிசெம்பில் நூற்றுக்கொன்று விபரமுடன் தானுருக்கி வூதிப்பாரு
பானான மாற்றதுவும் யெட்டதங்கும் பசுந்தங்கம் போலிருக்கும் பண்புதானே
1834.
பண்பான பொன்னதுவும் பத்துக்கொன்று பான்மைபெறத் தங்கமது வொன்றுசேர்த்து
திண்பான தகடடித்துப் புடத்தைப்போடு தெளிவான தங்கமது பிறவியாச்சு
வண்பான தங்கமது லோகமெச்சும் வாய்க்காது கருமிகட்கு வாய்க்குமோசொல்
நண்பான சித்தர்முனி ரிஷிகட்கப்பா நலமுடனே வணங்கியல்லோ வேதைவாங்கே
1835.
வாங்கவென்றால் குருமொழியை மனதிலுன்னி வாகுடனே யவர்வாசல் காத்திருந்து
நூங்காம லவர்பணிக்கு தொண்டராகி துணையோடு கிட்டிருந்து யேவல்செய்து
தாங்கியே யவர்பாத மர்ச்சித்தேதான் தாழ்மையுடன் கேள்விக்கு முதல்வனாக
ஏங்கியே யவர்முகத்தின் முன்னேநின்று யெத்தொழிலுஞ் சோரஅமல் செய்யநன்றே
1836.
நன்றுடனே சதாகாலங்காத்திருந்து நலமுடனே முடிவுநாள் வருகுமட்டும்
சென்றல்லோ சமாதியிடம் சென்றுநீயும் செம்மைபெறத் திருப்பணிகள் மிகவுஞ்செய்து
பன்றுடனே வாய்மொழிக்கு பதிலுங்கூறாப் பதிவாகப்பாத்திருந்து பேழைபோலே
கொன்றைமலர் தானெடுத்து வர்ச்சித்தேதான் கோடித்து சிவபதத்தில் போற்றிநில்லே
1837.
போற்றியே யஞ்சலிகள் மிகவுஞ்செய்து பொருந்தி மனமெப்போதும் புண்ணாகாமல்
நேற்றியாய் மனதுவர நடந்துகொண்டு நேர்ப்புடனே சகலகலை யறியவேதான்
கூற்றனெனுங் காலனுக்கு விடங்கொடாமல் கூர்மையுடன் சித்தர்களை வணங்கிநித்தம்
தோற்றமுடன் சதாகாலம் ரிஷிகள்தம்மைத் தொழுதுமிகவே பணிந்து வேதைவாங்கே
1838.
வேதைகளை வாங்கிநித்தம் சேர்த்துமென்ன வெகுகோடி வாதவித்தை பாடிவிட்டார்
போதையுடன் பாடிவிட்டார் என்றுசொல்வார் பூதலத்தில் ரிஷிகோடி மகிமைமெத்த
தீதையிலே சாத்திரங்கள் தொயாமற்றான் சீர்கெட்டு தலைகெட்டு பாடல்கெட்டு
பாதையிலே போகாமல் துறையுங்கெட்டு பாழாகச் சுட்டுக்கெட்டா ரனந்தமாமே
1839.
அனந்தமுடன் வேதைமுகஞ் செய்வாரப்பா அதினுடைய நுட்பவழி காணாமற்றான்
வனந்தனிலே தான்திரிந்து மூலிதேடி வாகுடனே கெட்டவர்கள் லக்கோயில்லை
மனந்தனிலே நேர்ந்தமட்டும் செய்துபார்த்து மார்க்கமுடன் சரக்கதனை மறைத்தாரென்று
எனந்தனிலே கும்புகும்பலாகக்கூடி யேளிதங்கள் செய்தாரே சண்டிமாடே
1840.
மாடான மாடுகள்தான் காணப்போறார் மகத்தான சித்தருட கைமறைப்பை
கோடான கோடிபொருளிழந்துவிட்டார் குவலயத்தில் வீடுவிட்டு
கேடான திரவியங்கள் யெல்லாந்தோர்த்து தெருத்திண்ணைப் பரதேசியாகிநின்றார்
கூடான கூடுவிட்டுப் பாய்வேனென்று கூக்குரலால் பேசியல்லோ பிழைப்பார்தானே

1841.
தானான பிழைப்புக்கு யிடமில்லாமல் தட்டழிந்து கெட்டழிந்து தாறுமாறாய்
கோனான்போலாடுதன்னை தோளிலிட்டு வாடெங்கே யென்றுசொன்ன கதையைப்போல
தேனான சாத்திரத்தின் கருகாணாமல் தேங்கியே கெட்டலைந்தார் கோடாகோடி
ஊனான தேகமது புண்ணுமாகி வுடலழிந்து வுருண்டவர்க ளனேகந்தானே
1842.
அனேகமுடன் மருந்துவகை செய்குவார்கள் அப்பனே சித்தர்களை நினைக்கமாட்டார்
அனேகவித சாத்திரத்தின் மருந்துசெய்வார் அந்நூலின் சித்தர்களைத் துதிக்கமாட்டார்
அனேகவித நூல்படியே மருந்துசெய்வார் அக்காலஞ்சித்தர்களைத் துதிக்கமாட்டார்
அனேகவித முறைப்படியே மருந்துசெய்து வவரவர்கள் குருபதத்தை நினையார்தானே
1843.
நினையாத குருவென்ற நிந்தையாலே நீனிலத்தில் சாபமது சேர்ந்துமேதான்
தினையான மருந்துகள்தான் பலிக்காமற்றான் திசைகெட்டு தடுமாறி தேங்கிநின்றான்
வினைபோல துன்பது மிகவுமாகி மேதினியில் அசுருண்டாய் மாண்டுபோனார்
மனைவிட்டு பொருள்தோற்று மாடுதோற்று மனைவிமுதல் தானிழந்தார் சாபத்தாலே
1844.
சாபமது வந்துமல்லோ சேருமப்பா சதாகாலஞ்சித்தர்களை வணங்கிநித்தம்
கோபமது வாராமல் வுள்ளடக்கி குவலயத்திலிருந்துகொண்டு வரசனாக
பாபமது விட்டகன்று பூமானாக பாருலகில் வாழுவது தருமமப்பா
தருமமுடன் சதகோடி சூரியர்போல் தாரிணியில் வாழுபவன் சித்தனாமே
1845.
சித்தனாமென்று சொல்லிமெச்சுவார்பார் ஜெகதலத்தில் யெனைப்போல நீயுமாவாய்
பத்தனாயிருந்துகொண்டு பரமன்தன்னை பட்சமுட னெப்போதும் பாலித்தேதான்
நித்தமுடன் குருபதத்தை போற்றிசெய்து நீடூழிகாலம்வரை யோகஞ்செய்து
முத்திபெற வழியுனக்கு தெரியுங்கண்டீர் முயற்சியுடன் பலநூலும் பாருபாரே
1846.
பார்க்கையிலே சின்மயத்தின் பொருள்கள் தோன்றும் பாகுடனே யவரவர்கள் துறையுங்காணும்
ஏர்க்கையிலே சுடரொளியின் பரிவுதோன்றும் யென்மகனே சூட்சாதி சூட்சங்காணும்
கார்க்கையிலே கருவிகரணாதியெல்லாம் கண்ணுக்கு ஒளியாக காணும்பாரு
சேர்க்கையிலே வஷ்டாங்கங் காணலாகும் ஜெகத்திலே சடாட்சரத்தை மேவிப்பாரே
1847.
மேவுடனே வாராதாரங்கள் தோன்றும் வெளிக்கப்பால் முப்பாழுங்காணலாகும்
பாவுடனே சிராமயத்தின் ஜோதிகாணும் பார்க்கையிலே ஜோதியது துலைவாய்த்தோற்றும்
நாவுடனே வுள்மூலம் நடுக்கங் காணும் நடுக்கத்தால் தேகமதுகீழ்போலாம்
தாவுடனே மூலாதாரங்கப்பா தடுமாறிக்காணல்போல் தோற்றமாமே
1848.
தோற்றமாம் சிகாரத்தின் மகாரமிஞ்சும் தொகுப்புடனே மகாரத்தின் வகாரமிஞ்சும்
கூற்றவாம் யகாரத்தில் வகாரமிஞ்சும் குறிப்புடனே வகாரத்தில் லகாரமிஞ்சும்
தோற்றமாம் லகாரத்தில் ரகாரமிஞ்சும் சேர்ந்தவுடன் ரகாரத்தில் ழகாரமிஞ்சும்
யேற்றமாம் ழகாரத்தில் னகாரமிஞ்சும் யெளிதல்லோ சிவயோகிக் கெளிதிதானே

1849.
எளிதான வின்னமொரு மார்க்கம்பாரு ஏற்றமுள்ள வெடியுப்பு நாலாங்காய்ச்சல்
நெளிதான சேதுதான் வொன்றேயாகும் நேர்த்தியாய் புளியுடனே காரமாகும்
ஒளிவான தலையண்டம் பேரண்டந்தான் வுத்தமனே சேரிரண்டு தூளதாக்கி
வளிவான சட்டிதனில் கீழேபோட்டு வளமாக வெடியுப்பை நடுவேவையே
1850.
வைக்கவே மேலுமந்த மாவைக்கொட்டி வகையாக மேல்மூடி சீலைசெய்து
மெய்க்கவே ரவிதனிலே காயவைத்து மேன்மைபெற வாலுகையில் யெரிப்பாய்தானும்
பொய்க்கவே நாற்சாம மெரித்தபோது போக்கான வுப்பதுவும் கட்டிநிற்கும்
மொய்க்கமே சட்டிதனை திறந்துபாரு மோசமில்லை கட்டியது வுருக்கிப்போச்சே
1851.
போச்சென்று விடுகாதே புண்ணியாகேள் போக்கான வெடியுப்பு வதீதமெத்த
நீச்சென்ற பேரண்டந்தன்னால்தானும் நிலையாகமதியுப்புக் கட்டலாச்சு
மாச்சென்ற வுப்பாலே சகலசித்து மார்க்கமுட னாடலாங் கோடிவித்தை
பாச்சலுடன் துரைத்தனத்தார்க் கேற்றவுப்பு பாருலகில் ராஜர்வெல்லு முப்புமாச்சே
1852.
உப்பான வுப்பிதுதான் வீரமெத்த வுலகிலுள்ள வாதிகட்குகந்த வுப்பு
அப்பான ஜலமதிலே வளர்ந்தவுப்பு அதிலிருந்து பிறந்துமல்லோ வெடியுப்பாச்சு
செப்பான செம்புகளிம்பூரல் போக்குந் தேசத்தில் சிறந்ததொரு வுப்புமாச்சு
ஒப்பான வுப்பிதுக்கு வொன்றுமொவ்வா வுத்தமனே இதுவோடும் வழியைக்கேளே
1853.
கேளேதான் வுப்பதுவுங் கட்டிநின்றால் கெடியான வுப்பதுவு மெடுத்துமைந்தா
மாளவே நாகமொரு பலமேதூக்கு மகத்தான சூதமொரு பலமேதூக்கு
சூளவே வீரமொரு பலமேதூக்கு சுத்தமுள்ள சாரமது பலமேதூக்கு
மீளவே நாகரசமொன்றாய்ச் சேர்த்து மிகப்படவே தானுருக்கி சாய்த்திடாயே
1854.
சாய்த்திடவே சரக்கெல்லா மொன்றாய்ச்சேர்த்து சாங்கமுடன் தானரைப்பாய்நாலுசாமம்
மாயவே காரசாரத்தினாலே மாண்டுமே ஜெயநீருமாகும்பாரு
தோயவே ஜெயநீரை மதிப்புக்கு தொகுப்புடனே சுருக்குமிடக் கட்டிப்போகும்
காயவே வுப்புக்கு கவசங்கேளு கவான வன்னமென்ற பேதியாமே
1855.
பேதியாம் வளையலென்ற வுப்புமாகும் பேதமில்லை எடைசரியாய் எடுத்துக்கொண்டு
வாதியா மறுவகை ஜெயநீர்தன்னால் மாட்டடா வெணசாமரை பூத்தபோது
ஜோதியா மெழுகதவும் சொல்லப்போமோ சூட்சமுடன் வுப்புக்குக் கவசஞ்செய்து
மேதியாங் கொம்பதனை சீவிமைந்தா மேன்மைபெற பொடியாக்கி செப்பக்கேளே
1856.
செப்பவென்றா லறுவகைஜெயநீர்தன்னால் செழிப்புடனே தானரைப்பாய் நாலுசாமம்
ஒப்பமுடன் தானரைத்துக் கவசஞ்செய்து வுத்தமனே ரவிதனிலே காயவைத்து சீலைசெய்து
தப்பறவே சட்டிதனில் மணலைக்கொட்டி சட்டமுடன் நடுமையம் வைத்துமைந்தா
மெப்புடனே மேலுமந்த மணலைகொட்டி மேன்னைபெற சட்டிகொண்டு சீலைசெய்யே

1857.
சீலையுடன் ரவிதனிலே காயவைத்து சீர்பெறவே வாலுகையி லடுப்பிலேற்றி
காலையுடன் தானெரிப்பாய் சாமம்நாலு கடந்தபின்பு தீயாறிமாற்றாநாள்தான்
மாலையிலே எடுத்துப்பார் என்னசொல்வேன் மகத்தான செந்தூரங்காந்திமெத்த
வாலையுடன் பூசைநைவேத்தியங்கள் வாகுடனே தான்செய்து எடுத்திடாயே
1858.
எடுக்கவே செந்தூரம் பதனம்பண்ணு என்மகனே வெள்ளிதனில் பத்துக்கொன்று
கொடுக்கவே மாற்றதுவு மெட்டதாகும் குறையாது வாணிக்கு மேலேகாணும்
துடுக்குடனே தகடடித்துப் புடத்தைப்போடு துகளற்ற பசுந்தங்கம் புகலப்போமோ
விடுக்கவே கடைதனிலே மாறியுண்ண விரைவான சமுசாரிக்கான தன்றே
1859.
அன்றான வித்தையது அவனியோர்க்கு அப்பனேகிட்டாது யாருக்குந்தான்
தன்றான விதியாளி வருவானானால் தாரணியிலிந்தவித்தை அவர்க்கே யெய்தும்
பன்றான சாத்திரங்கள் படித்தாலென்ன பலநூலுந்துறைகொண்டு பார்த்துமென்ன
ஒன்றான குருபிரானனிருந்தால் வுத்தமனே லபிக்குமடா புண்ணியோர்க்கே
1860.
புண்ணியனா மின்னமொரு கருமானங்கேள் புகழான சித்தர்கள்தான் செய்யுமார்க்கம்
திண்ணமுடன் சுக்கானின் கல்லையப்பா திறமுடனே சேரொன்று கொண்டுவந்து
வண்ணமுடன் வறுவகைஜெயநீர்தன்னால் மாட்டடா எண்சாமம் சுறுக்குத்தாக்கு
கண்ணனிட மூலியப்பா தன்னைவாங்கி வருவாக பொதிந்துமே கவசஞ்செய்யே
1861.
செய்யவே சீலையது வேழுஞ்செய்து சிறப்புடனே ரவிதனிலே காயவைத்து
பையவே கெஜபுடத்தில் மைந்தாகேளு பாங்காகப் புடம்போடச் சுண்ணமாகும்
வெய்யவே சுண்ணமதை யெடுத்துக்கொண்டு விருப்பமுடன் ரவிதனிலே பத்துக்கொன்று
தொய்யவே தானுருக்கி கொடுத்துப்பாரு துறையான செம்பதுவு மூறல்போச்சே
1862.
போச்சென்று விடுகாதே புண்ணியாகேள் பொலிவான செம்பதுவு மூறலேகி
நீச்சென்ற சிலிம்பதுவு மிகவேநீங்கி நிலையான சொகுசுநிறந் தன்னிலொப்பாய்
போச்சென்ற செம்பதுவுமொன்றேயாகும் பேரான தங்கமது வொன்றேயாகும்
மாச்சென்ற இரண்டுருவு மொன்றாய்ச்சேர்த்து மகத்தான பொன்னிறமாகுந்தானே
1863.
தானான பொன்னதுவு மாற்றுமாகும் சார்வாகப் புடத்துக்கு வுறுதிதங்கம்
மானான தங்கமது பசுமைமெத்த மார்க்கமுடன் சித்தர்கள்தான் செய்யும்வேதை
பானான கருவாளி காண்பானாகில் படுமுன்னே சுக்கனைச்சுன்னம்பண்ணி
தேனான சரக்குவகை யாவுங்கொன்று தேசத்தில் வாதிகட்கு குருவாவானே
1864.
குருவான வாதிகட்கு வழியுஞ்சொல்வேன் குறிப்புடனே சமாதிகட்கு நிலையுஞ்சொல்வேன்
பருவான பூநீருக்குறியுஞ்சொல்வேன் பாரினிலே வைத்தியற்கு வுணவுஞ்சொல்வேன்
திருவான மூலிவகைபோக்கு சொல்வான் திரளான கற்பத்துக் குறுதிசொல்வான்
முருவான சத்துரு மித்துருவுஞ்சொல்வான் முறையான சிமிட்டுவித்தைக் கருசொல்வானே

1865.
சொல்வானே மாணாக்கள் பிழைக்கவென்று சூட்சாதி சூட்சமெல்லாம் பிரித்துசொல்வான்
வெல்வான மின்னமொரு கருமானங்கேள் மிக்கான வதீதமென்ற வித்தைதன்னை
பல்வானே ஈடொன்று புகலக்கேளும் பொலுவான சீஷனுக்கு மைந்தாகேளு
நல்லதொரு செவ்வட்டை செம்பூநாகம் நலமான குழியானைப் பூச்சியாமே
1866.
பூச்சியுடன் தம்பலமாம் பூச்சியாகும் புகழான பச்சோந்தி பிச்சுதானும்
காச்சியென்னுங் கருங்குருவி பிச்சுதானும் கெவுரியுடபட்சியுட பிச்சுதானும்
மாச்சியென்ற கழல்வேண்டு மொக்கச்சேர்த்து மகத்தான புனுகுடைய பச்சைப்பூரம்
பாச்சென்ற கஸ்தூரி ரோசனையுந்தானும் பளிங்கான சுண்ணமென்ற காரமாமே
1867.
காரமுடன் தேனுடனுன் கருவாலாட்டி காட்சியுடன் சிமிழ்தனிலே பதனம்பன்னு
தீரமுடன் குளிகையொன்று செய்துகொண்டு திகட்டாதே வறுசிவைபரந்தன்னோடொக்க
சாரமுடன் பலகாரம் வர்க்கந்தன்னில் சார்பாக கொடுத்துவிட மைந்தாபாரு
பாரமுடன் வுன்மீதி லெந்தநாளும் பட்சமுடன் வாழ்வதற்கு சொன்னோம்பாரே
1868.
பாரேதான் வினோதமென்ற வித்தையப்பா பாரிலுள்ள சித்தர்முனி ரிஷிகள்தாமும்
சீரேதான் மனமுவந்து வெந்தன்மீதில் சிறப்புடனே பட்சம்வைத்து காப்பதற்காய்
மேரேதான் விண்ணுலகம் காண்பதற்கு மிக்கான தேரொன்று கட்டினேன்யான்
நேரேதான் தங்கரதம் செய்தமார்க்கம் நேர்ப்புடனே யாமுரைப்போம் போகர்தாமே
1869.
தாமேதான் சக்கரமும் பதினாராகும் தக்கான யிரிசியது எட்டதாகும்
போமேதா னிடதுபுறம் கெஜமோநூறு பொங்கமுடன் வலதுபுறம் கெஜமோநூறு
வேமேதான் நெடுக்குபுரம் சக்கரமும்நாலு வெளியான குறுக்குபரம் சக்கரமும்நாலு
தாமேதான் நடுமையம் சக்கரமுமெட்டு தாழ்வாக வுருளையென்ற யிரிசியாமே
1870.
இரிசியுடன் பாருமதுமெட்டதாகும் இணையான சட்டமது முப்பத்திரண்டு
குறிசியுடன் நெடுஞ்சட்டம் அறுபத்திநாலு குறுக்கான வுள்சட்டம் பதினாறுமாகும்
பரிசியுடன் மேல்வட்டம் நூற்றிருப்த்தியெட்டு பாங்குடனே பழுதுகளும் இருநூற்றன்பத்தாறு
வரிசையுட னொன்றுக்குள்ளிழுத்துமிகமாட்டி வலுமையுனாணிகளுமிகபொதிந்துமாட்டே
1871.
மாட்டையிலே சக்கரத்திற்குருளை யிருகம்பி மாறாட்டமில்லாமல் அணியுடனேமாட்டி
கோட்டையிலே சித்தியல்லோ வளையமுள்ள கம்பிகுறுக்குமுதல் நெடுக்குமுதல் குவிந்துமுனைமட்டும்
வாட்டமுடன் நடுவருளை கொலுசிமிகமாட்டி வார்புரத்தில் சக்கரத்தின் முனையோரமட்டும்
நீட்டமுடன் றலைபக்கம் சுக்கானிடகம்பி நடுங்கம்பி புறவட்டம் நிலைக்கமிகபூட்டே
1872.
பூட்டையிலே தாளுடனே யிரிசிகம்பி மாட்டி புகழுடனே நடுவட்டம் வட்டமத்தி
கூட்டமுடன் சட்டமது வரிவரியாய் மாட்டி கூர்மையுடன் சுழலாணி நடுவாணிதன்னில்
தேட்டமுடன் அஞ்சுருளை மிகப்பூட்டி தேர்மக்கியடிவாரம் பின்னலுடன் சட்டம்
பூட்டகமாம் பலகையின் மேலாணிமிகத்தாங்கி புகழ்பெறவே சுற்றோரம் கத்தரிப்பாய்செய்யே

1873.
செய்யவே கத்தரிப்பில் மணிகள்மிகமாட்டி சேர்ந்ரவடிவாரமது பலகைமிகப்பூட்டி
தொய்யவே வூஞ்சலதுபோல மிகச்செய்து துப்புறவாய் மையூறுவாணிமிகமுடுக்கி
பையவே யிரிசுக்கு வுள்ளுருளைமாட்டி பாங்குடனே வுள்ளாழி கடையாணிமாட்டி
மையவே சக்கரமும் சுழலமிகச்செய்து மான்மையுடன் நீளமதுசமைத்திட்டேன்காண்
1874.
காணவே யடிவாரம் நங்கூரமுமாச்சு கயவான மேல்வாரம் பீடமதுசொல்வோம்
ஏணவே சட்டமது குத்துக்கால் நூறு யெழிலாக குறுக்குவரை பத்துசட்டமாகும்
பூணவே நெடுக்குவரை பத்துசட்டமாகும் புகலான காலதுவும் முப்பத்திரண்டு
தோணவே நடுக்கம்பி சோடசமுமாகும் தோராதவுள்கம்பி வட்டமிதமாமே
1875.
அட்டமுடன் சட்டமது கெஜநீளம்பத்து அதன்மேலே சிம்மாடு கட்டையிருகெஜமாம்
சட்டமுடன் வேல்வரை துளைகளிருநூறாம் சாங்கமுடன் துளைகளிலே கம்பிமிகசெருகி
நெட்டமுடன் மேல்வரை வாணிகொண்டுமுடுக்கு நெடிதான யடிமட்டும் வூடுருக்கத்தாக்கி
குட்டமென்ற சட்டமது கீழ்புரமும் நாட்டி குவலயத்தில் தாங்கு கால்மிகக்கொண்டுசாத்தே
1876.
சாத்தியே நாற்புரமும் வரிசையுடன்மாட்டி சர்வாங்கக்காலுடனே சட்டமொன்றுபூட்டி
ஏத்தியே நடுமையம் திருகுசிம்மாடு எழிலானசுற்றோரம் வளையமிகச்செய்து
சூத்திரமாம் சட்டமது பதினாறுசட்டம் சுழல்கின்ற சட்டமது முப்பத்திரண்டு
நேர்த்தியுடன் தானமைத்து நெடுவூஞ்சல்போல நேர்மையுடன் செய்துவிட்டேன்
வின்னமிகக்கேளே
1877.
கேட்கவே மேற்சதுரம் வட்டமதுபத்து கெடியான சட்டமது குறுக்கு நெடுபத்து
சூட்சமுடன் மேற்சிகர வட்டமது வஞ்சு சுருளான நடுச்சிகரம் வட்டம்நாலு
தாக்கவே மேல்வட்டம் நடுச்சிகரமூன்று தாழ்மையுடன் மேல்வட்டம் நடுச்சிகரம்ரண்டு
தூட்கமுடன் சட்டநடுச்சிகரம்வென்று துடிப்பான வுச்சியது கூர்மைமிகுவாமே
1878.
மிகுவான தேரதுதான் சூட்சமிகமாட்டி மேன்மைபெற சோடித்து வஞ்சுருனியாலே
தகுமான கொலுசுடனே யொன்றோடொன்று வாய்சார்புடனே யிருக்கியல்லோ
சட்டமதில்பிகித்து
பிகுவான நடுவாணி தன்னில்மிகமாட்டி பேரான காந்தமென்ற சத்துமிகப்பூசே
1879.
பூசியே தேரிலுள்ள யிரும்புக்கெல்லாம் புகழான காந்தத்தின் சத்தேயூட்டி
வாசியென்ற மேலாணி காந்தவாணி வரையான கீழாணி யிரும்புமாகும்
மாசியென்ற பலகையெல்லாம் சத்தேயாகும் மகத்தான யிரும்புடனேகாந்தஞ்சேரில்
ஊசியென்ற காந்தமது சத்துதன்னால் வுயறவே பறக்குமடா ரதந்தான்பாரே
1880.
பாரேதான் நாலுபுரம் குத்துக்காலில் பாங்கான வாளியுடன் சிம்பமாகும்
நேரேதான் புரவியது மாட்டிருக்கும் நெடிதான பாதமது யிரும்பேயாகும்
சீரேதான் சிற்சிவது காந்தமாகும் சிறப்பான பீடமது முப்பத்திரண்டு
கூரேதான் பீடமென்ற பலகைதன்னில் குருமுனியாம் சித்தர்நமுனிவர்தாமே

1881.
முனியான நவகோடி ரிஷிகள்தாமும் முனையான சீனபதிஜெனங்களெல்லாம்
தனியான சித்திரமாந் தேரிலேற்றி தாக்குடைய விமையகிரி பர்வதத்தில்
பனியான மேலவரை கொண்டுசென்று பாராதகாட்சியெல்லாம் பார்க்கவிட்டு
தொனியான வாத்தியங்கள் கேட்டும் கோயில்தோற்றமுள்ள வடிவேலர் சேர்வைதானே
1882.
சேர்வையாம் வடிவேலர் தன்னைக்கண்டார் சேனைமுதல் சரிசனங்கள் யாவும்பார்த்தார்
பார்வையாம் சித்தர்முனி ரிஷிகள்தாமும் பட்சமுடனென்மீதில் கிருபைகூர்ந்து
நேர்மையுடன் வரமெனக்கு யீந்தாரப்பா நெறியுடனே தேவரதம் நடத்தினேன்யான்
கூர்மையுடன் மலையோரம் சுற்றிவந்து குறிப்புடனே சீனபதி யிறக்கிட்டேனே
1883.
இறக்கவே சித்தர்முனி ரிஷிகள்தாமும் இயலாகவென்மீதில் பட்சம்வைத்து
சிறக்கவே யெந்தனுக்கு வுபதேசங்கள் சீராக அத்தனையும் புகட்டிவிட்டாரப்பா
திறக்கவே சீனபதிமூன்றுகாதம் தெளிமையுள்ள வெள்ளையென்ற ஜெனங்களெல்லாம்
பறக்கவே சித்தரரதம் சூட்சாசூட்சம்பார்த்துமே பிர்மித்து மயங்கினாரே
1884.
மயங்கினா ரென்மீதி லிச்சைகொண்டார் மானிலத்தில் பெண்களெல்லாம் மோகமானார்
தியங்கியே என்னிடத்தில் மொகித்தார்கள் திறலான பெண்களெல்லாஞ் சீனந்தன்னில்
நயமுடனே நல்வார்த்தை பேசியேதான் நாட்டிலுள்ள வளப்பமெல்லாம் நன்காராய்ந்து
மயமுடனே தாமிருந்தார் சீனந்தன்னில் மகாபதி பட்சமது யிருந்தார்பாரே
1885.
இருந்தாரே பூரணமாம் சந்திரபட்சம் யெழிலுடனே தேவரதமுடுக்கியேதான்
திருந்தமுடன் கடலேழுஞ்சுத்திவந்தேன் திக்கெட்டில் வதிசயங்கள் யாவும்பார்த்தேன்
பொருந்தவே வணாந்திரத்தில் ரதமிறக்கி பொங்கமுட னவர்களாசீர்மத்தில்
குருந்தமுடன் போனபின்பு யடியேன்தானும் குளிகைகொண்டு சீனபதிவந்திட்டேனே
1886.
வந்திட்டேன் இதிகாசவித்தையெல்லாம் வாகுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
திந்திட்டேன் காலாங்கி கிருபையாலே சதாகாலமுள்ளமட்டும் தரணிமீது
பந்திட்ட வெண்பேருதான் விளங்காபாலித்தேன் லோகத்துமாந்தர்க்காக
முந்திட்ட வித்தைகளும் கோடிவர்க்கம் முனையாகக் காட்டிவிட்டேன் போகர்தாமே
1887.
போகரென்றால் வித்தையது பொய்யாதப்பா பொங்கமுடன் சித்தர்கள்தான் வித்தையல்ல
சாபமுடன் சொல்வார்கள் முனிவர்சித்தர் சார்பாக யான்சொல்வேன் அதீதமார்க்கம்
தாபமுடன் காலாங்கி தனைவணங்கி சார்பாகச்செப்பிவிட்டேன் துறைகளெல்லாம்
சேபமுடன் கருவாளியாவானானால் சுந்தரனே லபிக்குமடா புண்ணியவானே
1888.
புண்ணியனே வின்னமொரு கருமானங்கேள் புகலுகிறேன் நாகமென்ற செந்தூரந்தான்
திண்ணமுடன் நாகமொரு பலமேவாங்கு திறமான செம்பதுவும் பலமோகால்தான்
வண்ணமுடன் வயமதுவும் பலமோகால்தான் வகுப்பான வங்கமது பலமோகால்தான்
நண்ணமுடன் தங்கமது பலமோகால்தான் நலமான ரசமதுவும் பலமும்ரண்டே

1889.
இரண்டான கெந்தியது பலமோரண்டு யெழிலான கானகமும் பலமோகால்தான்
திரண்டான மனோசிலையும் பலமோகால்தான் திகழான வீரமது வராகன்ரண்டு
மாண்டான வளையலுப்பு விராகன்ரண்டு மகத்தான பூநீரு வராகன்ரண்டு
சுரண்டான விவையெல்லாம் வொன்றாய்கூட்டு சூட்சமுடன் குழியம்மி தன்னிலாட்டே
1890.
ஆட்டவே கையானின் சாற்றினாலே அப்பனே வெண்சாமமரைத்தபோது
நீட்டமுடன் வெண்ணெயது போலேயாட்டி நெடிதான ரவிதனிலே காயப்போடு
வாட்டமுடன் காய்ந்தபின்பு பொடியதாக்கி வளமாக காசியென்ற குப்பிதன்னில்
தேட்டமுடன் தான்போட்டு மைந்தாகேளு தெளிவான மரக்கல்லால் கொண்டுமூடே
1891.
மூடவே சீலையது வலுவாய்ச்செய்து முசியாமல் ரவிதனிலே காயவைத்து
நீடவே சட்டிதனில் மணலைக்கொட்டி நினைவாக சட்டிநடு குப்பிவைத்து
தேடவே குப்பியின்மேல் மணலைக்கொட்டி தெளிவாக சட்டிகொண்டு கவிழ்த்துமூடி
சாடவே சீலையது வலுவாய்ச்செய்து சாங்கமுடன் வாலுகையில் ஏற்றிடாயே
1892.
ஏற்றவே கமலமென்ற தீயாலப்பா என்மகனே யெண்சாமம் யெரித்தாரப்பா
போற்றவே யாறியபின் எடுத்துப்பாரு பொங்கமுடன் செந்தூரம் சொல்லப்போமோ
வாற்றமென்ற செந்தூரம் பதனம்பண்ணு மகத்தான வேதையிது கோடாகோடி
நாற்றமென்ற செம்பதனில் நாலுக்கொன்று நலமுடனே தானுருக்கிக் கொடுத்துப்பாரே
1893.
கொடுத்துப்பார் செப்பதுவு மிரண்டுபோகும் குணமாகும் வூரலது வடுத்துக்கொல்லும்
தடுத்துமே கரியோட்டி லூதிப்போடு தாக்கான செம்பதுவும் சொகுசுமெத்த
தொடுத்துப்பார் செம்புதனைமதிநாலுக்கு துப்புரவாய் தானுருக்கி யெடுத்துப்பாரு
விடுத்துப்பார் மாற்றதுவும் ஏழதாகும் வுரைவான பொன்னதுவும் பசுமைகாணே
1894.
காணவே பொன்னென்ற யேமமாச்சு கருவான தங்கமது வைந்துக்கொன்று
பூணவே தானுருக்கியெடுத்துக்கொண்டு புகழாக தகடடித்துப் புடத்தைப்போடு
வேணவே பூங்காவிதன்னிலப்பா விருப்பமுடன் புடம்போடப் பசுமையாகும்
மாணவே சித்தர்செய்யும் வேதையாகும் மார்க்கமுடன் நாதாக்களதீதந்தானே
1895.
தானான செந்தூரங் குன்றியுண்ணு தயவுடனே வெண்ணய்தனி லனுபானந்தான்
வேனான மண்டலந்தான் கொண்டபோது மிக்கான தேகமது கற்றூணாகும்
கோனான குருவருளால் தேகம்பொன்னாம் குவலயத்தில் கோடிவரையிருக்கலாகும்
பானான காலாங்கி கிருபைதன்னால் பாடினேன் போகரிஷி பண்மைபாரே
1896.
பண்மையா மின்னமொரு கருமானங்கேள் பாங்கான சாரமது பலம்நாலாகும்
திண்மையாம் கெந்தியது பலம்வைந்தாகும் திடமான வெண்காரம் பலமிரண்டாகும்
விண்மையாம் பூரமது பலம்ரண்டாகும் வகுப்பான வீரமது பலமொன்றாகும்
கண்மையாம் சரக்கெல்லா மொன்றாய்க் கூட்டி களிம்புபோல் தானரைப்பாய்சாமம்பத்தே

1897.
பத்தான சாமமது யரைப்பாயப்பா பாங்குடனே வாடுதின்னாப் பாலைமூலி
சித்தான சித்தருட மூலியப்பா ஜெகத்திலே தானறிவார் மாண்பர்தாமும்
முத்தான நிழல்தனிலே காயவைத்து முசியாமல் சீஷாவிலடைத்தஉக்கொண்டு
சுத்தான புட்டிக்குச்சீலைசெய்து சுத்தமுடன் மண்மறைவில் தயிலம்வாங்கே
1898.
வாங்கியே தயிலமது பதனம்பண்ணு வாகுடனே தயிலமதை யெடுத்துமைந்தா
பாங்குபெற வாருமாற்றானிக்கொப்பால் பசும்பொன்னாம் விராகனது தகடடித்து
தீங்கில்லாத் தயிலமது குன்றிதானும் திகழாகத்தானெடுத்துப்பூசி மைந்தா
ஏங்கியே திரியாதே புடத்தைப்போடு யெழிலான பொன்னதுவு மாற்றுபாரே
1899.
மாற்றான பொன்னதுவும் பசுமைத்தங்கம் மகத்தான நாதாக்கள் வேதைகாணும்
காற்றான தயிலமது காரமெத்தக் கடுங்காரச் செயநீருமிதுக்கீடுண்டோ
சேற்றான துருத்தியது பிழைப்பதற்கு சூட்சமுடன் சித்தர்முனி செய்யும்வேதை
வேற்றான மாந்தர்கட்கு யிந்தமார்க்கம் வெளியாகத் தானுரைத்தோம் வண்மையாமே
1900.
வண்மையா மின்னமொரு கருமானங்கேள் மார்க்கமுடன் நாதாக்களதீதவித்தை
உண்மையுடன் சொல்லுகிறேன் மைந்தாபாரு உவப்பான கல்லுப்பு பலமேகால்தான்
திண்மையுடன் மதியுப்பு பலமோகால்தான் திறமான துருசதுவும் பலமோகால்தான்
நன்மைபெற சாரமது பலமோகால்தான் நலமான சாரமது பலங்கால்கூட்டே

# போகரின் சப்த காண்டம் – 7000

1901.
கூட்டவே லிங்கமது பலமோகால்தான் குணமான பூநீறு பலமோகால்தான்
வாட்டமுடன் சீனமது பலமோகால்தான் வகுப்பான துத்தமது பலமோகால்தான்
காட்டமுடன் காரமென்ற ஜெயநீர்தன்னால் நலம்பெறவே தானரைப்பாய் பத்துசாமம்
நீட்டமுடன் யாறுமாற்றாணிக்கொப்பாய் நேரான பசும்பொன்னு தகடதாக்கே
1902.
தகடான ரேக்கதனை யெடுத்துமைந்தா தண்மைபெற மெழுகதனை தகட்டிற்பூசி
நிகடான மெழுகதனைப் பூசியல்லோ நேர்புடனே பூங்காவிக்குள்ளேபோடு
சகடான செம்பதுவும் கட்டியேதான் சார்பான தங்கமதுவாகும்பாரு
பகடான மாற்றுவகை கூறப்போமோ பசுந்தங்க மிதுக்கீடு சொல்லொண்ணாதே
1903.
சொல்லவென்றால் நாவேது பாவுமேவு சுருதிமுதல் யாராய்ந்து படித்துமென்ன
வெல்லவே சித்தர்கள் கைமறைப்பு மேதினியில் யாராலும் காணப்போமோ
புல்லவே காலாங்கிநாதர்பாதம் போற்றியே சதாகாலம் பணிந்துநித்தம்
நல்லவே மானிடர்கள் பிழைக்கவென்று நாட்டினேன் போகரிஷி நவிலத்தானே
1904.
நவிலவே போகரிஷி சொல்லுமார்க்கம் நாட்டுளோர் கருவாளி காண்பான்பாரு
புவிலவே வின்னமொரு கருமானங்கேள் புகழான வெல்வங்கம் பலமொன்றாகும்
கவிலவே பாஷாணம் பலமொன்றாகும் கடிதான வயமதுவுந் தூளேகாலாம்
தவிலவே ரசமதுவும் பலங்காலாகும் தாழ்மையுடன் தானரைப்பாய் சாமம்நாலே
1905.
நாலான சாமமது வரைக்கும்போது நலமான மெழுகதுபோலாகும்பாரு
பாலான தேனதுவும் இரண்டுசாமம் பாகமுடன் தானரைப்பாய் மைபோலாக
வேலான பசுநெய்பால் சாமம்நாலு மிக்கான வெண்காரம் பொரித்துப்போடு
கோலான கரண்டியினால் கிண்டிக்கொண்டு கொப்பனவே வச்சிரமாங் குகையிற்போடே
1906.
போடவே சீலையது வலுவாய்ச்செய்து பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
நீடவே குகைதனிலே யுருக்கியேதான் நிலையான களங்குதனை யுடைத்துப்பாரு
நாடவே களங்குதனை சொல்லப்போமோ நாதாக்கள் செய்யுமிது வதீதமார்க்கம்
கூடவே களங்குதனை யெடுத்துக்கொண்டு குமுறவே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்றே
1907.
பத்தான யிடைதனிலே குருவொன்றீய்ந்து பதமாகத் தானெடுத்து வூதிப்போடு
புத்தான களங்கதுவும் நீங்கியல்லோ புகழான வெள்ளியது மாற்றுகாணும்
மத்தான வெள்ளியது பசுமைமெத்த மகத்தான மட்டமது நாலுக்கொன்று
சித்தான தங்கமது வொன்றுகூட்டி தெளிவாக வாரடித்துப் புடத்தைப்போடே
1908.
போடவே மாற்றதுவும் பசுமையாகும் பொங்கமுட னின்னமொரு மார்க்கங்கேளு
நீடவே கரிவங்கம் பலமும்வாங்கி நிலையான தாளகமும் சரியதாக
மூடவே முலைப்பாலால் தானரைத்து முசியாமல் வங்கத்துக் கங்கிபூட்டி
சூடவே சீலைமண் வலுவாய்ச்செய்து சூட்சமுடன் கெஜபுடத்தில் போட்டிடாயே

1909.
போட்டவுடன் தீயாறி யெடுத்துப்பாரு பொங்கமுடன் களங்கமது வென்னசொல்வேன்
தாட்டிகமாய்க் களங்கமதை யெடுத்துமைந்தா தாக்கிடவே ரவிதனிலே பத்துக்கொன்று
நீட்டமுடன் கொடுத்துருக்கி யூதிப்போடு நேரான செம்பதுவும் கட்டிப்போச்சு
வாட்டமுடன் செம்புதனைப் பதனம்பண்ணு வாகுடனே வெள்ளிதனில் நாலுக்கொன்றே
1910.
ஒன்றுடனே வாரடித்துப் புடத்தைப்போடு ஓகோகோ பசுமையது சொல்லப்போமோ
குன்றான மலைமீதி லிருக்குஞ்சித்தர் கூர்மையுடனாராய்ந்த நூல்கள்தன்னில்
நன்றான கைமறைப்பு யாவும்பார்த்து நலமுடனே தேர்ந்தெடுத்த விந்தபாகம்
பன்றான மாணாக்கள் பிழைக்கவென்று பாடிவைத்தேன் போகரிஷி பண்பாய்த்தானே
1911.
தானான வித்தையது வதீதவித்தை தயவுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
மானான காட்டகத்தில் சென்றுயானும் மார்க்கமுடன் மூலியொன்று யாராய்ந்தேதான்
கோனான யிடையர்களை யிடமுங்கேட்டு குறிப்பாக இடைக்காட்டார் சமாதிகண்டு
பானான சமாதியிடம் சென்றுயானும் பரிவாக நானவரைக் கண்டிட்டேனே
1912.
கண்டிட்ட போதையிலே சித்தர்தாமும் கடுகெனவே யாரப்பா வென்றுகேட்க
மண்டிட்டு அடியேனும் தாள்பதிந்து மகாதேவர் காலாங்கி சிஷனென்றேன்
தெண்டிட்ட யெந்தனையும் கேள்விகேட்டார் தெளிவுடனே வுத்தாரஞ் சொன்னேனப்பா
விண்டிட்டு நானவரை வணங்கிமிக்க வேதாந்தம் சித்தாந்தம் கேட்டேன்பாரே
1913.
கேட்டேனே யென்மீதில் கிருபைவைத்துக் கீர்த்திபெற யெந்தனுக்கு வுபதேசித்தார்
மாட்டேனே எண்ணாமல் சித்துதாமும் மனங்கொண்டுபோதித்தார் கோடிமார்க்கம்
தாட்டிகமா யானுமல்லோ கண்டாராய்ந்து தயவுடனே நானவரைக் கருவுகேட்டேன்
வாட்டிகமாய் கருவெனக்கு வுரைத்தாரப்பா வாகுடனே வணாந்திரத்தில் சென்றேன்காணே
1914.
கண்டேனே மூலியுட வனாந்திரத்தை காடெல்லாந்தான் திரிந்து எடுத்தேனப்பா
விண்டேனே மதிமயக்கப்பூடுவொன்று விரைவான திகைப்பூண்டு வொன்றுதானும்
அண்டாத மரந்தனிலே ஏறுங்கொட்டை அழிஞ்சியிடவித்தப்பா வதனோடொக்க
பண்டான பழத்தோடு ஓடும்போக்கி பாங்குடனே குழித்தயிலம் வாங்குவாயே
1915.
வாங்கியே தயிலமதை பதனம்பண்ணு வாகுபெற சீஷாவிலடைத்துக்கொண்டு
ஏங்கியே திரியாதே மாணாகேளு எழிலான வித்தையிது ஜாலவித்தை
தூங்கியே துஷ்டருடன் கூடாமற்றான் துணையான சீஷனொன்று தேடிக்கொண்டு
பாங்குபெற ஜாலவித்தை யாடுவாய்நீ பாரினிலே சித்தனைப்போலாவாய்ப்பாரே
1916.
பாரப்பா தயிலமது மயக்கும் பார்வை பாரினிலே வித்தைக்கு கருதானாகும்
ஆரப்பா மேதியின்றோலினாலே அப்பனே டோலொன்று வுண்டுபண்ணி
நேரப்பா யிருபுறமும் கச்சைபூண்டு நெடிதான தோல்வாரு இறுக்கிமாட்டி
சீரப்பா முடிச்சுமுப்பத்திரண்டு சிறப்புடனே தலைபுறத்தில் சுறுக்கிடாயே

1917.
சுறுக்குடனே சூத்திரமாங் கயிறுமாட்டி சோடினைகள் மிக்கவது செய்துகொண்டு
குறுக்குடனே திரைமாட்டி கொம்புகட்டி குடியானபேர்க ளொருபக்கம்நிற்க
முறுக்குடனே கிடாவொன்று நேர்நிறுத்தி மூர்க்கமுடன் கத்திகொண்டு வெட்டினேன்யான்
தருக்குடனே சீனபதிஜெனங்களெல்லாம் சட்டமுடன் தான்பார்த்து பிரமித்தாரே
1918.
பிரமித்து நிற்கையிலே வடியேன்தானும் பேரான கிடாவதனை யெடுத்துமைந்தா
திரமுடனே டோலிக்குள் தானடைத்து திறமையுடன் வுள்ளிருந்த கிடாவைத்தானும்
வரருடனே தானழைத்து ஜெனங்கள்முன்னே மஅனிலத்தில் நடுநடுங்கி பிரமித்தேங்க
குரமுடனே தானழைத்தேன் கிடாவையப்பா கொப்பெனவே கண்டுபயந்தொதுங்கினாரே
1919.
ஒதுங்கையிலே வடியேனும் முன்னிருந்த வுயிர்போன கிடாவதனை யடக்கஞ்செய்தேன்
பதுங்கையென்ற டோலிக்குள் அடைத்துப்போட்டேன் பார்வைக்கு திரைமறைவில் காணாமற்றான்
சதுங்கையுடன் கிடாவங்கே குதிக்கும்போது ஜெனங்களெல்லாம் மிகவாச்சரித்து
மதுங்கையென்ற மரம்போலே நின்றுவிட்டார் மன்னவனே சாலமென்ற மோடியாமே
1920.
மோடியென்ற தொழிலதனைச் செய்யும்போது முன்செய்த கருத்தயிலம் வாடமிட்டு
ஓடியே துலைதூரம் சென்றுபோயி வுத்தமனே வேடமது பூண்டுகொண்டு
தேடியே குறத்தியென்ற பெண்ணைப்போல தெரியாமல் சாலமென்ற மையைதீட்டி
நீடியே பெட்டியி லடக்கஞ்செய்தேன் நீணிலத்தில் யெல்லவரும் பார்த்திட்டாரே
1921.
பார்க்கையிலே பெட்டிதனில் மூடிவிட்டேன் பாராளும் மன்னர்முன்னே வடக்கஞ்செய்தேன்
மூர்க்கமுடன் கட்டாரி தன்னைநோக்கி முயன்றுமே மேல்நோக்கிபூமிதன்னில்
தீர்க்கமுடன் பெட்டியின்றன் பக்கம்நின்று குத்திவிட்டேன் மாதுதன்னை
மார்க்கமுடன் மாதினுட பக்கமெட்டு மானிலத்தில் ஜனங்களெல்லாம் மயங்கினாரே
1922.
மயக்கமுடன் நிற்கையிலே வடியேன்தானும் மறைப்படைய மையதனை எடுத்துக்கொண்டு
தியக்கமுடன் நெற்றிதனில் பூசிக்கொண்டு தியங்கவே யெல்லோரும் பிரமித்தேங்க
தயக்கமுடன் மறைப்புடனே போயிருந்து ஜனத்திலே குறமாதுயானுந்தானும்
துயக்கமுடன் வெளியாங்கமாகி வந்தோம் துறைராஜர் மெச்சிடவே செய்தேன்யானே
1923.
செய்தேனே மோடியிலே யனந்தம்பேர்க்கு சிறப்பான ஜாலத்தி லனந்தம்பேர்க்கு
செய்தேனே பேதனங்களனந்தம்பேர்க்கு செழிப்பான கிண்ணவித்தை யனந்தம்பேர்க்கு
செய்தேனே சோளியிலே யனந்தம்பேர்க்கு செடல்கட்டி வித்தைகளிலனந்தம்பேர்க்கு
செய்தேனே பச்சிலையி லனந்தம்பேர்க்கு சோதித்தேன் கோடிவித்தை யதீதம்பாரே
1924.
பார்த்திட்டேன் சாலமென்ற வித்தைதன்னைப் பரிவாக சீனபதிலுற்றோர்தாமும்
கார்த்திட்ட வித்தைக்கு யெந்தன்மீது கருணைபெற வெகுபேர்கள் ஆசீர்மித்தார்
ஐர்ந்திட்டே னவர்களுக்கு வுபதேசித்தேன் யெழிலான வித்தைகளை கற்பித்தேதான்
ஊர்ந்திட்டு சீனபதிவிட்டு நீங்கி வுத்தமனே குளிகையது கொண்டேன்தானே

1925.
கொண்டேனே குளிகையது பூண்டுகொண்டேன் கோடானவித்தையெல்லாம்
யானும்பார்த்து
கண்டவர்கள்பார்த்து மிகபிரமைகொண்டு காசினியில் செய்வதற்கு கருவுஞ்சொன்னேன்
விண்டபடி யொருவருக்குஞ் சொல்லவேண்டாம் வேதாந்ததாயினது வருளும்பெற்று
தொண்டனெனும் பெயர்பெற்று சதாகாலந்தான் தொல்லுலகில் சித்தனைபோல்
வாழ்குவாயே
1926.
வாழவே யின்னமொரு சூத்திங்கேள் வையகத்தில் நாதாக்கள் செய்யமாட்டார்
நீழ்கவே கருவூரார் அநேகஞ்செய்தார் நிலையான வித்தையிது வதீதவித்தை
மூழ்கவே கண்ணபிரான் பள்ளிகொண்ட முனியான சித்தரிஷி தடமுங்கண்டேன்
மாழ்கவே பொற்கடலின் மத்திபத்தில் மகத்தான கப்பலொன்று செய்தேன்யானே
1927.
செய்யவே மராமரக்கப்பல்தானும் சிறப்பாக ஆயிரம்கூட்டத்தோடும்
பையவே சூத்திரமா மரக்கலந்தான் பாருலகில் சீனபதியார்கள் மெச்ச
மெய்யவே நீளமது கெஜமெண்ணூறு மெதிரான வகலமது கெஜனேநூறு
பெய்யவே சதுரமது தீர்மானித்து பிசகின்றி முடித்தவகை கூறுவேனே
1928.
கூறுவேன் சட்டமது பலகைகொண்டு குறிப்புடனே வில்லாணிதான்புணைந்து
வாறுடனே கயளர் நீளமளவெடுத்து வகுப்புடனே நெடும்புவை தன்னிற்சேர்த்து
காறுடைய வடிப்பீடந்தான் புனைந்து கருவான வாணிமிகத்தான் முடுக்கி
பேறுடைய விட்டமது குறுக்கணிந்து பேரான காலுடனே மாட்டிடாயே
1929.
மாட்டவே தொட்டியென்ற பீடமாச்சு மகத்தான ஏழுவரையுண்டுபண்ணு
நீட்டமுடன் காலாறு மண்டபத்தில் நிலையான தூணதுபோல் செய்துமேதான்
வாட்டமுடன் உயரமது கெஜநூறாகும் வாகுடனே ஏழுவரை வுள்ளடக்கி
பூட்டகமாய் முதல்வரையில் பலகைப்போட்டுப் புகழாகமேல்மூடி வழிசெய்தேனே
1930.
வழியான வறுபத்து நான்குவீடு வரையான எழுவரையின் கீழேயப்பா
நெறியான சன்னங்களும் அனந்தமாகி நேரான தெற்குமுகம் வடக்குமாக்கி
விழியான மேற்குமுகம்  கிழக்குமாக்கி வீரான கோட்டையது வுள்ளடக்கி
முழியான தெத்துடனே வாசலாக்கி முனையான இருபுரமும் சுக்கான்பாரே
1931.
பார்க்கவே முதல்வரைக்கு மேலேயப்பா பாங்கான விரண்டாங்கால் மச்சியப்பா
ஏர்க்கவே பலகைபோல் சுவருண்டாக்கி யென்மகனே நாற்புரமும் கதவுண்டாக்கி
தீர்க்கமுடன் சட்டமது மேலேபோட்டு திறமானமாணி மிகப்பூட்டிமாட்டி
மாற்கமுடன் சிறுபரணி மேலேகட்டி மகத்தான சுக்கானின் யாணிபோடே
1932.
போடவே கீழாணி மேலாணிகொண்டு சொங்கமுடன் சூட்சுமமா மாட்டிப்போடு
நீடவே மூன்றாங்கால் மச்சுவீடு நேர்பான பலகைகொண்டு மூடிப்போடு
கூடவே சுத்தெங்கும் சன்னல்வைத்து கொப்பனவே வறுபத்து வாசல்தன்னில்
மேடவே வாசலுக்கு பலகைபோட்டு மேன்மையுடன் சட்டமதாய் பதிந்துசாத்தே

1933.
சாத்தையிலே சூட்சமுனாணிபோட்டு சார்பாக மூலியிடம் சுக்கான்மாட்டி
காத்தடங்கும் பக்கமதில் சூட்சம்போட்டு பாங்குடனே சற்றெங்கும் கதவுமாட்டி
நேத்திய தாய்மேல்வட்டம் கீழ்வட்டங்கொண்டு நெடிவான வுள்வடந்தன்னில் சுக்கான்
மாத்தியே தான்முடுக்கி வடத்தைமாட்டி வகையுடனே நாலாங்கால் மச்சிதமே
1934.
தாமேதான் மச்சியது வறுபத்துநான்கு தாழ்வான வாசலது நூற்றிருபத்தெட்டு
போமேதா னிருபக்கங்கதவுமாகும் பொக்கான வாலதுவுள் கதவுகொண்டு
வேமேதான் சங்கிலியு மள்ளுமாட்டி மேலான சன்னல்களுக்குறுதியாணி
நாமேதான் நினைத்தவண்ணம் முடித்தேனப்பா நலமாக சுற்றெங்கும் கிராதிதானே
1935.
கிராதியமா மிருமூலை சுக்கான்போட்டு கீர்த்தியுடன் அஞ்சாங்கால் மச்சுமாக்கி
தராதிபரும் தானிருக்க மச்சுமாகி தாழ்வான யடிவாரம் சுரங்கம்போலாம்
நிராதியுட னறுபத்திநான்குமாளி நிர்மித்து பலகையுடன் சட்டமாட்டி
பராதியுடன் சன்னல்கள் மிகவுண்டாக்கி பக்கமெல்லாம் சூத்திரமாம் பலகைதானே
1936.
பலகையா மறுபத்து நாலுவாசல் பாங்குடனே சீர்திருத்தி வுள்ளேசட்டம்
நிலைமையுடன் இருபக்கம் வாசல்விட்டு நிவர்த்தியுடன் சுற்றிலுமே கதவமைத்து
பலகையுடன் சட்டமதால் பலகைமாட்டி மார்க்கமுடன் காற்றதுவும் வொடுங்கிநிற்க
சலகையுடன் கிராதிகளில் கண்ணாடியாலே சாங்கமுடன் வாசல்வழி நூற்றிருபத்தெட்டே
1937.
எட்டான மேலவாசல் சன்னலாகும் மெழிலான வைந்தாங்கால் மச்சுயாக்கி
திட்டான மாளிகையா மறுபத்திநாலு திடமான கோட்டையது நூற்றிருபத்தெட்டு
மட்டான வழிகளிலே சூத்திரங்கள் மாட்டி மகத்தான கிராதிகளில் பிரதமைகளமைத்து
வட்டான வாசலு நெடுவாசல்வட்டம் வகுப்புடனே யிரும்புகம்பி யிருத்துநான்கே
1938.
நாலான குழாவதுவுமிருத்துநாலு நலமாக கீழுவரை வூணிமிகநாட்டி
காலான குத்துக்கால் யிரும்புவட சட்டம் கதிரான வாணிகளால் கொண்டுமிக முடுக்கி
மேலான நீளவரை முக்காலுமட்டும் நெடுஞ்சட்டம் கீழ்வட்டம் மிகக்கொண்டுநிறுத்தி
கோலான பக்கமெல்லாம் இரும்புக்கால்மாட்டி கொடிதான சுக்கானுங் குழைபக்கந்தானே
1939.
பக்கமுடன் மேலரைவூடுருகமாட்டி படிவுடனே வாராங்கால் மச்சிவீடப்பா
நிக்கயிடமிருப்பதற்கு யிருபுரமுமாணி நிரமித்து சுக்கானை வடங்கொண்டு திருப்ப
சுக்கனிட னிருபக்கம் சங்கிலியால் மாட்டி சுழலான நடுமைய மிருபக்கந்தானும்
தக்கபடி வுள்ளுருளை யிரும்புகுழல்தானும் சமைத்திட்டேன் தலைபுரத்தில்
வக்கினியுமாச்சே
1940.
மாச்சப்பா யிடப்பக்கம் தண்ணியதுநிற்க அப்பனே குழலொன்று சமைத்திட்டேன்யானும்
மூச்சப்பா போகாமல் குழைகளுக்கும் புக்குமுளையான தண்ணீரும் கொதிக்குமிகவேளை
வாச்சமுடன் தான்திறந்து தண்ணீருமாவி மற்றுமுள்ள குழைகளுக்கு தானருந்தியோட
காச்ச நீராவிகுழல் தனிலேபுகுந்து கருவான சக்கரத்தை திருப்பமிகலாச்சே

1941.
திருப்புகையில் சக்கரமும் சுக்கானும்கொண்டு திறமுடனே ஏழாங்கால் மச்சியதுநின்று
பொருப்புடனே வாணிதனை தட்டிப்போட்டேன் பொங்கமுடன் மரக்கலமும் நிற்கலாச்சே
தருக்கலுடன் கல்லாணிகொண்டுமாட்டி தகைமைபெற மரக்கலத்தை நிறுத்தியானும்
குருக்கலுடன் புகையடக்கி நங்கூரத்தைக் குறுக்கிடவே கடைசிமுனைமாட்டிட்டேனே
1942.
மாட்டினேன் சக்கரமு மெட்டதாகும் மாற்கமுடன் வுள்ளாணி யச்சியாணி
நாட்டியே துளைகொண்டு தாண்முடுக்கி நலமாகச்சக்கரம் சட்டிபூட்டி
வாட்டமுடன் மரக்கலம் மத்திவாசல் வழியுடனே தாளணிந்து வாணிமாட்டி
தேட்டிமுடன் மேல்வரை கீழ்வரைமட்டும் தேரினது சக்கரம்போல் சட்டமாமே
1943.
சக்கரமாம் வுள்வரிசை நெடுவரிசையாவும் சட்டமுடன் பிகுவெடுத்து வாணித்தன்னால்
பக்கமெலாம் குழாய்களுக்கு கம்பிமாட்டி பாங்குபெற வுள்ளாவி வூடுதாக்க
நெக்கவிடமில்லாமல் புகைகள்நிற்க நேராகக் குழல்பினலில் முடுக்கிவிட்டு
தக்கபடி நீராவி நிதானம்பார்த்து தந்திரமாய் சூத்திரமுண்டாக்கினேனே
1944.
ஆக்கமுடன் கப்பலொன்று நேமித்தேதான் அதின்மேலே வெகுஜனங்கள் ஏத்திவிட்டேன்
மார்க்கமுடன் சித்தர்முனி ரிஷிகள் தம்மை பாங்குபெற மேலவரை யேற்றிவிட்டேன்
நோக்கமுடன் மேல்வரையில் நானிருந்தேன் நோட்டமுடன் சுக்கானை முடுக்கிவிட்டு
சோக்கமுடன் கடலேழுஞ்சுத்திவந்து சூட்சமுடன் கப்பலதை நிறுத்தினேனே
1945.
நிறுத்தினேன் சீனபதிக் கடலோரந்தான் நேர்புடனே சித்தர்முனி ரிஷிகள்தாமும்
திருத்தமுடன் தானிரங்கி யாசீர்மத்தில் சிறப்பாக சென்றுவிட்டார் ஜனங்களெல்லாம்
பெருத்தமுடன் சுக்கானை முடுக்கியானும் பொங்கமுடன் சீனபதிக்கடலைவிட்டு
வருத்தமுடன் இமயகிரி யோரப்பக்கம் வாகுடனே சென்றுமல்லோ நிறுத்தினேனே
1946.
நிறுத்தினேன் இமயகிரி யோரந்தன்னில் நிலையான சித்தர்முனி ரிஷிகளெல்லாம்
திருத்தமுடன் கப்பலில்யேத்தியானும் சென்றேனேயானுமல்லோ கடல்மார்க்கம்தான்
ஒருத்தமுடன் உலகமெங்கும் சுற்றிவந்தேன் ஓகோகோநாதாக்கள் மெச்சயானும்
நிருத்தமுடன் இமயகிரியோரந்தன்னில் னேமமுன் மறுபடியும் வந்திட்டேனே
1947.
வந்திட்டேன் மேருகிரி பர்வதந்தன்னில் வாகுடனே சித்தர்களை யிறக்கிவிட்டேன்
தந்திட்டார் எந்தனுக்கு மெச்சியேதான் தாரணியில் தீதமென்ற வித்தையெல்லாம்
முந்திட்ட யெந்தனுக்கு கிருபைவந்து மோசமில்லை யென்றுசொல்லி யுபதேசித்தார்
பந்திட்ட யெந்தனுக்கு பட்சம்வைத்து பாலித்தார் வெகுகோடி வித்தைதானே
1948.
தானான வித்தைகளும் அனேகங்கொண்டேன் தாக்கான வினோதமென்ற மார்க்கமெல்லாம்
கோனான குருவருளால் தன்னைபோற்றி கூர்மையுடன் தான்வணங்கி நின்றேன்யானும்
வேனான காலாங்கிநாதர்தாமும் விருப்பமுடன் யென்மீது பட்சம்வைத்து
தேனான வமிர்தரச குளிகைதன்னை தெளிவுடனே யிருக்குமிடஞ் செப்பினாரே

1949.
செப்பினாரெந்தனுக்கு காலாங்கிதாமும் தேற்றமுடன் வளப்பமெல்லாம் கண்டுகொண்டேன்
ஒப்பமுடன் வமிர்தரச குளிகைசெய்து ஒழுங்குபெற சீனபதிமாந்தருக்கு
தப்பிதங்கள் இல்லாமல் முடித்துயானும் சார்புடனே தந்துவிட்டேன் மைந்தாகேளு
நெப்பமுடன் வெள்ளையென்ற மாந்தருக்கு நேர்புடனே கற்பித்தேன் கோடிதானே
1950.
கோடான கோடிமுறை யனந்தஞ்சொன்னேன் கூறினேன் நாதாக்கள் கூறாவன்மை
பாடான பாட்டர் திருமூலத்தார்கள் பாடினார் முன்பின்னாய்ப் பாடிப்போட்டார்
தேடான பொருளெல்லாம் தேடிக்காண தெளியாது யவர்நூலில் ஒன்றுங்காணா
மாடான மனிதரப்பா வறியாமற்றான் மானிலத்தில் சாத்தரத்தைப் பொய்யென்றாரே
1951.
பொய்யென்றார் சாத்திரங்கள் மறைவுகாணார் பூதலத்தில் கெட்டலைந்து நூலைக்காணார்
மெய்யென்ற நூலதனைக்காணார் மாண்பர் மேதினியில் மாண்பர்களே சொல்லப்போமோ
கைகண்ட சாத்திரத்தின் வுளவுகாணார் காசினியில் நூல்பார்த்து சலித்துபோனார்
நெய்யென்ற ருசிபாகந் தெரியாமற்றான் நிம்பெண்ணையுண்டதொரு கதைபோலாச்சே
1952.
ஆச்சப்பா இன்னமொரு கருமானங்கேள் அப்பனே யாம்கண்ட மார்க்கஞ் சொல்வோம்
போச்சப்பா மணலிருப்பு கொண்டுவந்து பேரான சரவுலையில் பழுக்கக்காய்ச்சு
நேச்சென்ற சம்மட்டி மட்டங்கொண்டு நெருப்பான வதடுடனே சரடுபோக்கி
கூச்சன்ற மணலிரும்பு காச்சடித்துக் குறையாமல் சேத்தளத்தில்பாதிகாணே
1953.
காணவே வயமதுதான் கவனைபோலாம் கசடற்ற வெள்ளிதனக்கொப்பதாகும்
மாணவே வாரடித்து நீட்டிப்பின்பு மார்க்கமுடன் சேரதுதான் ராவிமைந்தா
தோணவே சரக்கதுதான் சுத்திகேளும் துறையான பழச்சாற்றில் நாலுநாளும்
வேணவே திரிபலாதி கஷாயத்தாட்டி விருப்பமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
1954.
நாலான சாமமது வாட்டிப்பின்பு நலமுடனே குடோரியது வெண்காரந்தான்
பாலான வயல்நண்டு வரப்புநண்டு பாகமுடன் பாலெடுத்து வெண்காரத்தை
நூலான நூல்படியே தெளிந்துயானும் நுணுக்கமுடன் தானரைத்து வயத்திலூட்டி
வேலான குடோரியென்ற காரந்தன்னால் விருப்பமுடன் தான்பிசறி மூசைக்கேற்றே
1955.
ஏற்றவே வச்சிரமாங் குகையில்வைத்து யெழிலான சீலையது வலுவாய்ச்செய்து
போற்றியே ரவிதனிலே காயவைத்து புகழாக சரவுலையில் வைத்துவூது
நாற்றமென்ற கசடதுவும் மிகவேநீங்கி நலமான வயமதுவும் வட்டுப்போலாம்
கூற்றனென்னும் வெண்காரக் குடோரியாலே குணமான வயமதுவும் வெளுமைபாரே
1956.
பாரென்ற வயமதுவும் துய்யானாகும் பாங்கான குடோரியது கட்டுமார்க்கம்
நேரென்ற துருசதுவும் அயத்திற்பாதி நெடிதான துருசுக்குபாதி கெந்தி
மேரேதான் கெந்திக்கு பாதிசூதம் மேலான சூதத்தில் பாதிவீரம்
சேரென்ற வீரத்தில் பாதிபூரம் செயமான பூரத்தில் பாதிதானே

1957.
பாதியாம் பூரத்தில் பாதிதாரம் பாங்கான தாரத்தில் பாதிதுத்தம்
சோதியாம் துத்தத்தில் பாதி சீனம் சுடரான சீனத்தில் பாதிவாளம்
வாதியாம் வாளத்தில் பாதியுப்பு வாகான வுப்பிலே பாதிபூநீர்
நீதியா மித்தனையு மொன்றாய்க்கூட்டி நினைவாக வாறுவகை செயநீராட்டே
1958.
ஆட்டவென்றால் மெழுகதுவும் நாலுசாமம் அப்பனே மைபோலவரைத்துமைந்தா
நீட்டமுடன் சிமிழ்தனிலே பதனம்பண்ணு நிலையான குடோரியது சொல்லப்போமோ
வாட்டமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று வலுமையுடன் தானுருக்கி குடோரியொன்று
நேட்டமுடன் வுருக்குமுகந் தன்னிலீய நிகரான களங்கமது போலாம்பாரே
1959.
பாரப்பா களங்குதனை யோட்டிலூத பாங்குபெற தகட்டித்துப் புடத்தைப்போடு
நேரப்பா புடமாறி யெடுத்துப்பாரு நேற்பான செம்பதுவும் நீங்கியேதான்
வேரப்பா வெள்ளியது யெடையேநின்று விரைவான மாற்றதுவு மாறுகாணும்
மாரப்பா தங்கமென்ற காசிதானும் மகிழ்வாக நாலுக்கு வொன்று சேரே
1960.
ஒன்றாகத் தான்கூட்டி மைந்தாபாரு வுத்தமனே வாரடித்துப் புடத்தைப்போடு
குன்றான புடமதுவில் மாற்றுகாணும் சூரான செம்பொன்னோ சொல்லப்போமோ
தன்றான பொன்னதுவும் சித்தர்வேதை சாங்கமுடன் மானிடரால் செய்யப்போமோ
பன்றான சாத்திரங்கள் மிகவாராய்ந்து பாடினேன் போகரிஷி பண்பாய்த்தானே
1961.
தானான வின்னமொரு வயணங்கேளு தயவான வெடியுப்பு யிந்துப்பாகும்
மானான கரியுப்பு வளையலுப்பு மகத்தான சவிட்டுப்புக் கல்லுப்பாகும்
கானான காய்ச்சுப்பு கெந்தியுப்பு கருவான அட்டுப்பு பாறையுப்பு
வேனான படிகாரம் வெண்காரந்தான் விதர்ப்பான யெரிகாலனுப்புமாமே
1962.
உப்பான மேனியுட வுப்புமாகும் ஒளிவான பூநீறுமுப்புமாகும்
வைப்பான துருசுடனே துத்தமாகும் மார்க்கமுடனிதுவெல்லாம் ஒன்றாய்க்கூட்டி
மெப்பான கல்வமதில் இட்டுமைந்தா மேன்மையுடன் சமனிடையாய் நிறுத்துப்போடு
ஒப்பான மேனியிட மூலிசாற்றால் ஓங்குபெற தானரைப்பாய் சாமமெட்டே
1963.
எட்டான சாமமது வரைத்தபோது யெழிலான பில்லையது செய்துகொண்டு
மட்டான வகலில்வைத்து சீலைசெய்து மயங்காமல் ரவிதனிலே காயவைத்து
திட்டான கோழியென்ற புடத்தைப்போடு தீயாறியெடுத்துப்பார் சிவப்போகொஞ்சம்
வட்டான பில்லையது கல்வமிட்டு வளமுடனே மேனியின் சாற்றாலாட்டே
1964.
ஆட்டவென்றால் மேனிச்சார் புடமோபத்து அப்பனே முன்போல புடத்தைப்போடு
வாட்டமுடன் புடமதுவும் தீர்ந்தபின்பு வாகான குமரியிட சாற்றாலாட்டு
நாட்டமுடன் பத்துபுடம் குமரிச்சாற்றால் நலமுடனே போட்டபின் மைந்தாகேளு
நீட்டமுடன் கையானின் சாற்றாலப்பா நினைவாகப் பத்துபுடம் போட்டிடாயே

1965.
போடவே முப்பத்தும் தீர்ந்தபின்பு பொங்கமுடன் புளியாரைச் சாற்றால்மைந்தா
கூடவே பத்துபுடம் முன்போல்போடு குறையாமல் கோழியென்ற புடமேயாகும்
நீடவே நொச்சிலையின் சாற்றாலாட்டி நீட்டமுடன் பில்லையது செய்துகொண்டு
வாடவே சில்லிட்டுச் சீலைசெய்து வளமாக முன்போல பத்துபுடம்போடே
1966.
போட்டவுடன் பில்லையது சிவப்புமெத்த போக்கான வுப்புடனே சூதஞ்சேர்த்து
வாட்டமுடன் வாறுவகைசெயநீர்தன்னால் வளமாகத்தானரைத்து பில்லைதட்டி
நீட்டமுடன் ரவிதனிலே காயவைத்து நேர்புடனே சில்லிட்டுச் செய்துகொண்டு
தேட்டமுடன் கோழியென்ற புடத்தைப்போடு தெளிவான செந்தூரமாகுந்தானே
1967.
தானான செந்தூரம் வெள்ளிசெம்பில் தாழ்மையுடன் பத்துக்கு ஒன்றுபோடு
மானான கரியோட்டிலூதிப்போடு மயங்காதே வெள்ளியென்ற பிடைதான்காணும்
வேனான செம்பதுவும் நீங்கியல்லோ விரைவான வெள்ளியது பசுமைகாணும்
போனான குருவருளை சதாநித்தந்தான் குணமுடனே போற்றிசெய்து வாழ்குவாயே
1968.
வாழ்கவென்றா லின்னமொரு கருமானங்கேள் வாகான செந்தூரம் மண்டலந்தான்
நீழ்கவென்றால் தேகமது வுளுப்புராது நீணலித்தில் எப்போதுமிருக்கலாகும்
தாழ்கவென்றால் தேகமது மழியாதாகும் சதாகாலம் கற்பமுண்டார்க் கொப்பாவார்பார்
மூழ்கவென்றால் தயிலமது செப்பக்கஏளும் முளையான பாகமது வுரைப்போம்தாமே
1969.
தாமேதான் யெள்ளெண்ணைப் படிதானொன்று சரியான முத்தெண்ணைப் படிதானொன்று
காமேதான் பசுநெய்யும் படிதானொன்று கருவான வழிஞ்சியுட தயிலம்கால்தான்
வேமேதான் விராலியிட தயிலமப்பா வீரான சிவனாரின் தயிலம்கால்தான்
நாமேதான் வாலுழுவைத் தயிலங்கால்தான் நலமான கருஞ்சீரந் தயிலங்கூட்டே
1970.
கூட்டவே மூலிவகை சொல்லக்கேளும் கொடிதான வேலியிட மூலிச்சாறும்
நீட்டமுடன் தைவேளை சாறுங்கூட்டி நெடிதான குமரியிட சாறும்சேரு
காட்டமென்ற வல்லாரைச் சாருஞ்சேர்த்துக் கருவான கையானின் சாறும்கூட்டு
தேட்டமென்ற பொடுதலையின் சாறுங்கூட்டி தெளிவான ஆதண்டைச் சாறுசேரே
1971.
சேர்க்கவே சாறொன்று நாழியாக சீர்பெறவே தானிடித்து ஒக்கச்சேர்த்து
ஏற்கவே யெண்ணெயுடன் தான்கலந்து யெழிலாக கற்கவகை சொல்லக்கேளு
பார்க்கவே கடுக்காயும் தான்றிக்காயும் பண்பான மாசியென்ற காயுங்கூட்டி
மார்க்கமுடன் மிளகுடனே நெல்லிக்காயும் மதிப்பான தேசாரமோமங்கூட்டே
1972.
ஓமமுடன் கற்கடக சிங்கியப்பா வுத்தமனே கஸ்தூரி மஞ்சளப்பா
நேமமென்ற செம்பூரான் பட்டைதானும் நேர்த்தியாய் பூலாவின் கிழங்குகூட்டி
தாமமென்ற கோஷ்டமென்னும் சார்ந்துபூரல் தனியான வேப்பரிசி சீரங்கூட்டி
நாமென்ற அகிற்கட்டை சந்தனமுஞ்சேர்த்து நலமுடனே தானரைப்பாய் பசுப்பாலுதாமே

1973.
பாலான சரக்குகளில் பலமொன்றதாக பாகமுடன் தானரைப்பாய் சரக்கெல்லாந்தான்
மேலான எண்ணெய்தனில் கலரவிட்டு விருப்பமுட னடுப்பேற்றி தானெரிப்பாய்
நூலான நூற்படியே முறைபோல் காய்ச்சி நுணுக்கமுடன் மெழுகுபத மிறக்கியப்பா
சேலான கெம்பதமா வடித்துமேதான் செவ்வையுடன் தாளிதனை யிறக்கிடாயே
1974.
இறக்கிடவே காலாங்கிதனை நினைத்து யென்மகனே சீஷசவிலடக்கஞ்செய்து
முறக்கமுடன் தயிலமது முழுகிவந்தால் மூட்டோடே வியாதிகளு மற்றுமேதான்
திறக்கமுடன் கண்ணிரண்டும் வரிதிகூசா தெளிவுடனே வருந்தூதி பகலிற்தோன்றும்
சிறக்கவே போகரிஷி பலநூல்பார்த்து சிறப்புடனே பாடிவைத்தேன் புவியுள்ளோர்க்கே
1975.
புவியான மாந்தர்களில் கருவாளியுண்டு புத்தியுள்ளான் கண்டறிவாம் திறப்புமார்க்கம்
கவியான பாடல்களின் மறைவுகாணான் கண்டவன்போல் பேசுவான் கழுதைமாண்மன்
நபியானக் கடவுளுக் கொலயாஞ்சித்தர் நவின்றிட்ட நூல்களையே பழிப்புஞ்சொல்வான்
அபிமான மில்லாமல் திட்டிப்பேசி அழிந்திடுவான் படைநரகில் பாவியாமே
1976.
பாவியாம் முழுமூடப்பாவியப்பா பரிசுத்தவான் மாவைப்பகடிசெய்வான்
காவியங்களுள்ளதொரு மறைப்புகாணான் கண்டறிந்து கற்றவன்போல் பினத்துவான்பார்
ஆவியுடன் தானடங்கும் வழியுங்காணான் அதற்கப்பால் கடந்ததொரு ஞானிபோல
சாவியென்னும் பொக்கிஷத்தைக்கைவிடாமல் சதாகாலம் காசுபணப்பிசாசியாமே
1977.
பணங்கொண்ட பாவியவன் மிகவும்பேசி பாங்கியர்மேலெண்ணமதிகங்கொண்டு
பிணம்போல பிரண்டமுதுபோவான் பாவிபின்னொன்று காணமாட்டான் பேடிமாண்பன்
மனங்கொண்ட பெரியோரை தூஷித்தேதான் மார்க்கமெல்லாங் கண்டவன்போல் அதிகப்பேச்சு
குணமில்லாச் சண்டாளப்பாவியாவான் குடிகெடுத்து வெகுபேரைச் சுடச்சொல்வானே
1978.
சொல்வானே சித்தர்கள்மேல் தோஷஞ்சொல்வான் சுருதிமுதல் சூத்திரங்கள் குற்றஞ்சொல்லி
வெல்வான வெகுவாகப்பேசிப்பேசி வீண்கதையாஞ் சாத்திரங்கள் பொய்யேயென்பான்
புல்வானே சித்தர்முனி கைமறைப்பை புத்தியுடன் படியாமல் தாறுமாறாய்
தொல்லுலகில் பாடல்முறை யொன்றிருக்கச் சுட்டுகெட்டு நூலைமிகத் தப்பென்றானே
1979.
தப்பென்று சொன்னதொரு பாவிகட்டு தப்பாமல் சிரசதுவும் வெடித்துப்போகும்
ஒப்பமுடன் சித்தர்முனி நூல்கள்தாமும் ஒருக்காலும் பொய்யாது மெய்யேயாகும்
செப்பரிய ரிஷிகளெல்லாம் நூல்கள்கோர்வை தேசத்தில் மானிடர்கள் பிழைக்கவென்று
மெப்பமுட றாமுரைத்தா ருண்மையாக மேதினியில் மாந்தர்கட்கு யுரைத்திடாரே
1980.
உரைத்திட்டேன் போகரிஷிநூல்கள் பார்த்தால் ஓகோகோ யாதொன்றும் பொய்யுமாகா
நிரைத்திட்டேன் கோர்வைகளி லனந்தஞ்சொன்னேன் நீடூழிகாலம்வரை நூலைப்பார்த்தால்
குறையொன்றும் வாராது போகர்நூலில் குறைசொன்னாலப்போதே தலைதான்போகும்
முறைபோல செய்து மிகமுறையைப்பார்த்து மோசம்வரில் தோஷமது மிகசொல்வீரே

1981.
சொல்லவென்றால் நாவேதுபாவுமேது சூட்சமுட னின்னமொரு விபரங்கேளு
புல்லவே வகஸ்தியனார் சதுர்காண்டத்தில் பூட்டினார் கருமான வுளவுமெத்த
வெல்லவே காண்டம்பனிரெண்டு காண்டம்விபரித்தார் பன்னீராயிரத்தில்
மெல்லவே கொட்டிவிட்டார் கோடிபாணம் மேதினியி லாரறிவார் அன்னூல்தானே
1982.
தானேதான் சாத்திரத்தில் எண்ணூர்கண்டேன் தனியான நாலுமறுநூறும் பார்த்தேன்
மானேதான் காவியங்கள் வைந்தும் பார்த்தேன் மகத்தான வெண்ணூறு வதீதம் பார்த்தேன்
வேனேதான் சௌமியங்கள் எட்டும்பார்த்தேன் வேதாந்தக்காவியங்கள் ஆறும்பார்த்தேன்
தேனேதான் பலதிரட்டுக் கோர்வைநாலுந் தெளிவான சாலமது எட்டுயெட்டே
1983.
எட்டான திருமந்திரம் நாலுகோர்வை கட்டான தீட்சைகளில் பத்துகோர்வை
கருவான மாந்திரீகக் கோர்வைபத்து
வட்டான முப்புவகை சாத்தரம் நூறு மதிப்பான வைத்தியத்தில் கோர்வைநூறு
திட்டான சொச்சசூத்திரத்தின் கோர்வை திருட்டுதனில் நூறுவகை பார்த்திட்டேனே
1984.
பார்த்திட்டேன் இதுகளெல்லாம் சேர்ந்துமல்லோ பாடிவைத்தார் பாடல்களுமிரண்டுலட்சம்
சேர்த்திட்ட மூலாதாரத்தின் கோர்வை சிறப்புள்ள கோர்வையிது காரணங்கள்
மார்த்திட்ட வின்னமனே கங்கள்கோர்வை மார்க்கமுடன் பாடிவிட்டார் லட்சமப்பா
பூர்த்திட்டமானகருமானமெல்லாம் புகழுடனே கண்டுதெளிந்தாராய்ந்தேனே
1985.
ஆராய்ந்தேன் தன்வந்திரி நூலைக்கண்டேன் ஆகமாங்காவியங்கள் ஐந்துங்கண்டேன்
பூராயமானதொரு காண்டம்நாலு புகழான கோர்வையது பதினாறாகும்
தோராயமுள்ளதொரு கிரந்தம்நூறு தொகுப்புடன் பாடல்வகை இரண்டுலட்சம்
நேரான சில்லரையில் அனந்தங்கோர்வை நெடிதான தொகுப்புகளில் லட்சமாமே
1986.
லட்சமுட னின்னம்வெகு போக்குநூலாம் லக்கில்லைகணக்கில்லை மெத்தவுண்டு
பட்சமுடன் வவர்நூலில் பலவார்கோர்வை பார்வையிட்டேன் சிலகோடி நூல்களப்பா
மச்சமுனி சாஸ்திரங்கள் தொகுப்பு சொல்வேன் மார்க்கமென்ற மெண்ணூறு எட்டுகோர்வை
சொச்சமென்ற சூஸ்திரங்கள் இருநூறாகும் சுருதிமுதல் பெருநூலாயிரந்தானாமே
1987.
நாலான காண்டமது எட்டுமாகும் நலமான கோர்வையது பதினாறாகும்
வாலான சிறுநூலாம் கோர்வைநூறு வகுப்பான திரட்டுநூல் முப்பத்திரண்டு
சேலான ஞானநூல் இருபத்திநாலு சிறப்பான காவியங்க ளெட்டுமாகும்
தூலான நூல்களிது பலநூலாகும் நுணுக்கமுடன் ஆராய்ந்தேன் போகர்தானே
1988.
நானான சட்டமுனி நூல்கள்பார்த்தேன் நயமுடனே பெருநூலாம் எட்டுக்கோர்வை
வேனான திரட்டுகளில் கோர்வைபத்து வெளியான தீட்சைகளில் கோர்வைநூறு
பானான பாடல்களுமொன்று துவக்கிப் பாடினார்வெகுநூல்கள் வனந்தமார்க்கம்
தேனான இருநூறு யெட்டுசொன்னார் தெளிமையுடன் கருவூராருரைத்தார்பாரே

1989.
பாரேதான் முன்னூறில் நாலுகோர்வை பாங்கான திரட்டுகளில் யெட்டுகோர்வை
நேரேதான் காவியத்தி லிரண்டுகண்டேன் நெடிதான சூத்திரத்தில் பத்துகோர்வை
மேரேதான் தீட்சைகளில் சோடசமுமாகும் மேலான சுருக்கமது கோர்வையிருபத்து
தீரேதான் சின்னநூலனந்தங்கோர்வை திறமுடனே கண்டேனே வதிதங்கள்தானே
1990.
தானான ரோமரிஷி நூல்கள் கண்டேன் தாக்கான பரிபாஷை கோர்வைநாலு
மானான பெருநூல் காவியங்களெட்டு மார்க்கமுடன் திரட்டுகளில் பதினாராகும்
வேனான தீட்சைகளில் யெட்டுகாண்டம் வெளியான காண்டத்துக்காயிரந்தான்
பானான பலதிரட்டு பத்துக்கோர்வை பாடிவிட்டார் சில்லரையில் முன்னூராமே
1991.
முந்நூறாங் கோர்வைகளில் அனந்தஞ்சொன்னார் முனையான திரட்டுகளில் கோர்வைபத்து
நந்நூராம் கோர்வைகளில் நாலுகோர்வை நலமான தீட்சைகளில் பத்துக்கோர்வை
பந்நூலாம் சாத்திரங்கள் பலவுஞ்சொன்னார் பாடிவிட்டார் வெகுகோடி யனந்தமார்க்கம்
அந்நூலுங்கண்டு தெளிந்தாராய்ந்தேதான் அன்புடனே பாடினே னேழாயிரந்தாமே
1992.
தாமேதானஃ கொங்கணவர் நூலைக்கண்டேன் தாறுமாறாகவல்லோ பாடிவிட்டார்
யாமேதான் பெருநூலு எட்டுகண்டேன் பொங்கமுடன் தீட்சைநூல் பத்துகண்டேன்
வேமேதான் கடைக்காண்டம் நாலுகண்டேன் மிக்கான நடுக்காண்டம் ஒன்றுகண்டேன்
நாமேதான் கண்டபடி யாருங்காணார் நலமுடனே வின்னம்பல சித்தர்தாமே
1993.
சித்தான புண்ணாக்கர் அனேகஞ்சொன்னார் சிறப்பான கமலமுனி யனேகஞ்சொன்னார்
முத்தான புலத்தியரு மனேகஞ்சொன்னார் முனையான சிவவாக்கிய ரனேகஞ்சொன்னார்
சுத்தான சுந்தரனாரனேகஞ்சொன்னார் சுருதிமுதல் பெருநூலாங் கண்டேன்யானும்
நித்தான விராமமுனி யனேகஞ்சொன்னார் நீடூழிசாத்திரங்கள் கண்டிட்டேனே
1994.
கண்டிட்டேன் யாக்கோபு நூலுங்கண்டேன் கருவான டமரகனார் நூலும்பார்த்தேன்
தூண்டிட்ட வரரிஷியார் நூலும்பார்த்தேன் துரைராஜர் வேதமுனி நூலும்பார்த்தேன்
கொண்டிட்ட வள்ளுவனார் நூலுங்கண்டேன் கூரான நந்தியுட நூலுங்கண்டேன்
வெண்டிட்ட சதாநந்தர் நூலும்பார்த்தேன் றெளியானபிரமமுனி நூல்பார்த்தேனே
1995.
பார்த்தேனே யின்னம்வெகு சித்தர்நூலும் பலபலவாங்கண்டறிந்தேன் நுணுக்கந்தன்னை
தீர்த்தேனே நவகோடி ரிஷிகள்தாமும் திறமுடனே வனேகநூல் பாடிவிட்டார்
சேர்த்ததொரு பதினெண்பேர் சித்தர்தாமும் சிறப்புடைய நூலெல்லாம் தெளிந்துபார்த்தேன்
நேர்த்தியுடன் காலாங்கிபாதம்போற்றி நேர்மையுடன் பாடினேன் ஏழாயிரந்தானே
1996.
தானான காவியந்தான் சத்தகாண்டம் தயவுடனே ஏழுலட்சம் கிரந்தந்தன்னை
வேனான நூல்பார்த்து வுளவுகண்டு விருப்பமுடன் பாடிவைத்தேன் ஏழுகாண்டம்
மானான மறைப்புமத லில்லாமற்றான் மாற்கமுடன் மனிதர்பேரில் பட்சம்வைத்து
கோனான குருவருளால் காலாங்கிதம்மைக் குறிப்புடனே சரணமிட்டுப் பாடினேனே

1997.
பாடினேன் நாலுயுக வதிசயங்கள்யாவும் பார்வைக்கு யெளிமைதனில் காண்பதற்கு
நீடியதோர் கருவெல்லாங் காணவென்று நேர்மையுடன் சீனபதியானுஞ்சென்று
கூடியதோர் விளையாட்டு யெல்லாம்பார்த்து கூறினேன் வெள்ளையென்ற மாந்தருக்கு
தேடியே அலையாமற் பொருள்களெல்லாம் திரவியங்கள் கிட்டுதற்கு மொழிந்திட்டேனே
1998.
மொழிந்திட்டேன் யேழாயிரக்கோர்வைநூலில் முறைப்படியே யாம்சொன்னவதீதமார்க்கம்
பழிந்திட்ட சித்தர்களுஞ் சொல்லவில்லை பாரினிலே சொன்னாலுங்காணமாட்டார்
வழிந்திட்ட சூத்திரங்கள் கைமறைப்பு வளமுடனே பாடிவைத்தேன் மாந்தர்க்காக
குறிந்திட்ட சூட்சாதிசூட்சமார்க்கம் குறையாமல் பாடிவைத்தேன் பண்பதாமே
1999.
பண்பான யேழாயிரக்காவியந்தான் பாரினிலே சித்தர்முனி ரிஷிகள்தாமும்
நண்பாக மெச்சியல்லோ வதீதஞ்சொன்னார் நாதாக்கள் கைமறைப்பு நடுவீதியாச்சு
திண்பான நூலதனை குகைக்குள்வைத்து சிறப்புடனே பூசையது மிகவுஞ்செய்தார்
கண்பான பெருநூலேழாயிரந்தான் கனமுடனே சித்தரெல்லாம் விரும்பிட்டாரே
2000.
விரும்பவே காண்டமது ஏழுஞ்சொன்னேன் வெளியாகக் கருவெல்லாந் திறந்துபோட்டேன்
துரும்புமுத லொளிக்கவில்லை சீனத்தார்க்கு துப்புரவாயுரைத்துவிட்டேன் பட்சம்வைத்து
கரும்புபோல் ஏழாயிரக்காவியந்தான் கருத்துடனே பாடிவிட்டேன் மாந்தர்கப்பா
அரும்பொன் மனிதனைப்போல் இரண்டாங்காண்டம் அப்பனே முத்துமது முற்றதாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

2001.
அண்டபராபரமான முதலேகாப்பு அடியேனுங்காலாங்கிநாதர் பதங்காப்பு
புகன்றுநின்ற காலாங்கிகுருபதமே காப்பு புகழான வல்லமுனி சித்தர்பதங்காப்பு
தகன்றபெரியோர் ஞானிதான் பதமேகாப்பு சதாசிவத்தின் சுடரொளியே தனிப்பதமேகாப்பு
நிகன்றசத்தகாண்டமது யேழாயிரந்தான் நிகழ்த்தினேன் மூன்றாவது காண்டமிதுதானே
2002.
தானான காண்டமிது மூன்றாங்காண்டம் சதுர்யுகத்து வதிசயங்கள் சாற்றலாகும்
கோனான யென்னையர் காலாங்கிநாதர் கூறினார் திரேதாயுகத்தி னதிசயத்தை
வானான காலாங்கிநாதருக்கு வயதல்லோ வைந்துரண்டு பத்துமாச்சு
தேனான யென்னையர் குருவாமையர் திரேதாவினதிசயத்தை செப்பினாரே
2003.
செப்பினார் காலாங்கிகுருவாமையர் சிறந்ததொரு குளிகையதுபூண்டுகொண்டு
ஒப்பமுடன் கடலேழுஞ்சுத்திவந்து ஓங்குபெற கைலங்கிரிகாணவென்று
மெப்புடனே கைலங்கிரி யாதிபீடம் மேன்னையுடன் அடிவாரத்தண்டைபக்கம்
கொப்பெனவே குளிகைகொண்டு இறங்கினாராம் கோடானகோடிமுனி ரிஷிகண்டாரே
2004.
கண்டவுடன் ரிஷிகளெல்லாம் ஓடிவந்து நடுகெனவே வதிசயித்துக் காணவந்தார்
தெண்டனிட்டு யடிபணிந்து தாழ்ந்திட்டாராம் திறமான சித்துதனைக்கண்டபோது
அண்டமுனி ராட்சதன்போல் சித்தர்கூட்டம் அங்ஙனவே காலாங்கிகுருவைக்கண்டு
விண்டபடி சொரூபமென்ற சித்துதன்னை விபரமுடன் கேட்டாராம் சித்தர்தாமே
2005.
தாமான சித்தர்முனி கேட்கும்போது சதாசிவமுந்திடுக்கிட்டு மனங்கலங்கி
நாமான காலாங்கி குருவாமையர் நாதாக்கள் சித்துகளைக் காணவென்று
வேமான குளிகைகொண்டு வந்தேன்சாமி வெகுகாலம் கோடிவரைத் தம்மைக்காண
காமான வார்த்தைக்கு சந்தோஷித்து கருத்துடனே நல்வார்த்தை யுரைத்திட்டாரே
2006.
உரைக்கையிலே நவகண்டரிஷிகள்தாமும் வுயர்நாகமலை யடிவாரத்தில்
திறக்கமுடன் சமாதியது நிலையுங்கண்டார் திறலான நவகண்ட ரிஷியுங்கண்டார்
சிறக்கமுடன் நவகண்டரிஷியாசீர்மம் சென்றாறாமெங்களையர் குருவாந்தேவர்
இறக்கம்வைத்து வவரெனக்கு வுபதேசங்கள் யெழிலாகத்தானுரைத்தார் கண்டார்தாமே
2007.
கண்டமா முனியோரும் வுபதேசிக்க காலாங்கி குருதானும் களிப்புகொண்டு
மண்டலமெல்லாம் புகழும் நவகண்டதேவர் மார்க்கமுடன் எந்தனுக்கு வதீதஞ்சொல்வீர்
விண்டலத்தினதிசயங்கள் யாவுஞ்சொல்லி வேதாந்ததாயினது ரூபஞ்சொல்லி
கொண்டணைத்து வெந்தனுக்கு குறைவைத்தீர்த்து கோடியுகங்காணவென குறைதீர்ப்பீரே
2008.
தீர்க்கவென்று கேட்டவுடன் நவகண்டர்தாமும் திரளான நாலுயுக வதிசயங்கள்யாவும்
பார்க்கவே யெடுத்துரைத்தார் குருநாதர்க்கு பாங்குபெற யாவற்று மறிந்துகொண்டார்
ஆர்க்கவே யென்னையர் காலாங்கிநாயர் அவருடைய விசுவாச வருளும்பெற்றார்
மார்க்கமுடன் யென்னையர் ஞானம்பெற்று மானிலத்தில் வெகுகாலம் இருந்திட்டாரே

2009.
இருந்தமுனி காலாங்கி வெகுகோடிகாலம் யெழிலான வித்தைகளுமற்புதங்கள் செய்தார்
குருந்தமுடன் எந்தனுக்கு ஞானவுபதேசம்கூறினார் சங்கற்பமனந்தம்பேர்க்கு
திருந்தவே வுபதேசமானபின்பு தீரமுடன் சமாதிக்கு யேதுகொண்டார்
பொருந்தவே யடியேனும் வுபதேசம்பெற்று புறப்பட்டேன் சீனபதிதேசந்தானே
2010.
தேசமாமின்னம்வெகு தேசமெல்லாம் சிறப்புடனே குளிகையது பூண்டுகொண்டு
ஆசையுடன் சத்தசாகரமும் கண்டேன் அன்பாகப் பாடிவிட்டேன் சத்தகாண்டம்
பூசையுடன் ஏழாயிரக்காவியத்தை புகட்டினேன் லோகத்துமாந்தர்க்கப்பா
யாசையுடன் பரிபாஷை யில்லாமற்றான் பாரினிலே பாடிவிட்டேன் பண்பதாமே
2011.
பண்பான குளிகையது பூண்டுகொண்டேன் பாங்கான பாரீசபதியைக்கண்டேன்
திண்பான பச்சையென்ற மலையைக்கண்டேன் திகழான கந்தருவர் மனிதர்கண்டேன்
நண்பான மனிதருக்கு ரெக்கைரெண்டு நாதாக்கள் குளிகைகொண்டு பறந்தார்போல
கண்பான கந்தருவர் மாந்தரப்பா கடையான மலைமீதில் இருந்தார்பாரே
2012.
பார்த்தேனே கந்தருவர் தன்னைக்கண்டேன் பாகுடனே யவர்பக்கல்சென்றுயானும்
நேர்த்தியுடன் மேலோகவதிசயத்தை நேர்ப்புடனே யானுமல்லோ கேட்டேன்மைந்தா
தீர்த்தமுடன் இந்திரனார் கொலுசிறப்பை சிறப்புடனே எந்தனுக்கு தாமுரைத்தார்
சார்த்தமுடன் அம்மலையிற் சுனையுமுண்டு சட்டமுடன் சுனையோரம் சென்றிட்டேனே
2013.
சென்றேனே சுனைகண்டேன் குகையுங்கண்டேன் சிறப்பான கொங்கனவர்
பதியுங்கண்டேன்
குன்றான மலையோரம் சமாதியுண்டு கூட்டமுடன் அங்கிருந்தார் சித்தர்கூட்டம்
பன்றானபூசையது ஆசீர்மத்தை பாங்குடனே கண்டுவிட்டே னடியேனப்பா
தன்றான திரேதாயினுகத்திலப்பா வர்க்கமுடன் எல்லவரும் பிறந்தார்தாமே
2014.
தாமான வர்க்கத்தோர் அனேகருண்டு சார்புடனே வவர்களிடம் சென்றுயானும்
நாமான வஞ்சலிகள் மிகவுஞ்செய்து நடுக்கமுடன் நிற்கையிலே வடியேன்தன்னை
பூமான சித்தர்முனி கூட்டத்தார்கள் புத்தியுள்ள பாலாநீ யாரென்றார்கள்
காமான காலாங்கிதனை நினைத்து கர்த்தனிட சீஷினென்று வுரைத்திட்டேனே
2015.
உரைத்துமே வென்பேரு போகரென்றேன் வஉறுதியுடன் சீனபதிபோயிருந்தேன்
திரைகடல்கள் ஏழுவரைசுற்றிவந்தேன் தேசாதிதேசமுள்ள சித்தர்தம்மை
வரைமுறைகள் தப்பாமல் கண்டுவந்தேன் வளமுடனே குளிகையது வலுமையாலே
இறையவனார் கொங்கணர் பாதங்காண வெழிலுடனே வந்திட்டேன் பாரிஷதானே
2016.
தானென்று சொல்லுகையில் சித்தர்கூட்டம் சடுக்கெனவே கொங்கணவர் பக்கஞ்சென்று
தேனான சமாதியிடம் வாசற்பக்கம் தேவாதி தேவருடசமாதியோரம்
கோனான குருவான சாமிபாதம் குறிப்புடனே யெல்லோருங் கூட்டமிட்டு
பானான காலாங்கி நாயர்சீஷர் பட்சமுடன் தன்பாதம் வந்திட்டாரே

2017.
வந்தாரே போகரிஷிபாலன்தானும் வண்ணமுடன் தாமுரைத்தார் சித்தரெல்லாம்
அந்தமுடன் அவர்சொல்ல கொங்கணவர்தாமும் அன்பான காலாங்கிபேரைக்கேட்க
சந்தோஷமுண்டாகி சமாதிதன்னில் சட்டமுடன் வருவதற்கு விடையுஞ்சொன்னார்
கந்தருவர் போலவல்லோக்குளிகைபூண்டு கர்த்தரிடம் சென்றேனே போகர்தானே
2018.
போகரென்று சொன்னேனே யடியேனுந்தான் பொங்கமுடனெந்தனுக்குத்தீரமாகி
ஆவலுடன் கொங்கணவர்பாதம்போற்றி அப்பனேசரணமென்று பணிந்திட்டேன்யான்
காவலுடன் தான்கடந்துவந்தபாலா பாரினிலே சித்தரப்பா ரிஷிகள்கூடி
சாபமுடன் உந்தனையும் சபிப்பாரப்பா சாக்கிறதை யவர்களிடம் சார்பாய்நில்லே
2019.
நிற்கையிலே வுத்தாரமெதிர்சொல்லாதே நிறைகுறைகள் நேர்ந்தாலும் பதரிடாதே
சிற்பனார் காலாங்கி தனைநினைத்து சீருடனே யவர்களுக்குத் தொண்டுபண்ணி
அற்புதங்கள் யாவனைத்தும் கண்டறிந்து அவர்களிடம் விசுவாசவருளும்பெற்று
சற்பனையோ டெந்நாளுங் காலாங்கிதம்மைச் சதாகாலம் கருத்தினிலே நினைத்திடாயே
2020.
நினைக்கையிலே எண்ணமெல்லாம் சித்தியாகும் நீடூழிகாலம்வரை இருக்கலாகும்
உனைப்புகழ்வார் லோகத்துமாந்தரெல்லாம் ஓகோகோ நாதாக்களிவர்போலுண்டோ
முனையான காலாங்கி சீஷனல்லோ மூதுலகில் பேர்கொண்ட சீஷனென்பார்
தினையளவு யாம்சொன்ன வுபதேசங்கள் தீர்க்கமுட னெந்நாளுங் கொள்ளுவீரே
2021.
கொள்ளவென்றால் இன்னமொரு வுபதேசங்கள் குவலயத்தில் யாம்சொல்வோ முந்தனுக்காய்
விள்ளவே எமைப்போல யாருஞ்சொல்லார் மேதினியில் யாமுரைத்தோம் பட்சம்வைத்து
வுள்ளபடி ஞானவுபதேசமெல்லாம் வூடுருவ எந்தனுக்கு ஓதித்தேதான்
எள்ளளவு இடையூறும் வாராமற்றான் எந்தனுக்கு வரமதுவும் கொடுத்தார்பாரே
2022.
பாரேதான் சீனபதிதன்னில் வந்து பட்சமுடன் கமலரிடம் வந்தேனப்பா
சீரேதான் கமலருக்கு வடியேன்தானும் சிறப்புடனே கொங்கணவர் செய்திசொன்னேன்
நேரேதான் கமலருமே சந்தோஷித்தார் நேர்மையுடன் விடைபெற்றுப் பதிக்குள் வந்தேன்
வேரேதான் வினோதங்கள் வதீதஞ்செய்தேன் மிக்கான சீனபதிக்குள்ளேதானே
2023.
தானான வின்னமொரு மார்க்கங்கேளு தயவாகச் சொல்லுகிறேன் மாணாக்கற்காய்
பானான சாரமது கட்டிவாங்கி பக்குவமாய் புடம்போட வரிசைகேளு
தேனானசீனமது ஒன்றேயாகும் தெளிவான காரமது ஒன்றேயாகும்
வேனான இந்துப்பு வளையலுப்பு வெடியான வுப்பதுவும் ஒன்றாய்க்கூட்டே
2024.
கூட்டவே சிப்பியென்ற சுண்ணந்தானும் குணமான பூநீருவொக்கச்சேர்த்து
நீட்டமுடன் வெண்கருவா லரைத்துமேதான் நிலையான சாரமதுக்கங்கிபூட்டி
வாட்டமுடன் ரவிதனிலே காயவைத்து வளமாக சீலையது வலுவாய்ச்செய்து
நாட்டமுடன் குழிவெட்டி மணல்தான்கொட்டி நலமாகப்புடம்போடப் பத்துமாமே

2025.
பத்தான புடமதுவு மிந்தபாகம் பாகமுடன் முன்போலப் போட்டுத்தீரு
புத்தான சாரமது கட்டிப்போகும் போக்கான புகையதுவு மடங்கியேதான்
தத்தான தந்தம்போலாகும்பாரு மகத்தான சாரமிது சித்தர்வேதை
சித்தான செந்தூர மென்னசொல்வேன் சிவன்தானுமாயிக்குத்தான் சொன்னாரே
2026.
சொன்னவுடன் ஆயிதானும் காலாங்கிக்குச் சூட்சமுடன் தானுரைக்கக் காலாங்கிதாமும்
நன்னயமாய் எந்தனுக்கு சொன்னபாகம் நாட்டிலே நாதாக்கள் கூறவில்லை
பொன்னான செந்தூர மார்க்கங்கேளு புகழான சாரமது கட்டிட்டாக்கா
மன்னான பொன்னாவரையின் மூலிமயங்காமல் தேங்காய்போல் கவசஞ்செய்யே
2027.
செய்யவே சீலையது செய்தபின்பு செழிப்புடனே ரவிதனிலே காயவைத்து
பையவே தளவாயின் சட்டிமேலே பாங்குபெற வுப்பதனைக் கொட்டிமைந்தா
மையவேகட்டி நடுமைவைத்து மறவாமல் வுப்பதனைமேலேகொட்டி
முய்யவே மேல்சட்டிகொண்டு முசியாமல் தானெரிப்பாய் சாமமெட்டே
2028.
எட்டான சாமமது யெரிக்கும்போது யெழிலான சாரமது சிவப்புயேறி
திட்டான கட்டியது சிவந்துகாட்டும் திறமுடனே கவசமதை திறந்துபாரு
மட்டான சிவப்புடனே மங்கல்காட்டும் மார்க்கமுடன் கட்டிதனை காற்றில்வைநீ
கட்டான செந்தூரம் பூர்த்துக்காட்டும் கடுஞ்சூறுக்கு வேதையிது வோடுமாமே
2029.
ஓடவே செந்தூரம் பதனஞ்செய்து வுத்தமனே செம்பதனில் தாக்கும்போது
கூடவே களிம்பதுவும் மிகவுநீங்கி குணமுடனே மாற்றதுவு மெட்டதாகும்
நீடவே பழுப்பான பொன்னுகாணும் நேர்மையுடன் பத்துக்கு ரெண்டுவெள்ளி
சாடவே தானுருக்கி வாரடித்துச் சட்டமுடன் புடம்போட பசுமைகாணே
2030.
காணவே சுடரொளியின் பசுமைத்தங்கம் பாருலகில் சித்தரல்லால் ஆர்செய்வார்கள்
பூணவே கருவாளியாகவேண்டும் புத்தியுள்ளான் பாக்கியவானாகவேண்டும்
மாணவே சாத்திரங்கள் கற்றோர்காண்பர் மடையனோ வாய்வீணன் காணமாட்டான்
நாணவே நல்லொழுக்கானாயிருந்து நாதாக்கள் கிருபையது பெற்றோர்தாமே
2031.
பெற்றாலும் பேரின்பம் பெறவேவேண்டும் பேடிபோல் மண்ணாசை பெண்ணாசைதன்னை
அற்றவற்கே லகிரியானந்தம் வாய்க்கும் ஆனந்தபரஞ்சுடருங் காணலாகும்
மற்றாலுமொன்றுமில்லை வையந்தன்னில் மயங்கினாலொன்றுமே காணமாட்டார்
பற்றற்ற ஞானியாயிருந்தாயானால் பாருலகில் சர்வசித்தும் ஆடலாமே
2032.
ஆடலாஞ் சாரமென்ற கட்டியாலே அப்பனே கட்டனதார் சாரந்தன்னை
கூடவே சாரத்திற் குறுதிகேளு குணமுடனே சாரணைகள் செய்வாயப்பா
நீடவே சாரத்தில் குழிபோல்பண்ணி நேர்புடனே சூதமதை வுள்ளேதாக்கி
போடவே நெருப்பதனில் கட்டிவைக்கப் பொங்கமுடன் சூதமது வெண்ணையாமே

2033.
வெண்ணையென்ற சூதமதை எடுத்துமைந்தா விபரமுடன்சொல்லுகிறேன் சாற்றக்கேளு
கண்ணனிட மூலியதுக்குள்ளேவைத்துக் கருவாக சீலையது வலுவாய்ச்செய்து
திண்ணமுடன் கோழியென்ற புடத்தைப்போடு திருவான சூதமது மடிந்துகொல்லும்
எண்ணமுடன் சூதமதை செந்தூரிக்க யானுஞ்சொல்வேன் வபரமதாய்க் கேளுகேளே
2034.
கேளேதான் சூதமிடை வொன்சுறயாகும் கெடியான வீரமிடை காலேயாகும்
பானேதான் துத்தமது துருசுதானும் பாங்கான கெந்தியது காலதாகும்
வீளேதான் காந்தமது சிலையுங்கூட்டி விரிவான வளையலென்ற வுப்புகூட்டி
தூளேதான் மதியுப்பு காரத்தோடு துடியான இந்துப்பு காலதாமே
2035.
காலான பூநீறு வுப்புமாகும் கருவான சாரமுடன் பூரந்தானும்
பாலான வரிதார மடலுப்பாகும் மகத்தான சீனமது காலாய்ச்சேர்த்து
வேலான பொற்றலையின் சாற்றாலாட்டி விருப்பமுடன் ரவிதனிலே காயவைத்து
பாலான பொடிசெய்து மாவதாக்கி பாலகனே செந்தூர மார்க்கங்கேளே
2036.
கேட்கவே காசியென்ற குப்பிக்கேழு கெடிதான சீலஜயது வலுவாய்ச்செய்து
நீட்டமுடன் குப்பிக்குள் மருந்தைப்போட்டு நினைவாக மரக்கல்லு கொண்டுமூடி
தாட்டிகமாய் சட்டிதனில் மணலைக்கொட்டி சாங்கமுடன் குப்பிநடுமையம்வைத்து
வாட்டமுடன் மேலுமந்தமணலைக்கொட்டி வகுப்புடனே மேல்சட்டிகொண்டுமூடே
2037.
மூடவே சீலையது வலுவாய்ச்செய்து முசியாமல் வாலுகையில் யேற்றிமைந்தா
நாடனே கமலாக்கினி யெட்டுசாமம் நலமுடனே தானெரிப்பாய் மதிப்பதாக
நீடவே தீயாறி யெடுத்துப்பாரு நினைவுடனே குப்பியது கறுத்துக்காணும்
சாடவே குப்பியது வுடைத்துப்பாரு சாங்கமுடன் செந்தூரம் அதிதமாமே
2038.
அதீதமாஞ் செந்தூரம் பதனம்பண்ணு அப்பனே வெள்ளியதில் பத்துக்கொன்று
வதீதமுடன் தானுருக்கி குருவொன்றீய வளமுடனே கறுத்தநிறங்காணும்பாரு
சதீதமாம் ஓட்டில்வைத்து ஊதிப்போடு சாங்கமுடன் பசுமையது மாற்றோயெட்டு
கதீதமுடன் பத்துக்கு ஒன்றுதங்கம் கருவாகத் தானுருக்கிச் சாய்த்திடாயே
2039.
சாய்க்கவே வாரடித்துப் புடத்தைப்போடு சட்டமுடன் பசுந்தங்கமாகும்பாரு
காய்க்கவே செம்புதனில் பத்துக்கொன்று கடினமுடன் தானுருக்கி யெடுத்துப்பாரு
மாய்க்கவே கரியோட்டிலூதிப்போடு மகத்தான செம்பதுவும் பழுப்புபொன்னாம்
தேய்க்கவே பத்துக்கு வொன்றுதங்கம் தேற்றமுடன் தானுருக்கி புடத்தைப்போடே
2040.
போடவே மாற்றதுவு மதிகமாகி புகழான பொன்னதுவும் காந்திமெத்த
நீடவே நாதாக்கள் செய்யும்வேதை நிலையான மாணாக்கள் அறிவாறோதான்
கூடவே கருவாளி காண்பான்பாரு குணமில்லான் குடிகெடுக்கும் பாவிகாணான்
நாடவே காலாங்கி பாதம்போற்றி நலமுடனே பாடிவைத்தேன் நன்மைபாரே

2041.
நன்மையா மின்னமொரு கருமானங்கேள் நாட்டிலே யாரறிவார் இந்தப்போக்கு
கண்மையாம் தாம்பூரத்துட்டுவாங்கி கருவாக வுப்புபுளி காரஞ்சேர்த்து
திண்மையாம் பழச்சாற்றால் தானரைத்துத் திறமுடனே செப்புக்கு கவசஞ்செய்து
நன்மையுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து நலமுடனே புடம்போடச் சுத்தியாமே
2042.
சுத்தியா மிப்படியே பத்துமுறைபோடு சுருக்கமுடன் செம்புக்குப்பாதி மருந்தாகும்
மத்தியே புடம்போட சுத்தியாகும் மகத்தான சுத்திசெய்து பொடியதாக்கி
துத்தமுடன் வெள்ளையென்ற பாஷாணந்தான் துடியான வீரமுடன் காரந்தானும்
சத்தியுடன் சூதமதுக் கூடச்சேர்த்து சதுராகப் பேரண்டம் சரியாய்க்கூட்டே
2043.
கூட்டியே தானரைப்பாய் எருக்கம்பாலால் குமுறவே நாற்சாமமரைத்தபோது
வாட்டமுடன் மெழுகதனை யெடுத்துமைந்தா வளமுடனே செம்புதனைராவிக்கொண்டு
நீட்டமுடன் தான்பிசறி மூசைக்கிட்டு நேர்புடனே சில்லிட்டுச்சீலைசெய்து
தாட்டிகமாய் சரவுலையில் வைத்துவூது சாங்கமுடன் சுன்னமது வாகுந்தானே
2044.
வாகான சுன்னமதை எடுத்துமைந்தா வளமையுடன் முன்போலச் சரக்குச்சேர்த்து
பாகான பதமுடனே வூதுவூது பசப்பற்ற பற்பமது வாய்க்கும்பாரு
வேகான பற்பமது வைந்துதரமூது வேகாது பச்சையென்ற செம்புதானும்
போகாது களிப்பதுவும் அற்றுநீங்கி புகழான பற்பமது தவளமாச்சே
2045.
ஆச்சிந்த பற்பத்தைப் பின்னுமைந்தா அழகுபெற சிற்றண்டம் சவ்வுபோக்கி
பேச்சொன்று மில்லாமல் சரியாய்க்கூட்டிப் பேராக மூசையிட்டு சீலைசெய்து
காச்சென்ற பச்சையது நீங்கிப்போக கடுந்தீயில் பின்னொருக்காலூதித்தீரு
மாச்சென்று மில்லாத பற்பமாச்சு மகத்தான பற்பமது பின்னுங்கேளே
2046.
பின்னுமே பற்பமதைக் கல்வமிட்டு பேரான சாரமென்ற செயநீர்தன்னால்
மின்னவே தானரைப்பாய் நாலுசாமம் மிக்கான சரக்கதனை மூசையிட்டு
கன்னான சீலையது வலுவாய்ச்செய்து கருவாக வூதிடவே பற்பமாகும்
மன்னான பற்பமதை யெடுத்துமைந்தா மகத்தான ரஸ்தாளி பழத்தில்தாக்கே
2047.
தாக்கவே பழமதுவும் இருகிக்காட்டும் தனியான பசும்வெண்ணெய் தன்னிலப்பா
நோக்கமுடன் வரிசியெடை அனுபானத்தில் நுட்பமுடன் தானருந்த தேகம்கற்றூண்
சேர்க்கமுடன் நரைதிரையு மற்றுப்போகும் சூட்சமுடன் கண்ணிரண்டும் துலக்கங்காணும்
ஆக்கையது யிறுகியல்லோ சட்டைதள்ளும் அவணிதனில் நீயுமொரு சித்தனாமே
2048.
ஆமேதான் வாலையது போலேதோற்றும் அப்பனே வயததுவும் பண்பாய்க்காட்டும்
நாமேதான் சொன்னபடி பற்பங்கொண்டால் நாட்டிலே யுன்னையொரு சித்தனென்பார்
வேமேதான் பற்பமது வெள்ளீயத்தில் விருப்பமுடன் தானுருக்கி குருவொன்றீய
தேமேதான் மாற்றதுவும் யெட்டதாகும் தேசத்தில் சித்தர்செய்யும் வேதையாச்சே

2049.
வேதையிலே தாம்பூரத்தில் வேதையப்பா வெகுகோடி வேதையிது தாம்பரவேதை
பாதையாம் சித்தர்செய்யும் வேதைமார்க்கம் பாருலகில் கருவாளி செய்வான்பாரு
தீதையிலே சண்டாளத் துரோகியோற்குத் திசைகெட்டு முறைகெட்டுத் தேராதொன்றும்
ஆதையுடன் பற்பமென்ற பற்பந்தன்னை அனுபான யெண்ணெய்தன்னில் கலந்திடாயே
2050.
கலந்த எண்ணை பணயெடைதான் அந்திசந்தி கவனமுடன் தானருந்த வாலையாவாய்
பலமதிகமுண்டாகும் பாலர்க்கப்பா பாரினிலே ராசாக்கள் காண்பராகில்
வலமுடனே யோடிவந்து ஆசீர்மித்து வரைகோடி திரவியங்கள் மெத்தயீய்ந்து
நலமுடனே பற்பமதை கைக்கொள்குவார்கள் நாட்டிலே பற்பமது நவிலொண்ணாதே
2051.
ஒண்ணான தங்கமென்ற காசுதன்னை வுத்தமனே களஞ்சியது பத்ததாகும்
கண்ணான ரேக்கதுவும் கொண்டுவந்து கவனமுடன் மாசியென்ற பத்திரிதன்னால்
குண்ணான காசமது பொசித்துப்போட்டு குன்றியிடை சீனமது வொக்கச்சேர்த்து
தண்ணான நாற்சாம மரைத்தபோது தாக்கான மெழுகுபோலாகும்பாரே
2052.
பாரேதான் மெழுகுதனை வட்டுசெய்து பண்பாக ரவிதனிலே காயவைத்து
நேரேதான் வோட்டிலிட்டுச் சீலைசெய்து நேர்பாகப் புடம்போடச் செந்தூரிக்கும்
காரேதான் செந்தூரமெடுத்துப்பாரு கருப்பான செந்தூரம்போலே காணும்
தீரேதான் பத்துமுறை யிப்படியேபோடு திறமான செந்தூரமாகுந்தானே
2053.
தானேதான் செந்தூர மெடுத்துமைந்தா தாரமுடன் கெந்தியது காலாய்க்கூட்டி
மானேதான் கட்டினதோர் சாரமொன்று மார்க்கமுடன் எட்டிலோர் பாகஞ்சேர்த்து
நாமேதான் சொன்னபடி செயநீர்தன்னால் நலமாகத்தானரைப்பாய் நாலுசாமம்
வேமேதான் ஆறுவகை செயநீர்தன்னால் விருப்பமுடன் அரைத்துபில்லை
விரைவாய்த்தட்டே
2054.
தட்டையிலே பில்லையது பணம்போலாகச் சாங்கமுடன் தட்டியல்லோ காயப்போடு
வட்டமென்ற வகல்தனிலே பரப்பிமைந்தா வளமுடனே வகல்மூடிசீலைசெய்து
மட்டமென்ற கோழியது புடமதாக மதிப்புடனே வோட்டிலிட சிவப்புமாகும்
திட்டமுட னிப்படியே மூன்றுமுறையப்பா சிறப்பாகப் புதிம்போடச் சிவக்குந்தானே
2055.
சிவப்பான செந்தூரம் பதனம்பண்ணு தேசத்தில்கிட்டாது சிவயோகிக்கு
தவக்கியானி யானாக்கால் யெல்லாஞ்சித்தி தாரணியில் அவன்போலச் சித்தனுண்டோ
பவமுடையோர்க் கிந்நூல்தான் வாய்க்காதப்பா பாரினிலே விட்டகுறையானவர்க்கு
சிவன்செயலால் கிடைக்குமே யிந்நூலப்பா தேசத்தில் மற்றவர்க்கு கிடையாதன்றே
2056.
தானான முன்யுகத்தில் காலாங்கிக்குத் தாக்கான மிருத்துவரிஷியின்சாபம்
கோனான பொன்னகரம் போயிருந்து கோடித்தார் கண்ணபிரான்தன்னையப்பா
தேனான திரேதாயுகத்தில்தானும் தெளிவான சுத்தனாங் காலாங்கிவையா
பானான குருசுவாமி சாபத்தாலே பாலனாங் காலாங்கிசாபம் போச்சே

2057.
போனபின்பு காலாங்குருவாஞ்சாமி பொன்னகரம் போயிருந்து பட்டமாச்சு
தானானவனாங் கருவூரார் கமலந்தாமும் தயவுடனே சீனபதிபோயிருந்து
வானானவனாங் காலாங்கி சீஷனென்னை வரவழைக்க கியாபகத்தில் நினைத்தபோது
பானமுட னடியேனும் குளிகைபூண்டு பறந்திட்டேன் சீனபதிதேசந்தானே
2058.
தேசமென்றால் தேசமது போயிருந்தேன் சிறப்பான கமலமுனி தன்னைக்கண்டேன்
ஆசையுடன் அவர்பாதம் பணிந்தேனப்பா அப்பவே குருசாபம் நிவர்த்தியாச்சு
பூசையுடன் காலாங்கி நாயர்தம்மை பூசித்தேன் திரேதாயி னுகத்திலப்பா
நேசமுடன் எந்தனுக்கு கலியுகத்தில் நேர்மையுடன் சாபமது நிவர்த்தியாச்சே
2059.
ஆனபின்பு கலியுகத்தில் நூற்றுப்பத்தில் அன்புடனே குளிகைகொண்டு பறந்துயானும்
வானவருக் கொப்பான போகரென்று வையகத்தில் கீர்த்தியுடன் பேருபெற்றேன்
தேனான காலாங்கி பாதஞ்சென்று தெரிசித்து அவருடைய வருளுங்கொண்டேன்
கோனான என்னையர் குருவினாலே கோடியுகஞ் குவலயத்தில் வாழ்ந்திட்டேனே
2060.
வாழ்கவே குளிகையது பூண்டுகொண்டு வையகத்தில் சுற்றியெங்கும் பார்க்கவென்று
வீழாத குளிகையுடன் மேருசென்றேன் விருப்பமுடன் நாற்றிசையும் காணும்போது
தாழ்கவே மேருவுக்கு வடபாகத்தில் தாக்கான மனிதரெல்லாம் தங்கவர்ணம்
மூழ்கவே வயததுதான் லட்சமாகும் முனையான தெய்வமது சத்தியாமே
2061.
சத்தியாம் மேருவுக்கு கிழக்கேயப்பா சார்பான மனிதரல்லோ நீலவர்ணம்
நித்தியமாம் வயததுதான் ரண்டுலட்சம் நிலையான தெய்வமது விஷ்ணுவாகும்
புத்தியுடன் மேருவுக்கு மேற்கேயப்பா புகழான மனிதரப்பா ரத்தவர்ணம்
சுத்தஇயுடன் கோறுவது கைலையாகும் சொரூபமென்ற போதமென்னும் நிலைநிற்பாரே
2062.
நிற்பாரே வயததுதான் ரண்டுலட்சம் நித்தியமும் சொரூபமென்ற நிலையுங்காண்பர்
சிற்புடன் மேருவுக்கு தெற்கேயப்பா சிறப்பான மனிதரப்பா மைனவர்ணம்
கர்மமென்ற வயததுதான் நூறென்பார்கள் கலியுகத்தில் இருப்பதுவும் இல்லைதானே
சொற்பமென்ற வயதுதனில் மாண்டுபோவார் சுந்தரனே அக்கிரமங்கள் மிகவுண்டாமே
2063.
உண்டான மனிதரப்பா கொடியசெய்கை வுற்பனமாம் மரியாதையில்லாமாண்பர்
மிண்டான முறைதப்பும் சண்டிமாண்பர் மீளாதகொடியதொரு பாவியாகும்
சண்டாள மையல்கொண்டு தாறுமாறாய்ச் சடுதியிலே சடமழிந்து போவாரப்பா
பண்டான சூதுகளும் பொய்யுமாகும் பாங்கான மனிதரப்பா நடத்தைபாரே
2064.
பாரேதான் சாத்திரங்கள் மெத்தவுண்டு பாங்கான பொய்ஞானி மெய்ஞானியுண்டு
சீரேதா னுண்ணுவது வனேகவர்ணம் சிறப்பான காய்கறிகள் பாலுங்கொள்வர்
நேரேதான் பழவர்க்கம் கொள்வாரப்பா நிறைவான லாகிரிகள் அனந்தங்கொள்வர்
வேரேதான் மனிதரப்பா மூன்றுபாகம் முன்சொன்ன மனிதரப்பா பழமுண்பாரே

2065.
உண்பான மின்னமொரு மார்க்கங்கேளு ஒளிவான வீரமது கொச்சிவீரம்
தின்பான சீனத்தின் வீரமப்பா திறமான வீரமது பலமொன்றாகு
பண்பான வீரத்தின் தயிலம்பாரு பாங்கான ஆனையென்ற விலாங்குதானும்
நண்பான விலாங்கதனை தயிலமாக்கி நலமாக கெந்தகத்தை விட்டுதாக்கே
2066.
தாக்கவே சேரென்ற கெந்திதன்னை தயவாகத் தானரைப்பாய் நாலுசாமம்
நோக்கவே தானரைத்து பின்னுங்கேளு நுணுக்கமுடன் வழித்தயில மிறக்கிப்பின்பு
தேக்கவே வீரமது சுறுக்குதாக்கு தெளிவுடனே வீரமது கட்டேயாகும்
பார்க்கவே மேற்கவசம் சொல்லக்கேளு பதிவாக துருசுடனே சிங்கியாமே
2067.
சிங்கியென்ற மிருதாரு சிங்கியப்பா செழிப்பான பூரமுடன் துத்தமாகும்
இங்கிதமாம் சாரமுடன் காரமாகும் எழிலான காந்தமுடன் குருந்தக்கல்லாம்
தங்கமுடன் சவ்வாது புனுக்குபூரம் தகமையுள்ள வபினியுடன் கெந்திதானும்
அங்கமுள்ள லிங்கமுடன் சீனந்தானும் அப்பனே வகைவகைக்கு விராகனொன்றே
2068.
ஒன்றான இத்தனையும் சரியாய்க்கூட்டி வுத்தமனே தேன்விட்டு மெழுகதாக்கி
பன்றான மெழுகுபதம் தன்னிலாட்டி பதமுடனே மெழுகதனை எடுத்துமைந்தா
நன்றான வீரத்துக்கங்கிபூட்டி நலமாகப் புடம்போடக் கட்டும்பாரு
அன்றான மெழுகதனை வைந்துபங்காக்கி அப்பனே வீரத்துக்கங்கிபூட்டே
2069.
பூட்டியே யிப்படியே யைந்துதரமப்பா புகழாகக் கலசத்தில் சீலைசெய்து
நீட்டமுடன் மணல்மறைவில் புடத்தைப்போடு நெடிதான வீரமது கட்டும்பாரு
வாட்டமுடன் மேற்கவசம் தன்னைப்போக்கி வளமுடனே வைந்துதரம் பூசியேதான்
பூட்டமென்ற புடந்தனிலே போட்டாயானால் புகழான வீரமது கட்டும்பாரே
2070.
கட்டான வீரமது மணியெடுத்து கண்ணான கண்மணியே கருத்தாய்கேளு
மட்டான வுப்பதுவும் சேர்த்துப்பாரு மதிப்பான வெடியுப்பு வளையலுப்பு
தட்டான பாறையென்ற வுப்புகூட்டி தளராத கல்லுப்பு சமனாய்ச்சேர்த்து
வட்டான சட்டிதனில் போட்டுமைந்தா வளமுடனே திருகள்ளி பாலையூத்தே
2071.
ஊத்தையிலே பாலதுவும் மிகவும்பொங்கி வுத்தமனே சுண்டமட்டும் எரிப்பாயப்பா
நாத்தமுள்ள கள்ளியது பாலுஞ்சுண்டி நலம்பெறவே கட்டியல்லோ சுண்டிருக்கும்
ஏத்தமுள்ள மேல்சட்டி கொண்டுமூடி எழிலாகச் சீலையது மிகவுஞ்செய்து
போத்தமுடன் வாலுகையி லடுப்பிலேற்றிப் பொங்கமுடன் தானெரிப்பாய் சாமமெட்டே
2072.
எட்டான சாமமது எரிக்கும்போது எணமகனே வுப்பதுவும் வுகிக்கிக்கட்டும்
மட்டான வுப்பதுவும் கட்டியல்லோ மார்க்கமுடன் பற்பமது போலேகாணும்
திட்டான வுப்பதுவும் பொடியதாக்கி திறலான சட்டிதனில் பாதிப்போட்டு
கட்டான வீரமதை நடுவில்வைத்து கருத்துடனே மற்றபொடி மேலேபோடே

2073.
போடேதான் சட்டிகொண்டுமூடி பொங்கமுடன் தானெரிப்பாய் மூன்றுநாளும்
நீடேதான் எரித்தபின்பு எடுத்துப்பாரு நெற்றிசிவன் தானெரித்த பற்பமாகும்
வாடாத பற்பமது புகலப்போமோ வளமையுள்ள பற்பமது பதனம்பண்ணு
தேடான செம்பெடுத்து பத்துக்கொன்று தெளிவுடனே தானுருக்கிக் கொடுத்திடாயே
2074.
கொடுத்தவுடன் செம்பதுவும் ஊறலேகி குணமாகும் ரவிதானும் கட்டிப்போகும்
தடுக்காமல் வெள்ளிதனில் நாலுக்கொன்று சாங்கமுடன் தானுருக்கிக் கொடுத்துப்பாரு
படுமுன்னே வெள்ளியது பழுக்கும்பாரு பாங்கான மாற்றதுவும் ஏழதாகும்
தொடுகுறிபோல் நாலுக்கொன்று தங்கம் தோராமல் தான்கொடுத்து வுருக்கிடாயே
2075.
உருக்குமுகந்தான்கொடுத்து வாரடித்து வுத்தமனே புடம்போடப் பழுப்புமாகி
தடுக்கென்ற பொன்னதுவும் தங்கமாகி தாரணியில் சித்தர்செய்யும் வேதையாகும்
குருக்குமுதல் அனேகவித வேதைகாணும் கோடானகோடி முறையிதுநாலாகும்
பருக்கலென்ற சிவப்புநிறம் கவலையப்பா பாங்குபெற பற்பமதை பிசறியூதே
2076.
ஊதையிலே மூசைக்குள் ளிட்டுமைந்தா வுறுதியுடன் சில்லிட்டு சீலைசெய்து
தோதமுடன் குகைவைத்து வூதும்போது துப்புறவாய்ச் சுன்னமது புகலப்போமோ
நீதமுடன் சுன்னமதை யனுபானத்தில் நிலைமையுடன் வெண்ணய்தனில் கொண்டுபாரு
சாதமுடன் மண்டலந்தான் கொண்டுவந்தால் சார்பாகும் மேகவகைபோகுந்தானே
2077.
போகுமே மேகவகை யிருபத்தொன்றும் பொல்லாத நீரிழிவு குன்மச்சூலை
ஏகுமே நீர்சொரிப்பு நீர்ப்பனைப்பு என்மகனே வாசனத்தின் கடுப்புதீரும்
யாகமுடன் வனுபானந் தன்னிலீய பறக்குமடா நோயேது காந்தமேது
தாகமுடன் வூஷ்ணங்கள் எல்லாம்போகும் சதாகாலம் தேகமது குளிர்ச்சியாமே
2078.
குளிருமே தேகமது கற்றூணாகும் குடிகெடுக்கும் சயரோகம் அகன்றுபோகும்
நளிருடனே நரம்புவலி சடலம்விட்டு நடுங்கியே கானகத்தில் தானேபுக்கும்
விளிருடனே கண்துலக்க மிகுதிகாட்டும் விரைவுடனே சுவாசமது கீழேநோக்கும்
களியுடனே இருமலது சடலம்விட்டு கண்ணுமே யெப்போதும் அணுகாதாமே
2079.
தாமேதான் தேகமது கற்றூணாகும் தனியான வாதமது கீழ்நோக்காகும்
காமேதான் சேத்துமங்கள் தொண்ணூற்றாகும் கடல்போகும் தப்பாது கருதிப்பாரு
வேமேதான் பத்தியங்கள் ஒன்றுமில்லை வெகுகோடி காலமது தேகம்போகா
நாமேதான் காலாங்கிநாதர் பாதம்நான் வணங்கி போகரிஷி நவின்றவாறே
2080.
வாறான நூல்பார்த்து கால்கள்பார்த்து வளப்பமுடன் அடிமுடியுந்தானும்பார்த்து
கூறான கடைபார்த்துக் குறிப்பும்பார்த்து கோடான கோடிமுறை தானும்பார்த்து
சேறான கைபாகம் செய்யாகந்தான் செழிப்புடனே செய்பவனே சித்தனாவான்
நாறான பூவதுவில் மணஞ்சேர்ந்தார்ப்போல் நாட்டிலே செய்பவன் யோகியாமே

2081.
யோகமுடன் இன்னமொரு மார்க்கம்பாரு ஒளிவீசும் தாரமுடன் லிங்கந்தானும்
சாகமுடன் வானையுட தயிலத்தாலே சட்டமுடன் தாளகத்தை அரைத்துமைந்தா
பாகமுடன் லிங்கத்தின் மேலேபூசி பக்குவமாய் ரவிதனிலே காயவைத்து
தாகமென்ற முலைப்பாலைச் சுறுக்குத்தாக்க தகமையுடன் தான்கருகி வுதிருமாமே
2082.
உதிர்ந்த தொருசரக்கதனை எடுத்துமைந்தா ஓங்குபெற கல்வத்திலிட்டுமேதான்
கதிர்ந்திடவே வாறுவகை செயநீர்தன்னால் கதிப்புடனே தானரைப்பாய் நாலுசாமம்
சதிருடனே பில்லையது தட்டியேதான் சாங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
முதிராமல் ஓட்டிலிட்டுச்சீலைசெய்து முசியாமற் புடம்போடச் சிவக்குந்தானே
2083.
சிவப்பான செந்தூரம் என்னசொல்வேன் சிவசிவாவெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
நலமுடனே ஒன்றுதள்ளி வூதிப்போடு நாதாக்கள் செய்யுமிது வேதைகாணும்
தவமுடைய ஞானிகட்டு எட்டுகாணும் தப்பாது லோபிகட்கு வாய்க்காதப்பா
பவநீக்கி இருப்பவர்க்கு இந்தபாகம் பலிக்குமே தப்பாது பண்புளோர்க்கே
2084.
பண்பான காலாங்கி பாதம்தொட்டு பாடுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
நண்பான தங்கமது களஞ்சிபத்தேயாகும் நலமான செம்பதுவும் களஞ்சிரண்டு
திண்பான வெள்ளியது களஞ்சிரண்டு திறமுடனே நாகமது களஞ்சிநாலு
வண்பான வங்கமது குன்றியிரண்டு வாகாகத்தானுருக்கி எடுத்துப்பாரே
2085.
எடுக்கையிலே மாற்றதுவும் எட்டதாகும் யென்மக்காள் லோகத்துவாதிமாக்காள்
சடுக்கமென்னும் பத்தியினால் அறியமாட்டார் சட்டமுடன் வரைதீர்ந்து வார்த்தை சொல்வார்
துடுக்கான வேதைமுகம் காணமாட்டார் துறைமுகங்காணாமல் வெருமையாவர்
படுக்காளியுடன் கூடிபதமுங்கெட்டு பாரினிலே யலைவார்கள் தாங்கள்தாமே
2086.
நாய்போல வலைவார்கள் சண்டிமாண்பர் நாதாக்கள் கைமறைப்பு வொன்றுங்காணார்
பேய்போன்ற பேயரல்லோ வீணாயக்கட்டு பிசகின்றி கெட்டவர்கள் கோடாகோடி
தாய்போல பஞ்சலோகந் தானிருக்கச் சதாகாலம் சீவனத்துக் குறைவுண்டாமோ
மாய்கையென்னும் கதைநீக்கி மைந்தாபாரில் மன்னவன் போல்வாழுவது சித்தனாமே
2087.
சித்தனா மின்னமொரு மார்க்கங்கேளு சீர்பெறவே செம்பதுவும் ஒன்றேயாகும்
புத்தியுள்ள சிஷ்யாநீ புகலவேண்டாம் புகழான வெள்ளியது மூன்றேயாகும்
புத்தமுள்ள தங்கமது வாறேயாகும் சூட்சமுள்ள வெண்காரம் குன்றிரண்டு
மொத்தமுடன் குகையிலிட்டுத் தானுருக்கி மோசங்கள் வாராமல் சாய்த்திடாயே
2088.
சாய்க்கவே பொன்னதுவும் எட்டதாகும் சரியான நிறையுடனே வூட்டங்காணும்
ஏய்க்காது புடத்துக்கு உறுதிதங்கம் எவராலும் இடைபாகங்காணமாட்டார்
மாய்க்கவே நாதாக்கள் கூட்டுபாகம் நாமல்லோ மானிடர்க்கு பட்சம்வைத்தேன்
காய்க்கவே பொன்வேண்டுமானாலப்பா கருத்துடனே இப்படியே செய்துபாரே

2089.
பாரப்பா கூட்டுமுறை இன்னங்கேளு பாளமென்ற தங்கமது நாலேகாலாம்
சீரப்பா சுத்தமுள்ள செம்புதானும் சிறப்புடனே ஒன்றரையுமரிக்காலாகும்
கூறப்பா வெள்ளியது வரிக்கால்முக்கால் குறையாம லிடைபாகங் குணமாய்க்கொண்டு
வாரப்பா நாகமது குன்றிரண்டு வளமுடனே தானுருக்கி எடுத்துக்கொள்ளே
2090.
கொள்ளவே மாற்றதுவும் எட்டரையுமாகும் கோளாறுநீங்கியல்லோ மாற்றுகாணும்
எள்ளளவும் பிசகின்றி புடத்துக்கேகா எழிலான பொன்னதுவும் பசுமைமெத்த
தள்ளவே வேண்டாங்காணிந்தபாகம் தாரணியில் கிடைப்பதுவும் அரிதேயாகும்
உள்ளபடி சொன்னோமே காலாங்கிதம்மை வுறுதியுடன் நான்வணங்கி உரைத்தேன்தானே
2091.
தானான பஞ்சகர்த்தாளாடுங்கூத்து தாரணியிலின்னமுண்டு சாற்றக்கேளு
பாரான பசுந்தங்கம் வாறேகாலாம் பாங்கான செம்பதுவும் ஒன்றேமுக்கால்
தேனான வெள்ளியது அரைக்காலாகும் தெளிவான நாகமது குன்றிமூன்று
மானான சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி மாசிபெற குகையிட்டு வுருக்கிடாயே
2092.
உருக்கியபின் தானெடுத்து உடைத்துப்பாரு உத்தமனே பொன்னதுவோ மாற்றுஎட்டு
பெருக்கமுள்ள வேலைக்கு நயமுமாகும் பொன்காகமிதற்கீடு புகலப்போமோ
செருக்குடைய இத்தங்கம் பசுமையாகும் ஜெகதலத்தில் நாதாக்கள் செய்யும்வேதை
திருகனுடன் கைமறைப்பு மெத்தவேண்டும் தேசத்தில் கிட்டாது யோகிக்காமே
2093.
யோகியென்றால் சமுசாரிக்காகும் வேதை யொருவரால்வுள்ளாணிகழல்காணார்கள்
தேவியுடன் தானிருந்து வாழும்வித்தை தேசத்தில் கிட்டாது கர்மிகட்கு
ஆவியுடன் காயமது வழிந்திட்டாலும் அப்பனே யொருவருக்கும் விள்ளவேண்டாம்
தேவிகளோ மெத்தவுண்டு படுக்காளிப் பட்சமுடன் நேசிப்பார் தூரத்தள்ளே
2094.
தள்ளுவது பூதலத்தில் மெத்தநன்று தருமவான் கிடைப்பதுவும் அரிதேயாகும்
உள்ளபடி வின்னமொரு மார்க்கம்பாரு வுற்பனத்தை ஆராய்ந்து வுருக்கித்தீரு
சள்ளையென்று விடுகாதே மைந்தாபாரு சாத்திரமும் பொய்யாது மெய்யேயாகும்
கள்ளமின்றி செம்பதுவும் இரண்டேகாலாம் கருவான வெள்ளியது வரைநாலாமே
2095.
நாலான வெள்ளியது நாலரையுமாகும் நலமான செம்பொன்னு மிரண்டேகாலாம்
கோலான நாகமது ஒன்றேகாலாம் குறிப்புடனே குகையிலிட்டு வுருக்கித்தீரு
பாலான வெள்ளியது பசுமையாகிப் பழுப்புடனே பொன்னதுவும் மாற்றேழாகும்
சூலான வர்ணமது வுள்ளேநிற்கும் சூட்சமுடன் வாரடித்துப் புடத்தைப்போடே
2096.
போட்டதுவும் பொன்னதுவும் மிகுதியாகிப் பொங்கமுடன் மாற்றுயர்வு காணும்பாரு
நீட்டமுடன் இன்னமொரு கருமானங்கேள் நெடிதான தங்கமது நாலேகாலாம்
வாட்டமுடன் செம்பதுவும் ஒன்றேகாலாம் வளமான நாகமது முக்காணியாகும்
தேட்டமுடன் வெள்ளியது வரிக்கால்காலாய் தெளிவான வங்கமது குன்றியாமே

2097.
குன்றியுடன் தானெடுத்து ஒன்றாய்ச்சேர்த்து குறிப்புடனே குகையிலிட்டு வுருக்கிப்பாரு
கண்றான மாற்றதுவு மெட்டேயாகும் தாக்கான பொன்னதுவும் நயப்புமாகும்
மன்றான பொன்னதுவை வாரடித்துப் பக்குவமாய்ப் புடம்போட பசுமைகாணும்
வென்றான சித்தர்முனி ரிஷிகள்பாகம் மேதினியால் அதீதமென்ற வித்தைதானே
2098.
தானென்ற வித்தையிது யின்னஞ்சொல்வேன் சதாசிவமும் உமையவட்குச் சொன்னபாகம்
வேனென்ற தங்கமது வரிக்கால்ரண்டு வெளுப்பான செம்பதுவும் முக்காலாகும்
காமென்ற கட்டியதோர் நாகம்கால்தான் கருவான வெள்ளியது ஒன்றேபாதி
யாமென்ற வெண்காரங் குன்றிகாணும் பாகமுடன் குகையிலிட்டு வுருக்கிடாயே
2099.
ஆனபின்பு பொன்னது மச்சங்கொண்டு அன்புடனே வாரடித்துப் புடத்தைப்போடு
பானமென்ற பொன்னதுவும் மாற்றுகாணும் பாங்கான வேதையிது சித்தர்வேதை
கானமென்ற கருமான மின்னமொன்று கருத்துடனே சொல்கிறேன் மைந்தாகேளு
வானமென்ற தங்கமதை ஒன்றுகூட்டி வளமாக செம்பதுவும் காலுகூட்டே
2100.
கூட்டியே வெள்ளியது வரிக்காலாகும் குணமான நாகமது வரிக்காலாகும்
வாட்டமுடன் தானுருக்கி எடுத்துப்பாரு வளமுடனே மாற்றதுவு மொன்பதாகும்
நீட்டமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு நெடிதாக மாற்றதுவும் ஏழதாகும்
தேட்டமுடன் சித்தர்களாம் செய்யும்வேதை தேசத்தில் சிவயோகிக் காணுவானே

# போகரின் சப்த காண்டம் – 7000

2101.
காணுவான் கருவாளி காண்பான்பாரு காசினியில் புத்தியுள்ளோன் விதியுள்ளோர்க்கும்
மாணவே இன்னமொரு மார்க்கம்பாரு மகத்தான செந்தூரம் மகிமையப்பா
ஊணவே கிருஷ்ணபிரோகம்காணும் வுத்தமனே சேரதுவும் நாலதாகும்
கானான வெண்ணையது செய்துகொண்டு கருவாக மையின்மதை எடுத்துக்கொள்ளே
2102.
கொள்ளவே நீதமது சேர்தான்ரண்டு கூரான வெடியுப்பு சேர்தான்பாதி
வில்லவே கெந்தியது சேர்தான்காலாம் வீரனவயச்சத்து சேர்தான் காலாம்
துள்ளவே மூன்றையுந்தான் ஒக்கக்கூட்டி தோராமல் குழிக்கல்லில் போடுமைந்தா
அள்ளவே எருக்கன்பால் விட்டரைத்து அப்பனே பில்லையது தட்டிடாயே
2103.
தட்டியே ரவிதனிலே காயவைத்து சாங்கமுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
மட்டமென்ற கெஜபுடமே போட்டுமல்லோ மார்க்கமுடன் ஆறவிட்டு எடுத்துப்பாரு
திட்டமுள்ள செந்தூரம் கறுப்பாய்காணும் திரும்பியே இப்படியே பத்துமுறைபோடு
வட்டமுடன் செந்தூரம் கரியோடாகும் மார்க்கமுடன் சிவப்பதற்கு இன்னும்பாரே
2104.
பாரேதான் செந்தூரம் சிவப்பதற்கு பாசமுடன் ஆறுவகை செயநீர்தன்னால்
நேரேதான் காரமது எட்டுசாமம் நேர்ப்புடனே தானரைப்பாய் வெண்ணெய்போல
வேரேதான் பில்லையது தட்டிமைந்தா விபரமுடன் ரவிதனிலே காயவைத்து
சீரேதான் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து சிறப்பாகப் புடம்போடச் சிவக்குந்தானே
2105.
தானான செந்தூரம் நூறுபுடமாகும் தாக்கான வருணோதம் சொல்லப்போமோ
வேனான செந்தூரம் சத்துக்கொன்று விபரமுடன் தங்கமது ஒன்றுசேர்த்து
கானான ஆறுவகை செயநீர்தன்னால் கருத்துடனே பில்லைதட்டிக் காயவைத்து
மானான கோழியென்ற புடம்தான்போடு மாசற்ற செந்தூரம் புகலொண்ணாதே
2106.
புகலவே செந்தூரம் பதனம்பண்ணு பொங்கமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
நிகலவே தானுருக்கு குருவொன்றீய நிலையான மாற்றதுவும் எட்டதாகும்
அகலவே நாலுக்கு ஒன்று தங்கம் அப்பனே கூட்டுமுறை தன்னில்சேர்த்து
தகலவே தானுருக்கி எடுத்துப்பாரு தகைமையுடன் மாற்றதுவும் மிகுதியாமே
2107.
ஆமேதான் செந்தூரம் சோதித்துப்பார் அப்பனே பச்சைமண் பாண்டந்தன்னில்
தாமேதான் சலம்விட்டு துவாரம்செய்து சட்டமுடன் செந்தூரம் குன்றிதானும்
போமேதான் போட்டவுடன் பாண்டம்தூக்கு போக்கான துவாரங்கள் அடைத்துகாணும்
நாமேதான் சொன்னபடி வரைதப்பாது நலமுள்ள செந்தூரம் அதீதம்பாரே
2108.
அதீதமாஞ் செந்தூரம் குன்றியுண்ணு அப்பனே மேகவகை இருபதும்போம்
கதீதமென்ற மதுமேகம் அழிந்துபோகும் கடல்போகும் நீரிழிவு காணாதோடும்
சதீதமென்ற செந்தூரம் அனுபானங்கள் சாற்றுகிறேன் வல்லாரைச்சூரணந்தான்
பதிதமென்ற வாவாரைச் சூரணந்தான் பட்சமுடன் அனுபானம் உண்ணுவீரே

2109.
உண்ணயிலே தேனாகும் நெய்யுமாகும் உத்தமனே பசுவெண்ணெய் தானுமாகும்
நண்ணயிலே கிரதங்கள் லேகியங்கள் நலமான சூரணங்கள் அனுபானந்தான்
கொண்ணையுடன் பூவதுவும் கிஷாயந்தன்னில் புகட்டவே மேகங்கள் போகும்பாரு
திண்ணையிலே கியாழவகை தன்னிலீய தெறிக்குமடா மேகவகை திண்ணந்தானே
2110.
திண்ணமுடன் காயமது இறுகிக்காட்டும் திரிந்தாலும் சுவாசமது மேல்நோக்காது
வண்ணமுடன் சதாகாலம் தேகம்கற்றூண் வளமையுடன் எப்போதும் வாழலாகும்
அண்ணலெனும் பராபரத்தை யணுகவேண்டும் யணுகாட்டால் காயுமில்லை பூவுமில்லை
சுண்ணமுடன் காலாங்கிதனை வணங்கி தாழ்மையுடன் பாடிவைத்தேன் பண்பாய்த்தானே
2111.
பண்பான காண்டமது என்னசொல்வேன் பாரினிலே நாதாக்கள்செய்யும்வேதை
கண்பான கர்மிக்கு வாய்க்குமோசொல் கசடற்ற மாண்பருக்கு வாய்க்குமல்லால்
திண்பான கருவாளியானால் திறமுடனே யறிந்துகொள்வான் புண்ணியவானாம்
நண்பான போகரிஷி சொன்னமார்க்கம் நாட்டிலே யாரேனும் சொல்வார்தாமே
2112.
சொல்லவே தாம்பூரவேதை சொல்வேன் சுத்தமுடன் தாம்பூரத்துட்டு காணும்
வெல்லவே சேரதுதான் ரண்டதாகும் வெளியான கெந்தகமும் நாலதாகும்
கொல்லவே தூளாக்கி எடுத்துமைந்தா கோளாறு நேராமல் சொல்லக்கேளு
புல்லவே தளவாயஞ் சட்டிதனில் பொங்கமுடன் கெந்தகத்தை கீழேபோடே
2113.
போடவே கெந்தகத்தைப் பாதிபோடு போக்கான கெந்தகத்தின் மேலேயப்பா
நாடவே வதின்மேலே துட்டைவைத்து நலமாக மேலுமந்த கெந்திபோடு
கூடவே மேல்சட்டி கொண்டுமூடி குமுறவே சீலையது வலுவாய்ச்செய்து
பாடவே வாலுகைகையா மடுப்பிலப்பா பாங்குபெற தானெரிப்பாய் சாமமெட்டே
2114.
எட்டான சாமமது எரிக்கும்போது என்மகனேதாம்பரமும் வெட்டையாகி
கட்டான வெட்டையது தொட்டியாகி கடுங்காரச் செம்பினது தொட்டியாச்சு
முட்டாளா யிருக்காமல் மைந்தாகேளு முயலலே தாம்பரத்தை எடுத்து மைந்தா
திட்டமுடன் கல்வமதில் இட்டுமைந்தா திறமுடனே பொடியதுவாம் நொறக்கிடாயே
2115.
நொறுக்கியே சூதமது சமனாய்ச் சேர்த்து நோக்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலு
பறுகவே மைபோலயரைப்பாயப்பா பாலகனே வில்லைதட்டிக் காயவைத்து
திறுகமுடன் வகலிலிட்டு சீலைசெய்து சிறப்புடனே குழிதோண்டி மணலைகொட்டி
பறுகமுடன் நடுமத்தி வகலைவைத்து பாங்குடனே மேலுமந்த மணலைக்கொட்டே
2116.
கொட்டவே தீமூட்டி புடத்தைப்போடு பொலிவாக எருவதுதான் முப்பதாகும்
சட்டமுடன் தீயாறி எடுத்துப்பாரு சாங்கமுடன் களங்குபோலிருக்கும்பாரு
கட்டமுட னிப்படியே பழச்சார்விட்டுக் கதுமையுடன் தானரைப்பாய் நாலுசாமம்
வட்டமுடன் முன்சொன்ன மார்க்கம்பாரு வகையுடனே யப்படியே பத்துபுடம்போடே

2117.
பத்தான புடமதுவும் தீர்ந்தபின்பு பாகமுடன் கெந்தியது களஞ்சிரண்டு
புத்தான ரசஞ்சேர்ந்த தாம்பரத்தில் பூட்டியே தானரைப்பாய் பழச்சாற்றாலே
முத்தமுடன் தானரைப்பாய் நாலுசாமம் முக்கியபாய் பில்லைதட்டி காயவைத்து
சித்தமுடன் ரவிதனிலே காயவைத்து சீர்பெறவே ஓட்டிலிட்டு சில்லுமூடே
2118.
மூடவே வெளிப்புடமாய் போடுமைந்தா முகிழவே வாட்டியது பத்ததாகும்
சாடவே தீமூட்டி புடத்தைப்போடு காற்றில்லா விடந்தனிலே போடவேண்டும்
காடவே தீயாறி எடுத்துமைந்தா சாங்கமுடன் பின்னுமந்த பாகம்போல
கூடவே கெந்திவைத்தான் களஞ்சிரண்டு கூசாமல்தான் போட்டு அரைத்திடாயே
2119.
அரைக்கையிலே பழச்சாற்றாலரைக்கவேண்டும் அப்பனே நாற்சாமமரைக்க வேண்டும்
குறையாமல் முன்போலப் புடத்தைப்போடு குடிலமுடன் புடமதுவும் வன்பதாகும்
நிறையான நிறமதுவும் அங்கிருந்தால் நினைவாக வின்னமொரு ஒன்பதப்பா
கறைக்காணப் பாகமது பிசகிடாமல் கண்டிதமாய்ப் புடம்போடச் சிவக்குந்தானே
2120.
தானான செந்தூரம் பதனம்பண்ணு தகமைபெற வெள்ளிதனில் பத்துக்கொன்று
கோனான குருவருளால் வணங்கியேதான் கொற்றவனே தானுருக்கி குருவொன்றீய
தேனான கருபோல யிருக்கும்பாரு செம்மையாம் வோட்டிலிட்டு வூதிப்போடு
பானான மாற்றதுவும் எட்டதாகும் பான்மையுடன் பாடிவைத்தேன் போகர்தாமே
2121.
போகருட வாக்கதுவும் பொய்யாதப்பா பூதலத்தில் வாதிகளோ காணப்போறார்
சாகமுடன் மருந்து வியாதிபோக சாங்கமுடன் சதாரூப வியாதிக்கெல்லாம்
பாகமுடன் அனுபானம் கொண்டபோது பறக்குமடா வியாதியெல்லாம் பண்பாய்த்தானும்
வாகமுடன் தேகமது கற்றூணாகும் வல்லலுட மிறுகியது மேனியாமே
2122.
மேனியாம் காந்தியது மிகவே மின்னும் மிக்கான நரைதிரையு மற்றுப்போகும்
கானிமையாய் கண்ணிரண்டும் குளிர்ந்துகாணும் கடுங்காளைக்கொப்பானசூரனாவாய்
பானிமையாம் பருவமது சதாகாலந்தான் பாலிக்கு மெப்போதும் ஆயுளுண்டாம்
கானிமையாய் காலாங்கி ஐயர்பாதம் நண்ணியே சாற்றலுற்றேன் நவிலக்கேளே
2123.
கேளேதான் யோகமுறை நடத்தவேண்டும் கெடியான ஸ்தூலத்தை நிறுத்தவேண்டும்
வீனேதான் போகாமல் வாசிபாரு வீண்காலம் போனாலே யோகம்பாழாம்
தானேதான் சிதாபாசம் நண்ணவேண்டும் சதாகாலம் சிற்பரத்தைப் பற்றவேண்டும்
ஆனேதான் மனோன்மணியைப் பணியவேண்டும் ஆத்தாலைப் பூசித்தால் வாழலாமே
2124.
வாழலாமின்னமொரு கருமானங்கேள் வகையுடனே நாதாக்கள் கைமறைப்பு
நீழலா மெத்தவுண்டு நேர்மைபாரு நிலையான வாதவித்தை சூதுமல்ல
வாழலாம் வெகுகோடி சித்தர்வேதை மாண்பரோ ஒருபோதுளவு சொல்வார்
தாழலாம் பலநூலு பார்த்திட்டாலும் தாரணியில் யெனைப்போல பகராரன்றே

2125.
அன்றான சாஸ்திரங்கள் யானும்பார்த்தேன் அடிமைப்போல் சொன்னவர்களாருமில்லை
குன்றான பர்வதம்போல் பாடிவைத்தார் கோடான கோடிநூல் அனேகமுண்டு
தான்றான நூலெல்லாம் மறைப்பேயாகும் தகைமையுடன் காண்பதுவும் எளிதேயாகும்
பன்றான மாணிடர்கள் சுட்டுக்கெட்டு பாரிலே மாண்டவர்கள் கோடிதாமே
2126.
கோடியாம் தாம்பரத்தின் துட்டேயப்பா கோளாறுவாராமல் சுத்தித்தேதான்
வாடியே திரியாதே மகிபாகேளு வணக்கமுடன் தாம்பரந்தான் சேர்தாநாலு
கூடியே தாளகமும் சேர்தானெட்டு குணமுடனே பொடியாக்கி செப்பக்கேளு
நாடியே தளவாயாஞ் சட்டிதனில் நாதாக்கள் சொன்னபடி நாட்டிடாயே
2127.
நாட்டவென்றால் சட்டியிலே தாரம்பாதி நலமுடனே கீழ்போட்டு நவிலக்கேளு
வாட்டமுடன் துட்டுநடுமையம்வைத்து வகையுடனே மேலுமந்தப்பொடியைப்போட்டு
தேட்டமுடன் மேற்பட்டகொண்டுமூடி தெளிவுடனே சீலையது வலுவாய்ச்செய்து
காட்டமென்ற வாலுகையில் அடுப்பிலேற்றி கணமுடனே யெண்சாமமெரித்திடாயே
2128.
எரிக்கையிலே துட்டதுதான் கடங்கமாகி யெழிலான வெட்டையதுபோலாகும்பாரு
நெருக்கமுடன் களங்குதனை யெடுத்துக்கொண்டு நெடிதான களங்குக்கு நேரேசூதம்
பருக்கமுடன் தான்சேர்த்துப் பகரக்கேளும் பாகம்போல் பழச்சாறு விட்டுமைந்தா
செருக்கமுடன் குழியம்மிதன்னிலிட்டு சிதறாமல் தானரைப்பாய் சாமமெட்டே
2129.
எட்டான சாமமது யரைக்கும்போது யெழிலான வெட்டைபோலாகும்பாரு
கட்டான தாம்பரத்தை பில்லைதட்டி கருவாக ரவிதனிலே காயவைத்து
துட்டான தாம்பரத்தின் பில்லைதன்னைத் துறையுடனே வகல்தனிலே யிட்டுமைந்தா
சட்டமுடன் குழிதனிலே மணலைக்கொட்டி சாங்கமுடன் குழிநடுவில் பில்லைவையே
2130.
வைக்கவே மேலுமந்த மணலைக்கொட்டி வளமாகத் தீமூட்டி புடத்தைப்போடு
மெய்க்கவே கோழியென்ற புடத்தைப்போடு மேன்மைபெறத் தானெடுத்துப் பின்னுங்கேளு
சைக்கவே பத்துமுறை யிப்படியேபோடு சார்பாகச் செந்தூரங் கறுப்புகாணும்
மொய்க்கவே செந்தூரமெடுத்துக்கொண்டு மொழிபெறவே தாரமது களஞ்சிரண்டே
2131.
ரண்டான தாரமுடன் களங்குசேர்த்து நெடிதான பழச்சாறுயிட்டுமைந்தா
திண்டான நாற்சாம மரைத்தபோது திறமான மயினம்போலாகும்பாரு
உண்டான பில்லையது லகுவாச்செய்து வுத்தமனே ரவிதனிலே காயவைத்து
கண்டான வகலிலிட்டுச் சீலைசெய்து கனமுடனே பத்தெருவிற் புடத்தைப்போடு
2132.
போடவே செந்தூர மேகவர்ணம் பொங்கமுடன் தானெடுத்துப் பார்க்கும்போது
நீடவே செந்தூரந் தானெடுத்து நீட்சியுடன் பின்னுமரிதாரங்கூட்டு
கூடவேதான் போட்டுப்பொடித்துமைந்தா குணமுடனே தானரைப்பாய் பழச்சாற்றாலே
வாடவே தானரைத்து பில்லைதட்டி வளமுடனே ரவிதனிலே காயப்போடே

2133.
காய்ந்தபின்பு மருந்ததனைப் புடமேபோடு கருமாக யிப்படியே வைந்துபத்து போடு
சாய்ந்ததொரு கைபாகம் செய்பாகந்தான் தட்டாமல் போட்டுமரச் சிவப்புகாணும்
மாந்ததொரு தாம்பரந்தான் சிவக்காவிட்டால் மறவாமல் பின்னுமஞ்சி பத்தேபோடு
தேய்ந்துமே செந்தூரமென்ன சொல்வேன் தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கே
2134.
யோகமென்றால் பாகமெதை மறவாமற்றான் யொளிவாகப் புடந்தோறும்தாரம்காலாம்
பாகமுடன் களஞ்சிரண்டு போட்டரைத்துக் கருவாகப் புடம்போடச் செந்தூரிக்கும்
சாகமுடன் செந்தூரமென்னசொல்வேன் சட்டமுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
தேகமுடன் தானுருக்கி குருவொன்றீய வீரான செந்தூரம் வேதையாமே
2135.
வேதையாம் மார்க்கமது எட்டும்பாரு வேகமுடன் செந்தூரம் தேனிலுண்ண
பாதையாம் சூரணங்கள் லேகியங்கள் பலமான கிரதங்கள் வெண்ணைதன்னில்
தாதையாம் தானருந்த வியாதிரூபம் சண்ணுமே தாம்பரத்தின் செந்தூரத்தில்
பேதையாம் தேகமது கற்றூணாகும் பொங்கமுடன் இம்மருந்து குருவுமாமே
2136.
குருவான மருந்ததனை பதனம்பண்ணு குவலயத்தில் குஷ்டமுதல் ரோகிக்கப்பா
திருவான மருந்ததனை தின்றுவப்பா திறமுடனே மண்டலந்தான் கொண்டபோது
பருவான தேகமடா கற்றூணாகி பாரினிலே வெகுகோடி காலம்வாழ்வாய்
தருவான காலரிஷி சித்தன்போல தாரிணியில் நீயுமொரு சித்தனாமே
2137.
சித்தான சித்தர்முனி செய்யும்வேதை தேசத்திலாரேனுஞ் செய்யமாட்டார்
பத்தியுடன் காலாங்கி நாயர்பாதம் பட்சம்வைத்து வடியேனும் உங்களுக்காக
முத்திபெற யடிவணங்கி சாமிதன்னை முடிவணங்கி இந்நூலை வெளியிலிட்டேன்
புத்திவானாயிருந்தால் யெல்லாஞ்சித்தி பூதலத்தில் முழுமக்கள் அறியார்தாமே
2138.
தாமான சாத்திரங்கள் மிகவுஞ்சொல்லி தாரணியில் பித்தனைப்போல் பினத்திக்கொண்டு
பேமானியாகவல்லோ திரிந்துகொண்டு பேரான சாத்திரங்கள் பொய்யுமாக்கி
சாமானியவான்போல வாதுபேசி சதாகாலம் யோனியிடவாசையாலே
சாமானியசைதன்னிய வாசையாலே கடைகெட்டு இடைகெட்டு கலங்கினாரே
2139.
கலங்கியே பேடிபோல் நாமங்கொண்டு கதிதனக்கு யிடையூறு செய்துகொண்டு
மலங்கியே துப்புரவாய் எல்லாந்தோற்று மானிலத்தில் மதிப்பற்று மானங்கெட்டு
தவங்கெட்டு பதிகெட்டு பலமுங்கெட்டு தாறுமாறாகவே கஞ்சாகொண்டு
புலம்பியே மதுபாணம் மிகுதியாகி பூதலத்தில் கெட்டலைந்தார் கோடிதாமே
2140.
கோடியாமிருந்தவரை யானுமப்பா பூதலத்தில் குளிகைகொண்டு பறக்கும்போது
வாடியே யிருந்தவரை கண்டேன்கோடி வாய்பிறப்பைக் கண்டறிந்தேன் லக்கோயில்லை
நாடியே காலாங்கிநாயர்பாதம் நான்தொழுது பாடிவிட்டேன் மறைப்பையெல்லாம்
தேடியே யலையாமல் மாணாகேளு தேசத்தில் சித்தனைபோல் வாழ்குவாயே

2141.
வாழ்கவே நாகமது சேரைவாங்கி நலம்பெறவே இலுப்பைநெய்யில் சுத்திசெய்து
மூழ்கவே கண்ணாடி கல்லினாலே முயலவே தானரைத்துக்கங்கிபூட்டி
தாழ்கவே கோழியென்ற புடந்தானப்பா தப்பாது மூசைக்குள் நாகம்வைத்து
ஏழ்கவே பொடிதனையே தூவிமைந்தா யெழிலாக வுருக்குபோல் சீலைசெய்யே
2142.
செய்யவே சீலையது காய்ந்தபின்பு செப்பினேன் கோழியென்ற புடம்தானப்பா
பையவே போட்டபின்பு எடுத்துப்பாரு பாங்கான நாகமது மஞ்சளேறி
மெய்யவே கண்ணதுவும் மிகவொடுங்கி மிக்கான நாகமது வெளுமையாகும்
மிய்யவே இப்படியே பத்துமுறைபோடு பேறானவெள்ளியது பேசலாமே
2143.
பேசலாம் சுக்கானின் கல்லையப்பா பெருமையுடன் சேரதுவும் தானெடுத்து
நாசமுள நாலுவகை செயநீர்தன்னால் நலம்பெறவே தானரைப்பாய் நாலுசாமம்
பாசமுடன் பில்லைதட்டி காயவைத்து பாகமுடன் வோட்டிலிட்டு சீலைசெய்து
நேசமுடன் ரவிதனிலே காயவைத்து நிதமுடனே கெஜபுடத்தில் போட்டிடாயே
2144.
போடவே பற்பமது என்னசொல்வேன் பொலிவான தவளமது நிறம்போலாகும்
கூடவே நாகத்துக் கங்கிபூட்டி குமுறவே மூசையில் கீழ்மேலிட்டு
வேடவே குழிவெட்டி புடத்தைப்போடு தெளிவாகும் நாகமது தெளிமையாகும்
நாடவே பத்துமுறை இப்படியேபோடு நலமான துய்யானுக் கொப்பதாமே
2145.
ஒப்பான வெள்ளியது பத்துக்கொன்று ஓங்குபெற சுயவெள்ளி கூட்டியாடு
செப்பான பாத்திரங்கள் இதற்கீடல்ல சேனவித வாபரணமிதனாலாகும்
உப்பான காய்ப்புக்கு வெளுமைகாட்டும் ஓகோகோநாதாக்கள் அதீதவித்தை
மெய்யான சாஸ்திரங்கள் உளவுபார்த்து மேன்மையுடன் பாடிவைத்தேன் பண்பாய்த்தானே
2146.
தானான சாத்திரத்தில் அனேகம்பேர்கள் சட்டமுடன் பாடிவைத்தார் வேண்டுமாற்கம்
வேனான வெகுநூலில் வெள்ளிசொன்னார் வெளியாகச்சொல்லவில்லை இந்தபாகம்
பானான காலாங்கி தனைவணங்கி பாடினேன் சத்தகாண்டம் பண்பதாக
கோனான குருவருளால் அடியேன்தானும் குவலயத்தில் இரைத்துவிட்டேன் மாந்தர்க்காமே
2147.
ஆமேதான் இன்னமொருகருமானங்கேள் அப்பனே வெள்ளியென்ற காடிக்காரம்
தாமேதான் துலாமதுவும் ஒன்றேயாகும் சார்பான வேங்கையுட பாலாலாட்டி
வேமேதான் சாமமது வரைத்துமேதான் விருப்பமுடன் பில்லைதட்டிக் காயவைத்து
தாமேதான் சொன்னபடி வகலில்வைத்து வலம்பெறவே சீலையது வலுவாய்ப்பண்ணே
2148.
பண்ணியே கோழியென்ற புடத்தைப்போடு பாகமுடன் பற்பமது பகரப்போமோ
வண்ணமுடன் பற்பமதை வெள்ளீயத்தில் வாகாக கொடுத்திடவே நீரைவாங்கும்
திண்ணமுடன் பத்துக்கு ஒன்றுதாக்கு திறமான வெள்ளீயம் நீரைவாங்கு
வண்ணமுள்ள வெள்ளியது சொல்லப்போமோ வளமையுடன் நாதாக்கள் கூத்துதாமே

2149.
கூத்தான கைபாகம் செய்பாகந்தான் குவலயத்தில் கோடியுண்டு யார்தான்காண்பர்
மத்தான சாத்திரத்தில் மறைத்துவைத்தார் மார்க்கமுடன் அடியேனும் தாள்பணிந்து
வேத்தான காலாங்கிநாயர்பாதம் விருப்பமுடன் போற்றியல்லோ தொழுதேன்யானும்
நேர்த்தியுடன் பாடிவைத்தேன் போகர்யானும் நேர்மையுடன் மாணாக்கள் பிழைக்கத்தானே
2150.
தானான முன்வர்களில் சித்தரதாமும் தயவாகப்பாடிவைத்தார் வெகுநூலப்பா
கோனான கமலரிஷிகள்தானும் கொட்டினார் கோடிமுறை என்னைப்போல
தேனான சாத்திரத்தில் என்னைப்போல தெளிவாகச் சொல்லவில்லை யாருமப்பா
வானான யெந்நூலில் ஒன்றும் பொய்யா வளமையுடன் போகரிஷிவன்மைபாரே
2151.
வண்மையாய் போகரிஷிமார்க்கம்பாரு வாகாகத் தன்னுடைய நூல்கள்யாவும்
உண்மையாம் சித்தருக்கும் ரிஷிகளுக்கும் ஒருபோதும் பொய்யாது மெய்யேயாகும்
தன்மையாய் பாடிவைத்தேன் சத்தகாண்டம் சதாகாலம் மானிடர்க்கு உறுதிநூலாம்
திண்மையாய் குருநூலாம் ஏழாயிரந்தான் திறமாக வாய்த்ததுவே சீனத்தார்க்கே
2152.
சீனமென்றால் தேசமது புதுமைமெத்த சிறப்பான நூல்களெல்லாம் அங்கேயுண்டு
வானமுடன் தானிருக்கும் அதிசயங்கள் வாகான பூலோகமர்மமெல்லாம்
ஞானமுடன் பாடிவைத்தார் கமலர்தாமும் மானிலத்தில் பாடிவைத்தோர்கோடாகோடி
தாளமது இருக்குமிடம் யாமும்கண்டோம் தராதலத்தில் எமைப்போலே காண்பாருண்டோ
2153.
உண்டான வெள்ளியது போக்குச்சொல்வேன் ஓகோகோ நாதாக்கள் பரிசவேதை
பண்டான வெள்வங்கம் சேர்தானொன்று பாளமென்ற சுக்கான் நல்லசுன்னம்போடு
திண்டான காடியென்ற சுண்ணம்போடு திறமாகத் தானுருக்கியெடுத்துப்பாரு
வண்டான வெள்வங்கம்நீரைவாங்கி வாகான வெட்டையதுவாகும்பாரே
2154.
வெட்டையாம் சூதமது வொக்கச்சேர்த்து வெடியுப்புச் சுண்ணமது நாலாய்ச்சேர்த்து
சட்டமுடன் தானுருக்கி எடுத்துப்பாரு கசடற்ற துய்யானாம் வெள்ளியப்பா
மட்டமென்ற வெள்ளியது ஒக்கச்சேர்த்து மதிப்புடனே சரியெடையாய்ச் சேர்த்துப்பாரு
திட்டமுள்ள ரூபாய்க்கு சரியதாகும் திறமான வெள்ளியது போக்குத்தானே
2155.
போக்கென்று விடுகாதே புண்ணியாகேள் புகலுகிறேன் சூதமென்ற செந்தூரத்தை
தீயென்ற கெந்தகத்தின் தயிலமப்பா திறமான பாஷானதயிலங்கூட்டி
காயென்ற கருஞ்சூரைத் தயிலஞ்சேர்த்து கருவாகத்தானரைப்பாய் சேரைசூதம்
பேயென்ற சுரைக்காயின் தயிலத்தாலே பிசகாமல் தானரைப்பாய் தயிலமெட்டே
2156.
எட்டான சாமமது வரைத்தபோது என்மகனே சூதமது மடிந்துபோச்சு
கட்டான சூதமது மாண்டபோது காணலாம் கோடிவித்தை சூதத்தாலே
இட்டமுடன் சூதத்தை பில்லைதட்டி யெழிலான ரவிதனிலே காயவைத்து
மட்டான ஓட்டிலிட்டுச் சீலைசெய்து மார்க்கமுடன் புடம்போட சிவக்குந்தானே

2157.
சிவப்பான செந்தூரம்பதனம்பண்ணு சிவசிவாவெள்ளிதனில் பத்துக்கொன்று
நயப்புடனே தானுருக்கிக் கொடுத்துப்பாரு நலமான மாற்றதுவுமெட்டதாகும்
பயமுடனே பத்துக்கு ஒன்று தங்கம் பாகமுடன் தானுருக்கி வாரடித்து
புவமுடனே புடமதுவும் மூன்றுபோட புண்ணியனே மாற்றதுவும் பசுமையாமே
2158.
பசுமையாந் தங்கமது என்னசொல்வேன் பாரினிலே நாதாக்கள் செய்யும்வேதை
நிசமுடைய புண்ணியர்க்கு வாய்க்குமல்லால் நிஷ்டூரப்பாவிகட்கு வாய்க்குமோசொல்
வசுவான பசுபதியோகியோர்க்கு வாய்த்தாலே குருபூசைக் கொவ்வும்வேதை
சிசுபாலர்க்கொப்பான சிவயோகிக்கு சிறப்புடனே வாய்க்குமிது திண்ணந்தானே
2159.
தானான திரிகுளிகை சொல்லக்கேளு சாற்றுகிறேன் ரசமுடனேதாரங்கெந்தி
கோனான குருபரன்தன் அருளினாலே கூறுவேன் ஆறுவகைசெயநீர்தன்னால்
வேனான நாற்சாமமரைத்தபோது மிக்கான செயநீரால் சூதம்மாண்டு
பானான சரக்கிரண்டு மொன்றாய்க்கூடி பததுடனே மெழுகதுபோலாகும்பாரே
2160.
பாரேதான் மெழுகதனை வட்டுதட்டி பாகமுடன் ரவிதனிலே காயவைத்து
சீரேதான் ஓட்டகலில் வைத்துமூடி சிறப்புடனே சில்லிட்டுச் சீலைசெய்து
நேரேதான் மணல்மறைவில் புடத்தைப்போடு நேர்ப்பாக வாறினபின்னெடுத்துப்பாரு
கூரேதான் செந்தூரமென்ன சொல்வேன் கொடியதோர் மேகவண்ணமாகுந்தானே
2161.
வன்னமாஞ் செந்தூரமிப்படியே பத்துவளமுடனே போட்டுவர விபரங்கேளு
சுன்னமென்ற கடுங்கார மிகவுமாகி சுடரொளியாங் காந்தியது மெத்தப்பற்றி
வின்னமில்லா கரடுகளுமில்லா மற்றான் மிக்கான பூப்போல வுதிருங்கண்டீர்
சொன்னபடி யின்னுமந்த செந்தூரத்தைச் சுகமுடனே தானரைத்துத் தங்கங்கூட்டே
2162.
கூட்டையிலே பத்துக்கு ஒன்றுதங்கம் குணமாகத்தான்சேர்த்து வரைத்துமைந்தா
வாட்டமுடன் ஆறுவகைசெயநீர்தன்னால் வளமாகத் தானரைப்பாய் நாலுசாமம்
நீட்டமுடன் ரவிதனிலே காயவைத்து நினைவாகப் பின்னுமதைப் பொடியதாக்கி
தேட்டமுடன் காசிபென்ற குப்பிதன்னைத் தெளிவாகச் சீலையது வலுவாய்ச்செய்யே
2163.
செய்யவே குப்பியது காய்ந்தபின்பு திறமுடனே சரக்கெல்லாம் குப்பிக்கேற்றி
பையவே மாக்கல்லால் கொண்டுமூடி பாங்குபெற சீலையது வலுவாய்ச்செய்து
மெய்யுடனே தளவரையாஞ்சட்டிதன்னில் மேன்மையுடன் மணலதனைக்கொட்டிமைந்தா
உய்யவே குப்பிநடுமையம் வைத்து உத்தமனே மேலுமந்த மணலைக்கொட்டே
2164.
கொட்டையிலே குப்பிவாய்த் தெரியமூடி குடிலமுடன் மேற்சட்டி கவிழ்த்துமைந்தா
திட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து திறமுடனே வாலுகையாம் அடுப்பிலேற்றி
சட்டமுடன் தானெரிப்பாய் எட்டுசாமம் சார்பாக வாறினபின்னெடுத்துப்பாரு
வெட்டவெளிக் காறாடாவிடத்திலப்பா விருப்பமுடன் குப்பியைநீ வைத்துப்போற்றே

2165.
போற்றவே மூன்றுநாளானபின்பு பொங்கமுடன் குப்பியை திறந்துபார்க்க
ஏற்றமுள்ள செந்தூரம் மிகவும்பார்த்து யென்மகனே காந்தியது புகலப்போமோ
தேற்றமுடன் சீஷாவிற்பதனம்பண்ணு திறமுடைய செந்தூர மனுபானந்தான்
கூற்றனுக் கிடையின்றி தேனிலுண்ணக் குடிலம்விட்டேகுமடா திண்ணந்தானே
2166.
திண்ணமாம் வெண்ணைதனில் கொள்ளலாகும் திறமான நெய்யிலும்கொள்ளலாகும்
வண்ணமுள்ள சூரத்தில் கொள்ளலாகும் வாகான லேகியத்தில் கொள்ளலாகும்
எண்ணமுடன் எய்தவனுபானத்தாலும் எழிலுடனே மண்டலங்கள் கொள்ளலாகும்
உண்ணயிலே சகலரூப வியாதியெல்லாம் வுத்தமனே தேகம்விட்டுச் சுண்ணுந்தானே
2167.
சுண்ணுமே மேகமென்ற ராஜனுக்கு சத்துருவா மிம்மருந்து சாற்றக்கேளு
குண்ணிவிடும் சிலவிஷயங்கள் யாவனைத்துங் குவலயத்தில் நிற்காது பறந்தேயோடும்
திண்ணமுடன் செந்தூரப்போக்கு சொல்வேன் திறமுடைய மக்களாயிருப்பாயானால்
நண்ணமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று நலமுடனே கொடுத்துருக்க
மாற்றெட்டாமே
2168.
மாற்றான வெள்ளிசெம்பை யூதிப்போடு மகத்தான வெள்ளியது மாற்றுமாகி
தேற்றான பசைமையது யதிகங்கொண்டு தெளிவுடனே மாற்றதுவு மெட்டதாகும்
சாற்றவே சிவயோகி செய்யும்வேதை தாரணியிலாரேனுஞ் செய்யமாட்டார்
போற்றவே புத்தியுள்ளானாவானாகில் பொங்கமுடன் செய்துகொள்வான் வாதியாமே
2169.
வாதியாய்ச் சகலவிதவண்மையெல்லாம் வாகுடனே கண்டறிந்து வளமாய்ச்சொல்வேன்
சாதியிலே யொருவனப்பா சன்மார்க்கன்தான் தாரிணியில் தானிருப்பான் ஒருவர்காணார்
மாதிமையாம் துஷ்டருடன் கூடமாட்டான் மானிலத்திலடக்கமுற்று வாழ்வானப்பா
சோதிமயங்காணுவான் சுந்தரன்தான் சூட்சாதிமர்மத்தை வெளிவிடானே
2170.
விட்டானே யாமானால் தலைதெறிக்கும் வேதாந்தத் தாயவளுமுன்னே நிற்காள்
தொட்டதொருவேலையெல்லாம் துகளாப்போகும் தொடருமே வினைதானும்
துரத்திக்கொள்ளும்
விட்டகுறைநேருமானால் தாமேயெய்தும் விண்ணுலகில் நாதாக்கள் செய்யும்வேதை
தட்டியஏ பராபரியைத்தொழுதுபோற்றி தராதலத்தில் சித்தனாய்ப் பிறப்பாய்த்தானே
2171.
தானான நிஷ்டையிலே யிருந்துகொண்டு சதாநிஷ்டை ருத்திரநிஷ்டை மாலிநிஷ்டை
கோனான மஹேஸ்பரியின்நிஷ்டை தானும் குறிப்பான பிர்மநிஷ்டைதானோடொக்க
வேனாகயிருந்துகொண்டு சதாகாலந்தான் விருப்பமுடன் ரேசகபூரகமுஞ்செய்து
மானாக்கும் பகத்திலிருந்துகொண்டு மார்க்கமுடன் மூலமதையழுத்திப்பாரே
2172.
அழுத்தியே கமலமதிலிருந்துகொண்டு அப்பனே பிரம்மத்தைக்காணலாகும்
வழுத்தவே குண்டலியில் மூலந்தாக்கி வாகுடனே பிரம்மத்தை நிஷ்டைகொள்ளு
தொழுகமாலினுட நிஷ்டையப்பா தோறாமல் வஷ்டாங்கம் செய்துகொண்டு
விழுகவே கும்பகத்தில் வாசிபூட்டி விஷ்ணுவை சதாகாலம் காணலாச்சே

2173.
காணவென்றால் வஷ்டருத்தஇரத்தைக்கேளு கருவான பூரகத்தைக் கும்பகத்தில்மாட்டி
தோணவே வனாகதத்தில் வாசிபூட்டி தொழுதுமே ருத்திரரை கண்டுபூசி
வீணவே சகலபாக்யமும்பெற்று விண்ணிலே வலதுகாலை தூக்கிமைந்தா
கோணவே பாதத்தை நிலத்தில்தாக்கி குப்புரவாய்க் கீழேநோக்கி
மாணவே விசுத்தியிலே இருந்துகொண்டு மாணிலத்தில் மகிபலைவாழலாமே
2174.
வாழலாம் மஹேஸ்பரணார் பாதங்கண்டு வகுப்புடனே நிஷ்டைவந்து மதிறமாய்த்தொட்டு
வீழலாம் சதாசிவத்தின் நிஷ்டைதன்னை விருப்பமுடன் கண்டறிந்து விழல்போகாமல்
தாழவே யோகதண்டைக் கையிலேந்தி தளமுடனே விபூதிதன்னைத் தளமாய்ப்பூசி
மாழவே சதாசிவத்தைப் பணிந்துபோற்றி மயங்காமல் மனோன்மணியைத் தொழுதுநில்லே
2175.
நிற்கையிலே மனோன்மணியாள் அமுர்தமீவாள் நிகறானவமுர்தமது கொண்டபோது
துற்கையுடன் காளிமுதல் நடுங்குவார்கள் துடியான தேகமது கற்றூணாகும்
சற்பனைகள் மிகடனே வதிகமாகி சதாகாலம் பூரணத்தில் லகித்துநின்று
உற்பனமாம் மதியமுர்த லேகியத்தை வுண்டுமல்லோ சதாநிஷ்டைப் பணிகுவாயே
2176.
பணியவே மதியமுர்தம் சாற்றக்கேளு கெஞ்சாவின் விரைநாற்சேரு
கணிதமுடன் சாதிக்காய் சாதிபத்திரி கருவான கிராம்புடனே டவாட்டிமொக்கு
தணியவே வபினியுடன் கசகசாவும் சாங்கமுடன் வகைக்கு வாருசேர்தான்பாதி
மணிபோலதான் வறுத்துச்சூரணித்து மயங்காமல் தான்செய்யும் வகையைக்கேளே
2177.
கேட்கவே சர்க்கரையாய்ப் பாகுதன்னில் கெணிதமுடன் சூரணத்தைக்கொட்டிக்கிண்டி
தாட்டிகமாய் நெய்தேனும் விட்டுக்கிண்டி சார்பாகக் கிளறியல்லோ குளிகைபண்ணி
வாட்டமுடன் அந்திசந்தி தானருந்தி வளமுடனே தீபவொளி கண்ணிற்றோன்றும்
நாட்டமுடன் சித்தர்முனி ரிஷிகள்தாமும் நானிலத்தில் போகுவதுந் தெரியுமாமே
2178.
தெரியுமாம் கேசரத்தில் போகுமார்க்கம் தேசத்தில் வினோதவகை யாவுந்தோன்றும்
அரியுடனே சிவன்முதலுங்காணலாகும் ஆகாயவதிசயங்களெல்லாந்தோன்றும்
பரியொளிபோல் கைலங்கிரிதன்னில் காணும் பாருலகில் நீயுமொரு சித்தனாவாய்
சரியுடனே காலாங்கிநாதர்பாதம் பணிந்துமே போகரிஷி பாடினேனே
2179.
பாடினேன் சத்தகாண்ட மேழாயிரந்தான் பாரிலுள்ள மானிடர்க்குப் பண்பாகத்
தேடியே கிட்டாது மிகவாராய்ந்து தெளிவுடனே பாடிவைத்தேன் குருநூலாக
கூடியே நல்லோரிடமுஞ் சார்ந்து குவலயத்திலெப்போதும் இருந்துவாழ்வாய்
வாடியே யலையாதே வுண்மைகண்டு வளமுடனே யெந்நூலை வணங்கிபோற்றே
2180.
போற்றவே கற்பமொன்று புகலக்கேளு பொலிவான வல்லாரையார்காண்பார்
ஆற்றவே வல்லாரைக்கற்பந்தானும் அவனிலே வுண்டவர்கள் மெத்தவுண்டு
நீற்றமுடன் கைபாகம் செய்பாகந்தான் நீனிலத்தில் கண்டவரும் யாருமில்லை
மாற்றமுடன் குருவருள்கள் பெறவேவேண்டும் பெறாவிட்டால் பூவில்லை காயில்லைதாமே

2181.
தரமான பூரமது ஒன்றேயாகும் தாக்கான வெல்லமது ரண்டேயாகும்
காமான எருக்கன்பால் தன்னாலாட்டி கரிவாகமைபோல யாட்டிமைந்தா
வேமான கற்புடைய மாதுக்கீய வெளியாகும் ஐந்துமாத கற்பந்தானும்
சாமான மின்றி வல்லாரைதன்னில் சட்டமுட னிக்கருவைப் போட்டிடாயே
2182.
போடவே கல்வமதில் இட்டுமைந்தா பொங்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நீடவே தானரைத்து வானபின்பு நினைவாகப் பரணிதனிலடைத்துக்கொண்டு
கூடவே குழிவெட்டி பூமிதன்னில் குடிலமுடன் தான்புதைத்து பின்புகேளு
ஆடவே மண்டலங்கள் சென்றுதானால் அப்பவல்லோ காயாதிகற்பமாச்சே
2183.
ஆச்சென்று விடுகாதே மைந்தாகேளு அப்பனே மதியமுர்தம் கொண்டாயானால்
மூச்சடங்கி தன்னிலையைக் காணலாகும் முயலான பூரணத்தை நன்னலாகும்
பேச்சென்ற சத்திசிவங் காணலாகும் பேரான சிவபூசை அறியலாகும்
பாச்சென்ற சத்திசிவங் காணலாகும் பராபரத்தின் சின்மயத்தின் பற்றநன்றே
2184.
நன்றான பேரொளியைக்காணலாகும் நாதாந்தத் திறவுகோல் காணலாகும்
குன்றான வேதாந்தக் கற்பமெல்லாம் கோடிக்குகோடிவரை காணலாகும்
தன்றான செங்கடுக்காய் சேர்தானப்பா தயவுடனே தானிடித்து சார்தானீக்க
வென்றான பாகமிது பத்துமுறைதானும் விரும்பியே தானிடித்து சூரணங்கள்செய்யே
2185.
செய்யவே சூரணத்தை எடுத்துமைந்தா தினம்போது காடியினாலரைத்துமேதான்
பையவே குன்றியிடை யுண்டுவந்தால் காலனுக்கிடமேது சாவுமேது
நொய்யவே தேகமது கற்றூணாகும் நோக்காடுவாராது நுணுக்கமெத்த
மெய்யவே காலாங்கிநாயர்பாதம் விருப்பமுடன் தான்பணிந்து விளம்பிட்டேனே
2186.
விளம்பிட்டேன் கைபாகம் செய்பாகம்தான் வித்தியாசங்களது மிகவாராமல்
குளம்பிட்ட நூல்களெல்லா மிகவாராய்ந்து குறிப்புடனே கண்டறிந்த கலையுமாகும்
தளம்பிட்ட சதாநூலும் பார்த்தாலென்ன சாங்கமுடன் காணுபவன் யோகவானாம்
அளம்பிட்ட இதிகாச வித்தையெல்லாம் அறிபவனே லோகத்தில் சித்தனாச்சே
2187.
சித்தனாய்ப் பிறந்தாலும் கீர்த்தியுண்டு தேசத்தில் வெகுபேர்கள் மெச்சுமாண்பன்
பத்தனாய்ப் பிறந்தாலும் பதவியுண்டு பாருலகில் தனவானாய் வாழலாகும்
பித்தனாய்ப் பிறந்தாலும் ஒன்றுங்காணான் பேசறிய மாட்டாத புலவனாவான்
எத்தனைதான் கற்றாலும் என்னலாபம் நீடூழி சமாதியிலே இருக்கநன்றே
2188.
நன்றான யின்னமொரு மார்க்கம்பாரு நலமான கரிவங்கம் சேர்தானப்பா
பன்றான தகடாக்கி செப்பக்கேளு பாங்கான ஆவாரை பஞ்சாங்கந்தான்
குன்றான சரக்கதுவைக் குடுவைக்குள்ளே குணமுடனே தான்போட்டு தகடைவைத்து
அன்றான பொடிமேலே தகடைவைத்து அப்பனே வதின்மேலே பொடியைப்போடே

2189.
போடையிலே கீழ்மேலும் பொடியைப்போட்டுப் புகழாகத்தான்போட்டுச் சீலைசெய்து
நீடவே கெஜமான குழியைவெட்டி நினைவாகப்புடம்போடக் கரிவங்கந்தான்
கூடாதே வெந்ததுவும் கரடுமாகி குடிலமுடன் பற்பமது சோளம்போலாம்
பாடவே யிப்படியே பத்துபுடம்போடு பாங்கான பற்பமது தவளமாச்சே
2190.
ஆச்சப்பா பற்பத்தை எடுத்துக்கொண்டு அப்பனே பொரித்தண்டம் சிற்றண்டந்தான்
நீச்சப்பா சரியாக எடுத்துக்கொண்டு நினைவாக வெண்கருவால் தன்னாலாட்டி
மாச்சலன்றி சிறுபில்லையாகதட்டி மதிப்புடனே ரவிதனிலே காயவைத்து
தீய்ச்சலென்ற கயுவோட்டிலிட்டுமைந்தா திறமுடனே கோழியென்ற புடத்தைப்போடே
2191.
போடவே பற்பமது காரமேறிப் புகழான வெண்மைநிறம் புகலப்போமோ
கூடவே பத்துமுறை இப்படியேபோடு குணமான பற்பமது கூறப்போமோ
நீடவே பற்பத்தை அனுபானத்தில் நேர்மையுடன் தானருந்த மேகமெல்லாம்
ஓடவே கடல்போகுமென்று சொல்லுவுத்தமனே போகரிஷிபுகன்றவாறே
2192.
வாறான கயரோகம் சயரோகங்கள் வாகுடனே கிரந்திமுதல் காணாதோடும்
கூறான பாண்டுடனே வீக்கம்போகும் பொல்லாத சயரோகம் காணாமல்போகும்
நேறான பவுத்திரங்கள் முளைமூலங்கள் நெடிதான கிரந்திமுதல் சண்ணலாகும்
சேறான வெள்ளையொடு சிலவிஷங்கள் சீறியேபோடுமடாதிண்ணந்தானே
2193.
திண்ணமா மின்னமொரு பாகங்கேளு தெளிவாக கல்லுப்பு படிதானொன்று
வண்ணமுடன் புளியாரை சாற்றினாலே வளமையுடன் தானரைப்பாய் நாலுசாமம்
கண்ணமுடன் பில்லைதட்டிக் காயவைத்து கருத்துடனே ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
நண்ணமுடன் பத்தெருவில் புடத்தைப்போடு நாதாந்தத் தாயெனக்கு சொன்னவாறே
2194.
சொன்னபடி யப்படியஏயரைத்துமைந்தா சுத்தமுடன் ரவியிலிட்டுக் காயவைத்து
நன்னயமாய் சீலைசெய்து புடத்தைப்போடு நலம்பெறவே வைந்துபத்து விப்படியே போடு
முன்னுரைத்த பாகமது பிசகிடாமல் முனையான வுப்பதுவும் சிவக்குமட்டும்
பன்னவே புடம்போடச் செந்தூரிக்கும் பாலகனே செந்தூரம் பதனம்பண்ணே
2195.
பண்ணியே சரக்கொன்றைப் பூவினாலே பாங்குடனே கெந்தகத்தை யரைத்துமேதான்
நண்ணமுடன் தானரைப்பாய் நாலுசாமம் நலமுடனே வுண்டையது புன்னைக்காய்ப்போம்
தண்ணமுடன் தோண்டியிட்டு துவாரமிட்டு சட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து
எண்ணியே நூறெருவில் குழித்தயிலமப்பா யெழிலாக வாங்கிடவே எண்ணையாமே
2196.
அமேதான் தயிலமதை செப்பக்கேளு அப்பனே மேற்சொன்ன வுப்பைமைந்தா
தாமேதான் மட்டமென்ற பொன்னுமேலே தகைமைபெற வாரடித்துப்பூசுபூசு
வேமேதான் செந்தூரத் தயிலத்தாட்டி விருப்பமுடன் பூசியல்லோ புடத்தைப்போடு
நாமேதான் சொன்னபடி மாற்றுகாணும் நாதாக்கள் செய்கின்ற வேதையாமே

2197.
வேதையிலே யின்னமொரு பாகங்கேளு மேன்மைபெற லிங்கமது கட்டிவாங்கி
போதையிலே நாகமொருகட்டிவாங்கி பொலிவாக நாகத்தை சுத்திசெய்து
பாதையிலே சூதமிடை நாகஞ்சேரு பாங்கான நாகமிடை வீரஞ்சேர்த்து
ஊதையிலே தானுருக்கி யெடுத்துமைந்தா வுத்தமனே சாரமிட்டு அரைத்திடாயே
2198.
அரைக்கையிலே நாற்சாமம் செயநீராகும் அப்பனேவந்நீரை செப்பக்கேளு
முரையுடனே லிங்கமது சுறுக்குதாக்கு முனையான லிங்கமது கட்டிப்போகும்
திரையுடனே பாகமது பிசகாவண்ணம் செப்புகிறேன் நாகமது தகடதாக்கி
வரைபோல லிங்கத்தைவுமிநீராலே வளமுடனே யெழைப்பாய் மைந்தாகேளு
2199.
கேளேநீ லிங்கத்தை தகட்டிற்பூசு கிருபையுடனே வோலையளவாகப்பூசு
பாளேதான் போகாமல் ரவியிற்போடு பாலகனே வெள்ளியென்ற ரேக்கடித்து
தூளேதானாகாமல் தகட்டைவாங்கி துப்புறவாய் நாகத்தின் தகட்டின்மேல்கீழ்
சூளேதான் வைத்துமல்லோ சீலைசெய்து துப்புரவாய் வைந்தெருவில் புடத்தைப்போடே
2200.
போடவே நாகமது வர்ணமிஞ்சி போக்கான லிங்கத்தைக் கட்டிக்கொண்டு
கூடவே லிங்கமது ஓடாமற்றான் குமுறவே வெள்ளியென்ற ரேக்கின்மேலே
மூடவே வர்ணமது தணலாயேறி மோசமில்லை யாறுமாத்தாகும்பாரு
நாடவே ரேக்கதனை யெடுத்துமைந்தா நயமுடனே தானுருக்கி யெடுத்திடாயே

# போகரின் சப்த காண்டம் – 7000

2201.
எடுத்துமே வாரடித்துப் புடத்தைப்போடு எழிலாகப்புடமதுவும் முன்போலாகும்
தொடுத்துமே முன்போல புடத்தைப்போடு துப்புரவாம் புடமதுவும் அதிகமாகி
விடுத்துமே மாற்றதுவும் அதிகங்காட்டும் மிக்கான பொன்னதுவும் பசுமையாகி
அடுத்துமே நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து அப்பனே வாரடித்துப் புடத்தைப்போடே
2202.
புடமாறி யெடுத்துப்பார் பொன்னேதங்கம் புஷ்பம்போல் குங்குமது நிறமேயாகும்
திடமான தங்கமது பிறப்பேயாகும் தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கு
சடமழியாக் கற்பமதுவுண்டுகொண்டு சதாகாலம் நிஷ்டையிலே இருப்பாயப்பா
மடமானின் ஆசைதனைவிட்டொழித்து மகிழ்ச்சியுடன் எப்போதும் வாழலாமே
2203.
வாழலாம் சித்தர்முனி ரிஷிகள்மெச்ச வாகுடனே சீனபதிமாந்தர்க்கப்பா
நீழவே பூமிதனில் பரிகளில்லா நெடிதான ரதமதுதான் போவதற்கு
தாழவே சூஸ்திரங்கள் சொல்வேனப்பா கருவூரார் சித்தர்முனி கமலர்தாமும்
சாழவே யொருவருஞ் சொன்னதில்லை சாங்கமுடன் போகரிஷி சொன்னேன்பாரே
2204.
பாரேதான் ராஜாதிராஜர்மெச்ச பாரினிலே வஸ்வமில்லா வண்டியோட
நேரேதான் சக்கரமும் ஆதராகும் நெடிதான இரிசியது மூன்றதாகும்
கூரேதான் குருக்கவட்டம் எட்டதாகும் குறிப்புடனே வடிவட்டம் நாலதாகும்
தேரேதான் படிவட்ட மூட்டிக்கொண்டு திறமான மேல்வட்டம் பூட்டக்கேளே
2205.
பூட்டவே விரிசியது விட்டங்கொண்டு புகழான கல்லாணி இரும்புமாட்டி
மாட்டியதோர் இரும்பு குவலயமிட்டு மார்க்கமுடன் சுத்துபுரம் கம்பிமாட்டி
நீட்டமுடன் நாற்சதுர மத்திவட்டம் நெடியதொரு குழலொன்று முனையில் வைத்து
வாட்டமுடன் மத்தகஜம் தலையுண்டாக்கி வளமுடனே தலைகுழையில் சில்லுபோடே
2206.
சில்லுதனை எடுத்துமிகப் பூட்டிபார்க்கச் சிறக்காலே மறைகொண்டுதிருவல்பூட்டி
பல்லுடனே சக்கரத்தில் திருவுபூண்டு பக்கமிருபுறமுமட்டும் குழைகள்விட்டு
மல்லுடனே மல்லணிந்து குழைசிபோட்டு மல்லினது மேற்புரத்தில் குழைகள்நிற்க
தெல்லுபோல் தகடதனை வுருளைசெய்து தேர்வட்டம் போலாகத்தெரியபூட்டே
2207.
பூட்டுகையில் வில்லாணி கள்ளாணியப்பா புகழான நடுசட்டம் திருகுசட்டந்தானும்
தாட்டிகமாய் கயிர்போலத் திருகுகம்பிமாட்டி சட்டங்களில் மூன்றுவட்டபிறை போலுண்டாக்கி
நீட்டமுள்ள கெஜநூறு வண்டிரதம்போல நெடிதான சட்டமது வளவுடனேமாட்டு
காட்டவே வகலமது கெஜமுப்பதாகும் கருணையுடன் அங்குலங்கள் வரைதப்பாமாட்டே
2208.
தப்பாமல் மாட்டையிலே தேர்கொண்ட சூட்சம் தாரணியில்போகுதற்கு சட்டமுடன்கூட்டு
ஒப்பமுடன் காலில் ஒருபக்கமிகவாணி ஓங்குபுகழாணிலே திருவல்மாட்டி
செப்பமுட னடிவாரக்குழைதனிலே சில்லு சீராகத்தானமைத்துக் கழுத்துக்கட்டைமாட்டி
நெப்பமுடன் சிம்மாடுகட்டைதன்னில் மத்திநேராக திருவலது சொருவல்மிகப்பூணே

2209.
பூணவே நெடுங்கம்பி யாறுவகைச்சட்டம் பூட்டியதோர் கம்பிகளில் ஆறுவகைக்குறுக்கு
தேணவே மேற்புரமும் அடிப்புரமுமப்பா துப்புரவாம் நடுக்குழலில் இருபக்கமடைத்து
காணவே வாயுவென்ற காற்றதுவுமொடுங்கி கடையாணி சுழலாணி
சுள்ளாணி முடுக்கிமாணவே பின்பக்கம்சட்டிகுழல்வைத்து வதிப்புடனே கொப்பரைபோல்
உருளைசெய்யே
2210.
செய்யவே கொப்பறையில் வக்கினியும்நிற்க சோரவேவப்புவென்ற கொப்பறையின்பக்கம்
உய்யவே சகலமதுவும் ஆவியோடொக்க வுற்பனமாம் வாவியது மேற்நோக்கிப்பாய
எய்யவே கணையாதே நெருப்பதனைமாட்ட எழிலான வுள்ளாவிகொண்டு
பய்யவே சலமிருக்கும் இடந்தனிலே பரவிபறக்குமே முன்குழலில் பரவிமிகப்போமே
2211.
போகவே கைசுழலல் மறைதிருவலப்பா பொங்கமுடன் நீராவிதன்னில் மிகச்சார்ந்து
பாகமுட னக்கினியின் காற்றதுவுமொடுங்கி பறந்துமே பெருங்குழாதன்னில் மிகச்சார்ந்து
சாகமுடன் சூத்திரங்கள் கண்டுமிகத்திருப்ப கற்ச்சனையாமாவியுடன் பறந்துமிகவோடும்
தாகமெனும் பாணியினால் யாவிமுதலெல்லாம் தட்டொடுங்கி குழல்தனிலே
தவித்துமிகப்போமே
2212.
போமேதான் பஞ்சபூதமிதி லொடுக்கம்பாரு போக்கான வாயுதனில் தேயுமிகச்சார்ந்து
வேமேதான் தேயுவிலே வுப்புமிகக்கலந்து வேகமுடனவிதனை விளைவிக்கும்பாரு
தாமேதான் பிரிதிவிதனில் வாகாஷமொடுங்கி தாரிணியினுள்ளடக்க பெட்டிமிகவாச்சு
நாமேதான் சொன்னபடி பஞ்சகர்த்தாள் நாட்டினேன் தேவரதம் நாட்டினேனே
2213.
நாட்டினேன் நாதாக்கள் கண்டதில்லை நலமுடனே நூலாதிநூல்களெல்லாம்
வாட்டமுடன் கண்டறிந்து வுளவுபார்த்து வளமுடனே செய்துவைத்தேன் சீனந்தன்னில்
தாட்டிகமாய் சீனபதி மூன்றுகாதம் தாரணியில் சுத்திவந்து வினோதஞ்செய்தேன்
ஓட்டமுனி மையகிரி யோரஞ்சென்றேன் ஒகோகோக்கோ நாதாக்கள் ரிஷிகண்டேனே
2214.
கண்டேனே கோடிமுனி சித்தரப்பா கைலங்கிரி வாசரைப்போல் கோடாகோடி
தெண்டமுட னடியேனும் காலாங்கிதம்மை தெளிமையுனானினைத்து சித்தர்தம்மை
கொண்டபடி செனங்களெல்லாம் ஏத்திக்கொண்டு கோர்வையுடன் ஆயிரமாம்ரதங்கள்
மாட்டி
அண்டர்முனி ராட்சதர்கள் கிடுகிடுக்க அவனியெலாம் சுத்திவந்தேன் அன்பாய்த்தானே
2215.
தானான ரோமபுரி சுத்திவந்தேன் தாக்கான யெண்ணாயிரங் காதமப்பா
வேனான சித்தர்தனை ஏற்றிக்கொண்டு வேகமுடன் தானடத்தி வந்தேனப்பா
கோனான குருசாமி காலாங்கிநாதர் கொற்றவனாம் ரோமாபுரிராசர்தானும்
பானான சமாதியிட இடமுங்கண்டேன் பட்சமுடனவ்விடத்தி லிறங்கினேனே
2216.
இறங்கினேன் ராசரிட சமாதிகண்டேன் எழிலான ஏசுவிறன் சீஷர்கண்டேன்
சுறமுடன் இம்மான்வேல்சமாதிகண்டேன் சுத்தனாம் பரிசுத்தர் சமாதிகண்டேன்
வரங்கொடுக்கு மிசுரவேல் சமாதிகண்டேன் வளமுடனே ரோமபுரி தேசத்தார்கள்
திறமுடனே ரோமபுரி கோட்டைக்குள்ளே போகுவதும் வருவதுங்கண்டேன்தானே

2217.
கண்டேனே கோட்டைவழி சென்றபோது கடுங்காளை யாயிரம்பேர் சூரரப்பா
தெண்டமுடன் யேசுவின்தன் பாதம்போற்றி தெளிவுடனே ஞானவுபதேசம் சொல்வார்
பண்டிதங்கள் அதிவிசேஷமனைத்துமுண்டு பனிரண்டு சீஷவர்க்கசமாதியுண்டு
மண்டலத்தில் தானிருக்கும் யேசுதன்னை வணக்கமுடன் வரங்கேட்பார் கோடியாமே
2218.
கோடிபேர் சமாதிநிலை தன்னைக்கண்டேன் கொற்றவனாம் ரோமபுரி சமாதியோரம்
தேடியே பார்க்கவென்று போகும்போது தேர்வேந்தராசரப்பா யிசுரவேலர்
நாடியே தபசிகளாயிரம்பேர் நலமுடனே சமாதியது லக்கோயில்லை
கூடியே பார்க்கையிலே விநோதமெத்தக் கூறவே முடியாது திண்ணமாமே
2219.
திண்ணமாம் எழுபத்து தேசங்கண்டேன் திடமுள்ள மாதாவின் தேசம்போனேன்
வண்ணமுடன் யூதாவில் கோடானுகோடி வனந்தனிலே ரிஷிகளப்பா சொல்லொண்ணாதே
என்னவே யேசுவின்தன் மகிமைமெத்த எடுத்துரைத்தார் சீஷர்வர்க்க மனேகம்போர்
சண்ணலுடன் மலையெல்லாம் சுத்திவந்தேன் சாங்கமுடன் யீசர்க்கு சமாதியுண்டே
2220.
உண்டான சமாதியிடம் போயிருந்தேன் ஓகோகோ நாதாக்கள் சீஷவர்க்கம்
கண்டேனே வெகுகோடி வதிசயங்கள் கலியுகத்தில் கண்டதில்லை யிதுபோலப்பா
தண்டவனந்தான் தாண்டிசுத்திவந்தேன் சகலான சீனபதிமார்க்கத்தாரை
கொண்டுமல்லோ வவரவர்கள் தேசம்விட்டுக் கொப்பனவே திரும்பிவந்தேன் சீனந்தானே
2221.
தானான மார்க்கமது யின்னஞ்சொல்வேன் தகமையுள்ள எருசலேம் நகரத்திற்கு
வேனான காலாங்கி நாயர்பாதம் விருப்பமுடன் தான்வணங்கியடியேன்தானும்
பானான குருபரனை வணங்கியானும் பார்க்கவே எருசலேம் போகவென்று
மானான மாதாவைக்காணவென்று வணங்கினே னவர்பாதம் தொழுதிட்டேனே
2222.
தொழுகையிலே அசரீரிவாக்கியந்தான் தொடர்ந்துமே யவரிடத்தில் பிறந்ததாச்சு
எழுந்துமே புகைரதத்தை நடத்திக்கொண்டு ஏகினேன் எருசலேம் நகரத்திற்கு
செழுமையுடன் தேசமெல்லாம் சுற்றிவந்து சீர்பெறவே தானிறங்கி வடியேன்தானும்
பழுதுமிக நேராமல் குளிகைபூண்டு பட்சமுடன் மலைமீதிற் சென்றேன்பாரே
2223.
சென்றுமிகப் பார்க்கையிலே குகைகள்வுண்டு சிறந்ததொரு குகைதனிலே மனுங்குமார்கள்
குன்றின்மேல் கோடானகோடி பேர்கள் கொடுத்தபசியம்கிருந்தார் லக்கோயில்லை
தன்றான நபியுடைய சீஷவர்க்கம் சார்பாக ஒருபக்கம் தவமிருப்பார்
பன்றான சீஷர்களனேகமுண்டு படைபொருத யென்மேலே வந்தார்தானே
2224.
வந்தாரே நபியுடைய சீஷவர்க்கம் வளமையுடன் கோடிபேர் சூழ்ந்தாரப்பா
சுந்தரனே யாரென்று கேட்களுற்றார் சுடரொளிபோல் சொரூபமதைக் காணும்போது
எந்தனுக்கு பயங்கொண்டு நடுக்கலாகி என்மகனே காலாங்கிசீஷனென்றேன்
அந்தமுடன் எந்தனையும் பெரும்பாலாக வாதரித்து கோபமதை தணித்திட்டாரே

2225.
தணிந்தபின்பு எந்தனையும் எங்கேவந்தாய் தயவுள்ள சிறுபாலா கூறுமென்ன
கணிதமுட னடியேனும் புகைரதங்கள் காசினியில் யாரேனும் அதிசயிக்க
துணிவுடனே சித்தர்முனி ரிஷிகள் தம்மைச் சுகமுடனே தானேத்தி சீனந்தன்னில்
அணியணியாய்க் கொண்டுசென்று அனியெல்லா மவரவர்க்கு வதிசயத்தைக்காட்டினேனே
2226.
காட்டிவந்தேன் சீனபதிதனிற்சென்றேன் கடவுளாமேசுவின்தன் காட்சிகண்டேன்
வாட்டமுடன் பீமார்கள் சீஷவர்க்கம் வகையுடனே காணவென்று திரும்பிசென்றேன்
காட்டமுடன் புகைரதத்தை மாட்டிக்கொண்டு நலமுடனே எருசலேம் காணவந்தேன்
மாட்டிமையாய் குளிகையது பூண்டுகொண்டு மாநபியைக்காணவென்று வந்திட்டேனே
2227.
வந்திட்டேன் நபிபாதங்காணவந்தேன் வாகான சீனவர்க்கர் என்னைநோக்கி
செந்தமுடன் உபசரணைமிக்க செய்து தேவனிங்கே இல்லையென்று வாக்குரைத்தார்
எந்தனுக்கும் மனஸ்தாபம் மிகவுண்டாக்கி யென்சாமி நபிதனையே காணவென்று
நொந்துமனந் தானிருக்க சீஷவர்கம் நோக்கமுற்று எந்தனுக்கு வழிசொன்னாரே
2228.
சொன்னவுட னடியேனும் அடிவணங்கி துணையாக சீஷவர்க்கம் கூட்டிக்கொண்டு
நன்னயமாய் புகைரதத்தில் ஏத்தியேதான் நாதாந்த நபிதனையைக்காணவென்று
மன்னர்மெய்ச்சு மக்காவாம்புரியைக் காணவகையுடனே நெடுந்தூரம் ரதம்திருப்பி
பன்னரகந் தனிலோரஞ்சென்றுயானும் பட்சமுடன் புகைரதத்தை நிறுத்தினேனே
2229.
நிறுத்தினேன் அங்கிருந்தோர் சேனைவர்க்கம் நிலையான புகைரதத்தை கண்டபோது
திருத்தமுடன் ஓடிவந்தார் கோடிபேர்கள் திரளான நபிக்கூட்டம் அலுங்குவார்கள்
பருத்தமலைதனையோரம் சமாதிபக்கம் பதுங்கியே காத்திருப்பார் சமாதிதன்னில்
வருத்தமுட னபிபாதங்காணவென்று வந்திட்டேன் என்றதுமே எனைப்பார்த்தாரே
2230.
பார்த்துமே நபிபாதங்காணவென்றேன் பட்சமுடன் கோரிக்குட் சென்றேனப்பா
நேர்த்தியாம் நவரத்தின சமாதிக்குள்ளே நேர்மையுடன் நபியிருக்க சொன்னாரப்பா
தீர்த்தமுடன் ரொட்டியொன்று யீய்ந்தாரப்பா தஇறமுடைய மனுமார்கள் ஆயிரம்பேர்
காத்திருந்தேன் நெடுநேரம் அடியேன்தானும் கண்ணெதிரே ரூபமது கண்டிலேனே
2231.
கண்டிலேன் நபிநாயந்தன்னைக்காணேன் காதிலே வதரிரிவாக்குண்டாச்சு
அண்டர்முனி ராட்சதர்கள் திடுக்கிட்டேங்க அவனியெல்லாந்தான் நடுங்க சப்தமாச்சு
தொண்டர்களெல்லாங்கூடி யுத்தாலாவை தொழுதுமே பணிந்திட்டார் அந்தநேரம்
தெண்டனிடும்போதையிலே மலுங்குகூட்டத் துணையாக யானுமொரு மலுங்கானேனே
2232.
மலுங்காகத் தானிருந்தேன் வலதுகாலம் மானபியைக்காணவென்று எண்ணங் கொண்டேன்
கலுங்கபத்தி முதலான சீஷவர்க்கம் காரைகாணார் கோடிமன்னர் காணியீவார்
பலுங்குடனே பனிரண்டு வாண்டுவாண்டு பாரினிலே சமாதியின்றன் சத்தமுண்டு
பலுங்கையுட சத்தமது சதாகாலந்தான் பாலிக்குமெந்நாளும் பண்பதாமே

2233.
பண்பான செய்தியல்லோ கண்டறிந்தேன் பட்சமுடன் நபிநாயந்தன்னைக்காணேன்
கண்பான சமாதியிலே மகிமைமெத்த காட்சியுடன் காணுவது மிகவுமாச்சு
நண்பான நபிக்கூட்டம் கோடிகாவல் நலமான சமாதியிலே இருப்பாரப்பா
திண்பான முகமது மார்க்கத்தார்கள் சிறப்புடனே கண்டேனே கோடிபேரே
2234.
கோடியாம் யணியணியாய் பார்த்து வந்தேன் கூறவேபோகாது குவலயத்தில்
தேடியே திரிந்தாலும் மக்காவைப்போல் ஜகத்திலே வதீதமுள்ள தேசமுண்டோ
நீடியே மகிமைகளும நேகமுண்டு நீனிலத்தில் யான்சென்றேன் தேசமெல்லாம்
பாடியே குளிகையது பூண்டுகொண்டு பாரெல்லாம் சுத்திவந்தேன் பண்பாய்த்தானே
2235.
தானேதான் சீனபதிபோகவென்று தாழ்ச்சியுடன் உத்தாரங்கேட்டபோது
மானேதான் பக்கிரியாக்கோபுதானும் மகாதீட்சை பெறுகவென்று வணங்கியென்னை
தேனான காலாங்கிபாதங்காண தெளிவுடனே எந்தனுக்கு வரமுமீவாய்
பானான கமலமுனி தன்னைக்காண பட்சமுடனிருப்பிடமும் செப்பிடீரே
2236.
செப்பவென்று யாக்கோபு என்னைகேட்க தெளிவுடனே யானுமல்லோ விடையுஞ்சொல்லி
ஒப்பமுடன் புகைரதத்திலேறிகல்கொண்டு உத்தமனே சீனபதிசென்றேன்யானும்
கப்பலெனும் நீராவிமார்க்கமாக கடுந்தூரந் தீவுகளுஞ்சுத்திவந்து
மெப்புடனே சீனபதிக்கரையிலப்பா மேன்மையுடன் இறங்கிவிட்டேன் பாலன்றானே
2237.
பாலனாம் யாக்கோபு சித்தர்தாமும் பட்சமுடன் கமலமுனிதன்னைக்காண
சீலமுடன்றாகோப சாரந்தன்னால் சிறப்புடனே சமாதியிடந் தன்னிற்சென்றார்
கோலமுனியானதொரு கமலர்தானும் குவலயத்தில் சமாதியிலே இருந்தாரங்கே
ஞாலமுள்ள சித்தொளிவைக் காணவென்று மகிழ்ச்சியுடன் சமாதியிடம் நெருங்கினாரே
2238.
நெருங்கியே கமலரிட சமாதிகண்டார் நேர்மையுடன் யாக்கோபு வணங்கிநின்றார்
கருங்கல்லுக்குள்ளிருந்த சித்துதம்மைக் கண்ணாலே கண்டாராம் யாக்கோபப்பா
உருகவே யடிபணிந்து பக்கிரிதானும் வுத்தமனார் வதமுனிபாதந்தொட்டு
தருதவே மெனக்குத் தயைசெய்யென்று தாழ்மையுடன் கேட்டாராம் சித்தர்தாமே
2239.
தாமெனமே யாக்கோபு கேட்கும்போது தயையுடனே கமலமுனி சாற்றலுற்றார்
பூமானம் யாக்கோபு மைந்தாகேளு புகழ்ச்சியுடன் சொல்லுகிறேன் உந்தனுக்கு
நாமமுடன் தேசமெல்லாம் சுத்திவந்தீர் நாதாக்கள் சித்தர்முனி ரிஷிகள்தம்மை
தாமமுடன வர்களிடம் வாதுபேசி சமர்த்துடனே வென்றுவந்த பாலாகேளே
2240.
கேளப்பா வுலகத்தில் கொடியசித்தர் கோடானகோடியுண்டு யிருப்பாரப்பா
தன்மையாய் அவர்களிடம் பேசியல்லோ சாங்கமுடன் வுளவுகளை யறியவேண்டும்
ஞானமுடன் அவர்களுக்கு தொண்டுசெய்து நளினமுடன் ஞானத்தை தெரியவேண்டும்
வேளாமையாய் எதிர்த்து மிகவாயாடாதே வீண்வார்த்தை தாமிழுத்து சபிப்பார்தாமே

2241.
சபிப்பாரே பக்குவமாய் நடந்துகொள்ளு சதாகாலம் அவர்களிடம் பூசித்தேதான்
அபிமானம் தான்வரவே நடந்துகொள்ளு அப்போதே யுன்மீதில் கிருபைவைத்து
நபியுடைய மகிமைதனைப் பற்றியேதான் நாதாக்கள் மரியாதை செய்வாரப்பா
கபிலமுனி நெடுங்காலம் இங்கேவந்தார் கண்டல்லோ சித்தர்களுஞ் சபித்திட்டாரே
2242.
இட்டாரே சித்தர்முனி ரிஷிகள்தாமு மிடையூறு பேசினதோர் தர்க்கத்தாலே
கெட்டாரே கமலமுனி கல்லாய்ப்போனார் கொடியுடனே சித்தர்களுஞ் சமைத்தாரங்கே
கிட்டிருந்து மரியாதி யாவும்பெற்றக் கிருபையுடன் மக்காவுக்கேகுமென்றார்
சட்டமுனி முதலானோரிங்குவந்து சாங்கமுட னுபதேச மடைந்தார்பாரே
2243.
பாரேதான் போகரிட தீரம்வேண்டும் பண்பான விட்டகுறை நேசம்வேண்டும்
சீரேதான் காலாங்கி பட்சம்வேண்டும் சிறந்தமுனி பலபேர்கள் கிருபைவேண்டும்
நேரேதான் குளிகையது பூணவேண்டும் நீனிலத்தில் பெருமையது கீர்த்திவேண்டும்
மேரேதான் கண்ணபிரான் அருளும்வேண்டும் இல்லாட்டால் அவனியிலே வெல்லார்தாமே
2244.
வெல்லார்க்களென்றுசொல்லி யாசீர்மித்து விதவிதமாய் வேணதெல்லாம் தாமுரைத்து
சொல்லாது மிகச்சொல்லி சுரூபஞ்சொல்லி துரையுடனே முறையோடு கதையுஞ்சொல்லி
வல்லான காலாங்கிநாயர்பாதம் வணங்கியே எப்போது மனதிலெண்ணி
மெல்லவே யுந்தனிட பதியைத்தேடி மேன்மையுடன் போகவென்று வரந்தந்தாரே
2245.
தந்தவுடன் பக்கிரியாக்கோபுதானும் சார்புடனே தன்பதிக்குப்போனாரங்கே
அந்தமுடன் காலாங்கி தாள்வணங்கி அப்பனே சீனபதிவிட்டுயானும்
விந்தமுடன் அதிசயங்காண வெளிப்பட்டேன் சீனபதிதன்னைவிட்டு
சொந்தமுடன் மேருவுக்கு கடைபாகத்தில் சூரியனார் தாமிருக்கு மிடங்கண்டேனே
2246.
கண்டேனே வனந்தனிலே மகிமைமெத்த கண்டவர்கள் விண்டவர்களாருமில்லை
அண்டமுனி ராட்சதர்கள் அசுராள் கூட்டம் அணியணியாய் எதிர்வந்து சூழ்ந்துகொண்டார்
தண்டவனந்தன்னிலே யான்குளிகைகொண்டு தரணியிலிறங்கியதைப் பார்த்தாரங்கே
கொண்டல் வண்ண னேகர்கள் கர்ச்சிப்பாலே கோடானகோடி வதிசயங்கண்டேனே
2247.
அதிசயங்கள் மெத்தவுண்டு அங்கேதானும் அப்பனே அசுராக்கள் கூட்டமப்பா
பதியைவிட்டு பதிதேடி வந்தவன்யார் பாதகனாயிருக்கிறான் என்றுசொல்லி
துரிதமுடன் எந்தனிட கிட்டவந்து துப்புரவாய் யாரென்று வினவிக்கேட்க
கரிதமுள்ள போகரிஷி யடியேன்தானும் கலங்கியே திடுக்கிட்டு நின்றிட்டேனே
2248.
நின்றேனே கிடுகிடுத்து பயந்துயேங்கி நெடுமூச்சு தானெரிந்து பயமுமுற்று
குன்றருகே நின்றுவிட்டேன் அடியேன்தானும் கூச்சலுடன் அசுராக்கள் கிட்டியேதான்
சென்றுமே யெனையெடுத்து விழுங்கவந்தார் சோறாமல் யானுமல்லோ வார்த்தைபேசி
வென்றுமே காலாங்கி நாயர்பாதம் விருப்பமுடன் தாள்வணங்கி பணிந்திட்டேனே

2249.
பணிந்தேனே எந்தனுக்கு பட்சம்வைத்து பாரிலுள்ளவினோதமெல்லாம் காண்பித்தார்கள்
துணிவுடனே சூரியனினி வனங்களெல்லாம் சுத்தியே வலசாரியாக வந்தேன்
அணிபெறவே யாளியுட வனமுங்கண்டேன்
கணிதமுடன் பூமிமுதல் அமுனையுங்கண்டேன் காலாங்கி நாதருட கடாட்சந்தானே
2250.
தானான வின்னமொரு மார்க்கம்பாரு தாக்கான தாதுபுஷ்டி குளிகைகேளும்
வேனான பேரீச்சங்காய்தான்சேரு மிக்கான ஊமத்தின் விரைதான்சேரு
பானான கஞ்சாவின் விரைதான் சேரு பாங்கான மாதுளையின் விரைதான்சேரு
தேனான கொமட்டிவிரை சேர்தானப்பா தெளிவான வத்திவிரை சேர்தானொன்றே
2251.
ஒன்றான விரையுடனே யத்திவித்து ஒளியான ஆவின்தன் வித்துவாகும்
நன்றான துத்தியுட வித்துவாகும் நலமான சூரியிட வித்துமாகும்
தன்றான ஆவாரை வித்துவாகும் தாக்கான வெட்பாலை வித்துவாகும்
பன்றான கார்போக வித்துவாகும் பாங்கான வாதுமையின் வித்துமாமே
2252.
அமேதான் காரையுட வித்துவாகும் அப்பனே கொன்றையிட வித்துவாகும்
தாமேதான் புரசையிட வித்துவாகும் தயவான கொத்தமல்லி வித்துவாகும்
வேமேதான் நீர்முள்ளி வித்துவாகும் வியர்வான சூரையிட வித்துவாகும்
காமேதான் பூனையிட வித்துவாகும் கறுப்பான பாளையிட வித்துமாமே
2253.
வித்தான வெள்ளரியின் வித்துமாகும் விதமான காசிலியின் வித்துமாகும்
சத்தஅன வரைக்கீரை வித்துமாகும் சார்பான குலாமல்லி வித்துமாகும்
சுத்தான வாலையின்தன் வித்துமாகும் சுடரென்ற தாய்ப்பாகல் வித்துமாகும்
சித்தான தேற்றானின் வித்துமாகும் சிறப்பான கருங்கொள்ளு வித்துமாமே
2254.
தானான பூசனியின் வித்துமாகும் தனியான எட்டியின்தன் வித்துமாகும்
பானான முருங்கையிட வித்துமாகும் பாகான முள்ளங்கி வித்துமாகும்
கோனான வரசினுட வித்துமாகும் குணமான சோகியிட வித்துமாகும்
தேனான தாமரையின் வித்துமாகும் தெளிவான வழிஞ்சியிட வித்துபாரே
2255.
பாரேதான் சாரத்தின் பருப்புகூட்டி பாங்கான கசகசாதானுங்கூட்டி
நேரேதான் சாதிக்காய் சாதிபத்ரி நேர்பான வால்மிளகு சுக்கோடேலம்
சாரேதான் கிறாம்புடனே மிளகுகூட சார்பான லவங்கமென்ற பட்டைதானும்
வேர்பான பூமிசர்க்கரையின்மூலம் விரைவான மராட்டியென்ற மொக்குமாமே
2256.
மொக்கான கருவேலம் பிசினியாகும் முனையான வெள்வேலம் பிசினியாகும்
தாக்கான சாலன்றன் பிசினியாகும் தகையான முருங்கையிட பிசினியாகும்
செக்கான மாங்கனியின் பிசினியாகும் சிறப்பான வத்தியின்றன் பிசினியாகும்
சுக்கான விசுக்கோலின் பிசினியாகும் சுகமான வாலன் பிசினியாமே

2257.
பிசினுடனே கருங்காலி பிசினியாகும் பிசகில்லா பூதத்தின் பிசினியாகும்
நசிதமுள்ள குங்குமத்தின் பிசினியாகும் நலமான காட்டத்தி பிசினியாகும்
உசிதமுள்ள பலாமரத்தின் பிசினியாகும் உத்தமனே ஊஞ்சனுட பிசினியாகும்
கசிதமுள்ள விலாவினுட பிசினியாகும் கருவான கசகசாபிசினுங்காணே
2258.
காணவே பூவினுட மார்க்கம்பாரு கருவான முருங்கையுட பூவுமாகும்
தோணவே யாவாரைப் பூவுமாகும் துறையான தென்னம்பூ சாமந்திப்பூ
மாணவே மல்லியிட பூவுமாகும் மகத்தான விலாவினுட பூவுமாகும்
சாணவே தாழையுட பூவுமாகும் சார்பான தாமரையின் பூவுமாமே
2259.
ஆமேதான் விலாமிச்சு பூவுமாகும் அப்பனே மாதுளையின் பூவுமாகும்
வேமேதான் வேம்பினுட பூவுமாகும் கடிதான செவ்வல்லி பூவுமாகும்
நாமேதான் பூவகையின் ரசமுஞ்சொன்னோம் நலமான செம்பூரான் பூவுதாமே
2260.
தரமான மூலவகை சாற்றக்கேளு தாக்கான தண்ணீர்மிட்டான் கிழங்குதானும்
காமான பனையினுட மூலமாகும் கருவான கரும்பினுட மூலமாகும்
சாமான செந்தொட்டி வேரினோடு சார்பான கருந்துளசி வேருமாகும்
வேமான யிம்பூரா வேருமாகும் மிக்கான செமஃபாளை வேருமாமே
2261.
வேறான மாமிஷமா மடைக்கலந்தான் வேகமுள்ள வுடும்பு முயல்கலைதானாகும்
வாறான முட்பன்றி மயிலுமாகும் வாகான செம்புரவி வாண்குறியுமாகும்
தூரான காடைகவுதாரியாகும் துறைமேயும் கொக்குடனே புறாவுமாகும்
தாராவாம் பெட்டையுடன் செஞ்சேவல்தானும் சாதாவாம் குறும்பாட்டு யிறைச்சிபாரே
2262.
இறைச்சியாம் விலங்குடனே யித்தனையுங்கூட்டி எழிலாக வெயிலிலுலர்த்தி சூரணித்து
முறையுடனே ஒவ்வொன்றில் சேர்தானப்பா முயற்சியுடன் தானெடுத்து சேர்க்கக்கேளு
குறையாமல் முன்சொன்ன சரக்கையெல்லாம் கூட்டுமுறை தப்பாமல் ஒன்றுகூட்டி
நிறையுடனே ரசவகையுந் தப்பாவண்ணம் நினைவுடனே நெய்தேனிற் கிண்டிடாயே
2263.
கிண்டையிலே சர்க்கரையுஞ் சரியாய்ச் சேர்த்து கிருபையுடன் மெழுகுபதந்தனிலிறக்கி
பண்டிதமாய் நெய்தேனும் கூடக்கூட்டிப் பாகமுடன் தானிறக்கி குளிகைசெய்து
கண்டிதமாய் மண்டலந்தானந்திசந்தி கருவாகத் தின்றுமல்லோ கூடும்போது
வண்டினம் போல்கலவியது மிகுதியாகி மங்கையரும் மானிலத்தில் நடுங்குவாரே
2264.
நடுங்குவார் மானிலத்தில் பெண்களெல்லாம் நாணுவார் புருஷாலைக்கண்டபோது
கடுஞ்சோப மதிகமுடன் காதல்கொண்டு கர்ச்சனைமிக வுண்டாய்கதிப்புகொண்டு
விடுமானும் கலையுடனே கலந்தமான்போல் விடாய்பட்டு மன்மதன்போல் காதல்பூண்டு
தொடுமாதர் நான்குவித சாதியோரை தோறாமல் அனுபவித்து பெயர்கொள்வீரே

2265.
கொள்ளவென்றால் பத்தியங்கள் இல்லையப்பா குணமுடனே வண்மையுள்ள பதார்த்தமெல்லாம்
தள்ளவே போகாது சதாகாலந்தான் தாரணியிலுண்டவருக்கு பலமேழானை
விள்ளவே யுண்டாகும் குளிகையப்பா விண்டலமு மண்டலமு மிடங்கொளாது
உள்ளபடி இக்குளிகை யார்தான் செய்தார் உத்தமனே கருவாளிசெய்வான் பாரே
2266.
பாரப்பா வின்னமொரு மார்க்கம்பாரு பாங்கான மகமேரு கிழக்கேயப்பா
நேராகத் தானிருக்கும் பர்வதந்தான் நேர்மையுள்ள அஷ்டகிரி என்பார் சித்தர்
சாராக யானுமல்லோ குளிகையிட்டு சட்டமுடன் சீனபதிவிட்டு யேகி
காரான கரிரோனின் வனமுந்தாண்டி கடினமுடன் மலையோரம் சென்றேன்தானே
2267.
சென்றேனே யடிவாரத்தருகிலப்பா திரளான கோடிமுனி சித்தருண்டு
குன்றினிடம் உட்சென்றேன் யானுமங்கே குறிப்பான குத்துக்கால் ஒன்றுகண்டேன்
பற்றியெனும் பெருச்சாளி வாகனத்தில் பாங்குடனே கணபதியும் வீற்றிருக்க
வென்றிடவே குத்துக்கல் பிள்ளையாரை வேண்டினேன் போகரிஷி வேண்டினேனே
2268.
வேண்டியே நிற்கையிலே கணபதிதானும் விருப்பமுடன் போகரைத்தான் வளப்பங்கேட்டார்
தாண்டியே வனமெல்லாந் தான்கடந்து தகமையுடன் வருவதற்கு நீதியுண்டோ
பூண்டமனதுறுதியினால் வந்தாய்நீயும் பூலோகமானிடனும் வரலாமோதான்
மாண்டுமே போவதற்கு சித்தர்தாமும் மன்னவனே தான்சபிப்பார் பெருமைபாரே
2269.
பாரேதான் என்றலுமே கணபதிதானும் பாங்குடனே போகரிஷி திடுக்கிட்டேங்கி
நேரேதான் கணபதியை சாஷ்டாங்கித்து நிலைமைபெற சுவாமிஎனக்கெதியேதென்ன
சாரவே என்மீதில் பட்சம்வைத்து சாங்கமுடன் எந்தனுக்கு உபதேசித்து
சூரனாமிருக்குமிடம் காணவென்று சுந்தரரும் வாக்களித்தார் சூட்சந்தானே
2270.
சூட்சமுட னுபதேசமருளும்பெற்று சுடரொளியாம் பத்மாசூரனையுங்காண
தாட்சியுடன் இரண்டாங்கால் வரையுமேறி தண்மையுடன் முதற்கோபுர வாசல்நின்றேன்
காட்சியுடன் சூரனது ஸ்தலமும் கண்டேன் கைலாச சட்டமுனி சமாதிகண்டேன்
மாட்சியுடன் கைலாசமுனிதானங்கே மார்க்கமுடன் சமாதிநிலை யறிந்திட்டேனே
2271.
அறிந்திட்டேன் சட்டமுனி பாதங்காண அவ்விடத்தில் சிலநேரம் நின்றேன்யானும்
அறிந்திடவே சித்தர்முனி கோடாகோடி தகைமையுடன் கொலுக்கூட மங்கிருந்தார்
செரிந்திடவே யடியேனை கண்டபோது சேனைதிரள் கூட்டமுடன் கிட்டவந்தார்
புரிந்திடவே சிறுபாலா எங்கேவந்தீர் புதுமையுடன் கேட்கலுற்றார் சித்தர்தாமே
2272.
தாமான சித்தர்முனி கேட்கும்போது சாங்கமுடன் காலாங்கிதனை நினைத்து
வாமமுடன் குருசாமி காலாங்கிதன்னை வளமையுடன்தானினைத்து துதிக்கலுற்றேன்
ஓமெனவே நாதாக்கள் கேள்விக்கல்லோ உத்தமனுமடியேனுங் கால்நடுங்கி
சாமெனவே சீனபதி தன்னில்யானும் சட்டமுடன் குளிகைகொண்டு வந்திட்டேனே

2273.
வந்திட்டேன் என்றலுமே சித்தர்தாமும் வணக்கமுடன் இரண்டாங்கால் வரையிற்கொண்டு
முந்திட்டு மூலரிட பாதங்காண முனையான சமாதியிடம் நிற்கும்போது
கந்திட்ட தேவரிஷிக் கொப்பாஞ்சித்தர் கருவான திருவாசர் படிகார்ப்பார்கள்
தந்திட்ட வாசலது திறக்கவென்று தாட்சியுடன் தேவரிஷி வினவிட்டாரே
2274.
வினவையிலே சமாதியது தான்திறந்து வேகமுடன சரீரி வாக்குண்டாச்சு
தினகரன் தன்னொளிபோல வடிவங்கண்டேன் திகழான சட்டமுனிதன்னைக்கண்டேன்
மனமுருகி யென்மீதில் கிருபைவைத்து மாட்சியுடன் ஞானோபதேசஞ்சொன்னார்
அனல்கண்ட மெழுகதுபோல் நெஞ்சந்தானும் அப்பனே மனமுருகி வழுந்திட்டேனே
2275.
வழுந்திட்ட போதையிலே சட்டர்தாமும் வகையுடனே வாக்களித்தார் அடியேனுக்கு
தொழுதிட்ட பாலாநீ சினந்தன்னில் தோற்றமுடன் தோற்றமுடன் குளிகையது
வுலவாய்ப்பூண்டு
கழுகுடனே வல்லூறு பறந்தாற்போல கருணைபெற வெந்தனிடம் காணவந்தீர்
தழுவியே சித்தரும் மைகண்டுபேசி தாரணியிற் கல்லாக சபிப்பார்தானே
2276.
தானான சித்தருட வுளவுகாணீர் தாரணியில் ரிஷிமுனிவர் மர்மங்கோடி
வேனாக நல்லவர்போல் நேசிப்பார்கள் விருதாவாய் வாதுமிகப்பேசியல்லோ
கோனாகக் குருநிந்தை கூறுவார்கள் குடிகெடுக்கும் சித்தருண்டு குவலயத்தில்
தேனான வமுர்தமது யீவாரப்பா தெரியாமல் கருவழியாற் கொல்லுவாறே
2277.
கொல்லுவார் அவர்கள்பதி செல்லவேண்டாம் கொடிமுடியுஞ் சித்தரப்பா கோடியுண்டு
வெல்லவே சமாதியிடந் தானழைப்பார் விருதுமிகப் பேசியல்லோ சாபமீவார்
செல்லவே ஞானத்தின் வழிகேட்பார்கள் சேறான முப்பூவின் மார்க்கங்கேட்பார்
புல்லவே நாதத்தின் முறையுங்கேட்பார் புகழான வறுக்கினத்தின் கிடங்கேட்பாரே
2278.
கேட்கையிலே தூரநின்று வார்த்தைகேளு கெடியான கும்பகத்திலிருந்துகொண்டு
நீட்டமுடன் வனாகதத்தை மேலேநோக்கி நெடுந்தூரங் காணிறுத்தி வூணிப்பாரு
பூட்கமல லட்சுமியும் பொருந்திநிற்பாள் புகழான விசுத்தியிலே ஏறிப்பாரு
தாட்கமலத் தாள்திறந்து போகம்பார்த்துச் சதாகாலந் தரணியிலகுவாய்வாழே
2279.
வாழவென்றால் வெகுகோடி காலம்வாழ்வாய் வாகான கற்பமது தெரிந்துகொண்டு
நீழவே காயசித்தி மாயசித்தி நெடுங்காலந் தானிருந்து நிலைத்துவாழ
மாழவே போகநிலை யறியவேண்டும் மகத்தான விசுத்திதனை சுழுத்தியிலேமாட்டி
சாழவே சடாஷரத்தை மேலேநோக்கு சதானந்த கணபதியை பூசிப்பாயே
2280.
பூசிக்கணபதியுங் கந்தன்தானும் புகழாக வாணியுடன் மனமுவந்து
நேசித்து வாலையுடன் நிரூபிதன்னை நேர்மையுடன் கண்டறிந்து நிச்சயித்து
ஆசையுடன் பிர்மான லாகிரிதன்னில் அப்பனே விசுத்தியிலிருந்துகொண்டு
காசையெனும் பொன்னாசை தனைமறந்து காசினியில் சித்தனைப்போல் வாழலாமே

2281.
சித்தான சித்தனைப்போல் வாழவென்றால் ஜெகதலத்தில் விண்ணமுண்டு காட்சியப்பா
கத்தனாம் பிர்மாவின் பதியைக்காணப் பகருகிறேன் மூன்றாங்கால் வரைதானப்பா
முத்தமுடன் நீர்சென்று பார்த்துவந்தால் மோசமில்லை யின்னம்வெகு கெவினியாவாய்
சுத்தமுடன் கைலாசநாதர்தாமும் சூட்சமுடன் தாமுரைத்தார் திரும்பினேனே
2282.
திரும்பியே குளிகையது விண்டுகொண்டு தீரமுட னடியேனு மேலேசென்றேன்
குரும்பான சித்தர்களாம னேகம்பேர்கள் கூடியேவெகுபேர்கள் வந்தாரப்பா
இரும்பான சித்தரப்பா யானுங்கண்டேன் எழிலாக எந்தனையு மாரென்றார்கள்
சுருப்புடனே காலாங்கி தனைநினைத்து துரிதமுடன் போகரென்று வசனித்தேனே
2283.
வசனித்த போதையிலே வடியேன்மீது வாகுடனே களிகூர்ந்து கூறலுற்றார்
துசனித்து சமாதியிடம் கொண்டுசென்றார் தோற்றமுடன் பிரம்மாவின் வாசல்கண்டேன்
நிசமுடனே கோட்டைக்குள் சுரங்கம்கண்டேன் நெடிதான சுரங்கத்தின் வழியைக்கண்டேன்
புஜமுடைய கிங்கிலியர் ஆயிரம்பேர் புனிதமுடன் கொலுவிருந்தார் ரிஷிகள்தாமே
2284.
தாமான ரிஷிமுன்னே சென்றேன்யானும் சதகோடி சூரியர்போல் சமாதிக்குள்ளே
பூமானாம் பிரம்மாவும் வுள்ளிருந்து பிரியமுடன் எந்தனிடம்வார்த்தைசொன்னார்
காமான வாகவல்லோ வடியேன்தானும் கைகட்டி முன்னின்று வார்த்தைசொன்னேன்
தேவான பிரம்மாவு மெந்தனுக்கு தெளிவாகத் தானுரைத்தார் பிரம்மந்தானே
2285.
பிரமனசாமியார் எந்தன்மீது பிரியமுடன் பட்சமுற்று கேட்கும்போது
திரமுடனே வடியேனுங் கால்நடுங்கி தெளிவாக யானுரைத்தேன் கோடிவண்ணம்
பரமானங் கண்டல்லோ குளிகைபூண்டு பட்சமுடன் தமதிடத்தில் வந்தேன்சாமி
சிரங்குவித்து நமஸ்கார மிகவுஞ்செய்து திடமுடனே வுத்தாரங் கேட்டிட்டேனே
2286.
கேட்டேனே பிரம்மாவு மனமுவந்து கிருபையுடன் எந்தனுக்கு வழியுஞ்சொன்னார்
நோட்டமுடன் சீனபதிதேசத்தார்க்கு நுணுக்கமுள்ள வதீதமென்ற வித்தைதன்னை
தோட்டமுடன் வுளவுமுதலெல்லாஞ் சொல்லி தேசத்தில் சித்துவென்ற மர்மந்தன்னை
காட்டியே விட்டதொரு வண்மையெல்லாம் கண்டாரே யாமானால் சபிப்பார்காணே
2287.
காணவே லோகமெல்லாஞ் சித்தாய்ப்போகும் கைலாசங்காணுவதும் சூட்சமாகும்
நாணவே நாதாக்கள் கைமறைப்பை நாட்டமுடன் கொட்டிவிட்டாய் கோடாகோடி
மாணவே குளிகையது பூண்டுகொண்டு மகத்தான தேசமெல்லாஞ் சுத்திவந்தீர்
வேணவே வினோதமென்ற கருவியெல்லாம் வெட்டவெளி பாழாகிவீணாய்ப்போச்சே
2288.
போச்சென்று விடுகாதே புண்ணியாகேள் புகலுகிறேன் நாலாங்கால் வரைதானப்பா
மாச்சென்ற வியாசர்முனி சமாதியுண்டு மகாகோடி ரிஷிகளெல்லாம் அங்கிருப்பார்
ஆச்சர்யமான தொருமகிமையுண்டு அதுக்கப்பால் கிள்ளைவனந்தானுமுண்டு
பாச்சலென்ற தபகோடி ரிஷிகளப்பா பாரவனந்தனிலிருப்பார் சொல்லொண்ணாதே

2289.
சொல்லவென்றால் நாவுமில்லை பாவுமில்லை சோதியுடல் மலைமீது தோற்றங்காணும்
வெல்லவே சோதிரிஷி வியாசர்தானும் வினோதமுடனங்கிருப்பார் கொலுக்கூடந்தான்
புல்லவே சித்தர்களின் கூட்டவர்க்கம் பூலோகமிடங்கொள்ளாததீதமெத்த
பல்லவே கொங்கணரின் கூட்டத்தார்கள் பகரவேமுடியாது பண்பதாமே
2290.
பண்பான நாலுபக்கம் கோட்டைவாசல் பளிங்குமண்டபங் களங்குண்டு
திண்பான தடாகங்கள் குகைகளுண்டு திடமான குன்னுகளில் தவசிருப்பார்
பண்பான தபசியிடம் யானும்சென்றேன் கருத்துடனே சித்தரெல்லாம் எனைக்கண்டார்கள்
வண்புடனே யடியேனும் தாள்பணிந்து வணக்கமுடன் குருவணக்கமோதிட்டேனே
2291.
ஓகவே காலாங்கிதனை நினைத்தேன் உத்தமனே யடியேனும் வார்த்தைசொன்னேன்
நீதமுடன் யானுரைத்த மொழியுங்கேட்டு நித்திலங்கும் வியாசர்முனி யாரென்றாரே
வேதமுனி நவின்றியதோர் மொழியைக் கேட்டு வேகமுடன் காலாங்கிசீஷனென்றேன்
போதமுடன் எந்தனுக்கு வேதயாகும் புகட்டினார் வேதரிஷி புகலத்தானே
2292.
புகலவே வேதத்தின் சூட்சாசூட்சம் புகழான வஷ்டகர்ம யாகமெல்லாம்
நிகலவே யோகத்தின் மார்க்கந்தானும் நெடிதான குருபாரசேஷமந்திரம்
சகலவே சூக்குமத்தின் சூட்சாசூட்சம் தசாங்கமுடன் மேலேறிநிற்கலாகும்
அகலவே பரவொளியைக்காணலாகும் அப்பனே கேசரத்திலிருக்கலாமே
2293.
இருக்கலாம் அஞ்சாங்கால் வரைதானாகும் எழிலான கோத்தையது ருத்திரக்கோட்டை
பெருக்கமுடன் கானாறுகுகைகளுண்டு பேறான சில்லாறு தீயாறுண்டு
சருக்கமெனும் நாதாக்கள் சங்கமுண்டு சாயுச்சியப் பதவியென்றும் சொல்லலாகும்
குருக்கதனில் ரசச்கிணறு கோடியுண்டு குருவான ஈசுரன்றன் விந்துவாமே
2294.
விந்தான ரசமதுதான் பொங்கிப்பொங்கிப் விசையுடனே தீயாற்றில் பாயும்போது
தொந்தமுடன் கானாற்றினோரமப்பா துறைமுகத்தில் சத்தியென்ற கெந்தியுண்டு
விந்துடனே சத்தியது சேர்ந்துகொண்டு வீராதி தீயாற்றினக்கினியாலே
சந்தமுடனுறவாகி சிவப்புமாகி சார்பாகச் செந்தூரம் ஜெனிக்குந்தானே
2295.
ஜெனித்ததொரு செந்தூரம் சொல்லப்போமோ திறமான சித்தர்முனி ரிஷிகள்காவல்
பனித்தடங்கண் வேகமது வதிகம்கொண்டு பாரிலே முப்பூவைப்போலேபூர்த்து
தனியாகக் காரமுடன் வீறுகண்டு தாக்கான செம்பினுட கோட்டையெல்லாம்
வனிகனைப்போல் பழுத்துமிசுவீறுகொண்டு வாகான தங்கமது போலேகாணும்
கனியான கோத்தையெல்லாம் தங்கமாகும் கதிரோன்போல் பிரகாசம் காணும்பாரே
2296.
காணுமே நாதாக்கள் சித்துதாமும் காட்டினார் மகிமைகள் மெத்தவுண்டு
தோணவே வரைக்குள்ளே செல்லும்போது துறையான சமாதிமுகம் கண்டுசென்றேன்
வேணவே ருத்திரனார் சமாதிபக்கம் விட்டார்கள் எந்தனையு முனிவர்தானும்
நாணவே யடியேனும் காலாங்கிதம்மை நலமுடனே தாள்பணிந்து நவின்றிட்டேனே

2297.
நவின்றிட்டேன் ருத்திரர் சமாதிபக்கம் நயமுடனே தலைவாசல் நிற்கும்போது
துவின்றிட்ட சமாதியது தாள்திறக்க துலங்கவே ருத்திரனார் குருவைக்கண்டேன்
புவின்றிட்ட திருமுகத்தை பார்க்கும்போது பொலிவான ஜோதியொளி மின்னல்போலாம்
கவின்றிட்ட தேகமது கூச்சலிட்டு கண்காணாஜோதிதன்னனில் சொக்கிப்போச்சே
2298.
போகையிலே ருத்திரனும் கண்டுஎன்னை பொற்புடனே மனதிறங்கி யெனையாரென்ன
சாகமுடன் காலாங்கி சீஷனென்றேன் சட்டமுடன் சொல்கையில் ருத்திரர்தாமும்
பாகமுடன் எந்தனுக்கு வரமுமீய்ந்தார் பட்சமுடன் வரம்பெற்று சித்தர்பக்கம்
சோகமுடன் நிற்கையில் சித்தர்தாமும் சோதித்து மலைபோகச் சொன்னார்தாஏே
2299.
சொன்னவுடன் அடியேனும் குளிகைபூண்டு சோதித்து மலைமீதில் சென்றபோது
அன்னமெனும் பட்சியையான் கண்டேனங்கே அன்புடனே வன்னமதுகண்டபோது
நன்னையா எந்தனுக்கு வன்னந்தானும் நலமுடனே ருத்திரர் மகிமைதன்னை
பன்னயமாய் தாம்உரைத்து பட்சமுடன் முதுகேற்றிப் போகலாச்சே
2300.
முதுகின்மேல் எந்தனையுமேற்றிக்கொண்டு முனையான மலைமுகவில் கொண்டுசெல்ல
கதும்புடனே யானுமங்கே இறங்கினேன்யான் கதிரவனார் தோற்றமது காணவில்லை
உதுப்மான விருள்மூடி பனிகள்நிற்கும் வுயர்ந்தமலை சுற்றிலுமே சித்தரப்பா
ததும்பலுடன் நிற்கிறதைக் கண்டேன்யானும் தாடகையாள் சமாதியது சொன்னார்தாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

2301.
சொன்னாரே தாடகையாள் சமாதிதன்னை சொரூபமென்ற சூக்குமத்தைக்காணவென்று
நன்னயமாய் ஆறாங்கால் வரைதானப்பா நலமுடனே யான்சென்று நிற்கும்போது
வன்னமது வாய்திறந்து கூறிற்றங்கே வளமையுடன் தாடகையின் மார்க்கந்தன்னை
பின்னமிலா தானுரைத்த தெந்தனுக்கு விகற்பமுடன் உரைத்திடவே மயங்கினேனே
2302.
மயங்கினேன் காலாங்கிதனைநினைத்தேன் மாற்கமுடன் ராவணன்தன் ரணகளத்தில்
தயங்கமுடன் தாடகையாள் பங்கங்கெட்டுத் தாரிணியில் சமாதியது பூண்டபோது
தயங்கமுடன் அஷ்டகிரி பர்வதத்தில் ரூபமுடன் தாடகையாள் சமாதிகண்டேன்
பயங்கியே மேல்வரையிற் சென்றுபோனேன் தாக்கான சித்தர்களைக் கண்டேன்யானே
2303.
கண்டேனே பலகோடி ரிஷிகள்மார்க்கம் கருத்திலே தான்நினைத்து பூசித்தேதான்
மண்டலங்கள் சுற்றியல்லோ குளிகைகொண்டு மானிலத்தில் வெகுகோடி வதிசயங்கள்
மண்டலங்கள் விண்டலங்கள் முழுதுஞ்சுற்றி தாரணியில் குளிகைகொண்டு பறந்தேன்யானும்
பண்புடனே சமாதிபுரம் சுற்றிவந்தேன் பாரினிலே தாடகையாள் கதைகேட்டேனே
2304.
கேட்டவுடன் ஏழாங்கால் வரைதானப்பா கெடியாக மேல்வரை சென்றபோது
நீட்டமுடன் ஜடாயுவனமங்கே கண்டேன் நேரான வனமுகத்தில் வீரபத்திரன்
வாட்டமுடன் சமாதியது தன்னைக்கண்டேன் வளமான தாள்வாசல் பூட்டிருக்கும்
கூட்டமெனும் ராட்சதர்கள் பூதக்கூட்டம் பெருமையுடன் சமாதியிடம் நிற்பார்பாரே
2305.
பார்க்கையிலே வீரபத்திரன் சமாதிதானும் பாங்குடனே வயிரக்கல் பச்சைக்கல்லாம்
தீர்க்கமுடன் சமாதியது திறக்கவென்றால் திறளான காவலுடன் திறக்கவேண்டும்
மூர்க்கமுடன் ராட்சதர்கள் முன்னேநின்று முடிசாய்ந்து கரங்குவித்து முன்னேநிற்பார்
ஆர்க்கவே போகாது முனிகளாலும் வஷ்டகிரி பர்வதத்தின் மகிமைதானே
2306.
மகிமையுடன் வீரபத்திரன் சமாதிதன்னில் மதிப்புடனே ஓங்காரச்சத்தம் கேட்டேன்
பகிரதனாம் சீஷவர்க்கம் பக்கம்நின்றார் பரிவான வீரபத்திரன் வார்த்தை சொல்வார்
சகிதமுட னுத்தாரஞ் சொன்னாரங்கே சட்டமுனி பக்கமது சமாதியுண்டு
துவிதமுடன் எந்தனுக்கு ஞானமார்க்கம் துப்புரவாய் போதித்தார் ரிஷிகள்தாமே
2307.
தாமேதான் போதனைகள் யாவுங்கேட்டு சாங்கமுடன் எட்டாங்கால் தன்னிற்சென்றேன்
வேமேதான் மேல்வரையிற் சென்றபோது வியர்வான ருத்திரகாலன் தவசிருப்பான்
தாமேதான் தவநிலையைக் கண்டபோது சாஷ்டாங்கம் தாள்பணிந்து கரங்குவித்து
நாமமுட காலாங்கி தனைநினைத்து நாதரிஷி பாதாம்புயத்தை நாடினேனே
2308.
நாடினேன் ருத்திரகாலன் தன்னைத்தானும் நாட்டமுடன் கண்டல்லோ தரிசித்தேதான்
தேடியே யவர்பாதம் தொழுதுநின்று தீரமுடன் காலனெதிர் நின்றேன்யானும்
வாடியே நின்றவென்னைக் காலன்தானும் மதிப்புடனே சிறுபாலா யாரென்றார்கள்
கூடியே போகரிஷி யடியேன்தானும் குளிகையிட்டு வஷ்டகிரி காணலாச்சே

2309.
காணவே வஷ்டகிரி தன்னில்நின்றேன் கைலாசமிதற்கீடு சொல்லப்போமோ
நாணவே காலனவன் சமாதிபக்கம் நாதாக்கள் கோடிபேர் தவசிருப்பார்
வேணபடி வுபசாரமதிகங்காட்டும் வெழிலான காலனிட வதீதமெத்த
மாணவே காந்தமென்ற கோட்டையுண்டு மகத்தான சித்தர்களோ சொல்லப்போமோ
2310.
சொல்லவென்றால் காஞ்சனமாமலைக்குள்ளே சுடரொளிபோல் சித்தொருவர் இருப்பாரங்கே
நல்லதொரு சமாதியது வஞ்சனக்கல் நலமான வஞ்சனத்திலுள்ளிருந்து
புல்லவே லோகத்தினதிசயத்தைப் புகட்டுவார் முனிவர்க்கும் சித்தருக்கும்
செல்லவே செந்தூரக் காடொன்றுண்டு ஜெகத்தினில் ஈசனன்றி காணார்தாமே
2311.
காணணென்றால் இன்னம்வெகு வதிசயங்கள் கண்டேனே கல்லென்ற வெள்ளைக்கல்லில்
மாணவே உள்ளிருக்கும் ரவைதானப்பா மண்டலத்தில் கண்டதில்லை மாந்தரங்கே
தோணவே பிரகாசமான ஜொதிசுடரொளிப்போல் வயிரங்கள் கூறப்போமோ
நீணவே நாதாக்கள் காண்பதல்லால் நீணிலத்தில் காமிகட்கு கிட்டாதன்றே
2312.
அன்றான ஜடாயுவுட வனத்தில்காணும் அதிகாயன் சமாதியது இருக்கக்கண்டேன்
தன்றான சமாதிமுன்னே நின்றபோது தயவுள்ள வதிகாயன் வாக்குரைத்தார்
குன்றான மலைதேடி குகைகள்தேடி குளிகைகொண்டு மலையேறி வந்ததென்ன
நன்றாக என்னையுந்தான் கேட்டபோது நலமுடனே யானுரைத்த வண்மைகேளே
2313.
கேட்டவுடன் அடியேனும் கிருபையோடு கெவனமுடன் காலாங்கிநாதர்தம்மை
நீட்டமுடன் தான்நினைத்து கூறலுற்றேன் நெடுந்தூரம் ருத்திரனார் காலனுக்கு
வாட்டமுடன் அஷ்டகிரிகாணவென்று வாகுடனே மலையேறி வந்தேனென்ன
மாட்டிமையாய் ருத்திரனார் யெந்தனுக்கு மகிழ்ச்சியுடன் உபதேசம் சொன்னார்தாமே
2314.
சொன்னவுடன் குளிகையது பூண்டுகொண்டு சுற்றியே பார்த்துமங்கே இருந்தபோது
மன்னனா மரிச்சந்திரன் பாட்டன்தானும் மகபதியான் கொலுக்கூட சமாதிதன்னை
பன்னவே பார்க்குகைக்கு வருகிற்சென்றேன் பாராளுஞ்சமாதியிலே வாக்குண்டாச்சு
நன்னயமா எந்தனுக்கு ஞானோபதேசம் நவின்றிட்டார் ராஜமன்னர் நவின்றிட்டாரே
2315.
நவிலவே வினோதமென்ற வித்தைதானும் நாதாக்கள் செய்ததில்லை நாட்டிலேதான்
புவியுடனே காலாங்கி நாதர்பாதம் புகழ்ச்சியுடன் தாள்வணங்கி சாற்றலுற்றேன்
பவிமதிசந்திரன் போல் காரந்தன்னைப் பக்குவமாய்தான்பொரித்து முட்டைபோல்
குவியலுடன் தான்சீவி வளவதாக கொற்றவனே முட்டைபோ லெடுத்துக்கொள்ளே
2316.
கொள்ளவே முட்டைதனை யெடுத்துக்கொண்டு கோபாலாசொல்லுகிறேன் குறிப்பாய்கேளு
விள்ளவே வாயிரம்பேர் கூட்டத்தார்கள் விருப்பமுடன் தான்பார்த்து களிப்புற்றேங்க
மெல்லவே மணல்தனை பூமிதன்னில் மேன்மையுடன் கொட்டியே மேடைசெய்து
பள்ளமதாய் குறியொன்று நடுமையத்தில் பாங்குடனேதான் பரவலாகச்செய்யே

2317.
செய்துமே ஜெனங்களெல்லாம் பார்த்துஏங்க சிறப்புடனே பொரிகாரமென்னும்முட்டை
கைதனிலே தானெடுத்து மைந்தாபாரு கருவாக முட்டைதனையெடுத்துக்கொண்டு
வெய்தமுடன் மந்திரங்கள் மிகவுங்கூறி வேதாந்த தாய்தனையே மனதிலுண்ணி
பக்குவமாய் முட்டைதனை மணலிற்பரவி பட்சமுடன் ஜலமதனைவிட்டிடாயே
2318.
விட்டவுடன் முட்டையது கரைந்துபோகும் வேகமுடன் காரமது ஒன்றுங்காணார்
சட்டமுடன் மெய்யான முட்டைதன்னை சார்பாக கூப்பிடுதூரமப்பா
தட்டாமல் மண்மறைவில் புதைத்துப்போடு தாரணியில் ஒருவருக்குந் தெரியவேண்டாம்
திட்டமுடன் சீஷனைக்கொண்டெடுக்கச்சொல்லு தீரமுடன்தானெடுத்து தருவான்பாரே
2319.
தருகையிலே சனங்களெல்லாம் மிகநடுங்கி தாரிணியி லிவர்போல சித்தருண்டோ
கருமான மிகவறிந்த சித்தர்தாமும் காசினியில் மாந்திரிகன் இவனென்பார்கள்
உருதெரியா மையுடைய ராசயோகன் வுலகத்தில் சித்தனிவன் வசியராஜன்
பெருமைபுகழ் படைத்தொரு தீரனாகும் பேருலகில் சித்தனைப்போல் உறுகாணாரே
2320.
காணாமல் ஜெனங்களெல்லாம் மிகதவிப்பார் கண்டவர்கள் விண்டவர்கள் யாருமில்லை
தோணாமல் கருவான முட்டையெங்கே தோற்றமுடன் கண்டோமே கண்ணற்காணோம்
வீணாகப்பேசியல்லோ மாந்தரெல்லாம் விருதாவாய் தாறுமாறாய் புத்திகெட்டு
நாணமுடன் இறந்தேங்கி நடுக்கமுற்று நாதாக்கள் மாயவலை சிக்கினாரே
2321.
சிக்கவே முட்டைதனை யாருங்காணாச் சிறப்புடனே தானெடுத்து காண்பித்தேதான்
தக்கவே மந்திரங்கள் ஒன்றுசொல்லி சார்புடனே கைமறைப்பு வதீதஞ்செய்வார்
சொக்கவே மறைப்பெல்லாம் சூட்சமாகச்சூட்டினேன் மாந்தர்க்கு உரைத்தோம்யாமும்
நிக்கவே லோகத்தில் மறைப்பு நிசமான வித்தைபோலாகுந்தானே
2322.
தானான கழற்சிக்காய் வாயிரந்தான் சதமுடனே யோகமது பொடியை மைந்தா
வேனான பொடிதனிலே மைபோலாட்டி விருப்பமுடன் பழச்சாற்றாலரைத்து மைந்தா
கோனான குருபரணைத் தனைநினைத்து குமுறவே கழற்சிக்காய் மேலேபூசி
பானான ரவிதனிலே காயவைத்து பாங்குடனே கோட்டையது கட்டிடாயே
2323.
கட்டவென்றால் கழற்சிக்காய் கோட்டையாகும் கருவான கார்தமது குச்சிக்கேற்றி
திட்டமுடன் குச்சிதன்னால் கோட்டைதன்னை திறமுடனே தானடிக்க கலைந்துபோகும்
மட்டமென்ற மண்மேலே ஓடிப்பாயும் மகத்தான கழற்சிக்காய் கிட்டிக்காணும்
பட்டவுடன் காந்தமது தானிழுக்கும் மகத்தான சித்துயிது வதீதந்தானே
2324.
அதீதமென்ற வித்தையது யாருங்காணார் ஆச்சரியக் கொம்புக்குள் காந்தவித்தை
கதீதமென்ற காந்தத்தால் சகலசித்தும் கருவாக வாடுதற்கு காணியாகும்
ததிதமென்ற கருவாளி காண்பான்பாரு சூட்சாதி சூட்சமத்தை காணான்மாடே

2325.
மாடான மாடுகள்தான் சண்டிமாடு மானிலத்தில் காண்பதுவும் அருமைமெத்த
கோடான கோடிமுனி ரிஷிகள்வேதை குவலயத்தில் கூறவுந்தான் முடியாதப்பா
பாடான வின்னமொரு கருமானங்கேள் பாடுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
நீடான முட்டையது காற்றில் போக நீணிலத்தில் பறப்பதற்கு வினோதங்கேளே
2326.
கேட்கவே வினோதமென்ற வித்தைசொல்வேன் கெவுனமுடன் கருவாளியானால்கேளு
நீட்கமுடன் முட்டைதனில் கதிர்சில்லாக்கி நீடான பனிஜலத்தை யதற்குள்தாக்கு
நாட்கமல செந்தாழம் பூரசத்தை நளினமுடன் தானெடுத்து வுளுந்துசீலை
ஆட்கமுடன் வலுவாகத் தானமைத்து அப்பனே ரவிதனிலே வைத்திடாயே
2327.
வைக்கவே கதிரோனின் சுடரினாலே வாகான முட்டைக்குள்ளிருந்த நீராம்
மெய்க்கவே சுடர்கண்டபோதேயப்பா மேலெழும்பி முட்டையது பறக்கும்பாரு
மொய்க்கவே பூமிவிட்டு பறக்கும்போது மேன்மையுடன் மாந்தரெல்லாம் நடுங்குவார்கள்
செய்க்கவே வாச்சரியம் இந்தப்போக்கு ஜெகதலத்தில் கிட்டாது சிவயோகிக்கே
2328.
யோகியென்றால் ஞானத்தின் மகிமைவேண்டும் யோசனைகள் மிகவேண்டும் வாசிவேண்டும்
போகமென்ற மாய்கையனை விட்டொழிக்க பொருமையுடன் சிவயோகம் காணவேண்டும்
பாகமது யெப்போதும் கைவிடாமல் பார்திபனே செய்குபவன் யோகியாவான்
சாகமுடன் காலாங்கிதனைநினைத்து சாற்றினேன் போகரிஷி பண்பாய்த்தானே
2329.
பண்பான வித்தையது சாற்றக்கேளு பாரினிலே மாணாக்கள்பிழைக்கவென்று
கண்பான ஈசலது மரக்காலாகும் கருவான புத்தீசல் தானெடுத்து
நண்பான பானைக்குள் சில்லுபோட்டு நலமுடனே குழித்தயிலம் இறக்கிக்கொண்டு
திண்பான தயிலமதில் கீறைவித்தை தெளிவுடனே முட்டைக்குள் வூறப்போடே
2330.
போட்டுமே மண்டலந்தான் சென்றபோது பெருமையுடன் தானெடுத்து மைந்தாபாரு
வாட்டமுடன் சீஷவர்க்கம் மிகவழைத்து வாகுடனே போசனங்களுண்பதற்கு
கூட்டமுடன் சித்தர்முனி நாதர்க்கூட்டம் குறிப்புடனே வாயிரம்பேர் சூழ்ந்திருக்க
வாட்டமுடன் மணலதனைக்கொட்டி மைந்தா பட்சமுடன் விரைதனையே தெளித்திடாயே
2331.
தெளித்தவுடன் ஜலமதனைக் விட்டுமைந்தா தெற்றமுடன் இருசாமப்பொழுதில்தானும்
நெளித்துமே விரையெல்லாம் முளைகிளம்பி நேர்ப்புடனே சிறுசெடியா மங்குலந்தான்
களிப்புடனே சித்தர்முனி ரிஷிகளுக்கு கண்கொள்ளாக்காட்சியுடன் கருவுமாகும்
துளிர்ப்புடைய கீரைவித்தை சொல்வார்தான் சுந்தரனே போகரிஷி சொல்லிட்டேனே
2332.
சொல்லவே வசியமொன்று சொல்லக்கேளு சூரியின்றன் வடவேருக் காப்புக்கட்டி
வெல்லவே முட்பொலியுந்தான்கொடுத்து வேதாந்தத் தாய்தனையே மனதிலுன்னி
செல்லவே தலைப்பிள்ளை மஞ்சத்தானும் சிறப்பான கருங்கொன்றை வடவேர்தானும்
கொல்லனுட மூலிதன்வடவேர்தானும் கூறான பேய்மிரட்டி வடவேர்தாமே

2333.
தரமான கருவாளி வடவேர்தானும் சார்பான வெள்ளெருக்கன் வடவேர்தானும்
கோமான கண்ணனிட வடவேர்தானும் குறிப்பான வழிஞ்சியிட வடவேர்தானும்
வாமான காட்டத்தி வடவேர்தானும் வாகான பராயனிட வடவேர்தானும்
தூமான குமிழினிட வடவேர்தானும் துப்புறவாய் மேனியிட வடவேர்தாமே
2334.
வடவான வேருடனே ஒன்றாய்க்கூட்டி வளமையுடன் பெரும்பாண்டம் தன்னிலிட்டு
குடவான பானைக்கு துவாரமிட்டு கொப்பெனவே வேறெல்லாம் பாண்டத்திட்டு
திடமான சீலையது வலுவாய்ச் செய்து தேற்றமுடன் குழித்தயிலம் வாங்கியேதான்
தடமான தயிலமதை எடுத்துமைந்தா தாக்குடனே கலசத்தில் வைத்திடாயே
2335.
அடைத்துமே தயிலமதை யுரைக்கக்கேளு அப்பனே சுழல்கண்டுபூதவண்டு
படையானை குழியானை மரவட்டைதானும் பாகமுடன் செவ்வட்டை மரவுணிதானப்பா
கடையான தம்பலமாம் பூச்சிதானும் கருவான வல்லூறு பிச்சுதானும்
கடையான செம்போத்து பிச்சுதானும் சார்வான தேவாங்குபிச்சுதானே
2336.
பிச்சான பச்சோனான் பிச்சுதானும் பீரான வார்த்தையுட பிச்சுதானும்
மச்சான சாரையுட பிச்சுதானும் மகத்தான மயிலினுட பிச்சுதானும்
கச்சான கரும்பூனை பிச்சுதானும் கருவான வவ்வாளின் பிச்சுதானும்
பச்சான பாம்பினுட பிச்சுதானும் பாங்கான வாணையிட பிச்சுமாமே
2337.
ஆமேதான் இத்தனையும் ஒன்றாய்கூட்டி அப்பனே முன்சொன்ன தயிலத்தாட்டி
வேமேதான் கபாலமென்ற ஓட்டிலப்பா விருப்பமுடன் மைபிடித்து செப்பக்கேளு
நாமேதான் சொன்னபடி மையின்மார்க்கம் நலமுடனே பரணைதனில் பதனம்பண்ணு
போமேதான் நிர்வானி பூசைசெய்து பொங்கமுடன் உருவேற்றி பூசிப்பாயே
2338.
பூசித்து மைதனையே எடுத்துமைந்தா புகட்சியுடன் லாடமதில் திலதத்தீட்டி
நேசித்து ராஜரிடம் சென்றாயானால் நேர்மையுடன் நினைத்ததெல்லாம்வசியமாகும்
காசினியில் உன்னைப்போல் சித்தனுண்டோ கைலாசம்காணியது வுனக்கேயாகும்
வாசியுடன் யோகநிலை நின்றுகொண்டு மகிழ்ச்சியுடன் சதாநித்தம் வாழலாமே
2339.
வாழவே வின்னமொரு மார்க்கம்பாரு மகத்தான விலங்கைபுரி வேந்தனப்பா
நீழவேதான் செய்தகுளிகையப்பா நீணிலத்தில் மானிடர்க்கு கூறலாச்சு
தாழவே செம்மண்ணம் பூமிதன்னில் தயவுடனே சென்றுமல்லோ குழிதான்வெட்டி
ஆழவே குழிதனிலே ஈச்சம்வெல்லம் அப்பனே வரவுவைக்கல் கலந்துபோடே
2340.
போடவே யிராமுழுதும் சென்றபின்பு பொங்கமுடன் காலையில் பார்த்தபோது
நீடவே பூநாகம் சூழ்ந்திருக்கும் நெடிதான பூநாகமெடுத்துமைந்தா
வாடவே திரியாதே பூநாகத்தை வாகுடனே தானெடுத்து மண்ணைப்போக்கி
கூடவே புளிப்பென்ற மோறுதன்னால் குணமான மண்ணையெல்லாம் போக்கிடாயே

2341.
போக்கியபின் பூநாகமெடுத்துபாலா பொருமையுடன் கெந்தியது சமனாய்ச்சேர்த்து
நோக்கமுடன் ஆறுவகைசெயநீர்தன்னால் நொய்யவே தானரைப்பாய் நாலுசாமம்
ஆக்கமுடன் பில்லையது லகுவாய்ச்செய்து அப்பனே ரவிதனிலே காயவைத்து
ஊக்கமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து வுத்தமனே புடம்போடக் கருப்புமாமே
2342.
கருப்பான மருந்துக்கு நாலிலொன்று கருத்துடனே காரமது பொரித்துப்போடு
தெருப்பான வஜ்ஜிரமாங் குகையில்வைத்து தெளிமையுடன் தானடைத்து சீலைசெய்து
நெருப்பான வஜ்ஜிரமாமூலையில்வைத்து நேர்மையுடன் தானுருக்கி யெடுத்துப்பாரு
பொருப்பான ரவியதுதான் புகலப்போமோ பொன்னவனே யுனக்கீடா ருலகில்தானே
2343.
தானவனே பூநாக சடசம்புதன்னால் தாரிணியில் தீகமென்ற வித்தைசெய்வார்
வானவனுஞ் செயவரியான் மானிலத்தில் வளமையுடன் இப்பாகம் யாரும்சொல்வார்
ஆனதினால் வுந்தனுக்கு கருவுசொன்னேன் அப்பனே கருவுளவு வெளியிடாதே
பானயெனும் பரணையது செய்துபாலா பஞ்சமுடன் சூதமதை நிறையவூத்தே
2344.
ஊத்தியபின் மேல்திருவல் கொண்டுமூடி வுத்தமனே சாதமது வேகும்போது
தோத்தவே மத்தினடு சொருகிப்போடு சுந்தரனே யிறினபின் னெடுத்துப்பாரு
காத்திரமாம் பரணையது திருவல்தன்னைப் பக்குவமாய்த் தானெடுக்கும் சூதந்தானும்
மாத்தமென்ற சத்துருவால் மடிந்துபின்னும் மாசற்ற வெண்ணையது போலாம்பாரே
2345.
பாரேதான் வெண்ணைதனை யெடுத்துக்கொண்டு பாகமுடன் மத்தங்காய் வுள்ளமுத்தி
சாரமுடன் சுண்ணாம்புச் சீலைசெய்து சட்டமுடன் நான்கெருவிற் புடத்தைப்போடு
தீரமுடன் தானெடுத்துப் பார்க்கும்போது திறலான சூதமது கற்போலாகும்
காரமது யின்னமுந்தான் ஏறுதற்கு கருவாகச் சாரனையும் இன்னமேற்றே
2346.
ஏற்றவே இப்படியே வஞ்சுபத்து யெழிலாகப் புடம்போடக் கட்டிப்போகும்
சீற்றமென்ற மேற்கவசந் தன்னைநீக்கி சிறப்புடனே தானெடுக்கக் கல்லேயாகும்
மாற்றமென்ற சூதத்தின் கல்லேயாகும் மார்க்கமுடன் கல்லான குளிகைதன்னை
கூற்றனென்னும் மாதர்களைக் கூடுதற்கு கொற்றவனே முறைசொல்வேன் குறைசொல்வேனே
2347.
குறையான குளிகைதனை யெடுத்து மைந்தா கோலமுடன் வாய்தனிலே யடைத்துக்கொண்டு
முறையான நாற்சாதிப் பெண்கள்தன்னை மூர்க்கமுடன் அணைத்திடிலோ கோடிபெண்கள்
திறமான மையலது நீங்கியேதான் தேசத்திலுனைக்கண்டால் நடுங்குவார்கள்
சிறைநீக்கி யணைவார்கள் மாதர்தாமும் சிறப்புடனே மன்மதன்போல் லீலைசெய்யே
2348.
செய்யவென்றால் சரீலீலைகிருஷ்ணலீலை ஜெகதலத்தில் யாராலும் முடியாதப்பா
மெய்யான குளிகைதனைப் பதனம்பண்ணு மேதினியில் யாருக்கும் காட்டவேண்டாம்
பொய்யாது எந்தனுட குளிகைமார்க்கம் பூதலத்தில் பெண்களெல்லாம் நடுங்குவார்கள்
மைபூண்டு குளிகையது வாயிலிட்டு மார்க்கமுடன் கெவிளியைப்போல் நீயாவாயே

2349.
ஆகவென்றால் குளிகையது செய்யவேண்டும் அப்பனேகுளிகைக்கு யின்னஞ்சொல்வேன்
சாகமுடன் வெள்ளியென்ற ஈயந்தன்னை சட்டமுடன் சேரெடுத்து உருக்கித்தீரு
பாகமுடன் குளிகைதனை யிட்டுப்பாரு பதிவான நீரையெல்லாம் வுண்டுமல்லோ
வேகமுடன் மேல்தெரித்து குளிகைதானும் விரைவுடனே தானெகிரி விழுகுந்தாமே
2350.
தாமான குளிகைதனை பதனம்பண்ணு தயவுள்ள சிறுபாலா செப்பக்கேளு
சாமான மாகியல்லோ மகிழ்ந்திடாதே சற்பனைகளுபசாமதிகங்கொண்டு
சீமானாய் பெயர்கொண்டு பூதலத்தில் யென்மகனே வெள்ளிதனை விற்றுமாறி
பூமான்போல் பூதலத்தில் வாழ்ந்துகொண்டு புகழ்ச்சியுடன் யெந்நாளும் பொருந்திடாயே
2351.
பொருந்தவே வின்னமொரு புதுமைகேளு பொலிவான குளிகைதனை எடுத்துமைந்தா
திருந்தவே சூதமிடை கெந்திசேர்த்து திறமுடனே மனோசிலையும் காலதாக
வருந்தவே தாளகமும் காலதாகும் வாகான வீரமது வரிக்காலாகும்
குருந்தவே பொற்றலையின் சாற்றாலாட்டி குமுறவே தானரைப்பாய் சாமம்நாலே
2352.
நாலான சாமமது வரைத்தபோது நலமான மைனம்போலாகும்பாரு
காலான ரவிதனிலே காயப்போடு கருத்துடனே பொடியாகச் செய்துகொண்டு
வேலான காசிபென்ற குப்பிமைந்தா விபரமுடன் தான்வாங்கி செப்பக்கேளு
சீலான குப்பிக்குள் சிலையேழு சிறப்புடனே தான்செய்து ரவியில்போடே
2353.
போடவே குப்பிதனை எடுத்துமைந்தா புகழாக மருந்தையெல்லாம் குப்பிக்காற்றி
நீடவே மாக்கல்லால் கொண்டுமூடி நினைவாகத் தளவாயாஞ் சட்டிதன்னில்
நாடவே மணல்தனைக் கொட்டிபாலா நன்மையுடன் குப்பிதனை நடுமையத்தில்
சூடவே குப்பிநடுமையம்வைத்து சூட்சமுடன் மணல்தனை மேலேகொட்டே
2354.
கொட்டியே மேற்சட்டிகொண்டுமூடி கோலமுடன் சீலையது வலுவாய்ச் செய்து
திட்டமுடன் தானெரிப்பாய் எட்டுசாமம் திகழாக வாறினபின் திறந்துபாரு
சட்டமுடன் செந்தூரமென்னசொல்வேன் சார்பாக வருணன்போல் காந்தியுண்டாம்
பட்டசெம்பு நாலுடனே வெள்ளியாறு பதமாகத்தான் சேர்த்து வுருக்கிடாயே
2355.
உருக்கியே வாரடித்துப் புடத்தைப்போடு உத்தமனே செம்பதுவும் அகன்றுபோகும்
செருக்கியே வெள்ளியெடைகாலத்தொன்று செம்மையுடன் தான்சேர்த்து வுருக்கித்தீரு
பெருக்கமுடன் இடைகண்டு இனமும்கண்டு பேரான சேர்வைமுதல் உளவுகண்டு
நெருக்கமுடன் மாற்றதுவும் மேவலாகி நேர்மையுடன் பசுமையது வெட்டதாமே
2356.
எட்டான பொன்னதுவும் அதிகங்காட்டும் எழிலான மின்னமொரு கருமானங்கேள்
திட்டமுடன் செந்தூர மனுபானத்தில் தீரமுடன் தானருந்த மண்டலந்தான்
குட்டமென்ற பதினெட்டு மகன்றுபோகும் கூறானமேகமது துள்ளியோடும்
சட்டமுடன் கயரோகம் நீங்கிப்போகும் சாராது எந்நாளும் தளிர்ச்சியாமே

2357.
தாளிராகும் தேகமது வன்னிமீறும் சதாகாலம் சைதன்னியமதிகங்காட்டும்
குளிராது தேகமது கனலோவீசும் குடியோடும் ரோகமெல்லாம் துலைந்துபோகும்
நளிரான நரம்புவளி பிடரிநோயும் நாடாது திரேகம்விட்டு நளினமாகும்
பளியான காந்தியது மிகவேவீசும் பான்மையாம் தேகமது பொன்னுமாமே
2358.
பொன்னான தேகமது காந்திமெத்தப் பொங்கமுடன் வாசியது கீழ்நோக்காகும்
மன்னவனே வஷ்டாங்கந் தன்னிற்சென்று மானிலத்தில் நீயுமொரு சித்தனாவாய்
தென்பொதிகை சித்தனிலே நீயொன்றாக தேசத்தில் சிவயோகியாக வாழ்வாய்
பன்னவே காலாங்கி நாயர்பாதம் பணிந்துமே போகரிஷி பாடினேனே
2359.
பாடியே வின்னமொரு மார்க்கம்பாரு பாங்கான புழுகென்ற குளவிதன்னை
நாடியே கானகத்தில் தேடும்போது நலமான குளவிகளாம் விருட்சந்தன்னில்
தேடியே பார்க்கையிலே மண்கூடாலே திரளான கூடதுதான் கட்டிருக்கும்
கூடியே மண்ணுக்குள் திறந்துபாரு குறிப்பான மெழுகதுவும் உண்டாம்பாரே
2360.
பாரேதான் மெழுகெடுத்து துருசுவெள்ளை பதமுடனே தான்சேர்த்து மெழுகதாக்கி
நேரேதான் ரவிதனிலே பத்துக்கொன்று நேர்மையுடன் தானுருக்கிக் கொடுத்துப்பாரு
வேரேதான் கரியோட்டி லூதிப்போடு வேகமுடன் செம்பதுவும் வர்ணங்காணும்
கூரேதான் மதிதனிலே நாலுக்கொன்று கொடுத்துருக்க மாற்றதுவும் மாறதாமே
2361.
ஆறான மாற்றதுவும் சொல்லப்போமோ அப்பனே சித்தருட மகிமைகோடி
கூரான பொன்தனையே செய்யுமார்க்கம் குருக்குவழி நெடுக்குவழி கோடிக்கோடும்
பேரான சாபத்தால் சபிப்பார்சித்தர் பேருலகில் வாதமது புகலப்போமோ
நேரான கல்லானைச் சுக்கான்கல்லாம் நேர்மையுடன் தானுரைப்போம் நுணுக்கந்தானே
2362.
தானான சீனபதி சுக்கானப்பா தகைமையுள்ள சேரதுதான் பத்ததாகும்
கோனான கொங்கணவர் வைத்தபாகம் கூறுவேன் மாணாக்கள் பிழைக்கவென்று
வேனான சுக்கானும் பூநீரோடே வேகமுடன் வேகவைத்து தெளிவிருத்து
பானான காரமது கூடச்சேர்த்து பளிங்குபெற மண்சட்டி காய்ச்சிடாயே
2363.
காய்ச்சியே மூதிரை யுருக்கிக்கொண்டு கருவாகக் கருவதனில் மெழுகுகட்டி
பாய்ச்சலுடன் பலவகைக்குக் காரமிட்டுப் பாங்குடனே வுருக்கையிலே கண்விட்டாடும்
தேய்ச்சலுடன் பலகைபோல் கருதான்கட்டி செம்மியே வுருக்கினமாய் வார்ப்பாயானால்
மாச்சலென்ற படிகம்போல் பாயும்பாரு மகத்தான கண்ணடியாகுந்தானே
2364.
கண்ணடி பிறக்கும்வகை யின்னஞ்சொல்வோம் கருத்துள்ள மாந்தர்களே கழறக்கேளும்
சுண்ணமென்ற பூநீரால் விளையுமார்க்கம் சூட்சாதி சூட்சமப்பா சொல்லப்போமோ
வண்ணமுள்ள கண்ணாடி வர்ணம்சொல்வோம் மயங்காதே யிரும்பினுட மண்தானப்பா
திண்ணமுடன் பூநீரில் சேர்த்துருக்க புகழான கண்ணடி வர்ணமாச்சே

2365.
வர்ணமுடன் கண்ணடி யனந்தமார்க்கம் வாகுடனே செய்யலாம் கோடிவித்தை
வர்ணமுள்ள பாத்திரங்கள் இதனாலாகும் வளமான புட்டிமுதல் குப்பிமார்க்கம்
வர்ணமுள்ள வுளக்கொளிவு இதனாலாகும் வாகான பீங்கான்கள் இதனாலாகும்
வர்ணமுள்ள மணிவகைகள் இதனாலாகும் மார்க்கமுள்ள திவாபரண மிதனால்தாமே
2366.
தாமான பூநீரு விபரஞ்சொல்வோம் தாக்கான மனிதனுக்கு வலைதான்கட்டி
சாமான மானதொரு ஜலத்தைவிட்டு சண்ணலுடன் தான்கரைத்து சாடிதன்னில்
தேமமுடன் தெளிவிருத்து மறுபாண்டத்தில் தெளியவே வடிகொண்டுகாய்ச்சும்போது
சாமமென்ற வர்ணமதிகங்காட்டும் சார்பாக பின்னுமொரு பாண்டம்போடே
2367.
போடவே பூநீரை முன்போல்காய்ச்சி புகழாகத் தானிறக்கி யெடுத்துப்பாரு
நீடவே பூநீரும் வெளுப்புமாகிப் நிலையான வெளுப்புக்கு முதற்றரம்தான்
கூடவே வுருக்குக்கு காலன்கூட்டி கொப்பெனவே எடுத்துப்பார் தவளம்போலாம்
சாடவே தவளத்தை பின்னும்பாண்டம் தகைமையுடன் தான்போட்டு காய்ச்சிடாயே
2368.
காய்ச்சியே முன்போல வடிதான்கொண்டு பாகமுடன் தான்காய்ச்சி எடுத்துப்பாரு
பாய்ச்சலுடன் பின்னுமோர் பாண்டம்விட்டு மறுபடியும் கனலேற்றிக் காய்ச்சும்போது
பேச்சலென்ற நீச்சதுவு மட்டுமாகி எழிலான படிகம்போல் வர்ணமாகும்
வாச்சலுடன் வர்ணமது பேதாபேதம் வகுக்கலாம் வெகுகோடி வழிகளாமே
2369.
வகுக்க வென்றாலிதனாலே வெகுவினோதம் வளமையுடன் செய்யலாம் பூமிதன்னில்
வகுக்கலாம் பிருத்திவியில் பிரந்தவர்ணம் வாகுடனே செய்யலாம் பூநீராலே
வகுக்கலாம் வரும்பொன்மணி வாபரணங்கள் வர்ணமுடன் செய்யலாம் கோடிபாதை
வகுக்கலாம் ஒளிவடப்பூநீராலே வண்ணவண்ண வதங்களெல்லாம் நாட்டலாமே
2370.
நாட்டலாம் சீனபதி நடுமையத்தில் நலமான பூநீரு விபரஞ்சொல்வோம்
நோட்டமுடன் பூநீராம் மண்ணையப்பா நுணுக்கமுடன் தானெடுத்துக் காய்ச்சும்போது
தாட்டிகமா யுவர்மண்ணு சுண்ணாம்பாலே தளிருடனே பிசைகிக்கு களிப்புண்டாகும்
வாட்டமுடன் குயவனார் பாண்டமொய்யாய் வளமையுடன் தான்வகுக்க வளமைகேளே
2371.
கேட்கவென்றால் பூநீருசுண்ணாம்புதன்னை கெணிதமுடன் சக்கரமாமாலைதன்னில்
தீட்கமுடன் தானரைப்பாய் மைபோலாக திறமுடனே களிப்புபதமாகுமட்டும்
வேட்கமல வாலையுட கற்றோரங்கள் வெளிப்படையில் பொங்குகின்ற களிப்புதன்னால்
பூட்கமல வெள்ளையென்ற பீங்கானாச்சு புகழான வடிவண்டல் மாட்டியாச்சே
2372.
ஆச்சென்று விடுகாதே மைந்தாகேளு அன்புடனே பின்னுமந்த வாலைதன்னில்
மாய்ச்சலுடன் வதற்கடியில் நிற்கும்மண்ணு மகத்தான மட்டியென்ற பீங்கானாகும்
பாய்ச்சலுடன் வதற்கடியில் நிற்கும்மண்ணு பாங்கான மட்டியென்ற பீங்கானாமே

2373.
ஆமேதா னிந்தவண்ண மாலைக்குள்ளே அப்பனே பிரிவினைகளாகும்பாரு
நாமேதான் சொன்னபடி பீங்கான்மார்க்கம் நாட்டிலே செய்வார்கள் கோடிபாதை
வேமேதான் செய்தாலும் நாட்டுள்வேதை வேகவைத்தால் மண்ணதுவும் வெடியுண்டாகும்
கோமானாம் சாலியன்றன் வேதையென்பார் கொற்றவனே சீனபதிக் கொப்பதாமே
2374.
ஒப்பான வேதையிது மனந்தமுண்டு ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
செப்பான வகலதனைப்போல் பாண்டங்கண்டார் செயலான சாலியன்றன் பாண்டங்கண்டார்
மெப்பான பாண்டமது மண்பாண்டங்கள் மேவலுடன் செய்குவார் வதீதமார்க்கம்
துப்பான பாண்டங்கள் மிகவுஞ்செய்வார் துறைமுகமுங் காணார்கள் சித்தர்பாரே
2375.
பாரேதான் ராசாக்கள் கண்டதில்லை பாரினிலே வெகுகோடி ராஜரப்பா
சீரேதான் பாக்கியங்கள் பெற்றுமென்ன தப்புடனே பலபணிகள் பூண்டுமென்ன
நேரேதான் திருமுகமுங் கண்டதில்லை நீணிலத்தில் வசீகரத்தைப் பார்த்தோரில்லை
சேரான செம்பதனை தகடதாக்கி சிறப்புடனே தான்துலக்கி முகம்பார்த்தாரே
2376.
பார்த்தாரே ராஜாதிராஜரெல்லாம் பளிங்குடனே திருமுகத்தைக் கண்டதில்லை
நேர்த்தியுடன் பணிதிபூண்டு நீணிலத்தில் திருமுகம் மங்கலாக
பூர்த்தியுடன் பிரகாசமான ஜோதிபூவுலகில் கண்டவரும் ஒருவரில்லை
கார்த்தியுடன் மங்கலாய் முகத்தைக் கண்டார் காசினியில் ராசர்களும் சித்தர்தாமே
2377.
காணாமல் போனார்கள் ராசரெல்லாம் காட்சியுடன் கண்காட்சிக் கண்டதில்லை
வீணாகத் தானலைந்தார் முனிவர்சித்தர் வெகுகோடி யேமவித்தை செய்தாரப்பா
பூணாரம் பூண்பதற்கு பொன்னுஞ்செய்தார் பூதலத்தில் அழகுதனைப்பார்ப்பதற்கு
தோணாமல் தானிருந்தார் சித்தரப்பா தொல்லுலகில் மறந்திட்டார் முனிவர்தாமே
2378.
முனியான காலாங்கி தாள்பணிந்து முயற்சியுடன் அடியேனும் குளிகைபூண்டு
தனியாக யானுமல்லோ சீனஞ்சென்றேன் தகமையுடன் பூநீரைக் கண்டறிந்தேன்
பணியான தேசமது சீனமார்க்கம் பான்மையுடன் எத்தொழிலுஞ் செய்வதற்கு
தொனியான தேசமென்று நிட்சயித்து தொடங்கினேன் கண்ணடி காய்ச்சவென்றே
2379.
என்றுமே சித்தரெல்லா மனேகவித்தை எழிலாகச் செய்தார்கள் பூமிதன்னில்
சென்றுமேயானுமல்லோ சீனந்தன்னில் சிறப்புடனே கண்ணடி காய்ச்சவென்று
குன்றுமலை குகைதனிலே வாராய்ந்தேதான் கோடானகோடிவளம் கண்டாராய்ந்து
நின்றுமே சாத்திரத்தின் உளவுபார்த்து நிர்மித்தேன் கண்ணடி மார்க்கந்தானே
2380.
மார்க்கமுடன் கண்ணடிக் காய்ச்சிவிட்டேன் மயங்காமல் பூநீரைக்கண்டறிந்தேன்
தீர்த்தமுடன் வட்டவெளிசேமித்தேன்யான் திறமுடனே பளிங்குயென்ற வட்டஞ்செய்தேன்
வார்க்கமுடன் கருக்கட்டி வளவுசெய்தேன் வளமுடனே சூதமுடன் உளவுகண்டேன்
பார்க்கையிலே சூதமென்ற கிணறுகண்டேன் பாகமுடன் கண்ணடிக் கேற்றலாச்சே

2381.
ஆச்சென்று விடுகாமல் கண்ணாடிக்கு அப்பனே காரமென்ற யீயந்தன்னால்
பூச்சென்ற கட்டிக்கு ரசச்தைதாக்கிப் புரட்டினேன் கண்ணாடிக்குள்ளேயப்பா
பேச்சென்ற திருமுகம் காணலாச்சு பேறான சுடரொளிபோல் முகமுங்கண்டேன்
மாச்சலுடன் வட்டொளிதன்னை யானும் மயங்காமல் கண்டறிந்தேன் புனிதவானே
2382.
புனிதமுடன் கண்ணடி முடித்தபோது புகழான சித்தர்முனி ராசரெல்லாம்
கனிவுடனே கண்ணடிப் பார்த்தபோது கட்டழகா யெந்தனையும் வரவழைத்து
நனியுடனே எந்தனுக்கு உபசாரங்கள் நாட்டமுடன் செய்துவித்து ஆசிர்மித்து
முனிபோன்ற ரிஷிசித்தர் எல்லாந்தானும் முயற்சியுடன் புத்திமான் என்றிட்டாரே
2383.
புத்திமான் என்றுமே சந்தோஷித்து புகழ்ச்சியுடன் காலாங்கி சீஷனல்லோ
சத்தியமா யுன்னொருவன் செய்வான்மூனே தாரணியிலஃ செய்வதற்கு புத்தியுண்டோ
வெற்றியுள்ள குருவுகந்த சீஷன் உலகத்திலுனைப்போல ஒருவருண்டோ
பத்தியுடன் எந்தனுக்கு உபசரங்கள் பலகாலும் பாவித்தார் பான்மையாமே
2384.
பான்மையாம் உபசாரம்பெற்று யானும்பலபலவா மாச்சரிய வித்தையெல்லாம்
மேன்மையுடன் சீனபதி யுலகத்தோர்க்கு மகிழ்ச்சியுடன் செய்துவைத்தேன் கோடிவித்தை
மாண்மையுடன் பூநீரை காண்பார்சித்தர் மார்க்கமுடன் துறைவழியுங் காணார்தாமும்
காண்மையுடன் காலாங்கி கடாட்சத்தாலே கண்டறிந்தேன் கண்ணடிகாய்ச்சத்தானே
2385.
தானான கற்பூர வைப்புசொல்வேன் தாரணியில் சித்தர்முனி செய்ததில்லை
பானான பழுப்புநிற கற்பூரந்தான் பாலித்தார் கோடிமுறைபாலித்தார்கள்
மானான கற்பூரம் பளிங்குதானும் மார்க்கமுடன் செய்வதற்கு மன்னாகேளு
கோனான குருவருளால் காலாங்கிதம்மை குறிப்புடனே யான்வணங்கி கூறுவேனே
2386.
கூறுவேன் வெள்ளையென்ற குக்கில்தானும் குறிப்புடனே பாரமதுவொன்றேயாகும்
நீறுடைய பூநீறு பாரங்கல்தான் நெடிதான வெடியுப்பு பாரங்கல்தான்
சேறுடைய சீனபதி கண்ணம்கால்தான் சிறப்பான சீனமது பாரங்கல்தான்
நாறுடையத் தாழையுட சாறுவிட்டு நலமாகக் காய்ச்சியெடு பதமாய்த்தானே
2387.
பதமுடனே காய்ச்சுகையில் கருப்பட்டைக் கருத்துடனே தயிலமதுகூடச்சேரு
நிதமுடனே கற்பூரந்தயிலந்தானும் நேர்ப்புடனே தாழைமலருப்பு கூட்டி
பேதமில்ல யேலரிசி தயிலந்தானும் பேரான பன்னீரும் விட்டுக்காய்ச்சி
பாதமுடன் கருப்பட்டி ஒன்றுசெய்து பாகுடனே காய்ச்சியதை விட்டிடாயே
2388.
விட்டவுடன் மற்றாநாள் எடுத்துப்பாரு வேகமுடன் பளிங்கென்ற கற்பூரந்தான்
சட்டமுடன் பலகைபோல் கட்டியாகி சார்புடனே தான்திரண்டு இருக்கும்பாரு
அட்டதிசை தான்புகழும் பூரமாச்சு ஆச்சரியம் நாதாக்கள் செய்வாருண்டோ
மட்டமென்ற கற்பூரம் செய்வாரப்பா மானிலத்தில் சித்தர்முனி செய்வார்பாரே

2389.
பாரப்பா கற்பூர மனேகமுண்டு பாங்குடனே செய்குவார் கோடாகோடி
நேரப்பா சீனபதி கற்பூரந்தான் நீனிலத்தில் செய்பவரு முலகிலுண்டோ
சேரப்பா வெகுகோடி சித்தரப்பா செய்தார்கள் கற்பூரம் வினோதமாக
ஆரப்பா யெனைப்போலச் செய்ததில்லை அப்பனே யானுமல்லோ முரைசெய்தேனே
2390.
செய்தேனே வின்னமொரு கருமானங்கேள் செயலான பிறாங்குவித்த செப்பக்கேளு
மெய்யான வித்தையது சூட்சவித்தை மேல்போகும் வித்தையது கூண்டுவித்தை
பொய்யான வித்தையது சொல்லப்போமோ பூதகத்தில் கருவாளிகண்டுசெய்வான்
வெயில்காணும் ஆகாஷவித்தையப்பா மேல்போகும் கூண்டினிட வித்தைதானே
2391.
தானான வித்தையிது சொல்வேன்கேளும் தகைமையுள்ள இரும்பினிலே காந்தஞ்சேர்த்து
பானாகத் தானுருக்கிக் கம்பியாக்கி பாலகனே சிறுகம்பி நூல்போலாக்கி
வேனாக கூண்டுதான் வடிதான் பத்து விருப்பமுடன் நீளமது வடிதான்பத்து
மானாக நாற்சதுரமாக்கியல்லோ மார்க்கமுடன் கம்பியால் கூண்டுகட்டே
2392.
கட்டயிலே சுற்றிலும் தூணிருத்திக் கருத்துடனே நடுக்கம்பி சதுரமிட்டு
தோட்டில் போல்தான்சமைத்து சுடர்கள் வைக்கசூட்சமுடன் கம்பிக்குள்ளேமாட்டி
சட்டமுடன் சுற்றிலும் நாற்பட்டாலே சாங்கமுடன் தானமைத்து கிளிபோல்கட்டி
திட்டமுடன் அடிவாசல் தாள்திறந்து தீர்க்கமுடன் மேல்வாசல் மூடிப்போடே
2393.
போட்டவுடன் கற்பூரத் தயிலத்தூட்டி பொங்கமுடன் விளக்கொளிதான் வைத்துபாலா
நாட்டமுடன் கும்மட்டம்போல் சோடித்து நயமுடனே காற்றடங்கச் செய்துபின்னும்
மூட்டமுடன் வாயுவது உள்ளேதங்கி முயற்சியுடன் மேலெழும்பிப் போகும்பாரு
வாட்டமுடன் கூட்டமதுதான் ஆகாஷத்தில் வளமையுடன் போவதற்குத் திறமுண்டாச்சே
2394.
உண்டான போகையிலே காற்றினாலே ஒகோகோ செல்லுமது வாகாயத்தில்
கண்டாலே மானிடர்கள் காணும்போது கைலாசம் மேருவரை செல்லும்பாரு
அண்டமுடன் ஆகாசமேலேநோக்கி அதற்கப்பால் போகும்வழி காணார்பாரு
விண்டலத்தின் விந்தையிது மாச்சரியமாகும் வெட்டவெளி வித்தையிது சூட்சம்பாரே
2395.
சூட்சமாம் கூண்டுவித்தை துலைதூரமோடும் தொல்லுலகில் கருவாளிகாண்பான்பாரு
மாட்சியுடன் வாயுவினால் பிறந்தவித்தை மானிலத்தில் மன்னவர்கள் மயங்கும்வித்தை
தாட்சியுடன் பாலரெல்லா மாடுவித்தை சதாகால மாடுதற்கு வினோதவித்தை
சூட்சியுட னிரக்காலமாடும்வித்தை மேன்மையுடன் போகரிஷி புகன்றிட்டேனே
2396.
இட்டேனே வின்னமொரு மாற்கம்பாரு வெழிலான கெந்தருவ வித்தையப்பா
சட்டையொன்று இரும்பாலே செய்துகொண்டு சாங்கமுடன் தலைதனிலே குழையமைத்து
சட்டமுடன் சங்கிலியால் கயிருண்டு கருத்துடனே மார்பதனில் தானணிந்து
திட்டமுடன் கழுத்துமிக மூடல்செய்து தெளிவுடனே நாசிவழிக்குழைசெய்வாயே

2397.
குழைதனிலே வடகலைதென்கலைமாற்றி குறிப்புடனே நாசிவழிக்காற்றுசெல்ல
இழையுடனே திரிபோல யிருண்டாக்கி யெழிலான கயிறுக்குள் துவாரமிட்டு
பிழையென்றும் நேராமல் கழுத்தைச்சுற்றி பிடரியிலே முடிச்சியுடன் பின்னல்செய்து
நுழையாமல் சமமதுவும் திருவல்பூண்டு நுணுக்கமுடன் தேகமதில் பூண்டுகொள்ளே
2398.
பூண்டுமே காலடியில் இரும்புமாட்டி பொங்கமுடன் இரும்புக்கு குண்டுவைத்து
நீண்டுமே தானுமல்லோ தாணிகட்டி நெடிதான வாரிதியில் மத்திபத்தில்
தாண்டியே மரத்தினின்று குதிக்கும்போது தாழ்வாகத் தாரிணியைக் காணலாகும்
வேண்டியே ராமுழுது முன்னிருந்து விருப்பமுடன் மேலேறி வருகலாமே
2399.
வருகவென்றால் மேல்நிற்கும் சூட்சந்தன்னை வாகுடனே யோரால்தான் தூக்கினாக்கால்
பெருகலுடன் சமுத்திரத்தை விட்டுமைந்தா பெருமையுடன் கரைவழியே காணலாகும்
துரிதமுடன் கடலுள்ளே சென்றுநீயும் துலையாத பொருள்களெல்லாம் காணலாகும்
பருவமுட னிதிகாசவித்தையப்பா பாகமுடன் போகரிஷி பாவித்தேனே
2400.
பாலித்தேன் இன்னமொரு மார்க்கமப்பா பாருலகில் யாருந்தான் சொன்னதில்லை
சாலித்த கிரேதாயினுகத்திலப்பா சத்தசாகரம் பொங்கிமேல்வழிந்து
வாவித்து கோட்டையது ஜலமேகொண்டு மண்மூடி ஜலமதுவும் மிகவேகோர்த்து
பாலித்து தேசமெல்லா முழுகிற்றென்று பாலித்தார் காலாங்கி எனக்குந்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

2401.
தானான கிராதாயினுகத்திலப்பா சதகோடிசூரியருங் கண்டதில்லை
வேனான ராவணனார் கோட்டைக்குள்ளே வெளிகாணாகோட்டையது ஏழுசுத்து
கோனான என்னையர் காலாங்கிநாயர் குளிகையிட்டு கோட்டைக்குள் சென்றாரங்கே
பானான கிரேதாயினுகத்துசித்தர் பண்புடனே இருந்தாராம் கோடிபேரே
2402.
பேரான சித்தர்முனி ரிஷிகள்கோடி பேருலகில் இருந்தாராம் அனேகம்பேர்கள்
சீரான கோட்டைக்குள் சமாதிகண்டேன் சிறப்பான சமாதிமுன் ராட்சசக்கூட்டம்
பாறான கிங்கிலியர் ஆயிரம்பேர் படைபொருத வென்மேலே வந்தபோது
நேரான காலாங்கிநாயர்தாமும் நெறிமுறைமை வழுவாது நெறிசொன்னாரே
2403.
சொன்னதொரு காலாங்கிநாதருக்கு சொரூபமென்ற சித்தரெல்லாம் ஒன்றாய்கூடி
நன்னயமாயி ராவணனார் கோட்டைக்குள்ளே நலம்பெறவே வதிசயங்கள் யாவுஞ்சொன்னார்
பன்னயமாய் சமாதியிடஞ் சென்றபோது பார்த்தார்கள் கோடிமுனி ரிஷிகள்தேவர்
மன்னவனார் கோட்டைக்குள் வந்ததற்கு வாகுடனே தண்டனைகள் மிகுதியாச்சே
2404.
ஆச்சுதாம் காலாங்கிநாதருக்கு அப்போதே சாபமது நேர்ந்துதங்கே
மாச்சலுடன் காலாங்கிநாதர்தாமும் மகத்தான சொரூபமென்ற குருவையெண்ணி
நேச்சலுடன் சாபமதை நிவர்த்திசெய்ய நேர்மையுடன் தன்மனதில் நினைத்தபோது
கூச்சலென்ற சாபமது நிவர்த்தியாச்சு கொற்றவனே திரேதாயினுகத்தில்தானே
2405.
தானான யுகத்திலப்பா காலாங்கிநாதர் தகைமையுடன் சாபமதை தீர்த்துக்கொண்டார்
கோனான என்னையர்காலாங்கிநாதர்குவலயத்தில் கோடியுகம் குளிகைபூண்டார்
தேனான ரிஷிகளிட சாபத்தாலுந் தேறினார் ராவணனார்கோட்டைக்குள்ளே
மானான சமாதியிடம் கிட்டிப்போனார் மகத்தான தேவமுனி கண்டிட்டாரே
2406.
கண்டவுடன் காலாங்கிநாதர்சாமி கருத்துடனே சமாதியிடம் சென்றபோது
அண்டமுனி ராட்சசர்கள் அசுரார்கூட்டம் அணியணியாய் வுலாகொடுத்து நின்றாரங்கே
சண்டையிடும் ராவணனார் சமாதிகண்டார் சாங்கமுடன் ரிஷிகளெல்லா மங்கிருந்தார்
தெண்டமுடன் சமாதியிடம் சென்றபோது தீரமுடன் வுளவையெல்லாம் கேட்டிட்டாரே
2407.
கேட்கையிலே சதகண்ட ராவணன்தான் நெடிதான சமாதியது கண்டிட்டாராம்
நாட்டமுள்ள சமாதியது நடுமையத்தில் நலம்பெறவே கோட்டைக்கு மேற்புரந்தான்
நீட்டமுடன் பன்னீருகாதமப்பா நிலையான சாமியுட கோட்டையாகும்
வாட்டமுடன் சமாதியது கிட்டப்போனார் வாகுடனே சித்தர்முனி காவல்தானே
2408.
காவலுடன் ரிஷிகூட்ட மசுராள்தானும் காவலனார் கோட்டையது சமாதிமுன்னே
ஆவலுடன் காணவென்று போகும்போது அங்குள்ள ராட்சதர்கள சுரார்கூட்டம்
ஏவலெனும் கிங்கிலியர் ஆயிரம்பேர் எழிலான கோட்டைவழி தான்மறிப்பார்
பாவலுடன் காலாங்கி வார்த்தைகூறி பதியோக வுபாயமது கண்டிட்டாரே

2409.
காணவே சமாதியது மேற்புரத்தில் கனகமணி நவரத்தின சமாதிகண்டார்
வேணவே வுபசாரமுடன் காலாங்கிநாதர் விடுபட்டுச் சமாதியிடம் சென்றாரங்கே
நாணமுடன் தலைகுனிந்து வார்த்தைகூறி நலம்பெறவே சமாதியிடம் சென்றிட்டாராம்
பாணம்போ லசரீரிவாக்கியந்தான் பாரினிலே சத்தமது கேட்கலாச்சே
2410.
கேட்டவுடன் காலாங்கிநாதர் தாமும் கிருபையுடன் கிருபையுடன் சமாதியிடம்போகவஞ்சி
நாட்டமுடன் நடுமையம் கோட்டைக்குள்ளே நலமுடனே காலாங்கி பெருமூச்சுவிட்டு
தேட்டமுடன் ராவணனார் பாதங்காண தேர்வேந்தே எனக்குகுறைநேரலாச்சு
கோட்டமுடன் மனக்குறைகள் நேர்ந்ததென்று கூறினார் காலாங்கிநாதர்தாமே
2411.
தாமான காலாங்கிநாதர்சாமி தன்மையுடன் அவர்களிடம் பேசாமற்றான்
நேமமுடன் காலாங்கி நாதர்தாமும் நெறியுடனே யங்கிருந்து மறுபக்கந்தான்
போமெனவே தன்மனதிலடக்கிசாமி பொலிவுடனே கீழ்புரமாம் திரும்பும்போது
தேமமுடன் கோட்டைக்குள் ரிஷிகள்கோடி தெளிமையுடன் கண்டாராம் கோடிபேரே
2412.
கோடியாம் ரிஷிமுனிவர் கோடாகோடி கோமகனார் கோட்டைக்குள் வாசற்பக்கம்
நீடியே சமாதியிடம் நின்றிட்டாராம் நித்திலங்குப் பூமகனார் சமாதிபக்கம்
தேடியே பார்க்குகையில் சமாதிமுன்னே திகழான சித்தொருவர் அங்கிருந்தார்
நாடியே யவரிடத்திற் கண்டுபேசி நயமுடனே ராவணன் சேதிகேட்டிட்டாரே
2413.
கேட்கையிலே துவாபரயுகத்திலப்பா கெடியான என்பாட்டன் ராவணற்கு
சூட்சமுடன் ரிஷிசாபம் நேர்ந்ததென்று சூட்சமுடன் எந்தனுக்கு சித்துசொன்னார்
வேட்கமுடன் ரிஷியினிட சாபத்தாலே வேகமுடன் கோட்டையது வழியவென்றும்
நீட்கமல சூர்ப்பனகி பங்கமாகி நீடாகி கோட்டையது யிடியென்றாரே
2414.
இடியென்ற சாபத்தால் இலங்கைதானும் எழிலான பதிகள்முதல் எல்லாம்போய்
நொடிக்குள்ளே வாரிதியும் மிகவும்பொங்கி நோக்கமுடன் ராவணனார் தம்பியானோர்
படிகடந்து சமாதிக்குப் போகநன்று பட்சமுடன் பாரினிலே இருக்கலாகா
குடிகொண்ட மயிலிராவணனாரொக்க கூட்டமுடன் சமாதிக்கு ஏகினாரே
2415.
ஏகவே ராமர்வெகு கோபத்தாலும் எழிலான சிதையின் சாபத்தாலும்
போகவே கோட்டைமுதல் யாவுங்கெட்டு பொன்னிலகுபதி தனக்கு போகமென்று
சாகமுடன் சமாதிக்கு இடமுந்தேடி சட்டமுடன் இலங்கைபதி கடலோரத்தில்
பாகமுடன் கோட்டையது நடுமையத்தில் சர்வரும் சமாதியது நின்றிட்டாரே
2416.
நின்றதொரு சமாதிமுத லெல்லாம்பார்த்து நேர்மையுடன் துதாபரத்து சேதிகேட்டு
தன்றனது வரலாறு யாவுஞ்சொல்லி சட்டமுடன் உபதேசம் பெற்றுமேதான்
குன்றுமலை வாருதியாரும்பார்த்து குவலயத்தில் காலாங்கிவந்துமல்லோ
சென்றுமே சமாதிக்கு பருவமானார் சிறப்புடனே காலாங்கிநாதர்தாமே

2417.
நாதரும் சமாதிக்குப் போகுமுன்னே நலமுடனே யடியேனும் போகர்தாமும்
பாதமுடன் அவர்பாதம் பணிந்துகொண்டு பாரினிலே வுபதேசம் யாவும்பெற்று
நீதமுடன் சீஷனில் நற்சீஷனாகி நிமையுடன் நாதனுடவருளும்பெற்று
போதமுடன் உலகுதனில் குளிகைபூண்டு புறப்பட்டுப்போனேனே சீனந்தானே
2418.
தானான சீனபதி சென்றேன்யானும் தகைமையுடன் கருவெண்ணை சாற்றக்கேளும்
வேனான சிற்றினாமணக்கிணெண்ணெய் விரைவான வரிக்குமட்டி நதிக்குமட்டி
கோனான கழற்சிக்காய் முடக்கொத்தானும் கூறானவிரலினுடன் காட்டுள்ளிதானும்
பானான பிமியுடன் வறுகுதானும் பாங்கான மூலியுட சாறுகூட்டே
2419.
கூட்டவே எண்ணையது பங்கொன்றாகும் குமுறவே சார்மூலி பங்கொன்றாகும்
நீட்டமுடன் சரீரெடையாய் எடுத்துக்கொண்டு நெடிதான புங்கன்வேர் சங்கன்வேரும்
வாட்டமுடன் கொடிவேலி பங்கம்பாளை வாகான கிளுவையுட வாகைதானும்
மீட்டமுடன் கிளுவையது சங்குதானும் நெடிதான தலைச்சுருளி காக்கணாமே
2420.
காக்கமுடன் திருகுமரி வெள்ளைசாறை கருவான மூவகையின் வேருங்கூட்டி
நோக்கமுடன் வகைக்கு ஒருபலமதாக நுணுக்கமுடன் தானிடித்துக் கூடப்போடு
தேக்கமுடன் கஸ்தூரிக் கள்ளிதானும் தேர்ந்துமே தானெடுத்து பிழிந்தசாறு
தூக்கமுடன் வகைக்குஒரு நாலதாக துப்புரவா எண்ணெய்தனைக் கலந்திடாயே
2421.
கலந்துமே வதிற்போடு கற்பங்கேளு கருவான திப்பிலியும் கடுகுதானும்
அலர்ந்த கடுக்காயுடனே கடுகுரோணி அப்பனே வால்மிளகுசிரந்தானும்
மலர்ந்ததோர் வால்மிளகு குரோசானிதானும் மார்க்கமுடன் கருஞ்சீரம் கஸ்தூரிமஞ்சள்
நிலர்ந்த மஞ்சள்தன்னுடனே வரத்தைகூட்டி நெடிதான சுக்குடனே சிறுநாகப்பூவே
2422.
பூவான இந்துப்பு திப்பிலிதானும் பொங்கமுடன் பெருங்காயாம் சாதிக்காயாம்
மாவான சாதிக்காய் சாதிபத்திரி மாற்கமுடன் சேங்கொட்டை தாளிசந்தானும்
சேவான சிவதைநில வாசைவேறும் சிறப்பான கோரையிட கிழங்குதானும்
காவான சுக்குடனே தான்றிக்காயும் கருவான நெல்லியுடன் ஓமந்தானே
2423.
ஓமமுடன் வாய்விளங்கம் விடையந்தானும் ஒப்பமுடன் மாசியென்ற காயுங்கூட்டு
தாமமுடன் வகைக்குஒரு பலமதாக தகைமையுடன் தானிடித்துக் கூடப்போடு
வாமமுடன் அடுப்பேற்றி எரிக்கும்போது வாகான வெண்காரம் விராகனொன்று
தூமமுடன் இந்துப்பு விராகன்ரண்டு சுயமான கரியுப்பு விராகனொன்றே
2424.
ஒன்றான யிவையெல்லாம் பொடித்துப்போட்டு வுத்தமனே மெழுகுபதந்தனிலிறக்கி
நன்றான கலசத்தில் பதனம்பண்ணு நலமாக மணடலஞ்சென்றெடுத்துக்கொண்டு
தன்றான வீட்டுக்கு விலக்கமான தயவான முதநாள்தான் மூன்றுநாளும்
குன்றாமல் காலையிலே ஓராண்டுகொள்ள குணமாகும் ஆறுவித சூலைபோமே

2425.
போமேதான் கற்பமென்ற சூலைபோகும் பொல்லாத கெற்பத்தின் வாயுபோகும்
தாமேதான் கெற்பத்தின் ரோகம்போகும் தனியான கெற்பத்தின் திரட்சிபோகும்
வேமேதான் சூதகத்தின் வாயுபோகும் வெகுளாமல் குன்மத்தின் கட்டிபோகும்
நாமேதான் சொன்னபடி பத்தியந்தான் நலமான வெள்ளாட்டுப்பால்தான் கூட்டே
2426.
கூட்டவே நாளாம்நாள் வென்னீராலே குமுறவே ஸ்தானமது செய்யவேண்டும்
நாட்டமுடன் அன்றுமுதல் நான்குநாளும் நலமாக விழுதியிலை பாலுங்கூட்டி
வாட்டமுடன் தானருந்தி அந்திசந்தி வாகாக ஏழாநாள் எண்ணெய்மூழ்க
நீட்டமுடன் மூன்றுசிறை இப்படியே செய்ய நீணிலத்தில் கெற்பமது விளையும்பாரே
2427.
பாரேதான் வாணுக்கு மிந்தபாகம் பட்சமுடன்தானருந்த ரோகம்போகும்
சீரேதான் சிங்களுக்கு வைத்துநாளும் திறமையுடன் மூன்றுமுறை யுண்ணவேண்டும்
நேரேதான் பத்தியமுமுன்போற்காரு நேரானமேகமது கசரோகம்போல்
வாரேதான் காலாங்கிநாயர்பாதம் வணங்கியே போகரிஷி வரைந்திட்டேனே
2428.
அறைந்தேனே பலசரக்குகளையாராய்ந்து அப்பனே மானிடர்கள் பிழைக்கவென்று
திரைந்திட்டேன் சூத்திரங்கள் உறுதிபார்த்து தெளிமையுடன் பலநூலும் பெருநூல்பார்த்து
குறைந்திட்ட சூட்சாதி சூட்சம்பார்த்து கூறினேன் சித்தர்நூலெல்லாம் பார்த்தேன்
முறைந்திட்டேன் இந்தவண்ணம் யாருஞ்சொல்லார் முயற்சியுடன் பாடிவைத்தேன்
காண்டந்தானே
2429.
தானான காண்டத்தின் மூன்றாங்காண்டம் தகைமையுள்ள கருக்குருவும்
யாவுஞ்சொன்னேன்
வேனான என்னையர் காலாங்கிநாயர் விருப்பமுடன் உபதேச மனேகஞ்சொன்னார்
கோனான வுபதேசம்யாவுங்கேட்டு கொட்டினேன் சத்தமென்ற காண்டமப்பா
பானான காண்டமேழாயிரந்தான் பாகமுடன் பாடிவைத்தேன் போகர்தாமே
2430.
தாமேதான் மொழிந்திட்டார் அனேகங்கோடி தகைமையுடன் கண்டறிந்தேன்
சதாகாலந்தான்
வேமேதான் சித்தர்முனி ரிஷிகளப்பா வெனைப்போல யாருந்தான் சொல்லவில்லை
சாமமுடன் நூல்களெல்லாஞ் சாபஞ்சொன்னார் சாங்கமுடன் வுளவுகரு சொல்லவில்லை
நாமமுடன் அடியேனும் விரித்துரைத்தேன் நலமாக சீனபதியுலகத்தோர்க்கே
2431.
உலகான சீனபதிமாந்தரப்பா வுலகுமுதல் கருக்களெல்லாங் கொண்டாரங்கே
நிலவுபோல் சொல்லிவிட்டேன் மாந்தர்கப்பா நிட்சயங்களெல்லாந்தான் கண்டுகொண்டார்
கல்வியுடன் நானுமல்லோ வுறவுகொண்டு காணாதகாட்சியெல்லாம் அங்கேகண்டேன்
தலமதிகமான தொருசீனதேசம் தாரணியிலெவராலும் சொல்லப்போமோ
2432.
போகாது வாதிசேடனிலுமாகப் பொங்கமுடன் சித்தரிலுமாகாதப்பா
வேகாத பிணம்போலே வுழல்வாரப்பா விருதாவாய் நூல்சொல்லி மறைத்தாரங்கே
சாகாத கற்பமது வுறுதிசொன்னார் சாங்கமுடன் கற்பத்துக் குயிர்தானில்லை
ஆகாத சாஸ்திரங்க ளனைத்துஞ்சொல்லி அப்பனே சாபமது சொன்னார்காணே

2433.
காணவே சாபமது சொன்னாரங்கே கருவாக யெனைப்போலச் சொன்னாரில்லை
தோணவே தோணாத பொருள்களெல்லாம் முரையுடனே சொன்னேன்யானே
மாணவே யெந்நூலை பார்த்தபேர்க்கு மறைப்புமுதல் திறைப்புமுதல் யாவுமில்லை
நாணவே சாத்திரங்கள் முறைதப்பாமல் நலமுடனே பாடிவைத்தேன் நன்மைபாரே
2434.
பாரேதா னின்னமொரு கருமானங்கேள் பாடுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
நேரேதான் வரிக்குமட்டி சார்தான்நாழி நேரான கள்ளிச்சாறுநாழி
வாரேதான் மாறுலிங்குச்சாறுநாழி வாகான விழுத்தியுட சாறுகூட்டே
2435.
கூட்டியே பழச்சாறு நாழிதானும் குணமான பசுநெய்யும்நாழிகூட்டு
நாட்டமுடன் இதுவெல்லாமொன்றாய்கூட்டி வளமையுடன் தான்சேர்த்து மருந்துகேளு
நீட்டமுடன் திப்பிலியும் சுக்குதானும் நெடிதான் வெள்ளுள்ளி யிலுப்பைபூவே
2436.
பூவான சவர்க்கார மிந்துப்போடு புகழான நவாச்சாரம் கடுக்காய்தானும்
நாவான பெருங்காயம் வெண்காரந்தான் நலமான வாளுவை சீரந்தானும்
பாவான ஒமமுடன் கடுகுரோனி பாங்கான வரப்பொடியுங் கருப்புகட்டி
மாவான சாதிக்காய் கிராம்புதானும் மகத்தான கடுக்காய் தான்றிக்காயே
2437.
காயான நெல்லிக்காய் சுக்குதானும் கருவான மிளகுடனே கோஷ்டந்தானும்
தாயான யேலமுடன் வளையலுப்பு தாக்கான வெடியுப்பு யெவச்சாரந்தான்
மாயான இந்துப்பு கல்லுப்போடு மகத்தான சவர்க்காரம் பலமதாகும்
தூயான இதுவெல்லாம் சமனாய்கூட்டி துப்புறவாய் சீனியது சரியாய்க்கூட்டே
2438.
கூட்டியே வாலுகையில் அடுப்பிலேற்றி குமுறவே சேறுபோலாகக் காய்ச்சி
நாட்டமுடன் கலபதில் பதனம்பண்ணு நலமுடனே அந்திசந்தி கொண்டாயானால்
வாட்டமுடன் கவுசையொடு குன்மம்மாண்டு வாகான தொண்டைமுதல் மலட்டுப்பூச்சி
காட்டகத்தே போகுமென்று போகர்தானும் கருத்துடனே பாடிவைத்தகிரந்தந்தானே
2439.
தானான கிரந்தமது பட்சந்தானும் தயவுடனே கொண்டவர்க்கு கெற்பமுண்டாம்
கோனான விஷபாண்டு சோகைபோகும் குடிகெடுக்கும் கெற்பமென்ற ரோகந்தீரும்
மானான கைகுடைச்சல் வாயுபோகும் மகத்தான சூலைமுதல் ரோகம்போகும்
தேனான விப்புருதி மாலைதீரும் தெளிவான கைமுடக்கு போகுங்காணே
2440.
காணவென்றால் யிடுப்புவலி சந்துவாதங் கள்வாதம் குடல்வாதம் காணாதோடும்
நாணவே வயிற்றுவலி விம்மல்போகும் நரம்பெல்லாம் பிகுத்திருத்தல் நளினமாகும்
ஈணவே பிறவீச்சு பித்தம்போகும் எழிலான வாதமென்ற தெண்பதும்போம்
சீணவே யிருளைவி பெருமூச்சேரும் சிறப்பான பத்தியந்தானில்லையாமே
2441.
ஆமேதான் மருந்துண்ணும் காலந்தன்னில் அப்பனே வாயுவென்ற பதாற்தந்தள்ளு
போமேதான் சீதளமாம் பண்டமாகா பொலிவான காரமுதல் மிகவுமாக
தாமேதானிச்சா பத்தியந்தான் காருசார்பாக மற்றதெல்லா மாகும்பாரு
நாமேதான் சொன்னபடி போகர்நூலு நாட்டிலே பொய்க்காது நளினமாமே

2442.
நளினமுடன் இன்னமொரு மார்க்கம்பாரு நாதாக்கள் சொன்னதிலை நாட்டிலோர்க்கு
நளினமென்ற வடைக்கலந்தான் ஆனேயாகும் கருவான வான்குருவி கொண்டுவந்து
மளினமுடன் ரோகமுதல் எல்லாம்நீக்கி மாசற்ற குடல்தலைகள் எல்லாம்போக்கி
பளினமுடன் கருங்கோழி ரத்தஞ்சேரில் பாகமுடன் தான்பொரித்து எடுத்திடாயே
2443.
எடுத்துமிக பார்க்கையிலே என்னசொல்வேன் எழிலான சோரியது சுண்டியேதான்
தொடுத்ததொரு வடைக்கலமும் ஒன்றாய்ச்சேர்த்து துப்புரவாய் திரண்டுமல்லோ கரிபோலாக்கி
விடுத்ததொரு மாமிசத்தை எடுத்துக்கொண்டு விபரமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு
கொடுத்திடவே லவனவகை யற்பத்துதானும் கூறுவேன் பளிங்குடனே செப்பக்கேளே
2444.
செப்பவென்றால் இந்துப்பு வராகன்ரண்டு தெளிவான கல்லுப்பு வராகன்ரண்டு
ஒப்பமுடன் வளையலுப்பு வராகன்ரண்டு ஒளியான மதியுப்பு வராகன்ரண்டு
நெப்பமுடன் சாரமது வராகன்ரண்டு நெரான வங்காரம் வராகன்ரண்டு
நொப்பமுடன் சவர்க்காரம் வராகன்ரண்டு குமுறவே இத்தனையும் பொடியாய்ச்செய்யே
2445.
செய்யவென்றால் பொடிதனிலே சேர்க்கக்கேளு செயலான சுக்குடனே மிளகுகூட
பொய்யவே ஓமமுடன் சீரந்தானும் பேரான கரியபோளந்தானப்பா
மெய்யான பூரமென்ற பற்பந்தானும் மேலான ரசமென்ற செந்தூரந்தான்
மையான பொடியாக்கி ஒன்றாய்ச்சேர்த்து மார்க்கமுடன் நெய்தேனும் கூட்டிடாயே
2446.
கூட்டையிலே சர்க்கரையும் ஒன்றாய்ச்சேர்த்து குணமாகத் தான்கிளறி பதனம்பண்ணு
நாட்டமுடன் லேகியத்தை மண்டலந்தான் நலமுடனே கொண்டுவர பலனக்கேளு
தீட்டமென்ற நாளையிலே வயிர்நோய்போகும் திறமான கால்வீக்க மகோதரம்போம்
வாட்டமுடன் சூதத்தின் திரட்சிபோகும் வாகானகட்டிமுதல் சூலைபோமே
2447.
சூலையுடன் வாயுவென்ற தெண்பதும்போம் சூக்குமத்தின் நீரேற்றமகன்றுபோகும்
காலையிலே வாயூரல் அற்றுப்போகும் கதிப்புடனே கொதிப்புமுதல் கொதிப்புமுதல் காணாதோடும்
மாலையிலே தான்காணும் மண்டைக்குத்து மயக்கமுடன் தலையிடியும் மாறிக்காணும்
ஆலையிலே யகப்பட்ட கரும்புபோல அகன்றுமே போகுமடா பிணிகள்தாமே
2448.
பிணியான ருதுகால வியாதிரோகம் பேரான கெற்பத்தின் ரோகம்போகும்
அணியான ருத்தரமாங்குடன்தான்மூட்டி அப்பனே வாயுவென்ற கட்டிதானும்
நணியான மகோதரமும் அணுகாதப்பா நாடாது குடல்வலியும் போகும்பாரு
கணியான சோரியது கட்டிப்போகும் காறான கெற்பநோய் போகுந்தானே
2449.
தானேகேள் சூதகத்தின் வாயுதீரும் தாக்கான கசரோக மெல்லாம்போகும்
வேனேதான் திமிர்வாதம் குடலில்வாதம் மிக்கான பட்சமென்ற வாதம்போகும்
கோனேதான் கெண்டையென்ற வாதம்போகும் கொடிதான இடுப்புவலி போகும்பாரு
மானேதான் முழங்காலில் வாதம்போகும் மகத்தான பாதமது வீக்கம்போமே

2450.
வீக்கமது யேகுமது என்னசொல்வேன் மிக்கான தேகமது இளப்புமெத்த
தூக்கமது மதிகமுடன் சன்னலாகும் துடியான நரம்புமுதல் துடிப்புமெத்த
தாக்கமுடன் சூடதுதான் தலைமேற்கொண்டு சதாகாலம் தலைவலியும் மிகுதிகாட்டும்
ஊக்கமுடன் தயிலமது சொல்வோம்பாரு வுத்தமனே போகரிஷி உண்மைகாணே
2451.
உண்மையா மின்னமொரு மார்க்கம்பாரு உத்தமனே நாதாக்கள்சொன்னதில்லை
வண்மையுடன் தயிலமது சாற்றக்கேளு வாகான எண்ணெயது சேர்தானப்பா
திண்ணமுடன் கையான்சார் சேர்தானப்பா தினமான முடக்கொத்தான் சேர்தான்பாதி
கண்ணமுடன் கருந்துளசி சேர்தானப்பா தலமான நெல்லிசார் சேர்தான்கூட்டே
2452.
கூட்டவே தழுதாழைச்சார்தான்நாழி குணமான வழுதலையின் சார்தான்நாழி
நீட்டமுடன் பசளைச்சார்தான்நாழி நெடிதான குமரிச்சார் சார்தான் நாழி
தேட்டமென்ற நீர்பூண்டு சார்தான்நாழி தெளிவான கரந்தைச்சார் சார்தானாழி
வாட்டமுடன் பசுவின்பால் நாழியாகும் வளமான கடைசரக்கு சாற்றக்கேளே
2453.
கேளேதான் கற்பவகை சாற்றக்கேளும் கெடியான வாலுழுவையரிசிதானும்
தாளமுடன் நன்னாரி முத்தக்காசு தாக்கான சீரகமும் ஓமந்தானும்
நீளமுடன் கார்போக மேலந்தானும் நிலையான கோஷ்டமுடன் மதுரந்தானும்
பாளமுடன் வகிற்கட்டை செம்பூரானும் பாங்கான சந்தனமுடன் தேவனாமே
2454.
தேவனாம் பட்டையுடன் கருஞ்சீரந்தான் தேற்றானுமெட்டியுடன் சித்தரத்தை
காவமென்ற வால்மிளகு சாதிக்காயும் கருவான பூப்பனையும் தண்ணீர்மிட்டான்
சாபமென்ற கரிமஞ்சள் சார்பான வெள்ளையென்ற மிளகுகூட்டி
தூபமென்ற சாம்பிராணி சமனதாக தப்புரவாய் முக்கண்ணின் பாலாலாட்டே
2455.
ஆட்டியே மெழுகுபதந்தன்னிற்காச்சி அப்பனே தான்வடித்து பதனம்பண்ணு
தாட்டிகமாய் சீசாவில் அடைத்துமைந்தா தகைமையுடன் ஒருதிங்களானபின்பு
நாட்டமுடன் தயிலமதை பிரயோகித்தால் நாடாது கெற்பத்தின் சூலைபோகும்
ஓட்டமுடன் கெற்பத்தின் வாயுபோகும் ஓகோபொய்யாது உண்மையாமே
2456.
உண்மையால் தயிலமாம் உறுமெத்த வுத்தமனே பொறிச்சூடு விட்டேயோடும்
திண்மையாம் பிடரிவலி சன்னிபோகும் திரளான வேர்வையது துள்ளிஓடும்
வண்மையாம் கையெரிவு காலெரிவுதானும் மகத்தான வாயுவென்ற தெண்பதுவும்போம்
நண்மையாம் காந்தலது மிகறாது நளினமுடன் போகரிஷி நவின்றவாறே
2457.
வாறான வின்னமொரு மார்க்கம்பாரு வளமையுடன் கெந்தகமும் சேர்தானொன்று
நேறான சீனமது சேர்தான்ரெட்டி நெடிதான பூநீறு சேர்தான்காலாம்
பானான உப்பதுவும் சேர்தான்பாதி பளிங்கான வளையலென்ற வுப்புத்தானும்
தேறான யெவாசாசாரம் தான்காலாம் சிறப்பான சரக்கெல்லாம் பொடியாய்ச்செய்யே

2458.
செய்யவே வாலையென்ற பானைக்குள்ளே சீருடனே சரக்கெல்லாம் போட்டரைத்து
பையவே சக்கரமாம் வாலைவைத்து பாகமுடன் திராவகத்தை இறக்கிப்பாரு
முய்யவே மூன்றுமுறை இந்தபாகம் முயற்சியுடன் தானிறக்கியெடுத்துக்கொண்டு
துய்யநல்ல சீஷாவில் அடைத்துக்கொண்டு துப்புரவாய் கற்பரணை மூடிடாயே
2459.
மூடவே திராவகத்தின் காரமப்பா மூவுலகும் தானெரிக்கும் கதிரோன்போல
சாடவே சரக்குக்குக் காலனாகும் சாங்கமுடன் திராவகமோ சுருக்குமெத்த
நீடவே திராவகத்தை பதனம்பண்ணி நினைப்புடனே யின்னமொரு மார்க்கம்பாரு
கூடவே கண்டருட திராவகத்தை கூறுவேன் மாணாக்கள் பிழைக்கத்தானே
2460.
தானான துருசதுதான் சேர்தானொன்று தாக்கான சீனமது சேர்தானொன்று
வேனான பூநீறு சேர்தான்பாதி வேகமுடன் கல்லுப்பு சேர்தான்காலாம்
கோனான வெண்காரம் சேர்தான்காலாம் கொப்பெனவே விவையெல்லாம் பொடியதாக்கி
மானான எனதையர் குருவையெண்ணி மார்க்கமுடன் பானைதனில் கொட்டிடாயே
2461.
கொட்டியே குருசொன்ன வளவாய்க்கூட்டி குணமாகச் சக்கரமாம்பானைதன்னில்
திட்டமுடன் வாலைவைத்து சீலைசெய்து சிறப்புடனே இருபக்கம் புனலும்வைத்து
சட்டமுடன் அடுப்பேற்றி யெரிப்பாயானால் சார்புடனே திராவகமும் இறங்கும்பாரு
நட்டமில்லா திராவகமும் எடுத்துப்பாரு நாதாக்கள் செய்யார்கள் அதீதந்தானே
2462.
அதீதமென்ற வித்தையிது வாலைவித்தை அவனியிலே செய்புவது வரிமைகாணும்
கதீதமென்ற திராவகத்தை பதனம்பண்ணு கருவான சூதத்துக்கு உறுதிகாலன்
நதீதமென்ற கண்டருட திராவகத்தால் நாட்டிலே வெகுகோடி செய்வாரப்பா
பதீதமென்ற திராவகங்கள் இன்னசொல்வேன் பாகமுடன் போகரிஷி பயின்றவாறே
2463.
பயின்றதொரு வின்னமொரு மார்க்கம்பாரு பாங்கான சாரமது சேர்தானொன்று
நவின்றதொரு பூநீறு சேர்தான்பாதி நலமான சீனமது சேர்தானொன்று
துயின்றதொரு கல்லுப்பு சேர்தான்கால்தான் சுயமான வெண்காரம் சேர்தானொன்று
அயின்றதொரு சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி அப்பனே கலசமென்ற பானைக்கேற்றே
2464.
ஏற்றவே சக்கரமாம் வாலைவைத்து எழிலாகச் சீலையது வலுவாய்ச்செய்து
காற்றதுதான் போகாமல் அடுப்பிலேற்றி கரகமென்ற பானைக்கு குழலும்வைத்து
போற்றமுடன் புனல்வழியே ஜலமும்போக பொங்கமுடன் தானெரிப்பாய் சாமநேரம்
கூற்றனைப்போல் திராவகமும் இறங்கும்பாரு கொடிதான வேதையிது சொல்லொணாதே
2465.
சொல்லவே நாவேது பாவுமேது சொற்பரிய திராவகமும் காரமெத்த
வெல்லவே சரக்குக்கு மித்திரகாலன் வெகுகொடியன் வெகுநெடியன் சாரனப்பா
புல்லவே திராவகத்தை பதனம்பண்ணு பொங்கமுடன் சீஷாவில் விட்டுமைந்தா
மெல்லவே மேற்கல்லு கொண்டுமூடி மிக்கான திராவகத்தை வுறுதிபண்ணே

2466.
பண்ணவே யின்னமொரு மார்க்கம்பாரு பாங்கான மதியுப்பு சேர்தானொன்று
உண்ணவே சீனமது இருசேராகும் வுத்தமனே சாரமது கால்சேராகும்
திண்ணமுடன் பூநீறு சேர்தான்பாதி தெளிவான கல்லுப்பு சேர்தான்காலாம்
வண்ணமுடன் சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி வளமாகத்தான் பொடித்து கலசமாட்டே
2467.
ஆட்டியே வாலுகையை மேலேவைத்து அப்பனே சீலையது வலுவாய்ச்செய்து
நீட்டியே திராவகமும் இறக்கிப்பாரு நிலையான திராவகமோ காந்தமெத்த
பூட்டகமாய் தானெடுத்து சீஷாவிற்குள் புகழாகத் தானெடுத்துப் பதனம்பண்ணு
நாட்டமுடன் திராவகமோ நவிலப்போமோ நாதாக்கள் செய்யார்கள் நன்மைபாரே
2468.
நன்மையுடன் வின்னமொரு மார்க்கம்பாரு நாதாக்கள் கண்டதில்லை சுளுக்குவேதை
உண்மையாயுறைக்கிறேன் பாஷாணந்தான் வுத்தமனே சுங்கென்ற பாஷாணந்தான்
திண்மையுடன் சேரதுதா னொன்றேயாகும் கதிப்பான வளையலுப்பு கால்தான்கூட்டே
2469.
கூட்டவென்றால் கலுவத்தில் பொடியாய்ச்செய்து பொங்கமுடன் கலசமென்ற
பானைதன்னில்
நீட்டமென்ற பொடிதனையே பாண்டமிட்டு நேர்புடனே வாலுகையை மேலேவைத்து
தாட்டிகமாய் மூடியது வலுவாய்ச்செய்து சாங்கமுடன் திராவகத்தை யெறக்கிப்பாரு
நாட்டமுடன் திராவகத்தை பதனம்பண்ணு நலமாக சீஷாவில் அடைத்திடாயே
2470.
அடைத்துமே திராவகமோ காரமெத்த அப்பனே திராவகத்தால் லோகம்நீறும்
புடைப்புடனே லோகத்துக் காலனாகும் புகழாக சத்துருமித்துரு தானாகும்
படைப்புடனே திராவகத்தால் காரசாரம் பாகமுடன் தான்மடியும் பண்போமெத்த
கடைப்புடனே இதனாலே வயமுமாளும் கருவான திராவகமு மென்பார்தாமே
2471.
தாமான வின்னமொரு கருமானங்கேள் தகைமையுடன் வயமதுதான் சேர்தானொன்று
காமான பாஷாணம் சரிதாக கடிதான வயத்துடனே ஒக்கச்சேர்த்து
நாமான பூநீறு வகையதாக நலமான வளையலுப்புக் காலதாக
பாமான சீனமது ரெட்டிப்பாக பாகமுடன் தான்போட்டு கலசமூடே
2472.
மூடவே வாலுகையை மேலேவைத்து முயற்சியுடன் சீலையது வலுவாய்ச்செய்து
தேடையிலே வடுப்பேற்றி எரிக்கும்போது தெளிவாக திராவகமும் இறங்கும்பாரு
நாடயிலே புனலாலே ஜலமுமோடி நலமான திராவகத்துக்கு உயிருமாச்சு
ஊடையிலே திராவகத்தால் காரமெத்த வுத்தமனே செந்தூர குருவுமாச்சே
2473.
ஆச்சென்று விடுகாதே யின்னம்பாரு அப்பனே செந்தூரமிதனாலாகும்
போச்சென்று போகாதே புண்ணியாகேள் பொங்கமுடன் இன்னமொரு பாகஞ்சொல்வேன்
தீச்சென்ற பாஷாணஞ் சகலத்துக்கும் தெளிவாக இந்தமுறைச் செய்யலாகும்
மூச்சப்பா சகலவித பாஷாணத்தின் மூர்க்கமெல்லாம் சத்துருவால் முறிக்கலாச்சே

2474.
முறிக்கலாம் பலகோடிவேதையாகும் மோசமில்லை திராவகங்கள் காரமெத்த
தறிக்கலாமின்னமொரு பாகங்கேளு தாக்கான சீரகமும்சேர்தானப்பா
செரிக்கவே ஜலமதுதான் ரெட்டிப்பாகும் சிறப்புடனே பூநீறு காலதாகும்
நெறியுடனே பாண்டமெனும் கரகத்துள்ளே நேர்புடனே ஜலத்தோடே கொட்டிடாயே
2475.
கொட்டியே கரகத்தின் மேலேயப்பா குணமான வாலைதனை மேலேவைத்து
திட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து திறமுடனே வடுப்பேற்றி யெரிப்பாயானால்
நட்டமில்லாத் திராவகமும் இறங்கும்பாரு நலமான சீரகத்தின் வேகமெத்த
பட்டவுடன் பித்தம்நாற்பதுவும் போகும் பாங்கான சீரகத்தின் பண்பதாமே
2476.
தாமான சீரகத்தின் தயிலந்தன்னை தயவுடனே மூன்றுமுறை யிப்படியே செய்ய
பாமான வாலுகையால் காரமேறி பரிவுடனே புகையோடு நெடிதானாகும்
காமான தயிலமது என்னசொல்வேன் காசினியில் சித்தர்களுங் காணமாட்டார்
பூமானாம் காலாங்கி நாதர்பாதம் புகழ்ச்சியுடன் பாடினேன் போகர்தானே
2477.
தானான வின்னமொரு பாகம்பாரு தயவுடனே சொல்லுகிறேன் மைந்தாகேளு
வேனான ஓமமது சேர்தானப்பா வேகமுடன் கொண்டுவந்து பாண்டமிட்டு
பானான ஜலமதுவும் ரெட்டிப்பிட்டு பாங்குடனே பூநீறுகாலதாக
பானான ஜலமதனை விட்டபின்பு மதிப்புடனே வாலுகையை மேலேவையே
2478.
வைக்கவே சீலையது வலுவாய்ச்செய்து வாகுடனே திராவகத்தை வாங்கிமைந்தா
மெய்க்கவே மூன்றுமுறை யிப்படியே செய்து மேன்மையுடன் திராவகத்தை யெடுத்துக்கொண்டு
மொய்க்கவே முன்சொன்ன திராவகமுமப்பா மோசமது வாராமல் செப்பக்கேளு
பொய்க்காமல் சரியெடையாய் எடுத்துக்கொண்டு பொன்னவனே வெள்ளுள்ளி சேர்தான்போடே
2479.
போடவே திராவகத்திலாட்டு மைந்தா புகழான வெள்ளுள்ளி கைபோலாகும்
நீடவே பூண்டுக்கு காயமேரி நிலையான வெள்ளுள்ளி காரமாச்சு
பாடவே செம்மறியின் தோலாலப்பா பாகமுடன் தான்பொதிந்து தைத்துப்போடு
சாடவே மண்டலஞ் சென்றெடுத்துப்பாரு சரக்கான பெருங்காயம் காரமாச்சே
2480.
மாயமின்னமொரு மார்க்கம்பாரு கருவான காசியென்ற கட்டியப்பா
நேயமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு நேர்புடனே வகிலத்தின் தூளுகூட்டி
பாயமுடன் பாக்கினிட கிஷாயந்தன்னால் பாகமுடன் மூன்றுநாளாட்டி மைந்தா
தூயமுடன் ரவிதனிலே காயப்போடு துப்புரவாய் காசியென்ற கட்டியாச்சே
2481.
கட்டியென்னும் ரத்தமென்ற பாளமாச்சு காசினியில் ஆருந்தான் கண்டதில்லை
திட்டமுடன் சொல்லிவிட்டோம் சீனத்தாற்கு திறமுடனே கண்டறிந்தோர் புத்திவானாம்
சட்டமுடன் இன்னமொரு பாகஞ்சொல்வோம் சார்வான இரும்பினுட சத்தைவாங்கு
வட்டமென்ற கொப்பறையில் துப்பைக்கொட்டி வாகுடனே செம்மரத்தின் தூள்தான்போடே

2482.
போடையிலே ஜலமதுதான் பாண்டமிட்டு பொங்கமுடன் பட்சம்சென்றெடுத்துப்பாரு
கூடையிலே ரண்டுமொன்றாய் சேர்ந்துகொண்டு குணமான சிட்டம்போலிருக்கும்பாரு
நாட்டமுடன் இரும்பென்ற வாலைக்குள்ளே நளினமுடன் தான்கொட்டி வரைத்திட்டேதான்
சாடவே சீலைக்கட்டு காரமேற்றிச் சார்பாகக் கரைகட்டி யோரந்தீத்தே
2483.
தீத்தையிலே பலபலவாம் ரூபம்காட்டும் சிவப்புமுதல் பஞ்சவர்ணம் காணலாகும்
தீத்தையிலே காரங்களில்லாப்பக்கம் தெளிவான வர்ணங்கள் காணலாகும்
தீத்தமுடன் வர்ணங்களெழுதலாகும் திறமான இரும்பினுட காரந்தன்னால்
சீத்தமுடன் செம்பினுட சத்துசேர்ந்து சிறப்பாகத் தானுருக்கி யெடுத்திடாயே
2484.
எடுத்துமே வயதினிட பாகம்போல எழிலான கவகிலமாம் மட்டைதூளும்
தொடுத்துமே செம்பினுட சத்துசேர்த்து தோற்றமுடன் ஆலைதனிலரைத்துக்கொண்டு
தடுத்துமே வயதினிட வர்ணத்தாலும் தாக்கான செம்பினிட வர்ணத்தாலும்
அடுத்தஉமே சீலைகட்டு வர்ணமாச்சு அப்பனே சீனபதி வுளவுதானே
2485.
உளவான சீனபதி வேதைமார்க்கம் வுத்தமனே வேடிக்கை யின்னஞ்சொல்வோம்
தலமான காயிதம்சன்னமட்டும் தான்செய்யும் விபரங்கள் சாற்றக்கேளு
நலமான தடமதுவும் கெஜநூறாகும் நளினமுடன் கலமதுவும் கெஜநூறாகும்
மளமான சுற்றோரக் கிராதிக்கம்பி மார்க்கமுடன் தானமைத்தை வாலைபூட்டே
2486.
பூட்டவென்றால் தலைபக்கம் கரும்பாலைபோல புகழான குழியொன்று தடாகமொன்று
நீட்டமுடன் தடாகத்தின் சுற்றுவோரம் நிலையான வாய்க்கால்போல் குழையுண்டாக்கி
பூட்டமுடன் குழைதனிலே யாலைவைத்து பொங்கமுடன் தொட்டியென்ற கிணறுண்டாக்கி
வாட்டமுடன் தொட்டிக்குள் நூல்போல்கம்பி வகுப்புடனே தானமைத்து சக்கரமாட்டே
2487.
சக்கரமுமாட்டியே வாலைதன்னை சாங்கமுடன் புகையென்ற வாலைதன்னால்
தக்கபடி திருப்பலுடன் கோணித்தன்னைச் சாந்தமுடன் தானரைத்துக் குளத்துக்கேற்றி
ஒக்கவே தெளிவதனை மேலேநோக்கி உவமையுடன் போகவே வழியுண்டாக்கி
பக்கமுடன் தெளஇவதனில் பூநீறுசேர்த்து சார்புடனே தொட்டிதனில் கரைத்திடாயே
2488.
கரைத்துமே மூன்றுநாள் சென்றபின்பு கருவாக தொட்டிதனில் சரக்குவைத்து
நிரைப்புடனே படல்கட்டி காயுதத்தை நேர்புடனே தானெடுக்க வண்ணம்பாரு
திரைப்புடனே வாலையென்ற கையிலப்பா திறமான பிரதிமை யொன்றிவுக்கும்
முறைப்படியே கைதனிலே படல்தானீய முளையாமல் தொட்டிதனில் கலக்கிடாயே
2489.
கலக்கஜயிலே வண்டலது படல்மேல்சாந்து கடினமுடன் சக்கரத்தைச்சுத்திவந்து
நிலத்தினது மேடையிலே சட்டந்தன்னில் நிலைமையுடன் தானமைத்து மேலேவைக்கும்
தலப்புடனே மறுவாலைதனிலிருந்து புகழாகச் சீலையது மூடிக்கொள்ளும்
தலப்புடனே பின்னுகந்த பதுமைதானும் தடாகத்தில் வண்டல்தனையெடுக்குந்தானே

2490.
எடுக்குமே சக்கரமாமாலைதன்னால் எழிலான வண்டலுடன் சரக்கையெல்லாம்
தொடுக்கவே மேற்படியில் கொண்டுசென்று துப்புரவாய் வாலையென்ற சட்டந்தன்னில்
படுக்குமே படல்தானும் விட்டபோது பாங்குடனே சீலையது மூடிக்கொள்ளும்
அடுக்குமே இப்படியே பலகாணுந்தான் ஆலையது சுழன்றுமே யோடுந்தானே
2491.
ஓடயிலே முதற்றரந்தன்னில் வொளிவான காகிதங்கள் சன்னமாகும்
நீடமுடன் இரண்டாங்கால் ஆலைதன்னில் நேர்புடனே தானடைக்கும் வண்மைபாரு
சாடலுடன் பஞ்சியென்ற வாலையுண்டு சட்டமுடன் முன்குழைபோலாணித்தூணாம்
வாடலுடன் குளமதனில் வண்டல்சேரும் வாகுடனே பனாசியென்ற வண்டல்தானே
2492.
வண்டலுடன் சுத்தித்த பூநீரப்பா வாகுடனே தான்சேர்ந்து குழம்புபோலாம்
அண்டமெனும் நட்சத்திர வொளிவுவீசும் அப்பனே வண்டல்தனைகலக்கிக்கொண்டு
தண்டமுடன் சக்கரவாலைதன்னை சாங்கமுடன் தான்திருப்பிரதமைதானும்
கொண்டபடிபடல்சாத்தி
வண்டல்தன்னை கொப்பனவே தானெடுக்கும் வண்மைபாரே
2493.
பார்க்கையிலே படல்சாத்தி தானெடுத்து பாகமுடன் மேற்புரத்தில் கொண்டுசென்று
திர்க்கமுடன் சட்டமென்ற படலின்மேலே சீலைகொண்டு அப்பனே மேல்மூடியாலையாலே
நீக்கலது படலதனை மேலேசாத்தும் நெடிதான சக்கரத்தின் நேர்மைகாணே
2494.
காணயிலே சக்கரமா மாலைதன்னில் கருத்துடனே தான்முடுக்கச் சலமும்நீங்கி
நீணமுடன் கசுவலது நீங்கியேதான் நேரான காயிதமும் சன்னமாச்சு
வேணபடி மூன்றாங்காலாதன்னில் வேகமுடன் திருப்ப உபாயங்கேளு
மாணவென்ற சக்கரமுமாடிநிற்கும் மன்னவனே நடுக்குளமாங் குழிதான்பாரே
2495.
குழியான சதுரமது பள்ளத்துள்ளே கூரான நுணதுதான் நடுமையத்தில்
வழியான சக்கரமாமாலைதன்னில் வகுப்பான பஞ்சினுட மஷ்டுதன்னால்
முழியான பூநீறு மொக்கச்சேர்த்து முயலவே தான்மசிந்து குழிக்குள்தானும்
கழியான மயினம்போலாகும்பாரு கருத்துடனே தானெடுக்கும் கருவைக்கேளே
2496.
கருவான மேல்வட்டஞ் சக்கரத்தில் கடினமுடன் ஆலையதுவோடிப்பாயும்
திருவான வண்டலது மேலேதானும் தெளிவுடனே படல்போலே சென்றுநிற்கும்
குருவான நடுமையம் சுக்கான்தானும் கொப்பனவே மேல்வட்டம் படல்தான்சாத்தும்
தருவான வண்டல்மேல் படல்தான்மூடி சார்பாக சீலையது பரவிக்கொள்ளே
2497.
கொள்ளையிலே மேல்சட்டம் நின்றுமூடி கொப்பனவே படலாலே யாலைசுற்றி
மெல்லவே சீலையது மேலேமூடி மேன்மையுடன் ஜலமதனைவடியச்செய்யும்
தள்ளயிலே சக்கரமாம் பலகையாலே சாங்கமுடன் வாலையின்றன் திருப்பல்காணும்
துள்ளியே திருப்பலது நின்றபோது சூட்சத்தால் காயிதமும் எடுக்கலாமே

2498.
எடுக்கலாம் வாலைவிட்டு எடுத்தபோது எழிலான காற்றதனில் காயப்போடு
தொடுக்கவே ரவியென்ற வொளிதான்பட்டால் தோற்றமுடன் காயிதமும் வெளுப்புமெத்த
படுக்கமுட னிப்படியே யாலைதன்னால் பலபலவாங் காயிதங்கள் எடுக்கலாகும்
கொடுக்கவே வாலைகளுமனேகமுண்டு கொப்பனவேயதன்கூறு சொல்லொண்ணாதே
2499.
சொல்லவே கஞ்சிதனை மேலேபூசி சுத்தமுடன் காயிதங்கள் எடுக்கலாகும்
வெல்லவே கஞ்சியினால் வாலைதன்னில் மெருகுடனே சக்கரமாமுருளையுண்டு
புள்ளவே யுருளைக்கு பஞ்சுபூட்டி பொங்கமுடன் தோலாலே யாலையாகும்
பங்கமில்லா காயிதத்தை யாலைக்கீய பாகமுடன் பெருகுடனே தள்ளும்பாரே
2500.
தள்ளயிலே சக்கரமுமோடித்தானும் சாங்கமுடன் தானெடுத்து வடுக்கும்பாரு
துள்ளியே படல்தானும் மேலேயேற்றி துப்புரவா யடிவாரத்தொட்டிக்குள்ளே
மெள்ளவே கொண்டுசென்று யடுக்கிப்பின்பு மேற்புரத்தில் சட்டமென்ற
வாலையப்பா கொடிதான வாலைக்கு கூறுண்டாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

2501.
தள்ளயிலே சக்கரமுமோடித்தானும் சாங்கமுடன் தானெடுத்து வடுக்கும்பாரு
துள்ளியே படல்தானும் மேலேயேற்றி துப்புரவா யடிவாரத்தொட்டிக்குள்ளே
மெள்ளவே கொண்டுசென்று யடுக்கிப்பின்பு மேற்புரத்தில் சட்டமென்ற
வாலையப்பா கொடிதான வாலைக்கு கூறுண்டாமே
2502.
கூறான வாலையிலே ஓரமப்பா கொப்பனவே கட்டுவகை தரிக்கலாகும்
தாரான காயிதமுமஞ் சுற்றோரந்தான் சாங்கமுடன் திருகியல்லோ நிற்கும்பாரு
சேறான வாலையது வோடிகொண்டு தெளிவான புகையுடனே வாடிநிற்கும்
பாறான கட்டுவகை தரித்தபின்பு பாகமுடன் கீழ்புறமாய் தள்ளலாச்சே
2503.
ஆச்சென்ற வாயது நிந்தித்தானும் அப்பனே லட்சமது கோடிக்கோடும்
காச்சலென்ற கடிதாசி செய்யும்நேர்மை காசினியில் சித்தர்முனி செய்ததில்லை
மாய்ச்சலுடன் சீனபதியானும்சென்று மார்க்கமுடன் கருவான வேதையாவும்
பாச்சலுடன் காலாங்கி நாதர்தம்மால் பாலித்தேன் வெகுகோடி வித்தைதானே
2504.
வித்தையா மின்னமொரு பாகங்கேளு வேடிக்கை வினோதமென்ற வித்தையப்பா
சுத்தமுடன் பஞ்சவர்ண மையினாலே சுருதியுடன் ஆலைதனிலேற்றிமைந்தா
பத்தமுடன் ஆலைவாய்ப்ப் படலின்மேலே பாங்குடனே பூசியல்லோ வாலைக்குள்ளே
வெத்தியென்ற காகிதத்தை வாலைதன்னில் விருப்பமுடன் தான்கொடுத்து செப்பக்கேளே
2505.
கேளேதான் காகிதம் படிந்தபின்பு கெடியான வன்னமென்ற பேதிதன்னை
தாளவே திராதகமாய் எடுத்துக்கொண்டு தகைமையுடன் சபுரியின்றன் மயிரினாலே
மீளவே கத்தையாய்க் கட்டிக்கொண்டு விருப்பமுடன் தான்தெளிக்க வர்ணம்பாயும்
சாளவே கடிதமெல்ம் வர்ணபேதம் சார்பாகக் காட்டியல்லோ பரவுந்தானே
2506.
தானான வனேகவிதம் செய்யலாகும் தகைமையுடன் வாலையென்ற வாலைதன்னால்
கோனான என்னையர் காலாங்கிநாதர் கொட்டினார் லோகத்தில் அனந்தம்வேதை
பானாக யெனைப்போல வெளியரங்கம் பாடினார் லோகத்து மாந்தர்க்கில்லை
தேனான வமுர்தம்போல் சத்தகாண்டம் திரட்டினேன் ஏழாயிரம் உண்மைபாரே
2507.
உண்மையா மின்னமொரு பாகங்கஏளு வுத்தமனே வஸ்துவென்ற போதையப்பா
திண்மையாய் நெல்லிவேர் பனையின்வேரும் திறமான மாதளையின் கெஞ்சாவேறும்
கண்மையாம் நன்னாரி யலரிவேறும் கருவான வாவாரை வேறுதானும்
பண்மையாம் கிச்சிலியின் வேறுகூட்டி பாங்கான வேலனிட பட்டைகூட்டே
2508.
கூட்டியே வெள்வேலன் பட்டைதானும் குணமான சரிஎடையா எடுத்துக்கொண்டு
மாட்டியே பெரும்பாண்டம் தன்னிலிட்டும் மதிப்புடனே ஜலமதுவும் நிறம்பவிட்டு
வாட்டமுடன் பத்தநாள் ஊறிப்பின் வகுப்புடனே சரக்கதனில் பனவெல்லந்தான்
நீட்டமுடன் தான்போட்டு யடுப்பிலேற்றி நிலைமையுடன் திராவகமா யிறக்கக்கேளே

2509.
இறக்கவென்றால் வாலையது திராவகத்தை எழிலான பாண்டமது இறக்கிப்பாரு
சிறக்கவே திராவகமும் காரமெத்த சீரான திராவகமும் பதனம்பண்ணு
முறைக்கவே வஸ்துசுத்தி சரக்குதன்னை முய்யவே நாதாக்கள் செய்யமாட்டார்
திறக்கவே பலநூலும் கண்டாராய்ந்து தீரமுடன் பாடிவைத்தேன் மாந்தர்க்காமே
2510.
ஆமேதான் சரக்குசுத்தி கொண்டபோது அப்பனே வருளுண்டு ஞானமுண்டு
தாமேதான் நாதாக்கள் மனமுவந்து தயையுடனே வேணதெல்லாம் ஈவார்பாரு
போமேதான் புகழுண்டு செல்லமுண்டு பொலிவான கருணையுடன் வரமுமுண்டு
வேமேதான் மனமுவந்து விருப்பமுடன் பட்சமது வைப்பார்பாரே
2511.
தானான சதாநிலையைக் காணலாகும் தாக்கான சின்மயத்தை யறியலாகும்
வேனான வறுகோண வட்டத்துள்ளே வேண்டியதோர் கருவிகரணாதியெல்லாம்
மானான வாராதாரத்திலுண்மை மார்க்கமுடன் காணுதற்கு மயக்கமில்லை
கோனான சிற்பரத்தை யடுக்கலாகும் கொற்றவனே தவநிலையில் நிற்பதாமே
2512.
நிற்பாரே யின்னமொரு மார்க்கம்பாரு நினைவாக மாணாக்கர் பிழைக்கவென்று
துற்பரவாய் குளிகையது சொல்லப்போமோ துடியான பாஷாண சற்பராசன்
பற்குணமாம் பாஷாணமொருவர் காணார் பாருலகில் கண்டறிந்து பகுத்துரைப்பேன்
சற்பமென்ற குளிகையது பெருமைமெத்த சர்வகுண ரோகிகட்கும் புகட்டலாமே
2513.
புகட்டலாம் சங்கென்ற பாஷாணந்தான் புகலவே களஞ்சியெடை யெடுக்கலாகும்
பகட்டுடைய தாளகமும் களஞ்சிரண்டு தகைமையுள்ள வீரமது களஞ்சியொன்று
மகட்டுடைய துரிசியது களஞ்சியொன்று தாக்கான சூடனுமே களஞ்சியொன்றே
2514.
ஒன்றான சூதமுடன் துத்தங்கூட்டி வுத்தமனே சிங்கியது களஞ்சிமூன்று
பன்றான கெந்தகமும் களஞ்சியாறு பாங்கான லிங்கமது களஞ்சிநாலு
கன்றான கெவுரியது களஞ்சியொன்று கருவான தீமுறுகள் களஞ்சியொன்று
தன்றான மனோசிலையும் களஞ்சியொன்று தாக்கான சூடனுமே களஞ்சுயொன்றே
2515.
களஞ்சியாம் காந்தமது களஞ்சிரண்டு கடிதான பொன்னிமளைக் களஞ்சியொன்று
தனமுடைய சூதசெந்தூரமொன்று தாக்கான வரப்பொடியும் களஞ்சியொன்று
மளமான வயத்தொட்டி களஞ்சியொன்று மாற்கமுடன் செங்கந்தி களஞ்சிரண்டு
பளமான கருங்கடல் களஞ்சிரண்டு பாங்கான சீனமது களஞ்சிநாலே
2516.
நலமான கல்நாறு களஞ்சியெட்டு நலமான கல்மதம் களஞ்சியாறு
பாலான சிலாசத்து களஞ்சிரண்டு பதிவான பவளமது களஞ்சியாறு
சேலான முத்ததுவும் களஞ்சிரண்டு செயலான சங்கதுவும் களஞ்சியாறு
கோலான மான்கொம்பு களஞ்சியெட்டு கூறான வகிற்சிலையும் களஞ்சிபத்தே

2517.
பத்தான கடைசரக்கு சாற்றக்கேளு பாங்கான சுக்கதுவும் களஞ்சியெட்டு
முத்தான மிளகதுவும் களஞ்சியாறு முயலான பரங்கியது களஞ்சியெட்டு
மத்தான லவங்கமது களஞ்சிநாலு மகத்தான சாதிக்காய் களஞ்சிரண்டு
சித்தான ரோசனையும் களஞ்சியாறு சிறப்பான வாள்மிளகு களஞ்சிமூன்றே
2518.
மூன்றான மிளகுடனே கருவாய்ப்பட்டை மூர்க்கமாய் கருஞ்சீரகம் களஞ்சிரண்டு
தான்றான பத்திரியும் களஞ்சியொன்று தருவான தக்கோலம் களஞ்சிரண்டு
கான்றான கார்கோலங் களஞ்சியொன்று கருவான மாசிக்காய் களஞ்சிரண்டு
பான்றான தேசாவரம் களஞ்சியொன்று பாகமுடன் வாய்விளங்க ரெண்டாய்ச்சேரே
2519.
சேர்க்கையிலே வசம்பதுவும் களஞ்சியொன்று செயலான சேங்கொட்டை களஞ்சியொன்று
மார்க்கமுடன் கடுக்காய்த்தோல் களஞ்சிரண்டு மருவான கருஞ்சீரம் களஞ்சியொன்று
தீர்க்கமுடன் நற்சீரம் களஞ்சியஒன்று திடமான சிறுதேக்கு களஞ்சியொன்று
ஏர்க்கவே தாளகமும் களஞ்சியெட்டு எழிலான முந்திரி களஞ்சிரண்டே
2520.
இரண்டான எள்ளுடனே களஞ்சிரண்டு இயலான ஓமமுடன் களஞ்சிரண்டு
பண்டான கொள்ளுடனே களஞ்சியொன்று பாங்கான எட்டிவிரை களஞ்சியொன்று
குண்டான தேற்றான்விரை களஞ்சிரண்டு கொடிதான கொடிவேலி களஞ்சியொன்று
திண்டான வாலுழுவை களஞ்சியொன்று திறமான சோம்பதுவும் களஞ்சிநாலே
2521.
நாலுடனே திப்பிலியும் களஞ்சியொன்று நலமான கஸ்தூரி களஞ்சியொன்று
பாலுடனே குங்குமப்பூ களஞ்சியொன்று பாங்கான கோடியது களஞ்சிநாலு
சேலுடனே முத்தமது களஞ்சிரண்டு செழிப்பான தான்றிக்காய் களஞ்சிநாலு
காலுடனே நெல்லியது களஞ்சிரண்டு கருவான முள்ளியது களஞ்சியாறே
2522.
ஆறான சிவதையது களஞ்சிநாலு அப்பனே நன்னாரி களஞ்சிபத்து
நேறான பற்பாடம் களஞ்சியாறு நேறான சிறுதேக்கு களஞ்சிரண்டு
தாறான பற்படகம் களஞ்சிரண்டு தளிரான சோரியது களஞ்சிரண்டு
சேறான செம்பூரான் களஞ்சிரண்டு சிறப்பான தேசாவின் வரமுந்தானே
2523.
தானான வரமதுவும் களஞ்சிரண்டு தாக்கான மயிலிறகு களஞ்சிநாலு
வேனான வலம்புரியுங் களஞ்சியொன்று வியர்வான ஏலமது களஞ்சியெட்டு
பானான சாம்பிராணி களஞ்சிநாலு பதமான ரோகணியுங் களஞ்சியெட்டு
தானான மகரப்பூ களஞ்சிரண்டு தகைமையுடன் குரோசானி களஞ்சிபத்தே
2524.
பத்தான நாகப்பூ களஞ்சியொன்று பாகமுடன் சித்தரத்தை களஞ்சியொன்று
சித்தான நிலைப்பனைக் களஞ்சியொன்று சிறப்பான பூகுசர்க்கரை தானொன்று
புத்தான வட்டதிப்பிலி தானொன்று புகழான வாய்விளங்கம் களஞ்சியொன்று
முத்தான வன்னமெனும் பேதிதானும் முயற்சியுடன் சாத்திரத்தின் பேதிதானே

2525.
பேதியாம் மாமிஷமும் களஞ்சியொன்று பேரான இருமஞ்சள் மரமஞ்சள்தானும்
வாதியாய் குன்றிமணி களஞ்சியாறு வகுப்பான முட்டியுடன் பேராமுட்டி
சாதியா மதுரமுடன் அக்கிராகாரம் சாங்கமுடன் களஞ்சியது ரண்டதாகும்
மேதியாம் நெருஞ்சியது ரண்டதாகும் மேலான களஞ்சியது ரண்டதாமே
2526.
தாமான வெள்ளுள்ளி களஞ்சியாறு தாக்கான கசகசா களஞ்சிரண்டு
காமான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி கருவாகத் தானரைக்க விபரங்கேளு
நாமான மூலிவகை உரைப்போம் பாராய் நாட்டிலே நாதாக்கள் சொன்னதில்லை
பாமான கையான்சார் சாமம்நாலு மயங்காமல் தானரைப்பாய் மகிபாதானே
2527.
கேளேதான் நற்கையான் சாமம்நாலு கெடியான பொற்கையான் சாமம்நாலு
பாலேதான் போகாமல் அரைப்பாயப்பா பாகமுடன் குலாமல்லி சாற்றினாலே
தாளவே தக்காளிச் சாற்றினாலே சாங்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
மாளவே புளியாரை சாமம்நாலு மயங்காமல் தானரைப்பாய் மகிபாதானே
2528.
தானேகேள் நீலியின்றன் சாமம்நாலு தகுவான வாதொண்டைச் சாமம்நாலு
மானேகேள் பொன்னாதரைச் சாமம்நாலு மார்க்கமுடன் பாற்சுரண்டி சாமம்நாலு
தேனேகேள் மலைத்தேனு சாமம்நாலு தெளிவான நீர்மிட்டான் சாமம்நாலு
வேனான கவுதும்பை சாமம்நாலு விருப்பமுடன் தானரைப்பாய் பண்பாய்த்தானே
2529.
பண்பான தானிச்சார் சாமம்நாலு பாங்கான கற்றாழை சாமம்நாலு
தின்பான கொள்ளிலைச்சார் சாமம்நாலு திடமான ஈருள்ளிச் சாமம்நாலு
நண்பான வரிக்குமட்டி சாமம்நாலு நலமான பேய்க்குமட்டி சாமம்நாலு
கண்பான கருப்பன்சார் சாமம்நாலு கதிரான மேனிச்சார் சாமம்நாலே
2530.
நாலான முசுக்கைச்சார் சாமம்நாலு நலமான மாதுளையின் சாமம்நாலு
காலான முருங்கைப்பூ சாமம்நாலு கடிதான முடக்கொத்தான் சாமம்நாலு
தாலான மாந்துளிரு சாமம்நாலு தாக்கான செந்தோன்றி சாமம்நாலு
நூலான வெந்தோன்றி சாமம்நாலு நுணாவுடனே செம்பருத்தி சாமம்நாலே
2531.
சாமந்தா னரைக்கையிலே யின்னங்கேளு சாங்கமுடன் பழச்சாறால் ஆறுசாமம்
நேமமுடன் தானரைப்பாய் தேங்காய்ப்பாலால் நேரான வாறுவகை செயநீர்தன்னால்
தாமமுடன் யெண்சாம மரைத்தபோது தகைமையுள்ள சரக்கெல்லா மடிந்துமல்லோ
சாமமுடன் மெழுகதுவாய் மைபோலாகி சார்பான வெண்ணெய்போ லிருக்கும்பாரே
2532.
பாரேதான் மெழுகெடுத்து பதனம்பண்ணு பாங்கான காயசித்தி மருந்தென்பார்பார்
சீரேதான் மண்டலங்கள் கொண்டுசென்றால் திறளான வியாதியது ஏகும்பாரு
கூரேதான் சொன்னபடி வியாதிமார்க்கம் கூறுவேன் மாணாக்கள் பிழைக்கவென்று
நேரேதான் மேகமென்ற திருபதும்போய் நெடிதான குஷ்டம்பதினெட்டும்போமே

2533.
போகுமே காப்பன் பதினெட்டும்போகும் பொல்லாத குன்மமது எட்டும்போகும்
ஏகுமே வாயுவென்ற தெண்பதும்போம் எழிலான பித்தம்நாற்பதுவும்போகும்
சாகுமே சேத்துமங்கள் தொண்ணூற்றாறும் சார்வான கிரந்தி பதினெட்டும்போகும்
வேகுமே சூலைபதினெட்டும்போகும் வேவமுட னரையாப்பு வெள்ளைபோமே
2534.
வெள்ளையென்ற ரோகமது ராஜரோகம் வெளிகாணா ரோகமது சகரோகம்போம்
கிள்ளையென்ற ஷயமதுவும் பதினெட்டும்போம் கீழான பாண்டுமுதல் மகோதரம்போம்
வள்ளையென்ற காமாலையாறும்போகும் வாகான நீரிழிவு மதுமேகம்போம்
கொள்ளைகொண்ட வயிற்றுவலி விம்மல்போகும் கொடிதான சுரமுதலு மகன்றுபோமே
2535.
அகன்றுபோம் சகலவிதநோய்கள்தானும் அப்பனே தேகமது வன்னிமீறும்
துகன்ற தொருவனுபான மறிந்துகொண்டால் துடிப்புடனே நரம்பெல்லாம் வலித்துக்காட்டும்
புகன்றதொரு தேகமது காந்திவீசும் புகழான தேகமது யிறுகும்பாரு
நிகன்றதொரு காயாதி கற்பமென்பார் நீனிலத்தில் சித்தர்செய்யம் வேதையாமே
2536.
வேதையாம் கோடிவழிவேதையுண்டு வேகமுடன் செய்பாகம் யாருஞ்செய்யார்
பாதையாம் இம்மருந்து வதீதமெத்த பாகமுடன் யான்முடித்தேன் இந்தபாகம்
தோதமுடன் சித்தர்முனி ரிஷிகள்தானும் தோற்றமுடன் தான்முடித்தார் அனந்தபாகம்
காலமுடன் காலாங்கிநாதர்பாதம் கருத்துடனே யான்வணங்கி பாடினேனே
2537.
பாடினேன் இன்னமொரு பாகங்கேளு பாங்கான கோமேதம் புஷ்பராகம்
தேடியே வப்ரேகம் பச்சைசெம்பு சிறப்பான வயிரமது சங்குமுத்து
கூடியே பவளமது நவதாதாகும் கொப்பெனவே யாறுவகை செயநீர்தன்னால்
நீடியே சமனெடையா யெடுத்துக்கொண்டு நேர்மையுடன் தானரைப்பாய் சாமம்நாலே
2538.
நாலான சாமமது வரைத்துமைந்தா நலமுடனே பில்லையது தட்டியேதான்
கோலமுடன் ரவிதனிலே காயவைத்து குறிப்பாக ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
ஞாலமுடன் சீலையது காய்ந்தபின்பு நளினமுடன் கனயெருவிற் புடத்தைப்போடு
தாலமுடன் புடமாறி யெடுத்துப்பார்க்கத் தவளநிற பற்பமது காந்தியாச்சே
2539.
ஆச்சென்று விடுகாதே மைந்தாகேளு அப்பனே சொர்ணமென்ற பற்பந்தானும்
மாச்சலுடன் நாலுக்கோர் நவநீதவித்தை மாட்டடா விரண்டுமொன்றாய்க் கல்வமிட்டு
காச்சலுடன் ஆறுவகை செயநீர்தன்னால் கருத்துடனே தானரைப்பாய் நாலுசாமம்
மூச்சடங்கத் தானரைத்து வில்லைதட்டி முயலவே ரவிதனிலே காயப்போடே
2540.
போடவே பில்லையது காய்ந்தபின்பு பொங்கமுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
நீடவே கோழியென்ற புடத்தைப்போடு நீணிலத்தில் நீயுமொரு சித்தனாவாய்
தேடவே காயாதி கற்பந்தேர்ந்தாலும் யாருந்தான்சொல்லவில்லை
பாடவே பலநூலுங் கண்டாராய்ந்து பாலித்தேன் லோகத்து மாந்தர்க்காமே

2541.
ஆமேதான் பற்பமுறை யாருஞ்சொல்லார் அப்பனே மானிடர்கள் பிழைக்கவென்று
நாமேதான் பலநூலுங் கண்டாராய்ந்து நளினமுடன் பாடிவைத்தேன் சத்தகாண்டம்
போமேதான் வீணிலே மனம்செல்லாமல் பொங்கமுடன் இப்பாகஞ் செய்தாயானால்
மாமான காயகற்பமிது தானாகு மகத்தான பற்பமது நலிலொண்ணாதே
2542.
ஒண்ணது பற்பத்தை பணவிடைதானும் உத்தமனே வெண்ணெய்தனில் கொண்டாயானால்
நண்ணாது நோயேது ரோகமேது நாடாது காலனுமே நாடமாட்டான்
திண்ணாலும் காயகற்ப மிதற்கொவ்வாது திறமையுடன் செய்துகொண்டோன் புத்திவானாம்
பண்ணாலு முடியாது பாரிலப்பா பாக்கியவான் செய்துகொள்ளும் வேதையாமே
2543.
வேதையிலே யின்னமொரு பாகங்கேளு விருப்பமுடன் சூரணங்கள் எதுவானாலும்
தீதையிலே வனுபானம் தெரிந்துகொண்டால் தேகமது கற்றூனாகும்பாரு
போதையிலே காயாதி கற்பமாகும் பொங்கமுடன் உண்டவருக்கு பலனுண்டாகும்
பாதையிலே மேகமென்ற யிழிவுபோகும் பாரினிலே நீயுமொரு சித்தனாமே
2544.
சித்தனா மின்னமொரு மார்க்கம்பாரு சிறப்பான பெருஞ்சாதி கோழியொன்று
முத்தலாய் கொண்டுவந்து  வலயமிட்டு முதன்மையா முட்டைதனை யெடுத்துமைந்தா
சுத்தமுள்ள பூநீராம் புட்டியொன்று சூட்சமுடன் சின்னவாய் கொண்டதாக
வெத்தியுடன் முட்டைக்குள் புட்டிபோக விருப்பமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே
2545.
பண்பான முட்டைதனை செப்பக்கேளு பாகமுடன் காரமென்ற காடிதன்னில்
திண்புஜடனே மூன்றுநாள் முட்டைதன்னை திறமுடனே யூறினபின் எடுத்துப்பாரு
நண்பான முட்டையது காரமேறி நவிலவே வோடதுதான் சவ்வுபோலாகும்
தண்பான முட்டையது தளர்ந்துபோகும் தாக்கடா புட்டியென்ற சீஷாதானே
2546.
தானான சின்னவாய்ச் சீஷாக்குள்ளே தள்ளடா முட்டைதனை யுள்ளேபோகும்
வேனான முட்டையது சென்ற பின்பு விருப்பமுடன் பாணியென்ற தண்ணீர்தானும்
கோனான புட்டிக்குள் ரொம்பவிட்டு குறையாமல் சீஷாவை மூடிப்போடு
கோனான முட்டையது கல்லுபோலாம் தீவிரமாய் பாணிதனை வூத்திடாயே
2547.
ஊத்தியபின் புட்டிதனை மூடிப்போடு உத்தமனே ராசரிடம் சென்றுநீயும்
நேத்தியுடன் புட்டிதனை கைகொடப்பா நேரான புட்டிதனை பார்க்கும்போது
மாத்தலுடன் புட்டிக்குள் முட்டையப்பா மன்னவனே சென்றவழி வதிதவித்தை
காத்தலுடன் வாச்சரிய வித்தைதன்னைக் காண்கிலோர் ராசரெல்லாம் மயங்குவாரே
2548.
மயங்குவார் வித்தையிது மண்டலத்தில் மாற்றானுங் கண்டறியான் வினோதவித்தை
தயங்கியே செய்தாலும் காணமாட்டார் தகைமையுள்ள கருவாளி காண்பான்பாரு
புயங்கமுடன் தாரிணியில் மற்றோராலும் புகழ்ச்சியுடன் செய்யுவது அருமையாகும்
வயங்கமுடன் காலாங்கி நாயர்பாதம் வாகுடனே தாள்பணிந்து பாடினேனே

2549.
பாடியே யின்னமொரு கருமானங்கேள் பாலகனே மாணாக்கள் பிழைக்கவென்று
தேடியே நிமிளையது தங்கமப்பா தெளிவான நிமிளையது கூறக்கேளு
வாடியே திரியாதே மன்னாபாரு மகத்தான செம்புத் தகட்டின்மேலே
நீடியே சூதவத மேனிச்சாற்றால் நேர்மையுடன் தானரைத்துப் பூசிடாயே
2550.
பூசியே நிமிளைதனை பொடித்துக்கொண்டு பொன்னவனே கரியோட்டில் துட்டுவைத்து
ஆசியே நிமிளைதனை சன்னமாக வப்பனே கீழ்மேலும் பொதிந்தபின்பு
காச்சிக்கு சீலையது வலுவாய்ச் செய்து கருத்துடனே கவுதாரி புடந்தான்போடு
மாசிபோல் வர்ணமது மிகவுண்டாகி மன்னவனே தாம்பரமும் பழுக்கும்பாரே
2551.
பாரேதான் தாம்பரமும் பொன்னுமாகும் பாங்கான நிளையது வர்ணமெத்த
சீரேதான் உருக்கிப்பார் மாற்றெட்டாகும் சிறப்பான வர்ணமது தூம்பரவேதை
வேறேதான் காணவுமே வதீதவேதை வேடிக்கை சிமிட்டுவித்தை  வித்தைசித்தர்
கூரேதான் சீனபதிமார்க்கத்தார்கள் குறிப்புடனே செய்வார்கள் கோடிதானே
2552.
கோடியாம் வேதையிது கோடாகோடி கொட்டினேன் மாணாக்கள் பிழைக்கவென்று
நீடியே நிமிளைதனைக் காணமாட்டார் நிமிளையில் வர்ணமதைக் அறியமாட்டார்
மூடியே பித்தளைபோல் கல்லுமப்பா முறுக்கலுடன் சிட்டம்போல் இருக்கும்பாரு
தேடியே மலைந்தானும் கிட்டாதப்பா தேசத்தில் வதீதமென்ற சிட்டம்பாரே
2553.
சிட்டமுடன் கல்லதனை செந்தூரித்தால் சிவப்புடனே தங்கமது செந்தூரந்தான்
கிட்டநிமிளையது வர்ணமெத்த கெடியான செந்தூரங் குன்றியுண்ணு
குட்டமென்ற தேகமது பொன்போலாகும் குறையாது வயதுதான் செவினியாய்
மட்டமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று மயங்காமல் கொடுத்திடவே மாற்றெட்டாமே
2554.
எட்டான மாற்றதுவு மதிகமாகி எழிலான புடத்துக்கு வுறுதிதங்கம்
மட்டான சங்கமது பசுமையாகும் மகத்தான வேதையிது சித்தர்வேதை
கட்டான நிமிளையது கருவுவேதை காசினியில் ஆருந்தான் சொல்லமாட்டார்
சட்டமுடன் காலாங்கிதனைவணங்கி சார்புடனே போகரிஷி பாடினேனே
2555.
பாடவே மாற்றுயர்வு பகரக்கேளு பாங்கான துருசதுவும் பலமோவொன்று
நீடவே துருசுக்கு சுண்ணாம்பப்பா நிலையான சுண்ணமதைக் கவசம்செய்து
தேடவே மூன்றுநாள் காய்ந்தபின்பு தெளிவுடனே காடையென்ற புடத்தைப்போடு
கூடவே கவசமதை பிரித்துப்பாரு கொற்றவனே துருசதுவும் வெளுக்கும்பாரே
2556.
பாரேதான் துருசதுவும் ஒன்றேயாகும் பாங்கான லிங்கமது ஒன்றேயாகும்
சீரேதான் சூதமது ஒன்றேயாகும் சிறப்பான காரமது ஒன்றேயாகும்
நேரேதான் எலிக்காலின் தழையினாலே நேர்புடனே தானரைப்பாய் நாலுசாமம்
சீரேதான் சிமிழ்தனிலே பதனம்பண்ணு திறமான மட்டமென்ற பொன்னிற்போடே

2557.
போடவே மூன்றுபுடம் உமிநீராலே பொங்கமுடன் தாட்டின்மேல் லேசாப்பூசி
தேடவே பூங்காவி தன்னிற்போடு தெளிவாக மாற்றதுவும் ஒன்பதாகும்
நீடவே யுருகிப்பார் மாற்றேகாது நிலையான புடத்துக்கு வலுத்ததங்கம்
சாடவே மட்டமது பழுப்புமாகா சாங்கமுடன் பசும்பொன்னிற் போடக்கேளே
2558.
கேளேதான் இவ்வேதை சிடிகைவேதை கெணிதமுடன் நாதாக்கள் செய்யும்வேதை
கோளேதான் வாறாது குருவின்மார்க்கம் கூறுவேன் வின்னமொரு மார்க்கம்பாரு
தானேதான் வுப்பினிட செந்தூரத்தை தாக்குடனே செய்வதற்கு தகைமைகேளு
வீணேதான் செந்தூரப்போக்கும் சித்தினிலே சொல்லியல்லோ மறைத்தார்தாமே
2559.
தாமான வுப்பதுவும் சேர்தானொன்று தாக்கான துருசதுவும் சேர்தான் நாளாம்
வாகான தும்பலென்ற பூண்டினாலே வகையுடனே தானரைப்பாய் நாலுசாமம்
காமான பில்லையது தட்டிமைந்தா கருவாக ரவிதனிலே காயவைத்து
நாமான வோட்டிலிட்டுச் சீலைசெய்து நலமாகப் புடம்போடக் கட்டிப்போமே
2560.
கட்டியதோர் உப்புதனை எடுத்துக்கொண்டு கருத்துடனே முன்போல மூலியாலே
திட்டமுடன் தானரைப்பாய் நாலுசாமம் திறமாக ரவிதனிலே காயவைத்து
சட்டமுட னோட்டிலிட்டுச் சீலைசெய்து சாங்கமுடன் கோழியென்ற  புடத்தைப்போடு
சிட்டமென்ற உப்பதுவும் காரமேறி கிருபையுடன் தான்சிவக்கும் பாண்மையாமே
2561.
பான்மையாம் இப்படியே ஐந்துபத்து பாகமுடன் புடம்போடச் சிவக்கும்பாரு
வான்மையுடன் கரிப்பில்லஜ கசுவுமில்லை வளமாக வுக்குக்கு காரமெத்த
தான்மையுடன் கரிதனிலே வுருகியாடும் தகைமையுடன் மணிபோல ஒளிவுவீசும்
கான்மையுடன் மணிதனையே உமிநீராலே கருத்துடனே மட்டமென்ற பொன்னிற்பூசே
2562.
பூசவே களஞ்சிக்கு குன்றிதானும் பொலிவாகத் தானெடுத்துப் பூசிப்போடு
ஆசலுடன் பூங்காவி தன்னிற்குள்ளே வப்பனே புடம்போட மாற்றுகாணும்
கூசாமல் மூன்றுபுடம் போட்டாயானால் குறையாது சரிநிறையும் ஏகாதப்பா
தாகமுடன் மூன்றுமுறை போட்டபோது தப்பாது வாணிக்குப் பத்துமாத்தே
2563.
மாத்தான தங்கமது வாணித்தங்கம் மகத்தான தங்கமது வுருகிப்பாரு
கூத்தான காச்சலுக்கு சுலாய்ப்புகாணும் குவலயத்தில் சித்தர்முனி செய்யும்வேதை
சாத்தலுடன் கருவானிலாண்டான்பாரு சாங்கமுடன் பின்னொருவர் காணுவாரோ
நீத்தலுடன் விட்டகுறை நேர்ந்தோன் காண்பான் நீனிலத்தில் மற்றொருவர் காணாராமே
2564.
ஆமேதான் செந்தூரம் குன்றியுண்ணு அப்பனே காயாதி கற்பமாச்சு
தாமேதான் சமாதிக்கு இடமுமில்லை தாக்கில்லை நோக்கில்லை தேகம்போகா
வாமேதான் வாசியது கீழ்நோக்காகும் வளமான யோகத்தி லிருக்கலாகும்
போமேதான் தேகமது கற்றூணாகும் போக்கான மேனியது சண்ணாதன்றே

2565.
சண்ணது இன்னமொரு பாகங்கேளு சார்வான லோகமது செந்தூரந்தான்
பண்ணாது பண்ணுவார் மாந்தரப்பா பாரினிலே சித்தர்கை மறைப்புகாணார்
தண்ணமுடன் காலாங்கிநாதர்பாதம் தாக்குடனே யான்வணங்கி கூற்றலுற்றேன்
வண்ணருடன் அயமதுவும் ராவிமைந்தா வளமையுடன் தான்செய்த வகைதான்கேளே
2566.
வகையான லோகமது சேர்தானப்பா வாகுடனே தானெடுத்து சாற்றக்கேளு
தொகையான சீனமென்ற காரந்தன்னால் துப்புரவாய் தானரைத்து கழுவிப்போடு
தகையான பால்நண்டு சாமம்நாலு தாக்குடனே தானரைப்பாய் மைந்தாகேளு
பகையான பில்லைதன்னை ரவியிற்போடு பாகமுடன் ஓட்டிலிட்டு சீலைசெய்யே
2567.
செய்யவே புடமதுதான் கோழியாக செப்புகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
உய்யவே பத்துபுடம் இப்படியேபோடு உத்தமனே பின்னாலே சாற்றக்கேளு
பையவே சூதமென்ற ராஜாதன்னை பாகமுடன் சரிகாலால் சேர்த்துக்கொண்டு
நையவே தானரைப்பாய் முன்மூலியாலே நயமுடனே பில்லைதட்டி காயப்போடே
2568.
காய்ந்தபின்பு தானெடுத்துமாணாகேளு கருவாக தளவாயாஞ் சட்டிதன்னில்
ஆய்ந்ததொரு வுப்பதனை மைபோலாக்கி வப்பனே சட்டிதனில் கீழேபோட்டு
மாய்ந்தலுடன் பில்லைதன்னை நடுமையத்தில் மார்க்கமுடன் தானமைத்து மன்னாபாரு
பாய்ந்தலுடன் மேலுமந்த வுப்பைக்கொட்டி பதமுடனே சீலையது வலுவாய்ச்செய்யே
2569.
செய்துமே வாலுகையிலி அடுப்பிலேற்றி செம்மெயுடன் தானெரிப்பாய் ஆறுசாமம்
பெய்துமே யாறினபின் னெடுத்துப்பாரு பேறான செந்தூரம் முருக்கம்பூவாம்
நைதுமே செந்தூரமெடுத்துப்பாரு நாதாக்கள் முறையதுதான் சொல்லப்போமோ
கொய்துமே செந்தூரம் பதனம்பண்ணு கொப்பெனவே வேதைமுகம் செப்பக்கேளே
2570.
செப்பவென்றால் செந்தூரம் வெள்ளியாறு சிவப்பான செம்பதுவும் செம்புநாலு
ஒப்பவே தங்கமது ஒன்றுகூட்டி வுவமையுடன் தானுருக்கி குருவொன்றீய
மெப்பவே கரிபோல இருக்கும்பாரு மேன்மையுடன் காரமிட்டு வூதிப்போடு
அப்பவே பொன்னுமது மாற்றுகாணும் அப்பனே எட்டரையு மாகுந்தானே
2571.
அதிகமா மின்னமொரு கருமானங்கேள் அப்பனே மாணாக்கள் பிழைக்கவென்று
துதீதமுடன் நீதமது நவநீதந்தான் சுத்தமுடன் வெண்ணெயது எடுத்துப்பாரு
கதீதமுள்ள வெண்ணையது சேர்தானொன்று கருவாக வெடியுப்பு சேர்தானொன்று
புதீதமுள்ள கெந்தியது சேர்தானொன்று புகழாக எருக்கன்பால் தன்னாலாட்டே
2572.
ஆட்டவே பனிரண்டு சாமந்தானும் அப்பனே வெண்ணெய்போல் பில்லைதட்டி
பாட்டடா பில்லையது ரவியிற்போடு மயங்காதே மன்னவனே ஓட்டிலிட்டு
மூட்டடா சீலையது வலுவாய்ச் செய்துமூர்க்கமுடன் கெஜமென்ற புடத்திற்போட்டு
தீட்டடா பின்னுமந்த எருக்கன்பாலால் திறமாக தானரைப்பாய் சாமம்நாலே

2573.
நாலான சாமமது வரைத்தபோது நாயகனே பில்லையது காயவைத்து
தாலான ரவிதனிலே காய்ந்தபின்பு தகைமையுடன் ஓட்டிலிட்டு சீலைசெய்து
மேலான பஉடமதுவும் கெஜமேயாகும் உத்தமனே யாறினபின் னெடுத்துப்பாரு
பாலான பற்பம்போலிருக்கும்பாரு பாலகனே யிப்படியே பத்துபோடே
2574.
போடையிலே தசபுடமுந் தீர்ந்தபின்பு பொங்கமுடன் காரமென்ற தும்பப்பூண்டு
தேடையிலே தானரைப்பாய் ஆறுசாமம் தெளிவாக பில்லையது தட்டிமைந்தா
மேடையிலே ரவிதனிலே காயவைத்து மேன்மையுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
கூடையிலே புடமதுதான் கெஜமேயாகும் கொற்றவனே புடமாறி யெடுத்துப்பாரே
2575.
பார்க்கையிலே பற்பமது சிவப்புகொஞ்சம் பார்த்திவனே யிதிற்பத்து புடமேபோடு
சேர்க்கையிலே புடமதுவுந் தீர்ந்தபின்பு செயலான மூலியது செப்பக்கேளு
மூர்க்கமுடன் பொன்னாவாவாரைதான் மூலிமியன்மையுடன் தானரைப்பாய்யெட்டுசாமம்
தீர்க்கமுடன் தானரைத்து பில்லைதட்டி திறலாக ரவிதனிலே காயப்போடே
2576.
காய்ந்தபின்பு ஓட்டிலிட்டு சீலைசெய்து கனமாக நூறெருவிற் புடத்தைப்போடு
மாய்ந்தபின்பு தீயாறி யெடுத்துப்பாரு மன்னவனே செந்தூரம் வர்ணம்காணும்
சாய்ந்தலுடன் இப்படியே பத்துபோடு சார்பாக புடமதுவுந் தீர்ந்தபின்பு
எய்தலுடன் உதரமாம் வேங்கை தன்னால் எழிலாக தானரைப்பாய் சாமம்ரெண்டே
2577.
ரண்டான சாமமது வரைத்தபோது எழிலான பில்லையது தட்டிமைந்தா
திண்டான ரவிதனிலே காயவைத்து திறமாக ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
கண்டான புதும்வராட்டிநூறு கவனமுடன் போட்டுவர செந்தூரிக்கும்
தண்டான புடமதுவும் பத்துபோடு தாக்கான செந்தூரம் சிவப்புகாணே
2578.
காணவே செந்தூரம் என்னசொல்வேன் கடிதான ரசமதுதான் மடியுமட்டும்
தோணவே புடமதுவும் செப்பக்கேளு துறையுடனே சாரமென்ற செயநீர்தன்னால்
மாணவே தானரைப்பாய் ஆறுசாமம் மார்க்கமுடன் பில்லைதட்டி காயவைத்து
ஊணவே ஓட்டிலிட்டு சீலைசெய்து உத்தமனே நூறெருவிற் புடந்தான்போடே
2579.
போட்டவுடன் செந்தூரம் அருணன்போலாகும் பொங்கமுடன் இதிற்பத்து புடந்தான்போடு
நீட்டமுடன் செந்தூரங் குற்றம்நீங்க நிலையான சுல்லிதனை யடைக்கும்பாரு
தாட்டிகமாய் பரிட்சிக்க விபரங்கேளு தகைமையுடன் மண்பாண்டந் தன்னைவாங்கி
மாட்சிமையாய் பாண்டத்தில் துவாசரமிட்டு மாட்டடா தொட்டியென்ற பாண்டம்வையே
2580.
வைக்கவே தொட்டியென்ற பாண்டந்தன்னில் மன்னவனே சில்லியென்ற பாண்டந்தன்னை
வைக்கவே ஜலம்விட்டு செந்தூரத்தை மயங்காமல் பணவிடைதான் பாண்டத்துள்ளே
வைக்கவே செந்தூரம் போட்டபோது வளமான துவாரமது வடையும்பாரு
வைக்கவே செந்தூரம் பரிட்சைகாட்டி மாட்டடா ரோகமென்ற பிழிவுதானே

2581.
இனிவான நீரிழிவு மதுமேகந்தான் எழிலான மேகமது இருபத்தொன்றும்
பழியாமல் அனுபானம் எதிலுண்டாகும் பறக்குமடா ரோகமென்ற கசரோகம்போம்
வழியான செந்தூரம் பரிட்சைகாட்டும் மயங்காமல் ராசரிடம் சென்றுநீயும்
சுழியான சுழிமுனையும் வாசிப்பார்த்து சுந்தரனே வடகலையில் சென்றிடாயே
2582.
சென்றுமே ராசனிடஞ் சென்றுநீயும் சிறப்புடனே செந்தூரம் பரிட்சைகாட்டி
குன்றிய தளவாகத் தான்கொடுத்து கொற்றவர்க்கு பத்தியமும் இல்லாமல்தான்
வென்றுமே யவரிடத்தில் பிணிகள்தீர்த்து வேணவுபசாரமுடன் நிதிகள்பெற்று
நன்றலுடன் சோடசோ வுபசாரந்தன்னால் நாயகனே தண்டிகையும் தருவார்தானே
2583.
தானேதான் சென்றவிடஞ் சிறப்புமுண்டு தாரணியில் மாந்தரெல்லாம் பிரமைகொள்வார்
வேனான சித்துமுனி ரிஷியென்பார்கள் வேதாந்த சித்தாந்த குருவென்பார்கள்
கோனான தத்துவத்தில் கடந்தஞானி கொற்றவர்க்கு வுகந்ததொரு மகத்துவென்பார்
தேனான மனோன்மணியும் கடாட்சிப்பாளே தேர்வேந்த ராபரெல்லாம் தியங்குவாரே
2584.
தியங்குவார் ராசமுடி மன்னரெல்லாம் தஇறமையுடன் கைகண்ட பாண்டியன்றான்
மயங்குவார் பூதலத்தில் ராசயோகன் மானிலத்தில் தன்வந்திரி யிவனென்பார்கள்
தயங்கவே அகத்தியனார் அவதாரம்தான் தாரிணியில் இவன்போல சித்தனுண்டோ
பயங்கமுடன் பலபலவாய்ச் சொல்லிக்கொள்வார் பூதலத்தில் நீயுமொரு சித்தனாமே
2585.
சித்தரகளும் உனைக்கண்டு பிமிப்பார்கள் சிறப்புடனே வந்துனக்கு யின்னஞ்சொல்வார்
பத்தியுடன் ஞானோபதேசஞ் சொல்வார் பாகமுடன் கைமுறையும் அனந்தம்சொல்வார்
முத்திபெரும் வழிதனையே காட்டுவார்கள் முயலான சின்மயத்திலிருந்துகொண்டு
சத்தியத்தை மறவாமல் தருமவானால் தாரிணியில் எந்நாளும் தழைப்பார்தானே
2586.
தழைக்கவே யின்னமொரு கருமானஞ்கேள் தாரிணியில் மானிடர்கள் செய்யமாட்டார்
பிழைக்கவே வேண்டுதற்கு யின்னஞ்சொல்வோம் புகழான கல்லுப்பு சேர்தானொன்று
முழைக்கவே குழுக்கல்லில் தள்ளிவிட்டு முயற்சியுடன் தானரைக்க விபரங்கேளு
மழைகளிலே பூக்குமந்த காளான்தன்னை மாற்கமுடன் கொண்டுவந்து ஜலத்தைவாங்கே
2587.
வாங்கியே ஜலமென்னும் செயநீராலே வளமையுடன் தானரைப்பாய் பத்துநாள்தான்
தூங்கியே திரியாதே மைந்தாபாரு துரையுடனே மைபோல வரைத்துமேதான்
ஏங்கியே போகாமல் பில்லைதட்டி எழிலாக ரவிதனிலே காயவைத்து
ஓங்கியே ஓட்டிலிட்டுச் சீலைசெய்து வுத்தமனே கோழியென்ற புடத்தைப்போடே
2588.
புடமதுதான் ஆறியபின் எடுத்துப்பாரு புகழான கல்லுப்பு கட்டிப்போகும்
திடமுடனே பின்னுமந்த செயநீராலே தீவிரமாய் தானரைப்பாய் நாலுசாமம்
தடமுடனே மைபோலவரைத்துபாலா சார்புடனே பில்லைதட்டி காயவைத்து
மடமுடனே ஓட்டிலிட்டுச் சீலைசெய்து மயங்காமல் முன்போல புடத்தைப்போடே

2589.
போடவே புடமதுதான் ஆறிப்பின்பு பொங்கமுடன் தானெடுத்துப் பார்க்கும்போது
நீடவே பற்பமது என்னசொல்வேன் நிலையான நீருக்கும் அனலுக்குமேகா
சூடவே பின்னுமந்த செயநீராலே சூட்சமுடன் பத்துபுடந் தீர்ந்தாயானால்
தேடவே பற்பமது என்னசொல்வேன் தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கே
2590.
சிவயோகி என்றாலே மெத்தவுண்டு சிவன்தனையே கண்டவர்போல் வார்த்தைசொல்வார்
தவயோகிபோல் ஒருவேஷம் பூண்டு சர்வகலை யறிந்ததொரு ஞானிபோல்
பவங்கண்ட ரிஷியென்று பெயருங்கொண்டு பாரினிலே பசப்பியல்லோ பொருள்தான்கொள்வார்
சவம்போல மூச்சிதனை யடக்கிக்கொண்டு தாரணியில் பிர்மைகொள்ள நடப்பார்தாமே
2591.
தாமான பற்பத்தை செய்யமாட்டார் தாக்கான சருக்குருவைக் காணமாட்டார்
பேமானிபோல வெகுபேச்சி சொல்வார் பேச்சிக்கு முன்பாக பாட்டுசொல்வார்
சாமானிய புருஷனென்று வார்த்தைச்சொல்வார் சாற்றலுடன் தூஷணைகள் மிகவுஞ்சொல்வார்
நாமான சாத்திரங்கள் அதிகம்பேசி நாணியே தலைகுனிந்து நடுங்குவாரே
2592.
நடுங்குவார் பற்பத்தின் நேர்மைகாணார் நாட்டிலே யாம்கண்ட வளமையப்பா
அடுங்கவே பற்பத்தை கண்டாராய்ந்து அப்பனே நாமுரைத்தோம் அவனியோர்க்கு
தடுக்கவே பற்பத்தை செம்பிலீய சண்ணுமே வூகலென்ற நாற்றம்போகும்
ஒடுங்கவே பத்துக்கு ஒன்றுதானும் உத்தமனே குருதனையே தாக்கிடாயே
2593.
தாக்கவே ரவிதானுங் கட்டிப்போகும் தகைமையுடன் செம்பதுவும் வூறலேகி
நோக்கமுடன் செம்பதுவும் வர்ணங்காட்டும் நேராக வசம்புநிகர் வெள்ளிசேர்த்து
பாக்கவே வந்திடைக்கு தங்கஞ்சேர்த்து பாண்மையுடன் தானுருக்கி யெடுப்பாயானால்
தூக்கமுடன் மாற்றதுவும் மிகவுமாகி துப்புறவாய் தங்கமது காணும்பாரே
2594.
காணவே பற்பத்தை யனுபானத்தில் பணவிடைதான் மண்டலங்கள் கொண்டுவந்தால்
தோணவே குன்மமென்ற தெட்டும்போகும் தோற்றாத வாய்வென்ற தெண்பதும்போம்
நாணவே பாண்டுவகை யாறுந்தீரும் நாடாது சூலை பதினெட்டும்போகும்
வேணவே மகோதரம் பீலிகையும்போகும் விருப்பமுடன் வயிற்றுவலி விம்மல்போமே
2595.
போமேதான் குடற்பிரட்டால் வாய்நீரூரல் குடல்வாதம் மனுர்வாதம் பட்சவாதம்
ஏமேதான் கண்டவலி கவுசுகட்டி வீக்கமுடன் நீரும்பல் விக்கல்போகும்
தேமேதான் பித்தமென்ற நாற்பதும்போம் திரளான மலட்டுவலி குடைச்சல்தீரும்
நாமேதான் சொன்னபடி யுப்பின்மார்க்கம் நாதாக்கள் சொல்லவில்லை நாம்சொன்னோமே
2596.
சொன்னோமே சித்தர்முனி சித்தர்தாமும் சூட்சாதி சூட்சமதை மறைத்துப்போட்டார்
என்னைப்போல் உப்பினிட மார்க்கந்தன்னை எடுத்துரைத்தார் நாதாக்கள் யாருமில்லை
தன்னைப்போல் வெகுளியதாய்ச் சொல்லிப்போட்டு தாறுமாறாகவல்லோ மறைத்துப்போட்டார்
இன்னம்வெகு கைமறைப்பு கண்டுதேர்ந்து எடுத்துரைத்தேன் உப்பினிட மார்க்கந்தானே

2597.
தானான வுப்புதன்னைக்கொண்டபோது தாக்கான தேகமது கற்றூணாகும்
கோனான யெனதையர் காலாங்கிநாதர் குருபதத்தை யான்வணங்கி பாடிவைத்தேன்
தேனான வின்னூல்தான் குருநூலாகும் திரட்டிவைத்தேன் ஏழாயிரங்காண்டமப்பா
பனான பராபரியை மனதிலுண்ணி பாடிவைத்தேன் சீனபதிதேசத்தார்க்கே
2598.
தேசமென்றால் தேசமது சொல்லப்போமோ தேசத்தில் சீனபதிக்கிணையீடுண்டோ
மோசமில்லை யவரிடத்தில் மாந்தரப்பா முடிசாய்ந்த மன்னர்முதல் குருக்கள்தாமும்
பாசசுடன் பட்சமுண்டு வருளுமுண்டு பாரினிலே யவர்க்கீடு சொல்லப்போமோ
நேசமுடன் சத்தியத்தைக் கைவிடாதார் நீணிலத்தில் சீனபதி மாந்தர்தாமே
2599.
தாமான இன்னமொரு சூட்சம்பாரு தண்மையுடன் சொல்லுகிறோம் மைந்தாகேளு
கோமான கெந்தகமும் சூதந்தானும் கொடிதான சாரமுடன் நிமிளைதானும்
காமான காரமுடன் சீனந்தானும் கருவான கண்டருட தொட்டிதானும்
நாமான சரக்கெல்லாமஃ சரியாய்த்தூக்கி நளினமுடன் தானரைப்பாய் பழச்சாற்றாலே
2600.
அரைக்கையிலே நாற்சாமமரைத்தபோது அப்பனே மெழுகதுபோலாகும்பாரு
திரைக்கவே கலசமென்ற பாண்டந்தன்னில் திறமுடனே தானடைத்து மைந்தாகேளு
கரைப்புடனே மேலதனில் ரவியால்மூடி களிப்பென்ற மண்ணதனால் சீலைசெய்து
முறைப்படியே கவுதாரி புடத்தைப்போடு மோசமில்லை பதங்கமது ஏறும்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

2601.
பாரேதான் பதங்கமது என்னசொல்வேன் பாரினிலே கருவாளி செய்வான்பாரு
நேரேதான் பதங்கமதை குழுக்கல்லிட்டு நினைவாக வந்திடைக்கு கெந்திசேர்த்து
கூரேதான் வந்திடைக்கு பாதிசூதம் குறிப்பாக தானரைப்பாய் செயநீர்தன்னால்
சாரேதான் மெழுகுபோல் அரைத்துப்பின்பு சட்டமுடன் பின்னுமந்த கலசமேற்றே
**2602.**
ஏற்றவே கலசம்வாய் ரவியினால் எழிலாக மூடியல்லோ சீலைசெய்து
போற்றியே மனோன்மணியை தியானித்தேதான் பொலிவாக முன்போல புடத்தைப்போடு
காற்றில்லா விடந்தனிலே புடந்தான்போடு கறுப்பான பதங்கமது மேலேதாவும்
ஆற்றியே புடமாறி யெடுத்துப்பாரு அப்பனே பதங்கமது சொல்லொண்ணாதே
**2603.**
சொல்லவென்றால் நாவுமில்லை பாவுமில்லை சூட்சாதி சூட்சமெல்லாம் சூதத்தாட்டம்
வெல்லவே பதங்கமதை எடுத்துக்கொண்டு விருப்பமுடன் பரணைக்குள் பதனம்பண்ணு
கொல்லவே தங்கமது களஞ்சியொன்று கூரான பதங்கமது சரிநேரொக்க
மெல்லவே மூசைதனி லடைத்துமைந்தா மேன்மையுடன் சில்லிட்டுச் சீலைசெய்யே
**2604.**
செய்யவே சீலையது வலுவாய்ச்செய்து செப்பமுடன் சரவுலையில் வைத்துயூது
பையவே தீயாறி யெடுத்துப்பின்பு பக்குவமாய் மூசைதனை யுடைத்துப்பாரு
மெய்யான யேமமது செப்புமாகும் மேன்மையுடன் செம்புதனை எடுத்துப்பாலா
துய்யவே பதினாலுக்கொன்றுசேரு துப்புரவாய் மாற்றாறு காணுந்தானே
**2605.**
காணவென்றால் வாதவித்தை லகுவிலாச்சோ கண்டவர்கள் விண்டவர்கள் யாருமில்லை
தோணாத சரக்கெடுத்து வூதியென்ன தொல்லுலகில் கெட்டவர்கள் கோடாகோடி
சாணான கைப்பொருள்போல் வாய்க்குமோசொல் சண்டாள துரோகிகட்கு வாய்க்காதன்று
வீணாகத் தானலைந்து சுட்டுகெட்டு வீணிலே மடிந்தவர்கள் கோடியாமே
**2606.**
கோடியா மின்னமொரு கருமானங்கேள் கொட்டினேன் வாதமென்ற கட்டைதானும்
தேடியே யலைந்தாலும் கிட்டுமோசொல் தெளிவான லிங்கமது களஞ்சிபத்து
வாடியே திரியாதே மன்னாகேளு வளமாகச் சொல்லுகிறேன் லிங்கப்போக்கு
நீடியே பாவையர் மூன்றுநாளு நினைவாக முழுகிடவே யூறப்போடே
**2607.**
போடேதான் மூன்றுநாள் சென்றபின்பு பொங்கமுடன் தானெடுத்து தேனில்தானும்
நீடவே மூன்றுநாள் ஊறப்போடு அப்பனே லிங்கமது சுத்தியாச்சு
கூடவே லிங்கமதை வின்னுமப்பா குமுறவே வெள்ளுள்ளிச் சாற்றினாலே
ஆடவே மூன்றுநாள் வூறப்போடு அப்பனே லிங்கமது சுத்தியாச்சே
**2608.**
ஆச்சென்று விடுகாதே மன்னாகேளு அப்பனே லிங்கமதை யெடுத்துக்கொண்டு
பாச்சலென்ற யெரிகாலன் பாலினாலே பாங்குபெற நாற்சாமம் சுறுக்குதாக்கு
காச்சலுடன் லிங்கமது கட்டிப்போகும் கருவான லிங்கமது வேதையாகும்
பேச்சில்லை வவதைமுகம் யாருங்காணார் பேரான லிங்கத்தின் போக்குதானே

2609.
போக்கான லிங்கத்துக் குறுதிசொல்வேன் பொலிவான வெள்ளியது யாறுமாறும்
தாக்கான செம்பதுவும் நாலுமாகும் தகைமையுடன் தானுருக்கி குருவொன்றீய
தூக்கான நிரையுடனே பாரங்காணும் துறையோடும் முறையோடும் வூதிப்போடு
காப்பான வெள்ளியது நிற்கும்பாரு கனகமது மாற்றதுவும் ஆறுமாமே
2610.
ஆறான மாற்றதுவும் மிகவுமாகி அப்பனே புடத்துக்கு வுறுதிதங்கம்
வாறான வாரடித்துப் புடத்தைப்போட வளமையுடன் தங்கமது இறங்கும்பாரு
கூறான தங்கமது என்னசொல்வேன் கொற்றவனே சிவயோகி வுறுதிகாண்பான்
நேரான தங்கமது பிறவியென்பார் நேர்மையுடன் செய்பவனே வாதியாமே
2611.
வாதியா மென்றதற்கு வகுப்புகேளு வாகான லிங்கமதை கொடுக்கக்கேளு
சோதியா மேனியது சுரமுங்கண்டால் துப்புரவாய் சன்னிமுதல் வாயுபோகும்
பாதிமதி சடையணிந்த தம்பிரான்மேல் பத்தியுடன் சத்தியமாய் சொல்லிட்டேனே
2612.
சொல்லவே பூரமென்ற கட்டைதானும் சூட்சமுடன் தாமுரைப்போம் மைந்தாகேளு
வெல்லவே பூரமது கொண்டுவந்து வேகமுடன் முலைப்பாலில் ஊறப்போடு
கொல்லவே மூலியது கேளுமைந்தா கொடிதான வாடுதின்னா மூலிதானும்
புல்லவே சுறுக்கதுதான் நாலுசாமம் புகழவே தான்கொடுக்க விபரங்கேளே
2613.
கேளேதான் மற்றாநாள் பின்னுங்கேளு கெடியான யிண்டிலையும் சாமம்நாலு
தாளேதான் பிரட்டியதை சுறுக்குதாக்கு சாங்கமுடன் கட்டியது இறுகிக்காட்டும்
பாளேதான் போகாமல் தைவேளைச்சார் பாகமுடன் பின்னுமது சாமம்நாலு
வீளேதான் சுருக்கிடவே பின்னுங்கட்டும் வேதாந்தத் தாயினது கடாட்சந்தானே
2614.
தானான பூரமது சாற்றக்கேளு தயையுடனே காரமென்ற படிகாரந்தான்
மானான பூரத்துக் கிரட்டிமைந்தா மன்னவனே வாறுவகை செயநீர்தன்னால்
பானான வெண்ணெயது போலேயாக்கி பாலகனே பூரத்துக் கங்கிபூட்டி
கோனான கவசமது வலுவாய்ச்செய்து கொற்றவனே ரவிதனிலே காயப்போடெ
2615.
போடவே சீலையது காய்ந்தபின்பு பொலிவாகப் பத்தெருவிற் புடத்தைப்போடு
நீடவே புடமதுவும் ஆறிப்பாரு நித்தமுடன் பூரமது பொருமிக்கட்டும்
கூடவே கட்டிதனை எடுத்துக்கொண்டு கோளாறு நேராமல் சட்டிக்குள்ளே
நீடவெ யுப்புதனை சட்டிக்குள்ளே நிறையவே பாதிநடுமையம்வையே
2616.
வைக்கவே மேலுமந்த வுப்பைக்கொட்டி மறவாமல் மேற்சட்டிகொண்டுமூடி
துப்புரவாய்ச் சீலையது வலுவாய்ச்செய்து துடியான வாலுகையில் எரிப்பாயப்பா
தப்பாமல் சாமமது எட்டுசாமம் சாங்கமுடன் தானெரிப்பாய் பான்மையாக
துப்புரவாய் ஆறினபின் எடுத்துப்பாரு குணமான பூரமது பற்பமாச்சே

2617.
ஆச்சென்று விடுகாதே யன்பாய்கேளு அப்பனே வெள்ளியது ஏழுமாகும்
மாச்சலென்ற செம்பதுவும் மூன்றேயாகும் மகத்தான குகைதனிலே யுருக்கியப்பா
காச்சலுடன் பத்துக்கு ஒன்றுபூரம் கருவாக தானுருக்கி கொடுத்துபார்க்க
பேச்சொன்று மில்லையப்பா பொன்னேயாகும் பொன்னவனே மாற்றதுவுமாகும்பாரே
2618.
பாரேதான் கரியோட்டிலூதிப்போடு பாங்கான செப்பதுவும் நீங்கியேதான்
நேரேதான் வெள்ளியது எடைதானிற்கும் நேர்மையுடன் இரண்டுக்கோர் தங்கஞ்சேர்த்து
வேரேதான் வாரடித்து புடத்தைப்போடு வாகான தங்கமது யிறங்கும்பாரு
சீரேதான் பிறப்பென்ற தங்கமப்பா தேசத்திற் கிட்டாது புண்ணியற்கே
2619.
புண்ணியத்தால் இவ்வேதை வாய்க்குமல்லால் புகழான பூரமென்ற பற்பந்தன்னை
திண்ணமுடன் ஆறுமாற்றாம் மாணிக்கமப்பா திறமாக மட்டமென்ற பொன்னுமாகும்
வண்ணமுடன் தகடடித்து களஞ்சியப்பா வாகுடனே குன்றியது உமிநீராலே
வண்ணமுடன் தான்குழைத்து தடவிப்போடு தகைமையுடன் மாற்றதுவும் உயருங்காணே
2620.
காணவே பூரமது குன்றிதானும் கருவாகத் தானெடுத்து வனுபானத்தில்
தோணவே கொண்டாக்கால் வாய்வுபோகும் தோற்றமுடன் மேகமென்ற திருபதும்போம்
வேணவே சூலையோடு விம்மல்போகும் மிக்கான வயிறுவலி பொருமல்தீரும்
சீனமுடன் வக்கினியாமந்தந்நீரும் சிறப்பான குன்மமுதல் சொரிகள்போமே
2621.
போகுமே கசரோகமெல்லாம்போகும் பொல்லாத சயரோகமேகும்பாரு
ஏகுமே சிவ்விஷபாகமனைத்தும்போகும் எழிலான பாண்டுமுதல் கசிவுபோகும்
சாகுமே வீக்கமுதல் ரணங்கள்போகும் தாழ்வான ரோகமுதல் மூலம்போகும்
வேகுமே புண்களெல்லாம் சடலம்விட்டு வேகமுடன் தீருமென்று வறைந்திட்டேனே
2622.
வறைந்திட்டேன் பஞ்சபூதம் செப்பக்கேளு வகையான லோகமது வஞ்சுமங்கூட்டி
துரைந்திட்டேன் தங்கமது ஒன்றேயாகும் துறையான வங்கமது ஒன்றேயாகும்
பரைந்திட்ட செம்பதுவும் ஒன்றேயாகும் பாலகனே இரும்பதுவும் ஒன்றேயாகும்
கறைந்திட்ட நாகமது நான்கேயாகும் கருவான லோகமது வஞ்சுங்கூட்டே
2623.
கூட்டியே தானுருக்கிக் உடுத்துப்பாரு கூறுவேன் கிராசமது சாற்றக்கேளு
தாட்டிகமாய் அரிதாரம் களஞ்சியாறு தாக்குவாய் கிராசமது தன்னிலீவாம்
வாட்டமுடன் மளங்கமது போலேயாகும் வாகான களங்கமது சிவப்புசெய்ய
மாட்டிமையாய் சூதமென்ற ராஜாதன்னை மயங்காமல் கெந்தியது ஒக்கக்கூட்டே
2624.
கூட்டியே செந்தூரம் செய்யக்கேளும் குறிப்பான பாண்டமது கொண்டுவந்து
நாட்டமுடன் வுப்புதனை கீழ்மேலிட்டு நளினமுடன் நடுமையம் காரமிட்டு
வாட்டமுடன் கெந்தியது மேலேபோட்டு வளமாக நடுமையம் சூதமிட்டு
தீட்டமுடன் மேலுமந்த வுப்பைக்கொட்டி திறமாக மேல்மூடி சீலைசெய்யே

2625.
செய்யவே ரவிதனிலே காயவைத்து சிறப்பாக வாலுகையி னடுப்பிலேத்தி
உய்யதே தீமூட்டு எட்டுசாமம் உத்தமனே தானெரிப்பாய் மைந்தாகேளு
பையவே யாறினபின் னெடுத்துப்பாரு பாகமுடன் செந்தூரமாகுமப்பா
தொய்யவே செந்தூரங் களங்குபாதி துறையோடும் முறையோடும் அரைத்திடாயே
2626.
அரைக்கையிலே தும்பையென்ற பூண்டினாலே அப்பனே நாற்சாமமரைத்தபோது
நிரைக்கையிலே மனம்போலாகும்பாரு நேர்மையுடன் ரவிதனிலே காயவைத்து
திரைக்கமுடன் கல்வத்தில் பொடியாய்ச் செய்து திறமுடனே காசியென்ற குப்பிதானும்
வரைக்கமுடன் குப்பிக்குச் சீலையேழு வாகுடனே வாலையிட்டுச் சீலைசெய்யே
2627.
சீலையது செய்தபின்பு பின்னுங்கேளு செழிப்புடனே மருந்தையெல்லாம் குப்பியிட்டு
வாலையென்று மனோன்மணியை தியானங்கொண்டு மறவாமல் மாக்கல்லு கொண்டுமூடி
பாலையுடன் சிட்டிதனில் மணல்தான்கொட்டி பாலகனே நடுமையம் குப்பிவைத்து
ஆலையெள்ளும் வாலுகையில் அடுப்பிலேற்றி அப்பனே எழுநாள் எரித்திடாயே
2628.
எரிக்கையிலே செந்தூரம் அருணன்போலாம் எழிலான முருக்கன்பூ நிறம்போலாகும்
அரிக்கையுடன் செந்தூரம் எடுத்துப்பாரு அப்பனே சீசாவிற்பதனம்பண்ணு
தரிக்கமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று தயையுடனே தானுருக்கி குருவொன்றீய
பரிக்கமுடன் தானுருக்கி வாங்கிக்கொள்ளு பாலகனே கரியோட்டி லூதிப்போடே
2629.
ஊதிப்பார் மாற்றதுவும் ஆறுகாணும் உத்தமனே தங்கமது நாலுக்கொன்று
சாதியாங் குங்குமப்பூ தங்கமப்பா சார்புடனே தான்சேர்த்து வாரடித்து
வாதியாம் புடமதுவும் மாற்றுகாணும் மகத்தான வேதையிது உறுதித்தங்கம்
பாதியாந் தங்கமது இரண்டுக்கொன்று பாகமுடன் மாற்றாறு சேர்த்துப்பாரே
2630.
சேர்க்கையிலே மாற்றதுவும் சிவந்தபொன்னாம் தெளிவான வர்ணமது வதிகங்காட்டும்
பார்க்கையிலே பிறவியது பிறவிப்பொன்னாம் பாரினிலே நாதாக்கள் ரிஷிகள்வேதை
தீர்க்கமுடன் கருவாளி செய்வான்பாரு தீரமுடன் மற்றொருவர் செய்வாரோதான்
மார்க்கமுடன் காலாங்கி பாதம்போற்றி மன்னவனே பாடிவைத்தேன் போகர்தாமே
2631.
தாமான பாகமது யாருஞ்செய்யார் தாரிணியில் புத்தியுள்ளவன் செய்வான்கண்டீர்
சாமான வாதவித்தை வதீதவித்தை சாங்கமுடன் யோகவான் காணும்வித்தை
வாமான ஞானவான் சிவயோகிக்கு வாகுடனே பலிக்குமல்லால் மற்றோர்க்கில்லை
தூமானமின்றி வார்க்குதவுமோசொல் துப்புரவாய் வித்தையது பலிக்காதாமே
2632.
பலிக்காது காமிகட்கும் கர்மிகட்கும் பாங்குடனே பாவியென்ற சண்டாளர்க்கும்
ஜொலிக்காது யேகமென்ற வித்தையப்பா சூட்சாதி சூட்சத்தைக் காணமாட்டார்
ஒலிக்கவே பூரணத்தை மனதிலுண்ணி யுத்தமனே யெந்நாளும் சிவயோகம்பார்
கெலிக்கவே பிராணாயந்தன்னிற்சென்று கெவனமுடன் குளிகைக்கு வழிதான்தேடே

2633.
தேடவே குளிகையது பூண்டுகொண்டு தேசத்தில் வித்தையெல்லாம் கண்டுபாரு
நாடவே இம்மருந்தை மைந்தாபாரு நளினமுடன் நெய்தேனிற்கொண்டு வந்தால்
ஊடவே மேகமென்ற திருபதும்போம் உத்தமனே யீளையயு காசம்போகும்
பாடவே பாண்டுவகை யாறுந்தீரும் பாங்குடனே குன்மமெட்டுந் தீரும்பாரே
2634.
தீருமே பீலிகையும் கவுசிக்கட்டி தீங்குசெய்யும் சூலையது விட்டுப்போகும்
கூருடனே வாயுவென்ற தெண்பதும்போம் கொடிதான சயமுதலும் அகன்றுபோகும்
நேருமே மூலமுதல் பவுத்திரம்போம் நெடிதான மந்தார காசம்போகும்
பாருமே மேல்மூச்சு வாதம்போகும் பட்சமென்ற வாதமது கழன்றுபோமே
2635.
கழன்றுமே போகுமது சிலேத்துமந்தானும் கண்ணிலுள்ள வியாதியெல்லாம் கதிகெட்டோடும்
கழன்றுமே தேகமது கற்றூணாகும் தகைமையுடன் எந்நாளு மிருக்கலாகும்
பழன்றுமே சாமாதிக்குள் இருக்கலாகும் பாரினிலெ நீயுமொரு சித்தனாவாய்
அழன்றுமே போகாதே வீண்போகாதே அப்பனே தேகமது கற்றூணாமே
2636.
கல்லான தூணதுபோலாகும்பாரு கருவாக வின்னமொரு கருமானங்கேள்
புல்லான விருட்சமது சொல்லக்கேளும் பகலரிய மேருவுக்கு வடபாகத்தில்
கல்லான சித்தரமுனி வாசஞ்செய்யும் காடான கானொன்று குகைதானுண்டு
செல்லான புத்துகளும் அனேகமுண்டு செயலான காணாறு வோடையுண்டே
2637.
உண்டான விருட்சமது என்னசொல்வேன் உத்தமனே கானகத்துஜோதியப்பா
திண்டான மரமதுதான் ரிஷிகள்பக்கம் திறளுடனே யம்மரமும் மெத்தவுண்டு
செண்டான புஷ்பமது நீலவண்ணம் ஜெகஜோதி நீலமப்பா சொல்லப்போமோ
வண்டான வண்டுகள்தான் கூட்டம்பாரு மகத்தான மரத்தினிட மேலேதாமே
2638.
தானான வண்டதுவுங் கீதம்பாடும் தாக்கான கீதமது ஓசைகாட்டும்
கோனான குருநாதர் சித்தர்தாமும் குடியிருப்பு எந்நேரம் விருட்சந்தன்னில்
தேனான முனிகூட்டம் மெத்தவுண்டு தெள்வான கானகத்தில் விருட்சந்தன்னை
பானான பலரிஷியுங் கண்டுதேர்ந்து பாரினிலே சித்தர்களுக் குரைத்தார்தாமே
2639.
உரைத்தாரே சித்தர்களுங் கண்டுதேர்ந்து உத்தமனே முனிகளுக்க உரைத்தார்தாமும்
நிறைத்தாரே ஜோதியின்தன் மகிமையெல்லாம் நீனிலத்தில் கண்டரிந்ரு வுளவுசொன்னார்
வரைத்துமே சித்தர்களும் கண்டாராய்ந்து வளமுடனே மையொன்று செய்தார்பாரு
முறைப்படியே மையதனை சொல்லக்கேளு உத்தமனே மாணாக்கள் பிழைக்கத்தானே
2640.
தானான வின்னமொரு கருமானங்கேள் தயவுடனே சொல்லுகிறேன் மைந்தாபாரு
கோனான கமலமுனி சொல்லவில்லை குவலயத்தில் சித்தரகளும் அனேகஞ்சொன்னார்
வேனான வெந்நூல்போல் யாருஞ்சொல்வார் தேசத்தில் மானிடர்க்கு தெளியாய்ச் சொன்னேன்
யானான விருட்சத்தின் பட்டைதானும் பாகமுடன் கொண்டுமே தயிலம்வாங்கே

2641.
வாங்கவென்றால் தயிலமது சொல்லக்கேளு வாகான மரவெட்டை சமனதாக
தூங்கியே திரியாதே மன்னாபாரு துறையோடு முறையோடு செப்பக்கேளு
வாங்கியே குழித்தயிலம் இறக்கிக்கொண்டு மார்க்கமுடன் அதிலரைக்க விபரங்கேளு
ஏங்கியே போகாமல் தயிலந்தன்னை என்மகனே புழுகோடு உரமுங்கூட்டெ
2642.
கூட்டியே சூதமுடன் குழியானைக்கண் கொற்றவனே கரும்பூனை கண்ணுதானும்
மாட்டியே தேவாங்கு கண்ணும்கூட்டி மயங்காமல் சுழல்வண்டு தானுஞ்சேர்த்து
தாட்டிகமாய் கஸ்தூரி பூரந்தானும் தான்கலந்து தயிலமதி லரைப்பாயப்பா
வாட்டமுடன் தானரைக்க மைபோலாகும் மன்னவனே மைபோலே யாகும்பாரே
2643.
பாரேதான் கையெடுத்து பதனம்பண்ணு பாகமுடன் போக்குவகை சொல்லக்கேளு
நேரேதான் மையதனைக் குன்றிதானும் நேர்மையுடன் உள்ளங்கை தன்னில்வைத்து
தீரேதான் மனோன்மணியை தியானித்தேதான் திறமுடனே மையதனைப் பார்க்கும்போது
ஊரேதான் பூமிதளமுள்ளதெல்லாம் உத்தமனே கண்ணுக்குத் தோற்றுந்தானே
2644.
தோற்றமுடன் மையதனைப் பார்க்கும்போது தோன்றுமே பாதாள நிதிகளெல்லாம்
வேற்றமையாய் காண்பிக்கும் நிதிகளப்பா வெவ்வேறாய் பிரிவுமுதல் வுளவுகாட்டும்
போற்றமுடன் மையதனை லாடமீதில் பொங்கமுடன் தான்தீட்டி வருவாயானால்
ஏற்றபொருள் உந்தனுக்கு கண்ணிற்றோன்றும் என்மகனே புத்தியுள்ளான் செய்வான்தாமே
2645.
தாமான மையதனை லாடம்பூண்டி தாரணியில் ராசரிடஞ் சென்றாயானால்
காமான மாகவல்லோ வுந்தனுக்கு கடாட்சித்து மரியாதை யாவுஞ்செய்து
வேமான மாகவல்லோ நிதியுந்தந்து விருப்பமுடன் சோடசோ உபாரஞ்செய்து
தீமானமாகவல்லோ சதாகாலந்தான் திகழுடனே யேமனுக்கு முன்னிற்பாரே
2646.
நிற்கையிலே வுந்தனுக்கு வசியமாகி நேர்மையுடன் சரிபீடம் தான்கொடுப்பார்
வற்கமுடன் கேட்டதெல்லாம் தான்கொடுத்து வாகுடனே நாடுவளம் பூமியீவார்
துர்கைமுதல் காளிபலபிடாரியாவும் துப்புரவாய் உந்தனுக்கு நடுங்கும்பாரு
அற்பமென்று நினையாதே மையின்வேகம் அப்பனே நாமுரைத்தோம் உண்மைபாரே
2647.
உண்மையாம் இன்னமொரு கருமானங்கேள் உத்தமனே சொல்லுகிறேன் மைந்தாகேளு
தன்மையாம் மையதனையெடுத்துக்கொண்டு தகைமையுடன் புருவத்தில் மைதான்தீட்டி
கண்மையுடன் வாகாஷம் பார்க்கும்போது கனிவாக வேழுமண்டலமுந்தோன்றும்
பன்மையாம் ஆகாஷவதிசயங்கள் பாங்குடனே தான்தெரியும் பாருளோர்க்கே
2648.
பாரிலே வதிசயங்கள் காணலாகும் பரிதிமதி வருந்ததிகள் பார்க்கலாகும்
சீருடனே சத்தலோகங்களெல்லாம் சிறப்புடனே கண்ணற்கு தோற்றுங்கண்டீர்
தாருடனே இதிகாசவித்தையெல்லாம் தாரிணியில் எந்நாளும் பார்க்கலாகும்
கூருடனே காலாங்கிநாதர்பாதம் குறிப்புடனே யான்வணங்கி பாடினேனே

2649.
கூறினேன் பலநூலுங் கண்டாராய்ந்து அப்பனே சுளுக்குமுதல் வுளவுபார்த்து
தேறினேன் கைபாகம் செய்பாகந்தான் தெளிவாகக் கண்டறிந்து இந்நூல்தன்னை
மாரியே பிழைப்பதற்கு வழியுஞ்சொன்னேன் மகத்தான வேதையிது துறையுஞ்சொன்னேன்
மீறியே போகாமல் விதியுஞ் சொன்னேன் மிக்கான காண்டமேழாயிரந்தானே
2650.
தானான காண்டமேழாயிரந்தான் தாக்கான கருக்குருவுங் காணலாகும்
பானான மார்க்கமுதல் அறியலாகும் பாலகனே இந்நூல்போல் ஆருஞ்சொல்லார்
தேனான இந்நூல்தான் குருநூலாகும் தேர்ந்தெடுத்தேன் காண்டமது சத்தகாண்டம்
மானான மனோன்மணியாள் தேவிதானும் மகிழ்ச்சியுடன் தான்கேட்டு மகிழ்ந்திட்டாளே
2651.
மகிழ்ந்ததொரு சாதிலிங்க மின்னம்பாரு மகத்தான லிங்கமொரு கட்டிவாங்கி
தகிழ்ந்ததொரு கட்டிக்கு கடகங்கேளு தாக்கான தாளகமுஞ்சிலையுங்கெந்தி
நெகிழ்ந்ததொரு யெரிகாலன் பாலாலாட்டி நேர்மையுடன் தானரைப்பாய் ஆறுசாமம்
மகிழ்ந்துமே தானரைத்துக் கவசஞ்செய்து மார்க்கமுடன் சீலையது வலுவாய்ச்செய்யே
2652.
செய்யவே ரவிதனிலே காயவைத்து செம்மையுடன் கோருபதுப்புடமதாக
துய்யவே தீமூட்டி புடத்தைப்போடு துப்புரவாய்ப் புடமதுதான் ஆறிப்பின்பு
பையவே எடுத்துப்பார் சாதிலிங்கம் பாகமுடன் கட்டியது வுருகிப்போகும்
மெய்யுடனே கட்டியது எடுத்துமைந்தா மேன்மையுடன் செந்தூரஞ் செப்பக்கேளே
2653.
கேளேதான் செந்தூரம் செயநீர்தன்னால் கெடியுடனே நாற்சாமம் சுறுக்குத்தாக்கு
வீனேதான் வீரமென்ற செயநீர்தன்னால் வேகமுடன் தான்கொடுக்க காரமேறி
தானேதான் சட்டிதனில் மணல்தான்கொட்டி சாங்கமுடன் சட்டிதனை நடுவேவைத்து
மீளேதான் மேலுமந்த மணல்தான்கொட்டி விளங்கவே மேற்சட்டிகொண்டுமூடே
2654.
மூடியே தானெரித்து எட்டுசாமம் முனையான வாலுகையில் எடுத்துமைந்தா
நீடியே தீயாறி எடுத்துப்பாரு நேர்மையுடன் செந்தூர மென்னசொல்வேன்
கூட்டியே செந்தூரம் பதனம்பண்ணு கொற்றவனே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
வாடியே திரியாதே மைந்தாகேளு மயங்காமல் கவயோட்டி லூதிப்பாரே
2655.
பார்க்கையிலே பொன்னதுவும் மாற்றுகாணும் பாகமுடன் நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து
தீர்க்கமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு திறமான பொன்னதுவும் எட்டுமாகும்
வார்க்கவே மறுபடியும் உருக்கியேதான் மறவாமல் செங்கல்லில் கம்பிசாய்த்து
ஆர்க்கவே தானெடுப்பாய் கம்பிதன்னை அப்பனே பிறவியது பொன்னுமாச்சே
2656.
ஆச்சென்று விடுகாதே மைந்தாகேளு அப்பனே குன்றியிடை தேனிலுண்ண
மூச்சின்றி வாசியது கீழேநோக்கும் மூலமுதல் கபாலவரை வன்னிமீறும்
காய்ச்சலுடன் சன்னிபதி மூன்றும்போகும் கடிதான வாயுவென்ற தெண்பதும்போம்
காய்ச்சலுடன் பிறவீச்சு வுள்வீச்சேகும் நஅடாதுநாவரட்சி நளினமாமே

2657.
நளினமாங் கவுசையொடு மேகம்போகும் நாட்பட்ட சுரமுதலும் நாடாதப்பா
நளினமுடன் முறைக்காய்ச்சல் கத்தியோடும் கபாலவலி முகசன்னி காடேபோகும்
மளினமதாய் இப்பாகம் யாருஞ்சொல்லார் பாரினிலே சித்தர்களும் முனிவர்தாமும்
மளினமுடன் பலநூலுங் கண்டாராய்ந்து மார்க்கமுடன் பாடிவைத்தேன் காண்டமேழே
2658.
ஏழான காண்டமது பெருநூலாகும் என்மகனே இந்நூல்போல் ஆருஞ்சொல்லார்
வாழான நூல்களெல்லாம் பார்த்துமென்ன பார்த்துமே வுள்ளுளவு மறிந்துமென்ன
தாழான பெருநூலேழாயிரத்தில் தாரிணியிலுள்ளதொரு பொருள்களெல்லாம்
நீழான நோயறிந்து கண்டாராய்ந்து நேர்மையுடன் பாடிவைத்தேன் பெருநூலாமே
2659.
பெருநூலாம் இன்னமொரு கருமானங்கேள் பெருமையுடன் மாணாக்கள்பிழைக்கவென்று
கருவான பிரமதண்டு சாறுவாங்கி கவனமுடன் தானிடித்து பிழிந்துகொண்டு
பருவான லிங்கமதுபலமும் பாகமுடன் சுறுக்கதுதான் எட்டுசாமம்
கருவான சட்டிதனில் கட்டிவைத்து சாங்கமுடன் சுறுக்கதுதான் தாக்கிப்பாரே
2660.
தாக்கினபின் கட்டிதனை எடுத்துப்பாரு தகைமையுள்ள கட்டியது இருகிக்காட்டும்
நோக்கமுடன் கட்டிக்குப் பின்னுமந்த நுணுக்கமுள்ள மூலிதனைக் கவசஞ்செய்து
பார்க்கவே சீலையது வலுவாய்ச் செய்து பாகமுடன் ரவிதனிலே காயவைத்து
நோக்கமன்றி திரியாமல் மைந்தாகேளு சுந்தரனே மணல்மறைவிற் புடத்தைப்போடே
2661.
போடவே புடமதுவு மாறிப்பாரு பொங்கமுடன் கட்டியது வுருக்குபோலாம்
நீடவே கட்டிதனைப் பதனம்பண்ணு நீடான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
கூடவே குருவதுதான் வுருக்குதன்னில் குமுறவே தான்கொடுத்து வூதிப்போடு
ஓடவே செம்பதுவும் ஓடிப்போக வுத்தமனே கரியோட்டி லூதிப்போடே
2662.
ஊதினபின் எடுத்துப்பார் என்னசொல்வேன் உத்தமனே மாற்றதுவும் ஆறுகாணும்
சாதியிலே பிறந்ததொரு பொன்னைப்போல சட்டமுடன் தானிருக்கும் பசுமைமெத்த
வாதிகளோ யிவ்வேதை காணப்போறார் வையகத்தில் சித்தர்செய்யும் வேதையாச்சு
மாதிகனா யிருந்தாலும் வேதைகாண்பான் மாநிலத்தில் விட்டகுறை வாய்க்கும்பாரே
2663.
பாரேதான் சித்தர்களுக் குகந்தவேதை பாராளும் ராசர்களும் மெச்சுவார்பார்
சீரேதான் இவ்வேதை சிடிகைவேதை சிறப்புடனே நாதாக்கள் கண்டவேதை
நேரேதான் நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து நேர்மையுடன் வாரடித்துப் புடத்தைப்போடு
கூரேதான் மாற்றதுவும் எட்டதாகும் குணமான போகரிஷி கூறினாரே
2664.
கூறவே முடியாது லிங்கப்போக்கு கொற்றவனே சன்னிசுரம் சன்னிவாதம்
தீரவே வனுபானந் தன்னிலீய திசைகெட்டு பிசைகெட்டு தியங்கியோடும்
மாறலென்னு முறைக்காய்ச்சல் மதிகெட்டோடும் மயங்காதே முன்றுநாள் அருந்திபாரு
ஊரவே மேகமென்ற நீரும்போகும் உத்தமனே சிவயோகம் வாய்க்குந்தானே

2665.
தானான சிவயோகம் வாய்க்கும்போது தாழ்வான தேகமது கற்றூணாகும்
வேனான வாசியது கீழ்நோக்காகும் வேகமுடன் நரம்பெல்லாம் வலித்துக்காட்டும்
கோனான யெனதையர்காலாங்கிநாதர் குருபதத்தைத்தான்வணங்கி சத்தகாண்டம்
தேனான மொழிபோல தேர்ந்தெடுத்து தேவிபதமடிபணிந்து பாடினேனே
2666.
பாடினேன் இன்னமொரு மார்க்கங்கேளு பாலகனே என்மக்கள் பிழைக்கவென்று
நீடியே பலநூலுஞ் சுளுக்கறிந்து நேர்மையுடன் யாமுரைத்த தயிலமப்பா
தேடியே பூவரசன் சேர்தானொன்று சிறப்பான கெஞ்சாவின் விரைதானப்பா
வாடியே யலையாதே கிழங்குசொல்வேன் வளமான தாமரையின் கிழங்குதானே
2667.
கிழங்கான விரையுடனே கெந்திசேர்தான் கிளறியே குழியம்மி தன்னிலிட்டு
பழங்கமுடன் தானிடித்து பாண்டமிட்டுப் பாகமுடன் பாகமுடன் பாண்டமதிற் சிலதுபோட்டு
தழுங்கவே மெல்வாய்க்குச் சீலைசெய்து தகைமையுடன் குழித்தயிலம் இறக்கிக்கொண்டு
வழுங்கவே தயிலமதை பதனம்பண்ணு வளமையுடன் ரவிதனிலே தாக்குவாயே
2668.
தாக்கவே தகடடித்துப் பூசிப்போடு தனியான செம்பதுக்கு புடமேபோடு
நோக்கமுடன் செம்பதுவும் ஊரலேகி நெடிதான செம்பதுவும் மாற்றுகாணும்
பார்க்கவே செம்பதுவும் மூன்றேயாகும் பாங்கான வெள்ளியது நான்கேயாகும்
போக்கவே தானுருக்கி தகடடித்துஃ பொங்கமுடன் தான்போட மாற்றுமாமே
2669.
மாற்றான பொன்னதுவும் ஆறேயாகும் மகத்தான தங்கமது மூன்றுக்கொன்று
நீற்றான விரண்டையுந்தான் ஒன்றாய்க்கூட்டி நிறையுடனே தானுருக்கி மன்னாபாரு
கூற்றான பொன்னதுவும் எட்டெயாகும் குணமான பசுந்தங்கம் அதற்கீடாகும்
தூற்றான தயிலமது வேதிக்கும்பார் துறையான முறையதுதான் அதீதம்பாரே
2670.
அதீதமா இத்தயிலம் கொண்டுபாரு அப்பனே குஷ்டமது கடைகெட்டோடும்
துதீதமுடன் மேகமென்ற திருபதும்போம் துலையாத கவுசையொடு பொருமல்போகும்
வதீதமுடன் சூலையது விட்டேயோடும் வாகான கிரந்திமுதல் சிரங்குபோகும்
கதீதமுடன் நரம்புவலி ரணங்கள்போகும் கண்ணொளிவு காட்டுவது தயிலமாமே
2671.
ஆமேதான் தயிலமது காயசித்தி அப்பனே தேகமது கற்றூணாகும்
காமேதான் காயாதிகற்ப நூலை கவனமுடன் கண்டறிந்து பாடலுற்றேன்
நாமேதான் சொன்னபடி சத்தகாண்டம் நாட்டுளோர் பிழைக்கவென்று நவின்றிட்டேன்
வேமேதான் காலாங்கிபாதம்போற்றி விருப்பமுடன் பாடிவைத்தேன் காண்டமேழே
2672.
ஏழான காண்டமது பின்னுங்கேளு எழிலான நடுக்காண்டம் நாலாம்காண்டம்
பாழான தேகமதுக் குறுதிசொன்னேன் பாலகனே தத்துவமும் அதிகஞ்சொன்னேன்
நீழான வயித்தியமும் வாதஞ்சொன்னேன் நிலையான யோகத்துக்குறுதி சொன்னேன்
தாழான சிவயோகம் எளிதிற்சொன்னேன் தாரிணியில் அதீதமென்ற வித்தைதானே

2673.
வித்தையாம் இன்னமொரு பாகம்கேளு வேடிக்கை சிமிட்டுவித்தை போக்குசொல்வேன்
சுத்தமுள்ள வபினியது பலந்தானொன்று சுயமான கெந்தகமும் பலந்தானொன்று
துத்தமுடன் துருசதுவும் பலந்தானொன்று துடியான வீரமது பலந்தாநாலு
கத்தபத்தின் நீரதனை விட்டுயாட்டிக் கருத்துடனே மெழுகதுபோல் அரைத்திடாயே
2674.
அரைத்துமே சிமிழ்தனிலே பதனம்பண்ணு அப்பனே செம்பதுதானெடுத்துக்கொண்டு
வரையுடனே செம்புநிகர் மெழுகெடுத்து வளமாக தானுருக்கி கிராசமீவாய்
குறையாமல் செம்புருக்கி நிற்கும்போது குறிப்புடனே வரிசைபெறத் தன்னிலீவாய்
நிறையுடனே செம்பதுவும் சுத்தியாச்சு நிலையான களிப்பதுவும் ஏகலாச்சே
2675.
ஆச்சென்று விடுகாதே யின்னங்கேளு அப்பனே செம்பெடுத்து மூன்றுவெள்ளி
பாச்சவே செம்பதுவும் ஒன்றேயாகும் பாலகனே தான்சேர்த்து வுருக்கிக்கொண்டு
மாச்சலென்று யிடையாதே பின்னுமைந்தா மார்க்கமுடன் தங்கமது ஒன்றுகூட்டி
பேச்சொன்றுந் தப்பாமல் வுருக்கிப்பாரு பேரான பொன்னதுவும் எழுமாமே
2676.
ஏழான பொன்னதுவும் என்னசொல்வேன் என்மகனே வாரடித்து புடத்தைப்போடு
ஆழான பொன்னதுவும் மாற்றுமெத்த அப்பனே பிறவியது பொன்போலாகும்
கூழான பொன்னதுவும் அல்லகண்டீர் குணமான சித்தர்செய்யும் வேதையாச்சு
நீழான ரிஷிமுனிவர்களுக்குவேதை நேர்மையுடன் காண்பவனே சித்தனாமே
2677.
சித்தனாய்ப் பிறப்பதுவும் அரிதேயாகும் சீருலகில் விட்டகுறை காணவேண்டும்
பக்தியுடன் சிவசத்தி ஞானம்வேண்டும் பாருலகில் பெரியோர்கள் கிருபைவேண்டும்
வெத்தியுடன் சின்மயத்தில் சொரூபம் வேண்டும் வேதாந்தத் தாயினது வருளேவேண்டும்
நித்திலங்கும் பதாம்புயத்தின் சூட்சங்காண நிலையான வாசிவழி யறிவாய்தானே
2678.
தானான கெந்தகத்தின் மாற்றங்கேளு தயவான கெந்தகமும் களஞ்சியொன்று
வேனான தங்கமது களஞ்சியொன்று எழிலான வேலனிட பிசினிதன்னால்
பானான கெந்தகத்தின் மேலேயப்பா பாகமுடன் சுத்தியல்லோ வங்கிபூட்டி
தேனான தேனதுவுந் தானெடுத்து தெளிவுடனே காரமதை பொரித்துப்போடே
2679.
போட்டுமே சாம்பிராணி பூரந்தானும் பொங்கமுடன் களஞ்சியது செப்பக்கேளு
தாட்டிகமாய் தேனதிலே யரைத்து மைந்தா சாங்கமுடன் கெந்தஇக்கு வங்கிபூட்டி
நோட்டமுடன் சுடராவி தீபந்தன்னில் நோக்கமுடன் தான்கொளுத்தி யெடுத்துப்பாரு
வாட்டமுடன் கெந்தியது தங்கஞ்சேர்த்து வாகுடனே களங்கமது போலாம்பாரே
2680.
பாரேதான் களங்கமது வுருக்கிப்பாரு பாகமுடன் பிரிதீவின் களங்குமாகும்
சீரேதான் களங்கெடுத்து மன்னாகேளு சிறப்பான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
நேரேதான் தானுருக்கிக் கொடுத்துப்பாரு நேரான மாற்றதுவும் ஆறுகாணும்
வேரேதான் கரியோட்டி லூதிப்போடு வெளுமையாம் பசும்பொன்போல் தோற்றுந்தானே

2681.
தோற்றவே யின்னுமந்த பொன்னைத்தானும் தோராமல் வாரடித்துப் புடத்தைப்போடு
மாற்றலென்ற திறைசவுடு களிப்புமேகி மன்னவனே பொன்னதுவும் பசுமைகாட்டும்
நாற்றமென்ற செம்பதுவும் கொஞ்சம்நிற்கும் நாயகனே புடத்துக்கு ஏகாதப்பா
கூற்றனென்னும் வங்கமது கொடுத்துவூத கொற்றவனே சவளையது பசும்பொன்னாமே
2682.
பொன்னான பொன்னுக்கு சரிநேர்தங்கம் பூட்டடா யெடைக்கிடைதான் தங்கஞ்சேரு
மன்னாகேள் மாற்றதுவும் எட்டரையாகும் மகத்தான பொன்னதுவும் சிவப்புமெத்த
தென்பொதிகை தனில்வாழும் சித்தர்யாவும் தெளிந்துமே கெந்தகத்தின்
மார்க்கங்கொண்டார்
வின்னமில்லா பொன்னதுவும் சித்தர்வேதை விருப்பமுடன் பாடிவைத்தேன் காண்டமேழே
2683.
காண்டமா மின்னமொரு கருமானங்கேள் கருத்துடனே யாமுரைப்போம் மாணாகேளு
தீண்டாத பாஷாணம் சேர்தான்வாங்கி திறமான கொடிகள்ளி சார்தானப்பா
மாண்டுமே பாஷாண வெண்ணெய்போக மார்க்கமுடன் சுறுக்கதுவும் எட்டுசாமம்
ஆண்டதுவும் நூறுவயதானவேம்பு அப்பனே பட்டையது சீவிக்கொள்ளே
2684.
கொள்ளவே பட்டையது தயிலம்வாங்கி கொப்பெனவே தயிலமது சுறுக்குதாக்கு
விள்ளவே சுறுக்கதுவும் எட்டுசாமம் விருப்பமுடன் தான்கொடுத்து எடுத்துப்பாரு
மெள்ளவே கட்டியது புகையடங்கி மேன்மையுடன் பாஷாணமிருகிக்காட்டும்
தள்ளவே சிவனாரின் வேம்புதானும் சாங்கமுடன் சுருக்கிட்டு நீற்றிப்போடே
2685.
நீற்றியபின் னாவியெல்லாம் வெளிபோகாமல் நேர்பாகச் சட்டியால் மூடிப்போடு
ஆற்றியபின் மருந்தெடுத்து காயப்போட்டு அப்பனே மறுசீலைக்குள்ளே வைத்து
சாற்றியபின் முன்போல நீற்றுநீற்று சாதகமாய் பதினொருக்கால் நீற்றுநீற்று
மாற்றியபின் மருந்தெடுத்து அண்டோட்டிலிட்டு வளமாக மேல்மூடி சீலைசெய்யே
2686.
செய்திட்டு ஐந்தெருவிற் புடத்தைப்போடு திரமாகச் சவர்க்காரச் சுன்னமாகக்
கொய்திட்ட சித்தரெல்லாம் வழலைதன்னை குவிழ்ந்தபடி சொல்லாமல் மறைத்துப்போட்டார்
உய்த்திட்டு பிள்ளைகள் தன்னைப்பார்த்து வுலகத்தோர் கரிகொள்ள காசில்லாமல்
எய்திட்டு ஏங்கியே வருமைபூண்டு இறந்திறந்து போனவர்கள் கோடிதானே
2687.
தானென்ற நூல்பார்த்து வுலகவாதி தனித்துமே மனம்புண்ணாய் வெறுமையுற்று
வாவென்ற வுலகத்தார் சிரிக்கக்கேட்டு மருட்கொண்ட பிசாசுபோல் வாயுலர்த்தி
ஊனென்ற சொத்துக்கு மிடமில்லாமல் உண்பாரை வுடுப்பாரை பார்த்துசங்கி
நானென்ற ஆணுவத்தால் கெட்டோமென்று நாய்போல திரிந்து மண்ணுள் மாளுவாரே
2688.
மாளாமலிருக்கவல்லோ வழலைதன்னை மறையாமல் சொல்லிவிட்டே னேழாயிரத்துள்ளே
கோளான சீஷருக்கு நூலீயவேண்டாம் கொடுத்தாக்கால் ரவிகோடி நரகமெய்தும்
தாளான எந்நூலில் வழலைதன்னை சாற்றினேன் ஒருசொல்லுந்தவறில்லாமல்
நாளான அம்பரத்துக் கொப்பாய்சொன்னேன் நாதாக்கள் பதமறிய சொன்னேன்காணே

2689.
காணப்பா புடம்போட வழலைதன்னை கடுங்காரச் செயநீர்தன்னில் தோய்த்துப்போடு
பூணப்பா ஏழுநாள் ரவியிற்போட்டு பேரான சுன்னமென்ற குளிகையிலூது
தேணப்பா எடுத்துடனே பூப்போல் நிற்கும் தொடுகுறிபோல் சரக்கையெல்லாம் துடியாய்கொல்லும்
வீணப்பா கெடுக்காதே எந்நூலைப்பாரு வேதாந்தமாயிதை பூசிப்பாயே
2690.
பூசித்து வழலையைத்தான் சுண்ணம்பண்ணு புத்திகெட்ட வாதிகளே மற்றொன்றாகா
நேசித்து வழலைதனி லுப்பைக்கட்டு நிலைத்தபின்பு பூரணத்தைச் சுன்னம்பண்ணு
ஆசித்துப் பூரத்தால் தாளகத்தைப்பண்ணு அதீதமாந் தாளகத்தால் வங்கத்தைநீற்று
வாசித்தஉ வாலைதனைப் பார்த்தாலாமோ வாதமென்ன கொஞ்சத்திலாமோ சொல்லே
2691.
சொல்லென்ற வங்கத்தில் திரிதெனைநீற்று துரிசியினால் சிங்கிப்பண்ணு சூதங்கட்டு
மல்லென்ற சூதத்தால் காயசித்தி கெவனத்தில் எட்டெட்டுஞ்சித்தி
அல்லென்ற கேழ்வியினால் வாதஞ்சுட்டு ஆற்றாமல் பொய்யென்றால் என்னசொல்வேன்
நில்லென்றால் எறிந்தகல்லும் நிற்குமோசொல் நிர்மூட வாதிகளே வழலைநீபாரே
2692.
பாரென்ற வழலையென்ற சுன்னமொன்று பரிவாகச் சுன்னமொன்று கூட்டியாட்டே
நேரென்ற ஜலமாகுஞ் ஜலத்தினுள்ளே நேர்ப்பாக கற்பூரம் வாரியிட்டு
காரென்ற ரவியில்வைத்து வுப்பாய்ப்பண்ணி கடுகைந்து கிண்ணமதில் வைத்துவூற்ற
நூரென்ற மல்லிகைப்பூப் போலாகுஞ்சுன்னம் துரிசான சாரயிடை சுன்னங்கூட்டே
2693.
சாரமிட செயநீராம் வீரம்போட்டு தயங்காத கல்லுப்புச் சூடந்தானும்
ஆரமிட்ட வெடியுப்பு சீனக்காரம் ஐந்தையுந்தான் வகைக்கு ரண்டுபலமேகூட்டி
காரமிட்ட செயநீரா லரைத்துருட்டி கடுரவியிற் போட்டுவர தினந்தானேழு
தாரமிட்ட சுண்ணாம்பு போலேயாகுந் தயங்காத குழம்புபோல் பண்ணிக்கொள்ளே
2694.
பண்ணியதோர் குழம்புக்குள்ளே பாறையுப்பு பலம்பத்து நிறுத்தெடுத்துப் பாக்குபோல
ஒண்ணியதோர் குழம்புக்குள் பிசறிவாட்ட உற்றுநன்றாய் குழம்பையெல்லாம் பிரட்டிபோடு
கண்ணியதோர் தீயிற்குள் முதிமவாட்டி நலமான வுவர்மண்ணும் கிளிஞ்சள்நீரும்
கண்ணியதோர் அமுரிவிட்டு பிசைந்துகொண்டு கடுகவே கீழ்மேலும் மடபோல்மூடே
2695.
மூடியே சட்டியிலே யிட்டுநன்றாய் முடிந்தபின்பு அன்பதெரு வடுக்கிப்போடு
நாடியே குளிர்ந்தபின்பு எடுத்துப்பாரு நலமான தங்கம்போலிறுகிக்கட்டும்
சூடியே கவசமெல்லாந் தள்ளிப்போட்டு துடியான கட்டுகொடி இலையைவாங்கி
தேடியே பழச்சாறு விட்டரைத்து திறமாகக் கவசித்துப் புடத்தைப்போடே
2696.
புடம்போட்டு உப்புமணி பார்த்தால்மக்கள் பேறான முத்துமண்போலக்காணும்
விடம்போட்ட சிவன்வந்து நிர்த்தஞ்செய்வார் வேதாந்தத்தாயீயிஎஃகே அஷ்டசித்தியாவாள்
தடம்போட்ட நிராதார வொளியுஞ்சொல்வாள் சதாநித்தம் குருபதத்தில் சரணம்பண்ணி
வடம்போட்டு வுப்புமணி செபித்தமாலை மகத்தான சித்தியுமா மாட்டிப்பாரே

2697.
மாட்டிப்பார் மெழுகாலே கிண்ணிபண்ணி மண்கட்டி மெழுகதனைத் தள்ளிப்போட்டு
ஊட்டிப்பார் உப்புருக்கி யதிலேவார்த்து உத்தமனே உப்பினுட கிண்ணிதன்னில்
தீட்டப்பா ரடித்தூரில் சீலைசெய்து சிறப்பான வாலுகையின் மேலேவைத்து
வாட்டிப்பார் சூதமது சிறங்கைவிட்டு மயிற்கொன்றை சாற்றினாலே சுருக்குபோடே
2698.
சுருக்கிடவே சூதமது வெண்ணய்போலாம் துடியான சூடனுட தீயில்வாட்டு
உருக்கிடவே கரண்டிதனில் எண்ணெய்குத்தி யுருக்கமணிபோல் நின்றாடுங்கரியினுள்ளே
உருக்கிடவே செம்மட்டில் தாழ்வடமாய்க் கோர்த்து உத்தமனே ஐந்தெழுத்தும்
எட்டெழுத்துமோதி
நருகிடவே மனோன்மணித்தாய் முன்வந்துநிற்பாள் நாடினதெல்லாஞ் சொல்லிரட்சிப்பாளே
2699.
ரட்சிக்க வுப்பைநன்றாய் கட்டியாடு நாதாந்த வழலையைத்தான் முன்னேபண்ணு
பட்சிக்கச் சூதத்தைச் செந்தூரம்பண்ணு பார்க்கவே வேணுமென்றால் சாரனையைத்தீரு
குட்சிக்குள் வாயுவெல்லா மறுத்துத்தள்ளு குடிலமாம் நரகத்தில் வழலைவாங்கு
பிட்சையெடுத்துண்ணாமல் இரும்பாட்டிப்பாரு பெண்மாய்கைதனையறுத்துப்
பின்பாய்நில்லே
2700.
நிலதென்றால் வாழ்வுனக்கு நிற்குமோடா நேராக வழலையது சிக்கினாக்கால்
அல்லென்ற குபேரனைப்போல் வாழ்வுண்டாகும் ஆதித்தனுள்ளவு உண்டுடுக்கலாகும்
கல்லென்ற கல்லுப்பு கட்டிட்டானால் காரமாஞ்சூதத்தைக் கவ்விக்கொள்ளும்
மல்லென்ற சூதத்தி லெட்டெட்டும்சித்தி வாய்வீணராய்த் திரிந்தால் மண்ணாய்ப்போமே

# போகரின் சப்த காண்டம் – 7000

2701.
போகாமல் உப்பைமுந்தி கட்டியுண்ணு பொய்யொன்றுஞ் சொல்லாதே புகழாய்எண்ணை
ஏசாதே மனதுதன்னிலிச்சியாதே எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணிப்பாரு
வேகாதது எதுவென்று பாருபாரு வெளியோடே மனந்திருந்தி எண்ணிப்பாரு
பாகாமல் வாசியைத்தான் மூலத்திலுண்ணு பராபரியைப் பூசித்துப் பானம்பண்ணே
2702.
பண்ணவே போகமுனி ஏழாயிரங்கோர்வை பாடினேன் சித்தர்க்கா மென்றுசொல்லி
திண்ணமுடன் வயித்தியத்தின் சார்பூநூலை திரட்டிவைத்தேன் இந்நூலுக் குறுதிமெத்த
வண்ணமுடன் செய்பாகம் அறிந்துசெய்தால் வலுவான நோயகன்று புனிதனாவாய்
எண்ணமுடன் காவியமாய்ச் சத்தகாண்டம் இயற்றினேன் ஏழாயிரக் காண்டந்தானே
2703.
தானான வின்னமொரு கருமானங்கேள் தாக்கான லிங்கமது பலந்தானப்பா
வேனான கட்டியொரு லிங்கத்திற்கு வேகமுடன் முலைப்பாலில் சுறுக்குசாமம்
கோனான சங்கன்சார் பலங்கார்சாமம் குறிப்புடனே சுறுக்கிடவே கட்டிப்போகும்
கானான மேற்போக்கு மின்னங்கேளு கருவான வழிஞ்சியிட தயிலம்வாங்கே
2704.
வாங்கியே லிங்கமது சுறுக்குத்தாக்க வரிசைபெற லிங்கத்தின் சூதந்தானும்
தேங்கியே யுள்ளடக்கிக்கட்டும் தெளிவான கெந்தியது புகையடங்கும்
ஓங்கியே லிங்கமது கட்டிற்றானால் ஓகோகோ நாதாக்கள் அதீதமென்பார்
ஏங்கியே திரியாதே மன்னாபாரு எழிலான லிங்கமது இறுகிப்போமே
2705.
போமென்று விடுகாதே புகலக்கேளு புத்தியுள்ள பாலகனே இன்னஞ்சொல்வோம்
தாமென்ற மேதியின்பால் கற்றாழம்பால் தயவாக சமனிடையாய் எடுத்துக்கொண்டு
நாமென்ற லிங்கமதை சுருக்குத்தாக்கு நாயகனே லிங்கமது வுருக்குபோலாம்
காமென்ற லிங்கத்துக்கு அங்கிசொல்வேன் கருவான தாம்பரத்திற் களங்குசெய்யே
2706.
செய்யவே களங்குடனே சூதத்தானும் சிறப்பான சிங்கியுடன் சாரம்கூட்டு
பையவே அரைப்பொடியுங் கூடச்சேர்த்து பாகமுடன் நிம்பழத்தின் சாற்றாலாட்டி
மெய்யவே சோடசாமம் பங்கதாக்கி பேரான லிங்கத்தின்மேலேபூசி
துய்யவே ரவிதனிலே காயவைத்து துப்புரவாய் சுண்ணாம்பு சீலைமாட்டே
2707.
மாட்டியே உமிப்புடமாம் தன்னிலிட்டு மயங்காதே மன்னவனே எடுத்துப்பாரு
தாட்டிகமாய் சோடசமாய் புடந்தானப்பா சாங்கமுடன் முன்சொன்ன படியேபோடு
நீட்டமுடன் லிங்கமது வுறுதிக்கட்டும் நெடுங்கம்பி லிங்கமது வுறுகிப்பாயும்
வாட்டமுடன் செந்தூரஞ் செய்தாயானால் வாகான வேதைமுகங் காணலாமே
2708.
காணலாம் சதகோடி சூரியன்போல் தாக்கான பிரகாசமானசோதி
நீணவே லிங்கமது என்னசொல்வேன் நிலையான கவனசுத்தி குளிகையென்பார்
தோணவே மதியுடனே ஏழுங்கூட்டி தோராமல் செம்பதுவும் மூன்றுங்கூட்டி
பூணவே தங்கமது ஒன்றுகூட்டி புண்ணியனே மூசைதனி லுறுக்கிடாயே

2709.
உறுக்குமுகந் தானறியார் மூடர்பாதி வுலகுதனில் மெத்தவுண்டு வுரைக்கக்கேளு
நெருக்கமுடன் லோகமது வுருகும்போது நேர்புடனே குருவொன்று தன்னையீவாய்
தெறுக்கமுடன் கணம்விட்டு ஆடும்போது தேரான காரமதை யின்னுமீவாய்
செறுக்குடனே கரிபோல யிருக்கும்பாரு செம்மைபெற வோட்டில்வைத்து வூதிப்போடே
2710.
போடவே மூன்றுமுறை வூதிப்போடு பொன்னவனே பொன்போலே மாற்றுகாணும்
நீடவே மாற்றாறு காணும்பாரு நிலைத்துதடா வாதவித்தை நிசமாச்சு
கூடவே தங்கமது ஒன்றுகூட்டி குறிப்பாக வாரடித்துப் புடத்தைப்போடு
ஆடவே சீவனத்துக் கிடமேசென்று அப்பனே அருந்தவசில் நின்றிடாயே
2711.
நிற்கையிலே வாணிவந்து நிர்த்தஞ் சொல்வாள் நிராமயத்தின் சோதியது சொரூபந்தோன்றும்
துற்கையென்னுங் காளியவள் ஒதுங்கிநிற்பாள் துரைராச சுந்தரன்போல் சித்தனாவாய்
பற்குணன்போல் வீராதி வீரனாய் பாருலகில் வுன்னையொரு  ரிஷியென்பார்
அற்பமென்று நினையாதே வருள்மைந்தாகேளு அருந்தவச நிலைதனையே நாடிக்கொள்ளே
2712.
கொள்ளையிலே குருவர்க்கம் சீஷனென்பார் குவலயத்தில் உம்மகிமைகாணமாட்டார்
தெள்ளுதமிழ் வடமொழியைப் பிரித்தாராய்ந்து திரட்டிவைத்த மாணாக்கனென்பார்கண்டீர்
பள்ளிபயிலேறுஞ் சுப்ரமணியன் சுவாசம் பூரணத்தின் இருகலைகள் அறிந்துநன்றாய்
பள்ளுதமிழ் நாடகத்தைப்பற்றான் பாருலகிலிருப்பவன் சித்தனாமே
2713.
சித்தனாய்ப் பிறந்தாலும் பிறக்கவேண்டும் சின்மயத்தின் சுடரொளியைப் பற்றவேண்டும்
பத்தனாயிருந்தாலும் என்னலாபம் பரியாகத் தமிழதனை கற்கவேண்டும்
முத்தமிழில் வல்லவராயிருக்கவேண்டும் மூதுலகில் கீர்த்தஇதனை யடையவேண்டும்
வித்தகனார் அகத்தியர்க்குச் சீடனாக விண்ணுலகில் இருப்பவனே யோகியாமே
2714.
யோகமென்றால் யோகமதை நிறுத்தவேண்டும் யோகத்தின் ரம்மியத்தை யறியவேண்டும்
போகமெனும் மாய்கைதனை ஒழிக்கவேண்டும் யோகமுடன் பேரின்பந் தேடவேண்டும்
சாகமுடன் இருப்பதற்கு கற்பம்வேண்டும் சட்டமுடன் சமாதிநிலை யறியவேண்டும்
வேகமுடன் காயமதை நிறுத்தவேண்டும் வெட்டவெள் யம்பரத்தை யூனிப்பாரே
2715.
பார்க்கையிலே ஞானமது வந்துறாது பாரினிலெெ பரிசனங்கள் கெட்டார்கோடி
தீர்க்கமுடன் பொய்வேடங் கொண்டுமல்லோ திறமுடனே யோகமதைக் கண்டோமென்பார்
நாக்கமல பீடமதில் வீற்றிருக்கும் நாதாந்த மனோன்மணியைக் கண்டோமென்பார்
ஏர்க்கமுடன் பொய்யது மிகவும்பேசி எழிலான சாத்திரத்தை அறியார்தாமே
2716.
அறியாத முழுமக்கள் அனேகம்பேர்கள் அவனிதனில் கும்பல்கும்லாகக்கூட்டி
நெறியான வழிதனையே கடந்துநித்தம் நேர்புடனே மதியழிந்து போனார்கோடி
குறியான சாத்திரத்தை விட்டுவிட்டு குவலயத்தில் கெட்டவர்கள் கோடாகோடி
முறியனைப் போல்வாய்ப்பினத்தல் மிகவும்பேசி மோசமுடன் பாலவழிக்கேகினாரே

2717.
ஏகினாரென்லுமே யாமறிந்து எழிலுடனே காலாங்கிநாதர்தம்மை
பாகமுடன் தான்வணங்கி பணிந்துபோற்றி பதாம்புயத்தை என்னாளும் மனதிலுண்ணி
வேகமுன் அடியேனும் பலநூல்பார்த்து வெளியான கருக்குருவும் வுரைக்கயெண்ணி
போதமென்னும் பெருநூலேழாயிரத்தில் பொங்கமுடன் பாடிவைத்தேன் கருக்கள்தானே
2718.
தானான பெருநூலேழாயிரத்தில் தாக்கான காண்டமிது மூன்றாங்காண்டம்
தேனான குருமொழிகள் அனேகமுண்டு தேசத்தில் பரிபாஷை யனேகமுண்டு
மானான மறைப்புமுதல் உளவுமெத்த மண்டலத்தில் கண்டவரும் விண்டோரில்லை
கோனான காலாங்கி நாதர்தாமும் கனகமெனும் நவமணிபோல் கருதினாரே
2719.
கருதினார் அடியேனுங் கண்டாராய்ந்து காசினியில் மானிடர்கள் அறியவேண்டி
சுருதியென்னும் பிரணவத்தைச் சீனத்தார்க்கு சூட்சமுடன் காட்டவென்று அடியேன்தானும்
பருதியெனும் குளிகைதனைப் பூண்டுகொண்டு பறந்தேனே சீனபதிக்கடலோரந்தான்
உருதியுடன் அப்பதியில் இறங்கியானும் ஓகோகோ வெகுகாலம் இருந்திட்டேனே
2720.
இருந்திட்டேன் கோடிவரையுகாந்தகாலம் எழிலான சூட்சாதி வித்தையாவும்
திருந்திடவே சீனபதி வுலகுள்ளோர்க்கு திட்டமுடன் கைமறைப்பு யாவுஞ்சொன்னேன்
பொருந்திடவே யவர்களுடன் சேர்ந்துயானும் போகித்தேன் வெகுகோடி காலமப்பா
செருந்திடவே போகமது செய்ததாலே சிறப்பான போகனென்று பேருண்டாச்சே
2721.
ஆச்சப்பா என்னைப்போல் பெயருள்ளார் அப்பனே வையகத்திலாருமில்லை
மாச்சலென்னும் நவகோடி ரிஷிகளுண்டு மாநிலத்தில் பதினெண்பேர் சித்தருண்டு
கூச்சலெனும் திருமூலவர்க்கத்தார்கள் கோடானகோடிபே ரனந்தமுண்டு
மூச்சடங்கி மாண்டசித்தர் கோடாகோடி முறைமையுடன் சமாதிகளில் கோடியாமே
2722.
கோடியாஞ் சமாதிதனில் இருந்தோர்மெத்த கூறவேமுடியாது குவலயத்தில்
தேடியே சமாதிநிலை கண்டாராய்ந்து தெரிசனைகளில்லாமல் மாண்டார்கோடி
நீடியே சாத்திரத்தை பாராமல்தான் நெறிதப்பி மாண்டவர்கள் கோடாகோடி
நாடியே காலாங்கிநாதர்பாதம் நான்பெற்றேன் கோடிமுறை வுண்மைதானே
2723.
தாமான ராஜரெல்லாம் தாரிணியில் தலைமாறி நூலைப்பார்த்து
சாமான கருக்களெல்லாம் காணாமற்றான் சார்பான நூல்படிக்கே வகையுங்கேட்டு
காமான தலையேடுங் கடையேடுந்தான் காணாமல் மதிகெட்டு மூப்பைவிட்டார்
நாமான படியாலே வுளவறிந்து நாதாக்கள் கைமறைப்பை வெளியிட்டேனே
2724.
இட்டேனே யின்னமொரு மார்க்கங்கேளு எழிலான மதிதனையே ராவிமைந்தா
சட்டமுடன் பலமதுதா னிறுத்துகொண்டு சாங்கமுடன் கெந்தியது காலதாக
கிட்டமென்ற சிட்டமது காலுங்கூட்டி கவனமென்ற சூதமது சரியாய் சேர்த்து
திட்டமுடன் வேங்கையது தயிலத்தாட்டி திறமுடனே நாற்சாமமரைத்திடாயே

2725.
அரைத்துமே பில்லைதட்டிக் காயவைத்து அப்பனே யோட்டிலிட்டுச் சீலைசெய்து
திரைப்புடனே ரவிமுகத்தில் காயவைத்து தீரமுடன் மணல்மறைவிற் புடத்தைப்போடு
முறைப்படியே மணலாறி எடுத்துப்பாரு மூதண்ட செந்தூரமென்ன சொல்வேன்
குறையாமல் பத்துபுடம் இப்படியேபோடு குறியான செந்தூரம் சிவப்புமாமே
2726.
ஆமேதான் செந்தூரம் அருணன்போலாம் அப்பனே புடம்போட சிவப்புமெத்த
வேமேதான் முறையோடு செய்தாயானால் விண்கொள்ளா வேகமது வீரங்காட்டும்
போமேதான் செந்தூரம் வெள்ளிசெம்பில் போக்கோடு முறையோடுங் கொடுத்துப்பாரு
நாமேதான் சொன்னபடி யோட்டில்வைத்து நலமாக வூதிடவே பசுமைதானே
2727.
தானான பசுமையது யிடைதானிற்கும் தாக்கான செம்பதுவு மற்றுப்போகும்
வேனான தங்கமது நாலுக்கொன்று விருப்பமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு
தேனான பொன்னதுவும் மாற்றெட்டாகும் தெளிவான புடத்துக்கு வுறுதிதங்கும்
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருபரன்தன் முறைப்படியே கூறினேனே
2728.
கூறினேன் வெள்ளியென்ற செந்தூரத்தை குணமான திரிகடுகு சூரணத்தில்
மீறியே வனுபான மறிந்துகொள்ள மிக்கான ரோகமெல்லா மகன்றுபோகும்
சீறியே மேகமென்ற பிணிகள்போகும் சிவப்பான தேகமது வண்டுபோலாம்
மாறியே வாசியது கீழ்நோக்காகும் மகத்தான ரோகமெல்லாம் அகன்று போமே
2729.
அகன்றுபோம் வாயுவென்ற எண்பதும்போம் அப்பனே காசரோகமகன்றுபோகும்
தகன்றுமே மேல்மூச்சு காணாதோடும் தாக்கான வாய்வூரல் விட்டுப்போகும்
புகன்றுமே சில்விஷங்கள் காணாதோடும் புகழுடனே மதிமயக்கம் பொருமியோடும்
சகன்றுமே பாண்டுவகை போகும்போகும் சார்பான மேலிளப்பு தீர்ந்துபோமே
2730.
போமேதா மின்னமொரு மார்க்கம்பாரு பொங்கமுடன் தாளகமும் பலமொன்றாகும்
தாமேதான் துருசதுவும் பலமொன்றாகும் தாக்கான ஈருள்ளுச் சாற்றினாலே
வேமேதான் தானரைப்பாய் நாலுசாமம் விருப்பமுடன் மைபோலேயாட்டி மைந்தா
நாமேதான் சொன்னபடி கலசம்செய்து நலமாக ரவிதனிலே காயப்போடே
2731.
போடவே சுண்ணாம்புச் சீலைசெய்து பொங்கமுடன் கல்வமதிலிட்டுமைந்தா
நாடவே மெல்வாய்க்கு சீலையேழு நலமாக ரவிதனிலே காயவைத்து
கூடவே பத்தெருவிற் புடத்தைப்போடு கொற்றவனே புடமாறி எடுத்துப்பாரு
தேடவே தாளகமும் கட்டிப்போகும் தெளிவான வங்கமது திரளுந்தானே
2732.
தானான தாளகமும் வங்கமானால் தாக்கான குருவுக்கு தற்காலந்தான்
வேனான செம்புக்கு நாலிலொன்று விருப்பமுடன் தான்கொடுத்து வூதிப்போடு
பானான செம்பதுவுங் கட்டிப்போகும் பாங்கான வூரலது போகும்பாரு
தேனான மனோன்மணியாள் சித்தரூபி செம்புக்குப் புடம்போடச் சுத்தியாமே

2733.
சுத்தமாஞ் செம்புக்கு வெள்ளிநாலு சகமடனே செம்பதுவும் ஒன்றேயாகும்
முத்தமுடன் தங்கமது ஒன்றேயாகும் முயலான மூசைதனிலுருக்கிப்பாரு
சித்தமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு தெளிவான மாற்றதுவு மதிகங்காணும்
பத்தமுடன் புடத்துக்கு வுறுதித்தங்கம் பாலகனே சித்தர்செய்யும் வேதையாமே
2734.
வேதையா மின்னமொருபாகங்கேளு வேடிக்கை சிமிட்டுவித்தை வாதம்பாரு
பாதையாம் தாளகமும் பலமொன்றாகும் பாங்கான துரிசியது பலமொன்றாகும்
காதையாம் பேயத்திப் பால்தானப்பா பாலகனே பாலதுவைக் கட்டிக்கேற்றி
சாதகமாய் ரவிமுகத்தில் துவைத்துப்பாலா சாங்கமுடன் உமிநீரால் அரைத்திடாயே
2735.
அரைக்கையிலே மெழுகதுபோலாகும்பாரு அப்பனே துரிசிக்கு கவசங்கட்டி
நிரைக்கையிலே மூன்றுபுடம் இப்படியேபோடு நிலையான தாளகமும் உருகிக்கட்டும்
திரைக்கவே துரிசிக்கு சரிநேரொக்க திறமான வீரமது நேரதாக
முறைப்படியே உமிநீராலரைத்து மைந்தா முன்போலப் புடம்போடக் கட்டிப்போமே
2736.
கட்டியதோர் புடமதுவும் பத்தேபோடு கருவான தாளகமும் மடித்துகொல்லும்
திட்டமுடன் தாளகத்தைக் கொடுக்கும்மார்க்கம் தீர்க்கமுடன் செப்புகிறேன் மைந்தாகேளு
மட்டமுடன் பொன்னாகச் செய்வதற்கு மயங்காதே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
வட்டமுடன் தானருக்கி குருவொன்றீய வாகுடனே கரிபோல யிருக்கும்பாரே
2737.
பாரேதான் கரியோட்டி லூதிப்போடு பாகமதாய் செம்பதுவும் நீங்கியேதான்
நீரேதான் வெள்ளியது மாற்றுகாணும் நிலையான பொன்னதுவும் ஆறுமாகும்
நேரேதான் தங்கமது ஒன்றுசேர்த்து சிறப்புடனே வாரடித்துப் புடத்தைப்போடு
கூரேதான் போன்னதுவும் எட்டுமாகும் குணமான பிறவியது யாகுந்தானே
2738.
தானான தங்கமது பசுமைகாணும் தாக்கான பொன்னதுவும் சிவயோகிக்காம்
வேனான பொன்னதுவும் ரிஷிகள்சித்தர் விருப்பமுடன் தான்செய்யம் அதீதவித்தை
கோனான காலாங்கிநாதர்பாதம் குறிப்புடனே யான்வணங்கி வதீதங்கேட்டு
பானான மானிடர்கள் பிழைக்கவேண்டி பாடினேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே
2739.
பண்பான போகரிஷி அடியேன்தானும் பாகமுடன் செய்துமல்லோ கண்டாராய்ந்து
நண்பான சாத்திரத்தை விரித்தாராய்ந்து பண்பான மானிடர்கள் பிழைக்கவேண்டி
நண்பானசிவயோகம் மிகுதிகாட்டும் நாதாக்கள் வித்தையிது நவிலப்போமோ
கண்பான விதியாளி காண்பான்பாரு கைலாசகாணியது லயிக்குந்தானே
2740.
தாமான மின்னமொரு பாகங்கேளு தயவுடனே சொல்லுகிறேன் தன்மையாக
காமான நாகமொரு பலந்தான்வாங்கு கருவான குகையிலிட்டு உருகிக்கொண்டு
பாமான சாரமதை பலந்தான்கொண்டு பதமுடனே கிரசாரமது தன்னையீவாய்
நாமேதான் சொன்னபடி நாகந்தானும் நயமுடனே கண்ணதுவும் அடையும்பாரே

2741.
அடைவுடனே நாகமதுதன்னையப்பா அப்பனே பில்லையது தகடதாக்கி
படையுடனே தாளகமும் சிந்திதானும் பதமுடனே சரியெடையாய் எடுத்துக்கொண்டு
தடையறவே நிம்பழத்தின் சாற்றாலாட்டி தாக்கான நாகத்துக் கங்கிபூசி
சடையுடனே ரவிதனிலே காயவைத்து சாங்கமுடன் புடம்போடக் கட்டியாமே
2742.
கட்டியாம் நாகமதை எடுத்துக்கொண்டு கருவாகத் தானுருக்கிப் பின்னுங்கேளு
திட்டமுடன் வீரமதை நொறுக்கிக்கொண்டு திகழ்பெறவே களஞ்சியது கிராசமீவாய்
மட்டியென்ற கண்ணாடி பூநீரப்பா மார்க்கமுடன் இருகளஞ்சி பொடித்துக்கொண்டு
சட்டமுடன் கிராசமது கொடுக்கும்போது சார்பான நாகமது சவளையாமே
2743.
சவளையாம் நாகமது பின்னுமப்பா சாங்கமுடன் தானுருக்கிப் பின்னுங்கேளு
கவளமுடன் நிமிளையது களஞ்சிரண்டு கணக்காகத் தானுருக்கிக் கிராசமீவாய்
தவளமது நாகமது என்னசொல்வேன் தாக்கான முழுக்கட்டு என்னலாகும்
பவளம்போ லுருகியது வுருளைபோலாம் பாங்கான நாதத்தின் பான்மையாமே
2744.
பாண்மையாம் நாகமதை கொடுக்குமார்க்கம் பாகமுடன் சொல்லுகிறேன் பண்பதாக
மேன்மையாய் செம்பதுவை தகடதாக்கி மிக்கான செம்புக்கு கெந்திநாலு
மான்மையாய் பழச்சாற்றால் அரைத்துமைபோல் மயங்காமல் தகட்டுக்குப் பூசிப்போடு
கான்மையுடன் கரியோட்டில் காய்ச்சிப்போடு களிம்பான செம்பதுவும் கட்டிப்போமே
2745.
போமேதான் செம்பதுவும் வூரலேகி பொங்கமுடன் வர்ணமது சிவப்புமெத்த
நாமேதான் சொன்னபடி நாகந்தன்னை நாட்டடா செம்புக்கு நாலுக்கொன்று
வேமடா தானுருக்கி எடுத்துப்பாரு மிக்கான செம்பதுவும் மாற்றுகாணும்
தாமேதான் மாற்றதுவும் ஏழதாகும் தனியாக சீனமது பிடிக்குந்தானே
2746.
தானேதான் தகடடித்துப் புடத்தைப்போடு தனியான செம்பதுவும் மூட்டங்காணும்
மாணேகேள் திரைசவுடு களிம்போடூரல் மார்க்கமுடன் சவளையது எல்லாம்போகும்
தேனேதான் யினியதிகம் வூட்டம்காய்ப்பு திகழான புடநயப்புகரகரப்பு
ஏனேதான் இத்தனையும் பொருந்திநிற்கும் எழிலான பொன்னதுவும் பிறவியாச்சே
2747.
ஆச்சப்பா பிறவியது என்னசொல்வேன் ஆச்சரியமாச்சரியம் வாதவித்தை
மூச்சப்பா விடுகாதே மற்றோருக்கு முயலான சித்தரமுனி கண்டாரானால்
ஏச்சப்பா யுந்தனுக்கு யிடையூறுண்டாம் என்மகனே சாபமது எய்தும்பாரு
பேச்சப்பா வாராது சிடிகைவேதை பேருலகில் நீயுமொரு சித்தனாமே
2748.
சித்தனாம் சிவபூஜைக்குறுதித் தங்கம் சிறப்பான சமுசாரிக்கேற்றவேதை
முத்தமுடன் கருவாளி காண்பான்பாரு மோசமில்லை சாபமில்லை முனிவர்வேதை
நித்தமுமே பூசையது நேமநிஷ்டை நிலையான தேசத்திலிருந்துகொண்டு
சத்தமுடன் சமுசார தொல்லைவிட்டு சராசரத்தை ஒழிப்பவனே யோகியாமே

2749.
ஆமேதான் இன்னமொரு மார்க்கம்பாரு அப்பனே மாணாக்கள் பிழைக்கவென்று
வேமேதான் துருசதுவும் பலமொன்றாகும் வேகமுடன் தானரைத்து புடத்தைப்போடு
நாமேதான் சொன்னபடி கூட்டிக்கொண்டு நன்மையுடன் கப்பலாய்ப்பாலைத்தாக்கே
2750.
தாக்கவே நாள்மூன்று தப்பாமற்றான் தயவுடனே துருசுக்குப் பாலையூட்டு
நோக்கமுடன் ரவிதனிலே காயவைத்து நுணுக்கமுடன் பற்பத்தை எடுத்துக்கொண்டு
தேக்கவே ரசமதுவை சரியதாக திகழுடனே நிம்பழத்தின்சாற்றாலாட்டி
தூக்கவே பில்லையது தட்டிமைந்தா துஃபுறவாய் ரவிதனிலே காயப்போடே
2751.
காயவே வோட்டிலிட்டுச் சிலைசெய்து கனிவாகக் குக்குடமாம் புடத்தைப்போடு
மாயாசமது தான்மடிந்துகொன்று நயமுடனே கண்டமது பற்பமாச்சு
தோயவே பின்னுமந்த பழச்சாற்றாலாட்டி தோறாமல் முன்போல பில்லைதட்டி
காயவே ஒட்டிலிட்டுச் சீலைசெய்து தண்மையுடன் புடம்போடச் சுன்னமாச்சே
2752.
ஆச்சப்பா சுன்னமது என்னசொல்வேன் அப்பனே கண்கொள்ளா வேதையாச்சு
மாச்சென்ற சுன்னமதை மதியிற்றாக்கும் மயங்காதே பத்துக்கொன்று போடு
பாச்சலுடன் வெள்ளியது எட்டுகாணும் பாகமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு
காச்சலுடன் கலாய்ப்புக்கு வறுதிதங்கம் கருவாளி கண்டாலே விடுவார்தாமோ
2753.
தாமான வின்னமொரு பாகங்கேளு தாக்கான செம்பென்ற ரேக்குதானும்
காமான வேஷங்கள் பூணுவோர்க்கு கருவான சீனபதிரேக்குதானும்
வேமான மானதொரு காந்தஞ்சேர்த்து விருப்பமுடன் காரமது கூடச்சேர்த்து
பாமான வெள்ளியது சரிநேரொக்க சாதகமாய் தான்சேர்த்து வுருக்கிடாயே
2754.
உருக்கவே செம்பதுவும் வொன்றாய்ச்சேர்ந்து உத்தமனே காந்தத்தின் சத்துசேர்த்து
பெருக்கமுடன் வெள்ளியது வரணமேறி பேரான மாற்றதுவும் மிகவுமாகி
செருக்கமுடன் வாவியது கட்டிப்போகும் சிறப்பான வாணிக்கு வாறேகாலாம்
சுருக்கமுடன் பத்துக்கு ரண்டுதங்கம் தாக்கவே மாற்றதுவும் ஏழதாமே
2755.
ஏழான மாற்றதுவும் மிகுதிகாட்டும் எழிலான பொன்னதுவும் பசுமைமெத்த
காழான பிறவியது எண்ணலாகும் கருவான வித்தையிது சித்தர்வேதை
நாழான நாதாக்கள் செய்யும்வேதை நளினமுடன் யான்சொன்னோம் மாண்பருக்கு
கூழான வேதையிது யல்லகண்டீர் கொற்றவனே போகரிஷி கூறினோமே
2756.
கூறினோம் சீனபதிவேதைமார்க்கம் குவலயத்தில் யாரேனும் கண்டதுண்டோ
மாறினதோர் கருமான வுளவுமார்க்கம் மகத்தான சுளுக்குமுதல் கருவுவேதை
தேறினதோர் கண்கண்ட வேதையாவும் திரட்டினேன் பூதல்த்தார்க்கென்றுசொல்லி
ஆறினங்கள் பிறவிமுதல் வைப்பெல்லாந்தான் அப்பனே யாமுரைத்தோம் வுளவுபாரே

2757.
வளமையா மின்னமொரு பாகங்கேளு மகத்தான நாதாக்கள் கூறவில்லை
இளமையாம் போகரிஷி யடியேன்தானும் எழிலாகக் கூறுகிறேன் பற்பதாக
களமைதாம் சூதமது சேரொன்றாகும் கனமான கண்டரது சேரொன்றாகும்
தளமையாம் நிம்பழத்தின் சாற்றாலாட்டி தாழ்மையுடன் தாழ்மையுடன் தானரைப்பாய்
சாமமெட்டே
2758.
எட்டான சாமமது வரைக்கும்போது என்மகனே சூதமது மடிந்துமல்லோ
கட்டான சூதமது வெண்ணெய்போலாம் கசடான கண்டரது நீக்கியேதான்
திட்டமுடன் வெண்ணெயது கல்வமிட்டு திறமாகத் தானரைப்பாய் தகரச்சாற்றால்
சட்டமுடன் எண்சாமம் அரைக்கும்போது சார்பான சூதமது வெண்ணெயாமே
2759.
வெண்ணெயாம் சூதமுடன் கருவூமத்தை விருப்பமுடன் பிசறியரைக்கும்போது
கண்மையுடன் வெண்ணெயது மடிந்துபோகும் கருவான ராசனென்ற வெண்ணெயாச்சு
திண்ணமுடன் சூதமது வெண்ணெயானால் திறமான லோகத்தி லனந்தம்வேதை
கண்ணமுடன் செந்தூரம் பண்ணக்கேளும் கழலான வேதையிது கோடியாமே
2760.
கோடியாம் வேதையிலே செந்தூரங்கேள் குறிப்பான கெந்தியது வரைக்குப்பாதி
நாடியே சீலையதுவும் ஒன்றுக்குக்கால் நலமான வீரமது வரிக்காலுக்கொன்று
தேடியே வாறுவகை செயநீர்தன்னால் தெளிவாகத் தானரைப்பாய் நாலுசாமம்
வாடியே திரியாதே மன்னாபாரு மார்க்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
2761.
நாலான சாமமது வரைக்கும்போது நாயகனே சூதமது மடிந்துசாகும்
காலான ரவிதனிலே வைத்துக் கனமாகப் பொடிபண்ணிஎடுத்துக்கொண்டு
சாலான குப்பிக்குச் சீலையேழு சார்பாகத் தான்செய்து வாயைவிட்டு
பாலான குப்பிக்குள் மருந்தைவிட்டு பாலகனே மாக்கல்லால் கொண்டுமூடே
2762.
மூடவே குப்பிக்குச் சீலைசெய்து மூர்க்கமுடன் தான்செய்து ரவியில்வைத்து
நாடவே தளவாயாஞ் சட்டிதன்னில் நலமுடனே பூமணக் கீழேகொட்டி
தேடவே சட்டிமையந்தன்னில் தெளிவாகக் குப்பிநடுமையம்வைத்து
கூடவே மணலதனை மேலேகொட்டி குப்புறவாய் மேல்சட்டி சீலைசெய்யே
2763.
செய்யவே வானுகையாம் அடுப்பில்தானும் சிறப்பாகத் தீமூட்டி எரிப்பாயப்பா
பையவே வெண்சாம மெரித்தபோது பாலகனே செந்தூரம் அருணன்போலாம்
தொய்யவே சூதமது செந்தூரத்தால் தொடரவாம் கோடிமுறை வேதையாவும்
செய்யவே செந்தூரம் பதனம்பண்ணு செய்பாகம் கைபாகம் முறைவிடாதே
2764.
முறையோடு செய்தாக்கால் எல்லாஞ்சித்தி முறைதப்பி செய்தாலோ எல்லாமோசம்
கரையேற வேண்டுமானால் சூதம்பாரு கண்கெட்ட வாதியானால் சூதந்தள்ளு
பரையான சூதமது ராசபோசன் பாரினிலே சூதம்விட்டால் வாதம்போச்சு
நிறையோடு சாத்திரங்கள் வுளவாராய்ந்து நிற்பவனே சித்தர்களி லொருவனாமே

2765.
ஒருவனாம் பேருள்ளான் ராசியுள்ளான் உலகத்தில் அல்லார்க்கும் வாய்க்குமோசொல்
பெருமையுடன் வீண்பேச்சு மெத்தபேசி பேருலகில் நாய்போல பினத்துவார்கள்
அருமையது கண்டறிய மாட்டாரப்பா அப்பனே கரைகண்ட முனிதானென்பான்
வெருமையாய் வாய்ப்பினத்தல் மிகவும்பேசி வெகுகோடி மாண்டார்கள் மண்ணில்தானே
2766.
தானான செந்தூரம் கொடுக்குமார்க்கம் சாங்கமுடன் சொல்லுகிறேன் தன்மையாக
வேனான வெள்ளியது வாறதாகும் வேகமுடன் செம்பதுவும் நாலதாகும்
கோனான மூசைதனி லுருக்கிக்கொண்டு குருதனையே தான்கொடுத்து வூதிப்போடு
தேனான கரியோட்டி லூதும்போது தெளிவான பசும்பொன்னாயாகுந்தாமே
2767.
தாமான பொன்னதுவு மாற்றாகும் தனியான தங்கமது நாலுக்கொன்று
வாமான மென்றதொரு மட்டத்தோடு வகையான பாகமுடன் வாரடித்து
சாமான மானதொரு காவிக்கல்லில் சட்டமுடன் புடம்போடத் தங்கமாகும்
வேனான வெனதையர் காலாங்கிநாதர் விருப்பமுடன் யான்வணங்கி விரித்திட்டேனே
2768.
விரித்திட்டேன் குடவனிலே பத்துக்கொன்று வீரமுடன் கொடுத்திடவே மாற்றெட்டாகும்
செரித்திடவே மட்டமென்ற பரிகள்மேலே சிறப்புடனே யுமிநீரால் செந்தூரத்தை
குரித்திடவே பொன்ற கட்டின்மேலே பூசபொங்கமுடன் மாற்றதுவும் பத்தேயாகும்
முரித்திடவே சவளையது போலாம்பாரு முனையான மாற்றதுவும் அதீதங்காணே
2769.
காணவென்றால் செந்தூரம் குன்றியுண்ண காயாதிகற்பமது வீறுமெத்த
தோணவே வனுபான மெதுவானாலும் துரையோடும் முறையோடுங் கொண்டாயானால்
நீணவே தேகமது கற்றூணாகும் நிலைத்ததடா தூலமது சாவேயில்லை
வாணவே நாதாக்கள் சொல்லவில்லை வையகத்தில் போகரிஷி வகுத்திட்டானே
2770.
வகுத்திட்டேன் செந்தூரப் போக்குதானும் வளமுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
தொகுத்திட்டேன் இன்னம்வெகு அனந்தம்கோடி தோராமல் நூலதனைக்கண்டாராய்ந்து
பகுத்திட்டேன் சூதமென்ற செந்தூரத்தை பலபலவாய்ப் பாடிவைத்தார் சித்தரெல்லாம்
பிகுத்திட்ட மானதொரு மூன்றாங்காண்டம் பிசகாமல் பாடிவைத்தேன் சத்தந்தானே
2771.
சத்தமுடன் ஏழுவகைக் காண்டஞ்சொன்னேன் சாகாமா மிந்நூலுக் கொருநூலில்லை
சித்தரெல்லா மொன்றாய்க்கட்டி யென்னைசிறப்புடனே மதிலழைத்திட்டார்கள்
சத்தமுடன் அடியேனுந்தான் வணங்கி துரைராசர் காலாங்கிதனை நினைத்து
பத்தியுடன் அடியேனும் மனதிலுண்ணி பட்சமுடன் கூட்டமதிற் சென்றிட்டேனே
2772.
சென்றேனே நாதாக்கள் முனிவர்பக்கல் சேனையுடன் ரிஷிகூட்ட மங்கிருந்தார்
நின்றேனே நெடுநேரம் சித்தர்பக்கல் நினைத்துமே காலாங்கிதனைநினைக்க
பன்றான நாதாக்கள் முனிவர்சித்தர் பலபேரு மெந்தனுக்கு யாசீர்மித்தார்
குன்றான ரிஷிமுனிவர் என்னைப்பார்த்து கூறுவார் அஞ்சலிகள் கோடிதானே

2773.
தானான போகர்முனி சொல்லக்கேளும் சார்பான சாத்திரத்தின் வுளவுயாவும்
கோனான காலாங்கி தன்பலத்தால் கொட்டினீர் வித்தையெல்லாம் வெளியாய்ப்போச்சு
மானான வித்தையெல்லா மிந்தமட்டும் மறைப்புடனே வைத்தாலே மதிப்புண்டாகும்
வேனான வித்தைகளை விருதாவாக விரைதிட்டால் லோகமெல்லாம் சித்தாய்ப்போமே
2774.
போமென்ற படியாலே இனிமேலப்பா பொங்கமுடன் கருக்குருவை வெளியிடாதே
நாமொன்று சொல்லுகிறோம் சித்தமாய்க்கேளு நாதாக்கள் சகலரும் பலநூல்சொன்னார்
வாமென்று நூல்களுக்குச் சாபஞ்சொன்னார் வகையுடனே சாபமதை நிவர்த்திசெய்து
தாமொன்று செய்தவர்கள் கோடிலொன்று தக்கபடி செய்தார் அனேகராமே
2775.
அனேகராம் மாண்பர்கள் மெத்தக்கூடி அண்டரண்ட சராசரங்கள் திரட்டினார்போல்
சினேகரால் சிறுபாலர் யாவுமொக்க சிறப்புடனே சிறப்புடனே கும்பல்கும்பலாகக்கூடி
அனேகமுடன் சாத்திரத்தை கண்டாராய்ந்து சண்டாளர் மருமத்தைவெளியில்சொல்லி
முனேந்திரனாய்ப் பாபத்துக்கேதுவாகிப் மூர்க்கமுடன் தவநிலையைக் கொடுத்தார்தாமே
2776.
காமான கரிவங்கம் சேர்தானொன்று சாற்றுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
வேமான மானதொரு கருமாக்கல்லை வேகமுடன் கெந்தியது சமனாய்ச்சேர்த்து
சாமான மானதொருநிமிளையப்பா சட்டமுடன் கொண்டுவந்து பின்னுக்கேளு
பூமான மானதொருபடிகந்தன்னை புகழாகத் தானெடுத்து சரியாய்க்கூட்டே
2777.
கூட்டையிலே பாஷாணம் சரிநேரொக்க குறிப்புடனே தானிடித்துப் பூநீர்சேர்த்து
நாட்டமுடன் கண்ணாடி வாலைதன்னில் நயமுடனே சரக்கெல்லாம் வாலையிட்டு
பாட்டமென்ற யடிப்பானைக்குள்ளேபோட்டு பாகமுடன் திராவகத்தை இறக்கிக்கொண்டு
நீட்டமுடன் நீவங்கமுருகும்போது நீதான திராவகத்தை வூத்திடாயே
2778.
ஊத்தையிலே வங்கமது கட்டிப்போகும் வுத்தமனே நீர்வாங்கி வெட்டையாகும்
கூத்தனென்னும் திராவகத்தால் வங்கந்தானும் குடியோடும் நீர்தானும் எகிரிப்போகும்
சாத்தலென்னும் வுக்ரகம் செய்யலாகும் சார்பான கருக்களே பாச்சலாகும்
நீத்தமுடன் கருத்தட்டு வார்க்கும்போது நிலையான வுருக்களெல்லாம் தோன்றும்பாரே
2779.
பாரேதான் இன்னமொரு கருமானங்கேள் பாகமுடன் மாணாக்கள் பிழைக்கவென்று
நேரேதான் இரும்பினுட மணலைவாரி நேர்புடனே மூசையிட்டு வுருக்கும்போது
சீரேதான் கண்விட்டு ஆடும்போது சிறப்பான திராவகத்தை குத்திப்பாரு
நேரேதான் இரும்பதுவும் வெட்டையாகி நேர்புடனே கருவுக்குள் பாயுந்தானே
2780.
தானான வுத்திரண்டு பாயும்போது தனியான இரும்பதுவும் சவளைபோலாம்
தேனான இரும்பதுவும் சவளையாகும் தெளிவான வுருக்கினத்து வெட்டையாகும்
மானான தங்கம்போல் கண்விட்டாடும் மார்க்கமுடன் இரும்பினுட வேதைமார்க்கம்
கானான தேசத்தார்கள் சீனத்தார்கள் கருவாளி யாகையினால் கண்டார்தாமே

2781.
தாமான குளிகையொன்று சொல்லக்கேளும் தாக்கான சாதிக்காய் கிராம்போடேலம்
காமான மராட்டியமா மொக்கினொடு கருவான ஏலக்காய் லவங்கப்பட்டை
பாமான குரோசானி யோமந்தானும் பாங்கான பத்திரியும் மிளகுதானும்
வாமான மென்றதொரு கச்சூர்தானும் வாகான பச்சையென்ற பூரமாமே
2782.
பூரமாங் கஸ்தூரி குங்குமப்பூ புகழான ரோசனையும் திப்பூண்டப்பா
காரமாங் குடோரியது சமனாய்க்கூட்டி கருவாக யௌநீராலே அரைத்துமைபோல
தீரமாங் கடலைபோலுண்டைசெய்து திறமாக நிழலுலர்த்திப் பதனம்பண்ணு
வீரமா மதன்ரதி தன்னோடொக்க விருப்பமுடன் தாம்பூலம் அருந்துவாயே
2783.
அருந்துகையால் உன்மீதிலிச்சைகொண்டு அணையவே எண்ணமது மிகவுண்டாகி
திருக்கவே போகமது செய்திட்டாலும் தீராது மாதர்மேலாசையப்பா
பொருந்தவே தேகமது கரிப்பேயில்லை பொங்காது விந்ததுவுங் கட்டிப்போகும்
கருந்தமுடன் தாம்பூலம் அருந்திப்பின்பு கொற்றவனே யௌநீரை யாண்டிடாயே
2784.
உண்ணயிலே பித்தமது கீழ்நோக்காகும் வுகாரமென்ற மயக்கமது மேலேறாது
திண்ணமுடன் கலவியது மன்மதன்போல் திகட்டாது மாதர்மேலாசைநீங்கா
உண்ணமது மிகவாகும் எந்தநாளும் இளைக்காது தேகமது கற்றூணாகும்
வண்ணமுடன் இப்பாகம் யாருஞ்சொல்வார் வையகத்தோர் சித்தாடச் சொன்னதாமே
2785.
தாமான மையொன்று சொல்லக்கேளும் சார்பான காகிதத்தின் தங்கவர்ணம்
காமான மஞ்சளென்ற கோபிதன்னால் கலரவிடு விளாம்பிசினைச் சமனதாக
பூமான் போலோர் உருவம் யெழுதியப்பா பொங்கமுடன் அவ்வுருவில் தூவக்கேளு
வேமான மானதொரு சரக்குசொல்வேன் வித்தகனே மேன்மையுடன் செய்துபாரே
2786.
செய்யவே சாரமது பலமொன்றாகும் சேர்மானங் கெந்தியொரு பலமொன்றாகும்
துய்யவே சூதமது பலமொன்றாகும் துப்புறவாய் வெண்வங்கம் பலமொன்றாகும்
நையவே காரமது சீனக்காராம் நாட்டமுடன் கல்வமதில் பொடித்துநன்றாய்
யெய்யவே பொடியாக்கிக் குப்பிக்கிட்டு என்மகனே கல்லாலே சில்லுபோடே
2787.
போடவே சீலையது வலுவாய்ச்செய்து பொங்கமுடன் தளவாயாஞ்சட்டிதன்னில்
கூடவே மணலதனை பாதிகொட்டி குப்புறவாய் புட்டிநடுமையம்வைத்து
மூடவே மணல்தனைமேலேகொட்டி முக்கியமாய் சட்டிகொண்டு மேலேமூடி
நீடவே சீலையது வலுவாய்ச்செய்து நினைவாக ரவிதனிலே காயப்போடே
2788.
காய்ந்தபின்பு வாலைகையாம் ஏந்திரத்தில் கருவாகத் தீமூட்டி எட்டுசாமம்
தேர்ந்திடவே தானெரிப்பாய் மைந்தாகேளு தோற்றமுடன் பதங்கமது ஏறிநிற்கும்
மாய்ந்திடவே சொர்ணமென்ற பதங்கந்தானும் மகத்தான பதங்கத்தை எடுத்துக்கொண்டு
வாய்ந்திடவே முன்சொன்ன வர்ணந்தன்னில் மார்க்கமுடன் தான்தோய்க்க
ஜொலிப்புண்டாமே

2789.
ஜொலிக்கவே எவ்வர்ணம் ஆனாலுந்தான் சூட்சமுடன் முன்னஎழுதி மேலேதூவு
பலிக்கவே பிசினியது பதங்கந்தன்னை பாகமுடன் தானிழுக்கும் பண்மைபாரு
ஒலிக்கவே ஜெகநோதி யென்னசொல்வேன் வுத்தமனே ரூபலாவர்ணந்தோறும்
செலிக்கவே பதங்கமது சொர்னமென்பார் பேரான வெள்வங்கக்கூத்துதானே
2790.
கூத்தான காயிதங்கள் வர்ணபேதம் கூறுவேன் மாணாக்காள் பிழைக்கவென்று
நாத்தான வெள்வங்கம் சூதந்தானும் நாயகனே வரிதாக மடல்துத்தந்தான்
காந்தான லிங்கமுடன் செங்கால்பச்சை கருவான நாகமொடு கெந்திதானும்
தூத்தான சாரமுடன் மதியும்போடு துடியான கண்டரொடு பேதியாமே
2791.
பேதியாம் அரப்பொடியும் பச்சைகோபி பேரான தாரமுடன் சங்கால்பச்சை
ஜொதியா மித்தனையும் வர்ணபேதம் தோராத ரூபமது வதிகங்காட்டும்
வாதியாம் கண்டறிவார் சரக்கின்பேதம் வகையுடனே மற்றவர்கள் காணமாட்டார்
நீதியா மித்தனையும் ஆராதாரம் நிலையான வர்ணத்துக்குறுதியாமே
2792.
உறுதியா மின்னமொரு மார்க்கம்பாரு வுண்மையாயுரைக்கிறோம் பண்பதாக
நிறுதியாய் நெல்லிக்காய் சார்தானாழி நீடான கையான்சார்சாருனாழி
பறுதியாம் முகக்கைச்சார் நாழியாகும் பாங்கான வெள்ளரிசார்தானாழி
துறுதியாம் யெள்ளெண்ணெய் படிதானொன்று துடிப்புடனே யாவின்பால் படிதானொன்றே
2793.
ஒன்றான யெளநீரு படிதானொன்று வுத்தமனே இதிற்சேர்க்கும் மருந்துகேளு
பன்றான கடுக்காய் தான்றி பாங்கான சிவதையுடன் நெல்லிதானும்
வன்றான விலாமிச்சு வெட்டிவேறு தாக்கான சந்தனமு மகிலுங்கூட்டி
குன்றான நன்னாரி கோரைதானும் குறிப்பான பச்சிலையும் ஒக்கச்சேரே
2794.
சேர்க்கவே யதிமதுரம் தேவதாரம் சிறப்பான கச்சோலம் சீரங்கூட்டி
பார்க்கவே முட்டியுடன் சாம்பிராணி பாகமுடன் ஏலக்காய் கோஷ்டந்தானும்
தீர்க்கமுடன் வலம்புரியும் இடம்புரியுமாகும் திறமான சீரகமும் ஒக்கக்கூட்டு
ஏர்க்கவே சடாமாஞ்சி பூலாதானும் எழிலான தண்ணீர்மிட்டான் கிழங்குதானே
2795.
கிழங்கான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி கெணிதமுடன் வகைவகைக்குப் பலந்தான்காலாம்
தழங்கான சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி தயவாகத் தேங்காய்பால் தன்னாலாட்டி
வழங்கான எண்ணெய்தனில் கலக்கியப்பா வாகுடனே மெழுகுபதந்தன்னிற்காச்சி
பழங்கமுடன் கணபதியைப் போற்றியேதான் பாகமுடன் சிவப்பதாய்க் காய்ச்சிடாயே
2796.
காச்சவே யெண்ணெய்தனை வடித்துக்கொண்டு கலங்காமல் சீஷாவிலடைத்துமைந்தா
பாய்ச்சலுடன் வாரத்திற்கிரண்டுமுறை பாலகனே முழுகிவரப் பலனைக்கேளு
தீச்சலென்ற பிடரிவலி சன்னிபாதம் திகழான மயக்கமுதல் காணாதோடும்
மாச்சலுடன் நேத்திரத்தில் ரோகம்போகும் மகத்தான ஒருதலைநோய் போகும்பாரே

2797.
ஏகுமே கபாலவலி சன்னிபாதம் யெழிலான தலைகனப்பு யெல்லாமாறும்
போகுமே மந்தார காசம்போகும் பொலிவான கண்கூச்சும் புழுவெட்டும்போம்
சாகுமே கண்ணில்நீர்வடிதலும்போம் சார்பான குத்திருமல் சன்னதாகும்
பாகுடனே இத்தயிலம் கொள்ளும்போது பறக்குமடா நேத்திரநோய் அகலும்பாரே
2798.
அகலுமே பத்தியமோ யரையக்கேளு அப்பனே கரப்பனென்ற பதார்த்தந்தள்ளு
நிகலவே பகல்நித்திரைக் கொள்ளலாகா நீடூழிநாள்வரைக்கும் போகமாகா
தாகவே சீதளமாம் பண்டமாகா தாக்கான புளிகையும் மசூகுமாகா
புகலவே காலாங்கி நாயர்பாதம் புகழுடனே யான்வணங்கி புகன்றிட்டேனே
2799.
புகன்றிட்டேன் தயிலமது என்னசொல்வேன் புகழான சந்தனாதி இதற்கொவ்வாது
தகன்றிட்ட சாத்திரத்தில் அனேகமுண்டு தக்கவே யாருந்தான் சொல்லவில்லை
அகன்றிட்ட சாத்திரத்தில் அனேகமுண்டு அப்பனே யான்சொன்ன கவிபோல
பகன்றிட்ட நாதாக்கள் முனிவர்தாமும் பாடினார் கோவைகளு மனந்தமுண்டே
2800.
உண்டான சாத்திரங்கள் அனேகமுண்டு உத்தமனே என்போல யாருஞ்சொல்லார்
திண்டான போகரேழாயிரந்தான் திரட்டினே சத்தககண்டத் திறமதாக
பண்டான சீனபதியுலக்த்தார்க்கு பலபலவா யோதிவைத்தேன் பான்மையாக
சண்டான மானதொரு தேசத்தாற்குச் சாற்றினால் பாவம்வரும் என்னலாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

2801.
என்னலா மின்னமொரு கருமானங்கேள் எழிலான தயிலமது இன்னஞ்சொல்வோம்
பன்னவே சதாவேரு மூலிதானும் பாகமுடன் சார்நாழி தானேயாகும்
நன்னயமாய் குலாமல்லி மூலிச்சாறும்நாட்டிலுள்ள பொன்முசுட்டை சார்தான்நாழி
தன்னயமாய் சீறாசெங்கழுநீரப்பா தண்மையுடன் சார்நாழி தானுங்கூட்டே
**2802.**
கூட்டவே தைவேளைச்சாறுநாழி குணமான பாவட்டை சாறுநாழி
நீட்டமுடன் தாமரைப்பூ சாறுநாழி நேரான கொத்தான்சார் சாறுநாழி
பாட்டமுடன் முதியாகுச் சாறுநாழி பாங்கான குமரிச்சார் சாறுநாழி
வேட்டவென்ற தைவேளைச் சாறுநாழி தேனான மனோன்மணியாள் சாறுகூட்டே
**2803.**
கூட்டியே நல்லெண்ணெய் படிதானொன்று குணமான வாவின்பால் படிதானொன்று
நாட்டமுடன் கடைசரக்கு சாற்றக்கேளு நலமான கிராம்புடனே ஏலந்தானும்
வாட்டமுடன் சாதிக்காய் சாதிபத்திரி வளமான குரோசானியோமந்தானும்
நீட்டமுடன் தக்கோலம் பரங்கிப்பட்டை நேரான வால்மிளகு சுக்குதானே
**2803.**
தானான சுக்குடனே கருவாய்ப்பட்டை சாதகமாய் கடுக்காயும் தான்றிமுத்தம்
வேனான நெல்லிக்காய் மிளகுதானும் விருப்பமுடன் கொடிவேலி பட்டையப்பா
பானான பாற்சுரண்டி பட்டைதானும் பாங்கான வலம்புரியுமிடம்புரியுந்தானும்
கோனான முசுட்டையுடன் தும்பைதானும் கூரான செம்பூரான் பட்டைதாமே
**2804.**
பட்டையுடன் கருஞ்சீரகம் கார்போகந்தான் கருவான கிச்சிலியும் பச்சிலையுந்தானும்
திட்டமுடன் வகிற்கட்டை தேவதாரி திடமான சந்தனமும் பூலாவாகும்
குட்டமருங்கவிப்பமளை தீண்டாப்பாளை குறிப்புடனே பட்டையொடு குறிஞ்சான்வேறும்
நுட்பமுடன் விராலியிட பட்டைதானும் நுணுக்கமுடன் யாவாரைப் பட்டைதாமே
**2805.**
தாமானப் பட்டையெல்லாம் ஒன்றதாக தாக்குடனே வகைவகைக்குக் களஞ்சிரண்டு
சாமான மானதொரு பற்பந்தானும் சாங்கமுடன் தானெடுத்து தேங்காய்ப்பாலில்
தூமானமாகவல்லோ ஒன்றாய்க்கூட்டித் துப்புரவாய் தானரைப்பாய் மைபோலப்பா
நாமான நூல்வேதப்படிதான்பாரு நாயகனே மூலியிடக் கூடப்போடே
**2806.**
போடவே தான்கலக்கி யொன்றாய்தானும் பொங்கமுடன் தானரைப்பாய் மெழுகதாக
நீடவே தீயாறி எடுத்துப்பார்க்க நிலையான தயிலமது என்னசொல்வேன்
கூடவே பச்சையென்ற  பூரந்தானும் குணமான சாம்பிராணி களஞ்சிகூட்டு
தேடவே குங்குமப்பூ கஸ்தூரிதானும் தெளிவான ரோசனையும் பொடித்துப்போடே
**2807.**
பொடியுடனே தான்போட்டு யாறவைத்து புண்ணியனே முழுகிவரப் பலனைக்கேளு
நெடியுடனே தும்மலரும் சீதளம்போம் நெடிதான கபமுதலும் காணாதோடும்
கொடிபோன்ற நேத்திரன்பாலம்போகும் கொடிதான சுயரோகம் அகன்றுபோகும்
துடியான கண்ணிமையில் ஊறல்போகும் தூக்கமுடன் சோம்பலது வகலும்பாரே

2808.
பாரேதான் கண்ணோய்கள் தொண்ணூற்றாரும் பாங்கான யிமைதடிப்பு யுள்ளிபோகும்
நேரேதான் வாயுவெண்பதுவும்போகும் நெடிதான சேத்துமங்கள் கீழ்நோக்காகும்
கூரேதான் மயக்கமொடு வாந்திபோகும் குணமாகும் விக்கலொடு பொருமல்போகும்
தேரேதான் பீனசமுமெட்டுபோகும் தெளிவாகும் கண்ணிரண்டும் தெளிவாந்தாமே
2809.
தாமான கருமான மின்னமொன்று சாற்றுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
கோமானுக்கொப்பான சூதராசன் குறிப்பாகத் தானெடுத்து சேர்தானப்பா
நாமான கண்டாகு சேர்தான்ரெண்டு நலமானதும்பைப்பூச் சாற்றினாலே
சாமான சாமமொரு ரெண்டதாக சாங்கமுடன் தானரைப்பாய் சாகுமட்டே
2810.
மாட்டான சூதமது மடிந்துகொல்லும் மாசற்ற வெண்ணெயதுயாகவென்றால்
திட்டமுடன் முமறியினாற் கழுவிப்போடு திரளான வெண்ணெயது மைபோலாகும்
சட்டமுடன் வெண்ணெய்க்குச் சப்தமில்லை சாதகமாய் கைதனிலே எடுக்கலாகும்
நட்டமில்லை பத்துக்கு ஒன்றுதங்கம் நாதாக்கள் முறைப்படியே கூட்டிக்கொள்ளே
2811.
கொள்ளவென்றால் யேமரசவெண்ணெயாச்சு தோடான குறுக்குவழி மேவலாச்சு
எள்ளளவு கோளாறு நேராதப்பா எழிலான சூதமது மடிந்ததானால்
விள்ளவே யெவராலும் முடியாதப்பா வீணிலே சுட்டலைந்தார் கோடாகோடி
கொள்ளகொள்ளப் பானவர்க்கு இந்தப்போக்கு குறுதிவழி கிடைத்தாலே சித்தனாமே
2812.
சித்தனாய்ப் பிறந்தாலும் பிழைக்கவேண்டும் சீரான சாஸ்திரத்தை யறியவேண்டும்
சுத்தமுடன் தியானிபோலிருப்பான் மட்டைசுந்தரம் பேசியல்லோ மொழியுங்காணான்
நித்தமுடன் சிவயோக நிலையில்நின்று நிர்மூடப் பயல்களுக்கு வேதஞ்சொல்வான்
கத்தனைப்போல் பிரமசிருஷ்டி செய்வேனென்பான் காசினியில் கதைமுடிக்கும்
கழுதையாமே
2813.
ஆமேதான் புல்லறிவு வாளனானால் அப்பனே அப்பதத்தை மனதிலுண்ணி
நாமேதான் சொன்னபடி ரிஷிகள்பக்கல் நலமுடனே சென்றுமல்லோ நயமும்பேசி
போமேதான் காலமுதல் வீண்போகாமல் பூவுலகில் புண்ணியனாயாவதற்கு
நேமமுடன் அஷ்டாங்க நிலையிற்சென்று நேர்புடனே குருபதத்தை மனதிலுண்ணே
2814.
உன்னியே நிற்கையிலே வாமிவந்து உத்தமனே யுந்தனுக்கு வழியுஞ்சொல்வாள்
கன்னியெனும் மஹேஸ்பரியாள் நிற்கும்போது காவலனே கண்டுமனம் மயங்கவேண்டாம்
பன்னவே யுந்தனுக்கு பிராணாயாமம் பாலிப்பாள் வாதமுடன் யோகமாற்கம்
சொன்னபடி தப்பாது குறையுண்டானால் சூட்சமுடன் நீயறியுந் துரையில்நில்லே
2815.
நிற்கவென்றால் பதியேது மைதானேது நிலைகெட்ட வாணவத்தை யடக்கவேண்டும்
துற்கையெனும் மந்திரங்கள் கற்கவேண்டும் துஷ்டபூத நாக்கிறம் அகற்றவேண்டும்
சொற்களெனும் பீஜாட்சர மந்திரத்தை துறையோடும் முறையோடும் செலுத்தவேண்டும்
கற்கடக ராசியிலே பிறக்கவேண்டும் கன்னிதுலாம் சிம்மமென்றால் கருதுவாரே

2816.
கருதுவார் நாதாக்கள் கணக்குங்காண்பார் கண்டறிந்து பிரணவத்தை யுரைப்பார்தாமும்
சுருதிபொருள் நால்வேத சாஸ்திரத்தின் சூட்சாதி சூட்சமெல்லாம் சுட்டிக்காட்டி
பருதிமதி கேசரத்தின் குளிகைமார்க்கம் பட்சமுடன் காண்பித்து வுளவுஞ்சொல்லி
நிருதியென்னும் திசைநோக்கு வழியுங்காட்டி நீதியுடன் ஞானோபமோதுவாரே
2817.
ஓதுவார் பொருளறிந்த கள்ளனானால் உத்தமனே யவர்மனதை தேத்திநீதான்
நீதியெனும் சன்மார்க்க வலையிற்சென்று நித்தமுடன் பெரியோர்க்கு தொண்டுபண்ணி
சாதியிலே தாழ்ந்தவரா யிருந்திட்டாலும் தவநிலையில் பெரியவரா மென்றேயெண்ணி
பாதிமதி சடையணிந்த தம்பிரான்போல் பாலித்தா லுந்தனுக்கு பண்பதாமே
2818.
பண்பான உந்தனுக்கு விட்டகுறைதானும் பாருலகில் லபிக்குமடா முன்சென்மத்தால்
திண்பான தேகமது கற்றூணாக திறமையுட னெந்நாளு மிருப்பதற்கு
நண்பாக முன்சொன்ன சூதவெண்ணெய் நாதாக்கள் முறைப்படியே சொன்னேன்யானும்
கண்பான யேமரச வெண்ணெய்தன்னை கருவாக செந்தூரஞ் செய்துபாரே
2819.
பாரப்பா சூதமென்ற செந்தூரத்தை பாலகனே முறையோடு செய்தாயானால்
நேரப்பா யுனைப்போல வுலகிலுண்டோ நீணிலத்தில் நீயுமொரு சித்தனாவாய்
தீரப்பா வெண்ணெயது ஒன்றேகாலாம் திரமான கெந்தியது முக்காலாகும்
கூரப்பா சாரமென்ற செயநீர்தன்னால் கொற்றவனே தானரைப்பாய் சாமம்நாலே
2820.
நாலான சாமமது வரைத்துமைந்தா நாயகனே ரவிதனிலே காயப்போடு
பாலான மேருவென்ற குப்பிக்கேற்றி பாலகனே தானெரிப்பாய் சாமம்நாலு
நூலான முறைப்படியே எரித்தாயானால் நுணுக்கமுடன் செந்தூர மென்னசொல்வேன்
சேலான செந்தூரம் பதனம்பண்ணு செம்மையுடன் போக்குவகை செப்பக்கேளே
2821.
செப்பவென்றால் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று செழிப்புடனே தானுருக்கி
குருவொன்றீய
ஒப்பமுடன் கரிபோல யிருக்கும்பாரு உத்தமனே ஓட்டிலிட்டு யூதிப்போடு
துப்புறவே மாற்றெட்டு காணுங்கண்டீர் தாக்குவாய் நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து
துப்புறவே வாரடித்துப் புடத்தைப்போடு தூய்மைபெற மாற்றதுவும் ஒன்பதாமே
2822.
தாமான மாற்றதுவும் மதிமயங்கி தாரிணியில் மாந்தருக்கு மிருதுதங்கம்
நேமமுடன் சிவயோகி தங்களுக்கு நிஷ்டைக்குமானதொரு தங்கமாகும்
பானமெனும் வஸ்துசுத்தி நேமனிஷ்டை பண்பாக பராபரிக்கு பாலித்தேதான்
கியானமுடன் சதாகாலம் வேதமாகும் கீர்த்தியுடன் தான்படித்து செலவுசெய்தே
2823.
செய்யவென்றால் அதிதிபெறபரதேசியற்குச் செப்புகிறேன் காவிகாஷாயாமப்பா
தையலென்னுமாதருக்கு வஸ்திரதானம் சதாகாலஞ்செய்யுதற்கு மனமுங்கொள்வாய்
வெய்யலிலே தாகவிடாய் தேருதற்கு விருப்பமுடன் கேணிகுளம் எடுக்கநன்று
மையலெனும் மங்கையரை கன்னிகாதானம் மாட்சியுடன் செய்யவென்று மதிப்பிட்டாரே

2824.
மதிக்கவே யின்னமொரு கருமானங்கேள் மாசற்ற அயமதுதான் சேர்தானொன்று
துதிக்கவே செம்பதுவுஞ் சேர்தான்பாதி துடியான கண்டரது சேர்தான் பாதி
கதிக்கவே காரமது சேர்தான்காலாம் கருவான சாரமது சேர்தான்காலாம்
விதிப்படியே சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி வித்தகனே கல்வமதில் பொடித்திடாயே
2825.
பொடித்துமே வச்சிமாங்குகையிலிட்டு பொன்னவனே சில்லிட்டுச் சீலைசெய்து
வெடிக்காமல் ரவிதனிலே காயவைத்து வேகமுடன் சரவுலையில் வைத்துவூது
நடிக்கவே மூசைதனையடைத்துப்பாரு நளினமாஞ் சரக்கதுவுஞ் செம்புசேர்ந்து
துடிப்பான அயமதுவும் சத்தேயாகி துறையான களங்கமது போலாம்பாரே
2826.
பாரேதான் அயமதுவுங் களங்குமானால் பாரினிலே செம்புவித்தை நிஜமதாச்சு
சீரேதான் செம்புநிகர் வங்கஞ்சேர்த்து சீர்பெறவே கரியோட்டிலூதிப்போடு
நேரேதான் செம்பதுவு மூறலேகி நெகிழான வாதத்துக் குறுதியாச்சு
தீரேதான் வெள்ளிதனில் நாலுக்கொன்று திகழாகத் தான்கொடுத்து வுறுக்கிப்பாரே
2827.
உறுக்கையிலே மாற்றதுவும் ஆறேகாணும் உத்தமனே வயச்சவளை என்னவாகும்
செருக்கமுடன் தங்கமது நாலுக்கொன்று சேரவே தான்கூட்டி வுருகித்தீரு
பெருக்கமுடன் வாரடித்து புடத்தைப்போடு பேரான தங்கமது வர்ணமாகி
குருக்களுடன் மாற்றதுவும் எட்டேகாலாம் குருவான வாக்கதுவும் மெய்யாங்காணே
2828.
காணவென்றால் உந்தனுக்கு வருமைமீறி னகடந்தனுக்கு முப்பிணிநேர்ந்தபோது
நாணவே மச்சமடம் பயிர்ப்புதானும் நளினமுடன் உந்தனுக்கு நேருங்காலம்
தோணவே சீவனத்துக் கில்லாவிட்டால் தேற்றமுள்ள வித்தையிது செய்துபாரு
ஈணவே சமுசாரத் தொல்லைபோக்கை எழிலான வாதத்தால் நிறுத்தலாமே
2829.
நிறுத்தலாம் வருமைவருங் காலந்தன்னில் நீமகரினயிவ்வேதை மாரியுண்ணு
செருக்கமுடன் கோடிவரை யுண்ணலாகும் செம்மையுடன் இச்சவளை செந்தூரத்தால்
பொருக்கமுடன் செந்தூரப் போக்குசொல்வேன் பொங்கமுடன் சவளையது ஒன்றேயாகும்
கருத்துடனே தங்கமது சரிகாலாக கருவாகத் தான்கூட்டி உறுக்கிடாயே
2830.
உருக்கையிலே கட்டினதோர் கெந்திதானும் வுத்தமனே கிராசமது யீவாய்பாதி
நருக்கையிலே களங்கமதை கல்வமிட்டு நாதாக்கள் சொற்படியே செப்பக்கேளும்
நடுப்பகலெனும் கையான்சார்சாமம்நாலு முசியாமல் தானரைப்பாய் மைந்தாநீயும்
வருக்கமுடன் ரவிதனிலே காயவைத்து வாகுடனே குப்பிதனி லடைத்திடாயே
2831.
குப்பியென்றால் காசியென்ற குப்பிதானும் குணமான சீலையது வலுவாய்ச்செய்து
தப்பிதங்கள் வாராமல் மாக்கல்கொண்டு தளராமல் வாய்மூடிச்சீலைசெய்து
ஒப்பமுடன் தளவாயாஞ் சட்டிதன்னில் உத்தமனே பொடிமணலே பாதியிட்டு
நெப்பமுடன் குப்பிநடுமையந்தன்னில் நேர்மையுடன் மேலுமந்த மணலைமூடே

2832.
மூடவே மேல்சட்டிகொண்டுமூடு முறையோடு நாதாக்கள் சொல்லைப்போலே
வாடவே திரியாதே மயங்கவேண்டாம் வாகுடனே வாலுகையா மேந்திரத்தில்
நீடவே எணசாம மெரித்தபோது நீதியுள்ள பாலகனே நிஜமாய்க்கேளு
சாடவே செந்தூர மென்னசொல்வேன் தளுக்கற்ற சந்திரன்போல் தளும்புந்தானே
2833.
தானான செந்தூரம் அருணன்போலாம் தாக்கான பிரகாசமான ஜோதி
வேனான கொங்கணவர் செய்தபாகம் மேதினியில் ஆருந்தான் செய்யவில்லை
கோனான எனதையர் காலாங்கிநாதர்குரு சொன்னபடி செய்தேன்யானும்
தேனான செந்தூரப் போக்குதன்னை தேசத்தார் சீனத்தார்க்கு உரைத்திட்டேனே
2834.
உரைத்திட்டேன் சீனபதிதேசத்தார்க்கு உகைமையுடன் செய்துவைத்தேன் இந்தபாகம்
வரைந்திட்ட செந்தூரப் போக்குதன்னை வளமுடனே மண்டலந்தான் கொண்டபோது
குரைத்திட்டார் கோரியது மேனிதானும் குறையாமல் குன்றியது போலேகாணும்
பரைத்திட்ட வடிவுமது சிவப்புகாணும் பளபளப்பு வெந்நாளும் அதிதந்தானே
2835.
அதிகமா மின்னமொரு பாகங்கேளு வப்பனே யான்கண்டவரைக்குஞ் சொல்வேன்
துதிதமுடன் செந்தூரமுண்டபோது முறையான மேகமென்ற திருபதும்போம்
கதிதமுள்ள யாறுவகை நீரும்போகும் கபத்துடனே ஈளைமுதல் காணாதோடும்
பதிதமுள்ள லிங்கத்தின்புத்து போகும் வாங்கான கண்டத்தின் மாலைபோமே
2836.
மாலையுடன் சுவாசகாசங்கள் போகும் மன்னவனே விப்புருதி திகட்டிப்போகும்
வாலையது வயததுவும் அதிகமெத்த வாகுடனே நரைதிரையு மற்றப்போகும்
காலையிலே மருந்துண்ணுங் காலந்தன்னில் காலார நடந்துவர மெத்தநன்று
வெளியிலுமெப்போதுஞ் சோம்பலாக வீணிலே காலமது கழிக்கநன்றே
2837.
நன்றாக சோம்பலது நீக்கியல்லோ நாயகனே கஷ்டமென்ற வேதைபாரு
தன்றான மேனியது பிணிநாடாது சதாகாலந் திமிரேனுங்கிட்டாதப்பா
பன்றான மருந்ததுவும் வீறுகாணும் பரிதிபோல் தேகமது கற்றூணாகும்
நின்றாடும் அரவமது தீண்டிட்டாலும் நேரான விஷமதுவும் ஏராதன்றே
2838.
ஏராது விஷமதுவும் மேல்நோக்காது என்மகனே எந்நாளுங்ஃ கற்பமான
கூரான தேகமது போலேதோற்றும் குறையாது வாசியது யடங்கியோடும்
பேரான நாதாக்கள் முனிவர்பாகம் பேருலகில் கிட்டாது புண்ணியோர்க்கு
நேரான செந்தூரம் சொல்லொணாது நேர்மையுடன் பாடிவைத்தேன் போகர்தாமே
2839.
தாமான வின்னமொரு மார்க்கம்பாரு தயவான சிறுபாலா சாற்றக்கேளும்
குமரன்கள் உண்பதற்கு உண்டைசொல்வேன் கொற்றவனே கருஞ்சீரம் நற்சீரந்தான்
வேமான முட்டியது சிற்றாமஉட்டி விரைவான பேராவின் முட்டிதானும்
நாமான திரிமஞ்சள்தானுமாகும் நாட்டிலுள்ள வேலியது ரண்டதாமே

2840.
ரண்டாமூலமது சிவப்புமூலம் நெடிதான கறுப்பான மூலந்தானும்
கண்டான கத்திரியும் ரண்டதாகும் கருவான மஞ்சளென்ற கத்திரிதானும்
துண்டான வெண்கத்திரி தானுமப்பா துரையான கருவேலன் வெள்வேலன்தான்
உண்டான யத்தியது ரண்டதாகும் வாகுடனே பேயத்தி நல்லத்தியாமே
2841.
அத்தியுடன் துத்தியது ரண்டதாகும் அப்பனே வட்டமென்ற துத்திதானும்
மத்தியாந் தட்டமென்ற துத்திதானும் மன்னவனே மிளகதுவும் ரண்டதாகும்
சுத்தியாம் நன்மிளகு வால்மிளகுதானும் துரையான கருஞ்சூரையப்பா
வெத்திபெற வலம்புரியுமிடம்புரியுமாகும் வேகமென்ற வேப்பிலையு மிரண்டதாமே
2842.
தாமான கருவேப்பிலையுமாகும் தாக்கான மலையின்வேப்பிலையுமாகும்
தூமான மழிசியது ரண்டதாகும் துவர்ப்பான பேரழிஞ்சி யிரங்கழிஞ்சியாகும்
காமான வேளையது ரண்டதாகும் கதிப்பான நல்வேளை முக்காவேளை
நாமான ஓமமது ரண்டதாகும் நலமான குரோசானி நல்லோமமாமே
2843.
ஓமமுடன் பிரண்டையது ரண்டதாகும் உத்தமனே நற்பிரண்டை ஒற்றையப்பா
தாமென்ற வாலிலையு மிரண்டதாகும் தாக்கான கல்லாலை நல்லாலையப்பா
நேமமுடன் கள்ளியது ரண்டதாகும் நெடிதான கொடிகள்ளி கொம்புகள்ளி
காமமென்ற வூமத்தை ரண்டதாகும் கருவான வூமத்தை மருளூமத்தையாமே
2844.
மத்தையுடன் வுள்ளியது ரண்டதாகும் மகத்தான வெள்ளுள்ளி யீருள்ளியப்பா
சத்தான தாமரையுமிரண்டதாகும் சார்வான குழித்தாமரை நற்றாமரைதானும்
முத்தான திப்பிலியும் ரண்டதாகும் முனையான யானையின் திப்பிலியுமாகும்
சத்தான வரிசையிட திப்பிலிதானும் சார்பான நிலாவிரையும் இரண்டதாமே
2845.
தாமேதான் சூரத்துவிரையுமாகும் தாக்கான நாட்டிலுள்ள விரையுமாகும்
வேமேதான் சரையதுவு மிரண்டதாகும் வெடிப்பான நற்சுரையும் பேய்ச்சுரையுமாகும்
நாமேதான் சொன்னபடி கொன்றைரண்டு நற்கொன்றை மயிற்கொன்றை ரண்டதாகும்
போமேதான் சீந்தியது ரண்டதாகும் பொற்சீந்தி தானுஞ்சேரே
2846.
சேரேதான் பசளையது ரண்டதாகும் சிறப்பான கரும்பசளை செம்பசளையுமாகும்
தூரேதான் கையானுமிரண்டதாகும் துடியான நற்கையான்பொற்கையான்தான்
சாரேதான் கிரந்தியது ரண்டதாகும் சாங்கமுடன் சிவகிரந்தை விஷ்ணுதானும்
நேரேதான் பாளையது ரண்டதாகும் நெடிதான பங்கனிட பாளைதானே
2847.
தானான பாளையது வாடுதீண்டா தாக்கான சின்னியது பெருஞ்சின்னிதானும்
பானான சிறுகின்னிதானும் கூட்டு மைந்தனே முருங்கையது ரண்டதாகும்
வேனான பேய்முருங்கை நல்முருங்கைதானும் வேகமுடன் தான்கூட்டு மெத்தநன்று
பானான கத்தாழை ரண்டதாகும் பாகமுடன் கல்லினிட தாழையாமே

2848.
தாழையாம் சோத்தினிட தாழையாகும் தாக்கான கருங்கொள்ளு செங்கொள்ளுமாகும்
வாழையாம் பேய்வாழை நல்வாழையப்பா வாகுடனே கருணையது ரண்டதாகும்
மோழையாம் நல்கருணைபொற்கருணையாகும் மூதண்ட நெல்லியது ரண்டதாகும்
காழையாம் நெல்லி பருநெல்லியாகும் கடிதான கரும்பதுவு மிரண்டதாமே
2849.
ரண்டுடனே வெண்கரும்பு செங்கரும்புதானும் நிலையான வாகையது ரண்டதாகும்
திண்டான பெருவாகைசிறுவாகையப்பா திறமான நொச்சியது ரண்டதாகும்
பண்டான கருநொச்சி வெண்ணொச்சிதானும் பாகமுடன் தான்சேர்க்க மெத்தநன்று
கொண்டலுடன் நாவலது ரண்டதாகும் கொடிதான கருநாவல் வெண்ணாவல்தானே
2850.
தானான நங்கையது ரண்டதாகும் தாக்கான பெரியானின் சிறியான்தானும்
வேனான விளாவதுவும் இரண்டதாகும் வேகமுடன் குட்டிவிளா பெருவிளாயுமாகும்
கோனான வவரையது ரண்டதாகும் கொடிதான நல்லவரை கோழியவரைதானும்
பானான கடுக்காயுமிரண்டதாகும் பாங்கான பொற்கடுக்காய் நற்கடுக்காய்தானே
2851.
காணவே வாவாரை ரண்டதாகும் கருவான பொன்னினா வாவாரையாகும்
தோணவே நல்லவாவாரையாகும் தோறாமல் கூட்டுவது மெத்தநன்று
சாணவே வாமணக்கு ரண்டதாகும் சாங்கமுடன் சிற்றினாமணக்குதானும்
வேணவே பெரியவாமணக்குமாகும் மேதினியில் கண்டறிந்து கூட்டுவாயே
2852.
கூட்டுவாய் வகைவகைக்கு சேரொன்றாக குறிப்பாக யினங்கண்டு சேர்வைகண்டு
மாட்டுவாய் விதித்தினுட பாகங்கண்டும் மதிப்புடனே மூலியுட பதமுங்கண்டு
நீட்டுவாய் பட்டையுட அளவுங்கண்டு நேர்புடனே சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி
வாட்டமுடன் தானிடிப்பாய் சரக்கையெல்லாம் வாகுடனே தான்போட வளமைகேளே
2854.
கேளேநீ பாண்டமமில் இட்டுமைந்தா கிருபையுடன் பேரீச்சங்காய்தானப்பா
மாளேநீ கொடிமுந்திரி பழமுந்தானும் மார்க்கமுடன் வகைக்கு ஒருசேரதாக
வாளேதான் மலைத்தேனும் கூடச்சேர்த்து வளமுடனே கற்கண்டு சரியாய்ச்சேர்த்து
பாளேதான் போகாமல் ரவியில்வைத்து பாகமுடன் சீசாவில் பதனம்பண்ணே
2855.
பண்ணவே காயாதிகற்பவுண்டை பாருலகில் நாதாக்கள் ரிஷிகள்தாமும்
வண்ணமுடன் மாணாக்கள் பிழைக்கவென்று வாகுடனே சீனபதிதேசத்தாற்கு
திண்ணமுடன் இப்பாகம் செய்துவைத்தேன் திறமையுடன் காயாதிகற்பந்தன்னை
நண்ணமுடன் வுண்டுமல்லோ மாந்தர்தாமும் மானிலத்தில் சித்தரைப்போ லிருந்திட்டாரே
2856.
இருந்திட்டார் வெகுகோடி காலமப்பா எழிலான சித்தர்முனி தம்மைப்போல
குருந்திட்ட சமாதிதனிலிருந்துகொண்டு குருவான போகரைத்தான் மனதிலெண்ணி
திருந்திட்ட சிவயோகந்தன்னிற்சென்று தீரமுடன் காயத்தை நிருத்திக்கொண்டு
பொருந்திட்ட மாகவல்லோ வாசிதன்னை பூட்டியே பூட்டியே யுள்ளடக்கி புரிந்திட்டாரே

2857.
புரிந்திட்ட காயமது மூச்சடங்கி பொங்கமுடன் வெகுகோடி காலந்தானும்
பரிந்திட்ட மாகவல்லோ சமாதிதன்னில் பரிதிமதி காணாமல் இருந்தாரப்பா
சரிந்திட்ட மாகவல்லோ சரிகைதன்னை சாக்கிரதை சுழுத்தியுடன் கிரியையொடு
திரிந்திட்ட துரியாதி தாமும்பூண்டு துப்புரவாய் மண்மறைவில் இருந்தார்தாமே
2858.
தாமான காயாதிவுண்டைதன்னை தற்காலம் மானிடர்கள் கொண்டாரானால்
பூமான்கள் வெகுகோடி காலமப்பா பூவுலகில் தானிருப்பார் வயதோமெத்த
சீமானகள் காயாதி உண்டிட்டாலும் சீர்பெறவே மாய்கைதனை ஒழிக்கவேண்டும்
நாமானவாயுரு வேதந்தன்னை நாட்டினேன் மாணாக்கள் பிழைக்கத்தானே
2859.
தானான கற்பமது உண்ணும்போது தகைமையுடன் புளிபுகையுந் தள்ளவேண்டும்
வேனான கற்பமது கொண்டபோது வேகமுடன் வாசியது கீழ்நோக்காகும்
கோனான மண்டலந்தான் கொண்டாயானால் கொடுங்காசை மீளையது தொண்ணூற்றாரும்
மானான வாதமென்ற தென்பதும்போம் மதிப்புடனே பித்தம்நாற்பதுவும் போமே
2860.
போமேதான் மேகமது இருபத்தொன்று பொலிவான கிரந்தியது பதினெட்டும்போம்
வேமேதான் சூலைபதினெட்டும்போகும் விருப்பமுடன் குன்மமென்ற தெட்டும்போகும்
நாமேதான் சொன்னபடி பாண்டாறும்போம் நாடாது விஷவலியும் நவிலொண்ணாது
சாமேதான் சன்னிபதிமூன்றும்போகும் சார்பான கக்கலுடன் வாந்திபோமே
2861.
வாந்தியாம் விக்கலுடன் வரோசிகம்போம் வகுத்ததொரு பீனசமுமெட்டும்போகும்
காந்தலெனும் தேகமது குளிர்ச்சி காணும் கண்கூச்சம் பெருமூச்சு காணாதோடும்
பாந்தலெனும் பாணமது போலாம்நோய்கள் பறக்குமடா தேகமதிற் சன்னலாகி
சாந்தமுடன் எந்நாளும் தளிர்ச்சிகாணும் சதாகால மெந்நாளும் கற்றூணாமே
2862.
கல்லான தூணுக்கு இணைவேறுண்டோ காசினியில் சித்தனைப்போல் நீயுமாவாய்
வல்லான சித்தர்முனி ரிஷியென்பார்கள் வையகத்தி லுனைக்கண்டோர் நடுங்குவார்கள்
புல்லான மானிடரா யிருந்திட்டாலும் பூதலத்தி லுன்னையொரு நாதரென்பார்
வெல்லான ரிஷியென்று நடுங்குவார்கள் வேதாந்தத் தாயருள்தான் வேண்டும்பாரே
2863.
பாரேதான் பராபரியாள் அருளும்வேண்டும் பாருலகில் சித்தர்முனி கடாட்சம்வேண்டும்
சீரேதான் விட்டகுறை காணவேண்டும் சிறப்பான தொட்டகுறை நேரவேண்டும்
நேரேதான் லலாட்ட கருவிருக்கவேண்டும் நேர்புடனே இதுவெல்லாம் கூடினாக்கால்
கூரேதான் நினைத்ததெல்லாம் சித்தியாகும் கொற்றவனே நீயுமொரு சித்தனாமே
2864.
ஆமேதான் இன்னமொரு கருமானங்கேள் அப்பனே யான்கண்ட வரைதான்கேளு
போனேனே சத்தசாகரமுங் கண்டேன் பொங்கமுடன் ஏழுவகை தோற்றங்கண்டேன்
நானேதான் அஷ்டவகை தீவுகண்டேன் நாட்டமுடன் அஷ்டபாலகரைக்கண்டேன்
கோனேதான் எனதையர் காலாங்கிநாதர் குருபதத்தை வணங்கியல்லோ போனேன்பாரே

2865.
பாரேதான் குளிகையொன்று பூண்டுகொண்டு பட்சமுடன் தீவுகளிற் செல்லும்போது
நேரேதான் வெள்ளையானை மீதிலேறி நேர்புடனே இந்திரனும் போகக்கண்டேன்
தேறேதான் அடியேனும் சிறுபாலன்தான் சீக்கிரமாய் அடியேனும் பின்தொடர்ந்தேன்
நீரேதான் தேவேந்திர பகவான்தானும் நிர்த்தமுடன் என்றனையும் யாரென்றாரே
2866.
யாரென்று கேட்கையிலே அடியேன்தானும் அப்பனே கால்நடுங்கி மெய்நடுங்கியேதான்
சீருடனே காலாங்கி சீஷனென்றேன் சிறப்புடனே யானுமல்லோ பக்கல்சென்றேன்
மார்புகழும் தேவேந்திரன் என்னைப்பார்த்து பாலகனே சிறுவயதுள்ளபாலா
நேருடனே என்முன்னே பயமில்லாமல் நேர்மையுடன் வந்ததினால் சாபந்தானே
2867.
தானான சாபமது சொல்லும்போது தன்மையுடன் குளிகைபூண்டு வந்தேன்சாமி
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருபதத்தை வணங்கிநித்தம் விடையுங்கேட்டு
பானான பராபரியாளு ரையுங்கேட்டு பட்சமுடன் சத்தசாகரமுங்காண
நானான போகரிஷி வருகும்போது நளினமுடன் தெரிசனங்கள் கிடைக்கலாச்சே
2868.
கிடைத்தென்று சொல்லுகையில் அடியேன்தானும் கீர்த்தியுடன் உரைக்கசாமியப்போ
படைத்தலைவர் கிங்கிலியர் ஆயிரம்பேர் பாங்குடனே இந்திரனைச் சூழ்ந்திருக்க
உடைபூண்ட பெண்களுடன் கோடாகோடி உத்தமரைச் சூழ்ந்துகொண்டு தானிருந்தார்
நடைநொடி ரம்மையுடன் மெல்லிதானும் நாட்டியமா மேனகையு மிருந்ததாமே
2869.
தாமுடனே திலோத்தமையும் ஊர்வசியுந்தானும் தகமையுடன் கொலுக்கூட மங்கிருந்தார்
நேமமுடன் தபோதனர்கள் கோடாகோடி நேர்மையுடன் கைலாசகிரியில்தானும்
வாமமுடன் தவசிருப்பார் லக்கோயில்லை வாகுடனே ரிஷிகூட்ட மனேகந்தானும்
சேமமுடன் இந்திரனோடிருக்கக் கண்டேன் சேனவதிசயங்களெல்லாம் தெளிந்திட்டேனே
2870.
தெளியவே யடியேனும் காத்திருந்தேன் தேவேந்திர பகவானு மெந்தனுக்கு
எளியனா மெந்தனுக்கு கிருபைவைத்து எந்தனது பதிதேடி வந்ததாலே
வெளியாங்கமாகவேதான் சாமிதானும் வேடிக்கை வினோதமெல்லாம் காண்பித்தேதான்
ஒளியான ஜோதியென்னும் ஆசீர்மத்தில் உத்தமனே இடதுபக்கம் இடம்தந்தாரே
2871.
தந்தவுடன் அடியேனும் அங்கிருந்து சதகோடி சூரிய சிம்மாதனத்தில்
சொந்தமுடன் சுகித்திருந்து கேள்விகேட்டு கேள்விக்கு வுத்தார விடையுஞ்சொல்லி
அந்தமுடன் தேவர்களின் பக்கம்போய் அந்தரலோகத்து மர்மமெல்லாம்
விந்தையுடன் தானறிந்தேன் வினோதமெல்லாம் விருப்பமுடன் தானுரைப்பேன்
மகிமைகேளே
2872.
கேளப்பா வமராபுரி சென்றேன்யானும் கொடியான கோட்டைமுதல் வுளவுகண்டேன்
தாளப்பா தங்கமதில் கோட்டையப்பா தாக்கான மாளிகையுங் கோபுரந்தான்
வானப்பா வீதிகளின் தேர்களப்பா வகுப்பான சோலைமுதல் தோப்புமுண்டு
நீளப்பா மல்லைகைப்பூ சாலையுண்டு நீடாழி கோட்டைக்கு வலங்கமுண்டே

2873.
உண்டான வசுவங்கள் கூட்டமுண்டு உத்தமனே வெள்ளானைக்கூட்டமுண்டு
திட்டான கோட்டைக்குள் அனேகமாதர் சிறப்புடனே நாட்டியங்கள் செய்துநிற்பார்
பண்டான கனிவகைகள் அனேகமுண்டு பாங்கான தேவதா கனியென்பார்கள்
வண்டான கூட்டங்கள் கீதம்பாடும் மகத்தான தொனியோசை யனேகம்பாரே
2874.
பாரேதான் நவரத்தின மலையுமுண்டு பாலகனே வெகுகோடி ரிஷிகள் கண்டேன்
மேரேதான் மேருவுமிதற்கீடல்ல மெத்தவுண்டு வதிசயங்கள் சொல்லப்போமோ
நேராதான் வாக்கினையின் பக்கல்சென்றேன் நெடிதான வடக்குபுரம் கொண்டுசென்றார்
சீரேதான் ஆக்கினைகள் மெத்தவுண்டு சிறப்புடனே கண்டுமல்லோ திடுக்கிட்டேன்
2875.
திடுக்கிட்டு பார்த்தளவில் கிங்கிலியரப்பா சிறள்கூட்டமாயிரம்பேர் ஓடிவந்து
ஒருக்கமுடன் தூதுவர்களாயிரம்பேர் வுத்தமர்களானவர்கள் ஒன்றாய்க்கூடி
நடுக்கமுடன் நரகமதிலிழுத்துக்கொண்டு நாட்டமுடன் தள்ளுகின்ற வளமைகண்டேன்
ஒடுக்கமுடன் மாந்தர்களைத்தான் குறித்து வுத்தமரே செய்பாஞ் சொல்லென்றாரே
2876.
சொல்லென்று கேட்கையிலே தூதர்தாமும் செப்பலுற்றார் அவர்செய்தபாவந்தன்னை
வெல்லவே பூசைமுக மிடர்செய்தோர்கள் வேகமுடன் உடைமைதனை கொள்ளை
கொண்டோர்
புல்லவே மிருகமென்ற சீவன்தன்னை பொங்கமுடன் வகைசெய்து கொன்றுபோட்டோர்
அல்லலுடன் சையோகஞ் செய்தபேரை அகடழித்து நாணம்வரச் செய்தார்தாமே
2877.
செய்யவே தபசுகட்டு வின்னஞ்செய்தோர் செயலான பாக்கியத்தை கொள்ளைகொண்டோர்
மெய்யுடனே பருஷனுக்கு வுண்மைபேசி மேதினியில் சோரத்துவம் செய்தபேரும்
கைதவமாய் ஞானிகட்கு இடர்செய்தோரும் காசினியில் நற்பெண்டீர் கெடுத்தபேரும்
வெயில்தனிலே மாடுகட்குச் சலஞ்காட்டாமல் வெட்டவெளி தன்னிலே விட்டோர்தாமே
2878.
விட்டபெரியோர்களைத் தானகமேபேசி வேதாந்தத் துண்மையெனும் நாதர்தம்மை
கொட்டுமே பறடுகடித்து யிடங்கொடாமல் தோறாமல் சதாகாலந் துன்பஞ்செய்தோர்
நட்டமுடன் யகதிபரதேசி தம்மை நாடோறு மையமிடாதிட்டபேரும்
வட்டமுடன் குழந்தைகட்கு பால்கொடாமல் வாகுடனே வதைசெய்தோர் பாவியாமே
2880.
புண்ணியனாம் நியாயம்செய்தபேரை பேரின்ப வீடதனைஜோடித்தோர்கள்
துண்ணமுடன் வைகுண்டப் பதியிலெல்லாம் திசைகெட்டு ஞறிபட்டு கிடக்கும்வண்ணம்
நண்ணமுடன் இதுகளெல்லாம் கண்டேன்யானும் நளினமுடன் வக்கினியின்
சுவாலைகண்டேன்
தண்ணமுடன் வட்டையென்ற குழியுங்கண்டேன் தாக்கான வரணையென்ற
குழிகண்டேனே

2881.
கண்டேனே முதலையுட சுனையுங்கண்டேன் கானாறு வோடைகளில் யானைகண்டேன்
தண்டமுள்ள காடுகள்போ லனந்தம்கண்டேன் தன்மையுள்ள தீநரகிற் தள்ளக்கண்டேன்
கொண்டல் வண்ணன் அச்சுதனை அங்கேகண்டேன் கோடான கோடிமனுராசர் கண்டேன்
தொண்டமுடன் ரிஷிக்கூட்டம் கோடிசேனை கொற்றவனைச் சூழ்ந்திருக்கப்
பார்த்திட்டேனே
2882.
பார்த்தேனே எமபுரத்து சாங்கமெல்லாம் பாழ்நரகு படுகுழியாவுங்கண்டேன்
தீர்த்தமுடன் லிங்கமது தெரிசித்தேன்யான் சிறமுடனே கோடிமுனி தபசிகண்டேன்
சேர்த்துமே வைகுண்டபதியைக்கண்டேன் சேனைதிரள் கூட்டமதை சேனைகண்டேன்
பார்த்துமே வந்தான்யான் பரலோகத்தை பராபரியாள் கிருபைதன்னால் பார்த்திட்டேனே
2883.
பார்க்கவென்றால் எந்தனது கணக்குகண்டேன் பாருலகில் மூன்றுயுக மிருக்கக்கண்டேன்
தீர்த்தமுடன் கணக்கெல்லாம் பார்த்தாராய்ந்து திறமுடனே கண்டுவந்தேன் தெளிவதாக
ஏர்க்கவே சத்தலோகத்தின் மார்க்கம் எனைப்போல கண்டவருமொருவருண்டோ
நாற்கமல வட்டத்தாலாயிபாதம் நான்வணங்கி கண்டறிந்தேன் அவித்தேனே
2884.
தானான முன்யுகத்தில் பிருமாவுக்கு தாக்கான ஈஸ்பரியாள் தந்தசாபம்
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருசாமி எந்தனுக்கு சொன்னதுண்டு
தேனான பிருமாவும் வைகுண்டத்தில் தேர்வேந்த ராசரிட மிருக்கக்கண்டேன்
பானான ரிஷிகூட்டமாயிரம்பேர் பாங்கான பிரமனிடம் கண்டேன்பாரே
2885.
கண்டேனே யின்னும்வெகு அதிசயத்தை காசினியில் ஆருந்தான்கண்டதில்லை
திண்டான வாத்துமகோடி கூறொண்ணாது வுத்தமனே யவரவர்கள் செய்தபாவம்
கொண்டான மட்டுக்கும் வாக்கிசனையும் குறிப்புடனே நேமிப்பார் தருமராசன்
சண்டாள மானதொரு கர்மியோற்கு சதாகால மாக்கினைகள் நேருந்தானே
2886.
நேரவென்றால் புண்ணியர்கள் மெத்தவுண்டு நெடுங்காலம் தவமிருப்பார் மனுக்கள்கோடி
சேரவே வெகுநாளாயிருந்து பார்த்தேன் சேனைதிரள்கூட்டங்கள் புண்ணியவான்கள்
கூரவே முடியாது சோடாசாரம் சொன்னாலும் நம்பார்கள் கர்மிமாண்பர்
திறமுடனே வடியேனும் கிட்டிருந்து திகழுடனே கண்டேனே போகர்தாமே
2887.
தாமான மின்னமொரு கருமானங்கேள் தயவாகச் சொல்லுகிறேன் தன்மையாக
சாமான மானதொரு வகத்தியர்தாமும் சாங்கமுடன் வைகுண்டந்தன்னிற்கண்டேன்
கோமானங் கொங்கணவர் செய்தபாவம் குவலயத்தில் முற்பிறப்பில் மெத்தவுண்டு
பூமானாம் கொங்கணரைக்கேள்விகேட்டு புத்தியுடன் தண்டனைக்குள்ளாக்கினாரே
2888.
ஆக்கினார் இடைக்காட்டார் தன்னைக்கண்டேன் அப்பனே யவர்செய்தவினைதான்கேளு
பாக்கியங்கள் அனேகமதாய்க் கொண்டுயென்ன பாருலகில் சிவதருமமில்லையப்பா
நோக்கமுடன் அவர்செய்த பூர்வபுண்ணியம் நொடிக்குள்ளே ராசனவன் கண்டாராய்ந்து
தாக்கவென்ற அவர்மீதில் பட்சம்வைத்து கஷ்டமில்லா வாக்கினைக்குள் சென்றிட்டாரே

2889.
சென்றவுடன் சிவவாக்கியர் தன்னைக்கண்டேன் சிறப்புடனே யவர்தம்மை கேள்விகேட்டார்
ஒன்றுமில்லை யவர்மீதில் குற்றமில்லை உத்தமனே வைகுண்டப்பதியில்தாமும்
குன்றின்மேலிக் கொடுத்தார்தூதர்தாமும் கொப்பெனவே சாமிக்குத் தொண்டனாக்கி
வென்றிடவே சதாகாலம் கைலாசத்தில் வேகமுடன் வீற்றிருக்க கெடுவுண்டாச்சே
2890.
ஆச்சப்பா மிரமமுனி தன்னைக்கண்டேன் அப்பனே யவர்செய்த கொடுமைகேளும்
மூச்சடங்கி பிணம்போல இருந்தசித்தன் முடிமீதில் ஜெபமாலையணிந்துகொண்டு
பாச்சலுடன் வெகுதேசம் வோடிச்சென்று பாடுபட்டு திரவியங்கள் சேகரித்து
பாச்சலுடன் சாத்திரங்கள் படித்துக்கொண்டு மாறாட்டமாகவல்லோ மறைந்தார்தாமே
2891.
மறைத்த பொருள் ஆனதினால் சித்துதம்மை மார்க்கமுடன் வைகுண்டந் தன்னிற்சென்று
குறைந்ர பொருள்வுளவுகளை மறைத்ததாலே கோடான கோடிபாவம் சேர்ந்ததென்று
நிரைத்தனமாய் தன்மனமெண்ணலானார் நேர்மையுடன் வைகுண்டபதியின்சேதி
முறைப்படியே செய்யவென்று தூதர்தாமும் முயன்றுமே வாக்கினைகள் செய்திட்டாரே
2892.
செய்யவே கமலமுனி தன்னைக்கண்டேன் சேர்வைமுகம் காணுகையிலடியேன்பக்கம்
பையவே தீர்ப்புமிகச் செய்யக்கண்டேன் பாழ்நரகில் சிலபேர்கள் இருக்கக்கண்டேன்
தொய்யவே காலனவன் கிருபைவைத்து துப்புரவாய் எந்நாளுந் தருமஞ்செய்ய
மெய்யுடனே தீர்ப்புரைக்கண்டேன் யானும் மேதினியில் சொன்னாலும்பொய்யென்பாரே
2893.
பொய்யென்பார் பூதலத்தார் சொல்லுவார்கள் பொங்கமுடன் யான்கண்ட வரையிற் சொன்னேன்
மெய்யுடனே புலிப்பாணி தன்னைக்கண்டேன் மேதினியில் அனேகமதாய் பாபஞ்செய்தார்
கைதவமாய் அவர்செய்தபாவந்தன்னை கண்டுமல்லோ எமதர்மராசர்தானும்
பையவே வாக்கினைகள் செய்யக்கண்டேன் பாழ்நரகிலிழுத்து போகங்கண்டேன்தானே
2894.
தானான புண்ணாக்கர் தன்னைக்கண்டேன் தாக்கான அவர்செய்தகொடுமைமெத்த
தேனான எனதையர் காலாங்கிநாதர் தேர்வேந்தரானவரும் சொன்னதுண்டு
பானான புண்ணாக்கர் தன்னையானும் பரமனிட கைலைதனில் கண்டேனப்பா
கோனான புண்ணாக்கர் செய்தபாபம் கோடியுண்டு லக்கோயில்லை என்பார்காணே
2895.
காணவே யவருக்கு வாக்கினைகள் கண்கொள்ளமுடியாது வைகுண்டத்தில்
தோணவே மாடுகட்டி புண்ணாக்கீயார் தொடர்வழக்கு மெத்தவதிகாரத்தாரம்
வேணவே வட்டிக்கு வட்டிவாங்கி மேதினியிலிருந்து பலமோசஞ்செய்து
நாணவே நாணயங்க ளதிகஞ்சொல்லி நயமுடனே வஞ்சகமும் செய்தார்தாமே
2896.
செய்ததினால் தர்மராஜனானோர் சீருலகில் செய்ததொரு பாபத்தாலே
நையவே வாக்கினைகள் செய்யவென்று நாட்டமுடன் விசாரணையில் கொண்டுசென்றார்
பையவே குளிகைகொண்டு பக்கல்சென்றேன் பார்த்தேனே யவருக்கு நடக்குந்தீமை
பொய்யல்ல வுலகுதனில் சொல்லப்போனால் பொங்கமுடன் நம்பார்கள் சண்டிமாண்பே

2897.
சண்டியான் சட்டமுனி தன்னைக்கண்டேன் தகைமையுடன் அவர்செய்த பாவங்கேளு
அண்டிவந்த சீஷருக்கு உபதஞ்சொல்லி அநியாயமாக வல்லோ நூல்மறைத்தார்
கண்டிதமாய் பாடல்களை சொன்னார்போல கருமறைவு காரணத்தை மறைத்துப்போட்டார்
பண்டிதங்க ளில்லாமல் செய்ததாலே பாவம்வந்து சேர்ந்ததென தண்டித்தாரே
2898.
தெண்டமுடன் சட்டமுனி தன்னைக்கண்டு தேர்வேந்தர் எமதர்மராசரண்டை
கொண்டுபோய் விட்டார்கள் கோடிதூதர் கொற்றவனார் எமதர்மராசரங்கே
அண்டையிலே தாருக்குமடியார்தம்மை அங்ஙனமே சாத்தரத்தை பார்ககச்சொன்னார்
தொண்டுசெய்யும் முனிக்கூட்டம் ரிஷிகள்தாமும் சுருதியெனும் சாத்திரத்தை
பார்த்தார்தாமே
2899.
பார்க்கையிலே சாத்திரங்கள் மறைப்புமெத்த பாழாகிமாந்தரெல்லாம் சுட்டுமாண்டார்
தீர்க்கமுடன் மறைபொருளை ஒளித்துச்சொல்லி திடங்குலைந்து போவதற்கு திறவுசொல்லி
சேர்க்கவே ஒன்றுவிட்டு முன்பின்னாக செழிப்புடனே வுட்பொருளை யறியாமற்றான்
கார்க்கவே நூலதனைக் கண்ணாற்காட்டி கருவாகத் தான்மறைத்தார் சித்தர்தாமே
2900.
சித்தராஞ் சாத்திரத்தை மறைத்ததாலே சீருடனே யவர்தனக்குத் தீர்ப்புசொன்னார்
மெத்தனவே தீவட்டிகொண்டுதம்மை மேன்மையுடன் நாவுதனை சுடவுங்கண்டேன்
கத்தனே யான்செய்ததப்பிதத்தை காத்துயென்னை ரட்சிக்கவேண்டுமென்று
சுத்தமுடன் கைகட்டி வாய்புதைத்து சுந்திரனும் நின்றிருக்கப் பார்த்தேன்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

2901.
தானான யிவ்வார்த்தை சாற்றப்போனால் தாரணியில் பொய்யென்று சொல்வார்மாண்பர்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனாராசிர்மத்தாலே யானும்
தேனான குளிகையது பூண்டுகொண்டு தெளிவுடனே பரலோகங்கண்டுவந்தேன்
மானான மஹேஸ்பரி பாதந்தொட்டு மானிலத்தை கண்டொழித்து வந்திட்டேனே
**2902.**
வந்தேனே வைகுண்டம் யானும்சென்றேன் வாகுடனே சித்தரகளைக் கண்டேன்யானும்
அந்தமுடன் தெண்டனைக்கு வாளுமானார் அப்பனே யான்கண்டதனேகமுண்டு
சொந்தமுடன் எந்நாளும் வைகுண்டத்தில் சந்தரனே இருக்கமனுதான்கொடுத்து
விந்தையுடன் வாக்கினைகள் நேர்ந்துதங்கே வேகமுடன் காண்பேனே போகர்தாமே
**2903.**
தாமான போகர்முனி சாற்றக்கேளும் சதாகாலம் வைகுண்டந்தன்னில்யானும்
வாமான வாக்கினையின் பக்கந்தன்னில் வாகுடனே சுற்றிவரும்போதிலப்பா
நாமான கருவூரார் தன்னைக்கண்டேன் நாயகனார் செய்ததொரு வண்மைகேளு
கோமானாம் அரசருக்கு வாதஞ்சொல்லி கோடிபொருள் தானிழக்க செய்தார்தாமே
**2904.**
செய்ததனாற் சாபம்வந்து நேர்ந்ததாலும் செயலான பாக்கியத்தை கெடுத்ததாலும்
பையவே பாண்டியர்க்கு மோசஞ்சொல்லி பாங்குடனே தில்லைபதி சென்றாரங்கே
கைதவமாய் பாண்டியனார் தேவஸ்தானம் கட்டினார் வெகுகோடி காலமப்பா
மெய்யடனே தேவஸ்தானந்தன்னில் மேன்மைபெற விக்கிரகஞ் செய்திட்டாரே
**2905.**
செய்திட்டர் எவர்தன்னால் செய்தாரானால் செயலான கருவூரார் தன்னைக்கொண்டு
மைதிகழுஞ்சித்தர் கருவூரார்தன்னை மன்னவனும் பாண்டியனார் தானழைத்து
வைபுகழுஞ் சித்தரே கேளுமென்று வாகுடனே பாண்டியனார் வாக்களித்தார்
பொய்புகலா புண்ணியரே கேளுஞ்சாமி பொன்னாலே விக்கிரகஞ் செய்யென்றாரே
**2906.**
என்றையிலே கருவூரார் சொல்லக்கேட்டு எழிலான மன்னவரே தடையென்னோதான்
குன்றான மலைத்தங்கம் கோடிமாற்று கொற்றவனே என்னிடம் மெத்தவுண்டு
பன்றான பாண்டியனார் தாமுரைக்க பாலகனார் கருவூரார் உட்கொண்டேதான்
வன்றான திரவியத்தை வாங்கிக்கொண்டு வளமுடனே கருவூரார் நடந்திட்டாரே
**2907.**
நடந்துமே கருவூரார் பொன்னைவாங்கி நடராசர் விக்கிரகஞ் செய்யவென்று
கடந்துமே காவேரிதன்னைத்தாண்டி காவலனார் அரண்மனையிற் தன்னிற்சென்று
தொடர்ந்துமே நடராசர் கருவமைத்து சொரூபமுள்ள வுட்கருவை வுள்ளமைத்து
படர்ந்துமே மெழுகாலே வுருக்கெடுத்து பாங்குபெற சிலைதனையே வமைத்திட்டாரே
**2908.**
அமைத்திட்ட கருவதனை வுருக்கொண்டேத்த அப்பனே மண்ணாலே மூசைபண்ணி
சமைந்திடவே கருக்குருவும் ஓடிப்பாய சட்டமுடன் தாள்திறந்து பாச்சியங்கே
தமைந்திடவே தங்கமதை செம்புதாக்கி தயவுடனே விக்கிரகஞ் செய்தாரங்கே
துமைந்திடவே தங்கமது செம்புமாக்கி சொரூபமென்ற வுருவமதை மாத்திட்டாரே

2909.
மாத்தியே செம்பாலே வுருவமைத்து மன்னவனார் பாண்டியனார் முன்னேவந்து
நேத்தியுள்ள பிரதமையான் செய்துவந்தேன் நேர்மையுள்ள பாண்டியனே கண்டுகொள்ளு
பூர்த்தியுடன் மனதுவந்து கருவமைத்து புண்ணியனாம் பாண்டியனார் முன்னேவைக்க
தீர்த்தமுடன் பாண்டியனார் ஆசீர்மிக்க திகழுடனே எதிர்கொண்டு புறப்பட்டாரே
2910.
புறப்பட்ட போதையிலே கருவூரார்தாம் பூபால பாண்டியனார் வரவுகண்டு
சிறப்புடனே பாண்டியர்க்கு எதிரேசென்று சிற்பரனார் முடிவணங்கி தெண்டனிட்டு
திறமுடைய சிலையொன்று நடேசர்தாமும் சீர்பெறவே செய்துவந்தேன் சாமியென்ன
குறமனதாய் பாண்டியனும் திடுக்கிட்டேங்கி கோபமுடன் சிலைதனையே பார்த்திட்டாரே
2911.
பார்க்கையிலே செம்பான சிலையைக்கண்டு பாதகனே பாண்டியனே மோசஞ்செய்தீர்
தீர்க்கமுடன் உன்கையில் பொன்கொடுத்தேன் திறலான பொன்னையெல்லாம் மோசஞ்செய்தீர்
ஏர்க்கையிலே ஜாதினது புத்திதானோ எழிலான சிற்பரனே வகடுசெய்தீர்
சேர்க்கையிலே பொன்னோடு செம்புசேர்த்து சேர்வைதனை கண்மறைக்க மறைத்திட்டீரே
2912.
மறைத்திட்ட பொன்னதனை மோசஞ்செய்து மன்னவனே செம்புதனைக் கைகொடுத்து
குறைத்திடவே என்மனதை புண்ணதாக்கி குவலயத்தில் பெருமோசஞ் செய்தபாவி
வறைத்திடவே கருவூரார் தன்னையங்கே வாகுடனே சிறைச்சாலைக் காவலுக்குள்
முறைப்படியே வதிகாரி கொண்டுசெல்ல மூர்க்கமுடன் கரூவூரார் வுரைத்தார்பாரே
2913.
பாரேதான் பாண்டியனார் தம்மைநோக்கி பதலமுடன் வத்தாரஞ் சொல்வாரங்கே
சீருள்ள பாண்டியனே யின்னங்கேளும் சீறியே என்மீதில் கனல்தான்கொண்டீர்
நேருள்ள பாண்டியரே யின்னங்கேளும் நேர்மையுள்ள விக்கிரகம் பொன்னேயானால்
ஊருள்ள குடிபடைகள் மோசஞ்செய்வார் வுத்தமனே செம்மைநிற மாக்கிட்டேனே
2914.
ஆக்கினேன் தங்கமதை செம்பதாக்கி அப்பனே யொருவருந்தான் காணாவண்ணம்
நோக்கமுடன் மாந்தர்களும் காண்பாரானால் நொடிக்குள்ளே கன்னமிட எண்ணங் கொள்வார்
தாக்கவே தங்கமென்ற செம்பதப்பா தாழ்மையுடன் மோசமது செய்யவில்லை
ஏக்கமின்றி செம்புதனை கொண்டுநீரும் எழிலான கருவுதனை சோதிப்பீரே
2915.
சோதிக்க பாரமென்ற செம்புதன்னை சுத்தமுடன் தானுருக்கி செப்பக்கேளும்
வேதிக்க கருவுதனை செய்வீர்மைந்தா விருப்பமுடன் கடுகளவுதானெடுத்து
நீதியுடன் வுருக்குமுகந்தன்னிலீய நீடான செம்பதுவும் தங்கமாகும்
பாதிமதி மணிபூண்ட பாண்டினாரே பசுந்தங்கம் பத்தரையு மாற்றுமாமே
2916.
மாற்றான பொன்னதுவைக் கண்டான்ராஜன் மகிமையது தெரியாமல் கோபங்கொண்டார்
கூற்றான யெமனென்று எண்ணங்கொண்டு கோலமுடி சிற்பரனே கொல்லச்சொன்னோம்
நாற்றிசையில் இவர்போலுஞ் சித்தருண்டோ நடுநடுங்கி கொற்றவனுஞ் சுற்றிவந்து
போற்றி கருவூராரைக் காணவென்று பூபால ராஜரவர் நினைத்திட்டாரே

2917.
நினைத்த பொழுதவ்வளவில் கருவூரார்தாம் நிமைப்பொழுதில் லாடமதில்மையேபூண்டு
சினத்துடனே மறையநின்று மன்னர்தம்மை சீரலுடன் பார்குமந்த வேளைதன்னில்
சுனைப்படியில் பாண்டியனும் நின்றுகொண்டு சுந்தரனாங் கருவூரார் எங்கேயென்ன
தனைப்புகழும் காவலர்கள் அங்கிருந்து தகமையுள்ள சிற்பரிங்கில்லை யென்றாரே
2918.
என்றையிலே பாண்டியனும் திடுக்கிட்டேங்கி எழிலான பாலகரை தேடச்சொல்லி
குன்றுமலை கடலோரஞ் சுனையோரந்தான் கொற்றவனாம் அதிகாரி சொற்படிக்கு
தென்றிசையிற் போதிகவரை துலைதேசந்தான் தொடர்ந்துமே யாராய்ந்து பார்த்தோமென்ன
வென்றிடவே வந்தவருஞ் சித்தரல்ல வேதாந்தசாமி குருநாதர்தானோ
2919.
நாதனென்றால் கண்ணுக்கு தென்படாது நாதாந்த கருவானால் கண்ணிற்றோற்றும்
போதமுடன் சித்தான குருவதாமோ பொங்கமுடன் கைலாயபகவான்தானோ
நீதமுடன் தேடுவதில் லாபமென்ன நீதியுள்ள புண்ணியத்தால் நேர்ந்தால்நேரும்
தோதமுடன் பாண்டியனும் விசனங்கொண்டு துப்புரவாய் மதிகுலைந்து மயங்கினாரே
2920.
மயங்கியே பாண்டியனு மாசீர்மத்தில் மார்க்கமுடன் விசனமதாய் வீற்றிருந்தான்
தியங்கியே நடராஜர் தம்மைதானும் தில்லையெனும் பதிதனக்கு சுவாமியாக்கி
தயங்கவே தாரணியிலுள்ள மாந்தர் சட்டமுடன் தான்தொழுது வணங்கிநிற்க
பயங்கரமா யெந்நாளும் நாதர்தம்மை பாலித்தார் தேவஸ்தானமாமே
2921.
தானமாம் பாண்டியனை இந்தக்கோலம் தகையுடன் செய்துவைத்தான் சிற்பன்தானும்
காண்மையுடன் செய்ததனால் பாவமில்லை கடந்ததொரு சித்தர்களை மோசம்பண்ணி
ஈனமுடன் சாத்திரத்தைப் பிரட்டல்செய்து யேளிதங்களாகவல்லோ பாடிப்போட்டார்
ஊனம்வரச் செய்ததினால் இந்தப்பாபம் வுத்தமர்க்கு நேர்ந்ததென நினைத்திட்டேனே
2922.
நினைக்கையிலே சிற்பனுக்கு வுப்பாயதண்டம் நேர்ந்ததுவும் பார்த்திருந்தேன் சுவாமிபக்கல்
பனைப்புடனே கருவூரார் கேள்விசொல்ல பயந்துமே யடியேனும் நடுநடுங்கி
வினைப்பயனால் நேர்ந்ததற்கு என்னசெய்வோம் விதிவசத்தை தப்புதற்கு யாராலாகும்
தினைப்புடனே யிச்சங்கை சொல்லப்போனால் தேசத்தில் பொய்யென்பார் மெய்யெந்நாரே
2923.
மெய்யான யின்னமொரு மார்க்கம்பாரு மேதினியில் இராமதேவர் செய்தகூத்து
பொய்யான சாத்திரத்தை மெய்யதாகப் புகட்டினார் லோகத்துமாந்தர்க்கப்பா
துப்பமுடன் சாத்திரத்தைப் பார்த்துப்பார்த்துப் துறைகெட்டு முறைகெட்டு துன்பப்பட்டு
பையவே வெகுபேர்கள் சுட்டலைந்து பாடுபட்டு மாண்டார்கள் கோடிதாமே
2924.
கோடியா மிராமதேவர் சாத்திரத்தைக் குறிப்புடனே மெய்யென்று விருதாவாக
தேடியே கோர்வைகள்தான் கிடைக்குமானால் தேசத்தில் சுத்தனாயிருக்க வேண்டி
நாடியே ராமரென்றும் யாக்கோபாரை நாட்டமுடன் செய்துவைத்த நூல்கள்பார்க்க
பாடியே பயித்தியங்க ளதிகமாகிப் பாருலகில் கெட்டலைந்தார் மாண்பர்தாமே

2925.
மாண்பான யாக்கோபு மக்கதேசம் நளினமுடன் சென்றதொரு வன்மைதன்னை
காண்பான பல்லரிடம் சென்றுதானும் கருவான வுளவுதனைக் கண்டாராய்ந்து
தாண்பான தத்துவத்தில் கடந்தோனென்றும் தகமையுடன் சாத்திரத்தின் பெருமைசொல்லி
வீண்பாக மற்றதோர் சாத்தரங்கள் வீணாகப்பாடி வைத்தார் வீணதாமே
2926.
வஆணான சாத்திரத்தை மாறாட்டமாக விருதாவில் மாண்பர்களும் கெட்டுப்போக
காணாத நூல்கள் எல்லாம்கண்டோமென்று காசினியில் கடைமுதலும் சாத்துமேதான்
தோணாமல் வெகுபேர்கள் மாண்டுபோனார் தோற்றாமல் இன்னுமவர் நூலைத்தேடி
சாணான்தான் கண்டபொருள் போலேவாக்கும் சாட்டமுடன் சாத்திரத்தி னுண்மைதானே
2927.
உண்மையாம் சாத்திரத்தை மெய்போல்பாடி உத்தமர்கள் தான்மயங்க திடுக்கிட்டேங்க
நண்மையுடன் வாதத்தை மெய்போலாக நாதாக்கள் சாத்திரங்கள் பொய்போலாக
நன்மையுடன் பாடிவைத்தேன் கருவாகத்தான் காசினியில் யாருந்தான் சொல்லவில்லை
திண்மைபெற வின்னம்வெகுகோடி கோர்வைகொட்டினேன் என்றுசொல்லி கூறினாரே
2928.
கூறினார் சாத்திரங்கள் சித்தர்பாலில் குறுக்குமுறை நெடுக்குமுறை யனந்தங்கோடி
மீறினார் முன்பின்னாய் பாடிப்போட்டார் மிக்கான சாத்திரத்தின் நேர்மைதானும்
தூறினார் குற்றங்கள் மிகவாய்ச்சொல்லி தூற்றினார் யாக்கோபு நூலைத்தானும்
மாறினார் சித்தர்முனி சாத்திரத்தை மார்க்கமுடன் தான்கெடுத்தார் பான்மையாமே
2929.
பான்மையுடன் வெகுமாந்தர் கெட்டுப்போயி பாழாகி சாத்திரத்தில் முழுகிப்போனார்
வான்மையுடன் யாக்கோபு செய்தபாவம் வைகுண்ட மவர்தனக்கு கேள்விமெத்த
மேன்மையுடன் சாபமது நேர்ந்ததாலே மேலுக்கு மின்னமொரு பிறவிகாண
மாண்மையுடன் தண்டனைகள் மிகவுமாகி மன்னருக்கு மறுபிறப்பில் குறைவுண்டாச்சே
2930.
உண்டான முறைகளை யான்கண்டுவந்தேன் உத்தமனே வுலகுதனிற் சொல்லப்போனால்
சண்டாள மானதொருசிலது மாண்பர்சார்பான பொய்யென்று சாற்றுவார்கள்
கண்டாலும் பொய்யென்று கதறுவார்கள் சதாகாலங் கருமத்துக்கேதுவாவார்
திரண்டாம முறைமையிது சொல்லவந்தேன் திறமான போகரிஷி கண்டதாமே
2931.
கண்டதொரு ஜோதிமுறை யின்னஞ்சொல்வேன் கைலாச வைகுண்டபதியின்சேதி
அண்டமுனி சிசுபாலன் அவனுக்கு சீஷனவன்பேரு சட்டைமுனி யென்பாரப்பா
கொண்டல்வண்ணன் ராவணனார்கிடையே செய்து கோடிமுறை தபசிகட்கு வின்னஞ்செய்து
தண்டவமை தானிருந்து ரிஷிகள்சாபம் சாற்றினார் சாத்திரத்தின் தன்மைதானே
2932.
தானான சாத்திரத்துக் கிடையேசொல்லி தப்பிதங்களாகவேதான் கெடுத்துப்போட்டு
கோனான எனதையர் காலாங்கிதன்னை கொண்டபடி யவர்பேரில் தோஷஞ்சொல்லி
வேனான கருவெல்லாம் மறைத்துப்போட்டு வேதமுதல் சாத்திரங்கள் பொய்யாச்சொல்லி
பானான பலவிதமாய்ப் பாடிவிட்டார் பாருலகில் சட்டமுனி சரிதையாமே

2933.
சரிதையுடன் சித்தர்முனி கோர்வையாவும் தப்பென்று தான்மிகவும் வெகுசாய்க்கூறி
கருதிபொருளாராய்ந்து சூட்சாசூட்சம் சுத்தமுடன் தானறிந்து தன்தன்நூலை
விரிவுடனே பாடிவிட்டார் வனந்தங்கோடி விண்ணுலகும் மண்ணுலகுங் கொள்ளாதப்பா
பரிவுடனே சொன்னதுபோல் தானுஞ்சொல்லி பட்சமுடன் தாமுரைத்தார் மாணாக்கராமே
2934.
மாணாக்கர் வின்நூலை மெய்யென்றெண்ணி மானிலத்தில் வெகுநாளாய் கண்டாராய்ந்து
வஆணாக சாத்திரத்தின் கோர்வைபார்த்து விருதாவாய் சுட்டலைந்து பொருளுந்தோற்று
கோணாமல் பருந்தினது பாகங்காணார் குவலயத்தில் மெய்பொருளை
பொய்ப்பொருளதாக்கி
வாணாளை தான்கழித்து மட்டிமாண்பர் மதிகெட்டு நின்றார்கள் மகிமைபாரே
2935.
பாரேதான் முப்பூவைக் கெடுத்துப்போட்டார் பலபலவாம் நூல்தோறும் பாடிப்போட்டார்
நேரேதான் விதிமுறைகள் யாவுங்கூறி விதிமுடிக்கும் முறையனைத்துங்குரைத்துப்போட்டார்
சீரேதான் சாத்திரத்தை மெய்யென்றெண்ணி சிறப்புடனே முப்பூவை முடிக்கவென்று
கூரேதான் சட்டமுனி மெய்யாய்ச்சொல்லி குறிப்புடனே நூலதனை மாத்திட்டாரே
2936.
மாத்தியே கலவரங்கள் மிகவுண்டாகி மன்னவர்கள் தான்மயங்க மறைத்துச்சொல்லி
நேத்தியுடன் பாடல்களை மெய்போல்சொல்லி நேர்மையுடன் திரவியங்கள் பாழாய்செய்து
தூத்தியே வாதத்தை மெய்போல்சொல்லி முறையோடு பொய்சொல்லி துகளகற்றி
சாத்திரத்தைப் பாடினதால் சட்டையோர்க்கு சாபமுடன் வைகுண்டபதியில் தீதே
2937.
தீதான சாத்திரத்தைக் கெடுத்ததாலே தீங்கஉமிக நேர்ந்தது வைகுண்டத்தில்
நீதமுடன் வாக்கினைகள் மிகவுண்டாகி நித்தியமும் வைகுண்டச்சார்புதன்னில்
காதமது வான்வாசல் கோட்டைக்குள்ளே கால்நடையாய் தாநடந்துசுத்திவந்து
போதமுடன் விசாரணைக்குத் தீமுன்பாக பொங்கமுடன் கொண்டுவந்து நிறுத்தினாரே
2938.
நிறுத்தையிலே சட்டமுனிக்கா யனெகம் நிருதியுடன் தான்செய்தார் வூசியாலே
திருத்தமுடன் நாவதனிலூசிகொண்டு திகழுடனே வுண்ணாக்கில் காட்டாரப்பா
பருத்தமுள்ள வாக்கினைகள் இல்லைகண்டேன் பாழ்நரகமவருக்கு இல்லையப்பா
பொருத்தமுடன் அவர்தனக்கு புத்திசொல்லி பொங்கமுடன் மறுவாசல்கொண்டு சென்றாரே
2939.
சென்றுமே யவர்தனக்கு பதம்மாத்தி சிறப்புடனே எந்நாளுங் கைலைதன்னில்
குன்றின்மேல் சாவலுடன் ரிஷிகள்பக்கல் கொற்றவனாம் எமதர்மராசன்பக்கல்
வென்றிடவே தவயோக புஷ்பசாங்கம் வேகமுடன் முனிவருக்கு பூசைமார்க்கம்
அன்றலுடன் சதாகாலமங்கிருக்க வவர்தனக்கு கட்டளைகள் விதித்திட்டாரே
2940.
விதிக்கையிலே வின்னமொரு வதிசயங்கள் வினவுடனே யாமுரைப்போ மின்னங்கேளு
துதித்தலுடன் மச்சமுனி தன்னையானும் துப்புரவாய் வைகுண்டபதியில்கண்டேன்
மதிக்கவே சாத்திரத்தை மறைவுபேசு மகத்தான நூல்களையே கெடுத்துப்போட்டார்
பதிக்கமுடன் மாந்தர்க்குப் பொய்பொய்யாக பாடிவிட்ட படியாலே கர்மமாச்சே

2941.
ஆச்சென்ற படியாலே நூல்கள்தம்மை அப்பனே பலபேரும்சொல்லக்கேட்டு
கூச்சலுடன் சித்தர்முனி ரிஷிகள்வாக்கு குறையாமல் பாடிவிட்டார் அனந்தங்கோடி
மேச்சலுடன் முன்பின்னாய்ச் சொன்னதாலே மேதினியில் மாந்தரெல்லாம் சுட்டலைந்து
பாச்சலுடன் மாண்டார்கள் கோடாகோடி பலபலவாம் கெட்டலைந்தோர் கோடியாமே
2942.
கோடிபேர் சாத்திரங்கள் பார்த்துமென்ன குவலயத்தில் கைமறைப்பு இல்லாமற்றான்
நாடியே சாத்திரங்கள் மிகவாராய்ந்து நாணமுடன் மெய்போலப்பாடிவிட்டார்
ஓடியே கோர்வைதான் மெய்யென்றெண்ணி உத்தமர்கள் கெட்டவர்கள் கணக்கோயில்லை
தேடியே திகைத்துமிக வாடிப்போனார் தேசத்தில் அதிகமுண்டு தெளிவுதாமே
2943.
தெளிவான சாத்திரத்தைப் பாடியல்லோ தேசத்தில் கீர்த்தியுடன் பெயர்தான்வேண்டும்
நெளிவான நூலதனைச் செய்யாமற்றான் நுணுக்கமெல்லா மறைபொருளாய்ச்
சொன்னதாலே
ஒளியான சித்தர்முனி தங்கள்பேரில் ஓகோகோ மோசமென்று நூலுஞ்சொல்லி
பளியான சாத்திரத்தைப் பாடிவைத்தார் பாலருக்குப்பாபம்வந்து லபித்ததாமே
2944.
தாமான மச்சமுனி தன்னைத்தானும் தண்மையுடன் வைகுண்டப்பதியிலப்பா
கோமானாம் எமதர்மராசருண்டே கொற்றவனைத் தானழைத்துக் கொடுதானுபோனார்
பூமானின் மச்சமென்ற முனிவர்தம்மை புகமுடனே கேட்கலுற்றார் அந்தநேரம்
வசமான மச்சமுனி கூறும்வண்ணம் வாகுடனே கிட்டிருந்து கேட்டிட்டேனே
2945.
கேட்கையிலே வுத்தரவு விடையுமில்லை கெடுதியுடன் வாக்கினைகள் கொஞ்சந்தானும்
நீட்கமுடன் தான்கொடுத்து தீர்ப்புசெய்து நீதியுடன் எமபுரத்து வாசலுண்டே
பூட்கமல தடாகமதில் காவல்வைத்து பொங்கமுடன் சங்கரற்கு பூசைக்கப்பா
வாட்கமல புட்பமதுதான்பரித்து வளமுடனே தான்கொடுக்க நீதியாச்சே
2946.
ஆச்சப்பா யின்னமொரு வதிசயங்கேள் அப்பனே யானறிந்த வரைக்குஞ்சொல்வேன்
வாச்சலுடன் தட்சணமூர்த்திதன்னை வைகுண்டப்பதிதனிலே கண்டேன்யானும்
கூச்சலுடன் கிங்கிலியர் தூதர்தாமும் குய்யோதான் முறையுமென்று வபயமிட்டு
பேச்சுடனே தட்சணாமூர்த்தியாரை பெருமையுடன் விசாரணையில் பார்த்திட்டேனே
2947.
பார்க்கையிலே தட்சணாமூர்த்தியாரும் பாடல்களை வெகுவாக மறைத்துப்போட்டார்
சேர்க்கமுடன் வாதத்தை முன்பின்னாகச் செப்பினார் திரட்டுமுதல் வுளவுமார்க்கம்
மூர்க்கமுடன் மருந்துவகை பாஷாணத்தை முன்பின்னால் பேர்மாற்றி பேருறைத்தார்
தீர்க்கமுடன் சொன்னதினால் மாந்தர்யாவும் தேசத்தில் சுட்டலைந்து கண்கெட்டாரே
2948.
கெட்டுமே போனாலும் போவதன்றி கெடியான பாஷாணமார்க்கந்தன்னை
தோட்டுமே தானஆடி மருந்துக்கீய தோராயமாகவல்லோ முழுதும்கெட்டு
வட்டமுடன் நோய்யுகலும் பேரண்டமாகி மானிலத்தி லிறந்தவர்கள் கோடாகோடி
மட்டமென்ற மருந்துகளும் செய்துவல்லோ மன்னவரும் பயித்தியங் கொண்டேகினாரே

2949.
ஏகவென்றால் பாவமதுவதிகமாகி எழிலான நோயதுவும் சொல்லப்போமோ
பாகமுடன் செய்பாகம் கெட்டலைந்து பாங்குடனே சாத்திரமும் பொய்யதாகி
தாகமுடன் பாஷாணவீறினாலே தாரிணியில் சடலமது இழந்தாரங்கே
மேகமென்ற மருந்தினது வேகத்தாலே மேனியெல்லாம் புண்ணாகி ரோகமாச்சே
2950.
ஆச்சுப்பா தட்சணாமூர்த்தி செய்த அரும்பவத்தை எமதர்மராஜன்தானும்
மாச்சலுடன் கண்டறிந்து மூர்த்தியார்க்கு மகாதீர்ப்பு கொடுப்பதற்கு மனமுமானார்
பூச்சலுடன் சாத்திரத்தைக் கெடுத்ததாலே புண்ணியனே வுந்தனுக்கு சொற்பதண்டம்
தீச்சலுடன் சிவயோகி ரிஷிகளுக்கு சிவாலய மடபதிக்கு காவல்தானே
2951.
தானான காவலது இருக்கவென்று தன்மையுடன் எமதர்மராஜன்தானும்
கோனான தட்சணாமூர்த்தியார்க்கு கொடுத்தவசி முனியோர்க்கு வாளதாக
பானான பரமசிவன் பட்சத்தாலே பாலித்தார் எந்நாளும் வைகுண்டத்தில்
தேனான தட்சணாமூர்த்தியாரும் தேவனிட கோட்டைக்குள் ளிருந்திடாயே
2952.
இருந்தாரே கைலகிரி வைகுண்டத்தில் எழிலாகச் சுவாமிகட்குத் தொண்டனாகி
பொருந்தவே யவர்களீடம் பூசித்தேதான் பொங்கமுடன் சதாகாலம் வைகுண்டத்தில்
திருத்தமுடன் தாமிருந்தார் தட்சணாயன் தீரமுடன் கதைதனையே செப்பவென்றால்
வெரித்திடவே லோகத்துமாண்பரெல்லாம் வெறும்பொய்யா மென்றுசொல்லி மேவுவாரே
2953.
மேவவே யின்னமொரு தெரிசனங்கேள் மேன்மையுடன் யான்கண்டவரைக்குஞ்சொல்வேன்
காவலுட ரோமரிஷிதன்னைக்கண்டேன் கருவாக வைகுண்டந்தன்னிலப்பா
ஆவலுடன் அவர்பக்கல் யானுஞ்சென்றேன் அப்பனே கேள்விகள் அனேகமுண்டு
பாவமெனும் புண்ணியங்க ளிரண்டைத்தானும் பராகரித்துக் கேள்விகளும் கேட்கலாச்சே
2954.
கேட்கவென்றால் அவர்மீதில் குற்றமெத்தக் கேள்விகளுமங்குண்டு சொல்லொணாது
நீட்கமுடன் சாத்திரத்தை வெகுவாய்ச்சொல்லி நீடாழியுலகமெலாம் மயங்கப்பண்ணி
தாட்கையுடன் ரோமரிஷி கோர்வையாவும் தன்மையுடன் முன்பின்னாய் பாடிவைத்தார்
மீட்கமுடன் கோர்வைதனில் நாலுகாப்பு மாளவே முன்பின்னாய்ப் பாடினாரே
2955.
பாடினார் பரிபாஷை யாவுஞ்சொல்லி பாடல்களில் கைமறைப்பு வதீதஞ்சொல்லி
மூடியே கருவுளவுமுப்பின்மார்க்கம் மூதண்டப்பூநீரின் போக்குயாவும்
தேடியே பரிபாஷை திரட்டையெல்லாம் தெளிவறவே செய்யாத மார்க்கந்தன்னில்
கோடிமனு சுட்டலைந்து கெட்டுப்போனார் குவலயத்தில் பாவம்வந்து நேரலாச்சே
2956.
நேரவே பாவத்தாலஃ கருமந்தங்கி நெடிதான வைகுண்டப்பதியிற்சென்று
கூரவே எமதர்மராஜன் பக்கல் கொற்றவனாம் ரோமரிஷி தன்னைத்தானும்
பாரமுடன் சாத்திரத்தை தலைமேல்வைத்து பாங்குடனே தூதர்கொண்டு சென்றுபோனார்
மாரலுடன் வைகுண்டப்பதியில்தானும் மார்க்கமுடன் குற்றமது நேமித்தாரே

2957.
நேமித்தார் குற்றமதை நேரதாக நெடுங்காலம் தானிருக்க விடையுண்டாச்சு சாமியுட
பக்கலிலே யனேகஞ்சித்தர் சதகோடி சூரியர்போல் கொண்டுவந்தார்
வாமியுடன் வைகுண்டப்பதியில்தானும் வாகுடனே யம்பாளும் தானிருக்க
பூமியிடங் கொண்டுவந்த சித்தர்தானும் புகழ்ச்சியுடன் கோடியுடன் லக்கில்லைதானே
2958.
தானான யின்னம்வெகு வதிசயங்கள் தன்மையுடன் சொல்லுகிறேன் தரணியோர்க்கு
வேனான விலாடரிஷி தன்னைக்கண்டேன் வியாசமுனி சூதமுனி தன்னைக்கண்டேன்
கோனான குருமுனி தன்னைக்கண்டேன் கொற்றவனார் போகரிஷி தன்னைக்கண்டேன்
தேனான திருமூலக் கூட்டத்தார்கள் தெய்வபுற பதிதனிலே கண்டேன்பாரே
2959.
பார்த்தேனே சிவாக்கியர் தன்னைக்கண்டேன் பாலகனாம் இடைக்காட்டார் தன்னைக்கண்டேன்
மூர்த்தவனாம் அகப்பேய்சித்துதம்மை முடியோடுஞ் சடையோடும் யானுங்கண்டேன்
தீர்த்தகிரி தனிலிருந்த காசிநாதர் திறமுடன் கொண்டுவரர்கண்டேன்யானும்
ஏர்த்திடவே வரரிஷிதன்னைக்கண்டேன் எழிலான சுந்தரரைக் கண்டேன்தானே
2960.
கண்டேனே யின்னம்வெகு சித்துதம்மை கைலாயபர்வதமாம் வைகுண்டத்தில்
அண்டமுனி ராட்சதர்கள் கோடாகோடி அவனியிலே இருந்துவந்தோர் சொல்லொணாது
கொண்டல்வண்ணன் மைத்துனனாம் தருமராசன் கொற்றவனாம் தம்பிமுதல் யாவுங்கண்டேன்
பண்டுலவமாலையணி சத்துருசங்காரன் பாவையெனும் சீதைதனைக் கண்டேன்தானே
2961.
கண்டேனே ராவணனார் சூர்ப்பனகைதானும் கைலங்கிரி வைகுண்டப்பதியிலோரம்
தொண்டரெனும் அறுபத்து மூன்றுபேர்கள் தோராத பரவநாச்சியாருங்கண்டேன்
விண்டேனே விண்ணுலகில் சேதியெல்லாம் விருப்பமுடன் நானறிந்தேன் சிலதுகாலம்
கொண்டல்வண்ண னச்சுதனுமங்கிருக்க கோபாலன் தாயாரும் கண்டிட்டேனே
2962.
கண்டிட்டேன் வைகுண்டப்பதியில்தானும் கரியமால் சேனையது கூட்டந்தன்னை
தொண்டிட்ட ஆழ்வார்கள் கூட்டந்தன்னில் தொடர்ந்துமே யவரிடமாய் பக்கஞ்சென்றேன்
விண்டிட்ட ஆழ்வாதி சாத்திரங்கள் வெகுமோசம் திகுவனுடன் பின்பின்னாக
துண்டிட்ட சாத்திரத்தில் தோஷமுண்டு தூராதி சிவன்தனை தோஷித்தாரே
2963.
தோஷித்து சிவன்தன்மேல் தோஷஞ்சொல்லி தோராயமாகவல்லோ நூலைமாற்றி
பாஷியங்கள் தோருமல்லோ பரமன்தன்மேல் பாடிவைத்தார் தூஷனைகள் மெத்தவுண்டு
காசினியி லாயிரத்தெட்டு சிவாலயங்கள் கட்டினார் வெகுகோடி மாந்தரப்பா
பூசிதமாம் திருப்பதி நூற்றேயெட்டு பொங்கமுடன் கட்டினார் சூட்சந்தானே
2964.
தானான சூட்சாதி தேவஸ்தானம் தாரிணியில் சொற்பதாய் கண்டதுண்டு
பானான பரமசிவன் சிவாலயங்கள் பார்க்கவென்றால் கணக்கில்லை லக்கோயில்லை
தேனான வாதிசேடந்தன்னாலும் தெளியாது நாவில்லை பாவுமில்லை
மானான பரமபதி மெத்தவுண்டு மானிலத்தில் வாழாது மாந்தர்கேளே

2965.
கேளேதான் சிவன்தனையே பழித்தாலும் கீர்த்தியுடன் சாத்திரத்தைக் கூறலானும்
நீளேதான் வைகுண்ட பதியிலப்பா நேர்ந்துதே வெகுகோடி தெண்டந்தானும்
மீளவே சொற்பனமாம் வாக்கினையும் மீண்டுதே துள்வார்கை சீஷவர்க்கம்
சூளவே யவர்பக்கல் யானிருந்து சுந்தரனே யதிசயங்கள் பார்த்திட்டேனே
2966.
பார்த்திட்டேன் வைகுண்டபதியில்தானும் பாங்குடனே வதிசயத்தை சொல்லப்போனால்
பூர்த்திட்ட பாரினிலே பொய்யென்பார்கள் பொய்யென்பார் மெய்யென்பார் ஆருமில்லை
சாத்திட்ட வைகுண்ட சரிதைதானும் தேர்ந்தவரை யானுரைத்தேன் தெளிவதாக
மார்த்திட்ட மாகவேதான் கைலைதன்னில் மகாகோடி வாக்கினைகள் மெத்தவுண்டே
2967.
உண்டான வதிசயங்க ளின்னஞ்சொல்வேன் உம்பர்பிரான் பதியினது காவையாவும்
திண்டான கிருஷ்ணாவதாரந்தானும் திகழுடனே வெகுகோடி மாதர்தம்மை
பாண்டான வையகத்தில் கற்பழிந்து பாவையரை லீலையது செய்ததாலும்
கண்டேனே வைகுண்ட பதியில்தம்மை கரியமால் ஆக்கினைகள் சொற்பமாமே
2968.
சொற்பமாய் எமதர்மராஜன்தானும் தொல்லுலகில் ஒருவரையும் விட்டதில்லை
அற்பமாம் ஆக்கினைகள் செய்ததுண்டு அவனியிலே யாருந்தான் மீண்டதில்லை
கற்பழிந்த மாதருக்குமிந்தநீதி கர்த்தனது வைகுண்டபதியில்தானும்
முற்பவத்தில் செய்தவினை பாவத்தாலே மூளுமே வைகுண்ட நீதிதானே
2969.
காணவென்றால் பரபஞ்ச மாய்கையப்பா கண்டவர்கள் விண்டவர்கள் ஆருமில்லை
வேணபடி சாத்திரத்தை மிகவறிந்து வேகமுடன் காலாங்கி பாதம்போற்றி
நாணவே சித்தர்முனி தானடுங்க நாதாந்த குளிகையது பூண்டுகொண்டு
கோணவே சொர்க்கபதி யானுஞ்சென்று தோற்றமுடன் கண்சிவந்தேன் போகர்தாமே
2970.
தாமான வையகத்தில் மாண்டமாண்பர் தாரிணியில் வைகுண்டபதியில்தானும்
கோமானாம் அரசர்குதல் குருக்கள் தாமும் கோலமுடன் ராஜாதிராஜர்தாமும்
பூமானாம் சீமான்களெவரையுந்தான் பொன்னுலகப்பதிதனிலே காணலாகும்
நாமான சடலமது மண்ணேயாகும் நாதாந்தக் காற்றதுதான் அழியாதென்றே
2971.
அழியாது மாண்டவர்கள் எல்லாருந்தான் அப்பனுட பதிதனிலே காணலாகும்
அழியாது வாதமந்தான் எந்தநாளும் அமரரது பதிதனிலே காணலாகும்
அழியாது மாண்டவர்கள் ஒருகாலந்தான் அப்பனே ஒருகாலம் எழுந்திருப்பார்
அழியாது ஒருகாலு மவர்தமக்கு அப்பனே நீதியுண்டு கேள்வியுண்டே
2972.
கேள்விக்கு உத்தாரஞ்சொல்லவேண்டும் சொல்லாவிட்டால் நீதியுடனாக்கினையுண்டு
தாழ்மையுடன் எமதர்மராஜனுக்கு சாங்கமுடன் நீதிமொழி யுரைக்கவேண்டும்
ஏழ்மையுடன் போலிருந்து நீதிபேசி நீதியுடன் அவர்பாதம் பணியவேண்டும்
வாழ்மையுடன் உன்மீதில் கிருபைவைப்பார் வாழலாம் சொர்க்கபதி வாழலாமே

2973.
வாழ்வுதான் வையகத்தில் பொய்யேவாழ்வு வாழ்நாளும் வீழ்நாளும் பாழ்நாளாகும்
தாழ்வுடனே சாத்திரத்தை மிகவாராய்ந்து சாங்கமுடன் ஞானோபமிகவுஞ்சொல்வார்
கேழ்மையுடன் மாசானவைராக்கியம்சொல்வார் கேடுவரும் பாவவினை யறியார்தாமும்
ஊழ்வினைகள் தாமறிந்து நடந்துகொள்வார் உத்தமனே லோகத்துமாந்தராமே
2974.
மாந்தராம் சடலத்தை மெய்யென்றெண்ணி மானிலத்தில் வெகுகோடி பாடுபட்டு
சாந்தமுடன் தேகமதை நிறுத்தவென்று சதாகாலம் வையகத்திலிருப்பதாக
போந்தமுடன் காயாதி கற்பந்தன்னை பொங்கமுடன் உண்டுமல்லோ கற்பங்கொண்டு
வேந்தர்களும் இதிகாசவித்தை எல்லாம்வேண்டியே விருப்பமுடன் படித்திட்டாரே
2975.
படிக்கவே வஷ்டாங்கம் காணவென்றும் பாருலகில் வசியனாயாகவென்றும்
துடிக்கவே வாதமதை யறியவென்றும் துப்புறவாய் முப்பூவைமுடிக்கவென்றும்
மடிக்கவே சரக்குக்கு சத்ருதானும் மார்க்கமுடன் கண்டறிந்த சித்தனென்றும்
வெடிக்கவே சமாதிக்கு ளிருப்பேனென்றும் வேதாந்தம் பேசியல்லோ விழலாய்ப்போச்சே
2976.
போச்சென்று விடுகாதே யின்னங்கேளு புதுமையுடன் கண்டவரை யாமுஞ்சொல்வோம்
மாச்சலுடன் மோகனங்களறியவேண்டும் மாறாட்டமானதொரு வெழுத்தைப்பாரு
கூச்சலின்றி சமாதிதனிலிருந்துமென்ன கோடான கோடியுகங்கண்டுமென்ன
மூச்சடங்கி போனபின்பு ஒன்றுமில்லை முனிகோடி தவசிகளு மாண்டார்தாமே
2977.
தாமான கோடியுக மதுவேயாகும் தாக்கான சித்துகளுமிப்படியேயுண்டு
நாமான படியாலே சத்தலோகம் நாதாக்கள் போக்குமுதல் யாவயஞ்கண்டோம்
நேமமுடன் சித்ரெல்லாம் இப்படியே தானும் நேர்மையுடன் நிஷ்டையிலே இருந்துமாண்டார்
வாமமுடன் பூலோக வதிசயங்கள் வகுத்துரைத்தார் வண்மைகளு மனேகந்தானே
2978.
தானேதான் ராஜாதிராஜரெல்லாம் தாரிணியில் சாத்திரத்தை மிகவறிந்து
மானமுடன் சிவயோகநிஷ்டைநின்று மானிலத்தில் தவசுபெரியோரைப்போல
தேனமிர்தங் கொண்டுமல்லோ வாசிபூட்டி தேசத்திலிருந்தார்கள் சித்தரெல்லாம்
மேனகையைக் கண்டுமல்லோ மையல்கொண்டு மேதினியில் மாண்டவர் கோடியாமே
2979.
கோடியாஞ் சித்தர்முனி மாந்தரெல்லாம் குவலயத்தில் மண்ணாசை பெண்ணாசையாலே
தேடியே செம்பொன்னாசையாலும் திடங்குலைந்து மாண்டார்கள் மாந்தரெல்லாம்
நாடியே நாதாந்த சித்தருக்கு நல்லவழி யொருவருக்கும் கிடைப்பதில்லை
பாடியே நூல்தனைப் பார்த்துபார்த்து பரதவித்து இருந்தார்கள் கோடிபேரே
2980.
பேரான தத்துவங்கள் அறிந்துமென்ன பேருலகில் ஞானிகளாயிருந்துமென்ன
நேரான நல்லவழி தெரிந்துமென்ன நேர்மையுடன் அறியாமல் இருந்துமென்ன
கூரான சாத்திரத்தைக் கற்றுமென்ன குவலயத்தில் வெகுகால மிருந்துமென்ன
தூரான கெட்டவழி சென்றுமென்ன துறையோடு காலம்வரை யொன்றுங்காணே

2981.
காணவே பிரபஞ்ச வாழ்க்கையாவும் கருத்துடனே கொண்டவர்க்கு ஒன்றுமில்லை
தோணவே நூலாதி நூல்கள்தோறும் துடர்ந்துமே சடலமது இறக்கவென்று
மாணவே சித்தர்முனி ரிஷிகளெல்லாம் மாராட்டமாகவல்லோ நூல்செய்தார்கள்
வேணவே காலாங்கி நாதர்தம்மால் கண்டறிந்த யான்சொல்வேனே
2982.
சொல்லவென்றால் பூலோகம் இடங்கொள்ளாது சுருதிபொருள் சாத்திரங்கள் மிகவும்பொய்யாம்
வெல்லவே மெய்யொன்றும் புகலவில்லை ஈலே சாத்திரத்தை பாடிப்போட்டார்
அல்லலுடன் தேகாதி தேககாலம் அலைச்சலுடன் சாத்திரத்தை பார்த்து மாண்டார்
கொல்லனது ழீதியிலே வூசிவிற்ற கொடிதான கதைபோல என்முன்னாச்சே
2983.
அச்சென்ற தேகமது நித்யாநித்தம் அப்பனே யாமறிந்த வரைக்குஞ் சொல்வோம்
மூச்சடங்கி எனதையர் காலாங்கிநாதர் மூன்றுயுக கோடிவரை சீனந்தன்னில்
பேச்சொன்று மில்லாமல் சாமாதிதன்னில் பிணம்போல இருந்தாரே சிலதுகாலம்
வாச்சலுடன் வாசிதனையடக்கிக்கொண்டு வையகத்தில் சிலதுநாளா இருந்திட்டாரே
2984.
இருந்திட்ட் காலாங்கி தம்மைப்போல எழிலான சித்தர்முனி ரிஷிகளெல்லாம்
பொருந்தியே பூவுலகில் வாசிகொண்டு பொன்னுலக நாட்டுக்கு போனார்தாமும்
திருந்தியே ஒருவருந்தான் இருந்ததில்லை சிறப்புடனே வைகுண்டஞ்சேர்ந்தாரங்கே
வருந்தியே அழைத்தாலும் வருவதுண்டோ வருங்காலந் தானிருந்தால் வருகுந்தானே
2985.
தானேதான் இன்னமொரு புராணஞ்சொல்வேன் தாக்கான சீனபதிதன்னில் யானும்
காலான கமலமுனி சமாதிபக்கல் காத்திருந்தேன் வெகுகோடி காலமப்பா
தேனான கமலமுனி சீஷரென்போர் தேவனிட சமாதியிடங்கண்டேன்யானும்
பானான சமாதிக்கு முன்னதாக பட்சமுடன் தாமிருந்தார் பண்பதாமே
2986.
பண்பான சீஷவர்க்கந்தன்னைக் கன்டேன் பட்சமுடன் அவரைக்கேள்விகேட்டேன்
திண்பான சீஷர்களும் அதிதஞ்சொன்னார் திகழான வதிதமது என்னவென்றால்
ன்பான முதற்சீஷன் சொன்னமார்க்கம் வாகுடனே வருஷமது கொன்டுசெய்தேன்
கண்பான இரண்டாங்கால் சீஷன்தானும் கனமுடனே மூனாண்டு தொண்டனாமே
2987.
தொண்டனாம் மூன்றாங்கால் சீஷன்தானும் சோர்வின்றி நாலாண்டு தன்னில்தானும்
விண்டமுடன் நாலாங்கால் சீஷன்தானும் விருப்பமுடன் நாலாவதாண்டுமட்டும்
கண்டிதமாய் ஐந்தாங்கால் சீஷன்தானும் கருத்துடனே வாறாண்டு தன்னில்மட்டும்
அண்டிடவே ஆறாங்கால் சீஷன்தானும் அப்பனே ஐயிரண்டு பத்துமாண்டே
2988.
பத்தான ஏழாங்கால் தன்னிலப்பா பாகமுடன் மூவைந்து மூண்டதாக
சித்தான எட்டாங்கால் தன்னில்தானும் சிறப்புடனே பஞ்சதசமாண்டு தானும்
கத்தான சித்தர்களும் தொண்டுசெய்து சூழ்ந்துமே வெகுகோடி காலம்பார்த்து
வத்தான சமாதியிடங்காத்திருந்தார் வாகுடனே கமலமுனி வாக்குகேளே

2989.
வாக்கான கமலமுனி சித்துதானும் வாகுடனே சமாதிக்குப் போகும்போது
நோக்கமுடன் கமலமுனி சித்துதாமும் நுணுக்கமுடன் தாமறிந்த வித்தையெல்லாம்
பாக்கமுடன் உபதேசம் செய்யவென்று பாண்மையுடன் சித்தர்களை அழைத்துதானும்
சோக்கமுடன் அவர்களிக்க வேண்டுமென்று சுந்தரரை தாமழைத்து கூறினாரே
2990.
கூறினார் சீஷர்களே கேளுமெனறார் குவலமுடி மன்னரெல்லாம் என்னைக்காத்தார்
தேரினதோர் சீஷர்களெட்டுபேர்கள் தெளிவுடைய பாலர்களு மாகையாலே
காரியங்கள் அனனதொருவித்தை மார்க்கம் கருத்துடனே கேளுமென்ன குருவுதாமும்
பாரினிலே இதிகாச வித்தைவிட்டு பாழான வித்தைகளை கேட்டார்தாமே
2991.
கேட்கையிலே ஒருசீஷன் வசியங்கேட்டான் கேடுள்ள ஒருசீஷன் மோகனமுங்கேட்டான்
நீட்டமுடன் ஒருசீஷன் வாதங்கேட்டான் நினைவான வாதத்தை போதியென்றான்
வாட்டமுடன் ஒருசீஷன் பிரணவத்தைக்கேட்டான் வாகுடனே பிரணவத்தை வுச்சரிக்க
நாட்டமுடன் ஒருசீஷன் ஞானங்கேட்டான் நலமான குளிகையது கேட்டார்தாமே
2992.
கேட்டாரே குளிகையது மார்க்கந்தன்னை கெவனமுடன் குளிகையது வேண்டுமென்றான்
பூட்டமுடன் ஒருசீஷன் புன்தங்கேட்டான் புகழான லோகத்தின் வுளவுகேட்டான்
காட்டமென்ற ஒருசீஷன் நிதியுங் கேட்டான் கருவான தயிலத்தின் மறைப்புகேட்டான்
மாட்டிமையாமொரு சீஷன் தவத்தைக்கேட்டான் மார்க்கமுடன் பலபலவாய் கேட்டார்பாரே
2993.
பாரேதான் சீஷவர்க்கம் கேட்கும்போது பலபலவாம் துறையோடு முறைமையெல்லாம்
நேரேதான் குருவான கமலர்தாமும் நேர்மையுடன் சமாதிக்குள் செல்லுமுன்னே
கூரேதான் அவரவர்க்கு தக்கபாகம் குறிப்புடனே தாம்கொடுத்தார் கமலர்தாமும்
ஆரேதான் சீஷவர்க்கமான போக்கு உகமையுடன் ஞானோப மோதிட்டாரே
2994.
ஓதவே யுகங்கோடி காலந்தானும் வுத்தமனும் சமாதிதனில் இருந்தாரங்கே
நீதமுடன் சமாதிக்கு பூசைமார்க்கம் நேர்மையுடன் நாள்தோறும் செய்திருந்தார்
காதமெனும் சீனபதிமூன்று காதம் கமலமுனிதன்னை யவர்மாந்தரெல்லாம்
வேதமுடன் சிவபூசை மார்க்கத்தோடு வேள்விகளு மனேகமதாய் நடத்துவாரே
2995.
நடத்துகையில் சீனபதி சென்றபோது நாதாந்த காலாங்கி நாதர்தம்மை
திடத்துடனே குருதனையே காணவென்று தீரமுடன் சமாதிக்கு சென்றேன்யானும்
மடபதியா மாயிரம்பேர் சீஷவர்க்கம் மகத்தான குருதனையே காணவென்று
வடகோடி கானகத்தில் மாந்தரெல்லாம் வளமுடனே சமாதிபக்க லிருந்தார்காணே
2996.
காணவென்றால் அவர்பெருமை யாருக்குண்டு காசினியில் இவரல்லால் ஒருவர்க்குண்டோ
வேணபடி மகிமையது யாருக்குண்டு வேதாந்த காலாங்கிநாதர்க்குண்டு
நீணமுடன் சமாதிதனைக் காணவென்று நேர்மையுடன் அங்கிருந்தேன் சிலதுகாலம்
தோணவே எனதையர் காலாங்கிக்கு சோடசமாம் உபசாரம் சொல்லொணாதே

2997.
சொல்லவென்றால் ராஜாதிராசர்கில்லை சூரியாதி சந்திராதி யவருக்கில்லை
வெல்லவென்றால் இவர்போலும் சித்துமுண்டோ மேதினியில் கண்டதில்லை சமாதிசித்து
புல்லவே திரியாமல் பூசைமார்க்கம் போற்றவார் காலாங்கி தம்மைத்தானும்
அல்லவே யவர்கிருபை வேண்டுமென்று வனேகமாம் கோடிப்பேர் வருணிப்பாரே
2998.
தருணமுடன் சித்தாதி சித்தரெல்லாம் வளமையுடன் அவர்தமக்கு வணக்கம்சொல்வார்
கருணையுடன் அவர்பாதம் தொழுதுநிற்பார் காவலுடன் சித்தர்களும் சமாதிபக்கம்
தருணமது சமாதிக்கு முன்னதாக தாழ்மையுடன் காத்திருந்த சித்துதாமே
2999.
சித்தான காலாங்கி கிருபையாலே சென்றேனே குளிகையது பூண்டுகொண்டு
சத்தான லோகமெல்லாஞ் சுத்திவந்தேன் சாங்கமுடன் காணாத காட்சியெல்லாம்
முத்தான காண்டமது மூன்றுக்குள்ளே முடிவுபெற பாடிவைத்தேன் லோகமார்க்கம்
நித்தமுமே காலாங்கி யாமுந்தானும் நிதந்தோறும் பூசையிலே நினைக்கின்றேனே
3000.
நினைக்கையிலே காரியங்கள் எல்லாஞ்சித்தி நீணிலத்தில் அவர்போலுஞ் சித்துமுண்டோ
வனைதோறும் காலாங்கி நூலைப்பார்த்து மார்க்கமுடன் வர்ச்சித்தே பூசிப்பார்கள்
சினத்தவரு முதலாவார் காலாங்கிதம்மால் சீருலகில் கீர்த்தியுடன் வாழலாகும்
வினைப்பயனும் விட்டுமல்லோ புண்ணியனாவாய் வேதாந்தத் தாயினது வருளுமுண்டே
3001.
அருளான செல்வமுண்டு கியானமுண்டு அப்பனே குருசம்பிரதாயமுண்டு
பொருளுண்டு புகழுண்டு போகமுண்டு பொன்னுலகப்பதி தனிலேயிடமுமுண்டு
இருளகன்று சூரியன்போல் விலாசமுண்டு எழிலான அஷ்டவிதபாக்கியமுண்டு
மருளகன்று வைகுண்டபதி என்னாளும் வாழ்வுண்டாய் வாழ்த்துமல்லோ இருப்பார்முற்றே

# போகரின் சப்த காண்டம் – 7000

3001.
ஓடியே சதாசிவன்தான் பாதங்காப்பு வுரைத்திடுவேன் போகரேழாயிரத்தில்
தேடியே சத்தசாகரமதாக திறமாகப் படிவைத்தேன் சத்தகாண்டம்
கூடியே காலாங்கி நாதர்பாதம் குருவான நாதாக்கள் பாதம்போற்றி
ஆடியே வயித்தியமாம் நாலாங்காண்டம் அப்பனே வாதமது காப்பதாமே
3002.
தானான சத்தசாகரமுங் கண்டேன் தானான சத்ததீவுகளுங் கண்டேன்
வேனான சத்தநதி தானுங்கண்டேன் வேகமுடன் அஷ்டதிக்கு தானும்கண்டேன்
கோனான அஷ்டபாலகரைக் கண்டேன் கொடிதான அஷ்டதேவாலயங் கண்டேன்
பானான பராபரியை மனதிலெண்ணி பாங்குபெற பாடிவிட்டேன் மகிமைபாரே
3003.
பாரேதான் குளிகையது பூண்டுகொண்டு பண்புடனே சீனபதிசென்றேன்யானும்
நேரேதான் சீனபதி மூன்றுகாதம் நேர்மையுடன் சுத்திவந்து வுளவுகண்டேன்
சீரேதான் பூமிவளம் யானுங்கண்டேன் சிறப்பான அவர்பூமியிதுவேயாகும்
கூரேதான் நாதாக்கள் கண்டதில்லை கொற்றவனே யான்கண்டேன் பூநீராமே
3004.
ஆமேதான் பூநீரின் வளப்பங்கேளிர் அகிலமெலாம் பூநீர்கள் மெத்தவுண்டு
தாமேதான் பாண்டிவளமெத்தநாடு தாக்கான யாவடையார் பிரம்மதேசம்
நாமேதான் கண்டபடி சேரநாடு நாதாக்கள் சோழவள மெடுப்பார்பூமி
போமேதான் நெடுங்காலம் தன்னிற்சென்று பொங்கமுடன் தானெடுப்பார் பூநீராமே
3005.
பூநீரில்ன்னம் வெகுதளமுஞ்சொல்வேன் புகழான காளஸ்திரி சிவகெங்கைதானும்
பூநீராம் பாலுவனம் பூம்பாறையாகும் புகழான திண்டுக்கல் பசுமலையுமாகும்
சோநீராந் தில்லைவனம் காளிங்கமடுவு சொர்ணமென்ற பூமியது வடமதுரையாகும்
தேநீரான் தென்மதுரை வயோத்திநகராகும் தெளிவான பொன்னகரந் தானுமாமே
3006.
ஆமேதான் பாஞ்சாலன் பூமிவளமாகும் அப்பனே தென்புவனம் வடபுவனமாகும்
தேமேதான் புல்லவே தீர்த்தக்கரையாகும் தேன்விளையும் நர்மதா வடமேருமாகும்
போமேதான் இத்தாதிதேசநாடு பொலிவான வளர்பூமி என்னலாகும்
மாமேதான் பூநீரு எடுக்குங்காலம் பகருவேன் காலமது செப்பக்கேளே
3007.
கேளேதான் சித்திரா பருவமுன்னும் கெணிதமுடன் பங்குனிக்கு முன்னதாக
தாளேதான் அமாவாசை பூரணவட்டம் நாள்தேடி பரிபாஷை தாமுணர்ந்து
பாளேதான் போகாமல் நாளைப்பார்த்து பாரினிலே எல்லவரும் நூலாராய்ந்து
வேளேதான் சித்தர்நூல் நுணுக்கம்பார்த்து வேதாந்தத் தாயினது உபவாசங்கேட்டே
3008.
கொண்டேதான் உபவாசமிருந்து கொண்டு காடான கோடிமலை தேசங்கண்டு
கண்டேதான் காணாறுதேசம்விட்டு காடுமலை நதிவனமுந் தான்கடந்து
விண்டேதான் பூநீருமெடுக்குங்காலம் விண்ணுலகில் சித்தர்முனி சொல்லைப்போலே
அண்டர்முனி ராட்சதர்கள் இருக்குங்காலம் அங்கனவே தாம்போனார் மாந்தர்தாமே

3009.
மாந்தராம் தவயோகி சிவயோகிதானும் மார்க்கமுடன் முப்புவனங்காணவென்று
வேந்தர்பதி முதலான தேசராஜர் வெகுகோடி மாந்தரெல்லாம் முப்பைக்காண
போந்தமுடன் நிலாப்பருவம் தன்னிற்சாமம் பொங்கமுடன் நடுவேளை சாமந்தன்னில்
சாந்தமுடன் பிரணவத்தின் மாறல்கொண்டு சட்டமுடன் பூநீருமெடுப்பார்தாமே
3010.
எடுக்கையிலே சீனபதிதேசந்தன்னில் எழிலான பூநீரு மெடுக்குமார்க்கம்
அடுக்குடனே யோராளின்கீழ்மட்டாக அப்பனே யவர்பூமி தன்னைத்தோண்டி
இடுக்கமென்ற குழிதனிலே மண்ணைத்தானும் யெழிலாகத் தான்பரப்பீ மூடிப்போடு
ஒடுக்கமுடன் கெட்டணைகள் அதிகங்கொண்டு வுத்தமனே பன்னாடை மேலேசாத்தே
3011.
சாத்தியே மூலங்கள் என்னும்குழல்கள்தன்னை சட்டமுடன் தானிருந்து சாற்றக்கேளு
நேர்த்தியுடன் குழல்தனையே பூமிதன்னில் நேர்மையுடன் தானிடித்து சில்லுபோடு
பூர்த்தியுடன் மூன்றாநாள் வெடியச்சாமம் பொங்கமுடன் தான்திறந்து பார்க்கும்போது
காத்திரமாய் கதிர்கதிராய் பூநீர்தாமும் கதிரவன்போல் பூர்த்திருக்கக் கண்டிட்டோமே
3012.
கண்டிட்டோம் வாதிகளு மொன்றாய்க்கூடி கடுவே பூநீரையெடுத்துவந்து
அண்டமென்னும் கற்சுண்ணம் முடிப்பதற்கு அரகரா பிண்டமென்ற செயநீர்தன்னால்
விண்டபடி மேகமென்ற யந்நீர்தானும் விருப்பமுடன் தானெடுத்து பூநீர்தன்னை
கொண்டபடி பாண்டமதில் இட்டுமைந்தா கூறுவேன் காச்சலென்ற விபரங்கேளே
3013.
கேளேநீ பூநீரைக்காச்சவேதான் கெனிதமுடன் தான்கரைத்து மைந்தாகேளு
மாளவே மறுபாண்டம் தெளிவிருத்து மார்க்கமுடன் காய்ச்சடுவாய் பூநீர்தன்னை
மாளவே தசதீட்சை இப்படியே சேயாகும் மானிலத்தில் செய்வார்கள் இந்தமார்க்கம்
சூளவே இன்னமொரு பாகங்கேளு சுடரொளியாம் பரிதிமுகம் செய்வார்பாரே
3014.
செய்வாரே தினந்தினமும் தீட்சையப்பா செம்மையுடன் பூநீரை ரவியில்வைத்து
பெய்யவே பனிநீரை பூநீரில்விட்டு பேரான ரவிமுகத்தில் வைத்தபோது
துய்யவே பூநீராம் பூவேபார்க்கும் துகளற்ற வெண்மையது கதிர்போலாகும்
மெய்யடனே இப்பாகஞ்செய்வார்மாந்தர் மேதினியில் இன்னமொரு பாகங்கேளே
3015.
பாகமென்றால் பாகமது சொல்லொண்ணாது பாவையுட கருவான செயநீராகும்
போமென்ற செயநீரும் பிண்டமாகும் பொங்கமுடன் பனிக்குடமாஞ் சலமேயாகும்
வேகமென்ற பூநிரைவிட்டு மைந்தா விருப்பமுடன் சலமதினில் கரைத்துநீயும்
சாகமுடன் தசதீட்சை யிப்படியேயாகும் சட்டமுடன் செய்துவந்தால் பூர்க்கும்பாரே
3016.
பூத்ததொரு பூவெடுத்து சொல்லக்கேளும் புகழான பூவுடனே பச்சைப்பூரம்
நேர்த்தியுடன் வீரமது காலதாக நேர்மையுடன் சீனமது வரையதாகும்
கீர்த்தியுடன் வெடியுப்பு சமனதாக கிருபையுடன் பூரமது தானுங்கூட்டி
மாத்தியே சரக்கெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து மன்னவனே கல்வமதில் மாட்டிடாயே

3017.
மாட்டவே பிண்டமென்ற செயநீர்தன்னால் மயங்காமல் நாற்சாமம் அரைத்துத்தீரு
வாட்டமுடன் பில்லைதட்டி காயவைத்து வளமாக வகல்தனிலே மூடிமைந்தா
நீட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து நேர்மையுடன் ரவிதனிலே காயவைத்து
நாட்டமுடன் தான்போடு கோழியாக நாயகனே பில்லையது பூர்க்குந்தானே
3018.
தானான பில்லையது பூர்க்காவிட்டால் தகைமையுடன் புடமதுவும் பின்னும்போடு
கானான பில்லையது கறப்பேராது கடுஞ்சுருக்கு ஒருவேளை சிவக்கும்பாரு
மானான பில்லையது மறுபடியுமப்பா மயங்காமல் செயநீரில் அரைத்துக்கொண்டு
கோனான குருவருளால் பில்லைதட்டி கொப்பெனவே ரவிதனிலே காயப்போடே
3019.
போடவே பில்லையது சத்தமிட்டால் பொங்கமுடன் ஓட்டிலிட்டு சீலைசெய்து
நீடவே ரவிமுகத்தில் காயவைத்து நேர்மையுடன் சீலையது வலுவாய்ச்செய்து
கூடவே கோழியென்ற புடந்தான்போடு கொப்பெனவே பில்லையது பூர்க்கும்பாரு
தேடவே பூநீராம் வன்னமாகும் தெளிவான சரக்கெல்லாம் தட்டிப்போடே
3020.
போமென்று விடுகாதே பின்னுங்கேளு போக்கான சரக்கெல்லாம் கட்டுதற்கு
வேமென்ற சத்துரு மித்துருவுஞ் சேர்த்து வேகமுடன் வசகமது செய்துகொண்டு
நாமென்ற வாக்கு பொய்யாகாமற்றான் நலமாக சட்டிதனில் மணல்தான்கொட்டி
நாமென்ற மேல்சட்டி கொண்டுமூடி சட்டமுடன் தானெரிப்பாய் சாமம்நாலே
3021.
நாலான சாமமது எரித்தபோது நலமான பில்லையது பூர்க்கும்பாரு
காலான பில்லையது காரமெத்த கடுக்காரச் சுண்ணமென்றே செய்யலாகும்
பாலான சுண்ணமதை மஞ்சள்தன்னில் பாச்சினால் மஞ்சளது சிவந்துபோகும்
மேலான சரக்குக்கு காலனாகும் மேன்மையுடன் சரக்கனைத்தும் கொல்லுந்தானே
3022.
கொல்லுமே பாஷாணமுப்பத்திரண்டும் கொடிதான சரக்கனைத்தும் நீற்றுப்பாரு
வெல்லுமே நவலோகம் நீறிப்போகும் வேகமுடன் சூதமது துடித்துக்கொல்லும்
புல்லுமே காரசாரங்கள் தானும் புகழான முப்புவால் மடிந்துபோகும்
கல்லைகளும் முப்புவால் நீறிப்போகும் காடெல்லாந்தான் விளையும் மூலியாமே
3023.
மூலியாம் சாறுவரா தழைகளெல்லாம் முப்பூவி லணுவளவு பட்டாக்கால்
கேலியாம் தழைகளெல்லாம் சலமாய்ப்போகும் கெவனமுடன் குளிகைக்கு முப்புவாகும்
வாலிபப்பெண்ருதுவாவால் முப்புவாலே வளமுடனே காயமது கற்றூணாகும்
சாலியனாம் வண்ணானும் காணமாட்டான் சட்டமுடன் முப்பூவின் வளமைபாரே
3024.
வளமுடனே முப்பூவைக் கண்டபோது வாகுடனே யேமத்துக் குறுதியாச்சு
பளமையுடன் வயித்தியமும் வாதயோகம் பலிக்குமடா முப்பூவின் மார்க்கத்தாலே
இளமையுடன் முப்பகலும் முப்புவாலே எழிலுடனே நீயுமொரு சித்தனாவாய்
நளபதியும் முப்பூவையுண்டபோது நரைதிரையு மற்றுமல்லோ ராஜனாமே

3025.
ராஜனாம் ராஜாதிராசனாவான் நலமான முப்பூவின்தன்மார்க்கத்தால்
போஜனுமே விவர்க்கீடு சொல்லப்போமோ பொங்கமுடன் முப்புவின் பெருமையாலே
கோஜபீஜங்களது முப்பூவாலே குவலயத்தில் காயகற்பம் முப்பூவாலே
பாசமுடன் சித்தர்முனி ரிஷிகள்தாமும் பாரிலே கர்ப்பமுண்டு இருந்தார்தாமே
3026.
இருந்தாரே கோடிரிஷிசித்தர் தாமும் எழிலான முப்பூவை முடித்துக்கொண்டு
திருத்தமுடன் சமாதியினிலிருந்துகொண்டு சீர்பெறவே யனேகவித சித்செய்தார்
பொறுந்தவே பூமியிடப் பாகங்கண்டு புகழான முப்பூவை கண்டறிந்து
வருந்தியே முடித்தவர்கள் கோடாகோடி வளமுடனே பதங்கெட்டார் கோடியாமே
3027.
கோடியாஞ் சித்தர்களி லொருவருண்டு கவலயத்தில் குருமுடிப்போன் ஒருவருண்டு
தேடியே பார்த்தாலும் கிடைப்பதில்லை தேசத்தில் விட்டகுறைநேருமானால்
கூடியே அவர்தனக்கு கிட்டும்பாரு கிட்டாவிட்டால் விட்டகுறை யில்லையென்று
நாடியே கர்மானுபவத்தினாலே நாட்டமுடன் அறிந்துகொள்ள நீதியுண்டே
3028.
உண்டான சாத்திரத்தில் அனேகஞ்சொன்னார் உத்தமர்கள் ரிஷிகோடி முனிவர்தாமும்
அண்டமுடன் பிண்டங்களை அறியாமற்றான் அனேகமதாய் சுட்டலைந்து கெட்டார்கோடி
கண்டபடி சாத்திரங்கள் தாறுமாறாய் காசினியில் தம்மனம்போல் பாடிவிட்டார்
விண்டவர்கள் கண்டவர்கள் யாருமில்லை வஇருப்பமுடன் பூநீரை கெடுத்தார்தாமே
3029.
தாமான பிண்டமது நடுப்பிண்டத்தை தாக்கான மடிப்பிண்டம் தலைப்பிண்டம்தான்
கோமான மாதர்களுங் கொண்டுவந்து கொப்பெனவே பூநீரு காச்சவென்று
நாமான சாத்திரத்தின் வுளவுகாணார் நாட்டிலே எந்நூலைபாராமற்றான்
சாமானமான கவியேழாயிரத்தை சாங்கமுடன் பாராமற் கெட்டார்தாமே
3030.
கெட்டான கோடிமனு ராஜரெல்லாம் கேடுகெட்ட கருமிகளு மாந்தர்தாமும்
சுட்டாரே முப்பூவைக் காணாமற்றான் சுட்டதினாலாபமென்ன லோபங்கண்டார்
விட்டகுறை இருந்ததினா லிந்நூல்பார்த்து விருப்பமுடன் வாதமதைக் காணலாச்சு
இட்டமுடன் சத்தகாண்ட மேழாயிரத்தில் எழாலாகப் பாடிவைத்தேன் மறைப்பில்லைதானே
3031.
மறைவான பொருளெல்லாம கண்டாராசய்ந்து மார்க்கமுடன் வாதமதைச் செய்யவேண்டும்
குறைவான பொருளறிந்து சேர்க்காவிட்டால் குற்றம்வரும் வாதத்திற்குறுதியில்லை
நிறைவான பொருளையல்லோ விட்டார்மாந்தர் நீனிலத்தில் வெகுகோடி கெட்டார்வீணில்
பறைவான சாத்திரத்தை முன்பின்னாக பாடுபட்டு பாராமல் மடிந்தார்தாமே
3032.
மடிந்ததினால் மானிலத்தில் கற்பமுண்டு மறைவாக மண்மேலே இருந்தார்தாமும்
முடிந்ததொரு காயாதிகற்பந்தன்னை மூதுலகில் பாடுபட்டு கிடையாமற்றான்
படிந்ததொரு கூடுவிட்டு கூடுபாய பாழான தேகமதை மெய்யெனறெண்ணி
வெடிந்தமட்டு மாயாதிசாகரத்தை விட்டொழிக்க வகைதேடி மாண்பர்தாமே

3033.
மாண்பான பயிர்களெல்லாமொன்றாய்கூடி மயக்கமுடன் சாத்திரத்தில் பிரிவுதோன்றா
காண்பான வவரவர்கள் செய்தகாப்பு கடையேடு முடியேடு நடுவேடுந்தான்
வீண்பான முப்புவகை மெய்யென்றெண்ணி விண்ணுலகில் சாத்திரத்தின் வழிபோகாமல்
சாண்பாம்பை யானாலுந்தடிகொண்டடிக்க தாரணியில் மறந்துவிட்ட காதையாமே
3034.
காதையாம் இப்படியே தெளிவுகாணார் காசினியில் வூசிகொள்ள திராணியற்று
பாதையாம் துலாங்கொண்ட கணக்கைப்போல பாரினிலே குருமுடிக்க சூட்சங்காணார்
மேதையாம் பஞ்சனையிற் சுகம்கண்டார்போல் மேதினியில் சாத்திரத்தைப் பார்த்துமென்ன
வேதையாம் பொருளறிந்து போனவர்க்கு விருப்பமுடன் வாதமது லயிக்கும்பாரே
3035.
பாரேதான் அண்டபிண்ட மறியவேண்டும் பாரினிலே அண்டமதை யாருங்காணார்
நேரேதான் முப்பூவு பார்க்கும்போது நெடிதான அண்டமென்ற கல்தானப்பா
கூரான பரதிவினால் உற்பத்தியாச்சு கொடிதான விஷக்கல்லு அண்டக்கல்லாம்
சேரேதான் சிற்றண்டம் பேரண்டமாகும் சிறப்பான நடுவண்டமென்னும்பாரே
3036.
பேரான சுக்காங்கல் பிரம்மக்கல்லாம் பெருமையுள்ள மூதண்டக்கல்லுமாகும்
சீரான படிகக்கல் லென்றும்பேரு சிறப்பான குழியானை யென்றும்பேரு
தாரான குடுகுக்கல் என்னும்பேரு தாக்கான கண்ணகக்கல் என்றும்பேரு
பாரான பச்சையென்ற கன்னக்கல்லு பாங்கான உதகமென்ற கல்லுமாச்சே
3037.
கல்லான கல்லதனைக் காணவேண்டும் காசினியில் ஆருந்தான் காணமாட்டார்
புல்லான பூநீரை யறியமாட்டார் புகழான சோனக்கல் கண்ணமப்பா
மல்லான மண்கட்டி யென்பார்பாரு வையகத்தில் தாமறியார் மகிமைதன்னை
செல்லான புத்துக்குள் இருக்குங்கல்லாம் ஜெகஜோதி மகிமைதனை காணார்தாமே
3038.
காணாரே கருவாளி காண்பானானால் காசினியில் விண்டிடுவான் கருத்துளோர்க்கு
தோணவே பூவுலகில் தொட்டாலுந்தான் தொல்லுலகில் மாண்டிடுவார் மாந்தர்தாமும்
நாணவே சாத்திரத்தை மிகவாராய்ந்து நாதாக்கள் சொல்லுதையும் மிகவுங்கேட்டு
நீணவே கற்பாந்திர மிருப்பதற்கு நீணிலத்தில் கைமறைப்பு யாவுங்கேளே
3039.
கேட்கையிலே சாத்திரமாம் யுகாந்தகால மிருப்பதற்கு வாசிநோக்கு
நீட்கமுடன் வாசியிலே இருந்துகொண்டு நீடாழி யுலகத்தை வெறுக்கப்பண்ணி
சூட்சமுடன் சின்மயத்தை யறிந்துபோற்றி சுருதியுள்ள கருவிகருணாதியெல்லாம்
தாட்கமல பீடமதை பணிந்துபோற்றி சதாகாலம் சமாதியிலே இருக்கநன்றே
3040.
நன்றான சரக்குதனைக் கொல்லவென்று நாட்டமுடன் சத்துரு மித்துருவுங்கண்டு
குன்றான மலைகளிலே பாஷாணமுண்டு கொப்பெனவே கொண்டுவந்து பூநீர்ச்சுண்ணம்
பன்றான வுமிழ்நீரால் மத்தித்தேதான் பாலகனே சுண்ணமென்ற பாஷாணத்தில்
தன்றான கட்டிக்கு வங்கிபூட்டி தகைமையுடன் கோழியென்ற புடத்தைப்போடே

3041.
போடயிலே பற்பமது கடுங்காரந்தான் பொலிவான கண்டர்தமைக் கொல்லும்பாரு
சாடவே முன்போல வுமிழ்நீர்தன்னில் சட்டமுடன்தான்குழைத்து புடத்தைப்போடு
நீடவே கடுங்காரச்சுன்னமாகும் நேர்மையுடன் சத்துருவுக் காலமித்ரன்
வாடவே திரியாதே மைந்தாகேளு வளமுடனே சுண்ணமதை எடுத்துக்கொள்ளே
3042.
கொள்ளவே சூதமதுக் கணுவுபோடு கொடிதான யேமரசந் துள்ளிப்போகும்
விள்ளவே சூதமது மடிந்துதானால் வேகமுடன் கெவனமென்ற குளிகையாச்சு
மெள்ளவே குளிகையது கொண்டபேர்க்கு மேதினியில் சதாகாலம் சாவேயில்லை
உள்ளபடி காலாங்கி நாதர்பாதம் உத்தமனே நாம்வணங்கி பாடினோமே
3043.
பாடினோம் போகரிஷி சொன்னமார்க்கம் பாருலகில் பொய்யாது மெய்யேயாகும்
தேடியே யிவ்வேதை முப்பின்மார்க்கம் தெளிவுறவே பாடிவிட்டேன் சத்தகாண்டம்
நீடவே நான்காவ திந்தகாண்டம் நீடவே சாகரம்போலிதுவேயாகும்
கூடவே ஏழாயிரங் காண்டமப்பா கூறவே முடியாது திண்ணந்தானே
3044.
திண்ணமுடன் இப்பாகம் யாருஞ்சொல்லார் திறமையில்லா சுந்தரனார் மறைந்தார்தாமும்
வண்டமுடன் கொங்கணவர் கரிதிசொல்லி வளமையுடன் தாமறைத்தார் பிண்டப்போக்கை
சுண்ணமுடன் செய்வதற்கு கொங்கணவர்பாதம் சுத்தமுடன் செயநீரை மறைத்துச் சொன்னார்
எண்ணமுடன் இடைக்காடர் தமராநந்தர் ஏத்தமுட னென்போலே சொன்னார்பாரே
3045.
சொன்னதினால் விதிமுறைகள் காணாதப்பா துரைகோடி முகங்கோடி தொந்தங்கோடி
வின்னமிலா செய்வதற்கு ரிஷிகள்தாமும் விட்டகுறை வெட்டவெளி என்றுவிட்டார்
நன்மையாய் நாதாக்களடிபணிந்து நலமுடனே பாடிவைத்தேன் முப்பூதிட்சை
பன்னவே இந்நூலின் தீட்சைபார்த்து பாகமுடன் செய்பவனே வாதியாமே
3046.
வாதியா மின்னமொரு மார்க்கம்பாரு மகத்தான வேதையிது சுளுக்குவேதை
சோதியாங் கேசரத்தின் வித்தையப்பா சுளுக்கிலே எவருந்தான் சொல்லமாட்டார்
நீதியுடன் சூதமென்ற ராஜர்தம்மை நேர்மையுடன் சேரதுதான் கொண்டுசென்று
பாதியுமைதாள்பணிந்து மைந்தாநீயும் பட்சமு னுப்பூவில் ஒருமாபோடே
3047.
போடயிலே மதயானைவீரங்கி பொங்கமுடன் சூதமது கட்டும்பாரு
கூடயிலே சூதமது குளிகையானால் கோடான கோடிவித்தை ஆடலாகும்
வாடையிலே சீவனத்துக் கில்லாவிட்டால் வளமாக வங்கமதை யுருக்கிக்கொண்டு
மூடயிலே குளிகையது போட்டுப்பாரு முனையான வங்கமது வெள்ளியாச்சே
3048.
ஆச்சென்ற வெள்ளியது பூசைக்கப்பா அப்பனே நாதாக்கள் முனிவர்தாமும்
மாச்சப்பா வாதவித்தை செய்துமல்லோ மகதேவாலயங்கள் பூசைசெய்தார்
பாச்சவே தேவாலயங் கட்டுதற்கு பாகமுடன் தங்கமென்ற போக்குசொல்வேன்
காச்சவே செம்புதனையுருக்கிக்கொண்டு கருவான முப்பூவை போட்டிடாயே

3049.
போடவே செம்பதுவும் ஊறலேகி பொலிவான தங்கமது வாகும்பாரு
நீடவே முன்சொன்ன குருவைத்தானும் நினைவாக நவலோகந்தன்னிலீய
கூடவே மாற்றதுவும் அதிகங்காணும் குணமான யேமம் என்னலாகும்
தேடவே சீவனத்துக் கில்லாவிட்டால் திறமான முப்பூவை அறிந்துகாணே
3050.
காணவே யின்னமொரு கருமானங்கேள் கருத்துடனே சொல்லுகிறேன் மைந்தாநீயும்
தோணவே பூநாகஞ் சேர்தானப்பா தோற்றமுடன் தானெடுப்பாய் செம்பையல்லோ
பூணவே செம்புதனை பரணைபண்ணி போக்கான சூதமது வுள்ளேவிட்டு
வேணவே பூநீரில் குன்றிபோடு வேகமுடன் மேற்பரணை கொண்டுமூடே
3051.
மூடவே மண்சீலை வலுவாய்ச்செய்து முனிநாதர் சொற்படியே புடமேபோடு
கூடவே கோழியென்ற புடத்தைப்போடு குணமுடனே புடமாறி எடுத்துப்பாரு
வாடவே சூதமது மடிந்துமேதான் வளமாக களங்கமது போலேயாகும்
தேடவே செம்புதனில் நூற்றக்கொன்று தெளிவான களங்கமதை கொடுத்திடாயே
3052.
கொடுக்கையிலே மாற்றதுவு மெட்டேயாகும் குணமான பொன்னதுவும் சவளைபோலாம்
விடுத்துமே பொன்னதனை வாரடித்து விருப்பமுடன் பூங்காவி புடத்தைப்போடு
கொடுத்திடவே மாற்றதுவும் பத்தேயாகும் தேராமப் பசுமைநிறச் செம்பொன்னேயாகும்
எடுத்துமே சிவாலயங்கள் கட்டநன்று எழிலான சூதமென்ற குருவுமாமே
3053.
குருவான சூதமதைப் பின்னுமைந்தா கொப்பெனவே ரவியெடுத்து பானைக்குள்ளே
திருவான பரணைதனில் வைத்துபின்பு திகமுடனே கெந்திதனை களஞ்சிபோடு
மருவான பரணைமூடிப்பின்பு மார்க்கமுடன் புடம்போடக் கட்டிப்போகும்
வுருவான களங்கமது வாரும்பாரு வுத்தமனே களங்கெடுத்து செப்பக்கேளே
3054.
செப்பவென்றால் நாவில்லை பாவுமில்லை செம்மையுடன் வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
ஒப்பமுடன் தானுருக்கி கொடுத்துப்பாரு ஓகோகோ நாதாக்கள் வித்தையாகும்
அற்பமென்று நினையாதே மைந்தாகேளு அரசர்களும் இந்தமுறை காணமாட்டார்
சொற்பமுடன் மாந்தருக்கு வுண்மையாக தோற்றவே இந்தமுறை தெளிந்திட்டேனே
3055.
தெளியவே இன்னமொரு மார்க்கம்பாரு தோற்றமுடன் நாமுரைப்போம் மாந்தர்க்காக
ஒளுவுடனே சீனபதிமார்க்கத்தார்கள் ஒக்கமுடன் செய்துவரும் வித்தையாகும்
வெளியாக செத்தவரை காண்பதற்கு வெட்கமுடன் ஜாலமொன்று சொல்வேன்பாரு
வளியான வட்டாரந் தன்னிலேதான் வளமுடனே மாளியொன்று செய்தார்தாமே
3056.
தாமான மாளிகையாஞ் செப்பக்கேளு தடநீளம் சதுரமது சொல்வேன்பாரு
வாமான குறுக்குவரை இருபதாகும் வாகான நெடுக்குவரை நாற்பதாகும்
நாமான கணக்குவகை வீடுசொல்வோம் நாற்சதுர மெழுநூற்றிருபதாச்சு
சாமான மாகவல்லோ துரைகள்பதாறும் சட்டமுடன் கண்ணாடி கதவுமாட்டே

3057.
மாட்டவே கண்ணாடி வாசலுக்குள் மார்க்கமுடன் குழலொன்று நிறுத்தியங்கே
நீட்டமுடன் எழுநூற்றிருபதுக்கும் நெடிதான குழலொன்று வெவ்வேறாகும்
வாட்டமுடன் கண்ணாடி சுற்றோரந்தான் வாகுடனே காந்தமென்ற கம்பிதானும்
தேட்டமுடன் தானமைத்து நடுமையத்தில் தெளிவாக குழல்தனிலே பின்னிப்போடே
3058.
பின்னவே நாகமென்ற குழலில்தானும் பேரான கம்பியது சேர்ந்தபோது
நன்மையாய் வேகமுடன் வாய்வினாலே நளினமுடன் காற்றதுவும் மிகவேதங்கி
பன்னவே சப்தமது மிகவுண்டாச்சு பாங்குடனே வாசல்வழி தன்னிலப்பா
சொன்னதுபோல் செவிதனக்கு கேட்கும்பாரு சூட்சமது கருவாளி காண்பான்பாரே
3059.
பார்க்கவென்றால் வாசல்முகம் வொவ்வொன்றுக்கும் பாங்குடனே பிரதமைகள் தானமைத்து
ஏக்கவே ஆண்பெண்ணாய் ரூபமமைத்து எழிலான வாடைகளும் கொண்டுசாத்தி
தீர்க்கமுடன் பூதமென்ற கண்ணாடிக்குள் திறமையுடன் பூதமதைக்காணலாகும்
சேர்க்கவே கண்ணாடி வருக்கந்தோறும் சிறப்பான கருமையைத் தீட்டிடாயே
3060.
தீட்டவே கருமையை நாட்டிப்பாரு திறமான வஞ்சனமு மிதற்கீடல்ல
நீட்டமுடன் எழுநூற்று சொச்சம்வீட்டில் நிலையான மைதனையே வமைத்தபின்பு
கூட்டமுடன் ஒவ்வொரு கண்ணாடிதன்னில் குறிப்புடனே ரூபமதைக்காணலாகும்
வாட்டமுடன் சிகரமது மேல்வட்டத்துள் வாகுடனே பரிதியது ஒளிவுகாணே
3061.
காணவே விழிதனிலே வஞ்சனமுமிட்டு கருத்துடனே பரணவத்தை மாறிக்கொண்டு
தோணவே வெட்டவெளி தன்னில்நின்று தோற்றமுடன் பரிதிதனைக் கண்டபோது
மாணவே விழிதனிலே நிமையொட்டாமல் மாற்கமுடன் கடிகையது பத்தேயாகும்
பூணவே பூமிதனில் நின்றுகொண்டு புகழான நடுநெற்றி மையம்பாரே
3062.
மையமாய் மட்டமது நின்றுகொண்டு மயங்காமல் விண்ணுலகம் பார்க்கும்போது
பையவே தோற்றுவது ரூபங்காட்டும் பான்மையுடன் சுயரூபம் தன்ரூபம்போல
மெய்யான தேகமது வடிவந்தோன்றும் மிக்கான ரூபமது வர்ணங்காணும்
பொய்யான தரிசனமும் மெய்யேயாகும் போக்கான ரூபமது மெய்போலாமே
3063.
ஆமேதான் இப்படியே ரூபங்காட்ட அனேகவித பான்மைகளூ மிதனாலாகும்
நாமேதான் சொன்னபடி நான்காங்காண்டம் நாட்டிலே மானிடர்கள் பிழைக்கவென்று
போமேதான் போகரேழாயிரத்தில் பொங்கமுடன் மாண்டவரைக் காணவென்று
தாமேதான் மாளிகையொன்று செய்தேனப்பா சட்டமுடன் ஜெகஜால மாளியாச்சே
3064.
ஆச்சப்பா ஜெகஜால மாளிதன்னில் அப்பனே யாம்கோடிவரைதான்சொல்வோம்
பேச்சப்பா பேசுதற்கு என்னசொல்வோம் பேரான செத்தவர்பேர் கேட்கச்சொல்லி
கூச்சலுடன் பின்னிருந்த பிரணவத்தை குறிப்புடனே மாறியல்லோ குறளிதன்னால்
மூச்சிருந்து பேசுமது பேச்சைப்போல முன்னிருந்து பேசும்வகை மொழிசொல்வேனே

3065.
மொழிசொன்ன வார்த்தைக்கு முன்னேநின்று மூர்கமுடன் குறளியது பின்னேசென்று
வழிசெல்லும் பிரதமையின் வாசல்முன்னே வழிமடக்கி வார்த்தையது முன்னேகூறும்
பழியில்லா மாந்தருக்கு ஜெகஜாலத்தை பாங்குடனே பூதமது கூறும்பாரு
முழியுடனே முகங்காட்டி பல்லைக்காட்டி மூர்க்கமுடன் கோபித்துப் பேசுந்தானே
3066.
தாணான குறளியென்ற பூதந்தானும் தகமையுடன் தாம்நினைத்த காரியத்தை
வானாக மாளிகையினுள்ளே சென்று மார்க்கமுடன் ஜாலமென்ற கண்ணாடிக்குள்
பானமுடன் உள்ளிருந்து பேசும்பாரு பாலகன்போல் வார்த்தையது மிகவேசொல்லும்
தேனமிர்தங் கொண்டதொரு சொல்லைபோல தெளிவாக முன்னின்று பேசும்பாரே
3067.
பேசுகையில் ரூபமதை யாருங்காணார் பேருலகில் மாயவித்தை ஜாலவித்தை
காசுபணங்கேட்டாலும் கொடுக்கும்பூதம் காசினியில் பூதமதை வசமேசெய்வார்
தேசுலவு நாட்டுவளமெல்லாந்தோன்றும் தேசத்தில் அதிதமென்ற வித்தையப்பா
வீசுபுகழ் மண்டபத்தில் ஜாலவித்தை வெகுவாகச் செப்புகிறேன் இன்னங்கேளே
3068.
கேளே தான் பூதாதி வித்தைசொல்வேன் கெடியான குறளியென்ற பூதந்தானும்
வீடேதான் பிரணவத்தின் வசமதாக்கி வேகமுடன் ஜாலமென்ற மாளிதன்னில்
நாளேதான் போகாமல் கதிரோன்முன்னே நளினமுடன் பூதமதை ஏவல்செய்து
சூளேதான் ஜாலமென்ற மாளிதன்னில் சூட்சமுடன் குறளிதனை வசியமாட்டே
3069.
ஆட்டேதான் ராசாதிராசர்தானும் அங்ஙனவே தான்மயங்கி வார்த்தைசொல்வார்
கேட்டேதான் காலாங்கி நாதர்தம்மால் கிருபையுடன் ஜாலமென்ற மாளிதன்னில்
நீட்டமுடன் வாசல்வழி சென்றவர்க்கு நிலையான வட்சரத்தை மாரல்செய்து
கூட்டமென்ற குழல்தனிலே ஓதிப்பின்பு கூர்மையுடன் ஓசையது கேட்குந்தானே
3070.
ஓசையா மெழுநூற்றிருபதுக்குள் ஒப்பமுடன் சப்தமது கேட்கும்பாரு
ஆசையுடன் தலைமாளி முதலில்நின்று அப்பனே நடுமாளி மையமட்டும்
பூசையுடன் கடமாளி நெடுகுமட்டும் பொங்கமுடன் தந்தியென்ற கம்பியதனால்
பாசையுடன் இரும்புக்கு கம்பிமாட்டி பாகமுடன் குழல்தனிலே சில்லுபோடே
3071.
போடேதான் வாசல்வழி முழுதுந்தோறும் போக்கான மையதனை திலதம்போடு
நீடேதான் திலதமதைப் பார்க்கும்போது நிலையான கோட்டைவழி மாளிதோன்றும்
தேடவே வஞ்சனத்தின் மையினாலே தேசத்திலுள்ளதொரு வதிசயங்கள்
கூடவே மாளிஜாலமென்ற மாளிதன்னில் குறிப்புடனே பார்ப்பதற்குத் தோற்றமாமே
3072.
தோற்றவே மையாழி மாளிதன்னில் துப்புரவாய் நடுமையம் இருந்துகொண்டு
ஏற்றமுடன் ஒவ்வொரு வறைகள்தன்னில் எழிலான பிரதமையின் பக்கம்சென்று
கூற்றனைப்போல் குறளியிட தந்திரத்தால் கோடான கோடிவழி நடத்தலாகும்
சாற்றலுடன் காமென்ற மாளிதன்னில் சதுராகத் தானடந்த விதிகள்கேளே

3073.
விதியுடனே முடிப்பதற்கு இன்னஞ்சொல்வேன் வேதாந்தத் தாயினது வருளினாலே
மதிபோன்ற சந்திரனைப்போலே யொத்தமாது மையாளின்ன மொருபதுமைதானும்
கதிரோனைத்தானெரிக்கும் ஜோதியப்பா காசினியில் ஒருவருந்தான் கண்டதில்லை
துதியுடனே பூதமென்ற குறளிதானும் துப்புறவாய் அதிசயங்கள் சொல்லுந்தானே
3074.
சொல்லுவதில் அவர்மனதில் தோற்றமெலாம் சூட்சாதி சூட்சமதைக் கண்டுதானும்
வெல்லுவது பிரணவத்தை சொல்வேன்பாரு விருப்பமுடன் அம் இம் வங்கென்றேயோது
புல்லுதற்கு ஆங்தீங்ரீயுஞ்செனவும் புகழான உயிரெழுத்தை மாறல்செய்து
சொல்லுதற்கு சோடசமாம் வாலைச்சக்கரம் தெளிவுடனே போட்டுமல்லோ மாறிக்கொல்லே
3075.
கொள்ளவே உச்சாடனம் வுரைப்பேன்கேளு கொடிதான பவமகற்றி நீயுமைந்தா
விள்ளவே பாணமுடன் சத்திபூசை விருப்பமுடன் தான்செய்தால் எல்லாஞ்சித்தி
துள்ளவே வனுமாரை வரவழைத்துத் துறையுடனே வறுகோணச் சக்கரத்தில்
எள்ளளவும் பிசகாமல் பழிசேராமல் எழிலான பிரணவத்தை முன்னேகூறே
3076.
கூறயிலே மங்சிங் என்றேயோது கொடிதான வுருவதுதான் லட்சமாகும்
தீறமுடன் நிருவாணமாயிருந்து திறமுடனே முக்கோண வட்டத்துள்ளே
சீறலுடன் வராகிதன்னை வரவழைத்து சிறப்புடனே பூசையது செப்பக்கேளும்
நேரமுடனே நடுச்சாம வேளைதன்னில் நேர்மையுடன் மசானகரையிருந்து செய்யே
3077.
செப்பவென்றால் பூசையது வின்னங்கேளு தெளிவுடனே மசானமதில் சக்கரந்தான்
மெய்யுருவங் கொண்டுமல்லோ  புவனைவாலை மேதினியில் கைவசமாய் செய்துகொண்டு
பொய்யுடலை மெய்யென்று நம்பியேதான் புகழான வஞ்சனத்தை மாற்றுதற்கு
மைவிழியாள் பாசமதை மிகவும்நீங்கி மார்க்கமுடன் தவவிலையில் நின்றிடாயே
3078.
நின்றுமே வராகமென்ற சிரசின்மேலே நிலையான பதிவிளக்கை ஏற்றிவைத்து
தன்னுடனே மசானத்தின் சவத்தின்மேல் சட்டமுடன் தீயெரிந்து வேகும்போது
வென்றிடவே வராகத்தின் சிரசின்மேலே வினையமுடன் பதிவிளக்கே யேற்றிவைத்து
சென்றிடவே குறளிதனை வரவழைத்து சிறப்புடனே கொள்ளிதனை காவல்வையே
3079.
வைத்தவுடன் கொள்ளிவாய் பிசாசுதானும் வாகுடனே குறளிக்கு காவல்நின்று
செத்ததொரு சவத்தின்மேல் இருந்தபன்றி சேரவே சிரசதுவும் எகிரித்தானும்
மெத்தவே ஓங்காரமிட்டுமேதான் மேன்மையுடன் குறளிக்கு எதிர்முன்னாக
சத்தமுடன் கூச்சலிட்டு வராகன்தானும் சதுர்முகமாய் குறளிமுன் பேசும்பாரே
3080.
பாரேதான் மசானத்தில் பூசைசெய்து பட்சமுடன் குறளியைத்தான் வசியஞ்செய்து
நேரேதான் ஜாலமென்ற மாளிதன்னில் நேர்மையுடன் நாலுபுறம்காவல்வைத்து
சீரேதான் செத்தவர்பேர் கேட்கும்போது சிறப்புடனே குறளிவந்து முன்னேகூறும்
வேரேதான் சஞ்சார மனிதரில்லை வினாவுக்கு விடைகொடுக்கும் குறளியாமே

3081.
குறளியாம் ஜாலமென்ற மாளிதன்னில் குறிப்பான நடுவாசல் திட்டுவாசல்
திறமுடனே கூட்டமது எட்டுபேராய் தீரமுடன் எணதிசையாம் திக்குபாலர்
மறளுடைய மேல்வாசல் முன்னேநின்று மதிப்புடைய நாகமென்ற குழல்சந்தாலே
சுறளுடனே மேல்வட்ட பரிதிமுன்னே சூட்சமுடன் செத்தவரைக்காணலாமே
3082.
காணலாம் அவரவர்கள் அடையாளத்தை கண்டுமே மகத்தெதிரே பேசலாகும்
தோணவே பேசுதற்கு முன்னேதானும் தோற்றமுடன் மயினமது நிறம்போல்நிற்கும்
பூணவே அந்தவண்ணம் என்னலாகும் புகழான ரூபமது கண்ணிற்றோற்றும்
வேணவே உபசாம் மிகவும்பேசும் விருப்பமுடன் முன்னின்று மறையும்பாரே
3083.
மறையிலே நாம்நினைத்த ரூபம்தோற்றும் மன்னவனே மயங்காதே மதிகொள்ளாதே
திரையுடனே முடியல்லோ கண்ணாடிக்குள் தீரமுடன் முன்னின்று வார்த்தைகூறும்
முறையுடனே தான்புகலும் முனிநாதாகேள் முன்னின்று போவதற்கு பின்னேசென்று
குறையன்றி குன்னடந்த காரியத்தை கூறிடுமே மனிதரைப்போல் கூறுமாமே
3084.
கூறவென்றால் எழுநூற்று இருபதுக்குள் கொப்பெனவே மந்திரத்தை உச்சாடித்து
தீரமுடன் குறளிதனை கிட்டழைத்து திகழுடனே ஞானோபதேசஞ்சொல்லி
கோதமுடன் கைதனிலே மையைப்பூசி கொப்பெனவே கண்ணாடிமேலேவைத்து
பாறமுடன் வட்டமொத்தம் விண்ணைப்பார்க்க பருவமுடன் உருவமது தெரியும்பாரே
3085.
தோணுமே ஜெகஜால மாளிதன்னில் தோற்றமுடன் கருவெல்லாம் இதற்குள்ளாடும்
காணுமே கையொளியில் வட்டந்தானும் களிப்புடனே மையுருவாய் காணலாகும்
ஏணவே கருமறைப்பை காணலாகும் எழிலான சமயமது வாய்க்கும்பாரு
வூணவே வட்டமென்ற பக்கம்நின்று உத்தமனே நடுமையத்தி லர்தந்தீட்டே
3086.
தீட்டையிலே கருமான மின்னமொன்று திறமுடனே செப்புகிறேன் மைந்தர்க்காக
வாட்டமுடன் ஜெகஜால கொள்ளிதன்னை வாகுடனே தானழைத்து திட்டங்கூறி
தேட்டமுடன் பிரணவத்தை முன்பின்னாகத் தெளிவுடனே ஓதிவைத்த படிநீதானும்
சசட்டியே குறளிக்கு பிரணவத்தைக்கூறி சூட்சமுடன் அட்சரத்தை சுறுக்கிமாறே
3087.
மாறப்பா வஞ்சமாய் வீட்டுக்குள்ளே மன்னவனே நடுமையம் நின்றுகொண்டு
கூறப்பா செத்தவரைக்காணவென்று குறிப்புடனே பட்சம்வைத்து காண்பதற்கு
நேரப்பா வந்தவர்பேர் வூர்தானென்ன நிலையான இருப்பிடமும் ரூபமென்ன
ஊரப்பா முன்னிருந்த ரூபமென்ன வுத்தமனே இறந்தபின்பு ரூபங்கேளே
3088.
கேளவே வடவத்தின் வரணங்கேளு கெடியான வாடையென்ற ரூபங்கேளு
நீளவே வாபரணப் பெயருங்கேளு நிலையான கைத்தொழிலை யின்னங்கேளு
மீளவே மரபினிடவாச்சாரந்தான் மிக்கான ஒழுக்கமென்ற வாச்சாரங்கேள்
மாளவே மாண்டதோர் வருஷங்கேளு மன்னவனே மாதமென்ற முடிவுங்கேளே

3089.
கேட்கையிலே இறந்ததோர் நாளுஞ்சொல்லும் கெவுனமுடன் நாழிகையும் முன்னேகூறும்
நீட்கமுடன் அடையாளம் சொல்லும்போது நிஷ்களங்கமாகவல்லோ உண்மைதோன்றும்
சூட்சமுடன் குறளிக்கு திலகவித்தை சுத்தமுடன் சொல்லுகின்ற தன்மையுண்டு
வேட்கமுடன் பில்லைதனை வசியங்செய்து லோகமதில் வெகுசித்து வாடலாமே
3090.
ஆடலாம் வெகுதந்திரம் குறளிகொண்டு அப்பனே சூனியமும் இதனாலுண்டு
தேடவே குட்டியது மலைக்குட்டிதானும் தெளிவுடனே நாம்சொன்ன காரியத்தை
ஊடவே ஒளிந்திருந்து வதையச்செய்யும் உத்தமனே இருள்மாளி காணலாகும்
நாடவே ஜாலக்காள் மோகினியுந்தானும் நலமான குட்டியென்ற வீரியந்தானே
3091.
தஅனான வீரியனும் ஆரியனாய்வேண்டும் தகமையுள்ள வீரியனாயிருப்பானானால்
வேனான மந்திரத்தை மிகவும்பேசும் மிக்கான கிரமவிதி தானடத்தும்
பானான குருமுறைபோல் யாகஞ்சொல்லும் பாலகனே யாகமது குறுதிகூறும்
தேனான வீரியனாங் குட்டிதன்னை தெளிவுபெற லோகமதில் வசியஞ்செய்யே
3092.
செய்யவே குட்டியெனும் வசியமானால் ஜெகத்திலே கோடிவித்தை யாடலாகும்
பையவே மாந்தர்மேலேவதாகும் பாங்குடனே கல்லதனை எறியலாகும்
மெய்யுடனே ஜெகஜால வித்தையப்பா மேதினியில் ஆருந்தான் செய்யவில்லை
பெய்யவே சங்கலீயன் கறுப்பன்தானும் பேரான வண்ணமா ரேழுமாமே
3093.
ஏழான வண்ணமார் காவலாளர் எழிலான ஜாலமென்ற மாளிதன்னில்
பாழான வையன்மார் பிடாரிதானும் பச்சையென்ற தேவதையும் காளியோடு
வாழாத குமரிகளாஞ் சத்தகன்னி வளமுடனே பச்சையென்ற பல்லக்குதன்னை
தாழாமல் தோலதனில் எடுத்துக்கொண்டு தகமையுடன் காளிதனை தூக்குவாரே
3094.
தூக்கியே ஜாலமென்ற மாளிதன்னில் துப்புரவாய் காவலுடன் இருந்துகொண்டு
நோக்கமுடன் தேவதையை வசியஞ்செய்து நொடிக்குள்ளே கோடிவித்தை யாடலாகும்
பார்க்கவென்றால் லோகமதில் மாந்தர்யாவும் பதபதைத்து நடுநடுங்கி கதருவார்கள்
வாக்குடனே வரமுனக்கு பதமுந்தந்து வாகுடனே செல்லுமென செப்புந்தானே
3095.
சொல்லவென்றால் இன்னம்வெகு கூத்துகேளிர் செயலான நாதர்முனி ரிஷிகள்தாமும்
வெல்லவே பூதமதை வசியஞ்செய்து வேணவுபசாரமது வதன்கையாலே
புல்லவே யேவல்தனைச்செய்யவென்று புகழாக வசியமது செய்துகொண்டு
மெல்லமே தம்பணிக்கு ஆனதாக்கி மேன்மையுடன் சித்துகளு மாடினாரே
3096.
ஆடினார் வெகுகோடி காலமப்பா அவனியிலே சித்தர்களும் முனிவர்தாமும்
கூடியே பில்லியென்ற பூதந்தன்னை குணபடுத்தி தம்வசமாய் செய்துகொண்டு
தேடியே வெகுகோடி நிதிகள்தன்னை தேசமதில் பூதத்தின் வசியத்தாலே
நீடியே கர்ப்பாந்த காலமட்டும் நீனிலத்தில் தாமிருந்தார் சித்தர்தாமே

3097.
சித்தான சித்துவகை யின்னுஞ்சொல்வேன் ஜெகதலத்தில் அனேகவித பூதமுண்டு
முத்தான வேதாள பூதமப்பா மூதுலகில் ராஜர்களும் வசியஞ்செய்வார்
நித்தமுடன் வேதாளமுந்தானும் நேர்மையுடன் விக்கிரமாதித்தனுக்கு
சுத்தமுடன் வாகனமாயிருந்துகொண்டு தொல்லுலகில் வெகுகால மிருந்தார்தாமே
3098.
இருந்துமே இன்னம்வெகு வினோதங்கேளு எழிலான ஜாலமென்ற மாளிதன்னில்
பொருந்தவே யெல்லவரும் பார்க்கவேதான் பொலிவான யெக்காள ஜாலந்தன்னை
திருந்தவே எழுநூற்று இருபதுக்குள் திறமான மாளிகையாம் பக்கோரத்தில்
வருந்தியே தானிருந்து ஜாலமாளி வாகுடனே குடியிருப்பு கண்டோம்பாரே
3099.
கண்டோமே யின்னமொரு கருமானங்கேள் கருவான நாகார்ச்சுன் ஆசீர்மத்தில்
தண்டுளவ மாலையணிபூண்டுகொண்டு தக்கனுட பாகமதில் தானிருந்து
கொண்டல்வண்ணன் அச்சுதனும் கோமான்தானும் குடியிருப்பு கோட்டைதனில் காவல்நின்ற
துண்டரிகமானதொரு ராட்சதபூதம் துடியான தேவனா பூதமாமே
3100.
ஆமேதான் பூதமது தன்னைத்தானும் அப்பனே ஜாலமென்றமாளிதன்னில்
போமேதான் நடுமையம் மத்திவாசல் பொங்கமுடன் கறுவீரன் பத்திரகாளி
வேமேதான் கறுப்பண்ணன் டாகினிதானும் மிக்கான காட்டேரி சங்கிலிநாயன்
தாமேதான் சொன்னபடி மசானவீறி சட்டமுடன் தெய்வங்கள் அனேகமுண்டே

# போகரின் சப்த காண்டம் – 7000

3101.
உண்டான தெய்வங்கள் அனேகமுண்டு உத்தமனே சர்வகலைக்கியானமுண்டு
பண்டான பொய்களவு சூதுமுண்டு பண்பான விசுவாசம் இல்லைகண்டீர்
திண்டான ராட்சதமாம் பூதந்தன்னில் திறளான நவகோடி ரிஷிகளெல்லாம்
கண்டிதமாய் இத்தாதி பூதந்தன்னில் காசினியிற் கோடிவித்தை யாடலாமே
3102.
ஆடலாம் பலபேத பூதந்தன்னால் வப்பனே வஷ்டகர்ம வித்தையாகும்
நீடவே ஜாலமென்ற மாளிதன்னில் நேர்புடனே கோடிவரை யாடலாகும்
பாடவே பூதங்கள் தன்னினாலும் பாங்குடனே சங்கீதங்கூறலாகும்
தேடவே எக்காள ஜாலந்தன்னை தெளிவுடனே யாட்டிவைக்கும் பூதம்பாரே
3103.
பாரேதான் அஷ்டவிதமாளிதன்னில் பாங்குடனே அஷ்டவித வாத்தியங்கள்
நேரேதான் ஒருமாளி சின்னமாகும் நேர்ப்புடனே ஒருமாளி திரிசங்காகும்
வேரேதான் ஒருமாளி பிரம்மதானம் வேகமுடன் ஒருமாளி துத்தாரியாகும்
சேரேதான் ஒருமாளி தம்பூறுமாகும் சிறப்பான ஒருமாளி மத்தளமுமாமே
3104.
ஆமேதான் ஒருமாளி கைத்தளமுமாகும் வப்பனே ஒருமாளி தம்பறையுமாகும்
வாமேதான் எட்டுவித மாளிதன்னில் வாகுடனே பலபேத வாத்தியங்கள்
நாமேதான் ஒருமித்த வண்ணமாகும் நலமுடனே மாளிதனில் சென்றுமேதான்
பாமேதான் மந்திராட்சரத்தை யோத பாடுமே பலவித வாத்தியங்கள் தானே
3105.
தானான வாத்தியங்கள் கேட்கும்போது தகமையுடன் மாநதரெல்லாம் பிரமிப்பாகும்
கோனான மாளிதன்னில் குடியிருப்பு கொற்றவனே யாருந்தான் இல்லஜகண்டீர்
தேனான வமிர்தமது போலேயல்லோ தெளிவான வாத்தியங்கள் கூறலாகும்
பானான பலபேத தொனிகள் தோற்றும் பாரினிலே மாந்தரெல்லாம் பிரமிப்பாரே
3106.
பாரேதான் எழுநூற்றிருபதுக்குள் பகருவேன் கோகர்ண ஜாலந்தன்னை
நேரேதான் நெடுஞ்ஜால மாளிகைக்குள் நேர்மையுடன் கிடையொன்று நாட்டியேதான்
வாரேதான் நெடுங்கம்பி நாலுபக்கம் வாகுடனே தானிருத்தி விட்டம்பூண்டு
சேரேதான் மேல்வட்டங் கயர்கள்மாட்டி சிறப்புடனே கீழ்வட்டம் மணிகள்மாட்டே
3107.
மாட்டவே நடுக்கம்பந்தன்னிலேதான் மதிப்புடனே மேற்சிகரம்நின்றுகொண்டு
ஓட்டமுடன் கயறுதனைப் பிடித்துக்கொண்டு ஓங்கார சத்தமுடன் சுத்திவந்து
நாட்டமுடன் தரணிதனை அண்ணாந்துபார்த்து நயமுடனே குளிகைதனை வாயிற்பூண்டு
தேட்டமுடன் துதிக்கையிலே கரணம்தன்னை தெளிவாகக் காணுதற்கு ஜாலங்கேளே
3108.
கேளேதான் வஞ்சனமாம் மையைத்தீட்டி கெவனமுடன் லாடமதில் வசியம்பூண்டு
பாளேதான் போகாமல் கருவுதன்னை பாங்குடனே தேகத்திற்பூசக்கேளு
நாளேதான் வர்ணரூபங் கெஜரூபமாக்கி நானிலத்தில் மெலிருந்து குதிப்பாயானால்
சூளேதான் சகஸ்திரமாம் யானைத்தோற்றம் சுந்தரனே பார்வைக்கு வாதாயந்தானே

3109.
தானான சகஸ்திரமாம் யானைரூபம் தகமையுடன் மாந்தரெல்லாம் காணலாகும்
பானான பராபரத்தை காணமாட்டார் பாரினிலே கோகர்ணவித்தை காண்பார்
தானான வித்தையது கோகர்ணவித்தை தேசத்தில் கிட்டாது மாந்தருக்கு
வேனான சீனபதி தேசத்தார்கள் விருப்பமுடன் செய்கின்ற ஜாலமாமே
3110.
ஆமேதான் மச்சென்ற மாளிதன்னில் அப்பனே கோகர்ணவத்தை செய்வேன்
தாமேதான் கயர்தனிலே மேலேநின்று தாக்கான வூசியென்ற காந்தந்தன்னால்
வாமேதான் உச்சானிதன்னிலப்பா வேகமுடன் நின்றுகொண்டு கரத்தைவீச
சாமேதான் சகஸ்திரமாங் கரங்கள்தானும் சரஞ்சரமாய் வந்துவிழக்காணலாமே
3111.
காணலாம் வஞ்சனமாங் கருவினாலே காசினியில் வெகுகோடிவித்தை காண்பீர்
பூணலாம் மந்திரத்தின் வசியத்தாலும் போக்கான பிரணவத்தின் வாறலாலும்
தோணவே தேவதையும் வசியத்தாலே தோற்றமுள்ள கருவியிட பேதத்தாலும்
நாணவே சதாகாலம் மாளிசென்று நாட்டமுடன் ஜாலவித்தை யாடலாமே
3112.
ஆடலாம் ஜெககோடி பதிகள்கோடி அப்பனே வெகுகால மிருந்துகொண்டு
தேடலாம் சின்மயத்தின் கேசரமாம் வித்தை தெளிவுடனே ஆடுதற்கு யின்னங்கேளு
கூடலாம் கேசரத்தில் இருந்துகொண்டு கோடான கோடிவித்தை யாடலாகும்
நீடலாம் வானரத்தின்வித்தைகேளும் நெடிதான அங்குதனார் வித்தையாமே
3113.
வித்தையிலே யின்னமொரு வித்தைகேளும் வீரனாம்அங்குதனார் அனுமார்தானும்
நித்தமுடன் வஞ்சனமா மையைத்தானும் நீடுறவே உள்ளங்கை தன்னிற்தாக்கி
சுத்தமுடன் கேசரத்தி லிருந்துகொண்டு துப்புரவாய் அட்சரத்தை யோதும்போது
மத்திபத்தில் நடுமையமிருந்துகொண்டு மானிலத்தில் வஞ்சனத்தை போடுவாரே
3114.
போடையிலே ஜாதிவர்ணஞ் சொல்லக்கேளும் பொலிவான நீலவிழித்தானுமாக
நீடயிலே பூனையென்ற நேத்திரமாகும் நீடாழி வஞ்சனத்தை பார்க்கவென்றால்
கூடயிலே குபேரனென்ற பட்டணந்தான் குவலயத்தின் நிதிகளெல்லாங் காணலாகும்
தேடயிலே வனுமானும் முன்னேநிற்கும் தெளிவான தேவதையுங் காணலாமே
3115.
காணயிலே பிரணவத்தை யோதும்போது கருவான மைதனிலே மகிமைகேளு
தோணவே வீரபத்ரன் முன்னேநிற்பான் தோற்றுகையில் அனுமாருங் கொண்டுசெல்லும்
பூணவே ஸ்ரீராமர் வைத்தபொன்னை பொங்கமுடன் பாதாள வஞ்சனத்தில்
நாணவே யனுமாரும் மிகவேசொல்லும் நாட்டமுடன் நிதியெடுக்க ஜாலமாச்சே
3116.
ஆச்சென்று விடுகாதே யின்னங்கேளு அப்பனே யான்கண்டவரைக்குஞ் சொல்வேன்
நாச்சலுடன் எழுநூற்று சொச்சம்வீட்டில் நடுவாக மத்திமத்தில் சதுரம்போடு
வீச்சுடனே பதினைந்து வரைதான்போடு விவரமுடன் குறுக்கு வரை பதினைந்தாகும்
ஏச்சலுடன் நெடுகுவரை பதினைந்தாகும் எழிலான நூத்தியம்பதரையுமாச்சே

3117.
அறையான வீடுமுனை சூலல்போடு அப்பனே ரீங்காரங் கொண்டுமாறு
திரையோடு ஓங்காரமுள்ளடக்கி திட்டமுடன் எட்டியென்ற பீடமீதில்
முறையோடு மௌனமதாயிருந்துகொண்டு மூன்றெழுத்தும் ஐந்தெழுத்தும் ஓதித்தீரு
சிறையான வைரவனும் முன்னேநிற்பான் சீறலுடன் பிரணவத்தை யோதுவீரே
3118.
ஓதுகையில் அஞ்செழுத்தை வுள்ளடக்கி உத்தமனே நவ்வெழுத்தை மவ்வெழுத்திலூணி
தீதுரவே பகையாளிதன்னை நோக்கி திட்டமுடன் கற்பூரவொலிதான்கொண்டு
காதலுடன் வட்சரத்தை வுள்ளமர்த்தி கருவாகச் செய்பவனே சித்தனாகும்
நோதலுடன் வஞ்சனத்தை கையில்தீட்டி நோக்கமுடன் செய்பவனே சித்தனாமே
3119.
ஆமேதான் பிரணவத்தை வுச்சரித்து ஆண்டவனைத் தாநினைத்து வருளும்வோதி
தாமேதான் பாதாள வஞ்சனத்தை தாரணியி லெல்லவரும் கண்டுமெச்ச
வேமேதான் சத்துரு மித்துருவு தானும் வேகமுடன் சென்றுமல்லோ வுறவுபேசி
நாமேதான் ரீங்காரம் வுள்ளடக்கி நாட்டமுடன் ஓங்காரம் உள்ளேபூட்டே
3120.
பூட்டுகையில் பிரணவத்தையோதும்போது பொங்கமுடன் சத்துருமித்துருவுமாகும்
நாட்டுகையில் நசிமசிமசியென்றேயோத நாசமடா வஞ்சனத்தின் தயிலத்தாலே
வாட்டுகையில் குறளிமுதல் பூதபேதம் வஞ்சனாதேவிமுதல் வசியமாகும்
சூட்டுகையில் காலனவன் எதிரேநிற்கான் துரைராஜ வஞ்சனத்தின் மையின்போக்கே
3121.
போக்கான காலாங்கி நாதர்பாதம் பொங்கமுடன் யான்வணங்கி சீனதேசம்
நோக்கமுடன் காடுமலை வனாந்திரங்கள் நொடிக்குள்ளே சென்றுமல்லோ வேதைபார்த்தேன்
தாக்கவே சீனபதி தேசத்தார்கள் சட்டமுடன் எந்தனையும் குருவாயெண்ணி
வாக்குடனே குருமொழியாஞ்சீஷனென்று வசனித்தார் கோடியுகம் வசனித்தாரே
3122.
வசனித்தார் சீனபதி மாந்தரெல்லாம் வறைகோடி திசைகோடி வகுக்கக்கோடி
நிசமுடனே என்வாக்கு மெய்யென்றெண்ணி நீடாழி யுலகமெலாம் வசனிப்பார்கள்
தசமுடனே தாரிணியிலஞ்சனத்தை தாக்குடனே வெகுமாந்தர் செய்துபார்த்து
பிசகில்லா பிரணவத்தை மெய்யென்றெண்ணி பேருலகில் மாந்தரெல்லாம் துதித்திட்டாரே
3123.
துதித்தாரே காலாங்கி நாதர்தம்மை தோற்றமுடன் எந்நாளும் வாசீர்மித்து
மதிப்புடனே யவர்பாதம் தான்வணங்கி வகையுடனே எப்போதும் கருணைகூர்ந்து
கதிப்புடனே சமாதிதனிலிருந்துகொண்டு சதாகாலம் லாடமதில் மையேபூண்டு
விதிப்பயனை தானெண்ணி விண்ணின்மீதல் வெகுகாலம் தானிருந்தார் மாந்தர்தாமே
3124.
தாமான வின்னமொரு மார்க்கம்பாரு தயவுடனே மாணாக்கள் பிழைக்கவென்று
கோமானாம் பங்குனி சித்திரையிலப்பா கொற்றவனே பூநீறு விளையுங்காலம்
மானான பூநீரை தானெடுத்து மார்க்கமுடன் செப்புகிறேன் மைந்தாகேளு
பானான பூநீரை படிதான்ரண்டு பாகமுடன் வாரிவந்து செப்பக்கேளே

3125.
செப்பவென்றால் கற்சுன்னம் படிதான் நான்கு தெளிவான வமுரியது படிதான்பத்து
ஒப்பமுடன் நல்லெண்ணை படிதானைந்து உத்தமனே இரண்டையுந்தான் கலக்கிக்கொண்டு
நெப்பமுடன் தெளிவிருத்தி பின்னுங்கேளு நேர்ப்புடனே தான்காய்ச்ச வுப்பேயாகும்
துப்புறவே யுப்பதுவும் மிகவேபூக்கும் துறையாக வுப்பதுவை பத்துமுறை காச்சே
3126.
காச்சிடவே சாம்பலது செப்பக்கேளு கருவான சாம்பலது எருச்சாம்பலப்பா
நீச்சென்ற வெருச்சாம்பல் கொண்டுவந்து நிசமான குழம்பதுவைத்தானெடுத்து
பாச்சியே சல்லாவை மேலேபோட்டு பாகமுடன் குழம்பதுவை மேலேயூத்து
ஏச்சலென்ற வுண்டைதனை எடுத்துக்கொண்டு எழிலான ரவிதனிலே காயப்போடே
3127.
காய்ந்தபின்பு பாண்டமதிலிட்டு மைந்தாகவனமுடன் வரைப்பாண்டம் போட்டுமேதான்
தோய்ந்திடவே மல்லியென்ற யிலையைமைந்தா சுத்தமுடன் வதன்மேலே வைத்துக்கொண்டு
தோய்ந்திடவே மேற்சட்டி கொண்டுமூடி தெளிவாக சீலையது வலுவாய்ச்செய்து
பாய்ந்திடவே தீயெரிப்பாய் நாலுசாமம் பதமுடனே தானெடுப்பாய் பின்னுங்கேளே
3128.
பின்னுங்கேள் ஏரியிலே வளர்ந்த பிண்டம் பாரான இறைச்சியுடன் அதிகங்கொண்டு
வின்னமுடன் துவாரமது விட்டுமைந்தா விவரமுடன் வீரமது வொன்றேயாகும்
கன்னலுடன் பச்சையென்ற பூரந்தானும் கருவான பூநீரும் சரியாய்ச்சேர்த்து
பன்னவே சிப்பிக்குத் துவாரமிட்டு பாலகனே இம்மருந்தில் குன்றிபோடே
3129.
குன்றியா மருந்ததுதான் போட்டபின்பு குமுறவே தளவாயாஞ் சட்டிதன்னில்
வென்றிடவே யடுக்கடுக்காய் பரப்பிமைந்தா மேல்மூடி காற்றில்லா ஒடுக்கந்தன்னில்
பன்றிடவே வைத்தவுடன் சலமிரங்கும் பட்சமுடன் ஜெயநீரை எடுத்துபாலா
தான்றிடவே மேற்சொன்ன பூநீர்சேர்த்து சாங்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
3130.
நாலான சாமமது வரைக்கும்போது நலமான வுரவண்டு குழியானைதானும்
காலான சூதமுடன் பச்சைபூரம் கருவான வாறுபுள்ளி தண்டுஞ்சேர்த்து
பாலான சீனமுடன் காரஞ்சேர்த்து பாகமுடன் தானரைப்பாய் லகுவதாக
வேலான பில்லையது தட்டிமைந்தா வேகமுடன் ரவிதனிலே காயப்போடே
3131.
போடேதான் பில்லையது காய்ந்தபின்பு பொங்கமுடன் பேரண்டஞ் சுத்திசெய்து
நீடேதான் வகல்தனிலே கீழ்பரப்பி நேர்மையுடன் பில்லைதனை மேலேவைத்து
தூடேதான் மேலுமந்த பொடியைப்போட்டு துப்புறவாய் மெல்மூடி சீலைசெய்து
காடேதான் ரவிதனிலே காய்ந்தபின்பு கனமாகக் கோழியென்ற புடந்தான்போடே
3132.
புடமதுதான் தீயாறி எடுத்துப்பாரு பொங்கமுடன் சுண்ணாம்பு மட்டிபோலாம்
திடமுடனே பத்துமுறை இப்படியேபோடு திறமான சுண்ணமது வாகும்பாரு
தடமான சுன்னமது எடுத்துக்கொண்டு தகமையுடன் பேரண்டம் சிற்றண்டத்தோடு
கடமான சிப்பியொடு நண்டுதானும் கருவான நத்தையொடு சமனவாமே

3133.
நத்தையுடன் இவையெல்லாம் ஒன்றாய்க்கூட்டி நலம்பெறவே சிற்றண்டக் கருவாலாட்டி
முத்திபெற மூசையிட்டு வூதிப்பாரு உத்தமனே சுண்ணாம்பா யிருக்கும்பாரு
பத்தியுடன் வுலையில்வைத்து வூதும்போது பாங்கான சுண்ணாம்பாயிருக்கும்பாரு
வெத்தியுடன் சுன்னமதை எடுத்துக்கொண்டு வேதாந்தத் தாயினது வருளைப்போற்றே
3134.
போற்றியே சுண்ணாம்பைத்தானெடுத்து புகழாக மூசையொன்று பிடித்துமேதான்
ஆற்றியே முன்சொன்ன முப்புசுன்னம் அப்பனே தானெடுத்து மூசையிட்டு
தூற்றியே தேவதைக்குப் பூசைசெய்து துறைபோல முறைபோல சீலைசெய்து
மாற்றியே சுண்ணாம்புச் சீலைசெய்து மயங்காமல் புடம்போட நீறிப்போமே
3135.
நீறியதோர் பற்பத்தை எடுத்துக்கொண்டு நினைவாக இப்படியே பத்துமுறைபோடு
கூறியதோர் பற்பமது குருபற்பமாச்சு குணமான காரமென்ற காலனாகும்
மீறியதோர் சரக்கெல்லாங் கொல்லுங்காலன் மிக்கான பற்பமது குருவுமாகும்
தேறியதோர் பற்பமதில் எந்தபாகம் தெளிவாகச் செய்தாலும் தாக்கிடாயே
3136.
தாக்கவென்றால் கிரதங்கள் லேகியங்கள் தகமையுள்ள செந்தூரம் பற்பம்யாவும்
நோக்கமுடன் குளிகைகள் பாடம்யாவும் நுணுக்கமுடன் மாத்திரைகள் கட்டுவகையாகும்
சூட்சமுடன் தயிலங்கள் எண்ணைமுதல்யாவும் சுளுவான சூரணங்கள் முதலாய்
தூக்கமுடன் கடுகளவு பட்டால்போதும் துரையான மருந்தெல்லாம் வீறுமாமே
3137.
வீறான வவுஷதங்கள் முப்பூபட்டால் விடுபட்டுப்போகுமடா பிணிகளேது
கூறான வவுஷதங்கள் காரமெத்த குடிலமுடன் நோயெல்லாஞ் சுன்னம்பாரு
நீரான நேத்திரங்கள் சிவந்துகாட்டும் நெடிதான மேனியது கறுப்புமாகும்
தூரான நோயெல்லாங் காடேபோகும் துப்புறவாய் முப்பூவின் மகிமைதானே
3138.
தானான முப்பூவின் மகிமையாலே சட்டமுடன் சரக்கெல்லாங் கட்டும்பாரு
பானான சூதமது துள்ளியோடும் பாங்கான கெந்தியது நீறிப்போகும்
தேனான லிங்கமது செந்தூரிக்கும் தேற்றமுடன் பூரமதை பொருமிக்கொல்லும்
கோனான வீரமது பற்பமாகும் கெடிதான பாஷாணம் சாகும்பாரே
3139.
பாரேதான் நவதாது முப்பத்திரண்டும் படுமுன்னே சரக்கெல்லாம் மடிந்துகொல்லும்
நேரேதான் லவணவகை இருபத்தைந்தும் நேரான கற்பவகை முன்னூற்றுச்சொச்சம்
கூரேதான் சொன்னபடி சூட்சமுப்பு குன்றியிடை பட்டாக்கால் எல்லாமாளும்
வீரேதான் சரக்குக்கு நெடுங்காலனாகும் மிக்கான துருசுக்கு குருவுமாமே
3140.
குருவான கண்ரது குருவுமானால் குவலயத்தில் கோடிவித்தை யாடலாகும்
திரிவான வாமியவள் முன்னேநிற்பாள் திக்கெல்லா மெச்சுதற்கு சித்தனாவாய்
மருவான நாதாக்கள் ரிஷிகள்தாமும் மதிப்புடனே யுந்தனுக்கு வரமுமீவார்
கருவான வுளவறிந்த சித்தனாவாய் காசினியில் உன்னைப்போல் சித்தனுண்டோ

3141.
உண்டோதான் வையகத்தில் சித்தனுண்டோ ஒகோகோயுந்தனையும் ரிஷிதானென்பார்
திண்டான தேவமுனி யுன்னையென்பார் திறமையுள்ள நாதாக்கள் குருவேயென்பார்
சண்டாளமானதொரு கருமிமாண்பர் சட்டமுடன் பொய்நாத னென்பார்கண்டீர்
கண்டாலும் விடுவாரோ சித்துரூபம் காசினியில் சபித்திடுவார் உண்மைபாரே
3142.
பார்க்கவென்றால் நாதாக்கள் சித்துரூபம் பட்சமுடன் உந்தனிட அருகில்வந்து
தீர்க்கமுடன் வருந்தியல்லோ முப்புகேட்பார் திகமுடனே குருவெனக்கு வேண்டுமென்பார்
கார்க்கவென்று மன்றாடி குருகேட்டாலும் கர்த்தனே யந்தனிட கடாட்சமென்று
மூர்க்கமது வாராமல் முன்னேநின்று முடிவணங்கி யடிபணிந்து மொழரசொல்வீரே
3143.
மொழியான வார்த்தைக்கு முன்னேநின்று மோசமது வாராமல் முடிவுசொல்லி
வழியான துரையோடு மார்க்கஞ்சொல்லி வகையுடனே யவர்தமக்கு தொண்டுசெய்து
பழியான வார்த்தைக்கு இடங்கொடாமல் பட்சமுட னவர்மீதில் கிருபைவைத்து
சுழியான வாசிமுனை தன்னைநோக்கி சூட்சாதிசூட்சமத்தைக் கேட்டிடீரே
3144.
கேட்டளவில் வுன்மீதில் கிருபைவைத்து கேள்விக்குத்தாரவிடையுஞ்சொல்லி
நாட்டமுடன் பரிபோகம் மிகவுஞ்செய்து நயமுடனே சரசமுறைதானுரைத்து
தேட்டமுடன் மனதிறங்கி செய்துகொண்டு தெளிவான குருவதனை யடைந்துகொள்ள
வாட்டமுடன் லகுவுடனே பின்னுங்கேட்பார் வகைமோசம்போகாதே மன்னாகேளே
3145.
கேட்கவே யவர்தமக்கு களிப்புகொள்ள கெவனமுடன் குளிகையென்ற லேகியங்கேள்
சூட்சமுடன் மாணாக்கள் பிழைக்கவென்று தொல்லுலகில் அடியேனுங் கருணைகூர்ந்து
நீட்டமுடன் கோரக்கர்மூலி தன்னைநேர்மையுடன் தானெடுப்பாய் சேர்தான்ரெண்டு
வாட்கமல வட்டமென்ற பாண்டந்தன்னில் வகையுடனே காலாங்கி சொற்படிக்கே
3146.
சொல்லான சொல்லுக்குக் குறைநேராமல் தோற்றமுடன் ஆவின்பால் படிதான்கொண்டு
புல்லான சீலைதனைவேடுகட்டி புகழான கெஞ்சாவை மேலேவைத்து
கல்லான பாண்டமதை மேலேமூடி கடியான வாலுகையா மேலேவைத்து
மெல்லவே தீயெரிப்பாய் சாமம்ரெண்டு விருப்பமுடன் கண்டமட்டும் எரித்திடாயே
3147.
எரிக்கவே இப்படியே பத்துமுறைதானும் எழிலான கெஞ்சாவை சுத்திசெய்து
வெரிக்கவசம் போவதற்கு பின்னுஞ்சுத்தி வேகமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு
பொரிக்கவசம் நிம்பழத்தின் சாற்றினாலே பொருந்தவே பத்துமுறை முன்போற்றீட்சை
சரியுமே செய்யுகையில் கெஞ்சாசுத்தி சட்டமுடன் காலாங்கி உரைத்ததாமே
3148.
தாமான கெஞ்சாவை எடுத்துக்கொண்டு சட்டமுடன் ரவிதனிலே காயப்போடு
காமான கல்லுரலில் போட்டுமைந்தா கருவாகத் தூளிடித்துப் பொடியாய்ச்செய்து
வேமானமானதொரு வபினிதன்னை வேகமட்போவதற்கு பின்னுங்கேளு
சாமானமாகவேதான் எளநீர்தன்னால் சட்டமுடன் தீட்சையது பத்துசெய்யே

3149.
செய்யவே யபினுக்கு தீட்சையப்பா செப்புகிறேன் வருண்மைந்தா யின்னம்பாரு
துயஃயவே பசும்பாலாம் பசுமோராகும் துப்புரவாய் சுத்தியது நன்றாய்ச்செய்து
செய்யவே பத்துமுறை தீட்சைதானும் பேரான வபினுக்குச் செய்யவேண்டும்
உய்யவே தீட்சையது வானபின்பு உத்தமனே கடைசரக்கு செப்பக்கேளே
3150.
கேளேதான் சுக்குடனேவாள்மிளகுதானும் கெடியான கெசகெசா மராட்டிமொக்கு
வேளேதான் லவங்கமுடன் லவங்கப்பட்டை வேகமுடன் சாதிக்காய் சாதிபத்திரி
கோளேதான் நேராமல் ஜீராவும் குணமான ரூமஸ்திபாஜிபந்து
பாளேதான் போகாமல் பேதானாவும் பாங்குபெற லவங்கமென்ற பட்டைதானே
3151.
தானான பட்டையுடன் யிம்புராவும் தாக்கான மாசிக்காய் தான்றிக்காயும்
மானான கடுக்காயும் மகரப்பூவும் மாசற்ற ஏலமுடன் நெல்லிக்காயும்
கோனான குமட்டியின் விரையினோடு கொடிதான வூமத்தின் விரையுந்தானும்
பானான கெஞ்சாவின் விரையுந்தானும் பளிங்கான கொடிவேலிமஊலியாமே
3152.
ஆமேதான் மூலியொடு சூரைவித்து அப்பனே வேலியென்ற பருத்திதானும்
தாமேதான் வலம்புரியு மிடம்புரியுமாகும் தாக்கான வவமுக்கராவின் தோல்தானும்
வேமேதான் தாதுமாதுளையின்வேறும் மிக்கான வாத்தலரிசரளிதானும்
நாமேதான் சொன்னபடி யிருவேலிகூட்டி நயம்பெறவே சூரணமாய் செய்துகொள்ளே
3153.
கொள்ளவே கற்கவகை யின்னஞ்சொல்வேன் கோளாறுநேராமல் குருபதத்தால்
விள்ளவே தக்கோலம் பரங்கிப்பட்டை விருப்பமுடன் வாலுளுவை திப்பிலியுமாகும்
மெள்ளவே யிருசீரங் காட்ச்சீரம் மேலானவாய்விளங்கம் ஓமந்தானும்
அள்ளவே ரோஜனையும் பூவாலாகும் அப்பனே பூமிசக்கரையுமாமே
3154.
சக்கரையுந் சீந்தியொடு சதாவேலிதானும் தாக்கான பெருவாகை சிறுவாகையாகும்
ஒக்கவே தண்ணீரின் மிட்டானாகும் உற்பனமாம் தம்பலப்பூச்சிதானும்
சிக்கவே பாதிரிமுல்லைத்தானும் சீராவாஞ் செங்கழுநீர் பூண்டுமாகும்
தக்கவே சிவகரந்தை விஷ்ணுகரந்தை சட்டமுடன் சாட்டாணைக் கூடச்சேரே
3155.
சேரவே வசுவாசி மிளகுதானும் சிறப்பான வேரமுடன் ரேவல்சின்னி
தீறவே விச்சியுடன் ஆலம்வித்து திறமான பேயத்தி விரையுமாகும்
பாரமுடன் கடலாஞ்சி யட்டைதானும் பாங்கான நடுவன்னாகள் பட்டைகூட்டி
வாரவே விளாம்பழத்தின் வித்துகூட்டி வகுப்பான எலுமிச்சைவித்துமாமே
3156.
வித்தான கரிமிரட்டி வேறுங்கூட்டி விதமான கரும்பசளை செம்பசளையுமாகும்
முத்தான வெள்ளையென்ற குன்றிதானும் முனையான வாசனிட வித்துதானும்
சித்தான குறிஞ்சாவின் வித்துகூட்டி சிறப்புடனே எட்டியென்ற வித்துமாகும்
சத்தான வித்தாதி சரக்கையெல்லாம் சூட்சமுடன் களஞ்சியது வெடுத்துக்கொள்ளே

3157.
எடுக்கவென்றால் சரக்கையெல்லாம் ஒன்றாய்கூட்டி எழிலான சூரணமாய் செய்துகொண்டு
தொடுக்கவே முன்சொன்ன சரக்கோடொக்க துறையோடும் முறையோடும் சேர்வைகண்டு
கொடுக்கவே சீனியது பாவுசெய்து கொற்றவனே சூரணத்தைப் போட்டுமேதான்
விடுக்கவே நெய்தேனும் விட்டுக்கூட்டி விருப்பமுடன் மெழுகுபதந் தன்னிற்கிண்டே
3158.
கிண்டையிலே மதுரமாம் திராட்சிதானும் சிளையான கதலியிட தேனுமாகும்
பாண்டுடனே கொடிமுந்திரி ரசமுமாகும் பாங்கான குங்குமப்பூ கஸ்தூரிதானும்
விண்டிடவே வாலுகையாம் அடுப்பிலேற்று வீரான ஜலமதுவும் போகக்கிண்டி
கண்டுமே மெழுகு பதந்தனிலிறக்கி கணபதியைதான்நினைத்து கருத்தில்நில்லே
3159.
நிற்கையிலே கணபதியஞ் கந்தன்தானும் நிருவாணி மஹேஸ்பரியும் எதிரில்நிற்பாள்
துற்கையெனும் பத்ரகாளியம்மன் துரைமுகமாய் நின்றுகொண்டு காட்சியீவாள்
பற்குணனாம் அர்ச்சுனனர்க்கு தந்தகாட்சி பாலகனே யுந்தனுக்கு மீவாள்பாரு
விற்பிடித்த மன்னரெல்லாம் காளிக்கல்லோ விண்ணுலகில் தான்நடுங்கி விடுபட்டாரே
3160.
பட்டாரே ராஜர்முடி மன்னரெல்லாம் பத்திரகாளியம்மன் சாபத்தாலே
கெட்டலைந்து மாண்டதொரு வேந்தரெல்லாம் கெடியான எந்தனது குருவினாலே
விட்டகுறை இருந்ததொரு நேர்மையாலே வேதாந்த காலாங்கி நாதர்தம்மால்
பட்டமுடி மன்னரெல்லாம் மீண்டுதாம் பாரினிலே நெடுங்காலம் வாழ்ந்திட்டாரே
3161.
வாழ்ந்திட்ட காலமது தன்னிலேதான் வாகுடனே மாந்தரெல்லா மொன்றாய்கூடி
தாழ்ந்திட்ட ரிஷிகோடிமுனிவருக்கு தகமையுடன் லேகியத்தை செய்யவென்று
ஆழ்ந்திடவே தம்கருத்தில் மனதிலுண்ணி அப்பனே சீனபதி மார்க்கஞ்சென்று
சூழ்ந்திட்ட போகரைதான் அடிவணங்கி சூட்சமுடன் பாகமதை யறிந்தார்தாமே
3162.
அறிந்துமே காயகற்ப லேகியத்தை அன்புடனே நாதாந்த ரிஷிகளுக்கு
செரிந்துமே பாகமுடன் செய்துமேதான் சிறப்புடனே யுண்பதற்குக் கற்பமீந்தார்
முறிந்துமே யானந்த கற்பந்தன்னை முப்பொழுதும் உண்டுமல்லோ களித்துமேதான்
வெறிந்துமே சினமதுவும் ஒடுங்கியேதான் வெட்டவெளி தனிலிருந்து கும்பித்தாரே
3163.
கும்பித்து நிற்கையிலே சிவயோகிதானும் குவலயத்தில் மானிடர்மே லிச்சைகொண்டு
தம்பநங்கள் முதலான வசியமார்க்கம் ஜெகத்திலே வஷ்டவித கர்மம்யாவும்
சும்பனமாம் கொக்கோக லீலையாவும் சூட்சாதி சூட்சமெல்லாம் சுலுவாய்ச்சொல்லி
சம்போகத்தி லிருந்துகொண்டு சதாநிஷ்டையாவும் சட்டமுடன் தாமறிந்தார் பலமாந்தர்தாமே
3164.
தாமான சித்தர்களும் முனிவர்தாமும் சதகோடி சூரியர்போல் பிரகாசித்து
பூமானாங் கருவாளி யானபேர்க்கு புகழுடனே யிப்பாகஞ் சொன்னாரல்லோ
காமானமாகவேதான் காயகற்பம் கருத்துடனே செய்தார்கள் மனுக்கள்கோடி
நாமேதான் சொல்லிவிட்டோம் மறைப்பையெல்லாம் நலமுடனே நாதாக்கள் செய்வார்பாரே

3165.
பாரேதான் லேகியத்தின் பெருமைகேளு பாருலகில் அறிந்தமட்டும் சொல்வேன்பாரு
நேரேதான் தூதுளங்காய் பிரமானந்தான் நேர்மையுடன் உண்டவர்க்கு முறைமை
சொல்வேன்
சேரேதான் ஆவின்பால் கொள்ளவேண்டும் செம்மையுடன் அவர்தமக்கு காட்சிமெத்த
கூரேதான் கெவனமுடன் குளிகைகொண்டு கொற்றவனே வதிசயங்கள் சொல்வார்காணே
3166.
காணவே வானுலகில் போகுஞ்சித்தர் கண்ணுக்குற்றேற்றுவது மெய்போலாகும்
பூணவே சூரியனும் எதிரேநிற்பான் பொங்கமுடன் சந்திரனும் தூரேநிற்பான்
வேணவே லாகிரிகளுண்டபோது வெகுவான வினோதவகை சொல்லலாகும்
தோணவே நேத்திரங்களி லிருந்துகொண்டு தொல்லுலகில் கண்டதெல்லாம் பினத்துவாரே
3167.
பினத்துவார் ஆகாசமார்க்கந்தன்னை பெருமையுடன் அதிசயங்கள் மிகவுஞ்சொல்வார்
நினைப்புடனே கண்ணுக்கு தோற்றம்யாவும் நிலையான வதிசயம்போல் கூறுவார்கள்
புனப்புடனே பித்தமது மேலேசொக்கி புகழான கபாலத்தை வரட்சிசெய்யும்
தினப்புடனே சரரிரமெங்கும் தினவுண்டாகும் திரளான தேகமது சொக்கிப்போமே
3168.
சொக்கவே காயாதி பூரணத்தால் தொல்லுலகில் அதிதவகை மெத்தக்கூறும்
சிக்கவே மலைகுகைகள் வனாந்திரத்தில் சிறப்புடனே சித்தர்களைக் கண்டேனென்பார்
ஒக்கவே யவர்களிடம் கூடிருந்து உத்தமனே காயகற்பங் கொண்டேனென்பார்
தக்கவே கைலங்கிரி கண்டேனென்பார் சாயுச்சிய போதையிலே இருந்தார்பாரே
3169.
போதையிலே ஞானமுண்டு வருளுஞ்சொல்வார் பொங்கமுடன் அதிசயங்கள் வினோதஞ்
சொல்வார்
தீதையிலே கற்பமது வுண்டபோது திரளான தத்துவங்கள் மிகவுஞ்சொல்வார்
பாதையிலே இருந்துகொண்டு கண்ணைமூடி பாரினிலே பரிபாச வார்த்தைசொல்வார்
வாதையிலே யன்னமது தேவையில்லை வைகுண்டபதிதனிலே கேட்பார்பாரே
3170.
கேட்கையிலே லாகிரிகள் மிகவும்மிஞ்சி கெடிதான வடிதடிகள் மிகவுண்டாகி
மூட்கமுடன் கீழ்விழுந்து பிரண்டெழுந்து முனையான கும்பகத்திலிருப்பேனென்று
தாட்கமல பீடமதில் வீற்றிருக்கும் தாயான மஹேஸ்பரியை காண்பேனென்றும்
சூட்சமுடன் சுந்தரனார் தானென்று சொல்லுவார் பலதுதியுஞ் சொல்லுவாரே
3171.
சொல்லுவார் பரிபூரணானந்தத்தை சூட்சமுடன் ஞானவெள் ஜோதியென்பார்
வெல்லுவார் லாகிரியைக் கடந்தோமென்பார் வேதாந்த வெட்டவெளி யறிந்தோமென்பார்
புல்லுவார் பூவுலகை மறந்தோமென்பார் பூதலத்தில் என்னைவிட குருவோவென்பார்
அல்லலற்று மாய்கைதனை மறந்தேனென்பார் அப்பனே குளிகையுட வேகந்தானே
3172.
தானான யின்னமொரு கருமானங்கேள் தகமையுடன் காயாதி கற்பந்தன்னை
பானான காலாங்கிநாதர்பாதம் பாரினிலே தான்பணிந்து வடியேன்தானும்
தேனான கற்பமது சிறுகற்பந்தான் தேசத்தில் மாந்தர்கள் பிழைக்கவென்று
மானான வபினியது சேர்தானப்பா மார்க்கமுடன் கெஞ்சாவின் சேர்தானொன்றே

3173.
ஒன்றான பிரண்டையுந்தான் தேனையூட்டி வுத்தமனே கல்லுரலில் இடித்துத்தீரு
நன்னான புகையிலையை மேலேசுத்தி பாங்குடனே யெறுக்கிலையை யதன்மேல்சுத்தி
நன்றான பனைவெல்லங்கவசஞ்செய்து நலமாக பூமிதனில் புதைத்துப்போடு
வென்றிடவே மண்டலந்தான் சென்றபோது விருப்பமுடன் தானெடுத்து செப்பக்கேளே
3174.
செப்பவென்றால் கவசமதை நீக்கிப்போடு தெளிவுடனே வபினியது காரமாகி
ஒப்பமுடன் கோரக்கர்மூலியாலே ஓகோகோ மகிமைகளு மிகவுண்டாகும்
வெப்பமது வபினிக்கு மிகவுண்டாகி வீறுடனே பித்தமது வதிகஞ்காட்டும்
தப்பிதங்கள் நேராமல் வபினிக்கேதான் சாத்துகிறேன் சத்திவகை சொல்லக்கேளே
3175.
சொல்லவென்றால் பன்னீரால் மைந்தாநீயும் சுத்தமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
வெல்லவே திராட்சியென்ற பழரசத்தால் மேன்மைபெற வெண்சாமம் அரைப்பாயப்பா
புல்லவே மலைத்தேனும் இரண்டுசாமம் புகழுடனே தானரைப்பாய் புதல்வாநீகேள்
செல்லவே மைபோலவரைத்துமேதான் சீர்பெறவே சிமிழ்தனிலே பதனம்பண்ணே
3176.
பண்ணவே குளிகையது தூதுளங்காய் பாகமுடன் தானெடுத்து வருந்தும்போது
நண்ணவே காயாதி கற்பமாகும் நலமான கண்ணிரண்டும் சொருவல்கொஞ்சம்
எண்ணவே மயக்கமது வதிகங்காணும் எழிலான புன்னகையும் அதிகமாகும்
தண்ணமுடன் தேகமது கனத்தலாகும் சதாகாலம் நிஷ்டையிலே இருப்பார்தாமே
3177.
தாமான செபந்தனிலே இருந்துகொண்டு சதாகாலம் நிஷ்டையிலே வழியுந்தேடி
சேமமுட னுந்தமக்கு மொழியுஞ்சொல்லி சிறப்புடனே யாசீர்வப் பேருரைத்து
வேமமுட சோடச வுபசாரமோதி வேகமுடன் பிரணவத்தை மனதிலெண்ணி
நாமமுடன் காலாங்கி தனைநினைத்து நவின்றிட்டேன் போகரிஷி நவிலத்தானே
3178.
தானான வின்னமொரு கருமானங்கேள் சாற்றுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருபதத்தை யடியேனுந்தாள்பணிந்து
வேனான காயகற்ப சூரணத்தை விருப்பமுடன் யானுரைப்பேன் பின்னுங்கேளிர்
மானான மகதேவ ரிஷிகள்தாமும் மானிலத்தில் மறைத்துவைத்தார் பான்மையாமே
3179.
பான்மையாம் கொங்கணரு மிந்தபாகம் பாரினிலே களங்கமறச்சொல்லவில்லை
மேன்மையுடன் அகஸ்தியரும் புலஸ்தியருக்கப்பா மேதினியில் விளக்கமறச்சொல்லவில்லை
வாண்மையுடன் புலிப்பாணிக் கிந்தபாகம் வசனித்தார் ஆயிரத்துவன்னுருக்குள்
மேன்மையுடன் எனைப்போலச் சொன்னாரில்லை நுட்பமதை மாந்தற்குச் சொன்னேன்பாரே
3180.
பாரேதான் சுக்குடனே வாய்விளங்கம் பாங்குடனே திப்பிலியும் வசுவாசிதானும்
நேரேதான் மிளகுடனே தான்றிக்காயும் நேரான கடுக்காயும் நெல்லிக்காயும்
கூரேதான் சித்திரமாம் மூலத்தோடு கொடிதான சிவதைவேர் சித்தாமுட்டி
வீரேதான் வாலுளுவை சோம்புயேலம் விருப்பமுடன் செந்தோன்றி வேறுமாமே

3181.
வேறான வெட்டிவேர் துத்திமூலம் வெளியான வாவாரை பஞ்சமூலம்
கூறானதாது மாதுளையின்வேறும் குணமான செங்கொட்டை சிவனார்வேம்பு
நாறான செங்காலி வேறினோடு நறுங்கந்தம் பீனாறி பட்டைதானும்
பாறான பூதமாம் விருட்சத்தோடு பாங்கான கருங்குன்றி வேறுமாமே
3182.
ஆமேபிரன் கருங்காலி பட்டைதானும் அப்பனே செனாமறைவேறினோடு
தாமேதான் வெம்பாடை பட்டைதானும் தாக்கான கொழிஞ்சியிட பட்டைமூலம்
வேமேதான் வராலியிட மூலந்தானும் விரையான பேய்மிரட்டி பட்டைமூலம்
நாமேதான் சொன்னபடி வகிற்கட்டைதானும் நலமான சந்தனமும் செஞ்சாந்துமாமே
3183.
சந்தான பூவந்திபட்டைதானும் சதுரான வெண்ணாவல் பட்டையோடு
காந்தமெனும் வேய்கையுட பட்டைதானும் கருவான வுதிரமாம் மூலத்தோடு
பாந்தலெனும் கொங்கலவன் மூலத்தோடு பளிங்கான விராலியிட மூலந்தானும்
வேந்தர்கைக் கோலூன்றி விருட்சமூலம் விரைவான பட்சையுட மூலந்தானே
3184.
மூலமொடு கரும்பசளை செம்பசளைதானும் முஷ்டியுடன் கருவாகை பெருவாகைதானும்
சீலமுடன் பற்பாடம் யிம்புராவும் சிறியாளின் நங்கையொடு பெரியாநங்கை
காலமெனும் புளியாரை சிறியாரைதானும் தகமையுள்ள நிலவேம்பு கருவேம்புதானும்
பாலமெனும் பொடுதலையாம் சீந்திலோடு பசுமையாப் பொற்சீந்தியாமே
3185.
சீந்திலொடு செவ்வாழை கருவாழையானும் சிறப்பான வுப்பதுவும் தானுமாகும்
சாந்திமலர் நந்தியாவட்டமூலம் சார்புடனே கொன்றைவேர் புன்னைவேறும்
தாந்திகழும் செங்கழுநீர் பூண்டுதானும் தகமையுள்ள வட்டாரி துத்திமூலம்
ஏந்தலெனும் மயிர்கொன்றை இருவாட்சிதானும் என்மகனே வகைக்குவொரு
பலமாய்த்தூக்கே
3186.
தூக்கையிலே தூக்கமது வதிகங்காணா தொல்லுலகில் மூலிவகைசமனதாக
ஏக்கமுடன் மூலவகை ரெட்டிப்பாக எழிலான சூரணமாய் செய்துகொள்ள
நோக்கமுடன் ரவிதனிலே காயப்போடு நுணுக்கமுடன் கல்லுரலில் மாவதாக்கி
பாக்கவேதான் சூரணத்தை சுத்திசெய்து பசும்பாலில் புட்டாவி செய்திடாயே
3187.
செய்யவென்றால் கைபாகம் செய்பாகங்கேளு செப்புகிறேன் தளவாயாஞ் சட்டிதன்னில்
பையவே யாவியின்பால் பாண்டுமிட்ள பாகமுடன் சூரணத்தை சீலைமேலே
மொய்யவே புட்போல பிசறிவைத்து முசியாமல் மேல்சட்டிகொண்டுமூட
வெய்யவே தானெரிப்பாய் கண்டமட்டும் என்மகனே தானெரிப்பாய் புகலக்கேளே
3188.
கேளேதான் ரவிதனிலே காயப்போடு கெணிதமுடன் இப்பாகம்பத்துப்போடு
கோளேதான் வாராமல் சூரணத்தை கொப்பனவே தானெடுத்து செப்பக்கேளு
பாளேதான் நேராமல் சீனிசேர்த்து பதமுடனே மண்டலந்தான் கொண்டாயானால்
நாளேதான் தேகமது கற்றூணாகும் நளினமுடன் போகரிஷி நவின்றவாரே

3189.
வாறான கற்பமென்ற சூரணத்தை வாகுடனே கொள்பனுஞ் சித்தனாவார்
நேறான சீனபதி மாந்தருக்கு நேர்மையுடன் தானுரைத்த கற்பமாகும்
சீறான கற்பமது வுண்டபேர்க்கு தேசத்தில் வயதல்லோ லக்கோயில்லை
காரான கடந்தமுனி சித்தனென்பார் காயாதிகற்பத்தின் பான்மைதானே
3190.
தானான கற்பமது வுண்ணும்போது சதாகாலம் நிஷ்டையிலே இருக்கலாகும்
வேனான கற்பத்திற் குறுதிசொல்வேன் வெளியங்க மாகவல்லோ திரியவேண்டாம்
பானுமதி சூரியனும் பார்க்கவொண்ணா பாலகனே யொடுக்கமதில் இருக்கவேண்டும்
தேனான புளிபுகையுந் தள்ளவேண்டும் தேசமதில் காயத்தை நிறுத்துவாயே
3191.
நிறுத்துகையில் அஷ்டாங்க யோகம்வேண்டும் நிலையான சமாதிதன்னிலிருக்க வேண்டும்
பொருந்துமே சிவயோகந்தன்னிற்சென்று போக்கான வாசியைத்தான் நிறுத்தவேண்டும்
கலுத்துமே வாத்துமத்தின் நிலையைக்காண கலியுகத்தில் வெகுகால மிருந்தார்தாமும்
மறுப்புடனே பிறவியது காணாமற்றான் மாநிலத்தில் மடிந்தவர்கள் கோடியாமே
3192.
கோடியாஞ் சித்தர்களும் முனிவர்தாமும் குவலயத்தே கற்பமுண்டு இருந்தார்தாமும்
பேடியாம் சிலமாந்தர் அவரைப்பார்த்து பேரின்ப நிலைதனையே யொழித்தார்போலும்
நாடியே யவர்களிடம் சென்றுமேதான் நயனமுடன் லகுவார்த்தை மிகவும்பேசி
வாடியே யவர்பதத்தில் கிட்டிநின்று வாகுடனே கற்பமதை முறைகேட்டாரே
3193.
முறையுடனே கற்பமதை வாங்கிக்கொண்டு மூதுலகில் வெகுபேர்கள் செய்யவெண்ணி
கறைகண்ட வயித்தியன்போல் மனதிலெண்ணி காசினியில் முறைகெட்டு தாறுமாறாய்
திரைமருவு தெரியாமல் தேர்ந்தோன்போல திறமையுடன் அனுபோகந் தெரியாமற்றான்
குறையனதாய் சூரணத்தை செய்துமேதான் குவலயத்தில் கெட்டவர்கள் கோடியாமே
3194.
கெட்டலைந்து போனவர்கள் கோடாகோடி கெவனமுடன் செய்யாதார் கோடாகோடி
சுட்டலைந்து போனவர்கள் கோடாகோடி சூட்சமுடன் வயித்தியத்தை காணார்கோடி
பட்டலைந்து கெட்டவர்கள் பாடுபட்டு பதமிழந்து போனவர்கள் கோடாகோடி
திட்டமுடன் சாத்திரத்தை பாராமற்றான் திடங்குலைந்து நலிந்துபோனார்தாமே
3195.
போனாரே மூதுலகில் பெரியோர்யாவும் பொலிவான சாத்திரத்தை பொய்யென்றெண்ணி
ஏனோதான் மாநிலத்தில் சுட்டுக்கெட்டு யேளிதங்களாகவல்லோ மாண்டுபோனார்
நானேதான் கண்டமட்டுஞ் சாத்திரத்தை நன்குடனே யாராய்ந்து பலநூல்கண்டு
பானுமதி சுடர்போலே திரட்டியல்லோ பாடிவைத்தேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே
3196.
பண்பான சாஸ்திரத்தை பாடிவைத்தேன் பாரினிலே மாண்பரெல்லாம் மறந்துபோனார்
தின்பான சீனபதி மார்க்கத்தோர்கள் திறமுடனே கண்டறிந்து எடுத்துக்கொண்டார்
நண்பான சாஸ்திரத்தை மெய்யென்றெண்ணி நயமுடன் பலன்விளையும் என்றுகந்து
கண்பான நூற்கோர்வை யாவுங்கண்டு காசினியில் மாந்தருக்கு கருதினோமே

3197.
கருதவே யின்னமொரு கருமானங்கேள் காசினியில் மானிடர்கள் பிழைக்கவென்று
துருதமுடன் ஜாலமென்ற வித்தைசொல்வேன் தொல்லுலகில் செப்பிடு வித்தைகண்டீர்
பருவமுடன் கன்னியென்ற பெண்ணைத்தானும் பாங்குடனே ஜோடனைகள் மிகவேசெய்து
உருவமுடன் கைச்சிலையாங் கையிலிந்து உத்தமனே வாளுமொரு கையிலீயே
3198.
ஈயவே லோகமென்ற வாய்வினாலே எழிலான பிரதமைகளொன்றுசெய்து
மெய்யுடனே ரூபமதைத் தானமைத்து மேன்மையுடன் காந்தமென்ற சத்தைத்தானும்
கைதனிலே தானுருக்கி சேர்வைகொண்டு கசடறவே இரும்புக்கு காரமேத்தி
பெய்யவே யிடைகண்டு யினமுங்கண்டு பாரான கருக்குருவுந் தானுங்காணே
3199.
காணவென்றால் பிரதமைக்கு உயிரேயில்லை காசினியில் வாவென்ற ரூபமப்பா
தோணவே ரூபமது வார்த்தையில்லை தோற்றமுடன் பார்வையிலும் ஒளியேயில்லை
மேணவே கண்ணுக்கு வினோதவித்தை வேடிக்கைப் பார்த்தவர்க்கு பகடியாகும்
ஊணவே வடகரத்தில் பதுமையேந்தி வுத்தமனே இடகரத்தில் வாளையீயே
3200.
வாளுடனே கேட்கமுங்கையிலேந்தி வளமையுடன் இடப்புறத்தில் மாளினாலே
தாளுடனே பூமிதனிலிருந்துகொண்டு தகமையுடன் கேட்கத்தை பதுமைமீதில்
மாளுவது போலாக வாளைவீசி வல்லஉயிரை வாங்குகின்ற வீரனைப்போல
கோளுகளு நேராமல் குமரிதன்னால் கொற்றவனே வாளுதனை சக்கரத்திலீயே

# போகரின் சப்த காண்டம் – 7000

3201.
சக்கரமாம் வாளுதனை கேடகத்திலேந்தி சட்டமுடட் முன்பின்னாய் பிரட்டியேதான்
மிக்கவுடல் கீழ்விழலே வாளும்மேலே மேலான வாளுமது பதுமைகீழே
தொக்கவுடல் பதுமையது மேலேயாகும் தொல்லஉலகில் வாளுமது கீழேயாகும்
தக்கபடி செப்பிடுமாம் ஜாலந்தன்னில் சட்டமுடன் பதுமையது தோரொண்ணாதே
3202.
தோர்க்காது பதுமையது வாளினாலே தொல்லுலகில் பதுமையது மேலேநோக்கும்
பார்க்கவே லோகத்து மாந்தருக்கு பாங்கான செப்பிடு ஜெகஜாலந்தான்
ஏர்க்கவே வதிசயத்தை மிகவேகாட்டும் எழிலாக பிடிப்பார் மாந்தர்கண்டீர்
மார்க்கமுடன் மாந்திரீகம் மென்பார்காணீர் என்மகனே ஜாலமென்ற வித்தைதானே
3203.
வித்தான வித்தையிது ஜாலவித்தை மேதினியில் ஜெகஜால வித்தையப்பா
சித்தான சித்தர்முனி ரிஷிகள்தாமும் சிறப்புடனே பூவுலகில் ஆடும்வித்தை
சத்தான கோத்தையிது யின்னஞ்சொல்வேன் சுரூபமென்ற காந்தமது கோட்டையப்பா
குத்தான கல்லதுதான் நடுமையத்தில் கொற்றவனே சங்கிகள் அணியாய்மாட்டே
3204.
மாட்டையிலே நடுக்கம்பம் மீதிருந்து நடுவான குத்துக்கால் மீதிறங்கி
கோட்டையது வாசலது காந்தக்கோட்டை கொப்பெனவே நடுவாசல் வந்துநின்று
நீட்டமுடன் கன்னிகையில் வாள்கொடுத்து நீளமுடன் நெடுக்குவரை சுத்திவந்து
மூட்டமுடன் கேடகத்தை கோட்டைமீதில் முனைநடுவாம் மத்திபத்தில் முன்னேவையே
3205.
வைத்துமே தலைகீழாய் சுத்திவந்து வளமுடனே குத்துக்கல் மீதிருந்து
குத்துடனே பிரதமையை கேடகத்தால் குறிப்புடனே நேர்பார்த்து பாரின்மிது
ஏத்தலுடன் கேடகத்தை கையிலேந்தி எழிலான பிரதமையை மேலேவைத்து
சுத்திய கோட்டைவழி தான்கடந்து சூட்சமுடன் பிரதமையை கீழேவையே
3206.
கீழான பதிதனிலே பிரதமையும் நிற்க கீர்த்தியுடன் கேடகமுந் தழுவிவிளையாட
தாழான பூமிதனில் கேடகமும்நின்று சட்டமுடன் பிரதமையும் யெகிரிகுத்த
சாழான கோட்டைக்குள் சண்டைஅதிவேகம் சாங்கமுடன் பத்மயுகம் சரிமுறிதலாக
நீழான ஜெகஜால வித்தையிதுதானும் நீணிலத்தில் அதிதமெனும் பதுமைவித்தைதானே
3207.
பதுமையாங் கோட்டைக்குள் காவலதிகாரி பாங்குடனே எதிர்நின்று பேசும்படைதன்னை
புதுமையுடன் பிரதமைதான் எழுந்து புகழ்ச்சியுடன் கேடகத்தின் கீழிருந்து
கதுமையுடன் கேடகத்தை தலைமேல்கொண்டு களிவுடனே சதாகாலம் நடிக்கச்செய்யும்
மதுரமுடன் யெட்சிணியால் பேசசெய்யும் மகாகோடி வினோதங்கள் இன்னங்கேளே
3208.
கேட்கையிலே கன்னிகையாள் பிரம்பெடுத்து கிருபையுடன் வசனிக்கும் போதுமங்கே
நீட்கமுடன் பிரதமையும் வாய்திறந்து நிட்சயமாய் முன்னின்று பேசும்பாரு
வாட்கையுடன் கேடகத்தின் உத்தம்கண்டு வளமையுடன் கைகொடுத்து வார்த்தைகூறும்
வேட்கமுடன் குறளியின்றன் வசியத்தாலே வேடிக்கை வினோதவித்தை பேசும்பாரே

3209.
பேசுகையில் மாந்தரெல்லாம் பிரமைகொண்டு பேருலகில் செப்பிடைகை வித்தைபோல
வீசுதமிழ்க் கலிவாணர் முனிவர்தாமும் விண்ணுலகில் இம்முறைபோல் சொன்னதில்லை
காசுபணஞ் செலவழித்தோர் கோடியுண்டு காசினியில் என்முறைபோல் செய்ததில்லை
மாசுமறை யில்லாமல் போகர்தாமும் வசனித்தோம் மானிடர்கள் பிழைக்கவென்றே
3210.
பிழைக்கவென்றால் இன்னமொரு கருமானங்கேள் பேரான சீனபதி மாந்தருக்கு
தழைக்கவே காயாதி கற்பஞ்சொன்னேன் தாரிணியில் திரேதாயினுகத்திலப்பா
முழக்கமுடன் காலாங்கிநாதர்தாமும் முனிவருக்கு தானுறைத்த காயகற்பம்
வழக்கமது பிசகாமல் யானுமல்லோ வசனித்தேன் கலியுகமாய் மதலிற்றானே
3211.
தானான கலியுகத்தில் அடியேன்தானும் தகமையுடன் குளிகையது பூண்டுகொண்டு
கோனான எனதையர் காலாங்கிதம்மை குருபதத்தை எந்நாளு மனதிலெண்ணி
தேனான சீனபதிமார்க்கஞ்சென்று தளளிவுடனே யாமுரைத்தேன் முறைமையோடு
வேனான வெளியரங்க மாகவல்லோ விருப்பமுடன் பாடிவைத்தேன் போகர்தாமே
3212.
தாமான சீனபதி மார்க்கத்தோர்கள் தாரிணியில் இவ்வேதை யதிகமென்று
பூமானாம் யோகிகளும் ரிஷிகள்தாமும் பொங்கமுடன் செய்வதற்கு மனதிலுன்னி
காமானமாகவேதான் சத்துருவைக்கண்டு கவனமுடன் மித்துருவை ஒன்றாய்ச்சேர்த்து
நாமேதான் சொன்னபடி சோதித்தல்லோ நலமுடனே சீனத்தார் கண்டார்காணே
3213.
காணவென்றால் வெகுகோடி காலந்தானும் கருவான நூலெல்லாம் வுளவுபார்த்து
தோணவே சரக்கெல்லாம் கண்டாராய்ந்து தோற்றமுடன் சோதித்தார் மித்துருதன்னால்
நாணவே குகைதோறும் சோதித்தல்லோ நலமுடனே சத்துருக்கள் மிகவாராய்ந்து
பூணவே யோரளமாய் சத்தையெல்லாம் புகழுடனே தானெடுக்கும் விபரங்கேளே
3214.
கேளேதான் அயத்தினுட சத்துசொல்வேன் கெவனமுடன் அயமதுதான் சேர்தானொன்று
பாளேதான் போகாமல் லோகந்தன்னை பக்குவமாய் பொடியாக எடுத்துக்கொண்டு
கோளேதான் நேராமல் நிம்பழத்தால் கொற்றவனே நாற்சாமமரைத்தபோது
வீனேதான் களிம்பற்று வெளுக்கும்பாரு விருப்பமுடன் அமுறியினால் கழுவிப்போடே
3215.
போடேதான் அயப்பொடிக்குத் திரட்டிமைந்தா பொங்கமுடன் சாரமது காரமாகும்
நீடேதான் சீனமது கல்லுப்பாகும் நெடிதாம் சம்பழத்தின் சாற்றினாலே
கூடேதான் தானரைப்பாய் ரெண்டுசாமம் குமரவே ஜலமதினாற் கழுவிப்போடு
பாடவே அயமதுவும் சுத்தியாச்சு பாலகனே சத்தெடுக்க வகையைத்தேடே
3216.
வகையான காரமது பலம்பத்தாகும் வளமுடனே செவ்வல்லிப் பூச்சாற்றாலே
தொகையுடனே பத்துநாளறைத்தபோது துறையோடு வெண்எஅர மெழுகுமாகும்
பகையான எரிகாலன் பாலினாலே பாகமுடன் தானரைக்க விவரங்கேளு
சிகையுடனே வரைப்பொடியு மொன்றேயாகும் சீரான காரமது நேர்தான்சேரே

3217.
சேர்த்துமே எரிகாலன்பாலினாலே சிறப்புடனே தானரைப்பாய் நாலுசாமம்
பார்த்துமே வஜ்ஜிரமாங்குகையில்தானும் பாங்குடனே பாங்குடனே தானெடுத்து சீலைசெய்து
பூர்த்தியுடன் ரவிதனிலே காயவைத்து புகழாக சரவுலையில் வைத்துவூது
தீர்த்துமே அயமதுவும் வுருகியல்லோ திறமான சத்ததுவும் ஆகுந்தானே
3218.
தானான சத்துக்கு இன்னங்கேளு தகமையுடன் வெங்காரம் கூடச்சேர்த்து
பானான முன்சொன்ன தந்தைதானும் பாகமுடன் தானரைப்பாய் எரிகாலன்தான்
தேனான தேனதுவும் கூடச்சேர்த்து தெளிவாக முன்போல வரைப்பாயப்பா
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருசொன்ன சொற்படியே செய்திடாயே
3219.
செய்யவே வஜ்ஜிரமாங் குகையில்வைத்து செம்மையுடன் ஓட்டைவைத்து சீலைசெய்து
பையவே ரவிதனிலே காயவைத்து பான்மையுடன் சரவுலையில் வைத்துவூது
துய்யவே வயமதுவுங் களங்குமாகும் துப்புரவாய் மூசைதனை யுடைத்துப்பாரு
பொய்யல்லா வயமதுவும் மணிபோல்நிற்கும் பொலிவான சத்தென்ற மணியைவாங்கே
3220.
வாங்கியே மணியெடுத்து யலையவேண்டாம் வளமுடனே மணிதனையே வுடைத்துப்பாரு
தூங்கியே திரியாதே மாண்பாகேளு துய்யநல்ல வயமதுவும் சத்தேயாச்சு
ஓங்கியே மணிதனையே பதனம்பண்ணு உத்தமனே யின்னமொரு மார்க்கம்பாரு
ஏங்கியே நிற்காதே யின்னஞ்சொல்வேன் எழிலான வப்ரேக சத்தைவாங்கே
3221.
சத்தான சத்ததுவும் இன்னஞ்சொல்வேன் தாரிணியில் நாதாக்கள் முனிவர்தாமும்
சித்தான ரிஷிதேவர் சொன்னதில்லை சீர்பெறவே தொகுப்புடனே வடியேன்தானும்
முத்தான நூலெல்லாம் கண்டாராய்ந்து மூதுலகில் கீர்த்தியுடன் சொன்னேன்யானும்
புத்தான கிருஷ்ணாதி ரேகர்தன்னை புகலுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்றே
3222.
பிழைக்கவே நவநீதஞ் சேர்தான்ரெண்டு பிழைமோசம் வாராமல் எடுத்துக்கொண்டு
தழைக்கவே முன்சொன்ன காரமப்பா சாங்கமுடன் நாலுக்கு ஒருபாகந்தான்
கழைக்கவே குழிக்கல்லு தன்னிலிட்டு கருவான தேனதினி லாட்டிமைந்தா
உழைக்கவே வஜ்ஜிரமாங் குகையில்வைத்து உத்தமனே குகையில்வைத்து சீலைசெய்யே
3223.
சீலையென்றால் சீலையது காரச்சீலை சீரான சுண்ணாம்புச்சீலையப்பா
வேலையெனும் ரவிதனிலே காயவைத்து விருப்பமுடன் சரவுலையில் வைத்துவூது
காலையது சாமமது தான்துவக்கி கருவுடனே சத்துதனை வூதித்தீரு
மாலையிலே மூசைதனை உடைத்துப்பாரு மன்னவனே சத்தென்ன வருணனாமே
3224.
அருணனாம் ஆதித்தன் இதற்கொவ்வாது வப்பனே வப்ரேகச் சத்துமாச்சு
தருணமது தப்பாமல் பின்னுங்கேளு தகைமையுடன் சத்துதனை யெடுத்துக்கொண்டு
கருணையுடன் முன்சொன்ன சத்துதானும் களிப்புடனே தானெடுத்து கல்வமிட்டு
வருணனுப்பு கரியுப்பு பொட்டிலுப்பு வகையுடனே தான்போட்டு வரைத்திடாயே

3225.
அரைக்கையிலே ஆறுவகை செயநீர்தன்னால் அப்பனே தானரைப்பாய் நாலுசாமம்
திரைக்கையிலே மெழுகுபதந்தன்னிலாட்டி திறமையுடன் வஜ்ஜிரமாங்குகையில்வைத்து
குறைக்கையிலே சில்லிட்டுச்சீலைசெய்து கொற்றவனே ரவிதனிலே காயப்போடு
முறைப்படியே ரவிதனிலே காயவைத்து முன்போல சரவுலையிலேத்திடாயே
3226.
ஏத்தியே தீமூட்டி வுருக்கும்போது எழிலான மூசையது வழுகியேதான்
நாத்தமுடன் நவநீதவாசம்வீசும் நலமான சரக்கதுவும் வுருகிப்போச்சு
காத்திரமாம் குகைதனையே யுடைத்துப்பாரு கருவான வப்ரேக சத்துமாச்சு
சூத்திரமாம் இப்பாகம் கண்டறிந்து சுளுக்குடனே பாடிவைத்தேன் காண்டம்நாலே
3227.
நாலான காண்டமது யின்னங்கேளு நலமான சத்ததுவும் முன்போலேதான்
காலான குழிக்கல்லி லிட்டுமைந்தா கருத்துடனே தென்விட்டு யரைப்பாய்நீயும்
பாலான வஜ்ஜிரமாம் குகையிலிட்டு பாலகனே சீலையது வலுவாய்ச்செய்து
மேலான ரவிதனிலே காயவைத்து மேன்மையுடன் தானெடுத்து செப்பக்கேளே
3228.
செப்பவென்றால் சரவுலையில் வைத்துவூது செம்மையுடன் நவநீதம் சத்துவாகும்
ஒப்பில்லை யுனக்கீடு ஒருவருண்டோ வுத்தமனே நீயுமொரு சித்தனல்லோ
தப்பிதங்கள் வாராது சத்துதன்னால் தகமையுடன் மூசைதனை யுடைத்துப்பாரு
மெப்புடனே சத்துமது வெளியே வீசும் மேன்மையுடன் இப்பாகம் பத்துமுறை தீரே
3229.
தீரவென்றால் நவநீதச்சத்துமாகும் திறமையுடன் சத்துதனை யெடுத்துக்கொண்டு
காரமுடன் பூநீரு சரியாய்ச் சேர்த்து கருத்துடனே தேன்விட்டு அரைப்பாய்பின்னும்
சாரமுடன் வஜ்ஜிரமாங் குகையில்வைத்து பாலகனே சிஃல்லிட்டுச் சீலைசெய்து
ஈரமது போவதற்கு ரவியில்வைத்து என்மகனே காய்ந்தபின்பு எடுத்துக்கொள்ளே
3230.
கொள்ளவே சரவுலையில் வைத்துவூது கொற்றவனே சத்ததுவை என்னசொல்வேன்
மெல்லவே மூசைதனை யுடைத்துப்பாரு மேலான சத்ததுதான் என்னசொல்வேன்
விள்ளவே சத்துதனை எடுத்துக்கொண்டு விருப்பமுடன் பீங்கானிற் பதனம்பண்ணு
எள்ளளவுங் குறையொன்று நேராதப்பா எழிலான சத்தினுட வேகந்தானே
3231.
வேகமா மின்னமொரு கருமானங்கேள் விருப்பமுடன் கெந்தியென்ற சத்துசொல்வேன்
பாகமாங் கெந்தியது சேர்தானொன்று பாங்கான பூநாகஞ் சேர்தானொன்று
சாகமுடன் பூநாகம் மண்ணைப்போக்கி சட்டமுடன் எரிகாலன் பாலாலாட்டு
மேகமென்ற வர்ணம்போலிருக்கும்பாரு மேன்மையுடன் காரமது காலாய்க்கூட்டே
3232.
கூட்டியே தானரைப்பாய் நாலுசாமம் குமுறவே வஜ்ஜிரமாங்குகையில் வைத்து
மாட்டியே சில்லிட்டுச் சீலைசெய்து மயங்காமல் ரவிதனிலே காயப்போடு
சூட்டியே வாலுகையா மேந்திரத்தில் சூட்சமுடன் நடுமையம் மூசைவைத்து
நாட்டமுடன் சத்துக்குத் துருத்திநாலு நயம்பெறவே யூதிடவே சத்துமாமே

3233.
சத்தான மூசைதனை யுடைத்துப்பார்க்க சார்பான கெந்தியது சத்துமாகி
வித்தான பூநாகச் சத்துனாலே வீறான கெந்தியது சத்துமாச்சு
சத்தான கெந்தியதூ சத்துமானால் சிந்தரனே வெகுகோடி வித்தையாடும்
யுத்தான பூநாகந் தன்னிலப்பா பொன்னவனே கெந்தியது சத்துமாச்சே
3234.
ஆச்சென்று விடுகாதே யின்னங்கேளு வப்பனே காலாங்கி நாதர்வாக்கு
போச்சென்று வுலகத்தில் பொய்யாதப்பா பொலிவாக சஇத்தர்முனி ரிஷிகள்தாமும்
நீச்சென்ற பூநாகம் மறந்தாரப்பா நீணிலத்தில் காலாங்கி தானாராய்ந்து
மாச்சலுடன் இப்பாகஞ்சொன்னாரையா மண்டலத்தில் கண்டவர்களில்லைதானே
3235.
தானான வேதமுனி ரிஷிகள்தாமும் திரிணியில் அனேகவிதஞ்சொன்னாரையா
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருசொன்னபடியளவா யானுஞ்சொன்னேன்
பானான சத்துவகை சாத்திரத்தில் பாடினார் பலபேத வண்ணமாக
தேனான யிந்நூல் போல் ஆருஞ்சொல்லார் தெளிவாகப் பாடிவைத்தேன் காண்டம்நாலே
3236.
காண்டமேழாயிரத்தில் நடுக்காண்டம்தான் காசினியில் மாண்பர்கள் பிழைப்பதற்கு
தூண்டுகோல் போலவே யிந்நூல்தன்னை துறையோடும் முறையோடும் சொன்னேன்யானும்
வேண்டியதோர் கருமானம் இந்நூல்தன்னில் விருப்பமுடன் பாடிவைத்தேன் நான்காம் காண்டம்
ஆண்டகையாம் எனதையர் காலாங்கிநாதர் அருளிருந்தால் பொருள்வாய்க்கு மன்பாய்த்தானே
3237.
அன்பான கெந்தியது சத்துதன்னையப்பனே யாமுரைப்போம் இன்னங்கேளு
தென்பான பிரிதிவியின் விளைவுமார்க்கம் தேசமுடன் செம்மண்ணாம் பூனாகந்தான்
முன்பாக முன்சொன்ன முறையாற்றோனும் முக்கியமாய் கெந்தியிட சத்தைத்தானும்
சன்பாக பூநாகஞ் சரியாச்சேர்த்து சட்டமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
3238.
நாலான எரிகாலன் பாலினாலே நயமுடனே தானரைக்கும் போதுமங்கே
பாலான பாலதுவுங் கூடச்சேர்த்து பாகமுடன் சத்துதனை வுறவுதாக்கி
சேலான செம்பினுட சத்துதன்னால் செம்பையென்ற பூநாகங்கெந்திசத்து
மாலான கெந்தியது சத்துமார்க்கம் வையகத்தி லாரெடுப்பார் வதிதந்தானே
3239.
அதிகமாய் கெந்தியது சத்துதன்னை வப்பனே வஜ்ஜரமாங் குகையில்வைத்து
கதிதமுள்ள மூசைதனி லடைத்துமைந்தா கவனமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து
பதிதமுள்ள ரவிதனிலே காயவைத்து பளிங்குபெற சரவுலையில் நடுமையத்தில்
துதிதமுடன் கரிபோட்டு வூதும்போது துடியான துருத்தியது நாலுமாமே
3240.
மாட்டடா நாற்சாமம் உருக்கித்தீரு மன்னவனே சத்தாரி யெடுத்துப்பாரு
நீட்டடா மூசைதனை யுடைத்துப்பாரு நிலையான கெந்தியது சத்துமாச்சு
கூட்டடா யிப்படியே பத்துமுறைதீரு குணமான பாகமிது சத்துபாகம்
தீட்டடா கெந்தியுட சத்துதன்னை திறமுடனே பீங்கானிற் பதனம்பண்ணே

3241.
பண்ணவென்றா லின்னமொரு பாகம்பாரு பாரினிலே நாதாக்கள் செய்ததில்லை
நண்ணமுடன் மானிடர்கள் பிழைக்கவென்று நயமுடனே காலாங்கிநாதர்பாதம்
எண்ணமுடன் யான்வணங்கி பணிந்துபோற்று என்மகனே உங்களுக்காய் சொன்னேன்பாரு
வண்ணமுள்ள நாகமது சேர்தானொன்று வளமையுடன் தானெடுத்து செப்பக்கேளே
3242.
செப்பவென்றால் நாகமது சேர்தானொன்று சிறப்பான சூதமது சேர்தானொன்று
ஒப்பமுடன் காரமது சேர்தான்பாதி ஓகோகோ பூநீர்தான் சேர்தான்பாதி
நெப்பமுடன் குழிக்கல்லில் ஒன்றாய்ப்போட்டு நேர்மையுடன் ஆறுவகைசெயநீர்தன்னால்
தப்பிதங்கள் வாராமல் அறைப்பாய்மைந்தா தகமையுடன் தானரைப்பாய் சாமம்நாலே
3243.
நாலான சாமமது வரைக்கும்போது நாயகனே நாகமது விந்தடங்கி
மாலான மயினமது போலேயாகும் மகத்தான தாளகமுங் கூடச்சேர்த்து
சூலான நாகமது கற்பத்துள்ளே சூதமென்ற ராசாவுங் கூடச்சேர்த்து
காலான கதிர்மேகந் தன்னைப்போல கண்ணுக்குத் தோன்றிடுமே மயினமாமே
3244.
ஆமேதான் மயினமதை தானெடுத்து வப்பனே வஜ்ஜரமாங் குகையில்வைத்து
தாமேதான் சில்லிட்டுச் சீலைசெய்து தகமையுடன் ரவிதனிலே காயவைத்து
போமேதான் சரவுலையில் வைத்துவூது பொங்கமுடன் துருத்தியது கொண்டேயாகும்
நாமேதான் சொன்னபடி நாகசத்து ராசாக்கள் கண்டதில்லை நளினந்தானே
3245.
நளினமாஞ் சத்துதனை எடுத்துப்பாரு நலமான நாகத்தின்சத்தேயாகும்
பளினமுடன் சத்துதனை முன்போல்மைந்தா பாலகனே பின்னுமதை கல்வமிட்டு
குளிதமுடன் தாளகமுஞ் சூதம்சேர்த்து துகளறவே பூநீறுங் கூடச்சேர்த்து
மளினமுடன் வாறுவகை செயநீர்தன்னால் மார்க்கமுடன் தானரைப்பாய் மன்னாகேளே
3246.
மன்னாநீ மயங்காதே யின்னுங்கேளு மதிப்புடனே தானரைப்பாய் நாலுசாமம்
தென்னாநீ திறமுடனே மெழுகதாக்கி தீரமுடன் வஜ்ஜிரமாங்குகையில்வைத்து
பொன்னாநீ சீலையது வலுவாய்ச்செய்து பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
என்னாநீ சொன்னபடி முன்போலப்பா எழிலுடனே சரவுலையிலேத்திடாயே
3247.
ஏத்தியே நடுமையம் தானிறுத்தி எழிலுடனே சரவுலையை வூதும்போது
சாத்திரத்தி லுள்ளபடி தப்பாகாது தகைமையுடன் சத்ததுவும் யீயமாகும்
கூத்தனுமே தான்நடுங்கும் வேதைமார்க்கம் குவலயத்தில் ஒருவரால் கூறப்போமோ
நேத்தியுடன் சத்ததுவை எடுத்துப்பாரு என்னசொல்வேன் மக்களா யின்னுங்கேளே
3248.
கேளேதான் நாகமது சத்துவாங்கி கெவனமுடன் முன்போல வரைப்பாய்நீயும்
கோளேதான் வாராமல் குற்றம்நீங்கி கொற்றவனே நாகமது சத்துவாங்கி
பாளேதான் போகாமல் பின்னுங்கேளு பாகமுடன் முன்சொன்ன சரக்கையெல்லாம்
தூளேதான் பொடிபண்ணி கல்வமிட்டு துப்புறவாய் செயநீரில் அரைத்திடாயே

3249.
அறைத்துமே யாறுவகை செயநீர்தன்னால் அப்பனே மயினம்போல் மெழுகதாக்கி
குறைத்துமே வஜ்ஜிரமாங் குகையில்வைத்து கொற்றவனே சில்லிட்டுச் சீலைசெய்து
திறைத்துமே ரவிதனிலே காயவைத்து தீரமுடன் வாலுகையா மேந்திரத்தில்
முறைத்திடவே நடுமையம் தானிருத்தி முசியாமல் கரியதனைக் கொட்டிடாயே
3250.
கொட்டியே சத்துதனை யூதும்போது குறிப்புடனே துருத்தியது ரெண்டதாகும்
திட்டமுடன் நாற்சாம் ஊதித்தீரு திறமான குகைதனையே யுடைத்துப்பாரு
வட்டமென்ற பில்லையதாம் வுருகிநிற்கும் வளமான சத்ததுவும் சொல்லப்போமோ
நட்டமில்லை நாகத்தின்சத்துதானும் நலமான தாரத்தினீயமாமே
3251.
ஆமேதான் நாகமது ஈயமானால் அப்பனே கோடான கோடிவித்தை
நாமெதான் சொன்னபடி இந்தமார்க்கம் நலமுடனே பத்துமுறை செய்யவேண்டும்
தாமேதான் சத்தெடுத்து பதனம்பண்ணு சாங்கமுடன் இன்னமொரு கருமானங்கேள்
வேமேதான் வங்கத்தின் சத்துசொல்வோம் விபரமுடன் மாணாக்கள் பிழைக்கவென்றே
3252.
பிழைக்கவே வங்கமது சேர்தானொன்று பேரான சிங்கியது சேர்தானொன்று
வழக்கமுடன் மனோசிலையும் சேர்தான்பாதி வாகுடனே தானுருக்கி கல்வமிட்டு
பழக்கமுடன் தேனதுவை விட்டுவாட்டி பளிங்குடனே வஜ்ஜிரமாம் குகையிலேந்தி
தழைத்திடவே சில்லிட்டுச் சீலைசெய்து தகமையுடன் ரவிதனிலே காயவையே
3253.
காய்ந்தபின்பு வஜ்ஜிரமாங் குகையைத்தானும் கனமுடனே சரவுலையில் வைத்துவூது
தீய்ந்திடவே குகையதுவும் கழுகியேதான் திறமான வங்கமது வுருகிநிற்கும்
பாய்ந்திடவே வங்கமது களங்குமாகும் பாரினிலே சித்தர்செய்யும் வேதையாச்சு
தோய்ந்திடவே வேதைமுகம் யாருங்காணார் தொல்லுலகில் கருவாளி காண்பான்பாரே
3254.
பார்க்கவே வங்கமதை எடுத்துக்கொண்டு பரிவாக கல்வமதில் பொடியாய் செய்து
தீர்க்கமுடன் முப்பூவுமங் காலதாக திறமுடனே தேன்விட்டு யரைத்தாயானால்
மார்க்கமுடன் மெழுகதுவும் வெண்ணைபோலாம் மயங்காமல் வஜ்ஜிரமாங்
குகையில்வைத்து
ஏர்க்கவே மேல்மூடி சீலைசெய்து எழிலாக ரவிதனிலே காயவையே
3255.
காயவே முசைதனை எடுத்துக்கொண்டு கவனமுடன் சுண்ணாம்புச்சீலைபின்னும்
தோயவே ஏழுசீலை யின்னுஞ்செய்து தோராமல் ரவிதனிலே காயவைத்து
நேயமுடன் சரவுலையில் வைத்துவூது நேர்மையுடன் சத்ததுவும் மணியாய்ப்போகும்
உபாயமுடன் மூசைதனை யுடைத்துப்பாரு உத்தமனே வெள்ளியென்ற மணிபோலாமே
3256.
ஆமென்ற மணியெடுத்து சொல்லக்கேளு வப்பனே சூதமது நேரேயாகும்
காமென்ற பாஷாணம் நேரேயாகும் கருவாக யிரண்டஜயுந்தான் வரைத்துமல்லோ
நாமென்ற வங்கத்துக் கங்கிபூட்டி நாயகனே சுண்ணாம்புச் சீலைசெய்து
தாமென்ற ரவிதனிலே காயவைத்து சட்டமுடன் குழல்தனிலே வுருக்கிடாயே

3257.
உருக்கியே மூசைதனை யுடைத்துப்பாரு உத்தமனே களங்கமது என்னசொல்வேன்
நருக்கியே பின்னுமதை மூசையிட்டு நயமுடனே வுருக்கிப்பார் களங்குமாகும்
பெருக்கியே களங்கெடுத்து பின்னுங்கேளு பேரான மூசைதனை யுருக்கப்பாரு
செருக்கமுடன் களங்கதுவும் என்னசொல்வேன் சிறப்பான போகரது பாகந்தானே
3258.
பாகமா மின்னமொரு கருமானங்கேள் பாலகனே மாணாக்கள் பிழைக்கவென்று
யூகமாம் தாம்பரத்தின் சத்துசொல்வேன் யுரப்பனமால் அதின்சுத்தி பின்னுங்கேளு
நாகமென்ற சிலவிஷத்தை நீக்குதற்கு நலமாகப் பூநீரில் சுத்திசெய்து
சாகமுடன் தாம்பரத்தை சுத்திசெய்ய சார்பான முறையொடு கதைசொல்வேனே
3259.
சொல்லவென்றால் தாம்பரமாம் கொடியகாலன் தொல்லுலகில் ஊரலதுபோவதற்கு
வெல்லுகின்ற பூநீரு சேர்தானொன்று வினோதமுடன் செம்பதுவுஞ் சேர்தானொன்று
கொல்லுகின்ற வீரமது சேர்தான்காலாம் குணமான சீனமது சேர்தான்காலாம்
புல்லுகின்ற கருங்குன்றி சேர்தான்காலாம் புகழான சிற்றண்டம் சேர்தான் காலே
3260.
காலான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி காட்சிபெற கல்வமதில் இட்டுமைந்தா
பாலான செயநீராம் சாரநீராம் பக்குவமாய் தானரைப்பாய் சரக்கெல்லாம்
மேலான செயநீராம் சாமம்நாலு மேன்மையுடன் தானரைப்பாய் மைந்தாகேளு
கோலான மாத்திரைபோல் செய்துகொண்டு கொற்றவனே நிம்பழத்தின் சாற்றாலாட்டே
3261.
ஆட்டவென்றால் விதிசொல்வேன் மதியாய்கேளு வப்பனே சுத்தித்த தாம்பரத்தை
நீட்டமுடன் மருந்தையெல்லாம் தாம்பரத்தில் நீதியுடன் கீழ்மேலும் பூசிப்போடு
வாட்டமுடன் ரவிதனிலே காய்ந்தபின்பு வகையுடனே வோட்டிலிட்டுச் சீலைசெய்து
தேட்டமுடன் கோழியென்ற புடத்தைப்போடு தெளிவாக புடமாறி எடுத்துப்பாரே
3262.
பார்க்கையிலே செம்பதுவும் பொருமிக்காட்டும் பதமதுதான் சரியாச்சு தாம்பரங்கள்
தீர்க்கமுடன் பனைதனிலே யடித்தபோது திறமுடனே செம்புக்கு வதந்தான்போகும்
மூர்க்கமென்ற வூரலதுயற்றுப்போச்சு முழுமக்கள் தாமடுயார் செம்புவூரல்
சேர்க்கையிலே இந்தமுறை பத்துபாகம் செவ்வையுடன் புடம்போட்டு எடுத்துப்பாரே
3263.
எடுத்துமிகப் பார்க்கையிலே என்னசொல்வேன் யெளிதமாஞ் செம்பதுவும் ஏத்தமேத்த
அடுத்துநின்ற பேர்களுக்கு மிந்தபாகம் அறியாமற் செய்பவனே புத்தியுள்ளான்
தொடுத்தகுறி தன்முறைபோல் செய்யுமாசான் தோற்றாமல் கண்ணுக்கு செய்வான்பாரு
கெடுத்துமே முறைபோல செய்துகாட்டி கெவனமுடன் வுட்கருவை காட்டான்தானே
3264.
தானான தாம்பரத்தை எடுத்துக்கொண்டு தண்மையுடன் குருசொன்ன நேர்பாகந்தான்
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருசொன்ன வாக்கதுபோல் தாம்பரத்தை
மானான தாம்பரத்தை சேர்தான்கொண்டு மாட்டடா வஜ்ஜிரமாங் குகையிற்றானும்
வேனான செம்புநின்று வுருகும்போது விருப்பமுடன் அதிற்போட சரக்குகேளே

3265.
சரக்கென்றால் வீரமது வெள்ளையாகும் தாக்கான பாஷாணங்கெவுரியாகும்
திரக்கமுடன் காரமது பூரமாகும் திகழான சூதமது சரிநேராகும்
உரக்கமுடன் சரக்கெல்லாம் சரியாய்த் தூக்கி வுத்தமனே கல்வமதில் பொடியாய்ச்செய்து
இரக்கமுடன் தாம்பரத்துக் கிவைசேர்பாதி எழிலுடனே கிராசமது நினைவாய்ப்போடே
3266.
போடவே செம்புருக்கி கிராசமீவாய் பொங்கமுடன் லகுவதாய் தாக்கிக்கொண்டு
நீடவே செம்புதனை யாற்றிப்பின்பு நினைவாக மூசைதனையுடைத்துப்பாரு
கூடவே செம்பதுவுங் களங்கமாகும் குணமான வூரலது யற்றப்போச்சு
வாடவே திரியாதே மைந்தாகேளு வகுப்புடனே யிப்பாகஞ் செய்துபாரே
3267.
பார்க்கையிலே செம்பதுவுங் களங்குமாகி பரிசுத்த களங்குமது என்னசொல்வேன்
தீர்க்கமுடன் களங்கதனை எடுத்துக்கொண்டு தீரமுடன் கல்வமதில் இட்டுமைந்தா
ஏர்க்கவே பொடிசெய்து மைபோலாக்கு எழிலான தனில்வறைந்துமேதான்
தீர்க்கமுடன் மூசைதினிலடைத்துமைந்தா சிறப்புடனே சீலைசெய்து ரவியில்தாக்கே
3268.
தாக்கவே மூசையது காய்ந்தபின்பு தகமையுடன் சரவுலையில் வைத்துவூது
நோக்கமுடன் செம்பதுவும் வூரலற்று நொடிக்குள்ளே களங்கமென்ற பேருமாச்சு
தூக்கவே செம்பென்ற களங்குதானும் துரையான வேதைமுகம் தன்னிற்தோன்றும்
வாக்கதுதான் தப்பாது போகர்தாமும் வரமுடனே பாடிவைத்த வண்மையாமே
3269.
வண்மையாம் சத்தெல்லாம் சமனதாக வளமுடனே தானுருக்கி எடுத்துக்கொண்டு
தண்மையுடன் தங்கமது நாலுக்கொன்று தாக்கவே களங்குடனே தங்கஞ்சேர்ந்து
திண்மையாம் களங்கதுவும் ஒளியுவீசும் தீர்க்கமுடன் களங்குக்கு எட்டிலொன்று
உண்மையாம் கெந்தியது கூட்டியேதான் உத்தமனே தானரைப்பாய் சாமம்நாலே
3270.
நாலான சாமமது வரைக்கும்போது நலமான சூதமதை எட்டிலொன்று
வேலான பொற்றலையின் சாற்றாலாட்டி விருப்பமுடன் பில்லையது லேசாய்தட்டி
மாலான ரவிதனிலே காயப்போடு மார்க்கமுடன் வோட்டிலிட்டு சீலைசெய்து
தாலான கெஜபுடத்தில் போட்டாயானால் தளிர்ச்சியுடன் வெந்ததுவும் கறுப்புமாமே
3271.
கறப்பான செந்தூரந் தனையெடுத்து கருவாகக் கையானின் சாற்றினாலே
உறுப்பாக தானரைப்பாய் நாலுசாமம் உத்தமனே முன்போல பில்லைதட்டி
தெறுப்பான பில்லையது காய்ந்தபின்பு தேற்றமுடன் வோட்டிலிட்டுச் சீலைசெய்து
குறுப்பான கெஜபுடத்தில் போட்டாயானால் கொற்றவனே செந்தூரமாகுந்தானே
3272.
தானான செந்தூரஞ் சிவப்பதற்கு தன்மையுள்ள புடமதுவு மைம்பதாகும்
கோனான யெமதையர் காலாங்கிநாதர் குருசொன்னபடியாக புடமேபோடு
மானான புடமதுவும் அம்பதானால் மகத்தான செந்தூரஞ் சிவப்புமெத்த
தேனான செந்தூரந் தனையெடுத்து செப்புகிறேன் பின்னுமொரு பாகங்கேளே

3273.
பாகம்போம் எண்ணாதே கெந்திதாரம் பகருமந்த செந்தூரம் நாலுக்கொன்று
வேகமுடன் சரக்கதனை ஒன்றாய்ச் சேர்த்து விருப்பமுடன் சூதமது எட்டிலொன்று
சாகமுடன் சரக்கெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து சட்டமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நேசமுடன் பொடுதலையின் சாற்றினாலே நேர்ப்பாகத் தானரைத்து பில்லைதட்டே
3274.
தட்டியே ரவிதனிலே காயவைத்து தகமையுடன் வோட்டிலிட்டு சீலைசெய்து
சட்டமுடன் கெஜபுடமாய் போட்டாயானால் சார்பான செந்தூரம் சிவப்புகாணும்
நட்டமில்லா புடமதுவும் ஐம்பதாகும் நயமுடனே பாகமது தவிறிடாமல்
இட்டமுடன் பும்போடச் செந்தூரிக்கும் எழிலான செந்தூரஞ் சொல்லொணாதே
3275.
சொல்லவென்றால் நாவில்லைப் பாவுமில்லை சுந்தரனே சித்தர்செய்யும் வேதையாச்சு
வெல்லவே செந்தூர மார்க்கந்தன்னை விருப்பமுடன் காரமது கொள்வதற்கு
புல்லவே யின்னமொரு பாகங்கேளு புகழான செந்தூரஞ் சிவப்புகாண
கொல்லவே விலாரியின் தயிலத்தாலே கொற்றவனே தானரைப்பாய் சாமமெட்டே
3276.
எட்டான சாமமது வரைத்தபோது எழிலான செந்தூரம் மெழுகுபோலாகும்
திட்டமுடன் தானரைத்து பில்லைதட்டி தீர்க்கமுடன் ரவிதனிலே காயப்போடு
சூட்டமது பில்லையாய் தட்டியேதான் குறிப்புடனே சீலைசெய்ய வகையைக்கேளு
வட்டமென்ற வோட்டிலிட்டுச் சீலைசெய்து வளமைபெற கெஜபுடமாய் போட்டுத்தீரே
3277.
தீரவென்றால் புடமாறி யெடுத்துப்பாரு திறலான செந்தூரஞ் சொல்லப்போமோ
சாரவே செந்தூரந் தனையெடுத்து சாங்கமுடன் விராலியிட தயிலத்தாலே
பாரமுடன் தானரைப்பாய் நாலுசாமம் பதராமல் மெழுகதுபோலவேதான்
நேரமுடன் பில்லையது லகுவாய்தட்டி நேர்புடனே ரவிதனிலே காயப்போடே
3278.
போடவே வோட்டிலிட்டு சீலைசெய்து பொங்கமுடன் கெஜபுடமாய் போட்டுத்தீரு
நீடவே இப்படியே ஐந்துபத்து நினைவாகப் புடம்போடச் செந்தூரிக்கும்
தேடவே செந்தூரம் எடுத்துப்பாரு தேசிகனே காரமது கூரொண்ணாது
பாடவே இன்னம்வெகு மூலிசொல்வேன் பாலகனே நீயறியாய் பண்பாய்த்தானே
3279.
பண்பான மூலிகைதான் சொல்லக்கேளு பாரினிலே மெத்தவுண்டு காயகல்பம்
திண்பான மூலிகை வல்லாரைகற்பம் திறமான மூலியது சார்பிழிந்து
நண்பான செந்தூரங்கல்வமிட்டு நயம்பெறவே மூலியிட சாற்றாலாட்டி
வண்பாக நாற்சாம மரைத்தபோது வளமாக மெழுகதுபோலாகும்பாரே
3280.
பாரேதான் மெழுகதனை பில்லைதட்டி பாகமுடன் ரவிதனிலே காயப்போடு
சீரேதான் வோட்டிலிட்டுச் சீலைசெய்து சிறப்பான கெஜபுடந்தான் போட்டுத்தீரு
நேரேதான் செந்தூரங்காரமேறி நெறியான காயகற்ப குருவுமாச்சு
தீரேதான் பின்னுமந்த செந்தூரத்தை தீர்க்கமுடன் புடம்போட வகையைத்தேடே

3281.
தேடயிலே செந்தூரம் ஐம்பதாகும் தேற்றமுடன் புடிமதுவும் அதிகங்கொண்டால்
கூடயிலே செந்தூரங்காரமேறி குறிப்புடனே காயாதிக்குறுதியாச்சு
நீடயிலே இப்படியே தீர்ந்தாயானால் நீனிலத்தில் நீயுமொரு சித்தனாவாய் பாடயிலே
ஒருவருந்தான் சொல்லவில்லை பாரினிலே இந்நூல்போல் ஒருநூலுண்டோ
3282.
உண்டேதான் வையகத்தில் பலநூலுண்டு உத்தமனே சாத்திரங்கள் கோடியுண்டு
கண்டேனே நானும்வெகு நூல்கள்தன்னை கவடமற்ற நூலிதுதான் மெய்நூலாகும்
திண்டான வேதமுனி நூல்கள்சொன்னார் திகழுடனே காசினியி லனேகமுண்டு
கொண்டான கொண்டபடி வினோதஞ்சொன்னார் குவலயத்தில் இந்நூல்போலில்லைதாமே
3283.
தானான செந்தூரஞ் சாற்றக்கேளு தகமையுடன் புளியாரைச் சாற்றினாலே
பானான செந்தூர மறைத்துமேதான் பதமுடனே பில்லைதட்டிக் காயவைத்து
வேனான வோட்டிலிட்டுச் சீலைசெய்து  விருப்பமுடன் கெஜபுடத்தில் போட்டாயானால்
கோனான குருநாதர் சொன்னவாக்கு குவலயத்தில் பொய்யாது மெய்யாம்பாரே
3284.
பாரேதான் செந்தூரங் காரமேறி பாகமுடன் காயாதிகற்பமாகும்
வேரேதான் வைத்து பத்துபுடமேபோடு நெறியான புடமதுவுந் தப்பாவண்ணம்
கூரேதான் சொன்னபடி செந்தூரிக்கும் கூர்பான காரமது சொல்லப்போமோ
வேரேதா னின்னமொரு மார்க்கம்சொல்வோம் வேதாந்தத் தாயினது வருள்தான்காணே
3285.
காணவென்றால் இன்னமொரு மார்க்கம்பாரு கருவான செந்தூரப்போக்குசொல்வேன்
தோணவே செந்தூரந் தனையெடுத்து துறையுடனே கல்வமதிலிட்டு மைந்தா
பூணவே பூநீறு முப்புச்சுண்ணம் புகழாகத் தான்போட்டு எட்டிலொன்று
வேணவே பொன்னினாவாரையாலே விருப்பமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
3286.
நாலான சாமமது வரைத்தபோது நயமுடனே வெண்ணையது போலேயாகும்
பாலகனே வெண்ணையது இதற்கொவ்வாது பாலகனே சித்தர்முகம் வேதையாச்சு
சேலான வனமூலிதன்னையப்பா செம்மையுடன் தான்கூட்டியரைத்தபோது
மாலான சத்தெல்லாம் மடிந்துமேதான் மகத்தான செந்தூரம் மடியலாச்சே
3287.
ஆச்சென்று விடுகாதே மைந்தாகேளு வப்பனே பில்லையது தட்டியேதான்
காச்சலென்ற ரவிதனிலே காயப்போடு கருவான ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
பாச்சலுடன் கெஜபுமாய்போட்டுத்தீரு பாலகனே யாறியபின் எடுத்துப்பாரு
மூச்சடங்கலிப் புடமதுதான் வெந்துதானால் மோசமில்லை வாராதன்றே
3288.
வாராது தோஷமது நேராதல்லோ வகுப்பான செந்தூர முறுதிகாணும்
நேரான செந்தூரந் தனையெடுத்து நேர்மையுடன் கல்வமதிலிட்டுபின்னும்
சேரான பொன்னினாவாரை மூலிசேரவேதான் விட்டுவரைத்துமேதான்
நீரான மைபோலரைத்துமல்லோ நிஷ்களமாய்ப் பில்லையது தட்டிப்போடே

3289.
போடவே ரவிதனிலே காய்ந்தபின்பு பொங்கமுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
நீடவே கெஜபுடமாய் போட்டாயானால் நீரான செந்துரமென்னசொல்வேன்
கூடவே இப்படியாய் ஐந்துபத்து கொற்றவனே புடமதுதான் தீர்ந்தாயானால்
நாடவே செந்தூர மென்னசொல்வேன் நாதாக்கள் கைமறைப்பு கண்டுபாரே
3290.
பாரேதான் சித்தர்முனி ரிஷிகள்தாமும் பாருலகில் செய்வதுதான் அதீதமார்க்கம்
நேரேதான் பலநூலுங் கண்டாராய்ந்து சிறப்புடனே அனேகவித காயகற்பம்
சீரேதான் தான்முடித்தார் லக்கோயில்லை
வேரேதான் வனேகநூல் யானுங்கண்டேன் வுற்பனத்தை யுளவறிந்து சொல்லார்தாமே
3291.
தாமான கருவெல்லாம் மறைத்துப்போட்டார் தகமையுடன் திருமூல வர்க்கத்தார்க்
நாமேதான் சொன்னபடி நூலாராய்ந்து நாட்டிலுள்ள வளப்பமெல்லாம் கண்டார்பாதி
தேமேதான் காயாதி கற்பசாங்கம் தெளிவாகச் சொன்னவர்கள் ஒருவரில்லை
பூமானங் காலாங்கிநாதர்தாமும் புகழுடனே பாடிவைத்தார் கோடியாமே
3292.
கோடியாஞ் சித்தர்களில் ஒருவருண்டு கூறினார் பலபலவாங் கண்டாராய்ந்து
தேடியே மானிடர்கள் பிழைக்கவென்று தெளிவாகப்பாடிவைத்தார் சித்தர்தாமும்
பாடியதோர் நூலெல்லாம் பழுதாராய்ந்து பாரினிலே பலபலவாம் பேதஞ்சொன்னார்
நாடியே போகரிஷி அடியேன்தானும் நயம்பெறவே யுலகமதில் நவின்றிட்டேனே
3293.
நவின்றிட்டே னின்னமொரு கருமானங்கேள் நாட்டிலுள்ள மாணாக்கள் பிழைக்கவென்று
நவின்றிட்ட சாத்திரங்கக் யுத்தாயுத்தம் தன்மைபெற வெகுசுளுவாய் ஆராய்ந்தேதான்
புவின்றிட்டேன் பொன்னினூமத்தை தன்னால் கருவாகத் தானரைப்பாய் சாமமெட்டே
3294.
எட்டான சாமமது செந்தூரத்தை எழிலாக தானரைப்பாய் மைந்தாநீயும்
திட்டமுடன் மைபோலதானரைத்து தீர்க்கமுடன் பில்லையது லகுவாய்த்தட்டி
சட்டமுடன் ரவிதனிலே காயவைத்து சாங்கமுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து
வட்டமென்ற குழிதனிலே எருவடுக்கி வாகுடனே புடமதுவும் போடுபோடே
3295.
போட்டவுடன் தீயாறி எடுத்துப்பாரு பொலிவான செந்தூரமென்ன சொல்வேன்
நீட்டமுடன் செந்தூரங்காரமேறி நீனிலத்தில் காயாதிகற்பமாச்சு
வாட்டமுடன் செந்தூரமிந்தபாகம் வன்மையுடன் வைந்துபத்து புடந்தான்போடு
தாட்டிகமாய் செந்தூரம் அருணன்போலாம் தாரிணியில் ஒருவருந்தான் செய்யார்தாமே
3296.
தானான செந்தூர மதீதவித்தை தாரிணியில் ஒருவருந்தான் செய்ததில்லை
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தம்பதியில் அடியேன்சென்று
வேனான சாத்திரத்தின் உளவுபார்த்து வேகமுடன் சீனபதிசென்றுயானும்
பானான குளிகைதனை பூண்டுகொண்டு பறந்திட்டேன் சீனபதிதேசங்காணே

3297.
காணவே சீனபதி சென்றேன்யானும் கமலமுனி சீர்பாதங் கண்டுபோற்றி
வேணவுப சாரமது மிகவுஞ்செய்து வெற்றியுடன் குளிகையது பூண்டுகொண்டு
பாணமது போலெழும்பி யடியேன்தானும் பக்கலென்ற சமாதியது நின்றேன்யானும்
நாணவே தலைகுனிந்து நின்றபோது நாதராங் கமலமுனி விடைசொன்னாரே
3298.
விடையொன்று சொல்லுகையில் அடியேன்தானும் விருப்பமுடன் வுத்தாரஞ்சொல்லுற்றேன்
தடையில்லா வாக்கதுவுங் கமலர்தாமும் தாட்சியுடன் எந்தனுக்கு உரைத்ததாலே
மடைபோன்ற செந்தூர காயகற்பம் மகதேவர் மகிட்சியுடன் செய்யலுற்றார்
இடையூறு வாராமல் எந்தனுக்கு எழிலான வாக்கதுவுங் கொடுவென்றேனே
3299.
கொடுவென்று கேட்கையிலே சித்துதாமும் கொப்பெனவே எந்தனுக்குச் சாபந்தீர்ந்து
படுமுன்னே சரக்கெல்லாம் கட்டிப்போக பாரினிலே காயாதிகற்பந்தானும்
தொடுகுறி போலெந்தனுக்கு வுளவுஞ்சொல்லி தோஷமது போவதற்கு முறையுஞ்சொல்லி
விடுவகலும் பிணிநீங்கக் காயகற்பம் விருப்பமுடன் வாக்களித்தார் முறையுந்தானே
3300.
தானான கமலமுனிநாதர்தாமும் தகமையுடன் எந்தனுக்கு வாக்களித்தார்
கோனான காலாங்கி நாதர்பாதம் கும்பிட்டு வடியேனுந் தாள்பணிந்து
தேனான சாத்திரத்தை கண்டாராய்ந்து திரட்டிவைத்தேன் போகரேழாயிரந்தான்
பானான காலாங்கிதனைநினைத்து பாடிவைத்தேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

3301.
தானேதான் செந்தூரப் பெருமைதன்னை சாத்துகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
மானேகேள் வனுபான மினமறிந்து மயங்காமல் மானிடர்கள் கொள்வதற்கு
தேனேதான் பசும்வெண்ணை நெய்யுமாகும் தேற்றமுடன் பாலாகுஞ்சூரணந்தான்
ஊனான லேகியங்கள் கிரதமாகும் வுத்தமனே இஞ்சிரசம் முலைப்பாலாமே
3302.
ஆமேதான் சக்கரையு மெழுகுமாகும் அப்பனே இந்தவித வனுபானங்கள்
நாமேதான் சொன்னபடி சிகிச்சைசெய்தால் நாடாதுதேகம் வலுபிணிகள்போகும்
போமேதான் பொல்லாத நோய்கள்போகும் பொலிவான ரோகத்தின் மார்க்கஞ்சொல்வேன்
வேமேதான் பிணிக்குறிப்பு வுளவுசொல்வேன் வேகமுடன் காயாதிகற்பங்கேளே
3303.
கேளேதான் வாயுவென்ற தெண்பதும்போம் கெடிதான பித்தமது நாற்பதும்போம்
நாளேதான் கிரந்தி பதினெட்டும்போகும் நாடாது ஜன்னி பதின்மூன்றும்போகும்
பாளேதான் பாண்டுவகை யாறுந்தீரும் பாலகனே மூலமிருபதுவும்போகும்
வீளேதான் அதிசார ரோகம்போகும் வீரான கிராணியென்ற தாறும்போமே
3304.
ஆரான வாதமென்ற ரோகம்போகும் அப்பனே சிலேத்துமது தொண்ணூற்றாரும்
காரான கொடியரோகம் பதினெட்டும்போம் கருவான காசமென்ற ரோகமெட்டும்
வேறான வுளமாந்தை ரோகம்போகும் விருப்பமுடன் பிரமியங்கள் அனைத்தும்போகும்
கூறான மேகமென்ற இருபத்தொன்றும் கொற்றவனே சடலம்விட்டு யேகும்பாரே
3305.
பாரேதான் குட்டமது பதினெட்டும்போம் பாங்கான சோகையென்ற ரோகம்போகும்
நேரேதான் மகோதரங்கள் எட்டும்போகும் நெடிதான விஷபாக மாறும்போகும்
சேரேதான் சூலைபதினெட்டும்போகும் செழிப்பான குன்மமென்ற தெட்டும்போகும்
நேரேதான் பெரும்பாடு ரோகம்போகும் மேலான கல்லடைப்பு வாரும்போமே
3306.
போமேதான் விப்புரிதி ரோகம்போகும் பொலிவான காப்பன் பதினெட்டும்போகும்
வேமேதான் பவுத்திரங்கள் அனைத்தும்போகும் விரப்பமுடன் நேத்திரநோய் தொண்ணூற்றாரும்
நாமேதான் சொன்னபடி வதிரோகங்கள் நாட்டிலுள்ள வதிசூரியெல்லாம்போகும்
தாமேதான் பீநிசங்கள் எட்டும்போகும் தாக்கான சிரசிநோ யனைத்தும்போமே
3307.
சிரமான நோயுடனே யின்னஞ்சொல்வோம் சீரான தாகமென்ற ரோகம்போகும்
வரமான விக்கல்வலி ரோகம்போகும் வகையான சுவாசமென்ற ரோகம்நீங்கும்
உரமான வாந்தியென்ற ரோகம்போகும் வுத்தமனே மார்புநோய் தனைவிட்டேங்கும்
பரமான கம்மலென்ற ரோகம்போகும் பார்த்திபனே சகலவிஷ ரோகம்போமே
3308.
போமென்று விடுகாதே வின்னஞ்சொல்வோம் பொலிவான வாண்குறியின் ரோகம்போகும்
தாமெனவே பெண்குறியின் ரோகம்போகும் தாக்கான மருந்துவகை வீரும்போகும்
நாமெனவே மலட்டுவலி ரோகம்போகும் நாடாது கசரோகமெல்லாம் நீங்கும்
வேமெனவே காயாதி கற்பமார்க்கம் விருப்பமுடன் செய்கின்ற வீரந்தானே

3309.
வீரமாஞ் சிலவிஷங்க ளற்றுப்போகும் வேகமென்ற பிளவையென்னும் கட்டிபோகும்
சாரமாம் ரத்தவிஷ மற்றுப்போகும் சதாகாலம் மேலிளைப்பு தேர்ந்துபோகும்
தூரமாங் காதவழி நடக்கலாகும் நடந்தாலும் வாசியது கீழேநோக்கும்
பாரமாந் தேகமது கற்றூணாகும் பாரினிலே வெகுகால மிருக்கலாமே
3310.
இருக்கலாம் கோடியுக கற்பகாலம் இருந்தாலும் நரைதிரையும் ஒன்றுமில்லை
சுருக்கமுடன் மேனியது தளர்ந்திடாது தளர்ந்தாலும் நரம்புக்கு வலுவுமுண்டு
பெருக்கமுடன் காயாதிகற்பகாலம் பேருலகில் நீயுமொரு சித்தனாவாய்
உருக்கமுடன் செந்தூரங் கொண்டபேர்க்கு வுலகத்தில் வயது கணக்கில்லைதாமே
3311.
கணக்கில்லை காலன்வந்தணுக மாட்டான் காசினியில் வெகுகால மிருக்கலாகும்
பிணமாகி மூச்சடங்கி இருந்திட்டாலும் பேருலகில் உன்னையொரு சித்தனென்பார்
ஷணநேரம் வாசியைநீ நடத்திட்டாலும் சதாசிவன்தான் நீயென்று சொல்லுவார்கள்
மணமுடனே பூமிதனில் வாழலாகும் மண்ணுலகில் வேந்தரெல்லாம் நடுங்குவாரே
3312.
நடுங்குவார் உனைக்கண்ட சீஷவர்க்கம் நாடோறும் உந்தனுக்கு பணியேசெய்து
ஒடுங்கியே உந்தனிட பக்கஞ்சென்று வுபசார வார்த்தைகளும் அதிகம்பேசி
கொடுந்தவசியானதொரு வுந்தனுக்கு கோபமது வாராமல் முன்னேநின்று
படுந்துயர மிகவாகி மனதிலெண்ணி பட்சமுடன் சதாநித்தஞ் சேவிப்பாரே
3313.
சேவிப்பார் தவநிலையில் ஒடுங்கிநின்று சேர்வையுடன் காட்சிதனைக்காணவென்று
கோவிப்பு வாராமல் குருவைத்தானும் கொற்றவனு மெந்நாளும் பணிந்துநின்று
தாவிப்பாம் சோடசோபாரத்தோடு தண்மையுடன் ஏவலுக்கு முதலாய்நின்று
சாவிப்பு வாராமல் புனிதவானாய் சதகோடி காலம்வரை பணிசெய்வாரே
3314.
பணியான நீயுமொரு சித்தனைப்போல் பாலகனே எந்நாளுமிருப்பதற்கு
அணியான சிவயோகந் தன்னிற்சென்று ஆத்தாளை சதாநித்தம் பூசித்தேதான்
துணிவோடு சமாதிநிலை நின்றுகொண்டு துப்புறவாய் மேல்மூச்சு தனையடக்கி
மணியான பூரகத்தை மேலேநோக்கி மார்க்கமுடன் லனாகதத்தைப் பூட்டிப்பாரே
3315.
பூட்டிமிகப் பார்க்கையிலே பொலிவு தோன்றும் பொங்கமுடன் கழுத்திதனை மேலிறுத்தி
ஆட்டுமந்தை தனிவோணாய்ப் புகுந்தாற்போல வப்பனே அஷ்டாங்கந் தன்னிற்சென்று
கூட்டுமுறை வகையறிந்து சிவயோகிதானும் குணமுடனே யங்கசித்தி பெற்றுக்கொண்டு
பாட்டுநயமறிந்துமல்லோ பாரின்மீது பாரமுடன் தவசிருத்தல் மெத்தநன்றே
3318.
நன்றான யோகமதையறியவேண்டும் நாயகனே எந்நாளும் பூசைவேண்டும்
குன்றான மாய்கைதனை யறுக்கவேண்டும் கொடிதான பொருளாசை நீக்கவேண்டும்
பன்றான சாத்திரத்தை பலவும்பார்த்து பாரினிலே கோளாறுயறியவேண்டும்
சென்றாலும் ராசரிடஞ் செல்லவேண்டும் செயலான பாக்கியத்தை நீக்கநன்றே

3317.
நீக்கவே பொருளாசை யவர்க்குச்சொல்லி நிதியெலாந் தானழிக்கமதியுஞ்சொல்லி
போக்கவே கர்மானுபவத்தை நீக்கி பொங்கமுடன் எந்நாளும் ஞானமோதி
வாக்கதுஊம் பிசகாமல் வறியோருக்கு வண்மையுடன் தானமது செய்யச்சொல்லி
நோக்கமுடன் அவரவர்க்குத் தக்கபாகம் நுண்மையுடன் கொடுப்பதுவே தர்மமாமே
3318.
தருமமாங் காயாதிகற்பமுண்டோர் சதாகாலஞ் சாயுச்சியம் பெறுவதாகும்
கருமமாம் வஷ்டான பீடைதானும் காசினியில் வெறுப்பதுவே யோகமார்க்கம்
கருமமுடன் காயமது பூமிதன்னில் சட்டமுடன் இருந்தாலும் கரிப்பேறாது
மகுமமுடன் சித்தாதி சித்தரெல்லாம் மானிலத்தில் இப்படியே வழங்கினாரே
3319.
வழக்கமுடன் தானிருந்தார் சித்தாசித்து வையகத்தில் காயாதிகற்பமுண்டு
பழக்கமிது மிகவாகி பாரினிற்குள் பதிங்கிருந்தார் வெகுகோடி காலந்தானும்
முழக்கமுடன் ஆண்டுக்கோர் கோஷ்டிகாட்டும் மூதுலகில் கண்டவர்கள் பிரமிப்பார்கள்
பழக்கமுடன் சீஷவர்க்கம் இதுவேபாகந் தாரிணியில் வெகுசித்து ஆடினாரே
3320.
ஆடினார் சித்தர்முனி ரிஷியைப்போல அவனிதனில் கோடிமனுதவசியோர்கள்
தேடியே சமாதியிட நிலையைக்கண்டு தேற்றமுடன் பெரியோரை யடுத்துமேதான்
கூடியேகும் பல்கும்பலாய்ச் சேர்ந்து குருவான தவநிலையைக்காணவென்று
நாடியே சொரூபமென்ற நிலையைக்காண நலமுடனே காத்திருந்தார் அனேகம்பேரே
3321.
பேரான வழிதனிலே வதீதம்பூண்டு பேருலகில் நீயுமொரு சித்தனைப்போல்
தூரான கெட்டவழி சொல்லாமற்றான் துரைராஜ் சுந்தரன்போலிருந்துகொண்டு
வாரான சாத்திரத்தின் வண்மைபார்த்து வண்மையுடன் வாதமதை யறிந்துகொண்டு
தேரான யோகமதை நிலைநிறுத்தி தேற்றமுடன் யோகநிலை திடமுந்தேடே
3322.
தேடையிலே விட்டகுறை நேர்ந்துதானால் தெளிவுடனே யுந்தனுக்கு லபிக்கும்பாரு
கூடயிலே வாசன்தானில்லாவிட்டால் கொற்றவனே காயாதிகற்பம்போதும்
பாடையிலே சென்றாலும் திரேகம்போமோ பாரினிலே தெரியாமலிருந்தார்கோடி
நீடையிலே காயாதிசெந்தூரந்தான் நிலைத்துதடா தேகமது கற்றூணாச்சே
3323.
கற்றூணாம் பொற்றூணாம் கருங்கல்லாகும் காசினியில் காயாதி கற்பமாச்சு
நற்றூணாம் காயாதி செந்தூரந்தான் நாயகனே முக்கோடி தவஞ்செய்தாலும்
சற்குணனாம் வீராதிவீரன்போலும் பாரினிலே சதகோடிசூரியன்போல்
துற்குணங்கள் தானகன்று சித்தனாவாய் துரைராஜ சிவயோகி நீயாவாயே
3324.
ஆகையிலே செந்தூர முண்ணபேர்க்கு அவனிதனில் நரையில்லை திரையுமில்லை
சாகையிலே சேத்துமங்கள் அணுகிடாதே செத்தாலும் ஆவியது வெளிபோகாது
போகையிலே தவஞ்செயினும் சிரசுக்குள்ளே பொங்கமுடன் தான்வசித்து கற்பகாலம்
வேகையிலே தீயதின் வெந்திட்டாலும் வெகுசுறுக்காய் தேகமது துள்ளும்பாரே

3325.
பாரேதான் தேகமது துள்ளும்போது பாரினிலே ஜெகஜால வித்தையென்பார்
நேரேதான் சவமுகத்தில் நிற்கும்போது நெருப்பான தணலதுவு மவிந்துபோகும்
கூரான மானிடர்கள் சொல்வதென்றால் குவலயத்தில் ஜெகஜால வித்தையென்பார்
தூரேதான் மசானமதிலிருந்துகொண்டு துப்புறவாய் சவமதனை பழிசொல்வாரே
3326.
பழியான செந்தூரங் காயகற்பம் பாருலகிலுண்டவர்க்குக் காயம்போகா
வழியான செந்தூரம் யார்தான்செய்வார் வண்மையுள்ள சிவயோகி தானேசெய்வான்
மொழிவான கருவாளி யானமாந்தர் மோசமின்றி காசுதனை செலவுசெய்து
கழியான செந்தூரப்போக்குதன்னை கனமுடனே செய்பவனே புனிதனாமே
3327.
புனிதனாம் இன்னமொரு மார்க்கம்பாரு புகழான செந்தூரஞ் செப்பக்கஏளும்
வனிதமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று வாகுடனே தானுருக்கி குருவொன்றீய
கனிவான கரியோட்டிலூதிப்போடு கருவான செம்பதுவும் கொஞ்சம்நீங்கி
தனியான வெள்ளியது வரணமேறி தகமையுடன் பொன்னென்ற மாற்றுமாச்சே
3328.
ஆச்சப்பா குடவனிலே பத்துக்கொன்று அப்பனே பாச்சிடவே மாற்றெட்டாகும்
மாச்சப்பா செம்புதனில் பத்துக்கொன்று பாங்குபெற மாற்றதுவும் எட்டதாகும்
பேச்சப்பா பிசகொன்று மில்லைதானும் பேரான தங்கமது பத்துக்கொன்று
மூச்சப்பா விடுகாமல் உருக்கியேதான் முதன்மையுடன் தானெடுக்கக் கலங்குமாமே
3329.
களங்கான தங்கமதை எடுத்துக்கொண்டு கருணையுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று
விளங்கவே தானுருக்கி யெடுத்துக்கொண்டு வேகமுடன் வாரடித்துப் புடத்தைப்போடு
அளங்கமுடன் தங்கமது விளையும்பாரு அப்பனே சிவத்துக்கு வுருக்கித்தங்கம்
நளங்கமுடன் சிவராஜயோகஞ்சென்று நாட்டிலே தாமிருந்தார் கோடியாமே
3330.
கோடியாந் தவகோடி ரிஷிகள்கோடி குவலயத்தில் சத்துவகை யறியாமற்றான்
கோடியே சுட்டலைந்து கெட்டார்கோடி தெரிசனங்கள் காணாமல் மாண்டார்கோடி
வாடியே மனந்தளர்ந்து வழிகாணாமல் வகைகெட்டு நூல்பார்த்து மறந்தார்கோடி
கூடியே யொருவரிடம் முறைகள்கேட்டு கூர்மையுடன் பாராமல் கெட்டார்தாமே
3331.
தாமான யின்னமொரு கருமானங்கேள் தகமையுள்ள சித்தர்முனி கொங்கணவரப்பா
சாமான்யமானதொரு சாத்திரத்தை சதுரான சங்கமதிற் கொண்டுசென்று
பூமான்கள் சித்துவகை இருக்குங்கூட்டம் புகழ்ச்சியுடன் வழிபாடு சென்றுமங்கே
சாமான்ய மானதொரு கொங்கணவர்தாமும் மதிப்புடனே சபைநடுவே சென்றிட்டாரே
3332.
சென்றிட்ட கொங்கணவர் சித்தர்தாமும் சிறப்புடனே சித்தர்முனிதம்மைக்கண்டு
வென்றிட்ட சாத்திரத்தை வாதுபேசி விருப்பமுடன் சத்துவகை மிகவும்பேசி
கன்றிட்ட கருங்குருவைத் தெரிந்துகொண்டு கருத்துடனே கருமுடிக்க மனதிலெண்ணி
பன்றிட்ட சாத்திரத்தை தோஷஞ்சொல்ல பாரினிலே சத்துவகை முடித்தார்காணே

3333.
காணவே பத்துவகை யெடுக்குமார்க்கம் நடந்ததோர் ஞானிமுதல் சித்தர்தாமும்
தோணவே பாஷாணம் முப்பத்திரண்டும் துறையோடும் முறையோடும் செப்பக்கேளு
பூணவே வகைவகைக்கு பலமதாக புகழுடனே தேனுதனில் நாலுசாமம்
வேணவே தானரைப்பாய் மைந்தாகேளு விருப்பமுடன் வெண்ணெயது போலேயாட்டே
3334.
ஆட்டியே ரவிதனிலே காயவைத்து அப்பனே மூசைதனிலடைத்து மைந்தா
பூட்டியே வாலுகையா மேந்திரத்தில் புகழாக தானரைப்பாய் மைபோலாக
நாட்டியே மூசைதனிலடைத்துமைந்தா நலம்பெறவே சில்லிட்டுச் சீலைசெய்து
நீட்டமுடன் சரவுலையில் வைத்துவூது சேறான சரக்கெல்லாம் புகைந்துபோமே
3335.
போகுமே சரக்கெல்லாஞ் சத்தேயாகி பொங்கமுடன் ஈயமதுபோலேயாகும்
சாகுமே பாஷாணம் புகைந்துமல்லோ சத்துபோல் சத்தாகி களங்குமாகி
வேகுமே சரவுலையில் புகையுண்டாகி வேகமுடன் அஞ்சனத்தின் கல்போலாகும்
பாகுடனே உருக்கியதோர் மூசைதன்னை பதமுடனே தானெடுத்து வுடைத்துப்பாரே
3336.
பாரேதான் பாஷாணஞ் சரக்குசேர்த்து பாகமுடன் தானுருகி கரியாய்நிற்கும்
நேரேதான் பூநாகம் மண்ணைப்போக்கி நேர்மையுடன் சத்துக்கு நேர்சேராக
கூரேதான் வினயமுடன் ஒன்றாய்ச்சேர்த்து கொற்றவனே கல்வமதில் இட்டுப்பின்பு
வேறேவான் ஆவின்நெய் தன்னாலாட்டி வேகமுடன் மூசைதனில் அடைத்திடாயே
3337.
அடைக்கவென்றால் வஜ்ஜிரமாங் குகையில்வைத்து அப்பனே சில்லிட்டுச் சீலைசெய்து
தடையறவே ரவிதனிலே காயவைத்து சாங்கமுடன் சரவுலையில் வைத்துவூது
மடைபோன்ற தீயதனால் வெந்துசத்தாய் மார்க்கமுடன் ஈயம்போல் உருகிநிற்கும்
இடைநடுவே களங்கமதை எடுத்துக்கொண்டு எழிலான தங்கமது நேர்தான்கூட்டே
3338.
கூட்டியே தானுருக்கி யெடுத்துக்கொண்டு கஒற்றவனே கல்வமதி லிட்டுமைந்தா
தாட்டிகமாய் பொற்றலையின்சாற்றினாலெ தண்மையுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நீட்டமுடன் தானரைத்து பில்லைதட்டி நேர்புடனே ரவிதனிலே காயவைத்து
வாட்டமுடன் வோட்டிலிட்டு சீலைசெய்து வளமையுடன் சரவுலையிலேற்றிடாயே
3339.
ஏற்றியே வுருக்குமுகம் தன்னிலேதான் என்மகனே துருத்தியது நாலதாகும்
போற்றியே வாலாம்பிகை தனைநினைத்து பொங்கமுடன் மூசைதனை நெருப்பிலிட்டு
தூற்றியே கரியதனை மேலேகொட்டி துப்புரவாய் மூசையது யழுகுமட்டும்
நாற்றிசையும் தீபரக்க வூதுவூது நாயகனே சத்தெல்லாம் முத்துமாமே
3340.
முத்தான சத்ததுவுஞ்சொல்லப்போமோ மூதுலகில் யாரேனுங் கண்டதுண்டோ
சித்தான முனிரிஷிகள் செய்யும்வேதை தேசத்தில் மற்றவரால் செய்யப்போமோ
வித்தான களங்கமது காயகற்பம் விண்ணுலகில் கருவாளி செய்வான்பாரு
சத்தான சத்துதனை யெடுத்துமைந்தா சார்புடனே மூசைதனை யுடைத்துப்பாரே

3341.
உடைத்து மிகப்பார்க்கையிலே என்னசொல்வேன் ஓகோகோ நாதாக்கள் ரிஷிகள்வேதை
புடைத்துமே சத்துகளை தானெடுத்து புகழாக கல்வமதிலிட்டு மைந்தா
படைப்புடன் வீரமென்ற செயநீர்தன்னால் களிப்புடனே தானரைப்பாய் சாமம்நாலு
படைப்புடனே பில்லைதட்டி காயவைத்து பாங்குபெற வோட்டிலிட்டு சீலைசெய்யே
3342.
சீலையென்றால் ஏழுசீலைவலுவாய்செய்து சிறப்புடனே செம்மண்ணைமேலேபூசி
காலைதனில் கெஜபுடத்தில் போட்டுமல்லோ கருவாக மூன்றுநாள் பொறுத்தபின்பு
மாலையென்னும் மூன்றாம்நாள் மாலையப்பா மயங்காமல் தானெடுப்பாய் மைந்தாநீயும்
வாலையென்னும் திரிபுரையாம் புவனைவாலை தண்மையுடன் தானினைத்து எடுத்திடாயே
3343.
எடுத்துமிகப் பார்க்கையிலே என்னசொல்வேன் எழிலான செந்தூரமெத்தமெத்த
அடுத்துநின்ற பேர்களைநீ தூரத்தள்ளி அப்பனே செந்தூரமெடுத்துக்கொண்டு
தொடுத்தகுறி தப்பாமல் பின்னுங்கேளு தோராமல் கல்வமதிலிட்டு மைந்தா
கொடுத்துமே முன்சொன்ன செயநீர்தன்னால் கொப்பெனவே தானரைப்பாய் சாமமெட்டே
3344.
எட்டான சாமமது வரைக்கும்போது எழிலான வெண்ணையது போலேயாகும்
கட்டான சூதமது நாலாய்ச்சேர்த்து கருவாகத் தானரைப்பாய் சாமம்ரெண்டு
மட்டான பில்லையது சிறுகத்தட்டி மதிப்பான ரவிதனிலே காயவைத்து
தட்டான பதிதனிலே குழிதான்வெட்டி தகமையுடன் புடம்போட வமிசைகேளே
3345.
வரிசையென்றால் வரிசையது செப்பக்கேளும் வாகுடனே குழிதனிலே மணல்தான்கொட்டி
சரியான மண்மேலே வுப்பைக்கொட்டி சார்பாக பில்லைதனை மேலேவைத்து
பரிவுடனே மேலுமந்த வுப்பைக்கொட்டி பண்புடனே மணல்தனை மேல்பரப்பி
குறியான குறிப்பதுபோல் வுமிதான்கொட்டி கொற்றவனே மேல்தனிலே எருவுபோடே
3346.
போட்டவுடன் தீமூட்டி புடந்தான்போடு பொன்னவனே மூன்றுநாளாறுமட்டும்
தாட்டிகமாய் தனையெடுத்து பார்க்கும்போது சட்டமுடன் செந்தூரம் அருணன்போலாம்
மாட்டிமையாய் இந்தமுறை ஐந்துபத்து மயங்காமல் தான்போட வரிசைகேளு
பாட்டினது முறையேனும் பொய்யுமாகா பாரினிலே கொங்கணவர்பாகமாமே
3347..
பாகமாங் கொங்கணவர் பாகந்தானும் பாரினிலே யாரேனும் செய்ததுண்டோ
கோபமாய் முனிசொன்னவாக்குபொய்யோ கொற்றவனே கொங்கணவர் வாக்குபொய்யோ
ஏகவழி தனைக்கடந்த ஞானசித்து ஏற்றமுடன் மானிடர்கள்பிழைக்கவென்று
சாகமுடன் செய்துவைத்தார் இந்தபாகம் சட்டமுடன் கொங்கணவர் நாதர்தாமே
3348.
தானான செந்தூரமென்ன சொல்வேன் தாரிணியில் மாமுனிவர் ரிஷிகள்தாமும்
தேனான பாகமிது கைபாகந்தான் தேற்றமுடன் ஆராய்ந்து கேள்விகேட்டு
கோனான எனதையர் காலாங்கிநாதர் சொன்னவள வாக்குணமுங்கண்டு
பானான செந்தூரப்பாகங்கண்டு பாரினிலே சந்தேக நீங்கினாரே

3349.
நீங்கினார் கொங்கணவர் கைபாகத்தில் நீடாழி காலம்வரை நுணுக்கம்பார்த்து
தூங்கியே திரியாமல் சித்துதானும் துறையோடும் முறையோடுஞ் செய்துகொண்டார்
ஓங்கியே பாகமது கைவிடாமல் வுத்தமனே செய்துமல்லோ குளிகைபூண்டு
ஏங்கியே போகாமல் மைந்தாநீயும் எழிலுடனே இப்பாகம் செய்திடாயே
3350.
செய்யவென்றால் வெகுகோடி மாந்தர்தாமும் செம்மையுடன் செய்துமல்லோ முறைதான்காணார்
பையவே கருவாளி செய்வான்பாரு பாரினிலே மற்றவரே காணார்காணார்
நையவருங் கோபத்தார் செய்யமாட்டார் நாட்டிலுள்ள சாத்மீகர் செய்வார்பாரு
துய்யவே வாதவித்தை செய்வார்தாமும் துப்புரவாய் செய்வதுவும் திண்ணமாமே
3351.
திண்ணமா மின்னமொரு கருமானங்கேள் திகழான வர்ணமென்ற போக்குசொல்வோம்
வண்ணமுடன் பஞ்சவர்ண விதங்கள் சொல்வோம் வகுப்புடனே யதிற்பிறந்த வர்ணம் நான்காம்
நண்ணமுடன் வாயுவென்ற இரும்புதன்னில் நலமான வர்ணமது ரூபபேதம்
கண்ணபிரான் வர்ணமது போலேயாகும் காசினியில் சித்தர்செய்யும் வேதையாச்சே
3352.
வேதையிலே இன்னமொரு போக்கைக்கேளும் வீறான சிறியகண்ணாகந்தானு
தீதையிலே தானுருக்கி மதியுப்போடு திகழான களங்குபோல் உருகும்பாரு
போகமுடன் சூதமதைக் கூடச்சேர்த்து பொங்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நாகமுடன் சாரமென்ற செயநீர்தன்னால் நளினமுடன் தானரைத்து செப்பக்கேளே
3353.
செப்பவென்றால் வளையலுப்பு கூடச்சேர்த்து சிறப்புடனே நிம்பழச்சார் தானும்விட்டு
ஒப்பமுடன் வெந்நீரில் கலக்கிக்கொண்டு ஓங்குபெற செம்பென்ற கட்டைதானும்
நெப்பமுடன் தகடடித்து சலத்திற்போடே நேரான வர்ணமது மேலேதாவி துப்புரவாய்
ஒளிவீசுந் தகட்டின்மேலே சூரியன்போல் தங்கமென்ற வர்ணமாமே
3354.
ஆமேதான் வர்ணமொடு சிவப்புபச்சை அப்பனே நீலமென்ற கருப்புதானும்
தாமேதான் ரசமதனைக் கூடச்சேர்த்து தன்மையுடன் சீசாவிலடைத்து மைந்தா
வேமேதான் தகடதனைத் தோய்க்கும்போது விதமான சஞ்சாயவர்ணங்காணும்
நாமேதான் சொன்னபடி ரூபவர்ணம் நயமுடனே தகடதனில் ஏறும்பாரே
3355.
பாரேதான் இரும்புக்கு இந்தமார்க்கம் பாகமுடன் செய்துவந்தால் பண்பதாகும்
நேரேதான் வங்கமது தகடடித்து நேரான முன்சொன்ன சரக்கிலேதான்
வாரேதான் வங்கமதை யுருக்கியேதான் வளமுடனே காய்ச்சியல்லோ தோய்ச்சிப்பாரு
கூரேதான் துரிசியிட காரத்தாலே கொற்றவனே பலபேதம் விளையுந்தானே
3356.
விளையுமே சகலவித ரூபாபேதம் வேகமுடன் தோன்றுவது வுண்மைபாரு
களையுடனே சூதத்தால் யெல்லாந்தோற்றும் காமரூப வடிவமெல்லாம் இதிலேதோன்றும்
தளைவுடனே தாளகத்தின் புகையினாலே தகமையுள்ள கெந்தியது காரத்தாலும்
சுளையுடனே பூத்ததுபோல் புகையெழும்பி சொர்ணமென்னு வேகமென்ற வர்ணமாமே

3357.
வர்ணமாயின்னமொரு போக்குசொல்வேன் வாகான கருவங்க பற்பங்கேளு
கர்ணமாங் கருவங்கஞ் சேர்தானொன்று தகமையுடன் தகடடித்து செப்பக்கேளு
மூரணமாங் கருங்காலி கிழங்குதன்னை முதன்மையுடன் தானரைத்து மூசைசெய்து
திரணமாங் குகைக்குள்ளே தகடைவைத்து தீர்க்கமுடன் முன்சொன்ன முப்புபோடே
3358.
போட்டுமே சில்லிட்டுச் சீலைசெய்து பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
காட்டென்ற எருவுதனை எஜமதாக்கி கருவாகக் குழிவெட்டிப் புடத்தைப்போடு
மூட்டென்ற புடமாறி மூன்றாநாள்தான் முக்கியமாய் நிருவாணி பூசைசெய்து
தாட்டிகமாய் புடந்தனையே திறந்துபாரு தளுக்கற்ற கருவங்க பற்பமாமே
3359.
ஆமேதான் பற்பமதை எடுத்துக்கொண்டு அப்பனே சிற்றண்டம் சவ்வுபோக்கி
தாமேதான் பற்பமெடை சரியாய்தூக்கி தகைமையுள்ள சிற்றண்டங் கூடச்சேர்த்து
போமேதான் வெண்கருவால் மிகவேயாட்டி பொங்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நாமேதான் சொன்னபடி பில்லைதட்டி நலமாக ரவிதனிலே காயவையே
3360.
வைத்ததொரு பில்லைதனை யோட்டிலிட்டுச் வண்மையுடன் சீலையது வலுவாய்ச்செய்து
நைத்ததொரு குழிதனிலே புடமே போடு நலமான கெஜபுடத்தில் வெந்துநீறும்
தைத்ததொரு புடமாறி யெடுத்துப்பாரு தளர்ச்சியுள்ள பற்பமது சொல்லப்போமோ
மெத்திடவே பற்பமதை பதனம்பண்ணு மேதினியில் சித்தர்செய்யும் வேதையாச்சே
3361.
ஆச்சென்று விடுகாதே யின்னங்கேளு அருமையுள்ள பாலகனே பின்னுஞ்சொல்வேன்
மாச்சலென்ற கற்பமதை வனுபானத்தில் மார்க்கமுடன் பணவிடைதான் கொண்டபோது
மேச்சலென்ற மேகமது இருபத்தொன்று மேதினியில் கண்காணாதோடும்பாரு
வீச்சலென்ற வீரவீச்சு சன்னிபோகும் வீரமுடன் தாதுவிர்த்தி யதிகமாமே
3362.
அதிகமாங் குன்மமென்ற தெட்டும்போகும் ஆண்மையுடன் குறிநோய்கள் அணைத்தும் போகும்
சதிரான குஷ்டமது பதினெட்டும்போம் சட்டமுடன் நீரிழிவு மாறும்போகும்
மதிமேகமென்றதொரு ரோகம்போகும் மாசற்ற தேகமது வன்னிமீறும்
துதியுடனே தாரணியில் சதாகாலந்தான் துப்புரவாய் யோகநிலை சமாதிதேடே
3363.
தேடையிலே சமாதிநிலை தன்னைக்கண்டு தெளிவாக கேள்விகளில் னேமங்கேட்டு
கூடயிலே சிவயோக நிலையில்நின்று குணமான வழிபாடு தனையெடுத்து
மாடையிலே சினமென்ற கோபந்தள்ள மதிப்புடனே தாரிணியிலிருந்துகொண்டு
நீடையிலே கரிவங்க பற்பந்தன்னை நீனிலத்திலுண்பவனே சித்தனாமே
3364.
சித்தனாய் பிறந்தாலும் மதிகள்வேண்டும் சீறலென்ற சினமதுவைத் தள்ளவேண்டும்
பத்தியுடன் பதாம்புயத்தை எந்தநாளும் பட்சமுடன் மனந்தனிலே நினைக்கவேண்டும்
நித்தியமும் பரவெளியில் நிற்கவேண்டும் நீடாழி யுலகாசை யொழிக்கவேண்டும்
முத்தியுடன் அஷ்டமா சித்திதன்னை மூவுலகில் பெறுபவனே யோகியாமே

3365.
யோகமென்றால் போகமதைத் தள்ளவேண்டும் யொருவருடன் வீண்வார்த்தைக் கூறலாகா
போகமதை நீக்கிவிட்டு பூமிதன்னில் புகழாக வாசியோகந் தன்னிற்சென்று
தாகமுடன் கானப்பால் தன்னைக்கொண்டு சதாகாலம் நிஷ்டையிலே யனுமானித்து
வேகமுடன் விட்டகுறை வந்தபோது வெறுப்பன்றி பொறுப்பலுடன் மீள்வீர்தாமே
3366.
மீளுவது யின்னமொரு கருமானங்கேள் மிக்கான வெள்வங்க பற்பஞ்சொல்வேன்
தாளுமையாய் வெள்வங்கஞ் சேர்தானொன்று தகமையுடன் சவுட்டுப்பு சேர்தான்பாதி
கோளகற்றி தகடடித்து மேலேபூசி கொற்றவனே யாவாரை பஞ்சாங்கத்தில்
மாளுறையாய் வெள்வங்கம் நீற்றுதற்கு மானிலத்தில் பஞ்சாங்கப் புடத்தைப்போடே
3367.
போடவே வெள்வங்கம் பொருமிநிற்கும் பொலிவான சோனமது போலேயாகும்
நீடவே சோனமென்ற பொறியெடுத்து நீட்சியுடன் கல்வமதிலிட்டு மைந்தா
கூடவே யாறுவகை செயநீர்தன்னால் கொற்றவனே தானரைப்பாய் சாமம்நாலு
சாடவே மைபோல வெண்ணையாக்கி சட்டமுடன் தானரைத்து பில்லைதட்டே
3368.
தட்டியே ரவிதனிலே காயவைத்து சதுராக வோட்டிலிட்டுச் சீலைசெய்து
திட்டமுடன் குழிவெட்டிப் புடத்தைப்போடு திரமான புமதுதான் கெஜமேயாகும்
மட்டமென்ற புடமதுவும் ஒன்றேயாகும் மறவாமல் மூன்றாநாள் பொறுத்தபின்பு
சட்டமுடன் தானெடுத்துப் பார்க்கும்போது தவளநிறம் போலாக யிருக்கும்பாரே
3369.
பாரேதான் பற்பமதை தனையெடுத்து பாகமுடன் கல்மதிலிட்டுப் பின்பு
நேரேதான் கிளிமூக்கு கிழங்குதன்னை நேர்புடனே சார்பிழிந்து சொல்லக்கேளு
சீரேதான் வெள்வங்க பற்பந்தன்னை சிறப்புடனே தானரைப்பாய் நாலுசாமம்
கூரேதான் வெண்ணையது போலேமைந்தா குறிப்பாக தானரைத்து பில்லைதட்டே
3370.
பில்லையென்றால் பில்லையது காசதாக பொறுமையுடன் தட்டியல்லோ ரவியில்போடு
கல்லுபோல் தானுலர்த்தி எடுத்துக்கொண்டு கருவாக வோட்டிலிட்டுச் சீலைசெய்து
அல்லன்றி கெஜபுடத்தில் போட்டாயானால் அப்பனே பற்பமது தவளம்போலாம்
வெல்லவே பற்பமதை எடுத்துக்கொண்டு விருப்பமுடன் கிழங்குசார் தன்னாலாட்டே
3371.
கிழங்கென்றால் கிழங்கதுவும் கொல்லன்கோவை கெடியான சாரதனை பிழிந்துகொண்டு
பழக்கமுடன் தானரைத்து பில்லைதட்டி பாகமுடன் ரவிதனிலே காயவைத்து
மழங்கவே வோட்டிலிட்டுச் சீலைசெய்து புகழாக கெஜபுடத்தில் போட்டாயானால்
விழங்கவே பற்பநிறம் கோக்குபோலாம் விண்ணுலகில் செய்பவரும் அருமைதானே
3372.
அருமையாம் பற்பமதை எடுத்துக்கொண்டு அப்பனே சிமிழ்தனிலே பதனம்பண்ணு
பெறுமையுடன் பணவிடைதான் சர்க்கரையில்கொள்ள பேரான நவமூல மொன்பதும்போம்
சிறுமைபட செயரோகமெல்லாம்போகும் சேர்மான மானதொரு கசரோகம்போம்
ஒருமையுடன் தேகமது கற்றூணாகும் வுத்தமனே வுனக்கீடு சொல்வாருண்டோ

3373.
உண்டோதான் வையகத்தில் வுனக்கீடுண்டோ வுத்தமனே ராஜாதிராஜபதியும்நீதான்
கண்டபடி பலபலவாஞ் சாத்திரத்தை கருத்திலே சற்றேனும் நினையாமற்றான்
விண்டபொருள் ஒன்றிருக்க ஒன்றைக்கொண்டு விட்டகுறை தொட்டகுறை யில்லையென்று
சண்டியென்னும் மானிடரைப்போலேநீயும் சதாகாலமிருப்பது நன்கல்லதாமே
3374.
நன்கல்லா சாத்திரத்தை தாறுமாறாய் நலமுடனே பாராமற்கெட்டலைந்து
புன்கவிகளொன்றிருக்க வொன்றைப்பார்த்து புராதனத்தின் பொருளறியார் மட்டிமாண்பர்
வன்கொடுமை செய்பவரோடு இணங்கிச்சென்று வாதாடி பலகாலும் வார்த்தைபேசி
தென்பொதிகை தனிலிருக்கும் சித்தர்நூலைத் தெளிவாகப் பாராத மட்டிமாடே
3375.
மாடான மாடிதுதான் சென்மமாடு மானிலத்தில் நூலறியா மட்டிமாடு
கூடான கூடழியுஞ் சண்டிமாடு குவலயத்தில் மெத்தவுண்டு கூறப்போமோ
தேடான பாக்கியமும் இங்கிருக்க தேசத்தில் சுட்டலைந்தோர் கோடாகோடி
பாடான வழியறிந்து காணமற்றான் பாரினிலே விட்டகுறைக்காளாவாரே
3375.
ஆவாரே யின்னமொரு கருமானங்கேள் அப்பனே சூதமென்ற ராசன்தன்னை
சாவான கள்ளியென்ற மரத்தில்தானும் சட்டமுடன் தான்குடைந்து சொல்லக்கேளும்
பூவான சூதமதை வதனில்விட்டு துப்புரவாய் அதின்நூலை மேலேகொட்டி
நாவான சீலையது வலுவாய்ச்செய்து நலமாக வாறுதினங்கள் கழித்துப்பாரே
3376.
பார்க்கையிலே சூதமது காரமேறி பாலகனே வெண்ணையது போலேயாகும்
தீர்க்கமுடன் வெண்ணையது எடுத்துக்கொண்டு திறமுடனே கல்வமதிலிட்டுக்கேளு
ஏர்க்கவே முன்சொன்ன முப்பூதானும் எழிலாகக் களஞ்சியது கூடப்போட்டு
நீக்கவே சூதமென்ற வெண்ணைதன்னில் நிலையான துருசுபலந் தன்னைப்போடே
3377.
போடவே பற்பமது கூடச்சேர்த்து பொங்கமுடன் கெந்தியென்ற செயநீர்தன்னால்
நீடவே தானரைப்பாய் சாமம்நாலு நீட்கமுடன் வெண்ணையது போலேமைந்தா
கூடவே பில்லையது தெல்லுபோலே குணமாகத்தான்செய்து ரவியில்வைத்து
தேடவே வோட்டிலிட்டுச் சீலைசெய்து தெளிவுடனே புடம்போடப் பற்பமாமே
3378.
பற்பமாங் கெஜபுடத்தில் நீறும்பாரு பாலகனே சிமில்தனிலே பதனம்பண்ணு
அற்பமென்று விடுகாதே புண்யவானே வன்புடனே வெண்ணைதனில் குன்றியுண்ண
கெற்பமே ரோகமதிலிருக்கும்நோய்கள் குலையோடே போகுமடா பின்னுங்கேளு
துற்பலத்தை நீக்கியல்லோ வலுவைக்காட்டும் துடியான பற்பத்தின் நேர்மைதானே
3379.
நேர்மையாம் மேகமென்ற ரோகம்போகும் மேனியது பளபளக்கும் சிவந்துகாட்டும்
கூர்மையாம் கபரோகம் சில்விஷங்கள் கொடிதான வயிற்றுவலி மேலிளைப்பு
தீர்மையாம் பௌத்திரமாம் முளைமூலங்கள் தீமைசெய்யும் கண்டத்தின் மாலைபோகும்
வார்மையுடன் கைன்னோசை கன்னக்குத்து தனமான கிரந்திமுத லற்றுப்போமே

3380.
அற்றுமே பீசமதினின்ற ரோகம் அப்பனே கால்வீக்கம் கைவீக்கம்போம்
முற்றுமே நரம்புகளும் முறுக்குமீறி முனையான தாதுவிர்த்தி யதிகமாகும்
பற்றாது பரையாப்பு கொறுக்குமூலம் படருமே தாமரையு மற்றப்போகும்
வற்றமே தேகமது வலுத்துகாட்டும் வண்மையுடன் மேனியது மின்னுந்தானே
3381.
தானான யின்னமொரு சூட்சஞ்சொல்வேன் தகமையுடன் மானிடர்கள் பிழைக்கவென்று
கோனான எனதையர் காலாங்கிநாதர் குருபதத்தை யடியேனுந் தாள்பணிந்து
பானான பராபரியை மனதிலெண்ணி பாடினேன் காண்டமேழாயிரந்தான்
தேனான இந்நூல்தான் குருநூலாகும் தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கே
3382.
சிவயோகி யானவர்க்கு எல்லாங்கிட்டும் தேசத்தில் மற்றவர்க்குக் கிட்டாதப்பா
தவயோகி என்றாலே கற்பங்கொல்வான் தாரணியில் மற்றவர் கொள்ளமாட்டார்
நவயோகம் பெற்றவரும் சிவயோகியாவார் நாட்டிலே மற்றவருமாவாரோதான்
பவமகற்றும் புண்ணியற்கு எல்லாமெய்தும் பாரினிலே சித்தனைப்போல் வாழலாமே
3383.
வாழலாம் வெகுகோடி காலமப்பா வரிபெறத் தலைமுழுக விபரங்கேளு
நீழவே நெல்லியுன் மிளகுதானும் நெடிதான கடுக்காயும் மஞ்சள்கூட்டி
காழவே பரிசிவைந்துங்கூட்டி கருவாக சமயெடையாய் எடுத்துக்கொண்டு
தாழவே கையாஞ்சாற் பாலுங்கூட்டி சாங்கமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
3384.
நாலான சாமமது வரைத்து மைந்தா நலமுடனே ஸ்தானமது செய்யும்போது
காலான காலனுக்கு இடமேயில்லை கண்ணிரண்டுங் குளிர்ச்சியது மிகவேயாகும்
பாலான விழியிரண்டு மெரிச்சல்நீங்கி பாலகனே சிரசுவலி தானேபோகும்
மாலான மண்டையிடி கபாலத்துக்கு மார்க்கமுடன் சடலம்விட்டேகும்பாரே
3385.
ஏகுமே கண்ணோய்கள் தொண்ணூற்றாறும் எழிலான மண்டையிடி கபாலக்குத்து
போகுமே வாதபித்தந் தலைகெட்டோடும் பொலிவான வாசியது கீழ்நோக்காகும்
வேகுமே யாவியது மயிர்கால்பற்றி வெளிதனிலே காற்றுடனே சேரும்பாரு
பாகுடனே தேகமது கற்றூணாகும் பாலகனே காயாதி கற்பமூழ்கே
3386.
மூழ்கினபின் பெண்ணாகா மதுபானந்தான் முக்கியமாய் மூன்றுமண்டலந்தானப்பா
மாழ்கியே சேராதே மனங்கொள்ளாதே மன்னவனே மூன்றுமுஆறை யிப்படியேகாரு
தாழவே கற்பமது கொண்டபோது தாரணியில் உன்னைப்போல் ஒருவனுண்டோ
வாழவே கற்பகோடி காலமப்பா வளமையுடன் தானிருந்து கற்பங்கொள்ளே
3387.
கொள்ளவே யின்னமொரு கருமானங்கேள் கொற்றவனே யாம்கண்ட வரைக்கும் சொல்வோம்
மெள்ளவே சாரனையா மூலியப்பா மேன்மையுடன் சேரதுதான் கொண்டுவந்து
துள்ளவே பொடியாக்கி மைந்தாநீயும் துரையுடனே நிழல்தனிலுலர்த்திக்கொண்டு
கள்ளவே சூரணமாய் செய்துகொண்டு கற்பனையாய் சுத்தியது செய்யக்கேளே

3388.
கேளேதான் பிட்டாவி செய்துகொண்டு கிருபையுடன் மூன்றுமுறை சுத்திசெய்து
பாளேதான் போகாமல் சூரணத்தை பாங்குபெற ரவிதனிலே காயவைத்து
வீளேதான் திப்பிலியு மிளகுதானும் விருப்பமுடன் சீரகமு மொன்றாய்க்கூட்டி
நாளேதான் போகாமல் சீனிசேர்த்து நலமுடனே சூரணமாய்க் கொண்டுபாரே
3389.
கொண்டவுடன் வாயுவென்ற குன்மம்போச்சு கொடிதான சூலையொடு வாதம்போகும்
பண்டுடனே கால்குடைச்சல் பறந்துபோகும் பாரினிலே எந்நூலை வெளியிடாதே
திண்டுடனே சித்துமத்தை யறுத்துப்போடும் திறமான வுளைமாந்தை யேகும்பாரு
அண்டமுடன் காயாதி கற்பமாகும் அப்பனே மூலியிட வேகங்காணே
3390.
காணவென்றா லின்னமொரு மார்க்கம்பாரு கருவான தாம்பரத்தின் மார்க்கம்சொல்வேன்
தோணவே தாம்பரத்தின் துட்டுவாங்கிப் துப்புரவாய் லேசாகத் தகடுகட்டி
மாணவே செய்கொடுவேலிதன்னை மயங்காமல் தானரைத்து வுண்டைசெய்து
வேணபடி குகைபிடித்து தாம்பரத்தை மெதுவாக வதிற்பொதிய விபரங்கேளே
3391.
கெட்கவென்றால் சீலையது வலுவாய்ச்செய்து கெவனமுடன் ரவிதனிலே காயவைத்து
நீட்டமுடன் குழிவெட்டி யெறுவடிக்கி நிஷ்களமாய் புடம்போட வெந்துநீறும்
பூட்கமுடன் புடமாறி எடுத்துப்பாரு பொன்னவனே துட்டதுதான் பொருமிவெள்ளை
தாட்கமல நாயகியாள் பாதத்தாணை தப்பாது பற்பத்துக்குறுதியாச்சே
3392.
ஆச்சென்று விடுகாதே பின்னுங்கேளு அப்பனே கல்வமதிலிட்டு மைந்தா
பேச்சென்றும் பேசாதே பொடியதாக்கி பேரான முன்சொன்ன முப்புசேர்த்து
மாச்சலென்ற சாரத்தின் செயநீர்தன்னால் மாளவே மூன்றுநாள் நெழுகறைத்து
பாச்சலுடன் பில்லையது லகுவாய்த்தட்டி பாலகனே ரவிதனிலே காயவையே
3393.
காய்ந்தபின்பு சில்லோட்டில் சீலைசெய்து கனமான கெஜபுடமாய் போட்டுத்தீரு
மாய்ந்துமே தாம்பரமும் மூரலற்று மாசற்ற பற்பமது தவளம்போலாம்
தீய்ந்துமே வூரலது மாண்டுபின்பு திரமான பற்பமது குருவுமாகி
சாய்ந்தலுடன் வாதத்திற்குறுதியாக்க சார்பான குருபற்பமிதுவெண்பார்கள்
வேய்ந்துமே சிமிழ்தனிலே பதனம்பண்ணு வேதாந்த தாய்தமக்கு வருள்சொல்வாளே
3394.
சொல்லவென்றால் வெள்ளிதனில் எட்டுமாற்று சொர்ணமது பிறவிக்கு ஈடுமாச்சு
நல்லதொரு பிறவியிடத்தங்கமென்பார் நாதாக்கள் செய்கின்ற வேதையாச்சு
புல்லறிவு வுடையதொரு பத்திமான்கள் பூதலத்தில் செய்துமல்லோ யோகஞ்செய்வார்
வில்லணிந்த வேந்தர்களும் செய்யலாகும் விருப்பமுடன் வேதத்தின் பெருமைபாரே
3395.
பார்க்கவென்றால் தாம்பரத்தின் பற்பந்தன்னை பாங்குடனே நெல்லிடைதான் கொண்டபோது
தீர்க்கமுடன் அனுபான மறிந்துகொண்டால் திறமுடனே தேகமது கற்றுணாகும்
சேர்க்கமுடன் வாயுவென்ற தென்பதும்போம் செயலான பித்தமது நாற்பதும்போம்
மூர்க்கமுடன் சேத்துமங்கள் தொண்ணூற்றாறும் முட்டோடே போகுமடா முடிவுதானே

3396.
தானேகேள் பற்பமது கொண்டபோது தாக்கான வாசியது கீழ்நோக்காகும்
மானேகேள் சிவராஜ யோகங்கிட்டும் மன்னவனே நீயுமொரு சித்தனாவாய்
வேமேதான் சொன்னபடி யோகமார்க்கம் வெளிப்படையாய் எப்போதுங்காணலாகும்
நாமேதான் உரைத்தபடி ஏழுகாண்டம் நடுகாண்மிதிலதிகங் காணலாமே
3397.
காணலாம் இன்னமொரு மார்க்கம்பாரு கருமான மாணாக்கள் பிழைக்கவென்று
பூணலாம் தங்கமென்ற காசுதன்னை புகழாகத் தானெடுத்து செப்பக்கேளு
தோணவே மூலியது கவுதும்பைத்தான் தோற்றமுடன் முன்சொன்ன முப்புசேர்த்து
வேணவே தானரைத்து மூசைசெய்து விருப்பமுடன் காசுதனை யுள்ளேவையே
3398.
வைத்துமே சீலையது வலுவாய்ச்செய்து வளமைபெற ரவிதனிலே காயவைத்து
தைத்தமுடன் குழிவெட்டி புடமேபோடு தாக்குடனே கெஜபுடத்தில் வெந்துநீறும்
பைத்தவிழா மூசைதனை எடுத்துப்பாரு பாலகனே தங்கமென்ற காசுதானும்
கைத்தவமாய் பொருமியது நொறுங்கிநிற்கும் காவலே தானெடுத்து செப்பக்கேளே
3399.
செப்பவென்றால் நாவில்லை பாவுமில்லை செயலான பாக்கியமும் இதனாலாகும்
ஒப்பமுடன் தானெடுத்து கல்வமிட்டு வுத்தமனே கவுதும்பைச் சாற்றினாலே
கொப்பெனவே தானரைப்பாய் நாலுசாமம் கொற்றவனே வெண்ணையது போலேயாகும்
எப்படியும் வெண்ணையது போலேயானால் எழிலான பற்பத்துக்குறுதியாச்சே
3400.
ஆதியாம் பூமியிட நாகத்தாலே அப்பனே தங்கமது பற்பமாகும்
ஜொதியாம் தங்கமென்ற வெண்ணைதன்னை சுருதியுடன் பில்லையது லகுவாய்த்தட்டி
வாதிகள் செய்பாகம் போல மனதிலுன்னி மயங்காமல் ரவிதனிலே காயவைத்து
சாதியாம் ஓரெருவிற் புடத்தைப்போடு தப்பாது கெஜபுடத்தில் நீறுமாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

3401.
நீறியதோர் பற்பமதை பின்னுங்கேளு நேர்மையுடன் தானெடுத்து கல்வமிட்டு
கூறியதோர் வாக்கதுவும் பிசகாமற்றான் குணமாகத் தானரைப்பாய் செயநீர்தன்னால்
மாறியதோர் சாரமென்ற கெந்திநீறு மார்க்கமுடன் தானரைப்பாய் மைபோலாக
மீறியே போகாமல் வெண்ணையாக்கி மிதியுடன் பில்லைதட்டிக் காயப்போடே
3402.
போடேதான் ரவிதனிலே காயவைத்து பொங்கமுடன் வோட்டிலிட்டுச் சீலைசெய்து
நாடேதான் குழிவெட்டிப் புடத்தைப்போடு நலமுடனெ கெஜபுடத்தில் தீரும்பாரு
கூடேதான் புடமதுவைத் திறந்துபார்க்க குணமான பற்பமது தவளம்போலாம்
தேடேதான் பற்பமதைத் பதனம்பண்ணு தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கே
3403.
கிட்டாது பாவிகட்கும் கருமிகட்கும் கீர்த்தியுள்ள யுத்தமர்க்குகப் பலிக்கும்பாரு
எட்டாத பொருளெல்லாம் இதிலே தேற்றும் எழிலான உடலாவிப் பொருள்களெல்லாம்
விட்டாலும் விடுகுறைகளெல்லாம் காணும் எழிலான விதியிருந்தால் லபிக்கும்பாரு
முட்டாளாயிருக்காமல் முடிமன்னாநீ முறையோடே செய்துமல்லோ முடிவுகாணே
3404.
காணவென்றால் பற்பமதை வுண்ணக்கேளு கருவான லேகியங்கள் கிரதமாகும்
தோணவே நெய்தேனும் வெண்ணையாகும் தோற்றமுடன் இஞ்சிரசம் முலைப்பாலாகும்
பூணவே இந்தவித வனுபானங்கள் புகட்டினால் காயகற்பமாகும்
நாணவே கைபாகம் செய்பாகங்கள் நலமுடனே தாமறிந்து வுண்ணுவீரே
3405.
உண்ணையிலே சேத்துமங்கள் தொண்ணூற்றாறும் வுத்தமனே பித்தமது நாற்பதும்போம்
நண்ணமுடன் வாயுவென்ற தெண்பதும்போம் நயமான மேகவகை இருபத்தொன்றும்
குண்ணவே குன்மமென்ற தெட்டும்போகும் கூரான கிரந்தி பதினெட்டும்போகும்
வாகாக நீரிழிவு யாறும்போமே
3406.
ஆறான கலமேகம் அகன்றுபோகும் அப்பனே வுளமாந்தை கவுசிபோகும்
வாரான குஷ்டம் பதினெட்டும்போகும் வாகான வண்டத்தின் வாயுபோகும்
தூறான மேலிளைப்பு தீர்ந்துபோகும் துடியான நரம்பெல்லாம் முறுக்கேபோகும்
சாறான மூலிகைகள் இதற்கொவ்வாது சட்டமுடன் போகரிஷி வுரைத்ததாமே
3407.
உரைத்தோமே சீனபதிமாந்தருக்கு வுத்தமனே கண்காணா வுணவையெல்லாம்
நிரைத்துவிட்டேன் வெள்ளையென்ற மாந்தருக்கு நிறையான கைமுறையும் முழுதும் சொன்னேன்
கரைத்துவிட்டேன் காயாதி கற்பந்தன்னை கருவாக வுளவுதனை யறிந்துகொண்டார்
மரைத்துமே கற்பமது வுண்டபோது பறக்குமடா நோயேது பிணிதானேதே
3408.
ஏதான தங்கபற்பமுண்டபோது எழிலான தேகமது கற்றூணாகும்
வாதான நமனுக்கு அருதியில்லை வந்தநோய் தீர்ந்துவிடும் வசனித்தேனான்
சூதான தங்கமதையுண்டபேர்கள் துரைகோடி காலம்வரை இருக்கலாகும்
தீதான பிணிகளது இதிலேதோயும் திரளான நோய்பிணியும் பறக்கும்பாரே

3409.
பாரேதான் தங்கமதை கொண்டபோது பாரினிலே நீயுமொரு சித்தனாவாய்
வேறேதான் சாத்திரத்தின் வுளவுபார்த்து தெளிவான கைமுறைகள் அறியவேண்டும்
நேரேதான் அறிந்தாலும் வுன்றுமில்லை நேர்பான வழியோடு செய்தால்சுத்தி
கூரேதான் குணங்கண்டு குறியுங்கண்டு கொப்பெனவே செய்பவனே ஞானியாமே
3410.
ஆமேதான் தங்கபற்பமுண்ணும்போது அப்பனே பத்திங்கள் உரைக்கக்கேளும்
நாமேதான் சொன்னபடி புளியுப்பாகா நலமுடனே பாலன்னங்கொள்ளநன்று
தாமேதான் பத்துநாள் இப்படியேகொண்டு தெளிவாக மண்டலந்தான் சொல்லக்கேளு
வேமேதான் சுட்டபுளி வறுத்துப்பாகும் வேகமுடன் மண்டலந்தான் வுண்டுகொள்ளே
3411.
கொள்ளவே பற்பமதுவுண்டுகொண்டு கோடான கோடிமுறை சித்துசெய்வீர்
விள்ளவே கன்னியென்ற மாயாகற்பம் வீணிலே யனுபோகம் மிகவுந்தள்ளு
மெள்ளவே கைபாகம் செய்பாகத்தை மேதினியில் கண்டறிந்து பின்னுங்கேளு
எள்ளளவு பிசகதுதான் வாராவண்ணம் எழிலுடனே செய்துமல்லோ வருள்தான்காணே
3412.
காணவே யின்னமொரு கருமானங்கேள் கவனமுடன் யானுரைப்பேன் கடியமூலி
நாணவே பொன்னாவாரைதன்னை நலமாகச் சமூலமதைக்கொண்டுவந்து
பாணமெனும் ரவிதனிலே காயவைத்து பாகமுடன் சூரணித்து வடிறான்கொண்டு
தோணவே பாண்டமதில் பாலைவிட்டு துப்புரவாய் வேடுகட்டி சீலைமூடே
3413.
மூடியதோர் சீலைதனில் சூரணத்தை முதிராமல் பதமுடனே தானமைத்து
நீடியே மேற்பாண்டந்தன்னைஐமூடி நினைவாகத் தானெரிப்பாய் கண்டுமட்டும்
சாடியே பாண்டமதை திறந்துபார்த்து சட்டமுடன் சூரணத்தை எடுத்துக்கொண்டு
வாடியே திரியாமல் ரவியிற்றானும் அவளுடனே சூரணத்தைக் கொட்டியாற்றே
3414.
ஆற்றியே சூரணத்தை ரவியிற்போட்டு அப்பனே காய்ந்தபின்பு எடுத்துக்கொண்டு
நேற்றியுடன் முன்சொன்ன முப்புசிண்ணம் நெடிதான களஞ்சியது கூடச்சேர்த்து
தூற்றியே சீனியது சரியாய்க்கொண்டு துப்புரவாய் திரிகடிகைதன்னையப்பா
மாற்றியே வெண்ணைதனில் கொண்டாயானால் மண்டலத்தில் போகுமடா பிணிகள்தானே
3415.
தானான பிணிகளது சொல்லக்கேளும் சார்பான யீளையுடன் இருமல்போகும்
வேனான குஷ்டம்பதினெட்டும்போகும் வேகமுடன் தழுவணையும் மாறிப்போகும்
தேனான தேனதனில்கொண்டபோது தேற்றமுடன் சொரிசிரங்கு பௌத்திரம்போம்
ஊனான கசரோகம் தீரும்தீரும் வுத்தமனே சில்விஷங்க ளற்றுப்போமே
3416.
போகுமே சூலையொடு காப்பன்போகும் பொல்லாத சிலவிஷங்க ளனைத்தும்போகும்
ஏகமே தேகமது கற்றூணாகும் எழிலான சட்டையது தள்ளும்பாரே
சாகுமே குழிச்சிலந்தி பிளவையாவும் சண்ணுமடா வுடலைவிட்டுக் காடேபோகும்
பாகுடனே மேவிளைப்பு தீர்ந்துபோகும் பாரினிலே இதுவுமொரு கற்பமாமே

3417.
கற்பமா மின்னமொரு பாகஞ்சொல்வேன் கருவாகத்தான் கேட்பீர் கருத்துளப்பா
அற்பமென்று நினையாதே இந்தபாகம் அப்பனே சூரியென்ற நத்தைசூரி
பொற்பமுடன் வெள்ளிநாள் வேர்பிடுங்கி சுத்தமுடன் பூசைதனில் குளிசமாடி
சற்பமென்ற ராஜனிட மையைத்தீட்டி சட்டமுடன் வுருவேற்றித்தீபம்போடே
3418.
போடவே மாடனுமே எதிரேநிற்பான் பொங்கமுடன் வுருவதுதான் லட்சமாகும்
நீடவே யங் சிங் வங் கென்றபோது நிலைக்குமடா மாரணமு மிதனாலாகும்
கூடவே நமசியென்றேயோது குடியோட்டிப் பூண்டுக்குக் காப்புகட்டி
தேடவே லட்சமுரு தன்னைப்போடு தெளிவான சித்திமுத லாகும்பாரே
3419.
பாரேதான் வட்சரத்து எழுதியோதி பாகமுடன் குளிசமதில் கட்டுவாய்நீ
நேரேதான் லட்சமுரு வோதிப்பின்பு நேர்மையுடன் தலைதனிலே நீரைவாரு
தேடேதான் லலாடமதில் கருமையைத்தான் தேற்றமுடன் தீட்டியல்லோ குந்தவைத்து
ஊரேதான் கிழக்குமுகந் தனிலிருத்தி வுத்தமனே செபித்திடுவாய் பூதந்தானே
3420.
தானான பூதமது ததைசுழற்றி தாரிணியில் நின்றுவிளையாடும்பாரு
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தன்பாதம் வணங்கியல்லோ
தேனான மனோன்மணியை தாபித்தேதான் தேற்றமுடன் சக்கரத்தில் குந்தவைத்தால்
மானான வேதாளம் பிரமராட்சன் மண்மீதிலிருந்துகொண்டு வாடும்பாரே
3421.
ஆடுமே கைதாளமதிகம்போடும் அப்பனே வேணுமென்ற வஸ்துகேட்கும்
பாடுமே கொண்டாட்டம் மிகவடிக்கும் பார்த்தவரைக் கண்ணாலே மிகமயக்கும்
ஒடுமே பஞ்சாட்சர மேலேபட்டால் வுத்தமனே சிரித்து விளையாடும்பாரு
கேடும் கெடுதிகளும் மிகவேபேசும் கேட்டதொரு கேள்விக்கு எதிர்சொல்லாமே
3422.
சொல்லாதே பலபலவாம் வார்தைபேசி துரைமுகத்திலிருந்துகொண்டு கூத்துமாடும்
புல்லவே கருவாலே யனேகம்வித்தை பூதலத்தில் வெகுசாக யாட்டலாகும்
கொள்ளவே பூதமது வினோதவித்தைக் கூறினார் பலபலவாம் சாத்திரத்தில்
வெல்லவே நம்முடைய நூல்கள் யாவும் வெளிப்படையாய்க் காட்டினோ முலகத்தோர்க்கே
3423.
உலகத்தோர் பிழைக்கவென்று யின்னஞ்சொல்வோம் உத்தமனே உருதிமனங் கொண்டுதேரு
பலவகையாஞ் சாத்திரங்கள் பலவும்பார்த்து பாரினிலே கெட்டவர்கள் கோடாகோடி
நிலவுபோல் ஏழைகள்பிழைக்கவென்று நீணிலத்தில் போகர்யாம் பாடிவைத்தோம்
சிலகதைகள் வீணென்று சொல்லிவிட்டாலும் சிறப்புடன் வுட்கருவை விடான்தான்பாரே
3424.
பார்கையிலே பெருங்கொடுப்பை கொண்டுவந்து பாலகனே சார்பிழிந்து சாற்றக்கேளு
தீர்த்தமுடன் சேரதுதான் எடுத்துமைந்தா திறமுடனே சுக்கதுவும் சீரந்தானும்
சேர்க்கவே திப்பிலியுங் கோஷ்டத்தோடு செம்மையுடன் கஸ்தூரிக்கூடச்சேர்த்து
ஆர்க்கமுடன் கூகைநீர் தன்னோடொக்க அப்பனே நெடைகாலாய் எடுத்துக்கொள்ளே

3425.
கொள்ளவே யாவிநெய் சரியதாக கொற்றவனே தான்சேர்த்துக் காய்ச்சிக்கொண்டு
மெள்ளவே மெழுகுபதம் வடித்துக்கொண்டு மேன்மையுடன் மண்டலந்தான் கொண்டுவந்தால்
கள்ளமெனும் கோழையது எங்கேபோச்சு கடிதான சயரோகம் தியங்கலாச்சு
உள்ளபடி மேகமென்ற ரோகம்போகும் வுத்தமனே சில்விஷங்களற்றுப்போமே
3426.
அற்றதொரு வரையாப்பு பரைகள்போகும் அப்பனே கண்டத்தின்மாலைதீரும்
உற்றதொரு வகுவையென்ற கட்டிதீரும் வுளமாந்தை குன்ம முதலகன்றுவோடும்
பெற்றதொரு மாதுக்கு வயத்தில்ரோகம் பேசாமல் வோடுமடா யின்னங்கேளு
மற்றதொரு மேகங்கள் கசரோகங்கள் மானிடத்தில் நிற்காது திண்ணந்தானே
3427.
திண்ணமாம் இன்னமொரு கற்பம்பாரு திறலான வல்லாரை பெரியாவாரை
நண்ணமுடன் மூலிதான் சேர்தானாழி நலமுடனே கொண்டுவந்து செப்பக்கேளு
வண்ணமுடன் திப்பிலியுங் கோஷ்டந்தானும் வளமான மிளகுடனே மதுரந்தானும்
எண்ணமுடன் சுக்குடனே கூகைநீரும் எழிலான கிராம்புடனே சாதிக்காயே
3428.
காயான வாள்மிளகு கூடச்சேர்த்து கருத்துடனே சாதிபத்திரி சரியதாக
மாயான வலம்புரியு மிடம்புரியுஞ்சேர்த்து மன்னவனே மயங்காமல் குங்குமப்பூ
தாயான கஸ்தூரி கோரோசனைத்தானும் தகமையுடன் வகைக்கொரு களஞ்சதாக
தோயாத பாலுடனே இத்தனையும்போட்டு துப்புரவாய் தானரைப்பாய் செப்பக்கேளே
3429.
செப்பவென்றால் நெய்யதுவும் சேர்தான்பாதி செம்மையுடன் ஒன்றாகக் காச்சியேதான்
ஒப்புடனே கடுகுபதந்தானிறக்கி வுத்தமனே கணபதிக்குப் பூசைசெய்து
தப்பிதங்கள் நேராமல் மைந்தாநீயும் தண்மையுடன் வடிபணிந்து சிரங்குவித்து
மைப்பதுவே சீஷாவிற் பதனம்பண்ணு மகத்தான நெய்யதுவும் காணார்தாமே
3430.
காணாரே நெய்யதனை யார்தான்கண்டார் காசினியில் ரிஷிகள்முனி சித்தர்வேதை
தோணவே காயகற்பரோகநெய்யாம் தொல்லுலகில் சீனபதிதேசத்தார்க்கு
வேணவே காலாங்கிநாதர் தாமும் விருப்பமுடன் செப்பவென்ற நெய்யுமாச்சு
பூணவே யறிவுள்ளான் செய்துபார்த்து பொங்கமுடன் நேமித்தகாயமாமே
3431.
காயமாமிந்தநெய் வதீதங்கேளு காயாதிகற்பங்களுண்டபேர்க்கு
நேயமுடன் வாரத்துக் கிரண்டுமார்க்கம் நேர்மையுடன் வந்திசந்திக் கொள்ளவேண்டும்
மாயமெனுங் கள்ளாசை நீக்கவேண்டும் மதுபான் விரும்பினால் காயமில்லை
தூயமுடன் நெய்யதனைக் கொண்டபோது துடியான ரோகமெல்லந் துலைந்துபோமே
3432.
துலைந்துவிடுங் கரப்பனென்ற ரோகக்போகும் துறையான மதுமேகம் விட்டேயாடும்
அலைந்துகெட்ட கசரோகம் அகன்றுபோகும் அப்பனே வரையாப்பு மேகம்போகும்
தலைவலி மண்டையிடி சண்ணல்போகும் சண்டாள வயிற்றுவலி தாவியோடும்
கலைந்துவிடும் காதுநோய் கண்ணோய்போகும் கால்வலியும் மேல்வலியும் தகைத்துபோமே

3433.
தகைத்துமே வாய்ப்புண்ணு வாய்நாற்றம்போம் தாரிணியில் வாதமென்ற ரோகம்போகும்
திகைத்துமே குன்மவலி குன்மரோகம் தீராத கவுசியென்ற மகோதரங்கள்
பகைப்புடனே பீசத்தின் வாயுவீக்கம் பாங்கான குடைச்சல்முதல் வலிப்பஉதீரும்
நகைப்புடைய மாதருட ரோகம்போகும் நாடாது பிணிமூப்பு நாடாதன்றே
3434.
நாடாது காயகற்பம் கொண்டபேர்க்கு நலமான நெய்யதுதான் கொள்ளவேண்டும்
தேடான காயத்துக் கிந்தநெய்தான் தேற்றமுடன் வாரத்திற் கிரண்டுமுறையப்பா
வீடான தேகத்துக் குறுதிநெய்யாம் விருப்பமுடன் பாடிவைத்தேன் போகர்தாமும்
தாடான சதாவேரிச் சமூலங்கொண்டு தளர்ச்சியுடன் சார்பிழிந்து சாற்றக்கேளே
3435.
சாற்றவென்றால் சதாவேரி சேரதாகும் சார்பான முசுமுசுக்கை சேரதாகும்
கூற்றனென்னும் குதம்பைசார் சேரதாகும் குணமான மாதளையுஞ் சேரதாகும்
மாற்றலென்ற வாவிநெய் சேரதாகும் மகத்தான தேனதுவும் சேரதாகும்
சீற்றமுடன் கடைசரக்கு செப்பக்கேளு சிறப்புடனே சேர்க்கும்வகை செப்பக்கேளே
3436.
கேளேதான் திப்பிலியும் விசுவாசிதானும் கெடியான சுக்குடனே ஓமந்தானும்
வீளேதான் கூகைநீர் பரங்கிதானும் வுத்தமனே கருவாயின் பட்டைதானும்
பாளேதான் போகாமல் மதுரந்தானும் பாங்குடனே நில்வாகை சிவதைவேறும்
தானேதான் வகைக்கு ஒருபலமதாக சற்பனையாய்ப் போட்டுமிகக் காய்ச்சிடாயே
3437.
காய்ச்சிகையில் கஸ்தூரி குங்குமப்பூ கருவான ரோசனையும் களஞ்சிசேர்த்து
காய்ச்சலுடன் மெழுகுபதந் தானிறக்கி மன்னவனே வடிகட்டி எடுத்துக்கொண்டு
பாச்சலுடன் வாரடித்துக் கிரண்டுமுறைதானும் பாங்குடனே யந்திசந்தி கொண்டாயானால்
மேச்சலெனும் ரோகமது கலன்றுபோகும் மேதினியில் எந்நாளும் இருக்கலாமே
3438.
இருக்கலாம் கற்பாந்த காலம்மட்டும் எழிலுடனே வாசியோகங்கொள்ளலாகும்
பொருக்கலாம் சிவயோகந்தன்னிற்சென்று பொங்கமுடன் வாசியைத்தான் மடக்கிக்கீழால்
சுருக்கவே கர்மேந்திரியம் அனைத்தும்போக்கி சதாகாலஞ் சின்மயத்திலிருந்துகொண்டு
வெருப்புடனே மாயாது ரட்சைதன்னை வெறுப்பதுவே யுத்தமர்க்கு புனிதமாமே
3439.
புனிதமாம் நெய்யதனைக் கொண்டபோது புகழான கசரோகமகன்றுபோகும்
வனிதமுடன் வாயுவென்ற தென்பதும்போம் வாகான பித்தமென்ற நாற்பதும்போம்
துனிதமுள்ள சூலைபதினெட்டும்போகும் துலையாத குன்மமென்ற ரோகம்போகும்
புனிதமுடன் பாரிசாமம் வாயுபோகும் பறக்குமடா தேகத்தில் ரோகம்போமே
3440.
போமேதான் கரப்பனென்ற பதினெட்டும்போம் பொல்லாத வயிற்றுவலி பொருமல்போகும்
வேமேதான் கால்வாதம் கைவாதம்போம் மிக்கான குடல்பிரட்டல் யாவும்போகும்
நாமேதான் சொன்னபடி சேத்துமங்கள் நாடாது எந்நாளும் நாடாதப்பா
வேமேதான் காசமொடு ஈளைபோகும் வேகமுடன் வதுவையென்ற கட்டிபோமே

3441.
கட்டியென்றால் கொசியென்ற கட்டிபோகும் கருவான வுதிரத்தின்கட்டிபோகும்
அட்டியில்லா வன்லதுவும் பறந்துபோகும் அப்பனே குடச்சல்முதல் அகன்றுபோகும்
துட்டமெனும் கொடிரோகம் மாந்தைரோகம் துடித்துமே கூடுவிட்டுக் காடுபோகும்
திட்டமுடன் காயாதி கற்பங்கொண்ட தேகத்துக்கிந்தநெய் வேண்டும்பாரே
3442.
வேண்டுமே காயாதி செந்தூரத்தை விருப்பமுடன் கொண்டவர்க்கும்பேதியாகா
தீண்டவுமே விஷமதுவும் ஏறலாகா திகழான வானமது சேரலாகா
காண்டிபனாயிருந்தாலும் காயகற்பம் காசினியில் கொள்ளாவிட்டால் காயம்பாழாம்
தூண்டுமிகக் கருமானந் தானறிந்து துப்புரவா யுண்பவனே சித்தனாமே
3443.
சித்தனாய்ப் பிறந்தாலும் ஒன்றுமில்லை ஜெகதலத்தில் வுண்மைதனையறியவேண்டும்
மெத்தவே வழியோடே காயகற்பம் வெகுபேர்கள் உண்டுமல்லோ கெட்டுப்போனார்
சத்தேனும் அறிவிருந்து நூலைப்பார்த்து சதாகாலம் நேர்மையது பாராமற்றான்
பித்தனைப்போல் கெட்டலைந்து பிசாசுபூண்டு பேருலக்ல் மாண்டவர்கள் கோடியாமே
3444.
கோடியிலே ஒருவருண்டு கருவாளியப்பா குணமுடையான் மனமுடையான் மானமுள்ளான்
பேடிகள் போல்வாய்வீனர் மெத்தவுண்டு பேருலகில் ஒன்றறியார் கழுதைமாண்பர்
தேடியோ வலைந்துமல்லோ காயகற்பம் திறமுடனே கண்டவன்தானென்றுசொல்லி
வாடியே பதிகெட்டு நிலையுங்கெட்டு வாட்டமுடன் மாண்டவர்கள் கோடியாமே
3445.
கோடியா மின்னமொரு கருமானங்கேள் கொற்றவனே புகையொன்று கூறக்கேளும்
நாடியஏ கருவூமத்தை சமூலங்கொண்டு நலமான பேய்ப்பாகல் மூலிதானும்
தேடியே சிறியானின் நங்கைதானும் தெளிவான கெஞ்சாவின்மூலிதானும்
பாடியே பொடுதலையின் சமூலந்தானும் பாங்கான செருப்படையின் மூலியாமே
3446.
மூலியுடன் தைவேளை சமூலந்தானும் முனையான வழிஞ்சியிடமூலிதானும்
சீலியாங் கொடிவேலி மூலிதானும் வீறான காட்டினாமணக்கு மூலிதானும்
சாலியாஞ் செம்பருத்திமூலிதானும் சார்பான கதலியிட சாருதானும்
வாலியாம் வழுதலையின் மூலந்தானும் வாசான கையானின் மூலிதாமே
3447.
தாமான பொன்னினாவாரைமூலம் தாக்கான குறிஞ்சாவின் மூலிதானும்
காமான கருஞ்சூரிமூலிதானும் கருவான பேச்சுரையின் மூலிதானும்
நாமான நத்தையென்ற சூரிதானும் நலமான பேய்சமிட்டி மூலிதானும்
பாமானமானதொரு திகைப்பூண்டுதானும் பண்பான பேய்க்கொல்லி நாய்க்கொல்லிதானே
3448.
தானான கரும்பசளை செம்பசளைதானும் தாக்கான கொடிவிரியன் செவ்விரியன்தானும்
பானான சரட்டரணை யெழில்மூலிதானும் பாங்குடனே மதிமயக்கம் மிகவேயாகும்
கோனான யெனதையர்காலாங்கிநாதர் குருசொன்னபடியாக வனமூலிதன்னை
தேனான மூலிகைகள் சமூலங்கொண்டு தேற்றமுடன் தானெடுக்க வகையைக்கேளே

3449.
கேட்கவென்றால் மூலிதனை சமூலங்கொண்டு கொடிதான ரவிதனிலே காயப்போடு
நீட்கமுடன் கல்லுரலில் போட்டுக்குத்து நேர்மையுடன் பொடியாக்கித் தூளதாக்கி
மீட்கமுடன் வெள்ளாட்டின் பாலினாலே மேன்மையுடன் தானரைப்பாய் நாலுசாமம்
வாட்டமுடன் தானரைத்து பில்லைதட்டி வளமாக ரவிதனிலே காயப்போடே
3450.
போட்டபின்பு பில்லைதனை பதனம்பண்ணு பொங்கமுடன் நாதாக்கள் சொற்படிக்கி
தேட்டமுடன் பில்லைதனை பதனம்பண்ணி தெளிவான காயாதிகற்பவுண்டை
நீட்டமுடன் காயகற்ப செந்தூரத்தை நீணிலத்தில் கொண்டதொரு ஞானிகட்கு
மூட்டமுடன் கருவாதி மூலியுண்டை முனையான சிலும்புதனில் வைத்துக்கேளே
3451.
கேளேதான் சிலும்புதனில் மூலியுண்டை கிருபையுடன் தான்வைத்து சொல்லக்கேளு
பாளேதான் போகாமல் அக்கினியைப்போடு பாகமுடன் சிலும்பிதனைக் குடித்தபோது
நாளேதான் நாதாக்கள் சொற்படிக்கு நலமான புகையதுவுங் கபாலந்தன்னில்
சூளேதான் புகையதுவும் மேலேநோக்கி சுருக்குடனே லாகிரியைச் காட்டும்பாரே
3452.
பாரேதான் சிலும்புதனில் புகையெழும்பி பண்பான லாகிரியை மீட்டும்போது
நேரேதான் காயாதிகற்ப செந்தூரந்தான் நீடாழிக்காலம்வரை பழுதுறாது
கூரேதான் நவகோடி ரிஷிகள்தாமும் குறிப்பான சித்தர்முனி யனேகம்பேர்
சீரேதான் இப்படியே சொல்லாமற்றான் சீரான செந்தூரங் கொடுத்தார்காணே
3453.
காணவே காயாதிசெந்தூரத்தை காசினியில் இப்படியே கெடுத்தார்தாமும்
தோணவே காயாதிகற்பத்துக்கு துறைகோடி முறைகோடி தொந்தங்கோடி
பூணவே யிப்புகையைச் செய்யாவிட்டால் புகழான செந்தூரங் கெட்டுப்போகும்
வாணவே காயாதிகொண்டபேர்க்கு வளமுடனே லாகிரிகள் வேண்டும்பாரே
3454.
வேண்டியதோர் கருமானம் இன்னஞ்சொல்வேன் விருப்பமுடன் காயாதிகொண்டபேர்கள்
தூண்டியே முன்சொன்ன சூரணத்தை துப்புரவாய் கியாழமது செய்துகொண்டு
தாண்டியே யாவின்பால் சீனிதானும் சட்டமுடன் தூள்போட்டு கியாழஞ்செய்து
தீண்டியே விஷம்போக வந்திசந்தி திறமாக குடிப்பதுவே யமுர்தமாமே
3455.
ஆமேதான் கியாழமதை யுண்டபோது அப்பனே காயாதி தேகந்தானும்
நாமேதான் சொன்னபடிக் கிச்சைசெய்தால் நலமான செந்தூரமேனியூறும்
போமேதான் கியாழமது காயாதிக்குப் பொங்கமுடன் அனுபானமென்னலாகும்
தாமேதான் இன்னமொரு வயனஞ்சொல்வேன் தகமையுடன் கேட்பவனே சீஷனாமே
3456.
சீஷனாம் மானிடர்க்கு சொல்வேன்பாரு சிறப்பான காயாதிகற்பத்துக்கு
பாஷமென்ற பசுமூலி யுண்டைதன்னை பட்சமுடன் நெய்தேனுங் கூடச்சேர்த்து
கோஷமென்ற சர்க்கரையைப் பாகுசெய்து கொப்பெனவே சூரணத்தைப்போட்டுக்கிண்டி
தோஷமது நீங்கியல்லோ மைந்தாகேளு துப்புரவாய் லேகியம்போல் கிண்டிடாயே

3457.
கிண்டியே லேகியத்தை பதனம்பண்ணு கீர்த்தியுடன் வாரத்துக்கிரண்டுமுறைதானும்
தொண்டமுடன் அம்பாளைப் பூசித்தேதான் தேசிக்காய் தானளவுகொண்டபோது
கொண்டவுடன் காயாதிதேகந்தானும் கொற்றவனே கற்றூணாமென்னலாகும்
அண்டர்முனி தேவாதி ரிஷிகள்தாமும் வன்புடனே லேகியத்தை கொள்வார்பாரே
3458.
பாரேதான் காயாதிகற்பவுண்டை பாரினிலே கொண்டவர்க்கு பலனைக்கேளிர்
நேரேதான் ஏழானைப்பலனுண்டாகும் நேர்மையுடன் மானிலத்தில் இருக்கலாம்பார்
சீரேதான் சிவயோகந் தன்னிற்சென்றால் சின்மயத்தின் அஷ்டாங்கங் காணலாகும்
வேரேதான் காண்பதுவும் வொன்றுமில்லை வேதாந்தச் சுடரொளியைக்காணலாமே
3459.
காணலாம் ஞானவொளிப் பிரகாசந்தான் கடிதான யேழுவகைத் தோற்றந்தானும்
பூணலாம் தேகாதி காயத்துக்கு பூட்டலாம் வேதாந்தத் தாயின்சாரம்
பாணமுடன் ஞானவுபசாரந்தன்னை பார்வையுடன் மனக்கண்ணால் காணலாகும்
நாணமுடன் பரவெளியைக்கண்டபோது நாதாந்தச் சித்தர்களி லொருவனாச்சே
3460.
ஆச்சென்ற பெரும்பாதைத் தன்னிற்சென்றால் அப்பனே தத்துவங்கள் தொண்ணூற்றாறும்
மாச்சலுடன் மானிலத்தில் காணார்சித்தர் மனக்கண்ணாலே யொருவர்காண்பார் கண்டீர்
மூச்சடங்கி யோகங்கள் செய்தபேர்கள் மூதுலகில் ஒருபாகங் கண்டதில்லை
பேச்சலுடன் வெறுபேச்சுப்பேசியல்லோ பேருலகில் வெந்தரெல்லாம் மண்ணானாரே
3461.
மண்ணானார் ஒருவருந்தான் மண்டலத்தில் மகிட்சியுடன் வாழ்ந்தவர்களாருமில்லை
திண்ணமுடன் இறந்தவர்கள் எழுந்ததுண்டோ தேசத்தில் கட்டுமொழி யென்னலாகும்
நன்னமுடன் நாதாந்தச் சித்துவெல்லாம் நலமுடனே வேதாந்தம்பேசியேதான்
எண்ணமுடன் வெகுகோடி மனதிலெண்ணி ஏற்றமுடன் மாண்டதுவும் உண்மையாமே
3462.
உண்மையாம் வெகுகோடி நூல்கள்தாமும் வுற்பனமும் விற்பனமுஞ் சொன்னார்பாரு
கண்மையுடன் மார்க்கண்ட நாயர்தாமும் காசினியில் வெகுகாலமிருந்தாரென்று
வண்மையுடன் அவர்கூறும் சாத்திரத்தில் வயதுபதினாரென்று கூறினார்பார்
திண்மையுடன் அவருமல்லோ மண்ணின்மாண்டார் தேசத்திலிருந்ததுண்டோ பொய்யுமாச்சே
3463.
பொய்யான சாத்திரங்கள் உளவுஞ்சொல்லி பூதலத்திலிருந்ததுண்டோ கண்டதுண்டோ
மெய்யான வார்த்தையைப்போல வினயஞ்சொல்லி மேதினியில் கட்டுமொழி சொன்னார்கண்டீர்
துய்யமுடன் மேதினியில் தருமராஜன் துப்புரவாய் மேனியுடன் கைலாயத்தில்
பையவே சென்றெழுந்து போனாரென்று பாரினிலே இதுவுமொரு கதையுமாச்சே
3464.
கதையான கவிவாணர் கட்டுரைத்த கதைதனையே மேதினியில் மெய்யென்றெண்ணி
பதைபதைத்து வச்சிராங்கம் பாண்டியன்தான் பாரினிலே வெகுகோடி தவசிருந்தான்
கெதையுடனே யீசனிடஞ்சென்றுமேதான் கீர்த்தியுடன் பேருலகில் வந்தானென்று
புகையொத்த மனப்போலக் கினவுகண்டு பூதலத்தில் நடந்தமொழி பொய்யுமாச்சே

3465.
ஆச்சேதான் இன்னமொரு வயனஞ்சொல்வேன் அப்பனே ஜெபமுனியாம் ரிஷிகள்தாமும்
பேச்சேதான் பேசாமல் சிலதுகாலம் பேருலகில் மண்மீது இருந்திட்டாராம்
மூச்சடங்கி சிலகாலம் பிணம்போல்தாமும் மூர்ச்சையது போலிருந்தால் சித்துதாமும்
நேச்சலுடன் சமாதிதனிலிருந்தாரென்று நீணிலத்தில் பேராச்சு சிவயோகிக்கே
3466.
யோகத்தை சாதிக்க வெகுகாலந்தான் வுலகத்திலிருந்தாராம் தேகத்தோடே
தேகத்தை தான்மறந்து அவருமாண்டார் தேகமது மண்ணோடு மண்ணுமாச்சு
போகத்திலிருந்தவரு மாண்டுபோனார் பொங்கமுடன் தேகமது நிலையேயில்லை
யாகத்தை செய்துமல்லோ செயமுனிவர்தாமும் யாக்கதனை யொழித்தாரே வுலகில்தானே
3467.
தானான யாகமது கூறப்போமோ தாரணியில் அற்புதங்கள் மிகவுஞ்செய்தார்
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தானிருக்குங்காலந்தன்னில்
பானான செயமுனியும் பாரிலேதான் பாடினார் வெகுகோடி கருக்கநூலாம்
தேனான தேகமதை நிறுத்தவென்று செப்பினார் பலநூலும் பண்பதாமே
3468.
பண்பான நூல்களிலே தேகம்நிற்கும் பாரினிலே வெகுகால மிருக்கலாகும்
திண்பான சமுசார வாழ்க்கைதன்னில் திகமுடனே காயாதிகற்பகாலம்
நண்பான குடிவாழ்க்கை தனிலிருந்து நலமுடனே வெகுகால மாண்டார்தாமும்
பண்பான லோகத்தில் எல்லாம்பொய்யாம் காசினியில் மாண்டார்கள் இப்படியேதானே
3469.
தாமான கிரேதாயினுகத்திலப்பா தாரிணியில் அஷ்டபாலரிருந்திட்டாராம்
கோமானாம் கிரேதாயின் ராசன்தானும் கொற்றவனும் ராஜ்ஜியத்தை யாண்டபோது
பாமான வஷ்டபாலர் எட்டுபேரும் பாரினிலே சாகாத வரங்கொண்டார்போல்
நாமான மிருந்தவரை யநேகம்பார்த்தோம் நலமுடனே ஒருவருந்தான் இல்லைகாணே
3470.
காணவென்றால் மண்ணுக்கு இறையுமானார் காசினியில் சித்துமுனி ரிஷிகள்தாமும்
மாணவே கோடிவரை திரவியங்கள் மகாகோடி நிதிகளெல்லாம் தேடிவைத்து
நாணமுடன் பிழைப்பதற்கு வழியுங்கெட்டு நாதாக்கள் காண்பதுவும் அருமையாகும்
தோணவே தொல்லுலகில் சாத்திரத்தில் துறைகோடி முறைகளெல்லாம் மறைத்தார்பாரே
3471.
மறைந்ததொரு பொருளதனை மானிலத்தில் மாளாமல் சேர்த்துவைத்து மாண்டுபோனார்
திரைப்புடனே சாத்திரங்களதிகங்கற்று தீராத பலவினையைக்கட்டறுத்து
முறைப்படியே ஞானவரம் பெற்றேனென்று மூர்க்கமுடன் கோபமதை மறுத்தேனென்றும்
குறைப்படியே குவலயத்திலெந்தநாளும் மானிடர்கள் கெட்டார்தந்தே
3472.
தந்திவிரை தட்டியெடு பலமுரண்டு தக்கதோர் மிளகிரண்டு கொம்பிரண்டு
முந்தியெடு கடுக்காயும் பலமுமெட்டு முனைந்து நெல்லி முள்ளியடை முன்னிடையுங்கூட்டி
பந்தமுடன் சிந்தூரத் தாதிநீராற் பதமாக அறைத்து மைபோற் கதிரில்வைத்து
சுந்தரமாய்ப்பொடியாக்கி வைத்துக்கொள்ளு சுருதிதனை யாய்ந்துணர்ந்த யாதிச்
சொன்னார்

3473.
மூவிரற்றுள் எடுத்துவைத்து முன்சிந்தூர முற்றினதோர் இலந்தை விரையளவுவைத்து
தேவர்தலையிடுந்தயிலங்குழைத்து வுண்ணச்செப்பமிடத் திரிநாளா மறுநாள்தன்னில்
காவிமுத்தின் எண்ணைவிட்டு மூழ்குமுன்னே கருத்தில்நினை புளிதள்ளு மோர் சாருண்டால்
தாவிவரு நாளெல்லாந் தானேபோகும் தாஷ்டிகமாய் பித்தமருந் தன்மைதானே
3474.
பித்தவெட்டை பாண்டுமகோதரமும் தீரும் பின்புதான் சொரிசிரங்கு மேகவாயு
குத்தலண்ட சூலைமுதல் வெட்டைபோகும் கூறரிதி தன்குணங்கள் கொள்கைமெத்த
நித்தநித்தம் மயக்குகின்ற பித்தமாலை நீங்குமென்று போகரிஷிசொன்னநீதி
புத்தியுள்ள ரிஷிமார்கள் சொன்னநீதி புகட்டினேன் எட்டினுரை புகன்றவாறே
3475.
பதங்கலிங்க பற்பமது பலமூநாலு பதியவெடு கொம்புமிளகோடுகூட்டி
விதம்பெறவே தந்திவிரை சுத்திபண்ணி வீதமிடு நெல்லிமுள்ளி கடிக்காயநேராம்
அதம்படவே கையானீர் அரைத்துச்சாமம் அதையெடுத்து குடுக்கைதனிலெடுத்துக் கொண்டு
இதம்படவே பணவிடைநாள் கொள்ளச்செல்ல எந்தமகோதரமும்போம் இதமதாமே
3476.
சூலைமகோதரமும் போகுமாம் பற்கட்டி துடர்ந்துபித்தம் மகோதரமும் சொல்லாதோடும்
வேலைதனிற் போய்விடுங் கானாம்பற கட்டிவிடுபடுஞ் சாண்சிலேட்டும் மகோதரமும்போம்
ஆலஜதனிற் கரும்பாகு முப்பைத்தள்ளு ஆறுநாள் சென்றபின்பு ஸ்நாணம்பண்ணி
காலைநேரமெல்லாமும் கூட்டிக்கொள்ளு கருத்துரைத்தார் போகரிஷி கருணைபாரே
3477.
பாரமுடன் தங்கபற்பம் பலமுநாலு பதமிடை மிளகுசுக்கு கெந்திகூட்டி
பாரமுள நெல்லி முள்ளிக் கடுக்காய் நேராய்ப் பார்த்து அரைபடி நீராற்சாமம்ரெண்டு
கோரமுள வுத்தியளவாகவுண்டை கொடுத்துவிடும் மகோதரங்கள் முப்பத்தொன்றும்
நேரமிலை யோடிவிடும் நிமிஷந்தன்னில் நிச்சயமாய் போகரிஷி நேர்சொன்னாரே
3478.
சூதபற்பம் கெந்திவெங்காரநேரே தூக்கியரை தேள்கொடுக்கு குமரியாலும்
வீதமொரு நாளரைப்பின் னெடுத்துருட்டி வியாதியறிந்து அனுபானத்திலீய
வாதமுதல் கணரோகம் ருத்திரவாயு மார்வலியுங் குன்மவகை சூலையாறும்
சீசமதைக் கொண்டுவரு மாந்தர்காசம் செல்லுமது இம்மருந்தின் திறமையாமே
3480.
நாகப்பழம் போலாகும் களங்குதானும் நற்சிவப்பு செந்தூரம் அலரிப்பூப்போல்
பாகமது சுன்னந்தான் மல்லிகைப்பூப்போல் பதிவான மெழுகதுதான் இலக்குமாகும்
தாகமது தயிலந்தான் இறக்கறப்பு தாட்டிகமாய் நிறங்களறி மருந்துதன்னை
யோகமது வந்திடுங் காண்பாகமாகுமித்தொழிலை யரிந்தபதஞ் சொன்னவாறே
3481.
நல்லறிவா முபசரங்கள் நவலோகங்கள் நாடதிலே பாஷாணஞ் சாரங்காரம்
சொல்லுமுன்னே சூதமுதல் செந்தூரிக்க சுருதிபெற மால்தேவி சிலைதான்கெந்தி
கல்லான கெவுரிகெவுரியப்பிரகந் துத்தநாகம் கடிதான வெடியுப்பு யிவைகள்சேரில்
உல்லாசமாக யிதுசேர்தானாகில் உண்மையெல்லாஞ் சிவந்துவிடும் என்தாய்சொன்னாளே

3482.
சாயமனஞ் சரக்கதுதான் சாற்றக்கேளு தடையற்ற வுப்பினொடு நாகந்தங்கம்
வாயமதா யிரும்போடு நிமிளைசூதம் வடிவுபெற்ற சுவரியுடன் வர்ணமாகும்
நாயமாரிதைப்பிரித்து சொன்னாரப்போ நான்பார்த்து உங்களுக்கு நடத்தச்சொன்னோம்
காயமது நிலையில்லை கண்டுமுன்னே கணக்காக சிந்தூர முண்டுதேரே
3483.
எச்சரக்கும் கட்டவொரு சேதிகேளு இனியவெடிச்சுன்னத்தால் சரக்குகட்டும்
தற்செயலாந் தயிலத்தால் சரக்குகட்டுந் தடையற்ற திராவகத்தால் சரக்குகட்டும்
இச்சைபட செயநீராற் சரக்குகட்டும் இதமான மெழுகாலே சரக்குகட்டும்
நற்சரவா மூலிகையில் சரக்குகட்டா நாகரிக யரிதேவர் நலஞ்சொன்னாரே
3484.
அங்குசமும் பலம்பத்து அயமுநேரா யதையரைத்து கையானாற் புடமுமிட்டால்
இங்கிதமாற் சிவந்துவிடும் சத்திசூத மிதமாக முன்கண்டயெடைக்குப்பாதி
தங்காமல் அரைத்துமுன்னீர் தன்னைவிட்டு தக்கதொரு குடத்திலிட்டு மேலேமூடி
பங்கம்வாரா தெரித்தெடுக்க சிவந்துபோகும் பதிவான களிக்கூத்து பலன்சொன்னாரே
3485.
தட்டியிட்டு வகாம்மட்டி வித்தெடுத்து தாட்டிகமாய்க் கர்திவிரை யிடையேசேர்த்து
மொந்தைதனிலடை நிறையதூரில் பொத்துமுக்கியமாய்க் குழித்தயிலம் வாங்கிச்சட்டி
சட்டமதாய் அடைத்து கரங்காசுவிட்டுச் சரியான மஞ்சளது பொடித்துவுண்ண
வட்டவனை மாதவிடாய்த் தன்னிலுண்ண வையகத்தில் பாலனதுவுண்டாம்பாரே
3486.
உரிக்குமடல் தாரமதை கன்னத்துள்ளே ஒருமூன்று சாமமதை யெரித்துவாங்கி
முருக்கிலையுங் கரிசாலைப் பழச்சார்விட்டு மெழுகுபட அரைத்து பழந்துணியிலூட்டு
அருக்கனிட காய்ந்தகழி வெண்டிலேறி அங்கியிட்டுப் புகைவாங்கி முக்கால்போக
கருக்கவே மறைப்பணமும் பிடிக்கவேதான் சுவாசமொடு மந்தாரக்காசம்போமே
3487.
சிறுகீரை வேர்தூக்கு பதக்குப்பில்லும் சேர்தரைத்து வடித்தாவின் படிநெய்விட்டு
அரைத்தூக்கு சக்கரையும் மிளகுஞ்சேரு அரைப்படிவந்தினையோர் நிறமாயாவி
மறைக்காமல் அரைப்பலமோர் பொழுதுவுண்ண மார்புவுண்மை பதினெட்டு வாதம்நீங்கி
சுருக்கோடே கழந்துநீ சிரங்குமேகஞ் சுகமாகுங் கைகண்ட தொழிலுமாமே
3488.
உள்ளியுடன் மிளகுசுக்கு கல்லுப்போடு ஒருநூறு வெற்றிலையின் காம்புக்கூட்டி
கள்ளியின்சார் விட்டரைத்து சார்ந்துநிம்மக்கயளவுரு நேரமஞ்சுநாளும்
கொள்ளுமிதை யிருபுரமு மிருத்துகொண்டு குத்தலிட்டு அடிவயிறு அண்டம்வீங்கில்
வுள்ளிருமல் வலிவீக்கம் வாங்குமென்று முன்னவர்கள் சொன்னதுண்மை மொழியிதாமே
3489.
காட்டினிட ஆமணக்கின் எண்ணைவாங்கி கசடகற்றி வச்சிரத்தின்பாலைவிட்டு
நீட்டுமென நீர்க்கட்டு மலக்கட்டுத்தான் நேராக மெத்தவுந்தான் பேதியாகில்
வாட்டிடுவாய் ஆவின்பால் தனையேவுண்ண வகைக்குணமாம் பேதியது வடிந்துநிற்கும்
கூட்டிவே மலக்கட்டி விதுவேயாதி குணமாக போகரிஷி குறித்தார்தானே

3490.
ஆமென்ற தவமுறுதிச் சின்னமொன்று அன்பாக்ச் சொல்லுகிறோம் நன்றாய்க்கேளு
நாமென்ற சொல்லகத்தி பூமிநாதம் நன்றானநாதமடா சத்திசத்தி
தாமென்ற பிரிதிவியாந் தன்னோடொக்க தயவான கெவுரியுடன் சிலையுங்கூட்டி
ஊமென்ற நாகரசங்கூட்டிச்சேர்த்து ஓர்நிரையாய் கல்வமதில் நன்றாயாட்டே
3491.
ஆட்டுவது சம்பளத்தின் சாறாலாட்டி அப்பனே நெட்டங்க நன்றாயாட்டி
கூட்டுவது ஒன்றாக்கி எட்டுபண்ணி குண்டலமாஞ் சட்டிதனில் நடுவேவைத்து
பூட்டுவது தாம்பரத்தின் கிண்ணந்தன்னால் பொருந்தவே மூடிநன்றாய் மண்ணுப்பும்போட்டு
தாட்டிகமாய் தீயெரித்துப்பாரு தயவான மதமதனைச் சொல்லுவேனே
3492.
சொல்லுவேன் சொரிந்தமணல் கருகிற்றானால் சுற்றமுள்ள பக்குவமென்றெடுத்துக் கொள்ளு
வெல்லுவே னிதற்குரெட்டி தாம்பரத்தை வாசையாக வுருக்குமுகந் தன்னில்மருந்தை
நல்நினைவாய் மருந்தைத்தான் ஈவாயாகில் நாற்றமுள்ள செம்பதுவும் கட்டிப்போகும்
கொல்லுவேன் என்றுசொல்லி வெள்ளியேழில் குணமுள்ள செம்புமுன் னொன்றாய்கூட்டே
3493.
கூட்டிநன்றாய் குகைதனிலே யுருக்கிப்பாரு குருவருளால் திருவருளால் மாத்தெட்டாகும்
தாட்டிகமாய் பத்திலொன்று தங்கஞ்சேர்க்க தயவான தங்கமடா யென்னசொல்வேன்
பூட்டிநின்ற பூட்டனுக்கு சத்திசிவந்தன்னைப் பூரணமாய்க் கண்டுமனதறிவினாலே
தீட்டிமுனை மருச்சுழிமுனையின்மீதே திருவான வுருகுருவுந் தீபவொளியாமே
3494.
ஆமப்பா யின்னமொரு கருவைக்கேளு ஆதியென்ற லிங்கமுடன் துருசைக்கூட்டி
தாமப்பா கண்டிகைக்கு ஆதிசேர்த்து சம்பளத்தின் சாற்றாலே கல்வத்தாட்டி
நாமப்பா சொன்னபடி வட்டுபண்ணி நன்மைபெற மண்மறைவிற் புடத்தைப்போடு
சாமப்பா சரக்குவகை மூன்றுதானும் சமரசமாய்க் கட்டவுந்தான் திட்டமாமே
3495.
திட்டமுடன் புடமாறி எடுத்துக்கொண்டு செம்மையுடன் செம்புருக்கி மருந்தையீவாய்
இட்டமுடன் செம்பிடைக் குரட்டியீவாய் இருண்டசெம்பு வுருகியது கட்டிநிற்கும்
பட்டசெம்பு நாலுடனே வெள்ளியாறு பக்குவமா யுருக்கிப்பார் மாற்றாகும்
நட்டமென்ன பத்திலொன்று தங்கஞ்சேர்த்து நலமாக எட்டுவயதாகும்பாரே
3496.
பத்திட்டுக் கடுமையாய் எரித்து ஆற்றிபதிய வெடுபிரித்திடவே மேலேயேறி
சத்துநிற்கு மயிர்குச்சிதன்னாற்றானே தனைச்சரண்டி பீங்கானிற் பனியில்வைக்க
நித்தியமாய் செயநீராம் ஆறுபோலாம் நிலைக்கவெகு சீசாவில் அடைத்துநீயும்
முத்திபெற துருசதனை தோய்ச்சுயெட்டு முதன்பெற வெட்டுநாள் தோச்சுப்போடே
3497.
போட்டுமே சுண்ணாம்பு வீரம்நேரே பொருந்தமஞ்சளாந்துருசு மேலேகட்டு
நாட்டவே கவசமிடு அங்கியிட்டு நலமாகக் குக்குடத்தில் நீறிப்போகும்
கூட்டுமே சூதனிடை நீலம்போடு கூட்டியரை சாரநீர் தன்னினாலே
வாட்டும் ரசகற்பூரம் நாலிலொன்று வகையாக நிறுத்திட்டு அரைத்துக்கொள்ளே

3498.
நல்லாக வரைத்து எட்டிலொன்று வீரநல்ல பச்சைக்கற்பூரமெட்டிலொன்று
வில்லாக முந்நீரால் அரைத்துசாமம் விருதுபட குக்குடத்தே போட்டெடுக்க
செல்லவொரு குருவேரும் துருசுச்செம்பில் திடமாக வுருக்கியிடை குருவைத்தாக்கு
செல்லுமதை வாங்கியது தட்டத்தூளாம் வெள்ளியதில் நால்சேர்த்து வூதிப்போடே
3499.
கனகமது யிரண்டிடை தானிற்குமந்த கனகத்தை யெடுத்துமெள்ள விற்றுக்கொள்ளு
இனமொத்த விடந்தனிலே நின்றுவாழும் இனமான ஞானத்தை யியல்புபாரு
உணவுடனே ஆறுதல மேறிப்பாரு வுத்தமித்தாய் வந்துநிற்பாள் வுலகந்தன்னில்
சனகனருள் பெருவீரா மிந்தபோக்கு தாஷ்டிகவான் போகரிஷி சொன்னவாறே
3500.
சொன்னாரே யின்னமொரு மார்க்கங்கேளு சொல்லுகிறேன் பாரினிலே கணேசருண்டு
மன்னேகேள் திரேதாயினுகத்திலப்பா மகாதேவரான வராங்கணேசர்தாமும்
பன்னவே தும்பிக்கை ரூபம்கொண்டு பாரினிலே பிறந்தாராம் மனுஷரூபம்
என்னவே வெகுகோடி காலந்தானும் எழிலான ஞானிபோலிருந்தார்தாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

3501.
தாமான சமுசார வாழ்க்கையற்று தகமையுள்ள பேரின்ப வாழ்வுபெற்று
சாமான மானதொரு வுலகவாழ்வை சர்ச்சனர்க்கு வுபயோக விருத்தியோகம்
நாமான சாத்திரங்கட் குயிராய்நின்று நமஸ்கரித்து கணபதியாங் கணேசரென்றும்
தாமான நூலுக்கு முதற்காப்பாக தாரிணியில் மானிடர்க்கு சத்திதானே
**3502.**
தானான சத்திக்கு முதல்வன்காப்பு தாக்கான ஈஸ்வரிக்கு முதல்வன்காப்பு
பானான திரிமூர்த்தி முதல்வன்காப்பு பாங்குபெற மானிலத்தில் செய்தவேதம்
கோனான ரிஷிமுனிவர் சித்துதாமும் கோடான கோடிநூல் செய்தார்பாரு
தேனான நூலுக்கு முதலாய்நின்று தேர்ந்தபிள்ளை வாருமென்ற பேருமாச்சே
**3503.**
ஆச்சென்ற நூல்களுக்கு இவரேயாதி அரிவோம் நமசிவயமிதற்குள்ளாகும்
பாச்சலென்ற ஓங்கார மிதற்குள்ளாகும் பாருலகில் வேதமெல்லாம் இதற்குள்ளாகும்
மாச்சலென்ற கவிவாணர் நூலுக்காதி மகுடமுடி மன்னவர்க்கு மிவரேயாதி
கூச்சலென்ற வேதமகா கோஷ்டத்தார்க்கும் குவலயத்தில் விநாயகரும் முதலாம்பாரே
**3504.**
பாரேதான் விநாயகரைக் காப்பேடாக்கி பாரினிலே நூலெல்லாம் பாடினார்கள்
நேரேதான் சர்வகோடி பாடலுக்கு நேர்மையுடன் விநாயகரை முதல்வனாக்கி
சீரேதான் காவியங்கள் பாவினங்கள் சிறப்பான வசனமென்ற ரூபந்தானும்
கூரேதான் எழுத்தாணிந் தைரூபத்தால் கோடான கோடிநூல் எழுதலாச்சே
**3505.**
எழுதவென்றால் நூலுரையோன் சொல்லும்நீதி எழிலான ஆக்கியொன்றான் பகரும்நீதி
பழுதறவே எழுத்தாணிக் கைபிடித்து பாங்குபெற கணபதியைக் காப்புமிட்டு
தொழுதுமே சிரங்குனிந்து கைகுவித்து தொல்லுலகில் வாணரெல்லாம் காப்பிட்டார்கள்
உழுதுபயிரிடுங் குடியானர்தாமும் வுத்தமர்கள் மானிலத்தில் தொழுவார்பாரே
**3506.**
பாருலகில் கணபதியே தேவனென்றும் பட்சமுடன் மானிடர்கள் தொழுதுபோற்றி
சீருடனே யஷ்டாங்கந் தனைநினைத்து சிறப்புடனே அஞ்சலிகள் மிகவுஞ்செய்து
ஊருடனே குடிமக்கள் மிகவுங்கூடி வுத்தமராங் கணபதியைக் கடவுளாக்கி
பேருடனே வையகத்தில் சுவாமியென்றும் பேரான புகழ்படைத்தார் அதிதமாமே
**3507.**
அதிதமாங் கணபதியாம் என்றநாமம் அவனிதனில் மனிதரல்லா வேறொன்றல்ல
துதிதமுள்ள கடவுளாயிருப்பாரானால் தொல்லுலகில் வுயிரோடே இருக்காரோதான்
பதிதமுள்ள பாடல்களில் சுவாமியென்றும் பாடினார் வெகுகோடி மாந்தரப்பா
நிதிதமுள்ள கணபதியின் தேகந்தானும் நிலையாத யனித்திய மென்னலாச்சே
**3508.**
என்னவே கணபதியும் நீணிலத்தில் எழிலான தேகத்தை மறந்துபோனார்
பன்னவே பாரினிலே தேவனானால் பாழான தேகமது மண்ணுக்காமோ
துன்னவே காயமது நிலைப்பதற்கு தொல்லுலகில் கோடான கோடிகற்பம்
முன்னமே காயாதி கற்பமுண்டு மூதுலகில் கற்றூணாயிருந்தார்தாமே

3509.
காணவே வவர்கூட்டந் தன்னிலப்பா கதுமையுடன் இவருமொருசித்துமானார்
தோணவே வெகுகோடி காலமப்பா தொல்லுலகில் காயாதி கற்பமுண்டு
ஈணவே சமுசார வாழ்க்கைநீக்கி யெழிலுடனே காயத்தை யிருத்திக்கொண்டு
பூணவே புவிஈலோர்க்கு கவியாக புகழுடனே வெகுகால மிருந்தார்தாமே
3510.
இருந்தாரே யின்னமொரு மார்க்கங்கேளு எழிலான வீரபத்ரன் பாடுசொல்வோம்
பொருந்தவே காலாங்கிநாயர்பாதம் போற்றியே முடிவணங்கி தாள்பணிந்து
திருந்தவே சீனபதி தேசத்தார்க்கு சிறப்பான வேதாதி மாந்தர்தம்மை
வருந்தியே வரலாறு காதைசொல்வோம் வகுப்புடனே யின்னம்வெகு காதையுண்டே
3511.
உண்டான வீரபத்ரன் படைவீரன்தான் வுத்தமனே யதிவீரன் போர்வீரன்தான்
திண்டான சாத்திரங்கள் பெருநூல்யாவும் திறைகோடி திசைகோடி திகழ்கள்கோடி
கண்டாலும் பெருநூல்கள் விரிநூல்தன்னில் காசினியில் அவர்பெருமை மெத்தவுண்டு
அண்டாத சேனைரதப்படைக் கூட்டத்தை அவனியிலே தான்ஜெயித்த வீரனாமே
3512.
வீரனாந் தக்கனது யாகந்தன்னை வீரமுடன் தான்ஜெயித்த வீரபத்திரன்
சூரனாம் பத்மாவின் சூரன்தன்னை சுட்டெரித்த சூட்சாதி கியானமாரன்
கோரமாம் டாகினியைக் கருவறுத்த கொற்றவனா மென்றிவர்க்குப்பேருமாச்சு
பாரமுடன் இதிகாச புராணமெல்லாம் பாடிவைத்தார் கவிவாணர் திறமைபாரே
3513.
திறமையுடன் சாத்திரத்தி லதிதஞ்சொல்லி திறளாக சத்துரு சங்காரர்தன்னை
முறைமையுடன் கதைபேசி யுறவுபேசி மூர்க்கமுடன் வெகுபேரை ஜெயித்தானென்றும்
குறைமனதாய்த் தக்கனுட யாகந்தன்னை குவலயத்தில் வேரறுத்துச் சுட்டறுத்து
உறமுடனே வெகுகோடி காலந்தானும் வுத்தமனும் இருந்தாரென்று உரைத்தார்பாரே
3514.
உடைத்தாரே வீரபத்திரன் வீரந்தன்னை ஓகோகோ நாதாக்கள் நம்புவாரோ
நிறைத்தாரே சாத்திரங்கள் புராணமெல்லாம் நிலையான தேவனென்றுஞ் சொன்னார்பாரு
பறைத்ததொரு காயமிது தேவனானால் பாரினிலே மற்றொரு தெய்வமேன்தான்
இரைத்தாரே இவர்தானுந் தெய்வமானால் எழிலான உலகமிதில் இருக்கொணாதோ
3515.
ஒண்ணாது தேகமது கூடுவிட்டு வுலகத்தைத் தான்மறந்து மண்ணாப்போச்சு
நண்ணமுடன் வாதமாவுங்காணாதாச்சு நலமான சடலமது விழலாய்ப்போச்சு
எண்ணமுடன் லோகமதில் இருந்ததுண்டோ எழிலான தேகத்தால் எடுத்தகாயம்
உண்பதுவும் வுடுப்பதுவும் என்னலாகும் வுத்தமனே வீரபத்திரன் நரஜென்மமாச்சே
3516.
ஆச்சப்பா சாத்திரங்கள் சொன்னார்கோடி அவனிதனில் வீரபத்திரன் கடவுளென்று
மூச்சடங்கிப் போனதொரு மனிதன்தன்னை முசியாமல் தேவனென்று தொழுதார்பாரு
வீச்சலுடன் காசினியில் அவருமாண்டார் விண்ணுலகி மாத்மாவும் போனதென்று
ஏச்சான வுறுதிமொழி காணலாச்சே என்மகனே வீரபத்ரன் மண்ணானானே

3517.
மண்ணானார் இன்னமொரு மார்க்கம்பாரு மகத்தான சீனபதி பிழைக்கவென்று
திண்ணாக வடபத்திரகாளியம்மன் திரளான கூட்டமுடன் சென்றுதானும்
குண்ணான நதிமலைகள் குகைகள்தேடி கொற்றவளும் யுத்தமது செய்யவென்று
வண்ணமுடன் மகுடாதி சூரன்தன்னை மார்பிளந்து வல்லபத்தில் குத்தினாளே
3518.
குத்தவே மகுடாதி சூரன்தானும் கொற்றவனுங் கிடாவயிற்றில் வந்துதித்தான்
சத்தமுடன் வபயமிட்டு கண்பிதுங்கி தரணிதனில் மலைபோலே விழுந்தான்பாரு
பித்தனைப்போல் மதிமயங்கி வாக்குரைத்து பிசகான வார்த்தையது மிகவுஞ்சொல்லி
சித்தமடியேனென்று தொழுதுபோற்றி சிறப்புடனே மண்ணுலகில் மாண்டான்தானே
3519.
மாண்டானே காளியிட கைவசத்தால் மானிலத்தில் கேட்டவருஞ் சொன்னார்தாமும்
கூண்டோடே சடமழிந்து மண்ணாய்ப்போனார் குவலயத்தி லிருந்தவரும் யாருமில்லை
பாண்டுமகா புத்திரரு மிப்படியே மாண்டார் பாரினிலே மாண்டவரு மிப்படியேயுண்டு
காண்டிபமும் தாம்பிடித்த பத்ரகாளி காசினியில் தான்வளர்ந்து மண்ணாணாளே
3520.
மண்ணான தேவியவள் சாமியானால் மானிலத்தி லிருப்பதற்கு வையமென்ன
வண்ணமுடன் தேகமது வழிந்துபோச்சு மானிலத்தில் காளியவள் கூளியானாள்
எண்ணிமிகப் பார்க்கையிலே தேகம்பாழாம் எக்காலமிருந்தாலும் மண்தான்வீடு
நண்ணமுடன் தேகமது மண்ணுமாச்சு நயமுடனே மண்கூறும் மண்ணுமாச்சே
3521.
ஆச்சென்று பிரிதிவியோ டொக்கச்சேர்ந்து அப்பனே மண்கூடு தானுமாச்சு
மூச்சடங்கி தேகமது போகும்பாரு மூதுலகில் ஒருவருந்தான் இருந்ததில்லை
மாச்சலுடன் வீராதிவீரர் தாமும் மகாபத்திரகாளியென்றும் வர்ணித்தார்கள்
பாச்சலுடன் தேகமது பாழதாகி பாரினிலே மடிந்தார்க் கோடியாமே
3522.
கோடியாமின்னமொரு கூத்துகேளிர் கூறுகிறேன் மானிடர்கள் அறியவென்று
நாடியே கிருஷ்ணாவதாரனப்பா நலமான துவாரகையிற் பிறந்தார் கண்டீர்
தேடியே லோகத்து மங்கைமாரை தேற்றமுடன் சிறையதுதா னெடுத்தானென்றும்
பாடியே பன்னீரு ஆயிரம்பேர் பட்சமுடன் வலதழித்தக் கதைகேட்டோமே
3523.
கதையான மாந்தர்களை சிறையெடுத்து காசினியில் லீலாவினோதஞ்செய்து
கெதையுடனே சத்துருசங்காரஞ்செய்து கெவனமுடன் லீலாவி குளிகைகொண்டு
சிதைவுபட தாரணியில் அனந்தம்பேரை சீரழித்து கெடுத்துவிட்ட கோபாலன்தான்
வதைச்செய்யும் கோபாலன் வடிவைப்பற்றி வையகத்து மாந்தரெல்லாம் மயங்கினாரே
3524.
மயங்கினார் கோடான கோடிபெண்கள் மண்டலத்தில் கருஷ்ணாவதாரனுக்கு
தியங்கியே கற்பழிந்து தேகந்தன்னை திகழுடனே தத்தமக்காய் செய்துகொண்டார்
பயங்கமுடன் புராணங்கள் இதிகாசங்கள் பலபலவாங் கிருஷ்ணனது காதைதன்னை
புயங்கமுடன் புலவரெல்லாம் புகழ்ந்துபாடி பூதலத்தில் கதையுமுண்டாக்கினாரே

3525.
உண்டான சாத்திரத்தில் இன்னஞ்சொல்வோம் உத்தமனார் பஞ்சபாண்டவர்கூத்துதானும்
கொண்டாநரவிகளு மிகவாய்ச்செய்து கொற்றவனா மருச்சுனனார்தன்தமக்கு
பண்டான மைத்துனராய் பேர்படைத்து பண்புடனே தங்கைதனை தானளித்து
திண்டான திரவியங்கள் உதவிசெய்து தீரமுடன் பார்தனுக்குத் துணையானாரே
3526.
துணையாக சத்தசாகரங்கடந்து துப்புறவாய் லோகவதிசயங்களெல்லாம்
பிணையுடனே இருவருமாய் லோகஞ்சுத்தி பிரியமுடன் சத்தகன்னிகையைக்கண்டு
பணையயுடன் திரவியங்கள் இல்லாமற்றான் பாரினிலே வெகுதீரவானனாக
கணையோடு வூர்வனத்தைச் சுற்றிவந்து கன்னிகையை மாலையிட்டார் கண்டீர்பாரே
3527.
பாரேதான் வடிவமுள்ள கன்னிமாரைப்பார்த்தனென்னும் வடிவழகன் மாலையிட்டு
நேரேதான் கீர்த்திபிரதாபனாக நெடுங்காலந் தானிருந்தார் தவசிருந்தார்
ஊரேதான் பதியிழந்து மண்ணிழந்து வுத்தமனார் துரியனுட தீங்குதன்னால்
போரேனாமென்றுரைத்துக் காட்டகத்தில் பொங்கமுடன் பரணைதனிலிருந்தார்தாமே
3528.
இருந்தாரே திரௌபதியும் ஐவர்தாமும் எழிலான காட்டகத்தில் நெடுங்காலம்தான்
பொருந்தாமல் வனவனமாய்த்தான் திரிந்து பொங்கமுடன் வெகுபாடு மிகவும்பட்டு
குருந்தமுடன் நற்சுகத்தை விட்டிழந்து குவலயத்தில் குடிவாழ்க்கை செய்துகொண்டு
வருந்தியே வவரவர்கள் பட்டபாடுதன்னை வைகுந்த கிருஷ்ணனவர் பார்த்திட்டாரே
3529.
பார்த்திட்ட கிருஷ்ணனவர் தெய்வமானால் பாருலகில் புஞ்சவரை ரட்சித்தாரோ
தீர்த்திட்ட தேசமது மனிதஜென்மம் திரளான சேனைகளு மிருந்துமென்ன
கார்த்திடவே கிருஷ்ணனவர் வல்லபத்தால் காசினியில் வெகுகோடி ஜெனங்கள்தம்மை
பூர்த்திட்டமாகவல்லோ புனிதபாலன் புகழுடனே ரட்சிக்க முடியார்தாமே
3530.
முடியாது கோபாலர்தன்னாலப்பா மூதுலகில் வல்லமைகள் இருந்துமென்ன
நெடிதான பாவத்துக்காளுமாகி நெடுங்காலந் தாமிருந்தார் பூலோகத்தில்
வடிவான தேகமது மடிந்துபோச்சு மண்டலத்தில் கிருஷ்ணனென்னும் பேரும்போச்சு
முடியான முடிவேந்த ரெல்லாருந்தான் முனையான தெய்வமென்று தொழுதார்பாரே
3531.
தொழுதாரோ ராஜாதிராஜரெல்லாம் தொல்லுலகில் மாந்தர்முதல் அனேகங்கோடி
அழுதாரே தெய்வமென்று காலாகாலம் அவனியிலே யவருமல்லோ மண்ணாய்ப்போனார்
பழுதுவராதென்றுரைத்த தேகந்தானும் பாரினிலே மண்ணோடே மடியலாச்சு
முழுதுமே யிவர்தேகம் அழியாதென்று முனையான சாத்திரங்கள் சொல்லலாச்சே
3532.
ஆச்சென்ற தேகமது அழியலாச்சு அப்பனே சாத்திரமும் பொய்யுமாச்சு
வீச்சலுடன் கிருஷ்ணாவதாரந்தானும் விண்ணுலகில் மடியவென்ற நாளுமாச்சு
பாச்சலுடன் தேகமது பொய்யேவாழ்வு பாரினிலே இருந்தவர்கள் ஒருவருமில்லை
ஏச்சலுடன் இவர்களெல்லாம் மனதரல்லால் எழிலான தெய்வமென்று சொல்லொணாதே

3533.
சொல்லவென்றால் இன்னமொரு கருமானங்கேள் சூட்சாதி சூட்சமுடன் செப்பக்கேளும்
வெல்லவே காலாங்கிநாதர்பாதம் விருப்பமுடன் தாள்பணிந்து விரித்துசொல்வேன்
மெல்லவே என்முன்னாய்நந்திதாமும் மேதினியில் சூதமுனி சித்தருக்கு
புல்லவே வுபதேசஞ் செய்தார்பாரில் பூவுலகில் சித்துமுனி நந்திதாமே
3534.
நந்தீசர் வேதமுனி சூதமுனி இவர்கள்நாதனடிபோற்றிசெய்து மகிழ்ந்திருக்கும்வேளை
யிந்திவொலக்க மௌனவாதவித்தை செய்யயேதுவகை அருள்வேத முனிதான்கேட்க
தந்திமுகனைப் பணிந்து வுரைத்திடுவார்நந்தி தாரினியிலுள்ளவர்க்குச்சாகாதவரமும்
மந்திரத்தால் சத்திசித்தியாகும் வரலாறு மாத்ததிக மகுத்துவத்தில் வளமாதிபவர்வாமே
3535.
ஆதியானார் உமையாள் தன்னுடனே யன்பாயன் அருளியசொல் வேதமுனிக்
கறிவித்தார்நந்தி
சாதிலிங்கந் தன்னிலிருப்பது களஞ்சிவாங்கித் தாமாக சிறுபயறுபோலநறுக்கி
நீதிசெறி யெலுமிச்சம் பழச்சாற்றிலிட்டு நேராக ஒருசாமம் வெயிலில் வைத்தெடுத்து
சூதில்லா கொடிவேலி வேரலனைக்கொண்டுதூளாக யிடித்ததையும் வேறுவைத்துக்
கொள்ளே

3536.
வைத்தபின்பு தனித்தகண்வாய்சேரும்பானை வகையேது ரெண்டுகொண்டுவந்து
அதிலேவொன்றில்
மெய்த்திடவே கொடிவேலிப் பொடிபாதியிட்டு மேலாக சாதிலிங்கப் பொடிதனையே பரப்பி
சித்தாக வதின்மேலும் கொடிவேலி வேர்பொடியைச் சிறப்பாக நிறப்பிப்பின் மறுபானை
தனக்கு
கைத்திடா வாழப்பழத்தினிலையுடனே கானமா முருக்கையிலையுங் கைகோர்த்துப்பிடியே
3537.
பிடித்து இருவகையிலையுந் தனிச்சாறாயெடுத்து யிதமாகமேல்பாளை தூரிலேதடவி
வடிதந்த பானைகொண்டுவாய்ச்சேர்த்துமூடி வகையாகச் சந்துவாய் ஏழுசிலைமண்ணும்
மடித்துநீ வுணர்த்தியதில் வெடித்தயிடந்தனக்கு பின்னுமந்த மண்தடவி
யுணர்த்திவலுசெய்து
படித்ததொரு வஞ்செழுத்தால் முன்னவனைப்பணிந்து பாங்கான வுபதேசஞ்
செய்தடுப்பிலேற்றே
3538.
ஏத்தியனற் கமலம்போல் முப்பதுநாழிக்குள் யெரியிட்டு சத்தியதை எடுத்துநீகுருக்கே
பாத்தியலரெய்வதைத் தந்தச்சீலைமண் திறந்துபார்க்கவே மேல்பானைதூரிலேயிரதம்
வேற்றுமையாயிருக்குமதைப் பன்றிமுடியதனால் மெதுவாகத்துடைத்தெடுத்து விரும்பி
வைத்துக் கொண்டால்
நாற்றிசையும் பார்க்கவே எடுத்தவகைக்கெல்லாம் நன்றாகக்கூடும் அதில்வகை
சொல்லினாட்டே

3539.
நாட்டுவேன் திருநாமம் நீலகண்டவாலை நந்தியுரைப்படி யரைத்துசேர்க்கும் வகைக்கேளு
கூட்டுவேன் கண்டங்கத்திரியின் பழத்தைக்கொண்டுவந்து யிடித்ததனைத்
தனிச்சாராயெடுத்து
வீட்டுவைத்துக்கொண்டதற்கு முன்னமேயெடுத்த வேதாந்த சாதிலிங்க யிரத்தைநிறுத்து
ஊட்டுநீ களஞ்சிக்காய் படிசாரளந்து யுறையுறைய விட்டதனை வைத்தமட்டுமறையே
3540.
அரைத்தெடுத்து ஒன்றிலே யடைத்துவைத்துக்கொண்டு அன்பாக சிவகாமிபூசைசெய்து
உரைத்துஅறவைத்த வெள்ளித்தகடாக்கி யிதிலேயுறவாக நீலகண்வாலைப்பூசி
யிரைத்து வளர்ந்திடும் கோழிப்புடம் போட்டெடுத்தால் யிடுந்தங்கம் போலமாத்துப்
பத்தரையுங்காணும்
வரைத்தாறவைத்த செம்புத்தகட்டிலேபூசி வளர்க்கோழி புடம்போட மாற்றமாறரையாமே
3541.
ஆறறையஞ் கானுமள்லாள் பின்னுமதில்வகைதான் அவனிதனில் மானிடர்க்கான
கற்பஞ்சொல்வேன்
மாறடைந்த விடத்தலையின் வடக்கான வேரைவாகாக வெட்டிவந்து சரணைதனிலுரைத்து
வீறான நெல்லிக்காயளவிலேயுருட்டி மேலான வாலைரசம் பணவிடைதானாட்டி
தேறாத பிணியாளர்க் கேழுநாள்கொடுக்க தீருமெனும் பிணிக்குவகை செப்புவதுமாமே
3542.
ஆமென்ற பிணிக்கஉவகை சொல்வதுகேளப்பா ஆக்கைதனிலெழுந்த வாதமென்பதுடனே
நாமென்றுவரும் வாதசூலையறுபதுக்கும் நாயினுங்கேடாக்கு மந்தகிரந்தி பதினெட்டும்
தாமென்ற ஆண்மைசெய்யும் குஷ்டமுடனாப்புதாமளிக்கும் பவுத்திரந்தான்
நீரெட்டும் எமனானென்று மண்டவாதமாருக்கும் யிதுவாலைக்கற்பமென்றுயியம்ப
விண்ணில்போமே
3543.
விண்ணலிபோய்விடும் மூலவியாதியாறும் வேகமாயெழுந்த குன்மம்பதினாறுங்கூட
மண்ணில்
தான்பிறப்பதுக்கும் செயரோகமாறும் மாயமெனவந்தடுக்குஞ்சன்னிபதினெட்டுஞ்சுரமாரல்
சுரமும்
எண்ணித்தான் முடியாத பீசனருள் பதத்திலிருக்குமுசல்சுண்டன் வலிபதினெட்டும்மேகுமே
3544.
ஏகுமே பலபிணியும் வியாதிகளும் என்றுரைத்த நந்திபின்னுமியம்பினதைக்கேளு
வாகுடனே மானிடயாக்கையெடுத்தோர்கள் வகையான முன்சொன்ன வாலைதனை
செய்தால்
பாகுடைய நிதிகோடி திரவியமுண்டாகும் பண்பாகப் பின்னுரைத்த வாலைகற்பங்
கொண்டால் போகுமே
எண்ணமற நோயானதெல்லாம் பொய்யாது கற்பத்திலின்னம்வகைசொல்வோமே

3545.
வகைசொல்வோம் கற்பத்தை சமாதியிலேயிருந்து வாகாககொண்டவர்கள் நரைதிரையும் மாறும்
திகையாமல் மூன்றுகற்பகாலமட்டும் தன்பேர்ஜெகமுழுதும் புறக்கவருள் தேசராயிருப்பர்
நகையாதே நந்திசொன்ன வாக்கிது தப்பாது நாதனாராணை நிசமின்னம் வகைகேளாய்
திகையாதி முன்சொன்ன விடத்தலையினிலையே திறமாகப் பறித்துவந்து சாந்தெனவே ஹரையே
3546.
சாந்தெனவே யரைத்ததிலே நெல்லிக்காயளவு சகலகுணமுன்சொன்ன நீலகண்டவாலை
கூர்ந்தரைக்கால் பணவிடையுங்கூட்டி ஆவரையில் குணமுடைய அஞ்சுவகைமருந்தெடுத் துணர்த்தி
நேர்ந்துபொடியாக்கியதில் வெருகடியுஞ்சேர்த்து நிறையாக பசுவின்வெண்ணை அனுபானந்தன்னில்
காந்தல்நீர் இருவெடுத்தோர்க்கிருபொழுது யேழுநாள்தான் கையாற்கொடுக்க நிற்குங் காசினியோர்க்குறையே
3547.
காசினியெல்லாம்பிறக்க பின்னுமந்த முனிக்கிங்கங்காளிமிர்திப்பம் வகைசொல்வாம்நந்தி
தேசிகனே முன்சொன்னசாதிலிங்க யிரதம்சிறக்கரைக்களஞ்சு குழிக்கல்லிட்டு
மாசில்லாக் கண்டமாங்கத்திரி பழத்தின்சாற்றால் வாகாய்முக்காற்படியும் மூன்றுவட்டமாத்த
தூசிநீ தளிராகவிட்டுபடுமட்டு மறைத்துசுருளவேயெடுத்து நல்லகுகைதனக்குள்ளாக்கே
3548.
ஆக்கியந்த குகையிலே மணத்துவளைநெய்யை அரைமட்டும்விட்டு வாய்சில்லேமூடி
நோக்கியிந்த மாயேழுசீலைமண்ணுஞ்செய்து நேரேதான் யெருவில்வைத்து சேவல்புடமாக
தாக்கியே தீமூட்டி யதையாறிப்பின்னெடுத்தால் தப்பாதுபடிக்கி பற்பமாயிருக்கும்
வாக்கியஞ்சேர் கணபதிக்குபூசைசெய்து வளமாக வயிரவனை யர்ச்சனையும் செய்யே
3549.
பூசைதனை செய்தபின்பு யிரதபற்பந்தன்னை பூராயமாக வொன்றிலடைத்துவைத்துக் கொண்டு
காசெனவே யெழுந்திருக்கும் ஈயமொருபலந்தான் கடுகவே யுருக்கியது தெளிந்துநிற்கும் முகத்தில்
வாசனைசேரிதபற்பஞ் சாவடிகொடுக்க மாத்துயர்ந்த வெள்ளியது காசினிலுமதிகம்
நேசனே தப்பாது நிசவெள்ளிபற்பம் நேராக மானிடர்க்கு பின்னுமதில்கேளே
3550.
பின்னுமதில் வகைகேளு மானிடர்தமக்கு பிணிவந்தால் திரிகடுகு சூரணமேபண்ணி
யுண்ணும்வெருகடியளவே சூரணத்தைக்கூட்டி யுறவாக இரதபற்பம் பணவிடை கால்சேர்த்து
தன்னுள்ளே யனுபானம் தேனிலாகிலுமே லாயானபணவெல்லந்தனிலே
மின்னுநோயாளருக்கு ஏழுநாள்கொள்ள மிகுபிணியுந்தீரும் இந்தபாகந்தானறியே
3551.
பாகந்தா னறியும்வகை எப்படியோகேளு பலபிண்க்கு தக்காதுநீ யனுபானமெடுத்து
வேகஞ்சேர் யிரதபற்பம் பணவிடைகள் கூட்டி விதமாக யிருபொழுது ஏழுநாள்கொடுக்க
தாகந்தாறையொழிந்து சகலவியாதிகளுந் தணியுமே பற்றிபத்திலின்னவகைகேளு
தேகந்தான் பழுப்பேறி தளர்ந்து மானிடர்கள் சிறுவாலை மதன்போலே சிறப்பதற்குமாமே

3552.
மதனாகவாவென்றால் சமாதியிலே யிருந்து வளமான இரதபற்பம் பணவிடைதான்கொள்ள
அதமீறும் பளவுடனே கசப்பெல்லாம்நீங்கி ஆவின்பாலுடன் குருவையரிசி சோருண்ணு
நிதம்பெறவே ரெழுந்ததிரை மாறிவாலையாம் நீணிலத்தில் நூறுகற்பகாலம் வரையிருப்பார்
சுதன்போலே யிருநூறு யானைவலுவுண்டாம் சோதிதிருவானை நந்தி சொன்னபடிசெய்யே
3553.
செய்யவென்று நந்தியின்னும் வேதமுனிதனக்கு செப்புவான் ஸ்ரீராமன் செந்தூரம் வகைதான்
வையகமெல்லாஞ் சுத்திசெய்த யிரவதம்கையாக அறுபது களஞ்சியதுபோலே
வெய்யதோர் கெந்தகமும் மிடைமுன்போலே கூட்டுமேலான சாதிலிங்கம் பதினஞ்சுகளஞ்சி
அய்யமெனும் நினையாதே பொன்னரிதாரத்தை அன்பாக அன்பதுகளஞ்சியதுசேரே
3554.
களஞ்சிரண்டு தனித்தயிடை மனோசிலையுங்கூட்டு கடிதான நாதத்தை ஈரஞ்சுவட்டம்
வளஞ்செய்து இதுப்பையென்ணை தனிலுருக்கிச்சாய்த்து வகையாக நாற்பதுகளஞ்சி யதில்சேர்த்து
உளஞ்செய்த தங்கத்தில் ஒருகளஞ்சியாக ஒக்கயிருநூத்திருபத் தென்களஞ்சியெல்லாம்
தளஞ்செய்த எருக்கம்பால் தன்னிலொருசாமம் கசடறவே யரைத்து மறுசாறு புரசிலையே
3555.
புரசிலை தும்பையுடன் செருப்படி செம்முள்ளி புகழான மாதலையின் இலையுடனேஅஞ்சும்
வரமுறவே கொண்டுவந்து வெவ்வேறேயிடித்து வகையாகத் தனிச்சாறுயெடுத்துவைத்துக் கொண்டு
திரமுறவே யிச்சாறு வொருசாமந் தீர்க்கமுற்ற சொல்முறையாய் சாமமஞ்சரைத்து
கரமறவே பின்னுமந்த மாதளையின் பூவுங்காண முருக்கம்பூவும்கலந்து சமன்கூட்டே
3556.
கலந்துசமன்கூட்டி யதுயிடித்ததில் சாறெடுத்து கைசேரவொருசாம் பின்னுமரைத்து
பலந்தநிழற்குள்ளுணர்த்தி பொடியாக்கி கங்காசல குப்பிதனக்குள்ளே
நிலந்தெளியாதே யேழுசிலைமண்ணுஞ்செய்து நேரான வெய்யிலிலேயுலர்த்தி
பிளந்தவராதே மண்பூசி மெழுகிட்டு பேதமறக் குப்பிதனைப் பேணிமருந்தடையே
3557.
மருந்தான பொடிவகையை குப்பியரைவாகாக அடைத்தந்தவாய்வலப்பக்கலில்
திருந்தவே மூடியதின்மேலுமடைமண்ணை திறமாக மூடியொரு தாளிதனையெடுத்து
பொருந்தியதற்குள்ளே நாலுவிரலக்கனந்தான் பொடிமணலையிட்டதன் மேல்குப்புதனை வைத்து
குருந்தமால்ப் பின்னுமந்த மணல்தனையேபோட்டு குப்பிகுடமரைமதில் கொட்டியடுப்பாக்கே
3558.
ஒட்டியதோரடுப்புமிட்டு தாளியதன்மேலேயுள்ளாக புதையவைத்து முன்னவர்க்குப்பூசை
கிட்டியன்பாய் செய்தபின்பு தீபமொருசாமம் யெரியிடும்தன்கமலம்போல்
இருசாமமெரித்தால்
கெட்டியாக் கடுயெரிவொரு சாமந்தனக்கு பேதமுடனிப்படியே சாமமாறெறித்து
விட்டடின்பு ஆறவைத்து மறுநாளிலிங்கே யிடுமோக வயிரவனைப் பூசைபண்ணிக் கொள்ளே

3559.
வயிரவனைப் பூசைசெய்து குப்பிதனையெடுத்து வாகாக வுடைத்துள்ளே பார்க்கவே செந்தூரம்
ஒயிலான முருக்கம்பூ நிறமாகயிருக்கும் ஒன்றிலே பத்திரமாய் அடைத்துவைத்துக்கொண்டு
கயிலாசகிரிதனிலே களஞ்சிதனிலுருக்கி கடுகவதில் மஞ்சாடி செந்தூரங்கொடுக்க
பயிலறிய நின்மாற்று ஒன்பதையுங்காணும் பற்றாறவைற்ற செம்புக்காறு குறையாதே
3560.
குறையாது செந்தூரம் விளைவதியங்கண்டால் குறிப்பதுதான் கண்டறிந்து குறைவுசெய்ய வேண்டும்
நிறையான விளைவுசற்றே குறைந்துவிட்டு தானாநிறைவிலே கால்மஞ்சாடி கூட்டுவது நலமாம்
மறைநாளும் ஆராயும்நந்திவகையுரைத்தான் வாக்கிது தப்பாது நிஜமானாணை வன்மை
திறமானஜெகத்தினிலே வாதியென்றுவாராமல் ஜெகத்தினிலே செய்வதுநற்கருமமென்று செப்பினதொப்பிணையே
3561.
ஒப்பரிய சூதமுனி நந்தியுரைகேட்டு வுளமகிழ்ந்தங்கவ னுரைப்பாள்வுப்பைநீகட்ட
அப்புமிகுங்கடல்துறையை பொடியாக்கி யதிலே அரைப்பொடிக்கு மூன்றுபடி வுப்பதனைக் கூட்டி
செப்பரிய வெள்ளாட்டு நீரதனைவிட்டு சேர்த்தரைத்தோர் கட்டியிற் குள்ளாக்கியே பின்புதப்பாமல்
மறுவோடு தான்கவிழ்த்து மூடிதட்டெருவில் புடம்போட்டு யெடுப்பதுவுமாமே
3562.
எடுத்திடுபின் செம்பதனைச்சுற்றி செய்யும்வாறு யெப்படியென்றெண்ணாதே நீலப்பூவின்
கடுத்தாக்கணாத்தி நிலையரைத்துவாங்கி களங்குபோல திரண்டசெம்மைபொதிவுதனை
அடுத்தயீரஞ் சுதிர்முருக்கிப்பின்பு அதியபுங்கன்வேரரைத்து அதிலுமுன்போல் கொடுத்துருக்க
யீரஞ்சு சுதிரத்திலே செம்புசுத்தியென்று சொன்னவகை சொல்லவும் ஒண்ணாதே
3563.
சொல்லாதே கெந்தகத்தை கட்டும்வாறு தோகையாகையுகிரி தனிலவன்மேறும்
நல்லமயிலா கஞ்சியிலை தனையரைத்து காட்டாவின் தயிர்தனிலே கலவைசெய்து
வில்லையைப்போ லொருமேட்டில் வட்டஞ்செய்து வெளிநடுவில் நாலாறு துவாரமிட்டு
கொல்லவே கெந்தகமு மோட்டிலிட்டு குளிதனிலே ஒருகலசம் வைத்துக்காணே
3564.
காணவே வைத்ததனை கலவைசெய்த கதையில் குறையவிட்டு கலசவாயில்
தோணவைத்த கந்தகோட்டைவைத்து கோணாமல் மறுஓடு கவிழ்த்துமூடி
வேணபடி சீலையது வலுவாகச்செய்து வேகமுடன் குழிவெட்டிப் புடத்தைப்போடு
பூணவைத்து யிப்படிநீ ரஞ்சுவட்டம் புடத்திலிட்டு கட்டிய கெந்தகத்தைச்சேரே
3565.
சேரப்பா நாகமஞ்சு களஞ்சைகொண்டு செப்பெனவே கிண்ணமொன்று செய்தபின்பு
பாரப்பா மரிதாரஞ் சாதிலிங்கம் பச்சைநிறமாக வுத்த துருசுடனேயிரதம்
காரப்பா கட்டிவைத்த கெந்தகத்தைக்கூட்டிக்கொண்டு கொள்ளும்வகைதனக்கு ஒவ்வொருகளஞ்சி

சாரப்பா களஞ்சி குளிக்கல்லிலேயிட்டு தளவாய்நீர்விட்டரைத்து குழம்பாய்க்கூட்டே
3566.
கூட்டியந்த குழம்பதனை கிண்ணமதிலுள்ளுங் குவிந்தபுறந்தனிலு மரைசாந்துபோல்பூசி
நாட்டியல்பாய் கட்டிவைத்த மூன்றுபடியுப்பை நாகவடம்போல் குளிர்ந்தசட்டிக்குள்ளிட்டு
வீட்டிமையாய் சட்டியதின் மேலாகக்கிண்ணம் விளும்புசற்றே கண்காண வெள்ளிநடுவில்
பதித்து
தாட்டிகமாய்க் கிண்ணத்தின் விளிம்புதான் மறைச்சார்வாக சீலைமண்ணஞ்செய்
தடுப்பிலேற்றே
3567.
அடுப்பிலே வைத்தபின்பு ஐங்கரர்க்குப்பூசை அன்பாகச்செய்துகொண்டு
நலத்தேக்கினிலையை
கடுகவே யிடித்ததிலே நவாச்சாரமிட்டு கசப்பில்லா தனிச்சாறு மூன்றுபடி யெடுத்து
தொடுப்பாக வனல்மூட்டி எரியிடுமவ்வேளை சுறுக்காகப்படிமூன்றுஞ் சிலவறுத்தபின்பு
மெடுப்பாத யெரியிடுநீ பதினஞ்சுநாழிகைக்குநன்றாக ஆறியபின்னெடுத்திடச் செந்தூரம்
3568.
செந்தூரந் தனையெடுத்து முன்னால்வைத்து சிவகாமிபூசையும் அர்ச்சனையுஞ்செய்து
அந்தரங்கமாக வொன்றிலடைத்துவைத்து கொண்டையறவைத்து வெள்ளீரேழு
பணவிடையுங்கூட்டி
சிந்தனையாய் சுற்றிசெய்த செம்பினிலே மூன்றுசேர்த்தொரு களஞ்சியொன்றாய்
உருக்குமுன்பெடுத்து
பின்னுமதையுருக்கி நிறந்தெளிந்தால் வைத்திருக்கும் மஞ்சாடிசேரே
3569.
மஞ்சாடி சேத்திடமாத்தேழரையுங்காணும் மாதவத்தோன் சூதமுனிவாக்கியம் பொய்யாது
அஞ்சாதே பரமகுரு ஆணையுண்டு நிசமேஅறிவதுபின் துருசுசெம்பாகும் வகைகேளு
மிஞ்சவே வெண்காரந் துரியொன்றாய்க் கூட்டி வெண்ணைதனிலேயரைத்து
குடக்கரியில்வைத்து
துஞ்சவே யுருக்கவந்த துரிசியிலே பாதிசுற்றி யுள்ளசெம்பிருக்குஞ் சொல்லயின்னங்கேளே
3570.
கேளப்பா இன்னமந்த னாகமதில்வகையே கோதறவே இலுப்பையெண்ணைதனை
வைத்துக்கொண்டு நாளொப்பயிருக்குமந்த நாகத்தையுருக்கி நாலுவட்டம்சாய்த்தபின்பு
எடுத்தால்
தூளப்பாலேகடந்து நாகமெழுகதுபோல சுத்தியாயிருக்குமது தினஞ்சுகளஞ்சால்
ஆளப்பா வில்லையின் காய்குடுக்கைமூடியுமாய் அளவாக செய்யிரதமிடை
யொப்பாயடையே
3571.
அடைத்திய ரூபத்திலொன்று தங்கந்தான்கூட்டி யதற்கிணங்க குகைதனையுண்டாக்கி
யந்தகுகைக்குள்
உடைத்தகல்லுப்புந் துப்புநவாச்சாரந்தானும் முள்ளுறவே முன்னிடையுஞ்சமனாக
கொண்டு
படைமுந்த எலுமிச்சம்பழச்சாற்றாலரைத்து பூணவே யொருபங்கு குகைக்குள்ளேபூசி
சடைத்திடச் சந்தேகுகையை வெய்யலிலேவைத்து தப்பாமலொருபங்கு
வேறுவைத்துணர்த்தே

3572.
உணர்த்தியெடுத்த மருந்தை பொடியாக்கி குகைக்குள் ஒருவிரலரலின் கனமாகப்
பொதிபாதியிட்டு
யிணக்கமுற குடுக்கைதனை பொடிமீதில்வைத்து யிரையளவு கண்மேலும்
பொடிதனையேபரப்பி
வணக்கமுடன் மண்சில்லால் குகைவாயைமூடி வகையாக்குகையே சீலைமண்ணுஞ்செய்து
புணக்காதேயுணர்த்தி வெடித்தயிடந்தனக்கு பின்னும்மண்பூசிப் புடத்தினிடஞ்செய்யே
3573.
இடமாக ஒருமுழத்திலத்தினிவாக்கிநீளயெத்தாதே குளிநெடுத்துப்பாதிமட்டும்
பெருவையிடமாக அடக்கியதின்மேல் அக்குகையைவைத்து பாங்காக குளிமறைய
மேலும்யெருப்பொதிந்து
அடவாக ஏழுநாள்வரைக்கும் பீடத்திலிட்டு ஆத்திநீயெடுத்தால்
திடமாகச்செந்தூரம் இருக்குமதையெடுத்து தீர்க்கமுள்ள வயிரவனைப் பூசனையுஞ்செய்யே
3574.
தீர்க்கமுள்ள வயிரவனை பூசைசெய்தபின்பு செந்தூரமதனை சிமிளில்வைத்துக்கொண்டு
ஆரமுள்ள ஒருகளஞ்சி வெள்ளிதனையுருக்கி யதுநிறமாய்த்தெளிவினிலே
பணவிடைசெந்தூரம்
ஏகமாய்க்கொடுக்க மாத்தெட்டரையுங்காணும் ஈசனாராணையிது தப்பாதுண்டாகும்
நீர்த்தமென்று நினையாதே சூதமுனியுரைத்தான் நிசமாகவுண்டாகும் இன்னவரைசொல்லே
3575.
சொல்லவேயின்னமொரு மார்க்கங்கேளு சொரூபமென்ற பாம்பாட்டி சித்தனப்பா
வெல்லவே வெகுகாலம் வனாந்திரத்தில் வினோதமுடன் சித்துமிகவாடிவந்தார்
கொல்லவே அரவங்கள்தான்பிடித்து கொற்றவனார் சமூகமது சென்றேயேகி
வெல்லவே அரவமதையாட்டியேதான் மேன்மையுடன் பரிசுமிக பெற்றார்தாமே
3576.
பெற்றாரே சிலகாலம் மலைகள்மீது பேருலகில் கீர்த்தியுடன் வாழ்ந்திருந்தார்
புற்றருகில் சென்றுமல்லோ சித்தர்தாமும் புனிதமுள்ள நவரத்தின பாம்புதன்னை
வெற்றியுடன் தான்பிடிக்கப் போகும்போது வேதாந்த சட்டமுனி யங்கிருந்தார்
கற்றியே பாம்பாட்டி சித்தர்தாமும் சொரூபமுள்ள சித்தரைக் கண்டார்தாமே
3577.
கண்டாரே கைலாச சட்டர்தன்னை கருத்தினிலே யவர்பாதம்தொழுகவென்று
தெண்டமுடன் அடிபணிந்து சிரங்குவித்து தெளிவுடனே அஞ்சலிகள் மிகவுஞ்செய்து
பண்டுடனே காயாதிவர்க்கங்கொண்டு பாங்கான பாலுடனே பழமுங்கொண்டு
தண்டுளப மாலையணி துளசிகொண்டு சர்ப்பனையாயர் சித்துதமை கண்டார்தாமே
3578.
தாமான நாதாந்த சித்துதம்மை தகமையுடன் பாம்பாட்டிக்கண்டபோது
நாமான கைலாசசட்டநாதர் நலமுடனே பாம்பாட்டி தனைநோக்கி
பூமான மானதொரு சித்தைக்கேளும் புகழுடனே காட்டகத்திலிருந்தீர்காலாம்
காமான கடியதொரு விஷத்தைத்தானும் கருமான மில்லாமல் கற்றீர்தாமே

3579.
கற்றீரே யுககோடி காலந்தானும் கருத்தினிலே பொய்மெய்கள் காணாமற்றான்
பெற்றீரே காட்டகத்தில் திரிந்துகொண்டு பேரான பாம்புகளை மடக்கியாட்டி
சுற்றிலுமே ஞானோபதேசப்பாலை சொரூபமுடன் சித்துதமைக் காணாமற்றான்
பற்றரவே சமுசார வாழ்க்கைதன்னில் பாருலகில் சிகாலம் இருந்திட்டாரே
3580.
இருந்துமே ஞானவானாகவேதான் எழிலான வுபதேசந்தன்னைநோக்கா
பொருந்துமே யுபதேசம் பெற்றீரானால் பூதலத்தில் வெகுகாலமிருக்கலாகும்
அருந்தியே ஞானப்பால் தானுமுண்டு அப்பனே உபதேசம் பெற்றுக்கொள்ள
வருந்தியே கைலாசசட்டநாதர் திறமுடனே வாக்களித்தார் பாம்பாட்டிக்கே
3581.
ஆட்டவென்றால் சித்தருமே ஞானம்பெற்று அவனியிலே வெகுகாலமிருப்பாரப்பா
கூட்டமுடன் பாம்பாட்டி சித்தர்தாமும் குவலயத்தில் மாந்தரிருசீஷனாகி
நாட்டமுடன் தாமறிந்த ஞானமெல்லாம் தன்மையுடன் சீஷருக்கு உபதேசித்தார்
வாட்டமுடன் சீஷருக்கு உபதேசித்து வாகாகச் சமாதியிலே யடைந்தார்பாரே
3582.
பாரேதான் சமாதியிலே யடைந்தபின்பு பாலகனே சிலகாலமங்கிருந்து
நேரேதான் திருஷ்டாந்திர மிகவுங்காட்டி நேர்மையுடன் கற்பகாலம் இருப்பேனென்றும்
ஊரேதான் குடிப்படைகள் எல்லாருந்தான் வுத்தமர்க்குத் தொண்டுமிக வதிகஞ்செய்து
சீரேதான் சமாதியிடம் பூசைமார்க்கம் தெளிவாகச் செய்தார்கள் கோடியாமே
3583.
கோடியாமின்னமொரு மார்க்கம்கேளு கூறுகிறேன் பாம்பாட்டி மகிமைதன்னை
நீடியே பாம்பாட்டி நாதர்தானும் நெடுங்காலம் சமாதியிலே இருந்துபின்னும்
நாடியே பூமிதனில் வெளியில்வந்து நாதாந்தக் கூத்துகளு மிகவுமாடி
தேடியே வரைகோடி காலமப்பா தேசத்திலிருந்தாரே சித்துதாமே
3584.
தாமான பாம்பாட்டி சித்தர்தாமும் தாரிணியில் சாகாமலிருந்தாரோதான்
நாமேதானறிந்தவரை யின்னஞ்சொல்வோம் நாதாந்த சித்ததுவும் மடிந்துபோனார்
போமேதான் சித்ததுவுந் தேகந்தன்னை பொங்கமுடன் சிலகாலம் மண்ணிற்சென்று
தூமானமாகவேதான் வெளியில்வந்து துப்புறவாய் தேகமதை மறந்திட்டாரே
3585.
மறந்திட்டார் தேகமதுநிலைநில்லாது மண்டலத்திலாரேனும் இருந்ததில்லை
துறந்திட்டார் நாதமுனிசித்துதாமும் துறையான வுலகுதனில் மாண்டுபோனார்
புறந்திட்ட சித்தர்முனி ரிஷிகள்யாவும் பேருலகில் மடிந்துமல்லோ மண்ணாய்ப்போனார்
இறந்துமே லோகமெல்லாம் மடிந்தார்கண்டீர் எழிலாக இருந்தவர்கள் இல்லைகாணே
3586.
தானான வின்னமொரு கருமானங்கேள் தாரணியில் மானிடர்கள் அறியவென்று
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருவினது கடாட்சத்தாலே
தேனான வடிவேலர் சுப்பராயர் தேசத்தில் பிறந்ததோர்வன்மையாவும்
பானான சாத்திராயுத்தம்பார்த்து பகருகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்றே

3587.
பிழைக்கவே வடிவேலர் தம்மைத்தானும் பெரான வுலகில்தேவனென்றும்
வழக்கமுடன் சாத்திரங்கள் இதிகாசங்கள் வளமாகப்பாடிவைத்தார் வினயம்யாவும்
முழக்கமுடன் வடிவேலர் முருகன்தானும் முற்பிறப்பில் பஞ்தாக்கியனாக
தழக்கமுடன் பிறந்ததாய் சாத்திரங்கள் தாரிணியில் கவிவானர் கட்டினாரே
3588.
கட்டினார் வடிவேலர் முருகன்தானும் காசினியில் ஆறுமுக சொரூபமாகி
திட்டமுடன் பள்ளியிலே யோதும்போது தீரமுடன் அரிநமோவென்றுகூறி
இட்டமுடன் சொல்லெனவே பிரமன்தானும் எழிலான வடிவேலர் சொல்வேனென்றார்
சட்டமுடன் அரிக்குத்தான் பரியஞ்சொன்னால் சாங்கமுடன் யானுரைப்பேன் சத்தியவானே
3589.
சத்தியமாய் சொல்லுகையில் இந்திரன்தானும் சந்தோஷமாகவல்லோ தாமழைத்து
வெத்தியுடன் அசுரர்களைத்தான்ஜெயிக்க விருப்பமுடன் தானழைத்துசென்றபோது
புத்தியுடன் பகவானை நமஸ்கரித்து புகழாக அரக்கர்களை சங்கரித்து
நித்தியமுஞ் சூரசங்காரனாக நீணிலத்தில் வெகுகால மிருந்திட்டாரே
3590.
இருந்திட்டார் வள்ளிதனை சிறையெடுத்து எழிலான கலவதனிலிருந்தாரென்று
பொருந்தவே வுலகுதனில் சாமியாக பொங்கமுடன் வீற்றிருந்தார் சதாகாலந்தான்
வருந்தியே கோடிமனு பேர்களெல்லாம் வையகத்தில் மகாதேவனென்றுசொல்லி
திருந்தியே நமஸ்கரித்து தலைகுனிந்து திகழுடனே கோடியுகமிருந்தார்தாமே
3591.
தாமான சாத்திரங்கள் சொன்னதெல்லாம் தகமையுடன் பொய்யாச்சு பொன்னுலோகம்
நாமேதான் சொன்னபடி வடிவேலர்தாமும் நாட்டிலோ யிருந்தாரோ யில்லைகண்டீர்
வேமேதான் பூலோகம்தன்னை விட்டுவிடுபட்டு தேகமது மண்ணாய்ப்போச்சு
போமேதான் மண்கூறுமண்ணாய்ப்போச்சு பூவுலகில் இருந்தாராம் காணோம்பாரே
3592.
உண்டாகும் கெந்தகத் தயிலவகைக்கேளு வுன்னியஞானிபண்டம் பத்துதானெடுத்து
மிரண்டாதி வெள்ளற்றிலிட்டாவியென்று வெண்கருவைநீக்கி மஞ்சள்கருவாகவெடுத்து
தீண்டாத சட்டியிலே யிட்டடுப்பிலேற்றி தனிவாகயெரிமூட்டி தாவியினாலிருக்கப்
பண்டாதிய ருளாலேவருந்தயிலந்தன்னை பண்பாகவெடுக்க பின்னை கெந்தகத்தை
வாங்கே
3593.
கெந்தகத்தின் மூன்றுபங்கில் பசுவின்பாலில் கெந்தம்விட முன்போலசுத்திசெய்தெடுத்து
துஞ்சாதே பொடியாக்கி சீலைதனில்பரப்பி திரியாகத்திரித்து வண்டத்தயிலத்தைவைத்து
பந்தமாய் அனல்மூட்டி தலைகீழாய்பிடித்து பாத்திரத்தை கீழ்வைத்து
பாங்காக யேந்திவந்துசேர்த்து தயிலத்தையொன்றிலேயடைத்தால் வாகாகப் பின்னுமதில்
வகைபகருவாமே

3594.
கருவாக யிந்தவகை பார்த்தெடுத்த பேர்கள் அகங்கார நிறத்துடனே மாற்று குறைந்திருந்து தானால்
வுருவாகவே யிந்ததயிலமதில் பொன்னைவுள்ளாக்கி யெடுத்துவைத்து ஒருதிரந்தானுக்க
திருவாக நிறம்பசுமையாகமாத்தேறும் செப்பினோம் பின்னுமதில் செப்பவகைகேளு
துருவான சொரிசிரங்கு நோயானார் தனக்கு துளசியிலைத்தனில் கொடுத்து தொகுத்துநீபாரே
3595.
தொகுத்துநீ பார்க்கவென்றால் வங்கவகைதனிலே சித்தியுள்ள செந்தூரம் சொல்வேன்கேளு
வகுத்தபடி வருஷம் நூற்றிருபதும் சென்றுவளமாகநிற்குமந்த வேம்பிடபழத்தை
வெகுத்தமுடன் கொண்டுவந்து யிடித்ததில் சாரெடுத்து வெறுப்பில்லாதே விரும்பிவைத்து
பகுத்ததிலே இன்னுமொரு பாத்திரத்தில்வாங்கி பாங்காக கருத்தவங்க முருக்கியிதில்சாயே
3596.
வுருக்கியந்த வங்கத்தை மூவேழுவட்டம் ஒன்றான சாத்திலே வுரைத்தபின்புயெடுத்து
தருக்கிசைந்த வோட்டில்வைத்து தாளகமுங்கூட்டி தனித்தடுப்பிலேத்தியே நாயுருவிக்கப்பால்
நெருங்கியதை வறுத்துவங்கம்நீராக்கிப்பின்பு நீன்குமரிச்சாற்றிலே
யொருசாம மரைத்ததிரிக்கிசைந்த குகைக்குளிட்டு யெருவில்வைத்து சேவலின் படமாக நாலிலிடலாமே
3597.
சேவலின் புடமாக தினமும்ரெண்டு வட்டந்திரமாக சாற்றிலரைத்திருவதுநாளையிலே
யேவலுறுபுடம் நாற்பத்தொண்ணு குறையாமலிடவே செந்தூரம் முருக்கம்பூநிறமாம்
ஆவலுறுவெள்ளிதனை ஒருகளஞ்சியுருகி அதுதெளிவில் பணவிடைசெந்தூரமதை
கொடுக்கநீ வலுமையாக மாற்றேழரையுங்காணும் நிமலனார் திருவாணை நிசங்கவரையிதுவே
3598.
இதுதனிலுஞ் சுறுக்கான இன்னமொருவகைகேளு இந்நிலத்தில் ஆதிமருந்து ஆவரையின்பட்டை
சதிராக கொண்டுவந்து வுணர்த்தி ஒருபானைதனிலிட்டு பாதாள அஞ்சனத்தில் தயிலமதைவாங்கி
இறிக்கியதை யிம்மிவைத்துக்கொண்டு மேலானகோழிமுட்டை வெண்கருவையதிலே
மதுவாக வுரைத்ததையுமாட்டிரேத் துவசமாகச் செய்தபின்பு அருதாரம்வாங்கே
3599.
வாங்கியந்த அரிதாரக்கட்டிதனில் தயிலம்வாகாகவேயுரைத்து வெய்யிலிலேவைத்தால்
பாங்கான செந்தூரமாகுமதையெடுத்து பசுமையாயாறவைத்து வெள்ளியொருகளஞ்சி
யேங்கவே யுருக்கியதில் பணவிடைசெந்தூரம் யேற்கையாய் கொடுக்க மாற்றேழுகுறையாது
நீங்காதே சூதமுனியுரைத்த வகையெல்லாம் நிசமாகும் கண்டறிந்து தேறிநீபாரே
3600.
பாரேதான் இன்னமொரு கருமானங்கேள் பாலகனே யருண்மைந்தா சொல்வேனப்பா
நேரேதான் அனுமாரின் உற்பவத்தை நேரான மாணாக்கன் அறியவென்று
சீரேதான் வாய்வினிட தனயனென்றும் சிறப்பான நூலெல்லாம் சொன்னார்கண்டீர்

கூரேதான் கவிவானர் எல்லாங்கூடி குவலயத்தில் கட்டுறைதான் உரைத்தார்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

3601.
உரைத்தாரே முன்னோர்சொல் நூல்களெல்லாம் உத்தமர்கள் பாடிவிட்டார் அனுமாரைத்தான்
நிரைத்தாரே தேவனென்றும் கர்த்தனென்றும் நிலையான இதிகாச புராணமெல்லாம்
பரைத்தாரே சிரஞ்சீவிப் பட்டமென்றும் பாருலகில் வரம்பெற்ற ஆஞ்சனென்றும்
வரைத்தாரே மிருகமென்ற கூட்டந்தன்னை வலுவான மிருகமென்றும் வசனித்தாரே
**3602.**
வசனித்தார் மிருகமென்ற அனுமார்தானும் வன்மையுள்ள வானரமாங்கூட்டந்தன்னில்
புஜவீரபராக்கிரம வீரனான புனிதமுள்ள ஆஞ்சனேய ஜாதிகண்டீர்
சதகோடி வானரமாய் ஆஞ்சநேயன் தாரணியில் தேவனாயிருப்பாரானால்
குசமுடைய ஸ்ரீராமர் பக்கல்நின்று குவலயத்தில் மிகயுத்தம் செய்தார்தானே
**3603.**
தானான ஸ்ரீராமர்க்குதவியாக தாரிணியில் வெகுயுத்தம்செய்துமென்ன
கோனான ஸ்ரீராமர் மாண்டுபோனார் குவலயத்தில் வானரங்களெல்லாம் மாண்டார்
பானான பாருலகில் ஆஞ்சனேயர் படைக்கூட்டம் தன்னுடனே மண்ணாய்ப்போனார்
தேனான யெனதையர் காலாங்கிநாதர் தெளிவுடனே எந்தனுக்கு உரைத்தார்தாமே
**3604.**
வுரைத்தாரே காலாங்கி சொற்படிக்கி வுத்தமனே யடியேனுந்தாள்வணங்கி
வரைக்கமலம் பதாம்புயத்தைக் கரத்தில்தொட்டு வாகுடனே யானுரைப்பேன் இன்னுங்கேளிர்
முறைக்கவே ராமருடன் ஆஞ்சநேயர் மூதுலகில் இறந்ததொரு கதைமெய்யாச்சு
திரைக்கவே வுலகுதனில் இருந்தார்யார்தான் திரளுடனே மண்கூறாய்ப் போனார்தாமே
**3605.**
போனாரே சாத்திரங்கள் புராணந்தன்னில் புகழான வனுமாரைக் கற்பகாலம்
வானோர்கள் முதலான பேர்களெல்லாம் வையகத்தில் சிரஞ்சீவி பட்டம்பெற்றோன்
ஏனோதான் வீணாக மாண்டாரென்று எழிலான வார்த்தைதன்னை நம்பாமற்றான்
கானான தேவர்முனி ரிஷிகூட்டங்கள் கட்டுரைத்த வாக்கியமும் பொய்யாப்போச்சே
**3606.**
பொய்யாகப் பிடாரனவன் பாம்புதன்னை பொங்கமுடன் ஆட்டிவைத்த கதையைப்போல
மெய்யாக ஸ்ரீராமர் அனுமார்தன்னை மேனமையுடன் கைப்பழக்கம் செய்திருப்பார்
கையுடனே ஆயுதங்கள் தடிகொடுத்து காசினியில் யுத்தமது பழக்கஞ்செய்து
பையவே வானரத்தை வசமதாக்கி பாருலகில் பழக்கமது செய்தார்காணே
**3607.**
காணவே யுலகமதில் இருந்தோருண்டு காசினியி லொருவருந்தா னிருந்ததில்லை
பூணவே பூதலத்தில் பொய்யேவாழ்வு புகழான மெய்வாழ்வு யாதொன்றில்லை
தோணவே தொல்லுலகில் எல்லாமாண்டார் தோற்றமுடன் தேகமது மண்ணாய்ப்போச்சு
வேணவே கற்பாதி கற்பங்கொண்டும் விண்ணுலகில் மடிந்ததுவும் மெய்யுமாச்சே
**3608.**
ஆச்சப்பா காணவென்றா லொன்றுமில்லை அப்பனே கோடானகோடிசெம்பொன்
மூச்சப்பா தேகமதை வருந்தியல்லோ முனையான கோடிபொருள் படைத்துமென்ன
பேச்சப்பா பேசுமுன்னே வாசியோகம் பேரான மகத்துவங்கள் கொண்டுமென்ன
பாச்சலுடன் கூடுவிட்டு கூடுபாய்ந்து பாருலகில் இருந்தாலும் ஒன்றுங்காணே

3609.
ஒன்றுமே காணாமல் வுடலாவிதன்னை ஒழுக்கமுடன் கருவிகரணாதியெல்லாம்
சென்றுமே நவத்துவாரங்களெல்லாம் சேகரமாய்த் தானடைத்து இருந்துமென்ன
கன்றுதான் பால்தேடித் தாயைக்கண்டகதையைப்போல வாச்சுதுபாருள்வாழ்வு
வென்றுமே யுபவாசமிருந்துமென்ன வேதாந்தக் கற்பமதைக் கொண்டார்பாரே
3610.
கொண்டுமே காயாதிகற்பந்தன்னை குவலயத்தில் கோடிவரையுண்டுமென்ன
பண்டான மேனியது பாழாய்ப்போகும் பாருலகில் உயிர்தனையே காண்பதில்லை
அண்டர்முனி ராட்சதர்கள் எவரானாலும் அவனிதனிலிருந்தவரும் மெய்யோ சொல்வீர்
கண்டபடி சாஸ்திரங்கள் மெய்போல்கூறி காசினியில் ஒருவருந்தானில்லைதானே
3611.
இல்லையே யின்னமொரு மார்க்கங்கேளு எழிலான சீனபதி பக்கந்தன்னில்
கொள்ளவே கோடானகோடி சூழ்ந்தகொடுந்தவசி தில்லைவனம் அங்கொன்றுண்டு
எல்லைநகர் சுற்றிலுமே காணார்தாமும் எழிலான வோடைகளும் நதிகளுண்டு
புல்லவே ஐராவதங்கள்போல புகழான மலையுண்டு குகைகளுண்டே
3612.
உண்டான மல்லிகார் சனையொன்றுண்டு வுத்தமனே ரிஷிக்கூட்டம் முனிவர்சஇத்தர்
திண்டான கானாறுமத்திபத்தில் திறளான வாய்க்கால் மண்டபந்தான்
வண்டுடனே கூட்டங்கள் கலந்துமெத்த வாகான மண்டபத்தைச் சுற்றியேதான்
திண்டுபோல் குளவிகளும் ஓடிவந்து திரளான கூட்டமதை சேர்க்கொண்ணாதே
3613.
ஒண்ணாது ரிஷிகூட்டம் முனிகள்கூட்டம் வுத்தமனார் சிவவாக்கியர் சித்தர்பக்கல்
கண்ணவிந்த பேர்களுக்கோ ருண்டல்போல கைக்குதவியாயிருந்தார் சித்தரெல்லாம்
நண்ணமுடன் ஆயக்கால் பக்கல்நின்று நளினமுடன் சிவவாக்கியர்சித்தருக்கு
வண்ணமுடன் சோடவுபசாரமெத்த வாகுடனே செய்துமல்லோ யிருந்தார்பாரே
3614.
இருந்தாரே வெகுகோடிகாலமப்பா எழிலாக சிவவாக்கியசித்துதாமும்
பொருந்தமுடன் சீஷவர்க்கமார்க்கத்தோர்க்கு பொங்கமுடன் தானுரைத்த வதிசயங்கேள்
திருந்தமுடன் தேகமது கற்றூணாகும் தெளிவான சித்தர்முனி கேளுமென்று
குருந்தமாம் தன்னருகில் பக்கல்சென்று கூறினார் வுபதேசங்கூறினாரே
3615.
கூறினார் சிலகாலம் சமாதிதன்னில் குவலயத்தையான்மறந்து இருப்பேனென்று
தேறியதோர் சித்தர்முனிரிஷிகளுக்கு தேற்றமுடன் கூறியதோர் வண்ணங்கேளிர்
பீறியதோர் மூன்றுயுகம் இருப்பேனென்று மேன்மையுடன் தானுரைத்து சமாதிதன்னில்
சீறியே தானிருந்து சித்தர்தாமும் சிறப்புடனே தாமிருந்தார் கோடியாமே
3616.
கோடியாம் இருகோடி வெகுநாள்காலம் கொற்றவனார் சமாதிதனிலிருந்ததுண்டு
நீடியே சிலகாலமிருந்துமேதான் நீதியுடன் பூமிதனிலெழுந்ததுண்டு
தேடியே அனேகம்பேர் சித்துதாமும் தெளிவான சிவவாக்கிய சித்துதம்மை
கூடியே கூட்டமிட்டு வதிகஞ்சொல்லி குவலயத்தில் சித்தரெல்லாம் மதிப்பிட்டாரே

3617.
மதிக்கவே சிவவாக்கிய சித்துதாமும் மார்க்கமுடன் மண்மீதிலெழுந்தபின்பு
துதிக்கவே பலபேரும் அஞ்சலித்து துறையுடனே மூன்றுமுறை சமாதிசென்று
கதிக்கவே யவர்மனது துடிக்கக்கூறி காசினியில் சமாதிதன்னில் பின்னுஞ்சென்றார்
பதிக்கவே சிலகாலம் சமாதியிருந்து பட்சமுடன் பின்னுமல்லோ எழுந்தார்பாரே
3618.
பாரேதான் சிவவாக்கிய சித்துதாமும் பாருலகில் சித்தனாய்ப் பிறந்துமென்ன
சீரேதான் சமாதிதனில் போயுமென்ன சிறப்புடனே யங்கிருந்து வந்துமென்ன
நேரேதான் காயாதிகற்பங்கொண்டு நேர்மையுடன் பூவுலகில் இருந்துமென்ன
தீரேதான் சித்தர்முனி கூட்டம்யாவும் திறமான சித்தனென்று சொன்னார்பாரே
3619,
சொன்னாரே சிவவாக்கியர் வல்லபம்போல் தொல்லுலகில் யாரேனுமிருந்ததுண்டோ
மன்னாகேள் சிவவாக்கிய சித்துதம்மை மானிலத்தில் மதிப்பார் ரிஷிகள்தாமும்
பன்னவே சிவவாக்கிய நாதர்தம்மை பட்சமுடன் அஞ்சலிகள்மிகவுஞ்செய்தார்
என்னவே நாதாந்தசித்துதாமும் எழிலான பூமிதன்னில் பிறந்தார்பாரே
3620.
இறந்தாரே கற்பாதிகற்பங்கொண்ட எழிலான சித்துமுனிநாதர்தாமும்
மறந்தாரே தன்தேகம் மண்ணிலப்பா மானிலத்தில் அவர்தேகம் மண்ணாய்ப்போச்சு
துறந்தாரே சகலகலைக் கியானமெல்லாம் துப்புரவாய்த் தானறிந்துமாண்டார்தாமும்
சிறந்ததொரு சிவவாக்கிய தேகந்தானும் சீரழிந்து மண்தனிலே மக்கலாச்சே
3621.
ஆச்சுதப்பா தேகமது மண்ணாய்ப்போச்சு அவனியிலே யிருந்தவர்கள் யாருமில்லை
பாச்சலுடன் பிரிதீவுதான் மண்ணாய்ப்போச்சு பாங்கான தேகமது நிலைநில்லாது
மாச்சலென்ற வாழ்வதுவு மிவ்வளவேயாச்சு மானிலத்தில் வாத்துமமும் பிரிந்துபோச்சு
ஏச்சலென்ற பிரிதீவா மண்கூறாச்சு எல்லாரு மிப்படியே போகலாச்சே
3622.
போகலா மின்னமொரு மார்க்கம்பாரு பூதலத்தி லதிசயங்கள் இன்னஞ்சொல்வேன்
வேகமுடன் சித்தர்களில் ஒருவனப்பாவுலகுதனிலிருந்தாரே யூகிதாமும்
சோகமுடன் சமுசார வாழ்க்கைதன்னில் செருக்குடனே வெகுகால மிருந்தாரப்பா
சாகமுடன் ஜமதக்கினி முனிவருக்கும் சார்பான திரனாக்கிய முனிவர்தாமே
3623.
தாமான முனிவருக்கு குருவேயாகும் தன்மையுள்ள குருவினது கீர்த்திதன்னை
கோமானாங் காலாங்கிநாதர்தாமும் கொப்பெனவே யடியேனும் குரைத்ததுண்டு
நாமான மாகவல்லோ யறிந்தமட்டும் நாதாக்கள் வரலாறை நாமுரைப்போம்
தீமானமில்லாமல் அடியேன்தானும் திறமுடனே சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே
3624.
பண்பான யூகிமுனி யென்போர்தாமும் பாருலகில் தட்சணப்பிரவேசத்தில்
மணபான மலைவளம் சுத்தும்போது கண்டாரே வராககிரி யென்றமேரு
தின்பான மலைவளத்தை சுற்றியேதான் திரமுடன்நடுமத்தி காடதன்னில்
வன்பான குத்துக்கல் கண்டாரங்கே வாகுடனே வதிசயமொன் றிருக்கலாச்சே

3625.
இருந்ததொரு வதிசயத்தை கண்டாரப்பா எழிலான யூகிமுனி சித்தர்தாமும்
பொருந்தவே மலையோரம் சமாதிகண்டு பொங்கமுடன் தானிருக்கும் காலந்தன்னில்
திருந்தமுடன் சமாதிபுரம் சத்தம்கேட்டு திடுக்கிட்டு மெய்மறந்து நிற்கும்போது
அருந்துதி போல்ஜோதியொன்று காணலாச்சு அப்போது சித்தொளிவைக் கண்டார்பாரே
3626.
கண்டாரே சித்தொளிவைக் கண்டபோது கண்காணா ஜோதிமயம்மென்னசொல்வோம்
அண்டசராசரங்களெல்லாம் கிடுகிடுத்து அங்ஙனவே ஒளிதனிலே மயங்கிபோனார்
தெண்டமுடன் கண்திறந்துபார்க்கும்போது தெளிவான ஸ்ரீசம்பாரனையுமப்பா
பாண்டுமிகப்பிரகாயந்தான் பாரினிலே தோற்றமது காணலாச்சே
3627.
காணவே யூகிமுனி சித்துபாலன் கண்டாரே ஸ்ரீசம்பாரனையர்தன்னை
தோணவே யவர்பாதம் தொட்டுமேதான் தொல்லுலகில் கீர்த்தியுடன் அடிபணிந்து
வேணதொரு வரமெனக்குத் தருகவென்று விருப்பமுடன் அஞ்சலிகள் செய்துகொண்டார்
பூணவே ரிஷியாரு முனியாருக்குப் புகழாக ஞானோபதேசம் செய்தார்பாரே
3628.
பாரேதான் ஞானோபதேசம்பெற்று பாலகனும் சமாதிக்கு முன்னதாக
கூரேதான் சிலகாலமிருக்கவென்று கொற்றவனும் வுறுதியது மிகவுமாகி
தேரேதான் லட்சணங்கள் விதியேற்பாடு தெளிவான முறையோடு சமாதிக்கேக
நேரேதான் யூகிமுனி சித்துதாமும் நெடுங்கால சமாதிதனி லிருந்தார்தாமே
3629.
இருக்கவே யூகிமுனி சிலதுகாலம் எண்ணமுற்று சமாதிக்குப்போகும்போது
உருக்கலென்ற கல்லின்மேல் வரைந்தரூபம் வுத்தமனே சொல்லுகிறேன் மைந்தாகேளு
பொருக்கவே சிலகாலம் சமாதிருந்து புவிமீதில்வரும்போது வடையாளந்தான்
கருக்கலாய் பாலிரவு மிரண்டுமொன்றாய் பாருலகமிருக்குமென்று எழுதலாச்சே
3630.
எழுதவே சீஷவர்க்கந் தன்னைக்கேட்டு ஏற்றமுடன் சமாதிதனி லருகிருந்தார்
தொழுதுமே சிலகாலமிருந்தாரங்கே தோற்றமுடன் சப்தமது கேட்கலாச்சு
பழுதுபடா தேகமது என்னசொல்வேன் பாரினிலே வெகுகால மிருந்துமேதான்
விழுதுபோல் ரோமங்கள் மிகவளர்ந்து விருப்பமுடன் மேதினியில் வந்தார்காணே
3631.
காணவே வதிசயங்கள் சொல்லியேதான் காசினியில் வெளிப்பட்டார் யூகிதாமும்
பூணவே காயகற்பமுண்டுமல்லோ புகழாகச் சமாதிதனிலிருந்துவந்தார்
வேணபடி வுபசாரமதிகமாகி மேதினியில் தாமிருந்தார்கோடிகாலம்
தோணவே கூடுவிட்டு கூடுபாய்ந்தார் தோறாமல் தேகமது வேறாய்த்தானே
3632.
வேறாகத் தானிருந்த வன்மைசொல்வேன் வேண்டியே கைவேறாய்க் கால்வேறாய்
நேறாக வுடல்வேறாய் தலைவேறாய் நேர்மையுடன் பூமிதனிலிருந்துதித்து
சீராக லோகமதில் அனேகங்கூத்துகள் சிறப்புடனே யாடினதுமெத்தவுண்டு
பாராமல் கேட்டவரும் பார்த்தோருண்டு பாரினிலே வதிசயங்கள் மெத்ததானே

3633.
தானான வதிசயங்கள் சாற்றக்கேளும் தகமையுள்ள குருபரனார் வித்தைதேடி
தேனான நூல்கள்முதல் யாவுந்தேர்ந்து தெளிவறவே யோகமுதல் வுளவுகற்று
கோனானயெனதையர் காலாங்கிநாதர் குருபரனார் அருளுடனே பாஷங்கொண்டார்
வேனான வெகுசித்து சொரூபசித்து வெளியான நாதவொளி யதீதமாமே
3634.
அதீதமாம் வதிசயங்கள் மெத்தசெய்து அவனியிலே யிருந்தவர்கள் வுண்டோசொல்லும்
தீதமுடன் மண்கூறாய்ப் போனாரப்பா துரைராஜர் வுலகுதனி லிருந்ததுண்டோ
கதீதமுள்ள தேகமது நிலைநில்லாது காசினியில் யாரேனும் இருப்பாருண்டோ
பதீதமுள்ள பொய்வாழ்வு யெனலாம் பாரினிலே யெல்லாமிப்படியேபாரே
3635.
பார்க்கையிலே தேகமது நிலைநில்லாது பார்லோகமெல்லாம் இப்படிதானாகும்
தீர்க்கமுடன் தேகத்தை நம்பியல்லோ திறமைகெட்டு மாண்டவர்கள்கோடாகோடி
ஊக்கமுடன் சித்ததமைக் கடவுளென்று உத்தமர்கள் சோடித்தார் பலருமப்பா
நோக்கமலம் வீற்றிருக்கும் வாணிபாதம் நேர்மையுடன் பாடிவைஃத்தகாண்டமாமே
3636.
காண்டமா மிந்நூல்தான் சத்தகாண்டம் கருவான சித்தருட மரபுமார்க்கம்
ஆண்டவனார் நாதாந்த சித்தனென்றும் வவனியிலே பொய்ஞானி மெய்ஞானியென்றும்
தூண்டியே கருவிகாணாதியென்றும் துரையான சமாதியுட பீடந்தானும்
வேண்டியே சித்தருட சொரூபம்யாவும் வினையமுடன் பாடினதோர் காண்டமாமே
3637.
காண்டமா மிக்காண்டம் நான்காம்காண்டம் காசினியிலி லிருந்ததொரு சித்துதாமும்
வேண்டியதோர் அற்புதங்கள் மகிமையாவும் மேன்மையுடன் பாடிவைத்தேன் இக்காண்டத்துள்
தாண்டவம் இன்னம்வெகு சித்துமார்க்கம் சாற்றுகிறேன் காலாங்கி நாதர்தம்மால்
மாண்டதோர் மானிடர்கள் சித்துதாமும் மார்க்கமுடன் அறியலாமிதற்குள்தானே
3638.
மானான யின்னமொரு மார்க்கம்பாரு தன்மையுள்ள என்சீஷன் ஒருவனப்பா
தேனான புலிப்பாணி யென்னுஞ்சித்தன் தேசத்தில் வேங்கையதை வாகனமாக்கி
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தன்னிடத்தில் சென்றுமேதான்
மானான வுபதேசம் பெற்றுக்கொண்டு மானிலத்தில் செய்ததொரு வன்மைபாரே
3639.
வண்மையுடன் வெகுகாலம் லோகந்தன்னில் வளமையுடன் வேங்கையின் மேலேறிக்கொண்டு
திண்மையுடன் வலசாரியா இடசாரியாக திறமுடனே சுத்திவந்த சித்தனப்பா
கண்மையாய் சிலகாலம் வுபதேசம்பெற்று காலாங்கிநாதருட கிருபையாலே
உண்மையாய் சமாதிக்கு ஏகவென்று வுத்தமனும் மனவுறுதி கொண்டான்காணே
3640.
காணவே காடுமலை சுத்திவந்து கடிதான கிக்கிந்தா மலையினோரம்
பூணவே சமாதிக்கு இடமுந்தேட புண்ணியனார் போகுமந்த காலந்தன்னில்
வேணபடி சித்துவொரு சமாதிகண்டார் விருப்பமுடன் சமாதிக்கு வருகேசென்று
சாணளவு தூரமது நிற்கும்போது சப்தமொன்று கேட்கலுற்றார் சித்துபாரே

3641.
பாரேதான் சித்தொளிவு சப்தம்கேட்டு பாருலகில் மெத்தமதிசயந்தானப்பா
நேரேதான் சமாதிக்கு முன்னேநிற்க நேறான சமாதியது திறந்துமங்கே
சீரேதான் நாதாந்த சித்துதாமும் சிறப்புடனே வெளிப்பட்டார் ஜோதியாக
கூரேதான் யவர்தன்னைக்கண்டபோது கொற்றவனார் திடுக்கிட்டு பயந்திட்டாரே
3642.
பயந்திட்ட புலிப்பாணி முனிவர்தாமும் பாரினிலே சித்தொளிவைக்கண்டபோது
நயந்திட்ட நமஸ்கார வஞ்சலிகள்செய்து நலமுடனே சித்தர்தாமும் எதிரேநின்று
சயந்திட்ட மனதோடு வுபதேசங்கள் சாங்கமுடன் பெறுவதற்கு மனதிலெண்ணி
வயங்கவே சித்தருகில் வந்துநின்று வன்மையுடன் கேள்விக்கு முன்னின்றாரே
3643.
முன்னின்ற புலிப்பாணி தன்னைநோக்கி முன்யுகத்தில் சமாதிதனிலிருந்த சித்து
தன்முகமாம் நின்றதொரு புலிப்பாணிதம்மை தகமையுடன் சித்துமுனி யாரென்றென்ன
சொன்னமொழிகள் தனையேகேட்ட பாணிசொரூபமென்ற சித்துக்குக்கூறலுற்றார்
மன்னவனார் முன்னாளில் விறந்தசித்து கைலாசபோகரிஷி சீஷனானே
3644.
நானேதான் போகரிஷி சீஷனென்றால் நன்மையுடன் சித்துமுனி மனதுவந்து
தானேதான் புலிப்பாணி தம்மைநோக்கி சட்டமுடன் திருவாக்கு கூறலுற்றார்
வானோர்கள் துதிக்குமந்த போகர்தன்னின் வளமான சீஷனென்று சொன்னதாலே
ஞானோபதேசமது செய்வேனென்று வன்மையுடன் தாமுரைத்தார் சித்துதாமே
3645.
தாமான சித்தொளிவு நாதர்தாமும் தன்மையுடன் புலிப்பாணிநாதருக்கு
வாமேதான் சொன்னபடி உபசாரங்கள் நலமுடனே செய்துமல்லோ ஆசிர்மித்து
போமேதான் முன்யுகத்தில் பிரம்மாவுக்கும் பொங்கமுடன் வரசனுக்கு நடந்தசாபம்
வேமேதான் மேதினியில் எல்லாருந்தான் எழிலாகக் கண்டிருப்பார் முனிவர்தாமே
3646.
தானான சாபமது தீர்வதற்கு தனியான ரிஷியொருவர் அங்கிருந்தார்
கோனான பிரமருக்கு தேவேந்திரபட்டம் கொடுத்துமே சாபமதை தீர்த்துவிட்டார்
பானான பராபரியாள் ஆசிர்மத்தால் பாருலகில் நீருமென்னைக் கண்டீரிங்கே
கோனான வுன்பாட்டன் காலாங்கிநாதர் கொற்றவனார் பேருரைத்தீர் புண்ணியவானே
3647.
புண்ணயனே பேர்சொன்னபடியாலப்பா பூதலத்தில் உந்தனுக்குவேங்கைசாபம்
திண்ணமுடன் தீர்த்துமல்லோ யுந்தனுக்கு தீரமுட னுபதேசம் செய்வேனென்றார்
வண்ணமுடன் உபதேசம் பெற்றுமல்லோ வானுலகில் எமனுக்கு இடமில்லாமல்
கண்ணபிரான் தன்னைப்போல் வாழும்பெற்று காசினியில் வெகுகால மிருவென்றாரே
3648.
இருவென்ற போதையிலே முனிவர்தாமும் வாகுடனே யுலகுதனில் வதிசயங்கள்
தந்திட்டார் லோகத்துமாந்தருக்கு தாரிணியில் வெகுகோடி சித்துசெய்தார்
முந்திட்ட சாஸ்திரத்தில் சொல்லாதெல்லாம் முனையாகப் பாடிவைத்தா ரிந்நூலுக்குள்
தொந்திட்ட மானதொரு வித்தைமார்க்கம் தொழிலெல்லா மிப்புவியி லாடலாச்சே

3649.
வந்திட்ட போதையிலே முனிவர்தாமும் வாகுடனே யுலகுதனிலதிசயங்கள்
தந்திட்டார் லோகத்து மாந்தருக்கு தாரிணியில் வெகுகோடி சித்துசெய்தார்
முந்திட்ட சாத்திரத்தில் சொல்லாதெல்லாம் முனையாகப் பாடிவைத்தார் இந்நூலுக்குள்
தொந்திட்ட மானதொரு வித்தைமார்க்கம் தொழிலெல்லா மிப்புவியி லாடலாச்சே
3650.
ஆடினார் கோடான கோடிவித்தை அப்பனே யிப்புவியி லாடலாச்சு
கோடான கோடியுகம் இருக்கவென்று கொப்பெனவே காயாதி கற்பங்கொண்டார்
காடாண்மையாகவேதான் சித்துதாமும் வெகுகோடி ஜாலஞ்செய்தார்
கூடான கூடுவிட்டு பாய்ந்துமேதான் குவலயத்தில் சித்துமுனி இல்லைதானே
3651.
இல்லையே சித்துமுனி பாலன்தானும் எழிலான மண்ணுக்கு இறையேயானார்
அல்லல்மிக பட்டுமல்லோ அவனிதன்னில் அப்பனே அவருமல்லோ மாண்டுபோனார்
கல்லான தேகமிது என்றிருந்தார் காசினியில் அவர்தேகம் மண்ணாய்ப்போச்சு
புல்லான புல்லோடே புழுதியாகி பூதலத்தில் புலிப்பாணி மாண்டார்பாரே
3652.
பாரேதான் வுலகமிதில் சித்துயாவும் பாங்காகக் கற்றறிந்து யிருந்துமென்ன
நேரான சிவயோகந்தன்னில்நின்று நிஷ்டையிலே தானிருந்து பலனுமென்ன
கூரான குறிப்பறிந்து குவலயத்தில் கொற்றவனே காயகற்பம் கொண்டுமென்ன
வீரான தேகமது விழலாய்ப்போச்சு விருத்தமுட னிப்படியே மாண்டார்தானே
3653.
மாண்டாரே வின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தான சித்தொளியின் வண்மைகேளும்
தாண்டவம்போல் கொங்கணவ சித்துதாமும் தாரிணியில் ஒருமுனிவர் இருந்தாரப்பா
ஆண்டகையாம் எனதையர் காலாங்கிநாதர் அவனியிலே சித்தொருவ ரிருந்தாருண்டு
பூண்டமனதுருதியினால் சித்துதாமும் பொங்கமுடன் பொங்கமுடன் வெகுகால மிருந்தார்தாமே
3654.
தாமான கொங்கணவமுனிவர்தாமும் தாரிணியில் சிலநூல்கள் செய்தாரென்றும்
நாமான கொங்கணவர் முக்காண்டமப்பா நாட்டினிலே செய்துவைத்த தண்மைதன்னை
பாமானமாகவல்லோ பாடிவைத்த பளிங்கான காண்டமென்னுஞ் சாத்திரத்தை
பூமானகள் எல்லவரும் பாராமற்றான் புகழாக சாஸ்திரத்தில் மறைப்பென்றாரே
3655.
மறைந்தாரே கொங்கணவர் சாஸ்திரத்தை மார்க்கமுடன் கருவெல்லாம் தெரியாமற்றான்
திறப்புடனே கொங்கணவர் காண்டந்தன்னை தீராத சங்கைபிரமாண்டமென்றார்
முறைப்படியே முழுமக்கள் பாராமற்றான் முனிசொன்ன நூறதைனை சங்கையென்றார்
குறையகற்றி வுட்கருவை யறிவதற்கு குவலயத்தில் யுத்தியில்லா மதிபோனாரே
3656.
போனாரே வெகுகோடி மாந்தர்தாமும் பொங்கமுடன் கொங்கணவர் நூல்கள்தன்னில்
ஆனாரே கருவிகாணாதியெல்லாம் அப்பனே மறைத்துவைத்தார் என்றுசொல்லி
ஏனோதான் மதிமோசந்தானுமாகி எழிலான சாஸ்திரத்தில் குற்றஞ்சொன்னார்
மானேகேள் மதிகெட்டு இப்படியே நூலில் மகாதோஷஞ்சொன்னாரே மாந்தர்காணே

3657.
காணவே கொங்கணவ சித்துதாமும் கருவான முக்காண்டம் பாடிக்கொண்டு
நாணவே நாதாக்கள் முனிவர்தாமும் நாணிலத்தில் நடுக்கமுடன் திடுக்கிட்டேங்க
வேணபடி நூலுக்குப் பலமுங்கூட்டி வேகமுடன் கொண்டுமல்லோ வுருகும்போது
தோணவே மகாமேருதன் னிற்பக்கம் தொடர்ந்தாரே கொங்கணவ முனிவர்தானே
3658.
தானான கொங்கணவ முனிவர்தாமும் தாக்கான மேருவிடந் தன்னிற்சென்று
மானான மலைபக்கல் குகையிற்சென்று மயக்கமுடன் சமாதிக்கி யிடமுந்தேட
பானான பரமமுனி மனதிலெண்ணி பட்சமுடன் சமாதிதனி லிறங்கவென்று
கோனான கொங்கணரும் எண்ணியல்லோ கொப்பெனவே பாறைமேல் படுத்தார்தானே
3659.
படுத்துமே பாறையின்மேல் நித்திரைசங்கம் பரிவாகப் பராபரியைநினைத்துக்கொண்டு
அடுத்துமே சுழுத்தியிலே சொப்பனமுங்கொண்டு ஆண்டவனார் தேகமதை மறந்துவிட்டு
தொடுத்துமே பூரணத்தை மனதிலெண்ணி தோற்றாமல் வாசியோகஞ்செய்துகொண்டு
விடுத்துமே நித்திரைகள் நீங்கியேதான் விருத்தமுடன் கண்விழித்துப் பார்த்தானே
3660.
பார்க்கையிலே பலபலவாந் தோற்றங்காணும் பாரினிலே வதிசயங்கள் மிகவாய்த்தோற்றும்
ஏர்க்கையிலே குன்றருகி சப்தங்காணும் எழிலான வாத்தியங்கள் மிகவேகேட்கும்
தீர்க்கமுடன் தேவதா கோஷ்டந்தானும் தீரமுடன் செவிதனிலே கேட்கும்பாரு
ஆர்க்கவே கொங்கணரு மிகவேகேட்டு அப்பனே மதிமயங்கி நின்றார்பாரே
3661.
நின்றாரே குன்றருகே மலையினோரம் நீடான சுனையுண்டு வுதகமுண்டு
குன்றான மலையோரங் குத்துக்கல்லுண்டு கூரான மண்டபமும ங்கொன்றுண்டு
வன்றான கானாறு தீர்த்தமுண்டு வகையான புலியுதங்கும் விடுதியுண்டு
தன்றான தடாகமது யிருக்கும்பாரு தண்மையுள்ள சமாதியொன்று கண்டார்பாரே
3662.
பார்த்துமே கொங்கணவர் முனிவர்தாமும் பரிவுடனே சமாதியிட மருகிற்சென்றார்
தீர்த்தமுடன் தடாகமது மூழ்கியேதான் திருப்பணிக்கு புட்பமது கையிலேந்தி
நார்கமலப் பட்டுடுத்தி வினையம்பூண்டு நமஸ்கார மஞ்சலிகள் மிகவுஞ்செய்து
ஏர்க்கமுடன் சமாதிக்கி முன்னேநின்று எழிலான கொங்கணரு மர்ச்சிப்பாரே
3663.
அர்ச்சித்து கொங்கணவ முனிவர்தாமும் அஷ்டாங்க பூசையது மிகவுஞ்செய்து
உர்ச்சிதமாய் சிரங்குனிந்து கரங்குவித்து வுற்பனமாம் வட்சரத்தை யோதும்போது
தர்ப்பரனார் கௌதமரிஷியார்தாமும் தண்மையுடன் வுள்ளிருந்து சமாதிதானும்
கற்பதிந்த பாறையது வெடிக்கவேதான் கைலாச கௌதமரும் வெளிவந்தாரே
3664.
வந்தாரே ஜோதிரிஷி போலேயப்பா மகத்தான கௌதமரிஷியார்தாமும்
சொந்தமுடன் கொங்கணரைச் சீஷனென்று சோர்ந்துமே மனதுவந்து பட்சம்வைத்து
எந்தவிதந் தனிலப்பா யிந்தநாடு எழிலான காவனத்தே வந்ததென்ன
அந்தமுட னெந்தனுக்குச் சொல்லுமென்று அபயாஸ்தம்தான்கொடுத்தார் ரிஷியார்தாமே

3665.
கொடுத்தாரே வபயமது தந்தபின்பு கொப்பெனவே கொங்கணருங் கூறலுற்றார்
அடுத்தேனே சமாதியிடம் அடியேன்றானும் அய்யனே பள்ளிகொண்ட பாறைமீதில்
படுத்தேனே சடுச்சாம வேளைதன்னில் பராபரியைத்தானினைத்து ஏங்கும்போது
எடுத்ததொரு கோஷ்டங்கள் வாத்தியங்கள் எழிலாகச் செவிதனக்கு கேட்கலாச்சே
3666.
கேட்டவுட னடியேனுங் கிடுகிடுத்து கிருபையுடன் சமாதியுடன் அருகில்வந்து
நீட்டமுடன் சமாதினில் இறங்கவென்று நீதியுடன் தடாகமதில் மூழ்கியேதான்
வாட்டமுடன் புட்பமலர் தானெடுத்து வளம்பெறவே சமாதியிடம் வந்தேன்யானும்
தேட்டமுடன் மனோன்மணியைத்தா நினைத்து தெளிவாக வட்சரத்தை யோதினேனே
3667.
ஓதவே சமாதியின்மேல் பாறைதானும் வுத்தமரே வெடிக்கவல்லோ தம்மைக்கண்டேன்
போதமுள்ள ரிஷியாரே யடியேனுக்கு பொங்கமுடன் காட்சிதர வேண்டுமென்று
நீதமுடன் கௌதமதிரிஷியர்தாமும் நீதியுள்ள கொங்கணனார் பாலனுக்கு
வேதமுதலாகமங்கள் விரிநூல்யாவும் விருப்பமுடன் போதித்தார் ரிஷியார்தாமே
3668.
தாமான கௌதமனார் ரிஷியார்தாமும் சாங்கமுடன் கொங்கணர்க்கு கூறல்வண்ணம்
கோமானாம் ராஜாதிராஜர்தாமும் குவலயத்தில் கோடிபேரிருந்தாரப்பா
பூமான்களெத்தனையோ ஞானங்கற்று பொன்னுலகு நாட்டுக்குப் போனாரையா
சாமான்னியமானதொரு கொங்கணாரே சமாதிக்குட் சென்றாலும் ஒன்றுங்காணே
3669.
நாணவே யுலகுதனில் கற்பங்கொண்டு கைலாசமேருவுக்கு மிடமில்லாமல்
பூணவே ஞானசாகரத்தைப்பூண்டு பூவுலகுதன்னிலே இருந்துமென்ன
வேணபடி கற்பமுறை யுண்டுநீரும் வேதாந்த மனோன்மணியைக் கண்டுமென்ன
தோணவே சமுசாரத்தொல்லைவிட்டு தோராமல் சமாதியிலே ஒன்றுங்காணே
3670.
ஒன்றுமே யில்லையப்பா வுலகுதனில் உயிரோடே சமாதியிலே இறங்கியென்ன
கன்றுதான் தாய்தேடுங் கதையைப்போல காசினியில் அவரவர்கள் சமாதிதேடி
தென்றிசையில் நதிமலையி லனேகஞ்சித்தர் சீருடனே யிப்படியே சமாதிகொண்டார்
வென்றிடவே கொங்கணரு நீருமிங்கே வேகமுடன் சமாதிக்கு வந்திட்டீரே
3671.
வந்திட்ட சித்தருக்கு வுபதேசங்கேள் வளமையுடன் தாமுரைத்தார் ரிஷியார்தாமும்
தந்திட்ட ஞானோபதேசத்தோடு தாரிணியில் சமாதிக்கு இடமுந்தந்தார்
நொந்திட்ட கொங்கணரும் விடையும்பெற்று நோக்கமுடன் சமாதிக்குப் போகும்போது
முந்திட்ட ரிஷியாரும் கூறும்வண்ணம் முதன்மையாய் கொங்கணரும் களிகொண்டாரே
3672.
களிகொண்ட கொங்கணனார் முனிவர்தாமும் கௌதமனார் ரிஷியிடத்தில் சாபம்நாஃக்கி
யளிதனையே நிவர்த்திசெய்து முனிவர்தாமும் பட்சமுடன் சமாதிக்குச் சென்றபோது
வளியுடனே கௌதமனார் ரிஷியார்தாமும் வாக்குரைத்தார் சிலகாலமிருக்கவென்று
துளியுடனே மழைமாரி பொழிந்துமேதான் துப்புரவாய் சமாதியது மூடலாச்சே

3673.
ஆச்சப்பா சமாதியது மூடிக்கொண்டு அங்ஙனவே கொங்கணரு முனிவர்தாமும்
மூச்சடங்கி சிலகால மிருந்தாரங்கே மூதுலகோர் தானடுங்க வந்தார்பின்னும்
பேச்சடங்கி பனிரெண்டு வருடகாலம் பேசாமல் தானிருந்த சித்துவப்பா
மாச்சலுடன் சமாதியது தான்வெடித்து மார்க்கமுடன் கொங்கணரும் வந்தார்பாரே
3674.
பாரேதான் கொங்கணவர் முனிவர்தாமும் பாரினிலே வந்துமல்லோ யாகஞ்செய்தார்
நேரேதான் யாகமது செய்யும்போது நேரான கௌதமனார் ரிஷியார்தாமும்
சீரேதான் யாகமதுக் கெதிரேநின்று செப்புவார் கொங்கணர்க்கு உபதேசங்கள்
தீரேதான் கொங்கணவர் தன்னைப்பார்த்து தீரமுடன் சாபமது செப்புவாரே
3675.
செப்புவார் கொங்கணவர் முனிவர்தன்னை தீரமுடன் யாகமது செய்ததாலே
எப்படிநீ யாகமதுசெய்யலாகும் என்போலே ரிஷியாரும் செய்யும்பாகம்
ஒப்புடனே யாகமது செய்வதற்கு யுத்தமனே நீர்கொண்ட யுறுதியென்ன
தப்பான யாகமது செய்ததாலே தாரிணியில் உந்தனுக்கு சாபமாச்சே
3676.
ஆச்சப்பா சாபமது பெற்றுக்கொண்டு அப்பனே தில்லைவனம் போகவென்றார்
பாச்சலுடன் கொங்கணனார் முனிவர்தாமும் பரமரிஷியாரிடஞ் சாபம்பெற்று
வாச்சுவந்தானழிந்து வனமேயேகி வந்துவிட்டார் தில்லைவனம் நாட்டகத்தை
பாச்சலுடன் சிலகாலமங்கிருந்து மானிலத்தில் கொங்கணரும் ரிஷியானாரே
3677.
ஆனாரே கொங்கணனார் முனிவர்தாமும் அங்ஙனவே ரிஷிபோலே யிருந்துகொண்டு
போனாரே தவயோக நிலையில்நின்று பொங்கமுடன் யாகமது செய்யும்போது
ஞானோபதேசமது பெற்றிருக்கும் நலமான சித்தொருவர் அங்கிருந்தார்
தேனோடு தினைமாவும் பொசித்திருந்து தீரமுடன் யாகமதுக் கெதிர்நின்றாரே
3678.
எதிர்நின்ற கொங்கணவர் தன்னைப்பார்த்து எழிலான ரிஷியாருங் கூறலுற்றார்
சதுருடனே யாகத்தைப் பார்த்துமேதான் சட்டமுடன் ரிஷியாருஞ் சொன்னதென்றால்
கதிரோன்போல் யாகமதுசெய்யுந்தீரா கனமான கொங்கணரெ கேளுமென்றார்
மதிபோன்ற யாகமது செய்வதென்ன மன்னவனே எந்தனுக்கு வுரையென்றாரே
3679.
உறையென்ற போதையிலே முனிவர்தாமும் ஓகோகோ நாதாந்த சித்துவென்று
சிறையிட்ட சாபமது தீர்க்கவென்று சித்தொளிவு வந்தாரோயென்றுசொல்லி
முறையிட்டு அவரிடத்தில் குறைகள்சொல்லி முத்திபெரும் வழிதனையே அடையவென்றும்
குறையிட்டு கேட்பதற்கு மனதிலெண்ணி கொப்பெனவே கொங்கணருங்கூறுவாரே
3680.
கூறுவார் கொங்கணரும் வார்த்தைசொல்வார் கோடிசூரியப் பிரகாசமானதேவர்
மாறுடைய வெந்தனுக்கு சாபம்நேர்ந்து மானிலத்தில் கௌதமனார் ரிஷியார்தம்மால்
வேறுவினையாகவல்லோ வடியேனுக்கு வேகமுடன் சாபமதுநேர்ந்ததாலே
தஊறில்லா ருந்தனுட வாசீர்மத்தில் துப்புறவாய் யாகமது செயவந்தேனே

3681.
செய்யவே தந்தேனான் சுவாமிநாதா ஜெகதலத்தில் உந்தனுட கீர்த்திகண்டு
எய்யதொரு சமாதிபுரம் யாகம்செய்தேன் வுத்தமனே எந்தனுக்கு கிருபைசெய்து
பெய்யவே மழையதனை வருட்சித்தேதான் பேரான வுலகுதனில் கீர்த்தியோங்க
தய்யதொரு கிருபையினா லுந்தனுக்கு துரைராஜ சுந்தரனே வரமீவாயே
3682.
வரமெனக்குக் கொடுத்தல்லோ புண்ணியவானே வரமுடனே ஞானோபதேசஞ்செய்து
புரம்விட்டு எந்தனுட பதிபோகத்தான் பொங்கமுடன் வாழ்த்துதல் கூறுமென்ன
கரமெடுத்து கைபிடித்து கொங்கணார்க்கு கர்த்தாவாம் ரிஷியாரும் விடைகொடுத்து
தரமுடனே யனுப்பிவிட்டார் சாபந்தீர்ந்து சாங்கமுடன் கொங்கணரும் வந்திட்டாரே
3683.
வந்திட்ட கொங்கணரைக் கௌதமரும்பார்த்து வண்மையுடன் ரெண்டாவது யாகஞ்செய்து
தந்திட்ட வரமதுவும் பெற்றுவந்த தகமையுள்ள கொங்கணர்க்குப் பின்னுஞ்சொல்வார்
முந்திட்ட சமாதியது சிலதுகாலம் முதன்மையுடன் தாமிருந்தீர் மைந்தாநீயும்
பந்திட்ட மாகவல்லோ வுலகுதன்னில் பரிவுடனே சிகால மிருவென்றாரே
3684.
என்றுமே கோடான வுற்பதங்கள் எழிலாகக் கற்பித்தார் கொங்கணர்க்கு
வென்றிடவே சித்தர்முனி காணாப்போக்கு வேணதொரு வதிசயங்கள் யாவுஞ்சொல்லி
துன்றிடவே பிரணாய கற்பந்தன்னை துறையோடும் முறையோடும் சொல்லிப்பின்பு
நன்றுடனே தேகமதைப் போக்கடிக்க நல்லவழியும் உபாயமது வருள்செய்தாரே
3685.
செய்யவே கொங்கணரு முனிவர்தாமும் செயலான பாக்கியமும் ஆசையற்று
பையவே உலகமதில் கற்பகோடிகாலம் பண்புடன்தானிருந்தாலு மென்னலாபம்
மெய்யதுவும் தானழிந்து போகுமல்லால் மேதினியில் யாதொன்றும் கண்டதில்லை
எய்யவே தேகமது நில்லாது யென்று நிலையவே சமாதிக்கு இறங்கிட்டாரே
3686.
இறங்கியே போம்போது வனேகசீஷர் எழிலான கூட்டமது நிற்கும்போது
உறங்கியே தானிருந்து பாசமற்று வுத்தமருங் கண்மூடி லகித்துக்கொண்டு
திறமுடனே தன்னறிவு இருக்கும்போது தீரமுடன் விசாரணைக்குச் சரியதாக
குரங்குடைய மனமதுவும் கியாபகத்தில் குறிப்புடனே சொக்கியல்லோ குழிசென்றாரே
3687.
சென்றாரே யோர்கடிகை தன்னில்நேரம் செம்மையுடன் கொங்கணரு மறையும்போது
நன்றான சீஷவர்க்க மாயிரம்பேர் நலமுடனே கிட்டிருந்து வேதஞ்சொன்னார்
வென்றிடவே தேகமது மண்ணால்மூடி மேன்மையுடன் கல்பாறைகொண்டுசாத்தி
இன்றுமுதல் ஓராண்டு பூசைமார்க்கம் யருளுடனே நடத்தவென்ன முடிவுமாச்சே
3688.
ஆச்சப்பா சப்தமது சொன்னார்பாரு அப்பனே முப்பதுயவாண்டுபின்பு
பேச்சப்பா யாருக்குஞ்சொல்லவேண்டாம் பேரான சமாதியைத் திறந்துபாரு
மூச்சப்பா யிருந்தாக்கால் பின்னும்யானும் மூதுலகில் நான்வருவேன் என்றுசொல்லி
ஏச்சப்பா மூச்சடங்கிப்போனாலுந்தான் எழிலான சமாதியது மூடென்றாரே

3689.
மூடியே கொங்கணரு மாண்டாரென்று மூதுலகில் பேராகிப்பேரின்பத்தில்
கூடியே கூட்டுமிட்டுப் பேசிக்கொண்டு பேருலகில் நகைசெய்வா ரிந்தவாழ்வு
தேடியே பேரின்ப நிலையும்பொய்யே தெளிவான தொன்றுமிலை வையகத்தில்
நாடியே பார்த்தாக்கால் எல்லாம்பொய்யே நாதாக்கள் வாழ்வதும் இப்படிதானாச்சே
3690.
இப்படிதான் உலகமெல்லாம் பொய்வாழ்வப்பா எழிலுடனே இருந்தவர்கள் யாருமில்லை
எப்படிதான் நம்புவது தேகந்தன்னை எழிலாக மாண்டார்கள் வையகத்தில்
செப்பவே தேகமது மண்ணாய்ப்போச்சு தேசமதிலிருந்தவர்களாருமில்லை
ஒப்புடனே யாம்கண்ட வரைக்குஞ்சொன்னோம் வுத்தமனே காலாங்கி கடாட்சந்தானே
3691.
தானான காலாங்கிசொன்னமார்க்கம் தாரிணியில் பொய்யல்லால் மெய்யொன்றில்லை
வேனான எனதையர்கூறும்வார்த்தை மேதினியில் யாவருக்குஞ் சத்தியந்தான்
பானான பராபரியை மனதிலெண்ணி பாடினேன் போகரேழாயிரந்தான்
தேனான இந்நூல்தான் நாலாங்காண்டம் தெளிவுடனே செப்பிவைத்தேன் மாந்தர்க்காமே
3692.
ஆமேதா னின்னமொரு மார்க்கம்பாரு அப்பனே யாம்கண்டவரைக்குஞ் சொல்வோம்
போமேதான் சித்தரமுனி ரிஷிகள்யாவும் பொங்கமுடன் சாத்திரங்கள் கட்டிவைத்தார்
வெமேதான் வெகுநூலின் கருவும் வெளிப்படையாய் சொல்லவில்லை இந்நூல்போல
நாமேதான் கண்டமட்டுஞ் சொல்லிவிட்டோம் நாதாந்த சித்தொளியி னருமைபாரே
3693.
பாரேதான் கபிலமுனி சித்துதாமும் பாருலகில் வெகுகாலமிருந்தாரென்று
நேரேதான் கவிவானர் கட்டுவாக்கியம் நேர்மையுடன் கட்டிவைத்தார் வெகுநூல்தன்னில்
சீரேதான் காயாதி கற்பமுண்டு சிலகாலம் பூமிதனிலிருந்தாரென்று
கூரேதான் சாத்திரங்கள் சொன்னமார்க்கம் குவலயத்தில் மெய்யாக வுறுதிகாணே
3694.
காணவே கபிலமுனி சித்துதாமும் கானகத்தில் சமாதியது பூண்டுமேதான்
வேணதொரு சீஷவர்க்கந் தன்னோடொக்க விருப்பமுடன் கூட்டமதாய் கூடிக்கொண்டு
நாணவே ஞானோபதேசந்தன்னை நாதாந்த சித்தொளிவு கபிலர்தாமும்
பூணவே யுபதேசம் செய்யும்போது பொன்னடிக்குத் தெண்டனிட்டார் கோடியாமே
3695.
கோடியாஞ் சீஷவர்க்கம் கபிலருக்கு கொப்பெனவே வஞ்சலிகள் மிகவுஞ்செய்து
நீடியே சீஷவர்க்கம் விடையும்பெற்று நிலையான சமாதியிட மருகிற்சென்று
கூடியே கருவிகரணாதியெல்லாம் குறிப்புடனே தானடக்கி கலைதான்மாறி
வாடியே முகந்தளர்ந்து மனதுவாராய் மயக்கமுடன் கபிலருந்தான் குழிசென்றாரே
3696.
சென்றாரே கபிலமுனி சித்துதாமும் செம்மையுடன் சமாதிதனி லிறங்கியேதான்
நின்றுமே மூச்சதனை வுள்ளடக்கி நிலஜயான படுபள்ளந்தன்னிற்சென்று
வென்றிடவே தாம்படுத்தார் பள்ளமீதில் மேதினியில் பாறைதனை மூடச்சொல்லி
இன்றுமுதல் இருபத்து ஆண்டுரெண்டும் எழிலாக சமாதிக்கு பூசைபாரே

3697.
கார்க்கவே சீஷவர்க்க மெல்லோருக்கும் கருத்துடனே தாமுரைத்தார் கபிலர்தாமும்
நீர்க்கமுடன் சீஷவர்க்கக் கூட்டத்தார்கள் திகழுடனே குருவினது வாக்குபோல
பார்க்கவே சமாதியது பூசைதானும் பாருலகில் செய்துவந்தார் ஆண்டுமட்டும்
ஏர்க்கமுடன் ரெண்டுபத்து வாண்டுபோக எழிலாக சமாதியிடஞ் சூழ்ந்திட்டாரே
3698.
சூழவே சமாதிக்கு கெடுவுமாகி சுந்தரமாஞ் சீஷவர்க்கமாயிரம்பேர்
தாழவே சமாதியிட பக்கல்நின்று சட்டமுடன் சிவபூசை செய்யும்போது
நீழவே கற்பாறை தான்வெடித்து நேரான கபிலமுனி சித்துதாமும்
ஆழவே சொரூபமுடன் கபிலர்தாமும் அங்ஙனவே வெளியான வதிதம்பாரே
3699.
பாரேதான் கபிலமுனி சித்துதாமும் பண்புடனே வதிசயங்களெல்லாங்கண்டு
தீரேதான் ஜெகதலத்தில் மாந்தர்தம்மை தீர்க்கமுடன் தான்பார்த்துக் கூறலுற்றார்
தேரேதான் காயாதி கற்பங்கொண்டு தெளிவுடனே பூமிதனி லிருந்தார்சித்து
நேரேதான் கோடிவரை யிருந்துமென்ன நேர்மையுள்ள தேகமது மண்ணாய்ப்போமே
3700.
மண்ணான தேகமது மரிக்காமற்றான் மானிலத்தில் சிலகாலமிருந்தார்சித்து
நண்ணவுடன் வூர்வனத்தை சுற்றவல்லோ நாதாந்த ரிஷியாரும் வனமேபோனார்
விண்ணமுடன் தட்சணயாகங்கள்செய்து வீரமுடன் காவனத்தேவந்துநின்று
குண்ணான மலைதேடி குகைகள்தேடி குருபரனார் ரிஷியொருவர் தனைக்கண்டாரே

3701.
கண்டாரே கபிலமுனி சித்துதாமும் காட்டகத்தே குபரனார் தம்மைத்தானும்
தெண்டமுடன் வஞ்சலிகள் மிகவுஞ்செய்து தேவாதி தேவனே யென்றுசொல்லி
கொண்டனைத்து மவர்பாதந் தொட்டுமேதான் கொப்பெனவே யென்றனக்கு வுபதேசங்கள்
அண்டிவந்த எந்தனையும் வாதரித்து அய்யனே கெதியென்று வணங்கிட்டாரே
3702.
வணங்கியதோர் எந்தனுக்கு குருபரனார்தாமும் வாகுடனே வபயஸ்தந்தான்கொடுத்து
இணங்கவே யெந்தனது யாகந்தன்னில் எழிலுடனே நீரிருந்து நடத்திவந்தால்
குணங்குடியார் மஸ்தானின் சாகிபோல குவலயத்திலுந்தனுக்கு வரமுந்தந்து
மணமுடனே வாக்களித்து ரிஷியார்தாமும் வகுப்புடனே வுபதேசம் செய்தார்தாமே
3703.
தாமான வுபதேசம் செய்துமல்லோ சதாகோடி காலமிருப்பதற்கு
பூமான சித்தொளிவு முனிவர்தாமும் பூதலத்தில் வெகுகாலம் கற்பமுண்டு
காமான ஞானோபதேசமெல்லாம் கருத்துடனே எந்நாளும் உறுதிகொண்டு
வேமான மாகவேதான் விரும்பிகித்து விவரமுடன் போதித்தார் முனிவருக்கே
3704.
முனியான கபிலமுனி சித்துதாமும் குருபரனார் ரிஷியார்பக்கல்
கனிவுடனே தானிருந்தார் சிலதுகாலம் காணாத காட்சியெல்லாம் கண்ணில்கண்டார்
பனிமதி சூழ்சடை பூண்டரிஷியார்தாமும் பாரினிலே பாகமது செய்யும்போது
தொனிவுடனே சாமரங்கள் வாத்தியங்கள் தொல்லுலகில் வனந்தமதைக் கண்டோம்தானே
3705.
தானான வதிசயங்கள் மெத்தவுண்டு தாக்கான குருபரனார் தன்றன்பக்கல்
பானான ரிஷிமுனிவர் கூட்டத்தார்கள் பண்புடனே ரிஷியினிட பக்கல்தன்னில்
தேனான சாஸ்திரத்தில் சொன்னநீதி தெளிவாகச் சொல்லிவிட்டேன் மாந்தர்க்காக
பானான பராபரியை மனதிலெண்ணி பாடிவைத்தேன் பண்புள்ள நீதியாமே
3706.
நீதியாம் இந்நூல்போல் யாருஞ்சொல்லார் நீணிலத்தில் யாம்கண்டவரைக்கும் சொல்வோம்
சோதியுடன் ரிஷியாருஞ் சமாதிபோக தோற்றமுடன் யாகமது செய்யும்போது
வாதியாங் கமலமுனி சித்துதாமும் வளமையுடன் தாமிருந்து வரமுங்கேட்டு
ஆதியாங் குபரனார் வாக்குபோல அங்ஙனவே சிலகால மிருந்தார்தானே
3707.
இருந்தாரே கமலமுனி சித்துதாமும் எழிலாக ரிஷியினிட மிருக்கும்போது
பொருந்தவே ரிஷியாரும் அன்புகூர்ந்து பொங்கமுடன் சமாதிக்கு இடமுஞ்சொல்லி
குருந்தமுடன் உபதேசம் யாவும்கூர்ந்து குவலயத்தில் சிலகாலம் காட்சிகாண
வருந்தியே குபரனார் யாகவானும் வரமதுவும் கொடுத்தாரே புண்ணியவானே
3708.
புண்ணியனாஞ் சிலகால மங்கிருந்து பொங்கமுடன் யாகமது முடிந்தபின்பு
திண்ணமுடன் சமாதிக்குப் போகவென்று திட்டமுடன் வரமதுவுங் கொடுத்தபின்பு
வண்ணமுடன் கபிலமுனி சித்துதாமும் வளமுடனே பின்னுமே சமாதிக்கேக
எண்ணமுடன் தன்மனதில் நினைக்கும்போது எழிலான சித்துமுனி கூறுவாரே

3709.
கூறுவார் வையகந்தனிலிருந்து கொத்தவனே பலனொன்றுமில்லையப்பா
தேறுவார் மானிலத்தில் சிவயோகம்பூண்டு திறமுடனே கருவிகரணாதியெல்லாம்
மீறுவார் தாமதிகம் பெற்றுக்கொண்டு மிக்கான சமாதிக்குப் போய்தானென்ன
ஆறுவார் பிறவியால் என்னலாபம் வப்பனே யொன்றில்லை கண்டிலேனே
3710.
கண்டிலேன் சமாதிக்குப் போய்தானென்ன காலனுக்கு வுட்படுவது வுண்மையாகும்
வண்டினம் மதுவையுண்டு செனனமாண்டு வையகத்திலிருப்பதினால் லாபமென்ன
தண்டகத்து முனிவரெல்லாம் மாண்டுபோனார் தாரிணியில் ஒருவருந்தான் இல்லைகண்டீர்
பண்டிதங்கள் சொன்னபடி யாதொன்றில்லை பாரினிலே எப்போதும் பொய்வாழ்வாச்சே
3711.
ஆச்சப்பா பொய்யான வாழ்வைநம்பி அப்பனே சமாதிக்குப்போகவேண்டாம்
மூச்சப்பா ஷணநேரம் வாழ்வதாகும் மூதுலகில் யாதொன்றும் வருவதில்லை
ஏச்சப்பா வுலகத்தார்க் கேச்சேயாகும் எழிலான சடலமது நிலைதானில்லை
பாச்சலுடன் வாழ்வனைத்தும் இப்படியேயாகும் பாங்குடனே சமாதிக்குப் போகாநன்றே
3712.
நன்றான வாழ்வல்ல வென்றுசொல்லி நாதாந்த சித்துபரம்சொன்னபோது
குன்றியே கபிலமுனி தாமுங்கேட்டு கொப்பெனவே மறுவிடையுங் கூறலுற்றார்
வென்றிடவே கபிலமுனி விடையுங்கேட்டு விருப்பமுடன் சீஷவர்க்கந்தனையழைத்து
தென்றிசைக்கு சிலகாலம் யானும்சென்று செவ்வையுடன் கொஞ்சநாள் சமாதிபூணே
3713.
பூணவே எந்தனுக்கு விருப்பமுண்டு புகழாக எந்தனிட பக்கல்நீங்கள்
தோணவே எல்லாருங் கிட்டிருந்து குறையோடு சமாதிக்கு வருகவென்று
வேணபடி வார்த்தையது மிகவும்பேசி விடைபெற்று தென்துரை வந்துமேதா
வாணலுடன் மலையோரக் குகைகள்கண்டு வளமுடனே சிலகால மிருந்தார்தாமே
3714.
இருந்தாரே சமாதிக்குள் சிலதுகாலம் எழிலாக தானிருக்கும்வேளைதன்னில்
பொருந்தமுடன் சமாதியது இடமுங்கண்டு பொங்கமுடன் சமாதியது குழிதான்வெட்டி
குருந்த மரமொன்றுமங்கே வைக்கச்செய்தார் கொற்றவர்கள் அப்படியே செய்துவைத்தார்
வருந்தியே தவசுடனேபூண வாகுடனே கபிலரங்கே நினைத்தார்தாமே
3715.
நினைக்கவே கபிலர்முனி சித்துதாமும் நீடாழிகாலம்வரை சமாதிபூண்டு
புனைப்புடனே சீஷர்களைத் தாமழைத்து புகழுடனே கூறலுற்றார் வண்ணங்கேளிர்
தினைப்புடனே முப்பத்து மூன்றுவாண்டு தீரமுடனிருப்பதற்கு எண்ணங்கொண்டு
சுனைப்புடனே வாக்கதுவுங் கூறலுற்றார் சீரான கபிலமுனி சித்துதாமே
3716.
சித்தான கபிலமுனி சொன்னவாக்கு சிறப்புடனே சமாதிக்குச் சென்றபின்பு
முத்தான வதிசயங்கள் என்னவென்றால் மூதுலகில் யான்வரும்வேளைதன்னில்
பத்தியுடன் பாறைமேல் எழுதும்பண்ணம் பாரினிலே இருளதுவும் மிகவுண்டாகி
சுத்தியே சூரியனார் கண்மறைத்து துப்புறவாய் மூன்றுநாளிருக்கும்பாரே

3717.
பாரேதான் இருளதுவும் மிகவுமாகி பாரினிலே சத்தவொளி மிஞ்சலாகி
நேரேதான் வானுலகில் தன்னிற்றோற்றும் நேரான தேவரெல்லாங் காணலாகும்
சீரேதான் கிறிஸ்துவிட நாளைப்போல தேசமெல்லாம் விருளாகி வதீதங்காட்டும்
ஊரேதான் காண்பதுவு மில்லையப்பா வுத்தாரப்படியாக நடக்குந்தானே
3718.
தானான சமாதிக்குப்பின்னாலப்பா பட்சமுடன் தூதாட்கள் நாலுபேர்கள்
கோனான குருசொன்ன வாக்குபோல கொற்றவர்கள் எந்தனுக்கு முன்னதாக
பானான பராபரத்தின் உத்தாரந்தான் பதமுடனே முந்நிற்பார் தேவர்வாக்கு
தேனான மனோன்மணியாள் சித்தரூபி தேற்றமுடன் எதிர்நிற்பாள் திண்ணமாமே
3719.
திண்ணமுடன் சமாதியது வெடித்தபின்பு திறமுடனே யடியேனும் வெளியில்வந்து
வண்ணமுடன் வதிசயங்கள் மிகவுண்டாகும் வாகுடனே சிலகால மிருந்துமேதான்
நண்ணமுடன் வரும்போது லோகமெல்லாம் நளினமுடன் வதிசயங்கள் தானடக்கும்
குண்ணமுடன் நமனாரும் என்னைவந்து கூப்பிட்டுப் போவாரென்று உரைத்தார்தாமே
3720.
என்றபடி தாமுரைத்த வண்ணம்போல எழிலாகத் தானடைந்து சிலதுகாலம்
வென்றிடவே கபிலமுனி சித்துதாமும் வேகமுடன் மண்ணுக்கே இரையுமானார்
தென்றிசையில் சதுரகிரி பக்கலாக தேற்றமுடன் சமாதிக்கு இடமுங்கண்டு
அன்றிடமாம் சமாதியது மிகவும்பூண்டு அங்ஙனமே மண்ணாகப் போனார்தாமே
3721.
தாமான வாழ்வதுவும் பொய்யுமாகும் தாரிணியி லிருந்ததொரு சித்துமில்லை
நாமான சொன்னதொரு மார்க்கம்போகும் நாடெல்லா மிப்படியே பொய்யேவாழ்வு
தாமான வாழ்வுக்கு வெகுகோடிகாலம் தகைமையுன் ஆசையது மிகவுமாகி
பூமான்கள் எல்லவரும் மண்ணாய்ப்போனார் பூதலத்தில் வாழ்வெல்லா மிப்படிதானாச்சே
3722.
ஆச்சப்பா வாழ்வெல்லாம் பொய்யேயல்லாமல் அப்பனே யாதொன்றுமில்லைகண்டீர்
மூச்சப்பா போய்விடும் கடிகைதன்னில் முதலான பாக்கியமும் ஒழிந்துபோகும்
ஏச்சப்பா தேகமிது இருந்தாலுந்தான் எப்படியும் லாபமென்ன ஒன்றுமில்லை
கூச்சமன்றி தேகத்தை மறைந்தாயானால் குவலயத்தில் மெய்யான சித்தென்பாரே
3723.
சித்தனா மின்னமொரு மார்க்கம்பாரு சீரான என்மகனே சொல்லக்கேளு
சுத்தமுடன் மச்சமென்ற முனிவர்தாமும் சொருபராமென்றொருவர் சித்துவுண்டு
புத்தியுள்ள சித்தனப்பா மச்சர்தாமும் புகழாக சமாதிக்கு இடமுங்காண
முத்தியுடன் பெறுவதற்கு காவனத்தைநோக்கி முயன்றுமே வராககிரி வந்திட்டாரே
3724.
வந்திட்ட போதுமல்லோ சித்துதாமும் வளமுடனே வராககிரி தன்னைக்கண்டு
பந்திட்ட மாகவல்லோ சமாதிபூண பாங்குடனே சீஷவர்க்கமனேகம்பேர்கள்
தந்திட்ட மாகவல்லோ கூட்டங்கூடித் தமதடியார் வாசீர்மம் விட்டுவந்து
முந்திட்டுக் குழியது மிகவாய்ச்செய்து மூதுலகில் யோகமது நீந்திட்டாரே

3725.
நீங்கியே சமாதியது போகவென்று நீனிலத்தில் மச்சமுனிரிஷியார்தானும்
நோக்கமுடன் குழிதோண்ட விடையுந்தந்து நுணுக்கமுடன் சீஷருக்கு வுபதேசித்து
நார்க்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணியாள்தம்மை நயமுடனே காணுதற்கு
எண்ணங்கொண்டு
தூக்கமுடன் சிவயோகந் தன்னில்நின்று சத்தமுடன் குழிதனிலே படுத்தார்தாமே
3726.
படுத்தாரெ மச்சமுனி ரிஷியார்தாமும் பாருலகில் சீஷரெல்லாந்திடுக்கிட்டேங்க
தொடுத்தாரே சகபூரணத்தைத்தானும் தோற்றமுடன் லாகிரியிலகித்துக்கொண்டு
விடுத்தாரே காவிகஷாயந்தன்னை விட்டெறிந்தார் மேதினியில் பலரும்பார்க்க
கொடுத்தாரே இதிகாச புராணமெல்லாம் கொற்றவனார் சீஷருடன் கொடுத்தார்தாமே
3727.
தாமான சாஸ்திரத்தை கொடுத்துவிட்டு தகமையுடன் சித்தரவர் கண்ணைமூடி
பாமான பராபரியை மனதிலுண்ணி பாகமுடன் கையிரண்டு மேந்திக்கொண்டு
சீமான லோகமது வாழ்வுமறந்து சிறப்புடனே சின்மயத்தி லிருந்துகொண்டு
கோமான சீஷவர்க்கந்தனையழைத்து கொப்பெனவே தாமுரைத்தார் வதீதந்தானே
3728.
தானான வதீதமது என்னவென்றால் சாற்றினார் சீஷவர்க்கமெல்லாருக்கும்
தேனான மொழியதுவு மென்னவென்றால் தெளிந்த நல்லசீஷர்களெ எந்தனுக்கு
கோனான குருசொன்னபடியாகத்தான்குறிப்புடனே பாறையது மேலேமூடி
பானான ஈஸ்பரியாள் கடாட்சத்தாலே பாரினிலே கீர்த்தியது பிறப்பிப்பீரே
3729.
பிறக்கவே காயமது சமாதிபூண்டு பேருலகில் பேரின்பந் தன்னைக்கொண்டு
இறங்குகிறேன் சமாதியது தன்னிலப்பா எழிலான தேகமது மூச்சடங்கி
உறக்கமுடன் படுத்திடவே மச்சர்தாமும் வுத்தமர்கள் கற்பாறை கொண்டுமூடி
திறக்கவே பனிரெண்டு வாண்டுதானும் தீர்க்கமுடன் கட்டளைகள் பிறக்கலாச்சே
3730.
ஆச்சப்பா பனிரண்டுங் கடந்துபோச்சு அப்பனே மச்சமுனி சித்துதாமும்
மூச்சடங்கி யிருந்தாரே சித்துதாமும் மூதுலகில் வருவதற்கு நாளுமாச்சே
பாச்சலுடன் மச்சமுனி ரிஷியார்தாமும் பாங்குடனே வருவதற்கு முன்னதாக
மாச்சலுடன் சீஷவர்க்கமாயிரம்பேர் மதிப்புடனே சமாதிக்கு வந்திட்டாரே
3731.
வந்ததுவும் சமாதியது வெடித்துமேதான் வாகுடனே பிரசன்ன சொரூபமாக
அந்தமுடன் மச்சமுனி சித்துதாமும் அவனியிலே வந்தவுடன் சீஷவர்க்கம்
சொந்தமுடன் ஆயிரம்பேர ஆடிவந்து சொரூபமென்ற சித்தொளிவைக்கண்டபோது
பந்தமுடன் மச்சமுனி ரிஷியார்தாமும் பருலகில் அனேகவித வளஞ்சொன்னாரே
3732.
சொன்னாரே பலபலவாஞ்சித்துதாமும் தோற்றமுடன் சீஷவர்க்கமனேகமாக
பன்னியே நாதாந்த சித்துதாமும் பாருலகில் அதிசயங்கள் கூறும் வண்ணம்
உன்னவே வாதிசேடனிலுமாகா வஉலகத்தில் கண்டறியவாகுமோசொல்
மன்னவர்ல் முதலானோர் இப்படியே வாழ்வு மானிலத்தில் யாரேனும் இப்படிதான் பாரே

3733.
பாரேதான் மச்சமுனி சித்துதாமும் பாருலகில் இரந்தாரோ மண்ணாகிப்போனார்
நேரேதான் சித்தொளிவு சிலதுகாலம் நேர்மையுடன் பூமிதனி லிருப்பதுண்டு
சீரேதான் சிலகால மிருந்துசென்று சிறப்புடனே மேதினிக்கு வருவதுண்டு
வேரேதான் தேகமது இறப்புமுண்டோ வித்தகனே நிட்சயந்தானில்லைதானே
3734.
தானேதான் வாக்கியங்கள் கட்டுமொழியுண்டு தாரிணியில் எல்லாநூல் பொய்யுமாகும்
தேனான எனதையர் காலாங்கிநாதர் திகழுடனே எந்தனுக்கு சொன்னநீதி
பானான முறைப்படியே சாத்திரம் பார்வையிட்டு ஜெனனமது பொய்யென்றெண்ணி
மானான நானிலத்தில் குளிகைபூண்டு மார்க்கமுடன் சீனபதி போனேன்பாரே
3735.
பார்த்தேனே சீனபதிதன்னின் மார்க்கம் பாங்குடனே யவ்விடத்தில் சித்துதாமும்
தீர்க்கமுடன் நதிமலைகள் சித்துவாடி சென்றுமே சீனபதி கடலோரந்தான்
ஏர்க்கவே சமாதியது பூண்டுகொண்டு எழிலாகத்தாமிருந்தார் அனேகம்பேர்கள்
மூர்க்கமுடன் ரிஷிதேவர் தேகந்தன்னை மூதுலகில் விட்டுமல்லோ சவமானாரே
3736.
சவமாகி பிணமாகி மண்ணிற்றானும் சட்டமுடன் சிலகாலமிருந்துமேதான்
தவமொழிந்து காயாதிகற்பமுண்டு சங்கமுடன் பூவுலகி லிருந்துகொண்டு
பவமகற்றி எந்நாளும் வுறுதிபூண்டு பாரினிலே சித்தரைப்போல் நியமம்பூண்டு
நிதமுடனே பவமகற்றி தேகந்தன்னை நிட்சயமாய் மறந்திட்டார் சிலதுபேரே
3737.
பேரான வாழ்வதுவும் பொய்யேவாழ்வு பாருலகில் பொய்யல்லால் மெய்யொன்றில்லை
நேரான சாஸ்திரமும் இப்படியேயாச்சு நிட்சயங்க ளொன்றில்லை பூலோகத்தில்
கூரான மண்ணுக்குள் எல்லாம்போவார் கொற்றவர்கள் ஆருந்தானில்லையப்பா
தாரான சாத்திரங்கள் பொய்யல்லாது தாரணியிலிருப்பார்கள் இல்லையாமே
3738.
ஆமேதானின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் அப்பனே சட்டமுனியென்ற சித்து
தாமேதா னொருவரப்பா சித்துதாமும் தாரணியில் வெகுகாலமிருந்தாரப்பா
போமேதான் காவனத்தே வெகுகாலந்தான் பொங்கமுடன் தானிருந்தார் தவத்தில்யாகம்
நாமேதான் சொன்னபடி கற்பமுண்டு நாதாந்த சித்தொளிவு மிருந்தார்தாமே
3739.
தாமான சித்தொளிவு சிலதுகாலம் திரினியில் சமுசார வாழ்க்கையற்று
காமான மானதொரு கற்பமுண்டு காயத்தை எந்நாளும்நிறுத்தவென்று
வேமான மின்றியேதான் சமாதிபூண வேகமுடன் கானகத்தை சென்றுதாமும்
பூமானா லோகமதிலிருக்கலாகா புகழ்பெறவே சமாதிக்கு இடங்கொண்டாரே
3740.
கொண்டதொரு இடமேது என்னவென்றால் நெடுந்தூரங் காசிக்குமேற்கேயப்பா
அண்டமெனுஞ் சூரியனுங் காணாக்காடு அவ்விடமாம் டஅகினியாளிருக்குங்காடு
தொண்டருடன் சீஷர்களாயிரம்பேர் தொடர்ந்துமே பின்வரத்தாநடந்தார்
தண்டுளப மாலையணி பாத்திரங்கள் சட்டமுள்ள கமண்டலமும் செயகண்டியாமே

3741.
செயமுடனே வீரமணி வீரசங்கு செம்மையுடன் கமண்டலமும் திருவோடுதானும்
பயமில்லாக் குளிகையது கையிலேந்தி பாரினிலே தானடந்தார் கூட்டத்தோடு
தயவுடனே சீஷவர்க்க மனேகம்பேர்கள் தாரிணியில் பின்னடந்து தயவாய்சென்று
வயலுடனே குன்றொன்று இருக்கப்பார்த்து வளமுடைய சுனையென்று தங்கிட்டாரே
3742.
தங்கியே குகையாறு நதியுங்கண்டு தகைமையுடன் குன்றருகே வநதுசென்று
மங்கியே மனம்வாடி சித்துதாமும் மார்க்கமுடன் சமாதிக்கு இடமுங்கொண்டு
அங்கமுடன் இவ்வூறு நல்லவூறாம் அத்வான கானகமாம் சித்துதாமும்
ஆங்கமுடன் சீஷர்களை தானழைத்து துறையான குழியதுவும் தோண்டென்றாரே
3743.
தோண்டியே சமாதியது கட்டுமென்றார் தொல்லுலகில் ஆசையது விட்டேனென்றார்
வேண்டியதோருடைமானம் மறந்தேனென்றார் வேகமுடன் மனைவியைத்
துறந்தேனென்றார்
தூண்டியதோர் மண்ணாசை அற்றேனென்றார் துனையான சோதரருமிழந்தேனென்றார்
பூண்டிருந்த வாபரணபிட்டேனென்றார் பூதலத்தில் தனயர்களை மறந்திட்டேனே
3744.
மறந்தேனே வையகத்து வாசையெல்லாம் மார்க்கமுடன் தானிழந்து மண்ணிற்சாய
துறந்தேனே காவிகஷாயந்தன்னை துப்புறவாய் விட்டெறிந்தேன் மண்ணின்மேலே
கறந்ததொரு பால்போல வாசையற்று கயிலாசங் காணுகிற இடமுங்கண்டு
பறந்திடவே எண்ணமது கொண்டுமல்லோ பட்சமுடன் சமாதிக்கு போறேன்தானே
3745.
தானேதான் சமாதியிலே சென்றபின்பு தகமையுள்ள சட்டமுனி நாதர்தாமும்
கோனான தமதையர் தட்சணாயன் குருபரனைத் தானினைந்து மனதிலுன்னி
வேனான எனதையர் சாமிநாதன் விட்டேனே விண்ணுலகில் ஆசையெல்லாம்
போனேனே சமாதியிட வந்தரங்கம் பொன்னுலகு நாட்டுக்குச் சென்றேன்நானே
3746.
சென்றாராம் சட்டமுனி ரிஷியார்தாமும் சிறப்புடனே சமாதிதனிலிருக்கும்போது
நின்றதொரு சீஷவர்க்கமாயிரம்பேர் நிலையான சமாதிதனிற் பாதுகாக்க
வென்றிடவே அசரீரிவாக்குதானும் விருப்பமுடன் சீஷவர்க்கங் கேட்கலாச்சு
இன்றுமுதல் முப்பத்திரண்டு வாண்டு முனிவரும் இருக்கவென்ற வாக்குண்டாச்சே
3747.
ஆச்சப்பா சித்துமுனி சொரூபர்தாமும் அங்ஙனவே சீஷர்கட்கு வாக்குரைத்தார்
மூச்சப்பா தேகமது வடங்கிப்போச்சு மூதுலகங் காண்பதற்கு வெகுநாட்செல்லும்
போச்சப்பா தேகமது வொடுங்கிப்போச்சு பேரான சடலமது மண்ணுள்ளாச்சு
ஏச்சப்பா தேகமது வழியாதென்று எழிலுடனே சப்தமது பிறக்கலாச்சே
3748.
பிறந்ததொரு சப்தமதை சீஷவர்க்கம் பேரான வாயிரம்பேர் கேட்டபின்பு
இறந்ததொரு சட்டமுனி மடிவதில்லை யினிதிரும்பி வருவதற்கு ஐயமில்லை
திறமுடனே நமமையர் சட்டநாதர் தீரமுடன் பூவுலகில் வருவாரென்று
உறமுடனே மாணாக்களாயிரம்பேர் வுற்றதொரு சமாதியிடங் காத்தார்பாரே

3749.
பாரேதான் சமாதியிடங் கார்த்தபோது பாருலகில் நெடுங்காலந்தானுமாச்சு
சீரேதான் சித்துவருங்காலமாச்சு சீரான வாயிரம்பேர் சீஷவர்க்கம்
ஊரோடு கூடியல்லோ கும்பலாக வுத்தமர்கள் சீஷவர்க்கம் சமாதிசென்று
தேரான சமாதியிடம் நின்றுகொண்டு தோற்றமுடன் வேதங்கள் ஓதுவாரே
3750.
ஓதவே சமாதியிடங் கெடுவுமாச்சு வுத்தமர்கள் வேதபாராயணங்கள்
நீதமுடன் அர்ச்சனைகள் சமாதிபூசை நித்திலங்கும் பூமுடியா ரோதும்போது
வேதமுடன் கைலாச சட்டநாதர் வேதாந்த சித்தொளிவின் சமாதிதானும்
தீதமுடன் சமாதியது வெடித்தபோது திரளுடனே புறப்பட்டார் சித்துதாமே
3751.
சித்தான சட்டமுனி நாதர்தாமும் ஜெகஜோதி காயமது வுலகிற்றுன்ன
பத்தியுடன் காயாதி கற்பங்கொண்ட பாங்கான தேகமது ஜோதிமின்ன
வெத்தியுடன் மேதினியில் வந்துதாமும் விருப்பமுடன் சீஷர்களை யாசீர்மஇத்து
புத்தியது மிகவாகச்சீஷருக்கு போதித்தார் சட்டமுனி நாதர்தாமே
3752.
போதித்த வசரீரிவாக்குதன்னை பொங்கமுடன் தாள்கேட்டு தாள்பணிந்து
ஆதித்தன் போலுதித்த சித்துதம்மை அடியார்கள் கூட்டமெல்லாம் சிரங்குனிந்து
சோதித்த சட்டமுனி நாதர்தம்மை சொரூபமுடன் முன்னின்று வினயங்கேட்க
பேதித்த கைலாசநாதர்தாமும் பேரான சீஷருக்கு வுறைப்பார்தானே
3753.
தானேதான் சீஷவர்க்கந் தனையழைத்து தகமையுள்ள லேகாவதிசயங்களெல்லாம்
மானேதான் யான்கண்ட வரைக்குஞ்சொல்வேன் மகத்தான வாழ்வதுவும் பொய்யேவாழ்வு
தேனான சீஷர்களே யின்னஞ்சொல்வேன் தேகமது வுலகுதனில் நிலைநில்லாது
போனவர்கள் மண்தனிலே மடிந்தபேர்கள் பொங்கமுடன் பூமிதனில் வருவார்தாமே
3754.
வருவாரே காயாதி கற்பங்கொண்ட வரமுடைய ரிஷியாரும் வருவாருண்டோ
குருவான எனதையர் கடாட்சத்தாலே கொற்றவனே வுபதேசம் பெற்றேன்யானும்
அருளான வுபதேசங் கொண்டதாலே அவனியிலே மறுபடியும் வந்தேனென்று
திருவான மனோன்மணியாள் கடாட்சம்பெற்று திரும்பி வந்தேன் மாணாக்காள் என்றிட்டாரே
3755.
என்றுமே சட்டமுனி நாதர்தாமும் எழிலாகத்தாமுரைப்பார் சீஷருக்கு
தென்றிசைக்கு சிலகாலம் போரேனென்று தேர்வேந்த சீஷருக்கு விடையுஞ்சொல்ல
நன்றதென்று சீஷவர்க்க மாயிரம்பேர் நலமுடனே யாம்கூட வருவோமென்று
அன்றலுடன் பின்தொடர்ந்தார் மாய்கைவிட்டு அடர்ந்துமே பின்தொடர்ந்தார் சீஷர்தாமே
3756.
தொடர்ந்துமே காவனத்தை விட்டுநீங்கி தோற்றமுடன் பொதிகைக்குச் செல்லும்போது
அடர்ந்த தொருகானாறு மலைகள்தாண்டி ஐயமுடன் பின்தொடர்ந்தார் ஆயிரம்பேர்
கடந்துமே மலைகுகைகள் விட்டுநீங்கி கடிதான பொதிகைமலை சாற்பில்சென்று
நடந்துமே கைலாசசட்டநாதர் நாதாந்தக்கூட்டமுடன் அமர்ந்திட்டாரே

3757.
இட்டாரே சட்டமுனி நாதர்தாமும் எழிலான குகையோரம் தன்னிற்சென்று
பட்டமரமொன்றதனைக் கண்டாரங்கே கண்டதுவும் பட்டமரம் துளிருண்டாகி
சட்டமுடன் இந்நாடு சமாதிபூண சாங்கமுடன் மலையோர மிதுதானென்று
வெட்டவெளிதனில் நின்று மயங்கும்போது வேதாந்த குருபரமும் வந்திட்டாரே
3758.
வந்திட்ட வேதாந்த ரிஷியார்தம்மை வாகுடனே சட்டமுனி யாருங்கண்டு
நொந்திட்ட மனதுடனே வியனங்கொண்டு நுணுக்கமுடன் சித்தொளிவைக் கண்ணிற்கண்டு
அந்தமுடன் என்சாமி குருவேயென்று வடிபணிந்து கைலாசசட்டநாதர்
சிந்தனையும் மிகத்தளர்ந்து மெய்மறந்து சீர்பாதந் தொட்டுமல்லோ பணிந்திட்டாரே
3759.
பணிந்திட்ட கைலாச சட்டர்தம்மை பரமகுரு வேதாந்த சித்துதாமும்
தணிவுடனே வார்த்தையது மிகவுஞ்சொல்லி வளமையுடன் சிலகாலம் இருக்கவென்று
அணியணியாய் சீஷவர்க்கம் பக்கல்நிற்க அங்ஙனவே சட்டிமுனி நாதர்தாமும்
துணிவுடனே வுபதேசம் மிகவுஞ்சொல்லி துப்புறவாய் சமாதிக்கு இடந்தந்தாரே
3760.
தந்தாரே வேதாந்த ரிஷியார்தாமும் தகமையுடன் சட்டமுனி நாதருக்கு
வந்துமே வுபதேசம் மிகவுஞ்சொல்லி வளமையுடன் சிலகாலமிருந்தபின்பு
சொந்தமுடன் தன்பக்கல் சமாதிபூண சுத்தமுடன் சட்டமுனிக் குபதேசித்து
இந்தவுலகினி லிருக்கநீதியில்லை யென்றுமே வேதரிஷி மறைந்திட்டாரே
3761.
மறைந்துமே போகையிலே விருட்சந்தானும் மறுபடியும் துளிரதுவு மொடுங்கியேதான்
குறைந்துமே பச்சைமரம் பட்டுப்போச்சு குவலயத்தில் பேராச்சு மகிமைதானும்
திறைந்துமே சமாதியது மூடலாச்சு திண்மையுள்ள சட்டமுனி மயங்கிநின்று
முறைந்துமே விசனமது மிகவாய்க்கொண்டு முடிவணங்கி சமாதிதனைப் பணிந்திட்டாரே
3762.
பணிந்துமே சிலகாலஞ் சென்றபின்பு பாரினிலே சட்டமுனி நாதர்தாமும்
துணிந்துமே சமாதிக்குப் பின்னுஞ்செல்ல துறையான சீஷவர்க்கந்தனையழைத்து
அணியணியாய் என்முன்னே சுற்றிருங்கள் வப்பனே வதிசயங்கள் பிறக்கலாகும்
மணிபோன்ற ஓசையது கேட்கும்பாரு மகத்தான சமாதியிட பீடந்தானே
3763.
தானான சமாதியிட பீடந்தன்னில் தண்மையுள்ள சீஷவர்க்க மாயிரம்பேர்
தேனான மணிபோலே சீஷவர்க்கம் தெளிவாக முன்நிற்க வேண்டுமென்பார்
மானான வையகத்தில் வதிசயங்கள் மார்க்கமுடன் தான்காண்பீர் வதிதமெத்த
பானான பராபரியாள் கண்ணில்தோற்றும் பாருலகி லிருந்துவந்து மூடிப்போமே
3764.
மூடிப்போம் பகல்தனிலே பரிதிகாணார் மூவேழு மண்டலமும் இருளாய்போகும்
நாடியே சித்தர்முனி நடுங்குவார்கள் நாதாந்த சித்தொளிவு சொரூபங்காணார்
கூடியே கூட்டமிட்டு வார்த்தைபேசி குவலயத்தி லிவர்போல சித்துண்டோசொல்
வாடியே மதிகலங்க மனமும்பொங்கி வையகத்தில் மதிமயங்கி நிற்பார்தாமே

3765.
நிற்பாரே சமாதியிட நடுமையத்தில் நிலையான தேகமதை தானிறுத்தி
கற்போன்ற காயமதை மூச்சடங்கி காசினி எல்லவரும் பிரமித்தேங்க
தற்பரமாஞ் சொரூபமதை வுள்ளடக்கி தாரிணியில் சமாதிக்குள் தானிறங்கி
சிற்பரனைத் தியானித்து மனதிலேதான் சின்மயத்திலிருந்துகொண்டு ஜெபித்திட்டாரே
3766.
இருந்தாரே மூச்சடங்கி மூணுநாளும் எழிலான சிவானந்த வமுர்தம்பூண்டு
பொருந்தியே காயமதை மண்ணிற்சாய்த்து பொங்கமுடன் மேற்பதவி பெறவேயெண்ணி
வருந்தியே சீஷர்களை தாமழைத்து வசனித்தார் உபதேசம் அனேகங்கோடி
திருந்தியே தாமுறைத்து பாறைமூட திகழான புத்திமதி யோதிட்டாரே
3767.
ஓதவே சீஷவர்க்கமாயிரம்பேர் ஓகோகோ நாதாந்த சித்துதாமும்
நீதமுடன் பின்னுமவர் சமாதிபூண்டு நீனிலத்தில் மண்ணோடே காயந்தன்னை
தோடமுடன் உள்ளங்கி இருப்பதற்கு தொல்லுலகில் பாசமதை சுட்டறுத்து
வேதமுனி வேதாந்த வாக்குபோல வீரமுடன் தாமறைந்தார் சித்துதாமே
3768.
சித்தான சட்டமுனி நாதர்தாமும் சிறப்புடனே மண்ணதனில் மறைந்தபோது
புத்தான மண்ணதுவும் மூடியல்லோ பொங்கமுடன் தான்சமைந்து வளர்ந்திருக்கும்
முத்தான பூசையது மிகநடக்கும் மூதுலகில் சட்டமுனி சமாதியென்றும்
நித்தமுடன் பூசையது மிகநடக்கும் நேர்மையுடன் அதிசயங்கள் காணலாமே
3769.
காணலா மசரீரி வாக்குண்டாச்சு காசினியில் பதினாறு வருடமட்டும்
பூணமாஞ் சமாதிதனி லிருப்பேனென்றும் புகழான வாக்கியமும் கேட்கலாச்சு
தோணவே திரிகால பூசைமார்க்கம் தொல்லுலகில் சீஷவர்க்கம் செய்வார்பாரு
வேணவே கீதங்கள் வாத்தியங்கள் விருப்பமுட னெய்பவர்கள் அனந்தமாமே
3770.
அனந்தமாம் அமாவாசை பருவந்தன்னில் வப்பனே யாண்டுக்கு ஒருநாளப்பா
அனந்தமாஞ் சிலம்பொலியி னோசைகேட்கும் அப்பனே நடுச்சாம வேளைதன்னில்
அனந்தமாம் வேதமுறை கோஷ்டந்தானும் அவனியெலாங் கிடுகிடுத்து வதிரலுண்டாம்
அனந்தமாஞ் சமாதியது சுழலுண்டாகும் வப்பனே கோழ்டமது மிகவுண்டாமே
3771.
உண்டாகு மிவ்வளவு மகிமைதானும் வுத்தமனே சட்டமுனி சமாதிதன்னில்
திண்டான வதிசயங்கள் சொல்லப்போமோ திகவான சமாதிக்கு வுள்ளதாக
நண்புடனே வதிசயங்கள் மிகநடக்கும் நாதாந்த சித்தொளிவின் மகிமையப்பா
கண்பான சித்துமுனி சட்டநாதர் காசினியில் வருவதற்கு நாளுமாச்சே
3772.
ஆச்சப்பா சட்டமுனி வருகுங்காலம் வப்பனே பதினாறு வாண்டுமாச்சு
பேச்சப்பா சொன்னபடி திருஷ்டாந்திரங்கள் பேருலகில் நடந்துவர கண்டார்தாமும்
மூச்சடங்கிப் போனதொரு தேகந்தானும் முன்போல வருவதற்குநாளுமாகி
பாச்சலுடன் சட்டமுனி நாதர்தாமும் பாறையென்ற புத்ததுவும் வெடிக்கலாச்சே

3773.
வெடித்தபின்பு கைலாச சட்டநாதர் மேன்மையுடன் மேதினியில் வந்தாரங்கே
நடிக்கவே நாதாந்த கூட்டத்தார்கள் நன்மையுடன் கிட்டிவைத்து நமஸ்கரித்து
துடிப்புடனே கைலாச சட்டர்தம்மை தொழுதிரங்கி தெண்டனிட்டு வணக்கங்கூற
கடிப்பிடிவோன் முரசோடு வாத்தியங்கள் கருத்துடனே தானகைத்து தொழுதிட்டாரே
3774.
தொழுதுமே சீஷவர்க்க மாயிரம்பேர் தோறாமல் மணிவிடைக்கு முன்னேநின்று
பழுதுபடாத் திருமேனி தன்னைப்பார்த்து பட்சமுடன் தானுரைத்தார் சீஷரெல்லாம்
வழுவுவதும் நேராத மேனிதன்னை வளமுடனே தான்பார்த்து பிரமைகொண்டு
புழுகுடனே வாசனைகள் கையிலேந்தி பொன்னடிக்கு வர்ச்சனைகள் செய்திட்டாரே
3775.
செய்யவே சீஷவர்க்கமாயிரம்பேர் சிறப்பான கெதியெமக்கு என்னவென்று
பையவே தொழுதிறங்கி கேட்கும்போது பட்சமுள்ள கைலாசர் கூறலுற்றார்
மெய்யான தேகமதை நம்பவேண்டாம் மேதினியில் இரந்தாலும் லாபமென்ன
துய்யசெம்பொன் கோடிமிக வைத்திட்டாலும் துப்பரவாய் வொன்றுவரக் காணேன்பாரே
3776.
பாரப்பா மானிலத்தி லிருந்துமென்ன பாங்குடனே மாளிகைதான் கட்டியென்ன
நெரப்பா வுலகுதனை யாண்டுமென்ன நேர்மையுடன் சிவயோகஞ்செய்துமென்ன
சூரப்பா பலநூலுங் கற்றுமென்ன கொற்றவனாய் மதியூகியானாலென்ன
வேரேதான் காயாதி கற்பங்கொண்டு விருப்பமுடன் இருந்தென்ன லாபங்காணே
3777.
காணேணே லாபமொன்று பார்த்ததில்லை காசினியில் ஆசைக்கோர் அளவுமில்லை
பூணாரம் பூண்டென்ன காயத்திற்கு புகழான தேகமது நிலைநில்லாது
வீணான வுலகுதனிலாசைகொண்டு விருப்பமுடன் கெட்டவர்கள் கோடாகோடி
தோணாத கருவெல்லாம் தோன்றச்செய்து தொல்லுலகில் இறந்தவர்கள் கோடியாமே
3778.
கோடியாம் யுகாந்தவரை காலமப்பா கொற்றவனே யிருந்தாலும் ஒன்றுமில்லை
நாடியே பராபரத்தை நண்ணலொப்பாம் நலமுடனே பாரினிலே இருந்துகொண்டு
தேடியே நாள்வருகுகுங் காலமட்டும் தேசமதில் பவக்கடலை நீக்கியேதான்
ஓடியே பலவழியிற் சென்றுநீதான் வுத்தமனே புனிதனாயிருந்துகொள்ளே
3779.
கொள்ளவே நன்னிலையி லிருந்துகொண்டு கொடும்பாசந் தனையகற்றி
குவலயத்தில் விள்ளவே பாசமென்ற கயத்தைநீக்கி வேதாந்தநுட்பத்தின் செயலுங்கண்டு
மெள்ளவே கும்பகத்தி லிருந்துகொண்டு மேலான சிவயோகந் தன்னிற்சென்று
வுள்ளபடி யாத்தும் கந்தனாகி வுலகுதனில் சிலகால மிருந்திடாயே
3780.
இருந்தாலும் தேகமது நிலைநில்லாது எலிலான தேகமது மண்ணாய்ப்போகும்
குருந்தவே காயாதி கொண்டிட்டாலும் கொப்பெனவே மண்ணோடே மண்ணாய்ப்போகும்
பொருந்தவே நானிருந்தேன் கோடிகாலம் பொங்கமுடன் காட்சிகளு மனேகங்கண்டேன்
வருந்தியே பராபரத்தை மனதிலுண்ணி வாகுடனே காண்பதுவே மோட்சந்தானே

3781.
தானான மோட்சவழிக் கிடமேதேடி சதாகாலமிருப்பதுவே சாயுச்சியந்தான்
வேனான எனதையர் சொற்படிக்கி கொற்றவனே இரண்டுமுறை சமாதிகண்டேன்
தேனான சீடர்களே நீங்களுந்தான் தெரிந்திருந்து பவக்கடலை சாரவேண்டாம்
மானான வையகத்தில் சிலநாள்தங்கி மார்க்கமென்னும் மோட்சவழி சேருவீரே
3782.
சேருவீர் என்றதுமே சட்டநாதர் செம்மலுடன் பூலோகவாசைவிட்டு
பாருள்ளே மறுபடியுஞ் சமாதிக்கேக பட்சமுடன் சீஷருக்குத் தாமுரைத்து
சீருடனே சமாதிக்குள் பிரவேசமாகி சிறப்புடனே சமாதிதனை மூடுமென்று
தூருடனே சமாதியது திறக்கவேண்டாம் துப்புறவாய் தேகமது மண்ணாய்ப்போமே
3783.
போமேதான் சடலமது மண்ணாய்ப்போகும் பொங்கமுடன் திறக்காமல் என்றுசொல்லி
ஏகுமே சட்டரிட வாக்குதப்பி எழிலான சமாதியது திறக்கவேண்டாம்
ஆகுமே தேகமது வழிந்துபோகும் வப்பனே யான்வருக மாட்டேனென்றார்
சாகுமே தேகமது சதாகாலந்தான் சட்டமுடனிருந்தாலும் பலங்காணேணே
3784.
காணேணே காயாதி கற்பந்தன்னை கருவாக யான்கொண்டபடியினாலே
வீணாக தேகமது யழியாதப்பா மேதினியில் வெகுகால மிருக்கலாகும்
பூணாத சமாதியது மூடியல்லோ பொங்கமுடன் சதாகாலமிருக்கவேண்டும்
தோணாது வுலகமது முடிவுகாலம் தோற்றமுடன் வருகுவதும் வுண்மையாமே
3785.
உண்மையா யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வுத்தமரே மாணாக்க ரறியவென்று
வன்மையாங் கமலரென்ற முனிவரப்பா வரைகோடி வெகுகால மிருந்தசித்து
நண்மையாந் திரைகடலேழுஞ்சுத்தி நாட்டிலுள்ள வளப்பமெல்லாம் கண்டாராய்ந்து
தன்மையுடன் சீனபதி தந்துமல்லோ தாக்கான பதிதேடி யமர்ந்திட்டாரே
3786.
அமர்ந்தாரே அலைகடலினோரமப்பா அங்குள்ள கற்பாறைதன்னிலேதான்
சுமர்ந்திடவே பிரதமையா மொன்றுதானும் சீலமுடன் மலைதனையே சுமந்துகொண்டு
தமர்ந்திடவே மலைதனிலே குகைதானுண்டு தடாகமுண்டு கானாறுவதிலேவுண்டு
கமர்ந்திடவே கமலமுனி சித்துதாமும் கருவாக சுனையோர மிருந்திட்டாரே
3787.
இருக்கவே கமலமுனி சித்துதாமும் எழிலான சிவயோகந்தன்னில்நிற்க
வருகவே மலைதனிலே சீஷவர்க்கம் வளமாக நூறுபேர் கூடிவந்தார்
பொருக்கவே கமலமுனி வருகிற்சென்று பொங்கமுடன் சாஷ்டாங்கம் சரணஞ்செய்தார்
தருக்கவே கமலமுனி சித்துதாமும் தயவுடனே யாரென்று கேட்டார்தாமே
3788.
கேட்டதொரு விடைதனக்கு வுத்தாரமென்றார் கெவனமுடன் கமலமுனி சொன்னதற்கு
மீட்டமுடன் சீஷவர்க்கம் நூறுபேரும் நேர்மையுடன் குருதனக்குக் கூறலுற்றார்
தாட்டிகமாய் மலைதனிலே வந்தசித்து தாரணியி லபுரூபசித்துவென்று
நாட்டமுடன் நாங்களெல்லாந் தம்மைக்கண்டு நலமுடனே சுகம்பெறவே வந்திட்டோமே

3789.
வந்தோமே சித்தொளிவின் பதாம்புயத்தை வாகுடனே கண்டுதெரிசிப்பதற்கு
அந்தமுடன் வந்ததொரு எங்களைத்தான் வாதரிக்க வேண்டுமென்றுவடிபணிந்து
எந்தவிதந் தன்னிலேதான்எங்களுக்கு எழிலான வுபதேசஞ் செய்வீரென்று
முந்தவே குகைதேடி வந்தோமையா முன்னின்று கார்க்கவென வகுத்திட்டாரே
3790.
வகுத்திட்ட சீஷருக்கு கமலர்தாமும் வளம்பெறவே ஞானோபதேசம்சொல்வார்
தொகுத்திட்ட மலைதனிலே இருந்துகொண்டு தோற்றமுடன் சமாதிக்கு இடமுஞ்சொல்லி
பகுத்திட்ட மாகவேதான் சமாதிபூண்டு பட்சமுடன் தாமுரைத்தார் சீஷருக்கு
விகுத்திட்ட மாகவல்லோ கமலர்தாமும் பேரான சமாதியிடம் நின்றார்பாரே
3791.
பாரேதான் சீஷவர்க்கந்தனையழைத்து பாங்குடனே கமலமுனி கூறும்வண்ணம்
நேரேதான் தேகமதை மறந்தேனப்பா நேர்மையுடன் பாசபந்த மற்றேனென்றார்
சீருடனே வுயிர்த்தோழனிழந்தேனென்றார் சிறப்பான சீஷவர்க்கமறந்தேனென்றார்
தாரேதான் பாருலகு மறந்தேனென்றார் தீரமுடன் மூவாசை யற்றேன்தானே
3792.
தானான பேரின்ப நிலையில்நின்று சார்பான சிற்றின்ப நிலைமறந்தேன்
தேனான எனதையர் புஜண்டரப்பா குருவினதுவாக்கு பிசகாதுவண்ணம்
பானான மனோன்மணியை மனதிலுண்ணி பாருலகில் வாக்குமுறை கூறலுற்றார்
தேனான என்குருவே புஜண்டநாதர் தேற்றமுடன் சமாதிக்குப் போரென்றானே
3793.
போகின்றேன்ன யகத்தையான்மறந்து பொங்கமுடன் சமாதிதனிலிறங்கவேதான்
சாகின்ற சமாதியது யடியேன்தானும் சட்டமுடன் சிலாகாலமிருப்பதற்கு
நோகின்றேன் எனதையர் புஜண்டநாதர் நோக்கமுடன் அடியேனுஞ்சமாதிபூண
யாகின்ற யடியேனும் நினைக்குங்காலம் பட்சுடன் ஆதரிக்க வேண்டும்பாரே
3794.
வேண்டியே கமலமுனி சித்துதாமும் வேதாந்த புஜண்டரைத்தான் நினைத்துமல்லோ
கூண்டுடனே காயமது யழியாமற்றான் கொப்பெனவே சமாதிதனி லிறங்கும்போது
தூண்டியே சீஷர்களை தாமழைத்து துப்புறவாய் கூறலுற்றார் கமலர்தாமும்
மாண்டுமே சீனபதிதன்னிலப்பா மகத்தான சமாதிதனி லிறங்கிட்டேனே
3795.
இட்டேனே நெடுங்கால மிருபதாண்டு எழிலான சமாதிதனிலிருப்பேனென்று
சட்டமுடன் அசரீரி வாக்குண்டாச்சு சதானந்த சீஷரெல்லாங் காதில்கேட்டார்
திட்டமுடன் இருபதாண்டு பின்பு தீரமுடன் மேதினியில் வருவேனென்று
கட்டான வாக்கியமும் பிறக்கலாச்சு கருவான சீஷரெல்லாம் பயந்திட்டாரே
3796.
பயந்திட்டு நடுநடுங்கி நிற்கும்போது பாருலகில் சப்தமது யின்னுமாச்சு
நயந்திடவே குழிதனிலே பாறைதன்னை நயமுடனே மூடவென்று வாக்குண்டாச்சு
தயவுடனே சீஷரெல்லாம் மௌனங்கொண்டு தாரிணியிலினி சும்மாயிருக்கலாகா
வியந்துமே கற்பாறை தனையெடுத்து விருப்பமுடன் சமாதியது மூடிட்டாரே

3797.
மூடியே நிற்குமந்ர காலந்தன்னில் முசியாமல் கமலமுனி சித்துதாமும்
நாடியே சீஷவர்க்கம் யாவுங்கேட்க நளினமுடன் அசரீரி வாக்குறைப்பார்
தேடியே சமாதிதனி லிருபதாண்டு தேற்றமுடன் யானிருந்து வருகும்போது
வாடியதோர் பயிரெல்லாஞ் செழித்திருக்கும் வளமையுடன் பட்சிமுதல் பேசும்பாரே
3798.
பேசுமே மிருகமெல்லாஞ் ஞானங்கூறும் பேரான மலைதனிலே சோதிகாணும்
ஏசுவின்றன் சீஷரெல்லாம் எதிர்நிற்பார்கள் எழிலான குருடரெல்லாங் கண்திறப்பார்
மாசில்லா நிலவதுவும் சூரியன்போல் மானிலத்தில் ஊமையவன் பேசுவான்பார்
தேசிபுகழ சப்பானி நடப்பான்பாரு தேசத்தில் மகிமையது மிகவுண்டாமே
3799.
உண்டான வதிசயங்க ளின்னங்கேளு வுத்தமனே தானடக்கும் மகிமைகோடி
கண்டாலும் லோகமது இருளடைந்து கதிரோனுங் கண்மறந்து நிற்பான்பாரு
அண்டமுட நட்சத்திரங்கள் அதிரல்காணும் அவனியெலாம் கிடுகிடுத்து யிடியுமுண்டாம்
கொண்டல்வண்ண மேகமது கர்ச்சிக்கும்பார் குவலயத்தில் தேவர்முனி காணலாமே
3800.
காணலாம் தேவாதிதேவர்தானும் காசினியில் கண்ணுக்குத் தோற்றுவார்பார்
வேணபடி ராட்சத பூதங்களெல்லாம் வேடிக்கையாகவல்லோ கீதம்பாடும்
தோணவே பலபலவாம் தெய்வம்யாவும் தொல்லுலகில் கண்ணுக்குத் தோற்றலாகும்
வேணபடி வதிசயங்கள் மிகவாய்க்காணும் விண்ணுலகு தத்தளிக்குஞ் சேடனாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

3801.
சேடனாம் ஆதியென்ற சேடர்தானும் திடுக்கிட்டு மெய்மறந்து மனந்தளர்ந்து
கூடலுடன் கமலமுனி குவலயத்தில் கொப்பெனவே வருவதற்கு நாளுமாச்சு
தேடவே சீஷாதி சீஷரெல்லாம் திடுக்கிட்டு மெய்மறந்து சமாதிபக்கல்
நாடவே சமாதியது முன்னே நிற்க நலமான பாறையது வெடிக்கலாச்சே
**3802.**
வெடித்தபின்பு கமலமுனி சித்துதாமும் விருப்பமுடன் புஜண்டரைத்தான் பனதிலெண்ணி
அடிப்படையி லிருந்துமல்லோ சித்துதாமும் அவனியிலே பாறையது வெடித்தபின்பு
நடிப்புடனே ஜெகஜோதி மின்னல்போல நாதாந்த சித்தொளியும் வெளியில்வந்து
துடிப்புடனே சீஷவர்க்கந் தன்னைக்கண்டு தீர்க்கமுடன் தாமுரைத்தார் அதீதமாமே
**3803.**
அதிகமாங் கமலமுனி சித்துதாமும் வன்பாக சீஷவர்க்கந் தன்னைநோக்கி
பதீதமுள்ள வதிசயங்கள் சொன்னதெல்லாம் பாருலகில் நடந்ததுண்டோ சீஷமாரே
கதீதமுடன் மெய்யாச்சு எந்நாதர் காசினியில் யாவற்றும் கண்டோம்நாங்கள்
பதீதமுடன் குருசொன்ன வாக்குபோல பூவுலகில் நடந்தேறிப் போச்சென்றாரே
**3804.**
போச்சென்று சொல்லுகையில் புகழான புஜண்டரைத்தான் நினைத்துமல்லோ
மாச்சலுடன் சிலகாலம் பூமிதன்னில் மகாகற்பமுண்டுமல்லோ வாசிபூண்டு
ஏச்சலில்லா வையகத்தில் சித்துதாமும் எழிலாக சிலகால மிருந்தாரங்கே
பாச்சலுடன் மறுபடியும் சமாதிக்கேக பாங்குடனே புஜண்டரைத்தான் நினைத்தார்தானே
**3805.**
தானான கமலமுனி நினைத்தபோது தகமையுள்ள புஜண்டரிஷி தன்னைக்கேட்டு
பானான கமலமுனி நாதருக்கு பாங்குடனே யசரீரி வாக்குதந்தார்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனே துவாபரயுகத்திலப்பா
தேனான சீனபதி சமாதிதன்னில் தெரிசினைகள் தான்கொடுத்து அடங்கினாரே
**3806.**
அடங்கியே சமாதிதனில் ஒடுக்கமாகி அவனிதனில் ஆசைதனை விட்டொழித்து
தடங்கண்டு சீனபதிசமாதிபூண்டு தாரிணியில் இருக்குமந்த காலந்தன்னில்
உடங்கொண்டு எந்தனையம் சமாதிக்கேக வுத்தமனார் தாமுரைத்தார் எந்தனுக்கு
படமுடனே யவர்பக்கல் யானுஞ்சென்று பாரினிலே வாசையெல்லாம் மறந்திட்டேனே
**3807.**
மறந்திட்டேன் லோகாசைதனை வெறுத்து மார்க்கமுடன் அவர்பக்கல் சமாதிபூண்டேன்
திறந்திட்டார் ஞானோபதேசமெல்லாம் தீர்க்கமுடன் யான்கேட்டு சமாதிகொண்டேன்
குறந்திட்ட தேகமது நிலைநில்லாது கொப்பெனவே சீஷவர்க்கா நீயுமப்பா
பறந்திட்ட பூமிதனை விட்டொழித்து பாங்குடனே சமாதியிடஞ் சேருவீரே
**3808.**
சேரவென்று சொல்லுகையில் புஜண்டர்தாமும் சிறப்புடனே கமலமுனி கூறலுற்றார்
தீரமுடன் வுலகுதனில் பதினாறாண்டு திறமுடனே யானிருந்து வருவேனென்று
கூறவே கமலமுனி சித்துதாமும் கொப்பெனவே தானுரைக்க சீஷரெல்லாம்
பாரமுடன் சித்தொளிவில் பக்கம்நின்று பாங்குடனே வெகுகாலம் பணிசெய்தாரே

3809.
செய்தாரே கமலமுனி ரிஷியாருக்கு சிறப்புடனே பணிவிடைகள் மிகவுஞ்செய்து
மெய்யான சீஷவர்க்கங் கூடியிருந்து மேதினியில் சித்தொளிக்கு பணிகள்செய்து
பையவே பதினாறு வாண்டுமட்டும் பாருலகில் கூடிருந்தார் சீஷர்தாமும்
மெய்யாக தேகமது வருந்தியேதான் மேதினியில் வெகுகாலம் கார்த்தார்தாமே
3810.
கார்த்தாரே சீஷவர்க்கம் அனந்தம்பேரும் காசினியில் சித்தொளிவு நாதருக்கு
பூர்த்தியாய் பதினாறு வாண்டுமாச்சு பொங்கமுடன் சீஷர்களை தாமழைத்து
நேர்த்தியுடன் சமாதிக்குச் செல்வதற்கு நேர்மையுடன் காலமது நெருங்கிப்போச்சு
சாத்திரத்தி லுள்ளபடி தப்பாவண்ணம் தகமையுடன் போகுகின்றேன் வண்மைபாரே
3811.
பாரேதான் சமாதியிடஞ் சென்றாரப்பா பான்மையுடன் குழிதனிலே இறங்கிநின்று
நேரேதான் கும்பகத்திலிருந்துகொண்டு நேர்மையுடன் கண்ணிரண்டும்மூடியல்லோ
சீரேதான் கரங்குவித்து தலைநிமிர்ந்து சிறப்பான நாதாந்த சித்துதாமும்
கூரவே கற்பாறைதனையெடுத்து குறிப்புடனே சமாதிதனை மூடிட்டாரே
3812.
மூடிட்ட சமாதிதனி லதிசயங்கள் மூதுலகில் கேட்பதற்கு வளமைசொல்வார்
நாடிட்ட நான்வருகும் நாளைதன்னில் நலமான வதிசயங்கள் மிகநடக்கும்
பாடிட்ட பார்லோகம் இருண்டுபோகும் பகலிரவு பகலாகத் தோற்றும்பாரு
கூடிட்ட மிருகமெல்லாம் ஞானம்பேசும் குறிப்பான பட்சிகள்தான் பேசும்பாரே
3813.
பேசுகையில் கமலமுனி வருவாரென்று பேரான பட்சிகளும் மிகவேகூறும்
வீசுபுகழ் தேவரெல்லாம் புஷ்பமாரி மாதினியில் பொழிவதுபோல் தோன்றும்பாரு
மாசுடைய ஞானமது ஜோதிவீசும் மகத்தான நட்சத்திரம் அதிரும்பாரு
ஏசுடைய சீஷவர்க்க மானபேர்கள் எழிலான சமாதிமுன்னே நிற்பார் பாரே
3814.
பாரேதான் சீஷவர்க்கம் நிற்கும்போது பாங்கான குருடனவன் கண்திறப்பான்
நேரேதான் மனக்கண்ணு யவனுக்குண்டாய் நீணிலத்தில் நடப்பதெல்லாம்
முன்னேசொல்வான்
சீரேதான் சப்பானிவூமைதானும் சிறப்பான ரூபமதை மாற்றிக்கொள்வார்
வேரேதான் சப்பானிவூமையாவான் வீரான வூமையவன் சப்பானியாமே
3815.
ஆமேதான் இன்னம்வெகுவதிசயங்கள் தானடக்கும் அறிந்துபாரு
நாமேதான் சொன்னபடி பிரளயங்காணும் நலமான ராசாதிராசரெல்லாம்
போமேதான் பிரளயத்தில் மாண்டுபோவார் பொங்கமுடன் வாரிதியும் வற்றிப்போகும்
தாமேதா னசுராக்கள் கூட்டந்தானும் தாரணியில் சமாதியிடங் காண்பார்பாரே
3816.
காண்பாரே லோகவதிசயங்களெல்லாம் காசினியில் வெகுகோடி சித்துவித்தை
வீண்பாக குருவில்லா சீஷன்முன்னே வித்தையன்னும் கவிதனையே கற்றாப்போல
மாண்பமைந்த வதிசயங்க ளெல்லாந்தோன்றும் மானிலத்தில் அசரீரிவாக்குதோன்றும்
ஆண்மையுள்ள சீஷரெல்லாங் காதாற்கேட்டு அவனியிலே தானடுங்கி மயங்குவாரே

3817.
மயங்கியே நிற்கையிலே அசரீரிவாக்கு மானிலத்திலதிகமதாய் கேட்கலாகும்
தியங்கியே சப்தமது வடங்கிப்போச்சு திறமான கூட்டத்தார் சிலதுகாலம்
புயங்கமுடன் அங்கிருந்தார் சீஷவர்க்கம் புகழான சித்தொளிவு வருகுமட்டும்
தயங்கியே கார்த்திருந்தார் சமாதிதன்னில் தாரணியில் சித்துவரும் நாளுமாச்சே
3818.
ஆச்சப்பா சித்துவரும் காலமாச்சு அங்கிருந்த சீஷரெல்லாம் சமாதிமுன்னே
மூச்சடங்கிப் போனதொரு சித்துதாமும் மூதுலகில் வருகின்ற நாளுமாச்சு
பாச்சலுடன் மனதில்நினைக்கும்போது பளிச்சென்று பாறையது வெடித்ததங்கே
கூச்சலுடன் தேவதா கோஷ்டந்தானும் கொப்பெனவே சீஷருக்கு கேட்கலாச்சு
3819.
கேட்டுமே சித்தொளிவை வெளியிற்காண கவனமுடன் சீஷரெல்லாம் பயந்துயேங்கி
நீட்டமுடன் மேதினியில் வந்தபோது நேர்மையுடன் சீஷவர்க்கந்தாள்பணிந்து
கோட்டமுடன் சித்தொளிவைச் சூழ்ந்துகொண்டு கொப்பெனவே யாசீர்மம் மிகவுஞ்செய்ய
தேட்டமுடன் கமலமுனி சித்துதாமும் தேற்றமுடன் ஞானோயமோதுவாரே
3820.
ஓதியே சீஷவர்க்கந்தன்னைக்கேட்டார் வுத்தமரே வதிசயங்கள் நடந்ததென்ன
நீதமுடன் அசரீரிவாக்குவண்ணம் நிலைதப்பிப்போகாமல் நடந்ததுண்டோ
வேதமொழி தப்பாதுயானுரைத்தேன் மேதினியி லதிசயங்க ளுள்ளதெல்லாம்
சோதனையின் பிரகாரம் சூட்சாதாரம் சொரூபமாகத் தானறிந்து சொன்னேன்பாரே
3821.
பாரேதான் கமலமுனி சொன்னவாக்கு பாரினிலே பொய்யல்லால் மெய்யொன்றில்லை
சீரேதான் சொன்னபடி நடக்கலாச்சு சிறப்பான வுபதேசம் மெய்யுமாச்சு
நேரேதான் வேதமுறை தப்பாவண்ணம் நேர்மையுடன் ஞானோபம் பெறுவதற்கு
தேரேதான் நாளாச்சு என்றுசொல்லி தெளிவுடனே கமலமுனி வுரைத்தார்தாமே
3822.
தாமான சீஷவர்க்கந் தன்னைப்பார்த்து தகமையுடன் ஞானோபம் சொல்லும்போது
பூமானம் சீஷவர்க்கம் அனைத்தும்பார்த்து பூவுலகில் அதிசயங்கள் எல்லாந்தேர்ந்து
நாமான கபிலமுனி சொன்னவாக்கு நளினமுடன் நடந்தேறிப் போச்சுதென்று
ஆமெனவே சீஷவர்க்கமொன்றாய்க்கூடி அடிவணங்கி முடிவணங்கி தொழுதிட்டாரே
3823.
இட்டதொரு கமலமுனி சொன்னவாக்கு எழிலுடனே பின்னும்யான் சமாதிபூண
சட்டமுடன் தாரிணியி நிற்கேனென்றும் சாங்கமுடன் தாமுரைத்தார் கமலர்தாமும்
திட்டமுடன் சமாதிக்குப் போரேனென்றும் தீரமுடன் கோடிவரையிருப்பேனென்றும்
வட்டமுடன் காயாதிகொண்டதாலே வாகான தேகமது வழியாதன்றே
3824.
அன்றான காயாதி கற்பந்தன்னால் அழியாது தந்தேகமழியாதென்றும்
குன்றான மலைபோலே யிருப்பேனென்றும் குவலயத்தி லின்னும்வெகுவதிசயங்கள்
வென்றிடவே சமாதிதனி லிருப்பேனென்று வீரமுடன் தாமுரைத்தார் சீஷருக்கு
சென்றிடவே இனிதிரும்பி வருவதில்லை சேர்வையது வுலகுநாள் முடிவுமாச்சே

3825.
ஆச்சப்பா வுலகுதன்னில் முடிவுகாலம் அவனியிலே யாவரையுங் காணலாகும்
பேச்சப்பா இறந்தவர்கள் வருவதில்லை பேரான வுலகுதனில் மொழிபொய்யாகும்
மூச்சடங்கிப் போனதொரு தேகந்தானும் மூதுலகில் மறுபடியஉம் வருவதுண்டோ
பாச்சலுடன் தேகமது முடிவுகாலம் பாரினிலே யாவரையுங்காணலாமே
3826.
காணலா மென்றதுமே கமலர்தாமுங் காசினியில் தாமுரைத்து சமாதிபூண்டார்
தோணவே தொல்லுலகைத்தான்மறந்து துறையோடு முறையோடும் சமாதிபூண்டு
வேணவே இதிகாசபுராணகற்பை விருப்பமுடன் தாமறிந்த சித்துதாமும்
பூணவே மிகவறிந்து சீஷருக்கு பத்திமதி சொல்லியல்லோ மறைந்திட்டாரே
3827.
மறைத்தாரே சீனபதிக்கடலோரந்தான் மகத்தான கமலமுனி நாதர்தாமும்
இருந்தாரே புஜண்டருட சமாதிபக்கல் எழிலான கடலோரந்தன்னிலப்பா
துறந்துமே சீஷவர்க்கந் தனைப்பிரிந்து தொல்லுலகில் சமுசார வாழ்க்கையற்று
திறமுடனே சமாதிதனி லிறங்கியேதான் தீரமுடன் பூமியில் ஐக்கியமானாரே
3828.
ஆனாரே காலாங்கிநாதரப்பா அப்பனே சமாதியது சொல்வேன்பாரு
தேனமிர்த முண்டுமல்லோ பூமிதன்னில் தெளிவுடனே சிலகால மிருந்தார்தாமும்
கோனான எனதையர் சாமிதானும் குவலயத்தி லதிசயங்கள் மிகவும்பார்த்து
பானான சாத்திரத்தின் படியாகத்தான் பதனமுடன் சமாதிக்கு நண்ணனாரே
3829.
நண்ணவே லோகமெல்லாஞ் சுத்திவந்து நலமான கானாறு மலைகள்தாண்டி
குண்ணதனில் வெகுபேர்கள் சித்துதம்மை குறிப்புடனே கண்டுமல்லோ மிகவாதித்து
எண்ணமுடன் சீனபதி கடலோரந்தான் எழிலாகச் சமாதியது மிகவேபூண
வண்ணமுடன் நாதாந்த சித்துதாமும் வளமையுடன் சமாதியிடம் வந்திட்டாரே
3830.
வந்திட்ட காலாங்கிநாதர்தாமும் வண்மையுடன் சமாதிக்குப் போரேனென்று
நொந்திட்ட தன்மனது வுறுதிகொண்டு நொடிக்குள்ளே சமாதிக்குப்போரேனென்று
வெந்திட்ட தன்மனது கருகிவேறாம் வேதாந்த சற்குருவை மனதிலெண்ணி
அந்தமுடன் அவனிதனி லாசையற்றேன் அன்பான தோழனைத்தான் மறந்திட்டாரே
3831.
மறந்திட்ட காலாங்கி போகர்தம்மை மாற்றமுடன் தானழைத்துக் கூறலுற்றார்
சிறந்திடவே சமாதிக்குப் போறேனப்பா சீருள்ள காயாதிகற்பங்கொண்டு
திறமுடனே வையகத்தி லிருந்துமென்ன தீர்க்கமுடன் தேகமது நிலைநில்லாது
அறந்தழைக்க எப்போதும் புனிதனாவாய் அவனியிலே வாக்குரைத்தார் காலந்தானே
3832.
தானான காலாங்கிநாதர்தாமும் தாரிணியில் வெகுகோடி காலமப்பா
தேனான கற்பமதுவுண்டுமல்லோ தேசத்தில் வெகுகால மிருந்தசித்து
ஊனான சடலமது வெறுத்தசித்து வுலகுதனில் மாய்கையனை தீண்டாசித்து
கோனான எனதையர் காலாங்கிசித்து கொற்றவனார் கதையுரைப்பேன் பண்பாய்த்தானே

3833.
பண்பான காலாங்கிநாதர்தாமும் பாருலகில் மூவாசையற்றசித்து
தண்மையுடன் சினமதுவுமில்லாச்சித்து தாரிணியில் வேதமதைத் துறந்தசித்து
வண்பான வையகத்தோர் துதிக்குஞ்சித்து வளமையுடன் சீனபதியமருஞ்சித்து
நண்பான சாத்திரங்கள் யாவுங்கண்டு கரைகண்ட காலாங்கி சித்துதாமே
3834.
சித்தான காலாங்கி யென்றசித்து திறமுடைய காயாதி கற்பங்கொண்டு
முத்தான கூடுவிட்டு கூடுபாய்ந்து முனையாக நன்மறையுஞ்சித்துதாமும்
சத்தான சாகரமுங்கரைகண்டசித்து சாங்கமுடன் சமாதிக்குச்செல்லும்சித்து
கத்தனென்றுங் கைலங்கிரிநாதர்தம்மை காட்சியுடன் கண்டதொரு சித்துதாமே
3835.
தாமான ராஜாங்க சித்துவப்பா தாரணியில் யாரேனும் பணியுஞ்சித்து
சாமான மானதொரு சித்துதாமும் சதாகாலம் வையகத்திலிருந்த சித்து
கோமானகள் கொண்டாடுஞ் சித்துவப்பா குவலயத்தில் ரிஷிகள்முதல் போற்றுஞ்சித்து
நாமான கண்டமட்டும் சொல்வோம்பாரீர் நாதாக்கள் பிழைக்கவென்று நவிலத்தானே
3836.
நவிலவே போகரென்ற எந்தனைத்தான் நாதாந்த சித்தொளிவைத்தானழைத்து
புவிலமுடன் சித்தொளிவு சொன்னநீதி புகழுடனே வண்ணமுடன் யானுரைப்பேன்
கவிலமதாய் காசினியி லாசைவிட்டு கர்த்தரிட பதிதேடிபோரேனப்பா
தவிலமுடன் எப்போதும் புத்திமானாய் தாரணியில் எந்தன்பேர் கொள்ளென்றாரே
3837.
கொள்ளவே சன்மார்க்க புத்திவேண்டும் குவலயத்தில் மதிப்புள்ள சீஷனாக
எள்ளளவும் பிசகின்றி நடக்காவண்ணம் எழிலான சீஷனுக்கு கந்தனாவாய்
கள்ளமின்றி பொய்சூது கபடுதந்திரங் காசினியிலற்றதொரு பூமானாக
விள்ளவே யாவருக்கு மன்பனாக மேதினியி லிருப்பதுவே புத்தியாமே
3838.
புத்தியுடன் தானிருந்து சாயுச்சியகாலம் புகழாகத் தாரிணியில் கீர்த்திபெற்று
சத்தியத்துக் கோர்நாளுந் தவறில்லாமல் சட்டமுடன் மேதினியி லிருந்துகொண்டு
நித்தியமுஞ் சதாகாலம் குருவைப்போற்றி நீதியுட னிஷ்டையிலே தானிருந்து
முத்தியுடன் நாற்பதவி பெறவே வேண்டும் மூதுலகில் இருக்கவென வரைந்திட்டாரே
3839.
அறையவே காலாங்கிதானுரைத்த அன்பான வார்த்தைக்கு வடியேன்தானும்
குறைகளுந்தான் நேராமல் அடியேன்தானும் குற்றமற நடப்பேன்நான் என்றுசொல்லி
திறையகத்தி லவர்பாதம் தொழுதுபோற்றி சிந்தனையாம் மெய்மறந்து நமஸ்கரித்து
முறையோடு சோடசவுபசாரத்தோடு முடிவணங்கி தொழுதிட்டேன் காலர்தாமே
3840.
காலராயென்மீதில் பட்சம்வைத்து கவனமுடன் நடப்பதற்கு மிகவாய்க்கூறி
பாலமுடன் நேசர்கள் மிகக்கொள்ளாதே பாரினிலே கர்மிகளும் பாவியுண்டு
கோலமுடன் நல்லவர்போலிருப்பாரப்பா பொங்கமுடன் அவர்களைத்தான் நம்பவேண்டாம்
சீலமுடன் யாருக்கு நண்பனாக சிறப்புடனே வாழ்கவென்று வரந்தந்தாரே

3841.
வரமுடனே தான்கொடுத்து காலாங்கிநாதர் வண்மையுடன் சமாதிக்குப் போகவென்று
கரமெடுத்து கண்ணதனில் ஒத்திக்கொண்டு கருத்துடனே காலாங்கிநாதர்தாமும்
சிரங்குனிந்து தண்ணீருந்தான் கலக்கிசிறப்புடனே எந்தனுக்கு புத்திகூறி
மரம்போலத் தானிருந்து காலாங்கிநாதர் மயக்கமுடன் விடைகொடுத்தார் எனக்குத்தானே
3842.
தானேதான் மனந்தளர்ந்து வடியேன்தானும் தகமையுடன் மறுபடியுங் கூறலுற்றார்
தேனான என்சீஷர் போகநாதா தேற்றமுடன் வுந்தனுக்குப் பின்னுஞ்சொல்வேன்
மானான வையகத்தில் கோடிசித்து மகத்தான நாதாக்களிருப்பார்பாரு
பானான மனோன்மணியாள் பாதம்பெற்ற பட்சமுள்ள சித்துகளுமிருப்பார்தாமே
3843.
இருப்பாரே குவலயத்தில் கோடிசித்து எதிர்த்துமிகப் பேசாதே ஏந்தன்சீஷா
பொருப்புடனே யவர்களுக்குப் பணிவாய்நில்லு பொங்கமுடன் அவர்களுமே வணக்கஞ்சொல்லி
தருப்புடனே யுந்தனுக்கு வுபதேசங்கள் சாத்துவார் வபிமானந்தன்னதான
விருப்புடனே சாபமது சொல்வாரானால் வீரமுடன் எந்தனையும் நினைத்திடாயே
3844.
நினைக்கையிலே சாபமது சுவர்ந்துபோகும் நீனிலத்தி லுந்தனையு மதிப்புகொண்டு
பனைப்புடனே காலாங்கி சீஷனென்று பட்சம்வைத்து ஞானோபம் பின்னுஞ்சொல்வார்
தினையளவு கோபமது வாராதப்பா திறமையுடன் நீயுமொரு சித்தனாவாய்
மனையுடனே சமுசார வாழ்க்கையற்று மானிலத்தில் வாழ்கவென்று வசனித்தாரே
3845.
வசனித்த சொற்கேட்டு வடியேன்தானும் வையகத்தில் வெகுகோடிசித்துவாடி
தசமுடனே பத்துயுக மிருக்கவென்று தாரிணியில் காலாங்கி தம்மிடத்தில்
நிசமான குளிகையது பெற்றுக்கொண்டு நேர்மையுடன் உபதேசம் மிகவுங்கேட்டு
குசமுடனே யட்டதிசை சொல்லவென்று கொப்பெனவே வுபதேசம் பெற்றேன்பாரே
3845.
பாரப்பா புலிப்பாணி மைந்தாகேளு பாங்குடனே காலாங்கி நாதர்தாமும்
நேருடனே சமாதிக்கு சென்றபோது நேர்மையுடன் வுபதேசம் பின்னுஞ்சொல்வார்
சீருடனே எந்தன்மேல் பட்சம்வைத்து சீவியகாலமது வுள்ளமட்டும்
பாருடனே எந்தனையும் சித்தர்தாமும் பட்சமுடன் கார்க்கவென்று பதஞ்சொல்வாரே
3846.
சொல்வாரே எந்தனது போகநாதா தொல்லுலகில் ரிஷிமுனிவரனேகருண்டு
வெல்லவே யவர்களிடம் வாய்பேசாதே வீணாகசித்தர்முனி கருமியுண்டு
நல்லவர் போலுந்தனிடம் வுறவுபேசி நாதாந்த சித்தொளிவு நான்தானென்று
கொல்லவே மனந்தனிலே வினயம்பேசி கூடிருந்து வுந்தனுக்கு வினைசெய்வாரே
3847.
வினையான நல்வினையு முனக்கிருக்க விட்டகுறை தீவினைக்கியாளதாக்கி
தினையளவு பொன்னதுவும் வுனக்குக்கூறார் தீங்கினையே விளைவிப்பார் கருமிமாண்பர்
சினங்கொண்டு வலியவே வாதுபேசி சீரான வுபதேசம் கிடைப்பதற்கு
மனங்கொண்டு தொடருவார் உந்தன்பக்கல் மர்மத்தைக்காட்டாதே மன்னாகேளு

3848.
காட்டாதே நாநில்லாக் காலமாச்சு கண்மணியே கலியுகமும் பிறக்கலாச்சு
வாட்டமுடன் வாதனுக்கு யிதவுரைத்து வாகுடனே நல்லவன்போலிருந்துகொண்டு
தேட்டமுடன் சிவயோகந் தன்னிற்சென்று தெளிவான சித்தர்முனி தம்மைக்கண்டு
நாட்டமுட னவர்பாதந் தொழுதுபோற்றி நலம்பெறவே பூமிதனிலிருப்பாய்தானே
3849.
தானான எந்தனிட போகநாதா தன்மையுள்ள கண்மணியே யின்னஞ்சொல்வேன்
தேனான தெள்ளமுர்த சிவராஜயோகா சீனபதிக்கரசுள்ளதீரா
பானான மனோன்மணியாள் குகந்தநற்பாலா பாருலகில் சித்தரமெச்சும் பண்புடையதேகா
மானான வையகத்தில் எனக்குகந்த சீஷா மாட்சியுடன் நானுரைப்பேன் யின்னுமிகக்கேளே
3850.
கேளேதான் சீனபதி மார்க்கந்தன்னில் கெவனமுடன் குளிகையது கொண்டுநீயும்
நாளடா கோட்டையது காவல்தாண்டி நலமுடனே தான்போகும் வழியிலப்பா
கேளடா சித்தர்முனி யதிககூட்டங்கும்பல் கும்பலாகவல்லோ கூடியிருப்பார்
வீளடா குளிகைகொண்டு போகும்போது விண்ணுலகு சித்தனென்று சபிப்பார்பாரே
3851.
பாரான சித்தர்முனி சபிப்பாரப்பா பாரினிலே மகிமையுள்ளசித்தருண்டு
தீரமுடன் எந்தனையும் பாராமற்றான் தீர்க்கமுடன் சபிப்பதற்கு வருவாரப்பா
கோரமுடன் ரிஷிமுனிவர் வந்தபோது கோபத்தை யடக்கியல்லோ யிதையுஞ்சொல்லி
சோரமது வுன்பேரில் நேராமற்றான் சொற்சோர்வு நேராமல் துணிவாய்நில்லே
3852.
நிற்கையிலே சித்துமுனி யாரென்றாலே நீதியுள்ள காலாங்கி சீஷனென்று சொற்பமுள்ள
போகரிஷி நான்தானென்று சூட்சமுடந் தலைகுனிந்து வணக்கஞ்சொல்லி
அற்முள்ள எந்தனையும் ஆதரிக்க ஆண்டவனே யன்னைவிட குருதானுண்டோ
துப்புறவாய் அவர்பாதந் தொழுதிட்டாக்கால் தொல்லுலகில் வெகுகால மிருக்கலாமே
3853.
இருக்கலாம் கோடிவரை இருக்கலாகும் எழிலான கண்ணியனே போகநாதா
பொருக்கவே எந்தனுக்கு ஞானோபதேசம் பொருமையுடன் கொடுக்கவென்று வரமுங்கேளு
அருக்கனே என்தேவர் காலாங்கிநாதர் அவர்தானே நீயென்று தாள்பணிந்து
பெருக்கமுடன் கரங்குவித்து பதம்பணிந்து பேரான வுபதேசம் செய்குவீரே
3854.
செய்யவென்று கேட்கையிலே போகநாதா சேர்வைதர யுந்தன்மேல்கிருபைவைத்து
வுய்யதொரு கருவிகரணாதியெல்லாம் உத்தமனே வுந்தனுக்கு தத்தஞ்செய்வார்
மைவிழியார் தன்னாசையகற்றியேதான்மானிலத்தில் சமுசாரவாழ்க்கையற்று
பெய்யவே யுந்தனுக்கு மனதுவந்து பேரான வுபதேசம் போதித்தாரே
3855.
போதிப்பார் காலாங்கி நாதர்தாமும் பொன்னான கண்மணியே புகலக்கேளு
ஆதித்தன்போல யுதித்தபோகநாதா வன்புடைய சீஷனே யின்னங்கேளு
ஜோதியென்னும் மகமேரு பர்வதத்தில் சுந்தரா குளிகைகொண்டு போகும்போது
பாரிமதி சடையணிந்த தம்பிரான்போல் பாலகனே வேடமது பூணுவாயே

3856.
பூணுவாய் குளிகையது மிகவேபூண்டு புகழுடனே மேருகிரி தன்னிற்சென்று
காணுதற்கு நீயுமங்கே போவாயானால் கனமான சித்தொளிவு யனேகமுண்டு
வேணவுபசாரமு மிகவறிந்து வேகமுடன் குளிகைகொண்டு செல்லும்போரது
மூணுயேழுவரைதனையே காணவென்று முனையாகப் போம்போது வரிசைகேளே
3857.
வரிசையுடன் ஒவ்வொருவரைகள்தோறும் வன்மையுடன் சித்தர்முனி ரிஷிகள்கூட்டம்
பரிவுடனே யாரென்று கேட்பாரப்பா பாலகனே யுந்தனையுமெங்கேவந்தாய்
சரியான பித்தனைபோல் குளிகைகொண்டு சட்டமுடன் மேருதனில் வந்தானென்று
மரியாதைத் தனையுமாறி வரம்புமீறி மகமேறிவந்தவன் நீயாரென்பாரே
3858.
ஆரென்று கேட்டுமல்லோ யுனைமிரட்டி வப்பனே கண்மணியே போகநாதா
பேரென்னவென்றுரைத்து யுன்னைக்கேட்டு பேரான மலைதனிலே வந்தவன்யார்
ஊரென்ன பதியென்ன யவர்தானப்பா வுத்தமனே குளிகைகொண்டு வந்ததென்ன
நீரென்ன வலுவல்கொண்டு யிங்குவந்தீர் நிட்சயமாய் சொல்லுமென வினவுவீரே
3859.
வினவியே கேட்கையிலே போகநாதா விருப்பமுடன் மனதுவந்து சொல்லக்கேளும்
தினகரன் தன்னொளிவீசும் காலாங்கிநாதர் திகழ்வேந்த சித்தொளிவின் சீஷனென்று
மனதுவந்து நீர்தானே சொல்வீரானால் மன்னவனே யுன்மீது கிருபைவைத்து
சினமதுவை விட்டொழித்து சித்தர்தாமும் சிறப்புடனே யுந்தனுக்கு விதிசொல்வாரே
3860.
விதியான வுபதேசஞ் சொல்லுவார்கள் விண்ணுலகு வதிசயங்கள் மிகவுரைப்பார்
மதிபோன்ற எந்தனிட போகநாதா வையகத்தில் நீர்காணும் புத்திமானாய்
துதியுடனே காலாங்கிசீஷனென்று துப்புரவாய் நீயுரைத்தபோதேயப்பா
கதிபெறவே யுந்தனுக்கு யாவுஞ்சொல்லி கருவான போகரென்று கருதுவாரே
3861.
கருதவே குளிகைகொண்டு போகநாதா கடலேழுஞ்சுத்திவருங் காலந்தன்னில்
நிருதமுள்ள ரிஷிகூட்டங் காணும்போது நித்திலங்கும் பூமுடியா சொல்வேன்கேளு
விருதுடைய குளிகைதனை பயர்த்தபோது விண்ணுலகு சித்தனென்று மனதிலெண்ணி
துரிதமுடன் குளிகைதனை பறிப்பதற்கு சூதுமுறை செய்வார்கள் சித்துதானே
3862.
சித்தான முனிவருட சூதுபார்த்து சீருள்ள கண்மணியே போகநாதா
பத்தியுட னெந்தனையும் நினைத்தபோது பட்சமுடன் உந்தனுக்கு முதலாய்நின்று
வெத்தியுடன் மேதினியில் வாழ்வதற்கு வேதாந்தத் தாயினது கடாட்சத்தாலே
சத்தியமாய் பாதுகாப்பேனென்றுசொல்லி சமாதிக்குள் சத்தியங்கள் கூறினாரே
3863.
கூறவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் குவலயத்தில் எந்தனது குருவாநாதர்
தேறவே காலாங்கிநாதர் தாமும் தெளிவுடனே எந்தனுக்கு வுரைத்தவண்ணம்
மாறவே ராமரென்னும் பெயர்தான்கொண்ட மகத்தான யோக்கோபு சித்துதாமும்
ஆறவே சிலகாலம் பூமிதன்னில் அனேகவண்ணம் அதிசயங்கள் செய்திட்டாரே

3864.
செய்திட்டார் என்றலுமே எனக்குரைத்த தெளிவான வதிசயத்தை சொல்வேன்பாரே
வையகத்தில் வேங்கைதனில் வீற்றிஔருக்கும் வளமான புலிப்பாணி சித்தேகேளும்
தய்யநல்ல யாக்கோபு ரிஷியார்தாமும் துன்பசாகரமென்னும் மாய்கைதன்னை
பையவே விட்டொழித்து பாருமப்பா பாங்குடனே மக்காவுக்கேகினாரே
3865.
ஏகினார் யாக்கோபு முனிவர்தாமும் எழிலான மக்காபுரி தன்னைக்கண்டார்
யூகிகாமதிமந்திரி யோகவானாம் வுத்தமனா ரங்கொருவர் தானிருந்தார்
யஓகியாஞ் சின்மயத்தில் சேர்ந்தசித்து யொளிவான ரிஷியொருவர் அங்கிருந்தார்
சாகினியாம் யாக்கோபு நாதர்தாமும் சட்டமுடன் உபதேசம் செய்தார்பாரே
3866.
பாறான யாக்கோபு நாதர்தாமும் பண்புடனே சித்தொளிக்கு யுபதேசித்து
நேறான தனக்குகந்த சீஷனாக்கி நேர்மையுடன் தான்கற்ற கல்வியெல்லாம்
சீரான சித்துமுனி ரிஷியாருக்கு சிறப்புடனே வையகத்து மார்க்கமெல்லாம்
நூரான மந்திரமாம் ஞானவர்க்கம் துறையோடும் முறையோடும் ஓதினாரே
3867.
ஓதியே சிலகால மங்கிருந்து வுத்தமனார் யாக்கோபு முனிவர்தாமும்
நீதியுடன் சமாதிக்குப் போகவெண்ணி நித்திலங்குஞ் சீடனைத்தான் மனதுநோக்கி
சாதியுடன் மறப்புள்ளோரெல்லாம் தம்மை சட்டமுடன் தான்மறந்து சமாதிக்கேக
ஜோதியுட பரவொளியைக்காணவென்று சுத்தமுடன் மனந்தனிலே எண்ணினாரே
3868.
எண்ணியே தனக்குகந்த சீடனுக்கு எழிலாகத் தாமுரைப்பார் யாக்கோபாரும்
தண்ணமுடன் சமுசார வாழ்க்கையற்றேன் தகமையுள்ள மைந்தர்களை யான்மறந்து
நண்ணியே இல்லறத்தை துறந்துமல்லோ நாதாந்தப் பேரொளியை காண்பதற்கு
வண்ணமுடன் சமாதிதனி லிறங்கவென்று வையகத்து வாசையெல்லாம் மறந்திட்டாரே
3869.
மறந்தாரே பூலோக வாசையெல்லாம் மார்க்கமுடன் சின்மயத்தின் ஒளிவுகாண
துறந்தாரே மூவாசையற்றேனென்றார் துறவிக்கு வேந்தரெல்லாந் துரும்பேயென்பார்
சிறந்ததொரு வஷ்டபாக்கிய மறந்தேன் செயலான நீதிகளெல்லாம் விட்டொழிந்தேன்
இறந்தாரே தேகத்தை விட்டொழித்து எழிலான சமாதிதனி லிறங்கிட்டாரே
3870.
இரங்கியே சமாதிதனிலிருந்துகொண்டு எழிலாகச் சீஷனுக்கு வதிதஞ்சொல்வார்
சுரங்கமென்ற குழிதனிலே போரேனப்பா ககுதிபொருள் கருவிகரணாதியெல்லாம்
வாங்கமுடன் வுள்ளடக்கி மனதிருந்தி வையகத்தின் வாழ்க்கையெல்லாம் தனையகற்றி
உரங்களுடன் பத்தாண்டு இருப்பேனென்று வுத்தமனே யாக்கோபு கூறினாரே
3871.
கூறினார் சமாதிதனிலிருந்துகொண்டு கொற்றவனே யென்சீஷர் குவாதெண்ணி
மாறிடவே கற்பாறைத் தன்னைமூடி மகத்தான சமாதிக்குப் பூசைமார்க்கம்
தேறிடவே தினந்தோறும் அர்ச்சித்தேதான் திறமுடனே நான்வருகுங்காலந்தன்னில்
வேறிவே எந்தனிட சமாதிமுன்னே விருப்பமுடன் காத்திருந்து காண்பீர்தானே

3872.
தானேதான் நான்வருகுங்காலந்தன்னில் தகமையுள்ள வதிசயங்கள் மிகநடக்கும்
போனவுடன் மக்காவிலதிசயங்கள் பொங்கமுடன் நாவினாற் சொல்லொணாது
தேனமிர்தமானதொரு மழைதான்பெய்யும் தேசமெல்லாந் தேனாறுவோடும்பாரு
மானமிர்தமானதொரு வுத்தாரைவின் மார்க்கமுள்ள சமாதியது வெடிக்கும்பாரு
3873.
வெடித்தபின்பு வசீரிவாக்குண்டாகும் வேதாந்த யாக்கோபு வருவாரென்று
மடிந்துவரும் மாந்தரெல்லாம் கடைசிநாளில் வையகத்தில் நாதாந்த நபியாருக்கு
துடியான குற்றமதை கேள்விகேட்டு துப்புறவாய் நாதாந்த நபியாருக்கு
முடியரசர் முதலானோர் முனிவர்தாமும் முன்னின்று கேள்விக்கு விடைசொல்வாரே
3874.
விடையான வார்த்தைக்கு வுறுதிசொல்லி மேன்மையுடன் பதவிக்கு இடமுந்தேடி
தடையறவே குற்றத்திற்காளதாகி தரணிதனில் வெகுபாவந் தலைமேற்கொண்டு
கடையான நாளதனில் பாவத்துக்காளாய்ப் பாருலகில் படுநரகம் வாய்க்கும்பாரு
குடையான கர்ணனாயிருந்திட்டாலும் குவலயத்தில் பாவத்துக்குறுதியாமே
3875.
உறுதியாம் இன்னம்வெகு வதிசயங்கள் வுத்தமனே சொல்லுகிறேன் அன்பாய்க்கேளும்
குருடமுடன் வக்கினியாம் மாருபெய்யுங் குன்றின்மேல் காடெல்லாம் மெலிந்துகொல்லும்
சொரூபமுள்ள சித்தர்முனி ரிஷிகள்பேரில் சொர்னமழை பெய்வதும் மகிமையாகும்
அருமையுடன் தானியங்கள் எல்லாந்தங்கம் அப்பனே பொன்போலே வீசும்பாரே
3876.
பொன்னான மழைமாரிப் பொழியும்போது பொங்கமுடன் பூமிக்குள் இடியுண்டாகும்
சின்னமுடன் சமாதிதனில் கோஷ்டந்தானும் திறமுடனே பூமிதனில் கேட்கும்பாரு
மன்னவர்கள் ராசாதிராசரெல்லாம் மானிலத்தில் திசைமாறி போவார்கண்டீர்
துன்னவே சஊரியாள் சந்திராளும் துறைகாணார் திசைதனிலே நிற்பார்தாமே
3877.
நிற்பாரே வருந்துதிகள் அதிரங்காணும் நீணிலத்தில் மிருகமெலாம் ஞானம்கூறும்
அற்பமென்று நினையாதே அவனிதன்னில் ஆண்டவனார் நபிநாயன் கிருபைதன்னால்
சொற்பரிய சமாதிதன்னில் புத்துண்டாகும் சொர்ணமென்ற ஐந்துதலை நாகமப்பா
கற்பாறை மேலிருந்து ஞானம்சொல்லும் காசினியில் யாக்கோபு வருநாளாச்சே
3878.
ஆச்சென்று கூறுமப்பா நாகந்தானும் வவனியிலே யாக்கோபு வருவாரென்று
மூச்சடங்கிப் போனதொரு சித்துதாமும் மூதுலகில் வரப்போராரென்றுசொல்லி
பாச்சலுடன் நாகமது பரிந்துகூறும் பாருலகில் பார்த்தவர்கள் பிரமைகொள்வார்
கூச்சலுடன் நபிக்கூட்டமார்களப்பா கொற்றவனே சமாதியிடம் வருவார்பாரே
3879.
பாரேதான் பார்லோகம் தத்தளிக்கும் பாங்கான சமாதியது வெடித்துதங்கே
நேரேதான் யாக்கோபு முனிவர்தாமும் நேர்மையுடன் ஜெகஜோதிபோலேவந்தார்
சீரேதான் அல்லாவுத்தாலா வென்று சிறப்புடனே வாய்தனிலே கூறிக்கொண்டு
சேரேதான் வையகத்தில் வந்தாரப்பா சிறப்பான யாக்கோபு முனிவர்தானே

3880.
முனியான யாக்கோபு சித்துதாமும் மூதுலகில் சமாதிவிட்டு வருகும்போது
கனியான நவக்கனிகள் ஒன்பதோடும் கடிதான ரொட்டியொன்று கையிலீந்தார்
தொனியான வாத்தியங்களோடுதானும் தோற்றமுடன் வையகத்தில் வருகும்போது
தனியான சீஷனவர் தன்னைப்பார்த்து தண்மையுடன் ஞானோபம் ஓதுவாரே
3881.
ஓதுவார் யாக்கோபு முனிவர்தாமும் ஓகோகோ நாதாந்த சீஷருக்கு
நீதமுடன் ஞானோபதேசந்தன்னை நேர்மையுடன் தானுரைத்து புத்திகூறி
போதமுடன் சீடர்முகந் தன்னைநோக்கி பொங்கமுடன் யாக்கோபு கேட்கலுற்றார்
சாதமுடன் சமாதிக்கு சென்றபோது தாரிணியில் அதிசயங்கள் என்னென்றாரே
3882.
என்றுமே யாக்கோபு சொன்னதற்கு எழிலாகச் சீஷனவர்தானுரைத்தார்
குன்றான என்தேவர் குருவேநாதா குவலயத்தை விட்டுமல்லோ சமாதிதன்னில்
அன்றுதான் போனவுடன் அவனிதன்னில் அனேகமாய்க் கூட்டமது மிகவாய்க்கூடி
இன்றுதான் யாக்கோபு சமாதிசென்றார் யினிதிரும்பி வருவதில்லை யென்றிட்டாரே
3883.
இட்டாரே வெகுமாண்பர் கும்பல்கூடி எழிலாக வேளிதங்கள் மிகவுஞ்சொன்னார்
திட்டமுடன் யாக்கோபு சமாதிசென்று திரும்பிவருங்காலமது யில்லையென்றார்
பட்டதொரு தேகமது மண்ணாய்ப்போச்சு பாரினிலே யாக்கோபு மடிந்துபோனார்
சட்டமுடன் யாக்கோபு மடிந்தாரென்று தாரிணியில் பெருங்கூச்சல் மிகஉதியாச்சே
3884.
ஆச்சப்பா யென்தேவா சாமிநாதா அவனிதனிலடியேனும் கேட்டிருந்தேன்
பேச்சடங்கிப் போனதொரு யாக்கோபுதானும் பேருலகில் வருவதுவும் பொய்யேயாகும்
கூச்சலுடன் வெகுமாண்பர் கும்பல்கூடி குவலயத்தில் வேகமுடன் வார்த்தைசொன்னார்
ஏச்சாகக் கூறினதோர் மொழிகட்கெல்லாம் எதிராக யானென்று பேசேன்பாரே
3885.
பாரேதான் வெகுகாலஞ் சமாதிபக்கல் பாரினிலே வருவாரும் போவாருண்டு
நேரேதான் அவர்களிடம் வார்த்தைபேசேன் நேர்யுடன் சமாதியிடம் பள்ளிகொள்வேன்
கூரேதான் சமாதியிடம் யிருந்துகொண்டு கொப்பெனவே தேவர்வருங்காலமட்டும்
ஊரேதான் போகாமல் காத்திருந்து உறுதியுடன் சேர்வையது கண்டிட்டேனே
3886.
கண்டிட்டேன் என்தேவா குருவேயென்ன கருவான யாக்கோபு மனதுவந்து
பண்டிதங்கள் கொண்டதொரு சீடனுக்கு பட்சமுடன் தானுரைப்பார் தரணிமீதில்
வண்டதுவும் மதுதனையே கவிழ்ந்தாப்போறும் மானபியாம்கோபு முனிவர்தாமும்
தண்டுலமான தொருதேகம்தானும் தாரிணியிலிருந் தென்னபலனுண்டாச்சே
3887.
ஆச்சப்பா தேகமது நிலைநில்லாது வப்பனே லோகமெல்லாம் பொய்யேவாழ்வு
மூச்சடங்கி சமாதிதனிலிருந்துமென்ன மூதுலகில் பேருண்டாய்வாழ்ந்துமென்ன
பாச்சலுடன் சீடர்களுமாயிரம்பேர் பக்கமதில் தேகமதை காத்துமென்ன
மாச்சலுடன் மகாகோடி நிதிகளெல்லாம் மானிலத்தில் யான்தேடி வொன்றுங்காணேன்

3888.
காணேணே தேகமது காயகற்பம் கருவாக யான்கொண்டு பலனுமில்லை
தோணவே நாலுயுகமிருந்துமென்ன தொல்லுலகை யொருகுடையிலாண்டுமென்ன
வேணவே லாபமது வொன்றுங்காணேன் விண்ணுலகு காணுவது மெத்தநன்று
பூணவே சமாதிகொள்வேனென்று புகழுடனே சீடனுக்கு வுரைத்தார்தானே
3889.
தானான சீடனுக்குப் பின்னுஞ்சொல்வார் தன்மையுள்ள யாக்கோபு முனிவர்தாமும்
கோனான கபிநாயகன் சொன்னவாக்கு கொப்பெனவே குவலயத்தில் பொய்யாவண்ணம்
பானான மனோன்னமணியாள் கடாட்சத்தாலே பாரினிலே சமாதிக்குப்
பின்னுஞ்சொல்வேன்
தேனான கண்மணியே சீடாபாலா தேகமதை நம்பவில்லை யென்றார்தாமே
3890.
தாமேதான் யாக்கோபு சித்துதாமும் சட்டமுடன் சமாதியிடம் பக்கல்வந்து
போமேதான் முன்சென்ற சமாதிதன்னில் பொங்கமுடன் அடைவதற்கு முனிவர்தாமும்
நேமமுடன் குழிதனிலே இறங்கிநின்று நிஷ்டையென்னுஞ் சதாசிவத்தை மனதிலெண்ணி
தாமமுடன் அல்லாவுத்தவாலாவை சாங்கமுடன் மனந்தனிலே எண்ணினாரே
3891.
எண்ணியே யாக்கோபு முனிவர்தாமும் எழிலான சீஷனைத்தானழைத்து
வண்ணமுடன் வையகத்தைத் தான்மறந்து வாகுடனே சீஷனுக்கு வுரைத்தார்தாமும்
கண்ணான கண்மணியே சீஷபாலா காசினியை யான்மறந்தேன் பாறைதன்னை
திண்ணமுடன் மூடியல்லோ சமாதிதன்னை தீர்க்கமுடன் கார்த்திருக்க வென்றிட்டாரே
3892.
என்றதொரு யாக்கோபு முனிவர்தாமும் எழிலான வார்த்தையது சொல்லக்கேட்டு
நன்றுடனே சீஷனவர் பாறைதன்னை நலமாக மூடியல்லோ பக்கல்நின்றார்
குன்றான யாக்கோபு வாக்குதத்தம் கூறுவார் சீஷனுக்கு வாசீர்தம்மை
வென்றிடவே ரிஷியாரும் மனதுவந்து விருப்பமுடன் முப்பத்து வாண்டுதானே
3893.
ஆண்டான முப்பது வருஷகாலம் வப்பனே சமாதிதனிலிருப்பேனென்றும்
மாண்டுமே தேகமது மண்ணிற்சென்று மறுபடியுஞ் சமாதியிட்டு வருவேனென்று
கூண்டுவிட்டு கூண்டடைந்த கதையைப்போல கொப்பெனவே மேதினியில் வருவேனென்று
ஆண்டகையாந் தனைநினைத்து முனிவர்தாமும் வன்புடனே தானுரைத்தார் வாக்குதாமே
3894.
வாக்கான வாக்கதுவுங் கூறியல்லோ வையகத்தில் யாக்கோபுயின்னஞ்சொல்வார்
தாக்கான சமாதிதனிலிருந்துமேதான் தண்மையுள்ள சீஷனுக்கு யின்னுஞ்சொல்வார்
நோக்கமுடன் சமாதிமுன்சென்றபோது நெடிதான கபடுரைத்த சீஷவர்க்கம்
ஆக்கமுடன் தாமுரைத்த சீஷரெல்லாம் அவனிதனில் குருடாக்க காண்பீர்தாமே
3895.
காணவே யின்னம்வெகு வதிசயங்கள் கலியுகத்து மாண்பருக்கு மகிமைசொல்வேன்
பூணவே யான்வருகுங்காலந்தன்னில் புகழுடனே வந்தரங்கம் வெளிச்சங்காணும்
நாணவே நாதாக்கள் முனிவர்தாமும் நடுக்கமுடன் நபிதமக்கு வஞ்சியல்லோ
தோணவே யர்ச்சனைகள் மிகவுஞ்செய்து தோற்றமுடன் சமாதிக்கு முன்நிற்பாரே

3896.
முன்னின்று யாக்கோபு வருவதெப்போ மூதுலகில் சாபமது தவிர்ப்பதெப்போ
மன்னவர்கள் மாண்பரிடம் வினையைநீக்கி மானிலத்தில் வரங்கொடுக்கும் காலமெப்போ
சொன்னதொரு வாக்குமொழி பிசகாவண்ணம் தொல்லுலகில் மகிமையதை
காண்பதெப்போ
நன்மையாய் நாதாந்த முனிவர்தாமும் நயமுடனே யாக்கோபை துதித்திட்டாரே
3897.
துதித்ததொரு சித்தரெல்லாம் மெச்சவேதான் துரைராஜ சந்திரரும் யாக்கோபாரும்
மதித்திடவே சமாதிதனிலிருந்துமேதான் மார்க்கமுடன் ஜெகஜோதி பிரகாசம்போல
கதிப்புடனே சமாதிவிட்டு யேகியேதான்கனமான யாக்கோபு முனிவர்தாமும்
விதிப்படியே வாக்குரைகள் பொய்யாவண்ணம் விருப்பமுடன் நிறைவேற்றி வந்திட்டாரே
3898.
வந்ததொரு யாக்கோபு முனிவர்தாமும் வாகுடனே பகடுறைத்த மாந்தரெல்லாம்
சிந்தனையாய் மனங்கலங்கி மெய்நடுங்கி சிற்பரனார் யாக்கோபு வந்தாரென்று
தந்தமக்குள் பயந்துமல்லோ ஒடுக்கமாகி தாரிணியில் மயங்கிநிற்கும்போது
நிந்தனையாய் வந்ததொரு சாபத்தாலே நீணிலத்தில் எல்லவரும் குருடானாரே
3899.
குருடாய்ப் போனவர்கள் சிலதுமாண்பர் குவலயத்தி லழிந்தவர்கள் சிலதுமாண்பர்
திருடரா யொளித்தவர்கள் சிலதுமாண்பர் தீர்க்கமுடன் வாய்க்குளறி சிலதுமாண்பர்
இருளதனில் கண்ணொளிவு மயங்கியேதான் யிராக்காலம் தெரியாமப்போனபேர்கள்
வருடமாம் வெகுகாலம் இக்கோலந்தான் வதைபட்டு வழிந்தாரே கோடிபேரே
3900.
கோடியாஞ் சிலபேர்கள் ஞானவான்கள் குவலயத்தில் வெகுநாளாய்ப் பேருண்டாக
நாடியே சமாதியிடங் கிட்டிருந்து நாதாந்தப் பேரொளியின் சமாதிமுன்னே
கூடியே வெகுகால மிருந்தாரங்கே கொற்றவர்கள் சமாதியிடந் தன்னிலேதான்
வாடியே காத்திருந்த சித்தர்தாமும் வண்மையுடன் வுபதேசம் பெற்றார்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

3901.
தானான யாக்கோபு முனிவர்தாமும் தகமையுட னுபதேசம் பின்னுஞ்சொல்வார்
கோனான குருதனையே மனதிலெண்ணி கொப்பெனவே தாமுறைப்பார் பின்னுஞ்சொல்வெவொம்
வேனான ரிஷிமுனிவர் சித்தருக்கு மேதினியில் உபதேசம் செய்துமேதான்
தேனான யாக்கோபு முனிவர்தாமும் தீர்க்கமுடன் முடிவுதன்னைக்கூறுவாரே
**3902.**
கூறுவார் யாக்கோபு சித்துதாமும் குவலயத்தில் தேகமது இருந்துமென்ன
மாறுபடு பேதனங்கள் செய்துமென்ன மகத்தான வசியமுதல் கற்றுமென்ன
நீறுபுகழ் மோகனங்கள் அறிந்துமென்ன நீணிலத்தில் வாதமது செய்துமென்ன
தூறுடைய வஷ்டமா சித்துவித்தை துறைமுதலுங்கற்றுமென்ன வொன்றுங்காணே
**3903.**
காணவே பிரபஞ்ச வாழ்க்கையற்று காசினியிலிருந்தாலும் வொன்றுமில்லை
பூணவே நவகோடி திரவியங்கள் பூவுலகில் தேடியென்ன லாபமில்லை
நாணமுடன் வுலகுதனில் வாழ்ந்துமென்ன நாதாந்தப் பேரொளியைக் கண்டுமென்ன
வேணபடி யுலகமெலாம் ஒருகுடைக்கீழ் வுத்தமனே யாண்டாலும் ஒன்றுங்காணே
**3904.**
ஒன்றான தேகமது பொய்யேவாழ்வு ஓகோகோ நாதாக்கள் யாரிருந்தார்
குன்றான கல்லதுபோல் தேகந்தானும் குவலயத்தி லிருந்தாலும் ஒன்றுமில்லை
தன்றான தேகமது இரும்பானாலும் தாரிணியில் நில்லாது மெய்யேயாகும்
சென்றாலுங் காயமது போவதுண்மை சடலமழிந்து போகுவதும் வண்மைதானே
**3905.**
உண்மையாம் யாக்கோபு முனிவர்தாமும் வுலகத்தில் இருந்ததுவும் போதுமென்று
நண்மையாம் சீஷவர்க்க மானபேர்க்கு நாதாந்த யாக்கோபு முனிவர்தாமும்
வண்மையாம் லோகமதை மறந்தேனப்பா வாகுடனே சமாதிக்குப் பின்னுஞ்செல்வேன்
எண்ணமுடன் சீஷருக்கு வாக்குரைத்து எழிலாக சமாதிக்குப் போவார்தாமே
**3906.**
போகவே யாக்கோபு முனிவர்தாமும் பொங்கமுடன் சமாதிக்குச் செல்வேனென்றும்
வாகடங்கள் விதிமுறைப்போல் தப்பாவண்ணம் வளமுடனே தாமறிந்த சித்துதாமும்
வேகமுடன் சமாதிதனி லிறங்கியேதான் வேதாந்த சித்தொளிவு சொரூபந்தன்னை
யோகமுடன் தானிருந்து முனிவர்தாமும் வுத்தமர்க்கு வசரீரிவுரைத்தார்பாரே
**3907.**
பாரேதான் யாக்கோபு சித்துதாமும் பாருலகில் இதுவரையிலிருந்தகோலம்
நேரேதான் சுகமறிந்த தேகந்தன்னை நேர்மையுடன் பிரிதிவினில் சேர்ப்பதற்கு
வீரேதான் விண்ணுலக வாசையற்று வேதாந்த யாக்கோபு சித்தருக்கு
சீரேதான் யுகமுடிவு காலமாச்சு சிறப்பான தேகமது மண்ணாய்ப்போமே
**3908.**
மண்ணாகிப் போனாலும் காயகற்பம் மகத்தான தேகமிது வழியும்பாரு
திண்ணமுடன் நபிதானும் முடிவுநாளில் தீர்க்கமுடன் கேள்வியது கேட்கும்போது
எண்ணமதில் யாக்கோபு முனிவர்தாமும் எழிலாக வந்தும்மைக்காண்பேனென்று
நிண்ணயமாய் வாக்குரைத்தார் சித்துதாமும் நீடாழியுலகத்தின் மேன்மைதானே

3909.
நேர்மையா மின்னமொரு மார்க்கங்கேளு நேரான வகஸ்தியனார்க் குகந்தசீஷன்
பார்மனதாய் யுலகுதனில் பெயர்வகுத்த பண்பான சிவராஜயோகியென்பர்
தீர்மையுள்ள புலஸ்திரா மென்றசித்து திகழான சமாதிதனை சொல்வோம்பாரு
வார்மையுடன் சீனபதி மேற்கேயப்பா வளமான தென்பொதிகை சார்புமாச்சே
3910.
ஆச்சப்பா புலிப்பாணி பாலாகேளு வன்பான யெனதையர் காலாங்கிதானும்
மூச்சடங்கிச் சீனபதி யிருந்தபோது மூதுலகில் வளமையெல்லாஞ் சொன்னார்முன்பு
பாச்சலுடன் பொதிகைமலைச் சார்புதன்னில் பாங்கான கடலோரம் பூமிவட்டம்
கூச்சலுடன் சித்தர்முனி ரிஷிகளோடு குவலயத்தில் சமாதிக்கு வந்தார்தானே
3911.
வந்தாரே சீஷனார் தெறையரொடு வளமாக சீனபதிகடலோரந்தான்
அந்தமுடன் பொதிகைமலை குண்ணின்பக்கம் வகஸ்தியனார் சீஷனது பாலன்தானும்
சொந்தமுடன் சமாதிதனி லிறங்கவென்று சுத்தமுள்ள புலஸ்தியருங் கூறலுற்றார்
வந்தவழி போவதுவே வுண்மையென்று வளமுடனே சமாதியிடந் தேடினாரே
3912.
தேடியே சமாதியிட மருகிற்சென்று திறளான சீஷவர்க்கக் கூட்டத்தோடு
நாடியே சமுசார வாழ்க்கையற்று நாதாந்தப்பேரொளியைக்கண்டுதேர்ந்து
கூடியே குவலயத்தில் நேர்மையெல்லாங் கொற்றவனார் தான்வெறுத்து சமாதிக்கேக
நீடியே புலஸ்தியரும் சீஷர்தம்மை நீட்சியுடன் தாமழைத்துக் கூறுவாரே
3913.
கூறுவார் வாய்திறந்து சீஷவர்க்கம் குவலயத்தின் மகிமையெல்லாங் கண்டாராய்ந்தேன்
சீருடனே சிற்றின்ப வாழ்க்கையற்று சீரான பேரின்ப நிலையைக்காண
நேருடனே வுலகுதனை யான்மறந்து நேர்மையுடன் காயமதைநிலைநிறுத்தி
பாருள்ளே சமாதிதனி லிருப்பேனென்று பட்சமுடன் சீஷருக்கு வுரைத்தார்பாரே
3914.
பாரேதான் தேரையர் மைந்தாகேளு பாரினிலே சமாதிக்குப் போரேன்யானும்
சீரேதான் இருபத்துவாண்டு தானும்சிறப்புடனே சமாதிதனிலிருப்பேனென்று
நேரேதான் சமாதிதனிலிருந்துகொண்டு நேர்மையுடன் அசரீரிவாக்குசொல்வேன்
தீரேதான் யான்வருகுங்காலமட்டும் தீர்க்கமுடன் சமாதியிட மிருந்திடாயே
3915.
இருந்துமே சமாதியது பூசைகொண்டு எழிலாக நான்வருகு நாளுமட்டும்
திருந்தவே என்சீஷா பிராணநாதா தெருள்கலையில் தேர்ந்ததொரு சித்துபாலா
பொருந்தவே யுபதேசம் மிகவுங்கேட்டு பொங்கமுடன் சமாதிதனிலிருந்துகொண்டு
வருந்தவே நான்வருகும் நாளையெண்ணி வளமுடனே நீநினைத்து நிற்பீர்தானே
3916.
தானான என்சீஷா யின்னங்கேளு தகமையுள்ள சித்தரமுனி யும்மைக்கண்டு
கோனான வுன்குருவு யெங்கென்றாக்கால் கொற்றவனே சமாதியிடஞ் சென்றாரென்று
தேனான புலஸ்தியரும் வருநாள்மட்டும் தேர்வேந்த சித்தருக்குப் பணிதிபூண்டு
மானான மனோன்மணியைத் தொழுதுபோற்றி மலையோரஞ் சமாதியிட மிருக்கின்றேனே

3917.
இருக்கிறேன் என்றுரைத்து யிதவுசொன்னால் எழிலான சித்தர்முனி பகடுரைப்பார்
வெருக்கவே புலஸ்தியரு மடிந்தாரென்று விண்ணுலகில் மறுபடியுந் திரும்பாரென்று
பெருக்கமுடன் வகடுமிகக் கூறுவார்கள் பேரான கர்மியென்ற சித்துதாமும்
உருக்கமுடன் நீயுரைக்கும்போதேயப்பா வுத்தமர்கள் பழிகூறு சொல்லுவாரே
3918.
சொல்லுவார் அவர்களிடம் வாய்பேசாதே சுந்தரனே சிவராஜ யோகபாலா
வெல்லுவாருந்தனிஞ் சூதுபேசி வேகமுடன் கொள்வதற்கு மனமுங்கொள்வார்
புல்லுவார் தூரான வார்த்தைகூறி புகழான வுச்சிதங்கள் மிகவுஞ்சொல்லி
அல்லலுடன் உந்தனிடஞ் சூதுபேசி வப்பனே வதைசெய்ய எண்ணுவாரே
3919.
எண்ணுவார் தேரையர் எந்தன்சீஷா எழிலான கண்மணியே யின்னஞ்சொல்வேன்
திண்ணமுடன் ஞானமதை கேட்பார்போல தீர்க்கமுடன் ஞானோப தேசந்தன்னை
வண்ணமுடன் கரைகண்ட சித்துபோலே வாரான எழுத்துக்கள் மாராட்டஞ்சொல்லி
நண்ணமுடன் ஜெகஜோதி சொரூபங்காண நானுரைப்பேன் விதியதனை மகிழென்பாரே
3920.
என்பாரே பொய்சூது கபடுதந்திர மெழிலான வுன்குருவை தூறுபேசி
வன்பான வார்த்தைகளு மிகவுரைத்து வளமான சமாதிக்கு யிடங்கள் தேடி
இன்பமுடன் மெய்போலே பொய்யுங்கூறி எழிலாக வுந்தனுக்கு புகழ்ச்சிசொல்வார்
தென்பாக மகிழாதே சீஷபாலா நேர்மையுடன் எப்போதும் புகழ்வாய்நில்லே
3921.
நிற்கையிலே புலஸ்தியரா முனிவர்தாமும் நீடான சமாதிதனிலிருந்துகொண்டு
அற்புதங்கள் மிகவுரைப்பார் சீஷருக்கு வன்பான மகிமைகளு மெத்தவுண்டு
தற்பரனார் புலஸ்தியரும் வருகும்போது தாரிணியில் அதிசயங்கள் மிகநடக்கும்
கற்பாறையானதொரு பொதிகைதானும் கடல்தனிலே யதிரலுடன் யரையும்பாரே
3922.
அதிருமே நான்வருகுங் காலந்தன்னில் ஆகாய கோடையிடிபோலேசத்தம்
சதிரான பொதிகைமலைச் சுழலுண்டாகும் சப்தரிஷி தவமுனிகள் நடுங்குவார்கள்
மதிலோட கோட்டைமுதல் அலங்கம்யாவும் மாறியே தலைகீழாய்க் கவிழ்ந்துபோகும்
உதிருமே வானத்து மீன்களெல்லாம் வுத்தமனே வதிரலது காணும்பாரே
3923.
பாரேதான் சத்தசாகரமும் பொங்கும் பாரினிலே தேர்வேந்த ராஜரெல்லாம்
நேரேதான் போர்முகத்தில் நிற்பார்பாரு நேர்மையுடன் திசைமாறி தேவரெல்லாம்
வேரேதா னவரவர்கள் பதிகள்கெட்டு மேதினியில் அரகநிலையாள்வான்பாரு
கூரேதான் வாக்கதுவும் பொய்யாதப்பா குணமான தேரைரிஷி சொல்லக்கேளே
3924.
சொல்லவே தேரமுனி சித்துகேளும் சுகரான புலஸ்தியரும் வருநாளாச்சு
புல்லவே சமாதியது திறப்பதற்கு புகழான புலஸ்தியரும் வருநாளாச்சு
வெல்லவே மேதினியில் சித்துதாமும் வேதாந்த ஞானப்பிரகாசத்தோடு
நல்லதொரு சமாதிதனில் பாரைதானும் நலமுடனே தான்வெடித்து வருகலாச்சே

3925.
வருகவே சித்துவரும் நாளுமாகி வாகுடனே புலஸ்தியரும் வந்துமேதான்
பெருகவே புலஸ்தியரும் வந்தபோது பேரான தேரையர் முனிவர்தாமும்
திருதலுடன் புலஸ்தியரைக் கண்டபோது தீர்க்கமுடன் நமஸ்கார மஞ்சலித்து
தருகவென வாசீர்மஞ் கொண்டனைத்து தக்கபடி மனுமுறைகள் கேட்டிட்டாரே
3926.
கேட்டவுடன் புலஸ்தியரும் மகிழ்ந்துமேதான் கெடியான வார்த்தையது மிகவுங்கூறி
நீட்டமுடன் லோகவதிசயங்களெல்லாம் நேர்மையுடன் தானுரைத்தார் சீஷனுக்கு
வாட்டமுடன் பூலோக வதிசயங்கள் யன்னமையுடன் போச்சுதென்று மனதிலுன்னி
தாட்டிகமாய்த் தேரைமுனிவர்தாமும் தமியேனைக் காக்கவென்று பணிந்திட்டாரே
3927.
பணிந்துமே தேரையர்சித்துதாமும் பாங்குடனே குருபதத்தை தாள்பணிந்து
துணிவுடனே சொன்னதொரு மொழிகளெல்லாந் துரைராஜ சுந்தரனே நடந்துபோச்சு
அணியணியாய் சமாதியிடம் பக்கம்வந்து வன்புடனே காத்திருந்தார் சீஷவர்க்கம்
கனிவுடனே ஜெகஜோதி வருநாளாச்சு கர்த்தனே பதியைவிட்டு யேகினாரே
3928.
ஏகவே யதிசயங்களெல்லாங்கண்டு எழிலான பரமகுரு சித்துதாமும்
போகருட குருவர்க்கங் காலாங்கிநாதர் பொங்கமுடன் செய்ததொரு வதிசயம்போல
வேகமுடன் அகஸ்தியனார் சீடர்தாமும் வேதாந்தப் புலஸ்தியனார் செய்தார்கண்டீர்
சாகமுடன் சித்தரெல்லாம் பிரமித்தேங்கி சட்டமுடன் அவர்பதிக்கு போனார்தாமே
3929.
போனாரே சித்தர்கள்தான் சென்றபின்பு பொங்கமுடன் தேரையமுனிவருக்கு
தேனான புலஸ்தியரும் இன்னஞ்சொல்வார் தெளிவானன என்சீடர்மைந்தகேளு
கோனான குவலயத்திலிருந்துமென்ன கொப்பெனவே தேகமது நிற்பதில்லை
மானான வையகத்தின் ஆசைவிட்டேன் மன்னவனே சமாதிக்குப் போரேன்தானே
3930.
போகின்றேன் தேரைமுனி சித்துகேளும் பொங்கமுடன் வையகத்தை யான்மறந்தேன்
சாகின்ற சடலமது யிருந்துமென்ன சதாகாலம் நேமநிஷ்டை கொண்டுமென்ன
தாகின்ற பொன்மணியின் ஜோதிபோலுஞ் சதாகாலம் எப்போதும் துலங்கவேண்டும்
வேகின்ற நெஞ்சமதை யிதங்கவைத்து வேகமுடன் சதாநித்தம் பணியநன்றே
3931.
பணியவே பதாம்புயத்தை நண்ணவேண்டும் பாங்கான மோட்சமதைக் கருதவேண்டும்
அணியவே மறுபடியுஞ் சமாதிக்காக வப்பனே யான்கொண்ட வுறுதிதன்னை
துணிவுடனே என்சீஷர் சித்துபாலா துனையாக நீயிருந்து செல்லுமட்டும்
கணிவுடனே வுபதேசம் பெற்றுமல்லோ காசினியில் இருப்பவனே சித்துவாமே
3932.
சித்தான சித்துமுனி தேரையாகேள் சிறப்புடனே சமாதிக்குப் போறேனப்பா
புத்தான மண்மீதில் வருவதில்லை புகழான தேகமதை மறந்துவிட்டேன்
சத்தமது தானடங்கி மண்ணாப்போறேன் சாகின்ற தேகமது விழலாய்ப்போச்சே
பத்தியுடன் வுகுவரை முடிவுநாளில் பாலகனே எந்தனையுங் காணலாமே

3933.
காணலா மின்னமொரு மார்க்கம்சொல்வேன் காசினியில் தன்வந்திரியென்றசித்து
நீணவே கிரேதாயினுகத்திலப்பா நீடான விஷ்ணுவவதாரங்கொண்ட
பூணவே தன்வந்திரியான சித்து புகழான மகாவிஷ்ணுவவதாரத்தால்
வேணவே மேதினியில் சித்துமாகி வேதாந்த தன்வந்திரியென்னலாச்சே
3934.
என்னவே தன்வந்திரி யென்றசித்து எழிலான காயாதிகற்பங்கொண்டு
தென்பொதிகை தனிற்சென்று மேறுதன்னில் தேற்றமுடன் அகத்தியனார் தன்னைகண்டு
வண்பான சாத்திரங்களுள்ளாராய்ந்து அவர்கள்மீதில் பட்சம்வைத்து வன்புகூர்ந்து
சொன்னமொழி தப்பாமல் நயங்கள்பேசி சூட்சாதி சூசமெல்லா மறிந்தார்தாமே
3935.
அறியவே அகஸ்தியனார் செய்தநூலாம் அகண்டமெனும் பெருங்கடலுக்கொப்பதாகும்
முறியாமல் தன்வந்திரி செய்தநூலை மூன்றுலட்சங் கிரந்தமென வகுக்கலாகும்
சரியொத்த நூல்களுமே பாடிவைத்தார் சரியாக வகத்தியரும் அருபோற்சொன்னார்
தெரியவே லோகாதிமாண்பருக்கு தோற்றமுடன் பாடிவைத்தார் நூல்கள்தாமே
3936.
பாடிவைத்த மூன்றுலட்சங் கிரந்தந்தன்னை பாரினிலே வெகுகோடி சித்தர்தாமும்
நாடியே மிகப்பார்த்துக் கண்டாராய்ந்து நலமுடனே பதினெண்பேர் சித்தரெல்லாம்
கூடியே வெகுநூல்கள் செய்தார்பாரு குவலயத்தில் எவராலும் சொல்லப்போமோ
தேடியே தன்வந்திரி பகவான்தானும் தீர்க்கமுடன் சமாதிக்கு எண்ணினாரே
3937.
எண்ணினார் காயாதிகற்பங்கொண்டு எழிலாகத் தாமிருந்தார் வுலகுதன்னில்
நண்ணமுடன் சீஷவர்க்க மனேகம்பேர்கள் நாடினார் தன்வந்திரி பகவான்தன்னை
வண்ணமுடன் வெகுகால மிருந்தசித்து வளமையுடன் சதுராதி மார்க்கமெல்லாம்
கண்ணபிரான் தானறிந்த சொரூபசித்து காசினியில் அவர்போலுஞ் சொல்லப்போமோ
3938.
சொல்லவே சீடருக்கு ஞானமார்க்கம் செப்பினார் சரிகைகிரி யோகமெல்லாம்
வெல்லவே விடகம்பம் பிரிதிமார்க்கம் வேதாந்த ஆகடியம் சௌபாக்கியந்தான்
புல்லவே சோபனமா மதிசண்டமார்க்கம் புகழான சுககர்மம் திரிதிபாதை
மெல்லவே சூலமொடு கண்டபத்திரம் மேதினியில் நேர்மையுடன் யிரைத்தார்பாரே
3939.
பாரேதான் விருத்தியுடன் துரூபம்யாவும் பாங்கான வியாகர்தம் அரிஷ்ணவேதம்
சீரேதான் வச்சிரமாஞ் சித்தியோகம் சிறப்பான விதியாக மனந்தங்கோடி
நேரேதான் விரியாகம்பதிகம்யாவும் நேர்மையுடன் சிவகண்டஞ்சித்தபோதம்
தீரேதான் யாத்திரங்கள் சுவாணகர்மம் சித்தமுடன் சிவசுப்பிமம் பிரம்மம்தானே
3940.
தானான பிரம்மமொடு வயிந்திரபேதம் தாக்கான வைகிருது யொக்கத்தானும்
பானான யோகமது இருபத்தேழும் பாகமுடன் பாலித்தார் சீடருக்கு
கோனான தன்வந்திரி பகவான்தானும் குவலயத்தில் சீடர்மேல் பட்சம்வைத்து
தேனான யோகமென்ற மார்க்கந்தன்னை தெளிவுடனே தாமுரைத்தார் தன்வந்திரியாமே

3941.
அமேதான் பலமுடனே பாவமுந்தானும் வப்பனே கெவனமுடன் கைதுளையுமாகும்
வேமேதான் காசியுடன் வனசிவமுமாகும் வெட்டவெளி பத்திரையாம் சகுனியிடமாகும்
தாமேதான் சதுடரதம் நாகலமுமாகும் தாக்கான கிமஸ்துவுடன் கரணமாகும்
போமேதான் கரணமது பதினொன்றாகும் பேர்காண போகத்துக்கு உறுதியாச்சே
3942.
ஆச்சப்பா ராசியது சொல்வேன்பாரு வப்பனே மேடமுடன் ரிஷபமாகும்
மாச்சலுடன் மிதுனமது கடகந்தானும் மகத்தான சிங்கமது கன்னியாகும்
வீச்சப்பா துலாவுடனே விருச்சிகந்தான் விரைவான தனுசுடன் மகரமாகும்
பாச்சலுடன் கும்பமது மீனமாகும் பாங்கான ராசியது பனிரண்டுமாமே
3943.
ரெண்டுடனே துலாராசி மெத்தநன்று எழிலுடனே கன்னிசிங்கமிருந்தால்நன்று
பண்டான சாத்திரங்கள் யாவுமல்லோ பாங்குடனே கண்டறிந்து சித்துயோகன்
கண்டாலும் விடுவார்கள் சித்துதான் காசினியில் தன்னோடே சேர்த்துக்கொள்வார்
உண்டான பொருளெல்லாம் அவர்க்கேயோதி வுத்தமனே சீடர்களாய்ச் செய்வார்தானே
3944.
செய்தாரே தன்வந்திரி  பகவான்தானும் செயலான பாக்கியமும் நூலுந்தந்தார்
உய்யவே சீஷவர்க்கங்கண்டாராய்ந்து வுத்தமனே தேடினதோர் ஆயிரம்பேர்
கையவே சீஷவர்க்கமாயிரம்பேர் நலமுடனே விட்டகுறை யுள்ளபேர்கள்
துய்யவே தேர்ந்தெடுத்தோர் இவர்களாகும் துரைராஜ சுந்தரனே சொல்வேன்பாரே
3945.
பார்க்கவே எனதையர் காலாங்கிநாதர் பட்சமுடன் எந்தனுக்கு வுரைத்தசேதி
தீர்க்கமுடன் யானுமல்லோ குளிகைகொண்டு தேசாதி தேசமெலாம் தான்திரிந்து
ஏர்க்கமுடன் லோகவதிசயத்தையெல்லாம் எழிலாகத்தான்பார்த்து கண்டாறாய்ந்து
மார்க்கமுடன் பாடிவைத்த சத்தகாண்டம் மகத்தான நடுக்காண்ம் இதுதானாமே
3946.
நடுவான காண்டமிது ஏழாயிரந்தான் நலமான காவியத்துக்கினைவேருண்டோ
வடுவான தன்வந்திரி பகவான்தானும் மார்க்கமுடன் சமாதிக்கு ஏகவெண்ணி
அடுமையாமானதொரு சீஷவர்க்கம் வன்புடனே தானகைத்தார் வதீதமார்க்கம்
படுகுழியில் சமாதிதனில் செல்லவென்று பண்புடனே தாமுரைத்தார் பகவான்தானே
3947.
தானான தன்வந்திரி பகவான்தானும் தன்மையுடன் சீஷருக்குத் தாமுரைப்பார்
தேனான கண்மணியே சீஷவர்க்கம் தெளிவுடனே எள்ளவருங் கேட்டிருங்கள்
பானான பேரின்பமிசையாசைவிட்டேன் பாங்கான சமுசார வாழ்க்கையற்றேன்
மானாம மனோன்மணியை மனதிலெண்ணி வையகத்தினாசையெல்லாம் மறந்திட்டேனே
3948.
மறந்திட்டேன் காயாதி கற்பங்கொண்டு மானிலத்தில் சிலகாலமிருக்கவென்று
துறந்திட்டேன் சமாதிக்குச் சிலதுகாலம் தொல்லுலகையான்மறந்து மண்ணிற்சென்று
கறந்திட்ட பாலதுபோல் வடிவமாகி காசினியில் மறுபடியும் வருவேனென்று
உறமுடனே ஞானோபதேசந்தன்னை வுண்மையுடன் போதித்தார் சீடர்க்காமே

3949.
போதித்த நாள்முதலாய் பகவான்தானும் பொங்கமுடன் மேருகிரிதன்னிற்சென்று
ஆதித்தன் காணாத வதீதகாடு அங்ஙனவே சென்றாராம் பகவான்தானும்
சாதித்து மனதுறுதிகொண்டுமல்லோ சட்டமுடன் சீஷவர்க்கங்கூட்டத்தோடு
பாதிமதி சடையணிந்த தம்பிரான்போல் பதிதனக்கு ஏகினார் பகவான்தானே
3950.
ஏகவே பொதிகைமலை கடலோரந்தான் எழிலான தீவுதனில் சமாதிதன்னை
பாகமுடன் படுகுழிகள் வெட்டினார்பார் பாங்குடனே நீரோடும் பாங்குமட்டும்
ஏகமுடன் சமாதியது கட்டினார்கள் எழிலான தன்வந்திரி பகவானுக்கு
சாகமுடன் குழிதனிலே இறங்கினாராம் சட்டமுடன் திரைகொண்டுமூடினாரே
3951.
மூடினார் சீஷவர்க்கம் ஆயிரம்பேர் மூதுவரைக்காணாமல் மறைந்தார்சித்து
நாடியே சீஷரெல்லாம் சமாதிபக்கல் நலமுடனே கார்த்திருந்தார் கும்பலாக
வாடியே சீஷரெல்லா மிருக்கும்போது மகத்தான தன்வந்திரி பகவான்தானும்
தேடியே சீஷருக்கு சொல்வார்பாரு தெளிவுடனே கேட்டிருங்கள் மாணாக்காளே
3952.
கேட்கவே தன்வந்திரி பகவான்தானும் கிருபையுடன் சீஷருக்குக்கூறினார்பார்
நீட்கமுடன் வறுபது வாண்டுமட்டும் நிலையான சமாதிதனிலிருப்பேனென்றும்
வேட்கமுடன் அசரீரிவாக்குதானும் வீரமுடன் கூறினார் பகவான்தானும்
தீட்கமுடன் சீஷவர்க்கம் கேட்டிருந்தார் திறைகோடி வறைகோடி காலமாச்சே
3953.
ஆச்சப்பா யான்வருகுங்காலந்தன்னில் அவனிதனி லதிசயங்கள் மிகநடக்கும்
மூச்சடங்கிப் போனதொரு தேகந்தானும் மூதுலகில் வருவதற்கு முன்னதாக
ஏச்சலுடன் அதிசயங்கள் மிகநடக்கும் எழிலான பொதிகைமலை சார்புதன்னில்
கூச்சலுடன் தேவாதி ரிஷிகளெல்லாம் கொற்றவனார் வருங்காலந் தானுமாச்சே
3954.
தானுமே ரிஷிக்கூட்ட முனிவர்தாமும் தன்வந்திரி பகவானும் வருநாளாச்சு
வானுலகு தேவரெல்லாம் வருந்தியல்லோ வருணமழைப் புஷ்பமது பொழிந்தாரங்கே
தானுலகு ராஜாதிராஜரெல்லாம் காணிக்கைகொண்டுவந்து பகவானுக்கு
தேனமுது கனிவுடனே புட்பதீபம் தேர்வேந்த பகவானுக்கொடு சென்றாரே
3955.
சென்றாரே சமாதியிட பக்கந்தன்னில் சிறப்புடனே சித்தர்முனி நிற்கும்போது
குன்றான பொதிகைமலை கும்பமுனி குவலயத்தில் அதிசயத்தை பார்க்கவெண்ணி
தென்திசையில் மலையைவிட்டு பகவான்தன்னை தேற்றமுடன் காண்பதற்கு முனிவர்தாமும்
வென்றிடவே சமாதியிட பக்கந்தன்னில் வேதாந்த சித்தொளிவும் வந்திட்டாரே
3956.
வந்ததொரு சேதிதன்னை நந்திகேட்டு வண்மையுடன் தன்வந்திரி பகவான்தன்னை
சிந்தையிலே நற்சீடன் என்றறிந்து சீரான பகவானைக் காணவென்று
பந்தமுடன் நற்சீடன் என்றுசொல்லி பாரினிலே கண்டுநெடுநேரமாச்சு
அந்தமுடன் சமாதிவிட்டு வருதலுக்கு வன்மையான நந்தீசர் வந்திட்டாரே

3957.
இட்டாரே நந்தீசர் முனிவர்தாமும் எழிலான சமாதியிட பக்கந்தன்னில்
விட்டகுறை இருந்ததினால் பின்னுங்காண விருப்பமுடன் வருவதற்கு வந்தாரல்லோ
பட்டதொரு தன்வந்திரி பகவான்தனை பட்சமுடன் காணுகைக்கு நந்திதாமும்
கிட்டியே சமாதியிட வலப்பக்கந்தான் கிருபையுடன் காண்பதற்கு நின்றார்பாரே
3958.
பாரேதான் அசுவினியாம் விசுவனியாந்தேவர் பட்சமுடன் தன்வந்திரி பகவான்தன்னை
நேரேதான் சமாதியிடங் காணவென்று நேர்மையுடன் சென்றாராம் சமாதிபக்கல்
கூரேதான் சித்துவரும் நாளுமாச்சு குவலயத்தில் சித்தரெல்லாம் கும்பாய்நிற்க
சீரேதான் புவிமீதில் அதிசயங்கள் சிறப்புடனே தான்நடக்கும் மகிமைதானே
3959.
தானான வறுபதுவாண்டுதன்னில் தாக்கான சமாதியின் பக்கல்தன்னில்
மானான குருடர் சப்பானிதானும் மகத்தான வூமைமுதல்பேசுவான்பார்
தேனான தன்வந்திரி பகவான்தானும் தேற்றமுடன் சமாதிவிட்டு வெளியேவந்தார்
பானான பகவானும் பாரின்மீதில் பரமவொளி சொரூபமாய் வந்திட்டாரே
3960.
வந்தாரே பகவானும் பூமிமீதில் வன்மையுடன் சீஷவர்க்கந்தன்னைக்கண்டு
சிந்தனையாய் சீஷவர்க்கம் தன்னைநோக்கி சிறப்புடனே வுபதேசம் மிகவாய்ச்செய்து
தந்தமக்கு வரமதுவும் பகவான்தானும் தன்மையுடன் தான்கொடுத்து வாசீர்மித்து
வந்தனையாய் வுலகினுட மகிமைதன்னை வாகுடனே தான்கேட்டார் பகவான்தானே
3961.
தானேதான் கேட்கையிலே சீஷவர்க்கம் தகமையுடன் வுத்தாரம் கூறுகின்றார்
தேனான தெள்ளமுர்தம் எந்தன்கோவே தேற்றமுடன் நாமுரைப்போம் பகவானுக்கு
பானான குருடர் சப்பானியாரும் பாங்குடனே கண்திறந்து நடக்கலாச்சு
வேனான வுலகுதனில் தங்கள்வார்த்தை வேணபடி யதிசயங்கள் கண்டோம்தாமே
3962.
கண்டோமே என்றதுமே சீஷர்தாமும் கருத்துடனே தாமுரைப்பார் பகவான்தானும்
அண்முலகளந்ததொரு ஆதிபாலன் அல்லவருங் கேட்டிருகந்கத் தாமுரைப்பார்
விண்ணுலகிலிருந்துமென்ன சீஷன்மாரே வினோதவகைமகிமையெல்லாங் கண்டுமென்ன
சண்டமாருதமான காயகற்பம் சட்டமுடன் கொண்டென்ன ஒன்றுங்காணே
3963.
காணவே காயாதிக்கொண்டுமென்ன கலியுகத்தில் கோடிவரை யிருந்துமென்ன
வேணபடி வேதநூல் செய்துமென்ன விட்டகுறை யிருந்தென்ன போயுமென்ன
பூணவே சமுசார வாழ்க்கையற்று பூவுலகி லிருந்தென்ன மடிந்துமென்ன
தோணவே சின்மயத்தை கடந்துமென்ன தொல்லையெல்லா மற்றாலும் ஒன்றுங்காணே
3964.
ஒன்றான தேகமது பொய்யேவாழ்வு வுத்தமனே லோகத்திலொன்றுமில்லை
பன்றான பொய்களவு யாவுமுண்டு பாரினில் விசுவாசம் அருளுமில்லை
குன்றான விசுவாச மருள்கொண்டாலும் குவலயத்தி லொன்றுமில்லை பாழுபாழே
தன்றான வையகத்து வாழ்க்கையெல்லாம் தாரிணியில் இப்படியே மேவலாச்சே

3965.
ஆச்சப்பா சீஷவர்க்கஞ் சொல்லக்கேளும் வப்பனே பின்னுமல்லோ சமாதிசொல்வேன்
மூச்சடங்கி சமாதிதனில் இருப்பேனென்றும் மூதுலகில் மறுபடியும் வருவதில்லை
மாச்சலுடன் வுகமது முடிவுகாலம் மகிழ்ச்சியுடன் சீடர்களைக் காணலாகும்
வாச்சுதே விட்டகுறை நேருமானால் வளமான சீஷரெல்லாங் காண்பேன்பாரே
3966.
பாரேதான் என்றலுமே பகவான்தானும் பாரின்மிசை யாசையது விட்டொழித்து
நேரேதான் சமாதிக்கு சென்றாரங்கே நேர்மையுடன் பகவானும் மண்ணிற்சென்று
போரேன்யான் பொன்னுலகப் பதியைத்தேடி பொங்கமுடன் எந்தனது வாசையற்று
சீராக தானிருங்கள் சீஷவர்க்கம் சிற்பரனார் பதிபோரேன் என்றார்தாமே
3967.
தாமான யின்னமொரு சூட்சங்கேளு தகமையுள்ள சுந்தரானந்தசித்து
காமான சித்தினுட பெருமைசொல்வேன் காசினியில் இவர்போலும் சித்துமுண்டோ
வேமான மானதொரு சித்துதாமும் வெகுகோடி காலம்வரைதாமிருந்தார்
நாமான மென்றதொரு காயகற்பம் நாதாந்த சித்துமுனி கொண்டார்தாமே
3968.
கொண்டதொரு சுந்தரானந்தர் தாமும் குவலயத்தில் வெகுமாண்பர்சித்தருக்கு
அண்டமுடியானதொரு சாத்திரங்கள் வனேகமாய்க் கற்பித்தார் சித்தர்தாமும்
கண்டறிந்த சித்துவர்க்கமாயிரம்பேர் கருவாளி கூடிருந்தார்சித்துதாமும்
தொண்டரெனும் சித்துமுனி சீஷவர்க்கம் துரைராஜ சுந்தரனை சூழ்ந்தார்பாரே
3969.
பாரேதான் சுந்தரானந்த சித்து பாரினிலே இருந்தசுகம் போதுமென்று
நேரேதான் வடக்குமுகந் தன்னிலப்பா நெடுந்தூரமான வயிராவதந்தான்
சீரேதான் யெண்ணூறு காதமப்பா சிறப்பான வயிராவதமலைதானாகும்
ஆரொன்று மலையோரந் தன்னிலுண்டு வழகான மண்டபந்தா னிருக்குந்தானே
3970.
தானான மண்டபந்தான் லட்சங்காலாம் தாக்கான வாய்க்கால் நடுமையத்தில்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் சொற்படிக்கிக் கண்டேன்யானும்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேசமெல்லாஞ் சுத்திவந்த சொரூபசித்து
வானான வையகத்திலிருந்த சித்து வளமுடனே காலாங்கி யென்னும்பாரே
3971.
பாரான சுந்தரானந்தசித்து பெருமையுடன் வுலகுதனில் வாழ்ந்தசித்து
சீரான சுந்தராநாதர்தாமும் சிறப்புடனே சமாதிக்கு செல்லவெண்ணி
கூரான சீஷவர்க்கக்கூட்டத்தோடு கொடுமுடி கைலாசர்போலேதானும்
சேரான வருங்கடலைத் தேடியல்லோ சேனையுடன் வந்தாரே சித்துகாணே
3972.
சித்தான சொரூபமென்ற சித்துதாமும் செழுமையுடன் சிலகாலமிருந்துமேதான்
முத்தான பவக்கடலை யொழித்துமல்லோ மூதுலகில் சமாதிக்குப்போகவென்று
பத்தியாய் சீஷருடன் பரமநாதா பாருலகுவாசல்தனைவிட்டொழித்து
நித்தியமு தானதொரு கடவுதன்னை நிட்களமாய் தானினைத்து துதித்திட்டாரே

3973.
துதித்துமே ஐராவதத்தின் பக்கல் துறையான வாற்றோரந் தன்னிற்சென்று
மதிப்பான சங்கநிதி பதுமநிதிதன்னை மார்க்கமுடன் கண்டல்லோசித்துதாமும்
விதிப்படியே சமாதிக்கு யிடமுந்தேடி விருப்பமுடன் தானழைத்து சீஷர்தம்மை
ததியான மாண்பர்களே பின்னுங்கேளும் தன்மையுடன் சமாதிக்குச் செல்வேன்பாரே
3974.
பாரப்பா சமாதிதன்னி லிரங்கியல்லோ பத்தாண்டு முடிவுவரையிருப்பேனென்றும்
சீரப்பா சிலகாலஞ்சென்றபின்பு சிறப்புடனே வையகத்தில் வருவேனென்றும்
காரப்பா சமாதியிடம் வீற்றிருங்கள் காசினியில் வெகுகோடிவதிசயங்கள்
நேரப்பா வதிசயங்கள் காணப்போரீர் நேர்மையுடன் சித்தனது வுரைபொய்யாதே
3975.
பொய்யான வுலகத்தில் மாந்தரப்பா பொங்கமுடன் கருமிகளு மெத்தவுண்டு
மெய்யாக வவர்களிடம் வாய்பேசாதே வேதாந்த நுட்பமதைக் காட்டவேண்டாம்
துய்யதொரு காயாதிகற்பந்தன்னை சூட்சத்து துறையதனைக் கூறவேண்டாம்
வையவே வுறவுகண்டு விடையுங்கேட்பார் பகராதே ஒருயக்காலும் மகிழ்ந்திடாதே
3976.
மகிழவே யுந்தனுக்கு யிதவுசொல்லி மாராட்டமாகவல்லோ கும்பல்கூடி
நெகிழவே ஞானத்துக் குறுதிகேட்டார் நெடிதான பாலமுர்த்த போதையுண்டு
மகிழவே தடுமாட்ட மிகவேகூறி தருக்கமது செய்துமல்லோ கருவிகேட்பார்
அகிழவே கருவதனால் உன்னைக்கொல்ல வப்பனே கபடுதந்திரஞ் செய்வார்பாரே
3977
பாரேதான் முழுமக்கள் கருமியோடு பகராதே வுன்னுக்குள் மருமவித்தை
தீரமுடன் சிவயோக நிலையிற்சென்று தீர்க்கமுடன் சதாநித்தம் பருவமாகி
நேரேதான் தீவழியை விட்டுநீங்கி நேர்மையுடன் நல்வழிக்கு யாளதாகி
கூரேதான் குவலயத்தில் அடக்கங்கொண்டு கொற்றவனே வாழ்குவது புத்தியாமே
3978.
புத்தியாம் இன்னம்வெகு மார்க்கஞ்சொல்வேன் புகழான கண்ணிமையே புகலக்கேளும்
சத்தியத்துக் கொருநாளும் குறைவராது தாரிணியில் நீயுமொரு சித்தனாவாய்
வெத்தியுண்டு விசுவாசமருளுமுண்டு வேதாந்தப் பெருங்கடலை வெல்லலாகும்
எத்திசையும் உந்தனையே புகழ்வார்பாரு எழிலான சீஷவர்க்க முதலவனாமே
3979.
ஆமேதான் அறிவுள்ள டமறானந்தர் வவனியிலே நீயுமொரு புத்திவானாய்
தாமேதான் யான்வருங்காலமட்டும் தன்மையுடன் சமாதியிட பக்கல்நின்று
நாமேதான் சொன்னபடி விதியின்மார்க்கம் நாட்டமுடன் தானிருந்துபத்திகொண்டு
போமேதான் வீண்காலங்கழியாமற்றான் பொங்கமுடன் சமாதியிடம் நிற்பீர்தாமே
3980.
நிற்கவே சுந்தரானந்தர்தாமும் நெடிதான வசரீரிவாக்குசொல்வார்
விற்பனமாங்கொண்டதொரு சீஷர்தாமும் விண்ணுலகில் எல்லவருங்கேட்டிருங்கள்
சொற்படியே தான்நடக்கும் சுந்தரன்சொல் தொல்லுலகில் பொய்யாது மெய்யேயாகும்
கற்புதைத்த பாறையது வெடிக்கும்போது கைலாச சுந்தரரும் வருவன்தானே

3981.
தானான சுந்தரரும் வருகும்போது தாரிணியில் வெகுகோடி வதிசயங்கள்
பானான பராபரியும் முன்னேநிற்பாள் பாருலகந்தத்தளிக்கும் ஜோதிகாணும்
மானான வையகங்களிருண்டுபோகும் மகத்தான நாதாக்கள் நடுங்குவார்கள்
கூனான மொண்டிசப்பானியெல்லாம் குரைநீங்கி பிணிநீங்கி யெதிர்நிற்பாரே
3982.
எதிரான சூரியனும் மங்கிநிற்பான் யெழுகடலுந்திசைமாறி பொங்கிநிற்கும்
சதிரான நாலுயுக வதிசயங்கள் சார்புடனே எக்காலுங் காணலாகும்
மதிபோன்ற சந்திரனும் எதிரேநிற்பான் மாசற்ற வருந்துதியும் நடுங்கும்பாரு
துதியான வஞ்சலிகள் மிகவே செய்வார் தொல்லுலகந் தத்தளிக்கக் காணலாமே
3983.
காணலாங் கைலாசமேருதானும் கண்ணுக்குத் தோற்றுமே கடினமில்லை
வேணபடி வுபசாரமிகநடக்கும் மேதினியில் சுந்தரனார் வாக்குபொய்யா
தோணவே யித்தியாதி வதிசயங்கள் தொல்லுலகில் தானடக்கும் சத்தியசத்தியம்
நீணவே எந்தனது சமாதிபாறை நெடியதொரு வதிசயங்கள் யின்னங்கேளே
3984.
கேளப்பா யான்வருகுங் காலந்தன்னில் கெனிதமுடன் பாறையதுமீதிலப்பா
நாளப்பா வருகுநாலெழுதலாகும் நாதாக்கள் புத்தியுள்ளோர் காணுவீர்கள்
ஆளப்பா வாசகத்தை கண்டபோது வப்பனே சமாதியுள் சிலம்பினோசை
வீளப்பா செவிதனிலே கேட்கும்பாரு விட்டகுறை யிருந்தோர்க்கு லபிக்குந்தானே
3985.
தானேகேள் சித்துவரும் நாளுமாச்சு தாரிணியில் வெகுகோடி மகிமைமெத்த
மானேகேள் சொரூபமென்ற சித்துதாமும் மகத்தான நவகோடிரிஷிகள்முன்னே
கானமுடன் சமாதிவிட்டு வெளியேவந்தார் கைலாயமேருகிரி சொரூபம்போலே
பானமிர்தம் வுண்டுமல்லோ பாரின்மீது பட்சமுடன் சித்தொளியைக் கண்டிட்டீரே
3986.
கண்டவுடன் சீஷவர்க்க மொன்றாய்க்கூடி கருத்துடனே வஞ்சலிகள் மிகவுஞ்செய்து
தெண்டமுடன் சாஷ்டாங்கம் மிகவும்பூண்டு தேற்றமுடன் ஞானோபதேசம்பெற்று
பண்டுடனே நவகனியும் அமுர்தம்தானும் பட்சமுடன் சித்துவுக்கு கொண்டுசென்று
விண்டதொரு வுபதேசம் பெற்றுக்கொண்டு வுத்தமர்கள் தாமிருந்தார் உண்மைபாரே
3987.
உண்மையாய் இப்படிதானிருக்கும்போது ஓகோகோ நாதாந்த சித்துதாமும்
வண்மையுடன் வையகத்தில் வந்துமல்லோ மககோடி வற்புதங்கள் செய்தார்பாரு
தண்மையாய் தானுரைத்த வாக்குயாவும் தாரிணயில் நிறைவேறிப்போச்சுதல்லோ
நன்மைபெற சீஷவர்க்கங் காணலாச்சு நாடனைத்தும் சுந்தரனார் கீர்த்தியுண்டோ
3988.
உண்டான கீர்த்தியது மிகவுமாகி வுண்மையுடன் கிரியைமுதல் வசரீர்தானும்
தொண்டர்கட்குத் தாமுரைத்த வாக்குபோல தொல்லுலகில் வதிசயங்கள் மிகவுமாகி
மண்டலத்தில் நாதாக்கள் சித்துதாமும் மதித்தாரே சுந்தரரை மதித்தார்பாரு
கண்டமுடி மாண்பரெல்லாம் தலைகுனிந்து கைலாசசுந்தரரை துதித்தார்பாரே

3989.
பாரேதான் யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பண்பான சுந்தரானந்தர்தானும்
நேரேதான் நெடுங்காலம் வையகத்தில் நேர்மையுடன் தாமிருந்தார் சீஷரோடு
சேரேதான் சிலகாலஞ் சென்றபின்பு சிறப்புடனே பூலோக வாழ்வுதன்னை
கூரேதான் பொய்யென்று மனதிலெண்ணி கொப்பெனவே சமாதிசெல்வேன் என்றிட்டாரே
3990.
இட்டாரே சுந்தரானந்தர்தாமும் எழிலாகச் சமாதிக்குச் செல்லவென்று
திட்டமுடன் மறுபடியுஞ் சமாதிக்கேக தீரமுடன் சீஷருக்கு விடையுஞ்சொல்லி
சட்டமுடன் சமாதிக்கு போரேனப்பா தாரணியில் சதாகாலம் நீங்களெல்லாம்
கிட்டிருந்து நான்வருகுங்காலமட்டும் கிருபையுடன் எதிர்பார்த்து நிற்பீர்தாமே
3991.
நிற்பீரே சிலகாலஞ் சமாதிபக்கல் நீடூழிகாலம்வரை முடிவுமட்டும்
அற்பமென்ற வாழ்வதனை மெய்யென்றெண்ணி  வவனியிலே மதிமயங்கி நிற்கவேண்டாம்
சொற்படியே சமாதிவிட்டு வருவேனானால் சுந்தரனே எந்நாளும் துதித்துக்கொள்ளும்
அற்பசுக தேகமது வழிந்துபோனால் ஆண்டவன்முன் கடைசிவரைக் காணலாமே
3992.
காணலாம் வுலகமது முடிவுதன்னில் கைலாசநாதரிடம் நிற்பேன்யானும்
தோணவே எந்தனையுங் காணலாகும் தொல்லுலகு முடிவுவரும் நாளிலப்பா
வேணபடி நீதிமனுமுறைகள்யாவும் விருப்பமுடன் தானடக்கும் தேவர்பக்கல்
நீணவே சீஷவர்க்கமனைத்துமேதான் நீடூழிமுடிவுதனில் காணலாமே
3993.
அமமெதான் வுலகுதனில் இருந்துமென்ன வப்பனே தேகமதை மறந்துவிட்டேன்
நாமேதான் பாசமதைத் துறந்துவிட்டேன் நாட்டினிலே நாதாக்களாசைவிட்டேன்
போமேதான் வுலகத்திலிருந்தாலுந்தான் பொன்னுலகும் எப்போதும் காணியாகும்
தாமேதான் தேகமது பொய்யேவாழ்வு சதாநித்தம் மோட்சமென்ற வீடுதானே
2994.
தானான லோகமதில் எல்லாம்பொய்யே சட்டமுடன் இருந்தவர்கள் யாருமில்லை
கோனான குருசொன்ன நூலும்பொய்யே குவலயமுமொரு காலமழிந்துபோகும்
தேனான சத்தசாகரமும்பா திறைமேடுவரை காணாதாகிப்போகும்
பானான வுலகமது வழிந்துபோகும் பாருலகைக் கண்டவர்களில்லைதானே
3995.
இல்லையே நாதாக்கள் சித்துதாமும் எழிலுடனே எல்லவரும் மாண்டாரப்பா
தொல்லையெனும் பிறவியது யற்றுப்போச்சு தோற்றமில்லை வண்டசராசரங்களெல்லாம்
வல்லதொரு வாத்மாவும் காணப்போகா மகத்தான லோகத்து மார்க்கமப்பா
சொல்லவென்றால் நாவில்லைப் பாவுமில்லை தொல்லுலகை மறந்தவனே சித்தனாமே
3996.
சித்தனாய்ப் பிறந்துமே பாலன்தானும் சிறப்புடனே காலாங்கி கிருபைதன்னால்
சுத்தமுடன் கிழக்கு தென்கிழக்குதானும் சஊட்சமுடன் தென்மேற்கு தெற்குதானும்
பத்தியுடன் மேற்குவடமேற்குதானும் பாங்கான வடகிழக்குதானும்
வெத்தியுடன் சுத்திவந்தேன் குளிகைதன்னால் வேதாந்தத்தாயினது ஒளிகண்டேனே

3997.
கண்டதொரு குளிகைதன்னால் கைலையெல்லாங் காசினியோர் தான்புகழசுத்திவந்தேன்
அண்டமுடன் அதிசயங்கள் எல்லாம்பார்த்து வப்பனே காலாங்கி கடாட்சத்தாலே
விண்டிடவே லோகாதிவதிசயங்கள் விருப்பமுடன் வாடிவைத்தேன் சத்தகாண்டம்
சண்டமாருதம் போல வேழாயிரந்தான் சாற்றினேன் லோகத்து மாண்பருக்கே
3998.
மாண்பான பெருநூலேழாயிரந்தான் மகத்தான நூலிதுதான் நாலாங்காண்டம்
காண்பான சத்தகாண்டந்தன்னிலேதான் கருவிகரணாதியெல்லாம் திரட்டிவைத்தேன்
நீண்பான காண்டமது ஏழுக்குள்ளே நினைத்ததொரு பொருள்களெல்லாங் காணலாகும்
தாண்பான சீனபதி யுலக்தார்க்கு தகமையுடன் செப்பினதோர் நூலிதாமே
3999.
நூலான நூலிதுதான் நாலாங்காண்டம் நுணுக்கமுடன் பாடிவைத்த சத்தகாண்டம்
பாலான நூலதுபோல் யாருஞ்சொல்லார் பாலகனே வாயிரத்துக்கொருகாண்டந்தான்
சேலான காண்டமது யேழுமாகும் சிறப்பான காவியமேழாயிரந்தான்
மாலான குருநூலாம் பொருநூலாகும் மகத்தான காண்டமது நான்குமுற்றே

# போகரின் சப்த காண்டம் – 7000

4001.
ஆதியென்ற சத்தி பராபரமேகாப்பு அகிலமெலாம் பேர்படைத்த வுமையாள் காப்பு
நீதியெனும் பரஞ்சோதி சுடரேகாப்பு நீடாழி யுலகனைத்தும் கொண்டோன்காப்பு
பாதிமதி சடையணிந்த பரமன்காப்பு பாதாளந்தனில் வாழும் சேடன்காப்பு
ஜோதியெனும் காலாங்கி பாதங்காப்பு சுத்தமுடன் தான்பணிந்தேன் பாதங்காப்பே
4002.
பணிந்தேனே காலாங்கிநாயர்பாதம் பாங்கான திருவடிக்கி நமஸ்கரித்தேன்
துணிந்தெனே காண்டமது ஏழுஞ்சொன்னேன் துறையான வாயிரத்துக்கு ஒருகாண்டந்தான்
மணிபோன்ற போகர்யேழாயிரந்தான் மகத்தான நூலிதுகாண் பெருநூலப்பா
கணிதமுடன் காண்டமிது வைந்துமாகும் காசினியில் வெகுமதியை யறியலாமே
4003.
அறியவே ஐந்தாவதானகாண்டம் வவனிதனில் அதிசயங்கள் இதிலடக்கம்
குறியான காண்டமது வைந்துக்குள்ளே குவலயத்தில் மலைகுகைகள் சாகரங்கள்
தெரியாத கானாறு குன்றுதானும் தெளிவான சத்தநதி யிதிலடக்கம்
சரியான சீனபதிமார்க்கமெல்லாம் சட்டமுடன் கூறுவேன் போகர்தானே
4004.
தானான காண்டமது வைந்துக்குள்ளே சாகரத்தின் பெருமையெலாம் சாற்றலாகும்
கோனான யெனதையர் காலாங்கிநாதர் குருபாதந்தனை வணங்கி யானுஞ்சொல்வேன்
பானான மனோன்மணியாள் முன்னேநிற்க பாடிவைத்தேன் போகரேழாயிரந்தான்
மானான நாதாக்கள் என்பேரிற்தான் மனங்கோபங் கொள்ளாமல் மன்னிப்பீரே
4005.
கொள்ளவே பிரிதிவென்ற பூமிதானும் குவலயத்தில் நான்கிலோர் பங்குமாகும்
விள்ளவே சத்தசாகரமுமப்பா மிக்கான மூன்றுபங்கென்னலாகும்
உள்ளவே காலாங்கி கிருபையாலே உத்தமனார் அடியேனும் குளிகைபூண்டு
தெள்ளமிர்தமானதொரு சாகரந்தான் தேற்றமுடன் திருப்பாலின் கடலுமாமே
4006.
கடலான ஏழுவரை கோடிமட்டும் காசினியில் குளிகைகொண்டு சுத்திவந்தேன்
மடலான சீனபதிகடலும்விட்டு மகத்தான திருப்பாலின் கடலுங்கண்டேன்
அடவர்க வஷ்டதிசை சுத்திவந்தேன் அப்பனே மற்றசாகரமும் கண்டேன்
திடலான நெய்க்கடலும் நானுங்கண்டேன் தீர்க்கமுடன் வுவர்கடலுங் கண்டேன்நானே
4007.
கண்டேனே யுவர்கடலை கடந்தபின்பு கடிதானன தயிர்க்கடலை யானுங்கண்டேன்
விண்டேனே மதுபானக்கடலுங்கண்டேன் விரிவான கறுப்பன் சாகரமும் கண்டேன்
அண்டமெலாம்புகழும் நன்னீரான வழகான சாகரமும் கண்ணிற்கண்டேன்
தண்டுலவ மாலையணிகிருஷ்ணன்கொண்ட சாகரமாம் மத்திபத்தில் இறங்கினேனே
4008.
இறங்கினேன் கிருஷ்ணனவர் பள்ளிகொண்ட எழிலான கடலினது நடுமையத்தில்
அறங்குடைய ஆவிலையைக்கண்டேனங்கே வப்பனே குளிகைகொண்டு வதின்மேல் நின்றேன்
திறமுடைய குளிகையது வலுவினாலே தீர்க்கமுடன் சென்றேறி வந்தேனப்பா
சிறகில்லாப் பட்சியது போலேநானும் கீர்த்தியுடன் குளிகையினால் பறந்திட்டேனே

4009.
இட்டேனே சத்தசாகரமுங்கண்டேன் எழிலான சத்ததீவுகளுங்கண்டேன்
திட்டமுடன் சம்புவென்ற தீவதங்கண்டேன் திகழான இலட்சமார் தீவுகண்டேன்
சட்டமுடன் செத்தீவு யானுங்கண்டேன் சார்பான கிரவுஞ்சத்தீவு கண்டேன்
வட்டமாஞ் சாகரத்தின் தீவுகண்டேன் மளமான சான்மலியுங் கண்டேன்பாரே
4010.
பாரேதான் சான்மலிவு தீவுகண்டேன் பாங்கான புஷ்கரத் தீவுகண்டேன்
நேரேதான் சத்ததீவுகளுங்கண்டேன் நேரான குளிகையது பூண்டுகொண்டு
சீரேதான் காலாங்கி புஜபலத்தால் சிறப்புடனே லோகமெலாம் சுத்திவந்தேன்
கூரேதான் சீனபதி யானுஞ்சென்றேன் குவலயத்தி லிதுபோல ஒன்றுங்காணே
4011.
காணேனே சீனபதி தேசம்போலே கண்டதில்லை ஒருதேசம் யானுமப்பா
பாலமுடன் சீனபதி கடலோரத்தில் பண்பான மலையொன்று குகைதானுண்டு
வானர்முதல் வந்திறங்கும் பொய்கையுண்டு வளமான மண்டபந்தான் அங்கொன்றுண்டு
தோணவே குளிகையது பூண்டுகொண்டு தொல்லுலகை யான்மறந்து சென்றேன்பாரே
4012.
சென்றேனே மலையிட்டு மண்டபத்தில் சேனநெடுங்காத வழிபோனேன்யானும்
நின்றதொரு இடிமலையாம் அங்கொன்றுண்டு நிலையான சப்தரிஷி மலைதானாகும்
குன்றான மலையோரங்குளிகைகொண்டு கொற்றவனார் காலாங்கி தனைநினைத்து
தென்திசையில் பொதிகைமுனி கார்த்தார்ப்போல தேர்வேந்தே யெந்தனையுங் காரென்றாரே
4013.
காரென்று சொல்லுகையில் காலாங்கிதம்மை கருத்திலே தான்நினைத்து நமஸ்கரித்து
ஆரென்று நினையாமல் ஐயர்பாதம் வப்பனே வணங்கினேன் கார்க்கவென்று
பாரென்னைக் காத்தருள வேண்டுமென்று பட்சமுடன் ஆதரிக்க மனமுவந்து
சீரென்ற நாமமது பேர்விளங்கி சிறப்புடனே யான்தொழுதேன் போகர்தாமே
4014.
தாமான அதிசயங்கள் யின்னஞ்சொல்வேன் தாக்கான மலைகளிலே ரிஷிகளப்பா
கோமானகள் தாமறியார் ரிஷியார்தம்மை குவலயத்தில் சத்தரிஷி யானுங்கண்டேன்
நாமான வரீசியென்ற ரிஷியார்தாமும் நலமான முதல்வரையி லிருந்தாரப்பா
வேமானமாகவல்லோ அத்திரியார்தாமும் வேகமுடன் இரண்டாங்கால் வரைமீதுண்டே
4015.
உண்டான அங்கீசுய ரிஷியார்தாமும் வுத்தமனே மூன்றாங்கால் வரையிலப்பா
திண்டான தவபதியிலிருந்துகொண்டு திறமான யோகநிஷ்டை செய்வாரப்பா
கண்டேனே நாலாங்கால் வரையிலப்பா கனமான புலஸ்தியரைக் கண்டேன்யானும்
சண்டமாருதம்போல ஐந்தாங்காலாம் சங்கநிதி மேல்வரையிலிருப்பார்பாரே
4016.
பாரேதான் புலகனாரிஷியார்தாமும் பான்மையுடன் மேல்வரையிலிருப்பாரங்கே
நேரேதான் ஆறாங்கால் மேல்வரையிலப்பா நேர்மையுடன் பிறகுமகரிஷிதானுண்டு
சீரேதான் ஏழாங்கால் வரைமேலப்பா சிறப்பான வரிஷ்டருங் கண்டேன்யானும்
தீரேதான் சப்தமகாரிஷிகள்தம்மை தீர்க்கமுடன் மலையதனில் கண்டேன்தாமே

4017.
தானான சப்தரிஷி யேழுபேர்கள் தாக்கான மலைகளிலே தவசிருக்கும்
கோனான குகைகளிலே கண்டேன்யானும் கொற்றவர்கள் ஆசீர்மங்கள் கண்டேன்யானும்
தேனான ரிஷிகளுள் சேர்வையான தீர்க்கமுடன் ஏழுவகை குளிகைபூண்டு
மானான மனோன்மணியாள் கிருபையாலே மலைமீதில் ஏழிவரை கண்டேன்காணே
4018.
காணவே ரிஷிகளிடஞ் சென்றேன்யானும் காலாங்கி நாதருட கிருபையாலே
பூணவே ஞானோபதேசம் பெற்றேன் பொங்கமுடன் கருவிகரணாதியெல்லாம்
தோணவே எந்தனுக்கு உபதேசங்கள் துரைராஜ சுந்தரனார் சொன்னாரங்கே
வேணவே சகலகலை கியானமெல்லாம் விருப்பமுடன் பிழைக்கவென்று கொடுத்திட்டாரே
4019.
கொடுத்தாரே பூவுலகில் பிழைக்கவென்று குவலயத்தி லென்மீதில் பட்சம்வைத்து
அடுத்ததொரு குளிகைக்கு வுறுதிசொல்லி அப்பனே சாரனைகள் மிகவுங்கூறி
வுடுத்துமே எந்தனையும் மலைவிட்டேகி வேதாந்த சித்துமுனி ரிஷிகளெல்லாம்
ஒடுக்கம்வர புத்தியது மிகவும்கூற ஓகோகோ சப்தரிஷி போவென்றாரே
4020.
என்றாரே சப்தரிஷி வுரையும்பெற்று எழிலான காலாங்கி கிருபையாலே
சென்றேனே குளிகையது மிகவும்பூண்டு சீனபதிக்குள்ளாக வந்தேன் யானும்
நின்றேனே எனதையர் காலாங்கிநாதர் நிலையான சமாதியிடஞ் சேர்வைசெய்தேன்
குன்றான மலைதனிலே ஏறியல்லோ கொப்பெனவே கமலமுனி கண்டேன்தாமே
4021.
தாமேதான் கமலனுனி சமாதிபக்கல் தன்மையுடன் யான்சென்று சேர்வைசெய்தேன்
வேடம்தான் சீனபதி கோட்டைக்குள்ளே வேகமுடன் குளிகைகொண்டு இரங்கினேன்யான்
போமேதான் சீனபதிபெண்களெல்லாம் போகமுடன் எந்தனுயும் அணையவல்லோ
நாமேதான் நினைத்தபடி பெண்களெல்லாம் நாட்டமுடன் மோகித்து வனைந்தார்பாரே
4022.
பாரேதான் நினைத்ததொரு கல்விதன்னால் பாங்கான சப்தரிஷிபோலேயப்பா
நேரேதான் நினைத்தவண்ணம் ரிஷிகள்போல் நேர்மையுடன் தான்பிரிந்தார் ரிஷிகளப்பா
சீரேதான் அவர்கொடுத்த வரத்தினாலே சிறப்பான சப்தரிஷிபிறந்தாரங்கே
கூரேதான் தேவரிஷி யென்னலாகும் குவலயத்தில் அரசரைப்போல் பிறந்தார்தாமே
4023.
பிறந்தாரே சீனபதிவரசுசெய்ய பேரான சப்தரிஷி யரசரப்பா
துறந்ததொரு ஞானிகள்போல் அரசரப்பா துப்புறவாய் சீனபதியாண்டதுண்டு
மறந்தாரே வெகுகாலம் இருந்துமல்லோ வையகத்தில் வாழ்க்கைதனை விட்டுநீங்கி
கறந்ததொரு பால்போலே ஞானம்பூண்டு காசினியில் வெகுகால மிருப்பார்பாரே
4024.
இருந்தாரே கோடிவரை யுகாந்தகாலம் எழிலான சீனபதிக்கேட்டைதன்னை
பொருந்தவே அரசாட்டசி நடத்தியேதான் பொங்கமுடன் காயாதிகற்பங்கொண்டு
திருந்தவே சமாதிதனில் இறங்கியல்லோ திட்டமுடன் தாமிருந்தார் சித்துதாமும்
வருந்தவே கோட்டையது யேழுசுத்து வாகாகத் தலைவாசல் ஏழுதானே

4025.
ஏழான தலைவாசல் ஒவ்வோர்சித்து யிறங்கியே சமாதியது பூண்டுகொண்டார்
தாழான திருவாசல் ஒவ்வோர்பக்கம் தன்மையுடன் சமாதியது பெருமைமெத்த
வீழாமல் தேகமது வழியாமற்றான் வீரான கோட்டையது வாசல்முன்னே
சாழான சமாதியது ஏழுங்கண்டேன் சட்டமுடன் சீஷவர்க்கம் நெருங்கினேனே
4026.
நெருங்கவே வெகுகோடி மாண்பரப்பா நேராக எந்தன்முன் வந்துநின்று
குருங்கையென்ற காமதனைத்தானெடுத்து கொப்பெனவே முடிமீதில் சுமந்துகொண்டு
தருக்கவே யாசீர்மம் மிகவுஞ்செய்து சட்டமுடன் எந்தனையுங் கேள்விகேட்டு
வருந்தியே இக்காலம் எங்கேசென்றீர் வண்மையுடன் வந்ததுவும் புதுமையாச்சே
4027.
ஆச்சென்ற புதுமையது மிகவுறைத்து வப்பனே யென்தேவா யிக்காலந்தான்
போச்சென்று தேகமது மனதிலெண்ணி பொங்கமுடன் வந்ததுவும் புதுமையாச்சு
பாச்சலுடன் காயாதிகற்பங்கொண்ட பாங்கான தேகமது என்றுசொல்லி
வீச்சலுடன் காலாங்கிகிருபையாலே விதித்துதே காணவல்லோ என்றிட்டாரே
4028.
இட்டாரே வெகுமாண்பர் கும்பல்கூடி எழிலாக எந்தனிடம் வந்தாரப்பா
சட்டமுடன் யான்கண்ட வதிசயங்கள் சார்புடனே யானுரைத்தேன் யோகமெல்லாம்
கிட்டமுடன் மாண்பரெல்லாம் அதிசயித்து தீரமுடன் வீற்றிருந்தார் சீனந்தன்னில்
பட்டமுள்ள அரசரது சமாதிவிட்டு பாங்குடனே குளிகைகொண்டு புறப்பட்டேனே
4029.
புறப்பட்டேன் சீனபதி கடலோரந்தான் புகழான வதிசயங்களெல்லாம்பார்த்து
திறக்கவே வடக்குமுகந் திருப்பால்தன்னில் தீரமுடன் குளிகைகொண்டு சென்றேன்யானும்
நிறமாறி தானிருக்கும் மாண்பரல்லோ நீடான வசுவத்தின் முகத்தைப்போல
உறமான மாண்பர்களைக் கண்டேனப்பா வுத்தமனே ஜெகத்துக்குள் இருப்பார்தானே
4030.
இருப்பாரே மலைமீதும் பாறைமீதும் எழிலான வட்டமதில் இறங்கினேன்யான்
விருப்பமுடன் குளிகையது பூண்டுகொண்டு வீரமுடன் அவர்களிடம் சென்றபோது
பொறுப்பான மலையொன்று குகைதானுண்டு பொங்கமுடன் ஐராவதம் என்னலாகும்
குருப்பான ஏழுவரை வுயரங்காணும் குணமான மலையொன்று கண்டேன்தானே
4031.
கண்டேனே என்வனத்தில் சந்தேகத்தால் கதனமுடன் குளிகைகொண்டு சென்றேன்யானும்
அண்டவொண்ணாப் பாறையது மேலேயுண்டு கவலயது யோசனைகள் சொல்லப்போமோ
தொண்டர்முனி சித்தர்களு மனேகமுண்டு தோற்றமுடன் எந்தனுக்கு கண்ணிற்றோன்ற
சண்டமாருதப் போலேயென்னைக் கண்டார் சட்டமுடன் யாரென்று கேட்டார்தாமே
4032.
கேட்டாரே சித்துமுனி எந்தனுக்காய் கிருபையுடன் யாரென்று கேட்கும்போது
தாட்டிகமாய் குளிகைகொண்டு வந்தவர்யார் தண்மையுள்ள சிறுபாலாவென்றபோது
நீட்டமுடன் காலாங்கி சீஷனென்றேன் நீடான சித்துமுனி ரிஷிகளெல்லாம்
வாட்டமுடன் எந்தனையும் வாசீர்மித்து வளமுடனே ஞானோபம்செய்தார்பாரே

4033.
பாரேதான் யானுமல்லோ சிலதுகாலம் பாண்மையுடன் அங்கிருந்தேன் சித்தர்பக்கல்
நேரேதான் வடகோடி கானகத்தில் நேரானதெதொப்புண்டு குளமுமுண்டு
ஊரேதான் என்றறிந்து வுளவறிந்து வுத்தமனே யாசீர்மங்காணுதென்றேன்
பேரென்ன வூரென்ன பதிதானென்றேன் பரான சத்தகன்னி பதியென்றாரே
4034.
பதியென்று சொல்லுகையில் அடியேன்தானும் பட்சமுடன் என்மீதில்கிருபைவைத்து
துதிபுரியும் சத்தகன்னி ஆசிர்மந்தான் துப்புறவாய் அவ்விடத்தில் சொல்லொணாது
மதிபோன்ற சத்தகன்னி இருக்குந்தானம் மகத்தான தேவதா வாசீர்மந்தான்
கதிபெறவே சென்றவர்க்கு எல்லாமுண்டு காசினியில் போவார்தா னில்லைதானே
4035.
இல்லையென்று போனாலும்கன்னிமார்கள் எழிலான மாண்பர்களை சபிப்பாரப்பா
கொல்லவே எமனுக்கு வுறுதியாகும் கோபத்தால் சாபமது வாய்க்கும்பாரு
புல்லவே யவ்விடத்திற் செல்லவேண்டாம் புகழான சத்தகன்னிமார்களப்பா
எல்லைவிட்டு போகாதே எந்தன்பாலா எடுத்துரைத்தார் எந்தனுக்கு மிகுதியாச்சே
4336.
ஆச்சென்று போகாமல் அடியேன்தானும் வன்புடனே மறுபடியுங்கேள்விகேட்டு
பாச்சலுடன் குளிகையது போட்டுக்கொண்டு பாங்கிமார் த்தகன்னி யேழுபேரை
மூச்சடங்கி போனதொரு தேகம்போல மொய்குழல்மார் முன்னடியேன்நின்று
ஏச்சியே யவர்களிடம் கண்டுபேசி எழிலாக யான்வருவேன் என்றிட்டேனே
4037.
என்றேனே சிறுபாலன் சொன்னவார்த்தை எழிலான தவமுனிகள் ரிஷிகள்கேட்டு
நின்றதொரு நெடுமூச்சு தானறிந்து நேர்மையுடன் எந்தனுக்கு யிதவுகூறி
குன்றின்மேல் செல்வதற்கு வினயஞ்சொல்லி கொப்பெனவே யாசீர்மம் மிகவுங்கூறி
வென்றிடவே அடியேனை யனுப்பினார்கள் விடுபட்டு குளிகைகொண்டு போனேன்நானே
4038.
போனேனே யாசீர்மந் தன்னிலேதான் பொங்கமுடன் காவனத்தை இறங்கினேன்யான்
சோனைபோல் சுனையருகே யிறங்கிநின்றேன் சொர்னமென்ற சத்தகன்னி மார்கள் கண்டார்
தேனேதான் அகலிகை யாசீர்மந்தான் திகழான முதற்பீடம் முதற்காவனந்தான்
மானேதான் திரௌபதியாம் ரெண்டாம்பீடம் மகத்தான சீதையது பீடந்தானே
4039.
சீதையாம் பீடமது மூன்றாம்பீடம் சிறப்பான தாரையாம் நான்காம்பீடம்
வேதையாம் மண்டோதரி ஐந்தாம்பீடம் மிக்கான சாமாலி யாறாம்பீடம்
பாதையாம் காந்திரௌதா சிறமாலியாகும் பாங்கான சத்தகன்னியேழுபேர்கள்
கோதையாம் தேவகன்னி யேழுபேர்கள் குளிகைகொண்டு யானுமங்கே கண்டிட்டேனே
4040.
கண்டேனே யவர்களிடம் வார்த்தைபேசி கலியுகத்து வதிசயங்கள் எல்லாங்கேட்டேன்
கொண்டல் வண்ணனச்சுதனார் செய்திகேட்டேன் கோடான கோடிபெண்கள் முறைமைசொன்ன
விண்டபடி வார்த்தையது மிகவுமங்கே வேதாந்தத் தாயினது வருளும்பெற்று
தொண்டனெனும் மைத்துனர்கள் ஐந்துபேரும் சுகமுடனே கேட்டுமல்லோ விசாரித்தாரே

4041.
கேட்டுமே கலியுகச் சேதிதன்னை கீர்த்தியுள்ள பஞ்சபாண்டவர்கள்தம்மை
வாட்டமுடன் கலியுக முதலில்தன்னில் வளமாக யெவ்விடத்தில் மடித்தாரென்று
நீட்டமுடன் எந்தனையும் கேட்கும்போது நீடுழி கோடிவரையிருந்தாரங்கே
காட்டமது கலியுக முதலிலப்பா கண்காணா மண்மேலே போனார்தாமே
4042.
போனதொரு செய்திதன்னை யானுரைத்தேன் பொங்கமுடன் எந்தன்மேல் பட்சம்வைத்து
தானமொடு சித்தர்முனி ரிஷியார் தம்மால் தாரிணியில் சாபமது நேரிட்டாலும்
தீனமொடு சாபமது சொல்லாமற்றான் தீர்க்கமுடன் எந்தனுக்கு வரந்தந்தாரே
4043.
தந்தாரே சாபமது நீக்கியல்லோ தாரணியில் சத்தகன்னி மார்கள்தானும்
அந்தமுடன் எந்தனுக்கு ஆசீர்மித்து அவனியெல்லாம் செல்வதற்கு அதிதஞ்சொல்லி
சொந்தமுடன் உபதேசம் மிகவுங்கூறி சூட்சாதி சூட்சமெல்லாம் தெளிவுரைத்து
எந்தனுக்கு மாற்றமென்ற மைகொடுத்து எழிலாக சீனபதி போமென்றாரே
4044.
என்றவுடன் காலாங்கி நாதர்தம்மை எழிலாக தானினைத்து சீனம்போக
சென்றுமே குளிகைகொண்டு வடியேன்தானும் சிறப்புடனே சீனபதிவந்தேன்யானும்
மூன்றுமே தானடந்த சேதியெல்லாம் முனையான சீனபதிமாந்தருக்கு
நன்றாகத் தானுரைத்தேன் அடியேன்தானும் நலமுடனே மனக்களிப்பு கொண்டார்பாரே
4045.
பாரேதான் சத்தகன்னி மார்கள்நேர்மை பாங்குடனே தானுரைத்தேன் சீனத்தார்க்கு
நேரேதான் எந்தனுக்கு உறுதிசொல்லி நேர்மையுடன் சாபமதை தவிர்த்தாரென்றே
ஊரேதான் போகவென்று விடையுந்தந்து வுத்தமர்க்கு ஆதியந்த முடிவுசொல்லி
பேரேதான் வாழ்கவென்று எந்தநாளும் பெருமையுடன் இருக்கவென்று வரந்தந்தாரே
4046.
தந்தாரே சீனபதி விட்டுவந்தேன் தகமையுள்ள குளிகையது பூண்டுகொண்டு
வந்தேனே தயிர்கடலுக்கப்பாலப்பா வாகான வடகோடி கானகத்தில்
சொந்தமுடன் யானுமல்லோ சென்றேனங்கே சுத்தமுள்ள யாசீர்மங்கண்டேன்யானும்
அந்தமுடன் ஆசீர்மம் நடுமையத்தில் அழகான வாயக்கால் கூடந்தானே
4047.
தானான கூடமது சித்தரக்கூடம் தன்மையுள்ள சித்தர்களும் அறியாநாடு
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்கு வுரைத்தநீதி
மானான வடகோடி கானகத்தில் வளமான வாயக்கால் மண்டபந்தான்
தேனான மனோன்மணியாள் இருக்கும்ஸ்தானம் தேவியென்ற கூடமது விசித்திரமாமே
4048.
ஆமேதான் ஆயக்கால் மண்டபத்தில் அண்டவொண்ணா தேவரிஷிகூட்டமப்பா
தாமேதான் காலாங்கி சொன்னவாக்கு தாரிணியில் மெய்யான வார்த்தைகொண்டு
போமெனவே வடகோடிகானகத்தில் பொங்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு
வேமெனவே யாசீர்மம் தன்னிற்சென்றேன் வேதாந்தத் தாயினது யிடங்கண்டேனே

4049.
கண்டேனே மனோன்மணியாள் வீற்றிருக்கும் கடிதான வாசீர்மந்தன்னைக்கண்டேன்
அண்டவொண்ணாச் சேனையது ரிஷிகள்கூட்டம் அங்ஙனமேயான்கண்டு பயமுங்கொண்டு
தொண்டரெனும் ரிஷிமுனிவர் சித்தர்தாமும் தோற்றமுடன் ஆசீர்மந்தன்னைச்சுற்றி
கொண்டல்வண்ணன் அச்சுதனும் முன்னேநிற்க கோடான கோடிவரை பார்த்திட்டேனே
4050.
பார்த்தேனே மனோன்மணியாள் ஆசீர்மத்தில் பலகோடி நவகோடி ரிஷியார்தாமும்
கார்த்துமே சதாகாஞ்சூழ்ந்திருக்க கண்மணி நவரத்தின வாசீர்மத்தில்
தீர்த்தமுடன் தடாகமென்ற பொய்கைதன்னில் திகழான மனுக்கூட்டம் அனேகம்பேர்கள்
சார்த்த கையாழ்வார் பன்னீராயிரந்தான் சட்டமுடன் தவசிருக்கக் கண்டேன்தானே
4051.
கண்டேனேமனோன்மணியாள் பொய்கைதன்னை மற்றெவரால் காணப்போமோ
தொண்டனென்னும் ஆழ்வார்கள் பொய்கையன்னில் தேற்றமுடன் காவலது பூண்டுநிற்பார்
வண்டுழலாள் மனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள் வசந்தமணிமண்டபத்தின் பொய்கைதன்னில்
தெண்டமுட னடியார்கள் கூட்டமெல்லாந் தெரிசிப்பார் மனோன்மணியை தெரிசிப்பாரே
4052.
பாரேதான் அடியேனுங்குளிகைகொண்டு பட்சமுடன் சீஷவர்க்கந்தன்னைக்கண்டேன்
நேரேதான் ஆசீர்மந் தன்னைச்சுற்றி நேர்மையுடன் காத்திருக்கும் ரிஷியார்பக்கல்
சீரேதான் குளிகையது பூண்டுகொண்டு சிறப்புடனே பொய்கைதனில் நடுமையத்தில்
கூரேதான் நீடாழி மண்டபத்தில் கொப்பெனவே இறங்கிவிட்டேன் பண்பாய்த்தானே
4053.
பண்புடனே ரிஷிமுனிவர் என்னைக்கண்டு பதறியே ஓடிவந்துயாரென்றார்கள்
திண்பான காலாங்கி நாதர்தம்மை திடுக்கிட்டு மனந்தனிலே தான்நினைத்து
நண்பாக காலாங்கி சீடனென்றேன் நாதாக்கள் சித்தொளிவு நடுங்கினார்கள்
கண்பான மனோன்மணியைக் காணவென்று காசினியில் குளிகைகொண்டு வந்திட்டேனே
4054.
வந்திட்டேன் என்றதுமே ரிஷியார்தாமும் வணக்கமுடன் எந்தனுக்கு வாசீர்மித்து
தந்திட்டார் மனோன்மணியைக்காணவென்று தகமையுடன் இடமதுவும் காண்பித்தார்கள்
அந்தமுடன் எந்தனையும் அழைத்துக்கொண்டு வன்பான வாசீர்மம் தன்னின்முன்னே
சொந்தமுடன் என்னைநிறுஃத்தி வுளவுசொன்னார் சூட்சமுடன் தான்கண்டு திரும்பினேனே
4055.
திரும்பியே மனோன்மணியைக்காணவென்று சிலகாலமங்கிருந்து வுளவுகண்டேன்
அரும்பொன்மணி நவரத்தின வாசீர்மத்தில் அழகான மனோன்மணியாள் பீடம்கண்டேன்
சுரும்புடைய பூந்துடையாள் சொரூபங்கண்டேன் தோற்றமுடன் கண்ணிற்குத் தோற்றலாச்சு
கரும்பெனவும் தேன்மாரி பொழியக்கண்டேன் கைலங்கிரி போலிருக்கும் பொய்கையாமே
4056.
ஆமேதான் பொய்கையிடம் கிட்டிநின்றேன் வப்பனே மனோன்மணியைக் கண்டதில்லை
தாமேதான் மனோன்மணியாள் ரூபம்போல சொரூபமானதொரு ஜோதிகண்டேன்
போமேதான் பொன்னான வாசீர்மத்தைப் பொங்கமுடன் நெடுந்தூரங் கண்டேன்யானும்
தேமேதானவச் சித்திரப்பொய்கையப்பா தெளிவான மண்டபத்தைப்பார்த்தேன்பாரே

4057.
பார்த்தேனே நீராழிமண்டபத்தை பளிங்கான பன்னகச்சாலைகண்டேன்
தீர்த்தமுடன் பூஞ்சோலைத் தன்னைக்கண்டேன் கதிழானன்னம்பலந்தன்னைக் கண்டேன்
சேர்த்துமே ரிஷிகோடி முனிவர்தம்மை சேனைமுதல் நவகோடி சித்தர்கண்டேன்
சார்த்தகிரி யாழ்வார்கள் கணக்கேயில்லை சட்டமுடன் வடகோடி மகிமைதானே
4058.
தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி சொல்லக்கேளும்
கோனான எனதையர் காலாங்கிநாதர் குவலயத்தில் வெகுகால மிருந்தாரப்பா
தேனான மனோன்மணியாள் காமரூபி தேவிதனை யொருநாளுங்கண்டதில்லை
பானான பராபரியாள் ஜோதியல்லால் பாங்கியரை ஒருநாளுங்காணேன்தானே
4059.
காணேனே என்றுசொல்லி காலாங்கிநாதர் கனமாக எந்தனுக்குச் சொன்னதுண்டு
வேணபடி வெகுகாலங் காத்திருந்தார் வேதாந்தத் தாயினது வருளைக்காண
மாணவே வரைகோடி காலமப்பா வையகத்தில் மனோன்மணியாள் சொரூபங்காண
நீணவே காயாதிகற்பங்கொண்டு நெடுங்காலந் தாமிருந்தார் தவசியாமே
4060.
தவசுடனே சின்மயத்திலிருந்துகொண்டு தாரிணியில் மதியமுர்தம் வெகுவாய்ப்பூண்டு
பவமகற்றி சமாதிதனில் கோடிகாலம் சட்டமுடன் தாமிருந்தார் நாதர்தாமும்
சிவக்கடலைக் காணுதற்கு வெகுவாய் எண்ணி தீரமுடன் சமாதிதனி லிருந்தாரப்பா
அவமுடனே சமாதிவிட்டு ஏகியுந்தான் வவனிதனில் மனோன்மணியைக் காணார்பாரே
4061.
பாரேதான் இன்னமொரு மார்க்கங்கேளு பாருலகில் வெகுகோடி சித்தருண்டு
நேரேதான் மனோன்மணியைக் கண்டதில்லை நேர்மையுடன் ஜோதியென்ற ஒளிவுகண்டார்
வீரேதான் சொரூபநிலைக்கண்டபோதே விருப்பமுடன் ஜோதிமயந்தன்னிற்தோன்றி
கூரேதான் மனோன்மணியை நினைத்தவண்ணம் கொப்பெனவே தெரிசனைப்போல்
தோற்றலாச்சே
4062.
தோற்றமுடன் புலிப்பாணி மைந்தாகேளு தொல்லுலகை சுத்திவந்து குளிகைகொண்டேன்
காற்றில்லா ராமேஸ்வரந் தானென்னுங்கனமான தனக்கோட்டி கடலைக்கண்டேன்
மேற்றிசைக்குக் கீழ்பாகங் கடலோரந்தான் மேலான தென்பொதிகை சமீபமப்பா
நாற்றமுள்ள சங்கதுவும் பிறக்கும்ஸ்தானம் நடுக்கடலாந் திட்டொன்று கண்டேன்பாரே
4063.
கண்டேனே நடுக்கடலாம் மத்திபத்தின் கனமான பாறையொன்று கட்டொன்றுண்டு
தண்டுளவ மாலையணி கிருஷ்ணபூபன் தகமையுள்ள மண்டபந்தா னங்கொன்றுண்டு
கொண்டல்வண்ணன் ஸ்ரீராமர் சீதாதேவி குடியிருப்பு வாசீர்மந் தன்னைக்கண்டேன்
வெண்டாமரைப் பொய்கையுண்டு ஸ்தலமுமுண்டு மேன்மையுள்ள குகையதுவும்
பார்த்திட்டேனே
4064.
பார்த்தேனே சீதையென்ற பெண்ணணங்கை பண்பான வச்சிரமாங் கல்லினாலே
நேர்த்தியாய் கைச்சிலையாய் அமைத்துமேதான் நேரான முகவையென்னும் சாகரத்தில்
பூர்த்தியாய் சேதுபதி ஸ்நாணம்செய்வோர் புகழான ராமருட தேவிதன்னை
தீர்த்தமுடன் சீதாவின் பிராட்டியரை தினக்கிரம வலங்காரம் செய்வார்தாமே

4065.
செய்வாரே ராமலிங்கம் பூசைசெய்து ஸ்ரீராமர் பிராட்டியார் ரூபங்காண
உய்யவே வோடமது தன்னிற்சென்று வுத்தமனார் ராமர்தேவிதன்னை
துய்யமுனி சித்தனவா ரிஷிகளெல்லாம் சுத்தமுடன் வோடமதிற்சென்றுமேதான்
பையவே விக்கிரகம் பூசைசெய்ய பட்சமுடன் போவாரும் வருவார்தாமே
4066.
தாமான யின்னமொரு மார்க்கங்கேளு தாக்கான தனக்கோட்டி யிடபாகத்தில்
வேமான மென்றதொரு வாசீர்மந்தான் மிக்கான காடுள்ளே குகைதானுண்டு
கோமானுக் கொப்பான ரிஷியார்தாமும் குருவான சாமியென்ற சித்துவுண்டு
நாமான மாகவல்லோ குளிகைபூண்டு நன்மையுடன் சென்றேனே வனந்தானுள்ளே
4067.
உள்ளான வாசீர்மந் தன்னிற்சென்றேன் ஓகோகோ நாதாக்கள் சித்தருண்டு
கள்ளரென்ற சித்தரப்பா கணக்கோயில்லை காசினியில் அவர்பெருமை மெத்தவுண்டு
தெள்ளமுர்தமானதொரு சித்துமுன்னே சிறப்புடனே குளிகைகொண்டு யானும்சென்றேன்
மெள்ளவே சித்தர்முனி கண்டபோது மேதினியில் யாரென்று எனைக்கேட்பாரே
4068.
கேட்டவுடன் சித்தர்கட்கு விடையுஞ்சொன்னேன் கெடியான காலாங்கி சீஷனென்றேன்
நீட்டமுடன் தனக்கோட்டி காணவந்தேன் நீதியுடன் சீதையென்னும் தேவிகண்டேன்
வாட்டமுடன் இடப்பாகங் குளிகைகொண்டேன் வாகான வாசீர்மமிங்கேகண்டேன்
நாட்டமுடன் குளிகைகொண்டு இறங்கியல்லோ நாதாந்த சித்தொளிவைக் கண்டேனே
4069.
கண்டவுடன் ரிஷிக்கூட்டம் முனிவர்தாமும் கருத்துடனே எந்தனுக்கு உறுதிசொல்லி
அண்டமுடன் ஆகாயரிஷிகள் தேவர்அப்பனே அதிசயங்கள் தாமுரைத்து
மண்டலங்கள் தான்புகழும் ரிஷியார்தம்மை வாட்டமுடன் யான்கண்டேன்போகர்தாமும்
தண்டமிழ்சூழ் சித்தர்முனிரிஷிகள் கூட்டம் தன்மையுடன் எந்தனுக்கு விதிசொன்னாரே
4070.
வதியான வாசகத்தை யானுங்கேட்டு விருப்பமுடன் குளிகைகொண்டு வாசீர்மத்தில்
பதியான குபர்னரிஷியார்தம்மை பட்சமுடன் காணுதற்கு வருகிற்சென்றேன்
ததியான ரிஷிபக்கஞ்சென்றபோது தகமையுள்ள ரிஷியாரும் என்னைப்பார்த்து
மதிபோன்ற திருமுகத்தை நோக்கியல்லோ மார்க்கமுடன் வார்த்தையது சொன்னார்பாரே
4071.
சொன்னாரே குருபர்ன ரிஷியார்தாமும் தெதொற்றமுடன் சிறுபாலா எங்கேவந்தீர்
மன்னவனே குளிகைகொண்டு வந்ததென்ன மாராட்டமாகவல்லோ வந்தாயப்பா
வன்னநெடுங்கோபமுள்ள சித்தர்தாமும் வளமுடனே யுந்தனையும் சபிப்பாரப்பா
இன்னநெடுங் காலமிலா திந்தகாலம் யிறையவனே ஏன்வந்தீர் என்றிட்டாரே
4072.
இட்டாரே குருபர்ன ரிஷியார்தாமும் எழிலான போகர்முகந்தன்னைப்பார்த்து
பட்டமரந் துளித்ததுபோல் பாலாநீயும் பட்சமுடன் வந்ததினால் வுந்தனுக்கு
சட்டமுடன் வரந்தருவேன் என்றுசொல்லி சாங்கமுடன் எனக்குரைத்தார் ரிஷியார்தாமும்
அட்டதிசை புகழவல்லோ வரங்கள்பெற்று வாசீர்மந்தான்கடந்து வந்திட்டேனே

4073.
வந்திட்டேன் தனக்கோட்டிக் கடலோரந்தான் வாகான சம்புவென்ற சங்கரைக்கண்டேன்
பந்திட்டமாகவல்லோ கடலோரந்தான் பாரினிலே குளிகைகொண்டு செல்லும்போது
முந்திட்ட குருபர்னார் செய்தியெல்லாம் முனையான சம்புவென்ற சங்கர்தானும்
தொந்திட்ட மாகவல்லோ சம்புதானும் தொன்மையுடன் தானுரைக்கக் கேட்டிட்டேனே
4074.
கேட்டேனே முத்தினாசிர்மந்தானும் கெடியான சாகரத்தைக் கிட்டிவந்தேன்
நீட்டமுடன் முத்துரையுங் கடல்தானப்பா நீடாழி சாகரமும் வுளவுமெத்த
தேட்டமுடன் ஆணியென்ற முத்துதாமும் தெளிவான கடல்தனிலே விளையுஞ்சிப்பி
நாட்டமுடன் சித்தர்முனி ரிஷியார்தாமும் நவிலவே தானிருக்கும் கடல்தானாமே
4075.
கடலான நடுமையம் பாறைமீதில் கனமான சம்புமகாரிஷியாசீர்மம்
அடலான வாய்கால் மண்டபந்தான் அழகான கள்ளழகர் கோட்டைதானும்
மிடலான தேவதா ஸ்தலமுமுண்டு மிக்கான வடிவேலர் கோயிலுண்டு
குடதிசையாம் பக்கமதில் பொய்கையுண்டு குறிப்பான சம்புமகாபதிதானாமே
4076.
பதியான பாறையின்மேல் மகிமைமெத்த பாங்கான கோட்டையது கள்ளர்கோட்டை
மதிபோன்ற சம்புமகாரிஷியார்தாமும் மகத்தான வாசீர்மம் சொல்லப்போமோ
துதியுடனே மாண்பரெல்லாம் கோடாகோடி துப்புறவாய் தெரிசித்து வருவார்போவார்
கதிபெறவே வடிவேலர் கோயில்காண காசினியில் வெகுகோடி வருவார்தானே
4077.
வருவாரே யாசீர்மந் தன்னிற்சென்று வரமுடனே வெகுபேர்கள் கோடிமாண்பர்
மருவான முல்லையிருவாட்சியொடு மகத்தான நமஸ்கார மஞ்சலித்து
குருவான சம்புமகாரிஷியைத்தானும் கோடிப்பார் திரிகால பூசைமார்க்கம்
உருவான வடிவேலர் தம்மைக்காண வுகந்துமே தான்போவார் கோயில்தாமே
4078.
தாமான வாசீர்மந்தன்னைவிட்டு தாக்கான வடிவேலர்கோயில்பக்கல்
போமேதான் வெகுகோடி மாண்பரப்பா பொங்கமுடன் அர்ச்சனைகள் மிகவுஞ்செய்வார்
பூமேவும் பன்னகச்சாலைதன்னில் புகழான புட்பமது மிகப்பறிப்பார்
தேமேவும் நவதாதுகனிகளோடு தெளிவாக தானரைத்துப் பூசிப்பாரே
4079.
பூசிக்குங் கிரியைதனை யானுங்கண்டேன் பொங்கமுடன் தனக்கோட்டி யானும்வந்தேன்
நேசித்து சம்புமகாரிஷியார்தம்மால் நேசமுடன் பின்னும்யான் சென்றுவந்தேன்
ஆசித்து ஆசீர்மந்தன்னில்வந்து யடியேனும்தலைவணங்கி முடிவணங்கி
வாசித்துப் பிணவத்தை யோதியேதான் வணக்கமுடன் பின்னும்யான் தொழுதிட்டேனே
4080.
தொழுதேனே ரிஷியார்தம் சீர்பாதந்தான் தோத்திரங்கள் மிகச்செய்து கரங்குவித்து
பழுதுறா சாபமதுநேரிடாமல் பாலகனையெந்தனையுங் காக்கவென்று
அழுதுமே வடியேனும் முடிவணங்கி வன்புடனே காலாங்கி தனைநினைத்து
நெழுகாமல் தாள்பணிந்தேன் அடியேன்தானும் நேர்மையுடன் வரமெனக்கு
கொடுத்தார்பாரே

4081.
பாரேதான் குளிகையது பூண்டுகொண்டு பாரினிலே சம்புவரம்பெற்றுவந்தேன்
நேரேதான் மத்துறையும் நாடுகண்டேன் நெடிதான ஆழியது யானுங்கண்டேன்
சீரேதான் சிப்பினுறை முத்துதானும் சிறப்பான கடலதுவும் பார்த்துவந்தேன்
ஊரேதான் குருபர்ன ரிஷியாசீர்மம் வுத்தமனே யான்கண்ட வளம்சொல்வேனே
4082.
வளமான மார்க்கமது யின்னங்கேளு வளமான தனக்கோட்டி வடபாகத்தில்
தளமான பதியென்று பாறைகண்டேன் தண்மையுள்ள சம்புமகாரிஷியைக்கண்டேன்
குளமான பொய்கையது சித்தர்வாழ்க்கை குவலயத்தில் அதற்கீடு யாதொன்றில்லை
பளமான நவகனியும் நவதான்யத்தோடு பாறையதில் தான்விளையும் பாண்டினாடே
4083.
நாடான பாண்டிவள நாட்டைக்கண்டேன் நவகோடிரிஷிமுனிவர் ஆசீர்மந்தான்
காடான தவமுனிகள் வுறையும்நாடு காசினியில் மாண்பர்கள்தானறியானாடு
கோடான கோடியிலே யொருவனப்பா குறையான விட்டகுறையிருக்குமானால்
தடாண்மைக்கொண்டதொரு தளமுங்காண்பார் தாரிணியில் அவனுமொரு சித்தனாமே
4084.
சித்தனாய்ப் பிறந்தாலும் என்னலாபம் சீரான விட்டகுறை யிருக்கவேண்டும்
கந்தனது பதவிதனைப் பெறவேவேண்டும் காசினியில் விதியாளிப் பெறுவானப்பா
சத்தமுடன் ஞானோபதேசந்தன்னை சூட்சாதி சூட்சமதை யறியவேண்டும்
பித்தனைப்போலிருக்காமல் பேரின்பத்தில் பேருலகில் வாழ்பவனே யோகியாமே
4085.
யோகமென்றால் யோகமது சொல்லொண்ணாது யொளிவான பிரகாசமானஜோதி
பாகமுடன் சின்மயத்தின் நிலையில்நின்று பட்சமுடன் சதாகாலமர்ச்சித்தேதான்
சோகமது வாராமல் சமாதிதன்னில் தொல்லுலகில் மாய்கையது வாசையற்று
வேகமுடன் மனோன்மணியை மனதிலுண்ணி வெட்டவெளியம்பரத்தே நிற்பீர்தாமே
4086.
நிற்பீரே நிலைதனிலே நின்றுகொண்டு நீடான பிரணவத்தை யுச்சரித்து
கற்பதித்த தூணதுபோல் எந்தநாளும் கலங்காமல் சமாதிதனில் நின்றுகொண்டு
சொற்படியே குருவினது மொழியுங்கேட்டு தோராமல் ஞானமது பூண்டுகொண்டு
பற்பல பேதத்தின் பேதாபேதம் பாரினிலே சொல்லாத பான்மையாமே
4087.
பான்மையென்ற சதாநிலையில் நின்றுகொண்டு பட்சமுடன் யோகமதை நிலைநிறுத்தி
ஆன்மாவுக்கொருநாளும் அழிவில்லை வவனிதனில் நீயுமொரு சித்தனைப்போல
மேன்மையுடன் தானிருந்து வையகத்தில் மெய்யான வழியறிந்து பதவிகண்டு
மான்மையென்ற மோட்சவழிக்காளதாகி மகிதலத்திலிருப்பவனே புத்திவானே
4088.
புத்தியென்றால் வாதமது காண்பதற்கு புகழான யோகமதை நிறுத்துதற்கும்
நித்தியமும் வாசியையுள்ளடக்கி நிகழான சுவாசமதை மேல்நோக்காமல்
சத்தியென்ற சொரூபமதைக் கண்னிற்கண்டு சதாகாலம் கரமவினைதனையகற்றி
முத்திபெற வழிபாடு செய்துகொண்டு மூதுலகில் இருப்பவனே தர்மவானே

4089.
தர்மமா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தாரிணியில் காலாங்கி கடாட்சத்தாலே
கர்மமென்ற பவக்கடலை விட்டகற்றி கருவிகரணாதியுடன் தொந்தம்பார்த்து
வர்மமுடன் நடப்பவனே புத்திவானாம் வரைகடந்துயிருப்பவனே கழுதைமாண்பன்
தர்மவினை விட்டகற்றித் தாரிணிதன்னில் சட்டமுடன் பேருண்டாய் வாழ்குவீரே
4090.
வாழ்கவே யின்னமொரு மகிமைகேளும் வாகான தனக்கோட்டி கடலிலப்பா
தாழ்கவே வலைகடலில் சத்தந்தானும் தண்மையுடன் நின்றதொரு வளப்பஞ்சல்வேன்
மாழ்கியதோர் கடல்தனில் பாறைமீதில் மகத்தான குருபர்ன ரிஷியார்தாமும்
வேழ்வியுடன் ஆசீர்மந்தனைநடத்தி விருப்பமுடன் தானடத்தும் காலந்தானே
4091.
தானான யாகமது நடந்தபோது தாக்கான தங்கையென்ற பதியில்வாழும்
தேனான மாதைமையாள் சீதாதேவி தென்னிலங்கை பதியைவிட்டு வாசீர்மத்தில்
கோனான குருபரனார் வேழ்வியாகம் கோதையருந்தான் பார்க்கவந்தபோது
பானான தனக்கோட்டி கடலில்தானும் பாரமுடன் சத்தமது கேட்கலாச்சே
4092.
கேழ்க்கவென்றால் இன்னமொரு மார்க்கங்கேளு கெடியான பற்பமென்ற மனையில்தானும்
வேழ்க்கமுடன் காற்றோசைத் தன்னினாலே வேகமுடன் அலைபனையும் வீசலாச்சு
சூழ்க்கமுடன் சப்தமதை மாதுகேட்டு சுத்தமுள்ள யாசீர்மம் யாகந்தன்னில்
தாழ்க்கமல நவரத்தின கசிதந்தன்னில் தவிக்கவொட்ட சப்தமதை கண்டார்தாமே
4093.
கண்டதொரு அலைகடலின் சப்தந்தன்னை காரிழையாள் ஸ்ரீராமர் தேவியப்பா
கொண்டல்வண்ணன் அச்சுதனை தனைநினைத்து கொடுத்ததொரு சாபத்தால் அலையும்போச்சு
விண்டபடி கற்பகத்தருவுக்கப்பா மேதினியில் சப்தமது யில்லைகண்டீர்
தண்டலென்னும் பனைமரமும் அசைவுமில்லை தாரிணியில் தனக்கோட்டி மார்க்கந்தாமே
4094.
மார்க்கமுடன் தென்திசையில் கடலில்தானும் மகத்தான ஸ்ரீராமர்தேவிதன்னால்
ஏர்க்கவே கடலோசை நின்றுபோச்சு எழிலான தனக்கோட்டி மகிமையப்பா
தீர்க்கமுடன் சம்புமகாரிஷிபலத்தால் சங்கதுவும் பிறக்கலாச்சு
வர்க்கமுடன் திரிசங்கு தன்னினாலே வாகான கோட்டையது கட்டலாச்சே
4095.
ஆச்சென்று போகாமலின்னஞ்சொல்வேன் அப்பனே புலிப்பாணிமைந்தாகேளு
மாச்சலென்ற தனக்கோட்டி கீழ்பாகத்தில் மகத்தான திருச்சங்கு கோட்டையுண்டு
நீச்சுடனே கடல்தனில் பிறந்தசங்கு நிலைகோடி சங்கதனை யெடுத்துமல்லோ
வீச்சுடனே காதவழிக்கோட்டைதானும் விருப்பமுடன் கட்டிருக்கக் கண்டேன்பாரே
4096.
கண்டேனே தனக்கோட்டி கடல்மையத்தில் கனமான திருச்சங்கு யாழிக்கோட்டை
அண்டர்முதல் தேவாதி ரிஷிகளெல்லாம் வன்புடனே வந்திரங்கும் கோட்டையப்பா
தண்டுல கிருஷ்ணாவதாரந்தானும் தகமையுள்ள வாசீர்மமொருபக்கந்தான்
கொண்டல்வண்ணனாசீர்மம் அதற்குப்பின்னால் குறிப்பான யேழுசுத்து கோட்டைபாரே

4097.
பாரேதான் ஏழுசுத்து கோட்டையப்பா பாங்கான ஆணிமுத்து மதில்தானாகும்
நேரப்பா ஆணிமுத்து தன்னினாலே நிலையான கோட்டையது கட்டிருக்கும்
சீரேதான் ஏழுசுத்து கோட்டைக்குள்ளே சிறப்பான பிரிங்கி மகாரிஷியாசீர்மம்
கூரேதான் மாண்பர்களும் காணப்போமோ குவலயத்தில் தனக்கோட்டி மகிமைதானே
4098.
தானான ஏழுசுத்து கோட்டைக்குள்ளே நவகோடி ரிஷிகளுமே சூழ்ந்திருப்பார்
மானான மதில்தனிலே சித்துமாண்பர் மகாதவசிவீற்றிருப்பார் கோட்டைதன்னில்
மோனான வாசீர்மந் தன்னில்தானும் மகத்தான முத்துசிம்மாதனந்தான்
கோனான பிரிங்கிமகாரிஷியார்தாமும் கொற்றவனார் வீற்றிருக்கும் பதிதானாச்சே
4099.
ஆச்சப்பா குளிகையது பூண்டுகொண்டேன் வப்பனே யாசீர்மந்தன்னிற்சென்றேன்
கூச்சலுடன் ரிஷிமுனிவர் சித்தர்கூட்டம் கூறவொண்ணா கோஷ்டமது சொல்லப்போமோ
பேச்சரியா மாண்பர்களோ காணப்போரார் பேரான பிரிங்கி முத்துரிஷியாசீர்மம்
மாச்சலுடன் காண்பதற்கு முடியாதப்பா மகத்தான சித்தரு கோட்டையாச்சே
4100.
கோட்டையாந் திருச்சங்கு கோட்டையப்பா குறிப்பான ஆணிமுத்து கோட்டைதன்னை
நீட்டமுடன் கோட்டைதனை யறியமாட்டார் நீடான சாகரத்தில் சொல்லமாட்டார்
வாட்டமுடன் குளிகைகொண்டு காலாங்கிநாதர் வகுப்பான மகிமையினால் கண்டேன்பாரு
தேட்டமுடன் எனதையர் சொன்னவாக்கு தெளிவான சொற்படியே காணலாச்சே

# போகரின் சப்த காண்டம் – 7000

4101.
காணவே கலியுகத்துமுன்னேயப்பா காலாங்கிநாதர் சொன்னதிருவாக்குத்தான்
தோணவே யெந்தனுக்கு இப்போதல்லோ தோற்றமுஜடன் எந்தனுக்குக்காணலாச்சு
வாணர்முதல் சொன்னதொரு கோர்வையெல்லாம் வளமாக இவ்வண்ணஞ்
சொன்னதில்லை
பூணவே குளிகையது பூண்டுகொண்டு புகழான கோட்டைதனை பார்த்திட்டேனே
4102.
பார்த்தேனே பிரிங்கி மகாரிஷியார்தன்னை பட்சமுடன் அடியேனும் அஞ்சலித்து
தீர்த்தமுடன் சோடசோபாரத்தோடு திக்காதி பிரிங்கிரிஷியார்முன்னே
சேர்த்துமே கரங்குவித்து சிரமேல்வைத்து சிறப்புடனே தான்பணிந்து வஞ்சலித்தேன்
பூர்த்தியுடன் மனதுவந்து சாமிபாதம் பொன்னடியை மறுக்காலும் தொழுதிட்டேனே
4103.
தொழுதுமே முக்காலும் பணிந்துமேதான் தொல்லுலகையான் மறந்துதுதித்தேனப்பா
பழுதுபடாத திருமேனி க்காவலாரே பாருலகில் பள்ளிகொண்ட நாயனாரை
முழுதுமே யாழியது கோட்டைசுத்தி மோனமுடன் குளிகைகொண்டு நிற்கும்போது
வழுவாக யாசீர்மம் அங்கேகண்டேன் வண்மையுள்ள கிருஷ்ணராசீர்மந்தானே
4104.
தானான துவாரகையாம் புருடனப்பா தாக்கான கிருஷ்ணரவராசீர்மந்தான்
தேனான திருச்சங்குகோட்டைக்குள்ளே தெரிசித்தேன் முத்தினாசீர்மம்பின்னால்
வானான பிரிங்கி மகரிஷியார்பக்கம் வகுப்பான வாணிமுத்துக்கோட்டையோரம்
மானான மகதேவன் ஆசீர்மந்தான் வையகத்தில் பார்தவர்கள் இல்லைதானே
4105.
இல்லையே ஒருவருந்தான் கண்டதில்லை எழிலான பிரிங்கிரிஷி கோட்டைகண்டேன்
புல்லவே யடியேனைப் பார்த்தபோது புகழான சிறுபாலா வென்றுசொல்லி
வல்லதொரு காலாங்கி சீடபாலா வாகான போகரென்று தானழைத்து
சல்லாபங் கொண்டலல்லோ என்னைப்பார்த்து சட்டமுடன் யாரென்று மதிப்பிட்டாரே
4126.
மதித்துமே எந்தனையும் கேட்டபோது மகத்தான காலாங்கிச்சீடனென்றே
துதிப்புடனே எந்தனையுமாசீர்மித்து துப்புறவாய் பட்சமதுகொண்டு என்னை
கதிரோன்கள் காணாத ஆழிக்கோட்டை கருவுடனே யுளவறிந்து குளிகைகொண்டு
விதிப்படியே விட்டகுறை யிருந்ததாலே விருப்பமுடன் உந்தனையும் காணலாச்சே
4107.
காணுதற்கு காலம்வந்து சேர்ந்துதென்று காலாங்கி நாதரதுகிருபையாலே
வேணபடி பலாபலத்தின் மகிமையாலே வினையமுடன் கோட்டையது கண்டாயென்று
கோணாமல் மனதுவந்து என்னைப்பார்த்து கொற்றவனே காலாங்கிசீடர்யென்று
நீணவே பிரிங்கிமகாரிஷியார்தாமும் நீட்சியுடன் சந்தோஷம்கொண்டார்தாமே
4108.
தாமான பிரிங்கி மகாரிஷியைத்தானும் தகமையுடன் கண்டுவந்து வுறவுபேசி
ஆமான மானதொரு வாணிமுத்து அலைகடலில் விளைகின்ற வதிதங்கேட்டேன்
நாமான வார்த்தைக்கி வன்பர்தாமும் நாதரதுகாலாங்கி கிருபையாலே
ஏமாந்து முத்துரையும் வளமைசொன்னார் எழிலான முத்துவளங்கண்டிட்டேனே

4109.
கண்டேனே முத்துறையும் நாடும்கண்டேன் கருவான ஆணிமுத்து தானுங்கண்டேன்
கொண்டேனே வெகுதூரங் குளிகைகொண்டு கொப்பெனவே முத்துறையும்
பதியுங்கண்டேன்
விண்டிட்ட குளிகையது பலத்தினாலே வீரான ஆழிவரை சுத்திகண்டேன்
உண்டதொரு குண்ணளவு முத்துகண்டேன் வுகமையுள்ள சிப்பிமுத்து கண்டேன்பாரே
4110.
பார்த்தேனே மலைமலையாய் முத்துதன்னை பாங்கான ஆழிக்குள் அனேகங்கண்டேன்
நேர்த்தியஉடன் முத்தெடுக்கும் பதமுங்கண்டேன் நேர்மையுடன் உளவுதனை
யறிந்துகொண்டு
சேர்த்துமே ஆணிமுத்து கையிலேந்தி சிறப்புடனே சீனபதியானுஞ்சென்றேன்
பூர்த்தியுடன் குளிகைதனை விட்டிறங்கிப் புகழாக சமாதியிட மிறங்கினேனே
4111.
இறங்கியே காலாங்கி நாதர்தம்மை யெழிலான சமாதிதனை தெரிசித்தேன்யான்
திறமான காலாங்கிநாதர்தானும் தீரமுடன் யான்வந்தசேதிகண்டு
வரமுடனே எந்தனுக்கு வசீரராக வாக்களித்தார் எந்தனது குருபரன்தான்
கரங்குவித்து முடிவணங்கி யடியேன்தானும் கர்த்தாவைத் தெண்டனிட்டுப்
பணிந்திட்டேனே
4112.
பணிந்தேனே காலாங்கிநாயர்பாதம் பட்சமுடன் தெண்டனிட்டுப் பதியிற்சென்றேன்
அணியணியாய் சீனபதிமாண்பரெல்லாம் வன்புடனே எனைவந்துகண்டாரப்பா
துணிவுடனே கொண்டுவந்த முத்தையெல்லாம் துப்புறவே சீனத்தார்க்கறியச்சொல்லி
மணியான முத்துறையும் கடலையானும் மாண்பர்களே கண்டுவந்தேனென்றிட்டேனே
4113.
இட்டேனே முத்திருக்கும் பதியுஞ்சொன்னேன் எழிலான திருச்சங்குக்கோட்டை
சொன்னேன்
வட்டமுடன் திருசங்குகோட்டைபக்கல் வாகான கிருஷ்ணவாசீர்மஞ்சொன்னேன்
பட்டணங்கள் சீனபதிமார்க்கமெல்லாம் பட்சமுடன் யான்வந்து சேதிகண்டு
திட்டமுடன் மாண்பரெல்லாம் எந்தனுக்கு தீரமுடன் ஆசீர்மஞ்சொன்னார்பாரே
4114.
பார்க்கவே எந்தனுக்கு பணிந்துமேதான் பட்சமுடன் முத்திருக்குந் தீவுதன்னை
தீர்க்கமுடன் போகவென்று வடையாளங்கள் தீரமுடன் கேட்டார்கள் மாண்பரெல்லாம்
ஏர்க்கவே யாழியென்னுங் கடலிலப்பா எழிலான முத்தெடுக்கப் போகாதப்பா
மார்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு மகத்தான முத்தெடுக்க வேண்டும்பாரே
4115.
பாரேதான் குளிகையது யில்லாவிட்டால் பாங்கான நீராவிக்கப்பல் வேண்டும்
நேரேதான் நீராவிக்கப்பல்தன்னில் நேர்மையுடன் நிர்மித்து நீங்களெல்லாம்
ஊரேதான் நீராவிக்கப்பல்கொண்டு வுத்தமனே முத்தாழிக்காணவேண்டும்
சேரேதான் ஆழிதடம்நடக்கும்போது சீரான யுத்தியது வேண்டுந்தானே

4116.
தானான தனக்கோட்டி வடபாகத்தில் தாக்கான முத்தாழிதீவுமுண்டு
தேனான சித்தர்முனி கண்டதில்லை தெவதா ரிஷிகளெல்லாம் காணுமாழி
பானான பராபரியாள் வாசஞ்செய்யும் பாங்கான முத்துறையுந்தீவுமாச்சு
மானான மண்டபத்தில் யாருங்காணார் மகத்தான முத்துரையுந் தீவுமாச்சே
4117.
ஆச்சப்பா தீவுவழி செல்லும்போது வப்பனே கடல்தனிலே அடக்கமுண்டு
நீச்சுடைய கடல்தனிலேபோகும்போது நீடான மலைப்பாறைக்குண்ணுமுண்டு
வீச்சுடனே நீராவி மரக்கலந்தான் வீறுடனே யாழிதனில் செல்லும்போது
மாச்சலென்ற மலைவளத்தா ரிடருண்டாகும் மகத்தான மரக்கலமும் உடைந்துபோமே
4118.
போமேதான் நீராவிக்கப்பல்தானும் பொங்கமுடன் கடல்தனிலே செல்லும்போது
நாமேதான் கண்ணாடிக்கைபிடித்து நலமுடனே யாழிதம் பார்க்கும்போது
வேமேதான் கண்ணாடிக்கைபிடித்து விருப்பமுடன் கப்பல்முனைத்தனிலிருந்து
தாமேதான் கண்ணாதன்னையப்பா தாரிணியில் ஆழிதனைக் காணுவாயே
4119.
காணுகையில் உந்தனுக்குப் புத்திமானே கடலிலுள்ள மர்மமெல்லாம் கண்ணிற்றோற்றும்
தோணுமே மலைப்பாறைக் கல்களெல்லாம் தோற்றுமே யுந்தன்கண்ணாடியாலே
பூணவே வழிதடத்தைக் கண்டுமல்லோ புகழான மலைப்பாறையொதுங்கியேதான்
நீணவே நெடுந்தூரஞ் செல்லலாகும் நீராவிக் கண்ணாடிக் கப்பல்தானே
4120.
தானான நீராவிக்கப்பல்கொண்டு தகமையுள்ள வாணிமுத்து யெடுக்கலாகும்
தேனான ஆணியென்ற முத்தைத்தானும் தெளிவாகக் கடல்தனிலே எடுக்கலாகும்
கோனான குருசொன்ன வாக்குதானும் குறையாமல் ஆழிதனில் நடத்தினாக்கால்
பானான பாதாளமுத்தையெல்லாம் பாங்குடனே எடுப்பதற்கு துரையுமாச்சே
4121.
துறையான துறைவழியே கண்டபோது துப்புறவாய் சுனகமெல்லாங் கைக்குள்ளாச்சு
மறைவான பொருளெல்லாம் கண்ணிற்றோற்றும் மகத்தான நிதிகளெல்லாம் எடுக்கலாகும்
திறைகடலில் நீராவிக்கப்பல் தன்னால் திறளான களஞ்சியத்தைக் காணலாகும்
குறையாமல் செல்வமது எந்நாளுந்தான் கொற்றவனே யுந்தனுக்கு வாய்க்கும்பாரே
4122.
வாய்க்குமே மகமேருபர்வதந்தான் வாகான குகையாவிப்பர்வதந்தான்
தீய்க்கவே தீவுங்காணலாகும் திறைகோடி கடல்தனை சுற்றலாகும்
வேய்ப்பான பதிதனிலே மகிமையெல்லாம் வேகமுடன் மரக்கலத்தால் காணலாகும்
காய்க்கவே சீனபதியுலகத்தார்க்கு சட்டமுடன் தானமைத்த நூலிதாமே
4123.
நூலான போகரேழாயிரந்தான் நுணுக்கமுள்ள பொருளெல்லாம் இதிலேதோயும்
பாலான சாத்திரந்தான் சத்தகாண்டம் பாலகனே யிக்காண்டம் ஐந்தாம்காண்டம்
மேலான காண்டமிது யேழுக்குள்ளே மேதினியில் கருவிகரணாதியெல்லாம்
மாதான சத்தசாகரமடக்கம் மகத்தான போகர் பெருநூலாமே

4124.
பெருநூலாம் போகரேழாயிரந்தான் பெருக்கமுடன் பாடிவைத்தேன் சீனத்தார்க்கு
விருநூலாம் அடியேனுஞ் சொன்னமார்க்கம் விருப்பமுடன் அகஸ்தியரும் ஒருநூல்செய்தார்
குருநூல் காவியம் பன்னீராயிரந்தான் கும்பமுனி பாடிவைத்தார் காண்டமப்பா
திருநூலாங் காண்டமது பனிரெண்டாகும் திறமான வாருயுறுவேதந்தானே
4125.
வேதமாம் யின்னமொரு மார்க்கங்கேளு விருப்பமுடன் புலிப்பாணி மஜந்தாநீயும்
நீதமுடன் குளிகையது பூண்டுகொண்டு நீதியுடன் சீனபதிவிட்டுயானும்
போதமுடன் வடகோடி கானகத்தை பொங்கமுடன் திரும்பிவந்தேன் அடியேன்தானும்
காதமெனும் கடலாறுதன்னிலப்பா கவனமுடன் குளிகைகொண்டு சென்றேன்பாரே
4126.
பாரேதான் வடகோடியாழிதன்னில் பாங்குடனே குளிகைகொண்டு யானுஞ்சென்றேன்
நேரேதான் குளிகைகொண்டு செல்லும்போது நேர்மையுடன் ஆசீர்மமொன்றுகண்டேன்
ஊரதுபோல் கடலாழிநடுமையத்தில் ஓகோகோ தீவதுதான் கண்டேனப்பா
சேரேதான் குளிகையது சென்றுயானும் சேர்ந்தேனே தீவுதனில் கிட்டினேனே
4127.
கிட்டவே தீவுதனில் செல்லுமபோது கெடியான தேவதா மலையொன்றுண்டு
குட்டவே பாசிபோலிருந்ததப்பா மூதுலகில் மலையென்று நினைத்துக்கொண்டேன்
வட்டமுள்ள பாறைதனை சோதித்தேன்யான் வளமான பச்சையென்ற மலைதானப்பா
திட்டமுடன் கண்டறிந்தேன் பச்சையப்பா திடமான பச்சைமலை பார்திட்டேனே
4128.
பார்த்தேனே மலையினிட மகிமைமெத்த பாருலகில் சித்தர்முனி கண்டதில்லை
தீர்த்தமுடன் மலைமீதில் சுனைதானுண்டு திறமான பச்சையென்ற நிறத்தைப்போல
கார்த்துமே காவலுடன் வெகுகோடிசித்தர் கதிகாணா மலைதனிலே யிருப்பாரங்கே
பூர்த்தியாய் அவர்களிடம் சென்றேன்யானும் புகழாக வடிபணிந்து தொழுதிட்டேனே
4129.
தொழுதேனே சித்தர்வர்க்கந்தன்னைக்கண்டேன் தோற்றமுடன் குளிகைகொண்டு பக்கல் சென்றேன்
பழுதுபடா மேனியது பார்க்கும்போது பச்சையென்ற திருமேனி யென்னலாகும்
கழுமுடனே யிமாப்பட்சியெல்லாமப்பா காணுகைக்குப் பச்சைநிறமென்னலாமே
4130.
என்னவே என்தேகம்பச்சையப்பா எழிலான ஜலமெல்லாம் பச்சையப்பா
துன்னவே மண்டலமும் பச்சையப்பா துறையான பூமிமுதல் பச்சையப்பா
பன்னவே பார்லோகம் பச்சையப்பா பாங்கான விருட்சமுதல் பச்சையப்பா
சொன்னதொரு மார்க்கமெல்லாம் பச்சையப்பா சுடரொளியை யென்சொல்வேன் போகர்தாமே
4131.
தானான மலைவளத்தை கண்டேன்யானும் தகமையுள்ள சித்தர்களோ சொல்லொண்ணாது
கோனான சித்தரென்னைக் கண்டபோது குவலயத்து மனிதரப்பா குளிகைகொண்டு
ஏனோதான் இம்மலையில் வந்தீரென்றார் எழிலான சித்தரெனைக் கேட்டபோது
நாமேதான் காலாங்கி சீடனென்றேன் நாதாக்கள் காணவல்லோ வந்திட்டாரே

4132.
வந்தேனே குருவினது பதாம்புயத்தை வணக்கமுடன் காணுதற்கு குளிகைகொண்டேன்
அந்தமுடன் பச்சையென்ற மலையைக்காண வன்புடனே யானுமல்லோ வந்தேனென்றேன்
சொந்தமுடன் யானுரைக்கும் வார்த்தைகேட்டு சுந்தரனார் சித்தர்முனிரிஷிகள்யாவும்
எந்தன்மேல் பட்சமது மிகவும்வைத்து எழிலாக கூறுற்றார் சித்தர்தாமே
4133.
சித்தான சித்துமுனி ரிஷிதானப்பா சிறப்புடனே எந்தனையும் போர்த்துமேதான்
பத்தியுடன் காலாங்கிபாதம்போற்றி பாலகனே யிம்மலையில் வந்ததாலே
வெத்திபெற எந்தனையும் சபிக்கவந்த வேதாந்த சித்தரெல்லாம் மனமிதங்கி
சுத்தியுடன் இதிகாசப்புராணமெல்லாம் சூட்சாதி சூட்சமுடன் சொன்னார்பாரே
4134.
சொன்னாரே எந்தனுக்கு வேகஞானம் சொரூபமென்ற சுடரொளியைக் காணவென்று
மன்னாகேள் காலாங்கி போகநாதர் மகிமையுள்ள ஆசீர்மம் இங்கொன்றுண்டு
தென்பாறை பச்சையென்ற மீதிலப்பா தேர்வேந்தர் அறியாரும் ஒருவருண்டு
முன்னேதான் பெரியார்கள் சொன்னாப்போல மோனமென்ற ஞானகுரு சித்துவுண்டே
4135.
உண்டான சித்துமகா ரிஷியார்தாமும் ஒகோகோ நாதாக்கள்  ஆசீர்மந்தான்
கண்டேனே பச்சையென்ற மலையின்மீதில் காவலர்கள் ஆயிரம்பேர் சூழ்ந்திருக்க
திண்டான வாசீர்மங் கிண்டியேதான் தீரமுடன் குளிகைதனை பூண்டுகொண்டு
அண்டமதில் தான்பரந்து மேலேநின்று வப்பனே குளிகைகொண்டு இறங்கினேனே
4136.
இறங்கியே மோனகுரு யெதிர்முன்பாக எழிலாக குளிகைகொண்டு நின்றேனங்கே
திறமுடைய சித்தர்களோ வாயிரம்பேர் தீரமுடன் எந்தனை யேசிக்கவந்தார்
நிற்மான பச்சையென்ற சித்துதாமும் நீராக்கி எந்தனையும் சபிக்கவந்தார்
மாய்போலே நின்றுவிட்டேன் போகர்யானும் மார்க்கமுடன் தள்பணிந்து தரிசித்தேனே
4137.
தெரிசித்தேன் மோனமகாரிஷியைத்தானும் தீரமுடன் வடகோடிகானகத்தில்
பரிசித்து ரிஷியாரும் பச்சைமீதில் பாங்குடனே வீற்றிருந்த வாசீர்மந்தான்
வரிசையுடன் மோனமகாரிஷியாசீர்மம் வண்மைதனைக் காணவென்று வந்தேன்யானும்
குளிகையென்ற மோனகுரு வாசீர்மத்தை குறிப்புடனே யான்கண்டு வணங்கினேனே
4138.
வணங்கவே ரிஷியாரும் என்னைப்பார்த்து வாகுடனே யாரப்பாயென்றுகேட்க
இணங்கவே காலாங்கி சீடனென்றேன் எழிலான மோனகுருரிஷியாசீர்மம்
சுணங்கமது வாராமல் அடியேன்தன்னை சூட்சமுடன் தன்னருகில் வரவழைத்து
மனமுடனே எந்தனுக்கு ஞானோபதேசம் மார்க்கமுடன் வரமதுவுங் கொடுத்தார்பாரே
4139.
பாரேதான் வெகுகோடி காலமப்பா பட்சமுடன் பச்சையென்ற மலைதான்மீதில்
நேரேதான் அக்கினியும் நவதாதோடு நேர்மையுடன் தானறிந்து இருந்தேனங்கே
சீரேதான் சிலகாலஞ் சென்றபின்பு திகழுடனே மோனமகரிஷியையானும்
சாரமுடன் ஞானோபதேசம்பெற்று சட்டமுடன் சீனபதியேகினேனே

4140.
ஏகவே சீனபதிப்போகவென்று எழிலான குளிகைதனைப்பூண்டுகொண்டு
வேகமுடன் சீனபதிவந்தேன்யானும் வெட்டவெளி ஆகாயங்கோட்டைதன்னில்
சாகமுடன் குளிகையிட்டு இறங்கியேதான் சட்டமுடன் மாண்பரெல்லாங் கண்டேன்யானும்
சோகமுடன் சீஷவர்க்கங்கண்டபோது சுத்தியெனை வந்துமல்லோ சூழ்ந்தார்பாரே
4141.
சூழ்ந்தாரே யெனையும் சீஷவர்க்கம் சூட்சாதியானதொரு மார்க்கமெல்லாம்
தாழ்ந்துமே எந்தனையும் கேட்கும்போது சட்டமுடன் யானுரைத்தேன் பச்சைதன்னை
ஆழ்ந்ததொரு கடல்தனிலே மலைதானுண்டு அப்பனே வடகோடியாழிதன்னில்
வாழ்ந்துமே பச்சைமலை தன்னிலப்பா வாகுடனே வெகுகால மிருந்தேன்பாரே
4142.
இருந்தேனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் எழிலான மாண்பர்களே கேளும்கேளும்
திருத்தமுடன் வடகோடியாழிதன்னில் தீரமுடன் பச்சையது எடுக்கவென்றால்
பொருந்தவே நீராவிக்கப்பல் தானும்போகாது கடலுக்குத்தடந்தானில்லை
வருந்தியே சுழலதுவும்மெத்தவுண்டு வாகான பட்சிமுதல் மடிந்துபோமே
4143.
மடியுமே கடலுக்கு மேற்பாகத்தில் வளமுடனே ஆகாயம்பறக்கும்பட்சி
துடியுமே தான்பறந்து சுழலுமாழி துப்புறவாய் சலமதிலே விழுகும்பாரு
அடியில் கற்பாறைதனிமெத்தவுண்டு அலைகடலில் தடமதுவுங் காணப்போமோ
நொடியான வாகாயக்கூண்டுதன்னில் நோக்கமுடன் தீவுக்குசெல்லலாமே
4144.
செல்லலாம் யானுரைத்த கூண்டினாலே சிறப்புடனே தீவுக்குப்போகலாகும்
வெல்லவே ஆகாயமார்க்கந்தன்னில் விருப்பமுடன் கூண்டைவிட்டு இறங்கியல்லோ
புல்லவே யான்சொன்னவாசீர்மத்தில் புகழான வடகோடி கடலில்தானும்
நல்லதொரு பச்சையென்ற மலையைக்கண்டு நலமுடனே இறங்கியல்லோ யெடுக்கலாமே
4145.
எடுக்கலாம் பச்சையென்ற களஞ்சியத்தை எழிலான வடகோடியாருதன்னில்
தொடுக்கவே கூண்டுவழிமார்க்கமாக தோராமல் பச்சைதனை எடுக்கவேண்டும்
விடுக்கவே யாகாயந்தனிலெழும்பி விடுபட்டுச் சுழலதனைதாண்டியேதான்
ஒடுக்கமுடன் சீனபதிகோட்டைக்குள்ளே வுத்தமனே இறங்கவென்று வுரைத்திட்டேனே
4146.
உரைத்தேனே யின்னமொரு மார்க்கங்கேளு வகமையுள்ள புலிப்பாணி மைந்தாசொல்வேன்
நிரைப்படியே எனதையர் காலாங்கிநாதர் நேராகயெந்தனுக்குச் சொன்னமார்க்கம்
திரையான வடகோடி யாழிதன்னில் தீர்க்கமுடன் ஆசீர்மம் அங்கொன்றுண்டு
வடகோடி கானகந்தான் சொல்லொண்ணாது வாகான குளிகைகொண்டு சென்றேன்பாரே
4147.
பாரேதானாழி தடகும்யான்கடந்தேன் பாங்கான வாசீர்மம்தன்னிற்செல்ல
நேரேதான் குளிகையது கொண்டுமல்லோ நேரான வடகோடி கானகத்தில்
தீரேதான் குளிகையது கொண்டுமல்லோ நேரான வடகோடி கானகத்தில்
ஊரேதா னொன்றில்லை கடல்தானப்பா வுத்தமனே யாசீர்மம் நதியாருண்டே

4148.
உண்டான வாசீர்மம் தன்னிற்சென்று ஓகோகோ நாதாக்கள் பெருமைதன்னை
கண்டேனே வடகோடி யாசீர்மத்தில் கனமான சித்தர்முனி ரிஷிகள்யாவும்
தொண்டருடன் வாசீர்மந்தன்னைச்சுற்றி சொரூபமென்ற சித்தொளிவு சொல்லொண்ணாது
அண்டர்முனி ராட்சதர்கள் காணாநாடு வப்பனே குளிகைகொண்டு சென்றேன்தானே
4149.
தானான குருபதத்தைக் காணவென்று தாக்கான மனோன்மணியாள் அருளும்பெற்று
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருமொழிசொற்படிக்கி
தேனான குளிகைகொண்டு சென்றுமல்லோ தெளிவுடனே யாசீர்மம் தன்னில்நின்றேன்
பானான கமபிளியாஞ் சித்தர்தாமும் பாற்கடலில் எந்தனையும் பார்திட்டாரே
4150.
பார்தாரே நடுக்கடல் ஆசீர்மத்தில் பாங்கான சித்துமுனி ரிஷிகளெல்லாம்
வேர்த்துமுகமாயிருக்க யானுங்கண்டேன் வீரான தேகமெல்லாம் ரோமமப்பா
கீர்த்தியுள்ள சித்தரப்பா வையகத்தில் சிறப்பான லோகமதிற்கண்டதில்லை
பூர்த்தியா மகிமையது சொல்லொண்ணாது பொன்னுலகு சித்தரென்று செப்பலாமே
4151.
செப்பவென்றால் அவர்களிடம் கிட்டிநின்றேன் செங்கதிரோன் போல்வீசும் சடலமப்பா
ஒப்பவே தேகமது ரோமந்தானும் உத்தமனே கரடியென்றே செப்பலாகும்
இப்புவியில் யாரேனுங்கண்டதில்லை எழிலான கரடிமயிர்சித்தரப்பா
அப்பதியில் ஆசீர்மம் யாருங்காணார் அலைகடலில் வழிகாணார் மாண்பர்தாமே
4152.
மாண்பான வையகத்தில் யானுமல்லோ வளமுடனே குளிகைகொண்டு சென்றேனப்பா
வீண்போகாக் காலமதுயான்கடந்து விருப்பமுடன் அட்டதிசை காணவென்று
காண்பான வடகோடித் தாண்டியல்லோ கையிலைபதிக்கொப்பான தீவுதன்னில்
ஆண்மையுடன் சென்றுமல்லோ சித்துதம்மை வன்புடனே யான்கண்ட வளஞ்சொன்னேனே
4153.
சொல்லவே யாசீர்மம் தன்னில்நின்று சுடரான சித்தர்முனி தன்னைக்கண்டு
வல்லதொரு ரோமமுள்ள சித்தரப்பா வண்மையுடன் எந்தனையாரென்றுகேட்க
புல்லறிவானதொரு வடியேன்தானும் புகழுடனே காலாங்கி சீஷனென்றேன்
மெல்லவே எந்தனையு மாசீர்மித்து மேன்மையுடன் பட்சமது கொண்டார்தாமே
4154.
கொண்டாரே காலாங்கி பேருரைக்க கொப்பெனவே ரோமமென்ற கரடிசித்து
சண்டமாருதம் போலக்கோபங்கொண்ட சகலருமே யென்பேரி லாசீர்மித்து
கண்டுமே யுதேசஞ் செய்வதற்கு கருத்திலே மனதுவந்து வடியேனுக்கு
விண்டதொரு ஞானோபதேசமெல்லாம் விருப்பமுடன் போதித்தார் சித்தர்தாமே
4155.
சித்தான சித்துமுனி ரிஷிதானப்பா சிறப்புடனே எந்தனுக்கு யாவுஞ்சொல்லி
முத்தான வாசீர்மம் பெருமைசொல்லி மூதுலகில் மகிமையெல்லாம் தானுரைத்து
எத்தலமுங் கண்டுவந்த சிறுபாலா எழிலான யாசீர்ம் மகிமையெல்லாம்
சுத்தமுடன் உந்தனுக்கு யாமுரைத்தோம் சூட்சாதி சூட்சமெல்லா மறிந்துகொள்ளே

4156.
கொள்ளவென்று சொல்லுகையில் அடியேன்தானும் கொப்பெனவே கெம்புந்தி
எங்கேயென்றேன்
விள்ளவே எந்தனுக்கு சொன்னாரப்பா விருப்பமுடன் வடகோடிகானகத்தில்
அள்ளவே அயோத்திநகர் மேற்பாகத்தில் அழகான கெம்புந்தி என்றுரைத்தார்
மெல்லவே கெம்புந்திக் காணவென்று மேன்மையுடன் குளிகைகொண்டு விடைபெற்றேனே
4157.
பெற்றேனே சித்தரிடம் விடைகள்பெற்று பேரான குளிகைதனை பூண்டுகொண்டு
சுற்றமுடன் அயோத்திநகர் தன்னைநோக்கி சூட்சமுடன் மேற்பாகந்தன்னிற்சென்றேன்
வுற்றதொரு குளிகைகொண்டு மேற்பாகத்தில் ஓகோகோ நாதாக்கள் இருக்கும்ஸ்தானம்
வெற்றியுடன் காலாங்கிதனைநினைத்து விருதுடனே அடியேனும் இறங்கினேனே
4158.
இறங்கினேன் அயோத்திநகர் மேற்பாகத்தில் எழிலான கெம்பாறு நடுமையத்தில்
திறமுடனே கெம்புகல் மண்டபந்தான் தெளிவான பதியென்று குகைதானுண்டு
நிறமான கெம்பென்ற சித்தர்தானும் நீலவர்ணன் முகம்போல சித்தொன்றுண்டு
உறமான மண்டபத்தில் தவசியாரும் வுற்பனமாய்த் தானிருக்கக் கண்டிட்டேனே
4159.
கண்டிட்டேன் குளிகையது பூண்டுகொண்டு கடிதான கெம்பாறு நடுமையத்தில்
தண்டுளமாலையணி கிருஷ்ணன்போலே தவமுடைய சித்தொருவர் அங்கேயுண்டு
மண்டனுகர் தானறியா தீவுதானும் மகத்தான கெம்பாறு மண்டபந்தான்
அண்டமெலாம் தான்புகழும் நதிதானப்பா வப்பனே கெம்பாறு பார்த்திட்டேனே
4160.
பார்த்தேனே ரிஷியாரை யடியேன்தானும் பட்சமுடன் பக்கல்தனில் யானுஞ்சென்றேன்
தீர்த்தமுடன் கெங்காநதிபானத்தோடு திறமுடனே வஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன்
சேர்ந்ததுமே எந்தனையுங் கொண்டனைத்து சிறுபாலா எங்குவந்தீர் என்றுரைத்தார்
ஏர்க்கவே எந்தன்மேல் பட்சம்வைத்து எழிலான வாசீர்மம் சொன்னார்பாரே
4161.
சொன்னவுடன் அடியேனும் கால்நடுங்கி சித்தமுடன் தலைகுனிந்து சாஷ்டாங்கித்தேன்
நன்னயமாய் காலாங்கிநாதர்தம்மால் நாடிவந்தேன் ஆசீர்மம் தன்னையென்றே
வுன்னிதமாய் கெம்புநதி காணவென்று உகந்ததொரு குளிகைதனைக் கொண்டுவந்து
மன்னவே யாசீர்மம் கிட்டிவந்தேன் பட்சமுடன் எந்தனுக்கு அருள்செய்வீரே
4162.
அருளென்று சொல்லுகையில் வடியேன்மீது வன்புடனே கிருபையது மிகப்புரிந்து
தெருள்கலையிற் தெள்ளமுதே தேனேமானே தெவிட்டாத கண்மணியே போகர்பாலா
இருளகற்றஞ் செந்தேனே சிங்கவெறே எழிலான குணக்குன்றே யோகவானே
பொருளான ஞானோபதேசங்கேட்கும் பொன்னவனே யுந்தனுக்கு யருள்சொல்வேனே
4163.
சொல்வேனே ஞானோபதேசந்தன்னை சூட்சாதி சூட்சமத்தை யுனக்குரைப்பேன்
வல்லதொரு காலாங்கிநாதர்பாலா வளமையெல்லா முந்தனுக்கு யோதுவேன்யான்
வெல்லவே ஞானோபதேசமெல்லாம் விருப்பமுடன் உனக்களிப்பேன் என்றுசொல்லி
புல்லவே பூதலத்தின் மகிமையெல்லாம் புகழ்ச்சியுடன் எந்தனுக்கு ஓதுவாரே

4164.
ஓதுவார் கெம்பாறு நதியுஞ்சொன்னார் ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
வாதுரைத்த எந்தனுக்கு ரிஷியார்தாமும் வண்மையுள்ள ஞானோபமுரைத்தாரப்பா
மாதுமனோன்மணியாள் கிருபையாலே மகத்தான மகிமைகளும் சொன்னாரப்பா
சேதுபந்த மானதொரு கடலின்நேர்மை செப்பினார் எந்தனுக்கு செப்பினாரே
4165.
செப்பினார் கெம்புதனை எடுக்கவல்லோ சேதுபந்தம் அயோத்திக்கு மேற்கேயப்பா
ஒப்பவே கெம்பாறு வடமுகத்தில் ஓங்கியதோர் வோடையுண்டு குகைதானுண்டு
வெப்புடனே வடகோடி யாற்றையப்பா விண்ணுலகில் கண்டவர்கள் யாருமில்லை
நெப்பமுடன் எந்தனுக்கு வுளவுசொல்லி நேர்மையுடன் ஓடைதனை காண்பித்தாரே
4166.
காண்பித்தார் அயோத்திநகர் வோடைதன்னில் கனமான கெம்பினது அருவிகண்டேன்
ஆண்பான கெம்பினது அருமைதன்னை அப்பனே நாதாக்கள் சொல்வாரோசொல்
தூண்போல கல்லதுதான் இருக்கும்பாரு துடியான கெம்பினது வோடைதன்னை
சாண்போலே பாறையது மிகவிருக்கும் காண்பான சிறுகல்லு பொடியுமாமே
4167.
பொடியான கல்லதுதான் மணல்தானப்பா பொங்கமுடன் கழச்சிக்காய்ப்போலிருக்கும்
துடியான கெம்பதனை எடுப்பாரப்பா தூண்போன்ற கெம்புதனை எடுக்கமாட்டார்
படியான ஓடைக்குள் சித்தர்காவல் பாங்கான மேற்புறத்தே செல்லலாகா
அடிபோன்ற கானாறுவதிலேயுண்டு அற்புதமா வருவியென்ற வாழியாமே
4168.
ஆழியாம் மேலருவில் தன்னிலப்பா வப்பனே கழற்சிக்காய் அளவுபோலும்
நாழியால் தான்கொண்டு கெம்பழுக்கும் நாயகனே பொடிமணலா யருவிபாயும்
நீழியுடன் கீழருவில் தூண்போல்கெம்பு நீடான மலைபோலே யிருக்கும்பாரு
தாழினிட மிளைகின்ற கெம்புமார்க்கம் தகமையுடன் வெகுபேர்கள் காணார்தாமே
4169.
காணாரே கெம்பினுட வாட்டின்மார்க்கம் காசினியில் காலாங்கி கிருபையாலே
தோணாத கருவிகரணாதியெல்லாம் தோற்றமுடன் எந்தனுக்கு காண்பித்தார்பார்
பூணாத துறைமுதலுங் காணாருந்தான் பொங்கமுடன் கெம்பினது வருவிதானும்
மானமுதும் கெம்பினிட தீவுதன்னை மார்க்கமுடன் கண்டுவந்தேன் தேசமாமே
4170.
தேசமா மின்னமொரு மார்க்கம்சொல்வேன் சிறப்பான சீனபதி வுலகத்தார்க்கு
மோசமது தெரியாத மாந்தரப்பா மூதுலகில் சீனபதியாரைப்போல
பாசமுடன் மெய்யென்று நம்பு மாண்பர் பாருலகில் சீனபதியுலகமப்பா
நாசமுள்ள மற்றதோர் தேசமெல்லாம் நலமான கருமிகள்தான் என்னலாமே
4171.
என்னவே சீனபதி யுலகத்தோர்க்கு எழிலான கபடுகளுஞ் சூதுதானும்
பன்னவே பழிபாவம் தெரியாதப்பா பாருலகில் அம்மாண்பர் போலேயுண்டோ
துள்ளவே யாம்கண்ட மாச்க்கந்தன்னை துப்புறவாய் சீனபதியுலகத்தார்க்கு
முன்னவே காலாங்கி சொன்னாப்போல முயற்சியுடன் தானுரைப்பேன் மதியுள்ளோர்க்கே

4172.
பதியான சீனபதி மாண்பரேகேள் பாருலகில் கடலேழுஞ் சுத்திவந்தேன்
நிதியான நவகோடி திரவியங்கள் நேர்மையுடன் தானிருக்குந் தலமுங்கண்டேன்
துதியான சித்தர்முனி ரிஷிகள்தாமும் சூழ்ந்திருக்கும் கெம்பினுட நதியுங்கண்டேன்
மதியாத தவசிமுனி சித்தராசீர்மம் மார்க்கமுடன் கண்டுவந்தேன் மகிமைபாரே
4173.
பாரேதான் கெம்பாறு நதியுங்கண்டேன் பாங்கான வோடைமுதல் அருவிகண்டஏன்
நேரேதான் கானாறு யாழிகண்டேன் நேரான கெம்புத்தூண் பாறைகண்டேன்
சாரேதான் மேலருவி வுள்ளருவி கண்டேன் சாங்கமுடன் கெம்பினுட மண்டபந்தான்
தீரேதான் வடகோடி மேல்பாகத்தில் தீரமுள்ள சித்தர்கள்தான் காவலுண்டே
4174.
காவலாங் கானாறுபதியிலப்பா கார்த்திருப்பார் வெகுகோடி சித்தரங்கே
ஆவலுடன் கெம்பெடுக்கப் போகும்போது வப்பனே யவர்கருணை மிகவேவேண்டும்
யேவலுடன் அவர்பணிக்கு முன்னேநின்று எழிலான கெம்பதனை எடுக்கலாகும்
கோபமது வாராமல் குருவின்முன்னே கொப்பெனவே யாசீர்மம் கொள்வீர்தாமே
4175.
கொள்ளவே யாசீர்மம் கொண்டபோது கொற்றவனே யுந்தமக்குத் தடமுஞ்சொல்வார்
விள்ளவே நிதியிருக்கு மிடமுஞ்சொல்லி விருப்பமுடன் கெம்பினுட நாடுஞ்சொல்லி
உள்ளதொரு வுடல்பொருள்கள் ஆவியோடு உத்தமனே உந்தனுக்குத் தத்தமீய்ந்து
கள்ளமின்றி தத்தம்வர நடக்கவென்று கடாட்சமுடன் அருள்வளஞ் சொல்வார்பாரே
4176.
சொன்னதொரு விதிமுறைகள் அனைத்தும்கூறி சுத்தமுடன் ஞானோபதேசமோதி
நன்னயமாய் வையகத்தில் வாழ்கவென்று நாதாந்தக் கண்மணியின் அருளைப்பெற்று
என்னாளுஞ் சித்தருக்கு முத்தனாக எழிலாக இருக்கவென்று வாசீர்மித்து
பன்னவே பரப்பிமம் ஜோதிதன்னை புகட்டுவார் யுந்தனுக்குப் பண்பாய்த்தானே
4177.
தானான யின்னமொரு மார்க்கங்கேளு தகமையுள்ள புலிப்பாணி மைந்தாசொல்வேன்
தேனான தென்மதுரை வடமேற்கப்பா தெளிவான யானமலை யென்றொன்றுண்டு
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்கு சொன்னமார்க்கம்
பானான குருசொன்ன மொழிபடிக்கி பாலகனே குளிகையது கொண்டேன்பாரே
4178.
கொண்டேனே குளிகையது யானுங்கொண்டு கூரான யானைமலை காண்பதற்கு
அண்டமுடன் ஆகாயம் தான்பறந்து அழகான யானைமலை மீதிற்சென்றேன்
கண்டேனே வுச்சிதனில் மண்டபந்தான் காலான காலமது மூன்றுயோகம்
உண்டான சித்தரப்பா யங்கேயுண்டு வுத்தமனே கல்லடியாஞ் சித்தர்தாமே
4179.
கல்லான சித்தரப்பா மனேகமாண்பர் காசினியிலிருந்துவந்து மலைமேற்சென்றோம்
வல்லான யானைமலை வுச்சிதன்னில் வளமுடனே ஆயக்கால் மண்டபத்தில்
கொல்லரெனுஞ் சீஷர்களா மாயிரம்பேர் கூட்டமிட்டு வந்திருக்கக் கண்டேன்யானும்
வெல்லவே போகாது சித்தர்தம்மை வேகமுடன் தான்சபிப்பார் உறுதியாமே

4180.
உறுதியாம் மோனநிலைகொண்டசித்து மூதுலகில் பார்த்தவர்கள் யாருமில்லை
மருமமாம் வதீதமுதல் மகிமைகோடி வண்மையுள்ள சித்தர்களு மங்கேயுண்டு
நறுமனங்கள் கொண்டதொரு சித்துதம்மை நவிலவேமுடியாது மலைமேலப்பா
குறுமுனியாம் அகஸ்தியர்க்கு நேரதான கொற்றவர்கள் அங்கிருக்கக் கண்டேன்தானே
4181.
தானான ஆயக்கால் மண்டபத்தில் தகமையுள்ள கக்லடியாஞ் சித்தரப்பா
கோனான மண்டபத்தில் சமாதியுண்டு கோமானாம் தும்புரிஷியார்தாமும்
பானான பளிங்குமா மண்டபந்தான் பாங்கான மலைமீதில் இருக்கும்பாரு
தேனான ரிஷிமுனிவர் சித்தர்தாமும் தேற்றமுடன் கொலுக்கூடம் காப்பார்தாமே
4182.
கொலுவன மண்டபத்தில் அடியேன்தானும் கொப்பெனவே குளிகைகொண்டு இறங்கியல்லோ
வலுவான கல்லடியான் சித்தர்முன்னே வளப்பமுடன் குளிகையிட்டு யிறங்கிநின்றேன்
மெலுவான வார்த்தையது மிகவும்பேச மேன்மையுடன் என்மனதில் எண்ணங்கொண்டு
அலுவான சமாதிபக்கல் நின்றேன்யானும் அங்ஙெனவே கண்டாரே முனிவர்தாமே
4183.
முனியான சித்தர்முனி ரிஷிகள்தாமும் மூர்க்கமுடன் என்மீதிற் சினமுங்கொண்டு
தொனியான வார்த்தையது சீறலாகி தோற்றமுடன் எந்தனையும் சபிக்கவென்று
பனிபோன்ற மலைமீதில் இருந்துமல்லோ பாங்குடனே புறப்பட்டார் ஆயிரம்பேர்
கனிவுடனே யவிர்களை யான்கண்டபோது கால்விழுந்து சாஷ்டாங்கஞ் செய்திட்டேனே
4184.
இட்டேனே சித்தர்முனி ரிஷிகளுக்கு எழிலுடனே யடிவணங்கி தெண்டனிட்டேன்
கிட்டிநின்ற எந்தன்மேல் கிருபைவைத்து கீர்த்தியுடன் யாரப்பா வென்றுகேட்க
திட்டமுடன் காலாங்கி நாதர்தம்மை திறமுடனே மனந்தனிலே நினைத்துக்கொண்டு
வட்டமுடன் குளிகைகொண்ட சீஷன்யானும் வாகுடனே மலைதேடி வந்தேன்பாரே
4185.
பார்த்தேனே யானைமலைக் காணவென்று பாங்கான குளிகைகொண்டு யிறங்கினேன் யான்
தீர்த்தமுடன் காசிபதி சென்றுயானும் திகழான காசிலிங்கந் தீர்த்தங்கொண்டு
ஆசையுடன் பூசைநைவேத்தியங்கள் வன்புடனே பதாம்புயத்தை யர்ச்சிப்பேன்யான்
சேர்த்துமே கரங்குவித்து வுரைத்தபோது சிறப்பான ரிஷியாரும் கிழ்ந்திட்டாரே
4186.
மகிழ்ந்தஇட்ட சித்தரென்னை யாசீர்மிக்க மகிழ்ச்சியுடன் அவர்பாதமஞ்சலித்தேன்
நெகிழ்ந்திட்ட ரிஷியாரும் என்னைப்பார்த்து நேர்மையுடன் மலைமீதில் வரலாமோசொல்
தவிழ்ந்திட்ட சிறுபாலா யென்னையிப்போ தன்மையுடன் தெரிசிப்பேனென்றுரைத்து
மகிழ்ந்திடவே ஞானோபதேசஞ்சொல்லி சட்டமுடன் மலைவளத்தை சொன்னார்பாரே
4187.
பாரப்பா காலாங்கி நாதர்பாலா பட்சமுடன் மலைவளத்தை யானுரைப்பேன்
ஆரப்பா வெனைப்போலச் சொல்லப்போரார் வப்பனே யானுனக்கு யுறுதிசொல்வேன்
சீரப்பா எந்தனது போகநாதா சிறப்புடனே யானைமலை தீமைகேளும்
நேரப்பா மலைதனிலே யதீதமெத்த நேர்மையுடன் யாம்கண்டவரை சொல்வேனே

4188.
சொல்லவென்றால் நாவில்லை பாவுமில்லை துரைராஜ சுந்தரனே சொல்லக்கேளும்
வெல்லவே யானைமலை யடிவாரத்தில் மேன்மையுடன் சுனையொன்று குகைதானுண்டு
புல்லவே சுனையருகில் போகும்போது புகழான கல்லடியாஞ் சித்தரப்பா
மல்லர்கள்போல் நூறுபேர் கொலுவிருப்பார் மகத்தான சுனையருகே காவலுண்டே
4189.
உண்டான காவலுக்குள் அதிசயங்கள் வுத்தமனே சொல்லவென்றால் முடியாதப்பா
திண்டான கார்த்தவராயனப்பா திகழான சுனையினது படிதளத்தில்
சண்டமென்ற வாயுதப்பாணியோடு சக்கரமும் வளைதடியும் கைபிடித்து
துண்டரிகமான வீரியன்தான் துப்புரவாய்க் காவலது இருப்பான்காணே
4190.
காணவே குளிகைகொண்டு செல்லும்போது கண்மணியே யுன்னையவர் வழிமறிப்பார்
பூணவே கார்த்தவனார் வீரியன்தான் புகழான வாயுதபாணியாக
வேணவே யுத்தமது செய்யவென்று விருப்பமுடன் வருவாரைக்கண்டபோது
ஆணவங்கள் அதிகரித்து உன்னைக்கொல்ல வப்பனேவருவாரே யுண்மைதானே
4191.
உண்மையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வுத்தமனே குகைக்குள்ளே செல்வதற்கு
நன்மையுடன் பிரனவமாம் சக்கரந்தான் நலமுடனே யான்கொடுத்தேன் யுந்தனுக்கு
கண்மையாஞ் சக்கரத்தைக் கைபிடித்து கவனமென்ற குளிகைகொண்டு
செல்வாயானால் வண்மையுடன் வுந்தனுக்கு வசியமாவார் வளமுடனே நாதாந்த சித்துதாமே
4192.
சித்தான சித்துமுனி தன்னைக்கண்டு சிறப்புடனே குகைதனிலே சென்றேன்யானும்
சத்தமுடன் கார்த்தவனார் எந்தனைத்தான் சூரமுடன் எனைவதைக்கத் துணிந்தார்பாரு
பத்தியுடன் அவர்பக்கல் நின்றுகொண்டு பட்சமுடன் பிரனவமாஞ் சக்கரத்தை
வெத்திபெற வுச்சாடம் செய்தபோது வீரபத்திரன் கைவசமுமானார்தாமே
4193.
ஆனாரே ரிஷியாரும் எந்தனுக்கு வன்புடனே கைவசமுமானார்தாமும்
போனேனே குகைகடந்து சென்றேன்யானும் பொங்கமுடன் வீரபத்திரன் தனைக்கடந்தேன்
வானோர்கள் தான்புகழும் பத்மாசூரன் வண்மையுள்ள குகைதனையே யானுங்கண்டேன்
ஞானோபதேசமது கூறிக்கொண்டு கயம்படவே சமாதிதனி லிருந்திட்டாரே
4194.
இருந்தாரே பத்மாசூரனையுங்கண்டேன் எழிலான சூரனவர் பக்கல்தன்னில்
பொருந்தவே தாருசாரிஷிகள்தானும் பொங்கமுடன் கொலுவிருந்தார் குகைதானுள்ளே
திருந்தமுடன் குளிகையது கொண்டுயானும் தீரமுடன் சூரனது பக்கல்சென்றேன்
குருந்தமலை சோலையது குகைதானுள்ளே குருபத்மா சூரனையுங்கண்டேன்தாமே
4195.
தாமான சூரனையுங்கண்டபோது தகமையுடன் எந்தனையும் ஆரென்றேதான்
கோமான்போல் வீற்றிருக்கும் சூரன்தானும் கோலமுடன் எந்தனையு முருட்டிப்பார்த்து
நேமமுடன் சிறுபாலா யாரென்றேதான் நேர்மையுடன் இவ்விடத்தில் வந்ததென்ன
பூமானே என்றுசொல்லி என்னைகேட்க பொங்கமுடன் அடியேனுங் கூறினேனே

4196.
கூறினேன் காலாங்கிநாதரையர் கொற்றவனார் நற்சீஷனென்றுரைத்தேன்
மாறிடவே சூரனவன் மகிழ்ந்துமல்லோ மகிமையெல்லாந் தாமுரைத்தாரெந்தனுக்கு
கோறிவந்த வினயங்கூடலாச்சே குவலயத்தில் அதிசயங்கள்தாமுரைத்தார்
வேறிடமாம் மலைகுகைகள் யாவுஞ்சொல்லி விருப்பமுடன் எந்தனுக்கு விடைதந்தாரே
4197.
தந்தாரே யின்னமொரு மார்க்கங்கேளு தகமையுள்ள புலிப்பாணி மைந்தாசொல்வேன்
அந்தமுள்ள அகஸ்தியர்க்கு வுகந்தசீஷன் அறிவுள்ள கண்மணியாம் தேரைதானும்
சொந்தமுடன் வெகுகாலம் அகஸ்தியர்தானும் தோற்றமுடன் நற்சீஷனென்றுசொல்லி
விந்தையுள்ள வதிசயங்கள் வையகத்தில் விருப்பமுடன் கண்டவரை சொன்னார்பாரே
4198.
பாரேதான் கண்டவரை மார்க்கமெல்லாம் பாங்குடனே தாமுரைத்தார் தேரையார்க்கு
நேரேதான் சங்கலத்தார் கூட்டமப்பா நேரான சித்தர்முனி ரிஷிவர்க்கத்தில்
சீரேதான் சமால்தனிமுனியார் சீஷன் சிறப்பான திரணாக்கியமுனிவருக்கு
நீரேதான் மூளைதனில் தலைநோக்கோடு நேர்மையுடன் வந்துமல்லோ வருத்தலாச்சே
4199
வருத்தமுடன் மூளைதனில் பத்திநின்ற வாகர்ன தலைநோக்கை யென்னசொல்வோம்
பொருத்தமுடன் நோய்களிலே வருந்தியல்லோ பொலிவான துன்பமது மேலதாகி
திருத்தமுடன் நோயதனைத் தீர்ப்பதற்கு திறமான வகஸ்தியரை யழைக்கச்சொல்ல
அருத்தமது தானறிந்த கும்பயோனி அறிந்தாரே ஞானமென்ற திருஷ்டியாலே
4200.
ஆமேதான் வகஸ்தியரும் முன்னேசெல்ல வன்பான தேரையர் பின்னேசெல்ல
தாமேதான் அகஸ்தியனார் வத்தாரந்தான் தகமையுள்ள மருந்துவகை ஆயதங்கள்
போமேதான் தேறையர்முனிவர்தாமும் பொங்கமுடன் அடப்பமது கொண்டுயேந்தி
நாமேதான் சொன்னபடி வகஸ்தியனார்பின் வன்பாக வழிநடந்தார் தேரையாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

4201.
தேறையென்ற முனியான சித்துதாமும் தெளிமையுடன் அகஸ்தியனார் வுடன்சென்றேபின்
பாரையென்ற மலைமிதில் தானிருக்கும் பான்மையுள்ள சங்கத்தார் கூட்டந்தன்னில்
ஆறையாஞ் சமூகமது முன்னேநின்று வகஸ்தியரும் சீஷனுடன் போயிருக்க
சூறையென்ற சங்கத்துப்புலவரெல்லாம் சூட்சமுடன் அகஸ்தியர்க்கு வுரைத்திட்டாரே
**4202.**
இட்டாரே சங்கத்துப் புலவரெல்லாம் எழிலான திரணாக்கிய முனிவர்நோயை
சட்டமுடன் தசவருட காலமையா தலைவலியும் சன்னிமுதலதிகமுண்டு
தொட்டதொரு பண்டிதங்கள் மெத்தவுண்டு துரைராஜர் சுந்தரர்க்கு லக்கோயில்லை
திட்டமுடன் தங்களது பண்டிதங்கள் திறமுடனே செய்வதற்கு வறிந்திட்டாரே
**4203.**
வருந்தவே வகஸ்தியர் முனிவர்தாமும் வல்லமையாள் பண்டிதங்கள் மிகவுரைப்பார்
பொருந்தியே தேரையது மூளைதன்னை பொலிவான நாசிவழி தன்னிற்சென்று
வருந்தியே முளைதனைப்பற்றியல்லோ வாகுடனே தேறையது பொருந்திநிற்க
மருந்தீயசிவன்றல்லோ மனதிலுண்ணி மகத்தான வகத்தியருங் கவனித்தாரே
**4204.**
கவனிக்கும் வேளையிலே கத்திகொண்டு கருத்துடனே மூளைதனைக் கீறிப்பார்க்க
மவுனமென்ற மூளைதனில் தேறைதானும் மார்க்கமுடன் கல்வியல்லோ கொண்டுநிற்க
புவனமென்ற குறடாவில் எடுக்கப்போனார் புகழான தேறையர்முனிவர்தானும்
கவனமென்ற பாணியினால் எடுக்கதந்திரம் சாற்றினார் தேறையர் சாற்றினாரே
**4205.**
சாற்றவே மண்பாண்டந் தன்னில்தானும் தண்மையுள்ள ஜலமதனை நிறையவிட்டு
ஆற்றலுடன் தேறையர்முன் எதிரேகாட்ட அங்ஙனவே மூளைவிட்டு குதிக்கலாச்சே
நாற்றிசையும் மேவுபுகழ் அகஸ்தியனார்தாமும் நல்லறிவைக கண்டுமல்லோ மனதுவந்து
போற்றியே என்சீஷா பொன்னரங்கா பொலிவான தெள்ளமுர்த தங்கமாமே
**4206.**
சிங்கமாம் சித்தர்முனி மெச்சும்பாலா சிவயோகாவருள்பாலா தேகாமோகா
துங்கமே மெய்ப்பொருளே ஞானதீபா சுடர்மணியே கதிரொளியே சூட்சபாதா
தங்கமே சடாட்சரத்தின் மோனவானே தயாபரமே தயாநிதியே சாருந்தீபா
புங்கிசித்தி யெட்டுரிய போகவானே புகழான மகமேரே யென்றார்தாமே
**4207.**
என்றாரே வகஸ்தியரும் மெச்சியல்லோ எழிலான தேறையமுனிவருக்கு
நன்றான பொருளெல்லாம் மிகவுரைத்து நலம்பெறவே ஞானோபஞ்செய்தாரங்கே
குன்றான மலைதனிலே யிருக்குமூலி குவலயத்தில் இறந்தவரை எழுப்புமூலி
வென்றிடவே மூலிதனை தேரையருக்கு விருப்பமுடன் ஞானோபம் செய்தார்பாரே
**4208.**
பாரேதான் பொன்மூலி வுளவுஞ்சொல்லி பாங்கான பொன்விளையும்நாடுசொல்லி
நேரேதான் கருவிகரணாதியெல்லாம் நேர்மையுடன் தேறையர்முனிவர்தானும்
சீரேதான் கற்றறிந்து கொண்டபின்பு சிறப்புடனே இறுமாப்பு யதிகமாகி
வேரேதான் அகஸ்தியரை விட்டுநீங்கி விருப்பமுடன் மலைவளத்தில் சென்றார்தாமே

4209.
தானான வாரணமாம் மலையைக்கண்டு தண்மையுடன் தேறையர்முனிவர்தாமும்
கோனான வகஸ்தியரை விட்டுநீங்கி குருமொழியைத் தான்கடந்தசித்துதாமும்
தேனான வித்தையெல்லா மறிந்துகொண்டு தேற்றமுடன் லோகமெல்லாஞ் சித்துசெய்ய
மானான காசியென்ற மலைவாரத்தில் மார்க்கமுடன் தான்சென்றார் முனிவர்தாமே
4210.
முனியான தேறையர் சித்துதாமும் மூர்க்கமுடன் தனக்கிசைந்த சீஷர்தம்மை
தனியாக ஞானோபம் செய்துமல்லோ தகமையுடன் மூலியெல்லாம் காண்பித்தாராம்
கனியான தேறைய முனிவர்தாமும் நலமான பொன்விளையும் மூலியெல்லாம்
பனியான மலைமேலே பூசியேதான் பழுக்கவே துருத்திகொண்டு வூதினாரே
4211.
ஊதவே மலையெல்லாம் தங்கமாச்சு வுத்தமனே வதிலிருந்த தவசிமார்கள்
மாதவங்கள் செய்கின்ற ரிஷிகள்தாமும் மகத்தான வடவாக்கினி யனல்கொள்ளாமல்
காதவங்கள் மிகவாகி ரிஷியார்தாமும் கைலங்கிரி மலைதானும் இடங்கொள்ளாமல்
பாதவத்தில் மிகுந்ததொரு வகஸ்தியர்முன்னே பொங்கமுடன் முறையமது செய்திட்டாரே
4211.
முறையான சித்துமுனிரிஷிகள்தாமும் மூர்க்கமுடன் ஓடிவந்துவகஸ்தியனார்முன்னே
சிறைமீண்ட சித்தனாம் தேறைதானும் தேற்றமுடன் மலையடிவாரந்தன்னில்
திறையான தீமூட்டி துருத்திகொண்டு திறமுடனே மலைதனையே தீயால்தாக்க
குறையான சித்தர்முனி ரிஷிகள்தாமும் குடியிருக்க எங்களுக்கு இடமில்லைதாமே
4213.
தாமான தேறைமுனி சித்துதம்மால் தரணியெல்லாம் சித்துமயம் ஆகிப்போகும்
சாமான மலைகளெல்லாந் தங்கமானால் தாரிணியில் ஒருவருக்கோர் மரிப்போருண்டோ
கோமான் குருவேது சீஷரேது குவலயத்தில் ஒருவருந்தான் இல்லைகண்டீர்
நாமான வாகவல்லோ கூறிவிட்டோம் நாதாந்த சித்தொளிவைக் காப்பீர்தாமே
4214.
காக்கவென்று சொல்லியல்லோ கரங்குவித்து கைலாசவகஸ்தியருக்கு யிதவுகூறி
ஆக்குவது அழிப்பதுவும் உம்மாலாகும் வப்பனே கடாட்சமதுசெய்யவென்ன
நோக்கமது கொண்டுமல்லோ அகஸ்தியர்தாமும் நொடிக்குள்ளே சினமதுவும் அதிகமாகி
தூக்கியே தேறைய சித்துதம்மை துப்புரவாய் கிழித்தெறிந்து போட்டிட்டாரே
4215.
போட்டாரே யகஸ்தியனார் சித்துதம்மை பொங்கமுடன் தம்பதிக்குப்போனாரப்பா
நீட்டமுடன் அகஸ்தியரும் போனபின்பு நேரான தேறையசீஷரங்கே
கூட்டமுடன் வந்திருந்து மூலிதன்னால் கொப்பெனவே எழுப்பிவிட்டார் சித்துதம்மை
வாட்டமுடன் மறுபடியும் சித்துதாமும் வளமையுடன் முன்போலே யூதினாரே
4216.
ஊதினார் தேறையமுனிவர்தானும் ஓகோகோ நாதாக்கள்பின்னுமல்லோ
சாதிகெட்ட பையலவன் பின்னும்வந்து சட்டமுடன் துருத்திகொண்டு வூதுகிறார்பார்
பாதிமதி சடையணிந்த தம்பிரான்போல் பட்சமுடன் தாமுரைப்பார் அகஸ்தியார்தாமும்
நீதிமுறையில்லையோதான் சித்தருக்கு நிஷ்டூரந்தானதிகம் வுரைத்தார்பாரே

4217.
பாரேதான் சித்தர்களும் உரைக்கும்போது பான்மையுடன் அகத்தியனார் சித்துதாமும்
சீரேதான் தேறையமுனிவர்தம்மை சிறப்புடனே செய்வதற்கு நீதியுண்டோ
நேரேதான் முக்காலில் கண்டுமேதான் நேர்மையுடன் தணலதனை நிறுத்தவென்று
கூரேதான் விண்ணப்பம் மொழியனந்தம் குறிப்புடனே கேட்டாரே முனிவர்தாமே
4218.
முனியான வகஸ்தியனார் முனிவர்தாமும் முறையோடுங் குறையோடும் கேட்டசீஷன்
தனியான தேறையசித்துதாமும் தகமையுடன் சமாதிக்குப்போகும் மார்க்கம்
பணியான நர்மதா மலையின்மீது பான்மையுடன் தேறையமுனிவர்தாமும்
நனியான சமாதிக்கு யேகவென்று நாட்டமுடன் தேறையர் வெளிப்பட்டாரே
4219.
பட்டாரே தேறையமுனிவர்தானும் பாருலகில் சுமுசாரவாழ்க்கையற்று
விட்டகுறை இருந்ததொரு நேர்மையாலே விருப்பமுடன் வுலகத்தில் ஆசைவிட்டு
சட்டமுடன் சீஷர்களைத் தாமழைத்து சதாகாலம் வுலகுதனில் இருந்துமென்ன
திட்டமுடன் குருவணக்கம் கொண்டுமென்ன திறளான வுபதேசம் ஒன்றும்காணே
4220.
காணேனே வுபதேசம் வொன்றுமில்லை காசினியி லிருந்தாலும் பயனுமில்லை
பூணவே வரைகோடி மகிமைவித்தை புகழாகக் கற்றாலும் ஒன்றுமில்லை
வேணபடி யிதிகாச புராணவேதம் வெட்கமுடனாயறுவேதந்தானும்
தோணவே கண்டாலுமொன்றுமில்லை துப்புறவாய் சமாதிக்குப்போகநன்றே
4221.
நன்றான சமாதிக்குப் போரேனப்பா நலமுடனே நீங்களெல்லாம் மனதுவந்து
குன்றான நர்மதாமலையைநாடி கொற்றவரெ வருகவென்று விடையுந்தந்தார்
வென்றிடவே தேறையர் சித்துதாமும் வீரமுடன் நர்மதா மலையைத்தேடி
சென்றாரே மலையடிவாரந்தன்னில் சிறப்புடனெ தானமர்ந்தார் முனிவர்தாமே
4222.
முனியான சித்துரிஷி சொரூபர்தானும் மூதுலகில் ஆசையது விட்டகன்று
பனிபோன்ற நாடுவலம் சென்றேயேகி பாங்கான மலைவளத்தை யடுத்தசித்து
சனிபிடித்தகதையைப்போல சொரூபர்தாமும் சாங்கமுடன் மனதுமிகத்தான்தளர்ந்து
நளியான சமாதிக்குச் செல்லவென்று நாட்டமுடன் சித்தரவர் நின்றிட்டாரே
4223.
நின்றாரே சித்துமுனி சொரூபர்தானும் நிலையான சமாதியது குழிதான்வெட்டி
தென்றலுடன் வாயுவது வுட்செல்லாமல் திறமானகல்தரையும் தானமைத்து
சன்னமதால் ஒருபக்கந்துவாரமிட்டு சட்டமுடன் சமாதிக்கு இடமுந்தேடி
பன்னவே ரிஷியாரு முன்னேநின்று பாருலகில் சீஷருக்கு மதிசொல்வாரே
4224.
மதியான சீஷவர்க்க மெந்தன்பாலா மகத்தான லோகமது வதிசயங்கள்
பதியான பாருலகில் சொல்லொண்ணாது பட்சமுடன் தேறைய முனிவர்தாமும்
விதியான விதிப்படியே சீஷருக்கு விருப்பமுடன் தாமுரைப்பார் சித்தர்தாமும்
துதியுடனே சீஷர்களுமஞ்சலித்து தோற்றமுடன் எதிராக நின்றார்பாரே

4225.
பாரேதான் சீஷவர்க்கம் நிற்கும்போது பாலகனே என்தோழா பாக்கியவானே
நேரேதான் கல்லறைக்குள் இறங்குவேன்யான் நேரான கற்பாறைமேலேமூடி
சீரேதான் சமாதியது பூண்டபோது சிறப்புடனே பால்பழமுந்தருகவென்று
நீரேதான் மண்டலங்கடந்தபின்பு நீட்சியுடன் அவ்வழியைமூடிப்போடே
4226.
போடவே கற்பாறைமூடிப்பின்பு பொங்கமுடன் சமாதியுடன் நிற்கவேண்டும்
நீடவே நான்வருகுங்காலந்தன்னில் நிலையான பாறைதனில் எழுத்துதோன்றும்
கூடவே வாண்டுவது பத்துக்குள்ளே கொப்பெனவே யான்வருகுங்காலந்தன்னில்
சாடவே நர்மதா மலைதானப்பா சட்டமுடன் தங்கநிறமாகும்பாரே
4227.
தங்கமாம் அதிலிருக்கும் சித்தரெல்லாம் சட்டமுடன் மலையைவிட்டுக் கீழிறங்கி
அங்கமுடன் அஞ்சலிகள் மிகவுஞ்செய்து வன்புடனே சமாதியிடம் வந்துநிற்பார்
புங்கசித்தி எட்டுமது பூண்டுகொண்டு புகழான யோகமென்ற ஞானம்கொண்டு
சங்கமென்ற ஞானோபதேசத்தோடும் சார்புடனே சமாதியிடம் நிற்பார்பாரே
4228.
பார்க்கவென்றால் இன்னம்வெகுவதிசயங்கக் பாருலகில் தானடக்கும் மகிமைசொல்வேன்
தீர்க்கமுடன் வடகோடியாறுதானும் திகழுடனே தென்திசையிலிருந்துமல்லோ
மூர்க்கமுடன் வடகோடி கானகத்தில் முத்தமுடன் கான்பாபுவென்றுசொன்னார்
ஏர்க்கவே காணாறுநதிகளெல்லாம் எழிலுடனே இப்படியே நடக்குந்தானே
4229.
தானான சித்துமுனி ரிஷிகளெல்லாம் தண்மையுடன் சமாதியுட பக்கல்வந்து
கோனான எனதையர் அகஸ்தியர்தம்மை கொற்றவனார் குருபதத்தை தாம்நினைத்து
தேனான சித்தர்முனி வருவதற்கோ தேசமெல்லாங் கண்டுமனங்களிப்பதெப்போ
பானான சமாதியது பாறைதானும் பாருலகில் வெடிப்பதெப்போ வென்றிட்டாரே
4230.
இட்டதொரு காலமது சென்றபின்பு எழிலான சித்துவரும் நாளுமாச்சு
சட்டமுடன் மலைகளெல்லாம் தங்கமாச்சு சார்பான பாறையின்மேல் எழுத்துண்டாச்சு
குஷ்டமுடன் நோயுள்ள பிணியோரெல்லாம் குறைநோயுந்தீர்ந்துமல்லோ குசலமானார்
திட்டமுடன் சீஷவர்க்கமானோரெல்லாம் சிறப்புடனே சமாதியிடம் இருந்தார்பாரே
4231.
இருந்தாரே தசமாண்டு பத்துமாச்சு எழிலான சித்துவருங் காலமாச்சு
பொருந்தவே சமாதியது வெடித்துமல்லோ பொங்கமுடன் தேறையசித்துதாமும்
அருந்தவமுந் தான்தீர்ந்து வவனிமேலே வன்புடனே வெளியானார் சித்துதாமும்
வருந்தியே சீஷரென்ற மாண்பரெல்லாம் வண்மையுடன் அவர்பாதம் தொழுதிட்டாரே
4232.
தொழுதாரே தேறையசித்துதம்மை தொல்லுலகை விட்டதொருமாண்பரெல்லாம்
பழுதுபடத் திருமேனி காயந்தன்னை பண்புடனே தான்களித்து வஞ்சலித்து
அழுதுமே யவர்பாதம் பின்வணங்கி ஐயனே நாதாந்தசித்துரூபே
வழுவாது பொய்யுரையாக் காவலோனே வணங்கியே நமஸ்கரித்து பணிந்திட்டாரே

4233.
பணிந்திட்ட மாண்பரெல்லாம் முகம்மலர்ந்து பரமவொளி நாதாந்தசித்துரூபே
கணிந்திட்ட வசரீரிவாக்குபோலே கர்த்தனே வற்புதங்கள் முடிந்துதாச்சு
துணிந்திடவே வாக்கதுவும் பொய்யென்றில்லை துப்புறவாய் வையகத்தில் மெய்யேயாச்சு
தணிந்திடவே சீஷவர்க்கம் மனதுவந்து சட்டமுடன் ஆசீர்மம் செய்வீர்தாமே
4234.
தாமான யின்னமொரு மார்க்கங்கேளும் தகமையுள்ள சீஷவர்க்க மாணபாரே
கோமான யெனதையர் அகஸ்தியனார்தன்னை கொற்றவனார்தம்மைவிட்டு யான்பிரிந்து
சாமான முள்ளதொரு ஞானோபதேசம் சட்டமுடன் யானறிந்து பிரிந்துவிட்டேன்
நாமான மாகவல்லோசமாதிகொண்டு நாயகனே பத்தாண்டு இருந்திட்டேனே
4235.
இருந்தேனே இன்னும்வந்து யானும்கண்டேன் எழிலான சீஷவர்க்கமென்ன சொல்வேன்
பொருந்தவே சொற்பனமும் யானுங்கண்டேன் பொங்கமுடன் மறுபடியும் சமாதிக்கேக
வருந்தியே பராபரத்தின் செயலினாலே வன்மையுள்ள சொற்பனமும் மெய்யேயாகும்
திருந்தியே யான்கண்ட சொற்பனத்தில் திறமாக நடப்பதுவும் வுண்மையாமே
4236.
உண்மையாம் சொற்பனமும் கண்டேனப்பா ஓகோகோ நாதாக்களுக் குகந்தசீஷர்
வண்மையாம் சமாதிக்குப் போனாப்போலும் வடப்புடனே யிருபதுவாண்டிருப்பனென்றும்
கண்மையாம் மனோன்மணியாள் கடாட்சத்தாலே கண்டேனே சொற்பனங்கள் உண்மையாக
திண்மையாஞ் சமாதிக்குப் போனாற்போலும் திறமான வதிசயங்கள் பார்த்திட்டேனே
4237.
பார்த்தேனே சமாதிக்குச் செல்லும்போது பாங்கான வெகுகாலஞ் சென்றசித்து
நேர்த்தியுடன் பூமிதனில் சமாதிபூண சேர்மையுடன் சீஷர்களுமொன்றாய்கூட்டி
பூர்த்தியுடன் குழிதோண்ட போனபோது புகழான சித்தொருவரங்கிருந்தாப்போலும்
பார்த்திடவே பிரகாசமான ஜோதி மகத்தான சித்தொருவர் கண்டேன்தானே
4238.
தானான சொற்பனங்கள் கண்டேனப்பா தண்மையுள்ள சீஷர்களே என்னசொல்வேன்
கோனான எனதையர் அகஸ்தியர்போல் கொற்றவனார் சித்தொருவர் கண்டேனங்கே
கோனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தெளிவுடனே கண்விழித்துப் பார்க்கும்போது
மானான சொற்பனத்தில் கண்டாப்போல மன்னவனே கண்விழிக்கி லொன்றுங்காணே
4239.
காணேனே சொற்பனத்தில் சித்துதாமும் கைலாசநாதருட ஜோதிப்போல்தான்
வூணவே நினைவதுதான் கினவுமாச்சோ பொங்குமுன் சொற்பனமும் மெய்யோபொய்யோ
தோணவே எந்தனுக்கு ஒன்றுங்காணேன் துரைராஜசுந்தரனே மகிமையேதோ
மாணவே மறுபடியுஞ்சித்துதாமும் மகத்தான சமாதிக்கு ஏகினாரே
4240.
ஏகினார் சீஷவர்க்க மனேகம்பேர்கள் எழிலான கூட்டமுடன் ஏகியல்லோ
சாகமுடன் நர்மதா மலைக்குமேற்கே சட்டமுடன் சமாதிக்கு சென்றுமல்லோ
வேகமுடன் சமாதியது தோண்டும்போது மேன்மையுள்ள சித்தொருவர் அங்கிருந்தார்
போகமுடன் சித்தொருவர் தன்னைக்கண்டார் யொளியான பிரகாசந்தோன்றலாச்சே

4241.
ஆச்சப்பா புலிப்பாணியின்னங்கேளு வப்பனே தேறையர் சென்றபோது
மூச்சடங்கி வெகுகாலஞ் சென்றசித்து மூதுலகைக் கடந்ததொரு சித்துமாச்சு
மாச்சலுடன் பூமிதனில் ஓராள்மட்டம் மண்ணதனை வாரியல்லோகண்டபோது
பாச்சலுடன் பூமிதனில் நிலங்களெல்லாம் பாதாளநீர்மட்டும் வுருகலாச்சே
4242.
உருகவே நீர்மட்டம் நிலங்களெல்லாம் வூருருகத்தான் பாய்ந்துமே வேர்கள்போல
பெருகவே சடைமுடியுந் தம்பிரான்போல் பேரான சமாதிதனிலிருந்தார்தாமும்
வருகலுடன் கண்மூடிசித்துதாமும் வண்மையுடன் சமாதிதனிலிருக்கக் கண்டார்
சருகலுடன் ரிஷியாரும் பூமிதன்னில் சட்டமுடன் தானிருக்கக் கண்டார்பாரே
4243.
பாரேதான் தேறையமுனிவர்தாமும் பண்மையுடன் சமாதிதனிலிருந்துகொண்டு
தீரமுடன் தேறையமுனிவர்தம்மை திறமுடனே யாரென்று கேட்கும்போது
சேரேதான் சித்துமுனி ரிஷியைப்பார்த்து சிறப்புடனே தாமுரைப்பார் முனிவர்தாமும்
நேரேதான் அகஸ்தியனார் சீஷரென்றார் நேர்மையுடன் தேறையமுனிவர்தானே
4244.
தானான தேறைய முனிவர்தானும் தகமையுடன் ரிஷியஅர்க்கு விடையுஞ்சொன்னார்
கோனான கும்பமுனி கடாட்சத்தாலே குவலயத்தில் வெகுகோடி மகிமைதன்னை
தேனான மனோன்மணியாள் அருளினாலே தேசமதில் அதிதமிகக்கண்டேன்யானும்
மோனான தேறையமுனிவர்தானும் மோதவே யடிபணிந்து துதித்திட்டாரே
4245.
துதித்தாரே தேறையமுனிவர்தானும் துப்புறவாய் அடிவணங்கி தெண்டனிட்டு
கதிப்புடனே காயகற்பங்கொண்டுயானும் காசினியில் வெகுகோடி காலந்தானும்
மதிப்புடனே சமாதிமுகம் சென்றுயானும் மகதேவர் தசவருஷம் யிருந்தேன்யானும்
விதிப்பயனாம் அமைப்பின்படி பின்னுமல்லோ வேதாந்தத் தாயினது வருள்பெற்றேனே
4246.
பெற்றேனே மறுபடியுஞ் சமாதியேக பெருமையுடன் இருபதுவாண்டுமட்டும்
கற்பறிந்தேன் ஞானோபதேசங்கேட்டு காசினியில் ஆசையற்றுசமாதிபூண
சிற்றறிவு வுடையதொரு பாலன்யானும் சீராக சமாதிக்குப் பாத்திரனாவாய்
குற்றமில்லா வரைகடந்து யடியேன்யானும் குருபதத்தை நாடியல்லோ வந்திட்டேனே
4247.
வந்தேனே சீஷவர்க்கந் தன்னோடொக்க வகையான நர்மதா மலையைத்தேடி
அந்தமுடன் சமாதிக்கு இடமுங்கண்டார் வன்பான சீஷவர்க்கமான பேர்கள்
சொந்தமதாய்க் குழிதோண்டுஞ் சமாதிதன்னை கந்தாரே தாயிருக்கக் கண்டேன்யானும்
முந்தவே யான்கண்டசொற்பனம்போல் முடிந்துதே விட்டகுறை வாய்க்கலாச்சே
4248.
ஆச்சென்று தேறையசித்துதாமும் வன்பாக ரிஷியார்க்குத் தாமுரைக்க
மூச்சடங்கி சிலகாலம் எந்தன்பக்கல் முடிவான வாண்டுவரு முடிவுமட்டும்
வீச்சுடனே சமாதியது யிருக்கவென்று விருப்பமுடன் ரிஷியாரும் வாக்களித்தார்
பாச்சலென்ற சுவாசமது தானடக்கி பட்சமுடன் தானிருக்க வரந்தந்தாரே

4249.
வரமுடனே தான்கொடுத்து ரிஷியார்தாமும் வண்மையுடன் ஆசீர்மஞ்சொன்னாரங்கே
சரமுடைய வார்த்தையென்ற மொழிக்கித்தானும் தப்பாமல் சமாதிக்குள் சென்றாரங்கே
திறமுடைய தேறையர் சித்துதாமும் தீர்க்கமுடன் சீஷருக்கு வோதலுற்றார்
குறமுடைய ரிஷியாரும் சீஷருக்கு கூறுவார் அதிசயங்கள் மிகவாய்த்தானே
4250.
தானேதான் சமாதியது பூண்டபோது தகமையுள்ள வசரீரி வாக்குண்டாம்
மானேதான் சீஷவர்க்கம் மாண்பாகேளு மகிழ்ச்சியுடன் சமாதிதனிலிருக்கும்போது
தேனேதான் சிவயோக நிலையில்நின்று தேற்றமுடன் மேதினியில் வருவதற்கு
மானேதான் வதிசயங்கள் மிகநடக்கும் மகத்தான சமாதியிடம் பக்கல்நில்லே
4251.
நிற்கையிலே மனோன்மணியால் கிருபையாலே நீடான வசரீரிகேட்கும்பாரு
அற்பமென்று நினையாதே வன்பாகேளு அவனியிலே நான்வருகுங்காலந்தன்னில்
சிற்பரன்போலுந்தனுக்கு சொற்பனங்கள் சீராகத் தானடக்கும் வருள்மைந்தாகேள்
உற்பமுடன் சொற்பனத்தில் நான்வந்தாற்போல் வுத்தமனே வதிசயங்கள் நடக்குந்தானே
4252.
தானான லோகமது இருண்டுபோகும் தாக்கான கடலதுதான் பொங்கும்பாரு
மோனான நாதாக்கள் இறந்தபேர்கள் மோனமென்ற சமாதியது யொளிக்கும்பாரு
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தெளிவாகக் கண்ணின்முன் நிற்பார்பாரு
பானான நாலுயுக வதிசயங்கள் பட்சமுடன் தாமுரைப்பார் சித்தர்தாமே
4253.
சித்தான தேறையர் முனிவர்தானும் சிறப்புடனே கூறலுற்றார் இந்தவண்ணம்
பத்தான ரிஷியாருஞ் சமாதிவிட்டு பட்சமுடன் தானடக்க வழியுஞ்சொல்வார்
முத்தான தேகமதை வுலகிற்காண முனியான தேறையர் சமாதிதானும்
புத்தான பாறையதுதான்வெடித்து புகழாகச் சமாதிவட்டு வெளிவந்தாரே
4254.
வெளியாக சித்துமுனி வந்தபோது வெற்றிபெற சீஷருக்குத்தானுரைப்பார்
தெளிவான சாஸ்திரங்கள் கற்றுமென்ன தேகாதி காயகற்பங்கொண்டுமென்ன
பளியான தேகமதை வையகத்தில் பட்சமுடன் காப்பாற்றி நிறுத்தியென்ன
குளியான சமாதியிடஞ் சென்றுமென்ன குவலயத்திலிருந்தாலும் ஒன்றுங்காணே
4255.
காணேனே பஞ்சபூதத்தினாசை கடிதான தேகமது நிலைநில்லாது
பூணவே வரைகோடி யிருந்துமென்ன பூவுலகில் சடலமது வழிந்துபோகும்
தோணவே யில்லாவே யிடுகாடாகும் துப்புறவாய் சொந்தநகர் புறங்காடாகும்
மாணவே வையகத்தினாசையெல்லாம் மறப்பதுவே வண்மையுள்ள வதிதமாமே
4256.
அதிதமாங் காயமது நிலைநில்லாது அவனியிலே யிருந்தவர்கள் யாருமில்லை
பதிதமாம் லோகத்தின் வாழ்க்கையெல்லாம் பாங்கான பொய்வாழ்வு மெய்யேயல்ல
துதிதமுடன் லோகமதிலிருந்தோரில்லை துப்புறவாய் சடலமது வழியும்பாரு
நதிதமுடன் தேறைய முனிவர்தானும் நயமுடனே தாமுரைத்தார் வுண்மைபாரே

4257.
பாரப்பா புலிப்பாணி மைந்தாகேளு பகருகிறேன் தேறையசித்துதம்மை
ஆரப்பா வுலகுதனில் தேறைபோலும் வப்பனே வதிசயங்கள் மகிமைகொண்டோர்
நேரப்பா வுலகுதனிலிருந்தசித்து நேர்மையுடன் கண்டவர்கள் இவர்போலுண்டோ
தீரப்பா காயாதிகொண்ட சித்து திறமுடைய தங்கமென்ற சித்துதாமே
4258.
தங்கமாஞ் சித்தர்களில் இவர்கீடுண்டோ தாரிணியில் காயாதிகொண்டசித்து
புங்கமாஞ் சித்துயெட்டு கொண்டசித்து புகழான மூலிவகையறிந்தசித்து
தங்கமாம் மாண்டவரை எழுப்புஞ்சித்து துரைகோடி வரைகோடி யறிந்தசித்து
சிங்கமாம் பதினெண்பேர் சித்துதன்னில் சீர்மிகு வகஸ்தியர்க்கு உகந்தசித்தே
4259.
சித்தான தேறையர் முனிவர்தானும் சீரான வுலகுதனிலிருந்தாரேதான்
முத்தான தேகமதை மறந்தாரேதான் மூதுலகு வாசைதனை விட்டார்பாரு
பத்தான பரமரிஷியெவரானாலும் பாருலகில் இருந்தவர்களா யாருமில்லை
சுத்தமுடன் சைதன்னியவாசைவிட்டு சுகமுடனே தவநிலையில் இருக்கநன்றே
4260.
நன்றான தவநிலையிலிருந்துகொண்டு நாதாக்கள் என்றல்லோ பெயருங்கொண்டு
குன்றான தேகமது குகைகள்தேடி கூறுபிலந்தனிலொளித்து முனிவரெல்லாம்
வென்றிடவே வெட்டவெளி தன்னிற்சென்று விருப்பமுடன் சமாதியது பூண்டுமல்லோ
மன்றிடவே பாரினிலே யின்னுமேதிய பாராமறிந்து காயமதை யொழித்திட்டாரே
4261.
ஒழித்தாரே சித்தரெல்லாம் இந்தமார்க்கம் ஓகோகோ நாதாக்களெல்லாருந்தான்
வழியுடனே வையகத்தைத்தான்மறந்து வல்லான வுயிர்தனையே போக்கடித்தார்
பழியுடனே கல்லான தேகந்தன்னை பான்மைபெற பாரினிலே யொழித்துப்போட்டார்
அழியான வையகத்திலொருவருந்தான் வப்பனே வையகத்தில்லைதானே
4262.
தானான தத்துவங்கள் அதிகஞ்சொல்லி தட்டழிந்து போகுமிந்த காயமப்பா
கானான குருவென்ற சொன்னசித்தும் குவலயத்தை தான்மறந்து சென்றாரப்பா
தேனான மனோன்மணியாள் வரமும்பெற்று தேசத்தில் இருந்தசித்தும்போனாரப்பா
பானான பரமருட பாதங்காண பாருலகில் எல்லோரும் பிறந்தார்தாமே
4263.
பிறந்தவரு மொருகாலமிருந்ததுண்டோ பேருலகில் வாக்கியமும் மெய்யோபொய்யோ
இறந்தவர்கள் ஒருகாலம் பிறந்ததுண்டோ எழிலான வுலகுதனில் மெய்யோபொய்யோ
நிரந்தரமாய் தேசமதில் எவரானாலும் தீர்க்கமுடன் சாகாமலிருப்பேனென்று
அறமென்ற மெய்பொருளை கண்டாராய்ந்து வப்பனே யந்தநிலை கண்டுபோற்றே
4264.
போற்றவே யின்னமொரு கருமானங்கேள் புகழான புலிப்பாணி மைந்தாகேளு
ஏற்றவே பதினெண்பேர் சித்தர்தன்னில் எழிலான ரோமரிஷி யென்னுஞ்சித்து
நாற்றிசையும் மெச்சுதற்கு யோகவானாம் நலமான ரோமபுரி யென்னும்நாடு
மேற்புறமாம் வடகோடிகானகத்தில் மேதினியில் தான்பிறந்த சித்துமாமே

4265.
தானான சித்தர்முனி வெகுகாலந்தான் தகமையுடன் ரோமபுரி பதியிலப்பா
தேனான செங்கமுனி தீர்த்தந்தன்னில் சிறப்புடனே வெகுகாலமிருந்தாரங்கே
மானான ரிஷியாரும் மலைமீதிற்தான் மகத்தான வாதவித்தை செய்வதற்கு
வூனான பட்சியின்தன் வாதவித்தை வுத்தமனே செய்தாரே கோடியாமே
4266.
கோடியாஞ் சாதியென்ற சேவல்தானும் கொற்றவனாம் ரோமரிஷி கானகத்தில்
தேடியே பெருஞ்சாதி சேவல்தன்னை தெளிவுடனே கண்டல்லோ வாராய்ந்தேதான்
நீடியே கெந்தகமும் பலந்தான் பத்து நேர்மையுடன் பருங்குறுவை யரிசிநேராம்
சூடியே குழிக்கல்லில் தன்னிலிட்டு துப்புறவாய் தானரைப்பாய் சாமம்நாலே
4267.
நாலான சாமமது மேதிப்பாலால் நலம்பெறவேதானரைப்பாய் நாலுசாமம்
சீலமுடன் மாவதனை திரட்டியேதான் சிறப்பான சேவலுக்கு வுணவுயீய
கோலமுடன் சேவலதுவுண்டபின்பு கொற்றவனே குகைக்குள்ளே யடைத்துமேதான்
பாலமுர்தமுண்டபின்பு பட்சிதன்னை பான்மையுடன் தானமைத்தார் குகையினுள்ளே
4268.
உள்ளான குகைதனிலே நாலாவட்டம் வுத்தமனே செவலுக்கு வுணவுதந்து
எள்ளளவும் எச்சமது வெளியேகாமல் யெழிலாகத் தான்சேர்த்துக்காயப்போடு
தெள்ளமிர்தமானதொரு காரமிட்டு தெளிவாக மூசையிட்டுச் சீலைசெய்து
கள்ளமின்றி ரவிதனிலே காயவைத்து கலங்காமல் மூசைதனை ஊதிடாயே
4269.
ஊதவென்றால் சரவுலையில் வைத்துவூது வுத்தமனே தீயாறி எடுத்துப்பாரு
நீதமுடன் மூசைதனை யுடைத்துப்பார்க்க நிலைத்துதடா கெந்தியென்ற செம்புமாச்சு
தோதமுடன் செம்புதனை எடுத்துக்கொண்டு தோராமல் மறுபடியும் பொடித்துமேதான்
சாதமுடன் கெந்தியது பொடியைச்சேர்த்து சட்டமுடன் சேவலுக்குக் கொடுத்திடாயே
4270.
கொடுக்கவென்றால் சேவலுக்கு முன்போல்செய்து குகைதனிலே தானெடுத்து எச்சந்தன்னை
தடுக்காமல் முன்போலே வுருக்கித்தீரு சட்டமுடன் செம்பதுவும் தங்கச்செம்பாம்
வடுவான செம்பதுவும் எடுத்துக்கொண்டு வண்மையுள்ள மதிதனிலே பத்துக்கொன்று
நடுவான மூசைதனையுருக்கிக்கொண்டு நன்மையுடன் கொடுத்திடவே மாற்றெட்டாமே
4271.
எட்டான மாற்றதுவும் தங்கம் எழிலான ஸ்ரீராமர் காசியப்பா
மட்டான தங்கமது மதிப்புமெத்த மகிதலத்தில் மகிமையது மகிழப்போமோ
திட்டமுடன் கெந்தியென்ற தங்கச்செம்பாம் சிவராஜயோகியவன் செய்வான்பாரு
சட்டமுடன் விதியாளி செய்வானல்லால் சாங்கமுடன் மற்றவருஞ் செய்யார்தாமே
4272.
செய்யாரா மற்றொருவரானாலுந்தான் செம்மையுடன் கைபாகஞ்செய்பாகந்தான்
எய்யாது கெந்தினுட செம்புமார்க்கம் யெடுக்கவுமே பாகமது காணப்போமோ
மையான கெந்தியது செம்பேயானால் மகத்தான வேதையிது கோடிக்கோடும்
துய்யதொரு மதிகாணும் பழுத்ததங்கம் துப்புறவாய் பின்னுமந்த மதியில்தாக்கே

4273.
தாக்கவே பத்துக்கு வொன்றுதங்கம் தண்மையுடன் வுருக்கிப்பார் மாற்றேயாகும்
நோக்கமுடன் கெந்தியென்ற செம்புதன்னை நேர்மையுடன் ஆறுமாற்றாணிமேலே
நூக்கமுடன் பத்துக்கு ஒன்றுதாக்க துடியான மாற்றதுவும் பத்தேயாகும்
வாக்கயுவும் பொய்யாது ரோமர்வேதை வண்மையுள்ள கலெந்தியென்ற செம்புதானே
4274.
தானான சேவலென்ற மாமிசத்தை தகமையுடன் ரோமத்தைப்போக்கிநன்றாய்
தேனான குடல்போக்கி எலும்புபோக்கி தெளிவுறவே அறுசுவையுந்தன்னோடொக்க
பானான பதமேத்தி சமைத்துமல்லோ பாங்குபெற மாமிசத்தையுண்டபோது
மானான தேகமது காயகற்பம் மகத்தான சாரமது ஏறலாச்சே
4275.
ஏறவென்றால் மண்டலந்தான் இப்படியே கொண்டால் எழிலான தேகமது கற்றூணாகும்
சீரலென்ற சுவாசமது கீழ்நோக்காகும் சிறப்பான தேகமது காந்திவீசும்
பீக்கலென்ற சுரோனிதம்தான் கட்டிப்போகும் பேரான தாதுவிர்த்தி யதிகமாகும்
கூறவே முடியாது சேவல்கற்பம் குவலயத்தில் ரோமரிஷிமார்க்கந்தானே
4276.
மார்க்கமா மின்னமொரு வயனஞ்சொல்வேன் மகத்தான ரோமரிஷி மகிமைபாரு
தீர்க்கமுடன் கந்தரது வாகனந்தான் திறமான புள்ளிமயில் பட்சியாகும்
சேர்க்கவே கெந்தியது தாளந்தானும் சிறப்பான சூதமது தன்னோடொக்க
ஏர்க்கவே சரக்கதுவும் சமனதாக எழிலான கருங்குருவை யரிசிகூட்டே
4277.
கூட்டவே சரக்குக்கு ரெட்டியப்பா கொற்றவனே யரிசியது ரெண்டதாகும்
நீட்டவே மூன்றையுந்தா னொன்றாய்க்கூட்டி நீதியுடன் குழிக்கல்லில் பொடியதாக்கி
தாட்டிகமாய்ச் சலமதனில் பிசைந்துகொண்டு சட்டமுடன் மயிலுக்குத் தாக்கிப்பாரு
வட்டமுடன் மண்டலமுந்தாக்கியேதான் மகத்தான எச்சமதை ஒன்றாய்ச்சேரே
4278.
சேர்க்கவே ரோமமது வுதிர்ந்துபோகும் செம்மையுடன் மயிலதுவுங் காரமேறி
தீர்க்கமுடன் காயாதிகற்பமாகி திரமான மயிலினது ரோமம்போகும்
ஏற்கவே ஆறாண்டு சென்றபின்பு எழிலான ரோமமது விளையும்பாரு
மூர்க்கமென்ற மயிலுக்கு ரோமமாகி முன்போலே வாலுக்கு யேதுவாமே
4279.
ஏதுவாங்காரர் மேகந்தன்னைக்கண்டு எழிலாக மயிலாடி வுறவுசெய்யும்
சாதுடனே மயில்தனைப் பிடித்துவந்து சட்டமுடன் ரோமரிஷி முயார்தாமும்
தீக்கற்றி மாமிஷத்தை எடுத்துக்கொண்டு திறமுடனே அறுசுவையாந் தன்னோடொக்க
மூதுறவே கைபாகஞ்செய்துகொண்டு மூப்பகல மண்டலந்தான்கொண்டார்பாரே
4280.
பாரேதான் ருசிபாகம் அறிந்தசித்து பாருலகில் வெகுகால மிருந்தாரப்பா
சீரேதான் மாமிசத்தைக்கண்டபோது சிறப்பான ரோமரிஷி முனியார்தாமும்
தீரேதான் தேகமது கற்றூணாகி திரைநிறையுமற்றுமல்லோ புனிதனானார்
மேரேதான் வேருவென்ற சித்தனாகி மேதினியில் வெகுகாலம் இருந்தார்காணே

4281.
காணவே தேகமது சட்டைதள்ளி காசினியில் வெகுகால மிருந்தசித்து
தோணவே யுகாந்தவரை கண்டசித்து தொல்லுலகில் ஆசைதனைதுறந்தசித்து
பூணவே கைலங்கிரி வாழுசித்து புகழான ரோமரிஷி
வேணபடி மயிற்கற்பம் கொண்டசித்து மேதினியில் சுயரூப சித்துதானே
4282.
தானான யின்னமொரு மார்க்கங்கேளு தகமையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
மானான ரோமரிஷியுண்டகற்பம் மகத்தான மயிலினது எச்சமப்பா
வூனான வுடல்தனிலே வந்தயெச்சம் வுத்தமனே ரோமரிஷி பாகங்கேளே
4283.
கேளேதான் எச்சமதைக்காரமிட்டு கிருபையுடன் மூசைதனில் அடைத்துமல்லோ
தோளேதான் வாராமல் வுலையில்வைத்து கொற்றவனே வஜ்ஜிரமாம் குகையைத்தானும்
பாளேதான் போகாமல் பதுங்கவூதி பக்குவமாய்த் தானெடுத்தார் களங்குமாச்சு
தூளேதான் களங்கமது நாலுக்கொன்று துப்புரவாய்க் காந்தமது சேர்த்திட்டாரே
4284.
இட்டாரே தங்கமது பத்துக்கொன்று எழிலாகக் குழிக்கல்லில் பொடியதாக்கி
சட்டமுடன் கையானின் சாற்றினாலே தானரைப்பாய் நாற்சாமமமானபின்பு
திட்டமுடன் ரவிதனிலே காயவைத்து திடமான காசிபென்ற குப்பிக்கேற்றி
வட்டமுடன் மரக்கல்லால் கொண்டுமூடி வண்மையுடன் சீலையது செய்தார்தாமே
4285.
செய்தாரே காசிபென்ற குப்பிதன்னை செம்மையுடன் தளவாஆம் பாண்டந்தன்னில்
பையவே மணலதனைக் கொட்டுமைந்தா பாங்குபெற நடுமையங் குப்பிதன்னை
பெய்யவே குப்பிமேல் மணலைக்கொட்டி பேரான மேற்பாண்டந் தன்னைமூடி
துய்யவே வாலுகையாம் ஏந்திரத்தில் துப்புரவாய் நாற்சாமமெரித்திட்டாரே
4286.
எரிக்கவே செந்தூர மென்னசொல்வேன் எழிலான நாற்சாமமானபின்பு
சொரிக்கவே மணலதுவுஞ் சிவந்துமெத்த சுத்தமுடன் செந்தூரங் காந்தியாச்சு
பரியான செந்தூர மென்னனொல்வேன் பாருலகில் சித்தர்முனி செய்வாரோதான்
சரியான வேதையிது ரோமர்வேதை சட்டமுடன் முடித்தாரே சித்துமாமே
4287.
சித்தான ரோமரிஷி செந்தூரத்தை திறமுடனே குப்பியது திறந்துபார்க்க
சத்தான சரக்கெல்லா மொன்றாய்ச்சேர்த்து சாங்கமுடன் செந்தூரம் நாவோயில்லை
சுத்தமுடன் மனோன்மணியைத் துதித்துமேதான் சுகமுடனே செந்தூரமெடுத்தார்பாரே
4288.
எடுத்துமே செந்தூரம் மைந்தாகேளு எழிலான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
கொடுத்துமே தானுருக்கி யெடுத்துக்கொண்டு கொற்றவனே யோட்டில்வைத்து வூதும்போது
படுத்ததொரு மாற்றதுவும் என்னசொல்வேன் பாலகனே வயததுவும் எட்டதாகும்
அடுத்துமே தங்கமது நாலுக்கொன்று வப்பனே புடம்போடத் தங்கமாச்சே

4289.
தங்கமென்றால் சுயத்தங்கம் பிரிதிலாச்சு தாரணியில் சமுசாரிக்காணவேதை
பங்கமது வொருக்காலும் நேராதப்பா பண்பான மாணபர்களுக்கான வேதை
புங்கசித்து எட்டுவகை யடையலாகும் புகழான ரோமரிஷிவேதைதானும்
வங்கசத்துக்கொருநாளும் யிடையாதப்பா வர்ணமென்ற செந்தூர வேதையாமே
4290.
வேதையாமின்னமொரு போக்குகேளும் வீரான செந்தூரமென்னசொல்வேன்
பாதையாம் நெய்தேனிற் குன்றிதானும் பாலகனே மண்டலந்தான் கொண்டாயானால்
தீதகன்று தேகமது கற்றூணாகும் திறமான சட்டையது தள்ளும்பாரு
மீதலத்தில் உண்டவருஞ் சித்தனாவார் புகழான செந்தூரக் களங்குதானே
4291.
தானான செந்தூர முண்டுமல்லோ தன்மையுடன் சமாதிக்குப்போகவென்று
கோனான குருசொன்ன வாக்குதம்மை குறையாமல் தன்மனதில்தான்நினைத்து
பானான சமாதிக்கு யிடமுந்தேடி பட்சமுடன் சீஷர்களைத் தானழைத்து
மானான டில்லிக்கு மேற்கோரமப்பா மகத்தான சமாதிக்கு இடங்கண்டாரே
4292.
கண்டாரே டில்லிக்கு மேற்கேயப்பா கனமான ரோமரிஷி முனிவர்தானும்
அண்டர்முனி யறியாத வனாந்திரத்தில் அங்ஙனவே சமாதிக்கு யிடமுங்கண்டு
தொண்டரெனுஞ் சீஷவர்க்கமானபேரை துரைராஜ சுந்தரனார் தாமழைத்து
விண்டிடவே சமாதியது தோண்டுதற்கு வருப்பமுடன் வுத்தாரஞ் செய்தார்பாரே
4293.
பாரேதான் சீஷவர்க்க மாண்பரோடு பாங்குடனே சமாதியதில் இறங்கவென்று
நேரேதான் சீஷர்முகந் தன்னைநோக்கி நேர்மையுடன் தாமுரைப்பார் ரிஷியார்தாமும்
கூரேதான் சமாதிக்குப் போரேனப்பா கொற்றவனே இருபதுவாண்டுமட்டும்
சீரேதான் வையகத்தை யான்மறந்து சிறப்புடனே இருப்பே னென்றுரைத்தார்தாமே
4294.
தாமான சமாதிக்குப் போகுமுன்னே தகமையுடன் ரிஷியாருந் தாமுரைப்பார்
சாமான மானதொரு சீஷர்தம்மை தன்மையுடன் பக்கலில்தாமழைத்து
கோமானாம் ராஜாதிராசர்தம்மால் கொற்றவனா யிடையூறு யெதுநேர்ந்தாலும்
நாமான சொற்படியே என்னைத்தானும் நலமான சமாதியது திறக்கொண்ணாதே
4295.
ஒண்ணாது சமாதிவிட்டு வருகும்போது வுத்தமனே சந்தனமும் மலரும்பாரு
நண்ணாது தேவதா புட்பந்தானும் நண்மையுடன் சமாதிசுத்திப் பூத்திருக்கும்
திண்ணமுடன் பாரிசாத புட்பமப்பா திடமான நாடெல்லாம் பூத்திருக்கும்
எண்ணமுடன் சித்தாதி சித்தரெல்லாம் எழிலான சொற்பனமும் காண்பார்தாமே
4296.
தானான சொற்பனங்கள் அதிகங்காண்பார் தகமையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு
பானான மிருகமெல்லாம் பாஷைபேசும் பட்சிகளும் பரிபாஷை மிகவும்கூறும்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேசமெல்லாம் இருள்வந்து மூடிக்கொள்ளும்
பானான பரிதிமதி காணமாட்டார் பாலகனே சமாதியது வெடிக்கும்பாரே

**4297.**
வெடிக்குமே சமாதிதனி லசரீரியுண்டாம் வேகமுடன் சித்துவருங்காலமாச்சு
துடிக்கவே சீஷாதிவர்க்கமெல்லாம் துறையோடும் முறையோடும் சென்றாரங்கே
நடிக்கவே சித்தாதி சித்தரெல்லாம் நலமுடனே ரோமரிஷி வந்தாரங்கே
முடிக்கவே சீஷர்முகந் தன்னைநோக்கி முனையாக கேட்கலுற்றார் ரிஷியார்தாமே
**4298.**
தாமேதான் கேட்கையிலே சீஷர்தாமும் தண்மையுடன் தாமுரைப்பார் ரிஷியாருக்கு
போமேதான் சமாதிதனில் சென்றபோது பொங்கமுடன் தாமுரைத்த வர்க்கமெல்லாம்
வேமேதான் மேதினியில் செய்யலாச்சு விருப்பமுடன் மகிமையெல்லாம் நடக்கலாச்சு
ஆமேதான் தாமுரைத்த வர்க்கமெல்லாம் ஐயனே மெய்யாச்சி யென்றிட்டாரே
**4299.**
என்றிட்ட போதையிலே ரிஷியார்தாமும் எழிலான தேகமதை நம்பொண்ணாது
சன்றிட்ட மாகவல்லோ சமாதிக்கேக சட்டமுடன் ரோமரிஷி முன்வரதானும்
வென்றிடவே சீஷர்களை மிகவிரும்பி விருப்பமுடன் சமாதிக்கு ஏகலாகி
சென்றிடவே பூலோக மாய்கையற்று சிறப்புடனே சமாதிக்கு யேகினாரே
**4300.**
ஏகவே ரோமரிஷி முனியார்தாமும் எழிலான சமாதிக்குச் செல்வேனென்று
சாகாமல் வையகத்தில் இருந்துமென்ன சட்டமுடன் காயகற்பம் கொண்டுமென்ன
வேகமுடன் சின்மயத்திலிருந்துகொண்டு விருப்பமுடன் வாசியோகஞ்செய்துமென்ன
யோகமது செய்துமல்லோ கோடிகாலம் ஒன்றையுந்தான் காண்பதில்லை தேகவாழ்வே

# போகரின் சப்த காண்டம் – 7000

4301.
வாழ்கவென்றால் லோகமதிலொன்றுமில்லை வையகத்தோர் வாழ்வெல்லா மிந்தவண்ணம்
மூழ்கியே போனார்கள் கோடிமன்னர் மூதுலகில் இருந்தவர்கள் யாருமில்லை
மாழ்கியே நன்னிலையில் நில்லாமற்றான் மதிகெட்டுப்போனவர்கள் கோடியுண்டு
பாழ்கியே லோகமதில் வாசைவிட்டேன் கைலாயமெந்தனுக்குக் காணியாச்சே
**4302.**
ஆச்சப்பா சீஷவர்க்கஞ் சொல்லக்கேளு வப்பனே சமாதிக்குச் சென்றபோது
மூச்சடங்கிப்போனதொரு தேகந்தானும் மூதுலகில் மறுபடியும் வந்துமென்ன
மாச்சலுடன் வையகத்தை யான்மறந்து வண்ணதனில் தேகமதையொழிப்பேனென்றும்
பாச்சலுடன் சமாதிக்குப்போறேனென்றும் பான்மையுடன் ரிஷியாரு மிரங்கினாரே
**4303.**
இறங்கவே சீஷவர்க்கமெல்லோருந்தான் எழிலாகப் பாறைகொண்டு மூடினார்கள்
உறங்கவே மண்ணுதனில் ரிஷியார்தாமும் வத்தமனார் தேகமதை மேவலாக்கி
மறந்தாரே தேகமதை சொரூபர்தாமும் மானிலத்தில் விட்டொழித்து மண்ணில்சாய்ந்தார்
திறமுடனே சீஷரெல்லா மாசீர்வாதம் செப்பினார் துரைராஜ வேந்தருக்கே
**4304.**
வேந்தராம் புலிப்பாணி மைந்தாகேளு விருப்பமுடன் சொல்லுகிறேன் ரிஷியார்தம்மை
சாந்தமுடன் வுலகுதனில் யாரிருந்தார் சட்டமுடன் தேகத்தை மறந்தார்சித்தர்
போந்தமுடன் வுலகுதனில் யாருமில்லை பொன்னுலகம் பதிபோனார் மாண்பரெல்லாம்
நீத்தவே பொய்யான வாழ்க்கைநம்பி நீனிலத்தில் வெகுகோடி கெட்டார்தாமே
**4305.**
கெட்டாரே மாண்பரெல்லாம் யுககோடிகாலம் கெவனமுடன் நாதாக்கள் தெய்வமென்பார்
பட்டாரே பாருலகில் மனிததெய்வம் பாரினிலே மனிதரே தெய்வமானால்
இட்டமொடு இன்னமொரு தெய்வமென்ன எழிலான பூலோக வாழ்க்கையாவும்
சட்டமுடன் இப்படியே இருக்குதல்லால் தாரிணியில் ஒன்றுந்தான் காணோம்பாரே
**4306.**
பாரேதா னின்னமொரு மார்க்கங்கேளு பாங்கான புலிப்பாணி மைந்தாபாரு
நேரேதான் எனதையர் காலாங்கி நாதர் நேர்மையுடன் எந்தனுக்கு வுரைத்தநீதி
சீரேதான் குளிகைகொண்டு யடியேன்தானும் சிறப்புடனே அஷ்டதிசை சுத்தியல்லோ
வீரேதான் வடக்குமுகம் போகும்போது வீரான கடுவெளியைக் கண்டேன்தானே
**4307.**
கண்டேனே கானகத்தில் மார்க்கந்தன்னை கடுவெளியா மென்றதொரு சித்துகண்டேன்
அண்டியே யானுமல்லோ வருகிற்சென்றேன் அங்ஙனவே யாரென்று என்னைக்கேட்க
விண்டதொரு கடுவெளியாஞ் சித்தருக்கு விருப்பமுடன் காலாங்கி சீஷனென்றேன்
பண்டிதங்கள் மிகக்கேட்டு என்னையல்லோ பட்சமுடன் ஆசீர்மம் செய்தார்காணே
**4308.**
காணவே கடுவெளியாஞ் சித்துதம்மை கனமுடனே யடியேனும் வணங்கியல்லோ
பூணவே காட்டகத்தைக் காணவந்தேன் புனிதமுள்ள ரிஷியாரே விண்ணப்பங்கேள்
தோணவே பவளமென்ற காட்டகத்தை தொல்லுலகில் யான்பார்க்கவேண்டுமென்றேன்
நீணவே யடியேனும் கேட்கும்போது நீதியுடன் எந்தனுக்கு வுரைத்தார்தாமே

4309.
உரைத்தாரே கடுவெளியாஞ் சித்தர்தாமும் ஓகோகோ யினாறோநாதனென்று
வரையான முறைப்படியே சித்துதாமும் வடகோடி கானகத்தைச் செல்லநன்னி
திரைபோன்ற காலுக்கு வடக்கேயப்பா தீவாந்திரமானதொரு காடொன்றுண்டு
கரையான வழிதனையே கண்டதில்லை காசினியில் அதிதமப்பா சொல்லொண்ணாதே
4310.
ஒண்ணாது யென்றல்லோ சித்துதாமும் ஓகோகோ நாதாக்களறியாக்காடு
குண்ணான மலையதுவும் கூறப்போமோ கூறான கதண்டுகளு மதிலேயுண்டு
என்னவே யாராலும் முடியாதப்பா எழிலான சிங்கத்தின் தலையைப்போல
அண்ணாந்து பார்த்தவரை யங்கேகொல்லும் அதவான வடகோடி மலைதானாச்சே
4311.
ஆச்சப்பா மத்தகசந் தன்னைப்போல அழகான கதண்டுகளு மங்கேயுண்டு
பேச்சப்பா பேசுமுன்னே சிகரம்போகும் பேரான கதண்டுகளுமங்கேயுண்டு
மூச்சடங்க மேல்விழுகுங் கதண்டுதானும் முனையான குதிரையின் சிரசிபோலாம்
கூச்சலுடன் தானிருக்கும் வனந்தானப்பா குவலயத்தில் கண்டவர்கள் இல்லைதானே
4312.
தானான காலாங்கி சீஷவர்கேளும் தண்மையுள்ள கதண்டுமகாரிஷிதானப்பா
கோனான யென்பாட்டர் ரிஷிதானாகும் கொற்றவனே தண்டுமகா ரிஷியாசீர்மம்
தேனான காட்டகத்தைச் சென்றாயானால் தெளிவுடனே யுந்தனுக்கு வுளவுசொல்வார்
மானான ரிஷிமகாதேவர்தன்னால் மானிலத்தில் பவளமதைக்காணலாமே
4313.
காணலாமென்று கடுவெள்யார்தாமும் கருத்துடனே எந்தனுக்குச் சொன்னாரங்கே
பூணவே யவர்பாதம் பின்னும்யானும் பொங்கமுடன் தொழுதிட்டேன் ரிஷியார்தாமும்
நீணவே எந்தனுக்கு யாசீர்மித்து நீதியுடன் எந்தனையு மழைத்துமல்லோ
வேணபடி எந்தனுக்கு உதவிசொல்லி விருப்பமுடன் காட்டகத்தைச் சென்றார்பாரே
4314.
பாரேதான் கதண்டுமகாரிஷியார்பக்கல் பதிவுடனே எந்தனையும் கொண்டுசென்றார்
நேரேதான் கடுவெளியார் சித்துதாமும் நேர்மையுடன் எந்தனுக்கு யிதவுகூறி
சீருடனே காலாங்கி சீஷனென்று செப்பிய யென்மீதில் கிருபைவைத்து
நீரேதான் இவர்தமக்கு வாசீர்மித்து நீட்டமுடன் வரந்தருக வென்றிட்டாரே
4315.
வென்றிட்ட போதையிலே ரிஷியார்தாமும் விருப்பமுடன் வுபதேசம் செய்யவென்று
சென்றிடவே தம்பக்கல் வழைத்துமல்லோ சிறப்பான காலாங்கி சீஷனென்று
என்றிடவே யிவர்தமக்கு பவழக்காட்டை யெழிலாகக் காணுதற்கு வரமுமீய
சென்றுமே தமதிடமும் வந்தாரையா சிறப்பான போகரிஷி யிவர்தானாச்ளே
4316.
ஆச்சையா என்குருவே சாமிநாதா வன்புடனே தன்பாதங் காணவந்தோம்
மாச்சலுடன் சீனபதிவிட்டுமல்லோ மகத்தான போகரிஷி வந்தாரையா
பேச்சரியா போகரிஷிநாதருக்கு பேரான வுபதேசஞ் செய்யவேண்டும்
ஆச்சரியமானதொரு பவழக்காட்டை யவர்தமக்கு இன்பமுடன் அளிப்பீர்தானே

4317.
தாமென்ற புலிப்பாணி யின்னங்கேளு தகமையுள்ள கதண்டுமகா ரிஷியார்தாமும்
ஆமெனவே காலாங்கிநாதர்தம்மால் வன்புடனே எந்தன்மேல் கடாட்சம்வைத்து
ஏமெனவே யாசீர்வாதங்கள் சொல்லிஎழிலான காட்டகத்தை எந்தனுக்கு
போமெனவே விடைதந்து வுளவுஞ்சொல்லி பொங்கமுடன் வரந்தந்தார் ரிஷியார்பாரே
4318.
பாரேதான் காலாங்கி சீஷாகேளு பாங்குடனே சொல்லுகிறேனுந்தமக்கு
சேரேதா னிவ்வனத்துக் கிழக்கேயப்பா செயலான பவளத்தின் காட்டகந்தான்
நேரேதான் கானாறுகுகையுமுண்டு நீடான வாரிதியாங் கடலோரந்தான்
கூறான பவளமது யென்னசொல்வேன் கொற்றவனே யாருந்தான் போகொண்ணாதே
4319.
ஒண்ணாத காட்டகத்தில் தண்டுதானும் வுத்தமனே யுந்தனையுங் கொல்லும்பாரு
அண்ணாந்து பார்த்தாக்கால் சிரசும்போகும் வப்பனே அவ்வனத்தே சொல்லொண்ணாது
மண்ணாளும் ராஜாதிராசரெல்லாம் மகாவனத்தை வந்துமல்லோ மடிந்துபோனார்
குண்ணான மலைதனையே கண்டபோது கொற்றவனே குலைநடுங்கி இறந்தார்தாமே
4320.
இறந்தாரே லோகத்து மாண்பரெல்லாம் எழிலான காட்டகத்தைச் சென்றுமல்லோ
மறந்தாரே தேகாதி தேகந்தன்னை வையகத்தில் கோடியுண்டு லக்கோயில்லை
துறந்ததொரு ஞானிகளுமாண்டுபோனார் துப்புரவாய்த் திரும்பிவந்தோர் ஆருமில்லை
சிறந்ததொரு கானகத்தே சென்றாயானால் சீரான பாலகனே மடிவாய்பாரே
4321.
பாரப்பா உந்தனையும் கண்டுதானும் பார்த்தாலே யுன்தலையைக்கொண்டுபோகும்
ஊரப்பா அதிலொருவர் போனதில்லை வுத்தமனே சிலநாளிங்கிருந்தாயானால்
சேரப்பா அமாவாசை பட்சந்தன்னில் சிறப்பான கதண்டுகளெல்லாங்கூடி
ஆரப்பா வுபதேசங்கேட்க வப்பனே வருமென்று சொல்லிட்டாரே
4322.
சொல்லவே போகரிஷி முனிவர்தானும் சொற்றவறா வணணமது யிருக்கவென்று
புல்லவே சிலநாளங்கிருந்தேன் யானும் பகழான கதண்டு மகாரிஷியார்பக்கல்
வல்லதொரு கதண்டுகளாம் கூட்டம்கூடி வண்மையுடன் ஞானோபதேசம் கேட்டு
செல்லவே கானகத்தைப்போகும்சேதி செம்மலுடன் யான்கண்டு நின்றிட்டேனே
4323.
நின்றேனே நெடுநேரங் கால்நடுங்க நேர்மையுடன் கதண்டுமகாரிஷியார்தாமும்
குன்றான மலைதனிலே இருக்கும் வண்டை கொப்பெனவே தாமழைத்து
வினயஞ்சொல்வார்
பன்றான பாலனிவன் யாரென்றாக்கால் பாருலகில் காலாங்கிசீஷனப்பா
தளன்றிசையில் மலைகளெல்லாம் தான்கடந்து திக்கு ஜெயம்பெற்றுவந்த பாலன்தானே
4324.
தானான பாலனுக்கு கடுவெளியார்தாமும் தயவுடனே எந்தனுக்கு நியழஞ்செய்தார்
தேனான துதண்டுகளே யுந்தமக்கு தேற்றமுடன் யானுமல்லோ நியமஞ்செய்தேன்
கோனான காலாங்கி நாதர்பேரால் கொற்றவனார் போகரிஷி நாதருக்கு
பானான பவளமென்ற காட்டையல்லோ பார்ப்பதற்கு இடமருளு மென்பார்தாமே

4325.
என்றாரே கதண்டுமகா ரிஷியார்தாமும் யெழிலான போகரிஷிநாதருக்கு
குன்றான மலைபோலே கதண்டுவெல்லாம் கொப்பெனவே போகரிஷிநாதருக்கு
நின்றுமே யஞ்சலிகள் மிகவுஞ்செய்து நீதியுள்ள காலாங்கி சீஷருக்கு
சென்றுமே தானழைத்து வனாந்திரத்தில் செம்மலுடன் ஆசனங்கள் கொடுக்கலாச்சே
4326.
ஆச்சப்பா அடியேனும் காட்டகத்தே வன்புடனே எந்தனையுங் கொண்டுசென்று
மாச்சலுடன் கதண்டுகளு மொன்றாய்க்கூடி மார்க்கமுடன் பவழக்கால் ஆசீர்மத்தில்
வீச்சுடனே சிம்மாதனம் ஏற்றியென்னை விருப்பமுடன் சங்கீதம்பாடலாச்சு
ஆச்சரிய மானதொரு பவளபீடம் வன்புடனே எந்தனுக்கு தருதலாச்சே
4327.
தந்துமே வடகோடி கானகத்தில் தண்மையுடன் பவளமென்ற காட்டையெல்லாம்
சொந்தமுடன் எந்தனுக்கு வுளவுசொல்லி சுத்தமுள்ள சீனபதி பிழைக்கவென்று
அந்தமுடன் எந்தனுக்கு சொல்லியல்லோ வப்பனே யடிவணங்கி தெண்டனிட்டு
வந்ததொரு பாலனுக்கு வதிதஞ்சொல்ல வண்மையெல்லாம் அடியேனும் கண்டிட்டேனே
4328.
கண்டேனே வளமான புதுமையெல்லாம் காட்டகத்தை சுத்தியல்லோ யானுங்கண்டேன்
அண்டர்முனி ராட்சதர்கள் இருக்குங்காடு அழகான பவளமென்ற காடேயாகும்
கொண்டலிடி மேகமது யெழும்பும்நாடு கொற்றவர்கள் தாமறியா பவளநாடு
தண்டகாரணியமது சொல்லப்போமோ தாரணியில் கண்டவர்களில்லைதாமே
4329.
தானான கோட்டையது யென்னசொல்வேன் தண்மையுள்ள கதண்டுமகாரிஷியின்கோட்டை
பானான கோட்டைக்குள் சுரங்கமுண்டு பக்கமெல்லாம் பவழத்தால் தூணுண்டு
தேனான மனோன்மணியாள் பீடம்போல தேற்றமுடன் சித்தரமாம் மண்டபந்தான்
கோனான கதண்டுமகாரிஷியின்பாட்டன் கொற்றவனார் ஆசீர்மந் தனைக்கண்டேனே
4330.
கண்டேனே யடியேனும் ரிஷியார்தம்மை கனமுடனே காணுதற்கு பாலன்தானும்
தெண்டமுடன் ரிஷியாரும் என்னைக்கண்டு தெளிமையுடன் யாரென்று கேட்கலுற்றார்
அண்டியே குருபாதந் தனைவணங்கி அப்பனே யாதரிக்க வேண்டும்பாரு
சண்டமாருதம்போலே ரிஷியார்பாதம் தலைவணங்கி நடுநடுங்கி பணிந்திட்டேனே
4331.
பணிந்துமே நிக்கையிலே சீஷவர்க்கம் படைமீறி யென்மேலே பேர்பொருந்த
அணியணியாய் திரள்கூட்டமதிகமாகி அங்ஙனவே கொல்லுதற்கு யெண்ணங்கொண்டு
துணிவுடனே சுகிப்பதற்கு கிட்டேநேர்ந்து துப்புறவாய் என்மேலே வினையுங்கொண்டு
மணியான யோகீஸ்வரன் முதலோர்தானும் மார்க்கமுடன் எந்தனையும் சூழ்ந்தார்பாரே
4332.
பாரப்பா சீஷவர்க்கம் சொன்னபோது பாருலகில் யானுமல்லோ திடுக்கிட்டேங்கி
தேரப்பா தரம்போல நின்றுவிட்டேன் தெளிமையுடன் அவர்பாதம் தொழுதேன்நானும்
காரப்பா யென்றுரைத்து கரமெடுத்து கர்த்தாவே ரட்சிக்க வேண்டுமென்றேன்
ஆரப்பா காலாங்கி சீஷர்தன்னால் வப்பனே யுந்தனையும் மதித்தோம்பாரே

4333.
மதித்தோமே காலாங்கி கடாட்சத்தாலே மகதேவரெங்களுக்கு குருவுமாச்சு
விதிப்படியே யவர்களுக்கு வஞ்சலித்தேன் வீரான சீஷரெல்லாம் மன்னித்தார்கள்
துதிப்புடைய பாலனென்று என்னைத்தானும் துரைராஜ காலாங்கிசீஷனென்று
மதிபோன்ற மனந்தனிலே யுன்னியல்லோ மார்க்கமுடன் சினமதுவை நீக்கினாரே
4334.
நீக்கியே எந்தன்மேல் பட்சம்வைத்து நீதியுடன் யாதரிக்க வேண்டுமென்று
நோக்கமுடன் போகரிஷி முனிவர்தாமும் நொடியான பவமகற்றி காக்கவேணும்
வாகுடனே எந்தனுக்கு வரமுந்தந்து வண்மையுடன் பாதுகாத் தருளென்றார்பார்
நாக்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணியாள்பாதம் நன்மையுடன் வணங்கியல்லோ பணிந்திட்டேனே
4335.
பணிந்துமே நிற்கையிலே சீஷர்தாமும் பாங்குடனே எந்தன்மேல் பட்சம்வைத்து
அணிந்ததொரு பவளமென்ற வாரந்தன்னை அப்பனே என்கழுத்தில் சாற்றினார்கள்
துணிந்துமே யடியஏனும் தாள்பணிந்து துப்புறவாய் யானுமல்லோ வஞ்சலித்தேன்
கணிந்துமே பவளத்தின் வுளவுசொல்லி கருவான வாரிதியை காண்பித்தாரே
4336.
கண்டேனே சத்தசாகரமுங் கண்டேன் கனமான பவளமென்ற கடல்தானப்பா
விண்டேனே நாதாக்கள் கைமறைப்பு வேதாந்தத் தாயினது கடல்மறைப்பு
உண்டான மகிமையெல்லாம் யானுங்கண்டேன் ஒகோகோ நாதாக்கள் சூட்சங்கண்டேன்
திண்டான பவழத்தின் விளைவுகண்டு தீரமுடன் சீனபதியேகினேனே
4337.
ஏகவே யடியேனும் காட்டைவிட்டு யெழிலான சீனபதிபோறேனென்றேன்
சோகமுடன் எந்தனுக்கு வெகுமானங்கள் தொல்லுலகில் தான்கொடுத்தார் சீஷவர்க்கம்
வேகமாம் பவளசிம்மாதனங்கள் விருப்பமுடன் எந்தனுக்கு யாவுந்தந்து
போகரென்ற போதனையே மெச்சவேதான் போவென்றார் சீனபதி வந்திட்டேனே
4338.
வந்தேனே காலாங்கி கிருபையாலே வளமுடைய கதண்டுமகாரிஷியாசீர்மம்
அந்தமுடன் கண்டல்லோ வடியேன்தானும் அடைவான பவளமென்ற கடலைத்தாண்டி
சொந்தமுள்ள சீனபதி தேசத்துக்கு துப்புறவாய் வந்தல்லோ பெண்களுக்கு
வந்தையது தானுரைத்தேன் வெகுசதாக மேதினியில் என்னைமெச்சி யணைத்திட்டாரே
4339.
அணைந்துமே சீனபதி பெண்களுக்கு அழகான பவளமென்ற மாலைதன்னை
மணங்கமழும் மார்பதனிற் பதங்கமாலை மார்க்கமுடன் தான்கொடுத்தார் பரிசனந்தான்
இணக்கமுடன் பவளமென்ற கடல்தானப்பா யெழிலான காட்டகத்தை தாமுறைத்து
கணக்கமது வாராமல் சீனத்தார்க்கு சூட்சமதை வெளியிட்டார் போகர்தாமே
4340.
தாமான யின்னமொரு கருமானந்தான் தகமையுள்ள சீனபதி யுலகத்தார்க்கு
போமெனவே கண்டுவந்த வதிசயத்தை பொங்கமுடன் தாமுரைத்தார் போகர்தாமும்
நாமெனவே எழுகடலுஞ்சுத்தி வந்தேன் நாதாக்கள் மகிமைதனை யானுங்கண்டேன்
நேமெனவே டில்லிக்கு வடபாகத்தில் நேர்மையுடன் ஆசீர்மந்தன்னைக்கண்டேன்

4341.
கண்டேனே நாதாக்கள் கண்டதில்லை காலாங்கி நாதருட கிருபையாலே
அண்டர்முனி ராட்சதருங் கண்டதில்லை யவ்வனத்தே மாண்பர்களும் போனதில்லை
தொண்டுசெய்து யடியேனும் வெகுகாலந்தான் தோற்றமுடன் தேசமெல்லாஞ் சுத்திவந்தேன்
விண்டவர்கள் யாரேனுங் கண்டதில்லை வீரான கடுவெளியார் வனந்தானாமே
4342.
வனமான கடுவெளியார் நாடுகண்டேன் வண்மையுள்ள சித்தொளிவைக் கண்டேன்யானும்
தினகரனுங் காணாத வாசீர்மந்தான் திகழான கடுவெளியார் சித்துநாடு
கிண்ணிடனே மேகமது தங்கும்நாடு புகழான திருப்பாலின் கடலோரந்தான்
மனமுடைய சித்துமகாரிஷிகள்நாடு மகத்தான கடுவெளியார் சித்துநாடே
4343.
நாடான கடுவெளியார் சித்துநாடு நலமுடனே குளிகையது கொண்டுயானும்
காடான வாசீர்மந் தன்னைக்கண்டேன் கடுவெளியார் வுபதேசம் யானும்பெற்றேன்
தாடாண்மையுள்ளதொரு பலமுங்கொண்டேன் தாக்கான ரிஷியினுட பலத்தினாலே
கேடான கோடிவடகானகத்தில் கொப்பெனவே யாசீர்மம் பார்த்திட்டேனே
4344.
பார்த்தேனே பவளமென்ற கடலோரத்தை பாங்குடனே யான்கண்டு வதிசயித்தேன்
தீர்த்தமுடன் கானாறுகுகைதான்சென்று திரளான பவளமென்ற காட்டைக்காண
நேர்த்தியுடன் கடுவெளியார் எந்தன்மீது நேர்மையுடன் அதிசயித்து சொன்னசொல்லை
பூர்த்தியாய் கடுவெளியார் பட்சம்வைத்து புகழாக எந்தனுக்கு விடைசொன்னாரே
4345.
சொன்னாரே எந்தனையுந்தானழைத்து சுத்தமுடன் கதண்டுமகாரிஷியாருக்கு
மன்னான காலாங்கிநாதர்தம்மை மகத்தான சீடனிவன் போகரென்று
முன்னோர்கள் ரிஷிமுனிவர் துதிக்கும்போகர் மூதுலகில் கீர்த்திபெற்ற சீஷனென்று
பன்னியே பலகாலும் பட்சம்வைத்து பாங்குபெற வுத்தாரஞ் செய்தார்பாரே
4346.
சொன்னாரே கதண்டுமகா ரிஷியாருக்கு தோற்றமுடன் எந்தனுக்கு அடவிதன்னை
பொன்னான பவளமது விளையுமார்க்கம் பொங்கமுடன் எந்தனுக்கு அருளவென்று
மன்னவனாம் கதண்டுமகாரிஷியாருக்கு மார்க்கமுடன் உறுதிமனங்கொள்வதற்கு
வின்னமது வாராமல் எந்தன்மீதில் விருப்பமுடன் பட்சமது விடைதந்தாரே
4347.
தந்தாரே கதண்டுமகாரிஷியார்தாமும் தாரிணியில் காலாங்கி சீஷனென்று
எந்தன்மேல் கிருபைவைத்து மனதுவந்து எழிலான பவளமென்ற கானகத்தை
அந்தமுடன் எந்தனுக்கு தெரியவேதான் வன்புள்ள கதண்டுகளை தாமழைத்து
இன்பமுடன் காண்பிக்க சொல்லியேதான் இனிமையுடன் உத்தாரஞ் செய்தார்பாரே
4348.
பாரேதான் வுத்தாரஞ்செய்தபின்பு பாங்கான கானகத்தில் கதண்டுதானும்
நேரேதான் வடகோடி கானகத்தில் நேர்மையுடன் கதண்டுகளும் காணலாச்சு
சீரேதான் யானைகளின் தலைகள்போலே சிறியதோர் கதண்டுகளைக் கண்டேன்யானும்
வீரேதான் கதண்டுகட்கு மெத்தவுண்டு விண்ணிலிடங் கொள்ளாது பயந்திட்டேனே

4349.
இட்டேனே யானையது தலைகள்போல யெழிலான கதண்டுகளு மெத்தவுண்டு
பட்டதொரு சிங்கத்தின் தலைகள்போலே பாங்கான கதண்டுகளு மெத்தவுண்டு
துட்டமுள்ள குதிரையது தலைகள்போலே தூரான கதண்டுகளைக் கண்டேன்யானும்
விட்டகுறை யிருந்ததினால் எந்தனுக்கு வினையதுவும் தொடராமல் வந்தஇட்டேனே
4350.
வந்தேனே கதண்டுமகாரிஷியார் பக்கல் வடக்குமுகம் பின்புறமாய் நின்றுகொண்டேன்
சொந்தமுடன் அவர்பாதம் தொழுதுயானும் துரைராசர் பக்கமதில் நின்றுகொண்டு
அந்தமுடன் கிங்குவித்து வஞ்சலித்து வன்புடனே தொழுதுபணி நிற்கும்போது
விந்தையுடன் கதண்டுமகாரிஷியார்தாமும் விருப்பமுடன் எந்தனுக்கு வழிசொன்னாரே
4351.
வழியான கதண்டுகளும் எந்தன்மீதில் வண்மையுடன் மனதுவந்து எந்தனைத்தான்
பழியதுவும் நேராமல் எந்தன்மீதில் பட்சமுடன் கதண்டுரிஷி வலுமையாலே
குழியான குண்ணுக்கல் கானார்தம்மில் கொற்றவனே யெனையழைத்துப்போகலாச்சு
அழியாத வாசனங்கள் எந்தனுக்கு வன்புடனே கொடுத்தார் பணியலாச்சே
4352.
பணியவே பவளமென்ற வாசீர்மத்தில் பாங்குடனே யடியேனும் வீற்றிருந்தேன்
துணிவுடனே கதண்டுமகாகூட்டத்தோடு துப்புரவாய் யெந்தனுக்கு வாசீர்மித்து
அணியணியாய் கதண்டுகளுங் கூட்டங்கூடி அங்ஙனவே எந்தனுக்கு வதிதஞ்சொல்லி
மணியான பவளமென்ற மாலைதன்னை மார்க்கமுடன் எந்தனுக்குக் கொடுக்கலாச்சே
4353.
கொடுக்கவே யடியேனும் பவளம்பூண்டு கொப்பெனவே குளிகையது பூண்டுகொண்டு
விடுபட்டு சீனபதி வந்தேன்யானும் விட்டகுறை யிருந்ததொரு வலுமையாலே
தொடுகுறிபோல் பவளமென்ற காட்டகத்தை தொல்லுலகில் வாரிதியைக் கண்டுவந்தேன்
கடுவெளியாஞ் சித்தருட கடாட்சத்தாலே கனமுடனே சீனபதிவந்திட்டேனே
4354.
வந்தேனே சீனபதி மாண்பரேகேள் வகுப்பான பவளமென்ற காட்டகத்தை
அந்தமுடன் யான்கண்டு பவளம்பூண்டு யன்புடனே யுந்தனுக்காய் உபதேசிக்க
சொந்தமுடன் எந்நாளும் அனுவுபூண்டு சுத்தமுடன் நீங்களெல்லாம் தேறுதற்கு
விந்தைகளை யுந்தனுக்குக் கூறவந்தேன் விருப்பமுடன் கண்டுகொள்ளு மென்றிட்டாரே
4355.
என்றிட்ட போகமுனி ரிஷியார்தாமும் எழிலான சீனபதி விட்டுமல்லோ
குன்றிட்ட குளிகையதை பூண்டுகொண்டு கொப்பெனவே வடகோடி யாசீர்மத்தில்
தன்றிட்ட மாகவல்லோ தரணிமீதில் சாங்கமுடன் குளிகைகொண்டு இறங்கினேன்யான்
சென்றிட்ட வடகோடி கானகத்தில் சேனையுடன் சீஷவர்க்கம் எழுந்திட்டாரே
4356.
எழுந்தாரே கடுவெளியார் சித்தர்தாமும் எழிலான சமாதிக்கு ஏகவென்று
அழுந்தியே பூமிதன்னில் வெகுகாலந்தான் அடக்கமதாய் தானிருக்க எண்ணங்கொண்டு
பழுதுபடா திருமேனி போகர்தம்மை பட்சமுடன் தாமழைத்து சித்துதாமும்
வழுதுணையாய் வெகுகால மிருக்கவென்று வண்ணமுடன் வரமதுவும் கொடுத்தார்தானே

4357.
கொடுத்துமே காலாங்கி சீடருக்கு கொப்பெனவே புத்திமதி யதிகஞ்சொல்லி
அடுத்துமே கண்மணியே போகநாதா அவனியெலாம் குளிகைகொண்டு சுத்திவந்தாய்
தொடுத்ததொரு பூமிவள மனேகமுண்டு தொல்லுலகில் கானகத்தில் சபிக்குஞ்சித்து
ஒடுக்கமுடன் தான்சபிப்பார் போகநாதா ஓகோகோ நாதாக்கள் அதிதங்காணே
4358.
காணவே சமாதிக்குப்போறேனப்பா காசினியில் யார்பகையுங் கொள்ளவேண்டாம்
வீணவே சித்துமகா கோடியுண்டு விருதுடனே மடிபிடித்து சண்டைசெய்வார்
மாணமருங் கல்வியுள்ளோர் போலேபேசி மகத்தான நாதவொளி சித்தன்போலே
நீணவே யுந்தனிட கரங்கள் வைத்து நீடான யுலகமதில் செய்வார்பாரே
4359.
பார்க்கையிலே நல்லவர்போல் பொல்லாரப்பா பாருலகில் சித்தருண்டு ரிஷியுமுண்டு
ஏர்க்கவே நல்லாவின் படத்தைப்போலே எழிலான நாதாக்கள் முனிவருண்டு
பூர்க்கவே படமதனில் விடத்தைக்காணார் புகழான படமதும் அழகாய்த்தோன்றும்
ஏர்க்கவே கதைபோல முடியுமப்பா எழிலான சித்தர்களை நம்பொண்ணாதே
4360.
ஒண்ணாது வுலகிலுள்ள சித்தரப்பா ஓகோகோ தர்மிகளுங் கருமியுண்டு
எண்ணவே முடியாது எவராலுந்தான் எழிலான சித்தர்முனி மர்மமப்பா
கண்ணபிரான் ஒருநாளும் சிக்கிக்கொண்டு காசினியில் அவர்வலையை நீக்கிக்கொள்வார்
நண்ணவே எப்போதும் போகநாதா நண்புடனே தர்க்கிட்டு வாழ்குவீரே
4361.
வாழ்கவென்றால் லோகமெல்லாங் குளிகைகொண்டு வளமுடனே சத்தசாகரமுங்கண்டேன்
தாழ்கவே அஷ்டதிசை தானுங்கண்டீர் தாக்கான மலையாறு குகைகள்கண்டேன்
மூழ்கியதோர் பிரளயங்கள் எல்லாங்கண்டேன் மூதுலகவையகத்தின் வாழ்க்கைக்கண்டேன்
மாழ்கியே போகாமல் சிலதுகாலம் மார்க்கமுடன் இருக்கவென்று வரந்தந்தாரே
4362.
தந்தாரே சமாதிக்குப் போரேனப்பா தண்மையுடன் சிலகாலமிருந்துயானும்
அந்தமுடன் வுலகுதனில் வருகும்போது அப்பனே உந்தனையுங் காண்பேனென்று
சிந்தனையில் அவர்மீது பட்சம்வைத்து சிறப்புடனே விடையதுவும் பெற்றுக்கொண்டு
சொந்தமுடன் சீஷர்பதிக் கூட்டத்தோடு சத்தமுடன் சமாதிக்கு ஏகினாரே
4363.
ஏகவே சீஷவர்க்கந் தனையழைத்து எழிலான காட்டகத்தைச் சென்றுயானும்
சாங்கமுடன் சமாதிக்கு யிடமுந்தேடி சட்டமுடன் குழியதுவுந்தோண்டியேதான்
வேகமுடன் ஓராளின் மட்டங்கீழே விருப்பமுடன் கல்லறை கழண்டுசெய்து
தாகமுடன் பாலமுர்தம் உண்பதற்கு சட்டமுடன் தானுழைய வழிவைத்தாரே
4364.
வழியான சமாதிக்கு திட்டவகூறி வண்மையுடன் கடுவெளியார் சீஷருக்கு
பழிபாவந் தனைநீக்கி சித்துதாமும் பட்சமுடன் வுபதேசஞ் செய்தாரங்கே
குழியான சமாதிக்குப் போகும்போது கொப்பெனவே எந்தனுக்கு மண்டலந்தான்
வழியோடே பால்பழமும் யெனக்குத்தந்து வண்மையுடன் சமாதிதனை மூடிப்போடே

4365.
போடேதான் மண்ணதனை மேலேமூடி பொங்கமுடன் கல்லாலே சமாதிகட்டி
நீடேதான் இருபது வாண்டுமட்டும் நிலையாக சமாதியிடங் கார்த்திருந்து
தேடவே சமாதியது வெடிக்கும்போது தேற்றமுடன் ஏவலுக்கு முன்னேநின்று
பாடவே யுபதேசம் மிகவும்பெற்று பாரினிலே வெகுகாலம் வாழ்குவீரே
4366.
வாழ்கவென்றால் சமாதிக்கு சென்றபின்பு வையகத்தில் அதிசயங்கள் மிகநடக்கும்
தாழ்கவே சத்ருசங்காரரெல்லாம் தாழ்மையுடன் நீதிவழிநடப்பார்பாரு
மீழ்கவே மிருகமெல்லாம் பாஷைபேச மிக்கான பட்சியது வேதங்கூறும்
ஆழ்கவே கடலதுவும் திசைமாறிப்போம் வப்பனே வதிசயங்கள் மெத்தவுண்டே
4367.
உண்டான சத்துருக்கள் வணங்குவார்கள் ஓகோகோ நாதாக்களெல்லாங்கூடி
திண்டான சித்துவருங் காலமாச்சு திகழான சமாதிவிட்டு ஏகவென்று
அண்டமது கிடுகிடுக்க ரிஷிகளெல்லாம் வன்புடனே ஏவலுக்கு முன்னேநிற்பார்
வண்டினங்கள் கவிபாடுஞ் சமாதிமுன்னே வருங்கால மாச்சுதென்று
நினைத்துயக்கொள்ளே
4368.
கொள்ளவே கெர்ப்பமது குள்ளிருக்கும் கூறான சிசுபாலன் வார்த்தைகூறும்
விள்ளவே பரிதிமதி திசைமாறிப்போம் வீரான கஆட்களுமதிரும்பாரு
துள்ளவே ஆதிசேடன் பூமிதன்னில் துடிப்புடனே தோள்மாற்றி நடுங்கச்செய்வான்
அள்ளவே யண்டமது வதிரும்பாரு ஆகாய நட்சத்திரமும் அதிரும்பாரே
4369.
பாரேதான் சமாதியது சுழலும்பாரு பாங்கான சமாதிக்குள் அசரிருண்டாம்
நேரேதான் தெற்குமுகம் அதிசயங்கள் நெருப்பான தேன்மாரி மிகவேபெய்யும்
சேரேதான் மேற்குமுகந் தன்னிலப்பா சிறப்பான மண்மாரி மிகவேபெய்யும்
கூரேதான் சந்தனமும் மலரும்பாரு குறிப்பான செங்கழுநீர் பூர்க்குந்தானே
4370.
தானான பாரிஜாதம் மலரும்பாரு தாக்கான தேவதா புட்பந்தானும்
மானான மலைதனிலே பூர்க்கும்பாரு மகத்தான காடெல்லாம் மணமேவீசும்
தேனான கதண்டுகளும் கூண்டைவிட்டு தேன்பொதிக்க காட்டகத்தைச் செல்லும்பாரு
கோனான அரசர்களுந் தேனையுண்ண குவலயத்தில் ஒருவருந்தான் பயப்படாரே
4371.
பயமேது உலகுதனிலொன்றுமில்லை பாங்கான புலிபசுவும் ஒன்றாய்க்கூடி
நயமுடனே ஓர்த்துறையில் நீர்குடிக்கும் நண்பஅன சற்பமது கீரிதானும்
செயமுடனே ஓர்கூண்டில் விளையாடும்பார் செப்பிடவே கெருடனுடன் பாம்புதானும்
தயம்பிடவே கூடிவிளையாடிருக்கும் தாரிணியில் அதிசயங்கள் காணும்பாரே
4372.
பார்க்கையிலே குருடனவன் கண்திறப்பான் பாங்கான செவிடனுக்குக் சத்தங்கேட்கும்
தீர்க்கமுடன் ஊமையனும் வார்த்தைசொல்வான் திறமான சப்பாணி நடப்பான்பாரு
ஏற்கவே யித்தாதி மகிமையெல்லாம் எழிலாகத் தானடக்கும் வருங்காலத்தில்
ஆர்க்கவே போகருக்கு சொன்னவாக்கு அப்பனே வுலகுதனில் நடக்குந்தானே

4373.
தானாக வதிசயங்கள் மிகநடக்கும் தாக்கான சமாதிவிட்டு வருகும்போது
பானான பாறையது வெடிக்கும்பாரு பளிங்கான ஜோதியென்ற சொரூபங்காணும்
தேனான வருஷமது முகுவதாகும் தேவிமனோன்மணியாள் கடாட்சத்தாலே
வேனான சமாதிவிட்டு வெளியில்யானும் விருப்பமுடன் வருவேனென்ற இயம்பினாரே
4374.
என்னவே கடுவெளியார் சித்துதாமும் எழிலான கெடுவதுவுஞ் சென்றுமேதான்
பன்னவே சித்துவருங் காலமாச்சு பாங்கான சீஷரெல்லாம் வந்திருந்தார்
முன்னமே தாமுரைத்த வாக்கதெல்லாம் மூதுலகில் நிறைவேற நாளுமாச்சு
சொன்னதொரு காலமது முடிவுமாச்சு சுந்தரனார் சமாதியது வெடிக்கலாச்சே
4375.
ஆச்சப்பா சமாதியது வெடிக்கலாச்சு ஆகாகா நாதாக்கள் ஒளிவுதானும்
பேச்சடங்கிப் போனதொரு தேகந்தானும் பேரான மண்ணுலகில் பிறவியாச்சு
மூச்சடங்கி வெகுகாலமிருந்தசித்து மூதுலகைக்காண்பதற்கு வந்தாரல்லோ
மாச்சலுடன் தேகமது தங்கம்போலாம் மகத்தான ரிஷியாரைக் கண்டிட்டாரே
4376.
கண்டாரே சீடர்களாங் கூட்டவர்க்கம் கனமான கடுவெளியார் சித்துதம்மை
அண்டாத சேனைமுடிமாண்பரெல்லாம் வன்பான சித்தொளிவைக் கண்டுமேதான்
தெண்டமுட னடிபணிந்து வஞ்சலித்து தெளிவான நாதவொளிசித்துதம்மை
பண்டுளப செங்கழுனி மாலைதன்னை பட்சமுடன் தான்போட்டு தொழுதிட்டாரே
4377.
இட்டாரே பதாம்புயத்தை பணிந்துமேதான் எழிலான சீஷவர்க்கக் கூட்டத்தோடு
கட்டுடனே யவர்முகத்தைத் தானும்பார்த்து களிப்புடனே யவர்பக்கல் நிற்கும்போது
சட்டமுடன் கடுவெளியார் சித்துதாமும் சாங்கமுடன் சீஷருக்கு உபதேசங்கள்
விட்டகுறை தப்பாமல் சீடருக்கு விருப்பமுடன் வுபதேசஞ்செய்திட்டாரே
4378.
செய்தாரே சீடருக்கு வுபதேசங்கள் செம்மலுடன் கடுவெளியார்சித்துதாமும்
வையவே சமாதிவிட்டு வெளியேவந்து பாங்குடனே வாசீர்மந் தன்னிற்சென்று
வெய்யவே கதண்டுமகாரிஷியார்தம்மை சிலதுகாலம் மேன்மையுடன் இருக்கவென்று
வந்திட்டேனே
4379.
வந்தேனே யின்னமொரு யுகமிருந்து வளமையுடன் சமாதிக்குப் போவேனென்றும்
அந்தமுடன் கதண்டுமகாரிஷியாருக்கு வன்புடனே வாக்கதுவும் மிகவுங்கூறி
முந்தினதோர் காலாங்கி சீடர்தம்மை மூதுலக்லி காண்பதற்கு யெண்ணங்கொண்டு
சிந்தனையில் தானினைத்து சித்துதாமும் திட்டமுடன் போகர்தம்மை கேட்டிட்டாரே
4380.
கேட்டாரே சமாதிக்கு முன்னேயப்பா கிருபையுடன் சித்தொருவர் வந்தாரங்கே
நீட்டமுடன் காலாங்கி சீடரென்று நிலையான குளிகையது பூண்டுகொண்டு
வாட்டமுடன் என்றன்முன் வாட்பேசி வளமான பவளமென்ற மாலைபூண்டு
ஒட்டமுடன் சீனபதிபோனசித்து வுத்தமனே காணவென்று கேட்டிட்டாரே

4381.
கேட்கையிலே கடுவெளியார் சித்துதாமும் கெவனமுடன் பூர்விக்கியானத்தாலே
வேட்கமுடன் காலாங்கி சீடனல்லோ வெளிப்பட்டார் குளிகைகொண்டுசீனம்விட்டு
வாட்கமல வாவுத்தில் வீற்றிருக்கும் வண்மையுள்ள கடுவெளியார் சித்துமுன்னில்
ஆட்படைகளில்லாமல் ரிஷியார்தாமும் அவனிதனில் குளிகைகொண்டு இறங்கினாரே
4382.
இறங்கியே குளிகஜவிட்டு சித்துதாமும் எழிலான கடுவெளியார் முன்னேவந்து
திறமுடனே போகரிஷிமுனிவர்தாமும் தீர்க்கமுடன் கடுவெளியார்க் கஞ்சலித்து
அறமுடைய தானமது மிகவும்பூண்டு வன்புடனே கடுவெளியார் சித்தருக்கு
வுறமுடனே வணக்கமது மிகவும்பூண்டு வுத்தமனார் போகரிஷி பணிந்திட்டாரே
4383.
பணியவே கடுவெளஇயார் சித்தருக்கு பட்சமுட னஞ்சலிகள் மிகவுஞ்செய்து
துணிவுடனே போகரிஷி முனிவர்தாமும் துப்புறவாய்க் கடுவெளியார் தம்மைக்காண
அணியான வாசீர்மந்தான் கொடுத்து வன்பஉடனே பக்கமது சேர்வைகொண்டு
பணியான கண்மணியே போகநாதா மண்டலத்தில் மங்களா வென்றிட்டாரே
4384.
என்றிடவே போகமுனி ரிஷியார்தாமும் எழிலான மங்களாகரமேயென்று
சென்றிடவே பவளமது அடியேன்பூண்டு சேனைபதி திரள்கூட்டஞ் சீனஞ்சென்றேன்
வென்றிடவே சீனபதி மார்க்கத்தார்க்கு விருப்பமுடன் பவளமென்ற காடுரைத்தேன்
இன்றுமுதல் தங்களது வாசீர்மத்தால் யெழிலான சீனபதி சுகமென்றாரே
4385.
என்றுமே போகரிஷி முனிவர்தாமும் எழிலான வதிசயங்கள் மிகவுங்கூறி
குன்றின் மேற்சந்திரனும் குவலயத்தில் குத்தெழுந்த பாலனைப்போல் கூறலாகி
அன்றுமே கடுவெளியார் சித்தருக்கு வன்புடனே வார்த்தையது மிகவுங்கூறி
இன்பமுடன் தாமிருந்தார் ரிஷியார்தாமும் எழிலான கடுவெளியார் துன்னேதானே
4386.
தானான போகரிஷி நாதாகேளும் தாரிணியிலிருப்பதில் பலனொன்றில்லை
தேனான மனோன்மணியாள் கிருபையாலே தேற்றமுட னுகாந்தவரை யதிசயங்கள்
கோனான குருசொன்ன வாக்கியம்போல் குவலயத்தி லனேகவித்தை யானுங்கண்டேன்
பானான பாருலகில் இருந்துமென்ன பாரைவிட்டு நீங்குவது நலமென்றாரே
4387.
நலமான வார்த்தையது மிகவுங்கூறி நன்மையுடன் கடுவெளியார் சித்துதாமும்
பலமான தேகமதை நம்பொண்ணாது பாரினிலே இருந்தவர்கள் யாருமில்லை
குலமான பதியைவிட்டு சிலதுகாலம் கொற்றவனே சாதிதனிலிருப்பேனென்று
தலமுடனே கடுவெளியார் சித்துதாமும் சட்டமுடன் போகரிஷிக்குரைத்திட்டாரே
4388.
உரைக்கவே சமாதிசென்று வருகுமட்டும் உத்தமனே நீயுமல்லோ வன்புகூர்ந்து
திரைக்கவே சமாதிவிட்டு வருகும்போது தீர்க்கமுடன் உந்தனையும் காணலாகும்
குறையகற்றி யுந்தனுக்கு வாசீர்மங்கள் குறையாமல் மனதுவந்து கூறுவேன்யான்
வரையாது வாக்கதுவும் பொய்யாமற்றான் வன்மையுடன் உந்தனுக்கு போதிப்பேனே

4389.
போகித்து கடுவெளியார் சித்துதாமும் பொங்கமுடன் சீடருக்குத் தாமுரைத்து
ஆதித்தன் வந்துதிக்கும் வேலைதன்னில் வன்பான சமாதியிட பக்கல்சென்று
வாதித்து சீடருடன் விடையும்பெற்று வளமான குழிதனிலே இறங்கியல்லோ
பேதித்து பாறைதன்னை சீடருக்கு பிரியமுடன் மூடவென்று விடைதந்தாரே
4390.
தந்தாரே சித்துமகாரிஷியாசர்தாமும் தகமையுடன் சீஷவர்க்கமானபேர்க்கு
விந்தைதனை மிகவுரைத்து சித்துதாமும் விருப்பமுடன் சீடருக்கு வதிதஞ்சொல்லி
அந்தமுடன் நான்வருகுங்காலந்தன்னில் அதிசயங்கள் மிகநடக்குமென்றுசொல்லி
சிந்தனையாய்த்தாமுரைத்து மண்ணிற்சென்று சிறப்பான அசரீரிகூறுவாரே
4391.
கூறுவார் சித்துமகாரிஷியார்தாமும் குணமான சித்தர்வர்க்கமானபேர்க்கு
மாறுடைய தேகமது வருகும்போது மகத்தான வையகத்திலிடியுணஃடாகும்
வீறுடைய மேகமது திரண்டுமேதான் விரானமாரியது இல்லாமற்றான்
ஆறுதலம் தான்முழுகில் வதிதம்பாரு அவனியெல்லாம் இடியென்ற சத்தமாமே
4392.
சத்தமாங் கோடையிடிபோலேகாணும் தகமையுள்ள நீரிடியும் நெருப்பிடியுங்காணும்
நித்தமுமிடிமுழக்கமதிகமாகும் நீடாழி யுலகமெலாம் தத்தளிக்கும்
வத்தியே சமுத்திரமும் சலமுங்காணார் வாரிதியும் திசைமாறி நடுங்கும்பாரு
புத்தியுள்ள சீடர்களே மகிமைதோன்றும் புகழான சித்துவரும் நாளுமாச்சே
4393.
நாளான காலமதில் வதிசயங்கள் நாடெல்லாம் சென்னெல்கள் விளையும்பாரு
காடான பூண்டதுவும் பூர்க்கும்பாரு தருவான மூலிகைகள் கண்ணிற்றோற்றும்
மாளாத மாண்பரெல்லாம் சிவயோகங்கள் மானிலத்தில் மிகபேசி வன்மைசொல்வார்
தூளான காயகற்ப மூலிதானும் துப்புறவாய் கண்ணிற்குத் தோன்றும்பாரே
4394.
பாரேதான் அதிசயங்கள் மிகநடக்கும் பாரினிலே சித்துவருங்காலந்தன்னில்
நேரேதான் மேற்குமுகந்தன்னிலப்பா நிலையான சூரியனும் உதயமாவான்
சேரேதான் அருந்துதிகள் யாவுந்தானும் செங்கையால் தான்தொடவே கிட்டிருக்கும்
ஊரேதான் குடிபடைகள் யாவுந்தானும் வுத்தமர்கள் எந்தனையும் நினைப்பார்தானே
4395.
நினைக்கையிலே யான்வருகுங் காலந்தன்னில் நீதியுடன் சமாதியது வெடிக்கும்பாரு
புனைமேவுஞ் சமாதியது வெடிக்கும்போது புகழான ஜெகஜோதி தோற்றும்பாரு
வினைபோன்ற சடலமதுவெளியேயேகி விருப்பமுடன் சித்துமுனி வந்துமேதான்
முனையான மூதுலகோர் நடுநடுங்க வுத்தமரும் வெளிதனிலே வந்திட்டாரே
4396.
இட்டாரே சித்துமுனி வந்தபோது எழிலான சீஷவர்க்கங்கூட்டங்கூடி
திட்டமுடன் அவர்பாதம் தொழுதிட்டார்கள் சிறப்பான மாண்பரெல்லாம் வணங்கிநின்றார்
சட்டமுடன் சித்துமுனி சொன்னவாக்கு தாரணியில் மெய்யாச்சு பார்க்கும்போது
வட்டமுடன் கடுவெளியார் சித்துதாமும் வண்மையுடன் லோகவதிசயங் கேட்டாரே

4397.
கேட்டாரே லோகத்தின் புதுமையெல்லாம் கிருபையுடன் சீஷவர்க்கந்தன்னைநோக்கி
நீட்டமுடன் சமாதிக்கு ஏகுமுன்னே நீதியுள்ள சிறுபாலன் போகநாதன்
வாட்டமாங் காலாங்கி சீடனப்பா வளமான போகரிஷிநாதன்தானும்
ஆட்டமுடன் குளிகையது பூண்டுகொண்டு வன்புடனே வந்தசித்து எங்கென்றாரே
4398.
எங்கென்று கேட்கையிலே போகநாதன் எழிலான குளிகையது பூண்டுகொண்டு
அங்ஙனவே சித்துவனம் நினைக்கும்போது அழகான போகர்முனி வந்திட்டாராம்
புங்கமுடன் சித்துமுனி ரிஷியார்தாமும் புகழான போகரிஷிநாதருக்கு
துங்கமுடன் ஆசீர்மம்மிகவுஞ் செய்து துப்புரவாய் போகருக்கு வளஞ்சொன்னாரே
4399.
சொன்னாரே கண்மணியே போகநாதா துறைகோடிவரைகோடி காலமப்பா
மன்னான பர்வதமே யுன்னைக்கண்டு மார்க்கமுடன் முப்பதுவாண்டுமாச்சு
தென்னாகேள் சீனபதிக்குடையவேந்தே சிறப்பாக வுன்னையான் கண்டபோதே
முன்னோராங் காலாங்கி நாதசித்து மொழிந்ததொருவார்த்தை எதிரில்லைதானே
4400.
தானான யின்னமொரு வயனங்கேளு தகமையுள்ள டில்லிக்கு தென்கிழக்கே
கோனான அழகாபுரியென்னுமூராம் குறிப்பான பதியொன்று குண்ணுமுண்டு
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தோற்றமுடன் புலிப்பாணி மைந்தாகேளு
பானான காலாங்கி கிருபையாலே பாலகனே குளிகைகொண்டு சென்றேன்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

4401.
பாரேதான் குளிகைகொண்டு செல்லும்போது பாங்கான வழிதடமும் அனேகங்கண்டேன்
நேரேதான் டில்லிக்குத் தென்கிழக்கே நேர்மையுடன் குளிகைகொண்டு இறங்கினேன்யான்
சீரேதான் அவ்விடத்தி லுள்ளமாண்பர் சிறப்புடனே எனைவந்து கண்டாரங்கே
ஊரேதான் குருப்படைகள் யாவுங்கண்டு வுத்தமர்கள் எந்தனுக்கு துதிசொன்னாரே
**4402.**
துதித்துமே எந்தனிட பக்கல்வந்து துறையோட முறையோடும் அஞ்சலித்து
மதிப்புடனே எந்தனையும் யாரென்றார்கள் மகத்தான மாண்பரெல்லாங் கூட்டங்கூடி
பதியான மாநகரம் வதிசயங்கள் பாரினிலே இதுவரையில் கண்டதில்லை
ததிதாகத் தோற்றுகுது யென்றுமல்லோ புத்தியுடன் மாண்பரெல்லாம் மயங்கினாரே
**4403.**
மயங்கியே மாண்பரெல்லாங் கூட்டங்கூடி மகத்தான ஜெயமுனிவர் சீடர்பக்கல்
தயங்கியே சீடர்களைத்தானும் பார்த்துத் தாரிணியில் புதுமையிது யாங்கள்கண்டோம்
நயம்புடனே சீனபதிதேசம்விட்டு நலமான காலாங்கி சீடன்தானும்
செயமுடனே குளிகைகொண்டு யிங்குவந்தார் சீரான மகத்துவங்கள் சொல்லொண்ணாதே
**4404.**
ஒண்ணாது சீடவர்க்கமானபேர்கள் ஓகோகோ நாதாக்கள் யாரோவென்று
நண்ணியே தன்மனதில் தானடக்கி யேகாந்த சித்தொளிவைக்காணவென்று
எண்ணியே சீஷவர்க்கமாயிரம்பேர் நலமுடனே எந்தனையுங் காணவென்று
வண்ணமுடன் எந்தனை யாரென்றுகேட்க வண்மையுடன் காலாங்கி சீடனென்றேன்
**4405.**
யென்றேனே யடியேனும் சொல்லும்போது எழிலான சீஷவர்க்மெந்தனுக்கு
வென்றிடவே காலாங்கி சீடர்களும் வீராகக் கானகத்தில் வரலாமோசொல்
குன்றான மலையுண்டு குகைதானுண்டு குவலயத்தில் மாமுனிவர் கண்டதில்லை
இன்றுநீ வந்ததினால் உந்தனுக்கு எழிலான சாபமது வெய்தும்பாரே
**4406.**
எய்யுமே சாபம்வருமென்றுமல்லோ எழிலான சீஷவர்க்கம் கூறும்போது
பையவே எந்தனுக்கு பயமுமாகி பாரமுடன் கைசோர்ந்து மெய்யுஞ்சோர்ந்து
நையவே யடியேனுஞ் சீடர்தம்மை நடுக்கமுடன் யானுமல்லோ வஞ்சலித்து
துய்யவே காலாங்கி சீடனென்றேன் துரைராசர் எந்தனையும் மன்னித்தாரே
**4407.**
மன்னித்து எந்தனுக்கு சாபந்தன்னை மதிப்புடனே ஜெயமுனியார் பக்கல்சென்று
கன்னியமாய் ஜெயமுனியார் தன்னைநோக்கி கர்த்தாவாம் சித்துமுனி யடிபணிந்து
இன்னிலத்தில் சீனபதி மனிதன்தானும் எழிலான குளிகையது பூண்டுகொண்டு
துன்னீலங் கண்ணானாம் போகநாதன் துப்புறவாய்க் காணவல்லோ வந்திட்டாரே
**4408.**
வந்தாரே போகரிஷியென்றுதாமும் வளமாகத்தாமுரைத்தார் சீஷவர்க்கம்
அந்தமுடன் ஜெயமுனிக்குக் கூறும்போது வன்புள்ள ஜெயமுனியார் ரிஷியார்தாமும்
சொந்தமுடன் ரிஷியாரும் அன்புகூர்ந்து சுத்தமுடன் எந்தனையும் வரவழைத்து
சிந்தனையாய் காலாங்கிசீடாகேளு சிற்பரனே வந்ததினால் குற்றமாச்சே

4409.
ஆச்சப்பா போகமுனி சொல்லக்கேளும் அன்பான யென்வார்த்தை யுந்தனுக்கு
பாச்சலுடன் சீனபதிவிட்டுமல்லோ பாருலகில் வந்ததொரு வதிசயங்கள்
மாச்சலுடன் யென்னவதிசயங்கள்காண மன்னவனே யேன்வந்தாயென்றுகேட்க
நீச்சமுடன் அடியேனும் மிகநடுங்கி நிஷ்களமாய்த் தானுரைத்தேன் உண்மைதானே
4410.
உண்மையாய் யடியேனும் உரைத்தபோது உத்தமனார் ஜெயமுனியார் எந்தனுக்கு
நன்மைபெற உபதேசம் மிகவுஞ்செய்து தீரமுடன் சகலகலைக் கியானமெல்லாம்
வண்மையுடன் எந்தனுக்கு உபதேசித்து வகைமான் தொகைமானம் சொல்லிட்டாரே
4411.
சொல்லவே யடியேனும் மனதுவந்து துப்புரவாய் ஞானந்தனைமறந்து
வெல்லவே மெய்ஞானமுட்புகுந்து மேதினியில் யானுமொரு சித்தனாகி
சச்லியங்கள் சாத்திரங்கள் மிகவும்கற்று தாரிணியில் கருவாளி யானுமாகி
தெள்ளியமாய் வித்தைதனில் முதல்வனாகி தேசத்தில் வஞ்சனமாஞ் சித்தானேனே
4412.
சித்தானேன் சிலகாலஞ் சென்றுயானும் ஜெயமுனியார் பாதாரவிந்தத்தாலே
சத்தான லோகமதில் இருக்குந்தானம் தகமையுள்ள நிதிகளெல்லாந் தானெடுக்க
எத்தனங்கள் மிகச்செய்து புனிதவானாய் எழிலான சாத்திரத்தை கையிலேந்தி
முத்தான யுலகமெலாம் மிகமதிக்க வுத்தமனே திரிந்தேனே போகர்தானே
4413.
போகரென்று சொல்லவென்றால் லோகந்தன்னில் பொங்கமுடன் கண்டவர்கள் தானடுங்க
யோகமுடன் திக்கெல்லாம் திரண்டுமல்லோ எந்தனையுங் காணுதற்கு வெகுஜனங்கள்
சாங்கமுடன் கண்டல்லோ யடியேனுக்கு சட்டமுடன் சோடசோபசாரஞ்செய்து
வேகமுடன் நிதியெடுக்க எந்தனைத்தான் மேதினியில் அழைத்தவர்கள் கோடியாமே
4414
கோடியாம் நிதியெடுக்க என்னைத்தானும் கொற்றவர்கள் கூட்டியல்லோ தேசந்தன்னில்
நீடியே திரவியங்கள் கண்டெடுக்க நிட்களமாய் வுறுதிமிகப்பாடுசெய்து
நாடியே சாத்திரத்தி னுளவுபார்த்து நாதாந்த சித்தொளிவை மனதிலுண்ணி
வாடியே திரியாமல் அடியேன்தானும் வண்மையுடன் கொடுக்கலுற்றேன் நிதிகள்தானே
4415.
கானான நிதிகளது எடுக்கலென்ன தட்சணமும் மலையமுனிவாசீர்மத்தில்
கேனான குருக்கள்முதல் சித்துயாவும் கூட்டியே யெனையழைத்து கொண்டுசென்றார்
மானான மனோன்மணியாள் கிருபையாலே மகத்தான நிதியெடுக்க சென்றேனங்கே
தேனான தென்மலையாங் கடலோரத்தில் தேற்றமுடன் யான்சென்றேன் பதிதானுண்டே
4416.
உண்டான பொத்கைமலை தன்னிலப்பா வுத்தமனே சல்லியசாத்திரத்தின்மார்க்கம்
கண்டுமே யடியேனும் மிகவாராய்ந்து கருத்துடனே தானெடுத்தேன் கோடியுண்டாம்
வண்டமிழ்சொல் வங்கத்தார் கூட்டங்கூடி வளமான நிதிகளெல்லா மெனக்குப்பாதி
கொண்டுபோ மென்றுசொல்லி விடைதந்தார்கள் கொற்றவர்கள் சங்கத்தார் புலவர்தாமே

4417.
தாமான நிதிகளெல்லாம் அடியேன்தானும் தன்மையுடன் ஜெயமுனியார் பக்கலாக
பூமானாம் ரிஷியின் மகாதேவர்பக்கம் பொங்கமுடன் கொண்டல்லோ யொப்பிவைத்தேன்
சாமானமானதொரு திரவியத்தை சட்டமுடன் எந்தனுக்காய் கொடுத்துவிட்டார்
ஆமானமாகவே யடியேன்தானும் வன்புடனே சீனபதிக் கொடுசென்றேனே
4418.
சென்றேனே திரவியங்கள் அனைத்துமல்லோ சிறப்புடனே யானுமல்லோ சீனத்தார்க்கு
குன்றான திரவியங்கள் செம்பொன்னெல்லாம் கொட்டினேன் மலைபோல தங்கமப்பா
என்றன்மேல் பட்சம்வைத்து நிதிகள்தம்மை எழிலாகத்தான் கேட்டார்சீனத்தார்கள்
வென்றிடவே ஜெயமுனியாரைக்கண்டேன் வேதாந்த ரிஷியாரும் அருள்செய்தாரே
4419.
அருளான மகிமையது மெத்தவுண்டு வன்பான சீனபதிமார்க்கத்தோரே
பொருளான திரவியங்கள் எடுப்பதற்கு பொங்கமுடன் வித்தைமிகக் கற்றுவந்தேன்
தெருளான தேசமெல்லாம் திரிந்துமேதான் தேற்றமுடன் தென்பொதிகை
கொண்டுசென்றார்
இருளான காட்டையதை யான்கடந்து யெழிலான தென்பொதிகை கண்டிட்டேனே
4420.
கண்டேனே பொதிகைமலை கடலோரந்தான் கானாறுவோடைமுதல் தான்கடந்து
அண்டமுனி ராட்சதர்கள் காணாநாடு அழகான தென்பொதிகை சாரலப்பா
தண்டலங்கள் தாமறியார் கடலோரந்தான் தகமையுள்ள சாரலது கொண்டுசென்றார்
விண்டலமும் அறியாத குண்ணுவப்பா வீராறு சுனையருகில் சென்றேன்பாரே
4421.
பாரேதான் சல்லியத்தின் சாத்திரந்தான் பாங்கான கணிதமென்ற படிதானப்பா
நேரேதான் பாதனங் கிழக்குதன்னில் நேர்மையுடன் வஞ்சனத்தை பார்க்கும்போது
சீரேதான் திரவியங்கள் கிடாரவைப்பு சிறப்பான மலைதனிலே கோடியுண்டு
கூரேதான் வைப்பதனை சல்லியத்தால் கொற்றவனே எடுத்தேனே கோடியாமே
4422.
கோடியென்ற பொன்னையெல்லாம் உந்தமக்காய் கொப்பெனவே கொடுவந்தேன்
என்றுரைத்தேன்
வாடியே திரியாமல் மனம்விடாமல் மகிதலத்தில் உங்களுக்கு குறைவுநேரா
நீடியே யுகாந்தவரை செல்வந்தானும் நீட்சியுடன் குறையாமல் செய்துவைத்தேன்
ஆடியே வகஸ்தியனார் மலையிலப்பா வன்பான திரவியத்தின் மகிமைதானே
4423.
மகிமையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தான நிதியனைத்துங் கோடியுண்டு
அகிலமெல்ந் தானெடுத்து வப்பாகேளும் வன்புடனே உங்களுக்கா யளிப்பேனென்றேன்
சகலமுடன் மாண்பர்களும் வினயங்கேட்டு சட்டமுடன் சாத்திரத்தை கேட்கலுற்றார்
விகிதமுடன் சாபமது நிவர்த்திசெய்து வெத்தியுடன் யான்கொடுப்பேன் என்றிட்டேனே
4424.
இட்டேனே சீனபதியுலக்தார்க்கு எழிலான திரவியத்தின் பெருமைசொன்னேன்
சட்டமுடன் சாத்திரத்தை யிதவுகேட்டு சாங்கமுடன் சாபமதை நிவர்த்திசெய்து
வட்டமுடன் யான்தருவேன் என்றுரைத்து மனமானவுறுதிமொழி மிகவுங்கூறி
திட்டமுடன் சொர்ணகிரி மேரும்சென்றேன் தீரமுடன் சீனவர்க்கங் காட்டினேனே

4425.
கண்டேனே சீனவர்க்கமாயிரம்பேர் கருவான மாண்பர்களுக்கெந்தனைத்தான்
கெண்டமுடன் வஞ்சலிகள் மிகவுஞ்செய்து தோற்றமுடன் யாரென்று கேட்கலுற்றார்
உண்டான சாத்திரத்தின் உண்மைசொன்னேன் உத்தமர்கள் எந்தனையும் மெச்சியேதான்
கொண்டனைத்து சொர்ணகிரி சித்தர்பக்கம் கொப்பெனவே கொண்டுபோய் விட்டார்காணே
4426.
காணவே அடியேனை சித்துதாமும் கனமுடனே எந்தன்மேல் பட்சம்வைத்து
கூணவே யாசீர்மந்தான்கொடுத்து பொங்கமுடன் எந்தனையும் யாரென்றென்ன
காணவே யடியேனும் சீனம்விட்டு நலமுடனே சொர்ணகிரிவந்தேனெனறேன்
பாணமுள்ள காலாங்கி சீடனென்றேன் கைதொழுது மெய்வணங்கி கலங்கினேனே
4427.
கலங்கியே நிற்கையிலே ரிஷியார்தாமும் கருணையுடன் எந்தனுக்கு வாசீர்மங்கள்
துலங்கவேதான்கொடுத்தார் எந்தனுக்கு துப்புரவா யடியேனும் மீதிருந்து
விலங்கவே சல்லியமாஞ் சாத்திரத்தை விருப்பமுடன் யானுரைத்தேன் ரிஷியாருக்கு
நலமுடனே சல்லியங்கள் கூறும்போது நாதாந்த சித்தொளிவும் மதித்தார்பாரே
4428.
மதிப்புடனே ரிஷியாரும் சொல்லும்போது மார்க்கமுடன் உரைத்தேனங்கே
பதியான பதிவிட்டு திரவியங்கள் பட்சமுடன் இவ்விடத்தில் வந்தேன்யானும்
நிதியான திரவியங்கள் கோடாகோடி நீட்சியுடன் எடுப்பதற்குகையுமில்லை
விதியான முறைப்படியே சாத்திரத்தை விருப்பமுடன் போதித்து எடுப்பேன்தானே
4429.
எடுப்பேனென் றுரைக்கையிலே ரிஷியார்தாமும் எந்தனுக்கு விடைதந்தாருண்மையாக
ஒடுக்கமுடன் யானுமல்லோ சல்லியத்தை வுத்தரித்தேன் சொர்ணகிரி மலையிலப்பா
அடுத்துமே அஞ்சனத்தை போடும்போது அதலபாதாளபூதமெல்லாம்
தடுத்துமே பூதமெல்லாங் கிடாரந்தன்னை தட்டழிந்து கெடுப்பதற்கு எண்ணமாச்சே
4430.
எண்ணங்கள் மிகக்கொண்டு பூதமெல்லாம் எழிலான வனுமாரையடித்துத்தள்ளும்
குண்ணருகே கிடாரத்தைச் சுத்தியல்லோ கூறவேமுடியாது பூதங்காவல்
அண்ணமுடன் சல்லியங்கள் பார்க்கும்போது அஞ்சனாதேவிதன் பூசையாலே
திண்ணமுடன் எடுப்பதற்கு தயிரியங்கள் திறமான சல்லியத்தில் செப்பலாச்சே
4431.
செப்பவே சல்லியங்கள் கூறும்போது செம்மையுடன் பின்னும்யான் வுச்சரித்தேன்
வப்பாலே பூதமெல்லாம் நடுநடுங்கி அம்மலையைவிட்டுமல்லோ யேகலாச்சு
ஒப்பவே எந்தனுக்கு நிதிகளெல்லாம் ஓகோகோ பூதங்கள் கொடுக்கலாச்சு
தப்பிதங்கள் நேராமல் நிதியனைத்தும் நிரங்கமுடன் ரிஷியாருக் கொப்பித்தேனே
4432.
ஒப்பித்தேன் வரைகோடி தங்கக்காசு ஓகோகோ ராமருட வைப்புவல்லோ
இப்புவியில் ராமருட வராகனப்பா யெவர்காண்பர் விதியாளி கண்டேனல்லோ
செப்பிடவே சிவராசரிஷியார்தாமும் திறளான நிதியனைத்தும் கண்ணாற்கண்டு
ஒப்புறவே எந்தனுக்கு பாதிதந்தார் வுத்தமனார் ரிஷியாரும் உண்மைபாரே

4433.
பாரேதான் புலிப்பாணி மைந்தாகேளு பட்சமுடன் எந்தனுக்கு ரிஷியார்தாமும்
நேரேதா னிடைபாதி யெனக்குத்தந்தார் நேர்மையுடன் திரவியங்கள் அனைத்துமல்லோ
தேரேதான் செம்பொன்னின் வராகந்தன்னை தேற்றமுடன் எந்தனுக்குத் தகமைகூர்ந்து
ஊரேதான் கொண்டுபோக எனக்குச்சித்து வுத்தமனார் வுத்தாரந்தந்திட்டாரே
4434.
தந்தவுடன் அடியேனும் நிதிகளெல்லாம் தன்மையுடன் சீனபதிக்கொண்டுசென்றேன்
சொந்தமுடன் சீனபதி மாந்தருக்கு சொர்ணமென்ற நிதியனைத்தும் கொடுத்தேன்யானும்
வந்ததொரு மாண்பரெல்லாம் நிதியைக்கண்டு வளமுடனே எந்தனையும் விசாரித்தார்கள்
இந்ததொரு திரவியத்தின் பெருமைதன்னை எவராலுஞ்சொல்ல நாவில்லைதானே
4435.
தானான திரவியத்தின் பெருமைதன்னை தாரிணியில் வெகுமாண்பர்கண்டதில்லை
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேடிவைத்த நிதிகளெல்லாம்
கண்டாராய்ந்தேன்
மானான வுலகுதனில் சல்லஇயத்தின் ரெங்கான சாத்திரத்தை கண்டாராய்ந்தேன்
மானான சீனபதிமார்க்கத்தோர்க்கு மகத்தான திரவியங்கள் கொடுத்திட்டேனே
4436.
இட்டேனே வெகுகோடி திரவியங்கள் எழிலான சீனபதிமாண்பருக்கு
திட்டமுடன் யான்கொடுத்தேன் கோடாகோடி தீரமுடன் சீனத்துப் பெண்களுக்கு
சட்டமுடன் சீனத்துப் பெண்களுக்கு சாங்கமுடன் யான்கொடுத்த நிதியினாலே
பட்டமுடன் நிதியதுவும் வந்தவாறு பட்சமுடன் எந்தனையும் கேட்டார்பாரே
4437.
கேட்டதொரு பெண்களுக்கு யானுமல்லோ கிருபையுடன் மனங்களித்து
சொன்னேன்யானும்
வாட்டமுடன் குளிகைகொண்டு லோகஞ்சுத்தி வண்மையுடன் வெகுமலைகள்
கண்டாராய்ந்து
நீட்டமுடன் நிதியினுட வாசீர்மங்கள் நீட்சியுடன் யான்சென்று தொண்டுசெய்து
நாட்டமுடன் அவர்பணிக்கு முன்னேநின்று நலமான வாசீர்மம் பெற்றேன்தானே
4438.
தானான வாசீர்மம் பெற்றுமேதான் தகமையுள்ள சல்லியமாஞ் சாத்திரத்தை
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தன்பாகக் கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் கிருபையாலும் தேர்ந்தெடுத்தேன் சல்லியமாங்
கோர்வைநூலை
பானான வையகத்தில் நூலைக்கொண்டு பார்த்தேனே மலைமுதலும் வளங்கள்தானே
4439.
வளமான மலைதோறும் யானும்சென்று வண்மையுடன் நிதிகளெல்லாம் கண்டெடுத்தேன்
தளமுடனே சொர்ணமென்ற கிரியில்யானும் சட்டமுடன் சல்லியமாஞ் சாத்திரத்தில்
அவ்வுடனே மையதனைத் தீட்டியேதான் வன்புடனே ராமர்வைத்த வைப்புதன்னை
களவுடனே பூதமதை யகற்றிப்போட்டு காசினியில் திரவியங்கள் பெற்றேன்பாரே

4440.
பாரேதான் ராமருட வராகந்தன்னை பாங்கான முத்திரையுடன் எடுத்தேன்யானும்
நேரேதான் ராமருட வடையாளங்கள் நெடிதான முத்திரையாந் தங்கக்காசு
சீரேதான் கிடாரவைப்பு கண்டெடுத்து சிறப்புடனே யுங்களுக்காய் கொண்டுவந்தேன்
வேரேதான் மற்றோரால் எடுக்கப்போமோ விருப்பமுடன் நான்கண்டேன் உண்மைதானே
4441.
தானான ராமருட வராகந்தன்னை தகமையுள்ள சீனபதிதேசத்தார்கள்
மானான செம்பொன்னின் காசுதன்னை மகத்தான முத்திரையுந் தளமுங்கண்டு
தேனான தென்பொதிகை சாரல்தன்னில் சிறப்புடனே தானெடுத்த தங்கக்காசு
கோனான எனதையர் காலாங்கிநாதர் குறிப்புடனே சொன்னதொரு காசுமாமே
4442.
காசான செம்பொன்னின் தங்கக்காசு கருவாகக் கண்டல்லோ சீனத்தார்கள்
நேசமுடன் ராமருட வராகன்போலும் நேர்மையுடன் ராஜாதிராஜன்போலும்
பாசமுடன் பரங்கியென்ற தங்கக்காசு பலபலவாம் தேசமதில் செய்யலாச்சு
மாசில்லா தங்கமது தசமாற்றாக மன்னவராஞ் சீனபதி யமைந்திட்டாரே
4443.
அமைத்தாரே பலபலவாம் வர்ணமாகும் வப்பனே சீனபதி மார்க்கத்தோர்கள்
சமைத்தாரே மதியாலே காசுதன்னை சட்டமுடன் தானமைத்தார் வினோதங்கோடி
இமையாமல் ரூபமதைத் தானழைத்து எழிலான ராஜாதிமாண்பருக்கு
சுவைபோலும் தங்கமென்ற காசுதன்னை சூட்டினார் நாவில்லை சொல்லொண்ணாதே
4444
ஒண்ணாது யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ஓகோகோ நாதாக்கள் மகத்துவந்தான்
எண்ணாது புலிப்பாணி மைந்தாகேளு எழிலான காலாங்கி சொன்னநீதி
திண்ணமுடன் தேசமெலாஞ் சுத்தியல்லோ தேற்றமுடன் ஜெயமுனியைக் கண்டேன்யானும்
வண்ணமுடன் வெகுகாலமிருந்தசித்து மார்கமுடன் சமாதிதனைக் காண்பேன்பாரே
4445.
காணவே போகருஞ் சொல்லும்போது கருவான ஜெயமுனியார் சீஷவர்க்கம்
பூணவே ஜெயமுனியார் சித்துதாமும் புகழான சீஷவர்க்கந்தனையழைத்து
தோணவே எந்தனுக்கு சமாதிதானும் துப்புரவாய் யானடையமனமுங்கொண்டேன்
நீணவே காசினியில் ஆசையற்றேன் நிட்களமாய் சமாதிசெல்வேன் என்றிட்டாரே
4446.
இட்டாரே ஜெயமுனியார் சித்துதாமும் எழிலான வடகோடி கானகத்தில்
திட்டமுடன் தென்பொதிகை சாரல்தன்னில் திகழுடனே சமாதிக்கு இடமுந்தேட
வட்டமுடன் சீஷவர்கம் மனதுவந்து மகத்தான சமாதியது இடமுந்தேடி
அட்டமுடன் குழியதுவும் தோண்டியேதான் அழகான சமாதியது கட்டிட்டாரே
4447.
கட்டவே சமாதியது என்னசொல்வேன் கைலாசஜெயமுனியார் சித்துதாமும்
திட்டமுடன் சமாதிக்கு செல்வேனென்று சிறப்புடனே சீஷவர்க்கந்தனையழைத்து
மட்டவிழ்கொள் மாண்பர்களே சீமானேகேள் மகத்தான சமாதிக்கு செல்லப்போறேன்
இட்டமுடன் கிட்டிருந்து நீங்களெல்லாம் யெளிவான சமாதிதனை மூடிப்போடே

4448.
போடென்று சொல்லுகையில் சித்தர்தாமும் பொங்கமுடன் சீஷவர்க்கம் கிட்டிழிந்து
கூடேதான் உபவாசந்தானிருந்து கொற்றவனார் ஜெயமுனியார் சித்துதாமும்
வீடேதான் கற்பாறைமேலேமூடி விருப்பமுடன் மண்ணதனை மேலேதூவி
சாடவே சமாதியது பொதித்துமேதான் சட்டமுடன் செய்யவென்று மொழிசொன்னாரே
4449.
சொன்னாரே ஜெயமுனியார் சித்துதாமும் தோற்றமுடன் வசரீரிகூறலாச்சு
மன்னாகேள் நான்வருகுங்காலந்தன்னில் மகத்தான வதிசயங்கள் மிகநடக்கும்
இன்னிலத்தில் குருடரெல்லாங்கண்திறப்பார் எழிலான வூமைகளும் பேசுவான்பார்
பன்னவே சப்பாணி நடப்பான்பாரு பாருலகில் செவிடனொளி கேட்குந்தானே
4450.
தானான தேன்மாரி பொழியும்பாரு தண்மையுள்ள பிரளயங்கள் அதிகங்காணும்
கோமானாம் வேந்தர்களும் போரேசெய்வார் குவலயத்தில் மாண்பரெல்லாம் போரில்மாள்வார்
தேனான மனோன்மணியாள் தேசம்மாறி திசைகெட்டு பதிகெட்டு திரும்பிநிற்பார்
பானான வுலகமெல்லா மென்னைப்போற்றி பட்சமுடன் துதிசெய்வார் காண்பீர்தானே
4451.
காணவே இருபதுவாண்டுமட்டும் காசினியையான்மறந்து சமாதிநின்று
பூணவே நான்வருகுங்காலந்தன்னில் புகழாக சீஷவர்க்கமெல்லாருந்தான்
வேணவே சமாதிவிட்டு வருகும்போது விருப்பமுடன் என்பக்கல்நின்றுமல்லோ
மாணவே சமாதியது வெடிக்கும்போது மண்டலத்தில் பாறையது வெடிக்கும்பாரே
4452.
பாரேதான் சித்துவருங் காலந்தன்னில் பாருலகில் சீஷவர்க்க மெல்லாருந்தான்
நேரேதான் சமாதியது வெடிக்குமுன்னே நேர்மையாந்திருக்கூட்டமாண்பரோடும்
சீரேதான் சமாதியது முன்னேநின்று சிறப்பான சித்துவருங்காலமென்று
தீரேதான் வெகுகோடி மாண்பராலே தீர்க்கமுடன் சமாதியிட மிருந்தார்தாமே
4453.
இருந்தாரே கோடிவர்க்க சேனையோடு எழிலான சமாதியது முன்னேநிற்க
பொருந்தவே சமாதியது வெடித்துமல்லோ பொங்கமுடன் நாதாந்த சித்துதாமும்
திருந்தவே காயாதிகற்பங்கொண்ட தேகமது ஜெகஜோதி மின்னல்போல
வருந்தவே சித்துமகாரிஷியார்தாமும் வையகத்தில் வந்ததொருவண்மைபாரே
4454.
வண்மையாஞ் செயமுனியார் சித்துதாமும் வையகத்தை தான்மறந்துவந்துமல்லோ
வுண்மையாய் தேகமது இருந்துமென்ன ஓகோகோ நாதாக்கள் கோடிபேர்கள்
திண்மையுடன் வையகத்தை மறந்துமல்லோ திகழான சமாதிக்கு சென்றார்தாமும்
பன்மையாய் நான்சிலதுகாலந்தன்னில் பட்சமுடன் சமாதிக்குப்போகநன்றே
4455.
நன்மையுடன் சமாதிக்குப் பின்னுமோர் நாதாந்த சொரூபரங்கே மனதுவந்து
வன்மைசெறி பாக்கியமும்  நாடுதானும் வளமான நன்னகம்தான்மறந்து
துன்மையெனும் வையகத்தில் வாழ்க்கையற்று துப்புரவாய் சமாதிக்குப்போரேனென்று
தன்மையாம் சித்துமுனி சொரூபானந்தர் சட்டமுடன் சமாதிக்கு ஏகினாரே

4456.
ஏகவே செயமுனியார் சித்துதாமும் யெழிலான சமாதிக்குப்போகவென்று
சாகமுடன் திருபாலின் கடலோரந்தான் சட்டமுடன் சமாதிக்கு ஏகவென்று
நாகமுடன் சீஷவர்க்கக் கூட்டத்தோடு நலமுடனே சமாதிக்கு முன்னதாக
பாகமுடன் ஜெயமுனியார் சித்துதாமும் பட்சமுடன் சீஷரொடு சென்றிட்டாரே
4457.
சென்றாரே ஜெயமுனியார் சித்துதாமும் செழிப்பான சமாதியது தோண்டவென்று
நின்றதொரு சமாதியது தோண்டியல்லோ நிட்களமாய் கல்லாலே அறையுண்டாக்கி
வென்றிடவே கற்பாறைதானமைத்து விருப்பமுடன் சீஷவர்க்க மாண்பரோடு
கன்றாமல் ஜெயமுனியார் சித்துதாமும் காசினியை யான்மறந்து யேகினாரே
4458.
ஏகவே சமாதிக்கு செல்கவென்று எழிலான ஜெயமுனியார் சித்துதாமும்
பாகமுடன் சமாதிதனில் இறங்கியல்லோ பட்சமுடன் சீடருக்குக் கூறலுற்றார்
வேகமுடன் கற்பாறை மூடிப்போட விருப்பமுடன் சீஷவர்க்கமுரைத்தபோது
தோகமுடன் சீஷவர்க்கமெல்லாம்கூடி தோறாமல் பாறைதனை மூடிப்பாரே
4459.
மூடவே ஜெயமுனியார் சித்துதாமும் முனையான சமாதிதனிலிருந்துகொண்டு
நீடவே யசரீரிவாக்குதானும் நிட்களமாய் தானுரைத்தார் சீடருக்கு
கூடவே முப்பது வாண்டுமட்டும் குறையாமல் பூமிதனிலிருந்துகொண்டு
ஆடவே வையகத்தை யான்மறந்து அவனிதனில் வருவேனென்றுரைத்திட்டாரே
4460.
உரைத்துமே சிலகாலம் சென்றபின்பு ஓகோகோ நாதாக்கள் சித்துதம்மால்
திரைப்புடனே மறுபடியும் வருவேனென்று திட்டமுடன் ஜெயமுனியார் சொன்னவாக்கு
நிரைப்புடனே முப்பதுவாண்டுசென்று நேர்மையுடன் சீஷவர்க்கம் வந்துநிற்க
மரைப்பில்லா சித்துமுனிநாதர்தாமும் மார்க்கமுடன் சமாதிவிட்டு வந்திட்டாரே
4461.
வந்தாரே சித்துமுனி ரிஷியார்தாமும் மார்க்கமுடன் வையகத்தைக்காணவென்று
சொந்தமுடன் சமாதிவிட்டு வந்துமல்லோ தோற்றமுடன் சீஷவர்க்கம் காண்பதாச்சு
அந்தமுடன் சீடாதிசீடரெல்லாம் வன்புடனே குருதனையே வாழ்த்திநின்று
சிந்தனைகள் மிகத்தீர்ந்து குருவின்பாதம் சிறப்புடனே மாண்பரெல்லாம் பணிந்திட்டாரே
4462.
பணியவே சித்துமுனி ரிஷியார்தாமும் பாங்குடனே சீஷவர்க்கம் தானுரைப்பார்
அணியுடனே வையகத்தின் ஆசைதன்னை வன்புடனே யொழிப்பதுவும் மெத்தநன்று
துணிவுடனே வையகத்திலிருந்துமென்ன துப்புரவாய் தேகமதை யொழித்தேனென்று
பணிவுடனே சமாதிக்குப் போரேனென்று பண்பாகத் தாமுரைத்தார் சித்துதாமே
4463.
சித்தான ஜெயமுனியார் ரிஷியார்தாமும் சிறப்புடனே வையகத்தைதான்மறந்து
முத்தான சமாதிக்குப்போரேனப்பா மூதுலகில் மறுபடியும் வருவதில்லை
பத்தான சீஷவர்க்கமானபேரே பாறைகொண்டு எந்தனையும் மூடவேண்டும்
சுத்தமுடன் சதாகாலம் பூசைவர்க்கம் சுடரொளியாந்தீபமதை வைக்கநன்றே

4464.
நன்றான சமாதியிலே பூசைமார்க்கம் நாடோறும் நடத்திவருங்காலந்தன்னில்
குன்றான தேவேந்தர் என்னைத்தானும் கொற்றவனார் ஜெயமுனியார் எங்கேபோனார்
பன்றான பரமகுருநாதர்தம்மின் பாதாரவிந்துமது யடைந்தாரென்றும்
வென்றிடவே யதிசயங்கள் மிகவுரைத்து மேதினியில் ஆசையது ஒழஇப்பீர்தாமே
4465.
வானான புலிப்பாணி மைந்தாகேளு தகமையுள்ள ஜெயமுனியார் சித்துதாமும்
பானான வையகத்தின் ஆசையற்று பரமகுரு நாதரது பாதஞ்சேர்ந்தார்
தேனான எனதையர் காலாங்கிநாதர் தேற்றமுடன் எந்தனுக்கு சொன்னநீதி
கோனான குருபரனார் ஜெயமுனியார்தாமும் குவலயத்தில் ஆசைதனை மறந்தார்பாரே
4466.
மறந்தாரே ஜெயமுனியார் சித்துதாமும் மகத்தான வையகத்தினாசையெல்லாம்
துறந்தாரே பதினாறு பிரமாவைத்தான் துப்புரவாய் யுகங்கடந்து சித்துதாமும்
திறமுடனே சகலகலையறிந்து மென்ன திக்கெங்கும் ஒருகுடையிலாண்டுமென்ன
அறமதுவும் வழுவாமல் செய்துமென்ன அவனிதனில் ஜெயமுனியும் மண்ணானாரே
4467.
மண்ணாகிப்போனாரே சித்துதாமும் மகத்தான வையகத்தின் ஆசையற்று
கண்ணபிரான் முதலானோர் மண்ணில்மாண்டார் காசினியில் யாரிருந்தார் வுலகுதன்னில்
வண்ணமுடன் சித்துமுனி ரிஷியார்தாமும் வளமுடனே யிப்படியே மாண்டாரல்லோ
எண்ணமது கொண்டல்லோ வுலகுதன்னில் எழிலான வாசையது வொழிந்திட்டாரே
4468.
ஒழித்தாரே யிப்படியே அனேகசித்து வொப்புரவே கலியுகத்தினாசையெல்லாம்
வழிப்படவே யொழித்தவர்கள் கோடாகோடி வைகுண்ட பதவிதனையடைந்தார்கோடி
பழிதனக்கு இடங்கொடா வண்ணமாக பாருலகில் சடமொழித்தார் சித்துதாமும்
அழியாத சடலமது வழிந்துபோச்சு வப்பனே யுலகமதில் வொன்றுங்காணே
4469.
காணவே யிப்பெரிய சித்துதம்மை காசினியில் சித்தர்முனி யென்னலாகும்
தோணவே தவங்கிடந்த ரிஷியார்தம்மை தொல்லுலகில் தெய்வமென்று செப்பலாமோ
வேணபடி வையகத்து மாண்பரெல்லாம் விருப்பமுடன் இப்படியே மாய்ந்தாரல்லோ
நாணவே சித்தர்களின் வர்க்கமெல்லாம் நானஇலத்தில் இப்படியே பொய்வாழ்வாச்சே
4470.
ஆச்சப்பா புலிப்பாணி மைந்தாகேளு ஆரிருந்தார் வுலகுதன்னில் பொய்யேவாழ்வு
மாச்சலுடன் சமாதிக்குப் போவேனென்று மானிலத்தில் தவமழிந்து கெட்டார்கோடி
மூச்சடங்கி வாசியோகஞ் செய்தபேரும் மூதுலகிலிருந்தாரோ லக்கோயில்லை
ஏச்சான வுலகமெலாம் இப்படியேயாச்சு எழிலான மாயசித்தி கிரியைதானே
4471.
தானான புலிப்பாணி மைந்தாகேளு தண்மையுள்ள சீனபதிவிட்டுயானும்
கோனான எனதையர்காலாங்கிநாதர் குருசொன்ன வாக்கினது பிரகாரந்தான்
தேனான குளிகையது பூண்டுயானும் தேசமெலாம் சுத்தியல்லோ வருகும்போது
மானான வடகோடிகானகத்தில் மார்க்கமுடன் மலையொன்று கண்டேன்பாரே

4472.
பாரேதான் வடகோடி கானகத்தில் பாங்கான திருப்பாலின் கடலின்பக்கல்
சீரேதான் மலையொன்று குண்ணொன்றுண்டு சிறப்பான வசுவினியாம் பருவமப்பா
நேரேதான் மலைநாடு நடுமையத்தில் நேர்மையுடன் குளிகையது கொண்டுமல்லோ
ஊரேதான் குடிகளில்லா மலைகள்நாடு வுத்தமனே யானுமது இறங்கினேனே
4473.
இறங்கியே மலைவளத்தைச் சுற்றங்கண்டேன் எழிலான மலைசுத்திகானாறுண்டு
நிறம்வேறு ரிஷிமுனிவர் அங்கேயுண்டு நேர்மையுடன் பச்சைவண்ண மாண்பரப்பா
திறமுடைய சீஷவர்க்கம் சொல்லொண்ணாது தீர்க்கமுடன் வெகுபேரைக்கண்டேன்யானும்
உயமான மாணாக்கர் ஓடிவந்து வுத்தமனே எந்தனையும் கண்டிட்டாரே
4474.
கண்டாரே சீஷவர்க்கமோடிவந்து கடூரமுடன் எந்தனையும் யாரென்றார்கள்
விண்டதொரு சீஷவர்க்கந்தன்னைப்பார்த்து வீரடங்கி மெய்நடுங்கி யடியேன்தானும்
தொண்டனைப்போல் அடிபணிந்து முடிகள்சாய்த்து தொழுதிறங்கி மிகப்பணிந்து
ஐயாவென்றேன்
அண்டர்முதல் தான்போற்றும் காலாங்கிநாதர் அவருடைய சீஷனென்று வுரைத்திட்டேனே
4475.
அறைந்தேனே காலாங்கி சீஷனென்றேன் அங்ஙனவே வார்த்தையது வுரைத்தபோது
குறைபேச வந்ததொரு சீஷவர்க்கம் குறிப்புடனே எந்தனையும் பார்த்தபோது
முறைபேசி கதைபேசி வுறவுபேசி மூதுலகில் சித்துமகாரிஷிநினைந்து
திறமையுடன் அஞ்சலிகள் மிகவுஞ்செய்து தீர்க்கமுடன் ஆசீர்மஞ் செய்திட்டாரே
4476.
செய்தாரே எந்தனுக்கு இதவுசொல்லி சிறப்புடனே வசுவினியாந்தேவருக்கு
பையவே காலாங்கிசீஷர்தாமும் பாருலகைகாண்பதற்கு பூபாலன்தான்
துய்யவே குளிகைகொண்டு சீனம்விட்டு துப்புரவோ மதுடையவாசீர்மந்தான்
வெய்யவே காண்பதற்கு வந்தாரென்று விருப்பமுடன் வசுவினிக்கு வுரைத்திட்டாரே
4477.
இட்டாரே எந்தனையும் சீஷவர்க்கம் எழிலான வசுவினியாந்தேவருக்கு
சட்டமுடன் தாமுரைத்தார் என்னைப்பற்றஇ தன்மையுள்ள வசுவினியார் தேவர்தானும்
வட்டமுடன் எனையழைத்து யாரென்றார்பார் வளமையுடன் காலாங்கி சீடனென்றேன்
கட்டமது வாராமல் அடியேனுக்கு கைவாகு செய்துமல்லோ வணைத்திட்டாரே
4478.
அணைத்தாரே காலாங்கி சீடனப்பா அவனியெலாங் குளிகைகொண்டு பறந்தசித்தர்
கணப்பொழுது பூமிதனில் தங்காசித்து கைலாசம் பறக்குகின்ற கடிகைபாலா
சனப்பொழுது பூமிதனில் நிற்காவேந்தர் சாங்கமுடன் காலாங்கிக்குகந்த சீடர்
வணக்கமுடன் இணக்கமது கொண்டசித்தர் வண்மையுள்ள பாலகனே வாவென்றாரே
4479.
என்றுமே வசுவினியாந் தேவர்தானும் எழிலான எந்தனையுங் கொண்டனைத்து
குன்றான மகமேரே கோவேகேளும் குவலயத்தில் சித்தர்களுக்குகந்த சீடா
வென்றிடவே நாற்றிசையும் போற்றும்பாலா வேதாந்த தாய்தமக்கு உகந்தபாலா
தென்றிசையில் அகத்தியரும் மெச்சும்நாதா தெளிவான கண்மணியே என்றிட்டாரே

4480.
கண்ணான கண்மணியே போகநாதா கைலாச ரிஷிகள்முதல் மெச்சும்பாலா
விண்ணுலகில் நவகோடி ரிஷிகள்தம்மில் விருப்பமுடன் தேர்ந்தெடுத்த வினோதபாலா
தண்ணா சுடர்மணியே சூட்சாசூட்சம் தாரிணியில் கற்றறிந்த லோகநாதா
வண்ணமுடன் மேதினியில் கீர்த்திபெற்ற வைராக்கியம் போகரென்று மதித்திட்டாரே
4481.
மதித்தாரே எந்தனையும் தேவர்தாமும் மார்க்கமுடன் எந்தன்மேல் பட்சம்வைத்து
துதித்தாரே காலாங்கி நாதர்தம்மை துப்புரவாய் அஞ்சலிகள் மிகவுஞ்செய்து
கதிப்பான சீனபதிவிட்டுநீரும் கண்மணியே யேன்வந்தீர் ஆசீர்மந்தான்
விதிப்புனக்கு இருந்துமல்லோ வந்தீரோதான் விருப்பமுடன் விதியகல வந்திட்டீரே
4482.
வந்ததொரு வரலாற்றைக் கூறுமென்று வண்மையுடன் தாமுரைத்தார் தேவர்தாமும்
சிந்தனையாய் கேட்குகையில் அடியேன்தானும் சிறப்புடனே வசுவினியாந் தேவருக்கு
சொந்தமுடன் தங்களது வாசீர்மந்தான் துப்புறவாய் காண்பதற்கு வந்ததென்று
இந்தமுடன் அடியேனும் பணிந்துமல்லோ வன்பாக வணங்கிட்டேன் பாதந்தானே
4483.
பாதத்தை யான்வணங்கி பரமநாதா பாருலகில் குளிகைகொண்டு வந்தேன்யானும்
நீதமுடன் தங்களது வாசீர்மத்தில் நிலையான வசுவத்தின் மார்க்கந்தன்னை
தோதமுடன் காண்பதற்கு வந்தேன்யானும் தோற்றமுடன் பறக்கின்ற வசுவந்தன்னை
நீதமுடன் அடியேனுங் காணவென்று நீதியுடன் தம்பதிக்கு வருகலாச்சே
4484.
ஆச்சென்று சொல்லுகையில் அடியேன்தானும் வன்புடனே மனதுவந்து தேவர்தானும்
பாச்சலுடன் தன்பதியி லழைத்துக்கொண்டு பாங்கான குண்ணருகின் மேலேசென்று
வீச்சுடனே பறக்குகின்ற வசுவந்தன்னை விருப்பமுடன் எந்தனுக்குக் காண்பித்தார்பார்
மூச்சடங்கி குளிகையனைக் கையிலேந்தி மூர்க்கமுடன் புரவியின்மேல் ஏறினேனே
4485.
ஏறினேன் கானகத்தைச் சென்றுயானும் யெழிலான செம்புரவி கொண்டுமல்லோ
தூறினேன் ஆகாயமார்க்கமாக துப்புறவாய் வையகங்கள் எல்லாஞ்சுத்தி
மாறிடவே வசுவினியார் ஆசீர்மந்தான் மகத்தான வலசாரி இடசாரியாக
கூறியதோர் மொழிபடியே யடியேன்தானும் கொண்டுவந்து செம்புரவி நிறுத்தினேனே
4486.
நிறுத்தினேன் ஆகாயப்புரவிதன்னை நீதியுள்ள வசுவினியாந் தேவர்தானும்
கறுப்புடைய செம்புரவி போகநாதா கருவான குளிகைக்கு கரியுமாச்சோ
துறுப்புநிகர் பலங்குறைந்து தோர்க்கலாச்சே துப்புரவாய்க் குளிகையது மேலதாச்சோ
பொறுப்புடைய பொன்னுலகப் புரவிமேலே புகழான சீனபதிமார்க்கந்தானே
4487.
மார்க்கமுடன் வசுவினியாந் தேவர்தானும் மகத்தான குளஇகைக்கு வாசீர்மந்தான்
தீர்க்கமுடன் தானுரைத்தார் தேவர்தானும் தீரமுடன் எந்தன்குளிகைக்கல்லோ
ஏர்க்கவே மெச்சிடவே ரிஷியார்தாமும் எழிலாக எந்தனுக்கு வசுவந்தன்னை
பார்க்கவே சீனபதிகொண்டுபோக பரமகுரு வசுவினியாம் விடைதந்தாரே

4488.
விடையான தேவரது மொழியுங்கேட்டேன் வீரான புரவியது மகிமைகண்டேன்
நடையுடனே கசம்புரவி பறக்கும்வேகம் நாதாக்கள் ஒருவருந்தான்கண்டதில்லை
தடைதன்றி செம்புரவி யடியேன்தானும் தன்மையுடன் பேசுவது மகிமைகண்டேன்
படைமுகமாம் புரவியது செல்லும்வேகம் பாருலகில் சித்தர்களங் காணார்தாமே
4489.
காணாரே நாதாந்தசித்துதாமும் காசினியில் வெகுகோடி கண்டேன்யானும்
தோணாத மகிமையெல்லாம் யானும்கண்டு துப்புரவாய் யுலகுபதி சுத்திவந்தேன்
நீணவே யசுவினியாந் தேவர்தம்மால் நிட்களமாய் வினோதமதை யானுங்கண்டேன்
பூணவே யிதிகாச வித்தையெல்லாம் புகழாக வையகத்தில் கண்டிட்டேனே
4490.
கண்டேனே புலிப்பாணி மைந்தாகேளு காசினியில் அசுவினியாம் மகிமைவித்தை
விண்டிடவே சீனபதிதேசத்தார்க்கு விருப்பமுடன் உரைப்பதற்கு யானுஞ்சொல்வேன்
சண்டமாருதம்போன்ற புரவிதன்னை சட்டமுடன் சைனத்தார் காணவென்று
கொண்டுமேயான் போரேனப்பாகேளு குவலயத்தில் ஆச்சரிய மகிமைதானே
4491.
தானான காலாங்கி சொன்னநீதி தப்பாமல் புலிப்பாணி மைந்தாகேளு
கோனான யெனதையர் கடாட்சத்தாலே கொற்றவனே ஆகாயப்புரவிகொண்டு
மானான லோகமெல்லாஞ் சுத்தியேதான் மகத்தான செம்புரவி கடிவாளேந்தி
தேனான சைனபதிதேசமல்லோ சிறப்புடனே யான்போறேனென்றிட்டாரே
4492.
இட்டாரே புலிப்பாணி மைந்தருக்கு யெழிலான வார்த்தையது மிகவுங்கூறி
சட்டமுடன் செம்புரவி மேலேயேறி தாரணியெல்லாஞ் சுத்திமகிமைபூண்டு
திட்டமுடன் சைனபதி தேசந்தன்னில் சிறப்புடனே செம்புரவி இறக்கினேன்யான்
மட்டவிழ் பூங்கோதையர்கள் எல்லாருந்தான் மார்க்கமுடன் எந்தனையே சூழ்ந்திட்டாரே
4493.
சூழ்ந்தாரே சைனபதிபெண்களோடு சுத்தமுள்ள மாண்பர்களு மொன்றாய்கூடி
தாழ்ந்ததொரு ஆகாயபுரவிதன்னை சட்டமுடன் எல்லவரும் கண்டுஏங்கி
வாழ்ந்தோமே வையகத்தில் வெகுகாலந்தான் வன்மையுள்ள வதிசயங்கள்
அனேகங்கண்டோம்
வீழ்ந்ததொரு ஆகாயந்தனிலிறங்கி விடுபுரவி மகிமையது கூறப்போமோ
4494.
கூறவென்றால் நாவில்லைப் பாவுமில்லை குவலயத்தில் பொற்புரவி புதுமையாவும்
மாறலுடன் வெகுகோடி வித்தைதானும் மன்னவனே போகர்முனி நாதர்நீயும்
தூறலன்றி எங்களுக்கு வதிதமார்க்கம் துப்புரவாய் வுபதேசம் செய்வீரல்லோ
சீரலது வாராமல் நாங்களுந்தான் சிறப்புடனே வுபதேசம் பெற்றோங்காணே
4495.
காணவே யுபதேசம் அதிகங்கொண்டு கருத்துடனே சீனபதிவாழ்ந்திருந்தோம்
பூணவே வெகுதேச வதிசயங்கள் புகழாகத் தாமுரைப்பீர் எங்களுக்காய்
ஆணவமாம் அசுவமதின் மகிமைதன்னை வன்புடனே வையகத்தில் கண்டதில்லை
நீணவே வாகாயபுரவிதானும் நேர்மையுடன் கண்டதொரு மகிமைபாரே

4496.
பாரேதான் செம்புரவி மார்க்கந்தன்னில் பாரினிலே ராஜாக்கள் கண்டதில்லை
நேரேதான் தேசமெலாஞ் சுத்திவந்து நேர்மையுடன் சவதாவனத்தைக்கண்டேன்
கூரேதான் சுவதாரிஷியாசீர்மம் குறிப்பான சைனபதிமார்க்கத்தோரே
தீரேதான் ஆசீர்மஞ் சென்றுமல்லோ திகழான ரிஷியாரைப் பார்த்திட்டேனே
4497.
பார்த்திட்டேன் சுவதாரிஷிவனத்தில் பாங்கான செம்புரவி மகிமைதன்னை
தீர்த்திட்டேன் ஆகாயபுரவிதன்னை திறமான வசுவினியாந்தேவர்தன்னை
நேர்த்தியுடன் புரவிதன்னை வேண்டுமென்றேன் நேர்மையுடன் ரிஷியாரும் மனதுவந்து
பூர்த்தியுடன் எந்தமக்கும் புரவிதானும் புகழாகத் தான்கொடுத்தார் தேவர்தாமே
4498.
தேவராம் அசுவினியார் கடாட்சத்தாலே தேற்றமுடன் புரவிதனின் மீதிலேறி
ஆவலுடன் சீனபதிமார்க்கத்தோர்கள் வன்பாகக் காணுதற்குவேண்டுமென்று
மேவலுடன் குளிகைதன்னை சோதித்தேதான் மெச்சியே செம்புரவி கொண்டுவந்தேன்
ஏவலது செய்வதற்கு சீனத்தோர்க்கு எழிலான புரவியது மகிமைதானே
4499.
தானான புரவியது உந்தமக்காய்க் தன்மையுடன் கொண்டுவந்தேன் அருமைமெத்த
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமுரைத்த நீதிதன்னால்
பானான காட்டகத்தை யானுஞ்சென்று பட்சமுடன் கொண்டுவந்தேன் புரவிதன்னை
தேனான வார்த்தையது மிகவுங்கூறி தெளிவாகத் தாமுரைத்தார் வதிதந்தானே
4500.
அதிதமுடன் புரவிதன்னைக்கண்டபோது அங்ஙனவே சீனபதிமார்க்கத்தோர்கள்
துதிதமுடன் புரவியது போலேசெய்ய துப்புரவா யெத்தனங்கள் மிகவேசெய்வார்
நதிதமுள்ள பரவியது செய்வதற்கு நாதாந்தமுனிவரால் முடியாதல்லோ
கதிதமுள்ள செம்புரவி செய்வதற்கு கருவாக சீனபதி நினைத்தார்தாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

4501.
நினைத்துமே சீனபதிதேசத்தோர்கள் நிகட்சியுடன் ஆகாயப்புரவிதானும்
பனையமென்ற செம்பாலே புரவிசெய்து பாங்குடனே பஞ்சலோகந் தன்னைச்சேர்த்து
தினைவுடனே பஞ்சகர்த்தாள் ஒடுக்கத்தாலும் திகழான பஞ்சலோகந் தன்னிற்சேர்த்து
முனையான பஞ்சபூதம் ஒன்றாய்ச் சேர்க்க முசியாமல் செம்புக்கு வுயிருமாச்சே
**4502.**
ஆச்சப்பா பிரிதினில் அப்புசேர்ந்து வன்புடனே வுப்புதனில் தேய்வுசேர்ந்து
மூச்சப்பா தேய்வுதனில் வாய்வுசேர்ந்து முசியாமல் வாய்வுதனில் ஆகாயஞ்சேர்ந்தஉ
மாச்சலுடன் பஞ்சபூதம் ஒன்றோடொன்று மார்க்கமுடன் ஒன்றுக்குள் ஒன்றடக்கம்
பாச்சலுடன் பூதங்கள் ஐந்துசேர்ந்து பாங்கான வசுவத்துக் குயிருமாச்சே
**4503.**
உயராசை சீனபதி மார்க்கத்தார்கள் ஒப்பமுடன் அசுவமது செய்துமேதான்
மயில்போன்ற செம்புரவி தனையமைத்து மகத்தான வாகாயங்கொண்டுசெல்ல
பயிலான சூத்திரத்தில் வாயுதாக்கி பாரினிலே பறப்பதற்கு மயமுண்டாக்கி
அயிலமுடன் சீனபதிமாண்பரெல்லாம் வன்புடனே அசுவமது சமைத்தார்பாரே
**4504.**
பாரேதான் போகருட வசுவம்போல பாங்குடனே சீனபதிமாண்பரெல்லாம்
நேரேதான் செம்புரவி நியமித்தார்கள் நேர்மையுடன் செம்புரவி தன்னைத்தானும்
சீரேதான் அசுவதாரிஷியாருக்கு சிறப்புடனே சீனபதி அசுவந்தன்னை
தீரேதான் குளிகையது பூண்டுகொண்டு தீரமுடன் அசுவதாபதிசேர்ந்தேனே
**4505.**
பதியான வசுவினியார் வாசீர்மந்தான் பாலகனே புலிப்பாணி மைந்தாகேளு
துதியுடனே வாசீர்மஞ் சென்றேன்யானும் துப்புரவே யசுவினியாந் தேவர்பக்கல்
மதிபோன்ற செம்புரவி தன்னைத்தானும் மார்க்கமுடன் கொண்டல்லோ சென்றுநின்றேன்
அதிவினய பலகாலும் விண்ணப்பங்கள் வன்புடனே வஞ்சலிகள் செய்தேன்தானே
**4506.**
தானான வசுவினியாந் தேவர்தானும் தண்மையுடன் எந்தன்மேல் கிருபைவைத்து
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் பாதமது கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் கிருபையாலும் தேற்றமுடன் என்மீதில் பட்சம்வைத்து
பானான முறைப்படியே என்னைத்தானும் பாங்குடனே சீஷவர்க்கம் நினைத்தார்தாமே
**4507.**
தாமான வசுவினியாந்தேவர்தானும் தண்மையுடன் எந்தன்முகந்தன்னைநோக்கி
பூமானாங் காலாங்கி கொண்டசீஷர்புகழான எந்தன்இருமணியே கேண்மோ
சாமானமானதொரு புரவிதானும் சட்டமுடன் நிர்மித்த வண்மைதன்னை
கோமானே போகரிஷிதுய்யபாலா கூறுவீர் எந்தனுக்கு உண்மைதானே
**4508.**
உண்மையுடன் அசுவினியாந் தேவர்தானும் வுகமையுடன் உத்தாரம்கேட்கும்போது
தண்மையுடன் அடியேனும் தாள்வணங்கி சட்டமுடன் யானுரைத்தேன் தேவர்சங்கம்
திண்மையுடன் ஆகாயபுரவிதன்மேல் தீர்க்கமுடன் அடியேனும் சென்றுமல்லோ
வண்மையுடன் சீனபதியானும் சென்றேன் வளமான புரவிதனைக் கண்டார்தாமே

4509.
கண்டாரே செம்புரவி தன்னைப்பார்த்து கைலாயநாதருட புரவியென்று
அண்டர்முனி ராட்சதர்கள் புரவிதானோ ஆண்டவனார் மஹேஸ்வரனார்புரவிதானோ
கொண்டுமே தன்மனதில் எண்ணங்கொண்டு குறிப்புடனே புரவியது போலமைத்து
சண்டமாருதம்போல புரவிதன்னை சாங்கமுடன் எந்தனுக்கு தந்தார்தாமே
4510.
தந்தாரே செம்புரவிக் குயிருந்தந்து தகமையுள்ள சீனபதிமாந்தர்தாமும்
அந்தமுடன் செம்புரவி அமைத்துமேதான்அன்பாகத்தான்கொடுத்தார் எங்களுக்கு
சொந்தமுடன் அசுவினியாந்தேவருக்குத் தோறாமல் செம்புரவி கொண்டுசென்றேன்
சிந்தனைகள் மிகத்தீர்ந்து செப்பலுற்றேன் திறமான அசுவினியாந்தேவருக்கே
4511.
தேவராம் ரிஷிமுனிவர்நாதர்தாமும் தேற்றமுடன் செம்புரவி தன்னைப்பார்த்து
யாவலுடன் சீனபதிமார்க்கத்தோர்கள் வன்பாகச் செய்துவைத்த புரவிதன்னை
மேவவே குளிகையது வேகந்தன்னை விருப்பமுடன் கண்டல்லோ மிகக்களித்து
தாவலுடன் புரவிக்கு வுதேசங்கள் சட்டமுடன் தான்கொடுத்தார் ரிஷியார்தாமே
4512.
தானான புரவிக்கு மகிமைசொன்னார் தண்மையுள்ள வசுவினியாந்தேவர்தானும்
கோனான வுபதேசம் என்னவென்றால் கொற்றவனார் போகரிஷிவுத்தாரந்தான்
தேனான செம்புரவி கேட்பதற்கு செப்பினார் தேவரிஷிமுனிவர்தானும்
பானான வுலகமெலாம் சுத்தும்போது பண்பாக நில்லென்றால் நிற்கவேண்டும்
4513.
வேண்டுமே போவென்றால் போகவேண்டும் விருப்பமுடன் வீதிகளில் நிற்கவென்றால்
தூண்டுமிகக் கருமான பஞ்சதாதும் தொட்டவுடன் அசைவற்று நிற்கவேண்டும்
தாண்டியே செல்லாமல் போகர்வாக்கு தட்டாமல் மகிமைதனை யறியவேண்டும்
பாண்டுடனே வெகுகாலமிருக்கவென்று வன்புடனே வரமதுவும் கொடுத்தார்பாரே
4514.
பாரேதான் புலிப்பாணி மைந்தாகேளு பண்புடனே யுந்தமக்கு சொல்வேன்யானும்
நேரேதான் தெற்குமுகந்தன்னிலப்பா நேரான கிக்கிந்தா மலைதானுண்டு
கூரேதான் மலைதனிலே வதிசயங்கள் குறிப்பான வடிவேலர் கோயிலுண்டு
பாரேதான் வைகையென்ற நதியுமுண்டு வளமான சுனையுண்டு கானாறுண்டே
4515.
உண்டான மலைதனிலே சித்தரப்பா ஓகோகோ நாதாக்கள் கோடியுண்டு
கண்டாலும் விடுவார்கள் முனிவர்தானும் காசினியில் மாண்பர்கட்கு கண்ணிற்கிட்ட
பண்டுடனே கிழங்குமுதல் சரிகையாவும் பாலமுர்தம்கொண்டல்லோ யிருப்பார்தாமும்
பெண்டான மாய்கையது அறியாரப்பா பேரான சித்தர்முனி கூட்டந்தானே
4516.
கூட்டமா மலைதனிலே குளிகைகொண்டு கொப்பெனவே மலைமீதில் இறங்கினேன்யான்
நீட்டமுடன் மலைதனிலே யிருந்தசித்து நேர்மையுடன் எந்தனதுபுரவிகண்டார்
தாட்டிகமாய் புரவியிடம் கிட்டநின்று சாங்கமுடன் எந்தனையும் கண்டிட்டார்கள்
வாட்டமுடன் சிறுபாலா புரவியென்ன வந்தவகை தானெனக்கு சொல்லென்றாரே

4517.
சொல்லென்று கேட்கையிலே சித்துதாமும் தோறாமல் புரவியது மகிமையோடு
வெல்லவே சித்துமுனி நாதருக்கு எழிலான எந்தனது புரவிதானும்
நல்லதொரு வார்த்தையது மிகவுங்கூறி நன்மையுடன் தானுரைக்கும் புரவிதானும்
புல்லவே காலாங்கி சீஷர்தம்மின் புகழான போகரிஷி யென்னலாச்சே
4518.
என்னவே புரவியது மகிமைதன்னால் எழிலான வார்த்தையது மிகவேகூறி
பன்னவே அசுவினியாந் தேவர்தானும் பாங்கான போகரிஷிநாதருக்கு
சொன்னமென்ற புரவியது தான்கொடுத்தார் துப்புரவாய் சீனபதிகொண்டுசென்றார்
அன்னமது தன்போலே வாய்திறந்து அழகான வார்த்தையது கூறலாச்சே
4519.
கூறவே சீனபதிமாண்பரெல்லாம் குறிப்பான புரவியது மகிமைகண்டு
மாறவே பஞ்சலோகந் தன்னிலேதான் மகத்தான புரவியது வுண்டுசெய்து
ஆறலுடன் பஞ்சபூதங்களைத்தான் வன்பாகத் தான்கொடுத்து என்னைத்தானும்
வீறலுடன் போகரிஷிநாதருக்கு விருப்பமுடன் தான்கொடுத்து வனுப்பினாரே
4520.
அனுப்பவே செம்புரவி யடியேன்தன்னை அழகான போகரிஷிமுனிவர்தாமும்
மனுவுடனே எந்தனையும் வசமதாக்கி மகிழ்ச்சியுடன் குளிகையது தானும்பூண்டு
தனுர்வுடனே ஆசீர்மங்கொண்டுமல்லோ தகமையுள்ள கிக்கிந்தா மலையைத்தேடி
கனுவுடனே வந்தாரே போகநாதர் கைலங்கிரி நாதரைத்தான் காணத்தானே
4521.
தானான புரவியது கூறும்போது தண்மையுள்ள திருவேல தேவர்தானும்
தேனான செம்புரவி தன்தனக்கு தேற்றமுடன் ஞானோபதேசஞ்சொல்லி
பானான காலாங்கி நாதர்தம்மின் பான்மையுள்ள சீஷனென்று மனதுவந்து
தேனான மகுத்துவமாங் கிரியைதன்னை தேற்றமுடன் உபதேசஞ்செய்தார்பாரே
4522.
பாரேதான் செம்புரவி யுபதேசத்தை பாங்குடனே கொண்டபின்பு யடியேனுக்கு
நேரேதான் திருவேலரிஷியாசீர்மம் நேர்மையுடன் சீஷவர்க்கம் கொண்டுசென்று
தீரேதான் திருவேல ரிஷியார்முன்னே தீர்க்கமுடன் எந்தனையுங்கொண்டுசெல்ல
வேரேதான் கிக்கிந்தா மலைநாட்டுள்ளே விடுதிதனில் புரவிவிட்டு இறங்கினேனே
4523.
இறங்கினேன் கிக்கிந்தா மலைதானுள்ளே எழிலான சீஷவர்க்கந்தன்னைக்கண்டேன்
சுறங்கமென்ற குகைதனிலே சீஷர்தாமும் சூட்சமுடன் எந்தனையுங் கொண்டுசென்றார்
மறங்களுடன் மலைதனிலே கோட்டையுண்டு மகத்தான கோட்டைக்கு வாசல்நான்கு
திறமுடனே வாசல்வழி யென்னைத்தானும் திகமுடனே கொண்டுசென்றார் சீஷர்காணே
4524.
காணவே கோட்டைவழி தன்னிற்சென்று கருவாக முன்வாசல் நிற்கும்போது
தோணவே தாளதுதான் திறந்ததங்கே துப்புறவாய் லிங்கமென்ற சமாதிகண்டேன்
பூணவே ரெண்டாங்கால் வாசல்சென்று புகழாக எந்தனையுங் கொண்டுசென்றார்
நாணவே ஜோதிலிங்கஞ் சமாதிகண்டேன் நாதாந்த சித்தொருவர் கண்டேன்பாரே

4525.
பார்த்தேனே நாதாந்த சித்துதாமும் பாங்கான மூன்றாங்கால் வாசல்சென்றேன்
தீர்த்தமுடன் சிவலிங்கந் தன்னைக்கண்டேன் தீர்க்கமுள்ள சித்தொருவர் அங்கிருந்தார்
ஆர்க்கவே நாலாங்கால் பதிதானப்பா வன்புடனே வாசல்வழி சென்றேன்யானும்
நாற்கமல சமாதிதனில் வீற்றிருக்கும் நடராஜசுந்தரனைப் பார்த்திட்டேனே
4526.
இட்டேனே நான்குதிரு கோட்டைவாசல் எழிலான சித்துமுனி சமாதிகண்டேன்
வாட்டமுடன் கோட்டையது வாசல்தாண்டி வண்மையுள்ள திருவேலரிஷியார்முன்னே
தட்டாமல் எந்தனையும் சீஷவர்க்கம் சட்டமுடன் எந்தனையுங் கொண்டுசென்றார்
திட்டமுடன் திருவேலர் ரிஷியார்தாமும் தீர்க்கமுடன் எந்தனையும் கண்டிட்டாரே
4527.
கண்டாரே திருவேலரிஷியார்தாமும் கடினமுடன் சீஷவர்க்கந்தனையழைத்து
அண்டமதில் குளிகைகொண்டு சிறுபாலன்தான் ஆகாய செம்புரவி விட்டிறங்கி
சண்டமாருதம்போல மலைதானுள்ளே சட்டமுடன் வந்தவரை யாரென்றென்ன
துண்டரீகமுள்ள தொருசீஷவர்க்கம் துப்புரவாய் தனையழைத்துக் கேட்டார்தாமே
4528.
கேட்கையிலே திருவேல ரிஷியார்தாமும் கெவனமுடன் சீஷவர்க்கமோடிவந்து
விட்கமுடன் போகரிஷிநாதர்தம்மை மிரட்டியே மிகபேசி வாதுகூறி
தாழ்க்கமலந்தனிலிருக்கு வேலரான தகமையுள்ள ரிஷியாரும் உந்தன்மீது
ஆட்கமுடன் சினமதுவும் நேர்ந்துமல்லோ அப்பனே யுன்மீதிற் சீறினாரே
4529.
சீறவே சீஷவர்க்கம் நாங்களுந்தான் சிறப்பான திருவேல ரிஷியார்வாக்கு
மீறியே வநததொரு மொழியினாலே மிக்கவே யுந்தனையுஞ் சபிக்கவென்று
ஆறியதோர் கோபமதைதனையகற்றி வப்பனே யுன்முன்னே வந்தோம்நாங்கள்
மாறியதோர் கல்லோடே யுனைசபிக்க மகத்தான வேலர்முனி விடைதந்தாரே
4530.
விடைதந்தார் எங்களது சித்துதாமும் வேதாந்த ரிஷியாரும் மனதுவந்து
தடையதுவும் நேராமல் யாங்களுந்தான் சாங்கமுடன் கல்லாகச் சுமைப்போமென்று
சடைபோன்ற சித்துமுனி சீஷவர்க்கம் சதுரான போகரிஷிநாதர்தம்மை
படைவீரர் ஒன்றாகக்கூடியல்லோ பாரினிலே கல்லாக சமைத்திட்டாரே
4531.
சமைத்துமே போகரிஷிநாதர்தாமும் தகமையுள்ள கிக்கிந்தா மலைதானுள்ளே
அமைந்துமே கல்லாகச் சமைந்தாரப்பா அங்ஙனவே மாண்பர்களுங் கண்டதில்லை
இமைந்த தொருபோகரிஷிநாதர்தம்மை எழிலான நாதவொளி சித்துதாமும்
சமைந்ததொரு போகரிஷிநாதர்தம்மை சட்டமுடன் சித்தொளிவும் எழுப்பினாரே
4532.
எழுப்பினார் நாதாந்த சித்துதாமும் எழிலான போகரிஷிநாதர்தம்மை
வழுக்கில்லா நாதாந்த சித்துதாமும் வளமாக போகருக்கு வாசீர்மித்து
அழுக்கறவே அவணிதனில் எந்தநாளும் வப்பனே சிரஞ்சீவி பட்டந்தந்தேன்
ஒழுக்கமுடன் உமதுபதி போகவென்று வுத்தமனார் சித்தொளியும் விடைதந்தாரே

4533.
எழுப்பினார் நாதாந்த சித்துதாமும் தண்மையுள்ள போகரிஷிநாதர்தம்மால்
அந்தமுடன் தானெழுப்பி வினயங்கேட்க அழகான போகரிஷிமுனியார்தாமும்
சொந்தமுடன் காலாங்கி சீடனென்றேன் சுந்தரனே எனைப்பார்த்து மிகக்களித்து
விந்தையுடன் உபதேசங்கூறியல்லோ விண்ணுலகில் போகவென்று வரந்தந்தாரே
4534.
தந்தாரே நாதவொளி சித்துதாமும் தகமையுடன் போகரிஷிநாதருந்தான்
சந்தரமாந் திருவேலரிஷியார்தம்மை சுத்தமுடன் யான்கண்டபோதுமல்லோ
வந்தையாயெந்தனையும் பார்த்துமல்லோ விட்டகுறை யிருந்ததினால் யெழுந்தீரேதான்
அந்தமுடன் காலாங்கி கிருபையாலே அவனிதனில் மறுபடியும் பிறக்கலாச்சே
4535.
பிறந்துமே ஜனனமது வொழிந்துமேதான் பேறான போகரிஷிநாதர்கேளும்
இறந்தவர்கள் இவ்வுலகில் பிறந்ததுண்டோ எழிலான மகிமையது கூறொண்ணாது
திறமுடைய சித்துமகா ரிஷியார்தாமும் தீர்க்கமுடன் எந்தனுக்கு உபதேசங்கள்
வுறமாகத் தான்கொடுத்து வாசீர்மித்து வுற்பனங்கள் மிகவுமல்லோ ஓதினாரே
4536.
ஓதவே யடியேனுந்தாள்பணிந்து வுத்தமனார் திருவேல ரிஷியாருக்கு
நீதமுடன் கரங்குவித்து சிரம்பணிந்து நீட்சியுடன் வுத்தாரஞ்சொன்னேன்பாரு
போதமுடன் எந்தனையுங் கண்டதாலே புகழாக யுந்தனுக்குக் கிருபைசெய்வேன்
தோதமுடன் சிலகாலம் எந்தன்பக்கல் தோற்றமுடன் நீரிருந்தால் அருள்சொல்வேனே
4537.
சொல்வேனே லோகவதிசயங்களெல்லாம் சுருக்கமுடன் உந்தனுக்கு உபதேசித்தேன்
புல்லவே திருவேல ரிஷியார்தாமும் புகன்றிட்டாரெந்தனுக்கு வாக்குமல்லோ
வெல்லவே தசவருடம் யானுமங்கே வீரான கிக்கிந்தா மலைதானுள்ளே
வல்லதொரு சித்தருடன் கூடயானும் வளமாக வனந்தனிலே யிருந்தேன்பாரே
4538.
பாரேதான் புலிப்பாணி மைந்தாகேளு பாங்கான காட்டகத்தே சித்தர்கூட
நேரேதான் யானுமது வாசம்பூண்டு நெடுங்கால மங்கிருந்தேன் காட்டகத்தே
சீரேதான் சீஷருடன்கொண்டுசென்று சிறப்பாக விருக்கையிலே ரிஷியார்தாமும்
பேரேதான் கூப்பிட்டு திருவேலர்தாமும் பேரான மகிமைதனைக்கூறினாரே
4539.
கூறினார் கிக்கிந்தா மலைதானுள்ளே கூறானகதவுமுண்டு மலைதான்பக்கல்
மாரிடவே ரிஷியாருஞ் சமாதிபூண்டு மகத்தான சமாதியது சொல்லொண்ணாது
நீறியதோர் கண்ணக்கூடமப்பா நிலையான சமாதியிதில் சென்றாயானால்
தேரிடவே கிக்கிந்தாரிஷிதானப்பா செயலான சமாதிக்குள் இருப்பார்காணே
4540.
காணவே நாலுயுகங் கண்டசித்து கருவான பிரளயத்தில் மிதந்தசித்து
பூணவே லோகமது முடிவுதன்னில் பொங்கமுடன் ஆலிலையைக்கடந்தசித்து
தோணவே யாதாமின் யோவான்தன்னை தோறாமல் கண்டறிந்த சித்துவாகும்
நீணவே பிரளயங்கள் வந்தபின்பு நிலையாகி நின்றதொரு சித்துதாமே

4541.
தாமான சித்துமகா சொரூபரப்பா தாரணியில் வெகுகாலங் கடந்தசித்து
கோமான்கள் இருந்ததில்லை கொடியசித்து கொற்றவனே போகரிஷியறியமாட்டாய்
பூமானாம் உனதையர் காலாங்கிநாதர் புகழுடனே கண்டறிந்த சித்துவாகும்
நாமாக வறிந்தபடி சொன்னேனப்பா நாட்டிலே யாரேனுஞ் சொல்லார்தாமே
4542.
சொல்லாரே கிக்கஇந்தா மலைதானுள்ளே சொரூபமென்ற சித்துமகா ரிஷியார்தாமும்
வெல்லவே வெகுகாலம் மலையின்மேலே வேழ்க்கையுடன் தாமருந்தார் ரிஷியார்தாமும்
புல்லவே சமாதிக்கு ஏகவென்று புகழான சீஷவர்க்கந் தன்னோடொக்க
அல்லல்படத்த வையகத்தில் ஆசைவிட்டு வன்புடனே தானெழுந்தார் ரிஷியார்தானே
4543.
தானான கிக்கிந்தா ரிஷியார்தாமும் தகமையுடன் சீஷவர்க்கந்தன்னைநோக்கி
கோனான எனதையர் திருவேலரிஷியார் கொற்றவனாருத்தாரப்படியேதானும்
பானான சமாதிக்கு செல்வேனென்று பட்சமுடன் சீஷருக்குத்தாமுரைத்து
தேனான கிக்கிந்தா மலைக்குமேற்கே தீரமுடன் புறப்பட்டார் சித்துதாமே
4544.
சித்தான கிக்கிந்தா மலைதான்சித்து சிறப்பான சீடருக்குத் தாமுரைப்பார்
முத்தான திருவேலர் ரிஷியார்வாக்கு மூதுலகைக் கண்டதொரு ரிஷியார்தாமும்
எத்தனையோ வரைகோடிகாலமப்பா ஏற்றமுடன் வையகத்தில் இருந்தார்தானும்
பத்தியுடன் லோகமதில் இருந்துமேதான் பாருலகில் லாபமதைக் காணார்பாரே
4545.
காணாரே திருவேல ரிஷியார்தாமும் காசினியில் நாலுயுகமிருந்துமென்ன
தோணாத காயகற்பம் கொண்டுமென்ன துப்புரவாய் ஆசைதனைவிட்டொழித்தார்
வேணவே யானவர்க்குத் தொண்டுசெய்து வெகுகாலம் வையகத்தில் இருந்தேன்யானும்
பூணவே பார்தனிலே வாசையற்று புகழான சமாதிக்கு யேகினேனே
4546.
ஏகுவேன் சமாதிக்கு சீஷவர்க்கம் எழிலான கிக்கிந்தா மலைக்குமேற்கு
ஆகுடனே சமாதியது தோண்டவென்று வன்புடனே சீஷருக்கு விடைகொடுக்க
பாருமொழிதவறாமல் சீஷவர்க்கம் பண்புடனே சென்றார்கள் மலையோரத்தில்
வேகுடனே சமாதியது கட்டவென்று வெளிப்பட்டுத் தான்தொடர்ந்தார் மாண்பர்தானே
4547.
மாண்பான சீடர்களுஞ் சமாதிகட்டி மார்க்கமுடன் கிக்கிந்தா ரிஷியாருக்கு
ஆண்பான சமாதியது கட்டியல்லோ அழகான பாறையது மேலேவைத்து
காண்பான ரிஷியாருக்கு முன்னேநின்று கர்த்தாவே கிக்கிந்தா மலைதான்சித்தே
நீண்பான சமாதியது முடிந்ததென்று நிஷ்டைவிட்டு வருகவென்று பணிந்திட்டாரே
4548.
பணிந்துமே மாண்பரெல்லாம் தொழுகும்போது பட்சமுள்ள கிக்கிந்தா ரிஷியார்தாமும்
துணிந்துமே கிக்கிந்தா மலையைவிட்டு துப்புரவாய் வெகுஜனங்கள் பின்னடக்க
அணியணியாய் மாண்பர்களும் கூட்டத்தோடு வன்பான ரிஷியாரும் முன்னடக்க
கணிவுடனே கிக்கிந்தா மலைக்கு மேற்கே கர்த்தாவும் சமாதிபதி வந்திட்டாரே

4549.
வந்ததொரு ரிஷியாருஞ் சமாதிகண்டு வளமையுடன் மாண்பர்களை நோக்கங்கொண்டு
அந்தமுடன் அடியார்கள் தன்னைநோக்கி வன்புடனே மனதுவந்து வார்த்தைசொல்வார்
இந்தொரு வையகத்தின் ஆசைவிட்டேன் யெழிலான சமாதிக்கு செல்வேனப்பா
சொந்தமுடன் பாறையது மூடியல்லோ சுத்தமுடன் காத்திருங்கள் என்றிட்டாரே
4550.
என்றுமே நாதாந்த சித்துதாமும் எழிலான சமாதிதனி லிரங்கும்போது
குன்றான மகமேரே மாண்பரேகேள் குறிப்பான சமாதிதனிலிறங்கிறேன்யான்
வென்றிடவே பாறைகளை மூடவென்று வெழ்க்கமுடன் குருவாக்குகூறும்போது
அன்றுரைத்த மொழிபோலே மாண்பரெல்லாம் வன்பாகப்பாறைதனை மூடிட்டாரே
4551.
மூடினார் சீஷவர்க்க மாண்பரெல்லாம் மூதுலகைக் கண்டதொரு சித்துதாமும்
நீடியே வருவதற்கு முன்னதாக நிட்களங்கமானதொரு வாக்குதானும்
கூடியே நான்வருகுங்காலமப்பா கொற்றவனே அறுபத்து வாண்டுமாகும்
தேடியே நிங்களெல்லாஞ் சமாதிபக்கல் தேற்றமுடன் காத்திருக்க வென்றிட்டாரே
4552.
என்றுமே நான்வருகுங்காலந்தன்னில் எழிலான சப்பாணி நடப்பான்பாரு
குன்றின்மேல் மேயுகின்ற மிருகமெல்லாம் கொப்பெனவே வாய்ஞானம் மிகவேகூறும்
வென்றிடவே குருடனவன் கண்திறப்பான் வேதாந்தம் வூமையன் மிகவேசொல்வான்
நன்றான பட்சியது ஞானம்கூறும் நாதாந்த சித்துவருங் காலமாச்சே
4553.
ஆச்சப்பா புலிபசுவு மொன்றாய்கூடி அடர்ந்ததொரு பொய்கைதனில் நீரையுண்ணும்
பாச்சலுடன் நரிவந்து கரியைவெல்லும் பாங்கான பரியதுவும் அரியைவெல்லும்
மேச்சலுடன் சந்திரனுங் கலைகள்மாறி மிக்கான நிலைதனிலே நிற்பான்பாரு
காச்சலுடன் கதிரோனுந் திசைகள்மாறி கண்ணுக்குத் தோற்றாமல் நிற்பான்பாரே
4554.
பாரேதான் காலாங்கி சொன்னநீதி பட்சமுடன் யிவ்வுலகில் மெய்யதாச்சு
நேரேதான் பூவுலகில் அப்பாகேளு நெடிதான பட்டமரந் துளித்துநிற்கும்
சீரேதான் பிரளயங்கள் அதிகங்காணும் சிறப்பான சித்தரெல்லாம் முன்னேநிற்பார்
கூரான யிவ்வண்ண வதிசயங்கள் குவலயத்தில் நடக்குமென்று சொல்லிட்டாரே
4555.
சொல்லவே கிக்கிந்தாரிஷியார்தாமும் சுத்தமுடன் சித்துவருங்காலமாச்சு
வெல்லவே அறுபத்து வாண்டுமாச்சு வேதாந்த சித்துவருங்காலமாச்சு
புல்லவே சமாதியிட மாண்பரெல்லாம் புகழான சித்துமுனி கூட்டத்தோடும்
வல்லதொரு நாதாந்த முனிவர்தானும் வளமையுடன் சமாதிவிட்டு வருநாளாச்சே
4556.
வருகின்ற நாளாச்சு சித்துதாமும் வண்மையுடன் சீஷவர்க்கம் முன்னேநிற்க
பெருகவே சமாதியின்தன் பாறைதானும் பேரான நாள்வருகுங்காலந்தன்னில்
வுருவுடைய பாறையது வெடிக்கலாச்சு ஓகோகோ நாதாந்த சித்துதாமும்
சொரூபமென்ற ஜெகஜோதி மின்னல்போல சுந்தரனார் சித்தொளிவும் வந்திட்டாரே

4557.
வந்திட்டார் நாதாந்த சித்துதாமும் வையகத்தின் பவக்கடலை காணுதற்கு
சொந்தமுடன் சீஷவர்க்கமெல்லோருந்தான் சொர்ணமென்ற சித்தொளிவைக் கண்டாரங்கே
அந்தமுடன் சித்தொளிவு சொன்னவாக்கு அவனிதனில் மெய்யாச்சோ பொய்யுமாச்சோ
சுந்தரம்போல் வாய்திறந்து ரிஷியார்தாமும் சூட்சமுடன் சுந்தரரைக் கேட்டிட்டாரே
4558.
கேட்டாரே கிக்கிந்தா மலையின்வேந்தன் கீர்த்தியுடன் இவ்வுலகில் இருக்கிறாரே
நீட்டமுடன் யானுரைத்த வாக்குவண்ணம் நீடாழியுலகமதில் வுறுதியாச்சோ
தாட்டிகமாய் சித்துமுனி வுரைக்கும்போது தண்மையுடன் சீஷவர்க்க மாண்பரெல்லாம்
மாட்டிமையாய் நிறைவேறிப் போச்சுதென்று மகதேவர் என்றுசொல்லி வணங்கிட்டாரே
4559.
வணங்கியதோர் சீடருக்கு உபதேசங்கள் வளமாகத் தாமுரைத்தார் ரிஷியார்தாமும்
இணங்கியே கிக்கிந்தா மலையின்மேலே எழிலான கிக்கிந்தா ரிஷியார்தாமும்
மணங்கமழுஞ் சமாதிவட்டு முனிவர்தானும் மார்க்கமுடன் சமாதிவட்டு வந்துநின்றார்
சுணங்கமது வாராமல் ரிஷியாருக்கு சுத்தமுடன் ரிஷியாருஞ் சூழ்ந்திட்டாரே
4560.
சூழ்ந்துமே அஞ்சலிகள் ஆசீர்மங்கள் சுத்தாதி மாந்தர்முதல் வேந்தர்யாவும்
தாழ்ந்துமே சிறங்குனிந்து வனங்கனிந்து சட்டமுடன் ரிஷியாரைத் தோத்தரித்து
வீழ்ந்துமே பதாம்புயத்தைப் போற்றிநின்று வீறான வுபதேசம் பெறுவதற்கு
ஆழ்ந்துமே பவக்கடலை விட்டகற்றி வன்புடனே கார்த்தருளு மென்றிட்டாரே
4561.
இட்டாரே மாண்பரெல்லாம் இதயம்கூர்ந்து எழிலான மனதுவந்து நிற்கும்போது
சட்டமுடன் காலாங்கி சீஷர்தாமும் சதுரான சீனபதிவிட்டுமல்லோ
அட்டதிக்கு காணுதற்கு குளிகைகொண்டு அவனியெலாஞ் சுத்திவருங்காலந்தன்னில்
பட்டமது பகற்கால முச்சிதன்னில் பாரினிலே கிக்கிந்தா ரிஷிகண்டாரே
4562.
கண்டாரே போகரிஷி நாதர்தாமுங் காசினியில் கிக்கிந்தா மலையைக்கண்டு
அண்டமுடன் தேவாதிதேவரெல்லாம் வன்புடனே தானிறங்கும் மலையென்றெண்ணி
கொண்டர்களுஞ் சித்தர்முனி இருக்கும்நாடு துரைராச கிக்கிந்தா மலைவளத்தை
சண்டமாருதம்போலே போகர்தானும் சட்டமுடன் கண்டுமல்லோ இறங்கினாரே
4563.
இறங்கியே போகமுனி ரிஷியார்தாமும் எழிலாகக் கிக்கிந்தா மலையினுச்சி
சுறங்கமென்ற மேற்கனையில் வந்துநின்று துரைராஜர் வடிவேலர் சுனையைக்கண்டு
கரந்தட்டி காசிவிஸ்வநாதர் தம்மை கருத்தினிலே தானினைத்து கூப்பிட்டேன்தான்
வறமுடனே மச்சமென்ற மீனைத்தானும் வாகுடனே கரந்தட்டி யழைத்திட்டாரே
4564.
தட்டியே போகரிஷிநாதர்தாமும் தகமையுடன் வடிவேலர் சுனையில்நின்று
எட்டியே சுனைதனையே பார்த்துமல்லோ யெழிலான காசியென்ற விசுவர்தம்மை
அட்டில்லா தனையழைக்க மச்சந்தானும் வன்புடனே போகரிஷிசத்தங்கேட்க
கொட்டியெனுஞ் சுனைதனிலே மச்சக்கூட்டம் சுந்தரரைக் காணவல்லோ வருகலாச்சே

4565.
ஆச்சப்பா போகரிஷிமுனிவர்தானும் வன்புடனே மச்சமென்ற சுனையைத்தாண்டி
பாச்சலுடன் ரெண்டாங்கால் வரையிலப்பா பாங்கான போகரிஷிமுனிவர்தானும்
பாச்சலுடன் கெவனமென்ற குளிகைதன்னை மகத்தான போகரிஷிமுனிவர்தானும்
வீச்சுடனே குளிகைசென்று போகும்போது வீறான தடந்தனிலே தனைக்கண்டாரே
4566.
கண்டாரே ரெண்டாங்கால் சுனையிலப்பா கருவாக போகரிஷிமுனிவர்தானும்
கண்டாரே படுமுதலை சுனையிலப்பா கருவாக சுந்தரமூர்த்திதன்னால்
கண்டாரே வந்ததொரு முதலையப்பா கனமுடனே மதலைதனைவிழுங்கிவிட்ட
கண்டாரே முதலைதனைபார்த்துமல்லோ கனத்ததொரு விசாரமது கொண்டிட்டாரே
4567.
கொண்டதொரு போகரிஷிநாதர்தம்மை குன்றான மலைதனிலே இருக்குஞ் சித்தர்
கண்டுமே போகரிஷிநாதர்பக்கல் கனமுடனே சித்தர்முனி கூட்டமெல்லாம்
மண்டலத்தில் காணாதவதிசயங்கள் மகத்தான மலைமீதிற் கண்டோமென்று
விண்டுமே தங்கள் தங்கள் மனதிலெண்ணி விருப்பமுடன் போகர்பக்கல் வந்திட்டாரே
4568.
வந்துமே போகரிஷி பக்கல்நின்று மகத்தான முனிக்கூட்டம் தேவர்கூட்டம்
அந்தமுடன் ஆயிரம்பேர் வோடிவந்து ஆங்கார கோபமது சிகரமிஞ்சி
இந்ததொரு மலைமீதில் வந்தபாலன் எழிலான வரலாற்றை அறிவோமென்று
சிந்தனையா யத்திரள்கூட்டம் படைகளோடு தீர்த்தமுடன் போகர்பக்கல் வந்தார்தானே
4569.
தானான போகரிஷிநாதர்தம்மை தண்மையுள்ள சிறுபாலா யாரென்றார்கள்
கோனான காலாங்கி நாதர்தம்மை கொற்றவனார் போகரிஷிக்கனைத்துமல்லோ
பானான யென்குருவே எந்தன்நாதா பட்சமுடன் இவ்வேளைப் பாதுகாத்து
தேனான மனோன்மணியாள் கடாட்சந்தன்னால் தேர்வேந்தரெந்தனையும் ரட்சிப்பீரே
4570.
இரட்சித்துக் காத்தருள வேண்டுமென்றும் யியலான போகரிஷிவணங்கியல்லோ
பரமவொளி கைலங்கிரி நாதாபோதா பாருலகில் உன்னைவிட சித்துமில்லை
நிரந்தரமாய் நிரைந்த பராபரமே போற்றி நிட்களங்கமானதொரு நிதியேபோற்றி
வரந்தந்து எந்தனையுங் கார்க்கவென்று வாகுடனே போகரிஷி பணிந்திட்டாரே
4571.
பணிந்துமே சித்தர்முனி தன்னைநோக்கி பான்மையுடன் அவர்பாதம் தொழுதுமேதான்
துணிந்துமே காலாங்கி சீடனென்றார் துப்புரவாய் குளிகையது யானுங்கொண்டு
பணியான குளிகையது பூண்டுமல்லோ மகத்தான வையகங்கள் சுத்திவந்தேன்
கனிவுடனே கிக்கிந்தா மலையைக்கண்டு கருவான மலையென்று இறங்கஇனேனே
4572.
இறங்கியே வதிசயத்தை பார்க்கவென்று எழிலான சித்தருக்குத் தாமுரைத்தார்
திறமுடைய சித்தர்முனி மனதுவந்து தீர்க்கமுடன் காலாங்கி சீடனென்று
அறமதுவும் நேராமல் வாசீர்மித்து வன்புடனே போகருக்கு இதவுகூறி
உறமுடனே உபதேசம் மிகவளித்து வுத்தமனார்க்கு வரமதுவும் கொடுத்தார்பாரே

4573.
பாரேதான் போகரிஷிமுனிவர்தாமும் பாங்குடனே சித்துதமை கேட்கும்போது
நேரேதான் முகதாவில் போகருக்கு நேர்மையுடன் தாமுரைத்தார் சித்துதாமும்
தீரேதான் இம்மலையிலதிசயங்கள் திறமான வெகுகோடி சித்தரப்பா
ஊரேதான் மலைதானுஞ் சித்துநாடு ஓகோகோ நாதாக்கள் கூட்டந்தானே
4574.
கூட்டமாம் சுனைதனிலே மச்சமுண்டு கோடான கோடியுகம் இருக்கும்மச்சம்
நீட்டமுடன் சித்தர்முனி காவலுண்டு நெடிதான முதற்சுனையில் மைந்தாகேளு
தாட்டிகமாய் ரெண்டாங்கால் சுனையிலெல்லாந் தாக்கான முதலையுண்டு சித்துமுண்டு
வாட்டமுடன் யுகத்தில் குழந்தைதன்னை வாரியுண்ட முதலையின்தன் சுனையுமாமே
4575.
ஆமேதான் முன்யுகத்தில் சுந்தரமூர்த்தி வன்புடனே எழுப்பிவிட்ட முதலையப்பா
தாமேதான் மதலைதலை விழுங்கிவிட்ட தன்மையுள்ள முதலையிது யென்றுசொல்லி
வேமேதான் முததையின்றன் மகிமைதன்னை விருப்பமுடன் தாமுரைத்தார் போகருக்கு
தீமேதான் வாராமல் சித்துதாமும் சிறப்பான முதலைமொழி கூறினாரே
4576.
கூறினார் சித்தர்முனி ரிஷிகள்தாமும் குறிப்பாகக் கிக்கிந்தா மலையினுச்சி
ஆறவே மேல்வரையிற் சென்றுமேதான் வன்பான போகரிஷிமுனிவர்தானும்
சீறலுடன் சினங்கொண்டு வுறுதிகொண்டு சிறப்பான சுனையருகில் கிட்டிநின்று
தேறவே சுனைமுகத்தைக்காணும்போது துப்புரவாய் சித்தொருவர் கண்டிட்டாரே
4577.
கண்டாரே போகரிஷிநாதர்தம்மை கனமான கிக்கிந்தா மலையில்சித்து
விண்டதொரு சுனைவளத்தை போகருக்கு விருப்பமுடன் உபதேசஞ் செய்யலுற்றார்
மண்டலங்கள் தான்புகழும் சுந்தரனார்தாமும் மகத்தான மதலைதனை யெழுப்பிவைத்து
துண்டரிகமானதொரு முதலைதானும் துப்புரவாய் இச்சுனையைக் காணலாமே
4578.
காணலாம் எந்தனது வுத்தாரந்தான் கனமான சிறுபாலா சுனையின்பக்கல்
நீணவே வுத்தாரமன்றியல்லோ நீதியுடன் சுனையருகில் செல்லலாகா
பூணவே வுத்தாரம் பெற்றுக்கொண்டு புகழான போகரிஷி செல்லலாகும்
வேணபடி தாமுரைத்தார் சித்தர்தாமும் விருப்பமுடன் கேட்டாரே போகர்தாமே
4579.
தாமான போகரிஷி சித்துதாமும் தன்மையுடன் ரிஷியாரை வணங்கியேதான்
பூமானாஞ் சுந்தரனார் முதலைதன்னை புகழுடனே யடியேனுங்காணவென்று
வேமான மாகவல்லோ போகர்தாமும் விருப்பமுடன் ரிஷிதமையே கேட்டபோது
சீமானாம் போகரிஷிவந்தாரென்று சிறப்புடனே முதலைதனை யழைத்தார்காணே
4580.
காணவே போகரிஷிநாதர்தானுங் கனமான முதலைதனைக் கண்டபோது
நீணவே போகரிஷிநாதர்தானும் நியாயமுடன் முதலைதனைக் கண்டபோது
வேணவே வுபசாரமஞ்சலிகள்தானும் விருப்பமுடன் தான்செய்தார் போகர்தானும்
மாணவே சினங்கொண்டு போகர்தானும் மகத்தான முதலைதனை கண்டிட்டாரே

4581.
கண்டதொரு முதலையது மனதுவந்து கனமான போகரிஷிநாதருக்கு
உண்டான முன்யுகத்தின் அதிசயங்கள் வுத்தமர்க்குஃத் தானுரைக்கும் முதலைதானும்
மண்டலங்கள் தான்புகழுஞ் சுந்தரனார் தாமும் மகத்தான நாடுவளஞ்சுத்தும்போது
அண்டமெலாந் தான்புகழுமாதிநாடு அவ்வனத்தின் வூர்வழியே வந்திட்டாரே
4582.
வந்ததொரு சுந்தரனார் மூர்த்திதானும் வளமுடனே யவ்வீதி வருகும்போது
அந்தமுடன் மனுக்கூட்டம் சோழர்கூட்டம் வழகான திருவாசல் வாசல்முன்னே
சிந்தனையாய் சோழனது கூட்டத்தார்கள் சிறப்புடனே மனங்கலங்கி புலம்பும்போது
விந்தையுட னெதிர்மாளி திருமணமாம்வாசல் விகல்பமுடன் கண்டாரே மூர்த்தியாமே
4583.
மூர்த்தியாஞ் சுந்தரனார் மனதுவந்து முத்தத்தில் நின்றதொரு மாந்தர்தம்மை
பார்த்துமே அழுகையென்ற சத்தமென்ன பாங்கான சோழவர்க்கஞ் சொல்லுமென்ன
தீர்த்திடுவேன் உந்தனது வபவாதத்தை திகழாகச் செப்புமென்றார் மூர்த்தியாகும்
ஆர்த்துமே சோழவர்க்க மாண்பரெல்லாம் வன்பாகத் தலைவணங்கி சொல்லிட்டாரே
4584.
சொல்லுவார் சோழவர்க்க மாண்பரெல்லாம் துரைராஜ சுந்தரனார் மூர்த்தியார்க்கு
நல்லறிவு வுடையதொரு மைந்தன்சாமி நலமான பாலனவனெவனுண்டு
புல்லவே தோழனுடன் கூடியல்லோ புகழான சாத்திரங்கள் ஓதும்போது
வல்லதொரு வாகுநாளென்றுசொல்லி வளமான விடுதிமுலை விட்டார்தாமே
4585.
விட்டாரே பாலனது குருவாம்சாமி விடுதிக்குப் போகவென்றுவிடையுந்தந்தார்
சட்டமுடன் இருவருமே பேசிக்கொண்டு தண்மையுடன் குளக்கரையில் படியில்நின்று
திட்டமுடன் ஸ்தானங்கள் செய்யும்போது திகழான எங்களது மைந்தன்தன்னை
வாட்டமுடன் முதலையது வந்துமல்லோ வாகுடனே மைந்தனைத்தான் விழுங்கிப்போச்சே
4586.
விழுங்கியே பதினாறுவாண்டுமாச்சு வீறான திருக்குளமும் வற்றிப்போச்சு
மழுகமழுங் கூடிருந்த தோழனுக்கு மகத்தான திருமணமும் புரியலாச்சு
ஒழுங்குடைய யெங்களது மதலைதானும் வுத்தமரே தாமிருந்தானாங்களுந்தான்
தொழுங்கமுடன் திருமணமுஞ் செய்வோமல்லோ துரைராஜ மதலையைத்தான்
நினைந்திட்டோமே
4587.
இளந்தோமே மதலையைத்தானென்று சொல்லி எழிலான சுந்தரற்குத்தாமுரைத்தார்
குளந்தனையே காட்டவென்று மூர்த்தியாரும் கொப்பெனவே சோழவளநாடார்தம்மை
பளமையுடன் மூர்த்தியவர் கேட்கும்போது பாங்கான சோழவளநாடார்தாமும்
வளமையுடன் வுரைக்கலுற்றார் மூர்த்தியார்க்கு வாகுடனே மதலையாகஞ் செய்தார்பாரே
4588.
பாரேதான் யாகமது செய்யும்போது பாங்கான சுந்தரனார்மூர்த்தியாகும்
நேரேதான் குளந்தனிலே சலமுண்டாக்கி நேர்மையுடன் எந்தனையும் வரவழைத்து
சீரேதான் விழுங்கியதோர் மதளைதன்னை சிறப்பாகத்தான்வாங்கி வெளியில்விட்டார்
கூறேதான் மைநதனையுஞ் சோழமாண்பர் குறிப்புடனே தானெடுத்து கொடுபோனாரே

4589.
போனவுடன் அடியேனும் சாபத்தாலே புகழான சுந்தரமூர்த்திதன்னால்
வானமுடன் தேவர்களும் வணங்கும்நாடு மகத்தான கிக்கிந்தா மலையினுச்சி
தேனமிர்தமானதொரு சுனையினுள்ளே தேற்றமுடன் வெகுகோடிகாலமப்பா
ஞானமிர்தமுண்டல்லோ சுனையில்யானும் மகத்தான மலைதனிலே இருக்கின்றேனே
4590.
இருக்கிறேன் என்றல்லோபோகருக்கு எழிலான முதலையது கூறியேதான்
சுருக்கமுடன் சுந்தரனார் மூர்த்தியாரின் சூட்சாதி வரலாற்றைக்கூறியேதான்
பெருக்கமுடன் சுனையருகில் வந்தாலே பேறான வுந்தனுக்குச்சாபம்நேரும்
திருக்கமல வேலவனார் ரிஷியார்தாமும் சிறப்பான பாதமரு பணிகுவீரே
4591.
பணிந்துமே எந்தனைத்தான் காண்பீரானால் பாருலகில் மகுத்துவங்கள் யானுரைப்பேன்
துணிந்துமே முதலையது தானுரைக்க துரைமன்னரானதொரு போகர்தானும்
அணியுடனே திருவேலர் தேவஸ்தானம் வன்புடனே பதாம்புயத்தை நண்ணுதற்கு
மணிபோன்ற கிக்கிந்தா மலையினுள்ள மகத்துவமாங் கடிஸ்தலத்தை நண்ணினானே
4592.
நண்ணியே காலாங்கிநாதர்தாமும் நலமுடனே சித்தொளிவை மனதிலெண்ணி
அண்ணலார் பதாம்புயத்தைக் காணுதற்கு வன்பான போகரிஷி சென்றாரங்கே
வண்ணமுடன் திருவேலரிஷியார்தாமும் வளமுடனே போகரிஷிதன்னைப்பார்த்து
நண்ணியே போகரிஷிநாதர்தம்மை நலமுடனே யாரென்று வினவினாரே
4593.
வினவியே திருவேலரிஷியார்தம்மை விருப்பமுடன் யாரென்றுகேட்கும்போது
கனமுடனே காலாங்கிநாதர்தம்மை கருத்துடைய நற்சீஷனென்று சொன்னார்
தினகரன்போல் முகத்தொளிவைக் கண்ணிற்கொண்டு தீர்க்கமுடன்
திருவேலரிஷியார்தாமும்
மனதுவந்து வந்தெனக்கு வாசீர்மங்கள் வண்மையுடன் தானுரைப்பார் வேலர்தாமே
4594.
தானான திருவேல ரிஷியார்தாமும் தகமையுடன் தாமுரைப்பார்போகருக்கு
வேனான விட்டகுறையிருந்ததாலே விடுபட்டு வந்தீர்காண் மலையைத்தேடி
கோனான காலாங்கிகிருபையாலே கொற்றவனே எந்தனுக்கு வாய்த்துதல்லோ
தேனான திருவினையாள் மனோன்மணியாள்தானும் சிகரமது வுச்சிமலையறியார்காணே
4595.
காணவே மனோன்மணியாள் பார்த்ததில்லை கைலாசதிருவேலர் மலையினுச்சி
நீணவே செய்ததவத்தினாலே நீதியுடன் மலைதனையே காணலாச்சு
வேணதொரு மகத்துவங்கள் அறியலாச்சு வேதாந்த சின்மயத்தின் பொருளுங்கண்டீர்
வாணர்முதல் மதலைதனைக் கண்டதில்லை வண்மையுடன் வுந்தனுக்குக் காணலாச்சே
4596.
ஆச்சப்பா போகரிஷிநாதாகேளும் வன்புடனே உந்தனுக்கு வருளுஞ்சொல்வேன்
மூச்சடங்கிப்போனதொரு வெகுகோடிசித்து முசியாமல் மலையடிவாரந்தன்னில்
மாச்சலுடன் சமாதினில் வெகுபேர்களுண்டு மகத்தான நாதாக்கள் சொல்லொண்ணாது
ஆச்சரியமானசித்து வனேகங்கோடி அடிவாரம் மலைதனிலே காணலாமே

4597.
காணலாம் போகரிஷிமைந்தாநீயும் கண்டாலோ சித்துசாபமெய்தும்
தோணவே சாபமது வந்திட்டாலும் தோற்றமுடன் எந்தனையும் நினைப்பீரானால்
வேணவதாருவுபகாரமுந்தனுக்கு விருப்பமுடன் செய்வதற்கு ஐயமில்லை
பூணவே யுந்தனுக்கு சாபம்நீக்கி பொங்கமுடன் வரந்தருவேன் என்பார்பாரே
4598.
பாரேதான் காலாங்கிசீஷபாதா பரிவுடைய எந்தனிருகண்ணிவேலா
சீரேதான் ஆகாயகுளிகைகொண்ட சிறப்புடனே கற்பமுண்ட மாயதூபா
கேரேதான் உந்தனுக்கோ வொருவருண்டோ நேரான குளிகைகொண்ட நேயபாலா
வீரேதான் சீனபதிவிட்டமாண்பர் வீரான பொன்மணியே என்றிட்டாரே
4599.
என்றுமே திருவேலர் சொல்லும்போது எழிலான போகரிஷிநாதர்தானும்
குன்றான பருவத்தின்மேலேசென்று கோடான கோடிமனுமகிமைகண்டு
தென்திசையில் கும்பமுனி மலையுங்கண்டு தேற்றமுடன் குளிகையது கொண்டுசென்று
வென்றிடவே மலையடியாம் வாரந்தன்னில் மேன்மையுடன் போகரவர் இறங்கினாரே
4600.
இறங்கியே போகரிஷிமனதுவந்து எழிலான சமாதிபதிதன்னிற்சென்று
அறமதுவும் வழுவாமல் முனிவர்தாமும் வன்புடனே சமாதியர்ச்சனையுஞ்செய்து
திறமுடைய காலாங்கிதனைநினைந்து தீர்க்கமுடன் சமாதிதனில் முன்னேநின்று
குறலகற்றி முனியாருங் கைகுவித்து கோலமுடன் சமாதிதனை வணங்கிட்டாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

4601.
வணங்கியே யடிவார சமாதிதன்னில் வண்மையுடன் போகரிஷிமுனிவர்தானும்
இணங்கியே கரங்குவித்து நிற்கும்போது எழிலான சமாதியது திறந்துதங்கே
மணமுடைய சொரூபமென்ற சித்துதாமும் மகத்தான ரிஷியாருங் கண்திறந்து
சுணங்கமது வாராமல் போகர்தம்மை சுத்தமுடன் வாய்திறந்து கேட்டிட்டாரே
4602.
கேட்டதொரு ரிஷியார்க்கு மனதுவந்து கிருபையுடன் காலாங்கி சிஷனென்றார்
நாட்டமுடன் போகரிஷிநாதர்தம்மை நாதாந்த சித்தொளிவு ரிஷியார்தாமும்
தேட்டமுடன் திரிசங்கு அயோத்திமைந்தன் திகழான வரிச்சந்திரன் சுகமோவென்றார்
வாட்டமுடன் போகரிஷிமுனிவர்தானும் வுளமுடனே யான்கண்டதிலையென்றாரே
4603.
என்றாரே போகரிஷிமுனிவர்தானும் எழிலான திரிச்சங்கு மைந்தன்தன்னை
குன்றான மலையிறங்கி குளிகைபூண்டு குவலயத்தையான்சுத்தி வருகும்போது
தென்திசையில் திருப்பாலின் கடலின்மேற்கே திகழான மயானமென்ற கரையில்தானும்
தன்றுணவ கிருஷ்ணனைப்போல் கல்லாய்த்தானும் திரிணியில் கண்டேனே யென்றிட்டாரே
4604.
இட்டாரே போகரிஷிமுனிவர்தானும் எழிலான வரிச்சந்திரன் தன்னைத்தானும்
பட்டதொரு மாண்பர்களின் கடலைதன்னில் பாங்குடனே காவலது இருக்கவென்று
கட்டதொரு மாண்பருக்குக் கூலியாளாய் சுடலைபதி கார்த்திருக்கக் கண்டேன்யானும்
கட்டவிழும் சத்தியத்துக் காளதாகி காசினியில் சுடலைபதி யிருந்திட்டாரே
4605.
இருந்தாரே கல்லாகவெகுகோடிகாலம் எழிலான திருச்சங்கு மைந்தன்தானும்
பொருந்தவே கல்லயனைக்கண்டேன் என்று பொன்னடிக்குத் தண்டனிட்டார் போகர்தாமும்
திருந்தவே சமாதிகளிலிருந்தசித்து தீர்க்கமுடன் கலியுகமும் பிறந்ததென்ன
குருந்தமுடன் சீனபதி துரைத்தனங்கக் குவலயத்தில் அமைத்துதோ தானென்றிட்டாரே
4606.
என்றுமே போகரிஷிமுனிவர்தம்மை எழிலான நாதாந்தசித்துதாமும்
சென்றுமே சமாதிதனை மூடவென்று சினத்திலே போகருக்கு விடையுஞ்சொல்ல
நன்றுடனே போகரிஷிமுனிவர்தானும் நாதாந்த சித்தொளிவைக் கெதியேதென்றார்
குன்றுடைய காலாங்கிசீஷருக்கு கூறுவார் சித்தொளிவுங் கூறுவாரே
4607.
கூறுவார் காலாங்கி சீஷவர்கேளும் கொற்றவனே சீனபதிவிட்டுநீயும்
மாறலென்ற குளிகையது பூண்டுகொண்டு மகத்தான கிக்கிந்தா மலையைத்தேடி
சாரலென்ற மேற்பதியில் வந்துநீயும் சட்டமுடன் சமாதிதனைக் கண்டுமேதான்
சேரவே எந்தனைநீபார்த்ததாலே செப்பமுடன் உந்தனுக்கு வருள்சொல்வேனே
4608.
அருளான மகிமையது என்னவென்றால் வப்பனே காலாங்கிசீஷர்கேளும்
பொருளான மூன்றுயுகங் கடந்துபோச்சு பொங்கமுடன் கலியுகமும் பிறக்கலாச்சு
இருளான கலியிகத்தின்முடிவுதன்னில் எழிலாக எந்தனைநீகாண்பாயானால்
தெருளகற்றியுந்தனுக்கு வனேகபோதம் தெளிவான கிரிகைகளும் செப்புவேனே

4609.
செப்புவே னுந்தனுக்கு யென்றுசொல்லி தேற்றமுடன் தாமுரைப்பார் சித்துதாமும்
ஒப்பமுடன் போகரிஷிநாதருக்கு ஓகோகோ நாதாந்த சித்துதாமும்
இப்புவியிலதிசயங்கள் யாவுங்கூறி யெழிலாகத்தாமுரைத்துபோகருக்கு
எப்போதும் போலாக சமாதிதன்னை எழிலாக மூடவென்று விடைதந்தாரே
4610.
தந்தாரே விடையதுவும் பெற்றுக்கொண்டு தகமையுள்ள திருவேல ரிஷியார்முன்னே
அந்தமுடன் போகரிஷிமுனிவர்தானும் வன்பாக மலைமீதிற்சென்றுமல்லோ
சொந்தமுடன் திருவேல ரிஷியார்பக்கல் தோற்றமுடன் போகரிஷிமுனிவர்தானும்
விந்தையது பெற்றமல்லோ ரிஷியார்பக்கல் விருப்பமுடன் சிரங்குனிந்து நின்றிட்டாரே
4611.
நின்றதொரு போகரிஷிமுனிவர்தம்மை நேர்மையுடன் திருவேலரிஷியார்பார்த்து
குன்றின்மேல் ஏறியல்லோ குளிகைபூண்டு கொற்றவனே எந்தனிடம் வந்தாயப்பா
நன்றான வதிசயங்கள் உந்தனுக்கு நலமுடனே யானுமல்லோ உபதேசிப்பேன்
என்றுமே ரிஷியாரும் வாக்களித்து ஏத்தமுடன் பச்சமாய் சொல்லிட்டாரே
4612.
சொல்லவே திருவேல ரிஷியார்தாமும் சோறாமல் போகருக்கு மனதுவந்து
வெல்லவே சீனபதிவிட்டுமேதான் வேதாந்த காலாங்கி விடையும்பெற்று
அல்லலெனும் பவக்கடலை விட்டகற்றி அவனியெலாம் குளிகைகொண்டு திரிந்துமைந்தா
வல்லதொரு கிக்கிந்தா மலையைத்தேடி வந்ததினா லுந்தனுக்குத் துறைசொல்வேனே
4613.
துறையான காலாங்கிநாதபாதா துப்பரவாய்ச் சமாதியிடம் சென்றுமேதான்
மறையான வடிவாரமலையோரத்தின் மகுத்துவமாஞ் சித்துகளுமனேகமுண்டு
சிறைமீளா சமாதிதனிலிருந்தசித்து சீரான நாதாக்கள் வெகுபேருண்டே
கறைபடுமா மாபுறத்தில் சமாதிமாண்பர் கனமான சொரூபசித்து காணீர்தானே
4614.
கண்டீரோ சமாதியென்ற சொரூபசித்தை கைலாசசீனபதி போகநாதா
விண்டதொரு திருவேலர் திருவாக்குக்கு விருப்பமுடன் போகரிஷி வுரைக்கலுற்றார்
சண்டமாருதம்போல சமாதிகண்டேன் சாங்கமுடன் அவ்விடத்தில் சித்துமுண்டு
தெண்டமுடன் சமாதியிடம் நின்றுயாமும் தெரிசித்து சமாதியிடம் வந்திட்டேனே
4615.
வந்திட்டேன் அஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன் வாகுடனே சமாதியின்தன் சொரூபருக்கு
சிந்தனையாய் நெடுங்காலமிருந்த சித்துமகாபுருடனையும் வேண்டிக்கொண்டேன்
அந்தமுள்ள சமாதியது பாறைதானும் அண்டரண்டங் கிடுகிடுக்க வெடிக்கலாச்சு
பத்துளவ மாலையணி கிருஷ்ணன்போல பார்த்தேனே சித்தொளிவை வணங்கினேனே
4616.
வணங்கவே சமாதிமுகந் தனிலிருந்து வளமான சித்துமகாரிஷியார்தாமும்
இணங்கவே எந்தனையும் மனதுவந்து எழிலான சிறுபாலா யாரென்றென்ன
சுணங்கமது வாராமல் அடியேன்தானும் துப்புரவாய்க் காலாங்கி சீஷனென்றேன்
மணங்கமழும் சித்துமகா சொரூபர்தானும் மனக்களிப்பாய் வார்த்தையது கூறுவாரே

4617.
கூறுவார் வாய்திறந்து எந்தனைத்தான் கூறான வரிச்சந்திரன் எங்கேயென்றார்
மாறுபடு எந்தன்மனம் பேதலித்து வையகத்தில் அரிச்சந்திரன் கண்டதில்லை
வீறுபுகழ் சுடலைபதி தன்னில்யானும் விருப்பமுடன் அரிச்சந்திரன் கல்லைக்கண்டேன்
ஆறுபுகழ் சூழ்நகரமாசுவேந்தன் அவனிதனில் மாண்டிட்டார் என்றிட்டானே
4618.
என்றேனே வரிச்சந்திரன் தன்னைக்காணேன் எழிலான வரிச்சந்திரன் கூறும்போது
குன்றான மகமேரு ரிஷியார்தாமும் குவலயத்திலில்லையென்ற மொழியுங்கேட்டு
சென்றுமே மூன்றுயுகங் கடந்துபோச்சு செயலான கலியுகமும் பிறக்கலாச்சோ
என்றுமே ரிஷியாரும் மனதுநொந்து எழிலான வார்த்தையது சொல்லிட்டாரே
4619.
சொல்லவே யடியேனை பாறைகொண்டு சோறாமல் மூடவென்று விடையுந்தந்தார்
புல்லவே யடியேனும் சமாதிதன்னை புகழாக முடியவல்லோ சமாதிவர்க்கம்
அல்லவருங் கண்டதினால் லோகமெல்லாம் அவமான வார்த்தைக்கு உடையுண்டென்று
சொல்லியே எந்தனையும் மூடச்சொல்லி துப்புரவாய் வாக்கதுவும் தந்திட்டாரே
4620.
தந்திட்டார் என்றதுமே வரலாறுந்தான் தகமையுடன் பதிவேலர்க்குரைத்தேன்யானும்
அந்தமுடன் திருவேலர் ரிஷியார்தானும் வன்புடனே மனங்கனிந்து எந்தன்மீது
சொந்தமுடன் என்மீதிற் பட்சம்வைத்து சுத்தமுள்ள காலாங்கி கிருபையாலே
விந்தைபுகழ் தேசாதி மகிமையெல்லாம் விருப்பமுடன் எந்தனுக்கு ஓதினாரே
4621.
ஓதியே திருவேலர் ரிஷியார்தாமும் ஓகோகோ போகரிஷிநாதருக்கு
நீதியுடன் ஞானோபதேசங்கூறி நிட்களங்கமானதொரு மகிமையெல்லாம்
வாதியாஞ் சித்தர்முனி சொரூபந்தானும் வளமான வதிசயங்கள் காணாதெல்லாம்
பாதிமதி சடையணிந்த போகருக்கு பட்சமுடனுபதேசஞ் செய்தார்பாரே
4622.
பாரேதான் காலாங்கி சீஷபாதா பரிவாக யுந்தனுக்கு சொல்வேனப்பா
நேரேதான் கிக்கிந்தா மலையினுச்சி நெடியான வடக்குபுறந் தெற்குவாசல்
சீரேதான் வுத்தமென்ற சுனையொன்றுண்டு சிறப்பான பொன்மயிலுமங்கேயுண்டு
சேரேதா னாவடியார் சமாதியுண்டு செங்கண்மால் சக்கரமும் அங்கேயுண்டே
4623.
உண்டான சக்கரமுங் காவலுண்டு வுதகமென்ற மலைமேலே சுனையிலப்பா
அண்டர்தொழும் ஆவடியார் தன்றன்பக்கல் வழகான பொன்மயிலுமங்கேயுண்டு
கண்டுமே மனதுவந்து களிப்படைந்து கனமுடனே வார்த்தையது மிகவுங்கூறி
மண்டலத்தில் அதிசயங்கள் யாவுஞ்சொல்லி மார்க்கமுடன் வருகவென்று விடைதந்தாரே
4624.
விடையான விடையதுவும் பெற்றுக்கொண்டு வீறான குளிகையது பூண்டுகொண்டு
தடையறவே கிக்கிந்தா மலையினுச்சி தண்மையுடன் வடக்குபுறம் மேற்குவாசல்
சடைபோன்ற போகரிஷிநாதர்தானும் சட்டமுடன் சிவலிங்கந் தன்னைக்கண்டு
நடையுடனே மேற்பதியில் செல்லும்போது நலமான பொன்மயிலை கண்டிட்டாரே

4625.
கண்டாரே பொன்மயிலை போகர்தானும் கனமுடனே எதிர்நின்று முடிகள்சாய்த்து
தெண்டமுடன் பதாம்புயத்தைத்தான்வணங்கி தேற்றமுடன் கூறலுற்றார் ரிஷியார்தாமும்
பண்டதுபோல் தங்கமென்ற மயில்தானப்பா பாண்டவனே போகரிஷிதன்னைப்பார்த்து
ஒண்டியுடன் மலைமேலே வந்தபாலா வுத்தமனே யாரென்று கேட்கலாச்சே
4626.
கேட்டதொரு வடிவேலர் பட்சிக்கல்லோ கிருபையுடன் போகரிஷிநாதர்தானும்
வாட்டமுடன் பொன்மயிலாந்தன்னைக்கண்டு வளமான வுத்தாரஞ் சொல்லுற்றார்
நீட்டமுடன் திருவேலரிஷியார்தாமும் நீதியுடன் அரிச்சந்திர சித்துமுன்னே
தேட்டமுடன் கண்டறிந்து வந்தபின்பு செப்பஉவேன் வடையெனக்கு என்றிட்டாரே
4627.
என்றுமே திருவேல ரிஷியார்சொல்ல ஏத்தமுடன் வுத்தாரம் பெற்றுமேதான்
வென்றிடவே மறுபடியும் திருவேலர்முன்னே வேகமுடன் வந்தல்லோ வணங்கிநின்றேன்
குன்றான மலைமேலே வுச்சிதன்னில் கொப்பெனவே எந்தனையும் போகச்சொன்னார்
நன்றாக வடயேனும் விடையும்பூண்டு நலமாக யுந்தனையும் காணலாச்சே
4628.
காணவே நாளாச்சுதென்றுசொல்லி கருத்துடனே தாள்பணிந்துகூறும்போது
பூணவே போகரிஷிநாதருக்கு பொன்மயிலும் மனதுவந்து என்னசொல்லும்
தோணவே காலாங்கிநாதர்சீஷர் துப்புரவாய் எந்தனையுங் கண்டதாலே
வேணபடி யுந்தனுக்கு வுபதேசங்கள் விருப்பமுடன் வுரைப்பேனென்று சொல்லலாச்சே
4629.
ஆச்சப்பா காலாங்கி நாதர்பாதா அருண்மைந்தா சொல்லுகிறேன் உந்தனுக்கு
வீச்சுடனே திரேதாயினுகத்திலப்பா விண்ணுலகு தெய்வலோகபதியில்யானும்
மாச்சலுடன் காகோடி ரிஷிகள்தன்னில் மகத்தான மகிமைகளுங்கிரியைபூண்டு
ஆச்சரிய மாகவல்லோ இந்திரன்பக்கல் அமர்ந்தேனே கொலுமேடை பக்கல்தானே
4630.
தானான சித்தர்கூட மண்டபத்தின் தகமையுடன் இந்திரனார்கொலுவிருக்க
தேனான ரம்பையூர்வசியாள்தானும் சிறப்புடனே நாட்டிங்கள் செய்துநிற்க
பானான வூர்வசியாள் தன்னைப்பார்த்து பட்சமுடன் கலவிக்கு எண்ணங்கொண்டு
மானான மகத்துவமாம் ரிஷியார்தாமும் மார்க்கமுடன் காதலது கொண்டிட்டீரே
4631.
கொண்டதொரு காதல்தனை இந்திரன்கண்டு கொற்றவனார் இந்திரற்குக் கோபம்பொங்கி
அண்டர்முனி ராட்சதர்தேவாதிமுன்னே அகங்கொண்ட ரிஷியார்க்கு சாபங்கொண்டு
மண்டலங்கள் தான்புகழும் வடிவேலர்க்கு மகத்தான பொன்மயில்வாகனமுமாக்கி
துண்டரிக மாகவல்லோ இந்திரன்தான் துப்புரவாய் சாபமது கொடுத்தார்தாமே
4632.
தாமான சாபத்தால் மயிலுமானேன் தகமையுள்ள கிக்கிந்தா மலையின்மேலே
கோமானகள் கோடிபேர் கண்டதுண்டு கொற்றவர்கல் சாபமதை தவிர்க்கவில்லை
பூமானங் காலாங்கிநாதர்பாதா பொங்கமுடன் எந்தனையுங் கண்டதாலே
சாமான மானதொரு காலாங்கிநாதர் சட்டமுடன் என்சாபம் நீக்கொண்ணாதே

4633.
ஒண்ணாது சொரூபமென்ற சித்துதாமும் வுலகபதி முன்யுகத்தில் ரிஷியாருமாய்
எண்ணதே வெகுகாலந்தானிருந்து எழிலான தேவபுரம் சென்றேன்யானும்
கண்ணான வாயிரங்கண் இந்திரன்தான் கடுங்கோபமென்மேலே யதிகமாகி
திண்ணமுடன் சாபமது எந்தனுக்கு தீர்க்கமுடன் தான்கொடுத்தார் பாருபாரே
4634.
பாரேதான் ரிஷியான மயிலுமப்பா பாலனெனும் போகர்முகந்தன்னைநோக்கி
நேரேதான் காலாங்கிநாதருக்கு நேர்மையுடன் எந்தனது வளப்பங்கூறி
சீரேதான் பொன்மயிலுஞ் சாபம்நீங்கி சிறப்பாக முன்போல ரிஷியுமக்கு
சேரேதான் வையகத்தில் சித்துமாக சிறப்புடனே செய்வதுவுன் பாரந்தானே
4635.
தானான தேவரிஷி மயிலேகேளும் தண்மையுடன் வடிவேலர்க்கு கந்தமாக
கோனான எனதையர் காலாங்கிக்கு கொற்றவனே யுன்வளப்பம் மிகவனைத்தும்
தேனான தேவேந்திரன் வளப்பந்தானும் தேற்றமுடன் யானுரைக்க சாபம்நீங்கி
மானான வையகத்தில் ரிஷியுமாக்கி மார்க்கமுடன் வுன்சாபம் தீர்ப்பேன்காணே
4636.
காணவே போகரிஷிநாதர்தானும் கனமான வடிவேலர் மயிலுக்கல்லோ
தோணவே யுபசார வார்த்தைகூற தோன்றாமல் பொன்மயிலும் மனதுவந்து
பூணவே தேவர்பதி மகிமையெல்லாம் புகழான பொன்னுலோக மர்மனைத்தும்
வேணவே யமரர்பதி சரித்திரங்கள் விருப்பமுடன் உபதேசங்கூறலாச்சே
4637.
ஆச்சப்பா கைலாசமர்மமெல்லாம் அடைவுடனே போகரிஷிமுனிவர்தானும்
பேச்சுமொழி வாய்ஞானந்தன்னிற்றானும் பேரான வுபதேசமனைத்துங்கொண்டு
பாச்சலுடன் விடையதுவும் பெற்றுக்கொண்டு பாங்கான குளிகையது பூண்டுமேதான்
ஆச்சரிய மாகவல்லோ சீனதேசம் வன்புடனே தம்பதிக்கு வந்திட்டாரே
4638.
வந்தாரே சீனபதிதன்னிற்சென்று வளமுடனே முக்காதக்கோட்டைக்குள்ளே
அந்தமுடன் போகரிஷிமுனிவர்தானும் அகங்களித்து மனதுவந்து குளிகையிட்டு
சொந்தமுடன் காலாங்கி சமாதிபக்கல் சுத்தமுடன் மேற்புறத்தில் வாசல்நின்று
சிந்தனையாய் அஞ்சலிகள் மிகவுஞ்செய்து சிறப்புடனே சிரங்குனிந்து வணங்கிட்டாரே
4639.
வணங்கியே இருகரமுந் தான்குவித்து வளமுடனே பதாம்புயத்தை மிகவும்நண்ணி
இணங்கியே சமாதியது கபாடவாசல் இணக்கமுடன் அர்ச்சனைகள் புரியும்போது
சுணங்கமது வாராமல் காலாங்கிநாதர் சுடரொளியாஞ் சமாதியது திறந்துதங்கே
கணமுடனே வாத்தியங்கள் ஆர்பரிக்க கர்த்தாவாஞ் ஜெகஜோதி காணலாச்சே
4640.
காணுகையில் போகரிஷி முனிவர்தானும் காலாங்கி ஜெகஜோதிநாதருக்கு
தோணவே சீனபதிவிட்டுமல்லோ துரைராஜபோகரிஷிமுனிவர்தானும்
நீணவே குளிகையது மிகவேபூண்டு நிட்களங்க கிக்கிந்தா மலையில்தானும்
வேணதொரு தான்கண்ட வதிசயங்கள் விருப்பமுடன் கூறுவார் காலாங்கிக்கே

4641.
காலாங்கி நாதரென்ற ரிஷியாருக்கு கனமுடைய சீஷவர்க்கம் போகர்தானும்
பாலான கிக்கிந்தா மலையினுச்சி பாங்குடனே குளிகைகொண்டு சென்றதுந்தான்
மாலான திருவேல ரிஷியார்தம்மை மார்க்கமுடன் பேசியல்லோ கண்டதுந்தான்
சீலான கிக்கிந்தா யடிவாரத்தில் சிறப்புடனே ரிஷியாரைக் கண்டார்தானே
4642.
கண்டாரே அரிச்சந்திர சித்துதானும் கனமுடனே தன்தனக்கு வுரைத்தசொல்லும்
அண்டாமல் வார்த்தையது மிகக்கூறாமல் வம்மலைக்கு மறுபடியும் யேகவென்று
சண்டமாருதம்போல முதலைதன்னை தகமையுடன் தான்கண்டசேதியாவும்
வுண்மையுடன் சுந்தரனார் மூர்த்தியாரும் வுரைத்தமொழி தப்பாமல் வுறுதிகொண்டே
4643.
கொண்டேதான் வார்த்தையது மிகவும்நண்ணி குறிப்பான பொன்மயிலைக்கண்டதுந்தான்
அண்டமது வாகாய விந்திரன்தான் அமரர்பதி சமர்க்களத்தில் ரிஷியார்தம்மை
தெண்டனைகள் சாபமது மிகக்கொடுத்து தேவேந்திர பகவானுமஞ்சலித்து
வண்டணிமார் கோபத்தால் சாபந்தந்து வண்மையுடன் மயிலாக்கி போவென்றாரே
4644.
போகவென்றார் தேவேந்திர பகவான்தானும் பொங்கமுடன் வடிவேலர் வாகனந்தான்
சாகமுடன் சதாகாலம் வடிவேலர்க்கு சட்டமுடன் பொன்மயிலா இருக்கவென்று
வேகமுடன் தேவேந்திர பகவான்தானும் எழிலான சாபமது தந்தாரென்றும்
பாகமுடன் சாபமதைத் தீர்க்கவென்று பட்சமுடன் பொன்மயிலுங்கேட்கலாச்சே
4645.
கேட்கவே காலாங்கிநாதர்தாமும் கிருபையுடன் பொன்மயிலின் சாபந்தீர்க்க
நீட்கமுடன் போகர்மேல் பட்சம்வைத்து நிலையான ரிஷியினது சாபந்தன்னை
வாட்கமுடன் மனோன்மணியாள் கிருபையாலே வாகுடனே இந்திரபதி சென்றுமல்லோ
தாட்கமுடன் நவரத்ன பீடந்தன்னில் தார்வேந்தர் இந்திரனார்சபைகண்டேனே
4646.
கண்டாரே காலாங்கி நாதர்தம்மின் கனமான போகரிஷிநாதர்தானும்
அண்டர்முடி தேவாதி தேவரெல்லாம் வண்பாக தேவேந்திரன் பக்கல்தன்னில்
கொண்டல்முடி அச்சுதனார் கோபாலன்தன் குருவான பீடமது தன்னைக்கண்டார்
சண்டமாருதம்போலே இந்திரன்பக்கல் சாங்கமுடன் போகரிஷி கண்டார்தானே
4647.
கானான போகரிஷி முனிவர்தானும் தண்மையுள்ள இந்திரனார் தன்னைநோக்கி
கோனான யென்தேவா பகவானேகேள் கொற்றவனார் ரிஷியாரின் சாபந்தன்னை
மானான காலாங்கி நாதரல்லோ மகத்தான நாலுயுகங் கண்டசித்து
தேனான மனோன்மணியாளறிந்தசித்து தேசமெல்லாங் கரைகண்டசித்துமாமே
4648.
சித்தான தேவேந்திர பகவானேகேள் சிறப்பான லோகமதில் கீர்த்திபெற்ற
முத்தான காலாங்கிநாதர்தாமும் முடிவணங்கியடிவணங்கி சமாதிதன்னில்
சுத்தமுடன் தேவேந்திரா யுந்தமக்கு சுடரொளியே ஜெகஜோதி சொரூபநந்தா
சித்துமது மனதுவந்து தேர்வேந்தேகேள் சீரான ரிஷிசாபம் நீக்கென்றாரே

4649.
என்றாரே மயில்ரூபந்தன்னைமாற்றி எழிலான பகதேவர் அடியார்தம்மை
முன்னான யுகந்தனிலே இருந்தாப்போல மூதுலகில் சாபமதைத் தீர்த்துமல்லோ
பின்னான மயில்ரூபந்தன்னைமாற்றி பேறானரிஷிபோல வடிவமாக்கி
மன்னவனே வையகத்தில் பிறவிமாற்றம் மகதேவா செய்வதுவுன் பாரமாமே
4650.
பாரமா மென்றல்லோ போகர்தாமும் பட்சமுடன் பலகாலுந் தாள்பணிந்து
தீரமுடன் தேவேந்திரன் தன்னைநோக்கி தீர்க்கமுடன் பலநாலுந் தெண்டனிட்டார்
சூரர்முதல் தேவர்கணபூதத்தோடு துப்புரவாய் தேவேந்திரபகவான்தானும்
வீரமுடன் போகர்முகந் தன்னைநோக்கி விருப்பமுடன் தேவேந்திர பகவான்தானே
4651.
தானான காலாங்கிநாதர்பாதா தண்மையுள்ள சிசுபாலா போகநாதா
கோனான தேவேந்திரபதியைக்காண கொற்றவனே வந்ததொரு தீரமாறா
தேனான மனோன்மணியாட் குகந்தசீஷா தேசத்தில் சித்தர்மெச்சும் குணக்குன்றேகேள்
பானான எந்தனது பக்கல்தன்னில் பட்சமுடன் கொலுவிருந்தார் கோடியாமே
4652.
கோடியாம் நவகோடி ரிஷிகளப்பா கொற்றவர்கள் எந்தனது கொலுக்கூடத்தில்
நீடியே நவகோடி ரிஷிகளப்பா நலமையுடன் கொலுவிருந்தார் கோடிமாண்பர்
ஆடியே எந்தனது சபையின்முன்னே அரம்பைமுதல் மேனகையு மாடிநிற்க
தேடியே மாதரிடம் கிட்டேநின்று தேவிகள்மேல் மோகமது கொண்டிட்டாரே
4653.
கொண்டாரே ரிஷியாரும் மாதுபேரில் கொற்றவனார் ரிஷியாரின் எண்ணந்தன்னை
கண்டேனே மனந்தனிலே சந்தேகங்கள் கசடுள்ள பாவியென்று மனதிலுன்னி
தெண்டனைகள் செய்யாமல் ரிஷியார்தன்னை சிறப்புடனே சாபமதுயான்கொடுத்து
அண்டமதில் தானேகும் மயிலைப்போல அவனிதனில் போகவென்று வரந்தந்தேனே
4654.
தந்தேனே பொன்மயிலாய் வடிவமாகி தாரணியில் சதாகால மிருக்கவென்று
இந்ததொரு தேவெந்திர லோகம்விட்டு எழிலான வையகத்தில் ஏகவென்று
நிந்தைகொண்ட பாவியர்க்கு வையகந்தான் நீடாழியுலகமே சதாகாலந்தான்
சொந்தமாய் வையகத்தி லிருக்கவென்று சொன்னேனே சாபமது ரிஷிக்குத்தானே
4655.
தானான சாபமது பெற்றமல்லோ தாரணியில் பொன்மயிலா யிருக்கவென்று
மானான துவாபர யுகத்திலப்பா மகத்தான சாபமது நேர்ந்துதங்கே
பானான ரிஷியாரை சாபம்தீர்க்க பாருலகில் சமாதிகொண்ட சொரூபசித்து
கோனான குருசாமி காலாங்கிநாதர் கொற்றவனார் மன்னாப்பு சொன்னார்காணே
4656.
சொன்னாரே காலாங்கி நாதர்தானும் சொர்ப்பமுள்ள ரிஷியார்க்கு சாபந்தீர்க்க
மன்னவனே மனோன்மணியாள் அறிந்தசித்து மகத்தான காலாங்கிநாதரப்பா
முன்னேதான் மூன்றுயுகங் கண்டசித்து மூதுலகோர் தானறியா மாயசித்து
நன்மையாய் வையகத்தை மறந்தசித்து நாதாந்த சொரூபமென்ற சித்துதாமே

4657.
தாமான காலாங்கிநாதர்வாக்கு தாரிணியில் ஒருகாலந் தடுக்கப்போகா
சாமானிய மானதொரு சித்துதாமும் சட்டமுடன் வாக்களித்த பிரகாரகாரந்தான்
நாமேதான் செய்வதற்கு ஐயமில்லை மாலான சித்தினுட வாக்குபாதம்
வேரேதான் மயில்ரூபம் மாறியல்லோ வேகமுடன் சாபமது கொடுத்தார்பாரே
4658.
பாரேதான் பொன்மயிலும் ரூபமாறி பாங்குடனே மறுபடியும் ரிஷியுமாகி
நேரேதான் ரிஷியாரும் சாபம்தீர்ந்து நேர்மையுடன் வையகத்தில் வாழ்ந்திருக்க
சீரேதான் தேவேந்திர பகவான்தானும் சிறப்புடனே வையகத்தில் மாண்பனாக
தீரேதான் சாபமது நிவர்த்திசெய்து தீர்க்கமுடன் வையகத்துக் கனுப்பினாரே
4659.
அனுப்பினார் தேவேந்திர பகவான்தானும் வன்புடனே போகரிஷி விடையும்பெற்று
மனுநீதி வழுவாமல் இந்திரன்பக்கல் மாட்சியுடன் போகரிஷிமுனிவர்தானும்
தனுசுடைய இந்திரனார் வில்லுங்கண்டு தாழ்மையுடன் போகரிஷிவிடையும்பெற்று
பனுவலுடன் வையகத்தில் வந்துமல்லோ பட்சமுடன் ரிஷிதனையே கண்டிட்டாரே
4660.
கண்டாரே போகரிஷிமுனிவர்தானும் கருவான ரிஷியாரைத் தானும்பார்த்து
அண்டரண்டம் சென்றுமல்லோ விடையும்பெற்று ஆண்டவனே என்சாபம் மீட்டிவந்தேன்
தண்டுலகந் தான்புகழும் காலாங்கிநாதர் தாளடிக்கி யடிபணிந்து செப்பவேண்டும்
விண்டுலகில் தனில்வாழும் இந்திரன்செய்தி விருப்பமுடன் வரைப்பேன் என்றிட்டார்தானே
4661.
தானான போகமுனி ரிஷியார்தாமும் தண்மையுடன் குளிகைதனைப் பூண்டுகொண்டு
கஓனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் சீர்பாதம் சமாதிகாண
தேனான மனோன்மணியாள் தனைநினைந்து தேற்றமுடன் சீனபதிசென்றுமல்லோ
பானான காலாங்கிநாதர்வாசல் பட்சமுடன் சமாதிமுகம் நின்றிட்டாரே
4662.
நின்றாரே நெடுநாழி சமாதிபக்கல் நிட்களங்கமானதொரு போகர்தானும்
குன்றான மலைபோலே சிறுபாலன்தான் கொற்றவனார் சமாதிமுகம் நிற்கும்போது
தென்றலுடன் கபாடமென்ற வாசல்தானும் தெளிவுடனே போகர்முன் திறக்கலாச்சு
நின்றாரே நெடுங்கால நாதசித்து நேர்மையுடன் ஜெகஜோதி காணலாச்சு
4663.
கண்டாரே ஜெகஜோதி பிரணாயத்தை கண்ணுக்குத்தோற்றாது கடினமெத்த
தண்டமுடன் தாள்பணிந்து சீர்பாதத்தை சட்டமுடன் போகரிஷியடிபணிந்து
விண்ணுலகம் அடியேனும் சென்றேன்சாமி வீரான தேவேந்திரன் பக்கல்நின்றேன்
மண்ணளந்தான் மாயவரைக் கண்டேன்யானும் மகதேவர் கொலுக்கூடம் கண்டேன்தாமே
4664.
தாமான தேவேந்திரன் என்னைக்கண்டு தகமையுடன் வாய்ஞானம் கேட்கும்போது
கோமானாம் எனதையர் நாமதேயம் கொற்றவனார் இந்திரனுக்கு யானுரைத்தேன்
சாமான மாகவல்லோ யிந்திரன்தான் சட்டமுடன் சாபமதைநிவர்த்திசெய்து
போமெனவே யுத்தாரம் தந்தாரையா பொன்னடியைக் காணவல்லோ வந்திட்டேனே

4665.
வந்தேனே போகரிஷி யடியேன்தானும் வாக்களித்தார் மகதேவநாதருக்கு
சொந்தமுடன் மகதேவர் மனதுவந்து சடர்மணியே என்சீஷா சிலதுகாலம்
அந்தமுடன் சமாதியிட மிருந்துமல்லோ வப்பனே போகவென்று விடையுந்தந்து
சிந்தனையாய்ச் சமாதியிட கபடவாசல் சீர்பெறவே மூடவென்று விடைதந்தாரே
4666.
விடையென்று சொல்லுகையில் போகர்தானும் விருப்பமுடன் சமாதியிடம் மூடியேதான்
தடையறவே தசவாண்டு யங்கிருந்தார் சட்டமுடன் சீனபதி தேசந்தன்னில்
படைவீரர் காவலுடன் சமாதிபக்கம் பட்சமுடன் தாமிருந்தார் போகர்தானும்
சடைபோன்ற சீஷவர்க்க மனேகம்பேர்கள் சாங்கமுடன் கொலுவிருந்தார் சமாதிகாணே
4667.
காணவே போகரிஷிமுனிவர்தானும் கனமுடனே சீனபதிப்பெண்களோடு
பூணவே கல்விமுகம் சிலதுகாலம் பொங்கமுடன் தாமிருந்தார் லீலைதன்னில்
வேணதொரு வுலகாதி வித்தையெல்லாம் விருப்பமுடன் மாதர்களுக்குபதேசித்து
நீணவே கவனமென்ற குளிகைதன்னை நீதியுடன் தாம்பூண்டார் போகர்பாரே
4668.
பாரேதான் போகரிஷிமுனிவர்தானும் பராபரியாள் அம்பாளின் கிருபையாலே
நேரேதான் குளிகைமுகம் பூண்டுகொண்டு நேர்மையுடன் தேசபதி சுத்தியேதான்
ஊரேதான் கிக்கிந்தா மலையைத்தேடி வுத்தமனே திருவேல ரிஷியார்முன்னே
சேரேதான் மலைமீதில் உச்சிதன்னில் சிறப்புடனே தானிறங்கி நின்றிட்டாரே
4669.
நின்றதொரு போகர்முனி தன்னைப்பார்த்து நிட்களங்கமானதொரு சீஷவர்க்கம்
குன்றின்மேல் தாமிருந்தார் யுகாந்தபேர்கள் கொற்றவனே வரைகோடி திகழ்கோடிதானும்
சென்றுமே காலாங்கிநாதசீஷர் சிறப்புடனே போகர்முனி பதாம்புயத்தை
நன்றுடனே வஞ்சலிகள் மிகவுங்கூறி நாதாந்த போகர்தனைக் கண்டார்தானே
4670.
தானான சீஷவர்க்கம் கண்டுமேதான் தகமையுள்ள திருவேல ரிஷியாருக்கு
கோனான சொரூபமென்ற நாதருக்கு கொற்றடிமை கொண்டதொரு சீடரெல்லாம்
தேனான வவர்பாதம் கிட்டியல்லோ தோற்றமுடன் சென்றார்கள் கோடிமாண்பர்
மானான ரிஷியாரின் பக்கல்சென்று மகத்தான குருவென்று தொழுதிட்டாரே
4671.
தொழுதாரே போகரிஷி வந்தாரென்று தோற்றமுடன் கோடிபேர் மாண்பரெல்லாம்
பழுதுபடா திருவேலரிஷியாருக்கு பட்சமுடன் தாமுரைத்தார் மாண்பரெல்லாம்
வழுவில்லா காலாங்கிநாதசீடன் வண்மையுடன் வந்ததொரு மகத்துவத்தை
மழுவேந்தும் திருவேல ரிஷியார்தாமும் மகதேவர் சந்தோஷங் கொண்டிட்டாரே
4672.
இட்டாரே திருவேல ரிஷியார்தானும் எழிலான போகர்முனி தன்னைத்தானும்
சட்டமுடன் தம்பதிக்கு வருகவென்று சாங்கமுடன் உத்தாரங்கூறும்போது
வட்டமுடன் பொன்மயிலும் இருக்குந்தானம் வாகுடனே போகமுனி வந்துநிற்க
திட்டமுடன் திருவேல ரிஷியார்தாமும் தீர்க்கமுடன் போகர்தமைக் கண்டார்பாரே

4673.
பார்க்கையிலே போகர்முனி மனதுவந்து பட்சமுடன் திருவடிக்கு தெண்டனிட்டு
தீர்க்கமுடன் வஞ்சலிகள் மிகவுங்கூறி திகழுடனே பொன்னுலகம் சென்றமார்க்கம்
ஏர்க்கவே தேவேந்திரன் தன்னைக்கண்டு எழிலான பொன்மயில் சாபந்தன்னை
ஆர்க்கவே சாபமதை நிவர்த்திசெய்து வன்புடனே சென்றேனே சீனந்தானே
4674.
சீனமாம் பதிதனிலே காலாங்கிநாதர் சிறப்புடனே தாமுரைத்த வண்ணமெல்லாம்
ஞானமென்ற மாணாக்கர் சொன்னநீதி நலமுடனே தாமிருந்த செய்தியாவும்
மானமுள மாதர்முக லீலாவர்க்கம் மகத்தான கோடிவரை சங்கமெல்லாம்
ஆனதொரு வையகத்தின் கதைகள்மார்க்கம் வன்புடனே தாமுரைத்தார் போகர்காணே
4675.
கண்டதொரு வதிசயங்கள் எல்லாந்தோர்ந்து களிப்புடனே திருவேல ரிஷியாருக்கு
வண்டணிமார் மாதரிடம் வகுத்தகாதை மகதேவர் ரிஷியாரின் சொரூபருக்கு
தண்டுலகந்தான்புகழும் மயிலின்சாபம்தறாபதிக்கு தாமுரைத்தார்போகர்தானும்
கொண்டணைத்து திருவேல ரிஷியார்தாமும் கொற்றவர்க்கு ஆசீர்மம் செய்தார்பாரே
4676.
பாரேதான் காலாங்கிநாதர்சீடர் பாங்கான போகரிஷிமுனிவர்தானும்
நேரேதான் தெற்குமுகம் சுனையின்மேலே நெடிதான சுனையருகில் போகர்தானும்
சீரேதான் குளிகையது பூண்டுகொண்டு சிறப்புடனே முதலையைத்தான் காணும்போது
ஆரோதான் வந்தாரென்றெண்ணி யல்லோ அடைவான முதலையது எண்ணலாச்சே
4677.
எண்ணியே முதலையது சுனையில்தானும் எழிலான கரையோரம் ஏறியல்லோ
நண்ணியே காலாங்கிநாதர்சித்து நாதாந்தபோகரிஷி தன்னைத்தானும்
வண்ணமுடன் கொண்டல்லோ போகர்தம்மை வளமுடனே இக்காலஞ்சென்றேநீர்தான்
கண்ணபிரான் அருளாலே என்னைக்காண காசினியில் வாய்த்ததென்று சொல்லலாச்சே
4678.
ஆச்சப்பா போகரிஷிமுனிவர்தன்னை அடவான முதலையது யேதுகூறும்
மூச்சடங்கி வெகுகால மிருந்தசித்து மூதுலகைத்தான்கடந்த நாதர்தாமும்
பேச்சரியா காலாங்கிநாதர்தாமும் பேரான சீனபதிதன்னிலேதான்
ஆச்சரியமானதொரு சொரூபர்தானும் அவர்சுகத்தை மிகவிரும்பி கேட்கலாச்சே
4679.
கேட்கவே போகரிஷிமுனிவர்தாமும் கெவனமுடன் முததைக்குக் கூறலுற்றார்
நீட்கமுடன் எனதையர் காலாங்கிநாதர் நீடாழி யுலகமதில் சுகமேயென்றார்
வாட்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணியாள்தாமும் வையகத்தில் மற்றவரும் சுகமோவென்றார்
கேட்கவே போகர்முனி ரிஷியார்தாமும் கீர்த்தியுடன் வையகத்தில் சுகமென்றாரே
4680.
என்றாரே போகமுனி ரிஷியார்தானும் எழிலான முததைக்கு யேதுசொல்வார்
குன்றான முதலையது மனதுவந்து கிருபையுடன் போகரிஷிமுனியாருக்கு
இன்றுமுதல் உந்தனுக்கு யானுமல்லோ எழிலான வுபதேசங்கூறுதற்கு
வென்றிடவே தன்மனதில் எண்ணங்கொண்டு விருப்பமுடன் போகருக்குக் கூறலாச்சே

4681.
கூறவென்றால் காலாங்கி சீடருக்கு கோலமுடன் முதலையது யேதுசொல்லும்
மாறலுடன் மூன்றுயுகப் பிரளயத்தை மகத்தான போகரிஷிநாதருக்கு
தீரமுடன் திரேதாயினுகத்திலப்பா தீர்க்கமுடன் பிரளயங்கள் வந்தபோது
சாரலுடன் நற்மதா கிழக்கேயப்பா சாங்கமுடன் போகரிஷியாரின் மடுகண்டேனே
4682.
கண்டேனே நவகண்டரிஷியார்யேரி கனமான பிரளயங்கள் வந்தபோது
வண்ணமுடன் திரேதாயினுகத்தில்யானும் வண்மையுடன் நவகண்டரிஷியார்யேரி
அண்டர்முதல் ராட்சதர்கள் காணாயேரி அம்மடுவில் யானுமல்லோ சிலதுகாலம்
கொண்டல்வண்ணன் அச்சுதனார் கிருபையாலே கொற்றவனே நானிருந்தேன்
என்னலாச்சே
4683.
என்னவே சிலகால மடியேன்தானும் எழிலான மடுதனிலே வதிசயங்கள்
பன்னவே நவகண்ட ரிஷியார்கோட்டை பாலகனே சுரங்கமது வங்கேயுண்டு
மன்னவர்கள் தானறியா கோட்டைதானும் மகத்தான ஆழியென் சுரங்கமப்பா
இன்னிலத்தில் கண்டவர்கள் யாருமில்லை எழிலான காயாபுரிக் கோட்டைதானே
4684.
கோட்டையாங் காயாபுரி கோட்டைதன்னில் கொற்றவனே யானுமல்லோ சிலதுகாலம்
நாட்டடுடன் யான்கண்டவதிசயங்கள் நலமாகத் தானுரைப்பேன் யுந்தனுக்கு
வாட்டமுடன் ஆழியது கோட்டைதன்னில் வளமான தெத்துவாசல் நான்கேயாகும்
பூட்கமல முதல்வாசல் காளிகாவல் புகழான ரெண்டாங்கால் வீரபத்திரனாமே
4685.
ஆமேதான் மூன்றாங்கால் ருத்திரன்காவல் அடவான நாலாங்கால் மாடனாகும்
தாமேதான் இத்தனையுங் கடந்துபோனால் தகமையுள்ள கோட்டைக்குள் அதிசயங்கள்
நாமேதான் சொன்னபடி முதலையுண்டு நலமான நவகண்டரிஷியார்தம்மை
போமேதான் திரேதாயினுகத்திலப்பா பொங்கமுடன் விழுங்கியதோர் முதலைதானே
4686.
தானான முதலையது யங்கேயுண்டு தண்மையுள்ள முதலையதைக் கண்டாயானால்
கோனான நவகண்டரிஷியார்சாபம் கொற்றவனே யுந்தனுக்கு உரைக்கும்பாரு
பானான சாபமது நேர்ந்ததன்மை பட்சசுடன் நீருமல்லோ வறியலாகும்
வேனான நவகண்ட ரிஷியார்பாட்டன் வேதமுத லாகமங்களோதினாரே
4687.
ஓதவே வேதமுதலாகமங்கள் வுற்றதோர் கிரியைகளோதும்போது
நீதமுடன் சதகோடி ரிஷிகளெல்லாம் நவகண்டர் பாட்டன்பக்கல்
வேதமுதல் இதிகாசப்புராணமெல்லாம் விருப்பமுடன் யாகத்தில் கூறும்போது
தீதுபுகழ் நவகண்டரிஷியார்தானும் தீர்த்தமது கொண்டுவர மடுசென்றாரே
4688.
சென்றாரே சர்வதீர்த்த குப்பிதன்னில் செம்மலுடன் மடுவுக்கு யேகியல்லோ
நின்றாரே சலமதனில் தானிறங்கி நிலையாழி மடுதனிலே நிற்கும்போது
குன்றான மலைபோலே முதலைதானும் கொப்பெனவே நவகண்டரிஷியார்பாதம்
மென்றுமே தான்விழுங்கி முதலைதானும் மேதினியில் மடுவுக்கு செல்லலாச்சே

4689.
சொல்லவே முதலையது ரிஷியார்தம்மை சிறப்புடனே தான்விழுங்கி மடுவிற்சென்று
மெல்லவே கொண்டல்லோ யேகியேதான் மேன்மையுடன் தானிருக்கும் வேளைதன்னில்
புல்லவே நவகண்ட ரிஷியார்தம்மை புகழான யாகமதிற் தேடும்போது
வல்லதொரு முதலையது கொண்டசேதி மகத்தான பாட்டனவர் கேட்டிட்டாரே
4690.
கேட்டாரே நவகண்டரிஷியார்தன்னை கீர்த்தியுடன் முதலையது விழுங்கிற்றென்று
வாட்டமுடன் யாகமது தவிர்த்துப்போச்சு வளமான முதலையின்தன் மோகத்தாலே
நீட்டமுடன் நவகோடி ரிஷியார்தாமும் நீதியுடன் ஜெபதபங்கள் செய்யும்போது
கூட்டமுடன் மண்மேடு புத்துபோலாம் குவலயத்தில் சமாதிபோல் வளரலாச்சே
4691.
ஆச்சப்பா நவகண்ட ரிஷியார்பாட்டன் வண்பான யாகமது செய்யும்போது
மூச்சடங்கி நின்றதொரு சமாதிவர்க்கம் முனையான பிரிதிவியோடன்னிற்சோர்ந்து
பாச்சலுடன் வையகத்தை மறக்கலாகி பாங்கான பேரனைத்தான் தேடவெண்ணி
கூச்சலுடன் மாமியிடந் துயரமாகி கூறுவார் ரிஷிவர்க்கங் கூட்டந்தானே
4692.
தானான காலாங்கிநாதர்பாலன் தண்மையுள்ள போகரென்ற சீஷன்தானும்
கோனான கிக்கிந்தா மலையைத்தேடி கொற்றவனே நவகண்ட ரிஷியார்பக்கல்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே திறமுடனே நவகண்டரிஷியார்பாகம்
மானான கலைவளத்தைக் கண்டுமல்லோ மன்னவனார் போகரிஷி யடுத்திட்டாரே
4693.
அடுத்தாரே போகரிஷிநாதர்தானும் வன்பான நவகண்ட ரிஷியார்பாட்டன்
கடுத்தமுகந் துயரமதாய் நின்றசேதி கடுங்காலை சோகரிஷி கண்டுமல்லோ
நடுக்கலுடன் நவகண்ட ரிஷியார்பக்கல் நாதாந்த சித்துமுனி போகர்தானும்
தடுத்துமே ரிஷியாரின் முகத்தைப்பார்த்து தயானிதியே மனத்துயரம் என்னென்றாரே
4694.
என்றவுடன் நவகண்ட ரிஷியார்பாட்டன் எழிலான போகரிஷிநாதருக்கு
குன்றான பருவதம்போல் எந்தன்பேரன் கூறான யாகங்கள் செய்யும்போது
சென்றதொரு திரேதாயினுகத்திலப்பா திறமான யாகமது செய்தேன்யானும்
அன்றல்லோ நவகண்ட ரிஷியார்யேரி வன்புடனே ஜலங்கொள்ள நண்ணினாரே
4695.
நண்ணியே என்பேரன் நவகண்டன்தான் நலமான மடுதனிலே சென்றுமல்லோ
தண்ணீரை முகந்துவர சென்றபோது தன்மையுள்ள முதலையது விழுங்கியல்லோ
மண்ணுடனே மடுதனிலே மடிந்துமேதான்மகத்தான என்பரன் சொர்க்கஞ்சேர்ந்தான்
எண்ணியே என்மனது குண்ணியேதான் எழிலான தவநிலைக்கு வந்திட்டேனே
4696.
வந்தேனே திரேதாயினுகத்திலப்பா வளமான என்பேரன் காணாமற்றான்
நொந்தேனே தவசுமுகஞ் சென்றுமேதான் நோக்கமுடன் மரைகோடி காலமாச்சு
சிந்தனையால் வையகத்தை யான்மறந்து சிற்பரனை எண்ணியல்லோ மண்மேடாச்சு
பந்தமது விட்டகற்றி பார்லோகத்தில் பதவிதனைக் காணுதற்கு பகர்கின்றேனே

4697.
பதைக்குதே என்மனது வுள்ளந்தானும் பாங்கான வுடல்பொருள்களாவியெல்லாம்
சிகைவுடனே வெகுகோடி காலந்தானும் தீராத வசனமது மிகவுண்டாகி
வதையான முதலையது தானுமல்லோ வளமான என்பேரன் தன்னைத்தானும்
சதையுடனே விழுங்கியதோர் முதலைதன்னை தாரிணியில் எப்போது காண்பேன்தானே
4698.
தானான நவகண்ட ரிஷியார்பாட்டன் தண்மையுள்ள போகரிஷிபாலனுக்கு
மானான மகதேவர் தன்னைநோக்கி மதிப்புடனே நடந்ததோர்சேதிவண்ணம்
மோனான முதலையின்தன் வளப்பமெல்லாம் மொழிபோல வார்த்தையது கூறலுற்றார்
தேனான காலாங்கிநாதர்சீஷன் தெளிவான போகரிஷி வுரைத்திட்டாரே
4699.
உரைத்தாரே போகரிஷிமுனிவர்தானும் ஓகோகோ நவகண்ட ரிஷியார்பாட்டர்
மரைத்ததொரு முதலையின்தன் மதலைதன்னை மகதேவர் வாங்குதற்கு ஐயமில்லை
சுரப்புடைய மடுவதுதான் எங்கேயென்று சுந்தரனார் காலாங்கிநாதர்சீஷன்
விரப்புடனே போகரிஷிகேட்கும்போது விசனமுடன் ரிஷியாருங் கூறினாரே
4700.
கூறவே போகரிஷிமுனிவர்தானும் கொதிதான மடுதனிலே சென்றுமேதான்
மாறலுடன் நவகண்ட ரிஷியார்தன்னை மார்க்கமுடன் விழுங்கியதோர் முதலைதன்னை
சீறலுடன் கண்டறிய வேண்டுமென்று சிறப்புடனே மடுவுக்கு வந்தபோது
சேறதுவும் வற்றியல்லோ மிகவுங்காய்ந்து செம்மலுடன் இருப்பதுவுங் கண்டிட்டாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

4701.
கண்டாரே மடுதனையே போகர்தானும் கண்கொள்ளா வாங்கார கோபத்தோடும்
தண்மையுடன் மடுவற்றி வெடுத்துமல்லோ தாரணியிலிருந்த தொருமார்க்கந்தன்னை
வண்மையுள்ள வதிசயத்தை கண்டுமல்லோ வளமான காலாங்கி சீஷன்தானும்
உண்மையுடன் காலாங்கி நாதர்தம்மை வுற்பனமாய் தன்மனதில் நினைத்திட்டாரே
4702.
நினைக்கவே காலாங்கி நாதர்தானும் நீடாழி மடுதனில் சென்றாரென்று
புனைமேவுஞ் சீஷனுக்கு வரமுந்தந்து புகழான முதலையது சாபந்தீர்ந்து
வினையகற்றி நவகண்ட ரிஷியாருக்கு வீரான பிறவியது தானுந்தந்து
சுனைமடுவை விட்டுமல்லோ வருவதற்கு துப்புறவாய் வரமதுவும் கொடுத்திட்டாரே
4703.
கொடுத்ததொரு வரமதுதான் போகர்தானும் கொப்பெனவே தன்மனதில் மனதுவந்து
அடுத்துமே மடுதனிலே நின்றுகொண்டு வன்புடனே பராபரத்தின் பொருளைநண்ணி
கொடுத்ததொரு மனோன்மணியை மனதிலெண்ணி துப்புரவாய் யாகமதுசெய்யும்போது
மடுதனிலே ஜலமதுவும் பொங்கியல்லோ மகத்தான முதலைதனை காணலாச்சே
4704.
காணவே போகரிஷிமுனிவர்தானும் கருவான மடுதனிலே முதலைதன்னை
ஆணவங்கள் தானொடுங்க கரத்தைக்காட்டி அகங்கார சீறலுடன் அழைக்கலுற்றார்
பூணவே முதலையது அடிவணங்கி புகழான போகரிஷிமுனியைப்பார்த்து
வேணதொரு வஞ்சலிகள் வுபசாரங்கள் விருப்பமுடன் போகருக்குச் செய்யலாச்சே
4705.
செய்யவே போகரிஷிமனங்களித்து சிற்பரனார் காலாங்கி தனைநினைத்து
வையகங்கள் தான்புகழும் காலாங்கிநாதர் மகதேவா எந்தனது குருவேகேளும்
மெய்தவங்கள் பூண்டதொரு மகிமையானும் வேதாந்த மனோன்மணித்தாய் கிருபையாலும்
கைதவமாய் வந்துதித்து முதலைதானும் காசினியில் மடுதனிலே கண்டிட்டேனே
4706.
இட்டேனே சாபமது நிவர்த்திசெய்து எழிலான முதலையின்றன் மடுவைக்கண்டே
பட்டதொரு நவகண்ட ரிஷியார்தம்மை பாலகனே தானெழுப்பவேணுமென்று
சட்டமுடன் எந்தனுக்கு கொடுத்தசாபம் சற்குருவை தனைநீக்கி மடுவிலேதான்
சட்டமுடன் பாலகனைத் தானழைக்க மகத்தான மடுதனிலே சென்றேன்பாரே
4707.
பாரேதான் போகரிஷிமுனிவர்தானும் பாங்கான முதலைமுகந்தன்னைநோக்கி
நேரேதான் திரேதாயினுகத்தில்தானும் நேர்மையுடன் யாகமும்செய்யும்போது
நீரேதான் நவகண்டிரிஷியார்தம்மை நீதியுடன் விழுங்குதற்கு ஞாபமுண்டோ
சீரேதான் யிட்சனமே மைந்தன்தன்னை சிறப்புடனே கொண்டுவர விடைதந்தாரே
4708.
விடையென்று சொல்லுகையில் முதலைதானும் விருப்பமுடன் நவகண்டரிஷியார்தம்மை
தயையறவே விழுங்கியதோர் பாலன்தன்னை தட்சணமே போகர்முன்னே கக்கலாச்சு
நடையுடனே நவகண்ட ரிஷியார்தாமும் நாதாந்த பாலகனும் வெளியிலேறி
சமைபோன்ற போகருட பதாம்புயத்தை சட்டமுடன் தான்வணங்கி பணிந்திட்டாரே

4709.
பணிந்ததொரு நவகண்ட ரிஷியார்தம்மை பாலகனார் போகரிஷிதானுங்கண்டு
மணிபோன்ற நவகண்ட ரிஷியாருக்கு மார்க்கமுடன் சாபமது நிவர்த்திசெய்து
துணிவுடனே பாட்டனாம் பக்கலுக்கு துப்புறவாய் சென்றல்லோ கொண்டுமேதான்
அணிபெறவே நவகண்ட ரிஷியார்தம்மை பன்புடனே கொண்டுபோய் விட்டிட்டீரே
4710.
விட்டதொரு போகரிஷிதன்னைப்பார்த்து வேதாந்த நவகண்ட ரிஷியார்பாட்டன்
சட்டமுடன் ஆசீர்மம் மிகவுஞ்செய்து சாங்கமுடன் காலாங்கி சீஷருக்கு
திட்டமுடன் திரேதாயினுகத்தில்காணும் தீர்க்கமுடன் அதிசயங்களுளவுமார்க்கம்
இட்டமுடன் தாமுரைத்தார் போகருக்கு எழிலான வேதாந்த ரிஷியார்தாமே
4711.
தாமான திரேதாயினுகத்திலப்பா தண்மையுள்ள காலாங்கி சீஷாகேளும்
நாமேதான் கண்டபடி சொல்வோம்கேளிர் நாதாக்கள் நவகண்ட ரிஷியார்கோட்டை
போமேதான் யோசனையோ சொல்லொண்ணாது பொங்கமுடன் வேதரிஷிகோட்டையப்பா
வேமேதான் சித்துமுனி ரிஷிகள் கூட்டம் வேதாந்தத் தவமுனிகள் கோடிபேரே
4712.
யேறாறு கோட்டைமுகம் லட்சங்கோடி பெருமையுள்ள தவமுனிகள் ரிஷிகள்தானும்
நேரேதான் தவமிருப்பார் கோடிசங்கம் நேர்மையுள்ள அரண்வாயல்கோட்டைதன்னில்
சீரேதான் யாகங்கள் செய்யும்போது சிறப்பான யோகங்கள் ஓதும்போதும்
ஊரேதான் சமுசார வாழ்க்கையற்று வுற்பனமாய்ப் பராபரத்தை நினைப்பார்தானே
4713.
தானான தவநிலையி லிருக்கும்போது தகமையுள்ள ரேணுகையாள் பூமாதல்லோ
கோனான குருதனையே நினைந்துகொண்டு கூறானவிழிதனையே மூடாமற்றான்
பானான பராபரத்தை மனதிலெண்ணி பட்சமுடன் பூசைமுகம் கூறும்போது
தேனான ரேணுகையாள் மாதுதானும் தேற்றமுடன் யாகமதைக் கெடுத்திட்டாளே
4714.
கெடுத்தாளே ரேணுகையாள் மாதுதானும் கீர்த்தியுள்ள நாதாந்த சொரூபபூசை
அடுத்ததொரு ரிஷிமுனிவர் தவங்கள்யாகம் அழிபடவே செய்தாளே மாதுதானும்
முடுமுன்னே மாயவலை மிகவுண்டாகி பாரினிலே தவநிலைக்கும் கெடுதியுண்டாய்
விடுபடவே செய்தாலே யாகமெல்லாம் விண்ணுலகில் ரிஷிகளெல்லாம் கேட்டார்காணே
4715.
கேட்டாரே ரேணுகையின் மோகத்தாலே கெடிதான தவநிலைகளெல்லாமற்று
பட்டாரே பாழ்நரகில் ஆளுமாகி பாங்கான ரிஷிதேவர் முனிவர்தானும்
விட்டகுறை காணாமல் வீணாய்த்தானும் வீரான ரேணுகையின் மோகத்தாலே
தட்டழிந்து தடமடைந்து தவமழிந்து தாரணியில் கெட்டாரே சித்தர்தானே
4716.
தானான லோகத்து மாண்பரெல்லாம் தகமையுள்ள ரேணுகையின் மாதுதன்னால்
கோனான குருபரனைத் தான்மறந்தார் கொற்றவனார் சிவபூசை தானிழந்தார்
தேனான மனோன்மணியை மனதிலெண்ணார் தேசொளியின் சின்மயத்தை தானொழித்தார்
பானான வையகத்தை தான்மறந்து பாங்கான ரேணுமோகங் கொண்டிட்டாரே

4717.
கொண்டாரே கோடிமனுசித்தரெல்லாம் குவலயத்தில் கெட்டழிந்து தட்டழிந்து
பண்டுளப கிருஷ்ணாவதாரணைப்போல் பாருலகில் மோகவலை சிக்கினார்கள்
அண்டர்முனி தவரிஷிகள் சித்துதாமும் அரிவையராம் ரேணுகையின் பாசத்தாலே
விண்ணுலகைத் தான்மறந்து பாவங்கொண்டு விடுபட்டு நின்றார்கள் கோடிபேரே
4718.
பேரான திரேதாயினுகத்திலப்பா பெருமையுள்ள நவகோடி ரிஷிகள்தானும்
சீறான தவநிலையில் நிலைகொள்ளாமல் சிக்கினார் கோடிபேர் முனிவர்தானும்
நேரான பவக்கடலுக்காளுமாகி நேர்மையுள்ள இன்பசாகரத்தைவிட்டு
பாரான வையகத்தில் தலைமேல்பாவம் பாங்குடனே கொண்டார் ரிஷிகள்காணே
4719.
காணவென்றால் காலாங்கி நாதபாதா கைலாயங்கண்டதொரு சித்துதேவர்
வேணதொரு தவமுனிகள் ரிஷிகள்தானும் விடுபட்டு வந்தார்கள் கிக்கிந்தாவில்
மாணமரும் பூபாலா யுன்னைப்போல மகத்தான சித்தொளிவைக்கண்டதில்லை
பாணமது போலெழும்பி சீனந்தன்னில் பட்சமுடன் குளிகைகொண்டு வந்திட்டாயே
4720.
வந்ததொரு காலாங்கி சீஷர்பாதா கேள்வளமையுள்ள கலியுகத்தி லுன்னைப்போல
விந்தையுள்ள சிறுபாலா யாருங்காணேன் விட்டகுறை இருந்ததினால் வந்தாயப்பா
சிந்தனையில் உந்தனையும் ஆசீர்வதித்து துப்புரவாய் எண்ணமதில் வியனங்கொண்டு
அந்தமுடன் நின்றதொரு தவநிலைக்கு வப்பனே சந்தோஷங் கொண்டிட்டேனே
4721.
இட்டதொரு சீனபதிபெண்களாலே எழிலான உந்தனது ஞானயோகம்
சட்டமுடன் கெட்டழிந்து தடுமாறாமல் தாக்கான காலாங்கி வலுவினாலே
மட்டமாம் போலிருந்து ஞானந்தன்னை பாலித்தாய் தவயோகபூரணத்தை
அட்டதிசைத் தான்புகழும் போகநாதா அவனிதனில் உனைப்போல சித்துமுண்டோ
4722.
உண்டான தவநிலையை உறுதிகொண்டு வுண்மையுடன் மடுதனிலே நின்றுகொண்டு
தண்மையுடன் முதலைவாய்ப் பிள்ளைதன்னை தகமையுடன் வாங்கினதோர் சாபந்தன்னை
திண்மைபெற மனநிலையை உறுதிகொண்டு தீர்க்கமுடன் யோகமதை சாதித்தல்லோ
உண்மையுடன் நின்றதொரு இதிகாசத்தை வுத்தமனே யென்சொல்வேன் என்றார்தாமே
4723.
தாமான போகரிஷிமைந்தா கேளும் தாரணியில் திரேதாயினுகத்திலப்பா
பூமானாஞ் சித்துமுனி ரிஷிகள்கோடி புகழான நாதாந்த சித்துதாமும்
சாமான மாகவல்லோ வாதந்தேடி தாரிணியில் சமைத்தார்கள் மலைபோற் தங்கம்
நாமேதான் அறிந்தமட்டும் சொல்வேனப்பா நாதாந்த சித்தொளிவின் தங்கந்தானே
4724.
தங்கமாம் நாதாந்த சித்துதாமும் தாரணியில் வெகுகோடி வாதவித்தை
புங்கசித்து எட்டுடனே வஷ்டயோகம் புகழான ரேணுகையின் மோகத்தாலே
சங்கமுகந்தான்போலே பூஷணங்கள் சதுராகத்தான் முடித்தார் மலைபோல்தங்கம்
இங்கிதமாம் லீலைதனில் மையல்கொண்டு எழிலாகத் தான்சமைத்தார் மேருபொன்னே

4725.
மேருபோற் பொன்னையல்லோ தானமைத்து மேதினியில் ரேணுகைக்குப் பூஷணங்கள்
சீருடைய வாபரணங்கோடாகோடி திக்கெங்கும் கண்டதில்லை பூஷணங்கள்
காரிழையாள் ரேணுகைக்கு வாதத்தங்கம் கட்டழகர் சித்தரெல்லாம் முடிப்பித்தேதான்
பாரினிலே தவநிலையைத் தான்மறந்து பதாம்புயத்தைப் பாராமல் கேட்டார்பாரே
4726.
பாரேதான் காலாங்கி நாதசீஷா பட்சமுள்ள கண்மணியே பகரக்கேளும்
நேரேதான் வடக்குமுகம் மலைதானுண்டு நெடிதான வடகோடி கானகந்தான்
சீரேதான் சித்தர்முனி தவமிருந்த சிறப்பான வுத்தமுண்டு சுனைதானுண்டு
ஊரேதான் கண்டவர்கள் யாருமில்லை ஓகோகோ நாதாக்கள் கண்டார்தானே
4727.
தானேதான் மலைநாடு சுனையோரத்தில் தண்மையுள்ள சித்துவர்க்கம் கோடாகோடி
மானேதான் ரேணுகையின் சமாதியுண்டு மகத்தான சமாதியிடம் சென்றாயானால்
தேனேதான் வண்டுரையும் கதண்டுக்காடு தெளிவான ரேணுகையின் சமாதிக்கோட்டை
கோனேதான் குருக்கள்முனி யாசீர்மங்கள் கூறான சமாதியிடங் காவல்தாமே
4728.
காவலாஞ் சமாதியிடம் சென்றாயானால் காரிகையாள் ரேணுகையின் ஆசீர்மத்தில்
போவதற்கு வழிதடங்கள் காணமாட்டார் புகழான ரேணுகையின் கோட்டைதன்னில்
ஆவலுடன் சென்றாலும் சமாதிகாண்போர் வப்பனே விட்டகுறை யிருந்தால் வாய்க்கும்
ஏவலுடன் குருக்கள்மார் ரிஷிகள்கூட்டம் எழிலாகத் தாமிருப்பார் சுத்திகாணே
4729.
காணவென்றால் ரேணுகையைப் பார்ப்பதற்கு கடைகோடி கானகத்தில் சென்றாலுந்தான்
பூணவே குளிகைகொண்டு சென்றபோதுப் புகழான ரேணுகையைக் காணமாட்டீர்
தோணவே ரேணுகையாள் சமாதிபக்கம் துப்புரவாய் பாலகனே நின்றாயானால்
நீணவே சமாதியிட தடமுந்தோன்றும் நிலையான ரேணுகையின் கோட்டைதானே
4730.
தானான கோட்டையது சமாதிபக்கம் தகமையுடன் நின்றாலே தடந்தான்காணும்
கோனான குருக்கள்மார் ரிஷிகள்கூட்டம் கொம்மனைமார் சமாதியிடம் பக்கம்நிற்பார்
தேனான சித்தர்முனி நாதர்தம்மை தேற்றமுடன் வாய்திறந்து கேட்பாயானால்
மானான சமாதியிடம் வழியுஞ்சொல்லி மகத்தான ரேணுகையின் விதிசொல்வாரே
4731.
சொல்வாரே காலாங்கி நாதசீஷா சொரூபமுள்ள போகரிஷிமுனியே கேளும்
வல்லதொரு ரேணுகைக்கு சித்தரெல்லாம் வளமாக காயாதிகற்பந்தன்னை
புல்லதொரு மாதுக்குத்தான்கொடுத்து புகழான தேகத்தைக் கற்றூணாக்கி
நல்லதொரு காயமதை வையகத்தில் நிலைநிறுத்தி நாட்டினாரே
4732.
நாட்டியே ரேணுகையின் மோகந்தன்னில் நலமான நாதாக்கள் சித்துதாமும்
தாட்டிகமாய்ப் பட்சமதை மிகவேபூண்டு தகமையுள்ள ரேணுகையின் வசியத்தாலே
பூட்டகமாந் தேகமதைக் கற்றூணாக்கி பொங்கமுடன் வெகுகால மிருக்கவென்று
வாட்டமுடன் வரமதுவும் மிகவுந்தந்து வண்மையுடன் ஞானோபம் போதித்தாரே

4733.
போதித்தார் சித்தாதி சித்தரெல்லாம் பொங்கமுடன் ரேணுகையாள் மாதுக்கல்லோ
நீதியுடன் ஞானோபதேசமோதி நீதியுடன் சமாதிக்கு இடமுந்தேடி
சாதித்து சமாதிதனில் இருக்கவென்று சட்டமுடன் மூன்றுயுகம் தானுமீய்ந்து
வாதித்து சமாதிக்கு ஏகவென்று வண்மையுடன் ரிஷிசாபங் கூறிட்டாரே
4734.
கூறவே ரேணுகையாள் மாதுதானும் கொப்பெனவே சமாதிக்கு சென்றுமல்லோ
மாறிடவே வையகந்தான்மறந்து மகத்தான கோபத்தை வினயம்பூண்டு
வீறுபடு தேகமது வழியாமற்றான் விண்ணுலகில் யெப்போதும் இருக்கவென்று
ஆறுபடை வடகோடி கானகத்தில் அங்ஙனவே சமாதியது இறங்கினாரே
4735.
இறங்கியே ரேணுகையாள் மாதுதானும் எழிலான வடகோடி கானகத்தை
திறமுடைய குருக்கள்மார் கூட்டத்தோடும் தீர்க்கமுடன் சமாதிதனில் இருக்கிறாள்காண்
நிறமுடைய மாதுமையாள் சமாதிபக்கல் நிஷ்களங்க மாகவல்லோ கண்டறிந்து
சிறப்புடனே போகரிஷிபாலாநீயும் சீருடனே காணவென்று வரந்தந்தாரே
4736.
தந்தாரே காலாங்கி சீடருக்கு தார்குழலாள் ரேணுகையின் மகுத்துவங்கள்
அந்தமுடன் அறிவதற்கு விதியுஞ்சொல்லி வன்புடனே நவகண்ட ரிஷியார்பாட்டன்
சொந்தமுடன் போவதற்கு விடையுந்தந்து துப்புரவாய் குளிகைகொண்டு செல்கவென்று
விந்தையுடன் போகருக்கு வரமுந்தந்து விருப்பமுடன் வுபதேசஞ் செய்திட்டாரே
4737.
செய்யவே போகரிஷிமுனிவர்தானும் சிறப்புடனே வடகோடி கானகத்தில்
பையவே வுத்தாரந்தானுமல்லோ பாங்குடனே பாலகனும் பெற்றுக்கொண்டு
துய்யநல்ல குளிகைதனைப் பூண்டுமல்லோ துப்புரவாய்த் தானுமல்லோ கானகத்தில்
ஐயமின்றி ஆரிழையாள் சமாதிபக்கம் வன்புடனே இறங்கியல்லோ நின்றிட்டாரே
4738.
நின்றதொரு பாலகனை குருக்கள்தானும் நீதியுடன் கேட்கலுற்றார் முனிவர்சித்தர்
வென்றிடவே போகர்முகந் தன்னைப்பார்த்து வேதாந்த குருக்கள் சித்துகூறுவண்ணம்
சென்றுமே சிறுபாலன் அருகில்வந்து செம்மலுடன் யாரென்ன வென்றுகேட்க
இன்றுமுதல் புதிதாகத் தோணுதப்பா எழிலான பாலகனே என்றார்பாரே
4739.
பாரேதான் குருக்கள்சித்துகேட்கும்போது பாங்கான சிறுபாலன் முனிவன்தானும்
நேரேதான் சித்தர்முகந் தன்னைநோக்கி நெடிதான பாலகனும் கூறலுற்றான்
தீரேதான் காலாங்கி சீஷனல்லோ தீரமுள்ள நவகண்ட ரிஷியார்பாட்டன்
சீரேதான் கிட்டிருந்து விடையும்பெற்று சிறப்புடனே வடகோடி வந்தேன்தானே
4740.
தானான ரேணுகையின் சமாதிகாண தகமையுடன் இப்பதியே வந்தேனென்றார்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தெரிசனைக்கு எந்தனுக்கு நாளுமாச்சு
கோனான நவகண்டர்பாட்டன் வாக்கு குவலயத்தில் பொய்யாது மெய்யாகத்தான்
நானோதான் காப்பதற்கு விதியுஞ்சொல்லி நலமுடனே எந்தனுக்கு வழிசொல்வாரே

4741.
வழியென்று கேட்கையிலே சித்தர்தானும் வண்மையுடன் தானுரைப்பார் போகருக்கு
பழியான ரேணுகையைக் காணுதற்கு பாருலகில் யாராலும் முடியாதப்பா
குழியான சமாதியிட கோட்டைதன்னில் கொற்றவனே செல்வதற்கு இடமுமில்லை
வழிகாணவேண்டுமென்றால் சொல்வோம்யாமும் வண்மையுடன் கண்டல்லோதெரிசிப்பீரே
4742.
தெரிசிக்க வேண்டுமென்றால் தெத்துவாசல் தெளியவே யுந்தனுக்கு தோற்றும்பாரு
பரிசனங்கள் காவலுடன் அங்கிருப்பார் பாங்கான சமாதியிட பக்கந்தன்னில்
சரியுடனே சமாதிமுகந் தன்னில்நின்று சட்டமுடன் வுச்சாடஞ் செய்வீராகில்
அரிவையாம் ரேணுகையின் சரீரவாக்கு வப்பனே யுந்தனுக்கு கேட்கும்பாரே
4743.
கேட்குமே யுந்தனுக்கு யசரீரியப்பா கிருபையுள்ள ரேணுகையின் வார்த்தைதானும்
நீட்கமுடன் சமாதிதனில் வார்த்தைதோன்றும் நெடிதான சப்தமதைக் காணலாகும்
வேட்கையுடன் குருக்கள்மார் சித்தர்தாமும் விருப்பமுடன் அசரீரிகேட்ட பின்பு
ஆட்கொள்ள வேண்டுமென்று போகர்தம்மை வன்புடனே வரங்கேட்க சொல்லிட்டாரே
4744.
சொல்லவே காலாங்கிநாதர்தம்மை சுத்தமுடன் போகர்முனி தாள்பணிந்து
வெல்லவே என்சாமி எந்தன்நாதா வேதாந்தத்தாயாரும் ரேணுமாது
புல்லவே காயாதி கற்பங்கொண்டு புகழான சித்தர்களை முடக்கஞ்செய்து
கொல்லவே ஜெபதபங்கள் கெடுத்தமாது கொம்பனையாள் சமாதியிடஞ் சென்றேன்தானே
4745.
சென்றேனே சமாதியிடஞ் சென்றேன்சாமி சிறப்பான ரேணுகையின் பக்கல்தன்னில்
நின்றதொரு எந்தன்மேல் பட்சம்வைத்து நீதியுடன் வாமருள்கவென்றுமேதான்
குன்றான கொம்பனையாள் மாதுதானும் குறையாமல் யென்மீதில் பட்சம்நல்க
வென்றிடவே மனங்கறைய ரேணுகைக்கு வேகமுடன் ஆசீர்மஞ் செய்வீர்தானே
4746.
தானான போகரிஷிமுனிவர்தானும் தண்மையுள்ள ரேணுகையைக் காண்பதற்கு
மானான மகதேவர் கிருபையாலே மகத்தான ரேணுகையின் சமாதிபக்கல்
கோனான குருபரனார் காலாங்கிதம்மை கொற்றவனார் போகரிஷிதாம்நினைந்து
தேனான தேசோவின் மயத்தினாலே தேர்வேந்தன் ரேணுகையை நினைத்திட்டாரே
4747.
நினைக்கையிலே ரேணுகையாம் வார்த்தைசொல்வாள் நீதியுடன் போகரிஷிமுனிவருக்கு
பனைப்புடனே சீனபதிவிட்டுவந்த பாலகனேபோகரிஷிநாதாகேளும்
வானைப்பயனை விட்டகற்றி யெந்தநாளும் விண்ணுலகில் கீர்த்தியது பெறுவதற்கு
முனைப்புடனே மூதுலகில் வாழ்கவென்று மொழிந்திட்டாள் ரேணுகையும் மொழிந்திட்டாளே
4748.
மொழியவே ரேணுகையாள் மாதுதானும் முனையான போகரிஷிநாதருக்கு
அழிவிலாக் காயாதிகற்பங்கொண்ட வன்பான காலாங்கி சீஷபாதா
ஒழிவான காயமதை நிலைநிறுத்தி புற்பனமாய்க் கற்பமது கொண்டபாதா
வழியோடே யெனைக்காண வந்ததாலே வரமுனக்கு யான்தருவேன் என்றிட்டாளே

4749.
இட்டாளே ரேணுகையாள் மாதுதானும் எழிலான போகரிஷிநாதருக்கு
அட்டதிசை சுத்திவந்த அரங்கநாதா வன்பான பாலகனே யுந்தனுக்கு
வட்டமுடன் நாலுவதிசயங்கள் வன்மையுடன் நானுரைப்பேன் அருண்மைந்தாகேள்
திட்டமுடன் வெகுகோடி காலமப்பா தீர்க்கமுடன் காயாதி கொண்டேன்பாரே
4750.
கொண்டேனே காயாதி கற்பங்கொண்டு குவலயத்தில் சித்துமகா புருஷர்தம்மை
கண்டல்லோ வலைக்கழித்த மாயாசித்து கனமான ரேணுகையாள் மாதுதானும்
கொண்டல்வண்ணன் மாயாதி கிருஷ்ணாகாரன் குவலயத்தில் என்வலையில் சிக்கினாரே
தண்டவள ரிஷிகளெல்லாம் மயக்கிவிட்டேன் தாரணியில் பூபாலா யென்றிட்டாலே
4751.
என்னவே ரேணுகையாள் மாதுதானும் எழிலான போகரிஷிநாதருக்கு
பன்னவே நாலுயுக சித்துமார்க்கம் பாலித்தாள் போகரிஷிநாதனுக்கு
துன்னவே போகரிஷிநாதர்தாமும் துப்புரவாய் ரேணுகையை சிந்தித்தல்லோ
நன்னயமாய் ரேணுகையாள் அம்பாள்தன்னை நமஸ்கரித்து முக்காலும் பணிந்திட்டேனே
4752.
பணியவே போகரிஷிநாதர்தானும் பண்பான ரேணுகையாள் மனதுவந்து
அணிபெறவே யறிஞனாம் பாலகனுக்கு வன்பான காயாதி கற்பந்தன்னை
துணிவுடனே தாமுரைத்தாள் மாதுதானும் துறையோடும் முறையோடும் மதுகளற்றி
மணிபோன்ற போகரிஷிநாதருக்கு மகிழ்ச்சியுடன் பின்னுமல்லோ முறைசொல்வாளே
4753.
சொல்வாளே மாதுமையாள் ரேணுதானும் துறையான பாலனுக்கு முறையோடல்லோ
வல்லதொரு நாலுயுக சித்துதாமும் வண்மையுடன் தாமுரைத்த முறைபாடெல்லாம்
கல்லான காயாதிகற்பந்தன்னை பாலன்தானும் சந்தோஷம்கொண்டல்லோ குளிகைபூண்டு
சீனபதி மாந்தர்களைக் காணவென்று சிந்தையிலே தாம்நினைத்து சிறியபாலன்
சிற்றின்பக்கடலினிலே யழுந்தினாரே
4754.
அழுந்தியே போகரிஷியானபாலன் வன்புடனே சீனபதிமாதர்தன்னை
பழுதுபடா திருமேனிக்காவலோனும் பட்சமுறப் பெண்களுடன் வந்துசேர்ந்து
எழுங்குடனே நவகண்ட ரிஷியார்தம்மை வுற்பனமாய்க் கண்டதொரு வதிசயந்தான்
மழுவான ரேணுகையின் மார்க்கந்தானும் மகத்துவங்கள் அத்தனையும் கூறுவாரே
4755.
கூறுவார் வாய்திறந்து போகர்தாமும் கொப்பெனவே சீனபதிப்பெண்களுக்கு
மாறுபடா லோகவதிசயங்களெல்லாம் மகத்தான நாலுயுக வதிசயங்கள்
ஆறுபுடை சூழ்நகரம் வடதேசந்தான் அடைவான கானாறு மலைகள் குன்கள்
வீறுபுகழ் ரேணுகையாள் சமாதிபாகம் விருப்பமுடன் தாமுரைத்தார் போகர்தாமே
4756.
தானான போகரிஷிமுனிவர்தானும் தண்மையுள்ள பெண்களுக்கு வுபதேசிப்பார்
கோனான நவகண்ட ரிஷியார்தானும் குறிப்புடனே தாமுரைத்த வண்மையாவும்
மானான ரேணுகையாள் லீலாகற்பம் மகத்தான குருக்கள்மார் ரிஷிகள்சித்தர்
பானான யின்னம்வெகு மாண்பரெல்லாம் பாருலகில் கேட்டகதை பகருவாரே

4757.
பகருவார் நாலுயுக காலந்தன்னில் பண்பான திரேதாயினுகத்திலப்பா
நுகரவே ரேணுகையின் மாயலீலை நுட்பமுடன் சீனபதிப்பெண்களுக்கு
சிகரம்வரை கிக்கிந்தா மலையைநாடி தீரமுடன் நவகண்ட ரிஷியார்தம்மை
தகரவே தாள்பாதங் கிட்டிநின்று சாங்கமுடன் பணிந்திட்டேன் ரிஷியார்காணே
4758.
காணவே ரேணுகையின் மார்க்கந்தன்னை கடிதான சீனபதிப்பெண்களுக்கு
பூணவே செய்தியெல்லாம் தானுரைத்து பொங்கமுடன் மகிமைதன்னைக் கூறுவார்காண்
தோணவே தேசாதி தேசமெல்லாம் துப்புரவாய் வலசாரி யிடமதாக
நீணவே தேசமெலாம் குளிகைகொண்டு நீதியுடன் சுற்றி வதிசயங்கண்டேனே
4759.
கண்டேனே ரேணுகைபோல் மாயாசித்து காசினியில் எங்கேனுங் கண்டதில்லை
அண்டர்முனி ராட்சதர்கள் அனேகங்கண்டேன் அகிலமதில் வெகுகோடி சித்துகண்டேன்
புண்டரீகமானதொரு கிருஷ்ணாவதாரன் பூவுலகில் அதிசயங்கள் சொல்லொண்ணாது
தண்டவள ரிஷிகளெல்லா மனேகசித்து தாரணியில் செய்தவருங் கோடிபேரே
4760.
கோடியாம் வெகுகோடி வதிசயங்கள் குவலயத்தில் கண்டதுண்டு யிதுபோலில்லை
தேடியே தேசமெலாஞ் சுற்றிவந்தேன் தெளிவான ரேணுகைபோல் சித்துமுண்டோ
வாடியே போகாத மாயசித்து  வளமையுள்ள காயாதிகொண்டமாது
நீடியே நீணிலத்தில் ரிஷியார்தம்மை நீதியுடன் வலதழித்த சித்துமாச்சே
4761.
சித்தான சித்துமுனி மாதுதானும் சிறப்பான மாநிலத்திலதிசயங்கள்
மெத்தனவே செய்துமல்லோ காயங்கொண்டு மேதினியில் சமாதிக்கு போனமாது
சத்தான லோகமதில் அடியார்தம்மை சதாகாலம் வலதழித்த கன்னிமாது
முத்தான நாலுயுகங் கடந்தசித்து மூவுலகில் ரேணுகைபோல் சித்துமுண்டோ
4762.
உண்டான ரிஷிகளெல்லாம் யாகஞ்செய்யும் உதகமென்ற மலைதனிலேதானுஞ்சென்று
கண்டாளே ரேணுகையாள் மாதுதானுங் களிப்பஉடனே நாதாந்த சித்துதம்மை
துண்டரிக மாகவல்லோ தவங்கள்யாவும் துப்புறவாய் தானழித்து வசியம்பூண்டு
கொண்டபடி வாதமென்ற மலைபோற்றங்கம் கொப்பெனவே தான்செய்து வாங்கினாரே
4763.
வாங்கியே நவகோடி சித்துதாமும் வண்மையுள்ள வாபரணப் பணிதியெல்லாம்
சாங்கமுடன் நவரத்தின கசிதத்தாலே சட்டமுடன் பெற்றுவந்த மாயாசித்து
ஏங்கவே ரிஷிகளெல்லாம் மதியம்பூண்டு யேமாந்து வாதமென்ற யேமந்தன்னை
பாங்குடனே தான்கொடுத்தார் கோடிபொன்னை பட்சமுடன் ரிஷிமுதலோர் முனிவர்தானே
4764.
தானான ரேணுகையின் சமாதிபக்கல் சட்டமுடன் மாண்பரெல்லாம் போவதுண்டு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தன்பாத கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தேற்றமுடன் சமாதியிடம் யானுஞ்சென்றேன்
பானான நவகண்டரிஷியார்பாட்டன் பதமதுவும் தப்பாமல் சென்றிட்டேனே

4765.
சென்றேனே ரேணுகையின் சமாதிபக்கல் செம்மலுடன் குளிகைகொண்டு யானுமல்லோ
குன்றான பருவதம்போல் சமாதிகண்டேன் கொப்பெனவே சீனபதிப்பெண்கள்மாரே
நின்றேனே சிலகாலம் சமாதிபக்கல் நீட்சியுடன் வடபாகங் கார்த்திருந்தேன்
தென்றலுடன் சப்தமது வசரீரிவாக்கு செப்பமுடன் எந்தனுக்குக் கேட்கலாச்சே
4766.
ஆச்சங்கே ரேணுகையின் சமாதிபக்கல் அடவான வசரீரிவாக்குதானும்
பேச்சுடனே சப்தமது கேட்கக்கண்டேன் பேரான ரேணுகையைக் கண்டதில்லை
மூச்சடங்கிப்போனதொரு மாயாசித்து மூதுலகில் நாலுயுகங் கடந்தமாது
வீச்சுடனே தேவாதி ரிஷிகளோடு விருப்பமுடன் காயமது கொண்டசித்தே
4767.
சித்தான சித்துமுனி யென்னலாகும் சீரான நாலுயுகங்கடந்தமாது
நித்தமுமே தேவாதிரிஷிகளெல்லாம் நீணிலத்தில் ரேணுகையின் சித்துகாதை
புத்தியுள்ள சீஷமார் வர்க்கத்தோற்கு புகழ்பெறவே சதாகாலம் வசனிப்பார்கள்
பத்தியுடன் சதாநித்தம் மாண்பரெல்லாம் பாருலகில் ரேணுகையைப் போற்றுவாரே
4768.
போற்றுவாரென்றுமே பெண்களுக்கு பொங்கமுடன் தாமுரைப்பார் சீனத்தோற்கு
தேற்றமுடன் குளிகைகொண்டு வெகுதேசங்கள் திறமையுடன் சுத்திவந்தேன் புத்திமானாய்
ஆற்றவே போகாது ரேணுமாது வன்பான வல்லமையான் கண்டதில்லை
மாற்றமென்ற மையுடனே யானுஞ்சென்று மங்கையரைக் கண்டேனே வெகுவாய்த்தானே
4769.
தானான சீனபதிப் பெண்கள்மாரே தன்மையுடன் வதிசயங்கள் இன்னஞ்சொல்வேன்
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருபாதக் கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் அருளினாலும் தேசமெலாம் சுத்திவந்தேன் இதுபோலில்லை
பானான ரேணுகையின் தெரிசனத்தை பாருலகில் அடியேனுங் கண்டிட்டேனே
4770.
கண்டேனே ரேணுகையின் வல்லபத்தை களிப்புடனே மனதுவந்து வரமும்பெற்றேன்
விண்டதொரு பொருள்தோய்ந்து வினயம்பெற்று வேதாந்த குருவைமனதிலெண்ணி
கொண்டல்முடி அச்சுதனார் முன்னேநிற்க கொம்பனையே குளிகைகொண்டு
பின்னும்வந்தேன்
வண்டணிமார் விட்டகுறை யிருந்ததாலே வண்மையுடன் சீனபதி வந்திட்டேனே
4771.
வந்திட்டேன் என்றலுமே முனிவர்கூற வாகான புலிப்பாணி மைந்தாகேளு
அந்தமுடன் குளிகையது பூண்டுகொண்டு அவனிதனில் சுற்றிவருங் காலந்தன்னை
சிந்தையுடன் வடபாகங் கடலோரத்தில் சீதாவின் பிராட்டியரின் சமாதிபக்கல்
சொந்தமுடன் குருட்சேத்திர பூமிதன்னில் தோற்றமுடன் அடியேனும் இறங்கினேனே
4772.
இறங்கினேன் குளிகையது விட்டுமல்லோ எழிலான வடபாகங் கடலோரத்தில்
இறங்கவே பாஞ்சால ராஜனப்பா திகழான கோட்டையது கெடிமுகத்தில்
சிறந்ததொரு கோட்டைமுகம் அரண்வாசல்தான் சீரானவாழிதடங் கண்ணிற்கண்டேன்
குறைவின்றிக் கூறாத சித்திரக்கூடம் கொற்றவனார் பாஞ்சாலன் பதிகண்டேனே

4773.
பதியான ராஜமகாராஜபோகன் பாங்கான கோட்டைமுகம் மண்மேடிட்டு
துதியான சமாதியது கோடாகோடி துப்புறவாய் காணுதற்கு இடமோயில்லை
நதியான பாஞ்சால நதிதானப்பா நவிலவே முடியாது காணாறுதானும்
மதிபோன்ற சமாதியல்லோ மகத்துவங்கள் மெத்தவுண்டு கூறொண்ணாதே
4774.
ஒண்ணாது பாஞ்சாலஞ் சமாதிபக்கல் ஓகோகோ நாதாக்கள் ரிஷிகள்கூட்டம்
அண்ணாந்து பார்த்தாலும் அளவுண்டோ ஆகாயக்கோட்டையது யறையப்போமோ
திண்ணமுடன் கோட்டையது இடபாகத்தின் திடமான பாஞ்சாலன் மண்டபந்தான்
வண்ணமுடன் மண்டபந்தான் தென்பாகத்தில் வளமான பாஞ்சாலன் வில்கண்டேனே
4775.
வில்லான வில்லதுவும் விளம்பப்போமோ மேதினியில் வச்சிரமாம் வில்தானப்பா
கல்போன்ற மலைதனையும் எறியும்வில்லு காவலனார் காட்டகத்தே யிருக்கும்வில்லு
மல்போன்ற சமர்க்களத்தைக் கொல்லும்வில்லு மகத்தான பாஞ்சாலன் ஆணிவில்லு
வல்லதொரு வில்லதனைக் கண்டேன்யானும் வளமான சித்தாதிக் காவலுண்டே
4776.
உண்டான காவலாஞ் சொரூபசித்தை வுத்தமரை யான்கண்டு கேட்டேனப்பா
அண்டாதி வில்னாணியாருதென்றேன் வப்பனே பாஞ்சாலன் வில்லென்றார்கள்
தெண்டமுடன் பாஞ்சாலன் வில்லென்றோத தெளிவான புத்தியது மனங்கலங்கி
கண்டுமே மதியேங்கி புத்திமாறி கலங்கியே பூமிதனில் விழுந்திட்டாரே
4777.
இட்டேனே அடியேனும் மதிகலங்கி எழிலான கோட்டைமுகம் தன்னில்யானும்
பட்டதொரு படுகளம்போல் எந்தனுக்கு பட்சமுடன் சித்துமுனி சொரூபந்தானும்
திட்டமுடன் கைவாகுதான்கொடுத்து தீரமுடன் விடையாற்றி எந்தனுக்கு
அட்டதிசை தான்புகழும் வில்சமர்த்தை வன்புடனே எந்தனுக்கு ஓதினாரே
4778.
ஓதவே யடியேனும் களைகள்நீங்கி வுந்தனது வுபதேசம் பெறவேயெண்ணி
தீதமுடன் வில்லினது வருகிற்சென்றேன் நிட்களங்கமாகவல்லோ கரங்குவித்தேன்
பாதமது தன்னளவாம் சிரங்குவித்து பட்சமுடன் அடிவணங்கி தெண்டனிட்டு
ஆதமுடன் வணங்கியல்லோ நிற்கும்போது அங்ஙணவே யசரீரி வாக்குண்டாச்சே
4779.
ஆச்சப்பா வில்லதுவும் ஏதுரைக்கும் வன்பான காலாங்கி நாதர்போதா
மூச்சடங்கிப் போனதொரு ராஜனப்பா முனையான பாஞ்சாலராஜன்தானும்
வீச்சுடனே கரமேந்தி விட்டநாணு வீரான வில்லதுவும் நான்தானாச்சே
மூச்சடங்கிப் போனதொரு சமாதிபக்கல் மூதுலகில் கார்த்திருக்கும் வில்லுமாச்சே
4780.
வில்லான பாஞ்சாலன் நாணுவில்லு வெகுகோடி ராஜர்களும் மெச்சும்வில்லு
வல்லதொரு லோகாதிசித்தரெல்லாம் மகத்தான ரிஷிகள்முதல் வணங்கும்வில்லு
நில்லாது படைமுகத்தில் வரசர்தம்மை நீணிலத்தில் வெல்லுகின்ற யிந்திரவில்லு
சல்லாப முடையதொரு வில்லுமாகும் சதுரான வையகத்தில் சமாதிவில்லே

4781.
வில்லென்ற பாஞ்சாலன் நாணிதானும் விருப்பமுடன் எந்தனுக்கு வுரைக்கும்வார்த்தை
சொல்லென்ற வசரீரிவாக்குனாலே சுத்தமுடன் உபதேசம் பெற்றுவந்தேன்
புல்லறிவால் எந்தனுக்கு உபதேசங்கள் புகட்டவேயானுமல்லோ வரமுங்கொண்டேன்
கல்லான கல்லினது வரமுமல்ல கைலாயவில்லினது வரமுமாமே
4782.
ஆமேதான் காலாங்கிநாதர்தம்மால் வன்புடனே யானுமல்லோ வரமுங்கொண்டேன்
போமேதான் திரௌபதியாள் சமாதிகண்டேன் பொங்கமுடன் எந்தனுக்கு விடையுமாச்சு
நாமேதான் சொன்னபடி விடையும்பெற்று நாதாந்த திரௌபதியாள் சமாதிகாண
வேமேதான் வுத்தார விடையும்பெற்று வேகமுடன் சமாதியிடம் வந்திட்டேனே
4783.
இட்டேனே வடபாகங் கடலோரத்தில் யெழிலான பாஞ்சாலன் தேசந்தன்னை
திட்டமுடன் கோட்டையது வெளிப்புறத்தில் தீர்க்கமுடன் திரௌபதியாள் சமாதிபக்கல்
சட்டமுடன் குகைவிட்டு நானிறங்கி சாங்கமுடன் தென்புறத்தில் இருந்துகொண்டு
வட்டபுரி திரௌபதியாள் அம்மன்தன்னை வணங்கினேன் போகரிஷிவணங்கினேனே
4784.
வணங்கவே சமாதியிட பக்கல்தன்னில் வாகுடனே யடியேனும் நிற்கும்போது
இணங்கவே நாதாந்த சித்துதாமும் யெழிலாக எந்தனையும் யாரென்றார்கள்
சுணங்கமது வாராமல் அடியேன்தானும் சுத்தமுடன் மனதுவந்து சொன்னேன்யானும்
மணங்கமழுங் காலாங்கி சீஷனென்றேன் மகத்தான போகரிஷியென்றிட்டேனே
4785.
யென்றிடவே காலாங்கி தாள்பணிந்து யெழிலாக ரேணுகையின் சமாதிகண்டேன்
சென்றுமே நவகோடி ரிஷிகள்தம்மால் செப்பியதோர் மார்க்கமெல்லாம் தெரிந்துயானும்
வலுவாகத் தேகத்தைக் கற்பங்கொண்டு காசினியில் வரைகோடி காலந்தானும்
செல்லாமல் தேகமது இருப்பதற்கு செம்மலுடன் ரேணுகையும் போதிப்பாளே
4786.
போதிக்கக் காயாதிகற்பந்தன்னை பொங்கமுடன் போகரிஷிநாதர்தானும்
ஆதித்தன் சந்திரன்போல் கற்பந்தன்னை வன்புடனே தாமறிந்து கொண்டாரல்லோ
பேதித்து காயாதிகுளிகைதன்னை பெருமையுடன் சிறுபாலன் பெற்றுக்கொண்டு
சாதித்து சிலகாலமங்கிருந்து சட்டமுடன் சீனபதிக்கேகினாரே
4787.
ஏகுதற்கு முன்னமல்லோ போகர்தாமும் எழிலான ரேணுகையின் மாயாகற்பம்
வாகுடனே பெற்றல்லோ நாயன்தானும் வண்மையுடன் ரேணுகையாள் பாதம்போற்றி
சாகுதற்கு இடமதுவும் நேராமற்தான் சட்டமுடன் போகரிஷிநாதர்தானும்
ஆகுடனே குளிகையது பூண்டுகொண்டு வன்புடனே சீனபதிக்கேகினாரே
4788.
ஏகவே போகரிஷிநாதர்தானும் எழிலான குளிகையது பூண்டுகொண்டு
சாகமுடன் சீனபதிக்கேகியல்லோ சட்டமுடன் காலாங்கி நாதர்தம்மை
வேகமுடன் சமாதியிடங் கண்டுமல்லோ விருப்பமுடன் காலாங்கிபாதம்நோக்கி
சோகமுடன் எந்தன்குரு நாதாயென்று சுத்தமுடன் தாள்பணிந்து நின்றிட்டாரே

4789.
நின்றதொரு காலாங்கிநாதர்தானும் நீதியுள்ள போகரிஷிநாதருக்கு
சென்று வந்தகாரியங்கள் செயந்தான் கொண்டீர் செம்பவள போகரிஷி புனிதவானே
கன்றுதான் தாயைவிட்ட கதையைப்போல கடுங்காளை நீதானோ சென்றுவந்தாய்
வென்றிடவே லோகாதிலோகமெல்லாம் விருப்பமுடன் ஜெயம்பெற்று வாழ்குவீரே
4790.
வாழ்கவென்று காலாங்கி நாதர்தாமும் வளமான போகரிஷிநாதருக்கு
சூழ்கவே ஆசீர்மம் மிகவுங்கூறி துப்புரவாய் யோகபதி மாண்பனாக
தாழ்வாக வெந்நாளுங் கீர்த்திவானாய் தாரிணியில் இருக்கவென்று வரமுந்தந்து
நீழ்கவே சீனபதிப்பெண்களோடு நெடுங்காலமிருக்கவென்று வரந்தந்தாரே
4791.
தந்தாரே போகரிஷிநாதருக்கு சாங்கமுடன் காலாங்கிநாதர்தாமும்
விந்தையுடன் விடையதுவும் பெற்றுக்கொண்டு வேதாந்த போகரிஷி
என்றேனே யடியேனும் மனதுவந்து எழிலாகக் குளிகையது பூண்டுகொண்டு
சென்றேனே சீனபதி தேசந்தன்னில் சிறப்புடனே வதிசயங்களெல்லாஞ் சொன்னேன்
குன்றான நாகமலைத் தன்னைக்காண கொற்றவனே மனதுவந்து குளிகைபூண்டு
சென்றேனே வாகாஷந்தான்பறந்து செம்மலுடன் வுச்சிமுகங் கண்டிட்டேனே
4792.
கண்டேனே நாகமலைத் தன்னிலப்பா கருவான புலிப்பாணி மைந்தாபாரு
உண்டான வுச்சிமுகந் தன்னிற்சென்றேன் வுதகமுண்டு சுனையுண்டு வதிசயந்தான்
அண்டர்முனி தாமறியா பாதாளந்தான் வதின்கீழே சமாதியது காவலுண்டு
திண்டான பட்சியது கழுகுவப்பா திரள்கோடி வரைகோடி சொல்லொண்ணாதே
4793.
ஒண்ணாது பட்சியது யானுங்கண்டேன் வுத்தமனே பட்சியெனைக் கண்டபோது
அண்ணாந்து அடியேனும் மனதுவந்து அன்புடனே காலாங்கி சீஷனென்றேன்
கண்ணான காலாங்கி சீஷனென்று கைதொழுது முடிவணங்கி தெண்டனிட்டேன்
மண்ணதனில் சுனைகீழே இருக்குஞ்சமாதி மார்க்கமுடன் எந்தனுக்குக் கூறலாச்சே
4794.
கூறவென்றால் மூன்றுயுகங் கடந்தசித்து குறிப்பான கிரேதாயினுகத்திலப்பா
மாறலுடன் காயாதி கற்பங்கொண்டு மானிலத்தில் வெகுகால மிருந்தசித்து
சீறலது வாறாது கழுக்குன்றிசித்து சிறப்பான யோகியல்லோ தவசியாரும்
ஆறலது பூண்டதொரு கொடியசித்து வப்பனே கிரேதாயின் சித்துதாமே
4795.
சித்தான தேவசித்து மானிடசித்து சிறப்பான பிரளயங்கள் கடந்தசித்து
முத்தான கிரேதாயினுகத்திலப்பா முனையான நாகமலை பரளயத்தில்
சத்தசாகரம் பொங்கியே மேலெழும்பி சட்டமுடன் மலையதுவும் முழுகிப்போச்சு
வித்தகனார் மலைபோலே இருந்தசித்து விடுபட்டு மடியாமல் இருந்திட்டாரே
4796.
இருந்தாரே மூன்றுநாள் ஆறுவேளை எழிலான பிரளயத்தின் மலையினுச்சி
திருந்தமுடன் ஜலஸ்தம்பஞ் செய்துகொண்டு திரளான நவரிஷியார் இருந்தாரங்கே
பொருந்தவே பிரளயங்கள் போனபின்பு பொங்கமுடன் நவகோடி சித்தர்தாமும்
வருந்தியே கனைகீழே யிருந்தசித்தை மார்க்கமுடன் கண்டல்லோ வணங்கிட்டாரே

4797.
வணங்கியே சமாதிபுரம் நிற்கும்போது வாகான சமாதியது வெடிக்கலாச்சு
இணங்கவே நவகோடி ரிஷிகள்தாமும் எழிலான சமாதியிடம் பக்கல்நின்றார்
கணமுடனே கழுக்குன்றி சித்துதாமும் கருவாக எந்தனையும் கண்டபோது
மணங்கமழும் சித்துமுனி தேவர்தாமும் மார்க்கமுடன் எந்தனை யாரென்றிட்டாரே
4798.
என்றுமே கழுக்குன்றி சித்துதாமும் எழிலாக எந்தனை யாரென்றுகேட்க
வென்றிடவே காலாங்கி நாதர்தம்மின் வேதாந்த சித்தினது சீஷனென்றேன்
நன்றிபுரிந் தென்னையவர் சித்துதாமும் நலமுடனே எந்தனுக்கு உபதேசங்கள்
குன்றின்மேல் தானிருந்து கோடியாகங் குறிப்புடனே எந்தனுக்குக் கூறினாரே
4799.
கூறானார் உபதேசம் யானுங்கண்டு குறிப்புடனே மனதுவந்து குளிகைகொண்டு
மீறிடவே சீனபதியானுஞ்சென்று மிக்கான மாண்பருக்கு யாவுங்கூறி
தேறிடவே சிலகால மங்கிருந்து சிறப்புடனே காலாங்கி விடையும்பெற்று
தூறியே குளிகையது பூண்டுகொண்டு துப்புறவாய்த் தென்றிசையில் வந்திட்டேனே
4800.
வந்தேனே நீலாஞ்சனக்கிரியிலப்பா மகத்தான புலிப்பாணி மைந்தாபாரு
சிந்தைமன மொன்றாகி மனங்களித்து சிறப்புடனே தென்கூடப் பதியமர்ந்தேன்
பந்தமுடன் குளிகையது பூண்டுகொண்டு பார்தனிலே கடலோரஞ் சுற்றிவந்து
விஞ்சைபுரி வஞ்சனமாங் கிரியைக்கண்டேன் விண்ணுலகு கொள்ளாத மகிமைதானே

# போகரின் சப்த காண்டம் – 7000

4801.
தானான மலையதனைக் கண்டுயானும் தகமையுடன் சிகரம்வரைக் காணவெண்ணி
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தன்பாதக் கிருபையாலும்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தேவர்முதல் அசுரர்கள் கிருபையாலும்
மானான பலபேர்கள் ரிஷிகளாலும் மகத்தான கிரிதனையே போற்றினேனே
**4802.**
போற்றினேன் குளிகையது செல்லவென்று பொங்கமுடன் மலைமீதிற் சென்றேன்யானும்
ஆற்றலுடன் குளிகைகொண்டு சிகரஞ்சென்று வப்பனே மலைதனிலே இறங்கினேன்யான்
மாற்றலுடன் அசுராக்கள் கூட்டத்தோடு மகத்தான தேவரிஷி சூழக்கண்டேன்
நீற்றமுடன் மலைதனிலே சுற்றியானும் நிகட்சியுடன் மூலவரைக் கண்டிட்டேனே
**4803.**
கண்டேனே கிரிகோடி யமுனைகோடி கண்கொள்ளாதூரமது வினயங்கண்டேன்
கொண்டல் வண்ணனச்சுதனார் மலையுங்கண்டேன் குறிப்பான கிருஷ்ணகிரி
யென்னலாகும்
தண்டுளவ மாலையணி மாலைபூண்ட தாக்கான செந்தாமரைப் பூவைக்கண்டேன்
மண்டோதரி தான்வசிக்கும் மலையுங்கண்டேன் மகத்தான மயிலிராவணன் கண்டேனே
**4804.**
கண்டுமே யதற்கப்பால் நெடுந்தூரந்தான் கனமான வஞ்சனமாங்கிரியில் வாழும்
தண்டுபுகழ் வேலாயுத சூலத்தோடும் தன்மையுடன் சித்தினது சமாதிகண்டேன்
குண்டுபோல் மலையொன்று இருக்குமங்கே குவலயத்தில் மாண்பர்களுங் கண்டதில்லை
வண்டினங்கள் கீதமுடன் ஓசைகூறும் வளமான சமாதியது பார்த்திட்டேனே
**4805.**
பார்த்துமே யடியேனும் குளிகைவிட்டு பாங்குடனே சமாதிபுரஞ் சென்றேனப்பா
தீர்த்தமுடன் சிவலிங்கக் குளிகைகண்டேன் சிவானந்த ரிஷிகளப்பா கோடாகோடி
ஆர்த்தியுடன் பூசைநைவேத்தியங்கள் வப்பனே ஏவல்பணி செய்துநிற்பார்
சாரத்தகியா மாழ்வார்கள் ஒருபக்கந்தான் சாங்கமுடன் ஏவலுக்கு முன்நிற்பாரே
**4806.**
நிற்கையிலே யடியேனும் மனதுவந்து நீதியுடன் சமாதிமுகஞ் சுத்திவந்து
பொற்கைவள நாட்டினில் வாழ்சித்தர்தம்மை பொற்பாதந்தாள்பணிந்து வடியேன்தானும்
சிற்பரனார் சதாசிவனார் சமாதிதன்னை சிறப்புடனே யடியேனும் காணவந்தேன்
கற்பனையாய் எந்தனையு மாசீர்மித்து கடாட்சிக்க வேண்டுமென்று கருதினேனே
**4807.**
கருதவே எந்தனையுஞ் சித்தர்கூட்டம் கருத்துடனே மனதுவந்துயாரென்றார்கள்
திருதமுடன் காலாங்கி சீஷனென்று தீர்க்கமுடன் அடியேனும் தெண்டனிட்டேன்
வருகவென்று சித்துமுனி யசுராள்கூட்டம் வண்மையுடன் எந்தனுக்கு வணக்கம்செய்து
பெருகவே எந்தனையுந் தானழைத்து பேறான சமாதிமுகஞ் சென்றிட்டாரே
**4808.**
சென்றுமே யடியேனும் கொண்டுவந்து சிறப்புடனே சமாதிமுகம் நில்லென்றார்
குன்றுமேல் தானிருந்த சீஷர்தானும் கோலமுடன் எந்தனையும் கண்டபோது
அன்றுதித்த மான்தோலும் புலித்தோலப்பா வப்பனே எந்தனுக்குத் தான்கொடுத்து
இன்றுமுதல் சிலகால மிங்கிருந்தால் எழிலான உபதேசங் கிடைக்கும்பாரே

4809.
பாரென்று சீஷவர்க்கம் பகர்ந்தாரப்பா பட்சமுடன் நானுமங்கே சிலதுகாலம்
தீரமுடன் ஆசனத்தின் மேலிருந்து தீர்க்கமுடன் தவநிலையி லிருந்தேனப்பா
சாரலெனுஞ் சமாதிமுகஞ் சென்றசித்து சட்டமுடன் நெடுங்காலஞ் சென்றசித்து
வீரமுடன் சமாதியதுதான்திறந்து விருப்பமுடன் குளிகையைவிட்டு வந்திட்டாரே
4810.
வந்தாரே சதாசிவ ரிஷியார்தாமும் வணக்கமுடன் அசுராக்கள் தேவகூட்டம்
சிந்தனையாய் மனதுவந்து வஞ்சலாகி சிறப்புடனே சதாசிவ ரிஷியார்தம்மை
பந்தமுடன் வெகுகூட்டம் வசுரர்களோடும் பட்சமுடன் தாள்பணிந்து நிற்கும்போது
அந்தமுடன் அடியேனும் தவசைவிட்டு வப்பனே யான்வணங்கி பணிந்திட்டேனே
4811.
பணிந்ததொரு எந்தனையும் யாரென்றேதான் பட்சமுடன் சதாசிவ ரிஷியார்தாமும்
கணிதமுடன் கருத்துவந்து கனிந்துகேட்க கைலாசகாலாங்கி நாதர்தம்மின்
அணிகடவுள் விசுவாசபாதம் பெற்றவப்பனே போகநாதா சீஷனென்றேன்
மணியான குளிகைகொண்டு மலையிற்சென்று மகதேவா வந்துநெடுநாளுமாச்சே
4812.
ஆச்சப்பா வந்துநெடுங்காலமாச்சு வப்பனே தாள்பணிந்து வணங்கிநின்றேன்
மூச்சடங்கி மலைதனிலே இருந்தசித்து முசியாமல் எந்தன்மேல் பட்சம்வைத்து
பாச்சலுடன் மலைதனிலே குளிகைகொண்டு பாலகனே வந்ததொரு புண்ணியத்தால்
மாச்சலுடன் வசுரர்கள் கூட்டந்தன்னில் மன்னவனே வந்ததொரு புண்ணியந்தானே
4813.
தானான விட்டகுறை இருந்ததாலே தண்மையுடன் மலைகளிலே வந்தீரப்பா
தோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் செய்ததொரு தவப்பலன்தான்
மானான வசுராக்கள் கூட்டந்தன்னில் மன்னவனே தான்கடந்து வந்தீரப்பா
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே செம்மலுடன் சபியாமல் இருந்திட்டாரே
4814.
இருந்தாரே யுந்தனது புண்ணியந்தான் எழிலான வசுராக்கள் கூட்டத்தார்கள்
பொருந்தவே வெகுகோடி மாண்பரப்பா பொங்கமுடன் மலைதனிலே வந்தாருண்டு
திருந்தவே யசுராக்கள் கூட்டத்தார்கள் சீறலுடன் சபித்தவர்கள் கோடியுண்டு
வருந்தியே யுந்தனையும் வணக்கம்செய்து மன்னவனே கொண்டணைத்தார் புண்ணியமாச்சே
4815.
ஆச்சப்பா முன்செய்த புண்ணியத்தால் வப்பனே எந்தனையுங் காணலாச்சு
பாச்சலுடன் காலாங்கி புண்ணியத்தால் பட்சமுடன் மலைதனிலே வந்தீரப்பா
மாச்சலது வாராமல் உந்தனுக்கு மன்னவனே உபதேசம் செய்வேனென்று
வீச்சலுடன் ஞானோபதேசந்தன்னை விருப்பமுடன் எந்தனுக்கு ஓதினாரே
4816.
ஓதவே சதாசிவ ரிஷியார்தாமும் வுத்தமனார் எந்தனுக்குக் கூறும்வண்ணம்
நீதமுடன் காலாங்கி சீஷபாதா நீதியுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
தீதமுடன் திரேதாயினுகத்திலப்பா திக்கெல்லாம் பிரளயங்கள் கண்டபோது
தோதமுடன் அடியேனும் தவமிருந்து துப்புறவாய் சமாதிநிலை நின்றிட்டேனே

4817.
நின்றேனே சமாதிநிலைத் தானிருந்து நீடூழிகாலம் வரைப்பிரளயத்தில்
குன்றேறி மலைமீதில் நானிருந்தேன் குவலயங்கள் எல்லாமழிந்து குண்ணுமாகி
சென்றவர்கள் மாண்பரல்லோ கோடாகோடி சேனதிரள் கூட்டமது மலையிற்றிறங்கி
வென்றிடவே தவயோக நிலையில்நின்று விருப்பமுடன் எந்தனுக்கு சீஷராச்சே
4818.
ஆச்சப்பா சீஷர்களோ கோடிமாண்பர் வப்பனே எந்தனிட சமாதிபக்கல்
மூச்சடங்கி சென்றிருந்தேன் வெகுகாலந்தான் முனையான சீஷரெல்லாம் பூசைகொண்டு
பாச்சலுடன் பிரளயங்கள் வடியுமட்டும் பண்பாக எந்தனிடம் பாதுகார்த்து
வீச்சலுடன் எந்தனுக்கு சோடசாரம் வினயங்கள் செய்துகொண்டாடினாரே
4819.
ஆடியதோர் சீஷவர்க்க மாண்பருக்கு வப்பனே யானுமல்லோ வுபதேசங்கள்
நாடியே சின்மயத்தை கண்டாராய்ந்து சிறப்புடனே ஞானோபதேசஞ்செய்தேன்யானும்
கூடியதோர் ஞானோபம் பெற்றுமல்லோ குவலயத்தில் நெடுங்கால மிருந்தார்மாண்பர்
வாடியே திரியாமல் உந்தமக்கு வளமையுடன் உபதேசம் கூறுவேனே
4820.
கூறுவேன் திரேதாயி னுகத்திலப்பா கொற்றவனே அயோத்திநகர் தனிலிருந்து
மாறுபடா சமுசாரி ஞானவானாய் மார்க்கமுடன் நெடுங்கால மங்கிருந்து
ஆறுதலாந்தான் கடந்து சித்தரோடே யப்பனே யவர்தமக்குத் தொண்டுசெய்து
வீறுடனே காயாதி கற்பங்கொண்டு விருப்பமுடன் அவர்களிடங் கார்த்தேன்பாரே
4821.
பாரேதான் இதிகாச வித்தையெல்லாம் பண்புடனே கூடிருந்து கண்டாராசய்ந்து
நேரேதான் சின்மயத்திலிருந்துகொண்டு நீதியுடன் மலைமீதில் சென்றுயானும்
தீரேதான் தவநிலைக்கு யாளுமாகி தீர்க்கமுடன் யாகமது செய்யும்போது
ஆரேதான் ஒருவரப்பா ரிஷியார்போலே வப்பனே முன்வந்துநின்றிட்டாரே
4822.
நின்றுமே எந்தனுக்கு காயகற்பம் நீடாழி யுலகுபதி இருக்கவென்று
குன்றின்மேல் ஆகாயதேவரிஷிதாமும் கொற்றவனே கண்முன்னேவந்துநின்று
அன்றுரித்த மான்தோலும் புலித்தோலுமாக வப்பனே கண்ணிற்குத் தோற்றங்கொண்டு
இன்றுமுதல் எந்தனுக்கு காயகற்பம் எழிலாக வுண்ணவென வரந்தந்தாரே
4823.
தந்தாரே வரமதுவுந்தான்கொடுத்து தகமையுடன் காயாதிகற்பந்தந்து
சிந்தனையுமொன்றாக்கி எந்தனுக்கு சீர்பெறவே நாலுயுகமிருக்கவென்று
சொந்தமுடன் எந்தனுக்கு ஞானமோதி சுடரொளியாந் தோற்றமதை முன்னுண்டாக்கி
விந்தைகளு மிகக்கூறி யெந்தனுக்கு விண்ணுலகில் இருக்கவென்று மதிசொன்னாரே
4824.
சொன்னாரே அன்றுமுதல் இன்றுமட்டும் துப்புரவாய் நெடுங்காலமிருந்தேன்யானும்
மன்னவனார் இருபத்தோர் முறைகள் கண்டேன் மகத்தான திருச்சங்கு யானுங்கண்டேன்
நன்னயமாய் தசரதரை யானுங்கண்டேன் நளராஜ பதியைத் தானுங்கண்டேன்
வின்னமிலா சூர்ப்பனகை தன்னைக்கண்டேன் வீறான கைகேசி கண்டேன்தானே

4825.
தானான சமர்க்களத்தில் இராவணன்தன் தண்மையுள்ள மண்டோதரி தன்னைக்கண்டேன்
கோனான ஸ்ரீராமர் தன்னைக்கண்டேன் கொம்பனையாள் பிராட்டியரை யானுங்கண்டேன்
மானான தென்னிலங்கை பதியிலப்பா மகத்தான வாக்கருட கூட்டங்கண்டேன்
பானான ராட்சதாள் தன்னைக்கண்டேன் பாங்கான ஆஞ்சனேயர் கூட்டந்தானே
4826.
கூட்டமாய் அணியணியாய் யானுங்கண்டேன் கொற்றவனார் ஆஞ்சனேயர் சேனைகண்டேன்
வாட்டமுடன் வல்லரக்கர் சேனையப்பா வையகத்தில் எக்கிறகோடி வெள்ளங்கண்டேன்
நாட்டமுடன் சதமுகராவணனைக் கண்டேன் நலமான பிரம்மாவை யானுங்கண்டேன்
நீட்டமுடன் இந்திரனார் சேர்வைகண்டேன் நீடாழி நாரதனார் பதங்கண்டேனே
4827.
கண்டேனே திருச்சங்கு மைந்தனப்பா கண்மணியே வரிச்சந்திரன் தன்னைக்கண்டேன்
கொண்டல்வண்ணன் ராவணனார் தம்பிகண்டேன் கோடிதனம் பெற்றதொரு குபேரன்கண்டேன்
அண்டர்முடி தேவரிஷியானுங்கண்டேன் ஆயிரங்கண் இந்திரனார் கூட்டங்கண்டேன்
தண்டுளப மாலையணி பூண்டரேணு தகமையுள்ள பூதகியை கண்டேன்பாரே
4828.
பாரேதான் திருதராட்டிரன் தன்மைந்தன் பாங்கான திரியோதிரன் சேனைகண்டேன்
சீரேதான் குருகுலமாம் வம்நிமிஷத்தில் சிறப்புடனே வந்துதித்து பாண்டுராஜன்
நேரேதான் பெற்றெடுத்த ஐவர்பஞ்சர் நேரான ராஜர்களை யானுங்கண்டேன்
ஆரேதான் பாஞ்சாலவர்க்கம் ஆண்டகையாள் திரெளபதியை கண்டிட்டேனே
4829.
இட்டேனே காளாங்கினியை யானுங்கண்டேன் எழிலான பரத்வமகாரிஷியைக் கண்டேன்
பட்டமுடன் வாழ்ந்ததொரு பாண்டிநாட்டில் பாங்கான அதிவீரராமன் கண்டேன்
வாட்டமுடன் நவகோடி ரிஷியைக்கண்டேன் வளமான முப்பத்து மூன்றுகோடி
திட்டமுடன் தேவர்களை யானுங் கண்டேன் தீரமுடன் ஐராவத ரிஷிகண்டேனே
4830.
கண்டேனே நாலுயுக முடிவுக்குள்ளே கலியுகத்திற் காணாதகாட்சியெல்லாம்
தண்டகம்போல் நாலுயுக பிரளயத்தின் தகமையுள்ள காட்சிகளும் அனேகங்கண்டேன்
பண்டிதங்கள் சாத்திரங்கள் நாலுவேதம் பாங்குடனே கோடிவரை யானுங்கண்டேன்
துண்டரிக மாகவல்லோ சமாதிநின்று துப்புரவாய் யுகம்யுகமாய்ச் சென்றேனே
4831.
சென்றேனே யுகந்தோறுஞ் சமாதிமார்க்கம் சிற்பரனை மனதிலுன்னி தெளிந்தேன்யானும்
குன்றான பருவத்தில் கோடியாகம் கொற்றவனே யான்செய்தேன் லக்கோயில்லை
வென்றிடவே நாலுயுகம் இப்படியேசென்று விண்ணுலக வதிசயங்கள் யாவும்பார்த்தேன்
இன்றுமுதல் வையகத்தி லதிசயங்கள் எழிலாக மெத்தவுண்டு சொல்லொண்ணாதே
4832.
ஒண்ணாது காலாங்கி நாதசீஷா ஒகோகோ நாதாக்கள் யாருங்காணா
திண்ணமுடன் நாலுயுகம் நானிருந்து தீர்க்கமுடன் கண்டவதிசயங்கள்கோடி
பண்ணவெனக் கும்மையல்லால் யார்க்குரைப்பேன் பாலகனே பண்பாய்க்கேளிர்
நண்ணமுடன் நம்மலையைத் தேடியல்லோ நலமுடனே வந்ததினால் பலனுண்டாச்சே

4833.
ஆச்சப்பா காலாங்கி நாதசீஷா வன்பான போகரிஷி மணியேகேளு
மூச்சடங்கி நெடுங்காலமிருந்தசித்து மூதுலகில் கோடியுண்டு லக்கொண்ணாது
எச்சலது வாராமல் உம்மைப்போல எழிலான சித்தர்களுங் கோடியுண்டே
மாச்சலுடன் மலைவந்ததுண்டோசொல்லு மகத்தான போகரிஷி யென்றிட்டாரே
4834..
என்றுமே போகரிஷி குளிகைபூண்டு எழிலான மலைதனிலே வந்தீரப்பா
குன்றின்மேல் எந்தனையும் ஒருவருந்தான் கொற்றவனே கண்டதில்லை என்பார்தானே
சென்றுமே எழுகடலுஞ் சுற்றிவந்து செம்மலுடன் எந்தனையும் கண்டீரப்பா
நன்றாக வுந்தனது உபதேசங்கள் நலமுடனே ஓதிவைப்பேன் என்பார்பாரே
4835.
பாரேதான் லோகமதில் அனேகசித்து பான்மையுடன் நெடுங்காலமிருந்தாரப்பா
நீரேதான் அவர்களிட சாபந்தன்னை நீடாழி யுலகமதில் இருந்தவாறு
நேரேதான் முன்செய்த பாக்கியந்தான்நிட்சயமாய் இந்நாள்மட்டுமிருந்தீரப்பா
கூரேதான் உம்மைப்போல் சித்துமுண்டோ குவலயத்தில் விட்டகுறை யிருந்தசித்தே
4836.
சித்தான சித்துமுனி யுந்தமக்கு சிறப்பான வுபதேசமென்னவென்றால்
முத்தான லோகமதி லதிசயங்கள் மூதுலகில் மெத்தவுண்டு சொல்வேன்கேளிர்
புத்தியுள்ள பூமானே துவாபரயுகத்தில் புகழான காலாங்கியுந்தன்நாதர்
சத்தியரிச்சந்திரனார் திருச்சங்குக்கு சத்தமுடன் வரமதுவும் மிகத்தந்தாரே
4837.
தந்தாரே வரமதுவும் மிகவும்பெற்று தாரிணியில் காயாதிகற்பங்கொண்டு
பந்தமுடன் அயோத்திநகர் தன்னையல்லோ பட்சமுடன் நெடுங்கால மாண்டிருந்து
விந்தையுள்ள வதிசயங்கள் யாவுங்கண்டு மிக்கான காயாதிகற்பங்கொண்டு
அந்தமுடன் குருவினுபதேசம்பெற்று வரிச்சந்திரன் மைந்தனையும் பெற்றார்தானே
4838.
தானான திருச்சங்கு ராசனுக்கு சார்பாக நெடுங்காலம் மைந்தனில்லை
கோனான காலாங்கி நாதர்தானும் கொற்றவனார் தேவரிஷி கொடுத்தகாயம்
தேனான திருச்சங்கு கொண்டபின்பு தோற்றமுடன் மைந்தனையும் பெற்றுமல்லோ
பானான சத்தியரிச்சந்திரன்தான் பார்தனிலே பிறந்ததொரு வண்மைகேளே
4839.
கேளேதான் சித்தினது வாசீர்மத்தில் கீர்த்தியுடன் சத்தியரிச்சந்திரன்தான்
நாளேதான் போகாமல் சதாகாலந்தான் நாவுதவறாமல்லோ சிறுபாலன்தான்
பாளேதான் தேகமது வழிந்திட்டாலும் பக்குவமாய் வையகத்தில் பொய்கூறாமல்
சூளேதான் தேவாதி தேவர்மெச்ச சந்திரனும் தேவிதனை யிழந்திட்டானே
4840.
இழந்தானே நெடுங்காலம் சுடலைக்காா்த்து எழிலான பணிவிடைக்கு யாளுமாகி
புழங்கிடவே வையகத்திலாகசெய்து புகழான கீர்த்தி யதிகம்பெற்று
வழங்கிடவே ராசாதி ராசர்மெச்ச வளப்பமுடன் தேவசித்து யென்றுகூற
தழம்பிடவே நெடுங்கால மரசுசெய்து சட்டமுடன் மண்ணதனில் சென்றார்பாரே

4841.
பாரேதான் வுந்தமக்கு எந்தனாலே பார்த்திபனே யுபதேசம்பெறுவதற்கு
சீரேதான் நற்காலம் சேர்ந்துதப்பா சிறப்பாக ஞானோபதேசஞ்செய்தேன்
ஆறோதான் சித்தர்முனி ரிஷிகள்தாமும் வப்பனே யுந்தமக்கு ஒன்றுங்கூறார்
நீறோதான் கொண்டதொரு குளிகையப்பா நீதியுடன் அனேகவரை செல்லுந்தானே
4842.
தானான காலாங்கி நாதசீஷா தண்மையுடன் உந்தனது குளிகையல்லோ
கோனான இமயகிரி பர்வதத்தின் கொற்றவனே ஏழுவரை சென்றுதல்லோ
பானான பதினான்கு வரையுஞ்செல்ல பார்திபனே யுந்தனுக்கு வரமுமீவேன்
மானான சித்தர்முனி ரிஷிகள்தாமும் மார்க்கமுடன் சாபமது தந்தார்பாரே
4843.
தந்தாரே சித்துமுனி ரிஷிகள்சாபம் தான்கொடுத்த சாபமதை நிவர்த்திசெய்து
அந்தமுடன் வுந்தமக்கு குளிகைசெல்ல வப்பனே வரமதுவும் தந்தேன்யானும்
இந்ததொரு வரமதுவும் உந்தனுக்கு எழிலாக இருபத்தோர் வரையுமட்டும்
முந்தவே ஏழுவரை செல்லும்போக முனையான பதினாலுவரை செல்வீரே
4844.
செல்லவே குளிகையது கொண்டுமல்லோ சிறப்புடனே மலைதனிலே செல்லும்போது
புல்லவே வெகுகோடி வதிசயங்கள் புகழான மலைதனிலே காணலாகும்
கொல்லவே யுந்தனையுஞ் சித்துதாமும் கொப்பெனவே வருவார்கள் கோடிபேர்கள்
வெல்லவே யவர்களையும் உந்தனுக்கு விருப்பமுடன் உபதேசம் சொல்வேன்காணே
4845.
காணவே போகரிஷி புனிதவானே கண்மணியே யுந்தனுக்கு இடையூர்வந்தால்
தோணவே காலாங்கி நாதர்தம்மை தோற்றமுடன் அவர்பாதம் தனைநினைந்து
நீணவே யஞ்சனமாங் கிரியில்வாழும் நிஷ்களங்கமான சதாசிவத்தையப்பா
ஆணவங்கள் தானொடுங்கி நீயுமப்பா வப்பனே எந்தனையும் நினைத்திடாயே
4846.
நினைக்கையிலே யுந்தனுக்கு வந்ததுன்பம் நிட்களங்க மாகவல்லோ ஜெயமுங்கொண்டு
தினகரன்போல் அவர்களுக்கு புனிதவானாய் தீர்க்கமுடன் நீநினைத்த காரியங்கள்
சினமதுவும் வாராமல் ஜெயமும்பெற்று சிறப்புடனே குளிகையது கொண்டுமேதான்
வனமெலாந் தான்திரிந்து சிகரமட்டும் வரமுடனே தலைதனைவிட்டிறங்குவாயே
4847.
இறங்கியே எந்நாளும் கீர்த்திவானாய் எழிலாக வையகத்திலிருந்துகொண்டு
துறவரத்தில் செல்லாமல் இல்லரத்தில் துப்புரவாய் எந்நாளும் பாக்கியவானாய்
குறையதுவும் நேராமல் குவலயத்தில் கொற்றவனே சீனபதிக்கு ஏற்றவானாய்
நிறுயுடனே வாழ்கவென்று ஞானந்தந்தார் நீதியுடன் உபதேசஞ்செய்தார்தாமே
4848.
தாமேதான் இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தயவான புலிப்பாணி மைந்தாபாரு
நாமேதான் சொன்னபடி வஞ்சனந்தான் நலமான கிரிதனிலே சென்றேன்யானும்
போமேதான் சதாசிவனார் ரிஷியைக்கண்டேன் பொங்கமுடன் சகலவரம் யானும்பெற்று
வேமேதான் சீனபதியேகுதற்கு விருப்பமுடன் விடையதுவும் பெற்றேன்தானே

4849.
தானேதான் குளிகையது கொண்டுமல்லோ தண்மையுள்ள சீனபதி மாண்பருக்கு
மானேதான் அஞ்சனமாங் கிரியில்வாழும் மகத்தான சதாசிவனார் ரிஷியார்சேர்வை
தேனேகேள் சீனபதிப் பெண்களுக்கு தேற்றமுடன் உபதேசம் பெற்றதெல்லாம்
வானேகேள் குளிகையது கொண்டுமல்லோ மகத்தான யிமயகிரி சென்றார்காணே
4850.
காணவே யின்னமொரு மார்க்கம்பாரு கருவான புலிப்பாணி மைந்தாகேளு
தோணவே இமயகிரி பர்வதத்தில் துப்புரவாய் குளிகைகொண்டு யானுமல்லோ
நீணவே எட்டாவது வரையிலப்பா நீடான குளிகையது கொண்டுயானும்
வேணபடி கிரிதனிலே செல்லும்போது விருப்பமுடன் குத்துக்கல் கண்டிட்டேனே
4851.
கண்டேனே குத்துக்கல் அருகிலப்பா கனமான திட்டென்ற வாசல்தன்னை
சண்டமாருதம்போல வயிரக்கல்லை சட்டமுடன் தான்பூட்டி யிருக்கக்கண்டேன்
அண்டர்முனி ராட்சதர்போல் இரண்டுசித்தர் வப்பனே தனிவாசல் காக்கக்கண்டேன்
தண்டுலகந்தான்புகழும் ரத்னஸ்தம்பம் சட்டமுடன் தானிருக்கக் கண்டேன்தானே
4852.
கண்டேனே யண்டர்முனி சித்துதம்மை கைலாசநாதரென்று வடிபணிந்து
தெண்டமுடன் முடிவணங்கி நமஸ்கரித்து தேற்றமுடன் என்குருவே என்றுசொல்லி
கொண்டுகரங் குவித்தல்லோ தாள்பணிந்து கொற்றவனே பாதுகாக்க வென்றுகூறி
விண்டிடவே நமஸ்கரித்து பாதந்தொட்டு விருப்பமுடன் பணிந்திட்டேன் உண்மைதானே
4853.
உண்மையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
திண்ணமுடன் அடியேனும் குளிகைபூண்டு தீர்க்கமுடன் எட்டாங்கால் வரையிற் சென்றேன்
வண்மையுடன் ரிஷிதேவர் இருவர்தாமும் வளமையுடன் எந்தனையாரென்று கேட்க
திண்ணமுடன் காலாங்கி சீஷனென்றேன் தீர்க்கமுடன் சதாசிவத்தின் சீஷனென்றேனே
4854.
சதாசிவத்தின் சீஷனென்று அடியேன்கூற சட்டமுடன் காவல்நின்ற இருவர்தாமும்
பதாம்புயத்தை யான்நினைக்க எந்தன்மீதில் பட்சமது மிகப்புரிந்து பண்பதாக
கதாயுதங்கள் தான்பிடித்து இருவர்தாமும் காவலரையுட்புகுந்து பின்னேசென்று
நிதாம்பஜமாம் வயிரத்தூண் தனைக்கடந்து விடுதிக்கு முன்பின்னாய் கொடுபோனாரே
4855.
போனதொரு மலைமீதில் யானும்சென்று பொன்னரங்கமானதொரு பொய்கைபக்கம்
தேனமரும் மடவார்கள் சத்தகன்னி தேவியர்கள் வீற்றிருக்கும் பொய்கைகண்டேன்
கானமா தொடையாருங் கன்னிமார்கள் கைலாசநாதரைப்போல் சித்தருக்கு
மானமுடன் திருத்தொண்டு செய்துமல்லோ மகத்தான திருக்கன்னி இருக்கின்றாரே
4856.
இருக்கவே சமாதியது வருகிற்சென்றேன் எழிலான கன்னிமார் எந்தனைத்தான்
பொறுக்கவே யாரென்று என்னைக்கேட்டு பொங்கமுடன் சபிப்பதற்கு எண்ணங்கொண்டார்
உருக்கமுடன் யானுமல்லோ மனதுவந்து வுத்தமியே காலாங்கி சீஷனென்றேன்
வருக்கமுடன் சதாசிவத்தின் சீஷனென்று வளமையுடன் பலகாலும் மொழிந்திட்டேனே

4857.
மொழிந்தேனே எந்தனது வரலாறெல்லாம் முனையான கன்னிமாரானவர்க்கு
வடியோடே யாமுரைக்க மாதுதாமும் வளமையுடன் எந்தன்மேல் பட்சம்வைத்து
பழியதுவும் நேராமல் எந்தனுக்கு பாங்குடனே சமாதிபுறங்கொண்டுசென்று
அழியாத வரமதுவும் எனக்குஓதி வன்பான சமாதியிடஞ் சென்றார்தாமே
4858.
சென்றுமே எந்தனையுங் கொண்டுமல்லோ செம்மலுடன் சமாதிபக்கல் கொண்டுநிற்க
வென்றிடவே சமாதியது பிற்பாகத்தில் விருப்பமுடன் இந்திரனார் யானைக்கண்டேன்
குன்றுமேல் வெள்ளானைத் தன்னைக்கண்டேன் குறிப்புடனே யடியேனும் மனம்நடுங்கி
கன்றுடனே மெய்நடுங்கி நிற்கும்போது நலமான வெள்ளானை கேட்கலாச்சே
4859.
ஆச்சப்பா வெள்ளானை எந்தனைத்தான் வப்பனே யாரென்று கேட்கும்போது
மூச்சொடுங்கிப்போனதொரு காலாங்கிநாதர் முனையான சீஷனென்று யானுரைத்தேன்
மாச்சலுடன் அஞ்சனமாங்கிரியில்வாழும் மகத்தான சதாசிவத்தின் சீஷனென்றேன்
ஆச்சரியமாகவல்லோ குளிகைகொண்டு வன்பாக மலையேறி வந்திட்டேனே
4860.
இட்டதொரு போகரிஷியென்றுசொல்லி எழிலாகத் தாமுரைத்தேன் போகர்யானும்
அட்டகிரி தனில்வாழும் வெள்ளையானை வன்புடனே மனதுவந்து மனங்களித்து
சட்டமுடன் எந்தனையும் தலைமேற்கொண்டு தண்மையுள்ள எட்டாங்கால் தறையிற்சென்று
திட்டமுடன் தேவேந்திரன் சமாதிபக்கல் தீர்க்கமுடன் கொண்டல்லோ விடுகலாச்சே
4861.
ஆச்சப்பா சமாதியிட பக்கல்சென்றேன் வப்பனே யங்கிருக்குஞ் சித்துதன்னை
பாச்சலுடன் குளிகைவிட்டு யானுமல்லோ பண்புடனே சித்தரிடம் நின்றேன்யானும்
வீச்சுடனே அங்கிருக்கும் காவல்சித்தர் வினயமுடன் எந்தனையும் யாரென்றார்கள்
கூச்சலிட சித்துமுனி கூட்டத்தார்கள் கொப்பெனவே எந்தனுக்கு பயன்சொல்வாரே
4862.
சொன்னமொழி தான்கேட்டு தப்பாவண்ணம் சுந்தரமே இமயகிரிக்காணவென்று
நன்னயமாய் குளிகைகொண்டு சீனம்விட்டு நளராஜ இந்திரனைக்காணவென்று
மன்னவனார் காலாங்கி விடையும்பெற்று மகத்தான சதாசிவத்தின் அருளும்பெற்று
உன்னிதமாய் எட்டாங்கால் வரையிற்சென்று வுத்தமனே வந்தேனென்று தொழுதிட்டேனே
4863.
தொழுதேனே எட்டாங்கால் வரையிலப்பா தெதொற்றமுடன் ரிஷிதேவர் முனிவர்தாமும்
பழுதுவரா வண்ணமது யடியேன் நிற்க பட்சமுடன் என்மீதிற்கிருபைகூர்ந்து
மழுவலுடன் தேவேந்திரன் சமாதிதன்னை மகிட்சியுடன் கொண்டல்லோ ரிஷிகள்தாமும்
முழுதுமே சமாதியது பெருமைதன்னை முனையான சித்துமுனி யுரைத்திட்டாரே
4864.
உரைத்தாரே திரேதாயினுகத்திலப்பா வுத்தமனார் தேவேந்திரன் உண்மைதன்னை
திரைப்புடனே கெருகந்தருவரோடும் தீர்க்கமுடன் கிம்புருடர் விஞ்சையோடும்
முரைப்படியே மெல்லிமேனகையினோடும் திலோர்த்தமையாள் ரம்பையோடும்
குறையாமல் ஊர்வசியாள் கன்னியோடும் குவலயத்தில் வெகுகாலம் ஆண்டார்தானே

4865.
தானான தேவேந்திர பகவான்தானும் தரணிபதி யாண்டிருக்கும் காலந்தன்னில்
கோனான பரமசிவன் கடாட்சத்தாலே கொற்றவர்க்கு ஞானமது மிகவுண்டாகி
தேனான மனோன்மணியாள் தரிசனத்தை செம்மலுடன் தேவேந்திரன் தானுங்கண்டு
மானான வையகத்தின் வாழ்க்கைதன்னை மகதேவர் தன்மனதில் நினைத்திட்டாரே
4866.
நினைத்துமே சப்தமேகங்கள்தன்னை நேர்மையுடன் தானழைத்து இந்திரன்முன்
தினையளவு பொன்னதுவும் நேராதப்பா தீர்க்கமுடன் நெடுங்கால மிருந்துமென்ன
மனையுடனே சமுசார வாழ்க்கையற்று வையகத்தை தான்மறந்து இந்திரன்தான்
சினமதுவும் வாராமல் இந்திரன்தான் சிறப்புடனே மேகமது வழைத்தார்காணே
4867.
காணவே மேகமதை தானழைத்து கயிலாய இந்திரனுங் கூறலுற்றார்
பூணவே எந்தனையுங் கொண்டுசென்று புகழான மேருகிரி தன்னிலப்பா
நீணவே எட்டாங்கால் வரையில்தானும் நீதியுடன் சப்தமேகங்கள்யாவும்
காணவே இந்திரனைக் கொண்டுமல்லோ துப்புரவாய் மலைதனிலே செல்லலாச்சே
4868.
ஆச்சப்பா தேவேந்திரன் ஞானம்பூண்டு வப்பனே சமாதிதனில் இறங்கினார்பார்
மாச்சலுடன் ஆயிரத்து எட்டுமாற்று மகத்தான சிம்மாசனந்தான்மறந்து
மூச்சடங்கி தேவேந்திரன் பகவான்தானும் முனையான மலைதனிலே இறங்கியல்லோ
பாச்சலுடன் நெடுங்காலம் இந்திரன்தான் பாங்கான மலைமீதில் இருக்கின்றாரே
4869.
இருக்கின்றார் தேவேந்திரன் பகவான்தானும் எழிலான சமாதிபுரம் நெடுங்காலந்தான்
பொருக்கவே யுந்தனுக்கு உபதேசங்கள் புகலுவார் சிலகால மிங்கிருந்தால்
திருக்கமலம் பாதாரசமாதிபக்கல் தீர்க்கமுடன் நீரிருந்தால் அசரீரிவாக்கு
கருக்காக வுந்தனுக்கு உபதேசங்கள் சுந்தரனே கிடைக்குமென வருள்சொன்னாரே
4870.
சொன்னவுடன் அசரீரி வாக்குண்டாச்சு சுத்தமுடன் சுந்தரனார் போகர்தாமும்
நன்னயமாய் விடைபெற்று குளிகைபூண்டு நாதாந்த சித்தொளிவின் பாதம்விட்டு
மன்னவனார் போகரிஷி ஒன்பதாங்கால் மார்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு
பன்னவே பத்தாங்கால் தன்னின்மட்டும் பாங்குடனே குளிகைகொண்டு சென்றிட்டாரே
4871.
சென்றதொரு காலாங்கிநாதர்பாதம் சிறப்புடனே மேல்வரையிற் சென்றுமல்லோ
குன்றான மலைமீதிற் பத்தாங்காலில் கொற்றவனார் குளிகையது விட்டிறங்கி
வென்றிடவே பச்சைவண்ண புரவிதன்னை விருப்பமுடன் போகரிஷி கண்டேன்யானும்
தென்றிசையாம் ஒன்பதாம் வரையிலப்பா தோற்றமுடன் சென்னிறக் கொக்குதானே
4872.
தானான சென்னிறக் கொக்குதானும் தன்மையுள்ள பச்சைநிறப் புரவிதானும்
பானான ஜோதியுடன் எந்தன்பக்கல் பட்சமுடன் யாரென்று என்னைக்கூற
கோனான காலாங்கி நாதசீஷன் கொற்றவனார் போகரிஷியென்றுமல்லோ
மானான மனோலயத்தை யுறுதிபூண்டு மகிழ்ச்சியுடன் தானுரைத்தேன் வளமைகேளே

4873.
கேளப்பா புலிப்பாணி சொல்லும்போது கெவனமுடன் பச்சைவண்ணப்புரவிதானும்
ஆளப்பா சென்னிறக் கொக்கோடொக்க வப்பனே எந்தனுக்கு வார்த்தைகூறும்
மாளப்பா யுந்தனைத்தான் சபிப்பேனென்று வார்க்கமுடன் இருபேருங் கூறலாச்சு
நானப்பா போகாமல் யானடுங்கி நலமுடனே முடிசாய்த்து வணங்கிட்டேனே
4874.
வணங்கியே எந்தனுக்கு மனதுவந்து மகத்தான பட்சியுடன் புரவியோடும்
இணங்கவே சதுர்முகப்பிர்மாவின்தன் யெழிலான சமாதியது அங்கிருக்க
மணங்கமழும் கிரிமீதில் வந்ததாலே மார்க்கமுடன் எந்தனையுங் கொல்வோமென்று
கனமுடனே புரவியது யனுமானித்து கண்மணியே எந்தனையுங் கொல்லலாச்சே
4875.
கொல்லவே எந்தனிடம் வந்தபோது கொப்பெனவே யடிவணங்கி முடிகள்சாய்த்து
புல்லவே காலாங்கி தனைநினைத்து புகழ்ச்சியுடன் உத்தாரங்கூறும்போது
வெல்லவே எந்தனுக்கு விடையுந்தந்து விட்டகுறை யிருந்ததொரு புண்ணியத்தால்
கல்லாக சபிக்கவந்த எந்தனைத்தான் காத்து ரட்சிக்க மனங்கொள்ளலாச்சே
4876.
கொள்ளவே சதுர்முகனார் சமாதிபக்கல் கொற்றவனே எந்தனையுங் கொண்டுசென்று
விள்ளவே கிரேதாயினுகத்திலப்பா விருப்பமுடன் சமாதிமுகம் இறங்கியல்லோ
உள்ளபடி நெடுங்கால மிருந்தசித்து ஓகோகோ நாதாக்களறிந்ததில்லை
கள்ளமன மில்லாத காயசித்து கடுஞ்சித்து சதுர்முக சித்துமாமே
4877.
சித்தான சதுர்முக பிர்மாதன்னை சிறப்புடனே யடியேனுங் காணவென்று
முத்தான கிரிதனிலே நெடுங்காலந்தான் மூர்க்கமது வாராமல் நானிருந்தேன்
பத்தியுடன் சமாதிபுரம் நிற்கும்போது பாங்கான வசரீரி வாக்குண்டாச்சு
சத்தியவான் சதுர்முக பிர்மாவின்தன் சதுரான வார்த்தைதனைக் கேட்டேன்பாரே
4878.
பாரேதான் சதாசிவனார் ரிஷிகள்தம்மின் பாங்கான காலாங்கி சீஷனென்றேன்
சீரோடு எந்தன்மேல் மனதுவந்து சிறப்புடனே எந்தனுக்குக் காயகற்பம்
தீரேதான் கிரிதனிலே இருக்கும்தானம் தீர்க்கமுடன் எந்தனுக்கு ஓதினார்கள்
ஆரோதான் சொன்னார்போல் அசரீரிவாக்கு வப்பனே மலைமீதிற் கேட்கலாச்சே
4879.
கேட்டவுடன் அடியேனும் மனதுவந்து கெவனமுடன் காயாதிகற்பந்தன்னை
தாட்டிகமாயுண்டுமல்லோ மகிமைபூண்டு தாரணியில் மேல்வரைசெல்லுதற்கு
வாட்டமுடன் எந்தனுக்கு நேத்திரங்கள் வளமுடனே ஜோதிமின்னல் கண்டாற்போல
நீட்டமுடன் பிரகாச வொளியுண்டாச்சு நீதியுடன் பதினோராங்கால் சென்றேனே
4880.
சென்றேனே இமயகிரி பர்வதத்தில் சிறப்பான பதினோராம் வரையிற்சென்றேன்
குன்றான மலையேறிக் குளிகைகொண்டு கொற்றவனே பதினோராம் வரையிற்சென்றேன்
வென்றிடவே யன்னமென்ற பட்சிதன்னை வீரான குகைதனிலே கண்டேன்யானும்
வென்றிடவே எந்தனையும் எண்ணங்கொண்டு கொற்றவனே யருகதனிற் செல்லலலாச்சே

4881.
செல்லவே எந்தனையுங் கண்டபோது சீறியே சினமதுவும் மிகவுமாகி
புல்லவே யன்னமது எந்தனைத்தான் புகழுடனே யாரென்று வினவிக்கேட்க
நல்லதொரு வன்னத்தை யானுங்கண்டு நயமுடனே காலாங்கி சீஷனென்றேன்
வல்லதொரு வன்னமது எந்தனுக்கு வாகுடனே எந்தன்மேல் இரங்கலாச்சே
4882.
இரங்கியே எந்தனையுங் கொண்டனைத்து யெழிலாக எந்தனுக்கு வினயஞ்சொல்லி
கரங்கொடுத்து எந்தனையும் ஆசீர்மித்து கைலாசபட்சியல்லோ அன்னமப்பா
சாங்கமதுக் குள்ளிருக்கும் ரிஷியார்தாமும் சுந்தரனே ஜம்புமகாரிஷியாருக்கு
வரங்கொடுத்த பிரகார மவருக்கல்லோ மன்னவனே பணிவிடைக்கு ஆளானேனே
4883.
ஆளாகி தேவேந்திரன் சாபத்தாலே யன்னமென்ற பட்சியது வுருவமாகி
நாளாகி நெடுங்காலம் நானிருந்து நாயகனே சாபமது நிவர்த்திசெய்து
மாளாத வரம்பெற்று யானுமல்லோ மகத்தான ரிஷிகளிடம் விடையும்பெற்று
தூளான பதாம்புயத்தை யான்வணங்கித் துப்புரவாய்ச் செல்வதற்கு நாளுமாச்சே
4884.
ஆச்சப்பா போகரிஷிநாதாகேளு வப்பனே யுந்தனுக்கு உபதேசங்கள்
மாச்சலுடன் செய்யுகிறேன் உந்தமக்கு மகத்தான ஜம்புமகா ரிஷியுன்பக்கல்
பாச்சலுடன் கொடுபோயி விடுவேனென்று பகர்ந்திடவே யன்னமது யெந்தனுக்கு
ஆச்சரிய மாகவல்லோ தானுரைக்க வப்பனே குகைதனிலே சென்றேன்பாரே
4885.
பாரேதான் புலிப்பாணி மைந்தாகேளு பாங்குடனே ஜம்புமகாரிஷியைக்கண்டேன்
ஆரென்று எந்தனையும் வினவிக்கேட்க வப்பனே காலாங்கி சீஷனென்றேன்
நேரேதான் நெடுங்காலஞ் சென்றசித்து நேர்மையுடன் என்மீதிற் கிருபைகூர்ந்து
வேரேதான் எந்தனது சமாதிபக்கல் விருப்பமுடன் வருகுவதும் மெய்யேபாரே
4886.
மெய்யென்று விட்டகுறையுந்தமக்கு மேதினியில் இருந்ததொரு தன்மையாலே
பொய்யான தேகமது நீர்படைத்து பொங்கமுடன் இவ்விடத்தில் வந்தீரப்பா
வையகத்தில் தானிருக்கும் மாந்தரல்லோ வளமுடனே வருகுதற்கு நீதியுண்டோ
துய்யபுகழ் சுந்தரனே யுந்தனுக்கு துப்புறவாய் யோகசித்து கிட்டலாச்சே
4887.
கிட்டவே சிறுபாலா மைந்தாகேளு கீர்த்தியுள்ள வையகத்தில் கோடிசித்தர்
அட்டதிசை தான்புகழும் அனேகசித்து வப்பனே யுனைக்கண்டால் விடுவாரோசொல்
திட்டமுடன் சாபமது யுந்தமக்கு தீர்க்கமுடன் தான்கொடுத்து சபிப்பாரப்பா
வட்டமுடன் உந்தனுக்கு ஞானயோகம் வண்மையுடன் தான்கொடுத்தேன் மகிமைகேளே
4888.
கேளேதான் காலாங்கி நாதர்பாதா கெவனமுள்ள சதாசிவனார் அருளும்பெற்று
நாளேதான் போகாமல் மானிலத்தில் நலமுடனே சித்துவிளையாடும்பாலா
வாளான குளிகையது உந்தமக்கு வளமுடனே யான்தருவேன் போகநாதா
பாளேதான் போகாமல் மனதுவந்து பட்சமுடன் குளிகையது கொள்வீர்தானே

4889.
தானான குளிகையது கொண்டுமல்லோ தண்மையுடன் அடியேனும் அருளும்பெற்று
கோனான குருபதத்தை மனதிலுன்னி கொற்றவனே யடியேனுங் கொண்டுமல்லோ
தேனான மனோன்மணியை தெரிசித்தேதான் தேற்றமுடன் பனிரெண்டாம் வரையிற் சென்றேன்
மானான குளிகைவிட்டு யானுமல்லோ மகத்தான கிரிதனிலே இறங்கினேனே
4890.
இறங்கியே மேருகிரி தன்னிற்சென்றேன் எழிலான காமதேனு தன்னைக்கண்டேன்
திறமான காமதேனே என்னைக்கண்டு தீர்க்கமுடன் யாரென்று வினவிக்கேட்க
சிறகுடைய காமதேனு தன்னைப்பார்த்து சிறப்புடனே காலாங்கி சீஷனென்றேன்
குறமாது என்போல ரூபங்கொண்டு கொற்றவனே எந்தனையுஞ் சீறலாச்சே
4891.
சீறவே யடியேனும் மனதொடுங்கி சீர்பாதம் முடிவணங்கி தாள்பணிந்து
ஆறவே மனதுவந்து கரங்குவித்து வப்பனே யடியேனும் சாஷ்டாங்கித்தேன்
மீறவே எந்தனுக்கு உபதேசங்கள் துக்கமனு நீதிமுறையாவுங்கூறி
மாறலுடன் பனிரெண்டாம் வரையிலப்பா மகத்தான சமாதியிடம் கொடுபோகலாச்சே
4892.
ஆச்சப்பா வசிட்ட மகாரிஷியின்பக்கல் வப்பனே யானல்லோ சென்றுநின்றேன்
மூச்சடங்கி சமாதிதனில் இருந்தசித்து முனையான வசிட்டமகா ரிஷியார்தாமும்
பேச்சடங்கி வெகுகால மிருந்தசித்து பிரியமுடன் எந்தனுக்கு உபதேசங்கள்
மாச்சலது வாராமல் குளிகைதன்னை மகத்தான சாரணைகள் கூறலாச்சே
4893.
கூறவென்றால் சாரனைகள் என்னசொல்வேன் கொப்பெனவே வசிஷ்டமகாரிஷியார்தாமும்
மாறலுடன் குளிகைக்கு வுறுதிசொல்லி மகத்தான சாரனைகள் மிகவுஞ்செய்து
ஆறவே எந்தனுக்கு வதிதங்கூறி வப்பனே குளிகையிட மார்க்கங்கூறி
சேறவே மகமேரு தன்னிலப்பா தேற்றமுடன் செல்கவென்று வரந்தந்தாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

4901.
கூறவென்றால் சாரனைகள் என்னசொல்வேன் கொப்பெனவே வசிஷ்டமகாரிஷியார்தாமும்
மாறலுடன் குளிகைக்கு வுறுதிசொல்லி மகத்தான சாரனைகள் மிகவுஞ்செய்து
ஆறவே எந்தனுக்கு வதிதங்கூறி வப்பனே குளிகையிட மார்க்கங்கூறி
சேறவே மகமேரு தன்னிலப்பா தேற்றமுடன் செல்கவென்று வரந்தந்தாரே
**4902.**
தந்தாரே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தயவான புலிப்பாணி மைந்தாகேளு
தெந்தமுடன் அடியேனுங் குளிகைகொண்டு துப்புரவாய் மேருகிரி தன்னிற் சென்றேன்
அந்தமுடன் பதிமூன்றாம் வரையிற்சென்று அவ்வரையில் விநாயகரைக் காணவென்று
விந்தையுடன் அடியேனும் மனதுவந்து வஇருப்பமுடன் குளிகைகொண்டு சென்றேன்தானே
**4903.**
தானான குளிகைகொண்டு காலாங்கிநாதர் தண்மையுடன் குருதனையே நினைந்து
கொண்டு
தேனான பதிமூன்றாம் வரையிற் சென்றேன் தோற்றமுடன் விநாயகரின் சமாதிகாண
கோனான தும்பிக்கை யுடைய மாண்பன் கொற்றவனாங் கணபதியாமென்ற சித்து
மானான மகதேவரென்னுஞ்சித்து மகத்தான சமாதிபதி கண்டிட்டேனே
**4904.**
கண்டேனே சமாதியிட பக்கந்தன்னில் கருவான சித்துமுனி கோடாகோடி
விண்டதொரு நாதாக்கள் கூட்டந்தன்னை விருப்பமுடன் யான்கண்டு மனதுவந்து
தெண்டமுடன் அடியேனும் முடிகள்சாய்ந்து தேற்றமுடன் பதாம்புயத்தை பணிந்துநின்று
கொண்டனைத்து எந்தனுக்கு விதிகள்கூறி குருவான விநாயகரைக் காண்பிப்பீரே
**4905.**
காண்பிக்கவேண்டுமென்று அடியேன்தானும் கனமான சித்துகளை வினவும்போது
வீண்பாலா வுந்தனையும் சபிப்பேனென்று வினவுடனே சித்துமுனி கூறும்போது
ஆண்மையுள்ள ரிஷிதேவர் அனைவோருக்கும் வப்பனே ஆதரிக்கவென்றுசொல்லி
கேண்மையுடன் அடியேனுங் காலாங்கிதன்னை கீழ்மையுடன் அடியேனும்
நினைந்திட்டேனே
**4906.**
நினைத்தேனே எந்தனையும் ஆதரித்து நிலையான பதின்மூன்றாம் வரையிற்கொண்டு
கனைபோன்ற விநாயகரின் சமாதிபக்கல் சுத்தமுடன் கொண்டுமல்லோ சித்துதாமும்
தினையளவு குற்றமது நேராமல்தான் தீரமுடன் எந்தனுக்கு வுளவுகூறி
பனையளவாய் வுயரமது குளிகைபூண்டு பார்த்தேனே விநாயகரின் சமாதிகாணே
**4907.**
காணவே விநாயகரின் சமாதிகண்டேன் கருவான சமாதியது மூடவில்லை
பூணவே யங்குசமும் ஒத்தைக்கொம்பும் புகழான யானைமுகம் தன்னைப்போலே
ஊணவே பூமிதனில் சமாதிபூண்டு உறுதியுடன் இருகரமு மேந்திகொண்டு
காணவே வெகுகால மிருந்தசித்து மகத்தான மூன்றுயுகங் கண்டசித்தே
**4908.**
சித்தான சித்துமுனி விநாயகன்தான் சிறப்பான மேருகிரி தன்னிலப்பா
முத்தான பதிமூன்றாம் வரையில்தானும் முனையான குளிகையினால் கண்டுவந்தேன்
பத்திதரும் நெடுங்கால மிருந்தசித்து பாருலகில் சாத்திரத்தின் முதலாஞ்சித்து
வெத்திபெறும் விநாயகரின் சித்துதம்மை வேகமுடன் மேருவரை பார்திட்டேனே

4909.
பார்த்தேனே யின்னமொரு மகிமைசொல்வேன் பாங்குடனே பதினான்காம் வரையிற்சென்றேன்
தீர்த்தமுடன் மேருகிரி தன்னிலப்பா திறமான சிவலிங்கப்பதியைக்கண்டேன்
ஆர்த்தியுடன் கோடியேரிஷிகளப்பா அம்மலையில் சூழ்ந்திருக்க யானுங்கண்டேன்
மூர்த்தியுடன் திருமூர்த்தி சொரூபரோடும் முனையான சிவலிங்கங் கண்டிட்டேனே
4910.
சிவலிங்கங்கண்டேனே யதற்குமேலே திருவான சிவலிங்கம் பதினாயிரத்தெட்டு
தவமுடனே நாதாக்கள் ரிஷிகள்தாமும் தண்மையுடன் சிவலிங்கந்தன் தானானோக்க
பவமகற்றி யர்ச்சனைகள் மிகவுங்கூறி பாங்குடனே நாதாக்கள் இருப்பாரங்கே
குவலயத்தில் மற்றொருவர் காணாமற்றான் கொற்றவனே பதினைந்தாம் வரைசென்றேனே
4911.
சென்றேனே புலிப்பாணி மைந்தாகேளு சிறப்பான காலாங்கி கடாட்சந்தன்னில்
குன்றேறி குளிகைதனைக் கொண்டுமல்லோ கொற்றவனே மேருகிரி தன்னிற்சென்றேன்
அன்றுரித்த மான்தோலும் புலித்தோலுமாக வப்பனே வாயிரம்பேர் ரிஷிகள்கண்டேன்
தென்றிசையில் அகஸ்தியனார் முனிவர்போலும் தேற்றமுடன் ஆயிரம்பேர் ரிஷிகண்டேனே
4912.
கண்டேனே பதினைந்தாம் வரையிலப்பா கயிலாச நாதருட சீஷவர்க்கம்
பண்டுபோல் மேனியது ஜோதிமின்ன பாங்குடனே தேவரிஷி வாயிரம்பேர்
கொண்டல்லோ பாரிஜாத புட்பந்தன்னை கொம்பனையாள் மனோன்மணியாள் தன்றனக்கு
தொண்டுடனே யர்ச்சனைகள் மிகவுங்கூறி தோறாமல் யாகமது செய்வார்பாரே
4913.
பாரேதான் யாகமதுசெய்துகொண்டு பாங்குடனே சித்துமுனி இருக்கும்போது
நேரேதான் பதினைந்தாம் வரையில்யானும் கெடிதான குளிகைகொண்டு செல்லும்போது
தீரேதான் ஆயிரம்பேர் சித்துதாமும் தீர்க்கமுடன் எந்தனையும் கண்டுமல்லோ
சோரேதான் எந்தனது பக்கல்வந்து சிறப்புடனே யாரென்று கேட்டிட்டாரே
4914.
கேட்டவுடன் அடியேனும் காலாங்கிதம்மை கிருபையுடன் யென்மனதில் எண்ணங்கொண்டு
வாட்டமுடன் அவர்பாத சீஷனென்றேன் வளமையுடன் எந்தனுக்கு யிதவுகூறி
நீட்டமுடன் பதினைந்தாம் வரையில்தானும் நீதிதப்பி வந்ததினால் உந்தமக்கு
தாட்டிகமாய் சாபமது வந்துசேரும் தயவுள்ள பாலகனே என்றிட்டாரே
4915.
என்றுமே கூறலுமே யடியேன்தானும் எழிலான காலாங்கி கடாட்சத்தாலே
குன்றுமே சாபமதை நிவர்த்திசெய்து குளிகைகொண்டு ரிஷியாரை யானுங்கண்டு
வென்றிடவே எந்தனையும் ஆதரித்து வேகமுடன் கோபமதை நிவர்த்திசெய்து
தென்றிசையில் கும்பமுனி தன்னைப்போலே தேற்றமுடன் எந்தனையும் ஆட்கொள்வீரே
4916.
கொள்ளவே யடியேனும் மனதுவந்து கோடியுகம் தவஞ்செய்யும் ரிஷியார்தம்மை
மெள்ளவே யடியேனும் தாள்பணிந்து வேதாந்த தாயி மனோன்மணியாள் தன்னை
தெள்ளமுர்தமானதொரு ஜோதிபீடம் தேற்றமுடன் அடியேனும் தான்பணிந்து
உள்ளபடி எந்தனுக்கு தெரிசனத்தை வுத்தமரே காட்டவென்று பணிந்திட்டேனே

4917.
பணிந்துமே நிற்கையிலே சித்தர்தாமும் பான்மையுடன் பதினைந்தாம் வரையின்மேலே
துணிவுடனே யடியேனைத் தாமழைத்து துப்புறவாய் மனோன்மணியாள் பீடந்தன்னை
கணிதமுடன் எந்தனுக்குக் காண்பித்தல்லோ கைலாச மனோன்மணியாள் ரூபந்தன்னை
துணிந்திடவே கண்டவர்கள் யாருமில்லை துப்புரவாய் ஜோதிமயங் காணலாச்சே
4918.
ஆச்சப்பா வையகத்தில் வெகுகோடி சித்து அம்தகையாள் மனோன்மணியைக் கண்டதில்லை
மூச்சடங்கி சென்றதொரு நெடுங்கால் சித்து மூதுலகில் யாரேனுங் கண்டதில்லை
பாச்சலுடன் மனோன்மணியாள் சொரூபவொளி கண்டசித்து மகத்தான வனந்தசித்து கோடியுண்டே
4919.
கோடானகோடியும் நாலுயுகமப்பா குவலயத்தில் மனோன்மணியைக் கண்டதில்லை
நாடாண்மைதனில் வாழும் ரிஷிகள்தேவர் நலமான சித்துமுனி நாதர்தாமும்
காடாண்மை கொண்டதொரு மனோன்மணியாள்ரூபம் தாரணியில் யாவருந்தான் கண்டதில்லை
பாடாண்மை கொண்டதொரு ஜோதிமயந்தன்னை பாருலகில் கண்டவர்கள் கோடிபேரே
4920.
பேரான திருக்கமலம் வீற்றிருக்கும் பெருமையுள்ள மனோன்மணியாள் பீடந்தன்னை
கீரான சித்துமுனி நாதர்தாமும் சிறப்புடனே பாடிவைத்தார் பலநூல்தன்னில்
நேரான சாத்திரத்தின் வுளவுகண்டோர் நேர்மையுடன் சின்மயத்தை மனதிலுன்னி
ஆரான பீடமென்ற ஆராதாரம் வப்பனே யொடுங்கிநின்ற சமாதிதானே
4921.
தானான சமாதிநிலை நின்றுகொண்டு தன்மையுள்ள ஓங்காரந்தன்னைநோக்கி
கோனான குருபதத்தை மேலேயுன்னி கும்பகத்தை மேல்நோக்கி பதியமர்ந்து
தேனான மனோன்மணியைக் காணவல்லோ தேசத்தில் வெகுமாண்பர் சிவயோகிதானும்
பானான பராபரத்தை தியானித்தேதான் பான்மையுடன் நெடுங்காலம் தவம்செய்வாரே
4922.
செய்தாலும் மனோன்மணியைக் காண்பதில்லை தேசமதில் நாலுயுகங் கடந்தாலென்ன
வையகங்கள் தான்முழுதும் அழிந்திட்டாலும் புகழுஞ்சித்தர் புகழான ஜோதிமயங் காண்பதல்லால்
மெய்யான ரூபமதைக் காண்பதேது வேதாந்த நூல்களிலுஞ் சொன்னார்தாமே
4923.
சொன்னாரே சித்துமுனி ரிஷியார்தானும் துப்புரவாய் எந்தனுக்கு சொன்னார்கோடி
தென்னான கும்பமுனி கூறும்நூலில் தோற்றமுடன் உபதேசம் சொன்னார்போலும்
நன்னயமாய் எந்தனுக்கு வேதங்கூறி நாதாந்த காலாங்கி பெயரைமாறி
உன்னிதமாய் உபதேசஞ் செய்துமல்லோ உவமையுடன் விடையெனக்கு தந்திட்டாரே
4924.
தந்தாரே ஜோதிமயந்தன்னைக்கண்டு தன்மையுடன் கிரிதனிலே விடையும்பெற்று
அந்தமுடன் பதினாறாம் வரையிற்காண வன்புடனே குளிகையது பூண்டுகொண்டு
சொந்தமுள்ள காலாங்கி நாதர்தம்மை சுந்தரனார் பதாம்புயத்தை மனதிலுன்னி
இந்தவரை விட்டுமல்லோ மேலேயப்பா எழிலான கிரிபோக வெண்ணினாரே

4925.
எண்ணினேன் பதினாறாம் வரையைக்காண யெழிலான மேருகிரிதன்னில்யானும்
குண்ணான மலையதுவும் குகைகள்தாண்டி கொற்றவனே சுனையதுவும் கடந்துமேதான்
தண்ணான கிரிவளத்தைக்காணவென்று தாக்குடனே குளிகையது பூண்டுகொண்டு
கண்ணான காலாங்கிநாதர்தம்மை கருத்திலே மனதுவந்து நடத்திட்டேனே
4926.
நடந்தேனே இமயகிரி தன்னிலப்பா நலமான மேருகிரி சாரலோரம்
கடந்தேனே பதினாறாம் வரையில்தானும் கருவான சுனையுண்டு தடாகமுண்டு
அடந்ததொரு சுனையருகே சுரங்கமுண்டு அதன்புறத்தே யிருளடைந்த சோலையுண்டு
தொடர்ந்ததொரு சித்துமுனி நாதர்கூட்டம் தோறாத சீஷவர்க்க மனேகமுண்டே
4927.
உண்டான மலைதனிலே கோடிசேனை உலகமதில் மெத்தவுண்டு சொல்லொண்ணாது
அண்டர்முனி ராட்சதர்கள் இருக்கும்நாடு அடைவான நாளதனில் அதிசயத்தை
கண்டதொரு காரியங்கள் என்னவென்றால் கடிதான வதிசயத்தை என்னசொல்வேன்
தொண்டனைப்போல் அடியேனும் குளிகைபூண்டு துப்புரவாய் வெகுகால மிருந்திட்டேனே
4928.
இருந்தேனே கானகத்தின் வழியில்தானும் எழிலான குகையோரம் தன்னில்நின்றேன்
குருந்தமரந் தன்னருகே சித்துதாமும் கொப்பெனவே சீஷவர்க்கம் தன்னிற்சேர்ந்து
பொருந்தவே நெடுங்காலந் தவமிருந்து பொங்கமுடன் சுனையோரம் சாரல்தன்னில்
விருந்தமுர்தமான தொருபசளைதன்னை விருப்பமுடன் சித்துமுனியும் பார்த்தாரே
4929.
தானான கறுப்பசளை யுண்டபோது தகமையுள்ள சித்துமுனி ரிஷியார்தாமும்
கோனான குருசொன்ன மூலிதன்னை கூறான சித்துமுனி நாதர்தாமும்
பானான மூலிதன்னை அந்திசந்தி பாகமுடன் தானிருந்து வருங்காலத்தில்
மானான மூலியது முனிவருக்கு மகத்தான இலையதுவும் பதினாரெட்டே
4930.
எட்டான மூலிதனை சித்துதாமும் எழிலான அந்திசந்தி காயகற்பம்
திட்டமுடன் சதாகாலங் கொள்ளும்போது திரமான மூலியது ஒருநாள்தன்னில்
பட்டமரந் தனிலல்லோ தழைகள்மென்று பாங்குடனே தானிருக்கும் வண்மைதன்னை
தொட்டவர்கள் யாரென்று சித்துதாமும் தோற்றமுடன் வுள்ளமதில் எண்ணிட்டாரே
4931.
எண்ணியே நாதாந்த சித்துதாமும் யெழிலான மூலியது சென்றபேர்க்கு
கண்ணமுடன் ஞானமென்ற குளிகைதன்னால் தகமையுடன் தான்பார்க்கும் வேளைதன்னில்
வண்ணமுடன் கரும்பசுவும் மலையோரத்தில் மார்க்கமுடன் தினந்தோறும் மேய்ந்துமல்லோ
புண்ணியனார் சித்துமுனி வைத்தமூலி புகழான காயாதி கற்பந்தின்னலாச்சே
4932.
தின்னவே காயாதி கற்பமூலி நீரமுடன் எந்தனுக்கு வாய்த்ததாலே
மன்னவனார் தேவாதி சித்துதாமும் மார்க்கமுடன் விட்டகுறை இருந்ததாலே
பன்னவே காயாதி கற்பமூலி பாங்குடனே வாய்த்துதென்று மனதிலுன்னி
தென்பொதிகைத் தனிலமைந்த கதையைப்போலும் தேவனது கடாட்சமதால் வாய்க்கலாச்சே

4933.
ஆச்சென்று கரும்பசுவும் மனதிலெண்ணி ஆண்மைகொண்டு இருக்குமந்த காலந்தன்னில்
மூச்சடங்கி தானிருக்கும் மாயாசித்து முனையான கரும்பசுவைத் தன்னைப்பார்த்து
மாச்சலென்ற சினமதுவு மதிகமாகி மகத்தான சாபமது கொடுத்தபோது
கூச்சலுடன் கரும்பசுவும் மண்ணில்வீழ்ந்து கொப்பெனவே யலறியல்லோ விழுகலாச்சே
4934.
விழுந்துமே காராவும் கதறும்போது விருப்பமுடன் கன்றதுவும் ஓடிவந்து
அழுதுமே காராவைத்தான்முகந்து அலறியே பசளையென்ற மூலிதன்னை
தொழுதுமே சித்துமுனி பாதந்தன்னில் துப்புறவாய் வாய்தனிலே யூட்டும்போது
பழுதுபடா சித்துமுனி மனதுவந்து பான்மையுடன் விசனமது கொண்டிட்டாரே
4935.
கொண்டுமே மனக்கவலை யதிகமாகி குவலயத்தில் பசுதனையே கொன்றதாலே
விண்டுமே பாவமது நேரலாச்சு வீண்பழிக்கு ஆளாகினோம் விண்ணிலப்பா
துண்டரிகமானதொரு கோபத்தாலே துப்புறவாய் விசனமது வதிகமாகி
பண்டுளவு மாலையணி கிருஷ்ணபூபன் பட்சமுடன் தான்வளர்த்த கோவுமாமே
4936.
தேதான ரத்னகிரி மலையிலப்பா கொப்பெனவே நாதாக்கள் கண்டதுண்டு
ஆவலுடன் தாயுடனே கன்றுமாக ஆண்மையுடன் கிரிதனையே சுற்றிமேய்ந்து
பாவமது நேராமல் நாதர்கட்கு பான்மையுடன் தானடக்கும் கோவுமல்லோ
சாவதுவும் நேர்ந்ததொரு துன்தையாலே சாங்கமுடன் சித்துமுனி புலம்பிட்டாரே
4937.
புலம்பியே மனந்தேறி சித்துதாமும் புகழான காராவின் பசுவுக்கல்லோ
நலம்பெறவே சாபமதை நிவர்த்தி செய்து நன்மையுடன் காராகன்றுக்கேதான்
ஜலமதுவும் குகைதனையே தானுங்கண்டு சட்டமுடன் இரப்பதற்கு புலமுங்கண்டு
வலம்பெரிய கானகத்தில் நெடுங்காலந்தான் வளமையுடன் வாழ்கவென்று வரந்தந்தாரே
4938.
தந்தாரே பதினாறாம் வரையிலப்பா தன்மையுடன் காராவின்கன்றுதானும்
சொந்தமுடன் அவ்வரையிலிருக்கக்கண்டேன் சுந்தரனே புலிப்பாணி மைந்தாகேளு
விந்தையுள்ள காதைதனை வையகத்தில் விட்டகுறை இருந்தவர்க்கு யெய்துமென்று
அந்தமுடன் என்மனதில் எண்ணியல்லோ வப்பனே குளிகைகொண்டு பறந்திட்டேனே
4939.
பறந்தேனே இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாங்கான புலிப்பாணி மைந்தாகேளு
இறந்ததொரு காராவின் பசுவின்காதை எழிலாக குளிகைகொண்டு வறிந்தமட்டும்
துறந்தேனே சொல்லிவிட்டேன் உண்மையாக துப்புரவாய் பதினேழாம் வரையில்சென்றேன்
சிறந்ததொரு வதிசயங்கள் சொல்வேனப்பா துப்புரவாய் மனதுவந்து கேட்பீர்தானே
4940.
தானான மேருகிரி தன்னிலப்பா தாக்கான விஷ்ணுவின் சமாதிதன்னை
கோனான என்குவாங் காலாங்கிநாதர் கொற்றவனார் சொரூபரது கடாட்சத்தாலே
கேனான மலைமேலே சென்றேனங்கே தேற்றமுடன் பதினேழாம் வரையிற்கிட்டி
மானான மகதேவர் கடாட்சத்தாலே மார்க்கமுடன் குளிகைகொண்டு நின்றிட்டேனே

4941.
நின்றேனே பதினேழாம் வரையிலப்பா நீதியுள்ள சித்துமுனி கோடாகோடி
குன்றினிலே எந்தனையுங் கண்டுமல்லோ கொப்பெனவே யாரென்று வினவிக்கேட்க
வென்றிடவே யடியேனும் பயந்தொடுங்கி விருப்பமுடன் பதாம்புயத்தை பணிந்துநின்று
சென்றேனே மகாவிஷ்ணு சமாதிதன்னை சேர்வை யெனக்கருள்தருக வென்றேன்தானே
4942.
தானான பதாம்புயத்தை பணிந்துகேட்க தகமையுடன் சொரூபமுனி சித்துதாமும்
மானான மகாவிஷ்ணு தன்னைக்காண மானிலத்திலாராலும் ஆகுமோசொல்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் நெடுங்காலங் கார்த்திருந்தார்
பானான பதாம்புயத்தைக் காணுதற்கு பாருலகில் யாராலும் முடியாதென்றே
4943.
முடியாத மகத்துவங்கள் உந்தமக்கு மூதுலக்லி கிட்டாது யாருக்கன்று
அடியார்கள் சிவகூட்ட மாண்பரோடும் அம்மலையில் நெடுங்காலம் கார்த்திருந்தார்
படிதோறும் நாதாக்கள் காவலுண்டு பதாம்புயத்தைக் காணுதற்கு முடியாமற்றான்
கெடியான மேருகிரிதன்னைநீக்கி கெவனமுடன் குளிகைகொண்டு இறங்கினாரே
4944.
இறங்கினார் என்றல்லோ எந்தனுக்கு எழிலான சித்துமுனி ரிஷியார்தாமும்
உம்முடைய வார்த்தையது கூறும்போது ஓகோகோ நாதாக்கள் காண்பியார்கள்
திறமுடைய எந்தனது வலுமையாலே தீர்க்கமுடன் அடியேனுங் குளிகைகொண்டு
சிறகுடைய பட்சியது போலேயானும் சீறுடனே மேல்வரையிற் சென்றேன்பாரே
4945.
பாரேதான் மகாவிஷ்ணு சமாதிபக்கம் பட்சமுடன் அடியேனுஞ் சென்றுவந்து
நேரேதான் சமாதியது மேலேநோக்கி நிட்களங்கமானதொரு சொரூபர்தம்மை
தீரேதான் திரிகர்ண சொரூபமூர்த்தி திகழுடனே எந்தனுக்கு இதவுகூறி
வேரேதான் கதியெனக்கு என்னவென்று விட்டகுறை இருந்ததினால் வந்திட்டேனே
4946.
வந்தேனே எந்தனுக்கு சொரூபநாதா வரமுடனே காட்சியது தருகவென்று
நொந்துமனந்தானுருகி தாள்பணிந்து நொடிக்குள்ளே சிரங்குனிந்து பணிந்தபோது
அந்தமுடன் மகதேவர் விஷ்ணுதாமும் அங்ஙனவே யசரீரிவாக்குகூற
மந்தமுடன் அடியேனுங் கால்நடுங்கி பட்சமுடன் உபதேசங் கேட்டிட்டேனே
4947.
கேட்டேனே மகதேவர் மனமிறங்கி கிருபையுடன் என்மீதில் மனதுவந்து
நாட்டமுடன் அசரீரிவாக்காலப்பா நயமுடனே எந்தனுக்கு வேகங்கூறி
நீட்டமுடன் காலாங்கி நாதசீஷர் நீதியுடன் நெடுங்காலங் குளிகைபூண்டு
தாட்டிகமாய் வையகத்தில் இருந்தாயப்பா தண்மையுள்ள குளிகையது வலுமைகாணே
4948.
காணவே இமயகிரி தன்னிலப்பா கருவான சித்தர்களும் முனிவருண்டு
பூணவே நாதாக்கள் வலுமையுண்டு புகழான மேருகிரி தன்னிலப்பா
ஆணவங்கள் கொண்டல்லோ குளிகைபூண்டு யவனியெலாம் சுற்றிவந்தாய் மகிமையாலே
வேணதொரு தேசாதி தேசமெலாம் வேகமுடன் மலைநதிகள் வென்றிட்டாயே

4949.
வென்றுமே நெடுங்காலந் தானிருந்து வேகமுடன் சீனபதிக்கேகியல்லோ
சென்றுமே சீனபதி மாண்பருக்கு செயலான மகிமையெல்லா மனைத்துங்கூறி
குன்றான மேருகிரி தன்னிலப்பா கொற்றவனே குளிகைகொண்டு வந்தாய்நீயும்
இன்றுநீ வந்ததினால் உந்தனுக்கு எழிலான வுபதேசங்கூறுவேனே
4950.
கூறுவேன் எந்தமக்கு என்றுவல்லோ குவலயத்தில் சித்தர்முனி காணாவண்ணம்
மாறுபட சித்துமுனி யுளவுகூறி மார்க்கமுடன் கையெனக்கு விடையுங்கூறி
தேறுதலாய் ஞானோபதேசஞ்சொல்லி தெளிவுறவே பதினெட்டாம் வரையிற்செல்ல
ஆறுதலஞ் சிராமவரை முடியைக்காண வன்புடனே எந்தனுக்கு வருள்தந்தாரே
4951.
அருளான விடையதுவும் பெற்றுமேதான் வன்பான குளிகையது யானும்பூண்டு
இருளான மலைதனிலே யான்கடந்து எழிலான பதினெட்டாம் வரையிற் சென்றேன்
மருளான மார்க்கண்டர் தன்னைக்காண மார்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு
பொருளான மேருகிரி யடியன்தானும் பொங்கமுடன் பதினெட்டாம் வரைசென்றேனே
4952.
வரையான மார்கண்டன் சமாதிகாண வளமுடனே யடியேனும் சென்றபோது
திரைகடலுஞ் சத்தசாகரங் கடந்து திறளான மனுகோடி முனிவரெல்லாம்
நரையகற்றி காயாதிகொண்டுமல்லோ நவகோடி ரிஷியாரும் முனிவர்தானும்
வரைகோடி லக்கில்லை கணக்கோயில்லை வளமான பதினெட்டாம் வரையிற்றானே
4953.
வரையான சமாதியது வனேகங்கண்டேன் வளமான மார்கண்டன் லிங்கந்தன்னை
நிரையான நாளொன்று பூசைமார்க்கம் நீதியுடன் ஆயிரமாஞ் சொச்சந்தன்னை
கரையான லிங்கமகாரபூசை கருவாக மார்க்கண்டன் செய்யும்மார்க்கம்
திரைகடலுங் கொள்ளாது வேதயாகந் திரளாழி லிங்கமதை கண்டிட்டேனே
4954.
கண்டேனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கருவான புலிப்பாணி மைந்தாகேளு
கொண்டேனே காலாங்கி கிருபையாலே கோடியுகம் தானிருக்க குளிகைபெற்றேன்
துண்டரிக மாகவல்லோ குளிகைபூண்டு துப்புரவாய் பதினெட்டு ஒன்றிற்சென்றேன்
சண்டமாருதம்போல மேருதன்னில் சாங்கமுடன் குளிகையிட்டு யேறினேனே
4955.
ஏறினேன் பத்துஒன்பது வரையிற்சென்றேன் எழிலான குளிகைபோற்ற சித்தருண்டு
மாறினேன் மகாதேவர் சித்துபக்கம் மகத்தான வஞ்சலிகள் யானுஞ்செய்து
கூறினேன் பதாம்புயத்தை வணங்கியானும் கொற்றவனே முடிதாழ்ந்து வடிபணிந்தேன்
சீறியே என்மீதிற் கோபம்விட்டு சிறப்புடனே எந்தனையாரென்றிட்டாரே
4956.
என்றாரே சித்துமுனி கூறும்போது எழிலஅன காலாங்கிநாதர்தம்மை
குன்றான மலைமீதிற் நின்றுகொண்டு கொற்றவரே சீஷபதி யென்றேன்யானும்
சென்றிடவே என்மீதிற் பட்சம்வைத்து சிறப்புடனே யெந்தனுக்கு இதவுகூறி
நின்றதொரு எந்தனுக்கு வாதினங்கள் நிட்களங்கமாகவல்லோ கொடுத்தார்தானே

4957.
கொடுத்தவுடன் அடியேனும் முடிவணங்கி கொப்பெனவே பத்துவொன்பதியில்வந்தேன்
அடுத்ததொரு நூலிருக்குஞ் சமாதிதன்னை யன்புடனே யான்பார்க்க வேண்டுமென்றேன்
கொடுத்ததொரு காவியங்கள் ஆயுர்வேதம் தோறாமல் சமாதியது மலைபோற்கண்டேன்
படுத்ததொரு தென்பக்கம் மேருதன்னில் பாங்கான சமஸ்கிருத நூல்கண்டேனே
4958.
கண்டேனே மேருகிரி தன்னிலப்பா கருவான வடபாகம் நூல்கள் சொல்வேன்
விண்டதொரு நூலெல்லாம் வடமொழியேயாகும் வீரான சாத்திரங்கள் மலைபோல்
கண்டேன்
அண்டமுடன் மேருகிரி தன்னிலப்பா வழகான கிழக்குமுகம் நூல்கள் சொல்வேன்
சண்டமாருதம்போல நூல்கள்தானும் சார்பாக கீர்வாணம் என்னலாமே
4959.
என்னலாம் மேருகிரி தன்னிலப்பா எழிலான மேற்குமுகஞ் சமாதிகண்டேன்
துன்னவே சாத்திரங்கள் மலைபோல் கண்டேன் துப்புரவய் படிப்பதற்கு நாளுமில்லை
சொன்னதொரு பரிபாஷை நூல்களப்பா தோறாமல் மேருகிரி தன்னிற்சென்றேன்
பன்னவே பலபேருங் கூடிசொன்ன பாரினிலே சாத்திரங்கள் அனேகந்தானே
4960.
தானான சாத்திரங்கள் மேருதன்னில் தண்மையுடன் நாலுமுகஞ் சமாதிகண்டேன்
கோனான குருநூலும் பெருநூலுமாக கொற்றவனே மலைபோலே சமாதிகண்டேன்
பானான மூன்றுயுகப் பிரளயங்கள் பாங்குடனே வந்தநெடுங் காலந்தன்னில்
தேனான சாத்திரத்தை மேருதன்னில் தேற்றமுடன் சமாதிதனில் வைத்திட்டாரே
4961.
வைத்தாரே மேருகிரி தன்னிலப்பா வண்மையுடன் பிரளயங்கள் நேர்ந்தபோது
கைத்தவமாய் அவரவர்கள் செய்தநூலின் காசினியில் மலையோரம் பிரளயத்தில்
மெய்த்தெனவே திருப்பாலின் கடலினோரம் மேதினியில் ஒதுங்கி மிதந்துமல்லோ
சத்தசாகரந்தனிலே சிலதுநூல்கள் சாங்கமுடன் கலியுகத்தில் கண்டார்தாமே
4962.
கண்டாரே கலியுகத்து மாண்பரெல்லாம் கருவான சாத்திரத்தைக் காணவில்லை
தொண்டுமிக வடியேனுஞ் செய்துமல்லோ துப்புரவாய் காலாங்கி கடாட்சத்தாலே
சண்டையிட்டு குளிகையது பெற்றுமேதான் சதுரான மேருகிரி தன்னிற்சென்று
விண்டிடவே போகரேழாயிரத்தை விருப்பமுடன் மனதுவந்து கொண்டிட்டேனே
4963.
கொண்டேனே போகரேழாயிரந்தான் குருவான வகஸ்தியனார் காவியந்தான்
சண்டமாருதம் பன்னீராயிரந்தான் சட்டமுடன் பணிநாலாயிரமுந்தானும்
பண்டான சதுர்காண்டம் நாலாயிரந்தான் பாங்கான கருமமென்ற
காண்டந்தானும் விண்டான பன்னீராயிரந்தானப்பா வுத்தமனே நாடி பன்னிராயிரந்தானே
4964.
நாடியாஞ் சுகர் பன்னீராயிரந்தான் நலமான பூசி பன்னீராயிரந்தான்தேடியுங்காணாத
கருமகாண்டம் தெளிவான தெளிவான சாத்திரமும் மலையிற்கண்டேன்
கோடிதனங் கொடுத்தாலுங் கிட்டாதப்பா கொற்றவனார் தன்வந்திரி கிரந்தந்தானும்
நீடியே வேதபுராணங்களெல்லாம் நிதியான மலைபோல பார்த்திட்டேனே

4965.
பார்த்தேனே சதகோடி புராணமெல்லாம் பாங்கான சித்துமுனி யாயுள்வேதம்
சேர்ந்ததொரு கோர்வையல்லோ கோடாகோடி தேற்றமுடன் மலைதனிலே கண்டேன்யானும்
ஆர்த்துமே பிரளயத்தில் மிதந்தநூல்கள் ஆயிரத்தில் ஒருபங்கு மாண்பர்கண்டார்
நேர்த்தியுள்ள சாத்திரங்கள் முழுதுமேதான் நேர்மையுடன் மலைதனிலே சமாதிகாணே
4966.
காணவே இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் கருவான புலிப்பாணி மகனேகேளிர்
பூணவே காலாங்கி கடாட்சத்தாலே புகழான குளிகையது கொண்டுமேதான்
வேணதொரு வதிசயங்கள் காண்பதற்கு விருப்பமுடன் இருபதாம் வரையிற்சென்றேன்
ஊணவே குளிகையது கொண்டுமல்லோ வுத்தமனே மேல்வரையிற் சென்றேன்பாரே
4967.
பாரேதான் குளிகைகொண்டு யடியேன்தானும் பட்சமுடன் மலைதனிலே ஏறும்போது
நேரேதான் சூரியமகாரிஷியார்தாமும் நேர்மையுடன் அருணனைதான் பூசைசெய்து
சீரேதான் கிழக்குமுகந் தானிருந்து சிறப்புடனே யாகமது செய்துமல்லோ
சேரேதான் கிட்டிருந்து வடியேனப்பா செவ்வண்மை மகாரிஷியைப் பார்த்திட்டேனே
4968.
பார்க்கையிலே சூரியமகா ரிஷியார்தாமும் பண்பாக எந்தனையும் மனதுவந்து
தீர்க்கமுடன் நமஸ்கார பூசையோடு தீரமுடன் வந்தவனாரென்றுகேட்க
கோர்த்தகரம் தனையோடு முடிவணங்கி குருபரனே யாரென்றுகூறி
வேர்த்துவுடல் தானடுங்கி யடியேன்தானும் வேதாந்தக் காலாங்கி என்றிட்டேனே
4969.
என்றேனே காலாங்கி சீஷனென்றேன் எழிலான சூரியனா ரிஷியாருக்கு
குன்றான மலையேறி குளிகைபூண்டு கொற்றவனே மேல்வரையைக் காணவந்தேன்
சென்றிடவே யடியேனும் வந்ததாலே செம்முலுடன் எந்தனுக்கு காட்சிதந்து
வென்றிடவே மகிமைதனைக் கூறவென்று விழுந்திட்டேன் அவர்பாதம் அழுந்திட்டேனே
4970.
இட்டதொரு எந்தனுக்கு இதவுகூறி யெழிலான சூரியனார் ரிஷியார்தாமும்
சட்டமுடன் ஆதித்தன் பிறக்கும்ஜோதி தண்மையுளஃள சந்திரனார் இருக்கும்ஸ்தானம்
வட்டமுடன் நட்சத்திரவரையுங் கண்டேன் வளமான மேகமண்டலமுங் கண்டேன்
திட்டமுடன் அக்கினி மண்டலமுங் கண்டேன் தீரமுடன் சப்தமேகந் தனைக்கண்டேனே
4971.
கண்டதொரு வதிசயங்களெல்லாங்கண்டேன் காசினியில் காணாத காட்சியெல்லாம்
சண்டமாருதம் என்னும்மேருதன்னில் சாங்கமுடன் மகிமையெல்லாம் கண்ணிற் கண்டேன்
கொண்டல்வண்ணன் மேகமென்ற இடியுங்கண்டேன் கோடான கோடிவரை முனையுங்கண்டேன்
விண்டிடு வதிசயங்கள்யாவும் பார்க்க விருப்பமுடன் மேல்வரையில் வந்திட்டேனே
4972.
வந்தேனே யென்றுமேதான் இதவுகூற வளமையுள்ள ரிஷியாரும் மனதுவந்து
வந்தையுள்ள வதிசயங்கள் எல்லாஞ்சொல்லி வேதாந்தத் தாயினது மார்க்கங்கூறி
அந்தமுடன் கைலாசபதியிற்செல்ல வப்பனே எந்தனுக்கு விடையுந்தந்து
சுந்தரனே எந்தனையும் ஆசீர்மித்து சூட்டினார் இருபத்தோர் வரையிற்காணே

4973.
வரையான கைலாசபதியைக்காண வண்மையுடன் காலாங்கி கடாட்சத்தாலே
திரைபோன்ற கடலோரஞ் சுற்றிவந்தேன் தீரமுடன் இருபத்தோர் வரையிற்சென்றேன்
நரையான மேருகிரி சிகரந்தன்னில் கைலாசநாதரையான் காணவெண்ணி
குறையதுவும் நேராமல் அடியேன்தானும் குளிகைகொண்டு மேல்வரையிற் சென்றேன்தானே

4974.
தானான மேருகிரி தன்னிலப்பா தண்மையுடன் இந்திரனார்பதியுங்கண்டேன்
தேனான மனோன்மணியாள் பீடங்கண்டேன் தேற்றமுடன் கருடகந்தருவர் கண்டேன்
கோனான யஷ்டதிக்கு பாலர்கண்டேன் கூறான நாற்பத்தொண்ணாயிரம்பேர்
மானான மகதேவர் முனிவர்கண்டேன் மகத்தான முப்பத்து மூன்றுதானே

4975.
மூன்றான தேவர்முதல் கோடியப்பா முனையான ரம்பை ஊர்வசியாளோடும்
சான்றதொரு நந்தீசர் முதலானோரும் சார்பான பிரிங்கிமகாரிஷியாரோடும்
போன்றதொரு மார்க்கண்ட முனிவரோடும் புகழான குருந்தர் முதல் வசிட்டரோடும்
சான்றதொரு நாரதமா முனிவரோடும் சார்பான பதிதனையே பார்த்திட்டேனே

4976.
பார்த்திட்டேன் சிவனடியார் கூட்டத்தோடும் பாங்கான தேவகனநாதரோடும்
தீர்த்தமுடன் வைகைதனை வரவழைத்து தீர்க்கமுடன் வாரிதியை யுண்டதீரன்
கோர்த்தவகை வைத்ததொரு குண்டோதரன்தான் குண்டலியாம் பூதமதை யானுங்கண்டேன்
ஆர்த்துமே பிர்மாவின் பாதங்கண்டேன் வன்பான சிவபாத தூள்கண்டேனே

4977.
தூளான பாத்திரத்தின் தூசுகண்டேன் துகளற்ற விஷ்ணுசக்கரமுங்கண்டேன்
காளானின் நிறம்போல பாரிசாதம் களவமென்ற மாலையுடன் அனேகர்கண்டேன்
பாளான நரகமுடன் மோட்சங்கண்டேன் பாங்கான எமதூதர் சேர்வைகண்டேன்
ஆளான மாண்பர்களின் பாவந்தன்னை அநியாயமான தண்டனைகண்டேனே

4978.
தண்டனையாம் அவரவர்கள் செய்தகுற்றம் தாக்கான படுநரகில் வீழக்கண்டேன்
மிண்டான அவரவர்கள் செய்தகன்மம் விளைந்துதடா கொடியதொரு நீதிதண்டம்
அண்டர்முனி ராட்சதர்கள் முதலானோர்கள் அவரவர்கள் செய்ததொரு வினைபாவத்தால்
தண்டனைகள் காலதூதர் செய்யக்கண்டேன் தகமையுள்ள இந்திர பதியிற்றானே

4979.
தானாக அவரவர்கள் செய்தபுண்ணியம் தக்கபடி மாண்பர்களுக்கு உகந்தமார்க்கம்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் சொற்படியே யாவுங்கண்டேன்
தேனான மோட்சமென்ற பீடந்தன்னில் தேற்றமுடன் புண்ணியர்கள் இருக்கக்கண்டேன்
மானான மகதேவர் புண்ணியக்கூட்டம் மார்க்கமுடன் கூடிருக்கப் பார்த்திட்டேனே

4980.
பார்த்தேனே யொருகோடி வெள்ளஞ்சேனை பாங்கான மேருகிரி தன்னிலப்பா
தீர்த்தமுடன் கைலங்கிரி வாசர்தன்னை சிறப்புடனே கைலாயபதியிற் கண்டேன்
சேர்த்ததொரு வெகுமாண்பர் கூட்டத்தோடும் ஜெகதலத்தில் புண்ணியர்கள் அனேகங்கண்டேன்
நேர்த்தியுடன் பட்டதிசை தன்னிலப்பா நேர்மையுடன் அதிசயங்கள் மிகவுண்டாமே

4981.
உண்டான மேருகிரி தன்னிலப்பா வுத்தமனே யட்டகிரி மலைதானுண்டு
செண்டான தேவரதமங்கே கண்டேன் சிறப்பான கைலாரதமுங்கண்டேன்
கொண்டல்வண்ணனச்சுதனார் பீடங்கண்டேன் குறையாத வட்டரதந் தானுங்கண்டேன்
பண்டுளவ மாலையணி மாலைபூண்ட பாங்கான பற்குணனார் ரதங்கண்டேனே
4982.
கண்டேனே வர்ச்சனனார் ரதமுங்கண்டேன் பாங்கான பாசுபதந்தன்னைக்கண்டேன்
துண்டரிகமானதொரு இந்திரன் வில்லை துப்புரவாய் கைலாயபதியிற்கண்டேன்
சண்டமாருதம்போல இந்திரன்சேர்வை தன்மையுடன் கைலாயபதியிற் கண்டேன்
புண்டரிகமானதொரு பர்மன்வில்லை புகழான பதிதனிலே பார்த்திட்டேனே
4983.
பார்த்தேனே மேருகிரி தன்னிலப்பா பாங்கான தங்கரதம்மேலிற்றானும்
தீர்த்தமுடன் லிங்கமுடன் இந்திரன்தானும் சிறப்பான ஆயிரங்கண் தன்னோடொக்க
ஊர்த்துவமா மாயிரத்தெட்டு மாற்றுக்குகந்த சிம்மாதனம் அதிலேஇந்திரன்சேர்வை
கோர்த்துமே கோடான கோடிமன்னர் கொற்றவர்க்கு ஏவல்செய்ய வறிந்திட்டேனே
4984.
அறிந்தேனே கைலாயபதியிலப்பா வன்பான தேவாதி தேவர்தாமும்
செறிந்திடவே வெகுகோடி மாண்பரோடும் செம்மலுடன் வினயமது சொல்லொணாது
முறிந்துதொரு நரகமென்ற குழியிலப்பா முனையான வக்கிரமக் கூட்டத்தார்கள்
குளிந்துமே வேதனைகள் செய்யுமார்க்கம் கொற்றவனே கண்டுமல்லோ நடுங்கிட்டேனே
4985.
நடுங்கினேன் கைலாயமேருதன்னில் நலமான வதிசயங்கள் அனேகங்கண்டேன்
ஒடுங்கியதோர் மாண்பர்களின் பாவந்தன்னை ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
படுந்துயரங்காணாமல் நூல்கள்பாடி பட்சமுடன் மாண்பர்களுக் கோதினார்காண்
இடும்புமிக யான்றுலைத்து மேருதன்னில் எழிலான வதிசயங்கள் கூறிட்டேனே
4986.
கூறினேன் இத்தாதி காட்சியெல்லாம் குவலயத்தில் யாரேனுங்கண்டதில்லை
மீறியே எந்தனது புண்ணியத்தால் மிக்கான காலாங்கி கடாட்சத்தாலும்
தேறியே மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தேற்றமுடன் மேருகிரி தன்னில்சென்றேன்
சீறியே என்மீதில் சினந்துமல்லோ சிதாபரசனமந்தேறிசென்றிட்டேனே
4987.
சென்றேனே ஆதியென்ற கடவுள்காணேன் சிறப்பான வெகுமகிமை யானுங்கண்டேன்
குன்றான மேருகிரி தன்னில்யானும் குறையாமல் கடவுளது மகிமைகண்டேன்
வென்றிடவே யாதியென்ற வஸ்துகாணேன் வீணாக வனாதியென்ற வஸ்துகண்டேன்
நின்றதொரு தேவாதிதேவர்தாமும் நிகட்சியுடன் பதாம்புயத்தை தவஞ்செய்வாரே
4988.
தவமான மேருகிரி தன்னிலப்பா தண்மையுள்ள தேவாதிதேவரெல்லாம்
சவம்போல யாகமது சென்றார்கள் சாங்கமுடன் தேவனையுங் கண்டாரில்லை
பவமகற்றி மேருகிரி தன்னில்தானும் பட்சமுடன் சாகமது செய்துமென்ன
அவப்பொழுதும் தவப்பொழுதுங்கொண்டு மென்ன அவர்களுந்தான் ஒருபலமுங்
காணார்தாமே

4989.
தானான கைலாயபதியில்தானும் சட்டமுடன் தேவாதிதேவர்தானும்
கோனான கடவுள்தனின் பதாம்புயத்தை கொற்றவரு மாண்பர்களுங் கண்டதில்லை
தேனான மனோன்மணியாள் முதலானோரும் தெளிவான சங்கையதை யறிவதில்லை
பானான பரலோகங்கண்டுமென்ன பாரினிலே கடவுள்தனைக் காணார்தானே
4990.
காணாமல் கைலாசம்கண்டுமேதான் கருத்துடனே பாடிவைத்த நூல்களெல்லாம்
வீணாகவாதியந்த பொருள்காணாமல் விட்டமுறை பித்ததென்று வீம்புபேசி
தோணாத பொருள்களெல்லாம் நூலில்கூறி தொகுப்புடனே சாத்திரங் கட்டிவைத்தார்
ஆணாக பெண்ணாக பிறந்தகூர்மை அவனிதனிற் கண்டதல்லா லில்லைதானே
4991.
இல்லையே வாண்பெண்ணாலிரண்டுங்கண்டார் எழிலான சாத்திரங்கள் கற்றுகண்டார்
தொல்லையெனும் பிறவியது கண்டதில்லை தோறாமல் சாத்திரத்தை வுளறினார்கள்
கொல்லனது வீதிதனில் வூசிவிற்ற கூரான கதைபோல யென்முன்னாக
எல்லையுள்ள சித்தர்முனி ரிஷிகளெல்லாம் யெழிலாகப் பாடிவைத்தார் நூல்கள்தாமே
4992.
நூலான நூல்களெல்லாம் அதிதஞ்சொன்னார் நுணுக்கமுடன் யாதியந்த வஸ்துயில்லை
பாலான நூல்போலே பலரும்பாடி பாரினிலே யொளித்துவைத்தார் முனிவர்சித்தர்
காலாண நூலதுதான் இருபத்திரண்டு கணக்குடனே பாடிவைத்தார் லட்சமாக
மாலான சாத்திரத்தில் ஆதியந்தம் மகதேவர் சங்கையதை சொல்வார்தானே
4993.
சொல்லாத சாத்திரங்கள் ஏதுக்கல்லோ தொல்லுலகில் பலநூலுங் கற்றுமென்ன
புல்லர்களாய் வெகுமாண்பர் பலர்கூடி புகட்டினார் சித்தர்முனி சாத்திரத்தை
வெல்லவே கடவுளது இருக்கும் ஸ்தானம் வேதாந்தத் தாயாரும் கூறவில்லை
நல்லதொரு சித்துமுனி சாத்திரங்கள் நலமான நூல்களெல்லாம் பாழாய்ப்போச்சே
4994.
போச்சென்று விடுகாமல் புண்ணியர்கள் புகட்டினார் வையகத்து மாண்பர்க்கெல்லாம்
மூச்சடங்கிப் போனதொரு சித்துதாமும் முனையான தெய்வமது வென்றொன்றுண்டு
பாச்சலுடன் பலபேருமறியவல்லோ பண்பாகப் பொதுப்படவே சொன்னாரங்கே
ஆச்சரியமான பராவஸ்துதன்னை வன்புடனே கண்டறிந்தோர் இல்லைபாரே
4995.
பார்க்கையிலே சாத்திரங்கள் இதிகாசங்கள் பண்புடனே பாடிவைத்தார் முனிவர்தானும்
ஆர்க்கமுடன் யாரேனும் விள்ளக்கூறி வன்புடனே சாத்திரங்கள் கூறவில்லை
மார்க்கமது தெரியாமல் வீணின்காதை மயக்கமுடன் பாடிவைத்தார் நூல்கள்தோறும்
சூர்ப்பனகை மாதுவுக்கு தனங்கள்போல சுருதிபஒருள் ஆகமங்கள் கதைபோலாச்சே
4996.
ஆச்சப்பா கைலாயமேரு கண்டேன் அங்ஙனவே மகிமையெல்லாம் கூறினேன்யான்
வீச்சுடனே குளிகையது பூண்டுகொண்டு வீரமுடன் மேருகிரி தன்னைநீக்கி
பாச்சலுடன் சீனமெனும் பதியிற்சென்று பண்பான மாண்பர்களுக்குகந்துயானும்
ஆச்சரியமானதொரு மகிமையெல்லாம் அன்புடனே யானுரைத்தேன் சீனத்தார்க்கே

4997.
சீனமாம் பதினென்பேர் சித்துதாமும் சிறப்பான சாத்திரங்கள் கோடியுண்டு
மானமுடன் சித்தாதி சித்தர்தாமும் மயக்கமுடன் வெகுநூல்கள் பாடினார்கள்
ஈனமது வாராது எந்தன்நூலு எழிலான குருநூல்தான் சத்தகாண்டம்
வானமது மேருவென்ற கைலைமேரு வளப்பமெல்லாம் இந்நூலில் பகர்ந்திட்டேனே
4998.
பகர்ந்தேனே காலாங்கிநாதர்தம்மால் பாங்கான சீனபதி யான்கடந்து
உகர்ந்ததொரு தேசாதிதேசமெல்லாம் வுத்தமனே குளிகையது பூண்டுகொண்டு
அமர்ந்துமே யட்டதிசை யானுங்கண்டு வன்பான கைலாச மேரிற்சென்றேன்
சுமர்ந்திட்ட ஆதிசேடன் தன்னைத்தானும் துப்புரவாய்க் கண்டதில்லை வுண்மைதானே
4999.
தானான சாத்திரத்தின் பெருநூலப்பா மேன்மையுள்ள குருநூலாம் சத்தகாண்டம்
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருபாத கடாட்சத்தாலும்
தேனான தென்பொதிகை தன்னில்வாழும் தேஜொளிவின் அகத்தியனார் கிருபையாலும்
மானான சீனபதி சமாதிசென்ற மகத்தான கமலமுனி கடாட்சங்காணே
5000.
காணவே சத்தகாண்ட மேழிற்குள்ளே கருவிகரணாம் பொருளாதியந்தம்
தோணவே துறைமுகமும் யானுங்கண்டு துப்புரவாய்ப் பாடிவைத்தேன் குருநூல்தானும்
வேணதொரு பொருளெல்லாம் இதிலடக்கம் விரும்பியே யானுரைத்த பெருநூல்தானும்
ஆணவங்கள் தானொடுங்கி யைந்தாங்காண்டம் அன்புடனே பாடிவைத்தேன் முற்றதாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

5001.
அண்டபகிரண்டாண்ட மரனேகாப்பு ஆனந்த பூரணமாம் உமையாள்காப்பு
குண்டமெனும் குவலயத்தில் குறியேகாப்பு குமரகுரு சீர்முருகர் பாதங்காப்பு
புண்டரீக திருபெருமாள் புவனைகாப்பு புகழான பிரமனவன் புனிதன்காப்பு
சண்டமாருதம்போலே வேழாயிரத்தை சாற்றுகிறேன் காலாங்கி பாதங்காப்பே
5002.
காப்பான வாறாவதான காண்டம் கருவான பொருளெல்லாம் இதிலடக்கம்
சேப்பான வேழாயிரம் பொருள்தானப்பா சிறப்பான சத்தகாண்டகமுமாகும்
வேப்பான வாறாவதான காண்டம் வெகுபொருள்கள் இதிலடக்கம் வினயமெத்த
பாப்பான காண்டமது வாறுக்குள்ளே பார்லோக வித்தையெல்லாம் காணலாமே
5003.
காணலாம் பெருநூலா மேழாயிரத்தில் கருவான சரக்கெல்லாம் இதிலேதோயும்
பூணவே குருநூல்தான் பெருநூலப்பா புகழான சத்தசாகரந்தானாகும்
வேணதொரு கருக்குருவும் இதிலடக்கம் வேகமுடன் பாடிவைத்த சத்தகாண்டம்
நாணவே நாதாக்கள் ரிஷிகள்பாதம் நான்வணங்கிபாடிவைத்தேன் நன்மைபாரே
5004.
பாரேதான் மாந்திரீக ஜாலப்போக்கு பாங்கான வயித்தியமும் யோகமார்க்கம்
சீரேதான் சிமிட்டுவித்தை யனந்தம்போக்கு சிறப்பான கோல்வரிசை சிலம்பாட்டம்
நேரேதான் பற்பமுடன் செந்தூரங்கள் நெடிதான கட்டினமும் நீற்றினமுமாகும்
தீரேதான் லேகியங்கள் குளிகைமார்க்கம் திறமான லோகமாரணமுமாமே
5005.
ஆமேதான் புலிப்பாணி வருண்மைந்தாகேள் அப்பனேசொல்லுகிறேன் புத்திவானே
நாமேதான் காலாங்கி நாதர்பாதம் நலமுடனே யான்வணங்கி கூறலுற்றேன்
வேமேதான் வெகுநூல்கள் பார்த்துமேதான் விருப்பமுடன் இந்நூலையுந்தனுக்கு
தாமேதான் குருநூலாய்ப் பொருள்கள்கண்டு தக்கபடி செய்தேனே தரணியோர்க்கே
5006.
தாரிணியில் நூல்கண்டோர் கர்மிகட்கும் தகமையுள்ள சண்டாளர் பாவிகட்கும்
காரணியாம் நயம்பேசி கதையுரைக்கும் கடிதான துரோகிகட்கு இந்தநூலை
தூரணியாய் கொடுத்தாக்கால் பாவமெய்தும் துப்புரவாய்க் கொடுக்காதே புண்ணியவானே
வேரணியாய் தர்மிகட்கும் புண்ணியர்க்கும் வேணவுபசாரமுடன் கொடுப்பாய்தானே
5007.
தானான போகரேழாயிரந்தான் தாரணியில் கண்டவர்கள் விள்ளார்தாமே
கோனான எனதையர் காலாங்கிநாதர் குவலயத்தில் கொற்றவர்தன் கடாட்சத்தாலும்
வேனான சத்தகாவியத்தையப்பா விருப்பமுடன் பாடிவைத்தேன் மைந்தாகேளு
தேனான இந்நூல்தான் சொர்ணநூலாம் தெளிவாகப் பாடிவைத்தேன் புவியுளோர்க்கே
5008.
புவியான இன்னமொரு மார்க்கம்பாரு புகழான தந்திரமாஞ் ஜாலவித்தை
கவியான சித்தர்முனி ரிஷிகள்யாரும் கழறவில்லை யெவ்வித நூலிலப்பா
பவியான பணிதிகளை கொள்ளைகொண்டோர் பாருலகில் காண்பதற்கு வரிதேயாகும்
குவிதமுடன் ஜாலமாந் தந்திரவித்தை கூறுவேன் மாணாக்கள் பிழைக்கத்தானே

5009.
தானான கொள்ளைகொண்டோர் மாண்பர்தம்மை தாரிணியில் பிடிப்பதற்கு வுபாயதந்திரம்
மானான மச்சென்ற மாளிதன்னில் மகத்தான காகமொன்று பதிதானப்பா
பானான மேடையது வொன்றுசெய்து பாங்கான மேடையின்மேல் கலசம்வைத்து
கோனான குருதனையே மனதிலுன்னி கொற்றவனே கலசமதில் தேங்காய்வையே
5010.
வைத்துமே தேங்காய்மேல் காயந்தன்னை வளமாகத்தான்பூசி மைந்தாநீயும்
பையவே சந்தேகப்பட்டபேரை பாங்குடனே கும்பலாய்க் கூட்டிக்கொண்டு
மெய்யாக நீங்களெல்லாம் மாளிசென்று மேன்மையுடன் தேங்காயைத் தொட்டுவந்தால்
கைதனையே சோதிப்பேனென்றுசொல்லி கருத்துடனே வுறுதிமொழி கூறுவாயே
5011.
கூறுவாய் காயத்தின் வலுமைதன்னை குறிப்பாக மர்மமதாய் மனதிலுன்னி
தேறுவாய் கைதனையே கண்ணிலொத்தி தேற்றமுடன் முத்தமது இட்டார்போல
மாறுபாடாகவல்லோ வாசந்தன்னை மதிமுகத்தில் மோர்ந்துமல்லோ தெரிந்துகொள்வாய்
தீதுடைய மனிதரவரெல்லாங்கூடி சிறப்பாகக் கையதனைக்காட்டுவாரே
5012.
காட்டுவார் ஒவ்வொருமனிதர்தானும் கைநிட்டி பரிட்சையது செய்யுமென்பார்
தாட்டிகமாய் கைநீட்டிக் காட்டும்போது தகமையுடன் வாசனையைத் தெரிந்துகொள்ளு
மேட்டிமையாய் வாசனைகள் இருக்குமாண்பர் மேதினியில் பொருளதனை தீண்டாமாண்பர்
பூட்டகமாய் வாசனைகளில்லா விட்டால் புண்ணியனே திருடனென்று செப்பலாமே
5013.
செப்பலாம் பயங்காளியான மாண்பன் சென்றுமே மாளியிடம் கட்டிநின்று
ஒப்பமுடன் நகையெடுத்த தோஷத்தாலே ஓகோகோ தொட்டாலே மோசம்நேரும்
எப்படியும் தப்பிக்க வழிதான்வேண்டும் எழிலான தேங்காயைத் தொடக்கூடாது
இப்படியே தன்மனதிலுள்ளடக்கி எழிலாக யான்தொட்டேன் என்பான்பாரே
5014.
பாரேதான் பயங்கரத்தை யுள்ளடக்கி பான்மைபெற சபையார்முன் சோதனைக்கு
நேரேதான் முன்நிற்பான் பாவிதானும் நெடிதான சண்டாளன் குருத்துரோகி
கூரேதான் சத்தியமாய் வார்த்தைசொல்வான் குணமில்லான் மனமில்லான் மானமில்லான்
சேரேதான் மெய்வார்த்தை மிகவுங்கூறி செழிப்புடனே தான்வருவான் திருடனாமே
5015.
திருடனாம் பொய்சூது கபடுதந்திரம் தீரமுடன் தான்பேசி தப்பிப்பான்பார்
பொருடனையே கொள்ளைகொண்ட லோபன்தானும் பொங்கமுடன் பொருளெடுத்த மாண்பென்ன
குருதனையே தான்நினைத்து திருடனென்று குறிப்புடனே சொல்லியல்லோ பொருளைவாங்கு
அருளுனக்கு வுண்டாகும் மைந்தாபாலா வப்பனே காலாங்கி கடாட்சந்தானே
5016.
தானாக பொருள்தீண்டா மாண்பரெல்லாம் சட்டமுடன் தேங்காயைத் தொடுவார்பாரு
வேனான பொருளெடுத்தோன் சந்தேகத்தால் வேற்றமுகமாகியல்லோ தீண்டானப்பா
மானான வையமென்ற யெண்ணத்தாலே மயக்கமுடன் தேவதைகள் கொல்லுமென்று
பானான கிலேசமது வெகுவாய் தோன்றி பான்மையுடன் கைதனையே தீண்டான்பாரே

5017.
தீண்டான்காண் பொருளெடுக்கா பூபன்தானும் திறமுடனே தப்பிக்க வழியேபார்ப்பான்
பூண்டகமாய் அதிதமென்ற போக்குசொல்லி புணிதமுடன் தப்பிக்க வழியே காண்பான்
காண்டகமாய் இந்தவித்தை யாருங்காணார் கஅசினியில் புத்திமான் காண்பான்பாரு
வேண்டியதோர் கருமான மின்னமுண்டு விருப்பமுடன் சொல்லுகிறேன் இன்னங்கேளே
5018.
கேளப்பா புலிப்பாணி மைந்தாகேளு கெடியான கஸ்தூரி ஜாலமப்பா
நாளப்பா போகாமல் இந்தஜாலம் நாட்டினிலே செய்வார்கள் அனந்தம்போக்கு
மாளப்பா புத்திமான் செய்யஞ்ஜாலம் மகத்தான ஜாலமது வினோதவித்தை
வீளப்பா ஜெகஜால சூதுவித்தை விள்ளாரே யாருந்தான் விள்ளார்தானே
5019.
விள்ளாரே கஸ்தூரி ஜாலவித்தை விளம்புகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று
புள்ளான தடியொன்று மூன்றேயாகும் புகழான மச்சென்ற மாளிதன்னில்
விள்ளவே நடுமையந் தன்னிலப்பா விருப்பமுடன் கோல்நாட்டி முக்கோணந்தான்
கொள்ளவே முக்கோணக் குச்சிக்குள்ளே குறிப்புடனே காகமென்ற கலசம்வையே
5020.
வைக்கவே கலசமதில் கலசம்வைத்து மகத்தான கலசமதில் வோடுவைத்து
நைக்கவே யோட்டின்மேல் தலைதானப்பா நலமான செம்மறியின் தலைதானாகும்
பொய்க்காமல் தலைமேலே சாணம்வைத்து பொங்கமுடன் சாணமதில் கலசம்வைத்து
மெய்க்கவே கண்டமதில் தீபமேற்றி மேன்மையுடன் மந்திரங்கள் ஓதுவாயே
5021.
ஓதுவாய் பஞ்சாட்சர வட்சரத்தை வுத்தமனே நூற்றெட்டு வுருதான்போடு
வாதுபுகழ் செம்மறியின் முகத்திலப்பா வண்மையுடன் வாடையென்ற கஸ்தூரிதானும்
தீதறவே கள்ளனைத்தானறியவேண்டி திகழான கஸ்தூரி தன்னையப்பா
சேதுபந்தமாகவல்லோ முகத்தில்பூசி செம்மலுடன் பதனமது செய்குவாயே
5022.
செய்யவே கஸ்தூரி தன்னைத்தானும் சிறப்புடனே பூசியல்லோ மைந்தாகேளு
வெய்யவே மாளிதனில் கன்னம்போனால் வேகமுடன் திருடர்களைப் பிடிக்குமார்க்கம்
பையவே சந்தேகப்பட்டபேரை பாங்குடனே யாவரையுங்கூட்டிவந்து
நையவே மச்சென்ற மாளிதன்னில் நலமுடனே சபைகூட்டி நிற்கச்செய்யே
5023.
நிற்கவே ஏகஜனஞ் சூழ்ந்துநிற்க எழிலாகக் கள்ளனைத்தானறியவேண்டி
துற்கையென்ற காளியது மந்திரத்தால் துப்புறவாய் நவகண்டமோதும்போதும்
அற்பமென்று நினையார்கள் மாண்பரப்பா வப்போதே எடத்தவனுமேங்கிநிற்பான்
சொற்பமென்ற தந்திரமந்திரத்தினாலே சோர்வடைந்து கள்வனவன் முழிப்பான்பாரே
5024.
பார்க்கையிலே கள்வனவன் லகுவாய்நிற்பான் கருத்தினிலே சதாசிவமுந் திடுக்கிட்டேங்கி
தீர்க்கமுடன் ஒவ்வொருவராகவல்லோ தீரமுடன் மச்சென்ற மாளிதன்னில்
ஏர்க்கவே சோதனைக்கு மாளிக்குள்ளே யென்தாயே யீஸ்வரியே தீண்டவில்லை
ஆர்க்கவே சத்தியத்தை செய்துமல்லோ வப்பனே முகமதனைத் தீண்டிடாயே

5025.
தீண்டவே வேண்டுமென்று சொல்லியல்லோ சோதனைக்கு வுள்ளகற்றி துலைவாய்நில்லு
ஆண்டகையே மாதாவே யென்றுரைத்து அங்ஙனவே யட்சதையைத் தூவுதூவு
மாண்டதொரு செம்மறியின் முகத்தைத்தொட்டு மார்க்கமுடன் ஒவ்வொருவர் வருங்காலத்தில்
வேண்டியே யவர்கரத்தை நீதானப்பா விருப்பமுடன் தானணைத்து முகத்திலொத்தே
5026.
ஒத்தையிலே கஸ்தூரி மனந்தான்வீசும் ஓகோகோ பொருளெடுக்கவில்லையென்று
சத்தியமாய் நீசொல்வாய்மகனேயப்பா சாங்கமுடன் பொருளெடுக்க வில்லையென்று
புத்தியுடன் பொருள்தொட்டோன் கரத்தில்வாசம் பொங்கமுடன் இருக்கவேமாட்டாதப்பா
வெத்தியுடன் நீநினைத்து மாண்பர்தம்மை மேதினியில் சொல்லுவது தருமமாமே
5027.
தருமமாம் பொருள்களவு கண்டுதேறி தண்மையுடன் தண்மையுடன் சொல்வதுவே மனுதர்மமாகும்
கருமமது பொய்யாது வுந்தனுக்கு காசினியில் நீயுமொரு நீதனாவாய்
பருமமுடன் வையகத்தில் மாண்பர்க்கெல்லாம் வளமையுடன் குருசம்பர போதவானாய்
அருமையாய் எல்லவரும் உந்தனைத்தான் அப்பனே சதாகாலம் போற்றுவாரே
5028.
போற்றவார் தந்திரமாஞ் ஜாலவித்தை பொங்கமுடன் யாருக்கும் விள்ளவேண்டாம்
ஏற்றியே கர்மிகளும் பாபியோரும் யெதாஸ்தான சண்டாளரனேகருண்டு
நாற்றிசையுமிருப்பார்கள் புண்ணியவான்கள் நவிலாதே யொருவருக்கும் நவிலவேண்டாம்
மாற்றியே மாந்திரீகம் என்றுரைத்து மகுத்துவமாய் ஞானிபோல் இருந்திடாயே
5029.
இருக்கையிலே எல்லவரும் போதங்கொண்டு என்குருவே என்சாமிஎன்றுமல்லோ
பொருக்கமுடன் பொருள்கொள்ளை யிட்டபேர்கள் பொங்கமுடன் வுனைத்தேடி வருவார்பாரு
தருக்கமது மிகப்பேசி மகனேயப்பா தருவித்த பொருளதனை கொடுப்பேனென்று
அருட்கமலம் வீற்றிருக்கும் அம்பாள்தானும் அப்பனே கூட்டிவைப்பாள் என்றுசொல்லே
5030.
சொல்லையிலே எதிராகவந்தபேர்கள் சொக்கியே யுன்வலையில்சிக்கியல்லோ
வல்லதொரு குருசம்பிரதாயபூபா வளமையுடன் எந்தனது பொருளையப்பா
மெல்லவே தருவித்துத் தந்தாயானால் மேன்மையுடன் யுந்தமக்கு பாதியீவேன்
சல்லியங்கள் நேராது சுவாமியென்று தப்பாமல் அடிபணிந்து சேவிப்பாரே
5031.
சேவிப்பார் கடவுளென்று வுன்னைத்தானும் ஜெகதலத்தில் மாண்பரெல்லாம் மயங்கியல்லோ
தாவியே சதாகாலம் பக்கலப்பா சட்டமுடன் கார்திருப்பார் கோடிமாண்பர்
ஆவிபொருளுடலாதி யனைத்துமப்பா வப்பனே யுந்தமக்கு தத்தமென்பார்
பாவியென்ற நாமமது படைக்காமற்றான் பாருலகில் சத்தியனாய் வாழ்வாய்தானே

5032.
தானான புலிப்பாணி மைந்தாகேளு தப்பாமல் எந்தனுக்கு குருதானப்பா
தேனான காலாங்கி நாதர்தம்மை தேற்றமுடன் சதாகாலம் மனதிலுன்னி
பானான மனோன்மணியாள் பாதம்போற்றி பான்மைபெற எப்போதும் தொழுதுமல்லோ
கோனான குருக்கள்மார் ரிஷிகள்தம்மை கொற்றவனே தான்நினைந்து நடத்துவாயே
5033.
நடத்துகையில் இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ராஜாதிராஜரெல்லாம் மெச்சுதற்கு
திடமான தந்திரமாஞ் ஜாலப்போக்கு செப்புகிறேன் மாணாக்கர் யுந்தமக்கு
அடலான தந்திரமாம் மாயதந்திரம் அப்பனே யாருந்தான் அறியமாட்டார்
கடலான கள்ளனைத்தான் பிடிக்கவல்லோ காசினியி லின்னமொரு மதிசொல்வேனே
5034.
மதியான ஜாலமொன்று சொல்வேனப்பா மகத்தான காலாங்கி நாதர்தம்மை
துதியுடனே தான்வணங்கி துய்யபாலா துப்புரவாய் யுந்தனுக்குக் கூறுவேன்யான்
நிதியெடுத்த கள்ளனைத்தா னறிவதற்கு நீதியுடன் தந்திரமாஞ் ஜாலவித்தை
பதியான களவுசென்ற மாளிதன்னில் பட்சமுடன் தானடுத்து செப்பக்கேளே
5035.
செப்பவென்றால் நிதிபோன மாளிதன்னில் சிறப்புடனே நீசென்று ஜாலஞ்செய்வாய்
ஒப்பமுடன் நிதியெடுத்த மாண்பர்தம்மை ஓகோகோ யாவரையுந்தானழைத்து
தப்பிதங்கள் நேராமல் மைந்தாகேளு தன்மையுடன் சந்தேகப்பட்டபேரை
மெய்யுடனே யவர்கையில் வரிசியப்பா மேன்மையுடன் தானெடுத்து செப்பக்கேளே
5036.
கேளப்பா யவரவர்கள் கையிலப்பா கெடியான பச்சரிசி நிரம்பவுந்தான்
ஆளப்பா தனித்தனியே கொடுத்துமைந்தா வப்பனே யவர்களுக்கு வணக்கங்கூறி
மாலப்பா மாண்பர்களே நீங்களெல்லாம் மயங்காமல் பொருளெடுக்கவில்லையென்று
தேளப்பா கொட்டினது போலேயப்பா தேற்றமுடன் யான்கூறும் மொழியைக்கேளே
5037.
மொழியான வார்த்தையது என்னவென்றால் மோசமில்லை நீங்களுந்தான்
நடுங்கவேண்டாம்
வழியுடனே பச்சரிசி வாயிலிட்டு வண்மையுடன்தான்மென்று மைந்தாகேளு
சுழியான வாயில்மென்ற வரிசிதன்னை சூட்சமுடன் பூமிதனில் முழியவேண்டும்
பழியான எலுமிச்சம் பழத்தையப்பா பாண்மையுடன் வாய்தனிலே கடிப்பாய்தானே
5038.
கடித்துமே பழரசத்தை மாணாக்காளே கருத்துடனே பூமிதனில் முழியவேண்டும்
துடிப்புடனே பொருளெடுக்கவில்லையென்று தூய்மையுடன் சத்தியங்கள் செய்யவேண்டும்
நடித்துமே சோதனைகள் தந்துமல்லோ நலமுடனே செல்கவென்று விடையுந்தந்து
முடித்துமே மந்திரங்கள் ஓதினாற்போல் முனையான தலைவாசல் முன்னேநில்லே
5039.
நிற்கையிலே மாண்பரெல்லாம் சோதித்தாகிவந்து நிலையான நிலைதனிலே நிற்கும்போது
அற்பமென்று நினையாமல் வவரவர்கள்தன்னை அன்புடனே தான்நினைந்துவப்பாகேளு
சொற்படியே நீயுமிந்த வரிசிதன்னை சொந்தமுடன் காட்டவென்று வினயங்கேளு
உற்பனமா யுமிழ்ந்ததொரு வரிசியப்பா ஓகோகோ குழம்புபோலிருக்கும்பாரே

5040.
பாரப்பா பொருளெடுத்தோன் வரிசிதானும் பான்மையுடன் பொடிபொடியாய் இருக்கும்பாரு
நேரப்பா யெடுக்காத பேர்கட்கெல்லாம் நேர்மையுடன் வரிசியது குழம்பாய் நிற்கும்
சீரப்பா பழமது வுமிழ்ந்தபேர்கள் சிறப்பான நாவதனில் ரசமுண்டாகும்
ஆரப்பா யெடுக்காத பேர்கட்கெல்லாம் அப்பனே ரசமதுவுமதிகங்காணே
5041.
காணவென்றால் எடுத்தவர்கள் மாண்பருக்குக் கடிதான பழமதுவும் ரசந்தானப்பா
பூணவே ரசமதுவும் குறைந்துகாட்டும் புகழான எலுமிச்சம் பழந்தானப்பா
தோணவே திருஷ்டாந்திரங் கண்டுகொள்ளு தோராமல் சபையார்க்குக்கூறுகூறு
வேணதொரு வுபசாரக் கள்ளனைத்தான் வேகமுடன் கண்டறிந்து செப்புவாயே
5042.
செப்பவென்றால் நாவில்லை பாவுமில்லை ஜெகதலத்தில் உனைப்போல மகுத்துமுண்டோ
ஒப்பவே சபையார்முன் கள்ளனைத்தான் ஓங்காரமிட்டல்லோ யழைப்பாய்பாரே
தப்பிதங்கள் நேர்ந்ததென்று மனதிலுன்னி தண்மையுடன் பொருளதனைத் தருவான்பாரு
இப்படியே ஜாலதந்திரத்தினாலே யென்மகனே பொருளதனை வாங்குவாயே
5043.
வாங்கையிலே புத்திமான் என்றுசொல்லி வார்த்தை சொல்வார் வையகத்திலுன்னையப்பா
தூங்கியே திரியாதே மைந்தாகேளு துப்புரவாய் நீயுமொரு கெவுளியாவாய்
ஏங்கியே யுனைகண்டால் எல்லாருந்தான் எழிலுடனே யுந்தமக்கு வணக்கங்கூறி
பாங்கியர்கள் தன்முதலாய்ப் பரிசுயீவார் பாரினிலே நீயுமொரு சித்தனாமே
5044.
சித்தனென்று சொல்லியல்லோ யுன்னையப்பா சிதாபாசக் கட்டளையை மனதிலுன்னி
பத்தியாய் திரிகாலப்பூசைசெய்து பலகாலும் சிந்தித்துப் பணிவுகூறி
முத்திபெற நல்வழிக்கு வாளதாகி முயன்றுமே யெப்போதும் முயற்சிவானாய்
நத்தியே யும்மிடத்தில் சீஷனாக நாடோறும் பணிவிடைக்கு நிற்பாரே
5045.
பாரப்பா நெற்பொறியின் வித்தைசொல்வேன் பாங்கான நெல்லதுவுங் குறுணிகொண்டு
நேரப்பா சீலைதனில் முடிந்துதானும் நெடிதான சுண்ணாம்புக் காளைதன்னில்
சீருடனே கிளிஞ்சி நடுமையந்தானும் சிறப்புடனே வைத்துமல்லோ கிளிஞ்சிமூடி
காருடனே தானவித்து எடுத்துக்கொண்டு கவனமுடன் முடிச்சதனை யவிழ்த்திடாயே
5046.
அவிழ்க்கையிலே நெல்லதுவுங் காரமேறி அழகுடன் நெல்லதுவுங் கண்ணிற்றோற்றும்
புவிதனிலே வெகுசனங்கள் கூட்டத்தோடு பொங்கமுடன் தானழைத்து கும்பல்சேர்த்து
பவிமதிகள் போன்றதொரு மாந்தருக்கு பண்பான ஜாலமொன்று சொல்வாயப்பா
துவிதமுள்ள நெல்லதனை சபையோர்முன்னே துப்புரவாய் பூமிதனில் கொட்டிடாயே
5047.
கொட்டியே பலபேர்கள் பார்க்கவல்லோ கொப்பெனவே ஜலமதனை நெல்லின்மேலே
திட்டமுடன் தான்தெளிப்பாய் மைந்தாய்நீயும் தீர்க்கமுடன் நெல்லெல்லாம் பொறியேயாகும்
சட்டமுடன் பொறியெடுத்துப் பார்க்கும்போது சார்பான நெற்பொறியும் மெய்யதாச்சு
வட்டமுடன் நெருப்பில்லாப் பொறியுமாச்சு மகத்தான வித்தையிது ஜாலமாச்சு

5048.
ஜாலமென்றால் நெருப்பில்லாப் பொறியுமாச்சு சாங்கமுடன் கண்டவர்கள் மயங்கலாச்சு
கோலமுடன் பொறியெடுத்து சபையோர்முன்னம் பொங்கமுடன் தான்கொடுத்துபரிசுவாங்கி
தாலமுடன் வையகத்தில் சித்தனைப்போல் தாரிணியில் வெகுகாலமிருந்துகொண்டு
சீலமுடன் லோகவதிசயமுங்கண்டு சிற்பரனைப்போலிருந்து பூசிப்பாயே
5049.
பூசித்துத் தானிருக்கும் காலந்தன்னில் பொங்கமுடன் மாந்தரெல்லாம் உன்னையப்பா
ஆசித்து வணங்கியேதான் வன்புகூர்ந்து வப்பனே எந்நாளும் பதாம்புயத்தை
நேசித்து யுந்தமக்குக் கருணைகூர்ந்து நெடுங்காலங் கார்த்திருப்பார் மாந்தரெல்லாம்
காசுமிகப் பொன்னையெல்லாம் தருவார்பாரு கடாட்சித்து அவர்களுக்கு கதிசொல்வாயே
5050.
சொல்லவே புலிப்பாணி மைந்தாகேளு சொற்பெரிய காலாங்கி தனைநினைந்து
வெல்லவே சினையுள்ள மச்சந்தன்னை விருப்பமுடன் தானெடுத்து புனிதவானே
புல்லவே பனிநீரைத்தானெடுத்து புகழாக சினைதனக்கு நித்தியந்தான்
செல்லவே ரவிதனிலே சுறுக்குத்தாக்கு செம்மலுடன் சூரியனும் வலிப்பான்பாரே
5051.
வலித்துமே சினைதானும் பனிநீர்தன்னை வளமுடனே தான்குடித்து நிற்கும்போது
பலிப்புடைய சினையெல்லாம் உதிர்த்துக்கொண்டு பட்சமுடன் கசகசாவில் கலப்பாயப்பா
சலிப்பின்றி பரணிதனில் அடைத்துமேதான் சட்டமுடன் பதனமது செய்துகொண்டு
கலிதனிலே வெகுமாண்பர் கூட்டத்தோடு களிப்புடனே ஜாலமது செய்குவாயே
5052.
செய்யவென்றால் ஜாலமது மார்க்கங்கேளு செம்மண்ணு தொட்டியொன்று பாண்டமப்பா
துய்யநல்ல ஜலமதுவும் பாண்டந்தன்னில் துப்புரவாய் நிறையவிட்டு புகலக்கேளு
பையவே பரணைதனை திறந்துமைந்தா பாலகனே பாரினிலே வெகுபேர்காண்க
வையகங்கள் பிரமிக்க கசகசாவை வண்மையுடன் தானெடுத்துக் கொட்டுவாயே
5053.
கொட்டையிலே ஜனங்களெல்லாம் மயங்குவார்கள் கோடியிலே புத்திமானொருவனுண்டு
சட்டமுடன் மற்றோர்கள் காணாரப்பா தாரிணியில் காண்பதுவும் அரிதேயாகும்
திட்டமுடன் பாண்டமதை மூடிப்போடு தீர்க்கமுடன் ஒருநாழிகையானபின்பு
வட்டமுள்ள பாண்டமதை திறந்துபார்க்க வளமான சினையதுவும் மீனுமாச்சே
5054.
ஆச்சப்பா சினையெல்லா மீனுமாச்சு வப்பனே கசகசா நின்றுபோச்சு
நீச்சப்பா சிறுமீன்கள் பொடிகளப்பா நிலையான பாண்டமதில் மேயலாச்சு
மேச்சப்பா பொரித்ததெல்லாம் சினைதான்கெட்டி மேன்மையுள்ள கசகசா சொத்தையென்று
ஆச்சரியமாகவல்லோ வுரைப்பாயப்பா வருண்மைந்தா மெய்யென்று நம்புவாரே
5055.
நம்பியே மாண்பரெல்லாம் ஏக்கம்கொண்டு நடுநடுங்கி பிரமித்து சோபித்தேதான்
வெம்பியே முகம்வாடி யுளங்களித்து வேகமுடன் ஆசீர்மம்மிகவுஞ் செய்து
தம்பியே எந்தன்குரு நாதபோதா தாரணியில் உனைப்போல சித்தனுண்டோ
கும்பியே கைகுவித்து வுளங்களித்து கொப்பெனவே கால்தனிலே பனிகுவாரே

5056.
பனிகுவார் எந்தன்குரு நாதாவென்பார் பாரினிலே வெகுகோடி சித்துவென்பார்
துணிவுடனே ஜாலமல்ல சிருஷ்டியென்பார் தோய்ந்தபொருளுள்ள தொருகருவேயென்பார்
கணிவுடனே காயாதி கற்பங்கொண்ட கைலாசநாதமுனி கடவுளென்பார்
மணிபோன்ற லோககுரு விவர்தானென்பார் மாசற்ற சற்குருவா மென்பார்பாரே
5057.
பாரப்பா யின்னமொரு கருமானங்கேள் பாரினிலே எல்லவரும்பயந்துவோட
ஆரப்பா ஆச்சரியமானவித்தை வப்பனே அறிவுள்ளான் அறிவான்பாரு
சீரப்பா பிரதிவா மெழுகினாலே சிறப்புடனே கத்தியொன்று செய்வாய்தானும்
நேரப்பா செம்பருத்தம் சப்பார்த்துப்பூ நெடிதான செம்பாளைப் பழத்தைவாங்கே
5058.
வாங்கியே சார்பிழிந்து மன்னாகேளு மகத்தான இரும்பினுட கத்திமேலே
தூங்கியே திரியாதே புத்திவானே துடிப்புடனே சாரதனைப்பூசிப்பூசி
மாங்குபெற ரவிதனிலே காயவைத்து பான்மையுடதன்னையே பதனம்பண்ணி
சாங்கமுடன் சபைகூட்டி மைந்தாகேளு சட்டமுடன் ஜாலம்விளையாடுவாயே
5059.
ஆடுவாய் சபையார்முன் செப்பக்கேளு வப்பனே யோர்சிறுவன்புத்திவானாய்
தேடியே கொண்டுவந்து கூட்டத்துள்ளே தெளிவுடனே யவன்கழுத்தில் நிம்பழந்தன்னை
சாடியே கழுத்திலே நிம்பழத்தை சட்டமுடன் தான்தறித்து கயறுபூண்டு
வாடியே திரியாமல் மயங்கிடாமல் மன்னவனே கத்திகொண்டு யரிகுவாயே
5060.
அரிகையிலே யெலுமிச்சை பழரசந்தான் வப்பனே ரத்தமது போலேசாயும்
கிரியையிது மெய்க்கிரியை சாலவித்தை கீர்த்தியுள்ள வித்தையிது என்பார்பாரு
சரியான ஜெகஜால மிதுவேயென்பார் தாரணியில் செய்பவர்கள் இதைபோலுண்டோ
குரியான ரத்தமது ஜாலவித்தை கொற்றவனே கழுத்தறியும் வித்தைதானே
5061.
தானான வித்தையிது சூட்சம் சூட்சம் தாரணியில் யாரேனும் காண்பதுண்டோ
கோனான காலாங்கி நாதரப்பா கொற்றவனார் எந்தனுக்கு உபதேசித்த
தேனான வித்தையிது தேசிவித்தை ஜெகதலத்தில் கோடிபேர் மயங்குவார்கள்
பானான பராபரியாள் கடாட்சத்தாலே பாலகனே யுந்தனக்கு யோதினேனே
5062.
ஓதினேன் ஜாலமென்ற வினோதஜாலம் வுத்தமனே வையகத்தோர் பிழைக்கவென்று
நீதியுடன் உந்தமக்கு சொன்னேன்யானும் நிட்களங்க மாகவல்லோ வுரைத்தேனப்பா
பாதிமதி தானணிந்த தம்பிரானே பாருலகில் சித்தனைப்போ லிருந்துகொண்டு
ஜோதிமயங் காணுதற்கு சூட்சாசூட்சம் தொல்லுலகில் காண்பதற்கு வழிகொள்வாயே
5063.
கொள்ளவென்றால் குருபதத்தின் கொள்கைவேண்டும் கோளாறுதானகற்றி நடக்க வேண்டும்
எள்ளளவும் பொய்சூது கபடுதந்திரம் யென்மகனே மனந்தனிலே நண்ணலொப்ப
புள்ளிமயிலேறிவரும் புனிதவானை புகழுடனே எந்நாளும் நினைக்கவேண்டும்
விள்ளவே யவருமக்கு வுபதேசிப்பார் வித்தகனே எல்லோரும் போற்றுவாரே

5064.
போற்றுவாரின்னமொரு கருமானங்கேள் பொங்கமுடன் உந்தமக்குக் கூறுவேன்யான்
ஆற்றலுடன் காலாங்கி நாதரோடு வன்புடனே வனஞ்சுத்தி வருகும்போது
காற்றுடனே வனாந்திரங்கள் சுற்றும்போது கண்மணியே எந்தனுக்குக் களையுண்டாச்சு
நீற்றலுடன் காலாங்கி யென்னைப்பார்த்து நீட்சியுடன் களைபோக நினைத்திட்டாரே
5065.
நினைத்துமே வரிசிதனைக்கொண்டுவந்து நீதியுடன் காலாங்கிநாதர்தாமும்
புனைப்புடனே சீலைதனிலரிசிகொட்டி புகழுடனே தோளாந்திரமாகவல்லோ
சினைப்பதற்கு வரிசிக்கு நாலுகொண்ட சிறப்பான இடமதுவும் அதிகம்விட்டு
பனைப்புடனே தான்முடிந்து வாற்றோரந்தான் பட்சமுடன் மணல்தனிலே பதிந்திட்டாரே
5066.
பதிந்துமே முடிச்சியின்மேல் மனலைக்கொட்டி பாங்குபெற தீயதனைமேலேமூட்டி
அதிந்துமே யோர்சாம மெரித்தபோது வப்பனே யாற்றுநீர் கசிந்துமேதான்
துதிந்துமே யரிசியது யூறலாகி துய்யாணின்னிறம்போலே சாதமாச்சு
முதிந்துமே போகாமல் பதத்தெடுத்து முத்தமனே எந்தனுக்கு தந்தார்தானே
5067.
தானான காலாங்கி நாதர்தாமும் தண்மையுடன் எந்தமக்குக் கொடுத்தஜாலம்
கோனான குருகொடுத்த ஜாலமப்பா கொற்றவனே யுந்தனுக்கு யானும்தந்தேன்
பானான பராபரியாள் கடாட்சத்தாலே பாலித்தேன் யுந்தமக்கு இந்தப்போக்கு
தேனான ஜாலமது இந்திரஜாலம் தேற்றமுடன் யுலகுதனில் செய்வாய்பாரே
5068.
பாரப்பா வரிசியென்ற சாதமப்பா பண்புடனே கண்டவர்கள் பிரமிப்பார்கள்
நேரப்பா பாண்டமில்லா வித்தையப்பா நெடிதான தந்திரமாஞ் ஜாலவித்தை
ஆரப்பா செய்வார்கள் இந்தப்போக்கு வப்பனே யாமுமக்குச் சொன்னநீதி
சீரப்பா வுலகுதனில் சித்தனைப்போல் சிறப்புடனே தாமிருந்து யாடுவாயே
5069.
ஆடையிலே வையகத்து மாண்பரெல்லாம் அப்பனே இந்திரமாஞ்ஜாலமென்பார்
கூடையிலே வெகுபேர்கள் மாண்பர்தானும் குறிப்புடனே இச்சாலம் செய்துபார்ப்பார்
தேடையிலே பாண்டமது ஜலமுமில்லா தேசத்தில் வித்தையிது சொகுசுமெத்த
நீடையிலே சபைகூடி செய்துபார்த்து நீதியுடன் உந்தனையும் வணங்குவாரே
5070.
வணங்கியே ஏவல்களும் மிகவுஞ்செய்து வஞ்சலிகள்மிகச்செய்து வன்பாயப்பா
இணங்கியே சோடசோபசாரஞ்செய்து யென்குருவே யென்சாமி யென்பார்பாரு
மணங்கமழுந் தாமரையை யடிபணிந்து வையத்திலெப்போதும் சதாநித்தம்தான்
பணங்காசு மிகத்தந்து பலவாயீந்து பாலகனே எப்போதும் போற்றுவாரே
5071.
போற்றுவார் உனைநித்தம் புண்ணியவானே பொங்கமுடன் சதாகாலம் பணிவார்பாரு
சாற்றலுடன் திரிகாலம் பூசைசெய்வார் சதாநித்தம் யேவல்களும் மிகவேசெய்வார்
ஆற்றலுடன் சித்தனைப்போல் நீயுமப்பா வப்பனே எப்போதும் மகிமைபூண்டு
நீற்றலுடன் சிவயோகம் பூண்டுமல்லோ நீதியுடன் நீயிருந்துகொண்டு நிலையங்காணே

5072.
காணவே யின்னமொரு மார்க்கம்பாரு கருவான ஜாலமப்பா வராகஜாலம்
பூணவே கடாவொன்று வராகமொன்று பொங்கமுடன் கொண்டல்லோ செப்பக்கேளு
தோணவே சபைகூட்டி வேந்தர்முன்னே தோற்றமுடன் டோலியென்ற மேளமப்பா
நாணவே டோலிக்குள் வராகன்தன்னை நாட்டமுடன் வாய்கட்டி யடைத்திடாயே
5073.
அடைத்துமே போலிருக்கு யிருபக்கந்தான் அடவாக வாயிறுக்கிக் கட்டிப்போடு
படைமுகம் பார்த்திருக்க சீஷனொன்று பாலகனே மனதிற்கு உகந்தமாண்பன்
தடைகூடி சீஷனப்பா பாலகனாக சற்பனைகள் தெரிந்தவனாய்த் தேர்ந்தெடுத்து
விடைதனக்கு உகந்தவனாய் ஞானமோதி வித்தகனே கழுத்தினிலே டோலிமாட்டே
5074.
மாட்டியே டோலிதனையடிக்கச்சொல்லி மன்னவர்கள் பார்த்திருக்க நீயுமப்பா
கூட்டமுடன் வாடதனை சபையோர்முன்னே குறிப்பாக கத்திகொண்டு வெட்டுவாய்நீ
தேட்டமுடன் வாடதுதான் வராகமாகும் தெளிவாக வுதிரமது பூமிநிற்கும்
நீட்டமுடன் வாடதுவும் ரூபமாறி நிலையான வராகமது வாகும்பாரே
5075.
பாரென்று சொல்லியல்லோ பாலர்மெச்ச பாரினிலே திரைகொண்டு மைந்தாநீயும்
நேரேதான் டோலிதனை யடித்துக்கொண்டு நிஷ்களங்கமாகவல்லோ சபையோர்முன்னே
வேறேதான் வுள்ளிருக்கும் வராகந்தன்னை விட்டல்லோ வாடதனையுள்ளேபோடு
நாரேதான் வாராலே இருக்கிக்கட்டி நலம்பெறவே திரையதனை யவிழ்த்திடாயே
5076.
அவிழ்த்துமே சபையார்முன் வராகந்தன்னை யங்ஙனவே விட்டுவிடு பிரமிப்பார்கள்
புவிதனிலே இந்தவித்தை ஜாலவித்தை புகழான விந்தையிது காணப்போகா
துவிதமுள்ள ஜாலமேதந்திரஜாலம் துப்புரவாய் காண்பதுவே மரிதேயாகும்
குவிதமுள்ள டோலினது வித்தைதன்னை குவலயத்தில் காணார்கள் மட்டிமாடே
5077.
மாடான வித்தையிது மகிமையப்பா மகிதலத்தில் எவராலும் கூறப்போமோ
கூடான கூடுவித்தை பாயும்வித்தை கூறினேன் வையகத்தில் நீதவித்தை
தாடாண்மை கொண்டதொரு வராகவித்தை தாரணியில் யாரேனுஞ் செய்வாருண்டோ
பாடான தந்திரமாம் ஜாலப்போக்கு பாலித்தேன் மாணாக்கள் பிழைக்கத்தானே
5078.
தானான இன்னமொரு கருமானங்கேள் தன்மையுள்ள வாஞ்சநேயா பிடித்துவந்து
கோனான குருதனையே நினைத்துக்கொண்டு கொற்றவனே சிற்றாமணக்கு வித்துதானும்
தேனான வித்தையதை யெடுத்துக்கொண்டு தேற்றமுடன் ஆசனத்தின்வழியதாக
மானான வயறுநிறை கொள்ளுமட்டும் மகத்தான கொட்டைதனை பொதிந்திடாயே
5079.
பொதியவே குழிவெட்டி வாஞ்சநேயர் பொங்கமுடன் தான்போட்டு மண்ணைமூடி
விதியான மார்க்கமது போலேயப்பா வித்தகனே நாள்தோறும் ஜலத்தைவிட்டு
பதியான நாள்கடந்து பார்த்தாயானால் பாலகனே செடியாகும் பண்பாய்க்கேளு
துதியுடனே காயதுவும் காய்த்தபின்பு தூய்மையுடன் வித்துதனை யெடுத்திடாயே

5080.
எடுத்துமே தயிலமது வாட்டியப்பா எழிலான தயிலமதை பதனம்பண்ணு
அடுத்துமே அழிஞ்சியின்தன் தயிலங்கூட்டி வப்பனே பரணிதனில் அடைத்துநீதான்
விடுத்துமே விடுதியொன்று மச்சியொன்று விரிவான மாளியது வீட்டுக்குள்ளே
தொடுத்ததொரு விளக்கதனில் நீபமேற்றி தோற்றமடா வுன்ரூபம் கிரங்குமாமே
5081.
ஆமப்பா வெளிநின்ற மாந்தர்க்கெல்லாம் அப்பனே தோற்றுமடா குரங்குரூபம்
போமப்பா வுன்னின்று பேசும்போது பேரான ரூபமது குரங்குபோலாம்
நாமப்பா வெளிநின்று பேசினாக்கால் நாயகனே நீயுமொரு மனிதனப்பா
தாமப்பா இந்தபடி ஜாலஞ்செய்து தாரணியில் பிழைப்பதுவும் அதிதமாமே
5082.
அதிதமென்ற வித்தையிது யார்தான்காண்பர் அன்பான புத்தியுள்ளான் அறிவான்பாரு
துதிதமுள்ள தருவினது ஜாலப்போக்கு தூய்மையுடன் காணுபவன் சித்தனப்பா
பதிதனிலே இந்தவித்தை செய்துமல்லோ பாலகனே கீர்த்தியது கொண்டுமேதான்
மதிமயங்க எல்லவருங் கண்டுயேங்க மானிலத்தில் எப்போதும் துதிகொள்வாயே
5083.
கொள்ளவே யின்னமொரு மார்க்கம்பாரு கூறுவேன் எனதையர் காலாங்கிநாதர்
உள்ளபடி கண்டதொரு வதிசயங்கள் உத்தமனே யானுமது வெகுவாய்ச்சொல்வேன்
வள்ளலுறை தென்னிலங்கைப் பதியிலப்பா தளமான வதிசயங்கள் கூறுவேன்யான்
தெள்ளுமையாள் துவாரத்தில் இலங்கையப்பா தெளிவான பதிமகிமை கூறுவேனே
5084.
கூறுவேன் இலங்கைபதி மார்க்கந்தன்னை கொற்றவனே புலிப்பாணி மைந்தாகேளு
தேறுபுகழ் நவகண்டந்தன்னிலப்பா தேர்வேந்தர் ராஜர்களின் கோட்டைதன்னில்
வீறுபுகழ் இராவணனார் கோட்டையப்பா விண்ணாழி கோட்டையது விளம்பப்போமோ
மாறுபடாக் கோட்டையது வளப்பஞ்சொல்வேன் மகத்தான வதிசயங்கள் மெத்தவுண்டே
5085.
உண்டான தேசமது இலங்கையப்பா வுத்தமனே வெகுகோடி காலமுன்னே
கண்டேனே குளிகையது பூண்டுகொண்டு கண்கொள்ளாக் கோட்டையது யானுங் கண்டேன்
அண்டர்முனி ராட்சதர்கள் இருக்குங்கோட்டை அரசனது ராவணனார்கோட்டையப்பா
சண்டமாருதம்போலக் கோட்டையுண்டு சாங்கமுடன் கற்கோட்டைக் கூறொண்ணாதே
5086.
ஒண்ணாது தேசமது நூறுகாதம் உத்தமனே காடுவன பூமியெல்லாம்
அண்ணாந்து பார்க்கவொண்ணா கோட்டையப்பா வழகான கோபுரங்கள் மாபுரங்கள்
சுண்ணாம்பு பூமியது வையகந்தான் சுற்றிலும் சாகரமே வலைகள்மோதும்
தண்மையுடன் யெந்நாளும் வாடைக்காற்று சாங்கமுடன் இருப்பதுவுங் கண்டிட்டேனே
5087.
கண்டதொரு தேசமது யிலங்கைநாடு காசினியில் அப்பதிபோலெங்குமில்லை
உண்டான வதிசயங்கள் மெத்தவுண்டு வுலகத்தில் எங்கேனும் கண்டதுண்டோ
திண்டான கோட்டைக்கு யகழிமத்தி திறளான சாளரங்க வாசலுண்டு
தண்டான வகழிக்குங் கடலுக்குந்தான் தாக்கான வழிதட்டு முண்டேபாரே

5088.
பாரப்பா ஜலமதுவும் போக்குவுண்டு பாங்கான கோட்டைக்கும் அகழிக்குந்தான்
நேரப்பா சாகரமும் வழியுமுண்டு நிலையான இலங்கைபதி கோட்டைதன்னில்
ஆரப்பா வெகுகால மிப்படியேயுண்டு வப்பனே வோடமது போவதுண்டு
கூரப்பா நெடுங்கால மிப்படியேயப்பா கூரான கோட்டையது இருக்குந்தானே
5089.
தானான கோட்டையது வாசல்தன்னில் தார்வேந்தன் மன்னனது செங்கோல்தன்னில்
தேனான மனோன்மணியாள் ரூபம்போல தேர்வேந்தர் சபைமுன்னே தோற்றலாச்சு
மானான வசீரி வாக்குதானும் மன்னவர்முன் தன்செவிக்குக் கேட்கலாச்சு
கோனான வேந்தனுமே திடுக்கிட்டேங்கி கொற்றவனும் பயந்தல்லோ விழுந்திட்டாரே
5090.
இட்டாரே தேர்வேந்தர் ராசர்தாமும் எழிலான கோட்டைக்குள் மத்தியானம்
பட்டதொரு ராசர்முன் மாண்பரெல்லாம் பயந்தொடுங்கி கண்கலக்கமிட்டபோது
அட்டதிசை தான்கலங்கி சாகரந்தான் வடியோடே யலையதும் மேலேபொங்கி
சட்டமுடன் கோட்டைக்குள் சாகரந்தான் சடுதியிலே பொங்கியது முழுகலாச்சே
5091.
ஆச்சப்பா கோட்டையது முழுகலாச்சு வப்பனே ராஜாதிபடைகள்யாவும்
போச்சப்பா கோட்டையது மண்மேடாச்சு பொங்கமுடன் மறுயுகத்தில் சாகரந்தான்
பாச்சலுடன் பொங்கியல்லோ மண்ணொதுங்கி பாங்குடனே நிலையாழி சாகரத்தில்
வீச்சலுடன் கோபுரங்கள் மாபுரங்கள் விண்ணாழிக்குள்ளாக மறைந்துபோச்சே
5092.
மறைந்துமே இலங்கையது போனபின்பு மகத்தான கோட்டைக்குள் இருக்கும்வாசல்
திறந்துமே கதவுகளுங் கலசத்தோடு திரையாழிக் கடலதனில் சிகரந்தானும்
உறைந்ததொரு கோபுரத்தில் கலைரசமெல்லாம் வுற்றதொரு கரைவழியே காணலாச்சு
இறையோடு ராவணனும் இலங்கைதன்னிற் திட்டமுடன் இருப்பரெனப் பேருண்டாச்சே
5093.
பேருண்டாய் வையகத்தில் மாண்பரெல்லாம் பேருலகில் யெப்போதும் இலங்கைதன்னை
சீருடனே போற்றியது மிகவுஞ்செய்து சிறப்புடனே எந்நாளுந் துதியேசெய்து
பாருலகம் சீனபதியிருக்குதென்று பாண்மையுடன் வையகத்தோர் துதிப்பார்கண்டீர்
தாருலகமழிந்துமல்லோ சேனையெல்லாந் தப்பாமல் கடவுள்பதி சேர்ந்தார்காணே
5094.
காணவே யின்னமொரு மார்க்கம்பாரு கருவான ஜாலமொன்று வரிசிஜாலம்
தோணவே யரிசிதனை யெடுத்துக்கொண்டு தோற்றமுள்ள படியொன்று பாத்திரந்தான்
மாணவே படிநிறைய வரிசியிட்டு மன்னவனே கூரெழுத்தாணிகொண்டு
நீணவே கிட்டணைகள் செய்துமல்லோ நினவாக எழுத்தாணி தன்னைவாங்கே
5095.
வாங்கியே சபையோர்முன் ஆயிரம்பேர் வளமாகத் தானழைத்துச்செப்பக்கேளு
ஏங்கியே எல்லவரும் பார்த்தொடுங்க எழிலான கூரெழுத்தாணிதன்னை
ஓங்கியே குத்தியல்லோ தூக்குவாய்நீ வுத்தமனே யடியதுவும் மேலேயாகும்
தூங்கியே திரியாதே மைந்தாகேளு துப்புரவாய் ஜாலமது செய்துகாட்டே

5096.
காட்டையிலே எழுத்தாணி தானுமப்பா கருவான வரிசிதனை பிடித்துக்கொண்டு
வாட்டமுடன் நிற்கின்ற வண்மைதன்னை வையகத்தில் கண்டவர்கள் மயங்குவார்கள்
கேட்டமுடன் அரிசிதனைக்கொட்டிக்காட்ட திறமுடனே கேட்பவர்களாமேயானால்
நீட்டமுடன் கொட்டியதைக் காட்டுவாய்நீ நிஜமென்ற ஜாலமதை மெய்யென்பாரே
5097.
பாரேதான் லோகமெல்லாம் பிர்மித்தேங்கி பாலகனே யுனைக்கண்டு வஞ்சலிப்பார்
சீரேதா னுந்தமக்கு சிறப்புமுண்டு சிற்பரனைப் போலாக எண்ணியல்லோ
நேரேதான் திரிகாலபூசையோடு நீதியுடன் உபசரனை மெத்தவுண்டு
வீரேதான் சதாகாலம் உனைப்பணிந்து விருப்பமுடன் எப்போதும் துதிப்பார்தாமே
5098.
துதியான யின்னமொரு ஜாலங்கேளு துப்புரவாய் கோழியென்ற முட்டைதானும்
பதியான வர்ணமதுமேலேயேற்றி பாங்குடனே காரமென்ற காடிதன்னில்
விதியான மூன்றுநாளூரப்போடு விருப்பமுடன் மூன்றுநாள் கழிந்தபின்பு
மதிபோன்ற பூனீராம் கிளாசுபாத்திரம் மதிப்புடனே போட்டடைக்க விதிதான்கேளே
5099.
கேளப்பா சின்னவாய் கொண்டபாத்திரம் கெடியான பாத்திரமாம் வாயினுள்ளே
பாளப்பா போகாமல் முட்டைதன்னை பான்மையுடன் கையினாற்றள்ள முட்டை
வீளப்பஆ தோள்போலே யுள்ளேபோகும் விருப்பமுடன் மறுபடியும் பாண்டத்துள்ளே
நாளப்பா போகாமல் ஜலத்தைவிட்டு நாயகனே யொருநாழி பொருத்திடாயே
5100.
பொறுத்துமே ஜலமதனை யிறுத்துப்போடு பொன்னவனே எப்போதும் போலேயப்பா
நிறுத்துமே முட்டையது கல்லுபோலாம் நீமகனே பாண்டத்துள் உருட்டிக்காட்டு
திருத்தமுடன் முட்டையது மகிமைவித்தை தீர்க்கமுடன் யாரேனுங் காணமாட்டார்
பொருத்தமுள்ள முட்டையென்ற வித்தைதானும் பொங்கமுடன் மாணாக்கள்
பிழைக்கத்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

5101.
தானான இன்னமொரு ஜாலமார்க்கம் தண்மையுடன் கூறுகிறேன் மைந்தாகேளு
தேனான மனோன்மணியாள் கிருபையாலே ஜெகதலத்தில் அனேகவித்தை செப்பக்கேளு
கோனான காலாங்கி நாதர்தம்மால் குவலயத்தில் கோடியுக மிருந்துமேதான்
பானான வதிசயங்கள் மிகவுஞ்சொல்லி பாலித்தார் எந்தனுக்குக் கோடியாமே
5102.
கோடியாம் பசுமாடு இருக்குங்கூட்டம் கொற்றவனே நீசென்றுமைந்தாபாரு
தேடியே கரும்புலியின் கொழுப்புதன்னை தீவிரமாம் கொண்டல்லோ காற்றுவாடை
நாடியே ஓரிடமாய் வைத்துக்கொண்டு நலம்பெறவே கோனானின்னருகிற்சென்று
பாடியே பால்கறக்கச் சொல்வாயப்பா பாலகனே மாடெல்லாமோடும்பாரே
5103.
ஓடியே பால்கறக்க மாட்டாதப்பா வுத்தமனே சமுசாரி யலைவான்பாரு
தேடியே மாடெல்லாம் பிடிப்பான்பாரு தேசத்தில் மாடெல்லாமோட்டங்காட்டி
நீடியே யவனிடத்தில் வாராதப்பா நிட்சய காலாங்கி ஜாலமப்பா
கூடியே ஜனங்களெல்லாங் கூட்டமிட்டு கொப்பெனவே மயங்கியல்லோ தியங்குவாரே
5104.
தியங்கியே ஏமாந்துநிற்கும்போது தீரமுடன் கோனாரின்பக்கல்வந்து
மயங்கியதோர் கோனானைக் கண்டல்லோதான் மார்க்கமுடன் தானழைத்து மன்னாகேளு
நயம்படவே யவன்தனக்கு குறிகள்சொல்ல நன்மையுடன் செம்பொன்னைக் கேட்பாயப்பா
ஜெயம்பெறவே காளியிடசாபத்தாலே ஜெகதலத்தில் மாடெல்லா மோடலாச்சே
5105.
ஆச்சப்பா சாபத்தை நிவரத்திசெய்து வப்பனே பூசைசெய்யவேண்டும்
மூச்சடங்கிப்போனதொரு மாடெல்லாந்தான் உத்தமனே மந்தைவந்து சேரும்பாரு
பாய்ச்சலுடன் வேங்கையுட கொழுப்புதன்னை பாலகனே நீமறைவாய் வைத்துவிட்டு
கூச்சலுடன் பாஷையாய் மந்தைமாட்டை கொப்பெனவே தானழைக்க வருகும்பாரே
5106.
பாரப்பா மந்தையெல்லாஞ் சேர்ந்தபின்பு பரிவாகக் காளிக்குப் பூசைபோடு
நேரப்பா பூசையது நேரும்போது நெடிதான சன்னிதங்கள் மிகவுங்கூறி
ஆரப்பா யடர்ந்தவனந்தனிலிருக்கும் அப்பனே கோனானே சொல்லக்கேளும்
சீரப்பா யுந்தமக்குக் குறைவுமில்லை சிறப்புடனே மாதமொரு பூசைசெய்யே
5107.
செய்யவே காளிக்கு காணிக்கையப்பா செப்பியதோர் உத்தாரப்படிதானப்பா
உய்யவே எப்போதும் பூசைமார்க்கம் உத்தமியே போடுகிறேன் என்றுகூறி
பையவே கப்பணங்கள் கட்டியேதான் பான்மையுடன் காணிக்கைதருவேனென்று
வெய்யவே கற்பூர வாலாத்திக்கொண்டு விருப்பமுடன் போற்றியது செய்வாய்தானே
5108.
தாமான பூசைகொண்ட காளிதானும் தன்மையுடன் சன்னதங்கள் வந்தாற்போல
கோமானாம் இடையன்முன் எதிரேநின்று கொற்றவனே குறிசொல்லுங்காலந்தன்னில்
சாமான மானதொரு குறிகளல்லோ தாரணியில் இவர்போலுஞ் சித்துமுண்டோ
போமேதான் சகலசித்துங் கடந்தஞானி பொங்கமுடன் குறிசொல்லுஞ் சித்தென்பாரே

5109.
என்பாரே கரும்புலியின் கொழுப்பின்மார்க்கம் எழிலான வித்தையிது கூறப்போமோ
அன்பான தோழனவன் இருக்கவேண்டும் அவனுக்கே மர்மங்கள் கூறவேண்டும்
பன்மையாய் பலபேர்கள் கூடுவார்கள் பார்க்கையிலே கர்மிகளும் தர்மிகளுமுண்டு
நன்மையுடன் வெகுவார்த்தைப் பேசியல்லோ நலம்பெறவே கருதனையே கேட்பார்காணே
5110.
காணவே மர்மத்தைக்கூறவேண்டாம் காசினியில் மகிமைகள் மெத்தவுண்டு
பூணவே மர்மத்தை வெளிகாட்டாமல் பொங்கமுடன் ஜாலமதை செய்துகொண்டு
நாணவே வையகத்தில் வித்தைசெய்து நன்மையுடன் பிழைப்பதுவே மெத்தநன்று
தோணவே இப்பாகமைந்தாபாரு தோற்றமுடன் உந்தமக்கு உரைத்ததாமே
5111.
உரைத்தேனே புலிப்பாணி மைந்தாபாரு உத்தமனே இன்னமொரு பாகஞ்சொல்வேன்
கரைக்கின்ற மருந்தினிட ஜாலமப்பா கண்கண்ட வித்தையடா கழறப்போமோ
துரைத்தனத்தார் மெச்சுகின்ற ஜாலமப்பா துப்புரவாய் நானுரைப்பேன் துய்யபாலா
கரையான குளங்கண்டு மடுவுகண்டு கட்டழகா ஜாலமது செய்வாய்தானே
5112.
தானான வித்ததுதான் பேன்கொட்டையப்பா தாக்கான சாதியது பெருவித்தாக
மானான வித்ததுதான் கொண்டுவந்து மகத்தான வக்கினியில் வருத்துப்போடு
தேனான வித்ததனை வறுத்தபின்பு தெளிவாக பொடியம்மி தனிலரைத்து
கோனான குருபதத்தை மனதிலெண்ணி கொற்றவனே யதிற்சேர்க்க வுகமைகேளே
5113.
கேளேதான் புலிப்பாணி மைந்தாகேளு கெடிதான பூநாக மன்னித்தோடு
பாரேதான் போகாமல் கிளறிப்போடு பாங்காகக் கொதியிட்டு எடுத்துக்கொண்டு
காளேதான் போகாமல் மத்தியானம் நலமான மடுவுதனில் மச்சங்கண்டு
ஆளேதான் அம்மருந்தை நீரிலேதானப்பனே கரைத்துவிடு மைந்தாபாரே
5114.
பாரேதான் போதையென்ற மருந்தினாலே பாங்கான மச்சமெல்லாந் தியக்கங்கொண்டு
சேரேதான் கரையோரம் வந்துசேரும் செயலான மருந்தினிட வேகத்தாலே
நேரேதான் ஜலத்தைவிட்டு எகிறிப்பாயும் நெடிதான மச்சமெல்லாம் கூறப்போமோ
வீரேதான் விஷமேறி மயக்கங்கொண்டு விடுபட்டு யேகுமல்லோ மச்சந்தானே
5115.
தானான ஜாலவித்தை யதீதவித்தை தாரணியில் சூட்சமதை யறியாமாண்பர்
கோனான காலாங்கி நாதர்வாக்கு குவலயத்திற்பொய்யாது மெய்யேயாகும்
தேனான ஜாலவித்தை செய்துமல்லோ தேசத்தில் பிழைக்கவல்லோ மாண்பருக்கு
பானான பராபரியாள் கிருபையாலே பாலித்த வித்தையது பாண்மையாமே
5116.
பாண்மையாம் இவ்வித்தை யறிந்துமைந்தா பாங்கான ராஜரிடஞ் சென்றாயானால்
தேன்போன்ற ஜாலமதை மிகவாய்ச்செய்து தேற்றமுடன் அவர்மனது களிப்புண்டானால்
மேன்மையாம் உந்தனுக்கு வேணதீவார் மேதினியில் உனைப்போல சித்தருண்டோ
பாண்மையுடன் சிவராஜயோகஞ்செய்து பாலிப்பாய் வெகுகோடி வித்தைதாமே

5117.
வித்தையால் ஜெகஜால வித்தையப்பா விருப்பமுடன் உந்தனுக்கு உபதேசித்தேன்
சுத்தமுடன் ஞானோபதேசவித்தை சூட்சாதி சூட்சமெல்லாம் திறந்துவிட்டேன்
நித்தமுமே மதியமுர்தம் நிலையம்பூண்டு நீணிலத்தில் நீயுமொரு சித்தனைப்போல
கத்தனையே எந்நாளுமனதிலெண்ணி கைலாயபதிபோல வாழ்ந்திடாயே
5118.
வாழவென்றா லின்னமொரு மார்க்கம்பாரு வளமான வித்தையது கருதானப்பா
தாழவே புலிப்பாணி மைந்தாகேளு தகமையுள்ள கண்மணியே புகல்வேன்பாரு
வேழமையாய் தேவதைகள் கூட்டத்தோடும் வெகுமாண்பருக்கோசை தன்னினோடும்
சாழலெனு மோசையது முறிந்துபோக சட்டமுடன் யாமுரைப்போம் வளமைகாணே
5119.
காணவே பேயோட்டு மந்திரவாதி கனமான பத்துபேர் மாண்பர்கூடி
தோணவே சிலம்பங்கள் போடும்போது துப்புரவாய்க் கூச்சலுடன் போரேவந்தால்
வேணவே மர்மங்கள் மனதிற்கொண்டு வேட்கையுடன் வுடுக்கைதனை யுடைப்பதற்கு
நாணவே கெந்தகத்தின் திராவகத்தால் நலமாக குச்சிதன்னிற் கோடுபோடே
5120.
போடேதான் எதிராளி காணாமற்றான் போக்கான திராவகத்தைத் தீட்டும்போது
நீடவே சவ்வென்ற சர்மந்தானும் நிட்களங்கமாகவல்லோ வெந்துமேதான்
கூடவே யிருக்குமந்த காலந்தன்னில் கொப்பெனவே யெதிராளி வந்துமல்லோ
சாடவே யுடுக்கைதனை யடிக்கும்போது சட்டமுடன் உடுக்கதுவும் கிழியுந்தானே
5121.
தானான வுடுக்கையது கிழியும்போது தாக்கான எதிராளி மாண்பரெல்லாம்
கோனான சற்குருவை மனதிலெண்ணி கொப்பெனவே மகதேவா வனியாயந்தான்
தேனான வுடுக்கையது கடிகைமுன்னே தெளிவான ஓசையது பாடிற்றல்லோ
மானான மஹேஸ்பரியே யென்னபாவம் மங்கையரே எந்தனுக்கு கூரென்றாரே
5122.
கூறென்று சொல்லுகையில் பாலன்பேரில் கொப்பெனவே சன்னதங்கள் ஏகியல்லோ
ஆரென்று எண்ணாதே எந்தன்மீதில் அப்பனே சக்கலாதேவியப்பா
ஊரென்று இந்தவூர் பதியுமல்ல வுத்தமனே வடகாசி வயோத்தியல்லோ
தேரென்ற பதிதனிலே வீற்றிருக்கும் தேவியல்லோ சக்கலாதேவியாச்சே
5123.
ஆச்சென்று சொல்லுகையில் பாலன்தானும் வன்பான தோழரெல்லா மொன்றாய்கூடி
பேச்சொன்றும் பேசாமல் பின்னோடாமல் பிரியமுடன் மனதுவந்து தேவியார்க்கு
கூச்சலுடன் குறைநீங்கி எங்களுக்கு கொம்பனையே செய்தகுற்றம் கூறுமம்மா
பாய்ச்சலுடன் மலையேறிப் பதியைத்தேடி பாங்குடனே போகவென்று வரங்கேட்டாரே
5124.
கேட்டதொரு மாண்பருக்கு தேவியாரும் கிருபையுடன் மனங்களித்து கூறும்வார்த்தை
நீட்டமுடன் எதிராளி மந்திரதந்திரம் நேர்மையுடன் நீங்களல்லோ வறியாமற்றான்
வாட்டமுடன் பகையாளி செய்தகுற்றம் வண்மையுடன் அறிவதற்கு மனமிருந்தால்
தாட்டிகமாய்ச் செம்பொன்னை தட்டில்வைத்து சட்டமுடன் கேட்டாலே விதிசொல்வேனே

5125.
விதியான வழியதுவுங் கூறும்போது விருப்பமுடன் மாண்பரெல்லாம் ஒன்றாய்க்கூடி
மதிமயங்கி செம்பொன்னைத் தட்டில்வைத்து மார்க்கமுடன் காணிக்கையேர்வையென்ன
பதிகடந்து மாண்பருக்கு கருவின்மார்க்கம் பட்சமுடன் தாமுரைத்து பழியுந்தீர்த்து
கதியனைத்தும் பெற்றல்லோ ஜாலதந்திரம் நீதியுடன் சித்தனைப்போல் செய்வாய்பாரே
5126.
பாரேதான் கருவறிவான் புத்திவான்தான் பாரினிலே மற்றவரோ காணப்போரார்
நேரேதான் வுலகமதில் ஜாலதந்திரம் நேர்மையுடன் இப்படியே செய்வார்பாரு
சேரேதான் கிட்டிருந்து நிதிகொடுத்து சேர்வையுடன் தேவதைகள் மார்க்கங்கண்டு
கூரேதான் வையகத்தில் ஜாலஞ்செய் கொப்பெனவே மாண்பரெல்லாம் பிழைப்பார்காணே
5127.
காணவே யின்னமொரு மார்க்கம்பாரு கருவான புலிப்பாணி மைந்தாகேளு
தோணவே யுடுக்கைதனை உடைப்பதற்கு துப்புறவாய்க் கருமானமொன்று சொல்வேன்
நீணவே வீரமென்ற காடிகாரம் நீதியுடன் தானெடுத்து மைந்தாபாரு
வாணமென்ற வுடுக்கைதனை கையிலேந்தி வளமான கோடதுபோல் தீட்டிடாயே
5128.
தீத்துமே காடியென்ற காரந்தன்னால் தீரமுடன் கீறலது வூனும்போது
வேத்துமே சவ்வதுவும் வெந்துமேதான் வேதாந்தத் தாயினது வுடுக்கைதானும்
ஆத்துமே வெந்துனைந்து இருக்கும்பாரு வப்பனே படுக்கைத்து மச்சந்தானும்
கீத்தலுடன் கைதட்டியடிக்கும்போது கீர்த்தியுடன் வுடுக்கையது வுடையும்பாரே
5129.
உடைந்ததொரு வுடுக்கையது காணும்போது வுத்தமர்கள் மாண்பரெல்லாம் திடுக்கிட்டேங்கி
படைமுகந்தான்கலங்கி பொறிகலங்கி பாங்கான மாண்பரெல்லாம் மதிகெட்டேங்கி
கடையான மாந்திரீக தந்திரஜாலம் கண்காணா வித்தையென்று கத்துவார்கள்
விடையான பாலரெல்லாம் மெய்யென்றெண்ணி விருப்பமுடன் அதிசயித்து நின்றிட்டாரே
5130.
நின்றாரே யின்னமொரு மார்க்கம்பாரு நிலையான புலிப்பாணி மைந்தாகேளு
வென்றிடவே மாணாக்கர் பிழைப்பதற்கு விருப்பமுடன் ஜாலமது சொல்வேன்யானும்
குன்றான மலைக்கல்லு போலேயப்பா குழியான மண்பாண்டமொன்றுசெய்து
நன்றான வாயதுவும் கலசம்போல நலமான சிறுவாயாய் செய்திடாயே
5131.
செய்யவே பாண்டமது கலசந்தன்னில் செயலான வித்தையது எல்லோர்காண
பையவே பூசனியாம் பிஞ்சுதன்னை பாங்குடனே மட்பாண்டந்தன்னிலிட்டு
மெய்யுடனே சின்னவாய் கொண்டபாண்டம் மெல்லெனவே பூசனிக்காய் வளர்ந்துமல்லோ
கொய்தபின்பு தனையெடுத்து பாண்டந்தன்னை கொப்பெனவே ரவிதனிலே வைக்கக்கேளே
5132.
கேளேதான் பாண்டமது ரவியில்வைக்க கொடியான காயதுவும் பழமேயாகி
நாளேதான் முத்தினதோர் பழமுந்தானும் நலமான பாண்டத்தில் உருளும்பாரு
சூளேதான் கலசமென்ற பாண்டந்தன்னை துப்புரவாய் பதனமது செய்துகொண்டு
ஆளேதான் தலைமீதில் குடத்தைவைத்து வன்புடனே ஜாலமது செய்வாய்தானே

5133.
தானான சபையேறி வேந்தர்முன்னே சட்டமுடன் மாணாக்கள் கூடிருக்க
கோனான வேந்தர்களும் திடுக்கிட்டேங்க கொற்றவனே பாண்டமதை முன்னிறக்கி
தேனான பூசனிக்காய் வேறங்கான்று தேற்றமுடன் சபையோர்முன் கொண்டுவந்து
பானான பராபரியை மனதிலெண்ணி பட்சமுடன் ஜாலமது செய்துகாட்டே
5134.
காட்டவே தனக்குகந்த சீஷனாக கருவாக மர்மமதை யவனுக்கோதி
நீட்டமுடன் பாண்டமதை யவன்கைதந்து நிறையவே ஜலமதனைக்கொடுவாவென்று
வாட்டமுடன் பாண்டமதில் ஜலமும்நிற்க வாகுடனே வலுவேந்தர்பார்த்திருக்க
நீட்டமுடன் மரமென்ற டோலிதன்னை நினைவாக யவன்கழுத்தில் மாட்டிடாயே
5135.
மாட்டியே திரைவளைத்து மதியம்பூண மார்க்கமுடன் எல்லவரும் பார்த்திருக்க
தாட்டிகவாய் ரவியதனிலிருந்துகொண்டு சட்டமுடன் பூசனிக்காய்தனையெடுத்து
நீட்டமுடன் டோலியென்ற கச்சைக்குள்ளே நினைவுடனே யாருமதுங் காணாமற்றான்
பூட்டகமாய் பூசனிக்காய் தனையெடுத்து பொங்கமுடன் டோலிக்குள் பொதிவாய்மூடே
5136.
மூடியே திரைநீக்கி மைந்தாபாரு முனையான பூசனிக்காய் குடத்துள்ளேகி
ஓடியே காயதுவும் பாண்டத்துள்ளே வுத்தமனே யிருக்கின்ற வயணம்பாரு
சாடியே ஜலமதனை யகற்றிப்போடு சட்டமுடன் பாண்டமதை திறந்துகாட்ட
வாடியே குடத்துக்குள் காயைக்காட்ட வண்மையுள்ள ஜாலமென்று மயங்குவாரே
5137.
மயங்குவார் குடத்துக்குள் பூசனிக்காய் மார்க்கமுடன் சென்றதொரு புதுமைகண்டு
தியங்கியே ஜெகஜாலயேந்திரஜாலம் தீர்க்கமுடன் மாந்திரீகம் இதற்கீடுண்டோ
நயம்படவே தாமுரைத்து மாண்பரெல்லாம் நாதாந்த சித்துவென்று நடுங்குவார்கள்
ஜெயம்பெறவே வித்தையிது யதிதவித்தை செய்கிறதோர் வண்மைகண்டு பிரமிப்பாரே
5138.
பாரேதான் இவ்வண்ண தந்திரஜாலம் பாரினிலே கருவாளி யறிவான்பாரு
நேரேதான் ஜாலவகை செய்துமல்லோ நெடிதான பிரம்மலபி கடந்தோன்போலே
சேரேதான் மாணாக்கள் கோடிமுன்னே செய்துமே தந்திரமாம் ஜாலப்போக்கில்
நீரேதான் பணமதுவும் மிகவேவாங்கி நீதியுடன் பிழைப்பதுவும் தருமமாமே
5139.
தருமமாஞ் ஜெகஜால தந்திரஜாலம் தாரிணியில் பிழைப்பதுவே நீதியாகும்
கருமமா மற்றொருகை தொழிலினாலே காசினியில் வெகுபாவமெய்தும்பாரு
மருமமது யாருக்கும் வெளியிடாமல் மார்க்கமுடன் ஜீவனத்தை செய்துகொண்டு
சொரூபமென்ற ஞானோபதேசந்தன்னை சுத்தமுடன் பெறுபவனே சித்தனாமே
5140.
சித்தனாய்ப் பிறந்தாலும் தீர்மைவேண்டும் சீருலகில் பலபேர்கள் மதிப்பேவேண்டும்
கத்தனாங் காலாங்கி போலேகீர்த்தி காசினியில் அவர்போலே பெறவேவேண்டும்
நித்தமுமே மனோன்மணியாள் அருளேவேண்டும் நீங்காத தவத்துறுதி கொள்ளவேண்டும்
பத்தியுடன் சித்துமனதுறுதிவேண்டும் பாரினிலே நீயுமொரு நீதிவானே

5141.
நீதியா யின்னமொரு மார்க்கம்பாரு நிலையான கருமானமொன்றுசொல்வேன்
சோதியே சுடரான மணிவிளக்கே தோற்றமுடன் யாமுனக்கு வுரைப்பேன்பாராய்
ஆதியாம் கற்பூர மணிவிளக்கை யப்பனே ஜாலமென்ற மணிதான்சொல்வேன்
சாதியினி லுயர்ந்ததொரு பூரமப்பா தண்மையுள்ள பூரமது ஆலாத்தியாமே
5142.
ஆமேதான் ஆலாத்தி கற்பூரத்தை அடைவுடனே தானெரிக்க வண்மைசொல்வேன்
நாமேதான் சொன்னபடி மச்சுமாளி நலமாக மாளிகையின் நடுமையத்தில்
போமேதான் குடவிளக்கு தன்னையப்பா பொங்கமுடன் பத்தடியாந்தூரந்தன்னில்
வேமேதான் வீண்போகா வண்ணமப்பா விருப்பமுடன் பதிதனையே வைக்கக்கேளே
5143.
கேளப்பா புலிப்பாணி மைந்தாகேளு கிருபையுள்ள யெந்தனிரு கண்ணேயப்பா
பாளப்பா போகாமல் புத்திமானே பாங்கான காலமொன்று செய்வாயப்பா
நீளப்பா பதிமுகத்திலிருந்துகொண்டு நீதியுடன் காந்தியது பூசைமார்க்கம்
வேளப்பா நோயாளி முன்னதாக வேள்வியுடன் வோமமது செய்திடாயே
5144.
செய்யவே நோயாளி படிநிதானம் கீர்த்தியுடன் யாககுண்டம் வளர்த்தும்போது
பையவே பூசைமுகம் கற்பூராத்தி பாங்குடனே ஜாலமது செய்யக்கேளு
துய்யநல்ல தீமுறுகல் பாஷாணத்தை துப்புறவாய் ஜலமதனில் வைத்துக்கொண்டு
மெய்யுடனே ஜலமதனைக்கையிற்றோய்த்து மேன்மையுடன் பாஷாணம் பதனங்கொள்ளே
5145.
கொள்ளவே தீமுறுகல் பாஷாணத்தை கொப்பெனவே வெண்ணீரில்தான்கலந்து
விள்ளவே ஓம்நமசியென்றுவோதி மிக்கவே கற்பூர மேலிற்போடு
துள்ளவே சீஷனுக்குக் கூறும்வார்த்தை துடியான கற்பூரம் விளக்கில்லாமல்
அள்ளவே குதிகொண்டு தீபம்போலே வாத்தாளே எறியவென்று வபயஞ்சொல்லே
5146.
சொல்லவே கற்பூரம் விளக்கில்லாமல் துப்புறவாய் ஜோதியுடன் எறியும்பாரு
வெல்லவே தீபமது தூரநிற்க வேதாந்தத் தாயினது கடாட்சத்தாலே
மெல்லவே எறிந்த வண்ணந்தன்னைப்பார்த்து மேதினியில் மாந்தரெல்லாம் மெய்நடுங்கி
கொல்லவே வந்ததொரு பூதந்தானும் கொப்பெனவே கற்பூர மெறியலாச்சே
5147.
ஆச்சப்பா ஜாலமென்ற தந்திரவேதை வதரணங்கள் தன்னாலே எறியலாச்சு
மூச்சொடுங்கிப் போயிருந்த பூரந்தானும் முனையான கொழுந்துவிட்டு எறியும்வண்ணம்
பாச்சலுடன் மாண்பர்களுங் கண்டுமல்லோ பாங்குடனே யதுபுதுமைகாலமென்பார்
ஆச்சரிய மானதொரு வித்தைதானும் அவனியிலே யாரறிவார் புத்திமானே
5148.
புத்தியுள்ள புலிப்பாணி மைந்தாகேளு பனிதமுடனுந்தமக்கு யின்னஞ்சொல்வேன்
சத்தியமாய் கருமானமின்னவென்று சட்டமுடன் யானுரைப்பேன் மைந்தாகேளு
வெற்றிபெற மாண்பர்களில் ஆயிரம்பேர் வெடிக்கை சிமிட்டுவித்தை வினோதம்பாரு
தத்துவமாய் சபையோர்கள் முன்னதாக சார்புடனே கரங்குவித்து நிற்பார்பாரே

5149.
பாரேதான் சபையோர்கள் பார்த்திருக்க பண்பாகக் கேணிதனிலிறங்கிமுன்னே
நேரேதான் எரிகாலன் பாலையப்பா நேர்மையுடன் கரந்தனிலே குழப்பிக்கொண்டு
சீரேதான் மறவிடமாய் நின்றுகொண்டு சிறப்புடனே வெண்ணீர்போல் குழைத்துப்போடு
சீரான பாலதுவும் மாண்பருக்கு நிறமான வெந்நீர்போல் தோற்றுநன்றே
5150.
அன்றான வெண்ணீரைப் பூசிக்கொண்டு வன்பான கேணிதனில் வந்துநின்று
குன்றான பருவதம்போல் கோடிமாண்பர் கொற்றவர்கள் திருமுகத்தைத் தானும்பார்த்து
வென்றிடவே யேகாந்தி நிஷ்களம்போல் விருப்பமுடன் ஜலமதனில் மூழ்கியேதான்
சென்றுமே ஜலத்தைவிட்டுக் கேணியேறி சிறப்புடனே சூரியனில் நிற்பாய்தானே
5151.
தானான ஜலமதுவும் காய்ந்தபின்பு சட்டமுடன் திருவெண்ணீர் காணலாகும்
கோனான குருபரனார் பூசைசெய்து கொற்றவனே தேவதாஸ்தலத்தைவிட்டு
தேனான மனோன்மணியாள் பாதங்கண்ட தேவிதனைப்பூசைசெய்த புனிதனென்பார்
பானான பரஞ்சுடராய் மேனியெல்லாம் பாங்கான பட்டையது காணலாமே
5152.
காணலாம் சிவயோக மாண்பன்போல கைலாயசித்தமுனி நீதானென்பார்
பூணவே பிர்மலபி கடந்தசித்து புகழான கேணிதனில் இறங்குஞ்சித்து
தோணவே யெரிகாலன் தந்திரஜாலம் தோற்றமுடன் காண்பதற்கு பிரம்மையாகும்
நீணவே ஜாலமாந் தந்திரப்போக்கு நீதியுடன் செய்துமல்லோ பரிசுவாங்கே
5153.
வாங்கப்பா ராஜரிடம் பரிசுவாங்கி வளமுடனே வையகத்தில் சித்தனைப்போல
தூங்கியே திரியாதே துய்யபாலா துரைராஜன் சுந்திரன்போல் போகஞ்செய்து
ஏங்கியே மாண்பரெல்லாம் திடுக்கிட்டேங்க யெழிலான மாயவித்தை வெண்ணீர்வித்தை
சாங்கமுடன் செய்துமல்லோ தரணிமீதில் சட்டமுடன் காலாங்கி தன்னைப்போற்றே
5154.
போற்றியே யின்னமொரு கருமானங்கேள் புகழான காலாங்கிநாதர்தம்மால்
தேற்றமுடன் எந்தனுக்கு உபதேசித்த தெளிவான ஜாலவித்தை மரக்காணந்தான்
ஆற்றலுடன் மணத்தவளை நெய்யைவாங்கி வப்பனே வுடும்பினுட நெய்யுங்கூட்டி
சாற்றலுடன் விலாங்கினது யிணமுஞ்சேர்த்து சட்டமுடன் குழித்தயிலம் வாங்கிடாயே
5155.
வாங்கியே தயிலமதை யிறக்கிக்கொண்டு வண்மையுடன் சீசாவிற் பதனம்பண்ணு
பாங்குடனே சிங்கமும் பாண்டஞ்செய்து பதனமுடன் மேல்வாயாந் தளவாய்போல
தேங்கவே பாண்டமதில் கரியைக்கொட்டி தேற்றமுடன் தீயதனைப் போட்டுமல்லோ
ஓங்கவே சிறுகழியாய் விறகுதன்னை ஒப்பமுடன் போட்டுமல்லோ எரித்திடாயே
5156.
எரிக்கையிலே கொழுந்ததுபோலெறியும்போது யெழிலான சங்கிலியாம் வீரமப்பா
முறுக்கியதோர் சங்கிலியை தீயிற்போட்டு முனையான தீயதனிற் காய்ச்சிக்கொண்டு
பரிக்கியே பலபேர்கள் மாண்பர்பார்க்க பட்சமுடன் நெய்யதனைக் கையிற்றோய்த்து
நெருக்கியே சங்கிலியை வுருவும்போது நெடிதான தீயதுவும் பற்றாதன்றே

5157.
அன்றான சங்கிலியைப் பார்க்கும்போது அடலான தீபமது சுடர்போல் தோற்றும்
குன்றான மலைக்கல்லு கருங்கல்லப்பா கொப்பெனவே யிதுபோலயெடுக்கலாகும்
சென்றுமே ராஜரிடம் ஜாலம்செய்து சிறப்பான பரிசுமுதல் யாவும்பெற்று
வென்றிடவே ஜாலமது தந்திரஜாலம் வினோதமுடன் செய்துமல்லோ பரிசுகொள்ளே
5158.
கொள்ளவே வெகுநபர்கள் மெச்சும்பாலா குவலயத்தில் நீயுமொரு சித்தனைப்போல்
எள்ளளவுங் குறையதுவும் நேராமற்றான் யெழிலான வித்தையது செய்துமல்லோ
வுள்ளபடி சிவயோகம் ராஜயோகம் வுத்தமனே சமாதிநிலை நின்றுகொண்டு
கள்ளமில்லா தேவரிஷிதம்மைப்போல காசினியில் வெகுகாலம் வாழ்குவீரே
5159.
வாழ்க்கையிலே வுமைக்கண்ட மாண்பரெல்லாம் வையகத்தில் இவர்போலுஞ்சித்துமுண்டோ
தாழ்மையுடன் உமைப்பணிவார் கோடிமாண்பர் தாரணியில் வுனக்கீடு வொருவருண்டோ
ஆழ்மையுள்ள மாண்பாலா புத்திவானே வவனிதனில் ஜாலவித்தை செய்துகொண்டு
மேழ்மையுடன் பூலோக வாழ்க்கைதன்னில் மேதினியில் யெப்போதும் வாழ்குவீரே
5160.
வாழவே யின்னமொரு கருமானங்கேள் வண்மையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு
தாழவே ரெண்டகமாஞ் சாதியப்பா தாக்கான பூசாலி செய்யுமார்க்கம்
ஆழவே பேய்கொண்ட மாண்பர்தம்மை வன்புடனே தாமழைத்து சபையோர்முன்னே
சாழலுடன் பேயாட்டம் கொள்ளுமார்க்கம் சட்டமுடன் தேவதைகள் வரவுதானே
5161.
தானான பேய்கொண்ட மாண்பருக்கு தாக்கான கருவொன்று சொல்வேன்பாரு
தேனான தேவிமனோன்மணியாள்பூசை தோற்றமுடன் தானமைத்துக் கும்பம்வைத்து
கோனான குருபரணைத் தியானம்செய்து கொப்பெனவே வுக்கோசைதனையெடுத்து
மானான மந்திரத்தை யுச்சரித்து மார்கமுடன் பேயாட வழிசொல்வேனே
5162.
வழியான தேவதையைத் தானழைத்து வளமையுடன் ஜெபதபங்கள் மிகவேவோதி
பழியான முப்புலியுந்தான்கொடுத்து பான்மையுடன் ஓமமதுசெய்யும்போது
சுழிமாரி மயக்கமது வதிகங்கொண்டு சுடரொளியாந் தீபமது பார்க்கும்போது
குழிபோன்ற கண்ணிரண்டும் இருளுந்தோன்றி குப்புரவாய் லாடகவிபேசுவாரே
5163.
பேசிய கூந்தலது வதிகமாகி பேரான மராட்டகமும் மிகவுங்கூறி
ஆசித்துப் பூசித்துக் கரங்குவித்து வப்பனே தேகமது நடுங்கலாகி
நாசிதனில் சுவாசமது மிகவேவோங்கி நடுக்கமுடன் குறட்டையது வதிகமாகி
தூசிபட மேனியது பிரண்டுமல்லோ துள்ளியே பற்கடித்து எழும்புவாரே
5164.
எழும்பியே வேதாளம் ஆர்க்கரித்து எழிலான பிடாரபலிகொண்ட பேய்போல்
தழும்புபடா மேனியது தழும்புமாகி தற்பரனாற் சொரூபமதைக் கண்டாப்போல
தொழும்படவே தலைவிரித்து ஆட்டங்கண்டு தோற்றமுடன் வெகுபினத்த லதிகமாகி
அழுதுமே ஆயாசத்தியக்கமாகி வப்பனே கரங்குவித்து வாடும்பாரே

5165.
பாரேதான் சின்மயத்தைக் கண்டாற்போல பட்சமுடன் வுதிரமதை வாயாற்கக்கி
நேரேதான் பூசைமுகம் தன்னைக்கண்டு நேர்மையுடன் யோ்வையது எனக்கொவ்வாது
சீரேதான் பிதுர்வனத்தை கத்துமாண்டி சிறப்பான ஓங்காரப்பேய்தானல்லோ
கூரேதான் பூசையது மயானபூசை கொப்பெனவே எந்தனுக்கு தருவீர்தாமே
5166.
தாமான பேயாட்டங் கொண்டமாண்பர் தன்மையுடன் பூசைமுகம் யோ்வையில்லை
நாமான மாகவல்லோ வேதமோதி நடுச்சாம பூசையது செய்வேனென்றும்
வேமான லாடகவி முனிதானென்றும் விட்டகுறை யிருந்ததினா லிங்கேவந்தேன்
சாமான்னிய மானதொரு முனிதானல்ல தத்துவத்திற் பேர்கடந்த முனிதான்பாரே
5167.
முனியான முனியல்லோ பிரம்மராட்சி மூதுலகைக் கடந்ததொரு ஞானசித்து
சனியான ராட்சதனும் எனைத்தொடர்ந்து தாரணியில் கேணிதனில் விழுந்தபூதம்
பனிபோன்ற மலைவளத்தை சுத்தும்பூதம் பட்சமுடன் பிடாரிகளை வணங்கும்பூதம்
தனியான தத்துவங்கள் அதிகங்கொண்ட தயாபரியை மறவாத பூதமாமே
5168.
பூதமாம் பேயாட்ட முப்பத்திரண்டு பூதலத்தில் மிக்ககூறும் அதிதவித்தை
நீதமுடன் சற்பனையோடொபசாரம் நீதியுடன் நடப்பதுவும் சிலதுபூதம்
தீதமுடன் தலைவிரித்தல் ஆட்டங்கொண்டு திகழான வார்த்தைகளும் மிகவேயாகும்
கோதகமாய் மலையிலேறிப்போவேனென்று தோற்றமுடன் சிலபூதம் கூறுங்காணே
5169.
காணவே இந்திராதி ஜாலமப்பா கருவான கருவிகளும் மையினாலும்
கோணவே யட்சரத்தின் பீட்டகந்தான் சொல்லும் வில்லாலுங் கரணத்தாலும்
பூணவே காஞ்சோரிப் பொடியினாலும் புகழான திருவெண்ணீர் கலப்பினாலும்
ஆணவங்கள் தானொடுங்கி பேய்கள்தானும் வன்புடனே வாய்திறந்து கூறுந்தானே
5170.
தானான பிரணவத்தை யுச்சரித்து தண்மையுடன் அகஸ்தியனார் காண்டந்தன்னில்
கோனான யென்பாட்டன் கும்பயோனி குருசொன்ன காவியம் பன்னீராயிரந்தான்
தேனான காண்டமது பனிரெண்டுக்குள்ளே திறமான முதற்காண்டந் தன்னிலப்பா
மானான இலங்கைபதி வேந்தனுக்கு மகத்தான மையொன்று கூறினாரே
5171.
கூறியதோர் மையதனால் அனேகசித்து குவலயத்திலாடலாம் பேய்தனக்கும்
மீறிதோர் மையினால் அஷ்டசித்து மேதினியில் வெகுகோடி மாண்பரப்பா
சீறியதோர் வேதாளம் பேயாட்டங்கள் சிறப்புடனே கருவென்ற மையினாலே
வீறிதோர் கருமானந் தன்னைக்கொண்டு விட்டகுறை தனையகற்றி செய்வாய்பாரே
5172.
செய்யவே மையினுட பெருமைதானும் சிறப்பான பூதலத்தில் எவராலாகும்
வெய்யவே விட்டகுறை யிருந்தவர்க்கும் மேதினியில் அம்மைதான் பலிக்கும்பாரு
துய்யநல்ல மையதுவுஞ் செய்வாரானால் துரைராஜ சுந்தரனைக் காணலாகும்
மெய்யான மையினுட போக்குதன்னை மேதினியில் காண்பவனே சித்தனாமே

5173.
சித்தனாம் பூவுலகில் ரிஷிதானென்பர் சிறப்பான கருவி கரணாதியுள்ளோன்
முத்தனாம் மூதுலகம் கடந்தஞானி முனையான பிரம்மலபி கடந்தோனென்பார்
சத்தியத்தைத் தவறாத வேள்வியோனாம் தரணிபதி யுலகாளும் ராஜனென்பார்
நித்தியமும் பிராணநிலை கலையில் நின்று நிட்களங்கமான சுடரென்பார்தானே
5174.
சுடரான வையத்து சித்தனென்பார் சூட்சாதி சூட்சமதைக் கடந்தஞானி
அடலான மாண்பரெல்லாம் வணங்கும்ஞானி வவனிதனில் விட்டகுறை யிருந்துதானால்
திடமான ஞானியென்று பேர்வகுப்பான் தீர்க்கமுள்ள ஜெகஜால மந்திரவாதி
மடலான தத்துவங்கள் தொண்ணூற்றாறும் மார்க்கமுடன் தானறிந்த மதியவானே
5175.
மதியான மையினுட மார்க்கத்தாலே மகத்தான லோகமெல்லாம் வசியமாகும்
கதியான மோட்சமென்ற மாளிதானும் காணிக்கையெப்போதும் கழரொண்ணாது
விதியான விதியிருந்தால் மையின்போக்கு வீணிலே போகாது சதாகாலந்தான்
துதியான இலங்கைமன்னன் மையினாலே தொல்லுலகோர் யெப்போதும் துதிப்பார்காணே
5176.
காணவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கருவான பொய்மசக்கல் தலையாட்டந்தான்
பூணவே கும்பமது கலசம்வைத்து பொங்கமுடன் பேயாட்டங்கொள்ளும்போது
தோணவே லாகிரிகள் வஸ்துவாலும் தொல்லுலகில் மாதர்மேல் சன்னதங்கள்
வேணபடி தன்மீதில் வந்தாப்போலும் வெகுபிறட்டல் தலைசுழட்டல் அதிகந்தானே
5177.
தானான தெய்வமது வனேகங்கொண்டு தாக்கான சன்னதங்கள் அதிகமாகி
கோனான தன்புருஷன் தன்னைநோக்கி கொற்றவா எந்தனுக்கு யேர்வையில்லை
மானான மகுத்துவங்கள் அதிகங்கொண்டு மன்னவர்க்கு தெய்வமது கூறினாப்போல்
பானான கரங்குவித்து தலைமேற்கொண்டு பாலகனே பூசையில்லை யென்பார்பாரே
5178.
பாரேதான் கன்னியர்மேல் சன்னதங்கள் கைலாயவடிவேலன்தன்னைப்போல
நேரேதான் நிற்கிறவராறோ நீர்தான் நீதியுள்ள வாண்பிள்ளை நினைவாய்க்கேளிர்
சீரேதா னுந்தனுட மாளிதன்னில் சிறப்பான பூவாடைக்காரியப்பா
வேரேதான் கட்டுதற்கு வாடையில்லை வித்தகனே மனங்கலங்கி நின்றாள்தானே
5179.
நிற்கவே பூவாடைக்காரிதானும் நிட்களங்கமாகவல்லோ வெகுகாலந்தான்
துற்கையென்ற பிடாரியது தானுமல்லோ துதியான காட்டேரி சின்னானப்பா
சொற்பழு வாராத கருப்பன்தானும் சுடரொளியாஞ் சத்தகன்னிமாதுதானும்
கற்பமதை யாவிகொள்ளும் ரத்தமுண்டி கருவழிக்கும் மாடனது நானுந்தானே
5180.
நானான தெய்வமப்பா பூவாடையப்பா நன்மையுடன் சித்தடிமேல் மையல்கொண்டு
கோனான தேவதைகள் வாடைகட்டி கொப்பெனவே சன்னதங்கள் அதிகங்கொண்டு
தேனான நடுவீட்டு செல்லியத்தாள் தெளிவான வங்காள பூபதிதானப்பா
மானான ஈஸ்வரியாள் எல்லைகாத்தாள் மகத்தான தெய்வமது வந்திட்டோமே

5181.
வந்திட்டோ மென்றல்லோ மையலாகி மகத்தான சன்னதங்கள் அதிகங்கொண்டு
குன்றான புருஷனையும் மிகவேநோக்கி குடிதனக்கு வனர்த்தங்கள் நேர்ந்துதென்று
இன்றுமே எந்தனுக்கு இந்தபூசை எழிலான பூசையது யேர்வையில்லை
கன்றுதான் பூசையது பரியேகொண்டு காணிக்கை வைத்தாலே யேர்வையாமே
5182.
ஏர்வையாம் வையகத்துப் பெண்களெல்லாம் எழிலான புருஷனையும் தூஷணிப்பார்
சேர்வையாம் சீனபதிப்பெண்களெல்லாம் சிறப்புடனே புருஷனையும் போற்றுவார்கள்
பார்வையாங் குளிகையது கொண்டுமல்லோ பாருலகம் ஏழுகடலுஞ் சுத்திவந்தேன்
நேர்மையாஞ் சீனபதிப் பெண்களுக்கு நெறிமுறைகள் தத்துவங்கள் மிகவுண்டாமே
5183.
உண்டான தெய்வமது யாதுமில்லை வுத்தமனே கடவுளன்றி வேறொன்றில்லை
பாண்டான பொய்கொலைகள் களவுமில்லை பாங்கான கர்மமது வொன்றேயுண்டு
திண்டான விசுவாச யருளுமுண்டு திறளான பாவமது யில்லையப்பா
கண்டேனே சீனபதி மார்க்கத்தோரை காசினியில் காலாங்கி கடாட்சந்தானே
5184.
தானான காலாங்கி கடாட்சத்தாலும் தாக்கான மனோன்மணியாள் கிருபையாலும்
மானான நாலுயுகங் கடந்துவந்தேன் மகத்தான வையகத்தில் எல்லாருந்தான்
கோனான சீனபதி பெண்கள்நீக்கி குவலயத்தில் எல்லாரும் இருந்தமார்க்கம்
வேனான வெட்டவெளி மயக்கத்தாலே விருதாவாய் மாண்பரெல்லாம் மயங்கினாரே
5185.
மயங்கவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தான புலிப்பாணி மைந்தாகேளு
தயங்கவே தந்திரமாஞ் ஜாலஞ்செய்வேன் தாக்கான மானிடர்கள் பிழைக்கவென்று
புயங்கமுடன் நோயாளிசாந்தியப்பா புகழாக பிணிகொண்ட மாண்பருக்கு
ஜெயம்பெறவே சாந்தியது சொல்வேனப்பா செய்கின்ற மார்க்கமது பண்பாய்க்கேளே
5186.
பண்பான நோய்கொண்ட பிணியாளர்க்குப் பாகமதுசொல்லுகிறேன் பாண்மையாக
திண்ணமுடன் மச்சென்ற மாளியப்பா திறமுடனே கிழக்குமுகமாகவல்லோ
நன்மையுடன் கொலுக்கூடம் ஒன்றமைத்து நாதாந்தக் கூடமதுயேகவட்டம்
வண்மையுடன் சோடசதூணிறுத்தி வாகுபெற சின்மயத்தின் பூசைசெய்யே
5187.
செய்யவே மயானத்தின் பூசையப்பா செப்புகிறேன் வருமைமைந்தாகேளு
உய்யவே கும்பமென்ற கலசமப்பா வுத்தமனே நடுமையம் தன்னில்வைத்து
பையவே நவகோண வாசல்விட்டு வாகமுடன் கலசமென்ற பாண்டமப்பா
மெய்யுடனே தானியமாமொன்பதாகும் மேன்மையுடன் கலசமதில் கீழேவையே
5188.
கீழான கலசமது தன்னிலப்பா கிருபையுடன் தானியங்கள் வைத்தபின்பு
தாழான குடுவைக்கு நூலைச்சுற்று தகமைபெற சூச்சதுதான்நாலதாகும்
தீதான சரணமது வொன்றேயாகும் நீதியுடன் நடுமையம் தன்னில்வைத்து
சாழான தேங்காயை அதின்மேலப்பா சட்டமுடன் வைத்தல்லோ மஞ்சள்பூசே

5189.
பூசியே குங்குமமுந் தானணிந்து புகழான மாயிலையும் புட்பஞ்சாத்தி
ஆசியே அவலுடனே கடலையப்பா வன்பாக முக்கனியுங் கொண்டுபோற்று
வாசியென்ற பிரணவத்தை மனதில்மாறி மகதேவா யெந்தனையுங் காருமென்று
தேசியென்னும் பழமதுவே கீறியப்பா திக்கெட்டும் போட்டுமல்லோ செப்பக்கேளே
5190.
செப்பவென்றால் வஸ்துமுதல் மதுபானங்கள் செம்மலுடன் பலகாரவர்க்கமெல்லாம்
ஒப்பமுடன் தானமைத்து புண்ணியவானே ஓகோகோ நாதாக்கள் செய்யும்வண்ணம்
தப்பிதங்கள் நேராமல் மன்னாகேளு தண்மையுடன் சோடசமாம் பூசைமார்க்கம்
செப்பமுடன் தானமைத்து நீதிவானே நிட்களங்க மாகவல்லோ நேமிப்பாயே
5191.
நேமமுடன் செம்மறியின் தலைதானப்பா நேர்மையுடன் கொண்டுவந்து மைந்தாகேளு
தாமமுடன் கலசத்திற்கெதிரேவைத்து சட்டமுடன் வகண்டமது மேலேவைத்து
ஒமமுடன் யாகமது செய்வாயப்பா வத்தமனே ஆயிரந்தான் வுருதான்போடு
சாமமது நடுச்சாம வேளையப்பா சாந்தியது செய்யும்வகை தன்மைபாரே
5192.
பாரப்பா பரசறுந்தியது செய்யும்போது பட்சமுடன் பிரமையது போவதற்கு
நேரப்பா நோயாளி தன்னிலப்பா நேர்மையுடன் கிரகமது போவதற்கு
சீரப்பா சடையதுவால் பொம்மையொன்று சிறப்புடனே தானமைத்து வுபாயங்கேளு
ஆரப்பா தானறிவார் வுபாயமார்க்கம் அப்பனே சொல்லுகிறெென் அன்பாய்த்தானே
5193.
தானான பிரதமைக்கு வாடைபூண்டு சட்டமுடன் வாபரணமெல்லாம்பூண்டு
கோனான காலாங்கி சொன்னவாக்கு கொற்றவனே பிசகாமலாமைதன்னை
பானான யாமையது கொண்டுவந்து பாலகனே பிரதமையின் பாதத்தின்கீழ்
தேனான வுளுந்தினுட மாவையப்பா திண்மையுடன் யாமையது வோட்டிற்பூசே
5194.
பூசியே பிரதமையின் பாதத்தின்கீழ் புகழாக யாமைதனை பொதிந்துபோடு
காசியென்ற பட்டினால் பாதந்தொட்டு பாங்குபெற வுடுப்பதுவும் பணிந்துமல்லோ
தூசிபடா பாதமது தெரியாமற்றான் துப்புரவாய் பிரதமையைச் சாய்த்துவைத்து
கூசிடா வண்ணமது யோமசாந்தி கொற்றவனே செய்துமல்லோ சொல்லக்கேளே
5195.
சொல்லவென்றால் பிரதமையை நோயாளிமுன்னே சுத்தமுடன் தானிறுத்திவைக்கும்போது
வெல்லவே பிரதமைதான் சுத்தியல்லோ விருப்பமுடன் தான்வருகும்போதிலப்பா
கொல்லவே வந்ததொரு கிரகமப்பா கொற்றவனே பிரதமையின் மேலேயப்பா
புல்லவே மையலதுபலியேகொண்டு கோபாலா போகுதடா யென்றுசெப்பே
5196.
செப்பிடவே கிட்டிருந்த மாண்பரெல்லாம் செம்மலுடன் பிரதமையைக் கண்டபோது
ஒப்பிடவே சாந்தியினால் கிரகம்நீங்கி ஓங்கார பலியதுவுங் கொண்டுதானும்
செப்பிடவே கிரகமது போகுதென்று மேதினியில் எல்லவரும் மயங்குவார்கள்
தப்பிதங்கள் இல்லாமல் பிணியாளன்தான் சட்டமுடன் சுகமாவான் பாரீர்பாரே

5197.
பாரப்பா பிணியாளன் சுகமுமாகி பான்மையுடன் பிரம்மையது நீங்கியல்லோ
சீரப்பா பிரதமையின் ஜாலத்தாலே சிறப்புடனே எந்நாளும் பிணிகள்நீங்கி
வேரப்பா சாந்தியது மகிமையாலும் வேதாந்தத் தாயினது கிருபையாலும்
ஆரப்பா பிரம்மையது நீங்கியல்லோ வவனிதனில் சுகமாக வாழ்வார்தானே
5198.
தானான சடந்தனக்கு நோய்கள்வந்தால் தகமையுடன் மாண்பரெல்லாஞ் செய்யுமார்க்கம்
கோனான தன்தெய்வங் குலதெய்வந்தான் கொப்பெனவே வம்மனென்றும் பிடாரியென்றும்
பானான பலதெய்வ குற்றமென்றும் பாங்குபெற கப்பணங்கள் கட்டுவாகும்
மானான முனிதேவர் முடங்கனென்றும் மகத்தான பலவிதமாம் வண்ணமாமே
5199.
வண்ணமா மிப்படியே லோகமெல்லாம் வகுப்புடனே புத்தியது மாறலாகி
எண்ணமுடன் தன்னறிவு நிலையுங்கெட்டு எழிலான பதாம்புயத்தை நினையாமற்றான்
திண்ணமுடன் கடவுள்தனை மனதிலுன்னி தீர்க்கமுடன் யேகாந்த வுருவைவிட்டு
பண்ணியதோர் கோலமதை யென்னசொல்வேன் பாருலகில் மாண்பருட தன்மைதாமே
5200.
தன்மையா மின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தன்மையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
பான்மையாம் எந்தனது பாட்டனப்பா பாங்கான காலாங்கி நாதரப்பா
வன்மையாம் வருமையசீஷனையா வளமான காலாங்கி நாதர்தாமும்
மின்மையாய் எந்தனது குருநாதனையா மேன்மையுடன் எந்தனுக்கு உரைத்தார்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

5201.
பாரேதான் எந்தனுக்குச் சொன்னமார்க்கம் பாருலகில் யாவருக்குஞ் சொன்னதில்லை
நேரேதான் வெகுகால கோடியப்பா நேர்மையுடன் காலாங்கி நாதர்தாமும்
தீரேதான் குருபாதங் கார்த்திருந்து தீரமுடன் வாங்கினதோர் வித்தையப்பா
சீரேதான் உந்தனுக்கு யானுமல்லோ சிறப்புடனே யோதிவைக்கும் வண்மைகேளே
**5202.**
கேளப்பா வையகத்தில் நன்மைதுன்மை கீர்த்தியுடன் தானிருக்கும் வளமைதானும்
சூளப்பா தேகமது வழியாவண்ணம் சுந்தரனே வெகுகாலமிருப்பதற்கும்
நாளப்பா போகாமல் கற்பஞ்சொல்வேன் நளினமுடன் கற்பமது என்னவென்றால்
ஆளப்பா வாகாய கற்பமாகும் வப்பனே சொல்லுகிறேன் வரிசைபாரே
**5203.**
வரியான புலிப்பாணி கண்ணேகேளு வாகுபெற வாகாய தெரிசனந்தான்
துரிதமுடன் வையகத்திலிருப்பதற்கு துப்புரவாய்ச் சாதனங்கள் உரைப்பேன்கேளிர்
சரியான பூமிதனில் மேடுபள்ளம் சட்டமுடனாராய்ந்து சரிதைகாண
பிரியமுடன் செங்கதிரோன் கிழக்குதிக்க பிசகாமல் மேற்குமுகந் தன்னைக்காணே
**5204.**
காணவே சாமமது ரெண்டுக்குள்ளே கருவான காயாதிகற்பங்கொண்டு
கோணவே போசனங்களுண்டுமேதான் தோறாமல் பூமிதனில் நின்றுகொண்டு
நாணவே முடிதனையே யசைக்காமற்றான் நன்மையுடன் இருதரமுந் தொங்கவிட்டு
பூணவே தன்னிழலைக் கண்ணிற்கண்டு பொங்கமுடன் நன்மைதுன்மை யறிந்திடாயே
**5205.**
அறியவே நுட்பமது என்னசொல்வேன் ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
முறியவே நேத்திரங்கள் இமைகொட்டாமல் முனைதான தன்சிரசைத்தானும்பார்த்து
குறிப்புடனே வாகாயந்தன்னைநோக்கி கொற்றவனே பார்க்குமந்த சமயந்தன்னில்
நெறியுடனே யுமைப்போல ரூபங்காணும் நேர்மையுடன் ரூபமதில் வினயங்கேளே
**5206.**
வினயமது என்னவென்றால் செப்பக்கேளிர் வேதாந்தத் தாயினது சொரூபம்போல
நினவதுவுந் தவறாமல் மைந்தாநீதான் நீதியுடன் ஆகாயந்தன்னிற்றானும்
கனவுகண்ட கதைபோலே சுடரானந்தங் கண்ணிற்குத் தோன்றுமப்பா கடினவேதை
பனையளவு வுயரமப்பா வுந்தன்ரூபம் பாரினிலே தானிருந்து காணலாமே
**5207.**
காணவென்றால் சொரூபமது முறைமைசொல்வேன் கண்ணிற்கு வாகாயந்தன்னிலப்பா
தோணவே சுடரொளிபோல் உந்தன்ரூபம் தோற்றுமப்பா கண்ணிற்குக் கூச்சங்காணும்
சாணளவு ரூபமது கொண்டுமல்லோ சட்டமுடன் பனையளவாய்த் தோற்றும்பாரு
நீணவே மாயாதிரூபந்தானும் நிட்களங்க மாகவல்லோ தோற்றும்பாரே
**5208.**
பார்க்கையிலே சிரசதும் தோன்றாவிட்டால் பாலகனே ஒருதிங்கள் சாவான்பாரு
தீர்க்கமுடன் இருகரமுங்காணாவிட்டால் தினமதுவும் மூன்றுதிங்கள் மறிப்பான்பாரு
சேர்க்கவே மார்பதனில் துவாரங்கண்டு செங்கதிரோன் கண்ணிற்குத் தோற்றுமாகில்
ஆற்றவே யறுதிங்கள் மரணமாவான் அப்பனே சாயாவின் புருஷன்தானே

5209.
தானான தரிசனங்கள் காணும்போது தகமையுள்ள சொரூபமது குறைவைகண்டால்
கோனான காலாங்கி வாக்குபோல கொற்றவனே முடிவதற்கு பிசகொன்றில்லை
தேனான மனோன்மணியாள் சொரூபம்போல தெளிவாக வுன்ரூபங் கண்டாயானால்
பானான பாருலகில் வெகுகாலந்தான் பாலகனே இருப்பதுவும் வுறுதியாமே
5210.
உறுதியாம் பனிரெண்டு வாண்டுதானும் வுத்தமனே தரிசனங்கள் காண்பாயானால்
நிறுதியாய் வுன்ரூபங் கண்டரூபம் நிட்களங்கமாகவல்லோ பின்தொடர்ந்து
சுருதியுடன் கருவிகரணாதியோடு சுத்தமுடன் வுடலாவி கொண்டுமல்லோ
பரிதிவிட்டு யுந்தனிழல் கூடேநிற்கும் பாலகனே சாயாவின் வண்மைபாரே
5211.
வண்மையாஞ் சொரூபநிலை பின்தொடர்ந்து வாகுடனே யுந்தனிடம் உலாவும்பாரு
திண்மையாய் சயனங்கள் செய்யும்போது தீர்க்கமுடன் பூமிதனில் நடக்கும்போது
புண்மையாய் யுளுக்கார்த்திருக்கும் போதும் தகமையுடன் ஒருவருடன் பேசும்போதும்
உண்மையாய் உந்தனுக்கு வருங்காலத்தை யுத்தமனே யுந்தமக்கு கூறும்பாரே
5212.
கூறுமே நன்மையென்ற தீமையாவும் குறிப்புடனே யுந்தமக்கு முன்னேசொல்லும்
மாறுபடா மேனியது வாசிகூறும் வளமான தேகமது கற்றூனாகும்
வீறுடனே வையகத்தில் கோடிகாலம் வித்தகனே இருப்பதுவும் நிட்சயந்தான்
நாறுமுடல் அழியாது கோடிகாலம் நாணிலத்தில் இருப்பதுவும் சமாதியாமே
5213.
ஆமேதான் சாயாவின் தரிசனத்தை வப்பனே கண்டவர்க்கு எல்லாஞ்சித்தி
தாமேதான் அட்டமாஞ் சித்தியாவும் தாரணியில் அடைவதற்கு ஐயமில்லை
போமேதான் பனிரண்டு வாண்டுமட்டும் பொங்கமுடன் கண்டவர்க்கே சித்தியாகும்
வேமேதான் காணாத மாண்பருக்கு குறையிருந்தாலும் வாய்க்காதன்றே
5214.
அன்றான தரிசனத்தைக் கண்டமாண்பர் வவனியிலே தானுமொரு சித்தனைப்போல்
குன்றான மலைதனிலே இருக்கலாகும் குவலயத்தில் நீயுமொரு சித்தனைப்போல்
வென்றிடவே தேவாதி ரிஷிகள்தம்மை விண்ணுலகில் காண்பதற்கு யிடமுண்டாகும்
தென்திசையில் அகத்தியனார் முனிவர்தானும் செப்பினார் இந்தமுறை சொன்னார்பாரே
5215.
பாரேதான் சரநூலாம் பஞ்சாட்சி பாரினிலே மாணாக்கர் பிழைக்கவென்று
நேரேதான் சாத்திரத்தைப் பாடிவைத்தார் நீதியுடன் சாயாவின் தரிசனத்தை
சேரேதான் தரிசனத்தை காண்பதற்கு செம்மலுடன் வழிசொன்னார் மைதானில்லை
கூரேதான் மையினது மார்க்கந்தன்னை கூறினேன் காலாங்கி கடாட்சந்தானே
5216.
தானான சித்துமுனி கும்பயோனி தாரணியில் கருவதனை மறைத்துப்போட்டார்
மானான காலாங்கி எந்தநாதர் மகாதேவர் கடாட்சமது கிருபையாலே
தேனான கருக்குருவை யானுங்கற்று தெளிவாக மாணாக்கள் பிழைக்கவென்று
பானான சாஸ்திரங்கள் யாவும்பார்த்து பாருலகில் பாலகர்க்கு பாலித்தேனே

5217.
பாலிப்பேன் இன்னமொரு மார்க்கங்கேளும் பாங்கான புலிப்பாணி மைந்தாகேளு
நீலியென்ற கருங்காலி மூலிதானும் நீட்சியுடன் கண்ணனுட மூலிவேரும்
சூலியென்ற நத்தையின் சூரியப்பா சூரியனார் காந்தியது மூலிவேரும்
வேலியென்ற பருத்தியப்பா இருவேலிதானும் வேகமுள்ள கருப்பு வூமத்தைவேரே
5218.
வேரான சடையனது மூலிதானும் வேகமுடன் பொன்னினூமத்தை வேரும்
தூரான மையூரின் சிகையுங்கூட்டி துப்புறவாய்த் தான்சுருக்கிப் பொடியதாக்கி
சேரான பொடிதனிலே வைங்கோலத்தை செப்பமுடன் தானுரைத்து சொல்லக்கேளு
கூரான புழுகு ரோசனையுஞ்சேர்த்து குறிப்புடனே மைசேர்த்து வரைத்திடாயே
5219.
சேர்த்துமே பேரண்டந்தன்னிலப்பா செம்மலுடன் மையதனைப் பிடித்துக்கொண்டு
கோர்த்துமே குமரியுட மையுங்கூட்டி கொற்றவனே தானரைத்து சிமிளில்வைத்து
பார்த்துமே நேத்திரமாம் புருவந்தன்னில் பாலகனே மைதீட்டி வாகாயத்தை
தீர்த்துமே பார்க்குகின்ற ஜாலந்தன்னில் திறமுடனே தெரிசனமுந் தெரியுந்தானே
5220.
தானான சூரியனை மேகந்தானும் சட்டமுடன் மேகமது மறைத்திட்டாலும்
பானான மேகமதுக்குள்ளிருக்கும் பாலகனே சூரியனுங்கண்ணிற்றோற்றும்
மானான சந்திரனைக் காணும்போது மகத்தான தரிசனையுங் கண்ணிற்றோற்றும்
தேனான தேசொளியின் மயக்கத்தைப்போல ஜெகஜோதி மின்னல்போல் தோற்றும்பாரே
5221.
பாரேதான் மையினால் மேகஜாலம் பாங்குடனே தெரிசனையுங் காணலாகும்
நேரேதான் இக்கருவை சித்தர்தானும் நெறிமுறைமை தானறிந்து கூறாமற்றான்
சீரேதான் கருக்குருவை மறைத்துவிட்டு சீர்தப்பி தெரிசனத்தைப் பாடிவைத்தார்
ஆரோதான் எனைப்போல சொன்னாரப்பா வப்பனே வுண்மையது வுரைத்திட்டோமே
5222.
உண்மையாய் சாத்திரங்கள் கண்டாராய்ந்து உவமையுடன் மாணாக்கள் பிழைக்கவென்று
திண்மையாய் காலாங்கி கிருபையாலே திறமுடனே யுந்தமக்கு வோதிவைத்தேன்
வண்மையாய் நீயுமொரு சித்தனைப்போல் வளமுடனே யுலகுதனி லிருந்துகொண்டு
நன்மையாய் நாதாக்கள் பாதம்போற்றி நாட்டமுடன் எப்போதும் வாழ்வீர்காணே
5223.
காணவே போகரிஷிநாதர்தானும் கனமான காலாங்கிநாதர்பாதம்
பூணவே யவர்பாதந் தொட்டுமல்லோ புகழுடனே மதியமுர்தம் பூண்டுமல்லோ
தோணவே குளிகைதனை பூண்டுகொண்டு துப்புரவாய் சீனபதிக்கேகியல்லோ
நீணவே காலாங்கி சமாதிபக்கல் நின்றாரே நெடுநேரம் நின்றிட்டாரே
5224.
நின்றதொரு போகரிஷி வந்தசேதி நீதியுள்ள காலாங்கிநாதருக்கு
சொந்தமுடன் மனோலயத்திலறிந்துகொண்டு தோற்றமுடன் போகரிஷிநாதருக்கு
அந்தமுடன் அசரீரிவாக்கினாலே யங்஖னவே சப்தமது கேட்கலாச்சு
விந்தையுடன் சப்தமது கேட்டபோது விருப்பமுடன் போகரிஷி வணங்கிட்டாரே

5225.
வணங்கியதோர் போகரிஷிநாதர்தானும் வாகான ஞானோபதேசங்கேட்டு
இணங்கியே சிரம்பணிந்து கைகுவித்து யெழிலான காலாங்கிநாதருக்கு
மணங்கமழும் வேதாந்த தாயாருக்கு மகிழ்ச்சியுடன் இருபாதந் தெண்டனிட்டு
சுணங்கமது வாராமல் போகர்தாமும் துப்புரவாய் சீனபதி வந்திட்டாரே
5226.
இட்டதொரு போகரிஷிநாதர்தாமும் எழிலான சீனபதிப்பெண்களுக்கு
சட்டமுடன் சாயாவின் தரிசனத்தை சாங்கமுடன் போதித்தார் போகர்தாமும்
அட்டதிசை தான்புகழும் சாயாவின்தன் வன்பான தரிசனத்தை கூறும்போது
திட்டமுடன் மாதரெல்லாம் கண்டுமல்லோ திறமுடனே மனதுவந்து களிப்புற்றாரே
5227.
களிப்பான தெரிசனத்தைப் பெண்களெல்லாம் கருத்துடனே பார்த்தல்லோ சந்தோஷித்து
தளிர்போன்ற கரமதனை கண்ணில்வொத்தி சார்புடனே சாயாவின் தரிசனத்தை
பளிங்குடனே எங்களுக்கு போதித்தாலே பாங்குடனே தரிசித்து மனங்களித்து
அளியாமல் எங்களது காயந்தன்னை வவனியிலே தாமிருக்கச் செய்வோம்பாரே
5228.
பாரேதான் காயாதி கற்பங்கொண்டு பாங்குபெற எந்நாளும் பாரின்மீது
சீரேதான் தாமிருந்து யோகசாதம் சிறப்புடனே கண்டல்லோ நாங்களுந்தான்
நேரேதான் பனிரண்டுவாண்டுமட்டும் நேர்புடனே சாதனைகள் மிகவுஞ்செய்து
வீரேதான் விண்ணுலகு வதிசயத்தை விருப்பமுடன் காண்பமென்று வினவிட்டாரே
5229.
இட்டதொரு பெண்களுக்கு போகர்தாமும் யெழிலான வித்தையென்ற சாதனத்தை
தொட்டகுறி போலல்லோ காண்பித்தேதான் தேறாமல் எப்போதும் காண்பதற்கு
பட்டதொரு குறிபோல தரிசனத்தை பாங்குபெற போதித்துப் பெண்களுக்கு
சட்டமுடன் குளிகையது கொண்டுமல்லோ சாங்கமுடன் மறுபடியும் வந்திட்டாரே
5230.
வந்தாரே மேருவுக்குத் தெற்கேயப்பா வளமுடனே நர்மதாநதிக்குப்பின்னால்
அந்தமுடன் போகரிஷிநாதர்தாமும் அன்பாக குளிகையது பூண்டுகொண்டு
நிந்தனைகளில்லாமல் ரிஷியார்தாமும் நீதியுடன் வேடிக்கை சிமிட்டுவித்தை
சொந்தமுடன் செய்தல்லோ மாண்பருக்கு சூட்சாதி சூட்சமெல்லாம் காண்பித்தாரே
5231.
காண்பித்தார் மாண்பருக்கு வினோதவித்தை களிப்புறவே போகரிஷிநாதர்தாமும்
ஆண்பிள்ளை புலிப்பாணி எந்தன்பாலா வப்பனே யுந்தனுக்கு வினோதஜாலம்
நண்பான பானையது பாண்டமப்பா நவிலவே யானுரைப்பேன் மைந்தாகேளு
சாண்பான தவளமது கலசம்போல சட்டமுடன் செய்துமல்லோ செப்பக்கேளே
5232.
செப்பவென்றால் நாவில்லை பாவுமில்லை ஜெகதலத்தில் நாதாக்கள் சொன்னதில்லை
ஒப்பமுடன் பாண்டமது செய்துமல்லோ ஒளிவான நறுவளியமேபழத்தையப்பா
இப்புவியில் மாண்பர்களுக் கறியாமற்றான் யெழிலான பழமதுவைப் பாண்டத்துள்ளே
அப்பியே பூசியல்லோ காயப்போடு அங்ஙனவே செய்யுமுறை வறையக்கேளே

5233.
கேளப்பா ஜலமதனை பாண்டமிட்டு செப்புகிறேன் கட்டுயென்ற கொடிதானப்பா
பாளப்பாப் போகாமல் யெனையுங்கூட்டி பாங்குபெற சார்பிழிந்து ஜலத்தினுள்ளே
நாளப்பா போகாமல் அப்போதேதான் நலம்பெறவே சார்பிழிந்து சீனிபோட்டு
ஆலேதான் எல்லவரும் பார்த்திருக்க வப்பனே பாண்டமதை வுடைத்திடாயே
5234.
உடைக்கவே ஜலமதுதான் வூறல்போல வுத்தமனே இறுகியல்லோ வெண்ணைபோலாம்
படைசேர்ந்த கொலுமுகத்தில் இந்தஜாலம் பாலகனே செய்துமல்லோ வெண்ணையீவாய்
தடையறவே மாண்பரெல்லாங் கண்டுயேங்கி தகமையுடன் பொசித்தல்லோ யுன்னைமெச்சி
சடைபோன்ற தம்பிரான் மகுத்துவந்தான் தாரிணியில் இவர்போலுமில்லை யென்பாரே
5235.
என்னவே வேணதொரு பொருளுமீவார் எழிலான மாந்திரீகரென்றுமல்லோ
துன்னவே யுந்தனுக்கு சோடசாரம் தோறாமல் செய்தல்லோ தனமுமீவார்
நன்னயமாய் வேதாந்த சித்துவென்று நாட்டினிலே யுந்தமக்குப் பேருண்டாகும்
பன்னவே பலபேரும் போற்றுவார்கள் பாலகனே நீயுமொரு சித்தனாமே
5236.
சித்தனா மின்னமொரு மார்க்கஞ்சொல்வோம் சிறப்பான புலிப்பாணி மைந்தாகேளு
பக்தியுடன் குளிகையது பூண்டுமல்லோ பார்லோகம் சத்தகடல் சுத்திவந்தேன்
முத்திபெற மாண்பரெல்லாங் கோடிகோடி முயன்றுமே காவிகஷாயத்தோடும்
நித்தமுமே ஜெபதபங்கள் அதிகமுண்டு நீணிலத்தில் வெகுபேர்கள் கோடியாமே
5237.
கோடியாம் சாதியிலே யனந்தஞ்சாதி கொற்றவனே பதினெட்டு ஜாதியுண்டு
பேடிகளுஞ் சூரர்களு மெத்தவுண்டு பேரான பதிதனிலே லக்கோயில்லை
தேடியே பலதேசங் கண்டாராய்ந்தேன் தேசத்தில் சைவமது காணவில்லை
நீடிரே வெகுமாண்பர் தேசமெல்லாம் நிலையான சைவமென்று சொல்லுவார்பாரே
5238.
சொல்லுவது வாக்கியத்தைக் கேட்டதுண்டு சொற்பமுள்ள சைவர்களைக் கண்டதில்லை
பல்லவே இறைச்சிவகை புசியோமென்றும் புலால்வகைகள் புசிப்பதில்லை யென்றுகூறி
வெல்லவே மதாச்சார பேதாபேதம் வெகுவாகப் பினத்தியல்லோ திரிவார்பாரு
கொல்லவே நித்தியமும் புலாலைத்தின்று கூசாமல் சைவமென்று கூறுவாரே
5239.
கூறுவார் பலபேத ஜாதிதன்னில் குறிப்புடனே பிரம்மென்ற ஜாதியப்பா
மாறுதலாம் சைவத்தைக் கூறியல்லோ மகுத்துவங்கள் ஆகமங்கள் மிகவுஞ்சொல்லி
தாறுமாறாகவல்லோ வேதங்கள்கூறி தாரிணியில் வெகுமாண்பர் பிழைப்பாரப்பா
ஆறுதலம் கரைகண்ட யோகநிஷ்டை வப்பனே செய்தவர்கள் மட்டிமாடே
5240.
மாடான மாடல்லோ மாண்பரப்பா வையகத்தில் ஜாதிகெட்ட சைவரப்பா
கோடான கோடிபேர் சைவமென்று கூறியதோர் மொழியதனைக் காதிற்கேட்டேன்
தாடான மாமிஷத்தை தின்பார்பாதி சட்டமுடன் நெய்யதனைக் குடிப்பார்பாதி
நீடான தயிர்பாலில் சைவமுண்டோ நிட்சயமாய் சைவமென்று நம்புவாரே

5241.
நம்பவென்றால் சைவங்களில்லையப்பா நாதாந்த சித்துகளுஞ் சொல்லவில்லை
வம்பென்று மறைத்துவைத்தார் சைவந்தன்னை வளமுடனே புலால் தின்னார் எவருமில்லை
வெம்பியதோர் ரோகமென்ற செம்மறிதானப்பா விருப்பமுடன் பொசிக்கின்றார்
சூத்திரருமப்பா
தும்பியுடன் பிரம்மகுல ஷத்திரியர்தாமும் துகளகற்றி நெய்மோரை குடிப்பார்தாமே
5242.
குடிப்பாரே பால்தயிர்கள் நெய்குடிப்பார் குற்றமென்று யிறைச்சிதனை நீக்கிவிட்டார்
நடிப்புடனே சைவமென்று சொல்லலாமோ நாதாக்கள் கைமறைப்பாய்க் காட்டவில்லை
துடிப்புடனே மற்றதோர் ஜாதியெல்லாம் துப்புரவாய் புலால்வகைகள் மிகவுந்தின்பார்
அடிப்படைதான் மாமிஷங்கள் என்னலாகும் அப்பனே மேல்மிதக்கும் நெய்யுமாமே
5243.
நெய்யான வகைகளெல்லாம் கொஞ்சமல்ல நிட்சயமாய் சேருக்கு எட்டிலொன்று
துய்யதொரு மாமிஷங்கள் தின்போன்சைவன் துப்புரவாய் நெய்தின்போன் சைவனல்ல
வெய்யதொரு மாமிஷத்தில் நெய்யேயில்லை விருப்பமுடன் ரத்தமது சுண்டியல்லோ
பையவே பாலாகி வந்தநெய்தான் பாலகனே இறைச்சிக்கு வதிகமாமே
5244.
அதிகமாம் காய்கறிகள் புழுவேயுண்டு வப்பனே யெலைவகையில் புழுவுமுண்டு
கதிதமுடன் தண்ணீரிற் புழுவுமுண்டு கண்காணாயெச்சலது மலுமுமுண்டு
துதிதமுடன் சுத்தமது யெதிலேயுண்டு சுகமுண்டோ சைவத்திலதிகமுண்டோ
பதிதமுடன் பொய்ச்சைவமல்லாலப்பா பாரினிலே மெய்ச்சைவ முண்டோபாரே
5245.
பாரப்பா யின்னம்வெகு வினோதமப்பா பாரினிலே மாணாக்கர் செய்யுமார்க்கம்
ஆரப்பா கற்பகத்தருவின்மூலம் வப்பனே யார்தின்ற யெச்சிலப்பா
சீரப்பா மாண்பரெல்லாம் ஆதாரந்தான் சிறப்புடைய கிழங்கென்று பொசித்தாரப்பா
நேரப்பா பலபேரும் பொசித்தமூலம் நினைவழிந்து நின்றுமல்லோ கெட்டார்மாண்பரே
5246.
கெட்டாரே யிப்படியே வையகத்தோர் கேடழிந்து சீரழிந்து சைவங்கெட்டு
இட்டபடி பிறவியென்ற சைவமாக எழிலுடனே மாண்பரெல்லாம் நம்புறார்கள்
தொட்டதொரு பொருளெல்லாம் சைவமில்லை தோராமல் மாண்பரெல்லாம் புலாலே
தின்போர்
சட்டமுடன் எந்தன்குரு காலாங்கிநாதர் சாங்கமுடன் எந்தனுக்கு வுரைத்தநூலே
5247.
நூலான நூலுக்குள் அதிதங்காணும் நுட்பமென்ற பொருளெல்லாம் இதிலேதோயும்
காலான காலாங்கி சொன்னவாக்கு காசினியில் பொய்யாது மெய்யேயாகும்
மாலான மாண்பரெல்லாம் சிற்றின்பத்தில் மதிகெட்டு தேவதா மங்கையோடு
கோலான லீலையது மிகவுமாடி குவலயத்தில் யெல்லில்தனை விரும்பினாரே
5248.
விரும்பியே கலவிதனி லிருவரெச்சை மெய்யுடலாவிபொருள் எல்லாந்தந்து
சுரும்பியன கைப்பொருள்கள் யாவுந்தந்து சுந்தரமே மோட்சமிது யோனியென்று
கரும்புடனே மூத்திரக்குழியையப்பா கைலாசமேருகிரி யென்றுநம்பி
துரும்பாகப் போனவர்கள் கோடாகோடி தூங்கியே மாண்டவர்கள்கோடியாமே

5249.
கோடியாம் ரிஷிதேவர் முதலாயுள்ளோர் குவலயத்தில் மாண்டவர்கள் கணக்கோயில்லை
தேடியே மாயவலை சிக்கியல்லோ தேசத்தில் கெட்டவர்கள் அதிகமாண்பர்
நீடியே வையகத்தி லிருந்தொரில்லை நிட்சயமாய் காலங்கி சொன்னநீதி
வாடியே போகரிஷி யடியேனப்பா வன்புடனே தாமுரைத்த நீதிதாமே
5250.
தானான நீதியது யாருக்கென்றால் தாரணியில் சீனபதியுலகத்தோர்கள்
மானான வாக்கியத்தை மெய்யென்றெண்ணி மகவதிலும் பதின்மடங்கு வதிகமாக
கோனான காலாங்கிநாதர்சொல்லை கொப்பெனவே மெய்யென்று நம்பியல்லோ
வேனான வொழுக்கம் ஆசாரத்தோடும் மேதினியில் நடப்பதுவும் உண்மையாமே
5251.
உண்மையாம் சீனபதிதேசத்தோர்க்கு ஓகோகோ சைவங்கள் இல்லையப்பா
கண்மையாய் மாமிஷங்கள் புலால்தானும் கபடன்றி புசிப்பது நீதியாகும்
வண்மையுடன் ஜெபதபங்கள் குளியலுண்டு வளமான நேமநிஷ்டை யனேகமுண்டு
திண்மையாம் மாமிஷப்பிலாதவர்க்கம் திகழுடனே தின்பார்கள் சைவந்தானே
5252.
சைவவென்பார் பேதாபதங்களில்லை சாதுரிய பதார்த்தவகை புசித்திட்டாலும்
கைதவங்கள் பிசகாத சுழிகள்போலும் கைலாயநாதரைப்போல் தவமும்செய்வார்
மைவனங்கள் மெத்தவுண்டு சீனத்தார்க்கு மகாவிஷ்ணு கிருஷ்ணாவதாரமென்பார்
வெய்தவம் பூண்டாலும் சீனத்தார்கள் விருப்பமுடன் சைவமது யில்லைதானே
5253.
தானான புலிப்பாணி மைந்தாகேளு தகமையுட னின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் பாதமது கடாட்சத்தாலே
தேனான தேசமெலாம் குளிகைகொண்டு தெளிவுடனே எழுகடலுஞ் சுற்றிவந்தேன்
மானான மாண்பரிட சைகைகண்டேன் மகத்தான சாஸ்திரங்கள் மெத்தவுண்டே
5254.
உண்டான லோகபதி மாண்பரெல்லாம் ஓகோகோ நாதாக்கள் சொன்னவாக்கு
கண்டல்லோ சாஸ்திரங்கள் அதிகம்பார்த்து காசினியில் தத்துவத்தில் மிகுந்தோர்போல
மிண்டான வார்த்தைகளும் மிகவுங்கூறி மேதினியில் கரைகண்ட வித்துவான்போல்
அண்டர்முனி முதலானோர் கண்டுயேங்க வவனியிலே சித்தனைப்போல் பேசுவாரே
5255.
பேசியே வெகுகோடி மாண்பரெல்லாம் பினத்தினார் சாஸ்திரத்தின் குப்பல்தன்னை
பூசிதங்கள் கொண்டல்லோ பகட்டுகாட்டி புகழுடனே சாஸ்திரத்தை மெய்போல்சொல்லி
ஊசிதாமாந் தத்துவங்கள் தியானமார்க்கம் உறுதியுடன் நாதாக்கள் சொன்னதில்லை
வாசித்து நால்வேத மாறுசாஸ்திரம் வகையுடனே கதைகட்டி வுரைத்திட்டாரே
5256.
உரைத்திட்ட கதையெல்லாம் பொய்யேயாகும் வுத்தமனே சாஸ்திரங்கள் அதர்வணந்தான்
கரைத்திட்ட மாகவல்லோ மாண்பருக்குக் காசினியில் தாமுரைத்தார் சாஸ்திரங்கள்
நிறைத்திட்ட மாகவல்லோ யானுஞ்சென்று நீடாழி யுலகுபதி சுத்திவந்தேன்
வரைக்கமலம் வீற்றிருக்கும் தாயார்பாதம் வளமையுடன் எந்நாளும் பதங்கண்டேனே

5257.
பதமான பதமதுவும் சாஸ்திரங்கள் பாங்குடனே மேதினியில் கண்டேன்யானும்
மிதமுடனே தர்க்கங்கள் யாகமங்கள் மேதினியில் வெகுபேர்கள் சொல்வாரப்பா
நிதமுடனே சாஸ்திரத்தின் தொகுப்பையெல்லாம் நீதியுடன் மெய்போலே பேசுவார்பார்
சதகோடி சாஸ்திரங்கள் கூறிட்டாலும் சட்டமுடன் சீனபதிக்கீடாகாரே
5258.
இணையான தென்காசி பதியிலப்பா யெழிலான தேசமது வனேகமுண்டு
சணமதிலே குளிகையது பூண்டுகொண்டு தாரிணியில் சதகோடி தூரமட்டும்
கணமதுவும் நில்லாமல் அடியேன்தானும் காசிபதி மாண்பரெல்லாங் கண்டுவந்தேன்
பிணமதுவும் மடிந்தாக்கால் சாஸ்திரங்கள் பேரான சாங்கியங்கள் மெத்தவுண்டே
5259.
உண்டான சமுசாரி கோடிமாண்பர் வுத்தமர்கள் வேதாந்தங் கடந்தஞானி
செண்டான முறைமைகெட்டு மையல்கொண்டு ஜெகந்தனிலே மடிந்தவர்கள் கோடாகோடி
அண்டமுடன் ஆகாயந்தன்னளவாய் அகிலமெல்லாங் கொடிகட்டி வாழ்ந்தார்கோடி
புண்டரீக கிருஷ்ணாவ தாரனைப்போல் புகழான கீர்த்தியுடன் மடிந்தோர்தாமே
5260.
மடிந்ததொர் மாணாக்கள் மானிலத்தில் மகதேவர் பாதமது வடைந்தோர்கோடி
கடினமுடன் வையகத்தில் வாழ்வுபெற்று காசினியில் சாஸ்திரங்கள் மிகவுங்கற்று
அடியளவு வேதமதல் ஆகமங்கள் அறுபத்து நாலுகலை சாத்திரங்கள்
முடியோடு முனிவர்பதந் தாள்பணிந்து மூதுலகில் கற்றென்ன ஒன்றுங்காணே
5261.
காணவென்றால் மடிந்தவர்க்கு சாத்திரங்கள் கைலாயஞ்சென்றவர்க்குப் பார்க்கலாமோ
தோணவே வுடல்பொருள்கள் ஆவியெல்லாம் தோற்றாமல் மண்ணோடே மண்ணாய்ப் போச்சு
வேணதொரு சாத்திரங்கள் பார்த்தாலென்ன பார்த்தாலும் வையகத்தி லிருப்பாருண்டோ
பூணவே யாகாத நாளில்மாண்டோர் புகழான வாத்துமமும் இருந்ததுண்டோ
5262.
இருந்துமே வையகத்தில் மாளிவிட்டு யெழிலான கிரகமது போவதுண்டோ
திருந்தவே வருடமது ஆறுதிங்கள் திறமான மாளிதனிலிருந்துகொண்டு
பொருந்தவே பெற்றோர்கள் குடும்பத்தோரை பொங்கமுடன் வம்புகளுங் கூர்வதுண்டோ
வருந்தியே மாண்டதொரு கிரகந்தன்னை வளமுடனே தானடைப்பார் பாருபாரே
5263.
பாரப்பா நலமான நாளில்மாண்டோர் பாருலகில் கிரகத்தைவிட்டுமல்லோ
நேரப்பா சமுதாயங் கைலாயத்தில் நேர்மையுடன் அடைக்கலமாய் சென்றதென்றும்
சீரப்பா வாத்துமமுங் கைலாயத்தில் சிறப்புடனே சென்றதென்பார் மாண்பரெல்லாம்
ஆரப்பா கண்டவர்கள் வையகத்தில் ஆருமில்லை வுண்மையிது பாருபாரே
5264.
பாரேதான் தேகமது மண்ணாய்ப்போச்சு பாருலகில் ஆத்துமமும் காணார்மாண்பர்
சீரேதான் ஒடுக்கநிலை யாருங்காணார் சிறப்பான பிரபஞ்ச வாழ்க்கனைத்தும்
வேரேதான் மறுபிறப்புங் கண்டதுண்டோ வெட்டவெளி யாகாயமொன்றுங் காணோம்
தீரேதான் சென்றநிலை காணாமற்றான் திகைத்துமே மாண்பரெல்லாம் திகைப்பார்தானே

5265.
தானான காலாங்கி எந்தநாதர் தகமையுள்ள வாக்கதுவும் பொய்யெண்ணாது
கோனான யென்குருவாம் சற்புருஷன் வாக்கு குவலயத்தில் பொய்யாது மெய்யேயாகும்
மானான மகதேவர்படி நிதானம் மார்க்கமுடன் வயததுவுங் கூறியல்லோ
தேனான தேவரது பாதங்காண தெளிவான கட்டளைகளுண்டுபாரே
5266.
உண்டான கட்டளைகள் அமைந்திருக்க ஓகோகோ சாஸ்திரங்கள் வேதமென்ன
திண்டான நல்லநாள் தீயநாளும் திகழுடனே மகதேவர் படைப்பாருண்டோ
சண்டாள மாண்பரெல்லாம் சாத்திரத்தை தக்கபடி யுணராமல் மதியீனத்தால்
கொண்டபடி யவரவர்கள் தியானத்தாலே குறிப்புடனே தீயநாள் என்றிட்டாரே
5267.
இட்டாரே தீயநாள் நல்லநாளா யெழிலான சாத்திரங்கள் கூர்வதுண்டோ
விட்டகுறை யமைந்தபடி மாண்பர்க்கெல்லாம் மேதினியில் சாஸ்திரங்கள் மெய்யதாச்சு
நட்டமது மாண்பர்தன்னால் நாதாக்கள் சாத்திரங்கள் ஏதுக்காச்சு
பட்டமதுதான் பிறந்த பாவனைப்போல் பாருலகில் சாத்திரம் பொய்யதாச்சே
5268.
ஆச்சப்பா வையகத்தில் சாத்திரங்கள் அனேகமுண்டு நாதாக்கள் செய்தநூலில்
மூச்சடங்கிப் போனதொரு தேகந்தானும் மூதுலகில் திரும்பி வந்தசேதியில்லை
பாச்சலுடன் சாத்திரங்கள் கற்றுமென்ன பாங்கான தத்துவங்கள் அறிந்துமென்ன
ஆச்சரிய மானதொரு தேகமப்பா வவனியிலே இருப்பதுவும் பொய்யுமாச்சே
5269.
பொய்யாது தேகமது நிலைநில்லாது பொங்கமுடன் சாஸ்திரங்கள் வேதமென்ன
மெய்யான வாத்துமமும் அழியாதென்று மேதினியில் கட்டுமுறை வாக்கியந்தான்
வெய்யவே சாஸ்திரத்தின்ஆகமங்கள் விட்டகுறை யிருந்தல்லோ வெளியுமாச்சு
பையவே யவனன்றி ஓரணுவுதானும் பாருலகில் அசையாது மெய்யதாமே
5270.
ஆமேதான் கெட்டநாள் நல்லநாளாய் ஆகவைக்க வுன்னாலே யாகுமோதான்
போமேதான் கதிரோனின் நாளையெல்லாம் பொங்கமுடன் நல்லநாளென்றிருக்க
வேமேதான் நாளெட்டும் நல்லநாளாய் வேதாந்தத் தாயினது கிருபையாலே
ஆமேதான் நாதரவர் செய்திருக்க வப்பனே நம்மாலே யாவதென்ன
5271.
என்னவே தேவனது யெட்டுநாளும் எழிலாக மாண்பருக்கு வமைந்திருக்க
பன்னவே வெள்ளிதனில் திரவியங்கள் பாருலகில் யீவதுவே தருமமமல்ல
சொன்னபடி காரிதனில் சவளமாகா துப்புரவாய் அருக்கனில் விருந்துமாகா
நன்மையாய் திங்களது வாரசூலை நலமுடனே மாண்பருக்கு காட்டினாரே
5272.
நாட்டமுடன் செவ்வாய்க்கு மேற்குதானும் நலமுடனே பயணமது வாகாதென்றும்
தேட்டமுடன் புதனுக்கு வடக்கேதானும் செம்மலுடன் பயணமது வாகாதென்றும்
நீட்டமுடன் குருவாரம் ஸ்தானமாகா நிலையான நாளெல்லாம் நீயநாளாய்
வாட்டமுடன் சாஸ்திரங்கள் கூறிருக்க வளமுடனே நாளெந்த பலந்தான்காணே

5273.
காணவே நாளெல்லாம் முறைப்பாடாக காசினியில் சாஸ்திரங்கள் பார்த்ததானால்
தோணவே எந்தநாள் நல்லநாளென்று துப்புரவாய் தன்மனதில் எண்ணலாகும்
வேணவே நாளெட்டும் நல்லநாளாய் விருப்பமுடன் உம்பரனார் செய்திருக்க
நாணவே மதியீன மாண்பரெல்லாம் நிலைகெட்டு மதிகெட்டு நின்றிட்டாரே
5274.
நின்றாரே காலாங்கி நாதர்தம்மால் நீடூழி காலம்வரை யடியேன்தானும்
குன்றான அவர்பாதந்தொழுதுமல்லோ குளிகைகொண்டு மலையேறி மலைதான்கண்டேன்
சென்றேனே சீனபதிக் கிடபாகத்தில் சிறப்பான தேசமது வனேகமுண்டு
வென்றிடவே பலஜாதி மாண்பர்தாமும் விருப்பமுடன் கண்டல்லோ மறிந்திட்டேனே
5275.
அறிந்தேனே சாஸ்திரங்கள் அனேகமுண்டு அவர்களது பேதமைகள் சொல்லொண்ணாது
குறிந்துமே முழுகுநாள் தன்னிலப்பா கூரான சாஸ்திரங்கள் மெத்தவுண்டு
முறிந்ததொரு வுதிரமது தீட்டேயென்று முனையான சங்கநதி முழுகவென்று
நெறிந்துமே ஸ்நாணமது செய்யவென்று நேரான வாற்றோரஞ் செல்வார்பாரே
5276.
பாரேதான் ஸ்நாணமது செய்யநன்று பாங்கான சடங்குகளுஞ் செய்யநன்று
நேரேதான் ஓமமது செய்யநன்று நெடிதான தீட்டதுவைக் கழிக்கநன்று
சீரேதான் சாஸ்திரத்தின் தொகுப்பைப்போல சிறப்பான வைதீகஞ் செய்யநன்று
தீரேதான் தீட்டினது மார்க்கத்தாலே திகழுடனே யொன்றுதான் காணார்பாரே
5277.
காணாரே சூதகங்கள் நேர்ந்தபோதும் கடிதான வேலைமுகஞ் செய்யும்போதும்
நீணவே மண்பாண்டம் தனையெடுத்து நீதியுடன் ஜலக் கரைக்குப்போகும்போது
வேணபடி யன்னமது சமைக்கும்போதும் வேண்டியே விருந்தமுர்தங் கொள்ளும்போதும்
ஆணவங்கள் தானொடுங்கித் தீட்டேகண்டால் அவனிதனில் விட்டெறிந்து
போனார்தாமே
5278.
போட்டாரோ பாண்டமது வன்னந்தானும் பொங்கமுடன் காய்ப்பதார்த்தங்கள்பேதம்
நீட்டமுடன் சமைத்ததுவும் போட்டிட்டாரோ நிலையான தீட்டதுவும் மெய்யேயாகும்
தேட்டமுடன் அவர்போட்ட வேஷமெல்லாம் தெளிவான வேஷமென்று செப்பலாகும்
வாட்டமுடன் தீட்டதனில் பிறந்தோர்தாமும் வண்மையுடன் தீட்டதுவும் மெய்யென்றாரே
5279.
மெய்யான தீட்டதுவும் தயங்கியல்லோ மேதினியில் தேகமென்ற வுருவுமாச்சு
கையுடனே கருவிகரணாதியோடும் காசினியில் மாதர்களின் கெர்ப்பக்கோளில்
பையுடனே வந்துதித்த சாற்பாத்திரந்தான் பாலகனே திரண்டுருவாய் வடிவங்கொண்டு
எய்யவே கடவுளது வரத்தினாலே யெழிலான சடலமது பிறக்கலாச்சே
5280.
ஆச்சப்பா சதகோடி மனிதரெல்லாம் அப்பனே பிறவியது யிதனாலாச்சு
மூச்சுடனே தேகாதி கற்பத்தோடும் மூதுலகைக் கண்டதொரு மானிடமுமாச்சு
பாச்சலென்ற பிறவியது தீட்டேயாச்சு பாங்கான சடலமது மண்கூறாச்சு
மாச்சலுடன் மகதேவர் கடாட்சத்தாலே மானிலத்தில் சகலவுயிர் தீட்டாலாச்சே

5281.
தீட்டென்று சொல்லுவது தருமமாமோ திகழான லோகமதிமாண்பருக்கு
வாட்டமுடன் லோகாதி வையகங்கள் மானிலத்தில் எல்லவரும் மதியேகெட்டு
தேட்டமுடன் சாஸ்திரத்தில் தீட்டேசொல்லி தெளிவான மதபேதங்கூறியல்லோ
நீட்டமுடன் மாண்பரெல்லாம் இந்தபாகம் நிதிகெட்டு மதிகெட்டாரே
5282.
கெட்டாரே மானிலத்தில் மாண்பரெல்லாம் கீர்த்தியுடன் இந்தவண்ணபாகத்தாலே
சட்டமுடன் சீனபதிப் பெண்களுக்கு சாஸ்திரங்கள் ஜாதியில்லை தீட்டுமில்லை
இட்டமது போலிருந்து போகஞ்செய்து யெழிலான பிறவிமக்களனேகமுண்டு
அட்டதிசை தான்புகழுஞ் சீனத்தார்க்கு வன்பான மதியநிலை யதிகந்தானே
5283.
தானான இன்னமொரு மார்க்கம்பாரு தகமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
பானான கடலேழுஞ்சுற்றும்போது பாலகனே கருமிகளும் தர்மியுண்டு
மானான நல்லவர்போல் சிநேகிப்பார்கள் மரமமதை மனதில்வைத்து கொல்வார்பாரே
5284.
கொல்லவந்த மித்துருவாஞ் சத்துருவுமார்க்கு குறிப்புடனே சொல்லிவைத்த சிங்கியப்பா
வெல்லவே யவரெனக்குக் கொடுத்தபாகம் விருப்பமுடன் உந்தனுக்குச் சொன்னநீதி
புல்லவே ஜெகஜாலம் சிங்கிஜாலம் புகழான சத்துருவைக் கொல்லுஞ்ஜாலம்
மெல்லவே மித்துரு போலிருந்துகொண்டு மேதினியில் ஜாலமதை செய்வார்தாமே
5285.
தாமான ஜாலமது யென்னவென்றால் தண்மையுடன் சொல்லுகிறேன் கண்ணேபாராய்
நாமேதான் கௌரியென்ற பாஷாணந்தான் நலமான எலிப்பகையுந் தன்னோடொக்க
போமேதான் வீரமென்ற காடிதானும் பொங்கமுடன் வேந்தோன்றி கணையுங்கூட்டி
தீமேதான் செய்யுகின்ற முறுவல்தானும் சிறப்பாக கணைவண்டு தானுங்கூட்டே
5286.
கூட்டியே கருஞ்சோரா செஞ்சோராதானும் குடிகெடுக்கும் குமுணாவின்கணையுங்கூட்டி
தாட்டிகமாய்ச் செங்கொட்டைப் பூரந்தானும் சட்டமுடன் சரியெடையாய் நிறுத்திக்கொண்டு
வாட்டமுடன் பாம்பினது விஷத்தாலாட்டி வளம்பெறவே சிமிளிதனில் பதனஞ்செய்து
ஆட்டமது வாடுதற்கு வயணஞ்சொல்வேன் வப்பனே எந்தனது முறைமைபாரே
5287.
முறையான முறையதும் என்னவென்றால் மூர்க்கராங் கருமிகட்கும் சண்டாளர்க்கும்
கறையான நேத்திரத்தில் கண்டபோது கரம்பேசி நயம்பேசி குடிகெடுக்கும்
திறையான பாவிகட்கு யிந்தபாகம் திகழுடனே வுள்ளங்கால் தாக்குவாய்நீ
சிறைகொண்டு மாநிலத்தில் நோயுங்கண்டு சீரழிந்து குழிவிழுந்து போவான்பாரே
5288.
போவானே திரேகமெல்லாம் புண்ணுமாகி பொங்கமுடன் வையகத்தினாசைவிட்டு
சாவானே அறுதிங்கள் சட்டமுடன் காலில்வந்து பணிவானானால்
நோவான பிணியதுவுந் தீருதற்கு நுட்முடன் வெள்ளையென்ற குன்றிதானும்
தேவான தழையதுவும் பிடுங்கிவந்து தேற்றமுடன் பாதாளமூலிசேரே

5289.
மூலியென்ற சிறுகீரை வேருஞ்சேரு முனையாகச் சரியெடையாய் யெடுத்துக்கொண்டு
நீலியென்ற மூலியப்பா சரிநேரொக்க நீமகனே நினைவாகப் பாண்டமிட்டு
சாலியனார் பாண்டமதிற் ஜலமேவிட்டு சாங்கமுடன் கியாழமது செய்துகொண்டு
நாலிலொரு கியாழமது காய்ந்துதானால் நலமான கியாழமதை யிறக்கிடாயே
5290.
இறக்கியே கியாழமது நாளொன்றுக்கு யென்மகனே நீநினைவாய் நாழியாக
உறக்கமது வாராமல் அந்திசந்தி யுத்தமனே இருவேளைக் கொள்வாரானால்
திறமுடைய கியாழமது வேகத்தாலே தீருமே குழுவிழுந்த புண்ணுமாறும்
நிறமான முன்சொன்ன மூலியப்பா நித்தமுமே மேலரைத்துப் பூசிடாயே
5291.
பூசியே மண்டலந்தா னிந்தபாகம் பொங்கமுடன் தான்குடித்து வருகும்போது
மாசிபடா தேகமதில் வந்தரோகம் வலுவழிந்து நாட்குநாள் குறைந்துமல்லோ
பாசியது போல்படர்ந்த சில்மிஷங்கள் பாலகனே மேனிவிட்டு பறக்கும்பாரு
காசினியில் உன்னையப்பா கடவுளாகக் கருத்தில்வைத்து காலில்வந்து பணிகுவாரே
5292.
பணிகுவார் கருமிகளும் உன்னையப்பா பாங்குடனே குடிகெடுக்கும் பாவிமார்கள்
அணியணியாய் உன்பாதந் தொழுவாரப்பா அப்பனே யுந்தமக்கு தருமமுண்டு
துணிவுடனே நீயுமொரு சித்தனாக துப்புரவாய் லோகமதி லிருந்துகொண்டு
மணிபோன்ற சின்மயத்தை மனதிலெண்ணி மகிட்சியுடன் லோகமதில் வாழ்குவீரே
5293.
வாழ்கவென்றால் பாவிகளுந் துரோகஞ் செய்தால் மார்க்கமுடன் மனந்தனிலே வையாமற்றான்
தாழ்கவே யவர்களுக்கும் பின்னும்நீதி சட்டமுடன் தான்செய்ய மெத்தநன்று
ஆழ்கவே வையகத்தில் கீர்த்திகொண்டு அடுத்தஜென்ம பகையாளி யார்வந்தாலும்
வாழ்கவே யவர்களுக்கு சோடசார வண்மையுடன் செய்குவதும் தருமம்பாரே
5294.
பாரேதா னின்னமொரு பாகங்கேளு பட்சமுடன் சொல்லுகிறேன் பண்பாயப்பா
நேரேதான் காலாங்கி நாதர்பாதம் நெறிமுறைமைத் தான்வணங்கி நீதியாக
சேரேதான் சிங்கியது கொண்டமாண்பர் சிறப்புடனே நோயகலுங்காயமப்பா
தீரேதான் தேகமது வீறுபோக தீர்க்கமுடன் காயாதி கற்பஞ்சொல்வேன்
கூரேதான் கற்பமதை செய்துமல்லோ கொற்றவனே நீகொடுக்க தருமமாமே
5295.
தருமமா மகத்தியரும் இந்தபாகம் சட்டமுடன் பூரணத்தில் சொல்லவில்லை
கருமமது வழியாமல் மூலிகற்பம் சாங்கமுடன் சொன்னாரே வேறொன்றில்லை
திருமகளின் கடாட்சத்தால் காயகற்பம் திட்டமுடன் சொல்லவில்லை பூரணத்தில்
குருவான யெனதையர் காலாங்கிநாதர் குறிப்புடனே சொன்னதொரு நீதியாமே
5296.
நீதியால் பூமிசர்க்கரையின்மூலம் நிட்களங்கமானதொரு பரங்கிப்பட்டை
சாதியாம் நல்லதொரு மாஞ்சில்தானும் தண்மையுள்ள தண்ணீரின் மிட்டாந்தானும்
வேதியாம் மூச்சரணை மூலந்தானும் வேகமென்ற கொடிவேலி மூலந்தானும்
ஆதியாம் பொன்னினாவாரைமூலம் வப்பனே நிலைபனையின் மூலங்கூட்டே

5297.
கூட்டவே கற்பகமாந்தருவின்மூலம் குணமான வெந்தோன்றி மூலந்தானும்
நீட்டமுடன் நன்னாரி மூலமப்பா நிலையான வெள்ளையென்ற குன்றிமூலம்
நாட்டமுடன் மிதுவென்ன மொன்றாயல்லோ நளினமுடன் சரியெடையாய் யெடுத்துக்
கொண்டு
பூட்டகமாய் ரவிதனிலே காயப்போடு புகழான மூலமதைப் பொய்யாய்ச் செய்யே
5298.
செய்யவே கல்லுரலிலிட்டுமைந்தா செப்புகிறேன் மலைத்தேனுங்கூடவிட்டு
பையவே மெழுகுபதந் தனிலிடித்து பாண்மையுடன் சிமிழ்தனிலே பதனம்பண்ணு
துய்யதொரு மெழுகதனை யந்திசந்தி துப்புரவாய்த் தானுமல்லோ கொண்டபின்பு
வெய்யவே யாவின்பாலுடனே கொள்ளு வேமென்ற வீரதுவுந் தணியந்தானே
5299.
தணியுமே முன்போல தேகந்தானும் சட்டமுடன் காந்தியது மின்னலாகும்
மணிபோன்ற காயாதி கற்பந்தன்னை மண்டலத்தி லுண்டதொரு மாண்பருக்கு
துணிவுடனே களஞ்சிக்கு மேலேயப்பா துப்புரவாய்க் கொள்ளுவது மெத்தநன்று
நணிலான தேகமது இறுகியல்லோ நயனமது பரிதிமுன்னே ஜொலிக்கும்பாரே
5300.
ஜொலிக்குமே பரிதியது மயங்கிப்போகும் தோறாமல் அருந்ததியும் கண்ணிற்றோன்றும்
வலித்ததொரு நேத்திரமும் நீரேகுன்றி வளமையுடன் கண்ணொளிவு பிரகாசந்தான்
ஒலிக்குமே வையகங்கள் கண்ணிற்றோற்றும் ஓகோகோ காலாங்கி காயகற்பம்
பலிக்குமே பாருலகில் யார்தான்செய்வார் பாலகரே புண்ணியர்க்கு வாய்க்கும்பாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

5301.
பாரேதான் இன்னமொரு மார்க்கம்பாரு பாருலகில் மாணாக்கர் பிழைக்கவென்று
சீரேதான் சிடிகையென்ற வேதைசொல்வேன் சிறப்பான நாதாக்கள் சொன்னதில்லை
நேரேதான் பலபலவாஞ் சாத்திரத்தில் நேர்மையுடன் பாடிவைத்த சித்தரெல்லாம்
தீரேதான் நுணுக்கமென்ற வேதைதானும் திறமுடனே பாடிவைத்த வுண்மைபாரே
5302.
உண்மையாய் மாணாக்கள் பிழைக்கவென்று வுத்தமனே ஏமமென்ற சிடிகைவேதை
நன்மையென்ற பாஷாணஞ்சிங்கிதானும் நயமான தாளகமும் பூரங்கூட்டி
வெண்மையெனும் குச்சியென்ற வீரந்தானும் வெளியான கௌரியென்ற பாஷாணந்தான்
தண்மையுள்ள துருசுடனே துத்தங்கூட்டி தகமையுள்ள வெடியுப்பு கூடச்சேரே
5303.
சேர்க்கவே வெண்காரஞ் சீனந்தானும் சிறப்பான நாகமுடன் சூதங்கூட்டி
ஏற்கவே மதியுப்பு தானுஞ்சேர்த்து யெழிலான கெந்தகமுஞ் சாரங்கூட்டி
தீர்க்கமுடன் லிங்கமது வொன்றாய்ச் சேர்த்து சிறப்புடனே சரியிடையாய் நிறுத்துக்கொண்டு
ஆர்க்கவே மூவகையின் ஜெயநீராலே வப்பனே நாற்சாமம் அரைத்திடாயே
5304.
அரைத்துமே வில்லையது லகுவாய்ச் செய்து வன்பான ரவிதனிலே காயப்போடு
வரைக்கலம் போலாகப் பீங்கான்தன்னை வளமுடனே தானமைத்துப் பீங்கான்மூடி
திரையான சீலையது வலுவாய்ச் செய்து திட்டமுடன் ரவிதனிலே காயவைத்து
சுரைபோல பூமிதனில் குழிதானப்பா சுத்தமுடன் சாணிளம் குழிதான் செய்யே
5305.
செய்யவே குழிதனிலே மணலைக்கொட்டி சிறப்புடனே மேலதனில் பீங்கான்வைத்து
பையவே மேலமந்த மணலைக்கொட்டி பாங்குபெற புடமதுவும் யெருவுபத்து
வெய்யவே சுடராறிக் குளிர்ந்தபின்பு வேதாந்தத் தாய்தனையே மனதிலுன்னி
உய்யவே செந்தூரந் தனையெடுத்து வுத்தமனே குழிக்கல்லிற் தன்னிற்போடே
5306.
போடேதான் பின்னுமந்த செயநீர்தன்னால் பொங்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
நீடேதான் சிறுபில்லைத் தகடுபோலாம் நிட்களங்கமாகவல்லோ பில்லைசெய்து
நாடேதான் ரவிதனிலே காயவைத்து நலமாக முன்போல பீங்கான்தன்னில்
சூடேதான் வில்லையது வுள்ளே வைத்து சுத்தமுடன் சீலையது வலுவாய்ச்செய்யே
5307.
வலுவான சீலையது ரவியில்வைத்து வளமுடனே காய்ந்தபின்பு யெடுத்துமுன்போல்
மலுவான புடமதுவும் போட்டுமைந்தா மார்க்கமுடன் தீயாறியெடுத்துப்பார்க்க
சுலுவான செந்தூர மென்னசொல்வேன் சுந்தரனே சத்திசிவம் அதிலேகாண்பாய்
வலுவான செந்தூர மிதற்கீடுண்டோ வையகத்தில் சித்தர்முனி சொல்லாரன்றே
5308.
அன்றான செந்தூர துந்தபாகம் வப்பனே புடம்பஞ்ச தசமுமாகும்
வென்றிடவே புடமதுவும் போட்டுமைந்தா விருப்பமுடன் தானெடுத்து சிமிளில்வைத்து
குன்றான மகமேரு செந்தூரத்தை குறிப்புடனே பாச்சுதற்கு வகையைக்கேளிர்
தென்றிசையில் பொதிகைமுனி கும்பயோனி செப்பவிலை யிந்தமுறை செப்பார்தாமே

5309.
தானான குன்றியிடை செந்தூரத்தை தகமையுள்ள வாறுமாற்றாணியாக
கோனான யென்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவனார் சொன்னதொரு நீதிபோல
பானான பரித்தகடு லேசாய்த்தட்டி பட்சமுடன் களஞ்சிக்குன்றிவீதம்
மானான மூவகையின் ஜெயநீராலே மயங்காமல் செந்தூரங் குழைத்துக்கொள்ளே
5310.
கொள்ளவே செந்தூரந் தன்னையப்பா குறையாமல் களஞ்சியென்ற பொன்தகட்டில்
மெள்ளவே புத்தீசல் இறகுபோல மேன்மையுடன் தான்தடவி செப்பக்கேளிர்
வள்ளலுடன் காவிக்கால் தானுங்கூட்டி வளமான யெருச்சாம்பல் தன்னிற்சேர்த்து
உள்ளபடி ரெண்டையுந்தான் ரேசித்தல்லோ வுத்தமனே தகடதனை வைக்கக்கேளே
5311.
கேளப்பா விக்கல் யெருவுக்குள்ளே கெவனமுடன் பரித்தகட்டைமேலேவைத்து
நாளப்பா போகாமல் தீயைமூட்டி நலம்பெறவே தகடதனை உள்ளமர்த்தி
சூளப்பா புடம்போட வர்ணமாகி சுந்தரனே வரணமது சொல்லொண்ணாது
ஆளப்பா யிப்படியே வறுபுடமுந் தீர்த்தால் வப்பனே தங்கமென்ற வரணமாச்சே
5312.
ஆச்சப்பா வரணமென்ற யேமந்தன்னை வப்பனே மூசையிட்டு வுருக்கிப்பாரு
மூச்சடங்கி வரணமது யேறியல்லோ முனையான யேமமது பசும்பொன்னாச்சு
மாச்சலென்ற பிறவியது தங்கமாச்சு மகத்தாக சுயத்தங்கம் இதற்கீடாமோ
யேச்சென்றுங் கூறார்கள் பிறவித்தங்கம் யெழிலான சாயமென்ற தங்கந்தானே
5313.
தானான தங்கமது பிரகாசந்தான் சதகோடி சூரியருக் கொப்பேயாகும்
கோனான சித்துமுனி ரிஷிகள்தேவர் குவலயத்தில் எந்தனைப்போல் கூறவில்லை
தேனான மனோன்மணியாள் பூசைக்காக செப்பியதோர் வித்தையது வர்ணம்பொன்னாம்
மானான பொன்னிதுதான் எவர்தான்காண்பர் மகத்தான சிவயோகிக் காண்பார்பாரே
5314.
பாரேதான் யின்னமொரு மார்க்கங்கேளு பாலகனே புலிப்பாணி மைந்தாபாரு
நேரேதான் செந்தூரந் தனையெடுத்து நேர்மையுடன் முன்சொன்ன நீராலாட்டி
சீரேதான் குடவனையே தகடுதட்டி சிறப்பாக மருந்ததனை மேலேபூசி
நீரேதான் சொன்னபடி மார்க்கமப்பா நிருதியுடன் புடம்போட பொன்மாற்றாமே
5315.
மாற்றான பொன்னதுவும் என்னசொல்வேன் மகத்தான தங்கமது பிறவிக்கொப்பாம்
நாற்றமுள்ள குடவனது கட்டிப்போச்சு நலமான நாதாக்கள் கண்டதில்லை
கூற்றமெனுஞ் செம்பதுவும் வூறலேகி குணமான நாகமது சீறல்நின்று
ஏற்றமது வாராமல் பொன்னேயாகில் யெழிலான மாற்றதுவுங் காட்டுந்தானே
5316.
காட்டுமே குடவனிலே எட்டுமாற்று கண்காணா வித்தையடா ரிஷிகள்வித்தை
நீட்டமுடன் சமுசாரிக்கான வித்தை நிலையான வித்தையது வேறுண்டோசொல்
பாட்டனார் காலாங்கித் தூதனப்பா பண்டையுள்ள காலாங்கி நாதருக்கு
சூட்டியதோர் யிவ்வேதை சூக்குமவேதை சூட்சமுடன் காட்டிவிட்டார் ஐயர்தாமே

5317.
தாமான பாட்டனவர் காலாங்கிக்கு தயவுடனே கூறினதோர் வேதைமார்க்கம்
நாமேதான் பட்சம்வைத்து எந்தன்மீது நலமுடனே வோதிவைத்த சுளுக்குவேதை
போமேதான் வையகத்தில் பொய்யாகாமல் பொங்கமுடன் மாணாக்கர் பிழைக்கவென்று
வேமேதான் மேதினியில் பலநூல்பார்த்து வேகமுடன் வோதிவைத்தார் வையத்தோர்க்கே
5318.
வையகத்தோர் பிழைக்கவென்று கருமானங்கள் வகையுடனே சொல்லுகிறேன் மைந்தாபாரு
பொய்யாது யென்குருவாங் காலாங்கிவாக்கு பூதலத்தில் மெய்யாகும் பொய்யேயில்லை
மெய்யான நூல்பார்த்து மாண்பருக்கு மேதினியில் கண்டறிந்த சுளுக்குவேதை
செய்தாலுங் கைகூடும் ஏமவேதை செப்பினார் எந்தன் காலாங்கிதானே
5319.
தானான யின்னமொரு கருமானங்கேள் தகமையுடன் உரைப்பேனே மைந்தாபாரு
கோனான என்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவனா ரெந்தனுக்கு சொன்னநீதி
தேனான செம்பதுவும் தூலமேயாகும் தெளிவான செம்பதனை யெடுத்துக்கொண்டு
மானான மனோன்மணியாள் சித்தரூபி மகிழ்ச்சியுடன் தாமரைத்து கவசம்போடே
5320.
போடேநீகவசமது செய்துமைந்தா பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
நீடேதான் கோழியென்ற புடத்தைப்போடு நிட்களங்கமாக்கியல்லோ கத்திசெம்பாம்
கூடேதான் செம்பதுவும் ஊறலேகி குணமான காந்தியது மிகவுண்டாச்சு
ஆடேதான் செம்பதுவும் என்னசொல்வேன் வப்பனே சத்திசிவம் இதிற்காண்பாயே
5321.
காண்பாயே யிந்தமுறை பத்துவிசையோடு களிப்பான செம்பதுவும் வூறலற்று
ஆண்பான வல்லிமலர் போல்நிறந்தான் வப்பனே சுந்தரா யென்னசொல்வேன்
வீண்போகா திந்தமுறை செய்துமல்லோ விருப்பமுடன் முன்சொன்ன செந்தூரத்தை
நாள்படவே ரவிதனையே யுருக்கிக்கொண்டு நலம்பெறவே செந்தூரம் பத்துக்கொன்றே
5322.
ஒன்றான செந்தூர மென்னசொல்வேன் உத்தமனே பத்துக்கு ஒன்றே யீந்து
குன்றான செம்பொன்றுங் கூடச்சேர்த்து கொற்றவனே வாரடித்துப் புடத்தைப்போடு
வென்றிடவே சொகுசாவின் கடைதானப்பா வித்தகனே சிவவேடம் பூண்டோர்க்கெல்லாம்
நன்றான கவசகுண்டலத்துக்காதி நாயகனே என்னசொல்வேன் வதீதம்பாரே
5323.
பாரேதான் முன்சொன்ன செந்தூரத்தை பட்சமுடன் செய்வதற்கு மைந்தாகேளு
சீரேதான் மதியுப்பு சீனத்தோடு சிறப்பான வுமருப்புக் கூடச்சேர்த்து
நேரேதான் வாயென்ற பாத்திரத்தில் நெடிதான செயநீரால் இறக்கிமைந்தா
நீரேதான் சீசாவில் அடைத்துக்கொண்டு நிகழான செந்தூர மரைப்பாய்தானே
5324.
தானான செயநீரின் போக்கைத்தானும் தண்மையுள்ள நாதாக்கள் சொன்னதில்லை
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமுரைத்த முறைப்பாடெல்லாம்
பானான வையகத்தோர் பிழைக்கவென்று பாருலகில் பாடிவைத்த குருநூலாகும்
வேனான சாத்திரத்தின் வுளவாராய்ந்து விட்டகுறை யிருந்தோர்க்கு லபிக்கும்பாரே

5325.
பார்க்கவென்றால் இன்னமொரு கருமானம்பார் பாடுகிறேன் புலிப்பாணி மைந்தாகேளு
தீர்க்கமுடன் பேரண்டந் தலையண்டந்தான் திறமான ஓடதுவும் கொண்டுவந்து
ஆர்க்கவே வெடியுப்புக் கூடச்சேர்த்து வப்பனே மூலிகையின் செயநீர்தன்னில்
ஏர்க்கவே நாற்சாமம் அரைத்துபாலா யெழிலாக வில்லைதட்டி காயவையே
5326.
காய்ந்தபின்பு தனையெடுத்து ஓட்டிலிட்டு கசகாமல் சீலையது வலுவாய்ச் செய்து
தோய்ந்துமே வராகமென்ற புடத்தைப்போடு துப்புறவாய்ப் புடமாறி எடுத்துப்பாரு
மாய்ந்துமே வெடியுப்புச் சத்துருவுஞ் சேர்ந்து மகத்தான பற்பமது யென்னசொல்வேன்
தீய்ந்ததொரு பற்பமதை யெடுத்துமைந்தா திறமான சீசாவிற் பதனம்பண்ணே
5327.
பண்ணவே ரவிதனையே யெடுத்துநீயும் பான்மையுடன் தானுருக்கி ராசமீவாய்
எண்ணவே செம்புக்கு பாதியீவர் யெழிலான பற்பமதை யென்னசொல்வேன்
உண்ணவே சோறுதின்ன வேண்டுமென்றால் வுத்தமனே செம்புசுத்தி போதாதேதான்
வண்ணமுடன் செம்பதனை யுருக்கி மைந்தா மகதேவர் கவசகுண்டலஞ் செய்வாயே
5328.
செய்யவே சிவயோகி வேடம்பூண்டு தேசத்தோர் நண்பருக்கு யிந்தவேதை
உய்யவே தான்கொடுக்க மனுதர்ம்மமாகும் வுத்தமனே சமுசாரிக்கான வித்தை
துய்யதொரு செம்புவித்தை யிதுதானப்பா துப்புரவாய் கலசகுண்டலத்துக்காதி
பையவே யுந்தமக்கு வுபதேசிப்பேன் பாங்குபெற கர்மிகட்கு சொல்லாரன்றே
5329.
சொல்லான சொல்லிதுதான் சிவவேடந்தான் துப்புரவா யிருப்போர்க்கு ஈயநன்று
புல்லான மாண்பர்களில் தர்மிகளுமுண்டு புகழான தருமிகட்கு ஈயநன்று
கல்லான கருமிகளுக்கு கொடுக்கலாகா கபடன்றி மெய்சொல்லுவோர் குடுக்கநன்று
வல்லதொரு சித்துமுனி வேதையப்பா வளமையுடன் செய்பவர்க்கு சித்தியாமே
5330.
சித்தியா மின்னமொரு பாகஞ்சொல்வேன் சிறப்பான நாதாக்கள் சொன்னதில்லை
முத்திபெற கடுகளவு ரசமேநின்றால் முனையான மோசமது பெறவேயாகும்
சத்திசிவம் சூதமதிற் காணலாகும் தாரிணியில் கண்டவனே வாதியாவான்
வெற்றிபெற கெந்தகமும் பலமைந்தாகும் விருப்பமுடன் பூநாகம் பலமைந்தாமே
5331.
ஆமேதான் லிங்கமது பலமைந்தாகும் வப்பனே எரிகாலன் பாலாலாட்டி
தாமேதான் கோளாறு நேரிடாமல் காட்சியுடன் ரவிதனிலே காயப்போடு
வேமேதான் மறுபடியும் பொடியாய்ச் செய்து விருப்பமுடன் செய்யுமந்த முறைமைக்கேளு
நாமேதான் மதியதுவுந் துலமுறாம் நன்மையுடன் செய்யுகின்ற வரிசைகேளே
5332.
கேளப்பா வெள்ளிதனை குகையிலிட்டு கெவனமுடன் வுருக்கியல்லோ செப்பக்கேளு
தூளப்பா முன்சொன்ன மருந்தையல்லோ துப்புரவாய்க் கிரசமது யீவாய்தானும்
நாளப்பா போகாமல் மூசைதன்னை நலம்பெறவே வுடைத்துப்பார் களங்கேயாகும்
பாளப்பா போகாமல் களங்குதன்னை பட்சமுடன் தானெடுத்து செப்பக்கேளே

5333.
செப்பவென்றால் நாவில்லைப் பாவுமில்லை ஜெகந்தனிலே ரசிதமென்ற குளிகையாச்சு
ஒப்பமுடன் குளிகைதனை யெடுத்துப்பூபா வுத்தமனே கலசமதில் சூதமிட்டு
தப்பிதங்கள் நேராமல் சூதந்தன்னில் தகமையுடன் குளிகைதனை கலசத்திலிட்டு
ஒப்பனையாம் வாய்மூடி சீலைசெய்து வுத்தமனே நெருப்பதனிற் காச்சிடாயே
5334.
காச்சியே கலசமதைத் திறந்துபாரு கனமான சூதமது வெண்ணைப்போலாம்
ஆச்சரிய மானதொரு சூதவித்தை வப்பனே யாரறிவார் மாண்பரப்பா
கூச்சலுடன் தானொடுங்கி சூதந்தானும் கொற்றவனே கீழ்நிற்கும் வெண்ணெய்தானும்
பாச்சலுடன் குளிகையது மேலேநிற்கும் பண்பான குளிகைதனை பதனம்பண்ணே
5335.
பண்ணவென்றால் சூதவெண்ணெய் தானெடுத்து பட்சமுடன் காந்தமென்னும் மூசைதன்னை
எண்ணவே தானடைத்து சீலைசெய்து யெழிலாகத் தானுருக்கி யெடுத்துப்பாரு
நண்ணவே வானத்து மீன்தானப்பா நலமான வெள்ளியது என்னசொல்வேன்
திண்ணமுடன் வெள்ளிதனை சிவயோகஞ்செய்து சித்தனைப்போல் தானிருந்து வருந்திடாயே
5336.
அருந்தவே வருமைவருங் காலந்தன்னில் வப்பனே சிவயோகம் வாறியுண்ண
திருந்தவே யொருவரை பேசவேண்டாம் தீரமுடன் சினமதுவுங் கைக்குள்ளாச்சு
பொருந்தவே தனக்குகந்த சீஷன்தேடி பொங்கமுடன் குணங்கண்டு குறியுங்கண்டு
மருந்தினிட கைபாகஞ் செய்பாகத்தை மன்னவனே யவன்தனக்கு போதிப்பாயே
5337.
போதித்து வெகுகாலஞ் சென்றபின்பு பொங்கமுடன் வுள்ளுளவும் மிகவேயோதி
சாதித்து வுபதேசங் கூர்ந்து மைந்தா சட்டமுடன் சின்மயத்திலிருந்துகொண்டு
ஆதித்தன் சந்திரனு மறியாமற்றான் அப்பனே தன்மனதில் ஒடுக்கமாகி
சாதித்து வாதமென்ற வித்தைதன்னை சட்டமுடன் கார்த்திருந்து சாதிப்பாயே
5338.
சாதிப்பாய் நல்லோர்கள் தீயோருண்டு சற்பனைகள் கண்டல்லோ மிகவாராய்ந்து
வாதியாந் தெரிந்தவர்போல் வாதுபேசி வந்துன்னைத் தடுத்தல்லோ தர்க்கம்பேசி
நீதியாய் நூல்தெரிந்த நிபுணனைப்போல் நிஷ்டூர முனைப்பேசி நிகழ்த்துவான்பார்
பார்வதியை சடையணிந்த தம்பிரான்போல் வேஷம்போட்டல்லோ பகட்டுவாரே
5339.
பகட்டுவார் அவர்வலையில் சிக்கவேண்டாம் பாருலகில் வெகுகோடி கவலையோடும்
முகமதுவின் முன்னின்று நீதிபார்த்து முனையான ராசிமுதலுறவுகண்டு
இகபரமு முள்ளளவும் வையகத்தில் யெழிலாக சீஷனென்றே வுருதிகொண்டு
சகமுதுதும் சதாகால முன்னையப்பா சட்டமுடன் துதிக்கும்வழி தேடிக்கொள்ளே
5340.
கொள்ளவென்றால் இன்னமொரு மார்க்கங்கேளு கொற்றவனே சரக்கதுதான் செப்பக்கேளு
விள்ளவே பூரமது வொன்றேயாகும் வித்தகனே வீரமது வொன்றேயாகும்
மெள்ளவே சூதமது வொன்றேயாகும் மேன்மையுடன் கெந்தியது வொன்றேயாகும்
உள்ளபடி லிங்கமது வொன்றேயாகும் வுத்தமனே கெவுரியது வொன்றுகூட்டே

5341.
கூட்டியே காரமது வொன்றுசேர்த்து கொற்றவனே நிம்பழத்தின் சாற்றாலாட்டி
மாட்டியே நாற்சாம மரைத்தபோது மன்னவனே மெழுகது போலாகும்பாரு
தாட்டிகமாய் மாத்திரைகள் செய்துமேதான் சட்டமுடன் ரவிதனிலே காயவைத்து
நீட்டமுடன் செய்யும்வகை வரிசைகேளு நீதியுடன் கைபாகங் கண்டிடாயே
5342.
கண்டதொரு செய்பாகஞ் சொல்வேன்கேளு கருத்துடனே செம்புதனை யெடுத்து மைந்தா
விண்டபடி துலமதுவும் இரண்டேயாகும் விருப்பமுடன் தானெடுத்துக் குகையிலிட்டு
அண்டமுடன் தானுருக்கி மருந்தையப்பா வப்பனே செம்புக்குப் பாதியாக
வண்டலது போவதற்கு கிராசமீவாய் வரிசையுடன் தானெடுத்து வண்மைபாரே
5343.
வண்மையாஞ் செம்பதனைத் தகடடித்து வளமைபெற பூங்காவி தன்னிலப்பா
சண்டமாருதம்போல லவணஞ்சேர்த்து சட்டமுடன் நிம்பழத்தின் சாற்றாலாட்டி
கொண்டபடி மேல்தனில் தகட்டிற்பூசி கொற்றவனே புடம்போட்டு யெடுத்துப்பாரு
பண்டிடுவ கிருஷ்ணாவதாரனைப்போல் பட்சமுடன் துலங்கியது மின்னும்பாரே
5344.
மின்னவே செம்பதுவும் என்னசொல்வேன் மேதினியில் நாதாக்கள் ஆடும்கூத்து
பன்னவே செம்புதனை யெடுத்து மைந்தா பட்சமுடன் நதிதனிலே நாலுக்கொன்று
துன்னவே தானுருக்கி யெடுத்துப்பாரு துப்புரவாய் மதியதுவும் செம்புமாச்சு
கன்னபுரி வேந்தனிடஞ் சென்றுமல்லோ கருவான வித்தைதனை காட்டிடாயே
5345.
காட்டவென்றால் உந்தனுக்கு சோடசாரம் கனமுடனே செய்துமல்லோ மணந்தான்கொள்வர்
ஆட்டவொண்ணா வாட்டமது செம்பினாட்டம் வப்பனே கூர்வதற்கு நாவுமில்லை
கேட்டமுடன் செம்புதனை யெடுத்துமைந்தா தெளிவான தங்கமது பத்துக்கொன்று
தாட்டிகமாய்த் தானுருக்கி யெடுத்துப்பாரு தங்கமென்ற செம்பதுவும் சொல்லொணாதே
5346.
வொண்ணாது தங்கச்செம்பு இதுவேயாகும் ஓகோகோ நாதாக்கள் கூர்ந்ததில்லை
அண்ணாந்து பார்த்தாலும் கண்ணேகூசும் வப்பனே நடராஜா விக்கினந்தான்
மண்ணாலே கருவதுவுங் கட்டியல்லோ மார்க்கமுடன் செய்துவைத்தார் கருவூரார்தான்
திண்ணமுடன் பரிசனமாஞ் செம்புவேதை செப்பினேன் லோகமதிமாண்பருக்கே
5347.
மாண்பான மாண்பருக்கு இந்தவேதை மார்க்கமுடன் யார்சொல்லப்போராரப்பா
வீண்போன்ற கருமிகட்கு பாவிகட்கும் விள்ளாது சொன்னாலும் விள்ளாதப்பா
சாண்கொண்ட சிறுபாலர் புத்திமானோர் சட்டமுடன் சொன்னாலுங் கண்டுகொள்வார்
ஆண்பான வித்தை யதிவதித வித்தை யப்பனே சிவயோகிக்காகுந்தானே
5348.
தானான யின்னமொரு பாகஞ்சொல்வேன் தகமையுடன் மாணாக்கள் பிழைக்கவென்று
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்கு வுரைத்தநீதி
மானான மனோன்மணியாள் பாதம்போற்றி மகத்தான செம்புதனைக் கூறுவேன்பார்
தேனான செம்பென்ற தோட்டிதன்னை தேற்றமுடன் தானெடுத்து செப்பக்கேளே

5349.
செப்பவென்றால் முறைதனை சொல்வேன்பாரு தெளிவான புலிப்பாணி மைந்தாகேளு
ஒப்பமுடன் அபினியே ஒன்றேயாகும் ஒளிவான தொட்டியது ஒன்றேயாகும்
செப்பமுடன் காரமது ஒன்றேயாகும் நெடிதான சாரமது ஒன்றேயாகும்
செப்பவே குழிக்கல்லில் தன்னிலிட்டு ஜெயம்பெறவே தானரைத்து வரிசைகேளே
5350.
வரிசையுடன் முறையொடுங் குறைவில்லாமல் வளம்பெரிய மூசைதனில் அடைத்துமைந்தா
பரிசையது புகைகொண்டு மேலிடாமல் பட்சமுடன் சீலையது வலுவாய்ச்செய்து
கரிசலது வாராமல் உருக்கிமைந்தா கனமான மூசைதனையுடைத்துப்பாரு
துரிசான களிம்பதுவும் நீங்கியல்லோ துப்பற்ற செம்பதுவும் ஆகும்பாரே
5351.
பாரேதான் செம்பதுவும் என்னசொல்வேன் பாரினிலே நாதாக்கள் செய்யும்வேதை
சீரேதான் செம்பதுவும் எடுத்துமைந்தா செயம்பெற்றே யோடதனில் ஊதிப்போடு
நேரேதான் செம்பதுவும் ஊறலேகி நெடிதான கலசகுண்டலத்துக்காதி ஆரோதான்
செய்வார்கள் இந்தபாகம் வவ்பனே விதியாளிக் கமையும்பாரே
5352.
விதியான செம்பதனை யெடுத்துமைந்தா விருப்பமுடன் தான்போகும் வழியைக்கேளு
மதியான வெள்ளிதனில் நாலுக்கொன்று மகத்தான செம்பதனைக் கொடுத்தாயானால்
பதியான மதியதும் பழுப்பேயேறி பாங்கான செம்பதுவும் தங்கச்செம்பாய்
துதியான சிவத்துக்கு உறுதிசெம்பொன் துறையான வழிபாடு முறைபாடாமே
5353.
பாடான செம்பதுவும் என்னசொல்வேன் பாரினிலே நாதாக்கள் செய்யும்வேதை
தாடாண்மை கொண்டதொரு சித்துவேதை தகமையுள்ள புத்திமான் அறிவான்பாரு
நாடான வையகத்தில் கருமிமாண்பர் நன்மையுடன் கதைபேசி முறைகள்பேசி
சாடான நயம்பேசி காமும்பேசி சார்பான முறைதனையே கேட்பார்பாரே
5354.
கேட்டாலும் முறைதனையே கொடுக்கவேண்டாம் கெடியான மாண்பருக்குக் கொடுப்பாயானால்
வாட்டமுடன் தலைதான் தெரித்துப்போகும் வளமுடனே நாதாக்கள் சொன்னவாக்கு
தேட்டமுடன் நண்பருக்குக் கொடுப்பாயானால் தெளிவான சியோகம் கிட்டும்பாரு
ஆட்டமது செம்பினது ஆட்டமல்லோ வவனிதனில் யார்காண்பார் வதிதம்பாரே
5355.
பாரேதான் இன்னமொரு மார்க்கங்கேளு பான்மையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு
நேரேதான் நாகமொரு சேர்தானாகும் நிலையான இலுப்பைநெய் தன்னிலப்பா
சீரேதான் நாகமதையுருக்கிக்கொண்டு சிறப்புடனே சாரமதை கிராசமீவாய்
தீரேதான் கிராசமது கொடுத்துமல்லோ திறமுடனே இலுப்பைநெய்யில் வுருக்கிச்சாயே
5356.
சாய்க்கவே நாகமது சுத்தியாச்சு தகமையுடன் மூவைந்து தரமேசாய்க்க
வாய்க்கவே நாகமது கண்ணொடுங்கி வளமான நாகமது சவளைபோலாம்
நாய்த்துளசி மூலிதனை யரைத்துமைந்தா நலமான நாகத்துக்கங்கிபூட்டி
மாய்க்கவே சீலையது வலுவாய்ச் செய்து மறவாமல் கோழியது புடமுந்தானே

5357.
தானான புடமதுவும் இப்படியே போடு தண்மையுள்ள நாகமது கண்ணொடுங்கி
வேனான வெள்ளியது வுருக்குபோல வெகுஜோதி நாகமப்பா யென்னசொல்வேன்
கோனான முன்சொன்ன மூலிதன்னால் கொற்றவனே புடமூன்று போடுபோடு
மானான நாகமது சீறலற்று மார்க்கமுடன் வெள்ளிபோலிருக்கும்பாரே
5358.
இருக்குமே வெள்ளியென்ற நாகந்தன்னை யெழிலாகத் தானெடுத்து செப்பக்கேளிர்
நொருக்கியே நாகமதை யெடுத்துமைந்தா நோக்கமுடன் சூதமது சரியாய்ச் சேர்த்து
பருக்கியே கெந்தகத்தின் தயிலத்தாட்டி பாங்குபெற ரவிதனிலே காயவைத்து
தெரிக்கவே குழியம்மி தன்னிலிட்டு தெளிமையுடன் பொடிபண்ணி செப்பக்கேளே
5359.
செப்பவென்றால் காசியென்ற குப்பிதன்னில் சிறப்புடனே மருந்தையெல்லாம் குகையிலூட்டி
ஒப்பமுடன் மரக்கல்லால் கொண்டுமூடி வுத்தமனே சீலையது யேழுஞ்செய்து
தப்பிதங்கள் வாராமல் பாண்டந்தன்னில் தன்மையுடன் மணலதனைக் கீழமைத்து
அப்போதே மணலதனைமேற்பொதிந்து வண்புடனே பாண்டமதை சீலைசெய்யே
5360.
செய்யவே சீலையது வலுவாய்ச் செய்து திறமுடனே தானெரிப்பாய் நாலுசாமம்
வெய்யவே நாற்சாம மெரித்தபோது வேதாந்தத் தாயினது செந்தூரந்தான்
துய்யபுகழ் ராஜாதிராஜர்தானும் துப்புரவாய் வருணனென்ற செந்தூரத்தை
பையவே சோதித்து வுந்தனைத்தான் பட்சமுடன் கேட்டுவழி யறிவார்தாமே
5361.
அறிவான செந்தூர மென்னசொல்வேன் வப்பனே குன்றியிடை தானெடுத்து
முறியாத வெள்ளிதனில் பத்துக்கொன்று முறையாகத் தானுருக்கிக் கொடுத்துப்பாரு
குறியான மாற்றதுவும் யேழதாகும் கொற்றவனே நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து
முறிபோன்ற மூசைதனில் உருக்கிக்கொண்டு மயங்காமல் புடத்தகட்டாய் வடித்துப்போடே
5362.
அடித்துமே தகடதனை யருண்மைந்தாகேளு அப்பனே முன்சொன்ன செந்தூரத்தை
நடிக்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணித்தாய் நாதாந்தத் தேவியரின் தாள்பணிந்து
படியான செந்தூரம் பரித்தகட்டில் பக்குவமாய்த் தான்பூசிப் புடத்தைப்போடு
கடியான கடிசதுவும் மிகவேநீங்கி கனகமென்ற தங்கமது வாங்கும்பாரே
5363.
தங்கமாம் பரிதியென்ற பிரிவியாச்சு தாரணியில் நாதாக்கள் செய்யும்வேதை
பங்கமது நேராது வொருக்காலந்தான் பாரினிலே தருமிகட்கு கிட்டும்பாரு
குங்குமப்பூ தன்னிறமாகத் தங்கந்தங்கம் குவலயத்தில் காண்பதுவும் அறிதேயாகும்
அங்கமென்ற குகைதனிலே இருக்குஞ்சித்தர் சட்டமுடன் செய்கின்ற பாகந்தானே
5364.
தானான யின்னமொரு பாகங்கேளு தண்மையுள்ள செந்தூரம் திரிவங்கந்தான்
கோனான கரிவங்கம் வெள்வங்கந்தான் கொற்றவனே நாகமது சரியாய்க்கூட்டி
மானான ஜெயநீராம் என்னசொல்வேன் மகத்தான ஆறுவகை ஜெயநீர்தன்னில்
பானான மூன்றுவகை திரிவங்கந்தான் பட்சமுடன் குகைதனிலே வுருக்கித்தீரே

5365.
உருக்கியே ஜெயநீரில் தாக்குதாக்கு வுத்தமனே நாகமது கண்ணுறங்கி
பெருக்கமுள்ள கண்ணதுவும் தானொடுங்கி பேரான சவளையது போலேயாகும்
நெருக்கமுடன் சூதமது நிகராய்ச் சேர்த்து நேர்மையுடன் கல்வமதிலிட்டு மைந்தா
பொருக்கவே கெந்தியது நாலுக்கொன்று பொங்கமுடன் தான்சேர்த்து வரைக்கக்கேளே
5366.
கேளப்பா கெந்தியுடன் தாரங்கூட்டி கெடியான மனோசிலையும் துருகவீரம்
நாளப்பா போகாமல் யிடைதானொக்க நாயகனே கெந்தியிடை தானுங்கூட்டி
ஆளப்பா வாறுவகை ஜெயநீர்தன்னால் வப்பனே நாற்சாம மரைத்துமேதான்
பாளப்பா போகாமல் நிழலுலர்த்தி பாலகனே முன்போல பொடிசெய்வாயே
5367.
பொடியான மருந்ததனை யெடுத்துமைந்தா பொங்கமுடன் காசிபஎன்ற மேருதன்னில்
படியளவாய் குப்பிதனிற் பாதியிட்டு பாலகனே யேழுசீலை வலுவாய்ச்செய்து
வடியுடனே ரவிதனிலே காயவைத்து கனமான வாலுகையா மேந்திரத்தில்
துடியாக நாற்சாம மெரித்தபோது துப்புரவாய் செந்தூர மாகும்பாரே
5368.
பாரேதான் செந்தூரந் தனையெடுத்து பாங்குபெற வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
தீரேதான் தானுருக்கி குருவொன்றீய திறமான மாற்றதுவுங் காணும்பாரு
சீரேதான் வோட்டிலிட்டு வூதிப்போடு சிறப்பான மாற்றதுவும் எட்டதாகும்
நேரேதான் பத்துக்கோர் தங்கஞ் சேர்க்க நிலையான மாற்றதுவு மாகும்பாரே
5369.
ஆகுமே தங்கமது என்னசொல்வேன் ஓகோகோ நாதாக்கள் செய்யும்வேதை
ஏகுமே செந்தூரந் தனையெடுத்து யெழிலான குடவனிலே கொடுத்துப்பாரு
போகுமே வூறலது யேகியல்லோ பொங்கமுடன் மாற்றதுவும் ஆணித்தங்கம்
பாங்குபெற தங்கமது சிவத்துக்காகி பாரினிலே தவயோகி காண்பான்தானே
5370.
காண்பானே நாதாக்கள் தாள்பணிந்து கருத்துரவே மனதுவந்து நடந்துகொண்டால்
ஆண்பான வாதமது சித்திக்குந்தான் அடவான பெரியோர்கள் கிருபைதன்னால்
மாண்பான சிவஞானம் கிட்டும்பாரு மறவாமல் சின்மயத்தை மனதிலுன்னி
ஜாண்பாம்பே யானாலும் பிடிவேண்டலல்லோ சட்டமுடன் தெருவழியில் நில்லாய்தானே
5371.
நில்லவே காலாங்கி தாள்பணிந்தேன் நிலையான குளிகையது பூண்டுகொண்டு
பல்லவே சீனபதி சென்றேயானும் புகழான காண்பர்களைக் கண்டுமல்லோ
வஎல்லவே வாதமென்ற கடலையப்பா வேதாந்தத் தாயினது கிருபையாலே
செல்லவே ஞானோபதேசங்கேட்டு துப்புரவாய் வாதமதை போதித்தேனே
5372.
போதித்தேன் சீனபதிப்பெண்களுக்கு புகழான வாதமென்ற கடலையப்பா
ஆதித்தன் சந்திரன்போல் அதிதவித்தை யவர்களிடம் யானதென்று போதித்தல்லோ
சோதித்து மனந்தேறி புத்திகொண்டு சொற்பெரிய வேதையெல்லாம் துடர்ந்துபற்றி
நீதியாய் பூநீரின் மார்க்கங்கண்டு நிலையான வுப்புமணி செய்தேன்பாரே

5373.
பாரேதான் யின்னமொரு மார்க்கங்கேளு பாலகனே புலிப்பாணி மைந்தாபாரு
நேரேதான் சீனபதி வடபாகத்தின் நெடியான கடலோரந் தன்னிலப்பா
வேரேதான் பூநீருவிளையும் மார்க்கம் விடங்கண்டு தலங்கண்டு விதியுங்கண்டு
சீரேதான் வளர்பூமி வளமுங்கண்டு சிறப்பான பூநீரை யெடுத்தேன்தானே
5374.
தானான பூநீரை யெடுத்து மைந்தா தண்மையுடன் மூசையென்ற பாண்டமிட்டு
கோனான நவவாசல் துவாரமிட்டு கொற்றவனே பூநீரை யதிற்பொதிந்து
தேனான மனோன்மணியாள் பாதம்போற்றி தெளிவுபெற சீனபதி மாண்பருக்கு
பானான பூநீரை யுருக்குதற்கு பட்சமுடன் தீமூட்டி வழிகண்டேனே
5375.
கொண்டேனே பூநீரை யுருக்கியல்லோ கொற்றவனே மாண்பர்களும் பிழைக்கவென்று
கண்டேனே பூநீரின் மார்க்கமெல்லாம் கனம்பெறவே தானுருக்கி பலகையாக்கி
அண்டர்முனி தேவாதி ரிஷிகளெல்லாம் அன்பாகக் கண்ணாடிக் காச்சுதற்கு
விண்டதொரு வழிதுரையும் அறியாமற்றான் விட்டாரே தேவசித்து முதலானோரே
5376.
முதலான முப்புவென்ற பலகைதன்னை முயற்சியுடன் பிரதியென்ற மூசையிட்டு
பதமுடனே தானுருக்கி யெடுத்துமைந்தா பாலகனே மயிர்கம்பி இரும்பாலப்பா
கதமுடைய ரசமதுபோல் நூரணிருத்தி கசகாமல் பலகைதனை வுருக்கிக்காய்த்து
இதமுடனே மண்கவசந் தன்னைநீக்கி யெழிலான மணியதனைக் கொட்டுவீரே
5377.
கொட்டவென்றால் மணியதுவும் சதகோடிகாணும் கொற்றவனே பூநீராம்பலகைதன்னை
திட்டமுடன் தானுடைத்து மூசையிட்டு திறமுடனே பாலமணியமைக்கவில்லை
குட்டமுள்ள தொங்கலது நூறுகம்பம் குறிப்பாக மயிர்கோதி தொங்கவிட்டு
பட்டதொரு பூநீரின் பலகைதன்னை பாங்குபெற கடல்நுறையால் சுத்திசெய்யே
5378.
செய்துமே தானுருக்கி யெடுத்துமைந்தா செம்மலுடன் கருக்கட்டி வார்க்கும்போது
பையவே யிரும்பினது மயிர்ப்பாய்ச்சலப்பா பாங்கிபெற பூநீறு வுருக்கிச்சென்று
மெய்யான கருவதனில் பாய்ந்துமல்லோ மேன்மையுடன் சதகோடி மணிகளாகும்
பொய்யாது காலாங்கி நாதர்வாக்கு பொங்கமுடன் செய்துவர வரிசைகேளே
5379.
கேளேதான் கவசமது வுடைத்துப்பாரு கெடியான பாலமணியென்னசொல்வேன்
பாளேதான் போகாமல் மணியுமாகி பாங்கான பூநீரு மணியுமாச்சு
நாளேதான் விட்டகுறை யின்னமொன்று நலமான பச்சைமணி புகலுவேன்பார்
சூளேதான் பூநீரு பலகைதன்னை சுத்தமுடன் தானெடுக்க வரிசைகேளே
5380.
வரிசையாம் இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தான புலிப்பாணி மைந்தாபாரு
பரிசையுள்ள பூநீருபலகைதன்னை பாங்குபெற ரங்கென்ற பூநீர்தன்னை
விரிவுடனே தான்சேர்த்து வுருக்கியல்லோ விருப்பமுடன் கருக்கட்டிவார்க்கும்போது
சரியான கருவதனில் பாய்ந்துமல்லோ சட்டமுடன் மயிர்பாச்சல் நிறையலாச்சே

5381.
ஆச்சப்பா பூநீறுறங்கினாலே வப்பனே பச்சையென்ற மணியுமாச்சு
மூச்சடங்கி யிருந்ததொரு கருவைத்தானும் முக்கியமாய் உடைத்துப்பார் யென்னசொல்வேன்
பாச்சலுடன் பச்சையென்ற மணிதானங்கே பாங்குடனே சதகோடி யென்னலாகும்
மாச்சலுடன் சீனபதி பெண்களுக்கு மார்க்கமுடன் ஓதிவைத்தேன் உண்மைபாரே
5382.
உண்மையாய் யின்னமொரு மார்க்கம்பாரு வுத்தமனே புலிப்பாணி மைந்தாபாரு
வண்மையாஞ் சீனபதி பெண்களுக்கு வளமான நீலமணி செய்வேனப்பா
தண்மையாம் பூநீராம் பலகைதன்னில் தகமையுள்ள நீலத்தினுட்படுத்து
பண்மைபெற மூசையிட்டு வுருக்கியல்லோ பட்சமுடன் நீலமணி செய்தேன்தானே
5383.
செய்யவென்றால் சிறுகம்பி மயிர்பாலந்தன்னில் சிறப்புடனே ஸ்தம்பமது நிறுத்தியல்லோ
பையவே கருக்கட்டி துவாரமிட்டு பாங்குபெற மூசையிட்டு வுருக்கியல்லோ
வெய்யவே மூசையது வுருக்கியேதான் மேன்மையுடன் கருவதனில் பாயும்போது
துய்யதொரு நீலமணி யென்னசொல்வேன் துப்புரவாய் சதகோடி யென்னலாமோ
5384.
என்னவே காலாங்கி நாதர்வாக்கு யெழிலான வேதைமுகம் பொய்யாதப்பா
பன்னவே சீனபதி பெண்களுக்கு பாலித்த வேதையது கோடாகோடி
மின்னவே பவளமணி சொல்வேன்பாரு வித்தகனே சித்தர்முனி சொன்னதில்லை
நன்னவே நாதாக்கள் தாள்பணிந்து நவிலுகிறேன் பவளமணி நவிலத்தானே
5385.
நவிலவே மண்பவளமென்னசொல்வேன் நாதாக்கள் சித்துமுனி வந்ததில்லை
சவிலமுள்ள பூநீரு பலகைதன்னை சட்டமுடன் ஈயமென்ற செந்தூரத்தை
குவிலவே மூசையிட்டுத் தானுருக்கி கொற்றவனே மயிர்பாலந் தூணித்து
பவிலவே கருக்கட்டி வாய்தான்விட்டு பக்குவமாய் யுருக்கியதை யெடுத்துவாரே
5386.
வார்க்கவே கருவதுதான் பாய்ந்துமல்லோ வளமான சதகோடி மணியுமாக
ஏர்க்கவே மூசைதனை யுடைக்கப்பாரு யென்னசொல்வேன் பவளமென்ற மணிதானப்பா
தீர்க்கமுடன் நாதாக்கள் சொன்னதில்லை திறமான வேதைமுகங் கண்டுமல்லோ
ஆர்க்கவே சீனபதி மாண்பருக்கு வன்புடனே போதித்த மணியுமாமே
5387.
மணியான மணியதுவும் என்னசொல்வேன் மார்க்கமுடன் இன்னமொரு மார்க்கங்கேளு
அணியான பூநீராம் பலகைதன்னில் அப்பனே இரும்பினிட சத்துவாங்கி
துணிவுடனே மூசையிட்டு வுருக்கிக்கொண்டு துப்புரவாய் துவாரமது விட்டுமேதான்
கணிதமுடன் மயிர்ப்பாலங் கால்நிறுத்தி கணக்குடனே சிறுகம்பி ஸ்தம்பமாட்டே
5388.
நாட்டியே முசைதனை யெடுத்துமைந்தா நலமுடனே கருவதனில் பாச்சியேதான்
வாட்டமுடன் கருவதனை யுடைத்துப்பாரு வளமான கறுப்புமணி சதகோடியப்பா
நீட்டமுடன் சீனபதி மாண்பருக்கு நியமித்த கருப்புமணி பூநீர்தானும்
ஆட்டமது என்னசொல்வேன் பூநீராட்டம் அப்பனே சித்துமுனி சொல்லாரன்றே

5389.
அன்றான யின்னமொரு மார்க்கம்பாரு வருமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
குன்றான குளிகைகொண்டு சீனஞ்சென்று கொற்றவனே யான்செய்த வேதையப்பா
நன்றான பூநீறு பலகைதன்னை நலமான நவநீத சத்துசேர்த்து
வளன்றிடவே தானுருக்கி மூசைகட்டி வேகமுடன் காச்சுதற்கு வகையைக்கேளே
5390.
வகையான மயிர்பாலந் தன்னிலப்பா வளமாக சிறுகம்பி ஸ்தம்பம்நாட்டி
மிகையான கருவதும் அமைத்துமேதான் மேன்மையுடன் தானுருக்கி மூசைதன்னை
நகையெனவே கருவதனில் உருக்கிவாரு நலமான கருவதுவும் பாய்ந்துமேதான்
பகையிலா முத்துமணி யென்னசொல்வேன் பாலகனே சதகோடி யெண்ணலாமே
5391.
எண்ணவே முத்துமணி சூரியன்போல் எழிலான காந்தியது என்னசொல்வேன்
பண்ணவே ரிஷிமுனிவர் சித்தராலும் பாருலகில் முடியாது இந்தவேதை
நண்ணவே காலாங்கி கடாட்சத்தாலே நாட்டினேன் சீனபதிமாண்பருக்கு
வண்ணமுள்ள வேதையிது மகாசங்கந்தான் மார்க்கமுடன் பூநீரின் வேதையாமே
5392.
வேதையாமின்னமொரு மார்க்கங்கேளு விருப்பமுடன் சொல்லுகிறேன் வுகந்துபாரு
பாதையாம் மூப்பென்ற செந்தூரத்தை பலபலவாஞ் சாத்திரத்தில் மிகவுஞ்சொன்னார்
நீதையுடன் உப்பென்ற செந்தூரத்தை நீட்சியுடன் உங்களுக்கு முகஞ்சொன்னதில்லை
சோதையாம் பலபலவாஞ் சாத்திரத்தை தோறாமல் கண்டல்லோ துணிவுற்றேனே
5393.
துணியான லவணமென்ற செந்தூரந்தான் துப்புரவாய் யானுரைப்பேன் மைந்தாகேளு
கணிதமுடன் உப்பென்ற கல்லுப்பல்லோ கருத்துடனே சேரதுதான் ஒன்றேயாகும்
பணிவுடைய குழியம்மி தன்னிலிட்டு பாலகனே மூலிவகை செப்பக்கேளே
துணிவுடனே செவ்வல்லி பூச்சார்கொண்டு சிறப்புடனே நாற்சாமமரைத்திடாயே
5394.
அரைத்துமே நாற்சாமமானபின்பு வப்பனே பில்லையது தட்டியல்லோ
வரைந்ததொரு ரவிதனிலே காயவைத்து வளமான சீலையது வலுவாய்ச்செய்து
திரைத்துமே கோழியென்ற புடத்தைப்போடு தீரமுடன் செந்தூரமாகும்பாரு
யரைத்துமே யிப்படியே பத்துமுறைபோடு பாங்கான செவ்வல்லி மூலிதாமே
5395.
மூலியா மின்னமொரு பாகங்கேளு முனையான புலியாரைச் சாற்றினாலே
சலியாமல் தானரைப்பாய் நாலுசாமம் சட்டமுடன் ரவிதனிலே காயவைத்து
மாலியுடன் வோட்டிலிட்டு சீலைசெய்து மகத்தான ரவிதனிலே காயவைத்து
ஆவியது வாராமல் புடந்தானப்பா வப்பனே கோழியென்ற புடந்தான்போடே
5396.
போடவே செந்தூர மென்னசொல்வேன் பொங்கமுடன் நாதாக்கள் சொன்னதில்லை
நீடவே யிப்படி பத்துபுடம்போடு நெடிதான செந்தூரமாகும்பாரு
தேடவே யின்னமொரு மூலிசொல்வேன் தெளிவான செந்தூரமாகும்பாரு
கூடவே மூலியது தான்பிழிந்து கொற்றவனே தானரைக்க வகையைக்கேளே

5397.
கேளப்பா மூலியது சாற்றினாலே கெடிதான வுப்பென்ற செந்தூரத்தை
மாளப்பா நாற்சாமம் அரைத்துமேதான் மகத்தான வில்லையது தட்டியல்லோ
சூளப்பா ரவிதனிலே காயவைத்து சுத்தமுடன் ஓட்டிலிட்டு சீலைசெய்து
ஆளப்பா கோழியென்ற புடத்தைப்போடு வப்பனே செந்தூரமாகுங் காணே
5398.
காணவே யிப்படியே பத்துமுறைபோடு கயிலாச நாதருட செந்தூரந்தான்
தோணவே செந்தூரந் தனையெடுத்து துப்புரவாய் ஜெயசூத மெடைக்குப்பாதி
வேணபடி தானெடுத்துக் கல்வமிட்டு வேதாந்தத்தாய்தனை மனதிலுன்னி
நீணவே கல்வமதிலிட்டு மைந்தா நீதியுடன் அரைப்பதற்கு வழிதான்கேளே
5399.
வகையான செந்தூர மரைப்பதற்கு வண்மையுடன் ஆறுவகை ஜெயநீரப்பா
துகையான துருசு வெடியுப்புக்காரம் தோற்றமுள்ள வருஞ்சாரம் கரியுப்பாகும்
பகையான சீனமது வொன்றுகூட்டி பக்குவமாய் ஜெயநீருந்தானிரக்கி
மிகைபடவே தானரைப்பாய் நாலுஜாமம் மேன்மையுடன் வில்லையது லகுவாய்த்தட்டே
5400.
தட்டியே ரவிதனிலே காயவைத்து சாங்கமுடன் வில்லையது வோட்டிலிட்டு
சட்டமுடன் சீலையது வலுவாய்ச்செய்து சாங்கமுடன் புடமதுவுங் கோழியாகும்
திட்டமுடன் தான்போட்டு எடுத்துப்பாரு திறமான செந்தூர மாகும்பாரு
வாட்டமுள்ள செந்தூரந் தனையெடுத்து வளமையுடன் முன்போல பகிர்ந்திடீரே

# போகரின் சப்த காண்டம் – 7000

5401.
தீரேதான் செந்தூரமென்ன சொல்வேன் திறமான நவகோடி ரிஷிகளப்பா
பூரேதான் சொன்னார்கள் இந்தபோக்கு வப்பனே யாமுனக்கு சொன்னோம்பாரு
சீரேதான் நாதாக்கள் சொன்னதில்லை சிறப்பான கல்லுப்பு மார்க்கவேதை
வீரேதான் பலபலவாஞ் சாஸ்திரத்தில் விருப்பமுடன் பாடிவைத்தார் கோடியாமே
5402.
கோடியாம் லவணமென்ற செந்தூரத்தை கொப்பெனவே மூலிவகை தன்னிலப்பா
நாடியே யாராய்ந்து சொன்னாரப்பா நலமான ஜெயநீர்தான் சொல்லவில்லை
மூடியே தான்மறைத்தார் ஜெயநீர்போக்கை முதன்மையா யானுரைத்தேன் ஜெயநீர்தன்னை
வாடியே மயங்காமல் செந்தூரத்தை வளமுடனே செய்பவனே வாதியாமே
5403.
வாதியாஞ் செந்தூரந் தன்னைத்தாக்க வளமுடனே சொல்லுகிறேன் வண்மைபாரு
சோதியாம் ரசிதமென்ற வெள்ளிதன்னில் துப்புரவாய்ப் பத்துக்கு வொன்றேயீய
நீதியாய் மாற்றதுவும் எட்டேயாகும் நிலையான நாதாக்கள் செய்யும்வேதை
ஆதியாம் தேவரிஷி முனிவர்தாமும் அன்புடனே செய்த செந்தூரந்தானே
5404.
தானான செந்தூரப் போக்குதன்னை தண்மையுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமுரைத்த நீதியாக
பானான பராபரியை மனதிலெண்ணி பாச்சப்பா செம்புதனில் பத்துக்கொன்று
மானான மாற்றதுவும் ஒன்பதாகும் மகத்தான வேதையிது யதிதம்பாரே
5405.
பாரேதான் செந்தூர மேகும்போக்கு பாலகனே சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
நேரேதான் குடவனில் பத்துக்கொன்று நேர்மையுடன் தான்கொடுக்கத் தங்கமாகும்
சீரேதான் சுயத்தங்கம் பிறவித்தங்கம் சிறப்பான சித்தாது தங்கமாகும்
ஆரேதான் செய்வார்கள் பிறவித்தங்கம் வப்பனே அறிவுளோன் செய்வான்காணே
5406.
காணவே செந்தூரம் போகும்போக்கு பாலகனே சொல்லஉகிறேன் பண்பாய்க்கேளு
பூணவே மட்டமென்ற ஆணிப்பொன்னாம் பொங்கமுடன் களஞ்சியது நூறதாகும்
வேணபடி தானெடுத்து மூசையிட்டு விருப்பமுடன் தானுருக்கி குருவொன்றீய
நீணவே மாற்றதுவும் ஒன்பதாகும் நிலையான பிறவியென்ற பசும்பொன்னாமே
5407.
பொன்னான பொன்னல்லோ நாதர்வேதை பொங்கமுடன் யார்செய்வார் வையகத்தில்
கன்னானக் கருவூரான் முன்ஜென்மத்தில் கைலாயநாதரென்ற நடேசருக்கு
தென்னவனாம் பாண்டியரின் வுத்தாரந்தான் தேர்வேந்தன் சொற்படிக்குக் கருவுசெய்து
நன்னயமாய்த் தங்கமென்ற செம்புசெய்து நாதரைப்போல் கருவுசெய்து நாட்டினாரே
5408.
நாட்டினார் கருவூரார் தங்கமப்பா நாயகனே யித்தங்கம் ஒப்பதாகும்
மேட்டிமையாய் அனேகம்பேர் சித்துதாமும் மேன்மையுடன் பலபலவாம் வாதஞ்செய்து
தாட்டிகமாய் தரணிதனில் பூசைக்கி தாரணியில் வெகுபேர்கள் செய்தார்மாண்பர்
வட்டமுடன் காலாங்கி முறைகள்போல வையகத்தில் கண்டதில்லை யாருந்தானே

5409.
தானான செந்தூரந் தன்னையப்பா தண்மையுடன் மண்டலந்தான் கொண்டபேர்க்கு
கோனான காலாங்கி நாதர்தாமும் கொற்றவனார் குருசொன்னவாக்குபோல
பானான சட்டையது மிகவேநீங்கி பளபளத்து தேகமது மின்னும்பாரு
மானான மஹேஸ்வரியாள் நிர்த்தஞ்செய்வாள் மன்னவனே யுந்தமக்கு வழிசொல்வேனே
5410.
சொல்வேனே யின்னமொரு மார்க்கங்கேளு துப்புரவாய் புலிப்பாணி மைந்தாகேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருசொன்ன நீதியப்பா
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தெள்வான வஞ்சனமாம் சல்லியப்போக்கு
மானான வண்டமென்ற காகமப்பா மகத்தான சத்தூறு வருஷமாமே
5411.
தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
நாறான வண்டமென்ற காகமப்பா நலமான தாகமது கொண்டுவந்து
மாறான வுயிரதுவும் போக்கியல்லோ மகத்தான சிரசதனை சோதித்தாக்கால்
கூறான நீலாஞ்சனக் கல்லுதானும் கொற்றவனே யிருக்குமது பாருபாரே
5412.
நூறான வருஷமது கடந்தகாகம் நுட்பமுடன் கண்டறிந்து மைந்தாகேளு
நாறான வண்டமென்ற காகமப்பா நலமான தாகமது கொண்டுவந்து
மாறான வுயிரதுவும் போக்கியல்லோ மகத்தான சிரசதனை சோதித்தாக்கால்
கூறான நீலஞ்சனக்கல்லுதானும் கொற்றவனே யிருக்குமது பாருபாரே
5413.
பாரேதான் நீலஞ்சனக் கல்லுதன்னை பட்சமுடன் தானெடுத்து மைந்தாகேளு
சீரேதான் பதனமது செய்துமல்லோ சிறப்பான வையகத்தில் மாந்திரீகனாவாய்
நேரான ராஜாதி ராஜர்தானும் நேர்மையுடன் சமாதிவைத்த நிதியனைத்தும்
கூரேதான் சல்லியமாம் வித்தைதன்னால் குறிப்பான வஞ்சனத்தால் எடுக்கக்கேளே
5414.
கேளேதான் கருவென்ற மைதானப்பா கெணிதமுடன் வுள்ளங்கை தன்னிற்றோய்த்து
சூளேதான் அஞ்சனமாங் கல்லைத்தானும் சுத்தமுடன் வுள்ளங்கைத் தன்னில்வைத்து
பாளேதான் போகாமல் அஞ்சனத்தை பஞ்சமுடன் தான்பார்க்க நிதிகள் தோன்றும்
ஆளேதான் திரவியத்தை எடுக்கலாகும் அப்பனே நீலாஞ்சன மகிமைபாரே
5415.
மகிமையாம் இன்னமொரு மார்க்கங்கேளு மகத்தான நீலாஞ்சனக் கல்லினாலே
அகிலமெலாம் நிதியெடுக்க இதனாலாகும் அப்பனே அஞ்சனமும் இதற்கீடல்ல
முசியாமல் சித்தர்முனி ரிஷிகள்தாமும் மூர்க்கமுடன் சாஸ்திரங்கள் அனேகஞ்செய்தார்
தகியுடனே நீலாஞ்சனக் கல்லின்மார்க்கம் சாற்றலில்லை சித்தர்முனி ரிஷிகள்தாமே
5416.
தாமான சாஸ்திரத்தி னுளவுகண்டு தண்மையுடன் சீனபதிப்பெண்களுக்கு
சாமானமாகவல்லோ குளிகைகொண்டு சட்டமுடன் சீனபதிக்கேகினேன்யான்
நாமேதான் சொன்னபடி நீலாஞ்சனத்தை நாட்டமுடன் போதித்தேன் மாண்பருக்கு
வேமேதான் சீனபதிப்பெண்களெல்லாம் வேகமுடன் தெரிசனத்தைக் கண்டார்தாமே

5417.
கண்டாரே யின்னமொரு மார்க்கங்கேளு கனமான சீனபதி மாண்பரெல்லாம்
தெண்டமுடன் காலாங்கி நாதருக்கு தேற்றமுடன் சீர்பாதந்தாள்பணிந்து
வண்டணிமார் பெண்களெல்லாம் ஆலோசித்து வளமான வண்டமென்ற காகந்தன்னை
கொண்டுவர தம்மனதில் ஆலோசித்து கொம்பனைமார் எந்தனுக்கு ஓதினாரே
5418.
ஓதவே சீனபதிப் பெண்களல்லோ வுத்தமர்கள் எல்லவரும் ஒன்றாய்க்கூடி
நீதமுடன் காகமதைத் தேடும்போது நிலையான காகமது காணாமற்றான்
வேதமுடன் வெள்ளையென்ற காகந்தானும் வெட்டவெளி கானகத்தில் காணலாச்சு
ஆதமுடன் காகமதைக்கண்டுமல்லோ வப்பனே கல்லதனைக் கண்டார்தானே
5419.
தானான கல்லதனை யெடுத்தபோது தண்மையுள்ள கல்லதுவும் வெண்மையாச்சு
கோனான குருசொன்ன வாக்குபோல கொற்றவனே நீலமென்ற கல்லேயில்லை
பானான மாண்பரெல்லாம் பலபேர்கோடி பண்பான யோசனைகள் செய்திட்டார்கள்
மானான தேசமது வெண்மையப்பா மகத்தான காகமது வெள்ளையாச்சே
5420.
ஆச்சப்பா நீலாஞ்சனக் கல்லுதன்னை வப்பனே பரிட்சையது செய்யும்போது
மூச்சடங்கி முன்போன காகத்தின்கல் முனையான நீலமென்ற வர்ணத்தாலே
பாச்சலுடன் வையகத்தில் நிதிகளெல்லாம் பாங்குடனே எடுப்பதற்கு பண்பதாச்சு
ஆச்சரியமானதொரு வெண்காகத்தில் அன்பான கல்லதுவும் வோடாதன்றே
5421.
வன்பான கல்லதுவும் வெண்மையாச்சு வப்பனே திரவியங்கள் எடுக்கலாச்சு
வென்றிடவே நீலாஞ்சனக் கல்லினாலே விருப்பமுடன் வையகத்தில் நிதியனைத்தும்
குன்றான மலைபோலே எடுக்கலாகும் கொற்றவனே நீலமென்ற கல்லினாலே
வென்றிடவே நவகோடி ரிஷிகளெல்லாம் வேகமுடன் கண்டறிந்து மறந்தார்தாமே
5422.
மறந்தாரே வெகுகோடி ரிஷிகளப்பா மகத்தான சிடிகையென்ற வேதைதன்னை
துறந்தாரே காலாங்கி நாதர்தாமும் துப்புரவாய் வையகத்து மாண்பருக்கு
சிறந்ததொரு நூல்பார்த்துக் கண்டாராய்ந்து சிறப்புடனே சொன்னதொரு நீதியெல்லாம்
கறந்ததொரு பால்போல யிருக்குமப்பா காலாங்கி சொன்னதொரு வாக்குமாச்சே
5423.
வாக்கான சீனபதிப்பெண்களெல்லாம் வளமுடனே வெண்காகங் கல்லெடுத்து
நோக்கமுடன் வுள்ளங்கை சஞ்சனத்தில் நுணுக்கமுடன் கல்லதனைக் கையில்வைத்து
ஏக்கமுடன் ஆகாயந்தன்னைக்காண யெழிலான வதிசயங்களுள்ளதெல்லாம்
ஆக்கமுடன் தோன்றிற்று மாண்பருக்கு வப்பனே வானவதிசயங்கள்தானே
5424.
அதிசயமாம் வானத்துள் மார்க்கமெல்லாம் வப்பனே சப்தலோகமெல்லாம் தோன்றும்
பதியான வையகத்தின் அதிசயம்போல் பான்மையுடன் வானத்தின் அதிசயங்கள்
மதியான சந்திரனுஞ் சூரியன்தான் மகத்தான வருந்துதியுங் காணலாகும்
துதியான கைபாகம் யார்தான் காண்பார் துப்புரவாய் சீனபதி மாண்பர்தாமே

5425.
மாண்பரா மின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான சீனபதிப் பெண்களெல்லாம்
காண்பான வெள்ளையென்ற காகந்தன்னில் கருத்துடனே கருவதனைக் கண்டாராய்ந்து
மாண்பான வையகத்தோர் பிழைக்கவென்று மார்க்கமுடன் எந்தனுக்கு உபதேசித்தார்
ஆண்பான வுபதேசம் பெற்றுமல்லோ வன்புடனே குளிகைகொண்டு வந்திட்டேனே
5426.
வந்தேனே சீனபதிவிட்டு மைந்தா மகத்தான குளிகையது பூண்டுகொண்டு
அந்தமுடன் வையகத்து மாண்பருக்கு வன்புடனே யான்கண்ட வித்தையெல்லாம்
சொந்தமுடன் உபதேசம் செய்யவெண்ணி துப்புரவாய் அதிதமெல்லாம் உரைத்தேனப்பா
பந்தமுடன் எந்நாளும் பதாம்புயத்தை பற்றியல்லோ பதவிவழி நடந்திடாயே
5427.
நிற்கவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் நிலையான புலிப்பாணி மைந்தாகேளு
வற்பமென்று நினையாதே யிந்தப்போக்கு வருமையுள்ள சீனபதிப்பெண்களுக்கு
சொற்பதமாய் ஈடொன்று சிடிகைவேதை செப்பினேன் சீனபதிப்பெண்களுக்கு
வுற்பனமாய் யானுரைத்த கைமசக்கு வுத்தமனே ஈறுவகை சொல்வேன்பாரே
5428.
பாரேதான் மருளினூமத்தைவித்து பாங்கானகாய்ப்பாகல் வித்துங்கூட்டி
நேரேதான் சாதிக்காய் தன்னோடொக்க நேர்மையுடன் கொவ்வையுட வித்துதானும்
சீரேதான் சுழல்வண்டு தானுமப்பா சிற்பரனே குழியானைத் தானுங்கூட்டி
வீரேதான் காந்தமது தானுங்கூட்டி விருப்பமுடன் ஈப்புலியுங் கூடக்கூடே
5429.
கூட்டியே மதனபூவும் வபின்கிராம்பு கொற்றவனே பேய்க்கருப்பன் சாற்றாலாட்டி
வாட்டமுடன் தானரைப்பாய் நாலுசாமம் வகையாக யிடைசரியாய் தானரைப்பாய்
நாட்டமுடன் பயிரதுபோல் திரட்டிமைந்தா நயம்பெறவே குளிகையது செய்துகொண்டு
வாட்டமுடன் மதியீடு பெண்களுக்கு வப்பனே கொடுத்துவிட வகைதான்கேளே
5430.
வகையான குளிகைதனை பதனம்பண்ணு வன்மையுடன் அறுகலையாந் தன்னிற்றானும்
சிகையான பார்த்தவகை தன்னிற்றானும் சிறப்புடனே யுனதுவிந்து கூடச்சேர்த்து
பகையான மாந்தர்கட்கு கொடுத்தாயானால் பண்பான மனதுவந்து பிரியமாகி
திகையான மதிமயக்கங்கொண்டுமல்லோ தீரமுடன் உன்னைவந்து யனைவார்காணே
5431.
காணவே கேட்டதெல்லாம் உந்தனுக்கு கனமுடனே தான்கொடுத்து வினோதஞ்செய்வார்
பூணவே கிருஷ்ணாவதாரனைப்போல் பொங்கமுடன் மதனகனையைத் திறவாயப்பா
ஆணவே ராஜாதிராஜர்போலும் வப்பனே சிற்றின்ப வாசைதன்னை
காணவே வையகத்தில் அனுபவித்து காட்சியுடன் எந்நாளும் பதங்கொள்வாயே
5432.
கொள்ளவே யின்னமொரு பாகஞ்சொல்வேன் கொற்றவனே புலிப்பாணி மைந்தாகேளு
வில்லவே சித்துமுனி ரிஷியார்தாமும் வெகுவாய்ப் பாடிவைத்தார் ஈடுமார்க்கம்
மெள்ளவே யவர்களுட சாத்திரங்கள் மேதினியில் வெகுபலவாய்க் கண்டேன்யானும்
கள்ளமில்லா முரையனைத்துங் கோடாகோடி காசினியில் விருப்பமுடன் பாடினாரே

5433.
பாடினார் அனேகவிதை யீடுதானும் பண்பான மாணாக்கள் பிழைக்கவென்று
தேடியே புலிப்பாணி மைந்தாகேளு தெளிவான ஈடொன்று சொல்வேன்பாரு
நீடியே லடைக்கலமாங் குருவிதானும் நீண்மையுடன் கொண்டுவந்து செப்பக்கேளிர்
ஆடியே மயிர்போக்கி குடல்கள்போக்கி வப்பனே சூதமுடன் காந்தந்தானே
5434.
தானான பாஷாணங் கவுரிதானும் தாக்கான தாளகமுமொன்றாய்க்கூட்டி
மானான கெஞ்சாவின் வித்தும்சேர்த்து மகத்தான எலிப்பகையுங் கூடச்சேர்த்து
தேனான குடோரியது சமனதாக்கு தேட்டமுடன் அடைக்கலத்தின் வாயிலூட்டி
பானான கலசமென்ற குடுவைதன்னில் பாங்குபெற தானமைத்து வஸ்துவூட்டே
5435.
ஊட்டியே சாராயமென்ற வஸ்து வுத்தமனே தான்சேர்த்து தீயில்வைத்து
தாட்டிகமாய் வூமத்தின் விறகினாலே தகமையுடன் தானெரிப்பாய் நாலுசாமம்
நாட்டமுடன் சாராய சுண்டமட்டும் நலம்பெறவே தானெரித்து யெடுத்துமைந்தா
கூட்டியே குழிக்கல்லில் தன்னிலிட்டு கொற்றவனே நாற்சாமம் அரைத்திடாயே
5436.
அரைத்துமே பயிரளவாய்க் குளிகைசெய்து வன்பான சிமிழ்தனிலே பதனம்பண்ணு
திரைகடலில் உள்ளதொரு மாண்பர்தம்மில் திறளான கர்மிகளும் மர்மிகளுமுண்டு
வரையான கர்மிகட்கு சொல்வேன்பாரு மகத்தான குளிகைதனை மீவாயப்பா
கரையான குளிகைதனை மீய்ந்தபோது கனமான ரோகமது பலிக்குந்தானே
5437.
தானான பரியாசஞ் செய்தபோக்கு தாக்கான தருமத்தைக் கெடுத்தபோக்கு
மானான சமுசார வாழ்க்கைதன்னை மார்க்கமுடன் தான்கெடுத்த பாவிகட்கும்
கோனான குருதனையே துரோகஞ்செய்து குடிகெடுத்த சண்டாளர்துரோகிகட்கு
தேனான ஸ்திரிசங்கஞ் செய்துமல்லோ தெருதனிலே வளையவிட்ட பாலிக்காமே
5438.
பாவியாஞ் சிசுவதைகள் செய்தபோக்கு பாருலகில் கருதனையே யழித்தபேர்க்கு
ஆவியுடன் காயமதை யழிக்கவல்லோ வழும்புமிக செய்ததொரு பாவியோர்க்கு
நாவிதனைப் பால்தனிலே கலந்தபேர்க்கும் நட்பான நேசமதைக் கெடுத்தபேர்க்கும்
காவிகஷாயமது பூண்டஞானி கருவான சித்தர்தமைக் கெடுத்தோர்க்கே
5439.
கெடுத்துமே நயம்பேசி கரங்கள்பேசி கெடுவழிக்கு யேதுவகைத் துரைகள்பேசி
அடுத்ததொரு கதாபாத்திரம் உள்ளபேரை அகடான வார்த்தைகளும் மிகவுங்கூறி
கொடுத்ததொரு பொருள்தனையே மோசஞ்செய்து கொற்றவர்க்குத் துரோகமது செய்தபேர்க்கும்
தடுக்காமல் கொடுக்குமொரு புண்ணியோரை தவிர்க்கவே செய்வதற்கு மொழிதான்கேளே
5440.
கேளேதான் நம்பியே துரோகஞ்செய்த நெடுங்கால சண்டாளமாண்பருக்கும்
நாளேதான் போகாமல் கூலிவாங்கி நலம்பெறவே தொழில்தனையே கெடுத்தபேர்க்கும்
பாலேதான் பார்த்தவுடன் நயங்கள்பேசி பண்பாகக் காணாட்டல் முறைகள்பேசி
ஆளேதான் கண்டவுடன் சூதுபேசி அவனிதனி லிருந்ததொரு மாந்தருக்கே

5441.
மாந்தராம் அன்னமிட்ட புண்ணியோரை மார்க்கமுடன் கண்ணமிட்ட பாவியோர்க்கும்
சாந்தகுணம் உள்ளதொரு சீஷந்தம்மை சாங்கமுடன் நிபந்தனைகள் செய்தபேர்க்கும்
போந்தமுடன் பிணியாளம் தம்மையல்லோ பொங்கமுடன் நிதிகெட்டு பிணிதீரார்க்கும்
பாந்தளெனும் பாணமது கையிலேந்தி பாராமல் விட்டதொரு பாவியோர்க்கே
5442.
பாவியாஞ் சண்டாள மூடருக்கும் பாரினிலே வெகுகுடியைக் கெடுத்தபேர்க்கும்
காதினில் யபலோசைகேட்டுமல்லோ கண்களித்து பாராமல் கொன்றபேர்க்கும்
தீவினையாள் எந்நாளும் மடிந்தபேயர் திறமான நிதிகொடுத்துத் தீராதுரோகி
பாவியெனும் பண்டிதர்கள் நிதியைவாங்கும் பண்பான கர்மிகட்கும் வேண்டும்பாரே
5443.
பாரேதான் கோயில்தனை யிடித்தபேர்க்கும் பாங்கான வாலயத்தில் தீபந்தன்னை
நேரேதான் விற்றல்லோ சிலைகள்தன்னை நேர்மையுடன் கொள்ளைகொண்ட துரோகிமார்க்கும்
சீரான மடுக்கள் குளமடைத்த பேர்க்கும் சிறப்பான பண்டிதரைப் பழித்தபேர்க்கும்
ஆரோதான் நடுச்சாம வழியிலப்பா அபகரித்து கொள்ளைகொண்ட கருமிகட்கே
5444.
கருமியாந் தேவபூசை கெடுத்தபேர்க்கும் கலியான மணமுகூர்த்த மழித்தபேர்க்கும்
மருமமாய் வஞ்சனைகள் அதிகங்கொண்டு வையகத்தில் வியாபார மோசங்கூறி
தருமமாய் நியாயமது மிகவேபேசி தகமையுடன் வியாபார முடக்கல்செய்து
குரூரமது தன்மனதில் உள்ளடக்கி குடிகெடுக்கும் சண்டாளர்க்காகுந்தானே
5445.
தானான சகோதரரைத் துரோகஞ்செய்து தண்மையுடன் வீடுமனை பறித்தபேர்க்கும்
கோனான குருமாது பத்தினியைத்தானும் குணம்பேசி வலகழித்த கள்வனுக்கும்
மானான மகதேவர் தன்னைத்தானும் மண்டலத்தில் குறைபேசி வைத்தபேர்க்கும்
பானான வகதிபரதேசிதன்னை பறக்கடித்த பாவிகட்கும் வேண்டும்பாரே
5446.
வேண்டியே நம்பியதோர் நிதிகள்தன்னை வேட்கமுடன் மோசமதுசெய்தபேர்க்கும்
கூண்டதனில் பட்சிகளைத் தானடைத்து குறைகேடாய் கானகத்திற் சேராமற்றான்
ஆண்டியைத் தானடித்து வகடுபேசி வனியாயஞ் செய்ததொரு கர்மிகட்கும்
தூண்டிதனில் மச்சமதை பிடித்தபேர்க்கும் துர்மார்க்க பாவியர்க்கு வேண்டுங்காணே
5447.
காணவே கணவனைத் துரோகஞ்செய்து காணாமல் சோரமது செய்தபேர்க்கும்
பூணவே புருஷர்க்கு மருந்துசெய்து பொங்கமுடன் அன்னமதிலிட்டபேர்க்கும்
கோணவே சாராயந் தன்னிற்றானும் துப்புரவாய் மருந்திட்ட பாவியோர்க்கும்
வேணபடி வுபசாரமிகவுங்கூறி விருந்ததனில் மருந்திட்ட பாவியோர்க்கே
5448.
மருந்திட்ட பாவிகட்கும் சண்டாளர்கட்கும் மகத்தான கணவனுக்கு நயங்கள்பேசி
விருந்திட்டு சோரநாயகனுக்காக விருப்பமுடன் மருந்துவைத்து கொன்றபேர்க்கும்
திருந்தவே பொன்னதனைப் புதைத்துவைத்து தீர்க்கமுடன் பிறருக்கு பொய்சொன்னோர்க்கும்
அருந்தவே முகம்பார்த்து வன்னந்தாரார் வவனிதனில் கண்டார்க்கிதுதான்பாரே

5449.
பார்க்கவே பச்சைமரம் வெட்டினோர்க்கு பாங்கான ஜீவவதை செய்தபேர்க்கும்
ஏர்க்கவே யதாசினங்கள் மிகவுங்கூறி வெளிதாக போர்தனிலே சண்டையிட்டு
மார்க்கமுடன் அனியாயம் மிகவுஞ்செய்து மடிபிடித்து சண்டையிட்ட பாவியோர்க்கும்
ஆர்க்கவே குளிகைதனை யெடுத்துமைந்தா வப்பனே யனுபானந்தன்னில் தாக்கே
5450.
தாக்கவே நெய்தனில் வெண்ணையப்பா தண்மையுடன் மூன்றுநாள் கொடுப்பாயப்பா
நாக்கமலம் வுந்தியெனும் படிகந்தன்னில் நலமான குளிகையது வூறியல்லோ
தேக்கமது கண்டல்லோ நான்காம்நாளில் திறளான காத்தனது வதிகமாகி
நோக்கமுடன் கண்சிவந்து சுரமுண்டாகி நோயதுவும் பிறக்குமது திண்ணம்பாரே
5451.
திண்ணமாம் வெகுகோடி போக்குசொல்வேன் திகழான குளிகையது கொண்ட போது
வண்ணமாஞ் சுரமதுவு மதிகமாகி வளமுடனே தீராத ரோகமாகும்
நண்ணவே பண்டிதரை மிகவேதேடி நயமுடனே ரோகமது தீர்ப்பதற்கு
குண்ணியே மனதுவந்து மருந்துகொள்வார் கூறான ரோகமது ஜெனிக்குந்தானே
5452.
தானான குளிகையது கொண்டபேர்க்கு தகமையுடன் மருந்தறிந்தினோர்கட்கெல்லாம்
கோனான சுரமதுவு மதிகமாகி கொப்பெனவே தீராத நோயுமாகும்
தேனான மருந்ததனை யருந்தாமற்றான் தெளிவான புத்தியுடன் மனதுவந்து
மானான மகதேவர் தன்னைநோக்கி மகத்தான வேண்டுதலும் கேட்கநன்றே
5453.
நன்றான வேண்டுதலின் கோளேதென்றால் நலமான காமத்தால் வந்தரோகம்
குன்றான வாய்மதத்தால் வந்தரோகம் கூறான சாபத்தால் வந்தரோகம்
வென்றிடவே மாந்தரிட கைமசக்கால் வினையினால் வந்ததொரு ரோகந்தானும்
சென்றுமேயாராய்ந்து மிகநினைத்து செம்மலுடன் பரிகாரஞ் செய்யநன்றே
5454.
செய்யவே சிலகாலஞ் சென்றபின்பு சீருடனே நீர்சென்று அவர்கள்வாசல்
பையவே பரிகாரம் மிகவும்பார்த்து பட்சமுடன் கடவுளுக்கு பொதுவதாக
மெய்யான ரோகமதை தீர்ப்பேனென்று மேன்மையுடன் வழிபாடு மிகவுரைத்து
துய்யதொரு பதாம்புயத்தை மிகவே நண்ணி துப்புரவாய்க் கியாழமதைக் கொடுத்திடாயே
5455.
கொடுக்கவே பட்சமது மிகவேவைத்து கொப்பெனவே கியாழமது சொல்வேன்கேளிர்
அடுத்ததொரு வெண்குன்றி வேரைதானும் அடவான மூலியொடு சமூலங்கூட்டி
தொடுத்துமே கூகைநீர் தானுஞ்சேர்த்து துப்புரவாய்க் கியாழமது கொடுத்தபோது
படுத்ததொரு சுரமதுவும் நான்குநாளாம் பாங்குடனே தீருமெனப் பகருவீரே
5456.
பகரவென்றால் நோய்தீர்ந்த மாண்பருக்கு பட்சமுடன் மனதுவந்து வுரைக்கக்கேளிர்
நிகரமுடன் நல்லோர்கள் தம்மையப்பா நிகட்சியுடன் உதாசினங்கள் கூறவேண்டாம்
சிகரமுடன் வுத்தமரைப் பகடிசெய்து சீறலுடன் அவர்தனையே கொடுக்கவேண்டாம்
சகரமுடன் வுபதேச வார்த்தைகூறி சட்டமுடன் அவர்பாதம் பணிகுவீரே

5457.
பனியவே யுந்தமக்கு காட்சிசெய்தும் பாருலகில் வினைதமக்கு ஆளுமாகா
அணிகடவுள் செய்கையினால் உந்தமக்கு வப்பனே நினைத்தவண்ணம் லபிக்கும்பாரு
துணிவுடனே காயாதிகற்பங்கொண்டு புதிதான திரேகம்போலாகும்பாரு
மணியான வுபதேசஞ் செய்துமல்லோ மார்க்கமுடன் வாழ்கவென்று வரமீவாயே
5458.
வரமான வரமதுவும் என்னசொல்வேன் வலையான மார்க்கமது சொல்வேனப்பா
உரமுடைய புலிப்பாணி மைந்தாகேளு வுத்தமனே யுந்தமக்கு சொல்வேனப்பா
சிரமான வசியமென்ற பொடிதானப்பா சிற்பரனே காலாங்கி சொன்னவாக்கு
வரமதுவும் பொய்யாது மகிமைமெத்த வண்மையுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே
5459.
பண்பான பொடியதுவும் என்னவென்றால் பாங்கான மசானமதில் இறந்துபோன
நண்பான தந்தமது முன்னிரண்டு நலமான தந்தமதைக் கொண்டுவந்து
திண்பான பிரேதமது மேலேசாற்றும் திறமான மாலையது பூவின்வாடை
நண்பான சுட்டதொரு எலும்புதன்னில் கலங்காமல் சாம்பல்தன்னை எடுத்திடாயே
5460.
எடுப்பாயே காடாற்று முன்னதாக எழிலான சாம்பல்தனை எடுத்துமைந்தா
கொடுத்துதே சானமதில் பறக்குகின்ற துப்புரவாய்த் தும்பிதனை கொண்டுவந்து
படுத்ததொரு வாத்மஜலந்தானுங்கூட்டி பாங்கான வாடையென்ற காற்றுதன்னில்
அடுத்துமே பறக்குமாவிலைதானப்பா வப்பனே தான்சேர்த்து எடுக்கநன்றே
5461.
நன்றான கருவதனை வொன்றாய்கூட்டி நாயகனே பொடியதுவாய்ச் செய்துகொண்டு
குன்றான மனோன்மணித்தாய் கிருபையாலும் கோவேந்தர் காலாங்கி கிருபையாலும்
பன்றாக சிமிழ்தனிலே யடைத்துக்கொண்டு பாங்குபெற சின்மயத்தை மனதிலெண்ணி
வென்றிடவே பூமிதனில் வீடமைத்து விருப்பமுடன் நவகோணங்கீறிடாயே
5462.
கீறவே நவகோணமென்னவென்றால் கிருபையுடன்சொல்லுகிறேன் மைந்தாகேளு
ஆறவே கோணமதில் நின்றுகொண்டு வப்பனே ஓங்காரம் மனதிலுண்ணி
மாறலென்ற வட்சரமாய் யௌவும்சௌவும் மகத்தான ரீங்ரீங்ஐயுங்கிலியுமாறு
தூறலதுவாராமல் எளியபாலா துப்புரவாய் அட்சரத்தை யோதிடாயே
5463.
ஓதையிலே லட்சமது வுருவுபோடு வுத்தமனே மனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள்
நீதமுடன் தரிசனங்கள் கண்டபோது நீநினைத்த காரியங்கள் சித்தியாச்சு
சாதனைகள் செய்தாலே யெல்லாஞ் சித்தி சட்டமுடன் வையகத்தில் மாந்திரீகனாவாய்
தோதமுடன் தாமிருந்து வாழ்க்கைபூண்டு தோறாமல் அஷ்டசித்தி யாடுவாயே
5464.
ஆடவென்றால் கருவென்ன பொடிதானப்பா வப்பனே நீநினைத்த மாதுதன்மேல்
போடவே மனதுவந்து வசியமாகி பொங்கமுடன் பின்னேயது துடறுவாள்பார்
நீடவே தொடர்ந்ததொரு மாதுதன்னை நீநினைத்த கலவிதனில் அனுபவித்து
சாடவே யெந்நாளும் பட்சம்வைத்து சட்டமுடன் பாதுகொள்ள நினைப்பீர்தானே

5465.
தானான காலாங்கி சொன்னவாக்கு தாரிணியில் பொய்யாது மெய்யேயாகும்
கோனான கருக்கள்வித்தை கோடிசொன்னார் குவலயத்தில் செய்வதற்கு யாராலாகும்
தேனான வித்தையது சிடிகைவேதை செப்பினேனுந்தமக்குக் கூர்ந்துபாரு
மானான வையகத்தில் சித்தனைப்போல் மாசற்று எந்நாளும் வாழ்குவீரே
5466.
வாழ்கவென்றால் இன்னமொரு மார்க்கங்கேளு வகையான புலிப்பாணி மைந்தாபாரு
ஆழ்கடலுஞ் சத்தசாகரமுந்தாண்டி வப்பனே காலாங்கி தாள்பணிந்து
மூழ்கியே சகலநதி தீர்த்தமாடி மூதுலகில் குளிகைகொண்டு வந்தேன்யானும்
பாழ்நகர தேசமது வனேகமுண்டு பார்த்தேனே வெகுகோடி வித்தைதானே
5467.
தானான வித்தையது கோடாகோடி தகமையுள்ள கண்மணியே யின்னங்கேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தன்பாதகிருபையாலே
பானான பட்சியது வடைக்கலந்தான் பண்பான வாண்பட்சிகொண்டுவந்து
மானான மடமாதர் சுரோணிதந்தான் மகத்தான வாத்மஜலங்கூடக்கூட்டே
5468.
கூட்டியே ரெண்டையுந்தான் பட்சிதன்னில் குறிப்புடனே வாயியிடதன்னிலூட்டி
தாட்டிகமாய் மண்கலசந்தன்னில்வைத்து தம்மையுடன் மண்சீலையேழுஞ்செய்து
வாட்டமுடன் வாலுகையா மேந்திரத்தில் வளமுடனே தானெரிப்பாய் ஐந்துநாளும்
தேட்டமுடன் தீயாறி யெடுத்துப்பாரு தெளிமையுடன் தவனமென்ற பற்பமாச்சே
5469.
ஆச்சப்பா பற்பமது யென்னசொல்வேன் ஆரறிவார் அடைக்கலத்தின் வசியயீடு
மூச்சடங்கிப் போனதொரு தேகந்தானும் முனையான வீடுதன்னால் மோகமாகி
பேச்சதுவும் பேசுதற்கு முன்னேதானும் பேரின்பந்தனைமறந்த கல்விகட்கும்
ஆச்சப்பா பற்பமதை யனுமானத்தில் வப்பனே கொடுத்திடுக வசியமாமே
5470.
வசியமா மனுபானமேதென்றாக்கால் வளமான பாணியென்ற தண்ணீராகும்
கசிதமுள்ள தண்ணீரில் சிடிகைதாக்க கருவான பற்பத்தால் வசியமாவார்
நிசிதமுள்ள மாதர்களும் வசியமாகி நிலையான கலவிக்கு ஒவ்யலாகி
முசிதமுடன் எந்நாளும் உந்தன்பக்கல் மோகித்து உனையனைந்து வணங்குவாரே
5471.
வணங்கியே சதாநித்தம் உந்தன்பக்கல் வளமான நிதியனைத்தும் உனக்கேயீவார்
சுணங்கமது வாராமல் எந்தநாளும் துப்புரவாய் யுனைப்பணிந்து போற்றுவார்கள்
மணங்கமழும் லீலாவினோதந்தன்னில் மார்க்கமுடன் எந்நாளும் பட்சம்வைத்து
இணங்கியே பரபுருஷர் முகமும்பாரார் எழிலான அடைக்கலந்தன் வசியம்பாரே
5472.
பாரேதான் யின்னமொரு கருமானங்கேள் பட்சமுடன் யானுரைப்பேன் மைந்தாகேளு
சீரேதான் காலாங்கி நாதர்தம்மால் சிறப்பான வித்தையது சிடிகைவேதை
நேரேதான் நூறாண்டு சென்றகாகம் நெடிதான காகமது கொண்டுவந்து
தீரேதான் காகமது வாயிலப்பா திகழான கறுப்பனென்ற பூச்சிதானே

5473.
தானான காகமது சொல்லக்கேளு தண்மையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு
வேனான காகமது தன்னிலப்பா விருப்பமுடன் பூச்சிதனை யூட்டியேதான்
கோனான மண்டரண்டங் கலசமப்பா கொற்றவனே தாளியீட்டு சீலைசெய்து
தேனான வாலுகையா மேந்திரத்தில் தேற்றமுடன் தானமைத்து யெரித்திடாயே
5474.
எரிக்கவென்றால் விறகதுவும் என்னசொல்வேன் எழிலான வூமத்தை விறகேயாகும்
நரிக்கியே நாற்சாமம் தீயைமூட்டி நலமாகத் தானெரிக்கப் பற்பமாகும்
முரிக்கவே பற்பமதை எடுத்துமல்லோ முனையான பற்பமதை பதனம்பண்ணு
சிரிக்கவே பற்பமதை யெடுத்தேமைந்தா சிறப்பான வாத்மஜலந்தன்னிற்கூட்டே
5475.
கூட்டியே பற்பமதை யெடுத்துமைந்தா கொப்பெனவே மாண்பரிட மேலிற்றானும்
தாட்டிகமாய்த் தூவிவரப் பலனைக்கேளும் சட்டமுடன் மாண்பரெல்லாம் வசியமாவர்
வாட்டமுடன் கேட்டதெல்லாம் உனக்கேயீவார் வளமான வஷ்டசித்து யிதனாலாகும்
மாட்டிமையா யெந்நாளு முந்தனுக்கு மகிழ்ச்சியுடன் கேட்டதெல்லாந் தருவார்பாரே
5476.
தருவாரே யுந்தனுக்கு பொடியேபட்டால் தாரிணியிலுள்ளதொரு மாண்பரெல்லாம்
குருவான குவிவர்தானென்றுசொல்லி கொற்றவனே யுந்தனையும் பணிகுவார்பார்
திருவான மாமுனியின் கடாட்சத்தாலே சித்திக்கும் அஷ்டசித்து கைக்குள்ளாகும்
நிருவாணி மஹேஸ்வரியாள் எந்தநாளும் நீதியுடன் வுன்பக்கல் நிற்பார்பாரே
5477.
நிற்பாரே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் நிலையான புலிப்பாணி மைந்தாகேளு
அற்பமென்று நினையாதே அருண்மைந்தாபார் அருமையுள்ள காலாங்கி சொன்னநீதி
சிற்பரனார் யெந்தன்குரு வாக்குதானும் சீருலகில் வொருநாளும் பொய்யாதப்பா
துப்புரவாய் தகரமுடன் தாரஞ்சேர்த்து துகையான வெள்ளையென்ற பட்டுதானே
5478.
தானான சீலையது தன்னில்மைந்தா தண்மையுடன் இரண்டையுந்தான் அதனிற்சுற்றி
மானான வெள்ளையென்ற கடுகுதானும் மகத்தான பாண்டமதிலிட்டுமைந்தா
பானான வெள்ளை கடுகெண்ணைதன்னால் பக்குவமாய் தானெரிப்பாய் நாலுசாமம்
தேனான சிரசதுவாம் மோடுதன்னில் தேற்றமுடன் மையதனை வாங்கிடாயே
5479.
வாங்கியே மையதனில் கூடச்சேர்க்கும் மகத்தான சரக்கதுவும் சொல்லக்கேளும்
ஓங்கியே பச்சையென்ற பூரந்தானும் வுத்தமனே வாடையென்ற கஸ்தூரியப்பா
தூங்கியே திரியாமல் புனுகுமைந்தா துடியான குங்குமப்பூ ரோஜனையும்சேர்த்து
சாங்கமுடன் சவ்வாதுந் தானுங்கூட்டி சட்டமுடன் தானரைப்பாய் பன்னீராலே
5480.
பன்னீரால் நாற்சாமம் அரைத்துமேதான் பாங்குபெற மையதனைப் பதனம்பன்னு
இன்னிலத்தி லுனைப்போலார்ச்சித்து யெழிலான பூபதியாமென்னக்கூறும்
நன்னயமாய் ஆவினதுவெண்ணைதன்னால் நயம்பெறவே தான்கூட்டி மத்தித்தேதான்
சொன்னபடி மையதனைக் கண்ணிற்றீட்டி சுகியுடனே வையகத்தைச் சுற்றுவீரே

5481.
சுற்றயிலே யுனைக்கண்ட மாண்பரெல்லாம் சுகமுடனே மன்மதனாரென்றுசொல்லி
வெற்றிபெற யுனைவணங்கி பின்னேசென்று விருப்பமுடன் கேட்டதெல்லா மீவார்பாரு
எற்றிசையும் உனைக்கண்டு யேங்குவார்கள் எழிலான மையினது வேகத்தாலே
நெற்றிதனில் மையதனை யிட்டாயானால் நேர்மையுடன் சிவராஜன் என்பார்பாரே
5482.
பாரேதான் சித்தர்முனி ரிஷிகள்தேவர் பண்புடனே சாத்திரங்கள் அனேகஞ்செய்தார்
நேரேதான் சிடிகையென்ற வேதையப்பா நேர்மையுடன் கைகண்ட வேதைதன்னை
தீரேதான் வையகத்து மாண்பருக்கு சிறப்புடனே பாடியல்லோ மறைத்துவைத்தார்
கூரேதான் மாணாக்கள் பிழைக்கவென்று கூறினேன் சிடிகையென்ற வேதைதானே
5483.
காணவே மையதனால் அனேகசித்து கருத்துடனே லலாடமதிலிட்டுமைந்தா
தோணவே யுந்தனுக்கு வேணமட்டும் துப்புரவாய் ராஜரிட கோட்டைதன்னில்
பூணவே நிதியிருக்கும் ஸ்நாணம்தன்னில் பொங்கமுடன் சென்றல்லோ மைந்தாகேளு
நீணவே காவலர் முன்னிருக்கும் நிதியனைத்தும் கண்ணெதிரே யெடுக்கலாமே
5484.
எடுக்கலாம் கோடிதனமெடுக்கலாகும் எழிலான வரண்மனையின் நிதிகளெல்லாம்
அடுத்ததொரு மாண்பர்களும் பார்த்திருக்க வளவற்ற திரவியங்கள் எடுக்கலாகும்
தொடுத்ததொரு வசியமென்ற மையினாலே தோறாமல் அஷ்டசித்து மாடலாகும்
விடுத்ததொரு காலாங்கி கடாட்சத்தாலே விருப்பமுடன் பாடினதோர் வசியமாமே
5485.
ஆமேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வப்பனே புலிப்பாணி மைந்தாகேளு
நாமேதான் சொன்னபடி போகர்வாக்கு நானிலத்தில் பொய்யாது மெய்யேயாகும்
போமேதான் மாதரிட வசியமப்பா பொங்கமுடன் இன்னமொரு வயணஞ்சொல்வேன்
வேமேதான் தாரமென்ற சிலையுங்கூட்டு விருப்பமுடன் ரோசனையுந்தானுங்கூட்டே
5486.
கூட்டியே பச்சையென்ற பூரந்தானும் கூறான காந்தமது தானுஞ்சேர்த்து
மாட்டியே வாஞ்சிநேயர் பலத்தினாலே மார்க்கமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
வாட்டமுடன் தானரைத்து சிமிளில்வைத்து வளமாக கஸ்தூரி புனுகுசேர்த்து
நாட்டமுடன் கரந்தனிலே பூசிமைந்தா நலமாக ஸ்ரீதலையில் பூசிடாயே
5487.
பூசியே நசிமசியென்றேயோது புகழான கருவதுவும் வுருவுமேறி
மாசிபடா மனத்துவங் கலங்கியேதான் மகத்தான சிந்தனையுமதிகமாகி
ஆசியுடன் வரும்போது மைந்தாகேளு வப்பனே வாத்மஜலங்கூடச்சேர்த்து
வாசியுடன் வுருவதும் லட்சமோது வரையுடனே பெண்ணுருவாய் வருவாள்பாரே
5488.
வருவாளே மோகமது கொண்டுமல்லோ மகத்தான நிதியனைத்து மீவாள்பாரு
உருகியே மனமதுவும் மிகவும்வாடி உத்தமனே யுன்பின்னே துடறுவாள்பார்
கருகியே முகம்வேர்த்து மனம்வேறாகி கட்டழகி பொன்மாது வருவாள்பாரு
திருவினையாள் மனோன்மணியாள் முன்னேநிற்பாள் திரமுடனே அஷ்டசித்தி
கைக்குள்ளாச்சே

5489.
ஆச்சப்பா கமலமுனி யனந்தம்போக்கு வப்பனே சொல்லிவைத்தார் லக்கோயில்லை
மூச்சடங்கி வையகத்திற் சென்றுமேதான் மூதுலகில் திரும்பிவந்து கண்டபின்பு
பேச்சொடுங்கி சிலகாலஞ் சமாதிநின்று பேரின்ப நிலைதனிலே யிருந்துகொண்டு
பாச்சலுடன் சிடிகையென்ற வேதைகோடி பலபலவாய் பாடிவைத்தார் கமலர்தானே
5490.
தானான வித்தையது யதிகஞ்சொன்னார் தண்மையுடன் காலாங்கி வித்தைக்கொவ்வா
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொட்டினார் இதுபோல சிடிகைவேதை
தேனான மனோன்மணியாள் கிருபையாலே தெரிவித்தே னுந்தனுக்கு சொன்னேனப்பா
பானான வித்தையெல்லாங் கூறப்போனால் பாங்கான வேழாயிரம் இடங்கொள்ளாதே
5491.
கொள்ளாது யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கூறான வித்தையிது சொல்லொண்ணாது
விள்ளவே யிருபிறப்பாளரப்பா விருப்பமுடன் இறந்ததோர் சடத்தைக்கண்டு
மெள்ளவே மயானமதில் சென்றுபாலா மேன்மையுடன் கருமுடிக்க சொல்வேன்கேளு
தெள்ளியதோர் கோல்ரெண்டு முழந்தான்ரெண்டு தேற்றமுடன் கைதனிலே பிடித்திடாயே
5492.
பிடித்திடவே மசானகரை சுத்திவந்து பேரான வுருவதும் லட்சம்போடு
நடித்திடவே வுருவதுவும் யேதென்றாக்கால் நாதாந்தத் தாயினது பீஜாச்சரந்தான்
கொடுத்திடவே வங் சிங் மங் கென்றேயோது கொற்றவனே லட்சமுரு குறையாதைய்யா
விடுத்ததொரு கழிதனக்கு வுருவுமேற்றி விருப்பமுடன் சொல்லுகிறேன் தண்மைபாரே
5493.
வண்மையாம் புழுகுடனே பூரந்தானும் வளமான ரோஜனையுங் கஸ்தூரிசேர்த்து
நண்மையாம் ஆத்மஜலந்தன்னிலாட்டி நலம்பெறவே கழிதனக்கும் பூசியல்லோ
திண்மையுடன் சவந்தனையே சுத்திவந்து தீர்கமுடன் சடம்மேகும் சமையந்தன்னில்
உண்மையாம் தலைமாடு கால்மாடாக வுத்தமனே நெல்லதனை யுருட்டிடாயே
5494.
உருட்டவே கைபிடித்த கழிதானப்பா வுத்தமனே தானெடுத்து செப்பக்கேளு
பொருப்புடனே ஸ்ரீதானும் வேகும்போது பொங்கமுடன் வலதுபக்கம் தடியால் குத்து
கருவுடைய நிணமதுவும் கழியில்தாக்கு கருத்துடனே இடதுபுறம் இப்படியே தாக்கு
மருப்பணைய நிணமதுவும் கழியில்தாங்கி மகத்தான மாத்திரைக்கோல் பிணமுமாச்சே
5495.
ஆச்சப்பா கருவென்ற கோலுமாச்சு வப்பனே கோலதனைப் பதனம்பன்னு
பாச்சலுடன் வையகத்திலிருந்துகொண்டு பாங்குடனே கிருஷ்ணாவதாரனைப்போல்
மாச்சலுடன் கலவிதனிலிருந்துகொண்டு மகத்தான ஸ்ரீகளை யனுபவித்து
ஏச்சலது வாராமல் எந்தநாளும் எழிலான சித்துதனையாடுவீரே
5496.
ஆடவென்றால் சித்ததுவும் ஏதென்றாக்கால் வப்பனே நீபிடித்த கழிதானப்பா
போடவே மாதர்தனைக் கண்டபோது பொங்கமுடன் கழிதன்னால் தொட்டுப்பேச
நீடவே வலதுகை கழிதான்தொட்டால் நீதியுடன் புருஷனவன் வசியமாவான்
சாடவே இடதுகை கழிதான்தொட்டால் சாங்கமுடன் மங்கையரும் வசியந்தானே

5497.
தானான வசியமது யேதென்றாக்கால் தகமையுடன் கழிக்கொம்பே வசியமாச்சு
கோனான வித்தையிது கருதான்வித்தை கூறுகின்றேன் பிரம்மகுலகிருதானவித்தை
வேனான வித்தையிது வினோதவித்தை வேடிக்கை கருவிதனை யாருங்காணார்
மானான வித்தையிது வையகத்தில் மார்க்கமுடன் சென்றல்லோ செய்துபாரே
5498.
செய்யவே ஜெகதலத்தி லுன்னையப்பா தோற்றமுடன் சித்தனென்ற புருஷனென்பார்
பையவே யந்தனிடம் கிட்டிவந்து பாங்குடனே கருவினுட வழியுங்கேட்பான்
மெய்யான கருவினுட வழியுஞ்சொன்னால் மேன்மைபெற வுந்தனுக்கு நிதியுமீவார்
உய்யவே சதாகாலம் வூழியனாக வுத்தமனே காத்திருப்பார் வுண்மைபாரே
5499.
உண்மையாம் லோகமதில் சித்தனாக ஓகோகோ நாதனைப்போல் வாழ்வாயப்பா
வண்மையுள்ள சித்தனென்று வையகத்தோர் யுலகுதனில் எந்நாளும் வாழ்த்துவார்கள்
திண்மையுடன் ராஜாதி ராஜர்பக்கல் தீரமுடன் இக்கருவை கொண்டுசென்று
கண்மைபெற கருவாட்டம் ஆடினாக்கால் கனகமென்ற நிதியனைத்தும் கொடுப்பார்தாமே
5500.
கொடுத்துமே யுந்தனுக்கு சோடசாரம் கொற்றவனே மதிமந்திரியாகக்கொள்வார்
அடுத்ததொரு வேந்தர்களும் உன்னைக்கண்டால் வப்பனே சற்பாத்ர சித்தனென்பார்
நடுக்கமுடன் வையகத்தோர் எல்லாருந்தான் நாடியே யுன்பாதம் பணிவாரப்பா
ஒடுக்கமுள்ள கருவிகரணாதிவித்தை ஓகோகோ போகரிட வித்தைதானே

# போகரின் சப்த காண்டம் – 7000

5501.
வித்தையா மின்னமொரு மார்க்கங்கேளு வேதாந்தப் புண்ணியனே விளம்புவேன்பார்
சித்திபெற காலாங்கி நாதர்வாக்கு சீருலகில் பொய்யாது மெய்யேயாகும்
சத்தியமாங் காலாங்கி சொன்னநீதி சதாகால மெந்தனுக்கு குருவாக்காகும்
நித்தியமும் அந்திசந்தி பாதம்தொட்டு நினைக்கிறேன் போகரிஷி நினைக்கிறேனே
**5502.**
நினைக்கிறேன் ஸ்ரீலீலாவினோதந்தன்னை நிலையான கருமான மேதென்றாக்கால்
கனையான மலையோரந் தேடிப்போனால் சுருக்கான வாத்தலரி வேர்தானுண்டு
தினைபோலே வித்துள்ள மலைதாங்கியப்பா சிறப்பான திருநீற்று சூலியாகும்
பனைபோன்ற வேரதனை வெள்ளிதன்னில் பட்சமுடன் காப்பதுவுங் கட்டிடாயே
**5503.**
கட்டியே காப்பதுவுந் தீர்ந்தபின்பு கணேசருக்குப் பொங்கலிட்டு காவுதந்து
எட்டியுட வடவேரைத்தான் பிடுங்கி யெழிலாக யெரிகாலன் வேருங்கூட்டி
தட்டியேரழிஞ்சி மூலந்தானும் சாங்கமுடன் பொன்னினாவாரைக்கூட்டி
குட்டியென்ற மிளகுசாரணையுஞ்சேரு கூறான சமனிடையாய் களஞ்சிதூக்கே
**5504.**
தூக்கியே தலைச்சுருளி மூலங்கூட்டி துப்புரவாம் ருதுகாலசீலைதன்னில்
ஆக்கமுடன் தலைமைஞ்சங்கொடியுஞ்சேர்த்து வப்பனே சீலைதன்னில் வைத்துருட்டி
நோக்கமுடன் ஐங்கோலத்தயிலத்தாட்டி நுணுக்கமுடன் பேரண்டந் தன்னிலப்பா
தீக்கமல மானதொரு கலசந்தன்னில் திகழுடனே தீபமது ஏற்றிடாயே
**5505.**
ஏற்றியே மையதனை வாங்குவாங்கு யெழிலான சிமிழ்தனிலே பதனம்பண்ணு
போற்றியே மனோன்மணித்தாய் பதாம்புயத்தை பொங்கமுடன் சதாகாலம் நிமிர்த்தம்செய்து
ஆற்றியே ஐங்கோல கருவின்மையை வப்பனே லலாடமதில் விட்டுமேதான்
கூற்றனெனும் காலனவன் தான்நடுங்க குவலயத்தில் சாரியது வருவாய்பாரே
**5506.**
பாரேதான் மையதனை தீட்டியல்லோ பாருலகில் மங்கையரைக் கண்டபோது
நீரேதான் மன்மதனாரென்றுசொல்லி நினைவுதடுமாறி யங்கேயுனைநினைத்து
ஆறுபுடை சூழ்நகரம் நிதியும்விட்டு ஆஸ்தான வரண்மனையுந் தான்மறந்து
வீறுபுகழ் மன்மதனென்றெண்ணியல்லோ வீடுவிட்டு நாடறியவருவாள்காணே
**5507.**
காணவே மையதனைக் கண்டபோது கடுங்காளை யானதொரு மாண்பரெல்லாம்
பூணவே யுமதிடத்தில் புத்திகூர்ந்து புகழான சித்தரவர் என்றுகூறி
ஆணவங்கள் தானொடுங்கி யதிகநட்பாயப்பனே யுனைவந்துவணங்குவார்கள்
காணறிய பரஞ்சுடர்போல் கருதிலுண்ணி கடாட்சித்து வவர்தமக்கு வதிதஞ்செய்யே
**5508.**
செய்யவே நட்பாலரெல்லாங்கூடி செம்மலுடன் மனதுவந்து யுமைப்பணிந்து
வெய்யதொரு விட்டகுறை யிருந்ததாலே வேதாந்த சித்துதமைக் காணலாச்சு
பையவே யுன்பாதங்கிட்டியல்லோ பராபரத்தின் பரவொளியைக் காணவென்று
உய்யவே பிராணாயந்தன்னில்நின்று ஓகோகோ வதிதமிகச்செய்வார்பாரே

5509.
பார்க்கையிலே யுந்தமக்கு லோகந்தன்னில் பாரிலுள்ள ராஜமுடி மன்னரெல்லாம்
ஏர்க்கவே மகாசித்து யிவர்தானென்று யெழிலான வாசீர்மம் மிகவுங்கூறி
தீர்க்கமுடன் மையதனைத்தருகவென்று திரளான நிதியனைத்தும் கொடுப்பாரப்பா
ஆர்க்க சிம்மாதனந்தான் கொடுத்து வப்பனே வஞ்சலிகள் செய்வார்பாரே
5510.
பார்க்கவே யஷ்டசித்து வுனக்குள்ளாச்சு பாங்கான வையகமும் கைக்குள்ளாச்சு
ஏர்க்கவே சிற்றின்ப நிலைமறந்து யெழிலான பேரின்பசாகரத்தை
ஆர்க்கமுடன் மனந்தனிலே நிட்சயித்து வப்பனே பதாம்புயத்தை மேலேநண்ணி
தீர்க்கமுடன் சமுசாரக் கடலைநீக்கி சிற்பரனை யறியும்வகை தேடிக்கொள்ளே
5511.
கொள்ளவே சீனபதி பெண்களுக்கு கொட்டினேன் ஈடுவகை யனேகமுண்டு
மெள்ளவே குளிகைகொண்டு யானுமல்லோ மேதினியில் எழுகடலுஞ் சுத்திவந்தேன்
தெள்ளவே புலிப்பாணி மைந்தாகேளு தேர்வேந்த ராஜரிடம் சென்றுயானும்
வள்ளலாம் வித்தையது சிமிட்டுவித்தை வரைகோடி திறைகோடி கறைகண்டேனே
5512.
கண்டதொரு வேதைதன்னில் சிடிகைவேதை கண்ணுக்குத் தோற்றாது கடினவேதை
விண்டதொரு வேதையிலே கருவுவேதை வித்தகனாய் இருந்தாக்கால் கண்டுகொள்வாய்
கொண்டதொரு வுருப்பதனில் குறையிலானால் கூறறிய புத்திதனில் மிகுந்தவானாய்
கண்டறிந்து ஒருவனைநீ தோழனாக காசினியில் சீஷபதி யமைத்துக்கொள்ளே
5513.
கொள்ளவே சீஷனாய்த் தேடிக்கொள்ளு கொற்றவனே யுந்தமக்கு உரியவாராய்
உள்ளபடி கபடுபொய்சூது தந்திரம் வுற்றுருமை யில்லாத புத்திவானாய்
எள்ளளவும் மனந்தனிலே களங்கமில்லா யெழிலான கற்றறிவு பாலனாக
தெள்ளுதமிழ் பண்டிதத்தில் அதிகவானாய் தேற்றமுடன் சீஷன்தனைநாடுவாயே
5514.
நாடியே சீஷனைக்கொண்டுமல்லோ நற்பாலா யுந்தனுக்குத் தேவையான
நீடியதோர் கருவிகரணாதியெல்லாம் நீட்சியுடன் உந்தனுக்குத் தருகவென்று
தேடியே கண்டுமிக வாராய்ந்தல்லோ தெளிவான தோழமைத்தான் கண்டுமல்லோ
வாடியே திரியாமல் மனமேங்காமல் மார்க்கமுடன் கருதொழிலைச் செய்திடாயே
5515.
செய்யவே கருமான மேதென்றாக்கால் சிறப்புள்ள யெரிகாலன் வித்துதானும்
பையவே மருளினூமத்தைவித்தும் பாங்கான பொன்னினாவாரை வித்தும்
வையகங்கள் புகழும் கோரக்கர்வித்தும் வானான சூரியனார் காந்திவித்தும்
துய்யதொரு குடைக்காளான் பூவுஞ்சேர்த்து துப்புரவாய் ஆத்மஜலந்தன்னிலாட்டே
5516.
ஆட்டவே நாற்சாமமானபின்பு வப்பனே குளிகையது செய்வாயப்பா
தேட்டமுடன் பயரளவாய்க் குளிகைசெய்து செம்மலுடன் நிழல்தனில் தானுலர்த்தி
நீட்டமுடன் பஞ்சாட்சர வுருவுதானும் நீதியுடன் லட்சமது போட்டபின்பு
வாட்டமுடன் பரணிதனில் அடைத்துக்கொண்டு வளம்பெறவே தானெடுத்து வளமைகேளே

5517.
கேளப்பா மங்கையரைக் கண்டபோது கெவனமுடன் அவர்மனதும் உன்மனதுமானால்
பாளப்பா போகாமல் எந்தநாளும் பட்சமுடன் உன்மீதில் மனம்லயித்து
ஆளப்பா சொல்லுகிறேன் குளிகைதன்னை வப்பனே யறுசுவையாம் பதார்த்தந்தன்னில்
மீளப்பா போகாமல் தாம்பூலத்தில் மிகபடவே பாலதனில் கொடுத்திடாயே
5518.
கொடுக்கவே மங்கையரும் மனதுவந்து குவலயத்தில் எந்நாளும் உந்தன்மீது
அடுக்கவே மற்றொருவர் தன்னைக்கண்டால் வப்பனே சத்தருவாய் மனதிலெண்ணி
ஒக்கமுடன் உன்பக்கல் சதாகாலந்தான் உத்தமனே பட்சமது கருணைகூர்ந்து
நடுக்கமுடன் ஏவலுக்கு முன்னேநின்று நாள்தோறும் கருணையது புரிவான்தானே
5519.
தானான யின்னமொரு மார்க்கங்கேளு தயவான புலிப்பாணி மைந்தாபாரு
கோனான சித்தர்களும் முனிவர்தேவர் குவலயத்தில் கோடிவித்தை வினோதஞ்செய்தார்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தெளிவான வித்தையெல்லாம் மறைத்துப்
போட்டார்
மானான வித்தையிது மாந்திரீகவித்தை மன்னவனே கண்மணியே சொல்வேன்பாரே
5520.
சொல்லவே காலாங்கி தாள்பணிந்து சுத்தமுள்ள எந்தனுக்கு உகந்தசீஷா
வெல்லவே வையகத்தில் மாண்பர்தாமும் விருப்பமுடன் இதிகாச வித்தையெல்லாம்
புல்லவே யுந்தனிட மறிந்துகொண்டு புகழான குருவென்று மனதிலெண்ணார்
அல்லல்படும் துயரமது மிகவாய்ச் செய்து வப்பனே துரோகமது செய்வார்பாரே
5521.
பாரேதான் துரோகமது செய்தபேர்க்கு பண்பான கருமான மொன்றுசொல்வேன்
நீரேதான் மனங்கொண்டு மனங்களித்து நீதியுடன் துரோகமது செய்தபேர்க்கு
கூரேதான் அமாவாசை யருக்கநாளாம் குறிப்புடனே மாளிதனில் வாழுகின்ற
சீரேதான் மீஞ்சூருதனைப்பிடித்து சிறப்புடனே யதில்செய்யும் வகையைக்கேளே
5522.
வகையான மீஞ்சூரைக் கொண்டுவந்து வன்குடலிற் காயமதைச் சுத்திசெய்து
தொகையான வுருவதும் லட்சமோதி சுந்தரனே எதிராளி பேரைமாறு
சிகைதனிலே ரோமமது சேகரித்து சிறப்புடனே மீஞ்சூருக் காப்புகட்டி
பகையான யெதிராளி மூலங்கண்டு பட்சமுடன் கருதனையே நாடிப்பாரே
5523.
நாடியே யுந்தனுக்கு துரோகஞ்செய்த நலமான படுபாவி சண்டாளன்தான்
தேடியே அவனிருக்கும் இடத்திற்சென்று தேற்றமுடன் கோஜத்தின் ஜலத்தின்
மண்ணையப்பா
நீடியே தானெடுத்துக் கொண்டுவந்து நெடிதான கருமான மண்ணையப்பா
கூடியே பேதனங்கள்கூறி கூசாமல் மீஞ்சூரின் வாயிலூட்டே
5524.
ஊட்டியே பிரிதிவென்ற மண்ணைத்தானும் வுற்றதொரு கருவிகரணாதிமண்ணை
தாட்டிகமாய் மீஞ்சூரின் வாயின்மட்டும் தயங்காமல் கிட்டணைகள் செய்தபின்பு
வாட்டமுடன் இருவாயைமூடியல்லோ வளமுடனே தான்தைத்து சீலைசெய்து
ஆட்டமுடன் மீஞ்சூரின் பவனிவாயை வப்பனே மேல்நோக்கி நிறுத்திடாயே

5525.
நிறுத்தியே தலைகீழாய் மீஞ்சூர்தன்னை நீதியுடன் நவகோணச் சக்கரத்தில்
உறுத்தியே தராசுமென்ற முள்தானப்பா வுத்தமனே நாற்சதுரமாகநாட்டி
கருத்துடனே வராகமென்ற சவ்வைத்தானும் கலங்காமல் நாற்சதுரமூலைமாட்டி
பொருத்தமுடன் நடுமையந் தொளாந்திரமாக பொங்கமுடன் வசிநாட்டி வுருவுமோதே
5526.
ஓதவே எதிராளி பேரைமாறி வுத்தமனே பேதனத்தை செய்துமல்லோ
நீதமுடன் யாகங்கள் தானுஞ்செய்து நிஷ்களங்கமாகவல்லோ ஓமகுண்டம்
போதவே பராணாயந்தன்னிற்சென்று போங்கமுடன் சின்மயத்தி லேறிநின்று
சாதகமாம் வாசிதனை தியானித்தேதான் சட்டமுடன் பிரணவத்தை சாற்றுவீரே
5527.
சாற்றவே எதிராளி தன்தனக்கு சட்டமுடன் மலஜலமுங் கட்டிப்போகும்
கூற்றனுக்கு விடமுண்டு பின்னுந்துன்பம் குவலயத்தில் யார்படுவார் இந்தபாடு
ஏற்றதொரு கருவிகரணாதியாலே யெழிலான துன்பமதுக் கிடமேயாச்சு
மாற்றமுடன் கருவென்ற பிரிதிவினாலே மகத்தான கோடிவித்தை யாடலாமே
5528.
ஆடலாம் புலிப்பாணி மைந்தாகேளு வவனிதனில் உனைப்பகைத்த மிடியோர்தானும்
தேடியே உந்தனைத்தான் மிகவேநாடி தேற்றமுடன் பாதந்தொழுதிட்டாக்கால்
நீடியே முன்வைத்த கருமானத்தை நிகட்சியுடன் நிவர்த்தியது செய்துமல்லோ
கூடியே யுபசார வார்த்தைகூறி கொற்றவனே திருப்பிவிட்டால் தருமமாமே
5529.
தருமமா முந்தனுக்கு மோட்சமுண்டு தாரிணியில் குடிகெடுக்கும் பாவியோரை
கருவென்ற கருவிகரணாதியாலே கலக்கமவர் செய்தவனே தியக்கங்கொண்டு
பொருளதனை யவனிடத்தில் அபகரித்து பொங்கமுடன் சாந்தியது மிகவேசெய்து
குருதனையே தானினைத்து கருமியோர்க்கு குவலயத்தில் புத்திமதி கூறநன்றே
5530.
நன்றான யின்னமொரு போக்குசொல்வேன் நலமான காலாங்கி சொன்னநீதி
குன்றான மலைபோலே கோடிவித்தை கூறினா ரெந்தனுக்கு லக்கோயில்லை
வென்றிடவே சிலபாகஞ் சிடிகைவேதை வேதாந்தத் தாயினது கிருபையாலே
தென்றிசையில் அடியேனுங் குளிகைகொண்டு தேற்றமுடன் வித்தைமிகக் கண்டேன்பாரே
5531.
பாரேதான் சீனபதிவிட்டுமல்லோ பாங்கான குளிகையது பூண்டுகொண்டு
நேரேதான் மலையாளங் குடகுநாடு நேர்மையுடன் வெகுதேசஞ் சுற்றிவந்தேன்
சீரேதான் சிங்கணர் கொங்கணவர் தாமும் சிறப்பான மராட்டியப்பரரைக்கண்டேன்
கூரேதான் கன்னடையர் மலையாளரப்பா குறிப்பான குசலரவர் வேளாளர்தாமே
5532.
தாமான துலுக்கருடன் மலுக்கர்தாமும் தகமையுள்ள வேளாள மாண்பருண்டு
கோமான குருக்களென்றும் ராஜரென்றும் குவலயத்தில் சித்துமுனிப் புருஷரென்றும்
தேமான பலபலவாஞ் சாதிபேதம் தேசமதில் கண்டதல்லோ லக்கோயில்லை
பூமான்கள் கற்றதொரு தொழிலையெல்லாம் பூவுலகில் கண்டறிந்தேன் போகர்தானே

5533.
தானான போகரிஷி முனிவர்தானும் தகமையுடன் கண்டறிந்த அதர்வனத்தை
வேனான விலாடமென்ற நகருக்கப்பால் வேந்தருட பதிதனிலே சென்றேன்யானும்
மானான மகதேவர் காலாங்கி நாதர்மன்னவனார் கூறியதோர் வாக்குநீதி
கோனான காலாங்கி வாக்குபோலே தேசமென்ற விலாடநகர் சென்றிட்டேனே
5534.
சென்றேனே விலாடநகர்ப்பதியிலப்பா செம்மலுடன் மாண்பருட வதிசயங்கள்
கஉன்றான மலைபோலே கோடியுண்டு கொற்றவர்கள் பஞ்சவரின் சேனைகண்டேன்
வென்றிடவே மூலபலயுத்தந்தன்னில் வெகுகோடி மாண்பரெல்லாம் மடிந்தாரங்கே
அன்று திரியோதிரனார் சேனைவர்க்கம் அவ்வனத்தில் சமாதிபதி கண்டிட்டேனே
5535.
கண்டேனே சமாதியது கோடாகோடி காசினியில் யாரேனுங் கண்டதில்லை
அண்டர்முனி ராட்சதர்கள் சமாதிவர்க்கம் அவ்வனத்தில் சுத்திவந்து காண்பரங்கே
கொண்டல்வண்ணன் அச்சுதனார் போர்கள்செய்த கோடான கோடிவகை யாயுதங்கள்
பண்டுளவு மாலையணி பூண்டமாது பாங்கான கோயில்தனில் பார்த்திட்டேனே
5536.
பார்த்தேனே வில்லம்பு முப்பத்திரண்டும் பாங்கான காளியுட தேவஸ்தானம்
சேர்த்துமே மலைபோலே யாயுதங்கள் சேனையெடு படைக்கூட்டம் திரள்கூட்டங்கள்
கோர்த்துமே விலாடபுர பதியிலப்பா கொற்றவர்கள் சமாதியது பதியுங்கண்டேன்
தீர்த்தமுடன் சிவலிங்க சமாதிகோடி திரைகோடி வரைகோடி தீராதானே
5537.
தீரவே சமாதியிடஞ் சென்றேன்யானும் திரள்வீரர் பஞ்சவர்கள் போர்க்களத்தை
சோரமெனும் வீராதி வீரர்தாமும் சொற்பெரிய அரண்வாயல் அரக்குக்கோட்டை
நேரமுடன் குளிகையது கொண்டுயானும் நெடுந்தூரம் பாஞ்சாலன் பதியின்மட்டும்
சேரவே சென்றல்லோ வெற்றிகொண்டேன் ஜெயமான சமாதியிங் காவலுண்டே
5538.
காவலாங் கட்டென்ன வதிகாரங்கள் கருதவென்றா லாதிசேடனிலுமாகா
ஆவலுடன் காலாங்கி தனைநினைத்து அதிகவழி நெடுந்தூரஞ் சென்றேனப்பா
போவதுவும் வருவதுவும் சமாதிபக்கல் பொங்கமுடன் மாண்பர்களோ சொல்லொண்ணாது
சாவதுவில் மாடுபிடி போர்க்களத்தில் சட்டமுடன் காவல்தனை பார்த்திட்டேனே
5539.
பார்த்தேனே மாண்பர்களை யடியேன்தானும் பக்குவமாய் வாய்மொழியை யறியவென்று
சேர்த்துமே கரங்குவித்து தாள்பணிந்து தேற்றமுடன் மாண்பர்களைக்கண்டேன்யானும்
தீர்த்தமுடன் சமாதியது யேதென்றென்ன திரளான படைவீரர் காவலாளி
பார்த்தனெனும் பஞ்சவர்கள் படுகளந்தான் பாரினிலே போரிட்ட விலாடங்காணே
5540.
காணவே யெந்தனுக்கு சொன்னாரங்கே கவனமுடன் குளிகைகொண்டு நின்றுமல்லோ
தோணவே திடுக்கிட்டு மனதுயேங்கி தொல்லுலகில் துரியோதனன் களந்தானங்கே
பூணவே யெந்தனுக்கு சொல்லவென்று புகழாக வடியேனுங் கேட்டேனங்கே
ஆணவம் பூண்டதொரு போர்க்கலத்தை யங்ஙனவே எந்தனுக்குக் காண்பித்தாரே

5541.
காண்பிக்க யடியேனும் மனதுவந்து கருத்துடனே மாண்பர்களைக்கேட்டபோது
வீண்பான சிறுபால போகநாதா விட்டகுறையிருந்ததினால் இங்கேவந்தாய்
ஆண்மைகொண்டு வந்ததினால் உந்தனுக்கு வப்பனே சாபமது தருவோமென்றும்
தீண்பான வாக்கினைகள் செய்வோமென்றும் திறமையுடன் எந்தன்பேர் கேட்டிட்டாரே
5542.
கேட்கவே யடியேனும் பிரமைகொண்டு கெவனமுடன் காலாங்கிசீஷனென்றேன்
மீட்கவே யடியேனுங் குளிகைபூண்டு மேதினியெலாம் சுற்றியிங்கேவந்தேன்
காட்கவே விலாடபுரங் காணவென்று தகமையுடன் போர்களத்தில் வந்தேனப்பா
ஆட்கொண்டு யெந்தனையு மாசீர்மித்து வன்புடனே பாதுகாக்க வென்றிட்டேனே
5543.
இட்டேனே மாண்பர்களைக் கண்டுயானும் எழிலான வஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன்
அட்டதிசை தான்புகழும் அதர்வனத்தை அன்புடனே எந்தனுக்கு வோதினார்கள்
சட்டமுடன் பிரணவத்தின் தழைகள்பூண்டு தாக்கான மரந்தனிலே காப்புகொண்டு
விட்டதொரு யெதிராளி பேரைமாறி விருட்சமென்ற மூலிதனில்காண்பித்தாரே
5544.
காண்பித்தார் விலாடபுரந் தன்னிலப்பா தண்மையுள்ள போர்க்களத்தில் அதிகமாண்பர்
ஆண்மையுடன் எதிராளி பேரைச்சொல்லி அங்ஙனவே மாந்திரீக பிரணவத்தால்
வீண்பழிக்கு யாளாகா வாகாமற்றான் விட்டகுறை இருந்ததொரு சாபத்தாலே
நீண்படவே மாந்திரீக தாந்திரீகத்தால் நிலையான போர்க்களத்தை வென்றிட்டாரே
5545.
வென்றாரே மூலியிட விருட்சத்தாலே வேகமுடன் கோடானகோடிபேரை
சென்றதொரு வித்தைகளை எந்தனுக்கு சிறப்புடனே போதித்து வதிதஞ்செய்தார்
குன்றான கோடிவித்தை யானுங்கண்டு கொற்றவனே குளிகையது பூண்டுகொண்டு
தன்றான கருமான வித்தையெல்லாம் தகமையுடன் தானறிந்து வந்தேன்பாரே
5546.
பாரேதான் இன்னமொரு கருமானங்கேள் பாங்கான புலிப்பாணி மைந்தாபாரு
நேரேதான் உந்தனுக்குத் தீங்குசெய்த நேரான கருமிகட்கு இந்தபாகம்
தூரேதான் இருந்தாலும் அஞ்சவேண்டாம் துப்புரவாய் குடிகெடுக்கும் பாவிதன்னை
சீரேதான் பிணவத்தின் மூலியாலே சீர்பதத்தை மாற்றியல்லோ பேர்தான்கொள்ளே
5547.
கொள்ளவே எதிராளி பேரைக்கூறி கொற்றவனே நெல்லிக்குக் காப்புகட்டி
விள்ளவே யவன்பேரைத் தலைகீழாக விருப்பமுடன் மனோன்மணியாள் அட்சரத்தை
உள்ளபடி வங் சிங் யங் கென்றபோது வுத்தமனே லட்சமது வுருவுகொண்டு
தெள்ளுதமிழ் பாவாணர் சித்தர்வாக்கு தேசமதிற் பொய்யாது மெய்யாம்பாரே
5548.
மெய்யான பிரணவத்தின் மூலியாலே மேதினியில் பிணம்போலே இருப்பான்பாரு
பையவே யவர்சென்று எதிராளிதன்னை பட்சமுடன் தானழைத்து வருந்திட்டாலும்
துய்யவே சவம்போலே இருப்பான்பாரு துப்புரவாய் வையகத்தைத் தான்மறந்து
உய்யவே பஞ்சபூதங்களெல்லாம் ஒடுக்கமுடன் தானொடுங்கி இருப்பான்தானே

5549.
தானான யேவல்தொழில் வொன்றுமில்லை தண்மையுள்ள பூலோகவாசையில்லை
கோனான கோவேந்தர் போருமில்லை கொற்றவர்க்கு எதிராளி படையுமில்லை
தேனான மாந்திரீக தாந்திரீகத்தால் தேசமெங்கும் ஜெயிப்பதற்கு ஐயமில்லை
பானான பாவமென்ற தொழிலுமில்லை பாருலகில் இவ்வேதை பண்பாய்ச்செய்யே
5550.
பண்பான வேதையினால் அஷ்டசித்தி பாருலகில் செய்வதற்கு ஐயமில்லை
நண்பான மூலிதனி லனந்தம்வேதை நாட்டினிலே செய்துமல்லோ கீர்த்திகொண்டு
திண்மையுடன் செய்தல்லோ வையகத்தில் தீர்க்கமுடன் கருமிகளை வெல்லலாகும்
வண்மையாம் மூலியிட போக்கனந்தம் வையகத்தில் கோடியுண்டு செய்வார்பாரே
5551.
பாரப்பா இன்னமொரு கருமானங்கேள் பாலகனே சொல்லுகிறேன் மைந்தாபாரு
நேரப்பா வையகத்தில் கோடிவித்தை நேர்மையுடன் கண்டதுண்டு பார்த்தோருண்டு
சீரப்பா இதிகாசவித்தையெல்லாம் சிறப்புடனே சித்தர்முனி மறைத்துவைத்தார்
ஆரப்பா யெனைப்போலே சொல்வாருண்டோ வப்பனே கண்டவரை வுரைத்திட்டேனே
5552.
உரைத்தேனே வையகத்து மாண்பருக்கு ஒகோகோ நாதாக்கள் சொன்னதில்லை
நிரைத்திடவே கருமான வித்தையப்பா நீதியுடன் பேர்கூறி வேர்பிடுங்கும்
கரைத்திடவே பிரணவத்தை மாறல்செய்து கருவுடனே பேர்மாறி வேர்பிடுங்கி
சிரைத்திடவே பூண்டுக்குக் காப்புகட்டி சீர்பெறவே சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே
5553.
பண்பான வாரமது ஆதிவாரம் பகலான வுச்சியது மத்தியானம்
திண்பான வுருவமது நடுச்சாமந்தான் திகழான மூலிக்குக் காப்புகட்டி
நண்பான எதிராளி பேரைக்கூறி நயம்படவே வங் சிங் யங் கென்றோது
கண்ணான மனோன்மணியாள் பீஜமந்திரம் கருவான லட்சம்வுரு போடுபோடே
5554.
போடப்பா தேவிமனோன்மணியாள் பீஜம் பொங்கமுடன் வுருவனைத்துந் தீர்ந்தபின்பு
நீடப்பா மாந்திரீக தாந்திரீகத்தால் நிலையான வாத்தமது கபாலஞ்சொக்கி
கூடப்பா சுவாசமது வுள்ளேபுக்கி குவலயத்தில் செத்ததொரு சவத்தைப்போலும்
ஆடப்பா பிரணவத்தின் மகத்துவத்தால் வப்பனே சவம்போல செய்திடாயே
5555.
செய்யவென்றால் நாவேது பாவுமில்லை ஜெகதலத்தில் உனைப்போல சித்துமுண்டோ
பையவே கர்மியென்ற எதிராளியப்பா பாருலகில் உன்மீதில் பகையுமில்லை
மெய்யான எத்தனங்கள் யாதொன்றில்லை மேதினியில் இருந்தென்ன பயனுமில்லை
துய்யதொரு வாத்மாவுஞ் சொக்கியல்லோ துப்புரவாய் பிரேதம்போல் இருப்பான்தானே
5556.
தானான பகையாளி தன்னையப்பா தயவுடனே மறுபடியும் பெயரைமாற்றி
கோனான மூலியிட சாபம்நீக்கி கொற்றவனே எதிராளி பகைவன்தன்னை
தேனான யிலையமுர்தங் காப்புநீக்கி தேற்றமுடன் வுருவுதனை மாறியல்லோ
பானான பராபரியை ஸ்தோத்தரித்து பட்சமுடன் காப்பாற்றல் தருமமாமே

5557.
தருமமாம் உந்தனுக்குக் கீர்த்தியுண்டு தணஃமையுள்ள ராஜசிவராஜயோகா
தருமத்தை எந்நாளும் நிவர்த்தி செய்து காப்பாற்றல் மனுதர்ம நீதியாகும்
சொரூபமென்ற நிலையதனைக் காண்பதற்கு சூட்சாதி சூட்சமதை யறிந்துகொள்ளு
கிருபையது யுந்தன்மேல் வருவதற்கு கீர்த்தியுடன் எந்நாளும் பதங்கொள்வீரே
5558.
கொள்ளவே இன்னமொரு மார்க்கம்பாரு கூறான புத்தியுள்ள மைந்தாகேளு
வெள்ளமது நிறைந்திருக்கும் கால்வாய்தன்னில் வெட்டவெளி வனாந்திரத்தில் சாரலோரம்
தெள்ளுதமிழ் வேளாளர் குடியனைத்தும் தேற்றமுடன் காய்கரிகள் அனந்தவர்க்கம்
உள்ளபடி பரதெய்வ சாட்சியாக வுத்தமர்கள் பயிரிடுவர் கோடிதாமே
5559.
கோடியாங் காய்கரிகள் பழவர்க்கங்கள் குவலயத்தில் மாண்பரெல்லாம் பயிரேசெய்வார்
நீடியே வெகுநாள்கள் பயிர்கள்பக்கல் நேர்மையுடன் போகாமலிருப்பதுண்டு
கூடியே கறுப்பண்ணன் காவல்வைத்து கொற்றவனே தாமிருப்பார் மாளிதன்னில்
தேடியே வையகத்தில் சிலதுமாண்பர் தெரியாமல் கனிவர்க்கம் தீண்டுவாரே
5560.
தீண்டியே பொசிப்பதற்கு எண்ணங்கொண்டு திருடியே கன்னமிட மனதிலெண்ணி
வேண்டியே பேராசைக் கொண்டுமல்லோ விருப்பமுடன் கனிவர்க்கங் காய்கள்தம்மை
காண்பமாய்த் தோட்டமது வருகிற்சென்று காய்களைத்தான் தொட்டுமல்லோ கொள்ளை கொண்டோர்
பாண்டியனார் கறுப்பண்ண சாமிதானும் பட்சமுடன் தொட்டவரை பிடிப்பார்தாமே
5561.
தாமான பழவகைகள் தொட்டபேர்கள் தகமையுடன் கறுப்பண்ணன் காவல்தன்னால்
பூமான்கள் அதிகார வார்த்தையாலே புகழாக தொட்டதொரு கரத்தைத்தானும்
சாமானிய மானதொரு கறுப்பன்தானும் சட்டமுடன் கைதனையே பிடித்திழுப்பான்
வேமான மாகவல்லோ வெகுநாளாக விருப்பமுடன் காயருகில் நிற்பார்காணே
5562.
காணவே புலிப்பாணி மைந்தாகேளு கருவான மாண்பரெல்லாம் தொழிலேசெய்வார்
பூணவே காவலாளி யாரென்றாக்கால் புகழான கறுப்பண்ண சாமியாகும்
தோணவே வீரியனாங் கார்த்தராயன் தோறாத ஜின்னுதேவதையுந்தானும்
ஆணவமாங் காளியென்ற துர்க்கைதானும் அடைவான கானகத்தில் காவலாச்சே
5563.
ஆச்சப்பா யின்னமொரு மகிமைகேளு அடவான பயிரிடுங் குடியாளர்க்கு
மூச்சடங்கிப் போனதொரு கிரகந்தானும் முக்கியமா யேவலுக்கு முன்னேநின்று
பாச்சலுடன் பில்லியென்ற பிசாசுதானும் பாலகனே பிரணவத்தால் உச்சாடித்து
ஏச்சதுவாராமல் மாண்பரெல்லாம் யெழிலாகக் கைவசஞ்செய்திருக்காரே
5564.
இருக்கிறதோர் பசாசியின் தந்திரத்தால் யெழிலான மந்திரங்கள் மெய்யேயாகும்
மருட்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணித்தாய் மகத்தான வட்சரத்தை யோதுவார்கள்
இருட்கடலை முறுக்கிய சற்றிரவிபோலும் யெழிலுருவங் காட்டும் ஒளிவட்டம்போலும்
அருட்கடலாம் ஈஸ்வரியாளட்சரத்தால் அவனிதனில் தாந்திரீகஞ் செய்வார்பாரே

5565.
பாரேதான் மூலிக்குக் காப்புகட்டி பாங்கான பிசாசுவகை கைவசமேயானால்
நேரேதான் வுலகுதனில் திருடுமாண்பர் நேர்மையுடன் வாய்பேசா கையாடாமல்
சீரேதான் இவ்விதமாய் இருப்பாயானால் சிறப்பான கீர்த்தியது லபிக்கும்பாரு
ஆரோதான் வையகத்தில் புத்திமான்கள் அவனிதனில் மாந்திரீகஞ் செய்வார்பாரே
5566.
பாரென்று சொல்லியல்லோ பாரில்தன்னில் பலவிதமாம் வார்த்தையது கூறுவார்கள்
நேரென்று பசாசினது மந்திரத்தால் நேர்த்தியுடன் காவலதுசெய்வார்பாரு
வேரொன்றுமில்லையப்பா எதிராளிபேரில் வியர்வான பசாசினது தந்திரந்தான்
ஆரொன்று மாண்பர்களும் வையகத்தில் அனியாயஞ் செய்வதற்கு முடியாதன்றே
5567.
முடியாது மூலியுட சாபமந்திரம் முக்கியமாய் பேயினுட வட்சரந்தான்
குடியான மாண்பரெல்லாம் வையகத்தில் கொற்றவனே ஏவலுக்கு முன்னதாக
மிடியான வருத்தமது தன்னோடொக்க மேதினியில் கருவிகரணாதியோடும்
துடியான மாந்திரீகம் தாந்திரீகத்தால் துப்புரவாய் மாண்பரெல்லாம் பிழைப்பார்தானே
5568.
தானான யிவ்வகையாம் வண்ணமெல்லாம் தகமையுடன் தட்சனத்தார் செய்யும்வேதை
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
பானான வித்தையது பழுதுபோகர் பாரினிலே வெகுகோடி வதிதஞ்சொன்னார்
மானான மகாசங்க வித்தைசொல்வேன் மகத்தான வையகத்தோர் மாண்டோர்தானே
5569.
தானான புலிப்பாணி மைந்தாகேளு தண்மையுடன் என்குருவாங் காலாங்கிநாதர்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேசமெல்லாங் குளிகைகொண்டு சென்றபோது
கோனான குருதனக்கு வயதுசொல்வேன் கொற்றவனே முந்நூற்றுப் பதினைந்தாகும்
பானான வாண்டுமது வஞ்சேயாகும் பாங்கான வாண்டுக்கு வறுபதாமே
5570.
ஆமேதான் வறுபதுவும் யென்றவாக்கு வப்பனே தலைமுறைதான் ஒன்றேயாகும்
கோமான்கள் ஓராண்டு இருந்ததில்லை கொற்றவனே தேகமதை மெய்யென்றெண்ணி
வேமேதான் முந்நூறுவாண்டு சொச்சம் வேதாந்தத் தாயினது கிருபையாலே
தாமேதான் முந்நூறு வானமட்டும் தகமையுடன் காலாங்கி இருந்திட்டாரே
5571.
இருந்தாரே வெகுகாலம் காலாங்கிநாதர் எழிலான வையகத்து மாண்பர்முன்னே
பொருந்தவே வதிசயங்களெல்லாங் கண்டார் பொங்கமுடன் இறந்தவர் கணக்குங்கண்டார்
திருந்தவே யவர்கண்ட கணிதமப்பா தீர்க்கமுடன் எந்தனுக்கு அருளினார்பார்
குருந்தமிழா மாசிரியர் முனிவர்தாமும் கூறவில்லை நூல்தனில் கூறாரின்றே
5572.
இன்றான சாத்திரத்தின் விருப்பமெல்லாம் யெழிலாகப் பாடிவைத்தார் சித்தர்தாமும்
குன்றான மலைபோலே கோடிநூல்கள் கூறினார் வையகத்து வதிசயங்கள்
சென்றதொரு வையகத்து சேதியெல்லாம் சிலருரைத்தார் சிலர்மறைத்தார் தேசமாண்பர்
வென்றிடவே அடியேனும் மனதுவந்து விருப்பமுடன் மறைத்ததெல்லாம் வெளியிட்டேனே

5573.
இட்டேனே காலாங்கி சொன்னநீதி எழில்பெறவே புலிப்பாணி மைந்தாகேளு
பட்டதொரு படுகளத்தின் மாண்பர்சேதி பாரினிலே விதியினால் மடிந்தோர்சேதி
சட்டமுடன் எந்நாயன் காலாங்கிநாதர் சாங்கமுடன் எடுத்துரைத்த தொகையைத்தானும்
வட்டமுடன் நபியுரைத்த தோப்புதன்னில் வளமான வையகத்துத் தொகையுந்தானே
5574.
தானான நபிநாயன் சாத்திரத்தில் சாற்றினார் வெகுகோடி வதிசயங்கள்
கோனான யேசுவின்தன் வேதந்தன்னில் கூறினதோர் வையகத்து மாண்பர்சேதி
பானான பரலோகமடைந்தசேதி பட்சமுடன் அவர்நூலுங் கண்டாராய்ந்து
மானான என்குருவாங் காலாங்கிசுவாமி மார்க்கமுடன் எந்தனுக்கு உரைத்தார்தாமே
5575.
காணவே சீனபதி மாண்பருக்கு கருவாக அடியேனும் மனதுவந்து
தோணவே மூலமென்ற பாஷைதன்னில் திரட்டியதோர் தொகைமுழுதும் யானுங்கண்டு
வேணபடி பதினென்பேர் நூலாராய்ந்து விருப்பமுடன் உபதேசஞ் செய்தேன்யானும்
நீணவே யுந்தனுக்கு யோதவல்லோ நீட்சியுடன் மனதுவந்து எண்ணினேனே
5576.
எண்ணினேன் என்னாயன் காலாங்கிநாதர் எழிலான காயாதி கற்பங்கொண்டு
நண்ணவே சீவியகாலமட்டும் நலமாகக் கிரேதாயினுகத்திலப்பா
மண்ணிலே மடிந்தவர்கள் கோடிசங்கம் மகத்தான கோடியிலே சங்கமாறு
திண்ணமுடன் மகாசங்க மற்புசங்களெட்டு திடமான வற்புதத்தில் பதினாறுதாமே
5577.
தானான திரேதாயி னுகத்திலப்பா சாற்றுகிறேன் வையகத்தயில் மடிந்தமாண்பர்
மானான லட்சமது நூறுசங்கம் மகத்தான மகாசங்கம் பதினாறுகோடி
தேனான வற்புதங்கள் நாலாறுபத்து தேசத்தில் மாண்டவர்கள் தொகைதானப்பா
கோனான குருவேந்தர் சொன்னநீதி கொற்றவனே தானிருந்த நாள்வரைக்கும்
வானான பராபரியாள் கடாட்சத்தாலே வளமுடனே தானறிந்த தொகையைக்கேளே
5578.
கேளேதான் துவாபரமாம் யுகத்திலப்பா கெடியான மாண்பர்களும் மாண்டசேதி
ஆளேதான் லட்சமது யெண்பத்திரண்டு வழகான சங்கமது எட்டுபத்திரண்டு
கோளேதான் வாராமல் மகாசங்கமேழு கொற்றவனே யற்புதமாகாற்புதங்கண்டு
நாளேதான் வையகத்தில் இறந்தமாண்பர் நலமான தொகையிதுதான் கண்டுகொள்ளே
5579.
கொள்ளவே காலாங்கி இருந்தமட்டும் குவலயத்தில் சமாதிக்கு ஏகுமுன்னே
எள்ளளவு பிசகாமல் முன்னோர்தாமும் எழிலான சாத்திரத்தின் தொகுப்பாராய்ந்து
உள்ளபடி கலியுகத்தி லிருந்தமட்டும் வுத்தமனே மாண்டவர்கள் தொகையைக்கேளிர்
கள்ளவே லட்சமது நாற்பத்திரண்டு கவனமுடன் சங்கமது நாலுமாமே
5580.
நாலான சங்கமது மகாசங்கமெட்டு நலமான அற்புதங்கள் ரெண்டுபத்துநாலு
நூலான மற்றவர்கள் கணக்கையெல்லாம் நுணுக்கமுடன் சித்ரபுத்ரன் கணக்கில்கூறும்
காலான கணக்குவகை யாராற்கூறும் காசினியில் யுகமுடிவில் இருந்தோர்மாண்பர்
பாலான முன்னோர்கள் சொன்னநூலில் பாலித்த கணக்கிதுதான் பண்மைபாரே

5581.
பண்மையாய் வையகத்தில் மடிந்தபேரை பாருலகில் ராஜாதிராஜர்தாமும்
வண்மையுடன் கலியுகத்து மாண்பர்தம்மில் வளமையுடன் ராஜாதிராஜரெல்லாம்
நன்மைபெற தொகைகணக்கு கண்டதில்லை நாணிலத்தில் மடிந்தவர்கள் சேதியப்பா
உண்மைபெற சீனபதி மாண்பரெல்லாம் வுற்றதொகை சற்றேறக் கண்டார்தாமே
5582.
கண்டாரே சீனபதிமாண்பர்தாமும் காசினியில் துகைக்கணக்கைத் தாமறிந்தார்
விண்டதொரு ராஜாதிராஜரெல்லாம் விருதாவாய் வையகத்தை யாண்டுமென்ன
கொண்டல்வண்ணன் அச்சுதனும் காணாமற்றான் குவலயத்தில் தான்மடிந்தார் மற்றொன்றுமில்லை
அண்டர்முனி ராட்சதர்கள் ஆனபேரும் அவனிதனில் கணக்கதனை யறியார்காணே
5583.
காணவே வையகத்துக் கணக்கையெல்லாம் கண்டறிந்தார் எந்தன்குரு நாதசாமி
தோணவே யவரிருந்த நாட்கள்மட்டும் தோறாமல் மாண்பரிட தொகையைத்தானும்
பூணவே யுகாந்தவரை சாத்திரத்தை புகழான காலாங்கிநாதர்தாமும்
மாணவே தொகுப்பினது வரலாறெல்லாம் வளமுடனே கண்டறிந்து வகுத்திட்டாரே
5584.
வகுத்தாரே புலிப்பாணி மைந்தாகேளு வளமையுள்ள கண்மணியே சொல்வேன்பாரு
தொகுத்ததொரு மாண்பர்களின் கணக்குதம்மை தொல்லுலகில் தாமறிந்த மட்டுஞ் சொன்னார்
தகுத்திடவே வையகத்தினளவுதானும் தகமையுடன் பூமிவளமேதென்றாக்கால்
மிகுந்திடவே சத்தசாகரமுஞ்சேர்த்து மேதினியில் மூன்றுபங்கு ஜலமுமாச்சே
5585.
ஆச்சப்பா பூமிவளம் நாலிலொன்று வப்பனே கர்த்தரது ஏற்பாடல்லோ
பாச்சலுடன் பூமிக்குப் பாதியல்லோ பாங்கான மலைவளங்கள் என்னலாகும்
மாச்சலுடன் தீவுகளும் அஷ்டதிக்கு மகத்தான திசைநான்கு மென்னலாகும்
ஆச்சரிய மானதொரு பட்டினங்கள் வதில்நான்கு ஓர்புரமுஞ் சொல்லலாமே
5586.
சொல்லவென்றால் முப்புறமுங்காடேயாகும் தோறாமல் பட்டினத்தின் தொகைதான் சொல்வேன்
வெல்லவே பட்டினங்கள் அறுபத்திநான்கு மேன்மையுடன் குரிச்சிகளோ கணக்கோயில்லை
புல்லவே நதிபாகம் நூற்றிருபதாகும் புகழான சிறுநதிகளனந்தங்கோடி
மேல்லவே ஏரிவகை யிருநூற்றிப்பத்து மேன்மையுடன் கால்வாய்கள் கணக்கில்லைதானே
5587.
தானான தேவதாஸ்தலங்கள்தன்னை சாற்றுகிறேன் அஷ்டதிக்குப் பூமிமட்டும்
கோனான காலாங்கி நாதர்தாமும் கொற்றவனார் குளிகையது பூண்டுசென்ற
தேனான தேவாலயத் தொகையைச்சொல்வேன் தேற்றமுடன் நூற்றிருபத்திரண்டு
மானான மகாஸ்தலங்கள் இதுவேயாகும் மகத்தான சிறுஸ்தலங்கள் சொல்லொண்ணாதே

5588.
ஒண்ணாது மானிடர்கள் வளப்பஞ்சொல்வேன் வுத்தமனே காலாங்கி கிருபையாலே
திண்ணமுடன் வையகத்தில் திசைகளெட்டும் சுத்திவந்தேன் சத்தகடல் பூமியெல்லாம்
அண்ணாந்து மலைவனத்தில் சிகரங்கண்டேன் அதிலிருந்த மார்க்கமெல்லாந்
தெரிந்தேன்யானும்
வண்ணமுடன் மானிடரின் ரூபந்தன்னை வளமையுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே
5589.
கேளப்பா சிலதேச மாந்தர்தானும் கெடியான ரூபமது அஸ்வரூபம்
மாளப்பா சிலதேச மாண்பர்தானும் மகத்தான சிங்கமென்ற முகமேயாகும்
ஆளப்பா சிலதேசமாண்பர்தானும் வப்பனே ஆஞ்சநேய ரூபமாகும்
வீளப்பா சிலதேச மாண்பர்தானும் விகாரமுள்ள ராட்சதரின் பேதமாமே
5590.
ஆமேதான் சிலதேச மாண்பரப்பா வப்பனே யலைகடலிலிருப்பார்தானும்
நாமேதான் சிலதேச மாண்பர்தானும் நலமுடைய மன்மதன் ரூபம்போலும்
போமேதான் சிலதேச மாண்பரப்பா புகழான ரூபமது பார்க்கொண்ணாது
தாமேதான் ரூபமது விகாரரூபம் தனியான ஜலரூபம் சொல்லொண்ணாதே
5591.
ஒண்ணவே சிலதேச மாண்பரப்பா வுத்தமனே அந்தவண்ணன் முகமுமாகும்
எண்ணவே முடியாது ஜாதிபேதம் எழிலான பேதமது லக்கோயில்லை
கண்ணவே சாதியது பதினெட்டாக காசினியில் அவதரித்தார் கோடிமாண்பர்
எண்ணவே முடியாது யாராலுந்தான் எழிலான ஜாதியிட மார்க்கந்தானே
5592.
மார்க்கமா மின்னமொரு மகிமைகேளு மகத்தான புலிப்பாணி மைந்தாபாரு
ஓர்க்கவே ஜாதியது பேதாபேதம் எழிநூற்றிருபத்தினாலுசொச்சமாகும்
மூர்க்கமாம் மாண்பரோடு பேசும்பட்சி முனையான முப்பத்திரெண்டேஜாதி
ஆர்க்கவே பரிபாஷை தெரிந்த பட்சி வப்பனே சோடசமும் ஜாதிபதினாறே
5593.
ஆறான பட்சியது அனந்தமுண்டு அதுதனக்கு குணாகுணபேதமில்லை
நூறான வாண்டுக்குளிருக்கும்பட்சி நுண்மையுடன் கலைகள் பதினாறதாகும்
நூறான மற்றதோர் பட்சியெல்லாம் துப்புரவாய் வயததுவுங் கொஞ்சமாகும்
தேறான மற்றதோர் பட்சிக்கப்பா தேசத்தில் பகுத்தறிவு இல்லைதானே
5594.
தானான மிருகத்தின் வளப்பஞ்சொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருபாத கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தேசமெல்லாம் குளிகையது பூண்டுகொண்டு
மானான மிருகத்தின் மகுத்துவத்தை மண்டலத்தில் கண்டறிந்து வந்தேன்பாரே
5595.
பாரேதான் மிருகத்தின் வளப்பஞ்சொல்வேன் பாங்கான மனோலயத்தை யறிந்தஜாதி
நேரேதான் மிருகமது சோடசமாகும் நேர்மையுடன் ஜாதியது பதிணாரேயாகும்
சீரேதான் மிருகமது பரிபாஷைபேசும் சிறப்பான மற்றதோர் மிருகமெல்லாம்
வேரேதான் பகுத்தறிவு யில்லையப்பா வேதாந்தக் காலாங்கி யருள்வாக்காச்சே

5596.
வாக்கான வாக்கதுவும் அறிந்தஜாதி வளமான நயமென்ற பாஷைதன்னை
நோக்கமுடன் தானறியும் மிருகஜாதி நுண்மையுடன் மார்பதனில் நகருஞ்சாதி
ஏர்க்கவே ஜாதியது பேதாபேதம் எழிலாகத் தாமுரைப்பேன் வண்மைபாரு
தீர்க்கமுடன் பூமிதனில் நகருஞ்சாதி திறமான காலில்லா ஜாதிதானே
5597.
தானான ஜாதிவகை சொல்வேன்கேளு தயவான புலிப்பாணி மைந்தாபாரு
தேனான பூமிதனில் விஷமுள்ள ஜெந்து தேசத்தில் அறிவுள்ள ஜெந்தொன்றப்பா
மானான மாணிக்கப் பாம்பேயல்லால் மற்றதொரு ஜெந்துக்கள் யாதொன்றில்லை
பானான வையகத்தில் கோடியுண்டு பாலகனே வாலகாலப் பாம்பாகாதே
5598.
ஆகாது பரிபாஷைத் தெரிந்தபாம்பு வப்பனே யாரறிவார் மண்டலத்தில்
சாகாது கோடியுக மிருக்கும்பாம்பு சர்ப்பராஜனென்றல்லோ பேருண்டாச்சு
வேகாது காடுதீப்பட்டெரிந்தால் வேகமுடன் ஆகாயம்பறக்கும்பாம்பு
போகாது சிறகுடைய சர்ப்பமல்லோ பொங்கமுடன் கண்டறிந்த பாம்புதானே
5599.
பாம்பான மற்றதோர் ஜீவஜெந்து பாரினிலே எத்தனையோ கோடியுண்டு
தீம்பான ஜெந்துக்கள் வையகத்தில் தரளான கணக்குவகை கூறப்போமோ
வீம்புடனே சீவவதை செய்திட்டாலும் வித்தகனே யதற்கொன்றும் தெரியாதப்பா
ஆம்பலுடன் கொட்டியவர் மலர்தல்போலும் வப்பனே யவனிதனி லதிகமுண்டே
5600.
உண்டான புலிப்பாணி மைந்தாபாரு உத்தமனே இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன்
கண்டதொரு வையகத்தில் விருட்சந்தன்னில் காலாங்கி நாதரவர் அறிந்தமட்டும்
அண்டமதில் ஆகாயதேவரெல்லாம் வன்புடனே யுகந்துகொண்ட விருட்சந்தன்னை
சண்டமாருதம்போல விருட்சந்தன்னை சாற்றுகிறேன் புலிப்பாணி மைந்தாபாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

5601.
பாரப்பா புலிப்பாணி மைந்தாகேளு பாண்மையுடன் அறிந்தவரை சொல்வேன்யானும்
சீரப்பா வையகத்தில் விருட்சந்தானும் சிறப்பான கோடியுண்டு லக்கோயில்லை
நேரப்பா கனிவகைகள் கோடியுண்டு நேர்மையுடன் கண்டறிந்து பார்த்ததுண்டு
ஆரப்பா கற்பகமாம் விருட்சந்தானும் அவனிதனில் மாண்பருக்கு உகந்ததாச்சே
**5602.**
ஆச்சப்பா விருட்சவகை கோடியுண்டு வப்பனே கர்ப்பத்தின் விருட்சந்தன்னை
மாச்சலுடன் எதுகேட்டால் தருவேனென்று மகத்தான விருட்சமது கூறும்வண்ணம்
ஏச்சலது வாராமல் இருக்கும்விருட்சம் எழிலான வையகத்தோர்க்கானஜாதி
காச்சலுடன் பூமிதனில் வாழுஞ்சாதி கனமான விருட்சமென்ற மரமுமாச்சே
**5603.**
ஆச்சப்பா மாந்தருக்கு பஞ்சபூதம் வப்பனே வாத்துமமாமென்னலாகும்
மூச்சொடுங்கும் மிருகமதுக் கறிவுநாலு முனையான சீஷனென்றே செப்பலாகும்
பாச்சலுடன் பறக்கின்ற பட்சியப்பா பாங்கான வறிவதுவும் மூன்றேயாகும்
மேச்சலுடன் மார்புதன்னால் நகரும்ஜெந்து மேன்மையுடன் அறிவதுதான் ரெண்டதாமே
**5604.**
இரண்டான விருட்சத்துக்கறிவுவொன்று எழிலான சாத்திரத் தொகுப்பின்கூறு
திரண்டதொரு கவிவாணர் சொன்னவாக்கு திக்கெட்டும் சித்தர்முனி கண்டாராய்ந்து
மிரண்டதொரு மானிடர்க்கு வையகத்தில் மிக்கான தொகுப்புவகை யாவுங்கூறி
காண்டகம்போல் போகரேழாயிரந்தான் காசினியில் பாடிவைத்த பண்பதாமே
**5605.**
பண்பான யின்னமொரு மார்க்கங்கேளு பாங்கான புலிப்பாணி மைந்தாபாரு
நண்பான வையகத்தில் கோடிமன்னர் நாடாண்டு காடுரைந்தார் லக்கோயில்லை
பெண்பான செங்கோலின் பெருமைமார்க்கம் பேரான வமைப்புசிலர்கண்டாரங்கே
சண்டாள வேந்தருக்கு யாதொன்றில்லை சட்டமுடன் போகரிஷிகூறுவேனே
**5606.**
கூறுவேன் சக்கரவர்த்தி என்றுமேதான் குவலயத்தில் பேர்கொண்டு லாபமென்ன
மாறுடைய வேந்தர்களா யவதரித்து மானிலத்தில் மன்னவராயிருந்துமென்ன
வேறுபட மாண்பர்களை வருத்தல்செய்து வேண்டியதோர் நிதியனைத்தும் கொள்ளை கொள்வார்
ஆறுதலங் கட்டறியார் மன்னர்தாமும் அகதிபரதேசியரைத் தேடார்காணே
**5607.**
தானான மன்னர்க்கு முறையேதென்றால் தாக்கான வங்கமது பத்துமுண்டாய்
கோனான அஷ்டசெல்வந்தானுங்கொண்டு கொற்றவனார் பேர்தனையே வகிக்கவேண்டும்
தேனான வெற்றியது எட்டும்பெற்று திரளான பொருளளவும் நான்குங்கொண்டு
மானான நிதியனைத்துங் கொண்டுமல்லோ மகத்தான மங்களமும் எட்டுந்தானே
**5608.**
எட்டான மங்களமும் இருக்கவேண்டும் எழிலான பேறுபதினாறுவேண்டும்
மட்டான கனமெட்டும் இருக்கவேண்டும் மகத்தான விளையாட்டும் எட்டுவேண்டும்
திட்டமாஞ் சேனைதுகை பத்தும்வேண்டும் திகழான புங்கசித்தி யெட்டும்வேண்டும்
வட்டமுடன் போகமது யெட்டும்வேண்டும் வளமான ராஜர்களுக் குகந்தவாறே

5609.
வாறான செருக்கு இருநாலதாகும் வண்மையுள்ள செங்கோலுமேழதாகும்
கூறான கலையதுவும் ஆறும்வேண்டும் குறிப்பான காமமதை மூன்றும்விட்டு
தாறான திரவியங்கள் அனைத்தும்பெற்று தாக்கான தீக்குணங்கள் பத்தும்விட்டு
சேறோடுங் கொங்கையாமும் மணியும்பெற்று சிறப்பான பணிதிமுதல் கொண்டார்தாமே
5610.
கொண்டதொரு வேந்தனுக்கு இதுகள்வேண்டும் கோடான கோடிபொருள் இருந்துமென்ன
அண்டிவந்த யதிதிபரதேசியர்க்கு வன்புடனே கர்ணனைப்போல் யீயவேண்டும்
வண்டணிமார் குடிப்படைகள் தன்னைத்தானும் வளமையுடன் கற்பழிக்கலாகாதப்பா
சண்டமாருதம்போலே செங்கோல்நாட்டி சதுருடனே யாள்பவனே மன்னனாமே
5611.
மன்னனாம் படுகளத்தில் உயிரைத்தானும் மார்க்கமுடன் விடுவதற்கு அஞ்சவில்லாய்
தென்னதன் போல்திக்கெட்டும் புகழவல்லாய் தேசமெங்கும் மாண்பர்களுந் துதிக்கவல்லாய்
இன்னிலத்தில் அவதரித்து மகுடம்பூண்டு எழிலான ராஜாதிராஜனென்றும்
நன்னயமாய் பராபரத்தின் ரூபங்கொண்டு நயமுடனே யவதரித்தோன் வேந்தனாமே
5612.
வேந்தனாஞ் சத்தியத்தில் வாக்குபெற்றோன் வேதாந்த மனோன்மணியாள் அருளும் பெற்றோன்
போந்தமுடன் மகம்மேரு வில்லும்பெற்றோன் புகழான விசயனென்று பேருங்கொண்டோன்
சாந்தமுடன் வேதவழி தன்னிற்சென்றோன் தவந்தனிலே தான்மிகுந்த யோகவானாய்
காந்திமதி கொண்டதொரு விலாசனாக காசினியில் இருப்பவனே யரசனாமே
5613.
அரசனாம் இப்படியே காலாங்கிநாதர் வன்புடனே குளிகையது பூண்டுகொண்டு
முரசுடனே முன்சொன்ன வமைப்புபோல முப்பத்திரண்டரசர் தன்னைக்கண்டார்
திறமுடனே காலாங்கி தாள்பணிந்து தீர்க்கமுடன் அடியேனுங் குளிகைபூண்டு

உரமான பதினாறு அரசர்தம்மை வுத்தமனும் அடியேனுங் கண்டிட்டேனே
5614.
கண்டேனே ராஜாதிசக்கரவர்த்தி காசினியில் நானிருந்த நாட்கள்மட்டும்
உண்டான சக்கரவர்த்தி பதினாறுகண்டேன் ஓகோகோ நாதாக்கள் சொன்னதில்லை
அண்டபுவனங்களெல்லாம் கண்டராஜர் அவனிதனில் இவர்போலுஞ் சித்துமுண்டோ
தண்டவன ரிஷிகளெல்லாஞ் சித்துதாமும் தாரணியில் மறைத்தாரே கோடியாமே
5615.
கோடியா மின்னமொரு மார்க்கங்கேளு குறிப்பான புலிப்பாணி மைந்தாபாரு
நாடியே வடிவேலர் தியானமப்பா நாட்டுகிறேன் யுந்தனுக்கு நன்மையாகும்
கோடியுக மிருந்தாலும் என்னலாபம் குவலயத்தில் கதிபெறவே வழிதான்வேண்டும்
தேடிய பரஞ்சுடரை நண்ணவேண்டி தேசத்தில் உறுதிமனங் கொண்டிடாயே
5616.
கொண்டிடவே வடிவேலர் தன்னையப்பா கூறுகிறேன் வசியமென்ற மார்க்கஞ்சொல்வேன்
கண்டறிய வேணுமென்றால் கைலாசர்தம்மை கருத்தினிலே சதாகாலம் நித்தஞ்செய்து
பண்டதிகமானதொரு பழவர்க்கங்கள் பாலகனே சர்க்கரையாம் அமுதுதானும்
விண்டதொரு வறுகோண நிர்த்தஞ்செய்து விருப்பமுடன் பிரணவத்தைமாறுவாயே

5617.
மாறலென்றால் மேல்மூலங் கீறலொன்று மகத்தான அடிமூலங் கீறலொன்று
ஆறுவுடன் கீழ்த்திகையாம் கீறலொன்று வப்பனே மேற்றிசையாங் கீறலொன்று
மீறலுடன் தென்றிசையாங் கீறலொன்று மேன்மையுடன் வடதிசையாங் கீறலொன்று
வாறலுடன் குணதிசையாங் கீறலொன்று வகுப்பான கீறலது வறுகோணமாமே
5618.
கோணமாம் மூலவரை சூலம்போடு குறிப்பான வரையாறும் மூலஞ்சூலம்
வேணபடி நடுமையங் கரணம்போடு வேகமுடன் சுழிமையம் பிரணவந்தான்
சீனணமதுவாராமல் பிரணவத்தை செப்புகிறேன் வுள்மூலங் கொண்டுமாறு
காணறிய பரஞ்சுடராம் வடிவேலர்தாமும் கர்த்தனைப்போல் வந்துதிப்பார் பாருபாரே
5619.
பாரப்பா மேல்மூலம் ஹரிவோம்பாடு பாங்கான கீழ்மூலம் ஐயுங்கிளியும்
நேரப்பா கீழ்மூலம் சௌவும் ஶ்ரீயும் நேர்மையுடன் ஹரியுடனே இம்மென்றோது
சீரப்பா அங்குடனே லிங்வங்ஓங் சிறப்பான சிங்குடனே ஆங்கென்றோது
ஆரப்பா மங் யங் நங் நங்கென்றேசொல்லு வப்பனே சிவசுப்பிரமணியென்பாயே
5620.
என்னவே அம்பிகை பாலாவாவா எழிலான சரவணபவனேவாவா
துன்னவே வசி வசி வருக வருக துப்புரவாய் சுவாஹாயாசிரோமணியே வாவா
பன்னவே பிரணவத்தையோதும்போது பாலகனே சுப்பிரமணியர் நிர்த்தஞ்செய்வார்
மின்னவே மயில்வாகன ரூபராக மீட்சியுடன் தரிசனைக்கு உள்ளாவாரே
5621.
உள்ளதொரு வறுகோணம் நடுமையத்தில் வுத்தமனே நாமிருந்து நிர்தஞ்செய்தால்
கள்ளமது வாராமல் சுப்ரமணியர்காட்சியுடன் உந்தனுக்கு வரமேயீவார்
எள்ளளவு குறையாமல் பிரணவந்தான் எழிலான வட்சரத்தை லட்சம்போடு
தெள்ளுமணி பாலகனார் முன்னேநிற்பார் சிவசுப்பிர மணியனெனச் சொல்லலாமே
5622.
செப்பலாஞ் சுப்பிரமணியனென்பார்பாரு சிறப்பான மனிதனல்லால் வேறொன்றில்லை
ஒப்பமுடன் நீநினைத்த சுப்பிரமணியன் ஓகோகோ நாதாந்தக் கடவுளாச்சு
எப்படியும் நாதாந்தக் கடவுளுக்கு எழிலான வவதார புருஷனென்றும்
இப்படியே கோடான கோடிநாமம் எழிலான சாத்திரங்கள் சொல்லலாச்சே
5623.
சொல்லவே யவரவர்கள் தக்கநேர்மை சுந்தரனே தன்மனதில் அயிக்கியங்கொண்டு
வெல்லவே பலவிதமாம் தெய்வம்போலே விசாரணைகளில்லாமல் பேதைநெஞ்சாய்
புல்லவே கவிவாணர் கட்டுவாக்கியம் புகழாகப் பலப்பலவாம் நாமந்தன்னை
சொல்லவே நற்கடவுளென்றுசொல்லி செம்மலுடன் மதிகெட்டுந் துதிப்பார்பாரே
5624.
பாரப்பா பூலோகக் கர்த்தனுக்கு பாங்கான மூன்றுபேர் வகுக்கலாச்சு
நேரப்பா ஹரியென்றும் பிர்ம்மாவென்றும் நெடிதான சாத்திரங்கள் கூறலாச்சு
சீரப்பா நாமமது மூன்றுமல்லோ சிறப்பான கடவுளுக்குப் பேருமாச்சு
தேரப்பா தேசாதி தேசமெல்லாம் செப்பினார் பலநூலுஞ் சொன்னார்தாமே

5625.
சொன்னாரே கடவுளல்லால் வேரொன்றில்லை சுந்தரனே கடவுள்தனைக்காணமாட்டார்
மன்னவனே தெய்வமதைக் காணுதற்கு மகத்தான திருஷ்டாந்திரம் ஏதென்றாக்கால்
தென்னவனே தேவஸ்தானந்தன்னில் திகழான மணியோசை கேட்குமல்லோ
முன்னவனே மணியோசை கேட்கும்போது முனையான மணியொன்று இருக்கலாச்சே
5626.
இருக்கவென்றால் மணியென்ற கருவொன்றுண்டு எழிலான கருவதனைக் கண்டதில்லை
திருத்தமுடன் மணியோசைக் கேட்டபோது திகழான மணியொன்று இருக்கும்பாரு
பொருத்தமுடன் வையகத்திலதிசயங்கள் பொங்கமுடன் கோடானகோடியுண்டு
வருத்தமுடன் பிறப்பதுவும் பிறப்போர்தம்மை வளப்பமுடன் மழைதனையே கண்டிட்டோமே
5627.
கண்டோமே லோகபதி வதிசயங்கள் காசினியில் வேரொன்று காண்பதேனோ
அண்டமுடன் வுலகுபதிக் கடவுள்தானும் வன்புடனே இருப்பதற்கு ஐயமுண்டோ
உண்டான சாத்திரங்கள் பேதாபேதம் வுத்தமனே பாடிவைத்தார் அனேகமுண்டு
சண்டான முறைமைகெட்டு சாத்திரங்கள் செப்பினார் மாண்பர்தாமே
5628.
மாண்பரா மின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான புலிப்பாணி மைந்தாபாரு
ஆண்மையுள்ள மாடனவன் வசியமப்பா வவனிதனில் யாரறிவார் சித்துமாண்பர்
காண்மையுள்ள கருவாளி யறிவான்பாரு காசினியில் சண்டாளன் சத்துருவேதை
பாண்மையுள்ள கர்மிகட்கும் மர்மிகட்கும் கருவான மாடன்மந்திரமுமாமே
5629.
மந்திரமாம் மாடனது வசியத்தாலே மகத்தான மாண்பரெல்லாம் வசியமாவார்
எந்திரமாம் மாடனதிபிரணவத்தால் எழிலான தேவதைகளெல்லாஞ் சித்தி
தந்திரமாம் மாடனது மந்திரத்தை தண்மையுடன் சொல்லுகிறேன் தயாளபாலா
சுந்தரமாங் கருவறிந்த மாந்தரப்பா சூட்சமுடன் செய்வான்பார் மர்மிதானே
5630.
தானான பிரணவங்கள் ஏதென்றாக்கால் தண்மையுள்ள ஹரிஓம் கேளென்றபோது
கோனான அகோரமடா கம்பீராயா குறிப்பான அகோரதர்க்க வாழ்முனீசா
தேனான ஸ்ரீங்கார பகவதிபுத்திரா தெளிவான வீராதிவீரமாடா
வானான சமானமென்ற சுடலைமாடா மகத்தான என்வார்த்தை கேட்டிட்டாயே
5631.
கேட்கவென்றால் உத்திரவின் மாடாகேளு கெடியான என்வார்த்தைக் கைவிடாதே
தாட்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணியாள்பாதம் தயங்காமல் முன்னின்று கார்க்கவென்று
வேட்கையுடன் கிருபையருள் வினோதமாடா வீறான ரீங் சௌவுங் கிளியென்றோது
சூட்சமுடன் மய் ஐயுங் கிளியென்றோது சுடறான ரீங்குடனே வாவா வென்றோதே
5632.
ஓதையிலே லட்சமது வுருவுபோடு ஓங்காரமிட்டல்லோ வசியமோது
நீலமுடன் ரீங்கார சப்தவோசை நிலையான அஷ்டசித்துக் கிதுவேமூலம்
போதமுடன் மாடனது பிரணவத்தால் பொங்கமுடன் முப்பத்திரண்டுபூதம்
தோகமுடன் மாந்தருக்குள் வசியமாச்சு தொல்லுலகில் இப்படியே பிழைப்பார்காணே

5633.
காணவே ஜெபதபத்தி லிருந்துகொண்டு கருவான பிரணவத்தை வுச்சரித்தால்
பூணவே ஏவல்பில்லி சூனியங்கள் பொல்லாத கறுப்பண்ணன் யேவல்சண்டி
தோணவே பாவாடைராயன் காத்தன் தோறாத பிரணவத்தால் எல்லாஞ்சித்தி
வேணதொரு மாடனது வசியத்தாலே வெட்டவெளி தேவதைகள் கைக்குள்ளாச்சே
5634.
ஆச்சப்பா மந்திரமாம் மூலமந்திரம் வப்பனே கண்டவர்க்கு எல்லாஞ்சித்தி
மூச்சடங்கிப் போனதொரு பிசாசுதந்திரம் முனையான பிரணவத்தால் பேசலாகும்
கூச்சலுடன் தலைசுழட்டி யாடும்பேய்கள் கொப்பெனவே பிரணவத்தை கண்டாலோடும்
ஆச்சரிய மானதொரு மாடன்மந்திரம் வப்பனே போகரிஷி வசனித்தேனே
5635.
வசனித்தேன் லோகாதி மார்க்கந்தன்னை வளமுடனே கண்டறிந்த ஞானவான்கள்
நிசமென்று நம்பார்கள் பசாசுமார்க்கம் நிலையான ஜெபத்தினால் தவத்தினாலும்
தசமதுவாய் லட்சமது வுருவுகொள்ள தாரணியில் காலமென்ற மரணத்தாலே
வசமுடனே மடிந்ததொரு வாத்மந்தானும் வளமான எந்திரத்தி லடக்கமாமே
5636.
அடக்கமாஞ் சூனியங்கள் எல்லாம்பொய்யாம் வப்பனே கருவதனால் வெல்லலாகும்
திடமுளஃள செம்பதத்தில் எல்லாஞ்சித்தி தாக்கமுடன் ஜெபத்தினால் வசிரமாகும்
மடலான மாடனது மந்திரத்தால் மகத்தான முடிமன்னர் வசியமாவார்
கடல்போன்ற மாந்திரீகமெல்லாமப்பா கருவான மாடனுக்கு ஈடாகாதே
5637.
ஈடான மார்க்கமது யின்னஞ்சொல்வேன் யெழிலான புலிப்பாணி மைந்தாகேளு
நாடான தேசமது நாடுவிட்டு நாதாந்தக்காலாங்கி கிருபையாலே
தாடாண்மைகொண்டல்லோ குளிகைபூண்டு தகமையுடன் சீனபதிவிட்டுயானும்
காடான மலைகுகைகள் வனாந்திரங்கள் கருவான வழியதுவுங் கடந்தேன்பாரே
5638.
பாரேதான் மலையாள தேசங்கண்டேன் பாங்கான பெண்கள் மலையாளமப்பா
நேரேதான் குளிகைவிட்டு கீழிறங்கி நேர்மையுடன் பகவதியாள் தேவஸ்தானம்
சேரேதான் தூமாதேவி கோயிலப்பா சிறப்பான தோப்புகளும் மடுவுங்கண்டேன்
தீரேதான் மடுவதனில் இறங்கியானும் தீர்க்கமுடன் ஸ்நாணமது செய்தேன்பாரே
5639.
பாரப்பா தூமாதேவி தேவஸ்தானம் பாங்குடனே தோப்பருகில் இருக்கக்கண்டேன்
நேரப்பா கன்னிகளோ வாயிரம்பேர் நேர்மையுடன் பச்சைபல்லாக்குகொண்டு
சீரப்பா தூமாதேவி தன்னைத்தானும் சிறப்புடனே பல்லாக்கு சாரிகொண்டு
ஊரப்பா காவனத்தை சுற்றியல்லோ வுத்தமனே கன்னிகளும் வருவார்தாமே
5640.
வருகுவதும் போகுவதும் சேர்வைகண்டேன் வளமான தூமதா தேவிதன்னை
குருவான தேவதையைக் காணவென்று குடிலமுடன் கன்னிமார் பெண்களைத்தான்
திருவான காவணத்தே யடியேன்தானும் திறமுடனே சுத்திவந்து காணும்போது
குருவான சித்தொருவர் அங்கிருந்தார் கொற்றவனே யடியேனுங் கண்டிட்டேனே

5641.
கண்டேனே சித்துமகா புருஷர்தம்மை கருவான சித்தொளிவு மென்னைக்கண்டார்
அண்டமதில் குளிகைகொண்டு யிறங்கிவந்த வப்பனே சிறுபாலா யாரென்றார்கள்
தெண்டமுடன் அடியேனும் முடிவணங்கி தேற்றமுடன் காலாங்கி சீஷனென்றேன்
சண்டமாருதம்போல குருசித்துதாமும் தண்மையுடன் மனதுவந்து சிரித்திட்டாரே
5642.
சிரித்துமே குருபரனார் என்னைப்பார்த்து சிற்றின்ப சிறுபாலா கேளு கேளு
திரிவான துவாபரயுகத்திலப்பா திகழுடனே காலாங்கி யடியேன்தானும்
பரிபோகச் சினேகிதராய்க் குளிகைபூண்டு பாருலகஞ் சுற்றிவருங் காலந்தன்னில்
சரியான நாகமலை பருவதத்தில் சட்டமுடன் உச்சிமுகங் கண்டிட்டோமே
5643.
கண்டோமே கழுக்குன்று சித்துதம்மை கைலாசநாதரும் எங்களுக்கு
திண்மையுடன் உபதேசம் சொன்னாரங்கே தீர்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு
வண்மையுடன் காலாங்கி நாதர்தாமும் வளமுடனே சீனபதிக்கேகினார்கள்
உண்மையாய் அடியேனும் குளிகைபூண்டு வுத்தமனே மலையாளம் வந்திட்டேனே
5644.
வந்தேனே எந்தனது சினேகபாலா வகுப்பான மலையாள தேசந்தன்னை
சந்தோஷமாக இக்காலமட்டும் சதுரான காவணத்தில் அடியேன்தானும்
நிந்தனைகளில்லாமல் மாண்பர்முன்னே நிஷ்களங்கமாகியல்லோ சமாதிகொண்டே
சிந்தனையை விட்டல்லோ வையகத்தில் சிறஃபரனை நண்ணியல்லோ இருக்கின்றேனே
5645.
இருக்கிறேன் துவாபர யுகந்தொடங்கி எழிலாக இந்நாளும் வுறுதியாக
திருக்கமலம் வீற்றிருக்கும் தூமாதேவி திகழான சன்னிதியைப் பாதுகாத்து
உருக்கமுடன் பத்மாசனத்திருந்து வுத்தமனே காலமதை கழித்துக்கொண்டு
பெருகமுடன் கன்னிமார்பூசையோடும் பேரின்ப நிலைதனிலே நிற்கின்றேனே
5646.
நிற்கின்றேன் தூமதாபதியிலப்பா நிலையான ஷேத்திரத்தில் வெகுகாலந்தான்
துற்கையெனும் மலையாள சன்னிதானம் துப்பரவாய் சமாதிமுகம் இருந்துகொண்டு
அற்பமென்ற லோகபதி யதிசயத்தை யருள்கடந்து கடல்கடந்து வன்பவனாய்
சற்பமென்ற சடாபாரந் தலையிலேந்தி சாங்கமுடன் மலையாளம் அமர்ந்திட்டேனே
5647.
இட்டேனே காலாங்கிநாதசீஷா எழிலாக எந்தனைநீ கண்டதாலே
சட்டமுடன் மனதுவந்து யுந்தனுக்கு சாங்கமுடன் தூமதாதேவி மந்திரம்
திட்டமுடன் வுந்தமக்கு யுபதேசங்கள் சிறப்பான தேவதா பிரணவத்தை
வட்டமுடன் உந்தனுக்கு உபதேசிக்கும் வளமையுடன் எந்தனது பாரந்தானே
5648.
பராபரமாங் காலாங்கி நாதசீஷா பட்சமுடன் பிரணவத்தை சொல்லக்கேளிர்
தீரமுடன் ஓமென்ற வட்சரத்தை தீர்க்கமுடன் எந்தனுக்கு உபதேசித்தார்
வீரமுடன் தூம் தூம் என்றேசொல்லி விருப்பமுடன் பிரணவத்தை யுச்சாடித்து
கோரமுடன் கிலி கிலி யென்றேசொல்லி கொற்றவனே ஸத்தம்பய வென்றிட்டாரே

5649.
என்றாரே அண்டமதைத் தான்பிடுங்கி எழிலான வாகாயந் தனிலெறிந்து
குன்றான நாற்கடலுந் தத்தளிக்கக் குறிப்புடனே என்முன்னே ஓடிவாவா
சென்றுமே ஐயுங்கிலியும் சௌவுமென்று செப்பினார் பிரணவத்தை என்முன்நிற்க
வென்றிடவே லட்சமுரு வோதுவோது வுத்தமனே வசி வசி சுவாஹாயென்னே
5650.
என்னவே மண்டலத்தில் வசியமாச்சு எழிலான தூமதா தேவிமந்திரம்
சொன்னதொரு மந்திரத்தால் அஷ்டசித்தி சுந்தரனே யுந்தமக்கு பலிக்கும்பாரு
பன்னவே குளிகையது பூண்டுகொண்டு பாருலகஞ் சுற்றிவருங் காலந்தன்னில்
முன்னமே சித்துமுனி ரிஷிகள்தாமும் மூர்க்கமுடன் சபித்திடவே வருவார்பாரே
5651.
பாரேதான் உந்தனையும் சபிக்கவந்தால் பாலகனே தூமதாபிரணவத்தை
நீரேதான் உச்சாடம் செய்யும்போது நிஷ்களங்கமாகியல்லோ வணங்கியுன்னை
சேரேதான் அருகழைத்து யுந்தனுக்கு செப்புவார் வேணவுபதேசமெல்லாம்
வேரேதான் உபதேசம் உந்தனுக்கு வேண்டுமோ தூமதாமந்திரந்தானே
5652.
தானான தூமதா மந்திரத்தால் சட்டமுடன் தரணிதனை ஜெயிக்கலாகும்
கோனான யிடையூறு வந்தபோது கொற்றவனே மந்திரவுச்சாடனத்தை
தேனான மனோன்மணியைத் தானினைத்து செப்பிடவே யுந்தனுக்கு எல்லாஞ்சித்தி
பானான தேவதா மந்திரத்தை பட்சமுடன் ஆருக்குஞ் சொல்லொண்ணாதே
5653.
ஒண்ணான குருமந்திரம் தேவதாமந்திரம் வுத்தமனே புலிப்பாணி யுந்தனுக்கு
திண்ணமுடன் உபதேசஞ் செய்தேனப்பா தீர்க்கமுடன் எந்நாளும் மனதிலுன்னி
வண்ணமுடன் வுந்தனுக்கு இடையூற்காலம் வந்திட்டால் பிரணவத்தை வுச்சாடித்து
தண்ணமுடன் சின்மயத்தி லிருந்துகொண்டு சதாநித்தம் தேவியைநீ போற்றுவாயே
5654.
போற்றுகிறேன் யின்னமொரு வசியங்கேளு புகழான புலிப்பாணி மைந்தாபாரு
ஆற்றலுடன் கறுப்பண்ணன் வசியந்தன்னை வப்பனே மாணாக்கள் பிழைக்கவென்று
மாற்றவே குளிகையது பூண்டுகொண்டு மகத்தான சீனபதி விட்டுமல்லோ
ஏற்கவே மலையாள பதியிலப்பா எழிலாக வாறாண்டு இருந்திட்டேனே
5655.
இருந்தேனே தூமதா தேவஸ்தானம் எழிலான சன்னிதிக்கு வடபாகத்தில்
பொருந்தவே சமாதியது யானுங்கண்டேன் பொங்கமுடன் கறுப்பண்ணன் விருட்சமுண்டு
திருந்தவே குளிகையது யானும்விட்டு தீரமுடன் சமாதிபுரம் நிற்கும்போது
அருந்தவசி யங்கொருவர் இருந்தாரப்பா வப்பனே எந்தனையுங் கண்டிட்டாரே
5656.
கண்டாரே சித்துமகா ரிஷியார்தாமும் கருத்தாக எந்தனைத்தான் கண்டபோது
திண்மையுடன் யாரென்று என்னைக்கேட்க தீர்க்கமுடன் காலாங்கி சீஷனென்றேன்
வண்ணமுடன் தாள்பணிந்து வடியேன்தானும் வளமாக சிரங்குனிந்து தெண்டனிட்டேன்
கண்ணபிரான் தன்னைப்போல் ரூபங்கொண்ட கர்த்தாவும் எந்தனையும் மதித்திட்டாரே

5657.
மதித்துமே எந்தனையும் ஆசீர்மித்து மகிழ்ச்சியுடன் ஞானோபஞ் செய்வேனென்றார்
துதித்துமே யடியேனும் மனதுவந்து துப்புரவாய் தமதுடைய பாதாரந்தான்
மதித்துமே வையகத்தில் அடியேன்தானும் வளமையுடன் சதாநித்தங் குருவென்றெண்ணி
கதிப்புடனே காலாங்கி என்றுசொல்லி கர்த்தாவே எந்நாளும் மறவேன்தானே
5658.
மறவேனே என்றுசொல்லி மனங்களித்து மார்க்கமுடன் அடியேனுங் கூறும்போது
திறமான சமாதியிது கறுப்பண்சமாதி தீரமுடன் விருட்சாதி விருட்சத்தின்கீழ்
உறமுடனே வெகுகோடி காலமாக வுத்தமனே சமாதியிட தவசியானும்
குறைவதுவும் நேராமல் கோடிகாலம் கொற்றவனே யானுமல்லோ இருந்திட்டேனே
5659.
இட்டேனே வெகுகோடி காலமப்பா எழிலான கருப்பண்ணன் சமாதிபக்கல்
வட்டமுடன் எத்தனையோ கோடாகோடி வண்மையுள்ள தவசிகளும் வருவார்போவார்
சட்டமுடன் கறுப்பனுக்கு எதிரானோர்கள் சாங்கமுடன் இதுவரையிற் கண்டதில்லை
திட்டமுடன் கறுப்பண்ணன் வசியந்தன்னை தீர்க்கமுடன் அனேகம்பேர் கேட்டிட்டாரே
5660.
கேட்டாரே வெகுமாண்பர் கேட்டாரப்பா கெடியான கறுப்பண்ணன் வசியந்தன்னை
வாட்டமுடன் ஒருவருக்குஞ் சொன்னதில்லை வண்மையுடன் எந்தனுக்கு உபதேசித்தார்
தாட்டிகமாய் குளிகையது பூண்டுகொண்டு தண்மையுடன் போகுகின்ற வுனக்குமைந்தா
நீட்டமுடன் பிரணவத்தை யுபதேசித்தேன் நிஷ்களங்கமாகவல்லோ கேளுகேளே
5661.
கேளேநீ என்றுசொல்லி பிரணவத்தை கெணிதமுடன் எந்தனுக்கு உபதேசித்தார்
பாளேதான் போகாமல் பிரணவத்தை பங்கமுடன் உந்தமக்கு உபதேசித்தேன்
ஆளேதான் மந்திரமோ பிரணவந்தான் வப்பனே ஓம் சங்கரி சங்கரியென்ன
வீளேதான் வுச்சாட மந்திரத்தை விருப்பமுடன் சங்கரியே வாவாவென்னே
5662.
என்னவே தேவதா கறுப்பண்ணன்பாலா யெழிலான வுக்கிர கறுப்ப்பண்ணா வாவா
துன்னவே ஆகாகா காளியொடுங்கறுப்பா துடியான வாங்கார முள்ளதீபா
யன்னவே அம் அம் அம் மென்றேவோது பட்சமுடன் கடுகெனவே வந்துநிற்பாய்
சொன்னபடி ஆஞ்சநேயர் முகனேவாடா சுந்தரனே கொஞ்சியென்ற சடையோன்தானே
5663.
தானான அந்திசந்தி தன்னில்நின்று தலையுருட்டு கறுப்பண்ணா தயாளபாலா
கோனான மாலைதனில்மயங்கும் கறுப்பா கொற்றவனே அடி அடி பிடி யென்றோது
வேனான அங் அங் கென்றேயோது விருப்பமுடன் ஆவேசு ஆவேசு யென்றும்
பானான அகோர கறுப்பண்ணா வாவா பாலகனே சீக்கிரமே வாவாவென்னே
5664.
சீக்கிரமாஞ் சிவாயனம வென்றேயோது சிறப்புடனே பிரணவத்தை யுச்சரித்து
சாக்கிரதை யாகவல்லோ கறுப்பன்தன்னை தகமையுடன் வுச்சாடித் தடுமையாக
வாக்கு தப்பாமலே யுருவுபோடு வளமுடனே மண்டலந்தான் லட்சம்போடு
நாக்கதுவும் பிசகாமல் நளினபாலா நயமுடனே வுச்சாடஞ் செய்வீர்காணே

5665.
காணவென்றால் வுச்சாட வசியத்தாலே கருவான கறுப்பண்ணன் முன்னேநிற்பான்
தோணவே பிரணவத்தால் அஷ்டசித்தி தோறாமல் உந்தனுக்கு பலிக்கும்பாரு
பூணவே யஷ்டமாசித்தியோடும் புகழான தேவதைகள் எல்லாஞ்சித்தி
நீணவே சின்மயத்தி லிருந்துகொண்டு நிஷ்களங்கமாகவல்லோ வோதுவீரே
5666.
ஓதவென்றால் புலிப்பாணி மைந்தாகேளு வுத்தமனே சத்துரு மாரணந்தான்சொல்வேன்
நீதமுடன் சத்துருவின் பிரணவத்தை நிகட்சியுடன் யாரறிவார் வுலகில்மாண்பர்
தோதமுடன் கருவாளி காண்பான்பாரு தொல்லுலகில் மற்றவருங் காணமாட்டார்
நாதமென்ற மனோன்மணியாள் கிருபையாலே நாதாந்த சித்தொளிவுங் காண்பான்பாரே
5667.
பாரேதான் எதிராளி சத்துருதன்னை பாங்குடனே மரணத்தாற் கொல்லுதற்கு
நேரேதான் பிரதமைபோல் பாவுசெய்து நெடிதான மண்பாத்திரந் தனிலமைத்து
சீரேதான் நடுமையம் வுந்திதன்னில் சிறப்புடனே வறாகமென்ற முள்ளையப்பா
வீரேதான் நடுமையந் தனிலமைத்து விருப்பமுடன் வசிதனையே மாட்டிடாயே
5668.
நாட்டுவாய் காந்தமென்ற வூசிதன்னை நலம்பெறவே முப்பத்திரண்டுவூசி
நீட்டமுடன் கால்பத்து கரங்கள்பத்து நெடிதான வசிதனையே நாட்டிட்டாய்நீ
வாட்டமுடன் யிருவிலா நெஞ்சுதன்னில் வளமான கீலெட்டும் வசிகள்நாட்டி
தேட்டமுடன் பஞ்சகருனை யெடுத்து தெளிவுடனே பாவுதனில் தூவிடாயே
5669.
தூவிடவே கருவினது மார்க்கங்கேளாய் துகளற்ற சாலியனார் மண்ணுங்கூட்டு
ஆவியெனும் மானிடரின் மாசானச்சாம்பல் வப்பனே எதிராளி பாதநூளும்
நாவிதனார் கையழுக்கும் மலத்தினுப்பும் நலம்பெறவே தானெடுக்க பஞ்சகோசம்
பாவியெனுஞ் சண்டாளப் பதுமைக்கப்பா பாங்குடனே ஐங்காயந் தானுஞ்சேரே
5670.
சேர்த்துமே லலாடமதிலிட்டு மைந்தா செம்மலுடன் அம்மென்று கும்பித்துமல்லோ
ஆர்த்துமே பிரணவத்தை யுச்சாடித்து வன்புடனே லட்சமது வுருவுபோடு
கோர்த்துமே வுருவதனால் எல்லாஞ்சித்தி கொற்றவனே சின்மயத்திலிருந்துகொண்டு
பார்த்துமே நவகோண பீடந்தன்னில் பக்குவமாய் சொரூபநிலை நின்றிடாயே
5671.
என்னவே திரிசூலி பிரணவத்தை எழிலான சத்துருவின் பாவுக்கல்லோ
சொன்னபடி மந்திரமாம் வட்சரத்தை சோறாமல் தானுரைத்து வுருவுபோடு
நன்னயமாய் வுருவதும் ஏதென்றாக்கால் நலமான ஹரிஹரி யென்றேயோது
குன்றான அரனொளி சக்கரத்தை கொற்றவனே சொரூபமதில் நின்றுஓதே
5672.
ஓதவே திரு திரு யென்றேயோது ஒளிவான சக்கரத்தை பின்னுமோது
நீதமுடன் திருபுரையின் புவனைவாலை நிலையான ஓம்பத்திரகாளி வாவா
தோதமுடன் சத்துரு சம்மாரிவாவா தோறாமல் ஓம்ஓம் யென்றேயோது
ஆதமுடன் வுன்கையில் கபாலமேந்தி கண்டகோடாளியென்னே

5673.
கோடாலி யென்றதொரு பீஜமோது கொற்றவனே அகோரமென்ற கோரவாவா
தாடாண்மை கொண்டதொரு உக்ர உக்ர தண்மையுள்ள புகைபுகை தனியேவாவா
பாடான்மை பெற்ற ஜலஜலமேவாவா பாங்கான கும்பய கும்பய மென்றேயோது
நீடாண்மை ஹணஹண நீயேவாவா நிகட்சியுடன் தகதக யென்றேயோதே
5674.
என்றவுடன் பாஷயபாஷய வென்றேயோது எழிலான அம்இம் குரோம் யென்றேயோது
வென்றிடவே லலி லலி லாங் கென்றேயோது வேதாந்தத் தாயினது கிருபையாலே
சென்றாடவே லிலி லிலி கிலி கிலி யென்றேயோது செயலான லுலு லுலு லும்யென்றோது
தென்றிசையாற் பரிபாஷை குறையாமற்றான் செயலான வட்சரத்தை யோதுவீரே
5675.
ஓதுவீர் உயிரென்ற பிரணவந்தான் ஓகோகோ நாதாக்கள் சொல்லமாட்டார்
தீதுபுகழ் அட்சரங்கள் கூறொண்ணாது தீரமுடன் மம மம வசங்கென்றோது
வாதுகுரி சிவ சிவ யாமென்றேயோது மகத்தான குரு குரு வாவென்றோது
சூதுபுகழ் ஓம் கிலிம் கிலியும் வா வா சுந்தரனே பகவதியே சுடரென்றோதே
5676.
சுடறான ஓங்குடனே பாஷாங்குசத்ரி சுத்தமுள்ள சூலிசூலி வா வா வா வா
தடமான சொரூபமதில் நக நக வென்றோது தாக்கான கலைவகுத்து தகதக வென்றோது
திடமுடனே எகுட எகுட வட்சரத்தை தீர்க்கமுடன் தலைசுழற்றி மாறுமாறு
சடமுடனே கும்பகரூம்பகமென்றோது சாங்கமுடன் சுவரலாமென்றோதல் கூறே
5677.
கூறவே சுசீசுவாலாம் யென்றேயோது குறிப்பான பிரணவத்தை தலைகீழாய்மாறு
மாறவே பிரதிசுவாலமென்றேயோது மகத்தான அக்கினிச்சுவாலாவென்று
ஆறவே நரதிர யென்றேயோது வப்பனே கருவான பீஜமாகும்
மீறவே கோமாங்கிஷ பட்சணியே வாவா மிக்கான பாஜிபந்துபந்தென்றோதே
5678.
பந்தான பந்ததுவும் குருபீஜமாகும் பாங்கான அகோரகோர வட்சரந்தான்
சிந்தனையில் தானினைக்கு மாறுமாறு சிறப்புடனே டாட்டேடாட்டே யென்றேயோது
தொந்தமுடன் ஐயுங்கிலியும் தற்கொவ்வாது சூதான வட்சரந்தான் அதர்வணமேயாகும்
பந்தமுள்ள வட்சரங்கள் ஒவ்வொன்றுதானும் பாலகனே யொன்றுக்கொன்று உயிருமாமே
5679.
உயிரான மெழுத்துக்கு ஒவ்வொன்றுக்கும் வுத்தமனே பஞ்சபூத ஆவியுண்டு
பயிலான வட்சரந்தான் மாமாமாகி மகத்தான ராம்ராம் ரீம் மென்றோது
பயிலான வட்சரந்தான் ரூம்ரூம் மாகும் ஆக்குருஷா ஆக்குருஷாயாகும்
ஒயிலான கிலியும்சௌவும் ஐயம்மாகும் வுத்தமனே பகவதிஓம் மென்றேயோதே
5680.
ஓம்யென்ற அட்சரந்தான் சத்துருசங்காரம் ஓகோகோ நாதாக்கள் மறைத்துவைத்தார்
ஆமென்ற சத்துருவை மடிமடியென்றோது வப்பனே மசி மசி நசி நசியென்றோது
ஏம்யென்ற வட்சரந்தான் படுபடு சுவாஹா எழிலான மித்துருவுக் கிதுபோலுண்டு
தீம்யென்ற சுடரான வட்சரந்தான் தீர்க்கமுடன் மித்துருவிங் குண்டேபாரே

5681.
உண்டான வட்சரத்தால் பகையாளிதம்மை வுத்தமனே ரோகமதை விளைக்கலாகும்
கண்டாலும் விடுவார்கள் புத்திமான்கள் காசினியில் யாரறிவார் இந்தப்போக்கு
திண்டான சாத்திரங்கள் ரிஷிகள் தேவர் தீர்க்கமுடன் இந்நூல்போல் சொன்னாரில்லை
பண்டான பிரணவத்தால் பாரில்மாண்பர் பார்தனிலே மாளுவது திண்ணந்தானே
5682.
தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு
கோனான மாரணத்தால் மடிந்தோர்தம்மை கொற்றவனே எழுப்புதற்கு மார்க்கஞ்சொல்வேன்
தேனான மனோன்மணியாள் பாதம்போற்றி செப்புவேன் மாணாக்கள் பிழைக்கவென்று
பானான சாத்திரத்தின் யுயிரெழுத்தை பாருலகில் பாடுகிறேன் பண்பாய்த்தானே
5683.
பண்பான அதர்வணத்தால் மடிந்தோர்தம்மை பாலகனே விதிப்படியே கொண்டுவந்து
நண்பான மசானமென்ற கரையிலப்பா நாயகனே சடங்கதுபோல் சவத்தைத்தானும்
திண்மையுடன் தானிறுத்தி காவலோடும் தீரமுடன் காளியின்தன் வசியத்தாலே
உண்மையாய் பிரணவத்தை யுச்சாடிக்க வுத்தமனே வுயிரதுவும் வருகும்பாரே
5684.
பாரென்றால் பிரணவங்கள் ஏதென்றாக்கால் பாங்கான ஹரிஓம் கிலியும் சௌவும்
நேரேதான் அம் மம் இம்மென்றேயோது நெடிதான கும்பகத்தின் அட்சரந்தான்
சீரேதான் சிங்லிங்வங்கென்றேயோது சிறப்பான ரீங்ரீங் ரீங் ராவென்றேயோது
தீரேதான் யௌவும்சௌவும் கிரீமென்றோது தீர்க்கமுடன் பிரணவத்தை யோதுவாயே
5685.
ஓதவே ரூம் ரூம் லூம்மென்றோது வுத்தமனே லௌவுடனே வெள்வென்றோது
நீதமுடன் ஞௌவுடனே பௌவென்றோது நிலையான லாடகவி பிரணவந்தான்
சாதகமாய் சுடல்காத்தான் மசானங்காத்தான் சாங்கமுடன் ருத்ராவி ருத்ரவீரி
ஆதமுடன் மசானத்தின் எல்லைக்காரி அதிகாரி வரிச்சந்திர பகவான்காணே
5686.
காணவே வாய்க்கரிசிக் குடையதேவா கருவான தரமாங் காளிவசியா
பூணவே செம்பூசி நாட்டும்பாலா புகழான வுந்தியென்ற வூசிநீதான்
வேணவே விருட்சமென்ற வடமூலந்தான் மிக்கான வேர்பிடுங்கி வசியதேவா
ஆணவத்தில் மிகுந்ததொரு அகோரதீரா வப்பனே சோடசங்களுடையோன்தானே
5687.
சோடசமாம் பதினாறு கரமும்பெற்ற சூலமுடன் கையேந்தும் டாகினிவாவா
பாடமுடன் மசானதுர்க்கி வாவா பார்மீது சிம்பத்தின் பகவதிவாவா
ஆடலுடன் சங்கீதம் வாத்தியங்கேட்கும் வன்பான அகோரவீர காளிவாவா
கூறலுடன் தென்கூடப் பதியமர்ந்து கோடாலி யுதிரபலி கொள்ளுந்தேவே
5688.
கொள்ளவே குடற்பிடுங்கி மார்பிற் ஜெஞ்சம் கொடியதொரு எதிராளி சத்துருமாரி
துள்ளவே யதர்வணத்தைத் தலைகீழாக்கி துப்புரவாய் முடியோடு மாலைபூண்டு
விள்ளவே வாய்க்கரிசி துள்ளிவீழ விஷங்குடித்த வாயாலே யமுர்தங்கொள்ளு
உள்ளபடி யமுர்தரசங் கொள்வாயப்பா வுத்தமனே போனவுயிர் வாவென்றோதே

5689.
ஓதவே தலைமாடு கால்மாடாக்கி வுத்தமனே சபந்தனையே பீரட்டுவாய்நீ
சாதகமாய் சடாட்சரபவனே வாவா சட்டமுடன் போனவுயிர் திரும்பிவாவா
வேதனைகள் நீங்கியல்லோ வுருட்டிப்பார்த்து வேகமுடன் அதர்வணந்தான் இல்லையில்லை
தூதனையுங் காலனையுஞ் செபித்தேனென்று துப்புரவாய் லட்சமுரு போடுபோடே
5690.
போடப்பா நாதாந்த வுள்ளெழுத்தை பொங்கமுடன் லட்சமுரு போடுபோடு
ஆடப்பா மசானகரை நின்றுகொண்டு வப்பனே வாசல்வழி தடைகள்கட்டி
நீடப்பா வரிச்சந்திரன் காவல்முன்னே நிச்சயமாய் அதர்வணத்தால் சிக்கினோனை
பாடப்பா மசானகரை விட்டுவிட்டு பார்மீது ஓடிவிடு ஓடென்றாரே
5691.
ஓடென்ற வுச்சாடங் கூறும்போது வுத்தமனே யதர்வணமும் நீங்கியல்லோ
நீடென்று வஸ்துசுத்தி பானஞ்செய்து நிலையுடனே பாலமிர்தம் வாயிலிட்டு
கூடென்று வசிமூலி வாயிற்கொண்டு கொற்றவனே செவிதனிலே யூதும்போது
மேடென்று வையகத்தில் கண்திறந்து மேதினியில் உயிரதுவும் வருகும்பாரே
5692.
பாரேதான் சித்துமுனி ரிஷிகள்தாமும் பாருலகில் அதர்வணத்தை மறைத்துவைத்தார்
ஆரோதான் சொன்னவர்கள் ஆருமில்லை வப்பனே யாமுமக்கு சொன்னோம்பாரு
நேரேதான் காலாங்கிநாதர்தாமும் நேர்மையுடன் எந்தனுக்கு உரைத்தநீதி
பேரேதான் சொல்வதற்கு யாருமில்லை பேரான போகரிஷி யுரைத்தேன்பாரே
5693.
உரைத்தேனே ஏழாயிர சத்தகாண்டம் வுற்பனமும் விற்பனமும் மெத்தவுண்டு
நிரைத்தேனே யாறாவது காண்டத்துள்ளே நேர்மையுடன் அதர்வணத்தைக் கூறினேன்யான்
விரைத்ததொரு பொருளெல்லாம் இதிலடக்கம் விருப்பமுடன் பாடிவைத்த சத்தகாண்டம்
குரைத்த தொருபொருளெல்லாம் எந்தனாயர் குருமுனியாம் அகஸ்தியத்தில் காணலாமே
5694.
காணலாம் அகத்தியனார் காவியத்தில் கருவான பன்னீராயிரத்திலப்பா
பூணலாம் பனிரெண்டு காண்டத்துள்ளே புகட்டினார் கோடிவகைக் களஞ்சியங்கள்
தோணவே யண்டசராசரங்களெல்லாம் துறட்டியென்ற குடலதுபோல் கூறினார்கள்
வேணபடி குருநூலாம் பன்னீராயிரம் விருப்பமுடன் பாடிவைத்தார் முனிவர்தாமே
5695.
முனியான என்பாட்டன் அகஸ்தியர்தாமும் முனையான காலாங்கி நாதர்தாமும்
சொனைபோலே சாத்திரங்கள் எனக்குரைத்தார் தோற்றமுடன் பிரகாசமானசித்து
மனைதோறும் சாத்திரவேதாகமங்கள் மார்க்கமுடன் பாடிவைத்தார் பலநூல்சித்தர்
வினையாலே மாண்டதொரு மாண்பருக்கு விரிவான அதர்வணங்கள் சொல்லார்காணே
5696.
கானான புலிப்பாணி மைந்தாகேளு தகைமையுள்ள காலாங்கிசொன்னநீதி
கோனான பதினென்பேர் சித்தர்தாமும் கொற்றவனே நவகோடி சித்தர்தாமும்
பானான நாற்பத்தெண்பேர்களப்பா பலபலவாஞ் சாத்திரங்கள் பாடிவைத்தார்
மானான தலைமுறைகள் சாதிவர்க்கம் மன்னவனே சாத்திரத்திற் சொல்லாரன்றே

5697.
சொல்லவில்லை சிலபேர்கள் சொன்னாரப்பா சுந்தரனே சிலபேர்கள் மறைத்துவைத்தார்
வெல்லவே காலாங்கிநாதர்தாமும் வேகமுடன் குளிகையது கொண்டுமல்லோ
கல்லான மலைகளிலும் குகைகள்தன்னில் கண்டுமே ஆராய்ந்து சித்துதம்மை
புல்லவே சாதிபேதங்கள் ரெண்டு புகழான சாத்திரத்தில் வசனித்தாரே
5698.
வசனித்தார் எந்தமக்கு காலாங்கிநாதர் வளமுடனே சொன்னதொரு சாதிமார்க்கம்
நிசமுடனே யானுரைப்பேன் நீதிவானே நிஷ்களங்கமானதொரு பேதஞ்சொல்வேன்
தசமான காலாங்கி நாதர்தாமும் தாக்கான மயன்சாதி யென்னலாகும்
கசடன்று தலைமுறைகள் பத்தேயாகும் காசினியில் கண்டவரை யுரைத்திட்டோமே
5699.
உரைத்தோமே எந்தனிட சாதிமார்க்கம் வுத்தமனே விஸ்வகர்மமென்னலாகும்
நிரைத்ததொரு ரோமரிஷி சாதிபேதம் நிலையான வலைவீசுஞ்சாதியப்பா
திரைத்ததொரு எந்தனது தலைமுறைதானப்பா திரளான பதினெட்டு தலைமுறையாகும்
வரைத்ததொரு ரோமரிஷி தலைமுறைதானப்பா வாகான பனிரெண்டு தலைமுறைதானாமே
5700.
தலைமுறையாம் மச்சமுனி சாதிபேதம் தண்மையுள்ள கல்லுடையோர் என்னலாகும்
கலையான கோத்திரங்கள் அறுபத்திரண்டு காசினியில் கண்டவரைச் சொல்லலாச்சு
மலையான சட்டமுனி சாதிபேதம் மகத்தான சிங்களவன் என்னலாகும்
சிலையான கோத்திரங்கள் பதினாலாகும் சிற்பரனே கண்டநூல் அறிந்தமட்டே

# போகரின் சப்த காண்டம் – 7000

5701.
மட்டான இடைக்காடர் ஜாதிபேதம் மகத்தான கோனாரேயென்னலாகும்
சிட்டமுள்ள கோத்திரங்கள் பதினெட்டாகும் திகழான நூலதனிற் கண்டமட்டும்
சட்டமுடன் தன்வந்திரி ஜாதிபேதம் தகமையுள்ள மகாவிஷ்ணுயென்னலாகும்
வட்டமுள்ள தலைமுறைகள் முப்பத்திரண்டு வளமுடனே கண்டறிந்த நூலிதாமே
5702.
தாமான புலிப்பாணி மைந்தாகேளு தகமையுள்ள மூலத்தீசனப்பா
சாமானியமானதொரு ஜாதிபேதம் சாங்கமுடன் வேளாளன் என்னலாகும்
கோமானாந் தலைமுறைகள் இருபத்தேழாம் கொற்றவனே நூற்படியே சொல்லலாச்சு
பூமான்கள் சித்தவர்க்க நூல்கள்தன்னில் புகட்டவில்லை ஜாதிபேதம் புகலார்தாமே
5703.
தானான சிலநூலில் சொன்னாரப்பா தன்மையுள்ள சிலநூலில் சொல்லவில்லை
கோனான அகத்தீசர் ஜாதிபேதம் கொற்றவனே வேளாளாளென்னலாகும்
பானான தலைமுறைகள் ஏதென்றாக்கால் பதமுடனே நாற்பத்தியெட்டேயாகும்
மானான நூல்தனிலே கண்டாற்போல மகத்தான போகரிஷி வகுத்திட்டேனே
5704.
வகுத்தேனே சிவவாக்கியர் ஜாதிபேதம் வளமான சங்கரகுலமென்னலாகும்
தொகுப்புடனே தலைமுறைகள் யிருபதாகும் தோறாமல் சாத்திரங்கள் புகன்றவாரும்
மிகுத்திடவே ராமதேவர் ஜாதிபேதம் மிக்கான மிக்கான விஷ்ணுகுல மென்னலாகும்
பகுத்திடவே தலைமுறைகள் ஆறதாகும் பாங்கான வவர்நூலில் கண்டோம்யாமே
5705.
கண்டோமே புஜண்டரிட ஜாதிபேதம் கருவான வக்கினிகுல மென்னலாகும்
விண்டதொரு தலைமுறைகள் நாற்பத்தைந்து வீரான சாத்திரத்தில் கண்டதுண்டு
பண்டிதமாம் வன்னியரின் புராணக்கூறு பலபலவாய்ப்பாடிவைத்தார் கவிவாணர்தாமும்
கண்டகம் போல்சாத்தரங்கள் மிகவுங்கூறி தாமறைத்தார் சித்துமுனி ரிஷிகள்தாமே
5706.
தானான கருவூரார் ஜாதிபேதம் தாக்கான பஞ்சணத்தில் குலத்திலொன்று
கோனான கன்னார ஜாதியாகும் கொற்றவனே நூல்தனிலே கண்டவாறு
தேனான தலைமுறைகள் நாற்பத்திரண்டு தெள்வுடனே நூல்தனிலே சொன்னார்பாரு
மானான மார்க்கமது சமயபேத மார்க்கமுடன் அவரவர்நூல் அறியலாமே
5707.
அறியவே புண்ணாக்கீசர்தாமும் அவருடைய ஜாதிபேதங்கள் சொல்வேன்
நெறியான கன்னடிய ஜாதியாகும் நேர்பான தலைமுறைகள் ஏதென்றாக்கால்
குறியான பதினெட்டு தலைமுறைதானாகும் குறிப்பான சாத்திரத்தில் சொன்னவாறு
முறியான சித்தர்மகா ரிஷிகள்நூலில் முறைபாடு சிலபேர்கள் சொல்லாரன்றே
5708.
சொல்வாரே புலிப்பாணி மைந்தாகேளு சுத்தமுள்ள கண்மணியே புகல்வேன்பாரு
வல்லான புலிப்பாணி மரபேதந்தான் மார்க்கமுடன் வேடனதுஜாதியல்லோ
புல்லான தலைமுறைகள் ஒன்பதாகும் புகழான நூல்தனிலே புகலும்வாறு
நல்லான ரிஷிதேவர் முனிவர்தானும் நலமுடனே சிலருரைத்து சிலர்மறைத்தாரே

5709.
மறைவான நந்தீசர் மறபேதென்றால் மார்க்கமுடன் மிருகமகா ரிஷியார் தோத்திரம்
குறையான தலைமுறைகள் ஏதென்றாக்கால் கொற்றவனே மூன்றுதலை முறைதானாகும்
நிறைவான சாத்திரத்தில் சொன்னவாறு நிஷ்களங்கமாகவல்லோ கண்டறிந்தோம்
முறையான முனிதேவர் ரிஷிகள்நூலில் முற்றிலுஞ் சொல்வார்கள் மறைத்தார்காணே
5710.
காணவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கருவான புலஸ்தியரின் மரபேதென்றால்
தோணவே சிங்களவ ஜாதியாகும் தோறாமல் தலைமுறைகள் எட்டதாகும்
பூணவே புலஸ்தியர் இந்நூல்கள்தன்னில் புகலாமல் மறைத்துவைத்தார் முன்னோர்தாமும்
வேணபடி யான்கண்டவரைதானப்பா வித்தகனே வெளியிட்டேன் பண்பாய்ப்பாரே
5711.
பாரேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் பாலகனே புலிப்பாணி மைந்தாகேளு
நேரேதான் வியாசருட மரபேதென்றால் நேர்பாக சந்திரகுல ஜாதியாகும்
சீரேதான் தலைமுறைகள் எண்பதாகும் சிறப்பான புராணவகை கூறும்வாறு
ஆரோதான் சாத்திரங்கள் அறியாமற்றான் வப்பனே கட்டிவைத்தார் கோடியாமே
5712.
கோடியாந் தேரையர் மரபேதென்றால் கொற்றவனே யானுரைப்பேன் கண்டமட்டும்
நீடியே பிரம்மகுல மென்னலாகும் நெடிதான காப்பியங்கள் கூறும்வண்ணம்
ஆடியதோர் தலைமுறைகள் ஏதென்றாக்கால் வப்பனே நவதசமு மென்னலாகும்
பாடியதோர் ரிஷிதேவர் முனிதேவர்தாமும் பண்பாகத் தாமுரைத்தார் பான்மைதானே
5713.
பாண்மையாம் யாக்கோபு மரபேதென்றால் பாங்கான குலம்விட்டு குலம்புகுந்தோர்
மேன்மையாம் முன்சொன்ன ராமதேவர் மெய்யான குலமென்றே சொல்லலாகும்
தேன்மாரி பொழிகின்ற மச்சுதேசம் சென்றல்லோ பெயர்மாறி வுருவுகொண்டார்
வான்மீது வறுந்துதிபோல் உதிக்குந்தீரன் மகத்தான ராமதேவர் என்னலாமே
5714.
என்னவே ராமதேவர் என்னலாகும் எழிலான தலைமுறைகள் பதினாறாகும்
மின்னவே நாமமது ரெண்டேயாகும் மிக்கான சாத்திரங்கள் சொன்னவாறு
உன்னிதமாய்ப் பலமுனிவர் சித்துதாமும் வுத்தமனே தாமுரைத்தார் மறைப்போமெத்த
நன்னயமாய்ப் பலநூலுங் கண்டாராய்ந்து நலமுடனே ஜாதிபேதம் வுரைத்தேன்பாரே
5715.
பாரப்பா கொங்கணரின் மரபேதென்றால் பாங்கான யாதவகுலமேயாகும்
ஆரப்பா தலைமுறைகள் என்னசொல்வேன் வப்பனே ஈரெட்டுப் பதினாராகும்
நேரப்பா வவர்சொன்ன காண்டந்தன்னில் நேர்மையுடன் மரபதுவுஞ் சொல்லவில்லை
ஊரப்பா பலபேருங் கூடியல்லோ வுத்தமனே தாமுரைத்தார் ஜாதிதானே
5716.
ஜாதியா மின்னமொரு மார்க்கங்கேளு தயவான புலிப்பாணி மைந்தாபாரு
ஆதியாம் தட்சணாமூர்த்தியப்பா வப்பனே யவர்மரபு யாதென்றாக்கால்
நீதியாங் கவுண்டனென்ற மரபேயாகும் நிஷ்களங்கமான தொருமூர்த்தியென்பார்
சோதிடமாம் பலநூல்கள் ஆராய்ந்தேதான் சொன்னதொரு மொழியதுவும் மெய்யதாமே

5717.
மெய்யான தலைமுறைகள் பதிமூன்றாகும் மிக்கான சாத்திரத்தில் உரைத்தவாறு
துய்யவே கோரக்கர் மரபேதென்றால் துப்புரவாய் மாராட்டியனார் என்னலாகும்
பையவே தலைமுறைகள் பதினொன்றாகும் பாங்கான சாத்திரத்திற் சொன்னவாறு
வெய்யவே வேதமுனி சித்துதாமும் வெகுநூல்கள் ஆராய்ந்து பார்த்தார்தானே
5718.
தானான இன்னமொரு மார்க்கங்கேளு தயவான புலிப்பாணி கண்ணேயப்பா
கோனான கௌபாலராணிக்கோர்வை கொற்றவனே பாடிவைத்தா ருண்மையாக
மானான வவர்மரபு யாதென்றாக்கால் பாங்கான பப்பரவர் மரபேயாகும்
மானான தலைமுறைகளெட்டேயாகும் மகத்தான பெருநூலில் சொன்னார்பாரே
5719.
சொன்னாரே ஜோதிமா முனிவரப்பா துப்புரவாய் ஆணியென்ற கோர்வைசெய்தார்
தென்னான தட்சணாபதியிலப்பா தேற்றமுடன் மலைதனிலே யிருக்குஞ்சித்து
பன்னவே மரபதுவும் ஏதென்றாக்கால் பாங்கான பள்ளனென்றே செப்பலாகும்
உன்னிதமாய் தலைமுறைகள் ஆறேயாகும் வுற்பனமாய் ஓதிவைத்தார் நூலில்தாமே
5720.
நூலான நூல்தனிலே சொன்னமார்க்கம் நுணுக்கமுடன் வெகுகோடி சொன்னாரப்பா
பாலாநடமரகர் மரபேதென்றால் பாங்கான மரவரென்றே செப்பலாகும்
தாலான தலைமுறைகள் நாலேயாகும் தாக்கான வவர்நூலில் சொன்னவாறு
பாலான மொழிபோலே முனிவர்தாமும் பாடிவைத்தார் பட்சமுடன் பாரில்தானே
5721.
பாரினிலே யின்னமொரு மார்க்கங்கேளு பாலான புலிப்பாணி மைந்தாகேளு
சீரிலகுஞ் சுந்தரனானந்தர் தாமே சீரான மரபதுவும் ஏதென்றாக்கால்
ஆரியனார் தாமுரைத்த நூலில்தாமும் வப்பனே அகமுடையர் என்னலாகும்
சூரியன் போல் தலைமுறைகள் இருபத்தெட்டு சொல்லுதற்கு நாவில்லைப் பாவில்லைதானே
5722.
பாவில்லை புலிப்பாணி யின்னங்கேளு பாங்குடனே வாரிதியாம் சாதிபேதம்
ஆவியுடன் பூமிதனி லிருந்தசித்து வப்பனே வரத்தினால் பிறந்தசித்து
காவிலயங் கண்டதொரு கள்ளர்ஜாதி கருவான ஜாதியென்றே செப்பலாகும்
நாவிலே சொல்வதற்கு யாராலாகும் நலமான தலைமுறைகள் நாற்பத்தெட்டே
5723.
எட்டான வால்மீகர் மரபேதென்றால் யெழிலான வேடருட ஜாதியாகும்
திட்டான தலைமுறைகள் சொல்வேன்பாரீர் தீர்க்கமுடன் முப்பத்திரெண்டேயாகும்
சட்டமுடன் வால்மீகர் காவியத்தில் சாங்கமுடன் எழுதிவைத்தபடிநிதானம்
வட்டமுடன் வால்மீகர் நூலறிந்து வளமுடனே கண்டறிந்து சொன்னதாமே
5724.
சொன்னேனே யின்னமொரு மார்க்கம்பாரு தூய்தான புலிப்பாணி மைந்தாகேளு
நன்னயமாய் வூர்வசியார் சாத்திரத்தில் நலமாகத் தானுரைத்த ஜாதிபேதம்
உன்னிதமாய் தேவதா மடந்தையென்று வுத்தமர்கள் சித்தர்முனி கூறும்வண்ணம்
பன்னியே தலைமுறைகள் பகுக்கொண்ணாது பாலகனே அடுமையென்ற ஜாதியாமே

5725.
ஜாதியா மின்னமொரு மார்க்கங்கேளு சாங்கமுடன் யானுரைப்பேன் மைந்தாபாரு
ஆதியாங் கமலமுனி யென்ற சித்து வன்பான குரவரிட ஜாதியாகும்
நீதியாந் தலைமுறைகள் ஆறெட்டாகும் நிஷ்களங்கமாகவல்லோ சாத்திரத்தில்
பாதிமதி சடையணிந்த தம்பிரானும் பாடிவஜத்த நூல்தனிலே காணலாமே
5726.
காணவே மகாசித்து அறிவானந்தர் கைலாசநாதரென்றே செப்பலாகும்
தோணவே வள்ளுவனார் ஜாதியாகும் தோறாமல் அவர்செய்த நூலிற்காண்பீர்
வேணவே தலைமுறைகள் எண்பதாகும் வெகுநாளாய் மலைதனிலே இருந்தசித்து
ஆணவங்கள் தானொடுங்கி யிருந்தசித்து வப்பனே அறிவான சித்துதாமே
5727.
சித்தான சித்துமுனி சொல்வேன்கேளிர் சிறப்பான அகப்பேயர் சித்தேயாகும்
முத்தான ஜாதியது யாதென்றாக்கால் முனையான நாயனார் ஜாதியாகும்
சத்தமுள்ள தலைமுறைகள் ஈரெட்டாகும் சார்பாக வவர்நூலிற் காணலாகும்
நித்தமுமே வாணிபங்கள் விர்த்திசெய்து நிலையாக பூமிதனில் இருந்தசித்தே
5728.
சித்தென்றால் சித்துயிது என்னசொல்வேன் சீர்பாலா புலிப்பாணி மைந்தாகேளு
புத்தியுள்ள பூபாலா புனிதவானே பூவுலகில் இருந்ததொரு குதம்பைசித்து
பத்தியுடன் பெண்ரூபங்கொண்டசித்து பாருலகில் வெகுநாளாய் இருந்தார்தாமும்
சுத்தியுடன் தேவதாபூசையோடும் சுந்தரனே வெகுகால மிருந்தார்தானே
5729.
தானான வவர்மரபு யாதென்றாக்கால் தாக்கான கோனாரின் ஜாதியாகும்
கோனான யிடையரென்றே சொல்லலாகும் கொற்றவனே யவர்நூலில் சொன்னநீதி
மானான தலைமுறைகள் ஏதென்றாக்கால் பத்துரெண்டொன்றுமூன்று
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தெளிவாகக் கண்டறிந்தேன் பலநூல்தானே
5730.
நூலான பலநூலுங் கண்டாராய்ந்து நுட்பமுடன் தானுரைத்த வண்மைநீதி
பாலான பாம்பாட்டி மரபேதென்றால் பாலகனே ஜோதியென்ற ஜாதியாகும்
கோலான மாதவத்தார் குலத்தினாலே கொற்றவனே சமாதியது பிரவேசமாகி
சேலான வையகத்தில் சிலதுகாலம் சிறப்புடனே சமாதிவிட்டு வந்தசித்தே
5731.
வந்ததொரு சித்துக்கு முறைமைசொல்வேன் வளமுடனே சோடசமாமொன்றுமூன்று
சிந்தனையாய் யவர்நூலில் கண்டாராய்ந்து சீருடனே யானுரைத்தேன் முறைதப்பாது
சுந்தரனே காலகண்டர் முனிவர்தாமும் சுத்தமுடன் யவர்மரபு யேதென்றாக்கால்
தந்திரமாங் கள்ளருட ஜாதியாகும் தாரணியில் அவர்நூலிற் கண்டவாறே
5732.
வாறான தலைமுறைகள் ஒன்றுபத்து வளமையுடன் அவர்நூலில் சொல்லலாகும்
நூறாண்டு வெகுகால மிருந்தசித்து நுட்பமுடன் சீஷவர்க்கங் கொண்டசித்து
காறான யின்னமொரு மார்க்கங்கேளு கருவான புலிப்பாணி மைந்தாபாரு
ஆறான சுப்பிரமணியர் மரபேதென்றால் வப்பனே சைவமென்ற பீடமாமே

5733.
பீடமாந் தலைமுறைகள் ஏதென்றாக்கால் பேரான நூற்றிரண்டு பத்துமூன்று
கீடாதி நூல்களிலே கண்டவாறு கிருபையுடன் நானறிந்தமட்டுஞ் சொன்னேன்
நீடான யூகிமுனி மரபேதென்றால் நிசமான குரும்பருட ஜாதியாகும்
தாடான தலைமுறைகள் என்னசொல்வேன் தாக்கான பதினெட்டு ஒன்று மூன்றே
5734.
ஒன்றான சாதியப்பா இன்னஞ்சொல்வேன் வுத்தமனே புலிப்பாணி வுகந்துகேளு
நன்றான ஜெமதக்னி ஜாதிபேதம் நலமான சைவமென்ற ஜாதியாகும்
குன்றான மலையேறி கிரணந்தன்னை கிருபையுடன் கண்டல்லோ சாதமுண்போர்
வென்றிடவே தலைமுறைகள் நான்குபத்து வேகமுடன் வந்நூலில் கண்டோம்பாரே
5735.
பாரேதான் இன்னமொரு மார்க்கங்கேளு பாங்கான திரணாக்கிய முனிவர்தானும்
தேரேதான் சைனகருட ஜாதியாகும் தேரான பிரபுலிங்க லீலைநூலார்
நேரேதான் அவர்நூலில் ஜாதிபேதம் நேர்மையுடன் கண்டறிந்த ஜாதிமார்க்கம்
வேரேதான் தலைமுறைகள் ஈரெட்டொன்று வித்தகனே நூல்தனிலே கண்டோம்பாரே
5736.
பாரேதான் சண்டேசர் ஜாதிமார்க்கம் பாங்கான வள்ளுவனார் என்றேயாகும்
நேரேதான் தலைமுறைகள் ஒன்றுபத்து நேர்மையுடன் அவர்நூலில் சொன்னநீதி
சீரேதான் சித்தர்முனி ரிஷிகள்தேவர் சிறப்புடனே பாடிவைத்த நூலைக்கண்டு
பேரேதான் வேர்பிரித்து பகுத்துயானும் பேரின்ப நிலைநின்று பாடினேனே
5737.
பாடினேன் இன்னமொரு மார்க்கங்கேளு பாலகனே புலிப்பாணி மைந்தாபாரு
நாடியே திருமூல வர்க்கத்தார்கள் நலமான ஜாதியது மரபேதென்றாக்கால்
தேடியே வேளாள ஜாதியாகும் திருக்கூட்ட மெத்தவுண்டு சொல்லொண்ணாது
ஆடியதோர் தலைமுறைகள் ஏதென்றாக்கால் வப்பனே ரெண்டுபத்து வொன்றுதானே
5738.
ஒன்றான சாத்திரத்தின் உளவாராய்ந்து வுத்தமனே பலநூலுங் கண்டுதேர்ந்து
சென்றுமே ரிஷிமுனிவர் கூறுநூலும் சிறப்பான சாத்திரத்தின் தொகுப்பைக்கண்டு
வென்றிடவே காலாங்கி தாள்பணிந்து வேகமுடன் குளிகையது பூண்டுகொண்டு
குன்றான மலைகுகைகள் யானுங்கண்டு கொற்றவனே காவியந்தான் கூறினேனே
5739.
கூறினேன் காவியந்தான் ஏழாயிரமாகும் கூறான சத்தகாண்டம்போலநூல்கள்
மீறியதோர் நூலுண்டோ வையகத்தில் மிக்கான நூலிதுபோல் ஆர்தான்சொன்னார்
மாறுபாடாகவல்லோ சாத்திரநூல்கள் மகத்தான சித்துமுனி சொன்னாரப்பா
ஆறுதலம் போலாக யிந்தநூல்தான் வப்பனே யுந்தனுக்கு வரைந்திட்டேனே
5740.
அறைந்ததொரு யின்னமொரு மார்க்கங்கேளு வப்பனே புலிப்பாணி மைந்தாபாரு
நிறைந்ததொரு சித்தர்முனி ரிஷிகளானோர் நீடாழி யுலகுதனி இருந்தவாறும்
குறைந்ததொரு வவரவர்கள் வயதுமார்க்கம் கூறுகிறேன் வையகத்தில் கண்டாராய்ந்து
மறைந்ததொரு சமாதியின்தன் மார்க்கமெல்லாம் மன்னவனே யுந்தனுக்கு நிகழ்த்துவேனே

5741.
நிகழ்த்துவேன் காலாங்கி நாதர்தம்மை நெடுங்கால செய்தியெலாம் நிகழ்த்துவேன்யான்
புகழான காலாங்கி நாதர்தாமும் விண்ணியனார் வெகுகால மிருந்தசித்து
அகந்தனிலே மூன்றுயுகஞ் சமாதிசென்று வப்பனே முயற்சியுடன் வந்தசித்து
ஜெகந்தனிலே சீனபதி தேசந்தன்னில் சிறப்புடனே குளிகைகொண்டு போனசித்தே
5742.
சித்தான காலாங்கி நாதர்தானும் சிறப்புடனே சீனபதி தன்னிற்சென்று
முத்தான காலனது வருளும்பெற்று முனையான சமாதிதனில் இறங்கியல்லோ
சத்தமுடன் அசரீரி வாக்கினோடும் தாரணியில் சமாதிமுகம் இருந்துகொண்டு
பத்தியுடன் சீனபதிமாண்பருக்கு பலகாலுந் தரிசனைகள் புரிகுவாரே
5743.
புரிகுவார் வயதினுட மார்க்கந்தன்னை புகலுவேன் காலாங்கி நாதருக்கு
சரியுடனே மூவாயிரஞ் சொச்சமப்பா சங்கமுடன் வயதுதான் என்னலாகும்
குறியான வருடமது மூவாயிரந்தான் குறிப்புடனே மகாநூலிற் சொன்னநீதி
நெறியுடனே வையகத்திலிருந்துமல்லோ நேர்மையுடன் சமாதிமுகம் சென்றார்தானே
5744.
தானான போகரிஷி மார்க்கஞ் சொல்வேன் தயவான புலிப்பாணி மைந்தாகேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் குறிப்புடனே எந்தனுக்குச் சொன்னநீதி
பானான வயததுவும் முந்நூரென்று பான்மையுடன் எந்தனுக்கு உபதேசித்தார்
தேனான குளிகையது பூண்டுகொண்டு தேசமெலாஞ் சுற்றிவந்தேன் காலந்தானே
5745.
காலமாம் வெகுகால மடியேன்தானும் காலாங்கி நாதருட கிருபையாலும்
கோலமுடன் திருக்கமலம் வீற்றிருக்கும் கொம்பனையாள் மனோன்மணியாள் கிருபையாலே
ஆலகால முடையதொரு வரன்பாகத்தில் வப்பனே வையகத்தில் யானுமல்லோ
தாலமெலாஞ் சுத்திவந்து யடியேன்தானும் தாரணியில் சித்துமுனி ரிஷிகண்டேனே
5746.
கண்டேனே வெகுகோடி சித்துதம்மை காலாங்கி நாதருட கிருபையாலே
கொண்டதொரு வையகத்து வதிசயங்கள் கொற்றவனே யடியேனுந்தானறிந்து
உண்டான வுளவுபதி மார்க்கமெல்லாம் வுத்தமனே கண்டல்லோ மிகவாராய்ந்து
பண்டிதங்கள் மிகப்பார்த்து பலநூல்சேதி பாங்குடனே சீனபதிக் குறைத்திட்டேனே
5747.
உரைத்தேனே சீனபதி மாண்பருக்கு வுத்தமனே லோகவதிசயங்களெல்லாம்
வுரைத்தேனே சீனபதிப் பெண்களுக்கு வகுப்பான சித்துமுனி ரிஷிகள் மார்க்கம்
திரைகடல்சூழ் அஷ்டாங்க யோகமெல்லாம் திரட்டினேன் போகரேழாயிரந்தான்
புரையொன்றும் நேராமல் புகழ்ந்தநூலாய் புகட்டினேன் சீனபதிமாண்பருக்கே
5748.
மாண்பான புலிப்பாணி மைந்தாகேளு மகத்தான வையகத்தில் முந்நூறாண்டு
ஆண்மையுடன் நானிருந்தேன் அதிசயங்கள் வப்பனே யான்கண்டவாறுமட்டும்
வீண்போகாக் காலமது சாத்திரத்தின் வீரானவுளவு நிதானங்கள்கண்டு
தாண்மையுடன் யானுரைப்பேன் இதிகாசங்கள் சட்டமுடன் சொல்லுகிறேன்
பண்பாய்க்கேளே

5749.
கேளேதான் ரோமரிஷி வயதுமார்க்கம் கெவனமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
நாளேதான் போகாமல் ரோமர்தாமும் நலமுடனே சமாதிமுகஞ் சென்றுமல்லோ
ஆளேதான் வருஷமது வையகத்தில் வப்பனே தானிருந்து வெளியுமாகி
பாளேதான் போகாமல் வருஷமறுநூறு பாங்குடனே வீற்றிருந்த சித்துமாமே
5750.
சித்தான மச்சமுனி வாறேதென்றால் சிறப்பான வையகத்தி லிருந்தசேதி
பக்தியுடன் முந்நூறு வாண்டுமட்டும் பகவானைத்துதிசெய்து காயங்கொண்டு
முத்தியுடன் சமாதிக்குச் சென்றுமல்லோ மூர்க்கமுடன் மூவாண்டு சமாதிபூண்டு
கத்தனையே தானினைத்து கைலைதன்னில் காசினியை விட்டுமல்லோ யேகினாரே
5751.
ஏகவே சட்டமுனி வாறேதென்றால் யெழிலாக எண்ணூறு வாண்டுமட்டும்
போகவே சமாதிமுகம் மூன்றுமுறைதானும் பொங்கமுடன் பூமிதனில் இருந்துமல்லோ
சாலமுடன் வெகுகால மிருந்தசித்து சாங்கமுடன் சீஷவர்கமுபதேசங்கள்
ஆகமங்கள் ஓதியல்லோ இருந்தசித்து வப்பனே யோகமாசித்துமாமே
5752.
ஆமேதான் இன்னமொரு மார்க்கங்கேளு வப்பனே இடைக்காடர் வரலாறு சொல்வேன்
போமேதான் வெகுகால மிருந்தசித்து பொங்கமுடன் காயாதி கற்பங்கொண்டு
நேமமுடன் நிஷ்டையது பூண்டுகொண்டு நெடுங்காலம் நூறாண்டும் இருந்தசித்து
வாமமுடன் தேவதா சாபத்தாலே வையகத்தில் இருந்ததொரு சித்துவாச்சே
5753.
ஆச்சப்பா தன்வந்திரி வயதுமார்க்கம் வப்பனே சொல்லுகிறேன் மன்னாகேளு
பாச்சலுடன் வயததுதான் எண்ணாறுண்டு பாங்குடனே சமாதிமுகங் கொண்டசித்து
மூச்சடங்கி தன்வந்திரி பகவான்தானும் மூன்றுமுறை சமாதிதனி லிருந்தசித்து
மின்னவே காலாங்கி நாதர்தம்மின் விருப்பமுடன் உபதேசங் கொண்டசித்தே
5754.
என்னலாம் வெகுகோடி மாண்பர்மெச்சும் எழிலான தன்வந்திரி பகவான்தானும்
பன்னவே மூலத்தின் ஈசரப்பா பாங்கான வயததுதான் ஏதென்றாக்கால்
துன்னவே இருநூறுவாண்டுமாகும் துப்புரவாய் பூமிதனில் இருந்தசித்து
மின்னவே காலாங்கி நாதர்தம்மின் விருப்பமுடன் உபதேசங்கொண்ட சித்தே
5755.
சித்தான சித்துமுனி மூலத்தீசர் சிறப்பான மலைதனிலே இருநூறாண்டு
சத்தியுடன் பூசையது செய்துமல்லோ சாங்கமுடன் மலைதனிலே அயிக்கியமாகி
வித்தகனார் சீஷவர்க்க மாண்பரோடும் விருப்பமுடன் சுனைதனிலே இறங்கினார்பார்
சத்தபரிசங்களற்று தரணிமீதில் சாங்கமுடன் தானிருந்தார் சிலநாள்தானே
5756.
தானான யின்னமொரு மார்க்கங்கேளு தயவான புலிப்பாணி மைந்தாபாரு
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்கு சொன்னநீதி
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேஜொளிவின் மயங்கொண்ட கும்பயோனி
பானான பராபரத்துக்கொப்பதான பாருலகில் அகஸ்தியரைப் பகருவேனே

5757.
பகருவேன் அகஸ்தியருக்கு வயதேதென்றால் பட்சமுடன் துகைகணக்குக்
கூறொண்ணாது
நிகரமுடன் சொல்வதற்கு யாராலாகும் நீதியுடன் நூல்தனிலே யுரைத்தமார்க்கம்
அகரமென்ற வட்சரமும் அவராலாச்சு வப்பனே நாலுயுகங் கடந்தசித்து
சகரமெலாந் தான்துதிக்கும் கும்பயோனி சதுரான வகத்தியர் என்றமையலாமே
5758.
அறையலாம் வெகுகோடி காலமப்பா வப்பனே சமாதிமுகம் இருபத்தொன்று
நிறையவே சமாதிமுகம் வையகத்தில் நேர்மையுடன் தானிருந்த சித்துமாகும்
குறையவே வயததுதான் சொல்வதற்கு குவலயத்தில் முடியாது ஒருவராலும்
மறையவே நூல்தனிலே காண்பதற்கு மகத்தான தயததுவும் இல்லைதானே
5759.
இல்லையே இன்னமொரு மார்க்கங்கேளு எழிலான புலிப்பாணி மைந்தாபாரு
தொல்லுலகம் புகழுஞ் சிவவாக்கியர்தாமும் தோறாத வையகத்தில் வெகுநாளப்பா
புல்லவே சமுசார வாழ்க்கைவேண்டாம் புகழான வன்பத்தோராண்டுமட்டும்
வெல்லவே சமுசார வாழ்க்கையற்று வெகுநாளாயிருந்ததொரு சித்துமாச்சே
5760.
ஆச்சப்பா வெகுகால வருஷமாக வப்பனே சமுசார வாழ்க்கையற்று
மூச்சடங்கி மடந்தனிலே இருந்தசித்து மூர்க்கமுடன் சமுசாரம் வேண்டியல்லோ
பாச்சலுடன் தாய்தந்தை சீர்பாதத்தை பணிந்துமே மனதுவந்து கேட்டார்தாமும்
மாச்சலுடன் தாய்தந்தை மனங்களித்து மார்க்கமுடன் மகன்தனையே கேட்டார்தாமே
5761.
தானான பிரகாசமானஜோதி தண்மையுள்ள சிவவாக்கிய புனிதவானே
கோனான குருநாதர் கடாட்சத்தாலே கொற்றவனே சமுசார வாழ்க்கைவேண்டி
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்றமுடன் இல்வாழ்க்கை கேட்டீரப்பா
மானான யில்வாழ்க்கை கேட்டதாலே மன்னவனே இப்போது செய்யலாமே
5762.
செய்யவே சந்தோஷங் கொண்டுமல்லோ சிறப்புடனே மனதுவந்து மனம்நொடிந்தார்
துய்யவே சிவவாக்கியர் பெயருண்டாக துப்புரவாய் சிவானந்தர் பிறந்தார்தாமும்
வெய்யவே எண்பத்தோர் ஆண்டுமட்டும் விருப்பமுடன் சிவவாக்கியர் தாமிருந்து
வையகங்கள் தான்புகழ சமாதிமார்க்கம் வளமுடனே யிறங்கியதோர் வளமைபாரே
5763.
பாரேதான் இன்னமொரு மார்க்கங்கேளு பாங்கான புலிப்பாணி மன்னாபாரு
நேரேதான் ராமரெனுந் தேவரப்பா நேர்மையுடன் வெகுகாலமிருந்தசித்து
சேரேதான் வயததுவும் இருநூறாண்டு செம்மலுடன் சமாதிமுகம் சென்றசித்து
கூரேதான் மூன்றுமுறை வையகத்தில் குறிப்புடனே சமாதிமுகம் போனார்காணே
5764.
காணவே யின்னமொரு மார்க்கங்கேளு கருவான புஜண்டருட வயதுமார்க்கம்
தோணவே முந்நூறு வறுபதாண்டு தோறாமல் குகைதனிலே இருந்தசித்து
பூணவே சமாதிமுகம் ஏறவில்லை பொங்கமுடன் முந்நூற்றி அறுபதாண்டு
வேணபடி வையகத்து வதிசயங்கள் விருப்பமுடன் யான்கண்டேன் வனேகந்தானே

5765.
தானேதான் சித்தர்முனி புஜண்டர்தாமும் தண்மையுள்ள சீஷவர்க்கம் தனையழைத்து
சோனையிலே எந்தனுக்கு சமாதிபூண சுத்தமுடன் சுரங்கமது செய்யவென்ன
ஆனையள வாகவல்லோ சுரங்கஞ்செய்து வண்புடனே மனதுவந்து கூறலுற்றார்
மானையவர் கைபிடித்து சுரங்கந்தன்னில் மார்க்கமுடன் சாரலிடஞ் சென்றிட்டாரே
5766.
சென்றாரே புஜண்டரெனும் சித்துதாமும் சிறப்புடனே சமாதிமுகஞ் சென்றபோது
குன்றான மலைமீதிற் கூடிருந்த குறிப்பான மானதுவும் மனதுவந்து
வென்றிடவே ரிஷியாரின் சித்துபாதம் வெகுநாளாய் தான்வளர்த்த சாபத்தாலே
அன்றுமே கூடிருந்த மான்தானப்பா வப்பனே சமாதிமுகஞ் செல்லலாச்சே
5767.
ஆச்சப்பா சமாதிமுகஞ் சென்றபோது வப்பனே சீஷவர்க்க மாண்பர்தானும்
மூச்சடங்கிப்போனதொரு புஜண்டரப்பா முனையான வையகத்தில் வருவதில்லை
பாச்சலுடன் சமாதிமுகம் மூடியல்லோ பண்பான பாறைகொண்டு யேகியல்லோ
வீச்சலுடன் மாண்பரெல்லாம் வெளியேகிவிட்டாரே கோடிதளங்காணலாச்சே
5768.
காணவே யின்னமொரு கருமானங்கேள் காசினியில் கருவூரார் என்றசித்து
தோணவே நடேசரென்னும் கருவுண்டாகி துப்புரவாய் பாண்டியனுக் கருளுந்தந்தார்
பூணவே பாண்டியன் தேவாலயத்தில் பொங்கமுடன் நடேசரைத்தான் செய்துவைத்தேன்
தோணவே காயாதி கற்பங்கொண்டு தொல்லுலகில் வெகுகால மிருந்தசித்தே
5769.
சித்தான கருவூரார் என்றசித்து சின்மயத்தில் பேரின்பங்கொண்டசித்து
முத்தான வயததுவும் முந்நூராண்டு மூதுலகில் பாண்டியனுக்குகந்தசித்து
பத்தியுடன் சிதம்பரமாம் தேவஸ்தானம் பட்சமுடன் நிர்மித்த ஞானசித்து
சத்தியெனும் மடாலயங்கள் உண்டுபண்ணி சாங்கமுடன் சமாதிமுகஞ் சென்றசித்தே
5770.
சென்றதொரு சித்துமுனி மார்க்கங்கேளு செயலான புண்ணாக்கு ஈசரப்பா
தென்றிடவே வயததுதான் நூற்றிரண்டுபத்து விருப்பமுடன் மரப்பொந்தில் இருந்தசித்து
குன்றுமலை குளிகையதுயனியாச்சித்து கோபாலா கோபாலா வென்னுஞ்சித்து
தென்றிசையில் வடகோடி கானகத்தில் திருவாத்தின் மரத்தின்மேலிருந்தசித்தே
5771.
சித்தான சித்துமுனி நாதருக்கு சிறப்பான வாசானாம் பாம்பாட்டியாகும்
சத்தான வையகத்தில் சிலதுகாலம் சாங்கமுடன் அறியாத வாலிபத்தில்
சுத்தமுடன் அரிபூசை சிவனார்பூசை சுந்தரனார் எந்நேரஞ் செய்துகொண்டு
கத்தனே கோபாலா கோபாலா வென்று காசினியில் வாய்ப்பினத்தித் திரிவார்பாரே
5772.
பாரேதான் மாண்பர்களைக் கண்டபோது பாலகனார் வாய்திறந்து யாருங்கேளார்
நேரேதான் பசிவந்து வுற்றபோது நேர்மையுடன் கோபாலா வென்றசத்தம்
வீரேதான் வீரிட்டு சபதமிட்டு விண்ணுலகைக் கண்திறந்துபார்க்கும்போது
ஆறோதான் தேவாதி வரத்தினாலே வப்பனே பால்பழமுந் தருவார்தானே

5773.
தானான பால்பழமுமுண்டபின்பு தாக்கான வழிதடங்கள் காணமாட்டார்
கோனான பாம்பாட்டி தனைநினைந்து கொற்றவனார் நடுவீதி பள்ளிகொள்வார்
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேசமெல்லாந் தான்திரண்டு வந்திப்பார்கள்
மானான புண்ணாக்கர் கண்திறந்து மகத்தான கோபாலா யென்பார்தானே
5774.
என்னவே புண்ணாக்கு ஈசர்தாமும் யெழிலான மண்ணதனைத் தானெடுத்து
உன்னிதமாய் மாண்பருக்குத் தான்கொடுப்பார் வுத்தமனே மண்ணதுவுந் தித்திப்பாகும்
பன்னவே நோயாளி யார்வந்தாலும் பட்சமுடன் மண்கிள்ளித்தான்கொடுப்பார்
சொன்னபடி நோயாளி ரோகந்தீர்ந்து சுத்தமுடன் போவார்கள் மெத்தவுண்டே
5775.
உண்டான மாண்பருக்கு புண்ணாக்கீசர் வுத்தமனே பிரிதிவென்ற மண்ணைத்தானும்
வண்மையுடன் தான்கொடுத்து வியாதிரோகம் வளமையுடன் தான்தீர்ப்பார் அதீதமெத்த
திண்மையுடன் சிலகாலஞ் சென்றபின்பு தீர்க்கமுடன் வயததுவும் நூறாண்டாச்சு
கண்மையுடன் வையகத்தி லிருக்கலாகா தற்பரனைக் காணவெண்ணி நினைத்திட்டாரே
5776.
இட்டதொரு புண்ணாக்கு மீசர்தாமும் எழிலான திருவாத்தின் மரத்தின்கீழே
சட்டமுடன் திருப்பொந்தி லிருந்துகொண்டு சாங்கமுடன் சிவயோகஞ் செய்துமல்லோ
திட்டமுடன் சிலநாட்கள் கழிந்தபின்பு தீர்க்கமுடன் மரப்பொந்தில் அயிக்கியமாகி
பட்டமரந் துளுத்தல்லோ வையகத்தில் பட்சமுடன் மாண்பருக்கு குருவுமாச்சே
5777.
குருவான திருவாத்தி மரத்தையப்பா கொற்றவனே வையகத்து மாண்பரெல்லாம்
திருவான ரோகமது கண்டபோது தீர்க்கமுடன் மரத்துக்குக் காப்புகட்டி
சருவான சருகுவகை கியாழமிட்டு சட்டமுடன் தானருந்தி ரோகந்தீர்ந்து
பெருமையுடன் வையகத்தில் புனிதவானாய் பேருண்டாய் வெகுநாளாய் வாழ்ந்தார்தாமே
5778.
வாழ்ந்தாரே யின்னமொரு மார்க்கங்கேளு வகுப்பான புலிப்பாணி மைந்தாபாரு
ஆழ்ந்தவே காலாங்கி கடாட்சத்தாலே வப்பனே வேங்கைதனி லேறிக்கொண்டு
தாழ்ந்திடவே ஜலந்திரட்டி புனிதவானும் சாங்கமுடன் தாரிணியில் சுற்றிவந்தோன்
மூழ்ந்திடவே வெகுகோடி காலமப்பா மூதுலகில் இழிந்ததொரு சித்துபாரே
5779.
பாரப்பா புலிப்பாணி பாலனான பட்சமுடன் உந்தனுக்கு வயதுசொல்வேன்
ஆரப்பா வயததுவும் அறுநூறாண்டு வப்பனே வையகத்திலிருந்தசித்து
நேரப்பா சமாதிமுகஞ் சென்றதில்லை நேர்மையுடன் நெடுங்கால மிருந்தசித்து
சீரப்பா சிவயோகந் தன்னிற்சென்று சிறப்புடனே சின்மயத்தி லிருந்தசித்தே
5780.
இருந்துமே வெகுகாலமானசித்து எழிலாக எந்தனிட வுபதேசங்கள்
பொருந்தவே தானடைந்து புனிதனாவாய் பொங்கமுடன் வையகத்தி லிருந்தசித்து
திருந்தவே மலைகுகைகள் வனாந்திரங்கள் தீரமுடன் கண்டறிந்த சித்துவாகும்
கருந்தமிழும் செந்தமிழும் கலந்தசித்து காசினியில் உபவாசச் சித்துமாமே

5781.
ஆமப்பா புலிப்பாணி மைந்தாகேளு வப்பனே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன்
போமப்பா நந்தியுட மார்க்கந்தன்னை புகலுகிறேன் வயததுவும் ஏதென்றாக்கால்
நாமப்பா வயததுவும் எழுநூறாண்டு நலமான வெகுகால மிருந்தசித்து
வேரப்பா சமாதிமுகங் கண்டசித்து வேதாந்த நந்தியென்று சொல்லலாச்சே
5782.
சொல்லவென்றால் நாவில்லைபாவுமில்லை சுந்தரனார் யுகங்கடந்த நந்திமூர்த்தி
வெல்லவே மலையடியாம் வாரந்தன்னில் வேண்டியே சமாதிமுகமிருந்தசித்து
புல்லவே சீஷவர்க்கமில்லாமற்றான் பூதலத்தில் வெகுநாளாய் இருந்தார்தாமும்
நல்லதொரு தேவதா ஸ்தலங்கள்தன்னில் நலமுடனே நந்தியென்ற பேருண்டாச்சே
5783.
உண்டாச்சு சித்துமுனி பாலனுக்கு வுற்றதொரு நந்திமுகந்தாமாச்சு
கண்டதொரு மாண்பரெல்லாம் ஆலயத்தில் கருத்தினிலே முன்னின்ற நந்தியென்று
அண்டர்முனி ராட்சதரும் ரிஷிகள்தாமும் அந்தரதுந்துபிமுதலுந் தேவரானோர்
மண்டலத்தில் தேவதா ஸ்தலங்கள்தன்னில் மகத்தான நந்தியென்று மதித்திட்டாரே
5784.
மதிக்கவே இன்னமொரு மார்க்கங்கேளு மகத்தான புலஸ்தியரின் வண்மைசொல்வேன்
துதிக்கவே வகஸ்தியனார் வாசம்பெற்ற துடியான புலஸ்தியனார் என்னலாகும்
விதிப்படியே கமலமுனி கோத்திரத்தில் வித்தகராய் வந்துதித்த முனிவர்தாமும்
கதிபெறவே யகஸ்தியனார் பாகம்பெற்று காசினியில் வந்துதித்த சித்துமாச்சே
5785.
ஆச்சப்பா புலஸ்தியரின் வயதேதென்றால் வப்பனே யறுநூற்று அறுபதாகும்
மூச்சடங்கி பிரணவத்தை மாறிமாறி மூதுலகில் வெகுகால மிருந்தசித்து
பேச்சசியாமாவின் சித்துவப்பா பேரின்பநிலைதனையே துறந்தசித்து
நீச்சனெனும் பஞ்சமரோடிருந்தசித்து நெடுங்கால வையகத்து சித்துமாச்சே
5786.
சித்தான புலஸ்தியருஞ் சமாதிக்கேக சிறப்பான தேரணமா முனிவர்தம்மை
பத்தியுடன் சீஷவர்க்கம் கொண்டுமல்லோ பாருலகில் சமாதிக்கேகவென்று
முத்திபெற சின்மயத்தை மனதிலெண்ணி மூதுலகில் சமாதிக்கு செல்கவென்று
சத்தியமாய் பவக்கடலை யொழித்துமல்லோ சட்டமுடன் சமாதிமுக மேகினாரே
5787.
ஏகவே வையகத்தில் சமாதிதன்னில் எழிலாக முப்பதுவாண்டுமட்டும்
போகமென்னும் அத்வீத நிலையில்நின்று பொங்கமுடன் தானிருந்த மாயாசித்து
பாகமுடன் தேரணமா முனிவர்தன்னால் பாருலகில் மறுபடியும் வந்தசித்து
சாகமது வாராமல் அறுநூற்றுச்சொச்சம் சாங்கமுடன் வையகத்தில் இருந்தார்பாரே
5788.
பாரேதான் யின்னமொரு வயனஞ்சொல்வேன் பண்பான எந்தனது நேசபாலா
சீரேதான் வேதமென்ற வியாசரப்பா சிறப்புடனே வெகுகாலங் கடந்தசித்து
கோரமென்ற வயததுவும் ஆயிரத்துச் சொச்சம் குவலயத்தில் வேதமதை யறிந்தசித்து
தீரமுடன் நூலாதி நூல்களெல்லாம் திறைகடல் போலுண்டதொரு சித்துகாணே

5789.
காணவே வனாந்திரங்கள் குகைகள்நாடு கருவான மலையாறு குண்ணுதானும்
வேணதொரு வண்டர்முனி கூட்டத்தார்கள் வெளிகாணா காடுமுதல் உறைந்தசித்து
நீணவே சமயமென்ற மார்க்கந்தன்னை நேர்மையுடன் துகைபாடு செய்தசித்து
மாணமருங் கல்விதனி லுறைந்தசித்து மகத்தான மாண்பருக்கு உகந்தசித்தே
5790.
மாண்பான வையகத்து ஜனங்களுக்கு மார்க்கமுடன் வேதமதை யோதும்சித்து
ஆண்மையுடன் சாத்திரங்கள் புராணமெல்லாம் அவரவர்க்கு உகந்தபடி செய்துவைத்தேன்
தாண்மைபெற சைவாதி சமயமெல்லாம் தாரணியில் கொடிநாட்டி இருந்தசித்து
நீண்மையுடன் காயாதி கற்பங்கொண்டு நெடுங்கால மிருந்ததொரு தவசியாச்சே
5791.
தவசியென்றால் மாண்பருக்கு உகந்தசித்து தாரணியில் சமுசார வாழ்க்கையோடும்
பவக்கடலைத் தானொழித்துப் பாரின்மீது பட்சமுடன் தானிருந்த கொடியசித்து
தவப்பெருமை கொண்டல்லோ ரிஷிகளோடும் தயங்காமல் அரசர்முதல் வணங்குஞ்சித்து
நவகண்ட வையகமும் அறிந்தசித்து நலமான வியாசமுனி யென்றசித்தே
5792.
முனியான சித்துமுனி வியாசர்தாமும் மூதுலகில் பெருமைதனை யறிந்தசித்து
கனிவோடும் பாலோடும் ரிஷிகள்தம்மை கண்ணினால் கண்டறிந்த சித்துவாகும்
பனிபோன்ற மலைநாடு பார்த்தறிந்து பட்சமுடன் சென்றல்லோ வுபதேசங்கள்
தனியாகத் தானிருந்து பிரணவத்தை தண்மையுடன் தானறிந்த சித்துதானே
5793.
தானான சித்துக்குச் சமாதியில்லை தாரணியில் வெகுகால மிருந்தசித்து
கோனான குருக்கள் மகாரிஷிகள்தேவர் கொற்றவனார் சீஷவர்க்க மாண்பர்தன்னை
மானான வையகத்தி அறிந்தசித்து மகத்தான வியாசமுனி சித்துபோல
தேனான வேதமதை யறிந்தசித்து திறைகடலிற் கண்டதுண்டோ வுண்மைதானே
5794.
உண்மையிது இன்னமொரு மார்க்கங்கேளு வுத்தமனே புலிப்பாணி மைந்தாபாரு
வண்மைபெறுந் தேரையர் என்னுஞ்சித்து வளமான ரோகமதைத் தீர்க்குஞ் சித்து
நன்மைபெற வயததுவும் ஏதென்றாக்கால் நாதாந்த சித்துமுனி கும்பயோனி
உண்மையுடன் எழுதிவைத்த சாத்திரத்தில் தீர்க்கமுடன் வயதுமுந்நூறென்னலாமே
5795.
என்னவே வயததுவும் முந்நூறாண்டு யெழிலான தேறையர் முனிவருக்கு
பன்னவே சாத்திரத்தின் வகுப்பைப்போல பட்சமுடன் கண்டறிந்து சொல்லலாச்சு
துண்ணவே யிவர்தமக்கு சமாதியில்லை துப்புரவாய் ஜெகத்தாசை விட்டோர்தாமும்
முன்னவே யகஸ்தியனார் உபதேசங்கள் முறைப்படியே கண்டறிந்த சுற்றுமாச்சே
5796.
முறையான கருவிகரணாதியெல்லாம் முயற்சியுடன் தாமறிந்தமாயாசித்து
கறைபோன்ற பதினென்பேர் சாத்திரத்தை கருத்தினிலே எந்நாளும் மனதுவந்து
மறைவான பொருளெல்லாம் மாண்பருக்கு மகத்தான முறைப்பாடு யாவுங்கண்டு
குறையாமல் உபதேசஞ் செய்தசித்து கொற்றவனார் தேறைய முனிவர்தாமே

5797.
முனியான தேரையமுனிவரப்பா மூர்க்கமுடன் சங்கமென்ற சபையிற்சென்று
தனியாக வகஸ்தியரின் பின்தொடர்ந்து சட்டமுடன் பிணிதீர்க்க சித்துவாகும்
பனிபோன்ற வனாந்திரத்தில் இருக்கும்மூலி பாங்கான சஞ்சீவி மூலிதன்னை
மனிதர்களை தானெழுப்பு மமுர்தமூலி மார்க்கமுடன் கண்டறிந்த சித்துபாரே
5798.
பாரப்பா யேமமென்ற வித்தைதன்னை பண்புடனே மனதுவந்து கண்டசித்து
ஆரப்பா யிவர்போலுஞ் சித்துமுண்டோ வவனிதனில் ஆரேனுங் கண்டதில்லை
நேரப்பா யேமமென்ற சித்தேயாகும் நெடிதான மலையனைத்தும் பழுக்குஞ்சித்து
சீரப்பா வையகத்தில் நெடுநாளாக சிறப்புடனே தானிருந்த சித்துமாமே
5799.
தாமேகேள் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் தயவான பாலகனே மைந்தாபாரு
போமேதான் பக்கிரி யாக்கோபுவென்றும் பொங்கமுடன் சாத்திரத்தின் உரைத்தவார்போல்
நேமமுடன் வயததுவுமேதென்றாக்கால் நிலையான வாண்டதுவும் இருநூற்றுச்சொச்சம்
நாமமுடன் நபிநாயன் தன்னைக்காண நன்னயமாய் மக்கபுரி போனார்தாமே
5800.
போனாரே மலைநாடு குகைகடந்து பொங்கமுடன் நபிதனையே காணவென்று
கானாறு பாதவழி செல்லும்போது கடுங்காளை நபிக்கூட்டம் மிகவாய்க்கண்டு
மானான மகதேவர் பதியிலப்பா மார்க்கமுடன் வந்ததினால் உந்தமக்கு
தீனான தீன்பதியில் உந்தனைத்தான் திட்டமுடன் சபித்திடுவோம் என்றிட்டாரே

5801.
என்றவுடன் யாக்கோபு தாள்பணிந்து எழிலான வார்த்தையது கூறும்போது
சென்றுமே யாக்கோபு தன்னைக்கண்டு சிறப்புடனே சுன்னத்து செய்துமல்லோ
தின்றிடவே ரொட்டியது தானுமீய்ந்து சிறப்புடனே யசேனுசேன் என்றுகூறி
வென்றிடவே யுபதேச பிரணவத்தை விருப்பமுடன் மலுங்குமார் ஓதினாரே
5802.
ஓதவே நபிநாயர் கூட்டத்தார்கள் வுத்தமர்கள் மனம்போலே மனதுவந்து
நீதமுடன் மக்கபுரி கோட்டைக்குள்ளே நிஷ்களங்க பக்கிரியாக்கோபு தன்னை
தோதமுடன் கொண்டுசென்றார் அரண்மணைக்குள் தோறாமல் கொத்துமா யோதினார்கள்
வீதமது பயனறிந்த சித்துதாமும் விடுபட்டு வந்ததொரு யாக்கோபாச்சே
5803.
ஆச்சப்பா யின்னமொரு வயனம்சொல்வேன் வப்பனே கொங்கணவர் வயதுமார்க்கம்
பாச்சலுடன் எண்ணூறு வாண்டுமட்டும் பாரினிலே இருந்ததொரு சித்துமாகும்
மாச்சலுடன் சமாதிமுகஞ் சென்றசித்து மகத்தான கொங்கணவர் சித்துமாகும்
ஓச்சலது இல்லாமல் வுலகுதன்னில் வுத்தமனே வெகுகாலம் வுழன்றசித்தே
5804.
சித்தான சித்துமுனி ரிஷிகள் தாமும் சிறப்பான கொங்கணவர் காண்டஞ்சொல்லி
முத்தான கடைக்காண்டம் மூன்றுஞ்சொல்லி மூதுலகில் சமாதிக்கு ஏகலானார்
பத்தியுடன் கடைக்காண்டம் நூலிலப்பா பாடிவைத்தார் வெகுசங்கைக் காணப்போமோ
புத்தியுள்ள மாண்பர்களும் காண்பாரப்பா கண்டாலும் மதிசங்கை யின்னமுண்டே
5805.
உண்டான கடைக்காண்டம் பாடியல்லோ வுத்தமனுங் கொங்கணவர் முனிவர்தானும்
நண்பான வையத்தில் மாண்பர்முன்னே நலமான ரிஷிமுனிவர் தனையழைத்து
வண்பான சாத்திரங்கள் பாடியல்லோ வளமுடனே வெகுசித்தர் மறைத்துவைத்தார்
திண்ணமுடன் காயாதி கற்பங்கொண்டு தீரமுடன் சமாதிக்குச் சொல்வேன்தானே
5806.
சொல்லவே சமாதிமுகம் நின்றபோது செம்மலுடன் சீஷவர்க்கம் அனேகங்கோடி
மெல்லவே சமாதிக்கு இடமுந்தேடி மேன்மையுடன் வழிபாடு செய்துமல்லோ
புல்லவே கொங்கணனார் முனிவர்தானும் புகழான சமாதிமுகம் வுள்ளேசென்று
வல்லமையாய் முப்பது வாண்டுதானும் வளமுடனே இருந்த சித்துதானே
5807.
தானான யின்னமொரு வயனஞ்சொல்வேன் தாக்கான கண்மணியே புகலக்கேளு
கோனான தட்சணா மூர்த்தியப்பா குவலயத்தில் வெகுகால மிருந்தசித்து
மானான வயததுவும் ஏதென்றாக்கால் மகத்தான வாயிரத்து சொச்சமப்பா
பானான படியேழு கடலுஞ்சுத்தி பாரினிலே வுழன்றதொரு சித்துகாணே
5808.
காணவே தட்சணாமூர்த்தியாகும் காசினியில் திருமந்திரம் பாடினோர்தான்
பூணவே சிவாலயந் தன்னிலப்பா பொங்கமுடன் வெகுகால மிருந்தசித்து
தோணவே திருமந்திரம் பாடியல்லோ தோற்றமுடன் சமாதிக்கு யேகவெண்ணி
ஆணவங்கள் தானொடுங்கி சித்துதாமும் வண்பான காசிபதி சென்றிட்டாரே

5809.
சென்றாரே நற்மதா நதியின்பக்கல் சிறப்புடனே தட்சணாமூர்த்திநாயர்
குன்றான கரையோரம் மண்டபந்தான் கொற்றவனார் சமாதிமுகஞ் சென்றுமல்லோ
வென்றிடவே ஒருயுகமாம் அறுபதாண்டு வுத்தமனார் தானிருந்துவந்தசித்து
தென்றிசையில் தட்சணாமூர்த்தி யென்று தேசமதில் பேர்கொண்ட சித்துபாரே
5810.
பாரேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் பாங்கான பாலகனே பகரக்கேளு
நீரேதான் கோரக்கர் வயதேதென்றாக்கால் நிஷ்களங்கமாகவல்லோ மாயாசித்து
சேரேதான் வயததுவும் எண்பதாகும் செப்பினார் அவர்நூலில் சூத்திரந்தான்
சீரேதான் பதினாறு சூத்திரத்தில் சிறப்பாகப் பாடிவைத்த துண்மையாமே
5811.
உண்மையாங் குளிகையது தானுமில்லை வுத்தமனே நரைதிரையும் யாதொன்றில்லை
வண்மையாம் பிணியென்ற ரோகமில்லை வகுப்பான காயாதிதானுமில்லை
தண்மையுடன் வையகத்து மாண்பரெல்லாம் தப்பாமல் சிவயோகி என்பார்பாரு
திண்மையுடன் கோரக்கர் மூலிதம்மை தீர்க்கமுடன் எப்போதும் தின்பார்தானே
5812.
திண்பாரே கோரக்கர் மூலியாலே தீர்க்கமுடன் கோரக்கர் சித்துமாச்சு
வன்பாக சமுசார வாழ்க்கையில்லை வளமான பொருளின்மேல் ஆசையில்லை
என்னேரந் திரிகால பூசையோடும் எழிலான காவிகஷாயத்தோடும்
சொன்னபடி மனோன்மணியாள் பிரணவத்தை தொல்லுலகில் யெப்போதும்
சொல்வார்தானே
5813.
சொல்வாரே யின்னமொரு மார்க்கங்கேளு தூய்தான நற்பாலா தீரவானே
புல்லவே கௌபால சித்துதானும் புகழான வையகத்தில் இருந்தசித்து
வல்லதொரு பொன்னுக்கு வாணிமாற்று வகுப்புடனே கண்டறிந்த ஞானசித்து
சல்லியமாம் வித்தைதனில் தேர்ந்தசித்து சட்டமுடன் வுரைகல்லுக்குரியசித்தே
5814.
உரையான பொன்னுரைக்கும் கல்லைத்தானும் வுத்தமனே மலைதனிலே கண்டுதேடி
திரையோடும் புரையகற்றி வயிரக்கல்லை திட்டமுடன் ஆராய்ந்த ஞானசித்து
வரையான சித்துக்கு வயதேதென்றால் வளமுடனே கூறுகிறேன் இன்னங்கேளு
கரைகண்ட சித்தல்லோ கெவனசித்து கௌபால சித்தென்று பேருண்டாச்சே
5815.
பேரான சித்துக்கு வயதேதென்றால் பெருமையுடன் கூறுகிறேன் கொற்றவர்கேள்
நேரான வயததுவும் இருநாற்றைந்து நெடிதான காடுமலை திரிந்தசித்து
ஊரோடுங்கூடியல்லோ உறவுபேசி வுகமையுடன் சாத்திரத்தை யறிந்தசித்து
சீரான கௌபால சித்தருக்கு சிறப்புடனே ஞானமென்ற தேசந்தானே
5816.
தேசமாம் உபதேசம் பெற்றுக்கொண்டு தேற்றமுடன் காயாதி கற்பங்கொண்டு
வாசமது மலையனிலே இருந்துகொண்டு வகுப்பான சித்தரது வுளவாராய்ந்து
நேசமுடன் சமாதிக்கு ஏகவெண்ணி நெடுங்காலஞ் சீஷவர்க்க மாண்பரோடும்
பாசமொடு தனக்குகந்த சீஷனைத்தான் பட்சமுடன் கண்டறிந்து வுரைத்தார்தாமே

5817.
உரைத்தாரே சீஷவர்க்க சேதிதன்னை வுத்தமனே சமாதிக்குப் போரேனப்பா
வரையான சமாதிமுகஞ் சென்றபோது வளமுடனே எந்தனுக்கு வயிரக்கல்லால்
குறையாமல் சமாதிதனை மூடியல்லோ கொற்றவனே கருவயிரக்கல்லில்தானும்
மறைவாகக் கைநாட்டுச் சித்திரந்தான் மன்னவனே எழுத்துரையு மென்பார்தானே
5818.
என்றவுடன் கௌபாலசித்துதாமும் எளிதான வயிரக்கல் மேலேயப்பா
வென்றிடவே எழுத்துமுகம் மாறியல்லோ மேதினியில் எல்லவர்க்கும் அறிவதற்கு
குன்றான கல்லின்மேல் எழுத்துவூன்றி கொற்றவனே கௌபாலர் சமாதியென்று
நன்றாக வரைதீட்டி சீஷர்தாமும் நலமுடனே சமாதிமுகஞ் செய்தார்பாரே
5819.
செய்யவே பதினான்கு வருஷமட்டும் செப்பரிய சமாதிமுகந்தனிலிருந்து
பையவே வையகத்தில் வந்தசித்து பாங்குடனே ஏமமென்ற சித்துவாகும்
துய்யதமிழ் பண்டிதர்கள் போற்றுஞ்சித்து துறையான ஏமமாற்றறிந்தசித்து
வையகத்தில் சித்துமுனி ரிஷிகள்தேவர் வளமுடனே எவரறிந்தார் ஆணிதானே
5820.
ஆணியா மின்னமொரு வதிதஞ்சொல்வேன் வப்பனே புலிப்பாணி மைந்தாகேளு
நீணிலத்தில் ஜோதிமாமுனிவர்தாமும் நீதியுடன் வெகுகாலமிருந்தசித்து
வாணிபங்கள் செய்வதற்கு ஏமமாற்றை வளமுடனே கண்டறிந்தசித்துதாமும்
காணிகளும் பூமிவளமெல்லாங்கண்டு கருவயிரக்கல்லெடுத்த சித்துதானே
5821.
தானான சித்துக்கு வயதேதென்றால் தன்மையுள்ள வருடமது நானூறாகும்
பானான காடுமலை தன்முகத்தில் பாங்குடனே தான்திரிந்த சித்துவாகும்
கோனான குருக்கள்மார் ரிஷிகள்தம்மை கொற்றவனார் தான்கண்டு வுரவுபேசி
மானான பொன்மாற்று அறியவென்று மார்க்கமுடன் சென்றதொரு சித்துபாரே
5822.
பாரப்பா ஜோதியென்ற முனிவர்தானும் பட்சமுடன் சமாதிமுகம் வுள்ளேசென்று
சீரப்பா முப்பத்தாறாண்டுமட்டும் சிறப்புடனே வையகத்தை மறந்தசித்து
நேரப்பா தவசுநிலை தான்கடந்து நேர்மையுடன் நேர்மையுடன் சமாதிவிட்டு வந்தசித்து
ஆரப்பா அறிவார்கள் ஜோதிமார்க்கம் வப்பனே யானறிந்து சொல்லிட்டேனே
5823.
சொல்லவே யின்னமொரு மார்க்கம்பாரு தூய்தான பாலகனே என்னசொல்வேன்
வெல்லவே டமரகனார் வயதேதென்றால் வுத்தமனே முந்நூற்றுச் சொச்சமாகும்
புல்லவே நெடுங்காலம் வையகத்து புகழான மாண்பருடன் கூடியல்லோ
நல்லதொரு வதிஷ்டகரு வித்தையெல்லாம் நலமுடனே செய்ததொரு டமரர்காணே
5824.
காணவே ஜெகஜால டமரகந்தான காசினியில் அதீதவித்தை செய்தசித்து
பூணவே நீர்மேலே நடந்தசித்து புகழான வாசியை நடத்துஞ்சித்து
தோணவே கூடுவிட்டு கூடுபாய்ந்து தொல்லுலகில் வித்தைதனை செய்தசித்து
ஆணவங்கள் தானொடுங்கி காயந்தின்று வன்புடனே வீற்றிருந்த சித்துதாமே

5825.
தானான டமரகனார் ஆடுஞ்சித்து தகமையுள்ள சாத்திரத்திற் சொல்லவில்லை
கோனான வாகாயந்தன்னின்மட்டும் கொற்றவனார் கெடைகட்டி யாடுஞ்சித்து
பானான பரிதிமதி தன்னைத்தானும் பக்குவமாய்த் திசைமாற்றிச் செய்தசித்து
மானான டமரகனார் சமாதிதன்னில் மார்க்கமுடன் ஏகுதற்கு எண்ணினாரே
5826.
நண்ணவே சகலரிஷி சித்துதாமும் நலமுடனே வையகத்து சமாதிதன்னில்
மண்ணதனில் இருந்ததொரு சித்துமாச்சு மகத்தான வவர்போன்ற சித்துமல்ல
கண்ணவிந்த குருடனைப்போல் கேணிதன்னில் காசினியில் இறங்கியல்லோ சித்துதானும்
தண்ணீரில் பனிரெண்டு வாண்டுமட்டும் தன்மையுடன் வீற்றிருந்த சித்துதாமே
5827.
சித்தான சித்து ஜலஸ்தம்பனசித்து சிறப்பான டமரகர்போல் சொல்லொண்ணாது
முத்தான கேணிவிட்டு வந்தசித்து மூதுலகில் இவர்போலு மெங்குமுண்டோ
பத்தியுடன் வையகத்தில் அனந்தஞ்சித்து பாரினிலே வெகுமுனிவர் இருந்தாரல்லோ
சாத்திரங்கள் மறவாத சித்தானாலும் ஜலஸ்தம்பன சித்துபோலில்லைதானே
5828.
இல்லையே இன்னமொரு கவிதைசொல்வேன் எழிலான எந்தனிட மணியே கேளும்
சொல்லவே சுந்தரானந்தரப்பா தொல்லுலகில் கேசரியாம் வித்தைதன்னை
புல்லவே வதீதமென்ற மாண்பருக்கு புகழுடனே புகட்டியதோர் சித்துமாகும்
வெல்லவே யவர்தமக்கு வயதேதென்றால் வட்டகுறை தொட்டகுறை மிகுதியாமே
5829.
ஆமேதான் அவர்தமக்கு வயதுமெத்த வப்பனே எண்ணூற்று சொச்சமாண்டு
நாமேதான் சொன்னபடி குளிகைபூண்டு நலமான கேசரிமேல் சென்றசித்து
போமேதான் வையகத்திலிருந்துமல்லோ பொங்கமுடன் சமாதிமுகஞ் சென்றசித்து
வேமேதான் இருபத்தாறாண்டுமட்டும் விடுபட்டு பூமிதனில் வந்தசித்தே
5830.
வந்ததொரு சித்துக்கு சமாதிமார்க்கம் வையகத்தில் மெத்தவுண்டு சொல்லொண்ணாது
சந்ததமாஞ் சீஷவர்க்கம் கோடிமாண்பர் தாரிணியில் கணக்குண்டோ லக்கோயில்லை
சொந்தமுடன் வெகுமாண்பர் கிட்டியல்லோ சுந்தரனார் பாதாரவிந்தந்தன்னை
அந்தமுடன் தாள்பணிந்து சிரங்குனிந்து வன்புடனே போற்றிசெய்தசித்துமாச்சே
5831.
ஆச்சப்பா புலிப்பாணி மைந்தாகேளு வன்புடனே சொல்லுகிறேன் வதீதமெத்த
மாச்சலென்ற வாரிஷியாஞ் சித்துதம்மை வளமுடனே சொல்லுகிறேன் வண்மைபாரு
பாச்சலென்ற வயததுவும் எழுநூற்றுச் சொச்சம் பாருலகில் நெடுங்காலமிருந்தசித்து
மூச்சடங்கி சிவயோகமான சித்து மூதுலகில் இவர்போலுங் காணார்தாமே
5832.
காணாரே தவசியென்ற வரரிஷியார்தானும் கருவாக காளிங்கமடுவுதன்னில்
வேணபடி தவயோகஞ் செய்யவென்று விட்டகுறை தனையகற்றி மடுவிற்சென்று
தோணவே பனிரெண்டு வாண்டுமட்டும் தொல்லுலகில் ஜலஸ்தம்ப சமாதியாகி
மாண்பரும் வையகத்தோர் காணவென்று மார்க்கமுடன் வந்ததோர் சித்துதானே

5833.
தானென்ற சித்ததுவும் ஜலரூபசித்து தாரணியில் இவர்போலுஞ் சித்துமுண்டோ
வானென்ற தேவாதி ரிஷிகள்தம்மால் வரத்தினால் பேருபெற்ற சித்தேயாகும்
கோனென்ற வரராரிஷியார் என்றுசொல்லிக் கொற்றவர்க்குக் குவலயத்தில் பேருண்டாச்சு
மானென்ற சித்தர்களும் வணங்கியல்லோ மகத்தான ரிஷியாரைப் போற்றுவாரே
5834.
போற்றுவார் பூதலத்தார் எல்லாருந்தான் பொங்கமுடன் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன்
தேற்றமுடன் வால்மீகர் என்றசித்து தெளிவான மார்க்கமது சொல்வேன்பாரீர்
மாற்றமயம் நீங்கியல்லோ வையகத்தில் வளமையுடன் வெகுகாலமிருந்த சித்து
ஆற்றலுடன் வால்மீகர் ராமாயணத்தை அவனிதனில் மாந்தருக்கு செய்திட்டாரே
5835.
செய்ததொரு வால்மீகர் வயதேதென்றால் செப்பமுடன் எழுநூற்றுச் சொச்சமப்பா
துய்யதமிழ் பண்டிதனாங் கல்விவானாம் தூய்தான வகப்பேரு கொண்டசித்து
பையவே சமாதிமுகஞ் சென்றதில்லை பாங்குடனே காயாதிகொண்டுதானும்
வெய்யவே நெடுங்கால மிருந்தசித்து வேதாந் வால்மீகர் தானுமாமே
5836.
தானான வையகத்து மாந்தர்க்கெல்லாம் தகமையுள்ள வால்மீகர் சரிகைதன்னை
கோனான குருவான வால்மீகர்தானும் குவலயத்தில் பேர்கொண்ட ஞானசித்து
தேனான வைதீக சாத்திரங்கள் தெளிவுடனே கட்டிவைத்த ஞானசித்து
பானான பராசரிஷிக் கொப்பதான பாங்கான யடியென்று செப்பலாமே
5837.
செப்பலாம் இன்னமொரு மார்க்கங்கேளு செயலான புலிப்பாணி மைந்தாபாரு
ஒப்பமுடன் ஊர்வசியாள் வயதேதென்றால் வுத்தமனே நூற்றிரு பத்தேயாகும்
தப்பிதங்கள் நேராமல் தரணிமீதில் சாங்கமுடன் வீற்றிருந்த மாதுசித்து
இப்புவியில் ஊர்வசியாள் சுருக்கரத்னம் எழிலாகப்பாடிவைத்த மாதுதாமே
5838.
மாதான ஊர்வசியாள் காயகற்பம் மகத்தான வையகத்தில் உண்டுமல்லோ
தோதான காவியங்கள் என்றுகூறி தோறாமல் பாடிவைத்த மாதுசித்து
நீதான வியாசரிடம் உபதேசங்கள் நீதியுடன் பெற்றதொரு மாதுதானும்
கோதாவரி கரைதனிலே மடிந்தசித்து கொற்றவனே சமாதியது அங்கேவுண்டே
5839.
உண்டான சமாதியது மண்டபத்தில் ஓகோகோ நாதாக்கள் கண்டறிந்து
திண்பான வேதமாம் ஆயுர்வேதம் தீரமுடன் கண்டறிந்த மாதுசித்து
கண்டல்லோ ரிஷிமுனிவர் சித்துதானுங் காசினியில் பூசைமுதல் நைவேத்தியங்கள்
சண்டமாருதம்போலே தானடித்து தாரணியில் கோடித்து வருகின்றாரே
5840.
வருகிறார் பூவாடைகாரிசித்தை மார்க்கமா மின்னமொரு மகிமைகேளு
கருமமதை வையகத்தில் தானகற்றி காசினியில் நெடுங்கால மிருந்தசித்து
தருமமது தானறிந்த கமலசித்து தாரணியில் தானறிந்த கொடியசித்து
அருமையுடன் சீனபதி தேசந்தன்னில் வன்பாகச் சென்றதொரு சித்துபாரே

5841.
பரேதான் கமலமுனி வயதேதென்றால் பாலகனே சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
நேரேதான் வயததுவும் நாலாயிரந்தான் நேர்மையுடன் முந்நூற்றச் சொச்சமாகும்
சீரேதான் சீனபதி தன்னிலப்பா சிறப்புடனே நெடுங்காலமிருந்தசித்து
தீரேதான் சமாதிமுகந் தன்னிற்சென்று தீர்க்கமுடன் இருநூறு வாண்டுதானே
5842.
ஆண்டான வருஷமது இருநூரப்பா வப்பனே பூமிதனி லிருந்தசித்து
கூண்டான கூண்டோடு வந்தசித்து குவலயத்தில் இவர்போலுஞ்சித்துமுண்டோ
தாண்டவம்போல் சீனபதி தேசந்தன்னில் சாங்கமுடன் வினோதங்கள் செய்தசித்து
ஆண்டகையாம் ஆனதொரு கமலர்தானும் வப்பனே வையகத்து சித்துமாச்சே
5843.
ஆச்சப்பா இன்னமொரு மகிமைசொல்வேன் வப்பனே யதிசயங்கள் மெத்தவுண்டு
மாச்சலுடன் வையகத்தில் இருந்தசித்து மகத்தான அறிவானந்த சித்துதானும்
பாச்சலுடன் வயததுவும் ஏதென்றாக்கால் பண்பான முந்நூற்று வறுபதாண்டு
மூச்சடங்கி சமாதிதனில் இருந்தசித்து மூர்க்கமுடன் பனிரெண்டு வருஷங்காணே
5844.
காணவே பனிரண்டாண்டுமட்டும் காசினியில் பூமிதனில் இருந்தசித்து
தோணவே கௌபாலர் சீஷனாகும் தொல்லுலகில் இவர்மகிமை மெத்தவுண்டு
பூணவே வையகத்து மாண்பருக்கு புகழாக முன்னடந்தகாரியத்தை
வேணபடி சன்னதங்கள் கொண்டாற்போலே விட்டகுறை இருந்தபடி சொல்வார்பாரே
5845.
சொல்லவே யின்னமொரு மார்க்கங்கேளு தூய்தான வகப்பேயர் சித்துதாமும்
வெல்லவே யவர்தமக்கு வயதேதென்றால் விருப்பமுடன் சொல்லுகிறேன் வியனுந்தானும்
புல்லவே நூற்றுபத்து ஒன்றுமூன்று புகழான மரத்தடியில் இருக்குஞ்சித்து
நல்லதொரு சமாதிமுகஞ் சென்றதில்லை நாதாந்த அகப்பைவெளி சித்துதானே
5846.
வெளியான சித்துக்கு குருவேதென்றால் விருப்பமுடன் வியாசமுனி யென்னலாகும்
ஒளிவாக காயாதி தானுமில்லை ஓகோகோ வுலகமதில் வாழுஞ்சித்து
களியான ஜோதியென்ற விருட்சந்தன்னில் கைலாசநாதரைப்போல் சமாதிகொண்டு
வளியான மரப்பொந்தில் தானொடுங்கி மகத்தாக இருந்ததொரு சித்துமாச்சே
5847.
சித்தான சித்துனுட மார்க்கஞ்சொல்வேன் சீரான புலிப்பாணி மன்னாபாரு
முத்தான பாம்பாட்டி வயதேதென்றால் மூதுலகில் பெயர்கொண்ட நெடியசித்து
புத்தியுள்ள சித்துக்கு வயதுசொல்வேன் புண்ணியனே நூற்றிருபத்துமூன்று
சுத்தமுடன் பாம்பினது விஷத்தைவாங்கி துப்புரவாய் அருந்துகிற சித்துகேளே
5848.
கேளேதான் காயாதிகற்பங்கொண்டு கீர்த்தியுடன் சிலகால மிருந்தசித்து
பாளேதான் போகாமல் தேகந்தன்னை பட்சமுடன் காப்பாற்றி பந்துகொண்டு
நீளேதான் திருவாத்தி மரத்தின்கீழே நீதியுடன் கொலுவிருந்த காயசித்து
ஆனேதான் கோகர்ண சித்துமல்ல வப்பனே சின்மயத்தின் சித்துபாரே

5849.
பாரேதான் இன்னமொரு மார்க்கம்பாரு பட்சமுள்ள எந்தனது பாலாகேளு
சீரேதான் காலகண்ட வயதேதென்றால் சிறப்பான வாயிரமா மிருநூறாண்டு
நேரேதான் நெடுங்காலமிருந்தசித்து நேர்மையுடன் குளிகையது பூண்டசித்து
ஊரேதான் பெயரேது சொல்லவென்றால் வுத்தமனே சேஷனால் முடியாதென்றே
5850.
அன்றான ஆதிசேடன் தன்னினாலும் வப்பனே கூறுதற்கு முடியாதப்பா
குன்றான நெடுமலைகள் வனாந்திரங்கள் கொற்றவனே நெடுங்கால மறிந்தசித்து
தென்றிசையில் தெட்சிணாமூர்த்தினாயன் சிறப்பான சித்துமகா சீஷனுக்கு
வென்றிடவே யுபதேசஞ் செய்தசித்து விட்டகுறை யிருந்ததொரு காலர்தாமே
5851.
காலனாம் நெடுந்தூத காலசித்து காசினியில் சமாதிமுகம் செல்வதற்கு
பாலகனாம் சீஷவர்க்கமாண்பர்தம்மை பட்சமுடன் தாமழைத்த சித்துதாமும்
சீலமுடன் முப்பத்து வாறுவாண்டு சிறப்புடனே வையகத்தில் இருந்தசித்து
கோலமுடன் முகமறியா பாலசித்து கொற்றவனே வெகுகால மிருந்தசித்தே
5852.
சித்தான சித்தனிட மார்க்கஞ் சொன்னேன் சிறப்பான இன்னமொரு வயனங்கேளிர்
முத்தான வடிவேலர் முருகரப்பா மயற்சியுடன் வயததுவும் ஏதென்றாக்கால்
சத்தியமாய் வயததுவுங் கணக்கோயில்லை சார்பான நூல்தனிலுஞ் சொல்லவில்லை
சித்திபெற ஞானவழிகொண்டசித்து சிறப்பான சுப்ரமணியர் என்னலாமே
5853.
என்னவே சிவசுப்பிரமணியரான யெழிலான சித்துக்கு வயதோயில்லை
பன்னவே பலசாஸ்திர நூல்கள் தன்னில் பாகமுடன் வயததுவுங்கூறவில்லை
சொன்னபடி சுருதிமுறை வேதாகமங்கள் தோற்றமுடன் பலபேரும் பாடிவைத்தார்
நன்னயமாய் சுப்பிரமணியர் காப்பேயென்று நாட்டினார் நூல்களெல்லாம் நாட்டினாரே
5854.
நாட்டினதோர் நாமமதைக் கண்டதல்லால் நாதாந்த வயததுவைக்கண்டதில்லை
தாட்டிகமாய் யின்னம்மொரு வயணஞ்சொல்வேன் தயாளமுள்ள சிறுபாலாசாற்றக்கேளிர்
வாட்டமுடன் யூகியென்ற முனிவர்தானும் வகுப்பான வயததுவும் ஏதென்றாக்கால்
மாட்டிமையாய் அறுநூற்று யெண்பதாண்டு மார்க்கமுடன் வையகத்து சித்துபாரே
5855.
பாரேதான் நீலகண்ட ரிஷியார்தம்மால் பாருலகில் உபதேசம் பெற்றசித்து
நேரேதான் சமாதிமுகந் தன்னிற்சென்று நேர்மையுடன் இருபத்தோர் ஆண்டுமட்டும்
தீரேதான் சமாதிமுகம் இருந்துமல்லோ தீர்க்கமுடன் வையகத்தில் வந்தசித்து
பேரேதான் நூல்தனிலே யூகியென்றும் பேருலகில் கீர்த்திபெற்ற சித்துதாமே
5856.
தாமான சாத்திரங்கள் அழிந்தசித்து தாரிணியில் நெடுங்கால மிருந்தசித்து
கோமான்கள் உபதேசம் பெற்றசித்து குவலயத்தில் இவர்போலும் யாருமுண்டோ
பூமான்களானதொரு மாண்பரெல்லாம் புகழ்ச்சியுடன் இவர்பாதம் புகழுஞ்சித்து
சாமான்யமானதொரு சித்துபோல சட்டமுடன் வையகத்திற் காணார்தாமே

5857.
தானான இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தகமையுள்ள பூபாலா மணியேகேளிர்
பானான திரணாக்கிய முனிவர்தானும் பாருலகில் நெடுங்காலமான சித்து
கோனான வயததுவும் ஏதென்றாக்கால் கொற்றவனே துலாயிரத்து எண்பதாண்டு
மானான சமாதிமுகஞ் சென்றசித்து மார்க்கமுடன் இருபத்திரண்டுதானே
5858.
ஆண்டான வருஷமது இருபத்திரண்டு வப்பனே சமாதிமுகம் இருந்தசித்து
பாண்டவர்கள் ஐவருங்காணாமுன்னே பாருலகில் வெகுகால மிருந்தசித்து
தாண்டவம்போல் ஜெமதக்கினி முனிவர்தானும் தாரிணியில் பெற்றெடுத்த சித்துவாகும்
மாண்டதொரு மாண்பரெல்லாம் வையகத்தில் வாழ்த்தியல்லோ வஞ்சலிகள் செய்தசித்தே
5859.
சித்தான சித்துமுனி இவர்தானப்பா சீருலகில் ரிஷிவர்க்கக் கூட்டத்தோடு
முத்திபெற நல்வழிக்கு உறுதிகொண்டு மூதுலகில் சின்மயத்தை மனதிலுன்னி
சத்தியுடன் மனோன்மணியை தியானித்தேதான் சதாகால நிஷ்டைகுறிகளங்கனாதி
புத்தியுடன் வையகத்தில் தவசியாகி பொன்னுலகுபதிதனிலே சேர்ந்தார்காணே
5860.
சேரவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் செம்மலுடன் புலிப்பாணி மைந்தாகேளு
வாரமுடன் சண்டீசுவரர் வளமைகேளும் வண்மையுடன் வயததுவும் ஏதென்றாக்கால்
தீரமுடன் நானூற்றியறுபதாகும் தீர்க்கமுடன் அவர்நூலில் சொன்னநீதி
சாரமுடன் சமாதிமுகஞ் சென்றசித்து சாங்கமுடன் வையகத்து சித்துகாணே
5861.
காணவே சமாதிமுகம் பத்துரெண்டு கருவாக ஒன்றுடனே தானுங்கூட்டி
பூணவே பூமிதனில் இருந்தசித்து பொங்கமுடன் ஞானமென்ற கிரியாசித்து
நீணவே நாலுயுக வதிசயங்கள் நீடாழி யுலகுபதி யறிந்தசித்து
சீனமது இல்லாமல் நெடுங்காலந்தான் சீவனோடிருந்ததொரு சித்துமாச்சே
5862.
ஆச்சப்பா யின்னமொரு முறைமைசொல்வேன் வப்பனே செங்கனிவாய்க்கொண்டபாலா
ஏச்சலது வாராமல் இருந்தசித்து எழிலான திருமூலரென்னலாகும்
பாச்சலென்ற வயததுவும் ஏதென்றாக்கால் பாரினிலே வாயிரத்து சொச்சமாகும்
மூச்சடங்கி சமாதிமுகந் தன்னிலப்பா மூதுலகில் நெடுங்காலமிருந்தசித்தே
5863.
நெடுங்காலம் சமாதிமுகந் தன்னில்தானும் நேர்மையுடன் அறுபது வருஷமாண்டு
கடுந்தவசி யாயிருந்த சித்துதாமும் கண்டுகொள்ளா வதிசயங்கள் மெத்தவுண்டு
படுந்துயரந் தானறியா மாண்பர்க்கப்பா பாரினிலே நிதிகொடுத்து வதிதஞ்செய்தார்
கடுவாதி தமைக்கண்டு நிர்த்தஞ்சொல்லி துப்புரவாய் விதியுரைத்து வழிசொல்வாரே
5864.
வழியான முறைபாடு தாமுரைத்து வண்மையுடன் உபதேசங்கூறியல்லோ
பழியான வார்த்தைக்கு ஆளாகாமல் பாருலகில் சித்துவிளையாடச்சொல்லி
முழியான வார்த்தையது வுபதேசங்கள் மூர்க்கமின்றி தானுரைக்கும் ஞானசித்து
சுழியான வாசிநிலை தனிலிருந்து சுத்தமுடன் வையகத்தில் இறந்தார்தாமே

5865.
இறந்தாரே இன்னமொரு மார்க்கங்கேளு எழிலான பதினெண்பேர் முனிவர்தானும்
பிறந்ததொரு வளப்பங்கள் யாவுங்கண்டு பேரின்பநிலைதனிலே மனதிலுன்னி
சிறந்ததொரு நட்சத்திரயோகங்கண்டு சீரான பிதங்கள் தான்வகுத்து
துறந்துமே நவகோடி ரிஷிகள்தானும் துப்புறவாய் நாற்பத்தி எண்பேர்தாமே
5866.
பேரான யிவர்களது பிறப்புதானும் பேரின்ப நட்சத்திர கால்தான்கூட்டி
சீரான சீனபதிமாண்பருக்கு தீர்க்கமுடன் உபதேசஞ் செய்தநூலாம்
கூரான வையகத்து மாண்பரெல்லாம் குறிப்புடனே தானறியமனதுவந்து
வீரான போகரேழாயிரத்தை விருப்பமுடன் உபதேசஞ் செய்திட்டேனே
5867.
செய்தேனே புலிப்பாணி மைந்தாகேளு செங்கமல கரத்தானே யின்னஞ்சொல்வேன்
மெய்யான வேதமிது சத்தகாண்டம் மேதினியில் சகலகலைக் கியானமெல்லாம்
பையவே வடநூலைத் தானாராய்ந்து பாடினேன் காண்டமது ஏழாயிரந்தான்
துய்யதமிழ் பரிபாஷைத் தன்னைநீக்கி துப்புறவாய் ஓதிவைத்தேன் காண்டந்தானே
5868.
காண்டமேழாயிரம் பெருநூலப்பா கருவிகரணாதிமுதல் இதிலடக்கம்
பூண்டமன துறுதியினால் இந்தநூலைப் புகட்டினேன் காலாங்கி கடாட்சத்தாலே
வேண்டியதோர் சீனபதி கருமானங்கள் வேற்றுருவ மில்லாமல் கூறினேன்யான்
ஆண்டகையாம் எந்தன்குரு நாதன்தன்னால் அப்பனே பாடிவைத்த நூலிதாமே
5869.
நூலான நூலிதுதான் நுணுக்கமெத்த நுட்பமுடன் காலாங்கி பிறந்தவண்ணம்
பாலான சித்திரையாம் மாதமப்பா பாங்கான வசுவினியாம் நாலாங்காலாம்
சேலான ஜெகத்குரு மைந்தனப்பா செயலான பாக்கியமும் பெற்றமைந்தன்
காலான காலாங்கி நாதரப்பா காசினியில் வந்துதித்த வுருவுமாச்சே
5870.
உருவான மார்க்கமது இன்னஞ்சொல்வேன் உத்தமனே போகாது பிறப்புநேர்மை
உருவான மாதமது வைகாசியப்பா கருத்தான பரணியது ரெண்டாங்காலாம்
குருவான பஞ்சணத்தில் ஒருவனப்பா கொற்றவனே விசுவகர்மன் மைந்தனாகும்
திருவான போகரிஷி என்றுமல்லோ செப்பினார் பலநூல்கள் வேதமாமே
5871.
வேதமா மின்னமொரு மாசர்க்கங்கேளு வெளியான புலிப்பாணி மைந்தாபாரு
போதமாம் ரோமரிஷி பிறந்தநேர்மை புகலுகிறேன் மாணாக்கள் அறியவென்று
நீதமுடன் ஆணியாந் திங்களப்பா நிஷ்களங்கமான கார்த்திகைதானாகும்
வீதமுடன் பயனறிய மூன்றாங்காலாம் விற்பரனார் பிறந்ததொழி நாளுமாச்சே
5872.
ஆச்சப்பா செம்படவன் தன்னையப்பா வப்பனே மாதுருவுங் குறத்தியாகும்
பாச்சலுடன் பலநூலுங் கண்டாராய்ந்து பாடிவைத்த மரபதுவும் மெய்யேயாகும்
மாச்சலுடன் இருகுலத்தார் பெற்றமைந்தன் மகத்தான ரோமரிஷி யென்னலாகும்
மூச்சடங்கி சென்றதொரு கானீனப்பா மூதுலகில் சென்றதொரு சித்துமாச்சே

5873.
சித்தான மார்க்கமது இன்னஞ்சொல்வேன் சீர்பாலா எந்தனிருகண்ணேகேளும்
பத்தியுள்ள மச்சமுனி பிறந்தநேர்மை பாங்குடனே யாடியாந்திங்களப்பா
சத்தியுடன் ரோகனியாம் முதற்காலப்பா சாங்கமுடன் பிறந்ததொரு நாளுமாச்சு
புத்தியுள்ள ஆதுலமாங் குலத்துதித்த புகழான கன்னியுட மைந்தனாமே
5874.
ஆமேதான் மச்சமுனி அடவுசொன்னேன் வன்பான புலிப்பாணி மைந்தாகேளு
நாமேதான் சொன்னபடி சட்டநாதர் நன்மையுடன் பிறந்ததொரு நேர்மைதானும்
போமேதான் ஆவணியாந் திங்களப்பா பொங்கமுடன் மிருகசீரிடமுமாகும்
வேமேதான் விட்டகுறை மூன்றாங்காலாம் விருப்பமுடன் அவதரித்த பாலனாமே
5875.
பாலனாஞ் சிங்களவ தேவதாசி பட்சமுடன் பயின்றெடுத்த புத்திரன்தான்
சீலமுடன் சட்டமுனி என்றுசொல்லி சிறப்புடனே குவலயத்தில் பேருண்டாச்சு
கோலமுடன் யின்னமொரு மார்க்கம்பாரு கொற்றவனே புலிப்பாணி மைந்தாகேளு
தாலமுடன் இடைக்காடர் பிறந்தநேர்மை சட்டமுடன் சொல்லுகிறேன் தண்மைபாரே
5876.
தண்மையாம் புரட்டாசி மாதமப்பா தாழ்வாக இரணியனைக் கொன்றமாதம்
வண்மையாந் திருவாதிரை ரெண்டாங்காலாம் வளப்பமுடன் அவதரித்த சிசுபாலன்தான்
பெண்மையாக கானகுறை சாதியப்பா பேரான கானீனன் பெற்றபிள்ளை
திண்மையாம் இடைக்காடர் தானுமாகும் தீர்க்கமுடன் பூவுலகில் இருந்தசித்தே
5877.
சித்தான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் திரளான நவகோடி ரிஷிகள்தன்னில்
புத்தியுள்ள தன்வந்திரி பகவான்தானும் பூபாலரானதொரு மாயாசித்து
சத்தியுள்ள மகாவிஷ்ணு வென்றேசொல்வார் தாரிணியில் மானிடமாஞ் சித்துவாகும்
முத்திபெற வைப்பசியாந் திங்களப்பா முனையான புனர்பூசம் நாலாங்காலே
5878.
காலான தன்வந்திரி பிறந்தநேர்மை காசினியில் இவர்நூலில் சொன்னவாறு
நூலான பலநூலிற் கண்டாராய்ந்து நுட்பமுடன் பாடிவைத்தேன் குருநூலாகும்
பாலான யிருப்பிரப்பாளரப்பா பாங்கான அனுலோமன் பெற்றபிள்ளை
சாலான சாத்திரங்கள் யாவுங்கூறும் சகலவித பண்டிதருங் காணார்தாமே
5879.
கண்டேனே நிர்வாண பாஷையப்பா காசினியில் சமஸ்கிருத பாஷையாலும்
விண்டதொரு இத்தாலிபாளபந்து விருப்பமுடன் பாகவதபாஷையாலும்
கொண்டேனே மனத்துறுதி யடியேன்தானும் கொற்றவனே குவலயத்தில் கண்டாராய்ந்து
விண்டுமி யானுரைத்தேன் விஷ்ணுகாதை விளம்பிட்டேன் சத்தகாண்டம் உண்மைதானே
5880.
தானான யின்னமொரு மார்க்கம்பாரு தயவான புலிப்பாணி மகனேகேளு
கோனான என்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவனார் தானுரைத்த வுளவுகண்டேன்
பானான மூலத்தின் ஈசரப்பா பண்புடனே பிறந்ததொரு நேர்மைதானும்
மானான கார்த்திகையாந் திங்களப்பா மகத்தான பூசமது மூன்றாங்காலே

5881.
மூன்றான பாதமது மூலத்தீசர் முனையாக பிறந்ததொரு நேர்மையப்பா
சான்றவரா மூலத்தினீசரப்பா சட்டமுடன் வந்துதித்த நாளுமாகும்
ஈன்றதொரு ஜாதியிலே பள்ளஜாதி எழிலான கன்னிகையும் பெற்றபிள்ளை
மேன்மையுடன் தான்பிறந்தார் மூலத்தீசர் மேதினியில் ரிஷிதனக்குப் பிறந்தார்தாமே
5882.
பிறந்ததொரு யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் பேரான புலிப்பாணி மைந்தாபாரு
சிறந்ததொரு அகத்தீசர் பிறந்தநேர்மை சிறப்பான தனுர்மாத மென்னலாகும்
துறந்ததொரு ஆயில்யம் மூன்றாம்பாதம் துப்புறவாய் அவர்பிறந்த நாளுமாச்சு
கறந்ததொரு பால்பசுவும் கன்னுமாகி காசினியில் பிறந்ததொரு சித்துமாச்சே
5883.
ஆச்சப்பா அகத்தியரின் பிறப்புநேர்மை அவனிதனில் ஆராலும் முடியாதப்பா
மூச்சடங்கி மலையின் மேல்நின்றசித்து முனையான கமலமதில் பிறந்தசித்து
மாச்சலுடன் தேவரிஷி வரத்தினாலே மகாதேவர் வந்துதித்த குருவுமாகும்
ஏச்சலது வாராத கும்பயோனி எழிலான அகஸ்தியரென் றரையலாமே
5884.
அறையவே யின்னமொரு வயணஞ்சொல்வேன் வன்பான கண்மணியே சொல்லக்கேளிர்
நிறையவே சிவவாக்கியர் பிறந்தநேர்மை நீதியுடன் சொல்லுகிறேன் நிறைவாய்க்கேளு
குறையாத தைமாதம் மகத்திலப்பா கொற்றவனே ரெண்டாங்கால் என்னலாகும்
மறையவே திருமூல கூட்டத்தாரில் மகத்தான கன்னியது பிள்ளையாமே
5885.
பிள்ளையாஞ் சிவவாக்கிய ரென்னலாகும் பேரான திருமூலர் மரபிலுள்ள
வள்ளலெனுஞ் சேய்மடவார் கன்னிதன்னின் மகத்தான சிவவாக்கியராகும்பாரு
தெள்ளுதமிழ் கவிவாணர் இவர்க்கீடுண்டோ செந்தமிழின் சுவையறிந்த சிவவாக்கியர்தான்
கள்ளமது வாராத புனிதபாலன் காசினியில் அவதரித்த வுருவுமாமே
5886.
உருவான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வுத்தமனே சிகாமணியே யுண்மைபாரீர்
திருவான ராமரென்ற தேவரப்பா தீர்க்கமுடன் வந்துதித்த நேர்மைகேளிர்
கருவான மாசியென்ற திங்களப்பா கடியதோர் பூரமது ரெண்டாம்பாதம்
அருவமுள்ள ராமரென்ற தேவர்தானும் வப்பனே வந்துதித்த நாளுமாச்சே
5887.
நாளான நாலாங்கால் என்னலாகும் நலமான ராமதேவர் பிறந்தநாளாம்
ஆளான ரோமரிஷி பாட்டனுக்கு அழகாக வந்துதித்த ராமதேவன்
கோளான நூல்களிலே குற்றஞ்சொல்வார் குறையான முறைப்பாடு யேதுஞ்சொல்வார்
பாளான நூல்தனிலே சொல்லாதாலே பட்சமுடன் யானுரைத்தேன் பண்பாய்க் கேளே
5888.
பண்பான யின்னமொரு மார்க்கம்பாரு பாலகனே ஐந்தறிவிற் சிறந்தபாலா
திண்பான புஜண்டருட மார்க்கஞ் சொல்வேன் தீர்க்கமுடன் பங்குனியாந் திங்களப்பா
கண்பான வுத்திரமாம் இரண்டாம்பாதம் காசினியில் வந்துதித்த திருவுமாச்சு
மண்பான வரரிஷியின் சாபத்தாலே மார்க்கமுடன் அவதரித்த பாலனாமே

5889.
பாலனாஞ் சந்திரகுலம் விளங்கவந்த பாரினிலே வெள்ளாட்டி பெற்றமைந்தன்
மாலான ரதிகேளி மடந்தையாகும் மகத்தான வருந்துதியு மென்னலாகும்
சேலான பாக்கியமும் பெற்றபாலன் செம்மலுடன் சாபத்தால் வரத்தில்வந்து
தாலான தவசியென்ற நாமம்பெற்று தாரிணியில் புஜண்டரென்ற பேருண்டாச்சே
5890.
பேரான யின்னமொரு வழிதான்சொல்வேன் பேருலகில் கீர்த்திபெற்ற புனிதவானே
சீரான கருவூரார் பிறந்தநேர்மை செப்புகிறேன் செம்பவள வாயாகேளிர்
கூறான சித்திரையாம் மாதமப்பா குறிப்பான வஸ்தமது ரெண்டாம்பாகம்
தேறான நாட்களிலே பிறந்தசித்து தேற்றமுடன் கருவூரார் என்னலாமே
5891.
ஆமேதான் தேவதத்தன் என்றுசொல்லி வப்பனே யவன்மைந்தன் மயன்என்பார்கள்
நாமேதான் சொன்னபடி மயனுக்கல்லோ நாடானக் கருவூரார் பிறந்தாரல்லோ
போமேதான் பொன்னுலகர் தேவதச்சர் பொங்கமுடன் கருவூரார்க் கீடுமல்ல
ஆமேதான் பாண்டியர்க்கு வுருவுசெய்து வப்பனே தான்கொடுத்த சித்துதாமே
5892.
தாமாக யின்னமொரு வழிபாடல்லோ சாற்றுகிறேன் புத்தியுள்ள பூபாலாகேள்
கோமானகள் அறிந்ததில்லை சாத்திரதோஷம் கொற்றவனே யாம்கண்ட வரைக்குஞ் சொல்வோம்
சாமான்ய மென்றதொரு புண்ணாக்கீசர் தாரணியில் வந்துதித்த நேர்மைசொல்வேன்
பூமான்கள் ஆரேனும் அறிந்ததுண்டோ புகட்சியுடன் கூறுகிறேன் புனிதவானே
5893.
புனிதமாம் வைகாசி மாதமப்பா புகழான புண்ணாக்கு ஈசர்தாமும்
வனிதமுடன் சித்திரையாம் இரண்டாம்பாதம் மகத்தான புண்ணாக்கர் பிறந்தநாளாம்
சனியிராகுடன் கூடிப்பிறந்ததாலே சாங்கமுடன் தேவரிஷி தன்னைப்போல
மனிதனாய் அவதாரம் எடுத்து மாட்டிடைச்சி யமங்கலியின் பிள்ளையாமே
5894.
பிள்ளையாயின்னமொரு பாகஞ்சொல்வேன் பேரான கண்மணியே புகலக்கேளிர்
எள்ளலவு பிசகாத புலிப்பாணி யுன்னை யேற்றமுடன் சொல்லுகிறேன் எழிலாய்க்கேளு
உள்ளபடி நீபிறந்த மாதமப்பா வுத்தமனே புரட்டாசி யென்னலாகும்
கள்ளமிலா ஜோதியென்ற நாலாங்காலாம் கருத்துடனே யவதரித்த சித்துமாச்சே
5895.
ஆச்சப்பா வேடர்குலம் வந்துதித்த வப்பனே கன்னிகழியாத மங்கை
மூச்சடங்கி கானகத்தில் தவசியாக மூர்க்கமுடன் இருந்த ரிஷியாரோடு
பேச்சுகளும் மிகப்பேசி வாதுகூறி பேரான நவகண்ட ரிஷிதானப்பா
பாச்சலுடன் கன்னிகையைச் சேர்ந்துமல்லோ பாலகனே பெற்றெடுத்த சிசுதானீயே
5896.
சிசுவான பாலகனே நீதானப்பா சிறப்பான காலாங்கி கடாட்சத்தாலே
பசுபோலே வேங்கைதனை வாகனமுமாக்கி பாரினிலே சுற்றிவந்த பாலனாகும்
நிசிதமுடன் எந்தனுக்கு சீஷனாக்கி நிஷ்களங்கமானதொரு புத்திவானாய்
விசுவாசமுள்ள தொரு பாலனாக மேதினியில் வந்துதித்த சித்துமாச்சே

5897.
சித்தான யின்னமொரு குறிதான்சொல்வேன் சிறப்பான புலிப்பாணி மகனேகேளாய்
முத்தமுடன் நந்தீசர் பிறந்தநேர்மை மூதுலகோர் தானறிய சொல்வேனப்பா
நித்தமது வைகாசி மாதமப்பா நீடான விசாகமது நாலாங்காலாம்
பத்தியுடன் தான்பிறந்த நந்திதேவர் பாரினிலே தேவஸ்தான குருவுமாச்சே
5898.
குருவான தேவதாஸ்தலங்கள் தன்னில் கொற்றவனே நந்தியென்ற பேருண்டாச்சு
அருவான தேவேந்திரன் சாபத்தாலே வப்பனே பிரம்மகுலந் தனிலுதித்து
உருவாகி மானிட ஜென்மமாகி வுத்தமனே கன்னியது வயிற்றிறங்கி
திருவான நந்திரூபங் கொண்டுமல்லோ சிறப்புடனே வந்துதித்த சித்துதானே
5899.
சித்தான யின்னமொரு மார்க்கம்பாரு சீருள்ள புலிப்பாணி மைந்தாகேளு
புத்தியுள்ள புலஸ்தியனார் பிறந்தநேர்மை பூதலத்தில் எவராலும் கூறப்போமோ
முத்திதரும் ஆவணியாந் திங்கள் தன்னில் முனையான அனுஷமாம் நாலாங்காலில்
பத்தியுடன் பிறந்தாரே புலஸ்தியர்தானும் பாரினிலே வந்துதித்த வுருவுமாச்சே
5900.
உருவான புலஸ்தியரின் மார்க்கங்கேளு ஓகோகோ நாதாக்கள் அறிந்ததில்லை
கருவான தேவரிஷி தன்வரத்தால் கமலமுனி தன்வயிற்றிற் பிறந்தபேரன்
திருவான வகஸ்தியருக்குகந்தசீஷன் தீர்க்கமுள்ள சிவராஜ புனிதயோகன்
பருவான திருமந்திர வுபதேசந்தான் பாருலகில் புலஸ்தியரென் றறையலாமே

# போகரின் சப்த காண்டம் – 7000

5901.
அறையலாம் இன்னமொரு மார்க்கம்பாரு வப்பனே புலிப்பாணி மைந்தாகேளு
நிறையனே வேதமென்ற வியாசர்தானும் நேர்மையுடன் தான்பிறந்த சேதிவண்ணம்
மறைபோன்ற வாணியாந் திங்களப்பா மகத்தான கேட்டையது ரெண்டாங்கால்தான்
குறைபோன்ற நாளதனில் உதித்தபாலன் கொற்றவனார் வேதமென்ற வியாசர்தானே
**5902.**
தானான பராசரது மைந்தனப்பா தாக்கான வியாசனென்றே செப்பலாகும்
கோனான நூற்படியே யானுரைத்தேன் கொற்றவனார் மாண்பரிடம் அறியவேண்டி
பானான யின்னமொரு பதமுஞ்சொல்வேன் பாரினிலே மாண்பர்களுந் தெரியவேண்டி
மானான புலிப்பாணி யுந்தமக்கு மார்க்கமுடன் முறைபாடு சொல்லலாச்சே
**5903.**
சொல்லவென்றால் தேறையர் மார்க்கஞ் சொல்வேன் சுந்தரனே பங்குனியாந்திங்களப்பா
வெல்லவே மூலமது ரெண்டாங்காலாம் மேன்மையுடன் அவதாரஞ் செய்தாரப்பா
புல்லவே தேரையர் முனிவர்தானும் புகழான பிரம்மகுலந் தன்னிலப்பா
வெல்லவே வானரிஷி தன்தனக்கு சிறப்புடனே பெற்றெடுத்த பாலனானே
**5904.**
பாலனாந் தேரையர்முனிவர்தானும் பண்பான வகஸ்தியருக்குகந்தசீஷன்
சீலமுடன் ஞானோபதேசம்பெற்று சிறப்புடனே மலைதனிலே இருந்தசித்து
கோலமுடன் யேமமென்ற வித்தைதன்னை குவலயத்தில் மாண்பர்களுக்காகவேண்டி
காலமுடன் அகஸ்தியராங் குருபாதத்தை தண்மையுடன் எதிர்த்ததொரு சீஷனாச்சே
**5905.**
சீஷனாமின்னமொரு மார்க்கம்பாரு சீருள்ள புலிப்பாணி மன்னவாகேள்
தோஷமது வாராமல் யாக்கோபென்னும் துப்புரவாய் ஞானமென்ற சித்துதானும்
வேஷமது தான்மாற்றி நபிநாயகத்தை விருப்பமுடன் கண்டுவந்த யோகசித்து
பாஷமுடன் தான்பிறந்தநேர்மைக்கேளும் பாரினிலே பங்குனி மாதந்தானே
**5906.**
மாதமாம் பங்குனியாந் திங்களப்பா மகத்தான பூராடம் நாலாங்கால்தான்
தோதமுடன் பக்கிரியாக்கோபுதானும் தொல்லுலகைதான்மறந்து பிறந்தசித்து
சாதகங்கள் பொய்யாது விதியுந்தப்பா தாரணியில் நெடுங்காலமிருந்தசித்து
கோதமென்னும் புலஸ்தியனார் தானுமப்பா கொற்றவனார் ஈன்றெடுத்த புனிதனாமே
**5907.**
புனிதமாம் மகமதுமார்க்கந்தன்னில் புகழான கன்னியவள் பெற்றபாலன்
சனியுடனே ரேவதியுங் கூடச்சேர்ந்து சட்டமுடன் வந்துதித்த யாக்கோபப்பா
மனிதனெனும் ஜென்மமது பெற்றுமல்லோ மகத்மான மகமது மார்க்கஞ்சென்று
தனியான மக்கமென்ற தேசந்தன்னில் சட்டமுடன் போனதொரு சித்துமாமே
**5908.**
சட்டமுடன் இன்னமனொரு மார்க்கங்கேளு சங்கரனே புத்தியுள்ள மணியேபாரு
திட்டமுடன் கொங்கணனார் பிறந்தநேர்மை தீர்க்கமுடன் யானுரைப்பேன் சுகந்தமாரா
வட்டமுடன் சித்திரையாந் திங்களப்பா வளமான உத்திராட முதல்கால்தன்னில்
அட்டதிசை தான்புகழப் பிறந்தபாலன் வன்பான கொங்கணவர் என்னலாமே

5909.
என்னவே யவர்பிறந்த நேர்மையப்பா எழிலான சங்கரகுலத்துதித்த
பன்னவே கானீனன் பெற்றபாலன் காசினியில் வந்துதித்த திருவுமாகும்
பொன்னரங்கம் பூண்டதொரு புனிதவானாம் புகழான தேவதா சித்துமாகும்
நன்னவனுக் கொப்பான கொங்கணவர்தானுங் காசினியில் வந்துதித்த திருவுமாச்சே
5910.
ஆச்சப்பா யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வப்பனே புலிப்பாணி மைந்தாகேளு
மூச்சடங்கிப் போனதொரு மாயாசித்து முனையான தட்சணாமூர்த்தியாகும்
பாச்சலுடன் தட்சணப்பதியில்தானும் பாங்குடனே பள்ளிகொண்ட சித்துவாகும்
ஆச்சரியமானதொரு மாயாசித்து அவர்பிறந்த வண்மைதனைப் புகலுவேனே
5911.
புகலுவேன் ஆவணியாந் திங்கள்தானும் பூரணமாந் திருவோண முதற்காலப்பா
நிகலவே தட்சணாமூர்த்திநாயன் நீதியுடன் தான்பிறந்த நாளுமாச்சு
அகலவே கொல்லிமலைநாதன்பேரன் வன்பான வைஷ்ணகுல சம்பிரதாயன்
சகலமுமறிந்ததொரு ஞானசித்து தாரணியில் வந்துதித்த சித்துமாச்சே
5912.
சித்தான குலசம்பிரதாயபூபன் சிறப்பான தட்சணாமூர்த்திநாயன்
முத்தான யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் மூதுலகைக் கடந்ததொரு புனிதனாகும்
புத்தியுள்ள கோரக்கர் பிறந்தநேர்மை பண்பான கார்த்திகையாமென்னலாகும்
சித்திபெற அயலிடமாம் இரண்டாங்கால்தான் சிறப்பான நாளென்றே சொல்லலாமே
5913.
சொல்லவே கோரக்கர் பிறந்தநேர்மை சந்திரனார் வசிஷ்டமகாரிஷியாருக்கு
புல்லவே கானகுற ஜாதியப்பா புகழான கன்னியவள் பெற்றபிள்ளை
வெல்லவே அனுலோமன் என்னலாகும் வேதாந்த கோரக்கர் சித்துதாமும்
நல்லதொரு பிரகாசமானசித்து நாதாந்த சித்தொளிவும் என்னலாமே
5914.
என்னவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் எழிலான புலிப்பாணி மன்னாபாரு
துன்னவே கௌபால சித்துதாமும் சுடரொளியாம் பிரகாசமானசோதி
மின்னவே வைகாசிமாதமப்பா மிக்கான சதயமது ரெண்டாங்கால்தான்
நன்னயமாய் அவர்பிறந்த நாளேயாகும் நலமான கௌபால சித்துபாரே
5915.
பாரேதான் தேவதா தச்சனப்பா பாங்கான ஜெகத்குரு கம்மாளன்தான்
நேரேதான் தவத்துதி சித்துவென்றும் நெடிதான கௌபாலரிஷிதானென்றும்
தீரேதான் வயிரக்கல் கண்டெடுத்து தீர்க்கமுடன் பொன்னுரைத்த சித்துவென்றும்
சீரேதான் பலநூல் காப்பியங்கள்கண்டு செப்பினேன் கௌபாலசித்துகாணே
5916.
காணவே யின்னமொரு புதுமைசொல்வேன் காசினியில் நாதாக்கள் கூறவில்லை
தோணவே ஜோதியென்ற முனிவர்தானும் துப்புரவாய் தானுதித்த வண்மைபராய்
பூணவே புரட்டாசி மாதமப்பா புகழான பூரட்டாதி யென்னலாகும்
மாணவே நாலாங்கால் தன்னிலப்பா மகத்தான ஜோதிமுனி வுதித்தவாறே

5917.
வாரான பிரம்மரிஷி மைந்தனப்பா மகத்தான சூரியகுந் தனிலுதித்த
தூரான பெண்மாது வரவர்ஜாதி துகளான ஜொதிமாமுனிவர்தானாகும்
வேரான மலைகுகைகள் குண்ணுதேடி விளக்கமற கல்லதனை யாராய்ந்தேதான்
கூறான வயிரக்கல் கண்டெடுத்த கொற்றவனார் ஜோதிமாமுனிதானாச்சே
5918.
ஆச்சப்பா யின்னமொரு மர்மஞ்சொல்வேன் வப்பனே புலிப்பாணி வண்ணலேகேள்
மூச்சடங்கி சென்றதொரு மாடர்தானும் முனையுடனே தான்பிறந்த வண்மைகேளிர்
மாச்சலென்ற மார்கழியாந் திங்களப்பா மகத்தான உத்திரட்டாதிதானும்
வீச்சுடனே நாலாங்கால் என்னலாகும் விரைவான நாள்தனிலே பிறந்தார்தாமே
5919.
பிறந்தாரே டமரகர் யாரென்றாக்கால் பேரான சுந்தரனார் மைந்தனப்பா
இறந்ததொரு சுந்தரர்க்கு மைந்தனப்பா எழிலான பிள்ளையது ரெண்டாம்பிள்ளை
துறந்ததொரு ஞானியப்பா சைவஞானி சுத்தமுள்ள வீராதிவீரனப்பா
மறந்ததொரு மார்க்கமெல்லாம் மாந்திரீகத்தால் மகத்தான புத்தியினால் அறிந்தசித்தே
5920.
சித்தான யின்னமொரு மகிமைசொல்வேன் சீர்பாலா புண்ணியனே பகலக்கேளிர்
முத்தான ஞானியிலும் உயர்ந்தஞானி முனையான சுந்தரனார் சித்துதாமும்
புத்தியுள்ள பூபாலன் தான்பிறந்த புகழான மாதமது யாதென்றாக்கால்
சுத்தமுள்ள ஆவணியாந் திங்களப்பா சுடரான சுந்தரனார் பிறந்தார்தானே
5921.
தானான ரேவதியாம் மூன்றாங்காலாம் தண்மையுடன் பிறந்ததொரு நாளுமாச்சு
கோனான சுந்தரனார் வுளவுகேட்டால் கொற்றவனே கிக்கிந்தர் மலையினுச்சி
தேனான நவகண்ட ரிஷியார்தம்மின் சிறப்பாக யவர்தமக்கு பேரனாகும்
மானான மகத்துவங்கள் உள்ளசித்து மண்டலத்தில் சிவஞான சித்துபாரே
5922.
பாரேதான் இன்னமொரு வதிதஞ்சொல்வேன் பாலகனே சிறுபாலா பகரக்கேளும்
கூரேதான் சொன்னார்கள் இதிகாசங்கள் வப்பனே யார்தானுஞ் சொல்லவில்லை
நேரேதான் யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் நெடிதான வரரிஷியாமென்றசித்து
சீரேதான் அவர்பிறந்த வண்மையப்பா சிறப்புடைய சித்திரையாந் திங்கள்தானே
5923.
சித்திரையாம் அசுவினி மூன்றாங்காலாம் சிறப்பான நாள்தனிலே பிறந்தாரென்றும்
பத்தியுடன் அவருடைய மார்க்கஞ் சொல்வேன் பண்பான திரணாக்கிய முனிவர்பேரன்
முத்திவழி செல்லுகின்ற சித்துவாகும் முனையான வரரிஷியாமென்றும்பேரு
சத்தியங்கள் தவறாத விசுவயோகி தாரணியில் வரரிஷியாமென்னலாமே
5924.
என்னவே யின்னமொரு வயணஞ்சொல்வேன் எழிலான எந்தனது புத்திவானே
துன்னவே வால்மீகர் பிறந்தநேர்மை துப்புரவாய் அவருடைய வண்மைசொல்வேன்
மன்னவனுக்கொப்பான வால்மீகர்தானும் மகத்தான லோகமதில் பெரியசித்து
சொன்னதொரு புரட்டாசி திங்களப்பா சொற்பெரிய அனுஷமது நாலாங்காலே

5925.
காலான வால்மீகர் வேடனப்பா கன்னியாள் பெற்றதொரு குறத்திமைந்தன்
கோலான மராமரா உபதேசங்கள் கொற்றவனார் பெற்றதொரு சித்துமாச்சு
பாலான மாண்பருக்கு ஞானகாண்டம் பகுத்தறிய வால்மீகர் சரிதையப்பா
மாலான வவர்பெருமை யாருக்குண்டு மகத்தான ரிஷிகளுக்கில்லைதானே
5926.
இல்லையே இன்னமொரு சரிதைசொல்வேன் எழிலான எந்தனது புத்திமாரா
தொல்லுலகிற் கீர்த்திபெற்ற மாதுசித்து துப்புரவாய் ஊர்வசியாள் என்னுமாது
எல்லவருந் தான்புகழ வைகாசிதன்னில் எழிலான பூரமென்ற நாலாங்காலாம்
வல்லமையாய் வந்துதித்த தேவமாது வையகத்தில் ஊர்வசியாள் என்றமாதே
5927.
மாதான ஊர்வசியாள் மார்க்கந்தானும் மகத்தான கானகத்து ரிஷிதானப்பா
தீதான பிரிங்கி மகாரிஷியின்பேத்தி தீர்க்கமுடன் கானீனன் பெற்றமாது
ஆதான சாத்திரத்தில் சித்துநூலில் அறிவுடைய ஊர்வசியாள் மாதுதானும்
கோதானந்தான் கொடுத்து பிறந்தமாது குவலயத்தில் ஊர்வசியாஞ் சித்துகாணே
5928.
காணவே இன்னமொரு கவிதைசொல்வேன் கண்ணான கண்மணியே கழரக்கேண்மோ
பூணவே புலிப்பாணி மைந்தாபாரு புகழான எந்தனிரு மணியே கேளும்
வேணவே இன்னம்வெகு வனேகசித்து வேடமது பூண்டுமல்லோ இருந்தாரப்பா
மாணமருங் கல்வியுள்ள சித்துகன்னில் மகத்தான சித்துகளைக் கூறலாச்சே
5929.
கூறவென்றால் கமலமுனி பிறந்தநேர்மை கூறுவேன் வைகாசி திங்களப்பா
மாறலுடன் பூசமது ரெண்டாங்காலாம் மகத்தான கமலமுனி பிறந்தநாள்தான்
சீறலது வாராத தேவசித்து தெளிவுடைய வையகத்துக் குகந்தசித்து
ஆறவே யொருவரால் கூறப்போமோ வப்பனே ஞானவொளிசித்துபாரே
5930.
பாரேதான் சித்தொளியின் மகிமைபாரு பாங்கான காலாங்கி பாட்டன்வர்க்கம்
நேரேதான் வம்மிஷத்திற் பிறந்தசித்து நெடிதான சின்மயானந்தசித்து
வேரேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வெளியரங்கமானதொரு மாராகேண்மோ
சீரேதான் அறிவான அனந்தசித்தர் தீர்க்கமுடன் பிறந்ததொரு நேர்மைகாணே
5931.
காணவே மாசியென்ற திங்களப்பா கருவான ரேவதியாம் மூன்றாம்பாதம்
பூணவே யவர்பிறந்த நாளதாகும் புகழான மார்க்கமது யாதென்றாக்கால்
வேணதொரு டமரகனார் மைந்தரப்பா வேதாந்த அறிவான அனந்தராகும்
தோணவே பிரதிலோமனென்றே சொல்வார் தொல்லுலகில் இவர்போலுஞ் சித்துமுண்டோ
5932.
உண்டான இன்னமொரு மர்மஞ்சொல்வேன் வுத்தமனே நாதாந்தமணியே கேண்மோ
தொண்டனெனும் சித்துமுனி ரிஷிகளுக்கு தோற்றமுள்ள வகப்பேயர் சித்துவாகும்
கண்டவர்கள் விடுவார்கள் சித்துதம்மை காசினியில் உபதேசம் பெற்றசித்து
அண்டமெனும் வையகத்தில் பிறந்தநேர்மை வப்பனே யானுரைப்பேன் சொல்வேன்பாரே

5933.
ஆச்சப்பா கன்னியவள் பெற்றபிள்ளை யவதார புருஷனென்றே செப்பலாகும்
மூச்சடங்கி வெகுகால மிருந்தசித்து முனையான வகப்பேயர் சித்துவாகும்
மாச்சலுடன் இன்னமொரு மார்க்கங்கேளு மகத்தான குதம்பையென்ற சித்துதாமும்
ஏச்சலதுவாராமல் தான்பிறந்த எழிலான சித்தினிட மார்க்கங்கேளே
5934.
கேளேதான் ஆடியாந் திங்களப்பா கெவனமுடன் விசாகமென்ற மூன்றாங்காலில்
நானப்பா தான்பிறந்த குதம்பைசித்து நலமுடனே திரிகால பூசைசெய்து
வேளப்பா யாகமது முடித்துமல்லோ வேள்வியுடன் பாலாமிர்தம் உண்டசித்து
ஆளப்பா பெரியோர்கள் நேசம்பெற்று வப்பனே மரப்பொந்தில் இருந்தசித்தே
5935.
சித்தான மாதவமாங் குலத்துதித்த சிறப்பான குதம்பையென்ற சித்துவப்பா
முத்தான பாலமுர்தம் உண்டுமல்லோ மூதுலகைத் தான்பழித்த சித்துவாகும்
பத்தியுடன் வையகத்தில் நெடுங்காலந்தான் பான்மையுடன் வீற்றிருந்த பரமசித்து
சுத்தியுள்ள திருவாத்தி மரத்தின்கீழே சுந்தம்போலிருந்ததொரு மாயாசித்தே
5936.
மாயான சித்தல்லோ மகிமைபாரு மகத்தான புலிப்பாணி மைந்தாகேளு
தாயான பாம்பாட்டி சித்தரப்பா தாரணியில் நெடுங்கால மிருந்தசித்து
காயான முப்பழமும் பாலுங்கொண்டு கலியுகத்தில் நெடுநாளாய் இருந்தசித்து
சேயான பாம்பாட்டி சித்துதாமும் சீருலகில் பிறந்ததொரு சித்துதானே
5937.
தானான பாம்பாட்டி பிறந்தமாதம் தாக்கான கார்த்திகையாந் திங்களப்பா
கோனான மிருகசீரிடந்தானாகும் கொற்றவனே மூன்றாங்கால் என்னலாகும்
தேனான அவர்பிறந்த நாள்தானப்பா தேசத்தில் சித்தர்முனி கண்டதுண்டோ
மானான பதினெண்பேர் நூலைப்பார்த்து மார்க்கமுடன் தானறிந்து சொல்லிட்டேனே
5938.
சொல்லவென்றால் பாம்பாட்டி மர்மந்தானும் தோற்றமுடன் ஜோகியென்ற வம்மிஷந்தான்
புல்லவே மசானகுறி யோகியப்பா புகழ்பெரிய குருடனார் பெற்றபிள்ளை
வெல்லவே மாலைசுற்றித் தான்பிறந்த வேதாந்தப் பாம்பாட்டி யென்னலாகும்
நல்லதொரு சித்துமுனி உபதேசங்கள் நலம்பெற்ற பாம்பாட்டியாமே
5939.
பாம்பான இன்னமொரு மார்க்கங்கேளு பண்பான புலிப்பாணி நேசபாசா
தீம்பில்லா காலகண்ட ரிஷியார்தாமும் தீர்க்கமுடன் பிறந்ததொரு திண்ணம்பாரு
தாம்புகழுஞ் சித்திரையாந் திங்களப்பா தாக்கா உத்திராடம் இரண்டாம்பாதம்
மாம்புலமாம் வட்டாரந் தன்னிலப்பா மகத்தான சிவவேடம் பூண்டசித்தே
5940.
பூண்டதொரு காலகண்ட ரிஷியார்தாமும் புகழான பேரண்ட முனிதான்சித்து
ஆண்டகையார் சித்துமுனி மைந்தனுக்கு வன்பான பேரனது பேரனப்பா
தாண்டகையாங் காலகண்ட சித்துவாகும் தரணிபதி சிவயோக சித்துவாகும்
வேண்டியதோர் கருமான மறிந்தசித்து வேதாந்த காலகண்டர் என்னலாமே

5941.
என்னவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் எழிலான புலிப்பாணி கண்ணேகேளும்
பன்னவே வடிவேலர் தாம்பிறந்த பதாம்புயத்தை சொல்லுகிறேன் பண்பாய்க்கேளும்
துன்னவே மூன்றுயுகங் கடந்தவேலர் துப்புறவாய்ப் பிறந்ததொரு நேர்மையப்பா
சொன்னபடி யாவணியாந் திங்களப்பா சொல்லுகிறேன் முதற்பூசங் கால்தானொன்றே
5942.
ஒன்றான கால்தனிலே பிறந்தநாளாம் வுத்தமனார் வடிவேலர் பிறந்தாரென்று
குன்றான மலைபோலே சாத்திரங்கள் கூறினார் குவலயத்தில் சொல்லொண்ணாது
தென்றிசையில் அகஸ்தியருக்கு உபதேசங்கள் செய்ததொரு வடிவேலர் சித்துதாமும்
பன்றிபெருச்சாளியின் மேல்சாரியேகும் பண்பான விநாயகருக்கு தம்பியாமே
5943.
தம்பியென்று சாத்திரங்கள் சொல்லலாச்சு சதகோடி வடிவேலர் சித்துதன்னை
வெம்பியதோர் மாந்தருக்கு ரோகந்தீரும் வெட்டவெளி வடிவேலரென்றே சொல்வார்
கும்பியே மனங்கொதித்து வந்தபேர்க்கு கோடான கோடிபொருள் ஈவாரப்பா
தம்பியே எந்தனுக்கு குருவுமாகும் தாக்கான வடிவேலர் தண்மைபாரே
5944.
பாரேதான் இன்னமொரு பதமுஞ்சொல்வேன் பாங்கான புலிப்பாணி மகனேபாரு
சீரான யூகிமுனி பிறந்தவண்ணம் சிறப்புடனே சொல்லுகிறேன் திறமைமெத்த
நேரான வாவணியாந் திங்களப்பா நெடிதான பூசமது மூன்றாங்காலாம்
கூரான நாளதனில் பிறந்தசித்து குறிப்பான யூகியென்ற முனிவர்தானே
5945.
தானான யூகிமுனி மார்க்கமென்றால் தகமையுள்ள தன்வந்திரிக் குற்றபேரன்
கோனான சிங்களவ குலத்துதித்த கொம்பனையாள் கானீனன் பெற்றபிள்ளை
தேனான திரவிடத்திற் சொன்னார்போல தீர்க்கமுடன் வடமொழியில் சொல்லலாச்சு
மானான மாண்பருக் குபயோகத்தால் மாட்சியுடன் சொன்னதொரு நீதியாமே
5946.
நீதியா மின்னமொரு மர்மஞ்சொல்வேன் நிஷ்களங்கமான புலிப்பாணியப்பா
தீதிலா ஜெமதக்னி முனிவர்தானும் சிறப்புடனே பிறந்ததொரு நேர்மைசொல்வேன்
கோதிலா வற்பசி மாதமப்பா குறிப்பான புனர்பூசம் மூன்றாங்கால்தான்
பாதிமதி சடையணிந்த தம்பிரான்போல் பாரினிலே யவதரித்த சித்துமாமே
5947.
சித்தான ஜெமதக்னி முனிவர்தானும் சிறப்பான பரத்துவமாம் ரிஷியின்பேரன்
முத்தான வனுலோமன் பெற்றபிள்ளை மூதுலகில் கீர்த்தியுடன் இருந்தசித்து
சத்தான யூகியென்ற சாத்திரந்தான் சாங்கமுடன் பன்னீராயிரந்தானாகும்
சுத்தமுள்ள ரிஷிதேவர் சொன்னதில்லை சுந்தரனார் இதிகாசங் கூறினாரே
5948.
கூறினார் இன்னமொரு குறிப்பைக்கேளு கூரான புலிப்பாணி மைந்தாபாரு
மீறியதோர் திரணாக்கிய முனிவரப்பா மிக்கான பிறந்ததொரு வண்மைசொல்வேன்
ஆறஉபுடை திங்களாம் புரட்டாசியப்பா வப்பனே திருவாரிரை ரெண்டாம்பாதம்
வீறுபுகழ் சாத்திரத்தை மனதிலுன்னி விருப்பமுடன் பாடிவைத்தார் நூலிதாமே

5949.
நூலான மார்க்கமது யாதென்றாக்கால் நுணுக்கமுடன் ஜெமதக்னி பெற்றபாலன்
கோலான குறத்தியிட சற்புத்திரந்தான் குறிப்பான பிரதிலோமன் என்னலாகும்
பாலான மார்க்கமது யாதென்றாக்கால் பட்சமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு
காலான புலிப்பாணி மைந்தாபாரு கசடற்ற புத்திரனே புகல்வேன்பாரே
5950.
புகலுவேன் கண்டீசர் பிறந்தநேர்மை புகழான வைகாசி மாதமாகும்
நிகலுவேன் பூரமென்ற மூன்றாங்கால்தான் நீதியுடன் பிறந்தநாளேயாகும்
சகலமுமறிந்ததொரு சித்துதாமும் சதாகாலம் வையகத்திலிருந்தசித்து
அகலவே புலஸ்தியருக்குற்றபேரன் அன்பான வேடருட ஜாதிதானே
5951.
சாதியாங் கானீனன் பெற்றபிள்ளை சாங்கமுடன் நெடுங்கால மிருந்தசித்து
சோதிமணி சுந்தரம்போல் குகைதானுல்லே சுட்டெரிக்கும் நிலாப்போலே இருக்குஞ்சித்து
நீதிமனுமுறை தவறாயிருந்தசித்து கடலாழியுலகுபதி யாண்டசித்து
தீதிலா சங்கமென்ற புலவருக்கு தீர்க்கமுடன் உபதேசஞ் செய்தசித்தே
5952.
செய்யவே யின்னமொரு மார்க்கம்பாரு செம்பவலகனிவாயா துய்யபாலா
உய்யவே திருமூலரென்ற சித்துவுலகமதில் தான்பிறந்தசேதிவண்ணம்
பையவே புரட்டாசி திங்களப்பா பாலகனார் வந்துதித்த மாதமாகும்
வெய்யவே அவிட்டமென்ற மூன்றாங்கால்தான் மேதினியில் வந்துதித்த சித்துமாச்சே
5953.
ஆச்சப்பா திருமூலவர்க்கத்தோர்கள் அவனியிலே சொல்லுதற்கு நாவுமில்லை
மூச்சடங்கிப்போனதொரு பாண்டியர்கள் தாமும் முனையான சங்கமதில் வாதுசெய்தோன்
பாச்சலுடன் சேரனுக்கு பெற்றபாலன் பாரினிலே யனுலோமன் யென்னலாகும்
வீச்சலுடன் இதிகாசபுராணமெல்லாம் விருப்பமுடன் பாடிவைத்த சித்துகாணே
5954.
காணவே யின்னமொரு கருமானங்கேள் கருவான புலிப்பாணி மைந்தாபாரு
தோணவே எழுகடலுஞ் சுற்றிவந்தேன் தோறாமல் தட்சணமாண்பர்தம்மை
பூணவே நெடுங்கால மிருந்துமல்லோ பொங்கமுடன் அதிசயங்கள் மிகவுங்கண்டேன்
வேணதொரு தேவாதி தேவரல்லோ விருப்பமுடன் அனேகவித கோயிலுண்டே
5955.
உண்டான வையகத்து மாண்பர்தம்மில் வுத்தமனே சன்னதங்கள் மெத்தவுண்டு
கண்டாலும் மாண்பர்களைப் பார்த்தபோது கருவான தெய்வங்கள் உச்சாடத்தால்
செண்டான முறைமைகொண்டு வுறவுபேசி செம்மலுடன் அருகிருந்து சிலதுமாண்பர்
திண்மையுடன் குறிசொல்ல வந்தோனுக்கு தீர்க்கமுடன் தானுரைப்பார் வதீதந்தானே
5956.
அதிதமாஞ் சமுசாரி செய்யும்வித்தை வன்போடு வாயிரம்பேர் குறிகேட்டாலும்
கதிதமுடன் தேவதைகள் வசியத்தாலே கதிரான சுகசேதி சொல்வோன்போல
மதிபோன்ற தேவதா கிருபையாலும் மகத்தான உண்மைவழி கூறினார்போல்
சதியுடனே சன்னதங்கள் மிகவுமாகி சட்டமுடன் கூறலுற்றார் மாண்பர்க்காமே

5957.
மாண்பான குறிசொல்லும் மார்க்கங்கேளும் மகத்தான பத்துபேர் ரெண்டுபேர்கள்
ஆண்பிள்ளைத் தன்னோடும் பாலரோடும் வழகான மாதர்களின் கூட்டத்தோடும்
வீண்பேச்சி வார்த்தைகளும் மிகவாய்ப்பேசி விருப்பமுடன் யாதொன்றும் தெரியாப்போலும்
நாண்போடு தூதுரைக்கும் மாண்பர்தாமும் நலமான மாந்தருடன் பேசுவாரே
5958.
பேசியே மாண்பரோடு வுறவுபேசி பேரான குறிகேட்க வந்தோர்தம்மை
காசினியில் வந்ததொரு மாண்பர்நாங்கள் கருவாகக் குறி சொல்லும் மாண்டிதன்னை
பாசிபடா குறியுரைப்பா ரென்றுசொல்லி பட்சமுடன் வெகுதூரங் கேட்டுவந்தோம்
மாசியென்னும் பதிதனிலே குறிகள்கேட்டோம் மகத்தான குறியதுவுஞ் சொல்லலாச்சே
5959.
சொல்லவென்றால் குறியதுவும் என்னசொல்வோம் சோடசத்தில் ஒன்றேனும் பொய்யே
யில்லை
வெள்ளவே குறிகேட்டார் மெய்யைப்போல மேன்மையுடன் கூடிவருமாண்பரொடு
புல்லவே வுறவுகொண்டு நயங்கள்பேசி புகழான எதிரியின் வார்த்தைதன்னை
மெல்லவே யவருரைக்கும் வார்த்தைதன்னை மேன்மையுடன் உபாயத்தால் அறிவார்தானே
5960.
தானாக எதிர்மாண்பர் கூறும்வார்த்தை தண்மையுடன் உபாயமதாய்த் தானறிந்து
கோனான குறியுரைக்கும் சங்கன்தானும் கொப்பெனவே யடையாள ரூபத்தோடும்
மானாக எதிரியின்தன் வார்த்தையெல்லாம் மார்க்கமுடன் தானுரைத்து ஆளைக்காட்டி
பானாக பதிமேடை மறைந்துகொண்டு பாங்குடனே குறிசொல்வோர் பின்நிற்பாரே
5961.
நின்றுமே தூதுரைத்து ஆள்காணாமல் நேர்மையுடன் ஓர்பக்கம் மறைவாய்நின்று
சென்றதொரு மாண்பருக்கு குறியுஞ்சொல்ல செம்மலுடன் ஜங்கமெனும் வேடம்பூண்டு
நன்னயமாய் கிருஷ்ணமுடி தானும்பூண்டு நலமான வுடுக்கைதனை கையிலேந்தி
பன்னவே பலபேர்கள் கூட்டத்தோடும் பாரினிலே பலகுறிகள் சொல்வான்பாரே
5962.
சொல்வானே யவரவர்கள் வார்த்தைகொண்டும் துப்புரவாய் முன்சொன்ன தூதைக்
கொண்டும்
புல்லவே குறிமேடை தனிலிருந்து புகழான யாவேசம் வந்தாற்போல
மெல்லவே வாய்திறந்து பொன்னாங்காயை மேன்மையுடன் மென்றுதின்று உமிநீர்தன்னை
நல்லதொரு மதுவுண்ட நாற்றம்போல நயமுடனே வமனமது செய்வான்பாரே
5963.
செய்யவே மதுபானங் கொண்டுமல்லோ செயலான தன்னினைவு தனக்குமாறி
பையவே மயன்மீதில் வாடைகொண்டு பதறுதே தேகமது நிலைகொள்ளாது
உய்யவே யார்வந்து எதுகேட்டாலும் உத்தமனே சித்தடியேன் சொல்வேன்பாரு
துய்யபுகழ் பாண்டியன்போல் வுதாரம்பேசி துப்புரவாய் குறிசொல்வோன் கேட்பான்பாரே
5964.
பாரேதான் முன்சொன்ன வடையாளம்போல் பாங்குடனே மாண்பர்களை யுருட்டிப்பார்த்து
நேரேதான் ஈசானீய மூலையப்பா நெருக்கமுடன் நடுபந்திதனிலிருக்க
சீரேதான் கட்டழகி மாதுதன்னை சிறப்பாக சித்தடியைக் கூப்பிடென்று
ஆரோதான் அம்மம்மா குறைகளொன்று ஆர்க்கமுடி போதாது என்பான்பாரே

5965.
என்னவே யுந்தனுக்குக் குறைகள்மெத்த ஏர்க்கமுடி போகாது ரோகம்மீறி
பன்னவே யுன்புருஷன் உன்னைவிட்டு பாரினிலே வனசாரி சென்றாரம்மா
துன்னவே மைந்தனுக்குக் கண்ணும்போச்சு துப்புரவாய்ப் பாவாடைராயனுக்கு
மின்னவே கங்கணமுங் கட்டியல்லோ மிக்கான பொங்கல்களு மிட்டீர்காணே
5966.
காணவே ரிருபத்தோர் வாரம்மா கட்டழகி காணிக்கைகொண்டுசென்று
தோணவே முதற்பூசை யுன்னுதென்று துப்புறவாய் சொல்லினதும் வுண்டோகூறும்
நாணவே குறுமுகத்தில் வந்துயென்னை நன்மையோ துன்மையோ வென்றுசொல்லி
பாணம்போல் மனதுருகி மனதுவந்து பாலகனே கேட்கவந்தீர் உண்மைதானே
5967.
உண்மையாம் என்குறிகள் பொய்யாதம்மா வுத்தமியே நாதாக்கள் வணங்குவார்கள்
வண்மையாங் கைகண்ட குறிதானென்று வளப்பமுடன் நிதியெனக்கு குடுப்பார்பாரு
திண்மையாம் பாதகாணிக்கையோடும் தீர்க்கமுடன் புஷ்பதாம்பூலத்தோடும்
தண்மையுடன் வேணவுபசாரத்தோடும் தட்டாமல் எந்தனுக்குத் தருவார்தானே
5968.
தட்டாமல் தருவதானென்றுசொல்லி சர்க்கமிட்டு சித்தடிக்கு வாதுகூறி
கொட்டாவி கொண்டல்லோ மலையேறியப்பா கொப்பெனவே யான்போறோமென்றுசொல்லி
சட்டமுடன் கற்பூர பழத்தைவாங்க சாங்கமுடன் வாய்தனிலே கொண்டுமல்லோ
வட்டபுரி யம்மனது பாதம்போறேன் வளமுடனே எல்லாரும் பணிவீர்தாமே
5969.
பணியவென்று குறிசொல்வோன் கூறும்போது பண்பான முழுமூடர் கழுதைமாண்பர்
அணியணியாய் குறிகேட்டு மெய்யென்றெண்ணி அவன்பாதந்தனில்விழுஞ் சண்டிமாண்பர்
மணியான தெய்வமது ஒன்றிருக்க மார்க்கமுடன் மதுகொள்ளும் மாண்பர்தம்மை
கணிதமுடன் குறிகண்டு குணமுங்கண்டு காசினியில் வந்துதித்த தெய்வந்தானே
5970.
தானான மதுகொள்ளும் மதுரைவீரன் தாரணியில் குறிசொல்லும் தெய்வமென்றும்
கோனான முழுமடையர் பேயரப்பா குவலயத்தில் கல்விகற்றும் பேயனாகி
மானான பஞ்சறிவுந்தானறிந்து மகத்தான சாத்திரங்கள் படித்துக்கேட்டு
பானாகக் குறிசொல்வோர் வலையிற்சிக்கி பண்புடனே மயங்குகிறார் மடையர்தாமே
5971.
மடையான மாண்பர்களும் பலநூல்கற்று மகத்தான மாயாவின் வலையிற்சிக்கி
இடைநடுவில் வையகத்து வாழ்க்கைதன்னை யெழிலாகத் தன்மனதில் பாராமற்றான்
கடைபோன்ற ஞானவழி கோடிசித்தர் கருவான சாத்திரங்கள் செய்திருக்க
திடமுறவே சற்றேனும் மனதுறாமல் தீர்க்கமுடன் பலநூலும் பார்த்தார்தானே
5972.
தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமிருக்குங் காலந்தன்னில்
பானான வையகத்து மாண்பரெல்லாம் பதிகெட்டு மதிகெட்டு குறிகள்கேட்டு
தேனான மனோன்மணியை மறந்துமல்லோ தீர்க்கமுடன் மூடவழி சென்றார்பாரே

5973.
பாரேதான்குறியுரைக்குஞ் ஜங்கன்தானும் பாங்கான பதிமேடைதனிலிருந்து
நேரேதான் மாண்பர்களின் கூட்டந்தன்னை நேர்மையுடன் தானோக்கி பார்த்துமேதான்
சீரேதான் சத்தகன்னி வந்தேனப்பா சிறப்புடனே சன்னதங்கள் மிகவுண்டாச்சி
கூரேதான் வாடைகொண்டு வீசுதையா கொற்றவரே குறிகேட்டால் கூறுவேனே
5974.
கூறுவேன் விளையாடி சன்னதங்கள் கொப்பெனவே ஓங்கார சத்தத்தோடு
மாறுபடா திருமேனி மங்கையப்பா மகத்தான பச்சைரிஷி வனத்திற்றானும்
ஆறுண்டு குளமுண்டு மடுவுமுண்டு அங்கிருக்கும் வனத்துகன்னி யானுமல்லோ
வீறுடனே வெகுநாளாய் யுந்தன்வாசல் விருப்பமுடன் விளையாட வந்தேன்பாரே
5975.
வந்தேனென்று சொல்லுகையில் ஜங்கன்தானும் வகையறிய முழுமூடர் மாண்பர்தம்மில்
சிந்தனையா யதிலொருவர் தானெழுந்து சிறப்புடனே குறிகேட்க வந்துநின்று
பந்துமுலைஸ்தனத்தாலே பச்சைகன்னி பட்சமுடன் எந்தனுக்கு குறிகள்கூறும்
தந்தையார் வைத்ததோர் நிதிகள்கோடி தாரணியில் மெத்தவுண்டு சொல்லொண்ணாதே
5976.
உண்டான திரவியங்கள் மெத்தவுண்டு ஓகோகோ நாதாக்கள் கொடுத்த பாக்கியம்
தண்மையுடன் தேவதா ஸ்தலங்கள்யாவும் தகமையுடன் தருமமது செய்தேன்யானும்
வண்மையுடன் யாகமது செய்துமல்லோ மகத்தான காணிக்கை யாவுந்தந்தேன்
உண்மையாய்க் கொடுத்தநீதி கோடியுண்டு வுத்தமனே மைந்தனிலை என்றார்தாமே
5977.
என்றுமே மாண்மர்களில் ஒருவனப்பா எழிலான ஜங்கமனைக் கண்டுமல்லோ
குன்றான மலைநாடு குகைகள்தன்னில் கொம்பனையே வந்ததொரு கன்னிதாயே
சென்றுமே தம்பதிக்கு வந்தேனம்மா செம்மலுடன் எந்தனுக்கு மைந்தன்வேண்டும்
இன்றுமே குறியுரைத்து எந்தனுக்கு எழிலுடனே ஏகவென்று தொழுதிட்டாரே
5978.
தொழுதாரே சமுசாரியானமாண்பர் துப்புறவாய் பாதகாணிக்கையிலிட்டு
அழிதாரே தேவியுடன் தானுமல்லோ அங்ஙனவே இருபேரும் சாஷ்டாங்கிட்டு
முழுவதிலும் எங்களைநீர் பாதுகாத்து மொய்குழலே எந்தனுக்கு மைந்தனீந்து
மழுவுடனே கற்பூரதீபாராத்தி மகிழ்ச்சியுடன் தருவேனென்று பணிந்திட்டாரே
5979.
பணியவே சத்தகன்னி ஜங்கன்தானும் பட்சமுடன் மனதுவந்து மனங்களித்து
மணியான மைந்தனல்லோ வுனக்குண்டாகும் மகப்பேறு மெத்தவுண்டு யுந்தனுக்கு
கணிதமுடன் குறியஉரைத்தேன் மைந்தாபாலா கட்டழகி யுன்தேவி இன்றுமட்டும்
துணிவுடனே இருபத்தோர் வாரமப்பா துப்புரவாய் பூசைமுகம் வரச்சொல்வீரே
5980.
சொல்லவே சத்தகன்னி ஜங்கன்தானும் சுத்தமுடன் சமுசாரி மாண்பன்கேட்டு
வெல்லவே தன்தேவி தனையழைத்து விருப்பமுடன் இன்றுமுதல் நீயுமேதான்
புல்லவே சத்தகன்னி ஜங்கன்தானும் புகழாக வாக்குரைத்த தன்மைபோலே
நல்லதோர் இருபத்தோர் வாரமட்டும் நலமுடனே பதிமுகத்தில் செல்வீர்தாமே

5981.
தாமான சமுசாரி மாண்பன்தேவி சட்டமுடன் நாயகன்சொற் கடவாமற்றான்
பேமானி தானுரைத்த வார்த்தை தன்னை பேருலகில் உபதேசம் மெய்யென்றெண்ணி
சாமான்ய மானதொரு பெண்பால்தானும் சட்டமுடன் ஜங்கமன்தன் வாசற்சென்று
பூமான்கள் அறியாமல் பதிமுகத்தில் புகட்சியுடன் ஜங்கமனைக் கண்டாள்பாரே
5982.
கண்டதொரு சத்தகன்னி ஜங்கன்தானும் கருத்துடனே கொம்பனையைக் கொண்டுசென்று
அண்டர்முனி தேவாதி தேவர்க்கெல்லாம் அவனியிலே குறியுரைத்தேன் மெத்தவுண்டு
தண்டுளப மாலையணி கிருஷ்ணன்போலே தகமையுடன் மாதுதனைக் கைபிடித்து
கொண்டனைத்து சைதன்யஞ் செய்துமல்லோ கொப்பெனவே மைந்தனுமுண்டாக்கினானே
5983.
ஆக்கினான் இருபத்தோர் வாரமட்டும் அங்ஙனவே பதிமுகத்தில் சென்றுமல்லோ
பாக்கியங்கள் பெற்றவர்போல் வாரவாரம் பதிமுகத்தில் ஜங்கமன்தான் கூடிருந்து
சாத்திரங்கள் சொற்பனங்கள் கண்டாற்போல சட்டமுடன் தம்பதிக்கு வந்துமல்லோ
நீக்கியே சத்தகன்னி வரமும்பெற்று நீட்சியுடன் வடபதிக்கு வந்திட்டாரே
5984.
வந்தாரே வெகுநாட்கள் தான்கழித்து வளமையுடன் மைந்தனையும் பெற்றபின்பு
சிந்தனைகள் தாம்நீங்கி கலியும்நீங்கி சிற்பரனைப்போல ஒருபாலன்பெற்று
பந்தமுடன் மணவாளன் மனைவிதானும் பட்சமுடன் மைந்தனையுங் கொஞ்சியல்லோ
அந்தவுலகத்தினிலே சத்தகன்னி எழிலான குறிப்போலே யுண்டென்பாரே
5985.
என்பாரே முழுமடையர்தானுமப்பா எழிலான சாத்திரங்கள் கற்றுமென்ன
வன்பான மாண்பனல்லோ நம்மைப்போல வளமையுடன் வையகத்தில் வந்தமாண்பன்
தன்போலே மனிதனென்று வறியாமற்றான் தண்மையுடன் சத்தகன்னி ஜங்கன்தன்னை
நன்னயமாய் மனிதனையுஞ் சுவாமியென்று நலமுடனே யவர்காலில் விழுந்திட்டாரே
5986.
விழுந்தாரே யவன்கலைவி தன்னிற்சென்று விட்டகுறை இருந்ததொரு பாவத்தாலே
அழுந்தியே அவன்வலையிற் சிக்கியல்லோ அவனியிலே பேருண்டாய் பேரும்பெற்று
தொழுதுமே குலதெய்வம் அவன்தானென்று தொல்லுலகில் கெட்டதொரு கழுதைமாண்பர்
மழுவேந்தர் கதைபேசி நயங்கள்பேசி மாநிலத்தில் கேட்டவர்கள் கோடியாமே
5987.
கோடியாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் குறிப்பான தட்சணமாமாண்பருக்கு
நீடியே பலதேவகோடியாக நீதியுடன் தாமுரைப்பார் அனந்தமார்க்கம்
வாடியே வையகத்து மாண்பரெல்லாம் வளமையுடன் பலகாலுந் தொழுதிரஞ்சி
தேடியே திரவியங்கள் அனைத்துந்தந்து தீர்க்கமுடன் தான்கொடுத்து நிதிகேட்பாரே
5988.
நிதியான மானிடர்மேல் குறிகள்வந்து நினைத்துவிளையாடுமது சன்னதங்கள்
பதியான பதிவிட்டு வந்தேனென்றும் பாலகனே தெய்வகன்னி நான்தானென்றும்
துதியுடனே மரத்துமுனி யென்பேரென்றும் துப்புரவாய் எல்லையது பிடாரியென்றும்
மதியான லாடமுனி நான்தானென்றும் மகத்தான சன்னதங்கள் கூறுந்தானே

5989.
தானான வம்மனது காளியென்றும் தாக்கான வேல்முருகன் யான்தானென்றும்
கோனான வாடைமுனி யான்தானென்றும் குறிப்பான காட்டேரி யான்தானென்றும்
தேனான திருவேங்கிட பதிதானென்றும் சிறப்பான அங்காள வல்லியென்றும்
மானான கார்த்தவராயனென்றும் மகத்தான அனேகவித தெய்வம்பாரே
5990.
பாரேதான் தெய்வமது அனேகங்கோடி பாரினிலே மாண்பர்மேல் சன்னதங்கள்
நேரேதான் தெய்வமயல் கொண்டோர்போலும் நேர்மையுடன் பலபலவாஞ் சன்னதங்கள்
கூரேதான் குடிகள்படை சேனைதன்னில் கோஷ்டமிட்டு சன்னதங்கள் மிகக்கொண்டாடும்
வீரேதான் பிராணாய வுட்சாடந்தான் வீரமுடன் தானுரைப்பார் வெகுவாய்த்தானே
5991.
தேனேகேள் லாடகவி யனேகஞ்சொல்வார் தாக்கான பரிபாஷை மிகவுஞ்சொல்வார்
மானேகேள் சன்னதங்கள் மிகவுண்டாகி மார்க்கமுடன் திரேகமது நடுக்கல்கண்டு
தேனேகேள் சிதாபாச நிலையில்நின்று தீர்க்கமுடன் வதிதங்கள் மிகவுரைப்பார்
தானேதான் தெய்வமது கொண்டாற்போலே தகமையுடன் பலபிரட்டு பேசுவாரே
5992.
பேசுகின்ற வார்த்தைதனை மெய்யென்றெண்ணி பேரான தட்சணத்து மாண்பரெல்லாம்
காசிபணம் நிதியனைத்தும் மிகவுந்தந்து கருத்துடனே குறிமுறைகள் கேட்டாரப்பா
ஆசுகவி சாத்திரங்கள் பார்த்துமென்ன அறிவுகெட்ட மாண்பருக்கு மதியீனந்தான்
தேசுலவு பூந்துடையாய் போகசீஷர் தெளிவுடனே மிகவுரைப்பேன் கேளுகேளே
5993.
கேளேதான் தட்சினத்து மாண்பரெல்லாம் கெவனமுடன் குறிகேட்டு மதியுங்கெட்டு
பாளேதான் சாத்திரத்தை மிகப்பாராமல் பாருலகில் மதிகெட்டு குருடராகி
ஆனேதான் அறிவழிந்து மானங்கெட்டு வப்பனே வஞ்ஞான வலையிற்சிக்கி
நாமேதான் போகாமல் நமனுக்காளாய் நாட்டினிலே யிருந்தவர்கள் கோடிகாணே
5994.
காணவே எந்தனது சீஷபாலா கருவான புலிப்பாணி மைந்தாகேளு
தோணவே தேசாதி தேசமெல்லாம் துப்புறவாய் குளிகைகொண்டு வடியேன்தானும்
நீணவே காலாங்கி கடாட்சத்தாலே நீதியுடன் சத்தசாகரமுந்தாண்டி
பாணமுடன் எழுகடலுஞ் சுற்றிவந்து பாங்கான நிலைதனிலே நின்றிட்டேனே
5995.
இட்டேனே அட்டதிசை யானுங்கண்டேன் எழிலான தட்சணத்துமாண்பர்போலே
கெட்டதொரு மாண்பர்களைக் கண்டதில்லை கெடியான தட்சணமாம்பதியிலப்பா
திட்டமுடன் வெகுகோடி மாண்பர்தம்மை தீர்க்கமுடன் கண்டேனே தட்சணத்தில்
சட்டமுடன் காலாங்கி நாதர்தாமும் தானுரைத்த வண்ணமது போல்கண்டேனே
5996.
கண்டேனே யடியேனும் யானுமல்லோ கனமான போகரேழாயிரத்தை
அண்டர்முனி தேவாதி தேவரெல்லாம் வன்புடனே மனதுவந்து களிப்பதற்கும்
தண்டபம்போல் வையகத்து சித்துமாண்பர் தருவான குருக்கள் மனுவேந்தருக்கும்
சண்டமாருதம்போலே இந்தநூலை சாற்றினேன் பெரியோர்கள் சமுசாரிக்கே

5997.
சாரிகேள் சமுசாரியானபேர்க்கு சட்டமுடன் சித்துமுனியானபேர்க்கு
வாரிதிபோல் பெருநூல் ஏழாயிரந்தான் மகத்தான நூல்களெல்லாம் இதிலடக்கம்
மீறியதோர் இந்நூலுக்குற்றநூலாம் மேன்மையுடன் அகஸ்தியனார் காவியந்தான்
வீறியதோர் பன்னீராயிரக் காண்டந்தான் வித்தகனார் பாடிவைத்த நூல்தான்பாரே
5998.
பாரேதான் சத்தகாண்டந் தன்னிற்குள்ளே பாங்கான லோகவதிசயங்களெல்லாம்
நேரேதான் ஆறாவதானகாண்டம் நெடிதான காண்டமிது குருநூலாகும்
தீரேதான் கடைகாண்டம் ஏழாங்காண்டம் தீர்க்கமுடன் இன்னவதிசயங்கள்கூறும்
சீரேதான் காலாங்கி கடாட்சத்தாலே சிறப்புடனே பாடிவைத்தேன் பெருநூல்தானே
5999.
நூலான நூலிதுதான் சத்தகாண்டம் நுணுக்கமுடன் இதிலடக்கஞ் சொல்லொண்ணாது
பாலான பதினெண்பேர் சொன்னநூலும் பயிலான இந்நூலுக் கொள்ளாதப்பா
சேலான நவகோடி ரிகள்தாமும் செம்மலுடன் கோடிவரை நூலுஞ்செய்தார்
மாலான நூலிதுவும் மகிமைமெத்த மகத்தான விந்நூல்போல் இல்லைதானே
6000.
தானான யெனதையர் காலாங்கிநாதர் தண்மையுடன் அவர்பாத கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் கிருபையாலும் தேற்றமுடன் காவியமேழாயிரத்தை
மானான வையகத்தோர் பிழைக்கவென்று மகத்தான சீனபதி மாண்பருக்கு
பானான காண்டமேழாயிரத்தில் பட்சமுடன் இருமூன்று காண்டமுற்றே

# போகரின் சப்த காண்டம் – 7000

6001.
தானான பிரகாசமான நந்தி தண்மையுள்ள மனோன்மணியாள் பாதம்போற்றி
கோனான வேல்முருகன் தாள்பணிந்தேன் கொற்றவனே அரிஅயனும் பதந்தான்போற்றி
மானான வகஸ்தியனார் பாதம்போற்றி மகத்தான கமலமுனி தாள்பணிந்தேன்
தேனான சதாசிவத்தி னடிபணிந்தேன் தேற்றமுடன் காலாங்கி பாதங்காப்பே
**6002.**
காப்பான பதினெண்பேர் முனிவர்தானும் பலப்பலவாய்ப் பாடிவைத்தார் நூல்கள்பேதம்
மூப்பான நூல்களுமே அனேகஞ்சொன்னார் முனையான சித்துமகாரிஷியார்தாமும்
வாப்பான பெருநூலில் அனந்தஞ்சொன்னார் வளமையுடன் இந்நூல்போல்
ஆருஞ்சொல்லார்
தாப்பான நூலிதுதான் சத்தகாண்டம் தண்மையுடன் பாடிவைத்தார் ஏழாயிரந்தானே
**6003.**
தானான சத்தகாண்டமேழாயிரத்தில் தண்மையுள்ள காண்டமிது ஏழாங்காண்டம்
கோனான காலாங்கி கடாட்சத்தாலே கூறினேன் வையகத்து வதிசயங்கேள்
தேனான மணிபோல் ஏழாயிரத்தில் தேற்றமுடன் சொல்லிவைத்தேன் ஏழாங்காண்டம்
மானான கடைக்காண்டம் நீதிமார்க்கம் மன்னவனே யுந்தமக்காய் ஓதினேனே
**6004.**
ஓதினேன் சீனபதி மாண்பருக்கு வுத்தமனே காண்டமேழாயிரந்தான்
நீதியுடன் சன்மார்க்க நிலையுஞ்சொன்னேன் நிஷ்களங்கமான தொருவழியுஞ்சொன்னேன்
பாதிமதி சடையணிந்த தம்பிரான்கள் பாருலகில் செய்ததொரு நூலையெல்லாம்
ஆதியந்த முடியுடனே பொருளாராய்ந்து வப்பனே சின்மயத்தின் வழிசொன்னேனே
**6005.**
சொன்னதொரு பொருள்களெல்லாம் இதிலடக்கம் சுந்தரனே போகரேழாயிரந்தான்
மன்னவர்கள் வையகத்து வாழ்க்கையெல்லாம் மார்க்கமுடன் அதிலடக்கஞ்
சொல்லொண்ணாது
தென்னவர்கள் தேவாதி முனிவர்தாமும் தேற்றமுடன் செய்ததொரு நூல்கள்யானும்
பன்னவே திரட்டியல்லோ பெருநூலாக பாரினிலே வினோதவகை சொல்லிட்டேனே
**6006.**
இட்டேனே இதிகாசப் பொருள்களெல்லாம் எழிலான போகரேழாயிரத்தில்
சட்டமுடன் பாடியல்லோ நுணுக்கமாக சாங்கமுடன் செய்துவைத்த பெருநூலப்பா
நட்டமது வாராது இந்நூலப்பா நலமான வேதையிது கோடிக்கோடும்
திட்டமுடன் நாதாக்கள் சொன்னதில்லை தீர்க்கமுடன் சத்தகாண்டம் பண்புதானே
**6007.**
பண்பான வறுவகை காண்டத்துள்ளே பலகோடி வேதைமுகம் அனந்தஞ்சொன்னேன்
நண்பான நாதாக்கள் நீதிமார்க்கம் நலமுடனே யாரேனுஞ் சொன்னதில்லை
திண்பான நீதிவழிக்குறியசித்தை தீர்க்கமுடன் பாடிவைத்தேன் இந்நூலுக்குள்
வன்பான பெருநூல்தான் குருநூலாகும் வண்மையுடன் பாடிவைத்தேன் காண்டமாமே
**6008.**
காண்மாஞ் சத்தகாண்ட மேழாயிரந்தான் காவியங்கள் போலவொரு நூலுமில்லை
பாண்டவாள் வையகத்து மாண்பரெல்லாம் பாங்குடனே சித்துவகை முனிவர்வாழ்க்கை
தாண்டவம்போல் குருநூலேழாயிரத்தில் சாற்றினேன் அறுகாண்டந் தன்னிற்குள்ளே
பூண்டதொரு லோகவதிசயங்களெல்லாம் புகட்டினேன் காலாங்கி கடாட்சந்தானே

6009.
தானான சத்தகாண்டந் தன்னைப்போலே சாற்றினார் அகஸ்தியனார் முனிவர்தானும்
கோனான பன்னீராயிரந்தானப்பா கொற்றவனே புலஸ்தியருக் குபதேசித்தார்
பானான பனிரெண்டு காண்டஞ்சொன்னார் பாலகனே வாயிரத்துக்கொருகாண்டந்தான்
தேனான மனோன்மணியாள் கிருபையாலே தேற்றமுடன் பாடிவைத்த நூல்தான்பாரே
6010.
பாரேதான் ஏழுலட்சங் காப்புதன்னை பாலகனே பாடிவைத்தார் அனந்தமாக
நேரேதான் இந்நூலேழாயிரந்தான் நேர்மையுள்ள காண்டமது தன்னைப்போலும்
சீரேதான் அகஸ்தியனார் உண்டுசெய்த சிறப்பான பன்னீராயிரத்தைப்போலும்
ஆரோதான் சொன்னதுண்டோ நூலையப்பா வப்பனே யானுமல்லோ வுரைத்திட்டேனே
6011.
உரைத்தேனே வெகுநூல்கள் அனந்தங்கோடி வுத்தமனே இந்நூலுக்கொப்பதாமே
கரைத்ததொரு பொருள்களெல்லாம் இதிலடக்கம் காசினியில் கண்டவர்கள் விடுவாரோசொல்
நரைதிரையும் வருவதில்லை இந்நூல்கண்டால் நாதாக்கள்தான்முதலோர் நாணுவார்கள்
சுரையடர்ந்த கரைபோலே யெண்ணவேண்டாம் சுந்தரனே குருநூலாம் மெய்நூலாமே
6012.
நூலான நூலுக்குள் மார்க்கஞ்சொன்னேன் நுட்பமுடன் மார்க்கமது என்னவென்றால்
பாலான சித்தருக்கு நீதிசொன்னேன் பாங்குடனே யனீதவழி விதியுஞ்சொன்னேன்
சேலான சன்மார்க்கந் துன்மார்க்கந்தான் செப்பினேன் கடைக்காண்டமேழினுள்ளே
மாலான மகுத்துவங்கள் சொல்லொண்ணாது மகத்தான நீதிவழி பாடுகாணே
6013.
காணவே சத்தகாண்ட மேழினுள்ளே கருவான கடைக்காண்டம் தன்னுக்குள்ளே
பூணவே சிடிகையென்ற நுணுக்கமப்பா புகட்டினேன் புலிப்பாணி மைந்தாகேளு
ஆணவங்கள் தானொடுங்கி மைந்தாநீயும் வப்பனே சித்தாதி முனிவர்க்கெல்லாம்
நாணலுடன் முடிவணங்கி கரங்குவித்து நாற்பாத கமலமதை வணங்குவாயே
6014.
வணங்கியே நூலதனைப் பதனம்பண்ணு வகையில்லா கசடருக்கு யீயவேண்டாம்
சுணங்கமெனுங் கழுதையப்பா மாண்பர்தாமும் சுந்தரனே வெகுபேர்கள் இருப்பாருண்டு
கணமுடைய ராட்சதர்கள் தன்னைப்போல கருமிகளும் மெத்தவுண்டு யீயவேண்டாம்
மனங்கமழும் புண்ணியர்கள் தன்னைத்தேடி மகத்தான நூல்கொடுத்தால் புனிதமாமே
6015.
புனிதமாங் கருமிகட்குக் கொடுத்தாயானால் பூபாலகன் மணியே பாபமெய்தும்
கனிவுடைய புண்ணியர்கள் வெகுபேருண்டு காசினியில் உன்னைவந்து நூல்கேட்டாலே
இனிதான வார்த்தையது மிகவுங்கூறி எழிலான நூலுக்குச் சாபந்தீர்ந்து
தனியாகத் தானழைத்து உபதேசித்து தாரணியில் பிழைக்கும்வகை சொல்லுவீரே
6016.
சொல்லவென்றால் நாவில்லைப் பாவுமில்லை துரைராஜ காலாங்கிநாதர்தம்மை
புல்லவே யவர்தமது பதாம்புயத்தை போற்றியே எந்நாளும் மனதுவந்து
அல்லதுவிட்டகற்றி யன்புகூர்ந்து வப்பனே சதாநித்தம் மனதிலுன்னி
வெல்லவே யுபதேசமோதியல்லோ விருப்பமுடன் நூல்கொடுத்தால் புண்ணியமாமே

6017.
புண்ணியமாம் இன்னமொரு மார்க்கங்கேளு புகழான புலிப்பாணி மைந்தாபாரு
மண்ணிலே வெகுகோடி சித்துதாமும் மகத்துவங்கள் கொண்டதொரு புனிதவான்கள்
நண்ணியதோர் நூல்களெல்லாம் மிகவுங்கூறி நலமுடனே மறைத்துவைத்தார்
அனேகங்கோடி
உண்மையாய் நூலதனைப்பாடியல்லோ வுத்தமனே மறைத்ததினால் ஒன்றுங்காணே
6018.
ஒன்றான சித்துமுனி ரிஷியைப்போலும் ஓகோகோ நாதாக்கள் தன்னைப்போலும்
குன்றான நூலதனை மிகவும்பாடி குகைதனிலே மறைத்துவைத்தார் கோடிமாண்பர்
வென்றிடவே வகஸ்தியரும் மிகவாய்ப்பாடி வெட்டவெளி குகைதனிலே மறைத்துவைத்தார்
தென்றிசையில் சித்தர்களுந் தாமுமல்லோ தெளியாமல் மலைமீதில் ஒளித்தார்தானே
6019.
தானான சாத்திரத்தைப் பாடியல்லோ தண்மையுடன் குகைதனிலே வைத்தாரப்பா
கோனான கும்பமுனி ரிஷியார்தாமும் கூட்டமிட்டு சாத்திரத்தை மறைத்துவைத்தார்
மானான காலாங்கி நாதர்தாமும் மார்க்கமுடன் நூலதனைப்பாடியல்லோ
தேனான சீஷவர்க்க மாண்பருக்கு தேற்றமுடன் நூல்கொடுத்தார் திண்ணமாமே
6020.
திண்ணமா மின்னமொரு மார்க்கம்பாரு தீர்க்கமுடன் புலிப்பாணி மைந்தாகேளு
வண்ணமா மேருவுக்கு வடபாகத்தில் மகத்தான கடலோரங் காட்டகத்தில்
நண்ணவே சிங்கமதை யானுங்கண்டேன் நாதாக்கள் சித்துமுனி யங்குமுண்டு
திண்ணமுடன் குளிகையது கொண்டுமல்லோ தீர்க்கமுடன் வனத்தில் இறங்கினேனே
6021.
இறங்கினேன் வடபாகங் கடலோரத்தில் எழிலான இருளடைந்த கானகந்தான்
உறங்குமே கரடிபுலி சிங்கந்தானும் ஓகோகோ நாதாக்கள் மெத்தவுண்டு
திறமுடைய கரிக்கூட்டம் சொல்லொண்ணாது திரளான வடகோடி கானகத்தில்
குறைவன்றி வாழுமது மிருகமெல்லாம் கொற்றவனே இமயகிரி வடபாகந்தானே
6022.
தானான முற்பக்கம் அரிகள்கூட்டம் தாக்கான பிற்பக்கம் கரிகள்கூட்டம்
கோனான மேற்பக்கம் பரிகள்கூட்டம் கொற்றவனே கீழ்பக்கம் நரிகள்கூட்டம்
தேனான நடுமையக் கானகந்தான் தேவிமனோன்மணியாள் அறியாநாடு
மானான பரிதிமதி காணாநாடு மகத்தான சில்லென்ற காடுதானே
6023.
காடான நடுமையங்கானகத்தில் கரடிபுலி சிங்கமது வாழும்நாடு
தாடாண்மை கொண்டதொரு தழைத்தநாடு தகமையுள்ள கானகந்தான் சித்தர்நாடு
நாடாளும் ராஜர்பதி கண்டதில்லை நலமுடனே தேவரிஷி இருக்கும்நாடு
பாடாண்மை கொண்டதொரு பசுக்கள்நாடு பாரினிலே யாரேனுங் காணார்தாமே
6024.
காணாரே யவ்வனத்தில் மகிமைதன்னை கதையுரைப்பேன் புலிப்பாணி மன்னாகேளு
தோணாமல் சித்தர்முனி ரிஷிகளுக்கும் தொல்லுலகில் கண்டறியா வதிசயங்கள்
நாணாது சிங்கமென்ற காட்டகத்தை நன்மையுடன் குளிகைகொண்டு சென்றுயானும்
வீணாகக் காலமது கழியாமற்றான் விருப்பமுடன் சிலகாலமிருந்திட்டேனே

6025.
இட்டேனே நெடுங்கால மடியேன்தானும் எழிலான காலாங்கி கிருபையாலும்
திட்டமுடன் குளிகைகொண்டு கானகத்தில் தீர்க்கமுடன் சுற்றிவருங்காலந்தன்னில்
பட்டையம் ஆண்சிங்கம் பெண்ணைக்கண்டு பாச்சலுடன் மோகமது வதிகமாகி
சட்டமுடன் கலவிதனில் மிகக்கலந்து சாங்கமுடன் இருக்குமது காலந்தானே
6026.
காலமாம் ஆணுடனே பெண்ணுங்கூடி கல்விதனிலிருக்கின்ற நாளுங்கண்டேன்
தாலமாம் பனிரெண்டு வருஷந்தானும் தாக்கான பெண்சிங்கங் கருவுமாகி
கோலமுடன் பூரணமாங் கெற்பங்கொண்டு கொற்றவனே யீனுகிற காலமாச்சு
சாலமது யென்சொல்வேன் மன்னாகேளு சாங்கமுடன் ஒருவருந்தான் கண்டிலாரே
6027.
கண்டேனே கானகத்தி லதிசயங்கள் கண்கொள்ளா மகிமையது யென்னசொல்வேன்
அண்டர்முனி ராட்சதர்கள் அறியாநாடு யவ்வனத்தில் சிங்கமது கற்பங்கொண்டு
பண்டுபல வஸ்துக்கள் அருந்தியல்லோ பாங்குடனே கெற்பவேதனையுமாகி
அண்டமுடியாமலது சிங்கந்தானும் அவனிதனில் வேதனைகள் படுகலாச்சே
6028.
ஆச்சப்பா வாண்சிங்கந் தானுமல்லோ அரிவையெனும் பெண்சிங்கந்தன்னைக்கண்டு
பாச்சலுடன் யானையது இருக்குங்கூட்டம் பாண்மையுடன் தானறிந்து மனதுவந்து
மேச்சலுடன் பெண்சிங்கந்தன்னைக்கூட்டி மேன்மையுடன் கரிக்கூட்டந்தன்னிலங்கே
மாச்சலது வாராமல் சிங்கந்தானும் மன்னவனே சென்றல்லோ நிற்கலாச்சே
6029.
நிற்கவே கரிக்கூட்டம் முன்னதாக நேரான சிங்கமது பின்னதாக
விற்பனமாய் முதுகொடுத்து நின்றுகொண்டு வீரமுடன் குட்டியது ஈன்றபின்பு
சொற்பெரிய குட்டியென்ற சிங்கந்தானும் சுந்தரனே மத்தகெஜந் தலையிற்பாய்ந்து
உற்பனமா மூளையது உரிந்துமல்லோ வுத்தமனே சிங்கமது இறங்கும்பாரே
6030.
பாரேதான் சிங்கமது இறங்கும்போது பாங்கான கரிக்கூட்டம் நடுங்கியல்லோ
நேரேதான் தலைவாறு திசைமாறிதானும் நேர்மையுடன் கானகத்தைச் சென்றுபோகும்
சீரேதான் சிங்கமென்ற குட்டிதானும் திறளான கரிக்கூட்டம் தன்னிற்சென்று
வீரேதான் நான்குநாள் இரையுங்கொண்டு விடுபட்சி காட்டகத்தே வருகுங்காணே
6031.
காணவே சிங்கமது பிறவியல்லோ கைலாய நாதருட கடாட்சத்தாலே
தோணவே வையகத்தில் குட்டியீன்று தொல்லுலகில் வாழ்குவது மகிமைமெத்த
ஆணவங்கள் அதிகமுண்டு அரிதனக்கு அவனியிலே ராஜனென்ற மிருகமாச்சு
பூணவே வையகத்தின் மிருகமெல்லாம் புகழான சிங்கத்தின் கீழுமாச்சே
6032.
கீழான மிருகமது வனேகமுண்டு கீர்த்தியுள்ள சிங்கமது ராசனப்பா
பாழான காடுகளில் இருக்கும் சிங்கம் பார்த்தவர்கள் ஆரேனும் கண்டதுண்டோ
சாழலுடன் கானாறுதன்னிலப்பா சட்டமுடன் விழுந்திறந்த கதைகேட்டார்கள்
ஆழான மடுக்களிலே விழுந்திறந்த அதிசயங்கள் வையகத்தில் கண்டார்தாமே

6033.
தாமான யின்னமொரு மார்க்கம்பாரு தண்மையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
கோமானகள் அறிந்ததில்லை குவலயத்தில் கொற்றவனே இன்னமொரு மகிமைசொல்வேன்
சாமானிய மானதொரு சித்தரப்பா சட்டமுடன் அன்பதுபேர் கூட்டமாக
அமானமாகவல்லோ கூட்டங்கூடி அடவான காட்டகத்தில் வந்திட்டாரே
6034.
வந்ததொரு வழிதனிலே மார்க்கங்கண்டு வண்மையுடன் சிங்கமது கர்ச்சித்தல்லோ
சிந்தனையாய் மாண்பருட சைகைதன்னை சீறலுடன் தானறிந்து கோபமிஞ்சி
தொந்தரவு செய்வதற்கு மனதுவந்து தோற்றமுடன் பாச்சலது வதிகமாகி
விந்தையுடன் சிங்கமது வேவுகொண்ட வீரியத்தை கண்டார்கள் சித்துதாமே
6035.
சித்தான சித்துமுனி ரிஷிகள்தாமும் சீறலுடன் வருகின்ற சிங்கந்தன்னை
புத்தியுள்ள சித்துமுனி பார்த்துயேங்கி புகழான வன்பதுபேர் கூட்டத்தோடும்
பத்தியுடன் கல்லாலின் மரத்தின்மேலே பரிவுடனே ஏறியல்லோ பார்க்கும்போது
சுத்தியெங்கும் பார்த்துமல்லோ சிங்கந்தானும் சுந்தரனார் அன்பதுபேர் காணலாச்சே
6036.
காணவே சிங்கமது சித்தர்தம்மை கனதான வீரியத்தால் கோபமிஞ்சி
தோணவே சிங்கமது யேதுசெய்யும் தோற்றாமல் கோபமது வதிகங்கொண்டு
பாணம்போல் சிறுநீரை பூமிதன்னில் பள்ளமதாய்ச் செய்துமல்லோ மண்ணைத்தானும்
பூணவே மூத்திரத்தில் வாலைவிட்டு புகழுடனே மண்ணதனைப் பிரட்டலாச்சே
6037.
பிரட்டியே வால்தனிலே மண்ணையேந்தி பின்பக்கமாகவல்லோ திரும்பியேதான்
வாட்டியே வாலதனைத் தூக்கியேதான் வளமையுடன் மண்ணதனை நோக்கியல்லோ
தூட்டிதயே வால்சுற்றி யெரியும்போது துப்புரவாய் மண்ணதனை மேலேநோக்கி
மிரட்டியே தானெரிய மண்தானப்பா மீறியே சித்தரின்மேல் விழுகலாச்சே
6038.
விழுகவே நாற்பத்தியெண்மர்பேரில் விஷமான மண்ணதுவும் மேலேபட்டு
பழுதுபடா மேனியதில் விஷமுங்கண்டு பாங்குடனே நித்திரைகள் வந்தாற்போல
நழுகியே சிங்கமது சென்றபின்பு நடுக்கமுடன் திரேகமது ஒடுக்கமாகி
முழுதுமே நாற்பத்தி யெண்மர்பேரும் மூதுலக மண்மீதில் விழுந்திட்டாரே
6039.
மண்ணான பூமிதனில் விழுந்தபோது மயக்கமுடன் கண்ணுரங்கி யிருந்தாற்போலும்
திண்ணமுடன் மடிந்தார்கள் சித்தரெல்லாம் தீர்க்கமுடன் வையகத்தைக் கண்டதில்லை
எண்ணயே மரத்தின்மேல் இருந்தபோர்கள் யெழிலான யிருவருமே யிறங்கியேபின்
குண்ணியே முகம்வாடி மனமயர்ந்து குவலயத்தில் மடிந்தவரைக் கண்டார்தாமே
6040.
தானான மண்படாதிரண்டுபேரும் சட்டமுடன் மரம்விட்டுக் கீழிறங்கி
கோனான சிங்கமது சென்றபின்பு கொற்றவனே இருவருமே யறிந்துகொண்டு
தேனான மனோன்மணியை மனதிலுன்னி தெளிவுடனே புத்தியது யதிகமாகி
பானான சித்துமுனி இருவர்தாமும் பரிட்சிக்க எண்ணமது கொண்டிட்டாரே

6041.
கொண்டுமே மரத்தடியை விட்டிறங்கி கொற்றவர்கள் சிங்கத்தின்பள்ளங்கண்டு
விண்டிடவே மூத்திரமாம் பள்ளங்கண்டு விருப்பமுடன் சோதனைகள் பண்ணவெண்ணி
கண்டிடவே கரமதனில் இருந்தசெம்பை கட்டழகர் தானெடுத்து மண்ணிற்போட
கொண்டதொரு செம்பதுவுந் தங்கமாச்சு கொற்றவனே யதின்விஷத்தை யறிந்தார்பாரே
6042.
பாரேதான் விஷமேறி பழுக்கலாச்சு பாங்கான அரியினது மூத்திரந்தான்
நேரேதான் மண்ணதனில் விஷமுமாகி நேர்மையுடன் சித்தரின்மேல் படுகலாச்சு
சீரேதான் தேகமது புண்ணுமாகி தீர்க்கமுடன் தானிறந்தார் சித்தரெல்லாம்
ஆரோதான் கண்டவர்கள் உலகிலில்லை யப்பனே சித்தர்முனி கண்டார்தானே
6043.
கண்டாரே சித்துமுனி ரிஷியார்தாமும் கானகத்தில் நடந்ததொரு வதிசயத்தை
தண்டம்போல் தான்கண்டு பிர்மித்தேங்கி தாரணியில் குளிகைகொண்டு சீனந்தன்னில்
வண்ணமுடன் சீனபதி மாண்பருக்கு வளமான வதிசயத்தை யெடுத்துக்கூற
திண்ணமுடன் மனதுவந்து மனங்களித்து தீர்க்கமுடன் சீனபதிக்கேகினாரே
6044.
ஏகவே யின்னமொரு மார்க்கங்கேளு யெழிலான புலிப்பாணி மணியேபாரு
சாகமுடன் நெடுங்காலம் வடமேருதன்னில் சட்டமுடன் நானிருந்தேன் சிலதுகாலம்
பாகமுடன் சிங்கத்தின் அதிசயத்தை பாரினிலே நாதாக்கள் கண்டதில்லை
வேகமுடன் யான்கண்டு சீனத்தார்க்கு விருப்பமுடன் உபதேசஞ் செய்திட்டேனே
6045.
செய்தேனே வடமேரு தன்னிலப்பா சிறப்பான சிங்கத்தின் மகிமைதன்னை
வெய்யபுகழ் சீனபதி மாண்பருக்கு விருப்பமுடன் உபதேசஞ் செய்தேன்யானும்
பையவே யான்கொண்ட காயகற்பம் பட்சமுடன் அவர்களுக்கு கொடுத்தேன்பாரு
துய்யவே சீனபதி மாண்பரெல்லாம் துப்புரவாய் காயாதி கொண்டார்பாரே
6046.
பாரேதான் காயாதி கொண்டபின்பு பாங்கான சீனபதி மாண்பர்தம்மில்
நேரேதான் சிலதுபேர் ஞானவானாய் நேர்மையுடன் குளிகையது பூண்டுகொண்டு
தீரேதான் வடமேரு கானகத்தில் தீர்க்கமுடன் தான்சென்று காணுதற்கு
வீரேதான் குளிகையது பூண்டுகொண்டு விருப்பமுடன் வடமேருக்கேகினாரே
6047.
ஏகினார் சிங்கமென்ற காட்டகத்தில் எழிலாக நாதாக்கள் தன்னைப்போலே
பாகமுடன் காயாதி கொண்டுமல்லோ பக்குவமாய் குளிகைவிட்டு கானகத்தில்
சாகமுடன் சிங்கமதைக் கண்டாரங்கே சட்டமுடன் சிங்கமது கெர்ச்சித்தேதான்
வேகமுடன் சீனபதி மாண்பர்தம்மை வீறுடனே கொல்லுதற்கு வருகலாச்சே
6048.
வருகவே சித்துமுனி தம்மைப்போலே வாகான சீனபதி மாண்பரெல்லாம்
பெருகவே கல்லாலின் மரத்தின்மேலே பேரான முன்னிருந்த சித்துபோலே
சொரூபமதைக் கண்டவுடன் மரத்தின்பேரில் சுந்தரனே பார்த்துமல்லோ திகைத்துநின்று
அருவமென்ன சிங்கமதைக் கண்டுமல்லோ வப்பனே பிரமித்து நின்றிட்டாரே

6049.
நின்றாரே சித்துமுனி ரிஷியார்தாமும் நேரான சிங்கமது கண்டுமேதான்
குன்றிடவே தன்மனதில் வுறுதிகொண்டு கூரான சிங்கமது யேதுசெய்யும்
வென்றிடவே முன்போலே மண்ணைவாரி விட்டெரிய சீனபதி மாண்பரெல்லாம்
தன்றிடவே கல்லாலின் மரத்தின்பேரில் சட்டமுடன் மேலிருந்து விழுந்தார்தாமே
6050.
தாமான சீனபதி மாண்பரெல்லாம் தகமையுடன் மண்ணதனில் விழுந்துமேதான்
பூமான்கள் விஷமதுவும் சகியாமற்றான் புகழான தேகமது சிலிர்த்துமல்லோ
நாமான பஞ்சேந்திரியம் உள்ளடங்கி நமனுக்கு ஆளாகி பொறிகலங்கி
வேமான மாகவல்லோ மண்ணின்பேரில் விழுந்துமே பிரண்டிருக்கக் கண்டிட்டேனே
6051.
கண்டேனே சீனபதி மாண்பர்தம்மை கடுகெனவே விஷமேறி யிருந்தபேர்க்கு
தண்டகம்போல் காயாதி முறிப்புயானும் தகமையுடன் தான்கொடுத்து யெழுப்பியல்லோ
மண்டலங்கள் உள்ளளவும் சிங்ககற்பம் மடியாமல் இருப்பதற்கு மனதுவந்து
விண்டவே யான்கொடுத்து உயிர்கொடுத்தேன் விட்டகுறை இருந்ததினால் எழுந்தார்பாரே
6052.
பாரேதான் சீனபதி மாண்பருக்கு பாங்கான கற்பமுறை யானுஞ்சொல்லி
நேரேதான் பிழைப்பதற்கு வழியுஞ்சொன்னேன் நேர்மையுடன் கருவாளி கண்டுகொள்வார்
சீரேதான் சித்தர்முனி மார்க்கந்தன்னை சிறப்புடனே யானுரைத்தேன் மாண்பருக்கு
வேரேதான் மற்றோரால் சொல்லப்போமோ வேதாந்த காலாங்கி கடாட்சந்தானே
6053.
தானான சீனபதி மாண்பரெல்லாம் தகமையுடன் தானெழுந்து முடிவணங்கி
கோனான காலாங்கி கடாட்சத்தாலே கொற்றவனார் சீனபதி மாண்பரெல்லாம்
பானான விட்டகுறை இருந்துமல்லோ பாங்குடனே என்னாலே எழுப்பப்பட்டார்
மானான மகதேவர் கடாட்சத்தாலே மறைபொருளை யானுமல்லோ உணர்ந்திட்டேனே
6054.
உணர்ந்தேனே யின்னமொரு மார்க்கம்பாரு வுத்தமனே புலிப்பாணி மைந்தாகேளு
மணங்கமழும் வடகோடி கானகத்தில் மார்க்கமுடன் மகமேரு பக்கந்தன்னை
கணமுடனே யனேகவித தெய்வந்தானும் காட்டகத்தே வாசமது செய்துகொண்டு
பிணமதனை யாபூதி கொள்ளுங்காளி பேரான காட்டகத்தை கண்டேன்தானே
6055.
தானேகேள் அண்டமுனி யறியாக்காடு தகமையுள்ள வனந்தனிலே திரிந்துயானும்
மானேகேள் மகமேரு சாரல்பக்கம் மகத்தான குண்ணுகளும் மலையுமுண்டு
தேனான மலைதனிலே வாசஞ்செய்யும் தேளதுவுந் திரள்கூட்டஞ் சொல்லொண்ணாது
கோனான தேளதுவின் கூட்டந்தன்னை தேற்றமுடன் கோடிவரை யான்பார்த்தேனே
6056.
பார்த்தேனே செந்தேளாம் கோடிவர்க்கம் சாங்கமுடன் யுகம்பிரித்து நடக்கும்போது
தீர்த்தலிங்கந் தனிலுதித்த செந்தேளப்பா தீரமுடன் கோடிதளம் வருகும்போது
ஆர்த்தியுடன் மேலேறி வருகுந்தேளாம் வப்பனே உச்சிலிங்கத்தேளேயாகும்
மூர்த்தியுடன் மும்மூர்த்தியானபேரும் மூதுலகில் நடுங்குவது திண்ணமாமே

6057.
திண்ணமாம் உச்சிலிங்கத் தேன்தானப்பா தீர்க்கமுடன் காட்டகத்தே இருக்கக்கண்டேன்
வண்ணமுடன் மலைசாரல் காளிகோயில் வளமான தேவதாஸ்தலமுங்கண்டேன்
எண்ணரிய கோயிலது மூலஸ்தானம் யெழிலாக வால்நுழைய இடமுமுண்டு
கண்ணமுடன் காளிதனைக் காணவென்றால் சாங்கமுடன் சுரங்கவழி செல்வார்பாரே
6058.
பாரேதான் தேவதா ஸ்தலத்துக்குள்ளே பாங்கான வழியதுவும் மூலஸ்தானம்
நேரேதான் காளிதனைக் காணவென்றால் நேர்மையுடன் மார்பாலே நகர்ந்துமல்லோ
தீரேதான் எண்சாணு விடமுந்தாண்டி தீர்க்கமுடன் காளிதனைக் காணலாகும்
கூரேதான் அதற்கப்பால் காளிவாசம் கொற்றவனே தானிருக்கக் காணலாமே
6059.
காணலாம் உச்சிலிங்கத் தேள்தானப்பா கடியதொரு சுரங்கமதில் வாசஞ்செய்து
பூணவே நெடுங்காலம் வாசஞ்செய்து பொங்கமுடன் இருக்குமந்த காலந்தன்னில்
நீணவே யவ்விடத்தில் கரிக்கூட்டங்கள் நீதியுடன் சொல்லுதற்கு லக்கோயில்லை
ஆணவங்கள் மிஞ்சியல்லோ யானைக்கூட்டம் வப்பனே கணக்குண்டோ
சொல்லொண்ணாதே
6060.
ஒண்ணாது காட்டகத்தே கோனான்தானும் வுத்தமனே மாடாடு மேய்க்கும்ஸ்தானம்
அண்ணார்ந்து பார்ப்பதற்கு முடிகொள்ளாது வப்பனே பசுக்கூட்டம் மெத்தவுண்டு
கண்ணாலே யானையது கோனான்தன்னை கடைநோக்கிப்பார்த்தல்லோ சீறலாகி
மண்ணோடே தும்பிக்கையாற்புரண்டி மகத்தான கோனானைத் துறத்தலாச்சே
6061.
ஆச்சப்பா கரியல்லோ கோனானைத்தான் வப்பனே துரத்துகின்ற வேளைதன்னில்
பாச்சலுடன் கோனானும் ஓட்டங்கொண்டு பதுங்கியே செல்வதற்கு காளிகோயில்
மூச்சடங்கி யோடியல்லோ தேவஸ்தானம் முனையான காளியது மூலஸ்தானம்
மாச்சலது வருவதற்கு முன்னதாக மகத்தான சுரங்கவழி சென்றான்தானே
6062.
சென்றாரே கோனானுங் காளிபக்கல் செம்மலுடன் பதுங்கியல்லோ மூற்புறத்தில்
நின்றாரே கோனானும் உடல்நடுங்கி நீதியுடன் காளிபுறம் தன்னில்நிற்க
குன்றேறி வாழுகின்ற யானையப்பா கொற்றவனே சுரங்கம் வழி வருகலாச்சு
வென்றிடவே யானையது தும்பிக்கையால் வீரமுடன் சுரங்கமது நுழையலாச்சே
6063.
நுழையவே சுரங்கத்தின் வழியிலப்பா துண்மையுடன் தும்பிக்கைவிட்டுமல்லோ
குழையவே தேகமது செல்லாமற்றான் கொற்றவனே யானையது நின்றுகொண்டு
தழைமேய்க்கும் கோனானைத் தும்பிக்கையால் தட்டாமல் நாற்புறமும் தடவும்போது
நுழையவே கதிதனக்கு இடமுமில்லை நுட்பமுடன் இடையூறு நேரலாச்சே
6064.
ஆச்சுதே தும்பிக்கையாலேதானும் வப்பனே கோனானைத்தேடும்போது
மூச்சடங்கித் தானிருந்து கோனான்தானும் முனையான காளியின்மேல் சிந்தையாகி
மாச்சலது வாராமல் இருந்துகொண்டான் மகத்தான யானையுந்தன் தும்பிதன்னை
வீச்சலுடன் உச்சிலிங்கத் தேள்தானப்பா வீரமுடன் கொட்டிடவே சத்தமாமே

6065.
சத்தமது கொண்டிடவே யானைதானும் சதுரான மலைதனிலே கேட்கும்போது
முத்திபெறும் சித்தர்களின் கூட்டத்தார்கள் முனையான சத்தமதைக் கேட்டுமேதான்
புத்தியுடன் யானையது தன்னையல்லோ புகழான வுச்சிலிங்கத் தேள்தானப்பா
வெத்தியுடன் கொட்டியதோர் தேள்தானென்று வீரமுடன் சித்தர்களும் அறிந்திட்டாரே
6066.
அறிந்தாரே வுச்சிலிங்கத் தேள்தானப்பா வப்பனே கரிதனையே கொட்டிட்டென்று
செறிந்துமே மலைதனையே விட்டிறங்கி செம்மலுடன் யானையது பக்கல்வந்தார்
குறி யான யானையது விஷமுமேறி கொப்பெனவே நெருப்பதுபோல் எரியுதங்கே
முறியுடனே தந்தமெல்லாம் பற்றியல்லோ முனையான கொழுந்துவிட்டு எரியலாச்சே
6067.
எரிந்துமே பிரிதிவென்ற சாம்பலாச்சு எழிலான யானையது மடிந்துபோச்சு
சொரிந்ததொரு சாம்பல்தன்னை சித்தர்கண்டு சோராமல் அவரவர்கள் பங்குவீதம்
புரிந்துமே பங்கதுவும் பகரும்போது புகழான கோனானும் சுரங்கத்தண்டே
வரிந்துமே கோனானை சித்தர்கண்டு வகையுடனே வளப்பமதைக்கேட்டிட்டாரே
6068.
கேட்டவுடன் கோனானும் மனம்நடுங்கி கெவனமுடன் சித்தர்கட்கு கூறலுற்றான்
வாட்டமுடன் மாடாடு மேய்க்கும்போது வளமான யானையது என்னைக்கண்டு
தாட்டிகமாய்ச் சீரலது மிகவுண்டாகி சட்டமுடன் எந்தனையும் துரத்தலாச்சு
கோட்டமுடன் யானையது வருகும்போது கொப்பெனவே யான்பயந்து ஓடினேனே
6069.
ஓடினேன் தங்குதற்கு இடமில்லாமல் ஓகோகோ நாதாக்கள் முனிவரேகேள்
தேடியே காளியது தேவஸ்தானம் தேற்றமுடன் யான்கண்டு மனதுவந்து
வாடியே சுரங்கமது வழியிற்சென்று மகத்தான காளியின்தன் பக்கல்நின்றேன்
நீடியே யானையது எந்தனைத்தான் நிஷ்களங்கமாகவல்லோ தேடலாச்சே
6070.
ஆச்சையா சித்துமுனி ரிஷியாரேகேள் ஆங்காரமுள்ள தொருயானைதானும்
மூச்சடங்கித் தும்பிக்கை தன்னினாலே முனையான சுரங்கத்தின் வழியினுள்ளே
பாச்சலுடன் தும்பிக்கை விட்டபோது பாழான சுரங்கமதில் மகிமையேதோ
கூச்சலுடன் வீரிட்டு யெறிந்துமேதான் கொப்பெனவே பரிதிவென்ற சாம்பலாச்சே
6071.
சாம்பலாய்ப் போனதொரு சேதிகண்டு சட்டமுடன் சுரங்கமது வுள்ளிருந்து
தீம்புகளும் நேராது யென்றுசொல்லி தீர்க்கமுடன் வெளியரங்கம் வந்தேனென்றான்
வீம்புடைய கோனானின் வார்த்தைதன்னை விருப்பமுடன் சித்தர்முனி கேட்டுவந்து
நாம்யிவனுக்கோருதவி செய்யவென்று நலமுடனே சித்தரெல்லாம் நினைத்திட்டாரே
6072.
நினைத்துமே வுச்சிலிங்கத் தேளினாலே நிஷ்களங்கமானதொரு திரவியங்கள்
சுனைபோல ஏமமென்ற தங்கந்தானும் துப்புரவாய் நந்தமக்கு வாய்த்துதென்று
சுனையான கோனானால் வந்தபாக்கியம் காசினியில் சதகோடி சொல்லொண்ணாது
பனையளவு பாக்கியமும் இவனாலாச்சு பட்சமுடன் சித்தர்முனி எண்ணினாரே

6073.
எண்ணியே சித்தர்முனி மனதுவந்து எழிலான கோனானைத் தானழைத்து
பண்ணவே ஏமமென்ற வித்தைதன்னை பட்சமுடன் இவனுக்கோர் பாகமீய்ந்து
வண்ணமுடன் செய்பாகம் கைபாகங்கள் வளமையுடன் காண்பித்து விதியுஞ்சொல்லி
சுண்ணமென்ற சாம்பல்தனை யோர்பாகந்தான் சுத்தமுடன் கைகொடுத்து போவென்றாரே
6074.
போமென்று சொல்லியல்லோ முனிவர்தானும் பொங்கமுடன் கோனானுக்குறுதிகூறி
நாமென்ற காலாங்கி வாக்குபோலே நலமுடனே ஞானோபதேசஞ்செய்து
தாமென்ற பிரிதிவியாஞ் சாம்பல்தன்னை சட்டமுடன் தான்கொடுத்து மதியுஞ்சொல்லி
வேமென்ற காட்டகத்தே சித்தர்தாமும் வேகமுடன் குகைதனிலே சென்றிட்டாரே
6075.
சென்றவுடன் கோனானும் சாம்பல்தன்னை செம்மலுடன் அவர்பதிக்குக் கொண்டுசென்று
பொன்னான மாற்றதுவும் செம்பிலேற புகழான செம்பதுவுந் தங்கமாச்சு
மன்னவனைப் போலாகக் கோனான்தானும் மகதேவர் சித்தர்முனி தம்மைப்போலும்
தென்னகரி ராமருட செல்வம்போலும் திரளான கோடிவரை பார்த்திட்டானே
6076.
பார்த்தானே சித்தருட மகிமைதன்னால் பாங்கான யேமமென்ற வித்தைதன்னை
கீர்த்தியுடன் முறைசெய்த தபோபலத்தால் சீர்பெற்றான் கோனானுஞ் சித்துதம்மால்
பேர்பெற்றான் கோனானுங் காட்டகத்தில் பேருலகில் விட்டகுறை இருந்துதன்னால்
தார்வேந்தர் மெச்சிடவே தரணிதன்னில் தாமுமொரு சிவயோகி போலானானே
6077.
ஆனான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப்பாணி புத்திவானே
கோனான கதையுரைத்தேன் மகிமையல்ல கொற்றவனே யின்னமொரு மகிமைசொல்வேன்
தேனான தேவிமனோன்மணியாள்பாதம் தேற்றமுடன் யான்வணங்கி காதைசொல்வேன்
பானான காலாங்கி நாதர்பாதம் பட்சமுடன் யான்வணங்கி பகருவேனே
6078.
பகருவேன் புலிப்பாணி மன்னாகேளீர் பாரினிலே குளிகைகொண்டு சித்தியேதான்
நிகரமுடன் வையகத்து வதிசயத்தை நீதியுடன் யான்கண்டு மலையிற்றேடி
சிகரமது சதுரகிரி மலையிலப்பா சிறப்புடனே யானிறங்கி இருக்குங்காலம்
நிகரமுடன் கிரிதனையே சுத்தியல்லோ நீடூழி காலம்வரை திரிந்திட்டேனே
6079.
திரிந்துமே மலையோரம் தன்னிற்சென்று தீர்க்கமுடன் யான்காணும் வேளைதன்னில்
புரிந்துமே சிகரமது கிரியில்நின்று புகழான பனையளவு சித்துதாமும்
தெரிந்துமே மலையைவிட்டு கீழிறங்கி சிறப்புடனே மாண்பர்களைக் காணும்வண்ணம்
செரிந்துமே மகிமையது கோடியுண்டு தேசமதில் விதியுள்ளான் காண்பார்பாரே
6080.
பாரேதான் இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாலகனே புலிப்பாணி மன்னாகேளு
ஆரோதான் பொதிமாட்டுக் காரரப்பா ஆயிரம்பேர் ஒருகூட்டமாகக்கூடி
தேரோடும் பாவனைப்போல் மாண்பரெல்லாம் தேற்றமுடன் மலையோரஞ் செல்லும்போது
சீரோடும் புகையிலையின் பொதிகைதன்னை சிறப்பான சித்துமுனி கண்டிட்டாரே

6081.
கண்டாரே புகையிலையின் வாசந்தன்னை பாங்கான பனையளவு சித்துதானும்
கொண்டதொரு புகையிலையின் எண்ணமப்பா கொற்றவனே மயக்கமது மிகவுண்டாகி
எண்ணமுடன் புகையிலையின் கற்கந்தன்னை ஏற்றமுடன் புகைபிடிக்க மனதயர்ந்து
வண்ணமுடன் மலையைவிட்டுக் கீழிறங்கி வளமுடனே வருவதற்கு எண்ணினாரே
6082.
எண்ணியே சித்துமுனி ரிஷியார்தாமும் எழிலான கிரியைவிட்டு இறங்கும்போது
நிண்ணதொரு பனமரம்போல் தோற்றமாச்சு நிஷ்களங்கமாகவல்லோ இறங்கும்போது
தண்ணமுடன் மேற்பதியை விட்டுமல்லோ தாழவே படிபடியாய் இறங்கும்போது
புண்ணியனார் சித்துமுனி ரிஷியார்தாமும் புகழுடனே இறங்கிவரக் குறைவானாரே
6083.
குறைவான ரோமமென்ற கரடிபோலும் கொற்றவனே சித்துமுனி ரூபங்கண்டார்
திரையான பொதிமாட்டுக் காரரெல்லாம் தீர்க்கமுடன் சித்துமுனி இறங்கும்நேர்மை
மறைவாக வான்ரூபங் குறைந்துகாணும் மகத்தான மகத்தான ரோமமது தெரியவில்லை
முறையான மகுத்துவத்தை எண்ணாமற்றான் மூர்க்கமுடன் சித்துதமை வசனிப்பாரே
6084.
வசனிக்கப் பொதிமாட்டுக் காரரரெல்லாம் வளமையுடன் ஒருவருக்கொரு வமைகூறி
நிசமுடைய பனையளவு சித்துபோலும் நீதியுடன் சித்துதம்மை மதியாமற்றான்
புசமுடைய தேவாதி சித்துதம்மை புகழான மகுத்துவங்கள் எண்ணாமற்றான்
கசம்போன்ற ஆயிரம்பேர் மாண்பரெல்லாம் கட்டாக ஒருவருக்கோர் பேசுவாரே
6085.
பேசுவார் மலையைவிட்டு இறங்குஞ்சித்தை பேரான மகுத்துவங்கள் அறியாமற்றான்
காசுபணமில்லாத சித்துவென்றும் கருவான சதுரகிரி யிருக்குமாண்பன்
வீசுபுகழ் மகுத்துவங்கள் இல்லாரென்றும் வீரமுடன் ஒருவருக்கோருகந்துபேசி
ஆசுகவிபோலாக வார்த்தைகூறி வப்பனே சம்வாதம் செய்வார்தானே
6086.
தானான பொதிமாட்டுக் காரரெல்லாம் தகமையுடன் ஒருவருக்கோர்வாதுகூறி
கோனான குருவென்று மதியாமற்றான் கொற்றவனே கும்பலது மிகவுங்கூடி
கோனான புகையிலையின் பொதிகைதன்னை தேற்றமுடன் தானிறக்கி யமுதுகொள்ள
மானான சாவடியாங் கிரியோரந்தான் மகத்தான அமுதுகொள்ள நண்ணுவாரே
6087.
நண்ணியே யேகாந்த கூட்டந்தன்னில் நலமுடனே தானிருக்கும் வேளையப்பா
திண்ணமுடன் கிரிதனிலே இருந்தசித்து தீர்க்கமுடன் மாண்பருட கூட்டந்தன்னில்
தண்மையாய் பொதிமாட்டுக் காரர்தன்னை தகமையுடன் சித்துமுனி யருகிற்சென்று
உண்ணவே புகையிலையின் கற்பமப்பா வுத்தமனே எனக்கருளு மென்றிட்டாரே
6088.
என்றுமே ஏதுரைத்தார் முனிவர்தாமும் யெழிலான மாண்பர்களின் முகத்தைநோக்கி
குன்றுமேல் சித்துமுனி யொருவருண்டு குவலயத்தில் ஒருநாளும் வருவதில்லை
இன்றுமுதல் காற்றினது வாடையாலே எழிலான புகையிலையின் வாசமப்பா
வென்றிடவே யவர்தமக்குக் காணலாச்சு விட்டகுறை இருந்ததினால் கிடைக்கலாச்சே

6089.
ஆச்சப்பா பொதிமாட்டுக் காரர்பாலா வப்பனே எந்தனுக்கு மனதுவந்து
மூச்சடங்கித் தானிருக்கும் சித்துதானும் முனையான வனத்துரிஷிமுனிவருக்கு
பாச்சலென்ற புகையிலையின் கற்பமப்பா பட்சமுடன் நீரவர்க்குத் தருவீரானால்
மாச்சலென்ற வினையகலு முந்தனுக்கு மகயோக புண்ணியமது கிட்டும்பாரே
6090.
பாரேதான் என்றலுமே யோகிதானும் பாங்குடனே சித்துமுனி நாதருக்கு
சீரேதான் புகையிலையின் கற்பந்தானும் சிறப்புடனே யாங்களது கொடுப்போமானால்
நேரேதான் உம்மாலே மகிமையென்ன நேர்மையுடன் எந்தமக்குக் கூறுமென்றார்
தீரேதான் சித்துமுனி ரிஷியார்தாமும் சிறப்புடனே மனதுவந்து கூறுவாரே
6091.
கூறுவார் வாய்திறந்து முனியார்தாமும் கொப்பெனவே பொதிமாட்டுக் காரரருக்கு
தேறுதலாய் வார்த்தையது கூறும்போது தேற்றமுடன் அதிலொருவன் தானெழுந்து
மாறுதலாய் சித்துமுனி தம்மைப்பார்த்து மகத்தான ரிஷியாரே பண்பாய்க் கேளும்
ஆறுபுடை சூழ்ந்திருக்கும் நதியோரத்தில் அசோகமென்ற விருட்சமது விழுகலாச்சே
6092.
விழுந்ததொரு அசோகமென்ற விருட்சந்தன்னை வீறுடனே நிமிரவது செய்வீரானால்
பழுதுபடா திருமேனி யுந்தனுக்கு பட்சமுடன் கெற்பமது தருவோம்நாதா
வழுதுணையாங் கற்பமது கொண்டபோது மகத்தான சித்துமுனி யெங்களுக்கு
முழுதுமே புகையிலையின் கற்பந்தன்னை முளையாக யாங்கொடுப்போங் காணீர்தானே
6093.
காணவே மாண்பரெல்லாங் கூறும்போது கருவான சித்துமுனி ரிஷியார்தாமும்
தோணவே யவர்களுக்கு பிரம்மைதோன்ற துப்புரவாய் சித்துமுனி நாதரல்லோ
வேணதொரு காயாதி கொண்டசித்து வேகமுடன் அசோகமென்ற விருட்சந்தன்னை
பூணவே தானோக்கிப் பார்த்துமல்லோ புகழான விருட்சமதை நிறுத்தினாரே
6094.
நிமிர்த்தவே வருட்சமது தானெழுந்து நீதியுடன் இலையூன்றி நிற்கும்போது
சமர்த்துள்ள சித்துமுனி தம்மைக்கண்டு தாரணியில் மகிமை பெரிதுமல்ல
கமர்போன்ற கானகத்தில் இருக்குங்கல்லாம் கடிதான மலைகல்லைத் தன்னைத்தானும்
சுமர்ந்துமே எந்தனிடங் கொண்டுவந்து சுந்தரரே கொடுத்தாலே நம்புவோமே
6095.
நம்புவோமென்றல்லோ மாண்பரெல்லாம் நயமுடனே வார்த்தையது மனதுவந்து
வம்புடனே சித்துமுனி தன்னைக்கண்டு வளமுடனே வார்த்தையது கூறும்போது
தெம்புடனே குண்ணுமலைத் தன்னைத்தூக்கி தீரமுடன் பொதிமாட்டுக்காரர்முன்னே
கும்பல்தனில் முண்ணதனை யெடுத்துமல்லோ கொப்பெனவே கொண்டல்லோ
போட்டிட்டாரே
6096.
போட்டாரே சித்துமுனி ரிஷியார்தாமும் பொங்கமுடன் கொண்டுவந்து மாண்பர்முன்னே
நீட்டமுடன் முண்ணதனைக் கொண்டுவந்த நிலையான வித்தையது மகிமையல்லோ
வாட்டமுடன் இன்னமொரு மார்க்கஞ்செய்தால் மகத்தான மகிமையென்று நம்பியல்லோ
கூட்டமுடன் உந்தமக்கு பணிகள்செய்து கொப்பெனவே சீஷர்களா யிருப்போம்தானே

6097.
தானான வார்த்தையது கேட்டபோது தண்மையுடன் சிவஞான சித்துதாமும்
கோனான பொதிமாட்டுக் காரர்தம்மை கொப்பெனவே மகிமையது யென்னவேண்டும்
தேனான மகிமையது வேண்டுமானால் தேற்றமுடன் சித்தொளிவுஞ் செய்யக்கூடும்
மானான மகதேவர் கடாட்சத்தாலே மார்க்கமுடன் மகிமையது வதிதமுண்டே
6098.
தருவேனென்று சித்துமுனி கூறும்போது தகமையுள்ள பொதிமாட்டுக் காரர்தாமும்
குருவான சித்துமுனி ரிஷியாரேகேள் கொற்றவரே எங்களுக்கு இன்றுதானும்
பருமழையு மின்னலிடி காந்தல்தாமும் பட்சமுடன் வரவழைப்பீர் ஆனாலல்லோ
திருவான குருவென்று வும்மைத்தானும் தீரமுடன் எந்நாளும் வந்திப்போமே
6099.
வந்திப்போம் உம்மையொரு குருவாயெண்ணி மகத்தான நாதாக்கள் நீர்தானென்றும்
சிந்திப்போம் சதாகால மர்ச்சித்தேதான் சீருடனே சின்மயத்தை மனதிலுன்னி
எந்நாளுங் கிரிவாழும் பதாம்புயத்தை எழிலான சர்குருமை மெய்க்குருவென்றெண்ணி
பந்நியே கிரிதனிலே மாண்பரெல்லாம் பாங்குடனே சதாநித்தம் அர்ச்சிப்போமே
6100.
போமேதான் வார்த்தையது கூறும்போது பொங்கமுடன் வனத்துமகாரிஷியார்தாமும்
தாமேதான் சொன்னபடி வனத்தில்தானும் தகமையுடன் மண்காற்று மழையுமாக
ஆமேதான் மின்னலிடி ஜோதிபோலும் அவனியெலாந் தத்தளிக்க மிகவேசெய்தார்
வேமேதான் பொதிமாட்டுக் காரரெல்லாம் விருப்பமுடன் கண்டல்லோ பிர்மித்தாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

6101.
போமேதான் வார்த்தையது கூறும்போது பொங்கமுடன் வனத்துமகாரிஷியார்தாமும்
தாமேதான் சொன்னபடி வனத்தில்தானும் தகமையுடன் மண்காற்று மழையுமாக
ஆமேதான் மின்னலிடி ஜோதிபோலும் அவனியெலாந் தத்தளிக்க மிகவேசெய்தார்
வேமேதான் பொதிமாட்டுக் காரரெல்லாம் விருப்பமுடன் கண்டல்லோ பிர்மித்தாரே
6102.
பிர்மித்த சிறுபால மாண்பரெல்லாம் பேரான சித்துமுனி ரிஷியார்தம்மை
வர்மமுடன் பதாம்புயத்தை சுற்றிவந்து மனதுவந்து முடிசாய்த்து வஞ்சலித்து
தர்மமுள்ள நாதாந்த சித்தே நாங்கள் தாரணியில் எந்நாளும் உந்தமைத்தான்
ம்மமது வையால் வையகத்தில் மார்க்கமுடன் எந்நாளும் வசனிப்போமே
6103.
வசனிப்பொஞ் சற்குருவே எந்தன்நாதா வளமையுடன் எந்நாளுங்கிரியில்வாழும்
நிசமுடைய வேதாந்த சித்தேகேளும் நிஷ்களங்காமானதொரு சொரூபபாதா
துசங்கொண்ட வீராதி சித்தேகேளும் துவாபரமா மூன்றுயுகந் தன்னில்தானும்
குசமுடைய சின்மயத்தில் இருந்தசித்தை கோடான கோடிவரை கண்டிட்டோமே
6104.
கண்டோமே வஷ்டகிரி தன்னில்நாதா காணோமேயும்மைப்போல் ஒருவரேனும்
தொண்டுசெய்து வெகுகோடி மாண்பரெல்லாம் தொல்லுலகில் கெட்டார்கள் அனந்தங்கோடி
விண்டுரை சொல்கேளாத வீணர்கோடி வெகுகோடி வையகத்தில் கண்டதுண்டு
துண்டரிகமானதொரு சித்துபோலே துப்புரவாய் வையகத்தில் காணோம்தானே
6105.
தானான கற்பமது கொடுக்கவேதான் தண்மையுள்ள பொதிமாட்டுக் காரரெல்லாம்
கோனான கிரிதனிலே இருக்குஞ்சித்து கொற்றவனார் மாயாவின் சித்துவுக்கு
மானான புகையிலையின் கற்பந்தன்னை மார்க்கமுடன் சித்தரவர் கொள்வதற்கு
பானான மாண்பரெல்லா மொன்றாய்க்கூடி பட்சமுடன் ஆள்பாரங் காட்டினாரே
6106.
கட்டினார் மாண்பரெல்லாம் ஒன்றாய்க்கூடி கனமான சுமையதுவுமென்னசொல்வேன்
இட்டமுடன் சுமையதுவை யெடுக்கும்போது எழிலான சித்துமுனி நடுக்கங்கொள்ள
வட்டமுடன் பாலரெல்லா மொன்றாய்க்கூடி வளமான சித்தருக்கே கொண்டுசென்று
பட்டமரம் போலேயல்லோ மாண்பரெல்லாம் பாதவித்து நின்றல்லோ பார்த்திட்டாரே
6107.
பார்த்தவுடன் மலையில் வந்த சித்துதாமும் பாலரெல்லாந் தானடுங்க கரத்திலேந்தி
தீர்த்தகிரி சிலிங்கப் பொதியைப்போலும் திறமுடனே கிரிதனிலே கொண்டுசென்று
பூர்த்தியுடன் குருபாதந் தனைவணங்கி புகழுடனே வஞ்சலிகள் மிகச்செய்தாரே
6108.
செய்யவே சித்துமுனி சீஷர்தாமும் சிறப்புடனே குருநாதர் மனதுவந்து
துய்யபுகழ் புகையிலையின் கற்பந்தன்னை துப்புரவாய் மனதுவந்து நாதர்தானும்
வெய்யவே காயாதி கற்பந்தன்னை வேண்டியே விருப்பமுடன் கொடுத்த மாண்பர்
பையவே யெவ்விடத்தி லிருப்போரப்பா பான்மையுடன் அவர்களுக்கு விதிசொல்வீரே

6109.
விதியான குருமதியி னுபதேசத்தை வித்தகனார் சீஷவர்க்கந் தானுங்கேட்டு
மதியான வுபதேசம் மாண்பருக்கு மார்க்கமுடன் செய்வதற்கு மனதிலெண்ணி
துதியுடனே பொதிமாட்டுக்காரர்தம்மை துப்புரவாய் அவர்மனதில் எண்ணங்கொண்டு
நிதியதுவுந் தான்கொடுத்து மாண்பருக்கு நீதியுடன் உபதேசமெண்ணினாரே
6110.
எண்ணியே பொதிமாட்டு மாண்பர்தம்மை எழிலாக வரவழைக்க மனதுபூண்டு
வண்ணமுடன் சரமாரி பொழியவல்லோ மார்க்கமுடன் மகதேவர் தனைநினைத்து
திண்ணமுடன் ரிஷியாரும் நினைக்கும்போது தீர்க்கமுடன் பிரளயங்கள் அதிகமாகி
எண்ணமுடன் பொதிமாட்டுக்காரரெல்லாம் எழிலான மலைதனிலே வந்திட்டாரே
6111.
வந்ததொரு மாண்பரெல்லாஞ் சித்துதம்மை மகதேவர் முன்னிருந்த சித்தென்றெண்ணி
சொந்தமுடன் அவர்பாதம் முடிவணங்கி சுந்தரம்மா நெடுந்தூரம் சென்றோமையா
அந்தமுடன் சரமாரிபொழிந்துமல்லோ வையனே பிரளயங்கள் அதிகமாகி
விந்தையுடன் வந்ததொரு யிடையூர்தன்னால் விசனமுடன் மலையேறி வந்தோம்தாமே
6112.
வந்தோமே யென்றுசொல்லி மாண்பரெல்லாம் வளமுடனே சித்துவுக்குக் கூறும்போது
பந்தமுடன் மாண்பருக்கு சித்துதாமும் பட்சமுடன் கூறலுற்றார் நாதர்தம்மை
வந்தையது வுபதேசஞ் செய்வதற்கு வித்தகனார் குருமொழியின் வாக்கதாச்சு
சிந்தனையா யெல்லோரும் வந்திருந்து சிறப்புடனே சித்துமுனி கூறினாரே
6113.
கூறினார் சித்துமுனி மாண்பருக்கு குவலயத்தில் நீங்கள்செய்த அறத்தினாலே
மீறியதோர் வுங்களுக்கு உபதேசங்கள் மிக்கமனு நீதியுடன் குருவின்வாக்கு
தேறியே பலநூலும் ஞானம்தேர்ந்து தேற்றமுடன் உங்களுக்கு உபதேசங்கள்
சீறியே கோபமது வாராமற்றான் சிறப்புடனே வுதேசஞ் செய்தார்பாரே
6114.
பாரேதான் உபதேசஞ் செய்தவண்ணம் பாருலகில் யாருக்கும் கிட்டாதன்று
நேரேதான் கிரியிலுள்ள வனப்பும்வாய்ந்து நேர்மையுடன் மனுநீதி கலைக்கியானம்
கூரேதான் வேதமுத லாறுசாத்திரம் குறிப்பான கலைக்கியானம் அறுபத்துநான்கு
தீரேதான் மாண்பருக்கு உபதேசித்தார் தீர்க்கமுடன் சித்துமுனி ரிஷியார்தாமே
6115.
தானான ரிஷியாரும் அன்புகூர்ந்து தகமையுடன் பொதிமாட்டுக் காரருக்கு
கோனான குருசொன்ன வாக்குபாதம் குவலயத்தில் யாதொன்றும் குறைவில்லாமல்
மானான மனோன்மணியாள்கடாட்சத்தாலும் மகத்தான காலாங்கி கிருபையாலும்
தேனான தேவர்முனி ரிஷியார்பாதம் தெளிவுடனே வாதமது போதிப்பாரே
6116.
போதிக்க வாதமது யாதென்றாக்கால் போக்கான மலைதோறும் குன்றுதோறும்
ஆதித்தன் சந்திரனார் காணாவண்ணம் அகஸ்தியனார் மலைமூலி யனைத்துங்காட்டி
வாதிகளு மறியாத மூலிவர்க்கம் வளமையுடன் கிரிமூலி பசிமூலியாவும்
வேதிக்கி மூலிகளும் அனைத்துங்காட்டி வேகமுடன் உபதேசஞ்செய்திட்டாரே

6117.
செய்துமே யேமமென்ற வித்தைதன்னை செப்பினார் பொதிமாட்டுக் காரருக்கு
கைதவமாம் மூலிகைக்குச் சாபஞ்சொல்லி கபடகற்றி வுளவுமுதல் யாவுங்காட்டி
வையகங்கள் தான்புகழ மாண்பருக்கு வண்மையுடன் ஏமமென்ற வித்தைதன்னை
துய்யபுகழ் மாண்பருக்கு  வுளவுமூலி செப்பினார் நாதரிஷி செப்பினாரே
6118.
செப்பவே யின்னமொரு மார்க்கங்கேளு செயலான புலிப்பாணி மைந்தாபாரு
ஒப்பமுடன் பொதிமாட்டுக்காரர்தாமும் ஓகோகோ நாதாக்கள் முனிவருக்கு
தப்பிதங்கள் நேராமல் புகையிலை கற்பஞ் சட்டமுடன் தான்கொடுத்த வுபசாரத்தால்
செப்பவே யேமமென்ற மூலிதன்னை செயலாகக் காண்பித்தார்கண்டிட்டேனே
6119.
கண்டேனே வனத்தினுட மூலியெல்லாம் கருவாகக் குளிகைகொண்டு கிரியைசுற்றி
விண்டதொரு மூலிகையின் வகுப்பையெல்லாம் விருப்பமுடன் உந்தமக்கு வுபதேசங்கள்
பண்டதுபோல் யான்வகுத்து சொல்வேனப்பா பட்சமுடன் மூலியது போக்குசொல்வேன்
சண்டமாருதம்போல செய்வாய்நீயும் சாங்கமுடன் கருமிகட்குச் சொல்லொண்ணாதே
6120.
சொல்லவென்றால் இன்னமொரு மார்க்கங்கேளு தூயதான வசளையென்ற மூலிமார்க்கம்
புல்லவே கறுவாளைக் கொண்டுவந்து புகழான முப்பூவுங்கூடச்சேர்த்து
கொல்லவே தாம்பரமாந் தகட்டின்மேலே கொப்பெனவே முப்பூவை மத்தித்தேதான்
மெல்லவே தகட்டின்மேல் பூசியேதான் மேன்மையுடன் கோழியென்ற புடத்தைப்போடே
6121.
போடேதான் புடமதுவும் மாறிப்பாரு பொங்கமுடன் மாற்றதுவும் என்னசொல்வேன்
கூடேதான் நவலோகஞ் செந்தூரங்கள் கூறான மூலிகைக்கு யீடுமுண்டோ
நாடேதான் மூலிவகை யறியா மாண்பர் நாட்டினிலிலே கெட்டார்கோடி
மாடேதான் குருமுடிக்கும் வகையுங்காணார் மட்டிகளாங் கூர்மையில்லா மாண்பர்தானே
6122.
மாண்பான யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் மகத்தான புலிப்பாணி மன்னாகேளு
காண்பான பொன்முசுட்டை மூலிதானும் காடெல்லாந் திரிந்தாலும் கிடையாதப்பா
மாண்பான காணாறு குகைகள்கண்டு மடிந்தவர்கள் கணக்கில்லைகோடாகோடி
சாண்பாம்பு நீளமப்பா மூலிதானும் சட்டமுடன் ஆணிவேர் அறாமற்றானே
6123.
ஆணியாம் மூலிகைக்கு மூலமப்பா வப்பனே சாணீளஞ் சொல்லலாகும்
காணிமுதல் காடெல்லாந் திரிந்திட்டாலும் கசடருக்கும் கிட்டாது கர்மிகட்கும்
வாணியாஞ் சரஸ்வதியாள் வீற்றிருக்கும் வளமான மூலியது பொன்முட்டை
பாணியது பூமிவளந் தன்னிலப்பா பாங்கான மூலியது காணாதன்றே
6124.
அன்றான மூலிகைதான் கொண்டுவந்து வப்பனே முப்பூவுங் கூடச்சேர்த்து
குன்றான சமூலமுடன் கூட்டியல்லோ கொற்றவனே குருத்தயிலமாகக்கொண்டு
வென்றிடவே நவலோகத் தகட்டின்மேலே வீரமுடன் தயிலமதைப் பூசியல்லோ
சென்றிடவே பாண்டமென்ற வோட்டிலப்பா செம்மலுடன் சீலையது வலுவாய்ச்செய்யே

6125.
வலுவான சீலையது செய்தபின்பு மகத்தான புலிப்பாணி மன்னாகேளு
சுலுவான புடமதுவுங் கோழியாக துப்புரவாய்ப் போட்டெடுக்க ஏமந்தானும்
மலுவான தடமதுவும் பழுப்புமேறி மகத்தான மாற்றதுவும் ஐநூறாகும்
நிலுவையாம் பிரிதிவென்ற தங்கமப்பா நீதிசொல்ல யிதற்கீடு சொல்லொண்ணாதே
6126.
சொல்லவே யின்னமொரு மார்க்கங்கேளு சுந்தரனே புலிப்பாணி மன்னாபாரு
வெல்லவே நாதாக்கள் சொல்லவில்லை வேதாந்தத் தாயாருஞ் சொல்லவில்லை
புல்லவே காலாங்கிநாதர்தாமும் புகழான வகஸ்தியருங் கூறவில்லை
நல்லதொரு குளிகையது பூண்டதாலே நாட்டிலே நானுமல்லோ வறிந்திட்டேனே
6127.
அறிந்தேனே பொன்னினாவாரையப்பா வழகான மலைதோறும் சுனைகள்தோறும்
செறிந்துமே மூலிகையின் வுளவுபார்த்து செம்மலுடன் முப்பூவுங் களஞ்செடுத்து
முறிந்துமே போகாமல் தயிலமாக்கி மூர்க்கமது வாராமல் மனதிலுன்னி
குறித்ததொரு தயிலமதை யெடுத்துக்கொண்டு கொற்றவனே குடவனிலே பூசிடாயே
6128.
பூசிடவே குடவனிலே என்னசொல்வேன் புகழான நாதாக்கள் கூறவில்லை
காசியென்ற செம்பதுவுங் காணும்போது கனமான மாற்றதுவும் இருநூற்றெட்டு
மாசிபடா தங்கமது என்னசொல்வேன் மகத்தான பிரதிவென்ற தங்கமாச்சே
ஊசியென்னும் இரும்பினிலே தாக்கினாக்கால் வுத்தமனே சுயத்தங்கம் அயத்தங்கமாமே
6129.
தங்கமாம் இன்னமொரு வதிதஞ்சொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி மகனேகேளு
அங்கமாம் பொன்னூமத்தையப்பா அழகான மூலியது கொண்டுவந்து
துங்கமாம் வழலையது வராகனொன்று துப்புரவாய் மூலியது சாற்றினாலே
பொங்கமுடன் மதியென்ற தகட்டிலப்பா புகழாகப் பூசிடவே யேமமாமே
6130.
ஏமமாங் காயாதி கொண்டமூலி எழிலான காயகற்ப மூலியாகும்
சாமமென்ற மூலியது வாணமூலி தாக்கான சித்தருண்ணும் மூலியாச்சு
வாமமுடன் மாற்றதுவும் எழுநூற்றெட்டு வளமான சுயத்தங்கம் பிறவித்தங்கம்
நேமமென்ற பூசைக்குக் கருவித்தங்கம் நெடிதான சித்துமுனி மூலியாச்சே
6131.
ஆச்சப்பா யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வப்பனே புலிப்பாணி மன்னாகேளு
மூச்சடங்கி நெடுங்காலங் கொண்டசித்து மூதுலகில் யாரேனுங் கண்டதில்லை
பாச்சலென்ற மூறலியது கறுங்கையானாகும் கதிரோனை கண்மறைக்கும் மூலிதானும்
மாச்சலென்ற மூலியது வதிதஞ்சொல்வேன் மகத்தான மாற்றதுவும் நூற்றெட்டுமாமே
6132.
எட்டான மூலியது துலமேயாகும் எழிலான பூநீறு களஞ்சியாகும்
சட்டமுடன் மத்தித்து வெண்ணையாக்கி சதிரான செம்பென்ற தகட்டிற்பூசி
திட்டமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து சிறப்பான புடமதுவுங் கோழியாக
வட்டமுடன் ஆறியபின் எடுத்துப்பாரு மகத்தான தங்கமென்ற செம்புமாமே

6133.
செம்பான செம்பதுவு மென்னசொல்வேன் செழிப்பான தங்கமென்ற செம்புமாச்சு
அம்பொன்னாந் தங்கமென்ற செம்புதன்னை வப்பனே பதிதனிலே நூற்றுக்கொன்று
கும்பிடவே தானுருக்கிக் குருவொன்றீய குற்றமற்ற மதியதுவுந் தங்கமாச்சு
வெம்பியதோர் விஷமதுவுந் தீண்டினாற்போல் வேதாந்த சித்தனுட தங்கங்காணே
6134.
காணவே தங்கமதை யென்னசொல்வேன் கைலாச நாதருந்தான் காணமாட்டார்
பூணவே சுயத்தங்கம் பிறவித்தங்கம் புகழான நாதாக்கள் செய்யும்தங்கம்
ஆணவங்கள் காவியங்கள் ஒடுக்குந்தங்கம் அரகரா யித்தங்கம் என்னசொல்வேன்
வேணதொரு நாதாக்கள் பாடுபட்டு வேதைமுகங் காணாமல் மறைத்திட்டாரே
6135.
மறைத்தாரே யித்தங்கம் ஆருக்கென்றால் மகத்தான சிவயோகி ஞானிகட்கும்
குறைந்தங்க மானாலே வையகத்தில் கொற்றவர்கள் மாண்பருக்கு விடுதியாகும்
நிறைந்ததொரு பரிபூரணத் தங்கமப்பா நீதியுள்ள ஞானிகட்கும் சிவயோகிக்கும்
மறைகொண்டு கானகத்தில் வாழுஞ்சித்து சீரான தேவரிஷி வாய்க்குந்தானே
6136.
வாய்க்குமே மற்றவர்க்குச் சித்தியில்லை மகத்தான கொற்றவருங் கண்டதில்லை
காய்க்குமே யிம்மூலி வேதைதன்னை காசினியில் ஆருக்குங் கிட்டாதப்பா
தோக்கமலம் வீற்றிருக்கும் அம்பாள் பாதம் தொழுதுமே பணிந்துநித்தம் சதாகாலந்தான்
சேய்போலே யம்பாட்குப் பணிகள் செய்து சித்தம்வர மனதுவந்து நடந்துகொள்ளே
6137.
கொள்ளவே யின்னமொரு வதிதஞ்சொல்வேன் கூரான புலிப்பாணி மகனேகேளு
எள்ளளவுங் கொளாறு நேராமற்றான் எழிலான கானகத்தின் மூலிகண்டேன்
மெள்ளவே சிறியானின் நங்கைதன்னை மேன்மையுடன் கொண்டுவந்து கூறக்கேளும்
விள்ளவே மூலியது சாற்றிலப்பா வீரமுடன் சூதமதைத் தாக்கிடாயே
6138.
தாக்கவே சூதமென்ற ரசத்தைத்தானும் தண்மையுள்ள நாகமதில் தன்னிலூட்ட
நோக்கமுடன் நாகமது கண்ணடைந்து நெருங்கியே சவளையது போலேயாகும்
ஊக்கமுடன் சவளையது எடுத்துமைந்தா ஓகோகோ நாதாக்கள் சொன்னநீதி
தூக்கமது கொள்ளாமல் செம்பிலப்பா துப்புரவாய் நூற்றுக்கு ஒன்றுதாக்கே
6139.
ஒன்றான சவளையது கொடுத்தபோது வுத்தமனே மாற்றதுவு மென்னசொல்வேன்
வென்றிடவே மாற்றதுவும் அறுபத்துநான்கு வேதாந்தத் தாயாரும் வுரைத்தநீதி
குன்றினில் வாழ்சித்தர்முனி கூறாரப்பா குவலயத்தில் வுந்தனுக்காய் உரைப்பேன்யானும்
சென்றிடவே நெடுங்காலம் மலையில் காத்து செம்மலுடன் வாங்கியதோர் வேதைபாரே
6140.
பாரேதான் சிறியானின் நங்கைவேதை பாருலகில் யார்செய்வார் மாண்பரப்பா
நேரேதான் நாதாக்கள் செய்யும்வேதை நேர்மையுடன் கண்டறிந்து மனதுவந்து
தீரேதான் உந்தமக்கு மனங்களித்து தீர்க்கமுடன் யான்கொடுத்த வேதைதன்னை
சீரேதான் மற்றவருங் காணாமற்றான் சீருலகில் புத்திவானாய் வாழ்வீர்தாமே

6141.
வாழவே யின்னமொரு வதிதஞ்சொல்வேன் மகத்தான புலிப்பாணி யதிதவானே
தாழவே பெரியாளின் மூலியப்பா தாரணியில் சித்தர்களுங் காணமாட்டார்
மூழவே கண்டாலுங் கூறமாட்டார் முனையான மூலிதனை மறைத்துப்போவார்
சூழமே கானகத்தில் இருக்குமூலி சுடர்மூலி விடமூலிச் சுருதியாமே
6142.
சுருதியாம் மூலியுட வேகந்தன்னை சுந்தரனே என்னசொல்வேன் மச்சகேந்திரா
நிருதியாங் காடெல்லாந் திரிந்தாலுந்தான் நிஷ்களங்கமானதொரு மூலிதன்னை
குருதியா மூலிநிறமேயாகும் குவலயத்தில் கண்டவர்கள் வில்ளாரப்பா
பருதிமதி காணாத விருட்சத்தின்கீழ் படர்ந்துமே தானிருக்கும் மூலியாமே
6143.
மூலியாந் தழையதனைக் கொண்டுவந்து முனையான ரசமதுவுந் துலமேயாகும்
நாலிலோர் பங்கதுவுஞ் சூதந்தன்னை நலமுடனே தான்கூட்டி மத்தித்தேதான்
வேலியெனும் வீரமதை கால்தான்கூட்டி வேகமுடன் தான்குழைத்து மன்னாகேளு
பாவீயெனும் பரித்தகட்டிற் பூசியேதான் பாங்கான ஓட்டிலிட்டு சீலைசெய்யே
6144.
சீலையது செய்தபின்பு ரவியில்வைத்து சிற்பரனே கோழியென்ற புடத்தைப்போடு
வேலையெனும் புடமதுவு மாறிப்பின்பு வேதாந்தத் தாயதனை மனதிலுன்னி
நூலையது வரன்முறையாய்த் தொகுப்புங்கண்டு நுட்பமுடன் கைபாகஞ் செய்பாகந்தான்
மாலையுடன் புடமாறி யெடுத்துப்பாரு மகத்தான யேமமது களங்கமாச்சே
6145.
ஏமமென்ற களங்கதனை எடுத்துமைந்தா எழிலான வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
வாமமுடன் தானுருக்கிக் குருவொன்றீய மகத்தான வெள்ளியது யேமமாச்சு
நாமமென்ற வெள்ளியது பிறவித்தங்கம் நாதாக்கள் கண்டதொரு நாகத்தங்கம்
ஆமமென்ற தங்கமது வர்ணத்தங்கம் வப்பனே மூலிகையின் பெருமைபாரே
6146.
பெருமையா யனேகவித போக்குமுண்டு பேரான வழலைக்கு மூலிவேண்டும்
கருமமது தானகற்றி புண்ணியவானே காசினியில் சித்துபோல் பெயருங்கொண்டு
அருமையுள்ள சித்தருக்கு வடிபணிந்து வன்புடனே யேவலது மிகப்புரிந்து
ஒருமைபட வையகத்தில் எந்தநாளும் வுலகமதில் பெயருண்டாய் வாழ்வீர்தானே
6147.
தானான மாற்றதுவும் நூற்றிருபத்தெட்டு தண்மையுள்ள நாதாக்கள் செய்யுந்தங்கம்
கோனான சித்துமுனி யனேகமாக கூறினார் வெகுகோடி நூலிலப்பா
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்றமுடன் கண்டறிந்த வேதைதன்னை
மானான மகதேவர் புண்ணியத்தால் மகிழ்ச்சியுடன் எந்நாளும் மணங்கொள்வீரே
6148.
மணமுடனே சிதாபாசம் மனதிலுன்னி மார்க்கமுடன் மதியமுர்தங்கொண்டுமல்லோ
கணலதுவும் நேராமல் யோகந்தன்னில் கழற்சியுடன் சிவயோக நிலையில்நின்று
குணமுடனே திரிகரண சொரூபராக குவலயத்தில் அஷ்டாங்க யோகங்கண்டு
வணங்கியே யஷ்டநிலை பதியைக்கண்டு வாமமுட னர்ச்சித்து வலுகொள்வீரே

6148.
உண்டான வித்தையது வனேகமுண்டு வுத்தமனே பார்க்கவென்றால் கண்கொள்ளாது
திண்டான வித்தையது சொல்வீரானால் தீரமுடன் செய்வதற்கு வையமில்லை
பண்டான குலைகளவு யில்லாவித்தை பட்சமுடன் எந்தமக்கு சொல்வீரானால்
வண்மையுடன் செய்துமல்லோ வுந்தமக்கு வளமையுடன் காட்சியது தருவேன்பாரே
6149.
கொள்ளவே யின்னமொரு குணமுஞ்சொல்வேன் கூரான புலிப்பாணி புனிதவானே
விள்ளவே காடெல்லாந் திரிந்தாலுந்தான் விட்டகுறை யருந்தாலே லயிக்கும்பாரு
வெள்ளமது கண்டாலே யழியுமூலி வேதாந்த தாயிருக்கு மூலியப்பா
எள்ளளவு குற்றமது நேராமூலி எழிலான கறுப்புக் கோடாலியாமே
6150.
கோடான சுழியென்ற மூலியப்பா கொற்றவனே கொண்டுவந்து சொல்லக்கேளும்
தாடான மூலிரசந் துலமேயாகும் தாக்கான வீரமது வராகனொன்று
கூடான சூதமது விராகனொன்று கொற்றவனே மூன்றையுந்தான் ஒன்றாய்க்கூட்டி
வாடாமல் வெண்ணையது போலரைத்து வளமான செம்பதனில் பூசிடாயே
6151.
பூசவே மயினமதை செம்புதன்னில் புகழாக வேபித்து காய்ந்தபின்பு
வாசமுடன் கரியோட்டி லிட்டுமைந்தா வளமையுடன் சில்லிட்டுச் சீலைசெய்து
பாசமது தானகல ஆவியில்வைத்து பட்சமுடன் கோழியென்ற புடத்தைப்போடு
கோசமென்ற பீஜமது சேர்ந்ததாலே கொற்றவனே செம்பதுவும் வர்ணமாச்சே
6152.
ஆச்சப்பா செம்பதுவும் வர்ணமீறி வப்பனே மாற்றதுவும் ஐம்பதாகும்
மாச்சலென்ற களிம்பதுவும் விட்டகன்று மகத்தான செம்பதுவும் பழுப்புமீறி
காச்சலுடன் திரைசுவடுகளிம்போடூரல் கசடகற்றி சவளையுடன் அழுகன்மாறி
ஆச்சரியமானதொரு வூட்டங்காய்ப்பு வப்பனே கரகரப்புட னயப்புதானே
6153.
தானான பிறவியென்ற தங்கம்போலே தண்மையுள்ள குற்றமது நீங்கியேதான்
கோனான குருதங்கம் பிறவித்தங்கம் குவலயத்தில் நாதாக்கள் செய்யும் தங்கம்
மானான மகமேருவான தங்கம் மகத்தான மூலியுட காரசாரம்
தேனான பரிசமது பட்டபோது தெளிவான வுறுதியென்ற தங்கந்தானே
6154.
தங்கமாம் அதிதனிலே நூற்றஉக்கொன்று தாக்கடா சோடசமுங் காணும்காணும்
வங்கமாம் படுபாவி யானவங்கம் வளமான வரணமதைக்கொள்ளாதப்பா
புங்கமாம் அஷ்டசித்தி யிதற்குள்ளாகும் புகழான தங்கமது பிறவித்தங்கம்
பங்கமது வாராது நாதத்தங்கம் பாருலகில் மாண்பருக்கு கிட்டாதன்றே
6155.
அன்றான விதியாளி வருவானானால் அவனுக்கே கிட்டுமது மற்றோர்க்கில்லை
குன்றான மலைநாடு தேசந்தன்னில் கொற்றவருஞ் சிவயோகி மாண்பருண்டு
தென்றிசையில் அகஸ்தியனார் மலையிலப்பா தீரமுடன் சென்றுவந்தோர் கோடியுண்டு
வென்றிடவே யவர்களிலுங்கருமியுண்டு வேதாந்த சிவயோகி தானுமுண்டே

6156.
உண்டான மனோலயத்தை யறிந்துகொண்டு வுத்தமனே நூல்பார்த்த வாதியுண்டு
கண்டாலும் விள்ளாத காணியாளர் கசடகற்றி மனம்பொருந்தி கருத்திலுன்னி
அண்டர்முனி தேவாதி ரிஷிகட்கொப்பாய் வப்பனே முற்பவத்தை யகற்றிவாழும்
சண்டமெனும் மாருதம்போல் பாசம்விட்டு சட்டமுடன் வாழுகின்ற யோகியாமே
6157.
யோகியாந் தத்துவத்தில் மிகுந்தவானாய் யோகமெனும் பதிதனக்குகந்த சீஷன்
போகமது தானகற்றி பொதிந்துவாழும் பொங்கமுடன் ஞானமென்ற மாண்பர்கண்டு
ரோகமது இல்லாத புண்ணியவானாய் நொடிக்குள்ளே பகுத்தறிவு கொண்டதீரன்
காகமது நேராத சீஷன்கண்டு சட்டமுடன் உபதேசஞ் செய்குவீரே
6158.
செய்யவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் செயலான புலிப்பாணி வதிதவானே
துய்யதமிழ் பாண்டியனுக் கொப்பதான துரைராஜ சுந்தரனே புகலக்கேளும்
வையகங்கள் தான்புகழும் வனாந்திரத்தில் வண்மையுள்ள சிவந்தகொடி வேலியப்பா
மெய்யான மலைதனிலே மெத்தவுண்டு மேதினியுளோர் காண்பதுவு மரிதுமாமே
6159.
பாரேதான் மலைதனிலே சுற்றும்போது பாங்கான பாறையின்தன் வெப்புதன்னில்
நேரேதான் விளைந்திருக்கும் சிவந்தமூலி நெடிதான கொடிவேலி யென்னலாகும்
சீரேதான் கொடிவேலி தனையெடுத்து சிறப்புடனே சூதமதை யெடுத்துமைந்தா
வீரேதான் வீரமது களஞ்சிகூட்டி நீதியுடன் மத்தித்து ரவியிற்போடே
6160.
போடவே சீலையது வலுவாய்ச்செய்து பொங்கமுடன் கனயெருவிற் புடத்தைப்போடு
நீடவே புடமாறி எடுத்துப்பாரு நிலையான செம்பதுவும் என்னசொல்வேன்
கூடவே செம்புதனைப் பதனம்பண்ணு கொற்றவனே கலசகுண்டலத்துக்காகும்
ஆடவே மாற்றதுவும் இருபத்தைந்து வப்பனே குங்குமப்பூ நிறமுமாச்சே
6161.
ஆச்சுதென்று விடுகாதே யின்னங்கேளு ஆகாகா நாதாக்கள் மறைத்தஜோதி
வாச்சுதே சிவயோகிக்குகந்த தங்கம் வர்ணதங்க மிதற்கல்லோ யீடாமோதான்
போச்சுதென்று விடுகாதே புண்ணியவானே புகழான நாதாக்கள் ஆடுங்கூத்து
காச்சதே சிவந்த சித்திரமாமூலி கனகமென்ற வேதையது கைக்குள்ளாச்சே
6162.
உள்ளான பொருளெல்லாம் இதிலேதோயும் வுத்தமனே நாதாக்கள் கூறாரப்பா
கள்ளமின்றி நேராக யேமவித்தை காசினியில் சித்துமுனி செய்யும் மார்க்கம்
எள்ளளவும் பிசகதுவும் வாராதப்பா எழிலான வித்தையது என்னசொல்வேன்
கொள்ளைகொண்ட குருவினது வாக்குதானும் குவலயத்தில் பொய்யாது மெய்யதாமே
6163.
மெய்யான சிவந்த சித்திரமாமூலி மேதினியில் வெகுமாண்பர் காணாமற்றான்
பொய்யான மூலிதனை மெய்யென்றெண்ணி பொங்கமுடன் கெட்டலைந்தார் கோடிகோடி
துய்யதமிழ் சாத்திரங்கள் கூறும்வண்ணம் துப்புறவாய் தலைமாடு கால்மாடாக
செய்யதொரு காப்பேடு காணாமற்றான் சேனைதிரள் மாண்பர்களும் கெட்டார்தாமே

6164.
கெட்டாரே சிவந்த சித்திரமாமூலி கெடியான வையகத்தில் காணாமற்றான்
பட்டலைந்து மலைவளங்கள் குன்னுநாடு பாருலகில் தேடியல்லோ காணாமற்றான்
அட்டகிரி தான்புகழும் மேடுதன்னில் வன்பான மூலிதனைக் கண்டறிந்து
விட்டகுறை யிருந்ததொரு தன்மையாலே மேதினியில் சிலபேர்கள் கண்டார்தாமே
6165.
கண்டாரே காலாங்கி கிருபையாலே காசினியில் நாதாக்கள் இருக்கும் ஸ்தானம்
தொண்டுமிக செய்தல்லோ மூலிதன்னை தோறாது மனதுவந்து கற்பங்கொள்ள
சண்டமாருதம் போலே மூலிகற்பம் சாங்கமுடன் இருவேளை யுண்டுமல்லோ
வண்டுமூது கோடாது போலவர்ணங்கொண்டு வையகத்தில் வெகுமாண்பர் இருந்தார்தாமே
6166.
தானான மூலியது கொண்டபோது தாக்கான வாசியது கீழ்நோக்காகும்
கோனான குருநாதர் சொன்னவாக்கு குவலயத்தில் பொய்யாமல் மெய்யென்றெண்ணி
தேனான சிவப்பு சித்தரமாங் கற்பம் தேசமதில் கோடான கோடிபேர்கள்
மானான மலைவளத்தி லிருந்துகொண்டு மார்க்கமுடன் கற்பமது கொண்டிட்டாரே
6167.
கற்பமாம் சித்தரமாம் மூலிகற்பம் கனமுடனே வுண்டவர்க்கு வயதேசொல்வேன்
சொற்பமென்று எண்ணாதே துய்யபாலா சொர்ணம்போல் தேகமது மின்னும்பாரு
விற்பனமும் மிகவுண்டாம் அறிவுமுண்டாம் விருத்தமது வாராது பாலன்போலாம்
அற்பமென்று நினையாதே யறியபாலா வாயிரமாம் வருடமது இருக்கலாமே
6168.
இருக்கவென்றால் உலகுபதி சித்துதாமும் எழிலுடனே நெடுங்கால மிருந்தசித்து
பொருக்கவே காயாதி கற்பங்கொண்டு பொன்னுலகு பதிதனிலே சேர்ந்தாரப்பா
வருத்தமுடன் வெகுகோடி சித்துதாமும் வளமான மூலிகற்பம் கொண்டுமேதான்
திருக்கவல வீற்றிருக்கு மம்பாள்பாதம் தீர்க்கமுடன் நெடுங்கால மிருந்தார்பாரே
6169.
பாரேதா னின்னமொரு பண்புசொல்வேன் பாங்கான புலிப்பாணி பாக்கியவானே
நேரேதான் உலகுபதி மாண்பரெல்லாம் நெடிதாம மொய்சதனை நுகரும்நேர்மை
தீரேதான் யான்தெய்வம் என்பார்தானும் திரளான சார்வாகம் பொய்யேயாகும்
கூரேதான் கடவுளெனும் மதம்பொய் குவலயத்தில் தேவனில்லை என்பார்தாமே
6170.
தாமான மார்க்கமது பொய்யேயாகும் சகலகலை யறிவதுவும் பொய்யேயாகும்
நாமான மோகனங்கள் பொய்யேயாகும் நலமான வசியமுதல் மாற்றம்பொய்யே
வேமான முள்ளதொரு வுச்சாடனங்கள் வெகுபிறட்டு தலைதிரட்டு மேதினிக்குள்
சாமானிய மானதொரு தேவசங்கம் சட்டமுடன் வரவழைத்தல் பொய்யதாமே
6171.
பொய்யான செப்பிடுகள் வித்தைபொய்யே பொங்கமுடன் தூலங்கள் சொல்லப்பொய்யே
துய்யகெஜ தரணமது சுத்தம்பொய்யே துப்புரவாய் குளிசங்கள் எல்லாம்பொய்யே
வெய்யபுகழ் தேகமது தானும்பொய்யே மேதினியில் இருப்பவரும் பொய்யேயாகும்
நையவரு மூகமதிலெல்லாம் பொய்யே பொய்யே நாதாக்கள் சொல்லுமுறை சிலபொய்தானே

6172.
தானான புலிப்பாணி தார்வேந்தா கேள் தண்மையுடன் சொல்லுகிறேன் தருமவானே
கோனேதான் உலகுபதி மாண்பரெல்லாம் கோர்வையுடன் பலநூலுங் கற்றுமென்ன
வீணேதான் பொய்மெய்யும் அறியா மாண்பர் விருதாவாய் சிவயோகஞ் செய்துகொண்டு
காணாமல் வையகத்தின் உண்மைதன்னை கசடகற்றி மெய்யறிய மறந்தார்பாரே
6173.
பாரேதான் வையகத்தில் தெய்வமுண்டு பாங்கான மோட்சமென்ற வீடுமுண்டு
நேரேதான் பாவிகட்கு நரகமுண்டு நீடாழி யுலகமது யழிவதுண்டு
சீரேதான் வாதமது மெய்யேயாகும் சிறப்பான குளிகையது மெய்யேயாகும்
வீரேதான் கற்பமது மெய்யேயாகும் விருப்பமுடன் இறப்பதுவும் மெய்யதாச்சே
6174.
ஆச்சப்பா புலிப்பாணி புனிதவானே அவனிதனில் இன்னமுண்டு கற்பங்கேளிர்
மாச்சலென்ற நன்னாரி கற்பமப்பா மகத்தான கற்பமதை யாண்டுகொண்டால்
பாச்சலென்ற வுதிரமது விஷங்காணாது பாங்கான தேகமது கனலேறாது
வீச்சுடனே நேத்திரங்கள் குளிர்ந்துகாணும் வீரான சுவாசமது கீழ்நோக்காமே
6175.
நோக்கான மூலிகையாங் கற்பந்தன்னில் நுணுக்கமுள்ள மாண்பர்களுங் கொண்டுவந்து
தாக்கான மதிமயக்கம் பூண்டுகொண்டு வண்மையுடன் தவநிலைக்கு உறுதிகொண்டு
வாக்குமனம் சித்தமார்க்கம் பொங்கி வளமையுடன் வளமையுடன் வாசியது கீழேநோக்கி
தேக்கமுடன் சிவயோக பதியில்சென்று தேற்றமுடன் நெடுங்கால மிருக்கலாமே
6176.
இருக்கவே யின்னமொரு மகத்துவந்தான் எழிலான புலிப்பாணி திலர்தவானே
பொருக்கவே காயாதி கொண்டபேர்க்கு பொங்கமுடன் சீவனத்துக் கிடமேதென்றால்
திருக்கையிலே தானிருக்கும் சிவனாராணை தீர்க்கமுடன் வாதமது புகலக்கேளும்
பெருக்கமுடன் காலாங்கி நாதர்பாதம் பெருமையுடன் யான்வணங்கி கூறுவேனே
6177.
கூறுவேன் ஜாதிலிங்கம் பலந்தானொன்று கொற்றவனே முலைப்பாலில் வூரப்போடு
தேறுதலாய் முப்பொழுது மானபின்பு தெளுவிருத்து லிங்கமதை யெடுத்து மைந்தா
மாறுபடா யெறிகாலன் பாலையப்பா மார்க்கமுடன் எண்சாமம் சுருக்குத்தாக்கு
வீறுடைய குமரியின்தன் பாலால்தானும் விருப்பமுடன் நாற்சாமம் சுருக்குத்தாக்கே
6178.
தாக்கான லிங்கமதை யெடுத்துபாலா தண்மையுடன் ஆராதாரச்சரக்காம்
போக்கான சரக்கதுவும் ஏதென்றாக்கால் பொங்கமுடன் துருசு வெடியுப்புக்காரம்
நோக்கான சாரமுடன் சீனந்தானும் நுண்மையுள்ள கரியுப்பு கூடச்சேர்த்து
வாக்கதுவும் பிசகாத வண்ணமப்பா வளமையுடன் தீராஞ் செயநீர்தானே
6179.
தானான வாராதாரச்சரக்கால் தாரணியில் அண்ட பிண்டந்தானுமாச்சு
கோனான குருவருளுங் காணலாகும் கொப்பெனவே சத்திசிவ மாற்றிக்காண்பீர்
பானான செந்தூரக் கட்டுப்போக்கும் பாங்கான களங்குமுதனாலாகும்
தேனான தேவி மனோன்மணியாள் பாதந் தேர்ந்தெடுத்து வாராதாரந்தான்பாரே

6180.
பாரேதான் ஜெயநீரில் அனந்தம்போக்கு பாடினார் ஜெகதலத்தில் முனிவர்கோடி
நேரேதான் குருக்கிடையுங் கருக்கிடையுமப்பா நெடிதான சாஸ்திரங்கள் அனந்தஞ்சொன்னார்
வேரேதான் சாஸ்திரத்தி லிந்தப்போக்கு வேதைமுகங் காணுதற்கு குறிகள் சொன்னார்
நீரேதான் சாத்திரத்தின் உளவுகண்டு நீதியுடன் ஆராதாரத்தைக் காணே
6181.
காணவே ஆராதாரத்தைக் கண்டால் கனகமெனும் வாதமது கைக்குள்ளாச்சு
தோணவே லிங்கமது தன்னிலப்பா தோறாமல் எண்சாமம் சுருக்குத்தாக்கு
வேணவே ஜெயநீரில் நின்றபாகம் வேகமுடன் தூரதனில் நின்றசத்து
நீணவே சத்ததனை எடுத்து மைந்தா நிகட்சியுடன் லிங்கமதிற் கவசம்பூசே
6182.
பூசியே லிங்கமதிற் கவசம்போடு புகழான லிங்கமது புடம்தான் பத்து
மாசில்லா லிங்கமது மணல்தானப்பா மகத்தான புடமதுவும் பத்தேயாகும்
தேசியெனும் ஊசிநீர் ஆறாதாரம் தெளிவுடனே சுருக்கதனால் கட்டும்பாரு
ஊசியெனுங் காந்தமது லிங்கமப்பா வுத்தமனே வுருக்கதுபோ லிருக்கும்பாரே
6183.
உருக்கவே லிங்கமது எடுத்து மைந்தா வுத்தமனே மேற்போக்கு கூறக்கேளும்
பொருக்கமுடன் சாரமென்ற ஜெயநீர்தன்னால் பேரான தங்கமதை பத்துக்கொன்று
குருக்கியே தங்கமதை ஜெயநீராக்கி கூசாமல் லிங்கமதில் சுருக்குத்தாக்கு
நெருப்பினிலே வைத்தாலே சூடுதாக்கி நேரான ஜெயநீரை சுருக்குதாக்கே
6184.
தாக்கிடவே லிங்கமது யிறுகிமைந்தா தண்மையுடன் வெட்டருக்கு போலேகாணும்
நோக்கிடவே மேற்போக்கு புகலக்கேளும் நுட்பமுடன் தேனதனை சுருக்குதாக்கு
வாக்குடனே காலாங்கி நாதர்பாதம் வண்மையுடன் அவர்பாதம் வணங்கியல்லோ
தீக்குழியில் அயமதனால் கட்டிதன்னை தீர்க்கமுடன் தானெடுத்து செப்பக்கேளே
6185.
கேளேதான் லிங்கமதை இரும்பில் வைத்து கெடியான தேனதனை மனதுவந்து
பாளேதான் போகாமல் சுருக்குதாக்கு பட்சமுடன் லிங்கமது இருகிக்காணும்
சூளேதான் சுருக்கதுவும் அறுபத்துநான்கு சுயமான தேனதனால் வுருக்குதாக்கு
மீளேதான் லிங்கமது ஜெயக்கட்டாகும் மிக்கான கட்டதுவும் அரிதாம்பாரே
6186.
அரிதான கட்டதனை எடுத்துமைந்தா வப்பனே சிற்றணடத் தயிலம்வாங்கி
பொரியான வெங்காரம் பத்துக்கொன்று பொங்கமுடன் தயிலமதில் சேர்த்துமல்லோ
வரியான லிங்கமதை சுருக்குதாக்கு வண்மையுள்ள லிங்கமது யிளகிக்காட்டும்
பரியான தங்கமது ஜெயநீர் சேர்ந்து பாங்கான லிங்கமது மெழுகுமாச்சே
6187.
ஆச்சப்பா லிங்கமது மெழுகேயாகும் வப்பனே மெழுகதனைப் பதனம்பண்ணு
காச்சலென்ற லிங்கமது யிளகிக்காட்டும் கருவான லிங்கமது போக்குசொல்வேன்
மாச்சலது வாராமல் லிங்கந்தன்னை மயங்காமல் கருவங்கச் சுத்திசெய்து
பாச்சலுடன் வங்கமதை லிங்கந்தன்னை பட்சமுடன் தானுருக்கி யிடைதானீயே

6188.
இடையான இடையதுவும் என்னவென்றால் எழிலான சரியிடையே செப்பலாகும்
மடைபோன்ற வங்கமதை யுருக்கி மைந்தா மயங்காமல் வுருக்கு முகந் தன்னிலீய்ந்து
கடையான தங்கமதில் வங்கலிங்கம் கருவுடனே வுருகிநின்ற களங்குதன்னை
தடையறவே தங்கமதிற் கொடுத்துமைந்தா சட்டமுடன் தானுருக்கி யெடுத்துப்பாரே
6189.
எடுத்து மிகப்பார்க்கையிலே என்னசொல்வேன் எழிலான களங்கமது யேமவித்தை
கொடுத்ததொரு களங்குதனை யெடுத்துபாலா தோறாமல் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று
கொடுத்திடவே வுருக்கு முகந்தன்னிலீய்ந்து கொற்றவனே செம்பதனை யூதிப்போடு
விடுத்ததொரு மாற்றதுவும் என்னசொல்வேன் விட்டகுறை யிருந்தவர்க்கு லபிக்குந்தானே
6190.
தானான வெள்ளியது என்னசொல்வேன் தண்மையுள்ள மாற்றதுவும் ஆறதாகும்
மானான மட்டநிகர் நாலுக்கொன்று மகத்தான தங்கமது வொன்றுசேரு
தேனான தேவியுட கடாட்சத்தாலே தேற்றமுடன் மாற்றதுவும் எட்டதாகும்
கோனான புடத்துக்கு வுறுதிதங்கம் குவலயத்தில் ஆரறிவார் சித்தர்தானே
6191.
சித்தான சித்துமுனி நாதர்தாமும் சிறப்பான ரிஷிதேவர் சொன்னமார்க்கம்
முத்தான வேதையிது யின்னஞ்சொல்வேன் முனையான மார்க்கமது போலொண்ணாது
பத்தியுடன் சிவராஜயோகிமாண்பர் பாலகனே செய்யும்வகை யனேகமுண்டு
சுத்தியுள்ள செம்பதுவும் துலந்தானொன்று துறையான லிங்கமது துலந்தான் ரெண்டே
6192.
துலமான செம்பதனில் லிங்கம்ரெண்டு தூக்கான லிங்கமதைக் கிராசமீவாய்
நலமான யிருண்ட செம்பு கட்டிப்போகும் நாற்றமுள்ள வூரலது யேகிப்போகும்
நலமான வூரலது யேகியல்லோ சாங்கமுடன் திரைசகடும் அற்றுப்போகும்
குலமான தங்கமதைச் சரியாய்ச் சேர்த்து குகைதனிலே தானுருக்கி யெடுத்திடாயே
6193.
எடுத்துமே மதிதனிலே பத்துக்கொன்று எழிலான தங்கமதை தாக்குதாக்கு
கொடுத்திடவே மாற்றதுவும் ஆறதாகும் கொப்பெனவே தங்கமது யெட்டிலொன்று
அடுத்துமே தான்கொடுத்து வுருக்கிக்கொண்டு வப்பனே வாரடித்துப் புடந்தான்போடு
கொடுத்ததொரு மாற்றதுவும் என்னசொல்வேன் தோறாமல் வயததுவும் ஏழதாமே
6194.
ஏழான பொன்னதுவும் பசுமைமெத்த யெளிதான யேற்றமொன்று யின்னஞ்சொல்வேன்
தாழான மட்டமது மாற்றுகாணும் தண்மையுள்ள பசுமையது என்னசொல்வேன்
காழான துருசினுட செந்தூரத்தால் கருவான மாற்றதுவும் அதிகங்காணும்
சூழான சூதவித்தை யேமவித்தை சுந்தரனே சொல்லவுந்தான் நாவொண்ணாதே
6195.
ஒண்ணாது இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ஓகோகோ புலிப்பாணி யுகந்தபாலா
கண்ணான லிங்கமது களஞ்சியொன்று கருவான நாகமது களஞ்சியொன்று
மண்ணான வாயுவென்ற பிரிதிவிதானும் மகத்தான வங்கமது களஞ்சியொன்று
திண்ணமாம் லோகமதை யொன்றாய்க்கூட்டி தீரமுடன் மூசைதனில் உருக்கிடாயே

6196.
உருக்கியே கண்விட்டு ஆடும்போது வுத்தமனே லிங்கமென்ற களஞ்சிதன்னை
பெருக்கியே வுருக்குமுகந் தன்னிலப்பா பேரான லிங்கம் குருவொன்றீய
வருக்கமுடன் மூசைதனை யாற்றிப்பாரு வளமான களங்கமது யென்னசொல்வேன்
சுருக்கமுள்ள சிமிட்டுவித்தை வேதைதானும் துப்புரவாய் மூசைதனை யுடைத்துப்பாரே
6197.
உடைத்துமிகப் பார்க்கையிலே என்னசொல்வேன் வுத்தமனே லோகமென்ற களங்குலிங்கம்
தடையறவே மதியதுவும் ஏழதாகும் தாக்கான ரவியதுவும் மூன்றதாகும்
கடையான களங்கமது வொன்றதாகும் களங்கமற தானுருக்கி குருவொன்றீய
மடைபோன்ற களங்கமதைத் தானெடுத்து மகத்தான வோட்டில்வைத்து வூதிப்போடே
6198.
போடேதான் கரியோட்டி லூதும்போது பொங்கமுடன் வெள்ளியது சவளைபோலாம்
நாடேநீ செம்பகல வூதிப்போடு நலமான பசும்பொன்னு யென்னசொல்வேன்
தேடேநீ புடமதனில் தாக்கிப்பாரு தெள்வான தங்கமது ஜோதிமெத்த
ஆடேநீ ஜீவனத்தை செய்துகொண்டு வப்பனே தவநிலையை சாதிப்பாயே
6199.
சாதிப்பா யின்னமொரு கற்பஞ்சொல்வேன் சற்பாத்ரமுள்ள தொருமைந்தாகேளு
வேதினிலே ஏரிதன்னில் வளருகின்ற மேன்மையுள்ள நத்தையது ஒன்றுவீதம்
ஆதியென்ற முப்பதுவும் கூடச்சேர்த்து வப்பனே மண்டலந்தான் கொண்டாயானால்
நீதியுடன் காயமது கற்பமீறி நீணிலத்தில் வெகுகால மிருக்கலாமே
6200.
இருக்கவென்றால் கோடிவரை யிருக்கலாமே யெழிலான காலாங்கி யுண்டகற்பம்
திருக்கமலம் வீற்றிருக்கும் தாயார்பாதம் தீர்க்கமுடன் எந்நாளும் மனதிலெண்ணி
வருத்தமுடன் நத்தையின்தன் கற்பந்தன்னை வாகுடனே கொண்டவர்க்கு காயசித்தி
பெருக்கமுடன் முப்பூவின் வலுமையாலே பேரான நத்தையது கற்பமாச்சே

# போகரின் சப்த காண்டம் – 7000

6201.
கற்பமென்ற நத்தையது யாதென்றாக்கால் கருவான பிரிதிவினில் வளர்ந்தபிண்டம்
சொற்பமென்று நினையாதே துய்யபாலா துப்புரவாய் பிரிதிவினில் வளர்ந்த சொர்ணம்
விற்பனர்கள் ராஜாதி யோகிமாண்பர் விருப்பமுடன் கொண்டருளும் காயகற்பம்
துப்புரவாய் இருந்தோர்க்கு ஒன்றுமில்லை துறைகோடி வரைகோடி கற்பமாமே
6202.
வரையான யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வளமையுள்ள புலிப்பாணி இந்திரகோபா
திரைமரைவு நேராமல் முப்புமார்க்கம் செப்புகிறேன் உந்தமக்கு புனிதவானே
முறையான வழிபாடு முன்னந்தம் முனையான சுருக்கமது இதிலடக்கம்
குறையாது சிடிகையென்ற வேதையப்பா குவலயத்தில் சித்துமுனி சொல்வார்தானே
6203.
தானான மனோன்மணியாள் கிருபையாலும் தாக்கான காலாங்கிக் கடாட்சத்தாலும்
தேனான முப்பூவின் வளமைதன்னை தேற்றமுடன் வெளியாங்க மாகச்சொல்வேன்
பானான முப்பூவை யெடுக்குமார்க்கம் பாலகனே முறைபாடு வழிபாடாகும்
மானான பங்குனியாம் பருவந்தன்னில் மார்க்கமுடன் அமாவாசை பருவந்தானே
6204.
பருவமாம் வடக்குவெகு தூரமப்பா பாங்கான வளர்பூமி தன்னிற்சென்று
உருவுடனே நடுச்சாம வேளைதன்னில் வஉத்தமனே மனோன்மணியை மனதிலுன்னி
குருவான பூநீரை யெடுப்பதற்கு கொற்றவனே வெடிகாலந்தன்னிலப்பா
பருவமுடன் பூர்க்குமந்த முப்பூதன்னை பட்சமுடன் தானெடுத்து வரையக்கேளே
6205.
கேளேதான் முப்பூவென்ற பூநீர்தன்னை கவனமுடன் பீங்கானிற் பதனம்பண்ணு
நாளேதான் போகாமல் குருமுடிக்கும் நலமாகக் கைபாகஞ் சொல்வேனப்பா
பாளேதான் போகாமல் பூநீர்தன்னை பாங்கான நிலமதனிற் சொல்லக்கேளு
ஆளேதான் பூநீர்களெடுத்தபூமி வதிலிருக்கும் மர்மமதை யறைவேன்பாரே
6206.
பாரேதான் வோராளு மட்டமாக பான்மையுடன் குழியதுதான் தோண்டும்போது
நேரேதான் பிரமமென்ற கல்தானப்பா நேர்மையுடன் தானிருக்கும் நிகலக்கேளு
தீரேதான் பிரமமென்ற சுக்கான்கல்லை தீரமுடன் தானெடுத்து சொல்லக்கேளு
சேரேதான் கல்லதனைப் பதனம்பண்ணு செயலான பாக்கியமும் அனேகமுண்டே
6207.
உண்டான யின்னமொரு மர்மஞ்சொல்வேன் வுத்தமனே முப்பூவின் மார்க்கமப்பா
திண்டான கல்லுப்பு வேணமட்டும் திரமுடனே தானெடுத்து புகலக்கேளும்
வண்மையுடன் கல்லுப்பைப் பதனம்பண்ண வாகுடனே போகும்வகை வண்மைபாரீர்
வண்பாக மூன்றையுந்தான் முடிப்பதற்கு நலமான மும்மூர்த்தி சொரூபந்தானே
6208.
தானான பழச்சாறு என்றமார்க்கம் தன்மையுடன் முடிப்பதற்கு பருவஞ்சொல்வேன்
கோனான குருவையென்ற நெல்தானப்பா கொற்றவனே அவிக்காமல் தானெடுத்து
பானான வரிசியது படிதானான்கு பாலகனே தானளந்து வரிசைபாரீர்
மானான புதுப்பாண்டந் தன்னில்தானும் மார்க்கமுடன் தான்சமைக்கும் வகைதான்கேளே

6209.
வகையான வரிசியது பொங்கியேதான் வண்மையுடன் தானிறக்கி யாரப்போடு
தொகையுடனே மறுபாண்டந் தன்னிலிட்டு தோறாமல் ஜலமதுவும் சோடசந்தான்
முகையுடனே பாணியென்ற தண்ணீர்தன்னை முசியாமல் தான்காய்ச்சி இறக்கிக்கொண்டு
பகையான வாசியென்ற சாரந்தன்னில் பக்குவமாய் நிலம்விட்டு மூடக்கேளே
6210.
மூடவே ரவியென்ற வெயில்தன்னில் முனையான காடியென்ற பாண்டந்தன்னை
நீடியே நாள்தோறும் அருணன்முன்னில் நிலையான பாண்டமதை வெயிலில்வைத்து
சாடியென்ற பாண்டமதில் ஜலமுந்தானும் தாக்கான ரவியினிலே சுண்டுமட்டும்
கூடியதோர் ஜலமதனைக் காய்ச்சி மைந்தா கொற்றவனே குறைவுக்கு விட்டிடாயே
6211.
விட்டிடவே நாள்தோறும் குறைவுமட்டும் வீரான காடியென்ற பாண்டந்தன்னில்
கொட்டளவு வெந்நீரை யாறவைத்து குறையாமல் நாள்தோறும் இப்படியேவாரு
சட்டமுடன் பாணடமதை யாறுதிங்கள் சாங்கமுடன் தினந்தோறும் ரவியில்வைத்து
திட்டமுடன் ராக்காலம் பனியில்வைக்க தீர்க்கமுடன் செய்குவது பாகமாமே
6212.
பாகமாங் காடியென்ற பாண்டந்தன்னை பரிதிமுன்னே தினந்தோறும் வைக்கும்போது
நாகமது சீரியதோர் விஷத்தைப்போல நாதாந்த காடிக்குக் காரமேறி
வேகமுள்ள சரக்குக்குக் காலனாச்சு வேகாத சரக்கெல்லாம் வெந்துநீரும்
யூகமுடன் காலாங்கி பாதம்போற்றி வுத்தமனே காடியது வழிசொன்னேனே
6213.
சொன்னதொரு காடிதன்னை யாறுதிங்கள் துப்புரவாய் ரவிதனிலே வைக்கும்போது
நன்னயமாய் நாதாக்கள் செய்பாகந்தான் நலமான பழச்சாறு என்னலாச்சு
வின்னமது நேராது முப்புமார்க்கம் விள்ளார்கள் சித்துமுனி ரிஷிகள்தேவர்
பன்னவே சாத்திரத்தில் சூட்சமுப்பு பாடவில்லை சித்தர்களும் பாடார்தானே
6214.
தானான ஆதியென்ற முப்புதன்னை தண்மையுள்ள பதினெண்பேர் சித்துதாமும்
மானான சாத்திரத்தில் சூட்சமாக மார்க்கமுடன் முடிக்கும்வகை சொல்லார்தாமும்
கோனான குருநூலாம் சத்தகாண்டம் கூறினேன் போகரேழாயிரத்தில்
பானான சூட்சமென்ற முப்புதன்னை பாருலகில் மாண்பருக்கு பாடினேனே
6215.
பாடினேன் காடியென்ற பழச்சார் சொன்னேன் பாண்மையுள்ள நாதாக்கள் மறைத்துவிட்டார்
நீடியதோர் சிவமுப்பு யிந்தமுப்பு நீடாழி யுலகமெலாம் இதிலடக்கம்
கூடியதோர் கருவிகரணாதியந்தம் குருவான ஜெயநீர்கள் இதிலடக்கம்
ஆடியதோர் சரக்கு அறுபத்துநான்கு வப்பனே சிவமுப்பால் மடிவுகாணே
6216.
மடியவே சரக்கு வறுபத்துநான்கும் மார்க்கமுடன் கைபாகஞ்செய்பாகந்தான்
முடியுமே கைபாகந் தவறிட்டாலும் முனையான வைத்தியத்துக் காதியாகும்
அடியான காயகற்ப மிதுவேயாகும் வப்பனே காடியென்ற பழச்சார்தானும்
நெடியான காரமது யேற்றுதற்கு நேர்மையுடன் கைபாகஞ் சொல்லக்கேளே

6217.
சொல்லவே காடியென்ற மார்க்கந்தன்னை தோறாமல் திராவகமாய் முடிப்பதற்கு
வெல்லவே வாலையென்ற சக்ரவாலை வேகமுடன் தீநீராய் வாங்குதற்கு
புல்லவே காடியென்ற மட்பாண்டத்தில் புகழான வாலையதை மேற்பொதிந்து
சில்லுடனே சீலையது வலுவாய்ச்செய்து தீர்க்கமுடன் வாலுகையாம் அடுப்பிலேற்றே
6218.
ஏற்றவே தீபதூபந்தான்கொடுத்து எழிலான வாலையென்ற பாண்டத்திற்கு
நாற்றிசையுங் குழலமைத்து சீஸாவைத்து நலமுடனே திராவகத்தை இறக்கிக்கொண்டு
மெற்புறமாம் ஜலமதனைத் தள்ளிநீக்கி மேன்மையுடன் மறுபடியும் ஜலத்தைவாறு
ஆற்கமுடன் மறுபடியும் குழலமைத்து வப்பனே திராவகத்தை வாங்கிடாயே
6219.
வாங்கியே திராவகத்தை பதனம்பண்ணு வளமான காடியென்ற பழச்சார்தன்னை
தூங்கியே திரியாதே வருண்மைந்தாகேள் துப்புரவாய் குருமுடிக்குந் திராவகந்தான்
ஏங்கியே திராவகத்தை முடியாமற்றான் எழிலான வையகத்து மாண்பரெல்லாம்
சாங்கமுடன் சாத்திரத்தை யுணராமற்றான் சட்டமுடன் பலதுறையாய்ப் போனார்தாமே
6220.
தாமான வழலையது எடுக்கும்பூமி தாக்கான நெடுங்காசி தன்னிலப்பா
பூமான்கள் செல்வதற்கு வளப்பஞ்சொல்வேன் புகழான திண்டிக்கல் பீம்பாறையாகும்
நாமேதான் சொன்னபடி திருபுவனமாகும் நலமான யாவடியார் கோயில்தானும்
வேமேதான் விலாடபுரம் தன்னில்தானும் மிக்கான வயநாடு பூமியாச்சே
6221.
ஆச்சப்பா தென்காசி பதியில் தானும் வப்பனே கன்னியா குமரியாகும்
நீச்சான வளையலென்ற குப்பிதன்னை நேர்மையுடன் தான்முடிக்கும் காளாஸ்திரிதானும்
மூச்சுடனே நெடுந்தூரஞ் சென்றாலப்பா முனையான பாளமென்ற கோயம்புத்தூர்
வீச்சுடைய பூமியது பள்ளநாடு வீரான கல்லழகர் நாடுதாமே
6222.
நாடான நற்மதா தேசமப்பா நலமான சித்தூரஞ் சிங்கிநாடு
பாடாண்மை கொண்டதொரு சீனதேசம் பாங்கான முப்பூவுக்கிடமேயாகும்
கோடான கோடிமனு மாண்பர்க்கெல்லாம் கொற்றவர்க்கு இந்நாடே வஞ்சிநாடு
தாடாண்மை கொண்டதொரு தேசமப்பா தாரணியில் பூவழலையெடுக்கும்நாடே
6223.
எடுப்பதற்கு இந்நாடு சிந்துதேசம் எழிலான தேசமெல்லாம் பின்னாடாகும்
கொடுப்பதற்கு சிவயோகி மாண்பருக்கு கோடான கோடிமுறை யிதிலொப்பாகும்
தடுப்பதற்கு யிப்பூமி விட்டாலப்பா தாக்கான பூமிவள தமக்குமில்லை
உடுக்கையென்ற பிரகக்கல் தானுமப்பா வுத்தமனே எடுக்கும் வகை செப்பினேனே
6224.
செப்பினேன் வழலையது யெடுப்பதற்கும் செயலான காடியது முடிப்பதற்கும்
ஒப்பான முப்பூவின் மார்க்கந்தன்னை ஒழுங்குடனே முடிப்பதற்கு வழிதான்சொன்னேன்
தப்பிதங்கள் இல்லாமல் குருமுடித்தல் தண்மையுள்ள முப்பூவும் முடியும்பாரே

6225.
பாரேதான் பூநீறு சுத்திசெய்து பாகமுடனெடுப்பதற்கு வகையைக்கேளும்
நேரேதான் பூநீரு படிதானப்பா நிலையான முன்சொன்ன காடிதானும்
சீரேதான் பூநீரில் விட்டுமைந்தா சிறப்புடனே கலக்கியதை தெளுநிறுத்து
கூரேதான் ரவிதனிலே காயவைத்து கொப்பெனவே யுப்பதனை யெடுத்திடாயே
6226.
எடுத்துமே யிப்படியே பத்துமுறை கலக்கி யெளிதான ரவிதனிலே காயவைத்து
தொடுத்ததொரு வுப்பதனைப் பதனம்பண்ணு தோறாமல் பத்துமுறை செய்தவுப்பை
கெடுத்திடா வண்ணமது பீங்கான் தன்னில் கவனமுடன் பதனமாய்ச் செய்துகொண்டு
நடுத்தெருவாங் கருமியென்ற மாண்பருக்கு நவிலாதே நவின்றிட்டால் சாபமாமே
6227.
சாபமா மின்னமொரு மார்க்கங்கேளு தப்பாது காலாங்கி வாக்குதானும்
பாபமது நேராது புண்யவானே பாருலகில் சித்துமுனி சொல்லார்தாமும்
கோபமது கொண்டல்லோ முனிவர்தாமும் கூறாரே சிவமுப்பு சூட்சந்தன்னை
தாபமுடன் மனோன்மணியாள் கடாட்சத்தாலே சாங்கமுடன் அடியேனும் நவின்றிட்டேனே
6228.
இட்டதொரு பிரம்மக்கல் தனையெடுத்து எழிலான கருப்பதனை நீக்கிமைந்தா
தொட்டளவு குருசொல் வாக்குபோல துறைமுகமுங் கண்டறிந்து பளிங்குக்கல்லாம்
சட்டமுடன் கல்லதனை யிடித்துமைந்தா சாங்கமுடன் பச்சையென்ற பூநீர்தன்னை
திட்டமுடன் கல்லுக்கு ரெண்டேயாகும் தீரமுடன் தான்கலந்து பாண்டம்வையே
6229.
பாண்டமது தனிலமைத்து பாகங்கேளிர் பாங்காக முன்னரைத்த காடிநீரை
வேண்டியே பூநீறுக்கரைதானப்பா விருப்பமுடன் பாண்டமதிலூட்டு மைந்தா
தூண்டியதோர் கருமான மிரண்டும்வேக துப்புரவாய்க் காடியென்ற நீரினாலே
மாண்டிடவே தானெரிப்பாய் காடிநீர்தான் மார்க்கமுடன் கண்டமட்டும் எரித்திடாயே
6230.
எரித்துமே பச்சையென்ற காடிநீரால் ஏற்றமுடன் தானலம்பி ரவியிற்போடு
மரித்துமே பிரம்மமென்ற கல்தானப்பா மகத்தான எண்ணையது கக்கிப்போச்சு
குரித்தபொருள் பிரமமென்ற சுன்னக்கல்தான் கூரான தேகமது வதிகங்கொண்டு
தெரிந்துமே பொடிப்பொடியாம் தகடுபோலாம் வெளிவான சுன்னத்துக் கிடந்தானாச்சே
6231.
ஆச்சென்று விடுகாதே யின்னங்கேளு வப்பனே காலாங்கி சொன்னநீதி
காச்சலென்ற சுன்னமதைத் தானெடுத்து கருவான கல்வமதி லிட்டுமைந்தா
மாச்சலென்ற சிற்றண்டங் கருதானப்பா மகத்தான பிரமக்கல் சுன்னந்தன்னை
வீச்சுடனே தானரைப்பாய் மடியுமட்டும் வீறான சுன்னமதை பில்லைசெய்யே
6232.
செய்யவே சிறுபில்லை காசதாக செம்மலுடன் ரவியுலர்த்தி சொல்வேன்பாரீர்
துய்யதொரு பில்லைமுகந் தானுலர்ந்து துப்புரவாய் மூசையிட்டு சீலைசெய்து
வையகத்தே தானிருக்கும் கருமமான வளமான பாகமதை யறியாமற்றான்
கைபாகந்தவறாமல் மைந்தாநீயும் கருத்துடனே வுலையில்வைத்து வூதுவாயே

6233.
ஊதவே சுன்னமது வாகுமாகும் உத்தமனே மூசையது வழுகுமட்டும்
நீதமுடன் ஊதிடவே சுன்னமாகும் நிலையான சுன்னமது பிரம்மக்கல்லாம்
தோதமுடன் மூசைதனை யுடைத்துப்பாரு சுந்தரனே சுன்னமது பிரமக்கல்லாம்
சாதமது தான்கொடுக்கும் சுக்கான்கல்லாம் சட்டமுடன் நாதாக்கள் பெருமைபாரே
6234.
பாரேதான் சுன்னமென்ற பிரமக்கல்லை பாங்குடனே பீங்கானிற் பதனம்பண்ணு
நேரேதான் சரக்குக்குக் கேறலாச்சு நெடிதான பிரமக்கல்லென்ற சுன்னம்
ஆரோதான் முடிப்பார்களப்பாகேளு ஆதியென்ற சுன்னமதை முடியாரப்பா
சீரேதான் சாத்திரத்தின் உளவாராய்ந்து சிறப்புடனே பார்த்துவைத்த சுண்ணமாமே
6235.
சுண்ணமாமின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் சுந்தரனே ரகுபாலா புண்யவானே
வண்ணமுடன் கல்லுப்பு பெரிதாய்க்கொண்டு வளமுடனே படியதுவும் தானெடுத்து
திண்ணமுடன் பாண்டமதில் இட்டுமைந்தா தீர்க்கமுடன் முன்சொன்ன காடிநீரை
நண்ணமுடன் மறுபாண்டந் தன்னிலப்பா நலமுடனே ஜலமதனை படிதான்வாரே
6236.
வார்க்கையிலே முன்சொன்ன காடிநீர்தான் வளமான பாண்டமதில் இட்டுமைந்தா
தீர்க்கமுடன் தான்கலக்க தெளுவிறுத்து தீரமுடன் பாண்டமதை யடுப்பிலேற்றி
ஏர்க்கவே யுப்பதுவும் பூர்க்குமட்டும் எழிலான வுப்பதனைக் காய்ச்சியல்லோ
சேர்க்கவே மறுபடியுங் காடிவிட்டு சிறப்புடனே கலக்கியதை யெடுத்திடாயே
6237.
எடுத்திடவே யிப்படியே பத்துமுறைக்காச்சு எழிலான கல்லுப்பும் குருவுப்பாகும்
கெடுத்திடா வண்ணமது பீங்கான்தன்னில் கிருபையுடன் பதனமது மிகவாய்ச்செய்து
தொடுப்பதற்கு முன்போலே வுப்பைநன்றாய் சுத்தமுடன் சேர்க்கும்வகை விபரங்கேளு
அடுத்துமே முன்சொன்ன கைபாகந்தான் அப்பனே முறைபாடு கூறுவேனே
6238.
கூறவே முப்பென்ற மார்க்கந்தன்னை குவலயத்தில் மாண்பர்களுந் தெளிவதாக
ஆறவே முன்சொன்ன வழலைமார்க்கம் வப்பனே பலமதுவும் எடுத்துக்கொண்டு
மாறவே பிரமமென்ற முப்புதன்னை மார்க்கமுடன் பலமதுவும் எடுத்துக்கொண்டு
தேறவே கல்லுப்புச் சுன்னந்தன்னை தேற்றமுடன் பலமதுவும் ஒன்றாய்க்கூட்டே
6239.
கூட்டியே மூன்றையுந்தான் ஒன்றாய்க்கூட்டி குறிப்புடனே வீரமுடன் புழுகுதானும்
தேட்டமுடன் வார்கனது ரெண்டேயாகும் தெளிவுடனே முன்சொன்ன காடிதன்னை
வாட்டமுடன் தானரைப்பாய் நாலுசாமம் வளமான பில்லையது லகுவாய்ச்செய்து
நீட்டமுடன் ரவிதனிலே காயவைத்து நிஷ்களங்கமானதொரு வகலில்வையே
6240.
அகலான பாண்டமது தன்னில்வைத்து வப்பனே சீலையது வலுவாய்ச்செய்து
பகலான ரவிதனிலே காயப்போடு பாங்குடனே காய்ந்தபின்பு செப்பக்கேளு
நிகலவே கோழியென்ற புடந்தான்போடு நிஷ்களங்கமாகவல்லோ நீறிப்போகும்
புகலவே பற்பமதை பதனம்பண்ணு புகழான மனோன்மணிக்கு பூசைசெய்யே

6241.
பூசையாம் மனோன்மணியாள் ஆராதாரம் பொங்கமுடன் தான்செய்து எடுத்துமைந்தா
ஆசையது கொள்ளாது வருண்மைந்தாகேள் வப்பனே சீசாவிற் பதனம்பண்ணு
காசுபணம் தேடுதற்கு உரிமைகேளு கனமான பாஷாணம் பலந்தானொன்று
மாசுபடா முப்பூவும் பலந்தான்காலாய் மார்க்கமுடன் கல்வமதில் போட்டிடாயே
6242.
போட்டவுடன் சரக்கதுவும் ஒன்றாய்க்கூட்டி பொங்கமுடன் முன்னுரைத்த காடிநீரால்
வாட்டமுடன் தானரைப்பாய் சாமமப்பா வளமான பில்லையது லகுவாய்ச்செய்து
நீட்டமுடன் ரவிதனிலே காய்ந்தபின்பு நீதியுடன் முன்சொன்ன மார்க்கம்போலே
தேட்டமுடன் புடமதுவுங் கோழிபார் தெளிவுடனே போடுவதும் முறைதான்கேளே
6243.
முறையான புடமதுவும் ஆறிப்பின்பு முனையான பற்பமதை யெடுத்துமைந்தா
நிறைபோடு வணுவளவுங் குறையுமில்லை நீட்டமுடன் பற்பமது பாரமெத்த
குறையாது பாஷாணமென்ன சொல்வேன் குவலயத்தில் சித்துமுனி கூறாவண்ணம்
அறைந்தேனே உலகுபதி மாண்பருக்கு வப்பனே சிவயோக தலத்தில்நில்லே
6244.
நிற்கையிலே மனோன்மணியாள் மனதுவந்து நிஷ்களங்கமாகவல்லோ வுனக்குமைந்தா
சொற்பமென்ற வாதமது பலிக்கும்பாரு சுந்தரனே வுன்னைப்போல சித்துமுண்டோ
அற்பமென்று நினையாதே துய்யபாலா வருண்மைந்தா முப்பாலே யெல்லாஞ்சித்தி
விற்பனர்கள் கொண்டாடும் இந்தவேதை மேதினியில் சமுசாரிக்கானவாறே
6245.
வாரான பற்பமது போக்குசொல்வேன் வளமான வெள்ளீயந் தன்னைத்தானும்
கூரான சேரதுதான் ஒன்றேயாகும் குறிப்புடனே தானுருக்கி செப்பக்கேளும்
நீரான பாஷாண பற்பந்தன்னை நீமகனே வராகனிடை காலதாக
சேரோடும் வெள்ளீயம் உருக்கியல்லோ செம்மலுடன் பற்பமதைத் தாக்கிடாயே
6246.
தாக்குவாய் வெள்ளீயம் பற்பத்தாலே தண்மையுள்ள நீரதுவும் உரிந்துகொள்ளும்
வாக்குடனே காலாங்கி மொழிபொய்யாது வளமையுடன் போகரேழாயிரந்தான்
நோக்கமுடன் நீர்வடிந்து வெள்ளிதன்னை நுணுக்கமுடன் வருமைவருங் காலந்தன்னில்
ஏக்கமது கொள்ளாமல் வெள்ளிதன்னை யெளிதாக சமுசாரி யுண்ணலாமே
6247.
உண்ணவென்றால் சாபமதுயாதுமில்லை வுத்தமனே சரக்குவறுபத்துநான்கும்
திண்ணமுடன் இம்முறைபோல் செய்வாயப்பா தீரமுடன் சரக்குவறுபத்துநான்கும்
வண்ணமுடன் நிற்றுதற்கு பிசகோயில்லை வளமான முப்பூவின் சுன்னமப்பா
சுன்னமுடன் முப்பூவின் காரத்தாலே நலமான சரக்கெல்லாம் நீறிப்போமே
6248.
நீறுமே சூதமென்ற சரக்குதானும் நீதியுடன் பலமதுவும் எடுத்துக்கொண்டு
வீறுடனே முப்பூவைச்சரியாய்க்கூட்டி வீரமுடன் முன்சொன்ன காடிதன்னால்
மாறுதலும் நேராமல் பற்பந்தன்னை மார்க்கமுடன் தானரைப்பாய் சூதங்கூட்டி
நூலுடனே கலசமென்ற பாண்டந்தன்னில் துப்புரவாய் சில்லிட்டுச் சீலைசெய்யே

6249.
சீலையது எழுசீலைவலுவாய்ச்செய்து சிறப்புடனே ரவிதனிலே காயவைத்து
வாலையென்ற எந்திரமாம் புவனவாலை வளமான வாலுகையாம் அடுப்புதன்னில்
காலையது ஜாமமது நாலதாக கருவான சூதமதை எரிப்பாய்நீயும்
மாலையது சூதமதை எடுத்துப்பார்க்க மகத்தான கடுங்கார சுன்னமாச்சே
6250.
சுன்னமென்றால் சுன்னமது என்னசொல்வேன் சுந்தரனே நாதாக்கள் செய்யும்வேதை
வின்னமது வாராது யிந்தப்போக்கு விருப்பமுடன் செய்வதற்கு மனதுவந்து
அன்னமெனுங் காடியென்ற பழச்சாரப்பா ஆகாகா சித்துமுனி மறைத்தாரங்கே
சொன்னமது முப்பூவால் கைக்குள்ளாச்சு சோறாமல் செய்பவர்க்கு சித்தியாமே
6251.
சித்தியாம் பஞ்சபூத சரக்கைத்தானும் சிறப்புடனே தானெடுத்து செப்பக்கேளீர்
வெத்தியுடன் முப்பூவை சரக்குபாதி வேகமுடன் காடியின்தன் பழச்சாற்றாலே
சுத்தியுடன் தானரைத்து பில்லைசெய்து துப்புரவாய் ரவிதனிலே காயப்போடு
சுத்தியுடன் வோட்டிலிட்டு சீலைசெய்து சாங்கமுடன் புடமதுவுங் கோழிதானே
6252.
தானான கோழியது புடமதாக தண்மையுடன் ஆறினபின் னெடுத்துப்பாரு
கோனான குருசொன்ன வாக்குபோலே கொற்றவனே பற்பமது தவளம்போலாம்
மானான பற்பமதை எடுத்துமைந்தா மகத்தான சீசாவில் பதனம்பண்ணு
பானான ரவிமதியில் தாக்கவல்லோ பாண்மையுடன் சொல்லுகிறேன் பண்பாய்த்தானே
6253.
பண்பான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்னு பாங்குடனே பற்பமதை யொன்றுதாக்க
நண்பான மாற்றதுவும் ஏழதாகும் நலமான புடமதுவுக்கேகாவர்ணம்
திண்பான பட்டசெம்பு ஆறுவெள்ளி தீர்க்கமுடன் தான்கொடுக்க மாற்றெட்டாகும்
உண்மையுடன் தங்கமது நாலுக்கொன்று வுத்தமனே சேர்க்க நலமாகும்பாரே
6254.
பாரேதான் அவமதுவும் ஒன்பதாகும் பாங்கான புடத்தங்கம் பிறவித்தங்கம்
சீரேதான் பஞ்சமுகங் கருத்துக்காணும் சிறப்புடனே மறைத்துவைத்தார் சித்துதாமும்
நேரேதான் சரக்கு வறுபத்துநான்கு நேர்மையுடன் முன்சொன்ன முப்பூவாலே
வீரேதான் சுன்னமென்ற முப்பூவாலே விண்ணுலகும் மண்ணுலகும் காணலாமே
6255.
காணலாம் முப்பூவால் அனந்தம்போக்கு காசினியில் நாதாக்கள் ஆடுங்கூத்து
பூணவே சிவயோகி சித்தருக்கு புகட்டவில்லை இந்தவழி முப்பூ மார்க்கம்
தோணவே கைமுறையாய் எடுத்துபாகம் துப்புரவாய் வையகத்து மாண்பருக்கு
வேணதொரு கருவிகரணாதியந்தம் விருப்பமுடன் பாடிவைத்த நுண்மைதானே
6256.
பாடினேன் முப்பூவின் வழலைமார்க்கம் பாருலகில் சகலசித்து மாடும்பாரு
நீடியதோர் முப்பூவைக் குன்றிவீதம் நீதியுடன் மண்டலந்தான் கொண்டாயானால்
வாடியதோர் திருமேனி சடலந்தானும் வண்மையுடன் காயாதி கற்பத்தாலே
கூடியதோர் தேகமது சட்டைதள்ளும் குணமான முப்பூவின் காட்சிகேளே

6257.
காட்சியாம் முப்பூவைக் கொண்டபேர்க்கு காசினியில் நரைதிரையும் இல்லையப்பா
மாட்சியுடன் நெடுங்கால மிருக்கலாகும் மகத்தான வாசியது மேல்நோக்காது
நீட்சியுடன் பதாம்புயத்தை நண்ணலாகும் நிஷ்களங்கமானதொரு சித்தனாவான்
மீட்சிபெற வையகத்தில் மாண்பரெல்லாம் மேன்மையுடன் எந்நாளும் துதிப்பார்பாரே
6258.
துதிக்கையிலே சித்துமுனி ரிஷியார்தாமும் துரைராஜ சிவயோகி இவரேயென்பார்
மத்க்கவே எல்லவர்க்கு போகவானாய் மகத்தான காயாதி கற்பத்தாலே
விதித்ததொரு வயததுவும் மேலதாகி மேதினியில் வெகுகாலமிருப்பாயப்பா
ததியான முப்பூவின் கைபாகந்தான் சாற்றவில்லை வெகுகோடி ரிஷிகள்பாரே
6259.
கோடியாங் காலாங்கி கிருபையாலே கூறினேன் போகரேழாயிரந்தான்
தேடியே பார்த்தாலும் கிட்டாதப்பா தேசத்தில் விட்டகுறை இருந்தால் கிட்டும்
வாடியே யலையாதே மன்னாகேளு மகத்தான போகரேழாயிரந்தான்
பாடியதோர் போகரேழாயிரத்தில் பாங்கான கடைக்காண்டம் முப்பூபாரே
6260.
பாரேதான் போகரேழாயிரத்தில் பட்சமுடன் காண்டமது ஏழுதன்னில்
நேரேதான் கடைக்காண்டம் ஏழிலப்பா நெடிதான முப்பூவாம் சூட்சுமப்பூ
சீரேதான் வையகத்து மாண்பருக்கு சிறப்புடனே பாடிவைத்தேன் சூட்சமாக
ஆரோதான் கருவாளி செய்வானப்பா வப்பனே யண்டபிண்ட மறிவான்கேளே
6261.
கேளேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் கெடியான புலிப்பாணி மன்னாகேளு
மீளேதான் பூநீரு எடுப்பதற்கு மீளாமல் வெகுமாண்பர் மாண்டாரப்பா
ஆளேதான் வகையறியா மாண்பரப்பா வப்பனே சாத்திரங்கள் படித்துக்கெட்டு
சூளேதான் சுடுவாதி மாண்பர்கூடி துறைமுகத்தை காணாமல் கெட்டார்தாமே
6262.
கெட்டதோர் மாண்பர்களின் சாத்திரவண்ணம் கேடறியார் பாடறியார் பயனுங்காணார்
நட்டதொரு பயிரதனை களைகள்போக்க நாதாந்த சித்துமுனி சொல்லைப்போல
விட்டகுறை இருந்ததொரு மாண்பர்போலே வீணாக வாசைகொண்டு மதியுங்கெட்டு
தொட்டலைந்து பூநீராய் எடுக்காமற்றான் சேர்ந்துருண்டு வெகுபேர்கள் மாண்டார்தானே
6263.
மடிந்தாரே வையகத்து மாண்பரெல்லாம் மகதேவர் கடவுளது யேமவித்தை
கடிந்ததொரு பொருளறிய மாட்டாமற்றான் காசினியில் வெகுமாண்பர் மாண்டாரப்பா
முடிந்ததொரு சிவானந்தப் பொருளைக்காண மூதுலகில் யாராலுங் கிட்டுமோசொல்
படிந்தபொருள் முப்பூவின் நிதானமார்க்கம் பாருலகில் விதியாளி யறிவான்பாரே
6264.
விதியான விதியிருந்தால் அதற்குக்கிட்டும் வீணாகக் கருமிகட்குக் கிட்டுமோசொல்
துதியான பராபரமான வஸ்துதன்னை துறைமுறையாய் கண்டறிந்தோன் காண்பான்பாரு
மதியான மூடனுக்கு வாய்க்குமோசொல் மகத்தான ஏமவித்தை பிரம்மவித்தை
கதிகாண எண்ணமது கொண்டபேர்க்கு கைவசமாம் ஏமவித்தை கிட்டும்பாரே

6265.
கிட்டுதற்கு பூவழலையெடுக்கவல்லான் கீர்த்தியுடன் நடராஜனருளேவேண்டும்
தொட்டகுறி போலதுபோல் காண்பதற்கு துரைராஜர் குருமுறைகள் வேண்டுமப்பா
பட்டமரம் போல்துளுக்கும் வழலைகாண பராபரியாள் கிருபையது வேண்டுமப்பா
விட்டகுறை யிருந்தாலே லபிக்கும்பாரு விருதாவாய் மாண்டவர்கோடியாமே
6266.
கோடியா மனுகோடி ராஜமன்னர் குவலயத்தில் வழலையுட மார்க்கந்தன்னால்
நாடியே வழலையது பூர்க்குங்காலம் நலமுடனே கண்டறிய மாளாமற்றான்
ஓடியே யிருமாப்பு வனப்புவாய்ந்து ஓகோகோ மாண்பரெல்லாம் மடிந்தாரப்பா
நீடியதோர் பொருளதுவும் விஷகாலந்தான் நிகட்சியுடன் யெடுப்பதற்கு யில்லைதானே
6267.
இல்லையே வெகுபேர்கள் மாண்பரப்பா யெழிலான சாத்திரத்தைப் பாராமற்றான்
அல்லல்படுந் துயரமது வருமையாலே வன்புடனே பூநீரை எடுப்பதற்கு
தொல்லையெனும் சாத்திரத்தை முன்பின்னாக சோராமல் பாடிவைத்தார் சித்தர்யாவும்
கல்லுதெய்வம் பேசுமென்று கையெடுத்து காசினியில் கையுரைத்த காட்சியாமே
6268.
காட்சியாம் கனகமென்ற பொருளையப்பா காசினியில் வெகுபேர்கள் காண்பதற்கு
தாட்சியில்லா சாத்திரங்கள் கண்டாராய்ந்து தடுமாறி தலைமாறி கலையுமாறி
மாட்சியுடன் கோர்வையென்ற சாத்திரத்தை மார்க்கமுடன் காணாமல் மயங்கினார்கள்
ஆட்சிபந்தம் வெகுநூல்கள் சொன்னாருண்டு வப்பனே குருநூல்தான் பாரார்தானே
6269.
பாராமல் மாண்பரெல்லாம் பதியுங்கெட்டு பாங்கான சாத்திரத்தின் முறையுங்கெட்டு
நேரேதான் சாத்திரத்தை விட்டகற்றி நேர்மையுடன் மதியூன்றி பாராமற்றான்
பூராயமானதொரு ரிஷிகள்நூலில் புகன்றிட்ட மர்மமதை யறியாமற்றான்
சாராயமானதொரு வஸ்துதன்னை சாங்கமுடன் கற்பமென்று கொண்டிட்டாரே
6270.
கொண்டாரே லாகிரிகள் அருந்தியல்லோ கோடான கோடிநூல்கள் மறைத்திட்டார்கள்
விண்டதொரு சாத்திரத்தை வினயங்கொண்டு வீண்காலம்போக்கியல்லோ மடிந்திட்டார்கள்
தண்டனையாஞ் சாபமது வுள்ளுமாகி தாரணியில் வெகுபேர்கள் சமைத்திட்டார்கள்
சண்டமாரு போலே சத்தகாண்டம் சாற்றினேன் போகரேழாயிரமுங்காணே
6271.
காணவே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் கருவான புலிப்பாணி மைந்தாகேளு
தோணவே பூநீரை யெடுக்கும்போது சுந்தரனே யுந்தனுக்கு பயமுண்டாகும்
வேணதொரு சித்துமுனி ரிஷிகள்தாமும் வேதாந்தத் தாயினது கடாட்சத்தாலே
பூணவே வேஷமது மாறாமல்கொண்டு புகழான முன்னிற்பார் பிரம்மைபாரே
6272.
பாரேதான் வேஷமது பூண்டுகொண்டு பாங்கான கபாலமது ஏந்திக்கொண்டு
நேரேதான் முன்னாக வந்துநின்று நேர்மையுடன் ஆங்கார கொர்ச்சிப்போடும்
ஆரோதான் பூநீரை எடுக்கவல்லான் வாண்பிள்ளை நீதானோவென்று கூறி
தேரோடும் சத்தமனக் கிரிச்சிபோலும் தேற்றமுடன் சத்தமது கேட்கும்பாரே

6273.
கேட்டுமே சித்துமுனி யசரீர்வாக்கு கெவனமுடன் கேட்டதுவும் உந்தமக்கு
ஆட்களில்லா வனந்தனிலே இந்தவோசை வப்பனே வதிசயங்கள் காணுதென்று
நிட்கமுடன் தலையெடுத்துப் பார்க்கும்போது நிலையான கறுப்பண்ணச்சாமிபோலே
வீட்கமுடன் முன்னிற்கக் கண்டபோது வித்தகனே பயந்தொடுங்கி சாவார்தானே
6274.
சாவாரே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் சட்டமுடன் ஒமென்றவேஷத்தோடும்
ஆவதுபோல் மகமேரு தன்னைப்போலே கப்பனே ஜடலமது கொண்டுமல்லோ
வேவலுடன் சவுக்கார வழலையாலே வேதாந்தத் தாயினது வருளினாலே
மேமமுடன் நடுக்கமது பலமுண்டாய மேதினியில் வெகுமாண்பர் மடிந்தார்தானே
6275.
தானான யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
பானான வையகத்து மாண்பரெல்லாம் பாராமல் பூநீரின் அபாயந்தன்னை
மோனான மௌனமென்ற மதியீனத்தால் மூதுலகில் சாபத்தால் மடிந்தார்தாமே
6276.
மடிந்தாரே வன்போடுங் கூடியல்லோ மகத்தான மேன்மக்களிருவர்கூடி
துடிந்ததொரு பூநீரையெடுப்பதற்கு துப்புரவாய் மனதுவந்து மாண்பர்தாமும்
விடிந்த தொருநாழிகையில் ஜாமந்தன்னில் விடுபட்டு வனாந்திரத்தில் இருவர்தாமும்
முடிந்ததொரு முப்பூவைக்காண்பதற்கு முயற்சியுடன் பூமிவளஞ்சென்றிட்டாரே
6277.
சென்றாரே வனந்தனிலே இருவர்தாமும் சிறப்புடனே பூநீரையெடுக்கும்போது
அன்றறிந்த கருஞ்சாரைச் சற்பந்தானும் வப்பனே பூநீற்றை எடுக்கவந்த
நின்றிருந்த சிவயோகி மாண்பர்தம்மை நெடுந்தூரந் தான்துரத்தி வருகும்போது
குன்றான மலைபோலே விருட்சமப்பா கூறான விருட்சமதில் ஏறிட்டாரே
6278.
ஏறினதோர் மாண்பர்தம்மைக் கண்டபோது எழிலான சற்பமது விருட்சந்தன்னில்
சீறியே தான்கண்டு சினந்துமேதான் தீர்க்கமுடன் சிவயோகி இருவர்தம்மை
மீறியே தீண்டுதற்கு விடமுங்கொண்டு மிக்கான மானிடரைக்காணும்போது
தூறியே சிவயோகி இருவர்தாமும் துப்புரவாய் அம்பதனால் எய்திட்டாரே
6279.
எய்யவே சற்பமதின் சிரசிற்பட்டு எழிலான சற்பமது மடிந்ததங்கே
பையவே சிவயோகி மாண்பர்தாமும் பார்த்துமே சர்ப்பமது மடிந்ததென்று
துய்ய நல்ல விருட்சமதை விட்டிறங்கி தூயதான வடிமட்டும் வருகும்போது
வெய்யதொரு வதிசயங்களென்ன சொல்வேன் வேதாந்தத் தாயினுட மகிமைகேளே
6280.
கேளப்பா புலிப்பாணி மகனேமைந்தா கீர்த்தியுள்ள மகிமையது என்னசொல்வேன்
ஆளப்பா சிவயோகி இருவர்தாமும் வப்பனே பூவெடுத்த வண்மைதன்னை
மாளப்பா பூவெடுக்குங் காலந்தன்னில் மகத்தான கருஞ்சாரை கண்டுமல்லோ
மீளப்பா போகாமலிருப்பதற்கு மீட்சியுடன் தந்திரங்கள் செய்யலாச்சே

6281.
தந்திரமா மூலியிட மகிமைதன்னை சதகோடி சூரியருங் கண்டதில்லை
விந்தையுள்ள சித்தரது திருக்கூத்தப்பா விண்ணுலகு மண்ணுலகுங் கண்கொள்ளாட
சிந்தையுடன் இருமனது ஒன்றதாகி சிறப்புடனே பூவழலை யெடுக்கும்போது
வந்துதல்லோ கருஞ்சாரை காலந்தானும் வளமையுள்ள மகிமையது புதுமைதானே
6282.
புதுமையாம் சர்ப்பமது என்னசொல்வேன் புகழாக மூலிதனை மனதுவந்து
கதுமையுடன் கானகத்தில் சென்றுமல்லோ கடிதான மலைகுகைகள் தான்கடந்து
மெதுவான சஞ்சீவி மூலிதானும் மேன்மையுடன் வாய்தனிலே கவ்விக்கொண்டு
பதுமமென்ற சர்ப்பமது இருக்கும் ஸ்தானம் பான்மையுடன் வந்தல்லோ நிற்கலாச்சே
6283.
நிற்கின்ற மறுசற்பந்தன்னைக்கண்டு நீதியுடன் சிலமாண்பர் இருவர்தாமும்
அற்பமென்று நினையாமல் ஆலோசித்து அறிவுள்ள சர்ப்பமதை கண்ணிற்கண்டு
துப்புரவா யெய்ததொரு சர்ப்பந்தன்னை துணிவுகொண்டு மூலிதனை மணங்கள்வீச
சொற்பெரிய சர்ப்பமது உயிருண்டாக்கி சோறாமல் எழுந்திருக்கக் கண்டிட்டாரே
6284.
கண்டாரே சர்ப்பமது மூலிதன்னால் கைலாசஞ் சென்றதொரு சர்ப்பந்தன்னை
பண்டுவள மாலையணி கிருஷ்ணன்கொண்ட பாங்கான மூலியது விஷமூலிதானும்
தொண்டல்லோ தான்கொடுத்து உயிருண்டாக்கி கூட்டுறவாய் யழைத்துக்கொண்டு சென்றநேர்மை
சண்டமாருதம் போலேயிருவர் மாண்பர் சட்டமுடன் பிரமித்து திகைத்திட்டாரே
6285.
திகைத்துமே சிவமாண்பர் இருவர்தாமும் தீர்க்கமுடன் மனஞ்சோர்ந்து நிற்கும்போது
புகைபடர்ந்த வனந்தனிலே சர்ப்பந்தானும் புகட்சியுடன் முன்னிறந்த சர்ப்பங்கூட்டி
பகைபோன்ற சிவமாண்பர் இருவர்காண பாங்குடனே கானகத்தைச் சென்றவண்ணம்
தகமையுடன் சர்ப்பமது கொண்டுசெல்ல தாட்சியுடன் சிலமாண்பர் பார்த்திட்டாரே
6286.
பார்த்துமே சர்ப்பமது சென்றுதென்று பாங்குடனே சிவமாண்பர் இருவர்தாமும்
நேர்த்தியுள்ள மூலிகைதான் என்றறிந்து நேர்மையுடன் சிவமாண்பர் மனதிலெண்ணி
பூர்த்தியுட னிருக்கப் பயந்தானுண்டோ புகழான வடிவார மரத்திற்றானும்
கார்த்தருந்து மூலிதனைக் கையிற்றானும் கவனமுடன் எடுத்துவர நண்ணினாரே
6287.
நண்ணியே சர்ப்பமது சென்றபின்பு நாதாந்தத் தாயாரை மனதிலெண்ணி
குண்ணியே மனதுவந்து முகமும்வாடி கூறான மூலிதனை எடுக்கவல்லோ
வண்ணமுடன் சிவமாண்பர் இருவருந்தான் வளமையுடன் உறவுகொண்டாடிகூட
திண்மையுடன் மூலிதனை யொருதோழன்தான் துப்புரவாய்த் தானெடுக்கக் கண்டிட்டேனே
6288.
கண்டேனே சிவமாண்பர் மூலிதன்னை கரந்தனிலே மூலிதனைத்தொட்டபோது
அண்டர்பிரான் மகிமையது யென்னசொல்வேன் ஆகாகா வையகத்தில் யார்தான்கண்டார்
சண்டமாருதம்போலே சர்ப்பந்தானும் சட்டமுடன் மூலிதனை வைத்தநேர்மை
தண்டகம்போல் அடியேனும் கண்டுயேங்கி சட்டமுடன் மகிமைதனைப் பார்த்திட்டேனே

6289.
பார்த்தேனே சிவமாண்பர் ஒருவர்தானும் பண்பான மூலிதனைக் கரத்திற்றானும்
நேர்த்தியுள்ள மூலிதனை யென்றயம்பி நேர்மையுடன் கரந்தனிலே எடுக்கும்போது
பூர்த்தியுள்ள மூலியது என்னசொல்வேன் புகழான வஞ்சனமாய்மூலிதானும்
ஆர்த்தியுடன் சிவமாண்பர் தோழன்தன்னை வப்பனே இருக்கவது பார்திட்டேனே
6290.
பார்த்தேனே மூலியது மகிமைதன்னை பாண்மையுடன் பிர்மித்து யேங்கும்போது
தீர்த்தமுடன் மூலியது வளத்திற்றானும் தீர்க்கமுடன் சிவமாண்பர் கரத்தைப்பற்றி
நேர்த்தியுடன் மூலியது தன்னைத்தானும் நேரான வனந்தனிலே இருக்கும்நேர்மை
பூர்த்தியுடன் யான்கண்டு திடுக்கிட்டேங்கி புகழாகக் குளிகைகொண்டு வந்திட்டேனே
6291.
வந்தேனே கல்லாலின் மரத்தின்பேரில் வளமையுடன் குளிகைகொண்டு நிற்கும்போது
அந்தமுள்ள சிவமாண்பர் தன்னைத்தானும் வதிதம்மை சிறப்புடனே தானிழுக்கும்
வண்மைமார்க்கம் தந்திரமாம் மூலியது வசியமூலி தண்மையுடன் மகிமையது கூறுவேனே
6292.
கூறுவேன் புலிப்பாணி புனிதவானே குவலயத்தில் சித்துமுனி யாரேனுந்தான்
சீறுகின்ற சர்ப்பத்தின் கற்பமூலி சீருலகில் கண்டவர்கள் எவர்தானுண்டு
தேறுபுகழ் பதினெண்பேர் நவகோடிதாமும் தேசமதில் வெகுமகிமை பூண்டாரல்லோ
மாறுடைய கூறுஞ்சாரை சர்ப்பமூலி மானிலத்தில் கண்டவர்கள் இல்லைதாமே
6293.
இல்லையே சித்தர்களும் வணக்கங்கூறார் எழிலான சாத்திரத்தைத் தானுங்காணார்
தொல்லையெனும் வனமூலி விஷத்தைக்காணார் தொட்டதொரு கிட்டிருந்த மூலிகண்டார்
அல்லல்வினை தானறுக்கும் வசியமூலி யவனிதனில் வெகுசித்தர்கண்டாருண்டு
கொல்லிமலை திரிந்தாலும் இந்தமூலி குவலயத்தில் கிட்டாது கிட்டாதன்றே
6294.
கிட்டாது என்றதொரு மூலிதானும் கீர்த்தியுள்ள சிலமாண்பர் தன்னையல்லோ
எட்டாத பொருள்தேடிப் போனதாலே எழிலான சிவமாண்பர் தானுமங்கே
சட்டமுடன் பணியைநம்பி யுழுதவர்போல் சாங்கமுடன் மூலியது வினயமாச்சு
விட்டகுறை யிருந்ததனால் வாய்க்கும்பாரு விண்ணாடர் மண்ணாடர் காணார்தாமே
6295.
தானான பதாம்புயத்தைக் கண்டாலல்லோ தாக்கான வசியமூலி வாய்க்கும்பாரு
மானான சிவமாண்பர் மூலிகொண்டு மகத்தான கானகத்தே செல்லும்போது
பானான பாம்பதுதான் சென்றபாதை பாங்கான படும்பாதை யென்றேயெண்ணி
கோனான குருதனையே மனதிலுன்னி கொற்றவனார் மோசமென்று நினைத்திட்டாரே
6296.
மோசமது வந்ததென்று மனதிலெண்ணி முனையான சிவமாண்பர் யேதுசெய்தார்
பாசமுடன் கைதனிலே இருந்தமூலி பட்சமுடன் பூமிதனில் உதறிட்டாரே
நாகமது கொண்டதொரு மூலிதானும் நற்கமல கரந்தனிலே வீழாமற்றானும்
வீசலுடன் மூலியது கரத்தைப்பற்றி விருப்பமுடன் கானகத்தில் விழுகலாச்சே

6297.
ஆச்சப்பா மூலியது இழுக்கும்போது வப்பனே கூடிருந்த தோழன்தானும்
மூச்சுடனே யவர்கரத்தை யிவருங்கூடி முனையாகத் தானிழுக்கப் பார்த்தேன்யானும்
கூச்சலுடன் இருவருமே குய்யோவென்று கூர்மையுடன் மனதுவந்து எண்ணங்கொண்டு
பாச்சலுடன் கரமிருந்த வாளால்தாமும் பான்மையுடன் கரமதனை துணித்தார்பாரே
6298.
பாரேதான் கரமதுவுந் துணிந்தபோது பாங்குடனே மூலியுடன் கானகத்தில்
நேரேதான் கரந்தனையே மூலிதானும் நேர்மையுடன் தானிழுத்து போகக்கண்டேன்
சீரான சிவமாண்பர் இருவர்தாமும் சிறப்புடனே மறுபடியும் பதிதிரும்பி
கூரான பூவழலை காய்க்கு மார்க்கம் குறிப்புடனே வந்துமல்லோ யமர்ந்திட்டாரே
6299.
அமர்ந்தாரே சிவமாண்பர் இருவர்தாமும் வப்பனே புலிப்பாணி மைந்தாகேளு
சமர்ந்ததொரு வருட்சமதில் யீன்னுமாண்பர் சுந்தரனே மறுபடியும் யேங்கிவந்து
சமர்த்துடனே பூவழலையெடுப்பதற்கு சட்டமுடன் குருசொன்னநீதிபோல
தமர்ந்திடா வண்ணமுடன் புனிதவான்கள் சட்டமுடன் தானெடுத்தார் புண்யராமே
6300.
புண்ணியராம் புலிப்பாணி மைந்தாகேளு புகழான சிவமாண்பர் கரத்தையல்லோ
வண்ணமுடன் சர்ப்பமது மனதுவந்து வளமையுடன் தன்தேவர் குருநாதர்க்கு
திண்ணமுடன் கரந்தனையே காட்டவென்று தீர்க்கமுடன் வாய்தனிலே கவ்வியல்லோ
எண்ணறிய நற்பொருளே யெந்தன்நாதா எழிலான கானகத்தின் வளமைகேளே

# போகரின் சப்த காண்டம் – 7000

6301.
கேட்கவென்றால் அடியேனுங் கானகத்தில் கீர்த்தியுடன் பெண்ணைய்தானிருந்தோம்
மீட்கமுடன் இரைதேடி போகும்போது மிக்கான கானகத்தில் யாம்திரிந்தோம்
சூட்சமுடன் பாலையென்ற வனத்தில் நாங்கள் சுந்தரமே சித்தொளிவே போகும்போது
ஆட்கள்விட்டு ஒருவரையும் பிரிந்துமல்லோ வையனே கல்லால மரங்கண்டோமே
6302.
கண்டோமே சிவசித்து மாண்பர்தம்மை கைலாசநாதரைப்போல் வேஷங்கொண்டு
உண்டான பொருள்தேடி கற்பமுண்ண உத்தமரே இருவர்தம்மைக்கண்டேன்யானும்
விட்டதொரு வழலையென்ற முப்பூதன்னை விருப்பமுடன் எடுக்கவந்த மாண்பர்தம்மை
சண்டமாருதம்போல துரத்தியானும் சாங்கமுடன் சீறலது சீறினேனே
6303.
சீறியே யோடுகையில் மாண்பர்தாமும் சிறப்பான கல்லாலின் மரத்தின்பேரில்
மீறியே எனைக்கண்டு பயந்தொடுங்கி மீளாத மரத்தின்மேல் ஏறிநின்றார்
வீரியமாய் அப்பாலே எந்தனைத்தான் விட்டல்லோ கொண்டுமே சிதைத்துப் போட்டார்
கீரியென்னும் விஷமூலி தன்னைத்தானும் கிருபையுடன் எந்தனுக்குக் கொடுக்கலாச்சே
6304.
கொடுக்கவே என்சேனை பிணையிலொன்று கொப்பெனவே நானிறந்த பாவனத்தை
அடுத்துமே கண்டல்லோ வாலோசித்து ஐயனே குருமூலி தேடிவந்து
அடுத்திருந்த எந்தன்முன் வந்துநின்று பாங்கான மூலிதனை முகத்தில்வைக்க
நடுத்தலையில் வில்லறுந்த நாணிபோலே நாதனே உயிர்கொண்டு வந்திட்டேனே
6305.
வந்தேனே என்பிணையுங் கூடியல்லோ வளமான மரம்விட்டு வந்தபோது
சிந்தனையாய் மூலிதனைவிட்டகற்றி சீறியே நாமிருவர் வந்தபின்பு
பந்தமுள்ள சிவமாண்பர் இருவர்தாமும் பட்சமுடன் கல்லாலின் மரத்தைவிட்டு
சந்தோஷமாகியல்லோ இறங்கிமாண்பர் சட்டமுடன் மூலிதனைத் தொட்டிட்டாரே
6306.
தொட்டிட்ட மூலியது எந்தன்நாதா துடர்ந்துமே கைதனையே பற்றியல்லோ
விட்டு விடாதவர்கரத்தை பிடித்துமல்லோ வீறான நாமிருக்குங் கானகத்தில்
சட்டமுடன் கரந்தனையே பற்றியல்லோ சாங்கமுடன் தானிருக்குங் காலந்தன்னில்
விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால் வீரமுடன் விரல்தனை துண்டிட்டாரே
6307.
துண்டிடவே கரமதுவும் எந்தன்பக்கல் துப்புரவாய் விஷமூலி வேகத்தாலே
கண்டிதமாய் அவர்செய்த பாவத்தாலே கர்த்தாவே கரமதுவும் வந்துதென்று
திண்டிரை சூழ்வையகத்தில் சமாதிபூண்ட திரளான வெந்தன்குரு தீர்க்கநாதா
கொண்டுவந்தேன் உந்தமக்கு சாட்சியாக கொற்றவனே கதியென்ன யென்னலாச்சே
6308.
யாச்சென்று சொல்லுகையில் ரிஷியார்தாமும் அங்ஙனவே சர்ப்பமதுக் கோதுவார்பார்
மூச்சடங்கி இருந்ததொரு சர்ப்பந்தன்னை முசியாமல் உயிர்மூலி தான்கொடுத்து
பாச்சலுடன் கானகத்தில் பின்னுமல்லோ பட்சமுடன் இருபேரும் வந்திட்டார்கள்
ஆச்சரிய மானதொரு விஷமூலி தன்னால் வப்பனே பிழைத்ததுவும் அருமைதானே

6309.
தஅனான சர்க்குருவின் கடாட்சத்தாலும் தாக்கான மனோன்மணியாள் கிருபையாலும்
கோனான மகதேவர் கிருபையாலும் கூர்மையுடன் பிழைத்ததுவும் புண்ணியந்தான்
தேனான சிவமாண்பர் கரமறிந்து தீர்க்கமுடன் வந்ததுவும் பாவமாச்சு
மானான பாவத்துக் கிடங்கொடாமல் மகத்தான சாபமதை நீக்குவீரே
6310.
நீக்கினால் வெகுகோடி புண்ணியந்தான் நிட்களங்கமானதொரு மாண்பருக்கு
ஆக்கமுடன் கரந்தனையே ஒட்டிக்கொள்ள வப்பனே மூலியது கொண்டுவந்து
நோக்கமுடன் தான்கொடுத்து வனுப்பினாக்கால் நெடிதான விரலதுவும் விருட்சந்தன்னில்
பாக்களவு பிறந்ததொரு கதையைப்போலே பாங்கான விரலதுவும் ஒட்டும்பாரே
6311.
ஒட்டுமே பின்னுமந்த மாண்பர்தாமும் ஓகோகோ வழலைதனைத் தானெடுக்க
கிட்டியே மறுபடியும் வருவாரங்கே கீழானனவிரலதுவும் அவரைக்கண்டு
எட்டியே தான்துரத்தி கையிலொட்டி எழிலான வங்கமது பங்கம்நீக்கி
சுட்டியே சிவமாண்பர் தானுமப்பா சொஸ்தமுடன் கைகொண்டு வாழ்குவாரே
6312.
வாழ்ந்தாலே தந்தமக்கு மோட்சமுண்டு வளமான கீர்த்தியது வதிகமுண்டு
ஆழ்ந்த தொரு வார்த்தைக்குக் குறைவில்லாமல் அங்ஙனவே மூலியது வாராய்ந்தல்லோ
தாழ்ந்துமே குருபாதம் வாக்குதப்பி தானடைந்தால் குருவுக்குப் பாவமென்று
சூழ்ந்துமே குருவுரைத்த வாக்குபோலே சூட்சமுடன் செய்யவல்லோ எண்ணலாச்சே
6313.
எண்ணவே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் எளிதான புலிப்பாணி மகனேபாரு
வண்ணமுடன் காலாங்கி கிருபையாலே வளமையுடன் லோகபதி எல்லாங்காண
திண்ணமுடன் குளிகையது பூண்டுகொண்டு தீர்க்கமுடன் சீனபதி சென்றேன்யானும்
அண்ணலெனும் பதாம்புயத்தை யானுங்கண்டு வப்பனே காலாங்கி வரம்பெற்றேனே
6314.
பெற்றதொரு வரத்தினால் அனேகம்பெற்று பேரான பேரின்ப வீடறிந்து
கற்றதொரு சிவயோகி தவக்கியானி கைலாச சட்டமுனி நாதர்கூட்டம்
சுற்றுமுள்ள திருமூல வர்க்கத்தோரும் சுந்தரானந்தரொடு ரோமந்தானும்
மற்றுமுள்ள சித்தாதி சித்தரெல்லாம் மகிட்சியுடன் மலைதனிலே பார்த்திட்டேனே
6315.
பார்த்தேனே யவரவர்கள் செய்தநூலை பாங்கான சமாதிமுகம் நின்றுகொண்டு
நேர்த்தியுள்ள பெருநூலாங் கிரந்தங்கோடி நெடிதான விரிநூலுஞ் சுருக்கங்கோடி
பூர்த்தியுடன் அவரவர்க்கு யிதவுகூறி புகழான சாத்திரத்தைக் கையிற்பற்றி
தீர்த்தமுடன் சிவலிங்க பதியில் சென்று சிற்பரனே நூல்களை யாம்பூசித்தேனே
6316.
பூசித்தேன் அதிதமென்ற நூல்கள்தம்மை புகழான சீனபதி மாண்பருக்கு
வாசித்தேன் சந்தேகந் தெளிவுநீங்கி வாகுடனே கருவிகரணாதியந்தம்
நேசித்தேன் சீனபதி பெண்களைத்தான் நெடிதான சாத்திரத்தின் மார்க்கங்கண்டு
ஆசித்தேன் நெடுங்கால மங்கிருந்தேன் வப்பனே குளிகைகொண்டு பறந்திட்டேனே

6317.
பறந்தேனே குளிகையது பூண்டுகொண்டு பாங்கான யிமயகிரி மேற்கேயப்பா
சிறந்ததொரு புவனமென்ற கிரியில்யானும் சிற்பரனே குளிகைவிட்டு இறங்கியேதான்
நிறைந்ததொரு குகைதனிலே சென்றேன்யானும் நெடிதான தேவரிஷி கோடாகோடி
குறைந்ததொரு கணக்கதுவும் லக்கோயில்லை கோடானகோடி சித்துமுனி கண்டேனே
6318.
கண்டதொரு சித்துமுனி ரிஷியார்தாமும் கைலாசபுவனகிரி தன்னிற்றானும்
அண்டமுடி போகாமல் யாகஞ்செய்து வப்பனே தானிருக்குங் காலந்தன்னில்
தண்டறிகமான தொருகானகத்தில் தாட்டீகமுள்ளதொரு செந்தேளப்பா
சண்டமாருதம்போலே ரெக்கைகொண்டு சட்டமுடன் இறங்கிநிற்கப் பார்த்திட்டேனே
6319.
பார்த்தேனே புவனகிரி சிகரந்தன்னில் பாங்கான செந்தேளின் கொடூரந்தன்னை
தீர்த்தமுடன் சிகரம்விட்டு மேலேநோக்கி திகழான கொடிமுனையைப் பற்றிநின்று
வோர்த்துடலும் விஷமதுவும் தலைகொண்டேறி மிக்கான சிகரமென்ற செம்புதன்னை
ஆர்த்துமே தானோக்கி கொட்டும்போது வழகான செம்பதுவும் உருகிப்போச்சே
6320.
உருக்கியே செம்பதுவும் மலையோரத்தில் வுத்தமனே பாய்ந்துமல்லோ லிங்கமாச்சு
மெருகான லிங்கமது செம்புமாகி மேன்மையுள்ள சமாதியென்ற பீடமாச்சு
திருவான பீடமது சித்தர்கண்டு தீரமுடன் சிவலிங்க மென்றுசொல்லி
பருவமுடன் அமாவாசை காலந்தன்னில் பட்சமது குருபூசை செய்வார்தானே
6321.
தானான பூசையது செய்யும்போது தாக்கான சிவலிங்கந் தன்னில்நின்று
தேனான ஜலமதுவும் முத்துபோலே தேற்றமுடன் சிவலிங்கந் தன்னிற்பொங்கி
கோனான விஷமதுவும் பொங்கியல்லோ கொப்பெனவே ஜலமதுவாய் சுத்திநிற்கும்
பானான நிலமதனை எடுத்துசித்தர் பாங்குடனே சீசாவில் அடைப்பார்பாரே
6322.
பாரேதான் ஜலமதனை எடுத்துமல்லோ பாங்கான செம்பதனை யுருக்கிக்கொண்டு
நேரேதான் ஆயிரமாங் களஞ்சிதானும் நேர்மையுடன் தானுருவங் காலந்தன்னில்
சேரேதான் இருக்குமுகந் தன்னிலப்பா சேர்வைகண்டு விஷநீரை தாக்குவார்பார்
கூரேதான் ஆயிரத்துக்கோர் களஞ்சிகொடுத்து வுருக்கியல்லோ எடுப்பார்காணே
6323.
காணவே ஆயிரத்து எட்டுமாற்று கனமான தேவேந்திரன் தங்கமாச்சு
பூணவே தங்கமது பிறவித்தங்கம் புகழான சித்துமுனி வழங்குந்தங்கம்
வீணவே பூசைக்கு வுதவுந்தங்கம் வேறுபடாத் தங்கமது சுயம்புத்தங்கம்
நீணவே கைலாசநாதர்தாமும் நீதியுடன் வீற்றிருக்கும் பீடந்தானே
6324.
பீடமாம் ஆயிரங்கண் இந்திரர்க்கு பெரான வாசனத்தின் தங்கமாகும்
கூடகோபுரந்தனுக்கு சிகரந்தங்கம் குவலயத்தில் மாண்பர்களுங் காணாத்தங்கம்
மாடமாளிகை நெருங்கும் மன்னர்தாமும் மார்க்கமுடன் ஆதீனத் தங்கமாகும்
தேடறியா நாதாக்கள் ரிஷிகள்தேவர் தோற்றமுடன் கண்டதொரு தங்கமாமே

6325.
தங்கமாம் புவனகிரி தன்னில்நின்று தாக்கான விஷமீறி வந்ததங்கம்
லிங்கமாம் சமாதியென்ற பீடந்தன்னில் நிஷ்களங்கமாகிவந்த தங்கமாச்சு
புங்கசித்தி எட்டுடனே பிறந்ததங்கம் புகழான நாதாக்கள் வசிக்குந் தங்கம்
பங்கமிலாத் தங்கமது பாரில்மாண்பர் பார்க்காத பிறவியென்ற தங்கமாச்சே
6326.
ஆச்சப்பா யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப்பாணி சுகுணமாரா
பாச்சலென்ற பாஷாண கற்பஞ்சொல்வேன் பாருலகில் நாதாக்கள் சொன்னதில்லை
நீச்சுடைய சர்ப்பமது தான்பிடித்து நீமகனே பாஷாணங் களஞ்சிரெண்டு
மூச்சுடனே சர்ப்பமது தானிருக்க முனியான பாஷாணந் தன்னைவாங்கே
6327.
வாங்கியே அரவத்தின் வாயில்தன்னில் வளமான பாஷாணங் களஞ்சிதன்னை
தூங்கியே திரியாமல் மைந்தாபாரு துப்புரவாய் வாயில் வைத்து தைத்துப்போடு
ஏங்கியே போகாமல் பாண்டந்தன்னில் எழிலாகத் தானடைத்து வாரமிட்டு
ஓங்கியே போகாமல் மேலுமூடி வுத்தமனே பதனமது நாள்தானெட்டே
6328.
எட்டான நாளதுவுஞ் சென்றபின்பு யெளிதான பாண்டமதை திறந்துமைந்தா
கட்டான அரவத்தின் வாயைத்தானும் கடுகெனவே தானவிழ்த்து பார்க்கும்போது
திட்டமுடன் அரவமது ஜீவன்செத்து தீர்க்கமுடன் உயிரதுவும் சற்றேநிற்கும்
சட்டமுடன் பாஷாணந் தனையெடுத்து சாங்கமுடன் பாம்புக்குப் பாலைவாரே
6329.
வார்க்கையிலே யரவமது உயிருண்டாகி வளமான அரவமது மளமேசெல்லும்
பார்க்கையிலே பாஷாணம் விஷந்தானேறி பாங்கான காயகற்ப மாச்சுதப்பா
தீர்க்கமுடன் பாஷாணந் தனையெடுத்து திணையளவு வாகவல்லோ மண்டலந்தான்
ஏற்கையிலே மண்டலமும் மூன்றுகொண்டால் யெழிலான காயமது இருகும்பாரே
6330.
அறுகுமே பாஷாணகற்பத்தாலே எழிலான கற்பமது கொண்டபேர்க்கு
குறுகியே தேகமது வயிரம்போலாம் குவலயத்தில் சித்துமுனி தம்மைப்போலே
அறுவதுவும் மிகவாகி புத்தியுண்டாய் அவனியிலே நீயுமொரு சித்தனாவாய்
நறுவலென்ற திரைநரையும் அற்றுப்போகும் நாதாந்த சித்தொளிவு நிதியுமாச்சே
6331.
சித்தான சித்துமுனி ரிஷிகளெல்லாம் தேசமதில் பலபலவாய் நூல்கள்கூறி
முத்தான பாஷாண கற்பஞ்சொல்ல மூதுலகில் மறைத்துவைத்தார் சித்தரெல்லாம்
சத்தசாகரங்கடந்து குளிகைபூண்டு சாயுச்சிய பதவிதனைக் காணவென்று
புத்தியுடன் காலாங்கி தாள்பணிந்து புகழான கற்பமதைக் கூறிட்டேனே
6332.
கூறினேன் கற்பமதைக் கொண்டபேர்க்கு குவலயத்தில் நெடுங்கால மிருக்கலாகும்
மாறிட்ட மேனியது தங்கம்போலாம் மகத்தான வாசியது மேல்நோக்காது
நின்றிட்ட மேனியது தவளம்போலாம் நிட்களங்க வாசியது மேலோடாது
வீறிட்டு வார்த்தையது மொழிசொன்னாலும் வீணாகித் தேகமது குண்ணாதன்றே

6333.
அன்றான புலிப்பாணி மைந்தாகேளு வப்பனே சொல்லுகிறேன் உந்தமக்கு
குன்றான மலையேறி குகைகடந்து கூறான சுவர்ணகிரி பதியமர்ந்து
வென்றிடவே குளிகையது பூண்டுகொண்டு வீறான சிகரமென்ற பதியைக்கண்டேன்
தென்றிசையில் தட்சணாமூர்த்திநாயன் தோற்றமுடன் கண்டதொரு கூர்மந்தானே
6334.
தானான கூர்மமது தன்னைக்கண்டென் தாக்கான திரேதாயி னுகத்திலப்பா
மானான பிரளயங்கள் வந்தபோது மகத்தான கூர்மமது மலையிற்சென்று
தேனான மனோன்மணியாள் இருக்கும்பீடம் தெரிசனமே செய்வதற்கு மனதிலுன்னி
பானான பார்லோகப் பிரளயத்தில் பட்சமுடன் கூர்மமது வந்ததாச்சே
6335.
வந்ததொரு கூர்மத்தைக் கண்டேன்யானும் வளம்பெரிய சுவர்ணகிரி மலையிலப்பா
அந்தமுடன் மலையைவிட்டு கீழிறங்கி வப்பனே சுனையருகே சென்றேன்யானும்
சிந்தனையாய் மனதுவந்து படியிறங்கி சிற்பரனைத் தெரிசிக்க தியானங்கொண்டு
சந்தோஷமாகியல்லோ சுனையோரத்தில் சட்டமுடன் இறங்கையிலே கண்டிட்டேனே
6336.
கண்டவுடன் கூர்மமது எனைப்பணிந்து கைலாசநாதரென்று தாள்பணிந்து
தெண்டமுடன் பதாம்புயத்தை பணிந்துபோற்றி தெளிவாக சுனையேறி மேலேநின்று
அண்டர்பிரான் எந்தனையுங்காணவந்த வன்பான போகரிஷி நாதாகேளும்
துண்டரிக மாகவல்லோ தட்சணாயன் துப்புரவாய் சாபமது தந்திட்டாரே
6337.
தந்ததொரு சாபத்தால் திரேதாயுகத்தில் சட்டமுடன் பிரளயத்தில் வந்தேனிங்கே
அந்தமுடன் நெடுங்காலம் சுனையில்யானும் வன்புடனே வாசமது செய்திருந்தேன்
சித்ததொரு சுவர்ணகிரி சுனையில்தானும் சிறப்பான சித்துமுனி வந்ததில்லை
வந்தையுடன் எந்தனுக்கு சாபந்தீர்க்க விட்டகுறை இருந்ததினால் வந்தீர்பாரே
6338.
பாரேதான் காலாங்கி நாதபாதா பட்சமுடன் எந்தன்மேல் கிருபைவைத்து
சீரேதான் சாபமதை நிவர்த்திசெய்து தீர்க்கமுடன் எந்தனையு மீட்பீரானால்
நேரேதான் உந்தமக்குக் காயகற்பம் நெடுங்காலந் தானிருக்க யான்கொடுப்பேன்
கூரேதான் வார்த்தையது மொழியுங்கூறி குறிப்புடனே வரலாறு கூறலாச்சே
6339.
கூறவே கூர்மமது சொல்லும்போது கொற்றவனே சாபமது நிவர்த்திசெய்தேன்
மீறவே கூர்மமதை சாபம்நீக்கி மிக்கான கற்பமதைக் கேட்கும்போது
மாறவே எந்தனுக்குத் தெரியவோதி மகத்தான கற்பமதைக் கேட்கும்போது
நாறலுடன் கூர்மமது வயிற்றிருக்கும் நலமான குளிகைதனைத் தருகலாச்சே
6340.
தருகவே வயிற்றிலுள்ள காயகற்பம் தண்மையுடன் மனதுவந்து அடியேன்தானும்
பெருகவே யான்வாங்கி மண்டலந்தான் பேரான குளிகைதனில் குன்றியுண்ண
மெருகலுடன் தேகமது இறுகியல்லோ மேதினியில் நெடுங்கால மிருப்பதற்கு
பொருகவே காயாதி கற்பங்கொண்டு பேறான வுலகுதனில் வசித்திட்டேனே

6341.
வசித்ததொரு குளிகையினால் எந்தனுக்கு வாகான மகிமைகளு மனேகமுண்டு
பசியதுவு மில்லையப்பா பண்புள்ளோனே பாலகனே சித்தர்களுக் கிடைக்குமோசொல்
நிசிதமுள்ள காயாதி கற்பந்தன்னை நிகழ்ச்சியுடன் முன்னிருந்த நாதர்தாமும்
உசிதமுடன் கண்டவரும் யாருமில்லை வுத்தமனே நாதாக்கள் சொல்லார்பாரே
6342.
சொல்லாரே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் சுவர்ணமென்ற மலையிலப்பா மேற்பாகத்தில்
வெல்லவே குளிகைகொண்டு வடியேன்தானும் வேதாந்தத் தாயினது கடாட்சத்தாலே
புல்லவே வனந்தனிலே கலைமான்தன்னை புகழ்ச்சியுடன் அடியேனுங் கண்டபோது
நல்லதொரு கலைமானும் என்னைக்கண்டு நலமுடனே ஓடிவந்து பணியலாச்சே
6343.
பணிந்துமே எந்தனிட பாதம்போற்றி பட்சமுடன் எந்தனையும் வினவிகேட்க
துணிந்துமே காலாங்கி நாதர்பாதம் துப்புரவாய் மனதுவந்து அடியேன்தானும்
அணிகடனின் பதாம்புயத்தின் சீஷனென்றேன் ஆத்தாளின் கடைபாத தூளியென்றேன்
மணிபோன்ற வார்த்தையது கூறும்போது மகத்தான என்குருவே என்னலாச்சு
6344.
என்னவே காலாங்கி நாதசீஷா எழிலாக எந்தனுக்கு வந்தசாபம்
பன்னவே புஜண்டரிஷியார்தாமும் பாங்கான கானகத்தில் யாகஞ்செய்ய
துன்னவே யடியனால் வந்தநேர்மை துப்புரவாய் யாதென்று வினவிக்கேட்பீர்
முன்னமே பெரியோர்கள் செய்தயாகம் மூதுலகில் அடியேனும் அறியேன்தானே
6345.
தானான புஜண்டமகாரிஷியார்தாமும் தன்மையுடன் தவஞ்செய்யுங்காலந்தன்னில்
கோனான வுமதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமுரைத்த நீதிபோலே
தேனான மனோன்மணியாள் கிருபையாலும் தேற்றமுடன் சாபமதை நீக்கவெண்ணி
பானான குருபரனார் ரிஷியாசீர்மம் பாங்குடனே யான்வணங்கி நின்றிட்டேனே
6346.
நின்றேனே புஜண்டமகா ரிஷியார்பக்கல் நிட்களங்க மானதொரு சமாதிதன்னை
சென்றேனே நெடுங்காலம் நானிருந்தேன் தேஜொளியின் கிருபையது வண்மையாலே
வென்றதொரு யான்செய்த பாவந்தன்னை வேட்கையுடன் அணிதவரா வண்ணம்யானும்
குன்றுடனே மலைதேடி சமாதிபக்கல் கொற்றவனே சாபமதால் சென்றிட்டேனே
6347.
இட்டதொரு சாபமதை நீக்கியல்லோ எழிலாக வெந்தனுக்குக் காட்சிதந்து
சட்டமுடன் ஞானோபதேசங்கொண்டு சாயுச்சிய பதவிதனைக்காணவென்று
திட்டமுடன் மனோலயத்தால் அருளுந்தந்து தீர்க்கமுடன் ஆசீர்மஞ்சாபம்நீக்கி
விட்டகுறை இருந்ததொரு நேர்மையாலே விடுதிக்கிப்போகவென வருள்கொள்வீரே
6348.
கொள்ளவென்று கலைமானுங் கூறும்போது கொப்பெனவே காலாங்கி கடாட்சத்தாலே
தெள்ளமுர்தமான பராபரியின் பாதம் தேற்றமுடன் அடியேனும் முடிவணங்கி
எள்ளளவுந் தீங்குமிக நேராமற்றான் எழிலான மனோன்மணியைப் போற்றிச்செய்து
உள்ளபடி கலைமானைப் பாதுகாக்க உவமையுடன் என்மனதில் எண்ணினேனே

6349.
எண்ணியே கலைமானின் சாபம்தீர்ந்தேன் எழிலான காயாதிதான் கொடுக்க
உண்ணவே நெடுங்காலந் தானிருந்தேன் உத்தமனே சித்துமுனி ரிஷியார்கூட்டம்
வண்ணமுடன் கலைமானின் கற்பந்தன்னை வாகுபெற வுண்டவர்கள் ஆருமில்லை
கண்ணபிரான் கொண்டதொரு கற்பந்தானும் கலைமானின் கற்பத்துக்கீடாகாதே
6350.
ஈடான கற்பமதை உண்டேன்யானும் எழிலான வையகத்து மாண்பரெல்லாம்
தேடாமல் கற்பமதை யுண்டேன்யென்று தேசமதில் சன்னியாசி வேஷங்கொண்டு
கோடான கோடிபொருள் சம்பாதிக்க கூறினார் கற்பமது கொண்டேன்யென்று
தாடாண்மை கொண்டதொரு பொய்ழஞானிக்கு தாரணியில் தனங்கொடுத்து
கெட்டார்பாரே
6351.
பாரேதான் கற்பமதைக் கொண்டபோது பாங்குடனே சீனபதி சென்றேன்யானும்
நேரேதான் குளிகையது பூண்டுகொண்டு நெடிதான கடலோரஞ் சென்றுயானும்
சீரேதான் சுவர்ணகிரி இடபாகத்தில் சிறப்புடனே மலையேறி சென்றேன் யானும்
ஆரோதான் கண்டவர்கள் ஆருமில்லை வப்பனே சுவர்ணகிரி கண்டிட்டேனே
6352.
கண்டேனே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் கருவான புலிப்பாணி மைந்தாகேளு
சண்டமாருதம் போல குளிகைகொண்டு சாங்கமுடன் சுவர்ணகிரி இடபாகத்தில்
தண்டகாரணியமதில் அடியேன்தானும் சாங்கமுடன் சமாதிமுகந் தன்னில்நின்றேன்
அண்டர்பிரான் அருளினது கடாட்சத்தாலே வப்பனே கடலோரமமர்ந்தேன்தானே
6353.
தானான வையகத்து மகிமையெல்லாம் தாக்கான சுவர்ணகிரி கடலோரத்தில்
மானான மகத்துவங்கள் அதிகமென்று மார்க்கமுடன் சுந்தரானந்தரேசர்
தேனான சாத்திரங்கள் பாடியல்லோ தேற்றமுடன் குகைதனிலே வைத்தாரப்பா
கோனான யென்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குக் கூறினாரே
6354.
கூறியதோர் நூலதுவும் பொய்யாதென்று கொற்றவனே சமாதியென்ற பீடம்நின்று
மீறியே யஷ்டாங்க யோகஞ்சென்று மிக்கான தவநிலையில் நிற்கும்போது
நீறுடை சுந்தரானந்தரேசர் நிஷ்களங்க சொருபமென்ற சுடரேகொண்டு
மாறுடைய சித்தனைப்போல் வேஷங்கொண்டு மார்க்கமுடன் தரிசனங்கள் தந்திட்டாரே
6355.
தந்தாரே எந்தனுக்குத் தரிசனங்கள் தாக்கான எந்தனையும் ஆரென்றேதான்
சிந்தனையாய் மனதுவந்து கேட்கயானும் சிறப்புடைய காலாங்கி சீஷனென்றேன்
அந்தமுடன் சீனபதி விட்டுயானும் வையனே குளிகையது பூண்டுகொண்டு
விந்தைகளை யறியவென்று இடபாகத்தில் விருப்பமுடன் யான்பணிந்து துதித்திட்டேனே
6356.
துதிக்கையிலே சுந்தரானந்தரேசர் துப்புரவாய் எந்தனுக்குத் துகளகற்றி
மதிப்புடனே எந்தனையு மனதுவந்து மார்க்கமுடன் கண்டதொரு வினயந்தானும்
விதிப்புடைய விட்டகுறை இருந்ததாலும் விருப்பமுடன் உந்தமக்கு உபதேசங்கள்
கதிபெறவே ஞானோபதேசஞ் செய்து கருவான கேசரியுந் தருவேன்பாரே

6357.
பாரேதான் புலிப்பாணி மைந்தாகேளு பாங்குடனே சுந்தரானந்தரேசர்
சேரேதான் எந்தனுக்குக் குளிகைதந்து தேற்றமுடன் உலகுபதி மகிமையெல்லாம்
நேரேதான் சதாகாலஞ் சீஷனாக நேர்மையுடன் என்மீதில் மனதுவந்து
கூரேதான் கேசரியின் மார்க்கந்தன்னை குறிப்புடனே எந்தனுக்குக் கூறினாரே
6358.
கூறவே புலிப்பாணி மைந்தாகேளு குவலயத்தில் எந்தனுக்கு சீஷமார்க்கம்
தேறவே கண்டல்லோ வாராய்ந்தேதான் தேற்றமுடன் இருப்பதற்கு முறையுஞ்சொல்வேன்
மாறவே தொண்டுசெய்யும் சீஷனுக்கு மகத்தான சன்மார்க்க மேதென்றாக்கால்
ஆறவே விசுவாச வருளும்வேண்டும் வப்பனே அறிவு ஜெபம்வேண்டும்பாரே
6359.
வெண்டுமே ஆசையுடன் இன்பம்வேண்டும் விருப்பமுடன் தவமுடனே பொறுமைவேண்டும்
தாண்டவம்போல் குருமொழியின் வணக்கம் வேண்டும் தாரணியில் ஜீவகாருண்யம் வேண்டும்
ஆண்டகையின் பதாம்புயத்தை நண்ணல் வேண்டும் வப்பனே இரக்கமுடன் ஈகைவேண்டும்
தூண்டியதோர் கருமான மின்னஞ் சொல்வேன் துப்புரவாய்த் துகளகற்றி இருக்கநன்றே
6360.
நன்றாக இறவாமல் முயற்சிதேடல் நலமான கற்புடைமை நண்ணல்வேண்டும்
குன்றான கொடியதொரு பாவம்நீக்கி குவலயத்தில் இருப்பவனே சன்மார்க்கன்தான்
தென்றிசையில் அகத்தியர்க்கு நேர்மையாக தேற்றமுடன் உபதேசஞ் செய்யவல்லோன்
நன்றிபுரி வேணாடு வாழுமாண்பர் நலமான சித்துமுனிக் குவமையாச்சே
6361.
ஆச்சப்பா பொய்சூது கபடுதந்திரம் வப்பனே நிந்தையுடன் நிலைமைமாறல்
பேச்சுடனே மெய்தவறல் பொறாமைகூறல் பேரான பேரின்ப நிலைமறத்தல்
மூச்சடங்கி மெய்போலே யாகஞ்செய்தல் முனையான நற்குருவை தூஷணித்தல்
ஆச்சரியமானதொரு களவுமார்க்கம் வப்பனே நீக்குவதும் உண்மைபாரே
6362.
உண்மையாம் முன்புநயம் புரணிகூறல் வுத்தமரை வுதாசினங்கள் மிகவும்பேசல்
நண்மையாம் பெரியோரை பகடிகூறல் நலமுடனே பரிசுத்தோன் போலேகூறல்
கண்மையாம் மேன்மேலும் போர்விளைத்தல் கருவான போருக்கு முயன்றுநிற்கல்
தண்மையாம் சித்துமுனி நூல்களெல்லாம் தானறிந்த பித்தனைப்போல் பினற்றுவானே
6363.
பித்தனென்றால் சொல்லுகிறேன் இன்னங்கேளு பிணிதீர்க்கும் பண்டிதன்போல் பெயர்வகுத்து
சுத்தமுடன் காவிகஷாயம்பூண்டு சுந்தரனே யுபதேசங்கூறவல்லோன்
சத்திநெறி தவறாத தருமவான்போல் தாரணியில் வேடமது பூண்டுகொண்டு
புத்தியுடன் கோபமதை யற்றவன்போல் புலம்பியே திரிவானே கழுதைமாண்பே
6364.
மாண்பான வையகத்தில் அனேகரப்பா மார்க்கமுடன் பலபலவாய் வேஷங்கொண்டு
ஆண்பிள்ளை போலாக வீரங்கொண்டு அதட்டியே வார்த்தையது மிகவுங்கூறி
காண்பவர்கள் எல்லவர்க்கும் கருத்துளான்போல் கைதனிலே ருத்திராட்ச மாலைபூண்டு
வீண்பிள்ளை யாகவல்லோ திரிந்துகொண்டு விருதான வேஷமது கொள்வார்தானே

6365.
தானான புலிப்பாணி யின்னங்கேளு தண்மையுள்ள பூபாலா சொல்வேனப்பா
கோனான குருவருளும்பெற்றோனாக குவலயத்தில் கீர்த்தி கொண்டு இருப்போனாக
தேனான மனோன்மணியாள் பதாம்புயத்தை தேற்றமுடன் எந்நாளும் துதிப்போனாக
பானான பரமசிவன் புத்திவானாய் பாருலகில் வசித்திருக்குச் சீடன்பாரே
6366.
பாரேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் பாங்கான புலிப்பாணி மகனேகேளு
நேரேதான் உந்தமக்கு காயகற்பம் நெகிழ்ச்சியுடன் சொல்லுகிறேன் நேர்மையாக
வீரேதான் நெல்லிக்காய் கெந்திதானும் விருப்பமுடன் பலமதுவும் ஐந்துசேரு
சீரேதான் தாளகமும் ரெண்டுசேரு சிறப்பான சிங்கியது வொன்றுகூட்டே
6367.
கூட்டவே மனோசிலையு மொன்றுசேரு குணமான கௌரியது ஒன்றுசேரு
நாட்டமுடன் பூரமது ஒன்றுசேரு நலமான வீரமது அரையேசேரு
வாட்டமுடன் அபினியது ஒன்றேசேரு வகுப்பான லிங்கமது ஒன்றுகூட்டு
தேட்டமுடன் துருசதுவும் ஒன்றேசேரு தெளிவான துத்தமது ஒன்றுதூக்கே
6368.
தூக்கியே சிற்றண்டங் கருவிலப்பா துடியாகத் தானரைப்பாய் நான்குசாமம்
தாக்குவாய் வாலுழுவைத் தயிலத்தாலே தானரைப்பாய் ஜாமமது எட்டதாக
நோக்கமுடன் கருஞ்சீரந் தயிலமப்பா நுணுக்கமுடன் தானரைப்பாய் ஆறுசாமம்
வாக்கதுவும் பிசகாத வண்ணமப்பா வளமான தாழம்பூ சார்தான்கூட்டே
6369.
சாரான தாழம்பூ நாலுசாமம் தண்மையுடன் மந்தாரை நாலுசாமம்
நாறான சரக்கெண்ணை நாலுசாமம் நலமான கொடிவேலி யாறுசாமம்
தேறான கௌதும்பை யாறுசாமம் தேற்றமுடன் துவரையது நாலுசாமம்
சேறான வெண்குன்றி யாறுசாமம் செம்மையுடன் தானரைப்பாய் மைந்தாகேளே
6370.
கேளேதான் சரக்கெல்லா மரைத்தபின்பு கெவனமுடன் பில்லையது லேசதாக
நாளேதான் போகாமல் ரவியில்வைத்து நயமான புதுக்கலசந் தன்னிலப்பா
கோளேதான் நேராமல் மைந்தாநீயும் குமுறவே தானடைத்துச் சீலைசெய்து
கீளேதான் கலசமது துவாரமிட்டு கிருபையுடன் தயிலமது இறக்கிடாயே
6371.
இறக்கியே குழித்தயில மாகவல்லோ யெழிலான கலசமதில் வடிதான்கொண்டு
சிறக்கவே முப்பூவுங் களஞ்சிசேர்த்து சிறப்புடனே கலசமதில் பதனம்பண்ணி
திரமான தயிலமதை யாரேனுந்தான் தீர்க்கமுடன் சொல்லவில்லை நூல்கள்தன்னில்
உறமான தயிலமது சித்துதானும் ஓகோகோ நாதாக்கள் சொல்வாரன்றே
6372.
அன்றான தயிலமதை யாராய்ந்தேதான் அவனிதனில் மாண்பர்களும் பிழைக்கவென்று
குன்றான வழிபாடு முறைபாடெல்லாம் கூறினேன் போகரேழாயிரத்தில்
தென்றிசையில் பொதிகைமலை தன்னில்வாழும் தெளிவான சித்துமுனி நாதர்தாமும்
வென்றிடவே தயிலமதை மறைத்துவைத்தார் வேதாந்த நுட்பொருளை காட்டார்தானே

6373.
தானான சாத்திரத்தின் உளவுகண்டு தண்மையுள்ள கருவிகரணாதியெல்லாம்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்றமுடன் தயிலமதை வாங்கிமைந்தா
பானான பரிதியென்ற சூதந்தன்னில் பாங்குபெற தயிலமதை களஞ்சிநீட்டே
6374.
நீட்டவே பத்துக்கு ஒன்றுமேதான் நீதியுள்ள மதவானை யடங்கிநிற்க
வாட்டமுடன் தயிலமதை யிரண்டுசாமம் வாகுபெற தானரைக்க சூதமாகும்
தாட்டிகமாய் சூதமதை செந்தூரிக்க தண்மையுடன் சொல்லுகிறேன் மைந்தாபாரு
நாட்டமுடன் தாரமென்ற நாதந்தானும் நலமான களஞ்சியது ஒன்றுசேரே
6375.
சேர்த்துமே முன்சொன்ன தயிலத்தாலே செவ்வையாய்த் தானரைப்பாய் நாலுசாமம்
நேர்த்தியாய் மெழுகுபத மாகுமட்டும் நேர்மையுடன் தானரைத்து செப்பக்கேளிர்
ஊத்துவமாய்க் குப்பிக்குச் சீலைசெய்து வுத்தமனே சரக்கதனைக் குப்பியிட்டு
தீர்த்தமென்ற குப்பிக்கு மாக்கல்லாக திறமாக மேல்மூடி சீலைசெய்யே
6376.
செய்யவே தளவாயாஞ் சட்டிதன்னில் சிறப்புடனே மணலதனைக் கொண்டுவந்து
பையவே தளவாயாஞ் சட்டிதன்னில் பாங்குடனே ரவியில் நாலுவுயரம்போடு
துய்யநல்ல குப்பிதன்னை மண்மேடிட்டு துப்புரவாய்க் குப்பிவாய் தெரியமூடி
எய்யவே மேற்பாண்டந் தன்னில்மூடி வுத்தமனே சீலையது வலுவாய்ச் செய்யே
6377.
வலுவான சீலையது செய்தபின்பு மைந்தனே மயங்காமல் செய்வாயப்பா
மெலுவான வாலுகையாம் ஏந்திரத்தில் மேன்மையுடன் தானெறிப்பாய் நாலுசாமம்
சுலுவான தீபமது கமலம்போலாம் சுந்தரனே தானெறிப்பாய் செப்பக்கேளு
உலுவான தீபமது யாறியபின் உத்தமனே தானெடுக்க வகையைக்ககேளே
6378.
கேளப்பா கணபதிக்குப் பூசைசெய்து கெட்டியாய் மனோன்மணியை மனதிலுன்னி
நாளப்பா போகாமல் செந்தூரத்தை நலமாக சீசாவிற் பதனம்பண்ணு
பாளப்பா போகாமல் தேகந்தன்னை பட்சமுடன் நெடுங்காலமிருப்பதற்கு
வேளப்பா காயாதி கற்பங்கொள்ள விருப்பமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே
6379.
பண்பான செந்தூரங் குன்றிவீதம் பாலகனே மண்டலந்தான் இரண்டுவேளை
நண்பான தேனதினில் கொண்டாயானால் நலமான தேகமது கற்றூணாகும்
திண்பான வாசியது மேல்நோக்காது தீர்க்கமுடன் கொண்டவர்க்கு நரையுமில்லை
உண்டான காயாதி கற்பமெல்லாம் உத்தமனே யிதற்கீடு சொல்லொண்ணாதே
6380.
ஒண்ணாது செந்தூரந் தானுமப்பா வுத்தமனே கோடிவரை யிருக்கலாகும்
கண்ணான செந்தூரந் தன்னையப்பா கருத்துடனே பாச்சுகின்ற விதத்தைக்கேளு
மண்ணான செம்பதுவும் களஞ்சிநூறு மகத்தான செந்தூரங் களஞ்சியொன்று
ஒண்ணாது தானுருக்கி மூசைதன்னில் வுத்தமனே தானெடுத்து சாய்த்திடாயே

6381.
சாய்க்கவே செம்பதுவும் மாற்றோபத்து தனியான மாற்றதுவும் என்னசொல்வேன்
வாய்ந்ததொரு பிறவியென்ற தங்கந்தானும் மகத்தான தங்கமது இதற்கீடுண்டோ
தேய்ந்ததொரு தேய்வுயென்ற தங்கமப்பா தேற்றமுள்ள பிறவியென்ற தங்கமாச்சு
பேய்ந்ததொரு மலைபோலே விளைந்த தங்கம் பெருமையுள்ள சிருஷ்டிப்பு தங்கந்தானே
6382.
தானான தங்கமது யோகித்தங்கம் தண்மையுடன் சிவவேடம் பூண்டோர்க்காகும்
கோனான குருத்தங்கம் ஞானத்தங்கம் கொற்றவர்கள் ராஜாக்கள் அணியுந்தங்கம்
பானான மனோன்மணியாட் குகந்ததங்கம் பாரினிலே சித்தர்மெச்சும் தங்கமப்பா
தேனான குருக்கள் மாரணியுந்தங்கம் தேஜொளிவின் சொரூபமென்ற தங்கந்தானே
6383.
தங்கமா மின்னமொரு போக்குசொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி மகனேகேளு
பங்கமில்லா தங்கமது என்னசொல்வேன் பாலகனே ஒன்பதுக்கு ஒன்றுதாக்கு
துங்கமுள்ள ரசிதமது மாற்றோபத்து துடியான பசுமையென்ற யேமமாச்சு
புங்கசித்தி எட்டுடைய சிவயோகிக்கு புனிதனே தங்கமது வாய்க்கும்பாரே
6384.
பாரேதான் கருமிகட்கும் சண்டாளர்க்கும் பலியாது இவ்வேதை பலியாதப்பா
ஆரோதான் சாத்திரங்கள் அனேகஞ்சித்தர் அபரிதமாய்ப் பாடிவைத்தார் கோடாகோடி
நேரேதான் இவ்வேதைக் குவமைகூற நெடியபுகழ் வையகத்தில் ஆராலாகும்
சீரேதான் விட்டகுறை இருந்தபேர்க்கு தீர்க்கமுடன் வாய்ப்பதும் மெய்யதாமே
6385.
மெய்யான வித்தையது என்னசொல்வேன் மேதினியில் நாதாக்கள் கூறும்வித்தை
பொய்யான வித்தையது யனேகங்கோடி பூட்டினார் வெகுகோடி மாண்பர்க்காக
வையகத்தில் வாழுகின்ற மாண்பருக்கு மகத்தான செந்தூரம் வுண்டபேர்க்கு
ஐயமற ரோகாதி ரோகமெல்லாம் வப்பனே வுடலைவிட்டே யேகும்பாரே
6386.
ஏகுமே யின்னமொரு கற்பம்பாரு யேற்றமுடன் சொல்லுகிறேன் மைந்தாபாரு
பாருடைய நெய்போன்ற விலாங்குதன்னை பட்சமுடன் தான்பிடித்து பண்பாய்க்கேளு
சாகுதற்கு முன்பாக சூலந்தன்னை சட்டமுடன் வாயிலிட்டு விலாங்குதன்னை
வேகுதற்கு பாண்டமது தானமைத்து வேகமுடன் பூநீரைப் பாண்டம்போடே
6387.
போட்டுமே விலாங்குதனை மேலே வைத்து பொங்கமுடன் மேலுமந்த பூநீர்விட்டு
நாட்டமுடன் ஜலமதனை மேலே விட்டு நிஷ்களங்க மாகவல்லோ பாண்டமூடி
வாட்டமுடன் தானவித்து ரவியிற்போடு வளமான விலாங்கதுவும் வுலர்ந்தபின்பு
தாட்டிகமாய் கல்லுரலில் இட்டுமைந்தா சட்டமுடன் இரும்புலக்கை தன்னாற்சாடே
6388.
சாடவே சூரணமாய்ச் செய்துகொண்டு சட்டமுடன் சுக்குடனே ஓமஞ்சேர்த்து
கூடவே மிளகுடனே வாய்விளங்கம் குணமான பரங்கியென்ற பட்டைதானும்
போடவே யேலமுடன் ஜாதிபத்திரி பொங்கமுடன் வெந்தயமும் இருசீரந்தான்
சூடவே பச்சையென்ற பூரந்தானும் சுத்தமுள்ள ரோசனையுங் கூடச்சேரே

6389.
சேர்த்துமே வகைக்குவொரு பலமதாக சிறப்புடனே நெய்தேனும் விட்டுக்கிண்டி
பேர்த்துமே புதுக்கலசந் தன்னிலப்பா பெருமையுடன் சீனிசர்க்கரையுங்கூட்டி
ஆர்க்கவே பாகுபதந் தன்னிலப்பா வப்பனே முன்னுரைத்த லேகியத்தை
தீர்க்கமுடன் தான்சேர்த்து கிளறிவாங்கி திட்டமுடன் பீங்கானிற் பதனம்பண்ணே
6390.
பண்ணவே கணபதிக்குப் பூசைசெய்து பாலகனே சோடசத்தில் வைத்துப்போற்றி
உண்ணவே மண்டலந்தான் கொண்டாயானால் வுத்தமனே கழற்சிக்காய் விகிதங்கொள்ள
தண்ணமுடன் தேகமது இறுகிக்காட்டும் தாக்கான வாசியது மேல்நோக்காது
கண்ணபிரான் செய்ததொரு குளிகையப்பா கண்மணியே வுந்தனுக்கு போதித்தேனே
6391.
போதித்தேன் விலாங்கினுட மாயாகற்பம் பொங்கமுடன் சமுசாரிக்கான கற்பம்
வாதிகளுங் கண்டறிந்து செய்வாரப்பா வையகத்தில் விதியுள்ளான் செய்யுமார்க்கம்
சோதித்து சாத்திரங்கள் கண்டாராய்ந்து சுந்தரனே உந்தனுக்கு ஓதிவைத்தேன்
சாதித்தால் குளிகையென்ற விலாங்குகற்பம் சாங்கமுடன் யோகிகட்கு உறுதியாமே
6392.
உறுதியாஞ் சிற்றின்பங்கொண்டபேர்க்கு வுத்தமனே யாக்கைநரம்புடையபேர்க்கும்
நிறுதியெனும் தாதுவிருத்தி யில்லாதார்க்கும் நீடூழி போகமது கொள்வோருக்கும்
குறுதியது யில்லாத தேகத்தோர்க்கும் குணமில்லா மணமில்லா மேனுயோர்க்கும்
அறிவுகுன்றி யிருப்பதொரு மாண்பருக்கும் வழகான குளிகையது பாருபாரே
6393.
பாரப்பா குளிகையது கொண்டபேர்க்கு பாங்குடனே யேழானை பலமுண்டாகும்
ஆரப்பா குளிகையது செய்யப்போறார் வப்பனே யறிவுடையோர் செய்யும்வேதை
நீரப்பா தனிலிருக்கும் விலாங்குகற்பம் நீதியுள்ள கற்பமது என்னசொல்வேன்
பேரப்பா சிவயோகி செய்யாரப்பா பேரின்ப நிலைநடந்தோர் செய்யார்தானே
6394.
செய்வார்கள் சிற்றின்ப முடையபேர்கள் ஜெகதலத்தில் கோடியுண்டு லக்கோயில்லை
துய்யதமிழ் பண்டிதங்கள் மெத்தவுண்டு துப்புரவாய்ச் செய்துமல்லோவதிதஞ்செய்வார்
மெய்யான கற்பமதை செய்தபேர்கள் மேதினியில் கலவிக்கு முதன்மையாவார்
பொய்யான கற்பமது கூறவில்லை புண்ணியனே யுந்தனுக்கு புகட்டினேனே
6395.
புகட்டினேன் உந்தனுக்கு வன்புகூர்ந்து புகழான விலாங்கினது கற்பந்தன்னை
ஜகமுதும் சித்துமுனி சாத்திரத்தில் சாங்கமுடன் மறைத்துவைத்தார் என்னசொல்வேன்
அகங்கொண்ட மாண்பர்களுக்காகாவென்று வப்பனே சிடிகையெல்லா மறைத்துப்போட்டார்
சுகம்பெறவே யடியேனும் மனதுவந்து சூட்டினேன் மாண்பர்களுக் குகந்தவாறே
6396.
வாறான சூத்திரத்தில் மறைத்துதெல்லாம் வாகுடனே சாத்திரத்தில் பெருக்கிவிட்டேன்
கூறான சிடிகையென்ற மார்க்கந்தன்னை குணம்பெறவே செய்தவர்க்கு எல்லாஞ்சித்தி
மாறாமல் கைபாகம் செய்பாகந்தான் மன்னவனே செய்தவர்க்கு எல்லாஞ்சித்தி
தூறான மார்க்கமது சென்றபேர்க்கு துப்புரவாய் யாதொன்றும் பலியாதன்றே

**6397.**
பலியாது குடிகெடுக்கும் பாவியோர்க்கும் பாங்கான சண்டாள துரோகியோர்க்கும்
வலிதான பவமுடைய கருமியோர்க்கும் வாகுடைய சிடிகையென்ற வேதைதானும்
நவியாளர் தங்களுக்கும் அவனாதியோர்க்கும் நற்பெண்டிர்களைக் கெடுத்த துரோகியோர்க்கும்
கலியுடைய சப்பாணி குருடருக்கும் சட்டமுடன் ஒருக்காலும் பலியாதன்றே
**6398.**
அன்றான போகரேழாயிரத்தில் வப்பனே கடைக்காண்டந் தன்னிலப்பா
குன்றான மலைபோலே கோடிகற்பம் கொட்டினேன் நாதாக்கள் அறிந்ததில்லை
தென்றிசையில் அகத்தியனார் காவியத்தில் தேற்றமுடன் வெகுகோடி பாடிவைத்தார்
வென்றிடவே சத்தகாண்டந் தன்னிலப்பா விருப்பமுடன் பாடிவைத்தேன் கோடியாமே
**6399.**
கோடியாமின்னமொரு கற்பஞ்சொல்வேன் கோபாலா என்குருவே குமரவேலா
வாடியே மயங்காதே மன்னாகேளு வளமையுடன் நாரையென்ற கற்பஞ்சொல்வேன்
தேடியே கருநாரை கொண்டாராய்ந்து தேற்றமுடன் குடல்போக்கி சிறகுபோக்கி
ஆடியதோர் சூதமென்ற பானைதன்னை வப்பனே யதன்வாயிற் புகட்டிடாயே
**6400.**
பகட்டவே இருவாயுந் தைத்துமல்லோ பொங்கமுடன் தாளியென்ற பாண்டந்தன்னில்
அகலமது சாணதுவும் விரல்தான் நாலு வப்பனே பூநீரைப் பரப்பிமைந்தா
நிகலவே நாரையென்ற பட்சிதன்னை நிஷ்களங்கமாகவல்லோ பாண்டம்வைத்து
புகலவே மேலுமந்த பூநீர்விட்டு புண்ணியனே மேற்பாண்டந் தன்னைமூடே

# போகரின் சப்த காண்டம் – 7000

6401.
மூடவே சீலையது வலுவாய்ச் செய்து முசியாமல் தானெரிப்பாய் இரண்டுசாமம்
நீடவே பட்சியது வந்துமல்லோ நீதியுடன் தீயாறி எடுத்துப்பாரு
கூடவே மேலிருந்த பாண்டம்நீக்கி குற்றமற மாமிசத்தை எடுத்துமைந்தா
சாடவே குழிக்கல்லில் தன்னிலிட்டு சட்டமுடன் இரும்புலக்கை தன்னாற்சாடே
6402.
சாட்டியபின் சூரணமாய்ச் செய்துகொண்டு சாங்கமுடன் சூரணத்தில் நாலுக்கொன்று
தாட்டிகமாய் பஞ்சமுஷ்டி தானுஞ்சேர்த்து சட்டமுடன் பஞ்சதிரவியங்களனைத்தும்
வாட்டமுடன் திரிகடுகு திரிபலாதி வகைவகைக்கு நாலுக்கொன்றுசேரு
பூட்டவே இத்தாதி சரக்கையெல்லாம் புகழ்பெறவே நெய்தேனும் விட்டுக்கிண்டே
6403.
கிண்டியே பரணிதனில் பதனம்பண்ணு கீர்த்திபெற வுண்பதற்கு விபரங்கேளு
தண்டகம்போல் இருவேளை யுண்பாயானால் தாட்டிகமாய் வாசியது மேல்நோக்காது
மண்டலந்தான் கொண்டவர்க்கு வாசியோகம் மகத்தான மார்க்கமெல்லாம் வழியேகாட்டும்
சண்டமாருதம்போலே இந்தகற்பம் சாங்கமுடன் உண்பவர்க்கு பலனைக்கேளே
6404.
கேளப்பா குளிகையது கொண்டபேர்க்கு கெடியான சின்மயத்தில் ஒடுக்கவாசி
நாளப்பா தன்மயமுங் காணாமற்றான் நலமான வாசிவழிக்கிடங்கொடுக்கும்
ஆளப்பா வாறாதாரத்தை காட்டும் வப்பனே யதிலொடுக்கம் கலைகள் ரெண்டும்
தேளப்பா கொட்டினதோர் விஷத்தைப்போலும் தேஜொளிவின் பூரணத்தைக் காணலாமே
6405.
காணலாஞ் சுழுத்தியிலே இருந்துகொண்டு கருவிகரணாதியந்தம் மேலேதொட்டு
பூணலாம் விசுத்தியிலே வாசிநாட்டி புகழ்பெறவே வனாகதத்தை மேலேபூட்டி
தோணவே சுடரொளியைத் தாக்கும்போது சூட்சமென்ற தலைதனையே பிரித்துக்காட்டும்
மாணவே மாயாதி சித்தரெல்லாம் மார்க்கமுடன் மறைத்துவைத்தார் உண்மைபாரே
6406.
உண்மையாய் வாசிதனை நடத்தும்போது வுத்தமனே சிகரமது மூஞ்சிக்காட்டும்
தண்மையாய் நடுமையம் மவுனம்பார்த்து தாக்குவாய் அங்கென்று கும்பித்தாக்கால்
வண்மையாஞ் சுழுத்தியிலே கலைதானோக்கும் வளம்பெறவே பூரணத்தைப் பதியக்காட்டும்
கண்மையாஞ் சுவாசமது கபாலம்பற்றி கைலாய வங்குலத்தை காட்டும்பாரே
6407.
காட்டுமே சூட்சமென்ற குதிரையாலே கதிரொடுங்கி சடாபோலே கண்பிதுங்கி
நீட்டமுடன் பஞ்சபூதங்கள் அனைத்தும் நிலையான ஒடுக்கவழி யடங்கநின்று
கூட்டமுடன் பிரிதிவினில் தேய்வுதங்கி குறிப்புடனே தேய்வினிலே வாய்வுதங்கி
காட்டிவே யாகாஸம் வப்பில்தங்கி கனமான யோகநிலை நிறுத்தும்பாரே
6408.
பாரேதான் கண்ணாலே மணக்கண்ணாலே பாங்குபெற யோகநிலை நடத்துதற்கு
சீரேதான் சித்துமுனி ரிஷிகள்தாமும் சிறப்புடனே குண்டலியாம் யோகந்தன்னை
நேரேதான் நெடுங்காலங் கற்பமுண்டு தேற்றமுடன் போகநிலையொடுக்கந் தன்னை
வேரேதான் கருவான நூல்கள்பார்த்து விட்டகுறை யிருந்ததென்று விட்டிட்டாரே

6409.
விட்டாரே தேவதா ரிஷிகளெல்லாம் விண்ணாடர் மண்ணாடர் மாண்பர்தாமும்
கெட்டாரே யோகநிலை சூட்சங்காணார் கேடழிந்து பாடழிந்து விழலாய்ப்போனார்
தொட்டகுறி போலாக வுந்தமக்கு தோறாமல் ஓதிவைத்தேன் புண்ணியவானே
விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால் வித்தகனே யுந்தமக்கு வமைக்கலாச்சே
6410.
ஆச்சப்பா காலாங்கி கிருபையாலும் வப்பனே மனோன்மணியாள் ஆசீர்மத்தால்
மூச்சடங்கி வாசியோகஞ் செய்வதற்கு முனையான காயாதி கற்பமெல்லாம்
வாச்சுதே புலிப்பாணி மன்னாகேளு வளம்பெறவே யுந்தனுக்கு யோகங்காண
மாச்சலென்ற யோகநிலை யுந்தமக்கு மகத்தான மகிமைகளும் போதித்தேனே
6411.
போதித்த யின்னமொரு மார்க்கம்பாரு புகழான புலிப்பாணி மகனேயப்பா
ஆதித்தன் சந்திரன்போல் யுந்தமக்கு வப்பனே யானுரைப்பேன் மகிமைபாரு
ஜொதிமய மானதொரு மயிலின்முட்டை சுந்தரனே மனதுவந்து முட்டைதன்னில்
பாதிமதி விந்துடனே யாயிநாதம் பாங்குபெற தானெடுப்பாய் களஞ்சியொன்றே
6412.
ஒன்றான களஞ்சியது வகைவகைக்கு வுத்தமனே தானெடுத்து செப்பக்கேளிர்
குன்றாமல் முட்டைதனில் துவாரமிட்டு குறையாமல் சரக்கெல்லாம் அடைத்துமைந்தா
வென்றிடவே சீலையது வலுவாய்ச் செய்து விவரமுடன் துவாரமதை மறைத்து மைந்தா
சென்றிடவே பாண்டமதில் மணல்தான்கொட்டி செழித்துமே மேலுமந்த மணலைக்கொட்டே
6413.
கொட்டியே மேற்பாண்டந் தன்னைமூடி குமுறவே சீலையது வலுவாய்ச் செய்து
சட்டமுடன் வாலுகையாம் ஏந்திரத்தில் சாங்கமுடன் தானெரிப்பாய் நாலுசாமம்
பட்டயம் போல் மணலதுவஞ் சிவந்தபிண்பு பாலகனே எடுத்துப்பார் அண்டந்தன்னை
நட்டமென்ன காயாதிக் குறுதியாச்சு நலம்பெறவே கவசமதைப் பிரித்துவாங்கே
6414.
வாங்கியே கவசமதை யெறிந்துபோடு வளம்பெறவே யண்டமதை யுரலிலிட்டு
தூங்கியே திரியாதே இரும்புலக்கை துப்புரவாய்த் தான்கொண்டு ஜாடும்போது
பாங்குபெற மெழுகதுவும் என்னசொல்வேன் பாரினிலே நாதாக்கள் மறைத்துவைத்தார்
ஏங்கியே இருந்தாக்கால் என்னசித்தி எழிலான கற்பமதைத் தேடிக்கொள்ளே
6415.
கொள்ளவே நயம்பெறவே கற்பந்தன்னை குணபாகங் கைபாகஞ் செய்பாகத்தால்
மெள்ளவே குளிகைதனை முடித்துக்கொண்டு மேதினியில் நீயுமொரு சித்தனைப்போல்
உள்ளதொரு வேஷமதை விடுத்துமல்லோ வுத்தமனே சிவராஜ யோகன்போலே
விள்ளவே நெடுங்கால மிருப்பதற்கு விருப்பமுடன் காயாதி கற்பமுன்னே
6416.
உண்ணவே மண்டலந்தான் அந்திசந்தி வுத்தமனே மயில்கற்பங்கொண்டாயானால்
திண்ணமுடன் நரைதிரையு மற்றுப்போகும் தீர்க்கமுடன் நெடுங்காலம் இருக்கலாகும்
வண்ணமுடன் காயாதி கற்பத்தாலே வளமான வாசிதனை நடத்தலாகும்
திண்ணமுடன் காலாங்கி நாதர்தானும் சட்டமுடன் எந்தனுக்கு ஓதினாரே

6417.
ஓதவே காயாதி கற்பந்தன்னை வுத்தமனே யுந்தனுக்கு உரைத்தேனப்பா
நீதமுடன் காயாதி கற்பமுண்டு நீணிலத்தில் நீயுமொரு சித்தனைப்போல்
தோதகமாய் என்காலஞ்சென்ற பின்பு துப்புரவாய் லோகாதிலோகமெல்லாம்
சாதகமாய்த் தான்திரிந்து மைந்தாநீயும் சட்டமுடன் சீனபதிக்கேகுவீரே
6418.
ஏகவே யுந்தமக்கு வரமுந்தந்தேன் எழிலான மகிமையெல்லாந் தானுரைத்தேன்
போகவே குளிகையது பூண்டுகொண்டு பொங்கமுடன் காயாதி கற்பமுண்டு
சாகாம லிருப்பதற்கு வினயங்கொண்டு சட்டமுடன் காயாதி கற்பந்தன்னை
ஆகாயந் தனிற்செல்ல குளிகைதானும் அப்பனே யுந்தமக்கு தந்திட்டேனே
6419.
தந்தேனே என்றுசொல்லி போகர்தாமும் சட்டமுடன் சீனபதிக் கேகியல்லோ
அந்தமுடன் சீனபதிப் பெண்களுக்கு யவனிதனில் நடந்ததொரு வதிசயங்கள்
சொந்தமுடன் தாமுரைத்து சித்துதாமும் சுந்தரனார் காலாங்கி சமாதிபக்கல்
விந்தையது யின்னமிகக் காணவென்று விருப்பமுடன் குளிகையிட்டு சென்றிட்டாரே
6420.
சென்றாரே சீனபதிக் கடலோரத்தில் சிறப்புடனே போகமுனிநாதர்தாமும்
வென்றிடவே சிலநாளங்கிருந்துமல்லோ வேகமுடன் மேருவடபாகத்தில்
குன்றான மலையோரஞ் செல்லும்போது கூறான சாம்பலென்ற குகையோரத்தில்
அன்றுமல்லோ செம்புரவி தன்னைத்தானும் அங்ஙெனவே போகர்முனி கண்டார்தாமே
6421.
தானான குளிகையது பூண்டுகொண்டு தாரணியில் வடபாகங் குகையோரத்தில்
மானான மகமேரு தன்னைப்போலே மகத்தான வசுவதா புரவிதன்னை
பானான சூரியன்போல் புரவிதானும் பாங்குடனே கண்டவரும் பிரமித்தேங்கி
தேனான மனோன்மணியை மனதிலுன்னி தேற்றமுடன் பிறவியிடம் இறங்கினாரே
6422.
இறங்கியே போகரிஷி முனிவர்தானும் யெழிலான செம்புரவி யருகில்வந்து
திறமுடனே குளிகையது விட்டுமல்லோ தீர்க்கமுடன் அஞ்சலித்து கரங்குவித்து
நிறமுடைய செம்புரவி தன்னைக்கண்டு நிட்களங்கமான பரவசமுங்கொண்டு
குறவனைப்போல் சித்துமுனி ரிஷியார்தாமும் கும்பிட்டு முடிவணங்கி பணிந்திட்டாரே
6423.
பணிந்துமே போகரிஷி முனிவர்தாமும் பட்சமுடன் முடிவணங்கி நிற்கும்போது
மணியான செம்புறவி தானுங்கண்டு மகத்தான போகரிஷி யாரென்றென்னை
அணியான காலாங்கி நாதர்பாதம் அவர்பாத சீஷனென்று யானுரைத்தேன்
துணிவுகொண்டு வடியேனுங் கூறும்போது துப்புரவாய் என்மீதில் கருணையாச்சே
6424.
கருணையெனும் வாய்மொழியை யறிந்துயானும் கர்த்தாவே எந்தனையாதரிக்கவென்று
அருணனைப்போல் மின்னுகின்ற புரவிதன்னை அடிவணங்கி முடிவணங்கி தொழுதேன்யானும்
வருணரிஷி வளர்த்ததொரு புரவியொன்று வாகுடனே யாசீர்மம் மிகவுங்கூறி
தருணமது வந்ததொரு காரியத்தை சாங்கமுடன் உரைக்கவென்று கேட்கலாச்சே

6425.
கேட்கவே போகரிஷி முனிவர்தானும் கெடியான லோகாதிதேசமெல்லாம்
மீட்கமுடன் குளிகைகொண்டு சுத்திவந்தேன் மிக்கான பதிதனையே காணவென்று
வாட்டமுடன் தெரிசனைக்கு வந்தேன்யானும் வளமான காலாங்கி கடாட்சத்தாலே
தேட்டமுடன் எந்தனுக்கு தெரிசனைத்தான் தேவனே கிடைத்துதென்று பணிந்திட்டாரே
6426.
பணிந்தாரே போகரிஷிநாதர்தாமும் பாங்கான செம்புரவி யாதுகூறும்
துணிவுடனே குளிகைபூண்டு யிங்கேவந்து துய்யதொரு சிறுபாலா வுந்தனுக்கு
மணியான வுபதேசஞ் செய்வேனென்று மார்க்கமுடன் செம்புரவி கூறியல்லோ
பணிபோன்ற செம்புரவி மாலையொன்று பட்சமுடன் தான்கொடுத்து மதிக்கலாச்சே
6427.
மதிக்கவே நவரத்தின மாலையொன்றும் மன்னவனார் போகரிஷி நாதருக்கு
துதிக்கவே நெடுங்கால மிருப்பதற்கும் துடியான கற்பமென்ற மார்க்கந்தானும்
நதிராகத் தான்கொடுத்து அசுவந்தானும் நயம்பெறவே கருவுவளவானதெல்லாம்
கதிர்போன்ற போகரிஷிநாதருக்கு கனமாகத் தான்கொடுத்து கருதலாச்சே
6428.
கருதவே காலாங்கி நாதர்தம்மை கனமுடனே கேட்டதொரு புண்ணியத்தால்
பொருந்தவே போகமுனி நாதருக்கு பொங்கமுடன் உபதேசஞ் செய்யவெண்ணி
அருமையுடன் மூலிகற்பமானதெல்லாம் வன்புடனே கொண்டுபோய் மனதுவந்து
பெருமைபெற சதாகாலம் வையகத்தில் பேரான மகிமைதனை கூறும்பாரே
6429.
பாரேதான் போகரிஷி நாதாகேளும் பாருலகில் வந்ததொரு குளிகைபாலா
சீருடைய சித்தாதி முனிவர்தாமும் சீரான கானகத்தில் அனேகருண்டு
வீறுபுகழ் நாதாக்கள் சபிப்பாரப்பா வித்தகனே யுந்தமக்குத் தீங்குநேரும்
மாறுபாடானதொரு வார்த்தைகூறி மன்னவனே மதிமோசஞ் செய்வார்தானே
6430.
தானான காலாங்கி சித்துபாலா தண்மையுடன் யுந்தனுக்கு மூலிகற்பம்
கோனான மலைதனிலே சென்றுயானும் கொற்றவனே யுந்தனுக்கு மூலிகற்பம்
தேனான செம்புரவி யுண்டகற்பம் தேசமதில் மாண்பரெல்லாம் காணாகற்பம்
பானான சூரியனார் காணாகற்பம் பட்சமுடன் மனதுவந்து கொடுக்கலாச்சே
6431.
கொடுக்கவே வருணரிஷி தன்தனக்கு கொற்றவனார் உபதேசஞ் செய்தமூலி
நடுக்கடலில் கருஷ்ணாவதாரங்கொண்ட நலமான கண்ணபிரான் மூலிதன்னை
அடுத்துமே ஆகாஸந் தான்பறந்து அலைகடலில் மையமதில் இறங்கியல்லோ
எடுத்துமே வாய்தனிலே கவ்விக்கொண்டு பசரியே மேற்பறந்து வருகலாச்சே
6432.
தருகவே மூலிதனை சாபந்தீர்த்து சட்டமுடன் போகரிஷி நாதருக்கு
குருவுரைத்த கற்பமென்ற மூலிதன்னை குவலயத்தில் ஒருவருக்கும் விள்ளாதப்பா
சருகுடைய மூலியின்தன் கற்பத்தாலே லட்சாதி கோடிவரை இருக்கலாகும்
திருவருளால் உந்தனுக்கு எல்லாஞ்சித்இ தீர்க்கமுடன் மூலிதனைப் பெற்றுக்கொள்ளே

6433.
கொள்ளவே யென்றுமல்லோ மனதுவந்து கொற்றவர்க்கு மூலிதனைக்கொடுத்துமேதான்
எள்ளளவும் நாதாந்த சித்தர்தம்மால் எளிதாக ஏற்றமது நேராமற்றான்
உள்ளபடி ஞானோபதேசமார்க்கம் வுத்தமனே தான்கொடுத்து வதிதங்கூறி
தெள்ளமுர்தமானதொரு மாயாகற்பம் தெளிவுடனே செம்புரவி யீயலாச்சே
6434.
ஆச்சப்பா புலிப்பாணி மகனேகேளு வட்டதிசை தான்கடந்து புரவிகண்டேன்
பாச்சலுடன் குளிகையது மனதுவந்து பட்சமுடன் கண்ணபிரான் உண்ணகற்பம்
மூச்சடங்கி வருணரிஷி கொண்டகற்பம் முனையான வசுவமது வுபதேசத்தால்
ஆச்சரிய மானதொரு கற்பந்தன்னை வன்புடனே பெற்றுவந்தேன் என்றிட்டாரே
6435.
என்னவே காலாங்கி நாதர்தம்மால் எழிலான எட்டுதிசை குளிகைகொண்டேன்
பன்னவே வசுவதா கடாட்சத்தாலே பாலகனே பெருங்கற்பம் யானுங்கண்டேன்
துன்னவே தேவதா ரிஷிவரத்தால் துப்புறவாய் மகமேரு கற்பங்கொண்டே
உன்னவே புஜண்டமகாரிஷி சாபத்தால் வுத்தமனே பற்பமது பெற்றிட்டேனே
6436.
பெற்றேனே சிங்கிந்தா ரிஷிவனத்தில் பேரான குளிகைகற்பம் யானுங்கொண்டேன்
கற்றதொரு முதலைகற்பம் யானுங்கொண்டேன் கருவான பச்சைவண்ணப் புரவிகற்பம்
வெற்றியுடன் இமயகிரி பர்வதத்தில் வேகமுடன் யேழுவரை சென்றேன்யானும்
பற்றியங்ஙன மேலிருந்த தேவர் பாங்கான ரிஷிநாதர் முனிகண்டேனே
6437.
கண்டேனே யவரிடமும் குளிகைகொண்டேன் காணவே மற்றொரு வகையுங்கண்டேன்
விண்டபொருள் இருபத்தோர் வரையுஞ் சென்றேன் விட்டகுறை இருந்ததுவும்
வனைத்துங்கண்டேன்
கொண்டல்முடி யச்சுதனார் மூலிகற்பம் கொடிதான சஞ்சீவி யனைத்துங்கண்டேன்
சண்டமாருதம்போலே புரவிகற்பம் சாங்கமுடன் கண்டேன் என்றிட்டார்தானே
6438.
தானான புரவியது எந்தனுக்கு தண்மையுள்ள கற்பமது கொடுத்ததாலே
கோனான எந்தேவர் காலாங்கிநாதர் கொற்றவனார் பாதமது கடாட்சத்தாலும்
தேனான மனோன்மணியாள் கிருபையாலும் தேற்றமுடன் கற்பமது கொண்டுமல்லோ
பானான வையகத்தில் பகைவர்தம்மை பட்சமுடன் வென்றுமல்லோ ஜெயித்திட்டேனே
6439.
இட்டேனே புலிப்பாணி மைந்தாகேளு எழிலான கற்பமதை யாருக்குந்தான்
தொட்டகுறி போலாகச் சொல்லிவந்தேன் துரைராஜ சுந்தரனே யுந்தமக்கு
விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால் விருப்பமுடன் உந்தனுக்கு யுபதேசித்தேன்
சட்டமுடன் எந்நாளுங் காலாங்கிபாதம் சதாகாலந்தான் வணங்கிவாழுவீரே
6440.
வாழ்கவே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வளமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு
தாழ்கவே லவணமது இருபத்தைந்து தப்பாமல் வகையொன்றுக் களஞ்சிவீதம்
மூழ்கவே குழிக்கல்லில் தன்னைவிட்டு முனையான காடியென்ற நீராலப்பா
நீழ்கவே முன்சொன்ன காடிதானும் முசியாமல் தானெடுத்து வரைத்திடாயே

6441.
அரைத்துமே நாற்சாம மானபின்பு வன்பாக பில்லையது லகுவாய்ச்செய்து
குறையாது ரவிதனிலே காயவைத்து குணமாக சில்லிட்டுச் சீலைசெய்து
முறைதானும் பிசகாமல் பின்னுமப்பா முசியாமல் கோழியென்ற புடந்தான்போடு
நிறைபோலே தீயாறி யெடுத்துப்பாரு நிட்களங்கமானதொரு பற்பமாச்சே
6442.
ஆச்சப்பா லவணமதை எடுத்துமைந்தா வப்பனே முன்போலே காடியாலே
மூச்சடங்கத் தானரைப்பாய் நாலுசாமம் முசியாமல் முன்போலே சீலைசெய்து
மாச்சலுடன் ரவிதனிலே காயவைத்து பாங்குபெற புடந்தனையே போடுபோடு
மாச்சலது வாராது லவணபற்பம் மகத்தான நாதாக்கள் வித்தையாச்சே
6443.
வித்தையாம் லவணமென்ற பற்பந்தன்னை வீறுடனே இரண்டுபத்து புடமேபோடு
சுத்தமுள்ள பற்பமது என்னசொல்வேன் சுந்தரனே நாதாக்கள் செய்யும்வேதை
சத்தியமாய் யானறிந்த மட்டுமல்லோ தண்மைபெற வுந்தனுக்கு வோதினேன்யான்
புத்தியுள்ள பூபாலா புண்ணியவானே புகழுடனே செய்துகொண்டால் சித்திதானே
6444.
தானேகேள் புலிப்பாணி மகனேயப்பா தண்மையுள்ள லவணவகை இருபத்தைந்து
மானேகேள் எந்தனது நிகண்டிலப்பா மகத்தான வாயிரத்து எழுநூற்றுக்குள்
கோனான என்குருவின் கடாட்சத்தாலே கொற்றவனே லவணவகை இருபத்தைந்தும்
மானான பேர்கண்டு விடையுங்கண்டு மகத்தான யினங்கண்டு சேர்வைகாணே
6445.
காணவே லவணவகை பற்பந்தன்னை கருவாக முடித்தவர்க்கு யெல்லாஞ்சித்தி
பூணவே பாஷாண முப்பத்திரண்டும் புகழாக லவணவகை பற்பத்தாலே
ஆணவங்கள் தானொடுங்கி யடங்கிக்கொல்லும் ஆராதாரத்தைத்தான் மறைத்துவைத்தார்
வேணதொரு சரக்கெல்லாம் லவணத்தாலே விஷங்கொண்டு மடிந்தல்லோ முடியும்பாரே
6446.
பாரேதான் லவணமதைக் கொண்டபோது பாலகனே தேகமது சுசிவேயில்லை
நேரேதான் கந்தமது இருக்கிக்காட்டும் நேர்மையுள்ள தேகமது வுளுப்பேயில்லை
சீரேதான் காயாதி கற்பமாகும் சிறப்பான லவணத்தின் பற்பமல்லோ
வீரேதான் கவனமென்ற காரத்தாலே வெகுவித்தை யாடுதற்கு யினமுங்கேளே
6447.
கேளேதான் பற்பமது தானெடுத்து கெடியான வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
நீளவே களஞ்சியது ஒன்றுதாக்க நிட்களங்கமானதொரு குருவினாலே
பாளமென்ற வெள்ளியது பழுக்கும்பாரு பாருலகில் நாதாக்கள் செய்யும்வேதை
ஆளாவ மாற்றதுவும் என்னசொல்வேன் வப்பனே பதினாறு மாற்றுகாணே
6448.
காணவே சிவயோகி மாண்பருக்கு கருவான லவணமென்ற தங்கந்தானும்
பூணவே பூசைமுகஞ் சொன்னதல்லால் புகழான வையகத்து மாண்பருக்கு
வேணபணி செய்வதற்கு சொன்னதல்ல வேதைமுகந் தங்கமென்ற லவணந்தன்னை
மாணமருங் கல்வியுள்ள வேடத்தோர்க்கு மகத்தான சிவயோகிக்காகும்பாரே

6449.
பாரேதான் புலிப்பாணி மன்னாகேளு பாருலகில் கருமியுள்ள மாண்பருண்டு
நேரேதான் அவர்வாசல் காத்துநின்று நேர்மையுள்ள பழக்கமது செய்யவேண்டும்
சேரேதான் கிட்டிருந்த பழக்கத்தாலே சேர்வையுடன் மனதுவந்து நூல்கள் கூர்வார்
வீரேதான் வாதமென்ற போக்கைக் கேட்பார் வேறுபடதூறுபட மயங்குவாரே
6450.
மயங்குவார் பலநூலு மறிந்தாற்போலே மார்க்கமெல்லாந் தெரிந்ததொரு மவுனிபோலும்
தியக்கமுடன் நூல்பார்த்துத் தெரிந்தோர்போலும் தீர்க்கமுடன் பவமகற்றி இருந்தோர் போலும்
தயக்கமது கொண்டல்லோ வாதுகூறி தப்பாமல் வேதைமுகங் கேட்பார்பாரு
நயம்படவே யவர்களுக்கு யிதவுகூறி நன்மையுடன் இருப்பதுவும் நன்றாய்பாரே
6451.
நன்றான வார்த்தையது மிகவுங்கூறி நலம்பெறவே யவர்களுக்கு மதிகள்கூறி
குன்றான சாத்திரங்கள் கற்றநீங்கள் குவலயத்தில் வேதைமுகம் வேணதுண்டு
வென்றிடவே யுந்தமக்கு வேறுண்டோசொல் வேதாந்த சித்துமுனி யார்தானுண்டோ
சென்றவர்கள் மடிந்தவர்கள் கோடாகோடி ஜெகதலத்தில் உம்மைப்போல் சித்துகாணே
6452.
சித்தான நாதரையாம் கண்டதில்லை சிறப்புடைய நாதரவர் நீர்தானென்று
புத்தியுள்ள பூபால ரும்மைப்போல பூவுலகில் பெரியோரைக் கண்டதில்லை
சத்தியத்தில் மிகுந்ததொரு தருமவான்போல் சட்டமுடன் முகதாவில் வந்தீரென்று
புத்தியுடன் தந்திரமாய் வார்த்தைகூறி புனிதனே விட்டகற்றல் மெத்தநன்றே
6453.
நன்றான வார்த்தையது மிகவுங்கூறி நலமுடனே பொய்ப்புகட்டு யாவுங்கூறி
சென்றிடவே பின்தொடர்ந்து வழிதான்விட்டு ஜென்மமுளஃள ஜீவந்தானுள்ளமட்டும்
வென்றிடவே யெப்போதும் மறக்கேனென்றும் வேதாந்த சித்தொளிவைப் பணிவேனென்றும்
குன்றியே முகம்வாடி மனதுவந்து குருபரனே தந்திரமாய்ப் பணிகுவாயே
6454.
பணியவே கருமியென்ற சீடருக்கு பாலமுர்தம் உண்டதொரு சந்தோஷம்போல்
கணிதமுடன் தமக்குகந்த சீடனென்று கருத்துடனே யுன்மீதிற் பட்சம்வைத்து
அணிபெறவே விழியில்லான் என்றுவந்து வப்பனே கடாட்சமது மிகப்புரிந்து
துணிவுடனே யுன்மீதிற் கிருபைவைத்து துப்புரவாய் பற்பமது கொள்ளார்தானே
6455.
தானான புலிப்பாணி மைந்தாகேளு தண்மையுள்ள நல்லோருந் தீங்கோருண்டு
கோனான குருக்கள் மார்யோகிமாண்பர் கொற்றவனே ஜெகதலத்தில் மெத்தவுண்டு
தேனான வார்த்தையது மிகவுஞ்சொல்வார் தெள்ளமுர்தமானதொரு நேசஞ்செய்வார்
பானான சீடன்மேல் பட்சம்வைத்து பகட்டுவார் மெய்பகட்டு வதிகம்பாரே
6456.
பாரப்பா லோகமென்ற மாரணத்தை பக்குவமாய் பகருகிறேன் மன்னாகேளு
ஆரப்பா லோகமாரணத்தைச் சொன்னார் வப்பனே சொன்னவர்கள் மறைத்துச் சொன்னார்
நேரப்பா யுந்தனுக்கு சிடிகைவேதை நேர்மையுடன் நானுரைப்பேன் நீதியாக
கூரப்பா செம்பதுவும் பத்தேயாகும் குறிப்பான வெள்ளியது ரெண்டுதானே

6457.
தானான நாகமது ஒன்றேயாகும் தாக்குடனே பதின்மூன்றும் ஒன்றாய்க்கூட்டி
தேனான செம்பதனை யூதிப்போடு தேற்றமுடன் சுத்தித்த செம்புதன்னை
மானான செம்புதனைப் பதனம்பண்ணு மகத்தான போகும்கை வரிசைகேளு
கோனான தங்கமது ஒன்றேயாகும் குறிப்பான வெள்ளியது ஒன்றுகாணே
6458.
காணவே நாகமது ஒன்றேயாகும் கனமான சூதமது ஒன்றேயாகும்
தோணவே முன்னுரைத்த செம்புதன்னில் தோறாமல் ஓரிடைத்தான் எடுத்துக்கொண்டு
பூணவே மூவகை ஜெயநீராலே புகழாகத் தானரைப்பாய் சாமமப்பா
மாணவே சரக்கெல்லா மறைத்தபின்பு மார்க்கமுடன் மாத்திரைகள் ஐந்துபாரே
6459.
செய்யவே வெள்ளிதனில் பத்துக்கொன்று செம்மலுடன் தானுருக்கி குருதானொன்று
பையவே கண்விட்டு ஆடும்போது பாகமுடன் தானுருக்கி குருவொன்றீய
துய்யதொரு வெள்ளியது மாற்றாறாகும் துப்புரவாய்ப் பசுமையது சொல்லப்போமோ
மெய்யான வித்தையது யேமவித்தை மேதினியில் செய்வர்களில்லைதானே
6460.
இல்லையே பத்துக்கோர் தங்கஞ்சேர்த்து யெழிலான வாரடித்துப் புடத்தைப்போடு
தொல்லையெனும் பிறவியது மாறாத்தங்கம் சயத்தங்கம் புடத்தங்கம் பசுமைத்தங்கம்
அல்லலது போக்கடிக்கும் அருமைத்தங்கம் ஆகாகாநாதாக்கள் மறைத்ததங்கம்
கல்லிலது விளைந்ததொரு தங்கந்தானும் கருவான தங்கமிதற் கொவ்வாதன்றே
6461.
அன்றான தங்கமது என்னசொல்வேன் அரகர நாதாக்கள் ஒளித்ததங்கம்
குன்றான சாத்திரத்தில் மறைத்ததங்கம் கோவேந்தர் சுட்டலைந்து கெட்டதங்கம்
வென்றிடவே யுந்தமக்கு ஓதிவைத்தேன் வேதாந்தக் கண்மணியே புத்திவானே
கன்றில்லாப் பால்கறந்த கதையைப்போல காசினியில் சித்தரெல்லாம் ஒளித்தார்தானே
6462.
தாமான யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி தம்பிரானே
கோமானுக் கொப்பான கோவேகேண்மோ குவலயத்தில் எந்தனிட சத்தியவானே
ஆமான மானதொரு சாத்திரங்கள் வப்பனே வெகுகோடி நூல்கள்பார்த்து
சாமானிய மானதொரு சூதவெள்ளி சாற்றுகிறேன் சன்மார்க்க புனிதவானே
6463.
புனிதமாஞ் சூதமது துலாமேவைந்து புகழான காடியென்ற காரந்தானும்
கனிவுடனே காரமது ஒன்றேயாகும் கனமான மூசைதனிலிட்டு மைந்தா
பனிபோன்ற வாறுவகை ஜெயநீர்தன்னால் பாங்குடனே மூசைதனில் நிறையவிட்டு
இனிதாக கலசமென்ற மண்பாண்டத்தில் எழிலாக மணலிட்டு மூசைவையே
6464.
வைத்துமேல் மூடிசீலைசெய்து வளமாக மேலுமந்த மணலைக்கொட்டி
சத்தமது போகாமல் பாண்டமிட்டு சதுராக சீலையது வலுவாய்ச்செய்து
சுத்தமுடன் கணபதியைப்போற்றி செய்து சுந்தரனே நாற்சாம மெரிப்பாயப்பா
துத்தமெனுங் காடியென்ற சாரத்தாலே துடியான சூதமது மடியலாச்சே

6465.
ஆச்சப்பா பாண்டமதை திறந்துமைந்தா வப்பனே மூசைதனில் இருக்குஞ்சத்தை
பாச்சலென்ற சூதமது வெண்ணைதன்னை பக்குவமாய் வருத்தெடுத்து பீங்கானிட்டு
மூச்சடங்கிப் போனதொரு சூதந்தன்னில் முசியாமல் கல்லுப்பு துலாமேபோடு
மாச்சலுடன் சூதமென்ற வெண்ணைதானும் மார்க்கமுடன் உருகியல்லோ நிற்கும்பாரே
6466.
நிற்குமே சூதமென்ற வெண்ணைதன்னை நீதியுடன் மூசையிட்டு வுருக்கிப்பாரு
அற்பமென்று நினையாதே யறிவுள்ளேனே ஆகாகா வானத்து மீன்தானாச்சே
சொற்பமென்று நினையாமல் ரவிவான்சேர்த்து துப்புரவாய் பூசையது செப்பக்கேளு
துற்கையென்ற காளிக்குப் பூசைபோடு துறையான வெள்ளிமுகங் காணலாமே
6467.
காணலாம் சூதமென்ற வெள்ளிதன்னை காசினியில் நாதாந்த சித்தர்தாமும்
பூணலாம் சித்துமுனிக்கான வேதை பூவுலகில் சமுசாரிக்கான வேதை
வேணபடி சூதமதைக் கொன்றபேர்க்கு வெகுபாடு வெகுகேடு குஷ்டரோகம்
ஆணவங்கள் தானொடுங்கி வழிந்துதேகம் வப்பனே சகரோகமாவார்பாரே
6468.
பாரப்பா சூதமதைக் கொன்றபேர்கள் பாருலகில் வெகுபேர்கள் மடிந்தாரப்பா
நேரப்பா தவயோகி வேடம்பூண்ட நிஷ்களங்கமானதொரு சிவயோகிக்கும்
கூரப்பா வித்தையது பலிக்கும்பாரு குவலயத்தில் மற்றோர்க்கு பலியாதப்பா
ஆரப்பா புலிப்பாணி புனிதவானே அன்புடனே யானுரைத்தேன் பண்பாய்க்கேளே
6469.
பண்பான புலிப்பாணி பாலாகேளீர் பகருகிறேன் சூதமென்ற செந்தூரத்தை
நண்பான நூல்களுள் வாராய்ந்தேதான் நாதாந்த சித்துமுனி யறிந்துமல்லோ
திண்பான செந்தூரப் போக்குதன்னை திசைமாறி யடைமாறி பிரட்டல்செய்து
உண்மையாய் சொன்னதொரு மொழியைப்போலே உவமைகொண்டு பாடிவைத்தார் பேதந்தானே
6470.
பேதமாம் சூதமென்ற வெண்ணைதானும் பேரான கெந்தியென்ற திராவகத்தால்
நீதமுடன் தானரைப்பாய் யிரண்டுசாமம் நிர்மலமாய் சூதமதை மடிந்துகொள்ளும்
போதமுடன் வாசியென்ற குப்பிதன்னில் பொங்கமுடன் மாக்கல்லால் கொண்டுமூடி
வாதமது பலிப்பதற்கு மெய்யேயானால் வளமான சீலையது வலுவாய்ப்போடே
6471.
போடேநீ குப்பிக்கு சீலையேழு பொங்கமுடன் வாயைவிட்டு சீலைசெய்து
கூடேநான் தளவாயாம் பாண்டந்தன்னில் கொற்றவனே மணலிட்டுக் குப்பிவைத்து
நாமேதான் குப்பிதனில் மணலுமிட்டு நயமாக மேல்மூடி சீலைசெய்து
ஆடேநீ நாற்சாம மெரித்தபோது வப்பனே செந்தூர மாகும்பாரே
6472.
பாரேதான் செந்தூரந் தனையெடுத்து பாங்குடனே நாதாக்கள் சொன்னமார்க்கம்
சேரேதான் வெள்ளியது களஞ்சிநூறு தேற்றமுடன் தானெடுத்து குகையிலிட்டு
கூரேதான் தானுருக்கி மைந்தாகேளு குறிப்புடனே குருவொன்று தன்னிலீய
வீரேதான் வர்ணமது என்னசொல்வேன் வீறான போக்கதுவும் கூறப்போமோ

6473.
போமேதான் வெள்ளிதனை யுருக்கிப்பார்க்க போக்கான வெள்ளியது தங்கமாச்சு
நாமேதான் சொன்னபடி தங்கமாற்று நாதாக்கள் தம்மாலே கூறப்போமோ
வேமேதான் பிறவியென்ற தங்கந்தானும் வேதாந்தத் தங்கமது இதற்கீடுண்டோ
ஆமஏதான் சிவயோகத் தங்கமாகும் அப்பனே காலாங்கித் தங்கமாமே
6474.
தங்கமா மின்னமொரு போக்குசொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி தயவாய்க் கேளு
வங்கமதைத் தான்கொடுத்து வூதிற்செம்பை வளமாகத் தானுருக்கி எடுத்துமைந்தா
துங்கமுள்ள செம்பதனில் நூற்றுக்கொன்று துப்புரவாய்த் தானுருக்கிக் குருவொன்றீய
பங்கமிலாத் தங்கமது என்னசொல்வேன் பாருலகில் சிவயோகிக் காணலாச்சே
6475.
ஆச்சப்பா செம்பதுவுந் தங்கமாச்சு வப்பனே நாதாக்கள் மறைத்துவைத்தார்
மாச்சலது வாராது தங்கச்செம்பாம் மகத்தான தங்கமது இதற்கீடுண்டோ
பூச்சுடைய பிறவியென்ற தங்கரேக்கு புகலவொண்ணா சுயத்தங்கம் இதற்கீடுண்டோ
ஆச்சர்ய மானதொரு தங்கமாச்சு வப்பனே நாதாக்கள் மறைத்தார்தானே
6476.
தானான தங்கமதைத் தானெடுத்து தண்மைபெற வெள்ளிதனில் பத்துக்கொன்று
கோனான குகைதனிலே விட்டுருக்கி கொற்றவனே செம்பதுவும் ஒன்றேயீந்தால்
தேனான வெள்ளியது பழுக்கும்பாரு தேற்றமுடன் மாற்றதுவுங் கூறப்போமோ
மானான தேவேந்திரன் வீற்றிருக்கும் மகத்தான வாணியென்ற தங்கமாச்சே
6477.
ஆணியா மின்னமொரு போக்குசொல்வேன் வப்பனே புலிப்பாணி மைந்தாகேளு
காணியாஞ் செந்தூரம் எடுத்துமைந்தா காத்துடனே குடவனிலே நூற்றுக்கொன்று
வாணிபதந் தான்வணங்கி கொடுத்துப்பாரு வளமான குடவனது வூறலேகி
ஆணியாந் தங்கமது கொப்பேசொல்வார் வப்பனே இந்திரபீட தங்கமாச்சே
6478.
இந்திரனார் வீற்றிருக்கும் ஆணித்தங்கம் எழிலானத் தங்கமது எவர்தான்செய்வார்
சுந்தரம்போல் சிவவேடம் பூண்டுமல்லோ துப்புரவாய்த் தானிருக்கும் யோகவான்கள்
விந்தையுடன் வினோதமென்ற வேதைதன்னை விருப்பமுடன் செய்துமல்லோ மனதுவந்து
அந்தரமெலாம் புகழவரமும்பெற்று வப்பனே வசித்திருப்பார் போகமாண்பே
6479.
மாண்பான யின்னமொரு போக்குசொல்வேன் மகத்தான புலிப்பாணி மன்னாகேளு
ஆண்மையுள்ள காலாங்கி நாதர்பாதம் வப்பனே நான்வணங்கி சீனதேசம்
வீண்காலம் போகாமல் குளிகைகொண்டு விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால்
தாண்டவவ்போல் தேசாதி தேசமெல்லாம் சற்குருவைத் தானடுத்து வரம்பெற்றேனே
6480.
பெற்றேனே காலாங்கி கடாட்சத்தாலும் பெருமையுள்ள மனோன்மணியாள் கிருபையாலும்
கற்றறிந்த நாதாக்கள் அருளினாலும் கைலாசநாதருட புண்ணியத்தால்
சற்றெங்குந் தேடியல்லோ கண்டாராய்ந்து சத்தமுடன் வேதைமுகம் உளவுகண்டு
பெற்றதொரு மைந்தனைப்போல் என்னையெண்ணி பெருமையுள்ள மார்க்கமெலாம்
ஓதினேனே

6481.
ஓதினேன் சிடிகையென்ற வேதையப்பா வுத்தமனே வெடியுப்பு ஐந்தாங்காய்ச்சல்
தீதில்லா வுப்பதுவுங் கப்பியுப்பு தீர்க்கமுடன் பலமைந்து நிறுத்துமைந்தா
ஆதியென்ற முப்பூவைப் பழச்சாற்றாலே வப்பனே தானரைத்துக் கவசஞ்செய்து
ஜோதிமயந் தான்பெறவே ரவியில்வைத்து சோராமல் சீலையது வலுவாய்ச் செய்யே
6482.
செய்யவே கோழியென்ற புடத்தைப்போடு செயலான வுப்பதுவுங் கட்டிப்போச்சு
பையவே வுப்பதுவுங் கட்டிற்றானால் பாலகனே யேமமென்ற செடியுமாச்சு
துய்யதொரு வுப்பாலே எல்லாஞ்சித்தி துப்புரவாய் ஜெகத்தொளிவை யற்றபேர்க்கு
உய்யதொரு பொருளெல்லாந் தோயும்தோயும் வுத்தமனே வெடியுப்பைக் கண்டோர்க்காமே
6483.
கண்டவர்கள் உப்பினிட மார்க்கந்தன்னை காட்டார்கள் கருவாளி மாண்பரெல்லாம்
விண்டதொரு வுப்பினால் அப்புக்கட்டும் விண்ணுலகும் மண்ணுலகும் இதிலடக்கம்
சண்டமாருதங் கொண்ட வுப்பினாலே ஜகமெலாம் படல்கட்டி யாடலாகும்
தொண்டுசெய்து உப்பதனை யறியவேண்டும் துரைராஜ சுந்தரனே செப்பக்கேளே
6484.
செப்பவென்றால் வெடியுப்பை விட்டாலல்லோ செம்மலுடன் பூவுமில்லை காயுமில்லை
அப்பினால் உப்பதனைக் கட்டலாகும் ஆகாகா நாதாக்கள் சிடிகைவேதை
ஒப்பமுடன் சிடிகையென்ற வுப்புதன்னை ஓகோகோ நாதாக்கள் மறைத்துவைத்தார்
தப்பிதங்கள் நேராது வுப்பின்மார்க்கம் தண்மையுள்ள மன்னவனே சாற்றக்கேளே
6485.
சாற்றவென்றால் உப்பினிட கட்டினத்தை சாங்கமுடன் குகையிலிட்டு உருக்கிமைந்தா
திட்டமுடன் குழலொன்று செய்துமல்லோ தீர்க்கமுடன் நாலுபட்டையாகச்செய்து
வட்டமுடன் உப்பதனை யுருக்கிமைந்தா வளமையுள்ள கருங்குழலில் பாய்ச்சியேதான்
நாட்டமது நேராமல் கருவைநீக்கி நயம்பெறவே வுப்பதனை யெடுத்திடாயே
6486.
எடுத்துமே உப்பதனைச் சொல்லக்கேளு எழிலான பஞ்சவர்ணமேற்றப்பாரு
தொடுத்ததொரு லிங்கமதை யரைத்துமைந்தா தோறாமல் ஒருபக்கம் பூசிப்போடு
விடுத்ததொரு தாளகத்தை யெடுத்துபாலா விருப்பமுடன் ஒருபக்கம்பூசிப்போடு
படுத்ததொரு கெந்தகத்தை யறைத்துமைந்தா பாங்குடனே ஒருபக்கம் பூசிப்போடே
6487.
போடேதான் கெவுரியது எடுத்துமைந்தா பொங்கமுடன் ஒருபக்கம்பூசிப்போடு
ஆடேதான் நாற்சரக்குமானபின்பு வப்பனே சீலையது வலுவாய்ச்செய்து
நாடேதான் ரவிதனிலே காயப்போடு நலமான புடமதுவுங் கோழியாகும்
தேடவே புடம்போடு எடுத்துப்பாரு தெளிவான வர்ணமது தோற்றும்பாரே
6488.
தோற்றவே பக்கமொரு வர்ணபேதம் தோறாத கம்பியுப்பு சாரணையேயாக்க
மாற்றதுவும் சொல்லவென்றால் நாவேயில்லை மகத்தான சாஸ்திரந்தானோடும்பாரு
ஆற்றவே லிங்கமது மாற்றாயிரந்தான் வப்பனே சொல்வதற்கு நாவுமில்லை
தேற்றமுடன் தாளகமும் ரெண்டாயிரம் மாற்று தெளிவான வுப்பினிட வேகம்பாரே

6489.
வேகமாங் கெந்தியது மூவாயிரமாற்று வெழிலான வேதைமுகஞ் சொல்லொண்ணாது
பாகமுடன் கெவுரியது ஐந்நூறு மாற்று பஅங்குடனே வேதைமுகஞ் சொல்லும்பாரு
சாகமுடன் வுப்பினிட மேற்பட்டையப்பா சதானந்தர் வைகுந்தர் அறிவாரோதான்
போகமது கொண்டதொரு காலாங்கிநாதர் பொன்னவனே எந்தனுக்கு உரைத்தார்தானே
6490.
தானான மாற்றினிட வேகமப்பா தாரணியில் சித்தர்தம்மால் சொல்லப்போமோ
கோனான காலாங்கி கடாட்சத்தாலே கொற்றவனே யானுரைத்தேன் உந்தமக்கு
தேனான முறையதுவை யாருஞ்சொல்லார் தேவாதி என்குருவே எந்தன்மைந்தா
பானான பரஞ்சுடரே யுந்தமக்கு பாரினிலே பாலித்தேன் பண்பாய்த்தானே
6491.
பண்பான வேதையிது தாம்பிரவேதை பாலகனே யாருந்தான் விள்ளாரப்பா
நண்பான சாத்திரத்தில் சொல்லிருந்தும் நலமான மனோன்மணித்தாய் மறைத்தபாவம்
உண்மையாய் உளவறிந்து கண்மலரோ பொன்மலரோ நீயெனக்கு கருகாதே
உண்மையாய் யொருவருக்கும் காட்டொண்ணாதே
6492.
காட்டினால் லோகமெல்லாஞ் சித்தாய்ப்போகும் கனமோசங் கனலோகம் கருவாய்ப்போகும்
நீட்டமுடன் சிவயோகி மாண்பரப்பா நீணிலத்தில் செய்துமல்லோ கண்டாராய்வார்
வாட்டமுடன் முறைபாடு கைபாடாக வளமையுடன் செய்தவர்க்கு எல்லாஞ் சித்தி
தாட்டிகமாய்ப் புத்திவான் அறிவானப்பா சண்டாள கருமிகளு மறியார்பாரே
6493.
பாரேதான் இன்னமொரு போக்குசொல்வேன் பண்பான பரிகாரமானபேர்க்கு
நேரேதான் புலிப்பாணி மன்னாகேளு நேர்மையுடன் உந்தமக்கு உபதேசிப்பேன்
சீரேதான் பெரும்பாடியாம் லவணந்தன்னை சிறப்புடனே தானெடுத்து மனதுவந்து
நீரேதான் சொன்னமுறை வழிபாடாக நிமலனே கைபாகஞ் செய்திடாயே
6494.
செய்யவென்றால் உப்பதனை சேசைவாங்கி செப்பவென்றால் வன்னியது பட்டையப்பா
கொய்யவே தானிடித்து மாவதாக்கி சுகம்பெறவே யுப்புக்கு கீழ்மேலிட்டு
துய்யநல்ல வுப்பதனை நடுவேவைத்து துரைராஜ சுந்தரனே செப்பக்கேளு
வெய்யதமிழ்ப் பண்டிதங்கள் பலிப்பதற்கு வேதாந்தத் தாயாரை வேண்டிக்கொள்ளே
6495.
கொள்ளவே யுப்பதனை சீலைசெய்து கொப்பெனவே ரவிதனிலே காயவைத்து
மெள்ளவே கோழியென்ற புடத்தைப்போடு மேன்மையுள்ள வுப்பதுவுங் கட்டிப்போகும்
கள்ளமது வாறாது வுப்புக்கப்பா காசினியில் கருவாளி யறிவான்பாரு
உள்ளபடி யானுரைத்தேன் யுந்தமக்கு வுத்தமனே கைபாகஞ் செய்வாய்காணே
6496.
காணவென்றால் வுப்பதனை யெடுத்துமைந்தா கலங்காமல் பூநீரை சுத்திசெய்து
தோணவே நாலுக்கோர் இடைதான்சேர்த்து தோறாமல் தானரைப்பாய் கல்வமிட்டு
வேணபடி வன்னியின்தன் பட்டைசாற்றால் வேகமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
பூணவே பில்லையது லகுவாய்ச்செய்து புண்ணியனே கோழியென்ற புடத்தைப்போடே

6497.
புடமான புடமதுவும் ஆறிப்பாரு புகழான வுப்பினிட கட்டியல்லோ
நீடேதான் நிஷ்களங்கமானவுப்பு நீடாழி யுலகுபதி யார்தான்கண்டார்
கோடான கோடிமனு சித்தருண்டு கொற்றவர்கள் கக்டுமல்லோ மறைத்தேவைத்தார்
பாடான பாடதுவும் யார்தான்செய்வார் பாலகனே விதியாளி செய்வான்தானே
6498.
விதியான கட்டென்ற உப்பைத்தானும் விமலனே செந்தூரஞ் செப்பக்கேளு
மதிபோன்ற வுப்பதுவுங் கசிவுநீங்கி மகத்தான தவளம்போல் உருகியல்லோ
துதியான வுருக்கினம்போல் குடோரியாக துப்புரவாய் இருக்குமந்த வுப்புதன்னை
பதியான வன்னமென்ற பேதிதன்னை பாலகனே நாலுக்கோர் அளவுசேரே
6499.
சேர்த்துமே கல்வத்தில் பழச்சார்விட்டு செம்மையுடன் தானரைப்பாய் நாலுசாமம்
பார்த்துமே பில்லையது லகுவாய்ச் செய்து பாலகனே ரவிதனிலே காயவைத்து
ஆர்த்துமே சில்லிட்டுச் சீலைசெய்து வப்பனே யேழுசீலை வலுவாய்ச்செய்து
பூர்க்கவே செந்தூரம் லபிப்பதற்கு புகழான வடுப்பில் வைத்து எரித்திடாயே
6500.
எரிப்பதற்கு வயணமது சொல்வேனப்பா எழிலான தளவாயாம் பாண்டந்தன்னில்
திரியான மணலதனைக் கொட்டிமைந்தா தீர்க்கமுடன் கல்லதனை மேலேவைத்து
சொரியான கருமணலை யின்னுமல்லோ சோராமல் பாண்டமதில் மணலைக்கொட்டி
சரியாக மேற்பாண்டந் தன்னைமூடி சட்டமுடன் தானெரிப்பாய் சாமம்நாலே

6501.
நாலான சாமமது எரித்தபோது நலமான செந்தூர மென்னசொல்வேன்
காலான செந்தூரந் தனையெடுத்து கருமான வெள்ளிதனில் பத்துக்கொன்று
மாலான வெள்ளியது வுருகும்போது மகத்தான செந்தூரங் களஞ்சியீந்து
கோலான கரியினால் கிண்டும்போது கொற்றவனே வுட்கொண்டு பழுக்கும்பாரே
6502.
பாரேதான் மற்றதுவும் என்னசொல்வேன் பாங்கான வயததுவும் எட்டுமாகும்
கூரேதான் நாலுக்கோர் தங்கஞ் சேர்த்து குறிப்புடனே வாரடித்துப் புடத்தைப்போடு
நேரேதான் மறுபடியும் உருக்கிப்பாரு நேர்மையுள்ள தங்கமது கூறப்போமோ
ஆரோதான் செய்வார்கள் இந்தப்போக்கு வப்பனே யுந்தமக்கு வுரைத்தேன்தானே
6503.
தானான புடத்தங்கம் பிறவித்தங்கம் தண்மையுள்ள குடோரியது உறங்காதப்பா
கோனான சிவராச தங்கமப்பா கொற்றவனே லவணமதிற் பிறந்ததங்கம்
தேனான சிவயோகிக் குகந்ததங்கம் தெளிவான நாணயத்துக் குகந்ததங்கம்
மானான வையகத்தில் மாண்பர்தாமும் மார்க்கமுடன் செய்கின்ற தங்கமாமே
6504.
தங்கமாம் லவணமென்ற சாரகாரம் தாரணியில் வெகுமாண்பர் காணமாட்டார்
புங்கசித்தி எட்டுரியோன் காண்பான்பாரு புகலான சித்துமுனி செய்யுந்தங்கம்
வங்கமதற் கேங்காது வர்ணத்தங்கம் வளமான புரிசடையோன் அணியுந்தங்கம்
இங்கிதமாய் சமுசாரி வழங்குந்தங்கம் யெழிலான வுப்பினிட தங்கங்காணே
6505.
காணேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் கருவான புலிப்பாணி கண்ணியவானே
தோணவே பூதமென்றால் பஞ்சபூதம் சொல்லுகிறேன் நாதாக்கள் மகிமைதன்னை
வேணபடி வாதமெனும் தேர்தானப்பா விருப்பமுடன் பூட்டுகிறேன் பஞ்சபூதம்
ஆணரசர் முன்னுக்குள் அஞ்சுபூதம் வப்பனே சரக்குவகை பூதமஞ்சே
6506.
அஞ்சான தேதென்று கேட்பாயானால் வப்பனே தங்கமது பிரிதிவாகும்
துஞ்சமென்ற இரும்பதுவும் வாயுவாகும் துப்புரவாய்ச் செம்பதுவும் தேய்வாகும்
மிஞ்சவே காரீயம் அப்புவாகும் மிக்கான நாகமது ஆகாசந்தான்
துஞ்சலென்ற லோகமது வஞ்சுங்கூடி துறையான பஞ்சபூத மொடுக்கந்தானே
6507.
ஒடுக்கமாந் தேருக்கு பிரிதியாச்சு வுத்தமனே பீடமது வுரைப்பேன்பாரு
தொடுக்கவே பாஷாணம்பஞ்சபூதம் தோராமல் பீடவகை யரைப்பேன்பாரு
இடுக்கமுள்ள கெந்தியது பிரிதிவாகும் யெழிலான கெவுரியது தேய்வேயாகும்
விடுக்கவே லிங்கமது வாகாசமாகும் விரிவான வீரமது வுப்புமாமே
6508.
அப்பான துரிசியது வாய்வுமாகும் வழகான பாஷாண பஞ்சபூதம்
உப்பான காரசார பஞ்சபூதம் வுத்தமனே யானுரைப்பேன் விபரங்கேளு
கப்பலென்ற தேருக்கு வுருளையப்பா கனமான லவணமென்ற பூதமெல்லாம்
ஒப்பமுடன் வெடியுப்பு பிரிதிவாகும் ஓகோகோ நாதாக்கள் ஆடுங்கூத்தே

6509.
கூத்தான வெடியுப்பு பிரிதிவாச்சு குணமான வளையலுப்பு தேய்வுமாச்சு
நாத்தமென்ற கல்லுப்பு வப்புவாச்சு நலமான சீனமது வாய்வுமாச்சு
சார்ரிரத்தில் உரைத்தபடி பூநீரப்பா தண்மையுள்ள தாகாசந் தானேயாகும்
சூத்திரமாம் பிரிதிவினில் உற்பவித்த சுடரான வுப்பதுவு மாகாசமாச்சோ
6510.
ஆச்சப்பா சரக்கு வறுபத்துநான்கும் வப்பனே வைந்தைந்தா யுகம்பிரித்து
மூச்சடங்கிக் கிடந்ததொரு தேருக்கப்பா முனையான சட்டமதில் தான்கள்பார்த்து
ஆச்சரியமாகவல்லோ சிகரமட்டும் வப்பனே தூணிருத்தி கால்கள்நாட்டி
மாச்சலென்ற வுபசாரங்கள் தொண்ணூற்றாறும் மார்க்கமுடன் அலங்கரித்து வரிசைகேளே
6511.
வரிசைபெற நவரத்னமொன்பதுந்தான் வளமைபெற கல்லாணி யாக்கிக்கொண்டு
அறிவுடைய சிம்பமதில் அத்திரந்தான் வப்பனே மூலிகையைக் கயற்போலாக்கி
புரிசடையோன் தம்பிரான்தன்னைதானும் புகழான தேர்மீதில் உச்சாடித்து
சரியுடனே மூலமதிற் தாள்கொண்டுபூட்டி தற்பரனை கள்ளாணி முடிக்கிடாயே
6512.
முடுக்கவே கருவிகரணாதியந்தம் முனையான உடல்பொருள்களாவியெல்லாம்
தொடுக்கவே யண்டசராசரங்கள் மட்டும் தோறாமல் தாம்கண்டவேதைகோடி
நடுக்கடலில் நாணியறுந்திட்டார்போலே நலமான பூதமெல்லா மொன்றேயானால்
படுகணையில் மாறன்விட்ட வம்புபோலே பாரினிலே வாதமது பலிக்கும்பாரே
6513.
பலிக்குமே அறிவுடையோன் செய்துகொள்ளும் பாங்கான வேதைமுகங் கோடாகோடி
ஜொலிக்குமே பிரணவத்தால் மூலிகட்டும் சோராமல் சரக்கெல்லாம் சுருண்டுமாளும்
ஒலிக்குமே லோகமெலாம் ஒன்றாய்க்கூடி வுத்தமனே வாதத்துக் குறுதியாச்சு
சலியாத சரக்கெல்லாம் ஐந்தைந்தாக சட்டமுடன் செய்வார்க்கு வாதமாமே
6514.
வாதமென்றால் சரக்குகளுள் பஞ்சபூதம் வளமான பூதமதில் ஒன்றுதப்பில்
கீதமென்ற கின்னரிக்கு நாணற்றாப்போல் கீர்த்தியுள்ள சரக்கெல்லாம் விழலாய்ப்போகும்
தோதமுடன் வாதமது காணவென்றால் தோறாமல் பஞ்சபூதத்தைப்பாரு
பேதமது வாராது பூதங்கண்டால் பேரான வுலகினிலே சித்தாவாயே
6515.
சித்தான சித்துமுனி இந்தமார்க்கம் சிறப்புடனே சாத்திரத்தில் சொல்லவில்லை
முத்தான நூலெல்லாம் அனேகங்கண்டேன் முனையான பஞ்சபூத பேதந்தன்னை
சத்தேனும் மாண்பர்களும் பிழைப்பதற்கு தயவுவைத்து யாரேனுங் கூறவில்லை
முத்திபெற சாத்திரங்கள் கோடாகோடி மூதுலகில் சொன்னவர்கள் கோடியுண்டே
6516.
கோடியே நாதாந்த சித்துதாமும் குறிப்புடனே சாத்திரங்கள் அதிதஞ்சொன்னார்
தேடியே சாத்திரங்கள் தலைவகுத்து செப்பினார் யாதொன்றுங் கண்டதில்லை
பாடியதோர் வெகுநூல்கள் கைமறைப்பு பாருலகில் பாடிவைத்தார் சித்தர்தாமும்
நீடியே யுந்தனுக்கு வாதங்காண நீதியுடன் போதித்தேன் உண்மைதானே

6517.
உண்மையா மின்னமொரு பாகஞ்சொல்வேன் வுத்தமனே நாதாக்கள் சொன்னாரில்லை
வண்மையுள்ள காலாங்கி கிருபையாலே வளம்பெரிய சித்தரெல்லாம் மறைத்துவைத்த
தண்மையுள்ள கைபாகஞ்செய்பாகத்தை சட்டமுடன் நாதாக்கள் கூறவில்லை
நண்மைபெற மாண்பர்களும் பிழைக்கவென்று நன்மையுடன் யானுரைப்பேன் பண்புதானே
6518.
தானான சூதமது பலந்தானைந்து தாக்குடனே சுத்திசெய்து எடுத்துமைந்தா
பாங்குடனே மருதாறு சிங்கிதன்னை பட்சமுடன் தானெடுத்து செப்பக்கேளு
மானான பலமதுவும் பத்தேயாகும் மகத்தான கல்வமதி லிட்டுமைந்தா
தேனான செவ்வாவின் பழரசத்தால் தேற்றமுடன் தானரைப்பாய் சாமம்நாலே
6519.
நாலான சாமமது வரைத்தபின்பு நலமான மூசையது குரைதான்செய்து
பாலான ரவிதனிலே காயவைத்து பாங்குபெற மூசைதனை யெடுத்துமைந்தா
தாலான தளவாயாம் பாண்டந்தன்னில் தண்மையுடன் பூமணலைக்கொட்டியல்லோ
காலான மூசைதனை மையம்வைத்து கண்மணியே மூசைதனில் சூதந்தாக்கே
6520.
தாக்கவே மேலுமந்த பில்லைமூடி தளமுடனே மணலதனை மேலேசெய்து
நோக்கமுடன் தானெரிப்பாய் நாலுசாமம் நுட்பமுடன் தீயாறி எடுத்துப்பாரு
பாக்கதுபோல் வுருளையது திரண்டுமல்லோ பாங்குடனே தானிருக்கும் வருண்மைந்தாகேள்
வாக்கதுவும் பொய்யாது புண்ணியவானே வளம்பெறவே சூதமதை எடுத்திடாயே
6521.
எடுத்துமே சூதமென்ற மணியையப்பா எழிலான சாரணைதான் செப்பக்கேளு
கொடுத்துமே யாறுவகை ஜெயநீர்தன்னால் துப்புரவாய் தானரைப்பாய் நாலுசாமம்
வித்ததொரு வெண்ணைதனை தானெடுத்து விருப்பமுடன் நாகுயென்ற காசந்தன்னை
அடுத்துமே பலமதுவும் நிறுத்துமைந்தா வப்பனே கவசமது செய்திடாயே
6522.
செய்யவென்றால் காடியென்ற காரந்தன்னில் செம்மலுடன் சூதமென்ற வெண்ணை
தன்னை
பையவே கவசமதுசெய்துபாலா பாங்குபெற சுக்கானின் சீலைசெய்து
துய்யதொரு ரவிதனிலே காயவைத்து துப்புரவாய்யெழுசீலை வலுவாய்ச்செய்து
வெய்யவே யுமிபுடத்தில் போட்டுமைந்தா விருப்பமுடன் தானெடுப்பாய் பதமாய்த்தானே
6523.
பதமான சீலையது பிரித்துமைந்தா பாங்குபெறத் தானெடுப்பாய் சூதந்தன்னை
கதமான சூதமது இறுகியல்லோ கண்மணியே நல்லதுபோலிருக்கும்பாரு
பதமுடனே மணியெடுத்து செப்பக்கேளு பாங்குபெற வெள்ளாட்டுப்பாலினாலே
மிதமுடனே நாற்சாமம் சுருக்குத்தாக்கு மிக்கான சூதமென்ற மணியுமாமே
6524.
மணியான சூதமதை எடுத்துமைந்தா மார்க்கமுடன் குளிகைக்கு வழிதான்சொல்வேன்
அணியான பூநாகம் பலம்பத்தப்பா வப்பனே மணிபோக்கி எடுத்துப்பாரு
கணிதமுடன் தேனதனில் அரைத்துமைந்தா கருத்துடனே மணிதனக்குக் கவசஞ்செய்து
பணிதமுடன் சீலையது காவிக்கல்லால் பான்மையுடன் தான்பொதித்து ரவியிற்போடே

6525.
போடவே ரவிதனிலே காய்ந்தபின்பு பொங்கமுடன் மண்மறைவிற் புடத்தைப்போடு
தேடவே தீயாறி எடுத்துப்பாரு தெளிவுடனே கவசமது இறுகியல்லோ
மூடவே கவசமதை யுடைத்துமைந்தா வுத்தமனே பார்க்குமந்த வேளைதன்னில்
கூடவே மண்ணாகஞ் செம்புதானும் குணமான சூதமதை இறுகலாச்சே
6526.
ஆச்சப்பா சூதமது மணியுமாச்சு வப்பனே சாரணைகள் இன்னஞ்சொல்வேன்
மூச்சடங்கி நெடுங்கால மிருப்பதற்கு முனையான சூதமதை மணியேசெய்தால்
பாச்சலுடன் நெடுந்தூரம் நடக்கலாகும் பாங்கான குளிகையது கீழ்நோக்காது
வீச்சுடனே கிருஷ்ணாவதாரனப்பா விண்ணுலகில் ஆடியதோர் குளிகையாச்சே
6527.
குளிகைக்கு சாரணைகள் என்னவென்றால் கொற்றவனே ஊமத்தங்காய்கள்தன்னை
நளினமுடன் தானரைத்துக் கவசஞ்செய்து நலமுடனே சீலையது வலுவாய்ச்செய்து
பளிதமது வாறாதுபாலாகேளு பாங்குபெற மண்மறைவிற் புடத்தைப்போடு
வனிதமுடன் கவசமது நீக்கிமைந்தா வளமையுடன் தானெடுத்து செப்பக்கேளே
6528.
செப்பவென்றால் குளிகையது என்னசொல்வேன் செம்மலுடன் போகும்வகை முறைமைகேளு
ஒப்பமுடன் குளிகைதனை எடுத்துமைந்தா ஒகோகோ நாதாக்கள் செய்யும்வண்ணம்
தப்பிதங்கள் வாராமல் தவளைச்சங்கு சாங்கமுடன் தானிடித்து மாவதாக்கி
இப்புவியில் சித்துவிளையாடுதற்கு எழிலான சாரணைகள் சொல்வேன்பாரே
6529.
சொல்லவென்றால் சாரணைகள் நிம்பழத்தால் சுத்தமுடன் தானரைத்து மைபோலாக்கி
வெல்லவே சூதமென்ற கட்டியப்பா வேகமுடன் தானரைத்துக் கவசஞ்செய்து
புல்லவே ரவிதனிலே காயவைத்து புகழான மண்மறைவிற் புடத்தைப்போடு
வெல்லவே புடமாறி எடுத்துப்பாரு வேதாந்தத் தாயினது கடாட்சந்தானே
6530.
தானான புடமதுவும் கவசம்நீங்கி தண்மையுள்ள மணிதனையே எடுத்துமைந்தா
பானான சக்கினிட சுண்ணந்தன்னை பார்த்திபனே தானெடுத்து மைபோலாட்டி
கோனான குருசொன்ன நீதிபோலே கொற்றவனே கைமுறைகள் பிசகாமற்றான்
ஊனான சங்குதனைக் கவசஞ்செய்து வுத்தமனே புடம்நூறு போட்டிடாயே
6531.
புடமதுவுஞ் சதமென்றால் நூறுபோடு புகழான ரசமணியுங் கட்டும்பாரு
தடமதுவும் நடப்பதற்கு இதுவே சித்தி தண்மையுள்ள சூதமது குளிகையாச்சு
மடந்தனிலே தானிருக்கும் சிவயோகிக்கு மகத்தான குளிகையது கிட்டிற்றானால்
நடராஜ சுந்தரனார் கிருபையாலே நாதாந்த சித்துவெனச் செப்பலாமே
6532.
சித்தான சித்துகளும் இவர்க்கீடுண்டோ சிறப்பான நாதாக்கள் கண்டதில்லை
வெற்றியுடன் அஷ்டசித்து இதனாலாகும் வேதாந்தத்தாயாரும் பிசங்கிப்பாள்
முத்திபெற மோட்சவழி காணலாகும் முனையான சிவயோகி இவர்தானென்பார்
சத்தியங்கள் தவறாமல் குளிகைகொண்டு சட்டமுடன் நடப்பவனே சித்தன்பாரே

6533.
பாரேதான் குளிகையது என்னசொல்வேன் பாங்கான புலிப்பாணி பாலகனே
நேரேதான் சாத்திரங்கள் உளவாராய்ந்து நேர்மையுடன் மாண்பர்களுக் ஆகாவென்று
சீரேதான் குளிகைதனை முடித்துமல்லோ சிறப்புடனே யஷ்டசித்து யாராலாகும்
ஆரோதான் உந்தமக்கு போதிப்பாரே வப்பனே யுந்தமக்கு வருள்செய்வேனே
6534.
அருளான வருளிதுவும் என்னவென்றால் வப்பனே முன்செய்தபுண்ணியத்தால்
பொருளான சூதமென்ற மணிதானப்பா புண்ணியனே யுந்தமக்கு கிட்டலாச்சு
இருளான பவக்கடலை விட்டகற்றி எழிலான தவக்கடலை யேகியல்லோ
மருளான ஞானமென்ற கடலைக்கண்டு மன்னவனே சிவயோக நிலையில் நில்லே
6535.
நிற்கவென்றால் உந்தமக்கு எல்லாங்கிட்டும் நீதியுடன் சூதமென்ற குளிகைதன்னால்
அற்பமென்று நினையாதே யருண்மைந்தாகேள் ஆகாகா விதியிருந்து கிட்டலாச்சு
சொற்பமெனும் கருமியென்ற மாண்பர்தம்மை சுட்டறுத்து விட்டகற்றி துகளகற்றி
கற்புடைய மாயவலைச் சிக்கறுத்து களங்கமில்லா சிவயோக தவத்தைப்போற்றே
6536.
போற்றியே சூதமென்ற குளிகைதன்னை பொங்கமுடன் துவாரமிட்டு கயர்தான்மாட்டி
நாற்றிசையும் மெச்சுதற்கு கண்டம்போல் நாயகனே கழுத்திலிட்டு வேடம்பூண்டு
ஆற்றவே நெடுந்தூரம் நெடுந்தேசம் வப்பனே வயிரமாங் காதவோசை
ஏற்றமுடன் தானடக்க வாசியோடும் எழிலான குளிகையது மகிமைபாரே
6537.
பார்க்கவென்றால் அறுபத்து நான்குசித்தும் பாருலகில் வெகுகூத்துவாடலாகும்
தீர்க்கமுடன் ஆவினது முதுகில்வைத்தால் திறமான பசுவதுவும் பால்கொடாது
ஏர்க்கவே குளிகையது வேகத்தாலே யெளிதான பாலதுவும் மேலேநோக்கும்
ஆர்க்கமுடன் மணியதுவை எடுத்தாலல்லோ வப்பனே பாலதுவுங் கறக்கும்பாரே
6538.
கறக்குகின்ற ஆவதுவும் பால்கொடாது காசினியில் இதுவுமொரு சித்துவாகும்
திறமுடைய குளிகைதனை யெடுத்துமைந்தா தீர்க்கமுடன் பதனமாய்ச் செய்துகொண்டு
உறமுடனே நெடுங்காலமிருந்துகொண்டு வுத்தமனே சிவயோகஞ் சாதித்தேதான்
நிறமதுவும் மாறாமல் சதாகாலந்தான் நீட்சியுடன் சமாதிமுகம் நின்றிடாயே
6539.
நிற்கவே விதியிருந்த புண்ணியத்தால் நிலமையுள்ள குளிகையது கிடைக்கலாச்சு
அற்பமென்ற பொருளெல்லா மாண்பாகேளு வப்பனே யுந்தனுக்குக் கிடைக்கலாச்சு
விற்பிடித்த மன்னவரும் நன்றமைத்து விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால்
உற்பனமாங் குளிகையது வாய்க்கலாச்சு ஓகோகோ நாதாக்கள் கடாட்சந்தானே
6540.
நாணவே யின்னமொரு போக்கு சொல்வேன் கருவான புலிப்பாணி மகனேகேளு
தோணவே செம்பதுவுஞ் சேர்தானொன்று செப்புகிறேன் செம்புதனை மூசையிட்டு
வேணபடி சரக்குவகை சொல்வேனப்பா வேதாந்தத் தாயினது கடாட்சத்தாலே
பானமெனும் வெடியுப்பு பலந்தானொன்று பாங்குபெற துருசதுவும் பலந்தானொன்றே

6541.
ஒன்றான வளையுப்பு பலந்தானொன்று வுத்தமனே சாரமது பலந்தானைந்து
குன்றான வீரமது பலந்தான்ரெண்டு குறையாமல் கல்லுப்பு பலந்தான்ரெண்டு
வென்றிடவே அன்னமென்ற பேதியப்பா வேகமுடன் யண்டோடு தானுஞ்சேர்த்து
சென்றுமே பொடியாக்கி திரள்வேந்தேகேள் செப்புகிறேன் கைவரிசை முறைமைபாரே
6542.
முறையான சரக்கெல்லாம் ஒன்றாய்க் கூட்டி வுத்தமனே கல்வமதில் பொடியதாக்கி
குறையாமல் செம்புதனை யுருக்கி மைந்தா குணம்பெறவே நயம்பெறவே கிராசமீவாய்
திறையகற்று செம்பதுவும் இருளுமேகி தீர்த்தமுடன் சிவந்துமல்லோ யின்னம்பாரு
துறையான செம்பதனை எடுத்துமைந்தா துகளகற்றி வூதியெடு சுத்தியாச்சே
6543.
சுத்தியாஞ் செப்புதனையெடுத்துபாரு சுந்தரனே யாறுவகை ஜெயநீர்தன்னால்
வெற்றிபெற தானுருக்கிக் காய்ப்பாயப்பா வேதாந்தத் தாயினது கடாட்சத்தாலே
சத்தியமாய் வூறலது யேகியல்லோ சண்முகனார் பூசைக்கு ஏற்றமாச்சு
அத்திபுரந் தானெரித்த வாலங்காடர் வப்பனே தானணியுஞ் செம்புமாச்சே
6544.
செம்பான செம்புதனை பதனம்பண்ணு செயலான முத்தியமும் பெறுவாயப்பா
கும்பமுனி சாத்திரத்தில் அனேகஞ்செம்பு கூறினார் பன்னீராயிரத்திலப்பா
நம்பியல்லோ செய்தவர்க்கு எல்லாஞ்சித்தி நாதாந்த சித்துமுனி சாத்திரத்தில்
அம்பொன்னாஞ் செம்பொன்னின் வினோதவித்தை வப்பனே கோடிதறை சூட்டினாரே
6545.
சூட்டினேன் இச்செம்பு சிடிகைவேதை சிறப்பான செம்புகளு மின்னமுண்டு
வாட்டமுடன் இச்செம்பை மதியில்தானும் வளமுடனே பத்துக்கு ஒன்றுதாக்க
நாட்டமுடன் வயததுவும் என்னசொல்வேன் நலமான மாற்றதுவும் ஆணிக்காறு
ஆட்டிடையன் கதைபோலே இருக்கவேண்டா மப்பனே செம்பிருக்க வலைவாருண்டோ
6546.
உண்டான வெள்ளிதனை யுருக்கிமைந்தா உத்தமனே பத்துக்கோர் தங்கஞ்சேர்த்து
கண்டதமாய் வாரடித்து புடத்தைப்போடு கண்மணியே என்னசொல்வேன்
மாற்றெறொயெட்டு
பண்டிதங்கள் பொய்யாது ஆயுர்வேதம் பாரினிலே கலைவகுத்து நிலைவகுத்து
விண்டிடவே போகரேழாயிரத்தை விருப்பமுடன் பாடிவைத்தேன் காண்டம்யேழே
6547.
ஏழான காண்டமது கடைக்காண்டத்தில் எழிலான சிவயோக தவயோகங்கள்
ஆழவே வைப்புமுதல் சிடிகைவேதை வப்பனே யானுரைத்தே னுந்தமக்கு
வாழவென்றால் இந்நூல்தான் சத்தகாண்டம் வையகத்து மாண்பருக்கும் போதாதுண்டோ
மீழவே கருவறிந்து பொருளறிந்து மிக்கான குருவறிந்து நினைவாய்க்கொள்ளே
6548.
கொள்ளவென்றால் சாத்திரத்தை யுன்னிப்பாரு கோடான கோடிமுறை குறிப்புசொன்னேன்
விள்ளவே மனோன்மணியாள் பதாம்புயத்தை விருப்பமுடன் பணிந்தாக்கால் எல்லாஞ்சித்தி
உள்ளதொரு பொருளெல்லாம் இதிலேதோயும் வுத்தமனே காண்டமது ஏழுங்கண்டால்
கள்ளமது வாறாது புண்ணியவானே கருத்துடனே பாடிவைத்தேன் காண்டமேழே

6549.
கண்டமாமின்னமொரு போக்குசொல்வேன் கண்மணியே விண்மணியே கருவாய்க்கேளு
வேண்டியதோர் கருமான வினோதமுண்டு வித்தகனே நாதாக்கள் மறைத்துவைத்தார்
தூண்டியே பொருளறிந்து தொடர்பறிந்து தூய்தான சாத்திரத்தின் நிலையறிந்து
ஆண்டியெனுஞ் சித்தர்முனி பதமறிந்து வப்பனே கருமுறைகள் சொல்வேன்யானே
6550.
சொல்லவென்றால் புலிப்பாணி சொகுசுள்ளானே சுந்தரனே இந்திரனே சுகுணமாரா
புல்லறிவால் உந்தனுக்குப் புகட்டுவோம்யாம் புகழான செம்பினிட சுத்திதன்னை
வெல்லவே செம்பதுவும் பலமொன்றாகும் வேகமுள்ள வீரமது பலமொன்றாகும்
சொல்லவே காரமது பலமொன்றாகும் செயலான நிமிளையது பலமொன்றாமே
6551.
ஒன்றான சாரமது பலமொன்றாகும் வுத்தமனே கெவுரியது பலமொன்றாகும்
வென்றிடவே துருசதுவும் பலமொன்றாகும் வேகமுள்ள சீனமது பலமொன்றாகும்
நன்றான லிங்கமது பலமொன்றாகும் நலமான வெடியுப்பு பலமொன்றாகும்
மன்றான கரியுப்பு பலமொன்றாகும் பாலகனே இதுகளெல்லாம் ஒன்றாய்க்கூட்டே
6552.
கூட்டவே சரக்கெல்லாம்  கல்வமிட்டு குமுறவே பொடியாக்கி மைந்தாகேளு
நாட்டமுடன் செம்புதனை குகையிலிட்டு நலமாகத் தானுருக்கிக் கிராசமீவாய்
வாட்டமுடன் கிராசமது கொடுக்கும்போது வளமான செம்பதுவும் ஊறலேகி
நீட்டமுடன் தங்கமென்ற செம்புபோலாம் நிதியான செம்புதனை பதனம்பண்ணே
6553.
பண்ணவே செம்பெடுத்து மைந்தாகேளு பாங்குபெற வெள்ளிதனில் பத்துக்கொன்று
தண்ணமுடன் கொடுத்துருக்கி மாற்றைப்பாரு தாக்கான வயததுவும் சத்தமாகும்
திண்ணமுடன் சுயத்தங்கம் பிறவித்தங்கம் தீர்க்கமுடன் தங்கமதின் பசுமையாகும்
உண்ணவே சீவனத்துக் கிடம்வேறுண்டோ வுத்தமனே நாதாக்கள் செம்புதானே
6554.
தானான வெள்ளிதனில் பத்துக்கொன்று தண்மையுடன் தங்கமது ஒன்றுசேர்த்து
கோனான காலாங்கி கடாட்சத்தாலே கொற்றவனே தானுருக்கி வாரடித்து
பானான புடமதுவும் தீர்ந்துதானால் பாலகனே மாற்றதுவும் எட்டதாகும்
மானான மனோன்மணியாள் கடாட்சத்தாலே மன்னவனே செம்பினுட வேதைகாணே
6555.
வேதையா மின்னமொரு போக்குசொல்வேன் வேதாந்தத் தாயினுட மகிமையாலே
தீதொன்றும் வாராமல் ரவியின்மார்க்கம் தீர்க்கமுடன் சொல்லுகிறேன் திறமாய்க்கேளு
போதமுடன் சீனமென்ற படிகக்கல்லாம் பொங்கமுடன் சேரதுவும் நிறுத்திமைந்தா
வாதமதில் மேலான வைடூரியந்தான் வளமான வச்சிமாங் கல்லின்போக்கே
6556.
போக்கான படிகமென்ற கல்தானப்பா பொங்கமுடன் வச்சிரமாங் குகையிலிட்டு
வாக்கதுவும் பொய்யாமல் வசனிப்பேன்யான் வளமான மாந்தளிரும் உருக்குப்பச்சை
நோக்கமுடன் சேரதுவும் கால்தானொன்று நுட்பமுடன் பூநீருக் கிடமொன்றாக
ஆக்கமுடன் காக்கையென்ற நிமிளையப்பா அடவான சேரதுவுங் கால்தானொன்றே

6557.
காலான குடோரியென்ற காரஞ்சேர்ந்து கருவாக மூசையிட்டு வுருக்கும்போது
பாலான சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூடி பாகுபதம் போலுருக்கி தண்விட்டாடும்
மாலான வயிரமதுபோலே தோன்றும் மகத்தான நிமிளையென்ற வேதைதன்னால்
சூலான கெற்பமது வுள்ளேதோன்றி சுக்கிரன்போல் சரணைவெளி காணலாமே
6558.
காணலாம் ரவையென்ற கல்லுமாச்சு கருவான தவளம்போலே இருக்கும்பாரு
பூணலாம் சரணையிட்டு வொளியேகொண்டால் புகழான சுக்கிரன்போல் பூர்க்கும்பாரு
தோணவே வேணமட்டும் குகைதானிட்டு தோறாமல் முன்சொன்ன கணக்குபோலே
வேணபடி கணக்கெடுத்து வுருக்கிப்பாரு வெகுகோடி நிதியனைத்தும் காண்பாய்பாரே
6559.
பாரப்பா மூசையிட்டு வுருகும்போது பாலகனே சிறுமணியாங் கருவமைத்து
நேரப்பா வுருக்கியதை சாய்ப்பாயானால் நெடிதான ஜெகஜோதி என்னசொல்வேன்
சீரப்பா யிதற்கீடு ரத்னமுண்டோ சீருலகில் வெகுமாண்பர் தெரியாமற்றான்
ஆரப்பா முறையோடும் வழிபாடோடும் வப்பனே தாமுரைத்தார் அதிகவானே
6560.
அதிகமாம் வயிரமென்ற போக்குதன்னை வப்பனே யானுரைத்தேன் நுணுக்கமெத்த
பதிதமுள்ள வைப்பதனை சித்துதாமும் பாருலகில் மாண்பருக்குத் தெரியாமற்றான்
துதியோடும் பதியோடும் நூல்கள்சொல்லி துப்புரவாய் மதிதனக்கு யேராமற்றான்
விதியான சிடிகையென்ற கைபாகத்தை விட்டகற்றி நூல்மறைத்து விலக்கினாரே
6561.
விலக்கவே வைப்புமுதல் உளவுதன்னை வெகுபேர்கள் அறியாமல் வினயங்கொண்டு
துலக்கமுடன் நூல்தனைக்காணாமற்றான் துப்புரவாய்க் கருவிகரணாதியந்தம்
பலக்கவே சிடிகையென்ற வேதைதன்னை பாராமல் பாருலகில் கெட்டார்கோடி
ஜலக்கம்ப மென்றதொரு கெந்திபோலே சாங்கமுடன் செய்வதற்கு மதிபோனாரே
6562.
மதியான வயிரமது பிறவிபோலாம் மகத்தான நாதாக்கள் செய்தவேதை
துதியான பிறவியென்ற கல்லினாலே துப்புரவாய் ராசாதிராஜர்தாமும்
நதிகளிலும் மலைகளிலும் கண்டெடுத்த நாதாந்த சித்தொளியே கல்போலாகும்
பதியான சுனைதனிலும் ஓடைதன்னில் பாங்குடனே வயிரமது விளையுந்தானே
6563.
தானான இன்னமொரு போக்குசொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி தம்பிரானே
கோனான இந்தமுறை வேதையப்பா குவலயத்தில் நாதாக்கள் கூறவில்லை
பானான படிகமது சேர்தானொன்று பாலகனே பூநீரும் பலந்தானொன்று
தேனான தேன்வளையல் சேர்தான்காலாம் தேற்றமுடன் பவளமென்ற புத்துகாலே
6564.
காலான பண்பவள சேர்தான்காலாம் கண்மணியே வளையலுப்பு சேர்தான்காலாம்
மாலான சரக்கெல்லாம் ஒன்றாய்க்கூட்டி மகத்தான வங்கமென்ற செந்தூரந்தான்
நூலான நூற்படியே கால்சேர்கூட்டி நுட்பமுடன் தானுருக்கிக் கருவமைத்து
சூலான கெற்பமது வுள்ளிருக்க துப்புரவாய் மணிபோலே வார்த்திடாயே

6565.
வார்க்கவென்றால் மணியதுவும் உருகியல்லோ வளமான கெம்பினுட தளம்போலாகும்
தீர்க்கமுடன் தளமெடுத்த சாணைதன்னில் திறமுடனே தான்கொடுத்து மதியம்போண்டு
ஏற்கவே யிவ்வேதை சிடிகைவேதை எழிலான கெம்பினுட தளந்தானாச்சு
பூர்க்கவே சாணைதனில் மணிகொடுத்தால் புகழான கெம்பினுட ஜோதிதானே
6566.
ஜோதியாங் கெம்பினுட மகிமைதன்னை சுந்திரனார் சித்துமுனி மறைத்துவைத்தார்
வாதிகளும் காணாமல் மதியம்பூண்டு வண்மையுடன் கைமறைப்பைத் தெரியாமற்றான்
நீதியுடன் சாத்திரங்கள் படித்தயர்ந்து நிஷ்களங்க மாயிருந்தார் கோடிபேர்கள்
வீதியெஉங் கொல்லனது மாளிதன்னில் விரும்பூசி விற்றதொரு கதையுமாச்சே
6567.
கதையான கதைகாட்டி மையம்பூண்டு காசினியில் தான்மறைத்தார் வினோதவித்தை
கெதையான உப்பினிட கெதையைச்சொன்னேன் கெணிதமுடன் எண்ணிகண்டு காணாமற்றான்
விதைபோட்டால் சுரையொன்று காய்க்குமோசொல் வித்தகனே நூல்களெல்லாம் வினயங்கூறி
உதயம்போல் கெம்புவைப்பு இருக்க உத்தமனே வெகுதேசஞ் சென்றார்பாரே
6568.
பாரேதான் மணிதனையே சாணைதன்னால் பக்குவமாய்த் தான்பொடித்து ஒளியுங்கொண்டு
நேரேதான் வணிகரிடஞ் சென்றாயானால் நெடிதான செம்பதுவும் பிறவியென்று
சீரேதான் ஜெகத்திலுள்ள மாண்பரெல்லாம் ஜெகதலத்தில் பிறவியுள்ள கல்லேயென்று
தீரேதான் ஜெகத்திலுள்ள மாண்பரெல்லாம் செப்பிடுவார் பின்னொன்றும் செப்பார்தானே
6569.
தானான கெம்பதனை யார்தான்செய்வார் தண்மையுள்ள புலிப்பாணி மன்னாகேளு
கோனான நாதாக்கள் சித்துதாமும் குவலயத்தில் மறைத்துவைத்தார் நூல்களெல்லாம்
தேனான நூல்களெல்லாம் உளவாராய்ந்து தேற்றமுடன் ஓதிவைத்தேன் உந்தமக்கு
பானான பரஞ்சுடரே போற்றிசெய்து பாலகனே சதாநித்தம் துதிப்பாய்தானே
6570.
துதிப்பான யின்னமொரு பாகஞ்சொல்வேன் துப்புரவாய் புலிப்பாணி மன்னாகேளு
மதிப்புடைய படிகமென்ற கல்தானப்பா மன்னவனே சேரதுவும் நிறுத்திக்கொண்டு
பதிவுடைய காச்சிக்கல் பச்சைதன்னை பாங்குபெற இருசேராய் நிறுத்துக்கொண்டு
மதிபோன்ற பூநீருங் கூடச்சேர்த்து மகத்தான வளையல் ரங்குதானுஞ்சேரே
6571.
சேரேதான் குகையிலிட்டு செப்பக்கேளும் செயலான ஆறுவகை ஜெயநீர்தன்னை
வீரேதான் மூசையிட்டு குடோரி சேர்த்து விருப்பமுடன் துருத்தியது நாலுகொண்டு
நேரேதான் தானுருக்கி மைந்தாகேளு நேர்மையுடன் கருக்கட்டி வார்ப்பாயப்பா
ஆரேதான் மற்றொருவர் காணாமற்றான் வப்பனே ஆறியபின் உடைத்துப்பாரே
6572.
உடைத்துமே பார்க்கையிலே என்னசொல்வேன் ஓகோகோ நாதாக்கள் மறைத்தவண்ணம்
படிகமும் நவநீதம் யானறிந்து பட்சமுடன் யானுரைத்த பச்சைதன்னில்
மடைபோன்ற சீரலது இருக்கும்பாரு மகத்தான வணிகரிடஞ் சென்றாயானால்
சடைநீக்கி சாணைதனில் கொண்டுமல்லோ சட்டமுடன் ஜோதிதனை யறிந்துபாரே

6573.
அறிவான பச்சையென்ற வைப்புதன்னை வப்பனே யுந்தமக்கு வரைத்தவார்போல்
குறியான முறையறிந்து வழியறிந்து குணமான பாகமதுதானறிந்து
முறியாமல் வுருக்குமுகம் பாலறிந்து முனையான கருவதனில் பாச்சும்போது
நெறியான பிறவியென்ற கல்லைப்போலும் நெடிதான பச்சையென்ற தளமுமாச்சே
6574.
ஆச்சப்பா யின்னமொரு பாகஞ்சொல்வேன் அறிவுள்ள சிறுபாலா வன்புள்ளானே
ஆச்சரியமானதொரு செப்புதன்னை வப்பனே புலிப்பாணி யறைவேன்பாரு
மூச்சடங்கி தானிருந்தேன் நெடுங்காலசித்து மூதுலகில் சமாதிகொண்ட காலாங்கிநாதர்
பாச்சலுடன் சீனபதி சமாதிருந்து பட்சமுடன் எந்தனுக்கு உரைத்தவாறே
6575.
வாறான வெடியுப்பு பலமோபத்து வளமையுள்ள சீனமது பலமோபத்து
கூறான கண்டரது பலமோபத்து குறிப்பான கல்லுப்பு பலமோபத்து
சேறான மிருதாருசிங்கி பலமோபத்து செம்பவள புத்துமது பலமோபத்து
மாறான கெந்தியது துலாமோவைந்து மகத்தான பூரமது பலமுமைந்தே
6576.
அஞ்சான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி வப்பனே சாரமென்ற ஜெயநீர்தன்னால்
மிஞ்சவே தானரைப்பாய் நாலுசாமம் மிக்கான பில்லையது லகுவாய்ச்செய்து
அஞ்சாமல் சக்ரமாம் வாலைதன்னில் துப்புரவாய்த் தானமைத்து பாண்டந்தன்னில்
பஞ்சமென்ற கவசமது வைந்தும்வைத்து பட்சமுடன் ஒன்றின்மே லொன்றுவையே
6577.
வைத்துமே கரகமென்ற பாண்டந்தன்னில் வளமுடனே சீலையது வலுவாய்ச்செய்து
பொய்த்துமே போகாமல் தீயைமூட்டி பொங்கமுடன் தானெரிப்பாய் கமலம்போலே
சுத்துமே சலமதனை விட்டுமைந்தா சுந்தரனே வாலையது எரிக்கும்போது
பத்துமே தீயதுவும் யோராமற்றான் பாங்குபெற வாலைதனை எரித்திடாயே
6578.
எரிக்கையிலே பதங்கமது என்னசொல்வேன் எழிலாக சமதிலைந்திலே
சரியான சூதமென்ற பதங்கந்தானும் சதுரான மேற்கலசந் தன்னைப்பற்றி
சரிகுழலில் மேலாகப் பதங்கமேறி சுத்தமுடன் தவளமது நிரந்தைப்போலும்
உரியதொரு சூதமென்ற ஆசுதானும் வுத்தமனே பளபளத்து நிற்கும்பாரே
6579.
பாரப்பா சாமமது நாலேயாகும் பாங்குபெற தானெரிப்பாய் கமலம்போலே
நேரப்பா எரித்தவுடன் காரமேறி நேர்மையுடன் சரக்குமிக சேர்த்துமல்லோ
வேரப்பா வடிப்பாண்டம் சிட்டம்நின்று விளக்கொளிபோல் சிறுபொடியாந் தகடுபோலே
ஆரப்பா தவளம்போலிருக்கும்பாரு வப்பனே சண்டரசப் பெருமைதானே
6580.
பெருமையாம் சண்டரசமென்ற பற்பம் பேருலகில் நாதாக்கள் மறைத்துமல்லோ
அருமையா முள்ளதொரு பற்பந்தன்னை வப்பனே தான்மறைத்துப் பாடிவைத்தார்
ஒருமையாம் எல்லவரும் அறிவதற்கு உத்தமனே உந்தமக்கு உகமைகூறி
பெருமையாய் யானுரைத்தேன் உந்தமக்கு பேரான கைமுறையை தெரிந்துகொள்ளே

6581.
கொள்ளவே சண்டரச போக்குசொல்வேன் குறிப்பான ரோகமதைக் கொல்லும்வேகம்
விள்ளவே ரோகமது என்னவென்றால் வீறான சூலையது பதினெட்டும்போம்
உள்ளதொரு குன்மமது யெட்டும்போகும் ஓகோகோ பாண்டுவகை யாறுந்தீரும்
கள்ளமிலா பித்தமது நாற்பதும்போகும் கருவான வாதமென்பதுவும்போமே
6582.
போமேதான் வாயுவென்ற ரோகம்போகும் பொல்லாத பீலிகையும் மகோதரம்போம்
ஆமேதான் கெவுசியென்ற கெண்டைபோகும் வப்பனே விக்கலென்ற வுளமாந்தைபோகும்
நாமேதான் சொன்னபடி வயிற்றுவலிபோகும் நலமான சோகையொடு பிரமேகம்போம்
வேமேதான் மேகமது இருபதுவும்போகும் வேகமுடன் விஷபாகந் தீருந்தானே
6583.
தானான கயரோகம் செயரோகம்போம் தாக்கான இருமலொடு வீனைகச்சும்
கோனான மண்டையில் சூலைபோகும் கெடிதான கருப்பனென்ற வியாதிபோகும்
பானான படர்தாமரை கருப்புபோகும் படையோடு சில்விஷங்கள் எல்லாந்தீரும்
தேனான காலாங்கி நீதிவாக்கு தேசமதில் பொய்யாது மெய்யதாமே
6584.
மெய்யான சில்விஷமாங் குஷ்டம்போகும் மேலான விப்புருதிழகண்டமாலை
வெய்யவே கிராணியது கழிச்சல்போகும் வெளுப்பான சீழ்மூலம் நவமூலம்போம்
துய்யதொரு பவுத்திரமும் மறையாப்பும்போம் துலையாத புத்துவுடல் யோனிச்சூலை
எய்யவே மந்தார காரம்போகும் எழிலான நேத்திரநோய் போகும்பாரே
6585.
பாரேதான் கண்ணோய்தான் தொண்ணூற்றாறும் பாங்கான பிடரிநோய் ஜன்னிபதிமூன்றும்
நேரேதான் அண்டமென்ற வாதம்போகும் நெடிதான பாதத்தின் வீக்கம்போகும்
கூரேதான் குறிப்புற்று கன்னப்புற்று குடிகெடுக்கும் ராசனென்ற பிளவையோடும்
சேரேதான் முதுவாளை விலாவின்வாளை செயலான தமர்க்காய்ச் சிலந்திகாணே
6586.
காணவே யிடிவிழுந்து புரைமேற்புண்ணும் கண்ணோசை சதைவளர்த்தி ரோகந்தானும்
தோணவே கபவாதம் ரத்தவாதம் தோற்றாத கைமுடக்கு கால்முடக்கு
வேணதொரு நாவரட்சி சந்திடுப்பு வீரான கீலினது வாய்வுபோகும்
தோணவே கரம்புவலி முடிச்சிபோகும் கோளான மலக்குற்றம் போகும்பாரே
6587.
போகுமே அனுபானம் கண்டறிந்து போக்கவே வியாதிகளுக்குகந்தவண்ணம்
ஏகுமே கைபாகஞ் செய்பாகந்தான் யெழிலான புடபாகம் ருசிபாகந்தான்
ஆகுமே இத்தனையுங் கண்டறிந்து வப்பனே நூல்வழியே சென்றாயானால்
பாகுபதங் கால்வழிதான் காணலாகும் பாங்கான நாதாக்கள் கற்பந்தானே
6588.
கற்பமாம் சண்டரச சூதமப்பா காசினியில் சித்தரெல்லாம் மறைத்துவைத்தார்
பற்பமது வுலகோர்கள் அறியாமற்றான் பான்மைபெற நூல்களிலே மறைத்துச்சொன்னார்
அற்பமென்று நினையாரதே யருண்மைந்தாகேள் வன்புடனே யாமுனக்கு வுரைத்தநீதி
கற்பேந்திர காலமது நெடுங்காலந்தான் காசினியில் இருப்பதுவும் உண்மைதானே

6589.
உண்மையாஞ் சண்டரச பற்பந்தன்னை வுலகுபதி மாண்பர்களும் உளவறிந்து
தண்மையுடன் கைபாகஞ் செய்பாகத்தால் சட்டமுடன் செய்குவது மெய்யேயானால்
வண்மையாஞ் சித்தர்முனி நாதர்போலே வளமுடனே வையகத்தில் நெடுங்காலந்தான்
திண்மையுடன் வெகுகோடி காலமப்பா தீர்க்கமுட னிருப்பதுவும் உண்மைதானே
6590.
உண்மையாம் வையகத்தில் நெடுங்காலந்தான் வுத்தமனே நாதாக்கள் சித்தரோடும்
பண்மையுள்ள சாத்திரங்கள் பலவாராய்ந்து பாருலகில் மாண்பர்களும் பிழைப்பதற்கு
கண்மையாய் காலாங்கி தாள்பணிந்து கர்த்தாவை யஞ்சலித்து முடிகள்சாய்த்து
நன்மைபெற வுந்தனுக்கு மனதுவந்து நாட்டினேன் உண்மைசத்தியமும்பாரே
6591.
சத்தியமா மென்னூலை முழுதும்பார்த்து சாங்கமுடன் செய்பவர்க்கு எல்லாஞ்சித்தி
முத்தியது பெறுவதற்கு காயகற்பம் முனையான பற்பமிது சூதபற்பம்
வெத்திபெற வஷ்டாங்க சித்தியெட்டும் வேதாந்தத் தாயினிட நடனமார்க்கம்
முத்தியது பெறுவதற்கு தேககற்பம் மூதுலகில் சத்தியர்க்கு பலிக்கும்பாரே
6592.
பலிக்குமே சூதமுண்ட மாண்பரெல்லாம் பாருலகில் மகானுபானென்பார்பாரு
ஜொலிக்குமே தேகமது கற்றூணாகும் சோராது வாசியது மேல்நோக்காது
சுலிக்காது இருகண்ணும் வருந்தியுந்தோன்றும் காசினியில் வேசியாக மாண்பரென்பர்
சலிக்காது சண்டரச பற்பமப்பா சட்டமுடன் செய்வேனே யோகிபாரே
6593.
பாரப்பா புலிப்பாணி மைந்தாகேளு பாலகனே காலாங்கிநாதர்நீதி
ஆரப்பா எந்தனுக்கு உரைத்தமார்க்கம் வப்பனே யஞ்சலித்து முடிவணங்கி
சேரப்பா சமாதிமுகஞ் சென்றபோது செம்மலுடன் எந்தமக்கு கொடுத்தபாகம்
நேரப்பா சொல்லுகின்ற பஞ்சபூதம் நெடிதான வேதைமுகம் நன்றாய்த்தானே
6594.
வேதையாம் வேதைமுகம் பஞ்சபூதம் மேன்மையுள்ள செந்தூரம் காயகற்பம்
கோதையெனும் மனோன்மணியாள் கடாட்சத்தாலும் கொற்றவனார் நாதாக்கள் பாதத்தாலும்
பாதையெனும் பஞ்சபூத செந்தூரத்தை பாருலகில் மாணாக்கர் பிழைப்பதற்கும்
சூதையது கூறாமல் குமாரவேலா சுந்தரனே கைபாகஞ்செப்புவேனே
6595.
செப்புவேன் கெந்தியது சேர்தான்பாதி செயலான வீரமது சேர்தான்பாதி
ஒப்பமுடன் லிங்கமது சேர்தானொன்று வுத்தமனே சாரமது சேர்தானொன்று
மெய்ப்புடனே பூரமது சேர்தானொன்று மேன்மையுடன் கல்வமதி லிட்டுமைந்தா
எப்படியும் ஓரைந்தா யட்சபூதம் எழிலான சரக்கெல்லாம் பொடியாய்ப்போச்சே
6596.
பொடியான சரக்கெல்லாம் மையதாகி பொங்கமுடன் தாகமது கருவிட்டாட்டி
கன்னமாஞ் சரக்கெல்லாம் நன்றாயாட்டி கண்மணியே ஜாலமெட்டுந் தீர்ந்தபின்பு
வடிவான பஞ்சரச சரக்கையெல்லாம் வளம்பெறவே பில்லையது லகுவாய்த்தட்டி
மிடியோக வோட்டிலிட்டுச் சீலைசெய்து மீட்சிபெற ரவிதனிலே காயப்போடே

6597.
போடவே ரவியாறிக் காய்ந்தபின்பு பொங்கமுடன் மணல்மறைவிற் புடத்தைப்போடு
நாடவே இப்படியே பத்துமுறைபோடு நலமான தாகமென்ற கருவினாலே
சாடவே புடமதுவும் பத்துந் தீர்ந்தால் சட்டமுடன் மறுபடியுஞ் செப்பக்கேளு
கூடவே சரக்கதனைக் கல்வமிட்டு கொற்றவனே கையானின் ரசச்சைதாக்கே
6598.
தாக்கவே நாற்சாமம் அரைத்தபின்பு சட்டமுடன் பில்லையது லகுவாய்ச்செய்து
ஆக்கமுடன் ரவிதனிலே காயவைத்து வப்பனே சில்லிட்டுச் சீலைசெய்து
போக்கான சரக்கெல்லாங் கட்டுதற்கு பொங்கமுடன் மண்மறைவிற் புடத்தைப்போடு
வாக்கதுவும் பொய்யாமல் கோழியாக வளமுடனே புடம்போடக் கட்டும்பாரே
6599.
கட்டுமே பஞ்சரசச் சரக்குதானும் கருவாக பத்துமுறை இப்படியே போட்டால்
சட்டமுடன் சரக்கதுவுங் கட்டிப்போகும் சார்பான செந்தூரம் நீலவர்ணம்
மட்டுமே சிவப்பதுவும் ஏராதப்பா மார்க்கமுடன் பின்னும்வகை செப்பக்கேளு
பட்டுப்போல் செந்தூரஞ் சிவப்பதற்கு பாலகனே வரிசையது செப்புவேனே
6600.
செப்பவென்றால் நாவில்லை பாவுமில்லை தேசத்தின் கருவாளி செய்வாரப்பா
ஒப்பமுடன் கருமிகட்கு வாய்க்காதப்பா ஓகோகோ வாய்த்தாலும் விழலாய்ப்போகும்
இப்புவியில் உந்தமக்கு தருமிகட்கும் எழிலான வேதைமுகம் கூறினேன்யான்
தப்பிதங்கள் நேராது சன்மார்க்கவானே சட்டமுடன் செய்பவனே புத்திவானே

# போகரின் சப்த காண்டம் – 7000

6601.
புத்தியுடன் சரக்கதனை தானெடுத்து பூபாலா பின்னுமந்தக் கல்வமிட்டு
பத்தியுடன் கருந்துளசி சாறுவிட்டு பாலகனே நாற்சாமமறைத்த பின்பு
சத்தியமாய் பில்லையது லகுவாய்ச் செய்து சாங்கமுடன் ரவிதனிலே காயவைத்து
முத்திபெற சில்லிட்டுச் சீலைசெய்து முனையான ஜோதியென்ற புடந்தான்போடே
**6602.**
போடேதான் புடமதுவுங் கோழியாக பொங்கமுடன் இப்படியே பத்துமுறைபோடு
நாடேதான் செந்தூரம் நவிலப்போமோ நாதாந்த சித்துமுனி சொல்லாவண்ணம்
கூடநீ செந்தூரந் தனையெடுத்து கொற்றவனே கல்வமதிலிட்டு மைந்தா
ஆடேதான் குமரியின்தன் சாற்றினாலே வப்பனே தானரைப்பாய் சாமம்நாலே
**6603.**
நாலான சாமமது வரைத்தபின்பு நலமான பில்லையது லகுவாய்ச்செய்து
பாலான ரவிதனிலே காயப்போடு பாலகனே காய்ந்தபின்பு சில்லிசெய்து
மாலான சீலையது செய்தபின்பு மகத்தான மணல்மறைவிற் புடத்தைப்போடு
சூலான புடமாறி எடுத்துப்பாரு துப்புரவாய்ச் செந்தூரஞ் சொல்லொண்ணாதே
**6604.**
ஒண்ணாது செந்தூரம் என்னசொல்வேன் ஓகோகோ நாதாக்கள்கூறவில்லை
மண்ணான சரக்கதுவும் பிரிதிவி தன்னால் மகத்தான காரசாரமதுவேயாகி
தண்ணமுடன் வேதைமுகங் கோடாகோடி தாக்கிடவே சிமிட்டுவித்தை யென்னலாகும்
விண்ணான நாதாக்கள் காணாவித்தை விருப்பமுடன் உந்தனுக்கு ஓதினேனே
**6605.**
ஓதினேன் செந்தூரந் தனையெடுத்து வுத்தமனே வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
நீதியுடன் தானுருக்கிக் குருவொன்றீய நிஷ்களங்கமானதொரு வெள்ளிதானும்
ஆதியென்ற பஞ்சபூதசரக்கிலே வப்பனே வர்ணமது மிகவேயாகி
பாதிமதி சடையணிந்த தம்பிரானால் பலிக்குமடா வாதவித்தை ஜொலிக்கும்பாரே
**6606.**
ஜொலிக்குமே மாற்றதுவும் என்னசொல்வேன் சோராமல் வயதுபன்னிரண்டதாகும்
ஒலிக்குமே தங்கமதை என்னசொல்வேன் ஓகோகோ சித்துமுனி அறியாத்தங்கம்
பலிக்குமே சிவயோக மாண்பருக்கு பாவியென்மாண்பருக்கு பலியாதப்பா
எலித்தலையில் கோடாரித்தான் விழுந்தாற்போல எளிதான கைமுறைகள் வினோதந்தானே
**6607.**
தானான சுயத்தங்கம் பிறவித்தங்கம் தாக்கான சிவயோகிச் செய்யுந்தங்கம்
கோனான காலாங்கிநாதர்சொன்ன குருவான வாக்கதுவும் பொய்யாதப்பா
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்றமுடன் பலவிதமாய் நூலைப்பாடி
மானான மாண்பர்களும் அறியாமற்றான் மயக்கமுடன் மருட்கடலில் மழுந்திட்டாரே
**6608.**
மருட்டான சிடிகையென்ற வேதைதன்னை மார்க்கமுடன் அறியாமல் மாண்பர்தாமும்
இருட்டுவழி யேகியல்லோ பாலரெல்லாம் எழிலான கைமுறையை பாராமற்றான்
பொருளிருக்கு மிடமதுவும் தோன்றாவண்ணம் பொங்கமுடன் மதியீன மயக்கத்தாலே
குருட்டுவிழிப் பூனையது விட்டம்பாய்ந்த குறிப்பான கதைபோலே மேவலாச்சே

6609.
மேவலா மின்னமொரு மேன்மைகேளு மேதினியில் கீர்த்திபெற்ற புண்ணியவானே
ஆவலுடன் உந்தமக்கு மனதுவந்து வப்பனே காலாங்கிப் பதம்பணிந்து
சாவதுவும் என்றைக்கும் நிட்சயந்தான் சாங்கமுடன் பலதொழிலும் கற்றுமென்ன
போவது மெய்யல்லால் இருப்பதில்லை பொங்கமுடன் வையகத்து வாழ்க்கையாமே
6610.
வாழ்க்கையாம் வெகுகால மிருப்போமென்னும் வண்மையுடன் பலநூலும் வுளவாராய்ந்து
தாட்கமல பதாம்புயத்தை மனதிலுன்னி தகமையுள்ள காயாதிகற்பங்கொண்டு
வீட்கமுடன் நெடுங்காலஞ் சமாதிசென்று விருதாவாய் மறுபடியும் வந்துமென்ன
பாழ்க்கமுடன் பவக்கடலை விட்டகற்றி பாருலகில் சுந்தரம்போ லிருப்பீர்தானே
6611.
சுந்தரனே காவிகஷாயம்பூண்டு சுத்தமுடன் இருப்பதுவும் யோகியல்லோ
தந்திரமாய் அஷ்டசித்தி யாடியென்ன தாரணியில் யோகமது கொண்டுமென்ன
அந்தரமெல்லாம் புகழஞானங்கொண்டு அவனிதனில் பொய்வேஷங் கொண்டுமென்ன
மந்திரத்தில் மாங்காய் விழுங்கதையைப்போல மானிலத்தில் வெகுபேர்கள் மயங்குவாரே
6612.
மயக்கவே எந்தனது மணியேகேளும் மாசற்ற நவலோகச் செந்தூரந்தான்
தியக்கமது வாராமல் லோகந்தன்னை தீர்க்கமுடன் முறைபாடு சொல்வேன்யானும்
நயமுடைய தங்கமது ஒன்றேயாகும் நலமான காரீயம் ஒன்றேகாலாம்
அயமதுவும் விராகனது ஒன்றேயாகும் வப்பனே நாகமது ஆறதாமே
6613.
ஆறான செம்பதுவும் ஒன்றேயாகும் வப்பனே குடவனது ஒன்றேயாகும்
காரான வெள்ளியது ரண்டேயாகும் கருவான வெள்வங்கமொன்றேயாகும்
கூறான வெட்டுருக்கு ஒன்றேயாகும் குறிப்பான நவலோகமொன்றாய்க்கூட்டி
சேறான லோகமெலாம் ஒன்றாய்ச்சேர்த்து செப்புகிறேன் வரிசைபெற வண்மைகேளே
6614.
வண்மையாய் இடைகண்டு இனமுங்கண்டு வகுப்பான சேர்வையது யானுங்கண்டு
தண்மைபெற நாதாக்கள் தாள்வணங்கி தாமுரைத்த முறைபாடு வழிபாடெல்லாம்
உண்மையுடன் தாமறிந்து புத்திவானை வுகமையுள்ள லோகமதைக் கண்டாராய்ந்து
திண்ணமுடன் மூசையிட்டுச் சீலைசெய்து தீர்க்கமுடன் சரவுலையில் வூதிடாயே
6615.
ஊதவே நவலோக மொன்றாய்ச் சேர்ந்து வுத்தமனே வுருகியல்லோ களங்கமாகும்
நீதமுடன் களங்கெடுத்து வுடைத்துமைந்தா நிஷ்களங்கமாகவல்லொ கல்வமிட்டு
சூதமது யீரிடைக்கு ஒன்றேசேர்த்து சுத்தமுடன் கெந்தியது ரெட்டிப்பாக
வாதமது பலிப்பதற்கு வருண்மைந்தாகேள் வளம்பெறவே தாளகமும் பலந்தான்கூட்டே
6616.
கூட்டியே கண்டரது கால்தான்சேரு குணமான கெவுரியது களஞ்சிரெண்டு
நீட்டமுடன் மனோசிலையுங் காலதாக நெடிதான வீரமது களஞ்சிநாலு
தாட்டிகமாய்த் துத்தமது களஞ்சிரெண்டு தாக்கான பூரமது களஞ்சியாறு
வாட்டமுடன் இடைகண்டு கல்வமிட்டு வளம்பெறவே தானரைக்க வகையைக்கேளே

6617.
வகையான ஆறுவகை ஜெயநீர்தன்னால் வளம்பெறவே தானறைப்பாய் எட்டுசாமம்
துகையான சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி தோராமல் தானரைத்து பில்லைதட்டி
புகையாம லிருப்பதற்கு ரவியில்வைத்து புகழான சீலையது வலுவாய்ச்செய்து
பகையான புடமதுவும் மண்ணிலப்பா பாங்குபெற கோழியென்ற புடந்தான்போடே
6618.
புடமதுவுந் தீயாறி சென்றபின்பு பத்தியுள்ள பூபாலா யுரைப்பேனப்பா
தடங்கண்டு வழிகண்டு தண்மையோடு சட்டமுடன் மணலதனை நீக்கிமைந்தா
அடலான வாசல்தனை யெடுத்துப்பாரு வப்பனே செந்தூரம் நீலவர்ணம்
மடலான செந்தூரந் தனையெடுத்து மன்னவனே பின்னுமந்த கல்வம்பூட்டே
6619.
பூட்டியே சரக்கெல்லாங் கல்வமிட்டு புத்தியுள்ள கண்மணியே ஜெயநீரப்பா
தாட்டிகமாய் ஆறுவகை ஜெயநீர்தன்னால் சட்டமுடன் தானரைப்பாய்ப் பின்னுமல்லோ
வாட்டமுடன் தானரைத்து பில்லைதட்டி வளமுடனே ரவிதனிலே காயவைத்து
நீட்டமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து நீதியுடன் மண்மறைவிற் புடந்தான்தாக்கே
6620.
தாக்கவே கோழியது புடமதாக்கி தண்மையுள்ள பூபாலா போட்டாயானால்
நோக்கமுடன் வோடதனை யுடைத்துப்பாரு வுத்தமனே செந்தூரமென்னசொல்வேன்
ஆக்கமுடன் செந்தூரம் அருணன்போலாம் வப்பனே நாதாக்கள் கூறவில்லை
வாக்கதுவும் பொய்யாது வருண்மைந்தாகேள் வண்மைபெற செந்தூர வேதைதானே
6621.
தானான வேதைமைகஞ் சாற்றக்கேளிர் தண்மையுள்ள பூபாலாதருமவானே
கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமுரைத்த நீதிவண்ணம்
பானான பராபரியாள் பாதம்போற்றி பாருலகில் மாண்பர்களும் பிழைக்கவென்று
தேனான சிவயோக நிலையில்நின்று தேற்றமுடன் வேதைமுகங் கூறுவேனே
6622.
கூறுவேன் செந்தூரந் தனையெடுத்து குணமான வெள்ளிதனில் நூற்றுக்கொன்று
மாறுதலாய்க் குகையிலிட்டு வுருக்கிமைந்தா மார்க்கமுடன் தகடடித்துப் புடத்தைப்போடு
தேறுதலாய் மாற்றதுவும் என்னசொல்வேன் தேற்றமுடன் எட்டரைக்கு ஆணிக்கொக்கும்
கூறுதலாய்ப் பிறவியென்ற தங்கமாகும் குணமான செந்தூர வேதைகாணே
6623.
காணவே யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் கைலாச புலிப்பாணி கருவுள்ளானே
தோணவே செம்பதனை யுருக்கிமைந்தா துப்புரவாய் இடைக்கிடைதான் செந்தூரத்தை
வேணமட்டும் செம்புருக்கிக் கிராசமீவாய் வித்தகனே செம்பதுவுங் களங்கமாகும்
மாணமருங் கல்வியுள்ள பூபாலாகேள் மகத்தான செம்பதனை யூதிப்போடே
6624.
ஊதவே செம்பதுவும் தங்கச்செம்பாம் வுத்தமனே நாதாக்கள் மறைத்தசெம்பு
நீதமுடன் செம்பெடுத்து செப்பக்கேளும் நிஷ்களங்கமானதொரு வெள்ளிதன்னை
தோடமுடன் நூற்றுக்கு ஒன்றுசேர்க்க துப்புரவாய் மாற்றதுவும் பதினாறாகும்
வாதமது காணவென்றால் இதுவேவாதம் வளம்பெரிய நாதாக்கள் வாதம்பாரே

6625.
பாரேதான் வாரடித்துப் புடந்தான்போடு பாதகாண வெள்ளியது செம்பினாலே
நேரேதான் மாற்றதுவும் அதிகங்காணும் நேர்மையுள்ள பிறவியென்ற தங்கமாச்சு
சீரேதான் இத்தங்கம் சிவயோகத்தங்கம் சிறப்பான மாண்பர்களுக் குகந்ததங்கம்
ஆரோதான் சொல்வாரோ யுந்தமக்கு வப்பனே யானுரைத்தேன் உண்மைபாரே
6626.
உண்மையாம் நவலோக செந்தூரத்தை வுத்தமனே உந்தனுக்கு ஓதினேன்யான்
வண்ணமுடன் சீவனத்துக் கிடமதாக வளம்பெரிய செந்தூரம் பதனம்பண்ணு
எண்ணரிய நற்பொருளை குருவாயெண்ணி எளிதான வறைமை வருங்காலந்தன்னில்
கண்மறையுங் காலமது தானறிந்து கண்மணியே சீவனத்துக் கிடந்தான்கொள்ளே
6627.
கொள்ளவே வருமை வருங்காலந்தன்னில் கொற்றவனே நவலோக செந்தூரத்தை
கள்ளமது வாராமல் மைந்தாகேளு கணக்குடனே நாளொன்றுக் கிருநேரந்தான்
வள்ளலுயர் வணிகரிடம் சென்றுமல்லோ வகையுடனே பணவிடைதான் பொன்தான்யீய்ந்து
உள்ளவரை சீவியநாளுள்ள மட்டும் வுத்தமனே காலமது கழிக்கநன்றே
6628.
நன்றான செந்தூரம் பதனம்பண்ணு நாதாக்கள் மறைத்துவைத்த செந்தூரந்தான்
குன்றான மலைபழுக்கும் நவலோகந்தான் கொற்றவனே கருமிகட்கு மனம்விடாதே
தின்றாலும் ஒருவனாய் மனதுவந்து தீர்க்கமுடன் மருமமதாயுண்பாயப்பா
அன்றெறித்த ஆதிசிவன் உந்தனுக்கு வப்பனே தான்கொடுத்த வேதையாமே
6629.
வேதையா மின்னமொரு போக்குசொல்வேன் வேதாந்தக் கண்மணியே புனிதவானே
கோதையர்கள் மாயவலை சிக்கிடாதே கொற்றவனே சிக்கினால் மனம்விள்ளாதே
மாதாவின் சீர்பதத்தை தாரிணியில் எப்போதும் தலைமேற்கொண்டு
சீதையுடன் ராமருந்தான் இருந்தநேர்மை செப்பினதோர் கதைதனையே கண்டீர்தானே
6630.
கண்டதொரு மாண்பர்களுக் கிந்தலோகம் கருவான ரோகமது போவதற்கும்
பண்டுளவ மாலையணி கிருஷ்ணாவதாரன்பார் மாலையாகவல்லோ பூண்டுகொண்டு
தண்டுளவ துளசியென்ற மூலிச்சாற்றால் சட்டமுடன் நவலோக செந்தூரத்தை
கொண்டிடவே யனுபானம் பணவிடைதானப்பா கொற்றவனே ரோகமது தீருங்காணே
6631.
காணவே நவலோக செந்தூரத்தால் கசரோகம் ஷயரோகம் கழன்றுபோகும்
பூணவே திருகடுகை சூரணத்தில் புகழான செந்தூரம் பணவிடைதான்கொள்ள
ஆணவத்தால் மிஞ்சிவந்த மேகரோகம் வப்பனே கடல்புக்கி யோடும்பாரு
மாணமருங் கல்வியுள்ள மன்னாகேளும் மகத்தான வியாதிமுகம் இன்னங்கேளே
6632.
கேளப்பா வனுபானம் நெய்தானாகும் கெடியான நவலோக செந்தூரத்தை
ஆளப்பா வியாதி முகந்தானறிந்து வப்பனே யனுபானமறிந்துகொண்டால்
கேளப்பா ஒருநாளும் வாராதப்பா குணமுள்ள நவலோக செந்தூரந்தான்
பாரப்பா போகாமல் மண்டலந்தான் பரிவுடனே கொண்டவர்க்கு ரோகம்போமே

6633.
போமேதான் பதினெட்டு குஷ்டம்போகும் பொல்லாத மேகமென்ற இருபதும்போம்
ஆமேதான் சூலைபதினெட்டும்போகும் வப்பனே காமாலையாறுந்தீரும்
வேமேதான் வாதமது யெண்பதும்போகும் வேகமுடன் பித்தமது நாற்பதும்போம்
நேமேதான் சொன்னபடி கிராணிபோகும் நலமாகப் பாண்டுவகை தீருந்தானே
6634.
தீருமே தேகமது வூதல்தீரும் தீர்க்கமுடன் ரோகநீரெல்லாம்போகும்
ஈரதனில் தான்சுரக்கும் விஷநீரப்பா எழிலான தந்தநோயெல்லாந்தீரும்
நாறுடலம் கிரந்தியென்ற புண்கள்போகும் நலமான தாதுடனே வலியுண்டாகும்
கூறுமுனி காலாங்கிநாதர்வாக்கு குவலயத்தில் ஒருநாளும் பொய்யாதாமே
6635.
பொய்யாது நவலோகஞ் செந்தூரந்தான் பூட்டுகிறேன் நாலாயிரத்துச்சொச்சம்
மெய்யிலுள்ள ரோகமது யெல்லாந்தீரும் மேலான நவலோக செந்தூரந்தான்
வையகங்கள் தான்புகழும் செந்தூரத்தை வளம்பெரிய நாதாக்கள் மறைத்துவைத்தார்
துய்யநல்ல பண்டிதங்கள் மிகவாராய்ந்து துப்புரவாய் ஓதிவைத்தேன் நுணுக்கம்பாரே
6636.
பாரேதான் நவலோக செந்தூரத்தை பாருலகில் நாதாக்கள் மறைத்துவைத்தார்
ஆரோதான் சாஸ்திரங்கள் உளவாராய்ந்து வப்பனே போதிப்பார் யாருமில்லை
நேரேதான் வுந்தன்முகம் மனதுவந்து நெடிதான முறைபாடு வழிபாடெல்லாம்
தீரேதான் இடைபாகங் கைபாகங்கள் தீர்க்கமுடன் உந்தனுக்கு போதித்தேனே
6637.
போதித்தேன் இன்னமொரு மார்க்கங்கேளிர் பொங்கமுடன் புலிப்பாணி புனிதவானே
ஆதித்தன் சந்திரன்போல் வெள்ளிபோக்கு வப்பனே யானுரைப்பேன் அன்புள்ளோனே
நீதியுடன் சூதமது பலந்தானொன்று நிஷ்களங்கமானதொரு காடிவீரம்
தீதில்லாப் பாஷாணஞ் சுன்னமொன்று தீர்க்கமுடன் களஞ்சியிடை தானுந்தூக்கே
6638.
தூக்கியே கல்வமதி லிட்டுமைந்தா துப்புறவாய் ஆறுவகை செயநீர்தன்னால்
நோக்கமுடன் தானரைப்பாய் இரண்டுசாமம் நுணுக்கமுடன் மெழுகதனை யுருட்டிமைந்தா
வாக்குடனே பாகமது பிசகிடாமல் வளமான சூதமென்ற வெண்ணைதன்னை
பாக்களவாயுருட்டியதை மூசையிட்டு பண்புபெற சில்லிட்டுச் சீலைசெய்யே
6639.
சீலையென்றால் ஏழுசீலை வலுவாய்ச்செய்து திட்டமுடன் சரவுலையில் வைத்துவூது
வாலையுடன் தீயாறி யெடுத்துப்பாரு வளமான சூதமது வெள்ளியாகும்
காலையிலே தானுதிக்குஞ் சூரியன்போல் கருவான வெள்ளியது ஜோதிமெத்த
ஆலையெனும் தகடதனை இறுத்திமைந்தா வப்பனே புடம்போடத் துலக்கமாமே
6640.
துலக்கமாம் வெள்ளியது என்னசொல்வேன் துப்புரவாய்ச்சூதமென்ற வெள்ளியாச்சு
பலத்ததொரு சிவராச வெள்ளிதன்னை பாருலகில் நாதாக்கள் மறைத்துவைத்தார்
சுலபமென்ற வேதைமுகங் காணாமாண்பர் சுந்தரனே வெகுகோடி மாண்பரப்பா
கலக்கமது வாராது சூதவெள்ளி கருவான வங்கத்துக்கு அசைந்திடாதே

6641.
அசையாது சோதனைக்கு வுறுதிவெள்ளி வப்பனே நாதாக்கள் நூலறிந்து
வகையொன்றும் நேராமல் தாள்பணிந்து வஷ்டாங்க யோகநிலைத் தன்னிற்சென்று
திசையெட்டுங் குளிகையது யானுங்கொண்டு திருவிளையாள் மனோன்மணியாள் போற்றிசெய்து
இசையுடனே யுந்தமக்கு இந்தபாகம் இன்பமுடன் தான்கொடுத்த வேதையாச்சே
6642.
ஆச்சப்பா கைபாகஞ் செய்பாகந்தான் வப்பனே வினயமென்ற பதமறிந்து
மூச்சடங்கி நெடுங்கால மிருந்தசித்து முனையான பாகமதைக் கைமறைத்தார்
பாச்சலுடன் அடியேனுங் குளிகைகொண்டு பாருலகைச்சுத்தியல்லோ மனதுவந்து
வீச்சுடனே யுந்தமக்கு ஓதிவைத்தேன் விட்டகுறை இருந்ததினால் வாய்க்கலாச்சே
6643.
வாய்க்கவே முன்செய்த புண்ணியத்தால் வளமான வினயமென்ற வெள்ளிப்போக்கு
தாய்க்கமலந் தாள்பணிந்த புண்ணியத்தால் சட்டமுடன் உந்தமக்குக் காணலாச்சு
பேய்பிடித்து மாண்பரெல்லாம் வாதந்தேடி பேரானநிலைகடந்து பதிகடந்து
மாய்கையெனும் சமுசார மிட்டிழுந்து மாடிழந்து வீடிழந்து மாண்டார்தாமே
6644.
மாண்டாரே வையகத்தில் கோடிமாண்பர் மானிலத்தில் கணக்குண்டோ லக்கோயில்லை
வேண்டியதோர் கருமான மனேகங்கொண்டு விட்டகுறை யில்லாமல் விழலாய்ப்போனார்
காண்டவம்போல் பூர்வீக புண்ணியத்தால் தற்பரனே யுந்தமக்கு இந்தபாகம்
ஆண்டகையாள் மனோன்மணியாள் கடாட்சத்தாலே வப்பனே யுந்தமக்கு வந்தவாறே
6645.
வாறான யின்னமொரு போக்குசொல்வேன் வளமையுள்ள புலிப்பாணி மன்னாகேளும்
கூறான வெள்வங்கம் பலந்தானொன்று கொற்றவனே சூதமது பலந்தான்பாதி
நீறான பாஷாண சுன்னமப்பா நெடிதான மூசையிட்டு வுருக்கியல்லோ
பேறுடைய பற்பமது குன்றியப்பா பெருமையுடன் உருக்குமுகந் தன்னில்தாக்கே
6646.
தாக்கவே வெள்வங்கம் உருகியல்லோ தகமையுள்ள நீரதனை யுரிந்துகொள்ளும்
தேக்கலென்ற வெள்ளீய வூட்டாங்காய்ப்பு தெளிவான நீரதுவும் மருகியல்லோ
நோக்கமுடன் பிறவியென்ற வெள்ளியாச்சு நெடிதான வங்கமதற் கசையாதப்பா
ஏக்கமது கொள்ளாமல் இந்தபாகம் எளிதாகச் செய்வதற்கு சித்தியாமே
6647.
சித்தியாம் வெள்ளீயம் பிரயோகித்தால் சீரான சமுசாரிக்கான வித்தை
முத்திபெற வழியுண்டு ஞானமுண்டு மூதுலகில் நீயுமொரு சித்தனாவாய்
நித்தியமும் சிவானந்த நிலையில்நின்று நீதியுடன் சிவயோகந் தன்னைப்பாரு
சத்தியவான் வார்த்தையப்பா பொய்யாதப்பா சட்டமுடன் காலாங்கி சொன்னவாக்கே
6648.
சொன்னதொரு புலிப்பாணி மைந்தாகேளு சொகுசுள்ள கண்மணியே தீராமாரா
நன்னயமாய் பலநூலுங் கற்றுணர்ந்த நாதாந்த சித்தொளிவை நவில்வேனப்பா
உன்னிதமாய் நாகமென்ற லோகந்தன்னை வுற்பனமாய்த் தானெடுத்து வுண்மைபாரு
பன்னவே நாகமது தானெடுத்து பாலகனே உருக்கியல்லோ சாய்த்திடாயே

6649.
சாய்க்கவே இலுப்பைநெய் தன்னிலப்பா சட்டமுடன் சாரமதைக் கிராசமீய்ந்து
வாய்க்கவே பதினோரு முறைதானப்பா வளமுடனே யுருக்கிமிகச் சாய்த்தாயானால்
மாய்த்துமே சட்டையது சவளையாகி மகத்தாக நாகமது வொருகண்ணாகி
பேந்தொரு மழையினால் மண்கசடான பேரான பிரீதிபோலிருக்கும்பாரே
6650.
பாரப்பா புலிப்பாணி யின்னங்கேளு பாகமுடன் முனசெய்த நாகந்தன்னை
நேரப்பா கரிவங்கந் தானுங்கூட்டி நேர்மையுடன் தானுருக்கிச் செப்பக்கேளிர்
ஆரப்பா தேன்வளைய லென்றுபூநீர் வப்பனே தானுருக்கி கவுவிட்டாட்டி
தீரப்பா நாகமதற் கங்கிபூட்டி திறமுடனே ஏழுவகைச் சீலைசெய்யே
6651.
ஏழான சீலையது வலுவாய்ச்செய்து எழிலான ரவிதனிலே காயவைத்து
ஆழான புடமதுவுங் கோழியப்பா வப்பனே தான்போட்டு எடுத்துப்பாரு
மீளான நாகமது கட்டும்பாரு மிக்கான தவளையென்றே செப்பலாகும்
கோளாறு வாராது இந்தபாகம் கொற்றவனே நாகமது கட்டிப்போச்சே
6652.
கட்டியதோர் நாகமது யின்னஞ்சொல்வேன் கருவான கையானின் சாற்றினாலே
திட்டமுடன் தானுருக்கி சாய்ப்பாயப்பா திறமான நாகமது சீறலேகி
சட்டமுடன் தவளையது போலேயாகி தகமையுள்ள நாகமது பகையடங்கி
நட்டமில்லா களங்கமதுபோல் ஜோதியோடும் நலமான நாகத்தின் கட்டுதானே
6653.
தானான நாகமது கட்டுதன்னை தண்மையுள்ள பூபாலா சாற்றக்கேளு
மானான மருதோன்றி சாற்றினாலே மார்க்கமுடன் தானுருக்கி சாய்ப்பாயப்பா
பானான பரஞ்சுடர்போல் ஜோதிமின்னும் பாலகனே பத்துமுறை உருக்கிச்சாய்க்க
தேனான நாகமது கண்ணடைந்து யேற்றமுடன் புத்துமென்ற புட்டுதானே
6654.
புட்டான நாகமதைத் தானெடுத்து புகழான பழச்சாற்றில் உருக்கிச்சாய்க்க
திட்டமுடன் பத்துமுறை வுருக்கிப்பாரு தீர்க்கமுள்ள சவளையது போலேயாகும்
கட்டமுடன் பாராமல் விராலிதன்னை கருவாகத் தானுருக்கிச்சாய்த்துப்பாரு
நட்டமென்ன சிவந்தகொடி வேலிதன்னை நன்றாக பத்துமுறை சாய்த்திடாயே
6655.
பத்தான முறையதுஞ் சாய்த்தாயானால் பாலகனே நாகமது கொடிகட்டாம்
சத்தான நாகமது கட்டேயானால் சதகோடி சூரியர்போல் பிரகாசிக்கும்
முத்தமரும் ஞானமுள்ளோர் செய்யமாட்டார் மூதுலகில் சமுசாரி செய்யும்வித்தை
குத்தமது வாராது நாகந்தன்னை குணமுடனே செய்பவனே வாதியாமே
6656.
வாதியாம் நாகமென்ற களங்கெடுத்து வரிசைபெற சூதமது நேரேசேர்த்து
நீதியாம் ஆறுவகை ஜெயநீர்தன்னால் நீட்டியரை யெண்சாமம் தானுமப்பா
ஆதியெனும் பரஞ்சுடரை மனதிலெண்ணி சோராமல் தானரைப்பாய் மெழுகுபோலாம்
பாதிமதி சடையணியுந் தம்பிரானால் பாலகனே மெழுகது போலிருக்குந்தானே

6657.
தானான மெழுகதனை பில்லைதட்டி தகமையுடன் ரவிதனிலே காயவைத்து
கோனான குருசொன்ன வாக்குபோலே கொற்றவனே சில்லிட்டுச் சீலைசெய்து
மானான மணல்மறைவிற் புடத்தைப்போடு மகத்தான செந்தூரம் நீலவர்ணம்
பானான புடமதுவும் பத்தேயாகும் பாலகனே தானரைத்துப் போடுபோடே
6658.
போடவே செந்தூரம் அருணன்போலாம் பொங்கமுடன் தானெடுத்து செப்பக்கேளு
ஆடவே ஜீவனத்துக் கிடமேதென்றால் வப்பனே வழிபாடு சொல்வேனப்பா
நீடவே செம்பதுதான் களஞ்சிபத்து நெடிதான செந்தூரங் களஞ்சியொன்று
கூடவே தானுருக்கிக் கொடுத்துப்பாரு கொற்றவனே மாற்றதுவும் ஒன்பதாமே
6659.
தாமேதான் செம்பதனை வாரடித்து தண்மைபெற புடம்போட பிறவித்தங்கம்
வேமேதான் காவிக்கு முப்புக்கேகா வேதாந்தக் கண்மணியே விளக்கம்பாரு
ஆமேதான் பசுமையென்ற தங்கமப்பா வப்பனே சமுசாரிக்கானதங்கம்
நாமேதான் சொன்னபடி நாகத்தங்கம் நலம்பெறவே செய்பவனே புத்திவானே
6660.
புத்தியா மின்னமொரு போக்குசொல்வேன் புகழான வெள்ளியது பத்துக்கொன்று
வெற்றிபெற தானுருக்கி குருவொன்றீய வித்தகனே மாற்றதுவும் என்னசொல்வேன்
சத்தியமாய் எட்டரைதான் ஆணிக்கொக்கும் சன்மார்க்க புத்தியுள்ள பூபாலாகேள்
நித்தியமும் குருபதாம்புயத்தைப்போற்றி நீமகனே ஜீவித்து இருப்பீர்காணே
6661.
காணவே வாரடித்து புடந்தான்போடு கருவான வெள்ளியது பசுமையாகி
நீணவே தானிருக்கும் மாற்றோமெத்த நிஷ்களங்கமானதொரு தங்கமப்பா
ஆணவங்கள் தானொடுங்கி பதாம்புயத்தை வப்பனே எந்நாளும் மனதிலெண்ணி
காணவே கரங்குவித்து அஞ்சலித்து காசினியில் மர்மமதாய் வாழ்குவீரே
6662.
வாழ்கவென்றால் செந்தூரம் பதனம்பண்ணு மகத்தான புலிப்பாணி மன்னாகேளு
வாழ்கவென்றால் செந்தூரந் தனையெடுத்து வளம்பெறவே செயரோகந் தன்னிலீவாய்
வாழ்கவென்றால் மேகமென்ற இருபதுக்கும் மகத்தான கசரோகந்தன்தனக்கும்
வாழ்கவென்றால் காயாதி கற்பம்போலே வண்மையுடன் தானருந்தி வண்மைகொள்ளே
6663.
கொள்ளவே அனுபானந் தன்னிலீய கொற்றவனே காசமது வாறும்போகும்
உள்ளதொரு பாண்டுவகையாறுந்தீரும் வுத்தமனே வாயுவென்ற தென்பதும்போம்
கள்ளமிலா பித்தமது நாற்பதும்போம் கயரோகஞ் சில்விஷங்களற்றுப்போகும்
வள்ளலுயர் மேகமென்ற குஷ்டரோகம் வண்மைபெறுந் தாமரையும் தானும்போமே
6664.
போமேதான் பொல்லாத ரோகம்போகும் போக்கான வாய்நாற்றம் வெள்ளைதீரும்
நாமேதான் சொன்னபடி நளிர்சுரங்கள் நலமிலாக் கிராணியது ஆறுந்தீரும்
வேமேதான் நேத்ரவலி தொண்ணூற்றாறும் விட்டகலும் மேனியது காந்திமெத்த
ஆமேதான் நாதாக்கள் கொண்டகற்பம் வப்பனே நாகசெந்தூரம்பாரே

6665.
பாரேதான் செந்தூரம் உண்டபேர்க்கு பாலகனே யேழானை பலமுண்டாகும்
நேரேதான் கிருஷ்ணாவதாரனைப்போல் நெடிதான ஸ்ரீலீலை மன்மதந்தான்
சீரேதான் செந்தூரந் தானுமல்லோ ஸ்ரீராமர் கொண்டதொரு கற்பமாகும்
வேறேதான் கற்பமது இதற்கீடுண்டோ வேதாந்தத் தாய்கொடுத்த கற்பமாச்சே
6666.
கற்பமாம் நாகமென்ற செந்தூரந்தான் காலாங்கி நாதருட கடாட்சத்தாலே
சொற்பமென்று நினையாதே துய்யபாலா சுந்தரனே சமுசாரிக்கானவித்தை
விற்பனர்கொண்டாடும் வேதைதன்னை விள்ளாதே யொருவருக்கும் விள்ளவேண்டாம்
அற்பமென்று நினையாதே வருண்மைந்தாகேள் ஆச்சரியமானதொரு மகிமைதானே
6667.
மகிமையா மின்னமொரு போக்குசொல்வேன் மகத்தான புலிப்பாணி மன்னாகேளு
அகிலமெலாந் தான்புகழும் காலாங்கிநாதர் வண்மையுடன் எந்தமக்கு சொன்னநீதி
சகிதமுடன் உந்தமக்கு ஞானோபித்து சகலகலை கியானமெல்லாம் உபதேசிப்பேன்
விகிதராய்க் கருமிகளும் உம்மைப்பற்றி வீரமுடன் நேசமது கொள்வார்பாரே
6668.
பாரான கருமிகளும் உம்மைவேண்டி பாருலகில் சினேகவதஞ்செய்யவென்று
காரான நல்லவர்போல் வார்த்தைகூறி கடுஞ்சினத்தைமனதிலுன்னி மெய்யேகூர்வார்
நேரான சிடிகையென்ற வேதைமார்க்கம் நேர்மையுடன் தாமுரைக்க வதிதஞ்சொல்வார்
கூரான வார்த்தையது மிகவிடாமல் குணமுடனே நயனமதுவாய் நேசங்கொள்ளே
6669.
கொள்ளவென்றால் பூரணத்தைக் கேட்பாரப்பா கொற்றவனே மர்மமதை வெளிவிடாதே
தெள்ளுதமிழ் வாகடத்தைப் பேசுபேசு தேஜொளியில் சின்மயத்தை வெளியிடாதே
உள்ளதொரு பொருளெல்லாம் உவமையோடும் வுத்தமனே தடம்பிரித்து கேட்பாரப்பா
கள்ளமனமில்லாமல் கபடகற்றி கண்மணியே உண்மையது புகன்றிடாயே
6670.
புகலவே புலிப்பாணி மன்னாகேளு புகழான பூரணமென்ற வேதைதன்னை
சகலமுனி சித்துகளுஞ்சொன்னாரப்பா தாரணியில் மர்மமதாய் சொல்லிவிட்டார்
நிகலவே சாத்திரங்கள் கோடாகோடி நீதியுடன் கட்டுமுறை யனேகங்கண்டார்
அகலமுள்ள இரும்பென்ற பாண்டந்தன்னை வப்பனே வெண்மையதாய் துலக்கிப்போடே
6671.
போடவேதான் பூரமென்ற சரக்குதன்னை பொங்கமுடன் அயச்சட்டி தன்னிலிட்டு
நீடவே பலமொன்றாய் நிறுத்திக்கொண்டு நிஷ்களங்கமான வெள்ளாட்டுப்பாலால்
சாடவே சுறுக்கதுவும் எட்டுசாமம் தண்மையுடன் தான்கொடுத்து பின்னுங்கேளு
கூடவே பசுவின்பால் நாலுசாமம் கொற்றவனே தான்கொடுத்து எடுத்திடாயே
6672.
எடுக்கவே பூரமது என்னசொல்வேன் எழிலான தந்தமது போலேகாணும்
ஒடுக்கமதாய் இருகியல்லோ யிறுகிக்காட்டும் வுத்தமனே தவளைநிறம்போலேகாணும்
தொடுக்கவே வெடியுப்பு பலமொன்றாகும் தோறாமல் சீனமது பலமொன்றாகும்
விடுத்ததொரு துருசதுவும் பலமொன்றாகும் வித்தகனே சிங்கியது பலமொன்றாமே

6673.
ஒன்றான சரக்கெல்லாம் கல்வமிட்டு வுத்தமனே நாதாக்கள் சொன்னவண்ணம்
தென்றிடவே கல்வமதி லிட்டுமைந்தா வேகமுள்ள வருக்கன்பால் தன்னாலாட்டி
குன்றான பூரமதுக் கங்கிபூட்டி கூர்மையுடன் ரவிதனிலே காயப்போடு
நன்றான சீலையது ஏழுசெய்து நலமுடனே எரிக்கும்வகை வரிசைகேளே
6674.
வரிசையாய் தளவாயாம் பாண்டந்தன்னில் வகையுடனே பூமணலைக்கொட்டியேதான்
பரியான பூரமதை எடுத்துமைந்தா பாங்குபெற மணலதனில் பொதிந்துமல்லோ
விரிவான மணலதனால் மேலுமூடி மேலுமந்ப்பாண்டமிட்டு சில்லுசெய்து
துரிதமுடன் ரவிதனிலே காயவைத்து துப்புரவாய் வாலுகையால் ஏற்றிடாயே
6675.
ஏற்றியே தீபமது என்னசொல்வேன் எழிலான புலிப்பாணி புத்திவானே
போற்றியே வம்பாளின் பதாம்புயத்தை பொங்கமுடன் தானெரிப்பாய் கமலம்போல
நீற்றவே பூரமது கட்டுவாகி நீதியுடன் தவளம்போல் நிற்கும்பாரு
ஆற்றியே ஜாமமது நாலுமாகும் வப்பனே தானெரித்து எடுத்திடாயே
6676.
எடுக்கவே கணபதியைப் போற்றிசெய்து எழிலான பாண்டமது திறந்துபாரு
விடுத்ததொரு பூரமது என்னசொல்வேன் விண்ணுலகு சந்திரன்போல் விளக்கமெத்த
தொடுத்ததொரு பூரமதைத்தானெடுத்து சோராமல் கவசமதை நீக்கியேதான்
தடுத்திடா மருந்துவகை யானுரைப்பேன் தற்பரனே சிற்பரனே சார்ந்துகேளே
6677.
சார்ந்துமே பூரமதை எடுத்துபாலா தண்மையுடன் பற்பமது செய்வதற்கு
ஓர்ந்துமே யீயமென்ற செந்தூரத்தை ஓகோகோ நாதாக்கள் மறைத்துவைத்தார்
தீர்ந்ததொரு செந்தூரந் தனையெடுத்து தீர்க்கமுடன் பூரமதுக்கிடையே தூக்கி
ஆர்ந்துமே சிற்றண்டக் கருவினாலே வப்பனே தானரைப்பாய் சாமம்நாலே
6678.
நாலான சாமமது வரைத்தபின்பு நலமாகப் பூரமதுக் கங்கிபூட்டி
பாலான ரவிதனிலே காயப்போடு பட்சமுடன் தானெடுத்து சீலைசெய்து
மாலான மண்மறைவிற் புடத்தைப்போடு மகத்தான கோழியென்ற புடமேயாகும்
சூலான பூரமதுக்குள்ளிருந்து சுந்தரனே சூதமது மடியும்பாரே
6679.
மடியுமே இப்படிதான் பத்துமுறை போடு மார்க்கமுடன் ஈயமென்ற செந்தூரத்தால்
படிபடியாய் கருவிட்டு ஆட்டிஆட்டி பாலகனே பூரமதுக் கங்கிபூட்டி
விடிந்தபின்பு ரவிதனிலே காயவைத்து வித்தகனே சீலையது வலுவாய்ச் செய்து
முகந்தபின்பு முன்போலே புடமும்போடு முனையான பதமாறி எடுக்கக்கேளே
6680.
கேளேதான் பூரமது இறுகியல்லோ நெடியான சூதமது மடங்கிநிற்கும்
வீளேதான் பூரமதை எடுத்துமைந்தா விருப்பமுடன் பின்னுமல்லோ வதிதங்கேளு
நாளேதான் போகாமல் நாதவானே நவிலுகிறேன் பஞ்சபூத வாராதாரம்
சூளேதான் துருசு வெடியுப்புக்காரம் சுந்தரனே வருஞ்சாரம் சீனந்தானே

6681.
சீனமாங் கரியுப்புத் தானுஞ்சேர்த்து சிறப்புடனே செவ்வாலம் பாலாலாட்டி
சோனமதாம் புரத்துக் கங்கிபூட்டி சோராமல் ரவிதனிலே காயப்போடு
கானமருஞ் சுண்ணாம்பு சீலைசெய்து கடுரவியால் பின்னுமங்கே காயவைத்து
ஊனமதுவாராமல் மணல்தானப்பா வுத்தமனே கோழியென்ற புடத்தைப்போடே
6682.
புடமாறீத் தீர்ந்தபின்பு எடுத்துப்பாரு புகழான வாறுவகை சரக்குதன்னால்
தடமான பஞ்சபூத வாராதாரம் தண்மையுடன் சரக்கதுவும் சேர்த்துமல்லோ
திடமாகப் புகழடங்கி வீரடங்கி தீர்க்கமுள்ள பூரமது என்னசொல்வேன்
மடலான பூரமது வுருகியல்லோ மார்க்கமுடன் தந்தம்போலிருக்கும்பாரே
6683.
தந்தமாம் பூரமது கட்டுமானால் தண்மையுள்ள வேதையது என்னசொல்வேன்
அந்தமுடன் பூரமதை எடுத்துபாலா ஆகாகா வராகமென்ற நெய்யினாலே
பந்தமுடன் சுருக்கதுவும் நாலுசாமம் பாகமுடன் தான்கொடுக்க முழுகட்டாகும்
விந்தையுடன் பூரமது சிடிகைவேதை விண்ணுலகில் மண்ணுலகில் காணார்தாமே
6684.
காணாமல் சித்துமுனி நாதர்தாமும் கருவான சாத்திரங்கள் அதிகஞ்சொன்னார்
தோணாத கருக்குருவும் முறைபாடெல்லாம் தோறாமல் பாடிவைத்தார் நூல்கள்தோறும்
வீணாதான் போகாமல் சாத்திரத்தில் விட்டகுறை இருந்தாலே லபிக்குமென்று
மாணாக்கள் அறியவென்று பலநூலெல்லாம் மானிலத்தில் பலவிதமாய்க் கூறினாரே
6685.
கூறினார் வாதநூல் அனேகஞ்சொல்லி குணமான பாகமதை விட்டறுத்து
தேறினார் நூல்களெல்லாம் முன்பின்னாக தஏற்றமுடன் கைமறைப்பாய்க்கட்டறுத்து
மீறியே சிலநூலில் உண்மைகூறி மிக்கான செய்பாகம் வேரறுத்து
சீறியே மாணாக்கர் தமைச்சினந்து சீரறுத்து வாரறுத்து திகைத்திட்டாரே
6686.
திகைத்ததொரு நூல்களெல்லாம் உளவாராய்ந்து தீர்க்கமுடன் காலாங்கிப் பதம்பணிந்து
பகைத்தொரு சித்தர்களைக் கரங்குவித்து பட்சமுடன் அஞ்சசிகள் மிகவுஞ்செய்து
வகையுடனே குளிகையது பூண்டுமல்லோ வளமான சீனபதி அடியேன்சென்று
தகமையுடன் குருபரனார் பதாம்புயத்தை தாள்பணிந்து சதாகாலந் தரிசித்தேனே
6687.
தெரிசித்தேன் சமாதிமுகம் மதிவாய்நின்று தேற்றமுடன் குருவணக்க மதிகங்கூறி
புரிசடையோன் பதாம்புயத்தை மனதிலெண்ணி பூபாலா காலாங்கிநாதர்பாதம்
தெரியாத எந்தனுக்கு உகமைகூறி தெளிவான உபதேசம் மிகவேநண்ணி
சரியான சமாதியது பெறவேவேண்டி சட்டமுடன் வருளெனக்கு அருளென்றேனே
6688.
என்றதொரு வாக்கதுவும் கூறும்போது எழிலான காலாங்கி நாதர்தாமும்
தென்றிசையில் கும்பமுனி நாதருக்கு தேற்றமுடன் தரிசனைகள் தந்தாற்போல
சென்றதொரு எந்தனுக்கு வாசீர்மங்கள் தெளிவாக மனதுவந்து வதிகங்கொண்டு
கன்றழுகுங் காலமதில் தாயுவந்து கடும்பசிக்கு பால்கொடுத்த கதையைப்போலாச்சே

6689.
ஆச்சப்பா எந்தனுக்கு உபதேசங்கள் அவனிதனில் ஆரதுதான் சொன்னாரில்லை
மூச்சடங்கி சென்றதொரு காலாங்கிநாதர் முனையாக எந்தனுக்கு உண்மைகூறி
மாச்சலுடன் சமாதிமுகந் தானிருந்து மன்னவனே கருவிகரணாதியந்தம்
ஏச்சலது வாராமல் பெற்றுமல்லோ எழிலான சீனபதி கடந்திட்டேனே
6690.
கடந்தேனே சீனபதி நீங்கியல்லோ காலாங்கி நாதருட கிருபையாலும்
சுடர்போன்ற மனோன்மணியாள் கடாட்சத்தாலும் சுந்தரனே யஷ்டதிசை துடர்ந்துவந்தேன்
திடமான முறைபாடு வழிபாடெல்லாம் தீர்க்கமுடன் குணபாடு தெரிந்துமேதான்
சட்டமுடன் காயாதி கற்பங்கொண்டு தாரணியில் நெடுங்கால மிருந்திட்டேனே
6691.
இருந்தேனே நெடுங்காலங் குளிகைகொண்டு எழிலான சமாதிமுகம் எல்லாங்கண்டு
பொருந்தவே யுந்தமக்கு உபதேசங்கள் பொங்கமுடன் கொட்டிவைத்தேன் இடங்கொள்ளாது
திருந்தவே பூரமென்ற காயகற்பம் திட்டமுடன் குன்றிவீதங் கொண்டாயானால்
அருந்தியதோர் தேகமது ஜோதிமின்னும் வப்பனே பூரமதின் வேகந்தானே
6692.
தானான குருசொன்ன வாக்குபோலே சட்டமுடன் மண்டலந்தான் உண்பாயானால்
பானான தேகமது என்னசொல்வேன் பரிதிகண்ட பனிபோலே நோய்கள்தீர்ந்து
தேனான மேனியது காந்திவீசும் தேசமதில் விதியாளி யறிவான்பாரு
மானான மகதேவர் கடாட்சத்தாலே மார்க்கமுடன் உந்தமக்கு வமைக்கலாச்சே
6693.
அமைப்பான பூரமதை எடுத்துமைந்தா வப்பனே மதிதனிலே நூற்றுக்கொன்று
நிமைப்பொழுதும் காலமது வீண்போகாமல் நீதியுள்ள புலிப்பாணி புனிதவானே
சுவைதாங்கும் நளியாளர் குறைதீர்த்தாப்போல சுந்தரனே சிடிகையென்ற வேதைதன்னை
அமைப்புடனே மதிதானும் உருகும்போது வப்பனே பூரமது ஒன்றுதாக்கே
6694.
தாக்கியே வுருக்குமுகந் தன்னிலப்பா தகமையுடன் வெள்ளிதனை யெடுத்துப்பாரு
ஆக்கியோன் வாக்கதுவும் பொய்யாதப்பா வப்பனே வெள்ளியது என்னசொல்வேன்
பாக்கியமுண்டாவதற்கு பசுமையாகி பாங்குடனே பத்தரையா மாற்றுமாகும்
வாக்கதுவும் பொய்யாது மைந்தாகேளு வண்மையுள்ள பிறவியென்ற தங்கமாச்சே
6695.
தங்கமாம் சுயத்தங்கம் பிறவித்தங்கம் தாரணியில் நாதாக்கள் மெச்சுந்தங்கம்
புங்கசித்திக் குகந்ததொரு யோகத்தங்கம் புகழான சமுசாரிக்கான தங்கம்
வங்கமதற் கசையாத வலுத்ததங்கம் வளம்பெரிய சித்துமுனி போற்றுந்தங்கம்
இங்கிதமாம் மாண்பர்களுக்குகந்த தங்கம் எழிலான நடராஜ தங்கம்பாரே
6696.
பாரேதான் புலிப்பாணி மைந்தாகேளு பாலகனே யின்னமொரு போக்குசொல்வேன்
நேரேதான் செம்பதுவும் களஞ்சிநூறு நேர்மையுடன் குகைதனிலே இட்டுமைந்தா
தீரேதான் பாகமது பிசகிடாமல் தீர்க்கமுடன் தானுருக்கி மருந்தையீவாய்
கூரேதான் காரமது விட்டுருக்கி கொற்றவனே குருவொன்று கொடுத்திடாயே

6697.
கொடுத்தவுடன் செம்பதுவும் உருகியல்லோ கோவேந்தர் புலிப்பாணி மன்னாகேளு
அடுத்தவிஷஞ் செம்பினது வூரலேகி வப்பனே மாற்றதுவும் சொல்லப்போமோ
தடுத்திட வர்ணமது என்னசொல்வேன் தாரணியில் நாதாக்கள் மறைத்தகூத்து
நடுப்படையில் வில்லுக்கு நாணுமற்று நானிலத்தில் விழுந்ததொரு கதையைப்போலாச்சே
6698.
கதையான செம்பதுவும் மாற்றோமெத்த காசினியில் ஆரறிவார் மகிமைதன்னை
சதையாமல் வாரடித்துப் புடத்தைப்போடு சட்டமுடன் தங்கமது என்னசொல்வேன்
உடையாது புடத்துக்கு வசைந்திடாது வுத்தமனே வங்கமதுக் குறந்திடாது
பதையாமல் வாரடித்துப் புடந்தான்போட பாங்குபெற செம்பொன்னின் மகிமைபாரே
6699.
பாரேதான் கவசகுண்டலத்துக்காதி பாங்குபெற சிவயோகிக்குகந்ததங்கம்
நேரேதான் வருமை வருங்காலந்தன்னில் நேர்மையுடன் உண்பதற்கு சொன்னநீதி
ஆரோதான் சொல்லார்கள் இந்தப்போக்கு வப்பனே யாமுனக்கு வுரைத்தேனப்பா
சீரேதான் நெடுங்காலந் தவமிருந்து சிற்பரனே வேதைமுகஞ் செய்துபாரே
6700.
செய்துமே குருவணக்கம் மிகவுங்கூறி செயலான பாக்கியமும் அதிகங்கொண்டு
வையகங்கள் தான்புகழ புத்திவானாய் வளம்பெரிய நாதாக்கள் பதம்பணிந்து
துய்யநல்ல சிவவேடம் பூண்டுமல்லோ துப்புரவாய் யோகநிஷ்டை தனிலிருந்து
பையவே யுனக்குகந்த சீஷன்தேடி பாலகனே வுபதேசஞ் செய்வார்தானே

# போகரின் சப்த காண்டம் – 7000

6701.
தானான யின்னமொரு போக்குசொல்வேன் தகமையுள்ள நற்பாலா பண்புள்ளானே
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தெளிவுடனே எந்தனுக்கு உபதேசித்தார்
பானான பரஞ்சுடரைப் போற்றியேதான் பாடுகிறேன் கொச்சியென்ற வேதைகாணே
6702.
காணவே கொச்சியென்ற வீரமப்பா கவனமுடன் பலமதுதான் கொண்டுவந்து
தோணவே லட்சுமியாள் வீற்றிருக்கும் துகையான வில்வமது பழந்தான்பத்து
நீணவே பழமதனைக்கீறியல்லோ நீதியுடன் வீரமதை யுள்ளமைத்து
மாணவே சீலையது வலுவாய்ச் செய்து மயங்காமல் மணல்மறைவிற் புடத்தைப்போடே
6703.
போடவே இப்படியே பத்துமுறைபோடு போக்கான வீரமது கட்டிப்போகும்
நீடவே வீரமது கட்டினாக்கால் நீடாழி யுலகமெலாம் கட்டலாம்பார்
சாடவே வீரமதைத் தானெடுத்து சட்டமுடன் சமென்ற செந்தூரத்தை
ஆடவே பழச்சாற்றால் தானரைத்து வப்பனே வீரமதுக் கங்கிபூட்டே
6704.
பூட்டியே ரவிதனிலே காயவைத்து பொங்கமுடன் சீலையது வலுவாய்ச்செய்து
நீட்டியே மணல்மறைவிற் புடத்தைப்போடு நீதியுடன் வீரமது புகையடங்கி
தாட்டிகமாய் உருகியே கட்டிநிற்கும் தாடாண்மையானதொரு வப்புதானும்
கூட்டியே பின்னுமந்த வீரந்தன்னை குணமாக மறுபடியுஞ் செப்பக்கேளே
6705.
செப்பவென்றால் இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் செயலான வீரமது தானெடுத்து
ஒப்பமுடன் மிருதாரு சிங்கிதன்னை ஓகோகோ நாதாக்கள் மறைப்புநீக்கி
தப்பிதங்கள் வாராமல் சிங்கிதன்னை சட்டமுடன் வெண்கருவால் தானரைத்து
மெய்ப்புடனே வீரமதற் கங்கிபூட்டி மேன்மையுடன் ரவிதனிலே காயப்போடே
6706.
காய்ந்தபின்பு சீலையது வலுவாய்ச்செய்து கவனமுடன் மண்மறைவிற் புடத்தைப்போடு
தேய்ந்ததொரு வீரமது கட்டுமாகி தேற்றமுடன் படிகமென்ற கல்லுபோலாம்
மாய்ந்ததொரு வீரமதைத் தானெடுத்து மறுபடியும் முன்போல பாகஞ்செய்து
பாய்ந்ததொரு மண்மறைவிற் புடந்தான்பத்து பாலகனே போட்டுவரக் கட்டிப்போமே
6707.
கட்டியதோர் வீரமதைத் தானெடுத்து கலங்காமல் சீலையது விலக்கியல்லோ
திட்டமுடன் பின்னுமொரு பாகஞ்சொல்வேன் தீர்க்கமுள்ள புலிப்பாணி புகலக்கேளிர்
எட்டியென்ற வித்ததுவும் பலந்தானைந்து எழிலாக நிம்பழத்தின் சாற்றினாலே
கொட்டியதோர் விஷந்தனைத் தானரைத்து கூறவே வீரமதற்கங்கிபூட்டே
6708.
அங்கியென்ற வீரமதை ரவியில்வைத்து வப்பனே ஏழுசீலை வலுவாய்ச்செய்து
இங்கிதமாய் மண்மறைவிற் புடத்தைப்போடு எழிலான புடமாறி எடுத்துப்பாரு
சங்கையில்லா வீரமது என்னசொல்வேன் சட்டமுடன் மணிபோலே இறுகிநிற்கும்
வங்கமென்ற மணிபோலே தோற்றும்பாரு வளமையுள்ள வீரமணியாகுந்தானே

6709.
தானான வீரமணி என்னசொல்வேன் தாக்கான புடமதுவும் முன்போலாக
கோனான புடமதுவும் தூறுபோடு கொற்றவனே வீரமணி என்னசொல்வேன்
மானான வீரமணி கட்டினாக்கால் மதகரியிலேறுதற்கு ஐயமுண்டோ
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேஜொளியில் வீரமணி காணலாமே
6710.
காணலாம் வீரமணி தனையெடுத்து கனமான மதகரியின் மேலேசென்று
பூணவே வீரமணி கட்டினேன்யான் புகழாக எதிரியென்ற மாண்பர்தம்மை
வேணவே மண்டதனைபிளப்பேனென்று விருதுபறை யறைந்திடலாம் மணியினாலே
நாணவே சித்தாதி முனிவர்தாமும் நடுங்குவார் மணிதனையே கண்டபோதே
6711.
கண்டதொரு நாதாந்த சித்துதாமும் கனமுடனே யுந்தனைத்தான் போற்றுவார்கள்
மண்டலத்து ராஜாதி ராஜர்தாமும் மகாவீரனென்றல்லோ மதிப்பார்தாமும்
கொண்டல் வண்ணன் அச்சுதனார் கிருஷ்ணாவதாரன் குவலயத்தில் கொண்டதொரு குளிகையென்பார்
தெண்டிரை சூழ்மாண்பரெல்லாம் உம்மையல்லோ தேர்ந்ததொரு சித்துமுனி என்பார்பாரே
6712.
பாரேதான் வீரமென்ற குளிகைதன்னை பாங்குடனே தானெடுத்துப் பகரக்கேளு
நேரேதான் ஆவினது முதுகின்பேரில் நேர்மையுடன் தான்வைக்கப் பால்கெடாது
சீரேதான் வீரமணி யாட்டந்தன்னால் சிறப்பான பாலதுவுஞ் சுவறிப்போகும்
நீரேதான் மணியதனை எடுத்தாயானால் நிஷ்களங்கமான பால்சுரக்கும்பாரே
6713.
சரக்குமே மணியதனை எடுத்துபாலா சுந்தரனே சொல்லுகிறேன் சூட்சம்பாரு
இரக்கமுடன் உன்மீதில் மனதுவந்து எழிலான மணியினது பூட்டகத்தை
திறக்கவே மணியென்ற வண்மைதன்னை தீர்க்கமுடன் புகலுகிறேன் தின்னம்பாரு
பறக்கவே வாயுவேகந் தன்னைப்போலே பாரினிலே வாயிலிட்டு நடக்கலாமே
6714.
நடக்கவே செந்தூரம் நெடுங்காலந்தான் நடராஜ சுந்தரனே நவில்வேனப்பா
அடக்கமுடன் குளிகைதனை வாயிலிட்டு அவனியெலாம் நடந்தாலும் அசைந்திடாது
படம்வரையும் மாதர்தனைப் புனர்ந்திட்டாலும் பகரவே கூடாது லீலாவண்ணம்
சடமதுவும் தோன்றாது யுந்தமக்கு சட்டமுடன் குளிகைதனைக் கொள்வீர்தாமே
6715.
கொள்ளவே யின்னமொரு போக்குசொல்வேன் குணமான புலிப்பாணி கேந்திராகேள்
எள்ளளவும் பிசகாது இந்தபாகம் எழிலான வீரமணி வேதையப்பா
விள்ளாதே யொருவருக்கும் இந்தபாகம் விட்டகுறை இருந்ததினால் உந்தமக்கு
கள்ளமது வாராமல் மனதுவந்து கண்மணியே கடாட்சித்தேன் பண்புதானே
6716.
பண்பான வீரமணி தனையெடுத்து பார்வேந்தா வெள்வங்கஞ் சேர்தானப்பா
திண்ணமுடன் தானுருக்கி குகையிலிட்டு தீரமுடன் வீரமணி தனையெடுத்து
அண்ணலார் பதம்போற்றி யடிபணிந்து வப்பனே குளிகையது எடுத்துமைந்தா
வண்ணமுடன் வங்கமது வுருகும்போது வளம்பெறவே குளிகைதனைப் பொதிந்திடாயே

6717.
பொதியவே நீருண்டு மேலெழும்பி பொங்கமுடன் மணியதுவும் தெறிக்கும்பாரு
மதிபோன்ற வெள்ளியது என்னசொல்வேன் மகத்தான வெள்ளீயம் நீர்தானேகி
துதிபெறவே வெள்ளியது மாற்றோமெத்த துப்புரவாய் சொல்வதற்கு நாவுமில்லை
பதியான வீரமணி தனிலுதித்த பரிதியென்ற வெள்ளியது காணலாமே
6718.
காணவே யின்னமொரு போக்குசொல்வேன் கண்மணியே புலிப்பாணி கவிராஜேந்திரா
ஆணவத்தால் வந்ததொரு கசரோகங்கள் வப்பனே தேனதனில் அனுபானித்தால்
நாணமது வாராமல் ரோகங்கள்நாடாது மேனிவிட்டு நழுகும்பாரு
மாணமருங் கல்வியுள்ள புத்திவானே மார்க்கமுடன் இன்னமொரு மர்மங்கேளே
6719.
கேளப்பா மணியதனை எடுத்துமைந்தா கெவனமுடன் பாணிதனிற்பதனம்பண்ணு
வாளப்பா தேகமது செல்லும்போது வளமுடனே ஐந்தறிவுங் குண்ணுமல்லோ
நாளப்பா வுடலைவிட்டு ஆத்துமந்தான் நீங்கியே போவதற்கு முன்னதாக
பாளப்பா தன்னைத்தான் மறந்துமல்லோ பாழுடலும் போவதற்கு நாளுமுண்டே
6720.
உண்டான காலமது ஒடுக்கந்தன்னில் வுத்தமனே தாகமென்ற கருவுதன்னில்
கொண்டிடவே வீரமென்ற குளிகைதன்னை கொற்றவனே தானிழைத்து நாவில்தீட்ட
தண்டமுடன் செத்தசவம் போலானாலும் தாரணியில் தலையெடுத்து வார்த்தைகூறும்
சண்டமாருதம்போல இந்தவீரம் சட்டமுடன் உந்தனுக்கு ஓதினேனே
6721.
ஓதவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ஓகோகோ நாதாக்கள் ஒளித்தமார்க்கம்
நீதமுடன் காயகற்ப சூரணந்தான் நிலையான யோகிகட்கும் மாண்பருக்கும்
தோடமுடன் சரக்குவகை செப்பக்கேளும் தோன்றாமல் சுக்குடனே மிளகுமாகும்
ஆதமுடன் திப்பிலியும் கடுக்காய்த்தான்றி வப்பனே மாசிக்காய் தானுங்கூட்டே
6722.
கூட்டவே தேசரவம் வாய்விளங்கம் குணமான கார்போகங் கடுக்காய்ப்பூவும்
நாட்டமுடன் சிற்றரத்தை பேரத்தை நலமான வாலுளுவை யோமந்தானும்
வாட்டமுடன் சிறுமல்லி பேராமல்லி வளமான குராசுரளி யோமந்தானும்
கோஷ்டமுடன் கட்டதிப்பிலியுங்கூட்டி குணமான அதிமதுரம் மேலந்தானே
6723.
தானான கிராம்புடனே லவங்கப்பட்டை தண்மையுள்ள ஜாதிக்காய் ஜாதிபத்திரி
கோனான தக்கோலம் பிறப்பின்மூலம் கோடிதான பூமிசர்க்கரையுமாகும்
தேனான பரங்கியுட பட்டைதானும் தெளிவான வால்மிளகு செங்கடுக்காய்
பானான துளசியென்ற வித்துதானும் பாங்கான ஆலினது வித்துங்கூட்டே
6724.
வித்தான அரசினது வித்துமாகும் வீரான யிச்சினுட வித்துமாகும்
சுத்தமுள்ள பூனையென்ற காலிதானும் சுந்தரனே ஊமத்தை வித்துங்கூட்டு
மெத்தவரிதான விராலிவித்து மேன்மையுள்ள பூவரசன் வித்துகூட்டு
சத்தநதிக் கப்பாலே விளையும்வித்து சந்தனமாம் வித்ததுவும் கூடச்சேரே

6725.
சேரப்பா அத்தியுட வித்துதானும் செயலான அழிஞ்சியுட வித்துதானும்
கூரப்பா சாரத்தின்வித்துதானும் குறிப்பான வூசத்தின் வித்துதானும்
நேரப்பா முருக்கிலையின் வித்துதானும் நெடிதான எருக்கினிட வித்துதானும்
ஆரப்பா சூரியுட வித்துதானும் வப்பனே எல்லினுட வித்துகாணே
6726.
காணவே வகைவகைக்கு பலந்தானொன்று கருத்தாகத் தான்வருத்து சூரணித்து
தோணவே சூரணத்தை ஒன்றாய்க்கூட்டி சோராமல் பசும்பாலில் சுத்தித்தேதான்
வேணதொரு சரிபாகஞ் சீனிசேர்த்து விருப்பமுடன் சீசாவிற் பதனம்பண்ணு
ஆணவங்கள் வுண்டாக இந்தபாகம் வப்பனே சரிகூட்டி பதனம்பண்ணே
6727.
பண்ணவே முப்பூவுங் களஞ்சிசேர்த்து பண்மையுடன் மண்டலந்தான் கொண்டபேர்க்கு
நண்ணவே நடுச்சாம வயதுதன்னில் நாட்டமுடன் சிவயோகஞ் செய்யும்பேர்க்கு
திண்ணவே மண்டலந்தான் காயகற்பம் தீர்க்கமுடன் சமுசாரிக்கானவித்தை
வண்ணமுடன் இப்பாகஞ் சித்தருக்கு வளமையுடன் மறைத்துவைத்தார் வண்மைபாரே
6728.
பாரேதான் மண்டலங் காயாதியப்பா பாங்குபெற வுண்டவர்க்கு எல்லாஞ்சித்தி
நேரேதான் சமுசாரிக்கான கற்பம் நெடிதான துறவிகட்கும் உகந்தகற்பம்
சீரேதான் காயாதி கொண்டபின்பு தீர்க்கமுடன் வழலையது கொள்ளவேண்டும்
நீரேதான் வழலையது கைபாகந்தான் நீதியுடன் அறிவதற்கு இன்னங்கேளே
6729.
கேளப்பா புலிப்பாணி மன்னாபாரு கெடியான யோகங்கள் சாதிப்போர்க்கு
வாளேதான் சமுசாரி குடியுள்ளோர்க்கு வகுப்பான சிவயோகி வேடத்தோர்க்கும்
பாளேதான் யோகமது போகாமற்றான் பகருகிறேன் திராவக வழலையப்பா
சூளேதான் கைபாகஞ் செய்பாகந்தான் சூட்டுகிறேன் வரிசைமுறை யின்னங்கேளே
6730.
முறையான முறைபாடு யாதென்றாக்கால் முனையான லவணமது வெடியுப்பாகும்
துறையான கல்லுப்பு வளையலுப்பு துடியான சவுட்டுப்பு இந்துப்பாகும்
குறையகற்பம் கரியுப்பு பூநீருப்பு குணமான காரமுடன் சீனகற்பம்
பிறைபோன்ற பாஷாணங் கெவுரிதானும் பேரான லிங்கமது பூரங்கூட்டே
6731.
கூட்டவே வீரமுடன் சிங்கிதானும் குணமான தாளகமும் கெவுரிதானும்
நீட்டவே மனோசிலையும் வரிதாரந்தான் நிலையான கெந்தியுடன் கற்பாஷாணம்
நாட்டமுடன் சங்குயென்ற பாஷாணந்தான் நலமான துத்தமுடன் துருசுங்கூட்டு
வாட்டமுடன் சரக்கெல்லாஞ் சமனதாக வளமுடனே தானிறுத்து எடுத்துக்கொள்ளே
6732.
கொள்ளவே சரக்குநிகர் சாரஞ்சேர்த்து கொடிதான சீனமது ரெட்டிப்பாக்கி
விள்ளவே குழிக்கல்லில் பொடியதாக்கி வீரான வாலையிட்டு திராவகந்தான்
மெள்ளவே பாண்டமதில் சரக்கையிட்டு மேன்மையுடன் சக்கரமாம் வாலைதன்னை
எள்ளளவு கோளாறு நேராமற்றான் எளிதான திராவகத்தை வாங்கு வாங்கே

6733.
வாங்கையிலே திராவகந்தான் வெளுத்தவண்ணம் வளமையுடன் மறுபடியும் அடித்துவாங்கு
தூங்கியே திரியாதே துய்யபாலா துப்புரவாய் திராவகத்தை யேழுமுறைவாங்கு
ஏங்கியே இருக்காமல் திராவகத்தை எழிலான சீசாவிற் பதனம்பண்ணு
சாங்கமுடன் யோகமது சாதிக்குங்கால் சட்டமுடன் திராவகத்தின் தண்மைகேளே
6734.
தண்மையாம் திராவகத்தை தாக்குவண்ணம் தகமையுள்ள புலிப்பாணி தயவுள்ளோனே
உண்மையுடன் மண்டலந்தான் அந்திசந்தி உத்தமனே களஞ்சியது கொண்டாயானால்
நண்ணமுடன் வாசியது மேல்நோக்காது நளினமது வாராது நடுங்காமேனி
சுன்னமது கொண்டாலும் ஒன்றுமில்லை சுந்தரனே திராவகத்தை பதனஞ்செய்யே
6735.
செய்யவே இன்னமொரு புலப்பஞ்சொல்வேன் செயலான புலிப்பாணி கணிதவானே
வையகத்தில் நெடுங்கால மிருந்துமல்லோ வளமுடனே உபதேசம் அனேகங்கொண்டீர்
வெய்யவே மகுத்துவங்கள் கோடாகோடி மேன்மையுடன் தானடைந்தீர் புண்ணியத்தால்
பையவே யுந்தமக்கு ஞானப்பாலை பகருகிறேன் புலிப்பாணி பண்புள்ளோனே
6736.
பண்பான புலிப்பாணி பாருள்ளானே பகருகிறேன் ஞானமென்ற பாலையப்பா
நண்பான வேங்கைதனை விட்டிறங்கி நலமுடனே திருப்பாலின் கடலின்மார்க்கம்
விண்ணதனில் குளிகையிட்டு யென்பின்னாக விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால்
வண்ணமுடன் பின்தொடர்ந்து வருகவென்று வணக்கமுடன் போகரவர் கூறுவாரே
6737.
கூறுவார் வாய்திறந்து போகர்தாமும் குணமான புலிப்பாணி தன்னைத்தானும்
நாறுமுடல் உந்தமக்கு உபதேசங்கள் நற்கதிகள் பெறுவதற்கு நயமதாக
ஆறுபுடை சூழ்நகரந் தன்னைநீங்கி வப்பனே திருப்பாலின் கடல்வாவென்று
பேறுடைய சப்தமுடன் உச்சாடித்து பெருமையுடன் சீஷனுக்கு உபதேசிப்பாரே
6738.
போதிப்பார் லோகமது மார்க்கந்தன்னை பொங்கமுடன் சாத்திரத்தில் வழிபாடெல்லாம்
சாதிப்பா யுலகமெல்லாம் ஆடலாகும் தற்பரன்போலிருப்பதற்கு ஞாயமுண்டு
நீதியுடன் வையகத்து மகிமையெல்லாம் நிஷ்களங்கமாகவல்லோ நடத்தலாகும்
ஆதியந்தமானதொரு சாதிபேதம் வப்பனே நடத்துவதாம் உண்மைபாரே
6739.
பாரேதான் திக்கெட்டும் ஆளலாகும் பாராளும் மன்னவரை வெல்லலாகும்
தீரேதான் திக்குவிஜயம்கொண்டதீரன் தீர்க்கமுள்ள பற்குணனை வெல்லலாகும்
சீரேதான் ஏழுகடலுங் காணலாகும் சிறப்புடனே நீரின்மேல் நடக்கலாகும்
கூரேதான் மிருகமென்ற ஜாதிதன்னை குறிப்புடனே யழைப்பதற்கு வசியமுண்டே
6740.
வசியமாம் பட்சிதனை பிடித்துவந்து வழக்கமுடன் பாஷைகளைச் சொல்லலாகும்
நிசிதமுடன் அரவமதை யாட்டலாகும் நிஷ்டூரமானதொரு கொடியபேரை
நசிதமுடன் நன்மையாற் சொல்லலாகும் நலமான பரிபோகஞ் செய்யலாகும்
பசிவந்த பாலனுக்கு பால்கொடுத்த பாருலகில் கதைபோல முடியுந்தானே

6741.
தானான வுலகமதையாண்டுமென்ன தாரணியில் கீர்த்தியது பெற்றுமென்ன
கோனான கோவேந்தர் தன்னைப்போலே கொற்றவனே கிரீடமதைக் கொண்டுமென்ன
தேனான மாளிகையுங் கட்டியென்ன திகழான சமுசாரங் கொண்டுமென்ன
பானான பாலகரைப் பெற்றுமென்ன பாலகனே ஞானமென்ற பால்தான்வேண்டே
6742.
பாலான ஞானமென்ற பாலையப்பா பகருகிறேன் புலிப்பாணி பளிங்குள்ளானே
மேலான பதந்தனையே நண்ணவேண்டும் மேதினியில் பவக்கடலையகற்றவேண்டும்
நாலான பதந்தனக்கு மேலேயப்பா நற்பதமாம் பொற்பதத்தை நண்ணல்வேண்டும்
காலான சிதாபாசப் பொருளையப்பா கருதுவேன் உந்தமக்கு கருதுவேனே
6743.
கருதவென்றால் நாவில்லை பாவுமில்லை கண்மணியே புலிப்பாணி கவிராஜேந்திரா
திருகமுள்ள திருப்பாலின் கடலின்பக்கம் சிற்பரனே என்பாலா சிரியவானே
குருவினது காலாங்கி வாக்குபோலே குணமான வுபதேசம் நீயும்பெற்று
பரிதிமதி யுள்ளநாளளவுமட்டும் பாலகனே யுபதேசம் போற்றுவாயே
6744.
போற்றவே புலிப்பாணி புகழுள்ளானே பொங்கமுடன்திருப்பாலின் நடுமையத்தில்
ஆற்றவே கிருஷ்ணாவதாரனப்பா அலைகடலில் பள்ளிகொண்ட வம்பலத்தில்
நாற்றிசையும் நாதாந்த சித்துதாமும் நடுக்கமுடன் ரிஷிகளெல்லாம் பார்த்திருக்க
மேற்புரத்தில் போகரிஷி நாதர்தாமும் மெல்லெனவே வடபாகஞ் சாதிப்பாரே
6745.
சாதிக்க வடபாகந்தனிலிருந்து சட்டமுடன் புலிப்பாணிக்கு உபதேசிக்க
மேதினியில் தேவாதி தேவரெல்லாம் மேன்மையுடன் கண்டல்லோ பிரமித்தேங்க
ஆதியென்ற பராபரியாள் முன்னேநிற்க அங்ஙனவே யுபதேசமனதுவந்து
ஜோதிமணி மந்திரத்தை உச்சாடித்து சுந்தரர்க்கு உபதேசங்கூறுவாரே
6746.
கூறுவார் உபதேசமென்ன வென்றால் குணமான திருப்பாலின் கடலின்மேலே
மாறுபாடானதொரு மயத்தைநீக்கி மகத்தான சிதபசாநிலையில்நின்று
தேறுதலாய் சமாதிமுகம் நிற்கவேண்டும் தேஜொளிவின் சின்மயத்தை யறியவேண்டும்
ஆறுதலமென்ற தொருபிரளயத்தை யப்பனே உச்சரித்து நிலையில்நில்லே
6747.
நிலையான நிலையதுவும் என்னசொல்வேன் நிஷ்களங்கமானதொரு கபாலபீடம்
கலையான கலையதுவும் யிடகலைபிங்கலையில் கருவான கருவான நாசியது மையம்பற்றி
மலையான கபாலமென்ற பீடம்பற்றி மகத்தான மூலவரைமேலேசென்று
தலையான பஞ்சேந்திரம் உள்ளடக்கம் சாற்றுகிறேன் சிவயோகம் சாற்றுவேனே
6748.
சாற்றுகிறேன் வாரமது ஒன்பதுந்தான் சட்டமுடன் தானடைத்து மேலேபூட்டி
போற்றியதோர் கும்பகத்தில் நின்றுகொண்டு போதனா சத்தியெல்லாம் மனதிலுன்னி
தூற்றியே தான்புடைத்து பொருளாராய்ந்து துப்புரவாய் சிதாபாசக்களையறுத்து
மாற்றியே வட்சரத்தை வுள்ளாராய்ந்து மகத்தான வுளவுதனை யறிந்துகொள்ளே

6749.
கொள்ளவே யறுபத்துக் கலைநான்காக கோடான கலைவகுத்து கயிர்கள்மாட்டி
விள்ளவே சச்சிதா நிலையில்நின்று விட்டகுறை வருமளவும் மேலேநோக்கி
உள்ளதொரு பூரணத்தை வெளிகாட்டாமல் வுத்தமனே விசுத்தியிலே நின்றுகொண்டு
தெள்ளமுர்தமான தொரு ஞானப்பாலை தேற்றமுடன் ஊசரத்திலிருந்து தாக்கே
6750.
தாக்கவே யூசரத்தை கொள்ளும்போது தகமையுள்ள வனாகதத்தை யெட்டிவாங்கு
நோக்கமுடன் கேசரத்தை கொண்டாயானால் நுணுக்கமுடன் கலைவகுத்து பிரிக்கலாகும்
ஆக்கமுடன் விசுத்தியிலே இருந்துகொண்டு ஆண்மையுடன் சுழுத்தியிலே மேலேபாய்ந்து
சாக்கரதை சொற்பனமும் வஸ்தையற்று சட்டமுடன் இருப்பதுவே சமாதிதானே
6751.
தானான சமாதியிலே நின்றுகொண்டு சட்டமுடன் யோகமதுகொள்ளும்போது
கஓனான குருநிலையை கைநிலையாய் குவலயத்தில் நடப்பவனே யோகவானாம்
தேனான தேஜொளிவின் மயத்தைக்கண்டு தேற்றமுடன் சொக்கியல்லோ போகாமற்றான்
பானான பரஞ்சுரைப் பற்றியல்லோ பரவெளியில் சமாதிவழி சாதிப்பாயே
6752.
சாதிக்க முச்சுடரை யறியலாகும் சட்டமுடன் நிஷ்டானுபூதிகொண்டு
ஆதியந்தக் கருவிகர முளவாராய்ந்து வஷ்டாங்க யோகநிலை தன்னிற்சென்று
நீதியுடன் மாயவலை சிக்கறுத்து நிஷ்களங்கமான சுபாநிலையிற்சென்று
சோதியெனும் உட்பொருளை மனதிலுன்னி சுந்தரனே கமலமென்ற பீடந்தாக்கே
6753.
தாக்கையிலே கேசரத்தில் நின்றுகொண்டு தகமையுள்ள பூரணத்தைப் போற்றிச்செய்து
நோக்கமுடன் கும்பத்தின் மேலிருந்து நொடிக்குள்ளே சுவாதிஷ்டானந்தெரிந்து
வாக்குடனே மனோலயத்தை யுச்சரித்து வளமுடனே யஷ்டநிலை பதியிற்சென்று
தூக்கமெனும் இருட்கடலை விட்டகற்றி துய்யகருணானந்தங் கருவிபூணே
6754.
பூணவே கருவியென்றால் ஞானப்பாலை புகழான பவக்கடலை விட்டகற்றி
தோணவே சின்மயத்தை மனதிலுன்னி தோறாத கடுஞ்சினத்தை சிக்கறுத்து
வேணபடி முச்சுடரைப் பற்றியல்லோ வேதாந்த மனோன்மணியைத் துதித்துநின்று
நீணவே வைராக்கிய கியானமூட்டி நிஷ்களங்கமானதொரு நிலையில்நில்லே
6755.
நில்லப்பா பசுபதியாம் பாசந்தன்னை நினைவான மவுனமென்ற நிலையிற்பூட்டி
வல்லதொரு பிரகாச நிலையில்நின்று வளம்பெறவே சூக்குமத்தின் வேரறுத்து
புல்லவே பாஷாந்திர பேதாபேதம் புகழான கருவிகரணாதியந்தம்
நல்லதொரு சிவானந்த நிலையைப்பற்றி நாட்டமுடன் மனதுவந்து நவிலக்கேளே
6756.
நவிலவே சிதாபாச வலையகற்றி நலமுடனே பௌஷிகத்தின் வேரறுத்து
நவிலவே கற்பாந்திர காலமட்டும் கருத்துடனே சச்சிதா நிலையைப்பற்றி
புவிலவே யருட்கடலை காண்பதற்கு புகழான இருட்கடலை விட்டகற்றி
நவிலவே வித்தியாரண்ணியத்தை விருப்பமுடன் கூறுகிறேன் உண்மைபாரே

6757.
பாரேதான் சன்னியாசி வர்த்தங்கொண்டு பாங்கான கலையகற்றி நிலையைப்பற்றி
சேரேதான் சிவானந்த லாகிரியாலே செம்மலுடன் குருசம்பிரதாயவர்க்கம்
நீரேதான் கற்றறிந்து நிலையில்நின்று நிட்சிதமாம் பொருளதனை விட்டகற்றி
கூரேதான் சசிவர்ணசுயரூபத்தை குணமுடனே யோதுகிறேன் இன்னந்தானே
6758.
தானான மனக்குரங்கை விட்டகற்றி தண்மையுள்ள இதிகாசப்பொருளறிந்து
தேனான வமுர்தமெனு மட்சீரபாத்திரம் தெகிட்டாத தெள்ளமுர்த ஞானப்பாலை
மானான மதியமுர்தம் கொண்டாற்போல மதகரியா மாணுவத்தை யொடுக்கிநின்று
பானான பத்மமெனும் யுகாந்தப்போரை பற்றறுத்து விட்டறுத்து பதிவாய்நில்லே
6759.
நிற்கையிலே ஜோதிமயம் தன்னிற்றோற்றும் நீதியுள்ள பாடுதுறை வழிதான்காட்டும்
அற்பமென்று நினையாதே அடிவணங்கி அம்பரத்தின் மேலிருந்து அறிவாலுன்னி
சொற்பமதாய் வாசியதை கீழ்நோக்காமல் சோராமல் மனந்தளர்ந்து சூட்சமேகி
உற்பனமாய் உமிநீரை வழலையாக்கி வுத்தமனே நாள்தோறும் அமுர்தமுண்ணே
6760.
உண்ணவே தேகமெனும் கோட்டைதன்னில் வுத்தமனே உட்கோட்டை யேழுகோட்டை
நண்ணவே துவாரமது வொன்பதாகும் நலமான பஞ்சேந்திர மைந்துமாகும்
திண்ணவே யுடல்பொருளாவியந்தம் தீர்க்கமுள்ள ஏழுசுற்று கோட்டைக்குள்ளே
வண்ணமுடன் கலையதுதான் முப்பத்திரண்டு வளமான இடைகலையின்
கலைதான்ரெண்டே
6761.
இரண்டான கலைக்குள்ளே முப்பத்திரண்டு எழிலான கலையதுவும் இதிலடக்கம்
திரண்டுமே ரேசகபூரகத்தைப்பற்றி தெளிவான கும்பகமும் இதிலடக்கம்
கரண்டகம்போல் ஆசாகாசக பாடமாகும் கருவிகரணாதியந்தம் இதிலடக்கம்
வரண்டதொரு மேல்வீடு மோட்சவீடு வளம்பெரிய வாகாய கோட்டையாமே
6762.
கோட்டையாங் கபாலமென்ற கோட்டையப்பா கொடிதான சின்மயத்தின் கோட்டையாகும்
பாட்டையுடன் வாசலது யதிலேயுண்டு பாலகனே சின்மயத்தின் வாசலப்பா
தேட்டையெனும் வமுர்தமப்பா வுமிழ்நீர்தேட்டை தேஜொளிவின் பம்பரம்போல்
சுரக்குந்தேட்டை
காட்டையது கண்டாலுங் காணலாம்பார் காயாபுரி கோட்டையின்தன் கருகாணாரே
6763.
காணாரே பஞ்சேந்திர கோட்டைதன்னை கருவான தடங்களது காணமாட்டார்
தோணாரே வாசலது தடங்கண்டாலும் தோறாமல் சின்மயத்தின் வழியறி ந்து
வீணாளைப்போக்காமல் விட்டில்போலே வியாபித்துக் குருவயர்ந்து விழலாய்ப்போனார்
ஊணாமல் பரஞ்சுடரை தனலென்றெண்ணி யுத்தமனே பாதைவழி தெரியார்காணே
6764.
தானான வட்சரத்தை யோதமாட்டார் தண்மையுள்ள குருட்டு வழிதன்னில்சென்று
தேனான மடாலயத்தை வீடென்றெண்ணி தேற்றமுடன் கிருஷ்ணாவதாரனப்பா
பானான கீதையிலே யுபதேசித்த பற்குணனார் உபதேசம்போலேயப்பா
மானான பத்மபீடம் பெற்றேனென்று மார்க்கமுடன் தாமுரைத்து கெட்டார்பாரே

6765.
கெட்டாரே ஞானத்தின் பீடங்கண்டால் கெடியான மோட்சவழி காணலாகும்
தொட்டாலே சின்மயத்தின் பொருளேதொட்டால் தோராமல் கேசதான்பத்தலாகும்
விட்டகுறை இருந்தாலும் ஞானப்பால்தான் விருப்பமுடன் உந்தமக்கு லபிக்கும்பாரு
தொட்டகுறி போலதுவே துய்யபாலா துப்புறவாய் உபதேசம் செய்திட்டேனே
6766.
இட்டேனே இன்னமொரு பாகஞ்சொல்வேன் எழிலான புலிப்பாணி ராஜபாலா
நட்டதொரு பயிரெல்லாம் பயிர்தானாமோ நாடதனில் பெற்றதெல்லாம் பாலராமோ
துட்டரென்றால் துட்டரது சொல்லப்போமோ துரைராஜ சுந்தரனே துய்யபாலா
கெட்டவர்கள் நல்லவர்களாவாரோதான் கெடியான வையகத்தில் மாண்பர்தாமே
6767.
மாண்பான வையகத்தின் மார்க்கம்சொல்வேன் மார்க்கமுடட் முறைபாடு வெவ்வேறாகும்
தாண்பான கொக்கதுதான் அன்னமாமோ தாடாண்மை கொண்டதொரு கோழிதானும்
ஆண்பான கலாபமென்ற மயில்தானாமோ வப்பனே குன்றின்மணி கெம்பாமோசொல்
காண்பான செக்கதுவும் லிங்கமாமோ தாரணியில் முறைபாடு இன்னங்கேளே
6768.
கேளேதான் பனியதுவும் மழைதானாமோ கெடிதான மின்மினிதான் விளக்காமோசொல்
தானான பிரிதிவென்ற பவளந்தானும் தாக்கான நற்பவளமாகுமோசொல்
பாளான சிப்பியது வெள்ளியாமோ பாலான வெள்ளைமணல் உப்பாமோசொல்
கோளான மாண்பர்களில் நிகர்தான்கூற கொற்றவனே வேணவித்தியாசம்பாரே
6769.
பாரேதான் சௌரியங்கள் அதிகமுள்ளோர் பாருலகில் அவருக்கோரீடுமுண்டோ
நேரேதான் அவரொக்க ரிஷிகளாவார் நேர்மையுடன் இவரொக்கர் அவரேனாவார்
சீரேதான் சீர்வளங்கள் மிகவும்பாடி சிறப்புடனே பேர்வளங்கள் மிககொண்டாடி
கூரேதான் சித்துமுனி சாத்திரங்கள்கூறினார் வெகுகோடி வேதைதானே
6770.
வேதையாமின்னமொரு பாகஞ்சொல்வேன் வேதாந்த தாயினது கிருபையாலே
பாதையாம் சமுசாரிக்கான வித்தை பாலகனே யுந்தமக்கு பகருவேன்யான்
சீதையெனும் பெண்ணாகி மாதுபூண்ட ஜெகஜோதி தங்கமதை யென்னசொல்வேன்
சூதகற்றி மயக்கறுத்து சுட்டிடாமல் சுந்தரனே சிடிகையென்ற வேதைகேளே
6771.
கேளேதான் துருசதுவும் சேர்தானெட்டு கெடியான தாரமது சேர்தானொன்று
பாளேதான்போகாமல் கல்வமிட்டு பாலகனே தானரைப்பாய் நாலுசாமம்
நீளேதான் செருப்படையில் நாலுசாமம் நிலையான நுணாமூலி நாலுசாமம்
கீளேதான் வேரோடிப் படர்ந்திருக்கும் கெடியான கும்மட்டி மூலிவாங்கே
6772.
வாங்கியே தானரைப்பாய் நாலுசாமம் வளமுடனே மாத்திரையாய் செய்துகொண்டு
தூங்கியே திரியாதே துய்யபாலா துப்புரவாய் மாத்திரையைப் பீங்கானிட்டு
ஓங்கியே வெள்ளாட்டுக் கோமியந்தான் உத்தமனே மண்டலந்தான் ஊறப்போடு
சாங்கமுடன் மண்டலந்தான் சென்றபின்பு சட்டமுடன் மாத்திரைதான் எடுத்துக்கொள்ளே

6773.
கொள்ளவே மாத்திரைகள் பதனம்பண்ணு கோவேந்தர் புலிப்பாணி பனிதவானே
விள்ளவே வெள்ளியது பலந்தான்ரெண்டு விருப்பமுடன் மாத்திரைதான் பலந்தான்பத்து
எள்ளளவும் பிசகதுவும் நேராமற்றான் எழிலான வெள்ளிதனை மூசையிட்டு
உள்ளபடி வெள்ளியது வுருகும்போது வுத்தமனே மாத்திரைதான் துலமும்போடே
6774.
போடேதான் மாத்திரைதான் உருகியல்லோ பொங்கமுடன் தானிறக்கி வைத்துமல்லோ
நாடேதான் மற்றாநாள் பின்னுமப்பா நலமுடனே மூசைதனை யுருகிக்கொண்டு
நீடேதான் பின்னுமந்த மூசைதன்னில் நிலையான மாத்திரையை துலந்தானீவாய்
கூடேதான் மூசைதனை இறக்கிவைத்து குணமாக மற்றாநாள் உருக்கிக்கொள்ளே
6775.
உருக்கியே பத்துமுறை பத்துநாளப்பா முனையான மாத்திரையை கிராசமீவாய்
செருக்குடனே பத்துநாளானபின்பு செவ்வையுடன் மூசைதனை யெடுத்துமைந்தா
பெறுக்கவே யாதுவகை ஜெயநீர்தன்னில் பேரான வெள்ளிதனை யுருக்கி சாய்ப்பாய்
சுருக்கமது வாராது வெள்ளிக்கப்பா சுந்தரனே பத்துமுறை யுருக்கியூத்தே
6776.
ஊத்தையிலே குண்டசெம்பு வெள்ளிதானும் உத்தமனே மஞ்சளென்ற வர்ணங்காணும்
நாத்தமுள்ள செம்பதுவும் ஊறலேகி நலமானவெள்ளியது பழுக்கும்பாரு
பாத்தவர்கள் வாதமென்ற சூதுவித்தை பாருலகில் மகிமைதனை யறிவாரோதான்
நேர்த்தியுள்ள கண்டரது மகிமையாலே நேர்மையுள்ள வெள்ளியது பழுக்கலாச்சே
6777.
ஆச்சப்பா மலைநாட்டுக் குள்ளிருக்கும் வப்பனே குரும்பரென்ற சித்துதானும்
பாச்சலுடன் காடுமலை வணாந்திரங்கள் பாங்கான குகைதனிலே இருந்துகொண்டு
ஏச்சலது வாராமல் எந்நாளைக்கும் எழிலான கண்டருட வேதைதன்னை
ஆச்சரியமாகவல்லோ செய்துகொண்டு வப்பனெ கடைமாறி யுண்ணிவாரே
6778.
உண்ணுவார் சமுசாரி தம்மிடத்தில் உத்தமனே நிதிவாங்கி பொன்கொடுத்து
திண்ணமுடன் மாற்றதுவும் என்னசொல்வேன் துய்யவெள்ளி பத்தரையுங்காணும்காணும்
எண்ணரிய நற்பொருளைக் காணாமற்றான் எழிலான சமுசாரி எல்லாமாய்ந்தார்
பண்ணவெனக்கும்மையது வறியாமற்றான் பாருலகில் யானுமல்லோ மயங்கினேனே
6779.
மயங்கியதோர் எந்தனுக்கு மன்னாகேளு மகத்தான காலாங்கி கிருபையாலே
நயம்படவே வித்தையது யானுங்கண்டு நாதாந்த சித்தொளிவின் ஒளியுங்கண்டு
ஜெயம்பெறவே வாதமென்ற வேதைதன்னை சேர்வையுடன் உந்தனுக்கு யானுந்தந்தேன்
பயப்படவே யெந்நாளும் பதாம்புயத்தை பணிந்துமல்லோ வசனித்து துதிப்பாய்தானே
6780.
தானானஸ்ரீராமர் கொண்டசீதை தகமையுள்ள ஜானகியாள் தன்தனக்கு
கோனான கோவேந்தர் பதியிலப்பா கொற்றவனே சித்தர்களும் முடித்தவேதை
தோனான செம்பொன்னே தங்கவர்ணம் தேற்றமுடன் பிறவியென்ற தங்கமாகும்
பானான சுயத்தங்கம் நயத்தங்கம் பாருலகில் நாதாக்கள் மறைத்தார்காணே

6781.
காணவே நாதாக்கள் மறைத்ததாலே காலாங்கி நாதருட கிருபையாலும்
தோணவே மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தோறாமல் உந்தனுக்கு மனதுவந்து
வேணதொரு நீதிமுறைபாடுகூறி வேதாந்த வுபதேச உண்மைகூறி
நீணவே யுந்தனுக்கு உபதேசித்தேன் நீடாழி பதவிதனை யாளுவீரே
6782.
ஆளவென்றா லின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வப்பனே புலிப்பாணி யறிவுள்ளானே
நீளவே தாரமது சேர்தானெட்டு நிலையான காரமது சேர்தான்ரெண்டு
சூளவே துருசதுவும் சேர்தான் ரெண்டு சுந்தரனே சூதமது சேர்தான்ரெண்டு
மீளவே இவையெல்லாங் கல்வமிட்டு மிக்கான சிவகரந்தை சாற்றாலாட்டே
6783.
ஆட்டவே அற்சாமம் ஆனபின்பு வப்பனே மத்திரைதான் செய்துகொண்டு
தாட்டிகமாய் வெள்ளிதனை யுருக்கிமைந்தா சட்டமுடன் சேருக்கு பத்துதாக்கு
நீட்டமுடன் வெள்ளியது வுருகும்போது நிஷ்களங்கமானதொரு மருந்துதன்னை
வாட்டமில்லா சேரதுதான் ஒன்றுதாக்கு வளமுடனே வெள்ளியது வுரியும்பாரே
6784.
உரியுமே மாத்திரையை வாங்கிக்கொள்ளும் உத்தமனே மூசைதனை யாறவைத்து
சரியாக வைந்துநாள் தணியவிட்டு சாங்கமுடன் மறுபடியும் பின்னுமல்லோ
புரியான வெள்ளிதனை மூசையிட்டு பட்சமுடன் தானுருக்கி மருந்தையப்பா
வரியான கணக்குடனே முன்போலப்பா வளமுடனே சேருக்கு ஒன்றுதாக்கே
6785.
தாக்கவே மூசையிட்டு உருக்கிமைந்தா தண்மையுடன் நாளதுவும் உமைந்ததாக
நோக்கமுடன் இப்படிதே பத்துமுறையப்பா நுணுக்கமுடன் உருக்கியல்லோ ஆறவைப்பாய்
வாக்கதுவும்பொய்யாது காலாங்கிநீதி வளம்பெரிய சித்தர்களும் மறைத்ததோஷம்
ஏக்கமது கொள்ளாமல் எழில்வேந்தாகேள் எழிலுடனே செய்குவது பாகமாமே
6786.
பாகமாம் இப்படியே பத்துமுறைதீர்ந்த பாலான வெள்ளிதனை எடுத்துமைந்தா
ஆகமத்தில் முறைபாடு செய்பாடெல்லாம் வப்பனே கண்டுமிக வுளவாராய்ந்து
வேகமுடன் ஆறுவகை ஜெயநீர்தன்னால் வெட்கமுடன் தானுருக்கி சாய்ப்பாயப்பா
பாகமது பொய்யாது மெய்யேயாகும் பாருலகில் செய்தவர்க்கு சித்திதானே
6787.
சித்தியாம் இப்படியே பத்துமுறைபோடு சேர்வைகண்டு பதனங்கண்டு உருக்கிசாய்ப்பாய்
சத்தியவான் காலாங்கி நாதர்வாக்கு சங்கரனே பொய்யாது வேதவாக்கியம்
பத்தியுடன் மனோன்மணியை தொழுதுபோற்றி பாலகனே முறைபோலே செய்வாயப்பா
சத்தியுள்ள வெள்ளிதனையூதிப்பாரு சுந்தரனே மாற்றதுவும் சொல்லொண்ணாதே
6788.
சொல்லவென்றால் நாவில்லை பாவுமில்லை துரைராஜ சுந்தரனே எவர்தான்காண்பர்
வல்லதொரு சித்தாதி முனிவர்தாமும் வளம்பெரிய சாத்திரத்தில் மறைத்துவைத்த
கல்லான முறைகளெல்லாங் கருக்கள்காட்டி கருவிகரணாதியந்தம் முடிவுண்டாக்கி
நல்லதொரு முறைபாடு செய்பாடெல்லாம் நாட்டினிலே மாண்பர்களுக் குரைத்திட்டேனே

6789.
உரைத்தேனே தாரமென்ற களங்குமார்க்கம் ஓகோகோ நாதாக்கள் கூறவில்லை
வரையான பொருளெல்லாம் இதிலேதோயும் வளமான மாற்றதுவும் பத்தேயாகும்
திரைகடலில் நாதாக்கள் மறைத்ததாலே தீர்க்கமுள்ள வேதைமுகம் யானுங்கண்டு
விரைபோட்டால் சுரையொன்று முளைக்குமோதான் வித்தகனே தாரமென்ற தங்கமாமே
6790.
தங்கமாமின்னமொரு வயனஞ்சொல்வோம் தண்மையுள்ள புலிப்பாணி தயவுள்ளோனே
இங்கிதமாய் யெந்தனையும் சித்தர்கூடி எழிலான விண்ணப்ப வருந்தல்தன்னை
சங்கமென்ற சபையாறு மனதுவந்து சட்டமுடன் எந்தனையும் கேள்விகேட்க
வந்தனமாய்ச் சொன்னதொரு வளம்பாடெல்லாம் வண்மையுடன் உந்தனுக்கு ஓதுவேனே
6791.
ஓதவே எந்தனையும் சித்தர்கூடி ஓகோகோ நாதாக்கள் கூட்டத்தோடும்
நீதமுடன் எந்தனையும் வரவழைத்து நீதியுடன் முறைபாடு வழிபாடெல்லாம்
தோதகமாய் கட்டுரைத்தார் கோடாகோடி தேறாமல் யானுமல்லோ விடைகள் சொன்னேன்
போதனைகள் மிகவுரைத்தாத் இறங்கியல்லோ பொங்கமுடன் யானுமல்லோ
விடைதந்தேனே
6792.
தந்தேனே விடையதுவும் என்னவென்றால் தகமையுள்ள ரிஷிகூட்ட முனிவரெல்லாம்
சொந்தமுடன் வாதாடி யுறவுகொண்டு சோராமல் எந்தனுக்கு யிதவுகூறி
வந்தனங்கள் மிகச்செய்து வஞ்சலித்து வளம்பெரிய காலாங்கி நாதசீஷா
இந்தவரை நெடுங்காலம் கோடிகாலம் இகபரமும் கண்டறிந்த சித்துபாரே
6793.
பாரேதான் வையகத்தின் மகிமையெல்லாம் பட்சமுடன் காலாங்கிநாதர்தாமும்
சீரேதான் உந்தமக்கு உபதேசங்கள் செய்துவைத்த படியாலே தோஷமில்லை
நீரேதான் குளிகையது பூண்டுகொண்டு நீடாழி யுலகமெலாஞ் சுற்றிவந்து
கூரேதான் மகிமையெல்லாம் அறிந்துகொண்டீர் கொற்றவனார் காலாங்கி கடாட்சந்தானே
6794.
தானான மகிமையெல்லாம் அறிந்தாலுந்தான் தாரணியில் ஒருபோதும் தோஷமில்லை
தோனான வுமதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் குருபாத கடாட்சத்தாலே
தேனான சாத்திரத்தின் முறைபாடெல்லாம் தெளிவுடனே சிக்கருத்து சத்தகாண்டம்
பானான சூரியன்போல் ஏழாயிரந்தான் பாடிவைத்தீர் சீனபதிபாண்பருக்கே
6795.
மாண்பான சாஸ்திரத்தை யுந்தன்சீஷன் மகத்தான புலிப்பாணிக் குபதேசித்தீர்
ஆண்மையுள்ள சித்தாதி சித்தரெல்லாம் அவர்பேரில் மெத்த மனஸ்தாபமுண்டு
வீண்போன்ற சாத்திரமா இருந்தாலல்லோ விருப்பமுடன் அவர்தமக்கு உபதேசிக்க
தாண்மையுள்ள சாத்திரந்தான் சத்தகாண்டம் தாரணியில் சாத்திரங்கள் மெத்தவுண்டே
6796.
உண்டானசாத்திரத்தை யவர்க்குமல்லோ வுத்தமனே மனதுவந்து உபதேசித்தீர்
கண்டாலும் விடுவாரோ ரிஷிகள்தாமும் கருவான மகிமையென்ற வேதைமார்க்கம்
சண்டமாருதம்போல யுலகவாழ்க்கை சட்டமுடன் வெகுகோடி யூதிவிட்டு
மண்டலத்தில் மகிமையெல்லாம் வெளியிட்டாக்கால் மாண்பர்களும் ஒருவருந்தான்
மதியார்தானே

6797.
தானான சத்தகாண்டமேழாயிரந்தான் தகமையுடன் கூறிவிட்டீர் தோஷமில்லை
பானான யெண்ணாயிரஞ் சாத்திரத்தை பகரவேண்டாம் புலிப்பாணி நாதருக்கு
தேனான சாத்திரத்தை மனதுவந்து தேற்றமுடன் மேருகிரி தன்னிலப்பா
கோனான குகைதனிலே வைத்தாலல்லோ கொற்றவனே லோகமெலாம் மதிப்பார்தானே
6798.
மதிப்பான சாத்திரத்தை வெளியிலிட்டால் மகதேவர் ஆனவருமொருவருண்டோ
துதிப்புடனே யொருவருந்தான் தன்னைத்தானும் துப்புரவாய் மதிப்பாரும் ஆருமில்லை
விதிப்படியே விட்டகுறை இருந்துதானால் விருப்பமுடன் வினயம்வந்து கிட்டும்பாரு
கதிபெறுவர் எண்ணாயிரங் காவியத்தால் காசினியில் அதிதமென்ற மார்க்கம்பாரே
6799.
பாரேதான் காண்டமேழாயிரத்தில் பாருலகில் வெகுகோடி வதிசயங்கள்
நேரேரென் சித்தாதி கூட்டத்தோடு நேர்மையுடன் பாடிவைத்த நுணுக்கமெல்லாம்
சேரேதான் கிட்டிருந்து வுளவுகண்டு சேனரகசியங்களெல்லாம் வெளியாய்விட்டீர்
ஊரேதான் உலகமெலாம் இதிலடக்கம் உத்தமனே யேழாயிரம் பாடல்தானே
6800.
பாடலாய் மறைத்துவைத்த சங்கையெல்லாம் பாரிலுள்ள மாண்பர்களுங் கண்டுகொள்வார்
தேடவே சாத்திரத்தை புனிதவானே தேற்றமுடன் புலிப்பாணிக் குறுதிகூறி
ஆடவே யம்பலத்தில் நல்லோர்தம்மை அறிவுடையோர் சிவயோக மாண்பருக்கு
கூடவே சாத்திரத்தை தேர்ந்துமல்லோ குணமான வெகுபுத்தி கூறுவீரே

# போகரின் சப்த காண்டம் – 7000

6801.
கூறுவீர் இதிகாச புத்திசொல்லிகுவலயத்தில் ஆள்கண்டு பதமுங்கண்டு
தேறியதோர் சிறுபாலரானாலுந்தான் தேற்றமுடன் புத்திமதி மிகவுரைத்து
மீறியே கட்டளைக்கு மஞ்சிடாமல் மிக்கமனது வந்துமல்லோ மதிகங்கூறி
ஆறியே சினமதுவும் மிகவகற்றி வப்பனே நூல்கொடுத்து பதனஞ்சொல்லே
**6802.**
சொல்லவே புலிப்பாணிக் குண்மைகூறி சோறாமல் மனத்திடமும் நன்றாய்சொல்லி
வெல்லவே வரவுக்குத் தக்கதாக வேதாந்த சின்மயத்தை யோதச்சொல்லி
புல்லவே சாத்திரத்துக் குறுதிசொல்லி புகழான சத்தியங்கள் வாங்கியேதான்
நல்லதொரு சாத்திரத்தைத் தந்தீரானால் நலமாக இருக்குமென்று நவின்றிட்டாரே
**6803.**
நவின்றதொரு வாக்கதுவும் பிசகாமற்றான் நாதாக்கள் சொல்லதற்கு இடையூறின்றி
குவின்றிடவே புலிப்பாணி புனிதவானே குவலயத்தில் பத்தியுண்டாய் மாண்பர்கண்டு
தவின்றிடவே விதியாளி குணமுங்கண்டு தக்கபடி நூலீய்ந்தால் தருமமாகும்
புவின்றிடவே யுந்தனது மனதுபோலே பூதலத்தில் நடப்பதுவுங் கடாட்சந்தானே
**6804.**
தானான காலாங்கி நீதிபோலே சட்டமுடன் போகரேழாயிரத்தை
கோனான வையகத்தில் யானும்பாடி கொற்றவனே யுந்தனுக்கு உபதேசித்தேன்
தேனான சாத்திரத்தை பாதுகாத்து தேசத்தில் கொடுப்பதுவும் உந்தன்பாரம்
பானான கருமிகட்கு கொடுப்பாயானால் பாலகனே பாவம்வந்து எய்தும்பாரே
**6805.**
பாரேதான் இன்னமொரு மார்க்கஞ் சொல்வேன் பாங்கான புலிப்பாணி பளிங்குள்ளானே
நேரேதான் அவரவர்கள் மகிமைதன்னை நேர்மையுடன் சொல்லுகிறேன் உண்மையாக
சீரேதான் சித்தரெல்லாம் ஒன்றாய்க்கூடி சிறப்புடனே காலாங்கி நாதர்தம்மை
வீரேதான் சீனபதி தன்னிலேகி விருப்பமுடன் மனதுவந்து வந்திட்டாரே
**6806.**
வந்தாரே காயாதி கொண்டசித்து வளம்பெரிய சீனபதி மார்க்கந்தன்னை
அந்தமுடன் காலாங்கி சமாதிபக்கல் வற்புதமாய் வெகுகோடி நாதர்தாமும்
சொந்தமுடன் எனதையர் காலாங்கிநாதர் சுடரொளியைக்காணவென்று மனங்களித்து
விந்தையாய் உபதேசம் பெறவேநண்ணி விருப்பமுடன் சமாதியிடம் வந்தார்தானே
**6807.**
தானான நெடுங்காலஞ் சமாதிருந்த தண்மையுள்ள நாதாக்கள் ரிஷிகள்தாமும்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் முன்பாக வினயங்கூறி
தேனான மகத்துவங்கள் இதிகாசங்கள் தேற்றமுடன் செய்தல்லோ மேவல்செய்தார்
பானான பரஞ்சுடராம் எந்தன்நாதா பட்சமுடன் அதிசயத்தை கண்டிட்டேனே
**6808.**
கண்டாரே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கனகரதி பூஷணமே கல்விவானே
அண்டமதில் ஆகாயந்தன்னிலல்லோ மகாபூதானந்தநாதர்
உண்டைவில்லு கவுண்டேகும் ஆகாயத்தில் வுத்தமனே யந்தமட்டுஞ் சொல்வேனென்று
கண்டிதமாய்க் காலாங்கி வாக்குந்தந்து கனமுடனே வாசியோகம் நடத்தினாரே

6809.
வாசியைத் தானடத்தி பூதநாதர் வளமான கேசரத்தினம் பரத்தில்
மாசியெனும் மண்டலத்தில் யேகியல்லோ மன்னவனார் மண்டலந்தான் அங்கிருந்து
காசிபதி கடலோரந் தன்னிற்சென்று கனமான சீனபதி யருகில்வந்து
தேசியெனும் வாசியைத்தான் நடத்தியல்லோ தேற்றமுடன் சீனபதி இறங்கினாரே
6810.
இறங்கினார் நாற்பதுநாள் மண்டலந்தான் யெழிலான வாகாசந்தனிலிருந்து
சிறந்ததொரு வாசியைத்தான் நடத்தியல்லோ சிறப்புடனே வையகத்தோர் காணவென்று
பறந்துமே வையகத்தில் இறங்கியேதான் பாங்கான காலாங்கி சமாதிமுன்னே
இறந்ததொரு சவம்போலே விழுந்தாரல்லோ எழிலாக பூதநாத சித்துதானே
6811.
சித்தான சித்துமுனி நாதர்தாமும் சிறப்பான காலாங்கி தம்மிடத்தில்
பத்தியுடன் அஞ்சலிகள் மிகவுஞ் செய்து பான்மையுடன் சிரங்குனிந்து கரங்குவித்து
முத்திபெற எந்தனுக்கு உபதேசங்கள் முனிவரே செய்யவென்று வடிபணிந்து
சத்தியமாய் எந்தனைத்தான் ஆதரிக்க சட்டமுடன் கடாட்சமது வருள்செய்வீரே
6812.
அருளான வருளதுவும் பெற்றுமல்லோ வன்புடனே பூதானந்தசித்து
இருளான இருளகற்றி மையம்பூண்டு எழிலான சீனபதிவிட்டுமல்லோ
குருவான டமரகனாரந்தனாரை குறிப்புடனே காண்பதற்கு மனதிலெண்ணி
திருவான ஜோதிமயந்தன்னைக்காண தீர்க்கமுடன் தென்பொதிகை வந்திட்டாரே
6813.
வந்தாரே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வளமான புலிப்பாணி யறி வுள்ளானே
இந்தமானிலத்தில் வெகுவதிசயங்கள் எழிலான சித்துமுனி கோடாகோடி
சுந்தரனார் காலாங்கிநாதர்பக்கல் துப்புரவாய் வந்தவர்கள் லக்கோயில்லை
விந்தைகளும் மிகச்செய்தார் ரிஷியார்தாமும் விண்ணுலகு கருவூரார் சித்துபாரே
6814.
பாரப்பா புலிப்பாணி பண்புள்ளானே பாலகனே எந்தனிரு மணியேகேண்மோ
ஆரப்பா வாகாயமண்டபத்தில் வப்பனே நட்சத்திர வளவுமட்டும்
நேரப்பா வாசியைத்தான் நடத்தியல்லோ நேர்மையுடன் ஆகாயஞ் சென்றாரில்லை
கூரப்பா கருவூரான் என்றசித்து கொற்றவனே வாகாயஞ் சென்றார்காணே
6815.
காணவே கருவூரார் என்றசித்து காசினியில் மகிமைவெகு கண்டசித்து
தோணவே நடேசரைத்தா னுண்டுசெய்த தோறாத கருவூரார் என்றசித்து
மானமருங் கல்வியுள்ள சித்தரெல்லாம் மானிலத்தில் மதிப்பதற்குக் கீர்த்திகொண்ட
ஆணவமாங் காமியத்தை விட்டொழித்த வப்பனே கருவூரார் என்றசித்தே
6816.
சித்தான சித்துமுனி கருவூரார்தான் சிறப்பான காலாங்கி நாதர்முன்னே
சுத்தமுடன் காலாங்கிநாதர்தம்மை சுந்தரனார் சீனபதி சமாதிதன்னில்
வித்தகனார் பார்த்திருக்க மகிமைபூண்டு விண்ணுலகம் ஆகாயஞ் செல்வேனென்று
புத்தியுடன் நட்சத்திரவளவுமட்டும் பரஞ்சுடரே செல்வேனென்று யேகினாரே

6817.
ஏகவே வாசியோகஞ் செய்துகொண்டு எழிலான நட்சத்திரமண்டலத்தில்
போகவே மனவுறுதிகொண்டுமல்லோ பொங்கமுடன் மூன்றுமண்டலந்தானப்பா
சாகாமல் ஆகாயமண்டலத்தில் சட்டமுடன் மூன்றுமண்டலமிருந்து
வேகமுடன் வாசியோகஞ் செய்துகொண்டு வேட்கையுடன் பூமிதனில் இறங்கிட்டாரே
6818.
இட்டாரே கருவூரார் என்றசித்து எழிலான வையகத்தின் மகிமைகோடி
சட்டமுடன் செய்தல்லோ யாகம்பூண்டு சதுராக நெடுங்காலந் தாமிருந்தார்
திட்டமுடன் காலாங்கி நாதர்தாமும் தீர்க்கமுடன் கருவூரார் தன்தனக்கு
வாட்டமுடன் முதலியதோர் மகிமையெல்லாம் வளமுடனே உபதேசஞ் செய்தார்பாரே
6819.
பாரப்பா புலிப்பாணி பளிங்குள்ளானே பகருகிறேன் சித்தருட மகிமைதன்னை
ஊரப்பா சீனபதி தேசந்தன்னில் வுத்தமனார் காலாங்கி நாதர்தம்மை
சேரப்பா சமாதியிடம் சென்றுமல்லோ செம்மலுடன் காலாங்கி தம்மைக்காண
ஆரப்பா வென்றல்லோ காலாங்கிநாதர் வப்பனே மனதுவந்து கூறென்றாரே
6820.
கூறென்று சொல்லுகையில் சித்தரான குணமான குணமான சுந்தரானந்தமூர்த்தி
தேறலுடன் யாரென்று வினவிக்கேட்க தெளிவான காலாங்கி நாதர்தாமும்
மாறலதுவாராமல் சித்துதாமும் மகத்தான காலாங்கி நாதருக்கு
ஆறலுடன் அஞ்சலித்து மனதுவந்து வப்பனே சுந்தரனார் என்றிட்டாரே
6821.
என்றாரே சுந்தரானந்தமூர்த்தி எழிலான காலாங்கி நாதருக்கு
வென்றிடவே என்தேவா லோகநாதா விருப்பமுடன் தங்களிடம் மனங்களித்து
சென்றுநான் வந்தேனே சீனதேசம் செம்மலுடன் அடியேனைப் பாதுகாத்து
குன்றான வுபதேசம் எந்தனுக்கு கொப்பெனவே கூறுமென்று பணிந்திட்டாரே
6822.
பணிந்துமே சுந்தரானந்தர்தாமும் பட்சசுடன் காலாங்கிநாதருக்கு
துணிந்துமே எந்தனது மகிமைதன்னை துப்புரவாய் காட்டுகிறேன் குருவேந்தாகேள்
கணிதமுடன் மேகமண்டலத்தில்யானும் கர்த்தாவே வாசியோகஞ் செய்துகொண்டு
பணிவுடனே வாகாசஞ் சென்றுமல்லோ பாங்குடனே மேகத்தோடேகுவேனே
6823.
ஏகுவேன் மேகத்தோடிணக்கமாகி எழிலான திருப்பாலின் கடலின்மேலே
போகுவேன் மேகங்கள் ஜலந்திரட்டி பொங்கமுடன் தானிறங்குங் காலந்தன்னில்
தாகுடனே மேகமது வாகாசத்தில் தகமையுடன் செல்லுமது பக்கமெல்லாம்
வாகுடனே யாகாசந்திரிந்துயானும் வளமுடனே நெடுங்காலம் இருப்பேன்தானே
6824.
தானான பூமிசஞ்சாரமில்லை தண்மையுடன் மேகத்தில் மேகமாக
கோனான மண்டலத்தில் நெடுங்காலந்தான் கொற்றவரே வாசியோகஞ் செய்துகொண்டு
தேனான மனோன்மணியை துதித்துமல்லோ தேற்றமுடன் நெடுங்காலந்தானிருந்தேன்
பானான பரஞ்சுடரே சொரூபானந்தா பரம்பொருளே வுபதேசம் பகருவீரே

6825.
பகரவென்று சுந்தரானந்தர்கேட்ட பாருலகில் இதிகாச மகிமைகண்டு
நிகரமுடன் இவர்தமக்கு உபதேசங்கள் நீதியுடன் கூர்வதற்கு மனங்களித்து
உகரமென்ற வட்சரத்தை யுபதேசித்து வுத்தமனார் சுந்தரானந்தருக்கு
ககரமுடன் யரகமுதல் வுயிர்களெல்லாம் கருவான வட்சரத்தை யோதினாரே
6826.
ஓதவே யஞ்சலிகள் மிகவும்பெற்று வுத்தமனார் சீனபதிகண்டுமல்லோ
நீதமுடன் விடையதுவும் பெற்றுமல்லோ நிலையான தம்பதிக்கு யேகினார்காண்
சேதமது வாராமல் சித்துதானும் ஜெகதலத்தில் நெடுங்கால மிருந்தாரல்லோ
தோதமுள்ள சித்தாதி சித்தரெல்லாம் தோறாமல் என்குருவைக் கண்டிட்டாரே
6827.
கண்டாரே யின்னமொரு கருமானங்கேள் கைலாச புலிப்பாணி கருவுள்ளானே
அண்டரண்ட தேசமெல்லாஞ் சுற்றிவந்தேன் வப்பனே பாஷாண விளைவுகண்டேன்
துண்டரிகமானதொரு விளைவுமார்க்கம் துப்புரவாய் யான்கண்டு விடமுங்கண்டேன்
சண்டமாருதம்போலே விளைவுகண்டேன் தண்மையுள்ள பாஷாண விளைவுகேளே
6828.
கேளப்பா கருமாவின் விளைவுமார்க்கம் கெடியான டில்லிக்கு மேற்கேயப்பா
ஆளப்பா பூமியெல்லாம் சுருமாவாகும் வப்பனே நீலாஞ்சனக்கல்லுதானும்
கேளப்பா வாராது அஞ்சனங்கள் கொற்றவனே சுருமாவின் கீழ்மட்டந்தான்
கீளப்பா வஞ்சனமாம் பாறையல்லோ கெடியான கல்லினுட பூமியாமே
6829.
பூமியாம் டில்லிக்கு கிழக்கேயப்பா புகழான கெந்தகத்தின் பூமியாகும்
சாமியது கிருபையினால் விளையுங் கெந்தம் சதுரான சித்தர்களுக்குகந்த கெந்தி
வாமிசிவகாமியம்மாள் வீற்றிருக்கும் வளமான சிவப்பு கெந்தியங்கேயுண்டு
நாமிகவே குளிகைகொண்டு சென்றேனப்பா நலமான டில்லிக்குக் கிழக்கேதானே
6830.
கிழக்கான பூமியப்பா நெடுந்தூரந்தான் கிளையான யாறுண்டு சுனைதானுண்டு
பழக்கமதாய் மாண்பர்களும் போனதில்லை பாங்கான குறும்பருட நாடேயாகும்
அழகான பூமியது சொல்லவொண்ணாது வப்பனே கெந்தகந்தான் விளையும்நாடு
தழலான செடிமரங்கள் பூண்டுமில்லை தாரணியைக் குளிகைகொண்டு கண்டிட்டேனே
6831.
இட்டதொரு கிழக்குக்கு தெற்கேயப்பா எழிலான திருச்சங்கு மைந்தனல்லோ
சட்டமுடன் ஆண்டிருந்த ராஜ்ஜியத்தின் சதுரான மேற்புறத்தின் ஓடையப்பா
வட்டமுள்ள பூமியது நெடுந்தூரந்தான் வளமான தாளகத்தின் பூமியாகும்
திட்டமுடன் பூமியெல்லாந் தாளகந்தான் திரமான நடுமையேறி தாரமாமே
6832.
அரிதான வரிதார மென்னசொல்வேன் வப்பனே வதின்கீழே மனோசிலையுமாகும்
சரிதான விளைவல்லோ பூமியெல்லாம் சாங்கமுடன் தாளகத்தின் பூமியாகும்
பரியான தங்கமது விளையும்நாடு பாருலகில் நாதாக்கள் கண்டதுண்டு
திரிலோகந்தான் மதிக்கும் தங்கமப்பா தீர்க்கமுடன் விளைகின்ற நாடுதானே

6833.
நாடான நாடதுதான் சொல்வேனப்பா நலமான புலிப்பாணி நன்புள்ளானே
காடான காடெல்லாம் யான்திரிந்து கனமான குளிகையது கொண்டுமல்லோ
மேடான பூமியது திரிந்துமேதான் மேன்மையுள்ள கற்பரிபாஷாணங்கண்டேன்
தாடாண்மை யுள்ளதொரு பாஷாணந்தான் தாரணியில் தங்கமிகச் செய்யலாமே
6834.
செய்யவே கற்பரிபாஷாணந்தன்னால் செயலான நவலோகம் வெல்லலாகும்
துய்யதொரு நவலோகம் நீறிப்போகும் துப்புரவாய் லோகங்கள் சத்துருவேயாகும்
வெய்யவே நடுமையந்தன்னிலப்பா வேட்கமெனும் அவுல்பாஷாணந்தானாகும்
பையவே யதின்கீழே தானிருக்கும் பாங்கான ஜலபாஷாணந்தான்பாரே
6835.
பாரப்பா யின்னமொரு பரிகாரந்தான் பாலகனே ஸ்தூலமது வுறுதிசெய்ய
ஆரப்பா மணலிரும்பு கொண்டுவந்து வப்பனே வுருக்கியல்லோ தகடடித்து
சீரப்பா முன்சொன்ன பாஷாணத்தை சிறப்புடனே நிம்பழத்தின் சாற்றினாலே
ஊரப்பா மூன்றுவகை பாஷாணந்தான் வுத்தமனே தானரைப்பாய் சாமம்நாலே
6836.
நாலான சாமமது தானரைத்து நலமான இரும்பதனை தகடதாக்கி
பாலான சரக்கெல்லாம் மேலேபூசி பட்சமுடன் ரவிதனிலே காயவைத்து
மாலான சில்லிட்டுச் சீலைசெய்து மார்க்கமுடன் கோழியென்ற புடந்தான்போடு
சூலான வயமதுவும் களங்கமாகி துப்புரவாய்த் தானிருக்கும் வயந்தான்காணே
6837.
காணவே யவரெலாந்தானெடுத்து கருவாகப் புடமதுவாய்ச்சேர்த்துக்கொண்டு
தோணவே கடைசரக்கு செப்பக்கேளிர் தோறாமல் கெவுரியென்ற வீரந்தானும்
மாணவே கெந்தகமும் லிங்கந்தானும் மகத்தான சிங்கியுடன் பூரமாகும்
நீணவே வகைவகைக்குப் பலந்தான்காலாய் நிஷ்களங்கமாகவல்லோ பழச்சார்தானே
6838.
தானான சாரதுவும் பிழிந்துகொண்டு தண்மையுள்ள வயப்பொடியாங் களங்குதன்னில்
தேனான செம்பழத்தின் சாற்றினாலே தெளிவுறவே தானரைப்பாய் நாலுசாமம்
பானான வில்லையது லகுவாய்ச் செய்து பாலகனே ரவிதனிலே காயவைத்து
மானான வோட்டிலிட்டுச் சீலைசெய்து மகத்தான மண்மறைவிற் புடத்தைப்போடே
6839.
போடேதான் இப்படியே புடந்தான்போடு பொங்கமுடன் தானரைத்து வில்லைதட்டி
நீடேதான் முன்னுரைத்த பாகம்போலே நீதியுடன் வில்லைதட்டிக் காயவைத்து
கூடேதான் சில்லிட்டுச் சீலைசெய்து கொற்றவனே கோழியென்ற புடந்தான்போடு
போடேதான் மண்மறைவிற் பத்துமுறைபோடு பொலிவான வயமதுவும் சிவக்கும்பாரே
6840.
சிவக்குமே அயமதுவும் பாஷாணத்தால் சிறப்புடைய குற்றமது பதினொன்றும்போம்
தவப்பலனைக் கொண்டவர்க்கு சித்தியாகும் தகமையுள்ள மணலிரும்பு செந்தூரந்தான்
தவப்பனைக் கொண்டோர்கள் காணமாட்டார் வப்பனே புத்தியுள்ள புனிதவானே
பவக்கடலை விட்டகற்றி பாலாநீயும் பாருலகில் இருப்பதுவே புண்ணியமாமே

6841.
புண்ணியனா யிருக்கவென்றால் பூபாலாகேள் புகழான செந்தூரமுண்பதற்கு
திண்ணமுடன் தேனதனில் மண்டலந்தான் தீரமுடன் தானிருந்த தேகங்கற்றூண்
வண்ணமுடன் வாசியது மேல்நோக்காது வளமான செந்தூரந் தானுமல்லோ
நண்ணமுடன் சட்டையது தள்ளும்பாரு நாதாந்த சித்தர்கள் தான் ஆடுங்கூத்தே
6842.
கூத்தான செந்தூரம் மண்டலந்தான் குறிப்புடனே கொண்டவர்க்குப் பலனைக்கேளு
நீத்தமுடன் நெடுங்காலமிருக்கலாகும் நெடியான ரோகமது கடலேபோகும்
சாத்தகி யாழ்வார்தானுங் கொண்டகற்பம் தாரணியில் வெகுகால மிருந்தாரல்லோ
பூத்தமலர் முககுண மாதர்தம்மை புகழாக வாயிரம்பேர் கூடலாமே
6843.
கூடலாங் கிருஷ்ணாவதாரனல்லோ கொற்றவனார் சிலகாலம் உண்டகற்பம்
ஆடலாம் தேசவிளையாட்டையெல்லாம் வப்பனே வயமென்ற செந்தூரத்தால்
ஓடலாம் வெகுதூரம் நடக்கலாகும் வுத்தமனே நடந்தாலும் யிளைப்போயில்லை
தேடலாம் வெகுகோடி திரவியங்கள் தேடினால் பலனொன்றுமில்லைதானே
6844.
இல்லையே செந்தூரம் வேதைகாண எழிலான வெள்ளியது களஞ்சிநூறு
தொல்லையெனும் பிறவியது மாற்றம்போல தோறாமல் வர்ணமது சொல்லப்போமோ
கொல்லனது வுலையில் வுருக்கியல்லோ கொற்றவனே செந்தூரங் களஞ்சிதாக்கு
வல்லதொரு வெள்ளியது பழுப்புமாகி மகத்தான யேமமது சொல்லொண்ணாதே
6845.
ஒண்ணாத தங்கமது மாற்றுசொல்வேன் ஓகோகோ நாதாக்கள் மறைத்துவைத்து
தண்ணமுடன் மாற்றதுவோ லக்கோயில்லை தாடாண்மைகொண்டடொரு வுறத்ததங்கம்
பண்ணுதற்கு விட்டகுறை யில்லாவிட்டால் பலிக்குமோ பாராளும் மாண்பருக்கு
நண்ணமுடன் மனதுவந்து இந்தபாகம் எழிலாக செய்பவர்க்கு பலிக்குந்தானே
6846.
பலிக்குமே இத்தங்கம் பிறவித்தங்கம் பாரிலுள்ள சிவயோகிக்கான தங்கம்
ஒலிக்குமே ஜெகஜோதியான தங்கம் வுத்தமனே கருமிகட்கு வாய்க்காதப்பா
நலியாளர் தங்களுக்கு இந்ததங்கம் நாதியற்ற பேர்களுக்கு நவிலவேண்டும்
பலியாது கருமிகளாய் இருப்பாரானால் பாருலகில் கருமிகட்கு வாய்க்காதன்றே
6847.
அன்றான யின்னமொரு போக்குசொல்வேன் வப்பனே புலிப்பாணி யன்புள்ளானே
குன்றான செந்தூர மென்னசொல்வேன் குறிப்பான வயமதுவும் பலந்தான்பத்து
வென்றிடவே நிம்பழத்தின் சாற்றினாலே விருப்பமுடன் சுத்தியது செய்துமல்லோ
நன்றாகக் கல்வமதிலிட்டுமைந்தா நலமுடனே தானரைக்க மருந்தைக்கேளே
6848.
கேளப்பா முருங்கைவேர் பட்டைதன்னை கிருபையுடன் தானிடித்து சார்பிழிந்து
பாளப்பா போகாமல் பத்துசாமம் பாங்குடனே தானரைப்பாய் சுன்னநீரும்
ஆளப்பா பலமதுவும் ஒன்றேயாகும் அப்பனே தான்போட்டு வரைத்துமல்லோ
சூளப்பா வில்லையது லகுவாய்ச்செய்து சுந்தரனே ரவிதனிலே காயப்போடே

6849.
காய்ந்தபின்பு பில்லையதை எடுத்துமைந்தா கருவாக வோட்டிலிட்டுச் சீலைசெய்து
வாய்ந்ததொரு புடமதுவும் கெஜமேயாகும் வளமுடனே போட்டபின்பு எடுத்துப்பாரு
தீய்ந்துமே போகாமல் செந்தூரந்தான் தீர்க்கமுடன் அருணனது நிறம்போலாகும்
மாய்ந்துமே அயமதுவும் மடிந்துமல்லோ மகத்தான செந்தூரஞ் சொல்லொண்ணாதே
6850.
சொல்லவென்றால் நாவில்லை பாவுமில்லை துப்புரவாய் நாதாக்கள் மறைத்தசித்து
வெல்லவே யிவ்வேதை யார்தான்செய்வார் வதியாளி செய்வாரே மற்றோர்காணார்
புல்லவே செந்தூர மகிமைதன்னை பூதலத்தில் மாண்பர்களுங் கண்டதில்லை
அல்லவென்றால் செந்தூரம் கோடிபாகம் வப்பனே கண்டதுண்டு மெத்தகாணே
6851.
காணவே செந்தூரம் மண்டலந்தான் கருவாகக் கொண்டவர்க்குப் பலனைக்கேளு
தோணவே தேனதனில் கொண்டாலல்லோ தோறாமல் தேகமது இருக்கும்பாரு
வேணதொரு ரோகமெல்லாம் நீங்கியல்லோ விரைக்குமே நரம்பதுவும் துடிப்புமெத்த
பாணமெனும் மன்மதனார் வேகந்தன்னை பாலிக்கும் வயத்தினுட வீரங்காணே
6852.
வீரமாம் வாசியது மேலோடாது வீறான நரம்புகளும் முருக்குமேறி
சாரமுடன் தேகமது வலுவுமெத்த சட்டையது மூன்று விசைதள்ளும்பாரு
கோரமென்ற தேகமது வழகுமீறி கொற்றவனே நெடுங்கால மிருக்கலாகும்
பாரமென்ற வயமதுவும் சொல்லப்போமோ பாராளுஞ் சித்தர்முனி வேதையாச்சே
6853.
வேதையாமின்னமொரு போக்குசொல்வேன் வேதாந்த புலிப்பாணி புண்ணியவானே
பாதையாம் மதிதனிலே பத்துக்கொன்று பட்சமுடன் தானுருக்கி குருவொன்றீய
சோதனைக்கு இடையாது வுறத்ததங்கம் சோராமல் லிங்கமிட்டு வூதிப்போடு
வேதைமுறை சொன்னவழி தப்பாதப்பா வேதாந்த சித்தினுட வுண்மைபாரே
6854.
உண்மையாம் இன்னமொரு பாகஞ்சொல்வேன் வுத்தமனே புலிப்பாணி புனிதவானே
திண்ணமுடன் அயமதுவும் பலந்தான்பத்து திறமான நிம்பழத்தின் சாற்றினாலே
வண்ணமுடன் தானரைப்பாய் நாலுசாமம் வாகுடனே கழுவியல்லோ வயமெடுத்து
கண்ணமுடன் கல்வமதில் இட்டுமைந்தா தகமையுடன் பழமதுதான் செப்பக்கேளே
6855.
செப்பவென்றால் கருநாகப் பழரசத்தால் செம்மலுடன் தானரைப்பாய் நாலுசாமம்
ஒப்பமுடன் முப்பூவுங் களஞ்சிசேர்த்து வுத்தமனே தானரைத்து பில்லைதட்டி
தப்பிதங்கள் வாராமல் ரவியில்வைத்து சட்டமுடன் சில்லிட்டுச் சீலைசெய்து
மெய்ப்புடனே கோழியென்ற புடந்தான்போடு மேலான செந்தூர மாகுந்தானே
6856.
தானான செந்தூரந் தனையெடுத்து தண்மையுடன் முன்போல கல்வமிட்டு
தேனான கருநாக பழரசத்தால் தேற்றமுடன் தானரைப்பாய் நாலுசாமம்
பானான பில்லையது லகுவாய்ச் செய்து பாலகனே ரவிமுகத்தில் காயப்போடு
மானான சில்லிட்டுச் சீலைசெய்து மார்க்கமுடன் முன்போல புடத்தைப்போடே

6857.
போடேதான் பத்துமுறை இப்படியேபோடு பொங்கமுடன் அயமதுவும் செந்தூரந்தான்
நாடேதான் முறைபோலே செய்வாயானால் நலமான செந்தூரம் வேதையாகும்
கூடேதான் ஆவின்பால் வெண்ணைதன்னில் குணமுடனே நெல்லிடைதான் கொண்டாயானால்
தேடேதான் காலாங்கி கடாட்சத்தாலே தெளிவாக தேகமது மின்னும்பாரே
6858.
பாரேதான் மண்டலந்தான் கொண்டபோது பாங்கான தேகமது சட்டைதள்ளும்
நேரேதான் தேகமது வண்டுபோலாம் நெடிதான வாசியது மேல்நோக்காது
கூரேதான் தேகமது கற்றூணாகும் கொற்றவனே யமனுக்கு நாளுமில்லை
வேரேதான் கற்பமது வேண்டுமோதான் வித்தகனே வயத்தினுட மகிமைகாணே
6859.
காணவே யின்னமொரு மகிமைசொல்வேன் கருவான புலிப்பாணி கணிதவானே
தோணவே வெள்ளியது களஞ்சிபத்து தோறாமல் தானுருக்கி மருந்தொன்றீய
மாணவே வெள்ளியது பழுக்கும்பாரு மகத்தான மாற்றதுவும் என்னசொல்வேன்
வேணபடி வங்கமதை கொடுத்தேயூது வேட்கையுடன் வர்ணமது யேகாதன்றே
6860.
ஏகாது உப்புக்குங் காவிக்குந்தான் எழிலான செந்தூர மென்னசொல்வேன்
போகாது புடத்துக்கு வறுதிதங்கம் பொங்கமுடன் நாதாக்கள் உரைத்ததில்லை
சாகாமல் இருந்திடலாம் செந்தூரத்தால் சதாகாலங் கற்பமது வுண்டுபாரு
வேகாது தேகமது தீயிற்பட்டால் வெந்தாலும் மேனியது வினைகொள்ளாதே
6861.
கொள்ளவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கொற்றவனே புலிப்பாணி குணமுள்ளானே
வெள்ளமுர்தமானதொரு யெந்தன்சாமி தெளிவான காலாங்கி நாதர்தாமும்
உள்ளபடி திரேதாயி னுகத்திலப்பா வுத்தமனே தாமிருந்த வண்மையெல்லாம்
கள்ளமின்றி இகழாமல் யானுரைப்பேன் கைலாச புலிப்பாணி கருவாய்க்கேளே
6862.
கருவான திரேதாயி னுகத்திலப்பா காலாங்கிநாதருட வுண்மையெல்லாம்
திருவான குருமுனி சொன்னநீதி தீர்க்கமுடன் இருவரது சரித்திரங்கள்
குருவான என்தேவர் எந்தனுக்கு கூறியதோர் லோகவதிசயங்களெல்லாம்
கருவறிந்து வழியறிந்து உந்தமக்கு கழறுவேன் புலிப்பாணி கவிவல்லோனே
6863.
வல்லதொரு திரேதாயினுகத்திலப்பா வளமான லட்சத்தி நாற்பத்தாண்டில்
புல்லான வுலகமது மகிமைசொல்வேன் புகழான பிரளயங்கள் நேர்ந்தபோது
கல்லான மலைகளுமே முழுகியல்லோ கடலேழுந்தான்கடந்து மலைமட்டந்தான்
வல்லமையாய் சத்தசமுத்திரங்களெல்லாம் வளமுடனே பொங்கியது நிற்கலாச்சே
6864.
நிற்கையிலே காலாங்கி நாதர்தாமும் நீடாழி யுலகமதைக் கண்டேயேங்கி
சொற்பமுடன் தன்மனதில் எண்ணியல்லோ தோறாமல் காலாங்கி கமலர்தாமும்
விற்பனர்கள் இருவருமாய் காலாங்கிகிரியில் வீற்றிருந்தார் மண்டலந்தான் நெடுநாளப்பா
அற்பமுடன் வையத்து மாண்பர்தம்மில் வனேகம்பேர் அம்மலையில் இருந்திட்டாரே

6865.
இருந்தாரே நெடுங்காலம் காலாங்கிநாதர் எழிலான மலைமீதில் என்னசொல்வேன்
பொருந்தவே காயாதி கற்பங்கொண்டு பொங்கமுடன் வுலகமதின் மகிமையெல்லாம்
திருந்தவே கண்ணினாற் கண்டுமல்லோ தீர்க்கமுடன் தன்மனதில் உள்ளடக்கி
அருந்தவத்தில் உதித்ததொரு ரிஷிகள்தேவர் வனேகரிட மகிமையெல்லாம் பார்த்திட்டாரே
6866.
பார்த்தாரே காலாங்கி மலையிலப்பா பாங்கான ரிஷியினுட மகிமைசொல்வேன்
தீர்த்தமென்ற கரையிலப்பா ரிஷியாருண்டு திரமான ரிஷியாரும் புலிரூபந்தான்
ஆர்க்கவே திருமுகத்தைக் கண்டாலல்லோ வப்பனே மானிடத்தின் சித்துபோலாம்
மூர்க்கமது வாராது முனிநாதர்க்கு முனையான வேங்கையுட சித்துதானே
6867.
சித்தான வேங்கையென்ற மனிதசித்து ஜெகதலத்தில் யாரேனுங் கண்டதில்லை
பத்தியுள்ள என்தேவர் காலாங்கிநாதர் பாங்கான திரேதாயி னுகத்திலப்பா
வெத்தியுடன் கண்டதொரு மகிமைதன்னை வேதாந்த சித்தெனக்கு வெளியிட்டார்காண்
எத்திசையும் சித்தர்முனி கண்டதில்லை யெழிலான வதிசயத்தின்கூறுதானே
6868.
கூறான கோடிவகை யதிசயங்கள் கொற்றவனே காலாங்கி மலையிலப்பா
நீறான மலைமுனியாந் தவசியப்பா நெடுங்காலந் தானிருக்குங் கொடியசித்து
வாறான மச்சமென்ற தேகமப்பா வளமான திருமுகந்தான் மனிதரூபம்
சேறாடும் சுனையோரம் மலையோரத்தில் செம்மலுடன் தவமிருப்பார் ரிஷியார்தானே
6869.
தானான வவர்பெருமை மெத்தவுண்டு தகமையுள்ள சித்தாதி கண்டதில்லை
கோனான என்தேவர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்குச் சொன்னநீதி
தேனான மகிமைகளுங் கோடாகோடி திரேதாயினுகத்திலப்பா கண்டதுண்டு
மானான நெடுங்கால சித்துவென்று மகதேவர் சொல்லெனக்கு தெரியலாச்சே
6870.
ஆச்சப்பா இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப்பாணி வரியவானே
மூச்சடங்கி நெடுங்கால மிருந்தசித்து முனையான காலாங்கி நாதரப்பா
பாச்சலுடன் பிரளயங்கள் வந்தபோது பாங்கான மலைமீதில் இருக்குங்காலம்
மாச்சலுடன் தவயோகி ரிஷியார்தம்மை மன்னவனே கண்டவதிசயத்தைக் கேளே
6871.
கேளப்பா தேகமது கூர்மவர்ணம் கெடியான திருமுகந்தான் மனுஷரூபம்
வாளப்பா நெடுங்காலந் தவசிருந்து வளமையுடன் காலாங்கி மலைமேற்றானும்
ஆளப்பா பிரளயங்கள் வந்தபோது வப்பனே தவசிருந்த சித்துமாகும்
காளப்பா திரேதாயினுகத்தில்தானும் கருவான மலைதனிலே இருந்தசித்தே
6872.
சித்தான புலிப்பாணி சிறியபாலா சிறப்புள்ள வதிசயங்கள் இன்னஞ்சொல்வேன்
பத்தியுடன் காலாங்கி நாதர்தாமும் பாருலகில் திரேதாயினுகத்திலப்பா
சத்தியங்கள் தவறாமல் தவசுசெய்து சாங்கமுடன் பிரளயங்கள் வந்தபோது
சுத்தியே நிற்பதற்கு இடங்கொள்ளாமல் சுந்தரனார் மலைமீதில் ஏறினாரே

6873.
ஏறினார் காலாங்கி மலையின்மேலே எழிலான பிரளயங்கள் வந்தபோது
மீறியே யாகங்கள் செய்துகொண்டு மிக்கான மலைகளிலே இருக்கும்போது
கூறியதோர் வராகமென்ற ரிஷியார்தாமும் கொற்றவனார் மலையதனில் தவசிருந்தார்
கோறியே காலாங்கி நாதர்தாமும் கொப்பெனவே தவசியிடம் சென்றார்பாரே
6874.
பாரேதான் எனதையர் காலாங்கிநாதர் பாங்கான மலைதனிலே தவசிருந்த
சீரான வராகரிஷி தன்னைத்தானும் சிறப்புடனே காலாங்கி காணும்போது
தீரான வுருவமது வராகம்போலும் தீர்க்கமுள்ள திருமுகந்தான் மனிதரூபம்
நேரேதான் தவயோகஞ் செய்துகொண்டு நேர்மையுடன் தானிருந்த ரிஷிகண்டாரே
6875.
கண்டாரே நெடுங்காலந் தவசிருக்கும் கருவான ரிஷியாரை மனதுவந்து
தெண்டமுடன் காலாங்கி நாதர்தாமும் தேற்றமுடன் ரிஷியாரைக் கேட்கும்போது
சண்டமாருதம்போலே ரிஷியார்தாமும் சட்டமுடன் மனதுவந்து சாற்றலுற்றார்
திண்ணமுடன் திரேதாயி னுகத்திலப்பா திருவாண்டு முதல்வருஷஞ் சமாதிகாணே
6876.
தானான காலாங்கி நாதரேகேள் தகமையுடன் திரேதாயினுகத்திலப்பா
தேனான மனோன்மணியாள் கிருபையாலே திரளான பிரளயங்கள் வந்தபோது
மானான மகதேவர் கடாட்சந்தானே மன்னவனே நெடுங்காலந் தவசிருந்தேன்
பானான வையகத்தில் ஆரேனுந்தான் பக்கல்வந்து கேட்டதில்லை என்றிட்டாரே
6877.
இட்டாரே வராகரிஷி முனிவர்தானும் எழிலான காலாங்கி தன்னைக்கண்டு
விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால் விருப்பமுடன் எந்தனையும் காணலாச்சு
சட்டமுடன் உந்தனுக்கு உபதேசங்கள் சாங்கமுடன் போதிப்பேன் என்றுசொல்லி
திட்டமுடன் உலகத்தில் மகிமையெல்லாம் தீர்க்கமுடன் காலாங்கிக் கோதினாரே
6878.
ஓதினார் சமாதிமுகம் இருந்தகாலம் வுத்தமனார் காலாங்கி நாதருக்கு
ஆதியெனும் பராபரத்தின் ரகசியத்தை வப்பனே காலாங்கிக் கோதினார்காண்
நீதியுடன் உபதேசம் பெற்றுமல்லோ நிகட்சியுடன் தெற்குமுகம் திரும்பிவந்தார்
பாதிமதி சடையணிந்த தம்பிரான்போல் பரமகுரு ரிஷியொருவர் இருந்திட்டாரே
6879.
இருந்தாரே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் எழிலான புலிப்பாணி இன்புள்ளானே
பொருந்தவே திரேதியினுகத்திலப்பா பொங்கமுடன் காலாங்கி நாதர்தாமும்
திருந்தியே கண்டதொரு வதிசயங்கள் தீர்க்கமுடன் எந்தனுக்கு சொன்னநீதி
வருந்தவே நரசிங்க ரிஷியார்தன்னை வளப்பமுடன் கண்டதொரு வுண்மைபாரே
6880.
உண்மையாங் காலாங்கி நாதர்தாமும் வுத்தமனார் திரேதாயினுகத்திலப்பா
வண்மையுடன் காலாங்கி நாதர்தாமும் வாகுடனே மலைமீதிற் கண்டசேதி
திண்மைபெற மார்க்கமது யாதென்றாக்கால் தீர்க்கமுடன் கிரிசுத்தி வருகும்போது
வண்மையுள்ள சுனையொன்று தடாகமுண்டு வளம்பெரிய தவசிதனை பார்த்திட்டாரே

6881.
பார்த்தாரே கரசிங்கரிஷியார்தம்மைப் பட்சமுடன் காலாங்கி காணும்போது
தீர்த்தமுடன் ரிஷியாரின் தவசின்வேடம் திரேகமெல்லாம் சிம்பத்தின் ரூபமாகும்
நேர்த்தியுள்ள வர்ணமது தங்கவர்ணம் நேர்மையுடன் வையகத்திலிருந்தசித்து
ஆர்த்ததொரு திருமுகம் மனிதரூபம் வப்பனே தவநிலையை அறிந்திட்டாரே
6882.
அறிந்தாரே தவசியுட மகிமைதன்னை வன்புடனே மனதுவந்து யருகில்வந்து
சிறந்ததொரு ரிஷியாரைக் காலாங்கிநாதர் தேற்றமுடன் வினவியங்கே கேட்கும்போது
குறித்ததொரு காலாங்கிநாதருக்கு குணமான நரசிங்க ரிஷியார்தாமும்
மறித்துமே காலாங்கி நாதர்தாமும் மன்னவனே மார்க்கமது கூறுவேனே
6883.
கூறுவேன் என்றதுமே ரிஷியார்தாமும் குணமான காலாங்கி நாதருக்கு
தேறுதலாய் உபதேசம் மிகவுஞ்சொல்லி தேற்றமுடன் நெடுங்காலம் மலையிலப்பா
மாறுலக வையகத்தில் தவசிருந்து மன்னவனே யானறிந்த மகிமைகோடி
ஆறுதலாய் உபதேச வதிதங்கூறி வப்பனே போகவென்று விடைதந்தாரே
6884.
தந்தாரே காலாங்கி நாதருக்கு தாரணியில் அதிசயங்கள் அதிதஞ்சொன்னார்
பொந்தியே காலாங்கி நாதர்தாமும் போனதொரு கிரிகைதனில் மேற்குபாகம்
சொந்தமுடன் காணுதற்கு மனதுவந்து தோறாமல் கிரியோரம் வருகும்போது
விந்தையுடன் அதிசயங்கள் என்னவென்றால் வீரான வாமரிஷி தனைக்கண்டாரே
6885.
கண்டாரே புலிப்பாணி புனிதவானே காசினியில் இன்னும்வெகு வதிசயங்கள்
அண்டர்பிரா நாதாக்கள் ரிஷியார்தாமும் யாரேனுங் கண்டறிந்து சொன்னதுண்டோ
சண்டமாருதம்போல எந்தன்தேவர் சட்டமுடன் காலாங்கி நாதர்தாமும்
கண்டறிந்த வதிசயத்தை யாமுரைப்பேன் கண்மணியே விண்மணியே கழறக்கேளே
6886.
கேளப்பா எந்தனது காலாங்கிநாதர் கெடிதான திரேதாயினுகத்திலப்பா
ஆளப்பா கிரிசுத்தி வருகும்போது வப்பனே மலையோரம் வடபக்கந்தான்
மீளவே தவநிலையைப் பார்க்கவென்று மிக்கான சுனையருகே வந்தபோது
சூளப்பா ரிஷியார்கள் கூட்டத்தோடும் சுந்தரனே வாமமகா ரிஷிகண்டாரே
6887.
கண்டாரே வாமமகாரிஷியார்தம்மை கருவான தேகமது வாமரூபம்
கொண்டதொரு திருமுகமும் மனிதரூபம் கோடான கோடியது நெடுங்காலந்தான்
அண்டமகா ரிஷிபோலே வாமர்தாமும் வருளான பெருந்தவசு தானிருந்தார்
கொண்டல் வண்ணன் அச்சுதன்போல் விசுவரூபம் கொடியதவம் செய்திருக்கக்
கண்டிட்டாரே
6888.
கண்டாரே திரேதாயினுகத்திலப்பா கடுந்தவசு செய்திருந்த ரிஷியார்தம்மை
சண்டமாருதம்போலே தவசிருந்து சாங்கமுடன் வையகத்து மகிமையெல்லாம்
வண்டணியாள் ரேணுகையாள் மகிமைதன்னை வளமுடனே தானுரைத்தார் காலாங்கிக்கு
குண்ணதின் மேலிருந்து தவசியாகும் கூறினார் வெகுகோடி மகிமைதானே

6889.
தானான யின்னமொரு தண்மைசொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணி கனவானேகேள்
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் எந்தனுக்கு சொன்னநீதி
தேனான திரேதாயி னுகத்திலப்பா தேற்றமுடன் இருபதாமாண்டுதன்னில்
பானான பிரம்மகுல பரசுராமன் பெருந்தவசு தானிருந்த வண்மைபாரே
6890.
பாரேதான் பிரளயங்கள் வந்தபோது பாங்கான காலாங்கி மலையின்பேரில்
நேரேதான் நெடுங்காலந் தவசிருந்து நேர்மையுள்ள பிரம்மகுல சித்துதானும்
சீரேதான் கிரிதனக்கு கீழ்பாகந்தான் சிறப்புடனே தவமிருந்த ரிஷியார்தம்மை
ஆரோதான் காண்பதற்கு வையகத்தில் வப்பனே யாராலும் முடியாதன்றே
6891.
அன்றான காலாங்கி நாதர்தாமும் அறிவுடைய சித்துமகாரிஷியாரல்லோ
குன்றான பருவதத்தைத் தேடியேதான் குணமான காலாங்கி நாதர்தாமும்
சென்றாரே பரசுமகாரிஷியார்பக்கல் செம்பவள ரிஷியாரும் அருகிற்சென்று
நின்றாரே நெடுநேரம் முடிகள்சாய்த்து நீதியுடன் காலாங்கி பணிந்திட்டாரே
6892.
பணிந்திட்ட காலாங்கி நாதருக்கு பட்சமுடன் பரசுமகாரிஷியார்தாமும்
துணிந்திட்ட காலாங்கி நாதருக்கு துப்புரவாய் உபதேசங் கோடிவண்ணம்
அணிபெறவே வையகத்து மகிமையெல்லாம் வப்பனே உபதேசஞ் செய்தாரல்லோ
கணிதமுடன் காலாங்கி நாதர்தாமும் கருத்துடனே மலையைவிட்டு யேகினாரே
6893.
ஏகவே காலாங்கி நாதர்தாமும் எழிலான சீனபதி தன்னிற்சென்று
பாகமுடன் லோகவதிசயங்களெல்லாம் பாலித்தார் சீனபதிப்பெண்களுக்கு
ஆகமசாஸ்திர புராணங்களெல்லாம் அங்ஙனவே போதித்து வினயங்கூறி
போகரென்ற எந்தனுயும் சீஷனாக்கி பொங்கமுடன் நெடுங்காலம் இருந்திட்டாரே
6894.
இருந்தாரே இன்னமொரு வயணஞ்சொல்வேன் எழிலான புலிப்பாணி எந்தன்மாரா
பொருந்தவே சீனபதி விட்டுநீங்கி பொங்கமுடன் காலாங்கிநாதர்தாமும்
திருந்தவே திரேதாயினுகத்திலப்பா தீர்க்கமுடன் பிரளயங்கள் வந்தபோது
அருந்தவசி யாயிருந்த ராமர்தன்னை அங்ஙனவே கண்டுமல்லோ மதித்திட்டாரே
6895.
மதித்தாரே ராமரிஷிமுனியார்தம்மை மார்க்கமுடன் காலாங்கிநாதர்தேவர்
துதிப்புடனே ராமரிஷி யென்றுமேதான் துப்புரவாய் அஞ்சலிகள் மிகவுஞ்செய்து
விதிப்படியே பட்டாபிஷேகமென்று விருப்பமுடன் தன்மனதில் உவந்துகொண்டு
நதிக்கரையைத் தான்தேடி தீர்த்தங்கொண்டு நமஸ்கார துதிகள் மிகசெய்திட்டாரே
6896.
செய்ததொரு காலாங்கி நாதர்தம்மை செங்கண்மால் ரிஷியாரும் மனங்களித்து
துய்யதொரு துலபமாம் மலைதன்னை துப்புரவாய் கையேந்தி முடிகள்சாய்ந்து
வெய்யபுகழ் உபதேசம் எந்தனுக்கு விருப்பமுடன் செய்யவென்று வினவிக்கேட்க
கைதவமாய் உபதேச உண்மைதன்னை கர்த்தாவும் எந்தனுக்கு கூறிட்டாரே

6897.
கூறியே உபதேச உண்மைதன்னை குணமான காலாங்கி நாதருக்கு
தேறியதோர் கிரேதாயி னுகத்தில்தானும் தேற்றமுடன் தானடைந்த மகிமையெல்லாம்
ஆறிடவே காலாங்கி நாதருக்கு அங்ஙனவே உபதேசஞ் செய்தாரல்லோ
பீறியே காலாங்கி நாதர்தாமும் மிக்கவே சீனபதி சென்றிட்டாரே
6898.
சென்றுமே சிலகாலம் அங்கிருந்து செம்மலுடன் கிரேதாயினுகத்தில்தானும்
குன்றுமலை வணாந்திரங்கள் குகைகள்தேடி கூறான சித்துமுனி யனைத்துங்கண்டு
தென்றிசையில் கும்பமுனி மலையுங்கண்டு தேற்றமுடன் காலாங்கி மலையைக்காண
வென்றிடவே பிரளயங்கள் வந்தபோது மேன்மையுடன் மலைதனிலே இருந்திட்டாரே
6899.
இருந்தாரே இன்னமொரு இணக்கஞ்சொல்வேன் எழிலான புலிப்பாணி புனிதவானே
திருந்தவே திரேதாயினுகத்திலப்பா தீர்க்கமுடன் காலாங்கி நாதர்தாமும்
அருந்தவசி பலராமரென்னுஞ்சித்து வம்மலையில் நெடுங்காலந் தவசிருக்க
குருந்தமெனும் மரக்கலப்பை தோளிலேந்தி குணமான ரிஷியாரின் தவங்கண்டாரே
6900.
தவமான ரிஷியாருங் கிரியைதன்னில் சட்டமுடன் நெடுங்காலந் தவசுகொண்டு
சவம்போலே மூச்சடங்கி ரூபத்தோடும் சட்டமுடன் தவசிருக்கும் வண்மைதன்னை
பவமகற்று காலாங்கி நாதர்தாமும் பண்புடனே முடிசாய்ந்து தலைகுனிந்து
நவகோடி யஞ்சலிகள் மிகவுஞ்செய்து நாதாந்த சித்துருவே கெதியென்றாரே

# போகரின் சப்த காண்டம் – 7000

6901.
கெதியென்று காலாங்கி கேட்குங்காலம் கெடியான பலராமர் ரிஷியார்தாமும்
பதிதனையைத் தேடிவந்த ரிஷியாருக்கு பட்சமுடன் ஞானோபதேசங்கூறி
மதிபோன்ற மகதேவர் காலாங்கிக்கு மார்க்கமுடன் உலகவதிசயங்களெல்லாம்
இதிகாசபுராணமென்னும் மறைப்பையெல்லாம் யிஷ்டமுடன் மனதுவந்து போதித்தாரே
**6902.**
போதிக்க வின்னமொரு வயணஞ்சொல்வேன் பொங்கமுடன் புலிப்பாணி புகழுள்ளானே
ஆதித்தன் சந்திரன்போல் பௌத்மசித்து அரகராயென்னசொல்வேன் கிரியிலப்பா
ஜோதிபிரகாசமென்ற காலாங்கிநாதர் சொர்ணமென்ற கிரியைதனில் செல்லும்போது
சாதியிலாதவனார் பௌத்மசித்து சட்டமுடன் நெடுந்தவசி பார்த்திட்டாரே
**6903.**
பார்த்தாரே யென்தேவர் காலாங்கிநாதர் பாரான மலைதனிலே தவசியாரை
சார்த்தகையாள் வார்போல தவங்கள்பூண்டு சட்டமுடன் நெடுங்கால சித்துதம்மை
கோர்த்துமே சுரமெத்து அஞ்சலித்து கொப்பெனவே காலாங்கி வணக்கஞ்செய்தார்
தீர்த்தமுடன் பத்திரமாந் துளபமாலை தீர்க்கமுடன் தான்கொடுத்து வர்ணித்தாரே
**6904.**
வசனிக்கா ஞானோபதேசந்தன்னை வளமுடனே பௌத்மமகாரிஷியார்தாமும்
நிசமுடனே மனங்களித்து மனதுவந்து நிட்சயமாம் ஞானமென்ற இதிகாசத்தை
வசனமதாய் யுபதேசவுண்மையாக வாக்களித்தார் காலாங்கி நாதருக்கு
தசமுடனே பஞ்தசா காயமாக்கி சட்டமுடன் மனதுவந்து கொடுத்திட்டாரே
**6905.**
கொடுக்கவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கோளாறு தான்சுற்றி மைந்தாகேளு
விடுக்கவே காலாங்கிநாதர்தாமும் விட்டகுறை இருந்ததொரு தன்மையாலே
படுகளம் போல்பத்தாவ தாரந்தன்னை பாற்கடல்கள் சுற்றிவந்து பான்மைகொண்டார்
தொடுகுறிபோல் கலிக்கமகா ரிஷியார்தம்மை தோறாமல் கிரிதனையே கண்டார்தானே
**6906.**
தானான கலிக்கமகாரிஷியார்தன்னை தகமையுள்ள காலாங்கிநாதர் தாமும்
பானான கிரேதாயினுகத்திலப்பா பாங்கான மலைதனிலே கண்டாரங்கே
தேனான பிரளயங்கள் வந்தபோது தேற்றமுடன் மலைதனிலே நின்றசித்து
கோனான கொடுந்தவசியானசித்து கொப்பெனவே சித்துமகா பத்துமாமே
**6907.**
பத்தான மகிமையது என்னசொல்வேன் பாங்கான புலிப்பாணி பாலாகேளிர்
செத்துமே சாகாமல் காயங்கொண்டு சேனைநெடுங்காலமது வரையிலப்பா
முத்தான மோட்சவழி பெறுவதற்கு முத்தான பத்துமகாரிஷியார்தாமும்
சுத்தமுடன் கிரேதாயினுகத்திலப்பா சுந்தரனே தவசிருந்து சித்துபாரே
**6908.**
பாரேதான் காலாங்கி நாதர்தாமும் பட்சமுடன் எந்தனுக்குச் சொன்னநீதி
நேரேதான் அவர்களுந்தான் மனிதரன்றி நெடிதான தேவ அவதாரமல்ல
சீரேதான் கலியுகத்து மாண்பரெல்லாம் சிறப்புடனே தசாதாரக்கடவுளென்று
வேரேதான் இன்னமொரு தெய்வமுண்டோ வித்தகனே என்றல்லோ விதிக்கின்றாரே

6909.
வித்தகனே இவர்களெல்லாம் தெய்வமல்ல விண்ணுலகம் பதிப்பதற்கு கூடுமோதான்
செத்தவர்கள் கோடிமனு மாண்பருண்டு தேவாதி தேவரிஷியானபேரும்
கைத்தவங்கள் தான்மறந்து மண்ணாய்ப்போனார் காசினியில் யாவருந்தான்
இப்படியேபோனார்
மெய்த்தவங்கள் செய்துமல்லோ காரம்பூண்டு வெகுகோடி மாண்பர்களும் இருக்கின்றாரே
6910.
இருக்கவே இன்னம்வெகு மகத்துவங்கள் எழிலான புலிப்பாணி கண்ணியவானே
பொருக்கவே வையகத்தின் மகிமையெல்லாம் பகட்டினேன் கணக்குண்டோ
லக்கோயில்லை
பெருக்கவே துகைகண்டு விதிகண்டு பேரான ஸ்தலமகிமை யாவுங்கண்டு
குருக்கவே திசையெட்டும் மதிக்கும் நான்கும் கூரான தேவகோட்டை கூறுவேனே
6911.
கூறுவேன் புலிப்பாணி மன்னாகேளு கொற்றவனார் காலாங்கி சொன்னநீதி
பேறுடைய வையகத்தின் ஸ்தலங்களெல்லாம் பேர்வகுத்துச் சீர்வகுத்துப் பிரித்துச்
சொன்னார்
ஆறுதலம் பஞ்சபூத ஸ்தலத்தைக்கண்டு வப்பனே எந்தனுக்கு ஓதினார்காண்
மாறுபடா ஸ்தலமகிமை யுந்தனுக்கு மார்க்கமுடன் வகைபிரித்து சொல்வேன்தானே
6912.
தானான பஞ்சபூத ஸ்தலமேதென்றால் தாக்கான காளஸ்திரி காஞ்சியாகும்
தேனான திருக்காசி சிதம்பரந்தான் தெளிவான திருவருணை ஸ்தலமுமாகும்
பானான ஸ்தலத்தினது சேர்வை சொன்னேன் பாங்கான ஆராதாரங்கள் சொல்வேன்
மானான மகதேவர் மதுரையைத்தான் மகத்தான ஸ்தலமென்று மதிப்பிட்டாரே
6913.
மதிப்பான ஸ்தலத்தினது கோர்வைசொல்வேன் மகத்தான மதுரைக்குள் எண்பத்துநாலு
துதிப்புடைய சிதம்பரங் கோர்வைசொல்வேன் துப்புரவாய் பதினாறு ரெண்டுயெட்டு
யிதிலான வருணைக்குக் கோர்வைசொல்வேன் விற்பனனே சோடசமா மொன்றுநான்கு
மதிப்போன்ற காளஸ்திரி கோர்வைசொல்வேன் மார்க்கமுடன் கலைரெண்டு
தசங்களொன்றே
6914.
ஒன்றான காசியின்றன் கோர்வைசொல்வேன் ஓகோகோ நாதாக்கள் மறைத்தகூத்து
சென்றதொரு கோர்வையது யாதென்றாக்கால் செம்மலுடன் ஒன்று பத்து நான்கு எட்டு
நன்றான திருக்காஞ்சி கோர்வைசொல்வேன் நலமான பஞ்சம் ரண்டு சத்தம்நாலு
குன்றான கணக்குவகை யின்னஞ்சொல்வேன் குணமுள்ள புலிப்பாணி மன்னாகேளு
6915.
மன்னாகேள் திருவானைக் காவலப்பா மகத்தான ஸ்தலத்தினது கோர்வைசொல்வேன்
நன்னயமாய் யதைச்சார்ந்த தேவஸ்தானம் நலமான ஈறாறு ஸ்தலமேயாகும்
தென்னாடன் கும்பமுனி அகஸ்தியன்தான் தேவதாகிரியுடனே ஸ்தலமுஞ்சொல்வேன்
முன்னேதான் பெரியோர்கள் உரைத்தவண்ணம் முனியான கோயில்வகை கூறுவேனே

6916.
வரையான வகஸ்தியனார் ஸ்தலமொன்றுண்டு வளமான கோர்வையது இன்னஞ் சொல்வேன்
திறையான சத்தமது மூன்றேயாகும் திகழான வட்டமது நான்கேயாகும்
குறையாத நந்தியது கோட்டையப்பா கொற்றவனார் மலயருகே சுற்றியுண்டு
முறையான வகஸ்தியனார் தேவஸ்தானம் முனையான லக்கமிது சொல்லொண்ணாதே
6917.
ஒண்ணாது திருக்கடையூர் தேவஸ்தானம் வுத்தமனே கோர்வையது என்னசொல்வேன்
திண்ணமுடன் கலைநானகு இருமூன்றாறு திகழான மண்டபங்கள் பதினெட்டாகும்
வண்ணமுடன் சீர்காழி தேவஸ்தானம் மகத்தான கோர்வையது என்னசொல்வேன்
தண்ணமுடன் கலைநான்கு பதிகளெட்டு தாக்கான மண்டபமும் பதினாலாமே
6918.
நாலான சேதுபதி தலமுஞ்சொல்வேன் நலமான கோர்வையது என்னசொல்வேன்
காலான வறுபத்து நாலுமாகும் கருவான மண்டபந்தான் முப்பத்திரண்டு
மாலான மகதேவர் எந்தன்நாதர் மார்க்கமுடன் கண்டறிந்த தலமுமாகும்
பாலான மனோன்மணியாள் கடாட்சத்தாலே பாங்கான புதுமை யின்னங்கூறுவேனே
6919.
கூறுவேன் தணிகையது தலமுமாகும் கூரான கோர்வையது என்னசொல்வேன்
ஆறுதலங்கோட்டையது மலைமேலப்பா வப்பனே தசம்ரெண்டு சத்தம்நாலு
வேறுண்டோ வையகத்தில் சொன்னாரில்லை வெட்டவெளி யானதொரு தலமுமில்லை
நாறுண்டோ பூவதுபோல் மணமுமாகி நானிலத்தில் கோடிதலங் கண்டேன்பாரே
6920.
பாரேதான் கோணமது நவகோணந்தான் பாங்கான கும்பமென்ற கோணமப்பா
நேரேதான் தேவதா தலமுமாகும் நெடிதான கோர்வையது என்னசொல்வேன்
கூரேதான் கலையாறு ருசிகையெட்டு குணமான தேவுதா தலமுமாகும்
நீரேதான் வகுத்தறிய யின்னஞ்சொல்வேன் நிஷ்களங்க மாயவர்தலமுமாமே
6921.
தலமான தேவதா தலமுமாகும் தாக்கான கோர்வையது என்னசொல்வேன்
பிலமான கோயிலது முப்பத்திரண்டு பேரான மண்டபந்தான் அறுபத்துநான்கு
வலமான பாஞ்சால தேசமப்பா வளமான தேவதா தலமுமாகும்
நலமான கோர்வையது என்னசொல்வேன் நாட்டிலே நவில்வதற்கு நாவில்லைதானே
6922.
நாவில்லைப்பா வில்லையென்ன சொல்வேன் நன்மையுள்ள வறுபத்துநாலுசத்தம்
காவிலா நேபாள தேசமப்பா கருவான தேவதா தலமுமாகும்
பூவிலுயர் கோர்வையது யென்னசொல்வேன் புகழான சத்தமது பரிசமெட்டு
தாவுபுகழ் ஆவுடையார் தலமுமாகும் தகமையுள்ள கோர்வையது சொல்லக்கேளே
6923.
சொல்லவென்றால் நாற்பத்தி யாறேயாகும் சுத்தமுள்ள சத்தமது நாலேயாகும்
வெல்லவே பழனிமகாதலமுமாகும் வேதாந்த தலத்தினது கோர்வைசொல்வேன்
புல்லவே சதுரெட்டு திசைகள்நான்கு புகழான கோணமது வறுபத்துநான்கு
வெல்லவே கழுக்குன்ற பதிதானப்பா மேன்மையுள்ள தலமென்று செப்பலாமே

6924.
செப்பவென்றால் கோர்வையது என்னசொல்வேன் ஜெகதலத்தில் யாராலும் சொல்லப்போமோ
ஒப்பமுடன் இருபத்து நாலுமாகும் ஓகோகோ நாதாக்கள் மறைத்தகூத்து
எப்படியும் ஈரைந்தாய்ப் பதினாறாக எழிலான மண்டபமும் கூறலாகும்
தப்பிதங்கள் இல்லாமல் தயவுள்ளானே சாற்றுகிறேன் திருவொற்றியூரைத்தானே
6925.
தானான துவாபரமாம் யுகத்திலப்பா தகமையுடன் பிரளயங்கள் வந்தபோது
கோனான திருவொற்றியூர்தானப்பா கொற்றவனே கடலிலே நெடுந்தூரந்தான்
தேனான மாபுரமுங் கோபுரந்தான் தோறாமல் பிரளயங்கள் வந்துமல்லோ
மானான தலமதுவும் மூழ்கியல்லோ மன்னவனே சமுத்திரமும் மேவலாச்சே
6926.
மேவவென்றால் கோர்வையது என்னசொல்வேன் மேன்மையுள்ள நாற்பத்தியெட்டேயாகும்
தாவுகடலலை யதுவுமிஞ்சியேதான் சட்டமுடன் பூமியல்லோ முழுகலாச்சே
ஆவலுடன் குளிகைகொண்டு சென்றேனப்பா வப்பனே திருப்புவனங் கண்டேன்யானும்
நாவதனில் கூறுதற்கு நளினமில்லை நலமான தலமதுவும் மகிமையாச்சே
6927.
ஆச்சப்பா கோர்வையது என்னசொல்வேன் வப்பனே பதினெட்டு ரெண்டுபத்து
பாச்சலென்ற திருப்பழனி தலமுமாகும் பாங்கான மகிமையது என்னசொல்வேன்
மாச்சலென்ற கோர்வையது முப்பத்திரண்டு மகத்தான மண்டபமும் எட்டுநாலு
வீச்சுடனே குளிகைகொண்டு பார்த்துவந்தேன் விதக்கவே புலிப்பாணி இன்னங்கேளே
6928.
கேளப்பா பிணிதீர்த்த வைத்தியநாதர் கெடியான தலமென்ற தொன்றுவுண்டு
ஆளப்பா கோர்வையது என்னசொல்வேன் வப்பனே பதினாறு திக்குநாலு
யாளப்பா திருப்பரமாங் குன்றந்தானும் வளமையுள்ள கெடிஸ்தலமாம் அதற்குப்பேரு
சூளப்பா கோர்வையது என்னசொல்வேன் துப்புறவாய் இருமூன்று சதரமெட்டே
6929.
எட்டான திருவாரூர் என்னலாகும் எழிலான கோர்வையது என்னசொல்வேன்
சட்டமுடன் திருவாசல் அறுபத்துநான்கு தகமையுள்ள கலையாறு சத்தமெட்டு
திட்டமுடன் திருவிடையா மருதூரப்பா தேவதா தலமென்று செப்பலாகும்
வட்டமுடன் கோர்வையது வன்பத்தாறு வப்பனே பரிசமது நாலுதானே
6930.
நாலான திருவிருஞ்சி தலமுமப்பா நலமான மலைநாடு கள்ளர்தேசம்
பாலான கோர்வையது என்னசொல்வேன் பாங்கான விளையாட்டு சத்தமெட்டு
காலான திருச்சோழ தலமுமாகும் கருவான மகிமையது என்னசொல்வேன்
நூலான கோர்வையது நாலுபத்து நுட்பமுடன் கலையாறு பாசமெட்டே
6931.
எட்டான சேரனது தலமுமப்பா எழிலான மகிமையது என்னசொல்வேன்
மட்டான தலபதியின் மகிமைசொல்வேன் மகத்தான கோர்வையது தொண்ணூற்றாறு
திட்டமுடன் பாண்டியனார் தலமுமப்பா திகழான வைகைவள நாடேயாகும்
வட்டமுடன் கோர்வையது என்னசொல்வேன் வண்மையுள்ள கலைரெண்டு சோடசமுமேழே

6932.
ஏழான காசியது எட்டேயாகும் எழிலான மகிமையது என்னசொல்வேன்
பாழான கோர்வையது நூற்றிரண்டுபத்து சட்டமுடன் மகிமையது மெத்தவுண்டு
காழான நாகார்ச்சுன தலமுமாகும் கருவான கோர்வையது எழுபத்திரண்டு
தாழான டில்லியது மகிமைமெத்த தாக்கான கோர்வையது எண்பத்திரண்டே
6933.
ரெண்டான சீனபதி தன்னிற்சென்று எழிலான குளிகையது யானும்பூண்டு
குண்டலியாம் வாசிதனை பூட்டியல்லோ கொற்றவனே சீனபதி யானிருந்து
சண்டமாருதம்போலே சிலநாட்சென்று சாங்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு
வண்ணமுடன் தீர்த்தவரை காணுதற்கு வளமுடனே சென்றதொரு மகிமைபாரே
6934.
பாரேதான் படிகமாந் தீர்த்தங்கண்டேன் பாங்கான ஜம்புவென்ற தீர்த்தங்கண்டேன்
நேரேதான் செந்தாமரை தீர்த்தங்கண்டேன் நெடிதான மனோன்மணியாள் தீர்த்தங்கண்டேன்
கூரேதான் மஹேஸ்வரனார் தீர்த்தங்கண்டேன் குறிப்பான மச்சமென்ற தீர்த்தங்கண்டேன்
சீரேதான் மானிடவ தீர்த்தங்கண்டேன் சிறப்பான கோபருவ தீர்த்தங்கண்டேனே
6935.
காணவே பட்சியென்ற தீர்த்தங் கண்டேன் கருவான சங்லினுட தீர்த்தங்கண்டேன்
பூணவே சந்தனமாந் தீர்த்தங் கண்டேன் புகழான வியாசமுனி தீர்த்தங் கண்டேன்
மாணவே மகதேவர் தீர்த்தங் கண்டேன் மகத்தான பச்சையென்ற தீர்த்தங்கண்டேன்
கோணவே திருப்பாலின் தீர்த்தங்கண்டேன் தோறாத வண்டூரன் தீர்த்தமாமே
6936.
தீர்த்தமாங் கரியமால் தீர்த்தங் கண்டேன் திறமான நாகேஸ்வர தீர்த்தங்கண்டேன்
பூர்த்தியாய் பரமசிவ தீர்த்தங்கண்டேன் புகழான பாகவத தீர்த்தங்கண்டேன்
கீர்த்தியுள்ள செங்கண்மால் தீர்த்தங்கண்டேன் கெடியான புண்ணியத் தீர்த்தங்கண்டேன்
பார்த்தேனே சடாயுவென்ற தீர்த்தங்கண்டேன் பாங்கான வச்சிரவல்லி தீர்த்தந்தானே
6937.
தானான குசலமென்ற தீர்த்தங்கண்டேன் தாக்கான யமுனையென்ற தீர்த்தங்கண்டேன்
கோனான வகஸ்தியனார் தீர்த்தங்கண்டேன் குணமான வன்னியனார் தீர்த்தங்கண்டேன்
தேனான மல்லியென்ற தீர்த்தங்கண்டேன் தெளிவான வனுமாரின் தீர்த்தங்கண்டேன்
பானான காசியென்ற தீர்த்தங்கண்டேன் பாங்கான கைலங்கிரி தீர்த்தம்பாரே
6938.
பாரேதான் செண்பகத்தின் தீர்த்தங்கண்டேன் பாங்கான கைகேசி தீர்த்தங்கண்டேன்
நேரேதான்கறுப்பண்ணர் தீர்த்தங் கண்டேன் நெடிதான கிட்கிந்தா தீர்த்தங் கண்டேன்
கூரேதான் அஷ்டமென்ற தீர்த்தங் கண்டேன் குணமான ஜெகமோகினி தீர்த்தங்கண்டேன்
திரேதாயின் திருவல்லி தீர்த்தங்கண்டேன் திறமான கற்பத்தின் தீர்த்தங்கண்டேனே
6939.
காணவே இன்னம்வெகு தீர்த்தமுண்டு கண்மணியே விலாடமென்ற தீர்த்தங்கண்டேன்
பூணவே இரணியனார் தீர்த்தங்கண்டேன் புகழான புஜண்டரிட தீர்த்தங்கண்டேன்
வேணபடி திருமாலின் தீர்த்தங்கண்டேன் விருளான கும்பமென்ற தீர்த்தங்கண்டேன்
நீணவே காளிங்க தீர்த்தங்கண்டேன் நிஷ்களங்க சொர்ணமென்ற தீர்த்தந்தானே

6940.
தானான தீர்த்தமது என்னசொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி தம்பிரானே
மானான தாமரையின் தீர்த்தங்கண்டேன் மகத்தான ஞானமென்ற தீர்த்தங்கண்டேன்
வேனான யாதவமாந் தீர்த்தங்கண்டேன் வெளியான வமுர்தமென்ற தீர்த்தங் கண்டேன்
பானான வசுவனியாந் தீர்த்தங்கண்டேன் பாங்கான வற்புதமாம் தீர்த்தமாமே
6941.
ஆமேதான் புலிப்பாணி யன்புள்ளானே வப்பனே வனாகதத்தின் தீர்த்தங்கண்டேன்
நாமேதான் காலாங்கி நாதர்தம்மால் நலமான குளிகையது பூண்டுகொண்டு
தாமேதான் காலாங்கி சொன்னநீதி தண்மையுடன் வாக்கதுவும் செய்யாமற்றான்
போமேதான் அஷ்டதிசையான்கடந்து பொங்கமுடன் தீர்த்தமதைக் கண்டிட்டேனே
6942.
கண்டேனே வெகுகோடி தீர்த்தந்தன்னை காசினியில் ஆர்கண்டார் என்னைப்போல
உண்டான சித்துமுனி ரிஷிகள்தேவர் வுலகமெலாம் குளிகைகொண்டு சென்றதுண்டே
ஒண்டொடியாய் மரம்பொந்து சமாதிபீடம் ஓகோகோ நாதாக்கள் கண்டதில்லை
சண்டமாருதம்போலே குளிகைபூண்டு சட்டமுடன் அஷ்டதிசை கண்டிட்டேனே
6943.
இட்டேனே இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் யெளிதான நாதாந்த சித்துதாமும்
பட்டமாம் விட்டலவோ பாரின்மீது பாருலகில் அதிசயத்தைக் கண்டிதில்லை
விட்டகுறை இருந்ததொரு புண்ணியத்தால் வேதாந்தத் தாயினது மகத்துவத்தால்
சட்டமுடன் வையகத்து மகிமையெல்லாம் தாரணியில் கண்டறிந்த மகிமைபாரே
6944.
புதுமையாம் வெகுகோடி சித்தர்தாமும் புகழான வுலகுதனில் கோடாகோடி
கதுமையுள்ள தேவரிஷி இருந்தாரல்லோ காசினியில் அதிசயங்கள் கண்டேனென்றும்
பதுமைமுகம் அஷ்டதிக்கு பரிசம்யாவும் பார்த்துவந்த வுறுதியதும் கூறவில்லை
வதுவைபுரி சுரக்காயங் கரிக்காயென்ற வார்த்தையது போலலைவாய் நவின்றிட்டாரே
6945.
நவின்றாரே சித்துமுனி கோடாகோடி நாற்பத்து எட்டுலட்ச கிரந்தந்தன்னை
குவின்றதொரு சாத்திரங்கள் மலைபோலாக குணமுடனே பாடிவைத்தார் லக்கோயில்லை
கவிந்ததொரு குறுக்குவழி சுறுக்குமார்க்கம் கண்டுமனது வந்தல்லோ வுளவாராய்ந்து
அவிந்ததொரு விளக்கதனை ஏற்றினார்போல் வப்பனே சத்தகாண்டம் பாடினேனே
6946.
பாடினேன் இன்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாலகனே புலிப்பாணி பகரக்கேளாய்
நீடியதோர் காலாங்கி கிருபையாலே நீதியுடன் நெடுங்கால மிருந்தேனங்கே
தேடியே காலாங்கிநாதர்தாமும் தேற்றமுடன் தன்தனக்கு உகந்தசீஷன்
நாடியே வெண்டுமென்று நன்மையாலே நானவற்கு நற்சீஷனாகினேனே
6947.
ஆகினேனே நெடுங்காலம் பணிதிசெய்து வப்பனே சமாதிக்குப் பூசைசெய்தேன்
பாலில்விழும் ஈயைப்போல பரிதவித்தேன் பட்சமுடன் என்மீதில் மனதுவந்து
சாகின்ற சடலமது காயந்தந்து சட்டமுடன் எந்தனுக்கு இதவுகூறி
மேதிடவே ஞானோபதேசஞ்சொல்லி மேன்மையுடன் எந்தனை யாசீர்மித்தாரே

6948.
எந்தனையும் ஆசீர்மம் மிகவுஞ்செய்து எழிலான வுபதேச வுண்மைகூறி
அந்தமுடன் ஆதியந்த முடிவுஞ்சொல்லி வப்பனே யோகமென்ற வழியுங்காட்டி
விந்தையுடன் வையகத்து மகிமைகூறி விட்டகுறை யாவனைத்து மொழிந்துமல்லோ
சொந்தமுடன் எந்நாளும் சீஷனாக்கி சுந்தரனே மகத்துவங்கள் கூறினாரே
6949.
கூறினார் வெகுகோடி இதிகாசங்கல் கொற்றவனே சமாதிமுறை பாடுஞ்சொல்லி
தேறியே சிலகாலம் அங்கிருந்து தேற்றமுடன் வையகத்து வதிசயங்கள்
மீறியே தானுணர்ந்து குளிகைபூண்டு மிக்கான நாடுபதி தேசமெல்லாம்
கோறியே தேசமெல்லாம் மகிதம்பூண்டு கொற்றவனே எந்தனுக்கு வருள்தந்தாரே
6950.
தந்தாரே எந்தனுக்குக் கோடியாக சட்டமுடன் காலாங்கி நாதர்தாமும்
அந்தமுடன் எந்தனுக்கு வதிதமார்க்கம் வப்பனே தாமுரைத்துப்போகவென்று
இந்தமானிலத்திலுள்ள மகிமையெல்லாம் ஏற்றமுள்ள குளிகையினால் அறிந்துகொண்டு
விந்தையுடன் பாடிவைப்பேன் சத்தகாண்டம் விண்ணுலகம் மண்ணுலகம்
விடங்கொள்ளாதே
6951.
கொள்ளாது போகரேழாயிரந்தான் கொற்றவனே நாதாக்கள்கூறவில்லை
எள்ளளவும் பிசகாது இந்நூலப்பா யிணையான நூலுக்கு எதுவேதென்றால்
கள்ளமிலாக் கும்பமுனி சொன்னநூலாம் காசினியில் பெருநூலாம் பேதமுண்டோ
தள்ளளவுந் தான்போகாத காண்டமப்பா தருவான பன்னீராயிரந்தானே
6952.
பன்னீராயிரம் என்னும் நூல்தானப்பா பயிலான காண்டமது பனிரெண்டுமாகும்
சொன்னமொழி தவறாது துய்யபாலா துகளகற்றி பன்னீராயிரந்தான் சொன்னார்
கன்னியமாய்ப் பன்னிரண்டு காண்டஞ்சொன்னார் கண்மணியே வாயிரத்துக் கொரு
காண்டந்தான்
உன்னிதமாய் இந்நூலுக்கு உவமைகூறி வுத்தமனார் பாடிவைத்தார் உண்மைதானே
6953.
உண்மையாம் எந்நூலைக் கண்டறிந்து வுத்தமனே கும்பமுனி நூலைப்பாரு
திண்ணமுடன் பனிரெண்டு காண்டம்பாரு தீர்க்கமுடன் ரகசியங்கள் எல்லாம்விள்ளும்
நன்மைபெற மோட்சவழி கதியேகொள்வார் நாதாந்த கும்பமுனி முன்னேநிற்பார்
தண்மையுள்ள சாத்திரந்தான் பெருநூலப்பா தகமையுள்ள பனிரெண்டு காண்டம்பாரே
6954.
பாரேதான் அகஸ்தியனார் கோடிநூல்கள் பாருலகில் பாடிவைத்தார் மறைப்புமெத்த
நேரேதான் பெருநூலின் மார்க்கமெல்லாம் நேர்மையுள்ள வென்னூல்போல் விள்ளலாகும்
சீரேதான் பனிரெண்டு காண்டமாக சிறப்புடனே பாடிவைத்தார் புலஸ்தியற்கு
வேரேதான் சாஸ்திரங்கள் பார்ப்பதுண்டோ பார்த்தாலும் பெருநூலுக் கொவ்வாதன்றே
6955.
அன்றான சாத்திரங்கள் அனந்தங்கோடி வளவில்லா சூத்திரங்கள் கணக்கோயில்லை
குன்றான மலைபோலே குவித்துவைத்தார் கொடிதான சாத்திரத்தின் மகிமையெல்லாம்
தென்றசையில் கும்பமுனி செய்தநூல்கள் தேசத்தில் பாதியுண்டு ஆயுர்வேதம்
வென்றிடவே பதினெண்பேர் செய்தநூல்கள் வேட்கமுடன் மறுபாதி என்னலாமே

6956.
என்னவே கும்பமுனி என்றநாமம் எழிலான வகஸ்தியரின் நாமமாகும்
பன்னவே யகஸ்தியனார் யென்றநாமம் பலபலவாஞ் சாத்திரத்தில் முறைபாடாக
துன்னவே கும்பமுனி யென்றுமேதான் துப்புரவாய் எப்போதும் வழக்கம்பாரு
சொன்னதொரு நூல்களிலே மகிமைகோடி தோறாமல் பாடிவைத்தார் முனிவர்தாமே
6957.
முனியான சாத்திரங்கள் பலநூல்கோர்வை மூதுலகில் பாடிவைத்தார் சித்தரெல்லாம்
கனியான நவகனியாம் நூல்தானப்பா கருத்துடனே பனிரெண்டு காண்டஞ்சொன்னார்
பனியதுதான் சூரியனைக் கண்டாற்போல பறக்குமடா பனிரெண்டு காண்டமுன்னே
தொனிபோன்ற சாத்திரங்கள் களவுமார்க்கம் துப்புரவாய்க் காவியத்துக் கொவ்வாதன்றே
6958.
அன்றான சாத்திரமாங் கோர்வையப்பா வப்பனே பனிரெண்டு காண்டஞ்சொன்னார்
குன்றான மலைபோலே கோடித்தங்கம் கொட்டினார் பனிரெண்டு காண்டத்துள்ளே
சென்றிடவே வைத்தியமும் வாதமார்க்கம் செயலான யோகமுதல் ஞானமார்க்கம்
வென்றிடவே மாந்திரீக மாரணவேதம் வேண்டியதோர் கருமானம் மிகவுண்டாமே
6959.
உண்டான சாத்திரத்தில் இல்லாமார்க்கம் வுத்தமனே பெருநூலிற்காணலாகும்
கண்டாலும் விடுவாரோ பெருநூலப்பா காசினியில் பனிரெண்டு காண்டந்தன்னை
விண்டதொரு பொருளெல்லாம் அதிலேதோயும் வித்தகனே மற்றோர்நூல் கண்பதில்லை
சண்டமாருதம்போலே பனிரெண்டுகாண்டம் சங்கையற வாயிரத்துக் கொருகாண்டந்தானே
6960.
சங்கையில்லா பெருநூலை பார்த்தபேர்கள் சாயுச்சிய பதவிதனைப் பெறவேயாகும்
இங்கிதமாய்ப் பெருநூலைப் பார்க்காமாண்பர் எழிலான சாலோக சாபமீந்தான்
அங்கமுடன் சாரூப பதவிமூன்றும் வப்பனே கிட்டுவதும் அரிதேயாகும்
புங்கசித்தி எட்டுவித போகந்தன்னை புகழுடனே பெருநூலோர் காண்பார்தானே
6961.
தானான இன்னமொரு தண்மைசொல்வேன் தாக்கான புலிப்பாணி தயவுள்ளானே
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனே எந்தனுக்குச் சொன்னநீதி
பானான பார்லோக மிடங்கொள்ளாது பாலகனே சொல்வதற்கு நாளுமில்லை
தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்றமுடன் கோடிமுறை சொல்வேன்பாரே
6962.
பாரேதான் கலியுகம் பிறக்கலாச்சு பாலகனே சத்தியமும் விழலாய்ப்போச்சு
ஆரேதான் உனக்கு மதிசொல்வார் அப்பனே யுபதேசம் பெற்றமட்டும்
பேரிருக்க வூரிருக்க பிதாவிருக்க பேரான மகுத்துவத்தை வெளியிடாதே
சீரழிந்த மாண்பரெல்லாஞ் ஜெனிப்பாரப்பா ஜெகதலத்தில் கருமியென்ற கோடிபேரே
6963.
கோடியாம் நல்லவர்போ லிருப்பாரப்பா கொற்றவனே யுந்தனுக்கு யுபதேசித்த
தேடியதோர் பொருளப்பா சத்தகாண்டம் தெளிவான யேழாயிரங் காவியத்தை
பாடியே யுந்தனுக்கு தத்தமாக பட்சமுடன் யான்கொடுத்த பெருநூலப்பா
வாடியே மயங்காதே மனம்விடாதே மதிகெட்டு நில்லாதே நூல்கெடாதே

6964.
கொடுத்தாலும் விதியாளி பார்த்தறிந்து கொற்றவனே கொடுத்தாலும் புண்ணியமெய்தும்
கெடுத்ததொரு குடிகெடுக்கும் பாவிகட்கும் கெடியான சண்டாள மாண்பருக்கும்
அடுத்துறவு நயம்பேசி புரணிகூறும் வனியாயக்காரருக்கும் வறிவிலார்க்கும்
தொடுத்ததொரு பெருநூலாஞ் சத்தகாண்டம் துப்புரவாய்க் கொடுத்தாலே பாவமாமே
6965.
பாவமாம் நூலதனைப் பதனம்பண்ணு பாலகனே சமாதிமுகம் வைத்துப்போற்று
ஆவலுடன் விதியாளி வந்துகேட்டால் வப்பனே நீகொடுத்து மதிகள்கூறு
சாவதுவும் தலைமேலே இருக்குமப்பா சாங்கமுடன் நூல்கொடுத்தால் மெத்தநன்று
போவதுமெய் இருப்பதுபொய் என்றவாக்கியம் பொங்கமுடன் வேதமது நுணுக்கமாமே
6966.
வேதங்கள் நுணுக்கறிந்து யீயாவிட்டால் வெகுபாவம் வெகுசாபம் நரகமெய்தும்
நீதமுடன் பரிசுத்தவாளருக்கு நீதியுடன் கொடுப்பதுவே கர்மமாகும்
தோதமுடன் விதியாளி வந்துகேட்டால் தோறாமல் சமாதிமுகம் இருந்தநூலை
ஆதவமாம் அருளினது விசுவாசத்தால் வப்பனே நூல்கொடுத்து மதிகள்கூறே
6967.
கூறவென்றால் புலிப்பாணி குணமுள்ளானே கொற்றவனே கலியுகமும் பிறந்துபோச்சு
மாறலுடன் வையகத்தில் வெகுபாடப்பா மாண்பர்களும் வெகுகேடு படுவாரப்பா
சீறலுடன் பொய்சூது கபடுதந்திரம் சிறப்பான குறைபாடு வதிதமார்க்கம்
மீறவே தானடக்குங் கலியுகத்தில் மிக்கான வுண்மையது வறிந்துகொள்ளே
6968.
கொள்ளப்பா யொருவரையும் நம்பவேண்டாம் கொற்றவனே கலியுகத்தில் அனியாயங்கள்
தள்ளவே போகாது தரணிமீதில் சட்டமுடன் அனேகவித தெய்வமென்பார்
விள்ளவே விசுவாசம் பாவமுண்டு வித்தகனே யனேகவித சாத்திரங்கள்
உள்ளபடி கூறுவார் மாந்தரப்பா வுத்தமனே மயங்காதே புத்திவானே
6969.
புத்தியாய் கலியுகத்தில் சிலதுகாலம் புகழுடனே தாமிருந்து சமாதிகொள்வாய்
சத்தியத்தைத் தவறாதே தம்பிரானே சதகோடி சூரியன்போல் ஞானங்கொள்ளு
வித்தகனே விற்பனனே விண்ணுள்ளானே விட்டகுறைநேருமட்டும் வையகத்தில்
புத்தியாய் நெடுங்காலந்தாமிருந்து புண்ணியனே சமாதிமுகம் புரிவீர்தானே
6970.
தானான புலிப்பாணி தகமையோனே தாக்கான என்தேவர் சொன்னநீதி
கோனான காலாங்கி வாக்குபோலே கொற்றவனே சமாதிமுகஞ் செல்வேனப்பா
மானான மனோன்மணியாள் கடாட்சத்தாலும் மகதேவர் காலாங்கி கிருபையாலும்
பானான பாரிலுள்ளோர் புண்ணியத்தால் பாலகனே சமாதிமுகஞ் செல்வேன்தானே
6971.
செல்கவென்றால் எந்தன்முறை பாடுபோலே ஜெகதலத்தில் சிலகாலம் நீரிருந்து
புல்கவே வையகத்தைத் தான்மறந்து புகழான சமாதிமுகம் ஏவநன்று
வில்கவே கலியுகத்தில் இருந்துமென்ன விட்டகுறை இருந்தாலும் என்னலாபம்
அல்லலது நெடுநாளு மிருந்தாலுந்தான் வப்பனே தேகமது மண்ணாய்போமே

6972.
மண்ணான தேகமது இருந்துமென்ன மகிதலத்தில் நெடுங்காலம் வாழ்ந்துமென்ன
வண்ணமுடன் கலியுகத்தில் அனியாயங்கள் வாகுடனே சதாகாலம் நடக்கும்பாரு
எண்ணமது கலியுகத்து மாண்பருக்கு எழிலான கோடிமுறை தத்துவங்கள்
கண்ணவிந்த மாண்பரப்பா கலியுகத்தார் காசினியை மறப்பதுவும் மெத்தநன்றே
6973.
நன்றான காசினியை மறந்துமல்லோ நான்போகுஞ் சமாதிமுகந் தன்னைப்போல
குன்றான கலியுகத்தில் நீயுமப்பா கொற்றவனே சமாதிமுகஞ் செல்கநன்று
என்றைக்கும் வையகத்தின் வாழ்க்கையெல்லாம் எழிலுடனே மறப்பதுவும் மெத்தநன்று
தென்றிசையில் கும்பமுனி சமாதிபக்கல் தேற்றமுடன் சமாதிமுகங் கொள்வீர்தானே
6974.
தானான வகஸ்தியர்க்கு சரணஞ்சொன்னேன் தாக்கான வவர்பாதம் போற்றிபோற்றி
கோனான வரரிஷியார் தாள்பணிந்தேன் கொற்றவனே யவர்பாதம் போற்றி போற்றி
தொழுதுமே சிவவாக்கியர் சரணஞ்சொன்னேன் தோற்றமுடன் அவர்பாதம் போற்றிபோற்றி
விழுந்துமே நந்தீசர் சரணஞ்சொன்னேன் விருப்பமுடன் அவர்பாதம் பணிந்திட்டேனே
6975.
தொழுதேனே ரோமரிஷி சரணஞ்சொன்னேன் தோறாமல் அவர்பாதம் பணிந்துபோற்றி
பழுதுபடா மச்சமுனி சரணஞ்சொன்னேன் பாலகனே யவர்பாதம் போற்றிபோற்றி
தொழுதுமே சிவவாக்கியர் சரணஞ்சொன்னேன் தோற்றமுடன் அவர்பாதம் போற்றிபோற்றி
விழுந்துமே நந்தீசர் சரணஞ்சொன்னேன் விருப்பமுடன் அவர்பாதம் பணிந்திட்டேனே
6976.
பணிந்தேனே தன்வந்திரி சரணஞ்சொன்னேன் பாலகனே யவர்பாதந் தொழுதுபோற்றி
அணியான ராமருக்குச் சரணஞ்சொன்னேன் வப்பனே யவர்பாதம் போற்றிபோற்றி
துணிந்துமே கௌபாலர் தாள்பணிந்தேன் துப்புரவாய்ச் சரணங்கள் மிகவுஞ் சொன்னேன்
மணியான சுந்தரானந்தருக்கு மகத்தான சரணங்கள் போற்றிதானே
6977.
போற்றியே தேறையர் சரணஞ்சொன்னேன் புகழுடனே யவர்பாதந் தொழுதுபோற்றி
ஆற்றலுடன் பூதனாநந்தருக்கு வப்பனே யவர்பாதந் தொழுதுபோற்றி
மாற்றலுடன் புண்ணாக்கு ஈசருக்கு மகத்தான சரணங்கள் மிகவுஞ்சொன்னேன்
தேற்றமுடன் இடைக்காடர் சரணஞ்சொன்னேன் தெளிவுடனே யவர்பாதந்
தொழுதேன்தானே
6978.
தானான டமரகானந்தருக்கு தண்மையுடன் மிகநோக்கி சரணஞ்சொன்னேன்
கோனான தட்சணாநாயருக்கு கோடிமுறை சரணங்கள் மிகவுஞ்சொன்னேன்
பானான வகப்பேய் சித்தருக்கு பட்சமுடன் வெகுகோடி சரணஞ்சொன்னேன்
மானான யாக்கோபு பாதம்போற்றி மார்க்கமுடன் சரணங்கள் கூறினேனே
6979.
கூறினேன் குறும்பரென்ற சித்தருக்கு கோடான கோடியது சரணஞ்சொன்னேன்
தேறியே யவர்பாதந் தொழுதுபோற்றி தேற்றமுடன் அஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன்
மாறுபடாசோதியென்ற முனிவருக்கு மகத்தான சரணங்கள் அதிகஞ்சொன்னேன்
ஆறுநதி தீர்த்தமது கொண்டுமல்லோ வவர்பாதம் அர்ச்சனைகள் செய்திட்டேனே

6980.
செய்தேனே யின்னம்வெகு மார்க்கஞ்சொல்வேன் செயலான புலிப்பாணி செல்லவானே
துய்யநல்ல வூர்வசியாள் சரணஞ்சொன்னேன் துப்புரவாய் என்மீதிற் கடாட்சம்வைத்து
வெய்யபுகழ் காலாங்கி கடாட்சத்தாலே விருப்பமுடன் என்மீதில் மனதுவந்து
தையலெனும் வூர்வசியாள் கடாட்சத்தாலே சட்டமுடன் சத்தகாண்டம் பாடினேனே
6981.
பாடினேன் புலிப்பாணி மைந்தாகேளு பாலகனே வியாசமுனி நாதருக்கு
தேடியே யவர்பாதந் தொழுதேனப்பா தேற்றமுடன் சரணங்கள் மிகவுஞ்சொன்னேன்
கூடியே கௌதமரிஷியாரின்தன் கொற்றவனே யவர்பாதந் தொழுதுபோற்றி
நீடியே வஞ்சலிகள் மிகவுஞ்செய்து நீதியுடன் அவர்பதத்தை பணிந்திட்டேனே
6982.
இட்டேனே திருமூலர் சரணஞ்சொன்னேன் எழிலுடனே யவர்பாதந் தொழுதுபோற்றி
சட்டமுடன் பாம்பாட்டி சித்தருக்கு சதகோடி நமஸ்காரம் செய்தேன்யானும்
திட்டமுடன் அவர்பாதந் தொழுதுபோற்றி தீர்க்கமுடன் மேலுமஞ்சலிகள் செய்தேன்
பட்டமுடன் கடுவெளியார் சித்தருக்கு பாலகனே நமஸ்காரஞ் செய்தேன்பாரே
6983.
பாரேதான் கமலமென்ற முனியாருக்கு பட்சமுடன் சதகோடி சரணஞ்சொன்னேன்
சீரேதான் அவர்பாதந் தொழுதுபோற்றி சிறப்புடனே வஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன்
நேரேதான் கைலாச ரிஷியாருக்கு நேர்மையுடன் அவர்பாதந்தொழுதுபோற்றி
கூரேதான் நமஸ்காரம் மிகவுஞ்சொன்னேன் கொற்றவனே புலிப்பாணி பண்புள்ளானே
6984.
பண்பான வஞ்சனமாம் ரிஷியாருக்கு பாலகனே சரணங்கள் அதிகஞ்சொன்னேன்
நண்புடனே தான்பணிந்து முடிகள்சாய்த்து நன்மையுடன் அவர்பாதந் தொழுதுபோற்றி
வண்பான நவகண்டர் பாதம்போற்றி வளமுடனே யவர்தனக்கு சரணஞ்சொன்னேன்
திண்பான வஞ்சலிகள் மிகவுஞ்செய்து தீர்க்கமுடன் கரங்குவித்து வணங்கினேனே
6985.
வணங்கவே இன்னம்வெகு சித்தருண்டு வளமான நாதாந்த ரிஷியாரப்பா
இணங்கினேன் ஜமதக்னி முனியாருக்கு எழிலான சரணங்கள் மிகவுஞ்சொன்னேன்
சுணங்கமது வாராமல் ரிஷியாருக்கு சுத்தமுடன் அவர்பாதந் தொழுதுபோற்றி
மணங்கமழுந் திரணாக்கிய முனிவருக்கு மார்க்கமுடன் அவர்பாதந் தொழுதிட்டேனே
6986.
தொழுதேனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தொல்லையெனும் பிறவியது மயக்கறுத்த
பழுதுபடா புலிப்பாணி பகர்வேனப்பா பாலகனே இன்னம்வெகு சித்தருண்டு
முழுதுமே மூதுலகில் கீர்த்திபெற்ற முனையான வசுவினியாந் தேவருக்கு
தொழுதுமே யவர்பாதம் போற்றிபோற்றி தோற்றமுடன் அஞ்சலிகள் பகருவேனே
6987.
பகரவே புஜண்டமகா ரிஷியாருக்கு பண்புடனே வெகுகோடி சரணஞ்சொன்னேன்
நிகரவே யவர்பாதந்தொழுதுபோற்றி நீதியுடன் தலைகுனிந்து முடிகள்சாய்த்தேன்
சகராஜபரிட்சித்து மன்னனுக்கு சட்டமுடன் சோதிடங்கள் தாமுரைத்த
சுகரென்ற ரிஷியார்க்குச் சரணஞ்சொன்னேன் துப்புரவாய் அவர்பாதம் பணிந்திட்டேனே

6988.
பணிந்தேனே பலிப்பாணி மன்னவாகேள் பாருலகில் கும்பமென்ற யீசருக்கு
துணிந்துமே யவர்பாதந் தொழுதுபோற்றி துப்புரவாய் சரணங்கள் அதிகஞ்சொன்னேன்
கணிதமென்ற மூலத்தின் ஈசருக்கு கனகாபிஷேகமுடன் சரணஞ்சொன்னேன்
மணிபோன்ற பாதமதைத் தொழுதுபோற்றி மன்னவனே சதாகாலம் நினைப்பேன்காணே
6989.
காணவே கருவூரார் சித்தருக்கு கனகாபிஷேகமது மிகவுஞ்செய்து
தோணவே யவர்தனக்கு சரணஞ்சொன்னேன் துப்புரவாய் அவர்பாதம் போற்றிபோற்றி
மாணமருங் கல்வியுள்ள கொங்கணர்க்கு மகத்தான சரணங்கள் மிகவுஞ்சொன்னேன்
நீணவே வாலையா னந்தருக்கு நீதியுடன் பாதமது பணிந்தேன்தானே
6990.
தானான புலஸ்தியர்க்கு சரணஞ்சொன்னேன் தாக்கான வால்மீகர் பாதம்போற்றி
கோனான சுப்பிரமணியர் சரணஞ்சொன்னேன் கூரான வவர்பாதந் தொழுதுபோற்றி
தேனான ஜெயகண்டி பாதம்போற்றி செங்கமல வள்ளுவனார் சரணஞ்சொன்னேன்
மானான மகதேவர் காலதூதர் மகத்தான பாதமது பணிந்திட்டேனே
6991.
இட்டேனே நவகோடி ரிஷியாருக்கு எழிலான பதினெண்பேர் சித்தருக்கும்
சட்டமுடன் நாற்பத்தி எட்டுபேர்கள் சதுரான முனிவருக்கு சரணஞ்சொன்னேன்
திட்டமுடன் மனோன்மணியாள் பாதம்போற்றி திகழான சுடரொளியாஞ் சோதிபோற்றி
அட்டதிசை தான்புகழுங் காலாங்கிநாதர் வையனே யுன்பாதம் போற்றிதானே
6992.
தானான சித்துமகா ரிஷியாருக்கு தண்மையுள்ள மனுவொன்று சொல்வேனப்பா
கோனான எனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் சீனபதி தேசந்தன்னில்
மானான வையகத்து மகிமையெல்லாம் மார்க்கமுடன் எந்தனுக்கு உபதேசித்தார்
பானான சதகோடி சூரியன்போல் பாடினேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே
6993.
பண்பான லோகவதிசயங்களெல்லாம் பாருலகில் நாதாக்கள் மறைத்ததாலே
நண்பான மாண்பர்களும் பிழைக்கவேதான் நலமான புலிப்பாணி பாலனுக்கு
திண்ணமுடன் இதிகாசவித்தையெல்லாம் தீர்க்கமுடன் சத்தசாகரத்தைப்போலே
உண்மையாம் போகரேழாயிரந்தான் வுகமையுடன் பாடிவைத்தேன் காண்டம்பாரே
6994.
பாரேதான் மகுத்துவங்கள் வெளியாச்சென்று பண்புள்ள நாதாக்கள் நீங்களெல்லாம்
வேரேதான் கோபமது கொள்ளாமற்றான் வேழ்க்கமுடன் எந்தன்மேல் கிருபைவைத்து
சீரேதான் சிறுபாலன் என்னையுந்தான் சிறப்புடனே மனதுவந்து வஞ்சலித்து
நேரேதான் என்மீதிற் சினங்கொள்ளாமல் நேர்மையுடன் கொண்டணைத்தல் பாரமாமே
6995.
பாரமாம் எந்நூலிற் துகளுண்டானால் பாலகனே சிக்கறுத்து மனங்களித்து
தூரான வார்த்தையது மிகக்கொள்ளாமல் துப்புரவாய்ச் செந்தமிழைச் சீர்திருத்தி
கூறான விதிபாடு முறைபாடோடு குணபாடு வழிபாடு தானமர்த்தி
சீறான போகரேழாயிரத்தை சிறப்புடனே யுகந்துமனங் கொள்வீர்தாமே

6996.
தாமான சித்துமுனி ரிஷியார்முன்னே தகமையுடன் பாடிவைத்த சத்தகாண்டம்
ஆமேதான் பசுபசுங்கிள்ளைமுன்னே வப்பனே யருங்காக்கை சத்தம்போலும்
வேமேதான் செந்தமிழாற் சித்தர்முன்னே வேட்கையுடன் யான்செய்த சத்தகாண்டம்
தாமேதான் புல்லறிவா லுரைத்ததாலே தண்மையுடன் பெரியோர் புன்னகையுமாமே
6997.
நகையான போகரேழாயிரந்தான் நலமான சித்தர்முனி நாதருக்கு
தகமையுள்ள காண்டமது பெருமையோசொல் தாரணியில் அனேகம்பேர் சித்தர்கூடி
குகைதனிலே வெகுநூல்கள் பாடியல்லோ கொற்றவனே சமாதிமுகம் வைத்தாரப்பா
வகையான சாத்திரத்துக் கொப்புசொல்ல வல்லவனே எந்நாளும் முடியாதன்றே
6998.
அன்றான ஆதிசேடன் தன்னினாலும் வப்பனே வினவிடவும் போகாதப்பா
குன்றான மலைபோலே சாத்திரங்கள் கொட்டினார் சித்தரெல்லாம் லக்கோயில்லை
வென்றிடவே கும்பமுனி வர்க்கத்தோரும் வேதாந்த திருமூல வர்க்கத்தோரும்
நன்றாகப் பாடிவைத்தார் கோடிநூல்கள் நலமாகப் பாடிவைத்தேன் இந்நூலாமே
6999.
சின்னூலாம் என்றதொரு இந்தநூலை சினமதுவுங் கொள்ளாமல் மனதுவந்து
பன்னூலும் பெருநூலாயிருந்திட்டாலும் பட்சமுடன் மனங்களித்து வாசீர்மித்து
என்னூலைக் குற்றமது கூறாமற்றான் எழிலான சிறியேன்மேல் அன்புகூர்ந்து
நன்னூலா யிதம்பூண்டு யின்னூல்தன்னை நன்மையுடன் அனுசரித்து கொள்ளநன்றே
7000.
கொள்ளவே போகரேழாயிரந்தான் கொற்றவனே நெடுங்காலந் தவமிருந்து
உள்ளபடி யுடல்பொருள்கள் ஆவியெல்லாம் வுத்தமனே இந்நூலுக்கொப்பிவைத்தேன்
கள்ளமிலா சாத்திரமாம் சத்தகாண்டம் கலியுகத்தார் தான்பிழைக்க பாடிவைத்தேன்
உள்ளபடி சாபமது இந்நூற்கில்லை வுத்தமனே காண்டமது யேழுதானே
7001.
தானான காண்டமது ஏழுக்குள்ளே சதகோடி சூரியன்போல் மகத்துவங்கள்
கோனான காலாங்கி கடாட்சத்தாலே கொற்றவனே பெருநூலாம் குருநூலாக
தேனான மனோன்மணியாள் கிருபையாலும் தேஜொளிவின் சின்மயத்தின் அருளினாலும்
மானான போகரேழாயிரந்தான் மார்க்கமுடன் பெருநூலும் முற்றதாமே